ஸ்ரீ

ஸ்ரீ சீதாசமேத ராமச்சந்த்ர பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமத்

# கம்பராமாயணவசனம்

இரண்டாவது புஸ்தகம்

உயுத்தகாண்டம் -
உத்தரகாண்டம் -

இராவணன் - - -
திக்குவிஜயம் - -
வரையில் - - - -

தமிழ்ச்சங்கத் தலைமைப் புலமைத்

திருச்சிற்றம்பலதேசிகரவர்களாற் செய்த

வசனத்திற்கிணங்க

A. இரங்கசாமி முதலியார் & சன்ஸ் அவர்களது

பூமகள்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது

சென்னை 1929

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்.

## உ யு த் த கா ண் ட ம்.

### காப்பு விருத்தம்.

இரணியன்மகனுமுன்ன ரிழிபுரைக்கேதங்கண்ட
தரணியின்மகனுமற்ற யானையின்சரணன்றேற்றி
முரணியசிறியோர்வெலக முதன்மைகொண்மாதுங்கண்ட
தரணியப்பொருளையின்னும் பேணுவார்காணுவாரே.

### வேறு.

ஒன்றேயென்னினொன்றேயாம் பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயா மாமேயென்னினுமேயாம்
இன்றேயென்னினின்றேயா மிலதென்றுரைக்கினிலதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கை நமக்கிங்கென்னோபிழைப்பம்மா.

## கடல்காண்படலம்.

நான்கு யுகமுடிவிலும் அழியாமல் நிலைபெற்றிருக்கின்ற விநோதமாகிய மேருகிரி முதலான மலைகளும், எப்போதும்வற்றாமலிருக்கும் ஏழுசமுத்திரங்களும், பூமியும், வடதிசையில் வானத்தையளாவி நெருங்கவும், தென்றிசையிலமைந்திருக்கின்ற பொதியமலை முதலிய பர்வதங்களும், பூமியும்பாதாளலோகத்தை நெருங்கவும், எவ்விடத்திலும் ஊசிநாட்ட இடமில்லாமல் நெருங்கியிருந்தவானரசேனைகள் எழுபது வெள்ளமும் தென்திசைச் சமுத்திரத்தின் அருகில் வந்திறங்கியதுகள். கடல்நெருங்கியிருப்பதாலும், ஸ்ரீராமமூர்த்தி வெகுநாளாகச் சீதாபிராட்டியைப் பிரிந்திருப்பதாலும், நாம் எங்குஞ் சஞ்சரியாமல், பசி-தாகம்-இளைப்புமுதலிய வருத்தங்களையும் சகித்து, எவ்விதத்திலாவது கஷ்டத்துடனே கஷ்டமாய்ச் சீக்கிரத்திற்போய்ச் சேரவேணுமென்றும், மகா பாபிகளாகிய இராவணாதி ராக்ஷதர்களுடன் எதிர்த்துச் சண்டைசெய்து மண்டைகளைப் பிளந்து வெற்றிபுரிந்து நமது அன்னையாகிய சீதாபிராட்டியைச் சிறையினின்று மீட்டுக் கொண்டு வரவேண்டுமென்னும் எண்ணத்தை பூர்த்தியாகக்கொண்டு மனம்பொங்க.

கோபாவேசத்துடன் பூமிமுழுதும் நிறைந்து பெருநடையோடு நடந்துவந்த வானரச் சேனாதிபதிகளெல்லாம் மாயாவித்தையை அறிந்த இராட்சதர்களால் ஸ்ரீராமமூர்த்திக்கு ஏதாவது அபாயம் நேரிடப்போகிறதென்று மிகுந்த ஜாக்கிரதையுடையவர்களாய் கூட்டங்கூட்டமாய் நெருங்கி ஸ்ரீராமமூர்த்தியை வளைத்துக்கொண்டிருந்தார்கள். அவ்வானரர்கள் தங்கள் தாய் தந்தையர் அண்ணன் தம்பி பெண்ஜாதி பிள்ளை மாமன் மைத்துனன் முதலிய சகலரையும் சுவப்பனத்திலும் கருதாமல் சுவாமி காரியதுரந்தரர்களாய் தமக்குத் துணையாகவந்த வானரர்களில் ஒருவராவது ராக்ஷதர்களுக்குப் பயந்து நீங்கிப் போகாமல் இவ்விடம் வந்து சேர்ந்தார்களாவென்றும், நமது சேனைகளுக்குச் சங்கடமெங்கே நேரிடுகிறதோ வென்றும், தெய்வாதீனத்தால் ஒருவேளை சங்கடம் நேரிட்டால் அவ்வருத்தமாகிய சொற்களைக்கேட்டு அவர்களுடைய தாய்தந்தைகள் இந்த ராமன் தன் பெண்சாதியாகிய சீதையை இராவணன் திருடிக்கொண்டு போனதால் அவனை ஜெயித்து வெற்றியடைவதற்காக எங்கள் புத்திர மித்திர பந்துவர்க்கங்களையெல்லாம் ஆட்டுக்கூட்டத்தைப்போல மடக்கிக்கொண்டு அவர்கள் உயிர்க்குச் சேதம் நேரிடாமல் காப்பாற்றி அழைத்துக்கொண்டுவந்து நம்மிடத்திற்சேர்க்காமல் அநியாயமாய் இராக்ஷதப்புலிகளுக்கு இரையாகக் கொடுத்துவிட்டான். நாசகாலனென்று அவரை நிந்திப்பதோடு தம்மையும் தூஷிப்பார்களென்று கருதி, அவ்வானரர்களையும் மறவாமல் அவர்கள்பேரில் தங்கள் மனதைச் செலுத்திக்கொண்டிருப்பதால் அவ்வானரச் சேனாதிபதிகள் ஸ்ரீராமமூர்த்தியைச் சூழ்ந்திருந்தாலும், தங்கள் தங்கள் சேனைகளின்மீது தங்கள் தங்கள் மனதையும் பார்வையையும்செலுத்திக்கொண்டும், ஸ்ரீ சீதாபிராட்டியைப் பிரிந்தபின்பு தன்விழிகளை யொத்திருக்கின்ற அரவிந்த மலர்கள் இதழைக்குவித்து நித்திரைசெய்யும்இராக்காலத்திலும் நித்திரை யென்பதில்லாமல் வியசனத்தோடு துக்கித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீராமசுவாமியும் சமீபமாக வந்து தென்சமுத்திரத்தைக் கண்டார்.

நாராயணனென்னும் பெயரையுடைய ஆதிமூலப்பெருமான் வெகுகாலமாய் திருக்கண் வளர்ந்த ஸ்தானத்தைவிட்டு நீங்கி வெகு வனத்தில் சஞ்சரித்து இவ்விடத்திற்குவந்தானுகையால், இனி முன்போலவே திருக்கண் வளர்வானென்று நினைத்து முத்துக்களையும் வெண்மையாகிய மல்லிகைப் புஷ்பத்தைச் சிந்துவதுபோல நுரையையுஞ்சிந்தி, இனிதாகிய பாயலைச் சுருட்டி உதறி மறுபடியும் விரிப்பதுபோல அந்தக்கடலலைகள் மந்தமாருதத்தினுல் அடிபட்டு எழும்பிச் சுருண்டுவிழுந்து எவ்விடத்திலும் பரவத்தலைப்பட்டதுகள். பெருகிவழிகின்ற கண்ணீராகிய சமுத்திரத்தின் மத்தியிலிருந்து ஜானகியம்மன் துக்கத்தோடிருப்பதனுல், தமக்குவந்தபழிக்கும் அனங்கனுடைய மலர்க்கணைகளுக்கு இலக்காயிருக்கின்ற ஸ்ரீராமரது சிறப்புப்பொருந்திய திருத்தோள்களை, சமுத்திரத்தினிடத்துண்டாகும் அலைகளிலிருந்து தென்றற்காற்று கிரகித்துக்கொண்டுவந்து தாவுகின்ற நீர்த்துளிகள் கொல்லனது உலைக்களத்தில் துள்ளியெழுகின்ற அனற்பொறிகளைப்போல எவ்வேதுவினாலோ சுருக்குச் சுருக்கென்றுசுடத்தொடங்கியதுகள். சீதாபிராட்டியாகிய பிராணநாயகியைப் பிரிந்த துயரத்தினுல் நேற்றையதினம் பார்த்த அழகியதிருமேனி இன்றையத்தினம் பார்த்தவரது விழிகளுக்கு ரூபம் வேறுபட்டு அடையாளந் தெரியாமல் நாளுக்குநாள் இளைத்துக்காண உயிர்நிலை சோர்வடைகின்ற ஸ்ரீராமனுகியமருமகனைப்பார்த்து வாவென்றழைக்காமல், ஐயா! உன்மனத்திற்குகந்ததேவியைப் பறிகொடுத்தையா? உனக்கும் இவ்வித ஆபத்து நேரிட்டதா என்று கலங்கி மேல்விழுந்து புலம்பாமல் தன் குமாரத்தியாகிய ஜானகியை இராவணன் திருடிக்கொண்டுபோனதைக் குறித்துத் தனக்கு நேரிட்டசோகத்தினுல் மெய்மறந்து, எக்காலத்தினும் வராத என் செல்வமருமகன் மாமியார் வீடுதேடி அபூர்வமாக வந்ததையும் கருதாமல், தனக்குத் துணையா யழுகின்றவரு மில்லாமல் ஒற்றைக்குரலாய் தனித்தழுதுக்கொண் டிருக்கின்ற சமுத்திரத்தினது அலையாகிய கரங்களின்மேல் தவழ்ந்து விளையாடுகின்ற இளந்தென்றலாகிய அவள்குமாரன் இ

ங்கன்று பயமறியாதென்பதுபோல் சமயாசமயமுங் கருதாமல் அச்சமுத்திரக் கரையிலிருக்கின்ற புன்னைப் புட்பங்களின் மகரந்தப்பொடியைக் கந்தப்பொடியாக வாரிக்கொண்டு வந்து, அடிக்கடி ஸ்ரீராகவனாகிய தன் தமக்கையின் புருஷன் மேலிறைத்து மைத்துனன்முறை கொண்டாடத் துடங்கியது. சமுத்திரத்தினிடத்தில் பவளக்கொடிகள் படர்ந்திருப்பது எப்படியிருந்ததெனில்; தமது தோள்களுக்குமுன்பு இணையாகாத மேருமுதலிய பற்பல பர்வதங்களும் கொஞ்ச மிணையாகும்படி மிகுந்த மெலிவடைந்திருக்கும் ஸ்ரீராமருக்கெதிரே சத்தலோகத்தாரும் தங்கள் தங்கள் முடியின்மேல் அணியத்தகுந்த கற்புக்கிருப்பிடமாகிய சீதாபிராட்டியின் அழகிய வாயைப்போல் இணையற்றவர்களாய்த் தோன்றி பிராணனை வருத்துகின்றதுகள் ஆதலால், இவைகள் ஜீவகோடிகளைவதைசெய்கின்ற இயமன்றானேவென்று அவர் அச்சங்கொள்ளும்படியிருந்ததுகள். அச்சமுத்திரமானது என் குமாரத்தியாகிய ஜானகியானவள் நீங்காத துக்கத்தை அனுபவித்துக்கொண்டு இலங்கையில் தனித்து தவஞ்செய்வது அம்மாதின் நாயகனாகிய உமது கௌரவத்திற்குத் தகுதியாயிருக்கின்றதோவென்று கண்ணீர் ததும்புவதுபோல்வெண்மையாகிய முத்துக்களை இறைத்து கரங்களைவிரித்து மார்பிலறைந்துகொண்டு, லோகாராட்டியனாகிய இராகவன்திருவடிகளில் விழுந்து முறையிடுவதுபோல அலைகளெழுந்து சுருண்டுவிழுந்து இரைச்சலிடத்துடங்கியது. அல்லாமலும் ஆதிசேஷனது சிரசின்மேற் கிடக்கிற விசாலமாகிய பூமியே அம்மிக்கல்லாக, மேலேயெழும்பிச் சிதறுகின்ற சிதறிய திவலைகளே தெளிந்த நீராக, பரிசுத்தமாகிய நீர்க்குழவியைச் சுழற்றிச்சுழற்றி, வெளுத்தநுரையாகிய சந்தனத்தை எம்பெருமானுடைய விரகாக்கினியால் வெதும்புகின்றஅழகிய திருமேனியில் அவ்வெப்பம் தணியத்தக்கதாக எடுத்துப் பூசும்படி அச்சமுத்திரமானது அலையாகிய கரங்களால் அரைப்பதையொத்து மிருந்தது. அன்றியும் கடலானது குயிலைப் பழித்த மொழியும், அயிலைப்பழித்த விழியும், அன்னம் போன்ற நடையும், கதலித்தண்டைப்போன்ற துடையும், கன்னலைப்போன்ற மொழியும், பின்னலைப்போன்ற சடையுமுடைய சீதாபிராட்டியாருடைய மிக்க துன்பத்தையகற்றி வானவர்களுக்குண்டாகிய இடையூற்றை நிவர்த்தி செய்யும்படி கரத்திலே விஜயகோதண்டத்தை யேந்தி முதுகின் புறத்தில் அம்புப்புட்டிலைத்தாங்கி நிகரில்லாத கோபத்துடனே பகைவர்கள்மேல் போர்செய்வதற்காக வந்திருக்கும் ஸ்ரீரகுநந்தனனைப்பார்த்து மனங்களிக்கும்படி, அலைகளாகிய கரங்களைச் சிரசின்மேல் எடுத்துக்கொண்டு எதிரே ஓடிவந்து நமஸ்கரிப்பதுபோலு மிருந்தது. இவ்வித சிறப்பினைவகித்த தென்சமுத்திரக் கரையில் தசரதகுமாரனாகிய ஸ்ரீராமன்வந்து சேர்ந்து, அச்சமுத்திரத்துக்கும் ஏழுபங்கு அதிகமாகச் சவுரியமும் - வியசனமும் - ஆசையுமுண்டாகும்படி இனி என்ன விளையுமோவென்று கருதிக்கொண்டிருந்தார். இவர் இவ்விதமாயிருக்க, இலங்காபுரியிலுண்டாகிய விசேஷங்களையும் ஆலோசனைகளையும் விவரித்து உரைக்கின்றோம்.

கடல்காண்படலம் முற்றிற்று.

---

## மந்திரப்படலம்.

அநுமாரால் கொளுத்தப்பட்டு எரிந்து சாம்பலாய்ப்போன இலங்காபுரியைப் பிரமதேவர்வந்துதெய்வத்தச்சனென்னும் மயனென்பவனை அழைப்பித்து முன்போல இலங்கையைப் புதுப்பிக்கும்படி ஆக்கியாபிக்க, அம்மயன் சுவர்க்கமுதலியமூன்றுலகங்களுக்கும் மேற்பட்ட விநோதமாக, இந்திரன் குபேரன் முதலிய தேவர்கள் யாவரும் இது அமராபதியோ? அளகாபுரியோ? தேஜோவதியோ? என்று ஐயுற்று பிரமிக்கும்படி ஒருக்ஷணநேரத்தில் இலங்கையைச் சிருஷ்டித்தான். சகலலோகங்களுக்கும் எழுவகைத்தோற்றத்தி லடங்கிய ஜீவாத்துமாக்களுக்கும் சிருஷ்டி கர்த்தாவான பிரமதேவரே இப்படிச்செய்யென்று அதனதன் லட்சணங்களையெல்லாம் குறிப்பாகக்காட்ட அவர் கருத்தைப்போலவே அம்மயன் சிருஷ்டித்ததால், இகழ்ச்சியில்லாத உலகங்களையெல்லாம் அழித்தழித்துச் சிருஷ்டிக்கின்ற பிரமனுக்கு செய்தற்

கரியதும் ஒன்றிருக்கின்றதோ? இப்படி ஆயிரத்தெட்டு மாற்றுவகித்த சாம்பூநதமென்று சொல்லும் பொன்னினாலும், நவரத்தினங்களாலும், புதிதாய் வெகுவிநோத விச்சித்திரமாகச் சிருஷ்டித்த அலங்காரத்தை வகித்த இலங்காபுரியை இராவணன் மந்திரிமார்களுடன் வந்து பார்த்து சந்தோஷப்பட்டு,இந்நகரம்தேவலோகம் நாணத்தக்க அழகைப்பெற்று, முன்னிலும் அதிக சிங்காரமாயிருக்கிறதென்று மந்திரிகளுக்குச் சொல்லி முன் லங்கையெரிந்து சாம்பலானதைக்கண்டுமனம் பதைத்து தான்கொண்ட கோபந்தணிந்து அதிக மகிழ்ச்சியுடையவனானான். இலங்கைப்பட்டண முழுதும் செவ்வையாகப் போய்ப்பார்த்து சந்தோஷத்தையடைந்த இராவணேஸ்வரன் அந்தப் பிரமதேவருக்கு விதிப்படி பூசைசெய்து, மயனென்னும் தேவதச்சனுக்கும் மகிழ்ச்சியுண்டாகும்படி கிடைத்தற்கரிய பலவித வஸ்திராபரணங்களும் வெகுதிரவியங்களும் வெகுமதி கொடுத்தனுப்பினான். பின்பு பிரகாசத்தையுடைய மாணிக்கங்களாலும் நவரத்தினங்களாலும் செய்த பதின்மூன்று லட்சந் தூண்கள் நிறுத்தி வெகு விநோதமாகப் புதுக்கிய மண்டபத்தில் சிங்கங்கள் சுமக்கும் விநோதமாகிய ஆசனத்தில் பெருமை பொருந்திய இராவணேஸ்வரனானவன் போய், மந்திரிமார்களும் சுற்றத்தார்களும் சேனாதிபதிகளும் தன்னைச் சூழ்ந்திருக்க, மார்பிலணிந்த நவரத்தினப்பதக்கங்களும், வாசனைபொருந்திய மலர்மாலைகளும், அசையத், தேவஸ்திரீகள் இருபுறத்திலும் சாமரைவீசும்படி அமர்ந்திருந்தான். அத்தருணத்தில் ஆலோசனைசெய்ய நினைத்து, அவ்விடத்திலுள்ள முனிவர்கள் - தேவர்கள்-ஸ்திரீகள்-பாலியர்கள்-அன்னியர்கள் முதலிய தன் சபைக்குத்தகாத சகலரையும் அப்பால் போகச்சொல்லி சகல சாஸ்திர பண்டிதர்களையும், வெகுகாலமாகத் தன்னுடன் நேசித்திருக்கின்றவர்களையும்,வயதில் முதிர்ந்தோரையும், தன் புத்திக்குத்தகுந்த குணசாலிகளையும், மகோதரன் முதலிய மந்திரிகளையும், அழைப்பித்துத் தன்னருகில் உட்காரும்படி ஆக்கியாபித்தான். அன்னியர்கள் கல்விகேள்விகளில் மிகுந்த வல்லமையுடையவர்களா யிருந்தாலும் அவர்களையெல்லாம் அவ்விடத்திலிருந்து நீக்கி, காற்று வண்டு முதலியவைகளும் அம்மண்டபத்தினுள் நுழையாமல் விலக்கும்படி சேவர்களுக்கு உத்தரவுகொடுத்து; அம்மண்டபத்தைச் சுற்றிலும் காவற்காரரைவைத்து யாராவது ஒண்டியிருந்து நமது இரகசியத்தைக் கேழ்க்கப்போகிறார்கள். ஜாக்கிரதையாகக் காருங்களென்று ஆக்கியாபித்தான். அக்காவற்காரரது பராக்கிரமத்தைச் சொல்ல ஆதிசேஷனாலு முடியாதெனில் யாரால் சொல்லக்கூடும்? உலகத்திலுள்ள வீரர்களெல்லாம் ஒன்றாகக்கூடி எதிர்த்து வந்தாலும் உள்ளங் கையிலிட்டு மூட்டுப் பூச்சிகளைப்போல நசுக்கிப்பிசைந்தெறியத் தகுந்த வல்லமையை யுடையவர்களாதலால், அவர்கள்காவலில் பக்ஷிகள் மிருகங்கள் முதலிய பலவித ஜெந்துக்களும் பயந்து வாயைத்திறவாமல், அததுகள் இருந்தவிடத்திற்றானே கல்லினாற்செய்த பதுமைகளைப்போல் அசைவற்று நின்றுவிட்டதுகள். செவிகளில் தரித்த மாணிக்கக் குண்டலங்களும், தோள்களிலணிந்த நவரத்ன வாகு வலயங்களும், மார்பிற்றரித்த கிரீடங்கள் இருளைமிரட்டித் துரத்தவும், சபையினடுவில் சிம்மாசனத்தில் வீற்றிருந்த இராவணன் தன்கருத்தை வெளியிடும்பொருட்டு சொல்லலுற்றனன்.

ஓ மந்திரிமார்களே! ஒரு குரங்கினாலே அழியாப் பெயர்பெற்ற எனது இலங்காபுரிபட்டணம் அழிந்து போயிற்றல்லவா. இதைவிட நமக்கு இனிமேல் உண்டாகும் மானக்குறைச்சல் என்ன இருக்கின்றது? என்னுடைய சௌரியமும், அழியாத சம்பத்தும் அழகாயிருக்கின்றன. அதல்லாமல் அந்தக்குரங்கு சுட்டுச் சூறையாடினதால் நமது பட்டணம் வெந்து சாம்பலானது. பந்துக்களும் சேனைகளு மடிந்தார்கள். எங்கும்மிகுந்த சுடுநாற்ற முண்டாயிற்று. ஒருகுரங்கால் இப்படிப்பட்ட அனர்த்தம்விளைந்தும் என்சரீரம் சாகாமலிருக்கின்றதல்லவா? இன்னும் கிணறு துறவுகளில் உதிரவூற்றுச் சுரந்து கொண்டிருக்கின்றது. அக்குரங்கிட்ட தீ ஆறவேயில்லை. பெண்டுகளின் தலைமயிரெல்லாம் அகிற்புகை நீங்கிச் சுடுநாற்றம் நாறிக்கொண்டிருக்கின்றது. நல்லது வேறொன்றில்லாமற் போயினும் இலங்கையைக் கொளுத்தி நா

இராவணன் மந்திராலோசனை.

விபீஷணன் அடைக்கலம்.



வருணன் அடைக்கலம்.

சஞ்செய்து சந்தோஷத்துடனே போன குரங்கு மரணமடைந்த தென்னுஞ் சொல்லாவது நமதுகாதில் கேட்கலாகாதா? அதுவுமில்லை. ஆகையால் நாமெல்லாம் உயிரோடிருந்தும் இறந்தவர்களை யொத்தோமேயல்லது நமதெண்ணப்படி முடித்தோமா? நமதுபெருமை குறைந்ததுமன்றி அபகீர்த்திக் காளானேமென்று இவ்விதமாக இராவணன்சொல்ல, பிரகஸ்தனென்னும் சேனாதிபதியெழுந்து நமஸ்காரஞ்செய்து, சுவாமி! நானொரு விண்ணப்பஞ்செய்கிறேன். அதைத் தேவரீர் கிருபையோடுகேட்டருள வேண்டுமென்று சொல்லலுற்றனன். இராமலட்சுமண னென்னும் மனிதர்களை மோசஞ்செய்து அவர்களுடைய ஸ்திரீயை எடுத்துக்கொண்டுவருவது பலமில்லாதவர்கள் செய்கிற காரியமென்று நான் முன்னமே தெரிவித்தேன்.

சகல சங்கதியையும் நுட்பத்தில் அறியத்தக்க புத்தியையுடைய தேவரீர், அது அற்பர்கள் செய்கிற செய்கையென்று அடியேனுக்குத் தெரிந்து சொன்னதாகக் கருதாமற்போனீர். அம்மனிதரோ கரதூஷணத்திரிசிரர்களைக் கொன்ற திருடர்கள். அதல்லாமலும் உமது தங்கை சூர்ப்பனகியை மூக்கையும் முலையையும் அறுத்த வீரர்கள். ஒரு சிறிய குரங்கைத் தூதனுப்பி அக்ஷன்முதலிய நமதுபடைத்தலைவர்களைக் கொன்று வெகு பொல்லாங்கை யுண்டாக்கினவர்கள். அப்படிப்பட்ட துன்மார்க்கர்களை அப்போதே கொல்லாமல் விட்டுவிட்டு, இப்போது இலங்கைப்பட்டணம் அழிந்ததென்று விசனப்படுகின்றீர். சாம-தான-பேத-தண்டமென்னும் நால்வகைத் தந்திரத்தில் வலியர்க்குரிய தண்டமென்னும் போர்செய்து பகைவர்களை நாசஞ்செய்யாமல் அசட்டை பண்ணலாமோ? எதிரிகளுடைய கர்வத்தையடக்கி இராஜரீகம்செய்யும் வல்லமையையுடைய நாம் அம்மனிதர்களையும் குரங்குகளையும் வணங்கியா பிழைக்கப்போகின்றோம்? இந்நாள் பரியந்தம் உம்மோடு எதிர்த்த தேவர்கள் அசுரர்கள் முதலியவர்களை வெற்றிகொண்டு புறமுதுகிட்டு ஓடும்படிசெய்து திரிலோகாதிபதியாய் அரசுசெய்துக்கொண்டு வந்தது உமது வீரத்தினாலோ? அல்லது சாந்தத்தினாலோ? சொல்லும். பகைவர்களை அதம்பண்ணாமல் இவ்விலங்கையை ஆண்டுகொண் டிருப்போமாகில், அந்தக் குரங்கின்மட்டிலேபோமா? ஒரு கொசுகு வந்து உபத்திரவஞ் செய்யினும் அதை விலக்கமுடியுமோ? இவ்வூரை யெரித்துப் போன குரங்கையும் அக்குரங்கை யனுப்பிய மனிதர்களையும் கொல்லாமல் இன்னும் சும்மாயிருக்கிறோம். இதை வாயினாற் சொல்லிக்கொண்டும், மனதில் நினைத்துக் கொண்டும் இருப்போமாகில் நமது ஆண்மைக்குப் பலவிதத்திலும் இகழ்ச்சிவருமென்று பிரகஸ்தன் சொன்னவுடனே மகோதரனென்னும் முதல்மந்திரியானவன் கண்கள் சிவந்து இராவணனைப்பார்த்து ஐயா! சேனாதிபதி சொல்லியவைக ளெல்லாம் எதார்த்தந்தான்; நான் சொல்வதையும் சற்றே கவனமாகக் கேளுமென்று சொல்லத்தொடங்கினான். தேவரீருடைய வீரப்பிரதாபத்திற்குப்பயந்து தேவர்கள் ஒடுங்கிப்போனார்கள். சித்தர்கள் சிதறினார்கள். அசுரர்கள் வீரத்தை யிழந்தார்கள். சகலரும் தங்கள் தங்கள் கடவுளர்களென்று வணங்குந் திரிமூர்த்திகளும் பயந்து எவ்விடத்திலோ ஒதுங்கிக்கிடக்கிறார்கள். இன்னும் விவரித்துச் சொல்லவேண்டியது என்னவிருக்கிறது? மனிதர் முதலிய ஜீவஜெந்துக்களின் உயிரைவாங்கும் புஜபலத்தையுடைய யமனும் உம்மை தன்னுயிருக்கு எமனென்று கருதி உமது கட்டளையைச் சிரமேற்கொண்டு நீரிட்ட வேலைகளைச் செய்துகொண்டிருக்கின்றான். உருத்திரமூர்த்தியுடனே கைலாயகிரியை வேருடனேபிடுங்கி ஆகாயத்தைமுட்ட அழகிய கையாலெடுத்து அட்டகாசஞ்செய்த பிரபல்லியத்தையுடைய தேவரீர் வனங்களில் சஞ்சரிக்கும் ஒரு குரங்கினுடைய பராக்கிரமத்தை விசேஷமாகச்சொல்லி உமது புஜபலத்தை இளைத்ததாக எங்களுடன்சொல்லுகிறீர். தேவலோகமுதலிய உலகங்களில் உம்மோடெதிர்த்து புறமுதுகிட்டோடிப் போகாத வீரர்கள் ஒருவருமில்லையே. இப்படியிருக்க அந்தச் சொற்பமானவர்களைக் குறித்து இவ்வளவாக ஆலோசிக்க வேணுமா? இனி நீர் இப்படிக்கெல்லாம் துக்காக் கிராந்தராய்ப் பேச வேண்டாம். நானும் தடையென்பதுசொல்வதேயில்லை. ஆகையால் இப்பொழுது எனக்குச்செலவு

கொடுத்து என்னை அனுப்பினீரேயாமாயின் இக்கணமே அந்தக் குரங்கினுடைய குலத்தை நிர்மூலஞ்செய்து ஒடுங்காத வலிமையையுடைய அம்மனிதருடைய உயிரையுமுண்டு, உம்முடையபகையை நானே முடித்துவிடுவேன் என்பதாய்ச் சொன்னான்.

இச்சொல்லை அவன் சொல்லி முடிப்பதற்கு முன்னமே வஜ்ஜிரதந்தனென்று சொல்லப்பட்டவன் தன்னுடையபற்களைக் கடித்து இரத்தத்தைப் பொழிவதுபோல கண்களானது சிவக்கும்படி சொல்லுகிறான். ஓ திரிலோகபயங்கரனே! நீபோய் மனிதரையும் குரங்கையும் தரையிலிட்டுக் கைகளால் தேய்த்துத் தின்றுவிட்டுவாவென்று என்னையேவி நீர் இவ்விடத்தில்தானேயிராமல் வெகுதூரம் ஆலோசித்து ஆராய்கின்றதென்ன? என்னிடத்தில்ஏதாவது உமக்குச் சந்தேகமுண்டா? முன்பு எந்த உலகத்திலேயும் உம்முடைய ஏவலைக்கேளாத சத்துருக்களைக் கருவறுத்துச் சகலமானபேரையும் உமக்கு அடிமையாகும்படி செய்த நான், எந்தவிடத்திலேயோ? ஏதோ ஒரு காரியத்திலே தவறிப்போனதாய் நினைத்தோ? இக் காரியத்தை என்னை முடிக்கச்சொல்லிஎனக்கு உத்தரவு செய்யாமலிருக்கின்றீரென்றான். அப்படி சொன்ன வஜ்ஜிரதந்தனென்பவனை நீ யதற்குத் தக்கவனல்ல, நில்லென விலக்கித் துன்முகனென்பவனெழுந்து இராவணேஸ்வரனைப்பார்த்து நீரிவற்றை என்முன்னும் பலவீனரைப்போல சொல்லுகின்றீரோவெனக் கைகூப்பித்தொழுது சொல்லத்தலைப்பட்டான். அஷ்டகஜங்களும் உம்மை ஜெயிக்கத்தக்க பலமுடையதுகளல்ல. தேவர்களும் பலத்திலே எளியவர்கள், முக்கண்ணினைப் படைத்த சிவனுடைய கைலாயகிரியும் பலமற்றதாய் இரானின்றது. அவையெல்லாம் அப்படியிருக்க, இனி மனிதரும் குரங்குமே பலத்திலே மிகுந்தவரானால் திரிலோக கண்டகனாகிய இராவணேஸ்வரனுக்கு உண்டான பலமெல்லாம் அங்கேதான் சிறப்பாயிரானின்ற செய்கைகள் அனேகமாயிருக்க எப்போதும் அற்பச்செய்கையே சிறியவர்களுக்கு உரியதாயிருக்கின்றது. ஆகையாலே நம்முடைய சத்துருக்கள் பலத்தையுடையவர்களென்றாலும் நாம் அவர்களுக்கு பயந்து நம்முடைய உயிரினிடத்தில் இச்சை வைத்துக்கொண்டு பின்னிடுகிறதா? இப்பொழுது ஆலோசித்த ஆலோசனை பூமியிலே சஞ்சரிக்கப்பட்ட மனிதர்களையும் குரங்குகளையும் நாம் உண்ணுகிறதற்கு ஏற்றதாகவே யிருக்கின்றது. அப்படியே உண்ணுகிறதற்காக நாம் அஞ்சுவோமானால் அப்புறம் இராக்ஷதர்களைப் பார்க்கிலும் கீழ்ப்பட்டவர்கள் யாரிருக்கின்றார்கள்? நம்முடைய நகரத்தின் வாயிலைக்கடந்து உள்ளேவருவதும், நாம் குடியிருக்கும்படியான ஊரிலே நெருப்பைவைப்பதும், எதிர்த்தோர் இறக்கும்படிச் சண்டையைச்செய்து போவதும், குரங்குக்கு எளிதாய்இரானின்றது. இராக்ஷதருக்குக் கடலை நீந்துகிறதே அரிதாய் இருக்கின்றது. இந்தமட்டும் வந்துஉம்முடைய அரண்மனையையும் கோட்டையும், மிதமில்லாத சேனையையும், உம்முடைய வீரத்தையும், அச்சமில்லாமல் கண்ணினால் பார்த்து, மனதினால் மதித்துப்போய், யார்தான் உலகத்திலே உயிர்தப்பிப் பிழைத்திருக்கிறார்? பொருந்திய காரியத்தையே நினைத்தாலும், உறுதியையே ஆலோசித்தாலும், ஜெயிக்கத்தக்கதையே விரும்பினாலும், போர்த்தொழிலைச் செய்யத்துணிந்தாலும், அவர் இருக்குமிடத்திற்போயல்லவோ ஆகவேண்டியது. ஆகையால் அவ்விடத்திலேபோய், அவர் நிர்மூலமாகும்படிக் கொல்வதே காரியமென்று தெரியும்படியாய்ச் சொன்னான். அந்தத் துன்முகனை லங்காதிபதியின் கண்ணுக்கு எதிரே கையமர்த்தி மகாபாரிசன் என்கிற பராக்கிரமத்தையுடைய மந்திரியானவன் சொல்லுகிறான். கோபமும்சாமர்த்தியமும் குரங்குக்கேயல்லாமல் இனி நமக்கு என்ன இருக்கின்றது? முன்னே அக்குரங்குடனே பலமில்லாத சிலபேர் யுத்தம்செய்து மடிந்துபோனரே; அவருடனே நம்முடைய புஜபலபராக்கிரமமெல்லாம் போய்விட்டதா? அல்லது குரங்கானதுவைத்த நெருப்பினாலே வெந்துபோன இலங்கையுடனே கூட இராக்ஷதருடைய ஆண்மையும் வெந்துதான் போய்விட்டதா? மனிதர் சுயேச்சையா யேவுவதும், குரங்கானது வந்து இந்த ஊரைக்கொளுத்துகிறதும், இராக்ஷதசேனையை மடிப்பதும், அதினுடைய

நிமித்தம் மற்றவரெல்லாம் விசனப்பட்டுக் கூட்டங்கூடி ஆலோசிப்பதுமாகி, அப்பால் நடக்கவேண்டியதைக் குறித்துச் சொல்ல வேண்டுமா? இப்படிக்கெல்லாம் இருந்திருந்து இவற்றை ஒருவரோடொருவர் ஆலோசனை பண்ணவும், வாயினாலே சொல்லவும், எனக்குச் சம்மதியாயிருக்கவில்லை. அற்ப மனிதரையும் குரங்கையும் கொன்றுதின்றாலொழிய ஒரு எண்ணமும் கைகூடிவராது என்பதாய்ச் சண்டைசெய்யவே யத்தனப்பட்டு அதிக கோபமாய்ச் சொன்னான். அவனுக்குப் பின்புபிசாசனென்று பெயர்பெற்றவன்; நம்முடைய இராஜாவானவர் செய்யா னின்றதைப் பார்த்தால் வீணாகயோசிக்கிறதும், சரீரமானது குன்றாகிறதுமா யிருக்கின்ற காரியமேயல்லாமல் ஒன்றும் சாரமில்லாதபடியினாலே நாமெல்லாம் பட்டணத்தைவிட்டுப் பல திசையிலும் போய் நம்முடைய வாழ்வை ஒழித்துவிட வேண்டியதாக நேர்ந்ததென்று நெருப்பானது பொங்கியதுபோல்பொங்கிச்சொன்னான். அவன் சொன்னவுடனேசூரியசத்துருவென்பவன் நம்முடைய இராஜாவின் குணமோ இப்படியிருக்கிறது இவருடைய ஆலோசனையும் ஒருவிதமாய் இரானின்றது. ஆகையால் காணுமிடத்தில் மனிதரே பெரியோரும் நாம்சிறியோருமாய்விட்டோம். இனிவேறென்ன இருக்கின்றதெனச்சொன்னான். அதற்குப் பிற்பாடு யாகசத்துருவெனச் சொல்லப்பட்டவன் இராட்சதர் யுத்தஞ்செய்வதிலும் பலத்திலும் தாழ்ந்தவரா? இது ஒருவராலே சொல்லத்தக்கதா? மனிதரைக் குறித்துச் சகலரும் கூடியிருந்து மந்திராலோசனை செய்கிறமட்டும் வந்துவிட்டதே. ஆ! ஆ! நன்றாயிருக்கிறதென்று சொன்னான். அதன்பிற்பாடு தூமாட்சன் குரங்கின் கூட்டத்தையுடைத்தா யிருக்கின்ற மனிதரை நாங்கள் ஒருபொருளாய்ச் சொல்லமாட்டோம். மேலும் சூலப்படையையுடைய ருத்திரனைக் குறித்துச் சொன்னாலும் இலட்சியஞ் செய்யமாட்டோம். எப்படியாயினும் அவரைக்கொல்லுகிறதே யுக்தமென்று சொன்னான்.

அவனுக்குப் பிற்பாடு மற்ற மந்திரிமாரும் இதுவே யுக்தமென்று புற்றிலிருக்கிற சர்ப்பங்களைப்போல மனம்புழுங்கி அவரவர் இருந்த விடத்திலிருந்து சொன்னார். இந்தப்பிரகாரம் அதிககோபாவேசமுடையவராய்ச் சொன்ன மந்திரிமார் யாவரையும் நீங்களெல்லாம் காரியாகாரியம் தெரியாமற்படிக்குப் பேசாநின்றீர். சும்மாயிருங்களென்பதாய்த் தடுத்துத் தன்னுடைய தமையனான தசக்கிரீவனைப்பார்த்து, நான் இதமான சில வார்த்தைகளைச் சொல்லுகிறேன். கேளும் அண்ணாவென்று அவனுடைய நேரிளைய தம்பியான கும்பகர்ணனென்பவன் சொல்லத் தொடங்கினான். ஐயா! நீர் சிரேஷ்டமான பிர்மகுலத்திலே உற்பவித்தீர்; சகஸ்திர வேதங்களையும் ஓதி அவற்றினுடைய அர்த்தத்தையும் தெளிந்து ஞானோத்கிருஷ்டரா யிருக்கின்றீர். இப்படிப்பட்ட நீர் பாபகிர்த்தியத்தை விரும்பிச் செய்ய ஏற்பட்டீர். சித்திரவிசித்திரமா யிராநின்ற மகாபட்டணத்தை அக்கினிதத்தமாகும்படிச் செய்தீர். என்னுடைய இராஜரீக மழிந்துபோய் விட்டதென்று வருத்தப்படுகிறீர். இராஜதர்மம் தப்பி அந்நியகுலத்தா னொருவனுடைய பெண்ஜாதியை இச்சித்து எடுத்து வந்து சிறைவைத்தீர். ஆதலால் இந்தப் பாபகர்மமொன்று மாத்திரமா சூழப்பெற்றீர். மேலும் கொடிய பாபாத்மாக்கள் அடையத்தக்க மகத்தான பழியையும் அடையப்பெற்றீர். இதைப்பார்க்கிலும் அதிகமாகிய பழிவேறுண்டா? இப்பொழுது நகரமானது அழிந்து போய்விட்டதென்று வெட்கப்படுகிறீர். உம்முடைய பிராணனுக்குச் சமானமான தேவிமார்களெல்லாம் உம்மைக் குறித்து அடிக்கடிக்குச் சிரிக்கும்படி ஒருவனுடைய பெண்சாதியாயிருக்கின்றவளுடைய காலிலே நீர்போய் விழுந்து விழுந்து வணங்க, அவள் வைதுமறுக்கும்படியா யிருக்கின்றதே; இதைப்பற்றி நாணமில்லையா? இதுவென்ன கீர்த்தியா? என்றைக்கு ஒருவருடைய மனையிடத்திலிருந்த பதிவிரதையைக் கொண்டுவந்து இரங்காத கடினசித்தமும், அதற்குத்தக்க கடினச்செய்கையு முடையவனாய், முறையழிந்து சிறைவைத்தாயோ? அன்றைக்கே இராக்ஷதருடைய பெருமையானது குலைந்துபோயிற்று. அபகீர்த்தியையுடையவரும் புகழைப் பெறுவதுண்டோ? குற்றமற்றபரதாரத்தை எடுத்துவந்து சிறைவைத்த நீர்

தோஷமில்லாத கீர்த்தியை இச்சிக்கின்றீர். வாய்மாத்திரம் டம்பமாய் வீரம்பேசாநின்றது மனிதரென்பதைக்குறித்து அபிமானமும் வாதிக்கின்றது. ஆகையால் நம்முடைய பிரதாபம் நன்றாயிருக்கின்றது. உயர்ந்தவரெனச் சொல்லப்பட்டோர் செய்வதற்குரிய நல்ல செய்கையைச் செய்யவில்லை. நம்முடைய இராக்ஷதகுலத்திற்கேற்ற துஷ்கிர்த்தியமே செய்தீர். இனி அந்தச் சீதாபிராட்டியை விட்டுவிட்டோமாலும், நாம் பராக்கிரமத்திலே மிகவும் இளைத்தவராய்ப் போகிறோம். அதைவிட அவர்கையாலே மாண்டுபோனாலும் நல்லதாகும். அது பழிப்பானகாரியமாகாது. ஆரணியத்திலே தனக்கு உபபல மில்லாமலே ஒருவனாகவே யிருந்து வில்லைவளைத்து கரதூஷணதிரிசிரரெனச் சொல்லப்பட்டவருடைய சேனைகளை நாசமாக்கி, அவரையும்கொன்று வென்று களைபறித்தான். அப்பேர்ப்பட்ட விஷயமும் அவனுடையசாமர்த்தியத்துக்குப் போதுமானதல்ல. இனி நமக்கும் அந்தக்கதிதான் ஆகப்போகின்றது. அதற்குமேல் நமக்கு என்ன உறுதியுண்டு? அம்மானிடர் நம்மை ஜெயிக்கத்தக்கவரானாலும், சாரமில்லையென்பதாய் நினைத்து, நாம் விலகிநில்லாமல் அவர்மேல் படையெடுத்துப்போய் நெருங்கி யுத்தமெனப்பட்டதைச் செய்து, அவரைக் கொல்லாமல் போய்விடுவோமே யாமாயின், தேவர் முதலாய்ச் சொல்லப்பட்ட ஏழுலகத்தாரும் ஒருமிக்க அந்தப்பகைவருடனே கூடிக்கொள்வார். அந்தப்பிரகாரம் அவருக்குப் படைத்துணை சேர்வதற்கு முன்னமே ஒருநொடிப்பொழுதிலே நாம் கடலைத் தாண்டிப்போய் அம்மனிதருடைய வானரரெல்லாம் வேறோரிடத்திலே ஓடிப்போய் விடாமற்படிக்கு வளைத்து வேருடனே மடிந்துபோகும்படியாய்ப் பஸ்மீகரப்படலஞ் செய்வதே காரியமென்று சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்டு இராவணேஸ்வரனானவன், தம்பி கும்பகர்ணா! நீ நல்ல உபாயஞ்சொன்னாய். நானும் இப்படியேதான் ஆலோசனைசெய்தேன். இதைவிட்டு இனி வேறொருயோசனைசெய்கிறது காரியப்பழுதாய் முடியும். இந்தநொடியிற்போய்ச் சத்துருக்களையெல்லாம் கொன்று குவித்துவிட்டு வருவோம். நம்முடைய சேனாசமுத்திரத்தை யெல்லாம் இப்பொழுது பிரயாணப்படுத்தும்படிச் செய்யக்கடவாயென ஆக்கியாபித்தான். இப்படியாய்ப் பிரதாப இலங்கேஸ்வர னென்னப்பட்டவன் சொல்லியபொழுது, ஐயா! சேனையுடனே நீர்போயல்லவா மனிதருடனே எதிர்த்துச் சண்டையிட்டு அவரை ஜெயித்துவருகிறவர்? அப்படியாயின் எம்முடைய வீரம் நல்லதாகுமெனச் சிரித்து, ஜேஷ்ட புத்திரனாகிய இந்திரஜித்து சொல்லத் தொடங்கினான். உமாபதியானவர் கொடுத்தவரத்தையும், ஆயுதத்தையும், பிரமதேவர் கொடுத்தவரத்தையும் ஆயுதத்தையும் நாகபாச முதலானவற்றையும் வீணே சுமந்துகொண்டு, இங்கேயிருக்கின்ற பலபெயரும் ஏசுகிற யிழிவாயிருக்கப்பட்ட சொல்லிற்கு இளையாமல் உழல்கிறவனாய் நானும் ஒருவனிருக்கிறேனல்லவா? திரிலோகமும் அவற்றைச் சிருஷ்டித்து இரக்ஷித்துச் சங்கரிக்கிறவரான திரிமூர்த்தியெனச் சொல்லப்பட்டவருடனே கூடிவந்து உம்முடனே எதிர்த்துச் சண்டை செய்தாலும் என்னை அனுப்பும். உமக்கு நான் ஜெயப்பிரதாபத்தைச் சம்பாதித்துக் கொடாமற்போவேனேயானால் நீர்என்னை பெற்றதுமில்லை. நான் உமக்குப் பிள்ளையாய்ப்பிறந்ததுமில்லை. குரங்குகளிறந்துபோகவும், பூமிமுழுதும் என்னாலே குறைத்துத்தள்ளப்பட்ட தலைகளால் மறைபடவும், போர்க்களமானது அதமாகவும், ராமலட்சுமணர்களாகிய மானிடர்கள் மிகவும் வருத்தப்படவும், சீதையானவள் மெய்பதைத்துத்துக்கப்படவும், அவ்விருதிறத்தாருடைய சிரசுகளையும் கொய்துகொண்டு வருகிறேன்பாரும். இனிச்சொல்லினாலே காலத்தைக்கழிக்கவில்லை. சுருக்கத்திலே முடித்துவிடுகிறேன். குரங்குகள் மலையைப்பிளக்கும்படியாய் விசைகொண்டுஇடிந்துவிழுகிற வல்லிடியைப்போல கடுமையானது தோன்றும்படி என்னுடைய வில்லிலே பூட்டிப் பிரயோகிக்கப்படுகிற உக்கிரமான பாணத்திற்குப்பயந்து, பல்லை இளித்துக் கொண்டு இந்த அண்டத்தைத் தாண்டி ஓடுகிறதைகண்டு மெச்சும். ஆனைப்படையில்லாதவர் தேர்ப்படையில்லாதவர் புரவியெனச் சொல்லப்பட்ட படையில்லாதவர்

ஆட்படையு மில்லாதவர் நம்மைப்போல வாழும்பெருதவர் கையிலே ஒருபொருளு ம்இல்லாதவர் கூனிய முதுகையுடைய அற்பமாகிய குரங்குகளைக் கூட்டிக்கொண்டு நம்மை வெல்ல நினைக்கின்றவர்களோ மானிடர்களா யிருக்கின்றார்கள்.

ஆகையால் நமது ஆண்மையானது அழகா யிருக்கிறதல்லவா? பிருதிவியெனவும், அப்புவெனவும், தேயுவெனவும், வாயுவெனவும், ஆகாயமெனவும், சொல்லப்பட்ட பஞ்சபூதங்களும்; அப்பஞ்சபூத காரியவுலகங்கள் யாவும் ஒரு நிமிஷத்திலே நிலைகுலையும்படி மானிடர்களுக்குள்ளே ஒருவரும் தவறாமல் குரங்குகள் முதலற்றுப்போகும்படியாகவும்; நாசஞ்செய்யாமல் நான் மீண்டுவரப் போகிறதில்லை யென்பதாய் உறுதியாய்ச் சொல்லிப் பிதாவினுடைய பாதத்தை வணங்கியெழுந்து, எனக்கு விடைகொடுக்க வேண்டுமென்று மிகவும் பணிவாகச் சொல்லினன்.

அவ்விதமாய்ச் சொன்னமாத்திரத்திலேதானே அதிக கோபம்கொண்டு வாயிலுள்ள பற்களைக்கடித்து உயிரை வருத்துகின்ற சகல தீவினையையும் வென்ற பெரியோர்களுக்குள்ளே விசேஷமாக மதிக்கப்படுகின்ற விபீஷணரானவர் அந்த இந்திரஜித்தைப் பார்த்துச் சொல்லுகிறார். அப்பா! சகலமான சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த அதிநுட்பமாகிய அறிவினையுடையவரும், மேலாகியபொருளை அறியும்படியான பெருமையினை யுடையவரும்போல பேசவந்தையே. மேலே வரும்படியான காரியத்தைக் கண்டறியும். கல்வியில்லாத சிறுபிள்ளையாகிய நீயா இந்தவிஷயங்களைக்குறித்துப் பேசுகிறவன்? நீபேசுகின்றது எப்படியிருக்கிறதென்றால்; விவேகமில்லாதவனும் கண்ணில்லாதவனுமாகிய ஒருவன் தன்னுடைய கையினால் எழுதப்பட்ட சித்திரம்போலிருக்கின்றது. முதிர்ந்த வயதினையும்பேரறிவையுமுடையவர் கூடி மந்திராலோசனை செய்யும்படியான இந்தக் கூட்டத்தில் நீ முன்னே சேர்ந்திருக்கலாமா? பாலியத்தினாலே அந்தக் கிரமத்தை எண்ணாமலிருக்கின்றாய். நிர்மலசித்தத்தையுடைய பெரியோர் எப்பொழுதும் கிரமமாகவே நடந்து கொள்ளுகின்றனர். அவ விருக்கட்டும். பாபாத்மாக்களாய் இருக்கின்ற அசுரர்முதலானவர் புண்ணியாத்மாக்களென்று சொல்லப்பட்ட தேவராய்ச் சிரேஷ்டப் படுகின்றது தர்மத்தினாலேயோ? அல்லது மாயையினாலேயோ? அல்லது வஞ்சனையினாலேயோ? அல்லது தங்களுடைய பராக்கிரமத்தினாலேயோ? நீதர்மத்தைக் கைவிட்டுத் தேவர்களை ஜெயித்த உன்னுடைய பராக்கிரமச்செய்கையை ஆலோசித்து அறியுமிடத்தில் அதுவும் அபூர்வம். நெறிதவறாமற் செய்த தவத்தினாலும், வைரத்தைவிட்டு அந்தப்பிரமாதி தேவர்கொடுத்த வரத்தினாலுமே இன்னமும் பொல்லாதவர் அநேகர் மும்மூர்த்தியையும் வென்று மூன்று லோகத்தையும் பூரணமாய் அரசாண்டு கொண்டிருந்தும் கர்வமானது அதிகரிக்கும்படி மரணமே முடிவாக இறந்துபோனாரே யல்லாமல் நியாயமாய்த் தேவரெனச் சொல்லப்பட்டவரை வென்றவர் யாரிருக்கிறார்கள்?

முனிவர்களுக்குள்ளேயும் தேவர்களுக்குள்ளேயும் முன்னும் பின்னும் இருவினைகளையும்கடந்து மேலாயிருக்கப்பட்ட மோட்ச சாம்பிராஜ்ஜியத்தை அடைந்தவர்கள் எத்தனை பெயரென்று அளவிட்டுச் சொல்லுவோம்? மற்றவர்கட்குள்ளே யார்தான் அவ்விதமாய்ச்செய்தார்கள்? சிறுபிள்ளையா யிருக்கின்றபடியாலே இவ்விதமாய்ச் சொல்லினை. நீ புத்தியில்லாதவ னென்பதாய் மகனை அதட்டித் தமையனான இராவணனைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினன்.

சுவாமி! என்னுடைய வார்த்தையை இகழ்ச்சிசெய்யாமல் கேட்பீரே யாமாகில் தெளிவான நல்ல சொற்களைச் சொல்லுகிறேனென்று சொல்லத்தலைப்பட்டார். எனக்குத் தந்தையும் நீரே; தாயும் நீரே; தமையனும் நீரே; நான் பூசிக்கின்ற சாட்சாத் தெய்வமும் நீரே; தவமும் நீரே; மற்றும் சகலமானவையும் நீரே. ஆகையால் உம்முடைய இந்திரபோகமாகிய வைபவத்தை இழந்துவிடுகிறீரென்று மிகவும் மனமெலிந்தேன். அதனால் உமக்கு நான்சொல்ல ஏற்பட்டேன். பல நூல்களையும் கற்றும் அமைந்ததன்மை என்னிடத்தில் இல்லாமற்போனாலும், சாத்தியமாகத்தக்க விஷயத்தை ஆலோசியாவிட்டாலும், உபாயதந்திரத்தை நிச்சயித்துச் சொல்லாதிருந்த பொழுதிலும், நீர் என்னுடைய சொல்

முழுமையும் கேட்டபிறகு வேண்டுமானால் என்மேல் கோபித்துக் கொள்ளும். சிலாக்கியமான நம்முடைய நகரமும் உம்முடைய பிரதாபமும் ஜானகியென்கிற லோகமாதாவினுடைய கற்பினாலே வெந்ததே யல்லாமல் ஒரு குரங்கானது சுட்டதென்பதாய் நினைக்கிறது என்ன பெருமை? யோசிக்குமிடத்தில் எவர்களுக்கானாலும் ஆபத்தும் சம்பத்தும் பெண்ணாலும் பொன்னாலும் மண்ணாலுமல்லது வேறொன்றால் வரத்தக்கதுகளோ? கடல் சூழ்ந்த இலங்கைக்குத் தலைவன் பூர்வம் அருமையாய்ச் செய்த தபோபலமெல்லாம் ஒரு மானிட ஸ்திரீயினாலே அழிந்துபோமென்று உலகத்தார் சொல்லும் அபக்கியாதியாகிய வார்த்தையானது இப்பொழுதென்ன முடியத்தக்கதா? நீர் பிரமதேவரை நோக்கி நெடுநாளாய்த் தவஞ்செய்து அவரிடத்திலே தேவதானவர் முதலாய்ச் சொல்லப்பட்டவரை ஜெயிக்கும்படி வரம்பெற்றபோது மனிதரை ஜெயிக்கும்படியாக வரம் பெறவில்லையே. ஆகையால் அவர்களை எந்தவிதத்தில் இனி ஜெயங்கொள்ளுவீர்? வேறொரு உபபலமும் வேண்டாமல் நீர் தனியே எதிர்த்து ஏழுலகத்தையும் வெல்லத்தக்கவராயிருந்தும், மனிதரைமாத்திரம் வெல்லமாட்டீரென்பதற்கு ஆயிரம் தோள்களையுடைய கார்த்தவீரியார்ச்சுனனான மனிதனுக்கு உம்முடைய வலிதோற்றுப்போனதுவே திருஷ்டாந்தம். இதைப்பார்க்கிலும் வேறுசாக்ஷியும் வேண்டுமா? முற்காலத்திலே வானத்தளாவும் உயர்ந்த கைலாயகிரியை யெடுத்ததுகண்டு சதுர்ப்புஜங்களையுடைய நந்திகேஸ்வரன் நீ குரங்குகளாலே உன் பலமழியப் படுவாயென்று சொன்ன சாபத்தை, வாலியினிடத்திலே பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறீர். பூர்வம் தெய்வீகமாகிய கற்பினையுடைய வேதவல்லியென்கிற ரிஷிபுத்திரியானவள் ஸ்ரீமகாவிஷ்ணு தனக்குக் கணவனாகவேண்டுமென்று தபசுபண்ணிக்கொண்டிருக்குமளவில், அவளை நீர் கற்பழிக்க ஏற்பட்டபொழுது அவள் வாயினால்கொடுத்த சாபத்தை நாம் தடுக்கத்தக்க வல்லமை யுடையவராவோமோ? உனக்கு நானே மிருத்தியுவான தீராப்பிணியென்று சொல்லிவிட்டு அக்கினிப்பிரவேசமானாளே அவள்தான் இந்தச்சீதையாய்வந்து அவதரித்திருக்கிறாள். இந்திராதி தேவர்களுக்குச் சத்துருவாயிருந்த சம்பராசுரனை ஆகாயத்தினிடத்தில் இரதத்தை நடத்திக்கொண்டுபோய் வில்லினுடைய வலிமையினாலே பிரபலமான யுத்தஞ்செய்து தலையையறுத்து, அந்தத் தேவர்கள் பிழைக்கும்படியாய்த் தேவராஜனுக்கு அரசுகொடுத்து உதவிசெய்துதர்மசக்கரமானது தானேவியபடியே உலகத்திலே தனக்கு ஊழியஞ்செய்ய மகத்தான கீர்த்தியை வகித்த தசரதமகாராஜனென்பவனொருவனிருந்தான். அந்தத் தசரதனே தேவேந்திரன் ரிஷபமாய்ச் சுமக்க முதுகின்மேலே யேறியிருந்து வாளையுருவி அசுரர்களையெல்லாஞ் சங்கரித்த ஒப்பற்ற ஆண்மையையுடைய காகுத்தமகாராஜனும், தன்னிடத்திலிட்ட வித்துக்களை யெல்லாம் முளைக்க வொட்டாமல் தனக்குள்ளே யிழுத்துக்கொண்டு மதப்பட்டிருந்த பூமியின்மேல் பாணப்பிரயோகஞ்செய்து அதன்மதத்தை யடக்கி அது பசுவுருக்கொண்டுவந்து தானிய முதலான சகல பதார்த்தங்களையுங்கொடுக்க யாவரும் முலையினுடைய வழியே கறந்தெடுத்துக் கொள்ளச் செய்த பிருதுமகாராஜனும், சமுத்திரத்தைத்தோண்டிய சகரர்கள், நற்கதியடைய தபசாலே ஆகாயகங்கையைப் பூமியிலே கொண்டுவந்த பகீரதமகாராஜனும் அவதரித்த மனுவம்சத்திலே உற்பத்தியானவன். அவன் பொய்பேசி உலகத்தைப் பகைத்தோருடைய குலத்தைக் கருவறுத்து தர்மத்தை விர்த்திசெய்து, அந்தத் தர்மநெறியிலே நின்று, தன்னுடைய மனைவிக்குக்கொடுத்த வரத்தை மறுக்கமாட்டாமல் சத்தியத்தை நிலைநிறுத்துவதற்காகப் பிராணனைக் கொடுத்து, தேவர்களும் பெறுதற்கு அருமையாகிய சாக்ஷாத் மோக்ஷத்தைப் பெற்றவன்.

அப்பேர்ப்பட்ட தசரதச்சக்கரவர்த்தியெனச் சொல்லப்பட்டவருடைய புத்திரர்களே இப்போது உமக்குப் பகையோராய்வந்திருக்கிறார்கள். அம்மம்மா! அவர்கள் எப்படிப்பட்டவரென நீர் கேட்பீரேயாகில்; ராமனெனவும், லட்சுமணனெனவும் பெயர்பெற்ற அந்த இருதிறத்தாரும் தங்களுக்கு ஒருவரும் எதிரில்லாதவராயிருக்கின்றவர்கள். முனீஸ்வரரும், தேவரும்

எல்லாச் சங்கதியையுமறிந்த ஞானியரும்,
மற்றுமுண்டாயிரானின்ற சகலவுத்தமரும்,
நினைப்பதற்கு அருமையான தகைமையு
டைய மகா புருஷர். நாம் செய்த தீவினை
யால் மனிதர்களாக வடிவெடுத்து, யாவர்
க்கும் எளிதாய்வந்திருக்கிறார்கள். தாமரை
யாசனத்தையுடைய பிரம்மதேவருடனே
சகல புவனங்களையுஞ் சிருஷ்டிசெய்கிறே
னென்று பிரயத்தனப்பட்ட விஸ்வாமித்
திரமகாரிஷி கொடுக்கப் பெற்றதுகளாய்,
இமைப்பொழுதிலே யாவரும் நாசமாகும்
படி எவ்வுலகங்களிலும் விசையாய்ச் செல்
லுகின்ற அஸ்திரசஸ்திர முதலாகிய ஆயு
தங்களைக் கையில் பிடித்திருக்கிறார்கள்.
பூர்வம் புஜபல பராக்கிரமத்தையுடைய
அசுரர்களுடனே பகைத்துத் தேவர்கள்
இளைத்தசமயத்தில் அவர்களுக்காக எடு
த்துவளைத்து யுத்தஞ்செய்து ஜெயத்தைச்
சம்பாதித்துக் கொடுத்த கருடவாகன
ரூடரான ஸ்ரீமகா விஷ்ணுவினுடைய
கைவில்லையும் முப்புரங்கள் எரிந்து
நீறாகும்படி கைலாயநாதன் பிரயோகித்த
திவ்விய அஸ்திரத்தையும், முனித்தலை
வராகிய அகஸ்தியர் கொடுக்கப்பெற்றுக்
கொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்திலிரு
க்கின்ற நாகாஸ்திரங்கள் எப்படிப்பட்ட
துகளென்றால், நாவை நீட்டி உலகங்களை
யெல்லாம் ஒருமிக்கவளைத்து எடுத்து விழு
ங்குகின்றதுகளும், திக்குகளை யெல்லாம்
ஒருக்ஷணத்திலேபோய் அளவிடுகின்றதுக
ளும், விஷாக்கினியே கக்கிக்கொண்டிருக்
கின்றதுகளும், அதியுஷ்ணமாகப் பெரு
மூச்செறிகின்றதுகளும், பிரகாசத்தை வீசு
கின்ற கூரிய பற்களையுடையதுகளும், அவ்
வீராதிவீரர்களுடைய அம்பறாத்தூணியா
கிய புற்றினிடத்திலிருந்து சீறுகின்றதுக
ளும், பூரணகியானத்தையுடைய பெரியோ
ர்கள் விஷயத்தில் அபசாரப்படுகின்ற
பாபாத்மாக்களுடைய உயிரையல்லது வே
றொரு இரையை இச்சியாததுகளுமாயிருக்
கின்றதுகள். அவர்களுடைய விற்கள் அந்
தப் பிரதாபசாலிகளால் மாத்திரம் எடுப்ப
தற்கும் வளைப்பதற்கும் பாணப்பிரயோகஞ்
செய்வதற்கும் சுலபமாயிருக்கிறதே யல்லா
மல்; மற்றொருவரால் அசைக்கப்படுமோ?
அப்படி அபாரமானதுகள். அதுகளிற்
பூட்டிய நாணியும் அறுபடாததுகள். நம்
முடைய சொற்பமாகிய விற்களைப்போல
எளிதில் ஒடிக்கப்படுமோ? மூங்கிலோ?
அண்டத்தை ஊடுருவி நிற்கின்ற மகாமே
ருவோ? சப்த குலாசலங்களில் சம்பந்தப்
பட்டதுகளோ? அல்லது இதுகளெல்லா
மல்லவோ? என்னமோ தெரியாது. அவர்
களுடைய பாணங்களால் கடலைக்கடைந்த
வாலியினுடைய மார்புருவி அவன் பராக்
கிரமமடங்கியது. உலகத்தையெல்லாம்கவி
ழ்ந்து சூழ்ந்த மராமரங்களும் ஒடுங்கியது
கள். கரன் முதலானவர்களுடைய தலையும்
கண்டிக்கப்பட்டதுகள். இனி யுத்தமுண்
டாகுமானால் தேவர்களுடையவிபத்து நீங்
குமல்லாமல்,அவர்களுக்குஅடங்காதபகை
யென்பது வேறுண்டோ? மகிமையுடைய
முநீஸ்வரர்கள் அவர்களுக்கு வேண்டிய
வரங்களைக் கொடுத்து, இணையில்லாதவர்க
ளாகிய இந்த இருவரும் தேவர்களுடனே
புவனங்களையெல்லாம் வெல்லுவார்களெ
ன்றும், ராக்ஷதர்களுடையகுலமானது வே
ரற்று போகும்படிக் கொல்லுவார்களென்
றும் நினைத்தறிந்து, அவர்களைவந்து சிநே
கித்திருக்கிறார்கள். உம்முடையகிருபையே
யல்லாமல் வேறுகதி யில்லாதிருக்கின்ற
தேவர்களுடைய மனது முன்பு ராக்ஷதர்
களுடைய பெயரைச்சொன்னாலும் நடுங்
கும், இரவும்பகலும் நித்திரைசெய்யவுமா
ட்டார்கள். இப்போது ஜானகியாகியவிஷ
த்தை உண்ண எத்தினப்பட்டவர்கள் மா
ண்டுபோய் நரக பிராப்தர்களாவார்களெ
ன்று எண்ணிக்கொண்டு நமக்குப் பயப்ப
டாதிருக்கிறார்கள். அடைக்கல ஸ்தானத்
தை யறியாதிருந்ததினால் நமக்குப் பயந்து
கிடந்த ரிஷிகளுடைய முகங்கள் பகற்கா
லச் சந்திரனைப்போல ஒளிமழுங்கி யிருந்
ததுபோய், இப்போது சரற்காலத்தில்
இராத்திரியி லுதயமாகிய சந்திரனைப்போ
ல அதிக பிரகாசத்தைக்கொண்டிருக்கிறது
கள். கடல்சூழ்ந்த உலகத்தைவிட்டு அப்
புறம்போய்த் தங்கள் உருவத்தை மறைத்
துக்கொண்டு எங்கும் சஞ்சரியாமல் ஒடுங்
கிப் பதுங்கிய எமன்முதலானதேவர்களும்
முனிவர்களும், மற்றவர்களும் சீதையான
வள் நம்முடைய நகரத்தில் வந்திருக்கிறா
ளென்று கேட்டபின்பு, பயமில்லாமல்
திரும்பிவந்து தங்களுலகமாகிய சுவர்க்க
முதலானதுகளையும் அடிக்கடிப்பார்த்துச்

சந்தோஷித்துப் போகின்றார்கள். சொல்லத்தகாத துர்ச்சகுனங்கள் எங்குங்காணத் தலைப்பட்டதுகள். நம்மைவெல்லத்தகுந்த சக்தியில்லாத நம்முடைய சத்துருக்களாகிய தேவர்களும், அசுரர்களும், சண்டையிலேதோற்றுவிட்டுப்போனகுதிரைகளும் யானைகளும், வலதுகாலைமுன்னேவைத்து நம்முடைய கிரகங்களுக்குள் வந்து நுழைகின்றதுகள். ராக்ஷதர்கள் வாயிலும் பல்லிலும் நீரில்லாமல் வாடுகின்றார்கள். பேய்களும், பூதங்களும், நாய்களும், நரிகளும், நாடுநகரமுழுமையும்திரிகின்றதுகள். ஸ்திரீகளுடைய கூந்தல்களும், நம்முடைய சிகைகளும் நெருப்பில்வெந்து சுடுநாற்றம் நாறுகின்றதுகள். இனி இதுகளைப்பார்க்கிலும் வேறு துர் நிமித்தமுண்டோ? தேவலோகமானது அதமாகும்படி தேவர்களைப் போரிலே நிர்மூலஞ்செய்த கரன் - தூஷணன் - திரிசிரன் - மான்வடிவெடுத்த மாரீசன் - வாலி முதலானவர்களுமே இவர்களால் மாண்டதனால், மானை யிடது கையிலேந்திய சிவனும், சக்ரபாணியாகிய விஷ்ணுவும், பிர்மாவும், மற்றத் தேவேந்திராதி தேவர்களுந்தான் இந்த இரண்டு மனிதர்களுக்குச் சமானமானவர்களென்று யார்தான் எண்ணுவார்கள்? ஐயா! இன்னமொன்று சொல்லுகிறேன். அதைச் சந்தோஷமாய்க் கேளும். அந்த இரண்டுமனிதர்களாயும் வானரக்கூட்டங்களாயும் வந்திருக்கிறவர்கள் நம்முடைய பகையாளிகளாகிய தேவர்களென்று அறிந்துகொள்ளும். ஆகையால் அவர்களுடனே பகைகொள்ளலாமென்பது செவிகொடுத்துக் கேட்கத்தக்கதல்ல. இது நமக்கு உறுதியென்று நினைப்பதுங் காரியமல்ல. கீர்த்தியும் பாக்கியமும் குலசிரேஷ்டமும்குறைந்துபோக அபகீர்த்தியும் சிறுமையும் அசிரேஷ்டமும்பிரபலிக்க, நமது சுற்றத்துடனே நாம் மடிந்திடாமல், சலியாத கற்பினையுடைய சீதாபிராட்டியை விட்டுவிடும். இதைப்பார்க்கிலும் வேறே ஜெயமென்பது நமக்கில்லையென்று பிரமக்கியானிக்குள் சிறந்த விபீஷணரானவர் சொன்னார். இந்த வசனத்தைக் கேட்ட இராவணேஸ்வரன் கையோடு கையறைந்து, வாய்கள்தோறுமுள்ள கோரதந்தங்கள் பிறைக்கூட்டம்போலப் பிரகாசிக்க கண்களில் நெருப்பெழ இரத்னாரங்களும் அதுகள் ஜொலிக்கின்ற மார்பும் தோளும் குலுங்க நகைத்துச் சொல்லத்தொடங்கினான். இவ்விடத்தில் பேசினவர்களெல்லாரைப்பார்க்கிலும் நல்ல உறுதிகளைச் சொல்லுகிறேனென்று சொல்லி, கேவலம் பித்தர்கள் பேசுகிற பேச்சுகளையே நீபேசினாய். உன்னுடைய மகாபலத்தை கொச்சையாகிய மானிடர்கள் ஜெயங்கொள்ளுவார்களென்று எனக்கு நேரில்தானே சொன்னது, நீ அவர்களுக்குப் பயப்பட்டுச் சொன்னதா? அல்லது அவர்களிடத்தில் அன்பினாலே சொன்னதா? என்ன கருத்துகொண்டு சொன்னாய்? மனிதப் பசுக்களை வெல்லும்படிக்கு நான் வரம் பெறவில்லையென்று, இந்த அற்பவிஷயத்தை எனக்கொரு லட்சியமானதாகக் குறித்துக்கொண்டு, என்மேல் குற்றஞ்சொல்ல வந்தையே? அஷ்டதிக்குகளையும், திரிலோகங்களையும், அஷ்ட கஜங்களையும் ஜெயித்து; அந்தத் தழல்வண்ணனாகிய சிவனைக் கயிலாசபர்வதத்துடனே எடுத்தேனே. அப்படியெல்லாம் செய்கிறதற்கு முன்பு நான் ஏதாவது வரம்பெற்றதுண்டா? கொஞ்சமாவது மனதிலெண்ணிப் பாராமல் பயனில்லாத சொற்களைச்சொன்னாய். இரணக்களத்தில் தேவர்கள் என்மேல் பிரயோகஞ் செய்த தெய்வீகம் பொருந்திய ஆயுதங்களெல்லாம் என்னை என்ன உபத்திரவஞ் செய்ததுகள்? அவர்கள்தான் என்னசெய்தார்கள்? அந்த மனிதர்கள் என்னை வெல்லுகிறதென்பது அப்படியிருக்கட்டும். குகேசியென்ற ஒரு தாய் வயிற்றிலே என்னுடனே கூடப்பிறந்த உன்னைத் தான் அவர்கள் ஜெயிக்கமாட்டுவார்களென்றுசொல்லுகிறதற்கு இடமுண்டா? நல்லது. ஒருவன் ஏதாவது சொல்லும்பொழுது, இது சொல்லத்தக்கது தகாதது என்று ஆய்ந்தறிந்தல்லவோ சொல்லவேணும். அவ்வாறு நீயோ சொல்லுஞ் சொல்லை அறிந்து சொல்லவில்லை. பலதரம்தோற்றும் ஒருதரம் வெற்றிக்கொள்ளத்தக்க பராக்கிரமமுண்டு. ஆனாலும் அண்டத்தைக்கெல்லி எறிகின்ற மகாபலத்தையுடைய என் பந்துஜனத்தையும், என்னையும் போர்க்களத்தில் ஜெயிக்கின்ற சத்துருக்களுமுண்டென்று நினைவு கொண்

டாய். தம்பி! நான்தேவர்களிடத்தில் பெற்றவரத்தினுல் மிகவுஞ் செருக்குண்டாய்ப் பேசுகிறேன். அந்த மனிதர்கள் திரிமூர்த்திகளுக்குள்ளே ரிஷபவாகன ரூடனுகிய சிவனிடத்திலேயா? புவனங்களையெல்லாம்ரட்சிக்கின்ற மகாவிஷ்ணுவினிடத்திலேயா? பிரமாவினிடத்திலேயா? இவர்களல்லாமல் மற்றயாரிடத்திலே தான்வரம் பெற்றூர்களென்று சொல்லுகின்றுய். நந்திகொடுத்த சாபத்தினுல் குரங்குகள் நம்மைக் கெலிக்குமென்று சொல்வாயாளுல், இந்திராதி தேவர்களாலும், சித்தர்கள் யக்ஷர்கள் முதலானவர்களாலும், நமக்கு வந்திருக்கிற சாபங்கள் என்னைத் தொலையுமா? அதுகளெல்லாஞ் செய்ததென்ன? சுரோத்திராதி இந்திரியங்களையும், சப்தாதிவிஷயங்களையும், மனுதி அந்தக்கரணங்களையும், அடக்கினவர்களாகிய எதீஸ்வரர்களிலும் ரிஷீஸ்வரர்களிலும் நமக்குமரணம் சித்திக்கும்படிப் பிரார்த்திக் காதவர்கள் யார்? அவர்களுடைய எண்ணங்களெல்லாம்நம்மை அழித்து விடாதா? சபையிலே நடனஞ்செய்கின்ற சிவனிடத்தில் அன்பு செய்து அந்தப்பூஜாபலத்தால் எதிரியின் பலத்தில் பாதிதனக்குவரும்படி வாலிவரம் பெற்றதை அறியாமல் நானிளைத்து நிற்க, என்பலம் அவனிடத்திற்போய்ச் சேர்ந்ததனுலல்லவோ அவனுக்குத் தோற்றேன். அப்படியிருக்க மற்றக் குரங்குகளெல்லாம் என்னை ஜெயங்கொள்ளுமென்பது நீ எப்படி குறித்துக்கொண்டாய்? நீலகண்டத்தையுடைய சங்கரனும் சக்கரதாரனுகியமகாவிஷ்ணுவும் அந்தவாலிக்கு எதிரே நின்றுபோர்செய்தாலும், அவர்களுடையமகாபலமும் அவனிடத்திற் சேர்கின்ற வரத்தைஅறிந்து; அவனுக்கு எதிரேபோவதற்கு அஞ்சி ராமனுகிய அந்த மனிதன் மறைந்திருந்து அவனை எய்தான். மிதிலையில் ஊனமாகியவில்லையொடித்து கிஷ்கிந்தையில் ஓட்டையானமராமரங்களின்மேல் அம்பைசெலுத்தி அயோத்தியில் கூனியினுடைய உபாயத்தினுல் அரசாக்ஷியை இழந்து ஆரணியத்திற்கு வந்து நான்செய்தமாயையினுல் தன்பெண்சாதியைப் பறிகொடுத்து மானமில்லாமல் இன்னமும் உயிரைச் சுமந்துகொண்டிருக்கின்ற அந்த மனிதனுடைய பலத்தை; நீயல்லாமல் மதித்துச் சொல்லுகிறவர்கள் யாரிருக்கிறுர்கள்? உனக்கு புத்தியில்லை. நல்லது நீயெழுந்திரு அப்புறம்போவென்று சொன்னராவணனை, விபீஷணர் இவன் பாழாய்ப்போவானென்று ஒழியாமல், அவனுக்குச்சமீபத்தில் போய்ச்சகோதர வாஞ்சல்லியத்தினுல் மறுபடியும் இன்னமொரு உறுதிவார்த்தை சொல்லுகிறேன் கேளுமென்றுசொல்லுகின்றுர். தனக்கு மேற்பட்ட பொருள் வேறொன்றில்லாமல் ஒப்பற்றிருக்கின்ற பராபர வஸ்துவாகிய ஸ்ரீமந்நாராயணனே நம்முடைய நிமித்தம் தேவர்கள்செய்த உபாயத்தினுல், அந்த மானிடனுகவந்து அவதரித்திருக்கின்றுன். நீரேதோ அறியாமல் இகழ்கின்றீர். அப்படிச் செய்யவேண்டாமென்று தமையன் பாதத்தைத்தொழுது இரந்துசொல்லினுர். அதுகேட்டுத் தசக்கிரீவன், ஆ! ஆ! அம்மனிதனை விஷ்ணுவென்று சொல்வாயாளுல் உன்புத்தியை என்னவென்கிறது? அற்பபுத்தியென்றல்லவோ சொல்லவேணும். ஆயினும் அந்த விஷ்ணு என்னுடைய யுத்தத்திலே எத்தனையோ தரந்தோற்றோடினுன். மேலும் என்னிஷ்டப்படி இத்தனை காலமாய் நான்நடந்தேன். முழுமுதலாகிய அவனென்ன செத்துக் கிடந்தானே? பின்னும் இந்திரனைப் பிடித்துச்சிறைவைத்த காலத்திலும், அஷ்டதிக்கஜங்களின்தந்தங்களை முறித்தகாலத்திலும்,பூர்வம் தான்வந்து போர்செய்யுந்தோறும் தன்னை நான் துரத்தியடித்தகாலத்திலும், தேவர்களுடைய உலகத்தைப் பஞ்சாய்ப் பறக்க அடித்தகாலத்திலும், நீ சொன்ன அந்தத்தேவன் அறியாத சிறுபிள்ளையாயிருந்தானே? சிவனும்,பிரமாவும், தேவர்களுக்குந்தெரியாத அந்த விஷ்ணுவும், மற்றுமுள்ள இந்திரன் - அக்கினி-யமன்-வருணன் - வாயு முதலாகிய தேவர்களும் அடங்கி யொடுங்கிக் கிலிகொள்ளும்படி, திரிலோகங்களையும் நான் ஏகாதிபத்தியமாக அரசாண்டு கொண்டிருப்பது அவனில்லாமையினுலேயோ? அல்லது அவன் பலவீனப்பட்டு ஒதுங்கிக் கிடந்ததினுலேயோ? நீ சொல்லுகின்ற ஆச்சரியமான சொல்லுக்கு என்னசொல்லுகின்றது? ஏகமூர்த்தியாகிய விஷ்ணு தன்னுடைய ஆயிரந்தோள்களும் ஆயிரம்சிரசுகளும் பொரு

ந்திப் பிரமாண்டத்தை யெல்லாம் ஒரு உள்ளங்காலுக்குள் அடக்கிய ஸ்தூலவடிவத்தையே மிகவுஞ் சிறியதுகளென்று நினைத்து நாம் தின்னுகின்ற சொற்பமாகிய மானிடவுருவ மெடுத்துக்கொண்டோ அவன் நம்மை ஜெயம்பண்ண வந்திருக்கிறான்? பித்தனாகிய சிவனும், மாயனாகிய விஷ்ணுவும், என்பெயரைக் கேட்டுப் பயந்து நடுங்கித் தளர்ந்து ஓடுகிறபோதெல்லாம், அவர்கள் ஏறிய ரிஷபத்தின்முதுகிலும் கருடன் முதுகிலும் என்னுடைய பாணங்கள்போய் மலைகளின்மேல் விழுகின்ற இடிகளைப்போல் விழுந்து தைத்துக் கொண்டு இன்னமும் இருக்கின்றதுகள். இப்படிக்கெல்லாமிருக்க நீ என்னபேச்சுப் பேசுகிறாய்? அவனுக்கும் எனக்கும் உள்ள படியே யுத்தம் நேரிட்டதானால் நீ யுபபலமாய் எங்களுடனேகூடப்புறப்பட்டுவந்து சண்டை செய்யவேண்டியதில்லை. உன்னுயிருக்கு பயமில்லாதிருக்கிறதற்கு இந்த அழிவில்லாத லங்கைக்கோட்டை யிருக்கிறது இதற்குள்ளேதானேசுகமாயிரு. பயப்படாதே; பயப்படாதே என்று சொல்லிக் கொண்டிருந்து, பக்கத்தி லிருந்தவர்களுடைய முகத்தைப் பார்த்து ஆலகாலமாகிய விஷத்தைப் பார்க்கிலும் அதிக கோரமான கோபத்தையுடையவனாய், கை கொட்டிப் பிரளயகால இடியிடித்ததுபோல ஆர்ப்பரித்துப் பகபகவென்றுசிரித்தான். பின்னும் அந்தவிபீஷணாழ்வானனவர் தசக்கிரீவனை நோக்கி, ஐயா! பூர்வ காலத்தில் உம்மைப்போலல்ல; உம்மிலும் அதிகபலமும் பிரதாபமும் படைத்தவர்கள் அநேகர் இந்த மகாபுருஷன் சங்கரிக்கும்படித் தங்கள் பந்துவர்க்கத்துடனே சமூலமாய் மாண்டுபோனார்கள். நானுமக்குச் சொல்லவேண்டியது இன்னமொன்றுண்டு. அது என்னவென்றால், இரணியனென்ற அசுரராஜனுடைய சரித்திரமாம். அதையுள்ளபடிச் சொல்லுகிறேன் கேளுமையாவென்று சொல்லத்தலைப்பட்டார்.

மந்திரப்படலம் முற்றிற்று.

---

## இரணியன்வதைப்படலம்

அந்த இரணியன் வேதத்திற்சொல்லியிருக்கின்ற தவங்களையெல்லாஞ் செய்து, தன்மனதில் நினைத்து வாயினால் கேட்ட வரங்கள் ஏதேதோ அதுகளையெல்லாம் பிரமதேவன் கொடுக்கும்படிப் பெற்றுக் கொண்டுவந்து, சிவன் பிர்மா விஷ்ணுவாகிய மும்மூர்த்திகளும் முடிவுகாணப்படாத சகலபூதங்களுக்குள்ள பலத்தையும் ஒரு மிக்கப்பெற்று, எக்காலத்திலும் அழியாமல் நித்தியமாயிருக்கின்றவனென்று வேத வேதாந்தங்களால் சொல்லப்பட்ட ஜெகதீஸ்வரனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவும், பிரமாவும், ஜடாமகுடத்தையுடைய சிவனும், படைத்துக்காத்து அழிக்கின்ற இந்த ஒரு அண்டத்தின்மட்டுந்தானா? இதற்கு அப்புறத்திலுள்ளவர்களும் தன்பெயரையேசொல்லும்படி வாழ்ந்திருந்தான். எட்டு திக்குகளையுந் தாங்குகின்ற ஐராவதமுதலாகிய அஷ்டகஜங்களில் வலதுகையில் ஒருயானையும் இடதுகையில் ஒருயானையுமாக, இரண்டுகையினாலும் இரண்டுயானைகளைச் சுண்டற்காய்போல அலக்ஷியமாக எடுத்து ஒன்றோடொன்று முட்டவிடுவான். அளவு காண்பதற்கரிதாகிய ஆழத்தையும் அகலத்தையுமுடைய ஏழு சமுத்திரங்களையும் தோணி முதலானதுகளில்லாமல், கணைக்காலளவு ஆழமாக எண்ணித் தன்காலாலேயே நடந்துநடந்து கரையேறுவான். ஆகாயகங்கை முதலான மகாநதிகளின் ஜலத்தைக் கொஞ்சமென்று நினைத்து, அதுகளின்கிட்டவும் போகான். ஸப்தமேகங்களின் ஜலத்தைக் குளிர்ச்சி போதாதென்று எட்டியும்பாரான். சமுத்திரஜலத்தை உப்பென்றுகருதி அதில் மூழ்கவே மாட்டான். பின்னையெப்படி ஸ்நானஞ் செய்கிறதென்றால்அண்டமுகட்டைஉடைத்து அதற்கு அப்புறத்திலிருக்கின்றபெரும் புறக்கடலின்ஜலத்தில் ஸ்நானஞ்செய்வான். இவ்விதமாகப் பெரும்புறக் கடலில் ஸ்நானஞ் செய்து, நாகலோகத்திற்குப் போய் நாககன்னிகள் உபசரிக்க, ஷட்ரச பதார்த்தங்களுடனும் பால் பழம் பஞ்சகச்சாயங்களுடனும் இஷ்டான்னம் புசித்து, கர்ப்பூரதாம்பூலங்கொண்டு, கந்த புஷ்பாதிகளைத்தரித்து இளைப்பாறி இந்திரலோகத்திற்குப்போய் அமிர்த பானம் பண்ணி, இந்திராணி முதலாகிய தேவஸ்திரீகள் சத்திரம்பிடிக்கச் சாமரம்வீசக் காளாஞ்சியேந்த, ரம்பை மேனகைமுதலா

கிய தேவதாசிகள் பரதநாட்டியஞ் செய்ய தேவேந்திரன் முதலான பலதேவர்களும் ஏவல்கேட்க அந்த இந்திரனுடையசுதர்ம மென்னும் மண்டபத்தில் சுதர்மணி சிங் காசனத்திலிருந்து வேடிக்கையாகப் பகற் பொழுதுபோக்கி சத்தியலோகத்திற்குப் போய்ப் பிர்மாவுடனே ஜனக சனந்தன சனுத சனற் குமாரர்களும் மற்றுமுள்ள சகல ரிஷிகளும் புடைசூழ அந்தப் பிர்மா வின் திருவோலக்கத்தி லிருந்து சம்பிரமத் தோடே இராப்பொழுது போக்குவான். ஒருசமயம் ரதத்தின்மேலேறிச் சந்திரமண் டலத்திற்குப்போய் அந்தச் சந்திரனைப் போலவே சஞ்சரிப்பான். ஒருவேளையில் தேரின்மேலேறி அதைச் சூரியமண்டலத் திற்கு நடத்திக்கொண்டுபோய் அந்தச் சூரியனைப்போலவே உலாவுவான். எட்டுத் திசைகளிலும் போய்த் திக்குப்பாலகர்கள் செய்யுங் காரியத்தையுந் தான் செய்வான். மகமேருவின் சிகரத்தில் பிரசண்டமாரு தம்மோதி யடித்தாலும், யுகாந்தகால இடி யிடித்து விழுந்தாலும், மகாபிரளயம் வந் தாலும் எவ்வளவாயினும் சலனமில்லா மல், சொர்னச் சாயையாயும் சித்திர விசித் திரமாயுமிருக்கின்றபெரியகோட்டைக்குள் நவரத்தின கசிதமாயும் திவ்வியதேஜோ மயமாயும் பிரகாசிக்கின்ற அழகியமண்ட பத்தில் மாணிக்க சிம்மாசனத்தில் சக் ரேஸ்வரனுய் வீற்றிருந்து, அகண்டாதி பத்தியமாக ராஜரீகஞ்செய்வான். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமாகிய இதுகளு க்கு அதிதேவதையா யிருக்கின்றவர்களைத் தள்ளித் தான்அவர்களுக்குப் பிரதியாயிரு ந்து அவாள்செய்கிற கிர்த்தியங்களெல் லாஞ்செய்வான். கமலக்கண்ணனுகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவும் அக்கினிக் கண்ணனுகிய சிவனுமென்கின்ற இவ்விரண்டு பெயருந் தவிரத் தன்பெயரையே சகல லோகத்தா ரும்சொல்லி ஸ்தௌத்தியஞ்செய்ய, பிரா மணர்முதலானவர்கள் மூவகை அக்கினி களையுங்கொண்டு வேதோக்தமாகச் செய் கின்ற யாகங்கள் எக்கியங்கள் கிர்த்துக்களி ல்தேவர்களை நோக்கி அவர்களுக்குக் கொ டுக்கின்ற அவிர்ப்பாகங்களையெல்லாம் தன க்குக்கொடுக்கும்படிசெய்து அந்தத் தேவ ர்களனைவருந் தானுயிருந்து வாங்கியுண் பான். ஆக்குதல் காக்குதல் அழிக்குதல் என்கிற இந்த முத்தொழில்களையும் மும் மூர்த்திகளும் கைவிட்டு ஒதுங்கி நிற்கும் படி, தானே அதுகளைச் செய்யத்தலைப்படு வான். யோகீஸ்வரர்களெல்லாம் அவனு லே தங்கள் தபங்களை இழந்தார்கள். தேவ ர்களும் தங்களுக்கு அவனே முக்கிய தெய் வமென்றெண்ணி அவன் பாதத்தை அர்ச் சிக்கிறதல்லாமல் மற்றொருவரைப் பூசிக் கிறதில்லை. முற்காலத்திலே அமரர்கள் அசுரர்க ளெல்லாருங்கூடி வெகுபிரயாச மாகத் தூக்கி நட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்த மத்தாகிய நெடிய மந்தரகிரியை, அவன் கையில் ஊன்றுதடியாகச் சிலநாள் பிடித்துக்கொண்டிருந்து பின்பு தன் கைக் குப்பளுவு போதாதென்று எறிந்துவிட் டான். சூரியன் உதித்து ஒடுங்குகின்ற ஸ் தானங்களாகிய உதயகிரி அஸ்தமானகிரி என்கின்ற இரண்டு மலைகளும் அந்த இர ணியனுடைய இருகாதுகளுக்கும் குண்ட லங்களா யிருக்கிறதுகளென்றுல், மற்றும் அவன் பராக்கிரமத்தைச் சொல்லவேண் டியதென்ன? நான்முகப்பிரமா முதலாகிய தேவர்களும், தேவகுருவாகிய பிரகஸ்பதி யும், சதாகாலமும் கற்பதும் கேட்பதும் அவனுடைய கீர்த்திப்பிரதாபமே. அநாதி யாயறியா திருக்கிற வேதங்களும் அந்தவே தங்களுக்கு அதிதேவதையும் இரணிய நமாவென்றே சொல்லுகிறது. ஜெபம்தப முதலானதுகளையும் சகலரும் அவனைநோ க்கியேசெய்கிறது. அவன் அடிவைத்தால் பூமிதாழ்ந்துபோம். சகஸ்திர பணமகுடங் களையுடைய அனந்தனும் சோர்ந்துபோ வான். அவன் எழுந்து நின்றுல் அண்ட முகடு சிரசிலே முட்டி அப்பாலுயர்ந்து போம். அவன் நடந்தால் பஞ்சமகா பூதங் களும் நடுங்கிச்சலிக்கும். அவன் பெற்ற வரத்தினுலும், அஷ்ட சித்திகளாலும், ஆணிலும், பெண்ணிலும், அலியிலும், உயிருள்ளதுகளாகிய சித்துப்பொருள்களி லும், உயிரில்லாததுகளாகிய ஜடப்பொரு ள்களிலும் கண்ணினுல் காணப்படுகின்ற காட்சிப் பொருள்களிலும், மனதினுல் நினைக்கப்படுகின்ற கருத்துப் பொருள்களி லும், சகல சராசரங்களிலும், சர்வாந்திரி யாமிபோலப் புகுந்துசஞ்சரிப்பான். மண் ணினிலும்மடியான். வானிலும்அழியான், நீரிலுஞ்சாகான், நெருப்பிலும் வேகான்.

காற்றிலும் இறவான், தேவர்களனைவரும் யட்சர்களெவரும் பிரமாவிஷ்ணுருத்திரா தியர்களும், அவனைக் கொல்ல யத்தினப் பட்டாலும் உயிர்மாயான். மற்றமனிதர்கள் மிருகங்கள் பறவைகள் முதலான பலபல ஜீவராசிகளாலும் அவனுக்கு மரணமே இல்லை. அண்டர்கள் முனிவர்கள் மற்றயா வரும் இடுகின்ற சாபங்களும் அவனைச் சேர்கிறதேயில்லை. அவனுக்கு அகத்திலு ஞ்சாவில்லை. புறத்திலுஞ்சாவில்லை. இரவி லுஞ்சாவில்லை. பகலிலுஞ்சாவில்லை. தெய் வீகமாகிய சக்ராயுதம்-சத்தி-வேல் - எமத ண்டம்-எமபாசம்- பிரமதண்டம்-பிரமபாச ம்-பிரமாஸ்திரம் - நாராயணஸ்திரம்-பாசு பதாஸ்திரம் - இந்திராஸ்திரம் - அக்கினி யாஸ்திரம்-வருணஸ்திரம்- நாகாஸ்திரம்- மாயாஸ்திரம் முதலாகிய அநேகவகை ஆ யுதங்களும் அவனைக் கொல்லமாட்டாது கள். எமன் வந்து பிடித்துக்கொண்டுபோ னாலுஞ் சாகமாட்டா னென்றால், பின்னை யார்தான் அவன் பிராணனைமாய்க்கின்றவ ர்கள்? பஞ்சமகாபூதங்களும் ஒன்றாய்க்கூடி ஓருருக்கொண்டு வந்தாலும் மாளான். வே தத்திற் சொல்லப்பட்ட மந்திரங்களினு லும், ஒளஷதங்களினாலும் இறக்கமாட்டா ன். பெற்றபிதாவே அவனைக்கொல்ல ஏற் பட்டாலும் பிராணபயப்படான். இதுவா கும் அவனுடைய நிலைமை. எல்லா உலக ங்களுக்கும் தானொருவனே தலைவனாகி யா ரும் தனக்கெதிரில்லாமல் மகத்தாகிய தீர சூரபிரதாபத்துடனே வாழுங் காலத்தில், அந்த இரணியேஸ்வரனுக்கு அறிவுடை யவர்களுக்கெல்லாம் மேலாகிய அறிவினை யுடையவன், நல்லவர்களெல்லாரிலும்மிக வும்நல்லவன், வேதத்தைகாட்டிலும் மகா பரிசுத்தமுள்ளவன், தாயைப் பார்க்கிலும் அதிக அன்புள்ளவன், அளவிறந்த தவத் தினையுடையவன், அப்படிப்பட்ட மகாநு பாவனொருவன் அருமைத்திருமகனாக உற் பவித்து, பிரகலாதனென்கிற பெயரினையு டையவனாய் வளர்ந்து, ஐந்துவயதுள்ள சிறுபிள்ளையாயிருக்குங்காலத்தில் அநேக யுகங்களைக்கடந்தும் அபிவிர்த்தித்துக்கொ ண்டிருக்கின்ற ஆயுஷியத்தை யுடை யவனு யும், சதுர்த்தச புவனத்தாரும் தன்பாத த்தை வணங்கும்படி ஏகசக்ரேஸ்வரனாயு மிருக்கின்ற இரணியாசுரன் மனமகிழ்ச்சி கொண்டு உருகி மகனைப்பார்த்து, அப்பா! என்புத்திர சிரோமணியாகிய பிரகலாதா! நீ சகலசாஸ்திரங்களும் கற்றுக்கொள்ளெ ன்றுசொல்லி, அபரிமிதமாகிய கல்வியும் விவேகமுடைய அசுரகுருவான சுக்கிரா சாரியார் புத்திரன் சண்டமார்க்க னென்ப வனை அழைப்பித்து, நீர் என்கண்மணியா கிய பிரகலாதனுக்கு வேதசாஸ்திராப்பியா சம் பண்ணுவியுமென்று திடப்படுத்தி யனுப்பினான். அவ்வண்ணமே அந்த உபா த்தியாயன் பிரகலாதனைக்கூட்டிக்கொண்டு போய்க் கல்விக்கழகத்தினிடத்திற் சேர் த்து, வேதத்தை யோதுவிக்கத் தொடங்கி, அசுரேந்திரனுடைய தவக்குமாரனைப்பார் த்து, பிள்ளாய்! இரணியநமா என்று உன் பிதாவினுடைய நாமத்தை முன்னே ஸ்ம ரணை செய்யென்று சொன்னான். அதுகே ட்டு அந்தப்பாலன் தன்னிரண்டு செவிக ளையும் கைகளால்மூடிக்கொண்டு, ஓ பேரறி வுடையஉபாத்தியாயரே! நீர்இப்படிச்சொ ல்லுகிறது நன்மையல்லவென்று சொல்லி வேதத்தின் முடிவிலே சொல்லப்பட்ட தத்துவார்த்தமாய் விளங்கி நிற்கும் பிரம சாக்ஷாத்காரத்தின் திருநாமத்தைப் பிரசித் தமாக (ஹரிஓம் நமோநாராயணய) என்று நாவினாற் சொல்லி மனதுருகி ஸ்தம்பாகிர் த்தியா யசைவற்று நின்று, தன்னுடைய இரண்டுகைகளையும்தலையின்மேல் அஞ்சலி பண்ணிக்கொண்டுநமஸ்கரித்துத் தாமரை களுக்கு இணையாகிய கண்கள் ஆனந்தபா ஷ்பம்பொழிய, தேகம்புளகிக்க, மயிர்க்குச் செறிய, இந்தப்பிரகாரம் அந்தஞானசிரே ஷ்டனாகிய பிரகலாதாழ்வான் பக்தி பரவ சனாய்ப் பகவத்தியானத்திலிருந்தான். அப் போது அந்தப்பிராமணன் உடல் நடுங்கி, என்னடா துரோகி! என்னடாபாவி! என் னடா சண்டாளா! ஐயையோ! என்னை யுங் கெடுத்தாய். என்னைக்கெடுத்ததல்லா மல் உன்னையுங் கெடுத்துக்கொண்டாய். நீ கெட்டதுமல்லாமல் சகலத்தையுங் கெடு த்துவிட்டாயே. அடகெடுவாய்! குலநாச கா! அந்தப் பிரமாதி தேவர்களுஞ் சொல் லுகிறதற்கு அடாததாய் அயோக்கியமான தாயிருக்கின்ற ஏதோ ஒன்றைச்சொல்லும் படி உனக்குப் புத்திபிறந்து நாவெழுந் ததே. இதென்னகாரணம்? ஓகோ! என்ன அக்கிரமத்தைச் செய்ய நினைத்தாயென்

ருன். இப்படி உபாத்தியாயர் சொன்னதற்குப் பிரகலாதன் சொல்லுகிருன். ஐயா வித்தியாகுருவே! நான் செய்த தென்ன வென்ருல், முதல் என்னை உய்யும்படிச் செய்துகொண்டேன். பின்பு என் தந்தை உய்யும்படி செய்தேன். அப்பால் உம்மை உய்யும்படி செய்து இந்த உலகத்தையும் உய்யும்படி செய்ய உத்தேசித்து, வேதாத்தியயனம் பண்ணுகின்றவர்கள் ஆதியிலும் அந்தத்திலும் அந்த வேதத்தின் முதற்பொருளாகிய ஸ்ரீஹரியையல்லவோ ஸ்துதிசெய்கின்றது? நானும் அந்தப்படியே சொன்னேன். நான் சொன்னதில் என்ன குற்றம்? என்று சொல்ல, அது கேட்ட உபாத்தியாயன் சொல்லுகிருன். தேவர்களுக்கெல்லாம் தலைவனுயிருக்கின்றவன் இந்திரன். அந்த இந்திராதி தேவர்களுக்குத் தலைவர்களா யிருக்கின்றவர்கள் திரிமூர்த்திகள். அந்தத் திரிமூர்த்திகளுக்குத் தலைவனுயிருக்கிறவன் உன்னைப்பெற்ற தந்தையாகிய இரணியன். அப்படிப்பட்டவனுடைய பெயரைச் சொல்லுகிறதற்கு அருகனு யிருக்கிற பிராமணேத்தமனை என்னைப்பார்க்கிலும் நீ என்ன விசேஷமாகத் தெரிந்தவனு? இந்தக் கர்ன கடோமாகிய பெயரைச்சொல்லி என் குடியைக்கெடுக்காதே.அப்பா!உனக்குப் புண்ணியமாய்ப் போகிறதென்று சண்டமார்க்கன் சொன்னுன். அப்போது நிர்மலசித்தத்தையுடைய பிரகலாதன் அவனைப் பார்த்து, ஐயா! நான் அந்த ஆதிநாயகனுடைய திருநாமத்தையல்லாமல் வேறென்றையுமறியேன். என்னறிவுக்குச் சொல்லவேண்டியது பிறிதொன்றுமில்லை. அவனுடைய கடாக்ஷத்தினுலே எனக்குப் போதிக்கப்படாத பரமார்த்தமும் வேறில்லை யென்றுசொல்லி, மறுபடியும் சண்டமார்க்கனைப் பார்த்து, புராதனமாகிய வேதங்கள் கிரமமாக நிச்சயித்துச் சொல்லப்பட்ட பொருளுக்கெல்லாம் முடிவாகிய பரம்பொருளாய் இருக்கின்ற ஸ்ரீமந்நாராயணன் எனக்குள்ளே வந்து புகுந்து, என்னுடைய இருதயகமலத்தைத் தனக்கு உறைவிடமாகக்கொண்டு எழுந்தருளி யிருக்கின்ருன். ஆகையால் அவனைவிடப் பெறுதற்குரியபயன் எனக்கு வேறென்.றுமில்லை. ஆனுலும் நானறியாதது ஏதாவதிருந்தால், அதை நீதிதவ

ருமல் ஓதுவியும். ஐயா! பிரமசிரேஷ்டர்களெல்லாம் யாரைச் சொல்லுகின்ருர்கள்? வேதங்களும் ஞானிகளும் சொல்லுகின்ற அந்தச் சர்வேஸ்வரனுடைய திருநாமத்தைச்சொல்லவேணுமேயல்லாமல்வேறே சொல்லத்தக்கதும் ஒன்றுண்டோ? மகானுக்களானவர் இருக்காதி வேதங்களினுலும், அக்கினிஷ்டோமாதி யாகங்களினுலும், தத்துவக்கியானத்தினுலும், மற்றுமுள்ள எவ்வகைப்பட்ட சாதனப்பொருள்களாலும்,சாதித்துப்பெறுவதற்குரிய பொருளையே நான் முக்கியமாய்ப் பெற்றிருக்கிறேனுகையால், இனியொருவர் ஓதுவிக்கும்படி ஓதி, கேட்பிக்கும்படிக் கேட்கத்தக்க பொருள் இன்னமும் ஒன்றுண்டாயிருக்கின்றதோ? அது இல்லவேயில்லை. ஆரணியவாசஞ் செய்தும், மலைக்குகைகளில் சேர்ந்திருந்தும், கிருஷ்ணுசனந்தரித்தும் சிரமுண்டிதஞ்செய்தும், ஜடைவளர்த்தும், அக்கினிமத்தியிலிருந்துதவம் பண்ணியும், அஷ்டாங்கயோகஞ்செய்தும், ஞானநிஷ்டைசாதித்தும், இந்தக் கிரமத்தினுல் மோட்சத்தை யடைந்த முக்தாத்மாக்கள் பெற்ற பாக்கியத்திலும், மிகவும் உத்திருஷ்டமாகச் சொல்லப்பட்ட பகவத் கடாக்ஷமாகிய பரமபாக்கியத்தை நான் பெற்றேன். இதைப்பார்க்கிலும் மேலும் வருத்தப்பட்டுச் சம்பாதிக்க வேண்டியது என்ன இருக்கின்றது? ஸ்ரீதெய்வநாயகனுடைய அடியார்க்கடியாரா யிருக்கின்றவர்கள் செவிகளினுல் பல கேள்விகளையும் கேளாதவர்களானுலும், வாயினுல்பல நூல்களையும் படியாதவர்களானுலும், தேவர்களுக்கு அவிகொடுக்கின்ற மந்திரங்களைச் சொல்லுகின்ற சதுர்வேதங்களின் பூர்வார்த்த உத்தரார்த்தங்களை அறிவார்கள். வித்துவஜனர்கள் உண்மைப்பொருளையும் காண்பார்கள். அவர்களுடைய பிரபாவத்தை யார் அறிவார்கள்? எனக்கும் உலகத்தைப் படைத்த சதுர்முகப் பிரம்மாவுக்கும், சகலமானவர்களிலும் உயர்ந்த தனக்கும் தன்னிலை யறியக்கூடாதிருக்கின்ற அந்த எம்பெருமான் என் மனதிலெழுந்தருளி யிருக்கின்றமையால்; எனக்குச் சகலமும் எளிதிற் கிடைத்திருக்கின்றன. ஐயாஉபாத்தியாயரே! உமக்கும்இதைவிட யுக்தமானது மற்றென்றில்லை. இப்ப

டியே நீருஞ்சொல்லி, இந்த அநுஷ்டானத்தையே கைக்கொண்டு, உம்முடைய ஆத்துமா உஜ்ஜீவிக்கின்றவிதத்தை நாடிக்கொள்ளுமென்று சொன்னான். இவ்வாறெல்லாம் பிரகலாதன் சொல்லக்கேட்டு அந்தச்சண்டமார்க்கனென்கிற உபாத்தியாயன் அதுகளுக்குப் பிரதியாக யாதொன்றுஞ் சொல்லாமல் இனி எனக்கென்னபெருமையிருக்கிறது? என்பிராணனுக்கே முடிவுவந்தது. இரணியனிடத்திற்போய் அவனைக் கண்டு நல்ல விசேஷத்தைச் சொல்லித் தப்பி வருகிறதே மகாபிரயாசம். அப்படியிருக்க, இந்தக்கொள்ளையை எப்படி மனந்துணிந்து நாவானது கூசாமற் சொல்லுகிறது? சொன்னால் அவனென்ன சொல்லுவானோ? நான் வேதங் கற்பிக்கச்சொன்னால் ஏதேதோ துர்ப்போதனைகளைப்பண்ணி நீயென் பிள்ளையின் புத்தியைக் கெடுத்துவிட்டா யென்பானோ? கோபத்தினால் கொலைசெய்வானோ? இதுவரையினுஞ் சுகமாக ஜீவித்தேன். இப்பொழுதெனக்குக் கிரகசாரந்தான் போதாதோ? ஐயையோ! இதேது தர்மசங்கடமாயிருக்கின்றதென்று எண்ணாததும் எண்ணி முகம்வாடிக் கிலேசித்துப்பயந்து, நடுங்கிக்கொண்டேபோய் இரணியனைக் கண்டு, அதிக பயபக்தி விசுவாசத்துடனே சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கி யெழுந்து; கைகட்டி வாய்புதைத்து வஸ்திரத்தை யொதுக்கிக்கொண்டு, சுவாமி! அடியேனொரு கனவுகண்டேன். அதைத் தேவரீரிடத்திற் சொல்லும்படிவந்தேனென்று சொன்னான். அது என்ன ஐயாவென்று இரணியன் கேட்க, ஓ எங்களுக்கெல்லாந் தந்தையாயும் குலதெய்வமாயும் இருக்கின்ற இரணியேஸ்வரனே! கேளுமையா; உம்முடைய வரகுமாரன் இம்மையினாலும் மறுமையினாலும் வாயினாற் சொல்லத் தகாததாயும், மனதிலும் நினைக்கக் கூடாததாயுமிருக்கின்ற சொற்களை, ஒருவர் சொல்லிக் கொடுக்காமல் தானேசொல்லிக்கொண்டிருக்கிறான். வேதமோதென்று சொன்னால் ஓதாமல், நான் முன்னமேதானேசகலார்த்தங்களையும் அறிந்திருக்கிறேனென்று சொல்லுகின்றானென்று சொன்னான். அப்படி உபாத்தியாயன் சொல்லக்கேட்டு இரணியன், ஐயா சண்டமார்க்கரே! பிராமணர்களுக்கு யோக்கியமல்லாததுகளாயும், முன்பு யாவருஞ் சொல்லிய கிரமத்திலே சம்பந்தப்படாததுகளாயும், நீர் வெறுக்கும்படியாயும், அவன் தன்னறிவினாலே புதுமையாக எடுத்துச் சொன்னதுகள்தா னென்ன சொல்லுமென்றான். அதற்குப் பிராமணன் பயந்து, சிரசின்மேற் கைகூப்பி நமஸ்காரித்துச் சொல்லுகிறான். சுவாமி! காதுக்குள்ளே விஷசர்ப்பம் நுழைகிறதுபோல மகா குரூரமாயிருக்கின்ற சொல்லை அடியேன் தேவரீடத்தில் சொல்வேனேயாகில், ரௌரவ நரகத்திலேபோய் விழுவேன். என்னவும் இப்பொழுதேவெந்து இற்றுவிழுந்து போமென்று சொல்ல, அதுகேட்டுக் கொடியவனாகிய இரணியாசுரன் ஆச்சரியசித்தனாய்ச் சீக்கிரமாக என்குமாரனை அழைத்து வாருங்களென்று ஆக்யாபித்தான். அந்தக்ஷணமே தூதர்களோடிப்போ யழைத்துவந்தார்கள். தனக்கு ஒருதுணையும் வேண்டாமலிருக்கின்ற ஏகமூர்த்தியைத் துணையாகவுடைய பிரகலாதன் வந்துபிதாவைக்கண்டு சேவித்தான். அப்படிச்சேவித்த புத்திரனை மணியாரம் பிரகாசிக்கின்ற தன்மார்பினிடத்திலணிந்த பொற்சுண்ணமுதலானதுகள் அவன் மார்பிற்படும்படி அன்பினா லிறுகத்தழுவி, பக்கத்தில் வைத்துக்கொண்டு, அவனுடைய திருமேனி முழுமையும்பார்த்து, அப்பா பிரகலாதா! உங்கள் உபாத்தியாயர் கோபிக்கும்படி நீ பழுதாக என்னவார்த்தை சொன்னாய்? அதைச்சொல்லென்று இரணியன் கேட்க, அதற்குப் பிரகலாதன் சொல்லுகிறான். ஐயா! வேதமோதும்போது பிரதமத்திலே சொல்லப்பட்டதை நான் உச்சரித்தேன். அறிந்தாலும், நினைத்தாலும், கேட்டாலும், சொன்னாலும், துன்பக்கடலைக் கடப்பதற்கு உரியது இதுவேயாம். இதைவிட நல்லது வேறொன்றில்லையென்று பிரகலாதன் சொன்னான். தேவர்களுக்குத்தக்க ஒழுக்கத்தையுடைய அந்தப்பிரகலாதன் அப்படிச்சொல்லவே, பொல்லாதவனாகிய இரணியன் குற்றமில்லாத உபாத்தியாயன் சொல்லத்தக்கதையே சொல்லியிருப்பான். ஆனதாகட்டும் இவனுடைய அபிப்பிராயத்தை யறிவோமென்று நினைத்துக்கொண்டு நீசொன்ன அந்தச் சொல்லென்ன? சீக்கிரமாகச் சொல்லென்று கேட்

டான். அதற்குப் பிரகலாதன் சொல்லு கிருன். மனேபீஷ்டத்தை யெல்லாங் கொடுத்தும், அதுகளையநுபவிந்துக்கடந் தால் மோக்ஷத்தை அடையும்படிசெய்வது ம், ஓமங்கள் யாகங்கள் செய்தவர்களை அவ ர்களுக்குரிய பதவிகளிற் செலுத்துவதும், அந்த ஏகவஸ்துவாயிருக்கின்றவனுடைய திருநாமமே. அது பிரணவத்துடனே கூடிய நமோ நாராயணுவென்னும் திரும ந்திரமேயாம். பூமண்டலமுதல் பிரமலோ கபரியந்தம் வாழ்கின்ற எண்ணிக்கையில் லாத பூதபௌதிக சராசரங்கள் யாவற்றி னுள்ளும் கலந்து நிறைந்து, அந்தக்கர ணங்களிலும் பொருந்தி, அங்கிருந்து உதி க்கின்ற உணர்வினுல் உணரப்படுவது இந் தத்திருவஷ்டாக்ஷரமேயல்லது வேறில்லை. திரிநேத்திரங்களையுடைய மகாதேவனும் சதுர்முகப் பிரமாவு மாதியாக மனிதர்கள் வரையிலும் இந்தத் திருமந்திரத்தை மறந் தவர்கள் இறந்தவர்களே. இதை ஒருவர் காண்பிக்க ஒருவரறிகிறதோமகாபிரயாசம். அப்படியானுல் எப்படித்தான் அறிகிற தென்ருல், சொல்லுதற்குரிய அதிகாரியா கிய சதாசாரியனும் கேட்பதற்குரிய பக் குவியாகிய சீஷனும்கூடி, ஒருமித்திருந்து காட்டக் கண்டறிந்தா லறியலாம். மற்றப் படி அதிகாரியாகிய ஆசாரியனும், அபக் குவியாகிய சீஷனும், அதனிலையைக் காட் டவும் அறியவுமாட்டார்கள். ஜனனமாகிய சமுத்திரத்தின் பழவினையாகிய சுழலினின் றும் கரையேற்றுகின்ற நல்ல மரக்கலமா யிருப்பதும், யாவருக்குங் கிடைப்பதற்கு அருமையாகிய பூஷணமா யிருப்பதும், சொல்லுக்குமங்களகரமாயிருப்பதும், ரிஷி கள் வேதத்தின் முடிவில் சிலாக்கியமாகத் தெளிந்தெடுத்த மெய்ப்பொருளு மிதுவே. இதற்குச் சமானுதிகமு மிதுவேயல்லாமல் மற்ருென்றுமில்லை. உம்முடைய ஆத்துமா வுக்கும், என்னுடைய ஆத்துமாவுக்கும், இவ்வுலகத்திலுள்ள சகல ஆத்துமாக்களு க்கும், இதுவே உறுதியென்று நான் மதித் துச் சொன்னதென்று தத்துவக்கியானிக ளிற் சிறந்தவனுகிய பிரகலாதாழ்வான் விசி தமாய்ச் சொல்லினுன். இரணியன் ஜோதி மின்னலைப்போலப்பிரகாசிக்கின்ற தன்கை யிலேந்திய வீரவேலாயுதத்தைச் சுழற்றி, கண்களைநெருப்புஜொலிக்கவிழித்துஅடா துஷ்டப்பயலே! நான் பிறந்தநாள்முதல் இந்நாள்வரைக்கும் இந்தப்பெயரைச் சொ ன்னவாயையும்,இதை நினைத்தமனதையும், என்னுடைய ஒப்பற்ற சக்ராக்கினையானது தகித்துவிடும். அப்படியிருக்கப்பின்னையார் உனக்கிந்தப் பெயரைச் சொல்லிக்கொடுத் தவர்கள்?எவரிடத்தில்கற்றுக்கொண்டாய். சீக்கிரத்தில் உள்ளதைச் சொல்லடாவெ ன்று காலாக்கினிசொரூபமாகக்கோபித்து, ரிஷிகள் தேவர்கள் முதலாகத் திரிலோகங் களிலுமுள்ள மற்றச் சகலமானவர்களும் என்னுடைய உபயபாதத்தையேதியானஞ் செய்கிறது. என் பெயரையே ஸ்துதிசெய் கிறது. ஆகையால் அவர்களெல்லாம் உன க்கு இதைச் சொல்லுகிறதற்குப் பயப்படு வார்கள். எப்படித்தான் நீ அறிந்தாய்? அந்த விஷ்ணுவானவன் என்னிடத்தில் யுத்தஞ் செய்யும்படி அநேகாவர்த்தி எதிர் த்து, தானேறியகருடவாகனத்தின் வேகத் தால் தப்பியோடிப்போய்க் கடலிலே விழு ந்து அமிழ்ந்து, இன்னமும் எழுந்திரா மல் கிடந்து உறங்குகின்ருன். அவ்வாறு உறங்குகின்றவனுடைய பெயரை உனக்கு உறுதியென்று சொன்னவர்களைக் காட் டடா? சமுத்திரத்தின் சிறுமணலை எண்ணி அளவிட்டாலும், நம்முடைய குலத்திலே தோன்றிய பெரியோர்களை அளவிடக்கூ டாது. அத்தனைபேர்களும் அவனெரு வனேகொன்றுதீர்க்கும்படி மாண்டுபோனு ர்கள். எலியானது தனக்குக்கூற்றுவனுகிய கொடியபாம்பின்பெயரைச்சொன்னதனுல் அதற்கு என்ன நன்மையுண்டு? அப்படி த்தானிருக்கிறது நீ அந்தச்சத்துருவின் பெயரைச் சொல்லுகிறது. உனக்கிந்தத் துர்ப்புத்தி வந்ததற்குக் காரணம் என்ன வென்றுசொல்லலாம்? மேலேழுலோகங்க ளையும் கீழேழுலோகங்களையும் தன்வயிற் றுக்குள்ளே அடக்கிவைத்துக்கொள்ளத்த க்க சந்தேகமற்ற பலத்தையுடைய என் தம யனுகிய இரணியாக்ஷனென்பவனை ஒருப ன்றியாகவடிவெடுத்துக் கொம்பினுற் குத்தி யெறிந்து மடித்தவனுடைய பெயரைச் சொல்லுகிறதற்கோ உன்னை நான் தவஞ் செய்துபிள்ளையாகப்பெற்றது? பெற்ற தாய் தந்தையின் பெயரைச் சொல்லுகிறதற்கல் லவா உலகத்திற்கும், அதிலுள்ள யாவ ருக்கும், எல்லாவற்றிற்கும் நாளுெருவனே

தலைவனுயிருக்கிறேன். சகல உயிர்களையும் உண்டாக்கல், காத்தல், அழித்தல் என்கிற இம்மூன்று தொழில்களும் என்னாலே செய்யப்படுகின்றதுகள். இந்தப் பிரத்தியக்ஷமாகிய காரியத்தைப்பாராமல் வேறே காரணமுண்டென்று நீ சொல்லுகின்றது எந்தவேதத்தின் சம்மதமென்றுதேறினாய்? ஆதியந்தமில்லாத அளவிறந்த உலகங்களிலும் வேதம் எம்மார்க்கமோ? அந்த மார்க்கத்தையே சார்ந்து அதுசொன்ன விதிப்படியே குற்றமற்ற நல்வினையைச் செய்தவர்கள் மேம்படுவார்கள். தீவினையைச் செய்தவர்கள் தாழ்வார்கள். ஆராயுமிடத்தில் இது எதார்த்தமாம். பூர்வத்தில் மகத்தாகிய தவத்தைச் செய்ததனால் ஹரிஹர பிரமாதிகள் திரிமூர்த்திகளென்று யாவருஞ்சொல்லத்தக்க பதத்தைப்பெற்றார்கள். பின்பு நான் அவர்களைப் பார்க்கிலும் விசேஷமாகிய தவத்தைச்செய்து, உண்மையாகிய நாயகத்துவத்தை வகித்ததனால் அந்தப்பதத்தை யவர்களிழந்து, இனியிச்சித்தாலும் அதுகிடைப்பது துர்லபமென்று நினைத்துப் பூரணமாகிய என் அதிகாரத்துக்குள் ளடங்கி நடக்கின்றார்கள். புத்தியில்லாத இளம்பிள்ளையாகிய நீ இப்பொழுது செய்தபிழையை நான் பொறுத்துக்கொண்டேன். இனிமே லிப்படிப்பட்ட விரோதமாகிய வார்த்தைகளைச் சொல்லாதே. உபாத்தியாயர் என்னசொன்னாலும் அதுகளை இதமாகவே கொள்ளக்கடவாய். இனி யோதுபோவென்று இரணியாசுரன் சொல்ல அதற்குப்பிரகலாதன் சொல்லுகிறான். ஐயா! உமக்கு நான் அறிவிக்கவேண்டிய வார்த்தைகள் சிலவுண்டு. நீர் அசட்டைபண்ணாமல் கேட்டறிய வேண்டும். என்னவென்றால், அதுவேதமாகிய கடலுக்குக் கரையாயும், யாவருங்கற்கின்ற கல்வியாகிய பாலுக்குப் பிரையாயுமிருக்கின்றதென்று பிரகலாதன் சொல்லத்தலைப்பட்டான். வித்தில்லாத விளைவு ஒன்றுமில்லை. உம்முடைய பைத்தியத்தைவிட்டு அறிவீரேயாமாகில் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காண்பீர். தனக்குள்ளே யிருந்து உலகங்களையெல்லாம் உற்பவிக்கப்பண்ணியும், தானும் அதுகளுக்குள்ளே கலந்திருந்தும், தனக்குப்பின்னுமில்லாமல் முன்னுமில்லாமல் ஏகவஸ்துவா யழியா திருக்கின்றவனுடைய மகிமைப்பிரபாவமானது ஒருவரால் நிச்சயித்துச்சொல்லத்தக்கதோ, விரிந்து ஸ்தூலித்திருக்கின்ற பிருதிவிமுதலாகிய தத்துவங்களை யெல்லாம் வெவ்வேறாகப்பகுத்துக் காண்கின்ற சாங்கியநெறியும்யோகநெறியுமென்று இரண்டு வழிகளுண்டு. அதுகளை யறிபவர்களுக்கல்லது மற்றவர்களுக்கு அவனுடையமேலாகிய உயர்ந்தநிலைஇன்னதென்று அறியக்கூடுமா? வேதமுடிவில் சித்தென்று தெளிந்துசொல்லப்பட்ட மெய்ப்பொருளாகிய அவனுடைய தன்மையைத் தம்மைத் தாமறிந்த ஞானசீலர்களறிவார்கள். அப்படி யல்லாமல் விஷயங்களையே பொருளென்று மதித்துக்கொண்டிருக்கின்ற பித்தர்களுமுண்டு. அவர்கள் தம்மையறியாமையால் அவனுடைய தன்மையையும் அறியார்கள். அவர்கள்மோக்ஷமும் பெறமாட்டார்கள். பிரத்தியக்ஷமுதலாகிய பிரமாணங்களால் அளவிடப்படாததாயும், மனதுக்கு அகோசரமனதாயும், உபநிடதங்களில் சொல்லப்பட்ட வாக்கியங்களாலும், அறிவிப்பதற்கு எட்டாததாயுமிருக்கின்ற அந்தப் பரமபுருஷனுடைய ரகசியத்தை மெய்மையைக்காணாதபாமரர்களி லாரறிவார்கள்? கீழ்மேல்நடுவாகிய மூன்றுலகங்களாகியும், முக்குணங்களாகியும், யாவரும்யாவையுமாகியும், இதுகளுக்கு வேறுபட்டும், நீக்கமில்லாமலிருக்கின்ற ஒப்பற்ற நிலைமையையுடைய பரம்பொருளாகிய ஒருவனுடைய கிர்த்தியங்கள்; பிரமாதி தேவர்களாலும் முனீஸ்வரர்களாலும் அறியப்போமோ? கர்மமும் அந்தக் கர்மத்தாலாகிய பயனும் அப்பயனைத்தருகின்ற கர்த்தாவும் தானாயிருக்கின்றான். அவனுடைய அருமையையும்பெருமையையும் யாரேனும் அறிவார்களாகில், அவர்கள் இகபரமென்கிற கடலைக்கடந்து கரையேறுவார்கள். மந்திரமும், மாதவமும், அதுகளால் வரும் பிரயோஜனமும், அதுகளைக்குறித்துக் கிரமமாகச்சொல்லப்பட்ட தெய்வமும், வேதமும், வேள்வியும், ஆகுதியும் அவனே. முறைதவறாமல் முன்கொடுக்கவேண்டிய பலனை முன்னேகொடுக்கிறதும், பின்னே கொடுக்கவேண்டியபலனைப் பின்னேகொடுக்கிறதும், அந்த நாராயணன் செய்கையே. இதை அவனுடைய அற்புதமாகிய மாயையினாலே அநேக ரறி

யாதிருக்கிறார்கள். நல்வினையானது நன்மையும், தீவினையானது தீமையுமாகியவெவ்வொரு பலனைக்கொடுக்குமல்லாமல், விசேஷமாகக்கொடுக்கமாட்டா. அந்தப் பகவானுடைய கருணையின் பிரபாவம் அப்படியல்ல. பலகாலம் ஜனனமரணத்துக்குஹேதுவாகிய இருவினைகளும் பற்றற்றுப்போகும்படி ஆசிரதர் நினைத்ததுகள் என்னவென்னவுண்டோ? அதுகளையெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கின்றது. இதையன்றி வேறு திருஷ்டாந்தமும் வேணுமோ? யாக கிர்த்தியங்களைச் செய்கின்ற சோமயாஜிகள் யாகமுடிவிலே அந்தச் சேஷசாயிக்கு ஒரு ஆகுதி கொடுப்பார்களானால், அது சராசரங்களுக்கெல்லாம் திருப்தியாகும். வேதமும் இப்படியே சொல்லுகின்றது. மூலப்பிரகிருதியென்னும் மாயையினிடத்திலிருந்து தோன்றிய பஞ்சபூத பௌதிகங்களைத்தந்தமுதற்பொருளானது அப்பூத பௌதிகங்களாலான மிருககதியும் அவைக்கு மேலான மனுஷகதியும் அவற்றிற்கு மேலான தேவகதியெனச் சொல்லப்பட்டவையுமான இவ்விதமாயுள்ள ஏழுவிதத் தோற்றத்தினும், போக்குவரவற்ற நிலைமையை அடையாதவருடைய அறிவிற்கு எட்டப்படுமோ? பிரமாமுதலாய்ச்சொல்லப்பட்ட சராசரமெல்லாம் அந்தச் சோதிசொரூபியினது திருநாபிக் கமலத்தினது பொகுட்டிலே ஒருபுரையினுள்ளே அடங்கியிரானின்றன. காணுகிறவர் காட்டுகிறவருடைய கண்ணிற்குள்ளும் அம்மகாபுருஷன்ஒளித்திருக்கிறான். பஞ்சபூதத்தினுள்ளும் நிறைந்து இருக்கிறான். சகலரானவருடைய நினைவிலேயும் செயலிலேயும் சொல்லிலேயும் வாழ்ந்துகொண்டிராநின்றனன். இந்திரியந்தோறும் சேர்ந்துக்கொண் டிருக்கிறான். இப்படியெல்லாம் இராநிற்பதைத் தான் எவ்வளவேனும் நினைப்பதுமில்லை.

முன்பு ஏகாக்ஷரமான பிரணவமும், பிறகு த்வயாக்ஷரமான நமசப்தமும், அப்பால் பஞ்சாக்ஷரமான நாராயணவெனச் சொல்லப்படுதலுமான எட்டெழுத்தும், மூன்றுபதமும் இரண்டு சந்தியுமாய்த் தழைத்திருக்கிறான். காமம்-வெகுளி-மயக்கமென சொல்லப்பட்டவற்றா லுண்டான தீமை எல்லாவற்றையும் நிவர்த்தி செய்கிற அந்த சாட்குண்ணிய பரிபூரணனான எம்பெருமானுடைய திருநாமத்தையும் அதனிட மகிமையும் குறித்துப் பேசாதவர்கள் அவனது இருப்பை எப்படி அறிந்து பேசமாட்டுவார்? காலமும் கருவியும் இடமும் பயனும் அந்தப் பயனை அனுபவிக்கிறவனுமாகி, சீலமும் அது கொடுக்கப்பட்ட சம்பத்கா முடையவனும் இருக்கின்றான். பெரிதான ஆலமரமும் சிறிதாயிரானின்ற அதனிட வித்தும் போலே சங்கோசமாயும் விகாசமாயுமிரானின்றனன். சங்கீதவித்வான்கள் சப்தசுரங்களையும் தங்கட்குள்ளே உதிக்கின்ற உணர்விலே முன்பு சிந்தித்துக் கண்டறிந்து பின்பு வீணையினிடத்திலே வாசித்தலினாலே செவிக்கு விஷயமாகும்படி அறிகிறது போலே பெரியோர்கள் யோகத்திலே தியானத்தின் வழியாய்த் தமக்குள்ளே தரிசித்து, அந்த யோகதிடத்தினாலே புறத்திலே காணுகிறார்கள். அதனாலே அகத்திலுள்ளவனாகியும், புறத்திலுள்ளவனாகியும், ஆகாயமானது மற்ற பூதங்களோடு சேர்ந்திருந்தும் அவையுடனே கலவாமலிருப்பதுபோலவே அது பிருதிவி முதலாய்ச் சொல்லப்பட்ட தத்துவங்களுடனே கூடியிருந்தும் அவற்றிலெல்லாம் தாக்கற்று நிற்பவனாகியும் வேதங்களும் பிரமிக்கின்ற தன்மையை யுடையவனாயு மிருக்கிறான். ஓங்காரமான ஓரெழுத்திற்குள்ளே அதனுடைய உயிராயுமிருக்கிறான். அறிவுக்கு அறிவாயு மிருக்கிறான். மூன்றுலகத்தையும் தழுவியிருப்பதினால் புகையும் அக்கினியும்போலவுமிருக்கிறான். பலபேதமாயிரானின்ற சமயவாதிகளுடைய மாறுபாடுகளை யொழித்து ஏகபாவனையாய்ப் பேசுகின்றவர்கட்கெல்லாம் பலமலர்களைக்கொண்டுதொடுக்கப்பட்ட மாலையினிடத்துள்ள மணம்போலவும், கடலும் அதனுடைய அலையும்போலவும், வேறுபாடில்லாமலுமிருக்கின்றான். இப்படிப்பட்ட பரமாத்மனை நீரிகழ்ந்துபேசி, உம்மைச் சார்ந்து இருக்கிறசெல்வமும், உம்முடைய தீர்க்காயுளும் பெயரான தற்றுப்போகும்படியாய் நீரும் பிராணனை இழந்துவிடுகிறீரேயென்று நினைத்து; நானந்தஜெகதீஸ்வரனுக்குத் தண்டஞ்சமர்ப்பித்து மங்களாசாசனமாக அவனுடைய திருநாமத்தைச்சொன்

னேனென்று பிதாவுக்குத் தெரியும்படியாய்ச் சொன்னான். இவற்றை எதிரே நின்று பிரகலாதன் சொல்லவே, அந்த இரணியனுக்கு எவ்வுலகமும் அஞ்சும்படிச் சமுத்திரத்திலே தோன்றிய ஆலகாலவிஷத்தைப்போலே பிரபலமாகிய கோபமூண்டது. சூரியனும் சந்திரனும் ஆகாயமும் சுழன்றன. பூமியானது கம்பிதமாயிற்று. அவனுடைய கண்ணானது உதிரத்தைக் கக்கின. கொடிபோலப் புகையெழுந்தது. யுகாந்த காலாக்கினியைப்போல உக்ரமான அக்னி ஜொலித்தது. இவ்விதமாகப் பொங்கிய அந்த இரணியேஸ்வரன் என்னுடனே பகைக்கின்றவர்கள் இனிவேறில்லை. குடலுக்குள்ளே தினவுபோல என்னிடத்திலேதானே பிறந்து, என்னுடைய சத்துருவுக்கே நானடிமையென்று சொல்லுகிறான். ஆகையாலே இவனைக்கொண்டுபோய்க்கொலைசெய்து விடுங்களென்பதாய் ஆக்யாபித்தான். அந்த நொடியிலேதானே காலனைப்பார்க்கிலும் அதிகமான கொடுமையைச் செய்கின்றவராகிய அசுரரனேகர் வந்து, ஒரு யானைக்குட்டியைச் சிங்கத்தினுடைய கூட்டமானது பிடித்து இழுத்துக்கொண்டு போவதுபோலப் பற்றியிழுத்துக்கொண்டு போய் உயர்ந்த ரத்னகசிதமான வாயிலுக்கு வெளிப்புரத்திலே நிறுத்தி, மழு-வாள் - சூலம்-வேல்-குந்தம்-கதைமுதலாய்ச் சொல்லப்பட்ட ஆயுதங்களொன்றுபோல அநேக மாயிரங்களைக் கொண்டு பிரகலாதன்மேலே பிரயோகஞ்செய்து இவனை உயிருடனே தின்று தீர்ப்போமென்று இடியிடித்தாற்போலக் கொக்கரித்துக் கண்களாலே நெருப்பைச்சொரிந்தார்கள். ஜீவகோடிகளிடத்திலே பெற்ற தாயைப்போலே அன்பைச் செலுத்தாநின்ற அந்தப் பிரகலாதன்மேல் தவத்தைச் செய்யாத பாவிகளான அசுரரெல்லாரும் பிரயோகித்த ஆயுதமெல்லாம்நல்லொழுக்கத்தையுடைய மெய்ஞ்ஞானியினுடைய சகாயத்தைப் பெற்றவனொருவனை அவனுடைய பகையாளிகள் திட்டுகள் திட்டுப்போலாய்விட்டன.

அவனொரு தன்மையாகிய வைராக்கியனாய்தான் அகக்கண் புறக்கண்களாலே தரிசிக்கப்பட்ட தெய்வநாயகனான ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடியைமறவாமலும், அவனுடைய திருநாமத்தை விடாமலும், தியானம் பண்ணிக்கொண்டிருந்ததினாலே அவன்மேலெறியப்பட்டனவும், எய்ததுகளும், அவனைஎற்றியதுகளும், குத்தியதுகளும், அரிந்ததுகளுமாகியபலபடைகளும்முறிந்து ஒடிந்து உதிர்ந்து சிறுபொடிகளாய்ப் போனதேயல்லாமல், அவனுடைய திருமேனியிலே யுண்டாயிருக்கப்பட்ட தினவைக்குறித்துச் சொறிந்த அம்மாத்திரம்உபத்திரவமுஞ் செய்யவேயில்லை அதையந்த அசுரர் பார்த்து ஆச்சரியங்கொண்டு, இரணியனிடத்திலே வந்து, சுவாமி! எங்களிடத்திலே இருக்கின்றஆயுதத்தையெல்லாம்பிரயோகஞ்செய்தோம். அவையெல்லாம் தவிடுபொடியாய்ப் போய்விட்டன. உம்முடைய குமாரனுடைய சரீரதிற்குயாதொரு துன்பமும்நேரிடவில்லை. இனிமேல் நாங்கள் செய்யவேண்டியது என்னவென்றார்கள். அப்படிச் சொன்னபொழுது அசுரேந்திரன் மிகுந்த கோபமுண்டானவனாய்ப் பிரகலாதன் கபடமான நெஞ்சை யுடையவனாகையாலே ஏதோ மந்திரக்கட்டினாலே அந்த ஆயுதமெல்லாம் தன்னுடம்பிலேதாக்காமல் முறிந்துபோகும்படியாய்ச்செய்தான். நல்லது;இப்போது நீங்கள் கரேமான அக்கினியை மூட்டி அதிலே அவனைக் கட்டித்தள்ளிவிடுங்களென்று சொன்னான். அப்படியே அந்தத் துஷ்டாத்மாக்கள் அதிக அகலமும் நீலமும் ஆழமுமுள்ளதாய் ஒரு பெரிய குழிவெட்டி அந்தக் குழியிலே பர்வதம்போலே பருத்த புளியங்கட்டைகளை மேலும் மேலும் நிறைய அடுக்கி ஆயிரங்குடத்து எண்ணெயும் நெய்யும் கொண்டு வந்து சொரிந்து தணல் மூட்டினார்கள். சுவாலையானது தெய்வலோகமட்டும்போய்த் தவழும்படியான நெருப்புப் பற்றிக்கொண்டு பிரளயகாலாக்கினியைப்போலே எறிந்தது. அவ்வண்ணமாய் எரியும்பொழுது அங்கிருந்தவரெல்லாம் உயிர்சோரும்படியாய் என் ஐயனான பிரகலாதாழ்வானைக் கையையும் காலையும் கட்டி நிர்த்தாக்ஷணியமாய்த் தள்ளிவிட்டார்கள். அவன் லோகாராட்டியனுடைய திருவடியை நமஸ்கரித்து, அரிஹரி என்னும் ஓசையுடனே அதிலே விழுந்தான். அவனுக்கு அதியுஷ்ணமான அனலானது குளிர்ந்து

சீதளசந்தனம்போலாய்விட்டது. அன்று அநுமானுடைய வாலிலே வஸ்திரங்களைச்சுற்றி நெய்யிலே தோய்த்து விஷத்திற்குச் சமானமான இராக்ஷதரான கொடுமையுடையவர்கொளுத்திவிட நம்முடைய இலங்கை ஆதியந்தமுஞ் சுட்ட தீயானது பதிவிரதா ரத்னமான ஜானகியம்மனவள் சொன்ன ஆசீர்வசனத்தினாலே உஷ்ணம் ஆறும்படி அந்த ஆஞ்சநேயருடைய வாலானது எப்படி குளிர்ந்ததோ, அப்படியே பிரகலாதனுடைய மாணிக்கத்தையொத்த அருமைத் திருமேனியானது குளிர்ந்தது. அப்பொழுது இரணியனிடத்திலே அசுரர்கள்போய், ஐயா! தேவரீருடைய உத்தரவின்படியே நெருப்புக்குழியிலே தள்ளியும், உம்முடைய புத்திரனை சுவாலையையுடைய அந்த நெருப்பானது எவ்வளவும்தகிக்கவேயில்லை. இனி என்ன செய்கிறது என்பதாய்க் கேட்டார்கள். இரணியாசுரனனவன் விழிகள் கொதிக்கும்படி மகத்தான குரூரத்தைக்கொண்டு, அப்படியா! அந்த அக்கினியைக்கட்டிச் சிறையிலிடுங்கள். இந்தக் கொடிய திருட்டுப் பயலை அட்டமாநாகத்தைவிட்டுக் கடித்து உயிரைக் குடிக்கும்படியாய்ச் செய்யுங்கள். அவன் சாகாமல் இருக்கின்றதைப் பார்ப்போமென்று ஆக்கியாபித்தான். அனந்தன்-வாசுகி-சங்கன்-குளிகன்-பதுமன் மகாபதுமன்-தட்சகன்-கார்க்கோடகன் எனச் சொல்லப்பட்ட தெய்வீகமான சர்ப்பங்களெட்டும் இரணியாசுரன் நினைத்தமாத்திரத்திலே அதிசீக்கிரமாய் எங்களுக்கு என்ன கட்டளையென்பதாய் வந்து அவனுடைய சொற்படியே கொடிய விஷாக்கினியைச் சிந்துகிற வாயினாலே இரைச்சலிட்டுச் சீறிப் பிரகலாதனுடைய அழகிய திருமேனியிலே வாளைப்போலவே நீண்டு வளைந்து கூர்மையாயிரானின்ற பற்கள் ஊன்றும்படி மரணமடைவதற்கு ஏதுவாகிய திதி நக்ஷத்திரங்களிலே அதிக கோபமாகக் கடித்தன. அப்படிக் கடித்தவுடனே படம் விரித்துக்கொண்டு ஆடியதுகள். தரையிலும்புரண்டன. அப்பொழுதுபிரகலாதனனவன் தன்னுடைய சரீரம் துடிக்காமற்படிக்கு எம்பிரானுடைய திருநாமத்தையே உச்சாடணம் பண்ணிக்கொண்டு இருந்தான். பக்கத்திலே நின்றவரெல்லாம் பயத்தினாலே வாயின்வழியாய் ரத்தத்தைக் கக்கவும், பாம்புக்கு வைரியான கருடனும் நடுக்கத்தை அடையவும், சிவந்த மேகத்திற்குள்ளே பாலசந்திரன் நுழைகிறது போல கடிமீளாத உறுப்புகளிலே காளி-காளத்ரி - யமன் - யமதூதனெனச் சொல்லும்படியான நாலுபற்களும் தைத்துருவ எழும்பி யெழும்பிக் கடித்ததனாலே அந்த பாம்புகளினுடைய பற்களெல்லாம் வலியற்று ஒடிந்துஉதிர்ந்தன. பிரகலாதனுக்குக் கடித்த இடங்களிலெல்லாம் விஷம் பாயாமல் அமிர்தமானதூறி ஒழுகத் தலைப்பட்டது. அதுகண்டுஅவரோடி அட்டநாகங்களும் சூழ்ந்துகொண்டு பற்றிக்கடித்தும், அவற்றினுடைய பற்கள் அழுந்தவுமில்லை. உம்முடைய மைந்தனுக்கு விஷமேறவுமில்லை என்பதாய் இரணியனுடனே சொன்னார். அவன்கேட்டுத் திக்கஜத்திற்கு முன்னேகொண்டுபோய்ப்போட்டுஅவற்றினுடையகாலாலே இடறச்செய்து விடுங்களென்று சொல்லினான். அப்படிச்சொன்ன மாத்திரத்திலேபலபெயர்தம்முடையபசையில்லாத மனதைப்போல கீழ்த்திசையிலே விசையாய் ஓடி இந்திரன் ஏறுகின்ற ஐராவதமென்கிற கொடிதான கோபத்தையும் மதத்தையும் அதிகபலத்தையும் நான்கு கொம்புகளையு முடைய வெள்ளையானையை அதிசீக்கிரமாகக் கொண்டுவந்து நிறுத்தி, அதன்பின்னே பிரகலாதனைக் கைகளிலும் கால்களிலும் மார்பிலும் கழுத்திலும் தெய்வீகமாகியபாசங்களை இறுக்கி ஒடுக்கிக்கட்டி எடுத்துக்கொண்டுபோய்ப் போட்டார்கள். அத்தருணத்திலே மெய்ப்பொருளை அறிந்தவனாய் இருக்கப்பட்ட பிரகலாதன் இந்த யானையைப்பார்த்து, ஐராவதமே! என்னுடைய தாயைப்பெற்ற பாட்டனாகிய கஜேந்திரனைப் பூர்வகாலத்திலே ஒரு முதலையானது விழுங்கினது கண்டு, ஆதிமூலமே என்று அழைத்த அதன்முன்னேவந்து ரக்ஷித்த அந்தகஜேந்திரவரதன் என்னுடைய மனதினிடத்திலே வந்திருக்கிறார் என்று சொன்னான்.

இப்படிச் சொல்லாததற்கு முன்னே தானே அந்த வெள்ளையானையானது இவன் சாக்ஷாத் ஹரிபக்தன். இவனுடைய விஷயத்தில் அபசாரப்பட லாகாதென்று பிரகலாதனைப் பிரதட்சணமாய்வந்து தன்

னுடைய நெற்றியிலணிந்த சொர்னப்பட்டமானது நிலத்திலேபொருந்தும்படி அவனுக்குத் தெண்டன் சமர்ப்பித்துவிட்டுத் திரும்பியது. இவ்விதமானசெய்தியைச்சத்துருக்கள் இரணியனுக்குப்போய்ச் சொன்னார்கள். அவன் ஒருயானையானது உலகத்திலே எங்கும் தனக்கு இடங்கிடையாமல் எனக்குப் பயந்துபோய்ச் சமுத்திரத்திலே தூங்குகின்ற விஷ்ணு வென்பவனையே பெரியபொருளாய் மதித்துக்கொண்டு என்னுடைய அழியாதவீரத்தையும், ஆக்கினையையுமழித்தது. ஆகையாலே அதைக்கொல்லுங்களென்று நெஞ்சம் கொதித்துச் சொன்னான். உடனே அசுரர்கள் ஐராவதத்தையும் கொல்லும்படி பிரயத்தனப்பட்டனர். அப்படி தன்னைக்கொல்லவந்தபொழுது அது பயந்து இரணியனே கொடியவனயிருக்கிறான். பிரகலாதனே சுவாமிக்கு அன்பனயிருக்கிறான். இதென்ன பெரிய சங்கடமாய் நேர்ந்துவிட்ட தென்பதாய் நினைத்துத் துக்கித்தும், பின்பு ஒருவிதத்திலே மனம் துணிந்து பொன்னொளியையும் மழுங்கச்செய்யும்படியான தேஜசையும், கீர்த்தியையுமுடைய சத்தியசந்தனாகிய பிரகலாதனைக் கொல்லும்படிவந்து மின்னலைப்பழிக்கின்றபிரகாசத்தையுடைய தன்னுடைய கொம்புகளினாலே அவனுடைய வலிபெற்ற மார்பிலேகுத்தி அழுத்தியது. அவ்விதமாய் அழுத்தவே அந்தத் தந்தங்கள் நான்கும் இளவாழைத் தண்டுபோல முறிந்துபோய் விட்டன. அது கண்டு உண்மையில்லாத அசுரர் கண்ணிமைப்பதற்குள்ளாய்ப் போய் ஐராவதமானது உம்முடைய குமாரனைத் திரும்பிவந்து குத்திப்பாய்ந்தது; கொம்பானது இற்றுவிழுந்ததென்றுசொல்ல,அசுரேந்திரன் கோடைகாலத்துச் சூரியனைப்போலே சுடும்படியான கண்ணையுடையவனாய்க் கோபித்து, அவனை எழு நிலையினையுடைத்தாயிரா நின்ற நம்முடைய பெரிய உப்பரிகையின் வாயிற்கோபுர சிகரத்தின்மேலே யேற்றிப் பூமியிலே தள்ளிவிடுங்களென்று உத்தரவு செய்தான். பல்லாயிரங்கோடி அண்டங்களையுமுண்டருளியபரமாத்மனுடைய உபய திருவடிகளைத் தியானியாநின்ற புண்ணியாத்மனாகிய பிரகலாதனைப் பிரசண்டவாயுவைப்பார்க்கிலும் அதிக பலத்தையுடைய கொலையாளர் அப்படியேகட்டித் தூக்கிக் கொண்டுபோய் மகா மேருவைப்போலே அண்டபரியந்த முயர்ந்திரா நின்ற இரணியனுடைய வாயிலிலிரா நின்ற கோபுர சிகரத்தின்மேலே யேற்றி அங்கிருந்து தலைகீழாயுருட்டித் தள்ளிவிட்டார்கள். அந்தச் சமயத்திலே பூமாதேவியானவள் இரணியனுடைய தமையனான இரணியாக்ஷன் தன்னைப் பாயாய்ச் சுருட்டிக்கொண்டுபோனபொழுது அவனை வராகமாயவதரித்துக் கொன்று தன்னுடைய ஆபத்தை நீக்கிய பகவானுடைய பக்தன் இவனாகையாலே இவனுக்குவந்த ஆபத்தைத் தான் நீக்க வேண்டுமென்று எண்ணிப் பிரகலாதனிடத்திலே இரக்கத்தை யுடையவளாய் அவனுக்கு யாதொரு உபத்திரவமுமில்லாமல் மாந்தளிருக்கு ஒப்பாயிரானின்ற தன்னுடைய கையினாலே அவனை ஏந்திக்கொண்டாள். அதை இரணியனறிந்து, உடல் வெதும்பிப் புத்திரவாச்சல்யமென்பதுகடுகளவுமில்லாமல், அந்தக் கள்ளனை யாவராலும் அசைக்கப்படாத பெரிய மலையுடனே நெருக்கிக்கட்டி கரைகாணக் கூடாத சமுத்திரவெள்ளத்திலே விட்டுவிடுங்களென்று ஆக்யாபித்தான். இவ்வண்ணமாய் ஆக்யாபித்தபோது அந்த அசுரர்பெற்ற தகப்பனே கொஞ்சமாவது பச்சாத்தாபமென்பதில்லாமலும், இவன் பிள்ளையாகையாலே இவனைக் கொல்லுகிறது நமக்குத் தர்மமல்லவென்று நினையாமலும், விடாமலோட்டிக்கொல்ல ஏற்பட்டானென்று தாங்களும் தயையில்லாமற்படிக்குப் பர்வதத்துடனே சேர்த்துக்கட்டி வாயுவேகமாய்க் கொண்டுபோய்க் கடலின் நடுவிலே விட்டனர். நடுவு நிலைமையினுடைய திருநாமத்தைச் சோரவிடாதவனாகையால், பிரகலாதனுக்குப் பாதாளபரியந்தம் ஆழ்ந்தபெரியசமுத்திரமானது சிறியமடுவைப் போலிருந்தது. அந்த நெடியமலையும் சுரைக்குடுக்கைபோலே மிதந்தது. அலைமோதுகின்றகடலிலே மூழ்காமல் அப்படி மேலேமிதக்கின்ற பர்வதத்தோடே அந்தப்பாலன் மகா பிரளயத்தின் மத்தியிலே ஆலிலையின்மேலே குழந்தைவடிவுகொண்டுசயனித்திருந்த ஜெகத்ரக்ஷகனைப்போலிருந்தது. தலையின்மேலே கைகூப்பிக்கொண்டு, தீர்க்கவைராக்யத்தை யுடையவனாய்

அவனுடைய சகஸ்திர திருநாமத்தையுஞ் சொல்லித் துதிசெய்யத் தலைப்பட்டான்.

கவி.

அடியாரடியேனெனுமார்வமலால்
ஒடியாவலியானுடையேனுளனோ
கொடியாய்குறியாய்குணமேதுமிலாய்
நெடியாயடியேனிலைநேர்குதியோ.

கள்ளந்திரிவாரவர்கைதவநீ
உள்ளந்தெரியாதவுனக்குளவோ
துள்ளும்பொறியின்னிலைசோதனைதான்
வெள்ளந்தருமின்னமுதேவிதியோ.

வருநான்முகனைம்முகன்வானவர்கோன்
திருநான்மறையின்னெறியேதிரிவார்
பெருநாடெரிகின்றிலர்பேதைமையேன்
ஒருநாளுனைவெங்ஙனமுள்ளுவெனோ.

செய்யாதனவோவிலைதீவினைதான்
பொய்யாதனவந்துபுணர்ந்திடுமால்
மேய்யேயுயிர்தீர்வதொர்மேல்வினைநீ
ஐயாவொருநாளுமயர்த்தனையோ.

ஆயப்பெறுநன்னெறிதம்மறிவென்
றேயப்பெறுமீசர்களெண்ணிலரால்
நீயப்புறநிற்கநினைக்கிலர்நின்
மாயப்பொறிபுக்குமயங்குவரால்.

தாமேதனிநாயகராயெவையும்
போமேபொருளென்றபுராதனர்தாம்
யாமேபரமென்றனரென்றவர்க்
காமேபிறர்நின்னலதாருளரே.

ஆதிப்பரமாமெனிலன்றெனலாம்
ஓதப்பெருநூல்களுலப்பிலவால்
பேதிப்பனநீயவைபேர்கிலையால்
வேதப்பொருளேவிளையாடுதியோ.

அம்போருகனாரனாறியார்
எம்போலியரெண்ணிடினென்பலவாக்
கொம்போடடைபூக்கனிகாயெனினும்
வம்போமரமொன்றெனும்வாசகமே.

நின்னிற்பிறிதாய்நிலையிற்றிரியா
தன்னிற்பிறிவாயினதானறமும்
உன்னிற்பிறிதாயினவோவுலகம்
பொன்னிற்பிறிதாகியபொற்கலனே.

தாய்தந்தையெனுந்தகைவந்தனைதான்
நீதந்தனைநீயுறுநெஞ்சினனன்
நோய்தந்தவனேநுவறீர்வுமெனா
வாய்தந்தனசொல்லிவணங்கினனால்.

துஷ்டர்களுக்கு நிஷ்கண்டகனாயிருக்கின்றவனே! எவர்களாலும் குறித்தறியப்படாதவனே! தோஷகுணம் யாதொன்றும் இல்லாதவனே! விராட்சொரூபத்தையுடையவனே! நான் உன்னுடைய அடிமைக்கடிமையாயிருக்கவேண்டுமென்கிறவிருப்பமுள்ளவனே! அல்லாமல் அழியாத அகங்காரத்தையுடையவனும் உனக்கு எதிர்த்தட்டாவேனோ? ஆயினும் என்னுடைய பக்தியீனமாகிய நிலைக்கு நீ இணங்கி அருள்வையோ? வஞ்சகத்தைக்கொண்டு நடிக்கின்றவர்களுக்கு வஞ்சகத்தைக்கொண்டு நடிக்கின்றவன் நீயாகையால் உள்ளத்திலுள்ள ரகசியங்களில் நீரறியாதவையுமுண்டோ? அமிர்தப் பிரவாகமாய் இரானின்றவனே! இப்படிப்பட்ட துன்பத்தை நான் அடையும்படியான செய்கை ஊழினுடைய சோதனை தானோ? பிர்மாவும் உருத்திரனும் தேவேந்திரனும் வேதஞ்சொன்ன நெறிப்படியே நடக்கின்றாரே யல்லாமல் அநேககாலமாய் உன்னுடைய மகிமையை அறியவில்லை. அப்படியிருக்க, நான் உன்னுடைய பிரபாவத்தை எப்படி அறியப்போகிறேன்? அடியேன் செய்யாத பாபகர்மமோ இல்லை. அவையெல்லாம் தவறுமல்வந்து எனக்குப் பிராப்தமாகின்றன. இது எதார்த்தம் தான். ஒருகாலத்திலே அந்தக்கர்மம் என் ஆத்மாவைவிட்டு நீங்கும்படி யத்தனப்பட்டாராம். அதை எந்தக்காலத்திலும் என் ஆத்மா உடனே சம்பந்தப்படும்படி செய்கின்ற செய்கையை நீமறவாதிருக்கின்றாய். ஆகையால் இது உன்னருளல்லாமல் எப்படி நிவர்த்தியாகும்? ஆராய்ந்து அடையப்பெறும்படியான நல்ல நெறியானது தம்முடைய அறிவேயென்று பொருந்தப்பெற்ற பூஜ்ஜியர் அநேகருண்டு. நீ அவருடைய அறிவிற்கும் அப்புறத்திலே நிற்க உன்னை எண்ணுதவராய் அவரெண்ணமும் உன்னிட மகாமாயையான வலைக்குள்ளே அகப்பட்டு மயங்காநின்றனர். தாங்களே தனிநாயகமாகத்தோன்றிஎவ்வகைப்பட்ட பொருள்களும் தங்களுக்குத் தெரியுமென்பதாய் நிச்சயஞ்செய்த முன்னோரெல்லாம் நாமே பரத்துவமென எண்ணியிருந்தனர். அப்படி எண்ணத்தகுந்ததாய் அவருக்கு அந்தப்பரத்துவமான துசித்திக்குமா? சடாக்ஷாத்காரம் உன்னை யல்லாமல் வேறே யாரிரானின்றனர்? ஒரு சமயத்தார் காரண காரியத்தைப்பற்றி ஜெகத்துக்கு நீதியே ஆதியாயிருக்கும்படியான பரமெனில், மற்

றொரு சமயத்தார் சுத்தாசுத்தத்தைப்பற்றி அல்லவெனச் சொல்லலாம். இந்தப்படி பலவிதத்திலும் சொல்லுவதற்குச் சாஸ்திரமும் அநேகவிதமாயிரானின்றன. அந்தச் சாஸ்திரமெனப்பட்டவை அனைத்தும் பேதிக்கும். நீயப்படி பேதமடையமாட்டாய். வேதார்த்தமாயிருக்கிறவனே! இப்படியெல்லாம் கபடநாடகம் நடக்கிறையோ? எல்லாம் நீயாயிருக்கிற உன்னிடபிரபாவத்தை அறியாத என்னைப்போலேயிருக்கிறவர் ஒருவிதப்பட்ட உன்னையே குறியாமல் பிரமாவெனவும், சிவனெனவும்,மற்றும் பலவிதமான தேவர்களெனவும், வெவ்வேறாய் அநேகமாயிருந்த போதிலும் விருக்ஷமானது ஒன்றே யெனுஞ்சொல் இப்பொழுதுதான் புதிதாய்த் தோன்றியதா? உலகமானது உம்மிலிருந்து வெளிப்பட்டு விகாரமாய் தனக்குள்ளே பலபேதப்பட்டதானாலும், உனக்கு அந்நியமாயிரானின்றதோ? பொன்னாலான ஆபரணங்கள் அந்தப்பொன்னினுக்கு அன்னிய மென்பதாகுமோ? தாயாகியும் தந்தையாகியும் வந்து நீயே என்னைப்படைத்தருளினாய். நீ எழுந்தருளியிருக்கின்ற நெஞ்சத்தையுடையவன் நான். எனக்கு ஜனன மரணமாகிய நோய்களைத் தந்தவன் நீயாதலால் அந்த நோய்களுக்கு நிவர்த்தியும் நீயே சொல்லவேண்டுமையனேயென்று பக்திபரவசனாய் இந்தப்படி பலவிதத்திலும் தன்வாக்கில் வந்ததுகளைச் சொல்லிச்சொல்லி ஸ்தோத்திரஞ்செய்து வணங்கினான். அதை அசுரர்களால் அறிந்த மகாபாராக்கிரமசாலியாகிய இரணியன் அவனைக் கொண்டுவந்து என்முன்னே விடுங்களென்றான். அவ்வாறேசமுத்திரத்தில் மிதந்துக்கொண்டிருக்கின்ற பர்வதத்துடனே கட்டிய கட்டவிழ்த்துக்கொண்டுவந்து விட்டார்கள். விட்டமாத்திரத்தில் சரீரமெலிந்து புழுங்கி இவனுக்கு விஷங்கலந்த அன்னம் பதார்த்தம் பால்பழம் பஞ்சகச்சாய முதலாகிய பக்ஷணங்களை ஊட்டி இவனைக் கொன்றுவிடுங்களென்றான். அவ்வாறே அநேகவகைப்பட்ட விஷான்னத்தையும் ஊட்டினார்கள். அதுகளையும் அவன்கண்டு பகவத்கடாக்ஷத்தினாலே ஜீரணஞ்செய்துகொண்டு சாகாமலிருந்தான். அதுகண்டு இரணியன் அப்புறம் ஒரு இருப்புப் பணையின்மேல் வைத்துச் சமட்டிகளைக்கொண்டு கைகால் தலை உடல் முதலானதுகளும் சிதைந்துப்பொடியாய்ப் போகும்படி மர்த்தியுங்களென்று ஆக்யாபித்தான். அவ்வண்ணமே அந்தக் கொலையாளர்கள் பிரகலாதனைக் கட்டிக் கொண்டுபோய்ப் பணையின்மேல் வைத்து எத்தனையோ பெரிய இருப்புச் சம்மட்டிகளைக்கொண்டு பலமாக ஓங்கியடித்தார்கள். கொடிய பாதகர்களாகிய அசுரர்கள் கணக்கில்லாதவர்கள் மூச்சுவிடாது ஓயாமல் அடிக்கவே இனியேது இவன் பிழைக்கிறது; கனவிலுமில்லையென்று சகலரும் எண்ணும்படியாயிருக்கின்ற சமயத்தில்; அந்தப்பிரகலாதாழ்வான் தனக்குள்ளே அந்தரியாமியா யிருக்கின்ற எம்பெருமானுக்குக் கைகளோ ஆயிரமல்ல. அநேகம் திருவடிகளோ அளவிறந்ததுகள் திருக்கண்களோ எண்ணத் தொலையாததுகளென்று இந்தப் பிரகாரம் அவன் அவயவமுதலாகிய ரூப நாமகுணங்களை ஒழியாது தியானித்து மனதுருகிக்கொண்டிருந்தானல்லாமல் தன்னையடிக்கிறார்களென்கிற நினைவு சிறிதாவது கொள்ளவில்லை. என்னசெய்தும் ஊறு படாததுகண்டு, இரணியன் மாயையினால் இவன் உடலுஞ் சிதையாமல் உயிரும்பிரியாமல் இருக்கத்தக்க உபாயத்தை யுடையவனாயிருக்கின்றான். ஆகையால் இனி நானே கொல்லுகிறேனென்று கோபித்து உலகங்களெல்லாம் நடுங்கும்படி சமீபத்தில் வந்தான். அப்படிக் கொல்லவந்த பிதாவை பிரகலாதன் வணங்கி, ஐயா! என்னுயிரை வாங்கும்படி நீர்வருத்தப்படவேண்டாம். இது உம்மாலே சாத்தியமாகத் தக்கதல்ல. சகல புவனங்களையும் உண்டாக்கிய ஸ்ரீமந்நாராயணனே கொல்லும்படியிருக்கின்றதென்று சொன்னான். அதைக் கேட்டு இரணியாசுரன் அடா! உலகங்களையுண்டாக்கினவனார்? என்பெயரை ஸ்துதிபண்ணிக்கொண் டிருக்கின்ற திரிமூர்த்திகளா? அல்லது முனிவர்களா? அல்லது தங்களுக்கு உள்ளதுகளையெல்லாம் என்னிடத்தில் தோற்றுப்போயிருக்கின்ற தேவர்களா? அல்லது மற்றவர்களா? தெரியச் சொல்லடா? என்றான். அப்படிப்பட்டவனொருவன் உண்டாயிருந்து அவனைக்காட்டுவானானல் காணலாமென்று நினைத்துத் தனக்குக்கோப மூண்டெழுந்தும் இரணி

யன் பிள்ளையைக் கொல்லவில்லை. அப்பொழுது பிரகலாதன் அவன் யாரென்று கேட்டீரல்லவோ? முன்குறித்தபடியே உலகங்களைப் படைத்தவனும், அதுகளுக்குள் நானுபேதமாகிய உயிர்களைப் படைத்தவனும், அந்த அழியாத உயிர்கள்தோறும் அந்தரியாமியாயிருந்து அங்கங்கே வாசஞ்செய்கின்றவனும், பூவினிடத்தில் மணமும், எள்ளினிடத்திலெண்ணெயும் போலவும், அளவில்லாத பலபொருள்களிலும் கலந்து நிறைந்திருக்கின்றவனுமாகிய ஹரியென்பவன்தான். அவன் என் கண்ணினுல் நோக்கிக்காண்பதற்கு எவ்விடத்திலு மிருக்கிறுன். உன்னிடத்தில் நான் அவனைக்குறித்து அன்புடனேசொன்னுல் நீயொன்ருவது உறுதியாகக் கொள்ளவில்லை. ஆகையால் உன்னுடைய கண்களால் நோக்கிப்பார்ப்பதற்கு உனக்கு மூத்தவனுகிய இரணியாக்ஷனுடைய உயிரை மாய்த்த தாமரைக்கண்ணன் அத்தனை லேசாய்க் கிடைக்கின்றவனே? சாத்துவிகம்ராஜசம்தாமசமாகிய முக்குணங்களும்அவனுடையதுகள். சிருஷ்டி திதி சங்காரமாகிய முத்தொழில்களும் அவனுடையதுகள். வெண்மை-பசுமை-செம்மையாகிய மூவுருவமும் அவனுடையதுகள். சோம சூரிய அக்கினியாகிய முச்சுடர்களும் அவனுடைய கண்கள். காருகபத்தியம் தக்ஷணக்கினியம் ஆகவனீயமாகிய வேதாக்கினி மூன்றும் அவனுடையதுகள். முதலும் நடுவும் முடிவும் உண்டாயிருக்கின்ற பொருள்களுக்கெல்லாம் அவனே சாக்ஷியாய் இருக்கின்றவன். இதுவே வேதத்தின் முடிவு. இதுவே சத்தியமென்று சொன்னுன். இப்படியென்று சொல்லவே, இரணியாசுரன் தன்னுடைய தந்தங்கள் பிரகாசிக்கும்படி கலகலவென்று நகைத்து, அடா! உலகத்திலுள்ள பலபொருள்களிலும் அந்த ஹரியென்கின்ற ஒருவன் புகுந்து நிறைந்திருக்கின்ருனென்று சொன்னையே. அதை நான்கண்டு பின்பு அதற்குத் தக்கபடி செய்கிறேன். அப்படியே அந்தத்திருட னிருப்பானுகில் அவனுடைய நிலைமையைத் திருஷ்டாந்தப்படுத்து பார்ப்போமென்றுசொன்னுன். அதற்குப் பிரகலாதன், ஐயா! அந்தப் புருஷோத்தமன் தூணிலும் இருக்கின்ருன். அணுவிலுமிருக்கின்ருன். அந்த அணுவை அனேகங்கூருகச் செய்யப்பட்ட பரமாணுவிலுமிருக்கிருன். மகாமேருவிலுமிருக்கிருன். இவ்விடத்தில் நிற்கின்ற தூணிலுமிருக்கின்ருன். நீர் சொன்ன சொல்லிலும் இருக்கின்ருன். அவனில்லாத பொருள் ஒன்றுமில்லை. இந்த அதிசயத்தைப் பார்க்கவேணுமானுல் சீக்கிரத்தில் சந்தேகமில்லாமல் பிரத்தியக்ஷமாகச் சோதித்து அறிந்துகொள்ளுமென்ருன். இவ்விதமாகச் சொல்லவே, இரணியன் நல்லதென்று சம்மதித்துப் பின்னுஞ் சொல்லுகின்ருன். தேவர்களுக்கும் உனக்கும் ஒத்தவனுகி இந்த உலகமெங்கும்நிறைந்திருக்கின்ற அந்த மகாவிஷ்ணுவை இங்கேநிற்கின்றதூணினிடத்திலிருக்கக்காட்டு; காட்டாமற் போவாயானுல் மத்தகத்தையுடைய மதயானையைச் சிங்கமானது அறைந்துக் கொல்வதுபோல உன்னை நான்கொன்று உன்னுதிரத்தைக் குடித்து உடலையுந் தின்றுவிடுவேனென்று சொன்னுன். அதுகேட்டு அறிவிலே சிரேஷ்டனுகிய பிரகலாதன் கேளுமையா பிதாவே! என்னைக் கொல்லுகிறேனென்று அடிக்கடிச் சொல்லுகிறீரே; என்னுயிரானது உம்மாலே கொல்லப்படுகிறதற்கு அத்தனை எளிதாய் இருக்கின்றதல்ல. நான் உமக்கு முன்னே சொன்ன சர்வேஸ்வரன் நீர் குறித்த குறித்த விடங்களிலெல்லாம் அவசியம்காணப்படுகின்ருன். காணுமற் போவானேயாகில், என்னுயிரை நானே மாய்த்துக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்யாமல் பின்னும் பிராணனுடன் இருப்பேனுனல் அவனுக்கு நான் அடிமையல்ல. எனக்கு அவன் ஆண்டவனல்லவென்று பிரதிக்கினை பண்ணினுன். அப்பொழுது இரணியாசுரன் தன்னுடைய வக்கிரதந்தங்கள் பிரகாசிக்கும்படிசிரித்துக் காலாக்கினிபோல் மனம் பொங்கி நல்லது நல்லதென்று சொல்லி, இடிவிழுந்ததுபோல அதிக ஆர்ப்பாட்டமாக எதிரேயிருந்த சொர்னமயமாகிய நெடிய தூணைத் தன்னுடைய வஜ்ரகடகங்களை யணிந்த ஜெயம்பெற்ற கையினுல் ஓங்கி உக்கிரத்துடனே விசைகொண்டு அறைந்து இதிலே எங்கே காட்டடா வென்ருன்? அப்படி அறைந்தமாத்திரத்தில் அந்தத் தூணிலிருந்து ஒரு பேரோ

சையானது எழுந்து திசைகளைக்கிழித்து அண்டமுகட்டையும் பீறிக்கொண்டு ஊடுருவும்படிச் சிவந்த கண்களையுடைய சிங்கமானது லோகாலோகங்களெல்லாம் கிடுகிடாயனமாக மிகவும் உக்கிரமாய்ச் சிரித்தது. சார்வகாலமும் சதுர்முகப் பிரமாவும் கைலாயநாதனும் தேடியும் காணப்படாத அதிதூரத்திலிருக்கின்ற சர்வக்கியன் சர்வபரிபூரணனாகிய எம்பெருமான் அந்தஸ்தம்பத்தில் சிரித்தவுடனே முன்பு பரமாத்துமனை நான் எப்படியும் உமக்குத் தேடிக் காண்பிக்கிறேனென்று இரணியனுக்கு உறுதியாகச் சொல்லியிருந்த மகாக்கியானியாகிய பிரகலாதாழ்வான் எழுந்து கூத்தாடினான். ஆனந்தக்கண்ணீர்விட்டமுதான். அவன் விஷயமாயிருக்கின்ற திவ்விய சூக்திகளைப் பாடினான்; சிரசின்மேற் கைகளை அஞ்சலி பண்ணிக்கொண்டான்; சாஷ்டாங்கமாகச் சேவித்தான்; மான் கன்றுபோலத் துள்ளித்துள்ளி உலகமெல்லாம் ஓடியோடித் திகைத்தான். அந்தச்சமயத்தில் இரணியன் கொக்கரித்து அடடா! தூணிலிருந்து சிரித்தையே நீ யாரடா? இந்தப் பையல் சொன்ன விஷ்ணுதானா? எனக்குப்பயந்து ஓடிப்போய் இதுவரையிலும் நீ ஒளித்துக்கொண்டிருந்த சமுத்திரத்தினிடம் போதாதென்றோ? இப்பொழுது இந்தத்தூணினிடத்தைத்தேடி இதிலேவந்து ஒளித்தாய். ஆகட்டும்; என்னுடனே யுத்தம்பண்ணத்தக்க வல்லமையையுடையவனானால் தூணைவிட்டுச் சீக்கிரமாகப் புறப்படு புறப்படு. ஏன்காலதாமதஞ்செய்கின்றாயென்று சொல்லிப் பின்னும் அதட்டி ஆர்ப்பரித்தான். அப்பொழுது அண்டம் வெடித்ததுபோலப் படீரென்று அந்தத் தூணும்பிளந்தது. அதிலிருந்த உக்ர நரசிங்கமானது பிறந்தது. பிறந்தவுடனே அதுவளர்ந்தது. அப்படிவளர்ந்து அஷ்டதிக்குகளையும் பகிரண்ட முதலானதுகளையும் அளந்துகொண்டே போய் நிறைந்தது. ஆகிலும் பகிரண்டத்திற்கு அப்பால் நடந்தசெய்தி என்னமோ அதையார் அறிந்துசொல்லுகின்றவர்கள்? ஆகாயம் கீழும் மேலும் கிழிந்தது. பரிமளம்பொருந்திய துளபமாலையை அணிந்த நரசிங்கமூர்த்தியின் திருவுருவம் வானத்தை யூடுருவிப் போனதை நாமறியமாட்டோம். திருவடித்தாமரைகள்பூமியிலேதேயும்படி நின்றபொழுது நெடிதாகிய அண்டமுகட்டில் சத்தியலோகத்திலிருந்த பிர்மதேவன் அன்றுதான் அந்த நரசிங்கப்பெருமாளுடைய திருவுந்திக் கமலத்தில் உற்பத்தியானவன்போல விளங்கியிருந்தான். அப்படிப்பட்ட நரசிங்க ஸ்வரூபத்திற்கு எத்தனையோ கைகள்; எத்தனையோ கால்கள்; எத்தனையோ முகங்கள் உண்டாயிருந்தது கள். அதுகளைக்குறித்து இவ்வளவென்று எண்ணிக் கணக்கிட்டுச் சொல்லத்தக்க விவேகிகளுமுண்டோ? உலகமெல்லாம் பரவியிருந்த அசுரேசுரனை ஆயிரங்கோடி வெள்ளமும் மாண்டுபோகும்படித் தனித்தனியே நரசிங்கமூர்த்தியின் கைகள் அள்ளிக்கொண்டதுகள்.

அந்தச் சகஸ்திர வெள்ளமாகிய அசுரர்களுக்குள்ளே ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு திருமுகமும் இரண்டிரண்டு கைகளும் ஒவ்வொரு சிரசுக்கு மும்மூன்றுகண்களுமாய் அங்கங்கேகாண, திருமேனியில் முடங்கிய ரோமங்கள் அசையும்பொழுது அதுகளிலிருந்து உண்டாகிய காற்றுப்பிரளயகாலாக்கினியை அவிக்கவும், சுவாசம் பிரசண்டமாருதத்தை அடக்கவும், கண்களினின்று ஜொலிக்கின்ற கோபாக்கினியானதுசமுத்திரஜலத்தைச்சுவரச்செய்யவும், வாயிலுள்ள நீர் சகலமாகியபுவனங்களையும் நிரப்பவும், பல்லாயிரங்கோடி அண்டங்களும் நெருங்கிய ரோமங்கள்தோறும் முட்டைகளைப்போல் ஒட்டிக்கொண் டிருக்கவும், இந்தப்படி அகோரபீகரமாகிய ஸ்வரூபத்துடனே உலகமெங்கும் இடமில்லாமல் நிறைந்து தோன்றிய அந்த நரசிங்கமூர்த்தியானவர் ஊழிக்காலத்தில் சகல உயிர்களையும் திருவுதரத்தில்வைத்து வாழ்விப்பதுபோல, பிரமாமுதலாகிய தர்மாத்துமாக்களையெல்லாம் அப்பொழுது தமது கர்ப்பத்தினிடத்தில் வைத்துத் தாயைப்போல ரக்ஷித்துக்கொண்டு அந்த அசுரர்கள்மேல் தவிர அநேகரை யெடுத்து அர்த்தசந்திரனுக்கு ஒப்பாகிய தம்முடைய வக்கிரதந்தங்களுக்குள் அடக்குவார். அநேகரைவாரிப் பூமியிலிட்டுத்தேய்ப்பார். அநேகரைத் தூக்கிப் பகிரண்டத்தில் மோதுவார். அநேகரைப்பிடித்து மகமேருவிலடிப்பார். அநேகரை விரல்களினால் பிசை

வார். அநேகரைக் கடல்நீருக்குள் அமிழ்த்திக் குமிழியெழும்படிச்செய்வார். அநேகரை வடவாமுகாக்கினியிலிட்டு வாட்டுவார். அநேகரை இருபாதியாகக் கிழிப்பார். அநேகரைக் குத்தி வாயைப் பிளப்பார். அநேகரை நகங்களால்கீறித் தோலுரிப்பார். அநேகரைக் கண்களைத்தோண்டி எறிவார். அநேகரை வயிற்றைப்பீறிக்குடலையறுப்பார். அநேகரைப் பசையற்றுப் போகும்படி நசுக்குவார். நகச்சந்தில் பதுங்கி யிருப்பவர்களை நகத்தினாலேயே அழுத்திக்கொல்லுவார். யானைகளையும்தேர்களையும் குதிரைகளையும் மற்றும் அந்த அசுரர்களுக்கு வாகனமாயிருக்கின்ற யாளிகள்சிங்கங்கள் முதலானதுகளையும் உடல்கள் பின்னப்படாமல் உயிருடனே எடுத்து விழுங்குவார். ஸப்தசமுத்திர ஜலங்களையும் அதுகளிலுள்ள பெருமீன் சிறுமீன்களுடனேயும் மொடுமொடுவென்று குடிப்பார். ஏழுமேகங்களையும் இடிகளுடனே உட்கொள்ளுவார். இந்தக் கோரத்தைக்கண்டு தர்மதேவதையும் இனியேது சுவாமிக்குக் கோபந்தணிகிறதென்று அஞ்சி சலிப்புற்றது. பின்னும் சில அசுரர்களைச் சக்ரவாளகிரியோடெற்றுவார்; சில அசுரர்களை அண்டச்சுவரின்மேல் மோதுவார்; சில அசுரர்களைச் சப்தகுல பர்வதங்களின்மேலடித்துக்கொல்லுவார்; சில அசுரர்களை அஷ்டதிக்குகளிலுமடங்கி யிருக்கின்ற இருட்பிரதேசத்திற்கொண்டுபோய்த் தமது பெரிய கையாலரைந்து தேய்ப்பார்; சில அசுரர்களை மலையைப்போலே உருண்டு விழும்படியாகத் தமது கைநுனிநகத்தினால் தலைகளைக் கிள்ளியெறிவார்; சில அசுரர்களை வாரிச் சூடுபிறக்கும்படி நசுக்குவார்; சில அசுரர்களைக் கொல்லுகின்ற முறைமைப்படி கொல்லுவார்; சில அசுரர்களுடைய உயிரைப் பறித்துப் பானம்பண்ணுவார்; சில அசுரர்களைப் பிடித்துக் கடல்நீர் ஆகாயத்தில் தாவும்படி கடலை நிறையத் தூர்த்து விடுவார். மூன்று லோகங்களிலுமுள்ள அவுணகோடிகளையெல்லாம்ஒன்று தவராமல் பிடித்துக்கொன்று ஸ்திரீகளுடைய கர்ப்பமும் அழிந்துபோகும்படியாகச்செய்து இந்த அண்டத்தில் அவுணரில்லாமல் கொன்று அப்புறத்து அண்டங்களிலும் தேடித் தடவிக்கொண்டிருந்ததுகள். இந்த நரசிங்கத்தினுடைய சில கைகள் இந்தப்பிரகாரமாகஇரணியாசுரன் அவன் பெற்ற தேவரக்ஷகனான பிரகலாதாழ்வானும் தவிர மற்றப்பலவகைப்பட்ட அவுணர்கூட்டங்களையெல்லாம் ஒரு இமைப்பொழுதினில் கொன்று ஆக்கிரமித்து வருகின்ற அந்நரசிம்மத்தை இரணியாசுரன்பார்த்து தனது வலதுகையில் வஜ்ஜிராயுதத்தை உருவிக்கொண்டு இடது கையில் ஆகாயத்தையும் மறைக்கும்படியான கேடயத்தைப் பிடித்துக்கொண்டு, தேவர்களுடைய மனது தீயும்படியாகவும் ஸப்த சமுத்திரங்களும் வற்றி மணல் காணும்படியாகவும், அஷ்டகுல பர்வதங்களும் நடுங்கும்படியாகவும் கெர்ஜித்து, உயிருள்ள மகமேருவைப்போல உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு நின்றான். அவ்வாறு நின்ற தன் பிதாவைப் பெரியோர்களெல்லாம் துதிக்கும்படியாக நிற்கின்ற பிரகலாதாழ்வான் பார்த்து ஐயா ஏகசக்கராதிபதியே! இப்பொழுது இந்த நரசிங்கமூர்த்தியைப் பார்த்தும், நீ உன்னுடைய மனதில் ஒன்றும் ஆலோசிக்கவில்லையல்லவா. இந்தக்கருணைக்கடலாகிய நரசிம்மமூர்த்தியை வணங்கு. அந்தப்படி நீ வணங்குவாயாகில் அவரிடத்தில் இது வரையில் நீ செய்திருக்கிற அபராதங்களையெல்லாம் பொறுத்துக் கொள்ளுவாரென்றுசொல்லினான். அதுகேட்டு, இரணியன் அதிக உக்கிரங்கொண்டு அடாபிரகலாதா! இதைக்கேள். உன் கண்முன்பாக வெளிப்பட்டிருக்கின்ற இந்த நரசிங்கத்தினுடைய தோள்களையும்கால்களையும்வெட்டித்தள்ளி உன்னையும் இரண்டுதுண்டமாகத் துண்டித்து, என்னுடைய வாளை வணங்குவேனேயல்லாமல் எனதுதேவிமார்களுடைய ஊடல்காலத்திலும் நான் வணங்கினதை நீ கண்டதுண்டாவென்று அண்டங்களெல்லாம் நடுங்கும்படியாகச் சிரித்து, அப்படி சிரித்த வாயிலும் கையிலும், கையிற்பற்றி யிருக்கின்ற வாளிலும், நடந்த கால்களிலும், குபுகுபுவென்று தீப்பொறி பறக்கும்படியாக அதிககோபங்கொண்டு அந்த நரசிங்கத்தை எதிர்க்கவந்தமாத்திரத்தில் கொடுமைகளைச் செய்துகொண்டிருக்கின்ற அசுரர்களுடைய தந்திரங்களுக்கெல்லாம் மேலாகிய உபாயங்களைச் செய்யும் அகடி

தகடனு சாமர்த்தியமுள்ள அந்த நரசிங்க மூர்த்தியானவர் கணித சாஸ்திர பண்டிதர்களாலும் கணக்கிட்டு, இவ்வளவென்று தொகைசொல்லுதற்கரிதான தம்முடைய எண்ணிறந்த கைகளினுலும் கால்களினுலும் அந்த இரணியாசுரனைச் சூழ்ந்து கட்டிப்பிடித்தார். இந்தப்படிக்கு ஒருவரையொருவர் கட்டிப்பிடித்து; எல்லா உலகங்களுக்கும் மேலாய் ஒருவரும் காணுதபடி உயர்ந்து நிற்கின்ற தன்மையைக் காணும்பொழுது பயப்படும்படியான ஆகாரத்தையுடைய இரணியாசுரன் மேருமலைக்குச் சமானமாகவும், இந்த நரசிம்மமூர்த்தி மற்ற அஷ்டகுலாசலங்களுக்குச் சமானமாகவும்காணப்பட்டார்கள். மேலும் இந்த நரசிங்கமூர்த்தியானவர் மிகுந்த கோஜ்ஜிதத்தினுலும் வேலாயுதம்போன்ற நகங்களையுடைய அனேகமாயிரம் கைகளாலும் சப்திக்கின்ற அலைகளுடைய திருப்பாற்கடலானது பிரமலோகத்தைத் தாவிக்கொண்டு போகிறதுபோலும் காணப்பட்டார். இரணியன் அந்தச்சமுத்திரத்திற்கு நடுவிலகப்பட்ட மேருமலைக்குச் சமானமாக விருந்தான்.

இப்படி இருவரும் மிகுந்த உக்கிரத்தோடு யுத்தஞ்செய்யும்பொழுது இந்த நரசிங்கமூர்த்தியானவர் தமதொரு கையினுலேஇரணியனுடையஇரண்டுகால்களையும் சேரப்பிடித்துவாரி, அவனுடையவாளும் கைகளும்-தலையும் பிரமலோகத்தினுடைய அண்டச்சுவரில் உறையும்படியாகச் சூரியனுனவன் தன்னுடைய பரிசவேடத்தோடுங்கூடச் சுற்றிவருகிறதைப்போலத் தோன்றக் கிறுகிறென்று சுழற்றினுர். அக்காலத்தில் அந்த இரணியனுடைய இரண்டு காதுகளில் தொங்கிக்கொண்டிருந்த குண்டலங்கள் சிதறி கிழக்கிலொன்றும், மேற்கிலொன்றுமாக விழுந்ததுகள். அதைப்பார்க்கும்பொழுது சூரியனுனவன் உதயகாலத்திலும் அஸ்தமான காலத்திலும் பிரகாசிக்கின்ற காலைமாலை கிரணங்களைப்போலவும் இருந்ததுகள். இந்தப்பிரகாரம் இவர்கள் இரண்டுபேரும் செய்த யுத்தப்பெருமையை இத்தன்மையதென்று ஒருவன் தன்னுருவாயினுல் சொல்லும் வல்லமையுடையவனுவானே? அந்தக்காலத்தில் தன்னடியார் யாவருக்கும் பரமபதத்தைக்கொடுக்கும் வள்ளல் தன்மையையுடையவரான அந்த நரசிங்க மூர்த்தியானவர் தமது வெண்மையான நகங்களினுல் இந்த இரணியனுடைய மார்பிலே நறுக்கென்றுகுத்தினுர். குத்தின மாத்திரத்தில் மார்பினிடத்தில் குபுகுபுவென்று இரத்தவெள்ளமானது புறப்பட்டுப் பூமியெல்லாம் பரவினது. இப்படி யுத்தத்தில் அவனுடைய கோபுரவாயிற்படியில் தமது திருத்தொடைகளின்பேரில் இரணியாசுரனை வைத்து வஜ்ஜிராயுதம்போன்ற தமது நகங்களினுல் அவன் மணிமார்பை இரண்டாகப் பிளந்து, அவனுடைய உதிரங்களையெல்லாம் பூமியின்பேரில் சிந்த வொட்டாமல் வாயினு லுறுஞ்சிக் கொப்பளித்துக்கொண்டு, அவனைச்சம்மரித்து, அவனுல் தேவர்களுக்கு உண்டாயிருந்த துன்பங்களைப் போக்கினுர்.

அந்தச்சமயத்தில் இரணியாசுரனுக்குப் பயந்தோடிப்போய்த் தாங்களிருந்த இடந்தெரியாமல் மறைந்திருந்த திரிநேத்திரங்களையுடைய பரமசிவனும், எட்டுக்கண்களையுடைய பிரமதேவனும், ஆயிரம் கண்களையுடைய இந்திரனும், திக்குப்பாலகர்களும்,எல்லாத்தேவர்களும், சப்தரிஷிக்கூட்டங்களும், மற்றுமுண்டான சகலமானபேர்களும் ஒன்றுசேர்ந்து, அவ்விடத்தில்வந்து சூழ்ந்துக்கொண்டு, தம்முடைய ரக்ஷகராகிய இந்த நரசிங்கமூர்த்தியின் பயங்கரமான ஸ்வரூபத்தைக்கண்டு கண்கூசி, எந்தக்கண்களால் காண்போமென்று இரக்கமுற்றவர்களாய் நிற்க, பார்த்த பேர்களுடைய கண்களுக்கு முன்பாகத் தமதுதிருமுகமும் திருக்கைகளும் திருமேனியும் திருவடிகளுமாய்த் தோன்றி, எல்லாவிடங்களிலும் தாமாய் நிறைந்து; வாக்கினுலும், மனத்தினுலும், அறிவினுலும், அளவிடக் கூடாதபடி திருவடிகள் பாதளத்திற்குக்கீழாகவும், இடைப்பிரதேசம் ஐம்முகனுதியோரும் காண அரிதாகும்படியாகவும், திருவடி சத்தியலோகவாசியான பிரம்மதேவனுலும் அளவிட்டுக் காணமுடியாமலும், பெரிய உருவத்துடனே சேவை சாதிக்கின்றதைக்கண்டு சமஸ்தமான அத்தேவர்களும், ரிஷிகளும், பயந்து நிற்க; இப்படி பல்லுக்குப்பல் இமைவெளி ஆயிரங் காதமாகவும், மீமென்ப

கோடி திருமுடிகளை யுடையவராகவும், அளவிடுதற்கரிதான பெரிய திருமேனியை யுடையவராகவும், பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற அந்த நரசிங்கமூர்த்திக்கு எதிரே கமலோற்பவனான பிரமதேவன்வந்து நின்றுகொண்டு, அவருடைய புகழை எடுத்துச்சொல்லத் தொடங்கினான்.

கவி.

தன்னைப்படைத்ததுவுந் தானேயெனுந்தன்மை
பின்னைப்படைத்ததுவே காட்டும்பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய்நீ யென்றாலுயிர்படைப்பான்
என்னைப்படைத்தாய்நீ யெனுமிதுவுமெற்றாமோ.

பல்லாயிரகோடி யண்டம்பனிக்கடலுள்
நில்லாதமொக்குளெனத் தோன்றுமானின்னுழையே
எல்லாவுருவமுமாய் நின்றக்காலிவ்வுருவம்
வல்லேபடைத்தால் வரம்பின்மைவாராதோ.

பேரையொருபொருட்கே பல்வகையாற்பேர்த்தெண்ணும்
தாரைநிலையை தமியைப்பிறரில்லை
யாரைப்படைக்கின்ற தியாரையளிக்கின்ற
தியாரைத்துடைக்கின்ற தையாவறியேமால்.

நின்னுளேயென்னை நிருமித்தாய்நீயல்லா
தென்னுளேயெப்பொருளும் யாவரையும்யானீன்றேன்
பின்னிலேன்முன்னிலே னெந்தைபெருமானே! [ன்.
பொன்னுளேதோன்றியதோர்பொற்கலனேபோல்கின்றே

தேவரீருடைய கல்யாண குணங்கள் ஒவ்வொன்றும் தன்னைத்தானே சிருஷ்டித்துக்கொண்டதென்பதாய் நினைப்பதற்கு அக்குணங்கள் தேவரீருடைய திருமேனியை யன்றியில் தன்னைத்தான் பிரத்தியேகமாகச்சிருஷ்டித்துக்காட்டுமேயானால் அந்தப் பெருமையையுடையதாகும். அப்படிக்கில்லாமல் தேவரீரே உம்முடைய திருமேனியையும், அத்திருமேனிக்குப் பிரகாசமானத் திவ்விய கல்யாணகுணங்களையும் சிருஷ்டித்தீரானால்; உலக ஜீவகோடிகளைச் சிருஷ்டிக்கும்படி என்னை நீர் சிருஷ்டித்தீரென்னும் செய்கை எத்தன்மைத்தாகும்? பல்லாயிரங்கோடி அண்டங்களும் குளிர்ந்த சமுத்திரத்தில் தோன்றி அழியும் குமிழியைப்போல உம்மிடத்தில் உற்பவிக்கும்படியான எல்லா உருவங்களும் நீரேயாயிருக்க அவற்றையெல்லாம் அழிக்கும்படியான இவ்வுருவத்தையும் வகித்துக்கொள்ளுவீரேயானால் அளவுகடந்த தோ...மென்கிற ஒரு குறைவானது வரமாட்...? ஒரு வஸ்துவுக்கே பலபெயரிட்...கச்செய்து...து நினைக்கும்படியான காக்ஷி...ரில்லாமல் ...டங்களிலும்

யையுடையவர் நீரொருவரேயன்றி வேறு ஒருவரில்லை. ஆதலால் நீர் யாரைச் சிருஷ்டிக்கின்றீர்? யாரை ரக்ஷிக்கின்றீர்? யாரைச் சம்மரிக்கின்றீர்? அம்மாயாலீலையை நாங்கள் ஒன்றும் அறியவேமாட்டோம். உம்முடைய உந்திக்கமலத்திலே அடியேனை உண்டாக்க உம்முடைய கிருபையின் நியமனத்தினால் என்னிடத்தினின்றும் எல்லாப் பொருள்களையும் ருத்திரேந்திராதியெல்லா ஜீவர்களையும் யான் சிருஷ்டித்தேன். உம்மையன்றி எனக்கொரு காரணமுமில்லை. காரியமுமில்லை. பிரம ருத்திரர்களான எம்முடைய பிதாவான பெருமானே! ஒருபொன்னிலுண்டான பலவிதமான பூஷணங்களைப்போல வடிவுடைய தேகதேகி! ஐக்கியபாவமான ஏகஸ்வரூபரானவரே! என்று இப்படியாகப் பிரமதேவனும் மழுவாயுதத்தையுடைய உருத்திரனும் மற்ற தேவர்கள் முதலிய யாவருஞ் சாஷ்டாங்கப் பிரணாமங்களைச் செய்துகொண்டு இரண்டு பக்கத்திலேயும் நின்றுகொண்டிருக்கும்படியாய்ச் சக்கிரதரராகிய சாக்ஷாத் ஸ்ரீவைகுண்டபதியானவர் அடங்காத தம்முடைய கோபமாறி இப்பொழுதே லோகமெல்லாம் அழிந்துபோகுமென்று மனம் நடுங்கிக்கொண்டிருக்கும்படியான பிரம ருத்திரேந்திராதி சகல தேவரையும் பார்த்து பயப்படாதிருமென்பதாய்க் கிருபைசெய்து தாமரைப்புட்பம் போன்ற தம்முடைய திருக்கரத்தாலே அபயம் கொடுத்தருளினார். இப்படிப்பட்ட சமயத்தில் தேவர்களெல்லாரும் தங்களுடைய பயநிவாரணத்தின்பொருட்டு பூவிலே வீற்றிருக்கும்படியான ஸ்ரீமகாலட்சுமியும் அழகுக்கு அழகானவளும் சர்வத்திராளுக்கும் ஐஸ்வரியமானவளும் பரமபதவின்பத்தைக் கொடுப்பவளும் பிராணரக்ஷகியும் தேவாமிர்தத்தோடு கூடப்பிறந்தவளும் தேவர் முதலிய யாவரையும் பெற்ற தாயானவளுமான பெரிய பிராட்டியாரை அந்த நரசிங்கமூர்த்தியினிடத்திலேஎழுந்தருளும்படியாய்ப் பிரார்த்தித்தார்கள்.

இப்படி தேவர்கள் பிரார்த்தித்த பிரகாரம் தம்மெதிரி லெழுந்தருளிய செந்தாமரைப் புஷ்பத்தின்மீது வீற்றிருக்கும்படியான தூண்டாவிளக்கானவளும், நல்ல வாசனைபொருந்திய புட்பமாலையில் கட்

டிய இளங்கொழுந்தைப் போன்றவளும், எல்லா உலகத்தையும் அவ்வுலகத்திலே யுண்டாயிரானின்ற பிரமருத்திரேந்திராதி முதலிய ஜீவகோடிகளையும் பெற்ற தாயானவளுமான சாக்ஷாத் ஸ்ரீமகா லட்சுமியைச் சமானுதிகரகிதனுன நரசிங்கமூர்த்தியானவர் கிருபையுடனே கடாக்ஷித்தார். அம்மாத்திரத்தில் ரிஷிக்கூட்டமெல்லாம் புருஷ சூக்தத்தினுல் தோத்திரம் பண்ணினூர்கள். அப்படிப்பட்டசமயத்திலே பரஞ்ஜோதியான நரசிங்கமூர்த்தியானவர் சந்தோஷத்தோடே தனக்கு எதிரிலே நிற்கும்படியான பக்தசிரோமணியான பிரகலாதாழ்வானைக் கடாக்ஷித்து; ஐயா பிரகலாதாழ்வானே! உன்னுடைய தகப்பனுன இரணியனை நான் உன்னுடைய கண்ணெதிரே கொன்று அவனுடைய உயிரைப் போக்கினகாலத்திலும் உன்னுடைய மனமானது கிஞ்சித்தேனும் சஞ்சலப்படாமல் தர்மமார்க்கமான செய்கையுடனே என் மீது அத்தியந்த பக்திவைத்திருந்தாயே? அப்படிப்பட்ட தயவுள்ள உனக்கு நான் என்ன பிரதியுபகாரஞ் செய்யப்போகின்றேன்? ஓர் இமைப்பொழுதை ஆயிரம் பங்கிட்டு அதில் ஒரு பங்கான சிறுகாலத்திற்குள் உன்னுடைய தகப்பனை உயிரைமாத்திரம் நீக்குகிறவனைப்போல அவனுடைய தேகத்தையும்பிளந்து சின்னுபின்னப்படுத்தக் கண்டும் பொருமையமைந்த நல்லமனதுடனே நீ யிருந்தாயே. இனிமேல் உனது சந்ததியார் என்னிடத்தில் அளவில்லாத பல குற்றத்தைச் செய்த போதிலும், அவர்களைக் கொல்லுகிறதேயில்லை. உனக்கும் நல்லவனுகயிருக்கிறேன் நான் உனக்குச் செய்யவேண்டிய நன்மைகள் எவ்வளவு வேண்டுமானபோதிலும் அருவைப்படாமல் கேட்டுக்கொள்ளகடவாயென்று ஆக்யாபித்தருளினூர். அப்போது பிரகலாதாழ்வான், சுவாமி! உம்மாலேமுன்பு அடியேன்பெற்ற பேறுகளுக்கு ஓரளவில்லை. ஆனபோதிலும் இன்னெரு வரம் அடியேனுக்குக்கிருபை செய்யவேண்டும். அதென்னவென்ருல், அடியேன் எலும்பில்லாத இழிபிறவியான புழுவாக ஜென்மித்த போதிலும், உம்மிடத்திலும், உம்மடியாரிடத்திலும், அத்தியந்த அன்பு பெற்றிருக்கும்படியான இந்த அரியவரமொன்று மாத்திரமே வேண்டுமென்பதாய்ச்சொன்னுன். அப்படிச்சொன்ன பிரகலாதாழ்வானைக் கடாக்ஷித்து, கருணைத்திருவுள்ளத்தராய், ஓ பிரகலாதாழ்வானே! பிரமருத்திராதி தேவர்களான சகலமான பூதங்களும் அழிந்தகாலத்திலும் நீ அழியாமல் என்னைப்போல் நித்தியனுய் ஜீவன் முத்தனுயிருக்கக்கடவாய். ஓ ஜோதிமயமான பிரகலாதாழ்வானே! இந்த மூன்று லோகவாசிகளும் உனக்கடிமையல்லவோ? அவரென்னை வணங்கி அடையும்படியான பிரயோஜனமெல்லாம் உன்னைவணங்கி உன்னுலேபெற்று உஜ்ஜீவிக்கக்கடவர்கள். எனக்கு அன்பாகப்பட்டவரெல்லாம் உனக்கு அன்பாகக்கடவர். நீ இனிக் கானவர்கட்கெல்லாம் அரசனுய் இரானின்றது மாத்திரமோ. வானவர்களுக்கும் நீயேதலைவனுயிரானின்ருய். நன்மையான தர்மமும், சத்தியமும், நான்குவேதங்களும், பெரிய ஞானமும், பொறுமையும், எண்குணங்களும், உன்னுடைய சொற்படி உனக்கு வேண்டியவற்றைச் செய்துய்யக்கடவர்கள். இனி உனக்கும் எனக்கும் ஒருவிதத்தாயினும் சற்றேனும் பேதமென்பதே யில்லையென்று எம்பெருமான் வரங்கொடுத்து, எல்லாலோகத்தாரும் கைகூப்பிவணங்கும்படியாகவும், ஆசாரவாயிலே ஜெயபெரிகை முழங்கும்படியாகவும், பிரகலாதாழ்வானுக்குத் திருமுடிசூட்டி, தேவரையெல்லாம் அழைத்து, நீங்கள் இந்தப்பிள்ளைக்குச் செய்யவேண்டிய உரிமைப்பொருளெல்லாவற்றையுஞ் செய்யக்கடவீ ரென்று ஆக்யாபித்தார். அப்படியே தேவர்களெல்லாரும் பிரகலாதாழ்வானுடைய பட்டாபிஷேகத்தில் தத்தமக்குரிய கடமையைச் செய்யவும், பிரமதேவரானவர் ஓமத்தை வளர்க்கவும், சாக்ஷாத் நாராயணனுல் முடிசூட்டவும், பிரகலாதாழ்வான் மகாராஜனுய்த் திரிலோகத்தாரும் தோத்திரஞ்செய்யவும் மகாரிஷீஸ்வரரெல்லாம் வேதபாராயணஞ்செய்யவும் சிம்மாதனத்தின்மேலே எழுந்தருளியிருந்தார். இது பூர்வவிருத்தாந்தமாகும். ஓ அண்ணு ராவணேஸ்வரா! நீர் இதை நன்ருய்த் தீர்க்காலோசனை செய்யவேண்டும். என்னமோ சாமான்யமென்பதாய் அலக்ஷியஞ் செய்வாயானுல் தீமையானதவசியம் விளைகிறது. சத்யமாமென்ப

தாய்ப் புத்திமான்களிலே விசேஷப்பட்ட விபீஷணாழ்வான் தன்னுடைய தமையனாகிய இராவணனுக்குச் சொன்னார்.

இரணியவதைப்படலம் முற்றிற்று.

---

## விபீஷணன் அடைக்கலப்படலம்.

இந்தப்பிரகாரமாய் விபீஷணாழ்வான் சொல்ல, இராவணன்கேட்டு, சீதையினிடத்திலே தான்வைத்திருந்த ஆசையினாலே அந்தகேள்வியைத் தன்னுடையமனதிலே உறுதியென்று நம்பாமல் செவ்வரக்கூட்டியதுபோல இரண்டுகண்ணுஞ் சிவந்து, மிகுந்தகோபமுடையோனாய் இரணியனென்னப்பட்டவ னெங்களைப்பார்க்கிலு மிகுந்த பலமுள்ளவன். அப்படிப்பட்டவனை அந்த விஷ்ணுவானவன் கொன்றுபோட்டானென்று பயந்து, இந்த மனிதரிடத்தில் நீ பக்ஷம்வைத்திருக்கின்றாய். மரணமென்கிற ஒருமுடிவுகாலத்திலே அப்படிப்பட்டபலமொழியுமே அல்லாமல் வேறல்ல. அப்படிப்பட்ட இரணியனாலே பெற்று வளர்க்கப்பட்ட பிரகலாதன் வளர்த்த கடா கையிற் பாய்ந்ததுபோலத் தன்னுடைய தகப்பனை அந்த விஷ்ணு பிளந்து சங்கரித்தகாலையில் விசனமென்பது எள்ளளவேனும் இல்லாமல், தான் மிகுந்த மகிழ்ச்சி அடைந்திருந்தான். அந்தப்பிரகலாதனும் என்னுடைய பகையாளிகளான அந்த மானிடர்களுக்குச் சிநேகம் பூண்டிராநின்ற நீயும் சமானமானவர்கள். உங்களைப்போலொத்த துரோக சிந்தனையுடையோர்கள் வேறொருவரும் இவ்வுலகத்திலுண்டோ? மிகுந்த பெருமையுடையோனான இரணியனுடைய குமாரனான பிரகலாதனுடைய ஸ்வபாவத்தைப் போலச் செய்யவேண்டிய தந்திரங்களை நீசெய்து முடித்து, நானிந்த மனிதனுக்குத் தோற்றபின்பு ஏழையான நீ என்னுடைய ஐஸ்வரியத்தையடைந்து வாழலாமென்றிருக்கின்றனையோ? உன்னுடைய நினைவின்படியே இது உனக்குக் கிடைக்குமோ? நீ அவர்களிடத்திலே வெகுநாளாய் உறவாளியைப்போல மிகுந்த அன்புவைத்திராநின்றனை. எனக்குப் பகையாளியான அம்மனிதரிடத்தில் சிநேகம் வைத்திருக்கின்றாய். அவர்களுடைய பக்ஷத்தில் மெத்த உருகிப்போகிறாய். அழுகின்றாய். அவர்களைத் தோத்திரம் பண்ணுகிறாய். ஆகையால் அவர்கட்கு நீ உளவாயிருக்கின்றாய். இதற்கு வேறே சாட்சி வேண்டியதில்லை. அந்த மனிதரிடத்திலேபோய் அவரைச் சிநேகஞ் செய்துகொண்டு செய்யவேண்டிய தந்திர மெல்லாவற்றையும் நன்றாய் ஆலோசனைபண்ணிக்கொண்டாய். என்னை ஜெயிக்கவேண்டுமென்று நினைத்திருக்கின்றாய். இந்த ராஜரீகத்தின்பேரிலும் ஆசையென்பதை வைத்திருக்கின்றாய். உன்னுடைய செய்கையானது வெகு கொரேமானதாயிருக்கிறது. உன்னைப் பார்க்கிலும் எனக்குப் பகையாளிகள் யார் இருக்கிறார்கள்? அன்றைக்கொரு குரங்குவந்து நம்முடைய அசோகவனத்தை அழித்துவிட்டதற்காக அதைக் கொல்லும்படியாய் நான் சொன்னதற்கு தூதரைக்கொல்லுவது வெற்றியல்லவென்று விலக்கிவிட்டாய். இனிநடக்கவேண்டிய காரியத்தை நினைத்துக்கொண்டு வெற்றிமாலையை அணிந்துவந்திருக்கின்ற ஸ்ரீராமனை உனக்குத் துணைவனாக்கிக்கொள்ளுகிறதற்குத் தீர்மானித்திருக்கிறாய். நீ உன் பிராணனுக்குப் பயந்து இருக்கின்றாய். ஆனபடியினால் எதிரிகளோடு யுத்தஞ் செய்கிறதற்கு நீ தக்கயோக்கியனுமல்ல. உனக்கு இரக்ஷகராக அந்த மானிடரிடத்தில் சிநேகம் வைத்திருக்கிறாய். உன் மனதில் சூதிருக்கிறது. நீ பிறந்த இராக்ஷத நிலைமையை மாற்றிவிட்டாய். விஷத்தை சமீபத்தில் வைத்திருப்பது போல உன்னையும் என்னுடனேகூடவைத்துக்கொண்டு வாழ்வதனாலே நன்மையுண்டாகுமோ? ஆகையால் சகோதரஹத்தியென்பதை நினைத்து உன்னைக் கொல்லாமற்படிக்கு விட்டுவிட்டேன். நீ ஒன்றும் பேசாதே. சீக்கிரமாய் வெளியிலே போய்விடு. என்கண்முன் நிற்பயேயாகில் மரணம் அடைந்திடுவாயென்று, இனி அழிந்துபோகிறவனும் தனக்குள்ள அறிவெல்லாம் கெட்டவனுமான இராவணன் சொன்னான்.

இப்படி அவன் சொன்னமாத்திரத்தில் விபூஷணாழ்வான் அந்தச் சபையை

விட்டு எழுந்திருந்து ஆகாயமார்க்கத்திற் போய் அநேக நீதியான காரியங்களை ஆலோசித்து, ஓ அண்ணா பிரதாப லங்கேஸ்வரா! மிகுந்த வாழ்வுடனே ஊழிகாலபரியந்தம் உயிரோடும்கூடிவாழ்ந்திருக்கிறதை எள்ளளவும் நீ நினையாமல் அற்பமானபேர்கள் சொல்லுகிறதைக் கேட்டுக் கெட்டுப் போகிறது நியாயமாகுமா? தர்மம் தப்பின பேர்கட்கு ஆண்மையுமுண்டாகுமா? உன் பிள்ளைகளென்ன? குருக்கள்மாரென்ன? மிகுந்த பந்துக்களென்ன? சிநேகிதர்களென்ன? பலவீனர்களும் பலமுள்ளவர்களுமான உன்னைச்சேர்ந்தபேர்களென்ன? இத்தனைவகையான பேர்களையும் ஸ்ரீராமருடைய அம்புக்கிரையாகக்கொடுத்து நீயுமிறந்துபோவாய். நான் பலவகையாலும் உறுதியானவற்றையும், தகுந்தவைகளையும் உன்னுடைய மனதுக்கிசையும்படியாய்த் தெரிவித்தேன். அவ்வளவையும் நீர் ஆலோசிக்கவில்லை. அண்ணா! என்குற்றத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று உத்தமனான விபீஷணாழ்வான்சொல்லிவிட்டு, அந்த இலங்காபுரிபட்டணத்தை விட்டுப் புறப்பட்டார். அப்போது அனலன்-அனிலன் - அரன்-சம்பாதி என்கிற நான்கு மந்திரிமாரும் வேகமாய் வந்து விபீஷணாழ்வாருடனே புறப்பட்டார்கள். அவ்வாறு புறப்பட்ட விபீஷணாழ்வாரும் நான்கு தோழரும் குரங்கினுடைய படையோடு இராமலட்சுமணரென்கிற இரண்டு மனிதர்கள் சமுத்திரக்கரையில் வந்து சேர்ந்திருக்கிறார்கள் என்ற சமாச்சாரங் கேட்டு, வேறோரிடத்திற்குப்போய் இந்த நான்கு தோழருடனே விபீஷணாழ்வார் ஆலோசிக்கத்தொடங்கினார். ஐயா தோழர்களே! தர்ம சிந்தையை யுடையவரிடத்திலே எனக்குப் பட்சம் உண்டாயிருக்கின்றது. நான் புகழையல்லாமல் வாழ்வை விரும்பவேயில்லை மறந்துவிட்டேன். என்னுடைய சகோதரன் தர்மத்தை யுறுதியென்று பிடியாதபடியினாலே அவனைவிட்டு நீங்கிவிட்டேன். இனி நான் செய்யவேண்டியதென்ன? நீங்கள் சொல்லுங்களென்று கேட்டார். அதற்கு தருமசாஸ்திர நிபுணர்களான அந்த நான்கு ஆலோசனை மந்திரிமாரும் ஒருவர்க்கொருவர் நன்றாய் ஆலோசனைசெய்து சொல்லத் தொடங்கினார்கள். ஐயா விபீஷணமகாராஜனே! பெருமையிற் சிறந்தது இதினும் வேறொன்றில்லை. குறைவில்லாத ஐஸ்வரியமானது தர்மசொரூபியாகிய அந்த இராமச்சந்திரனைத் தரிசித்துக்கொண் டிருக்கின்றதே; இனி உமக்குத் தர்மமும் இதுவேயாகுமெனச்சொல்லினார். அவ்வார்த்தையைவிபீஷணாழ்வார்கேட்டு ஐயா மந்திரிமாரே! நல்ல வார்த்தையைச் சொன்னீர்கள். நாமிதைத் தவிர்ந்து வேறொரு காரியஞ் செய்வோமேயானால் இராக்ஷதராகவேபோய்விடுவோம். நம்முடைய அற்பமான ஜென்மம் நீங்கிக் கடைத்தேறும்படி, அனந்த கலியாணகுணகனான ஸ்ரீராமமூர்த்தி யென்பவருடைய இரண்டு செந்தாமரைக் கமலம்போன்ற திருவடிகளையும் அடைக்கலமாய்ச் சேரக்கடவோம் என்று பின்னுஞ் சொல்லுகிறார்.

இந்த ஸ்ரீராமமூர்த்தியை நான் முன் பொருக்காலும்பார்த்ததுமில்லை. அவரைப் பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை. அவரிடத்தில் எனக்கு அன்பு பிறந்ததற்குக் காரணந் தெரியவில்லை. என் தேகமெல்லாம் ஆனந்தமென்னுங் கடலிற் குளித்துக் குளிர்ந்துவிட்டது. என்னுடைய நெஞ்சு திடமாய் நிற்கமாட்டாது. உருகிப்போகிறது. அவர் என்னுடைய அற்பமான பிறவிநோய்க்குப் பகையாளிபோல காணப்படுகின்றனர். அதுவுமல்லாமல் ஈஸ்வரபக்தியும், நல்லதர்மமும், பக்ஷபாதமின்மையும், பிறவுயிர்களிடத்திலே அருளும், ஸ்ரீவேதவித்துக்களுடைய ஆசீர்வாதமும் மூலதாமரை புஷ்பத்தில் வசித்துக்கொண் டிருக்கின்ற சாக்ஷாத் பிர்மதேவனை நோக்கித் தவஞ்செய்தகாலத்தில் நான் விரும்பிப்பெற்ற வரங்களும் ஆகிய இவற்றாலுண்டான பிரயோஜனமெல்லாம் என்னை இப்படிப்பட்ட பரிசுத்தவானாய்ச் செய்தனவோ யென்பதாய் நினைக்கிறேன். பிரம்ம ருத்திரேந்திராதி யாவர்களுக்கும் ஏகநாயகனா யிருக்கப்பட்ட அந்த ஸ்ரீராமமூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித்து, நம்முடைய மனதில் நினைத்த எண்ணங்களையெல்லாம் முடித்துக்கொள்ளும்படியாயினோம்என்று இருந்த விபீஷணரானவர் அக்கரையிலே எந்த விடத்திலேயும் விளக்கு வெளிச்சம் பிரகாசிக்கின்றதினாலே பாற்கடலில் தாப

ரைப் புஷ்பித்திருக்கிறதுபோலக் காணப்படுகின்ற பெரியவானரசேனைகளைத் தம்முடைய கண்ணினுலேபார்த்து தேகத்தோடு கூடிய சகல ஜீவகோடிகளையும் இந்தவானரங்களையும் ஓரிடத்தில் நிறுத்தி மதிப்பிடுவோமானுல் இந்த வானரசேனைகளினுடைய தொகையே பெரிதாயிருக்குமென்று தன்னுடைய மந்திரிகளுக்குச் சொல்லி, நாம் இப்போது இராத்திரிகாலமாயிருக்கின்றபடியினுலே அவ்விடத்திற்குப் போகிறது நமக்குத் தகுதியல்லவென்று உயர்ந்த பொருள்பட ஆலோசனை செய்து, அதிவிவேகியான அந்த விபீஷணுழ்வார் ஓரிடத்தில் மறைந்திருந்தார். தமது தீவினைகளெல்லாம் தம்மைவிட்டு ஒழிவதுபோல உலகிலுள்ள இருட்கூட்டங்களெல்லாம் ஒழியும்படி ஒற்றைச்சக்கரத்தைப்பூண்ட தேரையுடைய சூரியனும் உதயமாயினன்.

அந்தச் சமயத்தில் லோகாராட்டியரான ஸ்ரீராமமூர்த்தியானவர் சமுத்திரத்தைக் கடக்கும்படியாய் நினைவுகொண்டவராகி, நீலோற்பல புஷ்பம்போன்ற கண்களோடுகூடிய சீதாபிராட்டியாருடைய பவளத்தைக்காட்டிலுஞ் சிறந்து பிரகாசிக்கின்ற சிவந்த இதழை நினைத்துச் சோர்வடைந்து,அந்தக்கடற்கரைக்குச்சமீபத்தில் வந்து, அவ்விடத்திலே யிருக்கப்பட்ட சோலையையும், நீர்க்கழியையும், மணல்வெளியையும், தாழஞ்செடியையும், நீலோற்பலபுஷ்பங்களையும், கருங்குவளைப் புஷ்பங்களையும், படர்ந்திருக்கும்படியானபுன்னை விருக்ஷத்தையும், அதன் பக்கத்தில் அன்னங்கள் நிறைந்து ஒன்ருேடொன்று அணையும்படியாகக் காமவேட்கையை வளர்க்கத்தக்க புஷ்பச் சோலைகளையும் பார்த்து, அவ்விடத்தில் கும்பல் கும்பலாய் அலைகளினுலே யொதுங்கிக் கிடக்கின்ற முத்தினுடைய குவியல்களையும், மற்ற மணிக் குப்பைகளையும், சொர்னமயமான கடற்கரையும், யாவரும் பயப்படும்படியான அநேகமரம் அடர்ந்த தோப்புகளையும், மணற்குன்றுகளையும், அவற்றின்மேல் புரண்டுவருகின்ற கடலலையும் உற்றுப்பார்த்தார். நுளைச்சியர் தங்களுடைய நாயகன்மார் எப்போது வருவாரென்பதாய் பிரகாசியானின்ற மின்னலைப்போலும் அழகிய விரல்கள் தேயும்படியாய்ச் சுழிகள் சுழித்துச் சகுனத்தைப் பார்க்கும்பொழுது தம்முடைய கண்ணீரானது அந்தச் சுழிகளை அழித்துவிட அதனுல் விசனமுடையவராய் மறுபடியும் அச்சுழிகளைச் சுழித்துக்கொண்டு இருக்கின்ற சமுத்திரக்கரையிலுள்ள புன்னைமரச் சோலையைப் பார்த்து குளிர்ந்த சமுத்திரத்தினுடைய அலைகளானது மோதி யடித்துக்கொண்டு வருகிறதினுலே அதனுடைய கரையிலுள்ள வளைந்த தாழஞ்செடிகளின் மேல்பாதிச் சிறகினுலே தன்னுடைய பெட்டையைப் பக்கத்திலணைத்துக்கொண்டு ஆணன்னங்கள் நித்திரைசெய்கின்றதைப்பார்த்துப் பெருமூச்சுவிட்டவராய், உண்ணுதற்காக மீன் கொண்டுவரும்படி அந்த மரக்கிளையை விட்டுப்பிரிந்துபோன ஆண்கொக்கானது திரும்பிவரப்பட்ட திசையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற வெண்மையான பெட்டைக் கொக்கைப்பார்த்து மனமிரக்கமுடையவராயு மிருந்தார். மேலும் ஒரு பெண் கொக்கின்மேல் மோகங்கொண்ட இரண்டு ஆண்கொக்குகள் மிகுந்த கோபமுடையவைகளாய்க் கண்களில் நெருப்புப் பொறிபறக்க ஒன்ருேடொன்று பின்னிடையாமல் உயுத்தஞ் செய்வதைக்கண்டு தானும் கோபங்கொண்டு வளைந்த புருவத்தை யுடையவராயும், நிறைந்த ஊடலினுலே ஆணன்னத்தை ஜெயித்த பெண்ணன்னமானது கலவியில் ஆணன்னத்திற்குத் தோர்வையுற்று நிற்கிறதைக்கண்டு தன்னுடைய பவளம்போன்ற இதழைமுத்துப்போன்ற பற்களினுல் அதுக்கிக்கொண்டு துக்கமுடையவராகியு மிருந்தார். இப்படி சமுத்திரக் கரையிலே உலாவிக் கொண்டிருந்த சக்கரவர்த்தித்திருமகனுனவர்-இளையபெருமாள்-சுக்கிரீவமகாராஜர்-சாம்பவர் - அநுமார் முதலானவர்களும் தேறுதலைசொல்ல, அவர் திருவுள்த்தேறி ஸ்வபாவ அறிவோடுங்கூடிய பித்தரைப் போல அவ்விடத்தைவிட்டுத் தம்முடைய உறைவிடமே வந்துசேர்ந்தனர். சதுரரான துணைவரோடும்கூடிக்கொண்டு அவ்விடத்திலே அணியணியாய் நிற்கும்படியான வானரசேனையிலே விபீஷணரானவர் மனக்களங்கமில்லாதுவந்துசேர்ந்தார்.

இப்படி வந்த விபீஷணுழ்வாரையும் அவருடைய தோழன்மார்களையும், வானர

சேனையைப்பார்த்து நம்மிடத்திற்கு ஏன் இந்த இராக்ஷதர் வந்தார்? வந்தவர்கள் என்னசெய்ய வேண்டுமென்பதாய் நினைக்கிறார்களோ? அறிகிலோம். அதனால் இவரைத் தள்ளுங்கள்; பிடியுங்கள்; அடியுங்கள்; என்று இடி இடித்தாற்போலக் கர்ஜ்ஜித்துச் சொல்லிக்கொண்டு அவரைச் சுற்றிக்கொண்டார்கள். அப்போது விபீஷணாழ்வாரானவர் இவ்விடத்திலே எனக்கு வேறொரு துணையுமில்லை. அதிவீரபராக்கிரமசாலியான ஸ்ரீராகவமூர்த்தியே! உமக்கு அபயம். என்று கூவிய சப்பதமானது சக்கரவர்த்தித் திருமகனுருடைய திருச்செவியில் நுழைந்தமாத்திரத்தில் நம்முடைய துணைவராகிய இளையபெருமாள்-சுக்கிரீவன்-அநுமார்-சாம்பவர் முதலாய்ச் சொல்லப்பட்டவரைக் கிருபையோடு முகமலர்ந்து பார்த்து, ஐயா ஸ்ரீராகவப்பெருமானே! உமக்கு அபயமெனச் சொல்லுகிறார்களே? அவர்கள் யாரென்று பார்த்து வந்து சொல்லுங்களென்று ஆக்கியாபித்தார். அங்கே அப்படியிருக்கும்பொழுது இங்கே வானரசேனையில் வந்து சேர்ந்தபோது வானரவீரர்களாலே விபீஷணருக்குண்டானதைச் சொல்லுகிறோமென்று கம்பநாட்டாழ்வார் சொல்லுகிறார். வானரர்கள் விபீஷணரைப்பார்த்துத் தர்மதேவதையே! இந்த இலங்காதிபதியானவனை இங்கே கொண்டுவந்துவிட்டது. யதார்த்தமாய் என்னமோ ஒரு பொல்லாங்கு செய்கிறதற்கு இவ்விடத்திற்கு வந்தான். இவன் வேறொருவனல்ல. இராவணனே. ஆதலால் நம்முடைய எண்ணத்தை முடித்துக்கொள்ளலாம். மகா பாவியாகிய இராவணனுக்கு இருபதுகைகளும் பத்துத்தலைகளுமிருக்கிறதாய்ச்சொல்லுவார்களே. அவைகள் எல்லாம் அறுந்துபோய்விட்டதுகளோ? என்கிறவர்களும், எங்களோடு சண்டைசெய்யமாட்டுவையோ? என்கிறவர்களுமாய் ஆளுக்கொரு வார்த்தையாகசொல்லி மிகுந்த கோபத்தோடு நெருங்கி இவனைப் பிடித்து நாம் சிறையில் வைத்துவிட்டுப் பிறகு நம்முடைய சுவாமிக்குச் சொல்லுவோமென்பார்கள். சிலர் இவனைப்பார்த்தும் கொல்லாமல் க்ஷணப்பொழுதாவது நாம் சும்மா நிற்கவேண்டியதென்னவென்று நெருங்கிப் போகின்றார்கள். சிலர் இவர்கள் இராக்ஷதஜாதியிற் பிறந்தவர்களாதலால் க்ஷணப்பொழுதுக்குள்ளாக ஆகாயமார்க்கமாய் மறைந்துபோய்விட்டால் அப்புறம் நாம் செய்வதென்ன என்பார்கள். சிலர் இவனைச் சும்மாய்க் கொல்லுகிறதுமாத்திரந்தகுதியோ? குத்தி நசுக்கிவிடுவதே நல்லதென்று வெகுகோபத்துடனே சொல்லுகிறார்கள். இப்படி அவரவர்களுக்குத்தோன்றியபடி சொல்லும்போது, நிபுணர்களானமயிந்தனென்பவனும், துமிந்தனென்பவனும் ஸ்ரீராகவருடைய நியமனத்தால் விரைவாயோடிவந்து அப்படிக் கொல்லும்படியாகப் போகின்ற சேனைத்தலைவர்களைவிலக்கி வேதசாஸ்திரங்களையுணர்ந்தவர்களான அந்த இரண்டு வானரவீரரும் அந்த அரக்கரைப்பார்த்து இவர்கள் கோபக்குறியுடையவர்களல்லவென்று தெரிந்து; சாமுத்திரிகா சாஸ்திரப்படி அவர்கள் விவேகாதிகளையெல்லாம் ஆராய்ந்து, நீங்கள்யார்? இவ்விடத்திற்கு வந்த காரணமென்ன? சண்டைசெய்கிறதற்காகவோ? அல்லது வேறேஒரு எண்ணமாகவோவந்தீர்கள். மேலும் இவ்விடத்தில் நீங்கள்வந்து சேர்ந்ததற்குக்காரணமெதுவோ? அதுகளையெல்லாம்ஒளியாமல் உண்மையாகச்சொல்லவேண்டுமென்றுகேட்டார்கள். அதற்குச் சத்தியவந்தனான விபீஷணாழ்வாருடைய தோழரில் ஒருவனாகிய அனலன் சொல்லுகிறான். இவர் பிர்மாவினுடையகுமாரரான தயாசீலரும் தர்மவானுமாகிய புலஸ்திய பிர்மாவினுடையபுத்திரர். விபீஷணரென்னும்பெயரினையுடையவர். சூரியவம்சசிரேஷ்டரும்லோகநாயகருமான ஸ்ரீராகவபிரானுடைய திருவடிகளைச் சரணமடைந்து உஜ்ஜீவிக்கவந்தார். தர்மநிலைமை தவறாமலும், சாக்ஷாத் நாராயணமூர்த்தியினிடத்தில்நிறைந்த அன்பும், நிலைத்த சத்தியமும், பிராமணர்களிடத்தில் விசுவாசம் முதலாகிய இந்த நற்செய்கைகளையெல்லாம் பிரமதேவனை நோக்கித் தபசுசெய்து பெற்றுக்கொண்டார். இதன்றியும் இவர் இராவணனைப்பார்த்து, ஐயா இராவணேஸ்வரா! நீ அக்கினியை முன்தானையில் முடிபோட்டுக்கொண்டிருக்கின்றவர்களைப்போல அவிவேகமுள்ளவனாய் லோகநாயகருடைய தேவியாகிய சீதாபிராட்டியாரைச் சிறையில் வைக்கலாமா? அந்தச்சீதாபிராட்டி

யை விட்டுவிட்டால் நீர்கடைத்தேறுவாய். விடாமற்போவாயேயானால் அழிந்துபோவது சித்தமென்று பற்பலவிதமான நல்ல புத்திகளைச்சொன்னார். இதைக்கேட்டு கொரேமான துற்சிந்தையை யுடையவனும், புத்தியீனனுமான இராவணன் இவரைப் பார்த்து, நீஎனக்குப் பின்பிறந்தவனென்ற காரணத்தினால் பிழைத்துக்கொண்டாய். வெளியே போய்விடு. என் கண்முன்னாக நின்றால் இறந்துபோவாயென்று சொன்னான், இதைக்கேட்டு, அந்த இராவணனை விட்டு நீங்கிவந்துவிட்டார் என்று நடந்த சவிஸ்தாரங்களை யெல்லாம் விரித்துச் சொல்லியதை மயிந்தனென்பவன் கேட்டு ஆலோசித்து, இந்தவார்த்தை சுவாமியிடத்தில் அவசியம் சொல்லத்தக்கதென்று திரும்பி, இளையபெருமாளும் வானரசேனைகளும் பிராகிருதகாவலாய்ச் சூழ்ந்துநிற்கச்செய்து, தருமமும் நீதியும் தவமும் மதில்களாகவும், கீர்த்தியும் பொறுமையும் வாயில்களாகவும், கிருபையே ஒரு கோயிலாகவுங்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற சக்கரவர்த்தித் திருமகனாருடைய சன்னிதியில் மிகுந்த பயபக்தியுடனேபோய் அவருடைய திருவடிகளில் தெண்டனிட்டு, சுவாமி! அடியேனுக்கொரு விண்ணப்பமிருக்கிறதென்று சொல்ல, தாமரைத்தடாகம்போலும் திருக்கண்களோடுங்கூடி எழுந்தருளியிருக்கின்றஸ்ரீராமமூர்த்தியானவர் சுற்றிக் கட்டியிருக்கின்ற ஜடாமகுடத்தோடுங் கூடிய தமது திருமுடியை அசைத்துச் சொல்லும்படி சமிக்கைசெய்ய, மயிந்தன் தான் சத்தியமாகக் கண்டதையும் கேட்டதையும் சொல்லத்தொடங்கினான். ஓ சுவாமி! மேல்விளையுங்காரியம் அடியேனுக்குத் தெரியாது. விபீஷணனென்கிற பெயரையுடைய ஒருவன் இராவணனுக்குத் தம்பியாம். அவன் தன்னுடைய மந்திரிகளான நான்கு தோழர்களோடு நம்முடைய வானரசைனியங்கள் மத்தியில் வந்துசேர்ந்தான். அப்படி வந்துசேர்ந்தவனை அநேக வானரவீரர்கள் கொல்லுங்கள், பிடியுங்கள், தள்ளுங்களென்றுசொல்லிக்கொண்டு நெருங்கிப்போனார். அதை அடியேன் பார்த்துப் பொறுங்க ளென்று அவர்களைத்தடுத்து, அவனை நீயார்? உன்னுடைய நிலைமையென்ன? சொல்லென்று கேட்டேன். அதற்கு அவன் துணைவர்களில் அனலனென்னுமொருவன் சொன்னதாவது இந்தவிபீஷணர் கொடுந்தீமையைச் செய்துமுடித்ததன் தமையனான ராவணன் போய்ச்சேரப்போகிறது துன்பமிகும் நரகஸ்தானமே. அவனைக்காப்பதற்கு வேறொரு இடமுமில்லை என்று கிருபாநிதியாகிய சக்கரவர்த்தித் திருமகனாரைச் சரணமடைந்தாரென்று சொன்னதுமன்றி அந்த விபீஷணர் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் மற்றுள்ள சிந்தனையையும், உண்மையையும், பிரமதேவனிடத்தில் வெகுகாலம் தபசுசெய்து வரமாகப்பெற்ற பரிசுத்தவானென்றும் சொன்னான். மேலும் பதிவிரதாசிரோமணியான சீதாபிராட்டியை நீ விட்டுவிடாமல் காத்திருப்பையேயானால் இப்போது சூரிய நுழையாமல் பக்கத்தில் சுற்றிப்போகும்படியான பெருமையையுடைய இந்த இலங்காபுரிபட்டணத்தில் உன்னுடைய கிரீடங்களோடு கூடிய தலைகள் புரளுமென்று ஒரு நல்லபுத்தியும் சொன்னானும். அதற்கு இராவணன்கோபமுள்ளவனாய்க் கண்களில் தீப்பொறி பறக்கும்படியாக ஓ விபீஷணா! நீ ஒரு க்ஷணப்பொழுதேனும் என் சமீபத்தில் நிற்பையேயாகில் உனக்கு மரணம் சம்பவிப்பது நிச்சயம். ஆகையால் என் கண்முன்னாக நிற்காமல் அப்புறம் போய்விடுமென்று சொல்லத் தேவரீரைச் சரணமடைந்தானும் என்றுஞ் சொன்னான்.

இது அடியேன் கேள்விப்பட்ட விருத்தாந்தம் என்று மயிந்தனென்பவன்விண்ணப்பம் பண்ணிக்கொண்டபொழுது, அவ்வார்த்தையைக் கேட்ட சக்கரவர்த்தித்திருமகனாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் தமக்கருகில் நிற்கின்ற சுக்ரீவமகாராஜன் முதலான துணைவர்களைப் பார்த்து, இப்போதுஇந்த மயிந்தன் சொன்னதைக் கேட்டீர்களே; இந்தவிபீஷணன் அடைக்கலப்படத் தக்கவனா? நீக்கப்படத்தக்கவனா? உங்களுடைய புத்திகோசரத்தினாலே சீர்தூக்கிப் பார்த்துச்சொல்லுங்களென்று நியமித்தார். இப்படி நியமித்த விசாலமான கமலலோசனருக்குத் தண்டஞ்சமர்ப்பித்து இராஜகாரிய விவகாரங்களை நடத்துகிறதில் இன்னது தகுந்தயிடம் இன்னதுதகுந்தகாலமென்று ஆலோசித்து அறியும்படியான சமர்த்

துள்ள இரத்தினகிரீடதரனாகிய சுக்ரீவ மகாராஜன் ஆதியான வேதங்களையும் மனு முதலான சாஸ்திரங்களையும் கரைகண்ட தேவரீர் இப்படிப்பட்ட காரியங்களைக்குறித்து எங்களிடத்தில் விசாரிக்கவோ எங்களை வினவினகாரியம்? ஓ விதிக்குமேலிருக்கின்றவரே! ஓ கிருபாசமுத்திரமானவரே! ஆகிலும் அடியேன் சொல்லுவது தகுந்ததல்லாததும் சாஸ்திரோக்தமல்லாததுமாயிருந்தபோதிலும், என்னறிவுக்குத் தகுதியானவைகளை விண்ணப்பம் பண்ணுகிறேன். தேவரீர் கிருபைசெய்து திருச்செவி சாற்றியருளவேண்டும். இனி விளைவது தேவரீருக்கே தெரியும். இப்போது சண்டை தொடங்குகிறதாக யிருக்கின்றதே, அதற்காகவுமல்ல. எதிரிகள் சொல்லும்படியாக வந்திருக்க அதை ஆலோசியாமையுமல்ல. இவன் தன்னுடைய தமையனை நீக்கிவிட்டு வந்தது தருமமாகுமா? அயோக்கியரான ராக்ஷதர்களுக்குள் யோக்கியர்களுமுண்டாயிருப்பார்களா? பெற்றகாலமுதல் தயவுவைத்துப்போஷித்துக்கொண்டுவந்த தாய் தகப்பன்மார்களையும், தனக்கு முன்பிறந்த தமையனையும், தன் ஆசாரியர்களையும், அரசர்களையும் பகைக்கிறதும், அவர்களைவிட்டுப் பிரிகிறதும் யோக்கியர்களுக்கு இகழ்ச்சியாகுமேயல்லாமல் சந்தோஷிக்கும்படியானதோ? மேலும் தன்தமையனிருக்கும் இடத்திலிருந்து அவன் பிரவேசித்த யுத்தத்தில் தானும் பிரவேசித்து அவனுடன் மாண்டுபோக வேண்டியதாயிருக்க, அதற்குப்பயந்து நம்மிடத்தில் வந்து சேர்ந்தான். இது உலகத்தில் வீரலக்ஷணத்துக்குப் பழியை யுண்டாக்குமல்லவோ? தர்மத்தையே விரும்பினபோதிலும், தன்னுடைய பந்துக்களையெல்லாம் விட்டுப் பலர் நகைக்கும்படியாகத் தன்மானம் பிறர்மானமென்ப தில்லாமலிருந்து, அந்தப்பகையாளிகளிடத்தில் சேர்ந்து கொள்ளுதல் எந்தக்காலத்திற்கும் பழியாகாமல் போகுமா? இவன் தன்னுடைய தமையனை இராவணன் வாழ்ந்திருக்கிற காலத்தில் அவனுடையசெல்வத்தைப் பங்கிட்டு அனுபவித்துக்கொண்டிருந்து, இப்போது அவனை எதிரிகள்பகைத்து வந்திருக்கும்போது, அந்த யுத்தத்தில் அவனுக்கு உதவியாயிராமல் நம்மிடத்தில் வந்துசேர்ந்தானாதலால் இவன் நமக்கு உறவாளியென்று எண்ணலாமா? ஓ கிருபாநிதியாகிய ரகுராமா! பொன்மானுருவான மாரீசன் தன்மருமகனாகிய இராவணனுடைய துற்புத்திக்கிசைந்து அவனுடைய செஞ்சோற்றுக் கடனுக்காகத் தன்பிராணனைக் கொடுத்ததைப்பார்த்திருந்தும் இந்த விபீஷணன் தமயனென்னும் பக்ஷத்தை மறந்து விரோதங்கொண்டு வந்தவனாயிற்றே. இவனை நீக்கிவிடாமல் சிநேகங் கொள்ளலாமோ? நாம் மூன்று லோகத்தவர்களும் எமனோடு கூடிச்சேர்ந்து உம்மோடு எதிர்த்த காலத்திலும் தேவரீர் அவர்களை ஒருலக்ஷியம் பண்ணாதவராயிற்றே; நமக்குச் சத்துருவாகிய இராவணனுடைய தம்பியான இந்த விபீஷணன் நம்மிடத்தில் வந்து சேர்ந்ததினால் நமக்கு இவன் சினேகிதனாவானா? இராக்ஷதர்களையெல்லாங் கொன்று கருவறுத்து தர்மத்தைப் பரிபாலிக்கும்படியாகவந்தோமென்கிறபெருமையையுடைய நாம் இந்த நிர்த்தயா ஜெந்துவானவனைச் சிநேகமாக அங்கீகரிக்கப்போமேயானால் நாம் பலயீனரென்று பிறர் நினைப்பார்களல்லவா? நல்லபந்துக்களாக இருக்கின்ற பேர்கள் தங்களைப்பிரிந்த காலத்திலேயும், அவனுடைய மிகுந்த ஐஸ்வரியத்தைத் தாங்கள் பெற்று அநுபவிக்கிற காலத்திலேயும் அவ்வைஸ்வரியத்தையிழந்து தரித்திரனாய்த் தங்களோடு கூழுண்டு பிழைக்கிற காலத்திலும், வித்தியாசப்படாமல் ஒரே நிலைமையாய் இருப்பார்கள். மேகம் போலும் திருமேனியையுடைய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியே! நாமிந்த விபீஷணனைப் பக்ஷமாக அங்கீகரித்தபோதிலும் விஷத்தைப்போல நமக்குத் தீமைசெய்ய வந்தவனேயல்லாமல், அடைக்கலமாக நம்மிடத்திற்கு வந்தவனல்ல. சுக்கிரீவமகாராஜன் தன்னபிப்பிராயத்தை விவரமாகச் சொன்னதைக்கேட்ட ஸ்ரீராமரானவர், அவன் பின்னாக நிற்கின்ற அநேகசாஸ்திரக்கேள்விகளை யுடையவனும், தனக்குச்சமானமில்லாத பலாஷ்டிகனுமான ஜாம்பவனைப் பார்த்து உன்னுடைய அபிப்பிராயமென்னவென்று கேட்டனர். அநேககாலமாக வெகுகாரியங்களை அனுபவமாயறிந்த சாம்பவன் சொல்லுவதாயினான். ஓ சுவாமி! சத்துருக்கள் மிகுந்த அறி

வுடையவர்களா யிருந்தபோதிலும் அவர்களைச் சிநேகர்களென்று கொண்டால் எதார்த்தமாய்க் கெட்டுப் போவார்கள். இராக்ஷதர்கள் நல்லநெறியை யுடையவர்களைப்போலக்காணப்பட்டாலும், ஜாதிஸ்வபாவத்தைக் கொண்டு பெரியோர்கள் அவர்களை யோக்கியர்களென்று நம்புவார்களோ? அற்பஜாதியில்பிறந்தவர்கள் ஜெயமுங் காட்டுவார்கள். அதிக விநய விஸ்வாசமுள்ளவர்களாகவு மிருப்பார்கள். செய்யவேண்டிய காரியங்களை ஒழுங்காகவும் முடிப்பார்கள். தீர்க்க பகையாளிகளாகவு மிருக்கமாட்டார்கள். ஆனபோதிலும், அவர்களைச் சிநேகர்களாகக் கொண்டால் பெருமையுண்டாகுமோ? மேலும் வேதவிதிகளையும் யாகதருமங்களையும் மாறுபாடாக்கிப் பிராமணர்களுக்குத் துக்கத்தையும், தேவர்களுக்குத் துன்பத்தையும் செய்து கொண்டு வருகின்ற மகாபாதகர்கள் நம்மிடத்தில் வந்ததினாலே யோக்கியர்களாய் நமக்கு நன்மைசெய்வார்களோ? அப்படிப்பட்டவர்கள் நம்மைச் சரணமடைந்து நாம் அவர்களைக் காப்போமானால், அவர்கள் பொய்யைக் கொண்டு வஞ்சனையான துரோகங்களைச் செய்தபோதிலும் அதை எதார்த்தமாகக்கொண்டு நாம் இருந்தபோதிலும், நம்முடைய ஐஸ்வரியங்களை இழந்தபோதிலும், லோகத்தவர்களெல்லாரும் இகழும்பழியுமாகும். தர்மதேவதையும் சகிக்கமாட்டாது. இன்னுமிதற்குமேல் விளைகிறதீங்கை நான்சொல்லவேண்டுமோ? தேவரீர் காட்டில்வாசம்பண்ணுகிறகாலத்தில் மானுருவங்கொண்டு வந்தவனுடைய வருகை எப்படிப்பட்ட துன்பத்தை விளைத்ததோ? அப்படிப்பட்டதாகவேஇவனுடைய வரவு முடிவுபெறுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான். அதன்பிறகு எல்லாச் சாஸ்திரங்களையும் படித்து அதனுடைய உண்மைப்பொருளைப் பலரிடத்திலும் கேட்டறிந்தவனான நீலனென்கிறவானரசேனாதிபனைப் பார்த்து உன்னுடைய அபிப்பிராய மென்னவென்றுகேட்க, மிகுந்த பக்தி விசுவாசத்துடன் சொல்லலுற்றான். ஓ சகலவேதசாஸ்திரங்களையுந் தெரிந்த ஸ்ரீராமனே! அடியேன் விண்ணப்பம் பண்ணிக்கொள்வது இழிவாகிய குரங்கினுடைய சொல்லென்று சிரிக்கத்தக்கவை களாயிருந்தபோதிலும் அங்கீகரிக்கவேண்டும். சத்துருக்களைச் சிநேகர்களாக ஏற்றுக்கொள்வதில் அநேக வேற்றுமையுண்டு. தங்களுடைய பந்துக்களா யிருக்கின்றபேர்கள் யுத்தஞ்செய்கிறகாலத்தில் எதிர்த்துவந்த வீரர்களுக்குப்பயந்து அவர்களைப் பலவீனர்களாகக் காட்டிவந்தவர்களும், ஸ்திரீகளிடத்தில் ஆசைவைத்தவர்களும், குறைவுபடாத திரவியங்களையிழந்து கோபிக்கின்றபேர்களும்,தேசாபிமானிகளானபேர்களும், யுத்தத்தில்புறங்கொடுத்தோடிவந்தபேர்களும், தாயாதிகளுக்குச் சேரவேண்டிய தாயபாகத்தைக் கொடாமல் அதைக் கொண்டு ஐஸ்வரியவான்களா யிருக்கிறவர்களும், அன்னியரால் பீடிக்கப்பட்ட பந்துக்களைக் கொன்றுவிட்டபேர்களும், அன்னிய ராஜதெண்டனைக் குட்பட்டவர்களை வருத்தப்படுத்தினவர்களும், பகையாளிகளிடத்தில் தம்மனையாளை விட்டிழந்தவர்களும், ஆகிய இவர்கள் நம்முடைய பிள்ளைகளாயினும் நம்மிடத்தில்வந்தால், தண்டனை யடைதற் குரியவர்களே யாவார்கள். மேலும் இவர்கள் தங்களுக்குள்ளும் பொறுமை யுடையவர்களல்ல; நாமுறவு செய்யத்தக்கவர்களுமல்ல. அப்படிப்பட்ட இராக்ஷதர்கள் நம்மைவந்து சேர்ந்தார்கள். தம்முடைய பந்துக்களுக்குக் கெடுதியுண்டாகும்படியாக அவர்களைவிட்டு நீங்கி வந்தார்கள். ஆதலால் இவர்கள் மிகுந்த துணிவுடையவர்கள். இப்படிப்பட்டவர்கள் விஷயத்தில் நாமென்ன தீர்மானிக்கலாம்? இப்போது நாமிருக்கிற காலத்தைப் பார்க்கும் போதும், சாஸ்திரங்களினுடையகருத்தை ஆராயும்போது தமையன்மேல் கோபங்கொண்டுவந்த இவனுடையநடத்தையைச் சிந்திக்கும்போதும் இவனுடைய நிலைமை இப்படிப்பட்டதென்றுநாமறியும்படியான தன்மையை யுடையதா யிருக்கின்றதோ? என்று தனக்குத் தோன்றிய நியாயங்களை யெடுத்துக்காட்டினான்.

பிறகு ஸ்ரீராமர் மற்ற மந்திரிமார்களையும், அநேக வித்துவான்களையும், தனக்குச் சிநேகமா யிருக்கின்றவர்களையும் பார்த்து, இந்த விபீஷணன் விஷயத்தில் உங்களுக்கிருக்கும் அபிப்பிராய மென்னவென்று கேட்டனர். அவர்களெல்லோரும் வித்தியாசப்படாமல் ஒரே மொழியாய்

இவனை அங்கீகரிக்கிறது கிருபாநிதியாகிய தங்களுக்குத் தகாதென்று தீர்மானமாய்ச் சொன்னார்கள்.

அதைக்கேட்டு எல்லாரிலும் முதன்மைப்பட்டவரான ஸ்ரீராமமூர்த்தியானவர் அநுமாரைப் பார்த்து, ஓ சமானமில்லாத மிகுந்த நல்லறிவையுடைய மாருதியே! உன்னுடைய அபிப்பிராய மென்னவென்று கேட்டனர். அதற்கு அந்த அதிநுட்பமான கேள்வியையுடைய ஆஞ்சநேயர் மிகுந்த பக்திவினய விசுவாசத்துடனே தலைவணங்கி, கையினால் வாயைப் பொத்திக்கொண்டு, சுவாமி! அடியேங்கள் தேவரீருடைய திருவுளத்துக்கு இணங்கும்படி சொல்லத்தக்க அறிவுடையவர்களல்ல என்றாலும் மந்திராலோசனை செய்து காரியம் நடத்துகிறது தேவரீர் சந்ததியின் கடமையானதால் அதன்படி தேவரீருங் கேட்கத் திருவுளங் கொண்டீர். சுவாமி! ஆலோசித்துச் சொல்ல வேண்டியவைகளெவ்வளவுண்டோ அவ்வளவையும் தேவரீருடைய சன்னிதியில் உத்தமமானது இன்னதென்று இங்குள்ள பெரியோர்களெல்லாரும் விவரமாய் விண்ணப்பஞ்செய்திருக்க அடியேனைப் போன்றவர்களென்ன விசேஷித்துச்சொல்ல யிருக்கின்றது? இந்தப் பெரியோர்கள் சொன்ன ஆலோசனை அதிக உயர்ந்ததே; ஆயினும் அடியேன் கண்ணாரக்கண்டறிந்த சில காரியங்களைச் சொல்லுகிறேன். தேவரீர் திருச்செவிச் சாத்தியருளவேணும். இந்த விபீஷணரைத் தீயவனென்று சந்தேகித்துச் சொல்லமாட்டேன். அடியேன் இலங்கைக்குப்போய் இராவணன் சமூகம் சேர்ந்தபோது அவன் என்னைக்கொல்லும்படியாகத் தன்னுடைய கிங்கரரையேவினான். அப்போது இந்த மகானுபாவராகிய விபீஷணர் தடுத்து பகையாளிகளுடைய தூதரைக் கொல்லுவது தகாது. பழியாகும். மேலும் வெற்றியுமல்லவென்று சொல்லி அவர்களைவிலக்கி, ஸ்திரீகளைக் கொல்லுகிறதும், கண்ணில்லாத குருடர்களைக் கொல்லுகிறதும், தூதர்கள் எவ்வளவு கெடுதி செய்த காலத்திலும் அத்தூதரைக் கொல்லுகிறதும், நல்லதல்லவென்று இப்படிப்பட்ட சிறந்த ஏதுக்களை இராவணனுக்குத் தெரியச் சொன்னார்.

பின்னும் இராத்திரிகாலத்தில் இவருடைய திருமாளிகைக்குள் நான்பிரவேசித்தபோதும் அவ்விடத்தில்உலாவிக்கொண்டிருந்தபோதும் நல்ல சகுனங்கள் அடியேனுக்குக் காணப்பட்டது மல்லாமலும், ஓ சுவாமி! சக்கரவர்த்தித் திருக்குமாரராகிய ஸ்ரீராமமூர்த்தியே! இன்னும் அடியேன் கண்டவைகளைச் சொல்லுகின்றேன். இவர் திருமாளிகைக்குள் மது மாமிசங்களிருக்க நான் கண்டதில்லை. அது எப்போதும் தர்மம்-தானம்-வந்தனை-வழிபாடு-முதலானவற்றால் பிராமண கிரகம்போல பிரகாசித்துக்கொண்டிருந்தது. இவருடைய குமாரத்தியான திரிசடையென்பவள் என் தாயாகிய சீதாபிராட்டிக்கு அருகிலிருந்துகொண்டு, அம்மா! இந்தத் துர்ப்புத்திமானை இராவணன் உன்னைக்கையால் தொடமாட்டான். அப்படி தொடுவானானால் அவன் தலை சகஸ்திரசுக்கலாய் வெடித்து, அவனும் எமலோகத்தை யடையும்படியாகப் பிரம்மதேவரிட்ட ஒருசாப முண்டாயிருக்கின்றது என்று இதுமுதலான இனியவார்த்தைகளைச் சொல்ல அடியேன் காதாரக் கேட்டு மிருக்கின்றேன். ஓ துளபமாலிகாதரராகிய சுவாமி! அன்றியும் நெஞ்சில் வஞ்சனையுள்ளபேர்களுடைய முகத்தைப் பார்த்தமாத்திரத்திலே அவரவர்களுடைய குணம் வெளியாகாமல் மறைவாகமாட்டாது. உடைந்த கப்பலை விரும்பி சமுத்திரத்தில் முழுகிப் போகிறவர்களைப்போல் அடியேன் இவர் விஷயத்தில் பொய்சொல்லுவேனோ? மனதிலுள்ளதை வாயால் சொல்லுகிறதற்கு முன்னமே அவரவர்களுடைய முகங்களே வெளியாக்கிவிடும். திருட்டுப்பயிர் செய்கின்றவர்கள் ஒருவருக்குந் தெரியப்படாத இருண்ட ஒருபள்ளத்தில் பயிர்செய்வார்களே யல்லாமல் அதிகாரிகளுடைய கண்ணுக்குத்தோற்றும்படி செய்யமாட்டார்கள். சுவாமி! இராவணனை அலக்ஷியமாகத் தன் வாலில் கட்டியிழுத்துக்கொண்டு எங்குந் திரிந்த வாலி சுவர்க்கத்தை யடையவும், அவனுடைய பட்டத்தைச்சுக்ரீவமகாராஜரடையும்படியாகவும், வளைத்த உம்முடையவில்வல்லமையையும், உம்முடைய ஜயப்பிரதாபத்தையும், உம்முடைய நல்ல குணசீலத்தையும் கேள்விப்பட்டு; உம்மையடைந்து ஞானப்பிரதேச

மான பரமபத வாழ்வை அடையும்படி இந்த விபீஷணர் உம்முடைய திருவடியில் அடைக்கலம் புகுந்தார். மேலும் இந்த இராக்ஷதர்களுடைய ராஜரீகம் வேதமார்க்கத்துக்கு விரோதமான கொடுங்கோன்மையோடு கூடினதாகையால் இது நிலைத்திருக்கமாட்டாதென்று நம்பி, இந்தச் சமுத்திரஞ்சூழ்ந்த இந்த உலகமுழுவதையும், உம்முடைய தம்பியாகிய பரதாழ்வாருக்குக் கொடுத்துவிட்ட அபாரகருணையையும்சத்தியத்தையும் விரும்பிவந்தார். இவர் தகுதியல்லாதகாலத்தில் வந்தாலும்குறையல்ல. வாலிக்குச் சமானமான பலமுள்ளவர்களான மூலபலசைனியங்களினுடைய வல்லபம் தங்களுக்கு உதவியா யிருந்தபோதிலும், அந்த ராக்ஷதர்களுக்கு முடிவுகாலம் வந்துவிட்டதென்கிறநம்பிக்கையினால் தம்முடைய சகோதரர்களை உண்மையாய்ப் பிரிந்துவிட்டார். அந்த இராக்ஷதர்களுடைய மாயதந்திரச்செய்கைகள் அனேகமுண்டு. அந்த வித்தையில் நன்றாய்த்தேர்ந்து பழகியிருக்கின்ற இந்த விபீஷணர் ஒருவர் நமக்கு அகப்பட்டதினால் இனி நாம் எளிதில் வெற்றிபெறலாம். இந்த இராக்ஷதர்களுடைய மனதின் தீமையை இனி ஆராய்ந்தறிகிறது நமக்கு மெத்த லேசாய் முடியத்தக்கது. இவர்கள் கொல்லும்படியான செய்கையைப் பெற்றவர்கள் என்கின்ற எண்ணம் இனி நீங்கும்படி அனுப்பப்பட்டவர்களுக்குச் சமானமாய் இருக்கிறார்கள். மேலும் இவர்கள் எளியவர்கள். இவர்களைப்பற்றி ஆலோசிக்க வேண்டியதில்லை. மேலும் இந்த ராக்ஷதர்கள் பிரமாதி தேவர்களிடத்தில் பெற்றிருக்கின்ற பெரியவரங்களையும், இவர்களுக்குத் தெரிந்த வஞ்சனை சூது முதலானவைகளையும் பார்க்கும்போது; அவர்களையல்லாமல் வேறொருவரும் இப்படிப்பட்ட தவங்களைச் செய்து வரம்பெற்றவர்களில்லை. இவர்களுடைய பெரிய வரங்களும், இவர்களுடைய பிறவிக்குணமான வஞ்சனை சூது முதலானவைகளும், தேவரீர் திருக்கையில் பிடித்திருக்கின்ற கோதண்டத்திலிருந்து புறப்படுகிற இராமபாணத்தினால் வெந்து அழிந்துபோகுமென்று நினைத்து உம்முடைய திருவடிகளை யடைந்தார். ஜெயப்பிரதாபசீலரான தேவரீர் தேவர்களாலும், அசுரர்களாலும், தேவதேவர்களான பிரமருத்திரேந்திராதிகளாலும் செய்து முடிக்க அரிதான தர்மஸ்தாபனத்தை முடிக்கும்படியாகக் கங்கணங்கட்டிக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றீர். ஆபத்தையடைந்து அபயம் புகுந்தவர்களைச் சந்தேகித்து அகற்றிவிடுவீரேயானால், ஒரு சிறுகிணற்றின் ஜலத்தைப் பெரிய சமுத்திரமானது சந்தேகித்து நீக்கினாற்போலாய்விடும். இந்த விபீஷணர் பகையாளியைச் சேர்ந்தவர்; நமக்குச் சிநேகரல்லவென்றும், இவரைத் தள்ளிவிடுவோமேயானால், அறிவாளிகள் பார்த்தால் நகைப்புக்கு இடமாயிருக்குமல்லவா? தாயத்தில் ஒருவருக்குச் சேரவேண்டிய பாகப்பொருளையும் விளையுந் தானியங்களையும் அவர்களுக்குக் கொடாமல் தாங்களே அதை இச்சிப்பார்களேயானால், தந்தையர்களானாலும், தம்பி தமையன்மார்களானாலும், அவர்களல்லவோ பகையாளிகளாகப் போர்க்களத்தில் மரணமடையத் தக்கவர்கள். ஆகையினாலே இந்த விபீஷணனுடைய வரவு நல்வரவாகுமென்று அடியேனுடைய மனத்தில் நினைத்திருக்கிறேன். வேதத்திற்குச்சமானமான தேவரீருடைய திருவுளக்குறிப்பு எப்படிப்பட்டதோ தெரியாதென்று ஆஞ்சநேயர் சொல்லினர். இப்படி நான்கு முகங்களோடுங் கூடிய பிரமாவினாலும் கற்றதற்கருமையான சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் சூரியனுடையகதிக்கு முன்னிட்டு அவனுடைய சன்னிதானத்தில் கற்றறிந்தவரும், சமுத்திரங்களைத் தாண்டி இலங்கைக்குப் போய் ஜெயம்பெற்று இந்த லோகங்களையெல்லாம் இரட்சிக்கும்படியாக அவதரித்தவருமான மாருதியானவர் சொன்ன அமிர்த வார்த்தையைச் சக்கரவர்த்தித் திருக்குமாரர் தமது திருச்செவியைச் சாய்த்து மிகுந்த சந்தோஷத்தோடு கேட்டருளி, அந்தச் சமுகத்திலிருக்கின்ற புத்திமான்களெல்லாரும் சபாஷென்று மெச்சிக்கொள்ள அவர்களைப்பார்த்து, இந்த ஆஞ்சநேயர் சொன்னது மகா சிரேஷ்டமான ஆலோசனையாகும். இதற்குமேல் நீங்கள் எல்லோரும் தெளியும்படியாகச் சொல்லுகின்றேன் கேளுங்கள் என்று அவர்கள் கேட்கும்படியாக ஸ்ரீராமமூர்த்தியானவர் அவர்களைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

இந்த விபீஷணன் என்னை யடைக்கலம் புகவேண்டுமென்று நினைத்துவந்த இந் தக்காலமும், அவனுடைய மனதிலுண் டான விருப்பமும், அவனுக்கு இராஜ ஐஸ்வரியத்தின்மேல் ஆசையும் எந்த விதமா யிருந்தபோதிலும் நம்மிடத்தில் அடைக்கலம் புகுந்த இந்தப் பெரிய தர்ம மொன்றினால்மாத்திரமே தப்பானவனல்ல வென்று திருப்திகரமானதாயிருக்கின்றது. இனிமேல் வேறேசொல்லவேண்டிய வார் த்தை யொன்றுமில்லை. இந்த ஆஞ்சநேயர் தெளிந்துசொன்ன ஆலோசனையே தகு ந்த ஆலோசனை. இப்படிக்கல்லாமல் வே றொன்றினால்வெற்றிவந்தாலுஞ்சரி,தாழ்வு வந்தாலுஞ்சரி, அது எனக்ககங்காரமல்ல. இவன் நம்மை அடுத்து அடைக்கலமெ ன்றுசொன்னபோதே இவனை அங்கீகரிக் கிறதினால் எனக்குத் தோல்விவந்தபோதி லும் மரணம் வந்தபோதிலும் அதுவே என்பக்ஷம். என்னை அடைக்கலம் புகுந்த வன் புண்ணியமொன்று மில்லாமல் மாத திரமல்ல. தகப்பனையும் தாயையும் கொன் றுவிட்டு அந்த மகா பாதகத்துடனே வந்தபோதிலும் அவனே எனக்கு இனி மையைச்செய்கிற சிநேகனாகும். அந்த அடைக்கலத்தைத் தவறினவனுக்கல்ல வோ இம்மையிற் பழியும் மறுமையில் நர கமுமுண்டாகும். என் பிதாவர்க்கங்களில் சிபிச்சக்ரவர்த்தியானவர் புறுவுக்காகத் துலாயேறின தன்மையை எங்கள் வம்சத் தவர்களுக்குள்ளே தங்கள் ஆயுள்நாளில் மறந்துபோனபேர்களில்லை. அப்படி யிரு க்க, என்னை அடைக்கலமென்று வந்து சேர்ந்தவனைத் துறந்துவிடுவேனேயானால் நானிருந்தும் செத்தவனே யல்லது வே றல்ல. எல்லா ஜீவகோடிகளையும் சிருஷ் டித்து ரட்சித்துக்கொண்டு வருகிற சாட் க்ஷாத் நாராயணமூர்த்தியானவர் உலகத் துக்கெல்லாம் தானே தர்மதேவதையும், அந்தந்த ஜீவர்களுக்குள் அந்தரியாமியு மாயிருந்து தன் திருவடிகளை அடைக்கல மாகச் சேர்ந்தபேர்களுக்குமாத்திரம் இகத் தில் ஐஸ்வரியத்தையும் மறுமையில் பரம பதத்தையும் கொடுத்தருள்வ ரென்றால், பின்னை வேறென்ன திருஷ்டாந்தம் சொ ல்லவேண்டும்? என்னை யார் ரட்சிப்பார்க ளென்று சீதையானவள் அழுதுபுலம்பும் போது, அம்மா! நீ பயப்படாதே. உன க்கு நான் துணையாயிருக்கின்றேன் என்று கிருபையோடுவந்து இரக்கவார்த்தையைக் கூறிய திரிச்சடையும் இந்த இராவண பாதகனுடனே பெரியயுத்தத்தைச்செய்து ஜெயம்பெற்றுத் தெய்வமரணத்தை யடை ந்த ஜடாயுவாகிய என் பிதா பெற்ற பெரு மையும் எனக்குச் சாட்சியல்லவோ. மே லும் அபயமென்று அடைந்தவர்களு டைய உயிரைத் தன்னுயிர்போல இரட்சி யாத சண்டாளனும், ஒருவன் செய்த நன் றியை நினையாதவனும், களங்கமறப் பரி சோதியாமல் வேத நிச்சயமான மெய்ப் பொருளை பொய்யென்று சொன்னவனும் ஆகிய இவர்களெல்லாம் மீளாத நரகம் அடைவார்கள். தேவர்களுக்கு இமிசை செய்த அறிவீனனாகிய இராவணனை நான் கொல்லவென்று சபதம்பண்ணிக்கொண் டது சீதைக்காகவா? என்னை அபயமடை ந்த ரிஷிகளுக்கு வாக்குத்தத்தம் பண்ணி னதற்காகவல்லவா? அந்தச்சொல்லை நான் தவறலாமா? ஒரு யானையானது முதலையி னாலே இம்சிக்கப்பட்டபோது ஆதிமூல வஸ்துவான பரப்பிரமமே உமக்கபயம். என்னை இரட்சிக்கவேண்டுமென்று கூப் பிட்ட அந்தக்காலத்தில் வேதோபநிஷத் தினாலும் அறியப்படாத மெய்ப்பொரு ளான சாக்ஷாத் நாராயணமூர்த்தி அந்த கஜேந்திராழ்வானுக்குச் சேவை சாதித்து இரட்சித்தானென்கிறவார்த்தையை ஞான வான்கள் மறந்துவிடுவார்களோ? நம்மு டைய காரியம் ஆகாவிட்டாலும் போகட் டும். அடைக்கலம் புகுந்தவர்களை இரட் சிக்கிறதைப் பார்க்கிலும் தயாசீலர்களுக் குப் பெருமைவேறொன்றுண்டோ? அதை நீங்கள் நன்றாய் யோசித்துப் பாருங்கள். தன்னை அடைக்கலமாக அடைந்தபேர் கள் அற்பர்களா யிருந்தபோதிலும் தன் னுயிரைக்கொடுத்தாவது அவர்களை இரட் சிக்க நினையாமல் போவானேயானால் அப் படிப்பட்டவன் சக்கரவர்த்தியானபோதி லும் அவனுக்கு என்ன மேன்மையுண்டா கும்? ஆனபடியினாலே அபயமென்று சொ ன்னமாத்திரத்தில் அவனுக்கு அபய தா னங் கொடுக்கவேண்டியதே தகுதியாகும். நீங்கள் சொன்னதெல்லாம் என்னிடத் தில் உங்களுக்குண்டான பக்ஷத்தினாலே

தான். அவரைப்பற்றி நாம் ஆலோசிக்க வேண்டியதில்லை. ஓ சூரியகுமாரனை சுக்கிரீவமகாராஜனே! இந்த இராவணாதி ராக்ஷதர்கள் - பிசாசர்கள் - யக்ஷர்கள்-தானவர்கள் முதலான திரிலோகவாசிகளுமான இவர்களெல்லாரும் ஒருமிக்கச்சேர்ந்து என்மேல் யுத்தத்திற்கு வந்தபோதிலும், என் சுண்டுவிரலால் அவர்களெல்லாரையும் ஜெயித்துவிடுவேன். பயப்படவேண்டாம். அந்த விபீஷணனை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வரக்கடவாயென்று நியமித்தருளினர். சுக்கிரீவமகாராஜன் தேவராஜனை சக்கரவர்த்தித் திருமகனர் திருவுள்ளத்தைப்போலத் தன்மனமுந்தெளிந்து இதோ அடியேன் அழைத்துக்கொண்டு வருகிறேனென்று வேகமாய் புறப்பட்டுச் சத்தியவந்தான விபீஷணழ்வாரிடத்திற்குவரும்போதுசுக்கிரீவமகாராஜனைமயிந்தனென்கிற சேனைத்தலைவன் விபீஷணருக்குக்காட்டிஉம்மையழைத்துக்கொண்டுவரும்படியாக சுவாமி நியமித்தார். அதனல் உம்மை எதிர்கொள்ளும்படியாக பெரியமலைக்குச் சமானமான தோள்களையுடைய சூரியகுமாரர் எழுந்தருளினரென்று சொன்னமாத்திரத்தில், கலங்கிக்கொண்டிருந்த உள்ளத்தை யுடையவரான விபீஷணழ்வார் மிகுந்த மனக்களிப்புடனே தாமும் அவரெதிர் நடந்துபோனர். அயோக்கியர்களா யிருக்கின்றபேர்கள் நல்லவர்களுடன் தங்கள் ஆயுள்வரையும் பழகினபோதிலும் நட்பாகமாட்டார்களென்றும் புத்திமான்கள்கண்ட அந்தணக்ஷமே சிநேகமாவார்கள் என்றும் கூறுகின்ற நீதிப்படியே இருவருடைய மனமும் ஏகமாகும்படி விபீஷணழ்வானுஞ் சுக்கிரீவமகாராஜனும் இரவுபகலும் ஒரேகாலத்தில் கலந்ததுபோல ஒருவரையொருவர் ஆலிங்கனம் பண்ணி நின்றூர்கள். அப்போது, சுக்கிரீவமகாராஜன் விபீஷணரைப் பார்த்து, நீர் சரணமடைந்த சக்கரவர்த்தித் திருமகனகிய ஸ்ரீராமர் தங்களுடைய வம்சத்துக்குத் தக்க முறைமைப்படி உம்மிடத்தில் கிருபைகூர்ந்து அபயதானம்பண்ணினர். இனிசீக்கிரமாய் வந்து அவர் திருவடிகளுக்குத் தெண்டஞ்சமர்ப்பியும் என்று சொல்லினர். இப்படி ஆண்சிங்கம்போன்ற சுக்கிரீவமகாராஜன் சொன்ன வார்த்தை செவியில் நுழைவதற்குமுன்னமே கறுத்த நிறத்தையுடைய விபீஷணழ்வார் தமது இரண்டு கண்களிலுமிருந்து ஆனந்தபாஷ்பப் பிரவாகம் கரைபுரண்டோடவும், தேகங்குளிரவும், சந்தோஷ மிகுதியினலே உடல் மயிர்க்குச்செறியவும். சர்வசங்க பரித்தியாகம் பண்ணினவர்களான ஜீவன்முக்தர்களுக்கு நண்பரான ஸ்ரீராகவபிரான் என்னையும் உறவென்று திருவுளங்கொண்டு அபயதானம்பண்ணினரே; அப்போதே என்னுடைய பாபவினைகளெல்லாம் போய் அந்தப் பாபகாரியமான மாயவாழ்க்கையோடும் கூடிய என்னுடைய பிறவியையும் கடந்து மறுமையிலடையவேண்டிய நரகத்தையும் நீங்கிவிட்டேன். செம்பஞ்சைப்போலுஞ் சிவந்த மிருதுவான திருவடிகளையுடைய லோகமாதாவைப் பிரிவுசெய்த இராவணனுக்குத்தம்பியானஎன்னையும் வரும்படியாகத் திருவுள்ளங்கொண்டாரே: மயக்கநஞ்சையுடையவனை ராவணன் என்சொல்லை மறுத்தபோதே, சூரியனுடைய தேரும் லங்கைமேல் ஓடுமல்லவா? எம்பெருமானுடைய கிருபை இவ்வளவு சௌலப்பியமா யிருக்குமேயானல் ராக்ஷதர்களுக்குஇனிபிழைப்புண்டாகுமா? துஷ்டர்கள் சகிக்கக்கூடாத இம்சைகளைச் செய்தபோதிலும், கிருபவான்களான பெரியோர்கள் தங்களுக்கு ஸ்வபாவமான நிலைமையில் நின்றுந் தப்பமாட்டார்கள். முன்னம் தேவர்கள் மந்தரமென்னும் ஓர் பெரியமலையை மத்தியில் கடலில் நிறுத்தி சின்னு பின்னமாகக் கடைந்தகாலத்திலும் அவர்கள் பிழைக்கும்படியாக அமிர்தத்தைக் கொடுத்ததன்றோ? என்று சொன்னபோது மிகுந்த அறிவுடையவரான சுக்ரீவமகாராஜர் விபீஷணரைப்பார்த்து; நம்முடைய சுவாமியானவர் நல்லவர் தீயவரென்று கருதமாட்டார். தமது திருவடிகளில் சரணமடைந்தவர்களைக் கடாக்ஷிக்க வேணுமென்கிற கருத்துடைய பரமாத்துமா. ஆகையால் தாமதஞ்செய்யாமல் எழுந்தருளுமென்று அழைத்துக்கொண்டு அநேகமலைகள் சூழ்ந்துகொண்டுவரும்படியாக இமயமலையும் மேருமலையும் வருகிறதுபோல தங்கள் தபோபலத்தை அடைந்தவர்களான விபீஷணழ்வாரும் சுக்ரீவமகாராஜரும் வானரவீரர்கள் சூழ்ந்துவர எழு

மராமரங்களும் உருவும்படியாகப் பாணப் பிரயோகஞ் செய்த பிரதாபசீலரான சக்கர வர்த்தித் திருமகனுருடைய சன்னிதிக்கு வந்தார்கள். வானரவீரர்கள் நிறைந்த அந் தக்கடற்கரையில் இளையபெருமாள்கையில் வில்லைப் பிடித்துக் கொண்டு பக்கத்தில் காவலாக நிற்க, லோகநாயகரான ஸ்ரீராம மூர்த்தியானவர் வில்லைப் பிடித்துக்கொண் டிருப்பது எப்படியிருந்ததென்றால் மேரு மலையானது பக்கத்தில் நிற்கும்படியாகக் கருங்கடலானது க்ஷீரசாகரத்தினுல் சூழப் பட்டு, தாமரைப் புஷ்பங்களைப் புஷ்பித் துக்கொண் டிருந்தாற்போலப் பிரகாசிக்க வும், மிகுந்த களிப்புடனே சூழ்ந்துகொண் டிருக்கின்ற வானரசேனைகளுக்கு நடுவில் தேவர்கள்வணங்கி வேண்டிக்கொள்ள கள ங்கமற்று அலைகளோடு விளங்கிக்கொண்டி ருக்கின்ற பாற்கடலின் நடுவில் தமதுயோக நித்திரையை விட்டு எழுந்தருளியிருக்கி ன்ற க்ஷீரசாகர நாதனைப்போல பிரகாசிக் கின்றவரும், வளைந்து கறுத்த அழகியபுரு வம்போல் அலைகள் ஒன்ருேடொன்றுகூட வும், பூணுதற்கு இன்பத்தைத் தருவதான முகத்தைப்போல்பிரகாசிக்கின்ற வெள்ளிய மணற்பிரதேசத்தில் விசாலமான வானர படைகளுக்குநடுவில் கறுநிறத்துடன் ஒளி பொருந்திய நெற்றியையுடைய சீதாபிரா ட்டியின் கண்ணின் கருமணியைப்போல் பிரகாசிக்கின்றவரும், மேகங்களை வாகன மாயுடைய தேவேந்திரன் ஒருகாலத்தில் தன்வில்லை விட்டிருந்ததுபோல ரத்தின பரணங்களை நீக்கிப் பிரகாசித்துக்கொண் டிருக்கின்ற திருமார்பையுடையவரும், கட லைக் கடையும்போது மந்தரகிரியில் பூட் டிய வாசுகியைக் கழற்றிவிட்டதுபோல ரத்தின கங்கணங்கள் நீங்கிய திருத்தோள் களை யுடையவரும், தனது கிரணங்களை நீக்கிவிட்டுக் கிருபையினுலே அமிர்தத் தைப் பொழிந்துகொண்டிருக்கின்ற சோ டசகலா பூரணசந்திரனுக்குச் சமானமான திருமுகத்தை யுடையவரும், தன் பிதா கொடுத்த ராஜமுடியைத் தமதுதிருத்தம்பி யாருக்குக் கொடுத்தருளி சிறியதாயாரால் பெற்றஜடாமகுடத்தைத் தரித்துக்கொண் டிருக்கிற திருமுடியை யுடையவருமான ஸ்ரீராமமூர்த்தியைப் பார்த்துத் தேகம்புள காங்கிதமாகவும் கண்களில் ஆனந்தபாஷ் பம் பொழியவும், மனமுருகி அஞ்சனகிரி க்குச் சிவந்த திருக்கண்களுண்டோ? அல் லது கறுத்தமேகத்தில் தாமரை புஷ்பித்த தோ? அவ்விரண்டுமல்ல. இவர் சாக்ஷாத் கண்ணன்போலிருக்கிறது. அல்லது மிகு ந்த கிருபையொழுகுகிற சத்தியமானதரும தேவதைக்கு நிறங்கறுப்பாயிருக்கின்றதோ வென்று நினைத்தவராய் மின்மினிப்பூச்சி யின் ஒளிதோன்றி மறைவதுபோல அழி ந்துபோகும் பிறவியையும், தமக்கு உரிமை யான இராஜகிரீடத்தையும் நீக்கிவிட்டு, சுவாமியினுடைய திருவடித்தாமரைகளைச் சிரசில் சூடிய செல்வரான ஸ்ரீவிபீஷணாழ் வார் என் தமையனுன இராவணன் என் தந்தையாகிய புலஸ்தியருக்குத் தந்தை யான காசிபருடைய தந்தையாகிய பிரமா வினுடைய மூத்த தகப்பன் ஸ்ரீராமமூர்த் தியை வணங்கும்படியாக எனக்கு உபகா ரஞ்செய்தானென்று சொல்லி, பின்னும் மிகுந்த தபசுசெய்த பேர்களுக்கும் நீக்கக் கூடாத பிறவிப்பிணிக்கு மருந்தாகயிருக் கின்ற சாக்ஷாத் நாராயணனே வில்லில் அம்பைப் பூட்டிக்கொண்டு இந்தஅரக்கர் களைக் கொல்லும்படி நின்ருன். இவர்கள் பெருமையை என்னசொல்லப் போகின் றேன்? இந்த அரக்கர்கள் அளவில்லாத அருந்தவஞ் செய்தவர்களே யென்று ஆச் சரியமானவராயும் தமது இரண்டுகைகளை யும் ரத்தினகிரீடத்தின்மேல் கூப்பினவரா யும் கல்லுமரமும் உருகும்படியான காக்ஷி யையுடைய கிருபாமூர்த்தியாகிய ஸ்ரீராமச் சந்திரர் இரக்கத்துடன் கடாக்ஷித்தருளும் பொழுதெல்லாம் தண்டஞ்சமர்ப்பித்துக் கொண்டேபோய் சர்வாபீஷ்டங்களையும் நிறைவேற்றும்படியான இரண்டு திருவடி களிலும் சரணுகதம்பண்ணினுர். அடியே னுடைய பிறவித்துன்பம் ஒழிந்துபோய் விட்டதென்ற மனதின் நினைவு முகத்திலே பிரகாசிக்கவும், ஆனந்தக் கண்ணீரோடு பூமியில் மார்புபடும்படியாகவும், தெண் டஞ்சமர்ப்பித்த விபீஷணுழ்வாரைக் கிரு பையுடனே ஆலிங்கனம் பண்ணினது போலக் கடாக்ஷித்து எழுந்திருக்கக் கட வாயென்று நியமித்துத் தமது திருக்கை யினுல் இருக்கும்படி சமிக்கைபண்ணிப் பின்பு சக்கரவர்த்தித் திருமகனுனவர் மிகு ந்தகிருபையும் சந்தோஷமும் பொங்கும்

படியாக விபீஷ்ணாழ்வாரைக் கடாக்ஷித்து, இந்தப் பதினாலுலோகங்களும் என்பெயரும் எத்தனைகாலமிருக்குமோ? அதுபரியந்தம் நீர் அழியாமல் சிரஞ்சீவியாகவும் ராக்ஷதர்களுக்கு வாசமாக இருக்கின்ற இந்த லங்கையின் ஐஸ்வரியமெல்லாம் உனக்கேயாகும்படியாகவும் இதோ கொடுத்துவிட்டேனென்று வாக்குதத்தம் பண்ணியருளினார். இப்படி சுவாமி அருளிச்செய்த கிருபையைப் பார்த்தோ? அவரால் எல்லாப்பெருமையையும் பெற்ற விபீஷணாழ்வாருடைய தர்மத்தைப்பார்த்தோ? வேறென்ன காரணத்தினாலோ? சுவாமி வாக்குதத்தம் பண்ணினமாத்திரத்தில் உலகத்திலுள்ள சராசரங்களெல்லாம் தனித்தனியே தமக்கே வாழ்வுண்டானதுபோலப் பெருங்கோஷ்டமாகச் சப்தமிட்டது கள். பிறகு கிருதார்த்தனானேன் என்று அடிக்கடி வணங்கிக்கொண்டு நின்ற அஞ்சனம்போன்ற நிறத்தையுடைய விபீஷணாழ்வாரிடத்தில் ஸ்ரீராமர்கிருபைகூர்ந்து அடைக்கலம் புகுந்து நமக்குத் துணைவராகிய குற்றமற்ற கீர்த்தியோடுகூடிய இவருக்கு நித்திரைசெய்யாத நேத்திரத்தையுடைய ஐயனே முடிசூட்டக்கடவாயென்று நியமித்தார். அதைக்கேட்டு மேல்விளையுங் காரியங்களை யெல்லாம் அறியும்படியான புத்தியையுடையவிபீஷணர்சுவாமி! எந்நாளும் அழியாத அளவிறந்தபெருமையைத் தரத்தக்க நல்லசெல்வத்தை அருளிச்செய்தீரேயாயினும், திருட்டு ஸ்வபாவமுள்ள ராக்ஷதனான இராவணனுக்குத் தம்பியென்கின்ற சம்பந்தமொழிந்து விடும்படியாகத் தேவரீர் திருத்தம்பியான பரதாழ்வாருக்குச் சூட்டிய திருப்பாதுகையாகிய மௌலியை அடியேனுக்கும் சூட்டியருளவேண்டும் என்று விண்ணப்பம் பண்ணினார். அதுகேட்டு ஜகத்ரக்ஷகனாகிய சீதாபிராமன்சொல்லுகிறார். ஓ விபீஷணனே! நாங்கள் முதலில் நான்கு சகோதரர்களாகப் பிறந்தோம். அப்புறம் குகனோடுசேர்ந்து ஐந்துபேரானோம். மேருகிரியைச் சுற்றி வருகின்ற சூரிய குமாரனான சுக்கிரீவமகாராஜனைச் சேர்ந்து ஆறுபேரானோம். இப்போது எங்களிடத்தில் வைத்த அன்பினாலே இங்கே வந்து சேர்ந்த மனப்பூர்வமான காதலையுடைய உன்னோடு ஏழுபேரானோம். அடர்ந்து இருள் தங்கியிருக்கின்ற நெடிய காட்டிற்கு என்னைப்போகும்படியாக நியமித்த எம்முடையபிதாவாகிய தசரதமகாராஜனும்இந்தப்புத்திரர்களால் மிகுந்த எஸஸ்ஸை யடைந்தாரையா விபீஷணரே யென்றார். இப்படியே சொன்ன சுவாமியினுடைய வார்த்தையைக் கேட்டு, சுவாமி! சர்வலோகரக்ஷகராகிய தேவரீர் இனி வேறென்ன சொல்லவேண்டிய திருக்கின்றது? நாய்க்குச் சமானமான அடியேனைத் தேவரீருடன் பிறந்தவர்களோடு ஒருவனென்று அருளிச்செய்தீர். இனி நான் அடியவர்களுக்குள் சிறப்புற்றேனென்று சொல்லி, சந்தேக பயநிவர்த்தகராகி ஸ்ரீராகவபிரானுடைய திருவடிச் சுவட்டைத் தமது சுவர்னகிரீடத்தைத் தரிக்கும்படியான சிரசில் சூட்டிக்கொண்டு சூரியனைத் தனது உச்சியில் சேர்த்துக் கொண்ட பெரிய மலையைப்போல் விபீஷணர் நின்றனர். இப்படி நிற்கின்ற இலங்காதிபதியான விபீஷணாழ்வாரைப் பார்த்து, ஸ்ரீராம லட்சுமணர்க ளிருவரும் களித்தார்கள். அப்பால் சுக்ரீவமகாராஜன் முதலான வானரர்களெல்லாம் சந்தோஷித்தார்கள். தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். சப்தசமுத்திரங்களும் சப்த மேகங்களும் சப்தித்ததுகள். தேவதுந்துமியும் தேவசங்கமும் முழங்கின. சுவர்ன வருஷம் வருஷித்துக்கொண்டும் வாசனைப் பொடிகளை இறைத்துக்கொண்டும் தேவர்கள் எல்லாரும் ஆகாயமார்க்கத்தில் நின்றுக்கொண்டு மங்களங் கூறினார்கள். அமிர்தத்திற்குச் சமானமான வார்த்தையினை யுடைய சீதாபிராட்டியம்மையார் விஷயத்தில் முறைமைதப்பி அபசாரப்பட்ட என்னுடைய வம்சத்திலுண்டான இந்த ராக்ஷதகுலம் இப்போதுதான் சிரேஷ்டத்தை யடைந்ததென்று பிர்மதேவர் துக்கநிவாரணமானார். பிறகு தர்மதேவதையும், இராவணனுடைய செல்வமழிந்து போய்விட்டதென்று ஆர்த்துக் கூத்தாடிக் கொண்டு சந்தோஷித்தது. இப்படிப்பட்ட காலத்தில் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியானவர் இலங்காதிபத்திய ஐஸ்வரியமெல்லாம் விபீஷணாழ்வான் பெற்றதைப் பலரும் கேட்டறியும்படியாக எங்கும் கட்டியம் கூறும்படிச்செய்து, அங்கே தமது பக்கத்தில்

அதிக விஸ்வாசத்துடன் வாய்பொத்திக் கொண்டு நிற்கின்ற சுக்ரீவமகாராஜனையும், இளையபெருமாளாகிய லட்சுமணரையும் பார்த்து, நீங்களிருவரும் சகல வானரப் படைகளுடன் இவரை நம்முடைய பாடி வீட்டைச்சுற்றி ஊர்க்கோலம் செய்வியுங்க ளென்று நியமித்தார். அந்தப்படியே விபீஷணாழ்வாரை இரண்டு திருவடிச்சுவட்டைத்தரித்த முடியுடனே சந்தன விமானத்திலேற்றி அந்தவிமானத்தை வானரவீரர்கள் சுமந்துகொள்ளவும், பல வானர சைனியங்கள் பந்திபந்தியாகக்கூடி ஓ இந்திரபோக ஐஸ்வரியத்தையடைந்த இலங்காதிபதி இவரே. எச்சரிக்கை. பராக் என்று கட்டியம் கூறிக்கொண்டு ஸ்ரீராமருடைய பாடிக்கூடாரத்தை வெகு வேடிக்கை விநோதமாகச் சுற்றி நகர்வலம் வந்தார்கள். அப்போது தங்கள் ஸ்வரூபத்துக்கு அநுகுணமான கைங்கரியத்தைச் செய்யும்படியாக அபேக்ஷித்துக்கொண்டிருக்கின்ற தேவர்கள் அக்கைங்கரியப் பிரதிசம்பந்தியான திருவடியைத் தேடிக்கொண்டிருந்து அன்றுதரிசித்த பிர்மதேவனும் மற்ற தேவர்களுமெல்லாம் சமுத்திர ஸ்நானஞ் செய்து தங்களுடைய பாப நிவாரணம்பண்ணிக்கொண்டு சுவாமியினுடைய திருவடித்தாமரைமலரைத் தங்கள் சிரசின்பேரில் சூடிக்கொண்டு, அவர்களடைந்த ஆனந்தப்பிரதாபத்தன்மையை இந்தவிதமென்று தெரிந்துச்சொல்ல யாவராலாகும். ரிஷிகளும்,தேவர்களும், ஞானவான்களும்,பக்திமான்களும், யாகாதிகிருதுக்களைச்செய்து முடிக்கின்றவர்களும், மகத்தாகிய தபசிகளும் இந்த விபீஷணாழ்வான் பெற்றபேறு இதுவரையிலும் யார்பெற்முரென்று ஆச்சரியப்பட்டார்கள்.

விபீஷணனடைக்கலப்படலம் முற்றிற்று.

## இலங்கைகேள்விப்படலம்.

இந்தப் பிரகாரமாக ஊர்க்கோலம்வந்து சுவாமியினுடைய திருவடியில் தீர்க்க தெண்டம் சமர்ப்பித்த விபீஷணாழ்வாருக்கு அங்கேவசிக்கும்படியாக ஒரு பெரிய விடுதிசெய்து கொடுத்து, அதில் அவரை யிருக்கும்படி சொல்லினர். பிறகு சூரியன் தன் கிரணங்கள் அதிக உஷ்ணமானவைக ளென்று நீக்கிவிட்டதுபோல அஸ்தமனமானன். சுவாமியும் தனது க்ஷத்திரியதர்மத்துக்கிசைந்த சந்தியாவந்தனுதி கருமங்களை முடித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும்போது, மேற்குத்திசையில் அக்கினிநிறமான செவ்வானமுண்டாகிப் பின்பு ஆகாயமெல்லாம் கறுகறுத்தது. மன்மதன் புஷ்பபாணங்களை ஸ்ரீராமர்மேல்பிரயோகித்தான் சமுத்திரமானது எங்கும் கோர்த்து மூடிக்கொண்டதுபோல, அஷ்டதிக்குகளையும், இருள் மூடிக்கொள்ள, அந்தச் சமுத்திரத்தில் தாமரை, அல்லிக்கொடி முதலானவைகள் புஷ்பித்ததற்கொப்பாக ஆகாயத்தில் கிரக நக்ஷத்திரங்கள் பிரகாசித்தன. சீதாபிராட்டியாரை நினைத்து வருத்தமுற்றுக்கொண்டிருக்கிற ஸ்ரீராமமூர்த்தியினுடைய மனதை வருத்தப்படுத்தும் கருத்தால் இருளைக்கண்டமாத்திரத்தில் புஷ்பித்த மல்லிகைக்காடானது நக்ஷத்திரங்களுடன்கூடிய ஆகாயம்போன்றிருந்தது. இருளினுலே மறைபடாமல் என்னைச் சமாதானப்படுத்திக்கொண்டிருந்தும்,ஒளியினுலே என்னைத் தோல்வி படுத்தி ஜெயம்பெற்ற திருமுகத்தையுடைய சீதாபிராட்டியாருக்குச் சிநேகராகிய இந்த ஸ்ரீராமமூர்த்தி இராத்திரிக்குச்சமானமான திருமேனியையுடையவராயிருக்கிறபடியால், இவரைவெல்லலாமென்று எண்ணங்கொண்டதுபோலச் சந்திரனுதயமானன். இப்படி உதயமான சந்திரனவன் இந்த ஸ்ரீராமரை வருத்தும்படியாக அந்தச்சீதாபிராட்டியாருடைய நிறத்தை தாமுடைத்தாய் இருந்தோமாகில், இவருடைய மனதைக் கவலைப்படுத்தி நமது கைவசப்படுத்திக்கொள்ளலாமென்று நினைத்து; தன்னுடைய சந்திரிகையாகியவலையைக் கடல்சூழ்ந்த உலக முழுமையும் வீசினன். அப்போது சமுத்திரமானது அப்பூரண சந்திரனைக் கண்டு பெருகினது எப்படியிருந்ததெனில், இந்த ஸ்ரீராமர் நம்மைப்போன்ற நிறத்தையுடையவராயிருந்தும், தம்முடைய வானரசேனைகளால் நம்மேல் அணையிட்டு அடைக்கும்படியாக என்முன்னே வந்தாரல்லவா? அப்படிவந்தவரை சும்மாவிடத்தனது இவரோடு சண்டைசெய்து மோதுகிறதற்குச் சமயம் இதுதானென்று, உடல் பூரித்தது

போதுமிருந்தது. மேலும் சமுத்திரமாகிய பாம்பானது வளர்ந்ததோலையுரித்துத் தள்ளினதுபோல விளங்குகின்ற மணற்குன்றுகளால் விசாலித்திருக்கின்ற சமுத்திர தீரப் பிரதேசத்திலெல்லாம் பாலைக்கவிழ்த்தது போல் சந்திரிகை பிரகாசித்தது. அப்போதுவாசனைபொருந்திய மல்லிகையரும்பென்கின்ற பல்லையும், தேனில் மொய்த்துக்கொண்டு இருக்கின்ற வண்டுகளென்னும் கருவரிகளையுடைய தேனாகிய கண்களையும், மலைக்குகையிலிருந்து பாய்கின்ற சதியையுமுடையதான தென்றலென்கிற ஒரு புலியானது ஸ்ரீராமர்பேரில் சீறிக்கொண்டு புறப்பட்டது. கடலைக்கடைந்து அமிர்தங் கொடுத்தவனானவாலியினுடைய மார்பையும், காட்டினிடத்தில் ஓங்கி வளர்ந்திருந்த மராமரங்களையும், தமது கையிற் கொண்ட பாணத்தினாலே துளைத்த ஸ்ரீராமருடைய திருமார்பில் பாய்ந்திருக்கிறமன்மத பாணத்தோடு சந்திரிகையினுடைய கிரணங்களாகிய வாளாயுதமும் பாய்ந்தது. அப்போது ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்முடைய இளைத்ததிருமேனியைப் பார்ப்பார். இனிய உயிருக்கொப்பாகிய சீதாபிராட்டியாரை நினைப்பார். வேறொன்றையும் பாராமல் தமக்கு எதிராக விருக்கின்ற கடலைப் பார்ப்பார். இராவணனாகிய திருடன்வாசம் பண்ணுகிற லங்காதீப மெங்கே யென்று சுற்றிப்பார்ப்பார். கோதண்டத்தைப்பார்ப்பார். இப்படி சீதாபிராட்டியாரிடத்தில் கொண்ட மோகப்பித்தேறிய மனத்தையுடையவரான ஸ்ரீராமபிரான் அச்சீதையினது மிகுந்த அழகையுடைய முத்துப் போன்ற தந்தபந்தியோடு கூடிய பவளத்தைத்தமது பாசத்தில் நினைத்துமறவாமல் வருத்தமடைவார். அக்காலத்தில் சூரிய குமாரனானசுக்ரீவமகாராஜன் அவரைச்சேவித்து, ஓ எல்லாக் காரியங்களையும் பூர்த்தி பண்ணத்தக்கதிருவுளத்தையுடையசுவாமி தேவரீர் இனி விபீஷணரோடு ஆலோசித்துமேல்நடக்கவேண்டிய காரியத்தை எண்ணாமல், இப்படி வருத்தப்படுவது கிருபா சமுத்திரம்போன்ற தங்கள் பெருமைக்குத் தக்கதோ என்று சொல்லினன். இப்படி சொன்னமாத்திரத்தில், ஸ்ரீராமர் மூர்ச்சை தெளிந்து துக்கம் நீங்கினவராய் சீக்கிரமாகப்போய் விபீஷணனை அழைத்துக் கொண்டு வாவென்று சுக்கிரீவனை நியமித்தனர். உடனே சுக்கிரீவமகாராஜன் விபீஷணரிடத்திற்குப்போய் உம்மை சுவாமி வரும்படி நியமித்தாரென்ன, உடனே அக்கிரமமல்லாத வழியை யடைந்தவரான விபீஷணாழ்வாரும் தாமரை நெருங்கிப் புஷ்பித்ததடாகம்போல் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமருடைய சன்னிதியில்வந்து, அவருடைய திருவடித்தாமரைகளில் தெண்டம்சமர்ப்பித்தனர். அந்த விபீஷணாழ்வானை ஸ்ரீராமர் எழுந்திருந்து உட்காரும்படியாக நியமித்தார். அப்படியே உட்கார்ந்தபோது, தம்பி விபீஷணா! சமுத்திரத்தினால் சூழப்பட்ட லங்காபட்டணத்தினுடைய வர்ணிப்பும் அதிலுள்ள ராக்ஷதர்களுடைய வல்லமையும், சைனியங்களினுடைய தொகையும் விபரமாய்ச் சொல்லவேண்டுமென்றார். அப்போதுவிபீஷணாழ்வார் எழுந்திருந்தார். அதுகண்ட சுவாமி நீ இருந்தேசொல்லென்ன, இரண்டுகைகளையுங் கூப்பிக்கொண்டு சுவாமியைத்தொழுது, வினாவினகாரியங்களை விபரமாகச் சொல்லத்தொடங்கினார்.

முன்னொருகாலத்தில் ஆதிசேஷனும், வாய்வுபகவானும் தங்கள்வலியைச் சோதிக்கும்படியாகஆயிரஞ்சிகரங்களோடுகூடிய மேருமலையினிடமாக வந்து, ஆதிசேஷன் தன்னுடைய ஆயிரந்தலைகளாலும், ஆயிரஞ் சிகரங்களைமறைத்து மூடிக்கொண்டார். அப்பொழுது வாய்வுபகவான் பூமிக்கஞ்சுருவாணியாக நிலைத்திருக்கிற அம்மேருமலையை அலையகுலையச்செய்து, தம்முடைய பலத்தினாலே ஒரு சிகரத்தைப் பறித்துக்கொண்டுவந்து சமுத்திரத்தின் மத்தியி லெறிந்துவிட்டார். அதுதான் இலங்காதீபம். அந்தத்தீபம் எழுநூறு யோசனை விஸ்தீரணமாகும். அதைச் சூழ்ந்த கோட்டைமதில் லக்ஷயோசனை ஆழ்ந்ததும், சூரியமண்டலத்துக்கு முயர்ந்ததுமாய் உலகத்தை சக்கரவாளகிரி வளைத்துக்கொண்டிருக்கிறது. அதைச் சுற்றிலுமுள்ள தந்திரங்களையும், சித்திரவேலைப் பெருமைகளையும், காவலாக அமைத்திருக்கின்ற அரண் முதலானவைகளையும் விரித்துச் சொல்லவேண்டுமானால் ஆயுள் போதாது. அடியேன் அதைப்பற்றி வேறென்ன சொல்லவேண்டி யிருக்கின்றது.

தேவரீர்கடாக்ஷிக்கலாம். அதற்குச் சமுத்திரமே அழகாக விருக்கின்றது. அப்படிப் பட்ட கோட்டையின் வடக்குவாயிலுக்குக் காவலாயிருப்பவர்கள் பதினுறுகோடி அரக்கர்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் யுகாந்தகாலயமனுஞ் சமானமல்ல. சாக்ஷாத் ரிஷபவாகன ரூடரான ஈசுவரமூர்த்தியே சமானமாகும். மேற்குக் கோட்டை வாயிலில் இருக்கின்ற காவலாளிகள் அவர்களைப்பார்க்கிலும் இரண்டு கோடிபேர் அதிகமானவர்கள். அவர்கள் கண்ணெதிரே எமன்வரக்கண்டால் அவனுடைய ரக்த சகிதமாய் உயிரையும் உண்டுவிடுவார்கள். தெற்குக்கோட்டை வாயிலைக் காக்கின்ற துஷ்டர்கள் மலைக்குச் சமானமான ஆகாரமுள்ள பதினுறுகோடிபேர்கள். அவர்களுடைய கொடுமைசொல்லி யடங்காது. மிகுந்த பலமுள்ள நமனுடைய அரசையும் பிடுங்கிக் கொள்ளத்தக்கவல்லமை யுடையவர்களாகும், கிழக்குக் கோட்டைவாயிலில் இருக்கின்ற துஷ்டர்களும் பதினுறுகோடி பேர்கள்தானென்று கேள்வி. அவர்கள் அஷ்டதிக் கஜங்களையும் பின்னங்காலைப் பிடித்துப் பூமியிலறையத்தக்க வல்லபமுள்ளவர்கள். ஆகாயத்தில் காத்து நிற்கின்ற துஷ்டர்கள் முப்பத்திரண்டு கோடிபேர்களென்பார்கள். தேவர்கள் வருவார்களென்று பூமிக்குள் பதுங்கிக்கொண் டிருக்கின்ற இரக்கமற்ற ராக்ஷதர்களுக்கு அளவில்லை. அந்தக்கோட்டையின்மதிலுக்கு உட்புறத்திலும் வெளிபுறத்திலும் நித்திரையில்லாமல் காற்றை ஆகாரம்பண்ணிக்கொண்டு, காற்ருடியைப்போல சுற்றித்திரிந்து காத்துக்கொண்டிருக்கின்ற ராக்ஷதர்கள் ஆயிரங்கோடிபேர்கள். இந்தப்பிரகாரமாக அந்தலங்காபுரிக்கு மூன்று அரண்களுண்டு. அவைகளைக்காக்கின்ற ராக்ஷதர்கள் மதிலொன்றுக்கு முப்பதுகோடியாகமதில் மூன்றுக்கும் தொண்ணூறு கோடிபேர்கள் காவலிருப்பார்களேயானல், அந்த லங்கா பட்டணத்தின் பெருமையைச் சிறப்பித்துச்சொல்லவேண்டுமோ? இராவணனல் சிறப்பும் செல்வமும் அடைந்து, தீர்க்க வைரமுள்ள அதிக பலவந்தர்களும் எதிரிகள் வந்தால் உண்மையாய்ப்பாடுபட்டு உதவிசெய்கிறவர்களுமாய் ஆயிரத்தறுநூறு கோடி ராக்ஷதர்களிருக்கின்ருர்கள். அதுவுமல்லாமல் அவனுடைய அரண்மனை வாயிலில் இந்தவுலகத்தை யொருகையில் தூக்கும்படியான தைரியசாலிகளும், மலைக்குச் சமானமான பலமுள்ளவர்களுமாய்க் கோடிகோடி ராக்ஷதர்கள் காவலிருக்கின்ருர்கள். மேலுமந்த இராவணனுடைய மேருமலைக்குச் சமானமாகிய ராஜமாளிகை வாயிலின் இடதுபக்கத்திலும், வலதுபக்கத்திலும், விஷக்கண்ணர்களும், அக்கினிக்கண்ணர்களும், கோபக்கண்ணர்களும் கண்சிமட்டாமல் பார்க்கிறவர்களுமாய் அறுபத்து நாலுகோடி ராக்ஷதர்கள் காத்துக்கொண் டிருக்கின்ருர்கள். அல்லாமலும் பேய்க்குச் சமானமாகப் பிதற்றிக்கொண்டு அவனுக்கு மூலபலமாயிருக்கின்ற ஆயிர வெள்ளம் சைனியங்களைக் கொல்வதற்குப் பிர்மகற்பபரியந்தம் சொல்லவேண்டுமென்பது அடியேனுக்குத் தெரியும். சதுரங்க சைனியங்களாய்ப் பதினுயிரந்தேரும்,செந்தாமரைப் புஷ்பம்போல் முகங்களையுடைய இருபதினுயிரம் யானைகளும், காற்றைப் போலப் பறக்கும்படியான நாற்பதினுயிரம் குதிரைகளும், எண்பதினுயிரம் ஒட்டகங்களுமிருக்கின்றன. லங்காபட்டணத்தினுடைய அரணிப்பு இப்படிப்பட்டது. அதன் சைனியங்களினுடைய தொகை இவ்வளவாகும். சிவனிடத்தில் வரமாகவாங்கின வாளாயுதத்தை வலதுகையில் பிடித்திருக்கின்றவனை ராவணனுக்குத் துணையானவர்கள் அநேகர். அவர்கள் தங்களுக்குவேண்டிய பலங்களையும், வரங்களையும் அநேக தபங்களைச்செய்து பெற்றுக்கொண்டிருக்கிருர்கள். அவர்களில் கும்பனென்று ஒருவனுண்டு, அவன் ஊழிக்காற்றைப் பார்க்கிலும் மகா கொடுமையானவன். சுவர்க்கலோகத்திலுள்ள சித்தகணங்களைச் சிறையிட்டவன். இரதகஜதுரகபதாதிகளான பத்துக்கோடி சைனியங்களையுடையவன். வேருெருவன் அகம்பனென்கிற பெயருள்ளவன் உளன். அவன் அநேகயுகம் தவஞ்செய்து வெகுவரங்களைப்பெற்றிருக்கின்ருன். அவன் யுத்தங்களல்லாமல் தனக்குச் சுகந்தருவதாக வேருென்றையும் இச்சிக்கிறவனல்லன். அவனுடையசைனியங்கள் அளவில்லாதவைகள். அவனேநரசிங்கத்திற்குச் சமானமான வல்லமையுள்ளவன். திகும்பனென்ருெரு பெரியவாங்கார

முடையவனுண்டு. அவன் மலையிலும்
பெரியதான குதிரைகளும், யானைகளும்,
தேர்களும், வில்வீரர்களும் ஆகிய ஒன்
பதுகோடிசைனியங்களையுடையவன். இவ
னேடு யுத்தஞ் செய்யவேண்டுமென்று தன
துவாகனமாகிய ஆட்டுக்கடாவை வேக
மாய் நடத்திக்கொண்டு வந்து யுத்தத்தில்
நின்ற அக்கினிதேவனைத் தோற்கடித்
தான். மகோதரனென்கிறமற்ருெருவீரனு
ண்டு. இவன் பிசாசங்களும், யாளிகளும்
யானைகளும், கழுதைகளும், கட்டப்பட்ட
பத்துக்கோடிதேர்ப்படையையுடையவன்.
தாயாயிருந்தபோதிலும் வஞ்சனைசெய்கிற
தில் பின்னிடமாட்டான். மகாதந்திரசாலி
யாக கேதுவென்ருெருவீரனுண்டு, அவன்
மலையில் வாசஞ்செய்கின்றவர்களான இரு
பதுகோடிவீரர்களுக்குத் தலைவன். இன்
றைக்குள்ளவர்கள் நாளைக்கில்லையென்னும்
படியாய் யாவர்களையும் தன் பற்களுக்கு
இரையாக்கிவிடுவான். அநேகந்தடவை
களில் யுத்தத்துக்குவந்த தேவர்களை ஜெயி
த்திருக்கின்ருன், சூரியகேதுவென்று ஒரு
வீரனுண்டு. அவன் பூலோகத்திலுள்ள
வர்களையும், தேவலோகத்திலுள்ளவர்களை
யும், ஒன்ருகச்சேர்த்து ஒரேநாளில்தின்று
விடத்தக்கவனென்றுபிரசித்தப்பட்டவன்.
இவன் எட்டுக்கோடி சைனியங்களையுடை
யவனும், அக்கினியும் பயப்படும்படியான
பார்வையுடையவனுமாவன். மகாபாரிச
னென்கிற ஒரு வீரன் அவனிலும் மிகுந்த
பலமுள்ளவன். தேவர்களும். ரிஷிகளும்,
பிர்ம்மசிவாதிகளும், இவன் பெயரைச்
சொல்லவேண்டுமானுலும், பக்கம்பார்த்
துச் சொல்லவேண்டும்படியாகிய மகத்தா
ன கோபமுள்ளவன். இவன் பதினுறு
கோடி சைனியங்களுக்குத் தலைவன், வஜ்ர
தந்தனென்றும் காலாந்தகனென்றும்பெய
ருள்ள எரிமுகத்தையுடையவனும்,எட்டுக்
கோடி சைனியங்களுக்கு அதிபதியும்,
சூலாயுதத்தையுடைய உமாபதியும் வெல்
லத்தக்க பலமுள்ளவனுமாகிய ஒரு வீர
னுண்டு. எந்தக்காலத்திலும் சஞ்சலப்ப
டாதவர்களான பத்துக்கோடி சைனி
யங்களை வசப்படுத்திக்கொண்டிருக்கின்ற
வல்லமையில் தனக்குச் சமானமாக
வேருெருவருமில்லாதவனும், யுத்தத்தில்
யட்சகர்களைக் கையினுலே பிசைந்து
நசுக்கினவனுமான பிசாசன் என்கிற மற்
ருெருவீரனுண்டு. தேர்களும்-யானைகளும்
குதிரைகளும் - வில்வீரர்களுமாகிய பதி
னுறுகோடி சைனியங்களுக்குத் தலைவனும்
பூமியைப்பேர்த்தெடுக்கத்தக்கவனும், சப்த
சமுத்திரங்களும் சப்தகுலாசலங்களும் கல
ங்கச்செய்யவல்லவனும், கோபித்துப்பேசு
கின்ற சக்தியுடையவனுமான துன்முக
னென்று ஒரு பாபியுண்டு. லங்காதீபத்தை
யொத்த மற்றத் தீபங்களிலே வாசம் பண்
ணுகிறவர்களான பத்துக்கோடி ராட்சத
வீரர்களுக்குத் தலைவனும், வாள் வித்தை
யில் வெற்றி பெற்றவர்களான வித்தியா
தரர்களைத் தோற்கடித்து அவர்களுடைய
கீர்த்தியைப் போக்கடித்தவனுமான விரு
பாக்ஷனென்கிற அக்கினியைக் கக்குகின்ற
பார்வையையுடையவனொருவனுண்டு. யுத்
தத்தில் வல்லவனும், மகா ஜெயசாலியும்,
தேவர்கள் மத்தாகக்கொண்ட மந்தரகிரிக்
குச் சமானமானவனும், எல்லாச் சேனுதி
பதிகளிலும் அதிக பலமுள்ளவனும்,
பூலோகத்தாரும் சுவர்க்கலோகத்தாரும்,
கேட்டமாத்திரத்தில் முதுகுகாட்டி ஓடும்
படியான ரணமஸ்தனென்கிற பெயருள்ள
வீரனொருவனுண்டு. தூவாக்ஷனென்பவன்
பிணங்களை மயானத்தில் வைக்கவொட்டா
மல் தன் பல்லுக்கே இரையாக்கிக் கொள்
ளுகிறவனும், கோடாகோடி ராக்ஷதவீரர்
களுக்குத் தலைவனும், தேவர்களை யெல்
லாம் யுத்தத்தில் முதுகிட்டோடும்படியா
கச் செய்தவனுமானவன். இப்படிப்பட்ட
பேர்களை எத்தனையாயிரம் பேர்களென்று
சொல்லப்போகின்றேன். அந்த இராவண
னுடைய உதவிச் சைனியங்களாய் இப்
போது சொன்னவர்களைப் பார்க்கிலும்
இரண்டுமடங்கு சைனியங்களுக்குத் தலை
வனுயிருக்கின்ற பிரகஸ்தனென்று ஒருவீர
னுண்டு. சேனுதிபதியாகிய இந்திரனு
டைய ஐராவதமென்கிற யானை பின்னிட்
டோடவும், அந்த இந்திரனுடைய ஏழு
சக்கரம் பூட்டிய தேர் சின்னபின்னப்பட்
டழியவும், முப்பத்துமூன்றுகோடி தேவ
கணங்களும் முதுகிட்டோடவும், தன்னு
டைய அம்புகளைப் பிரயோகித்தவனும்
நான்கு சந்திரர்களைப்போலப் பிரகாசிக்கி
ன்ற அஷ்டதிக்கஜங்களினுடைய நான்கு
கொம்புகளையும் பிடுங்கிக்கொண்டு மேருபர்

வதமானது மதங்கொண்டு திரிந்தாற் போலத் திரிந்துக்கொண் டிருந்தவனு மான கும்பகர்னனென்று இராவணனுக்கு ஒரு தம்பியுண்டு. மேலும் சூரிய சந்திரர் களையும் சிறையிட்ட மிகுந்த கோபமுடை யவனுன இந்திரஜித்தென்று சொல்லப் பட்டபிள்ளை ராவணனுக்கொருவனுண்டு. இவன் இந்திரனைப் பிடித்து கட்டின தழு ம்பு அந்த இந்திரனுடைய கையிலும் காலிலும் இன்னம்மாறவில்லை. அந்த இந் திரஜித்தையும் ஜெயிக்கவல்லவனும் கொ ஞ்சமாவது தருமத்துக்கு இரக்கப்படாத வனும், சாக்ஷாத் கைலாயமூர்த்தியினிடத் தில் பெற்ற வில்லையுடையவனும், இந்திர ஜித்துக்கிளையவனுமான ஒருபிள்ளையுண்டு. வேருெருவு இந்திரனிவனுக்கு ஜெயிக்கிற தற்கு இல்லாமையால் இந்திரஜித்தென்று பெயரில்லாமல் அதிகாயனென்ற பேரு ண்டாயிற்று. இவ்விருவரல்லாமலும் ராவ ணனுக்குத் தேவாந்தகன் நராந்தகன் திரி சிராஎன்கிறமூன்றுபிள்ளைகளுண்டு. அந்த மூன்றுபேரும் திரிமூர்த்தியையொத்தவர் கள். யுத்தத்திற்குப்புறப்பட்டால் அவர் களெதிரில் நிற்கவல்லவர் திரிபுவனங்களி லும் ஒருவருமில்லை. இவர்களுடையவல்ல மை இப்படியிருக்க, இராவணனுடைய பலம் எனக்குத் தெரிந்தமட்டுக்குஞ் சொல் லுகிறேன். இவன் பிர்ம்மபௌத்திரனும் காசிபமகாரிஷியின் புத்திரனுமான புலஸ் தியப் பிர்மாவினுடைய புத்திரன். இவன் தபசில் முனிவர்களிலும் உயர்ந்தவனுகி, திரிநேத்திரராகிய ருத்திரமூர்த்தியை நோ க்கித் தவஞ்செய்து எல்லாச்சிறப்பையும் பெற்ருன். இவன் பூதகோடிகளெல்லாம் சூழ்ந்துகொண்டிருக்கும்படியான சாக்ஷாத் மான்தோலாடையை அணிந்த ருத்திர மூர்த்தியானவர் பார்வதிசமேதராய் எழுந் தருளியிருக்கின்ற கைலாய பர்வதத்தை, உள்ளங்கையில் வேரோடு பிடுங்கித் திரி லோகங்களும் நடுநடுங்கும்படியாய்த் தூக் கினுன். உலகங்களைத் தாங்குகின்ற அஷ்ட திக்கஜங்களையும் தந்தங்கள் முரியும்படியா கத் தன்னுடைய மார்பினுல் தாக்கினுன். இனிநமமீதும் வருவானென்று முப்பத்து முக்கோடி தேவர்களும் நடுக்கங்கொண்டு ஓட்டம்பிடித்தார்கள். இவன் காலகேயர் களை அவர்கள் பந்துசகிதமாக அணிந்த கிரீடங்களோடும், பிடித்த ஆயுதங்களோ டும் கொன்றபிறகு, இவனுடைய பெய ரைக்கேட்டாலும் இடிமுழக்கங் கேட்ட சர்ப்பம்போல் தானவ ஸ்திரீகளுடைய கர்ப்பத்திலிருக்கின்ற சிசுவும் இன்னும் பயப்படுகின்றது. அநேக தடாகங்களால் சூழப்பட்ட அளகாபுரிபட்டணத்தில் இப் போது பதுங்கிக்கொண்டிருக்கிறகுபேரன் தன்னுடைய அநேகமான ஐஸ்வரியங்க ளெல்லாம் பட்டணவீதிகளில் சிந்திச் சித றுண்டு போகும்படியாகப் புலியைக்கண்ட மானைப்போலப் பயந்து, தன் மானமும், புஷ்பகவிமானமுமிழந்து, இந்த லங்கா பட்டணத்தையும் விட்டு ஓடிப்போய்விட் டான். நம்மையடித்து உடம்பெல்லாம் காயப்படுத்தினது மல்லாமல் இந்த ராவ ணனுகிய நமன் நம்முடைய உயிரையும் வாங்கும்படியான செய்கையிலிருக்கிருன். என்று எமனும் தன் பட்டணத்தைவிட்டு ஓடித் தன்னுடைய ஆயுள்நாளைக் கணக் கெண்ணிக்கொண்டிருக்கின்ருன். சூரியனை லங்காபட்டணத்திற்குள் பிரவேசிக்கவொ ட்டாமல் வெளியிலேயே நிற்கும்படியாகச் செய்தவன், அந்தச் சூரியனுடைய கண் களுக்கு இலங்கையின் பெருமையையுங் காட்டவில்லை. வருணனை ஜெயித்து, அவ னுடைய பாசத்தையும் பிடுங்கிக்கொண் டான். அந்தப் பயத்தினுலே அவன் தப் பிப்பிழைத்துச் சமுத்திர ஜலத்திற்குள் ளே மறைந்துகொண்டிருக்கிருன். இப்ப டிப்பட்ட பலமுள்ள ராவணன் மலைக ளெல்லாம் பொடிப்பொடியாக அழித்தா லும்,இவனுடைய தோள்களுக்குக் கொஞ் சமேனும் லயமுண்டாகிறதில்லை. இவனு டையபலம் இன்றைக்காணுலும், நாளைக் காணுலும், இன்னம் கொஞ்சகாலம்போய் அழியுமாணுலும் தேவராலன்றிவேருெரு வராலும் முடியாது.

இந்த ஆஞ்சனேயரால் புலியினிடத் தில் அகப்பட்ட ஆடுகளைப்போலச் செத் தழிந்த ராக்ஷதர்களுக்கு அளவில்லை. தோ ரணகம்பத்தினுல் வதைப்பட்ட ராக்ஷதர் கள் கடல்மணலின் தொகையைப்பார்க் கிலும் அளவில்லாதபேர்கள். அதுவுமல் லாமல் லங்காபட்டணமும் சுட்டெரிக்கப் பட்டது. அப்போது அதில் வெந்த ரா க்ஷதர்களுடைய தேகத்தின் கரிகள், நிறை

ந்த கடலிலிருக்கிற வடவாமுகாக்கினிக்குக் கொடுத்த தக்ஷிணையாயிற்று. அந்த இராக்ஷதர்களுடைய கையில் பிடித்திருந்த மலைபோன்றவில்லோடுங்கூட அவர்களைப் பிடித்து இவர் பூமியில் தேய்க்கும்போது அவர்கள் தேகத்திலிருந்தும் வழிந்த இரத்த நிணக்குழம்புகள் இலங்காபட்டணத்துத்தெருவில் இன்னமும் உலரவில்லை. இந்த ராவணனுடைய பஞ்சசேனாபதிகள் தேவர்களுக்குரிய சுவர்க்கத்திலுள்ள காவலையும், அரண்களையும் அழித்த வீரர்களாகும். அப்படிப்பட்டவர்கள் தங்கள் சேனைகளும், பந்துக்களுமாய் யானையின் காலிலகப்பட்ட செல்லைப்போல் இவரால் நசுக்குண்டு இறந்தார்கள். இதுவுமல்லாமல் எண்பதினாயிரம்பேர்கிங்கரர்கள் தனக்குச்சமானமான ஆசாரங்களையடைவர்கள். கொடிய கையினாலும், மழுவாயுதத்தினாலும், இருப்புலக்கைகளினாலும் எதிர்த்து நின்று உருத்திரமூர்த்தியினால் அழிந்துபோன திரிபுராசுரர்களைப்போலானார்கள். ஜம்புமாலியென்கிற மகாவீரன் ஒருவன் சமுத்திரம்போன்ற சைனியங்களோடுகூட இந்த ஆஞ்சநேயரை எதிர்த்து, இவர் தோளொன்றுக்கு ஆயிரமாயிரம் அம்புகளைப் பிரயோகித்தும், பிறகு அவன் கைவில்லினாலேயே அடியுண்டு எமலோகமே போய்ச் சேர்ந்தான். இதுவுமல்லாமல் அந்த லங்காபட்டணத்தை இவர் எரித்த காலத்தில் அதிலழிந்துபோன இராக்ஷதர்களை இவ்வளவென்று யார் கணக்கிட்டுச் சொல்லுவார்கள்? எரிந்துப்போகாமல் தப்பி இன்னமும் வீரர்களிருக்கிறார்களா? இவரால் எரிக்கப்பட்ட அந்த லங்காபுரிபட்டணத்தின் நெருப்பானது அவர்களுடைய சிறந்த பிணங்களினாலேதான் அவிந்தது. இலங்கையி லிறந்தவர்களைப்பற்றி வேறே என்னசொல்லவிருக்கிறது? இராவணனே அணிந்த மாலையுடனும், பூசின சந்தனத்துடனும், அன்று பூண்ட ஆபரணங்களுடனும், கட்டிய வஸ்திரங்களுடனுங்கூட ஏழுநாள்வரைக்கும் அந்த லங்கையிலிருக்கச் சகிக்கமாட்டாமல் ஆகாயத்திலேயே நின்றுவிட்டான். இப்படிப்பட்ட வல்லமைபொருந்திய இராவணனுடைய இலங்காபட்டணத்தின் பெருமையையும் அதன் காவற்பெருமையையும் சொன்னேனே. அது எரிந்துபோனபிறகு இராவணனுடைய ஏவலினால் சாக்ஷாத் பிரம்மதேவரே அந்த இலங்காபட்டணத்தைப் பழையபடியேசிருஷ்டித்துவிட்டார். மதத்த யானையையொத்த கரன்முதலாகிய வீரர்களும், வாலியும், தேவரீரால் இறந்ததைக்கேட்டதினாலும், கவிசிரேஷ்டராகிய இந்த ஆஞ்சநேயரால் இலங்காபட்டணம் எரிந்ததனாலும், இவர் ராக்ஷதர்களைக் கொன்றுவிட்டு வந்ததனாலும் அடியேன் கண்ணினாற் கண்டதினால்தான்; இவ்விடம் வந்து தேவரீருடைய திருவடியையடைந்தேன். என்று தம்முடைய திருமேனியோடு உறவுகொண்ட கறுத்த மேனியையுடையவரான விபீஷணாழ்வார் விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அவ்வார்த்தைகளையெல்லாங் கேட்ட ஸ்ரீராமமூர்த்தியானவர் வாளைப்போலும் கண்களையுடையவரும், மிகுந்தபாக்கியமுள்ள மயில்போன்றவருமான சீதாபிராட்டியாரை வெகுகாலம் விட்டுப் பிரிந்ததினாலே ஒளிமழுங்கி மெலிந்து இருந்த திருத்தோள்கள் பூரித்து, தனது தூதராகிய ஆஞ்சநேயரைப் பார்த்துச் சொல்லுகின்றார். ஓ வீரசிகாமணியாகிய ஆஞ்சநேயனே! அந்த இராவணனுடைய சைனியங்களிலே பாதி சைனியங்களுக்கு மேற்படவே கொன்றுவிட்டாய். இலங்காபட்டணமுழுதையும் அக்கினிக்கு இரையாக்கிவிட்டாய். இனி அங்கேயென்ன பலமிருக்கிறது? சீதையை நீ கண்டும் இங்கே கொண்டுவாராதது என்னுடைய வில்லின் வீரத்தைக் காட்டும்படியாகத்தானோ? உன்னுடைய தோள் வல்லமையை நிறைத்துவைத்திருக்கின்ற அந்த இலங்காபட்டணத்திற்கு நாங்கள்போய் இனி செய்யப்போகின்ற காரியங்களினாலே எங்களுக்கு என்னபெருமை உண்டாகப்போகின்றது? ஓ மேருமலைக்குச் சமானமான தோள்களையுடையவனே! நாங்கள் அதிக சேனைகளோடு வந்தும் என்ன காரியத்தைச் செய்தோமென்று கீர்த்தியடையப் போகின்றோம்? என்னுடைய சௌரியத்தையும் இராவணனுடைய வல்லமையையும், ஜெயம்பெற்றதினாலும் தோற்பித்ததினாலும் உன்வசப்படுத்திக்கொண்டாய். ஓ என்னுடைய ஐஸ்வரியமெல்லாம் உருவம் பெற்று வந்ததுபோலும் உற்பவித்த

ஆஞ்சநேயனே! இந்த மூன்று லோகங்களையும் சிருஷ்டித்த பிரமதேவனுடைய மேலான பதவியை மறு கற்பத்தில் நீ அடையக்கடவாயென்று அருளிச்செய்த மாத்திரத்தில் அநுமானனவர் சுவாமியினுடைய திருவடிகளில் சாஷ்டாங்கதெண்டம் சமர்ப்பித்து, ஒன்றும் பேசாமல் வாய் பொத்திக்கொண்டு நின்றார். அவருடைய பிரதாபத்தை கேள்விப்பட்ட வானரவீரர்களும் அவர்களுக்குத் தலைவரான சுக்ரீவ மகாராஜரும் மோக்ஷத்தை யடைந்தவரைப்போல பரமானந்த பரிதர்களாய் ஆச்சரியமடைந்தார்கள்.

இலங்கைவேள்விப்படலம் முற்றிற்று.

---

## வருணன் அடைக்கலப்படலம்.

விபீஷணாழ்வார் சுவாமியை நோக்கி, சுவாமி! இனிமேல் இந்த ஆஞ்சநேயருக்கு இம்மூன்று லோகங்களைச் சிருஷ்டிக்கிறதும், இரக்ஷிக்கிறதும், சம்மரிக்கிறதும், ஒருகாரியமல்ல. இனிவருணனை அழைக்கும் விதத்தையும் நம்முடைய சேனையானது இச்சமுத்திரத்தை தாண்டிப்போகும்படியான வழியையும் ஆலோசிக்கவேண்டும். மறைந்துநின்ற உம்முடைய திருக்கல்யாண குணங்களை ஆஸ்ரயித்த இச்சமுத்திரமானது இச்சிக்கின்றது. மேலும் உம்முடைய வம்சத்தாரால் உண்டானது. ஆதலால் தேவரீர் விரும்பும் வரத்தைக் கொடுத்தருளும், இச் சமுத்திரராஜனைக் கேட்டுச் சைனியங்கள் போகும்வழியைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றார். அதைக்கேட்டு விபீஷணாழ்வானுடைய வார்த்தை நன்றாயிருந்ததென்று சந்தோஷப்பட்டு, வானரசைனியங்களோடுகூட ஸ்ரீராமமூர்த்தியானவர் சமுத்திரத்தின் சமீபமாய் வந்தனர். அப்பொழுது சூரியனுடைய குதிரைகள் அஸ்தமனகிரியினின்றுந் தாண்டிப்போய்விட்டன. அப்பொழுதுஇராத்திரிகாலமாயிற்று. அந்தஇருள் நீங்கும்படி அமிர்த கலைகளோடும் கூடிய சந்திரன் உதித்தனன். அவ்வேளையில் இந்தச்சமுத்திரம் சூழ்ந்த பூமியானது எவ்வாறு யிருந்ததெனில், பொறிகளோடு கூடிய படத்தையுடைய கரும்பாம்பாகி இராகுவினாலே விழுங்கி உமிழப்பட்ட அச்சந்திரனைப்போலு மிருந்தது. அப்போது சுவாமியானவர் சீதாபிராட்டியாரை மீட்டுக்கொண்டு வரத்தக்க வழியைப் பெறும்படியா யிருக்கப்பட்ட திருவுளங்கொண்டவராய், சாஸ்திரோக்தமாய் இலையபெருமாளாலே திருத்தப்பட்ட தர்ப்பை சயனத்தின்மீது வருணமந்திரத்தை ஜெபித்துக்கொண்டு, கடலின்மேலே பார்வையானது செல்லும்படியாய்ச் சயனித்துக்கொண்டிருந்தார். தம்முடைய திருமேனியிலே துகள்படியவும், சூரியன் திருமுக மண்டலத்தைப் பரிசிக்கவும், ஒரு பகல் ஒரு ஊழிக்காலத்திற் கொப்பாய் ஏழுநாள் பரியந்தம் சயனித்திருந்தும், வருணதேவன் வாராமையைக்கண்டு, இப்பெரிய சமுத்திரராஜனனவன் நாம் கேட்ட வரம் உண்டு இல்லையென்று சொல்லும்படியாக வரப்பெற்றோமில்லையே யென்கிற கோபத்தினல் சமுத்திரத்தில் அக்கினிபுறப்பட்டதுபோலச் செந்தாமரைப் புஷ்பம்போன்ற இரண்டு திருக்கண்களுஞ்சிவந்தன. நான் சிறந்த பெண்சாதியையிழந்து இச்சமுத்திரத்தை தாண்டிப்போகிறதற்கு வழி வேண்டுமென்று வேண்டியும், இந்த வருணதேவ னென்னப்பட்டவன் இல்லையெனச்சொல்வதற்கு ஈடாக ஒளித்துக்கொண்டான்போ லிருக்கின்றது என்று மிகுந்த கோபத்துடனே பெருமூச்சுவிட்டுக்கொண்டு, நீண்ட வில் வளைந்ததுபோல் இரண்டுபுருவங்களும் வளைந்தவராகி இதனைச் சொல்லுகின்றார். தாங்களொருவரிடத்திலும் ஒன்றும் விரும்பாதவர்களாய் இருந்த போதிலும், தம்மிடத்தில் ஒருவர்வந்து ஏதேனும் கேட்பாரேயானால் அவருடைய வறுமையை நீக்குவார்கள். இன்றைக்கு நாம் கடலைத் தாண்டவேண்டுமென்று வருணராஜனைப் பிரார்த்திக்கவும், அதை மறுத்துவிட்டான். இவனுடைய நீதி நன்றாயிருக்கின்றதுயென்று மிகுந்த கோபத்துடனே நகைத்து, நம்மை அற்பவில்லையுடைத்தாயிருக்கப்பட்டவரென்றும், இராவணன் அபகரித்துக்கொண்டுபோக தன்னுடைய தாரமிழந்த தன்மையுடையவனைபடியால் வீரமற்ற மனிதனெனவும் அலட்சியஞ்செய்து இவ்வருணராஜன் வாராமற்

போனான். ஒருதவியைச்செய்து ஒன்றைப் பெற்றுக்கொள்ளுதலும், கீர்த்தியினாலே ஒருவரிடத்தொன்றைப் பெற்றுக்கொள்ளுதலும், சண்டைசெய்து துரத்திவிட்டு ஒன்றைப்பெற்றுக்கொள்ளுதலும்ஆகியஇவையெல்லாம்வழக்கமானவைகள். நாமோ அப்படி செய்யாமல் கேட்டு வாங்கும்படியாய் வந்தபொழுது தனது இயல்பும் தர்மமும் குறைவாகும்படியாய் ஒளித்துக்கொண்ட இதுநலமாயிருக்கிறது. நம்மைக்காட்டிற்கு வந்துகாய்கனிகளைத்தின்றுஉடம்பைவளர்த்துக்கொண்டிருக்கிறவன் என்பதாய் நினைத்திருந்த இக்கடலுக்குத்தலைவனானவருணராஜனுடைய பெருமையையும், வில்லினுடனே நிற்கும்படியானமனிதனான எனது சிறுமையையும்தேவரென சொல்லப்பட்டவரே பார்க்கட்டும். இதுகாறும் பழிக்குப் பயந்து நாமிருந்த தன்மையை அற்பமென நினைத்து நம்மைநிந்தித்த இச்சப்த சாகரமும் வெந்து ஒருபிடி சாம்பலாகும்படியாகவும், பஞ்சபூதமும் அழுதுகொண்டுவந்து பிராணபிக்ஷை கேட்கும்படியாயும் செய்கிறேன். அப்பொழுது எனது சேனை யாவற்றும் கால்கூசாமல் தாராளமாய் இக்கடலின்வழியாய் நடப்பார்கள். மோக்ஷத்தை அடைந்த முத்தர்களானபோதிலும் இப்பூமியில் வெறுமையுடனே வருவாரேயானல் ஒருவரும் அப்பேர்ப்பட்டவரை இலக்ஷியஞ் செய்யமாட்டார்கள். அக்கினியானபோதிலும்சிறியதாய்க் காணப்பட்டால் அதற்குப் பயப்படவே மாட்டார்கள். உருவச் சிறுமையைக் கண்டவர்கள் குணப்பெருமையைப் பார்த்தாலல்லாமல் உணர்வடைய மாட்டார்கள். என்று பலவாறாய் வருணனைக்குறித்துக் கோபித்துக்கூறிய ஸ்ரீராமரானவர் ஊழிக்காலத்தில் அதிக உக்கிரத்தோடு புறப்படும்படியானதிருமுகமண்டலத்தையுடையவராகி பலதாம் வில்லைக்கொடு கொடுவெனத் தம்பியைக் கேட்டபோது, அவர் கண்கள் சிவந்து நெருப்புப்பொறி பறக்க வில்லைக்கொடுத்தார். அதை வாங்கிச் சுவாமியானவர் வளைத்து நாணேறிட்டு விரலாலே குணத்தொனிபண்ணினார். அக்குணத்தொனியானது ஸ்ரீகயிலாயபதியினுடைய தேவியான பார்வதியம்மன் உடைத்தாயிருந்த ஊடலையும் நீக்கிவிட்டது.

மேலும் சுவாமியானவர் லோகத்திலுள்ள ஜலத்தையெல்லாம் முடிவுகாலத்திலே கிரகிக்கும்படியான கிரணங்களையுடைய சூரியனுக்குச் சமானமான அஸ்திரங்களைப் பிரயோகம் பண்ணினார். சப்த குலாசலங்களைப் பார்க்கிலும் மிகவும் பலமுடையதான அந்த மகிமைபொருந்திய கோதண்டத்தை மூன்றாம்பிறைச் சந்திரனைப்போலே வட்டாகாரமாய்வளைத்து அதிலே சராசரங்களையும் பிரளயகாலத்திலே சுட்டெரிக்கும்படியான வடவாமுகாக்கினியைக்காட்டிலும் மூன்றுபங்கு அதிகமாகக் கொடுமையையுடைய பாணங்களைப் பிரயோகித்தார். அப்போது சமுத்திரத்திலுள்ள மீன்களும்-பாம்புகளும்-மலைகளும் மற்று முள்ளவைகளும் சமித்துக்களாகவும் நுரைகளோடு கூடிய அச்சமுத்திர ஜலமானது ஓமநெய்யாகவும் பிரயோகிக்கப்பட்ட அம்பு அக்கினியாகவும், சமுத்திரக்குழியானது யாககுண்டமாகவும், இருந்தன. மேலும் அப்பெருமைபொருந்திய நெடியவில்லினின்றும் புறப்பட்ட இராம பாணம் சத்தசாகரத்தையும் புகையும்படியாய்ச் சுட்டெரித்துக்கொண்டு ஊழித்தீயினுடைய கொழுந்துகள் புறப்பட்டது போல போய்ச் சக்ரவாளகிரிக்கு அப்புறத்திலே யிருக்கின்ற இருட்கூட்டத்தையும் நாசப்படுத்தி விட்டன. சுவர்க்கலோகத்திலேயிருக்கின்ற கற்பகச்சோலைகளும் தீயும்படியாய்க் குறித்துவிட்ட இராமபாணாக்கினியாலே மருமஸ்தானமெரிந்து பெரும் புறக்கடலிலுள்ள மகரம்ச்சங்கள் இடிவிழுந்ததுபோலேவிழுந்தன. சமுத்திரத்திலேயுள்ள மலைகள் வெந்து புகையாலே மூடப்பட்டு மேலெழும்பின. அக்கினிப்பொறிகள் ஆகாயத்தை அளாவினதால் அவ்வாகாயத்திலே ஓடும்படியானமேகங்கள்வந்து பூமியிலுதிரப் பெற்றன. நிர்த்தனம்பண்ணிக்கொண்டிருந்த அரம்பாஸ்திரீகளினுடைய கறுத்த கூந்தலெல்லாம் வெளுத்துப்போய் விட்டதுகள். இராமபாணங்களானவை மார்பிலேபட்டு உருவிப்போனதினாலே இரத்தங் கக்கிக்கொண்டு மகரமச்சங்கள் வற்றி யுலரப்பெற்றன. திமிங்கிலங்களும், திமிங்கலகிலமச்சங்களும். அநேக கண்டதுண்டமாய் நறுக்குண்டு செத்துப்போய் விட்டன. மலைகளெல்லாம்

எரிந்துபோய்ச் சாம்பலானது பறக்கவும் கிழாறுகொண்டு சமுத்திரஞ் சேருகி அச் சேறுதீயவும், ஆதிசேடனுடைய ஆயிரஞ் சிரசுகளும் காய்ந்துபோகவும், இராமபாணங்கள் ஒவ்வொன்றும் நூறு ஆயிரங் கோடிகளுமாய்ப் புறப்பட்டதுகள். மீன்களெல்லாம் பொய் சொன்னவர்களுடைய குலம்போலக் கருவற்றுப் போய்விட்டதுகள். பாய்மரங்களோடுங் கூடிய கப்பல்கள் சமுத்திரத்திலே ஓடித் திரிவதுபோல, அநேகமீன்கள் பாய்ந்த அம்புகளோடுங் கூட ஓடித்திரியப்பெற்றதுகள். சமுத்திரமானது இரத்தங்கள் வழிந்து ஓடும்படியாய் நெஞ்சு பிளப்புண்ட இரணியனைப் போலவும், சிவப்பாகிய அந்திவானத்தைப் போலும் இருந்தது. பத்தி பத்தியாக ஸ்ரீராமபாணங்கள் பறந்துபோனதினாலே அந்தச் சமுத்திரத்திலே யிருந்த அநேக மீன்கள் வெந்து தீய்ந்துபோனதுகள். அநேக மச்சங்கள் கரிந்துபோனதுகள். அநேகமச்சங்கள் பொரிந்துபோனதுகள். சுவாமியினுடைய பாணம் குடித்துவிட்டதினாலே வற்றி அங்கங்கேகொஞ்சம் ஜலமுள்ளதாய்ப் பக்கத்திலே அனல்கள் சூழ்ந்திருக்கும்படியாக சுவாலையோடு வெந்துகொண்டிருக்கின்ற சமுத்திரம் கறுத்த சட்டிபோலவும், அதில் வேகின்ற சிலவகை மச்சங்கள் நெய்யில் வேகின்ற மச்சங்கள் போலுமிருந்தன. அநேக ராமபாணங்கள் இரத்தத்தைக்குடிக்கிறதுபோலச் சமுத்திர ஜலத்தையெல்லாம் வற்றிப்போகும்படியாய்ப் பானம்பண்ணினதினாலே, அதில் பிரகாசித்துக்கொண்டிருந்த பவளம் மாணிக்க முதலான இரத்தினகூட்டங்கள் எப்படியிருந்ததெனில் கடல் வெந்தும் அவிக்கக்கூடாத மிகுதியான நெருப்பைச் சொரிகிறதுபோலுமிருந்தது. சமுத்திரமுழுமையும் நீர்வற்றி வெளியாய்ப் போய்விட்டபடியினாலே சங்குகளெல்லாம் கொழுப்புடனே கரிந்து கிடக்கிற மச்சக்கூட்டத்தைச் சுடுகிறதற்கு வைத்திருக்கும் பாத்திரங்கள் போலிருந்தது. அதல்லாமலும் ஆற்றினிடத்திலே பிணங்களை வரிசை வரிசையாய் வைத்துத் தகனஞ் செய்த அங்கங்கள்போலும் இருந்தது. சீறிக்கொண்டு வருகிற இராமபாணங்கள் ஒன்றோடொன்றுதாக்கி அக்கினியை யுண்டாக்கினதினால், மூங்கிற்காடுபற்றி யெறிகிறதுபோலும் இருந்தது. கடலிலுள்ள மச்சங்களும் மற்ற ஜீவகோடிகளுமெல்லாம் இராம பாணத்தினால் துண்டிடப்பட்டு அவற்றினின்றும் ஒழுகி வருகின்ற இரத்தவெள்ளமானது கடலினிடத்து சில பக்கங்களில் அலைமோதிக் கொண்டிருந்தது. ஸ்ரீராமபாணமறுத்துத் தள்ள தெறிபட்டு விழுந்த பெரிய மரங்களும் அலைகளும் ஆழ்ந்த சமுத்திரக்கொதிநீர் படும்போதெல்லாம் நெருப்பு குபீர் குபீரென்று பற்றி, உள்ளூன்றிய வேரோடுங்கூடிய எண்ணெயில் தோய்ந்து வேகின்றதுபோல வெந்தன. தேவதேவரான ஸ்ரீராமரால்விடப்பட்ட பாணமானது பிர்மாவினுடைய சாபத்தைப்போலப் பிசகாமல் மனோவேகத்திலும் அதிகமாய்க் கடுகி உக்கிரமான அக்கினியை அங்கங்கே கக்கிக்கொண்டு போகிறபடியினாலே சமுத்திரமானது தாமரைப்பூ புட்பித்திருந்த ஒரு தடாகம்போலு மிருந்தது. பெரியோர்களெனச் சொல்லப்பட்டவர்கள் கோபித்தாலும் அது சிறப்பைக் கொடுக்குமேயல்லாமல் கெடுதியைத்தரமாட்டாது என்பதைத் திருஷ்டாந்தமாய்க் கண்டோம். அதெப்படியென்றால் உப்புச்சமுத்திரமென்று உலகத்தவர்கள் பழிக்கிறதுபோய் ஸ்ரீராமருடையபாணம்பட்டு வற்றிப்போன அந்தத் தென்சமுத்திரம் சுத்தோதக சமுத்திரமாய் விட்டது. வரிசை வரிசையாக இருக்கின்ற பெரிய அண்டங்களையெல்லாம் வாரியுண்டருளின சாக்ஷாத் நாராயணனுக்கு இச்சமுத்திரத்தை வற்றடிப்பதொரு வல்லமையோ? பூமியை அமிழ்த்துவது சமுத்திரம். அச்சமுத்திரங்களையும் ஊழிக்காலத்தில் வடவாமுகாக்கினியானது தீய்ந்து பக்ஷித்துப்போடுமென்றும் சொன்ன வேதவாக்கியத்தின் அர்த்தத்தை இவர் நிலைநிறுத்திக் காட்டினார். இராத்திரியும் பகலுமாய் அக்கடலுக்குள்ளா யிருந்து மங்களகரமாய்த் தபத்தைப் பண்ணிக்கொண்டிருந்த மகரிஷிகளெல்லாம் அந்தஸ்ரீயப்பதியினுடைய திருவடியைத் தியானம்பண்ணிக்கொண்டு இருந்தபடியால், இராமபாணத்தினால் வேகாதவராகி அவ்வக்கினிமயமானஜலத்திற்குள்ளேயே சஞ்சரித்தனர்கள். தென்றிசை வடதிசைமுதலாய்ச் சொல்லப்பட்ட எல்லாத் திக்குகளிலும் புகைப்படலம் மூடிக்

கொண்டதனுல் சூரியனுடைய குதிரைகள் புகையால் உடல்கள் ஒழுகி கருகி நிறமாறி நடக்கக்கூடாமல் வழிதப்பி நின்றுவிட்டன. தம்மைவிட்டு நீங்கினபேர்கள் அனுபவிக்கும் தகைமை இன்னதென்று தெரிந்தும் தெரியாதாரைப்போல், சக்ரவாளப் பக்ஷிகள் தம்மைவிட்டுப் பிரிந்திருக்கிற பேடுகளைத் தேடிக்கொண்டுபோய் அவ்வக்கினியிலே அகப்பட்டுத் தீய்ந்துபோய்விட்டன. பொறுமையற்ற கருங்கடல்முழுமையும் அக்கினிவிசாலித்து வேகத்தொடங்கினபோது, அதனுடைய கொடுமையைச் சொல்லவேண்டுமோ? நெருங்கிய பெரும் புகைப்படலம் தம்மைச் சூழ்ந்துகொண்டபடியாலே தேவர்களும் கண்சிமிட்டி வியர்வுயடைந்தனர். பூக்களைத் தேடிப்போகாமல் ஒளியைக்கண்டு அவ்விடத்தைச் சேர்ந்து பாவங்களெல்லாம் ஒன்ருய்க்கூடினதுபோன்றிருந்த வண்டுகளெல்லாம் அந்நெருப்பைக் கடந்துபோக வேறு வழியில்லாமையால் வருணராஜனுடைய விருத்தியடையாத புகழைப்போல மடிந்துபோய்விட்டன. நெருங்கிக் கூடிக்கொண்டிருந்த கடற்பறவையெல்லாம் ஆகாயத்திலே பறக்கும்படி தொடங்கி, அவ்வாகாய வெளியிலே போகிறதற்குச் சக்தியில்லாமல் நெருப்புப்பற்றி எரியும்படியான தேகத்தையுடையவைகளாய்ப் பூமியிலே உதிர்ந்துபோய்விட்டன. இறந்துபோன பக்ஷிகளெல்லாம்போக, சாகாதபக்ஷிகள் அக்கினிப்படலம் சூழ்ந்துக்கொண்டபடியால் தாங்கள் முட்டையிட்டுவைத்தவிடம் இன்னதெனத் தெரியாமல் வெந்தமுத்துகளைத் தம்முடைய முட்டைகளென்பதாய் எடுத்துக்கொண்டு போயின. அக்கடலிலுள்ள குரங்குகள் ஓ பாவிகளே! சாக்ஷாத் எம்பெருமானை மனிதனென்று நிந்தித்து, அவரிடத்தில் சேராமல் இங்கேயேயிருந்துவிட்டோம். ஆனபடியாலே அவர் நம்மைத் தமது திருவுளத்தில் நினையாமற்போனுரெனத் தம்முடைய பற்களை இளித்துக்கொண்டு ஆகாயத்திலே தாவிக் குதித்து ஓடிப்போய்விட்டன. அதிக தீமையையுடையவராய்க் கடலில் மறைந்துகொண்டிருந்த அசுரரெல்லாம் செத்து பெரிய மலைகளைப்போல சமுத்திரத்தில் மிதந்தார்கள். பொற்குடமானது இடையில் விரிந்ததையொத்த வரிகளையுடைய பொன்னிறமான மான்களெல்லாம் வெந்து விழுந்துவிட்டன. ஆகாயகங்கையும் வற்றி வரண்டுவிட்டது. வானநக்ஷத்திரங்களும் வெந்துபோய்விட்டன. சிவந்த நிறத்தையுடையவைகளாகவும் அக்கினியை வளர்க்கின்றவைகளாகவும் நீதியைப்போல நடக்கின்றவைகளாகவும் தபசைப்போலவிர்த்தியானவைகளாகவும் கோபம் பல உருவுகொண்டிருக்கின்றது போன்றவைகளாகவும் இருக்கின்ற இராமபாணங்கள் அகஸ்தியமகாமுனியைப்போல சமுத்திரத்தை வற்றக் குடித்துவிட்டன. சமுத்திரத்தை மூடிக்கொண்ட தீயினுல் பூலோகமானது மரங்களோடு வெந்து இலங்காபட்டணத்தின் மதிலும் வேகத் தலைப்பட்டபோது அதிலேயிருக்கப்பட்ட இராக்ஷதரெல்லாம்முன் சுட்டுவிட்டுப்போன தூதன் மறுபடியும் வந்தானேவென்று பயமடைந்தனர். சூரியனைப்போல பிரகாசித்துக்கொண்டிருக்கிற மேருமலையானது பொற்காருகளாகயுருகியது. இரத்தந் தோய்ந்ததுபோன்ற முருக்கம்பூவுக்குச் சமானமாக காடுகள் நெருப்பாய் வெந்தன. பவளக்காடுகளெல்லாம் கரிக்குப்பலுக்குச் சமானமாய்விட்டன. பெரியமலைக்குச் சமானமாய்ப் பருத்துயிருக்கும்படியான மச்சங்களெல்லாம் உயிர்தப்பி ஓரிடத்திலும் ஒதுங்குகிறதற்கு இடமில்லாதவையாய் இரத்தவெள்ளத்துக்குள்ளே நுழைகின்றன. அவற்றிலே சிலமச்சங்கள் இந்த நீரைக்காட்டிலும் நெருப்பே குளிர்ச்சியாய் இருக்கிறதென்று கரையிலேகுதித்து உடல் துடிக்கின்றன.

இந்தப்பிரகாரமாய் இராமபாணமானது சுருண்டு விழுகின்ற திரையையுடைய கடல்நீரையெல்லாம் பானம்பண்ணிப்போட்டு, இனிப் பானம் பண்ணுவதற்கு ஜலமில்லாமல் பூலோகத்திலேயிருக்கின்ற அந்தகாரத்தைக்கெடுத்து நரகலோகத்திலேயிருக்கின்ற இருளும் அழியும்படியாகச் சூரியனைப்போல சென்றன. உலகத்தை சூழ்ந்திருக்கும்படியான சப்தசாகரங்களையும் கொதிக்கச்செய்த இராமபாணங்கள் வேகமாய்ப்போய் மேலுங்கீழுமாய்ப் பாய்ந்து பிரமாண்டத்தையும் உருவி அப்புறத்திலுள்ள பெரும்புறக்கடலையும் தொடர்ந்துபோயின. ஆகாயங்கிழிந்து அவ்

விடத்தில் நின்று முதிருகிற சிவப்பாகிய மணிகள் சுவர்க்கலோகமுதல் கிழிந்து இரத்தவெள்ளம் ஒழுகுகிறதுபோலயிருந்தன. கடலின் ஜலமெல்லாம்வற்றி அதனுடைய குடல்கள் கிழிபட்டதுபோல கடற்பாம்பானவை நெளியப்பெற்றன. சமுத்திரஜலம்வற்றி இரத்தினம் வைத்திருக்கின்ற பெட்டியைப்போல இருந்தது. சமுத்திரத்தின் அலைகளில் நுழையப்பெற்று இராமபாணங்கள் வைத்திருக்கின்ற சங்கங்கள் சட்டுவம்போல பிரகாசித்தன. அநேகமாயிரம்பாணங்கள் தைத்தலினாலே மலைகளும் அநேகமாயிரம் துண்டுகளாய்விட்டன. வித்வான்கள் கோபித்தால் வீரமனைத்தும் தேய்ந்து நசிந்துப்போகிறவர்களைப் போல அச்சமுத்திரத்திலே யிருக்கின்ற முத்தானவை இராமபாணத்தில் வேகப்பெற்று ஒன்று நூறாய்ச் சிதறிப்போயின. இப்படி ஸ்ரீராமபாணத்தினாலே துண்டிக்கப்பெற்று மாண்ட ஜீவகோடிகளெல்லாம் பரமபதமடைந்துவிட்டன. அச்சமுத்திரத்தில் நெருங்கிவளர்ந்த மூங்கிற்காடுகளில் பற்றிய அக்கினி புறப்பட்டுச் சமுத்திர நீர் முழுதிலும் பரவியோடியது. கொடிய அக்கினியானது பூமியைச்சுற்றிலும் வளைத்துக்கொண்டது எப்படியிருந்ததென்றால், பூமிதேவி தரித்துக்கொண்டிருந்த நீல வஸ்திரத்தை நீக்கிவிட்டுச் சிகப்பு வஸ்திரத்தை தரித்துக்கொண்டதுபோன்றிருந்தது. படித்தவரும் படித்தவரும் எப்படி மனஞ்சகித்துக் கூடியிருக்க மாட்டார்களோ அதுபோல ஸ்ரீராமபாணத்திலுண்டான அக்கினி இச்சமுத்திரஜலத்தைப் பானம்பண்ணுவதைக்கண்டு சகிக்கமாட்டாமல் வடவாமுகாக்கினியானது உயிர் பதைத்து வேறொருசுடலைநாடி ஓடத்தொடங்கினது. இச்சமுத்திரத்தினிடத்திலே பற்றிய நெருப்பானது ஜீவகோடிகளெல்லாம் வாழும்படியான உலகத்தையெல்லாம் மூடிக்கொண்டு, ஆகாயம்வரையில் பரவி, ஊழிக்காலத்தில் யுலகமெல்லாவற்றையும் அழுத்தி அழிக்கும்படியாய்ப் பொங்கிவருகிற பெரும்புறக் கடலை ஒத்திருந்தது. அக்கினியானது ஆகாயத்தை யளாவிச்சுட, அதைச்சகிக்கமாட்டாமல் தேவர்கள் சுவர்க்கலோகத்தைவிட்டுப் பிரமலோகத்திற்குப்போய் அவ்விடத்திலேதங்குவாரேயானால், பூலோகத்திலிருக்கின்ற மற்றவருடைய செய்கையை இன்னபடியென்று சொல்லவேண்டுமோ? ஸ்ரீராமரானவர் இனிமேற்பட வருத்தமுண்டாகப்போகிறதை ஆலோசிப்பதென்ன? இப்பொழுதே வருணனையோடி வருவதாய்ச் செய்கிறேனெனச்சொல்லி மிகவும் உக்ரமான கோபத்தோடே பிரம்மாஸ்திரமெடுத்து வில்லிலேபூட்டினார். அப்படிபூட்டினவுடனே தேவர்களெல்லாம் நடுங்கிவிட்டனர். இனியார் பிழைக்கப்போகிறாரென்கிற பயத்தாலே மேகமெல்லாம் கதறின. வருணபகவானுடைய நாவிலே தண்ணீரென்பதில்லாமல் அபயக்கூக்குரலிட்டான். எல்லாலோகத்திலேயும் அடைபட்டிருந்த ஆறுகளெல்லாம் தத்தளித்துப்போய்விட்டன. பிரம்மாண்டத்துக்கு அப்புறத்திலே இருக்கின்ற பெரும்புறக்கடலும் கொதிக்குமானால் ஏழுசமுத்திரங்களினுடைய செய்கையைச் சொல்லவேண்டுமோ? கயிலாசபதியினுடைய ஜடாபாரத்தில் ஆதிகாலந்தொட்டு வாழ்ந்துகொண் டிருக்கின்ற ஜலஸ்வரூபமாகிய கங்காதேவியும் பதைபதைத்துப் போனாள். பிரம்மதேவனுடைய கமண்டலத்திலிரானின்ற தீர்த்தமும் கொளகொளவெனக்கொதித்து தமக்குத்தயவுவந்தகாலத்தில் லோகங்களையெல்லாம் சிருஷ்டித்துக் கோபம்வந்தகாலத்தில் மறுபடியுஞ் சம்மரிக்கும்படியானசர்வேஸ்வரனை இந்த வருணன் அறியாமற்போனானே. அவருடைய் கோபத்தைக்கண்ட பின்பாவது வந்து அவரைக்காணப் புத்தியில்லாமல் தாமதப்பட்டானே. இவனைப் பார்க்கிலும் ராக்ஷதர்களோ பகையாளிகள் என்று தேவர்களெல்லாம் நடுங்கினார்கள். தானே தனியாயிருந்து தன்னிடத்திலேயே எல்லா உலகங்களையும் பெற்றவனை சர்வேஸ்வரனை் கோபிக்கப்பெற்றால் இவன் இனி பிழைக்கிறதற்கு இடமெங்கே? குற்றமில்லாதவர்கள் பேரிலும் இப்படிப்பட்ட தப்பிதம் வருகிறதற்குச்சம்பவித்ததேயென்று சமஸ்தாத்மாக்களும் வருணனைத் தூஷித்தன. அப்போது வருணன் லோகமெல்லாம் அக்கினி ஜுவாலையோடு மிகுந்த புகை கிளம்பினதினாலேவழிதெரிந்துபோகச் சக்தியில்லாதவனாய்க் கண்களில்தாரை தாரையாய்த் தண்ணீர்விட்டுப் பயபக்தியு

டனே உருகி, மனநடுங்கி; தொழுதகையுடனும் ஏழையைப்போலக் கெஞ்சிப் புகழ்கின்ற சொல்லையுடையவனாகியும் எழுந்து, சுவாமி! தேவரீர் அடியேனை நினைத்ததன்மையைக் கடலுக் கக்கரையில் நின்ற நாய் போன்ற அடியேன் அறியவில்லையென்று சொல்லிக்கொண்டு சுவாமிக்குச் சந்தேகம் நீங்கும்படியாக அக்கினிபற்றியெரிக்கின்ற சமுத்திரத்தின் மத்தியிலே தட்டித்தடுமாறிக்கொண்டு நடந்து, வாய்குளறி, வேகின்ற தலையையுடையவனாயும், பயந்த நெஞ்சை யுடையவனாகியும் கண்களிற்புகை மண்டிக்கொள்ளக் குருடனைப்போல வழிதடவிக்கொண்டு, மிகுந்த வருத்தத்துடனே துக்கப்பட்டுவந்து நின்று, குற்றமற்றலோகத்திற்கெல்லாம் ரக்ஷகராகிய தேவரீரே கோபித்தால் உம்முடைய இரண்டு திருவடிகளே யல்லாமல் அடியேனுக்கு வேறுகதி யொன்றுண்டோ? இந்த லோகமெல்லாம் உமக்கு ஒரு லக்ஷியமோ? உம்மையல்லாமல் எனக்கு வேறு ரக்ஷகருண்டோ? உமக்கே அபயமபயமென்று அடிக்கடி சொல்லிக்கொண்டு இவ்வாறு துதிப்பதாயினன். ஓ ஸ்ரீராமமூர்த்தி! நீரே இந்த சமுத்திரங்கள். நீரேஅக்கினி. மற்ற பூதங்களும் நீரே. ஊழிக்காலமும் நீரே. உலகங்களும்நீரே. அந்த உலகத்தில் வசிக்கின்ற ஜீவகோடிகளும் நீரே. இப்படிப்பட்ட உம்மை யான் மறப்பேனே? அடியேன் மிகவும் கொடிய அக்கினிசூழ்ந் தெரித்ததினல் வருத்தப்பட்டுப் போனேன். இரக்ஷித்தருள வேண்டும். லோகங்களை யுண்டாக்குவீர். உண்டாக்கிரக்ஷித்தவைகளைக் கடைசியில் சுட்டெரித்து விடுவீர். அவைகளையெல்லாம் உண்டு விடுவீர். உம்மாலாகாத காரியமுண்டோ? மிகுந்த கூர்மையுள்ள ஒரு பாணத்தினலே இந்த மூன்றுலோகங்களையும் சுட்டு நாசமாக்கிப் போடுவீர். அடியேனுக்கு இவ்வளவு செய்யவேண்டுமோ? ஓ மிகுந்த பிரசண்டகிரணங்களாகிய வாளாயுதத்தினல் எங்கு மூடிய இருட்காட்டை வெட்டிச் சாய்க்கும்படியான சூரியமண்டலத்தில் வசிக்கின்ற ஜோதிஸ்வரூபரே! ஓ வேதங்களின் ஆதாரமே! ஓ நான்குமுகங்களையுடைய பிரமதேவனாகிச் சராசரங்களைச் சிருஷ்டித்தபோது தாமரைப்புஷ்பத்தில் எழுந்தருளியிருந்த அனாதிவஸ்துவே! ஒருவருக்கும் தெரியாமல் லோகங்களையெல்லாம் மறைத்துவைத்திருக்கிற கிருபையோடுங்கூடின வேதப்பிரமாண வேதப்பிரதிபாத வஸ்துவான ஆதிகாரண வஸ்துவே! இரக்ஷித்தருள வேண்டுமென்று அழைத்த கஜேந்திராழ்வானுடைய துக்கம் நீங்கும்படியாகக் கருடபகவான்மீது எழுந்தருளிவந்து சேவைசாதித்த ஓ புராதனரே! உமக்குமங்களமுண்டாவதாக. எனக்குத்தாயும் நீரே. தந்தையும் நீரே. வேண்டியமற்ற எல்லாப் பொருளும் நீரே. ஆதியும் நீரே. அந்தமும் நீரே. மோக்ஷமும் நீரே. நரகமும் நீரே. சர்வேஸ்வரரான நீரே உம்மை அறியாதிருந்தால் அடியேன் எப்படியறியப்போகிறேன்? அடியேனை இகழக்கூடுமோ? என்று துதித்தனன். இவ்வாறு துதித்த வருணனானவன் இருளைத்துறத்தும்படியான திவ்விய தேஜசுள்ள ஆதிசேஷனுடைய ஆயிரம் சிரோரத்தினங்களையும் பழிக்கும்படியான ஆயிரம் ரத்தினங்களாகிய மணிமாலையை சுவாமியின் திருவடிகளில் காணிக்கையாகவைத்துச் சிறியவர்கள் தப்பிதஞ்செய்வார்களேயானல் பெரியோர்கள் அதைப் பொறுப்பது கடமையாகும். ஓ சகஸ்திரநாமங்களையுடைய சுவாமி! உமக்கு அடைக்கலம் என்று திருவடிகளில் விழுந்தான். இப்படி ஒருமலையானது அக்கினிபற்றி யெரிகிறதுபோல யெரிகிற உருவத்துடனே சமுத்திரராஜன் அடியேன் உமக்கு அபயமென்று சொன்ன மாத்திரத்தில் மிகுந்த நெருப்பிலே காய்ந்து பொங்கிவழியும் பாலானதுகொஞ்சந் தண்ணீரைத் தெளித்தமாத்திரத்தில் ஆறி அடங்குவதுபோல் ஸ்ரீராமமூர்த்தி கோபமாறி, வருணனைப் பார்த்து கோபமாறினோம், பயப்படாதே. உனக்கு அபயந்தந்தருளினோம். உன்னை வேண்டிப் பிரபத்தி பண்ணவும்வாராமல் கோபித்தபிறகு வந்ததற்குக் காரணமென்ன? அதனை விவரமாகச் சொல்லென்று நியமித்தனர். அம்மாத்திரத்தில், வருணன்சுவாமியைத்தொழுது சொல்லத்தொடங்கினன். சுவாமி! பூமிதேவியைப்பார்க்கிலும் மிகுந்த பொறுமையையுடைய உமது பத்தினியாகிய சீதாபிராட்டியாருக்குச் சம்பவித்த துன்பத்தை இன்றைக்குத் தேவரீருடைய வார்த்தையி

ஞல்தா னறிந்தேன். ஏழுசமுத்திரங்களுக் கப்புறத்தில் மீன்கள் சண்டை செய்து கொண்டிருந்ததை விலக்கப்போ யிருந் தேன். ஆகையினாலே தேவரீருடைய நிய மனத்தை அடியேன் அறியாமலிருந்து விட்டேன். இதுதான் உள்ள சமாச்சார மென்று கூறினன். இப்படிகூறிய வருண னுடைய வார்த்தையைக்கேட்டு, ஸ்ரீராமர் இரக்கமுற்று, இந்தக்காரியம் நிற்கட்டும். இந்தப்பாணம் சும்மா வியர்த்தமாய்ப்போ காது. இதைப் பிரயோகிக்கும்படியான லக்கு இன்னதென்று சொல்லக்கடவாய் என்று நியமிக்கவும், வருணன் மிகுந்த சந் தோஷத்துடன் மலையைக்காட்டிலும் உயர் ந்த திருத்தோள்களையுடைய சக்கரவர்த் தித் திருக்குமாரரே! அடியேனும் இந்த லோகங்களும்பிழைத்தோம். மிருகாந்தார மென்கிற தீவிலே நூறுகோடிபேர்களுக் கும் அதிகமாக அசுரர்களிருக்கின்றார்கள். அவர்கள் இந்த லோகத்து ஜீவகோடிக ளில் அநேகர்களைத் தின்றுவிட்டார்கள். அவர்கள் எனக்கு மகாபகையாளிகள். இந் தப்பாணத்தை அவர்கள்மேல் பிரயோகித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். வேதசாஸ்திரங்களை ஆராய்ந்தறிந்த மகா ரிஷிகளுடைய அறிவுக்கு மெட்டப்படா மல் எழுந்தருளிய ஸ்ரீராமமூர்த்தியானவர் நூறுகோடி பேர்களான அந்தத் துஷ்ட அசுரர்களை அவர்களுடைய வம்சசகிதமா கச் சீக்கிரமாய்ப் போய்ச் சம்மரித்துவிடும் படியாக ஆக்கியாபித்து அந்தப் பாணத் தைவிட்டார். ஒருக்ஷணநேரத்திற்குள்ளாக அவர்களைச் சுட்டெரித்துப்போட்டு அந் தப் பாணதிதேவதையானது மறுபடியுஞ் சுவாமியின் அம்பறாத்தூணியில் வந்து நுழைந்துகொண்டன. அப்போது ஸ்ரீரா மர் வருணனைநோக்கி, சத்கர்மங்களைச் செ ய்து தர்மந் தப்பாதவர்களுக்கு எப்போ தும் நன்மையேசேருமல்லது கெடுதியுண் டாகமாட்டாது. அழித்துவிடும்படியாக உன்மேற் பிறந்த கோபமானது துஷ்ட செய்கையை யுடையவர்களான அசுரர்க ளுக்கே தீமையைச்செய்தது. பாவத்தைச் செய்துகொண் டிருந்தவர்களான அந்த அசுரர்களைத்தேடி அநேககாததூரமோடி எரிந்து புகை மண்டும்படியாகவும் தீபத் தைப்போன்ற ஞான முடையவர்களான வேதமூர்த்திகளா லிடப்பட்ட சாபத்துக் குச் சமானமாகவும் எம்முடைய பாணமா னது சுட்டுவிட்டபடியினாலே தர்மத்தைக் காட்டிலும் பலமுள்ள தொன்றுண்டோ? ஓ வருணதேவனே! நீ யெம்மிடத்தில் அபயமென்று புகுந்தாய். அப்படி உன க்கு அபயங்கொடாவிட்டால் பழியுண்டா மென்று நாம் கோபமாறினோம். பாதகர்க ளாகிய ராவணாதி ராக்ஷதர்களுடைய தலை களை அறுக்கும்படியாக இந்தச் சமுத்திரத் தைத் தாண்டிப்போகிறதற்கு எங்களுக்கு வழிகாட்டவேண்டும் என்றுசுவாமிகேட்க, வருணன் சொல்லுகிறான். ஓ தபோசிரே ஷ்டரான சுவாமி! இந்தச்சமுத்திரத்தினு டைய ஆழமும் அகலமும் அறிகிறதற்கு அடியேனாலும் முடியாது. இதன் ஜலத் தை இறைத்துக்கட்டிவைக்கிறதற்கு அடுக் காக இருக்கின்ற இந்த ஏழுலோகங்களும் போதாது. மேலும் தேவரீருடைய சேனை கள் இதை இறைத்து வற்றடிக்கிறதற்கு அனேககாலஞ் செல்வதுமல்லாமல் மனத் தளர்வையு மடைந்துவிடும். எல்லா ஜீவ கோடிகளும் கல்லைப்போல வலியுடைய வைகளாய் ஒன்றின்மேலொன்றாய் நின்றா லும், இதில் மூழ்கி மாய்ந்துபோய்விடும். ஆகையால் என்மேல்வைத்த பொருளொ ன்றும் நழுகி விழவொட்டாமல் எத்தனை காலமானாலுஞ் சுமந்துகொண் டிருக்கின் றேன். தேவரீர் என் தலையின்மீது ஒரு சேதுவைக்கட்டிச் சந்தோஷமாக எழுந் தருளும் என்று விண்ணப்பம் பண்ணிக் கொண்டான். நல்லது அப்படியே செய் கிறோம் என்றுசொல்லி, வானரங்களைப் பார்த்து நம்மிடத்தில் வருணன் கொண் டிருக்கிற தயவினாலே இன்றைக்கே தீரும் படியாக எல்லாரும் மலைகளைக் கொண்டு வந்து அடுக்கிச் சேதுகட்டுங்கள் என்று நியமித்துவிட்டு, சுவாமி தம்முடைய இருப்பிடம்போய்ச் சேர்ந்தார். வருணதே வனும் சுவாமியினிடத்தில் சந்தோஷமாய் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான்.

வருணன் அடைக்கலப்படலம்

முற்றிற்று.

---

## சேதுபந்தனப்படலம்.

பின்பு சுக்கிரீவமகாராஜன் அநேக வானர மந்திரிமார்களுடனே விபீஷணாழ்வாரும் சேர்ந்து ஆலோசித்து, இனி நடக்கவேண்டிய வேலையை முடிக்கும்படித் தீர்மானிக்கிறதற்கு வானரதச்சனாகிய நளனை வரவழைத்தான். அப்படியே நளன் வந்து சுக்கிரீவமகாராஜனுக்குத் தெண்டனிட்டு, ஓமகாராஜரே! அடியேனையழைப்பித்த காரியம் என்னவென்று கேட்டான். அதற்குச் சுக்கிரீவன் அவனை நோக்கி, நாமெல்லாம் இந்தச் சமுத்திரத்தைப் பந்தனை செய்யவேண்டுமென்ன, அப்படியே நல்லது சுக்ரீவமகாராஜரே! கடலையடைத்துச் சேதுகட்ட வேண்டுமேயானால் நம்முடைய சைனியங்களுக்கு மலைகளைக் கொண்டுவரும்படி நியமியும். அடியேன் மேருவையும் அணுவையும் வித்தியாசம் தோற்றவொட்டாமல் படியச்செய்து கட்டுகிறேன் என்று சொன்னான். அப்போது ஜாம்பவர் வானரசேனையைப் பார்த்து; இளையபெருமாளும் சுவாமியும் விபீஷணாழ்வாரும் சுக்கிரீவமகாராஜனுமல்லாத மற்றவர்களெல்லாம் லங்கையைச் சூழ்ந்து இருக்கின்ற சமுத்திரத்தைப் பந்தனஞ் செய்கிறதற்குப் புறப்படுங்களென்றுசொன்னார். அந்தப்பிரகாரமே வானரசேனைகள் வெகுதூரம்போய் அநேக மலைகளைப் பெயர்த்துக்கொண்டு, இரண்டு கைகளிலும் தோள்களின்மேலும் தலையிலுஞ் சுமந்துக் கொண்டு, ஒரு சமுத்திரத்தை யடைக்கிறதற்கு மற்றச் சமுத்திரங்கள் எல்லாஞ் சேர்ந்துவந்ததுபோலப் புறப்பட்டு வந்தன. சில வானரவீரர்கள் மலைகளைப் பெயர்த்துக்கொண் டிருந்தன. அப்படிப்பெயர்க்கப்பெயர்க்க அவைகளைச் சில வானரங்கள் இழுத்துக்கொண்டு வந்தன. சிலவானரங்கள் தலைமேல் சுமந்து கொண்டு வந்தன. சிலவானரங்கள் அந்த மலைகளால் கடலைத்தூர்த்தன. சில வானரங்கள் அப்படி கடலைத்தூர்த்த சந்தோஷத்தினாலே நின்று ஆர்ப்பரித்தன. சில வானரங்கள் கூத்தாடின. சில வானரங்கள் பாட்டுகளைப்பாடின. சில வானரங்கள் ஒரு மலையைக் காலால் உருட்டிக்கொண்டும், இரண்டு மலைகளை இரண்டு தோளின்மேல் தூக்கிக்கொண்டும், ஆகாயத்தையளாவிச் சூல்கொண்ட மேகங்களால் சூழப்பட்ட ஒரு பெரியமலையைத் தலையிற் சுமந்துகொண்டும், ஒரு மலையை வாலில்கட்டி யிழுத்துக்கொண்டும் வந்தன.

இந்தப்பிரகாரமாகக் கைக்குக்கை கொண்டுவந்து கொடுக்குந்தோறும் கொடுங்கள்கொடுங்களென்று நளனானவன் வேகப்படுத்தினபோது மூன்றுகோடி வானரங்கள் சேர்ந்து தூக்கிக்கொண்டு வந்தாலும், அப்படிப்பட்ட பெரியமலையையும் நளனென்கிற வானரத்தச்சன் ஒரு கையை நீட்டி வாங்கி வைத்தடுக்கித் தன்சாமர்த்தியத்தைக்காட்டி, வருணதேவனை நடுங்கும்படியாகச் செய்தான். வெற்றியையுடைய வானரசேனைத் தலைவர்கள் சந்திரமண்டலம்வரையிலும்அளாவியிருக்கின்ற பெரிய மலைகளைத் தங்கள் கால்களால் உதைத்து அசைக்கும்போது, அந்த மலையின்பேரில் இருக்கின்ற மேகங்களெல்லாங் கூச்சலிட்டுக்கொண்டு ஓடின. யக்ஷர்களும், யக்ஷஸ்திரீகளும் ஓட்டம்பிடித்தார்கள். வண்டுகள் சப்தித்துக்கொண்டிருக்கின்ற பெரிய மலைகளை அலைகளையுடைய கருங்கடலின் கரையில் கொண்டுவந்து அணைகட்டுவதற்குக்குவித்துவைத்திருக்க, அதுகளின்மேல் மோதுகின்ற அலைநீர்த்திவலைகள் சுவர்க்கலோகத்தைத் தாண்டிப்போய் மறுபடியுந் திரும்பிப் பூமியில் விழுகிறபடியால் தேவலோகத்திலும் மழை பெய்ததாயிற்று. இப்படிமலைகளை அடியோடேபிடுங்கி வானரத் தலைவர்கள் எறிகிறபோது, அந்த மலைகள் ஒன்றின்பேரிலொன்றுபட்டுச் சமுத்திரஜலத்தில் நெருப்புபறக்க, அந்த நெருப்பை வருணன் பார்த்து, இது ராமபாணநெருப்போவென்றுபயந்தான். பசுக்கண்ணனென்னும் பேருடைய ஒருவானரவீரன் ஓர் பெரிய மலையைக் கையில் தூக்கிக்கொண்டு வந்து சமுத்திரத்தில் எறிந்தபோது, அந்தக் கடலிலுள்ள முத்துக்கள் நீர்த்துளிகளோடுங்கூடச் சிதறி, ஆகாயத்திற்போய் வானநக்ஷத்திரங்களுக்குச் சமானமாகப் பிரகாசித்தன. சிவந்த மலைகளைப் பிடுங்கி எறிந்தபொழுது ஆகாசத்தினிடமாக முன் சிதறிப்போயிருந்த முத்துக்கள் வந்து விழுந்து பதிந்ததினால், ஆகாயத்

தில் படர்ந்திருக்கின்ற மேகங்கள் மேற்கட்டும் வஸ்திரத்துக்கொப்பாகச் சூரியனுக்காகப் போடப்பட்டமுத்துப்பந்தலைப் போலு மிருந்தன. மேகங்களால் சூழப்பட்ட மலைகளுடன் அலைசுருட்டுகின்ற கடலில் வந்துவிழுந்த பெரிய யானைகளின் கால்களை சுறுமீன்கள் வந்து கௌவின மாத்திரத்தில் பயந்து, பூர்வத்திலே தடாகத்தினிடத்து முதலையினால் கௌவப்பட்டுப் பயந்து ஆதியந்தமில்லாத பரம்பொருளே என்று துதிக்கையைத் தூக்கிக்கொண்டு கூப்பிட்ட கஜேந்திரனுக்கொப்பாயிருந்தன. புலால் நாறிக்கொண்டிருந்த சமுத்திர ஜலமானது கருக்கலுண்டாகும்படி ஒழுகுகின்ற தேனும், புஷ்பங்களும், சந்தனக்கட்டைகளும், அகிற்கட்டைகளும், இன்னம் அநேக வாசனைத்திரவியங்களும் ஆகாயமுழுமையுங் கமழுகின்ற தேவகந்தம்போல நெருங்கிப் பரிமளிக்கின்றபடியினாலே வாசமூட்டிக் குடத்தில் நிறைத்து வைத்திருக்கின்ற திருமஞ்சன தீர்த்தம் போல வாசங்கமழ்ந்தது. மிகுந்த கொடையாளர்கள் குடும்பமெல்லாம் சிறுமைப்பட்டாலும் தாங்கள் அக்கொடையினின்று மாறுர்களன்றே? அதுபோல மாமரங்கள் முதலிய கனி விருக்ஷங்களோடுங்கூடிய பெரிய மலைகளெல்லாம் தங்களிடத்திலுள்ள கனியும் - காயும் - தேனும் - மாமிசமும் - திவ்விய பரிமள புஷ்பங்கள் முதலான மற்றெல்லாவற்றையும் சமுத்திரத்திலுள்ள மீன்கள் பெற்றுக்கொள்ளும்படியாகக் கொடுத்துச் சிறப்பையடைந்தன. மிகுந்த சேற்றுக்குள் அமிழ்ந்து போகின்ற மலைகள் தமக்குள்ள மிகுந்த செல்வங்களைக் கொடாமல் ஒளித்துக்கொள்ளுகின்ற லோபிகளைப்போலவும் அவைகளிலுள்ள மதுரமாகிய தேனிறைந்த புஷ்பங்களையும், காய்களையும், கனிகளையும், இன்னுமுள்ள மற்றப் பொருள்களையும் உண்ணப்பெறுத வெண்மையான மீன்களெல்லாம் கொடைபெறுத யாகசாலைப் போலவுமிருந்தன. மேலும்,காற்றுடியைப் போல மிகுந்தவேகமாய்த் திரிந்துகொண்டிருக்கின்ற வானரங்கள் பெருமலைகளைச் சடுதியிற் கடலிற் போடும்படியாகப் பெயர்த்தபோதும் அப்பெரிய மலையிலுள்ள மலைப்பாம்புகள் யானையை விழுங்கிப்போட்டு நகராமட்டாமல், அறிவில்லாதவர்கள் துன்பம்வந்து சம்பவித்தபோதும் உணர்வடையாதிருப்பதுபோலச் சோர்ந்து உறங்கிக் கிடந்தன. ஆபரணத்துக்கொப்பாய் மின்னுகின்ற பற்களை யுடையவர்களாய்ச் சமுத்திரத்திலிருக்கின்றமுதலைகளும், துதிக்கையுடையவைகளாய் மலையிலிருக்கின்ற மதயானைகளும் கர்ஜ்ஜித்துக்கொண்டு, ஒன்றுடனென்று எதிர்த்துச் சுற்றிப் பற்றி இடியுடன்கலந்த ஊழிக்காலத்தின் மேகத்திற்கொப்பாக மிகுந்த யுத்தஞ்செய்தன. அன்றியும், அற்பபுண்ணியஞ் செய்தவர்களிறந்து சுவர்க்கமடைந்து அப்புண்ணியத்திற்கீடாக அந்தச் சுவர்க்கத்தலத்தைக் கண்ணால்மாத்திரங்கண்டு மீள்வதுபோல, சில வானரவீரர்கள் எறிகின்ற மலைகள் ஒன்றின்மேலொன்று பட்டு எழும்பித் தேவலோகத்திற் சென்று, அங்கே தங்காமல் கீழேவிழுந்தன. வானரவீரர்களால் தங்கள் நிலைமைவிட்டால் பலவான்களும், அபலவான்களாவார்களென்று அறிவாளிகள் சொல்லுவார்கள் அல்லவோ? அதுபோல எறியப்பட்ட மலைகளில் முன்னே வசித்திருந்த வல்லமையுள்ளசிங்கங்களும், புலிகளும், யானைகளும் கூர்மையான பற்களையுடைய சுறு மச்சங்களால் கொல்லப்பட்டு நீரினிடத்தில் மாண்டன. கொடையாளிகள் தங்கள் புத்திபூர்வமாக உதவாவிட்டாலும், அவர்கள் ஐஸ்வரியங்கள் யாவர்களுக்கும் உபகாரமாவதுபோல, பெரியமலைகளின் சிகரத்திலிருந்து பெருகியொழுகுகின்ற பூந்தேன்களை அம்மலைகளே கொடாவிட்டாலும் கடல்மீன்கள் நிறையக்குடித்து வானரங்களைப்போலச் சந்தோஷித்துத் துள்ளிக்குதித்தன. மிகுந்த நெருப்புண்டாக ஒன்றேடொன்று தாக்கும்படி வானரங்கள் அதிகமாக மலைகளைக் கொண்டுவந்து இறக்கின வேகத்தினாலே, தேனைச்சொரிகிறதுபோலக் குளிர்ந்த நீரைச் சொரிகின்ற அம்மலைகளில் விளைந்த மூங்கிலிற்பிறந்த முத்துக்களுக்கு வாய்விரிந்த சிப்பியினிடத்தில்பிறந்த முத்துக்களும், வலம்புரி முத்துக்களும், கலந்து விழுந்து கொண்டாடின. அடைக்கலமென்று வந்தவர்களை வெண்ணெய்நல்லூர் சடையப்பமுதலியார் ஆதரித்துந் தாங்குவதுபோல, வானர சேனாவீரர்கள்

பெரியமலைகளை வருத்தப்பட்டுப் பேர்த்தெடுத்துக் கொண்டுவந்தெறிந்தபோதிலும் வானரத்தச்சனாகிய நளன் தன் வித்தியாசாமர்த்தியத்தால் அவைகளை ஒரு அநாயாசமாக ஏந்தி வாங்கினான். ஆகாயத்தையளாவிக்கொண்டு இருக்கின்ற மலைகளை வானரவீரர்கள் வேரோடு பெயர்த்தெடுத்துக் கொண்டுவந்து சமுத்திரத்தில் கும்பல்கும்பலாய்க்குவித்துவிட்டபடியினாலே, கடல்நீரெல்லாம் பூமியில் தேங்கி பூமிகடலாகவும் கடல்பூமியாகவும் மாறிவிட்டன. சாக்ஷாத் தாரகமந்திரவாச்சியனாகிய ஸ்ரீராமபிரான் விரும்பினால் எது எப்படியாக மாட்டாது? கொடுமையான சிங்கங்களும், வேங்கைப் புலிகளும், யாளிகளும் சூழ்ந்து கொண்டிருக்கின்ற மலைகளும், விருக்ஷங்கள் முதலானவைகளும் நெருங்கியிருக்கின்றபடியினாலே, நெய்தனிலம் குறிஞ்சிநிலமாய்விட்டது. மலையிலுள்ள மிருகங்கள் யாம் உண்ணக்கிடையாதவைகள் இவையென்று சொல்லுகிறதற்கு அவைகளுக்கு வேண்டிய ஆகாரங்களில் எவையும் அம்மலையிலுண்டு. அப்படியிருந்தும் அம்மிருகங்கள் சமுத்திரத்தில் வீழ்ந்தபோது, தாம் உண்ணத்தகாத மீன்களாலே உண்ணப்படாமல் இருந்த மிருகங்களொன்றுமில்லை. கொல்லாமல் வளர்க்கின்றவர்களிடத்தில் மிகுந்த தயவு உண்டாயிருக்கிறபடியினாலே அப்படிப்பட்டவர்களைவிட்டு ஒருயிரும் விலகாதன்றோ? அதுபோலஇம்மலை எங்களுக்கு ஆதாரமாயிருக்கின்றது. ஆகையால் இதைவிடோமென்று தொடர்ந்ததுபோல எல்லாமிருகங்களும்அம்மலையுடனே கடலில் வந்து சேர்ந்துவிட்டன. இதுபோலவே உலகப்பற்றில்லாத ரிஷிகள் எல்லாரும், தினந்தோறும் வருத்தமில்லாமல் உண்ணும்படியாக மிகுந்தகனிகளையும் கர்ப்பகளையும் பெற்றுச் சந்தோஷமாகத் தவமுஞ்செய்கிறதற்கு நல்ல இடமிருந்தபடியால், அம்மலைகளை விரும்பி அவைகளுடன் தாமுமுடிக்கிறதற் கிச்சித்தார்கள். இந்த மலைகளின்மேல் புலால் தின்று வாழ்ந்துகொண்டிருந்த இராக்ஷதர்கள் தலையின்மேல் கையைவைத்துக்கொண்டு,நமக்கினி இருக்கிறதற்கு மலையிலிடங் கிடையாது; அதை விட்டாலும் வேறே வாழும்படியான இடமும் நயக்கில்லையென்று சொல்லிக்கொண்டு இலங்கையைப் போய்ச் சேர்ந்தார்கள். சமுத்திர நீரில் முழுகியும் முழுகாமலும், மேலேறி வராமலும், சிறப்பாகக்கட்டப்பட்ட சேதுவினைக் கட்டினுடைய இரண்டுபக்கத்திலும் கட்டப்பட்ட ஒழுங்கான எழுதகம்போலுமிருந்தன. முந்திப்போட்ட பளிங்குமலைகள் பிரகாசித்துக்கொண் டிருக்கிறதைத் தெரியாமல் இடையில் வெளிவிழுந்திருக்கின்றதென்று கருதி, அவ்வெளியை மூடுகிறதற்கு வேண்டுமென்று வானரவீரர்கள் சிலமலைகளைக் கொண்டுவந்து சேர்த்தார்கள். பூமியானது பள்ளமாய்ப்போகும்படியாக வானரங்கள் பிடுங்கிய மலைகளின்வேரைப்போல, இந்த மலைகளினுடைய குகைகளில் நின்றும் பாம்புகள் நழுவிப் பூமியில் தொங்கின. அந்தச்சேதுவில் சூரியகாந்தமலையின் பக்கத்தில் சில இருண்ட மலைகளையும் வரிசையாக அடுக்கிவைத்திருக்கின்றது எப்படியிருந்ததென்றால், கிருபாமேகமாகிய ஸ்ரீரகுகுலோத்தமரானவர் மஹாதேவனாகிய வருணராஜன் வெறுங்கழுத்துடன் இருக்கிறானென்று அவனுக்குத் திருப்பிக்கொடுத்த வருணசரமாகிய ரத்னமாலைபோலிருந்தது. யோகீஸ்வரர்கள் தங்களுக்குச் சொந்தமான தேகத்தைவிட்டுவிட்டு மறுகூடுபாய்ந்து சித்துவிளையாடுகிறதுபோல, மலைப்பாம்புகள் தான் முன்பு வாழ்ந்துகொண்டிருந்த மலைகளைவிட்டு அம்மலைகளின்பக்கத்தில் சேதுவின் கட்டடத்துக்காகப் போடப்பட்ட வேறு பெரியமலைகளின் குகையில் நுழைந்தன. அநுமாரால் கொண்டுவந்துபோட்ட மலையினால் சிதறுண்டு நீர்த்துளியோடு அந்தச் சமுத்திரஜலத்திலுள்ள மீன்களெல்லாம் சகலாத்மகோடிகளையும் சம்ரக்ஷணைசெய்யும் ஸ்ரீ உபேந்திரனுடைய லோகத்தைப்போய்ச் சேர்ந்ததினால், அந்தச் சேதுவினுடைய சிறப்பைச் சொல்லுகிறதற்கு ஒருமுகாந்திரம் வேண்டுமென்று ஆலோசிக்கவும் வேண்டுமோ? அந்தவாயுபுத்திரராகிய அநுமாருடைய நீண்ட தோள்களைப்போலப் பருத்திருக்கின்ற மலைகளைக் கரடிப்படைக்குத் தலைவராகிய ஜாம்பவர் பிடுங்கியெறிந்த வேகத்தினாலே சிதறிப்போன கடல்நீரானது தேவர்களுடைய சிரசின்மேற்போய்ப்பட்டது. இடி

யுடன்கலந்த மேகங்கள் சூழ்ந்த மலைகளைப் பனசனென்கிற வானரவீரன் கொண்டு வந்துபோட, அவைகள் பாதாளலோக பரியந்தம் பதிந்ததினாலே அவைகளை ஆயிரம் பணாமுடியையுடைய ஆதிசேஷமூர்த்தி தாங்கமாட்டாமல் அந்தலோக வாழ்வை வெறுத்துவிட்டுப் பூலோகத்திற்கு வந்துவிடப் புறப்பட்டார். நீலனென்பவன் ஒருபெரிய மலையைப்பிடுங்கியெறிய, அந்தமலையானது சமுத்திரத்தினுடைய அடித்தரைவரையிலும் தாக்கிச் சமுத்திர ஜலமெல்லாம் பொங்கிக் கரைக்கு மேற்பட்டு வழிந்து பூமிமுழுவதும் ஜலம் மூடிக்கொண்டதினாலே, உலகத்துள்ள ஜனங்களெல்லாம் அழுதுகொண்டு ஓடத்தலைப்பட்டார்கள். இப்படி வானரவீரர்கள் ஒவ்வொருவரும் ஆயிரம்யோசனை யுயரமாக இருக்கின்ற பெரியமலைகளைப் பிடுங்கியெறிந்து கர்ஜ்ஜித்தபோது வாசனை ஊட்டிக் கொடிகளைக்கட்டிய உப்பரிகைகளோடுங் கூடிய லங்காபட்டண வீதியெல்லாம் சமுத்திரஜலம் பரவினது. மயிந்தனென்கிற வானரவீரனால் பெரிய மலையானது ஆகாயத்தை முட்டிவிழுந்தபோது சப்தித்தெழுந்த சமுத்திரஜலமானது திகந்தபரியந்த முஞ் சென்றதினால் அஷ்டதிக்குகளிலுமுள்ள திக்கஜங்கள் தம்முடைய நிலைபெயர்ந்து கூச்சலிட்டன. குமுதனென்னும் வானரப்படைத்தலைவன் கொண்டுவந்திட்ட கூட்டமாகிய மலைகளினால், நாடகரைப்போல் அசைந்தசைந்து எழும்பித் துள்ளிக்குதிக்கின்ற திரைந்த அலைகளையுடைய சமுத்திரத்தினது நீர்த்துளிகள் தேவலோகத்திற்றெரிக்க அங்குள்ளதேவர்கள் முன்னேபிறந்த அமுதம் இன்னும் பிறக்குமென்கின்ற ஆசையால் துள்ளித் துள்ளிக் குதித்துச்சந்தோஷித்தார்கள். அமிர்தமுண்டாகும்படியாகக் கடலைக் கடைந்த வாலியினுடைய புத்திரனாகிய அங்கதனென்பவன், இளையபெருமாளானவர் ஆயிரம்பாணங்களைக்கொண்டு விலக்கினாலும் விலக்கக்கூடாத பெரியமலையொன்றை பிடுங்கியெறிந்து மறுபடியும் அந்தக்கடலைத் தன்தந்தையைப்போலக் கலக்கினான். அளவில்லாத கரடிக்கூட்டங்கள் கொண்டு வந்து போடப்பட்டமலைகள், ஒன்றின்மேலொன்றுவிழுந்து, புண்ணியஞ் செய்யாதவர்களுடைய ஐஸ்வரியத்தைப் போலப் பொடிப் பொடியாய்ச் சிதறிப் போய்விட்டன. சமுத்திரத்தினுடைய ஆயிரம்யோசனைவரையிலும் நீண்டு உயர்ந்து பருத்திருக்கின்ற திமிங்கிலமச்சமானது தன்மேல் பெரியமலைகளின் பாரங்களேற, அதைச் சகிக்கமாட்டாமல் அது உடல்பதைத்துப் புரண்டபோது மலைகளெல்லாம் சரிந்து வீழ்ந்துவிட்டன. இப்படி வானரவீரர்களால் கொண்டுவந்தமலைகளை வாரிக்கரை கட்டுவதற்கு அடையாளம் பார்க்கின்ற வானரதச்சன் மலைகளையொன்றுபோலுடைத்துச் சேர்த்து சமானமான மலைகளை வரிசையாயடுக்கி, மேல்மட்டம் சரியாகும்படி மணலை வாரிப்போட்டுத் தனது பெரியகையினாலே சமப்படுத்திப் பரப்புவான். அநேககோடி வானரசைனியங்கள் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு கூட்டமாய்க் கொடுக்கின்ற பெரியமலைகளை எழுக்கம்பம் போன்ற தன்னுடைய கையை நீட்டி எல்லாவற்றையுமொரு மிக்கச் சேர்த்துவாங்கும்போது; இடையில் நழுவி விழுகின்ற மலைகளைக் கால்களினாலே தாங்கிச் சேர்த்துக்கொள்ளுவான். வானரவீரர்களெல்லாம் மலைகளைத் தலையின்மேற் சுமந்துகொண்டு பூமியிற்போடாமல் வரிசை வரிசையாக நிற்க அந்தத்தோற்றமானது கடலிற் கட்டுகிற சேதுவை யல்லாமல் இந்த வானரசேனைகள் தலையின்பேரிலும் ஒருசேதுவை யுண்டாக்கினதுபோலு மிருந்தன. வானரவீரர்களெல்லாம் பெரியமலையைக் கொண்டுவந்து வரிசை வரிசையாக வைத்திருக்கிறபடியினாலே, சிலவானரங்கள் பூமியில் நடக்க வழியில்லாமல் கையில் தூக்கிக்கொண்டுவந்த மலையைத் தலையிலேதாங்கிக்கொண்டு சமுத்திரஜலத்தி லிறங்கி நடந்துபோனார்கள். சில வானரங்கள் வெகுதூரம் வருத்தப்பட்டுக் காலோய்ந்து பசியினால் சிரமமடைந்து, சுமந்துகொண்டு வந்த மலைகளைக் கீழே யிறக்கிவைத்து, அவைகளில் கட்டியிருக்கின்ற தேன்களை அடிக்கடி குடித்து வெறியேறி மெய்ம்மறந்து நித்திரைபோயினர். மலைகளைக்கொண்டு வருகிறதற்காகப் போகிற வானரர்களில் சிலரை அஷ்டதிக்கிலுமிருந்து மலைகளைக்கொண்டுவருகிற வானரர்களிற் சிலர் கண்டு, இப்போது சேது எவ்வளவு கட்டி

யாயிற்றென்று கேட்க, பாதி கட்டியாயிற் றென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண் டார்கள். இப்படி திருவணைசெய்வதற்கு உபயோகமாகத் தானே வானரக்கூட்டங் களால் கொண்டுவந்த மலையிலுள்ள குங்கு மங்களும், குகையிலுள்ள தேன்களும், அநேக சாதிபுஷ்பங்களும், கலந்து துறை தோறும் படிந்திருப்பதினாலே, உப்பாகிய கருங்கடல் நிறத்தினாலும் சுவையினாலும் மதுரமாகிய செந்தேன் கடலுக்குச் சமான மாயிருந்தது. இந்தச் சமுத்திரமானது அநேகம் பெரிய மலைகளைப்போட்டுத் தன்னை நெருக்கப்படுத்தியும், எவ்வளவு தரித்திரம் வந்தகாலத்திலும் சிறிதுங் கல ங்காமல் குடும்பசம்ரக்ஷணை செய்கின்ற உயர்ந்த குடிப்பிறப்பாளரைப்போல் கொ ஞ்சமும் கலங்காம லிருந்தது. மலைகள் விழுந்தபடியாலே சிதறின நீர்த்துளிகள் எங்குந் தெறித்தல் எப்படி யுளதெனில், இந்தக் கடல் தூர்ந்துபோனபடியினாலே வேறொரு கடலில் சேருகிறதற்குப் போகி றதுபோலு மிருந்தன. கொழுந்துவிட்டுப் படர்ந்துவளருகிற பவளக்கொடிகள் அமி ழ்ந்து போகும்படியாக எறியப்பட்ட மலை களால் சிதறுண்ட நவரத்தினங்கள் எவ்வி டத்திலும் இந்திரவில்லினது காந்தியைப் போல ஒளிவீசின. வானரவீரர்கள் ஆல மரங்களைப் பரித்தபோது அதில் வாழ்ந்து கொண்டிருந்த பக்ஷிக்கூட்டங்கள் குடும் பத்தைத் தாங்குகிறவன் இறந்தபோது அவனால் இரக்ஷிக்கப்பட்டவர்கள் வேறே தங்களுக்கு இரக்ஷகரில்லாமையால் அ ழுது துக்கிக்கிறதுபோலக் கூச்சலிட்டுக் கொண்டுப் பறந்தன. மாமரங்களெல்லாம் கடலில் விழுந்தபோது அந்த மாமரங்க ளில் வாழ்ந்துகொண்டிருந்தவண்டுகளெல் லாம், அரசனிறந்து போக ஆதரணையில் லாத ஏவலாளர்களைப்போலப் பல பக்கங் களிலும் ஓடின வானரவீரர்களால் வே ரோடு பறியுண்ட புஷ்பங்களையுடைய விரு க்ஷங்களைச் சூழ்ந்துபடர்ந்திருந்த பூங்கொ டிகள் அவைகளுடனே வெகு துன்பம டைந்தவைகளே யாயினும் குலஸ்திரீகள் தங்கள் நாயகன்மார்களை விடாததுபோல் அந்த மரங்களை விடாமற் பற்றியன. சில வானரவீரர்கள் மலைகளைப் பிடுங்கிக்கொ ண்டு வரும்போது அவற்றிலுள்ள யானை களுடையமதஜலத்துக்கு ஆசைப்பட்டு அ வைகளைப்பின்றொடர்ந்து மொய்த்துக்கொ ண்டுவந்த வண்டினங்கள் அந்த யானைகள் மலைகளுடனே சமுத்திரத்தில் விழுந்த போது நாயகன் சௌக்கியமா யுள்ளவரை யிலும் அவன் கைபொருள்களைப் பறித்து அனுபவித்துக்கொண் டிருந்து அவனு க்குசங்கடம்நேரிட்டமாத்திரத்தில் அவனை விட்டு விலகிபோன்ற வேசைகளைப்போல் திரும்பிப்போய்விட்டன. மலைகள் விழுவ தனால் சிதறுண்ட உப்புக்கடலின் நீர்த் துளிகள் பட்டுப் பெரும்புறக் கடலின் ருசி யும் நீங்கிப்போயின. அன்றியும், மேகத்தி னிடத்து அக்கினி மயமாக இருக்கின்ற இடிகளும் குளிர்ந்துபோய்விட்டன. இவ் வளவுதானோ? மேகம் வருஷிக்கின்ற மழை த்தண்ணீரும் உப்புகரித்தது. பெரியமலை கள் விழுந்தபோது எதிர்த்தெழுந்த நீர்த் துளிகள் படுகின்றதினால், சூரியனுடைய உஷ்ணகிரணங்களானவைசந்திரனுடைய கிரணங்கள்போலும் குளிர்ந்துவிட்டன. அன்றியும் பேர்த்தெரிந்த மலைகளால் சித றுண்ட நீர்த்துளிகளோடு மேலெழுந்த பவளத்துண்டங்கள் பிரகாசிப்பதினாலே, ஆகாய முழுமையும் மின்னற்கொடிகள் ஜொலிக்கிறதுபோ லிருந்தன. முத்துக் களை விரித்தாற்போ லிருக்கின்ற மணற்பிர தேசங்களின் பக்கங்களிலே அக்கினிகளைப் பரப்பி வைத்ததுபோலே தனித்தனியே அநேகவிதமான கனிவர்க்கங்களை உண் ணுதற்குப் பரப்பி வைத்திருக்கிற வான ரங்களினுடைய கூட்டத்தின்விலாசம் அ நேக பெருமணிகளையுடைய சமுத்திரப்பர ப்பை யொத்திருந்தது.

இந்தப் பிரகாரமாகச் சேதுவானது இலங்கை பரியந்தம் மூன்று நாளைக்குள் ளாகக் கட்டிமுடிந்தது. கட்டிமுடித்த சந் தோஷத்தினாலே வானரக்கூட்டங்கள் மிகு ந்த பேராசையோடு கர்ஜ்ஜித்ததினால் அண்டகோளம் படீரென்று பிளந்துவிட, அக்கால் நளனால் கட்டப்பட்ட அச்சேது வானது எப்படி பிரகாசித்ததென்றால், பிலத்துவாரத்திற்குள் ளிருந்த ஆதிசே ஷன் மேலெழுந்து இச்சேதுவைக் கட்டு கிறதற்குவேறேயொருவரைத் தேடவேண் டிய, காரணமென்ன? ஜெகன்மாதாவாகிய சீதாபிராட்டியாருடைய துன்பத்தை நீக்

கும்படிக்கு நீங்கள் என்னுடைய முதுகின் வழியாய் லங்கைக்குப் போகலாமென்று தனது முதுகை உயரத்தூக்கினது போல் பிரகாசித்தன. இன்னும் அத்திருவணை எத்தன்மையதெனில், மெய்யை விரும்பிய லங்கையென்கிற ஸ்திரீயானவள் இராக்ஷதர்களாற் செய்யப்பட்ட தீமையைச் சகிக்கமாட்டாதவளாகி ஸ்ரீசர்வேஸ்வரனுடைய சேனையைக்கண்டு சந்தோஷத்தினால் தனது கையை நீட்டி உபசரிப்பதுபோலு மிருந்தது. காட்டாறுகளாக நிறைந்த சமுத்திரத்தைச் சர்வக்ஞரான ஸ்ரீராமச்சந்திரருடைய சேனைகள் தாண்டிப்போகிறதற்கு ஆறென்று பெயர்பெற்ற வழி நானல்லாமல் வேறெது வென்று ஆகாயகங்கையானது சமுத்திரத்தின் குறுக்காக விழுந்துவந்ததுபோலு மிருந்தது. மேலும் வானர சைனியங்களால் கட்டப்பட்ட சேதுவானது நவரத்தினக் கற்களினாலே பிரகாசிக்கின்றபடியினால், ஆகாயத்திலுள்ள இந்திரவில்லானது சமுத்திரத்தின் குறுக்கே கிடந்ததுபோலும் தோற்றிக்கொண்டிருந்தது. இப்படிப்பட்ட சிறப்பையுடைய சேதுவை மிகுந்த சந்தோஷத்துடனே கட்டிமுடித்த பிறகு, வானரசேனாதிபதியான சுக்ரீவனும், லங்காதிபதியானவிபீஷணாழ்வாரும் இன்னும் அங்குண்டான சகலமானவர்களும் ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவினிடத்திற்குவந்து தெண்டஞ் சமர்ப்பித்து, நூற்றிரண்டு யோசனை நீளமும் பத்துயோசனை அகலமுமான சேது கட்டிமுடிந்த தென்பதாக விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள்.

சேதுப்படலம் முற்றிற்று.

---

## ஒற்றுக்கேள்விப்படலம்

அப்போது தயாமூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானானவர் ஆனந்த அமுதவெள்ளம் பெருகத் தமது நீண்ட செந்தாமரைக்கமலம்போன்ற திருக்கையினால் வானரத்தலைவனாகிய நளனைத்திருமார்போடு சேர்த்துத் தழுவி, நான் சொன்னபடியே எல்லாமுடிந்ததாவென்று வினவி அத்தியந்த சந்துஷ்டியாய் எல்லாரும் வாருங்களென்று நியமித்துப் புறப்பட்டுப்போய், தம்முடைய பழைய வாசஸ்தலமாகிய திருப்பாற்கடலுக்கு எதிர்த்தட்டப்பட் டிருக்கின்ற கடலிலே சயனித்துக்கொண் டிருக்கின்ற சாக்ஷாத்விஷ்ணுவுக்குச் சமானமாகக் கட்டப்பட்டிருக்கின்ற சேதுவுக்குச் சமீபத்தில் வந்து தேவதேவராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்முடைய பிராணனையொத்த சீதாபிராட்டியாரைக் கண்டதுபோல மிகுந்த சந்தோஷமுடையவராய், இந்தப் பெரிய கடல் நிரம்ப மலைகளைக்கொண்டு தூர்த்து அணைகட்டினது மகா அருமையாகும். லோகங்களையெல்லாம் சிருஷ்டித்த பிரமதேவனே வந்து கட்டின போதிலும் இதுமுடிகிறதற்கு எத்தனைகாலஞ் செல்லுமென்று ஆச்சரியசித்தராய்ச் சந்தோஷித்தார். பின்னும் சர்வசம்மார கர்த்தாவாகிய ஸ்ரீதாசரதியானவர் அதிக ஆச்சரியப்பட்டு, இந்தக்கடலினழும் ஒருவரால் சொல்லி முடியுமோ? இந்தச் சமுத்திரத்தைக் காட்டிலும் லங்கை பெரிதாயிருக்கின்றது. ஆகையால் இந்தக்கடலைவிட்டு இதற்கு மேலான சப்தசாகரங்களையும் ஒரு நொடிப்போதில் இந்த வானரக்கூட்டங்கள் தூரத்தி விடுவார்க ளென்பதற்குச் சந்தேகமுண்டோ? என்று சொல்லிச், சைனியங்களுக்கு முன்னாக விபீஷணாழ்வாரைப் போகும்படியாகவும், பின்பக்கத்தில் சாஸ்திரோக்தங்களையெல்லாம் விசிதமாக நன்றாய்க் கற்றுணர்ந்த சமர்த்தரான ஆஞ்சநேயரை வரும்படியாகவும் நியமித்து, தமக்குப் பின்னாக இளையபெருமாள் எழுந்தருள, வீரத்தோடுகூடிய மகா அழகிய திருத்தோள்களையும் கறுத்த திருமேனியையுமுடைய ஆண்யானைக்கொப்பாகத் தாம் எழுந்தருளினார். பெரிய வானரசேனைகள் ரத்தினங்களையும் முத்துக்களையு மெறிந்துகொண்டு அருகிலேயோங்கி வளர்ந்திருக்கின்ற சோலையில் தாவி விழுகின்ற அலைகளுக்குச் சமானமாகவும், கருங்கடலிற்போய் விழுகின்ற காவிரியாற்றின் பெருக்கைப்போலவும், உயர்ந்த சேதுவின் வழியாகப்போயின. அதெப்படியென்றால்,அக்காவிரிநதி குறிஞ்சி நிலத்திலுள்ள ஆகாரங்களையும், முல்லை நிலத்திலுள்ள ஆகாரங்களையும், மருதநிலத்திலுள்ள மரங்களையும் சுமந்து கொண்டு போகிறபடியினாலும், இந்த வானரசேனைகள் குறிஞ்சிநில முதலானவற்றி

லுள்ள உணவுப் பொருள்களொன்றும் விடாமல் கொள்ளை கொள்ளையாய் அலைகளென்கிற கைகளினால் வாரிக்கொண்டு கடல் மார்க்கமாய்ப் போயின. அந்தச் சேதுவானது அழுந்தும்படியாக மிதித்துக்கொண்டு ஒருவர் போனவழியில் ஒருவர்போவதினாலே காலடிபட்டுத் தேய்ந்து அந்தவழியில் சமுத்திரத்தினலைகள் பாய்கிறபோதெல்லாம்குதிரைமேலேறிச்சவாரி செய்துக்கொண்டு போகிறவர்களைப்போல வானரவீரர்கள் குதித்துக்குதித்துத் தாவிக்கொண்டு போனார்கள். அப்படி போகும் போது,ஒருவர்தேகத்தோடொருவர்தேகம் நெருங்கிஉராய்கின்றபடியால் நடக்கவிசையற்றுக் கால்தவறி பக்கத்தில் விசாலமான இடமில்லாமல் கடலில் விழ, அப்படிவிழுகின்றவர்களை முழுகிப்போகாமல் கையைத் தூக்கிவிடுகின்ற தயையுடையவர்கள் கைகொடுத்துத் தூக்கி வரிசைவரிசையாக அழைத்துக்கொண்டுபோக, இப்படி அநேக வானரவீரர்கள் போனார்கள். அநேக வானரவீரர்கள் கருக்கொண்ட மேகத்துக்குச் சமானமாகக் கறுத்த ஸ்ரீராமமூர்த்தியினது திருமேனியில் சூரியனுடைய அதிக தீக்ஷண்யமாகிய கிரணங்கள் படவொட்டாமல் மிகவும் தழைத்து நிழல்தருகிற உயர்ந்த அதிக சீதள சந்தனவிருட்சங்களையும் சுர புன்னை விருட்சங்களையும் பிடுங்கிக் குடை பிடித்துக்கொண்டு ஸ்ரீராமமூர்த்திக்கு இரண்டு பக்கங்களிலும் போனார்கள். அநேக வானரவீரர்கள் தெய்வீகம் பொருந்திய அநேகமான யாகாதிகிருத்துக்களைச் செய்யும்படியாகிய வேதோத்தமர்கள் அத்தியயனம்பண்ணுகின்றவேதார்த்தமே தாமாக எழுந்தருளியிருக்கின்ற அந்தச் சக்கிரவர்த்தித் திருமகனாருடைய திவ்விய திருமேனியானது இளைப்படையாமல் நானாவித பரிமளசுகந்த புஷ்பக் கொத்துக்களுள்ள மரக்கிளைகளையொடித்து அவைகளைத் திருத்தவேண்டியபிரகாரமாய்த் திருத்திச் சாமரைபோல வீசிக்கொண்டு சென்றார்கள். சீதாபிராட்டியாருடைய திருமணத்தைத் திருவுள்ளத்தில் நினைத்துத் தம்முடைய ரத்தினக் கங்கணங்கள் பொருந்திய திருக்கரங்களைக் கடாக்ஷித்துக்கொண்டு யுத்தத்தின்பேரில் இச்சைகொண்டு போகிறவர்களான வானரசேனைகளுடனே சமுத்திரத்தைத்தாண்டிக் கரையேறினார். தேவாமிர்தத்திற்குச் சமானமாகிய தமது திருத்தம்பிமாரோடும் சுக்ரீவமகாராஜர் விபீஷணாழ்வார் அநுமார் முதலான துணைவர்களோடும் அருந்ததியுங்கண்டு அதிசயித்து ஸ்தோத்திரம் செய்யத்தக்க சீதாபிராட்டியார் எழுந்தருளியிருக்கின்ற அந்த லங்கா பட்டணத்தின் சமீபத்திலிருக்கின்ற ஒரு பெரிய மலையின்மேல் தேவர்கள் பெருந் தவஞ்செய்து பிரார்த்தித்ததின் பொருட்டு வந்து அவதரித்தருளின ஸ்ரீராமமூர்த்தியானவர் எழுந்தருளி நீலனென்கிற வானர சேனாவீரனைப் பார்த்து, அப்பா நீலா! நம்மோடுகூடவந்த சைனியங்களுக்கெல்லாம் பாடிக்கூடாரம் நீ செய்விக்க வேண்டுமென்று ஆக்கியாபித்தார். அம்மாத்திரத்தில் அந்தச் சுவாமியினுடைய திருவடிகளில் நமஸ்கரித்து விட்டுப் போய்ச் சமுத்திரத்தில் அணைகட்டு வழிசெய்தவனான நளனுக்குச் சுவாமி நியமித்த கட்டளையை விபரமாகச் சொன்னான். அதைக் கேட்ட நளன் தன் பிதாவாகிய மயனும், நாணமடையத்தக்கதாக அந்த இடத்தைச் சதுரப்படுத்தித் தலைவர்களான சுக்ரீவமகாராஜா விபீஷணாழ்வானென்று சொல்லப்படுகிற இருவர்களுக்கும் மற்றயாவர்களுக்கும் அவரவர்கள் நிலைமைகளுக்குத் தக்கபடியே பிரமதேவனால் சிருஷ்டிக்கப்பட்டதுபோல பொன்னினாலும் ரத்தினங்களினாலும் பாடிக்கூடாரமமைத்து ரகுகுலோத்தமரான ஸ்ரீகோதண்டபாணி எழுந்தருளியிருக்கத்தக்க இடத்தையும் உண்டாக்க வேண்டுமென்கிற விருப்பத்துடனே அம்மலைச்சிகரத்தை மட்டப்படுத்தி மூங்கில் கால்கள்நாட்டி தருப்பைபுற்களால் உறுதி பெறக்கட்டித் திவ்விய சுகந்தபரிமள புஷ்பங்களினால் மேற்கூறைமேய்ந்து பர்னசாலைகட்டிமுடித்தான்.

பின்பு சுக்ரீவ மகாராஜன் முதலான யாவர்களுக்குந் தத்தமது வாசஸ்தானங்களைநோக்கி எல்லா ஜீவகோடிகளிடத்திலேயும் தாயைப் பார்க்கிலும் மிகுந்த தயா சீலரும் சர்வரக்ஷகருமான ஸ்ரீராமமூர்த்தியை மனப்பூரணமாக வாழ்த்திச் சாஷ்டாங்கமாகத் தெண்டஞ்சமர்ப்பித்து, அந்த மலையின் அஷ்டதிக்குகளிலுமுள்ள அவரவர்களிருப்பிடத்தைச் சேர்ந்தார்கள். அப்

பால் சர்வலோக சரணியராகிய சுவாமியும் தம்முடைய பர்ணசாலையில் சந்தோஷமாக எழுந்தருளினார். மிகுந்த மனவருத்தமுடைய ஸ்ரீராமர் லோகமாதாவாகிய சீதாபிராட்டியாரைப் பிரிந்ததினாலுண்டாகிய துக்கசாகரத்தில் மூழ்கவும், நக்ஷத்திராதி கிரஹங்கள் பிரகாசிக்கவும், கறுத்த உப்புநீர்த்துளிகள்பட்டு மழுங்கிய ஒளிபிரகாசிக்கச் சுத்தஜலத்தில் ஸ்நானம் பண்ணுகிறதற்குப் போவதுபோலச் சூரியன் அஸ்தமயமானான். அப்படி அவன் அஸ்தமித்த மாத்திரத்தில் ஸ்ரீராமர்மீது அஸ்திரப்பிரயோகம் பண்ணுகிறதற்காக அதிககோபத்துடனே இரண்டு குதிரையும் ஒன்றோடொன்று பொருந்தும்படியாக வளைக்கப்பட்ட மன்மதனுடைய வில்லைப்போலமேற்றிசையில் மிகுந்த பிரகாசத்துடனே மூன்றாம்பிறைபோலச் சந்திரன் உதயமாயிற்று.

சகஸ்திர இதழ்களோடுங்கூடிய தாமரைப் புஷ்பத்திலுண்டான வாசனையையுடைய மகரந்தப்பொடிகளை அளாவிக்குளிர்ந்த பனிநீர்த்துளிகளை வீசிக்கொண்டு வருகிற தென்றற்காற்றைப்பார்க்கிலும், அந்திவானமாகிய செவ்வானத்தைக்காட்டிலும், மன்மதபாணமாகிய எமனிலும், அதிகமான குரூரத்தைக்காட்டிக்கொண்டு அந்த மூன்றாம்பிறைச் சந்திரன் மிகுந்த சுவாலையை வீசினான். கோபவேளையிலும் அழகு விளங்கிக்கொண்டிருக்கின்ற திருமுகமண்டலத்தையுடைய சீதாபிராட்டியாரைப்பிரிந்த காலமுதல் நித்திரையும் நாவிற்கு ருசி தேடுதலையும் மறந்திருப்பவராகிய ஸ்ரீராமருடைய திருத்தோள்களில் சந்திரகிரணங்கள் பிரகாசிப்பது எப்படியிருந்ததென்றால், பெருமைபொருந்திய ஒரு மரகதமலைமேல் வாசமாயிருந்த ஓர் மயில் பிரிந்துவிட்ட சமயம்பார்த்து அக்கினிமயமான சுவாசத்துடன் வெண்மையான ஒரு குட்டிப்பாம்பு தவழ்வதை ஒத்திருந்தது. சீதாபிராட்டியார் எழுந்தருளிய லங்காபட்டணத்தைக்கிட்டி வந்த வஜ்ஜிரகங்கணங்கள் தரித்து அழகுடனே திரண்டதிருத்தோள்களையுடைய ஸ்ரீராமபத்திரர் தேகமெல்லாம் புழுங்கி வருத்தமடைந்தார். அநேக காததூரத்திலே இருந்து நினைக்கும்போதே சுட்டெரிக்கும்படியான சிவந்த இதழையும், கறுத்த கண்ணையுமுடைய அந்தச் சீதையாகிய அக்கினியானது சமீபத்தில்வந்தால் சுடாமலிருக்குமோ? இந்தப்படியாகச் சீதாபிராட்டியாருடைய வியோகாக்கினியாலே ஸ்ரீராமபிரானானவர் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார். இராவணன் தன்னுடைய வாழ்நாளுக்கு முடிவுவந்ததினாலே ஸ்ரீராமனுடைய பலாபலங்களைத் தெரிந்து வரும்படியாக இரண்டு ஒற்றர்களை அனுப்பினான்.

அவர்கள் ராக்ஷதமாயையினால் குரங்குருவ மெடுத்துக்கொண்டு வானரசேனைகளைச் சுற்றிச்சுற்றி எவ்வளவு சேனைகளென்று மதிப்பிட்டுப் பார்த்துக்கொண்டிருக்கும்போது பூர்வத்தில் நாம்செய்த நல்ல தபோபலத்தினாலே முந்திவந்து சாட்குண்ணிய பரப்பிர்ம்மாவாகிய ஸ்ரீராமசுவாமியை அடைக்கலம்புகுந்த விபீஷணாழ்வார் பெரிய சமுத்திரத்திற்குச் சமானமாகிய வானரசேனைகளை இவ்வளவென்று தம்முடைய உள்ளத்தில் கணித்தறிந்திருக்கின்றவரானபடியால் பாற்கடலில் ஒரு சிறுதுளிநீர் தெளித்தபோதிலும் அந்த நீரை வேறுபிரித்தறியும்படியான அன்னத்தையொத்த விவேகசாமர்த்திய முள்ளவராய் மகத்துக்கு மகத்தாயும் அணுவுக்கணுவாயுமிருந்து ஒரேதன்மையாய்க்காண்பதற்கரிய அகண்டாகாரமாய்ப் பருத்துயர்ந்திருக்கின்ற தம்முடைய விராட்சொரூபத்தை யுள்ளடக்கிக்கொண்டு தம்முடைய விஸ்வரூபமிப்படிப்பட்டதென்று தெரியாதபடிமறைந்து அந்தர்யாமியாய்ச் சகலாத்துமாக்களிடத்திலும் வசித்துக்கொண்டிருக்கின்ற மகா மாயாசக்தியை யுடையவர்களான பெரியபிராட்டியாரும் அவர் நாயகரான நாராயண மூர்த்தியாகிய இருவரையும் தங்களுடைய இருதயத்திலே தரிசனை செய்கின்ற மகாயோகிகட்குச் சமானமானவராய், இராவணனுடைய ஒற்றர்களான இராக்ஷதர்கள் சிறிய வானர தேகத்தையுடையவராய்ப் பார்க்க பயங்கரமாய்ப் பருத்துயர்ந்திருந்திருக்கும் தங்கள் ஆகாரத்தை உள்ளடக்கிக்கொண்டு தங்களுடைய உண்மையான உருவம் ஒருவர்க்கும் தெரியாதபடி மறைத்துக்கொண்டு திரிகின்ற அந்த மாயாரூபிகளான இரண்டு இராக்ஷதர்களையும் சூசனையாய்க்கண்டு அவரைத் தம்முடைய முஷ்டிபிடித்த பலம்பொருந்

திய கைகளாலே வானரக்கூட்டங்களுக்கு
இரக்கமுண்டாகும்படிக்குக் குழைத்து வே
றொன்றையுஞ் செய்யாமல் மிகுதியாக பல
முள்ள ஊனுங்கொடியாலே இறுகக் கட்டி
இரத்தம் கக்கிக்கொண்டுவரும்படியாக அ
வ்விருவரையும் கட்டிய கட்டுடனே சுவா
மிக்கு முன்பாகக்கொண்டுவந்து இராவண
னால் அனுப்பப்பட்ட திருடரிவரென்று
விண்ணப்பம்பண்ணிக்கொண்டார். அதை
க்கேட்ட சேஷசாயியாகிய ஸ்ரீராமமூர்த்தி
யானவர் அவர்களைப்பார்த்து பகைவரென்
பதாய் நினையாமல், இவர்கள் நமக்குச் சகிக்
கக்கூடாத வருத்தத்தை செய்தபோதிலும்
குரங்குகளாச்சுதேயென்று இரக்கங்கொண்
டவராய் நம்மைத் தஞ்சமென்றடைந்தவ
ரை நாம் வருத்தப்படுத்தலாகுமோ? இவர்
களைத் துன்பப்படுத்தாமல் விட்டுவிடுங்க
ளென்று திருவாய்மலர்ந்தருளினார்.

இப்படிச் சுவாமி சொல்லுவதைக்கே
ட்டு அந்த இராக்ஷசத் திருடர்கள் சுவாமி
யைப்பார்த்து, ஓ வில்வீர சிகாமணியே!
இந்த விபீஷணன் உம்முடைய சேனாசமு
த்திரமாகிய வானரவீரர்களுடைய மிகுதி
யைப்பார்த்து இப்பேர்ப்பட்டவரை வெல்
லுஞ்செய்கை அரிதென்றெண்ணி வஞ்ச
னைசெய்து எங்களையெல்லாம் கொல்லும்
பொருட்டு இங்குவந்தான். நாங்கள் யதார்
த்தமான குரங்குகள் எங்களை அங்கீகரித்த
ருளவேண்டுமென்று சொன்னார்கள். அப்
போது விபீஷணாழ்வார் சுவாமியினுடைய
திருவுளத்தினது தயையை அறிந்து; கண்
ணீரும் தண்ணீருமாய் நின்று, சுவாமி!
இவர் மலையிலேயும் காட்டிலேயும் வாழும்
படியான குரங்குகளல்லர். தயையும் தாக்ஷ
ண்யமும் சத்தியமுமில்லாத மனதையுடை
யவனான இராவணனால் ஏவப்பட்ட தூதர்
கள். இவரிரண்டு பெயரில் ஒருவனுக்குச்
சுகனென்று பெயர். மற்றொருவனுக்குச்
சாரனென்று பெயர் என்று சொன்னதும
ல்லாமல் இவர் மாறுருவம் தரித்துக்கொ
ண்டு இருக்கும்படியான திருடர்கள் அந்த
மாறுபாட்டைத் தேவரீருக்குச் சந்தேக
மறக்காட்டுகிறேன் பார்த்தருள வேண்டுஞ்
சுவாமியென்று விபீஷணாழ்வார் ஒருமந்தி
ரத்தைச் செபித்தனர். அப்படி ஜெபித்த
மாத்திரத்திலே பாதரசத்துளி பட்டவுட
னே, தன்னுடைய பழைய நிறமாறி வேறு
பட்டு வெள்ளி நிறமாய் இருந்த செம்பான
துபுடமிடுகிறவர் அந்த ரசம் போகத்தக்க
தகுந்த செய்கைகளைச் செய்து புடமிடத்
தன்னுடைய பழைய நிறத்தைப் பெறுமா
றுபோல வானரவடிவுகொண்டிருந்த அந்
தத்திருடர்கள் தம்முடைய யதார்த்தமான
இராக்ஷத ரூபத்தோடே வக்கிரதந்தத்தை
யுடையோராய்ப் பயந்து நின்றார்கள். மலை
போலே நிற்கும்படியான அந்தக் கொடி
யோரைப் பார்த்துச் சிரித்துத் துன்பமுற்
று, தம்மையடைந்தோருடைய துக்கத்தை
யெல்லாம் நிவர்த்தி செய்யும்படியான பர
மதயாளுவான ராமமூர்த்தி பயப்படாதீர்
கள். நீங்களிவ்விடம் ஏதுகாரியத்திற்காக
வந்தீர்கள்? அந்த விவரத்தை யெல்லாம்
விபரப்படச் சொல்லுமென்பதாய் நியமி
த்தார். அப்படி நியமித்த மாத்திரத்திலே
பெரியோரெல்லாம் தாயென்று தெரிந்
துக்கொள்ளும்படியான சீதாபிராட்டியா
ரைத் தன்னைக் கொல்லும்படியான ஒரு
பெரிய நோயென்று அறியாமல் தனக்குத்
தானே சம்பாதித்துக் கொண்ட அந்த
இராவணனாலே ஏவப்பட்டு இன்னது
சொல்லவேண்டு மென்கிறதைத் தெரி
யாமல், மனதிலொன்றை நினைத்து வாயி
லே ஒன்றைக் குளறுகின்றவர்களாய் வண
ங்கி, சுவாமி! வஞ்சனையான தந்திரத்தி
னாலே இவ்விடத்திலுள்ள உளவைத்தெரி
ந்துக்கொண்டுபோய்ச் சொல்லும்படியாக
ராவணனால் அனுப்ப வந்தோமென்று
விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள்.

அதைக்கேட்டு ஸ்ரீராமர் அப்படியா?
நல்லது: ஓய்சுகசாரணரே! உங்களையிங்கே
விலங்கிட்டுச் சிறைப்படுத்தாமல் விட்டு
விட்டேன். நீங்கள் இராவணனிடத்திலே
போய் இந்த அளவில்லாத இலங்காபட்ட
ணத்தினுடைய ஐஸ்வரியத்தை எல்லாம்
உன்னுடைய தம்பியான விபீஷணருக்குக்
கொடுக்கப்பட்டதென்றும், வானரசேனா
வீரர் மலைகளைக்கொண்டு கடலையடைத்துச்
சேதுவைக்கட்டி அந்தவாராவதியின் வழி
யாய்க் கடலைத்தாண்டி எல்லோரும் இலங்
கைக்குவந்தாரென்றும், இத்தனை நாள்பொ
றுத்திருந்த இரண்டு வில்வீரரும் வந்தி
ருக்கிறாரென்றும்,பனங்குலையைப்போலும்
பத்துத்தலைகளை யுடையோனான ராவணன்
வசித்துக்கொண்டிராநின்றதும், குறும்ப

ரான ராக்ஷதர் நிறையப்பெற்றதுமான இலங்கைக் குன்றமானது சமுத்திரத்தினுலே சூழப்பட்டு இந்த மூலையிலே இராநின்றதென்று தெரிந்துகொள்ளக் கூடாமையாய் இருந்தபடியினுலே உயிருடனும் துஷ்ட இருதயத்துடனுமாய் இத்தனை நாள் வாழ்ந்திருக்கும்படியாய் நேரிட்டதென்றும், என்னுடைய பிதாவானஜடாயு பகவானைக்கொன்று அவருடைய பந்துக்களை வருத்தினபடியே அவனுடைய பந்துக்களையும் அவனுடைய பலத்தையும் அவனுக்குண்டான எல்லா வரங்களினுடைய பெருமையையும், இரணக்களத்தில் நாசப்படுத்தி, என்னுடைய பிதாவுக்காகச் சொர்க்கலோகத்தி லிரா நின்ற தேவர்களுக்கு அவனுயிரைக்கொண்டு நான் பலியூட்டப் போகிறேனென்றும் நான் சொன்னதாகப் போய்ச்சொல்லுங்கள். மேலும்மிகுந்தவேகத்தோடுஞ் செல்லும்படியானரிஷபவாகனத்தையும் கருட வாகனத்தையுமுடையவரான மூன்றும்பிறைச் சந்திரனையணிந்த உருத்திரமூர்த்தியும், துளசிமாலிகாதரராகிய விஷ்ணுமூர்த்தியும், மற்றச் சமஸ்தலோகநாதரும், அவனுக்கு உதவியாகவந்து காத்தபோதிலும் என்னுடைய ராமபாணத்தினுலே அத்துஷ்டனுடைய தேகத்தைத் துண்டாய்ச் செய்யக் காத்திருக்கிறேனென்றும், பதிவிரதா சிரோமணியான சீதையைத் தனித்த ஓர் சிறையிலே இருக்கும்படியாக வீரருக்கு அடுக்காத வஞ்சனையைச் செய்த அந்த மகாபாதகக் கொடியோனுன இராவணனை அவனுடைய பந்துக்களோடு அக்கினிபற்றியெரியும்படியான நரகமென்று சொல்லப்பட்ட மீளாத சிறையிலே வைக்கப் போகிறேனென்றும் நான் சொன்னதாய்ச் சொல்லுங்கள். நீங்கள் எம்முடைய சைனியங்களையெல்லாம் நுழைந்து நன்றாய்ப்பார்த்தாயிற்றே. இனி நீங்கள் செய்யவேண்டியது ஒன்றுமில்லையே. ஆகையால் நீங்கள்போங்களென்று திருவாய்மலர்ந்தருளி வானர சைனியங்களைப்பார்த்து, நாம் மனப்பூரணமாய் அஞ்சலென்றுசொல்லி இவர்கட்கு வாக்குதத்தஞ் செய்த நம்முடைய சொல்லை நினைத்துக் கொண்டு, இவரை வாக்கினுலும், மனத்தினுலும், உம்முடையகையினுலும், ஓர் துன்பஞ் செய்யாமல் சீக்கிரமாய் வெளியேகொண்டுபோய் விடுங்களென்று நியமித்தனர். அப்படியே கொண்டுபோய் வெளிப்புறத்திலே விட்டுவிட்டனர். அப்படி விடப்பட்ட சுகசாரணர் நாங்கள் பிழைத்தோம் பிழைத்தோமென்று சந்தோஷத்துடனே ஓட்டம்பிடித்தார்கள்.

அப்பொழுது ராவணன் முன்னர் சமுத்திராஜன் பயந்து அடைக்கலம் புகுந்ததையும், குரங்குகள் சமுத்திரத்திலே சேது கட்டின சாமர்த்தியத்தையும், அந்தச்சேதுவின் மூலமாய் குரங்குச் சைனியங்களுடனே ஸ்ரீராமர் முதலியோர் வந்ததையும் பார்த்துக்கொண்டு, ராத்திரியிலே ஓரிடத்திலே தனித்திருந்து, தன்னுடையபிள்ளை பெண்ஜாதி ஒருத்தரையும் வராமற்படிக்குச்செய்து, காற்றும் நுழைவதற்கருமையான மந்திராலோசனச்சாலை என்கிற ஓரி ரகசிய ஸ்தானத்திலே தன்னுடைய கருத்திற்கு இசைந்த மந்திரிமாரோடும்கூட ஆலோசனை செய்யும்படிப் போயினுன். அங்கே மிகுந்த புத்தியும், யதார்த்தமும், சாத்திரக் கேள்வியும், சிறிதேனு மில்லாதோரும், ஊமை செவிடுமுதலாய்ச் சொல்லப்பட்ட குரூபிகளும், விளக்குகளைப் பிடித்துக்கொண்டு, அசுர யக்ஷ காந்தர்வ முதலாயினோர் தொழுதுநிற்கும்படியான பாதத்தையுடைய பிரதாப லங்கேஸ்வரனுன ராவணன் அந்த மந்திரிகளைப் பார்த்து, மனிதர்கள் நம்முடைய பட்டணத்தைச் சேர்ந்துவிட்டார்கள். இனிநாம் செய்யத் தகுந்த காரியமென்னவென்று கேட்டான். அப்போது, ராவணனுடைய தாயைப்பெற்ற பாட்டனுன மாலியவான், ராவணேசுரனைப்பார்த்துச் சொல்லுகிறுன். அப்பா இராவணு! அந்த ஸ்ரீராமனுடைய வடவாமுகாக்கினியையொத்த சரங்களினுலே சமுத்திராஜன் உடல்வெந்து நடுங்கிச் சூரியனுக்குச் சமானமான ரத்தினமாலைகளைக் கொண்டுவந்து ஸ்ரீராமச்சந்திரனுடைய உபய திருப்பாதாரவிந்தத்திலே வைத்து வணங்கிக்கொண்ட அந்தச்செய்தியானது, சூலத்தைப்போல என்னுடைய நெஞ்சிற்குள்ளே நின்று தொளைக்கின்றது. அச்சமுத்திரமானது ஸ்ரீராமபாணத்தினுல் சின்னபின்னப்பட்டழிந்ததும், அப்பகவானுடைய உத்திரவின்படியே அணைகட்டிமுடிந்ததும், மிகுதியான பயத்தினுலே அந்தக்

கடலானது இலங்கையிற் பிரவேசிக்கும்படியாய் வழிகொடுத்ததும் ஆகிய இந்த அபூர்வமான செய்கையெல்லாம் என்னுடைய மனத்தை மெத்தவும் வருத்தப்படச் செய்கின்றது. மேலும் லோகத்திலே யிராநின்ற மலைகளையெல்லாம் வேரோடே பிடுங்கிக்கொண்டுவந்த வானரவீரர்கள் தம்முடைய தோளைத் தட்டிக் கொட்டிக் கெர்ச்சனைசெய்த சப்தமும், சமுத்திரத்தைக் கெட்டியாய் அடைத்துக் கட்டின கோஷமும், என்னுடைய நினைவை ஸ்தம்பிக்கும்படியாய்ச் செய்துவிட்டது. மிகுந்த கோபாவேசத்தோடு அளவில்லாத குரங்குவீரர்கள் தம்முடைய சக்திக்குத் தக்கபடியாய் மலைகளைச் சுமந்துக்கொண்டுவந்து கொடுக்க, அம்மலைகளையெல்லாம் அலட்சியமாய் ஒரு நளனென்னும்படியான வானரவீரன் தன்னுடைய கைந்நுனிவிரலினாலே வாங்கிச் சமுத்திரத்திலிட்டது என்னுடைய மனதிலே இட்டதுபோலே யிருக்கின்றது. இந்த இலங்காபட்டணத்தை முன்னொரு குரங்குவந்து சுட்டதையும் சமுத்திரத்தை அக்குரங்கு தாண்டிவந்ததையும் மகா பலசாலிகளான நம்முடைய அநேக ராக்ஷதர்களை அந்தக்குரங்கொன்றேகொன்றுவிட்ட விதத்தையும் கண்டோம். அல்லாமலும் இந்தக் கொடுமையான செய்கைகளெல்லாஞ் செய்துவிட்டு, அந்தக்குரங்கு நம்முடைய கண்ணிற்கெதிராகவே எவ்வளவும் அச்சமில்லாமற்படிக்குப் போய்விட்டது. இவைகளெல்லாம் நாம் அனுபவமாய்ப் பார்த்திருந்தும் அந்த மனிதர்களுடைய பலாபலத்தைப்பற்றி ஆலோசிக்கவும் வேண்டுமா? என்பதாய் நன்மையான நீதிவார்த்தைகளைச்சொன்னமாத்திரத்திலே, இராவணன் பற்களை நெறநெறவெனக் கடித்து, கண்களிலே அக்கினிப்பொறி பறக்கும்படியாய் நம்முடைய மந்திராலோசனை நன்றாயிருந்ததென்று கோபித்து, ஓ மாலியவானே! நீ எப்பொழுதும் உயிருடன்கூடி வாழ்ந்துகொண் டிருக்கும்படியாய் விபீஷணனோடுகூடிப் போய்விடென்றான். இச்சொல்லைக் கேட்ட மாலியவான் எப்போதும் நல்லவார்த்தையை துஷ்டர்கள் கெட்டதென்று நினைப்பார்களென்றெண்ணிக் கொண்டு ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்துவிட்டான்.

அப்போது அவ்விடத்திலிருந்த சேனாதிபதியான பிரகஸ்தனென்கிறவன் எழுந்துவணக்கஞ்செய்து கையை கூப்பிக்கொண்டு, ஐயா மாலியவானே! ஏழைகளான மனிதர்கள் இந்த அற்பமாயுள்ள கடலைத் தாண்டிவந்தது ஒன்றுதானே அவர்களுக்குப்பலம். அட்டதிக்குப்பாலகரும் வணங்கும்படியாய் ஜெயம்பெற்று அவர்கள் இந்தப் பிரதாப லங்கேஸ்வரனான ராவணனுக்கு ஊழியஞ் செய்துக்கொண் டிருக்கின்ற அவ்வகைப்பட்ட யதார்த்தத்தை ஒன்றும் நினைக்காமற் போய்விட்டீரே. இந்தக் குரங்குகள் வருத்தப்பட்டுச் சிறு குன்றுகளைத் தூக்கிக்கொண்டுவந்து கடலை அடைத்தாரென்பதாய்ப் பிரலாபித்துச் சொன்னீர். இந்த இராவணேஸ்வரன் அம்மகா கயிலாய பர்வதத்தைப் பிரதமகணங்களோடும் உமாநாயகனான பரமசிவனோடும் அச்சாணி வேறுபடும்படி பேர்த்தெடுக்கவில்லையோ? அதை இப்பொழுது ஏன்சொல்லவேண்டும்? இந்த இரண்டு மனிதர்களும் குரங்குகளும் புத்திகெட்டவராய் நம்முடைய வாசஸ்தலமாகிய இந்த இலங்கைக்குவந்து சேர்ந்தார்கள். தம்மை நாசப்படுத்துவதான காலம் பிடரியைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு வந்தபடியாலே இனிச் செத்தவரே யல்லாமல் பிழைக்கிறவரல்லவென்று சொன்னான். அப்பொழுது தேகமுழுதும் மூடிக்கொண்டு இருக்கின்ற நிலையங்கிதரித்தவனும் அக்கினி ஜுவலிக்கின்ற கண்களையுடையவனும் கையில் பிரம்பைப் பிடித்துக்கொண் டிருக்கிறவனுமான வாயிற்காவலாளியான ஒரு கட்டியக்காரன் இராவணனிடத்தில் ஓடிவந்து கீழேவிழுந்துகும்பிட்டு நின்று, சுவாமி! எச்சரிக்கை பராக்கு. தாங்கள் அனுப்புவித்த ஒற்றர்கள் வந்தார்களென்று சொன்னான். அப்படிச் சொன்னமாத்திரத்தில் அக்கினி பொழியும்படியான கண்ணையுடையவரும் மிகுந்த பலமுள்ளவருமான இராக்ஷதருக்குத் தலைவனான இராவணன், நல்லது. அவர்களை இங்கே யனுப்பென்பதாய் நியமிக்க, அப்படியே புத்தியென்றுபோய், அந்த ஒற்றர்களை உள்ளே போங்களென்று அனுப்பினான். அவர்கள் இராவணனுடைய சமுகத்திலே வந்து அவனுக்கு வணக்கஞ்செய்து. வானரசேனைகளை நினைத்து நினைத்

துத் திடுக்கிடும் நெஞ்சையுடையவராய், கனைக்கும்போதெல்லாம் ரத்தம் கக்கிக்கொண்டு நின்றார்கள்.

அந்தப்படி நின்றவர்களைப் பார்த்து வானரசேனைகளுடைய அளவையும், விபீஷணர் செய்யும்படியான செய்கையையும், இராம லட்சுமணருடைய தன்மையையும், விவரமாய்ச் சொல்லுமென்று யாவரும்பயப்படும்படியான எமனுக்குச் சமானமாயிருக்கப்பட்ட இராவணேஸ்வரன்கேட்க, சுகசாரணர்கள் சொல்வதானார்கள். சுவாமி ராவணேஸ்வரா! நாங்கள் இந்தச் சமுத்திரத்தை ஒரு கணத்திற்குள்ளே தாண்டி, வானரசேனாசமுத்திரம் வசிக்கும்படியான பாடிக்கூடாரங்கள்தோறும், அந்த வானரவுருவந் தரித்துக்கொண்டுபோய் நாங்கள் அச்சேனா சமுத்திரங்களினுடைய அளவைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையுடனே உன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டு கருடனைக்காட்டிலும் அதிவேகமாய்ப் பறந்தோடிப் போயினோம். அதினுடைய அளவைப்பார்க்க எங்களாலே கூடாமற் போய்விட்டது. அந்தக் குரங்குச்சேனையினுடைய விரிவைப்பார்த்துச் சொல்லுகிறதற்கு நாங்கள் வேண்டுமோ? அந்தக் குரங்குகள் இக்கடலை யடைத்தபோது சப்தித்துக்கொண்டெழும்பின அந்நீர்த்துளிகளே உமக்கு முன்னேவந்து சொல்லவில்லையா? பிர்மருத்திரேந்திராலும் இத்தன்மையரென்று அளவிடவும் கூடாதவேத சாஸ்திரங்களைக் கற்றறிந்த அம்மனிதர் தம்முடைய தோள்களெனச் சொல்லப்பட்ட மேருமலையைப் பார்த்துப்பாணங்களையும் பார்த்துத் தமது வில்லையும் பார்த்த மாத்திரத்திலே சமுத்திரமானது வெந்து நீறாய்ப்போய்விட்டது. ஓ கற்பகப்பூமாலை அசைகின்ற இரத்தினமா யலங்காரமுள்ள மார்பையுடைய இராவணேஸ்வரா! உம்முடைய இலங்காதிபத்திய ஐஸ்வரியமெல்லாவற்றையும் அந்த ஸ்ரீராமமூர்த்தி சூரிய சந்திருருள்ளமட்டும் தம்முடைய நாமம் பிரகாசித்துக்கொண் டிருக்கிறவரையிலும் உம்முடைய தம்பியான விபீஷணருக்கே கொடுத்துவிட்டார். தூதுவந்த ஒருகுரங்கு தன்னுடைய புஜபல பராக்கிரமந்தெரிவித்த பெருமையை இன்னம் ஒருவரும்அளவிடவில்லை. அப்படி யிருக்கச் சேதுபந்தனஞ்செய்தாரென்று சொல்லும்படியான ஒருபொதுவான வல்லமையும் வெளிப்பட்டிரானின்றது. முப்பத்துமுக்கோடி தேவரும் தேவாமிர்தபானம் பண்ணியபோது தம்முடைய பந்தியிலே தானவர்கள் மறைந்திருக்கின்றதை அறிந்து சர்வவல்லவரான ஸ்ரீ மாதவப்பிரானுக்குத் தெரிவித்த தன்மைபோல உம்முடைய தம்பி குரங்குகளைக்கொண்டு எங்களை அடிப்பித்து, மடலோடு மடல்முறியச் சேர்த்துக்கட்டி இழுத்துக்கொண்டுபோய் சகஸ்திரகோடி கிரணத்தோடு கூடியிருக்கின்ற இளங்கருஞ் சூரியனைப்போல பிரகாசித்துக் கொண்டிரானின்ற மகாவீரனை ஸ்ரீராமமூர்த்திக்குக் காட்டி, எங்களை இராக்ஷதர்களென்று சொல்லி மந்திரத்தினாலே நாங்கள் குரங்கல்லாமையையும் வெளிப்படுத்தினான்.

இப்படி வெளிப்படுத்தினபோது எங்களை இராக்ஷதரெனத் தெரிந்துகொண்டும் அவ்வெற்றிவீரரான ஸ்ரீராமர்எங்கள்மீது பரிபூரண தயைவைத்ததினால் நாங்களும் பிராணன் தப்பிவந்து உம்முடையபாதங்களையடைந்தோம். மேலும் அந்த ஸ்ரீராமச்சந்திரர் சொன்ன வார்த்தைகள் இவையிவைஎன்று ஒன்றும் விடாமல் விபரமாய்ச் சொல்லி, இதுதான் நாங்கள் போய்வந்த ஒற்றத்தொழிலினுடைய விதமென்றுகூறி, பின்னும் உமக்குண்டாயிரானின்ற குறைவுகளும், பொல்லாங்குகளும் நீங்கி இன்றுமுதல் தீர்க்காயுளுடையவர் ஆகக்கடவீரென்று வாழ்த்தினார்கள். அப்போது மகோதரன் இராவணனைப்பார்த்து, ஐயா இராவணேஸ்வரா! பெரியோர்களிட சாப வார்த்தையைப்போல தப்பாமல் கொல்லத்தக்க வில்லைப் பிடித்துக்கொண்டிருக்கின்ற அந்த மனிதர்கள் சமுத்திரஜலத்தை இலேசி லணையிட்டு அடைத்து வல்லமையுள்ள சேனைகளுடனே யாவரும் துதிக்கும்படியான நம்முடைய ஊரை வந்து சேர்ந்தாரென்றபோதே இனிநாம் ஆலோசித்துச் செய்யத்தகுந்த செய்கையுமுண்டா யிருக்கிறதாவென்று சொல்லிப் பின்னுஞ்சொல்லுகிறான்.

நாம் சீதையை விட்டுவிட்டபோதிலும் தேவர்கள் இராவணன் பயந்தானென்று இகழ்வதுமல்லாமல், உம்மோடு ஸ்ரீ ராமலட்சுமணருக்கு உண்டான பகையை

ஒழியவிடார்கள். ஸ்ரீராமன் சண்டையிலே ஒருவேளை சிநேகமாகிறதா யிருந்தாலும் உம்முடைய ஊரைக் கிட்டினபிறகு அவர்கள் செய்யப்போகிற அவமானத்தை இப்படியென்று சொல்லத்தகுந்ததோ? நாம் படைகளுடனே போய்ச் சமுத்திரத்தின் அக்கரையில் அவர் இருக்கும்போதே குரங்குகளுடனே அம்மனிதரையும் கொன்று திரும்பி நம்மிடம்வந்து சேரவேண்டுமென்பதை ஆலோசியாமற்போய்விட்டோம். இப்போது அவர்கள் இங்கேயே வந்திருக்கிறார்கள். இனி அவரைக்கொல்லுதலை விட நமக்கு வேறே உறுதிப்பாடுமுண்டோ? இச்சித்தது சமீபத்திலே கிடைக்கப்பெற்றால் வெகுதூரம்போய்ப் பிரயாசப்பட்டு ஜெயம்கொள்ளுதலிலும் சிறப்பான தன்றோ? ஓ திரிலோககண்டகரா யிரானின்ற ஓ இராவணேஸ்வரா! ஆயிரவெள்ளமான நம்முடைய ராக்ஷதசேனைகள் அழியத்தக்கதா யிருந்தாலும் நூறு ஊழிக்காலம் வேண்டியதாயிருக்கும். நமக்குச் சேனையில் என்னகுறைச்சல்? சிங்கத்தைக்கண்ட நாய்க்கூட்டங்களைப்போல ஓடிவிடுமேயல்லாமல் நீ கோபித்துப் புறப்படும்போது இந்த அற்பக்குரங்குகளும் உன்னெதிரே நிற்கமாட்டுமோ? அப்படி யிருக்கவும் நம்முடனேபகைத்துவந்தோரைத்தங்களுடைய சேனையுடனே மடங்குண்டு பெரிய சமுத்திரத்திலே வீழ்ந்து சிதறுண்டு ஓடிப்போகச் செய்யத்தக்க சேனையும் நானுமாய்ச்சென்று கொடிய யுத்தஞ்செய்கிற விதத்தைக்கொஞ்சம் தயைசெய்துபாரும். எனக்கு உத்தரவு கொடுமென்பதாய் இந்திரனை முதுகுகாட்டி ஓடச்செய்த அந்த ராவணனுடைய மனஞ் சம்மதப்படும்படியாய்ச் சொன்னான். அச்சமயம் தனது புத்திபூர்வமாய் அனுப்புவித்தறிந்த மாலியவான் சத்தியமாய் நாம்கேள்விப்பட்டதைப் பொதுநெறி நிலையாய்ச் சொல்லித் தெரிவிப்பது நல்ல அறிவாகுமென்று நினைத்து வேத சாஸ்திரவிதிகளினாலே நிச்சயமாய்ச் சொல்லப்பட்ட வஸ்துவாயினோர் இந்தராம லட்சுமணரே யென்பதை விபரமாய்ச் சொல்லத்தொடங்கினான். அப்பா ராவணா! நம்மிடத்திலே சண்டைசெய்ய ஏற்பட்டுவந்த ஓர் வீரன் சமுத்திரத்தாற் சூழப்பட்ட ஐம்பத்தாறு தேசத்திற்கும் ஏக சக்ராதிபதியான தசரதருடைய குமாரனாய்த் திருநாமஞ் சாத்திக்கொண்டு வந்திருக்கிற பரஞ்சோதி ஸ்வரூபரென்றும் சுருதியினுச்சிலே எழுந்தருளியிருக்கும் தேவதேவரான சர்வேசுரரென்றுஞ் சொல்லுகிறார்கள். அவருக்கிளையவரான லட்சுமணரை அப்பரம்பொருளுக்குச் சயனத்தலமான ஆதிசேஷனெனச் சொல்லுகின்றனர். அவர் உயர்ந்த நிலையிலே நின்று முற்றத்துறந்து, அகங்காரமெனச் சொல்லப்பட்ட குற்றமற்ற ஜீவன்களினிடத்தி லெல்லாம் சேஷத்துவ பாரதந்திரியமாகிற ஞான நிலையைக் காட்டுகின்றோரைப்போல, எல்லாஸ்வரூபத்திலும் பரிசுத்தனெனச் சொல்லப்பட்டதை லோகப்பிரசித்தமாய்ச்சொல்லிக்கொள்ளுகின்றார்கள்.

அந்த இரண்டு வீரர்களுடைய விற்களைப் பிரமதேவன் குலாசங்களுடைய சத்தையெல்லாம் வேறாய் எடுத்து வில்லாய்ச் செய்த அக்காலத்திலே அதற்கேற்றநாணி அத்திருவனந்தாழ்வானெனச் சொல்லப்பட்டோனையே அமைத்திருக்கின்றதாம். பாணமாய்ச்செய்தகாலநேமியோ என்றால் ஒருத்தனாலும் களிக்க இசையாதென்று சொல்லுகிறார்கள். வாலியையும் அவனுக்குப்பிள்ளையாய்த் தோன்றினோனையும், தேவேந்திரனெனச் சொல்லுகிறார்கள். நீலனென்கிற குரங்குசேனாதிபனை உலகங்களையெல்லாஞ்சுட்டழிக்கத்தக்க அக்கினி என்கிறார்கள்.எமக்குச்சமானாகிய ஸ்ரீராமதூதரை வாயுவெனவுஞ் சாம்பசிவனெனவும் சொல்லுகிறார்கள். மேலுமிந்த ஸ்ரீராமதூதர் இனிமேல் பிரமனாகப் போகிறாரென்றோர்விசேஷமுஞ்சொல்லுகின்றார்கள். அந்த பிரமபதவியைஅவருக்குகொடுத்தோர் இராக்ஷதர்கள் கருவை அறவே யறுத்துவிடும்பொருட்டு இந்தவூருக்கு வந்திருக்கும்படியான சர்வலோகரக்ஷகரா யிருக்கிற ஸ்ரீராமபத்திரரென்று எல்லாருஞ் சொல்லுகிறார்கள். இவர்களுடைய வல்லமையைப்பார்த்துஒப்பிட்டுச் சொன்னார்களோ? தெரியாது. குரங்காய் வந்தவர்களெவ்வொருவரும் பிரம சிவேந்திராதிதேவர்களென்கிறார்கள். இந்தச் சமாசாரங்களையெல்லாஞ் சொன்னவர்கள் பயத்தினால் சொன்னார்களோ? அல்லது அவர்களுடைய ஞானதிருஷ்டியினால் தெரிந்துசொ

ன்ஞர்களோ? தெரியாது. சீதையைப்பிரம் மருத்திரேந்திராதி தேவர்களுக்கு மெட்டப்படாத பரமபத நாட்டிலுள்ள சாக்ஷாத் ஸ்ரீமஹாலட்சுமி யென்று சொல்லவேண்டுமேயல்லது இந்த லோகத்துக்கு எளிய பெண்ணென்று இகழ்வாய் நினைக்கப்படாதென்றும், மஹா பரிசுத்தமானவளென்றும், அமிர்தத்துடன் அவதரித்தவளென்றும், சர்வலோகங்களுக்கும் நிருபாதிகத் தாயானவளென்றும் சொல்லிக்கொள்ளுகின்ருர்கள். மீன்களையுடைய சமுத்திரமாகிய அகழியால் சூழப்பட்ட மேருசிகரமாகிய லங்காபட்டணத்திற்கு ராஜஞன ராவணனுடைய வரத்தை நினைத்துத் தர்மஸ்தாபனர்கள் தங்கள்சுயேச்சையாகவே மனிதவடிவுகொண்டு காட்டுக்கு வந்ததை தேவர்களுடைய பிரார்த்தனையால்தான் வந்ததென்று சொல்லுகிருர்கள். அப்படியே அளவில்லாத உற்பவங்களும் சம்பவித்தனவென்கிருர்கள். சர்வ ஜீவர்களுக்குந் தாயைக் காட்டிலும் அதிக கிருபையையுடையவரான சீதாபிராட்டி எழுந்தருளியிருக்கின்ற அந்த ரகசியமான அசோகவனத்தை யறியத்தக்கவரான ஸ்ரீராமதூதரால் இந்த லங்கையைக் காத்துக்கொண்டிருந்த தேவதையானது உதையுண்டு, அந்தக் காவலைவிட்டு ஓடிப்போய்விட்டதென்றும் அதனாலேயே இந்த யுத்தமுஞ் சம்பவித்ததென்றும் சொல்லுகிருர்கள். அந்த ஸ்ரீராமருடைய அம்புக்கு லக்ஷயமானவர்கள் இப்போது ராஜரீகஞ்செய்துவருகிற ராக்ஷதர்களென்கிருர்கள். இப்படியென்று நம்முடைய வசத்திலிருந்த பொய்யாத நாவையுடையவனும், தேவமந்திரியான பிரகஸ்பதிக்கும் ஒரு முழம் உயர்ந்தவனுமான உன் தம்பியாகிய விபீஷணன் சொல்லிவிட்டுப் போனனென்றும், வெளியரங்கமாகச் சொல்லுகின்ருர்கள். இவைகளையெல்லாம் நான் கேள்விப்பட்டதுமல்லாமல், என்குலம் ஆதியில் நாசமானதும் பரம்பொருளாகிய அவனாலேதான். இதையெல்லாம் உன்னிடத்தில் எனக்கிருந்த பக்ஷத்தினலே பின்விளையும் காரியங்களைக் குறித்து மனதில் வருத்தமுற்று உனக்குச்சொன்னேன். இனியாவது சீதையை விடுவாயானல் இந்தப் பொல்லாங்கு விலகிப் போய்விடுமென்று மாலியவான் கூறினன். இப்படி சொன்னதைக் கேட்டு, ராவணன் மாலியவானைப் பார்த்து நீ சொன்னவைகளெல்லா மிருக்கட்டும். அந்த மனிதர்களும், வானரங்களும், இன்றுவரை தப்பிநின்ற தேவர்களென்று சொன்னதுமல்லாமல், அவர்களுக்கு நான் தோற்றுப் போவேனென்றுஞ் சொன்னய். நீ இதுவரையில் பல சாஸ்திரங்களையும் படித்தறிந்தது இவ்வளவுதானு? என்று இகழ்ந்து பின்னும் சொல்லத் தொடங்கினன்.

இந்தப் பேதைகளான மனிதர்களுடனே குரங்குகளல்ல, மற்ற ராக்ஷதர்கள் தானகட்டும், பூலோகத்தி லுள்ளவர்கள், நாகலோகத்தவர்கள், சுவர்க்கலோகவாசிகள், எல்லாரும் பகைத்து, என்மேல் சண்டைக்கு வந்தபோதிலும் சீதையின் விஷயத்தில் என்றைக்காகுலும் என் வல்லமையில் தப்பிப் போய்விடுவேனே? இந்தலோகங்களையெல்லாம் ஜெயித்தவைகளாய் என் கையில் ஒன்றல்லவே. அநேக பாணங்களிருக்கின்றதுகளே. அவைகளந்த அநுமானுடைய கொடுமையிலும் அதிகமாய் முன்னலே மிகுந்த உக்கிரமான யுத்தஞ் செய்த தேவர்களுடைய முதுகையும் ஊடுருவிப்போனவைகளாயிற்றே. அப்படிப் பட்டதுகள் இன்று இந்தக் குரங்குகளின் மேல் செல்லச் சக்தியற்றதுகளோ? சூலாயுதத்தைக் கையிற் பிடித்துக் கொண்டிருக்கின்ற பரமசிவனே ஒரு குரங்காய்ப் பிறந்துவந்தாலென்ன? என்னைக்கண்டா லிடைந்துபோகவேண்டுமேயல்லாமல் என்னை என்னசெய்யமாட்டுவான். என்கையில் இருக்கின்ற கூரியபாணங்கள் பாற்கடலைக் கடைந்தகாலத்தில் உலகமெல்லாம் பயப்படும்படிப் புறப்பட்டுவந்த காலகோடி விஷத்தையும் கவளீகரிக்க வல்லமைகளாகும். என்வல்லமை உனக்குத்தெரியாதுபோலிருக்கிறது. யுத்தத்தில் எனக்குத் தோற்றுப்போன சக்ராயுதனை விஷ்ணுவே இந்த ஸ்ரீராமனகவந்து எதிர்த்தாலுந்தான் என்ன? என்கையிலிருக்கின்ற பாணங்கள் சூரிய சந்திரர்களும் தீய்ந்து போகும்படி அதிவேகமாய்ச் செல்கின்றவைகளல்லவோ? அவைகள் சமுத்திரத்தைக் கடையும்போது உண்டான கௌஸ்துவமணியோ? அவன் மார்பில் தரித்துக்

கொள்ளுகிறதற்கு வெற்றி பொருந்திய வாளாயுதத்தை யுடையவர்களான தேவர்களுக்கு ராஜனுகிய இந்திரன் குரங்குருவங் கொண்டானேயானுல், அன்றைக்கு அவனுல் பிரயோகிக்கப்பட்ட வஜ்ஜிராயுதமறுக்கச் சிறகு வெட்டுண்டு நிற்கமட்டாமால் விழுந்த அற்பமாலைகளோ? என் புஜமலைகள் அவனுலறுபடுதற்கு என்று இப்படி ராவணன் சொல்லிக்கொண் டிருக்கும்போது குலஸ்திரீகள் உள்ளமே தூதாகப்போகத் தங்களுயிர்க்குச் சமானமாகிய நாயகன்மார்கள் தங்கள் சொந்தவீட்டிற்குப் போகவும், அவர்களைவிட்டுப்பரஸ்திரீகள் சோர்வடையவும், சக்கரவாகப் பக்ஷிகளுடைய வியசனங்கள் விலகவும், மேருமலையையு மூடிக்கொண்டிருந்த பிரளயவெள்ளம் வடிந்ததுபோல உலகத்தை மூடிக்கொண்டிருந்த ராத்திரிகழிந்து, பொழுது விடிந்தது. லங்கைப்பட்டணத்தின் தன்மை இப்படிப் பட்டதென்று எட்டிப்பார்க்கவும் பயந்து, அந்தமதிலுக்குப் பக்கமாய்த் தினந்தோறும் போய்க்கொண்டிருந்த சூரியன் இப்போது சக்கரவர்த்தித் திருக்குமாரர் யுத்தத்திற்குவந்திருக்கின்றுர். ஆதலால் நமக்கு நல்ல சலிகை கிடைத்ததென்று வெகுநாளாய்க் காணுமலிருந்த அந்த லங்கையைப் பார்க்கிறதற்காகப்புறப்படுகிறதுபோல உதயமானுன்.

ஒற்றுக்கேள்விப்படலம் முற்றிற்று.

---

## இலங்கைகாண்படலம்.

அப்போது ஸ்ரீராமர் அருந்ததிக்குச் சமானமாகிய சீதாபிராட்டியார் அவ்விடத்திலிருக்கின்றுளென்று மிகுந்த ஆசையுடனே சுவர்க்கலோகத்தைக் காணப்போகிறவரைப்போல, துணைவர்களான சிறிய திருவடி, சுக்கிரீவமகாராஜன் அங்கதன் ஜாம்பவர் முதலானவர்கள் சுற்றிவரவும், இளையபெருமாள்பின்னேவரவும், சுவேலா பர்வதத்தின் சிகரத்தின்மே லேறியருளினுர். மிகுந்த பலவந்தர்களான வீரர்களெல்லாம் நெருங்கிச் சூழ்ந்துவரவும், சுக்ரீவ மகாராஜரும், அங்கதனும் கைலாகுகொடுத்துக்கொண்டு வரவும், ஸ்ரீகாகுஸ்தவம்சோத்தாரகர் அதிகபலமுள்ள சிங்கமும், யாளியும், புலியும் சூழ்ந்துகொண்டு வரும்படியாக உயர்ந்த பருவதத்திலேறுகின்ற ராஜசிங்கத்துக்குச் சமானமா யிருந்தார். மேலும் அந்த ராமர் அலைமோதிப் பொங்கிச் சப்திக்கின்ற சமுத்திரஞ் சூழ்ந்த உலகமெல்லாம் மூடிக்கொள்ளுகினற இருளைப் போல மொய்த்துக்கொண்டிருக்கின்ற மிகுந்த ராக்ஷதர்களுடைய நகரமும், அதன் ஐஸ்வரியமும், அழியச்செய்கின்ற உற்பாதத்தைக்காட்டும்படி, கிரமமாய் உதயகிரியினின்று உதித்து வராமல் இருந்தாற்போலிருந்து உக்கிரமாக வடக்கே ஒரு மலையினுச்சியில் உதித்த கருஞ்சூரியனை யொத்திருந்தார். பெரிய யுத்தத்தில் மிகுந்த அஸ்திரவருஷங்களைப் பொழிகின்ற வில்லுடனேகூட அந்தச் சுவேலாசலத்தின் மேல் ஒருபெரிய காளமேகம் தாமரைகளைப்பூத்துவந்ததுபோல, ஸ்ரீகோதண்டபாணியாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் திருக்கைகளும் திருவடிகளும் திருக்கண்களும் திருமுகமும் திருவாயும் பிரகாசிக்க எழுந்தருளியிருந்தார்.

வலிய மலையையொத்த திருத்தோள்களையுடைய சக்கரவர்த்தித் திருமகனுர்பெருமைபொருந்திய தம்முடைய கோதண்டவல்லமையினுல் சமுத்ரநாயகனுய வருணனை வரவழைத்து மலைகளால் சேதுகட்டிக் கடலைத்தாண்டித் சுவேலாசலத்தின் மீது வானரவீரர் கூட்டத்தினடுவே சுவர்னகிரிகளுக்கு மத்திலிருக்கின்ற ஒரு மரகதமலையையும் ஒத்திருந்தார். பெரியசமுத்திரத்தின்மத்தியில்திருவணையைக்கண்டுவருணனிடத்திற்கொண்ட கோபம் மாறிய ஸ்ரீரகுநாதர் சீதாபிராட்டியென்னும் தமதுஇனியஉயிர் பிரிந்த பிறகு துணைபிரிந்த அன்றிற்சேவலைப்போல வருத்தமுற்றிருந்தவர் தமது இரண்டு திருக்கண்களாலும் லங்காபட்டணத்தைப் பார்த்து இளையபெருமாளுக்கு அதன் பெருமையைக்காட்டத்தொடங்கினுர். லோகத்தில் வித்துவான்கள் நம்முடைய அயோத்தியாநகர முதலாகிய எல்லா லோகத்திலுள்ள எல்லா நகரங்களுக்கும் உபமானஞ்சொல்லிப் புகழ ஏற்படுங்காலத்தில் இந்திரபதவியாகிய சுவர்க்கலோகத்தைத் திருஷ்டாந்தப் படுத்துகிறுர்களில்லை. அதற்கும் இதற்குமுள்ள தாரத

ம்மியந்தெரிய அரிதானதால் இதன் பிரபாவத்தை அவர்கள் அறியவில்லேபோலிருக்கின்றது.

குற்றமறப் பிரகாசிக்கின்ற செம்பொற்றகடு படித்தலத்தில் சூரியனுங் கண்கூசத்தக்க மிகுந்த ஒளியுள்ள நவரத்தினங்களால்செய்து முடிக்கப்பட்டவைகளும், ரிஷிகளாலுஞ் சித்திரிக்கக் கூடாததுகளுமான மாளிகைகளினுடைய பொருத்தமான வேலேமானங்கள் அதிகபிரகாசமுள்ள கிரணங்கள் சூழ்ந்ததினுல் கண்ணுக்குத் தெரியவில்லே. விரிந்த கிரணங்களேயுடையவைகளாகிப் பிரகாசிக்கின்ற ரத்தினங்களினுடைய கிரணக்கூட்டங்கள் ஆகாயவரையில் அளாவுகின்றதைப் பார்க்கும்பொழுது, சிங்கத்துக்குச் சமானமாகிய வெற்றியோடுங்கூடிய வல்லமையுள்ள ஆஞ்சநேயன் வைத்த நெருப்பால் இன்னமும்இந்த லங்காபட்டண மெரிகின்றதென்று நினேக்கும்படியா யிருக்கின்றதைப் பார். மேலும் மேகங்கள் பரவிப் படர்ந்திருக்கின்ற பெரிய மரகதத் தளத்தில் தங்கத்தால் கட்டிய உப்பரிகைகளின் தழைந்த கிரணக்கூட்டங்கள் சூழும்படியாக மத்தியில் களங்கமற்ற வஜ்ஜிரக்கற்கள் பதித்துக் கட்டியவீடுகள், கொதிப்பாகி படர்ந்துள்ள ஒரு தடாகத்தில் தாமரைப்புஷ்பத்தில் வசிக்கின்ற அன்னப் பக்ஷிகளேப் போலிருக்கின்றதைப் பார். அக்கினிக் கொழுந்துபோன்ற ஜோதியையுடைய ரத்தினங்களேயழுத்திக் கட்டியமிகுந்த பிரகாசமுள்ள மேல்மாடங்கள் நெருங்கி ஜொலிக்கின்றபடியால், கருமை நிறத்துடன் ஆகாயமார்க்கமாய்ப் போகும் மேகங்களெல்லாம் அந்தக் சுடர்கள்பட்டு உலேக்களத்தில் வேகும்படி காய்ச்சின இரும்புக்கொப்பாகச் சிவந்து ஒளிவீசுகின்றதைப்பார். வளேந்தவில்லின் வடிவத்தைப் போலத் திரண்ட தோளேயுடைய லட்சுமணு! அதோ கோபக்கண்ணுேடுங் கூடிய யானேயானது இருள்படிந்த நிறத்தையுடையதாக விருந்தபோதிலும் உரலுக்குச் சமானமான பலம்பெற்றிருக்கின்ற கால் நகங்களினுல் பொற்றரையைக் கல்லிப்பேர்த்துத் தனது துதிக்கையினுல் அந்தப் பொற்புழுதியை வாரித் தன்னுடம்பெல்லாம் பூசிக்கொண்டு பொன்மலேயைப்போலப்போகின்றதைப்பார். யுத்தஞ்செய்கின்ற வில்லேயுடைய இளேயவனே! மிகுந்த பிராகாசத்தோடுங்கூடிய சுவர்னத் தேர்களில் கட்டியிருக்கின்ற ஒளியையுடைய வாழைமரக்காடுகளும், அந்தத் தேரின்மீது கட்டிப் பறந்துக்கொண் டிருக்கின்ற சுவர்னக் கொடிக்காடுகளும், ஆகாயத்தினிடத்தில் பரவியிருக்கின்ற மேகமாகிய அழுக்கைத் துடைத்து, அந்த அகண்டஆகாயமாகிய கண்ணுடியைப் பிரகாசப் படுத்துகிறது போலு மிருக்கின்றதைப் பார். இதுவுமல்லாமல், இந்தலங்காபட்டணமானது நூல் போட்டதுபோல் வரிசையாக ஒன்றின் பக்கத் தொன்ருகச் சேர்த்து சுவர்ன்னத் தகடுபதித்துச் சித்திரங்களமைத்துப் பத்திபத்தியாய்க் கட்டியிருக்கின்ற மாளிகைகளாகிய ரத்தினமணிகளுக்கு நடுவே ராவணனுடைய மாளிகையானது நாயகப்பதக்கத்துக்குச் சமானமாகி, சமுத்திரராஜன் தரித்துக்கொண்டிருக்கின்ற ரத்தினமாலே போலுமிருக்கின்றதைப்பார். நல்லவிவேக மார்க்கத்தையுடைய தம்பி! அழகான லங்கையின் நெடுந்தெருவில் வர்ணத்துக்கொருரத்தினங்களினுற் கட்டப்பட்டிருக்கின்ற உப்பரிக்கைகளின் வரிசையான நிழல்படுவதனுல் தன்னுடைய சொந்த நிறமானது தெரியாமலும், ஒருநிறத்தையாவது சேராமலும், இன்னஜாதியானது யென்று அறியப்படாமலும், குதிரைகள் போகின்றதுகள்பார். அதிக பராக்கிரமம் பொருந்திய சுத்தவீரனே! மன்மதனுங் கண்டு புத்திமருண்டுஆச்சரியப்படும்படியாய் தெளிவான பளிங்குக்கல்லால் பிரகாசிக்கத்தக்தாக கட்டினஉப்பரிகைகள் வேறே ஒருபொருளின் சாயைபடும்போது மாத்திரங் காணப்படுகின்றனவேயன்றி, அப்படிக்கில்லாதபோது ஆகாயத்தோடு ஆகாயமாய்க் காணப்படவில்லே. அவை காணப்படுகிற தோற்றம், ஜலத்தினுலே கட்டப்பட்டவைகள்போல நிழலிடுகிற தன்மையுடையவைகளா யிருக்கின்றதுகள் பார். அம்புகோத்து வளேந்த வில்லேப்பிடித்திருக்கின்ற அழகிய கையையுடைய ஓ லட்சுமணு! வெண்மையான நிறம்வாய்ந்த சந்திரனுடைய கிரணங்கள் பிரகாசிக்கிறதுபோலும் காணப்படுகின்ற ஆகாயத்தையளாவிய முத்துப்பந்தலுக்கு மத்தியில் அலங்கரித்து வைக்கப்பட்ட மரகதரத்தினமானது, பாற்கடலின் மத்

தியில் சயனித்துக்கொண் டிருக்கிற பரம விராட்புருஷருக்கு நிகராக இருக்கின்றது பார். மிகுந்த பலத்தையுடைய ராஜசிங்கத் திற்கொப்பாகிய தசரதகுமாரனே! சூரிய னைப்போலும் அதிக பிரகாசத்தை வீசுகி ன்ற உப்பரிகையின்மீது ஒரு தேவஸ்திரீ யானவள், கறுத்த வுறையினின்றும் வெளி யிலெடுக்கப்பட்ட கண்ணாடியானது, ஆகா யத்தினிடமாக இராகுவென்கிற கரும்பாம் புபற்றிவிழுங்கி மறுபடியும் கக்கின சந்திர னுக்குச் சமானமாக இருக்கிறதை உற்றுப் பார். வெற்றியைக் கொடுக்கின்ற வில்லைக் கையில் வைத்திருக்கிற வீரசிகாமணியே! அநேக கொடிகள் நெருங்கிய உப்பரிகை களுள்ள லங்கையி லிருக்கின்ற நீண்டகழு த்தையுடைய ஒட்டகங்கள், அந்த லங்கை யினுப்பரிகைகளில் புஷ்பங்களைப்போல பிரகாசிக்கும்படியாகப் பதிக்கப்பட்ட ரத் தினங்களினின்று வீசுகின்ற கிரணங்களைத் தோமவிருக்ஷங்களினுடைய கொத்துகளா கிய தளிர்களென்று பறித்துத் தின்னும் படியாகக் கழுத்தை நீட்டுகின்றதைப்பார். வெற்றிமாலையைத் தரித்த வில்லைக் கையி லேந்திக் கொண்டிருக்கிற அதிக பராக்கிர மமுடைய லட்சுமணா! ஸ்திரீகள் பூமாலை யை நீக்கிவிட்டுத் தங்கள் கூந்தல்களுக்கு ஊட்டுகின்ற அகிற்புகையினால் முழுதுஞ் சூழப்பட்ட ஒரு பவளமாளிகையானது, யானையுரியைப் போர்த்துக்கொண் டிருக் கிற பார்வதி சமேதராகிய சாம்பசிவமூர்த் தியைப்போலும் பிரகாசித்துக்கொண்டிரு க்கின்றதுபார். ஓ தசரதமகாராஜருடைய அருந்தவப்புத்திரனே! விஸ்வகர்மாவான வன் நீலரத்தினத்தினால் அலங்கரித்துச் செய்யப்பட்ட செய்குன்றங்கள் ஒருவரும் தெரிந்து கொள்ளக்கூடாத வஞ்சக மனத் தையுடைய இராக்ஷதர்களாலே சம்பாதித் துவைக்கப்பட்ட பாபநிக்ஷேபங்களைப்போ லுமிருக்கின்றவைகளைப் பார். மானைப்போ லமதர்த்த தங்களுடைய பார்வையானது வியர்த்தமாகும் படியாக மோகத்தினால் பிணிப்புண்டு சொந்தநாயகர்களை விட்டுப் பிரிந்துவந்து, தங்களிடையைப்போலத் தத்தளிக்கின்ற உள்ளத்தை யுடையவர்க ளும் சர்ப்பத்தின் படத்திற்குச்சமானமான அல்குலை யுடையவர்களுமாகிய ராக்ஷதஸ் திரீகள், வருஷகாலத்தை எதிர்ப்பார்த்துக் கொண் டிருக்கின்ற மயில் கூட்டங்களைப் போல நம்மைப் பார்த்துக்கொண் டிருக்கி றார்கள்பார். அகாலத்தில் பழுக்கும்படி மாதுளம் பழத்துக்குப் புகையூட்டுவது போல, வண்ணப்பெண்ணொருத்தி ராக்ஷத ராஜஸ்திரீயினுடைய குஜங்களில் சந்தன த்தால் கோலமெழுதி, அது உலரும்படி பொன்தூபமுட்டியால் அகிற்புகை யூட்டு கின்றதைப் பார். ஓ புதுமலராற் றொடுத்த மாலையைத் தரித்திருக்கின்ற வீரசிகாமணி யே! நம்முடைய சைனியங்களைப்பார்க்கும் படியாக, வீணாநாதத்திற்குச் சமானமாகிய சொல்லையுடைய தேவஸ்திரீகளும் தேவ புருஷர்களும், நமக்கு இனி வாழ்வுண்டா யிற்றென்று லங்காபட்டணத்தை எல்லாம் பாழாக்கிவிட்டுப் போட்டு ஓடிப்போகிற வர்களைப்போல ஆகாயமார்க்கமாக ஏறிப் போகிற விதத்தைப்பார். என்று இந்தப் பிரகாரமாக லங்காபட்டணத்தை இளைய பெருமாளாகிய லட்சுமணருக்குத் தாரக மந்திரவாச்சியராகிய ஸ்ரீராமமூர்த்தியான வர் காட்டினபோது, சுவாமி சொன்னபிர காரம் இளையபெருமாள் திரும்பச்சொல்லு கிறதற்குக் கூடாமையால், அந்த லங்கைப் பெருமையைக் கண்டு அதிசயப்பட்டுக் கொண்டிருக்கின்ற காலத்தில், லங்காதிபதி யான ராவணன் வானர சைனியங்களினு டைய பெருமையைப் பார்க்கும்படியாக ஆகாயத்தை யளாவிய சிகரங்களோடுங்கூ டிய உத்தரகோபுரத்தின்மீது ஏறினான்.

இலங்கைகாண்படலம் முற்றிற்று.

---

## கோபுரப்படலம்.

கட்டுக் கயிறுகளெல்லாம் தெரிக்கத் தக்கதாகக் கோபிக்கும்படியான மத்தகஜத் துக்குச் சமானமாகிய அந்த இராவணன் சீதையினிடத்தில் வைத்த ஆசையாகிய மன்மதபாணமானது தைக்க வாட்டமுற் றும் மல்யுத்தஞ்செய்து காய்ப்பேறிய தோ ள்களுடன் அனேக கவடுகளையுடைய ஒரு பெரிய மலைபோல் உத்தர கோபுரத்தின் மீது நின்றான். சுகுமாரியாகிய சீதாபிராட் டியாருடைய அழகினாலே தளர்வடைந்து மெலிந்திருந்த அந்தத்தோள்கள்சண்டை

யென்று சொன்னமாத்திரத்தில் மேருமலை யைக்காட்டிலும் பருத்துப் பலங்கொள்ளு ம்படியாகக் கர்வித்திருக்கின்ற மனதையு டையவனுகி, தன்பத்து சிரசிலும் சுவர்ன கிரீடங்கள் பிரகாசிக்கவும், அழகியபொன் மலைக்குச் சமானமாக உத்தரகோபுரம் பிர காசிக்கவும்விளங்கினுன். பிரளயகாலத்தில் உலக முழுகும்போது உலகத்தைவிட்டு மேலேறிப்போகின்ற அனேக சிரசுகளோ டுகூடிய சர்ப்பராஜனுகிய வாசுகிக்குச் சமா னமானவனுய், பஞ்சபூதங்களோடு கூடிய தேகத்தையும், பத்துத் திசைகளிலும் பார் வையுற்றிருக்கின்ற பத்துத் தலைகளையும், மற்றப் பக்கபாகங்களையும் மறைத்து நிழல் பரப்பிக்கொண்டு யாவர்களும் ஆச்சரியப் படும்படியான விசாலமாகிய குடைபிரகாசி க்கவும், பக்கங்களி னின்றுகொண்டு வீசு கின்ற வெண்சாமரைக் காற்றினுல்களித்து திரண்டு உயர்ந்திருக்கின்ற ஒருபெரிய மலை யின்மீது தத்திவிழுகின்ற அருவியாறுக ளைப்போல நீண்ட பெரிய உத்தரீயங்கள் தன்னுடைய விஜயம்பொருந்திய மார்பில் அசைந்துகொண்டிருக்கவும்விளங்கினுன். தேவாமிர்தத்திற்குச் சமானமாயிருக்கின்ற ஊர்வசியும், வாசனையுள்ள தாமரை மலர் போலப் பரிமளிக்கின்ற தேகத்தையுடைய அழகிய திலோர்த்தமையும், சிவந்த இத ழையும் குயிலையொத்த சொல்லையுமுடைய மேனகையும், முதலிய உயர்ந்த ஸ்திரீக ளெல்லாம் தாங்கள் தெய்வமாதர்களாயிரு ந்தும், சீதைக்கு ஆயிரத்தி லொருகூறும் ஒப்பாகாமல் சூரியனைக்கண்ட சந்திரனைப் போல விளங்குகின்றமையால், அவளுக்கு அழகை விளைவித்துக்கொண்டு பக்கத்தில் நின்று நிர்த்தனம் பண்ணவும், வீழிப்பழ த்திற்கொப்பான இதழையும், குறுத்துமூங் கில்போன்ற மிருதுவான தோள்களையுமு டைய கந்தருவ ஸ்திரீகளில் நன்குய் பாட த்தக்கவர்கள் ஒவ்வொரு பக்கத்திற்கு ஆயிரத்தெழுபது பேர்களாக இரண்டு பக்கத்திலும் இரண்டு வரிசையாய்ச் சூழ்ந்து பாடிக்கொண்டு நிற்கவும் விளங்கி னுன். வாயாகிய உறையினிடத்தில் பதிந் திருக்கின்ற வளைந்த கூர்மையான மிகுந்த பிரகாசமுள்ள வாளாயுதங்களுக் கொப்பா கியபற்கள் இளஞ்சந்திரிகையை வீசிக்கொ ண்டிருக்கவும், குண்டலங்கள் படிந்துறை ந்து கொண்டிருக்கின்ற தோள்களாகிய ஒவ்வொரு மலையிடத்திலும் சப்திக்கின்ற மேகங்கள் மழைத்தாரைகள் சொரிந்தாற் போல முத்துமாலைகள்பிரகாசிக்கவும், அரு மையான உயிரானது தேயும்படி மனமா னது சீதா சீதாவென்று கருதானிற்கவும், பலசாஸ்திரங்களைக் கேள்விப்பட்டிருக்கிற செவியாகிய வாய்கள் தேவநாத சுரங்களை யுடைய வீணையினிசையினேடு நாரதமகா முனிவர் பாடுகின்ற சாமவேத கீதாமிர்தத் தை வாரிக்குடிக்கவும், கொடுமையான கை யினிடத்தில் வேலாயுதத்தை யுடையவர்க ளும், வாளாயுதத்தையுடையவர்களும் வில் லையுடையவர்களுமாய்ச் சங்கரமூர்த்திக்கும் தோல்வியடையாத பலசாலிகளான நூறு கோடி ராக்ஷத மெய்காப்பாளர்கள் சூழ்ந்து காத்துக்கொண் டிருக்கவும் விளங்கினுன். லோகங்களை யெல்லாம் பெயர்த்து உள் ளங்கையில் தூக்கத்தக்க சக்தியையுடைய வர்களும், லங்காபட்டணம் தோன்றின காலந்தொட் டிருக்கிறவர்களுமாகிய, யா தொரு குற்றமில்லாத கணித நூலோர்க ளாலே கணக்கிட்டுச் சொல்லப்பட்ட நூறு கோடிய க்ஷர்கள் பக்கத்தில் வில்லைப்பிடித் துச் சூழ்ந்து ஆர்ப்பரித்துக் கொண்டிருக் கவும், பூமியில்சஞ்சரிக்கின்றவர்களும் ஜல புஷ்களமான மேகத்தினுடைய சப்தத்தை யொத்த பேரிகைகளையும், முருடென்கிற வாத்தியங்களையும்,சமுகத்துவாரத்தில்முழ க்கிக்கொண்டிருக்கவும், விஷத்தையும் மே கத்தையுமொத்த விழிகளையுடைய நாகஸ் திரீகளும், பூங்கொடிக்குச் சமானமாகிய இடையையுடைய பூலோக ஸ்திரீகளும், இனிய மதுரம்பொருந்திய சுவையைத் தருகின்ற சொற்களையுடைய சுவர்க்கலோ கத்து ரம்பா ஸ்திரீகளுடன் சேர்ந்து மது ரமான கானங்களைப் பஞ்சமசுதியில் பாடிக் கொண்டிருக்கவும் விளங்கினுன். மேகமு மஞ்சும்படியாகக் கர்ஜ்ஜிதச் சொல்லையு டைய கட்டியக்காரர்கள் விஷத்தைக் கக் கிக்கொண்டு அக்கினி ஜொலிக்கின்ற கண் களையுடையவர்களாயும், பல நிறமுள்ள மெய்ச்சட்டையை யணிந்து கையிற் பிரம் பைப் பிடித்துக்கொண் டிருக்கின்றவர்களா யும், கேகயப் பக்ஷியையொத்த வேகத்து டனே நடந்து நான்குதிக்குகளிலும் கட் டியங் கூறிக்கொண்டு திரியவும், அட்ட

குலாசலங்களையும் சமானமென்பதைச் சொல்லுதற்குக்கூடாத விசாலமான தோள்களினிடத்திலே பூசியிரானின்ற கலவைச் சாந்தினுடைய பரிமளமானது இராவணன் வருகிறானென்று ஒற்றர்கள் சொல்லுவதுபோல அஷ்டதிக்குகளிடத்திலேயும் போய்க் கமழ்ந்து கொண்டிருக்கவும், கையிலே பிரம்பையுடையவர்களும், தீயானது பறக்கும்படியாய் விழிக்கின்ற கண்களையுடையவரும், கணத்திற்குக் கணம் ஒவ்வொரு வகையான கோபத்தையுடையவர்களும், நகரக்காவலை விரும்புகின்றவர்களுமாகிய பதினாயிரம் இராக்ஷதவீரர்கள் சூழ்ந்துகொண்டு நிற்கவும் விளங்கினான். இப்படியாக அழகிய தோரணவாசல்மீது கருக்கொண்ட கறுத்தமேகம்போல நின்ற இராவணனானவன் ஸ்வதப்பிரமாண வேதப்பிரதிபாத்திய வஸ்துவாயும், அபௌருஷேயமாயிருக்கப்பட்ட வேதபுருஷனாலுந் தேடிக்காண அரிதான முதற்காரணப்பொருளுமாயிருக்கப்பட்ட சாக்ஷாத் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியைத் தன்னுடைய இருபது கண்களாலேயும் உற்றுற்றுப் பார்த்தமாத்திரத்திலே பத்துவாய்களு மடிந்ததுகள். இருபதுகண்களிலேயும் குபுகுபென்று நெருப்புப்பொறி பறந்ததுகள். அப்படிப்பட்ட சமயத்திலே அஷ்டதிக்குகளிலேயும் வெள்ளிடியிடித்து நெஞ்சிலே கோபாக்கினியானது திகுதிகென்று பற்றியெரிந்தது. இராவணேசுவரனுக்கு இடதுகண்களும் இடதுதோள்களும் துடிக்கப்பெற்றன. இவ்விதமாயிருக்கப்பட்ட துர்ச்சகுனங்கள் காணும்படியாக இக்ஷ்வாகுவமிசப் பிரபுவான ஸ்ரீராமமூர்த்தி யென்பவரைக் கண்டு, ஆகாயமார்க்கமாய்ச்செல்லாநின்ற சூரியன் தனது இராசியிலே வரக்கண்டு எதிர்த்த கொடிய ராகுவைப்போலே அதிகோபமடைந்தான். சாரனெனச் சொல்லப்பட்ட ஒற்றனைப்பார்த்து, ஸ்ரீராமனுடைய வடிவழகே அவனை எனக்குத் தெரிவிக்கின்றது. மற்றச்சேனாவீரர்களை இன்னாரின்னாரென்று தெரியக் காட்டென்று வினவ, சாரனானவன் காட்டத்தொடங்கினான். ஐயா இராவணேஸ்வரா! அதோ இளஞ் சூரியனைப்போலேப்பிரகாசித்துக் கொண்டு ஸ்ரீராமபிரானுடைய பக்கத்திலே இரானின்றவன்தான் சூர்ப்பநகையைத் திரிலோக பயங்கராகிய உமது தங்கையென்று கேட்டமாத்திரத்திலேபெருங் கோபங்கொண்டு, தனது அழகிய கையினிடத்திலே வாளையுருவி, உமதுதங்கையான மங்கையர்க்கரசியானவள் ஓவென்றழுது புலம்பும்படியாய் முலையையும் மூக்கையுஞ் சேர்த்துப்பிடித்து அறுத்தவனாகிய இலட்சுமணன். இவன் தருமசிந்தை யுடையவனேயல்லது அதர்மநோக்கமுடைய னல்லாதவனாகி, கருங்கடலைச் சக்கரவாள கிரியானது சூழ்ந்து காத்துக்கொண் டிருக்கிறதுபோலே ஸ்ரீராமச்சந்திர பிரபுவுக்கு யாதொருவருத்தமும் தோற்றாதபடிச் சகல பணிவிடையுஞ் செய்து, சுவர்க்கத்தை யடைந்த பேர்களும் துறக்கக்கூடாத நித்திரைக்கு அதிதேவதையான க்ஷாமதேவதையை ஓடும்படியாகக் கோபித்துத் துரத்திவிட்டவன்.

அந்த ஸ்ரீராமச்சந்திர பிரபு கைதொட்டுக்கொண் டிருக்கும்படியாகக் கைலாகு கொடுத்துக் கொண்டு நிற்கப்பட்டவன். தன்னுடைய தமையனான வாலியோடு இந்த அண்டங்களெல்லாம் நடுங்கிப்போகக் கொடிய யுத்தஞ்செய்து தன்னுடைய கீர்த்தியால் பிரகாசித்துக்கொண் டிருப்பவனும், சூரிய குமாரனுமான சுக்ரீவனென்கிற நாமதேயமுடையவன். அவன்பக்கத்திலே நிற்கிறவன் அசுரர்களெனச் சொல்லப்பட்டவருக்குத் தோல்வி யடைந்தவர்களான தேவர்களுடைய வாசஸ்தலமான தேவலோகத்திலே அமிர்தமுண்டாக மந்தரகிரியிலே வாசுகியெனச்சொல்லப்பட்ட சர்ப்பராஜனைக் கயிறாகப்பூட்டி, தனதுபெரிய தோள்களினாலே க்ஷீரசாகரமர்த்தனஞ் செய்த வாலியினுடைய குமாரனான அங்கதனெனச் சொல்லப்பட்ட பெயரினையுடையவன். அவனைச்சேர நிற்கிறவன் சூரியனுடைய கதிக்கு முன்பாகப்போய் அவனிடத்தில் நவவியாகரணங்களைக் கற்றுணர்ந்தவனும், இந்தப்பூலோகத்தைத் தனது தந்தத்தினாலே பெயர்த்தெடுத்த ஆதிபுருஷவராகமூர்த்திக்குச் சமானமாகிய பலத்தையுடையவனும், இந்தச் சமுத்திரமெனச் சொல்லப்பட்டதைத் தாண்டி இந்த இலங்கைக்குவந்த அநுமானென்கிற பெயரினையுடையவன். இவனுடைய காரியங்களையெல்லாம் முன்னாலே நீர் பார்த்திருக்

கின்றீரல்லவா? இதோ நிற்கிறவன் அக்கினி குமாரனுன நீலனெனச் சொல்லப்பட்ட பெயரினையுடையவன், இவனைத் தெரிந்தவர்கள் பலம்பொருந்திய சூலாயுதமும்பாசமுமில்லாமல் வந்திருக்கின்ற விஷத்திற்குச் சமானமாகக் கறுத்த எமனெனச் சொல்லுவார்கள். அதோமலைக்குச் சமானமாகப் பெரிய ஆகாரமுள்ளவன்தான் நளனென்னும் பெயரினையுடையவன். இவன் வருணனுனவன் வழிகொடுக்கவில்லையென்பதாய் ஸ்ரீராமமூர்த்தி அதிககோபங்கொண்டு அக்கினியாஸ்திரத்தினுலே கடலைச் சுட்டபோது, அச்சூடு ஆறுததற்குமுன்னே சமுத்திரத்திலே சேதுவைக்கட்டி வழியுண்டாக்கினவன்.

அவனுடைய பக்கத்திலே நின்றுகொண்டிருக்கப்பட்டவன் மூன்று காலத்தையும் தன்னுடைய புத்தியினுலே முறைப்படி அறியத்தக்கவனும், தேவர்களெல்லாரும் கடலின்கண் விஷமுண்டாகும்படியாய்க்கடைந்த அந்தக்காலத்திலு மிருந்த பெரியோனுமான கரடிப்படைக்குத் தலைவன். அவனுடையபெயர் ஜாம்பவனெனச் சொல்லுவார்கள். அவன் இவ்வளவு வயதாகியும் இன்றைக்குங்கூட இந்தச்சப்த லோகங்களையும் அம்மனைக்காய்போல் எடுத்தெறியத்தக்க அதிக பலாஷ்டியனுக இரானின்றவன். அப்பேர்ப்பட்ட ஜாம்பவனுக்கு இருபாரிசத்தினும் ஒரு கரியமலையின் இரண்டு பாரிசத்திலும் இரண்டுமேருமலை நின்றதுபோலும் நிற்கிறவர்கள் இராமலட்சுமணர்கட்குச் சமானமானவர்களும், தேவமருத்துவர்களுடைய புத்திரர்களுமான மிகுந்த பலசாலிகளாய் இரானின்றவர்களாகும். அதோ நிற்கிருனே அவன்தான் குமுதனெனச் சொல்லப்பட்டவன். இந்த பாரிசத்திலிரானின்ருனே அவன்தான் குமுதாக்ஷன். அவனுக்கு அருகிலிரானின்ருனே அவன்தான் கவையாக்ஷன். அதோ நிற்கின்ருனே அவன்தான் சிவனென்றும், பிரமாவென்றும், நாம் சந்தேகிக்கும்படி இலங்கா பட்டணத்திற்கு வந்த தூதனுன அநுமானுடைய பிதாவெனும் வாயுதேவனுக் கொப்பாக நினைத்தற்கேதுவான கேசரியென்கிற நாமதேயத்தையுடைய அதிக பலசாலியானவன். மிகுதியான பலத்தோடுங் கூடிய தோள்களையுடைய சிங்கத்திற்குச் சமானமாக விஷத்தையுடைய சர்ப்பராஜர்களும், ஜீவரத்தினங்களைக் கக்கும்படியாய்க் கோபஞ்செய்துகொண் டிரானின்ருனே. அவன்தான் அஷ்டகுலாசலங்களையும் வேரோடுபெயர்த்தெரியத் தகுந்த வல்லமையையுடைய சரபனென்கிற நாமதேயத்தையுடையவன். அந்தப் பாரிசத்திலிரானின்றவன் சதவலியென்கிற பெயரையுடைய வானர வீரன். இதோமூன்றுகண்ணில்லாதவனுய் இருந்தபோதிலும் திரிபுரங்களைச் சுட்டெரித்த உருத்திரமூர்த்திக்குச்சமானமாய் நிற்கிறவன் பனசனென்கிற வானரவீரன். எவ்வகையான பல சண்டைக்கும் தானென்று ஏற்று நிற்கிறவன் இடபனென்கிற பெயரையுடையவன். அவனெதிரே தோன்றுகின்ருன் மகாபுத்திமானுன சுசேஷணனென்கிற பெயரையுடையவன். மூங்கிற்புதர்களுள்ள மலைகளை யெல்லாம் வேரோடு பிடுங்கிப் பூமியினுடைய கடினத் தன்மையை நீக்கி மிருதுவான தன்மையையுண்டாக்கினவனும், வடவா முகாக்கினியையும் குளிரும்படியாகச் செய்த கோபத்தையுடைத்தா யிரானின்றவனும், சூரிய குமாரனுன சுக்ரீவனுக்கு இடதுபாரிசத்திலே நிற்கின்ருனுமான காளைதரன் ததிமுகனென்கிற பெயரினையுடையவன். அவன் அருகிலே நிற்கின்ருன்தான் சிங்கமென்னும்படியான பலமுடைய சங்கனென்று சொல்லப்பட்டோன். கேளுமையா பிரதாப லங்கேஸ்வரா! இவ்விதப்பட்ட வானர சைனியங்கட்கு எண்ணுமில்லை. எல்லையுமில்லை. ஆகாய நக்ஷத்திரங்களை இவ்வள வென்பதாய் அளவிட்டாலும், கடலிலுள்ள மீன்களையெல்லாம் கணித்துத் தொகை செய்தபோதிலும், இந்த வானரர்கள் அளவிலே அகப்படமாட்டார்கள். நீரே பாருமையா என்று காண்பித்தான்.

இப்படி சாரன் சொன்னதைக் கேட்டுக் கோபங்கொண்ட மிகுந்த பலவானுன ராவணன் புன்சிரிப்பு சிரித்து, ஓ சாரா! காட்டிலே வசித்துக்கொண் டிரானின்ற அற்பமான குரங்கைப் புகழுகிருயென்ன? வனங்களிலும், பலமலைகளிலும், திரிந்துக்கொண்டிரானின்ற அநேக மான்குலங்கள் கூட்டங்கூடி, ஒரு சிங்கத்தை என்ன

செய்யமாட்டும். அதுபோல இந்த வானரங்களெல்லாம் என்னை என்னசெய்யக்கூடுமென்று சொன்னான். அந்தச்சமயத்திலே சூரியவம்சோத்பவரான ஸ்ரீராமமூர்த்தியானவர் இராவணனுக்குத் தம்பியெனச்சொல்லப்பட்ட விபீஷணாழ்வானைப் பார்த்து, தம்பி விபீஷணாழ்வானே! அதோ இலங்காபட்டணத்தினுடைய கோட்டைக்கோபுரத்தின்பேரில் நின்று, நம்முடைய சைனியங்களைக் காணும்படியாய் நினைவுகொண்டு, ஆகாயமும் மறையும்படியாய்ச்சேர்ந்திரானின்றவர்களைக்கிரமமாய் இன்னபெயரினையுடையவ ரின்னாரென்பதாய்ச் சொல்லக்கடவாயென்று நியமிக்க, விபீஷணாழ்வார் சொல்லுகிறார். ஓ சக்கரவர்த்தித் திருக்குமாரரான சுவாமி! ரம்பை - ஊர்வசி - திலோர்த்தமைமுதலாய்ச் சொல்லப்பட்ட ஸ்திரீகட்கு நடுவே கோபுரத்தின் உச்சிமீதிலேறி நிற்கின்றானே; அவன்தான் தன்னுடைய பந்துக்களான நாற்றுக்களையெல்லாம் நரகமான கழனியிலே நடும்படியாக அந்நிலத்தைச் சேறுசெய்துவைத்திராநின்ற அற்பகிருத்தியத்தையுடைய இராவணனென்கிற பெயரினையுடையோனென்றார்.

கோபுரப்படலம் முற்றிற்று.

---

## மகுடபங்கப்படலம்.

விபீஷணாழ்வான், இராவணனென்று சொல்லி மற்றொருவனை நினைத்துச் சொல்லுகிறதற்கு முன்பாகச் சூரியகுமாரரான சுக்கிரீவமகாராஜா கண்களிலே நெருப்புப்பொறி பறக்கும்படியாய் அஞ்சனாதேவியெனச் சொல்லப்பட்டவள் தன்னுடைய குமாரனுக்குச் சூரியனைக்காட்டிச் சிவந்த கனியென்று சொன்னமாத்திரத்தில், அச்சூரியன்மேலே பாய்ந்த ஆஞ்சநேயரைப் போலக் குபீரென்று இராவணன்பேரிலே சண்டைக்குப் பாய்ந்தார். தன் பிதாவான சூரியன் ஆயிரங்கிரணங்களையும் பரப்பிக்கொண்டு உதயகிரியினிடத்திலிருந்து அந்த இலங்காகோபுரமாகிய மலையானது சிதறுண்டு போகும்படியாய்ப் பாய்ந்ததுபோலுமென்று கண்டோர் சொல்லும்படியாய்த் தேவாமிர்தம் ஒருசேரத்திரண்டு இருந்ததுபோலுள்ள சுவேதகிரியினுச்சியைவிட்டு இராவணனேறிநின்ற உத்தரகோபுரமானது சிதைந்துபோகும்படியாய்ப் பாய்ந்தார். பள்ளத்தைத் தேடிக்கொண்டு போகும்படியான ஜலத்தைப்போல அதிவேகமாய்ச்சென்று மேருமலையினது ஒரு சிகரமாகிய இலங்கையானது முழுமையும் நடுங்கி நொறுங்குமென்னும்படி அந்த உத்தரகோபுரத்தின்மேல் பாய்ந்த சுக்ரீவமகாராஜனானவர்,கடலுக்குச் சமானமான விசாலத்தையுடையசீதாபிராட்டியாரானவள் இராவணன் அபகாரத்தின்பொருட்டுத் துக்கித்தழுதகாலத்தில் அந்த இராவணன்மீது தனது புத்திபூர்வகமாய்ப் பாய்ந்துச்சென்ற ஜடாயுமகாராஜனுக்குச் சமானமானார்.

இப்படிச் சுக்ரீவமகாராஜனானவர் பாய்ந்தபோது ஜனனவிடாய் பட்டோடிவந்தடைந்த மெய்ஞ்ஞானியர்கள் கண்டு, விடாய் தணியும்படியான நீலமேகஸ்யாமளரூபரும் கிருபாசமுத்திரமானவரும் ஆகிய ஸ்ரீராமபிரானைப் பார்க்கும்படியாக இமையாத கண்களைப்பெற்றுப் பேறடைந்தோமெனச் சந்தோஷப்பட்டுக்கொண்டு இருந்த ரம்பைமுதலான ஸ்திரீகள், தாம் வசித்துக்கொண்டிருக்கும்படியான மலையிலே இடிவிழுந்தமாத்திரத்திலே நடுங்கிப் பறந்துபோகின்ற மயில்கூட்டங்களுக்கொப்பாக ஓடிப்போனார்கள். உதயகாலத்தில் உண்டான இருளை நாசஞ்செய்யாநின்ற சூரியகுமாரராகிய சுக்கிரீவமகாராஜர் மிகுந்த பலமுள்ளவனான இராவணனுக்கு எதிராகப்போய், நீலமலைக்குமுன்னே நின்ற கயிலைமலை போலவும், க்ஷீரசாகரத்தைக் கடைந்தபோது அதிலே பிறந்துவந்த ஆலகாலவிஷத்திற்கு முன்பாகநின்ற ருத்திரமூர்த்திக்குச் சமானமாகவும் நின்றார். அப்படி நின்ற சுக்ரீவரை ராவணன் பார்த்து, இவ்விடத்திலே நீ வந்தகாரியமென்னவென்று கேட்டான். அதற்குப் பதிலுத்தரம் ஒன்றேனுஞ்சொல்லாமல் எதிரேபோய், அட்டதிக்குகளையும் வென்ற உயர்ந்த பெரிய தோள்களிருபதுமொன்றோடொன்று பின்னிக்கொள்ளவும்,தேகம் நடுக்கங்கொள்ளவும், அவனுடைய மார்பிலே பதியும்படியாய்த் தம்முடைய இரண்டு கைகளாலு மோங்கிக்குத்தினார். அப்படிக்

குத்திய குத்தைப்பட்டுக்கொண்டு ராவணனனவன் மிகுந்த கோபத்தோடும் ஆக்கிரமித்து,நெருப்புப்பொறிபறக்கும்படியாகப் பார்த்து, பத்துத்திசைகளிலேயும் பிரதித்தொனியுண்டாகும்படியாக மகாவிருக்ஷக்கிளைகளைப்போலே பக்கத்திலே தழைத்து உயர்ந்திருக்கின்ற இருபது பெரிய கைகளாலேயுமோங்கி, இடியிடித்ததுபோலே சுக்ரீவமகாராஜரை யடித்தான். அப்படி யடித்த ராவணன் தன்னுடைய விரல்கள் பட்டவிடத்திலே அவருடைய தேகத்திலே காயம்பட்டு, ரத்தஞ்சிதறி யொழுகானிற்கக் கர்ஜ்ஜித்துக்கொண்டு, எதிரே போய் ஒருவருடலோடு ஒருவருடல் தாக்கும்படியாக இடித்து,கண்களில்அக்கினிப்பொறி பறக்கும்படியாகக் காலினாலே யெற்றினன். அப்படி அவன் உதைத்துத் தள்ளினமாத்திரத்தில் குபீரென்று பாய்ந்து, கிரீடங்கள் தரிக்கப்பட்டிருந்த பத்துத்தலைகளினிடத்தும் பத்து முகங்களிலும் சுக்ரீவமகாராஜன் எட்டியுதைத்தார். அப்படி எட்டிஉதைத்த சுக்ரீவருடைய இரண்டுகால்களையும் ராவணனனவன் பிடித்து, ஒருகணப்பொழுதிற்குள்ளாக தேகமானது பதைபதைத்து அலைவுறும்படியாகப் பலவித சேஷ்டைகளைச்செய்து, ஒரு மதத்த யானையைச் சிங்கமானதுபிடித்து அலட்டினாற்போலே அலட்டி, அந்தக் கோபுர தளத்தின்மீது போட்டுத் தன்னுடைய காலைக்கொண்டு மிதித்துத் துகைத்தான். அப்படி மிதித்த ராவணனுடைய பெரிய தேகத்தைவேகமாய்ப்பற்றி இழுத்துத் தம்முடைய மிகுந்த பலத்தினலே அந்தத் தளத்தின்மீது தள்ளி யமுக்கி, இரண்டு கோரதந்தங்களையுடைய அவன் வாயிலே குத்தி மலைக்குகையிலிருந்து சொரிகிறது போலவும் ஒழுகுகின்ற ரத்தத்தைக் கையினாலேவாரிச் சுக்ரீவமகாராஜன் குடித்தார். அப்படிகுடித்த மகாராஜருடைய தேகமாகிய மேருமலையை அநேக படங்களோடு கூடிய தலையினையுடைய சர்ப்பராஜனைப் போல பலவகைப்பட்ட கைகளினாலும் பிடித்து, மையைப்போலுங் கொடிய நிறத்தையுடைய இராவணன் மிகுந்த கோபத்துடனே திக்குகளிலேயும், மலைகளிலேயும், பூமியிலேயுமாகக் கிறுகிறென்று சுழற்றினன்.

அப்படி சுழற்றின ராவணனுடையமார்பிலே ரத்தமானது சிந்தும்படியாகக்குத்தி தன்னுடைய பருத்துயர்ந்தபெரியகைகளைக்கொண்டு அவன் இடுப்பைப் பிடித்துத் தூக்கி, அவனுடைய மனது திடுக்கிட்டுப் பலமும் தைரியமும் கெடும்படியாகத் திரிபுரங்களை அன்று சுட்டெரித்த உகாந்த கால ருத்திரனைப்போலே அவனைக் கசக்கி இலங்கைக் கோட்டையைச் சூழ்ந்த அகழியிலே விட்டெறிந்தான். இப்படி விட்டெறிந்த சுக்ரீவமகாராஜரை இராவணன் சீக்கிரமாகப்பாய்ந்துபிடித்து தானுமந்த அகழியில் விட்டெறிந்தான். அவருமப்படியே மறுபடியும் குபீரென்று பாய்ந்து இவனை எதிர்த்துநிற்க, இருவரும் ஒருவரையொருவர்விடாமல் இறுகக்கட்டிப் பிடித்துக்கொண்டு, பாய்ந்துஅந்த அகழியில்விழுந்தார்கள். அப்படிவிழுந்தவர்களாகிய இராவணனும், சுக்ரீவமகாராஜனும் கிறுகிறென்று சுழன்றார்கள். ஒருவரை யொருவர் விட்டுப்பிரிந்து இடசாரி வலசாரியாகவும் வலசாரி இடசாரியாகவும் திரிந்தார்கள். ஒருவரையொருவர் காயப்படுத்தினர்கள். ஒருவர்க்கொருவர் தோற்கவில்லை. ஒருவரையொருவர்விட்டு நீங்கவுமில்லை. ஒவ்வொருவரும் வீரபௌருஷமானவார்த்தைகளைப்பேசி ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்து, ஒருவர்க்கொருவர் பின்னிடையாமல் எதிர்த்துநின்றார்கள்.

இப்பேர்ப்பட்ட மகாவீரத்தோடும் மிகுந்த கோபங்கொண்டு தளர்ச்சியடையாமலும்சிறிதுவீரமும் நஷ்டப்படாமலும் சமயுத்தஞ்செய்தார்கள். அப்போது சூரியகுமாரராகிய சுக்ரீவமகாராஜன் அந்தஅகழியேகடலாகவும், தம்முடைய அழகுபொருந்திய கைகளே வாசுகியாகவும், ராவணனைப்பற்றி வலிக்கும்போது அச்சுழியிலே அகப்பட்டுக்கொண்டு முழுகிப் போகின்ற ஜலயந்திரம்போலே சுழலும்படியான இரக்கமற்ற ராக்ஷதனாகிய அந்த இராவணனே மந்தரகிரியாகவும், தாம் அந்தக் கிரியைப் பற்றிக்கடைந்த வாலிக்குச் சமானமாகவும் தோன்றினர். இந்தப் பிரகாரமாக ஒருவரையொருவர் அடித்துக் காயப்படுத்திப் புண்ணினின்றும் ஒழுகுகின்ற இரத்தமானது ஆலையிலே உடைந்த கரும்பினின்றும்புறப்பட்டசாறு பெருக்கெடுத்தோடுகிற

துபோலே பெருகியோட, அவ்விரண்டு பேர்களும் கழுகும் பருந்தும் பறக்கிறது போலே ஆகாய மார்க்கமா யெழும்பின போது அவர்களுடைய கண்களினின்றும் புறப்பட்ட கோபாக்கினியாலே லோகமெல்லாந் தீயத்தலைப்பட்டது. விசாலமான ஆகாயத்திலே யுத்தஞ்செய்யானின்ற சுக்ரீவமகாராஜரானவர் கருமேகம்போன்ற நிறத்தையுடைய மேருமலையையொத்த கோபமுள்ளவனுன இராவணனுடைய வெற்றி மாலையைத் தரித்த இருபது தோள்களினுலேயும் கட்டிப்பிடிக்கப்பட்டபோது, இராகுவினுலேபிடிக்கப்பட்ட பரிவேடத்தோடு கூடிய தன்னுடைய பிதாவாகியசூரியனுக் கொப்பாகவிருந்தார். இந்தப்பிரகாரம் ஆகாயத்தில் மிகுந்தயுத்தஞ் செய்துகொண்டிருக்கிறபோது சூரியகுமாரனுன சுக்ரீவ மகாராஜனுடைய மேனியைத் தனது திரண்ட தோள்களினுலே மறைத்த மிகுந்த பலமுள்ள ராவணனுனவன், உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியபகவானை மறைத்த மேகத்திற்குச் சமானமாக இருந்தான். அப்பொழுது சூரிய குமாராகிய சுக்ரீவமகாராஜர் பாதச்சிலம்புகள் சப்திக்கும்படி நடந்துவந்து வேடிக்கைபார்த்துக்கொண்டிருக்கின்ற ராக்ஷத ஸ்திரீகளெல்லோரும் கீழேவிழுந்து கதறும்படியாகவும், பகைவர்களாகிய இராக்ஷதர் பெரியலங்காபட்டண முழுதும் ஓடி இளைப்படையவும், உத்தர கோபுரமானது தலைகீழாய் விழுந்து பொடிப்பொடியா யிடியவும், சுவர்க்கலோகத்திலே யிருந்து ஒரு சிங்கமானது தனித்துக் குதித்தாற்போலே வந்து குதித்தார்.

அப்படி குதித்தமாத்திரத்தில் மிகுந்த கோபத்தோடு அதிகமான பலாட்டியனுய் இருக்கப்பட்டதைப் பொருந்தும்படியாய் வந்துவிழுந்த இடியுடனே சம்பந்தப்பட்டமின்னலான பற்களையுடைய ஒருபெரிய காளமேகமானது விழுந்தாற்போலே,உன்னைக்கொன்று தின்று விடுவேனென்று அவரைப் பின்றொடர்ந்து வந்து, இரண்டு கைகளையுந் தாவிப்பிடிக்க அவனைச் சுக்ரீவ மகாராஜர் அதிகமான கோபாவேசத்தோடெதிர்த்து அவனுடையஇருபதுகைகளையுஞ் சேரப்பிடித்து எமனும் பயப்பட்டுப் போகும்படியாய்ப் பூமியிலே வாரியறைந்தார்.

அப்போது இராவணன் சுக்ரீவமகாராஜரை ஒருயந்திரப் பிரதிமையைத் தூக்கியெறிவதுபோல ஆகாயத்திலே விட்டெறிந்தான். அவர் அதைத்தப்பித்துக்கொண்டு ஒருபந்து தாக்குண்டு எழும்பினது போலே சடக்கென்பதாய்ப்பாய்ந்து, இராவணனை யெதிர்த்துநின்றுர். இப்படியாக அவர்கள் லங்காபுரி பட்டணத்திலுள்ள விருக்ஷங்களெல்லாம் புற்பூடு நசுங்கவும் விசாலமான அந்தப் பூமிமுழுமையும் பாளம்பாளமாய்க் கிழிந்துபோகவும், கொடிய கோபமுதிர்ந்து ஒருவரை யொருவர் ஓங்கிக் குத்தும்பொழுது, பெரிய சுவர்களெல்லாம் நெக்குவிட்டுப் பிளந்துபோய் விட்டதுகள். உயர்ந்திரானின்ற மலைகளெல்லாம் பொடிப்பொடியாய் நொறுங்கிவிட்டன. லங்காபட்டணக் கோட்டையினுடைய மதில்களெல்லாம் அஸ்திவாரத்தோடே யிடிந்து விழுந்துவிட்டன. இவ்விரண்டு பெயரும் நெருங்கி உயரப் பறக்கின்ற காற்றுடியைப்போலே கிறுகிறென்று சுழலும்பொழுது அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த ராக்ஷதர் அந்த வேகத்தாலே அவர்களுடைய மேனியை வெண்மை கருமையென்று அறியாமல், கைகளைப்பிணைத்து சுற்றிநின்று இருவரும் ஒருவரோடொருவர் பிரிந்தார்கள் அல்லது ஒருவரோடொருவர் சேர்ந்தார்கள் என்றுதெரிந்துகொள்ள மாட்டாதவர்களாய், இராவணனைச் சுக்கிரீவமகாராஜர் வாறியெறியும்பொழுது இராவணனெறிந்தான் சுக்கிரீவனெறியவில்லை யெனவும், சுக்ரீவரை ராவணன் வாரியெறியும்பொழுது சுக்ரீவனெறிந்தான் இராவணனெனச் சொல்லப்பட்டவனெறியவில்லை யெனவும், சுக்ரீவர் இராவணனைத் தாக்கும்பொழுது இராவணன்தாக்கினுன் சுக்ரீவன் தாக்கவில்லையெனவும், ராவணன் சுக்ரீவரைத் தாக்கும்பொழுது சுக்ரீவன் தாக்கினுன் ராவணன் தாக்கவில்லை யெனவும், அவர்கட்கெதிரே நின்றும் அவர்களின்னுரென்று அறியாதவர்களாய்த் தாங்கள் கற்றிருந்த மல்யுத்த வித்தையெல்லாவற்றையும் இதைக் கண்டு மறந்துவிட்டார்கள். இந்தப் பிரகாரமாய் சுக்ரீவமகாராஜரும் இராவணனும் யுத்த

த்தை மகாகொரேமாய்ச் செய்துக்கொண் டிருந்தார்கள்.

அவ்விடத்திலே தம்மைச் சரணமடைந்தவர்களுக்கு வேண்டியதுகளைவேண்டிய படியே தருகின்ற கருணாநிதியும் அதிமானுஷ சேஷ்டிதருமாயிரானின்ற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியானவர் தம்முடைய உயிருக்குச்சமானமா யிருக்கப்பட்ட மிகுந்தபக்ஷமுள்ள துணைவரெனச் சொல்லப்பட்ட சுக்ரீவமகாராஜரைக் காணாததினாலே விசனமுற்று, அப்பா சுக்ரீவா! நானினைத்த காரியங்களெல்லாம் இப்பொழுதும் உன்னோடுமுடிந்து போய்விட்டது எனச்சொல்லித் தன்னுணர்வுமாறி, மனக்கலக்கமுற்றுச்சோர்ந்து சொல்லுகிறார். தம்பி சுக்ரீவா! ஒருமைப்பாடான என்னுணர்வே! என் உயிர்க்குச் சமானமாகிய துணையே! உன்னையிழந்து நான்மாத்திர மிருக்கிறதினால்எனக்கு ஒரு காரியமுமாகமாட்டாதே, அதுவுமல்லாமல் தேவர்க ளெல்லாரையும் துக்கசாசரத்தில் மூழ்த்தி ராக்ஷதர்களெல்லாருக்கும் வெற்றியைக் கொடுத்தாயே, உன்னுடைய கோபமானது என்னைக் கெடுத்துவிட்டதே, சீதையினுடைய ஆபரணங்களைக்காட்டி என்னுயிரைக்கொடுத்த உபகாரனே! இந்த ராக்ஷதர்கள் தெய்வத் தன்மையுள்ள அஸ்திர சஸ்திரங்களையுடைய மகா பலவந்தர்கள். மேலும் மாயவஞ்சனையிலே மிகவும் கைதேர்ந்த பாவிகளாச்சே, அப்படிப்பட்ட துஷ்டர்கள் கையில் நீ அகப்பட்டுக்கொண்டாயே, ஆகையால் அவர்களுடைய காவலைக்கடந்துஎவ் விதமாய் வருவாய்? நீ வராமற்போவாயேயானால் இந்தப் பதினாலு லோகங்களையும் நான் பெற்றபோதும் அந்த வாழ்வோடு வாழ்ந்திருப்பேனோ? உன்னை விட்டுத்தனியனாய் உயிர் வைத்துக்கொண் டிருப்பேனோ? ஐயோ நானொருவிதமாக நினைக்க என்கருமந் தானொன்றாய் முடிந்துவிட்டதே, ஆகையினாலே இனி நான் வாழமாட்டேன் நீ இல்லையென்கிற வார்த்தையைக் காதினாலே கேட்கவுஞ் சகிக்கக்கூடவில்லையே, உன்னை அந்தத் துர்க்குணனான ராவணன் கொல்லுவானேயானால் எப்போதும் நிலைநிற்கும்படியான பழி உண்டாகத்தக்க தாய் பெரிய யுத்தகளத்திலே என்னைக் கொன்றவ னீயாகிறாயல்லவோ? என் கண்மணியே சுக்கிரீவா! நீ இறந்து விட்டாயென்கிற சொல்லைக் கேட்டால் உடனே நானுமிறந்து போகாமல் ராக்ஷதர்களுடைய பலவந்த சேஷ்டைகளை இந்த உலகத்திலில்லாமல் நீக்கிப் பிறகு என்னுயிரைமாய்த்து விடுவேனான போதிலும், அந்த ஸ்ரீராமன் தனக்கு நன்மை செய்த சிநேகிதர்களான பலசாலியான அநுமான் ஜாம்பவன், நளன் முதலாகிய பேர்களுடனே தன்னுயிர்க்குச் சமானமாகவந்துசேர்ந்த சுக்ரீவனை மறந்துவிட்டானே இவனொரு சுத்தவீரனாவென்று உலகத்தார் பழிப்பார்களே, ஆகையினால் அந்தக் காரியமும் செய்யமாட்டேன், நீவெகு குரூரமானகாரியஞ் செய்துவிட்டாய், பக்ஷமும் தயையுமில்லாத எனக்கு எப்போதும் நிலைநிற்கும்படியான உபகாரஞ்செய்த உன்னை நாம் ஒழித்துவிட்டு வாழலாமோ? இந்த எழுபதுவெள்ள வானரசைனியங்களில் ஒருவராவது குறையாதபடி மிகுந்த வளப்பத்தையுடையஅயோத்தியாபுரியைப்போய்ச் சேர்ந்தாலல்லவோ துக்கமற்றுச் சந்தோஷமாயிருப்பேனென்று ஸ்ரீராமர் துக்கப்பட்டுப் புலம்பிக்கொண் டிருக்கையில், சுக்ரீவமகாராஜரும் ராவணனும் ஒருவரையொருவர் வெற்றி கொள்ளாமலும் ஒருவர்க்கொருவர் தோல்வியடையாமலும் செய்யும் கொடுமையான யுத்தத்தில் மகாபலவந்தனான ராவணனுடைய கிரீடங்களிலுள்ள ஒப்பற்ற பத்து ஜீவரத்தினங்களையும் தன்னுடையபலத்தினாலே பற்றிப் பரித்துக்கொண்டு அவன் செத்தவனைப்போல வெட்கப்பட்டுக்கொண்டு நிற்க, குபீரென்றுபாய்ந்த வானரசேனைக்கு மத்தியில் வந்து கூட்டமாகிய ரத்தினங்களிழைத்த ஒவ்வொரு கிரீடங்களிலும் இருந்து பறித்த அந்த நாயகஜீவரத்தினங்களை அழுது துக்கித்துக்கொண் டிருக்கின்ற ஸ்ரீரகுநந்தனருடைய திருவடித்தாமரைகளில் பாத காணிக்கையாகச் சமர்ப்பித்து நமஸ்காரஞ் செய்து சகலருக்கும் ஜீவன் வந்ததுபோல எதிரேவந்து சுக்ரீவமகாராஜர் நின்றார்.

அப்படி நின்ற சுக்ரீவருடைய சரீரத்திற்பட்டபுண்களிலொழுகி வருகின்றரத்தமும் நீசச்சேரியில் வசிக்கும் ராக்ஷதனைத் தீண்டிவந்த அசுசமுந்தீர ஸ்ரீராமர் அந்த சுக்ரீவராகிய தமதன்பரைத் தம்மார்பிலே

சுக்கிரீவன் சண்டை



அங்கதன் தூது

இராவணனை மாருதி குத்தல்

தழுவிக்கொண்டு கருணைசுரந்து மடைதிறந்து ஒழுகுவதுபோலத் தாரைதாரையாய் ஒழுகாநின்ற தமது செந்தாமரைமலர்போன்ற கண்ணீராலே ஸ்நானம்பண்ணுவித்து, என் மனதை வியசனமானது பிளக்கவும் அங்குமிங்கும் ஆவிதடுமாறவும், சரீரம் ஸ்தம்பித்துத்தெளிவில்லாமற்றிகைத்துப் போகவும், எல்லா நூல்களையுங் கற்றுணர்ந்த உன்மனது திகைத்து என்னைப்பிரிந்து போனாயே என்று கண்களிலே அருவிச் சோரச் சுக்ரீவரைப்பார்த்துப் பின்னுஞ் சொல்லுகிறார். பெருமை வண்மை ஆண்மை இவைகள் பொறுமையினாலல்லவோ உண்டாகின்றன. செய்யத்தகாததாயும்எனக்குச் சம்பவிக்கப் போகின்ற பழியையும் மறந்து, இகபரமிரண்டையுங் கொடுக்கும்படியாய் நீ என்ன நினைத்து என்னசெய்தாயப்பா? போனவிடத்தில் அந்ததயை கெட்ட பாவியாகிய ராவணன் உன்னைக் கொன்றானேயானால் பிற்பாடு நான் பிராணனை வைத்துக்கொண்டிருந்து இந்த ராக்ஷதர்களை வேரோடே பறித்து வெற்றி கொண்டாலுந் தோற்றவனேயல்லாது ஜெயித்தவனாவேனோ? இப்போது நீ விரைவாய் வராமற் சற்றுத் தாமதிப்பாயேயானால் எனக்குச் சீதையினாலேயும் இந்தப் பூமியினாலேயுங் காரியமென்னயிருக்கிறது நீ இறந்து போனாயென்று உன்னைத்தொடர்ந்து நான்வருவேன், என்னை இந்த மூன்று லோகங்களுந் தொடர்ந்து வரும், அப்படியாகும்படியாய் விளையாட்டிலேயே என்னபிழை செய்துவிட்டாய் அப்பா தம்பி என்றிப்படியாக ஸ்ரீராமபிரான்சொல்ல, சுக்ரீவமகாராஜா சொல்லுகிறார்:—

சுவாமி! தேவரீருடைய காரியத்திற்காகக்காட்டிலே கழுகரசரானஜடாயு செய்ததுபோலவும், காட்டில் ஸ்ரீ குகப்பெருமான்செய்த நன்மைபோலவும் செய்யாமற் போனேனே, அவைகளைக் காதினாற் கேட்டவனுமல்லாதவனாய் விட்டேன். நான் உண்மையாய்க் கேட்டவனேயானால் ஜெகத்மாதாவை மீட்டுக்கொண்டு அந்நீசனுடைய பத்துத்தலைகளையுங் கொய்துக்கொண்டல்லோ வருவேன், பெரியபகை மூண்டிருக்கவும் என் குரங்குப் புத்திக்குத் தக்கதாயோடி தீராதிருக்கும் பகையைக் களையாமல் வந்தேன், என் பகையைத் தீர்த்து என் பிராணனையும் ரக்ஷித்துச் சகல சாம்பிராஜ்ஜியமுங் கொடுத்த உமக்கு உம்முடைய பகையை உமக்கே கொடுத்தேன். இன்னும் பிராணனையும் வைத்துக்கொண்டுதிரிகிறேன், திக்கஜத்தினுடைய தந்தங்களைவிட என் தோள்பலங் குறைந்து போச்சே, அப்படி குறையவில்லையென்பேனாகில் அந்தத் துராத்மாவினுடைய மார்பிலே எந்தன் கைகள் புதையும்படி குத்திவிட்டல்லவோ வருவேன், உம்முடைய அம்புக்குமுன்னே நான்போய் அந்தப்பகையை யறுக்கிறேனென்று கோபித்த என் மனமும் நானும் யாதொரு தீங்குமில்லாமலே வந்து சேர்ந்தோம். எல்லாச் சாஸ்திரங்களையும் கற்றறிந்த உம்முடைய தூதரானவர் போயிருந்தபோது, அஸ்திரங்களுடனே அநேககோடி ராக்ஷதர்கள் வந்தெதிர்த்தார்கள். அவர்களையெல்லாம் கொன்று தமது வாலினுடைய பலத்தைக் காட்டி வந்திருக்க, நான் அந்த வூரிலே என் கால் பலத்தைக்காட்டி ஓடிப்போயோடிவந்து விட்டேனேயல்லாமல் ஏதாகிலும் சாரசியமுண்டாயிற்றா? என்று சொல்லித் தமது தலையை வளைத்துக்கொண்டு வானராதிபதியான சுக்ரீவன் நின்றார். இப்படி விசனமுற்று நின்ற சுக்ரீவமகாராஜரைப் பார்த்து லங்காதிபத்திய மோதிரமும் மிகுந்த ஆபரணமும் பூண்ட விபீஷணாழ்வானானவர் ஒருவார்த்தைசொல்லுகின்றார். அந்த ராவணேஸ்வரனுடைய கிரீடமென்றால், அவன் தலைமேலிருக்கிறதன்றோ? அந்தத் தலையிலும் அது அதிகமாச்சே; அதிலுமுயர்ந்ததென்னவிருக்கிறது? அந்தக்கிரீடம் அவன் தலையைப் பார்க்கிலும் உயிரைப் பார்க்கிலும் சிறந்ததாயிற்றே; அவனுடைய பிரதாபகீர்த்தியை வேரோடேபிடுங்கிவந்து விட்டீரே. அந்த ஆதிசேஷன் சிரோரத்தினத்தைப் பறிக்க வேண்டினால் தன் காலினாலே கல்லெறிந்து விடவல்லவனான அந்த ராவணனுடைய சிரசிலுள்ள ஜீவரத்தினங்களைப் பறித்து வந்தீரே; இது மிகுந்த சௌரியவநீத திரிபுராந்தகனாலேயும் ஆகுமா? இதற்கு மேலான காரியமும் வேறேயுண்டா? ஓ வாகுவலயங்கள் பூண்ட புஜபலமுள்ள வானராதிபதியே! ஸ்ரீ உபேந்திரனுடைய மார்பிலே தரித்திருக்

கிற கௌஸ்துவ மணியையும் காளகண்டனை சிவனுடைய ஜடையிலே தரித்திருக்கிற பாலசந்திரனையும் பறித்தாலும், அந்த ராவணனுடைய சிரங்களிலே தரித்திருக்கிற கிரீடங்களைப் பறித்துவந்ததே வீரியாதிக்கமாச்சே. சிவன் கையிலிருக்கிற வாளை வாங்கிக்கொண்ட அந்த ராவணனுடைய கிரீடத்தைப் பறித்து வந்தீர். அவனை ஜயம் பண்ணுகிறதற்கு அஸ்திவாரம்போட்டு வந்தீரே? என விபீஷணர் சொல்லக் கேட்டு, ஸ்ரீராமர் அது மெய்தான், இப்போது தம்பி செய்துவந்த காரியம் கொஞ்சமா? இது அந்த ஆதிபுருஷ தாரகஸ்வரூபரான பகவான் செய்தா லென்னமோ சொல்லமாட்டோமே யல்லாமல், பின்னை யொருத்தராலே செய்து முடிக்கிற காரியமா? தன்னுடைய பலத்திற்கு இது ஜயமல்லவென்றும், சுத்தவீரர்கள் செய்யத்தக்கது இதொரு நன்மையா வென்றும் எண்ணிச் சொல்லுகிறாரல்லாமல், இது யாராலே செய்யச் சவுக்கிய மென்று ஸ்ரீராமர் அத்தியந்த இரக்கத்துடனே சொன்னார். அப்போது சூரியன் தன்னுடைய குமாரன் சாமார்த்தியத்தினாலே ராவணனுடைய கிரீடங்களைப் பறித்துவர அதைப்பகிரங்கமாய்க் கண்டு ஒன்றை விட்டொன்றாய் முடியப்போகிற தென்று அந்த ராக்ஷதனுக்குப் பயந்து ஒளித்துப்போகிறவனைப்போல அஸ்தமனகிரிக் கப்பால் மறைந்து போயினான்.

மகுடபங்கப்படலம் முற்றிற்று.

---

## அணிவகுப்புப் படலம்.

ஸ்ரீராமர் சுக்ரீவன் செய்து வந்த ஜயத்தை மனதில் நிறையவைத்து நினைத்து நினைத்துத் தோள்கள் பூரித்துக்கொண்டிருக்க, அப்போதுவந்த இருளுக்கு ராவணனுடைய கிரீடமானது கைவிளக்காய்ப் பிரகாசிக்கச் சுவேலாசலத்தை விட்டிறங்கித்தமதிருப்பிடம்போய்ச் சேர்ந்தார். ஒரு நாளும் இப்படிப்பட்ட அவமான மடைந்தவனல்லாத இலங்காதிபதியான இராவணேஸ்வரன் இதைத் தேவர்கள் வந்து நின்று கண்டார்களே யென்கிற நாணம் அதிகரிக்கவும், ஸ்திரீகள் பார்வை அப்போது பார்த்திருந்த புருஷர்கள் நோக்கம்போலக் கூசாமல் பார்த்திருக்கவும், சாகாது செத்தவனுடைய அபகீர்த்தியைப்போல அந்த உத்தரகோபுரத்தை விட்டு இறங்கிச் சென்றனன். அவமானத்தினாலே துளைக்கப்பட்ட மார்புடனே முகங்களையெல்லாம் தலைவளைந்த தாமரை மலர்கள்போல வளைத்துக்கொண்டு, தன்னுடைய அரண்மனைபோய் மத்தியபானத்தையும் ஆடல்பாடல்களையும் கேளிக்கைகளையும் விட்டு, ஒருவருடனேயும் பேசாமல் தன்படுக்கையிலே சேர்ந்தான். அந்தப் படுக்கையானது திரைகளையுடைய பால்சமுத்திரம்போலவும் அதின்பேரில் ஜீவரத்தினங்களையிழைத்து படுத்திருக்கிற இராவணன் பலதலைகளிலுமுள்ள ரத்தினங்களையிழந்து தன்மீது சயனித்திருக்கும் ஸ்ரீசாட்குண்ணியபரப்பிர்மத்தைப் பிரிந்திருக்கிற ஆதிசேஷனுக் கொப்பாகவு மிருந்தான். அப்படியிருக்கிற சமயத்தில் தாயைப்போலத் தன்னுடன் பழகினவர்களுக்கும், தன்னுடைய நிலைமை இப்படிப்பட்டதென்று காட்டாத மாயவித்தையில் தேறின சார்த்தூலன் பள்ளியறை வாயிலில் வந்துநிற்க, வாயிற்காவலாளிகளி லொருவன் ராவணனருகே வந்து, சுவாமி! எதிராளிகளுடைய சேனையிற்போய் அவர்கள் காரியமறிந்துவரச் சொல்லி யனுப்பின தூதன் வந்திருக்கிறானென்று வணங்கிச் சொல்ல, அழையென்று ஆக்கியாபித்தான். அவனும் வந்து வணங்கி நிற்க, அவனைப்பார்த்து, அடா! நீயறிந்து வந்த எல்லாக்காரியங்களையும் ஒளியாமற் சொல்லென்று ராவணன்கேட்டனன். அந்தச் சாதுரிய புத்திமானான தூதுவன் ராவணனுடைய முகக்குறிப்பினால் அவனுடைய மனத்தை யறிந்துகொண்டவனாய்த் தன் சரீரத்தை வணக்கமாய் வளைத்துக்கொண்டு மெள்ளத் தான் போய் வந்த வரலாற்றைச் சொல்லுகிறான்:—

சுவாமி! பதினேழு வெள்ளஞ் சேனைகளுடனேயும் வீரலக்ஷணத்துடனேயும் அநுமான் நம்முடைய மேலைக்கோட்டை வாயில் அரணைக்கைப்பற்ற வருகிறதாகவிருக்கிறது. அல்லாமலும் அங்கதன் பதினேழுவெள்ளஞ் சேனைகளுடனே தெற்கு வாயிலைக்கைப்பற்ற வந்திருக்கிறான். நீலன் பதினேழு வெள்ளஞ் சேனையுடனேயும் அனேகம் படைத்தலைவருடனேயும் கீழ்க்

கோட்டை வாயிலில் சேர்ந்திருக்கிறான். மற்றப் பதினேழு வெள்ளஞ்சேனையும் சுக்கிரீவனும் தன்னைப்பிரியாம லிருக்கும்படியாய் வடக்கு வாயிலில் நிற்கும்படி அந்தத் தசரத புத்திரன் குதூகலமாக வந்திருக்கின்றான். இந்தச் சேனைகளுக்கெல்லாம் இங்குள்ள காயுங்கனியும் சுற்றித்திரிந்து கொண்டு வரும்படியாக இரண்டுவெள்ளஞ்சேனைகளை யனுப்பியிருக்கின்றான். இந்த வாயில்கள்தோறுந் திரிந்து மர்மங்கள்தெரிந்து சொல்லும்படியாய் உம்முடைய தம்பியைத் திட்டம்பண்ணி யிருக்கின்றான். தானும் தன்தம்பியும் சண்டைக்கெதிர்த்து நிற்கிறதாயிருக்கின்றான். இதுதான் அவ்விடத்தில் நடந்த செய்தியென்று அந்தச் சார்த்தூலன் சொல்லி முடித்தனன். கண்களிலெல்லாம் நெருப்புப் பொறிபறக்க, நாளையதினம் அவர்களுடைய சரீரங்கள் என்னுடைய தேர்க்காலிலே நசுங்க அவர்கள் ரத்தம் புழுதியுடனே கூடப்பறக்கும்படியாய்ப் பண்ணிப் போடுகிறேன் பாரென்று பல்லை நெறநெற வென்று கடித்து, சுக்ரீவன் குத்தின குத்துகளினாலே ரத்தம் பீறிட்டு அந்த ரத்தக்குறியால் சிவந்து சூரியவுதயமான நீலமலை இளவெயிலோடு பிரகாசிக்கிறது போலப் பிரகாசிக்கின்ற தோள்களையுடைய ராவணன் மன்மதபாணத்தால் எரிக்கப்பட்டு, புஷ்பமெத்தையைவிட்டு வேறொரு ரத்தின சிங்காதனத்திலே போயிருந்தனன். காலத்திற்குத் தக்கபடி யோசனைசெய்து அந்தக்காலத்திற்குத் தக்கபடி யோசித்துப் பலாபலங்களை அறிந்து சொல்லுகின்ற தன் வமிசபரம்பரையாய் வந்த மந்திரிகளை அழைத்துவர சொல்லி ஆக்யாபித்தான். அப்படியே அவர்களும் அந்த அரண்மனை வந்து சேர்ந்தார்கள். பாலைவனத்தில் கானலாகிய தங்களுண்டாய தேரைச்சுற்றிக்கொண் டிருப்பது போல பளிங்குக்கல்லாற்கட்டிய ஒருபெரிய மண்டபத்தைச் சுற்றிக் காவல்செய்யும்படி பத்துகோடிப் பேய்க்கூட்டங்களை ஏவி, மிகுந்த அறிவுள்ளவர்களான மந்திரிகளோடு அந்த மந்திராலோசனை மண்டபத்தைச் சேர்ந்து அவர்களைப்பார்த்துச் சொல்லுகிறான். ஓ மந்திரிகளே! குரங்குச் சேனைகள் எங்கும்வந்து சுற்றிக் கொண்டன. வாயிலுக்கு வாயில் வானரங்களாக நிறைந்து யுத்தத்திற்குத் தலைப்பட்டு நம்மையின்னமும் விடாது வருத்தப்படுத்துகின்றதுகளே. நாமிதற்கென்ன காரியம் செய்யத்தகும்? என்று அவர்களை வினவினான்.

அதற்கு அவனுடைய அம்மானாகிய நிகும்பன் மிகுந்த கோபங்கொண்டு, கண்களில் நெருப்புப் பொறிபறக்க இடியிடித்தாற்போலச் சிரித்து, பூமியைக் கையாலறைந்துச் சொல்லுகிறான். ஐயா ராவணா! எழுபது வெள்ளம் வானர சைனியங்கள் நம்முடைய கோட்டை மதிலையெல்லாம் சூழ்ந்து முற்றுகைச் செய்துகொண்டதுகள். இப்பொழுது நீ வேறென்னமோ செய்ய ஏற்பட்டாய் போலுமிருக்கின்றது. நமக்குப் பெரிய சமுத்திரத்திற் கொப்பான ஆயிரம் வெள்ளம் ராக்ஷதசேனைகளிருந்தும், சத்துருக்கள் கோட்டையின் அரணிப்பைப் பற்றிக்கொள்ளும்படியாகநெருங்கி மேற்கொண்டு வந்து விட்டார்கள். வளைதடி, மழுவாயுதம், தண்டாயுதம், வில், வாள், சூலாயுதம் என்று சொல்லப்பட்ட பெரிய ஆயுதங்களைக் கையிற்பிடித்துக்கொண்டு நம்முடைய ராக்ஷதவீரர்கள் கோபித்தகாலத்தில், இவர்களுக்குக் கும்பிடுபோட்டுவிட்டுத் தங்களுடைய சைனியங்களுக்கு முன்னாகத் தேவர்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்களே. அப்படிக்கிருக்க கையில் ஒரு ஆயுதமுமில்லாமல் இந்தக்குரங்குப்படைகள் வெறுங்கையால் வெற்றி கொள்ளுவது ஆச்சரியமாக யிருக்கிறது. ஐயோ! காமவிகார மல்லவோ நம்மை இப்படிவேரோடுங் கெடுத்துவிட்டது. என்று பின்னும் அதிக பக்ஷத்தோடு ஒருவார்த்தை சொல்லத் தொடங்கினான். இந்த ஊருக்குவந்து நெருப்பு வைத்துச் சாம்பலாக்கி விட்டுப்போன ஓர் குரங்குகையிலே சக்கரமுண்டா? மலைகளுக்குச் சமானமான பத்துத்தலைகளையுடைய பிரதாப லங்கேஸ்வரனாகிய உன்னுடைய கிரீடத்திலுள்ள நாக ரத்தினங்களைப் பறித்துக் கொண்டுபோன சுக்ரீவனுக்குச் சூலாயுதமும் வாளாயுதமும் வேலாயுதமும் உண்டாயிருந்தனவோ? இந்த இரண்டு குரங்குகளின் கைகளில்ஓராயுதத்தையும் கண்டோமில்லை. ஆகையால், இனி ராமனுடைய பாணம் வரிசை வரிசையாகப் புறப்படுகிறதற்கு முன்னதாக

ஸ்திரீகளுக்குள்ளே அதிக உத்தமியான அந்தச் சீதையைக் கொண்டுபோய்விட்டு, ஆயுதமில்லாத அந்தச் சேனைகளைச் சேர்ந்து பற்பல ஆயுதங்களையுமுடைய நாம் அடைக்கலம் புகவேண்டுமே யல்லாமல் அவரவர்கள் மட்டில் தப்பி யொளித்துக் கொள்ளுகிறதற்கும் வேறே வழியிருக்கின்றதாவென்று சொன்னான்.

அப்போது கண்களில் தீப்பொறி பறக்கும்படியாக மாதுலனைப்பார்த்து, ஓ அம்மானே! நீஎனக்கு அபகீர்த்தி சம்பாதிக்கிறாய்போலிருக்கின்றது. நீ என்மீது பக்ஷமில்லாதவனாகி, நமது குலத்தின் பராக்கிரம முதலியவற்றை அறியாதவர்கள் சொல்லுகிற தகாத வார்த்தைகளையா சொல்லுகிறாயென்று பின்பிறரால் நிந்திக்கப்படும் ராவணன் மிக்க கோபத்துடனே சொன்னான். அந்த நிகும்பன் பின்பு ஒன்றும்பேசாமலிருந்தான். அப்போது ராவணன் பிரகஸ்தனைப்பார்த்து, ஓ காலகேயர் யாவரையும் சம்மாரம்பண்ணின ஆயுதங்களையெல்லாந் தரித்திருக்கின்ற சேனாபதியே! நீஇருநூறுவெள்ளம் ராக்ஷதசேனைகளோடும், உன் பந்து ஜனங்களோடும் கிழக்கு வாயிலைக் காத்துக்கொண்டு நில்லென்று ஆக்கியாபித்தான். அப்படி அவனுக்கு ஆக்கியாபித்துத் தென்றிசைக் கதிபனாகிய எமனுடைய அகங்காரத்தை அடக்கின மகோதரனைப் பார்த்து, நீ சீக்கிரமாகப்போய் மதத்தவீரனான மகாபாரிச னென்பவனைத் துணையாகக் கூட்டிக்கொண்டு இருநூறு வெள்ளம் சேனைகளுடனே தெற்குவாயிலிலே நின்று அங்கேவருகின்ற வானரசேனைகளையெல்லாஞ் சம்மரித்துப் போடென்று கட்டளையிட்டான். அப்பால் இந்திரஜித்தைப்பார்த்து, அநுமானுடைய பலத்தை நீ அறிந்திருக்கின்றா யாகையால், இருநூறுவெள்ளம் சேனையுடன் பொழுதுவிடிகிறதற்குள்ளாக மேற்கு வாயிலிற்போய்க் காத்திருவென்று உத்தரவுசெய்தான். பின் விரூபாக்ஷனைப் பார்த்து, இதுவரைக்குந் தேவர்களை ஜெயம்பண்ணிக் கொண்டிருந்த நீ குரங்குப்படைகளின்மேல் சண்டை செய்யும்படிப் போகிறது அற்பமாகும். கீர்த்தியும் வரமாட்டாது. இருக்கிறமூலபலச் சேனைகளுடனும் மந்திரிகளுடனும் பட்டணத்தைக் காத்திருவென்று சொல்லினான். அப்பால் பிரமனுலகத்திற் கிப்புறத்திலுள்ளவர்களை யெல்லாம் ஜெயித்துவிட்டு வெகுநாளாகச் சண்டை கிடைக்கவில்லையேயென்று கோபித்துக்கொண்டிருக்கின்ற யானைவீரர் குதிரைவீரர் தேர்வீரர் காலாள்களாகிய இருநூறு வெள்ளஞ் சேனையுடனே வடக்குவாயிலை நான் காத்துக் கொள்ளுகிறேனென்று ஆயத்தம் பண்ணினான்.

அப்போது இருதிறத்தாருக்கும் யுத்த அபேக்ஷையுண்டாகி விரைவில் பொழுது விடியவில்லையேயென்று உதயத்தை எதிர் நோக்கிக்கொண் டிருந்தமையால், அந்த ராத்திரி ஒரு கற்பகாலம்போல நீளுவதாகக் காணப்பட்டது. அல்லாமலும் இனி ராக்ஷதர்களாலுண்டாகும் உபத்திரவங்கள் ஒழிந்து விடுமென்றெண்ணிக் குதூஹலமாயிருக்கும் தேவர்கள் முனிவர்கள் முதலிய சாதுஜனங்களுக்கும் லோகங்கள் சுகிப்பதுவே தாம் சுகிப்பதாகவும், துக்கிப்பதுவே தாம் துக்கிப்பதாகவும் கொள்பவராகையால், ஆதிசங்கற்பத்தின்படி நிறைவேற்றக் காலம்வாய்த்ததென்றிருக்கிறஸ்ரீ ராமபிரானுக்கும், ஸ்ரீரகுகுலோத்தமருடைய சௌந்திரியத்தில் மூழ்கி அவருடைய திருமார்பைவிட்டுப் பிரியாதகாலம் கிடைத்ததென்பதினால் ஜானகிப்பிராட்டியாருக்கும், தன்னுடைய பேதமைப்புத்தியால் மனிதரென்றெண்ணி நாளை சுலபத்திலே வெற்றிகொள்ளலாமென்று அகங்கரிக்கும்ஹேயகுணசீலனாகிய ராவணனுக்கும் ஆனந்தத்தை விளைவிப்பதாகவுமிருந்தது. அப்போது பொறுமைதயைமுதலிய சற்குணங்களில்லாத அதிக பலிஷ்டனாகிய ராவணனுடைய கொடுமைக்குப் பயந்துவெளிப்படாமல் வேதனைப்பட்டுக்கொண்டிருந்த காலத்தில், இருமாப்புடையவருடையகர்வத்தைப் போக்கிக்காக்கவல்லவரைக்கண்டு வெளிப்பட்டாற் போலச் சூரியன் உதயமானான். அப்போது ஸ்ரீராமபிரானுடைய சேனைகள் அதிகசௌரியத்துடனே கடல்களினலைக ளோய்ந்துபோகவும், ஆகாயமெல்லாம் மறைபட்டுப்போகவும், தூளிக ளெழும்பும்படியாகப் புறப்பட்டு, தங்கள் ராஜனாகிய சுக்கிரீவ மஹாராஜனாக்கினையின்படி அந்தந்த [illegible] சமீபத்திலே போய் லங்கையை [illegible]

கொண்டு, அந்தக் கோட்டைமதிலேத்தாவி ஆகாயத்தை மூடிக்கொண்டிருந்த இருளு ம்இச்சேனைகளினுடைய தேககாந்தியால் அழிந்துபோகவும், அண்டமும் நடுக்கமெ டுக்கவும் ஆர்ப்பரித்ததுகள். அப்போது சுக்ரீவமகாராஜனும் இளையபெருமாளும் பின்னேவர, பிரம ருத்ரேந்திராதி தேவர் கள் தொழுதுவாழ்த்த, ஸ்ரீராமமூர்த்தியும் லங்கையை நோக்கி நடந்தார். சகல சாஸ் திரபண்டிதராலும் அளவிடக்கூடாத பல முள்ள ராக்ஷத சேனைக்கடலை உள்ளே யுடையதாக விருந்தும், கருங்கடலாலே வெளியே சூழப்பட்டதான வானரசேனை களால் வளைத்துக்கொள்ளப்பட்ட அந்தப் பாவியினுடைய லங்காபட்டணமானது பாற்கடல் மத்தியிலுள்ள ஒரு நகரத்தை ப்போ லிருந்தது இராக்ஷத சேனைகளைப் பிடிக்க வீசிய வலையைப்போல் வானர சேனைகள் எல்லாம் அந்த லங்கைமா நகரத்தை வளைத்துக்கொண்டன. மேலும் அந்த லங்கையானது பிரளயகாலத்தில் பிரமருத்திரேந்திராதி ஆத்துமகோடிகள் தங்கியிருக்கத்தக்க மாயப்பெருமானுடைய திருவுதரம்போலவும் பிரகாசித்திருந்தது.

அணிவகுப்புப்படலம் முற்றிற்று.

---

## அங்கதன் தூதுப் படலம்.

ஸ்ரீராமபிரான் இந்தப்படி அதிக சீக் கிரமாக வடக்குவாயிலின் சமீபத்திற்கெழு ந்தருளி எழுபது வெள்ளம் சேனைகளையு டையவராய், அந்தக்கள்ளனை எதிர்பார் த்துக்கொண்டேயிருந்து, அவன் வரவுகா ணுததினலே விபீஷணாழ்வானைப்பார்த்து, தம்பி ! எனக்கொரு நல்லயோசனைதோன் றுகிறது. அதாவது இப்போது ஒருதூத னை ராவணனிடத்திற்கு அனுப்பிச் சீதை யை விடுகிறையாவென்று கேட்டனுப்ப வேண்டும். அதற்கு மறுத்துச் சொல்லி அனுப்புவானுகில் அதன்மேல் யுத்தத்தி ற்கு ஆரம்பிக்கலாம். அதுவே என்யோச னையும் இராஜதருமமும் நீதியுமென்றுகிரு பா நிதியானவர் சொல்ல, அந்தவார்த்தை யை ராக்ஷதாதிபதியான விபீஷணாழ்வான் கேட்டு, சுவாமி! அதுதான் உத்தமமென் றூர். வானராதிபதியான சுக்ரீவ மகாராஜ ரும் இது இராஜதருமமேயன்றி வேறல்ல, இராஜாக்களுக்குச் செய்யத்தக்கதே யென் ஞர்.இதுகளையெல்லாம் இளையபெருமாள் கேட்டு, அவனை இரந்து நாம் கேட்பது மிகுந்த ஏளனமாகும். ஆகையால் இனி நாம் ராக்ஷதர்பேரில் அஸ்திரப் பிரயோக ஞ்செய்வதே யல்லது, அவனை ஒருபொரு ட்டாக எண்ணிச் சமாதானவார்த்தைசொ ல்லியனுப்புவது தகாதென்று பின்னையுஞ் சொல்லுகின்றூர். தேஜஸையுடையலோக மாதாவைச் சிறையிலே வைத்ததல்லாமல் தேவர்கள் ரிஷிகள் முதலான பேர்களையும் மிகுந்த வருத்தப்படுத்தினன். சகல ஜீவ கோடிகளையும் அடித்துக்கொன்று தின் றுவிட்டான். சகல லோகங்களையும் ஆ சையினலே தானே ஆளுகிறுன். இந் திரனுடைய சகல சாம்பிராஜ்ஜியங்களை யும் தானே அபகரித்துக் கொண்டான். தருமந் தப்பின வழியே நடக்கின்றுன். அல்லாமலும் சுவாமி ! தேவரீர் அள வில்லாத துக்கசாகரத்திலே முழுகியிருக் கும்படியாக வஞ்சனை செய்து தேவியாரை யும் பிரித்தான். திக்கில்லாதவரா யழுதுக் கொண்டுபோகின்ற சீதாபிராட்டியாரது துக்கத்தைச் சகிக்கமாட்டாமல் தனியாய் யுத்தத்திற்குவந்த நம்முடைய பிதாவாகிய ஜடாயுவையும் முன்னே கொன்றிருக்கின் றுன். அப்படிப்பட்ட பாவிக்கு நாம் தூத னுப்பினல் அவன் அதற்கிசைந்து பிரா ட்டியாரை விட்டுவிடுவானேயாகில், அப் போது அவனைகொல்லாமல் விடவேண்டி யல்லவோவரும். அந்தப்படி விட்டுவிட் டால் தேவரீருடைய பெருங்கீர்த்தி யிருக் கிறவரைக்கும் லங்காதிபத்தியம் உனக்கெ ன்று இவருக்கு வாக்குக் கொடுத்திருக்கிற தும் வீணுகுமல்லவோ? நீர்பண்ணின சப தம் எப்படி முடியும்? உம்முடைய அன்பி னுலே அதுகளையெல்லாம் விட்டுவிடுவீரா கில், இந்த லங்கையினுடைய பலத்தைப் பார்த்து இதில் நாம் பிரவேசிப்பது மிகு ந்த பொல்லாங்கைத் தருமென்று அஞ்சி நின்றுவிட்டீரென்றுஉலகத்திற்குத்தோன் றுமே. ஆதலால் எவ்விதத்திலும் போர் செய்வதே அதிகசிறப்பாகுமென்றுஞ் சொ ன்னுர். அந்த வார்த்தையைக் கேட்ட வீர சிகாமணியாகிய ஸ்ரீராமமூர்த்தி நகைத்து ஒருவார்த்தை அருளிச்செய்கிறுர்.

தம்பி! நானொன்றையும் ஒருபோதும் மறந்தவனல்லேன். பிராப்தப்படிக்குவந்து முடியப்போகிறது. ஆனாலும்தெரிந்தபெரியோர்கள் சொல்லியிருக்கின்ற நீதிசாஸ்திரத்தை நீக்கி நடப்பது யுக்தமல்லவே. அதிகபலசாலிகளானாலும் பொறுமையினாலேயே எந்தக்காரியமும் செய்யவேண்டும். அப்படிச் செய்கிறதே ஜெயமானகாரியம். அதுதான் தருமமுமாகுமென்று அவருக்குச் சம்மதியாகும்படி சொன்னார். இப்படியாகச் சொல்லியதற்கு யாரையனுப்புவோம்? அநுமானை அனுப்பினால் இவனைத்தவிர அவ்விடத்திற்கு வரத்தக்கபேர் வேறேயில்லையென்று அவர்களுக்குத்தோன்றும். ஆகையால் அங்கே போனவிடத்திலே அவர்கள் தங்கள் சௌரியத்தைக்காட்டினாலும், அதுகளையும் ஜெயித்துச் சீக்கிரமாய்ப் போய்வரத்தக்கவன் அங்கதனென்று அவனை அழைத்து, பிள்ளாய்! நீ அந்தச் சத்துருவிடத்திற்குப்போய் என்னபிப்பிராயத்தைச் சொல்லி வரவேண்டுமென்று ஸ்ரீராமபிரானவர் சொன்னார். அவர் அருளிப்பாட்டைப்பெற்ற அங்கதராஜனுக்குத் தோள்கள் பூரித்தன. அவனுடைய சந்தோஷ நிலையை இவ்வளவவ்வளவென்று சொல்லத் தரமாகுமோ? அவன் சந்தோஷத்துடனே எழுந்திருந்து சுவாமியைப் பார்த்து, அடியேன் அந்தக் கொடியோனான ராவணனிடஞ் சென்று யான் சொல்லவேண்டுங் காரியமென்னவென்று பரிந்துகேட்டனன். எவர்களும் புகழ்ந்துசொல்லும் பெருங்கீர்த்தியைப் பெறவேண்டிச் சீதையைவிட்டுப்பிழைப்பதோ? அல்லது நரகத்திற்கேதுவாகப் பத்துத் தலைகளும் பனங்காய்கள்போலச் சின்னாபின்னமாயறுபட்டு மாண்டுமாய்வதோ? உன் சம்மதியென்னகேள். விரோதமாக அவன் கோபங்கொண்டு மறுத்தானேயாகில், நாங்கள் வந்திருக்கும்போது நீ கோட்டைக்குள்ளே மறைந்திருக்கிறது தருமமல்லவே, சௌரியவந்தனுக்கு இது அழகாகுமோ? அல்லது ஆண்மையாகுமோ? சாமர்த்தியமுமல்லவே; உனக்கு எதிரில்வந்து யுத்தஞ்செய்யச் சக்தியுண்டானால் வந்தெதிர்க்கலாமெனச் சொன்னதாகச் சொல்லக்கடவாயென்று ஸ்ரீராமபத்திரர் சொன்னார். அப்பொழுது அங்கதன் சேவித்து ஒரு சிங்கமானது ஆகாயத்தில் தாவிப்போகிறதுபோலவும், ஸ்ரீராமபாணத்தின் விசைபோலவும், அதிவேகமாய் அநுமாருக்கிரண்டாவது நீயென்றுசொல்லும்படி நல்ல வார்த்தைபெற்றேனே? எனக்குச் சமானம் யாரிருக்கிறார்களென்கிற மகிழ்ச்சியுடனே கிளம்பினான். வேலாயுதத்தையுந் தோற்கடித்து நெருப்புப்பொறி பறக்கும்படியாகப் பார்க்கிற ராக்ஷதரை ஜெயங்கொள்ளும்படிக்குத் திருப்பாற்கடற் சயனத்தைவிட்டு அயோத்தியிலெழுந்தருளின ராமருடைய நியமனத்தைச் சிரசாகவகித்த தூதனான அந்த அங்கதராஜன், சூரியனைத்தாண்டிப் போகக்கூடாததும் மகமேருவிலுமுயர்ந்திருக்கின்றதுமான மதில்களைத் தாண்டி அந்த இராவணனிருக்கிற இடம்போய்ச் சேர்ந்தான்.

அவ்விடத்தில் அநேக ராக்ஷதர்கள் அழுதுகொண்டு, அந்த அநுமானே வந்தானோவென்றுபயந்து ராவணனிடம்போய்த்தொழுது முறையிட்டார்கள். இப்படி அழுதுக்கொண்டும் தொழுதுக்கொண்டும் வந்த பந்துக்களாகிய ஸ்திரீபுருஷர்களையும் தன்னிடத்திற்குவந்து முறையிட்டுக் கொள்ளுகிற வீரர்களையும், தன்காலில்விழுந்து அலறுகின்ற சேனைகளையும் பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கிற இராவணனை அங்கதகுமாரன் கண்டு; நாம் கல்லினாலும் மரத்தினாலும் இந்தச் சிறுகடலைக் கட்டினது பெருமையென்றல்லவோ எண்ணியிருந்தோம். இவன்பிரதாபத்தைப்பார்த்தால் இவனைவெல்ல நினைத்துத் தைரியங்கொண்டு புறப்படுவோர்களுமுண்டோ? இவன் கையில் ஆயுதமெடுப்பானானால் ஸ்ரீராமர்கையில் வில்லொன்றிருந்தாலல்லாமல் வேறேயெதிர்த்து நிற்பவர்களுமுண்டோவென்று மிகுந்த ஆச்சரியத்துடன் பிரமித்து நின்றான். இவனை வெல்லவேண்டுமென்று நினைக்கிறவர்கள் யுத்தத்திலே இவனைத் தோற்கடித்த என் தந்தையாகிய வாலியின்மார்பில் ஒரு அம்பெய்து கொன்றுவிட்ட அந்த ஸ்ரீராமர் குறித்தாலல்லாமல் பிழைத்திருக்கின்ற மற்றவராலே இவனை ஏதேனுஞ் செய்யக்கூடுமோ? ஆபரணங்களில்லாமலே அழகை விளக்கும்படியான சீதாபிராட்டியார்பேரில் ஆசைவைத்திருக்கின்ற இவனைக்கொன்று, இவனு

டைய துராசையை அறுத்தெரிய வல்லமையுள்ளவர்கள்யாரிருக்கின்றார்கள்? ஆதிசேஷன்மீதுபாய்ந்து அவனுடையசிரோரத்தினங்களைப் பறித்துவந்த கருடனைப்போல இவன்மேற்பாய்ந்து இவனோடுமல்யுத்தஞ் செய்து இவனுடைய கிரீடத்திலுள்ள ஜீவரத்தினங்களைப்பறித்துக்கொண்டு வந்த நம்முடைய சிறியதந்தையே வல்லவரென்று கிருபாநிதியாகிய ஸ்ரீராமதூதனை அங்கதன் இப்படிப் பலவாறு நினைத்து கொடிய அக்கினிமயமான இடியையும் யமனையுஞ் சேர்த்து அவைகளுடனே காலகோடிவிஷத்தையுங்கூட்டிச்செய்தது போலக் கிரீடங்கள்மின்ன ஒரு கருங்கடலிருக்கிறதுபோல யிருக்கிற சிங்கத்தையொத்த இராவணனுக்கு முன்னேபோய் நின்றான். இப்படி எதிரே நின்றவனைப்பார்த்து காலாக்கினிபோலக் கோபத்துடனே இப்போது இங்கேவந்த நீயார்? வந்தகாரியம் என்ன? இந்த ராக்ஷதர்கள் உன்னைக்கொன்று தின்பதற்கு முன்னே தெரியச்சொல்லென்று இராவணன் கேட்க, வாலிபுத்திரனாகிய அங்கதன் தந்தங்களெல்லாம் பிரகாசிக்க நகைத்து ஒருவார்த்தை சொல்லுகிறான்.

கவி.

பூதநாயகனீர்சூழ்ந்த புவிக்குநாயகனப்பூமேல்
சீதைநாயகன்வேறுள்ள தெய்வநாயகனீசெப்பும்
வேதநாயகன்மேனின்ற விதிக்குநாயகன்றான்விட்ட
தூதன்யான்பணித்தமாற்றஞ் சொல்லிடவந்தேனென்றான்

பஞ்சபூதங்களுக்கும் சமுத்திரத்தால் சூழப்பட்ட இந்தப்பூலோகத்திற்கும், நீ பூமியோடு பேர்த்தெடுத்துக் கொண்டுவந்த லோகமாதாவான சீதாபிராட்டிக்கும், சமஸ்த லோகநாயகர்களாகிய பிரம்ம தேவேந்திராதி தேவர்களுக்கும், நீ நாள்தோறும் ஓதிவருகின்ற வேதத்திற்கும், சகலாத்துமாக்களையும் தன்னியமப்படி நடத்திவருகின்ற மேலாகிய விதிக்கும், ஆகிய இவைகளுக்கெல்லாம் நிருபாதிகநாயகனாயிருக்கின்ற ஸ்ரீராமநாம தாரக பிரம்மத்தினால் விடப்பட்ட தூதனாகக்கொள்ளும். நான் அவர் ஆக்ஞாபித்த நியமனத்தை சொல்லும்படியாக வந்தேனென்றான். இவ்வாறு அங்கதன்சொல்லவே, அரனும் அயனும் அரியுமல்லாமல் குரங்குகளைக்கூட்டிக்கொண்டுவந்து கடலாகிய குட்டைக்கு ஒரு சேதுகட்டி, இன்னும்பயந்துகொண்டுஉன்னைத்தூதனுப்பின நரனோ லோகநாயகன்? என்று நகைத்து, கங்கையையும் மூன்றாம் பிறையையுந்தரித்த திரிநேத்திரதாரிக்கும், கையில் சங்கு சக்கரந்தரித்த விஷ்ணுவுக்கும், முன் என்னால் சம்பவித்ததையறிந்தும் இந்த ஊரைவந்தடைந்த அந்தராமன் யாராயிருந்தாலும், அவன் செய்தி இருக்கட்டும். அந்தமனுஷ்யருக்குதூதாக இங்கேவந்துபயப்படாமலிப்படிசொன்ன நீயார்? சொல்லென்று ராவணன் கேட்டனன். அதற்கு அங்கதன் நான் தேவேந்திரனுடைய குமாரனும், பூர்வகாலத்திலே இராவணனென்கிற ஒருவனை அழகான தோள்களோடு சேர்த்துத் தன்வாலிலே கட்டிக்கொண்டு மலைகளைத்தாண்டித் திரிந்தவனும், தேவர்களுண்ணும்படிக்கு மந்தரகிரியினாலே கடலைக் கடைந்து அமிர்தங் கொடுத்தவனுமான வாலியினுடைய புத்திரன் நானென்று சொன்னான். அதைக்கேட்டு உன் தகப்பன் எனக்கு சிநேகிதனென்கிறதற்கு பழையகதையைச் சொன்ன நீயே சாக்ஷியாகயிருக்கின்றாய். அப்படிப்பட்டவன் மகனான நீ மனிதனுக்குத் தூதனாவதைப் பார்க்கிலும் நிந்தனைவேறேயுண்டா? உனக்கு வானராதிபத்தியம் நானே கொடுத்தேன். நீ அவர்களிடத்தி லிழிவடையாமல் வந்து பெரிய உபகாரஞ் செய்தாய். வாலிக்குப் பிள்ளையாகையா லெனக்கும் நீ பிள்ளைமுறையே அல்லது வேறல்ல. தகப்பனைக் கொன்றவன் [illegible]றகே கும்பிட்டுக்கொண்டு திரிந்து பே[illegible]ப் போல இருந்தாயென்கிற அப[illegible]மும் தீர்த்துவிட்டாய். சீதையைப் [illegible]ன். உன்னை என் குமாரனாகவும் [illegible]ன். இனி என்னால் முடியாத கா[illegible]ன்ன யிருக்கின்றது? அந்த மனிதர்கள் இன்றைக்கோ நாளைக்கோ மாண்டு [illegible]தற்குச் சந்தேகமில்லை. என் ராஜ்[illegible] உனக்கே கொடுத்தேன். நீ ஊழி[illegible]பத்தம் அந்த ராஜ்யத்தை யாண்[illegible]ண்டு சுகமாயிரு. தேவர்களெல்லா[illegible]தொழப் பொற்சிங்காதனத்திலே [illegible] மகாராஜாவாக உனக்கு நானே [illegible]வே னென்று ராவணன் சொ[illegible] அந்த வார்த்தையை அங்கதன்[illegible] இங்கே யிருக்கிறவர்களுக்கெல்லா[illegible]வுகாலம் வந்ததென்

பதை யறிந்துதானே உன்னுடைய தம்பி உங்களை யெல்லாம்விட்டு எங்களிடம்வந்து சேர்ந்தான். அதை நீ சுத்தமாக மறந்து உன் வாயிலே வந்ததைச் சொல்லி என்னை உன் வசஞ்செய்து, நானும் திரிலோகநாயகராகிய ராமரால் விடப்பட்ட தூதனுக வந்து அரசாளுகிறது புத்திமான்களால் ஆலோசிக்கத் தகுந்ததே. மேலும் சிங்கமானது நாய்கையில் மகுடாபிஷேகம்பெற்றதுபோல உன்னுல் நான் அரசாக்ஷிபெறுவேனேயானுல், இதற்குச் சமானமாகியது வேறென்ன இருக்கின்றதென்று கைகொட்டித் தன்னுடைய மார்புந்தோளும் இலங்கைப்பட்டண முழுதும் குலுங்கும்படிக்குக் கெக்கலிகொட்டிச் சிரித்தான். அப்போது ராவணனுக்கு அங்கதனைக் கொல்லத்தக்ககோபம் பொங்கித் தங்களாயுள் முடிந்த மனிதரை நம்பிச் சாகத்துணிந்திருக்கிற குரங்கே! நீவந்த காரியத்தைச்சொல்லென்றுசொல்ல, அதைக்கேட்டு அங்கதன்சொல்லுகின்ருன். ஸ்ரீராமசுவாமி என்னை அழைத்து, நீ போய்த் தன்னுடைய குலத்தை யெல்லாங் கொல்லுகிறதற்கு ஏற்பட்ட பாவியாகியும், யுத்தத்திற்குப்பயந்து கோட்டைக்குள்ளே பதுங்கி யிருக்கின்றவனுமான ராவணனைச் சீதாபிராட்டியை விடுகிறையா? இல்லாவிட்டால் போர்செய்து பிராணனை விடுகிறையாவென்றுகேட்டறிந்து வரும்படியாகக் கிருபை நிறைந்த மனமுடையவராய்ச் சொன்னுர். அதுவுமல்லாமல் பருந்துக்கு இரையாகும்படி உன் பாட்டியாரைக் கொன்றபோதும், அநேக சேனையுடனே உனக்குத் தேவாமிர்த [illegible]க்காட்டிலும் சிறப்புற்ற அம்மானைக் [illegible]றநாளிலும், ஆரணியத்திலேவந்து [illegible]கை சூர்ப்பநகையினுடைய மூக்கு [illegible]யும் எங்கள்இளையபெருமாள் அரிந்த[illegible]லையும் வாராத நீ; இனி ஆண்மை[illegible]ப் போகிருயா? பந்துக்களோ[illegible] அநேக ராக்ஷதக்கூட்டத்தோடும் உலகத்[illegible] சளைபிடுங்கினதுபோலக் கரதூஷணா[illegible] உன் தம்பிமார்களைக்கொன்றதைப் [illegible]ந்தும், உன் மனதில் சற்றுமெண்ணி[illegible]வெனில்லை. மேலும் இளையபெருமாளை[illegible]யும்படியாக வஞ்சனைசெய்து சீதை[illegible] கொண்டுபோன வஜ்ஜிரதந்தங்களுடை[illegible]ராக்ஷதனுன நீயுத்தத்திற்கு வருவாயா? அநுமார்வந்துசீதையைக்கண்டு எதிரே வந்தெதிர்த்த ராக்ஷதர்களையெல்லாம் காலால் எற்றிவிட்டு உன் பிள்ளை அக்ஷனையும் தரையிலேபோட்டுத் தேய்த்துவிட்டு, உன்னுடைய ஊரிலேயும் நெருப்புவைத்துக் கொளுத்தி, நீயும் பார்த்திருக்கவே கடலைத்தாண்டி வந்திருக்கச் சேயும் கூடத்தொடர்ந்து வரமாட்டாத நீ செய்யுஞ் சண்டையானது மொன்றிருக்கின்றதோ? உன் இனத்தாராகிய சுகசாரணர்களுக்குப் பிராணபிக்ஷை கொடுத்து அவர்களுடைய கள்ளத் தன்மையையும் அறிந்து அவர்களாலுனக்கு புத்திசொல்லி அனுப்பினபோதும், வருணன் வந்து எங்களாண்டவராகிய ராமரை வணங்கினபோதும், சமுத்திரத்தைஅடைத்துஅணையிட்டபோதும் வராத உன்னுடைய ஆண்மைக்கும் ஒரு சிறப்புண்டா? தேவர்களும், உன்மீது விருப்பங் கொண்டிருந்த ஸ்திரீகளும் பார்த்துக்கொண்டிருக்க என் சிறிய தந்தையாகிய சுக்கிரீவமகாராஜரால் உன்னுடைய கிரீடங்களைப் பறிகொடுத்தும், யுத்தத்திற்கு வராதவன் நீஇனி உன்வீரத்தைப்பற்றி என்ன சொல்லப்போகிறேன்? நெஞ்சில் கொஞ்சமும் தயையில்லாத உன்னை உன் குலத்துடனே கொன்றபோதும், அதனுல் தனக்கு ஒரு கீர்த்தியுமில்லையாம். நீ அவ்வளவு இழிவான நிந்தைக்குட்பட்டாய். எல்லாரும் தூஷிக்கிற தூஷணையானது உன்னைச் சூழ்ந்துக்கொள்ளும்படி உன் ஊரை நாங்கள் வளைந்துகொண்டும், வெளியே வராமல் பதுங்கிக்கொண்டிருக்கிருய். நீ திக்விஜயம் பண்ணின கீர்த்தி வரவர நன்ருய்ச் சிறந்து வருகின்றது, என்றிப்படிப் பலவாகச் சொல்லிப் பின்னும், அங்கதன் ராவணனைப் பார்த்து, எங்களாண்டவர் ஆக்கியாபித்தருளினபடி உனக்கு நன்மை வேண்டுமானுல், எங்கள் சீதாபிராட்டியாரைக் கொண்டுவந்து விட்டுச் சுவாமியை வணங்கிச் சுகமாய் வாழ்ந்திரு. அப்படிக்கில்லாமல் உன்பந்துக்களுடனே நீயும் போர்க்களத்தில் மடிந்துபோக வேண்டுமென்கிற எண்ணமுனக்கிருக்குமானுல், ஸ்ரீராமர் உன்னுடைய கோட்டைவாயிலில் கையும் வில்லுமாக உன் வரவை எதிர்பார்த்திருக்கிருர். இப்போதே என்பின்னுலே வா.வருணமண்டலத்தி

லும், அக்கினிமண்டலத்திலும், பூமண்டலத்திலும், சுவர்க்கலோகத்திலு முண்டான வீரர்களையெல்லாம் போர்க்களத்திலே தோற்றுப்போகும்படி ஜெயம்பெற்ற நீ, இப்போது லங்கையில் ஒளித்துக்கொண்டு அதை மங்கும்படிச் செய்வாயானால், யாவருக்கும் பழியாய்விடுமென்று அவனுடையமனம் உளையும்படிச்சொல்லினான். இதை கேட்டமாத்திரத்தில், ராவணன் அங்கதனுயிர்முழுதையும் வாரி உண்டு விடுகிறவனைப்போல மிகுந்த கோபமுள்ளவனாகி, நான்கு மகாவீரர்களான இராக்ஷதர்களைப் பார்த்து, இவனைப் பிடித்து மூளை சிதறிப் போகும்படி பூமியிலறையுங்களென்று ஏவினான். அந்தப்படியே அவர்கள் வந்து பிடித்தார்கள். பிடித்தமாத்திரத்தில் அவர்கள் நாலுபேரையுந் தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கத்தி லெழும்பி, அவர்கள் தலைகளறுந்து அந்த ராவணனுடைய கோபுரவாயிலில் வந்து விழும்படி கொக்கரித்துக் கூவி அவர்களைக் காலினாலே துவைத்து ஒருவார்த்தை சொல்லுகின்றான். ஓ இராக்ஷதர்களே! ஏழைகளான நீங்கள்யாவரும் ஸ்ரீராமரால் விடப்பட்ட கொடிய பாணம் தகத்தகாயமாய் மின்னலைப்போல வருவதற்கு முன்னமே ஓடிப்பிழையுங்கள். ஓடிப் பிழையுங்களென்று, ஆரவாரித்துச் சொல்லிக்கொண்டு ஆகாயமார்க்கமா யெழும்பிப் போய், சந்திரன் பூமியிலிறங்குவதுபோலிறங்கி, ராகவனுடைய பாதாரவிந்தம்வணங்கி தெண்டன் சமர்ப்பித்தான். ஸ்ரீராமர் அங்கதனைப் பார்த்து, ராவணனெனுங் கொடியோனுடைய அபிப்பிராயம் ஏதுவோ, அவையெல்லாம் தெரியச் சொல்ல வேண்டுமென்று ஸ்ரீராமர்கேட்க, சுவாமி! அதுகளை சொல்லுவதாலுண்டாகிற சாரமென்ன? அந்த மூர்க்கனுடைய பத்துத் தலைகளையுமறுத்துத் தள்ளினாலல்லாமல், அவன் சீதாபிராட்டிமேல் வைத்த ஆசை மாறாதென்று அங்கத குமாரன் சொன்னான்.

அங்கதன்தூதுப்படலம் முற்றிற்று.

---

இராவணன்

## முதல்நாள் உயுத்தப்படலம்.

பின்னும் அங்கதகுமாரன் வானரப் படைத்தலைவர்களைப் பார்த்து இனியுத்தஞ் செய்வதே காரியமல்லாமல் வேறோர் யோசனையில்லை. திசைகளெல்லாம் பேரிகை முழக்கியதுபோல நம்முடைய பாடிக்கூடார வாயில்கள்தோறும் போய், எல்லாருக்கும் யுத்தமென்று தெரியச்சொல்லுங்கள் மலைகளும் மரங்களும் பிடுங்கிவந்து, முன் சமுத்திரத்தை தூர்த்துப் பழகின கைகளினாலே லங்கைக் கோட்டைக்கு அரணாயிருக்கின்ற அகழிகளைத்தூர்த்துப்போடுங்கள். ராக்ஷதர்களை யெங்குந் திரியவொட்டாமல் பல விருக்ஷங்களால் அடித்து அவர்களை யுத்தத்திற்கு வரச்சொல்லி அழையுங்கள். சூரியனானவன் மேற்றாண்டிவராத அவன் கோட்டை மதில்களைப்போய் இந்த க்ஷணமேபிடித்துக் கொள்ளுங்கள் என்று, இப்படி பலவாறு ஆக்கியாபித்தமாத்திரத்தில் பெரிய மலைகளையும், மரங்களையும் பிடுங்கிக் கொண்டு புறப்பட்ட சிங்கங்களை யொத்த வானரசேனைகள், முதலைகளெல்லாம் ஓடிப் போகும்படியாகவும், அதிலுள்ள ஜலமெல்லாம் மேலேறி யோடிவிடவும், அந்த லங்கையின் அகழியைத் தூர்த்துவிட்டதுகள். இப்படி எழுபது வெள்ளம் வானர சேனைகளும், எட்டாங் கடல்போன்ற அகழியைத் தூர்த்தமாத்திரத்தில் அதிலிருந்த தண்ணீரெல்லாம் அந்த வானரங்களுக்குஉதவிசெய்வதுபோல பொங்கிவழிந்து அந்தக்கோட்டை வாயில்வழியாய்ப்போய் லங்காபட்டணத்தை மூடி வளைத்துக்கொண்டது. அநேகவானரங்கள் ஜெயப்பிரதாபசாலியான அந்தராவணனுடைய பெருங் கீர்த்தியை வேருடனேபிடுங்குகிறதுபோல விசாலித்துத் தழைத்து மலர்ந்த தாமரைக் கொடிகளைவளையங்களுடனே பிடுங்கிக்கொண்டதுகள். அதிலே நீலோற்பலபுஷ்பங்கள் குவிந்தது எப்படியிருந்ததென்றால், நிந்தைக்குப் பாத்திரவானான ராவணனுடையபுகழானது அவனுடனேகூட அழிந்துபோய்விடுகின்றதே என்று அந்த அகழிக்கண்ணைமூடிக்கொண்டு அழுகிறதுபோலுமிருந்தது. தாமரைகளெல்லாம் பிடுங்கு

ண்டு போனபடியினாலே, அதிலேயிருந்த வண்டுகளெல்லாம் பறந்துபோய் விட்டது கள். அன்னங்களெல்லாம் முட்டைகளைத் தங்கள் வாயிலே கவ்விக்கொண்டு பறந்து ஓடிவிட்டதுகள். வல்லிசைபாய் ஈளைப்பண்களைப் பாடுகின்ற வண்டுகள் மொய்த்திருக்கின்ற கமுகு தெங்கு முதலியவைகளின் பாளையிலுள்ள தாமரைமலரினிடத்து வாளைமீன்கள் தாவும்படியாக வானரவீரர்கள் ஓரிடத்திலிருந்து வேறோரிடத்தில் குதித்துப் பாய்ந்தார்கள். கூட்டங்கூட்டமாக பெரிய விருக்ஷங்களும், மலைகளும், பூந்தாதுகளும் மேன்மேலுமடர்ந்து அகழியில் விழுந்து நெருங்குகிறபடியால், அதிலுள்ள நீரெல்லாம்மேலேறிப்பல ஆறுகளாய்ச் சமுத்திரத்தின்மேல் பாவியோடினது. அந்த ஆறுகள் கடலில்விழு மிடங்கள்தோறும் அங்கங்குதோன்றுகின்ற நீர்ச்சுழிகளில் சுரிந்து முழுகி மேலெழுகின்ற தாமரைப்புஷ்பங்கள், சமுத்திரஜலத்தில் ஸ்நானம்பண்ணி மேலெழும்புகின்ற ஸ்திரீகளுடைய முகத்தையொத்திருந்ததுகள். எல்லா மேன்மைகளையுமுடையவனான ராவணனுடையபுராதனமாகவிருந்த அகழியே வானரக்கூட்டங்களால் தூர்ந்துபோகும்படியான காலம் வந்துநேரிட்டதனால், இனி மற்றவர்களுக்குள்ள பலத்திற்கும் பாக்கியத்திற்கும் தரித்திரத்திற்கும் ஒருமிதமுண்டாகுமா? இப்படி அகழியைத் தூர்த்த வானரசேனைகள் அந்த அகழின்கரையை இடித்துத் தகர்த்துவிட்டு, அந்தக் கோட்டைமதில் முழுதையும், தாங்களேறி நடக்கிறதற்குத் தக்க ஒரு வரப்பாக்கிக்கொண்டு, அதின்பேரில் நின்று சப்தசாகரமும் சப்தமேகமும் கலங்கும்படி கர்ச்சித்ததுகள். அந்த வானரசேனைகள் சக்கரவாளகிரியைப்போலவளைந்து அண்டமுகட்டை அளாவியிருக்கின்ற அந்தமதிலின்மேலேறி ஆகாயத்தைத்தொட்டுக்கொண்டிருக்கிறசிலவானரங்கள், அந்த மதிலுக்கு அலங்காரமாகக் கட்டியிருக்கிற அநேக வெள்ளைக் கொடிகளைப்போலக் காணப்பட்டதுகள். அளவில்லாத ரத்தினங்களாலும், சுவர்னங்களாலும், இயற்றப்பட்ட மேருமலையைப்போ லிருக்கின்ற கோட்டைமதில், தன்னை ஒருவரும் இடிக்கவேண்டாமலே இந்த வானரவீரர்கள் ஏறிநிற்கிறதைச் சுமக்கச் சக்தியில்லாமல் தானேபூமியில் அழுந்திப்போய்விட்டது. ராக்ஷதர் முரசறைந்துக்கொண்டு புறப்பட்டார்கள். அவர்கள் ஆனைமேலேறிப் பிடித்துவந்த கொடிகளால் ஆகாயம்மறைந்து விட்டது. ராக்ஷதசேனைகள் மிகுந்த ஆர்ப்பாட்டத்தோடு புறப்பட்டதனால் எழும்பிய சேனாபராகம்,அஷ்டதிக்குகளிலும்போய்ப் படிந்ததுகள். அந்தச்சேனைகள் சண்டைக்கென்றுபுறப்பட்ட பேரோசையானது சுவர்க்கலோகபரியந்தம் போய் அளாவினது. சங்கங்கள் தொனித்ததுகள். அவர்களணிந்து கொண்டிருந்த ஆரங்களொலித்ததுகள். நிர்த்தனம் பண்ணிக்கொண்டு வருகின்றகுதிரைகள் அனுமானித்ததுகள். தேர்களில் கட்டியிருக்கின்ற மணிகள் கோஷித்ததுகள். யானைகளெல்லாம் பெருங்கூட்டமாகவும், அதிவேகமாகவும் நடக்கின்றமையால் அதனிரண்டுபக்கங்களிலும் கட்டியிருக்கின்ற மணிகள் கணீர்கணீரென்று ஒலித்ததுகள். அந்தச் சமயத்தில் வெகுகாலமாக விருத்தியடைந்திருந்த ராக்ஷதகுலமாகிய அரிஷ்டங்களெல்லாம் அழிந்துபோகவும், மற்றத் தேவர்கள் மனிதர்கள் வானரர்களெல்லாம்வாழ்வடையவும் தக்கக்ஷேமமானகாலத்தை விதிகொண்டுவந்து காண்பிக்க, வானர சேனாசமுத்திரம் அதிக மனவூக்கங்கொண்டு ராட்சத சேனாசமுத்திரத்தோடு கலந்து ஒன்றோடொன்று எதிர்த்தன. வானரசேனைகள் தங்கள்வாயிலுள்ள பல்லுகளையும், உயர்ந்த குன்றுகளையும், பெரிய மலைகளையுமே தமக்கு ஆயுதங்களாகக்கொண்டு போர்செய்ததுகள். ராட்சத சேனைகள் வில்லாயுதம் - நீளமான வேலாயுதம்-சூலாயுதம்-வாளாயுதம்-குந்தாயுதம் - சக்கராயுதம் முதலான அநேகமான ஆயுதங்களைக் கொண்டு சண்டைக்குப் புறப்பட்டு, ஒருவரோடொருவர் யுத்தஞ்செய்யத் தொடங்கி, வானரங்கள்விட்ட மலைகளை ராட்சதர்கள் அம்புகளால் பொடிசெய்யத் தொடங்கினார்கள். அந்த ராக்ஷதர்களுடைய அம்புகளை வானரர்கள் விருக்ஷங்களால் ஜாடித் துண்டுதுண்டாக்கினார்கள். அந்தவிருக்ஷங்களை ராக்ஷதர்கள்விட்ட உதிரந் தோய்ந்து செக்கச்செவேலென்று பிரகாசிக்கின்றவேலாயுதங்கள் நொறுங்கிவிட்டதுகள்.வானரவீரர்களெறிந்தமலைகளால் வஞ்சகர்களான ராக்ஷதர்களுடைய தலைகள்

சிதறி, அவர்கள் நாக்கின்வழியாயும், செவியின்வழியாயும், மூக்கின்வழியாயும், தலைமூளைகள் வழிந்து சரிந்தன. கன்னங்கரேலெனவிளங்குகின்ற ராக்ஷதவீரர்கள்விட்ட அம்புகள்பட்ட புண்களில் ரத்தங்கள்வடியப்பற்களெல்லாந்தகர்ந்து, தங்கள்கையில் பிடித்திருக்கிற மலைகளோடு அநேகவானரங்களுருண்டுபோயின. லங்கைக்கோட்டை மதிலின்மேலேறியிருந்த வானரவீரர்கள் வீசியெறிந்த மலைகள் ராக்ஷதர்களின் உடல்மீது மலைகளின்மேலிடிவிழுந்ததுபோலத் திடீரென்று விழுந்து, அவர்கள் பிராணனைப் பறக்கடித்து விட்டதுகள். நெருப்பைப்போ லெரிந்துகொண் டிருக்கின்ற குரூரப் பார்வைகளையுடைய அரக்கர்கள் கைகளையுதறி வீசியெறிந்த வேலாயுதத்தினால் எதிர்த்துவந்த வானரங்களுடைய தேகங்கள் கோட்டைமதிலுக்குப் புறப்பில் மண்ணுக்குள் புதைந்து போய்விட்டதுகள். வானரவீரர்கள் அதிக கோபங்கொண்டு அநேகராக்ஷதர்களைக்கடித்தும் குத்தியும் கையாற் கழுத்தைப் பிடித்துத் தமது நீண்ட நகங்களால் இருபிளவாகப் பிளந்தும், அறைந்தும் காலினாலுதைத்தெறிந்தும் கொன்றுவிட்டதுகள். ராக்ஷதர்கள் சஸ்திரங்களைத்தொட்டும் அஸ்திரங்களைவிட்டும் இருப்புலக்கை தண்டாயுதம் முதலானவைகளால் மோதியும் வேலாயுதத்தைக்கொண்டு தேகத்தில் அழுத்தியும் சண்டைசெய்தபடியால் வானரங்கள் கூட்டங் கூட்டங்களாக மடிந்துபோனதுகள். ரத்தத்தினாலே தோயப்பட்டிருக்கிற அந்தப் பொன்மதிலானது பவளத்தினாற் கட்டப்பட்ட மதில்போன்றிருந்தது. ரத்தமானது பிணமலைகளை யிழுத்துக்கொண்டு உப்புச்சமுத்திரத்தில் போய்விழும்படி பிரவாகித்தது. ஆகாயமுழுவதும் கழுகுபருந்து முதலானபக்ஷிகள் படர்ந்துபறந்துகொண்டிருந்தபடியினாலே அதுலங்கையை மறைத்து ஒருபந்தலிட்டதுபோல விருந்தது. அதனால் இந்திரனுக்கும் லங்கைக்குள் நுழையக் கூடாமல் திரும்பிப்போகத் தக்கதாயிருந்தன. கொள்ளிவாய்ப் பிசாசத்துடனே அநேககவந்தங்கள் அந்த ரத்தவெள்ளத்தின்நடுவில் இருபக்ஷத்தாரிலுங்கூத்தாடினதுகள். இந்தரத்தக்கடலில்பக்ஷிகள் முழுகி ஆகாயமார்க்கத்தில் பறக்கிறபடியினால், அந்தத் துளிகள்பட்டு லங்கைப்பட்டணத்தில் கட்டியிருந்த கொடிகளுடைய பலநிறங்களும்போய் எல்லாம் செந்நிறக் கொடிகளாய் விட்டதுகள். ரத்தவெள்ளமானது லங்கைக்கோட்டைமதிலுக்குமேற்பட்டுப் பொங்கி வழிவதினாலே, வானரசேனாசமுத்திரம் பாற்கடலானதுமேருமலையின்மேலேறி இறங்கி வருவதைப்போல அந்த மதிலைவிட்டிறங்கி யோடிவிட்டதுகள். நடுக்கங்கொண்ட ராக்ஷதசேனை வெள்ளம் மதிலினுண்மேடைகளிலும், மதிலின் மேலும், மதிலுறுப்புகளிலும், கோட்டைவாயில்களிலும், நிலாமுற்றமாகிய அட்டாலைகளினும் இன்னும் லங்கைபட்டண முழுவதிலுமுள்ள மேட்டுப்பாங்குகளிலும் போய் நிறைந்ததுகள். இப்படி ராக்ஷதசேனைகள்நெருங்கி நிறைந்திருப்பதைக்கண்டு வானரசேனைகள் ரத்தக்கடலிற்குதித்துநீந்தும்போது, அதிகநெருக்கத்தால் நீந்தமாட்டாமல் அதில் அமிழ்ந்தும், நீந்திக் கையோய்ந்துவிழுந்தும், இவ்வாறு ஓடத்தொடங்கின. வானரசமுத்திரம் ஓட்டம் பிடிக்கவே ராக்ஷதர்கள்கெக்கலிகொட்டிக்கொண்டு மூன்றுலோகங்களையும்அழிக்கும்படியாகப் புறப்பட்டமகாபிரளயகாலசமுத்திரம்போலச்சப்தித்ததுகள். அந்தராக்ஷதர்முழக்கிக் கொண்டுவந்த பேரிகைமுழக்கமும், முருடுவாத்திய சப்தமும், சங்கவாத்திய நாதமும், தாளவாத்தியத் தொனியும், அவரவர்களுடைய விற்களின் டங்காரமும் ஒன்றாகக் கூடி சமுத்திர ஓசையை மயங்கும்படிச் செய்துவிட்டன. அப்படிப்பட்ட சமயத்தில் எல்லாலோகங்களையுஞ்சிருஷ்டித்தபிர்மதேவருடைய நான்கு முகங்களினின்றும் நான்கு நதிகள்புறப்பட்டதுபோல ராக்ஷதசேனாசமுத்திரங்கள் ஆகாயத்தை தொட்டுக்கொண்டிருக்கின்ற லங்கைக்கோட்டை கோபுரவாயில்களின் வழியாய்ப்புறப்பட்டு சுற்றிவளைத்துக்கொண்டதுகள். யானைகள் பூமித்துவாரத்தின் வழியாக மலைகள் எழும்பி வருவதுபோல துதிக்கைகளில் கொடிமரங்களைப்பிடித்து எட்டுத் திக்குகளிலும் வீசிச் சுழற்றிக்கொண்டு கொடியோடு கொடி சிக்கிக்கொள்ளும்படியாகவும், பிடித்துக்கொண்டு வருகிற கொடித்தண்டுகள் முறியும்படியாகவும் பூமியி லூன்றிக்கொண்டு வந்ததுகள். அந்தயானையின் மதங்க

ளால் அவ்விடங்களெல்லாஞ்சேருகி, அதி
ல் ஊழிக்காற்றைப்போல ஓடுகின்ற தேர்க
ளால் அச்சேறுகாய்ந்து புழுதியாகி விட்
டது. வானரவீரர்களா லிடிக்கப்பட்ட மதி
ல்களைப் புடவையாகவுடைய லங்கைப்பட்
டணமாகிய பெண்ணானவள் கடலை வாரிக்
குடித்து, அதைச் சகிக்கமாட்டாமல் மறு
படியும் கக்குகின்ற பெரிய கடலினுடைய
அலைகளைப்போலக் குதிரைகள் கோட்டை
வாயில் வழியாகப் புறப்பட்டதுகள். ராவ
ணனுடைய ஆக்கினையாலே சூரியன் லங்
கைக்குள் பிரவேசியாதபடியால் பூமியில்
பந்துக்களானவர்கள் ஒருவரோடொருவர்
சேரு முறைப்படி தினந்தோறும்வந்த ராக்
காலமானவைகள் பந்தியாக லங்கைப் பட்
டணத்தின் ஓரிடத்திலிருந்து மறுபடியுந்
திரும்பிக் கோர்வையாக வருவதுபோல
ராக்ஷதக்காலாள்கள் புறப்பட்டார்கள்.

இப்படி புறப்பட்ட ரதகஜ துரகபதா
திகளான சேனைகளின் காற்றூளி பூமியை
ச்சுமந்து கொண்டிருக்கின்ற ஆதிசேஷ
னுடைய வரிசையான ஆயிரந்தலையினு
டைய சுமை குறையும்படியாகப்பறந்துசுவ
ர்க்கலோகத்தின் மேல், முகடு முழுவதை
யும் அண்டபித்திகையின் புறப்பக்கத்தை
யும் அஷ்டதிக்குகளின் வெளிப்புறத்தை
யும்போய் தொத்திக்கொண்டு, மறுபடியும்
கீழே உதிராமலிருந்து விட்டது. அந்த
ராக்ஷதர்கள் இப்படி நெருங்க, குரங்குச்சே
னைகள் குலைந்துபோய் யுத்தஞ்செய்கின்ற
ஆசையினால் உண்டாகிய செருக்குடனே
நிற்கிற சூரியகுமாரனை சுக்ரீவமகாராஜ
னிடத்திற்குப் போய்ச்சேர்ந்ததுகள். தன்
சேனைகள் சாய்ந்து தளர்ந்ததையும் கர்ஜி
த்துக் கொண்டுவந்த ராக்ஷத சேனையினு
டைய பெருமையையும் பார்த்துக் கோபா
க்கினியுடனே அங்கேயிருந்த ஒரு மராமர
த்தைக் கையில் எடுத்துக்கொண்டு புகுந்து
யானை-குதிரை-தேர்-பதாதிகளான நால்வ
கை ராக்ஷதசேனைகளுக்கெதிரே ஒவ்வொ
ருத்தருக் கொவ்வொருவராக நெருங்கி, மு
ன்னாலே தோரண கம்பத்திலிருந்து அடி
த்தவன் இவனென்று நினைக்கும்படியாக
அந்த ராக்ஷதர்களுக்கு காணப்பட்டு, ஆனை
யுங் குதிரையும் ராக்ஷதர்களும் தேர்களும்
உருளும்படியாகவும், அவர்களுடைய ரத்
தவெள்ளத்தில் தன்கையிலிருக்கிற மராம
ரமானது தனது வெள்ளை நிறந் தோற்று
மல் சிவந்த நிறமாம்படி குளிக்கவும் கிறு
கிறென்று வீசி அடித்தார். அப்போது
வானரகுல வீரர்கள் தம்மரசனுக்கு எதி
ரில் சண்டைக்கு வந்த ராக்ஷதர்களுடன்
பெரும்போர் செய்யத் தொடங்கி மலைகளை
ப்பிடுங்கி அரக்கர்மேலெறிய, அதனால்
அவர்களில் அநேகம்பேர் நசுங்கிமடிந்தா
ர்கள். இராக்ஷதர்கள் விட்ட அம்புகள்
பட்டு அநேகவானரர்களும் இறந்தார்கள்.
அப்போது ரணக்களத்தில் பேய்க்கூட்ட
ங்கள் பாடத்தொடங்கினதுகள். கவந்தங்
கள் கூத்தாடினதுகள். ரத்தவெள்ளங் கட
லைகிழித்துக் கொண்டோடினது. பதிவிர
தாசிரோமணிகளான ஸ்திரீகள் யுத்தகள
த்திற்குவந்து, தங்கள் தங்கள் நாயகன்மார்
களுடைய சரீரங்களைத் தேடத்தலைப்பட்
டார்கள். அல்லாமலும், அதிக உக்கிரமா
னகோபத்தையுடைய வானரவீரர்களால்
தங்களாயுள் முடிந்த ராக்ஷதர்களுடைய
ரத்தவெள்ளமோடுகின்ற ரணக்களமானது
வெறுங்களமாம்படி தப்பி உயிரோடிருந்த
ராக்ஷதர்கள் சண்டைக்கு ஆற்றமாட்டா
மல் ஓட்டம் பிடித்தார்கள்.

அப்போது வஜ்ஜிரமுஷ்டி யென்கிற
ராக்ஷதன் தங்கள் சேனை பின்னிடையவே
அதிக கோபத்துடனே கடலிலோடுகின்ற
கப்பல்போலத் தேரைப் பருந்துக்கூட்ட
ங்கள் பின்றொடரும்படி முடுக்கிக்கொண்டு
வந்து எதிர்த்து, அந்த வானரங்கள்பேரி
லே சரமாரியாகப் பொழிந்து சின்னாபின்
னமாகும்படி செய்தான். அதுகண்டு இந்
திராதி தேவர்கள் மனந்திகைத்தார்கள்.
அப்போது சுக்ரீவமகாராஜர் மனதுநொ
ந்து அவனுடைய தேரும், அதில் வெகு
விசித்திரமாகக் கட்டியிருக்கின்ற குதிரைக
ளும், அவனும் பொடிப்பொடியாய்ப் போ
கும்படியாகப் பாய்ந்து குதித்து, அவன்
கையிலிருந்த வில்லையும் அம்பறாத்தூணி
யையும் பிடுங்கி யெடுத்து, அவனுடைய
சரீரத்தைச் சிதைத்துவிட்டுப் போய்விட்
டார். அந்தப்படியாக ஒருபெரிய மலையா
னது அழிந்ததுபோல வஜ்ஜிரமுஷ்டியெ
ன்கிறவன் மரணமடையவே, மற்ற ராக்ஷத
ர்களெல்லாம் நிற்கமாட்டாமல் நிலைகுலை
ந்து ஊரைப்பார்த்து ஓடத்தலைப்பட்டார்
கள். அப்படி யோடுகிறதைக் கண்டு அங்கி

ருந்த வானரர்கள் சமுத்திரகோஷம்போலே ஆர்ப்பரித்துக் கொக்கரித்தார்கள். இவர்களிங்கே இப்படியிருக்க கிழக்குவாசலிலே புறப்பட்டு வீழிப்பழம்போலச் சிவந்தகுரூரமான கண்களையுடைய ராக்ஷதர்கள் பிரளயகால சமுத்திரம்போலப்புறப்படக்கண்ட வானரவீரர்கள், தங்களோடு மாறுகொண்டு எதிர்த்த பகைவர்களான இராக்ஷதர்கள்மேல் பகைத்து யுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். விஷத்தையொத்த அந்த ராக்ஷதர்கள் சூலம்-வாள்-தோமரம் - பாலா - சக்கரம்-அம்பு முதலான ஆயுதங்களை சேனைமழையைப்போல இடைவிடாமல் அவரவர்கள் கைகளால் சோர்வடையாமல் பொழியவே, அதனால் சில வானரங்கள் வாலும் காலும் அறுபட்டுத் தறிபட்டு குறைபட்டு முறையிட்டு மடிந்ததுகள். வெற்றிபெற்ற சிலவானரவீரர்கள் வீசியெறிந்தமலைகளும் மரங்களும் உகாந்தகால நமனைப்போலப் போய் விழுந்தமாத்திரத்தில் அநேக ராக்ஷதர்கள் இறந்தார்கள். குதிரைகளும் யானைகளும் தேர்களும் விழுந்து நாசமாயின. அப்போது மற்றராக்ஷதர்கள் மிகவும் கொதித்து ஆக்கிரமித்து பராக்கிரமத்தோடு தண்டு வாள் முதலான படைகளினாலே சிதைக்க வானரசேனைகள் சரீரங்கள் கிழிபட்டு சல்லடைக்கண்களாகக் குழிபட்டு ரத்தப்பிரவாகமாய் நிற்கமாட்டாமல் ஓட்டமெடுத்தார்கள். அந்தச்சமயத்தில் அக்கினிபுத்திரனாகிய நீலன் அங்கு அண்டமளாவும்படியாக நீண்டு பருத்து உயர்ந்திருந்த ஒருபெரிய மராமரத்தை அதிவேகமாய்த் தனது பலம்பொருந்திய கைகளினால் வேரோடே பிடுங்கிக்கொண்டு வந்து ராக்ஷதப்பூண்டுகள் கூண்டோடு அழிந்து சின்னாபின்னமாகும்படி பிரளய காலாக்கினியைப்போல அடித்தான். அந்தமராமரத்தால் அடியுண்டு அநேகந்தேர்கள்-தேர்த்தலைவர்கள்-யானைகள் - யானைவீரர்கள்-குதிரைகள்-குதிரைவீரர்கள் - அல்லாமலும் அந்தராக்ஷதர்கள் தங்கள் தேர்களில் கட்டிவந்தசிங்கங்கள்-யாளிகள்-பூமியிலே விழுந்துமடிய ரத்தப்பிரவாகம் எங்கும் பிரவகித்தோடி சமுத்திரத்தில் விழுந்து நிறைந்தது. அவ்வாறு மடிந்த ராக்ஷதர்கள்போக மற்றவர்கள் ஓட்டமெடுத்தார்கள். அவ்விராக்ஷத சேனைத்தலைவனான கும்பானுவென்பவன், அதிக கோபத்துடனே தன் கைவில்லில் அஸ்திரங்களைப் பூட்டிப் பிரயோகித்த மாத்திரத்தில், அந்த அஸ்திரங்கள் எண்ணிறந்ததுகளாய்ப் பிரவேசித்துப்போய் அநேக வானரங்களைத் துண்டந் துண்டமாகத் துணித்து விட்டதுகள். அப்போதங்கிருந்து பார்த்துக் கொண்டிருந்த காடிக்குத் தலைவனான இடும்பனென்பவன் ஒருபெரிய பர்வதத்தைத் தனது புஜபலத்தினால் உக்கிரமாய்ப் பேர்த்துக் கையிலெடுத்துக்கொண்டு கும்பானுவுக்கு எதிராகவந்து குதித்து, அவன் பிரயோகஞ்செய்த அந்த அஸ்திரங்கள் நெருங்கிவருகிறதற்கு முன்னமே அவனுடைய கொடிகளும், வில்லும், அம்பும், தேரும், தேரிற்பூட்டின குதிரைகளும், நாசமடையவும்; சிங்கங்கள் அழியவும்; அந்தப்பர்வதத்தினால் எறிந்தான். உடனே கும்பானும் மேகத்தினின்றும் இடியானது பாய்ந்ததுபோல பூமிகிழிந்து பிளக்கும்படியாகப் பாய்ந்து, வானரங்களெல்லாம் புறங்காட்டியோடும்படி யுத்தஞ்செய்து, இடும்பன் மார்பிலே ஓங்கி ஒருகுத்து குத்திக்கொக்கரித்தான். அப்படிகுத்தி எதிரே நின்ற அந்தக்கும்பானுவை இடும்பன் கன்னத்திலறைந்து தலைமயிரைப் பிடித்திழுத்து மடலோடு மடல்சேரக் குண்டுகட்டாகக் கட்டி அவனை குப்புறத்தள்ளி, அவனிடுப்பினில் தன்னிரண்டு காலுமூன்றி ஏறி நின்றுகொண்டு மலைச்சிகரம்போலிருக்கிற அவன் தலையை கையினால்பற்றி, மூளைசிதறும்படி ஜாடி பூமியிலறைந்து கொன்றான். அதைக்கண்டு சுமாலி புத்திரனான பிரகஸ்தன் அதிக மனவருத்தமுற்று வில்லை வளைத்து வானரசேனைகள் பேரிலே ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் நூறாயிரமாகச் சரமாரி பொழிந்து, க்ஷணநேரத்திற்குள்ளே வானரசேனைகளைச் சின்னாபின்னப்பட்டுச் சிதறிப்போகும்படிச் செய்ததை இடும்பன் பார்த்து வெகு கோபத்துடனே பக்கத்திலிருந்த ஒரு மலையைப் பிடுங்கி யெறிந்து எமனைப்போல அந்தப் பிரகஸ்தன் சேனையை நாசப்படுத்தினான். அப்போது அவன் அஸ்திரவருஷத்தால் அந்த மலையை ஒன்று நூறாயுதிரும்படிச் செய்தான். இடும்பன் பின்னையுமொரு மராமரத்தை வேரோடே பிடுங்கிக்

கொண்டு இடிபோல மோதியடிக்கவே பிரகஸ்தன் கையிலிருந்த வில்லுந் தேருங் குதிரைகளும் தூள்தூளாகச் சிதறிப்போயின.

அப்படி தேரும் வில்லும் இழந்து இடியிடித்தாற்போலச் சப்தித்து ஆகாயத்திலுள்ள சூரியன் பரிவேடத்தை நீங்கி கையிலொரு தண்டாயுத மெடுத்துக்கொண்டு பூமியிலிழிந்து ஓடிவருவதுபோலப் பிரகஸ்தன் வாயை மடித்துகொண்டு இரண்டுகண்களிலும் அக்கினிப் பொறிகள் பறக்கும்படியாக ஓடிவந்தான். வந்தமாத்திரத்தில் அக்கினிகுமாரனுன நீலன் வெகுகோபத்துடனே அவனுக்கெதிரே பாய்ந்து, அவன் பிடித்துவந்த தண்டாயுதத்துடனே அவனைத் தூக்கி ஆகாயத்தில் விட்டெறிந்து கர்ஜித்தான். அப்போது சுமாலி புத்ரன் ஆகாயத்தினின்றும் குதித்து தேவர்கள் நடுங்கும்படியாய் நீலன் பேரிலே தண்டாயுதத்தினுல் மோதினுன். அந்த அடிக்கு நீலன் இளையாமல் தண்டாயுதத்தை பறித்தெறிந்துவிட்டு உன் பிராணனை இதோ முடிக்கிறேனென்று சொல்லிக்கொண்டு தன் கையினுலோங்கிப் பிரகஸ்தன் தான்முன் குடித்திருந்த ரத்தத்தை கக்குகிறதுபோல கக்கும்படி யறைந்தான். பிரகஸ்தன் அதற்குச் சலியாமலும் கொஞ்சமாகிலுங் கூசாமலும் நீலனுடைய மார்பிலே யோங்கி ஒருகுத்துக் குத்தினுன். இவ்விதமாக இருவருஞ்செய்த யுத்தமித்தன்மையதென்று எவராலேயுஞ் சொல்லி முடியாது. இப்படி யுத்தஞ்செய்கிறபோது ராக்ஷதசேனுபதியான பிரகஸ்தனை நீலன் வாலினுலேசுற்றி கட்டிவிட்டுத் தோளிலேயும் மார்பிலேயும் தலையிலேயும் கையிலேயும்அடித்தான். நீலன் அடித்த இடிமுழக்கம்போன்ற அந்த அடியினுல் பர்வதமானது முறிந்து விழுவதுபோல பிரகஸ்தன் துண்டுதுண்டாகத் தறிபட்டுத் தெறிபட்டு விழுந்திறந்தான். அப்படி பிரகஸ்தன் விழுந்திறந்ததைக் கண்டு, தேவர்கள் சந்தோஷித்து ஆர்ப்பறித்தார்கள். அதைப்பார்த்து நெறிந்த செம்பட்டமயிரையும் வெண்மையான கோரதந்தங்களையுமுடைய மற்ற ராக்ஷதர்கள் பயந்து முறிந்து தங்கள் இருப்பிடமாகிய லங்கையை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். இவர்களிப்படிக் கிருக்க தெற்குவாயிலின் வழியாகச்சுபாரிசனுேடு புறப்பட்ட ராக்ஷதசேனைகளையெல்லாம்கொன்று அங்கே அங்கதனிருந்து திடுக்கிடும்படி அடித்த அடியினுலே சுபாரிசனென்கிற படைத்தலைவன் கதறிப்பதறி உதறிவிழுந்து செத்தான். அவன் இப்படிசாகவே மற்ற ராக்ஷதகூட்டங்களெல்லாம் நிற்கமாட்டாமல் ஓட்டம் பிடித்தார்கள். மேற்கு வாயிலிலிருந்த இருநூறுவெள்ளம் ராக்ஷதசேனைகளும் மகா பலசாலியான துன்முகனும் புறப்பட்டுப் போய் அநுமான் கையென்கிற யமனுலே ஒருவருந்தவருதபடி அத்தனை பேரும் மடிந்துபோனுர்கள். அந்தக் கோட்டைவாயில்கள்தோறும் நடந்த யுத்தங்களைப் பார்த்த தூதுவர்கள் அதிசீக்கிரமாக ஓடோடியும் வந்து ராவணனைசேவித்து எங்கள் சக்கரவர்த்தியே! இந்த அதிசயத்தைக் கேட்க வேண்டுமென்று சொல்ல, அவன் தலையைச்சாய்த்து கேட்கக் காதிலே ரகசியமாக ஐயா இராவணேஷ்வரா! கிழக்கு வாயிலிலே புறப்பட்டுப்போன நம்முடையசேனைகளும் எக்காலத்திலும் ஜெயம்பெற்று வந்தவனும், உன்னுடைய ஆக்ஞாசக்கரத்தை யொத்தவனுமான பிரகஸ்தனென்னும் சேனுதிபதியி னுயிரானது வானர சேனுதிபதியான நீலனென்பவனுல் வீர சுவர்க்கம்போய்ச் சேர்ந்தது. வடக்குவாயிலில் வச்சிரமுஷ்டியும், மேற்கு வாயிலில் மலையையொத்த துன்முக னென்பவனும் ஒருவரும் ஜெயிக்கவரிதான ஐம்பதுவெள்ளஞ்சேனையு மிறந்துபோனுர்கள். தெற்கு வாயிலில் போன நம்முடைய ராக்ஷதக் கூட்டத்திலே சுபாரிசனு மிறந்துபோனுன். மற்றவர்கள் போனவழியை நாங்கள் அறியோமென்று சொன்னுர்கள். அந்த வார்த்தையைக் கேட்கவே ராவணன்நெருப்பிலே நெய்யைவிட்டதுபோல கோபாக்கினி மண்டி கண்களிலே அக்கினி ஜுவாலைகள் எழும்பும்படியாக அடிக்கடி பெருமூச்சுவிட்டு மறுபடியுமந்த தூதர்களைப் பார்த்து, பிரகஸ்தனை யார் கொன்றவன்? நிறுத்திப் பொறுமையோடு சொல்லுங்களடாவென்று சொன்னுன். அதற்கு தூதன், சுவாமி! நீலனென்பவன், ராக்ஷதசேனைகளையெல்லாம் எங்குந் தலைக்காட்டவொட்டாமல் சிதையவடித்துவிட்டு பிரக

ஸ்தனுடனெதிர்த்து இருவரும் பற்பல விதமாக யுத்தஞ்செய்தார்கள். அந்தச் சமயத்தில் நீலன் கையினால் ஓங்கி தலையிலடித்தான். அந்தப்பலமான அடியினாலே அந்தப் பிரகஸ்தன் மாண்டுபோனானென்றும், அவனுடனேகூடத் துணையாகச்சென்றவர்களில் நாங்கள்மாத்திரந்தான் தப்பிப் பிழைத்துவந்தோம், மற்ற ராக்ஷதர்கள் அனைவரும் சிதைந்து இறந்துபோய்விட்டார்களென்றும் சொன்னார்கள். அந்தவார்த்தையைக் கேட்கவே, பல்லை நறநறவென்று கடித்து திசாதிசைகளெல்லாம் திக்கென்று ஒரேகாலத்தில் பற்றியெரியத்தக்கதாகக் கண்களில் தீப்பொறிபறக்கப் பார்த்து, ராவணன் தனக்கு சமீபத்திலிருக்கிற ஒரு ராக்ஷதவீரனோடு, நம்முடைய சேனாதிபதி பிரகஸ்தன் ஒருமரத்தை எடுத்துவந்து போர்செய்த அற்பக்குரங்கினால் இறந்துபோனானென்றுவெளியரங்கமாகத்தூதுவர்கள் சொன்னார்களே. இந்திராதிதேவர்களையெல்லாம் ஜெயித்து அதிக கீர்த்திபெற்றவன் ஒரு குரங்கினாலே செத்தானெனச் சொல்லப்பட்ட இந்தவார்த்தையை கேட்கவே, என்னுடைய காதும்வெந்து மனதும்வேகிறதென்று சொல்லினான். அப்பிரயோஜனமான ஒரு சிறிய எலியைப்போன்ற குரங்கு அடிக்க, மகமேருவைப்போல பருத்துயர்ந்த உருவமுள்ளவன் இறந்துவிட்டபடியால், பகையையும் அக்கினியையும் கொஞ்சமென்று எண்ணலாகாது என்று கருதி, இரண்டான கண்களிலேயும் தாரைதாரையாய், கண்ணீரானது ஒழுக அங்கலாய்த்து, நல்லது அதிருக்கட்டும். நமக்குக் குறைவுவராமல் குதிரைப்படையுடனே புறப்பட்டுப் போங்களென்று வில்வீரர்களான இராக்ஷதர்களை அனுப்பி, யுத்தகாரியங்களையெல்லாம் தெரிந்துகொண்டு கைலாயமலையைப் பறித்துப் பந்தாடின பராக்கிரமசாலியான இராவணனெனச் சொல்லப்பட்டவன் ஆயிரங் குதிரைகளைக் கட்டியிருக்கிறதும், கடல்போல சப்திக்கத்தக்கவோட்டமுடையதும், தெய்வலோகமெல்லாம் கொள்ளை கொள்ளும்படியாக சென்றதும், முன்னாலே தேவராஜனாகிய தேவேந்திரன் தோற்றுக் கொடுத்ததும், அதிகபலமுள்ளதும்,உயர்ந்ததும், விசாலமானதுமாகிய தேரிலேறி, ரிஷபவாகனரூடரான ருத்திரமூர்த்தியை வணங்கி தோத்திரங்களைச்செய்து மகாமேருகிரிக்குச் சமானமானவில்லைக் கையிலே ஏந்திக்கொண்டு அட்டகாசம்செய்து குணத்தொனி செய்த மாத்திரத்திலே, அந்தச்சப்தத்தால் தென்றிசைக்கு அதிபனாயிருக்கின்ற கூற்றுவனுடைய ஸ்திரீயின்வயிற்றிலே இருந்த கெர்ப்பமும்கலங்கி விழுந்தது. பின்னும் தேவர்களுடைய மணிமார்பினிடத்தில் பட்டுமுறியாத பலமுள்ளதும், ஒருவர்மீதும் இதுவரையும்பிரயோகஞ்செய்யாததுமான பற்பல ஆயுதவர்க்கங்களை கையினிடத்திலே பிடித்துக்கொண்டும், வஜ்ஜிரகவசத்தை மார்பிலே தரித்துக்கொண்டும், தும்பைமாலைச்சூடி இருபக்கங்களிலேயும் வீசுகின்ற வெண்சாமரைகள் நுரைகள்போலவும், தன்னுடைய சரீரமே கடல்போலவும், முத்துக்குடையென்கிற பூரணச்சந்திரனுக்குக் கீழே காணப்பட்ட கரியமேகம் போலவும் பிரகாசித்தான். சேனாசமுத்திரங்கள்வர, முரசுகள், ரணபேரிகைகள், தவளசங்கங்கள், காகளங்கள் முதலாகச் சொல்லப்பட்ட வாத்தியங்கள், அண்டகடாகங்கள் முழுதும் படீரென்று வெடிக்கும்படியாய் முழங்கினதுகள். யானைகளும், தேர்களும்,குதிரைகளும், இராக்ஷதர்களும்வந்து நெருங்கி யுகாந்தகாலத்திலே சப்தசாகரங்களு மொன்றாய் பொங்கி வந்ததுபோல் நிறைந்ததுகள். அதிநடுவே மகமேரு பர்வதம்போல, தேரிலேறிவந்தவனான இராவணனெனச் சொல்லப்பட்டவன் பிரகாசித்தான். அந்தத்தேரிலே சரிகமபதநிச வென்கிற ஏழிசைகளையும் காட்டுகின்ற வீணைக்கொடி ஆகாயமட்டும் அளாவி, பிரளயகாலகூற்றுவன் நீட்டியசைக்கிற நாவைப்போலத் தோன்றினது. இந்த யுத்தத்திலேவந்த ராக்ஷத சேனாசமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ராமமூர்த்தியை ஒரு தோணியாக நினைத்து யுத்தத்தைப்பார்க்கவந்த தேவர்கள் நெருப்புப்பற்றி எரிகின்ற மூங்கிற்காட்டையுடைய மலைகளைப்போல செம்பட்டமயிரும் கறுத்ததேகமுமாய்க் காணப்படாநின்ற இவ்வகைப்பட்டராக்ஷதர்களைப் பார்த்துப் பயந்து, ஆகாயத்திலே சிதறிப் போனார்கள்.தேரிற்கட்டியிருக்கின்றகொடிகளும் யானைமேல் பிடித்துவருகிற படைமுன்னணிக்கொடிகளும், அளாவித்தோய்

ந்தபடியினாலே ஆகாயகங்கையும் சுவறும் படியாய் வற்றிப்போச்சுது. ஆயிரங்கோடி பேய்கள் ஆயுதங்களைச் சுமந்துக்கொண்டு பக்கங்களிலே வரவும், இரண்டாயிரகோடி சேமத்தேர்கள் பின்னேவரவும், அநேக மானராக்ஷதப்படைத்தலைவருமாகியசேனை கள் நெருங்கி ஆர்ப்பரித்து சூழ்ந்து வர வும், இந்த மூன்றுலோகத்தையும் வெற்றி கொண்டராவணன் புறப்பட்டுவந்தபோது வானரதூதர்களோடிவந்து லோகநாயக ரான ராமமூர்த்தியைச்சேவித்து, சுவாமி! அற்பத் தொழிலையுடைய ராவணனெனச் சொல்லப்பட்டவன் சமுத்திரம்போல அ நேகஞ் சேனைசூழ அதிக கோபத்தோடே யுத்தகளத்தில் வந்து சேர்ந்தானென்று சொன்னார்கள். ராவணன் யுத்தத்திற்கு வந் தானென்கிற வார்த்தையைக் கேட்கவே சீதையை மீட்டதற்கொப்பான தைரிய சந் தோஷத்தினால் இதுவரையில் சீதையைப் பிரிந்து இளைத்திருந்த தோள்கள் பூரித் தன. மரவுரி தரித்து இடதுபக்கத்திலே வாளை இறுக்கிக்கட்டினார். பின்னும் உலக த்திலே துன்பமெனச்சொல்லப்பட்டதைத் தருவதான சகல கருமங்களினால் ஒரு பய னும் உண்டாகாதென்கிற மெஞ்ஞானநேத் திரத்திற்கு இஷ்டமாகிய பராபரவஸ்து வான ஸ்ரீராமர் பூர்வத்திலே வாமனாவதா ரத்தில் தம்முடைய திருவடிகளால் உலக த்தை அளந்தகாலத்து வேதத்திற்கும் இந்த உலகங்களுக்கும் எட்டப்படாமலிரு ந்த திருப்பாதாரவிரல்கள் பக்கங்களிலே விரிந்திருந்த தன்மைபோல அந்த திருவ டிக்கு வீரகண்டாமணியைத் தரித்தார். ஆகாயத்திலே நக்ஷத்திரங்களானவை பிர காசிக்கின்றதுபோல தம்முடைய திருமார் பில் பிராட்டியில்லாம விருப்பதினால் அவ ளுக்கு வருத்தமுண்டாகாதென்பது கருதி யோ தெரியாது அந்தமார்பிலே வஜ்ஜிரக வசத்தை இறுக்கிக்கட்டினார். கற்பகக் கிளை யிலேகருமமானதுசுற்றிக்கொண்டிருப்பது போலே கையிலே முன்கைத்தோல்கட்டிக் கொண்டு இராத்திரிகாலத்திலும் பூத்துப் பிரகாசிக்கிறதும் நடுப்பகற்காலத்திலும் நிறம் மாறுமலும் வாடாமலும் இருப்பது மான தாமரைமலர்போன்ற கைவிரல்களு க்கு விரற்புட்டில்பூட்டி உலகத்திலேயுள்ள பாஷையைக் கற்று அளவிறந்தனவாகிய சாஸ்திரங்களையும் ஆராய்ந்து பஞ்சவிலக் கணங்களைக்கற்றறிந்த மகாகவியாலே செய் யப்பட்ட செய்யுட்களைப்போலவிளங்குகிற அக்ஷயத்தூணிரத்தையும் தோளிலே சட் டிக்கொண்டு, பிரகாசிக்கும்படியான மேகக் கூட்டங்களுக்கு மத்தியிலே கிடக்கும்படி யான மின்னலுக்கொப்பாக அளவிறந்த கிரணங்களுடனே கூடிய நெற்றிப்பட்டத் தைத் தரித்துக்கொண்டு, இளந்தளிரான இலைகளையுடைய ஆத்திமாலையுடனே அழ கிய துளவமலர்மாலையையும் தும்பைமாலை யையும் தரித்து, இந்தப் பெரிய உலகமும் இதிலுள்ள எல்லா சராசரங்களும் முதலா ய்த் தம்முடைய திருவயிற்றிலே அடங்கிய சகலமான வஸ்துக்களும் தாமேயென்று சொல்லும்படியாயிருந்தும், இப்பொழுது இது வேறாக இருக்கின்றதாதலாலே இது வேறொரு பொருளென்று சொல்லும்படி யானதான மகா கோதண்டமெனச் சொல் லப்பட்ட வில்லினை இடதுகையில் பிடித் துக்கொண்டவராய் ராமர் வானரசேனையி நடுவே திருப்பாற்கடலுடனே ஸ்ரீமகாவி ஷ்ணுவானவர் புறப்பட்டு வருவதுபோல வந்து, உலகத்தையெல்லாம் அழிக்கும்படி யாய் வந்திருக்கின்ற பிரளயகால ருத்திர மூர்த்தியைப்போல வானரசேனைகட்கெல் லாம் முன்னணிப்படையிலே வில்லு டனே நின்றுக்கொண்டிருக்கின்ற தம்பியு டனேவந்து கூடினார். அப்போது சப்த சமுத்திரங்களும் ஏககாலத்திலே திரண்டு வந்ததுபோல வந்த ராக்ஷத சேனைகளும், மின்னலைப்போல பிரகாசியாநின்ற பற்க ளையு முடைத்தாயிராநின்ற வானரசேனைக ளும், உயிர்களைக்கொண்டுபோகும்படியான எமனைத் தன்னுடைய வேலையில் பிரவேசி க்கும்படிச் செய்யாநின்றதுபோல எதிர்த் துப் போர்செய்யத் தொடங்கின. அச்சம யத்திலே ராக்ஷதருடைய தலைகளறுந்தன. குடல்கள் சரிந்தன. தேர்கள் சிதைந்துரு ண்டன. குதிரைகள் இறந்தன. எங்கும் இராக்ஷதப்பிணம் குவிந்தன. அப்பிணக் குப்பல்களை வாரிக்கொண்டு இரத்தவெள் ளம் எவ்விடமுமோடிப் பெருகினது. தெ ற்கு வடக்கிலே குரங்கு சேனைகளுடைய பற்களுதிர்ந்தன. குரங்குப்பிணங்கள்பொற் குவியலைப்போலவும், மலையடுக்குப்போல வும், மேகக்கூட்டங்கள்போலவும் காணப்

பட்டன. குரங்குகள் இரண்டுகைகளினாலே யறைய ராக்ஷதர்கள் ஏறிவந்த குதிரைகளுடைய காற்குளம்புகள் சிதைந்துபோய்விட்டன. அவ்வானரவீரருடையகுத்தினாலே ராக்ஷதர்கள் மார்புபிளந்தோடி விட்டனர். அவர்களுடைய ரத்தமானது அங்கங்கு ஆறுகளாய்பெருகியோடத் தலைப்பட்டது. அப்போது ராவணன் கண்களிலே நெருப்புப் பொறிபறக்க தன்னுடைய வில்லைத் துத் தேவர்களும் நடுங்கும்படியாக குணத்தொனி பண்ணினான். அச்சப்தத்தினாலே சில வானரப்படைகள் இடிமுழக்கம் கேட்ட சர்ப்பக்கூட்டம்போலே ஓடி யொளித்தன. சில வானரங்கள் போர்க்களத்தைவிட்டு ஓடிவிட்டன. சில குரங்குகள் பயந்துவிட்டன. சில வானரங்கள் பயந்தோடயத் தனித்தன. சிலவானரம் மூர்ச்சையாய்விழுந்துபோய் விட்டன. நெஞ்சிலே சற்றும் இரக்கமற்ற இராவணன் ஆகாயமும் கிழிந்துபோகும்படியாய்ப் பண்ணின அந்த நாணொலியைக்கேட்டு, அவனுடையஜாதியாரான ராக்ஷதர்களே பயந்து நடுநடுங்குவாரானால், குரங்குகள் பயந்ததை இன்னபடியென்று சொல்லவேண்டுமா? ஆனால் விபீஷணாழ்வாரும் இளையபெருமாளும் சுக்ரீவ மகாராஜரு மாத்திரம் பயமென்பதில்லாமல் சுவாமியுடனேகூட நின்றுகொண்டிருந்தார்கள். மற்றவரெல்லாம் நான்கு திக்கிலேயும் ஓட்டம் பிடித்தனர். ஆகாயமும் தூளிப்படலத்தால் மூடப்பட்டுப் போய்விட்டது. முல்லை-குறிஞ்சி-மருதம்-நெய்தல் என்னும் நான்குவித நிலமான இந்தப் பூமியை ஒருகையாலே தூக்கி எடுக்கும்படியான பராக்கிரமசாலியான இராவணன் வில்லினுடைய குணத்தொனியாலே இந்தப் பூலோகத்தவரையெல்லாம் நடுங்கச்செய்ததுமாத்திரமோ? அது சப்தலோகத்தையும் அழிக்கவரும் பிரளயகாலமேக கர்ஜ்ஜனைப்போல தேவர்களுடைய செவியிலும் நுழைந்தது. அப்போதுவானராதிபதியான சுக்ரீவமகாராஜர் வஜ்ஜிராயுதத்தையொத்த ஒரு பெரிய மலையைப்பிடுங்கி அதிவேகத்தோடே அக்கினி ஜொலிக்கும்படியாய் ராவணன்பேரிலே விட்டெறிந்து நகைத்தார். ராவணன் அதை ஒருபாணத்தினாலே சாம்பலாய்ச் சிதறிப்போகும்படியாய்த் தரையிலேதள்ளினான். அது கண்டு சுக்ரீவமகாராஜர் அதிககோபமாய்க் கண்ணிலே நெருப்புப்பொறி பறக்க பூமியின் வயிறும் கிழியும்படியாய் ஒரு பெரிய மரத்தை வேருடனேபெயர்த்து பிடுங்கிக்கொண்டார். அதைக்கண்டு ராவணன் அநேகமாயிரம் அம்புகளைப் பிரயோகம்பண்ணி அம்மரத்தை ஆயிரத்துக்குமேலும் அதிக தொகையாய்த்துண்டங்களாக்கிவிட்டான். பின்பு சுக்ரீவமகாராஜா மேருமலையிலேயும் பெரியதா யிரா நின்ற ஒரு பர்வதத்தைப் பேர்த்தெடுத்து நெருப்புப்பொறி பறக்க ராவணன்பேரிலேவீசியெறிந்தார். அந்தப் பருவதத்தையும் ஒரு அம்பினாலே உடைத்துத் தள்ளிப்போட்டுத் திக்குப்பாலகரை முதுகிட்டோடும்படி தோற்கடித்து வில்லைக் கெட்டியாகப்பிடித்து சுக்ரீவமகாராஜருடைய மார்பில் ஒருவஜ்ஜிர அம்பு அழுந்தும்படியாய் விட்டுவிட்டான். அப்படிப் பட்ட பாணமானதுபோய் அழுந்தவே சுக்ரீவமகாராஜர் சரீரம் பதைத்தார். அப்படி பதைப்பதற்குமுன்னமே, மேற்குவாயிலிலேயிருந்த சிறிய திருவடியான அநுமார் கூடவிருந்து அறிந்தவர்போலே ஒரு நிமிஷப்பொழுதிலே ஓடிவந்து சுக்ரீவமகாராஜருக்கு முன்னாக நின்று ராவணனைப் பார்த்து எங்களுடைய ராஜா ஆயாசந்தீர்ந்துவருவதற்குமுன்னே மிகுந்தபலசாலியான ராவணனே! நீ என்னுடனே போர் செய்கின்றாயாவென்று சொன்னார். அப்படி சொல்லவே அதிககோபாவேசத்தோடேவருவாயானால் வா வா என்றுசொன்னான். இவ்விதமாகச்சொன்ன ராவணன் பேரிலே வேதங்களையொத்த தோள்களையுடைய அநுமான் ஒரு பெரியமலையையெடுத்து வீசியெறிந்தார். அந்தப் பர்வதமானது ஆகாயத்திலே படர்ந்துவரா நின்ற மேகங்களையெல்லாம் எரித்துவிட்டு அக்கினியை வீசிக்கொண்டு அதிவேகமாய் வருவதைக் கண்டு ராவணன் பத்துப்பாணம் தொடுத்து ஆயிரம் கூறாக்கிவிட்டான். அதைக்கண்ட தேவர்கள் பயமடைந்து நடுங்கினார்கள். அநுமான் பின்னும் ஒரு பர்வதத்தைப் பிடுங்கித் தம்முடைய தோள் பலங்கொண்டுவீசியெறிந்தார். அம்மலையானது இடியைக்காட்டிலும் அதிவேகமாய்ப்போய் அவனுடைய தோளிலே அணிந்திரா நின்றவாகுவலயத்துடன்கூடகானும்

புழுதியாய் உதிர்ந்துவிட்டது. அதுகண்டு அநுமான் அதிகமான கோபங்கொண்டு வேறொரு பர்வதத்தைப் பேர்த்தார். அப்படி பேர்க்கின்ற அநுமானுடைய கையிலேயும் தோளிலேயும் பத்துப்பாணம் அழுந்தும்படி ராவணனெய்தான். அவை வந்து சரீரத்திலே அழுந்த அதற்குச் சற்றேனும் ஆயாசப்படாமல் மிகுந்த தைரியத்துடனே நின்றார். அதைக்கண்டு தேவர்கள் இப்படி யார்தான் நிற்பார்களென்பதாய் ஆச்சரியப்பட்டு ஆரவாரித்தார்கள். அநுமான் பின்னும் ஒருமராமரத்தைக் கையிலே யெடுத்து வேரோடே சுழற்றி விட்டார். அப்படிவிட்ட அந்த மராமரம் ராவணனுடைய தேர்ச்சாரதியின் தலையைத்துணித்து எறிந்துவிட்டு, பக்கத்திலுள்ள இராக்ஷதர்களையும் அடித்துக்கொன்றுவிட்டது. வேறொரு சாரதிவந்து ரதத்திலேறினன். அப்போது கடல்பொங்கினதுபோலக் கோபங்கொண்ட ராவணன் நூறுபாணம் பிரயோகம் பண்ணினன். அத்தனையும் வந்து சரீரத்திலழுந்தவே ரத்த ஆறு ஒழுகும்படியாய் மாருதிமெய்மறந்து மிகவும் நொந்தார். அதுகண்டு ராவணன் சொல்லுகிறான் ? குரங்குகளே ! கல்லுமரமும் கொண்டு கைகளினாலேயும்,வாய்ப்பேச்சினாலேயும், மயிர் வளர்ந்திருக்கிற தோள்களினாலேயும், ஊசிப்பல்லுகளினாலேயுமா என்னை ஜெயிக்கவெண்ணியிருக்கிறீர்கள் ? ஒருபொருளாய் நான் வில்லெடுத்து நின்றால் வெகு பலவந்தர்களைப்போல சௌரியங்காட்ட மாட்டீர்களாவென்று சொல்லிப்பல்லைக்கடித்து நெருப்புப் பொறிபறக்க நகைத்து, வில்லைவளைத்து, குரங்கு சேனைகளின்மீது பிரளயகாலத்து இடிக்குச்சமானமான பாணங்கள் ஒன்றைப்பார்க்கிலும் ஒன்றதிகமாய் ஆயிரங்கோடி பாணம் பிரயோகித்தான். அந்தப்பாணவருஷத்தால் சண்டமாருதத்தினாலே கடலலைந்து பொங்கியிரைவதைப்போல வானரங்கள் துன்பப்பட்டதுகள். இப்படி தம்முடைய சேனைகளை வருத்தப்படுத்தின ராவணனுடைய வில்லின் வல்லமையையும், வானரங்கள்பட்ட பாடுகளையும், படைத்தலைவர்கள் செய்த காரியங்களையும், இளைய பெருமாளாகிய லட்சுமணர்கண்டு நம்முடைய பாணத்திற்கே இவன் அலக்ஷியமானவன் இன்றைக்கு இவனை அதஞ்செய்வோ மென்றெண்ணி, தனுசோடுகூடின மேருமலையைப்போல வந்து எதிர்த்தார். அப்படி எதிர்த்த ராஜராஜனான தசரத மகாராஜகுமாரனான இலட்சுமணப் பெருமாள் வில்லைக்குணத்தொனி பண்ணினார். அதைக்கேட்ட ராவணனுடைய நிலைமையென்னவென்று சொல்லப்போகிறேன் ? அந்தக்குணத் தொனியைக்கேட்டுப் பிரளயகாலமேகக் கூட்டங்களின் இடியென்று மூன்றுலோகத்தவரும் நிச்சயித்து நடுக்கத்தை யடைந்தார்கள். சத்துருக்களெல்லோரும், சிங்கத்தினுடைய தொனியைக் கேட்ட யானைகளைப்போலே பயந்து திடுக்கிட்டார்கள்.

அந்தத்தொனியைக்கேட்ட ராவணன் தன்பக்கத்திலே நின்ற ராக்ஷதர்கள் மனம் முறிந்து கலங்கின தன்மையும், மகாவீரரானராமபிரானுடைய திருத்தம்பியானஇளையபெருமாளுடைய வில்லின் நாணோசையும் அறிந்து, தன்னுடைய பத்துத்தலைகளையும் அசைத்து,இவனும் ஒருமனிதனோவென்று ஆச்சரியப்பட்டுக்கொண்டு இருக்கும்போது லட்சுமணப் பெருமாளுடைய வில்லிலேயிருந்து புறப்படுகிற பாணமழைகள் ரதங்கள்பேரிலும், குதிரைகள்பேரிலும், யானைகள்பேரிலும், ராக்ஷதர்பேரிலும், மேன்மேலும் வத்துபாய்ந்து எவ்விடத்திலும் ரத்தப்பிரவாக மாக்கிவிட்டன. சிலபாணங்கள் முகங்களிற்பட்டுக் கீழ்நோக்கி உடலிலுருவித் தேரினுடைய பார்களைப்பிளந்து, அச்சினை முறித்து, கீழ்லோகங்களையும் உருவிச்சென்றும் ஓய்வில்லாமலோடின. அப்போது பத்துக்கோடி ராக்ஷதர்கள் யானை - குதிரை-தேர் இவற்றைப் படை முன்னணியாக்கிப் பற்பல ஆயுதத்தைப்பிரயோகம் பண்ணிக்கொண்டு ஒரு மனிதனானவன் நம்முடைய அரசனுடனே எதிர்த்தால் நமக்குள்ள சௌரியமானது என்னபயன்படப் போகிறதென்று சொல்லிக்கொண்டு, தம்முடைய தரித்திரம் அதமாகும்படியாய்க் கொடுக்கின்ற ஒருபிரபுவை அனேகமான தரித்திரர்கள்போய்ச் சுற்றிக்கொண்டதுபோலே இராமானுஜரைச் சுற்றி வளைந்துகொண்டார்கள்.

அப்படி சுற்றிக்கொண்ட அந்தராக்ஷதரென சொல்லப்பட்டோராலே எறியப்

பட்டதும் எய்யப்பட்டதுமான எல்லா ஆயுதத்தையும் லட்சுமணர், சிலபாணத்தினாலே யழித்துப்போட்டும், பின்னும் ஓயாமல் பாணத்தைப்பொழிந்து, அந்த ராக்ஷதரையெல்லாம் சம்மாரஞ்செய்தார். அப்போது ராக்ஷதருடைய உயிரையுண்டு எமனும் திகட்டிப்போனான். சமுத்திரமெல்லாம் ரத்த ஆறுகளாலே நிறைந்தெதிர்த்தது. அந்தரத்த ஆறுகளை வாடவொட்டாமல் பிணங்கள் மலைபோலே குறுக்கே மறித்துக்கொண்டிருந்தன. இப்படி இளைய பெருமாளெனச் சொல்லப்பட்ட லட்சுமணர் எய்கிற பாணங்களினாலே ராக்ஷதருடைய தலைகளெல்லாம் அற்றன. வயிரம் பற்றிய கால்களெல்லா மற்றுப் போய்விட்டன. மலையைப்போன்ற தோள்களெல்லாம் அற்றுப்போய் விட்டன. மார்புகளெல்லாமற்றன. அவருடைய வீர நிலைமையெல்லாம் அற்றன. பலங்களெல்லா மற்றன. வளைந்த வில்லெல்லாமற்றன. அவர் கற்றுக்கொண்டிருந்த யுத்தவகையெல்லாம் மற்றுப் போய்விட்டன. தேரெல்லாம் துணிந்தன. குதிரைக் கூட்டமெல்லாம் துணிந்து போய்விட்டன. சிவந்த கண்களையுடைய மேகம்போன்ற யானையெல்லாம் துணிந்து போய்விட்டன. வீருடைய பாதகண்டாமணிகளெல்லாம் துணிந்து போய்விட்டன. கழுத்திலே தடிபோலே கிடக்கின்ற மாலையெல்லாம் துணிந்துபோய்விட்டன. கருவித்து நின்றுகொண்டிருந்த அவருடைய நிலைமையெல்லாம் குலைந்துபோயின. அவர் செய்யும்படியான போரெல்லாம் சின்னபின்னப்பட்டு விட்டன. பூர்வத்தில் ஜெயம்பண்ணின புகழுமழிந்துபோய்விட்டது. மலைப்பாம்புபோன்ற கடினமாயிருக்கப்பட்ட கால்களையுடைய ராக்ஷதர்விழுந்தார். அவர்பேரிலே புரவிகள் விழுந்தன. அவற்றின் பேரிலே யானைகள் விழுந்தன. அவற்றின்பேரிலே ரதங்கள் விழுந்தன. அவற்றின்பேரிலே ராக்ஷதரெனச் சொல்லப்பட்டவருடைய தலைகள் விழுந்தன. நிணமும் ரத்தமாய் அந்தரணக்களத்திலே கொஞ்சமாயினும் வெளியில்லாமல், இவ்வாறாய் ஒன்றின்மேலொன்றாய் விழுந்து மாண்டு கிடந்தன. அப்படிப்பட்ட சமயத்திலே அவ்விலட்சுமணனுடைய வில்லிலே அம்புதொடுக்கின்றதையும் பிரயோகிக்கின்றதையும் ஒருவரும் காணவில்லை. அவ்வம்பு வரிசை வரிசையாய்போகின்ற அடுக்கையும் கண்டவரில்லை. அதுவேகமாய்வந்து பட்டு வீழ்கின்ற பிணக்குப்பல்களிலே பத்திகளை மாத்திரமே அங்கங்கேகண்டார். அத்தனை கரவேகமாய் இளையபெருமாளான லட்சுமணர் பாணங்களைப் பிரயோகம்பண்ணினார். பர்வதம்போலவே யானைகளும் குதிரைகளும் தேர்களும் யாளிகளும் சிங்கங்களும் மற்றவைகளும் நிறைந்து வந்தவைகட்கு ஒரு அளவில்லை. அவ்வளவும் வந்து திரிந்து சிறிதுநேரமாகிலும் நிற்கவில்லை. அந்த ரணக்களத்திலெல்லாம் பிணமாய்க் கிடந்தன. அநேக ராக்ஷதர் சூலம் வேல் வில் முதலாய்ச் சொல்லப்பட்ட ஆயுதமெடுத்து இளையபெருமாளென்கிற இலக்ஷமணப்பெருமாள்பேரிலே பிரயோகம் பண்ணினார்கள். அதுகளெல்லாம்அவருடைய பாணத்தினாலே ஒன்று நூறு துண்டங்களாயற்றுப்போயினதேயல்லாமல் ஒன்றாயினும் தப்பவேயில்லை. அப்போது ராக்ஷதசேனைகள் நிலைத்து நிற்கமாட்டாமல் பின்னிட்டு ஓட்டமெடுத்து வழிகளிலேபந்துக்களுடைய தலைகள் தங்கள் தங்கள் காலிலே இடறுவதினாலே ஓய்ந்து விழுந்து மாய்ந்ததுகள். இப்படியாகவே ராவணன் அவ்விலட்சுமணருடைய அம்புகளைப் பார்த்து வடவாமுகாக்கினிபோலே மனமானது கொதித்து, காற்றுக்கு சமானமான குதிரைகள் பூட்டியிரானின்ற தன்னுடையதேரை யதிவேகத்துடனே செலுத்திக் கொண்டுவந்து லட்சுமணருடனே எதிர்த்தான். அப்போது கூற்றுவனுக்குப் பித்தேறினதுபோலக் கொல்லுகின்ற லட்சுமணருடைய கோபமும் தாபமும் வேறென்று பேதம் தோன்றாதபடி இராவணனைக்கிட்டிவந்து, நான் காத்துக்கொண்டிருந்த பிராட்டியாரை என்னுடைய காவல் தப்பும்படி மோசம்பண்ணி எடுத்துக்கொண்டுவந்த திருடா! இன்றைக்கு நீ தப்பிப்போகமாட்டாயென்றுசொல்லி அக்கினி ஜுவாலையாகப் பெருமூச்சுவிட்டுத் தலைகளினோட்டைப் பிளக்கின்ற அக்கினிக்கு சமானமான பாணங்களை ஒன்றின்பின்னொன்று அடிக்கடி அடுக்கடுக்காய்ப் பிரயோகித்துப் போர்செய்தார். இப்படியாய்ப்

பொழிந்த பாணங்களெல்லாம் தன்பேரிலே வராமல் நடுவே முறிந்துபோகும்படியாக ராவணன் அதிகூர்மையான பாணங்களினாலே தடுத்தான். அதுகண்டு லட்சுமணப்பெருமாள் இலகுவான பாணங்களானபடியாலே அறுத்தாய், இனியறுப்பாயென்று மேகம்பொழிகிறதுபோலே சரமாரிகளாய்ப்பொழிந்தார். இச்சமயத்திலே ராவணன் சரற்கால மழையைப்போல அஸ்திரங்களைப்பொழிந்து லட்சுமணர்விட்ட பாணங்களையெல்லாம் விலக்கி இலட்சுமணர் மறுபடியும் பாணப்பிரயோகஞ்செய்ய வொட்டாமல் அவருடைய அக்ஷய அம்பறுத்தூணியை அறுத்துத் தள்ளினான்.

அத்தருணத்திலே இளைப்பாறிக்கொண்டிருந்த அநுமானெனச் சொல்லப்பட்ட ஆஞ்சநேயர் கண்களிலே அக்கினிப்பொறிபறக்கவந்து போர்செய்யாதேயெனச்சொல்லி அந்த ராவணனுடைய தேரினுக்கு முன்னாக மறித்து நின்றுகொண்டு, இந்தயுத்தத்தைவிட, வேறொரு நல்லயுத்தமிருக்கின்றது. அதனுடைய விபரத்தைக்கேளென்பதாய்ச் சொல்லுகின்றார். நீ சுவர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்று லோகத்தையும் ஜெயித்து இளையாமல்மிகுந்த பலத்துடனே தேவேந்திரனுடைய புகழை யழித்துப் போட்டாய், திக்விஜயம் பண்ணினாய், ஆனாலும் இன்றைக்கு உனக்கு அபஜெயம் வருமென்றுசொல்லி அந்தராவணனுக்கெதிரில் கையைத்தூக்கி, அந்தக்கை திரிவிக்கிரமருடைய திருவடியைப்போலே எல்லாலோகங்களையும் மூடிக்கொண்டு வளர்கின்றதை எங்கும் வெற்றிகொண்டு கொடிகட்டியிருக்கிற அந்தராவணனுக்குக்காட்டி நீ வில்லாயுத முதலிய ஆயுத பரீக்ஷைகளையெல்லாம் வெகுசாமர்த்தியத்தோடே கற்றிருக்கிறாய். இருபது கைகளுடனே இருக்கிறாய். நீ மிகுதியான பலசாலி யுத்தத்திலே கைதேர்ந்தவன். மேலும் நல்லவீரனாயுமிருக்கிறாய். என்கைக்குமுன் நீ நில்லுபார்ப்போமென்று நின்று அக்கினியைப்போல சுவாசமிட்டுக்கொண்டு உனக்குச் சமானமில்லையென்று மிகுந்த ஆண்மையுடனே யிருந்தாய். இதுமாத்திரமா சிவனிடத்தில் பற்றிய வாள் வல்லமையும், சப்தலோகாதிபத்தியமும், சப்தபிரகாரங்களையுடைய லங்காராஜ்ய வல்லமையும், உன்தைரியமும், ஒருவரும் ஒப்பில்லாமலாளுகை செய்கின்ற தன்மையும், உன்தோள்வல்லமையும், உன்பிரதாபமும், எல்லாம் என்னொரு குத்தினாலே நாசமாக்கிவிடுகிறேன். பலவார்த்தைசொல்லியென்ன? கைலாயபர்வதத்திற்கும், செவ்வரக்கைப்போன்ற கண்களையுடைய அஷ்டதிக்கஜங்களும் அசையாத அதிகபலமுள்ள இருபது தோள்களும் மார்புமுடையவனான நீ குரங்கினுடைய கையினாலே குத்துகிறதைப்பொறுத்துக்கொள். இப்போது நான்குத்துகிற குத்துக்கு நீ சாகாமலிருந்தாயேயானால் பிறகு உன்னுடைய இருபது கையினாலேயும் என்னைக்குத்து, அதற்கு நான் சாகாமலிருந்தேனேயானால், அப்பால்உன்னுடனே எப்போதும் எதிர்த்துப் போர் செய்கிறதில்லை என்று சிறிய திருவடியாகிய ஆஞ்சநேயர் சொன்னார். அதற்குராவணன் சந்தோஷப்பட்டு நல்ல சௌரியவந்தன் சொல்லுகிறபேச்சு சொன்னாய், நீ பலசாலியே சரி, என்னெதிரே வேறொருவர் நிற்பார்களோ? நீ வந்து நின்றாயே. உனக்கு இந்த உலகத்திலாவது மற்றெங்கேயாவது சமானமுண்டோ? உன்கையிலொரு ஆயுதமில்லாமல் நீ யொருவனாய் முன்னே எங்கள் பந்துக்களையெல்லாம் கொன்று தேரின்மேலேறி வில்வளைத்துக்கொண்டு மிகுந்த சேனைகளுடனே வந்த என்முன் தனியேவந்து நின்றாயே. உனக்குச் சமானமானவர்கள் யாரிருக்கிறார்கள்? நீயே சொல்லையா நீஇப்படி நின்றபோதே அந்த மும்மூர்த்திமுதல் மூன்றுலோகங்களிலுமுள்ள தேவர்களும், தானவர்களும், மற்றவீரர்களும், பித்துப்பிடித்ததல்லாமல் எதிரே நின்று மார்பில் குத்தென்று நிற்கத்தக்கவர்களாரிருக்கிறார்கள்? இந்த ஆச்சரியம் வெளியில் சொல்லத்தக்கதல்ல. எனக்கு இருபது கைகளிருக்கின்றதுகள். அஷ்டதிக்கு யானைகளும் தோற்றதென்ற புகழுங் கொஞ்சமுண்டு. இரண்டுகைகளையுடைய நீஎன்முன் இப்படிசொன்னாய், இனிமேல் என்யுத்தமானது எனக்கு வெற்றியைத் தரத்தக்கதல்ல. எட்டுத்திக்குகளையும் ஜெயித்த என்கீர்த்தி யழியும்படியான ஒரு இகழ்ச்சி முன்னேயே உண்டாயிருக்கின்றது. என்உயிருக்குச்சமானமான அதிகாய

னென்னும் புத்திரனைத்தரையில்தேய்த்து, ரத்தவெள்ளம் லங்கையெல்லாம் பரவச் செய்தாய். அந்தரத்தம் இன்னம் உலரவில்லை. இப்படியிருக்க, நீ என்முன்னின்று இவ்விதமாய்ச்சொன்னாய். நீ சொன்னது இசைவானதுதான். இது வீரர்களுக்குப் பொதுவானதுவே. நீ இப்போதுபகர்ந்ததேசரி வேறேபேச்சென்னத்திற்கு? உன் சொல்லுக்குப் பின்னிட்டுத் தலைகுனியமாட்டேன். இந்த உலகங்களெல்லாம்பார்க்க என்மார்பிலே நீ குத்தென்று ராவணன் சொன்னான். அந்தவார்த்தையைக்கேட்ட அநுமான் இவன் சௌரியவந்தனென்று மெச்சி, வீரகர்ஜ்ஜிதத்துடன் அவன் தேரின்மேற்பாய்ந்து, கண்ணிலே நெருப்புச் சிதறப்பார்த்து, அவன்மார்பிலே தரித்திருக்கிற ஆபரணங்களுடன் கவசங்களெல்லாம் பொடிப்பொடியாய்ச் சிதற வஜ்ஜிரம் போலிருக்கின்ற தம்முடைய கையாலோங்கிக்குத்தினார். அப்போது பர்வதங்களிலெல்லாம் மணலுதிர்ந்தது, ராவணன்கண்களில் அக்கினி உதிர்ந்தது. அவன் தலைகளிலிருக்கிற மூளைகள் தயிர்போலத் ததும்பிக் குழம்பினதுகள். ராக்ஷதக்கூட்டங்களுக்கெல்லாம் பிராணன் சுழன்றுபோய் விட்டது. எல்லா வானரங்களுக்கும் மயிரும் பல்லுகளுமுதிர்ந்து விட்டதுகள். மேகங்கள்மழையைகக்கினதுகள். அந்தராக்ஷத குலாதிபனுடைய கைகளிலும், மற்றராக்ஷத வீரர்களுடைய கைகளிலும், பிடித்த வில்லுகளிற்பூட்டின நாணிகளெல்லாமறுந்ததுகள். சமுத்திரம் நிலைகுலைந்தது. சப்தகுலபர்வதங்களும் அதிர்ந்து கல்லுகளைச் சிந்தியதுகள். சூரியகிரணங்களுமுதிர்ந்ததுகள். திக்கெஜங்களுடைய பல்லுகளுமுதிர்ந்ததுகள். சகலருடைய ஆயுதங்களும் தரையிலேவிழுந்ததுகள். ராவணனுடைய மார்பிலே நெருப்புப் பொறிபறந்தது. அநுமானுடைய கைக்குத்து படவே ராக்ஷதாதிபதியான ராவணனுடைய மார்பிலே பூர்வத்தில் அஷ்டகஜங்களுடைய தந்தங்கள் அழுந்தி முறிந்ததெல்லாம் கீழே பலபலவென்று உதிர்ந்துபோயிற்று. அள்ளுக்கட்டியிருந்த கவசத்தி லழுத்திவைத்த ரத்தினங்களெல்லாம் பேர்ந்து திக்குத்திக்குகளில் சிதறி, ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங்க ளுதிர்ந்து விழுவது போல விழுந்ததுகள். அவன் கண்களில் பொறி எழும்பியது. அப்போது பிரளயகாலத்துச்சண்டமாருதக்காற்றடிக்க, அலைந்து தள்ளாடிச்சாய்ந்த மகமேரு பர்வதம்போல ராவணன்சாய்ந்தான். அதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்து, ஆர்ப்பரித்து, சிறிய திருவடியாகிய ஆஞ்சநேயர்பேரிலே புஷ்பமாரிபொழிந்து வாழ்த்தினார்கள். ராக்ஷதர்களெல்லாரும் பயந்தார்கள், வானரங்களெல்லாம் ராவணன்தோற்றுப்போனானென்று சரீரம் புளகாங்கிதமாய்க் கூத்தாடினார்கள். அப்போது ராவணன் மலைகளிலிருந்து யோகாப்பியாசம்பண்ணிச் சுவாசவாயுவி னிலையையறிந்த தபோதனர்கள் தங்களுக்குக் கைவந்த சித்தியால் தங்கள் தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தில் புகுந்து அந்தத்தேகத்துக்கு மாறுபாடுவந்த காலத்தில் தாங்கள் பழயதேகத்தை யடைவது போலவும், அந்தத்தேகத்தி லனுபவிக்கக்கூடாத இஷ்டவிஷயங்களைமற்றொருதேகத்தையடைந்து அனுபவித்து விட்டு மறுபடியும் பூர்வதேகத்தை யடைவதுபோலவும், மூர்ச்சை தெளிந்துபார்த்து, பெருமூச்சுவிட்டுப் பேசும்போதெல்லாம் ரத்தங்கக்கிக்கொண்டு வாயுபுத்திரரைப்பார்த்து சொல்லுகிறான். ஒருவருஞ்சமானமில்லாத ஓ வீரனே! நீ என்னைச் சின்னபின்னப் படுத்தினாய், இனி என்னுடனே யுத்தஞ் செய்யமாட்டாயல்லவா? பலமென்பதும் அதுவுண்டென்பதும் உன்னிடத்திலே தானிருக்கிறது. மற்றவர்களெல்லாம் பேடிக்கு சமானம். நீ என்னை மூர்ச்சிக்கும்படி குத்தியபடியால் உன்பலத்தை இந்தச் சப்தலோகங்களிலும் நிறைத்தாய். பிர்மதேவன்வந்து சலிக்கக்கடவாயென்று சபித்தாலும் சலியாதவன் நான். வருத்தமென்கிறதை இதுபரியந்தம் அறிந்தவனல்லாத என்னை, அதையறியப்பண்ணினாய். ஓ ஜயசாலியே! இன்னும் ஒருவார்த்தை இருக்கிறது சொல்லுகிறேன்கேள். உன் மார்பிலே பிரளயகாலத்திடிபோல என்கையால் ஒரு குத்து குத்துகிறேன்; அதற்குத்தப்பி பிராணனுட னிருந்தாயேயானால், உனக்குச் சமானமானவர்கள் இந்த மூன்றுலோகங்களிலும் ஒருவருமில்லை. நீயே இன்றைக்கும் மற்றென்றைக்கும் உள்ளவன். உனக்கு வேறே பகையுமில்லை என்று சொன்னான்.

அதற்கு அநுமான் எப்போது என்கைக் குத்தினல் சாகாமல் நின்று பேசினயோ அப்போதே நீ என்னை ஜெயித்தவனல்லவா? நீ நல்ல சமர்த்தன்; மிகுந்தபலவானென்று எதிரேநடந்து, அவன் சமீபத்திலேபோய், உன்கடனை நீவாங்கிக்கொள்ளென்று மார்பைக்காட்டி நின்ருர். அப்படி மிகுந்த உற்சாகத்துடனின்ற ஆஞ்சநேயருடைய மார்பிலே இராவணன் தன் பல்லை இறுக்கி கடித்துக்கொண்டு, பிலத்துவாரம்போன்ற பத்துவாய்களையும் மடித்து இருபது கண்களிலும் நெருப்புப்பொறிபறக்க, கைகளைமுறுக்கி, பலவிரல்களும் நெரியவீசி, அஷ்டதிக்குகளும் போதாதென்னும்படி நீட்டி ஓங்கி இருபதுகையினலேயும் குத்தினன். அந்தக் குத்துப் படவே பிரளயகாலத்தில்சமுத்திரத்தினல் மூடப்பட்டு பூமியழிந்தகாலத்திலும் அழியாத சிரஞ்சீவிகளெல்லாரிலும் வல்லமையுடையவரான ஆஞ்சநேயர் அந்தராவணனலே பூர்வத்திலே சலித்த கைலாயம் போல மெய்சலித்து பதைத்தார். அப்படி அநுமான் சலிக்கவே தேவலோகமெல்லாஞ்சலித்தது. தர்மஞ் சலித்தது. சத்தியமொழிசலித்தது. பின்னையும் தவமும் வேதமும் நீதியும் கருணையும் சகலமுஞ் சலித்ததுகள். அப்போது வானரவீரர்கள் அனைவரும் ஏககாலத்திலே ஆளுக்கொரு பர்வதமெடுத்துக்கொண்டு, ஆகாயத்தில் வெளியில்லை என்னும்படியாய் நிறைந்து பிரளய காலத்தில் உலகங்களையெல்லாம் அழிக்க மேகங்கள் சொறிகிறதுபோல ஆயிரங்கோடிக்கும் அதிகமான அந்தப் பருவதங்களை ராவணன்மேல்எறிந்தார்கள். அதுகண்டு தேவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். வானரவீரர்கள் மிகுந்த கர்வத்துடன் மலைகளை எறிந்து ஆகாயத்திலிடமில்லாமல் ஒருவர்க்கொருவர்நெருங்கி விலகாமல் நிறைந்து நின்றபடியால் சூரியனும் மறைந்து உலகமெல்லாமிருண்டது. வானரர்களெறிகிற மலைகளினல் இனி ராக்ஷதர்கள் நசுங்கிப் போய்விடுவார்களென்று நினைத்துத்தேவர்களெல்லாம் ஆகாயத்தில்வந்து சூழ்ந்து கொண்டார்கள். வானரர்கள் எறிந்தமலைகள் ஒன்றுடனென்றுதாக்கி யுடைபட்டு இடிகள்போல நெருப்புப் பறக்கும்படி ஒன்ருேடொன்று உராய்ந்துகொண்டு கோதண்டத்தில் நின்றும் புறப்படுகின்ற அம்புகள்போலவும் சரவருஷம்போலவும் பூமியில் விழவே, ராக்ஷதசேனைகள் பயந்தோடத்தலைப்பட்டதுகள். அந்தப் பர்வத ராசிகள் போய்விழுவதினல் சமுத்திரங்களுஞ் சுவறிப்போய்விட்டதுகள். உலகமெல்லாம் இன்றையதினம் கல்லால் முழுகிப்போய்விடுமென்கிறபெருந்தொனியுண்டாயிற்று. இதைக்கேட்ட ராவணன் மிகுந்த கோபங்கொண்டு தேவர்களால் புகழ்பெற்றிருக்கிற தன் வில்லைவளைத்து ஆயிரமாயிரங்கோடி பாணங்களைப் பிரயோகஞ்செய்து, அத்தனை மலைகளையுஞ் சில்லுச்சில்லாயுடைத்து கீழேதள்ளினன். அம்புகளினலே துண்டுகளாக்கப்பட்ட பருவதங்கள்ராவணனணிந்திருந்தமாலைகள் துண்டு துண்டா யறுந்து விழவும், யானைகளெல்லாம் துண்டங்கள்படவும், யானைகள் சிங்கங்கள் பெரிய கொடிஞ்சிகளுடன் கூடிய தேர்கள் எல்லாம் சின்னபின்னமாய் நசுங்கிப்போய் விழுந்ததுகள். தேவர்கள் இராவணனுடைய பாணம்பாயும்விதமும் மலைகளொன்று நூருயிரமாக மூறிந்த விதமும், மலைகளிடியுண்டு பொடிப்பொடியாய் நொறுங்கினவிதமுங் கண்டு, இப்படியாக இந்தக் கொடியவன் வில்வித்தை கற்ருனே யென்று பயந்து கைகளை விரித்தார்கள். ராவணனுடைய பலத்தை நாசப்படுத்துகிருேமென்று வானரவீரக் கூட்டங்கள் எடுத்தெறிந்த மலைகளையெல்லாம் அவனுடைய பாணங்கள் பொடியாக்கி விட்டதுகள். அதனல் சுற்றிலுமிருந்த கடலெல்லாந் தூர்ந்துபோய்விட்டது. ரணக்களத்தில் நின்றவர்கள் தேகத்தில்படிந்த புழுதிகளையெல்லாம் அவர்கள் தேகத்தில் இருந்து வழிகிற ரத்தவெள்ளங் கழுவிவிட்டுப் பூமியையுந்துடைத்துகொண்டோடினது. அப்பொழுது இராவணன் இந்தக் குரங்குக்கூட்டங்கள் இப்படிச் செய்கிறபடியால் இவைகளையெல்லாங் கொன்று, இந்த இரண்டுமனிதரையும் இந்தக்ஷணமே வெல்லுகிறேனென்று அதிக கோபத்துடனே பத்துக்கையிலேயும் பத்து வில்லை எடுத்துக் கொண்டு பத்துக்கையினலும் பிரளயகாலத்து மேகம்போல சரமாரிகளாய்ப் பொழிந்தான். பத்து வில்லிலேயும் கையொன்றுக்கு ஆயிரமாயிரம் பாணங்களாகத் தொடு

த்து எய்கிறபோது ஆகாயம் பூமி சமுத்திர திசைகளெங்கும் அம்புகளாய் நிறைந்து விட்டது. அந்தரணக்களமானது ரத்தத்தி னாலே அந்திவானம்போலேசிவந்து வான ரங்கள் பந்திபந்திகளாக மடிந்து விழுந் ததுகள். பிணங்கள் மலைமலையாகக் குவிந் திருந்தபடியால் அவற்றை மலைகளென் றெண்ணி மேகங்கள்வந்து கவிந்ததுகள். நீலன் தன்னுடலில் பட்ட அம்புடன் கீழேவிழுந்தான். அனலனும் மரணமூர்ச் சையடைந்தான். காலகோடிவிஷத்துக்குச் சமானமான அம்புடனே அங்கதன் மூர்ச் சையானான். சூலாயுதம்போன்ற முச்சிர பாணத்தால் ஜாம்பவன் சுருண்டுவிட்டா ன். மற்ற வானரவீரர்கள் மார்பில் அம்பு கள் தைத்தபடியால் தங்கள் வெற்றிபெற்ற வீரங்களும் ஆண்மையான செய்கைகளும் குறைந்துபோனார்கள். சூழ்ந்திருந்த வான ரப்பெருஞ் சேனைகளெல்லாம் சின்னாபின் னப்பட்டு மெலிந்து போய்விட்டதுகள். மிகுதியான வானரங்கள் ஓடிவந்து முறை யிட்டார்கள். இளையபெருமாள் கோபங் கொண்டு இராவணன்விட்ட நூறுகோடி நூறுநூறாயிரகோடி பாணங்களையெல்லா ம்தமது அஸ்திரங்களால் அறுத்து அவ ன்கையிலே வைத்திருந்த பத்துவில்லையும் இரண்டிரண்டாக முறித்துப் போட்டார். அதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்து ஆரவாரித்தார்கள். ராக்ஷதர்கள்மெய்வியர் த்து மனம் வெதும்பினார்கள். முனிவர்க ளெல்லாம் புஷ்பமாரி பொழிந்தார்கள். லட்சுமணருடைய திருத்தோள்களைப் பார் த்து புகழ்ந்து பாடிக்கொண்டு தருமதேவ தைவந்து சேர்ந்தது. ராவணன் இளைய பெருமாளைப்பார்த்து உன் யுத்தவல்லமை யும் நன்றாயிருக்கிறது. உன் கைவேகமும் நன்றாயிருக்கிறது. உன் வித்யாசாமர்த்திய மும் நன்றாயிருக்கிறது, உன்னாண்பிள்ளைத் திறமையும் அதுபோலவே உன் மேனிய ழகும் நன்றாயிருக்கின்றது என்று கரக்கம் பம்பண்ணி உனக்கு நீயே சமானமென்று சொல்லி, ஆரணியத்தில் அன்றைக்கு கர னையும் அவன் சேனைகளையுங் கொன்றஉன் தமையனும், இந்திரனைத் தன் வல்லமை யால் தேவலோகத்தில் ஜெயித்த என் மக னும் நானுங்கூடச் சரியல்லோம். ஆனா லிந்தலோகத்திலே உனக்கு எதிராரிருக் கின்றார்கள் என்றுசொல்லி, இவனைவில்லி னாலே நாம் ஜெயிக்கமுடியாது. இவனைத் தாமசியாமல் இன்றைக்கே கொல்லவேண் டுமென்று நினைத்து உதட்டைப் பல்லி னாலே யழுத்திப் பிர்மாகொடுத்த வேலா யுதத்தைத் தன்பலங்கொண்டெடுத்து லட் சுமணர்பேரிலே எரிந்தான். அதுவருகிற போது லட்சுமணர் அநேகம் அம்புகளைக் கொண்டு தடுத்தார். அந்த அம்புகளையெல் லாம் எரித்துப் பொறியா யுதிர்த்துவிட்டு அக்கினிகளைக் கக்கிக்கொண்டு அதிவேக மாய்வந்து லட்சுமணருடைய மார்பிலே பாய்ந்தது. பாயவே மகா புத்திமானாகிய வீரம்பொருந்திய இளையபெருமாள் அந்த ப்பெரிய ரணக்களத்திலே சோர்ந்து விழு ந்தார். அதுகண்டு பயந்து வானரங்கள் ஓட்டமெடுத்ததுகள். தேவர்கள் நடுங்கி உணர்வழிந்து போனார்கள். ரிஷீஸ்வரர் கள் மனம்பதைத்தார்கள். ராக்ஷதாள் சமு த்திரத்திற் கிரட்டிப்பாகக் கொக்கரித்துச் சந்தோஷித்தார்கள். பூமிசுழன்றது. சூரிய னுடைய பிரகாசமும் அந்தகாரப்பட்டது அப்போது இராவணன் இளையபெருமா ளைப்பார்த்து இவன் வேலுக்குப் பயப்பட வுமில்லை. சாகவுமில்லை. மூர்ச்சித்திருக்கி றான். இவனை எடுத்துக்கொண்டு போய் விடுவோமென்றெண்ணி தேரைவிட்டிழி ந்து கால்நடையாக ரத்தப்பிரவாகத்திலே ஓடிவந்து முன் ருத்திரமூர்த்தியினுடைய வெள்ளியங்கிரியை எடுத்த நம்முடைய பராக்ரமத்துக்கு அவமானமாச்சே என்று நாணப்பட்டு அந்த நாணந்தீரும்படி அஷ்டகுலாசலங்களும் சிறந்த மகமேரு வாகிய பொன்மலையை இப்போதுஎடுக்கிற வனைப்போலே விஷத்துக்குச் சமானமான மனதையுடைய ராவணன் இருபதுகைக ளாலும் ஊன்றி இளையபெருமாளை எடுத் தான். தமக்கு இயற்கையான சேஷத்துவ கியானங்கெடாமல் சாக்ஷாத் ஸ்ரீராமமூர்த் தியே அந்தப் பீதாம்பரதாரியாகிய ஸ்ரீயப் பதியென்று தம்முடைய திருவுள்ளத்தில் தியானித்துக்கொண்டு மூர்ச்சித் திருக்கின் றானதால் திக்குப்பாலகரை நடுங்கச்செ ய்து கைலாயத்தை யெடுத்த ராவணன் கைகளுக்கு அந்த ராமாநுஜர் எடுபட வில்லை. அப்போது பத்துத்தலைகளையுடை யதசமுகனென்கிற ராவணன் ஒரு கடலை

யொத்திருந்தான். இவன் கைகள் உதயபர்வதங்களையொத்திருந்ததுகள். துளபமாலிகாதரரான ஸ்ரீராமருடைய திருத்தம்பியாகிய இளையபெருமாள் அந்தப் பர்வதத்திலே உதிக்கின்ற பாலசூரியனை ஒத்திருந்தார். அப்படி ராமாநுஜனுடைய திருமேனியை எடுக்கப் பலமில்லாதவனாய் ராவணன்பெருமூச்சுவிட்டு கொண்டிருந்தான். அப்போது மூர்ச்சைதெளிந்து அநுமாரோடிவந்து ராவணனை ஒரு இடியிடித்துத் தள்ளிவிட்டு லட்சுமணரைக் கையினாலே தாங்கி யெடுத்துக்கொண்டு அதிவேகமாய் அப்பாலேபோகும்போது ஸ்வரூபக்கியான மொன்றுக்குமாத்திரம் இளையபெருமாள் ஆண்டவரென்று சொல்லுந் தன்மையை யுடையவராக விருந்தாலும், அன்பென்னும் பக்தியால் ஒரு குட்டியைப் போலவும், ஆஞ்சநேயர் அந்தக் குட்டியைத் தழுவிப்போகின்ற மந்தியைப்போலவும் பிரகாசித்தார். இவ்விதமாய் லட்சுமணர் சற்றுநேரத்திற்குள்ளாக மூர்ச்சைதெளிந்து, எழுந்திருக்கும்படி தூக்கிக்கொண்டுகையும்காலும், திருக்கண்களும், செந்தாமரைப்புஷ்பத்திற்குச் சமானமாகப் பிரகாசிக்கின்ற ராமபிரானுடைய சந்நிதிக்குப் போனார். அப்போதுஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவும் யானையின்பேரிலே போருக்குபோகிற ஒருசிங்கம்போல ராவணன்பேரில் எதிர்க்க நடந்தருளினார். தேவதைகள்புஷ்பமாரி பொழிந்தார்கள். ராவணனுந் தன் தேரைவிட்டுக் கொண்டுவந்தான். அவன் ரதத்திலேயும் ஸ்ரீகாகுஸ்த குலதிலகர் கால்நடையாகவும் எதிர்க்கிறதைஅநுமானாகிய திருவடியானவர்கண்டு முன்னால் பரிசுத்தத்தையடையும்படி தந்த கங்கையைச் சிரத்திலே தாங்கிய மகானுபாவர் அந்தக் கங்கையைத் தந்த திருவடி பாவிகளுடைய போர்க்களத்தில் நின்று சிரமப்படக்கண்டு சகிப்பாரோ? மனம்பொறாமல் மிகுந்தபரிவுடனேவந்து, சுவாமி! அவன் ஆயிரங் குதிரை கட்டின தேரின்பேரி லேறிவந்து எதிர்க்கதேவரீர் பாதசாரியாகஎதிர்க்கிறது சுலபமாககாணும். அடியேன்சிறியேனுடைய லும் என்னுடைய தோளின்மேலேறியருளவேண்டுமென்று பற்பலவிதத்தில் பிரார்த்தித்தார். அப்படி பிரார்த்திக்க அனந்த கலியாணகுணபிராமனும் நல்லது நல்லதென்று சம்மதித்து பருவதத்தின்பேரிலே தாவியேறுகிற ஒரு ராஜசிங்கம்போல அநுமானுடைய தோளிலேறவே தேவர்கள் பல்லாண்டு பாடினார்கள். ஈன்ற கன்றைத் தாங்கியெடுத்த தாயைப்போல மாருதி சந்தோஷித்துக் களித்தார். திருக்குறளான ஸ்வரூபமாய் உலகத்தை யளந்தவருடைய திருவடியை அப்போது அநுமான் செவ்வையாகப் பார்த்தும் பரிசித்தும் சிந்தித்தும், அறிந்துசுமக்கக்கிடைத்ததேயென அதிசயமடைந்தார். அது அறிந்து எப்போதும் உரிமையாக அவரைத் திருத்தோளிலெடுக்கிற அந்தக் கருடபகவானும் ஸ்ரீராமபிரானைத் திருத்தோளில் எழுந்தருளச் செய்துகொண்டு ஆனந்தக் கூத்தாடுகின்ற ஆஞ்சநேயருடைய பாக்கியம் இப்போது நமக்குக் கிடைக்கவில்லையேயென்று நாணினார். ஆதிசேஷனும் தலைநடுங்கினார். அப்போது அந்த அநுமான் திருப்பாற்கடல்போலப் பிரகாசித்தார். ஸ்ரீராமர் அந்தத்திருப்பாற்கடலிலே வாசமாயிருக்கிற ஸ்ரீ மகாவிஷ்ணுவான புருஷோத்தமரைப்போல விளங்கினார். ஆனாலும் அந்தப் பரமபுருஷோத்தமரைப்போல் இவர் யோகநித்திரைசெய்யாமல் வீற்றிருக்கிறபடியினாலே, அந்த மாருதி வேதமும், ஸ்ரீராமர் அந்த வேதத்தினுடைய முடிவிலேயிருக்கிற போதஸ்வரூபமான ஸ்ரீஹரியைப்போல பிரகாசித்தார்கள். மேலும் அந்த அநுமான் ஞானம் போலவும், ஸ்ரீராமர் அந்த ஞானத்துக்கு மேலே யிருக்கிற பரமபதம்போலவும் காணப்பட்டார்கள். அண்டங்களை யெல்லாம் உண்டு வயிற்றிலடக்கின அந்தப் பகவானைத் தாங்கிக்கொண்டிருந்து பலவிதமாகச் சாரிகை திரிகிற அநுமானுடைய தோள் வண்மையா யிருக்கிறபடியால் அந்த மகமேரு பர்வதத்தையும் சமானமாகச் சொல்லக்கூடாது. அப்படி தோன்றுகிற அநுமானையும், அவர் தோளிலே சேவை சாதிக்கிற சக்கரவர்த்தித் திருமகனை கோதண்டராமனையும் கண்டு, ரிஷீஸ்வரர்கள் பல்லாண்டு சொன்னார்கள். தர்மதேவதையும் கையை யெடுத்துக்கொண்டு ஆனந்த நிர்த்தனமாடியது. சிவன், பிர்மா, குபேந்திரனாகிய விஷ்ணுமுதலான சகலமான தேவர்களும் இந்தராம ராவணர்களுடைய

யுத்தம் பார்க்கும்படியாக அச்சத்தோடு வந்து சேர்ந்தார்கள். அப்போது ஸ்ரீராமன்கோதண்டத்தையெடுத்துகுணத்தொனி பண்ணினார். அந்தத்தொனி பிரளயகாலத்திலே சகல ஜீவராசிகளையும் தன் வாயிலே போட்டுக் கொள்ளுகிறபோது ருத்திரன் கொக்கரிக்கும் தொனிபோலிருந்தது. ராக்ஷதர்கள் இயக்கர் முதலாகிய அனைவரும், பிராணனும் போகாமல் நிற்கவுமாட்டாமல் சோர்ந்து, நாவுலர்ந்து கலங்கி, மிருகங்கள்போல அறிவுநீங்கி நடுங்கினார்கள். பதினாலு லோகமுங் குலைகுலைந்தது. பிரமத கணங்களுக்கு இறைவனாகிய சிவனும் பிர்மாவும் தலைநடுங்கினார். அச்சமயத்தில் ராவணன் பிரளயகாலாக்கினிபோலச் சமுத்திர நீரையும் குடிக்கத்தக்கவைகளும், திக்குகளெல்லாம் அளக்கத்தக்கவைகளும், பூமியையும் ஆகாயத்தையும் துளைக்கத்தக்கவைகளுமாகிய ஏழுபாணந்தொடுத்து எய்தான். அந்த ஏழுபாணத்தை பதினாலுதுண்டமாக அறுத்துத்தள்ளிப் பின்னும் ஐந்துபாணங்களைக் கோதண்டத்தில் பூட்டி காலாக்கினியும் தீயும்படியான அக்கினி வீசிக்கொண்டுபோக, ஸ்ரீராமர் பிரயோகம் பண்ணினார். அந்த ஐந்துபாணத்தை ஐந்து பாணத்தினால் ஆகாயத்திலே விலக்குவித்து அம்புகளை ஆகர்ணபரியந்தமாக நாணையிழுத்து ராவணன் விட்டான். வேதமுதல்வராகிய ஸ்ரீராமபிரானாரும் பத்துஅம்புகளை யெய்து அந்தப் பத்தம்பையும் அறுத்துத் தள்ளினார். அவன் சமீபத்திலேயிருக்கிற அநேக ராக்ஷதர்கள் பிரயோகம் பண்ணின ஆயுத மழைகளையும் சில அம்புகளினாலே அறுத்துத் தள்ளி, அவர்களுடைய யானைகளையும் சுட்டெரித்து, அவர்களது தலைகளையுமறுத்து, மலைமலையாய்க் குவித்து, ராவணனென்கிற அம்புகளையும் வானரர்கள்பேரில்வந்து படாமல்மறுத்து, அந்த ராக்ஷதர்களது தலைகளையும் துண்டித்தார். அப்போது அநுமானவர் பூமியிலே யிருந்தாரென்று பார்த்தால்ஆகாயத்திலே யிருப்பார். மறுபடியும் ஒரு க்ஷணத்திலே அந்த ராவணனுடைய எல்லா முகங்களுக்குமெதிரே நேராக நிற்பார். அங்குவந்த வஞ்சகரான அந்தராக்ஷதர்களுடைய முகத்துக்கெதிரேயும் பிரகாசிப்பார். அதிவேகமாய் ராமனுடையஅம்புக்கு முன்னேயும் போவார். மனதுக்கு முன்னேயும் போய்நிற்பார். அப்பிரகாரம் இடசாரிவலசாரியாகச் சுழன்றுகொண்டுத் திரியும்போது அவ்விரணக் களத்திலே எங்கும் கவந்தங்களாடின. அவற்றுடனே கூடப் பேய்களுமாடி பாடத் தலைப்பட்டன. யானை தேர்முதலாய்ச் சொல்லப்பட்டவற்றை யிழுத்துக்கொண்டு பல ரத்தஆறுகள் கடல்போலே எவ்விடத்து மோடின. அவ்விரணக்களத்திலே தேர்களெல்லாஞ் சக்கரங்களோடுகூட அஞ்சுறுவாணி முறிந்துஉடைபட்டுப்போயின. யானைகளுருண்டுபோயின. குதிரையெல்லாம் துண்டமாய் விழுந்துபோயின. பேய்களும் ரணக்களத்திலே கூட்டங் கூட்டமா யடைந்தன. ராக்ஷதர்களெல்லாம் தேரழிய சிலையழிய, ஆனையழிய, குதிரையழிய தங்களுடைய சௌரியமும் கவசமும் பிடித்துவந்த துவஜமும் மார்பிலே தரித்து வந்த வெற்றிமாலையும் அழிய, பிறகு தங்களுடைய தலைகளுமிழந்து போனார்கள். அச்சமயத்திலே அநேக ராக்ஷதஸ்திரீகள் வந்து தங்களுடைய புருஷருடைய தலைகளைத் தேடிப் பார்த்து விகார ஸ்வரூபமுள்ள அரக்கருடைய தலைகளும், யானைகுதிரைகளுடைய தலைகளும் பேதம் தோன்றாமல் சிதைந்து குழம்பிக் கிடக்கின்றபடியாலே மயங்கி, யானைத் தலையை இதுதானென்னுடைய கணவன் தலையெனவும், இவ்வாறாய் எடுத்து உடற்குறைகளோடு பொருத்திப் பார்த்துத் தழுவிக்கொண்டு அழுது மாண்டார்கள். ராமபாணமான காலனானது ஒன்று பத்து நூறு ஆயிரமாகத் தலைகளையறுத்துக்குவித்தும், அதனுடைய விசையோயாமல் திரிந்துகொண்டு அநேககோடிசேனையையும் உருவிச்சென்றது. தன்னுடைய தேருடனே ராவணனொருவனிற்க, மற்றங்குள்ள சேனையெல்லாம் கொலையுண்டுபோகவும், ராக்ஷதரெனச் சொல்லப்பட்டவருடைய வாய்கள் ஆர்ப்படங்கின. கண்கள் அக்கினியை கக்கிக்கொண்டு பார்க்கின்ற அவரவருடைய அகங்காரம் குலைந்தடங்கினது. அவனுடன் வந்த ரதகஜதுரகபதாதிகளெல்லாம் மாண்டு பிணங்கள் மலைமலைகளாய் மேகமண்டல முதல் ஆகாயபரியந்தம் உயர்ந்து கிடக்கின்றதை பலவகைப்பட்ட திசைகளிலேயும் கண்டு, இராவணன்

சர்ப்பம்போலே சீறி, கோபித்து, அதிசீக்கிரமாய் வில்லிலே இரண்டு பாணங்களைத் தோளளவும் வாங்கி, ராமமூர்த்தியினது யமரகத ரத்தினத்தைப் போன்ற இரண்டு திருத்தோள்களிற்போய் அழுந்தும்படியாய் பிரயோகம்பண்ணினன். அதுகண்டு ராமர் புன்னகைசெய்து, ஒரு திவ்யாஸ்திரமெடுத்துப் பிரயோகஞ்செய்து ஊழிக்காலத்து சண்டமாருதக் காற்றானது மந்தரகிரியை முறித்து விட்டதுபோல அவ்விராவணனுடைய கையிலே பிடித்திருந்த வில்லைத் துண்டித்துவிட்டார். துண்டித்த மாத்திரத்திலே திடுக்கிட்டு ராவணன் மறுவில்லெடுத்து நாணேற்றி ஆக்கிரமித்து அம்பைத் தொடுக்கும்படியான சமயத்தில் அதையும் எம்பிரானாகிய ராமமூர்த்தி ஒரு தெய்வீகம் பொருந்திய பாணத்தை விட்டு நாசப்படுத்திவிட்டார். அவ்வளவிலே நில்லாமல் அதிவேகமாக அந்த ராவணனுடைய தேரிலே கட்டியிருந்த அநேக குதிரைத்தலையையும் அறுத்தெறிந்தார். அச்சமயத்திலே அதிக பலம்பொருந்தி இராநின்ற ராவணன் பின்னொருவில்லில் அஸ்திரமெடுத்து பிரயோகஞ் செய்யும்படியாய் எத்தனித்தான். அதை அவன் எடுக்கவொட்டாமல் கணைகளாலே ராமமூர்த்தி தடுத்தார். அவனுடைய குடையும் கொடியும் யானைகளும் கணைகளாலே துணித்து விழும்படியாய் அறுத்துத் தள்ளி, அவனுடைய அதிக பிரகாசமான கவசத்தையும் அறுந்து விழத்தள்ளினர். இதுவுமல்லாமல் அவ்விராவணனுக்கு மேலும் மேலும் யுத்தகளத்திலே வரும்படியான சேமத்தேர்களை வரவொட்டாமல் அதி உக்ரமான பாணங்களால் விலக்கி நாசப்பட்டுப்போகும்படியாய்ச் செய்தார். அப்போது எமனும் கையெடுத்துக்கொண்டு ஆடும்படியான அந்த இரத்தவெள்ளமோடுகிற ரணக்களத்தில் ராவணன் அத்தேரைவிட்டுக் குதித்தான். குதித்தபொழுது பிரகாசித்துக் கொண்டு இருக்கிற அவனுடைய கிரீடங்களின்மேல் சிலபாணத்தை யெய்தார். அப்பாணம் முன்னாலே சூரியன்பேரிலே பாய்ந்த அநுமானைப்போலே அதிகவிசையாய்ப்போய் அவனுடைய கிரீடத்தைப் பல மேருமலைகளைத் தள்ளிக்கொண்டுபோவதுபோலே தள்ளிக்கொண்டுபோய் சமுத்திரத்திலே போட்டுவிட்டது. அவ்வகைப்பட்ட ராமபாணமானது இழைக்கப்பட்ட இரத்தினங்களையெல்லாம் திக்குத்திக்குகளிலே சிதறும்படியாய்ப் பண்ணிக் கிரீடங்களைக் கடலிலே தள்ளிவிட்டபடியாலே வாயுபகவானாலே முறியப்பட்ட மேருவினுடைய கொடுமுடிகள் பறியுண்டு கடலிலேவிழுந்ததுபோலவும், அந்தமகுடங்கள் பிரகாசித்தன. பின்னையும் ராமருடைய கோதண்டத்திலே நின்று புறப்பட்ட அம்புகளோடு பறியுண்டுபோய்க் கடலிலே விழுந்த அந்த மகுடமானவைகள் பரிவேடத்துடனே கூடிய சூரியர்கள் தங்களை வாயாலே கவ்விக்கொண்ட கிரணசர்ப்பங்களுடனே சமுத்திரத்திலே விழுந்தது போலவுமிருந்தன. ஓர் சொல் சொல்லும் அவைக்குள் தன்னுடைய கிரீடங்களையிழந்த அத்துராத்துமாவானவன் சூரியனை இழந்த பகலைப்போலவும், சந்திரனில்லாத ராத்திரிபோலவும், பொலிவற்றுக்காணப்பட்டான். இதுவரையிலும் தன்னோடே சண்டை செய்தவரிடத்திலெல்லாம் வெற்றிபெறுவதே யல்லாமல் இந்தராமச்சந்திரப் பிரபுவினிடத்திலே தோற்றதுபோல ஒருவரிடத்திலேயும் தோற்றறியாத வல்லவனை இவ்விராவணன் சகலபாக்கியமும் பெற்றுப் பராக்கிரம முள்ளவனானாலும், வித்துவான்களுக்கு அபசாரஞ்செய்யஅவருடைய மனதுநொந்து வசைபாடித்தூஷணித்தால் அவனெவ்விதம் தன்னுடைய கீர்த்தியும் செல்வமும் கெட்டுப்போவானோ அவ்விதமாய் எல்லாமழியப் பெற்றவனானன். தருமம் தவறி நடக்கின்றவர்கள், காரியம் இவ்விதம் தான் முடியுமென்று உலகஞ்சொல்லும்படியாய் முகம் கருகிப்போய்க் கால்விரலாலே நிலத்தைக் கீறிக்கொண்டும், தலைகுனிந்து தரையை நோக்கிக்கொண்டும், முகத்தில் சிறிதுப்விஷமில்லாமல் வெறுங்கைகள் தொங்க, விழுதுகள் தொங்குகின்ற ஒரு ஆலமரம்போலே நின்றான். அவ்விதம் நின்ற ராவணனை கிருபாநிதியான தாசரதிபார்த்து, வெறுங்கையுட னிருக்கின்றவனைக் கொல்லலாகாதென்று திருவுளத்திலெண்ணி, அவனை நோக்கி, ஓ இராவணா! உன்னுடைய அக்கிரமம் இன்றைக்கு அழிந்துவிட்டதுபோலுமிருக்கிறதென்று சொல்லிச் சிலவார்த்

தைகள் சொல்லுகின்ருர். தருமசிந்தையுள்ளவர்களெவர்களானுலும் அவர்களுக்கு ஜெயமாகுமேயல்லாமல் தேவர்களானுலும் அதர்மத்தினுல் ஜெயமடையமாட்டார்கள் என்றுசொல்லுகிற நீதிவாக்கியத்தை உன்னுடைய மனதிலே வைத்துக்கொண்டு, ஐயோ பாவி! இப்போதே ஓட்டமாயோடி உன்னுடைய பதியை அடைந்துவிடு. இன்னும் கணநேரமாத்திரம் என்னுடனே மாறுகொண்டு எதிர்த்து இருப்பையேயானுல் உன்னுடைய பிராணன் போய்விடும். அது உண்மையாயிருந்தாலும் அவ்வாறு நான் நினைத்தவனல்ல. நீ தனியனுனபடியினுலே மனமிரங்கினேன். உன்னுடைய குலத்தாருடனேயும், உன்னுடைய உறவின் முறையாருடனேயும், ஆயுதங்களுடனேயும், அல்லாமலும் உன்னுலே என்னென்ன ஆயுதங்கள் சம்பாதிக்கப்பட்டனவோ அவைகள் எல்லாவற்றுடனேயும் யுத்தத்திற்குவர இஷ்டமிருந்தால் வரக்கடவாய். அல்லது உனக்குஅவ்வளவு பலாபலத்துடனே வருவதற்குச் சக்தியில்லையாகில் எங்கேயாவதுபோய்ப் பதுங்கிக்கொள்வாயாக. ஓ அற்பகிருத்தியஞ் செய்கிற ஈனகுணவானே! நீ சிறையிலே வைத்திருக்கிற சீதையைக் கொண்டுவந்துவிட்டு, உன்னுடைய தம்பியாகிய விபீஷணனை இவ்வுலகத்திற்குத் தெய்வமென நினைத்து ராக்ஷதர்கட்கெல்லாம் ராஜாவாய்ப் பட்டங்கட்டிவைத்து, நீஅவனிடும்படியான ஏவலைச்செய்து கொண்டு இருப்பாயானுல் உன்னுடைய தலையை என்பாணத்தினுலறுத்து, பூமியிலே தள்ள மாட்டேன். அப்படிக்கல்லவென்று யுத்தஞ்செய்ய உனக்குத் தேகவலியிருந்தால் உன்னுடைய பலமெல்லாங்கொண்டு என் எதிரே நின்று சண்டைசெய்து மாண்டு, சுவர்க்கலோகத்திற்குச்சென்று அங்குண்டான சகலருக்கும் நீ நல்லவனுகப்பேரெடுதிருக்கக்கடவாய். நீ இனி பிழைத்திருப்பாயென்று மனதில் ஆசைவையாதே. நீ பிடித்து வளைத்துநின்ற வில்லுமுறிந்தது. தேரும் அழிந்தது. நீ கொண்டுவந்த பெருங்கூட்டமான சதுரங்கசேனைகளெல்லாம் நாசமாய் விட்டதுகள். நீயும் இளைத்துப்போய் விட்டனை. உனக்கு நல்லசண்டைசெய்து பார்க்கவேண்டுமென்று விருப்பமிருந்தால், ஆண்பிள்ளை தன்மையையுடைய ஓ ராவணு! உனக்கு உதவியாய் அமைந்திருந்தவைகளெல்லாம் சண்டமாருதக்காற்றிலே அகப்பட்ட பூளைப்பூப் பறக்கிறதுபோலே பறந்துபோய்விட்டதை நீ உன்னுடைய கண்முன்னுகக்கண்டிருக்கின்ருயே. ஆகையாலே நீ இன்றைக்குப்போய் நாளைக்குவாவென்று கோசல தேசாதிபதியான ரகுகுலோத்தமர் மிகுந்த கிருபையுடனே ராவணனுக்குச் செலவுகொடுத்தனுப்பி விட்டார்.

இராவணன் முதல்நாள்யுத்தம் முற்றிற்று.

---

## கும்பகர்னன்வதைப் படலம்.

அப்போது இராவணன் திக்கஜங்களுடனே போர்செய்து, ஜெயம்பண்ணின மார்பினுடைய பலமும், கைலாய பர்வதத்தையெடுத்த புஜபலமும், இருடிகளுக்கெல்லாம் வேதங்களை அத்தியயனம் பண்ணுவித்த நாவினுடைய சாதுரியமும், வெற்றிமாலையைத்தரித்துப் பிரகாசியாநின்ற கிரீடங்கள் பத்தும், சங்கரன்கொடுத்தவாளும், தன்னுடைய சௌரியங்களும், இரணக்களத்திலேயே இழந்துவிட்டு வெறுங்கையுடனே திரும்பிப்போய் இலங்கைப் பட்டணத்தைச்சேர்ந்தான். தேவர்களை வெற்றிகொண்ட திரிலோகாதிபதியான ராவணன் இவ்விதமாய் நிராயுதபாணியாய் அபகீர்த்திகூடவே தொடர்ந்துவரக் கால்நடையாய்ச்சென்று நகரம் புகுந்தபோது சூரியனும் அஸ்தமனமானுன். அன்றலர்ந்த தாமரை மலரையொத்த முகங்களையுடைய மண்டோதரி முதலாகச் சொல்லப்பட்ட ஸ்திரீகள் கண்களெல்லாம் வாள்போலவும், தன்னுடைய பிள்ளைகள் வார்த்தை அந்த ராமபாணம்போலவும், நவக்கிரகங்கள் முதலான தேவர்களையெல்லாம் ஒரே விடத்திலே சிறைவைத்து ஆண்டுவந்த ராவணனுக்கு அன்றைக்கு ஸ்திரீகளுடைய ஸ்தனங்கள் தன்னுடைய வெறுந்தோள்போலப்பார்க்க வெறுப்பாகவுமிருந்தன. திசைகளையும் பாராமல், சேனுசமுத்திரங்களையும் பாராமல், ஸ்திரீகளெல்லாம் தன்னைப்பார்க்கத் தான் பூமியைப்

இராமராவணயுத்தம்.

இராவணனை மகோதரன் கலைத்தல்.



கும்பகர்னன் வதை.

மாயாஜனகனுக்கு சீதைபுலம்பல்.

பார்த்தபடியே போனான். மந்திரிகளெனச் சொல்லப்பட்ட பந்துக்களும், தன்னுடைய பெண்ஜாதிமார்களும், சேனைத்தலைவர்களும், உறவின்முறையார்களும், மனம் திகைத்து ஒன்றும் பேசாமல் சித்திரப்பிரதமைகள்போல நிற்க, ஒருவருமில்லாமல் தான்மாத்திரம் ஒருமதயானை தன்னுடைய கொட்டாரத்தில் போவதுபோலத் தன்னுடைய மாளிகையில்போய்ச் சேர்ந்தான். அவ்விடத்தில் ஒரு பொற்சிம்மாசனத்தில் போயுட்கார்ந்து ஆயாசத்தைத் தீர்த்துக்கொண்டு எதிரே நின்றிருந்த ஒருகாவற்காரனை அழைத்து, நம்முடையதூதர்களை அழைத்து வாடாவென்று ஆக்ஞாபித்தான். அக்கணமே அவன்போய் மனகதியென்றும், வாயுவேகனென்றும், மருத்தனென்றும், மேகனென்றும், பேரினையுடைய நான்கு தூதர்களைக்கூப்பிட அவர் வந்து நின்றார்கள். அப்படிவந்து நின்றவர்களைப்பார்த்து, இக்கணமே நீங்கள் ஓடி நம்முடைய ராக்ஷதசேனைகள் எங்கேயிருக்கின்றனவோ அங்கங்கே விரைந்துபோய் அவைகளையெல்லாம்அழைத்துக்கொண்டு ஓடிவாருங்கள். இன்னும் சப்ததீபங்கள் அளவற்ற பர்வதங்கள் பாதாளலோகம் சக்கிரவாளகிரியாகிய இவைகளிலிருக்கிற இராக்ஷதரெனச் சொல்லப்பட்ட பெயருள்ளவர்களை யெல்லாம் ஒருவரையேனும் விடாமல் அதிசீக்கிரமாய் அழைத்துக்கொண்டு வாருங்களென்று உத்தரவுசெய்தான். அத்தூதர்கள் அவ்வாக்கினையைச் சிரசாய் வகித்து ராக்ஷதர்களைத் தேடிக்கொண்டு போனார்கள். முறை முறையாய் ராவணனுக்குஏவல்செய்துகொண் டிருக்கும்படியான சுவர்க்க மத்திய பாதலமென்கிற மூன்று லோகத்தவர்களும், ராவணனுடைய கருத்து இன்னதென்று தெரியாமையால் என்ன அபாயம் நேரிடுமோவென்று மனம்பதைத்து அழுதுகொண்டு நின்றார்கள். அவ்வாறு இவர்களிருக்க, ராவணன்தோல்வியென்னும் வேலானது இரண்டு பக்கத்திலேயும் குத்துவதினால் வேடனெய்த அம்புதைத்த உடலுடனே சாய்ந்த யானையைப்போல் ஒரு புட்பமெத்தையின் பேரில்சாய்ந்து, முன்னே சீதாபிராட்டியாரிடத்தில் வைத்த நினைவு நிறைந்திருக்கிற நெஞ்சில் தோல்வியினால் உண்டானவெட்கமும் நிறைந்தபடியால், பிறகு கள்ளுண்டாவது அவ்வெட்கத்தை மறைத்துக்கொள்ளுகிறதற்கும் இடமென்பதில்லாமல் தோன்றிய விசனமானது மனதைச் சூழ்ந்துகொள்ளவே, தன்னுடைய உள்ளமானது மானத்தைவெளியில் கக்குகிறதைப்போல் பெருமூச்சுவிடத் தலைப்பட்டான். சுவர்க்கலோக பூலோகம் எல்லாவற்றையும் தன்னுடைய கையால் தோல்வியடையப்பண்ணி நகைத்த ராவணன், ராமலக்ஷ்மணர் முதலான பகைஞர்கள் சிறியமனிதரென்று வெட்கப் படவில்லை. மிதிலையிற் பிறந்த ஜானகியானவள் சிரிப்பாளென்கிறதற்கு மாத்திரம் மிகுதியான வெட்கமுற்றுச் சோர்ந்துகிடந்தான். அவன் சோர்ந்துகிடக்கும்போது வயது சென்றதனால், வில்லைப்போல வளைந்தகூனின் தேகத்தையுடைய அவனுடைய பாட்டனான சுகுணமுள்ளமாலியவானென்கிற ராக்ஷதன் ராவணன்படுத்திருந்த மெத்தையின் பக்கத்திலே ஒரு ஆசனத்திலிருந்துகொண்டு, இலங்காதிபதியினுடைய இருப்பை நன்றாயுற்றுப்பார்த்து, அப்பா பேரப் பிள்ளாய்! பட்டாற்றெரியும் பறையனுக் கென்பது போலு மிரானின்றதே. நீ உன்னுடைய மனதும் தோளும்வாடி யிருக்கின்றாய். ஓ ஒருநாளும் வாடாத தபோபலத்தையுடையவனேயனே! என்ன நடந்தசெய்திசொல்லென்று கேட்க, ராவணன் அதிகமான மனக்கவலையுடனே காந்தி யெரிகிற கண்களையுடையவனாய்ப் பதைபதைத்துப் பருத்த துருத்திகளில் காற்றுமிகுத்து வருவதுபோல பத்துமூக்குகளிலும் அதிக காற்றாகப்பெருமூச்சு விட்டுக்கொண்டுபாகு அமிர்தம் இவற்றை நக்கினாலும் சுவைதெரியாதபடிவரண்ட நாவுடனே பாட்டனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஐயா என்னுடைய உயிருக்குயிரான பாட்டனே! கூட்டங்கூட்டமாய் இருடிகளும் தேவர்களும் நாமும் இதுவரையில் ஒரு தேகம்போல பேதமற்றிருந்தோமே. அப்படிப்பட்ட நம்முடையகுலத்திற்குப் பங்கமும் பழியும் வந்து நேரிட்டது. குழந்தைச் சந்திரனைத் தரித்த அந்தத் திரிபுராந்தகன் முதலாய் திரிலோகத்தாரும் நமக்குக்கூட உபபலமாய் வந்து எதிர்த்த போதிலும், ஓ பாட்டா! என்னுடைய பெருஞ்சேனை யெல்லாம்

அவ்விளையவனை லக்ஷ்மணன்வில்லைவளை த்துப் பாணப் பிரயோகஞ்செய்தால் அவனுக்கேபோதாது. இப்படி அதியுக்ரமாய்ப்போர்செய்கிற அநேக வெள்ளம் ராக்ஷத வீரர்களுடைய ஆவியைப் பயப்படும்படி ராமன் கவர்ந்தபோதிலும், அவ்வவமானத்தையெல்லாம் என்னுடைய முதுகின் மேல் சுமத்தினகாலத்திலும், அம்மடையனுக்குக் கொஞ்சமாகிலும் கோபம்வரவேண்டாமா? அது பரிச்சிதமில்லையே. முன்னாலே கூனிமுதுகினிலே உண்டைவில்லு தெரித்தபோது, அது எப்படி விளையாட்டாய் இருந்ததோ, அதேபிரகாரம் அவனுக்கு இன்றைக்குமிருந்தது. அம்பானது அவனுடைய கையை விட்டுப் புறப்பட்டால் உலகங்களிலெல்லாம் திரிந்துகொண்டிருக்குமே யல்லாமல் ஊழிக்காலமானாலும் ஓயுமென்று சொல்லக்கூடுமோ? பிரளயகாலாக்கினியையும், தீய்ந்து போகும்படியான திசையையும், தீய்க்கும் மகம்மேருவைப் பிளக்கவேண்டு மென்றாலும், ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு அப்பால் போகவேண்டு மென்றாலும், இச்சமுத்திர ஜலத்தைக் குடிக்கப் புறப்பட்டாலும், அதற்கு லக்ஷியமாகுமா? அவைகளுடைய வல்லமைக்கு மகமேருவும், உலகங்களும், ஆகாயமும், சப்த சமுத்திரங்களும், அநேககோடிகளா யிருந்தபோதிலும், அப்போதாவது போதுமா? அவன் வில்லில் நாணைப்பூட்டி வளைக்கிறதும், அம்புதொடுக்கிறதும், தேவர்களுக்கும் பார்க்கமுடியாதென்றால்; இன்னும் மற்ற எவர்கள்தான் தெரிந்துசொல்லப் போகிறார்கள்? ராக்ஷதரைச் சம்மரிக்க வேண்டுமென்று அவன் நினைத்தாலேபோதும். உலகமெல்லாம் அம்புக்கூட்டமாய் நிறைந்து போகும். இந்த இருநூறுவெள்ளம் சேனைகளையும், யானை குதிரைகளையும், ராக்ஷதரையும், தலைகளையறுத்துத் தள்ளினதே யல்லாமல், சரீரங்களிலே தடைபட்டதுண்டா? நல்லவித்துவான்கள் நாவில் பொருள்களைக் குறித்து அமைக்கப்பட்டதும், ஞானத்தை மனத்தின்கண்ணே விளைவிப்பதுமான சொற்களைப்போலவும், அச்சொல்லாலமைந்த செய்யுட்களினதுமோனை எதுகை இயைபுமுதலான அளபெடை முதலாய்ச்சொல்லப்பட்ட தொடைகளைப்போலேயும், அத்தொடையினளவை நீக்கி அந்தந்த சுரத்திற்கமைந்த சுதிகூட்டி, மந்தரம் - மத்திமம்-தாரம் முதலான வழியிற்பாடப்படும் அளவுக்கடங்காத பண்களைப் போலவும், குன்றக்கூறல் முதலிய குற்றங்களற்ற தன்மை உவமை முதலான பற்பல அலங்காரங்களைப்போலவும், அளவிடக்கூடாத பெருமையையுடையதாய் இருந்தது. அக்காகுஸ்தனுடைய பாணங்கள் இந்திரனெனச் சொல்லப்பட்டவனுடைய வஜ்ஜிராயுதமும், சிவனுடையமழுவாயுதமும், ஆகிய இவைகளெல்லாம் வருகிற வேகத்தைப் பார்த்தேன். அதற்கும் இதற்கும் வெகுவானதாரதம்மியம் இரானின்றது. இம்மனிதனுடைய அம்பைச் சகிக்கமாட்டாமற்படிக்கு இவ்வளவு மகத்துவம் பொருந்தியிருக்கப்பட்ட நானே அதிகமாய் நொந்துபோனேன். என்னையல்லாமல் வேறே யாராவது அதைக்கண்ணாலாவது பார்க்கமாட்டுவார்களோ? சுடுகாட்டில் பேய்க்கணத்துடனே வாசம்பண்ணுகின்ற தன்மையையுடைய சிவபெருமானுடைய எட்டுத்தோளும், இந்திரனுடைய இரண்டுதோளும், சர்வலோகங்களையும் தன்னுடைய வயிற்றில் அடக்கிவைத்துக் கொண்டிருக்கின்ற விஷ்ணுவினுடைய ஆயிரந்தோள்களும், இம்மனிதனுடைய ஒரு விரலின் வல்லமைக்கு ஈடுகொடுக்கமாட்டுமா? கொடுக்கமாட்டாது. திரிபுரங்களைச் சுட்டெரித்த பலம்பொருந்திய அம்மேருவில்லும் இந்தவீரனுடைய வில்லுக்கு முன்னே அம்பென்று சொல்லவும் கூடுமா? கூடாதாகையால் அதற்கு இணையாய்ச் சொல்லுகிறதற்கு வேறே ஒரு பொருளுங்கிடையாது. வேதம் தப்பினாலும், அவனுடைய வில்லிலிருந்துவருகிற அம்புகள் தப்பமாட்டாதுகள். மகாவீரர்கட்குள்ளே அந்தவிஷ்ணுவானாலும், கார்த்தவீரியனுக்குச் சமானமாகமாட்டா ரென்பதாய் நான் இதுவரையிலும் எண்ணிக்கொண் டிருந்தேன். அப்படிப்பட்ட கார்த்தவீரியனும் இம்மனிதனுடைய தம்பியின் பாததூளிக்குஞ் சரியாகமாட்டானானால் அவர்களெதிரே கலங்காத சித்தத்தை யுடையவர்களாக நிற்கத் தக்க வல்லமைசாலிகள் யாரிருக்கிறார்கள்? மேலும், அவனுடைய பாணங்கள் புறப்படுகிறபோது நாலுமுகமாய்ப் புறப்

பட்டுப் பிரம்மதேவனுக் கொப்பாகவும் ஓடுகின்ற காலத்தில் காலாயிரம் முடியாயிரம் கையாயிரமுள்ள விஷ்ணுவுக்கு நிகராய்ப் பலவாயும், அது சத்துருக்களது படையைச் சேர்ந்தபோது அவர்களை நிச்சேஷமாய்ச் சம்மரித்துப் பிரளயகால ருத்திரமூர்த்தி யென்று கண்டோர் சொல்லும்படியாயு மிரா நின்றது. அதனுடைய பெருமையைச் சொல்லுகிறதற்கு எத்தனை காலஞ்செல்லும் அற்பகாலத்திலே நம்மாலேசொல்லி முடியத்தக்கதோ? ஐயா மாலியவானே! அப்பாணங்கள் மேலே ஆகாயத்தையும் துடைத்துக்கொண்டுவருமானால் அவற்றின் வல்லமைக்கு வேறுயிரானின்ற சாக்ஷியும் நான் சொல்ல வேண்டுமோ? நானென்ன சொல்லப்போகிறேன். அவ்விதமான மனிதனுடைய வில்லானது, கிழக்கு-மேற்கு-வடக்கு-தெற்கு-பூமி-ஆகாயமெனச் சொல்லப்பட்டவை மற்ற இடங்கள் இத்திசைகளில் எத்திக்கிலிருந்ததோ? இடதுகையிலிருந்ததோ? அல்லது வலதுகையிலிருந்ததோ வென்று இன்னும் நினைத்து நினைத்துப் பார்க்கிறேன், அது என்னுடைய மனதிற்குத் தோற்றப்படவேயில்லை. அதிருக்கட்டும். அவனுடையவாகனத்தின் பெருமையை நானென்னவென்றுதெரிந்து சொல்லப்போகிறேன்? அக்கருடனும் யுத்தத்தில் இப்படி முனைந்து இடசாரி வலசாரி வலசாரி இடசாரியாய்த் திரியமாட்டான். அவ்விதமாக ஸ்ரீராமனென்பவன் காற்றின் மேலேதானே ஏறியிருந்தானோ? கூற்றுவன்மேலே தானேறிச்செலுத்தினானோவென்றால், அப்படி என்பது சற்றேனுமில்லையே. ஒரு குரங்கின் மேலேதானே ஏறியிருந்தான். அதுபெருமையுடைய தல்லவென்று சொன்னால் புத்தியீனமல்லவா? ஆதலால் அநேகமாய்ப் பேசித் திரிவதிலே என்ன பிரயோசனமுண்டு? சாந்தத்தில் பூமியையொத்த இந்தச் சீதாபிராட்டியானவள் அந்த ஸ்ரீராமனுடைய மேனியையும், அவனுடைய செய்கையையுங்கண்ட கண்ணுக்கு மன்மதனும் நானும் மற்றவரும் நாயென்று மதிக்கின்றதற்குத் தானுவோமா? இந்திரன் விஷ்ணு சிவன் பிரமாவெனச் சொல்லப்பட்ட இந்தப் பலவீனரல்லாமல் இம்மனிதர்களால் நமக்கு நாசகாலம் வந்து முடிந்தபோதிலும் நல்லதே. நாம் நல்லபகையாளியைத் தான் பெற்றோம். இதுதான் இன்றைக்கு நடந்த சேதி. என்று சொல்லக்கேட்டு பாட்டனாகிய மாலியவானென்பவன் ஐயா ராவணா! இச்சேதியெல்லாம் உனக்குமுன்னமேதானே வெகுவாய்ச் சொல்லியிருந்தேனே. அதற்கு என்பேரிலே வீணாய்க் கோபம் பண்ணிக்கொண்டாய். இதுவல்லாமலும் உன் தம்பியாகிய விபீஷணனும் எத்தனையோ நல்ல புத்திகளை உனக்குச் சொன்னான்; அதையுங் கேளாமல் கோபித்துக்கொண்டு, அவனையும் துரத்திவிட்டாய் எல்லாவிதத்திலும் உனக்கு நம்பும்படியான ஏதுக்களைப் படித்துப்படித்துக் காட்டியும் அதுகளையெல்லாம் மெய்யென்றுகேட்டா யில்லையே. அப்பா ராவணா! உன் பேச்சுக்குக் குறுக்கே பேசுகிறவர்களுமுண்டோ? அக்கினியையும், மின்னலையும் தோற்கடிக்கும்படியான வேலாயுதத்தையுடைய ஹேராவணேஸ்வரா! உண்மையையறிந்தவர்கள் தீர்க்காலோசனை செய்து சொன்னபோது, வருத்தப்படத்தக்கவைகளானாலும், அதைக் கேட்காமற்போய்விட்டாய். இப்போது அந்த ஜகன்மாதாவாகியசீதாபிராட்டியாரைக் கொண்டுபோய்விட்டுவிட்டால் நீ பிழைப்பாய். அப்படிச் செய்யாவிட்டால் உன்னுடைய கிளைகளும் சுற்றமும், வெற்றியும், உரிமையும், கல்வியும், செல்வமும், சேனையும் இவை முதலானவைகளுடன்கூட நீயும் மாண்டுபோகிறது நிச்சயம். நிச்சயம். என்னுடையவார்த்தையைப் பொய்யென்று யோசனைசெய்யவேண்டாம். நாளை நீயே காணப்போகின்றாய் என்று மாலியவான் சொன்னான். அதைக்கேட்டு மாயை செய்கிறதிலே அதிக சமர்த்துள்ளவனான மகோதரன் ஓடிவந்து, அப்படியாகச் சொன்ன மாலியவானைப்பார்த்து, கண்களிலே நெருப்புப்பொறிபறக்க, என்ன சின்னவார்த்தைகள் பேசுகிறீரென்று சொல்லிவிட்டுப் புத்திமயங்கிக்கிடக்கிற ராவணனுக்குச் சிலதகாத புத்திகளைச் சொல்லுகிறான். ஆராகிலுமொருவர் ஒருகாரியத்தை இது நன்மையென்று பிடித்தால் அதனாலே ஜெயம்வந்தாலும், அல்லது அபஜெயமாகி மரணம் வந்தாலும், அதைவிடாமல் முழுமையும் சாதிக்கிறதே உத்தமர்களுடைய செய்கையாகும்.

சொன்ன சபதம் தவறினவனுக்கல்லவோ இம்மையிற் பழியும், மறுமையில் நரகமு முண்டாவது. திரிபுரங்களெரிந்து போகு ம்படி ஒருஅம்பைப் பிரயோகம்பண்ணின சிவனும், உலகமெல்லாம் ஓரடியாக அள ந்தடக்கின அந்த மகாவிஷ்ணுவும், உன் னோடு யுத்தஞ்செய்து தோற்றுப்போயிரு க்க, இந்த மனிதனுடைய போருக்கு நீ பயந்திருக்கிறாப்போலக் காணப்படுகிறதே இதென்ன விந்தையா யிருக்கின்றது. கை லாயகிரியை வேரோடு பேர்த்தெடுத்த ஓ மகானுபாவனே! ஒருவேளை வென்றவர் தோற்பார். தோற்றவர் வெல்லுவார். எல் லாருக்கும் மேலாயிருந்தவர்கள் தாழ்வார் கள். தாழ்ந்திருப்பவர்கள் உயர்வார்கள். இது பிரபஞ்ச நீதியென்று உணர்ந்தவர் கள் தானே ஞானவான்களென்றவர்கள். சாமர்த்தியத்திற்குக் கரையுண்டா? அற்ப மனிதர்கள் செய்கின்ற யுத்தத்தைப் புகழு கிறாப்போலு மிருக்கிறதே. நாம் சீதையை விட்டுவிடுவோமேயானால் நமக்கு வந்த இந்தப் பொல்லாங்குகளெல்லாம் நீங்கி விடும். இல்லாவிட்டால் யுத்தஞ்செய்து பிராணனை விடவேண்டும். இவ்விரண்டு மல்லாமல் வேறே ஒரு உபாயஞ்செய்கிற தில் பிரயோஜனமில்லை. அழியாத பெரு மையையுடைய ஓராவணேஸ்வரா! நீ இந் தப்பிரகாரமாக இவ்விடத்தில் தாமதமா யிருப்பதென்ன? உன்மனதில் கொண்டிரு க்கிற கவலையை இப்போதே லக்ஷியம்செய் யாமல் விட்டுவிடு. இன்னம் சற்றுநேரம் தாமதம் செய்வாயானால் பனிமூடியிருக்கி ன்ற சிறிய சமுத்திரஜலத்தைச் சூரியனா வன் கிரகித்துவிடுவதுபோல லங்காபட்ட ணத்தையும் நம்மையும் கனிகளையுடைய விருக்ஷங்களுக்குச்சமானமாக்கி இந்தவான ரசேனைகளெல்லாம் கூடிக்கொண்டு தும் சம்பண்ணிப்போடும். நீ வருத்தப்பட்டுக் கொண்டு சோர்ந்திருப்பது தகுதியோ? இ ந்தத்துன்பத்தை விட்டுவிடு. முன்னாலே சர்வலோக நாயகர்களான திரிமூர்த்திகளு ம், உனக்குத்தோற்றுப் போய்விட்டபிறகு, சமஸ்தமான தேவர்களும் உனக்கு ஏவல் செய்யும்படியாய், இந்தத் திரிலோகங்களை யும் ஏகசக்ராதிபதியாய் ஆண்டுவருகின்றா ய். அப்படிப்பட்ட நீ புல்லினுனியில் ஒட் டிக்கொண்டிருக்கின்ற பனிநீர்த் துளிக்குச் சமானமாகிய இந்த அற்பமனிதர்களை ஒரு லக்ஷியம்பண்ணி உனக்கு இளையவனா கும்பகர்னனை ஒரு திரணமாக நினைத்து இகழ்ந்துவிட்டாயே. இதுவென்ன ஆச்ச ரியம்? நீ அந்த கும்பகர்னனை வரவழை த்து இந்த மனிதர்கள்பேரில் சண்டைக் கனுப்பிவியும். மிகுந்த பயங்கரமான மலை யையொத்த அந்தக் கும்பகர்னனுடைய சொரூபத்தை அவர்கள் பார்த்தமாத்திரத் திலே எங்கேயாவது ஓடி ஒளித்துக்கொள் ளுவார்கள். அப்படிக்கில்லாமல் எதிர்த்து சண்டைக்கு நிற்பார்களானால் ஒருவருடை யசகாயமுமில்லாமல் அந்தக் கும்பகர்னன் மாத்திரமே சடைமுடியாளர்களான அந்த மனிதர்களுடைய உயிரை பரிகரித்துப் போடுவான் என்றுஇந்தப்பிரகாரம் மகோ தரன் சொல்லக்கேட்டு இராவணன்உடன் பட்டுசமஸ்தமுந்தெரிந்த ஓமகோதரனே! உன்னைப்போலச் சமயோசிதமாக எல்லா வற்றையும் சொல்லவல்லவர்கள் யாரிருக் கின்றார்கள்? நீ சமஸ்தகாரியங்களையும் அ றிந்திருக்கின்றாய். மேலும் நீ என்னிடத் தில் வைத்திருக்கின்ற அன்போ இவ்வள வவ்வளவல்ல. ஆகையினாலே நல்ல உபா யம்சொன்னாயென்றும், மனம்பேதித்த நம க்கு ஈஸ்வரயத்தினத்தால் கெடுதி காலம் வந்து நேரிடுமேயானால் மத்தியில்வேறொ ன்றினாலே தடுக்கக்கூடுமோ? நீ சொன்ன து நல்லகாரியமென்று சொல்லிய பின்பு, என் தம்பியாகிய கும்பகர்னனிடத்திற்குப் போய் அவனைஇங்கே அழைத்துவாருங்க ளென்று கர்னகடூரமாக நியமித்த மாத்திர த்தில், எமதூதர்கள் தேடிக்கொண்டு போ கிறதுபோலநாலுதூதர்கள்புறப்பட்டுபோ ய்மலைகளைப்பார்க்கிலும் பலம் பொருந்திய உயர்ந்ததோள்களையுடையவனான கும்பகர் னனுடையவெற்றிபொருந்தியஅரண்மனை யிற்சேர்ந்து, மலைக்குச்சமானமாகிய அந்த கும்பகர்னன் சயனித்துக்கொண் டிருக்கிற பள்ளியறையின் மேகமண்டலத்தை யளா விய வாயிலில் நுழைந்து, ஐயா கும்பகர்ன மகாராஜனே! நீ விழித்துக்கொள்ளக் கட வாயென்று தங்கள் கையிலே பிடித்துக் கொண்டிருக்கின்ற இருப்புலக்கையினாலே தலையிலடித்துச் செவியில் குத்தினார்கள். பின்னும் அந்தக் கொடுங்கண்ணனான கும் பகர்னன் நித்திரைசெய்கிறதைக் கண்டு

கோபமுற்றுச் சொல்லத்தொடங்கினார்கள். எந்தக்காலத்திலும் அழிவில்லாத ராக்ஷதர்களுடைய இன்பமான மாயவாழ்க்கையெல்லாம் அழிந்து போகும்படி, உன் தமையனான இராவணன் புத்திபூர்வகமாய்த்தெரிந்து தீமையைச் சம்பாதித்துக்கொண்டான். நீ இன்றைக்கு உயிர் நீங்கி மாண்டுபோவதே நிச்சயம். இன்னும் உனக்கு உறக்கமேதுக்கு? எழுந்திருக்கக் கடவாய் என்று பற்பலவிதங்களாகச் சொல்லிப் புறட்டிப்புறட்டி எழுப்பிச் சொல்லுகின்றார்கள். ஐயா கும்பகர்னமகாராஜனே! உங்களுடைய மோசமான வாழ்வெல்லாம் அழிந்துப்போகிறதை இன்றைக்குப் பாரும். எழுந்திரு மெழுந்திரும். காற்றாடியைப் போல கிறுகிறுவென்று சுழன்றுகொண்டு வந்து எதிர்பார்த்துக்கொண்டு இருக்கின்ற யமதூதர்கள் கையிலே நீ நன்றாய்ச் சயனித்துக்கொண்டு உறங்கப்போகிறாய் உறங்கப்போகிறாய் என்று பற்பலவிதமாகச் சொல்லி எழுப்பவும்; தங்களுடைய வல்லமையினாலே எழுந்திராததைக் கண்டு, திரும்பி ராவணனிடத்திற்குப் போய் ஐயா இராவணேஸ்வரா! வாசனையோடுங்கூடிய மாலையையணிந்த மார்பை யுடையவனான உமது தம்பியாகிய கும்பகர்னன் எழுந்திருக்கவில்லை என்று சொல்லக்கேட்டு, ராவணன் குதிரை-யானை-யாளி முதலானவைகளில் ஆயிரமாயிரமாக ஏவி மிதிக்கவிட்டு எழுப்புங்கள் என்று நியமித்தான். அந்தப்பிரகாரம் அவர்கள் அந்தச் சேனைகளைக் கொண்டு மிதிக்கச்செய்தும் அவன் எழுந்திராததினாலே, மறுபடியும்போய் ராவணனுக்குத் தெரியப்படுத்த மிகுந்த சாமர்த்தியமுள்ளவர்களான நீங்கள் உங்கள் சைனியங்களோடுங்கூடப் போங்களென்று அந்த ராக்ஷதமல்லர்களை ஏவினான். அந்தப் பிரகாரமாக மகாபலமுள்ள வீரர்களான லக்ஷம்பேர் ராக்ஷதமல்லர்கள் ஓடிப்போய் ராவணனுடைய மனதிலுள்ள வருத்தம் நீங்க, இன்றைக்கு இவன் வானரவீரர்களையும் மற்றுமுள்ளவர்களையும் ஜெயித்துகாரியத்தை நிறைவேற்றுவானென்று அவனை எழுப்ப நினைத்து, மலையைப்போலும் உயர்ந்த நீண்ட தோள்களையுடைய அந்தக் கும்பகர்னன் சயனித்துக் கொண்டிருக்கின்ற வெற்றிப்பிரதாப மாளிகையில் நுழைந்தார்கள். அந்தப்படி நுழைந்த மிகுந்த பலமுள்ள வீரர்கள் கும்பகர்னனுடைய திறந்த வாயினிலிருந்து புறப்படுகின்ற சண்டமாருதத்தை யொத்த சுவாசத்தில் அகப்பட்டுக்கொண்டு வருகிறதும் போகிறதுமாய் உழன்று திகைப்படைந்து தத்தளித்து, அந்தச் சுவாசத்திலிருந்தும் தப்பித்துக் கொள்ளக்கூடாமல், ஒருவர் கையையொருவர் பிடித்துக்கொண்டு, தங்களுக்குண்டாகிய அளவில்லாத பலத்தினாலே நெக்கிக்கொண்டு, அந்தப் பெரிய சுவாசத்தைக் கடந்துபோய், அவனுடையபெரிய நித்திரையை எழுப்புகிற நிமித்தமாக மறுபடியும் வேறொரு வாயிலில் நுழைந்து, நாமெல்லாம் இன்றைக்கு இவனை எழுப்புகிறதற்கு என்ன உபாயஞ் செய்யலாமென்று அவனுடைய பெரிய வாயையும் மூக்கையுங்கண்டு உடல்நடுங்கி அவனைக்கிட்டித்தொடுகிறதற்குப் பயந்துஅவனுடைய பெரிய குகைக்குச் சமானமாகிய காதில் சங்கு-தாரை-பூரி முதலாகிய நாதங்களால் உகாந்தகால பேரிடியைப்போல் கோஷ்டம் உண்டாகச்செய்தும், அநேககோடி தண்டாயுதங்கள்-சம்மட்டிகள்-குந்தாயுதங்கள் இவைகளை வழங்குவதில் சாமர்த்தியமுள்ளவர்களெல்லாரும் கூட்டங் கூட்டமாகக்கூடிக் கும்பகர்னனுடைய தவடையிலும், சந்துமுட்டுகளிலும், மார்பிலும், தலையிலும் பலங்கொண்ட மட்டும் ஓங்கி அடித்தும் குத்தியும் மொத்தியும் எற்றியும் கையோய்ந்து, மெய்களைத்து, சக்தியற்று நின்று, ராவணனுக்குத் தெரிவிக்க; அவன் பெரிய குதிரைப்படைகளையெல்லாம் அதிசீக்கிரத்தில் கூட்டங் கூட்டங்களாகக் கொண்டுபோகும்படி நியமித்தான். அந்தப்படியே அவர் சவாரிசெய்யத்தக்க ஜோடினைகளோடு ஆயிரங் குதிரைகளை ஆயிரம் பாகர்கள் வேகமாய்ச்செலுத்திக்கொண்டுவந்து பெருந்தூக்கங் கொண்டு உறங்குகிற கும்பகர்னனுடைய அகன்ற மார்பின்மீது வருத்த முண்டாகும்படியாக யேற்றி, அந்தக் குதிரைகளை நடத்துவித்தும், ஓடச்செய்தும், மிகுந்த வேகத்துடனே வையாளிபோகச்செய்தும், அயர்ந்து தூங்குவதற்கு உடம்பினைக் குத்துவது போல நினைத்து கொஞ்சமும் உணர்ச்சியடையாமல் அப்படியே தூங்கிக்கொண்டி

ருக்கக் கண்டு, விரைவாயோடிப்போய் நெருங்கிய புஷ்பங்கள் கட்டியிருக்கின்றவெற்றிமாலையை யணிந்த ராவணனுடைய வீர கண்டாமணி தரித்த பாதத்தில் விழுந்து, ஐயா ராவணேஸ்வரா! கும்பகர்னனை எழுப்பும்படியான உபாயங்களில் ஒன்றல்ல. அநேக கடினமான விதங்களெல்லாம் செய்துளங்களுக்குக் கையும் மெய்யும் பலமும் குதிரைகள் கால்களும் ஓய்ந்துவிட்டதேயொழிய அவனை எழுப்பும்படியாக எங்களாலாகவில்லை. எழுப்பத்தக்க உபாயங்களுண்டாயிருந்தால் எங்களுக்குச் சொல்லவேண்டுமென்ன ராவணன் அவர்களைப் பார்த்து சக்கரங்கள் பூட்டி மணிகளால் அலங்கரித்திருக்கின்ற பெரியதேர்ப்படைகள் தன்மீது பெயர்த்துவருகிற காலத்திலும் உடல் அசையாதவனும், அதிகபலம்பொருந்திக் கட்டமுடியாத சூலத்தினாலும் மழுவினாலும் வாளினாலும் சம்மட்டியாலும்ஓங்கிக் குத்திவெட்டி எறிந்து துடிக்கும்படி அடித்தபோதிலும், தன்னுடைய துடையையும் அசையாதவனுமான என்தம்பியாகிய கும்பகர்னனை நீங்கள் எவ்விதத்தினாலாவது நித்திரையைப்போக்கிஅழைத்துவாருங்களென்று உத்தரவு செய்தான். அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அந்த ஆயிரம் ராக்ஷதமல்லர்களும் அவனுக்குத் தெண்டனிட்டுப்போய் அதிகபலத்திற்காக நித்திரை செய்கின்ற கும்பகர்ன மகாராஜனைக் கிட்டிநின்று, இரண்டு கன்னத்திலும் நீண்ட இருப்புலக்கைகளைக்கொண்டு கைகொண்ட மட்டுக்கும் ஓங்கியோங்கி அடித்தார்கள். அப்படியடித்தபோது மூன்று லோகத்தவர்களும் நடுங்கும்படியாகவும், அஷ்டதிக்குகளிலு மிருக்கின்ற பலம்பொருந்திய பருத்த கைகளையுடைய எட்டுயானைகளும் பெயராத தங்கள் தங்கள் நிலையிலிருந்து பெயர்ந்துபோகவும், சந்திர சூரியர்கள் திகிலடையவும், தாமரைமலரை ஆசனமாகவுடைய பிரம்மதேவனும், திருப்பாற்கடலைச் சயனமாகவுடைய விஷ்ணுவும், கயிலாயகிரியை வாசஸ்தலமாகவுடைய சாம்பசிவனும் ஆகிய இவர்கள் முதலான சமஸ்த தேவர்களும் நடுக்கமுற்று ஏக்கமடையவும், செத்தவர் உயிர்பெற்றெழுந்ததுபோல அந்தக் கும்பகர்னன் விழித்துக்கொண்டான். அப்படி விழித்து மேகங்களைப் பற்றிப் பிழியும்படியான பெரியகைகளையும், ஆகாயத்தை அளவிடத்தக்க பருத்த ஸ்தூல ஆகாரத்தையும், கடலினும் பெரிதாகிய இரண்டு கண்களையும், அளவிடக்கூடாத பெருமையையுமுடைய அதிக பலமுடைய கும்பகர்னனாகிய ராவண சகோதரன் பூலோகத்தையெல்லாம் தமது திருவடிகளால் அளந்து விஸ்வரூபங்கொண்டுநின்றசாட்சாத் திரிவிக்கிரமமூர்த்தியைப்போல ஓங்கி எழுந்து நின்றான். அவன் அப்படியே நித்திரையைவிட்டு எழுந்தமாத்திரத்தில் உண்ணும்படியாக வறுத்துச் சுட்ட மாமிசங்களோடுகூடக் கள்ளுக் குடங்களையும் வழக்கப்பிரகாரம் கொண்டுவந்து கொடுக்கப் பெற்றுக்கொள்ளாதவனாகித் தன்னுடைய உயர்ந்த கடைவாயைநக்கிக்கொண்டு களைமாறின முகத்தையுடையவனாய், பிறகு அறுநூறுவண்டிகளிற்கொண்டுவந்த சோறும், பதினாயிரங்குடக்கள்ளும் தட்டாமலும் மிகுந்தபசியாறாதவனாய் இரண்டுகண்களிலும் நெருப்புப்பொறிபறக்க ஆயிரத்திருநூறு கறுத்த எருமைக்கடாக்களையும் ஒருலக்ஷியம் வையாமல் சிறு திண்டியாகத் தின்றுவிட்டு, அதுவும்போதாமல் இன்னமும் அதிக ஆகாரங்கொண்டுவந்து கொடுங்களென்று பிரகாசிக்கின்ற இடிகளைப்பிடித்துக் கையினால்பிசைந்து, நெருப்புப்பற்றவைக்கும்படியான மகாகோபத்தையுடையவனாகிப் படுக்கையிலுட்கார்ந்திருந்து தன் அண்ணனாகிய ராவணன் எதிரில் இல்லாததைத்தெரிந்து பெரிய கடலின் அலைகள் நெறித்ததுபோலப் புருவம்நெறித்த நெற்றியை யுடையவனாகியும், குடித்தரத்தம் அவன் கடைவாயில் வடியவும் உட்கார்ந்தபடியே தூங்கினான். கடல்போல ரத்தங்களுடனேகலந்தமாமிசங்களையும், எலும்பும் தோலும் நீக்கி வாரியுண்ணுகின்ற ஆகாரம் வேண்டுகிறவனும், சூரியனையொத்த வஜ்ஜிரகங்கணங்களைத் தரித்த பருத்த கைகளை யுடையவனும், கருங்காலிக் கட்டைபோலவைரம்பற்றியகால்களில்வீரகண்டாமணியைத்தரித்தவனும், மிகுந்தபசிநோய்க்கு மருந்தாக வேலாயுதமும் இருப்புக்கழுமுட்களும் அரிவாளும் தோல்வியடையும்படியான பற்களைக் கொண்டு யானைகளுடைய கொழுத்த மாமிசங்களைத் தின்கிறவ

னும், வெற்றி நீங்காத மிகுந்த கள்ளைக் குடிக்க அதிக ஆசையுள்ளவனும், ஒரு சூலாயுதத்தைப் பிடித்துக்கொண் டிருக்கின்ற உயர்ந்த தோள்களை யுடையவனும், சூல்கொண்ட மேகம்போலும் காத்திரமுள்ள தோற்றத்தையுடையவனும், ராத்திரி போலும் மேனியையுடையவனும், அந்தகாரம் பொருந்திய மனதையுடையவனும், சப்திக்கின்ற வீரகண்டாமணி தரித்திருக்கின்ற கால்களையுடையவனும், தேகமெல்லாம் நெருக்குற்றிருக்கின்ற செம்பட்டமயிரையுடையவனும், தேவேந்திரனைப் பற்கள் உதிரும்படியாக வடித்த தனது கையினுலே சுவர்க்கலோகத்துமதிலும் இடிபட்டுப் பூமியில் விழும்படியாகப் பெயர்த்துத் தள்ளினவனும், வயிற்றைப் பிசைந்துகொண்டு ஸ்திரீகளெல்லாரும் பயந்துபோய் ஒளித்துக் கொள்ளும்படியாகக் கழுமுளைகளைவரிசையாகவைத்ததுபோலும், பற்கள் காணப்படுகின்ற வாயை யுடையவனும், உடல்கிடந்து நித்திரை செய்யும்போது தேவர்களுக்கு முழுப்பிராணவாயுவும் குடலிற்கிடந்திருக்கவொட்டாமல் பயங்கொள்ளச் செய்யத்தக்க வலியையுடையவனும், பூமியிற் கிடந்த கடல் நின்றதுபோலவும், அதன்பேரில் மிகுந்த வெப்பமான வடவாமுகாக்கினி எரிகிறதுபோலவும், கறுத்த மேனியும் தலையிற் செம்பட்டமயிருமுடையவனும், அஷ்டதிக்குகளையும் ஜெயம்பெற்ற ராவணன் கோபிக்கும்போது மிகுந்த கிரணங்களையுடைய சூரியனும், அக்கினியும் கண்டு மனங்கலங்கிப் பதுங்கி ஓடியொளித்துக்கொள்ளும் பெரிய மலையினது குகைத்துவாரம்போன்ற மிகுந்த நித்திரை மயக்கமுள்ள கண்களையுடையவனும், மூங்கில்கள்பொருந்தியபெரியமலையில்வசிக்கத்தக்க யானைகள் குடைவரையென்று நினைத்து உறங்கும்படியான நீண்ட ரோமராசியுள்ள மார்பையுடையவனும், வந்து சேர்கின்ற பிராணிகளுக்கு ஆதாரமான குகையென்று எண்ணிப்போய் பாம்புகள் தங்கும்படியான செவிகளை யுடையவனுமாகிய கும்பகர்னனை நோக்கித் தூதர்கள், ஐயா! உம்முடைய தமையனாகிய பிரதாப லங்கேஸ்வரர் உம்மை அழைத்துக்கொண்டு வரச்சொன்னர் என்று சொல்லியவுடனே பெரியமலைக்குச் சரியொத்த கடினமான தேகத்தையுடையகும்பகர்னன் இலங்கையிலுள்ளவர்களெல்லாம் கோவென்று சப்திக்க, அதிவேகமாய்ப்புறப்பட்டு கோட்டை வாயிலில் நுழைந்து சந்திரமண்டலபரியந்தம் அளாவிக்கொண்டிருக்கின்ற ராவணனுடைய அரண்மனையின் வாயிலைச் சேர்ந்து மதில்களால் சூழப்பட்ட பலநிலைகளமைத்த கோபுரத்தையுடைய மாளிகையின் மேல்நிலையில் சயனித்துக்கொண் டிருக்கின்ற லங்காதிபதியைக்கண்டு அநேகம்பேர்களைக் கொலைசெய்து ஜெயம்பெற்ற வேலாயுதத்தையுடைய கும்பகர்னன் ஒரு பெரிய மலை விழுந்ததுபோல சாஷ்டாங்கமாகவிழுந்துதெண்டனிட்டான். நின்றுக்கொண்டிருந்த ஒருமலையானது தன்னிடத்திற் பிரசண்டவேகத்தோடும்வந்த மற்றொரு மலையைத் தழுவினதுபோலத் தசக்கிரீவனுகிய ராவணனுனவன்எழுந்து தனது வல்லமைபெற்ற துணைவனுன மூத்த தம்பியை இருபது கைகளினுலும் வாரியெடுத்து மார்போடு தழுவித் தன்னுடன்கூட உட்காரவைத்துக்கொண்டு ரத்தத்தையும் குடங்குடமாக நிறப்பிவைத்திருக்கின்றகள்ளையும் குடிப்பாட்டி நான்குதிசைகளிலும் சூழ்ந்திருக்கின்ற கடல்களினுரைக்குச் சமானமாகிய வெள்ளைப்பட்டு வஸ்திரங்களையுடுத்திக் கிரணக்கூட்டங்களுடன் பல பக்கங்களிலும் ஒளிவீசிக்கொண்டிருக்கின்றபற்பல ஆபரணங்களைத்தரித்து அதிக பலமுள்ள இந்திரனுனவன் தான் ஏறி நடத்திக்கொண்டுவந்த ஐராவதமென்கிற யானையோடு கூட ராவணனுக்குத் தோற்றேடும்போது சோர்ந்து விழுந்துவிட்ட பிரகாசமுள்ள ரத்தினங்களிழைத்த நெற்றிப்பட்டத்தை வெற்றிப்பட்டமாக அவனுடைய நெற்றியிற்கட்டித் தேகமுழுதும் மின்னலைப்போலப் பிரகாசிக்கும்படியாகக் குங்குமச்சேறு பூசப்பட்டகையையுடையமத்தகஜம்போலவும் அந்தக் குங்குமக்குழம்பு கலந்த கடல்போலவும், விளங்கும்படித் தெய்வமணம் வீசுகின்ற செஞ்சந்தனக்குழம்பை அவன் உடம்பெல்லாம்பூசினுன். காளகோடிவிஷமானது எழுந்துயர்ந்ததுபோல உயர்ந்து ஆகாயத்தையளாவும்படியாக நீண்ட அவனுடைய மார்பினிடத்தில் ரிஷபவாகனரூடராய் வந்த அக்கினிக்குச் சமானமாகிய

நான்கு தோள்களையுடைய சாம்பசிவமூர்த்திகொடுத்த கவசத்தை யணிந்தான்.

இப்படி ராவணன்சிங்காரிக்கும்போது கும்பகர்னனுடைய மின்னற் கொடிபோல் நீண்டு சிவந்திருக்கின்ற புருவமும் ஆகாயத்தைத் தொட்டுக்கொண்டிருக்கின்ற தோளும் இடந்துடிக்கக்கண்டு, அண்ணா ராவணேஸ்வரா! என்னகாரணத்திற்காக இப்படிப்பட்ட அலங்காரங்களை ஆரம்பித்துச் செய்கின்றாய்? என்று கேட்க, இராவணன் தம்பி! மிகுந்த வானரசைனியங்களுடனே இரண்டுமனிதர்கள்கெர்வித்து நம்முடைய கோட்டையைச் சுற்றி முற்றுகைபோட்டுக் கொண்டிருக்கின்றார்கள். நீபோய் அவர்களுடைய உயிரை உண்டு முடித்துவிடென்றான். அப்போது கும்பகர்னன் அண்ணா! பிரகாசிக்கின்ற லக்ஷ்மியைப்போன்ற சீதையைக் குறித்து நீ முன்னம்வைத வசைச் சொற்களால் சண்டை நெருங்கிவிட்டதா? விஷத்துக்குச் சமானமாகிய கண்களையுடைய அந்தப் பதிவிரதா சிரோமணியை இன்னும் விட்டுவிடவில்லையா? இது உன்னுடையபிராரப்தகர்மமேயல்லாமல் வேறல்ல. கொடுமையானயுத்தம் நடக்கப்போகின்றதோ? மஹாபதிவிரதையாகிய ஜானகிபிராட்டியினுடைய துக்கம் இன்னும் தீரவில்லையா? பூலோகமுதல் சுவர்க்கலோக பரியந்தம் ஓங்கிவளர்ந்திருந்த உன்னுடைய அழியாத பெருங்கீர்த்தியானது அழிந்துவிட்டதோ? ராக்ஷதர்களுக்கு நாசகாலம் வந்துவிட்டதோ? எல்லாமலைகளின் வலியையும், உலகங்களின்வலியையும், இவ்வளவென்று வாம்பிட்டுச் சொல்லக்கூடுமானாலும்; அளவுசொல்லக்கூடாத ஸ்ரீராமன்தோள்வலியை நீவெற்றிக்கொள்ளலாமென்றது சீதாபிராட்டியின்திருமேனியைத்தழுவலாமென்று வெறுவாய் வெல்லுகின்றையே அதற்குச்சமானமாகும். இந்த இரண்டும் முடியாதகாரியங்கள். புலஸ்தியப் பிரம்மாவின்வழியாக முதலிலே உற்பத்தியாகி, எதார்த்த தர்மங்களைச் செய்துவந்த நம்முடைய குலத்தினியல்பை அழித்துவிட்டாயே. இப்படிப்பட்ட உனக்கு வெற்றியுங் கைகூடுமா? உன்னுடைய பலமெல்லாம் அழிந்துபோகு மென்பதற்குச் சந்தேகம் எள்ளளவுமில்லை. நிலத்தின் சுபாவம் எப்படியோ அப்படியே அதைச் சேர்ந்த நீரின்தன்மையு மிருக்குமென்பது போல, நம்முடைய ராக்ஷததர்மமே மேலிட்டுவிட்டதல்லவா? இனி இந்திரனுக்கு அரசும் வெற்றியுங் கொடுத்துவிட்டாய். உன்னையும் உன் புத்திரமித்திர களத்திராதிகளாகிய அளவற்ற பந்துக்களையும் அழித்துப்போட்டாய். அநேகவகையானராக்ஷதர்களையெல்லாங்கொன்று நீக்கிவிட்டாய். இனி உனக்கு நல்லகதியுமுண்டாகப்போகிறதுமில்லை. உனக்குத் தருமமும் பயந்து ஒளித்துக்கொண்டது. இந்தத்தருமந்தான் உனக்கு அழியாத மிகுந்த வல்லமையும், செல்வங்களையும், நல்லயௌவனத்தையும், கொடுத்திருந்தது. அப்படிப்பட்ட தருமத்தைவிட்டு அழியப்போகின்ற உன்னை வேறே யாரெடுத்து நிலைநிறுத்தப் போகிறார்கள்? அடைக்கலமும் தருமமும் நல்ல நடக்கையும் வாக்குவிர்த்தியு முடையவர்களே குறைவில்லாமல் எப்போதும் நீடித்துவாழ்வார்கள். அப்படிக்கில்லாமல்வஞ்சனையும், பாவமும், பொய்யும் நிறைந்திருக்கின்ற நாம் அழிந்துபோகிறதற்கும் ஒரு தாழ்ச்சியுமுண்டா? தம்முடையகாலினாலே இந்தக் கருங்கடலைத்தாண்டிக் காற்றைப் போல வரும்படியான குரங்குகளு மிருக்கின்றதுகள். சீதையும்நம்முடையலங்கையை விட்டுப்போகவில்லை. வாலியினுடைய மார்பைப் பிளந்துகொண்டுபோன அம்பைப் போலொத்த வல்லமையுடைய ஸ்ரீராமபாணங்களுமிருக்கின்றதுகள். அதற்குலக்ஷியமாக நாமுமிருக்கின்றோம். இனி நடக்கப்போகின்ற காரியங்களுக்கு ஏதேனும் ஒரு குறையுமுண்டாகுமா? என்று கும்பகர்னன் இதுபோல் இன்னும் அநேக காரியங்களைப்படித்துச் சொல்லி, பின்னும் ராவணனைப்பார்த்து நான் உனக்கு ஒன்றுதெரிவிக்கிறேன். அதை அங்கீகரித்துக்கொள்வாயானால் அதனால் மிகுந்த நன்மையுண்டாகும். அதை அங்கீகரித்துக்கொள்ளாவிட்டால் நீ செத்ததாகவே தீர்மானஞ்செய்துகொள். ஐயா ராவணேஸ்வரா! சீதாபிராட்டியைக் கொண்டுபோய்விட்டு, ஸ்ரீராமருடையபாதத்தில் விழுந்து, உன்னுடைய உண்மையான தம்பியாகிய விபீஷணனோடு சிநேகங்கொள்வதுதான் நீ தப்பிப் பிழைப்பதற்குத்தக்கநல்லவழியாகும். அப்படிக்கு இல்லாவிட்டால் செய்யவேண்டிய

உபாயம் வேறொன்றிருக்கின்றது. அதைத் தெரிவிக்கிறேன் கேளாய். வரிசை வரிசையாக உன்னுடைய சைனியங்களை அவர்கள்பேரில்யுத்தத்திற்கு அனுப்பு. அவைகளெல்லாம் அழிந்துபோனபிறகு நீ மாத்திரம் துக்கப்பட்டுக்கொண்டிருப்பது நியாயமல்லவே. உன்னுடைய பலமெல்லாங் கொண்டு எதிர்த்து அவர்களோடு யுத்தஞ் செய்வதுதான் காரியசித்தியென்று உபாயம் சொன்னான். அதைக்கேட்டு ராவணன் கும்பகர்ணா! உன்னை நான்கூப்பிட்டது இனி நடக்கப்போகிற காரியத்தைத் தெரிந்துக் கொள்ளுவதற்காகவல்ல. அற்பபலத்தையுடையவர்களான அந்த மனிதர்களைப்போய்க்கொல்லு. என் புத்தியைப் பார்க்கிலும் அதிக அறிவுடையமந்திரி நீயல்ல. நீஇப்போது அவர்களுக்குப் பயந்துவிட்டாய். உன்னுடைய வீரத்தன்மை பயனற்றதாகப் போய்விட்டது. மிகுந்தபலத்தோடு செய்யவேண்டியயுத்தத்திற்குத் தகுதியான அதிக மாமிசமும் கள்ளுஞ் சாப்பிட்டாய். அதிருக்கட்டும். இப்போது இனிக்கண்ணைமூடிக்கொண்டு இரவும்பகலுமாக நித்திரைசெய்யும்படியாகப் போய்விடு. நீசண்டைசெய்யத்தக்க யோக்கியனல்லவென்று மனம் உளையும்படியாகச் சொல்லி, இரண்டு மனிதர்களை வணங்கிக் கூனலான குரங்குகளையும் கும்பிட்டு வயிறுவளர்த்துப் பிழைக்கிற செய்கை, உன்தம்பியாகிய விபீஷணனுக்கும் உனக்குமே தகுதியானதாகும். நான் அப்படிச் செய்யமாட்டேன். நீ எழுந்து போய்விடென்று சொல்லிவிட்டு, என்னுடைய தேரையும் ஆயுதங்களையும் கொண்டு வாருங்கள். எல்லாரும்புகழ்ந்து சொல்லப்பட்ட எமனும் என்னோடுவந்து எதிர்க்கட்டும். தேவலோகத்திலுள்ளவர்களும்பூலோகத்திலுள்ளவர்களும் இன்னும் மற்றயாவர்களும் கைவல்லமையுடைய இரண்டு சிறு மனிதர்களுடனே சேர்ந்துக்கொண்டு எல்லாரும் என்னோடு சண்டைசெய்யட்டும். நானே யுத்தத்திற்குப் போகிறேனென்று புறப்பட்டான். அதைக்கண்டு தம்பியாகிய கும்பகர்னன் அவனுடையபாதத்தில் விழுந்து வணங்கி, அண்ணா! நான் சொன்னதைப் பொறுத்துக்கொள்ளென்று பலம் பொருந்திய நீண்ட சூலாயுதத்தை வலது கையில் தாங்கி ஓங்கிப் பிடித்து நின்று, அண்ணா! இன்னும் ஒருவார்த்தை யிருக்கின்றது. நான் இனிமேல்போய் ஜெயித்து வருவேனென்று எண்ணங்கொள்ளவில்லை விதியானது என்பிறகே நின்றுகொண்டு பிடரியைப் பிடித்து நெட்டித் தள்ளுகின்றது. நான் யுத்தகளத்தில் இறந்துபோய் விடுவேன். நான் இறந்துபோனதன் பிறகாவது நீ நன்மையைப் பெறும்படி சந்தோஷத்துடனே ஸ்வர்னச்சாயையோடுங் கூடியிருக்கின்ற தோள்களையுடைய சீதாபிராட்டியைக் கொண்டுபோய் விட்டுவிடு. என்னை எப்போது ஜெயிக்கின்றார்களோ, பிறகு உன்னையும் ஜெயித்து வெற்றிபெறுவார்களென்பதற்குச்சந்தேகமில்லை; நீபின்னால் யோசனைசெய்கிறது புத்திஹீனமாகும். ஆகையால்சீதாபிராட்டியை இன்றைக்கேகொண்டுபோய் விட்டுவிடுகிறது உனக்குத் தவத்தைப்பார்க்கிலும் மிகுந்த எஸஸ்ஸைத்தருவதாகும். இந்திரனுக்குப் பகைவனாகிய இந்திரஜித்தென்னும் உன்னுடைய குமாரன் ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இலக்ஷ்மணன் பிரயோகிக்கின்ற மந்திராஸ்திரத்தினாலேசாகப்போகிறது சத்தியமாகும். உன்னுடையசைனியங்களெல்லாம் காற்றிற்பறக்கின்றபுழுதிபோலாகப் போகின்றதுகள். ஆகையாலே நீ தகுந்த ஆலோசனைசெய்து உனக்கு யுக்தமான மார்க்கத்தைச்செய்துகொள். இன்றையவரையிலும் நான் உனக்கு முன்செய்துவந்த குற்றங்களுண்டாயிருக்குமானால் அவைகளையெல்லாம் பொறுத்துக்கொள். உன்னுடைய முகத்தில் நான் விழிக்கிறது இன்றையோடு முடிந்துவிட்டது. அண்ணா! விடைகொடுவென்று அந்த ஸ்தானத்தைவிட்டுப் புறப்பட்டுத்திரும்பினான். அப்போதுராவணன் இருபது கண்களினிடத்தும் ரத்தக்கண்ணீர்விட்டழுதான். கும்பகர்னன் பெண் ஜாதிபிள்ளைகள் உற்றார் உறவின்முறையார் முதலானயாவரும் துக்கப்பட்டழுதார்கள். இப்படியாக அழுகிறவர்களெல்லாரையும் பார்த்துக் கும்பகர்னனும் அழுதுகொண்டு உத்தரகோபுரவாயிலைவந்தடைந்தான். கும்பகர்னனோடுகூட நம்முடைய சேனாவீரர்கள் தங்கள் தங்கள் ஆயுதங்களோடு ரணபேரிகை முழக்கிக்கொண்டு போகவேண்டுமென்று ராவணன் நியமித்தமாத்திரத்தில் தேவலோகத்தவர்களுடைய வண்டுகள்

மொய்த்த கற்பகமாலைசூடிய தலைகளில் சேனுபராகங்கள் படியும்படியாய் ரதகஜது ரகபதாதிகளென்று சொல்லப்பட்ட நால் வகைச்சேனைகளும்புறப்பட்டு வந்ததுகள். தேரின்மீது கட்டியிருக்கின்றகொடிகளும், யானைகளின்பேரில் பிடித்துக்கொண்டுவரு கின்ற துவஜங்களும், முன்னணிப் படைக் கர்த்தர் பிடித்துக்கொண்டுவருகின்ற ஆகா யத்தைத் தாவும்படியான விருதுக்கொடிக ளும் ஆகிய இவைகளெல்லாம் ஒன்றுட ஞென்று நெருங்கிச் சேனுபராகங்கள் போ ய்ச் சுவர்க்க மண்டலத்தில் படிந்திருந்த மையால், அந்தத் தூசியைத் துடைக்கி றதுபோலும், ஆகாயமார்க்கத்தில் ஆடிக் கொண்டுவந்ததுகள். அந்தராக்ஷதசேனைக ளுடைய அநேக ஆயுதங்கள் ஒன்றுடனெ ன்று தாக்குவதினுல் அதுகளினிடத்துண் டாகிய அக்கினிப்பொறிகளும் சேனைத்த லைவர்களுடைய கண்களினின்றும் புறப்ப ட்ட நெருப்புப்பொறிகளும் போய்ப்பட்டு விசாலமான ஆகாயத்திலுள்ள மேகங்க ளெல்லாந் தீய்ந்து உதிர்ந்துவிட்டதுகள். தேர்ப்படைகள் போகிறதினுலும், யானைப் படைகள் செல்லுகிறதினுலும், நெருக்கு ண்டுசிந்துரமப்பியமுகத்தையுடையமேகம் போன்ற யானைகளும் தேர்களுஞ் செல்ல மாட்டாமல் நிற்க, குதிரைகள் காற்றைப் போல ஓடுவதினுலும், கொடிப்படைகள் நடக்கிறதினுலும், பின்வரும் சேனைகளா னவை முந்திப் பூமியில் செல்லுகிறதற்குத் தம்மால் முடியாதென்று ஆகாயமார்க்கமா ய்ப் பாய்ந்துபோனதுகள். ஆயிரம் சிங்கங் களும், ஆயிரம்யாளிகளும், ஆயிரம்யானை களும், ஆயிரம்பூதங்களும் பூண்டதும் வி சாலமாகிய பூமியை மறைக்கத்தக்கதுமான அதிக பிரகாசமுள்ள ரத்தினங்களிழைத்த ஒருபெரிய தேரின்பேரில் கும்பகர்னன் ஏறினுன். தோமரம்-இருப்புலக்கை - தண் டாயுதம்-வேலாயுதம்-சூலாயுதம்-வல்லயம் வாளாயுதம்-மழுவாயுதம்-அலாயுதம்-வளை தடி - சக்கரம்-வில் - கேடயம் - இன்னும் க்ஷேமத்தில்வைத்திருந்த பற்பல கொடிய ஆயுதங்களையெல்லாம் தலையிற்றூக்கிக்கொ ண்டு அநேகம் ராக்ஷதர்கள் இரண்டுபக்கங் களிலும்வந்தார்கள். இதுவல்லாமலும்சில பேர்கள் கள்ளுஜாடிகளைத் தூக்கிக்கொண் டும், பக்குவமாக வெந்த மாமிசத்துண்டங் களை நிறைத்துவைத்திருக்கின்ற ஆயிரம் சகடவண்டிகளை ஓட்டிக்கொண்டும், வக்கிர தந்தங்களை யுடையவனுன கும்பகர்னனுக் குப் பின்னுல் கள்ளும் மாமிசமும் மாறி மாறி அடிக்கடி முறைப்படிக்குக் கைநீட் டிக்கொடுத்துக்கொண்டும்வந்தார்கள். அப் போது அதைக்கண்டதேவர்கள் இது இந் தப்பெரிய கூட்டங்களாகிய குரங்குகளி னுலேமாத்திரம் ஒழிந்துபோகமாட்டாது. இவன்தின்னுகிற மிகுந்த கொழுத்த மாமி சத்திற்கு இந்த உலகந்தான் போதுமோ? எங்கும் பிணக்காடாகப்போகிறது. யமனு க்கும் ருசி தெரிந்துவிட்டது. இது சும் மாய் போகமாட்டாதென்று தேவர்களெல் லாம் ஓட்டம்பிடித்தார்கள். ஆதிசேஷனு டைய ஆயிரஞ் சிரசுகளையும்விட்டு நீங்கிப் பூமியுடனேகூட பர்வதசிரேஷ்டமென்று சொல்லும்படிப் பெயர் பெற்றிருக்கின்ற பெரிய மேருகிரியானது வந்ததுபோல சொர்னமயமாகிய தேரின்பேரில் உக்கிர மாய் வந்திருக்கின்ற கும்பகர்னனை உயர்ந் ததோள்களையுடைய சக்கரவர்த்தித் திருக் குமாரராகிய ஸ்ரீராமர் பார்த்து, அவனு டைய தேரில் கட்டியிருக்கின்ற கொடிகள் வீணையெழுதி யிருக்கிறதோவென்று பார் த்தபோது, அதில்லாமல் வெற்றிபொருந் திய சிங்கமெழுதி யிருக்கக்கண்டு, இவன் ராவணனல்லன். காற்றிலும் அதிகவேக மாக மனதைச் செலுத்திப் பார்த்தாலும் அளவறிவதற்கு அருமையான தோற்றமு டையவனு யிருக்கிறுன். மேலும் உயிரு டைய பொருளல்லவென்று நினைக்கலா மென்றுலும், ஆபரணங்களை அணிந்த மார்புடையவனுகவுமிருக்கின்றுன். இவன் யாரோ? இவனுடைய ஒரு தோளோடு மற்றொருதோளை ஒருசேரப் பார்க்கிறதற்கு அநேக நாள்செல்லும். மேருமலைக்குக் கால்கள் முளைத்ததோ? யுத்தஞ்செய்வத ற்கு இசைந்துவந்திருக்கின்ற இவன் இன் னுனென்று தெரியவில்லை. இவன் பெயர் என்னமோ? ராவணன் தன்னுடைய நிஜ ரூபத்தை மறைத்துக்கொண்டு, நமது வானர சைனியங்களைப் பயப்படுத்தும் படியாகக் காட்டுகிறதற்குக் கொண்ட மாறு வேஷமோ? இந்த உரு இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. ஆகையால் ஓ வி பீஷணு! இதுநன்ருய் தெரியத்தக்கதாக

சீக்கிரம் எனக்கு நீ சொல்லவேண்டும் என்றுஸ்ரீராமமூர்த்திகேட்க, அவருடைய திருவடிகளில் சாஷ்டாங்க தெண்டஞ் சமர்ப்பித்து, சுவாமி! இவன் மகா பிரதாப சாலியான லங்கேஸ்வரனுடைய தம்பியும் எனக்கு மூத்தவனும், மேகத்தை யொத்த கறுத்த நிறத்தையுடைய யமனுக்குச் சமானமாகிய வீரகண்டாமணியைத் தரித்தவனும் கூர்மைபொருந்திய சூலாயுதத்தை யுடையவன். இவனுடைய தன்மை எப்படிப்பட்டதென்றால், அருமையான தபசைச் செய்கிறவர்களாலும் வேதவேதியர்களுமானவர்களாலும் தியானிக்கத் தக்கவரும், கைலாயபதியும் மூலதாமரைப்புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற சதுர்முகப் பிர்மாவும்சிந்திக்கும்படியான சாட்சாத்க்ஷீராப்தி நாதனுன சாட்குண்ய பரப்பிரம்மமானவர் யோக நித்திரைவிட்டு எழுந்திருக்கிற காலத்தில் தேவர்கள் நாசமடைவார்கள். இவன் நித்திரைவிட்டு விழிக்கிற காலத்தில் தேவர்களைக் கொல்லுவான். ஓ சக்கரதாராகிய சுவாமி! இவன் அற்ப வாழ்நாளை யுடையவனும் என் தமையனுமான ராவணனுக்கு அடுத்த சகோதரன். ஊழிகால பரியந்தம் நித்திரைசெய்யததக்கவன். யமனுடைய உயிருக்கு யமனாகவிருக்கிறவன். வாயுதேவனைப் பார்க்கிலும் மிகுந்த வேகத்துடனே நடக்கின்ற கால்களை யுடையவன். தேவேந்திரன் முதலானபேர்களும் தோல்வி யடையும்படியாக வெற்றிமாலையைத்தரித்த ஒப்பற்ற சூலாயுதத்தைக்கொண்டு அவர்களைக் குத்தினவன். நான்கு கொம்புகளையும் மலைக்குச் சமானமாகிய நான்கு கால்களையுமுடைய ஐராவதமென்கின்ற யானையை, அதின்பேரி லிருக்கின்ற தேவேந்திரன் பயந்துவிழாமல் இருந்தபடியே இருக்கும்படியாக அந்த யானையைப் பின்னங்காலிரண்டையும் பிடித்துக் கிறுகிறுவென்று சுழற்றினவன். அல்லாமலும் வடவாமுகாக்கினியையும் காற்றையும் பிடித்துப் பிழிந்து, சாற்றெடுக்கும்படியான சாமர்த்தியமுடையவன். மீன்களெல்லாம் அழிந்து நசுங்கிப் போம்படியாகச் சமுத்திர ஜலத்திலிழிந்து காலால்நடந்து கரையேறத்தக்க வல்லவன். மாமிசபுஷ்டியின் உறுதியினுல் மேருவும் நிகரற்ற மிகுந்த பலமுள்ளவன். அதிக தபங்களைச் செய்ததினுல் யாரொருவரும் பெறாத மிகுந்த வரங்களைப் பெற்றவன். பூர்வத்தில் இவன் மதோன் மத்தனாய் லோகங்களிலும் சாரியுலாவி வந்தபோது, பேயையும் இவனுக்குச் சமானமாகச் சொல்லவொட்டாமல் எல்லாரையும்பிடித்துக் கொண்டுவந்தான். தொங்குகின்ற மாலையை யணிந்த இந்த கும்பகர்னன் அன்றைக்கு வந்துபடுத்து இன்றைவரையிலும் நித்திரைசெய்துகொண்டிருந்த படியினுலே லோகமெல்லாம் இவ்வளவாவது பிழைத்திருந்தது. இவன் கையில் ஒருசூலமிருக்கின்றது. அதுதேவர்களுடைய வாழ்நாளை யெல்லாம் உண்டுவிட்டது. அந்தச் சூலத்தை லோகங்களை யெல்லாம் உண்டவனாகிய சாக்ஷாத் விஷ்ணுமூர்த்தியினது சக்ராயுதத்தி னிடமாக விருந்து காலகோடிவிஷத்தை யுண்டவராகிய சதாசிவமூர்த்திபெற்று இவனுக்குக் கொடுத்தார். மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற திவ்வியதேகத்தையுடைய சுவர்க்க லோகவாசிகளாகிய தேவர்கள் அநேகம் பேர் இவனுக்கு முன்னாக அமர்செய்ய நின்றார்களென்ற போதிலும், அவர்கள் எல்லாரும் முதுகிட்டோட அவர்கள்முதுகைப் பார்ப்பானே யல்லாமல் அவர்கள் முகத்தில் இவன் விழிக்கவே மாட்டான். இவன் இடியைக்காட்டிலும் கொடியவனான ராவணனைப் பார்த்து, அண்ணா! சீதாபிராட்டியைக் கொண்டுவந்தது தர்மமல்லவே? அதனுல் நமக்கு உயிர்ச்சேத முண்டாகுமென்றும், பெரியோர்கள் இருந்து சொன்ன புத்தியை மறுத்த ராவணனைச் சத்தியமாகக் கோபித்துப் பிராணநாசம் வருமென்பதைத் தெரிவித்தான். அதைக் கேளாததினுல் அவனே வெறுத்துத் தான் சாகப்போகிறது நிச்சயமென்று, அவனிடத்தில் தனக்குண்டாகிய பாத்தியத்தையும் முறித்துக்கொண்டு, இது நமக்கு நல்லதல்லவென்று தகுந்த நீதியை ராவணனுக்குச்சொல்லி, இன்றைக்குத் தேவரீருடைய சந்நிதிக்கு முன்பாக வந்தான் என்று விபீஷணுழ்வார் சுவாமியை வணங்கினார். அப்போது அந்தவார்த்தையைக்கேட்டுக்கொண்டிருந்த சுக்கிரீவமகாராஜர் சுவாமி! அடியேன் ஒரு நல்ல நினைவு நினைத்தேன். அதாவது இவனைக் கொல்லுகிறதினுலே நமக்கு ஒரு பிரயோஜனமுமில்லை.

அவனுக்கு இஷ்டமிருந்தால் அவனை நம்மோடு சேர்த்துக்கொண்டு பிறகு நடக்கவேண்டியதைச் செய்யலாம்; அப்போது இந்த விபீஷணுழ்வாருடைய துக்கமும் நிவர்த்தியாகுமென்று சொன்னுர். அதற்குச் சக்கரவர்த்தித்திருமகனுர், ஆம். இது யுக்தமான காரியந்தானென்று சொல்லி, ஆனுல் அவனிடத்திற்குப்போய் இந்தக் காரியத்தை சொல்லத்தக்கவர்கள் யாரிருக்கிருர்களென்று விசாரித்தபோது, விபீஷணுழ்வார் தேவரீருக்குத் திருவுள்ளமாளுல் அடியேனேபோய்த் தகுந்த புத்திமதிகளைச்சொல்லி, அவனுடைய மனத்திலிருக்கின்ற வன்மைத்தன்மையை இளகச்செய்து நம்மோடுசேர விருப்பமுள்ளவனுகயிருந்தால் அழைத்துக்கொண்டுவருகிறேனென்று சொன்னுர். நீலமேகத்துக்கு ஒப்பாகிய ஸ்யாமளரூபரான ஸ்ரீராமபிரான் நல்லது, அப்படியே அதிவேகமாய்ப் போய் வரக்கடவாயென்று அனுப்பினுர். உடனே அந்த ராக்ஷதசேனுசமுத்திரங்களைத்தாண்டி, தமக்குச்சிறந்த துணைவனுன கும்பகர்னனுக்குச் சமீபமாகப் போனமாத்திரத்தில் வேவுகாரர்கள் அவனைக்கண்டு ஐயா கும்பகர்னமகாராஜனே! உம்முடைய தம்பியாகிய விபீஷணர் என்னமோ வெகுவிரைவாக உம்மிடத்திற்கு வந்திருக்கிருரென்று சொல்லக்கேட்டு, அளவில்லாத சந்தோஷத்தைக்கொண்டு எக்களிப்புற்றிருக்க, அந்தக் கும்பகர்னனுடைய பாதங்களில் விபீஷணுழ்வார் தம்முடையசிரசைச்சேர்த்து தெண்டனிட்டார். எதிரேவந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்ட விபீஷணுழ்வாரைக் கைகளால் வாரியெடுத்து, உச்சிமுகந்து உயிராரத்தழுவிமார்போடணைத்து, தன்னிரண்டு கண்களிலும் மழைத்தாரைகள்போல் நீர் ஒழுகும்படியாக, அப்பா விபீஷணு! எங்களில் நீஒருவன்பிழைத்துப்போய் புத்திமானுய் வாழ்ந்திருக்கிருயென்று சந்தோஷப்பட்டிருக்கின்ற என்னுடைய சிந்தை முழுதும் திகைக்கும்படியாகப் புத்தியில்லாதவனைப்போலத் தனித்தவனுய் ஏன் திரும்பி வந்துவிட்டாய்? ஸ்ரீராமபிரான் திருவடியையடைந்து, நீஅபயம்பெற்றவிதத்தையும், தேவர்களும் பெறுதற்கேலாத இகலோகபரலோகாதி ஐஸ்வரியத்தையும்பெற்றசிறப்பையும், நான் கேள்விப்பட்டு மிகுதியும் மனங்களித்திருந்தேன். சகல சாஸ்திரக்கியான சம்பன்னனுன நீ, யமன்தன் வாய்க்கிரையாக எதிர்பார்த்திருக்கின்ற எங்களிடத்திற்குக் குற்றமுள்ளவனுக ஏன் வந்துவிட்டாய்? ஸ்ரீராமகைங்கரியமான அமிர்தபானம் பண்ணுகின்ற நீ ராக்ஷத கிர்த்தியமாகிய விஷமுண்ணவரலாமோ? என் கண்மணியாகிய தம்பி! நீ ராக்ஷதகுல தர்மத்தை யழித்துவிட்டாய். ஆனபோதிலும், உன்னுல் இந்தப் புலஸ்திய பிரம்மாவினுடைய வமிசம் மாக்ஷிமைபொருந்திய புண்ணியத்தையடைந்ததென்று எனது வலது தோளைப் பார்த்து மகிழ்ச்சியடைந்திருந்தேன். நீ என்னை இப்போது உன்வருகையாலே துக்கப்படுத்தி, என்னுடையநாவை வரளச் செய்துவிட்டாயே. அதை நினைக்கும்போது என்மனது உளைக்கின்றதே. மகா தர்மிஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் தங்களுயிரை விட்டபோதிலும், அபயமென்றடைந்த உன்னை நீக்கி விடுகிறதற்குச் சம்மதிக்கமாட்டார்கள். அவர்களைவிட்டு விலகினதினுலே நீ மறுமையில் அடையப்போகிற நல்ல பதவியை இழந்துவிட்டாய். ராமநாமத்தைச் சொல்லிக்கொண்டிருக்கின்ற பரியந்தம், இந்த அற்பப்பிறவி யுண்டாகப் போகிறதில்லை. இதுகளையெல்லாம் வேதவேதாந்தங்களால் கற்றறிந்தும் நீ என்னகாரணத்தினுலே அந்தராமனைப்பிரிந்து இங்கே வந்துவிட்டாய்? தர்மமே ஸ்வரூபமாகநின்ற சாட்சாத் ஸ்ரீராமலக்ஷ்மணருக்குத் தாசத்துவம் பூண்டு, அவர்களாலே பாவமலையாய் நிலைபெற்றுநின்ற அக்கியானம், அன்னியதாக்கியானம், விபரீதகியானங்களாகியமூன்றையும் இருந்தவிடந்தெரியாமல் மாய்த்துவிட்டு, இன்னும் பலங்கொண்டிருக்கிற மற்றப்பாவங்களெல்லாவற்றையும் இந்தப்பிறப்பிலேயே ஒழித்துவிட்ட மெய்ஞ்ஞானச் செல்வமுள்ளவிபீஷணனே! பிறர்தாரத்திலிச்சைவைத்திருக்கின்ற எங்களை உறவாகப்பெற நினைக்கின்ருயோ? நீ நல்ல நீதியும், தர்மநிலையான நல்லசெய்கையும், யதார்த்தகியானத்தையும், நீசெய்த அளவில்லாத தவங்களினுல் ஆதிவஸ்துவாகிய சாக்ஷாத் ஸ்ரீயப்பதியாலே பெற்றுக்கொண்டாய். வேதமுதல்வனுன ஸ்ரீராகவமூர்த்

தியினுடைய இனிய அமிர்தவாக்கினாலே நீ சிரஞ்சீவிபட்டமும் பெற்றாய். இவ்வளவு யோக்யாதிகாரத்தைப்பெற்ற நீஹேயமான ஜாதிதர்மத்தை இன்னமும் விடவில்லைபோலக் காண்கின்றதே. எல்லாருக்குந் தலைவரான ஸ்ரீசக்கரவர்த்தித் திருமகனார் நாணேற்றிய வில்லையுடையவராய் நிற்கின்றார். அவர்பக்கத்தில் ஒருவராலும் தடுத்தற்கரிய வல்லமையுடைய இளையபெருமாளும் நிற்கின்றார். மற்றவானரவீரர்களெல்லாம் நிறைந்திருக்கின்றார்கள். எங்களைக் கொல்லும்படியாக யமனும் வந்திருக்கின்றான். அதற்கு இசைவாக விதியுங்கூடி நிற்கின்றது. இனி எங்களிடத்தில் என்னவல்லமை இருக்கக்கூடும்? நீ ஏன் எங்களோடு கூட மாளவந்தாய்? ஓ புலஸ்தியவமிசகுல திலகமாகியவிபீஷணா! நீஅயோத்தியாபுரிக்கு அரசர்களாகியராமலட்சுமணர்களுக்கு அடைக்கலமாகி, அவர்களால் உஜ்ஜீவனமடையாமல் இவ்விடத்திற்குவந்தாயானால் ராக்ஷதர்களாயுள்ளநாமெல்லாம்அந்தராமலட்சுமணர்கள் பிரயோகிக்கின்ற அஸ்திரவருஷங்களாலே மாண்டு லங்காபட்டண முழுதும் பாழாய்விடப்போகிறதே. பின்பு கையிலே எள்ளுந் தண்ணீரும் எடுத்து இறைத்துப் பிதுர்யாகக்கடமையை நிறைவேற்றத் தக்கவர்கள் யாரிருக்கின்றார்கள்? அப்படிப்பட்டவர்கள் ஒருவரை எனக்குக் காட்டு பார்ப்போம், ஒருவருமில்லையே. இங்கே இருக்கின்ற பாவிகளாகிய ராக்ஷதர்களெல்லாம் மாண்டுபோன பிறகு திருவுறைமார்பனான ஸ்ரீராமபிரானுடனே நீ உன்னுடைய லங்காபட்டணத்துக்கு வந்த பிறகு எக்காலத்திலேயும் அழியாதிருக்கின்றசெல்வத்தை அனுபவிக்கத்தக்கவனான நீ, இங்கே வீணாய்த் தாமசஞ் செய்யாமல் சீக்கிரமாய்த் திரும்பி அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப் போய்விடு என்று சொன்ன கும்பகர்னனைப்பார்த்து, விபீஷணர்சொல்லுகிறார். அண்ணா! நான் உன்னிடத்தில் விண்ணப்பம் பண்ணிக் கொள்ளுகிறதற்கு ஒருகாரிய மிருக்கிறதென்று சொல்ல, அதென்னவென்று கேட்டான். அதற்கு விபீஷணாழ்வார் சொல்லத் தொடங்கினார். அண்ணா கும்பகர்னா! அக்கியானசிந்தையுடைய எல்லாரிடத்திலும் இனிய அருள் சுரக்கின்றமகாவீரசிகாமணியாகிய ஸ்ரீராமமூர்த்தியினுடைய கிருபைக்கு நீ பாத்திரமானால் அவர் அபயம் கொடுப்பதொன்று மாத்திரமோ? இந்த மாயப்பிறவிப்பிணியைமாற்றுதற்கு மருந்தாகவுமிருந்து, கீழ் மேலாக மாறிமாறி உருண்டோடுகின்ற சடத்தினுருளையைப்போல நின்றநிலையில் நில்லாத இந்த மாயவாழ்க்கையை நீக்கிவிட்டு, மறுமையில் தன்னுடனே ஜோதியாகிய பரமபதத்தையும் கொடுப்பார். அந்த ஸ்ரீராகவபிரான் எனக்குக் கிருபைசெய்து கொடுத்த சகல ஐஸ்வரியங்களும், குறைவின்றி நிறைந்த இந்த இலங்காதிபத்தியத்தையும், மற்றெல்லாச் சிறப்பையும், உனக்கு நான் கொடுத்துவிடுகிறேன். மேலும் உன்னுடைய ஆஞ்ஞையின்படி எப்போதும் நடந்துகொண்டும்வருகின்றேன் இதைப் பார்க்கிலும் உனக்கு வேறேயுறுதிப்பாடு ஒன்றுமில்லை. ஓ உத்தமனான அண்ணாவே! உன் பின்னாகப்பிறந்த என்னுடைய மனத்தினிடத்தில் உண்டாகிய துக்கத்தை நீக்கி, நம்முடைய யக்ஷவம்ச தர்மத்தையும் விர்த்திசெய்து வாழக்கடவாய். இனி இந்த ரணக்களத்தைவிட்டுத் தப்பிப் போகிறதோ அருமை. அப்படி தப்பிப் போனபோதிலும் பிராணனோடே தங்குதற்கான இடமும் கிடையாது. ராவணாதி ராக்ஷதர்களெல்லாம் வெகு சீக்கிரத்திலே நிச்சயமாகச் சாகப்போகிறார்கள். நீயோ நல்ல நீதியையும், தர்மத்தையும் அபேட்சித்திருக்கின்றாய். ஆனபடியினாலே இன்னும் சிலநாளைக்கிருக்கத்தக்க பிராணனை விருதாவில் மாய்த்துக்கொள்ள வேண்டிய காரணமென்ன? வேதமார்க்கத்திற்குத்தக்க ஒழுக்கங்களையே கைப்பிடித்து நடக்கவேண்டியது யாவர்களுக்கும் யுக்தமாகும். வேதவிரோத பாபகிருத்தியங்களைச் செய்வார்களேயானால் அப்படிப்பட்டவர்கள் தங்களிலும் சிறந்தவர்களானாலும், உடன் பிறந்தவர்களானாலும், உறவின்முறையார்களானாலும், தாய்தந்தையர்களானாலும், அவர்களை வைதீகதரும ஒழுக்கத்தில் நிற்பவர்கள் சற்றேனும் மதிப்பார்களோ? அந்த நியாயங்களையெல்லாம் நீ நன்றாய் அறிந்திருக்கின்றாயல்லவோ? அப்படிப்பட்ட உனக்கு நான் சொல்லவேண்டியதென்ன விருக்கின்றது? சத்தியத்தைப் பின்பற்றி நடக்கும்போதும், அந்த உத்த

மர்களைப் பாபமானது பின்தொடர்ந்து வருத்துமா? பிள்ளைகளும், வித்தியாப்பியாசஞ் செய்துவைத்த உபாத்தியாயர்களும், கொண்ட பெண்டிரும், இனி உயிர்க்குச் சமானமாகிய சிநேகிதர்களும், இடுக்கண் வந்தபோது உதவிசெய்தவர்களும், மேலும்தம்மைவந் தடுத்தவர்களும் ஆகிய இவர்களிடத்தில் வைக்கும் அன்பு, துக்ககரமானசம்சார பந்தத்தை யுண்டாக்குமென்று அத்தியவசாயம் மிகுந்த முமூக்ஷுக்கள் துறந்திடுவார்கள். வைதீகதருமமொன்று மாத்திரமே இகத்துக்கு நன்மையைச்செய்வதும், பரத்திற்கு அனுகூலமாயிருப்பதுமாகும். ஒருவன் அகிருத்தியத்தைச்செய்ய அவனுடன் யாதொரு தீங்கும் செய்யாத மற்றொருவன் மாணமடைகிறது நியாயமோ? அல்லது அநியாயமோ? நீயே ஆலோசித்துப்பார். நீ நன்மை தீமையை நன்றாய்ப் பகுத்தறியும் தன்மையுடையவனுச்சே; தபசிரேஷ்டராகிய ஸ்ரீபரசுராமர் பெற்ற தாயாகிய ரேணுகாதேவியானவள் பாபகிருத்தியத்தைச் செய்ததனு லல்லவோ தர்மத்தைநோக்கி அவளைக்கொன்றுவிட்டார். துஷ்கிருத்தியத்தைச் செய்த தன் பிதாவாகிய பிர்ம்மதேவனுடைய தலைகளில் ஒன்றைக் கிள்ளி எறியும்படியாக மூன்று கண்களையுடைய உமாநாயகராகிய சிவபெருமானுனவர் முற்காலத்தில் ஏற்பட்டாரல்லவா? ஓ பகைவர் உடலைப் புண்படுத்தி புலால்நாற்றம்வீசுகின்ற சூலாயுதத்தை கையிற்றுங்கிய மகா வீரசிகாமணியே! இம்மையில் மகா பாபிஷ்டியாய் பலரு மிகழும்படியிருந்து, மறுமையில் இரௌரவாதிஎன்னத்தக்க நரகத்தில் வீழ்வதற்கும் புத்திமான்கள் பிரயத்தனப்படுவார்களா? தேகத்தில் கட்டிபுறப்பட்டால், அதைச் சத்திரமிட்டுக் கெட்ட ரத்தத்தை நீக்கிவிட்டுக் காரம்வைத்து சுட்டு, பூச்சு மருந்தினுல் அந்தப்புண்ணையாற்றித் துன்பத்தை நீக்கிக் கொள்வார்களல்லவா? வாசனை வீசுகின்ற பூவிதழ்களால் தொடுத்த மாலையையணிந்த மார்பினையுடைய அண்ணு கும்பகர்ணு! மிகுந்த புத்திமான்கள் உறைத்து உடலிலேபூசிப் பரிமளிக்கச் செய்யவேண்டிய வாசனைத் திரவியத்தை, வீணுகக்கடலில்கொண்டுபோய்க் கரைத்து அழித்துவிடமாட்டார்களே. ஆகையால் உன்னுடைய தமையனுன ராவணனைப் பிராணன் போகாமல் காப்பாற்றலாமென்றுல், அதற்கேற்றஒருநற்குணமாவது அவனிடத்தில் காணப்படவில்லையே. இனிவேறொரு வழியாய்த் தர்மத்தை விருத்திபண்ணலாமென்றாலும், அதையும்நிறைவேற்ற அவன் இடங்கொடுக்கமாட்டானே. அஷ்டதிக்குப்பாலகர்களும் பலதிசைகளிலுள்ளவர்களும் சிரிக்கும்படியாக ரணக்களத்திலே ராக்ஷதர்களுடைய பிராணன்களெல்லாம் போய்விடப்போகின்றன. அப்படி போன பிற்பாடு அவர்களுக்கு நரகமேயன்றி வேறொன்றும் சித்திக்கமாட்டாதே. நீ மிகுந்த பலத்தைக்கொண்டு மேலுலகங்களையெல்லாம் ஜெயித்தாயே. அங்கேயாவது வசித்துக் கொண்டிருந்தாயா? இல்லையே. இந்தப் பூமியில் நீ வந்து இறங்கி இன்றையவரைக்கும் உன்னுடைய யௌவன வயதெல்லாம் வீணுய்ப்போகும்படியாக நித்திரை செய்தாயென்றதல்லாமல், அதனுல் ஏதேனும் ஒருலாபத்தையடைந்திருக்கின்றுயா?ஒன்றுமில்லையே. நீஎன்ன பிரயோஜனத்திற்காகத் தர்மத்தை விட்டு உயிரைமாய்த்துக் கொள்ளுகிறதற்கு ஏற்பட்டாய்? அண்ணு! திருவையும்மறுவையும் மார்பிலுடையவரும், சாக்ஷாத்ஜெகத்ரக்ஷகரும், தைத்தியாரியுமாகிய ஸ்ரீராமருடைய காருண்ணியத்தினுல் உன்னுடைய அக்கியானமாகிய நித்திரையையும் நீக்கி எல்லா ஐஸ்வரியச்சிறப்பையும் அடைந்து வாழ்வாய். மேலும் சிரஞ்சீவிப்பட்டமும் பெறுவாய். ஏகசக்ராதிபதியாய் அரசுசெய்துகொண்டிருப்பாய். எல்லா உரிமையும் உன்னதேயாகும். உனக்கு ஒருகாரியமும் அருமையாகமாட்டாது. அதுகளுக்கெல்லாம் இதுவே தகுந்த நல்லகாலமாகவுமிருக்கின்றது. அண்ணு! தேவதேவனுன சக்ரவர்த்தித்திருமகனுர் கைகொடுத்த லங்கையின் ஐஸ்வரியங்களெல்லாம் பெற்றுக் கொள்ளுவாய். எப்படிப்பட்டவர்களுக்கும் நீ கீழடங்கி யிருக்கவுமாட்டாய். யாரும் உன்னை வருத்தமாட்டார்கள். திரிமூர்த்திகளுக்குத் தலைவரான நாராயணமூர்த்தியே காகுஸ்தவம்சோத்பவராய் அவதரித்துத் தர்மமுழுவதையும் காக்கும்படியாக வந்திருக்கின்றுர். உனக்குப் பிள்ளைகளாவிருக்கின்றபேர்களும், உன்கூடப்பிறந்த எனக்

குப் பிள்ளைகளாக விருக்கின்றபேர்களும், நம்முடைய யக்ஷவம்சத்திற்கு முடிவுகாலத்தை ஆலோசித்தவனுன ராவணனுடைய பிள்ளைகளுடனே சிரேஷ்டத்தைப்பெற்றுத்திரிந்துகொண்டிருப்பார்களல்லவோ? துஷ்கிருத்தியத்தைச்செய்து அதர்மவானென்று கண்டோர்பழித்துச் சொல்லாமல், நல்ல புத்தியினுலே தர்மவானென்று பேர்பெற்று வாழக்கடவாய். இதுவரையிலும் ராக்ஷதர்களிடத்தில் வெறுப்புற்றிருந்த மகாரிஷிகளெல்லாரும் இனிமேல் கருணையுடையவர்களாக இருப்பார்கள். சுவர்க்க மத்திய பாதாளமென்று சொல்லப்பட்ட திரிலோகத்திலும், இனி பகையும் உண்டாகப்போகிறதில்லை. இனி உனக்கு மரணமும் உண்டாகுமென்று பயப்படவேண்டியதுமில்லை. ராக்ஷதர்களை வருத்தப்படுத்திக்கொண்டு பகைவர்களாயிருக்கிற தேவர்களெல்லாரும் நட்புடையவர்களாகப் போகிருர்கள். இப்படிப் பழம்பறித்துத் தின்னத்தக்க காலத்தில் மரத்தைவெட்டி அது துளிர்த்துப் புஷ்பிக்கவேண்டுமென்று நினைத்திருக்கின்றவர்களைப்போலப் பிரயோஜனத்தை இழந்து விடலாமோ? மேலும் உன்னிடத்திற்கு நானே என்சொந்த அபிப்பிராயத்தின்படிக்கு வரவில்லை. அந்த வேதமுதல்வனுகிய ஸ்ரீராகவபிரானேதான் என்மீதுவைத்திருக்கின்ற கிருபையினுலே உன்னிடத்திலும் தயையுடையவராய் உன்னைஅழைத்துவரும்படியாக என்னை அனுப்பினுர். நான் வந்த காரியம் இதுவேயாகும். ஆனபடியினுலே அந்தச் சக்ரவர்த்தித்திருமகனுரைக்காணும்படியாகத் தர்மத்திற்கும் பிசகிநடவாமல் இப்போதே என்னுடன்கூடப் புறப்பட்டு வரக்கடவாயென்று அவனுடைய அழகு பொருந்திய இரண்டுபாதங்களிலும் சாஷ்டாங்கமாக விழுந்தார். அழகிய மலர்மாலையைத்தரித்து ரத்தினங்களிழைத்துப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற கிரீடமானது பூமியில் படியும்படியாக நமஸ்கரித்து, இரண்டுபாதங்களையும் தம்முடைய கைகளினுல் பிடித்துக்கொண்டு, புலம்புகிற மேருமலைக்குச் சமானமாகிய தோள்களையுடைய விபீஷணுழ்வானைக் கும்பகர்னன் வாரியெடுத்து மார்போடணைத்து, அக்கினி ஜொலிக்கின்ற கண்களினிடத்தில் வெவ்விதாகிய ரத்தநீர் தாரைதாரையாகச் சொரியும்படியாகத் தம்பியைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினுன். ஓ நல்லமாலைகளைத் தரித்து அழகுபொருந்தியிருக்கின்ற திருமேனியையுடைய தம்பிவிபீஷணு! நீரினுலெழுதிய கோலத்தைப்போலச் சிறிதுபொழுதே தோன்றும் அற்பவாழ்க்கையை விரும்பி என்னை இத்தனை காலமளவாக வளர்த்ததுமன்றி இப்போதுபோர்க்கோலமுஞ்செய்து யுத்தத்திற்குஅனுப்பின இராவணன் நிமித்தமாக நான் என்னுடைய உயிரைக் கொடுக்காமல், ஸ்ரீராமமூர்த்தியினிடத்தில் அடைக்கலமாகப் போய்ச்சேரமாட்டேன். என்னுடைய உயிரைக் காக்கவேண்டுமென்று உனக்கு இஷ்டமிருந்தால் மேகத்தைப்போலச் சிறந்து அழகுபெற்றிருக்கின்ற திருமேனியையுடையவரான அந்த ஸ்ரீராமமூர்த்தியைச் சீக்கிரமாய்ப் போய் சேர்ந்துகொள்ளக்கடவாய். மூலதாமரைபுஷ்பத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவருடைய பொய்யாவரத்தினுலே நீ எப்போதும் நிலைபெற்றிருக்கின்றதர்மமார்க்கத்தை அடைந்துகொண்டாய். இந்தலோகமுள்ளவரைக்கும் அழியாமல் சிரஞ்சீவியாகவுமிருக்கப்போகிருய். இந்தலோகமுழுமைக்கும் நீயே சர்வாதிபத்தியமு முடையவனுகயிருக்கிருய். உனக்கே அந்த அடைக்கலமென்பது தகுதியாகும். அகிருத்தைச் செய்கிற மூத்தவநிமித்தம் மரணமடைகிறது அதிக இழிவுவரத்தக்கதேயாயினும் அதுவே எனக்கு மேலான கீர்த்தியாகும். புத்தியீனனுகிய ஒரு எஜமான் கெடுநினைவை நினைத்தால், அந்தக் கெடுதியை நீக்கி அவனைத் திருத்தக் கூடுமானுலல்லவோ அவனைச்சேர்ந்த மற்றவர்களுக்கு நல்ல சுபக்ஷேமம்உண்டாகும். அப்படி அவனைத் திருத்தக்கூடாவிட்டால் குடிகளுக்கு க்ஷேமத்துடனே வாழும்படியாகவும் நேரிடுமோ? போர்த்தொழிலைசெய்கிறதற்கு உரியவர்களான விவேகமற்ற தலைவர்கள் மடிவதற்குமுன்னே மடிந்து விடுதலே அவர்களுடைய சேனைகளுக்கு உரியதாகும். தும்பைமாலையைத் தரித்துக்கொண்டிருக்கின்ற வீரசிகாமணியாகிய ஸ்ரீராமபிரானுடைய தீயைவீசுகின்ற அஸ்திரமானது சம்மரிக்கும்போது, தன்னைச்சூழ்ந்த கொடிய ராக்ஷ

தசேனைகளோடும், மற்ற பந்துக்களோடும், தேவர்கள் முதலியமற்றயாவர்களும் தோத்திரஞ் செய்யத்தக்கவனுய்த் தானே ஏகசக்ராதிபதியாய் இந்த மூன்றுலோகத்தையுமாண்டவன் உடன்பிறந்த தம்பிமார்களும் தன்னோடு மடியாமல் தான்மாத்திரம் தனித்து ரணக்களத்தில் மாண்டுக்கிடக்கத்தகுமா? வெற்றியில் தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்தவனுகவும் இருக்கின்ற ராவணன் தன்னுடைய பலத்திற்குக் குறைந்தவர்களுடைய கையினுல் மாண்டபோதும், பெண்மானுக்குச் சமானமாகிய விழிகளையுடைய பார்வதியை வாமபாகத்தில் வைத்திருக்கின்ற நற்குலதெய்வமாகிய சாம்பசிவமூர்த்திகளானவர் எழுந்தருளியிருக்கின்ற பெரிய கைலாயமலையை நடுங்கும்படியாகப் பெயர்த்த ராவணனுடையதிரண்ட தோள்களை யமன் தனது பாசத்தினுல் கட்டியிழுத்துக்கொண்டு போகும்போதும், முன்னுலே தனக்குத் தோல்வியடைந்து தலைமறைவாய்த் திரிந்துகொண் டிருக்கின்ற அந்தயமனுடைய பட்டணத்துக்குவெட்கமில்லாமலும்ஒருவருந்துணையில்லாமலும் தனித்து போகும்படியாய் விட்டுவிடுகிறது நமக்கு நல்லதாகுமா? மேலும் எமனையும் யுத்தத்தில் தோற்கடித்து வெற்றி பெற்றிருக்கின்ற நான் செம்பினுல் கட்டப்பட்டிருக்கின்ற மதில்களால் சூழப்பட்ட சிரேஷ்டமாகிய லங்காதிபத்திய ஐஸ்வரியவானுன ராவணேஸ்வரனுடைய தங்கையாகிய சூர்ப்பநகையின் கச்சணிந்த முலையையும்மூக்கையு மிதழோடு சேர்த்தரிந்த பகைவர்களாகிய அந்த மனிதர்களைப் புகழ்ந்துகொண்டு நாணமென்னும் அம்பினுலே தைக்கப்பட்ட புண்கொண்ட நெஞ்சையுடையவனுக அவர்களைக் கும்பிட்டுக்கொண்டுஉயிர்வாழ்ந்திருக்கவுமாட்டேன். அப்பாதம்பி! விபீஷணு! அநுமானையும் வாலிபுத்திரனுகிய அங்கதனையும் சூரியகுமாரனுகிய சுக்ரீவனையும் அழகிய பொன்போன்ற கோதண்டத்தையுடைய ஸ்ரீராமனையும் நீலனையும் சாம்புவந்தனையும் பழங்களைத்தின்னும் விருப்பத்தினுல் காட்டில் திரிந்துகொண்டு ஜீவிக்கின்ற குரங்குச் சேனைகளாகிய பிரளயகாலச் சமுத்திரத்தையும் ஒருமிக்கஜெயித்துப் பனிக்கூட்டமெல்லாம் வற்றும்படி செய்து, இந்த உலகத்தை சுற்றிவருகின்ற சூரியனுக்கொப்பாக உலாவிவரப்போகிறதைச் சற்றே நீ பார்த்துக்கொண்டேயிரு. காலகோடிவிஷத்தைப்பார்த்து ஓடின தேவர்களைப்போலக் குரங்குகளெல்லாம் சின்னுபின்னப்பட்டு ஓடும்படியாக, மேருமலையானது தன்னுடைய கையிலே ஒரு சூலாயுதத்தைப் பற்றிக்கொண்டு அவர்களைப் பின்றொடர்ந்து ஓடிவருகிறதைப்போலொத்த தோற்றத்தைக் காட்டிக்கொண்டு கருங்கடலோடவும், வடவாமுகாக்கினி ஓடவும் சண்டமாருதக் காற்றோடவும் லோகமெல்லாம் காலமுடிந்தோடவும் காற்றுடியைப்போலச் சாரிகைசுற்றித் திரியப்போகிறேன். அதை நீ பார்த்துக்கொண்டேயிரு. போர்க்களத்தில் சற்றும் பயப்படாமல்வந்து என் கண்ணெதிரே அகப்படுகின்றவர்கள் நீலமலையும் மேருமலையுமென்று ஒப்பிட்டுச் சொல்லும்படியான சிறப்புடையவர்களாகிய ராமலக்ஷ்மணுளென்கிற இரண்டுபேர்களும்தவிர மற்றவர்கள் எவர்களாயிருந்தபோதிலும் அவர்களில் பயத்தால் செத்தவர்கள்போக உயிரைச் சுமந்துகொண்டு திரிகின்ற எல்லாரையும் ஒருவராவது தப்பித்திரியும்படியாக விடாமல் கொன்றுவிடுவேன். யாவரும் வணங்கும்படியான யோக்கியதையுடைய தம்பி விபீஷணு! இனி தாமதஞ்செய்யாதே. இதைச் சிரசாகவகிக்கத்தக்கதென்று கேட்பாயாகில், சீக்கிரமாகப்போய் அவர்களோடுகூடி யிருக்கும்படியாக நட்பைத்தேடிக்கொள்ளக்கடவாயாக. இனி ஏதேனும் ஒரு வார்த்தைசொல்லுவாயானுலும் பொல்லாங்காய் முடியுமென நீ யோசிக்கக்கடவாய். அப்பா விபீஷணு! நீ சீக்கிரமாய்போய்விடு. பிறகு இந்தபோர்க்களத்திலிருந்தபேர்களுக்கெல்லாம் நிலைபெற்றிருக்கின்றவேதவித்துக்களாகியபிராம்மணிய தேவனுயிருக்கிற ஸ்ரீராமபிரானிடத்தில் உனக்கு வேண்டியவைகளைப் பெற்று அவர்களுக்கு உண்மையுள்ளவனுகியிருந்து, எங்களுக்கு சாஸ்திரவிகிதமான உரிமைக்கடன்களைச்செய்து, நாங்களடையத்தக்க துக்கசாகரமாகிய நரகத்தை அடையாதவிதமாக எங்களைக் காத்துக்கொள்ளக்கடவாய். எக்காலத்திலும் அழியாமல் சிரஞ்சீவியாக யிருக்கப்பெற்ற பாக்கியவானுகிய விபீஷணு! அழிந்துபோகிற

தாய்க் காணப்படுகிறதும் ஆகுங்காலத்தில் அழியாததாய் முடியும். அழிந்துபோகத் தக்க காலத்தில் சூழ்ந்துநின்று பல உபாயங்களைச்செய்து காப்பாற்றினபோதிலும் அது நசிக்காமற்போகாது. இது சத்தியமாகும். ஆச்சரியமற்ற ஆலோசனையுடையவர்களில் உன்னிலும் உயர்ந்தோர் யார் இருக்கின்றார்கள்? இது உனக்குத் தெரியாததல்லவே. ஆதலால் நீ என் மரணத்தைப்பற்றி விசனப்படாமல் போய்விடு. எங்கள் நிமித்தம் நீ துன்பப்படவேண்டாமென்றுசொல்லி, மறுபடியும் அவனைவாரியெடுத்து மார்புடனே இறுகத்தழுவி நின்று, இரக்கமுற்று அழுது கண்ணீரும் கவலையுமாய் வெகுநேரம் செவ்வையாக உற்றுப்பார்த்து, எமது செல்வமே! என்னுயிர்த்துணையே! தம்பிவிபீஷணு! உனக்கும் எனக்கும் இன்றையோடு உடன்பிறப்பென்கிற ஆசையானது நீங்கிவிட்டதல்லவாவென்று கும்பகர்னன் சொல்லியபோது வெற்றிபெற்ற மிகுந்த பலமுள்ளவரும் அதிக குணவிசேஷருமான விபீஷணாழ்வான் அவனுடைய பாதங்களில்விழுந்து நமஸ்கரித்து எழுந்து தமது தமையனாகிய கும்பகர்னன் தம்முடைய போதனைக்கு இசையாமையால் கண்ணும் முகமும் மனமும் சொல்லும் அதிக சோர்வடைந்து, வஜ்ஜிரதேகமும் வாட்டமுற்று, இன்னும் எதையாவது சொல்லுகிறதினாலே அவனுக்குக் கோபமுண்டாகும். அதனால் மிகுந்த பொல்லாங்கு நமக்கு விளையும். இனி காரியமில்லை; திரும்பிப் போய்விடவேண்டுமென்றுஅபிப்பிராயமுற்று, அந்த இராக்ஷதசைனியங்களெல்லாம் கையெடுத்துக் கும்பிடும்படியாகத் திரும்பி நடந்து, ஸ்ரீராமர் சந்நிதானத்தை நோக்கிப் புறப்பட்டார். அப்படிப்போகின்ற விபீஷணாழ்வானைப்பார்த்துக் கும்பகர்னன் வஞ்சக சுபாவமுள்ளவாழ்க்கையையுடைய நம்மை இவன் கைவிட்டு இராக்ஷதஸ்வபாவத்தையும் விட்டுவிட்டான். முலைப்பால் மணமாறாத குழந்தைப் பருவமுள்ள இவன் இவ்வளவு பெருந்தன்மையான நல்ல குணமுடையவனானென்றுதான் மிகுந்த ஆச்சரியப்பட்டு, பித்துகொண்டவனைப்போல் சித்தப்பிரமையடைந்து, தெளிந்து, பெரிய வெள்ள நீரையுடைய சமுத்திரத்தில் விழுகின்ற ஆற்றுநீருக்குச் சமானமாகத் தன் இரண்டு கண்களிலிருந்தும் தாரைத் தாரையாக இரத்தநீர் பெருகி யோடும்படியாக நின்றுகொண்டிருந்தான். இந்தநிலையில் கும்பகர்னனிருக்க, ஸ்ரீராமருடைய சந்நிதானத்தில் சேர்ந்த விபீஷணாழ்வான் சுவாமிக்குத் தெண்டன் சமர்ப்பித்து சர்வலோக காரணபூதரான ஓ சுவாமி! கடைத்தேறும்படியானவர்களுக்கல்லவோ வைதீகதர்மமார்க்கமும் நல்லொழுக்கமும் சத்தியமும் உண்டாகப்போகின்றன. அடியேனால் ஆனமட்டும்சொல்லவேண்டிய புத்திமதிகளையெல்லாம் திருஷ்டாந்தப்படுத்திச் சொன்னேன். அவனுக்குக் கொஞ்சமாவது இராவணனைவிட்டு வருகிறதற்கு மனதில்லை. இராக்ஷதகுலாபிமானம் அவனை விட்டு நீங்கவில்லையென்று சொல்லக் கேட்டு, நீலமேகஸ்யாமளரூப ஸ்ரீராமமூர்த்தியானவர் கத்தரித்தமைத்த சடைமுடியைச் சற்றே அசைத்துத் தம்பி விபீஷணு! உன் கண்முன்னாக உன் தமையனாகிய கும்பகர்னனை இறக்கும்படி அஸ்திரப்பிரயோகஞ்செய்துதுண்டித்து அறுத்துத் தள்ளுகிறது அழகல்லவே? என்று அவனை அழைத்துக்கொண்டு வரும்படி நானும் உனக்குச் சொல்லியனுப்பினேன். இதைவிட நான் உனக்குச் செய்யும் உபகாரம் இப்போது வேறென்ன இருக்கின்றது? பிராரத்வ கர்மத்தை யாவர் விலக்குவார்கள்? என்று இப்படி இனியவார்த்தைகளைச் சொல்லிக்கொண் டிருக்கும்போது இராக்ஷத சேனைகளென்கிற பெரிய சமுத்திரமானது வானர சேனைகளாகிய கழியைச்சூழ்ந்து முற்றுகைபோட்டுக்கொண்டு யுத்தஞ்செய்யத்தொடங்கியது. அப்போது அந்தச் சேனைகளால் எழும்பிய தூளியானது சொர்க்க மத்திய பாதாளம் என்கிற மூன்று லோகங்களையும் மூடிக்கொண்டு சமுத்திரத்தையும் தூர்த்துவிடத் தொடங்கினது. நாலாபக்கங்களிலும் குதிரைகளும் யானைகளும் ஓடித்திரிந்ததுகள். சக்கரங்களைப் பூட்டிய பலம்பொருந்திய தேர்கள் ஓடினதுகள். மலைகளையெல்லாம் பெயர்த்துக்கொண்டு பல இரத்த ஆறுகளோடினதுகள். ஒருவர் கொலையுண்ணும்போது இந்த உடலின் இரத்தமாமிசங்கள் உனக்கு எனக்கென்று பேய்கள் ஒன்றோடொ

ன்று பந்தயப் போட்டுக்கொண்டதுகள். விருதுக்கொடிகள் பறந்ததுகள். ஆகாய மார்க்கத்தில் மாமிசபக்ஷிணிகளாகிய பருந்து கழுகு முதலியவை பறந்ததுகள். வானரவீரர்கள் மேருமலைக்குச் சமானமாகிய தங்கள் தோள்களினாலே எறிந்த மரங்களினாலேயும், மலைகளினாலேயும், இராக்ஷதர்களால் ஏவப்பட்ட சூலாயுதத்தினாலும் வேலாயுதத்தினாலும் இருவகைச் சேனைகளும் மொத்துண்டன. அப்போது மூளையும் மாமிசமும் இரத்தமும் எலும்பும் கொழுப்பும் சிதறுண்டு பல திசைகளிலும் விழும்படியாகக் கோரதந்தங்களையுடைய இராக்ஷதர்களைச் சிலர் தங்கள் தங்கள் கையில் பிடித்திருந்த வாளாயுதத்துடனே குழம்பிக் குழைந்து மாண்டுபோனார்கள். சில ராக்ஷதர்கள் அநேக ஆயுதங்களைப் பிரளயகால மேகத்தைப்போல வானரர்கள்பேரில் ஏவினார்கள். சில வானரவீரர்கள் மலைகளைப்பேர்த்து யுகாந்தகால இடியைப்போல ராக்ஷதர்கள்மீது மோதினார்கள். சில ராக்ஷதர்கள் வானரர்களையெறிந்தார்கள். சில வானரர்கள் ராக்ஷதர்களைக் கையிற் பிடித்து பிசைந்து கொன்றார்கள். சில அரக்கர்கள் வானரர்களை அடித்துத் துன்பப்படுத்தினார்கள். இந்தப்பிரகாரமாக இருதிறத்தாரும் பற்பலவிதமான யுத்தங்களைச்செய்யும்போது ஏதாய்முடியுமோவென்று தேவர்களெல்லாரும்பயந்து நடுக்கங்கொண்டார்கள். புசலடிக்குங்காலத்தில் காற்று முன்னும், மழைத்தாரை பின்னும், காற்று அதன்பின்னும் ஆக ஒன்றையொன்று மாறிமாறித் துரத்துவதுபோலக் காணப்படும்விதமாக இராக்ஷதவீரர்களை வானரவீரர்களும், வானரவீரர்களை இராக்ஷ வீரர்களுமாக ஒருவரையொருவர் மாறிமாறித் துரத்திப் பின்னிடைந்து போய்விடாமல் எதிர்த்துநின்று சண்டைசெய்கிறதைப்பார்த்து, தனக்கு வேண்டிய சகல ஐஸ்வரியங்களையும் தேவலோகத்திலிருக்கவிடாமல் பறித்துக்கொண்டு மறுபடியும் அவைகளில் தேவர்களுக்கு இச்சையுண்டாகாதபடித் தன்னுடைய உதிரந்தோய்ந்தசூலாயுதத்தைப்பார்த்துக்கொண்டிருக்கின்றவனான கும்பகர்னன் வானரசேனைகளின்பேரில் தன் தேரைச் செலுத்திக்கொண்டு யுத்தத்திற்குவந்தான். ஊழிக்காலத்தில் புறப்படுகின்ற சண்டமாருதத்தில் உலகங்கள் அகப்பட்டுத் துன்பப்படுவதுபோல வானரங்களென்று சொல்லப்பட்டவைகளில் அநேகம்சேனை தூளியில் அகப்பட்டும், இரத்தக்கடலில் மூழ்கியும், முகபடாத்தை யணிந்த மஸ்தகத்தையுடைய யானைகள் காலிலும், அவற்றோடு தொடர்ந்து வந்து கும்பகர்னனுடைய தேர்க்காலிலும் அகப்பட்டு மாண்டதுகள். இம்மட்டிலே போகாமல் கும்பகர்னனானவன் தன்மீது மலைகளைக்கொண் டெறிகிறவைகளும் தன் தேரின்முன்பாக வந்து குதிக்கின்றவைகளுமான வானரங்களில் சிலவற்றை இரண்டு கைகளினாலும் பிடித்து ஒன்றுடனே ஒன்றை மோதியும், சில வானரங்களைக் காலினாலே தேயும்படியுதைத்தும், சில வானரங்களைக் காலின்கீழ்ப் போட்டு நசுக்கியும், சில வானரங்களை வாயில்போட்டு மென்றுமென்று உமிழ்ந்தும், சிலவானரங்களைக் கையினால் கும்பல் கும்பலாய் வாரியெடுத்து முந்திரிகைப் பழத்தினின்றும் கொட்டையைத் திருகிப்பிட்டதுபோலத் தலைகளைத் திருகிப் பிட்டெறிந்தும், சிலவானரங்களைப் பல்லினால் கடித்துக்கடித்துக் கொன்றும், மிகுந்த பலாட்டியமான வசந்தனென்கிற வானரவீரப் படைத்தலைவனைப் பிடித்து நசுக்கி, அவனுடைய இரத்தத்தை வாரி தேகத்தில் சந்தனம்போலப் பூசிக்கொண்டான். இப்படிச்செய்ததல்லாமலும் சில வானரவீரர்களை கையிற்பிடித்து சமுத்திரத்தில் தோய்த்துத்தோய்த்து எடுத்தான். சில வானரவீரர்களைப் பூமியிற்போட்டு தேய்த்துவிட்டான். சிலவானரவீரர்களைச்சமுத்திரத்தில்அமிழ்த்திவிட்டான். சில வானரவீரர்களைநெருப்பில் இறக்கும்படி எறிந்துவிட்டான். சில வானரவீரர்களை எட்டுதிக்கிலும்போய் விழும்படி வாரித்தூவினான். சில வானரவீரர்களைப் பிடித்து மரத்தூர்களில் வீசி யடித்தான். சில வானரவீரர்களைக் கிறுகிறுவென்று சுழற்றி மலைகளில் மோதினான். இதைக்கண்டு தேவர்களெல்லாரும் பயந்து பறந்தோடிப்போனார்கள். எங்கே பார்த்தாலும் வானரப் பிணக்கும்பல்கள் நிறைந்துவிட்டதுகள். கழுகு பருந்து முதலான பறவைகளெல்லாம் திட்டு திக்குகளுந்தோன்றாதபடி நெருக்கிப் பறந்

ததுகள். மலைகளையெல்லாம் பிடுங்கி எறிந்துஎறிந்து குரங்குகள் குமைத்ததுபோல வேகுரங்குச் சேனைகளையெல்லாம் யமனும் பயப்படும்படி கும்பகர்னன்கொன்று குறைத்துப்போட்டான். அப்போது மிகுதியானவானரசேனைகள் இனிமேல் நாம் கும்பகர்னன்மேலன்றி மற்றொருவர் மேலும், மரத்தையாவது பிடுங்கி யெறியப்போகிறதில்லை ஆயினும் இன்றைக்கே நாம் ஜெயமடையப் போகிறோம். சத்துருக்களெல்லாம் இப்போதே முடியப்போகிறார்களென்றுதங்கள் ஊக்கங்கொண்டு அடித்தவைகளும், விட்டெறிந்தவைகளுமான மரங்கள் மலைகள் வேர்கள் கட்டைகள் காலிலகப்பட்ட புற்பூண்டு முதலிய எல்லாவற்றையும் கும்பகர்னன் தனது பெரியதோள்களினாலே தாங்கினான். அப்படித் தாங்கினபோது இவர்களால் வீசப்பட்டவைகளெல்லாம் பொடிப்பொடியா யுதிர்ந்துபோய் விட்டதுகள். அதைக்கண்டு வானரவீரர்கள் இனி இவன்மீது எறியத்தக்கவைகளும், வாரி அடிக்கத்தக்கவைகளும் ஒன்றுமில்லையேயென்று சொல்லிப் பல்லோடு பல்லை நறநறவென்று கடித்துக்கொண்டு இவனை நாமெல்லாரும் சுற்றி நின்று அடிக்கலாம் வாருங்களென்று சொல்லி, ஒருமிக்கப் போய்ப்பாய்ந்து குருவிக்கூட்டங்கள் மலையை மோதுகிறதுபோலக் கும்பலாய்த் தாவிக் கூடிக் குதித்துகுதித்துக் கொண்டுபோய்க் கும்பகர்னன் மேல்விழுந்து பிடித்துத் தங்கள் கைகளுந் தேய்ந்துபோகும்படியாகக் குத்தியும், பலம்பொருந்திய பற்களினால் கௌவிக் கடித்தும், கூர்மைபொருந்திய நகங்களினால் சதைச்சதையாய்க் கிள்ளிப்பார்த்தும் அவனுக்குக்கொஞ்சமும் துன்பம் நேரிடாததைக் கண்டு நம்மாலொன்றும் ஆகமாட்டாதென்று அவனைவிட்டு இழிந்து ஓட்டம்பிடித்தார்கள் அப்போது ஊழிக்காலத்தில் லோகத்தையெல்லாம் சுட்டெரிக்கும்படி வருகின்ற பிரளய காலாக்கினியைப்போல நீலனானவன் பூமியில் வேரூன்றிப் பதிந்துநிற்கிற ஒருபெரிய மலையை உகாந்தகால மேகத்தைப்போலக் கையினால் பேர்த்தெடுத்துக் கும்பகர்னனுடைய தேகத்தின்மீதில் எறிந்தான். அதைக் கும்பகர்னன் ஒரு சூலாயுதத்தைக் கொண்டு பொடிப் பொடியாய் நொறுக்கிவிட்டுச் சிரித்துக்கொண்டு நின்றான். அதைக்கண்டு நீலன் இன்னும் ஒரு மலையைத் தேடிப்பிடுங்கி எறிந்தபோதிலும் அதுவும் இப்படியே தூள்தூளாய்ப்போய்விடப் போகிறதென்று ஆலோசித்துத் தன்னுடைய புஜங்களையே ஆயுதமாகக்கொண்டு கும்பகர்னனுடைய தேருக்கெதிரே யோடி அட்டகாசஞ்செய்து நின்றுகொண்டு பிரகாசிக்கின்ற கடல்நீர் வற்றிப்போகும் படியாகவும், மேகத்திலுள்ள இடிகள் உதிரும்படியாகவும், பூலோகத்தவர்களெல்லாம் நடுக்கங் கொள்ளும்படியாகவும், பலதரம் கைகளால் ஓங்கித் திடீர் திடீரென்று குத்தியும், கால்களினால்எட்டியுதைத்தும், கையும் சலித்துக் காலுமோய்ந்து மனதும் திகைத்து நெய்யைச்சொரிந்த அக்கினியைப்போலக் கோபத்தால் ஜுவாலித்தெரிந்துகொண்டு இருந்தான். அப்படி நீலன் வெறுங்கையோடிருக்கிறானென்று கூர்மைபொருந்திய சூலாயுதத்தைப் பிரயோகிக்கிறதற்கு வெட்கமுற்று அவன் இளைத்து உயிர்சோர்ந்து விழும்படியாகக் கும்பகர்னன் தனது இடது கையினால் ஒருகுத்து குத்தினான். அப்போது நீலன் சோர்ந்து விழுந்ததைப் பார்த்துக் கொண்டிருந்த அங்கதன் சக்கரவாளகிரியைப்பார்க்கிலும் நீண்ட ஒருபெரிய பாரமான மலையைப் பூமிதேவியானவள் முதுகை ஆற்றிக்கொள்ளும்படியாகப் பிடுங்கி, இன்றைக்குக் கும்பகர்னன் மரணமடைந்தானென்று ஏழுலோகத்தவர்களும் மகிழும்படியாக அவன்பேரில்விட்டெறிந்தான். அதைக் கும்பகர்னன் தன் ஒரு தோளினாலே தாங்கினான்.தாங்கின மாத்திரத்தில் அந்த மலையானது அநேகம் சுக்கல்சுக்கலாயும், துண்டு துண்டாயும், பாளம் பாளமாயும் பிளப்போடும் விழுந்ததுகள். அதைக்கண்ட வானர சேனைகளெல்லாம் இனி எங்களுக்கு என்ன சக்தியிருக்கின்றது? இவனோடு எதிர்த்துச் சண்டைசெய்ய எங்களால் முடியாது என்று பயந்து ஓட்டம் பிடித்தார்கள். அந்தச் சமயத்தில் அங்கதன் மிகுந்த கோபத்துடனே மிதித்த அடிமாறாமல் ஒன்றியாய் நின்றான். அப்போது கும்பகர்னன் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தையும் எமனுடைய தண்டாயுதத்தையும் ஜெயிக்கத் தக்கதும், சமான

மற்ற வலியை யுடையதுமான ஒரு இருப்புலக்கையை அதிக வேகங்கொண்டு இடது கையினு லெடுத்து அங்கதனுடைய உயிரை வாங்கக்கடவாயென்று உச்சரித்து எறிந்தான். அங்கதனனவன் தேவர்களெல்லாரும் தன்னை ஸ்தோத்திரம் பண்ணும்படியாகத் தனது பலம்பொருந்திய கையினுலே அந்த முசலாயுதத்தைப்பிடித்துச் சுழற்றிக்கொண்டு, மேகத்தில் தோன்றுகின்ற இடியானது ஒரு பர்வதத்தை அக்கினிமூட்டி எரிகிறதுபோல மிகுந்தவல்லவனுன கும்பகர்னனை அடித்து, அவன் உடல் முழுமையும் உதிரமயமாகும்படிச் செய்து உயிரை மடிப்பேனென்று கண்களில் அக்கினிபறக்கக் கர்ஜித்துக்கொண்டேகும்பகர்னனுடைய விருதுக்கொடிகள் கட்டிய பெரியதேருக்கு முன்பாகத் தாவிக் குதித்துப்போய் அவன் எதிரே நெருங்கி நின்ருன். நின்ற அங்கதனைக் கும்பகர்னன் நெருப்புப் பறக்கப் பார்த்து என்னிடத்தில் சாகும்படியாக வந்த நீ வானரசேனைகளுக்கெல்லாம் தலைவனுன சுக்கிரீவனே? அல்லது அவனுடைய குமாரனே? அல்லது என்னுடைய ஊரில் நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டு மிகுந்த வெற்றிபெற்றுகொண்டு போனவனே? நீயார்? உன்னுடைய பெயரென்ன? சீக்கிரமாகச் சொல்லுவாயென்று கேட்க, கும்பகர்னனை அங்கதன்பார்த்து, உன்னுடைய தமையனுன ராவணனை வாலினுற் சுற்றிக்கட்டிக்கொண்டு நான்கு திக்குகளிலும் தாவிச் சூலாயுதத்தைக் கையிற்கொண்ட சாம்பசிவமூர்த்தியினுடைய திருவடித் தாமரைகளில் வணக்கஞ்செய்த மகாவீரனுன வாலிபுத்திரனும், உன்னையும் அப்படியேஎன்வாலில் கட்டிக்கொண்டு ராக்ஷதர்களாகிய சத்துருக்களை எதிர்த்து நிற்கின்ற தசரதகுமாரனுடைய திருவடிகளில் வணங்கும்படியான ஐஸ்வரியத்தைப் பெற்றவனுமாகிய அங்கதன்நானேயென்று சொல்லக்கேட்டு, உன் தகப்பனை மறைந்திருந்து ஓர் அம்பினுலே உயிர்போக்கின அபகாரிகளுக்கு வருத்தப்படுத்துகின்ற பகையைச்செய்து காட்டாமற் போவாயேயானுல் உன்னை உலகத்தவர்கள் நிந்தனைசெய்ய மாட்டார்களா? அப்படி செய்தாயேயானுல் என்னைப்போல வசையற்ற வீரர்களும் உன்னை ஸ்தோத்திரஞ்செய்வார்களல்லவா? நல்லது அதிருக்கட்டும். நீஇங்கேவந்து என்னை உன்வாலினுலே கட்டியிழுத்து ஸ்ரீராமனிடத்திலே கொண்டு போய் வைக்கிறதற்காகவல்ல. தேவேந்திரனுடைய மார்பிலேகுத்தி கூறிட்டிருக்கின்ற எனது மூவிலைச் சூலாயுதத்தின் உச்சியானது, உன் முதுகைத் தடாரித்துக்கொண்டு போகும்படியாகவும், என்னைக் கட்டுகிறதற்கு உரியதாகச் சொன்ன உன்னுடைய வாலைப்போல் கையுங்காலும் அச்சூலாயுதத்தில் தலைகீழாய்த் தொங்கும்படி நிற்கவும் வந்தாயென்றனன். அம்மாத்திரத்தில், அங்கதன் கண்களில் அக்கினி பொறிபறக்கும்படி பார்த்து, மலையின்மீது இடியிடித்து விழுந்ததுபோலப் பிரதிதொனியுண்டாகத் தக்கதாகவும் உலகத்தவர்களெல்லாம் நெஞ்சு நடுங்கும்படியாகவும், தனது அழகுபெற்று விளங்கும் பெரிய கையினுலே அந்தக் கும்பகர்னனை இருப்புலக்கையைக் கொண்டு ஓங்கியடித்தான். அப்படி அடித்தவுடனே அந்த இருப்புலக்கையானது அநேகந் துண்டுகளாய் முறிந்து விழுந்துவிட்டது. அப்படி அந்த இருப்புத் தண்டத்தை தனது கையை உயர்த்தித் தாக்கிப் பொடியாகச் செய்த கொடியவனுன கும்பகர்னனைப் பார்த்துக் கொன்று விடுகிறேனென்று பூமி குழியும்படியாகக் குதிக்கின்ற அங்கதனை அதிக பலமுள்ளவனுன கும்பகர்னன் கோபித்து, தேகத்தில் புண்வடுப்படும்படியாக ஓங்கி ஒரு குத்துக்குத்தினுன். அந்தக் குத்துபட்டமாத்திரத்தில் அங்கதன் மரணமூர்ச்சையடைந்து, பூமிபடீரென்று வெடிக்கும்படியாகப் படாலென்று விழுந்தான். அதைக் கண்டுஉடனே அனுமான்வந்துகுதித்தார். குதித்து அந்தக் கும்பகர்னன் மூர்ச்சித்து விழுந்த அங்கதன்பேரில் மறுபடியும் தன் கையிலுள்ள அதிக பலமாகிய உயர்ந்த சூலாயுத்தை மார்பிற்கு லட்சயம்வைத்து எறியத் தனித்ததைக் கண்டு, விரைவில் ஒருமலையைப் பறித்துக்கொண்டு வந்து அந்தக் கும்பகர்னனுடைய விசாலம்பொருந்திய முழு நெற்றியின் பாதிப்பங்கில் பாய்ந்து பொத்துக் கொள்ளும்படியாக வீசி ஸ்ரீராமனை வாழ்த்திக் கர்ஜ்ஜித்தார். அது கும்பகர்னனுடைய தலையிலேபோய் பொத்துக்கொண்டு அவனுக்கு மற்றொரு

தலையிருந்தாற்போல நின்ற அந்தமலையைத்தானே கும்பகர்னன் கையினால் பிடுங்கிக்கொண்டு வாயுபுத்திரராகிய அனுமானுடைய வஜ்ஜிரமலைக்குச் சமானமாகிய மார்பிலே உலைக்களத்தில் வேக்காடுற்ற இரும்பின்மீது தீப்பொறிகள்சிதறத்தாக்குகின்ற சம்மட்டிக்குச் சமானமாக நெருப்புப்பொறிகள் சிதறத்தக்கதாய் எறிந்து, தானும் தன்னுடைய தோளைக்கொட்டிக் கர்ஜித்தான். அந்தச்சமயத்தில் முன்னோடிப்போனவானரர்கள் மறுபடியும் பயப்படாமல் வந்து அங்கதனை எடுத்துக்கொண்டு போனார்கள். அந்தமலையைச் சிறிதும் லட்சியஞ்செய்யாமல் ஆஞ்சநேயர் ஆகாயமுழுதையும் விழுங்குகிறதுபோல மறைத்துக்கொண்டிருக்கின்ற ஒருபெரிய மலையைப்பறித்துக்கையிலேந்தி நின்று ஒருவருஞ்சமானமில்லாதபலமுள்ளவனை கும்பகர்னனைப்பார்த்து, இந்தமலையை உன்மேல்எறிகின்றேன்; க்ஷணநேரத்திற்குள் நீ நசுங்கிமாண்டு போகப்போகிறாய். அப்படிக்கில்லாமல் நீசீக்கிரத்தில் அதைத்தடுத்து விடுவாயேயானால் உன்னுடைய சக்தியின் வல்லமையைநான்அறிந்து மெச்சிக்கொள்ளுகின்றேன். அதன்பிறகு உன்னுடன் சண்டைசெய்யாமல்திரும்பிப்போய்விடுகிறேன் உலகத்திலேமகாவீரனென்கிற ஒருபெரும்புகழையும்நீ அடையக்கடவாயென்று அஞ்சனை யிளஞ்சிங்கம் சொல்லக்கேட்டு, மலைக்குகை திறந்தாற்போலப் பிளப்பாகிய வாயைத்திறந்து கும்பகர்னன் நகைத்து, நீ எறிகிறமலையை, அப்படியே எறி. அது என்மேல்படுகிறகாலத்தில் கொஞ்சமாவது இளப்படைவானேயானால் உனக்கு நான் தோற்றுப்போனவனே யானேன். என்னுடைய பலமும் அற்பமானதாக நினைக்கத்தக்கதன்று. இப்படி இருவரும் சபதம் பண்ணிக் கொண்டார்கள். அப்போது ஆஞ்சநேயர் நீசமர்த்தனானால்அடா கும்பகர்னா! என்னோடே எதிர்த்து நில்லு. சமர்த்தில்லாவிட்டால் உயிர்தப்பி ஓடிப்போய்விடு என்று சொல்லி, தமது பெருங்கையினாலே குறிப்பிட்டு எறிந்த அந்த வஜ்ஜிரமலையை அதிகஉக்கிரத்தோடு கும்பகர்னன் தனது தோளில் தாங்கினான். அம்மலை அவன் தோளில் பட்டமாத்திரத்தில் படீரென்று அநேகம் சுக்கல்சுக்கலாய்ப்போய்விட்டது. அந்தச் சப்தத்தைக்கேட்டு உலகத்தவர்கள் மனம் திடுக்கிட்டார்கள். அவனுடைய தேகமோ கொஞ்சமும் கன்றி இளைக்காமல் இருக்கிறதை ஸ்ரீராமதூதர் கண்டு, இவனுடைய வல்லமை இவ்வளவென்று ஒருவராலும் அளவிட்டுச் சொல்லிமுடியாது. மேருமலையைச்சமானப்படுத்திச் சொன்னாலும், வல்லமையிலும் அழகிலும் அதை நிகர்சொல்லக்கூடாத வெற்றியும் சுந்தரமும்பெற்ற தோள்களையுடைய ஸ்ரீராமமூர்த்தியின் பாணங்கள்தான் இவனைப் பிளந்தால் பிளக்குமென்று சொல்லிவிட்டுத் திரும்பிப்போய்விட்டார். எழுபது வெள்ளம்வானரசேனைகளுள் இதுவரையிலும் இறந்தவர்கள்போக மற்றவர்கள் எல்லாம் அன்றைக்கே இவனுடைய வலது பாரிசத்திலுள்ள மூக்கமூச்சூலத்தால் குத்துண்டு கருவற்றுப்போவார்கள். இறந்துபோனவர்கள் துஉதிரமாமிசங்களால் நிறையப்பட்டு ஒரேநாளையில் இந்த லோகமுழுவதும் நாசமடைந்து வேறுபட்டுப்போகுமென்று தேவர்களெல்லாம்கலங்கி நெஞ்சுபொருமி நடுநடுங்கினார்கள். கும்பகர்னனை எதிர்த்து வானரர்கள் குத்தினார்கள். அப்படி குத்தினாலும் தங்கள் கைசலித்துப் போய்விட்டார்களே யல்லாமல் அவனைத் தோற்கடித்தவர்கள் ஒருவருமில்லை. கும்பகர்னன்தான் ஒருவனுமே போர்க்களத்தில் ஒரு குரங்கினது அடிச்சுவடுங் காணவொட்டாதபடி அடித்துத் துரத்தி தேவர்களை ஜெயித்த தன்னுடையவீரத்தையும் கீர்த்தியையும் மறுபடியும் புதுக்கினவனாகிக் குரங்குகளெல்லாம் பெருங் கூட்டங்களாக ஓடிப்போய்விட்டதுகளே. ஆதலால் அந்த ரிஷிகளாகவிருக்கின்ற இரண்டு மனிதர்கள் இங்கில்லையே. இன்னமொரு லங்கை இருக்கின்றதென்று நினைத்து ஒருவேளை அங்கே போகிறதற்குப் போனார்களோ? அவர்கள் எங்கே இருக்கின்றார்கள்? எங்கே இருக்கின்றார்களென்று உறத்த சப்தத்தோடு கூப்பிட்டுக்கொண்டு, தேவர்களும் பயங்கொள்ளத் தன்னுடைய தோள்களைத் தட்டிக்கொண்டு பேரிடி முழக்கம்போல் வீரகர்ஜ்ஜிதஞ் செய்தான். அதைக்கேட்டு யமனும் பயந்து நடுங்கினான். அதிவேகத்துடனே மோதிவருகின்ற அலையைப்போலும் தாவிவந்த எழுபதுவெள்ள வானர

சைனியக்கூட்டங்களில்கும்பகர்னனால்இற ந்துபோனவைபோகஉயிராயிருந்தவைகள் ஓட்டம்பிடித்தபடியினாலே இரணக்களத் தில் ஒருவரும் இல்லாமல் வேறுவெளியா யிருக்கிறதைப்பார்த்து, சந்திரோதயகாலத் தில் கடல்பொங்கிவருகிறதுபோல வானர சேனைகளால் அடியுண்டு குறைபட்டுப் போன இராக்ஷத சேனாசமுத்திரமானது ரணக்களத்தை மறுபடியும் வந்து சூழ்ந்து கொண்டது. அப்போது குன்றுகளையும், மலைகளையும், பர்வதங்களையும், விருக்ஷங்க ளையும் பறித்தெறிந்து வெற்றிபெற்றிருந்த வானரப்பெருஞ் சேனைகளில் பாதிக்கு அதிகம் மாண்டுபோய் விட்டதேயென்று விசனப்பட்டுக்கொண்டு இருந்ததேவர்களு ங்கண்டு சந்தோஷப்படும்படியாகச் சுமித் திரை இளஞ்சிங்கமாகிய இளையபெருமாள் ஒருவரே தனித்துப்போய்க் கும்பகர்ன னோடு எதிர்த்து நின்று வில்லைக் குணத் தொனி பண்ணினார். அந்தத்தொனியால் திடுக்கிட்டுக் கைகால்கள் நடுங்கி அனேக ராக்ஷதர்கள் இறந்தபடியினாலே ராக்ஷத ஸ்திரீகள் தங்கள் கழுத்தில் கட்டியிருந்த பொற்றாலிகளையெல்லாம் அறுத்துத் தரை யில் எறிந்துவிட்டார்கள். இடியிடித்ததெ ன்று சுவர்க்கலோகமுழுதும் நடுங்கினது. அஷ்டதிக்குகளெல்லாம் செவிடுபட்டுப் போய்விட்டதுகள். பேய்க்கூட்டங்களெல் லாம் கையிற் பிடித்துத் தின்றுகொண்டிரு ந்த மாமிசங்களை எறிந்துவிட்டு இரண்டு கைகளையும் தட்டிக்கொண்டு கூத்தாடினது கள். லக்ஷ்மணப்பெருமாள் வேகத்தோடும் பிரயோகித்தபாணங்கள் வெகுநாளாய் ஆ காரமில்லாதிருந்தபடியினாலே சீறிக்கொ ண்டு கும்பகர்னனைச் சிறைப்படுத்தி உலைக் களத்தில்வெந்த இரும்புபோல அக்கினி யைக் கக்கிக்கொண்டு ராக்ஷதர்களுடைய தேகத்தில் நுழைந்து, அவர்களுடைய ரத்தத்தையெல்லாம் பானம்பண்ணி விட் டதுகள். சில அஸ்திரங்கள் சமுத்திரத் திற்கொப்பாகவந்த ராக்ஷதர்களுடையதலை களைக் கொய்துகொண்டு போனதுகள். சில பாணங்கள் அவரவர்களுடையஅறுபட்ட சிரங்களில் தைத்து அவைகளை அஷ்ட திக்குகளிலும் கொண்டுபோ யெறிந்தது கள். சில அம்புகள் அறுத்ததலைகளை விழ வொட்டாமல் வேகமாய்க் கொண்டுபோவ தினால் இந்த அம்புகளுக்கும் தலைகளுண்டு என் னும்படியாகஇருந்தன. அக்கினிமய மாக இருக்கின்ற சில கணைகள் முகபடாத் தோடு தலையைக்கத்தரித்து மலைக்குச் சரி யொத்த யானைகளுடைய தேகத்தில் ஊடு ருவிப்போய், ரணக்களத்திலே யுத்தஞ் செய்கின்ற ராக்ஷதர்களுடைய அனேகந் தலைகளைச் சிந்திக்கொண்டு குகையில் நுழை கின்ற பெரிய மலைப்பாம்பைப்போலப் பக் கங்களிலுள்ள மலைகளிற்போய் நுழைந்து கொண்டதுகள். சிலசரங்கள் அனேககூட் டங் கூட்டங்களாக மின்னல்கள் ஓடுகிறது போல விரைந்துபோய் எதிர்முகமாக இரு க்கின்றவானரர்களாகிய ராக்ஷதர்களுடைய முகத்தில் நுழைந்து அந்த முகத்தில் நுழைந்துபோகவே கூன்வளைந்த முது கின் பின்புறத்திலிருக்கின்ற ராக்ஷதர்களு டைய பிடர்க்குள்ளும் சமவேகத்தோடு போய் நுழைந்தன. தோல்போர்த்திருக் கின்ற பேரிகைகளிலும் தைத்ததுகள். சங் கை ஊதுகின்றவர்களுடைய குவிந்த வாயி லும் சங்கைப்பிடித்திருக்கின்றகைகளிலும் பாணங்கள் அபரிமிதமாகப் போய்ப்பாய்ந் ததுகள். யானைகளுடைய கழுத்தில்போ ய்ப் பொத்தியதுகள். தேர்களில் கட்டியிரு க்கின்றமிகுந்த வேகமுடையகுதிரைகளின் தலைகளிலும்போய்ப் பதிந்ததுகள். இவை களைப் பார்த்துக்கொண்டிருந்த ராக்ஷதர்க ளில் ஒருவரையும் விடாமல், அவரவர்க ளுடைய கண்களிலெல்லாம் உருவியது கள். இந்தப்பிரகாரமாக எல்லாவிடங்களி லும் லக்ஷ்மணர் விடப்பட்ட பாணமய மாக நிறைந்திருந்ததுகள். பாணங்கள் பட்டு யானைகளெல்லாம் தந்தங்கள் முறி யுண்டதுகளும், வாலறுபட்டதுகளும், தீப்பறக்கின்ற கண்களிழந்ததுகளும், துதி க்கைத்துணிந்ததுகளும், ரணக்களத்தில் பிரவேசித்த கொடுமையான முன்னங்கால் கள் தறிபட்டதுகளுமாய்க் கொடிமுடி யோடு மலைகளுருண்டதற்கு ஒப்பாகப் பூமி யில் முண்டங்களாய்ப் புரண்டதுகள். வரி சைவரிசையாய் எப்போது பிரயோகிக்கப் பட்டுக் கொண்டே இருக்கிறபடியினாலே அஷ்டதிக்குகளிலும் நிறைந்திருக்கின்ற லக்ஷ்மணருடைய பாணங்கள் பூமி அந்தர சுவர்க்கமென்றுசொல்லப்பட்ட அந்தந்த இடங்களிலும் தைக்கிறதினால் பூமியிலும்

ஆகாயத்திலும் குளம்புகளைவைத்து நிற்க மாட்டாமல் குதிரைகள் மயங்கிச் சாய்ந்தவைகளும், மார்பில் தைத்துப் பிளத்தலினாலே மாண்டுபோனதுகளுமாய் ஒழிந்ததுகளேயல்லாமல் ஒரு குதிரையாவது தப்பிப் பிழைத்துப் போகவில்லை. மாந்தளிருக்குச் சமானமாகிய அச்சுவடியும் உதிரந் தோய்ந்து செந்நிறமும் குகைமயமுடைய பாணங்கள் தேரிற்பூட்டிய குதிரைகளைக் கொன்றுதள்ளி இரண்டு குகையும் வளையும்படியாக வில்லைப் பிடித்துக்கொண்டிருக்கின்ற தலைமையான ரதிகர்களையும் பாகர்களையும் அறுத்துத் தள்ளிவிட்ட படியினாலே, அளவில்லாமல் பெருகுகின்ற சத்தப் பெருவெள்ளத்தினால் இழுப்புண்டு போனதுகளேயல்லாமல், கொடிகள் கட்டிய பெரிய தேர்கள் போகவேண்டிய கிரமப்பிரகாரம் ஓடினவைகளுமல்ல. ஒரு நிலையில் நின்றவைகளுமல்லவாயின. செங்கடலுக்கொப்பாகிய ரத்தவெள்ளத்தில் மிதக்கின்ற ராக்ஷதர்களின் தலைகள் அகன்ற வாயையுடையவைகளாய்த் தோணிகளை ஒத்திருந்ததுகள். தோண்டப்பட்ட கண்ணின் குழிகளும், அறுபட்ட மூக்குகளும், அகப்பைகளுக்குச் சமமாகவிருந்தன. கழுத்தோடுகூட அறுபட்டிருந்த தலைகள் ஒரே பாணத்தினால் வரிசை வரிசையாய்க் கோப்புண்டு தெப்பங்களுக்கு நிகராகவிருந்தன. அக்கினியைக்கக்குகின்ற கொடிய பாணமானது நெற்றியிற்பட்ட மாத்திரத்தில், யானைகள் தங்களைக் கொத்துகின்ற அங்குசங்களுடனே கலவியில் விருப்பங்கொண்டு அதிக வேகத்துடனே மேற்றவிசுகளை நீக்கினதுகளாய் ராக்ஷதர்களோடு எதிர்த்து யுத்தஞ் கொண்டிருக்கின்ற வானர சைனியங்களுக்கு நடுவே கறுத்த மேகத்தைப்போல நுழைந்தோடினதுகள். ராக்ஷதர்களெடுத்துக் கொண்டுவந்த வெள்ளி உடுக்கைகள் கிழிந்து பூமியில் குத்திட்டாற்போல விழ, அதனுடைய வட்டமான வாயிற்படிந்து விழுந்திருக்கின்ற வெண்சாமரைகள் ஸ்ரீராமருக்குச் சீக்கிரத்தில் வெற்றியுண்டாகப்போகிறதென்று நல்ல முகூர்த்தநாளைக் குறித்து முளைகள் வார்த்திருக்கின்ற பாலிகைக்குச் சமானமாய் இருந்ததுகள். வேனிற் காலத்திற்குரிய மன்மதனைப்போல வடிவழகுள்ள இளையபெருமாள் விட்ட கொடிய பாணங்களினாலே கீர்த்திபெற்ற வாளாயுதம் போன்ற வக்கிரதந்தங்களையுடைய ராக்ஷதர்கள் ஆயுதங்களெல்லாம் அள்ளுண்டு, போனதிசை முழுதிலும், நெருப்புப்பற்றி எரிந்து, வான்மீன்களெல்லாம் ஒருமிக்க ஆகாயத்தில் நின்றும் பூமியில் விழுந்ததுபோலப் பலபலவென்றுஉதிர்ந்ததுகள். அரத்தினால் ராவப்பட்டுக் கூர்மைபெற்ற நீண்ட பாணங்களால் சேணத்துடனே ஓடுகிற குதிரைகளுடைய காலறுப்புண்டதுகள். அக்கினிமயமான விருதுக் கொடிகள் அறுப்புண்டதுகள். அலங்காரமாகிய பெரிய தேர்களெல்லாம் அழிந்துபோய்விட்டதுகள். நல்வினை தீவினைகளுக்குக் காரணமாகிய அகங்கார மமகாரங்கள் யதார்த்தக்கியானத்தை நீக்கிவிட்டாலும், அந்தப் பாபத்தை வீரத்தன்மையானது நீக்கிவிடுமென்பதைத் திருஷ்டாந்த பூர்வமாகப் பார்த்தோம். எப்படியென்றால், இளையபெருமாளோடு எதிர்த்து யுத்தஞ்செய்து மரணமடைந்த ராக்ஷத வீரர்கள் இரக்கமற்றவர்களாயும் தர்மத்திற்கு விரோதஞ் செய்தவர்களாயுமிருந்த போதிலும், வீரவான்களாக இருந்தபடியினாலே அவர்கள் வீரஸ்வர்க்கலோகத்தையடைந்தார்கள். அப்போது ரம்பாஸ்திரீகளெல்லாரும் அவர்களிடத்தில் அதிக விருப்பமுடையவர்களாய் அவர்கள் தேகத்தைத் தழுவிக்கொண்டார்கள். மேகதாரைகள்போலப் புறப்பட்ட கொடுமையான சில பாணங்கள் வடவாமுகாக்கினியைப் போலவும், சண்டமாருதத்தைப்போலவும், உலகங்களையெல்லாம் மூடிக்கொண்டு ஜுவாலையுடனே வேகமாய் வந்தபோது, கொடிய பாபகிருத்தியத்தையுடைய ராக்ஷதர்களெல்லாம் அப்பாணங்களைத் தடுக்கமாட்டாமல் மரணமடைந்தார்கள். இந்தப்பிரகாரம் மரணமடைந்த எல்லாரும்ஒருமிக்க சுவர்க்கமடைந்தார்களேயானால், வீரர்கள் அடையத்தக்க அந்தச் சுவர்க்கத்தைப் பார்க்கிலும் பெரியதொன்று இருக்கிறதாகப் புத்திமான்கள் சொல்லமாட்டார்கள். லக்ஷ்மணராலே விடப்பட்ட பாணங்கள் ராக்ஷதர்களில் ஒருவரை இரண்டு முன்னங்கைகளை அறுத்தும், மற்றொருவரைச் சிரந் துணித்தும், வேறொருவரை வீரகண்டா

மணிகட்டிய பாதங்களை வெட்டியும், சிலர் தோள்களைப் பிளந்தும், இந்தப் பிரகார மாக ராக்ஷதர்களையெல்லாம் அவயவக்கண் டனைகள் செய்தபடியினுலே மறுபடியும் சம்மரிப்பதற்குச் சத்துருக்க ளில்லாமல் வெறுமையானதுகளாய்ச் சில பாணங்கள் ரணக்களத்தைச் சுற்றித்திரிந்தும், கொடுக்கத்தக்க வள்ளலைக் காணுமையால் பிரயோஜனம் பெருத அநேக யாசகர்களை ஒத்திருந்ததுகள். சில ராக்ஷதர்களைச் சிரங்களையும், சில ராக்ஷதர்களைச் செவிகளையும், சிலபேர்களை நாசிகளையும், சிலபேர்களைக் கைகளையும், அநேகம் பேர்களைக் கண்களையும் சேதித்தமையால் பூமியினிடத்துத் தாதாக்கள் கொடுக்கின்ற பொருள் அளவுக்குத்தக்கபடி தண்டமிழ்ப் புலவர்களால் செந்தமிழ்ச் செய்யுட்கள் இயற்றிய முடித்தற்கொப்பாகவு மிருந்தது. தர்மதேவதையின் உயிர்க்குச் சமானமாகிய பலசாலி இளைய பெருமாளானவர் பிரயோகித்த அஸ்திரங்கள் படுகிறதினுலே நாம் இங்கு யிருக்கப்போமானுல் இறந்துபோவோம். நம்முடைய ராஜகுமாரனுகிய கும்பகர்னனும் இன்னும் சற்றுநேரந்தான் இந்த ரணக்களத்தில் நிற்கப்போகிருனென்று, ஓடிப்போக யத்தனித்துப் போகிறதற்கு வழிதெரியாமல் கூட்டங்கூட்டமாய்ப் பயந்து நான்குதிசைகளிலும் ரத்தவெள்ளம் ஓடுவதுபோலச் சிதறி ஓட்டம்பிடித்தார்கள். அப்போது புலஸ்திய பவுத்திரனை கும்பகர்னன் யுத்தகளத்தில் மாண்டவர்களான ராக்ஷதர்களுடைய பரிதாபஸ்திதியையும், லக்ஷமணர்செய்த வில்வல்லமையையும் ஆலோசித்து, திரிபுரசம்மார கர்த்தாவாகிய சிவசங்கரமூர்த்தியும் இந்தஇளையபெருமாளே, வில்வீரர்கள் வேறொருவரும் இவருக்கு ஒப்பாகமாட்டார்களென்று ஒருதரத்திற்கு ஆயிரந்தரமும் எடுத்துச் சொல்லிப் புகழ்ந்துகொண்டு விசாலமாகிய தேர்த்தட்டின் பலவிடங்களிலும் சாரதிகளிருந்து செலுத்துகின்றதும், வாயுவேகத்திற்கும் மனுேவேகத்திற்கும் மிஞ்சின வேகமுள்ளதுமான ஆயிரம் சிம்மங்கள் பூண்ட ஸ்வர்னமயமாகிய மேருகிரியையொத்த தேரை நடத்திக்கொண்டுவந்து ரணரங்கத்தில் நின்றுன். அப்படிநின்ற வக்கிரதந்தங்களையுடையகும்பகர்னன்தொளையிட்ட நுகங்களில் அனேக சிம்மங்கள் பூண்டிழுக்கின்ற தேரிலிருந்துவில்லைவளைத்து யுத்தஞ்செய்தபோது இளையபெருமாள் பாதசாரியாய் யுத்தஞ்செய்வதுமேம்பாடாயிருக்கமாட்டாது என்று ஆஞ்சநேயர் ஆலோசித்து, சரமோபாய நிஷ்டராய் அவருக்கு முன்னே வந்து, சுவாமி! தேவரீர் அடியேன்மீது ஆரோகணித்து யுத்தஞ்செய்தருளுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அப்போது சுமித்திரை இளஞ்சிங்கமாகிய லக்ஷமணரும் அப்படியே வாயுபுத்திரராகிய சிறிய திருவடியின்மீது ஏறியருளினுர். தேவர்கள் ஆசீர்வதித்தார்கள். வானரவீரப் பெருங் கூட்டம் ஜயவிஜயயீபவ என்று ஆர்ப்பரித்தார்கள். ஆஞ்சநேயருடைய திருத் தோள்கள், ஆயிரம்பரிகள்பூண்ட கும்பகர்ணனுடைய ரதத்திலும் விசாலமாகப் பூரித்ததுகள். தமக்குச்சமானம் தாமேயல்லாமல் வேறொருவருமில்லாத ஆஞ்சநேயருடைய திருத்தோள்மீது அதிகதேஜோன்மயமான இளையபெருமாள் எழுந்தருளி விளங்குகின்ற காட்சி, மேருமலையானது கயிலாயமலையின்மீதிருந்து பிரகாசித்தது போன்றிருந்ததேயல்லாமல், அதற்குச் சமானமாகச் சொல்லுகிறதற்கு வேறொன்று உலகத்தில் கிடையாது. இவ்விதமாய் எழுந்தருளிய லக்ஷமணப்பெருமாளுக்குச் சமானமாக யுத்தஞ்செய்யவேண்டுமென்று கும்பகர்னன் அனேக அஸ்திரங்களை நிறைத்துவைத்திருக்கின்ற அம்பறாத்தூணியை முதுகிற்கட்டிக்கொண்டுபெருத்த தோள்வல்லமைக்குத் தக்கதும், இந்திர தனுவும் வெட்கப்படத்தக்கதுமான ஒரு பெரியமலைக்குச் சமானமாகிய வில்லை கையில்பிடித்துக்கொண்டு இளையபெருமாளைப் பார்த்து, நீ ஸ்ரீராமன்தம்பி; நான் ராவணேஸ்வரன்தம்பி; நாமிருவரும் யுத்தஞ் செய்ய நிற்கிறோம். நம்முடைய யுத்தத்தைப் பார்க்கிறதற்குத் தேவர்களெல்லாம் ஆகாயத்தில்வந்து பரவியிருக்கின்றார்கள். சமஸ்தமான வீரர்களும், பாரம்பரியமாய் அனுசரித்துவந்த யுத்தமரியாதைக்குத் தக்கவைகளைச்சொல்லி யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்க யுத்தத்தைச் செய்யலாம். நான் இப்போது கேட்கிற கேள்விக்குத் தகுந்த உத்தரம் சொல்லக்கடவாயென்று

சொல்லுகிருன். அனேக தவஞ்செய்து எங்களுடன்பிறந்த சூர்ப்பநகையென்னும் பெண்ணனவள் யாதொருகுற்றமும் செய்யாதிருக்கவும், அவளுடைய மூக்கை வெகு கோபங்கொண்டு அறுத்தது உனக்குத்தகுமா? அப்படியறுத்த உன் வெற்றிப்பிரதாபத்தையும், அவளுடைய அளகபாரத்தைப்பற்றி இழுத்த உன் கையையும், இதோ அறுத்துக் கீழேதள்ளப்போகிறேன்; தப்பித்துக்கொள்ளென்று சொன்ஞன். இருளையொத்த கறுத்த மேனியையுடைய கும்பகர்னன் அப்படி சொன்னதைக்கேட்டு மல்யுத்தத்திஞல் உயர்ந்த தோள்களையுடைய லக்ஷமணப்பெருமாள் கேட்டு, அடா கும்பகர்ஞ? உங்களுக்கு மாறுத்தரம் எங்கள் வில்லிஞல்சொல்லும்படி கற்றிருக்கிருேமேயல்லது வீரலட்சணத்துக்கு நாணமுண்டாகும்படிச் சொல்லிஞல் சொல்லுகிறதற்கு நாங்கள் சாஸ்திரங்கள் படிக்கவில்லையென்று சொன்ஞர். அதைக்கேட்டு ஆகாயம் இரண்டாய்ப்பிளந்துவிடுமென்றும், மேருமலை பூமியுடனே இரண்டாய்க் கிழிந்துவிடுமென்றும், தேவர்களெல்லாம் மனம்திகைக்கும்படியாகக் கும்பகர்னன் தனது இரண்டு கண்களிலும் அக்கினிப்பொறிகள் பறக்கப் பதினெட்டு அக்கினி முகாஸ்திரங்களை யொன்ருகத் தொடுத்து இளையபெருமாள்மீது பிரயோகித்தான். அஷ்டதிக்கெஜங்களுடைய தந்தங்கள் தன்மார்பில் பாய்ந்துபதியும்படி எதிர்த்து அவைகளைத் தோற்கடித்தவனும்; தேவர்களுடைய வல்லமையையொடுக்கினவனும், இடிக்குச்சமானமாகிய கொடுங்கோபமுள்ளவனுமான ராவணன் தம்பியாகிய கும்பகர்னன்விட்ட பதினெட்டுப் பாணங்களையும் இளையபெருமாள் வில்லைவளைத்து நாணேறிட்டு அதில் நாலுபாணங்களைப் பிரயோகித்து அறுத்தெறிந்தார். அந்தப்பாணங்களை அறுத்தமாத்திரத்தில் கும்பகர்னன் தேவர்களையெல்லாம் மடங்கடித்ததும், ஆயிரமுக முள்ளதும், பிரம்மாவினிடத்தில் பெற்றதுமான ஒரு கொடிய அஸ்திரத்தையெடுத்து வில்லிற் பூட்டி, லட்சுமணு! உனக்கு வல்லமையுண்டாஞல் இந்த அஸ்திரத்தை அறுத்துவிடு பார்ப்போமென்று இளையபெருமாள்மீது பிரயோகித்தான். அது பார்த்திசைகளிலெல்லாம் பாண வருஷங்களைப் பெய்கிற மேகத்திற்கொப்பாக அக்கினியைப் பொழிந்துகொண்டு வருகிறதைப்பார்த்து, இளையபெருமாள் அதற்குத்தக்கது இன்னதென்று தெரிந்து ஒரு தேவாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகஞ்செய்ய, அந்தசகஸ்திர முகாஸ்திரத்தை அறுத்துக்கீழே வீழ்த்தினபோது அது இரண்டாயிரந் துண்டுகளாக விழுந்து விட்டதுகள். அதைக் கண்டு உடனே கும்பகர்னன் பன்னிரண்டு பாணங்களை திருமேனியில் அழுந்தும்படி அனுமான்மீதும் வேறே இரண்டுபாணங்களை இளையபெருமாள்மீதும் பிரயோகித்துப் பின்னும் நூறும் ஐம்பதுமாகத்தொடுத்து ஒரு க்ஷணநேரத்திற்குள்ளாக எட்டுத்திக்கையும் ஆகாயம் பூமியையும் பாணமாய் மறைத்துவிட்டான். அந்தப்பாணங்களையெல்லாம் இளையபெருமாள் பாணங்களைக்கொண்டே அறுத்தும்,பின்னும் கும்பகர்னனுடைய தேரை இழுக்கும்படி அங்கங்குப்பூட்டிய குதிரைகள்,யாளிகள், பெரும்பூதங்கள்இதுகளெல்லாவற்றையும் துண்டுதுண்டு கண்டங்கண்டமாய்த் துணித்து, அவன் தேரையும் பொடிப்பொடியாகச் சிதைத்து விட்டார். அப்படி சூரியனைச் சூழ்ந்த பரிவேடமழிந்ததுபோலத் தேர் அழிந்து அந்தத்தேரைச் செலுத்திக் கொண்டுவந்த சாரதிகளும் அழிந்தார்கள். நீர்கொண்ட மேகக்கூட்டத்தினிடத்திலுள்ள பெரிய வானவில்லானது அழிவுற்றதுபோலக் கும்பகர்னன் கையிற்பிடித்திருந்த நெடியவில்லும் இரண்டு துண்டாய் முறிந்து விழுந்தது. ஏறியிருந்த தேரழிந்து பிடித்தவில்லும் முறிந்து கருங்கடலானது பொங்கிவந்ததுபோலத் தோற்றுகின்ற கும்பகர்னன் பூமியில் பாதசாரியாய் நின்று இந்தலக்ஷமணனுடைய உயிரை இதோபானம்பண்ணுகின்றேனென்றுபுறப்பட்டு, தான் இந்த மூன்றுலோகத்தையும் ஜெயித்ததற்கு அடையாளமான விருதாக மூன்று அலகுடனே தன்கையிற்பிடித்திருக்கின்றதும், யமனுக்கு நிகரானதுமான சூலாயுதத்தை யெடுத்தான். தேவர்களெல்லாம் இளையபெருமாள் அப்போது செய்த யுத்தவேடிக்கையைப்பார்த்து இவர் அஸ்திரங்களை எடுத்துத்தொடுத்துப் பிரயோகிக்கின்ற கரவேகத்தை அறிந்துகொ

ள்ளக்கூடாமையால், இந்தத்தேரில் பூட்டியிருந்த பிடரிமயிரினையுடைய கொடிய சிம்மமுதலாகிய கூட்டங்களை அஸ்திரப் பிரயோகஞ்செய்துகொன்ருரோ? அல்லது உயர்ந்த மந்திரோச்சாடனஞ்செய்து ஜயித்துக்கொன்ருரோ ? என்று மனக்களிப் போடு ஆச்சரியப்பட்டுக்கொண் டிருந்தார்கள். அத்தருணத்தில் பூமிபிளக்கும்படியாகப் புறப்பட்ட பிரளயகால வெள்ளம்போலத் தோன்றுகின்ற கும்பகர்னன் தேரில்லாமல் கீழே பராரியாய்நிற்க, நாம் வாகனத்தின்மீதிருந்து சண்டைசெய்கிறது வீரலக்ஷணத்திற்குப் பழியாகுமென்று ஆஞ்சநேயருடைய விசாலமாகிய திருத்தோள்களைவிட்டுத் தாமும் கீழே குதித்துப்போய் இளையபெருமாளும் கும்பகர்னனேடு எதிர்த்துநின்ருர். இந்த இரண்டுபேரும் இப்படி எதிர்த்துநிற்கிற தருணத்தில் கும்பகர்னனுக்கு உதவியாக ராவணனுல் அனுப்பப்பட்ட சேனைகள் முன் அழிந்த சேனைகளிலும் இருமடங்கு அதிகமாய்ச் சமுத்திரத்தைப்போலக் கோஷித்துக்கொண்டு வந்து சுமித்திராதேவியின் இளஞ்சிங்கமாகிய இளையபெருமாளைச் சுற்றிக்கொண்டு கர்ஜ்ஜித்தன. அதைக்கண்டு தேவர்களெல்லாம் திப்பிரமைகொண்டு ஓட்டம்பிடித்தார்கள். இளையபெருமாள் கும்பகர்னனைவிட்டு அவர்கள்பக்கமாய்த்திரும்பி ராக்ஷதசேனைகளெல்லாம் ஏககாலத்தில் தம்மீது பிரயோகித்த ஆயுதங்களை அதிகசாதுரிய சக்தியினுல் துண்டுதுண்டாய் அறுத்தெறிந்து, மிகுந்தகோபத்துடன் அவர்களையெல்லாம் ஒருபக்கமாகச் செல்லவிட்டுக் கருங்கடல் போன்ற அந்தராக்ஷதசேனைகளுக்குள்ளே நுழைந்து கொடுங்கண்களைப்பெற்ற அவர்களுடைய அன்றலர்ந்த முருக்கம்பூவையொத்த செம்பட்டமயிர்த்தலைகளையறுத்து மலைமலையாகக்குவித்து அணைகட்டிச் செம்பையுருக்கினுற்போலொத்த ரத்தவெள்ள ஆறுகளோடவும், அந்தப்பிரவாகத்தினுல் அத்தலைகள் கடலிற்போய் விழும்படியாகவுஞ்செய்தார். யானைகளுடைய துதிக்கைகளும், குதிரைகளின் கால்களும், காற்றைப்போலாடுகின்ற தேர்களின்சக்கரங்களும், ராக்ஷதர்களுடைய தலைகளும் அறுந்து அவர்கள் தேகத்தில் ஒழுகின்ற ரத்தவெள்ளமானது ரணக்களமுழுதிலுஞ் சுழியிட்டுக்கொண்டோடி ராக்ஷதர்களுடைய பிணக்குன்றுகள் நான்குபக்கங்களிலும் தடுக்கின்றபடியால் அதுகளைத்தாண்டிப் போகிறதற்குக்கூடாமல் தேங்கி நின்றுவிட்டது. ராக்ஷதர்களுக்கு வெற்றியை யுண்டாக்கின வாளாயுதம் - எழுவாயுதம் - தண்டாயுதம்- வேலாயுதம்-அஸ்திரங்கள் - மழுவாயுதம்- வஜ்ஜிராயுதம் - இவை முதலிய இன்னும் அநேக ஆயுதங்களை லக்ஷமணர் எய்த பாணங்கள் ரணக்களமுழுவதும் சுற்றிச் சுற்றியோடித் துண்டிக்கிறபடியினுல் அதுகள் கூட்டங்கூட்டமாய் முறிந்து துண்டு துண்டுகளாய்க் கீழேவிழுந்துவிட்டதுகள் ராக்ஷதர்கள் பூண்டிருந்த குண்டலங்களும் கிரீடங்களும், முத்தாரங்களும் புஷ்பமாலைகளும், வீரத்தண்டைகளும் தோள்வளைகளும், கைக்கடகங்களும் ஆகிய இவை முதலிய ஆபரணங்களையெல்லாம், அவைகளை அணிந்திருந்த அவயவங்களுடனே கண்ட துண்டங்களாகும்படிப் பாணங்கள் சேதித்துவிட்டபடியால் அவைபூமியில்விழுந்து சூரியமண்டலத்துக்கு எதிர்த்தட்டாகப்பிரகாசித்துக்கொண்டிருந்தன. விசாலமாகிய குண்டலங்களையும், சாமரைகளையும், நீண்டவிருதுக்கொடிகளையும், அம்பூட்டியெய்யும் விற்களையும், கேடகங்களையும், மயிற்பிச்சங்களையும் பாணங்கள் வாரிக்கொண்டுபோனதுகள். ரத்தவெள்ள ஆறுகளில் பேய்க்கூட்டங்கள் வரிசைவரிசையாய் நீந்திக்கொண்டுவந்து, கரைகளில் கும்பல்கும்பலாய் நின்றிருந்ததுகள். இந்தப்பிரகாரமாக யுத்தம் நடந்துவருகிற சமயத்தில் நீண்ட வக்கிரதந்தங்களை யுடையவனுன கும்பகர்னன் வேருெரு பக்கத்தில் நின்று அந்த ரணரங்கத்திலே சூரியகுமாரரான சுக்ரீவமகாராஜருடனே யுத்தஞ் செய்துக்கொண்டிருந்தான். அதைத்தேவர்கள்பார்க்க கொடிய யுத்தமாயிருக்கிறதென்று எல்லாரும் கூட்டமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சஹஸ்திரகோடி கிரணங்களையுடைய சூரியபுத்திரரான சுக்கிரீவமகாராஜர் தீப்பொறி பறக்கின்ற கண்களையுடையவராகவும், புகையெழும்புகிற வாயையுடையவராகவும் மிகுந்த கோபமுற்று ஆகாயத்தையளாவிய ஒரு பெரிய மலையைப் பறித்து இத்தோடே கும்பகர்னனுடைய பலம் பொருந்திய தோள்கள் அற்றுப்

போய்விட்டனவென்று யாவரும் நினைக்கும்படியாகவீசியெறிந்தார். எறிந்தபோது அந்த மலையிலிருந்து பூமியிலிறங்கிவந்த செம்பொன் மலைபோலிருக்கின்ற மதத்தயானைகளும், ராக்ஷதசேனையிலுள்ள யுத்தபழக்கமுள்ள யானைகளும், ஒன்றோடொன்று சண்டை செய்தனுகள். அந்தப்பெரியமலையிலிருந்து புறப்பட்ட மலைப்பாம்புகள் ராக்ஷதர்களுடைய கூட்டங்கள் சிதறுண்டு நடுங்கும்படி அவர்களைக் கவ்விப்பிடித்தன. யானைகளும் பெரும்பாம்புகளும் வசித்திருந்த ஒரு பெரியமலையை எடுத்தெறிவாரானால், இவரால் பெயர்த்து எறியக்கூடாத ஒரு பெரிய மலையும் உலகத்திலுண்டோ? இப்படிப்பட்ட பராக்கிரமமும் சௌரியமும் உள்ளவரால் பறித்தெறிந்த அத்தன்மையான பெரியமலையைக் கும்பகர்னன் தனது உள்ளங்கையினால் பந்தைப் பிடிக்கிறதுபோலப் பிடித்தான். அப்போது இராக்ஷதவீரர்களெல்லாம் அந்தக்கும்பகர்னனை வாழ்த்தினார்கள். அவன் அந்தமலையை ஒருகையினால் பிடித்துத் தனது மிகுந்த பலத்தினால் நீறாய்நொறுங்கிப்போகும்படி பிசைந்து, ஏ குரங்கே! நீ மிகுந்த பலங்கொண்டு பேர்த்தெடுத்து எறிந்தமலையை நீயே யெடுத்துக்கொள்ளென்று சுக்கிரீவமகாராஜருக்கு எதிராகவே கரத்தில் தூக்கினான். அவனுடைய பலத்தைக்கண்டு தேவர்கள் திடுக்கிட்டு நடுங்கினார்கள். சுக்ரீவர் இன்னமொரு பெரியமலையைத் தேடிக்கொண்டுவருவோமென்று நினைத்துக்கொண்டு இருக்கின்ற சமயத்தில் கும்பகர்னன் அதிகசந்தோஷத்துடனே நிறைவான தவசிரேஷ்டர்களுடையசத்தியவாக்கைப்போலத் தவறிப்போகாத வல்லமையுள்ளதாய்த்தன்கையில் பிடித்திருந்த சூலாயுதத்தை எடுத்து, அந்தக்குரங்கைக் கொல்லக்கடவாயென்று அபிமந்திரித்துச் சுக்ரீவமகாராஜர்பேரில் எறிந்தான். அந்தச்சூலாயுதமானது எட்டுத்திக்கிலும் புகைபரப்பிச் சீறிக்கொண்டு வருகிறதைக் கண்டவர்களெல்லாம், ஐயோ! இன்றைக்குச் சுக்ரீவன் இறந்துபோனார் ; இறந்துபோனாரென்று பெருங்குரலிட்டு அழுது புலம்புகிறதைத் தருமபரிபாலகரான ஆஞ்சநேயர்கேட்டு அதைச்சும்மாய் போகவிடுவாரோ ? குபீரென்றுபாய்ந்து ஆகாயமார்க்கமாய்ப்போகின்ற அந்தச்சூலாயுதத்தை எட்டிப்பிடித்து இரண்டுதுண்டாக முறித்தெறிந்துவிட்டார். அப்படிமுறித்த சூலத்தின் ஓசையானது சீதாபிராட்டியாருடைய திருமணக்காலத்தில் தமது திருவடியைப்பற்றிச் சகல சேதனர்களையும் நித்திய விபூதியாகிய பரமபதத்தை யடையும்படிச் செய்கிறவரான சாக்ஷாத் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர் தத்துவ நிச்சய ஞானபூரணரான ஸ்ரீசாம்பசிவ மூர்த்தியினுடைய வில்லை ஒடித்தபோது உண்டான பெரிய ஓசையைப்போலப் பூமி சுவர்க்கமெல்லாம்செவிடுபடும்படியாக ஒலித்தது. கும்பகர்னன் அந்த ஆஞ்சநேயருடைய வல்லமையைக் கண் முன்னாகப்பார்த்து, ஆஹா! சபாஷ்! உன்னுடைய வல்லமையை நினைக்கவும் சொல்லவும் அடங்கினதல்ல ; ஒருவராலும் முடியாத காரியத்தை முடிக்கவல்லவன்; எல்லாலோகங்களிலும் பார்த்தால் நீ ஒருவன் தானிருக்கின்றாய் ; இப்போது நீ செய்த இந்தச்செய்கையினாலே உனக்குச் சமானம் யாரிருக்கின்றார்கள் ? என்னுடன் யுத்தஞ்செய்ய விருப்பமுண்டானால் நீ எப்படிச் சொல்லுகிறாயோ அப்படிப்பட்ட யுத்தத்தைச் செய்கின்றேன்; சண்டைசெய்யவாவென்று கும்பகர்னன் கூப்பிட்டபோது, முன்னால் இனி உன்னோடு சண்டை செய்கிற தில்லையென்று சபதஞ்செய்துவிட்டு இப்போது சண்டைக்கு வருகிறேனென்று சொல்லுவது அசத்தியமாகுமல்லவா ? ஆகையால் அப்படிச்செய்யத் தகாதென்று சத்தியவந்தரான அனுமார்சொல்லித் திரும்பிப்போய்விட்டார். பிறகு கும்பகர்னன் நிராயுதனாய் ரணக்களத்தை விட்டுப்போகாமல் ஒருபுறத்தில் நிற்கக்கண்டு, சுக்ரீவமகாராஜர் அவனுடனே மல்யுத்தஞ்செய்ய இசைந்து அவனை இடித்துக் காலால் உதைத்துக் கைகளாலோங்கிக்குத்தினார். கும்பகர்னன் நீ நல்லவீரன் தான். ஆயினும் இன்றையோடு உன்னுடைய கர்வமெல்லாம் ஒடுங்கிப்போகிறதென்று உலையிலுருகுகின்ற செம்பைப்போலச் சிவந்த கண்களையுடையவனாய்க் கோபங்கொண்டு, சுக்ரீவமகாராஜரை நெருக்கிப்பிடித்து அவரைத் தப்பிப்போகாதபடி கட்டி மார்புடனேசேர்த்து நெருக்கினான். சுக்ரீவமகாராஜர் அவன் கையை விடுவித்துக்கொண்டு

பின்பு ஒருவரையொருவர் பற்றுவதற்காக இடம்வலமாய் கிறுகிறுவென்று சாரிகை சுற்றினார்கள். சுற்றுகிறவேகத்தினால் இவ் விருவரையும் இன்னாரின்னாரென்று தேவர்களும் காணமாட்டாமல் போனார்கள். இந்தப்பிரகாரமாக வெகுநேரம் ஒருவர் கைக் கொருவர் அகப்படாமல் தப்பித்திரிந்து, பின்பு ஒருவரையொருவர் நெருங்கிப்புஜங்களால் தாக்கியும், கைகளால் குத்தியும், கால்களால் உதைத்தும், தலைகளால்மோதியும், முஷ்டியாலிடித்தும், அநேகவகையான யுத்தங்களைச்செய்து, கண்களில் புகையெழும்பித் திகுதிகென்று நெருப்புப்பற்றி எரியும்போது அந்தத்தீயால் இடிகளுந் தீய்ந்துபோய் விட்டதுகள். சற்றுநேரமாவது ஒருவரையொருவர்விட்டு நீங்கிச்சேர்ந்து நிற்காமல், கண்களில் ரத்தம் தெறிக்கும்படி ஒருவர்மீதொருவர் சீறி, ஒருவரையொருவர்பற்றி முறைமுறையாய் மல்யுத்தஞ்செய்தார்கள். அப்போது கும்பகர்னன் சுக்ரீவமகாராஜரைச் சகிக்கக்கூடாத விதமாய்த் தனது நீண்ட கைகளினால் கட்டியிறுக்கினான். அப்போது சுக்ரீவமகாராஜர் மயங்கி மனஞ்சோர்ந்து மூர்ச்சையடைந்தார். அத்தருணத்தில் கும்பகர்னன் இன்றையோடு சண்டை முடிந்துபோகவேண்டுமானால் இந்தமாளாத சேனையைச் சிதறடிக்கத்தக்க ஓர் உயர்ந்த உபாயம் தேடவேண்டும். அதற்கு இந்தக்குரங்கைக் கொண்டுபோய் விடுவதிலும் வேறொருபாயமில்லையென்று சுக்ரீவரை மார்பிலணைத்துக்கொண்டு லங்கையைநோக்கிப் போகத்தொடங்கினான்.

அப்போது வேடன் தாயைவருத்தப்படுத்திப்பிடித்துக்கொண்டுபோகும்போது குஞ்சுகள் அலறிக்கூக்குர லிடுவதுபோல மனங்கலங்கிக் கையோடு கையையறைந்துகொண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டும் வானரக்கூட்டங்களெல்லாம் ஓவென்றழுதார்கள். ராக்ஷதர்களும், தங்களுக்கு ஜெயமுண்டாயிற்றென்று பெருங்கோஷ மிட்டார்கள். தேவர்களெல்லாம் நாவறண்டு நெஞ்சம் திடுக்கிட்டார்கள். வானரவீரர்களெல்லாம் மனமுருகி, ஐயோ! நம்முடைய ராஜா கண்கள் மூடிக்கொண்டாரோ? வலியிழந்து உயிரும் அடங்கிவிட்டாரோ? என்கிற அங்கலாய்ப் புடையவர்களானார்கள். கும்பகர்னன் விசாலமாகிய ஆகாயத்தினிடமாய் வருகின்ற ராகுவென்னும் கரும்பாம்பைப்போலவும், சூரியகுமார னென்று சொல்லப்படுகின்ற சுக்ரீவமகாராஜா அந்தக்கரும்பாம்பினால் விழுங்கப்பட்டு ஒளிமழுங்கிய சந்திரனைப்போலவும் தோன்றினார்கள். மேலும் அந்தச்சுக்ரீவமகாராஜர் கும்பகர்னனுடைய கருநிற உடலுக்குள் மறைந்துகொஞ்சம் பிரகாசித்தும், மற்றபாகம் மறைந்தும், மேகத்துக்குள் மறைந்துகாணப்படுகின்றதுமான சந்திரனுக்கு ஒப்பாக விருந்தார். பின் தொடர்ந்து செல்கின்ற வானரவீரர்களில் கருங்கடலைத் தாண்டின நீண்ட அழகிய திருவடிகளையுடைய ஆஞ்சநேயர் உன்னோடு நான் எதிர்த்துச்சண்டைசெய்வ தில்லையென்று முன்னால் அந்தக் கும்பகர்னனோடு சபதஞ்செய்ததை நினைத்து அவனை எதிர்க்கக்கூடாமல், ஐயோ! இனி என்னசெய்யப்போகிறோமென்று தமது கையைப்பிசைந்துகொண்டு கும்பகர்னன் பிறகேபோனார். சிலவானரங்கள் சஹஸ்திர திருநாமங்களை யுடையவரான ஸ்ரீராமபத்திரருடைய சந்நிதானத்திற்கோடிப்போய், சுவாமி! சூரியகுமாரனாகிய சுக்ரீவரைக் கும்பகர்னன் கையினாலிறுக்கிக் கட்டின கட்டுடனே கொண்டுபோய் விடுகிறானே; இனி எங்களுக்குத் தலைவரென்று யாரை அழைக்கப்போகிறோமென்று அழுது சொன்னார்கள். இந்தவார்த்தையைக்கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீராமர் வடவாமுகாக்கினியிலும் மிகுந்த சிவப்பான கண்களையுடையவராய், உலகங்களை யெல்லாம் சுட்டெரிக்கத்தக்க அஸ்திரங்களையும் வில்லையும் கையிலெடுத்துக்கொண்டு, ஒரு க்ஷணநேரத்திற்குள்ளாக இலங்கைக்கோட்டைவாயிலில் வந்துசேர்ந்து, ஒருவேளை என்னருமைத் துணைவனான சுக்ரீவனைஎன்னுயிரைப் பிரித்துக்கொண்டு போகிறதுபோல ஒருவராலும் பேதிக்கக்கூடாதஅரணிப்பையுடைய இந்தலங்கைக்குள்கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டால் வெகுகெடுதியுண்டாய்விடும். ஆகையால் அஸ்திரவருஷம்பொழிந்து சரக்கூடங்கட்டி எல்லா வழிகளையும் அடைத்துவிட வேண்டுமென்று ஆகாயமார்க்கங்களையெல்லாம் பாணப்பந்தலிட்டு மூடிவிட்டார். அப்போது பாணங்களினால் அஷ்டதிக்குகளும் மறை

ந்ததுகள். சூரியன் பிரகாசிக்கவில்லை. ஆகாயமுழுவதையும் மேகங்கள்மறைத்ததுபோலப் பாணப்பந்தல் மறைத்ததனால் கிரஹ நக்ஷத்திரங்களும் நடக்கமாட்டாமல் நின்றுவிட்டதுகள். அப்போது மனோவேகத்திலும் அதிவேகமாய் ஆகாயமார்க்கத்தில் போகின்ற கும்பகர்னன் சுற்றிலும் பாண மதி லிட்டிருக்கின்றதனால் தன்னினைவை முடிக்கிறதற்கு முடியாமல் வழிதேடித் திரியும்போது, திருமுகமும், திருவாயும், திருக்கண்களும், திருக்கைகளும், திருவடிகளும் ஆகிய தாமரை மலர்க்காடுபூத்த ஸ்வர்ன மயமான கோதண்டமென்னும் இந்திர தனுசுடன் மண்டலமாக மின்னலை வீசிக்கொண்டுவந்த மேகத்துக்குச் சமானமாய்ப் பிரகாசிக்கின்ற ஸ்ரீராமமூர்த்தியைக் கண்டு வாயை மடித்துக்கொண்டு, குபுகுபென்று புகையெழும்பவும், இதழ்கள் துடிக்கவும், புருவங்கள் நெறித்துநிற்கவும், கண்களில் நெருப்புப்பொறிபறக்கவும் கர்ஜ்ஜித்தான். அந்த கர்ஜ்ஜனையைச் சகிக்கமாட்டாமல் மலைகளெல்லாம் நெக்குவிட்டுப் போனதுகள். இந்தப்பிரகாரமாகக் கும்பகர்னன் ஸ்ரீராமரைப்பார்த்து, ஓ ராமா! நீ அந்தக் கவந்தனைப்போலவும், வலியிழந்து செடிகளிலுள்ள புஷ்பங்களைப்பறித்து உண்டு உயிர்பிழைத்திருந்த வாலியைப்போலவும் நினைத்து என்னோடு சண்டைசெய்ய வந்தாயோ? அல்லது இந்தக்குரங்கினுடைய உயிரைக் காக்கவந்தாயோ? என்று கேட்டுப்பின்னுஞ் சொல்லுகின்றான். உன் தம்பியாகிய லக்ஷ்மணனைக் கோபிக்கவில்லை. அவனுக்கு வாகனமாய்இருந்துதும்பிபோற்பறந்தவனை அந்தக் குரங்கையும் கோபிக்கவில்லை. அபஜயப் பட்டுப்போன வாலியினுடைய பிள்ளையையுங் கோபிக்கவில்லை. நான் யுத்தகளத்திலேவந்து உன்னுடனே சண்டைசெய்ய நினைத்து, அவர்களுடன் போர்செய்வது நமக்கு அழகல்லவென்று உன்னை அந்த ரணக்களமுழுதும் தேடினேன். உன் சேனையெல்லாம் என்னைக் கண்டு பயந்து ஓடிவிட்டதுகள். உன் தம்பியும் என்னைப் பார்த்து ஒருபக்கமாயொதுங்கிப் போனான். அனுமானும் என்னோடு யுத்தஞ்செய்ய மாட்டேனென்று போய்விட்டான். இவனொருவன் மாத்திரம் அறிவில்லாமையால், கர்வித்துப் போர்செய்ய வந்தான். ஆதலால் இவனை மாத்திரம் லேசாயெடுத்துக்கொண்டு வந்துவிட்டேன். இவனைக் காக்கவேண்டுமென்றுவந்தாயே யானால் உன்னைக் காணும்படி என் அதிருஷ்டமே என் கண்முன் கொண்டுவந்து விட்டது. உன்னுடனே நான் செய்யவேண்டிய யுத்த மாதிரிகளையெல்லாம் செய்து, என் தமையனுக்கு உண்டாயிருக்கின்ற மோக விச்சையின் தடையையும் நீக்கிவிடுகிறேன். நீ நல்ல வீரனானால், தேவர்கள் முன்னிலையில் இந்த அற்பக்குரங்கை நான் கட்டியிருக்கிற என்கைப்பிணி உன் வில்வல்லமையினால் அவிழ்த்துவிடு. அப்படி இவனை விடுவிப்பையே யானால், சீதையும் சிறைவிட்டு வந்தவளே யாகுமென்று சொன்னான். இப்படிசொன்ன கும்பகர்னனை ஸ்ரீராமர் நகைத்து, என்னுடைய உயிர்போன்ற துணைவனை சுக்ரீவனைப் பிணித்துக்கொண்டிருக்கின்ற உன்னுடைய மலையினும் உயர்ந்த தோள்களை அறுத்துத் தள்ளாவிட்டால் உனக்கு நான் தோற்றவனே. இனி வில்லும் பிடிக்கிறதில்லையென்று சொன்னார். பிறகு கும்பகர்னன் அஸ்திரங்களினாலாகிய பலம்பொருந்திய அந்த மதில்களை முட்டிவிட்டுப் போகும்படிச் செய்கிறதற்கு யத்தனப்பட்டான். அப்படியத்தனப் படவே மழுங்காத கூர்மையுள்ளவைகளான இரண்டு பாணங்களைத் தொடுத்துக் கும்பகர்னனுடைய விசாலமான நெற்றியைப் பிளந்தார். அதனால் வழிந்த ரத்தவெள்ளம் அவன் தேகமுழுமையும் வழிந்து செந்நிறமாய்க் காணப்படவும், நெற்றியில் ராமபாணமானது பிரகாசிக்கவும், அதனால் கிரணபூரணனான சூரியனுதயமாவதற்குமுன்னதாக உதிக்கின்ற அருணோதயம்போலக் கும்பகர்னன் தோன்றினான். மலையிலருவியாறொழுகுவதுபோலக் கொப்பளித்துக் குபுகுபுவென்று வழிகின்ற ரத்தவெள்ளமானது சுக்ரீவ மகாராஜருடைய முகத்தை மூடிக்கொண்ட மாத்திரத்தில் தமது சோகம் நீங்கி, நித்திரை நீங்கி யெழுந்தவரைப்போல உணர்வடைந்து, கும்பகர்னனுடைய நெற்றியில் அதிகப் பிரகாசத்துடன் ஜொலிக்கின்ற பாணத்தைப் பார்த்து, இது ஸ்ரீராமபாணமென்றுயூகித்தறிந்து அஞ்சலித்தகையராய்ச் சுற்றிப்

பார்த்தான். அப்போது ஞானபூரணர்களான பிர்ம்ம ருத்திரேந்திராதிகளுக்கெல்லாம் காரணபூதராயிருக்கின்ற ஸ்ரீராமமூர்த்தி நிற்கிறதைக் கண்டு, அதிக மானமும் வெட்கமு மடைந்து, கும்பகர்னனுடைய நாசியையுஞ் செவியையும் வேருடன் பறித்துக்கொண்டு, குபீரென்று பாய்ந்து தமது வானரசேனையை வந்து அடைந்தார். அப்போது வானரர்களெல்லாம் மங்களம் பாடினார்கள். சப்தமேகங்களும் கர்ஜ்ஜித்ததுகள். யாவரும் தங்கள்தங்கள் பொருள்களைத் தானங்கொடுத்துக் களித்து ஆனந்தக்கூச்சலிட்டார்கள். மீன்களால் நிறைந்த சமுத்திரம், மற்ற வஸ்துக்களும் பிரதித்தொனி யுண்டாகும்படி கோஷித்ததுகள். தேவர்களும், தர்மதேவதையும் ஆசீர்வாதஞ்சொல்லிச் சப்தித்தார்கள். மகாகோபியான கும்பகர்னனுடைய கையிலிருந்து வெளிப்பட்ட சுக்ரீவரைச் சந்தோஷத்துடன் வந்துசேரப் பார்த்த ஸ்ரீகோதண்டபாணியாகிய சக்கரவர்த்தித் திருக்குமாரரும், தம்முடைய தேவியாகிய ஜானகிப் பிராட்டியானவள், லங்கையின் சிறையிலிருந்து வந்துவிட்டாற்போல ஆனந்தித்தார். ஸ்ரீராமபாணமானது கும்பகர்னனுடைய நெற்றியைப் பிளந்து, மார்பிலுருவிப் போனபடியால், கும்பகர்னன் மூர்ச்சையடைந்து சித்திரப்பிரதிமை போலிருந்துவிட்டான். அப்போது அவனுடைய செவியையும் மூக்கையும் கையிற் பறித்துக் கொண்டுபோன சுக்கிரீவமகாராஜர் வானரசேனைகளிற் போய்ச் சேர்ந்தார். அப்படி போகாமல் அவனுடைய கைக்கட்டுக்குள்ளேதானே தங்கியுமிருப்பாரோ? சுக்ரீவர் தங்கியிராமல் போனவுடனே கும்பகர்னன் மூர்ச்சைதெளிந்து தன்கையிலிருந்த வானராதிபதி போய்விட்டா னென்கிறதையும், தன்னுடைய பெரிய மலையையொத்த மூக்கும், செவியும் அறுந்து வெட்டவெளியாயிருக்கிறதையும், தேகமெல்லாம் ரத்தவெள்ளம் மூடிவழிகிறதையும் பார்த்துச் சிவந்த பதுமராக மலையின்மேல் மழைபெய்யும்போது தாரைதாரையாக நான்கு பக்கங்களிலும் ஜலங்கோத்துக்கொண்டு அருவியாறுக ளிழந்தாற்போலத் தேகமெல்லாம்ரத்த மொழுகாநிற்க இவ்வளவென்று அளவு செய்யப்படாத துக்காக்கிராந்தனாய் தான் சண்டைக்கு வந்து எல்லாவிதத்தாலும் பேடித்தன்மையே யடைந்ததினால் மனம் மிகவும்நொந்து, மூக்கும் காதுகளும் புண்பட்டு எப்படி ரத்தநீர் சொரிகின்றதுகளோ, அப்படியே ரத்தநீரைச் சொரிகின்ற குழிந்தகண்களினால் தன்னைப் பரிகாசஞ்செய்து போகின்ற தேவர்கள் முகத்தைப் பார்ப்பான். அறுந்துபோன தன்னுடைய மூக்கை தடவிப்பார்ப்பான். தனக்குமுன் கழிந்துபோன நாள்களிலுண்டான சுகங்களையும் வெற்றியையும் நினைப்பான். பிறகு பூமியைப் பார்த்துச் சற்றுநேரம் ஆலோசித்து சீ! சீ! நமக்கென்னஇப்படிப்பட்ட அவமானம் வந்ததேயென்று மனக்கொதிப்படைவான். இந்தப்பிரகாரமாகக் கும்பகர்னன் பெருங்கோபங்கொண்டு, என்முகத்தை நான் கண்ணாடியில்பார்க்கிறதற்கு முன்னதாக இந்த ஸ்ரீராமனுடைய முகமும் இப்படியே மூக்கும் காதும் அறுப்புண்ணப் பார்க்கிறேன். இது சத்தியமென்று சபதஞ்செய்துகொண்டு பொன் கட்டிய கேடகத்தை இடதுகையிற் பிடித்து, யுத்தத்தில் வெற்றிப் பிரதாபத்தைப் பெறச்செய்வதாகிய வாளாயுதத்தை வலது கையிலெடுத்தான். ஆயிரம் பேய்கள் சுமந்துகொண்டுவந்து கொடுத்த அந்தக்கேடகத்துடனும் இரண்டாயிரம் பேய்கள் தூக்கிக் கொண்டுவந்து கொடுத்த சமானமில்லாத வஜ்ஜிர வாளாயுதத்துடனும் புறப்பட்டு, இடதுகையிலுள்ள அந்தக் கேடகத்தை ஒருசுற்றுச் சுற்றினான். அப்போது அதனுடைய காந்தியினாலும், வேகத்தினாலும் ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களெல்லாம் ஒளிமழுங்கி நிலைதளர்ந்துவிட்டதுகள். தேவர்களெல்லாரும் குடர்குழம்பிப்போனார்கள். அந்தக் கும்பகர்னன் கோபித்தபோது அவனுடைய நாசியினின்றும் செவியிலிருந்தும் ரத்தங்கள் தாரை தாரையாய்க் குபுகுபுவென்று வடிந்ததுகள். வாளாயுதத்தை ஒரு குலுக்குக் குலுக்கி கிறுகிறுவென்று ஒருசுழல்சுழற்றினான். அதனால் நக்ஷத்திரங்களெல்லாம் பலபலவென்று பூமியிலுதிர்ந்து விழுவது போலக் காணப்பட்டதுகள். பூமியும் அதைச்சுமந்து கொண்டிருக்கின்ற ஆதிசேஷனுடைய உச்சியும் நடுங்கும்படியாகப் பெருங்காஜ்ஜனைசெய்து, ஆயிரங்கிரணங்

களோடுங்கூடிய சூரியன் சூழ்ந்துவருகிற மேருமலைக்குச் சமானமான அந்தக்கும்ப கர்னன் தன் கேடகத்தை வீசியெறிந்தான். அப்போது அதிலிருந்து புறப்பட்ட காற்றானது வானரர்களினுடைய பெருங் கூட்டங்களை யொருமிக்க வாரிக்கொண்டுபோய் அஷ்ட திக்குகளிலும் வீசியெறிந்தது. மேலும் அங்குள்ள பொருள்களெல்லாவற்றையும் வாரிக்கொண்டுபோய் எறிந்ததினால் கடல்களையும் மேடுசெய்து விட்டோடினது. அப்படிவீசியெறிந்த கேடகத்தை ஆயிரம் திருநாமங்களையுடைய ஸ்ரீராமர் பார்த்துக்கொண்டே யிருந்தார். பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவருக்குத் தெரியாமல் கும்பகர்னன் எங்கேயென்று கை நீட்டினான். அப்படியவன் கைநீட்டிக் கேட்கிறதற்குள் ஒரு க்ஷணநேரத்தில் இரண்டாயிரம் பேய்களால் சுமந்து கொண்டு வந்துகொடுத்த வேறொரு கேடகத்தைக் கையில் பிடித்துக்கொண்டான். கையிலுள்ள கேடகத்தின் காற்றினால் வாரியெறியுண்டும், காலினால் மிதித்துத் துவைக்கப் பட்டும், பிரகாசம் பொருந்திய வாளாயுதமாகிய எமனால் துணிபட்டும், இன்னும் பலவகையாலுஞ் சின்னபின்னமாய்ச் சண்டமாருதக் காற்றினால், அலைக்கப்பட்ட கடலுக்கொப்பாகச் சிதறுண்டு வானரப் படைகளெல்லாம் மாய்ந்து போய்விட்டதுகள். இந்தப்படி கும்பகர்னன் மேலிட்டு வந்ததும், அவனுக்கு எதிர்பட்ட வானரங்களெல்லாம் நசுங்கிச் சின்னபின்னப் பட்டதும், அந்த வானரங்களினுடைய தேகத்திலிருந்து ஒழுகிற ரத்தவெள்ளங்கள் பூமியில் ஆறாகவடிந்து ஆதிசேஷனுச்சியிலும் சேறுபட்டதும், ஆகிய இந்தச் செய்கைகளெல்லாம் ஒரு க்ஷணநேரத்திற்குள்ளே முடிந்துவிட்டது. இதைக் கண்ட பிர்ம்மாவினுடைய அம்சபூதரான சாம்பவர் சுவாமியைப் பார்த்து, இதைக் காட்டிலும் வேறேயொரு இக்கட்டு மினி வரப்போகிறதில்லை. இப்போது இவனை நீர் தடுக்காதிருப்பீரானால் வானரசேனைகளையெல்லாம் தேவரீரே யொடுக்கி ராக்ஷதர்களை யெல்லாம் பலங்கொள்ளும்படிச் செய்தீரென்று ஒரு நிந்தனையான பெயர் சம்பவிக்கும். இப்படித் தேவரீர் வேடிக்கை பார்த்துக்கொண் டிருக்கலாகாதென்று முடிக்கினார். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி வானரசேனைகள் அழிந்ததையும், கும்பகர்னனுடைய அதிவீரியப் பிரதாபவெற்றியையும், அவன் சக்தியையும் நினைத்து, இனிநாம் சும்மா இருக்கிறது தகாதென்று திருவுளங்கொண்டு, இன்றைக்கு மறைந்து கொண்டிருந்த எமனை இவன்கண்முன்னாக நிறுத்தி இவனைக் கொல்லுகிறேனென்று சபதம்பண்ணிக்கொண்டு அந்தக் கும்பகர்னனுக்கு எதிராகவந்துநின்று ஆறிடிகளுடனே யேழாமிடியு முண்டோ வென்னும்படி அதிக வேகமுள்ளவைகளான பாணங்களை ஸ்ரீராமர் பிரயோகித்த மாத்திரத்தில் அவைகளை யெல்லாம் அதிநுட்ப வித்தியாவானான கும்பகர்னன் பருந்து உதிர்க்கின்ற சிறகுகளைப்போல ஆகாயத்திலேயே பறந்துபோகும்படித் தன்னுடைய வாளினால் நொறுக்கிவிட்டான். புருஷோத்தமரான ஸ்ரீராமபத்திரர் பின்னும் கோடைகாலச் சூரியனைப்போல அதிகூர்மையான பாணங்களை அவன்மீது பிரயோகித்தார். அவைகளையும் தன் கைக்கேடகத்தினாலேயே சிந்திச் சிதறிப்போகும்படி தட்டிவிட்டான். அப்போது தசரதகுமாரரான ஸ்ரீரகுநந்தனர் புன்சிரிப்புகொண்டு வேறேயொரு அஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணினார். அது கருடபகவானைப்போல வந்து, கும்பகர்னன் கையில் வெகுகொடுமையுடன் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற அதிகபலமுள்ள வாளாயுதமாகிய சர்ப்பத்தை துண்டு துண்டாய்ப் பொடித்தெறிந்துவிட்டது. அதைக்கண்டு தேவர்களெல்லாம் சந்தோஷகோஷமிட்டார்கள். அந்த வாளாயுத முறிந்தும் முறியவில்லையென்று நினைக்கும்படி வேறொரு வாளாயுதத்தை அதிவேகமாய் எடுத்துக்கொண்டு, எல்லாரையும் முடித்துவிட்டேன், முடித்துவிட்டேனென்று சொல்லிக்கொண்டும், வடவாமுகாக்கினியும் அவியும்படியாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டும், ஸ்ரீராமருக்கு முன்பாகவந்து நின்றான். புருஷசிம்ஹமாகிய ஸ்ரீராமபிரானானவர் அந்த வாளாயுதத்தையும் துணித்து, பொன்மயமான கேடகத்தையும் அழித்து, அவன் மார்பில் அணிந்திருக்கின்ற நல்ல வலுவுள்ள கவசத்தையும், மின்னலைப்போல ஒளியைவீசிச் சத்துருக்களாகிய சர்ப்பங்களுக்

குப்பயங்கரத்தையுண்டாக்கத்தக்க கொடிய பாணங்களால் அறுத்து நீக்கினார். அது நடக்கின்ற சமயத்தில் ஆகாயமார்க்கத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த தேவேந்திரனுடனே தேவர்களெல்லாம் ஓட்டமெடுக்கவும், சமுத்திரமுந் தத்தளித்துத் தன்னிலைகெடவும், ராவணனால் உதவியாக அனுப்பப்பட்ட ராக்ஷதப் பெருஞ்சேனைகள் வந்தன. அப்போது ஸ்ரீராமரும் இந்தக் கும்பகர்னனைக் கொல்வதற்குத் தகுந்தசெய்கை இதுவாமென்று ஆலோசித்துக்கொண்டு வில்லை ஊன்றி நின்றார். பல தீவினைகள் பரவினகாலத்தில் ஒரு நல்வினையானது பெருகிவந்தது போல ராக்ஷதசேனைகளுக்கு முன்னே நடந்து ரணக்களத்தில் ஸ்ரீபகவான் விளங்கினார். நான்குபக்கங்களிலும் குதிரைப்படைகளும், தேர்ப்படைகளும், பதாதிப்படைகளும், யானைப்படைகளும், துணையாக வந்து சூழ்ந்ததைக்கண்டு, ஆச்சரியசேஷ்டரான ஸ்ரீராமர் அடாகும்பகர்ன! சீக்கிரமாக நீங்கள் யாவரும் அழிந்துபோகும் படியாக வரக்கடவாயென்று கூப்பிட்டார். நெற்றிப்பட்டத்தையுடைய மதயானைகளும், குதிரைகளும், குதிரைகளாலும் யானைகளாலும் இழுக்கப்படுகின்ற சக்கரங்கள் பூட்டியதேர்களும் நிறைந்திருக்கின்ற பதினன்குகோடி ராக்ஷதசேனைகளும் போர் செய்யத் தொடங்கினதுகள். மகாப்பிரளய கால சம்மாரமூர்த்தியான ஸ்ரீராமரும் அவர்களுக்குஎதிரேவிளங்கினார். அப்போது கும்பகர்னன் எமனையும், அவனுக்குரிய காலத்தையும், அதற்குவேண்டிய பாபங்களையும், அவைகளுக்குப் பிறப்பிடமான ராக்ஷதப்படைகளையும் அணிவகுத்து நிறுத்தி; இந்தப் பூலோகத்தவர்களையும், பாதாளலோகத்தவர்களையும், ஸ்வர்க்கலோகத்தவர்களையும் தன் நுனியினாலே தொட்டு நக்கிவிடும்படியான கொடிய ஒரு சூலாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தகளத்தில் எதிர்த்து நின்றான். இப்படி இருவரும் முனைந்து நிற்கையில் ஸ்ரீராமமூர்த்தி வில்லைவளைத்து நாணேறிட்டு அஸ்திரப் பிரயோகம் பண்ணினாரென்பதையும், இல்லையென்பதையும் தெரிந்திலர். அந்த ரணரங்கத்தில் கவந்தங்கள் கூத்தாடினதுகள். அல்லாமலும் தேவர்கள் மரங்கள் கிடக்கின்றனவோ? மலைகள் கிடக்கின்றனவோ? என்று பிரமிக்கும்படியாகக் கைகளற்றுக் கிடந்ததுகள். மெய்களற்றுக் கிடந்ததுகள். பாணங்கள் தைத்துக்கொண்டு சிரங்கள் கிடந்ததுகள். இவற்றை மாத்திரம் கண்டார்களே யல்லாமல் அவர்கள் உயிர் கொண்டு திரிய ஒருவரும் பார்க்கவில்லை. ரணக்கள முழுவதும் மேடிட்டுக் கிடக்க, அவர்கள் கொண்டுவந்த ஆயுதங்களில் இற்றுப்போகாதவைகளையும்முறிந்து மீதியாய்க் கிடவாதவைகளையும், நடுவே முறிந்து ரணக்கள முழுவதும் தூர்ந்து கிடவாதவைகளையும், துணிக்கப் படாதவைகளையும், வெந்து நெருப்பை யிறைத்துக் கொண்டு வெறுஞ் சாம்பலாகாதவைகளையும், ஒன்றுநூறாய் அற்றுப்போகாதவைகளையும் ஒருவருங் காணவில்லை. யானைகளுடைய விசாலமான மஸ்தகத்திற் பாய்ந்த பாணங்கள் உருவிச்சென்று பாதிதேகத்தைப் பிளந்துகொண்டுபோக, அதனால் பெருக்கெடுத்துப் பூமியில் வடிந்து தேங்கிய ரத்தவெள்ளத்தில் குடல்களெல்லாம் சரிந்து விழும்படியாகத் துதிக்கைகளுடனே இரண்டு தந்தங்களும் துணிபட்டும், முன்னங்கால்களறுப்பட்டும் பூமியில் விழுந்துகிடந்ததுகளே யல்லாமல் நடந்துதிரிந்த யானைகளை யொருவராவது பார்க்கவேயில்லை. மணிகட்டிச்சப்திக்கின்றதேர்களில் ஒளி இழந்தவைகளாகியும், பிருதுக்கொடியற்றதுகளாகியும், சூரிய கிரணங்களைப் போலப் பிரகாசிக்கின்ற கூர்மையான அம்புகளால் உடல்பிளப்புண்ட அநேகக் குதிரைகள் கட்டினதுகளாயும், வரிசைவரிசையாய் அச்சுகளுடன் அஞ்சுருவாணியற்றதுகளாயும், ரணக்களத்தில் சரிந்துகிடக்கிற வெண்மையான கொழுப்பில் வழுக்குண்டு தலைகீழாய்விழுந்து பூமியிலாழ்ந்ததுகளாயும் கிடக்கக் கண்டார்க ளல்லாமல்; அந்தத் தேர்கள் ஸ்ரீராமபாணங்களால் பிளக்கப்படுகிறபோது ஒருவருங் காணவில்லை. வந்த குதிரைகளெல்லாம் ஆடலொழிந்தவைகளும், வளைந்த கழுத்தற்றவைகளும், அநுமானிக்கிற குரல்வளைகளற்றதுகளும், கால்களற்றதுகளும் கோபக்கண்களையுடைய யானைகள் கூட்டங்கூட்டமாய் மாண்டு பிணமலைகளாய்க் கிடக்கையால் அப்பிணங்களை மூழ்த்தித் தேங்கிய இரத்த

வெள்ளச் சுழிப்புகளில் அகப்பட்டடித்துக்கொண்டு போகின்றவைகளுமாகக் கண்டார்களேயல்லாமல்; ரணக்களத்தில் குதிரைகள் நின்று திரியக்கண்டவர்கள் ஒருவருமில்லை. வேதமுதல்வராகிய ஸ்ரீராகவப்பிரானுனவர் எய்கின்றஅஸ்திரப்பிரயோகவேகத்தின் விசேஷத்தைக் கணிதசாஸ்திரத்தால் திருஷ்டாந்தப்படுத்தி அளவிட்டுச் சொல்லவேண்டிய தென்னத்திற்கு? தேவர்கள் ரணக்களத்தில் ராக்ஷதர்களென்னப்பட்ட கொடியவர்களை வீரஸ்வர்க்கத்திலாகிலும் இவ்வளவினரென்று கண்டிலர். ஆயினும் இந்த ரணக்களத்தில் அவரவர்கள் தங்கள் நாயகன்மார்களைத் தேடிக்கொண்டுவந்த பெண்ஜாதிமார்களைத் தான் ஒருவாறு கண்டார்கள். அந்த ராக்ஷதர்களுடைய மலையினும் பெரிய தேகக்குவியலையும் ஒருவரும் காணவில்லை. பனிக்கூட்டம் சூரியனுதயமான மாத்திரத்தில் எப்படி அழிந்து போகுமோ, அதுபோல் ராக்ஷதப் படையெல்லாம் ஸ்ரீராமமூர்த்தியால் மாண்டுபோன ராக்ஷதர்கள் கோபம் கொண்டார்களென்று பயந்து நடுங்கின தேவர்களெல்லாம், யாவரையும் ஜெயம் பெற்றுக் கர்வித்திருந்த ராவணன் இனி நாசமடைந்து விட்டானென்று நெஞ்சம் பூரித்தார்கள். ராக்ஷதர்களெல்லாம் இதைக்கண்டு துக்கமடைந்தார்கள். அப்போது பரமதயாளுவான ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவானவர், ஐயோ! கும்பகர்னன் தனித்தவனுய்ப்போனனே யென்று அவன் முகத்தைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார். பெருந்துணைவராக வந்த சேனையுமிழந்துபோய் நீயொருவன் மாத்திரம் நிராயுதனுய் நின்றுவிட்டாய். நீ நல்ல தர்மவானன விபீஷணுழ்வானுடன் பிறந்தாய். ஆனபடியால் உனக்கு உயிர்பிச்சை கொடுக்கின்றேன். இன்றைக்குப் போய் நாளை வருகின்றுயோ? இல்லாவிட்டால் இப்போதேசண்டைசெய்துஉன்னுயிரைக் கொடுக்கின்றுயோ? நீ எதை ஆலோசித்து முடிவு செய்திருக்கின்றுய்? உன் அபிப்பிராயத்தைச் சொல்லக்கடவாய். நான் உன் தம்பியாகிய விபீஷணுழ்வானைக் கொண்டு அழைப்பித்தும் நீங்கள்செய்தபாவவினை முடியாதபடியால்உனக்குணர்வுவரவில்லை. நீ எமதர்மராஜா நியமித்த ஆக்ஞையின்படி நிற்கின்றுய். உன்னுடைய ஆயுள் நாளெல்லாம் உன் நித்திரையிலேயே கழிந்துபோய்விட்டது. இப்போது வருத்தப்பட்டுச் சாகவேண்டியவனுக இருக்கின்றுய். உன்மனதில் தோற்றுவதைச் சொல்லென்று கேட்க, அப்போது கும்பகர்னனுனவன் சொல்லுகின்றுன். மற்ற காரியங்களெல்லாம் நிற்கட்டும்; பெருமையும் மானமும் வீரமும் நீதியும் வழுவில்லாத வெற்றியும் குலதர்ம முதலாகிய எல்லாக்கிரமங்களையுமுடைய உங்களால், எங்களைவிட்டு வந்து தன்பெரிய செவியும் மூக்கும் அறுப்புண்ட என்தங்கையாகிய சூர்ப்பநகையைப்போல என்முகத்தை நான் யாருக்குக் காட்டி உயிர்வாழ்ந்திருப்பேன்? எங்களால் தேவர்கள் தம்முடையஒழுக்கங்கெட்டு ஒளி மழுங்கிப்போனுர்கள் அதை நினைக்கும்பொழுதே மனது வருத்தமாய் இருக்கின்றது. அவ்வருத்தத்தோடேமகாலக்ஷ்மிக்குச்சமானமுள்ள அழகும் கற்பும் வாய்க்கப்பெற்ற பிறன் மனையாளான சீதையைச் சிறையிடுதல் தகாதென்று தடுத்துச்சொல்லிய பெரியோர்வாக்கை இராவணன் கடந்தானே யென்கிற வியாகூலத்தை எப்பொழுதும் அனுபவிக்கிற நான், என்னுடைய செவியையும் மூக்கையுமிழந்த பிறகும் இலங்கைக்குப் போவேனே ஒருக்காலுமுடியாது. என்னுடைய தமையனைக் களிப்பிக்கவும் என்னுடைய தங்கையினுடைய மானத்தைக் காப்பாற்றவும் உம்முடைய காலையும் தலையையும் என்னுடைய கைவாளாயுதத்தால்வெட்டி உம்முடைய உயிரையும் போக்குகிறேனெனச் சபதஞ் செய்துவந்த நான், தேவர்களெல்லாம் பரிகாசஞ்செய்யும்படி இராவணன் முன்பாக எனது தங்கையான சூர்ப்பநகை அலறிமோதிவிழுந்ததுபோலேதலையிற் கையைத்தூக்கி வைத்துக்கொண்டு கண்ணீர் இரத்தநீராய் வடியும்படியாய் அழுது கூவிக்கொண்டு விழுவேனே; சுவர்க்கமத்திய பாதாளமென்கிற இம்மூன்று லோகத்திற்கும் நீயே தனித்தலைவனெனப்பிறரால் சொல்லப்பட்டிருந்தும் பழியானது இன்னதென ஆராயத்தக்க கருத்துடைய சேவகனுய் வந்தவனல்லவோ வீரருடைய கடமையென்றும் நீ யேன்ஆலோசிக்கவில்லை? யுத்தகளத்திலே அதிவீரரான உம்முடைய தலையை வாளி

ஞலேயறுத்தும் மீண்டும் ஒட்டவைத்தால் ஒட்டிக்கொள்ளுமோ? யுத்தத்திற்கெனஉத்தேசித்துப் புறப்பட்டுவந்த நான் அவ்வுத்தேசத்தை உன்னுடைய சொல்லால் கைசோரவிட்டுத் திரும்பிப் போய்விடுவேனே? வீரர்க்குப்பொருத்தமானதைச்சொன்னுயில்லையெனச் சொல்லி தன்னுடைய வலக்கையிலுள்ள சூலத்தை இடதுகையில் மாற்றிக்கொண்டு, அவ்வலது கையால் எதிரே நின்ற ஓர்மலையைப் பூமியினுடைய குடலைப்பிடுங்குதல்போலப் பெயர்த்தெடுத்து ஆகாயமெல்லாம் நெருப்பாய்ச் சொறியும்படியாய் ஸ்ரீராமருடைய திருமுடிக்குக் குறிப்புவைத்துத் தலையை முறித்திடென வீசியெறிந்தான். அதைப்பார்த்த யாவரும் ஸ்ரீராமருடைய திவ்ய திருமேனியிற்பட்டுவிட்டதென்றே சொல்லும்படியாய் அது நெருங்கிவந்த மாத்திரத்தில் இடிக்குச்சமானமான அம்மலையைச் சமஸ்தலோக காரணபூதரான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர் கைலாயபதியினுடைய மேனியில் அணிந்திருக்கும்படியான பஸ்மத்திற்கொப்பாய்த் தூள்தூளாய்ச்செய்துவிட்டு, மறுபடியும் அவன்மீதில் அஸ்திரப்பிரயோகஞ் செய்யயத்தனித்தார். இதற்குள் கும்பகர்னன் இடது கையிலிருந்த சூலாயுதத்தை வலதுகையிற்பற்றினுன். அப்படிபற்றுவதற்குள்ளாகச் சுவாமியானவர் பாணங்களை அடுத்தடுத்துப் பிரயோகஞ்செய்து, தினைப்போதிற்குள்ளாக அச்சூலாயுதத்தை அவன் கையிலிருந்தபடியே துண்டுதுண்டாய்விழச் சிதைத்துவிட்டுப் பின்னும் இடியையும் சுட்டெரிக்கத் தக்கவைகளும் அலையையுடைய சமுத்திரநீரை வறள உண்டுவிடத் தக்கவையும், மேருமலையை மூடுருவிக்கொண்டு ஓயாமல் ஆகாயமுழுவதையும் கடக்கத்தக்கவையும், தவருத உண்மைக் கொப்பானவையுமான பாணங்களை இரண்டு குதையும் ஒன்ருேடொன்று தாக்கும்படியாய் வில்லைவளைத்துத் தொடுத்துவிட்டார். அக்கணைகள்போய்ப் பாலநேத்திரரான சம்புமூர்த்தியால்கொடுக்கப்பட்ட கவசத்தைப் பேதித்துக்கொண்டு போகமாட்டாமல் அதன்மேல்மோதி நிற்கிறதைச் செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய சக்ரவர்த்தித்திருக்குமாரர் கடாக்ஷித்து, ஓகோ! இது சங்கரனுல் கொடுக்கப்பட்ட கவசமென்று யூகித்துணர்ந்து, சிவாஸ்திரத்தைத் தொடுத்தெய்தார். அதுபட்டமாத்திரத்தில் அக்கவசமானது அள்ளுகழன்று, மேருமலையைச்சூழ்ந்து வரும்படியான சூரியன் பூமியிலேவிழுந்து விட்டதுபோலத் துண்டுதுண்டாய்க் கீழேவிழுந்துவிட்டது. அப்படி மிகுந்த பிரகாசத்தையுடைய கவசமானது நொறுங்கி யுதிர்ந்தமாத்திரத்தில்கும்பகர்னன் இரண்டுகண்களிலும் அக்கினியைச்சிந்தி, தனது தோளைத் தட்டிக்கொண்டு கர்ஜ்ஜித்து, அநேகரைஜெயம்பெற்ற ஒருவச்சிர தண்டாயுதத்தைக் கையிலெடுத்து, இவ்வானரசேனையையெல்லாம் குழம்பாக்கி விடுகிறேனென்று பூமியை அம்மியாகவும் அந்தநெடுந்தண்டத்தைக் குழவியாகவும், வானரங்களைச் சுண்டாங்கிப்பொருளாகவும்கொண்டு கிரமக்கிரமமாய்அரைக்கத்தொடங்கினுன். அப்போது ஸ்ரீராமபாணங்களில் ஆயிரம் பாணங்கள் ஆகாயமெல்லாம் பறந்தோடின. ஆயிரம்பாணம் கும்பகர்னனெனச் சொல்லப்பட்டவன்மீது பாய்ந்தன. ஆயிரம்பாணம் அவனுடைய பெரியமலைபோன்றமார்பைச் சல்லடைக்கண்ணுய்த் துளைத்தன. ஆயிரம்பாணம் அங்குமிங்குமாய்த் திரியப்பட்டன. ஆயிரம்பாணம் அவனுடைய காத்திரமான உடலிலேதைத்துஉருவிப்போகாமல் உள்ளேயே மறைந்துகொண்டன. ஆயிரம்பாணம் அவனை எதிர்த்துக் கொண்டுவரப்பட்டன. இப்படியாக இராமபாணம் அவனை வருத்தினபோதிலும் அவன் கர்ஜ்ஜனையென்பதைச்செய்துகொண்டு காற்ருடியைப்போல கிறுகிறென்று சாரிசுற்றிவந்தான். அச்சமயம் நீலமேகம்போன்ற சியாமளமேனியையுடைய ஸ்ரீராமர் அவனைப்பார்த்து, இவனுடைய கையிலே தண்டாயுத மிருக்குமேயானுல் நம்முடைய வானரசைனியம் இருக்கமாட்டாதென்பதாய் நினைத்து, பத்து கூரியபாணம் வரிசையாய்த் தொடுத்து எய்தார். அம்மாத்திரமே அவ்விதமான வஜ்ஜிர தண்டமானது பற்பல துண்டு துண்டாய் வெட்டுண்டது. பெரிய வீரகண்டாமணியைத்தரித்த கும்பகர்னனுனவன் வடவாமுகாக்கினியைப்போலே பொங்கி, வட்டாகாரமான ஸ்வர்னகேடக மொன்றையும், ஒரு கூரியவாளையும் கையிலே யெடுத்துக்

கொண்டான். அப்படி அவன் வாளைக்கையிலே யெடுத்தவுடனே வானரவீரரெல்லாம் தைரியம் குறைந்து, நாலாபக்கமும் கால் எடுத்தோடத்தலைப்பட்டார்கள்.தேவர்களெல்லாம் வருத்தமுற்றுத் தலைகாட்டாமல் மறைந்துகொண் டோடினார்கள். என்னுடைய சபதத்தை நிறைவேற்றிக்கொண்டுதான் திரும்புவேனெனக் கும்பகர்னன்சொல்ல, அதைக்கேட்டு ஸ்ரீராமமூர்த்தியானவர் கும்பகர்னனுடைய மலைபோன்ற தோளைப் பிடித்திருக்கின்ற வாளோடுகூட துணித்துவிடக் கடவாயென்று தேவர்களெல்லாம் வாழ்த்துதல் செய்யும்படியாய் ஒருபாணத்தையெய்தார். அப்பொழுதுஇலங்கைக்கும் இராவணனுடைய தலைக்கும் கணக்கு முடிந்து விட்டதென்று பாவமானது மனம் திடுக்கிட்டது. நல்வினையானது ஆனந்தித்துக்கொண்டு ஓங்கிவளர்ந்தது.இராக்ஷதரெல்லாம் தேகம்வெயர்த்து மகாகொடுமையான யுகாந்தகாலக் கடலினுடைய அலையைப்போலே மனங்கலங்கினார்கள். இவ்விதமாகும் சமயத்தில் கும்பகர்னனுடைய வலதுகையானது தேவேந்திரனுடைய மேனியிலேயுள்ள கண்களுக்கொப்பாக, அம்புகளாற்கிழிபட்ட புண்களுடனே வாளாயுதத்தோடே அற்றுவிழுந்து போய்விட்டது. அதிவீரனான அந்த கும்பகர்னனிடத்திலே பிச்சை கேட்டு வாங்கினாரேயானாலல்லது வேறேயும் வீருண்டென்று சொல்லுவதற்கு ஒருவராலும் முடியாது. அப்படிப்பட்ட வீரனான கும்பகர்னன் குருத்துத் தோளளவாய், அறுக்கப்பட்டு வீழ்ந்த வலதுகையை இடது கையாலே யெடுத்து வீரகர்ஜ்ஜனையைசெய்துகொண்டு வானரப்படையில் பிரவேசித்து அடித்தபோது வானரக்கூட்ட மெல்லாம் பல்லையிளித்துக்கொண்டு ஓட்டமாயோடிப்போய்விட்டன. மஹா தாதாவான ஸ்ரீராமச்சந்திரப் பிரபு காத்துக்கொண்டு நிற்கும்போதே கும்பகர்னன் வானரசேனையைக் கொள்ளை கொள்ளையாக யமலோக மடையும்படி முன்னிலும் மூன்றுமடங்காகச் சிதைக்கின்ற குறிப்பைப்பார்த்து இவ்வானரக்கடல் இன்றையப்பொழுதிலேயே நாசமாய் விடுமென்ற துக்கத்தினாலே உயிர்வாடி, இருக்கும் கையைப்பார்க்கிலும் அறுந்தகைக்கே மூன்றுலோகத்தாரும் பயந்தார்கள். தன்னைக்கண்டு வானரப்பெருங்கடலானது முதுகுகாட்டி யோடவும்,யானைப்பிணங்கள் மேலே மிதக்கும்படி இவனுடைய தோளிலிருந்து வழிந்து ரத்தஆறுகளோடவும், ஆகாயமார்க்கத்தில் தேவர்களெல்லாம் பயந்தோடவும், துண்டுதுண்டாய் இலங்கைபட்டணத்திலுள்ள பொருள்களும் மலைகளும் கடலும் நிலைகுலைந்து பின்தொடர்ந்து ஓடிவரவும், மேகங்களெல்லாம் சின்னாபின்னப்பட்டுச் சிதறிப்போகவும் கும்பகர்னனானவன் ஆண்சிங்கம் போன்ற மகாவீரனான ஸ்ரீராமபிரானைநோக்கி அதிகவேகமாக ஓடினான். சிதறுண்டு போன தேவர்களெல்லாம் ஸ்ரீராமரை நோக்கி, சுவாமி! மற்றொருகையையும் இப்போதே அறுத்துவிட வேண்டியதென்று பிரார்த்தித்து வணங்கிநின்றார்கள். அது கண்ட நித்திய ஜெயப்பிரதாபரான ஸ்ரீ ஜானகிநாயகர் மனதிரங்கி, இவனுக்குத் தோல்வியடைந்து கைக்கெட்டாமல் மறைவாகி நின்று இவனுடைய வாழ்நாள் முடிவையும் பயத்தினால் மறந்துவிட்ட யமனுக்கு இப்போது இவனுடைய காலமுடிந்ததோ? இல்லையோ? என்ற சந்தேகமும், ஒருவேளை எதிர்ப்பட்டால் என்ன பொல்லாங்கு வருமோ என்றிருந்த பயமும் நீங்கும்படிஒருதிவ்வியபாணத்தினாலே அவன் இடது கையையுமறுத்து வேறொரு சேது கட்டினதுபோலக் கடலிலே விழச்செய்தார். அப்போது அவன் அணிந்திரா நின்ற வஜ்ஜிரரத்னகங்கணம் விருத்தாகாரமாய்த் தோன்றிக்கொண் டிருப்பதினாலே வச்சிரமலைக்குச்சமமான புஜமானது தேவர்களெல்லாம் பாற்கடலிலே அமுதமுண்டாகக் கடைந்த அச்சமயத்திலே சந்திரனென்கிற பெருந்தறியில்சேர்ந்திருந்த மந்தரகிரியைப்போலவும், அல்லாவிட்டால் வெள்ளை நிறமாகிய வாசுகியென்கிற சர்ப்பராஜனால் சுற்றிக்கட்டிய அம்மலையைப் போலவுமிருந்தது. மேலும் தன்னுடைய நிறத்திற்குத்தானே ஒப்பான பெருங்கடலில் விழும்படியாய்ச் செய்தபடியினாலும், நெருங்கிய ரேகைகளையுடையதாகிய ஸ்வர்னமயமான இறகுகளின் கடிவிசையால் மூடிக்கப்பட்ட செய்கையாலும், நிர்விகாரியான ஸ்ரீயப்பதியின் அவதாரமான ஸ்ரீராமமூர்த்தியின் நியமனப்படி நடந்த தன்

மையினுலும் கூர்மையாகிய ஸ்ரீராமபாண மானது பெரிய திருவடிகளாகிய கருடபகவானைப்போலவும் அந்த உயர்ந்ததோளானது அக்கருடபகவான் அனுயாசமாக எடுத்துவந்து கடலிலிட்ட மந்தரகிரிக்குச்சமானமாகவும் இருந்தது. இப்படி இரண்டு தோளும் அற்றபின்பு, தினந்தோறும் சூரியன் சுற்றிவருகின்ற மேருமலையை உள்ளே குடைந்து ஒருபறையாக்கித் திரிவிக்கிரம மூர்த்தியானவர் உலகத்தை அளவிடற்கமைத்த ஒரு நீண்ட குறுந்தடியை வலக்கையிலேந்தி அடித்து முழக்கினுற்போல் பெருங்கூச்சலிட்டுக்கொண்டு வானரசேனு சமுத்திரத்தைத் தலையும் தோளும் சதையும் எலும்புமாகச் சின்னுபின்னமாய் இரத்த ஆற்ரூடே பெருக்கு எடுத்தோடும் படியாய்க் கலக்கிவிட்டான். நிலம்-நீர்-தீ-காற்று என்னும் பூதங்கள் நான்கும் அசுர வடிவாகிஒருவராலும் கொல்லுதற்குஇசையாத பெரிய தோற்றத்தைப்படைத்து வந்ததைப்போல ஜீவகோடிகளையெல்லாம்சங்கரிக்கிறவனுய், பிரளயகால எமனுக்கொப்பாகக் கோபமுற்றுச் சங்கிராம வீரர்களுக்குத் தலைமைபெற்று யாதொரு விஷயங்களிலும் தனக்குத்தானே சமானமானவனெனச் சொல்லப்பட்ட பிரபலமுற்று வாழ்வுற்றிருந்த கும்பகர்னனுடைய மலைபோன்ற கறுத்த வலதுகாலை, விஜயகோதண்டபாணியாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் தன்னுடைய வடித்துக் கூரிட்டுப் பகைவருடைய உதிரத்தில் காய்ச்சித் துவையலிட்டுப் பொற்கட்டு வஜ்ஜிரக்கட்டுக ளிட்டுச் சிறப்புற்ரூங்கிய மயிலிறகு கொக்கிறகைச் சொருகிட்டு விளங்கத்தக்க அதிக தீக்ஷண்ணியமுள்ள ஒருகூர்மைபொருந்திய பாணத்தினுல் கதறிப்பதறிச் சிதறத்தக்கதாய் அறுத்து பூமியில் விழும்படியாய்ச்செய்தார். அப்போது கும்பகர்ணன் அழகுபெறத் தக்கதாயொன்றுடனென்று சேர்த்து வரிசை வரிசையாயிருக்கும்படி அமைத்து வைத்ததுபோல் பிரகாசிக்கின்ற, தந்தபந்திகளெனச் சொல்லப்பட்ட நக்ஷத்திரகூட்டங்களோடு சம்மந்தப்பட்டு முதன்மைபெற்றிருக்கிற, இளமையான வெள்ளிய மூன்ரும்பிறைச் சந்திரனைத் துண்டிட்டு வைத்ததுபோல ஜொலிக்கத்தக்க, கூனலானஇரண்டு வக்கிரதந்தங்கள் இரண்டுகடைவாயிலும் தோன்றும்படியாய், இரத்தவெள்ளமானது மலையிலேயிருந்து தாரைதாரையாய்ப் பெருக்கெடுத்து ஓடிவரும்படியான அருவி நீரைப்போல குபீர்குபீரென்று பாய்ந்து வருவதினுல் மாலைப்பொழுதில் காணப்படும்படியான செக்கர் வானம்போன்ற தனது அகண்டவாயைத் திறந்துகொண்டு; தன்னெருகாலை இழக்கப்பெற்றமையால் மற்ரெருகாலினுல் நடக்கத் தடமில்லாமல் குந்திக்குந்தி, பூமி குழிபடும்படியாயும், கடலினுடைய நீர்கொதித்துக் கொப்புளித்துத் தத்தளித்துக் கலங்கி வழியும்படியாயும், அதிவேகமாயோடி; வானம்பாடிப் பறவைப்போலவும், பந்தைப்போலவும் விசைகொண்டு, பூமியிலிருந்தெழும்பி ஆகாயமார்க்கமாய்த்தாவிக்குதித்து நின்ருன். இப்படி நின்ற அக்கும்பகர்னன் தனதிரண்டு பக்கத்திலுமுள்ள அநேகம் பெரிய மலையையும்-குன்றையும்-மரத்தையும் - மற்றுண்டான எவ்வகைப்பட்ட தன் ஒற்றைக் காலும் சரீரத்தாலும் உடைத்து முறித்து வஸ்துவையும் எடுத்துக்கொண்டு இடசாரிவலசாரி வலசாரி இடசாரியாகச் சுற்றிக்கொண்டு, சூராவளிகாற்றைப்போல் கறகறவென்று கட்டுக்கடங்காத மதயானையைப்போல் கண்களில் தீப்பறக்கத்தக்கதாகஆக்ரமத்தோடே வானரப்படைமேல் தாவி வந்தான். அச்சமயத்தில் அதைக்கண்ட எம்பெருமானுன உத்தண்ட சண்டப்பிரசண்ட பிரபல கோதண்ட தீக்ஷாகுருவான ஸ்ரீராமபிரான் தனக்கு இனியவளான பூமிப் பிராட்டியினது தலைச்சுமையான பெரியபாரமானது நீங்கிப்போகவும், வேதங்கள் அளவில்லாத சந்தோஷத்தினுல் ஆனந்தக்கூத்தாடத் தக்கதாயும், பொன்னுலக வாசிகளெனச் சொல்லப்பட்ட தேவருடைய மனத்துயரம் தொலைந்து போகும்படியாயும், ராக்ஷதரென்கிற விஷப்பூண்டுகளெல்லாம் வேரற்று சாகத்தக்கதாயும், அக்கினிமுகாஸ்திரத்தை யெடுத்து அதற்குச் செய்யவேண்டிய மந்திராகுதிகளைக் கிரமப்படி கொடுத்துத்தொடுத்துவிட்டார். அப்படி தொடுத்துவிட்ட அக்கினி முகாஸ்திரமானது அதிவிரைவாய்ச் சென்று, அக்கும்பகர்ணனுடைய இடதுகாலையும் அறுத்தெறிந்துவிட்டது. இப்படிகும்பகர்ணன் சிறிய குன்றுகட்குச்சமான

மான தனது இரண்டுகாலும் கையும் அறு பட்டுப்போயும், பெரிதா யிருக்கப்பட்ட மேருகிரியையொத்த ஸ்தூல தேகமும் லக்ஷம்பாணங்களால் சல்லடைக் கண்களா கவும், சில்லி சில்லியாகவும், தொளைப்பட்டும்; சற்றுமினும் விசனமில்லாமலும் பயப்படாமலும் திடச்சித்தத்தை யுடையவனாய் முன்னிலும் அதிககோபங்கொண்டு முகமெனச்சொல்லுகிற கறுத்த ஆகாயத்தில் கோபாக்கினியான மின்னலானது ஜொலிக்கும்படியாய் பேரோசையானஇடி முழக்கம்போல இடைவிடாமல் கர்ஜ்ஜனை செய்துகொண்டு தனதிரண்டு கையுங்காலும் அறுப்புண்டதனால் பூமியில் விழுந்த படியே உருண்டுபோய், குகைக்கொப்பான வாயினாலே அங்கேகாத்திரமாயோங்கிவளர்ந்திருக்கிற மலையைக்கவ்வி, வாள்போன்ற பற்களினாலே நறநறவெனக் கடித்து, சுக்கல் சுக்கலாய்ப்போம்படி சிதைத்து உமிழத்தலைப்பட்டான். அப்போது தனக்குள் அடங்காத கோபாக்கினியால் உண்டான ஸ்வாசக்காற்றானது அம்மலையினுடைய பொடியை நாலுதிக்கிலேயும் கொண்டு போய் எறிவதினால்,அங்கங்குள்ள அநேக வானர சேனைகள் நசுக்குண்டு மாய்ந்து விட்டன. இதல்லாமலும் கும்பகர்னனானவன் மேலுமேலும் அதிகரிக்கிற பெருங் கோபத்தினால் கண்ணெனச் சொல்லுகிற பொறியிலிருந்து அபரிமிதமாகப் பறக்கும்படியான தீப்பொறிகளானவை எட்டுத் திக்கிலேயும் போய்ப்பாய்ந்து தீய்க்கும்படியாய்ப்பார்த்து, எட்டாத பொருளை எளிதிற்றானே துறட்டுக்கோல்கொண்டு கிரகித்துக் கொள்ளும்படியான தன்மைபோல் முத்துக்களைச் சொரிகிற மூங்கில்கள் வளர்ந்து அடரப்பெற்றிருக்கிற ஒருபெரியமலையை அதனுச்சியோடு தனது வாயுதட்டினாற்பற்றி வேரற்றுப்போகும்படி களைந்து, பறிந்தெடுத்து, கழுகு - காக்கை - பருந்து முதலிய பறவை வட்டமிட்டுப் பறக்கவும், நாய்-நரி - ஊளையிடவும், பேய்க்கணங்கள் நடிக்கவும், உதிரம் தோய்ந்திருக்கிற ரணக்களமெல்லாம் நிலைகுலையும்படி பெரிய பிலத்துவாரம்போன்ற வாயில் வைத்தூதி ஆக்ரமித்து அட்டகாசஞ்செய்தான். அப்போது முன்னம் வேதங்களுக்கு பெட்டாத பரப்பிரம்ம ஸ்வரூபமாகிய ஆதிமூலமேயென ஓதிவணங்கிய யானையினுடைய வேதனையை நீக்கும்படியாக முதலையைச் சங்கரித்து ஆதரித்த எம்பிரானான ஸ்ரீராமமூர்த்தியானவர்,மதுகரங்கள் தேனுண்டு கீதம்பாடி வாசஞ்செய்யும்படி முகைவிழ்ந்து மகரந்தப்பொடிகளை வீசுகிற செந்தாமரை மலர்போன்ற தம்முடைய திவ்விய திருக்கண்களால் பார்த்தார். இப்படி பார்த்த ஸ்ரீராமர் மிகுதியான ஆச்சரியமுற்று, இக்கும்பகர்னனானவன் கைகால் முதலானவை தறிபட்டுத்தரையில் வீழப்பெற்றும் அதிக ஆங்காரத்தோடு பயமென்பதைக் கடக்கவோட்டி, வீரவைராக்கியத்தைப்பாராட்டி,வானரசேனையெனச் சொல்லப்பட்டவற்றை திக்கு முக்காடும்படியாய்வாட்டி, தனக்குண்டான வல்லமையைக்காட்டி நிற்கிறானே;இவனல்லவோ வல்லவன்என மூக்கின்மேல் விரலைவைத்துச் சபாஷெனச் சொல்லிமெச்சினார். அச்சமயத்தில் உலகத்தைச்சூழ்ந்துகொண்டிருந்த இருள்போன்றபெரும்பனிக்கூட்டமான துசூரியகிரணத்தைக்கண்டு நீங்குதல்போலே சக்கிரவர்த்தித்திருமகனாருடையகோடிசூரியப்பிரகாசம் தங்கிய அழகிய முகாரவிந்தத்தைக்கண்ட கும்பகர்னனுக்கு நல்ல விவேகம்பிறந்து, தானவராக்ஷதகுல சம்மாரமூர்த்தியுங் கோசலைகுமாரரும் மலையானது அஞ்சத்தக்க பருத்துயர்ந்த திருத்தோள்களை யுடையவருமாகிய புருஷோத்தமனான ஸ்ரீராகவ பிரானைப் பார்த்து, ஐயோ! இந்த உத்தமருடைய கையிற் பற்றியிராநின்ற வில்லினுடைய வல்லமைக்கு என்னைப்போன்ற சுத்தவீரனே கைகாலறுந்து, சூழ்ந்துவந்த சேனையுமிழந்து, வேறோர் உதவியுமில்லாமல் போம்படி காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் பறந்துபோவேனேயானால், என்னுடைய தமையனான ராவணன் இச்சுந்தரமூர்த்தியை வெல்லுவானெனச் சொல்லவும்படுமோ? அல்லவென்று ஒருவேளை அவனுக்கு உதவியால் ஆயிரம் ராவணன் வந்துஎதிர்க்கக்கூடுமானால் அத்தனை பெயருடைய பிராணனையும், அவர்கட்கு உதவியாகச் சேனைகளெத்தனை வந்ததோ அத்தனைபெயருடைய உயிரையும், இவருடைய கையிலேயிராநின்ற கோதண்டமானது யமனுடைய உலகத்தில் குடியேற்றி விடாமல் சும்மா விட்டுவிடப் போகிறதோ?

நான் அவருடைய பெருமையை என்ன சொல்லப்போகிறேன்? அளவில்லாத அகண்ட ஐஸ்வரியத்தைப்பெற்று வாழ்வுற்றிரா நின்ற இவ்விராவணன் காமநோய் தலைக்கேறித் தீண்டாவிளக்கைத் தீண்டும்படிவந்த விட்டிற்பூச்சியானது தன்னுடையபலங்குறைந்து சாவதுபோலச்சீதையெனச் சொல்லுகிற நெருப்பைச் சிறையிட்டபோதே அவனுடைய வாழ்நாள் குறைபட்டதே, இனி இராமபாணத்திற்குத்தப்பி ஒருபோதிலும் பிழைக்கப்போகிறவனல்லவே எனப் பற்பலவிதமாய்க் கும்பகர்னன் மனதில் நினைத்து, அதிக துக்காக்கிராந்தனாய்ப் பரிதபித்தான். இப்படி பரிதபித்த கும்பகர்னனானவன் சிந்தூரப்பொடியையும் செம்பஞ்சைப்போன்ற சிவப்பாகிய உதிர ஆறானது பல திசையிலேயும்போய் அங்கங்கு உள்ள மிகுதியும் பலமுள்ள பெரியதேரையும், யானையையும், குதிரையையும், சிங்கத்தையும் வாரிக்கொண்டு ஓடுவதைப்பார்த்து, உடல் வெயர்த்து,ஓவென்றார்த்துச் சித்தங்கலங்கி, பின் அக்கலக்கம் ஒருவிதமாகத்தெளிந்து, சுவாமியினுடைய வல்லமையைக்குறித்து அளவில்லாத சந்தோஷசாகரத்தில் மூழ்கினவனாகி, தனக்கெதிரே சேவைசாதியா நின்ற கருங்கடல்வண்ணனும் கிருபாசமுத்திரனுமான ஸ்ரீரகுநாதருடைய திருமுகமண்டலத்தைப்பார்த்துச் சிலவார்த்தையை வணங்கிச் சொல்லுகிறான்.

விருத்தம்.

புக்கடைந்தபுறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்க
மைக்கடங்கார்மதயானைவாள்வேந்தன்வழிவந்தீர்
இக்கடன்களுடையீர்நீரெம்வினைதீர்த்தும்முடைய
கைக்கடன்றானுயிர்காக்கக்கடவீரென்கடைக்கூட்டால்.

நீதியால்வந்ததொருநெடுந்தருமநெறியல்லால்
சாதியால்வந்தசிறு நெறியறியானென்றம்பி
ஆதியாயுனையடைந்தா னரசருருக்கொண்டமைந்த
வேதியாவின்னுமுனக் கடைக்கலயான்வேண்டினேன்.

வெல்லுமாநினைக்கின்ற வேலரக்கன்வேரோடும்
கல்லுமாமுயல்கின்றா னிவனெனலுங்கறவுடையான்
ஒல்லுமாறறியலுமே லுடன்பிறப்பின்பயனோரான்
கொல்லுமாலவனிவனைக் குறிக்கோடிகோடாதாய்.

தம்பியெனநினைந்திரங்கித் தவிரானத்தகவில்லான்
நம்பியிவன்றனைக்காணிற் கொல்லுமிறைநல்காணல் (ம்
உம்பியைத்தானுன்னைத்தா னனுமனைத்தானொருபொழுது
எம்பிபிரியானாகவருளுதியான் வேண்டினேன்.

மூக்கிலாமுகமென்று முனிவர்களுமமரர்களும்
நோக்குவார்நோக்காமை நுன்கணையாலென்கழுத்தை
நீக்குவாய்நீக்கியபின் னெடுந்தலையைக்கருங்கடலுள்
போக்குவாயிதுநின்னை வேண்டுகின்றபொருளென்றான்.

ஒரு வேடுவனால் வருத்தப்பட்டுத் தன்னை அடைக்கலம்புகுந்த ஒருபுராவின் நிமித்தியமாகத் துலையேறினவனும், மேகத்திற்கும் பெய்துமுடியாத மதம்பெய்கிற யானைச்சேனையை யுடையவனுமாகிய வெற்றி தங்கிய கூரிய வாளாயுதத்தைத்தாங்கிய சிபிச்சக்கிரவர்த்தி வமிசத்தில் வந்து அவதரித்த இராமலக்ஷ்மணர்களே! அந்தச் சிபிச்சக்கிரவர்த்தி செய்ததுபோல நீங்களும் பல அன்பின்கடமைகளைச் செய்ய வல்லீர்கள். இனி உங்களுடைய திருக்கைகளால் செய்யவேண்டிய கடமையாவது, எங்களுடைய குலமுழுமையும் உங்களுடைய பாணத்தால் தொலைத்துவிடுவதே. அப்படி தொலைத்து விடுவீர்களேயானால், எங்களுடைய இருவினைகளையுமொழித்து நிரதிசயானந்த பரமானந்தத்தை யடைவோம். நீங்களும் எங்களுடைய ரக்ஷிக்குங்கடமை யுடையவராவீர்கள். ஓ வேத முதல்வனாகவும், க்ஷத்திரியகுலத்தில் அவதரித்த அந்த வேதப்பிரதிபாத்திய வஸ்துவுமாகிய ஐயனே! கோதண்டக்கையனே! எம்மை ஆண்டருளுமெய்யனே! என்தம்பி விபீஷணன் சகலாத்மாக்களுக்கும் செய்யவேண்டிய நீதியாயமைந்த வேதமார்க்க தருமத்தை அநுசரித்தவனே அல்லாமல், எங்கள் சாதிகிருத்தியமாகிய அற்பமார்க்கத்தை அனுசரித்தறியான். அவன் வேதமார்க்காநுசாரியாதலால் உன் பக்கலிலே அடைக்கலம்புகுந்தான். அந்த அடைக்கலமானது யாதொரு பின்னத்தையும் அடையாமலிருக்க வேண்டுமென்பதையே இன்னமும் நான் வேண்டுவது. ஆகையால், எல்லாலோகங்களுக்கும் மேலாகிய பரமபதநாட்டிலிருந்து அந்த அழியாத வீட்டைத்தருகின்ற ஓ வைகுந்தா! முகுந்தா! கோவிந்தா! தேவரீரை வெல்ல வேண்டுமென்று நினைத்து வெறுவாயை மெல்லுகின்றவனும், வேலாயுதத்தைத்தாங்கியவனுமான என்தமையன், இத்த விபீஷணன் உங்களுடன்சேர்ந்து, அவர்களை அடியோடு வேரற்றுப் போம்படிச்செய்யக் கருத்துற்று இருக்கின்றானென்கிற என்

ணங்கொண்டு கறுவிக்கொண் டிருக்கின்றுன். ஆனதால் இந்த உத்தமனுன விபீஷணன்மாத்திரம் தனியாய் அவன் கண்ணில் அகப்படுவானேயாகில், சகோதரவாஞ்சையென்பதுளள்ளளவுமில்லாமல் கொன்றுவிடுவான். கிருபாமூர்த்தியாகிய எம்பெருமானே! அந்தவிபீஷணனை எப்போதும் மறவாமல் திருவுள்ளத்தில் வைத்துக் காத்தருளவேண்டும். இதல்லாமலும் இராவணுதிராக்ஷதர்கள் மாயாரூபிகளானதால் எவ்வகைப்பட்ட உருவமெடுத்தேனும் அவனைக்கொல்லச் சித்தமாய்க் காத்துக்கொண்டு இருப்பார்களென்பது யான் மாத்திரஞ் சொல்லப்பாத்திரனே? அது தங்கள் திருவுள்ளத்திற்கே விசிதப்படத் தெரியவரும். ஆகையால், ஓ சுவாமி! உம்முடைய திருவடியை நம்பியிருக்கும் தம்பியாகிய இளையபெருமாளையாவது, உம்மையாவது, அல்லது வாயுபுத்திரனுகிய ஆஞ்சநேயனையாவது, என்தம்பியாகிய விபீஷணன் பிரிந்திருக்கவொட்டாமல் பாதுகாக்கவேண்டிய வரமொன்றும்; மூக்கறுப்புண்ட முகமென்று என்னைத்தேவர்களும் ரிஷிகளும் பார்த்து நகைப்பார்கள். ஆதலால் அவர்கள் வந்து பாராமுன்னம் இப்போதே காலதாமதஞ்செய்யாமல் உம்முடைய திவ்வியாஸ்திரத்தாலே என் கழுத்தைத் துணித்து, தலையைக் கருங்கடலிற் கொண்டுபோய் விழச்செய்யவேண்டுமென்கிற வரமொன்றும்; ஆகிய இந்த இரண்டு வரம்மாத்திரம் அடியேனுக்குக் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டான். அப்போது ஜகத்ரக்ஷகராகிய எம்பெருமான் இவன் வேண்டுதலுக்கிசைந்து, அப்படியே யாம் செய்விப்போமென்று அழியாவரங்கொடுத்து, உடனே தமது வஜ்ஜிரவாகுவலய கடகங்களைத் தரித்திருக்கின்ற அழகிய இரண்டு தோள்களும் பூரிக்கக் கோதண்டத்தைக் கையிலெடுத்து நாட்டி, விஷத்தயிலத்திலூட்டிக்காய்ச்சித் துவையலிட்டுச் சாணையிலாட்டிக் கூரிட்டுத் தங்கக்கட்டுகள் பொற்கட்டுகளிட்டுக் கொக்கிறகு இமாம்பக்ஷி யிறகுகளைப்பூட்டி அதிக கூர்மைபெற்றிருக்கின்ற ஒரு திவ்வியாஸ்திரத்தைத் தொடுத்து, நாணைக்காதளவும் இழுத்து, கும்பகர்னனுடைய சிரசுக்கு லக்ஷியமாய்ப் பிரயோகித்துத் துணித்தார். பிறகு அந்தத்தலையை அதிவேகமுள்ள வாயுவாஸ்திரமொன்று விடுவித்துக் கடலிற் கொண்டுபோய் விழும்படியாகச்செய்தார். இந்தப்பிரகாரமாகக் கும்பகர்னனுடைய மலைபோன்ற தலையானது கடலில் விழுந்தபோது, அதில் வாசஞ்செய்துகொண்டிருந்த மகரமச்சங்கள் முதலான எல்லா ஜீவகோடிகளும் தட்டுகெட்டுக்கலங்கி நசுங்குண்டு கடல்நீர் பெருக்கெடுத்து நான்குதிக்குகளிலும்போய்ப் பரவியது. அப்போது அங்கே கும்பகர்னனுடைய தலை புகை எழும்பிக்கொண்டிருக்கின்ற வாயிலும், மூக்கிலும், காதிலும், கண்களிலும் நீர்கோத்துக்கொண்டதனுல், கடலில் மூழ்கிவிட்டது. அதைக்கண்ட தேவர்களும், ரிஷிகளும், வேதமார்க்க நிஷ்டானுபரர்களும், தேவதாஸ்திரீகளும் தாங்கள் நெடுநாளாகக் கொண்டிருந்த துன்பம் நீங்கி, அமிர்தத்திற் கொப்பான அளவில்லாததேவகானங்களைப்பாடி ஆனந்தக்கூத்தாடினுர்கள். அன்றியும் முன்னம் கும்பகர்னனுக்குப் பயந்து தோற்ருேடிப்போன வானரவீரர்களெல்லாம் மறுபடியும் ஸ்ரீராமனிடத்தில் வந்துசேர்ந்தார்கள். இது இப்படியிருக்க, இங்கே கும்பகர்னன் மடிந்து விழுந்ததைக்கண்ட ராக்ஷத வீரர்களெல்லாம் ராவணனிடத்திற்கோடி, உம்முடைய தம்பியாகிய அதிக பராக்கிரம சாலியான கும்பகர்னமகாராஜன் ஸ்ரீராம பாணத்தால் மடிந்தானென்று சொல்லும் படியாகப் போனுர்கள்.

கும்பகர்னன்வதைப்படலம் முற்றிற்று.

---

## மாயாஜனகப் படலம்.

---

### விருத்தம்.

அவ்வழிக்கருணன்செய்த பேரெழிலாண்மையெல்லாம்
செவ்வழியுணர்வுதோன்றச் செப்பினஞ்சிறுமைதீரா
வெவ்வழிமாயையொன்று வேறிருந்தெண்ணிவேட்கை
இவ்வழியிலங்கைவேந்தனியற்றியதியம்பலுற்ரும்.

மிகுந்த பராக்கிரமத்தையும் அதிக பலத்தையுமுடைய கும்பகர்னனுனவன் ஸ்ரீராமருடன் போர்செய்த வீரப்பிரதாபங்களையும் முடிவில் பரிசுத்தனுய் ஸ்ரீலோகா

ராட்டியனுடைய பாணங்களினால் வெட்டுண்டு விழுந்ததையும் விவரமாகச் சொல்லினேம். இனி கொடுங்கண்ணனாகிய இராவணன் துன்மார்க்கராகிய மந்திரிகளுடன் ஆலோசித்து ஒருமாயைச்செய்ய நியமனஞ்செய்து காமாந்தகாரத்தால்ஒன்றுந்தோற்றுதவனும் ஒருஇராக்ஷதனை மாயையினால் ஜனகனைப்போலாக்கி சீதைமுன் கொண்டுவந்து நிறுத்தி, பற்பல பரியாசமான வார்த்தைகளைப்பேசி, பின்பு ஜானகியம்மன் பிரமிக்கும்படி அம்மாயாஜனகனை வெட்டியெறிந்த சரித்திரத்தைச் சொல்லுகின்றேம். எப்படியெனில் இராவணனனவன் இருந்தாப்போலிருந்து தன்மந்திரிகளில் தன்குலமென்னும் விருக்ஷங்களுக்கு ஒரு கோடாலியைப் போன்ற குடிகேடனாகிய மகோதரனென்னும் பிரதானமந்திரியினுடைய முகத்தைப்பார்த்து உடலம்வேர்த்து, ஐயா! என் வல்லமைக்குத் தகுந்த ஆலோசனைகளைச்சொல்லும் முதன்மந்திரியாகிய மகோதரா? என்னை வெகுநாளாய்க்காமத்தீயில் கொளுத்தி வதைசெய்யும் சீதையைக் கூடிக்கலந்து மன்மதன் மலர்க்கணைகளால் அடிபட்டு மெலிந்திருக்கின்ற என்மனதைச் சந்தோஷப்படுத்தி அனங்கனுடைய மலர்வாளிகள் தைத்த காயங்களை ஆற்றும்படியான உபாயம் இன்னதென்று ஆலோசித்து, அதுமுடியத்தக்க ஒன்றை நியமித்து, அன்போடு எனக்குச் சொல்லி என்னுயிரை மன்மதனுடைய பாணங்களுக் கிலக்காக்காமல் நிலைநிறுத்திக் காப்பாற்ற வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டனன். மகோதரன் அக்கருத்துக் கிசைந்து, பலவித ஆலோசனைசெய்து, சுவாமி இராவணேஷ்வரா! உமது புயமாகிய இருபதும் பூரித்து அச்சீதையை மருவியணையும்படி செய்யத்தக்க மாயமொன்றை இன்றைக்கே நான் நியமித்து, அந்த ஜானகியை உன்கருத்திற் கிசையும்படி அரைநொடிப்போதில் செய்விக்கிறேன். அதெப்படி யெனில் நம்மிடத்திலிருக்கும் மருத்துவனென்பவனை உருத்தெரியாமல் அச்சீதைக்குத்தகப்பனானஜனகமகாராஜனைப்போல நமது மாயையினால் நியமித்துக் கட்டிப்பிடித்துக் கொண்டுவந்து அந்தச் சீதைமுன்னே கொண்டுபோய் நிறுத்திப்பலவித இம்சைசெய்வோமாகில், அப்போதே அவள்கண்டு மனங்கலங்கித் திடுக்கிட்டு, தானேமேல்விழுந்து வந்து அணைவாள். ஆதலால் அதுவே தகுந்த உபாயமாகும். இந்த உபாயத்தால் உனது கோரிக்கையை நிறைவேற்றுகிறேனென்று சொன்னான். இப்படி மகோதரன் சொன்னதைக் காமநோயால் மனவருத்தப்பட்டுக்கொண் டிருக்கின்ற ராவணன் கேட்டுத் திடீரென் றெழுந்திருந்து, மகோதரனை மார்பிறுகத் தழுவி, என் அருமைத் தோழனே! உன்னுடையகருத்தின்படியாக அதிகதீவிரத்தில்செய்வாயென்றுசொல்லி உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டு, பாபிஷ்டர்களான ராக்ஷதர்களென்கின்ற இருட்கூட்டத்தை நாசப்படுத்தும் தூண்டாவிளக்கை யொத்துப் பிரகாசிக்கின்ற சீதாபிராட்டியார் மகோதரனுடைய மாயவஞ்சனைகளுக்குப் பயப்படுகின்றாரோ? இல்லையோ? அதைக்காணும்படியாகப் பலராகங்களைப்பாடத்தக்க வண்டினங்கள் மொய்த்து வாசனை வீசுகின்ற புஷ்பங்களால் நிறைந்த அசோகவனத்தை நோக்கிப் போய், நித்தியானந்தத்தைத் தருகின்ற ராகத்தையொத்த சொற்களையுடைய ஸ்திரீகளுக்குள்ள சுந்தரமான அவயவங்களையெல்லாம்ஒவ்வொன்றாகக்கூட்டியமைத்து அளவிடுதற்கு அருமையான நற்குணங்களையெல்லாம் ஒன்றுசேர்த்து செய்த சித்திரப்பிரதி மெய்போலெழுந்தருளி யிருக்கின்ற சீதாபிராட்டியாரைக் கண்டான். மின்னலைப்போன்ற தன் பத்துக்கிரீடங்களும் தகதகாயமாய்ப் பிரகாசிக்கவும், இருள்போன்ற இருபதுதோள்களிலும் அணிந்திருக்கின்ற ஸ்வர்னமயமாகிய மாலைகளானவை நீலமலையிலிருந்து அருவியாறுகள் விழுகிறதுபோலத் தொங்கி யசையவும், இளமைதங்கிய மூன்றாம்பிறைச் சந்திரனையும் சேறகண்டையையும் வாளையும் வில்லையும் பழிக்கத்தக்க நெற்றியையும் கண்களையும் புருவத்தையுமுடைய தேவமாதர்கள் கொங்கையாகிய மலையைச்சுமந்து இடையானது வருத்தமுற முன்னும் பின்னுமணியாகச் சூழ்ந்து ஒருவிளக்கானது மற்றொருவிளக்கைத்தாங்கி வருகிறதுபோலக் கைகளில் விளக்கைப் பிடித்துக்கொண்டு வரவும், கட்டியக்காரர்கள் இரண்டுபக்கங்களிலும் எச்சரிக்கைப் பராக்கென்று இடி

முழக்கம்போலச் சொல்லிக்கொண்டு வரவும், மதத்துக்களித்த யானையும் வெட்கப் பட வெகு விநோத வாடம்பரத்துடனே போய், அங்கே சீதாபிராட்டியாருக் கெதிரில் போட்டிருந்த ஓர் பொற்சிங்காதனத்தின்பேரில் சந்திரவட்டக்குடை கவியவும், தேவர்களைச் சிறையிலிட்ட வெற்றிபொருந்திய தோள்கள் பூரிக்கவும், பாதங்களில் வீரகண்டாமணி அசையவும், இருமருங்கினும் ரம்பாஸ்திரீகள் சாமரைவீசவும், உடைவாளைத்தாங்கி ஒருராஜசிங்கம்போல் உட்கார்ந்தான். அந்தப்படி வீற்றிருந்த ராவணன் சீதாபிராட்டியாரைப் பார்த்து, ஓ பெண்களுக்கெல்லாம் நாயகமே! உனக்கு அடிமையாயிருக்கிற என்மீது என்றைக்கு நீ இரக்கம்வைத்துக் காக்கப்போகின்றாய்? துன்பப்படுத்துகின்ற கொடியோனை சந்திரன் என்றைக்குச் சூரியனைப் போல் வேறுபாடில்லாமல் காணப்படுவான்? நெஞ்சில் சற்றுமிரக்கமற்ற பஞ்சபாணனாகிய மன்மதனென்னும் பாதகன் வஞ்சனையால் தன்னைக் கெஞ்சக்கெஞ்ச என்மீது விடுகின்ற பாணங்களுக்கு நான் என்றைக்கு லக்ஷியமில்லாம லிருக்கப்போகிறேன்? அல்லாமலும் வஞ்சனையுள்ளவனாகிய நான் ஓர் பெண்வடிவுற்றிருக்கின்ற நஞ்சாகிய உன்னை என்னுட்கொண்டிருப்பதால், அதைமாற்றிக்கொள்ளும்படியான உன் போகாமிர்தத்தை விரும்பி நாளுக்கு நாள் மெலிந்துவாடுகின்றேன். இப்படிவாடுகின்ற என்னுடைய சிந்தையை விட்டு நீங்காமல் எப்போதும் குடியாயிருக்கின்ற உன்னை நினையாமல், ஆவியைவிட்டு நீங்குகிறதற்கும் பயந்திருக்கிறேன். ஓ தேவாமிர்தம்போன்ற சீதா! நான் உனக்கு அடைக்கலமல்லவோ? என்னை மன்மதனுக்குத் தோற்கும்படிச்செய்துசந்திரனைக்கொண்டு என்மனதைச் சுட்டு, புலிபோற் சீறிவருகின்ற தென்றல் காற்றினால் மோதும்படிச் செய்து, வஜ்ஜிரமலைக்குச் சமானமான இருபது தோள்களையும் மெலியவிட்டாயே, அல்லாமலும் தேவர்கள் என்னிடத்தில் கொண்டிருந்த பயங்கரத்தையும் கெடுத்தாயே, ஆகிலும் இந்தமட்டுடன் என்னை விட்டு விடுவையோ? அல்லது இன்னுமென்ன துன்பங்களை விளைத்துப் பின்பு உன் மனவயிரந் தீரப்போகின்றனையோ? அதைஅறிகிலேன். ஓ என்னுடையமனோரம்மியமான சீதா! லோகங்களிலிருக்கிற பெண்களெல்லாம் நீயேயாகவும், அவர்களுடைய எல்லாப்பெயர்களும் உன்பெயராகவும், என்னுடைய பார்வையெல்லாம் நின்மேலாகவும், பார்த்தவிடங்களி லெல்லாம் மன்மதனாகவு மிருக்கச்செய்து; அவனுடைய பஞ்சபாணங்களால் என்மேனி முழுவதுந் துளைபடும்படிக்குப் பார்ப்பது உனக்கழகல்லவே. அப்படியானால் என்னால் சகிக்கக்கூடுமோ? மேலும் இந்திரன்முதலிய தேவர்களும், மற்ற எல்லா ஜீவர்களும் என்னைக்கண்டவுடன் பயப்படும்படியாக இந்தத் திரிலோகங்களையும் ஏகச்சக்கிராதிபதியாய் அரசுசெய்கின்ற எனக்குச் சகலரும்பயந்து நடப்பார்களேயல்லாமல், நான் யாருக்காகிலும் பயந்து உயிர்பெற்றிருந்ததுண்டோ? ஒரு பெண்ணினிடத்தில் வைத்த ஆசைநோயானது, இப்போது இராவணனைக்கொன்றதென்று உலகத்தார் சொல்வார்களேயாகில், என்னுடைய ஆண்மையானது வியர்த்தமாய்ப் போய்விடுமல்லவோ? மேலும் உன்னுடைய ஆசையால் இன்னம் சிலநாள்கழியுமேயாகில், இந்தக்காமநோயானது என்னுடைய ஆவியைக் கொள்ளை கொண்டு போகும். அப்போது யாதொரு பலனுமற்ற நாய்ப்பிறவியையல்லவோ நானடையத்தக்கது? அன்றியும் நான் ஆயிரம்பங்கதிகமாக என்னனுபவத்திற்கண்டு தெளிந்திருக்கின்ற இந்தக் காமியத்தைக் குறித்துச் சாஸ்திரக்கியானிகள் காமப்பகுதியென்று ஒரு பிரிவை ஏற்படுத்தி, அக்காமப் பகுப்பைப் பத்தென்று சொல்லியிருப்பதும் பொய்யல்லவோ? ஓ குற்றமற்ற நல்ல செல்வத்தைப்போல அமிர்தத்திலும் இனிமையாக யிருக்கின்ற சீதா! இந்த உலகத்திற்பிறந்த என்னை யாதொரு பிரயோஜனமு மடையாதவனுக்கவோ நீ பெண்பிறந்தாய்? உன்னுடைய அழகுக் கீடுபடத்தக்க என்னுடைய மனமானது என்னைக்கொல்ல நானுன்னை மறந்தது போலப் போய், இறந்த உயிரானது பிழைக்கத்தக்க சஞ்சீவி மருந்தான உன்னால் எப்போது மிறந்தும்பிழைத்து வருகின்ற என்னுடைய அருமையை இங்கே அறியத்தக்கவர்க ளாரிருக்கின்றார்கள்? முற்காலத்

தில் தன்மீது மோகங்கொண்டுவந்த சுவர்க்கலோகத்தரசனாகிய இந்திரனைக்கூடிச் சுகித்திருந்த கௌதமரிஷியினுடைய பத்தினியான அகலிகையென்பவளுக்கு, இந்த உலகத்தில் கீர்த்தியில்லாமற் போய்விட்டதா? இல்லையே. ஓ அன்னம்போலொத்த மெல்லிய நடையையும் குயிலுக்குச் சமானமாகிய சொல்லையுமுடைய பெண்ணணங்கே! நீ கேட்பாயாக, நான் உன்மேல் கொண்ட காமநோய்க்கு அழகிய குமுதமலரையொத்த உனது சிவந்த வாயமிர்தமே மருந்தல்லாமல், அதை நீக்கிக்கொள்ளுவதற்கான வேறொரு மந்திரமும் மருந்துமுள்ளதோ? என்று பற்பலவிதமாக முறையிட்டுக்கொண்டு எழுந்து நின்று நீலமலைகளுங்கண்டு நாணும்படியான தன்னுடைய இருபதுகைகளையும் தலையின்பேரில் கூப்பிக்கொண்டு, ஒரு சூரியனைப் பத்தாகப் பங்கிட்டதுபோலப் பிரகாசிக்கின்ற பத்துக்கிரீடங்களும் பூமியிற்படிய லோகமாதாவாகிய சீதாபிராட்டியினுடைய தாமரைமலர்போன்ற இரண்டு பாதங்களிலும் போய் விழுந்தான். அப்போது பிராட்டியார் புலியைக்கண்ட மானைப்போலப் பயந்து நடுநடுங்கி, நீலோற்பலம் போன்ற கண்ணீர் ஆறாய்ப் பெருகும்படியாக அழுதுகொண்டு, சில வசனங்கள் சொல்லத் தொடங்கினாள்.

என்னவென்றால், அடாபாவி! நான் உனக்குப் பச்சைநாவி. உனக்குப் பொல்லாதகாலம் சமீபித்ததால் நாளையேபோகப் போகிறதுன்னாவி. இப்போது நான் சொல்லுகிறதைக்கேளென்று அங்கிருந்த ஒரு சிறிய துரும்பைப்பார்த்துச் சொல்லுகின்றாள். ஓ ராவணத்துரும்பே! கற்பென்னும் பதிவிரதாபத்தியத்தைப் பூண்டிருக்கின்றவர்களை இகழ்ந்து பேசுகிறதினால் பழிபாவங்களுமுண்டாக்குவதைச் சற்றும் யோசித்தாயில்லை. உன்னுடைய துண்டரீகமுள்ள நெஞ்சைப் பிளந்து நீவஞ்சகரான உன்பந்துக்களுடனே நாசமாய்ப் போகும்படிச் செய்யாவிடில், என்னுடைய கற்புநிலைமைக்கும், தர்மதேவதையின் வல்லமைக்கும் என்னபெருமையுண்டாகப் போகின்றது? தேவதா நிர்ணயப்படிக்கு இவ்வுலகில் வாழ்வுற்றிருக்கின்ற மாமிசதேகங்கள் தோறும் உயிரும், அவற்றிற்கேற்ற நல்லுணர்வுமறியாயோ? குகைபோன்ற உன்னுடைய பிளந்தவாயினால் தகாத வார்த்தைகளைப் பேசக்கேட்டும், உன்னை நாசப்படுத்தாமற் சும்மாயிருப்பதனால், நீ தானென்ன சொல்லமாட்டாய்? என்ன செய்யமாட்டாய்? மேலும் சுவர்க்கலோகத்தரசனாகிய இந்திரனையும், சத்தியலோக வாசியாகிய பிர்ம்மதேவனையும், திரிபுராந்தகனாகிய சாம்பசிவமூர்த்தியையும், ஸ்ரீவைகுண்டபதியாகிய விஷ்ணுமூர்த்தியையும், அவரவர்களுக்குள்ள வல்லபங்களையும் நீ பார்த்திருந்தும், நீ அவர்களோடு சண்டைசெய்தேன் ஜெயம் பெற்றேனென்று மனப்பால் குடித்துச் சொல்லுகின்ற உன்னுடைய கட்டுக்கதைகளைச்சுட்டுவிடக்கடவாய். ரணக்களத்திற்போய் அங்குண்டான வீரர்களையெல்லாம்பார்த்து வந்தேனென்றும் சொல்லுகின்றாய்? அது உண்மையாயிருக்குமாகில் அவ்விடத்திலிருக்கின்ற என்னுயிர் போன்ற நாயகராகிய சக்ரவர்த்தித் திருக்குமாரர் தம்முடைய கோதண்டத்தை நாணேறிட்டு உன்தலையைத் துணித்துவிடாமலிருப்பாரோ? ஆனால் அவருக்கு நீ பயந்தோடி வந்துவிட்டாய்போலக் காணப்படுகின்றது. அன்றியும் இதுவரையில் நான் ஆகாரமென்பதில்லாமலும், அபிமானத்தினால் உயிரைமாய்த்துக் கொள்ளாமலும் நாணமுற்று, மிகுந்த வருத்தப்பட்டுக்கொண்டு உன்கண்ணெதிரே வாழ்வுற்றிருக்கிறேனென்று நீ நினைக்கப்போகின்றாய்? அப்படியல்ல. நல்லவொழுக்கத்தையே ஆபரணமாகத் தரித்திருக்கின்ற நீலமலைபோன்ற அழகிய திருமேனியையுடைய புண்ணியவந்தரான என்நாயகனைக் காண்பதற்கும், போர்க்களத்தில் என்னுடைய கொழுந்தனரான இளையபெருமாளானவர் பின்னேகாவலாக நிற்கத் தம்மோடு எதிர்த்துவருகின்ற உன்பத்துத்தலைகளையும் பத்துக்கைகளையும்சின்னாபின்னப்படுத்திச்சிதறிப்போக அடித்ததன்பிறகு என்பர்த்தாவான கர்த்தாவின் திருமுகதரிசனம் செய்வதற்காகுமென்றே நீ நிச்சயமாக நம்பக்கடவாய். ஐயோ ராவணத்துரும்பே! எனக்கும் என்னுடைய நாயகராகிய அந்த லோகராட்டியனுக்கும் உடலிரண்டேயல்லாமல், உயிரொன்றென்று நீ உன் மந்தபுத்தியை நீக்கி யுணர்ந்துகொள்ளுவாய்.

செந்தாமரைமலர்போன்றகண்களையுடைய ஒரு நீலமலையானது வில்லைப்பிடித்துக் கொண்டு பார்த்த பேர்களுடைய மனதை வெட்கமடையும்படியாகச் செய்வதுபோல விளங்கும் பெருமைபெற்ற புருஷோத்த மர் என்னுயகரல்லவோ? அதை நீ யோசி த்துப்பாரென்று சொல்ல, ராவணன்கேட் டுத் திடுக்கிட்டு இருபதுகண்களிலும் அக் கினி ஜுவாலையானது வீசும்படியாக யம னைப்போல அதிககோபங்கொண்டு லோக மாதாவாகிய சீதாபிராட்டியைப் பார்த்து சொல்லுகிருன்.

ஓ பெண்கள் நாயகமே! நீ புகழ்ந்து பேசுகின்ற அந்தராமன் என்னைக்கொன்று விட்டு உன்னை மீட்டுக்கொண்டுபோன பின்பு, அவனுட னுயிரொத்து வாழலா மென்று நினைத்திருக்கின்ற உன் எண்ணத் தை நான் பார்க்கிறேனென்று புன்னகை கொண்டு சொல்லுகிருன். இருக்கட்டும். ஓ மின்னற்கொடிபோன்ற இடையையுடைய சீதா! இந்த உலகத்தில் உன்னினத்தார் முதல் மற்றெவர்களாகட்டும், தேவர்களா கட்டும், புனத்துழாய் மாலையைத் தரித்த அந்த விஷ்ணுவென்று நீ சொல்லுகின்ற ராமனுகட்டும் என்னோடு எதிர்ப்பார்களே யானுல்; அவர்களை யெல்லாம் வேரோடு அதஞ்செய்து போடேனே? நீ இதை நாளையேகாணப்போகிருய். முன்னமொரு குரங்குவந்து ஏதோ புளுகிப்போன அந் தச்சொல்லைநம்பி அவர்களெல்லாரும் சமு த்திரத்தை யணையிட்டுக்கட்டி லங்கையைக் கிட்டி வளைத்துக்கொண்டார்களென்று நீ மனமகிழ்ந்திருப்பாயே யானுல், நானும் என்னைச்சேர்ந்தவர்களும் என்ன மூடர்க ளோ? அந்த நினைவைமறந்துவிடு. மேலும் என் முன்னுகத் தோன்றுகின்ற எப்படிப் பட்ட வஸ்துக்களானுலும், அதுகளெல் லாம் விளக்கின்முன் விட்டிற்பூச்சிபோ லழிந்துபோய் விடுமல்லவா? அதிகபராக் கிரமசாலிகளான வெற்றிபெற்ற சில ராக்ஷ தவீரர்களை அயோதிக்கும் மிதிலாபுரிக்கும் போய் அங்குண்டான பந்துக்களையும்மாமி மார்களையும் உன்னைப்பெற்ற அப்பன்ஜனக ராஜனையும் கைப்பிடியாகப் பிடித்துக்கொ ண்டு வருப்படியாகவும், ஒருவேளை அவர் கள் எதிர்ப்பார்களாகில் அப்படிப்பட்டவர் களுடைய தலைகளையறுத்துப் பச்சையுதிர மொழுகும்படியாக என்னுடைய கண்முன் பாகக் கொண்டு வரும்படியாகவும் ஆக்கி யாபித் தனுப்பி யிருக்கின்றேன்.

என்று இப்படியாகப் பயமுறுத்த, சீதாபிராட்டியார் இது என்னகாலக்கேடா யிருக்கின்றது. நெருப்புக்குச் சமானமான என்னை மாயவஞ்சனை செய்து கொண்டு வந்து வைத்திருக்கின்ற சண்டாளர்களு க்கு எந்தக்காரியந்தான் அருமையாகப் போகிறதென்று பற்பல ஆலோசனைகளைச் செய்து பெருமூச்சுவிட்டு, ஐயோ! இங்கே நான் இப்படியாக வென்று என் தலையிலெ ழுதிய கபடனுகிய பிரம்மதேவர், அங்கே என் மாமியார் முதலானவர்களுக்கும் இப் படியேயெழுதி யிருக்கமாட்டாரோ? ஆகை யால் அவரும் நம்மிடத்தில் நல்லகிருபை யுடையவராகத் தானிருக்கின்ருர். ஒருகால த்திலும் தருமம் பொய்த்துப் போகாதெ ன்று உலகத்தார்சொல்லுவார்களே. அந்த வார்த்தையும் பொய்த்துப் போயிற்றே என்று சீதாபிராட்டியார் கண்களில் நீர் தாரைதாரையாய்ப் பெருகும்படியாகப் புல ம்பிக்கொண்டிருந்தார். அப்போது மகோ தரன் மருத்துவனென்பவனை ஜனகராஜ னைப்போல் ரூபீகரித்துக் கையிற் கயிறிட் டுக் கட்டிக்கொண்டு அதிவேகமா யோடி வந்து, காலகோடி விஷத்திற் கொப்பான வனும் தீக்கண்ணனுமான ராவணனுக்கு முன்னேவிடுத்தான். அதைச்சீதாபிராட்டி யார்பார்த்து, இதை மாய்கையென்றறியாத வராய் நெருப்பில்விழுந்த தாயைக்கண்ட குஞ்சுபோலச்சகியாதவராகி, உடல்பதைத் துக் கைகளைநெரித்து, முகத்திலிரண்டுகை களாலுமோதியறைந்துகொண்டுநெய்சொ ரித்த நெருப்பை மிதிக்கக்கூடாமைபோல த்தமது தாமரைமலர்போன்ற பாதங்களைப் பூமியில் படியவையாமல் பதைபதைத்து, உள்ளும் புறம்பும் கொதித்துக் கீழேவிழு ந்து புலம்பத்தொடங்கினுர். அதெப்படி யென்ருல், ஓ தெய்வமே! தெய்வமே!! சத் தியமென்பது மறைந்து விட்டதோ? என் னுடைய பதிவிரதா தர்மமானது இந்த உலகத்தைச் சுட்டுவிடுமே. இந்த வஞ்சகர் களாகிய ராக்ஷதர்களுக்குத்தானே ஆண் மையிருக்கத் தக்கது? மற்றவர்களுக்குக் கிடைக்கத்தக்க தல்லவோ? அந்தப்படியா னுல் நான் பிழைத்துக்கொண் டிருப்பே

னென்று நம்பத்தக்கதோ? என்று புலம்பிய எம்மாதாவாகிய சீதாபிராட்டியார் அங்கே வந்திருக்கின்ற மாயாஜனகனைப் பார்த்து, ஐயா என்பிதாவே! பெரியதவத்தைச் செய்துஎன்னைப்பெற்று அருமைபாராட்டி வளர்த்த உமக்கு இப்போ தென்பொருட்டு வந்த பொல்லாங்கு மிதுவோ? ஓ தர்மமே ஸ்வரூபமாகப் பெற்று எல்லாவுயிர்களுக்கும் தாயுந்தந்தையுமாகி வந்த மகாதவசிரேஷ்டரே! ஓ வந்த விருந்தினர்களுக்கு முன்னே யமுதளித்துப் பின்னுண்ட பாக்கியவானே! ஓ அளவற்ற நல்ல தவங்களைச் செய்த என் அப்பனே! உமக்குச் சத்துருக்களாகவிருந்த எல்லாரையும் வென்று வெற்றி பெற்றிருக்கின்ற நீர், இந்த அற்பர்களாகிய ராக்ஷதர்கள் கையிலகப்பட்டுக் கொண்டது பூர்வம்செய்த மாதவசேஷமோ? இவ்வுலகத்தில் உன்னைப்போல யாகஞ்செய்தபேர்களுமிருக்கின்றார்களோ? மதுரமாகிய தேனொழுகுகின்ற வாடாத வெற்றிமாலையைத்தரித்த உத்தமனான என்னப்பனே! மஹாபாபாத்துமாக்களாகிய இந்த ராக்ஷதர்களால் வஜ்ஜிராயுதத்திற் கொப்பாகிய உம்முடைய தோள்கள் கட்டப்பட்டதென்ன அநியாயம்? இதை இந்தப்பாபிஷ்டிக் கண்ணினால் பார்த்திருந்தும் ஆவியைப்போக்காமலிருப்பது என்னஜென்னமாகுமென்று பற்பலவாகச்சொல்லி, உயிரில்லாத சித்திரப்பிரதி மெய்போல மூர்ச்சையடைந்து, ஆகாயத்தில்தோன்றுகின்ற மின்னற்கொடியானது பூமியில்வந்து மடிந்ததுபோலச் சுவர்னமயமாகிய மேனியானது மண்படியும்படியாகப் புரண்டு, சிவந்த இதழையுடைய சீதாபிராட்டியார் வாய் திறந்து பெண்ணன்றிலைப்போல் அழுது புலம்புவதாயினள் ஐயா! என்னைப்பாணிக்கிரகணஞ் செய்த என் பிராணநாதராகிய ஸ்ரீராமமூர்த்தியினுடைய அயோத்தியாபுரிக்கு என்றும் வந்தவரல்லாதநீர், அடியேனைச் சிறையிருப்பில் காணவேண்டுமென்று நீரும் சிறைபட்டு வந்தீரோ? ஓ வேதவரம்பைக்கடவாத வமிசத்தவர்களுடைய சந்ததியிற்பிறந்த ஐயா மஹாராஜரே பலமுள்ள இறகையுடைய கருடபகவானையே வாகனமாக ஆரோகணித்து வருகின்ற சாக்ஷாத் ஸ்ரீயப்பதியானவர், தம்மை ஆசிரயித்தவர்களுக்கு மாயக் கட்டாகிய இந்த அற்பப்பிறவியை நீக்குவாரென்று புத்திமான்களெல்லாம் நிச்சயித்திருக்கின்றார்கள். இப்படிக்கிருக்க என் சிறையை நீக்கும்படியான ஸ்ரீசக்கிரவர்த்தித் திருக்குமாரரை இன்னும் வரக்காணவில்லை. என்னிமித்தமாகக் கட்டுப்பட்ட உம்முடைய சிறையை நீக்கத்தக்கவர்கள் இந்தலோகத்தில் யாரிருக்கின்றார்கள்? இந்தகுணஹீனர்களிடத்தில் அதர்மவழியான பகையைப் பெற்றீரே? ஐயா! எதிர்த்து நின்று அம்புகள்பட்டு மாண்டு வீரசுவர்க்கம் பெற்றீரேயானாலும் பெருமை உண்டே. உலகத்திலுள்ள வீரத்தால் உயர்ந்த க்ஷத்திரியர்களெல்லாம் பரிகாசிக்கும்படியானீரே. எந்நாளும் நிலைநிற்கும்படியான பாவத்திற்குமுள்ளாய்விட்டீரே. இந்தநஷ்டம் உம்மாலுண்டாயிற்றென்று நினைக்கலாமென்றால் உம்மாலல்ல ; பாபியாகிய என்னைப் பெண்ணாய்ப் பெற்றீரே அதனாலுண்டாயிற்று. இப்படிப்பட்ட பேறுபெற்றவர்கள் நம்மையல்லாமல் யாரிருக்கின்றார்கள்? நானிறந்துபோகாமல் உயிருடனிருந்து சத்துருக்களையெல்லாம் நாசமடையக் கண்டபோதிலும், நானொருசுகமும் கண்டவளல்ல. உங்களெல்லாரையும் வருத்தப்படுத்தி நாசமாக்கிவிட்டு அயோத்தியின் ராஜவமிசங்களின்கீர்த்தியையெல்லாம் பிடாரியைப்போல உண்டுவிட்டு, என்னுயகரைக் கொல்லுங்களென்று, இந்த லங்கையிலொரு கொடிய பகையைச் சம்பாதித்துவைத்து, என்பிதாவாகிய உம்முடைய மலைபோலத் திரண்ட தோள்களையும் பாசத்தாற்கட்டியிருக்கவும் கண்டேன். இப்படி புகுந்தவீட்டிற்கும்பிறந்த வீட்டிற்கும் அழியாத துக்கத்தைக் கொண்டுவந்து விட்டவள் நானல்லவோ? நானென்ன சாமானியமானவளோ? கொஞ்சமாவது என்னிடத்தில் கிருபையென்பதுண்டோ? இனிநான் உயிருடன் இருக்கலாமோ? ஆனபடியால் நான் செத்தபோதிலுமென்ன சுகம்? அது ஒன்றுமில்லை. அளவில்லாத உயர்ந்த யாகங்களை முன்செய்து என்னை வேண்டுமென்று பெற்றுக் காப்பாற்றிக் கரையேற்றின என் பிதாவாகிய உம்மை, கைவிலங்கிட்டுப் பற்றி இழுத்து உம்முடைய மேனி புழுதியிற் புரளுகிறதைக்கண்டேன். அல்லாமலும் என்னை மணம்புரிந்து, செய்யும் சடங்குகளை முடி

த்து, மந்திரவிதிப்படி பாணிக்கிரஹணம் பண்ணின பிராணநாயகருக்கும் இந்தத் துன்பத்தைச் சொல்லாமலே முடிந்து போகின்றேனே? தெரியாது. ஐயோ! என் தாயே! ஓ எனக்குப்பெரியோர்களா யிருக்கின்றவர்களே! ஓ என்னருமையான உயிர் போன்ற தங்கைமார்களே! என்னைப்பெற்றெடுத்துவளர்த்த இத்தகப்பனுருக்கு இந்தத் துன்பம் வந்ததை நீங்கள் கொஞ்சமாவது ஆலோசித்து உணர்ந்தீர்களில்லையே அல்லது உங்களுக்கு ஏதேனும் துன்பம் வந்து விட்டதோ? அல்லது கூடவே நீங்களும்வந்து வழியிலிறந்துபோனீர்களோ? இந்தசண்டாளர் மேருமலைக்கு முயர்வாகப் போய் ஆகாயமார்க்கமாய் வந்தபோதிலும், அகழாற்சூழப்பட்ட காவலையுடைய மிதிலாபுரியி னுள்ளே நுழைகிறதற்கு முடியாது. அப்படிக்கில்லாமல் ஒருவேளைபோர்க்களத்தில் பிடித்துக்கொண்டு வந்துவிட்டாலும், வேறேயொரு மோசஞ்செய்து என்னைப்போலக் கொண்டுவந்து விட்டாலும், ஜனகமகாராஜரை ராக்ஷதர்கள் பிடித்து லங்கைக்குக் கொண்டுபோய் விட்டார்களென்று தெரிவிக்க அநுமானிருக்கிருரு? இல்லையே.உங்களுக்கு யாரறிவிக்கப் போகிருர்கள்? சத்தியமாக இந்தஜனகமகாராஜரைக் கொண்டுவந்த சண்டாளர்கள் சத்கர்மத்தைச்செய்து வல்லமை பெற்றிருக்கின்ற என் மைத்துனராகிய பரதமகாராஜரையும், அவர்க்கிளைய சத்துருக்க மகாராஜரையும் கொண்டுவருகிறதற்குச் சந்தேகமில்லை. அவர்கள் பிறந்து ஒருசுகமுங்காணுத குழந்தைகள். ஐயோ தெய்வமே!விரதங்களை யனுஷ்டித்துத் தர்மமார்க்கத்தில் நிலைநிற்கிற பேர்களுக்குண்டாகிற நன்மை இதுதானே? இதோ வானரசைனியங்கள் சமுத்திரத்தை யணையிட்டதென்றும், சமுத்திரத்தைத் தாண்டிவந்து லங்கைக்கோட்டையின் மதிலை முற்றுகை போட்டுக் கொண்டதென்றும் சத்துருக்களைச் சம்ஹரித்ததென்றும் சிலர்வந்து சொன்ன வார்த்தைகளைக்கேட்டு அடைந்திருந்தசந்தோஷத்தை; வேறொரு மோசமான செய்கை வந்து சிதைத்துவிட்டதே. ஐயோ என் ஊழ்வினையே! என்று பெருமூச்சுவிட்டு மனந்திகைத்து மூர்ச்சையடைந்து, மறுபடியும் மூர்ச்சைதெளிந்து சீதாபிராட்டியார் அழுதுகொண்டிருக்கிருர். அப்போது, தேவர்களுடைய வல்லமைகளையெல்லாம் பயத்தாலொளிக்கச் செய்யத்தக்க வெற்றிவாளைக்கையிற்பிடித்துக்கொண்டிருக்கின்ற துராத்துமாவாகிய இராவணன் அதிக மனமகிழ்வுடனே சீதாபிராட்டியாரைக் குளிர்ந்தமுகமாய்ப் பார்த்து, இவள் அதிக துக்கத்தைச் சகிக்கும்படியான கடின இருதய முடையவளல்லள். இவளையினிச் சமாதானப்படுத்தி நமது எண்ணப்படி சந்தோஷிக்கலாமென்று தன் துன்மதியாலெண்ணிச் சிலவார்த்தைகள் சொல்லினன்:ஹே சீதா! உன்னைச் சேரவேண்டு மென்கிற ஆசையால் நினைக்கிறதற்கும் சகிக்கமுடியாதஇந்தப்பெரிய துன்பத்தைச் செய்துவிட்டேன். இந்தத் தப்பிதத்தைப் பொறுத்துக்கொள். இனி மிதிலாபுரியிலுள்ளவர்களை வேரறக் கொல்லுகிறதில்லை. இவனிறந்தாலும் இவனுக்கு மறுபடியும் பிராணனுண்டாகச் செய்கிறேன். ஓ அம்ஸபக்ஷிக்குச் சமமாய் நடக்கின்ற சீதையே! தேவலோகமானுலும், இந்தப் பதினாலுலோகமானுலும்,இந்தப் பெரியலோக மூன்றிலுள்ள என்னரசாட்சியேயானுலும், இந்தவெற்றிமாலையையணிந்த உன்பிதாவாகிய ஜனகராஜருக்கே சொந்தமாக்கிவிடுகிறேன். என்னுல் சஹிக்கக்கூடாத காமநோயை நீக்கிவிடுவாயானுல், உன்னையே தெய்வமாக வணங்கி உன் உத்திரவின்படி நடக்கிறேன். அப்படியல்லாமல் இந்த லங்காபட்டணத்தை இவனுக்குக் கொடுத்துவிட்டென்னை வேறே யோரிடத்திலிருக்கும்படி நியமித்தாலும், அப்படியே இருக்கின்றேன். எல்லா ஐஸ்வரியங்களையும் கொடுக்கும்படியான சங்கநிதிமுதலிய மூன்று நிதியங்களையும் கொடுத்துவிடுகிறேன். குபேரனிடத்தில் நான் ஜெயித்துப்பறித்துக்கொண்ட புஷ்பகவிமானத்தையும் பொதுவாயேறும்படிக் கொடுக்கிறேன். தேவர்களையெல்லாம் வெற்றிகொண்ட இந்த வாளாயுதத்தை வேண்டுமென்று கேட்டாலும் கொஞ்சமாவது தடையின்றிக் கொடுத்துவிடுகிறேன். இந்திரன் சூடிக்கொண்டிருக்கிற தேவசாம்பிராஜ்ஜிய கிரீடத்தை அந்தத்தேவர்களெல்லாம் இவனை வணங்கும்படியாக மந்திரவிதிப்படியே இவனுக்குச் சூட்டி, தேவஸ்திரீகளெல்லாம் இவருக்கு அடி

மையேவலை செய்யும்படியாக நானும் இவ
ரிட்ட ஊழியங்கேட்டு நிற்கின்றேன். உன்
னுடைய அழகிய பவளம்போன்ற திருவா
யால் கிருபையாக ஒரு சிறுவார்த்தை
சொன்னாலும்போதும். எந்தனைப் பெற்ற
முப்பாட்டன், இந்த லோகங்களையெல்
லாம் சிருஷ்டித்தபிரமதேவர். அவர்தாமே
வந்து கேட்டவரங்களையெல்லாம் கொடுப்
பார். மற்ற தேவர்களெல்லாம் கிங்கரர்க
ளாய் அடிமைசெய்வார்கள். தேவாமிர்தத்
தோடு பிறந்த லக்ஷ்மியே நீயல்லாமல், அ
வள் வேறேயில்லை. அப்படியிருந்தாலும்,
அவளும் உனக்கு அடிமைசெய்வாள். தே
வர்களும் அறிவாளரும் மற்றபெரியோர்
கள் யாவரும் தாமேயோடி வந்து, உம்மு
டைய பிதாவாகிய இவருடைய பாதத்தில்
விழுந்து சொன்னயேவலைச் செய்வார்கள்.
சித்திரப்பாவை யொத்த நீ இவனுக்குப்
பெண்ணாய்ப் பிறந்ததினால், இத்தனை நாள்
ஒரு பிரயோஜனத்தையும் காணவில்லை.
இன்னமும் அப்படியிராமல் இப்போதே
எல்லா நன்மையையும் இவரடையப் போ
கிறார். நீ இந்த மூன்றுலோகச் செல்வத்
தையும் உன்னியமனப்படி யாருக்குவேண்
டுமோ அவர்களுக்குக் கொடுப்பாய். என்
நெஞ்சிலுள்ள இச்சையைமாத்திரம் நிறை
வேற்ற வேண்டுமென்று இராவணேஸ்வ
ரன் சொல்லக்கேட்டு, சீதாபிராட்டியார்
எதிரே கிடக்கிற அந்தத் துரும்பைப்பார்
த்து, அடா துன்மார்க்கத்துரும்பே! இந்த
ஐஸ்வரியங்களையெல்லாம் பெறப்போகிற
வன் இந்திரனாகும். உங்கள் பொய்வாழ்
வான இந்த லங்காராஜ்ஜிய முழுவதையும்
விபீஷணாழ்வான் பெறப்போகிறான். தேவ
தேவராகிய ஸ்ரீசக்ரவர்த்தித் திருக்குமாரரு
டைய திருக்கரத்திலுள்ள திவ்வியாஸ்தி
ரங்கள் உன்மார்பைச் சின்னாபின்னப்படப்
பிளக்கப்போகின்றதுகள். அந்த நீலமேக
சியாமளரூபரான சுவாமியினுடைய திரு
வடிகள் வைக்கிறதற்கு என்தலை உரிமையா
யிருக்கின்றது. உன்னைப்பார்த்துச் சிரித்
துக்கொண்டே சக்கரவர்த்தித் திருக்குமார
ருடைய நாமமுத்திரித்திருக்கின்ற பாணங்
கள் உன்மார்பில் புகுந்து, சல்லடைக் கண்
களாய்த் தொளைக்கப்போகின்றன. உனக்
குத்தகுந்த புத்தி சொல்லப்போகிறவை
கள், சுவாமியின் கோதண்டத்திற் பூட்டிய
நாணிலிருந்து மலைகளெல்லாம் நடுங்கிப்
பொடிப்பொடியாய் உதிரும்படி புறப்படப்
போகிற திவ்விய நாராசங்களே. அடா
துரும்பே! யாவரும் சொல்லிக்கொள்ளு
கிற வார்த்தையு மொன்றிருக்கின்றது. அ
தைச் சொல்லுகிறேன் கேள். காக்கைகள்
தங்கள் மூக்குகளால் உன்கண்ணைக் குத்திக்
கிளறும்படியாக, செந்தாமரை மலர்போ
ன்ற கண்களையுடைய சுவாமியின் கோதண்
டத்திலிருந்து அளவற்ற பாணங்கள் புறப்
பட்டு வரப்போகிறதுகள். பிறகு உன் அழ
குள்ள மாலைகளணிந்திருக்கின்ற மார்பை
எக்களித்துக்கொண்டு, புலால் நாறுகின்ற
பிசாசங்களெல்லாம்தழுவப்போகிறதுகள்.
எங்கள் சுவாமியினுடைய நாமமுத்திரித்
திருக்கிற பலம்பொருந்திய திவ்வியாஸ்தி
ரங்களினாலே கோரதந்தங்களையுடைய பெ
ரிய வாய்களோடும் கூடிய உன் தலைகள்
சின்னாபின்னப்பட்டுச் சிதறி, நீயு மாண்டு
போனாயென்கிற சமாசாரத்தை திவ்விய
துளசிமணி மாலிகாதரனான என் அரு
மைப்புத்திரன் ஆஞ்சநேயன்வந்து சொல்
லப்போகிறான். அதைத்தான் நான்விரும்
பிக்கேள்விப்படப்போகின்றேன். அக்கால்
அதைக் கேள்விப்பட்ட பேர்களுக்கெல்
லாம் சந்தோஷகரமா யிருக்கப்போகிறது.
ரணக்களத்தில் உன்மகனான இந்திரஜித்து
வினுயிரை எங்களிளையபெருமாள் பிரயோ
கிக்கப்போகிறபாணங்கள் உண்டுவிட, அவ
னுடலை நாய்கள் தின்ன, ஐயோ! என்மக
னிறந்தானேயென்று நீ புலம்பி ஓவென்ற
லறி யழப்போகிறாய். அப்படி நீ யழுகி
றதை எல்லாருங் கேட்டுச் சந்தோஷப்பட்
டுச் சொல்லுகிறவார்த்தையை நீ கேட்கப்
போகிறாய். அடா ஈனஜன்மத் துரும்பே!
என்று சொல்லி முடித்தாள். இப்படி சீதா
பிராட்டியார் சொல்லக்கேட்ட மஹா துஷ்
டனான ராவணன் அக்கினி பறக்கும்படிக்
கண்களை விழித்து, பலம்பொருந்திய தன்
கைகளை முறுக்கி, இதழில்பல்லழுந்தக்கடி
த்துச் சீதையின் மேற்பாயும்படி யோடி
னான். அப்போது துஷ்டமந்திரியாகிய
மகோதரன் ராவணனைத் தடுத்து இவள்
தன் தகப்பன்வேண்டிய புத்திசொன்னா
லிசைவாள். நீர் கோபிக்க வேண்டாமெ
ன்று சமாதானப்படுத்தவும் ராவணன் திரு
ம்பிவந்து, அங்கிருந்த ஆசனத்தின்மீது

உட்கார்ந்தான். பின்பு உயிர்போனவனைப் போலத் தரையில் விழுந்துகிடந்த மாயா ஜனகன் சீதாபிராட்டியைப்பார்த்து, அம்மா! நீ இந்தராவணன் இஷ்டப்படி இசையாவிட்டால், என்னையும் என்குலத்தையும் நீயே கொன்றுவிட்டவளாகிருய்.

அம்மா சீதா! தாமரைப் புஷ்பத்தின் மேலிருக்கின்றசரஸ்வதியும்தன்னை அடையும்படி விரும்பி முயல்கின்ற எல்லாருக்கும் உரியவளாக விருக்கிறபடியினாலே யல்லவா? அவளுக்குப் பொதுமகளென்று பெயருண்டா யிருக்கின்றது. இது உனக்குத் தெரியாதா? ஓபாவியாகிய நான்பெற்ற பெண்ணே! உன்னிமித்தமாக என்னுயிர் போவது உனக்கு நல்லதோ? சிறையிலகப் பட்டுவருத்தப்படுகிற நீ, தேவர்களுக்கெல்லாம் ராஜனான இந்த ராவணனுக்குப் பட்டபு தேவியாயிருப்பது உனக்குப் பொல்லாததோ? என்தாயே! என்னை என்பந்துக்களுடனே மிகுந்த ஐஸ்வரியத்தை அநுபவிக்கும்படி உயிர்வாழச்செய்துஉன்னையும் இந்தக்கொடிய சிறையிலிருந்தும் விடுவித்து இன்பமடையச் செய்யக்கடவாய். என்று சீதாபிராட்டியாருடைய திருவடிகளுக்கருகே வீழ்ந்து, இடியும் உதிரும்படி ஓவென்றலறினான். இப்படியலறுவதைக்கேட்டுச் சீதாபிராட்டியார் ஹரி! ஹரி! ஓ சதுர்முக பஞ்சமுகதெய்வங்களுக்குத் தெய்வமே! இப்படிப்பட்ட பாவச் சொல்லையும் கேட்கவாயிற்றே. என்றுசொல்லித் தமதிரண்டு செவியையும் கெட்டியாய் மூடிக்கொண்டு, புழுங்கிப் பெருமூச்சு விட்டு உயிர்சோர்ந்து அழுது, மிகுந்த கோபத்துடனே அம்மாயாஜனகனைப்பார்த்து, தர்ம நிஷ்டரான என்பிதா ஜனகராஜா நீதியான வார்த்தை சொல்லுவாரே யல்லாமல் உயிரை யிச்சித்து இப்படிப் பட்ட வார்த்தைகளைச்சொல்லமாட்டாரே. இது என்ன விபரீதம் என்று பயந்து கிளியைப்போல வாய்குழறிச் சிலமொழிகள் சொல்லுகின்றூர். தர்மமழியவும், க்ஷத்திரியவம்சத்திற் கடுத்த வீரத்தன்மை நாசமாகவும், சத்தியம் சிதையவும், நிந்தை உண்டாகவும், வேதசாஸ்திர நியமம்க்ஷீணித்துப்போகவும் ஆசாரம் பிழைபடவும், தேவர்களும் முனிவர்களும் சம்மதித்து வந்தபுகழ் நீங்கவும், இப்படிப்பட்ட துர்வார்த்தைகளைச் சொன்னாய். நீ என்பிதாவாகியஜனகராஜனாவாயோ? தங்கள் வமிசமெல்லாம் அழியநேரிட்டாலும், தங்கள் தங்களுரிமையான வாழ்க்கை க்ஷீணித்துப் போனாலும், நெஞ்சைப்பிளக்கும்படி அக்கினியைக் கக்கிக்கொண்டு வேலாயுதம் வந்துசின்னாபின்னப்படுத்தினபோதிலும், பெரியோர்கள் சொன்ன ஆஜ்ஞையின்படி வாழ்வார்களேயல்லாமல் முறைமைகெட்டு அதர்ம்மிகளாய்ப் பிழைக்கிற சண்டாளர்களுக்குட்பட்டு வாழ்கின்ற க்ஷத்திரியர்களுமுண்டோ? ஐயோ! பாவம். நீயும் உன்பந்துக்களும் இந்தப்பூலோகமும் அழிந்து போனாலும், நான் முறைமைகெட்டு உயிர் வாழ்ந்திருப்பேனோ?மேலும் வஜ்ஜிரமலைக் குச்சமமான பலமுள்ள திருத்தோளினிடத்தில் சுதரிசன ஆழ்வானைத்தாங்கிய ஆயிரந் திருநாமங்களையுடைய சாட்சாத் ஸ்ரீயப்பதியாகிய ஸ்ரீராகவபிரானுக்கு அந்நிய சேஷமாயிருக்கிற நான், என்னுயிரைக் காக்கும்பொருட்டு இந்த நாயையும் மறந்தாவதுகையாலேனும்தொடுவேனோ? அந்தஸ்ரீகோதண்டபாணியல்லாமல்அன்னிய புருஷர்களென்னருகேவந்தால், விளக்கில் விழும் விட்டிற்பூச்சியைப்போல் மாண்டுபோக மாட்டார்களோ? ராஜசிம்ஹத்துடன் வாழ்ந்திருக்கின்ற பெண்சிம்ஹம், சலதாரைச் சேற்றைத்தின்று ஜீவிக்கின்ற ஒருசிறு நரிக்குட்டியோடும்வாழ்ந்து கொண்டிருக்குமோ? இவன் நாயினுங் கடைப்பட்டவனாச்சே நல்லது. நீ எனக்குத் தகப்பனாய். ஆனபோது வெற்றி மாலையையணிந்த வீரசிகாமணியாகியஎன் சுவாமியினுடைய கோதண்டத்துக்குப்பல்லாண்டுகூறி, அந்தவில்லால் நாம் இருவரும் மீட்கப்படுவோமானல். நமக்கென்ன குறைவந்து விட்டது?அப்படிக்கில்லாமல் தகாதசொல்லைச்சொன்னவனென்று ஒருநிந்தைவார்த்தையை இப்படிஏன்தேடிக்கொள்ளவேணும்? என்று சொல்லினன். சீதாபிராட்டியார் சொல்லக்கேட்ட, ராவணன் அப்படியா? ஆனதாகட்டும். இனிநடக்கிறபடி நடக்கட்டும். இதோ உன்கண் முன்னிற்கின்றனே, இவனல்லவே உன்னைப் பெற்றஜனகராஜன்? இந்தக்ஷணத்தில்இவனைக்கொன்று உயிர்குடித்து விடுகிறேனென்று, தன் உடைவாளை உருவிக்கொண்

டான். அப்போது சீதாபிராட்டியானவர் அந்தத் துரும்பைப்பார்த்து, அடா துரும்பே! நீஎன்னையுங் கொல்லப்போகிறதில்லை. அல்லாமலும் இவனையும் கொல்லப்போகிறதில்லை. இப்போது நீயும் சாகப்போகிறதில்லை. இந்தஉலகையும் அழிக்கப்போகிறதில்லை. கொல்லுந்தொழில் உங்களுக்குண்டாகுமா? நான் இந்தத் துன்பத்தை நீங்கி அழியாத கீர்த்தியை அடையப்போகிறேன். நீயோ என்பிராணநாயகர்விடும் திவ்வியபாணங்களால் உன்பந்து சகிதமாய்க் கொல்லப்படப்போகிருயென்று சீதாபிராட்டியார்சொன்னர். அப்போதுமகோதரன் ராவணனைப்பார்த்து, ஓ தேவைஷ்வரியமுள்ள திரிலோகநாயகனுன இராவணேஷ்வரா! இந்தஜனகன்மேலென்னதப்பிதம்? இவனுலானமட்டும் வேண்டினன். இவனைக்கொல்லுகிறது உமக்கொரு லக்ஷியமோ? நமக்குப் பகையாய் வந்திருக்கின்ற அந்த ராமலக்ஷமணர்களை ஜெயித்து விடுவோமானல், இந்தச்சீதைக்கப்புறம் போக்கடியெங்கே? இப்போது தகப்பனைக்கொன்ருல் அதை நினைத்துக்கொண்டு இவள்எப்போதும் துன்பப் பட்டுக்கொண் டிருப்பாளல்லவாவென்று தடுத்தான். அப்போது ராவணன் கோபமாறினவனைப்போல் அங்கிருந்த ஆசனத்தின்மீது உட்கார்ந்தான். உடனே, மலைபோலுயர்ந்துவளர்ந்த கும்பகர்னன் ஸ்ரீராமபாணத்தால் இறந்தானென்று வானரவீரர்கள்கர்ஜ்ஜித்துச்சொன்ன சப்தமானது, தேவர்களுடைய ஆனந்த கோஷத்துடனேவந்து ராவணன் செவியில் நுழைந்தது. அப்படிவந்து நுழையவே, இராவணன் நம்மோடு வேறுபட்ட தேவலோகத்தாருக்கும் வானரசேனைகளுக்கும் பலம் அதிகரிக்கிறதற்குக் காரணம் வேறென்றுமில்லை. அந்த ரணக்களத்தில் நிற்கின்ற அந்த இரண்டுமனிதர்களுடைய வில்லிற்பிறந்த நாணேசையின் தகுந்தவல்லமையேயென்பது எனக்கு நன்ருய்த் தெரிந்திருக்கின்றது. என் தம்பியாகிய கும்பகர்னனுக்கு உதவியில்லாமல் தனித்திருக்கும்படியானசமயம்நேரிட்டுவிட்டதென்று மனதில் துக்கமடைந்தான். அந்தச்சமயத்தில் தோற்றுப்போன ராக்ஷதசேனையைக் கடலுக்கிரையாக்கிவிட்டுப்பறந்துவருகின்றவனைப்போல ஒருதூதன்வந்து,செவியில் மெள்ள உம்முடைய தம்பி கும்பகர்னமகாராஜர்வரிசைவரிசையாகவானரவீரக்கடலையெல்லாம்சிதறடித்துவிட்டபின்பு அவரை ராமன் தன்னுடையபாணத்தால் கொன்றுவிட்டானென்று சொன்னன். அதைக் கேட்டு ராவணனனவன் பரிவேடத்துடனேகூடித் தோன்றுகின்ற சூரியனைப்போல் வெற்றிமாலையைத் தரித்திருக்கின்ற பத்துக் கிரீடங்களும் தரையில்விழுந்துருளப் பூமியில் வேரூன்றிநின்ற மராமரமானது தன் பருத்த பல கிளைகளுடனே வேர்பறிந்து மண்மேல் விழுவதுபோலத் திடீரென்று வீழ்ந்து, ஒருவரையொருவர் பிரிகிறதென்கிற துன்பந் தாங்கள் பிறந்த நாள்முதல்இன்றையவரையிலும்ஒருநாளுமடையாமல் உயிரொன்றும் உடலிரண்டுமாய்ப்பிரியாதிருந்தார்கள். ஆதலால் இன்றைக்குத் தன்னிமித்தமாகத் தம்பி இறந்துபோனனென்று அறிவுமயங்கிப் பரவசப்பட்டு, சமஸ்தலோகங்களும் செவிடுபடும்படிப் புலம்பத்தொடங்கினன்.

விருத்தம்.

தம்பியோவானவராந் தாமரையின்காடுழக்கும்
தம்பியோநான்முகத்தோன் சேய்மதலைதோன்ருலோ
நம்பியோவிந்திரனை நாமப்பொறிதுடைத்த
எம்பியோயானுன்னை யிவ்வுரையுங்கேட்டேனே.

மின்னிலையவேலோனே யானுன்விழிகாணேன்
நின்னிலையாதென்றே னுயிர்பேணிநிற்கின்றேன்
உன்னிலைமையீதாயி னேடைக்களிறுந்திப்
பொன்னுலகமீளப் புகாரோபுரந்தரனர்.

வன்னெஞ்சினென்னைநீ நீத்துப்போய்வானடைந்தால்
இன்னஞ்சிலரோ டொருவயிற்றின்யார்பிறப்பார்
மின்னஞ்சும்வேலோய் விழியஞ்சவாழ்கின்ருர்
தன்னெஞ்சந்தாமே தடவாரோதான்வர்கள்.

கல்லன்ருேநீராடுங் காலத்துட்காறேய்க்கும்
மல்லொன்றுதோளாய் வடமேருமானுடவன்
வில்லொன்றுநின்னை விளிவித்துளதென்னும்
சொல்லன்ருேவென்னைச் சுடுகின்றதுதோன்ருல்.

மாண்டனவாஞ்சூலமுஞ் சக்கரமும்வச்சிரமும்
தீண்டினவாவொன்றுஞ் செயலாற்ருவாந்தெறித்து
மீண்டனவாமானுடவன் மெல்லம்புமெய்யுருவ
நீண்டனவாந்தாமின்னு நின்ருராந்தோணேக்கி.

நோக்கறவுமெம்பியர்கண் மாளவுமிந்நொய்திலங்கை
போக்கறவுமாதுலனர் பொன்றவுமென்பின்பிறந்தாள்
மூக்கறவும்வாழ்ந்தே னுருத்திமூலக்கிடந்த
ஏக்கறவாலின்ன மிரேனேவுனையிழந்தும்.

*தன்னைத்தான் நம்பியைத்தான் ருனைத்தலைவனைத்தான்*
*மன்னைத்தான்மைந்தனைத்தான்மாருதத்தின்காதலைத்தான்*
*பின்னைக்கரடிக்கிறையைத்தான் பேர்மாய்த்தாய்*
*என்னைத்தான்கேட்டிலே னென்னுனவாறிதுவே.*

*ஏழைமகளீரடி வருடவீர்ந்தென்றல்*
*வாழுமணியரங்கிற் பூம்பள்ளிவைகுவாய்*
*சூழுமலகை துணங்கைப் பறைதுவைப்பப்*
*பூழியணைமேற்றுயின் றனையோபோர்க்களத்தே.*

*செந்தேன்பருகித் திசைதிசையுநீவாழ*
*உய்ந்தேனினியின்று நானுமுனக்காவி*
*நொந்தேன்பிரியேன்றனிப் போகத்தாழ்க்கிலேன்*
*வந்தேன்ரொடர மதக்களிறேவந்தேனல்.*

ஐயோ தம்பி கும்பகர்ணு! ஓ தானவர்களாகிய தாமரைக்காட்டை மிதித்து நசுக்கி விடும்படியான மதயானையே! ஓ பிரம்மபுதல்வருடைய குமாரனுக்குப் பிள்ளையாகப் பிறந்த புத்திரசிகாமணியே! ஓ அரக்கர் குலபுருஷ சிரேஷ்டனே! ஓ தேவேந்திரனுடைய பெயரைச் சுவடு தெரியாமல் மறைய அடித்த என்பின் பிறந்தவனே! நான் உன்விஷயத்தில் இந்தவார்த்தையும் கேட்டுசகிப்பேனே? ஓ இலைவடிவாய் மின்னலைப்போல் பிரகாசிக்கின்ற வேலாயுதத்தையுடையவனே! நீ இப்போது அடைந்த நினதுநிலையாகிய மரணத்தை உன் கண்முன்பாக நானடைதல்முறைமையென்றிருந்தேன். அப்படிப்பட்ட நான் இனி உயிரைவைத்துக்கொண்டிருக்கமாட்டேன் உன்னுயுள் நிலை இப்படியாய்விட்டால், தேவேந்திரன் ஐராவதயானையை நடத்திக் கொண்டு இனித்தம்முடைய ஸ்வர்க்கலோகத்திற்கு மறுபடியும்போய்ச் சேரமாட்டானே? அப்பா தம்பி கும்பகர்ணு! கடின இருதயத்தை யுடையவனுகி என்னை விட்டுவிட்டு நீமாத்திரம்போய் வீரஸ்வர்க்க மடைந்தாய். இன்னெருதரம் நம்மில் ஒருதாய் வயற்றில் யார் பிறக்கப்போகிருர்கள்? ஓ மின்னலு மொளியில் தோற்றுவிடத்தக்க வேலாயுதத்தை யுடையவனே! உன் கண் முன்வரப் பயப்பட்டு உயிர் வாழ்ந்திருந்த தானவர்கள் எல்லாம் இனித் தங்களிஷ்டப்படி எல்லாயிடங்களையும் சடுதியிற்பிடித்துக்கொள்ளமாட்டார்களா? ஓ யுத்தத்தில் தேர்ந்த தோளையுடையானே! நீ ஸ்நானம் செய்யும் காலத்தில் உன்காலைத் தேய்க்குங் கல் மேருமலையல்லவா? உன்னை ஒருமனிதனுடைய வில்லானது கொன்றுவிட்டதென்னும் இந்த அற்பச்சொல்லல்லவா என்னைச்சுட்டெரிக்கின்றது? ஆயுதங்களிளெல்லாம் சிறந்திருக்கின்றவைகளான சிவன் கைச்சூலமும், விஷ்ணுவின் சக்கரமும், இந்திரனுடைய வஜ்ராயுதமும், உன்மேல் வந்தகாலத்தில் உன்னைத்தொட்டதுகளா? ஒன்றும்செய்யமாட்டாமல் ஆகாயத்திலேயேதெறித்து மீண்டுபோய்விட்டதுகளே. அப்படிக்கிருக்க, ஒருஅற்பமனிதனுடைய மெல்லிய அம்புஉன்தேகத்திலுருவித்தடாரித்துவிட்டதா? தங்கள் தோள்வலியைப் பார்த்துக்கொண்டு அவர்கள் பிழைத்திருக்கிருர்களா? என் தம்பிமார் பார்க்கிறதற்குமில்லாமல் மாண்டுவிடவும், சுலபத்தில் இந்தலங்கையை அவர்கள் கைப்பற்றிக் கொள்ளவும், என்மாமனுகிய மாரீசன் இறந்துபோகவும், என் தங்கையாகிய சூர்ப்பநகைமூக்கிழந்துபோகவும், நான்மாத்திரம் ஒருபெண்ணினுடைய போகத்தை இச்சித்து அந்த ஆசையால் உன்னையிழந்தும் நான் இன்னமிருக்கமாட்டுவேனு? அந்த ஸ்ரீராமனையும், அவன்தம்பியாகிய இலக்ஷ்மணனையும், அந்தகுரங்குப்படைக்குத் தலைவனுன நளனையும், அப்படைக்கு இராஜனுன சுக்ரீவனையும், அவன்மகனையும், வாயு புத்திரனுன அநுமானையும், இன்னும் கரடிக்கிறைவனுன ஜாம்புவனையும் கொன்று; அவர்கள் வேரறமாய்த்துவிட்டாயென்று நான் கேட்காமல் இப்படிக் கேள்விப்பட்டேன். இதென்ன காரியமாய் முடிந்தது? அப்பா கும்பகர்ணு! இலங்கைப்பெண்கள் கால்பிடிக்கக் குளிர்ந்த தென்றல்வீசுகின்ற ரத்தினமயமான பள்ளியறையில் நித்திரை செய்துகொண்டிருப்பாய். நீ இப்போது பேய்களெல்லாம் சூழ்ந்துக்கொண்டு முழங்கைமடக்கி விலாவிற்புடைத்துக் கூத்தாடுகிற ஓசையைக் கேட்டுக்கொண்டு, ரணக்களத்தில் புழுதி மெத்தையின்மீது தூங்குகின்ருய். ஐயா தம்பி! நீ அஷ்டதிக்குகளையும் ஜெயித்துச் சிவந்த தேனைக் குடங்குடமாகக் குடித்துக் களித்து வாழ்வுற்றிருக்கின்றதை நான் கேட்டு, இதுவரையிலும் பிழைத்திருந்தேன். இனியின்றைக்கே என்னுயிரை உனக்குக் கொடுத்துவிட்டேன். இனிப்பிழைக்கமாட்டேன். நீ மாத்திரம் தனியாய் மாண்டுபோக நான் தாமதித்திருக்கமாட்டேன். ஓ ஒப்பற்ற யானைக்குச்

மானவனே! இதோ வந்துவிட்டேன்; வந்துவிட்டேனென்று தன்சத்தம் ஆகாயம்போய் முட்டும்படி இவ்விதமாகச் சொல்லிக் கூவி, ஜானகிப்பிராட்டியாரைக்கொண்டுவந்துசிறையிட்ட தனது தீச்செய்கையினாலே நேரிட்ட போரில் கும்பகர்னன் மாளவும், அதுநிமித்தமாகத் தன்னையும் மற்ற அரக்கர்களையும் அழும்படித்தானே செய்துக்கொண்ட ஏதுவினால் அழுவிப்போனேனென்று பொருள்படத் தனக்கிட்ட ராவணனென்கிற பெயரின் காரணத்தைத் தோற்றுவித்தான்.

இப்படி இவன் அழுவதைக்கேட்டுக் கொவ்வைக்கனிபோன்ற இதழ்துடிக்கவும் திருமேனியெல்லாம் மயிர்க்குச்செறியவும், கயல் மீன்போன்ற திருக்கண்கள் குளிர்ப்படையவும்,தமக்குள்ளே நெஞ்சம்பூரித்து திருமுலைக்குடம் விம்மி, திருமேனிவாடினவாட்டம் நீங்கித்தழைத்து, மனமுவந்து, போனவுயிர் திரும்பி மறுப்படாத கற்பினையுடைய அந்தச் சீதாபிராட்டியார் இவ்வாறு ஆனந்திக்க, அதுபார்த்து அவருக்குத்தோழியாகப் பக்கத்தில் நிற்கின்ற திரிச்சடையடைந்த சந்தோஷம் யாவரால் சொல்லி முடியப்போகிறது? முன்னம் கும்பகர்னனுடைய சாமார்த்தியத்தை பீகரகாரமான தோள்களை முன்னொருகாலத்தில் கண்டுபயமடைந்திருந்த சீதாபிராட்டியார் அவனைத்தன்னுடைய சுவாமி ஒருவராலுந்தடுக்கமுடியாத பாணத்தால் கொன்றுவிட; அந்தவார்த்தையைக் காதாரக்கேட்டு அமுதபானம் பண்ணினதுபோல உடல் பூரித்தார். அப்போது கண்டவர்கள்இவர் முன்னைய சீதாபிராட்டியல்ல வேறொருவராக்குமென்று நினைக்கும்படியானார். ராவணன் அதிக உக்கிரங்கொண்டு இந்த அழியாத உலகத்தில் என் தம்பியின் பிணத்துடனே அந்த இரண்டு மனிதர்களையும் மற்றவானரங்களையும் கொன்று பிணக்காடாக அழித்துவிட்டு, என்றைக்கும் இறவாத மும்மூர்த்திகளையும் அழியாத அமிர்தபானம் பண்ணி தேவர்களையும் பிடித்துக் கொண்டுவந்து சிறையில்போட்டு விடுகிறேனென்று புறப்பட்டான்.

அப்போது மந்திரிகள் சமாதானஞ்செய்யக் கொஞ்சங்கோபமாறி, இதோ இந்தக்ஷணமேபோய் அந்தமனிதர்களைக்கொன்று அவர்கள் ரத்தத்தால் என்தம்பிக்குத் திலதர்ப்பணம் செய்கிறேனென்று அஷ்டதிக்குகளையுஞ் ஜெயித்தவனை ராவணன் கண்களில் அக்கினிசொரியும்படிச் சீறிக்கொண்டு சிங்காரவனத்தைவிட்டுப் புறப்பட்டுப்போனான். பின்பு மகோதரன் இந்த கதியே நமக்கும் உண்டாகப்போகிறது.கும்பகர்னன் பேய்கள் உழலுகின்ற ரணக்களத்திலே மாண்டுபோனானேயென்று மெய்பதைத்தவனாய் அங்கிருக்கின்ற இராக்ஷதர்களுக்குக் கண்ஜாடைகாட்டி மாயாஜனகனை வேறொருபக்கத்தில் கொண்டுபோய் வையுங்கள் என்று போக்குக்காட்டி விட்டுப்போய்விட்டான். நல்ல வாசனையுள்ள புஷ்பங்களில் படிகிற விதம்போல வண்டுகள் படிந்துபடாமல் துகள்படிந்து எல்லாமொரு சடைபற்றிச் சுமையாகச் சுற்றி வைத்திருக்கிற பூங்குழலையுடைய சீதாபிராட்டியாரிடத்திலுள்ள அன்பினாலே அவரைத் தேற்றும்பொருட்டு விபீஷணாழ்வான் புத்திரியாகிய திரிசடையென்னும் பாக்கியவதி தேவாமிர்தத்திற்கொப்பாகிய சிலவார்த்தை சொல்லுகின்றாள். அம்மா! சீதாபிராட்டியாரே! உம்முடைய தந்தையென்று சொல்லி உமக்கு முன்பாக உருவுமாறிவந்தவன் அளவில்லாத மாயையால் கொடுந்தொழில் செய்வதே சுவபாவமாகவுடைய மருத்துவனென்கிற பெயருள்ள ஒருராக்ஷதனாகும், இவன் உம்முடைய தகப்பனாகிய ஜனகமகாராஜ ரல்லவென்று சொன்னாள். அதைக்கேட்டுச் சீதாபிராட்டியார் அவளுடைய வார்த்தை அநேகந் தடவை கேட்டு யதார்த்தமாயிருப்பதையறிந்துச் சந்தோஷித்திருக்கின்றவரான படியால் இப்போதும் தமக்குண்டாயிருந்த சம்சயமும் துக்கமும் மனவருத்தமும் நீங்கி ஆறியிருந்தார். இங்கிருந்து புறப்பட்டுப் போன லங்காதிபதியான ராவணன்தன்னுடைய வீரர்களைப்பார்த்து, ஓ வீரர்களே! நீங்கள் என்னுடைய சேனையையும் ஆயுதங்களையும் உதவியாகக் கொண்டுபோகிறீர்களேயல்லாமல் அந்தக் குரங்குவீரர்கள் சூழும்படியாக வந்த மனிதர்களுடைய வேகமுள்ள வில்வல்லமையை நீக்கிவந்தீர்களில்லை. நீங்கள் என்னெதிரே மாத்திரம் நாங்கள் அவர்கள் படையெடுத்து வந்திருக்கிற இடத்திற்குப்போய் எல்லாரையு

ங்கொன்றுவிட்டு வந்துவிடுகிறேமென்று சொல்லுகிறீர்கள். இப்படிப்பட்ட நீங்கள் என்தம்பியான கும்பகர்னனைச் சாகாமல் தடுத்தீர்களா ? அல்லது உங்களுடைய உயிரை அவனுடனே போக்கிவிட்டீர்களா? நீங்கள் நல்ல வீரர்களென்று பெயரைமாத்திரம் வைத்திருக்கின்றீர்களே ? நானிந்த மூன்று லோகங்களையும் கொடுமையுடன் ஆண்டுவந்ததற்கு உங்களுதவியொன்றுமில்லையே? நீங்கள் இந்தப்பெரிய ஐஸ்வரியங்களை அடைந்திருக்கிறதும் நான் அடைந்த வெற்றியினால் தானே ? அந்தக்கடனுக்காவது உங்களுயிரை என்பொருட்டுக் கொடுத்துவிட்டீர்களா? எங்களுக்கு வல்லமையில்லையென்று சொன்னாலுஞ் சொல்லுங்கள். நானேதனித்து யுத்தத்திற்குப்போய் அவர்களைத்தோர்ப்படைந்துபோகும்படித் துரத்தி, வெகுகாலமாய் யமனுடைய கலப்பைபோல் சத்துருக்களுடைய உயிரைத் தாகசாந்திபண்ணிக்கொண்டிருக்கிற என்னுடைய கூர்மையான வேலாயுதத்தின் முனை அந்தமனிதர்களுடைய முதுகில் பொத்து உருவும்படிச் செய்து, அவர்களை என்கண்ணால் பார்க்கிறேன். இனி உங்களை ஒன்று கேட்கிறேன். நீங்கள் அந்தமனிதரோடுசண்டைசெய்து வெற்றி பெறுகிறோமென்பீர்களேயானால் சண்டைக்குப்போங்கள். அல்லது எங்களுயிரையெல்லாம் இங்கேயே உன்முன்னே கொடுத்து விடுகிறோமென்றீர்களேயானாலும் அப்படியே செய்துவிடுங்கள். இவ்விரண்டில் உங்கள் அபிப்பிராயமென்னவென்று வெகுகோபத்துடனேகேட்டான்.

மாயாஜனகப்படலம் முற்றிற்று.

---

## அதிகாயன் வதைப்படலம்.



இயமன் முதலான பராக்கிரமத்தையுடையவர்கள்எதிர்த்துப்போர்புரிந்தபோதிலும் ஜெயிப்பதற்கரிதாகிய வீரதீரனான அதிகாயனென்னும் பெயருள்ளவனும், இந்திரஜித்துக்குச் சகோதரனுமான ஒருவன் எழுந்துநின்று அதிககோபமுடையவனாய் திரிலோகத்தையும் நடுங்கச்செய்த வெற்றி வில்லைத்தாங்கிய இராவணேஸ்வரனைத் தூஷித்துச் சொல்லுகிறான். ஓமகாராஜாவே! நான் சொல்வதைச் சற்றேகவனமாகக்கேளும். தேவேந்திரன்முதலாகிய தேவர்கள் பயப்பட்டாலும், சர்வசக்தியுடைய அந்த ஸ்ரீமகாவிஷ்ணுவும் பயப்பட்டாலும்,யுகமுடிவில் சர்வசம்மாரஞ்செய்யும் வல்லமையுடைய அந்த உருத்திரமூர்த்தி பயப்பட்டாலும், அவர்களுடனே இந்நாள்வரைக்கும் இணையில்லா வீரதீரம் பெற்றுச் சகலரையும் வணங்கச்செய்த நீர் பயப்படாமலும் பயமென்பதே யில்லாத என்னை பயந்தவனென்று அலக்ஷியமாகச் சொன்னீரே? அது உமக்குத்தகுமா மிகுந்த கொடிய யுத்தம்செய்தவர்களும் அதிகபலாஷ்டீகர்களுமான தானவர்களை முன்பு நான் கட்டிக்கொண்டுவந்து உமக்குக்கொடுக்கவில்லையா? உங்களை ஓடி அடித்ததேவர்களை நான் குலாலன் சக்கரம்போலச் சுற்றியடிக்கவில்லையா? உலையிற்காய்ச்சிச் செய்யப்பட்ட ஆயுதங்கள் கையிலிருந்தும் ஒரு குரங்கின் காலில் தேய்ப்புண்டு மாண்டுபோன அக்ஷயனைப்போலவும், சிலபாணங்களால் மாய்ந்துபோன உன் தம்பியாகிய கும்பகர்னனைப்போலவும், அந்தச்சிறுமனிதர்கள் வாய்மொழியால் தங்களுக்குப் பலமிருக்கிறதாக ஏமாற்றினதற்கு உடன்பட்ட மற்றொரு தம்பியாகிய விபீஷணனைப்போலவுமா என்னை நினைத்திருக்கிறீர்? ஐயா! நான்போய் எதிரிகளைக் கிட்டிச்சண்டை செய்து அந்தக்கர்வங்கொண்ட வானரசேனைகளையெல்லாம் சூழ்ந்துகொண்டு, அவர்களுடைய தலைகளை வெட்டிப் பூமியில் தள்ளி, அந்த இரண்டு வில்வீரர்களையும் பின்கட்டாய்க்கட்டிக்கொண்டு வருகிறேன் பார்த்திரும். உம்முடைய தம்பியாகிய கும்பகர்னனுக்கு முடிவையுண்டாக்கின ஸ்ரீராமனுடைய தம்பியாகிய லக்ஷமணனைக்கொன்று அவனண்ணன் மெய்பதைக்கும்படியான துன்பத்தைச் செய்யாவிட்டால் லோகப்பிரசித்தரான உமக்குப்பிறந்த பிள்ளை நானாவேனோ? நீர் என்னைச்சேனாசமுத்திரத்துடனே சண்டைக்குப்போவென்று நியமித்தாலும், அல்லது நீமாத்திரம் தனியாய்ப் போவென்று உத்தரவு கொடுத்தாலும் நல்லதுதான். உம்முடைய மனதிற்கிசைந்தபடியே விடைகொடும் விடைகொடுமென்று அதிகாயன்கேட்க, ராவண

ன் அந்த வார்த்தையைக்கேட்டு, அப்பா அதிகாயா! நீ நன்ருய் ஆலோசித்துச் சொன்னுய். நீ அந்த லக்ஷ்மணனுடைய உயிரைவாங்கி விடுவாயேயானுல், நான் மற்ற இராமனென்ற பெயரையுடையவனை ச்சேதித்து முடிக்கிறேன். அப்பா! சொர்ணமயமான வீரகண்டாமணியைத் தரித்த அதிகாயனே! நீ மூவாயிரங்கோடி பதாதிகள்-யானைகள்-தேர்கள்-குதிரைகள் இவைகளின் காவலுக்குள்ளாக இருந்துசண்டை செய்யப்போவென்று அளவில்லாதசேனைகளுடனேஏவினுன். தேவர்களாலும்வெல்லுதற்கேலாத பலமுள்ளவர்களான அதிகதுஷ்டர்களாகிய கும்பனென்பவனும் நிகும்பனென்பவனும் மற்றெருரு ஸ்வர்ன வீரகண்டாமணியையுடைய அதிவீரனுகிய அகம்பனும் செம்பொன் மயமான தேரிலேறிக்கொண்டு அவனுக்கு முன்பின் இரண்டு பக்கங்களிலும் காவலாக நெருங்கினுர்கள். சிவபெருமானேறி நடத்தும்படியான நந்திக்கொப்பானவைகளாய், சண்டைமிகுந்தால் தமக்கும் வீரமிகுவதுமான வார்பூட்டப்பட்ட ஆயிரங் குதிரைகள் பூட்டின தேரில் மஹாகொடியவனுன அதிகாயன் ஏறிக்கொண்டுவந்தான். இன்னும் ஆயிரங்குதிரைகள் பூட்டிய ஆயிரஞ் சேமத்தேர்கள் பின்னுலேவர, கொல்லும் பயத்தைக் காட்டுகின்ற ஒருகோடி பெரிய மதத்யானைகளுடனே ஐம்பதுநூருயிரம் குதிரை வெள்ளங்களும் உதவிச்சேனையாகப் போனதுகள். யானையைக்காட்டிலும் வேறுபட்டுக் கறுத்துப்பெருத்துக் காணப்படுகின்ற தேகத்தையுடைய அதிகாயன் அநேகவகையான ஆயுதங்கள் சூரியனைப்போல் ஒளிவீசித் தோன்றவும் பற்பலபாஷைகளினுல் சௌரியவார்த்தைகளைப் பேசுகின்ற வீரர்கள் சுற்றிக்கொண்டுவரவும் யுத்தத்தை மேற்கொண்டு போனுன். அஞ்சனமையைக் குழைத்துப் பூசினதுபோலக் கறுத்த தேகத்தையுடைய யானைகளும், அளவில்லாத தேர்களும், மலைக்குகையிலிருந்து பிரதித்தொனி உண்டாகும்படி சப்தித்தகுள். இராக்ஷதவீரர்களுடையவில்லின் நாணேசையானது கடலும்பொங்கிக் கொதிகொள்ளும்படி யொலித்தது. ரணபேரிகைகள் மேகங்கள் பயந்தடங்கும்படி முழங்கினதுகள். இராக்ஷதசேனுவீரர்கள் ஸ்வர்க்கலோகத்தாரெல்லாம் நடுங்கும்படி கர்ஜித்து நடக்கும்போது, பூமியும் அடியோடேபெயரு மென்னும்படிக் காலடி எடுத்துவைத்தார்கள். தங்கள் சேனுபாரகத்தால் கடலையுமேடிடும்படித் தூர்த்துவிட்டார்கள். இவர்கள் வருகிறதைப்பார்த்துத் தேவர்கள் பயந்து வேர்த்துப்போனுர்கள். மிகவும் வேகமாயோடுகின்ற மதத்யானைகளின் பின்ருெடர்ந்துபோய்ப் படைமுன்னணியின்கோடியிற் படிந்து மின்னுகின்ற மேகங்களெல்லாம், ஓடுகின்ற அந்தமதத்த ஆண்யானைகளுக்குரிய பெண்யானைகளைப் போலிருந்தன. அங்குசங்களால் குத்துண்ட மதயானைகளிலிருந்து பெருக்கெடுத்து ஒன்றுக்கொன்று மாருயொழுகுகின்ற மதநீராற்றில் குதிரைகளும் அந்தயானைகளும்படிந்து சேருடினதுமல்லாமல் வெகுவிசாலமாகப் பரவிவருகின்ற சேனைகளும் அச்சேற்றிற் படிந்ததுகள். சூரியனைச்சூழ்ந்து பரிவேடம்போவதுபோலத் தேர்கள் போனதுகள். மின்னிக்கொண்டு மேகக் கூட்டங்கள் வரிசைவரிசையாகப்போவதுபோல முகபடாமணிந்த யானைகள் சென்றதுகள். சிலகுதிரைகள் பூமிமார்க்கமாக ஓடின. ஓட இடம்பெருமல் சிலகுதிரைகள் ஆகாயமார்க்கமாகப் பறந்ததுகள். இந்தப்பிரகாரமாக வந்த அதிகோபிஷ்டனுன அதிகாயன் ஸ்ரீராமனென்கிற மதத்யானையானது கமளீகரித்துத் தும்சப்படுத்தின ரணக்களமுழுவதையும் பார்த்துப் புண்பட்ட தன்னெஞ்சு புழுங்கிப் பரவசப்பட்டுக் குதித்து மலைக்குச் சமமான வலதுதோளோடிடதுதோளும் வெட்டுண்டு கருங்கடல் கிடப்பதுபோல் கிடக்கின்ற தன்சிறிய தந்தையினிலையைக்கண்டு அவனுடைய தலையைக்காணுமல் மனவெறுப்படைந்து பலம்பொருந்திய பாணங்கள் பாய்ந்தபடியே கிடக்கின்றதைக்கண்டு, இது உயர்ந்தமலையுமல்ல; அஷ்ட திக்கஜங்களிலொன்றின் உடலுமல்ல; பெரியசமுத்திரமுமல்ல; ஒருவரும் வெல்லுதற்கேலாதிருந்த கும்பகர்னனுடைய தேகமேயென்று நிச்சயித்து உயிர்சோர்ந்து பெருமூச்சுவிட்டு சீ சீ! இதுகளைப்பார்க்கவா நான் இவ்விடம்வந்தேன்? அதிகபலாட்டியாகவிருக்கின்ற அந்தமனிதர்களை நான்கொலைசெய்து என்னுயிரைக் காத்துக்கொண்டு

போகாவிட்டால் இந்தப்பழி என்னைவிட்டு எவ்வாறொழியும்? என்று மிகுந்த கோப த்தையுடையவனாய்ச் சொல்லினான். இப் படிச்செய்த அந்தராமனுடைய தம்பியை இவ்விதமே கொன்று; பின்பு அந்த ஸ்ரீ ராமன்படும் துன்பத்தைக் கண்டு என் துக்கம் தணிகிறேன் என்று ஒரு சபதவா ர்த்தையை யாவருக்கும் தெரியப்படுத்தி னான். மயிடனென்கிற ஒரு தூதனை யழைத்து நீ அதிவேகமாய்ப் போய் லக்ஷ்மணனைக் கண்டு அதிகாயனென்கிற ஒரு மகாவீரன் பிரதாப லங்கேஸ்வரனு டைய கனிஷ்டபுத்திரன். ஒருவருமெதிரி ல்லாதஜெயசாலி. இப்படிப்பட்டவன் தன் தகப்பனான ராவணன் தம்பியாகிய கும்ப கர்னன் இறந்தானென்று அழுது மனத் துயர்படுகிறதை நீக்குகிறதாக, உன்னோடும் உன்னுடையசைனியங்களோடும் சண்டை செய்யும்படி நிச்சயம் பண்ணிக்கொண்டு ரணக்களத்தில் வந்து நிற்கின்றான். உன் னெண்ண மென்னவென்று கேட்டுவரும் படி என்னையனுப்பினான். மகாவீரனான அவன்நெஞ்சம் கொதித்துக்கொண்டு இரு க்கின்றது. இனி நாளைக்காகட்டும் நாளையி னன்றைக்காகட்டுமென்றுசொன்னால் பொ றுக்கமாட்டான். உன்னைத் தன் சிறியதகப் பனைப்போலக் கைகால்களற்றுக் களத்திலு ருளும்படி அஸ்திரப்பிரயோகம் பண்ணப் போகிறதாய்ச் சபதம்பண்ணிக்கொண் டிரு க்கின்றான். அவன்கொன்றவ னொருவனுக விருக்க கொல்லாத மற்றொருவனைக்கொ ல்ல எண்ணங்கொள்வது பொல்லாங்காயி ற்றே என்று நினைக்கிறவனல்ல. கொஞ்ச மாவது தருமமென்பதை நினைக்கமாட்டா ன். நீ என்னைத் தூதனென்று அலக்ஷியம் பண்ணாதே. நானும் அந்தயுத்தத்திற்சேர் ந்தவீரன்தானென்றுஞ் சொல்லு. ஓ மயி டனே! என்தந்தையாகிய ராவணனுடைய துக்கம் ஆறும்படி அந்தலக்ஷ்மணனிதோ வந்தானென்றுஅழைத்துக்கொண்டுவந்து என்னெதிரே விடுவாயானால் உனக்கு விரு ப்பமான வஸ்துக்களையெல்லாம் என்னைக் காட்டிலும் உனக்கு யார் கொடுக்கப்போகி றார்கள். ஐயா புத்திமானாகிய மயிடனே! சண்டை செய்யவேண்டுமென்கிற ஆசையி னால் புகழ்சம்பாதிக்கிறவர்களான அந்த இரண்டு மனிதர்களையும், பின்னும் எதிர்த் துச் சண்டைசெய்து நம்முடைம சிறைச் சாலையையடையவிருப்பமுள்ளவர்கள்யாரி ருந்தாலும் அவர்களெல்லாரையும் வாரு ங்களென்றுகூப்பிடு. அப்படி நீ கூப்பிடுகி றதினாலே அந்த லக்ஷ்மணனென்று சொல் லப்பட்ட சிங்கம் வருவானேயானால் அவ னைத் தேவர்களெல்லாம் பார்த்துக்கொண் டிருக்கும்படி பற்பலதுண்டுகளாய் வெட்டி விட்டு உன்னையும் அவருக்கீடாக ராஜபட் டங்கட்டி ஒரு ராஜாவாக்கி விடுகிறேன். அல்லாமலும் தேவலோகவாசிகளும் வித் தியாதரருமாகிய இவர்களுடைய நாயகிமா ரான தேவாமிர்தத்தை யொத்திருக்கும்படி யான ஸ்திரீகளால் திவ்யகானம்பாட வை ப்பதல்லாமல், ஒருவரும் இதுவரையிலும் உண்ணாத மாமிசமும் எண்ணாயிரம் ஜாடிக் கள்ளும் உனக்குக்கொடுக்கும்படி பண்ணு கிறேன். சூரியனுக்கொப்பாகப் பிரகாசிக்கி றவைகளும் நூற்றிலொன்றாய்ப்பொறுக்கி யெடுத்தவைகளும் அதிகதேஜசை யுடைய வையும் தேவர்களால் கப்பம்கட்டினவையு மான அநேக ஆபரணமும் அளகாபுரிக் குத் தலைவனான குபேரனால் வரிசையனுப் பப்பட்ட நவநிதியும் உனக்குப் பரிசாகக் கொடுக்கின்றேன். இன்னும் எப்பொழு தும் மேகதாமரைபோல ஒழுகிக்கொண்டு இருக்கும்படியான மதஜலத்தில் மொய்த்த வண்டுகளும்பருந்தும் சுற்றிப்பறக்கும்படி யான முகத்தை யுடையவைகளாய் ஒருநா ளும் கோபமாறாத சிவந்த கண்ணையுடைய வையுமான யானைகள் நூறாயிரம் உனக்கு நான்கொடையாகக்கொடுக்கின்றேன். வண் ணத்திற் கொருவிதமாய்த் தங்கத்தாற்செய் யப்பட்டிரா நின்ற ரதங்களும் உயர்ந்ததேவ லோகத்திலுஞ் சமானமில்லாதவையான இரத்தின கிண்கிணி மாலைகளால் அலங்க ரிக்கப்பட்டவையுமான குதிரைகளும் அ நேகம் கொடுக்கிறேன். நவரத்தினத்தைக் கும்பல்கும்பலாய்க்கோக்கப்பட்டிருக்கின்ற வையும்,மூட்டைமூட்டையாய்த்தங்கக்காசு விலைபெற்றனவும் சந்திரனுக் கொப்பான வெண்பட்டுகளால் தைக்கப்பட்ட நிலையங் கிகள் அநேகமாயிரங்கொடுக்கிறேன். ஐயா பொன்மயமான வீரகண்டாமணியை யணி ந்த மயிடவீரனே! இன்னும் உன்னுடைய மனதில் இச்சிப்பதற்கு அருமையாய்த் தே வர்களும்இச்சிக்காதவற்றில் எல்லாவுடை

யும்உனக்குப்பரிசாகக்கொடுக்கிறேன். நீசந்தோஷமாய்ப் போய்வாவென்பதாய்ச்சொன்னமாத்திரத்தில் மல்யுத்தத்தால் மோதுண்டு காய்ப்பேறித் திரண்டதோளை யுடைத்தாயிரானின்ற மயிடனென்கிறஇராட்சத வீரன் தூதுபோகச் சம்மதித்துப் புறப்பட்டு காகுஸ்த வம்சோத்பவரான ஸ்ரீராம பிரானுடைய சந்நிதியிற்போய்ச் சேர்ந்தான். அச்சமயத்தில் அதிகவேகத்துடன் வானரவீரர்கள் எதிர்நோக்கி வருவதை இம்மயிடன்கண்டு பயந்து, ஐயா! ஒரு சந்தோஷசமாசாரஞ்சொல்லவந்த தூதுவன் நானென்கிறான். அதைப்பரமகிருபனுயும் வேத முதல்வனுமான ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரர்கேட்டு இவன் இனி அழிந்து போகப் போகின்ற தன்னுடைய எஜமானன் சொன்னவார்த்தையைச் சொல்லவந்தவன்;மற்றொன்று நினைத்துவந்தவனல்ல; சும்மாவந்த தூதனுகையால் இவனைகோபியாதேயுங்களென்று விலக்கி, நீவந்தகாரியமென்ன சொல்லென்று சுவாமி கேட்டருளினார், அம்மயிடன் ஐயா வில்வீரசிகாமணியே! அக்காரியம் உம்முடைய தம்பியாருடனே சொல்ல வேண்டியதென்று சொல்லினார். அதைக்கேட்டு இராஜாதிராஜ ஸ்ரீராமபிரானுன வீரருடைய திருத்தம்பியான இளையபெருமாள் என்னுடைய தமையனிடத்தில் சொல்லக் கூடாததை என்னிடத்திலேசொல்லச்சொன்னதுஎன்னடாவென்றுகேட்க, ஐயா! சொர்னவிக்கிரகம்போலத் தேககாந்தி யுடைத்தாயிருக்கப்பட்டவரே! இராவணனுடைய இளைய குமாரன் அதிகாயனென்போன் அநேக கோடி சைனியங்களுடனேகூடத் தேவரீரைத் தாக்கும்படி வெகுகோபத்தோடே மேருமலைபோல் இரணக்களத்திலேவந்து என்மீது சண்டைக்கு வாவெனச்சொல்லிக்கொண்டு நிற்கிறான். அவன்மீது நீர்எதிர்க்க வலியுண்டானுல் என்னோடுகூடவே புறப்படும். கைலாய பருவதம்போலே உருவத்தையுடைய கும்பகர்னனுகிய தன்சிறிய தகப்பனுடைய தேகத்தை உம்முடைய தமையன் ஸ்ரீராமன் எப்படி கால்வேறு கைவேறு தலைவேருக வெட்டி யெறிந்தாரோ, அப்படியே உம்மையும் வேகமாக இந்த ரணபூமியிற் செய்யப் போகிறதாய்ச் சொல்லச்சொன்னுன். ஏன் கொன்றவனை விட்டுக் கொலைசெய்யாத என்னைத் தேடிக் கொண்டுவந்து நிற்கின்றுனென்று கேட்பீரேயானுல், தன்னுடையபிதாவான இராவணன்படுந் துக்கத்தைத் தன்னுடைய சிறியதகப்பனைக்கொன்ற அந்த ஸ்ரீராமனும் படவேண்டுமென்கிற விருப்பத்தைக் கொண்டு வந்தானுமென்றுசொல்லிவிட்டு, மறுபடியும் அம்மயிடன், ஓ தேவலோகத்துள்ளவர்களே! ஓ பூலோகத்திலிருப்பவர்களே! இன்னும் மற்றயாவரும் இவ்வார்த்தையைக்கேளுங்கள். அதிகாயனென்பவன் இவ்விளைய வீரனுடன் சண்டைசெய்யப் போகிறான். இவனுக்கு உதவியாக யார்வந்தாலும் அவருடனேயும் போர்செய்வான். வர விருப்பமுள்ளவரெல்லாம் வரலாமென்றுஞ் சொன்னுனென்றுசொல்லி, இளைய பெருமாளைப்பார்த்து நீர் புறப்படுகிறதாயிருந்தால் என்னோடு புறப்படுமென்று எரிகின்ற மழுமுனைபோலே கர்னகடோமாய்ச் சொல்லக்கேட்டு, பிரபத்தி பண்ணும்படியான பாக்கியமுடையவரெல்லாம் வணங்கி உஜ்ஜீவிக்கும்படியான திருவடித்தாமரைகளையுடைய சர்வலோக சரணியரான ஸ்ரீரகுநந்தனர், தம்பி இலக்ஷ்மணு! இவனோடுகூடவே புறப்பட்டுப்போய் வருவாய் தாமதிக்கவேண்டாமென நியமித்தார். அம்மாத்திரத்தில் அதைக்கேட்டுச் சகல சீலரான விபீஷணுழ்வான் ஸ்ரீயப்பதியான சுவாமியினுடைய சன்னிதியிலே வந்து சாஷ்டாங்கமாய்த் தண்டஞ்சமர்ப்பித்து, சுவாமி! நாமெல்லோரும் இளையபெருமாளுடன் போகவேண்டும். பிறகு இவரே அவ்வதிகாயனென்கிற வில் வீரனுடன் யுத்தஞ்செய்யட்டும். ஏனென்றுல், அவன் அழியாத முதல்வனுன பிரமதேவனைநோக்கி ஒருபெரிய தவத்தைச்செய்து பெற்ற வரத்தினுல், தேவர்களும், அசுரர்களுமான பெரியவீரர்கள் சேர்ந்துசெய்த சண்டையிலும் அவன் செத்தவனுமல்லன். கொஞ்சமாயினும்மனஞ்சலித்தோனுமல்லன், அதிகபலமுள்ளவனுகவுமிருந்தான். மேலும் உமாநாயகரான திரிநேத்திரருடனே அக்கயிலாய மலையை வேரோடே பறித்தெடுத்தோனுன இராவணனே தன்னிலும் இவனைமகாவல்லோனென்றும், பிரமருத்திரேந்திராதி சமஸ்ததேவதா சமுகங்களுடனே மேருபர்வதத்தைப்பேர்த்தெடுக்கவல்லோ

னென்று நினைத்து, அதற்கேற்ற ஆகாரங்களெல்லாம் கொடுத்து வளர்த்தான். இன்னுமிவன் க்ஷீரசாகரத்தை அவ்விஷ்ணுவும் வாசுகி மந்தரகிரியும் அதைப்பற்றிஇழுத்துக்கடைய மற்றதேவர்களும் வேண்டாமல் தன்னுடைய காலினாலே கலக்கிச் சற்றுநேரத்திற்குள்ளே ஆலகால விஷத்தையும் அமிர்தத்தையும் உண்டாக்கிவிட வல்லனுக்கும், பிரளயகாலத்திலும் சிறந்த மகாபிரளயகாலத்திலே அழியாதவையென்னும்படியான அட்டதிக்கிலேயும் நின்று லோகத்தைத் தாங்கிக்கொண்டிரானின்ற பருத்தமஸ்தகங்களையுடைய யானைகளை இவனுடைய தோள்வலியாலே தள்ளுவானென்பது ஒருபெருமையோ? சக்ரவாளகிரியையும் தன்னுடைய உள்ளங்கையாலே தள்ளும் வல்லமையுடையவனுக்கும். வெகுகாலமட்டும் கண்ணிமை கொட்டமாட்டாத விஷகண்டரான சங்கரமூர்த்தியானவர் அக்கினி வீசுகின்ற சூலாயுதத்தை அவன்மேற்பிரயோகித்தபோது, அதை அவன் கையிற் பிடித்துக்கொண்டு இச்சூலம் உன்னுடைய சூலமல்லவாவென்று அலக்ஷியமாய்ப் பேசினவனுக்கும். இவன் தன்னோடு பகைத்த தேவர்களுடைய ஊரைப் புகையெழும்படிச் சுட்டெரிக்கப்போனகாலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் பகைவனுகிய இவன் சேனைகளுடைய உயிரை உண்ணும்படி விடப்பட்ட சக்கரமென்னு மாயுதத்தையும் தன்னுடைய வில் வல்லமையினால் தடுத்துவிட்டவனுக்கும். உயிருள்ளவைகளைப் போலொத்த ஆயுதங்களாயுள்ளவைகளை யெல்லாம் இவன்மீது அதிககோபங்கொண்டு இந்திரன் பிரயோகித்தபோது, அவைகளையெல்லாம் இவன் சிறுமணலைப்போலே பொடிசெய்துவிட்டு, அவனுடைய வச்சிராயுதத்தையும் தன்பாணங்களினாலே கீழேதள்ளிவிட்டான். இவன்வேதசாஸ்திரமெல்லாம் கற்றிருக்கின்றான். உருத்திரனிடத்தில் தேவர்களுடைய ஆயுதத்தை அவர்கள் வல்லமைகொண்டு இவன்முன்னின்று பிரயோகஞ்செய்யக் கூடாதபடியான வரமும் பெற்றிருக்கின்றான். மேலும் அதிகசக்தியும்பெற்று யிருப்பதால் யுத்தத்தைவிட நல்லதென்று மற்றொன்றை யறியமாட்டான். அதிசூரனுயிருக்கின்றான். அதர்மமல்லாமல் வேறேயொரு நன்மையென்பதை இவன் அறியவேமாட்டான். யுத்தமல்லாமல் வேறோர் ஆபரணமும் அணியமாட்டான். யுத்தத்திலே வலியில்லாதவரைக்கண்டால், அவர்கள்மேலே ஆயுதத்தையெறிந்து அவர்களுடைய அரிய உயிரை வேறுபடுத்தமாட்டான். பலத்தைக் காட்டிலும் கீர்த்தியே உயர்ந்ததென்று விரும்புகின்றவனுக்கும். தேகத்தை விட்டு உயிர்போகும்படியான காலத்திலும், வஞ்சகர்களே தன்னோடெதிர்த்தாலும் தன்தேசத்தவர்கள் செய்யப்பட்ட அத் தந்திரங்களையெல்லாம் அவர்கள் செய்தபோதிலும் அந்தமாயச்செய்கைகளை செய்யும்படியானதற்குக் கொஞ்சமாவது நினைக்கமாட்டான். மேலும் இவனுடைய பிறப்பின் வரலாற்றைக்கேளும். சுவாமி! வானவர்களுடைய லோகத்தைத் தாங்கள் வசப்படுத்திக்கொண்டிருந்த மது கைடவர்களென்கின்ற இரண்டு அசுரர்கள் முன்னாலொருநாள் அதிக வஞ்சகராய்ச் சக்கராயுதத்தைத் தரித்தவரான விஷ்ணுமூர்த்தியினிடத்தில் பகைகொண்டு திருப்பாற்கடலுக்குப்போய், ஓய் விஷ்ணுவே! எங்களோடு நீர் சண்டைசெய்ய வாருமென்றார்கள். அப்படியே நல்லது வாருங்களென்று நியமித்தார். அவர்களும் சண்டைக்குப் புறப்பட்டார்கள். தம்மோடு போர்செய்ய சூரியன் ஆயிரம் கரங்களுடனே வந்தாலும் அக்கரங்களை முறைமுறையாகக் கழித்துவிட்டுப் பரிகாசம்பண்ணும்படியான அந்தவீரர்கள் அதிகபகைகொண்டு போர்செய்தனர். அந்தப்போரில் அநேகநாள்கழிந்துபோய்விட்டன. பின்பு தங்களுக்குத் தாங்களே சமானமான அம் மதுகைடவர்கள் தனிமையானதங்கத்தைப்போலே பிரகாசிக்கின்ற திருமேனியையுடைய அந்த விஷ்ணுவைப்பார்த்து, யாவர்களாலும் மதிக்கத்தக்க ஓ புருஷோத்தமனே! புகழுடையவரென்று பலரை எடுத்துப் பேசுவதினாலே பயனென்ன? நாங்கள் ஒவ்வொருவரே இந்த ஏழுலகங்களையுமுண்டு உமிழ்ந்து விடுவோம். இப்படிப்பட்ட எம்மிருவரோடே நீ இத்தனை நாள் பரியந்தஞ் சமயுத்தஞ்செய்தாய். ஆதலால் நீ நல்லகெட்டிக்காரன் தான். உனக்கு என்னவரம் வேண்டும்? உன்னுடைய மனதின்படி கேள். அவற்றை நீ கேளாத

தற்கு முன்னமே கொடுத்துவிட்டோமென்ருர்கள். அவர் உனக்கு வேண்டியபடி நல்லதை நாங்கள் கொடுக்கிறதற்கு என்ன வேண்டுமென்று கேட்டமாத்திரத்தில் சர்வலோகநாயகனுகிய அப்பகவான் உம்மை நான் ஜெயித்தேனென்று சொல்லுகிறதற்கு ஈடாக உங்களை ஒடுக்கும்படியான வரம் எனக்குக் கொடுக்க வேண்டுமென்று கேட்டருளினுர்.

அதற்கு ஒழுங்குபடி நடக்கும்படியான நீதிமான்களும் சீமான்களான அந்த மதுகைடவர்கள் நாங்கள் வேறேரிடத்திலேயும் சாகமாட்டோம். உன்னுடைய தொடையில் இறந்துபோவோம். நீதுணிவாக எம்முடைய சமீபத்திலே வருவாயாகுல் எம்முடைய சொற்படி நடத்திக்கொள்ளென்று வரம்கொடுத்தனர். அந்தவரம் பெற்றவுடனே விஷ்ணுவானவர் மேலுலகம் கீழுலகமெல்லாம் கடந்து எட்டாதபடி தம்முடைய இடதுதொடையை நீட்டினுர். மதுகைடவர் ஊழ்வினைப்படியே அந்த விஷ்ணு மூர்த்தியானவர் தமது கையால் வலிய கதையை யெடுத்துச் சுழற்றியடித்தார். அந்த அடிபட்டு இருவருமடிந்தார்கள். அவருள் தன் வாணுள்முடிந்த மதுவென்பவனுடைய மாமிசம் பட்டபடியால் இந்தப்பூவுலகமெல்லாம்மேதினியென்று பெயர்பெற்றது. அந்த மதுவென்பவன்தான் இப்போது தன்னுடைய வாழ்நாள் கழிந்து மாண்டுபோன தேகவல்லமையுள்ள கும்பகர்னன். இரும்புச்சலாகையொத்த கால்களையுடையவனுன கைடவனென்பவன்தான் இந்தக் கூரியவேலாயுதத்தைக் கையிலே வைத்திருக்கும்படியான அதிகாயனென்பவன். நானறிந்த பூர்வோத்தரமிவ்வளவுதான் என்றுசொல்லிமுடித்தனன். இப்படி விபீஷணுழ்வான் சொன்னதையெல்லாம் கேட்டு தம்பி விபீஷணு! நல்லகாரியஞ் சொன்னுய் என்று மின்னல் நாணிப் பறக்கும்படியாய் நகைத்துச் சொல்லுகின்ருர். தம்பி விபீஷணுழ்வானே! எண்ணுயிரங்கோடி இராவணர்களும் ஸ்வர்க்கலோகத்தாரும் மற்ற லோகத்தாரும் திரிமூர்த்திகளும் ஒன்ருய்ச்சேர்ந்துவந்தெதிர்த்தபோதிலும் இந்த லக்ஷ்மணன் வில் வித்தையின் பெருமையை நீ உன்னுடைய கண்ணுல் பார்க்கப்போகின்ருய். ஸ்வர்க்கலோகத்தார்தானென்ன? பூலோகத்தார்தானென்ன? அந்த சாக்ஷாத்விஷ்ணுவானுல்தானென்ன? வில்வீரர்கட்குள்ளே நானே தானுகட்டும், பிரதமகணத்தலைவரான உருத்திரமூர்த்தியும், தேவாதிபதியான இந்திரனுமானுலுஞ்சரி, என்னுடையதம்பிவில் யாரையும் தோற்கடித்து விடும். இவன் தன்வில்லில் கையைவைத்தானேயானுல், தேவாஸ்திரங்களாகட்டும், கோபமென்பதாகட்டும், பலமென்பதாகட்டும், குற்றமற்ற வீரமேயாகட்டும் இவனுக்கெதிரே நிற்கவல்லமையுள்ளவைகளு முண்டோ? இதை நீயே பார்க்கக்கடவாய். அப்பா விபீஷணு! அந்தப்பெரிய தேகத்தையுடைய அதிகாயன், இவன் விடும் பாணத்தோடுகூடவே ஆகாயம் வரையிலும்போய் இப்பூமியிலே விழுந்தபோது காக்கை-பருந்து – கழுகு முதலானவைகள் அவனைப் பிடுங்கித்தின்பதை நீயும் லக்ஷமணனுடனே பார்ப்பாயாக. என்றைக்கு என்னுடைய தேவியை வஞ்சனைசெய்து எடுத்துக்கொண்டுபோனுனே; அன்றைக்கேஅந்த இராவணனும் அவனைச்சார்ந்த இவனும் எல்லாரும்முடிந்துவிட்டார்கள். என்தம்பி தன் பாரதந்திர ஸ்வரூபம்குறையமாட்டேனென்றிருக்கிறபடியால் இதுவரையிலும் எல்லாரும் உயிரோடிருக்கின்ருர்கள். ஒரு நீருடன் மற்றெரு நீரெதிர்த்துக்கூடாமல் நிற்குமோ? அதுபோலத் தர்மத்துடன் தர்மமே எதிர்த்துப் பகைசெய்யுமோ? இந்த முழுதுஷ்டர்களுடனே தேவர்களும் போர்செய்யமாட்டார்களே. அப்பேர்பட்ட யுத்தத்தை நாமேறிட்டுக்கொண்டு வந்தது தர்மத்தைக்கொண்டு ஜெயிக்கவந்தோ மல்லாமல் வேறெருவருடைய உதவியினுலே ஜெயிக்க வந்தோமா? தம்பி! இவர்களோடு யுத்தஞ்செய்து ஜெயம்பெறத் தக்கவர் அந்த உருத்திரமூர்த்தியொருவர். அவரல்லாவிட்டால் லக்ஷ்மி பதியாயிரானின்ற அந்த மகாவிஷ்ணுவினுலாகவேண்டும். அல்லது இந்தலோகங்களைச்சிருஷ்டித்த பிரமதேவராலாகவேண்டும். இவர்கள் யாவராலு முடியாவிட்டால் சமானமற்ற வல்லமையுடைய தர்மசொரூபியாயிராநின்ற இந்த இளையபெருமாளாலாகவேண்டும். இவனுமல்லா விட்டால் நானுகட்டும், மற்றவர்கள் யாராகட்டும் இவ

ர்களோடு சண்டைசெய்ய முடியுமா? கும்ப கர்னனோடு வந்தது ஓராயிர வெள்ளஞ்சேனையா? எவ்வளவோ சேனைகள் வந்தன. அவ்வளவு சேனையும் ஒரு கணத்திற்குள்ளாகக் கொன்றவன் இவனேயல்லாமல் வேறே யாரையாவது கொல்லக்கண்டாயா? நீயும் கூடவேயிருந்தாயே. அந்த மகாதுஷ்டர்களை யெல்லாம்கொல்லப்போகிறவனுமிவனே அவர்களைக்கொன்று ஜெயமடையப்போகின்றவனுமிவனே, அந்த வீரர்கட்கு மேலிட்டு நிற்கப்போகிறவனுமிவனே, நான் வரவில்லையென்று இவனோடுகூட நீமாத்திரம் போவென்று அவ் விபீஷணரை அனுப்பினர்.

அப்பொழுது இளையபெருமாளாகிய லக்ஷ்மணப் பெருமாளுக்குத் தான் சேஷமாய் இருப்பதையும், பெருமாள் நியமனமேதமக்கு உத்தரவாதமென்பதையும், பாரதந்திரிய சொருபத்தையும், பிரகாசப்படுத்தப் பெரியபெருமாளாகிய தமதாசியரை வாசிக்காயிகமான சித்தமாகிய மூன்று பிரகாரத்திலும் தெண்டன்சமர்ப்பித்து, அதி புத்திமானாகிய விபீஷணுழ்வான் மாத்திரமே சத்தியபூர்வமாய்ப் பின் தொடர்ந்து வர, அதிகாயன் வந்து நிற்கும்படியான இரணக்களத்தில் வந்து, அந்தத் தூதுவனுடனே பிரவேசித்தார். அப்பொழுது வானரசேனை சமுத்திரமானது தென்கடலின்மீதெதிர்த்த வடகடல் வந்ததுபோல இராக்ஷதசேனைக் கடலையெதிர்த்தது. அப்படியெதிர்த்த வானரசேனைகளின்பேரில் அதிகாயனுடைய யானைப்படை - தேர்ப்படை-குதிரைப்படை-காலாட்படை யெல்லாம் ஒருமிக்கச்சேர்ந்து போர்செய்ய எத்தனித்தன. முன் பசியரத்தத்தாற் சேறுபட்டுச் சறுக்கலுண்டாயிருந்த அந்த ரணக்களம் இப்போது இரண்டு திறத்தாருடைய சேனைகளும் மிதித்ததினாலே காய்ந்து சிவந்தபுஷ்பத்தின் மகரந்தப்பொடியைப்போலச் செந்தூளெழும்பி ஆகாயத்தையெல்லாம் மறைத்துவிட்டது. இடிக்குச்சமானமான பேரிகை முழக்கத்தாலும், சங்கத்தொனி இடிமுழக்கத்தாலும், வீரகர்ஜ்ஜித ஓசையாலும் பயங்கரமாய் வளைந்தவில்லின் சப்தத்தாலும் நடுக்கமுற்றுச் சமுத்திரகோஷமும் அடங்கிப் போய்விட்டது. பாதகர்களாகிய இராக்ஷதர் மரணமடையும்போதெல்லாம் மலையினின்றும் பூமியில் விழும்படியான அருவியாற்றைப் போலே இரத்தத்தைக் கக்கிக்கொண்டு விழவும் மரங்களிலிருந்து உதிரும் இலைகளைப்போல விருதுக்கொடிக ளறுந்துவிழவும், மலைகள்மீது பாய்கிறதுபோலப் பெரிய யானைகளினுடைய தலைகளின்மேல் பல வானரங்கள் குதித்துப் பாய்ந்தன. பலமர்க்கடங்கள் கூட்டங்கூட்டமாக மலைகளைப்பிடுங்கி யெறிந்தபோது, அவற்றிலிருந்து தேனருவிகள் கீழேயொழுகி வரும்படி மதஜலம் ஒழுகுகின்ற யானைகளின் மீது அம்மலைகள்மோதி, ஒருயானை மற்றொரு யானையுடன் தாக்கி விழுவதுபோல மலையும் யானையுமாக இரண்டும் கீழேவிழுந்தன. பலகுரங்குகள் அரக்கருடைய சில குதிரையைக் கையாலே குத்தின. சில குதிரையை நசுக்கிவிட்டன. சில குதிரையைக் கையாலே யிறுக்கிப் பிடித்துக்கொண்டு தூக்கின. சில குதிரையைத் துண்டுதுண்டாக்கிவிட்டன. சிலகுதிரையை முன்னங்கால்வேறு பின்னங்கால்வேறு தலைவேருகப் பல்லினாலேகடித்து எறிந்துவிட்டன. சிலகுதிரை வானரங்களுதைத்த உதையால் இரத்தம் கக்கிக்கொண்டு துடிதுடித்திறந்தன. பல குரங்குகள் மோதியபோது சண்டமாருதக் காற்றடிக்க அதனாலேமேகங்களொன்ருேடொன்று மோதுண்டு ஒதுங்குவதுபோல் ஓட்டமெடுத்த யானைகள் ஒன்றுடனொன்றுதாங்கித் தந்தங்கள் முறிபட்டு அவற்றிலிருக்கும்படியான முத்துகள் பலபலவென்று உதிர்ந்தன. இந்தப் பிரகாரமாகயானைகளிறந்தன.சத்துருக்களை மிதித்துத் துவைக்கின்ற வஜ்ஜிரத்தூணையொத்த கால்கள் முறிபட்டு, யமபாசம் போன்ற வால்கள் அறுபட்டு அவற்றின் பேரிலிருந்த பாகர்களும் இறந்தார்கள். வானரவீரர்கள் மரத்தையும் கல்லையும், மலையையும், வாள்போன்ற பற்களையுடைத்தா யிராநின்ற மலைப் பாம்புகளையும், இராக்ஷதரேறிவந்த யானையையும், குதிரையும் தேரினையும் வாரிவாரி வீசினபடியாலே ஓங்கிவளர்ந்திராநின்றபெரியகாட்டைப்போலே ஆகாயமுழுவதும் காணப்பட்டது. வானரத்தலைவர்மலையைப்பிடுங்கியெறிய அவை ஆகாயமெல்லாம் பரவிச் சென்று கடலிலே மேகமானது படிகிறது

அதிகாயன்யுத்தம்.

அதிகாயன் வதை.



இந்திரஜித்து முதல்நாள் யுத்தம்

லட்சுமணர் நாகாஸ்திரத்தில் கட்டுண்டல்.

போல இராக்ஷதசேனையின்பேரில் விழுந்தன. வானரவீரர் ஓடமாட்டாமல் கால்சறுக்குண்ட குரூர இராக்ஷதவீரர்கள் வானரவீரரைப்பிடித்து, மழுவாயுதம் வேலாயுதம் வாளாயுதம் இவற்றைப் பிடித்துக்கொண்டிருக்கும்படியான தோளோடு மடக்கி, அவர்களுடைய இரத்தவெள்ளத்திலேயே அமிழ்த்திக்கொன்று, அப்பிணத்தை அவ்வெள்ளத்துடனே ஓடும்படியாய்ச் செய்தனர். அதிக பலவந்தரான அளவில்லாத வானரங்கள் இரத்தப்பெருக்கிலே நீந்தி நீந்திக் கையிளைத்து யானைப்பிண மேட்டின்மீது ஏறிநிற்க, அவை அந்தஆற்றிலே அடித்துக்கொண்டு போனதினாலே அவற்றுடனேபோய்க் கடலில் விழுந்திறந்து போய்விட்டன. சேற்கெண்டையுடனே யெழும்புகின்ற அலையையுடைய ஆற்றில் ஒருவர்தடியை நீட்டப்பிடித்துப்போகின்ற குருடர் கூட்டம்போல் கால்வாய் ஓடுகின்ற இரத்தப்பிரவாகத்தில் வானரவீரர்கள் ஒருத்தர்வாலை யொருத்தர் பிடித்துக்கொண்டு கிரமக்கிரமமாய் இறங்கி நடந்துபோனார்கள். இராக்ஷதசேனைகள் பலமுறை வானரசேனையின்மீது பாய்ந்து ஆயுதத்தாலடிக்க, அந்த ஆயுதத்தையெல்லாம் விலக்கிக்கொண்டு வானரர்களுடைய கை கொஞ்சம் கொஞ்சமாய்த்தேய்ந்து சிதைந்துசின்னபின்னமாகி, மாமிசமானது ஆகாயமுட்டச் சிதறுண்டு அநேக வானர மிறந்து போய்விட்டன. இப்படி வானரசேனை வருத்தப்படுகிறதை இளையபெருமாள் பார்த்து பயப்படாதேயுங்கள் என்று அவர்களுக்குத் தைரியம் பிறக்கும்படியான வார்த்தைகளை யெல்லாம் சொல்லி அவர்களுக்கு ஊக்கமுண்டாக்கி, தம்முடைய கையிலிருக்கின்றதும் எமனுக்கும் உயிர்பிச்சைகொடுப்பதுமான வில்லிலே நாணேற்றிக் குணத்தொனியைச் செய்தார்.

அந்த நாணோசையானது சாஸ்திரமெல்லா மூழ்கிவிட்டாலும் ஸ்தூலபூதங்கள் சூட்சுமபூதத்திலும் சூட்சுமபூதங்கள் தன் மாத்திரையிலும் அத்தன்மாத்திரை கிரமக்கிரமமாய்ப் பிரகிருதியினிடத்திலே யொடுங்கிப்பிரமகற்பமு முடிந்தும் காரணமாத்திர முடியாத அக்கடைசி காலத்தின் கண்ணே, ஸ்வதப்பிரமாணமான நான்கு வேதங்களும் ஸ்ரீயப்பதியினுடைய குணத்தைப் பல்லாண்டுபாடி எவ்விடத்திலும் கோஷித்துக்கொண் டிருப்பதுபோல எங்கும் நிறைந்தது. உடனே அவ்வவ்வில்லிலிருந்து அனேகபாணங்கள்புறப்பட்டன. அவைகள் எண்ணிறந்த ராக்ஷதருடைய தேகத்தையெல்லா மூடிக்கொண்டு சல்லடைக் கண்ணைப்போற் றுளைத்து, ஆகாயமுற்றும் பிணக்காடாய் நிறைந்துவிட்டன. அவருடைய மார்புபிளந்து புறப்பட்ட இரத்த வெள்ளங்கள் கடலை நிறைத்துவிட்டன. அவருடைய மார்புபிளந்து புறப்பட்ட இரத்த வெள்ளங்கள் கடலைநிறைத்து விட்டன. பின்னுமந்த அம்புகள் யானையினுடைய துதிக்கையை அறுத்து, தேர் வீரருடைய உயர்ந்த கிரீடத்தைத் தரித்திருக்கின்ற தலைகளைத் துண்டித்து, குதிரைகளினுடைய கால்களைத்துணித்து, அவைகளின் மீதிலேறிவந்த இரத்தநிறக் கண்களையுடைய பாகர்களது தேகங்களைச் சின்னபின்னங்களாகச்செய்து, வில்லுகளை இரண்டிரண்டாக முறித்து, வேலாயுதங்களை யொடித்து, வீரர்கள் அணிந்திருந்த பிரகாசமுள்ள கவசங்களைப்பேதித்து அவருடைய மார்பைப் பிளந்து, தேகங்களை மலையைப்போலே நொறுக்கி, குதிரைகளை உருவிப்போக அவைகள் பூண்டிருந்த தேரையுடைத்து, யானையை எமனைப் போல் கொன்றுவிட்டன. ஸ்ரீலக்ஷ்மணர் பாணத்தால் துண்டிக்கப்பட்டு விசையுடனே ஆகாயத்திற்போய்த் தோன்றும்படியான வெற்றி யானையின் வளைந்த வெள்ளைத்தந்தங்கள் லோகசிருஷ்டிக்கு முந்தினகாலத்தில் ஆகாயத்தினிடமாயிருந்த அனேகமூன்றாம்பிறைச்சந்திரனைப்போலப்பிரகாசித்துக்கொண்டிருந்ததுஷ்டராக்ஷதருடைய பெரியதலை அக்கினி சொரியும்படியான இரண்டு கண்ணையுடைய மூன்றாம்பிறைச் சந்திரரைக் கவ்விக்கொண்டன போன்று தொங்குகின்ற குண்டலங்களாகிய மின்னல்களுடனே சந்திரமண்டலம் ஆகாயத்திலிருந்து நழுவி மண்ணில் விழுந்து கிடக்கிறதுபோலக்கிடந்தன. கூர்மையான தந்தங்களை யுடையவையாவும், துதிக்கை குறைவுண்டு இரணக்களத்தினுடைய இரத்தவெள்ளத்திலே குப்புற்று விழுந்து கிடக்கும்படியான யானைக்கூட்டம் இந்தப்பூமியைப் பேர்த்தெடுக்க

ஆதிபுருஷ வராகமூர்த்தியை யொத்திருந் தன. புண்பட்டு உயிரிழந்த குதிரைகள் பூட்டிய பூட்டுகளவிழ்ந்து தலைகீழாய்விழு ந்த பெரிய தேர்க்கூட்டங்கள் புண்ணிய வசத்தாலே சுவர்க்கத்தை யடைந்திருந்து அது குறைபட்டு அந்த சுவர்க்கத்திலிரு ந்து பூமியில் விழுந்த தெய்வ விமானம் போலிருந்தன. ஸ்ரீராமாநுஜருடைய பா ணமானது சங்கரித்தபடியால் தம்மிடத்தி லிருந்த உயிரானதுவிட்டு நீங்காத பாபங் களை முற்று நீக்கி அடைகிறதற்குத் துர்லப மான மோக்ஷத்தை யடைந்ததென்று சொ ல்லும்படி தேகமாகிய சுமைகள் சந்தோ ஷத்தால் கூத்தாடுகின்றதைப்போல இரா க்ஷத கவந்தங்கள் கூத்தாடின. நாற்பத்தெ ண்ணாயிரம் வீரர்களிறந்தால் ஒருகவந்தம் கூத்தாடுமென்கிற பிரமாணம்யதார்த்தமே. அது யதார்த்தமாதலால் கோடிக்கு மேலா கக்கவந்தங்கள் கூத்தாடினபோது இறந்த வீரருடைய தொகை இவ்வளவென்றுஎவ ராலாயினும் சொல்லி முடியுமோ? முடியா து. யானையினுடைய இரத்தப்பிரவாகமும் இராக்ஷதருடைய உதிரவெள்ளமும், மற் றக்குதிரைக் கூட்டத்தினுடைய செந்நீரா றும், காட்டிலும் மலையிலும் பெய்த மேக வருஷத்தா லுண்டான பெரு வெள்ளத் தைப்போலப் பரந்தோடி தெய்வீக கங்கா நதியைப்போலச் சமுத்திரத்திலே விழுந் தன. லக்ஷ்மணருடைய பாணம்பட்டுத்தலை களறுந்த அநேக இராக்ஷத உடற்குறை கள் அந்த யானைக்கழுத்திலுள்ள கயிற்றிற் கால்கள் கோத்தபடியே யானைமேல் அங் குசங்களைக் கையிற் பிடித்திருந்து அந்த யானைகளைக்குத்தியோட்டுகின்றதுகள். பல முள்ள பாணங்கள்பட்டுக் குதிரைவீரரு டைய தலைகள் அறுந்தும் கீழேவிழாமல் முண்டங்கள் கையிலே வாளைப் பிடித்துக் குதிரைமே லிருந்தபடியே கூத்தாடின. ஸ்ரீமத் வேதமார்க்க மஹாரிஷிகளுடைய சாபவரத்தினைப் போன்ற பாணங்கள் தேர்வீரருடைய தலைகளை அறுத்து நீக்கி விடவும், அம்முண்டங்கள் முன்பு தாம் பிடித்து வளைத்து அம்பு தொடுத்துக்கொ ண்டிருந்த கையோயாமல் அதிவேகமாய்ப் பாணப்பிரயோகம் பண்ணிக்கொண்டே யிருந்தன. சீதாபிராட்டியாளென்கிற ஓர் இயமனை இராக்ஷதர்கள் தேடிக்கொண்டு தம்முடைய தகப்பனையும் தமையன்மாரை யும் தம்பிமாரும் குமாரரையும் பேரரையும் மருமகமாரையும் சண்டமாருதக் காற்றைப் போல அதிவேகமாய்ச்சென்று ஒரேபாண முருவிக்கொண்டு போனபடியாலே அவர் யாவரும் மாண்டுபோய்விட்டனர். லக்ஷ்ம ணராற் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள்பா ய்ந்து அறுந்து உருண்டுக்கிடக்கின்ற பெ ரியதலைகளைக் கழுகுகளில் சில கவ்விக்கொ ள்ள, அவற்றில் வைத்திரா நின்ற ஆசை யால் வேறேசிலகழுகுகள்சகியாமல் கோழி களைப்போல ஒன்றோடொன்று எதிர்த்துச் சண்டைசெய்தன. ஆயிரக் கணக்காகவும் வருகின்ற அக்கினிமுகபாணங்கள் மனோ வேகமாய்ப்போய்ப் பாய்கின்றபடியினாலே ராக்ஷதருடைய உடல்மாய்ந்து நசிக்க, அவ் வுடல்களிலுள்ள உயிரைப் பிடிக்கிறதற்கு எமதூதரும் ஓடியோடிக் கால்கள் ஓய்ந்து போகின்றார்கள். லக்ஷ்மணருடைய பாண ங்களால் மேருமலையையுமசைக்கும் வல்ல மையுள்ளவரான ராக்ஷதர்கள் உடற்சுமை நீங்கி மாண்டுதுடிக்கும்படியானதைகண்டு, இளையபெருமாளுடைய வல்லமைக்காகத் தேவர்கள் தம்முடைய தலைகளைக் குலுக்கி னார்கள். இராக்ஷதருடைய பிணமலைகளின் பாரத்தால் பூமிதேவியு முதுகுநெளிந்து வருந்துகின்றவளாயினாள். இப்படிப்பட்ட சமயத்திலே தாருகனென்னும் பெயரை யுடையவனும் மேருவுக்குச் சமமான தேக த்தை யுடையவனும், வடவாமுகாக்கினியி லும் கொடியவனுமான ராக்ஷதன்யுத்தமே தனக்கு விளையாட்டாகக்கொண்டு தேரேறி வில்லைப்பிடித்து அதி உக்கிரம்கொண்டு வந்தெதிர்த்து நின்று இளையபெருமாள் மீது அக்கினிமயமான அம்புகளைப் பிர யோகித்தான். அவையெல்லாம் அவன் முன்னாலே பெற்றிருந்த வரங்களைப்போல ஆகாயம் பூமி முழுமையும் எள்ளிட இட மில்லாமல் மூடிக்கொண்டன. அவற்றை இளையபெருமாள் அதிதீக்ஷண்யமான சில பாணங்களால் இருந்தயிடம் தெரியாமல் போகப் பண்ணினார். அப்பாணங்களில் ஒன்று அவனுடைய நிலையையும் அறுத்து விட்டது. அவ்வகைப்பட்ட பருத்த தலை யானதுவெகுவேகமாய்மலையிலிருந்துமேக மெழும்பினதுபோல ஆகாயமார்க்கத்தில் போயும் கர்ஜ்ஜித்தது. அச்சப்தத்தைக்கே

ட்டு அவனுயிரைப்பிடிக்கும்படிவந்த தூதர்களேயல்லாமல் எமனும் பயந்தான். இப்படி அவன் இறந்துபோனபிறகு காலனெனச் சொல்லப்பட்டவனும், குலிசனென்பவனும், காலசங்கனென்பவனும், மாலனென்பவனும், மருத்த னென்பவனும், கணிச்சி யென்பவனும், வெகு வேகமாய் வந்து, லக்ஷ்மணரை எதிர்த்துக் கடினபாஷைகளைப்பேசி, சூலாயுதத்தையும், பாசத்தையும், வேலாயுதத்தையும் அடுக்கடுக்காய்ப்பிரயோகித்தனர். அப்படியவர்கள் எறிந்தவையும் வீசினவையுமான அநேகமான ஆயுதமெல்லாம் லக்ஷ்மணர் துண்டுதுண்டாக்கி, அத்துஷ்டருடைய பெரிய தலையையுமறுத்து அவர்களுக்கு உதவியாகவந்த இரதகஜதுரகபதாதியையும் சின்னுபின்னமாய்ச் சிதறிப்போகும்படிச் செய்தார்.

அச்சமயத்தில் அதிகாயனுடைய சேனுவீரர்கள் ஐம்பத்தாறுயிர மதயானையைச் செலுத்திக்கொண்டு லக்ஷ்மணரைச் சூழ்ந்து அவரவர்கள்பலபலஆயுதங்களை மேக வருஷம்போல வருஷித்தார். அன்றியும் வானரசேனையி லொருவராயினும் அப்புறம்போகவொட்டாமல்சுற்றிப் பெருங்கூட்டமானமலையைப் பெருங்கையிலேகொண்டு வீசியெறிந்தும், ஆயுதத்தால் நொறுக்கியும் கர்ஜ்ஜிப்பினுல் வானரரைக் கலங்கிப் போகும்படியாயுஞ் செய்தனர். அவ்விராக்ஷதவீரரால் எறியப்பட்டனவும், எய்யப்பட்டனவும், இடியோசை யுண்டாகும்படி ஒன்றையொன்றுகிட்டித் தாக்கி, அதிவேகமாய்க் கடல் பொங்கிவந்ததுபோலவும், யுகாந்தகாலமேகம் மூடிக்கொண்டாற்போலவும், லோகமுழுமையும் நெருங்கியபடியாலே பூமி ஆகாயம் திக்குகளெனச்சொல்லப்பட்டவையெல்லாம் மறைந்து போய்விட்டதுகள். இவற்றையெல்லாம் லக்ஷ்மணர் தம்முடைய பாணத்தால் அறுத்துத் தள்ளி ஆயுதத்தைப் பிடித்துக்கொண்டிருக்கும்படியான கையைத் துண்டு துண்டாக்கி, கன்னமதம் கபோலமதம் பீஜமதம் என்று சொல்லப்பட்ட மும்மதங்களைப் பொழிகின்ற மலைபோன்ற யானைகளினுடையதந்தமும் துதிக்கையும் அற்று வலிய தலையும் அறுந்து மேகத்தைப்போற் சுருண்டுக்கொண்டு விழும்படி செய்தனர். இப்படி லக்ஷ்மணர் ஒவ்வொருயானைக்கு ஒவ்வோர்பாணம் பிரயோகிக்கவே, இடியையொத்த அப்பாணம்பட்டு யானைக்கழுத்தின் கயிற்றில் மாட்டியிராநின்ற பாகர்களுடைய இரண்டுகாலுமற்று, ஆயுதம் பிரயோகம்செய்யும்படியான இராக்ஷதரும்மடிந்து கீழேவிழுந்தார்கள். மதத்தைப்பொழிந்துகொண்டு யானைகளும் மலையைப்போல விழுந்தன. இடிபோல் முழக்கும்படி வல்லமையுள்ளவையான கூரிய பாணங்கள் நுழைந்து முதுகிலுருவினபடியினுலே, சில யானைகள்மேற் றவிசும் அவ்வகைப்பட்ட தவிசை இறுக்கிய கச்சுவார்படிந்தமார்பும் பிளப்புண்டு மதங்களைப் பொழிந்துக்கொண்டு, திக்குத்திக்குகளாய்க் கரியமலையைப் போலே விழுந்து கிடந்தன. கொடிகள் முறிந்துஅங்கங்கேபற்றியெரியத்தக்கதாய் அக்கினியாஸ்திரங்கள் தேடிக்கொண்டு போகிறபடியாலே, யானைகளறுபட்டு அவ்வானைகளைச் செலுத்தினவருடைய தலையும் அறுபட்டுப் போய்விட்டன. அதனுலே கண்குழிந்த பேய்கள் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டுமென்று சும்மாயிராமல், தமக்கு வேண்டியமட்டும் பிணத்தைக் கொள்ளை கொள்ளையாய் வாரிக்கொண்டன. இளையபெருமாளாகிய லக்ஷ்மணர் பலங்கொண்டு விடும்படியான பாணங்கள் மழையிலும்மிகுதியாய்வந்து படுகின்றபடியாலே இடிவிழப்பெற்ற மலையைப்போல் கூட்டங்கூட்டமாயுருளும்படியான யானைகளினுடைய இரத்தவெள்ளமானது கறுத்த யானைக் கூட்டத்தோடு சிவப்புநிறமுள்ள யானைக்கூட்டம் போரிட்டாற்போலக் கடலிலே போய்விழப்பெற்றன. சிலயானைகள் தம்மைச் செலுத்தாநின்ற பாகர்கள் மாண்டுபோய்விட்டபடியால் நேராய்ச்செல்லாமல் ஆலகாலவிஷத்தையும்இடியையுமொத்த கோபத்தையும் ஓசையையு முடையனவாய் மதமேறி வெறிகொண்டு மதஜலமழையைப்போலச் சொரிய ஒன்றோடொன்றுதாக்கிச் சண்டைசெய்தன. இவ்வாறு சுமித்திராதேவிபெற்ற இளஞ்சிங்கம்பாணவருஷத்தைப் பொழிந்து தும்சப்படுத்தலினுலே சிலயானைகள் காலற்றன. சிலயானை துதிக்கையற்றன. சிலயானை வாலற்றன. சிலயானை குடல்சரியப்பெற்றன. சிலயானை தோள் வழுக்குண்டு போய்விட்டன. சில யானைமழையைப்போலவீறிட்டுக்கொண்டு

வளைதடியைப்போல இருக்கும்படியானதந் தங்களொடியப் பெற்றன. இராக்ஷதவீரரெனச்சொல்லப்பட்டவர்எட்டுத்திக்கிலேயும் நிறைந்து பதினாறுவகையான ஆயுதத்தையும் அவரவர்கள் விட்டது விட்டபடியே லக்ஷ்மணர் பாணத்தால் அவருமடிந்தனர். அவர் ஆயுதமும் முறியப்பெற்றன. இப்படித் தீயைச் சொரியும்படியான கண்ணையுடையவராயும், பெரிய தேககாத்திரமுள்ளவராயும்,கோபமுற்றுவீரவார்த்தையைப் பேசுகின்றவராயும், லக்ஷ்மணர்மீது கடல் புரண்டு வருவதுபோல வந்து அநேகமாயிரா நின்ற துஷ்டராக்ஷதர்கள் அறுபத்தாறாயிரம் யானைகளை அக்கினியைப்போலே செலுத்தி அநேக சித்திர விசித்திரமாய் அஸ்திரப் பிரயோகம்பண்ணி கொல்லுகின்ற வீரத்தொழிலையுடைய லக்ஷ்மணரைப் பார்த்து இனி இந்தயானைகளை உன்னுடைய அஸ்திரங்களால் கொல்லு பார்க்கலாமென்று சொன்னார்கள். மேகங்களினாலே மூடப்பட்ட சிவப்பான கிரணத்தையுடைய சூரியனைப்போல் அந்த யானைக் கூட்டங்களுக்குள்மறைந்து விளங்கிய வீரசிகாமணியாகிய இளையபெருமாள் இந்திர தனுசுக்குச் சமானமான வில்லைவளைத்தார். வளைத்தமாத்திரமே யானையாகிய மேகமெல்லாஞ் சிதறுண்டு தலைகால் முதலியவை நடுங்கிக்கொண்டு பூமியில் விழப்பெற்றன.

மோகமிகுதியால் செவியடியில் மதமழையைப் பொழியும்படி யானவையும், மலையையும் கடலையுமொத்த தேகத்தையுடையவையும், கண்ணிலே திரள்திரளாக நெருப்புச் சொரிகின்றவையுமான யானைகளிற் சில முதுகு பிளக்கப்பெற்றன. சில மத்தகம் திறக்கப்பெற்றன. சில பலம் பொருந்திய துதிக்கையற்றன. இப்படிப் பலவாறுகச் சின்னுபின்னப்பட்டும் தமக்குண்டாகிய மதமாத்திரம் நீங்கவில்லை. சில யானைகள் ஊழிக்கால சண்டமாருதம் ஓடுவதினாலே தன்னளவுக்கு உள்ளாகவே அலையை வீசிக்கொண்டு யிரா நின்ற சமுத்திர நீர் கரைபுரண்டு வருதல்போல் எண்ணிற்கு அடங்காமல் பலங்கொண்டு விசையாய்ப் புறப்பட்ட பாணங்கள் யாவும் முகப்படாமணிந்த மத்தகத்திலே பட்டுருவ பூமியிற் பெய்யும்படியான மேக ஜலத்தைப்போல் மதஜலத்தைப் பொழிந்துகொண்டே மாண்டுபோய் விட்டன. சிறகுகளுடனே மிகவும் அதிகவேகமாய்ப் பறந்துகொண்டிருந்த பருத்தமலைகள் தேவேந்திரனுடைய கூர்மழுங்காத வஜ்ஜிராயுதத்தினாலே வீசப் பக்கத்திலே பறந்து போவதற்கு இசைந்த சிறகுகளற்றுவிழுதல்போல மூன்றாம்பிறைச் சந்திரனுக் கொப்பாக நெற்றியில் அர்த்தசந்திரபாணம்பட்டுச் சில யானைகள் மடிந்தன. சூரியனுக்குச் சமமான பாணங்கள்பட்டுக் கோபமாறாமல் வேகமாய்க் குமுறும்படியானமேகத்திற் கொப்பாய்க் கர்ஜ்ஜிக்கும்படியான அநேகவித யானைகள் இரணக்களத்திலே பின்வாங்கிப் போகாமல் நிற்கவும் பலபாணங்கள்பட்டு அளவில்லாத யானைகள் பிளப்புண்டு அவற்றினின்று மொழுகி அலைமோதி யோடுகின்ற சிவப்பு நிறமாகிய இரத்தப் பிரவாகத்திலே முழுகின மலையைப்போல கடலிற்போய் விழுந்தன. சில யானைகள் தம்முடைய கண்ணிலேகூர்மையான பாணம் வந்து தையாநின்றதைக் கண்டு இவ்வளவவ்வளவென்னாத கோபத்துடனே கும்பல்கும்பலாகப் பூமியும் பொடிப்பொடியாய் நெரிந்து போகும்படி திக்குத் திசைதெரியாமலோடி இராக்ஷதசேனாசமுத்திரத்தை மிதித்து உழக்கிவிட்டன. இளையபெருமாள் ஒருபிரயோகத்தில் ஆயிரங்கூர்மையான பாணங்களை மேகம் பொழிகின்ற ஆயிரம் தாரையைப்போல எய்வதினாலே, அப்பாணங்கள் பாய்ந்து இரண்டாயிரம் மதயானைகள் பிளந்துவிழுமேயானால் அவருடைய கரவேகசரவேக வில்வித்தையை ஆராய்ந்து நிச்சயிப்பதற்குத் தேவர்களாலு முடியுமோ? தேர்கள் முறியப்பெற்று, யானைகளறுபட்டு, சண்டைசெய்கின்ற கோபமுள்ள வீரர்கள் இறந்து விஜயலக்ஷ்மி நிர்த்தனஞ்செய்கின்ற ரணக்களத்தில் குதிரைக்கூட்டங்கள் பொரிந்து இவையெல்லாம் நான்கு பக்கத்திலும் மோதுகின்ற யானையினுடைய இரத்தப் பிரவாகத்தில் அகப்பட்டு அப்புறமிப்புறம் போகாமல் போர்க்களத்திலே தேங்கி நின்றுவிட்டன.

இப்படி அறுபதாயிர மதயானையும் ஒருநாழிகை செல்வதற்குள்ளே துண்டு துண்டாய்ச் சிதைந்து குவியல் குவியலாய்க் கிடந்தபடியினாலே லோகத்தாரால்

இவைகளெல்லாம் மலைகளோ? யானைபிண க்கூட்டமோ? என்றறியக் கூடாதவையா யிருந்தன. பிரத்தியேகமா யிருந்த ஒரு கோடி யானையை அந்த இராவணன் அவ் வதிகாயனுக்கு துணையாய் அனுப்பினன். முன்னம் ஒரு கோடி பலமான யானை பட் டுப்போய்விட்டன. வரும்படியானவழிஎல் லாம் மதநீராய்ப் பெருக்கெடுத்தோட,இப் பொழுது வந்த யானையை இராக்ஷத வீரர் இடியையொத்த அம்புகளைப் பொழியும் படியான இரண்டு குதையையுடைய இந் திர தனுசுக்குச் சமானமான வில்லைக்கை யிலே வைத்திருக்கின்ற வெற்றிபெற்ற சிங் கத்திற் கொப்பான இளையபெருமாளுக்கு முன் செலுத்திக்கொண்டு வந்தனர். இந்த லோகத்திலெத்தனை மலைகளுண்டோ,அத் தனையும்உருவத்தால் தோற்கடிக்கின்றவை யும் ஒன்றிற்கொன்று ஒப்பானவையுமான அக்கஜமெல்லாம் இளையவரான லக்ஷ்மண ரைவந்து கும்பல் கும்பலாய் நாலுபக்கமு ஞ்சூழ்ந்துக்கொண்டன. அவ்வளவில்லாத வடவாமுகாக்கினியைப்போலே கோபிக்கு ம்படியான கஜமெல்லாம் அவருடைய வில்லிலிருந்து புறப்பட்ட பாணத்தாலே சில தலையற்றனவும் சிலகாலற்றனவும் சில உடல்பிளந்து போனவையுமாய் மாண்டு போய்விட்டன. முப்பத்தாறுயோசனைதூர மட்டும் நான்காய்ச் சொல்லப்பட்ட திசை யிலேயும் மதகஜங்களினுடைய சஞ்சார மேயாகிவிட்டதென்று யாவரும் மிகவும் பயந்து போய்விட்டனர். வானரக்கூட்ட மெல்லாம் நசுங்கிக் குழம்பி அப்பூமியே வேறுபட்டுப் போய்விட்டது. பேய்க்கூட் டங்கள் வால்பக்கமிது தலைப்பக்கமிதுவெ ன்று தெரியாமல் யானைப்பிணங்களை மலை யைத் தூக்கிக்கொண்டு போகிறதுபோலத் தூக்கிகொண்டு போயின. பக்கங்களில் அலைவீசிக்கொண்டிருக்கின்ற இரத்தக்கட லுடனே சிதைந்து மாண்டுபோன சேனை களை வாரிக்கொண்டு மதஜல ஆறுகள் பற் பலவாய்ப் பாய்ந்தன. லக்ஷ்மணர்ஒருபாண த்திற்கு ஒருயானை இறந்து விழும்படியாய் அக்கினியைக் கக்கிக்கொண்டுஇடிபோன்ற வையும் யமனைப்போன்றவையும் முருகனு டைய வேலுங்கண்டு நாணத்தக்கவையும் கடலெனச்சொல்லுகிறதையும் வற்றடிக்க த்தக்கவையுமான பாணங்களால் மேகம் போல மதஜலத்தை பொழியும்படியான யானைகளை பதினாயிரம் பதினாயிர மொவ் வொரு பந்தியாகக்கொன்றார். இந்தப்பிர காரமே இளையபெருமாளுடைய பாணங் கள் யானைகளைத் தேடிதேடிக் கொல்லு கின்றதைக் கண்டு யானைபோல உயர் ந்து காணப்படுகின்றபடியால் மலைகளும் பயந்ததுகள். யானைபோலக் கறுத்துக்கா ணப்படுகிறதால் மேகங்களும் நடுங்கினது கள். சோலைகளும் அஞ்சினதுகள். மற்ற பெரிய பொருள்களும் தங்கள் நிலை மாறி னதுகள். திக்கஜங்களும் தங்கள் ஸ்தானம் விட்டு நழுவினதுகள். கடலலைகளும் துடி துடித்ததுகள், சிவபுத்திரராகிய ஐந்து கையுள்ள விநாயகரும் தாம் யானையுருப் பெற்றிருக்கின்றமையால் இராமாநுஜ ருடைய பாணம் தம்மையும் கொல்லுமோ வென்று திடுக்கிட்டாரென்றால், மற்றதைப் பற்றிபலவாறுசொல்லவேண்டியதென்ன? விற்குதைகளிற் பூட்டியிருக்கின்ற நாணோ சையானது, கடலைத் தத்தளிக்கும்படிச்செ ய்து சுவர்க்கலோகமெல்லாம் கிடுகிடாய மான மாக்கிவிட்டது. அந்த வில்லிலிரு ந்து புறப்பட்ட பாணங்கள் வேகமுள்ள ராக்ஷத வீரர்களுடைய தலைகள் உடல்களி லெல்லா முருவினதுகள். அந்தப்பாணங் கள்பட்டு மத்தகஜங்கள் இடிவிழுந்த மலை களைப்போல் அடிசாய்ந்து விழுந்ததுகள். இப்படிப்பட்ட சமயத்தில் ஆஞ்சநேயர் ஏழுசமுத்திரம்போலவந்து, ராக்ஷதர்க ளால் ஏவியமிகுந்த யானைகள் மடியத்தக்க ஒருசெய்கையைச் செய்கிறேனென, ஓ வீர ர்களே! துள்ளிக்குதியாதே யுங்களென்று சொல்லி வேல்பாய்வதுபோலப் பாய்ந்து வந்து வீரகர்ஜ்ஜனைசெய்து கண்களில்தீப் பொறிபறக்க ஒருபெரிய மதயானையைப் போலக் காணப்பட்டு, அஜசங்கராதி தேவர் முதலியோரை உபத்திரவஞ்செய்து கொண்டிருந்த இரணியன் முதலிய அசுர வர்க்கங்களை நாசமாக்கும்படி அவதரித்த ஆதிநரசிங்கம்போல அதிக உக்கிரங்கொ ண்டு ஸ்ரீராமநாம ஸ்மரணைபண்ணி யம தண்டம்போன்று வளர்ந்திருந்த ஒருமரா மரத்தைப்பிடுங்கி இருப்புத் தடிபோன்ற நீண்ட துதிக்கைகளையுடைய மதயானைக ளெல்லாம் ஒருமிக்கமாளும்படியாக ஊழி க்காலத்தில் பெரும் பூதங்களும் உகாந்த

காலமேகமும் கலந்து அழிக்கும்போது, மலைகளின்மீதுபேரிடிவிழுவது போலச் சாடினர்.

அநுமாரானவர் அப்படிச்சாடுகிற காலத்தில், தம்முடைய கால்மிதியிற் பல யானைகளும், நடக்கும்விசையிற் பலயானைகளும், வல்லமையிற் பலயானைகளும்உதையிற்பலயானைகளும், கால்தட்டுதலிற்பலயானைகளும்,வாலாற்பலயானைகளும், வால்நுனியாற் பலயானைகளும், வாய்ச்சொல்லின் வேகத்தாற் பலயானைகளும், கைவீசுதலிற் பலயானைகளும், ஓரிடத்திலிருந்தோரிடத்திற் குதிக்கிறதினுற் பலயானைகளும் மாளும்படிக்கொன்றுர். சில யானைகளைப் பற்றியிழுத்தும் சிலவற்றை பிளவு பிளவாகப் பிளந்தும், சிலவற்றை நகங்களாற்கீறியும், சிலவற்றைப் பனைமரத்தைப் பற்றி முறிக்கிறதுபோல துதிக்கைகளைப் பற்றி முறித்தும், சிலவற்றைக் கையால் குடைந்தும், சிலவற்றைக் கிழித்தும், சிலவற்றைத் துண்டித்தும், சிலவற்றைப் பல்லாற்கவ்வியும், சிலவற்றை மத்திட்டுக் கடைவதுபோலக் காலால் கடைந்தும், சிலவற்றைத் துண்டந் துண்டமாகக் கடித்தும், சிலவற்றைப் பற்றிக் குண்டுக்கட்டாக வளைத்தும், சிலவற்றை யொடித்தும், சிலவற்றினுடைய நீண்ட தந்தங்களைப் பிடுங்கியும்கொன்றுர். சில யானைகளைக் கைகளினுல் வாரிவாரிச் சமுத்திரத்திலெறிந்தார். சில யானைகளை இழுத்துச்சுற்றி யலையச்செய்து உருட்டினர். சிலயானைகளைப் பிடித்து பூமியிலறைந்தார். சிலயானைகளை குடலைப்பிடுங்கினர். சிலயானைகளை சுவர்க்கலோகத்தில் விழும்படிவீசினர். சில யானைகளை மிதித்துத்து வைத்தார். சில யானைகளை முகத்திலுதைத்தார்.

அநேக யானைகளை மலைப் பாம்பைப் போலே தம்முடைய வாலினுலே சுற்றி வளைத்துக்கட்டி பாகர்களுடனே வேகமாய்மலைமேல் மோதியடித்துக் கொன்றுர். முன்னே தம்மேல்வந்த யானையைத் தோலுரித்துக்கொன்ற சாக்ஷாத் சிவபெருமானேதாம் என்பதற்குத் திருஷ்டாந்தமாகத் தம்முடைய பெரிய வாயில் அநேக யானைகளைப்போட்டு குதப்பினர். இப்படி ஒரு க்ஷணப்பொழுதுக்குள் ஆயிரம் யானைகளைச்சிம்ஹத்தைப்போலக் கொன்றுர். இப்படிக்கொல்லும்போதே சையபருவதத்திலுமுயர்ந்த நூறுயிரம் மதயானைகள் அதிவேகத்துடனே ஆஞ்சநேயருக் கெதிராக வந்ததுகள், அவைகளையெல்லாம் உருமாய்த்து இன்னபொருளென்று தெரியவொட்டாமல் உழவு நிலத்துச் சேற்றைப் போலாகும்படித் துகைத்தார். இப்படி ஆஞ்சநேயர் க்ஷணப் பொழுதுக்குள்ளாக முன்பின்னுமாக வந்த யானைகளில் லக்ஷம் யானைகளைக்கொன்றுர். மற்றவைகளையெல்லாம் இளையபெருமாள் அர்த்தசந்திர பாணத்தினுல் கொன்றுவிட்டார்.

இதைக்கண்டு இராக்ஷதர்களெல்லாம் அதிக பயங்கொண்டு திக்கு திக்குகளாக ஓட்டம் பிடித்தார்கள். யானைப்பிணங்கள் தங்கள் மேல்விழுந்தபடியால் அதிலகப்பட்டு நசுங்கிப்போன ராக்ஷதர்களும் நசுங்கிப்போகாமல் உயிர்தப்பியிருந்த ராக்ஷதர்களும் உடல் நெருங்கி புழுக்கத்தால் வெந்து குழம்பிப்போனர்கள். மற்றவர்களெல்லாம் தாம் தாமேறிவந்த தேர்களையிழந்து பாதசாரிகளாக முன்னேபோக, அதைப்பார்த்து அதிககோபங்கொண்டு தேவாந்தகனென்பவன் ஒருவனுய் ரத்த வெள்ளத்தினருகே பிணங்கள் மலைமலையாகக் குவியப்பெற்று அதிக பயங்கரமாய்த் தோற்றுகிற அந்தரணக்களத்திலே தனித் தேர்விட்டுக் கொண்டுவந்தெதிர்த்து, அக்கினிக்குச் சமானமாகிய சிலபாணங்களை அநுமான்மீது பிரயோகித்துத் தேகத்தைச் சல்லடைக்கண்களாய்த் தொளைத்து இடியைப்போலக் கர்ஜ்ஜித்தான். அப்போது அநுமானும் ஒருபெரியமரத்தைப் பிடுங்கி அடா! இதோ உன்னுயிர்போய் விட்டதென்று அவன்மேல்விட்டெறிந்து அட்டகாசஞ்செய்து நின்றுர். அதைக் கண்டுதேவாந்தகன் அக்கினியைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மையான பாணத்தை எடுத்து அந்தமரத்தின் வேகத்தை அடக்கக்கடவாயென்று பிரயோகித்து அந்த மரத்தைத் துண்டாக்கிவிட்டான். அதைக் கண்டு வானரக்குலத்தில் ஒருசிங்கம்போலிருக்கின்ற அநுமான் வேருெருமலையைப் பிடுங்கி எறிய அது தன்மேல் படவரும்போது அதுதன்மேற் படுதற்குள்ளாகத் தேவாந்தகன் அந்தமலையைப்பாணத்தால் உடைத்துவிட்டுச் சந்தோஷித்தான். அப்

போது ஆஞ்சநேயர் அதிககோபங் கொண்டு வில்லில் அம்பைப் பூட்டிக் கொண்டிருக்கின்ற அந்தத் தேவாந்தகன் மீது, புராவின்மேல் ராஜாளி பாய்வது போல் அவன் கையிற்பிடித்திருந்த பெரிய வில்லைப்பறித்துத் தேவர்களெல்லாம் பல்லாண்டு கூறும்படி அதை அநேக துண்டுகளாக முறித்தார். அவருடைய வல்லமையைக்கண்டு வெகு கோபமாய்த் தேவாந்தகன் ஒரு தோமராயுதத்தை யெடுத்துத் தேவர்கள் பயப்படும்படி அநுமானுடைய இடது தோளில் மோதிக்கர்ஜ்ஜித்தான். அதைக்கண்டு ஸ்திரீபோகத்தை நீக்கி இந்திரிய ஜெயம்பெற்ற ஆஞ்சநேயர் அதிக கோபங்கொண்டு அவனுடைய தோமரத்தைப் பிடுங்கி இடியிடித்தாற்போல மோதி, அவன் தேரையுடைத்துச் சாரதி சிரசைச் சிதைத்துத் தேவர்களுக்கு முகமலர்ச்சியை யுண்டுபண்ணினர். அப்போது அந்தக் காலாந்தகன் ஒரு சூலாயுதத்தை யெடுத்துப் பிரயோகிக்கும்படித் தொடங்கினன்.

அவனை ஆஞ்சநேயர் ஒரு இமைகொட்டுமுன்னமே அவன்மேல் எதிர்த்துப் பாய்ந்தார். காலகோடி விஷத்தைப் பார்க்கிலுங் கொடியவனுன அந்தத் தேவாந்தகனும் எதிர்த்து நின்றான். அநுமான் எமனுடைய தண்டாயுதத்துக்கொப்பான தம்முடைய கையால் அவன் பிடர்மூலத்தில் ஒரு குத்துகுத்தி, அவனுடைய தலையை மடக்கி உயிரையொடுக்கினர். அதை அதிகாயன் எதிரே நின்று பார்த்துக்கொண்டிருந்து வடவாமுகாக்கினியைப்போற் சீறி புண்ணிலிருந்து வடிவதுபோல இருகண்ணிலிருந்து ரத்தவெள்ளம் பொழியும்படியாக இப்போதே உன்னுயிரை யுண்டுவிடுகிறேன்; உன்னை இனிவிடமாட்டேனென்றுசொல்லிக் கொண்டே தன்தேரை விட்டுக்கொண்டு அம்பு வருவதுபோல வந்தான். அநுமானும் அப்படியேசலியாமல் நின்றார். அதிகாயன் வரும்போது முன்னிட்ட சேனை பின்னிடவும் பின்னிட்ட சேனை முன்னிடவும், பிரிந்து வந்தவர்களெல்லாம் ஓடிவந்து ஒன்றாய்ச்சேர்ந்தார்கள். இப்படி அதிகாயன் மேருமலைபோல யிருக்கின்ற அநுமானை வந்தெதிர்த்து பொன்மலையையும் முறிக்கும் வல்லமையோடுதோன்றிச் சொல்லுகிறான். நீ என்னுடைய தம்பியாகிய அக்ஷ குமாரன் தனித்துவந்தவனை வெட்டாந்தரையில் போட்டுத்தேய்த்து நசுக்கிக் கொன்றுவிட்டு, கடலைத்தாண்டி ஓடிப்போய்விட்டபடியினாலே தப்பிப் பிழைத்துப் போனாய். இப்போது வந்து நடுவே நுழைந்து தேவாந்தகனையுங்கொன்றாய். அதைப்பார்த்து எதிர்த்து வந்தேன். உனக்கு ஆயுள்நாள் முடிந்துவிட்டபடியால் இன்றைக்குஅகப்பட்டாய். இன்றைக்கு நீ தப்பினால் இனி என்றைக்கும் உன்னோடு நான் எதிர்க்கிறதே யில்லை. நீ எங்களை அநேகவிதமாய் வருத்தப்படுத்தியிருக்கின்றாய். இந்த லக்ஷ்மணனையும் உன்னையும் வெற்றிபெறாமல் வியர்த்தமாய்ப்போகாத என் பாணவருஷத்தால் கொன்றாலல்லாமல் நான் திரும்பிப் போகிறதில்லை. இதை நீ கெட்டியாய்நம்பு. இந்தவார்த்தை தப்பமாட்டாதென்று தன்னிரண்டு கையையும் பிசைந்துமேகங் கர்ஜ்ஜித்தது போலச் சப்தித்துச் சிரித்தான். ஆஞ்சநேயர் ஓர் குகையிலிருக்கின்ற சிங்கத்தையொத்த அதிகாயனே! என்னை அப்படியே நீ கோபிக்கலாம். உன்பின்னே நிற்கின்றதிரிசிரனென்பவனையும் உன்னோடு கூடப்பூமியிற்போட்டு அரைத்துவிடும்படியாகக்கூப்பிடென்று சொன்ன மாத்திரத்தில் அது கேட்டுத் திரிசிரனென்பவனும் ஆமாம் நீ சொன்னது மெய்தானென்று கோஷித்துக் கொண்டுவந்து சேர்ந்தார். ஸ்ரீராமதூதரும் சாம்பசிவாம்ச பூதருமாகிய ஆஞ்சநேயரும் அவர்களுடனே எதிர்த்து உங்களில் சாகாதவர்களெல்லாம் பலமுள்ளவர்கள்தானென்றுஞ் சொல்லிக்கொண்டு வாய்மென்றுகொண்டு பக்கத்திலிருக்கின்றவர்களுக்குள்ளே நுழைந்துபோய்த் தேர்மேல் பாய்ந்து குதித்து, தம்முடைய பலத்தால் கறுத்தமேகங்கள் மூடிக்கொண்டிருக்கின்ற மலைபோன்ற அந்தத் திரிசிரனைப் பிடித்துத் தூக்கிப் பூமியின்மேற் போட்டுக் காலால்மிதித்து அரைத்து, அந்த ராக்ஷதர்களுடைய பழியை வாங்கும்படிக்கொன்று மேற்குவாயிலும்போர் நடக்கின்றதென்று ஒரு இமைப்பொழுதுக்குள்ளாக அவ்விடம்போய்ச் சேர்ந்தார்.

அப்போது அதிகாயன் நின்றபடியே நின்று இன்னது செய்யவேண்டுமென்ப

துந் தெரியாமல் கண்களில் கண்ணீரும் அக்கினியும் சொரியும்படியாகப் பரிதபித்துக்கோபித்து, நின்று இந்த அநுமான் எதிர்த்து நிற்பானேயானால் பார்வதியை இடப்பாகத்திலுடைய ருத்திர மூர்த்தியுமெதிர்த்துநிற்கச் சக்தியுள்ளவ னல்லவென்றுசொல்லி, அதிக கோபத்துடனே கையை அசைத்து, நாமொரு காரியத்திற்கு வந்து வேறொருசெய்கையில் நின்றுமுயல்கிறது வீரலக்ஷணமல்ல. மஹாவீரர்களுக்குள்ளெல்லாம் உயர்ந்தவீரனான இவனைப் பிறகுபார்த்து பேசலாமென்று தன்தேரை இளையபெருமாள்மீது செலுத்தும்படிச்சாரதிக்கு நியமித்தான். அந்தத் தேரோசை கடலொலியைக் கெடுக்கவும், வில்லினோசை மேககர்ஜ்ஜிதத்தை அடக்கவும், யுத்த சன்னகத்தொனியும் பேரிகை முழக்கமும் அஷ்டதிக்குகளையுஞ் செவிடுபடுத்தவும், கிண்கிணிமாலை சப்திக்கும்படியாக வீரகண்டாமணியைத்தரித்த அதிகாயன் சேனைகளுந் தானுமாகவந்து நின்றான். தேவர்களெல்லாம் பல்லாண்டிசைக்கும்படியாக இளையபெருமாளும் அவனோடெதிர்த்துவந்து நின்றார். அதைக்கண்டு வாலிபுத்திரனாகிய அங்கதன் அதிவேகமாயோடிவந்து, ஓவில்வீரர்களுக்குத் திலகம்போலிருக்கின்ற சுமித்திரை இளஞ்சிங்கமே! ராமாநுஜரே! அதிகாயன் தேரின்மேலேறியிருக்கத் தேவரீர் பாதசாரியாய் அவனோடு நின்று யுத்தஞ்செய்வ தழகல்லவே, அடியேன் தேவரீருடைய திருமேனியைத் தாங்க வல்லமையற்ற அற்பனாயிருந்தபோதிலும் கிருபைசெய்து அடியேனுடைய தோளிலேறி யருளவேண்டுமென்று பிரார்த்திக்க, ஸ்ரீராமமூர்த்தியின் திருத்தம்பியாகிய இளையபெருமாள் நல்லதென்று அந்த அங்கதன் தோள்மீது தமது திருவடிக்கமலங்களை வைத்தேறியருளினர். பெரியதிருவடியாகிய கருடனைப்போல அங்கதன் இளையபெருமாளைத்தாங்கி நின்ற வல்லமையைநோக்கித் தேவர்களெல்லாம் மனங்குளிர்ந்து புஷ்பமாரி பொழிந்தார்கள்.

ஆயிரங் குதிரைகள் பூட்டிய இடியைப்போல சப்திக்கின்ற அந்த அதிகாயன் தேர் போனதிசைகளெல்லாம் அங்கதனும் காற்றுடியைப்போலச் சாரியோடுவான். அந்தத்தேர்மேலே எழும்பினால் தானும் மேலேபோவான். அதுகீழேயிறங்கினால் தானும்கீழேவருவான். அது ஆகாயத்திற்போனால் தானும் ஆகாயத்திற்போவான். இந்தப்பிரகாரமாக அங்கதன் கடல் நீரெல்லாம் அக்கினி மயமாகக் கொதிப்பெழும்படிக் கலக்கினான். அந்தச்செய்கையைப்பார்த்த வானர வீரர்களெல்லாம் ஆனந்தமுற்று ஆர்ப்பரித்தார்கள். தேவர்களெல்லாம் இந்த அங்கதனுடைய செய்கை அந்தக் கருடபகவானுக்கு முண்டாயிருக்க மாட்டாதென்று தங்கள்கைகளை விரித்தார்கள். பிறகு இளையபெருமாளுடையசரமாரி அதிகாயனுடைய யானைகள் மீதும் குதிரைகள்மீதும் தைத்ததுகள். ராக்ஷதர்கள் பக்ஷத்தில் மேககர்ஜ்ஜிதத்திலும் மூன்றுமடங்காகப் பேரிகை முழங்கினதுகள். வேணுநாதங்கோஷித்ததுகள். பெரிய தேர்கள்ஒலித்ததுகள். குதிரைகள் அநுமானித்ததுகள். தவளச்சங்குகள்தொனித்ததுகள். வில்லின் குணத்தொனி அதிர்ந்தது. வீரகண்டாமணியும் ரத்னாபரணங்களும் கலகலவெனகளித்ததுகள். வீரர்களுடைய அதட்டுதலும் அவர்களுடைய சிம்ஹநாதமும் இடித்ததுகள். அதிகாயனுடைய யானைகளிறக்கவும், பதாதிவெள்ளமாளவும், காற்றுக்கொப்பான குதிரைகள் மடியவும், இவைகளைப் பார்த்து யமன் பயப்படவும், தங்கமிழைத்த தேர்கள் எரிந்துபோகவும், அவ்விடத்தி லுள்ளவைகளெல்லாம் பொடிப் பொடியாய்விடவுமாக இளையபெருமாள் பிரயோகித்த பாணம் பெருமாரியாய்ப் பாய்ந்ததுகள். அப்போது திரிலோக நாயகராகிய ஸ்ரீரகுநந்தனருடைய திருத்தம்பியார் எதிரே நிற்கின்ற இராவணனுடைய மகனைநோக்கி உன்னுடைய அபிப்பிராயமென்ன? உன்சேனையெல்லாம் சின்னாபின்னப்பட்டு போனால் போய்விடுகின்றாயா! அப்படிக்கில்லாமல் சண்டைசெய்யத்தெரிந்து நீமாத்திரம் நின்று என்னோடு போர்செய்கின்றாயா? சொல்லென்றுகேட்க யமனைக்காட்டிலும் கொடியவனான அதிகாயன் என்னோடுகூடவந்தவர்கள் உன்னோடு சண்டை செய்கிறவர்களல்ல. எதிர்த்திருக்கின்றவர்களும் பார்க்கும்படியாகவே வந்தவர்கள் வேறல்ல. இப்போது போர்செய்வதெல்லாம் உன்பிணத்தைக் காக்கைகள்காக்கும்படிச்செய்யத்தானே நானுன்னைக் கூப்

பிட்டது. இதற்காகத்தானென்று சொல்லி பின்னும் உன்னை அந்தப்பார்வதியே கார்க்கட்டும். அல்லது அந்த உமையவளை இடதுபாகத்திலுடைய ருத்திரபகவானே கார்க்கட்டும்; ஏழுலோகத் தேவர்களுங் கார்க்கட்டும்; யாவர் கார்த்தபோதிலும் உன்னுடைய ஆயுள் இன்றோடு முடிந்துவிடுமென்று சொல்லி, தன் சங்கைத் தொனித்து மூங்கிலுருவங்கொண்டிருக்கிற எமனுகிய தன்வில்லைவளைத்து டங்காரம்பண்ணி இடியைப்போலச் சிங்கநாதமுஞ் செய்தான்.

அப்படி அதிகாயன்சொல்லக்கேட்ட இளையபெருமாள் புன்சிரிப்புச்சிரித்து, நீ சொன்னபடி எனக்கு ஒருவருந் துணைவர மாட்டார்கள். நானொருவனுமே உன்னோடு சண்டைசெய்து தோற்றாலுந் தோற்கின்றேன். என்னை நீ ஜெயித்துவிட்டாயேயானுல் முன் நீசொன்னதேவர்களையெல்லாஞ் ஜெயித்தவனேயாவாயென்றுசொல்லிமின்னலைப்போலபிரகாசிக்கின்றஒருபாணத்தை வில்லில்தொடுத்து பிரயோகித்தார். அதை மலையை அவமதிப்புச் செய்யும்படியான தோள்களையுடைய அதிகாயன் ஒரு அக்கினி பாணத்தைத் தொடுத்து ஆகாயத்திலேயே துண்டாக்கிவிட்டு கண்ணில் விஷமுள்ளதான குக்குடசர்ப்பம்போன்ற பதினுறு பாணத்தைப் பிரயோகித்து, ஓ லக்ஷ்மணு! இந்தப் பாணங்களை விலக்கு பார்ப்போமென்று கர்ஜ்ஜித்தான். இளையபெருமாளானவர் அவனெய்த பாணங்களையெல்லாம் தமதுபாணத்தாலேமுறித்துவிட்டு மேருவையும் பிளக்கவல்ல பாணங்களை அநேகமாகப் பிரயோகித்தார். குபேரனை எதிர்த்துயுத்தஞ்செய்தவனுன அதிகாயன் அவைகளையெல்லாம் துண்டு துண்டாக்கிவிட்டுக் கூர்மையான சில பாணங்களை இளையபெருமாள்மீது பிரயோகித்தான். அவனெய்த பாணங்களையெல்லாம் இவர் அக்கினிமுகாஸ்திரங்களால் பொடிப்பொடியாக்கி வீரகர்ஜ்ஜனை செய்துக்கொண்டிருக்கிற அந்த அதிகாயனைப்பார்த்துக் கோபித்துத் தெய்வத்துக்கொப்பான சில பாணங்களைப் பிரயோகித்தார். அவைகள் தவருமல் அவன் அணிந்திருந்த கவசத்தை இரண்டாய்ப் பிளந்துவிட்டதுகள். அப்படி அந்தப்பாணங்கள் அதிகாயனுடையகவசத்தைப்பிளந்துகொண்டு அவன் மார்பில் நுழைந்தமாத்திரத்தில் அவன் மூர்ச்சையாய்த் தேரிற் சாய்ந்துச் சோகமாறிக்கொண்டிருந்தான். அவ்வளவு நேரத்திற்குள்ளே அவனுடைய சேனைகளையெல்லாம் இளையபெருமாள் கோடிகோடியாகப் பாணங்களைப்பிரயோகஞ்செய்து துண்டந்துண்டங் கண்டங்கண்டமாய் சிதைத்துக்கொன்ருர். இப்படிப் பக்கத்திலிருந்த சேனைகளெல்லாம் மாண்டவிதத்தையும் அவர்களை உருவிக்கொண்டுபோகின்ற அம்புகளை இவ்வளவுயென்று தொகைசெய்யக்கூடாத விதத்தையும் பார்த்துச் சேனைக்கு நடுவே நின்று தான் அடைந்திருந்த சோகந்தீர்ந்தும் தீராமலும் இருக்கும்போதே அதிகாயன் வில்லைக் கையிலே பிடித்து அதிக கோபத்துடனே மேகவருஷத்திலும் மூன்றுபங்கு அதிகமான பாணவருஷங்களை சரசரவென்றுபொழிந்து நிறைத்தான். அப்போது ஆகாயமெல்லாம் பூமியெல்லாம் அம்புகள், மலைகளெல்லாம் அம்புகள், போர்க்களத்தில் நின்றவர்கள் தேகமெல்லாம் அம்புகள், அவர்களுயிரெல்லாம் அம்புகள், சமுத்திரநீரெல்லாம் அம்புகளாக அதிகாயன் நிருமித்துவிட்டான். அதனுல் அஷ்டதிக்குகளும் மறைந்துபோய்விட்டன. தேவர்கள்மனம் பயத்தால் இருண்டது. அதுபோலவே சூரியகிரணங்களும் மழுங்கிவிட்டது. சூரியனும் மறைந்து இருண்டுபோனுன். பூமி முழுதும்பாணந்தைத்து அதிர்ந்தது. ஆகாயம் பாணங்களால் நிறைந்துவிட்டது.

அந்தப்பாணங்கள்கக்கிக்கொண்டுவருகிறதீயும், அவை ஒன்றுடனேஒன்றுதாக்குதலாலுண்டாகிறதீயும், ஒருங்குசேரப்பற்றி லோகமெல்லாம் புகையாய் நிறைந்துவிட்டது. இன்றோடே வானரசேனையெல்லாம் முடிந்து போய்விடுகின்றதல்லவா? இந்த அதிகாயனை ஸ்ரீராமருடைய திருத்தம்பியாரா ஜெயிக்கமாட்டுவாரோ? இவர் கற்றவித்தையெல்லாம் எமனுக்குஆகாரமாய்விட்டதோ? கொல்லுகிறதற்கு இந்த அதிகாயன் கற்ற வித்தைதானெப்படிப்பட்டதாயிருக்கின்றதென்று தேவர்களெல்லாம் பயந்து தத்தளித்தார்கள். அவன் அங்கதகுமாரனுடைய நெற்றிமீதும், அவன் தோள்மேலும், அவன்மார்பிலும் ரணமய

மாகும்படி பாணத்தைப் பிரயோகித்து பின்னும் மூன்றுபாணங்களை இளையபெருமாள்மீதும் ஏகவிட்டு, தன் வீரசங்கத்தையெடுத்துப்பூரித்து, தேவர்களுடைய தலைகள் நடுக்கங்கொள்ளும்படி அட்டகாசஞ் செய்தான். அங்கதனுடைய தேகத்தில் அம்புபட்டு மலையிலிருந்து அருவியாறு ஒழுகுவதுபோல ரத்தவெள்ள மொழுகுவதை இளையபெருமாள் பார்த்து, ஆயிரம் பாணங்களினால் அதிகாயனுடைய குதிரைகளின் தலைகளை அறுத்து, அந்தக் குதிரைச்சாரதியையும்சிதைத்து, அவன்பிடித்திருந்தவில்லையுமுறித்தெறிந்தார். உடனே வேறொரு வில்லை வளைத்துக்கொண்டு அமர்க்களத்தில் எதிர்த்துநின்ற அதிகாயன் மீது இளையபெருமாள் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்தார்.

அதைக்கண்டு அதிகாயனும் அக்கினியாஸ்திரத்தைவிட்டான். இரண்டஸ்திரங்களும் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்செய்துகொண்டிருந்ததுகள். மேலும் இளையபெருமாள் இடிக்குச்சமமானவேறே அக்கினிமுகப்பாணங்களை தொடுத்துவிட்டார். அவைகள் அதிகாயன் மார்பில்பட்டு உருவினதுகள். அதற்குக் கொஞ்சமாவது மனஞ்சோராமல் மிகுந்தவல்லமையுடனே மழையைப் பார்க்கிலும் மூன்றுமடங்கு அதிகமாகப்பாணங்களை வீரஷ்டக அட்டகாசஞ்செய்து அதிகாயன் பிரயோகஞ்செய்தான். அந்தப்பாணங்கள் பின்னே நின்றவர்கள் முன்னே நின்றவர்களைக் காணத்தக்கதாகத் துவாரங்களு முண்டாகும்படி தேகமுழுவதுஞ் ஜல்லடைக் கண்களாகத் திறந்துவிட்டதுகள். இந்தப் பிரகாரமாக அதிகாயன் மூர்ச்சியாமலும், உயிர் மாளாமலும், வில்லைவளைத்தும், பொன்கட்டின ஈர்க்குகளுள்ள அம்புகளை இடியைப்போலப் பிரயோகஞ் செய்துகொண்டிருக்கக் கண்டு, பயங்கரமான பாணங்களைப் பிடிப்பிடியாயெடுத்து நாணிற்பூட்டி வில்லை இருகுதையும்பொருந்த வளைத்துச் சரவருஷமாய்ப் பொழிந்துகொண்டு நிற்கின்ற லக்ஷ்மணப்பெருமாளண்டை வாயுதேவன் தரிசனையாகி நின்று, ஐயா இளையபெருபெருமாளே! இவன் பிரம்மாஸ்திரத்தாலல்லாமல் ஒருநாளுஞ் சாகமாட்டானென்று சொல்லிவிட்டு மறைந்துபோனான். லக்ஷ்மணர் அதைக்கேட்டு, நல்லதென்று அங்கீகரித்துப் பிரம்மாஸ்திரத்தை பயத்தைத் தருவதால் மின்னலெரிக்கின்ற இரண்டு பாணங்களுடன் சேர்த்து பிரயோகித்துவிட்டார்.

அந்த அஸ்திரமானது மலையினுமுயர்ந்த தோள்களையுடைய அதிகாயனதுதலையை அறுத்துக்கொண்டு போகின்றதை ஆகாயத்தில் நின்றுதேவர்களெல்லாம்பார்த்துப் புஷ்பவருஷங்களை வருஷித்து, எங்கள் துக்கமெல்லாம் இன்றோடே போய் விட்டதென்றார்கள். ராக்ஷதர்களெல்லாம் ஒருவரையொருவர்கூவி அலறிக்கொண்டு, நான்கு பக்கங்களிலும் ஓட்டம் பிடித்தார்கள். வானரர்களோ அதிகாயனுடைய பாணவருஷத்தால் வருத்தப்பட்ட துக்கமும் நம்மால்தான் இவர்களுக்கு ஜெயமுண்டாகப்போகின்றதென்றிருந்த கர்வமும் நீங்கிப்பிரமித்தார்கள். வெற்றிபெற்ற வில்வீரனான இளையபெருமாளுடையஅதிகவல்லமையுள்ள வெற்றியைக்கண்ட விபீஷணர் ஆச்சரியப்பட்டு, அந்தரமார்க்கத்தில் சித்தவித்தியாதரர் முதலான தேவசமுகங்கள் கோஷிக்கின்ற ஆநந்தகோஷத்தைக்கேட்டு, மந்திரசித்தியைப்போல் இவருடைய வில்வல்லமை இப்படிப்பட்டதானால், இந்திரஜித்துக்கு முடிவுகாலம் நெருங்கிவிட்டதென்பதற்குச் சந்தேகமில்லையென்று நிச்சயம் பண்ணினார். இப்படிச் சாதுக்கள் யாவரும் சந்தோஷசித்தராயிருக்கும்போது, மஹாவீரனான என்தமையன் அதிகாயன் இறந்துபோனான், இனிச் சண்டையும் முடிந்துவிட்டதென்று பூசினசாந்தழியாமல் அநாயாசமா யுத்தஞ்செய்த உன்தோளைப்பார்த்தும், கட்டுத்தளராத உன் வில்லைப்பார்த்தும், நான் சும்மாய் போய் விடுகிறதுகூடாது போகாதே! போகாதே!! என்று கூவிக்கொண்டு தன் வாளாயுதம் பளபளவென்று மின்னும்படி வீசி நராந்தகனென்பவன் தேரிலிருந்து குதித்துக் கண்களில் அக்கினிபறக்கக்கோபம் வரவர அதிகரிக்கப் பூமிகிழிந்துபோகப் பாய்ந்தோடிப் பகற்காலத்திலே சூரிய கிரணத்தினால் தன் பரிவேடத்தோடு பிரகாசிக்கிறதுபோல இடதுகையில் கேடயத்தைப் பற்றிக்கொண்டு, சூல்கொண்டமேகத்தில் மின்னல் மின்னுவதுபோல வாளா

னது பிரகாசிக்கும்படிவீசிக்கொண்டுவந்து நின்றுன். அப்போது வானரவீரர்கள் அவன்மீது விருக்ஷங்களேயும், கல்லுகளே யும், மலேகளேயும் வாரிவாரி வீசினுர்கள்.

அப்படி எறிந்தவைகளெல்லாம்துண் டுதுண்டு, சில்லுசில்லாக எட்டுதிக்குகளி லுஞ் சிதறிப்போகும்படி நராந்தகன் தன் கையாயுதத்தினுல் அறுத்துத்தள்ளி வான ரங்கள் பிடித்திருந்த கொடியையும் இரண் டுகைகளேயும் தலேகளேயும் உள்ளே சுருக்கி க்கிக்கொண்டு நீர்மேற் பாசி ஒதுங்குவது போலத் தன்னேக்கண்டு ஒதுங்கிப் பதுங்கு ம்படிப்பாய்ந்து வானரசேனேக்குள்ளே நுழைந்தான். அதை அங்கதன் பார்த்து, ஒருபெரிய விருக்ஷத்தை வேகமாய்ப் பறி த்து உதட்டைமடித்துச் சீறிக்கொண்டு இ ளேயபெருமாளுடைய பாணவேகத்திலும் கடுவேகமாய்ப் போய் அந்த நராந்தகன் மீது மோதினுன். அப்படி மோதின அங் கதன் கையிற்பிடித்த அந்த விருக்ஷம் சுழ லுவதைப் பார்த்தும் பாராதற்குமுன் அ தை அவன் தன்கைவாளாயுதத்தால் ஆயி ரந்துண்டுகளாகக் கண்டித்து விட்டான். அப்போது வெறுங்கையுடன் நின்ற அங் கதன் நாம் சும்மாயிருப்பது வீரமல்லவெ ன்று ஒரு ரிஷபம் போவதுபோல ஒருக்ஷ ணிகத்துள் விஷம் பொங்கினதுபோலக் கொதித்து அவன் வீசின வாள்வீச்சளவுக் குள் இடிப்பாய்ந்ததுபோலப் பாய்ந்து, அவனே வாளாயுதத்துடன் சேர்த்துப்பிடி த்துக்கொண்டான்.

அந்த வல்லமையைக் கண்ட தேவர் கள் ஜயஜயவென்று சப்தித்துக் கூத்தாடி இப்படிப்பட்ட மல்வித்தை இவனுக்கேய ல்லாமல் சிவபெருமானுகிய ருத்திரனுக் கும் வராதென்றுர்கள். அப்படி அவனேக் கட்டிச் சேர்த்துப்பிடித்து அவனே ஒருகு த்துகுத்தி அவன் பிடித்திருந்த வாளாயுத த்தைத் தன்கூருள்ள நகக்கையால் பற்றிப் பிடுங்கிக்கொண்டு, அதனுலேயே அந்த நராந்தகனேச் சரியிரண்டு கூருய்த் துண்டு பட்டு விழும்படி ஒருவீசுவீசித் தேவர்க ளும் ஆச்சரியப்படும்படி கர்ஜ்ஜித்தான். பின்பு ஆதிகூர்மருடைய முதுகின்மீது கடைந்து தேவர்கள் அமிர்தங்கொண்ட மந்தரகிரியாகிய மத்தையொத்த தோள்க ளேயுடையவனும் நிறைந்த மஸ்துள்ளகள் ளில் ஊமத்தையைக் கலந்து குடித்தவனே ப்போல மிகுந்த மயக்கத்தை யுடையவனு மான மத்தனென்ற பெயருள்ளவன் ஒரு பெரிய மதயானேயின்மீது ஏறிக்கொண்டு வந்து அங்கதனே டெதிர்த்தான். அவ னேறிவந்த யானேயின் வேகத்துக்கு வாயு வேகத்தையும் ஒப்பிடலாகாது. அதன் முழக்கத்திற்குக் கடல்முழக்கமும் ஒப்பாக மாட்டாது. அது கொல்வதுபோல யம னுங் கொல்லத்தக்கவனல்லன். அதன் கொடுமைக்கு இடியும் சமமல்லாவிட்டால் பின்பு எதை யொப்பிட்டுச் சொல்லத் தகும்? அதன் கோபத்திற்கு முன்னே கோபமென்ற ஒரு குணமும் வேறேயில்லே. இந்தக் காரியங்களிலெல்லாம் இதற்கு இ துவே ஒப்பாகுமல்லது வேறென்றைச் சொல்வதென்ன பிரயோஜனப்படும்? அத னுருவத்துக்குச் சரியாகச் சொல்லத்தக்க மலேயும் வேறென்றில்லே. வானரவீரர் கள் அதிகவேகமாக ஏறிய மேல்மேலாக வந்துவீழ்கின்ற கூட்டங்கூட்டமான மலே களெல்லாம் அந்த யானேப்பாகர்கள் வில் வில்பூட்டித் தெறிக்கின்ற வில்லுண்டாக் கும் சமமாகமாட்டாது. அவர்கள் வீசுகி ன்ற ஆகாயத்தையளாவிய விருக்ஷங்களெ ல்லாம் அந்த யானேயின் மதஜலத்தில்மொ ய்த்துக்கொண் டிருக்கின்ற வண்டுகளேத் துரத்துங் குஞ்சம்போல் இருந்தனவென் று சொல்லினும் ஒவ்வாதுகள். அந்த யா னேமுறித்துத் தின்னுங் கரும்புக்கொப்பெ ன்று கொண்டால் கொள்ளலாகும். முன் இளேயபெருமாள் வில்லிற் பூட்டியெய்த அம்புகளால் அந்த ராக்ஷதர்களுடையரத கஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சே னேகளும் என்னபாடுபட்டதோ, அந்தப் பிரகாரம் இந்த வானரசேனேகளில் சில கவிகள் அந்த யானேயினுடைய காலிற் பட்டு மாண்டதுகள். சில வானரங்கள்பரு த்த துதிக்கையிற்பட்டு இறந்ததுகள். சில குரங்குகள் யமனுக்கு ஒப்பாகிய வாலில் அடிபட்டு அழிந்ததுகள். சில மந்திகள் பார்க்கப் பயங்கரமான நீண்ட தந்தங்களா ல் குத்துண்டு செத்ததுகள். இப்படித் தன் சேனேயெல்லாஞ் சின்னுபின்னப்பட்டுப் போகிறதை அதிக தயையுள்ள வள்ளல் தன்மையுள்ள அக்கினிபுத்திரனுகிய நீல னென்னும் வானரவீரன் அங்கிருந்த ஒரு

மரத்தைப் பிடுங்கிச் சக்கராயுதம்போலச் சுழற்றிக்கொண்டுவந்தான். அதைக்கண்டு அந்த மஸ்தனுக்குப் பின்துணையாகவந்த பெருஞ்சேனையெல்லாம் ஓட்டமெடுத்தது கள். அப்படித் தன்சேனைகள் பின்னிட்டோடுவதைக்கண்டு அந்த மஸ்தனென்பவன் நேராகப் பன்னிரண்டு அம்புகளை எய்து, அந்த மாமரத்தைத் துண்டாக்கி வீழ்த்தினன். நீலன் வேறொருமலையைப் பிடுங்கி மஸ்தன்மேல் விட்டெறிந்தான்.

அதை அவன் யானையைக்கிட்டிநெருங்கி நூறுபாணத்தால் ஆகாயத்திலேயே அவன் பொடிப்பொடி யாக்கிவிட்டான். பிறகு வேறே மலையைத்தேடிக் கொண்டு போக யத்தனித்த நீலனை அப்படிப்போக விடாமல் மேருமலையைச் சுற்றிவளைந்த கார்க்கோடக சர்ப்பத்தைப்போன்ற தனது தும்பிக்கையை நீட்டி, மிகுந்த கோபமுள்ள அந்த யானையானது தேவர்களும் பயந்து நடுங்கும்படிப் பிடித்தது. பிடித்த மாத்திரத்தில் நீலனென்பவன் பராக்கிரமமும் மிகுந்த சக்தியும் உயிரும் ஒடிங்கிப் போய் விட்டதென்று யாவரும் நினைத்து இரக்கப்படமூர்ச்சித்திருக்கும்போது, வளைந்து வஜ்ஜிராயுதம்போ லிருக்கின்ற தந்தங்களினலே அவனைக்குத்தும்படி யானையானது யத்தனித்த அந்தச்சமயத்தில்அதன் துதிக்கையும் சிதறிப்போகத் தக்கதாகக் குபீரென்று எழும்பிப்பாய்ந்து போய்விட்டான். ராக்ஷதர்களெல்லாம், அதைக்கண்டு நடுங்கினர்கள். தேவர்கள் இவனுடைய வீரம் நன்ருயிருந்தது நன்ருயிருந்தது என்றுசொல்லிக் கலகலவென்று சிரித்தார்கள். அப்படி நீலன் பூமியில் வீழ்ந்தான் வீழ்ந்தானென்று சொல்லுகிறதற்குள்ளே தானே தலையறுந்து அதிலிருந்துவருகிற ரத்தவெள்ளத்தில் பெரியமலைபோல முண்டமான யானைவீழ்ந்தது. வீழ்ந்தவுடனே மஸ்தன் ஆகாயமார்க்கத்தில் பாய்ந்து நின்று அர்த்தசந்திரபாணங்களை மழைபோலச் சொரிந்தான் அவன்சொரிவதைக் கண்டு நீலன் அந்தயானைமுகத்திலிருந்த தந்தங்களைப்பிடுங்கி அதிகவேகத்துடனே மஸ்தன்மீது வீசியெறிந்தான். அவைகளை அவன் ஒரு அம்பினலறுத்துத்தள்ளிவிட்டு வேருேரம்பை மாலையையொத்த புஜத்தையுடையநீலன் மார்பில்பதிய ஏவினன். அந்தப் பாணமெய்த காலத்திற்குள்ளாக நீலனல் யானை சாகவில்லையென்று சொல்லும்படியாக மஸ்தன் வேறொருமலை போன்ற பெரிய யானையின்மேலேறிக்கொண்டு வாயுவேகமாகச் செலுத்திவந்தான். நீலன் அதைக்கண்டு குபீரென்று அந்த மஸ்தன்மீது பாய்ந்து அவனைக்கையில் வில்லுடனே மதங்கொண்ட யானைக்கெதிரே இரணக்களத்தில் விழும்படியாகத் தள்ளினன்.

அப்படி விழுந்தவன் கீழேயிருந்து எழுந்துநிற்கிறதற்குமுன்பாக அந்தயானை யானது மஸ்தனைத் தன்னுடைய ஆளென்றுதெரியாமல் கீழேதள்ளிகாலாலுதைத்துத் துதிக்கையால் சுற்றிப்பற்றித் தூக்கி, இந்தப்பக்கமும் அந்தப் பக்கமுமாக இழுத்திழுத்தலைக்கழித்தது. அதைச் சகிக்க மாட்டாமல் மஸ்தன் தன்யானையைத் தானே ரணக்களத்தில் கொன்று வீழ்த்தினன். இப்படி அந்த யானையைக்கொன்று தன் பெரிய கையாலே பூமியில் தள்ளிய மின்னலைப் பார்க்கிலும் பிரகாசிக்கின்ற கோரதந்தங்களையுடைய மஸ்தனது கோபத்தைப்பார்த்துப் பொன்னுங் கறுப்பாயிருக்கிறதென்னத் தக்கதாகக் கண்களில் நெருப்புப் பொறிபறக்க நீலன்பாய்ந்து, மஸ்தனுடைய கைகளைப்பற்றி முறுக்கி அவனுடைய மார்பிலொரு குத்துக்குத்தினன். அந்தக் குத்துபட்டவுனே மஸ்தன் மாண்டுபோனன். இப்படி மஸ்தனுடைய வஜ்ஜிரமலை போன்ற மார்பில் இடிபோன்ற கையானது தாக்கின வல்லமையைப்பார்த்தும் அந்த உன்மத்த னேறிவந்த யானை மாண்டுபோனதைக் கண்டு, தன் ஜன்ம ஸ்வபாவத்தாலும், தருமத்தைக் கடந்து நடந்த பாவத்தின் ஏற்பாட்டாலும், வயமஸ்தனென்கிற மற்ருெரு ராக்ஷதவீரன் அதிக உக்கிரங்கொண்டு ஒருபெரிய தேரின் மேல் ஏறிவந்தான். பொய் கையைக் காட்டிலும் பெரிய தேகத்தை யுடையவனும் மலையைக் காட்டிலும் பருத்த தோள்களையுடையவனும் மஹா கொடியவல்லவனும் வில்வீரனுமான அந்த வயமஸ்தன்வந்து வீரகண்டாமணி காலில் கணீர்கணீரென்று சப்திக்க, சேனைகள் சிங்கநாதஞ்செய்ய, ஆயிரம்பேய்க ளிழுக்கும்படியான அந்தப் பெரிய தேரிலிருந்து மிகுந்த ஆர்ப்பாடஞ்

செய்கிறதும், லோகத்தைக் கிடுகிடாயன மாய் அதிரப் பண்ணுகிறதும், இடியைப் போலச் சுற்றுமுற்றும் பார்க்கிறதும், இறந்த ராக்ஷதவீரர்களைப் பார்த்து இவர்களென்ன அற்ப பலவந்தர்களென்று நிந்திக்கிறதும், அஸ்திரவருஷஞ் சொரிகின்றதும் வானர சேனைகளைப் பின்றொடர்ந்தோடுகிறதுமாக இருந்தான். இவனுடைய தைரியத்தைப்பார்த்து அவனோடு ஒருவருமெதிர்க்கவில்லை. நாம் எதிர்க்கலாமென்று விருஷபனென்கிற வானரவீரன் அவனுக்குமுன் வந்து நின்றான். அவனை வயமஸ்தன்பார்த்துச் சிரித்து, நீயென்கைக் கெவ்வளவு? வெகுசிறியவன். உன்னை ஜெயிக்கிறதினாலே எனக்குப் பிரயோஜனமென்ன? ஆனால் உங்களையெல்லாம் நான்தான் கொல்லப்போகிறேன். இப்போது பிரம்மனே வந்து என்னுடனெதிர்த்தாலும் நானெதிர்க்கமாட்டேன். எங்கள் சக்கரவர்த்தியாகிய பிரதாப லங்கேஸ்வரனுடைய குமாரனை அதிகாயனைக் கொன்றவனெவனோ, அவனைக் கொன்றுவிட்டு, பின்பு குரங்குகளின் மீதுகோபிப்பேன் என்றான்.

அதைக்கேட்டு விருஷபன் கொஞ்சமும் அஞ்சாமல், அடா பைத்தியக்காரா! நீ உன் வாயாலெவ்வளவு உளறினாயோ? அவ்வளவு வல்லமையும் உனக்கிருக்கவேண்டும். அப்படிக்கிருக்குமானால் பலியுண்டு வாழும்படியான சொற்ப பலமுள்ள பேய்களைத் துணைகூட்டிக்கொண்டு வந்ததினாலேயே உன் பவுஷ்யந் தெரியவில்லையா? தகுந்த மருந்தை தேடிச்சாப்பிடாத நோயாளியைப்போல நீ உன்னுடைய வல்லமையெல்லாம் என்முன்பாக ஓய்ந்துபோய் விடப்போகின்றாய் பார். ஓடிப்போகவேண்டுமானாலோடிப்போ. ஓடாமல் என்னோடெதிர்த்தாயாகில் உன்னோடு நான் அநாயாசமாக விளையாடிச் சண்டைசெய்கிறேன் என்றதைக்கேட்டு அதிக கோபிஷ்டனாய் வயமஸ்தன் தன்கையிற் பிடித்த பொன்னுற்செய்த குதையையுடைய வஜ்ஜிரவில்லைப் போலவே தன் புருவத்தையும் வளைத்து, விருஷபன் மார்பில் பத்து பாணங்களைப் பிரயோகித்தான். அந்தப்பாணங்கள்பட்டு ஊற்றெடுத்து ரத்தவெள்ளம்பாயும் மார்பையுடையவனான விருஷப னென்பவன் அதிவேகத்துடனே பொற்கலசமமைத்து விருதுக்கொடி கட்டின அந்தத் தேரைத் தனது பெரியகையால் பிடித்துத் தூக்கி விட்டெறிந்தான். அப்போது பச்சைக் காய்போன்ற கண்களையுடைய பேய்களெல்லாம் பறந்துபோய்விட்டதுகள். சமுத்திர முகமாய் ஆகாயத்தில் ஓடுகின்றமேகமானது ஒருமிக்கக் கொட்டிய மழைநீரைப்போலதேரிலிருந்து விழுகின்ற தேகத்தையுடையவனாகிய அந்த வயமஸ்தன் அந்தத் தேருடனேகூடக் கடலில் வீழ்ந்து தன் சிலையும், கலையும், மற்ற ஆயுதங்களும், ஆபரணதிகளும் அந்தக் கடல்நீரில் அமிழ்ந்துவிடத் தான்மாத்திரம் கட்டையைப் போல அம்மணமாய் மேலெழும்பி அதிக கோபத்துடனே வந்து பூமியில் குதிக்கிறதற்கு முன்பாகவே, அடா சண்டாளா? நீ அப்படியேபோய்ச் சுவர்க்கத்தை அடைந்துவிடு என்று தானும் ஆகாயத்தில்பாய்ந்து, இருளைக்கட்டிப் பிடிக்கின்ற சூரியனைப்போல அந்தராக்ஷதனை மலையிலும்வலிய தோள்களையுடைய விருஷபன் கட்டிப்பிடித்து இறுக்கின்றபோது இடைவெளிவிட்டுவளர்ந்த பற்களையுடைய பிலம்போன்ற வாயின்வழியாக ரத்தங் குபுகுபென்று கக்கிக்கொண்டு உயிர்போலவே பறக்க, இந்திர தனுசோடுங் கூடிய கரிய மதத்தைப் போல அவன் தேக மாத்திரம் பிணமாய்க் கீழேவிழுந்துவிட்டது. இந்தச் சண்டை இப்படியிருக்க, அவ் வானராதிபதியான சுக்கிரீவமகாராஜனும், தேவர்களை வெற்றி பெற்றிருந்த கும்பனென்கிற ராக்ஷதவீரனும் எதிர்த்து யுத்தகளத்துக்கு ஒரு அலங்காரமாக நல்ல மல்யுத்தஞ்செய்து, இருவரும் ஆயிரந்தரம் இடசாரிவலசாரியாகச் சுற்றிச்சுற்றி, மஹாராஜா மராமரத்தையும் கும்பன் தண்டாயுதத்தையும் கொண்டு இரண்டு மலைகள் போர்செய்வதுபோலச் சண்டைசெய்தார்கள். அதைக்கண்டு தேவர்கள் சிரமும், கரமும் நடுக்கமெடுத்தார்கள். இப்படியாக வானராதிபதியும் ராக்ஷத வீரனும் ஒருவரையொருவர் எதிர்த்து, அவரவர் தன் மேனியில் ஒழுகுகின்ற ரத்தங்களை வழித்தெறிந்து, கண்களின் வழியாக அக்கினிப்பொறிகளைக் குபுகுபென்று சொரிந்து அணிந்திருக்கிற வெற்றிமாலையும் வீரகண்டாமணியும் சப்திக்க உலாவி, போர்செய்கின்ற இரண்டு சிங்கங்களைப்

போல ஒருவரையொருவர் கைகளினுலே அறைந்தார்கள். இப்படி சண்டைசெய்கையில் கும்பனுனவன் தண்டாயுதத்தைச் சுழற்றி, அண்டங்களெல்லாம் வெடித்தது போலச் சப்தமுண்டாகும்படிச் சுக்ரீவமகாராஜரை யோங்கியடித்தான். அடிக்கவே வானராதிபதி தன் கையிலுள்ள மராமரத்தால் அந்தத் தண்ட அடியைத்தாங்கினுர். அப்போது அந்த மராமரமோ சின்னுபின்னமா யுதிர்ந்துபோய்விட்டது. பின்பு சுக்கிரீவமகாராஜர் உன்னைக்கொன்று விடுவேனென்றுசொல்லி, அதிக உக்கிரமாய்ப் புறப்படுகிற சமயத்தில், நினைக்கு முன்னமே நீலனென்கிற வானரவீரன் மலைக்குச் சமமான ஒரு பெரிய தண்டாயுதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அந்தத்தண்டாயுதத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, அண்டமும், பூமியும் கிடுகிடென்று நடுங்கும்படியாகக் கர்ஜ்ஜித்து, அந்தப் பித்தனை கும்பனுடைய தோளிலும்மார்பிலும் அடித்துப் பிளந்தார். அதைக்கண்டு ராக்ஷதர்களெல்லாம் நடுங்கிப்பயந்தார்கள். இப்படிச் சுக்கிரீவமகாராஜரால் அடியுண்ட ராக்ஷதன் மிகுந்த அக்கினியாய் மின்னுகின்ற இடிவிழப்பெற்ற பெரிய மலையைப் போல அயர்ந்து நின்றதைக் கண்டவர்களெல்லாம் இவன் முடிந்துபோவானென்று நினைக்கும்போது சோர்வுநீங்கி, இதோ உன்தோள் முறிந்துவிட்டதென்று சொல்லி ஓங்கிச் சுக்ரீவர்தோளில் அடித்தான். அப்படி தோளில் அடியுண்ட சூரியபுத்திரரான சுக்ரீவ மகாராஜர் சோகமானுர். உடனே சோகம் நீங்கி, இளையபெருமாளுடைய பாணம்போல் வேகமாய்ப் பாய்ந்து கும்பனைக்கிட்டி, யாளிக்கொப்பான அவனுடையமார்பில் கதையினுலே மோதினுர் இப்படிச் சுக்கிரீவமகாராஜரும் கும்பனும் ஒருவரையொருவர் கதையால் ஆயிரங்கோடியடிகளுக்கு மேலும் அடித்துப் போர் செய்கிறதைக்கண்டு, தேவர்கள்இவர்களில் யார்ஜெயம் பெறுவார்களென்று பார்க்கும்படி நெருங்கிவந்து நின்ருர்கள். இப்படி இருவரும் கதைகளை இடியுடனே இடிதாக்கினதுபோல மோதவே, இரண்டுகதையும் பொடிப்பொடியா யுதிர்ந்து விட்டதுகள். பிறகு இருவரும் கைச்சண்டை செய்யத் தொடங்கி, மதத்த இரண்டுபெரிய, யானைகளைப்போலப் போர்செய்து, பத்துத்திக்குகளுஞ் செவிடுபடும்படி பலதரங் குதித்துக் கட்டிப்பிடித்தும், திரண்ட தோள்களால் மோதித் தாக்கியும், கைகளினுல் குத்தியும், ஒருவர்மார்புடன் ஒருவர்மார்பை முட்டியும் சண்டை செய்கிறபோது சுக்ரீவமகாராஜர் தம்முடையபலமுள்ள கையைநெருக்கி, முஷ்டிபிடித்துக் கொல்லும்படியாகக் கொல்லன் சம்மட்டியால் புடைக்கிறது போலத் திடீரென்று அவன் மார்பில் குத்தினுர். அப்படி குத்தவே, உலையிலுருகிக் காய்ந்த இரும்பு நசுங்குவதுபோல உடல் நசுங்கியும், மலைபிளவு பட்டதுபோல மார்புபிளந்தும், அப்படியா இனிச் சண்டை செய்யக் கிட்டிவாவென்று அந்தக் கும்பன் நின்று சிறிக்கிறதைக் கண்டு சுக்ரீவர் ஐந்துதலை நாகம் வளையில் நுழைவது போலத் தமது கையை அவனுடைய வாயில் நுழைத்து, பையைப் போன்றநீண்ட நாவை அவனுயிருடனே கூடப்பறித்து விட்டார். கும்பனிறந்தவுடனே நிகும்பனென்கிற பெயருள்ள ராக்ஷதவீரன் கண்களில் தீப்பறக்கவந்து இனிநீங்களெங்கே தப்பிப்போகப் போகிறீர்களென்று குதித்துக்கொண்டிருந்தான். அங்கதகுமாரன் அவனைவந்தெதிர்த்து மிகுந்த கோபத்துடனே இதுவரையிலும் ஒருவருஞ்செய்யாத யுத்தங்களெல்லாஞ் செய்கிறபோது விஷத்திலுங் கொடியவனுன நிகும்பனென்பவன் கையிலொரு சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு குத்தவந்தான்.

அதற்கு அங்கதன் ஓர்பனை விருக்ஷத்தைப் பறித்துக்கொண்டு, ஒரு நீலமலையை மேருமலையானது எதிர்த்துவந்ததுபோல வந்துதடுத்தான். தடுக்கவே நிகும்பன்சூலாயுதத்தை யெடுத்தெறிய யத்தனிக்கையில் அதை இப்போதே முறித்து விடுகிறேனென்று அங்கதன் பிரவேசிக்கிறதற்கு முன்னதாக அந்த இருவருடைய எண்ணங்களையுந் தெரிந்த மாருதியென்னும் வாயுபுத்திரர் ஆகாயத்திலிருந்து நெருப்புப்பொறிவிழுந்ததுபோலவந்துகுதித்து, ஒருவராலும் தடைபடாத சூலாயுதத்தை விருஷபத்துக்குச் சமமான அங்கதகுமாரன்மீது அதிககோபத்துடனே விட யத்தனித்த அந்த நிகும்பனைத் தம்முடைய இதழ்விரிந்த தாமரை மலரையொத்த

திருக்கையின் அறையினாலே கொன்று விட்டு, மறுபடியும் தம்முடைய இடத்திற் குப் போய்விட்டார். இறந்தவர்கள்போக மீதியான ராக்ஷதர்களில் வானரர்களைத் தடுத்து போர்செய்கிறவர்களில்லாமையை நினைத்து ஒருநாளும் பிராணத்துடனே முதுகுகாட்டி ஓடாத ராக்ஷதர்கள் ஓட்டம் பிடிக்க வழிதேடினார்கள். வானரர்களோ பெரியவிருக்ஷங்களைப்பிடுங்கியடித்து, ராக்ஷ தர்களைத் தப்பிப்போகாதபடி கொலைசெய் தார்கள். அதிலும் தப்பி ஓடுகிறசமயத் தில் ஒருவரொருவர் முட்டினநெருக்கால் அநேகராக்ஷதர்கள் கீழேவிழுந்து, தங்கள் பின்னே ஓடிவருகிறவர்களுடைய கால்மிதி யால் மிதியுண்டு இறந்தார்கள். கோடிபேர் களுக் கதிகமாகவே வானரவீரர்களுடைய கைக்குத்தினால் வருந்திப்புண்பட்டதேகத் துடனோடினார்கள். சண்டைசெய்யும்படி யாகிய ரணக்களத்தில் நின்றவர்களில் கணக்கில்லாத ராக்ஷதர்கள் தண்ணீர் தண் ணீரென்று கேட்டுக்கொண்டேயோடினார் கள். சிலராக்ஷதர்கள் தங்களுக்கு உதவியா ளரில்லாமல் பயந்தோடித் தடாகங்களி லுண் ணுதற்கும் நீரில்லாமல் தாகவெப் பத்தால் நாவுலர்ந்து உடல்சோர்ந்து விழுந்தார்கள். சிலர் கண்ணீர்சொரிந்து உயிர்கலங்கி அழுது, தங்கள் கால்வழியே ஓடுகிற தண்ணீரால் பூமிநனையும்படி தங்க ளூரைப்போய்ச் சேர்ந்தார்கள். சில ராக்ஷ தர்கள் ஆகாயத்தில் தாவிப்போய் மேலுந் தாவச் சக்தியில்லாமல் பூமியில்விழுந்து மாய்ந்தார்கள். சிலர் பூமியிலே பெரியமலை களைப்போலக் குற்றுயிராய் மாண்டுகிடந் தார்கள். அளவில்லாத ராக்ஷதர்கள்இருண் டமேனியில் அதிக புண்பட்டவர்களாகித் திக்குத் திக்குகளா யோட்டம் பிடித்தார் கள். சிலராக்ஷதர்கள் தங்களுக்கு அறிமுக மானவர்களைக் கண்டு இந்த அம்புகளைப் பிடுங்கி விடுங்களென்று கிட்டிவர, பிடுங்கி னமாத்திரத்தில் உயிர் நீங்கிக்கீழேவிழவும், உபகரிக்கவந்த ராட்சசர்கள் தேகமெல் லாம் புண்பட்டிருக்கிறபடியால்இப்போது விழுந்தவர்கள் இவர்களென்றும் அடை யாளந்தெரியாமல் வியசனப்பட்டு, தாங்க ளும் மனத்தைரியம் குறைந்துபோனார்கள். சிலராக்ஷதர்கள் குதிரைகளின் காலாலுதை பட்டு விழுந்து உடல் பதைத்தார்கள். யானைகளின் காலிலகப்பட் டுருண்டுபோ னார்கள். சிலர் தேர்க்காலிலகப்பட்டு அப் படியே நசுங்கிப்போனார்கள்.

இப்படி நெருப்புப்பட்டு வெந்த வீட் டிலகப் பட்டவர்களைப்போல யுத்தகளத் தில்வந்த ராக்ஷதர்களெல்லாம் மாண்டு போனார்கள். சிலராக்ஷதர் பயந்து வானர வேஷம்பூண்டு பூமியின் வழியாகவர அப் படிவந்தவர்களைத் தேகத்திற் புண்பட்டுப் போகின்ற ராக்ஷதர் பலபேர்பார்த்து, இங்கே குரங்குகள் வருவதென்னவென்று கோபத்தினாலே அவர்களோடு சண்டை செய்ய, இப்படியும் சில ராக்ஷதர்களிறந் தார்கள். சில ராக்ஷதர் கீழேவிழுந்து பிரா ணன்போகும் சமயமாயிருக்கும்போது தங் களிரண்டு கண்களையுந் திறந்துபக்கத்தில் வியசனப்பட்டுக்கொண் டிருக்கிற தங்கள் சிநேகரைப்பார்த்துக் குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுங்களென்றுகேட்க, கொண் டுவந்து கொடுக்கிறதற்குள்ளாக மாண்டு போனார்கள். சிலர் குடித்தானவுடனே மாண்டுபோனார்கள். சில ராட்சதர்களை அவர்கள் தகப்பன்மார் தூக்கிக்கொண்டு வீட்டிற்குப் போகும்போது வழியிற்பிரா ணனைவிட, அவர்களை அவர்கள் விட்டெ றிந்து விட்டுத் தாங்கள் மாத்திரமே ஊர் போய்ச் சேர்ந்தார்கள். சிலர் ரத்தங்கக்கிக் கொண்டு கண்விழி பிதுங்கித் தங்கள் ஊர் இன்னதிசையென்று தெரியாமல் சுற்றிச் சுற்றித்திரிந்து, அவ்விடத்திலேயே உயிர் நீங்கி மாண்டார்கள். இந்தப்பிரகாரமாக அவஸ்தையடைந்து மாண்டவர்கள்போக மிகுந்த சிலராக்ஷதர்கள் சிதறியோடி லங் காபட்டணத்தைச் சேர்ந்தார்கள்.

இந்தச்சண்டையைப்பார்த்துக் கொண் டிருந்து ஓடிவந்த தூதுவர்கள் மழையைப் போலக் கண்ணீர் சொரியும்படியாக வீர கண்டாமணியைத் தரித்த இராட்சதவீரர் களுக்கெல்லாம் ராஜாவான ராவணேஸ் வரனுடையபாதத்தில் வீழ்ந்தார்கள். அப் படி வீழ்ந்த தூதுவர்களை ராவணன் பார்த்து, என்ன சமாச்சாரம் நடந்தது? சொல்லுங்களென்று கேட்க, ஐயா ராவ ணேஸ்வரா! நீர் அனுப்பின சேனைகளில் திரும்பிவந்தது மேருவுக்கு அணுவளவும் போதாது. நடந்த யுத்தத்தில் அதிகாயன் முதலான ராஜகுமாரர்களெல்லாம் தங்க

ளாவியை ஒப்புவித்து விட்டார்களென்று சொன்னதைக்கேட்டு, ராவணன் அதிக துக்கத்துடனே அழுது இறந்தார்களே யென்ற வெட்கமுள்ள கோபமும், வருத்தமும், ஒன்றுக்கொன்று சமுத்திரம்போலப் பொங்கிவழிய பூமியின்மீது மாய்ந்து மாய்ந்து கண்களில் நெருப்பும் நீருஞ்சொரியும்படியாகப்பெரியகடல்போல்விழுந்து திக்குகளைப் பார்ப்பான்; அந்தத் திக்குகளைக் காத்துக்கொண்டிருக்கின்ற தேவர்களைப் பார்ப்பான்; தங்கள் தங்கள் தந்தைமார்கள், அண்ணன்மார்கள், தம்பிமார்கள், நாயகர்கள், மைத்துனர்கள், சிநேகிதர்கள் இறந்தனர்களென்று ராட்சத ஸ்திரீகளும் புருஷர்களும் அழுகிற கூக்குரல் இலங்கா பட்டணமெங்கும் எழும்பியதைக்கேட்டு, தனக்குச் சம்பவித்த பழைய நாமத்தை அடிக்கடி நினைப்பான், வெற்றிபெற்றுத் தன்கையிலிருக்கின்றவாளாயுதத்தைநோக்கிப் பார்ப்பான். அவ்வாளாயுதத்தைப்பிடித்துப் பிசைகின்ற கையைப்பார்ப்பான். புகைந்து தீயும்படியாக மீசைகளையும் பார்ப்பான். ஆசையில் மூழ்கினவனைப்போல சிரிப்பான். மறுபடியும் அழுவான். அவ்வளவில் வெட்கமுற்றுத் தலைகளையும் இறங்கிக்கொள்ளுவான். உலகத்தில்கணித சாஸ்திரத்தால் கணிக்கப்பட்ட சகல ஜீவகோடிகளையும் இந்தக்ஷணத்திலேயே கொன்றுவிடலாமாவென்று நினைப்பான். ஸ்திரீகளென்று சொல்லப்பட்டவர்களையெல்லாம் பிளந்து விடலாமாவென்று நினைப்பான். ஆருப்புண்ணிலே நெருப்பு வைத்ததுபோல மானத்தினுல் மனம் புழுங்குவான்.

அப்போது அங்கிருந்தவர்களெல்லாம் ஒருவரும் வாய்பேசாமலும், மூச்சுவிடாமலும்; மனஞ்சகியாமலும், நடுங்கினதேகத்தையுடையவர்களாகி அழுதுகொண்டிருந்தார்கள். இப்படியிருக்கும்போது காடுபோலிருக்கின்ற தோள்களையுடைய ராவணனுக்கு முன்பாக அக்கொடியோனுடைய பெண்ஜாதியும் அதிகாயனுடைய தாயுமான தானியமாலியென்கின்ற பெயருடையவள் மகனே! மகனேயென்று ஓயாமல் கூவி, முட்டிமோதி அழுதுகொண்டுவந்து, மலைச்சிகரங்களின்மீது இடி விழுந்தது போல வளையல்களும் ரத்னுபரணங்களும் சப்திக்கும்படி ஸ்தனங்களின்மீது கையால் பளேர்பளேரென் றறைந்தும், மலைக்குகை திறந்தாற்போல ஆவென்ற வாயைத்திறந்தும், தலையென்ற மலைச்சிகரத்தில் கட்டி முடித்திருந்த செம்பட்டைமயிர்க் கூந்தல் அவிழ உலையிலுருகின செம்பைப்போல அருவிக்கொப்பாக நீரொழுகுகின்ற சிவந்தகண்களை யுடையவளாய் ராவணன் கால் மேல்விழுந்து,மெருகிடப்பட்ட அங்குள்ள தளவரிசையெல்லாம் பொறுக்குப்பொறுக்காயெழும்பும்படிப் பெரியமலைப்பாம்பைப் போலப் புரண்டுபுரண்டு, அடக்கக்கூடாத துக்கத்தையடைந்து, தானிதுவரையிலும் அழுதவர்களையுங் கண்ணுல்பார்த்து அறியாதவளாகையால் இவ்விதமாய்ச்சொல்லியழவேண்டு மென்பதுந் தெரியாமல், ராவணனைப்பார்த்து மரியாதையில்லாமல் ஐயோ! துஷ்டாவென்றும் சொல்லத்துணிந்து, துக்கசாகரத்தின் கரையைக்காணுமல் புலம்பத்தொடங்கினுள்.

விருத்தம்.

மாட்டாயோவிக்காலம் வல்லோர்வலிதீர்க்க
மீட்டாயோவீர மெலிந்தாயோதோளாற்றல்
கேட்டாயுணர்ந்திலையோ வென்னுரையுங்கேளாயோ
காட்டாயோவென்னுடைய கண்மணியைக்காட்டாயோ.

இந்திரற்குந்தோலாத நன்மகனையீன்றுளென்
றந்தரத்துவாழ்வாரு மேத்துமளியத்தேன்
மந்தரத்தோளென்மகனை மாட்டாமனிசன்றன்
உந்துசிலைப்பகழிக் குண்ணக்கொடுத்தேனே.

அக்கனுலந்தா னதிகாயன்றுனுலந்தான்
மிக்கதிறத்துள்ளார்க ளெல்லாரும்வீடினர்!
மக்களினினின்றுள்ளான் மண்டோதரிமகனே
திக்குவிசய மினியொருகாற்செய்யாயோ.

ஏதையாசிந்தித் திருக்கின்றுயெண்ணிறந்த
கோதையார்வேலரக்கர் பட்டாரைக்கூவாயோ
பேதையாய்க்காமம் பிடிப்பாய்பிழைப்பாயோ
சீதையாலின்னும் வருவசிலவேயோ.

உம்பியுணர்வுடையான் சொன்னவுரைகேளாய்
நம்பிகுலக்கிழவன் கூறநலமோராய்
கும்பகருணனையுங் கொல்வித்தென்கோமகனை
அம்புக்கிரையாக்கி யாண்டாயரசைய.

ஓ லங்கேஸ்வரா! இப்போதே அந்த ராமலக்ஷ்மணருடைய வல்லமையை நீக்குகிறதற்கு உன்னுல் முடியாதோ? என்பிள்ளையை மீட்டுக்கொண்டு வரமாட்டாயோ? உன்வீரம் குறைந்துபோனுயோ? அந்த

மனிதர்களுடைய தோள் வல்லமையைக் கேட்டும் அறியாமற்போனாயோ? நான்புலம்பி அழுது சொல்லுகின்ற என் சொல்லையும் கேளாயோ? என்னுயிரெங்கே யிருக்கின்றதென்று காட்டமாட்டாயோ? என்கண்மணிஎங்கேயென்றும்காட்டமாட்டாயோ? இந்திரனையும் ஜெயிக்கும்படியான நல்ல பலமுள்ள புத்திரனைத் தானியமாலை பெற்றிருக்கின்றாளென்று தேவர்களெல்லாம் புகழும்படியாயிருந்த என்களிப்பு இன்றைக்குப் போய்விட்டதே. மந்தரகிரிபோன்ற தோள்களையுடைய என்மகனை சக்தியற்ற மனிதன் வில்லை வளைத்தேவின அம்புக்கு ஆகாரமாக்கிவிட்டேனே. அக்ஷயகுமாரன் மாண்டான்; அதிகாயனுமாண்டுபோனான்; அதிக பலமுள்ள பிள்ளைகளெல்லாம் மாண்டுபோனார்கள். உன்பிள்ளைகளில் இப்போது இருக்கிறவன் வண்டோதரியின் பிள்ளையானஇந்திரஜித்துமாத்திரந்தானே இன்னொருதரமும் முன்போலத் திக்குவிஜயம் செய்யமாட்டுவையோ? ஐயா! என்ன நினைத்துக்கொண் டிருக்கின்றாய்? வெற்றி மாலையைத்தரித்த அநேகவலியவர்களான ராக்ஷதப் பிள்ளைகளில் இறந்துபோனவர்களைக் கூப்பிடமாட்டாயோ? ஓ புத்தியற்றவனாகி மோஹத்தால் பீடிக்கப்பட்டவனே! நீயும் பிழைக்கும்வழியறியப்போகிறாயோ? சீதையாலே இன்னும் உனக்கு நேரிடப் போகிற தீங்குகள் கொஞ்சமோ? அநேகம் உண்டு. உன்னிளையதம்பி வெகுபுத்திமான். அவன்சொன்ன புத்தியை அப்போதே நீ கேட்டாயா? எல்லாந்தெரிந்த குலவிருத்தரான உன்பாட்டனார் சொல்லியும் அதை விரும்பி யாலோசித்தாயில்லையே. அதிக பலாட்டியனென்னும்உன்மூத்ததம்பியான கும்பகர்னனையும் கொல்லுகிறதற்குக் காரணமாயிருந்தாயே. ராஜகுமாரனாகிய அதிகாயனையும் அம்புக்கு இரையாக்கிவிட்டாயே. இனி நீயரசாக்ஷிசெய்வதும் அப்படியப்படிதான் என்று இப்படிப் பலவித மாய்ச்சொல்லி, ஓ அதிகாயா! அதிகாயா என்று உரத்துக்கூவி, கன்றிழந்த பசுப்போலக் கதறியழுகின்ற தானியமாலியைப் பக்கத்தில் நின்ற ஊர்வசியும், மேனகையுங்கூடி யெடுத்துக்கொண்டு, மலைபோல் உயர்ந்து பெரிதாயிருக்கின்ற மாளிகையில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அந்த நகரத்தில் அந்தப்புர ராக்ஷதஸ்திரீகளெல்லாம் இழவுகொண்டாடவந்து, தங்கள் தங்கள் பிள்ளைகளே யிறந்ததுபோல அழுது புலம்பினார்கள். மற்ற மனித ஸ்திரீகளுடைய நிலையைச்சொல்லவேண்டியதென்ன தேவஸ்திரீகளும் தங்கள் வாயைத்திறந்து ஓவென்று அழுதார்கள். ராவணனுடைய அரண்மனையிலுள்ள பரசார ஸ்திரீகளெல்லாரும் உலகமுடிவில் பிரளயத்தைகண்டு யாவரும் ஒருமிக்க உத்கோஷிப்பதுபோலக் கோஷித்தார்கள். லங்காபட்டணத்தில் உள்ளவர்களெல்லாம் அழுத குரலோசை பூரணச்சந்திரோதயகாலத்தில் சமுத்திரம் இறைந்ததுபோல இருந்தது.

அதிகாயன்வதைப்படலம் முற்றிற்று.

---

## நாகபாசப்படலம்.

வாள்போன்ற விழிகளையுடைய இராக்ஷதப்பெண்கள் கூட்டங்கூட்டமாய்க்கூடி தலைமயிரை விரித்துக்கொண்டு ஒருவரோடொருவர் கட்டிக்கொண்டு மாரிழவு மயிரிழவுகொடுத்து அழவேண்டிய காரணமென்னவென்று சந்தேகங் கொண்டவனாய், மேகத்தி னிடியைப்போல் வெளிப்பட்டு, அஷ்டதிக்குப்பாலகர்களையும் தன் பலத்தினால் வெற்றிபெற்று அவர்களைத் தன்னுக்கினைக்குட்படுத்தியஇராவணன்மறுபடியும் அவர்களுடனே சண்டைசெய்து ஜெயிக்காமல் அபஜயமடைந்தானோ? அல்லது திரிமூர்த்திகளும் சந்தோஷமடைய இறந்து போனானோ? அல்லதுமுன் தூதாகவந்து இலங்கையைச்சுட்டுச் சாம்பலாக்கிப்போன அநுமாரென்னுங் குரங்கு இப்போதுவந்து இலங்கையை ஆழமுள்ள சமுத்திரத்தி லெறிந்து விட்டதோ? இப்படி அழுகிறதற்குக் காரணமென்ன என்று நினைத்து, தான் கண்டகண்டராக்ஷதர்களை லங்கைக்குவந்த வருத்தம் என்னவென்று கேட்டான். அதற்கு ஒருவரும் சொல்லுகிறதற்குக்கூடாமல்மெய்நடுங்கி வாய்குளறிப் பேசத்தெரியாமல் நின்றார்கள். அப்போது இந்திரஜித்து தன்சாரதியைத் தேரைச் சீக்கிரமாய் ராவணனுடைய மாளிகைக்கு ஓட்டென்று சொல்லி, ஓரிமைப்பொழுதுக்

குள்ளாகவத்து சேர்ந்து, ராவணன் உயிருடன் இருக்கக்கண்டு, கிலேசம்விட்டுக் கும்பிட்டு, ஐயா! இவ்விடத்தில் நேரிட்ட துன்பமென்னவென்று கேட்டான். அதற்கு ராவணன், அப்பா மகாவீரனே! உன்னுடைய தம்பிமாரை யமனும் பயமில்லாமல் கொண்டுபோய்விட்டானே. கும்பன், நிகும்பன், அதிகாயன் இந்த மூன்றுபேரும் சுவர்க்கலோகமடைந்தார்களென்றுஞ் சொல்லிச் சொல்லாததற்கு முன்னே இந்திரஜித்தானவன் அக்கினியையு மெரிக்கும்படியான கோபக்கண்களை யுடையவனுகி, பல்லாலுதட்டைக்கடித்து ஆகாயத்தைப் பார்த்து, எல்லாரு மிறந்துபோனார்களாவென்று மிகுந்த ஏக்கம்பிடித்து நின்று, வில்லாளரை விரல்தொட்டு எண்ணுமிடத்து முதலில் எண்ணதிற்கும்படியான வீரவானான இந்திரஜித்து இராவணனைப்பார்த்து, அவர்களைக்கொன்றவர்கள்யாரென்று கேட்டான். அதற்கு ராவணன் அப்பா! நமது அதிகாயனென்பவனை லக்ஷமணன் கொன்றானும். மற்றவர்களை நம்முடைய ஊரில் நெருப்புவைத்துக் கொளுத்தின ஆஞ்சநேயனும் மற்ற வானரவீரர்களும் கொன்றார்களாம். என்று கொன்றைப்பூமாலையைத் தரித்த சாக்ஷாத் ருத்திரமூர்த்தியினுடைய கைலாயகிரியை வேரோடு பேர்த்துச்சாய்த்த மகாபலவானான இராவணேஸ்வரன்சொன்னான். அதைக்கேட்டு வலிய சேனையையுடைய அந்த மனிதர்களுடைய வல்லமை உனக்குத்தெரிந்திருந்தும், அதிகாயன்முதலானோரை அவர்கள்மேல் போருக்கு நீர்அனுப்பினபடியால் நீரே அவர்களைக்கொன்றாய். அவர்களல்லகொன்றவர்கள். ஐயாராவணேஸ்வரா! என்னையாவது போகச்சொல்ல உமக்கு எண்ணம்வராமல் போச்சேயென்று சொல்லி வெகுநேரமாய் ஆலோசித்து, அதிககோபத்துடன் பெருமூச்சுவிட்டு, ஐயா! முன் அக்ஷயகுமாரனைப் பூமியிற்போட்டுத்தேய்த்துவிட்ட அநுமானை, இப்படி செய்விக்கிறதற்குத்தானே சத்துருக்கள்சொன்னசொல்லைச்சொல்லவந்த தூதுவனென்று கொல்லாமல் விட்டுவிட்டாய். நம்முடைய ஊருளவு சத்துருக்களிடத்திற்குப் போகின்றதேயென்று முன் ஆலோசனை செய்யாமற் போனீரே. ஓ ஆலோசனையில்லாதவரே! இனி நீ பிள்ளையுதவியில்லாமற்போய்விட்டாய். உன்வாழ்க்கையும் அழிந்துபோய்விட்டது. நான் சும்மா நினைத்துப் பேசியும் ஆலோசித்துமென்ன? இனிநான் என்தம்பியைக்கொன்றவனை அந்த ரணக்களத்திலேயே அவன் உயிர்வேறு உடல்வேறாக நீக்கினாலல்லாமல், வெகுகாலமாக நம்முடைய வசத்திலிருந்த இலங்காபட்டணத்திற்குத் திரும்பி வரமாட்டேன். இந்தவாழ்வு மெனக்கு வேண்டாம். அந்த வானரப்பெருஞ்சேனையைப் பிளவுபிளவாய்ப் பிளந்து நிணச்சேறுபட அரைத்துவிட்டு அந்த லக்ஷமணனையும்கொல்லாமற்போவேனானால்,என்னெதிரேவருவதற்கும்பயந்துஎன்னுக்கைதை மீறுத செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையவனான விஷ்ணுமுதலான தேவர்களெல்லாரும் என்னைப் பார்த்துச் சிரிக்கக்கடவார்கள். ஒருவராலும் ஜெயிக்கமுடியாத ஸ்திரமான உயிரையுடைய என்தம்பியாகிய அதிகாயனைக்கொன்ற அந்த மனிதனுடைய ஊற்றெடுக்கும்படியான ரத்தவெள்ளத்தைப் பூமிதேவி குடிக்கும்படிச் செய்யாமற் போனேனேயானால், என்னோடெதிர்த்த இந்திரன் இரண்டுதரமல்லவோ எனக்குத் தோற்றுப்போனான்? அப்படியல்ல. அவனுக்கே நான் தோற்றவனாகக் கடவேன். மேலும் நாகபாசத்தையும் பாசுபதாஸ்திரத்தையும் கொண்டு மூன்றாம் பிறைச் சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய நமது குலதெய்வமாகிய அந்தச்சங்கரதேவன் எனக்குக் கற்பித்த தேவயாகத்தைச் செய்யத் தனித்துத் திரிகிற நான் இப்போது அவர்களுயிரை உமக்குக் கொடாமற் போவேனேனானால், என்னுயிரை நான்கொண்டு விட்டுவிடுவேன். அதுவரையிலும் நான் உணவும் உண்ணுகிறதில்லை. எனக்குத் தேவாமிர்தம் போலிருந்த என் தம்பியினுடைய அருமையான உயிரைப்பறித்துவிட்ட அந்தக் கொடியவனை யமனுக்கு விருந்தாகக்கொடாமற்போனால் பிறகு கையில் வில்லைப் பிடித்துத் தேவகூட்டமெல்லாம் சிரிக்கத் திரும்பிவந்து இந்தப் பூமியிலிருந்தேனானால், நான் ராவணனுக்குப் பிறந்தவனல்ல. அதனாலெனக்குள்ள ராவணியென்கிற பெயரும் இல்லாமற் போகக்கடவது என்று சபதம்செய்து கொண்டான். இப்படி இந்திரஜித்துச்

சொல்லக்கேட்டு இராவணன், என்னப்பா இந்திரஜித்தே! நீ இந்த லேசானகாரியத்தைச்செய்து என் விசனத்தை நீக்குகிறதற்கு உனக்குமுடியாத காரியங்களும் உண்டோ? ஓ பெருங்குதையையுடைய நீண்ட வில்வீரனே! உன்னை இந்த அற்பர்கள் மீது எதிர்க்கும்படி அனுப்புவேனே யானால் எனக்கே என்மீது கோபமுண்டாகுமேயென்று கருதி, உன்னோடு ஒன்றும் யோசியாமலே நானிப்படிப்பட்ட துக்கத்துக்குட்பட்டேனென்றுசொன்னான். தேவர்களையெல்லாம் ஜெயித்துச் சுவர்க்கலோகத்தை வெற்றி பெற்றவனான இந்திரஜித்தென்பவன் அவ்வாறுசொன்னராவணனை வணங்கி, மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மையுள்ள வாளாயுதத்தைக் கையிற்பிடித்துக்கொண்டும், ஒன்றினாலும் அறுபடாததும் ஊடுருவப்படாததுமானகவசத்தைத் தரித்தும், சத்துருக்களுடைய முதுகையுருவிப் போகும்படியான அம்பறுத்தூணியை முதுகில் வலித்துக் கட்டியும், வலிய குதைகளையுடைய வயிரமான வில்லை இடதுகையில்பிடித்தும் நின்றான். அவன்பிடித்த வில் ஆதியில் பிரமதேவன் வஜ்ரமலையை யெடுத்துப் பகைவர்களால் ஒருகுறைவும் நேரிடாதபடிக்கு இந்திரனுக்காகச்செய்து கொடுத்தவில்லாகும். அப்படிப்பட்டவில்லை இவன் அந்த இந்திரனை அடித்துக் கட்டிச் சிறையில்வைத்து அவன் கையிலிருந்து பிடுங்கிக் கொண்டான். தோளிற்கட்டிய அம்பறுத்தூணியோ வென்றால், அந்தக்காலத்தில் சிங்கம்போன்ற பலமுள்ளவனான இவன் அவ்விந்திரனிடத்தில் இருந்து பறித்துக்கொண்டான். அது சப்தசாகர ஜலம்வற்றினாலும் அம்புகள் குறைவுபடாததும், கொடிய கண்களையுடையபேயும், யமனுமுண் ணும்படியான ஆகாரமுள்ள தொம்பைக்கூடுபோன்றதுமானது. அந்தத் தூணியிலுள்ள அஸ்திரங்களோ அவன் முன்பு தேவர்களுடன் சண்டை செய்தபோது மெய்ச்சி அவர்கள் கொடுத்ததுகளும், மேருவை வில்லாகவுடையவரான ருத்திரமூர்த்தி கொடுத்ததுகளும், இதுவரையில் வெற்றியல்லாமல் தோல்வியைக் கொடாதது மானவைகள். இவையல்லாமல் இன்னும் அநேக ஆயிரங்கோடி ஆயுதங்களை ஆராய்ந்துபார்த்தெடுத்துக்கொண்டு லக்ஷம் யாளிகளும் அதிக பலமுள்ள லக்ஷம் ஆண்சிங்கங்களும் பூட்டினதும், லங்கைக்குச் சமமாக அவ்வளவு விசாலமானதாகச் செய்யப்பட்டதும், தேவர்களும் அதன்வல்லமை இவ்வளவென்று அறியக்கூடாததும், பொன்னைச் சமானஞ்சொல்ல வரியதான நிறத்தையுடைய சிரேஷ்டமான கருடனையும் மின்னலையும் தோற்கடிக்கும்படியான பிரகாசமுள்ள மழுவாயுதத்தை யுடைய சிவமூர்த்தியின் விருஷபத்தையும், முன்யுத்த சமயத்தில் பின்றொடர்ந்து போனதும், அந்தத் திரிமூர்த்திகள் முதலானவர்களையெல்லாம் ஜெயித்து மேன்மையடைந்த போது இந்த மூன்றுலோகங்களிலும் அவர்கள் வாகனங்க ளனைத்தும் தன்னைப் பின்றொடர்ந்து வரும்படியாகத் தான்தோல்வியடைந்து முன்செல்லாததும், வயிரம் பற்றிய கைகளையுடைய தானவர்களுடைய தேகமாமிசங்களை யெல்லாம் தேய்த்துவிட்ட சக்கரங்களை யுடையதும், துதிக்கையையுடையதும் அஷ்ட திக்கஜங்களைத் துரத்தினதென்று சொல்வதே பெருமை? அதிக வீரத்தன்மையைக் காட்டிஎதிர்த்து நின்று இந்திரனைத் தூக்கி விட்டெறிந்த காலத்தில் அவன் மல்லாந்து விழும்போது அவனுடைய முதுகைத் தேய்த்துத் தழும்புண்டாக்கின சிகரத்தை யுடையதும் சமானமற்ற வல்லமையைக் காட்டின இந்திரனுடைய அழியாத பெரும்புகழானது நீங்கும்படி அவனுடைய பெரிய தோள்களைப் பாசக்கயிற்றால் கட்டிய ஜெயப்பிரதாபசாலியான இந்திரஜித்து வந்தான். என்று சொல்லிக்கொண்டு பேய்கள் சப்திக்கத்தக்கதாக ஆடிக்கொண் டிருக்கின்ற நீண்ட பிருதுக்கொடி கட்டியிருக்கின்ற தேரிலேறி, அந்தத் தேருக்கொப்பான ஆயிரம் சேமத்தேர் பின்னேவர, மனதில் யுத்தத்தில் தேறினவனாகி, ஒருநாளும் யுத்தத்தில் தேவர்களை முதுகிடச்செய்தானே யல்லாமல் முகத்தைப் பார்த்து யுத்தஞ் செய்தறியாத வீரனான இந்திரஜித்து வந்தான். அந்த இராவணகுமாரனான இந்திரஜித்துடனே வந்த சேனைகளை இவ்வளவென்றுசொல்லமுடியாது. ஆயினும்இது வால்மீகிபகவான் தமது ஞானதிருஷ்டியால் சொன்ன கதையாகையால் அவர்

நாற்பதுவெள்ளம் சேனையென்று கணக்கிட்டிருக்கின்றார். ஆதலால் அவ்வளவு சேனைகள் சூழ்ந்துவரவும், வெகுகாலமாய்ச்செய்த யுத்தத்திலும் தோற்காமல் வெற்றிபெற்ற தூமாக்ஷனென்பவனும், மகாபாரிசனென்பவனும், தன் தேர் வண்டியைத் தொடர்ந்து காவலாய்வரவும், சந்திரவட்டக் குடைமேலே நிழலிட்டுக்கொண்டுவரவும், பெரிய சங்கத்தொனி முழங்கவும், கேட்கப் பயங்கரமான அஷ்டாதச வாத்தியங்கள் நாலுகடலும் சேர்ந்து சப்திக்கிறதுபோலச் சப்திக்கவும், ஆயிரமாயிரங்கோடித் தேர்வீரர்கள் உள்ளணி சூழ்ந்துவரவும், இரண்டாயிர மாயிரங்கோடி யானைவீரர்கள் புறவணி சூழ்ந்துவரவும், இதற்குமுன் அநேகமாயிரம் குதிரைவீரர்கள்போகவும், படைமுகத்தில் சேனுவீரர் யுத்தக்கடலைப்போலச் செல்லவும், இந்தப் பிரகாரமாக இந்திரஜித்து ரணக்களத்தை நோக்கிக்கொண்டு வந்தான். அப்போது இளையபெருமாள் ராவணன் புதல்வனை அதிகாயன் இறந்தபடியால் இராவணனாவது அவன்வராவிட்டால் தேவேந்திரனை வெற்றிகொண்ட இந்திரஜித்தாவது யுத்தத்திற்கு வருவார்களென்று கருதி, ரணக்களத்தைவிட்டு நீங்காமல் அங்கேயே நின்றிருந்தார்.

அப்படி நின்றிருந்தவர் இவன் வருகிறதைக்கண்டு, இவன் யார் சொல்லக்கடவீரென்று விபீஷணரைக் கேட்டார். அதற்கவர்சுவாமி! இவன் மஹாபலவந்தனும், தேவேந்திரனை யுத்தத்தில் ஜெயம்பெற்றவனுமான இந்திரஜித்தென்பவன். இன்றைக்குக் கடினமான சண்டை நடக்கும். ஒளங்களாண்டவரே! அடியேன் ஒருவிண்ணப்பம் செய்துகொள்ளுகின்றேன். இவனோடுகூட மஹாவீரவான்களெல்லாம் துணையாய் வருகின்றார்கள். நம்மோடுகூடவும் தகுந்த துணைவர்களை வைத்துக்கொண்டு சண்டைசெய்வது நல்லது. தேவரீர் எல்லாந்தெரிந்த மஹானுபாவர். தீர்க்காலோசனை செய்யவேண்டும். ஆஞ்சநேயர்-சாம்புவர்-சுக்ரீவமகாராஜர்-தாரையின் புத்திராகிய அங்கதர் - நீலன் என்பவர்களாகிய வீரர்கள் நம்முடன் நிற்கும்படியாக, பாபாஹிதரும் வீரப்பிரதாபமே திருவாபரணமாக வுடையவருமான தேவரீர் இவனோடு சண்டைசெய்வதே தகுதி. அநேகமாயிரம் தேவர்களெல்லாம் உதவியாயிருக்க அளவில்லாத தேவசேனைகளுடனே கூடிக்கொண்டு தேவேந்திரன் இவனோடு சண்டை செய்தபோது, அவர்களையெல்லாம் இவன் நிமிஷநேரத்தில் தோற்கடித்துத் துரத்திவிட்டான். தேவேந்திரன் அமிர்தபானம் பண்ணினவனுகையால் அந்தப் பலத்தைக்கொண்டு தன் உயிர்தப்பிப் பிழைத்தோடிப் போனான். இந்திரனது யமலைபோன்ற தோள்களை இவன் நாகபாசத்தாற் கட்டினான். ஆஞ்சநேயரையும் அந்தப்பாசத்தான்தால் கட்டினான். இந்த இரண்டு காரியமும் லோகப்பிரசித்தமான காரியம். இதுவுமல்லாமல் இவனுடைய தனுர்வித்தியா சாமர்த்தியத்தை எப்படிப் பட்டவர்களாலும் தடுக்கமுடியாது. என்று விபீஷணாழ்வான் வணங்கிச் சொல்ல, அதைக்கேட்டு இளையபெருமாளும் நல்லது. உம்முடைய மனம்போலச் செய்யக்கடவீர் விபீஷணரே என்ற மாத்திரத்தில் ஆஞ்சநேயர் இளையபெருமாள்மீது இந்திரஜித்து எதிர்த்து வந்தானென்று தாமே வந்துசேர்ந்தார். அங்கதகுமாரர் முன்னமே சுவாமியுடனிருந்தார். மற்ற வீரர்களெல்லாரும் மகாஜாக்கிரதையாக வந்து சேர்ந்தார்கள். சங்குகளுடன்கூடிய சமுத்திரத்துக்கொப்பான வானர சேனைகளுடன் சுக்ரீவமகாராஜர் முன்னதாக நடந்தார். வானரசேனையும் இராக்ஷதசேனையும் வடசமுத்திரம் தென்சமுத்திரமென்னும் இரண்டு பெரிய சமுத்திரங்களும் சண்டை செய்வதற்காக விரும்பிப் பொங்கிச் சப்தித்துக்கொண்டு வருகின்றதைப்போலவே, மிகுந்த கோபத்துடன் ஒன்றை யொன்று எதிர்த்து நின்றதுகள். தேவர்களெல்லாரும் தம்பதி சமேதர்களாய்த் தேவலோகத்தைப் பாழாக்கிப் போட்டுவிட்டு, இன்றைக்கு நம்முடைய கண்ணினுலும், மனத்தினுலும், ஆலோசனையினுலும் நன்றாய்ப் பார்த்திருந்தோமானால் சந்தோஷ மடையலாமென்று வந்து ஆகாயமார்க்கத்தில் நிறைந்தார்கள். அப்போது அவ்விரண்டு பக்ஷத்துச் சேனைகளும் போர் செய்யத் தொடங்கின. அப்போது, அந்தவீரர்கள் கர்ஜித்த வீரகர்ஜ்ஜனையும், சமுத்திரம் போன்ற சங்கத்தொனியும், ரணபேரிகை

முழக்கமும், ஒன்றுசேர்ந்து ஒலித்தபடியால்; தேவேந்திராதி தேவர்களெல்லாம் தங்கள் செவிகளைக் கைகளால் பொத்திக் கொண்டார்கள். யுத்தவீரர்கள் ஒருவரையொருவர் அடியுங்கள்-பிடியுங்கள்-எறியுங்கள்-எய்யுங்களென்று சொல்லுகிற சப்தமும், வில்லில் நாண் பூட்டிச்செய்த டங்கார ஓசையும், பிரளயகால இடியைப்பார்க்கிலும் மூன்றத்தனை கோஷமாகப் பிறந்ததுகள். மலைகள்பட்டும், மரங்கள்பட்டும், யமனுக்கொப்பான வேலாயுதம் தைத்தும், வில்லிலிருந்து புறப்படுகிற அம்புகள் தைத்தும், ராக்ஷதரும் வானரருமாகிய வீரவான்களுடைய ராத்திரியை யொத்தவையும், பகலை யொத்தவையுமான தேகங்களெல்லாம் அழிந்ததுகள். இந்தப்பிரகாரமாக இரண்டுசேனையும், ஒன்றையொன்று தோற்கடிப்பதினாலேபூமியும்இரண்டாய்ப் பிளக்க யத்தனித்தது. முசலாயுதங்களாலும் விருக்ஷங்களாலும் ஒருவரை யொருவர் அடிக்கத் தலைகள் சிதறுண்டுபோன வானரங்கள், இளையபெருமாளுக்கு ஜெயமுண்டாகக் கடவதென்று வாழ்த்திக் கொண்டே விழுந்ததுகள். ராக்ஷதர்களுடைய கொடிய தேகங்கள் கழுத்துடனே தலைகளில்லாமல் ரணக்களத்தில் கூத்தாடினதுகள். தலைவெட்டுண்டு நரம்புகள் வலிக்க ரத்தத்தைக்கொப்புளித்துக்கொண்டிருக்கின்ற வானரவீரர்களுடைய பலத்த தேகங்களெல்லாம், காடெல்லாம் வெந்து மடிந்தபிறகு நிற்கின்ற அடிக்கட்டைகள் மாத்திரம் எரிகிறதுபோ லிருந்ததுகள். சிலவானரங்கள் இராக்ஷதர்களைப்பிடித்து அவர்களுடைய பெரிய தோள்களை முறித்ததுகள். சிலவானரங்கள் அரக்கர்களைக் காலாலெட்டி யுதைத்ததுகள். சிலவானரங்கள் ராக்ஷசர்களைப்பிடித்து அவர்களுடைய பெரிய கைகளை முறித்ததுகள். சிலவானரங்கள் அரக்கர்களைக் கிள்ளிக் கிள்ளி சிதைத்தார்கள். சிலவானரங்கள் நிசாசர்களை நெட்டித் தள்ளினதுகள், சிலவானரங்க ளந்தத்துஷ்டர்களைப்பிடித்துத் துண்டுதுண்டாய்க் கடித்துக்கொன்றுவிட்டதுகள். சிலவானரங்கள் அந்தப்பாவிகளைக் கழுத்தறுந்து போகும்படி கைகளால் வாரி யடித்ததுகள். சிலவானரங்கள் ராக்ஷசர்களைப் பூமியிற்போட்டுத் தேய்த்து விட்டதுகள். சிலவானரங்கள் வீரசிம்ஹநாதம் செய்ததுகள். இராக்ஷசர்களிற் சிலர் வாளாயுதங்களினால் வானரங்களினுடைய வீர கண்டாமணி தரித்த கால்களைத் துணித்துவிட்டார்கள். சிலர் தலைகளை வெட்டித்தள்ளினார்கள். சிலர்தோள்களை வெட்டியெறிந்தார்கள். சிலர் உடலை இரண்டுதுண்டமாகத் தறித்துப்புழுதியிற் புரட்டினார்கள். இயமனைப்போலத் திரியும் வானரங்கள் விருட்சங்களினால் இராட்சசர்களுடைய மலைபோலுயர்ந்த தலைகளைச் சிதறடித்தார்கள். சிலருடைய உயிரைப் பருவத வீசுதலினாற் போக்கிவிட்டார்கள். சிலருடைய கைகளும் கால்களும் அதனால் முறிந்து விழும்படி மோதினார்கள்.

சிலகரடிகள் அக்கினிப்பொரிகளைக் கக்குகின்ற கண்களையுடையதுகளாய்ப் பலம் பொருந்திய தலையும் கைகளும் அற்றதுகளாகியும், தேகத்தில் வஜ்ரவேலுருவும்படி விடுத்து எதிரிலுள்ள ராக்ஷசர்களுடைய கழுத்தைத்தாவிக்கடித்துக்கொண்டு அவர்களுடனேகூட மாண்டுபோனதுகள் சில கரடிகள் மலைகளைப்போர்த்து இடியோடுகூடின மேகத்தையொத்த தந்தங்களையுடைய கரியயானைகளின் மஸ்தகங்களைப் பிளந்து, அவற்றிலுள்ளமூளைகளைத்தின்று தங்களுடைய பசியாறினதுகள். மலைகளிலும் பெரிய தேகங்களையுடையவைகளான வானரங்களிற் சில மதத்த யானைகளின் மீதும், சிலகுதிரைகளின்மீதும், சிலமணிகள் கட்டியிருக்கிற தேர்களின்மீதும், சில எதிரிகள் கைகளிற் பிடித்திருக்கிற வாள்களின்மீதும், சில வில்லுகளின்மீதும்,சில ராக்ஷசர்களுடைய செம்பட்டமயிர்த் தலைகளின்மீதும் தாவிக்குதித்ததுகள். இராக்ஷசர்கள் தண்டாயுதங்களைக் கொண்டு அடித்துக்கொல்ல உடைந்த தலையைவீசியெறிந்தும், வாள்களினாலே துண்டு துண்டாய்ப் போன தேஹங்களை வாரிக்கொண்டும்,அங்குள்ள மலைகளைப் புரட்டிக்கொண்டும் போகின்ற ரத்தவெள்ளமானது; குரங்குப் பிணங்களையெல்லாம் சமுத்திரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டது. ஆஞ்சநேயர் தமது திருக்கரத்தால் வஜ்ரதண்டங்கொண்டு இராட்சசச்சேனையை மோதி அடித்தபோது உடல்நசுங்கி,இவைமேகத்துக் கொப்பான கொடியென்றும், இவை

இந்திரஜித்து உ-வதுநாள், யுத்தம்.

மாருதிக்கும் அகம்பனுக்கும் யுத்தம்.



பிரமாஸ்திரப் பிரயோகம்.

பிராட்டியை திரிசடை தேற்றுதல்.

பிடரி மயிர்களையுடைய பலவகையான குதிரைகளென்றும், இவைவில்லுகளென்றும், இவை அம்புகளென்றும், இவைவாளென்றும், இவை தண்டாயுதமென்றும், இவை கோபத்தையுடைய மதயானையென்றும், இவை தேரென்றும் வேறு பிரித்தறியக் கூடாமற் போய்விட்டதுகள். அங்கதன் ஒருபெரிய விருட்சத்தைப்பிடுங்கிச் சாடின போது, அநேகந்தேர்கள் - குதிரைகள் - யானைகள் - இராட்சசர்கள் - என்று சொல்லப்பட்ட அளவிறந்த சேனைகள், யமனும் சுற்றித்திரிந்து உயிர்களெங்கேனும் தப்பியிருக்கின்றதுகளோ வென்று இரண்டுகைகளினாலும் பிரேதங்களைக் கிளறித்தேடிப் பார்க்கும்படியாக அழிந்துபோய் விட்டதுகள். அக்கா லஷ்டதிக்கிலுள்ளவர்கள் அந்த நாற்றிசைகள்தோறு நின்று, யானைகள்-தேர்கள்-குதிரைகள்-முதலிய யெல்லாவற்றையும் வானரவீரர்கள் சம்ஹரிக்கிற இரணக்களத்தைப் பார்த்துத் தேவர்களுடனே சொன்னதாவது; முன்னே அசுரர்கள் சண்டை செய்கிறதைப்பார்த்து இன்னார் ஜெயமடைவார்கள்; இன்னார் தோற்பார்கள்; என்று நிச்சயித்து மஹாரிஷிகள் சொன்னதுபோல, வானரங்களுக்கு ராட்சசர்கள் தோல்வியடைவார்களென்றுசொன்னார்கள்.

இப்படியவர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்போதே இராட்சசர்கள் படையெடுத்துவர, அதைக்கண்டு வானரர்களெல்லா மோட்ட மெடுத்தார்கள். வானர வீரர்கள் அதைக்கண்டு அவர்களையோட வொட்டாமல் தடுத்தார்கள். மறுபடியுமிராட்சசர்கள் வானரங்களைச் சமுத்திரம் போலச்சூழ்ந்து மடித்தார்கள். அதைப் பார்த்த வானரங்கள் மீட்டும் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். அப்போதும் வானர வீரர்கள் அவர்களை யோடவொட்டாமல் தடுத்து நிறுத்தினார்கள். பிறகு நீலனென்கிற வானரவீரன் சூலாயுதமும்-மழுவாயுதமும்-கையிலே தாங்கிக்கொண்டு அஷ்டபுஜங்களுடனே பிரளயகாலத்தில் உலகங்களையெல்லாம் சம்மரிக்கும் உருத்திரமூர்த்தியைப்போல நின்றவிடத்திலேயே நின்று வந்த ராட்சசர்களை யெல்லாம் கொன்று கொண்டேயிருந்தான். இப்படி அநேகர் உயிர் மாய்வதினால் யமன் தன்கிங்கரர்களுடனே பாசத்தைக் கையிற்பிடித்தபடியே அந்தயிடத்தைவிட்டு அப்பாற்போகாமல் நின்று உயிர்களைப் பிடித்துக்கொண்டிருந்தான். வேறொரு பக்கத்தில் குமுதனென்பவன் வாயுதேவனைப் பார்க்கிலும் வருணதேவனைக் காட்டிலும் அதிகமாகவும், அக்கினிதேவனும்சமானமாகானென்றுசொல்லும்படியாகவும், ஆயுதமொன்று மில்லாமல்; இரண்டுகை வல்லமையாலேயேசெய்கிற யுத்தத்தின் பெருமையை விரித்துச் சொல்லவேண்டிய தென்ன? இயமனும் தன்பதவியையும் இவன் பிடுங்கிக்கொள்ளுவானென்று நடுங்கிப் பயப்படும்படி தன் கையிலகப்பட்ட ராக்ஷசர்களை யெல்லாம் கொன்றான். மற்றொரு பக்கத்தில் இடபனென்கிற வானரவீரனால் வீசியெறிந்த சமுத்திரம் சூழ்ந்த பூமியிலுள்ள மரங்களுக்குள்ளும், மலைகளுக்குள்ளும், ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனாரெய்த பாண முருவிப் போன நெருங்கிய கிளைகளையுடைய ஏழுமராமரங்கள் மாத்திரம் யாவர்களுக்கும் அடையாளம் தோன்றுவதற்காக நின்றன. மலைகளில் மேருமலையும் அஷ்டகுலாசலங்களுமே சாஸ்திர நிச்சயத்திற்காக நின்றன. மற்றமரங்களிலு மலைகளிலும் ஒன்றாவது அவன் கைக்குத்தப்பினவைகளில்லை. இந்தப்பிரகாரம் எல்லாமரங்களாலும்,எல்லாமலைகளாலும், அநேகராட்க்ஷசர்களிறந்துபோனார்கள். மதகிலிருந் தோடுவதுபோல இரத்தம்குபுகுபென்றொழுகும்படிச் சாம்பவன் பெரிய விருட்சங்களைச் சுற்றிச் சுற்றிக்கொல்ல எல்லா ராக்ஷசர்களுமாண்டுபோகின்றதைப் பார்த்த தேவர்களெல்லாம், குதிரைகள்-மதயானைகள் - தேர்கள்- இவைகளையுடைய வக்கிரதந்தங்களோடு கூடிய வீரர்களும் பாம்பிலும் கொடியவர்களுமான ராக்ஷசர்கள் ஓயாமற் பல்கிப்பெருகுவதனாலுண்டாகிய பயம்இன்றைவரையிலுந்தா னென்று பேசிக்கொண்டார்கள். போர்செய்கின்ற குதிரைகளாகிய அலைகளும் - தேர்களாகிய கப்பல்களும் - மதங்கொண்ட யானைகளாகிய கொம்பன்சுறாமீன்களும் ஓடிப்போகவும், நெருங்கிய வாயுதங்களாகிய மீன்கூட்டங்களெல்லாம் சிந்திச் சிதறிப்போகவும், கருங்கடலைக் கலக்குகின்ற மத்தைப்போல இராக்ஷசசேனாசமுத்திரத்தைபனசனென்கிறவானர

வீரன் சின்னுபின்னப்படக் கலக்கிவிட்டான். மயிந்தனென்கிற வானரவீரனும், அவனுக்கிளையவனுகிய துமிந்தனென்கிற வானரவீரனும், முன் மேகங்களைக் கிழித்துச் சின்னுபின்னப் படுத்தி ஆகாசத்திற் பறந்துபோன ஜடாயுராஜனையும், அவர் சகோதரரான சம்பாதிராஜனையும்போல, இராக்ஷசர்களையெல்லாம் சின்னுபின்னப் படுத்தி விட்டார்கள். கவையனென்னும் வானரவீரன் இராக்ஷசக் குட்டையைக் கலக்குகின்றமதயானையைப்போலானுன். கேசரியென்னும் வானரவீரன் நின்றபடியே நின்று, வந்த வந்த இராக்ஷசர்களையும் அவர்கள் சேனைகளையும் கொன்று விட்டான். இந்தப் பிரகாரமாக வானரவீரர்கள் முன்வைத்தகாலைப்பின்வையாமல் இராக்ஷசப்பிணங்களை மலைமலையாகக்குவித்து அட்டகாசம் செய்து போர் நடத்துகிறபோது, ஓடிப்போன வானரக் கூட்டங்களெல்லாம் வந்து ஒன்ருய்க்கூடிப் போர்க்குப் புறப்பட்டதுகள். அதைக்கண்டு இராக்ஷசசேனை முழுவதும் தங்குதரியில்லாம லோட்டமெடுத்தது.

இந்தப்படி சமர்க்களமுழுவதும் இகல் நீடித்திருக்கும்போது இந்திரஜித்தானவன் தானொருவனுய் நின்று போர்செய்ய யத்தனித்தான். ஆபரணங்களைத் தரித்த மலையைப்போலத் தோள்க ளிரண்டுபக்கத்திலும் பூரித்துயரவும், மிகுந்த பலமுள்ள தூண்கள்போலநெரித்தவிரல்களிற் புட்டிவிட்டு அந்த விரலால் ஆகாசமெல்லாம் வெடிபடவும், திக்குகளெல்லாம் செவிடுபடவும், அஷ்டகுலாசலங்களு நெக்குவிடவும், மகாவீரத்தோடு வரிசை வரிசையாக வில்லைக் குணத்தொனிபண்ணி; சமுத்திரஞ்சூழ்ந்த லோகங்களையெல்லா நடுங்கும்படிச் செய்தான். அன்றியும் சத்தசாகரங்களைப்போல யாவருநடுங்கும்படி அட்டகாசம்செய்து, தனதுயர்ந்ததேரை வேகமாய்ச் செலுத்தும்படிச் சாரதிக்குத் திட்டஞ் செய்து, அங்கதன் முதலானவர்க ளெல்லாம் பயப்படவும், தேவர்களெல்லா நடுக்கங்கொள்ளவும், அதிக கோபதீபிதனுகி, சங்கபாலன் - குளிகன் - பதுமன்-மகாபதுமன் - வாசுகி-அனந்தன்-தட்சகன் - கார்க்கோடகன்-என்று சொல்லப்பட்ட அஷ்டநாகங்களும் தங்கள் பற்களிலிருந்து அக்கினிமயமான விஷங்களைக் கக்கினுற்போல அதிவேகமாய் இடியையும் தோற்கடிக்கும் படியான கொடியபாணங்களை நான்கு பக்கங்களிலும் தூற்றினுன். அதனுல் வானர வீரர்கள் சுற்றிலும்கவிந்துகொண்டுவீசின மலைகளுமரங்களும் அவ்விந்திரஜித்துவிடுகிறபாணங்கள்பட்டுப் பொடியாயுதிர்ந்தும் துண்டுதுண்டாய் முறிந்தும் போயின.

அப்போது வானரர்களுடைய தலைகள்அநேகமாயறுபட்டு ஆகாசத்திற்போய் சின்னுபின்னமாய்ச் சிதறிப் பூமியில் வீழ்ந்து மண்ணிற்புதைந்துபோனதுகள். சில வானரவீரர்கள் இந்திரஜித்துவின் வில்லிலிருந்து புறப்படுகின்ற பாணங்கள் போவதைக்கண்டு நடுங்கி, தாங்கள் கோபத்தாற் பேர்த்தெறியும்படித்தூக்கின மலைகள் தங்களுக்கேபாரமாகும்படி ஒடுங்கி நின்றுவிட்டார்கள். சிலவானரவீரர்கள்முந்திப்போய் நெருங்கினபோது, அவர்கள் கொண்டுபோன மலைகளும் அவர்களுடையமார்பு மூடுருவும்படியாகஇந்திரஜித்துவின்பாணங்கள் நுழைந்ததுகள். ஒரு முகூர்த்தகாலத்துக்குள் ஒருவெள்ள வானரங்கள் மாண்டதுகள். சிலவானரங்கள் தங்கள் கழுத்துகளும்-கைகளும்-கால்களும் - வால்களும்-அநேகந்துண்டங்களானதைக்கண்டு, உருக்கு ஸ்தம்பம்போன்ற தோள்களினுலே அடித்தும்-குத்தியும்-உயர்ந்த மூங்கில்கள் வளர்ந்திருக்கின்ற பெரியமலைகளைப் பேர்த்தெறிந்தும், தாமுமந்தமலைகளுடனே பூமியில் விழுந்துபோய் விட்டார்கள். வானரர்களுடைய தலைகளை அரிந்துக்கொண்டு போன இந்திரஜித்துவின் பாணங்கள் சூரியனைப்போலப் போய் புற்றில் நுழைந்த நீண்ட பாம்பைப்போல நாகலோக மடைந்துவிட்டதுகள். இரணக்கள முழுவதும் மேடுபள்ள மில்லாமல் வேற்று வெளியாயிருந்தபடியால், அதிற்பரவின ரத்தங்கள் ஒரு சமுத்திரத்துக்கொப்பாயிருந்ததுகள். இந்திரஜித்துவினுலெய்தபாணங்கள்வானரர்கள் விழித்துப்பார்த்தால் அந்தவழியிற் பாய்கின்றதுகள். நிற்பார்களானுல் அவர்களுடைய மார்பிற்பாய்கின்றதுகள். திரும்பியோடுவார்களேயானுல் முதுகிற் பாய்கின்றதுகள். ஆகாசத்திற் பாய்ந்தார்களானுல் அவர்கள் மேனியைக் கிழிக்கின்றதுகள். இப்படியவர்கள் கைகால்களை அசைத்தா

லும், வாயாற்பேசினுலும், மனதால் நினைத்தாலும், அந்தந்த அவயவங்களிற் பாய்கின்றதுகள். இந்தப்பிரகாரமாக மலைகளையொத்த தேகங்களை யுடையவர்களான வானரர்களினுடல்முழுவதும் இந்திரஜித்துவின் பாணங்கள் நுழைந்ததுகள். நெருங்கி வருகின்ற பாணவருஷத்தால்மூடப்பட்ட இடத்தைக் கண்டார்களே யல்லாமல், வெறுமையா யிருக்கிறவிடத்தை ஒருவரும் அறியார்கள். அஸ்திரப் பிரயோகம் செய்யும்போது நெறித்திருக்கிற வில்லின் நாணேசையே யல்லாமல், வேறேரோசையும் கேட்கவில்லை. வானரர்களென்று பேரெடுத்த சேனைகளெல்லா மாண்டுபோய் விடுகின்றதுகளென்று துக்கிக்கின்ற அவ்வானரசேனையின் வீரர்களைப்பார்க்கிலும், தேவர்கள் அதிகமாய்க்கலக்கமடைந்தார்கள். இந்தப் பிரகாரமாக வானரர்களெல்லாம் அநேக கண்ட துண்டங்களானதைக்கண்ட அந்தத் துஷ்டஞன இந்திரஜித்தானவன், தன்னேடெதிர்த்துவரத்தக்கவர்கள் வேறெருவருமில்லாமையாற் பாணப்பிரயோகம் செய்யாமலிருந்தான்.

அப்போது சூரியகுமாரனுன சுக்ரீவ மகாராஜன் இந்திரஜித்துவோடு சண்டை செய்யவேண்டுமென்கிற ஆசையால் ஆகாசத்திற்பரவியிருக்கின்ற மேகங்களெல்லாம் சின்னபின்னப்படும்படி உயர்ந்திருந்த ஒரு மராமரத்தைப்பிடுங்கி,அவ்விந்திரஜித்துத் தன்சேனைகளெல்லாமாண்டு உயிரழியும்படிப் போர்செய்ததனுல் அதிக கோபங்கொண்டு, திருப்பாற் கடலைக்கடைந்து தேவாமிர்தங்கொண்டவாலியைப்போலொதுங்கி நின்ற அவ்விந்திரஜித்துவைக்கிட்டி, அவனுக்கு உபபலமாகவந்து சூழ்ந்துகொண்டிருக்கின்ற சேனசமுத்திரமெல்லாம் கால்தளர்ந்து பின்னிட்டோடும்படி அம்மராமரத்தைக் கிறுகிறுவென்றுசுற்றியடித்தார் அதைக்கண்ட இராக்ஷச வீரர்களெல்லாம் பயந்து நடுங்கினுர்கள். இப்படிச் சுக்ரீவ மகாராஜன் ஒரு மராமரத்தைக் கொண்டு தன்னைச் சூழ்ந்து நின்ற இராக்ஷசப்படைகள் சின்னபின்னப்பட்டோடத் தும்சம் பண்ணுகின்ற வீரத்தை இந்திரஜித்துவானவன் கண்டு, ஷபாசு! நல்லவீரன்; நல்ல வீரன்; என்று ஆச்சரியப்பட்டு, அதிவேகமாய்ச் சுக்ரீவமகாராஜனுடைய நெற்றியிலிரண்டுபாணமும், மார்பில் அஞ்சு பாணமும், விஷத்தைப்போல எய்து, அவர் கையிற் பிடித்திருந்த மராமரத்தையும் துண்டு துண்டாய் நொறுக்கிப் பொடியாக்கிவிட்டான். அதைக்கண்ட ஆஞ்சநேயர் ஆலகாலவிஷம்போலக் கோபங்கொண்டு புகுந்து, உலகங்களெல்லா நடுங்கும்படித் தமது தோளைத்தட்டி இடிபோலக் கர்ஜ்ஜித்து, இந்தட்சணமே இந்திரஜித்து இறந்துபோவானென்று யாவரு நினைக்கும்படியாக ஒருபெரிய மலையைப்பேர்த்து அவன் மீது எறிந்தார். அஃதவன் பிரயோகித்த பாணங்களினுல் தூளிதூளியாய்ப் பறந்து போய்விட்டது. அப்போது இந்திரஜித்து ஆஞ்சநேயரைப் பார்த்து, அடா எரியுண்ட வானரமே! சற்றே நில்லு. சற்றே நில்லு, உன்னை நினைத்துக்கொண்டுதான் சண்டைக்குவந்தேன். கையில் வில்லெடுக்காமல் உன்வீரத்தைச்சொல்லி விளையாடிக் கொண் டிருக்கின்ருய். இந்த மலைகளையும் மரத்தையுங் கொண்டுமா என்னைஜெயிக்கப் போகிருய். என்று சொல்லி அட்டகாசஞ் செய்தான். மேருமலையல்லாமல் வேறென்றுடனும் சமானப்படாத திருத்தோள்களையுடைய ஆஞ்சநேயர் கேட்டு, அடா அற்பனே! வில்லெடுத்துச் சண்டைசெய்ய உரியவர்கள் வேறே இரண்டு வீரசிகாமணிகள் இருக்கின்ருர்கள். அதை இன்றைக்கோநாளைக்கோ பார்க்கப்போகிருய். நாங்கள் மலையு மரங்களு மெடுக்கத்தக்கவர்களாயிருக்கின்ரேம். அடா எனதெரியுண்டவாலுக் கிடியுண்டுபோன ஈனனே! பிரகாசிக்கின்ற பலவாயுதங்களை யெடுத்துக்கொண்டு வந்த இந்திரன் முதலானபேர்கள் தம்முயிரைப் பெரிதாகக்கொண்டு உனக்குத் தோற்றுப்போவார்கள். நாங்களவ்வுயிரை லக்ஷியஞ்செய்து கையிலே புல்லெடுத்துக்கொண்டு வந்தவர்களல்ல. நாங்களு முன்னேடு சில யுத்தம் செய்யத்தான் வந்திருக்கின்ரேம். உனக்கு என்னேடு சண்டைசெய்ய விருப்பமா? அல்லது இலக்ஷ்மணரென்கிற திருநாமமுள்ள எங்கள் ஆண்டவருடனே சண்டைசெய்ய விருப்பமா? இவ்விரண்டு மில்லாவிட்டால் உங்களப்பனுன ராவணனுடைய தலைகளை வெட்டித்தள்ள வெழுந்தருளியிருக்கின்ற மகாவீரராகிய சக்கரவர்த்திப்பிரானுடனே போர்செய்யவிருப்பமா

நீ எப்படிக்கேட்டாலும் தடைசொல்லமாட்டோம். அப்படியேசெய்வோம். என்று சொல்லவும் அதுகேட்ட இந்திரஜித்தானவன் குலுங்க நகைத்து, அப்படியாளுல் நீ சொன்ன அந்தலக்ஷ்மணன் எங்கேயிருக்கின்றுன்? அந்த ஐம்பேதை என்தம்பியாகிய அதிகாயனென்கிற சிங்கக்குட்டிவந்தால் அவனேக்கொன்று தன்னுயிரைப் போல ஒரு கீர்த்தியைச் சம்பாதித்தானல்லவா? அப்படிப்பட்டவனேடு சண்டைசெய்து அவனேக்கொன்று என்கோபந்தணியவந்தேன். அடா நரதூதனே! இவ்வுலகங்களேயெல்லாம் ஒடுக்கிவிடும்படியான என் பாணங்களேப் பிரயோகித்து உங்களேமாத்திரமா கொன்றுவிட்டுப் போய்விடுவேன். என் சேனேகளேயெல்லாம் அப்பாற்போகச் செய்துவிட்டு, நானுமென்வில்லும் இவ்வொரே தேரிலிருந்து உங்களேயெல்லாம் தலேயறுத்துவிடப்போகிறேன். இது சத்தியம். எல்லாரும் வாருங்கள். உங்களுடனே தேவர்களேயும், இந்தப்பூலோகத்திலுள்ளவர்களேயும், உங்களுக்குஉபபலமாய் அழைத்துக்கொண்டு வரலாம். இன்றைப் பகற்பொழுதுக்குள்ளே ஜெயம்பெற்று விடுகிறேன். என்றுசொல்லித்தொளாயிரம்பாணங்களே வில்லிற்பூட்டி அநுமான்மீது பிரயோகம்செய்தான். அவைகள் மேருபருவதம்போல நின்றிருக்கின்ற அவ்வாஞ்சநேயர் மேனிமுழுவதும் கும்பல் கும்பலாகப் போய்த் தைத்தமாத்திரத்திற் பல்லே நெறநெறவென்று கடித்து, அதிக கோபத்துடனே பக்கத்தில்நிற்கின்ற ஒருபிரமாண்டமான மலேயைத் தூக்கிக்கொண்டுபோய் இந்திரஜித்துவுக்கு முன்பாக நின்றுகொண்டு இப்படிச் சொல்லுகின்றுர்.

அடா துஷ்டராணவச் சிசுவே! உலகத்தில் யானேகளெவ்வளவும் உண்டோ? அவ்வளவுமொன்ருய்க்கூடிஞலும்உருண்டகால்களேயுடைய சிம்ஹமொன்றுக்குமுன்னின்று அதை வெல்லுமா? எங்களாண்டவராகிய ஸ்ரீராமச்சந்திரருடைய திருத்தம்பியார் வருமளவும் நீ நிற்கமாட்டாய். நீ அஸ்திரப்பிரயோகம் செய்வதற்குள்ளாக முந்தி இஃதுன்னுடைய பிராணனே யுண்டுவிடும். நீ உன் வில்வல்லமையாற் பிராணனேக் காக்கக் கூடுமாளுற் காத்துக்கொள்ளடா பார்க்கலாம். என்று சொல்லி ஆஞ்சநேயர்விட்டமலேயானது அஷ்டதிக்கஜங்களினுடைய தந்தங்கள் பதிந்த திரண்டதோள்களேயுடைய ராவணன் மகனை இந்திரஜித்துவின்மார்பில் தரித்திருக்கின்ற வஜ்ஜிரகவசத்தில் ஒருமலேமீதுமற்ருெருமலே தாக்குண்டது போலவும், நெருப்பில் வெந்த இரும்பு சம்மட்டியாலடித்தபோது பொறிப்பொறியாய்ச் சிதறிப் போவது போலவும், உடைந்து இடிந்து மாவாகி நான்கு பக்கங்களிலும் சிதறி விழுந்ததுகள்.

இப்படி அநுமாராலே எறிந்தமலே மேலேவிழுந்து சிதறிப்போனதைக்கண்டு கோபங்கொண்ட சிம்ஹத்தைப் போன்ற வஞ்சகளுகிய இந்திரஜித்தானவன் அதி உக்கிரமான செருக்குடனே ஆக்கிரமித்து உலகத்தை மேருமலேயுடனே பேர்க்கத்தக்கவரான வாயுபுத்திரராகிய அவ்வநுமானுடைய வெற்றிமாலேயைத் தரித்திருக்கின்ற மார்பிலும் தோளிலும் உருவத்தக்கதாக ஆயிரம்பாணங்களேக் கொண்டு அழுத்தினுன். ஒரேவிதமான அந்த ஆயிர பாணங்களும் போய்த் தைத்தமாத்திரத்தில் ஆஞ்சநேயர் மேருமலேயானது சண்டமாருதக்காற்றி லசைந்ததுபோல மேனி நடுங்கி, தேகமெல்லா மிரத்தப்பிரவாகமொழுகச் சற்றே இளேப்பாய் நின்றுர். இப்படி நின்றவர் அச்சிரமபரிகாரம் பண்ணிக் கொள்வதற்குள்ளாக அதிபலாட்டியனை நீலனென்கிற வானரவீரன் வந்து இந்திரஜித்துவை நெருங்கி, ஒரு நீலமலேயைத் தனது பெரியகையினுற் பேர்த்து அவ்விந்திரஜித்துவின் மீது ஆகாசத்தில் அக்கினிசெல்வதுபோல அதிவேகமாய் விழும்படி எறிந்தான். உடனே யமனெறிந்த சூலத்துக்கொப்பான அந்தமலே க்ஷணகாலத்துக்குள் வந்தது தெரியாமற் சிந்திச் சிதறிப் போகும்படி, வலியவில்லேயுடைய அவ்விந்திரஜித்து அம்புகளேக் கொண்டு உடைத்து விட்டான். இப்படி அக்கினியும் பயங்கொள்ளும்படியான வாயையுடைய சர்ப்பசாலங்களுக் கொப்பான இந்திரஜித்துவினுடைய பாணம் பாயும்போதெல்லாம் உயிரோடுநின்ற வானரங்கள் திக்கு திக்குகளாக ஓட்டம் பிடிக்கவும், தேவர்களுடைய மனமும் பிராந்தியடையவும், மேருமலேயிலு மூன்றுபங்கு பலமு

ள்ள நீலனுடைய தேகமெல்லாம் சல்ல டைக்கண்கள்போலத் திறந்து போகவும், அவற்றிலிருந்து ரக்தப்பிரவாக மொழுக வும் ஆனபோது; அந்த நீலன் கிடுகிடெ ன்று தேகநடுங்கினுன். அப்போது வாலி புத்திரனை அங்கதகுமாரன் தன்னைப் பார்த்தபேர்களிற் சிலர் மேருதான், மேரு தான், என்று சொல்லவும், சிலர் யூகித்து அதுவல்ல; அதுவல்ல; என்று சொல்ல வும், அங்கேயுள்ள மலைகளை யெல்லாம் வேரோடுபிடுங்கி இந்திரஜித்துவின் மார் பின்மேலும் தோளின்மேலுமாகக் குறிப் பிட்டு எறிந்தான். அவைகளெல்லாம் இந் திரஜித்துவின் கையில் வில்லிருக்கிற பரி யந்தம் கிட்டச்சேருமோ? அல்லது நடு வேதான் வருமோ? அப்படி வந்தபோதி லும் தப்பிப்போய் விடுமோ? உடனே யவ் விந்திரஜித்தானவன் தனதுகொடிய பாண ங்களினுல் அவ்வங்கதன்விட்ட மலைகளை யெல்லாம் பொடிப்பொடியாய் நொறுக்கி விட்டான். இப்படி அங்கதன்விட்ட மலை களெல்லாம் நொறுங்கி விட்டது மாத்தி ரமா? அவனுடைய நெற்றியின்மீதும், உயர்ந்த தோளின்மீதும், நீண்டமார்பின் மீதும், மற்றக் கால்கள் முதலிய உறுப்புக் களின்மீதும், புற்றில் நுழைகின்ற சர்ப் பத்துக்கொப்பாக அந்த இந்திரஜித்துவி னது புகைகின்ற பாணங்கள் நுழைய நு ழைய, அவ்வங்கத குமாரனும் அலைகுலை ந்து பல்லைக்கடித்துக் கைகளைப் பிசைந்து, கண்களில் நெருப்புப்பறக்க வாட்டமுற்று இரக்தம்வடிய மயங்கிப் பூமியிற்சோர்ந்து விட்டான். அப்படியே மற்ற வீரர்களு டைய மார்பின்மேலும், தோள்களின்மே லும், மழைத் துளிகளைப்போலக் கொடிய பாணவருஷங்கள் தைத்தபடியால்; அவர் களெல்லாரும் உடல்நடுங்கி வேர்த்து வா ட்டமுற்றவரானுர்கள். அப்போது வானர சேனைகளில் வெகுவாய் மாண்டதுகள். மற்ற உயிருள்ளவைகளெல்லா நாலுதிக்கு களிலும் பறந்துவிட்டதுகள்.

அப்போது இளையபெருமாள் அவ னுடைய வீரத்தன்மையைக் கண்டு மனம் கொதித்து, கண்களில் அக்கினி ஜொலிக் கும்படியாக விபீஷணுழ்வானைப் பார்த்து, ஓ விபீஷணரே! இந்தத் துஷ்டனை நான் மாத்திரமாய் நின்று கொல்லவிடாமல் நீர் நம்முடைய வானரவீரர்களையெல்லாமழை த்து, ஓடிப்போனவர்கள் போக நின்ற வானரவீரர்களெல்லா மிவ்வளவு பெருஞ் சேனைகளுடனே இரத்த வெள்ளத்திலு ழைத்து மாண்டு போகும்படியாகச் செய் ததுபெருந்தப்பிதமாய் முடிந்ததே என்று சொல்லவும் அதுகேட்ட விபீஷணுழ்வார் ஸ்வாமி! அதுமெய்தான் இந்தச் சண்டா ளனுக்குமுன்பாக ஆயிரகோடி தேவர்கள் யுத்தத்திற்குவந்து சேர்ந்து இவன் கையி லகப்பட்டுப் போனுர்களே யல்லாமல், இவனை அவர்கள் ஒன்றும் செய்யவே யில்லை. தேவரீர் இவனைக் கொன்ருலல்லா மல், அடியேங்களும் இந்த உலகமும் பிழைக்கமாட்டோம். ஆதலால் அடியேங் களுக்குத் தேவரீரே பிராணபிக்ஷை கொடு க்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்.

அதைக்கேட்ட இளையபெருமாள் இந் திரதனுசுடனே வருகிற ஸ்வர்ன்னமய மேகத்தைப்போல இந்திரஜித்துவுக்கு மு ன்பாகவந்து நின்ருர். அவரைப் பார்த்த ராவணகுமாரன் சாரனை நோக்கி, இவன் தானு பரதனுக்குத் தமயனுன ஸ்ரீராமனு டைய தம்பியென்று கேட்க, அதற்கவன் இவன்தான் நீர் கேட்ட லட்சுமணனென் றுசொல்ல, அதைக்கேட்ட அந்தத் துஷ் டன் இளையபெருமாள்மீதுதான் யுத்தத்தி ற்குப் புறப்படுவதற்குமுன்னே அவன்பின் வந்த சில ராக்ஷசவீரர்கள் இளையபெருமா ளைப்பார்த்து, ஓ பிள்ளாய்! நீ எங்கள் ராஜ குமாரனுன அதிகாயன் ஒண்டியாய்வர அவனைக் கொன்றுபோட்டா யல்லவா? இப்போது எங்களிடத்தில் அகப்பட்டுக் கொண்டாய். இனியெங்கள் கண்முன்னே எங்கே தப்பிப் பிழைக்கப்போகிருய்? என் றுசொல்லிக் கண்களில் அக்கினிசொரிய அடர்ந்து, அந்த நூறுகோடி ராக்ஷசர்க ளும் தங்கள் ரதங்களையும் - நர்த்தனம்பண் ணுகின்ற குதிரைகளையும் - யானைகளையும் அதிவேகமாகச் செலுத்திக்கொண்டுவந்து நெருங்கி லக்ஷ்மணரைச் சூழ்ந்து மூடிக் கொண்டார்கள். அப்படிச் சூழ்ந்துகொண் டவர்களையெல்லாம் ஸ்ரீராமருடைய திரு ப்பாதுகைகளைத் தமது திருமுடியில் தரித் துக் கொண்டிருக்கிற பரதாழ்வாருடைய தம்பியான இளையபெருமாள் கிரமக் கிரம மாகத் தொடர்ந்து, அவர்கள் தேர்களையும்

குதிரைகளையும் யானைகளையும் பதாதிகளையும்முடிவில் இராக்ஷசவீரர்களையும் துண்டு துண்டாக்கி வெற்றிமாலையைத் தரித்தார். அப்போது சப்தலோகங்களும்கிடுகிடுத்து நடுங்கியதுகள். இளையபெருமாளுடைய அஸ்திரவதிர்ச்சியால் இடிவிழுந்து மணல்களா யுதிர்வதுபோல மலைகளுதிர்ந்தது கள். பூமியும் பாளம்பாளமாய் வெடித்தது கள். அறுப்புண்டு கிடக்கின்ற இராக்ஷசப் பிரேதங்களின்மீது ஆகாசத்திலெழும்பிப் போன தலைகள் பலபலவென்று சிந்தியது கள். இரத்தப் பிரவாஹங்கள் நாலுபக்கங் களிலும் ஓடினதுகள். தேவர்கள் கைகளை விரித்தார்கள். இப்படிக்கொடிய சண்டையை விளைத்தும் அவ்விலட்சுமணர் பிரயோகித்த பாணங்கள் வேகமாருமல், தூரத்தில் யுத்தசன்னத்தர்களா யிருந்த இராக்ஷசர்களுடைய மார்பிலும்பட் டுருவினது கள். சிலபாணங்கள் உலக முழுமையும் பரவினதுகள். சில பாணங்க ளிராக்ஷசர்களுடைய பிருதுக்கொடிக் காடுகளைச் சுட்டெரித்ததுகள். சில பாணங்கள் குதிரைகளையெல்லாம் துணித்ததுகள். சிலபாணங்கள் யானைகளையெல்லாம் கண்டம்கண்டமாயறுத் தெறிந்ததுகள். சிலபாணங்கள் யமனைப்போலக் கண்டகண்ட ராக்ஷசர்களையெல்லாம் கொன்றதுகள். இந்த யுத்தத்திற்சாகின்ற ராக்ஷசர்களையெல்லாம் கணக்கிடலாமென்றுவந்த தேவர்கள் பொறிகலங்கி முடிவுகாணமாட்டாமல், ஒருவராலும் தடுக்கமுடியாத அஸ்திரவருஷங்கள் செய்கின்றசெய்கையை நினைத்து, லக்ஷ்மணருடைய வில்லினிடத்தில் தானே சப்தமேகங்களும் மழைவருஷிக்கக் கற்றுக்கொண்டதுகளென்று ஆச்சரியப்பட்டார்கள். லக்ஷ்மணர்விட்ட பாணங்களில் ஒவ்வொரு பாணம் யானைக் கூட்டங்களின் பந்திகளில் நுழைந்து, அந்தந்த வரிசை யானையின் தலைகளையெல்லாம் அறுத்துக் குப்பற் குப்பலாய்க்குவித்துவிட்டது. மேலும்மலைக்கு சமமாகவந்து சுற்றிக்கொண் டிருக்கின்ற கர்ஜ்ஜனையையுடைய அந்தந்த யானைவீரர்களோடு சேர்ந்துவந்திருக்கின்ற சேனைபராக மெவ்வளவுண்டோ? அவ்வளவு இளையபெருமாளுடைய பாணத்தொகைகள். அப்படிப்பட்ட பாணங்கள் தோற்றத்திற் பருத்த ஆகாரமுள்ளவைகளும், மாமிசங்களையேயுண்டு திரிகின்றவைகளும், பக்ஷிகளைப்போலச் சிறகுகளை விரித்துப்பறக்கின்றவைகளுமானதுகள். இப்படிப்பட்ட பாணங்கள் தேவர்களும் திகைத்துப்போகும் படிக்காணப்பட்டு, ஆகாசமுழுவதும் வெளியில்லாமல்மறைத்து, கழுகுப் பக்ஷியைப் போலச் செத்த ராக்ஷசப் பிணத்தின்மீது பற்றிப்படிந்து கொண்டிருந்ததுகள். இந்திரஜித்துவினால் மாண்ட வானரசேனைகள் முப்பத்தைந்து வெள்ளத்திற்கு மேலாக இரணக்களத்தில் விழுந்துகிடக்க, அதுகளை மலைபோன்ற தலைகளெல்லாம் அறுந்துமாண்ட வஞ்சகர்களான இராக்ஷசர்களுடைய தேகங்கள்மூடி மறைத்துக் கொண்டதுகள். இரக்தவெள்ளங்கள் அவைகளை முழுத்தியோடிச் சமுத்திரத்திற் போய் விழுந்ததுகள்.

இராக்ஷசர்களில் அநேகர் கையற்றார்கள். அநேகர் காலற்றார்கள். அநேகர் கழுத்தற்றார்கள். அநேகர் கவசமற்றார்கள். அநேகர் கவசம்பூண்ட மார்புமற்றார்கள். அநேகர் வயிறுகிழிந்து குடல்களற்றார்கள் அநேகர் ஓடிவந்த வேகமற்றார்கள். அநேகர் ஒருவரையொருவர் கூப்பிடவும் சக்தியற்றார்கள். அநேகர் கொண்டுவந்த மத்த யானைகளும்-தேர்களும்-குதிரைகளும் மற்றவைகளுமிழந்து, தாங்கள் மாத்திரம் தப்பிப்பிழைத்துப் புகலிடந்தேடி யோடிப் போனார்கள். இப்படி வற்றின கடலிலிருந்த மலையைப்போலத் தன்னைச் சூழ்ந்திருந்த எல்லாருமாளத் தான்மாத்திரமா யிருந்தஇராவணன் புத்திரனான இந்திரஜித்து அதிககோபத்தால் துடிதுடித்துப் புருவத்தைநெரித்து, தன்மனம்போல அதிவேகமா யோடும்படியான தேருடனே வந்து இளையபெருமாளை எதிர்த்தான். இதற்குள் ஆஞ்சநேயர் மூர்ச்சை தெளிந்து இளையபெருமாளை வந்துசேர்ந்து, ஸ்வாமி! அடியேன் தோளின்மீது தேவரீர் எழுந்தருள வேண்டுமென்றுபிரார்த்தித்தார். அம்மாத்திரத்திற் சிம்மம்போன்ற பலவந்தரான இளையபெருமாளும் அப்படியே யேறியருளினார். அதைக்கண்ட தேவர்களெல்லாம் பல்லாண்டுகூறினார்கள். உடனே யவ்விருவரும் காளியைப்போ லொத்தவைகளும், எமனைப்போல் கொல்லுகின்றவர்களும், அக்கினிக்குச் சமானமாகிய அதியுஷ்ண

முள்ளவைகளுமான பாணங்களை, ஒருவர் மேலொருவர் மேகத்தின்மீது வேறொரு மேகமெதிர்த்து மழையை வருஷித்தாற் போலப் பொழிந்தார்கள். இருவரும் தங்களுடைய வில்லில் இடியிடித்தாற்போலக்குணத்தொனி பண்ணினார்கள். அவைகள் அஷ்டதிக்குகளையும் செவிடுபடுத்தி விட்டதுகள். அஷ்ட குலாசலங்களும் பத்தல் பத்தலாய் வெடித்துப் பிளந்து விடுவதுபோ லானதுகள். ஆகாசம் பூமியெல்லாம் பொறிகள் யெழும்பியது. உலகமுழுவதும் அக்கினியைக் கக்கிக்கொண்டு ஒருவர்பாணங்களை ஒருவர் பாணங்கள் கூர்மையான வாயாற் கவ்விக் கடித்துக் கொண்டதுகள். ஒருவர்விட்ட அம்பை ஒருவர்விட்ட அம்பு அறுக்க மாட்டாமல், அக்கினிப்பொறிகளைச்சிதறி ஆகாசமார்க்கத்தில் வெந்துகரிந்து விழுந்ததுகள். அதைக்கண்ட தேவர்களு மனோதைரியங்குறைந்து ஏங்கிப்போனார்கள். உலகமெல்லாம் அதிர்ச்சியுற்றது. கடல் பொங்கி மேலெழும்பியது. அண்டமெல்லாம் கடல்கலங்கினது போலக் கலங்கியது. அப்போது சிம்ஹங்கள் பூட்டின இந்திரஜித்துவின்தேரும், இளையபெருமாளைத்தாங்கும் வாயுபுத்திரனாகிய அனுமானும், அனேகவிதமாகச் சாரிசுற்றவும், இலங்காபட்டணமுழுவதும்கிறுகிறென்று சுழன்றது. அக்கினி முகாஸ்திரங்கள் உலகங்களை எல்லா மூடிக்கொண்டதினாலே, இளையபெருமாளும், இத்திரஜித்துவும், இருக்கின்றார்களோ ? இல்லையோ? என்று தேவர்களும் அறியமாட்டாமற் போய்விட்டார்கள். தனுர்வேத சாஸ்திரமு நாண் பூட்டியவில்லைக் கையிலுடைய இவர்களது சாமர்த்தியமட்டே யல்லாமல், வேறொருவருடைய சாமர்த்தியத்தை எடுத்துக்காட்டி இந்தமட்டுக்குந்தா னென்று சொல்லக்கூடாததாயது. இவ்விரண்டு வீரர்களுடையபலத்தைக்கண்ட தேவர்களாதியோர் முடிவில் ஆகாயத்திலும் பெரியதாகுமென்றுசொல்லி, இவர்கள் வல்லமையான செய்கையைப் பார்க்கமுடியாதென்று காட்சிப்பிரமாணத்திற்கும் சந்தேகம் புகட்டினார்கள்.

இவ்விரண்டு பேர்களுடைய செய்கைகளையும் பார்த்த கற்பகப்பூமாலையுள்ள கிரீடங்களைத்தரித்த இந்திராதி தேவர்களெல்லாம் ஒன்றாகக்கூடி, இவர்கள் இப்போது என்னசெய்தார்கள் ? முன்னென்ன செய்தார்கள் ? என்றொருவரையொருவர் வினவுவார்கள். அன்றியும் தங்களிலிப்படிமுன் யுத்தஞ் செய்தவர்கள் யாரென்று கேட்பார்கள். முன்னே இப்படி யுத்தஞ்செய்தவர்களுமுண்டோ ? இனிமேலும் இப்படி யுத்தஞ்செய்யப்போகிறவர்களும் இருக்கின்றனரோ ? இப்படி யுத்தத்திற் பயங்கரத்தை உண்டாக்குகின்ற இன்னவீரர் இன்ன திசையி லிருக்கின்றார்களென்று தெரியவில்லையே ! என்று மனம் திகைத்தார்கள். இப்படி அவர்கள்செய்கிற ஒருசெய்கையை யாவது எந்தத்தேவர்களும் உணர்ந்தவர்களல்லர். இப்பால் வக்கிரதந்தங்களையுடைய இந்திரஜித்து ஆயிரகோடி பாணங்களைப் பிரயோகித்தான். இளையபெருமாளும்ஆயிரகோடி பாணங்களைத்தொடுத்து அதுகளையறுத்துத் தள்ளினார். இந்திரஜித்து ஆயிரகோடி நாகபாணத்தை எய்தான். இலக்ஷமணர் ஆயிரகோடி நாகபாணங்களால் அதுகளையும் அறுத்தெறிந்தார். இந்திரஜித்து கூட்டங்கூட்டமாகக் கோடிகோடி அம்புகளைத் தொடுத்தான். ஸ்ரீராமசகோதரரும் கூட்டங்கூட்டமாகக் கோடிகோடி அம்புகளைவிட்டு அதுகளைக் கொய்துவிட்டார். இராவணபுத்திரன் மறுபடியும் ஒரு கோடிகோடி வாளிகளை அதிககோபத்துடனே ஏவினான். வீரசிகாமணியாகியஇளையபெருமாளும் மறுபடியும் ஒருகோடி கோடி வாளிகளைக்கொண்டு அதுகளைத் தடுத்து விட்டார். இந்திரஜித்து கோடி கங்கபத்திரக்கணைகளைப் பிரயோகித்துவிட்டான். இளையபெருமாளும் கோடி கங்கபத்திரக் கணைகளைக்கொண்டு அதுகளைத்துண்டாக்கிவிட்டார்.

இலட்சுமணர் கோடி அர்த்தசந்திர பாணங்களைப்பொறுக்கிப் பிரயோகித்தார். இந்திரஜித்துவும் கோடி அர்த்தசந்திரபாணங்களினால் அதுகளை நீக்கிவிட்டு, மீட்டும் கோரைத்தலை யம்புகளைக் கோடிகோடியாகத் தொடுத்தான். தசரத குமாரரும் அவ்வித கோரைத்தலை அம்புகள் கோடி கோடியெய்து அதுகளைத் துண்டாக்கி வெட்டிவிட்டு, மீட்டும் கோடி மொட்டம்புகளை அனேகம் தடவைகளாகப் பிரயோ

கித்து நிறைத்துவிட்டார். இந்திரசித்தும் கோடி மொட்டம்புகளை யாவருங்கண்டு பயப்படும்படி எய்து, கமலமுகப்பாணங்களை அரைக்ஷணத்துக்குள்ளாக அடுக்கடுக்காய்ப் பிரயோகித்துச் சிம்ஹநாதம் பண்ணினான். அரவிந்த லோசனராகிய ஸ்ரீராமமூர்த்தியின் திருத்தம்பியாரும்கமலமுகப் பாணங்களை அரைக்ஷணத்திற்குள்ளாக அனேகமாகப் பிரயோகித்து, அவன் விட்டவைகளையெல்லாம் அடித்து நொறுக்கி உதிர்த்து விட்டார்.

இப்பால் வளைந்த பல்லுடையவனை இந்திரசித்துகோடி வஜ்ரமுகாஸ்திரத்தை ஏவினான். பரிசுத்தராகிய இளையபெருமாளும் கோடிவஜ்ஜிர முகாஸ்திரத்தை ஏவி அவைகளையெல்லாநொறுக்கிவிட்டு,கோடி திரிமுகாஸ்திரங்களை வேகமாய்ப் பிரயோகித்து விட்டார். அதிகபலாட்டியனை இந்திரசித்தும் கோடி திரிமுகாஸ்திரத்தை விட்டு அதுகளையெல்லாம் தடுத்துவிட்டு, ஐந்துகோடி அஞ்சலியாஸ்திரங்களைப்பிரயோகித்து வீரகர்ஜ்ஜனை செய்தான், இளையபெருமாளும்ஐந்துகோடி அஞ்சலியாஸ்திரத்தைப் பிரயோகித்துவிட்டு, கோடிகஜகர்ணாஸ்திரத்தை வில்லிற்பூட்டிப் பிரயோகித்தார். இந்திரசித்துவும் கோடி கஜகர்ணாஸ்திரத்தைத்தொடுத்து அதுகளையெல்லாம் அடித்து விட்டான். இந்தப்பிரகாரமாக இந்திரசித்துவும் இளையபெருமாளுமாக ஒருவரெய்யவும், அந்தப்பாணங்களை ஒருவர்கொய்யவும், உலகமெல்லாம் அம்புக்காடுகளாய் விட்டதுகள். சப்திக்கின்ற சமுத்திரமும் அவர்கள்விட்ட அம்புகள் சொரிகின்ற நெருப்புப்பொறிகளாலே நீர் வற்றிப்போய்விட்டது. இரண்டு வீரர்களுக்குமுண்ட கோபமானது தங்கள் தங்கள் கைத்தொழிலை ஒருவருக்கொருவர் காண்பிக்கும் தோறு மேலும் மேலும் அதிகரித்ததேயல்லாமல், கொஞ்சமாவதுதணியவில்லை. இப்படிப் போர்செய்யும்போது இந்திரசித்துவானவன் அனுமான் வீழிப்பழம்போலத் தேகங்கிழிந்து மூர்ச்சையடையவும்படியாக அவருடைய உருண்ட உருக்குத்தடிபோன்ற தோளின்மீது ஆயிரம்பாணங்களைத்தூவி, உகாந்தகால மேகமானது இடிகளைக்கக்கினதுபோல ஆயிரத்துநானூறு பாணங்களாலே இலக்ஷ்மணருடைய மார்பின் கவசத்தைப்பிளந்தான்.

அதைக்கண்ட தேவர்களெல்லாம்இந்திரசித்து கைமுந்தி விட்டானென்று தங்கள் முகம்வாடி, கல்மலையிலிருந்து அருவியாரூடுவதுபோல இளையபெருமாளுடைய அழகிய திருத்தோளில் நின்று மிரத்தவெள்ள மொழுகுவதைக் கண்டு துக்கித்தார்கள். வைதிகமார்க்கா நு சாரிகளாகிய முனிவர்களும், பெரியோர்களும், இந்த ராக்ஷசனே வில்வீரர்களிற் சிரேஷ்டமானனென்று பயந்து நடுங்கினார்கள். அப்போது சகலசாஸ்திரங்களையும் கற்றறிந்த இலட்சுமணர் அதிககோபம் கொண்டு, கையிலுள்ள வில்லிற் பதினாயிரபாணங்களைப் பிரயோகித்து, க்ஷணப்பொழுதில் அவன்தேரிற் பூட்டியிருந்த பிடர்மயிரையுடைய சிம்ஹங்களையெல்லாம் வேறுவேறாய்க்கூறிட்டு, அதில் நாட்டியிருந்த பிருதுக்கொடியையும் சாரதியையும் அறுத்துத்தள்ளி, அதிககோரமான பதினாயிரம் அம்புகளையேவி அந்த இந்திரஜித்து அணிந்திருந்த கவசத்தைச்சின்னாபின்னப் படுத்திவிட்டார். இவ்வாறிளையபெருமாளுடைய பாணங்கள் காளமேகத்திற் சூரிய கிரணங்கள் பிரகாசிக்கிறதுபோல விளங்கும் கவசத்திற்பட்ட மாத்திரத்தில் அவ்விந்திரஜித்துவின் தோளின்மீதும் மார்பின்மீதும் பொருந்தியிருக்கின்ற அந்தக்கவசத்தைச் சுற்றிலும் நீளநீளமாகப் பவளக்கொடிகளை ஏறிப்படர்ந்ததுபோல, அம்புகள்தைத்த வாய்களிலெல்லாம் இரத்தம் தாரைதாரையாய் ஒழுகிவடிந்தது. அப்போது இந்திரஜித்துவானவன் பொன்மயமான பெரியதேரிற்பூட்டிய சிம்ஹங்கள் மாண்டபோதும், பிரகாசிக்கின்ற வெற்றிக்கொடியுடனே சாரதியுமறுந்து வீழ்ந்த காலத்திலும், தன்னுடையமார்பிற்பாணங்கள் தங்குதடையில்லாமல் உருவினவேளையிலும், இன்னகாரிய நடந்ததென்று அறியாதவனாகி ஒருவார்த்தை சொல்லுகிறான். இந்த லட்சுமணனே! நாராகவேண்டும். அந்தராமனே நாராயணனாக வேண்டும். இவன் நரனல்லாவிட்டால், அந்த ஸ்ரீராமன் நாராயணன் அல்லனென்று சொல்லலாம். இப்படி யிவர்களல்லாவிட்டால்இவனைச் சிவனென்றும், அந்த ஸ்ரீராமனைப்

பிரம்மாவென்றுயாவது சொல்லலாம். இவர்களுமல்லாவிட்டால்இவ்வுலகத்தில்இராஜவமிசத்திற்பிறந்துவாழ்கிறவர்களுக்குள், தனுர் வித்தியா சாமர்த்தியத்தில் இந்த மனிதர்களுக்கொப்பாகவேறே அரசர்களுமிருக்கின்றார்களா? என்று வாயில் நெருப்பைக்கக்கிக்கொண்டு, தேகமுழுவதும்இரத்தம்வடிய எரிகிற நெருப்பில் நெய்வார்த்ததுபோலக் கோபமதிகரித்து, உயிர்போனாலும் உடலோயாதவனாகி, அதிசீக்கிரமாய் ஒரிமைப்பொழுதுக்குள்ளே ஆயிரம் குதிரைகள் கட்டிய வேறொரு தேரிலேறி, திக்கு திக்குகளெல்லாம் பாணத்தொனிகள் நிறையவும்,உருத்திரமூர்த்தியும்உடல் நடுங்கவும், ஆயிரகோடி திவ்விய பாணங்களைப் பிரயோகித்து ஆகாசமெல்லாம் வெளியில்லாமல் மறைத்துவிட்டான்.

உடனே இளையபெருமாளும் ஆயிர பாணங்களைப் பத்தி பத்தியாய்ச் சித்திர விசித்திரமாகப் பிரயோகித்து, அந்தந்தப் பாணங்களைச் சின்னாபின்னஞ்செய்து, ராவணபுத்திரனாகியஇந்திரஜித்துவின்மேலும் ஆயிரபாணங்களைப் பிரயோகித்தார். அவ்வாயிர பாணங்களும்வந்து தைத்தவுடனே அதிதுஷ்டனான இந்திரஜித்துவுக்கு அக்கினியில் நெய்சொரிந்ததுக் கொப்பாகப் பொறுக்கமுடியாத கோபமூண்டு, அதிவீர சிரேஷ்டரான இளையபெருமாள் சென்னியின்மீது நூறுபாணங்களைப் பிரயோகித்தான். இளையபெருமாள்தமது நெற்றிமேல் அந்த நூறுபாணங்கள்வந்து தைத்தகாலத்திலும் கொஞ்சமும் ஆயாசப்படாமல், அந்தத்துஷ்டன் மார்பினிடத்தில் அதிகுரூரமான நூறுபாணங்களைச் செலுத்தினார். அப்பாணங்கள்பட்டு உதிரமொழுகுவதற்குள்ளாக இரத்தினங்கள் இழைத்த பொற்சக்கரம் அச்சோடு முறிந்துபோகவும், ஆயிரம்குதிரைகளும் சின்னாபின்னப்பட்டுப்போகவும், கொல்லுகின்ற வேறொருயமனைப்போல வாயுபுத்திரனான ஆஞ்சநேயர் ஒரு உதையுதைத்து அவன் தேரை நொறுக்கிவிட்டார்.

இந்திரசித்து மறுபடியும் ஆயிரம் பேய்களைப்பூட்டியதும்இரத்தினங்களிழைத்ததுமான வேறொரு தேரின்மேல் ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளேஏறினான். அதையும் இளையபெருமாள் தமது கையிலுள்ள ஐம்பது பாணத்தாற்சிதைத்துத்தள்ளினார். இப்படி இந்திரஜித்து தேரேறுகிறதும், இளையபெருமாள் அதைச்சிதைக்கிறதுமேயல்லாமல், அவன் வேறேயுத்தம் செய்யவேயில்லை. இளையபெருமாள் இந்தப்பிரகாரமாக அறுநூறு பாணங்களால் அவனுடைய ஆயிரம் தேரையும் ஒருநாழிகைக்குள் சின்னாபின்னம்பண்ணித் தகர்த்துப் போட்டார். இதைக்கண்ட தேவர்களெல்லாம் பல்லாண்டுபாடி ஆனந்த கர்ஜ்ஜனை செய்து, கற்பகப்புஷ்பங்களை வாரிவாரியிறைத்து, சுமித்திரை இளஞ்சிங்கமாகிய ராமாநுஜரை வணங்கி, இதற்குமுன் ஊசலாடிக் கொண்டிருந்த மனமுங்களித்து, மேலுத்தரீயத்தையும் விசிறியெறிந்து ஆனந்தத்தாண்டவம் செய்தார்கள்.

அந்தச்சமயத்தில் பத்துலக்ஷம் ராக்ஷசர்கள் இந்திரஜித்துவுக்குத் துணையாகவந்து, லக்ஷ்மணருடனே போர்செய்யும்படியாக எக்களிப்புடனொன்றாய்க்கூடி முந்தியெதிர்த்து, சிவந்த முகத்தையும் கறுத்த மேனியையுமுடைய தேர்வீரரும் - குதிரை வீரரும் - யானைவீரருமாகிய இவர்களோடு மேகம்போலக் கர்ச்சிக்கின்ற வீரகண்டாமணியைத்தரித்த பதாதிவீரர்களும் பூமியாகாசமெல்லாம் அளாவும்படியாக ஒருவரை ஒருவர் பேரிட்டழைத்து, சாக்கிரதை சாக்கிரதையென்று எச்சரிக்கைபண்ணிப் பேரிமுழக்கத்துக் கொப்பாகப் பேசிக்கொண்டு வந்தார்கள். பார்த்த பார்த்த திக்குகளிலெல்லாம் சப்தமேகங்களுங்கவிந்த ஆகாசமாய்த்தோன்றும்படி நிறைந்த அவர்கள்கூட்டத்தின் ஓசையும், அஸ்திரசஸ்திரங்கள் ஒன்றுடனொன்றுபட்டு சப்திக்கின்ற சப்தமும் ஒன்றாகக்கூடி; சுவர்க்கலோகத்தையும் செவிடுபடுத்திவிட்டன. அவர்களதுசேனைகளில் ஆளிகள் சப்தித்ததுகள். சிம்ஹங்கள் கர்ச்சித்ததுகள். பேய்கள் கூவினதுகள். யானைகள் வீறிட்டதுகள். அதிரதர்-மகாரதர்-சமரதர்-அர்த்தரதர்-என்னுநால் வகைரதிகரும் தங்கள் தங்கள் சேனைகளோடு நெருங்கி எய்தபடியால், பாணங்கள் எங்கும் நிறைந்ததுகள். இவ்வளவு சேனைகள் வந்தும் ரணக்களமெல்லாம் பிணமயமாயிருப்பதினால் சேனாபாகமெழும்பவேயில்லை. அவர்கள் கொண்டுவந்த தும்சிம்ஹங்கள்பூட்டித்தாவுகின்றதுமான

தேரின்மீது இந்திரனை ஜெயம்பெற்றவனை மேகநாதனேறிச் சரமாரியாக வருஷித்துத் திக்கு திக்குகளெல்லாம் நிறைத்துவிட்டான். அந்திவானம்போலச் சொர்னமயமான திருமேனியையுடைய இளையபெருமாள் அவைகளையெல்லாம் தும்சமாக்கிப் போட்டார். பின்னும் அவருடைய பாணங்கள் பட்டு, முன்னம் அவ்விந்திரஜித்துவுக்குத் துணையாய்ச் சூழ்ந்துவந்த ராக்ஷசர்கள் வீசுகின்றவைகளும் எய்கின்றவைகளும் எறிகின்றவைகளும், உதிர்ந்து பொடிப் பொடியாய்ப் போய்விட்டதுகள். ஆயிரந்தலைகள் ஒவ்வொருபாணத்தினாலே உருண்டுகிடந்ததுகள். குடல்கள்பாம்பைப் போற்கிடந்ததுகள். பலம்பொருந்திய மதயானைகள் குன்றுகள்போற் கிடந்ததுகள். தேர்களெல்லாம் சின்னாபின்னப்பட்டுச்சிதறிப் போய்விட்டதுகள். பலவகையான ஆயுதங்கள் மேடிட்டுக் கிடந்ததுகள்.

அவ்வாயுதங்களையுடையவீரர்கள் கருங்கடல்போல் ரணக்களத்திற் கிடந்தார்கள். குண்டலங்களும், முத்தாரங்களும், பூமாலைகளும், கண்டசரங்களும், வீரக்கழல்களும், மெய்க்கவசங்களும், சண்டமாருதக் காற்றடித்தபோது மேகங்களில் நின்று மின்னல்கள் வீழ்ந்ததுபோல, லக்ஷ்மணருடைய பாணங்கள்பட்டு வீழ்ந்ததுகள். இந்திரசித்துயெய்த பாணங்களை இளையபெருமாள் தமது அம்புகளாலே நாசமாக்கிவிட்டு, தம்மோடெதிர்த்துப் போர்செய்கின்ற தண்டகர்களாகிய இராக்ஷசர்களுடைய தலைக்குப்பல்களென்னுமலைகளை யமனுக்கும் இரக்கம்தோன்றும்படியாகக் குவித்தார். அப்போதிந்தவில்வீராகிய இளையபெருமாள் ஆரோகணித்திருந்த இராக்ஷதர்களுக்கு இயமனுக்கொப்பாகிய ஆஞ்சநேயர் தம்முடையவாலால் சில ராக்ஷதர்களைச்சுற்றிக்கட்டிவாரித்தூவுவார். சிலரைக் கால்களால் மிதிப்பார், சிலரை நெட்டித்தள்ளுவார். சிலரை ஆகாசத்திலெடுத்து எறிவார். சிலரை எதிரேபோய்அறைவார். சிலரைக்காலாலெட்டியுதைப்பார். இப்படியெல்லாம் செய்தும் இளையபெருமாளேறியருளிய மத்தகஜம்போன்ற அவ்வநுமானானவர் கோபமடங்காமற் பின்னும் வீரகர்ஜ்ஜனைசெய்து, சிலர் பிராணபீதியடையும்படி உறுமிப்பார்ப்பார். சிலர் கைகால் விதிர்த்துப் பிராண நீங்கும்படிக் கோபிப்பார். சமுத்திரத்தை யானைகளால் தூர்த்துவிடுவார். இரண்டுதோளையும் கொட்டி நின்று அட்டகாசம் செய்வார். ஆயிரந்தேர்களைத் தமது உள்ளங்கையாற் பற்றியிழுப்பார். பின்னும் வீரசிகாமணியாகிய இளையபெருமாள் விருப்பங்கொண்டேறின ஆண் சிம்ஹத்துக்கொப்பாகிய அந்த வாயுபுத்திரர், குதிரைகளையும் யானைகளையும் ஆயுதங்களை பிடித்திருக்கிற ராக்ஷசவீரர்களையும் புஷ்பத்தைப்போலவும், ஜலத்தைப்போலவும், அலங்காரமான தளிரைப்போலவும் வாரி வாரித் தூவுவார். சில சேனைகளை அள்ளி உள்ளங்கையில்வைத்து நசுக்கி வருத்தப்படுத்துவார்.

அந்தச் சமயத்தில் தேவாமிர்த முண்டாகும்படி கடைந்தகாலத்திற்பிறந்த விஷத்தைப்பானம்பண்ணின கைலாசபதியானவர் திரும்பிவந்ததுபோல் அந்தந்த இடங்களில் மூர்ச்சையாய் வீழ்ந்துகிடந்த சுக்ரீவமகாராஜன்-அங்கதன்-நீலன்-இவர்கள் முதலிய சத்துரு சம்ஹாரர்களான பலாட்டியர்கள் மூர்ச்சைதெளிந்து சுற்றுமுற்றும் பார்த்து, இளையபெருமாள் யுத்தத்தில் நிற்கிறதைக்கண்டு, நாமிருந்தும் இவரைச் சண்டைக்குவிடத் தகுமாவென்று நெருப்புப்பறக்கக்கோபித்து, அதிக உக்கிரமாகப் புறப்பட்டுவந்து இலக்ஷ்மணரைச்சேர்ந்து கொண்டு, மாறிமாறி மலைகளையும் மரங்களையும் நூறும் ஆயிரமுமாகப் பறித்தெறிந்து இராக்ஷசசேனைகளை அரைத்துக்கொல்லத் தலைப்பட்டார்கள். இப்படி அவர்கள் அநேகஜாதிகளான மரங்களையும் மலைகளையும் பகைவர்மேற் செலுத்தும்படிப் பறித்துச் சுமந்துபோய் வீசியெறிந்தபோது, அது பட்ட ராக்ஷசர்களுடைய தேர்களெல்லாம் கடைச்சற்றொழிலைச் செய்கின்ற கம்மாளர்களுடைய பட்டடைச் சக்கரம்போலச் சுழன்றதுகள். அப்போது வாலிபுத்திரனாகிய அங்கதப்பெருமான் ஒரு மலையைப்பிடுங்கித் தேர்மேல்வந்த இந்திரஜித்துவைப் பார்த்து, அடா துஷ்டா! தப்பித்துக் கொள்! இதுதான் உன்னுடைய உயிரை வந்து குடிக்கப்போகின்றது. என்று சொல்லி ஆகாசபரியந்தம் அளாவும்படி நெருப்புப்பறக்கவீசியெறிந்தான். அப்படியெறிந்த அம்மலையானது அனியாயஞ்செய்த

ராவணனுடைய சீரை யழித்துவிட்டது போல, தேவர்களுடைய சுவர்க்கலோகத்தை நாசப்படுத்தின உயர்ந்த தோள்வல்லமையையுடையஇந்திரஜித்துவின்தேரை ஓரிமைப் பொழுதுக்குள்ளாகச் சிதைத்து அழுத்திவிட்டுப் போயினது. அப்போது தேவர்களெல்லாம்அதைக்கண்டுபெருமையுடன்வந்து, எங்கள் கண்மணியாகிய அங்கதன் தன்பாட்டன் இந்தத் துராத்துமாவினது கையிற்பட்ட பழியை நீக்கிவிட்டானென்கிற சந்தோஷத்தால் ஆர்ப்பரித்துக் கூத்தாடினார்கள்.

அக்கால் இந்திரஜித்து அழிந்த தேரைவிட்டு ஆகாசத்திலெழும்பி, க்ஷணநேரத்திற்குள் வேறொருரதமேறி, ஓ அங்கதா! போய்விடாதே? நில்லு! நில்லு! என்று சொல்லிக் கையிலுள்ள பாணங்களை மழைபோல் வருஷித்து, அதிககோபத்துடனே எதிரே நின்று, உன்னுயிரை என்பாணங்கட்கு ஆகாரமாகக் கொடுத்துவிட்டுப் போடாவென்று சொன்னான். அப்படிச் சொன்ன இந்திரஜித்துவென்பவனை மற்ற வானரவீரர்களெல்லாம் வந்து சூழ்ந்து வரிசைவரிசையாகப் போர்செய்யத் தொடங்கி, விருக்ஷங்களையும்-கற்களையும் - இறந்த ராக்ஷதர்களுடைய தலைகளையும் - தேர்களையும் - குதிரைகளையும் - பலம்பொருந்திய யானைத்துதிக்கைகளையும் - அம்புகளையும் - வாரிவாரி, அவ்விந்திரஜித்துவின் பாணவேகமும் பின்னிடும்படிவீசி எதிர்த்தார்கள். அந்தச்சமயத்தில் ஸ்ரீசர்வேஸ்வரனாகிய ஸ்ரீராமபிரானுடைய கைங்கரிய விஷயத்திலீடுபட்டுத் தமது இராச்சியத்தையும் வாழ்வையும் நித்திரையையும் நீக்கின மகானுபாவராகிய லக்ஷ்மணப் பெருமாள், ஆயிரமாயிரங்கணக்காக வஞ்சனையுள்ள ராக்ஷசர்களுடைய உயிர்களைத்தேவர்கள் நினைவிற்கு மெட்டாததற்கு முன்னே போக்கிவிட்டார். இப்படித் தன்னோடு வந்ததும் பின்னர் தனக்குத் துணையாகவந்ததுமாகிய சேனைகளில் அளவற்ற மதத்தயானைகளும் பெரிய தேர்களும் தன்னுயிர்க்குச் சமானமாகிய இராக்ஷசக் காலாட்படைகளும், வாயுவேகத்திலு மிஞ்சிப்பாய்கின்ற பலஜாதிக்குதிரைகளும் மாண்டுபோன விதத்தை இந்திரஜித்து நினைத்து வெற்றியிழந்து, அக்கினியைப்போலக்கொதித்து, தன் தேரின்சக்கரப்பக்கத்தினின்று அந்தத்தேரைக்காத்துக்கொண்டிருந்த மகாபாரிசுவன் - தூமாட்சன் - என்கிற இரண்டுபேரோடும் பெருஞ்சேனையோடும் இரணக்களத்துக்கு வந்து, அந்த ரத்தவெள்ளத்தில் நின்றும் தன்தேரைச்செலுத்தமாட்டாதவனாகிவாய் பேசாமல் மரம்போல் நின்றான்.

அக்கால் ஆகாசத்திற் பரவியிருக்கின்ற கருமேகங்களையொத்த இருளையோட்டவல்லதும் அவ்வாகாசத்திற்றானே பறக்கவல்லதுமான தனதுதேர், தனக்குத் தானேசெல்லமாட்டாமலும் அந்தப் பிணமலைகளைத் தாண்டமாட்டாமலும் போய்விட்டது. அப்போது இந்திரஜித்து தன் பக்கத்திலிருக்கின்ற அவ்விரண்டுபேர்களுடைய முகங்களை யுற்றுப்பார்த்து, ஓ சக்கரரக்ஷகர்களே! பார்த்தீர்களா! ஒரு வில்லையுடையவன் மகாவீரர்களான நம்முடைய நாற்பதுவெள்ளம் சைனியங்களோடு பின்னர் துணையாகவந்த பத்துலக்ஷம் சேனைகளையும் கொன்றுவிட்டு, இன்னும் பூசினசாந்தழியாமல் நிற்கின்றவித மென்னவென்று கேட்டான். அதைக்கேட்ட அவ்விரண்டுவீரர்கள் அவனைப்பார்த்து, ஐயா இந்திரஜித்துவே! அதைரியப்படாதேயும்; நீரும் அப்படியே வானரர்களில் அத்தனைத்தொகைச்சேனைகள் அழியும்படியாகக் கொடிய பாணவருஷங்களைப் பிரயோகஞ் செய்துதானிருக்கிறீர். உமது சண்டையும் அதற்கொப்பாகுமென்று தைரியம் சொன்னார்கள். அப்போது ஆஞ்சநேயர்மீது ஆரோகணித்தருளிய அந்திபோன்ற சுவர்னச் சாயையையுடைய இளையபெருமாள், இந்திரஜித்துவுக் கெதிரேவந்து பத்து லக்ஷபாணங்களைப் பிரயோகித்தார். அவைகளை யெல்லாம் அவனவ்வளவு பாணங்களைப் பிரயோகித்து வரிசையா யெல்லாவற்றையும் படுசூரணப்படுத்தி, பின்னும்நூறு ஆயிரமுமாகப் பாணங்களைச்செலுத்தி எதிர்த்த வானரவீரர்களையெல்லாம் மூர்ச்சையாக்கிச் சிலரைப் பூமியில்வீழச்செய்தான். அப்போது சூரியகுமாரன் முதலான வானரவீரர்களெல்லாம் இரத்தப் பிரவாகத்தில்மூர்ச்சித்துவிழுந்தொதுங்கினதை ஸ்ரீ கோதண்டதீக்ஷா குருவின் திருத்தம்பியாகிய இளையபெருமாள் கண்டு, எதிரிலிருந்த ராவணியென்கிற ராவணகுமாரனை லக்ஷி

யப்படுத்தி, மூங்கிற்காடெரிகிறதுபோல அவன் மேனியெல்லாம் இரத்தமயமாகும்படி கொடுமையான பாணங்களைத் தூவிவிட்டார். அந்தப்பாணங்கள் பட்டமாத்திரத்தில் இந்திரஜித்து அதிகவருத்தமடைந்தான். அவனுடனிருந்த மகாபாரிசுவனும் தூமாக்ஷனும் நடுக்கங்கொண்டார்கள். அளவில்லாத ராக்ஷச சேனைகளெல்லாம் மடிந்ததுகள்.

இந்தப் பிரகாரமாக லக்ஷ்மணருடைய சரவருஷங்களால் அளவற்ற தேர்களும் - யானைகளும்-குதிரைகளும் - பதாதிகளுமாண்டு ரணக்களத்திற் கிடப்ப, அவைகளை அந்த மகாபாரிசுவனும் - தூமாட்சனும்-பார்த்துக்கொண் டிருந்தார்கள். மற்றுமுள்ளராக்ஷசர்களில்ஒருவராவது அந்த ரணக்களத்தில் நில்லாமல் உயிர்தப்பிப்போய் ஓடிவிட்டார்கள். அப்படி ஓடிப்போன ராக்ஷசர்களில் சிலர் நாவுலர்ந்து தண்ணீரையுண் ணுமாசையா லதைத்தேடினவர்களாய்த் தங்களுக் கெதிர்ப்பட்ட மேகங்களைப்பிழிந்து குடித்து, உடலிலுள்ள புண்களில்ரத்தம் பெருவாரியா யொழுகி ரணவலிகொண்டு கீழேவிழுந்துமாண்டார்கள். சிலர்மாத்திரம் தோற்றேடினார்கள். சிலர் தேகமெல்லாம் பாணங்களாற் சல்லடைக்கண்களாய்த் தொளைபட்டு வழியிற் சாகாமல் பெண்சாதிமார்களைக் கூவிக்கொண்டு போக, அவர்களுமிவர்களைக்கண்டு தங்கள் செம்பட்டமயிர் விழுந்துசோரக் கதறிக்கொண்டுவந்து, இருவரும் கற்பகப் புஷ்பங்கள் பரப்பிய படுக்கையைச்சேர்ந்து ஒருவரையொருவர் கட்டிக்கொண்டபடியே இருவரும் பிராணன் நீங்கினார்கள். சிலர் அம்புகள் தைத்த மார்புடனே தங்கள் சொந்தக் கிரஹங்களைச் சேர்ந்து, தங்களை வந்து காலைக்கட்டித் தடுத்துக்கொண்ட பிள்ளைகளைப் பார்த்து, இவர்களை நீங்கள் காப்பாற்றுங்களென்று அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் முதலாகிய சுற்றத்தாருக்குச்சொல்லி, அந்தப் பிள்ளைகளைக் கனிவாய்ப் பார்த்ததன்றி பக்கத்தில் நிற்கின்ற யமனையும் பார்த்துத் தங்களுயிரை நீக்கினார்கள். சிலர் பெண்சாதி பிள்ளை தாய் தந்தைமுதலிய தங்கள் பந்துக்களைப் பார்த்து, எங்கள் உடலின் புண்களைப்பார்த்தீர்களா? செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீதசரதநந்தனர் திருத்தம்பியாருடைய சாமர்த்திய மிப்படிப்பட்டதாயிருக்கின்றபடியினாலே, இந்த லங்கா பட்டணம் அரைக்ஷணத்துக்குள்ளாக வெந்துபோய்விடும். இந்திரஜித்து மரணமடைகிறதற்குள்ளே நீங்களெல்லாரும் பெரு விருக்ஷங்களுள்ள காடுகள் மலைகள் முதலான விடங்களிற் போய் பிராணன் பிழைக்கும்படிச் சீக்கிரமாய்ப் புறப்பட்டுப் போயொளித்துக் கொள்ளுங்கள். என்று புத்திசொல்லிவிட்டுப் பிராணனைவிட்டார்கள். அன்றியும் மலையையொத்த கடினமானதேகத்தின் மருமஸ்தானத்தில் ஸ்வாமியின்பாண மிரத்தபாணம்பண்ணிப் பொத்துக்கொண்டி ருக்கும்படிப் போன சில ராக்ஷசர்கள் இந்தப் பாணத்தைப் பிடுங்கினால் பிராணன் போய்விடுமென்று பிரை கலந்த பாலைப்போல மனம்பேதலித்து, மந்தாதி காரிகளாகிய மற்றவர்களுக்குச் சொல்லத்தகாத திருமந்திரோபதேசத்தைப்பெற்ற பிரபன்னர்களைப்போலத் தங்களுக்குள்ளேயே பெருமூச்சுவிட்டு வருத்தப்பட்டுக்கொண்டு மௌனமா யிருந்துவிட்டார்கள். சில சில ராக்ஷசர்கள் தேர் மீதும்போகார். குதிரைமீதும் போகார். சிவந்த கண்களையுடைய மேகம்போன்ற யானைமீதும் போகார். காற்றைப்போற் கடுவேகங்கொண்டு தங்கள் காலாலுமோடமாட்டார்கள். தங்களை ஊருக்குள் நுழையவொட்டாமற் காவலிட்டிருக்கிற படியால் வெட்கமுற்று இலங்கைக்குள்ளும்போகார்கள். உயிரின்மே லிருக்கிற ஆசையால் அந்த ரணக்களத்திலும் திரியமாட்டார்கள். இப்படி நடுநடுங்கித் திக்குமயங்கி, அவ்வவர்களும் கண்டவிடங்களில் ஓடிப் போய்விட்டார்கள்.

அப்போது இந்திரஜித்து தனக்கு நேரிட்ட வருத்தத்தை நினைத்து, இந்த லக்ஷ்மணனை இப்போதே கொன்றுவிடுகிறேனென்று அதிக கோபத்துடனே அநேக பாணங்களை வருஷித்தான். அதைக் கண்டு பாணவருஷங்களைப் பொழிகின்ற பொன்னிற மேகத்துக் கொப்பான இளைய பெருமாள் யமனுக்குச் சமானமாகிய சில பாணங்களினாலே அவன் மார்பிலணிந்திருந்த மற்றொரு கவசத்தையும் சின்னபின்னப்படுத்திக் கிழித்துத் தள்ளிவிட்டார்.

அப்போது மஹாபாரிசுவனும் தூமாட்சனுமாகிய இரண்டு தேர்வீரர்கள், அனுமான்மீதும், இளையபெருமாளுடைய மார்பின்மேலும், அவருடைய தோளின்மேலும், லக்ஷியம்வைத்து அநேக பாணங்களைத் தூவினார்கள். அவர்களப்பாணங்களையெய்தவுடனே லக்ஷ்மணர் அந்த இரண்டு பேர்களுடைய வாகைமாலை சூடின வில்லுகளையும், அச்சுப் பூட்டின தேர்களையும், அந்தத் தேரைச் செலுத்துகிற சாரதிகளுயிரையும், குதிரையின் பிராணனையும் தும்சப்படுத்திவிட்டார். அக்கால் வில்லிழந்த அவ்விரண்டு வீரர்களும் இரண்டு வஜ்ரதண்டங்களைக் கையிற் பிடித்துக்கொண்டு, இடிகள் வருவதுபோல ஓடிவந்து ஆஞ்சநேயரைக் கிட்டிக் கண்களில் அக்கினிப் பொறிபறக்க மோதி யடித்தார்கள். அப்படி யடித்தவுடனே ஆஞ்சனேயரானவர் தம்முடைய மிகுந்த பலம்பொருந்திய கைகளால் அவ்விரண்டு முசலங்களையும் பறித்துக் கொண்டார். அந்தத் தண்டங்கள் அவர் கையிற் சிக்கிக்கொண்டதை அந்தத் துஷ்டர்கள் பார்த்து இனிநாம் செய்வதொன்று மில்லை. இனி அவன் நம்மையடித்துக் கொன்றுவிடுவான். என்று பயந்து தாங்களிதுவரையிலு மிராவணனிடத்திலுண்ட செஞ்சேற்றுக் கடனையும் பாராமல், தங்களுயிரையே பெரிதென்று கருதி, அதற்கே வுதவிசெய்ய அந்தக்ஷணமே ஓடிப்போனார்கள்.

அந்தச் சமயத்தில் அங்கதகுமாரன் - குமுதன்- நீலன்-சாம்பவன் - சுக்கிரீவ மகாராஜன்-மயிந்தன்-துமிந்தன்-சதவலி - பனசன் - இவாள் முதலான இராஜசிம்ஹங்களுக்கொப்பான வீரர்களெல்லாம், குளிர்ந்த தென்றற்காற் றடிக்கிறதினாலும் ஆயுளுக்கு முடிவில்லாமையாலும் - இயமன் வந்து அவர்களுயிரைக் கிரகிக்கத்தக்க குறிகளில்லாமையாலும் முன்னரடைந்த மூர்ச்சைதெளிந்து, ஆயாசமும் வருத்தமுமாறி, அதிக ஊக்கமும் பலமும்பெற்று எழுந்துவந்து, மலைகளைப்பேர்த் தெடுத்துக்கொண்டு தேவர்களெல்லாம் வாழ்த்தி பல்லாண்டுசொல்ல வீரகர்ஜ்ஜனை செய்து அத்தனைபேர்களும் ஏககாலத்தில் இடிகளைப்போலவும்மின்னலைப்போலவும் மலைகளை இந்திரஜித்துவின்மேற் பிரயோகித்தார்கள். அப்போது சித்திரவில் வீரனாகிய இந்திரஜித்து இந்த மலைகளெல்லாமோ நம்முடன் யுத்தம்செய்ய தக்கவையென்று சிரித்து, அதுகளை யெல்லாம் சின்னாபின்னமாகத் தனது அம்புகளாற் சிதறவடித்தான். மறுபடியு மவ்வானராதிபதிகள் மரங்களையும், மலைகளையும், கல்லுகளையும், மழையைப்போல வருஷித்து; அவனை நாற்புறத்தும் நெருங்கினார்கள். அப்படி நெருங்கியதைப் பார்த்தும் தனதுதீரமான மனமும் கையில்லும் அம்புகளுமே தனக்குத் துணையாகத் தானொருவனே அச்சமின்றி நிற்கின்ற நிசாசரனாகிய இந்திரஜித்துவின்பேரி லிரக்கமுற்றவனைப் போல, சூரியன் அஸ்தகிரியின்மீது இறங்கினான். அப்போது இருக்கு எஜுர் சாமம் அதர்வணம் என்கின்ற வேதங்களும் - மநுமுதலான தருமசாஸ்திரங்களும் - பஞ்சமகா யஜ்ஞங்களும் - யாகங்களும்-அந்தச் சீதரனே என்றும், தெய்வத் தன்மையுள்ள மஹாரிஷிகளடையும் பிரயோசனமும் அந்நாரணனே என்றும், நித்திய நிர்விகார அப்பிராகிருத திவ்ய தேஜோமயமாயும் - ஆயுதராஜமாயும் - சாக்ஷாத் தம்முடைய திவ்யாஜ்ஞையின்படி சகல லோகங்களிலும் பிரவேசித்துஅங்குள்ள துஷ்டர்களையெல்லாம் சம்ஹரிக்கின்றவராயு மெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ சுதரிசனாழ்வாரைத் திருக்கரத்தில் தரித்தருளிய ஸ்ரீயப்பதியே சகலலோக காரணமான வஸ்துவென்று நினையாத அறிவீனர்களுடைய மனம் போல; அஷ்டதிசையும் அந்தகாரமாய் விட்டது.

அப்போது விபீஷணாழ்வான் இளைய பெருமாளைப் பார்த்து, ஸ்வாமி! இந்தச் சர்ப்பத்துக் கொப்பானவனை இன்னும் க்கால்நாழிகையிற் கொன்றால்தான் அவனிறப்பான். இல்லாவிட்டால் இராக்ஷசர்களுடைய மாயகாலம் வந்துவிடும். அப்பாலிவன் ஆகாசத்திற் பாய்ந்து நம்மைமோசம்பண்ணி வெல்லுவானென்று சொன்னார். அதுகேட்ட லக்ஷ்மணர் எல்லா வானரவீரர்மேலும் அனுமான்மீதும் அநேககோடி பாணங்களைப் பிரயோகித்துக் கொண்டு காலம் பார்த்துக்கொண் டிருக்கின்ற வில்வீரனான இந்திரஜித்துவை இனி கொன்றுவிடவேணுமென்று கருதி, அவ

னுடைய சித்திரத்தேரைச் சில திவ்விய பாணங்களால் நொறுக்கிவிட்டார். அந்தத்தேரழிவதற்கு முன்பாக இந்திரஜித்தானவன் சற்று நிதானித்து, இனிநாமிங்கிருந்தால் லக்ஷ்மணனுடைய அம்பினுல் வருத்தப்பட்டுச் சாகவேண்டுமே? இவர்கள் ஜெயித்தோமென்று கர்விப்பார்களே? இப்படி நமதுயிர்தப்பிப் போகாதபடி அவனையும் அவனோடுவந்த வானரவீரர்களையுநாகபாசத்தாற் கட்டிவிடுவோம். என்று நினைத்துக் கண்ணிமைகொட்டு முன்னே வில்லும் அம்பருத்தூணியுமாய் ஆகாசத்திற் பாய்ந்தான். அதுகண்ட தேவர்கள் பொன்மயமாகிய திருமேனியையுடைய இளையபெருமாள் இவனுடனே யாவரும் புகழும்படியான சாமர்த்திய வித்தையைச் செய்துகொண்டிருக்கவும்,இவன்வேறே என்னமோ மோசக்கருத்தை நினைத்துக்கொண்டு ஆகாசத்தில் மறைந்தான்? இனியென்ன விளையப்போகிறதோ? என்றுபயந்து ஓடிப்போனுர்கள். அக்கால் கையில் வில்லைப் பிடித்தவனும், முதுகில் அம்பருத்தூணியை இறுகக் கட்டினவனும், தன்னுள்ளே பொங்கிக் கொதிக்கின்ற கோபத்தையுடையவனும், அக்கினிமயமாய்ச்சுவாசம்விடுகிறவனும், பொல்லாங்கைச் செய்பவர்களுக் கெல்லாம் குருபீடமானவனும், மாயங்களே தனக்கு ஐஸ்வரியமாகத்தேடி வைத் திருக்கின்றவனுமான இந்திரஜித்து நல்ல இருட்டில் ஆகாசத்திலுள்ள மேகத்துக்கு மேலேபோய் மறைந்து கொண்டான். குறைவில்லாத தவங்களைச் செய்ததினுலும், அநேக தானங்களைச் செய்ததினுலும், அஞ்ஞானப் பிணிப்புகளை யறுப்பவர்களான பிரமருத்திரேந்திராதியர்களிடத்தில் தான்பெற்ற வரத்தினுலும், தன்னுடைய ராக்ஷசப்பிறப்பினுலும், மந்திர உருவினுலும், அணுவைப்போலச் சிறிய தான ஒரு சூக்ஷ்மதேகத்தையு முடையவனுகி; அந்தப் பிரமருத்திரேந்திராதியர்களானுலும் அவர்களுடையஉயர்ந்ததோள்களையு மிறுக்கிக் கட்டித் தள்ளினுலல்லாமல் மீளாத நாகபாசப் படையை உபமந்திரித்து எடுத்தான்.

இங்கே இந்திரஜித்து மறைந்துபோனதைக் கண்ட வானரவீரர்கள், இராவண புத்திரன் சண்டைக்குப் பயந்து ஓடிப்போய்விட்டானென்று நினைத்துஆர்ப்பரித்தார்கள். இளையபெருமாளும் அப்படியே திருவுளங்கொண்டு சிரித்தார். இவர்களெல்லாம் இந்திரஜித்து மாயையைச் செய்வானென்பதை அறியாதவர்களாய்ப் போர்த்தொழிலை நீங்கி நின்றுர்கள். இளையபெருமாளும் ஆஞ்சநேயருடைய திருத்தோளை விட்டிறங்கி, தமது கையிலிருந்த பலம் பொருந்தியவில்லை அங்கதகுமாரனுடைய கையிற்கொடுத்து, முதுகிலிருக்கி யிருந்த அம்பருத்தூணியை இறக்கிவைத்து, அம்முதுகுவரையிலும் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் வரிசையாய்ப் பிடுங்கிவிட்டு, கைகாற்கட்டுகளை யுதறி இளைப்பாறிக்கொண்டு, அதிமானுஷிய சேஷ்டிதராகிய தாம் மேல் நடப்பதை சிறிதுமுணராதவரா யிருந்துவிட்டார்.

அப்படியாயிருக்கும்போது இந்திரஜித்துவாகிய சண்டாளோத்தமன் அந்தக் கொடிய நாகபாசப்படையைப் பிரயோகித்துவிட்டான். அஃதஷ்டதிக்குகளிலும் உள்ள இருட்டையெல்லாம் ஓட்டி அக்கினியைக் கக்கிக்கொண்டு ஓடிவந்து, இளையபெருமாளுடைய திரண்ட வயிரத்தோள் மலைகளை வருத்தமுண்டாக்கிக் கட்டிவிட்டது. இப்படி அப்பாசமிறுகிக் கட்டினபோதும், பொல்லாங்குகள் விளைந்தபோதும், மனந்திகைத்து நின்றுரே யல்லாமல், இஃதிந்திரஜித்துவின் மாயமென்று உணராமலும், மனதிற்கொஞ்சமாவதுவியசனப்பட்டுஅதைரியமடையாமலும்,அதற்கொடுங்கி யாதொன்றும் தோற்றுமற்சுற்றி ரணக்களத்தைப் பார்ப்பார். மறுபடியும் ஆகாசத்தைப் பார்ப்பார். பின்னுமந்தக் கோர தந்தங்களையுடைய நாகபாசம்வந்து, வஜ்ஜிரஸ்தம்பம்போலவும், மலைகளைப் போலவும், பெரியனவாயிருக்கின்ற வானர வீரர்களுடைய தோள்கள் முறிந்துபோயினவென்று சொல்லும்படி இறுக்கிக்கட்டினமாத்திரத்தில் ; அவ்வானரவீரர்களெல்லாம் தங்கள் தெளிவுள்ள தைரியமான மனமிளகிச்செய்வ தின்னதென்று தெரியாமல் உழைத்துக்கொண் டிருந்தார்கள். அப்போது வாயுபுத்திரராகிய ஆஞ்சனேயர் அதனைக்கண்டு, வஞ்சனையுள்ள சொற்பப்பையனுகிய இவ்விந்திர சித்துவை ஒரு

க்ஷணநேரத்துக்குள்ளாக ஆகாசத்திற்பாய்ந்து தேடிப்பிடித்துக்கொண்டு வருகிறேனென்று உக்கிரங்கொண்டார். அக்கால் வாலியினுடைய வாலால் இராவணன் தோள்களைக் கட்டினதுபோல நாகபாசமானது அனுமானுடைய வஜ்ஜிரபருவதம் போன்ற தோள்களையும் இறுக்கிப்பிணித்தது. இந்தப்பிரகாரமாகக்கட்டுண்ட வானரவீரர்களெல்லாம் வருத்தம் பொறுமல் மலைகளைப்போலக் கீழேவிழுவார்கள். பூமியிற்புரளுவார்கள். தலைகளைமேலெடுத்துக் கண்களில் அக்கினி பறக்கப்பார்ப்பார்கள். வால்களைச்சுழற்றிப் பூமியிலடிப்பார்கள். வாய்மடித்துப் பல்லைக்கடித்து, ஆண் சிம்ஹத்துக்கொப்பான கோதண்டபாணியின் திருத்தம்பியாரைப்பார்த்து உள்ளங்கொதிப்பார்கள். பக்கத்தில் நிற்கின்ற விபீஷணாழ்வாருடைய முகத்தைப்பார்த்து,ஐயா! இதை நீக்கிக்கொள்ளும்படியான உபாயமேதேனும் உண்டாவென்றுகேட்பார்கள். உலோகமெல்லா மூடிக்கொண்டிருக்கின்ற இராத்திரி காலத்தைப் பார்த்துக்கோபிப்பார்கள்.

இளையபெருமாளுடைய மலைபோன்ற திருத்தோள்களைப்பார்த்து, ஐயோ! நம்முடைய கண்முன்பாக ஸ்வாமி இப்படி வருத்தப்படலாமோ வென்று கோபச்சிரிப்புச் சிரித்து நிர்ப்பயர்களாய் அழுவார்கள். இதையார் நீக்கவல்லவர்கள்? ஆஞ்சநேயராகிய உபகாரகர்தாம் நீக்கவல்லவர். அவராவது தப்பிப்பிழைத்தாரோவென்று பார்ப்பார்கள். இளையபெருமாள் வருத்தப்படுகின்றதைப்பார்த்து, இதுதானுநமக்குவந்த பிரயோசனமென்று துக்கித்து, ஸ்ரீராமபிரானுனவர் இவருடைய இக்கட்டைப் பார்ப்பாரோவென்று துக்கித்தார்கள். இந்தச்சமயத்தில் நடந்த பொல்லாங்கை என்னென்று சொல்லப்போகிறேன்? அந்த மகாதுராத்துமாவான இந்திரஜித்து மின்னல்கள் ஓடுகிறதுபோலவும், ஆகாசத்திலிருந்து இடிகள் விழுகிறதுபோலவும், அநேகமான பொன்கட்டிய பாணங்களைப் பிரயோகித்தான். அவைகளெல்லாம்புகை பரப்பி அக்கினிகளை கக்கிக்கொண்டுவந்து, யாவருங் குப்புற்றுக் கிடக்கின்றபடியால் முன்னே முதுகிற்பாய்ந்து பின்னே மார்பிலுருவிப் போய்விட்டதுகள். அப்போது மலைகளின்மீது வருஷகாலமேகத்தைத்தடுத்துப் பிரசண்ட வாடைக்காற்று மோதினபோது அந்தமலைகள்பேர்ந்து அங்கங்கே தடுமாறி வீழ்ந்து விடுவதுபோல, அம்புகள் பாய்ந்தமாத்திரத்தில் மலைபோன்ற தோள்களையுடைய வீரர்களெல்லாம் பூமியில் அலைகுலைந்து சாய்ந்துவிட்டார்கள். எங்கும் இரத்தவெள்ளமோடியது. ஆஞ்சநேயர் தமதுதேகத்தில் ஆயிரகோடி அம்புக்கும்அதிகமாகப்பாய்ந்தும் கொஞ்சமும் லக்ஷியஞ்செய்யாமற் கண்களில் நெருப்புப்பொறிபறக்கப்பார்த்து, தமது ஆண்டவருடைய திருத்தம்பியாருக்குச் சம்பவித்த துக்கமானது தம்மைச்சுட அதைப்பொறுக்கமாட்டாமற் பயந்து நடுங்கினர். மற்ற வீரர்களெல்லாம் இடிபோன்ற பாணங்கள் நூறும் ஆயிரமுமாகத் தங்கள் தேகத்தில் நுழைந்தவுடனே இரத்தம்பெருகி ஆறுபோலோட மூர்ச்சையாய் வீழ்ந்துபோனுர்கள். அங்கதப்பெருமான்மாத்திரம்அநேக பாணங்கள் தேகமுழுவதுந் தைத்திருந்தபோதிலும் சோர்வடையாமற் சும்மாயிருந்தான். சூரியகுமாரராகிய சுக்ரீவமகாராஜன் கழற்காய்மேலுள்ள முட்களைப்போல உடலெல்லாம் அம்புகள் தைப்புண்டு, கண்களில் நெருப்புப்பொறி பறக்கவும், மூங்கிற்காடு பற்றியெரிவதுபோலத் தேகத்தில் மயிர்களெல்லா மெரியவும், இரத்தக்கடலுக்குள்ளே உதிக்கின்ற தன்பிதாவாகிய சூரியனைப்போலிருந்தார்.

அக்கால் ஈடுமெடுப்புமில்லாதஸ்ரீராமருடைய திருத்தம்பியாகிய இளையபெருமாள் கொடிய நாகபாசத்தாற் கட்டுண்டு, வெப்பமான பாணங்கள் தொளைக்கின்ற திருமேனியையுடையவராய்உணர்வுடனேயிருந்து வருத்தப்பட்டு, உலோகபாசமயக்கமூலப்பிரகிருதியாலென்று அதனைக்கடந்தவர் இந்த நாகபாசத்தைச் சகிக்கமாட்டாதவராய் அறிவுசோர்ந்து மூர்ச்சையானுர். அப்போதவ்விளையபெருமாள் எப்படித் தோன்றினுரென்முல்? தமது திருமேனியில் தைத்திருக்கின்ற அக்கினிமுகப்பாணங்களெல்லாம் கிரணங்கள் போலவும், அத்திருமேனியினின்றும் வடிகின்ற இரத்தம் வெயிலைப்போலவுமாக; இருட்டைத் துரத்தும்படியான மிகுந்த பிரகாசத்தையுடைய சூரியனுனவன் கேதுவென்கிற

சர்ப்பத்தினுற் பற்றப்பட்டு ஆகாசத்திலிருந்து பூமியில் வீழ்ந்ததற்கொப்பாகத் தோன்றினர். இந்தப்பிரகாரமாக இளையபெருமாளே மூர்ச்சையடைந்தாரென்முல், மற்றவர்களெல்லா மூர்ச்சையாய்ப் பூமியில்விழுந்துகிடந்தார்களென்பது ஓரதிசயமோ? இப்படித் தன்னம்புகளால் அவர்கள் தேகத்தையெல்லாமூடிவிட்ட இந்திரஜித்துவானவன் முன்னம் இளையபெருமாள்விட்ட பாணங்களாற் சரீரமெல்லாம் சல்லடைக்கண்களாய்த் தொளைபட்டு வருத்தமுற்று, வாயால்இரத்தங்களைக்கக்கிக்கொண்டு, எல்லாரையுங் கொன்றுவிட்டு வருகிறேனென்று நாம்சொன்ன சபதத்தை முடித்துவிட்டோம். நம்முடற்புண்ணையும் வருத்தத்தையும்நாளைக்கேயாற்றிக்கொண்டுவந்து மற்றகாரியங்களையும் முடித்துவிடுவோமென்று நினைத்தான்.

உடனே தன்னிரண்டு பக்கங்களிலும் இரண்டுபேர்கள் நின்று இன்றையோடு மனிதர்களுடைய உயிர்வாழ்க்கைபோய்விட்டதென்றும் குரங்குச் சேனையெல்லாம் மாண்டுவிட்டதென்று மங்கலங் கூறிக்கொண்டுவரத் தன்பிதாவான ராவணனுடைய மாளிகையைப்போய்ச் சேரும்படிப் புறப்பட்டு, தன்மேல் உகாந்தகாலமேகத்தைப் போல அஸ்திரவருஷங்களைப் பொழிந்துகொண்டிருந்தஇளையபெருமாளைவிட்டுநீங்கியும் கச்சிறுக்கிய பருத்தஸ்தனங்களோடு முத்தையொத்த சிறுதந்த பந்திகளையுமுடைய இராக்ஷசஸ்திரீகளினது கருங்கண்களாகிய பாணங்கள் தனதுதோள்களில்தைத்துப் பாயும்படியான மன்மதயுத்த நீங்காதவனுகி, பத்துக்கோடிரத்னதீபங்களை ஏந்திக்கொண்டு குற்றமற்ற தேவலோக ஸ்திரீகளும் நாகலோக ஸ்திரீகளும் பூலோகஸ்திரீகளும் பல்லாண்டு பாடிக்கொண்டு வரவும் இராக்ஷச ஸ்திரீகளெல்லாம் ஆர்த்தி சுற்றி வாழ்த்திக்கொண்டு புடைசூழ்ந்து வரவும்போய் இராவணனைக்கண்டு, ரணக்களத்தில் நடந்த காரியங்களையெல்லாம் அவனுக்குத் தெரியச்சொல்லி, ஐயா! வெற்றிபெற்றேன். நீர் இனிமேல் துக்கிக்க வேண்டாம். இன்றைக்குநான் வெகு வருத்தப்பட்டேன். என் தேகப்புண்களையெல்லாம் சீக்கிரத்தில் ஆற்றிக்கொண்டு மற்றக் காரியமெல்லாம் பின்னுற்சொல்லுகிறேன். என்றவனைத் தேற்றிவிட்டு, தன் மனதிலிருக்கின்ற வருத்தத்தை நீக்கிக்கொள்ளும்படியாகத் தன்னுடைய மாளிகைக்குப்போய்ச் சேர்ந்தான்.

இவ்விடத்தில் விபீஷணுழ்வான் அதிகதுக்கத்துடனே தானின்னது செய்ய வேண்டுமென்று அறியாதவராகி, மத்தினுற்கடைந்த தயிரைப்போல மனம் பேதித்து மயங்கி, ஐயோ! அவ்விடத்திலேயே துஷ்டனுன இராவணன் என்னைக்கொல்லாமற்போனுனே, தயவில்லாத நானேயாகுலும் நான்றுகொண் டிறவாமற்போனேனே? ஆகிலும் நான் மகாதைரியவான். என்று கிலேசித்துவந்து பூமியில்விழுந்து புரண்டு, நாகபாசத்தினுலே என்னுசாரியருடைய திருத்தம்பியார் கட்டுண்டார். அதுபோலவேஎன்னட்பினர்களானவானரவீர்களெல்லாரும் கட்டுண்டுபோனுர்கள். நானெருவன் மாத்திரம்இறவாமலிருக்கின்றேன். சக்கரவர்த்தி திருக்குமாரர் என்னை என்ன நினைப்பார்? என்றுசிந்தித்து மனே உஷ்ணத்தால் தீய்ந்த மலர்மாலையுடைய மார்பராய் வாயைத்திறந்து கதறி, என்னை ஸ்வாமியானவர் இவன்கூடவேயிருந்து மோசம்பண்ணிக்கொல்லச் செய்தானென்பாரோ?கூட அழைத்துக்கொண்டுபோய்த் தன்மகனுக்கு வெற்றியுண்டாகும்படி செய்தானென்று சொல்வாரோ?இப்படிப்பட்ட பொல்லாங்குக்கெல்லாம் இவனே தகுந்த மூலமாய் நமக்கு விசுவாசம்வர நடந்து காட்டினுனென்று நினைப்பாரோ ? என்று புத்திமான்கள் தங்கள் கல்வியின் அளவே தாங்கள் சொல்லும் வார்த்தையுமென்பது போல்தம்முடையஉள்ளத்தினளவுபுலம்பி தமது கண்ணீரைப்போல உயிரையுங்கரையச்செய்து பின்னுஞ்சொல்லுகிறுர். ஆ தெய்வமே! அந்தச்சண்டாளனுகிய இந்திரஜித்து போர்செய்தபோது சமானமில்லாத இந்தத்தண்டாயுதத்தினுலே அவனைத்தேரோடு நசுங்கும்படிகொன்று, என் மனதின் சுத்தத்தை இவருக்காவது தெரிவிக்காமற்போனேனே, அல்லா தவன்கையிற்சாகாமலும் போனேனே? ஒருவிதத்தாலுமெலிவடையாமலும்போனேனே?இனி யாருக்கும் நான் உறவானவனுவேன்? கொஞ்சமுந் தயையில்லாமற் சும்மா! அழுதுகொண்டிருக்கின்றேனே? ஐயோ! நானி

வர்களோடு சேர்ந்து அவர்களுடன் சண்டைசெய்து கூடவே மாண்டுபோகவேண்டும். அல்லதுபிழைத்தாற்கூடப்பிழைத்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல என் விசுவாசத்தைக் காட்டவேண்டும். இவ்விரண்டிலொன்றேனுஞ் செய்யாமற்போனேன். அல்லது பிறகாவது மாண்டுபோகவில்லை. நான் துஷ்டகாரியத்தை செய்யாததினாலே அவனுக்கும் நல்லவனாகாமற் போனேன். இப்போது அபயங்கொடுத்தாண்ட இவருக்கும் ஆகாமல், குத்தினவனையும் குத்துண்டவனையுங்கொன்ற இருமுனையிலுங்கூர்மையுள்ள சூலத்தைப்போல இருவரையுங் கெடுத்து விட்டவனானேன். என்று பலவிதமாய்ப் புலம்பிக்கொண்டழுது துக்கிக்கின்ற விபீஷணாழ்வானை அனலனென்கிற இராக்ஷசமந்திரிபார்த்து, ஐயா! இனிநடக்கவேண்டிய காரியங்களையெல்லாஞ் செய்யவேண்டியவர் நீர்? நினைவில்லாதவர்களைப்போல நீரும் புலம்பலாமோ? என்று அவரைத்தேற்றிப் பின்னுஞ் சொல்லுகின்றான். ஐயா! விபீஷணாழ்வானே! நீரிவ்விடத்தில் இவர்களைக் காத்துக்கொண்டிரும். அடியேன் போய்ப்பெரிய பெருமாளுக்குச்சொல்லுகிறேன். என்று புறப்பட்டுப்போய்த் தர்மமே ஸ்வரூபமாயுள்ள ஸ்ரீராமருடைய திருவடித்தாமரைகளில் வீழ்ந்து, இரணக்களத்தில்நடந்த சமாசாரங்களையெல்லாம் விவரமாக விண்ணப்பம் பண்ணினான். அதைக்கேட்ட சகஸ்திர நாமங்களையுடைய ஸ்ரீரகுநந்தனர் துக்கசாகரத்தில் மூழ்கி, ஒன்றும் பேசாமலும், தமது நிலைமையையும் அறியாமலும், உயிருஞ்சோராமலும், கண்ணீர் விடாமலும், உலோகத்திலுள்ளஒன்றையும்பாராமலும், உலோகத்தைப் பசுரணப்படுத்தி விடாமலும், கோபங்கொண்டு தமது திருக்கையால் இவ்வுலகத்திலுள்ள எல்லாவற்றையும் வாரி இறைத்து விடாமலும் அழுது ஏங்கி, பிராணனுள்ளவரைப்போலவே யாவருக்குங் காணப்பட்டு, மனம்புழுங்கிப் பெருமூச்சுவிட்டுத் துக்கித்து, இவ்விடத்திலிருந்து செய்யத்தக்கதொன்று மில்லையென்று திடீரென்றெழுந்து, வேகமாய் மடமடவென்றோடிப்போய்த் தமது தம்பியார் சத்துருக்களைத் தூத்தியடித்த ரணக்களத்தை நெருங்கினார். அப்போது விஷமும், மேகமும், கருங்கடலும், ஆகிய இவை முதலான மற்ற நீலநிறமுள்ளவைகளையெல்லாம் ஒருமிக்கச்சேர்த்துப் பிழிந்ததைப்போலவும், காலமூற்றிக் கருநிறமேகமானது உலகமெல்லாம் வருஷித்ததுபோலவும், எங்கும்இருட்படலம்மூடிக்கொண்டு அர்த்தராத்திரிகாலமாயிருந்தது.

அக்கால் ஆயிரந்திருநாமங்களையும் உடைய ஸ்வாமியானவர் அதிகசிரேஷ்டமான அக்கினியாஸ்திரத்தைத்தம்முடைய கோதண்டத்திற் பூட்டிவிட்டார். அம்மாத்திரத்தில் அப்பகையாகியஇருள் நீங்கியோடும்படிச் சூரிய உச்சியில் உதித்தாற்போல உலோகமெல்லாம் வெளிச்சமாயிருந்தது. அப்போது ஆயுதங்கள் காணப்பிணமலைகள் பலபலவாய் இரத்தப்பிரவாகத்திற் காணப்பட்டன. பிரம்மகபாலத்தைக் கையிலுடைய உருத்திர மூர்த்தியானவர் உலோகத்துள்ள உயிர்களையெல்லாம் அழித்து உண்ணுகின்ற உகாந்தகாலத்தில் சமுத்திரஞ்சூழ்ந்த லோகம்போல் இரத்தம் பிரவகிக்க எங்கும் பிணமயமாயிருக்கின்ற அந்த ரணக்களத்தை ஸ்ரீராமர் பார்த்து, அந்தப்பிணமலைகளுக்கும் இரத்தப் பிரவாகத்திற்கு நடுவிலும் – நிணமுள்ள சேற்றிலும்–ஆயுத நெருக்கினுள்ளும் – அரைக்ஷணத்துக்குள்ளாக யாவரையு மாராய்ந்து, ஒரு மங்கலகரமான விடத்தில் இளையபெருமாளிருக்கக் கண்டு, உடனே யவர்மீது விழுந்து தம்முடைய திருமார்பிறுகும்படித்தழுவி, அப்பா தம்பீ! இனிநா னுன்னை விட்டுப் பிழைக்கமாட்டுவேனோ? என்றாவி சோர்ந்துருகிக் கண்களில் தாரைதாரையாகக் கண்ணீர்பெருக்கி, ஆகாசத்தில் மழையைப்பெய்துகொண்டு சூரியனைச் சூழ்ந்து நின்ற நீல நிறமான மேகத்துக் கொப்பாக இருந்தார்.

அந்தச்சமய மவர்பட்டபாட்டை என்னென்று சொல்லுவேன்? கையுங்காலு மூதைந்து உழைத்துக்கொண்டார். பெருமூச்சுவிட்டார். உருகிப்போவார். புத்திமயங்கிப்போவார். செய்யவேண்டிய காரியமின்னதென்றறியார். ஓலக்ஷ்மணா! ஓலக்ஷ்மணா! என்றழைப்பார். தமது திருக்கையால் வாயையு மூக்கையு மூடிக்கொண்டு சும்மாயிருப்பார். ஐயா லக்ஷ்மணா! நாமினி பிழைப்போமோவென்று சொல்லுவார். யாவர்

க்கும் பிறந்தவர்போற் காணப்பட்டும் பிறவாதவரான சர்வலோகசரணியர் தமது தாமரை மலர்போன்ற திருக்கைகளால் அவ்விலட்சுமணருடைய பாதங்களைத்தடவிப்பிடிப்பார். தொடையை மெல்லெனக் குத்துவார். பரிசுத்தமான தாமரைமலர் போன்ற அவருடைய கண்கள் சிமிட்டுகிறதோ இல்லையோவென்றுபார்ப்பார். மார்பைத் தொட்டுப் பார்த்து நெஞ்சந்துடிக்கிறதென்று சொல்லுவார். ஆகாசத்தைப் பார்ப்பார். லக்ஷ்மணரைத் தூக்கித் தமது திருத்தொடைமேல் வளர்த்திக் கொள்ளுவார். மறுபடியும் பூமியில் வளர்த்துவார். அந்தத் திருடன் போய்விட்டானோவென்பார். வானரவீரர்களை யெல்லாம் பார்ப்பார். ஆதிசங்கல்பத்தை நினைப்பார். தமது திருத்தோளிலுள்ள பெரிய வில்லைப் பார்ப்பார். அம்புகளையெடுத்துப்பார்ப்பார் இந்த லோகத்தில் என்னைப்போல் இந்தத் துன்பத்தை யடைந்தவர்கள் வேறே யாராவதுண்டோவென்பார். எனக்குநேரிட்ட இந்த எளிமைத்தனம் பெரியதென்பார். எல்லா வளவைப் பிரமாணங்களையுந் தாண்டிநின்றவர் மீட்டு மடிக்கடி தமது வில்லை நோக்குவார். இந்திரஜித்துவினுடைய நாகபாசக்கட்டைப் பார்ப்பார். விடியாத ராத்திரியைப் பார்ப்பார். ஆகாசத்திலுள்ள தேவர்களை பார்ப்பார். பூமியை வேருடனே பேர்த்துவிடுகிறேனென்பார். தமது திருப்பவளம் போன்ற இதழைக் கடிப்பார். பெரியோர்களுடைய சாஸ்திர சம்மதியைப் பார்ப்பார். இப்படிக்கெல்லாம் தம்மைப்போலத் தமது புகழைவிரும்பும் திருத்தோளையுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் படாதபாடுபட்டு, அப்பா தம்பி விபீஷணா! இந்திரஜித்துக்கு மிளையபெருமாளுக்கு மிவ்விதச் சண்டைநேரிட்டதென்று என்னைச் சீக்கிரமாக அழையாமற் போனாயே; இந்த தேவாஸ்திரத்தைத் தொடுத்த அவ்விந்திரஜித்துவின் தலையுடனிதையுந் துணித்து உயிரைவாங்கி விடுவேனே? என்னை யனியாயமாய்க்கெடுத்து விட்டாயே; என்றெக்காலத்துங் கெடாத வரான ஸ்ரீராமர் அருளிச்செய்தனர். அவ்வார்த்தையை ஆறாததுயரோ டழுதுகொண்டிருந்த விபீஷணாழ்வான் கேட்டு, ஸ்வாமி! அந்தச் சண்டாளன் யுத்தத்திற்கு வந்து சண்டைசெய்வா னென்பதை அடியேனறியவேமாட்டேன். அவன்வந்துயுத்தத்தல் நின்றகாலத்திலும் அவனேதோற்றுப்போவானென்றே யுணர்ந்திருந்தேன். இந்தமாயம்இத்தெய்வத்தன்மையுள்ள அஸ்திரத்தால் வந்ததே யல்லாமல் வேறொன்றாலல்ல. சுவாமி! அதிகாயனுடைய தேகத்தை முண்டமாக்கி வெற்றிபெற்ற நம்முடைய இளையபெருமாள் உடனே திரும்பாமல், இலங்காதி பத்தியத்தைப் பெற்றவனான இராவணன் யுத்தத்திற்கு வருவானென்று எண்ணிக்கொண் டிருக்கும்போது அவனுடைய பிள்ளையாகிய இந்தப்பையல் நாற்பதுவெள்ளம் சேனையுடனேவந்து, நம்முடைய நாற்பதுவெள்ளம்வானரசேனைகளின்மீது பாணங்களைப் பிரயோகித்து அவைகளைக்கொன்று, மற்ற வானரவீரர்களைத் துரத்திப் பெருஞ்சண்டைசெய்து, அவர்களை மூன்றுதரம் பூமியில் மூர்ச்சையாய் விழும்படிச் செய்தான். பிறகு ஆயிரஞ் சிம்ஹங்கள்பூட்டிய தேரின் மேலேறி ஆண்சிம்ஹத்துக் கொப்பான இளையபெருமாளோ டெதிர்த்தான். இளையபெருமாள் அநுமான்மீது ஆரோகணித்தருளி, அவனுடைய ஆயிரந்தேரும் பொடிப்பொடி யாகும்படித் தம்முடைய வில்வல்லமையைக் காட்டி, பிறகவனுடனே வந்த நாற்பதுவெள்ளஞ் சேனைகளையும்-உதவியாய்வந்த பத்துலக்ஷஞ் சேனைகளையும் சூரியனைக்கண்ட பனிபோற்கொன்று, அவனுக்குச் சக்கிரரக்ஷகராய் வந்த மஹாபாரிசுவ னென்பவனையும் - தூமாக்ஷனென்பவனையும் - பதாதியாய்த் துரத்திவிட்டு, இனியென்ன இருக்கிறது? இவனுமிறந்தான். என்னத்தக்கதாக அநேக திவ்வியபாணங்களை அந்தச் சண்டாளனுடைய மார்பிலெய்தார்.

அப்படி யெய்த பாணங்கள் பட்டுப் பிளந்தவிடமெல்லாம் இரத்த மொழுகும்படி நின்றவனை நான்பார்த்து, இவன்சேனையெல்லாமுடிந்து ஒருவனாய்ச்சோர்ந்து நிற்கின்றான். தப்பிப் போவானேயானால் ஏதேனும் வஞ்சனைசெய்வான். என்று லோகமெல்லாங் கீர்த்திபரவச் செய்திருக்கின்ற ஸ்வாமிக்குச் சொன்னேன். சூரியனும் அஸ்தமனமானான். உலகமெல்லா மாயமாயிருண்டுவிட்டது. பின்னர் வஞ்சக

ஞன இந்திரஜித்து தன்னுடைய மாயவரத்தினலே ஆகாசத்திற்போய் ஒளித்துக்கொண்டு நாகபாசத்தை வீசி, நம்முடைய கூட்டத்தை யெல்லாம் அந்த க்ஷணமே சோரும்படிப் பண்ணினன். என்று அம்பு பட்டுத் தொளைப்பட்ட புண்ணுடையவரைப்போல அழுதகண்ணும் தொழுதகையுமாய் நின்று விண்ணப்பம்பண்ணிய விபீஷணுழ்வாரானவர் பின்னுஞ் சொல்லுகின்ருர். ஓ எங்களாண்டவனே! இவர்களெல்லாரும் பிராணன் போனவர்களல்லர். கட்டின பாசமாத்திரமறுந்தால் அவனெய்திருக்கின்ற புல்லின் நுனிபோன்ற பாணங்களுக்கு வருத்தப்படமாட்டார்கள். தேவரீர்புலம்பி மனஞ்சலித்துத் துக்கிக்கவேண்டாம். தருமத்தை யொருநாளும் பாவம் வெல்லமாட்டாதென்ருர். அதைக்கேட்ட சுவாமி!விபீஷணுழ்வானைப்பார்த்து, இவ்வஸ்திரங்கொடுத்த தேவர்களார்? இதன் பெயரென்ன? இது தீரும்படியான உபாயமேது? இதைப்பற்றிஉனக்குத்தெரிந்ததையெல்லாம் விவரமாய்ச் சொல்லென்றுகேட்க விபீஷணுழ்வான் சொல்லுகின்ருர்.

சுவாமி ! இதுமுன்னே லோகத்தைச் சிருஷ்டித்த பிரமதேவர்செய்த யாகத்திலுண்டானது. இதைக் கயிலாசபதியாகிய காமதகனர் அவரிடத்தினின்றும் பெற்றிருந்தார். அவரைநோக்கி இந்தச் சண்டாளன் அதிக கொடுமையான தவசைச்செய்து பெற்றுக்கொண்டான். இஃதூழிக்காலத் திடியைக்காட்டிலு மிகுந்த வல்லமையுடையது. இது நாகபாசமென்று பேருள்ளது. இதனுடைய வல்லமைதான் ஆயிரங்கண்களைப்பெற்ற தேவேந்திரனுடைய வஜ்ஜிரத்தோள்களை யிறுக்கிக் கட்டினது. வேறேயொன்றை யாலோசிப்பானேன்? முன்னு லனுமானுனவ ரிலங்கைக்கு வந்தபோதும் இதுதான் அவருடைய தோள்களையுமிறுக்கினது. மேலும் தேவர்கள்சொர்க்கலோக ஐஸ்வரியத்தை யிழந்ததும் இதனுல்தான். இந்த நாகபாசம் தானே விட்டால்தான் விடும். அல்லாவிட்டாற் பிரமலோக முதலான லோகங்களெல்லாம் அழிந்தாலும் இது நீங்கமாட்டாது. அப்படியிருக்க இந்தப் பூலோகத்தைப்பற்றிப் பேசியென்ன ? மாமிசங்களெல்லாங் கழன்று உயிர் நீங்கினுல் தானேவிட்டுவிடும். வேறேயிதற்கு உபாயமில்லை.

ஓ தேனெழுகுகின்ற திருத்துழாய் மாலையைத் தரித்த ஸ்ரீரகுநந்தனு! இதன்வரலாறு இப்படிப்பட்டதாகுமென்ருர். அப்போது தேவர்களுடைய துன்பங்களையெல்லாம் தீர்க்கும்படி அவதரித்தவரான பெரியபெருமாள் விபீஷணரைப் பார்த்து, தம்பீ! அப்படியானுல் இந்த அஸ்திரத்தை இப்படிப்பட்ட துஷ்டர்களுக்குக்கொடுத்த தேவர்கள்மே லெதிர்த்துப் போகட்டுமா? இந்த லோகத்தையெல்லாஞ் சாம்பலாகச்சுட்டுவிட்டு நானு முடிந்துபோகட்டுமா? இலங்கை சின்னபின்னப் படும்படியாகப்போய் அந்த ராக்ஷசர்களுடைய வமிசங்களைக் கருவறுத்துப் போடட்டுமா? நான் செய்யவேண்டியதைத் தகுந்த ஆலோசனையுடனே சொல்லக் கடவாய். இந்த நாகபாசத்தைக் கொடுத்தவர்கள் தாமே யென்னெதிரில் வந்து இரங்கி வேண்டிக் கொள்ளும்படியான மார்க்கமுண்டானுற் கோபம் தணிகின்றேன். இல்லாவிட்டால் முப்புரங்களையு மோரம்பினுற் சுட்ட உருத்திரமூர்த்தியைப்போல இந்த மூன்றுலோகங்களையும் சுட்டு ஒரு நொடியிற் சாம்பலாக்கி அழித்து விடுகிறேன்.

அப்பா விபீஷணு ! என்னருமைத் தம்பியாகிய இலக்ஷ்மண னிறப்பானுனுல், பின்பென்னை ஒருவேளை ராவணனே புகழ்ந்தாலுமென்ன? பழித்தாலுந்தானென்ன? அப்பால் தருமந்தானென்ன? என்னை நம்பிவந்த என் சிநேகர்களைக்காட்டிலும் தேவர்களானுலும் இந்த லோகத்திலுள்ள ஜீவர்களானுலும் எனக்கு நல்லவர்களாவார்களோ! ஐயோ! ஒருதுஷ்டன் இப்படிப்பட்ட துன்பத்தைச் செய்தற்கு நானுலகத்தையெல்லாம் ஜெயித்து நாசம் பண்ணுகிறது கிரமமல்லவே? என்றிவ்வாறுசொல்லித் தமக்குத்தாமே துக்கித்து, இருந்திருந்து ஆலோசித்தும் பெருமூச்சுவிட்டு, தமது திருத்தம்பியாரைப் பார்க்கிலு மற்ற வானரவீரர்களிடத்தில் தமக்குண்டான அபாரதயவால் பெருஞ்சோகமுற்று, வேதமாகிய அங்குசத்தினிலையில் நிற்கின்ற இரண்டு துதிக்கையையுடைய பெரிய யானைபோன்ற ஷ்வாமியானவர் மறுபடியும் இளையபெருமாளுக்குச் சமீப

மாய்வந்து, அவருடைய மலைபோன்றதும் வெற்றிபெற்றதுமான திருத்தோள்களைப் பிணித்திருக்கிற நாகபாசத்தைப் பலதரம் உற்றுப்பார்த்து, இஃதென் தம்பியைக்கொன்றுவிட்டதானால் நானுமுடனே மாய்ந்துவிடுவேனென்று நினைத்தார்.

இந்தப்பிரகாரமாக ஸ்ரீராமமூர்த்தி துக்கிக்கிறதைக்கண்ட தேவர்களெல்லாம் ஸ்வாமியைவந்துபார்த்துப் பயந்து, இனியிதனாலென்னமாய் முடியப்போகிறதோவென்றுபரிதபித்தார்கள். அச்சமையத்தில் சுவாமி துக்கிக்கின்றதைப் பார்த்துக்கொண்டு தேவர்களுடனே நின்ற பெரிய திருவடியாகிய கருடாழ்வான் அதிவேகத்துடனே தமது பக்தியினிமித்தமாக மனந்திடுக்கிட்டு, தமது பாரதந்திரிய ஜ்ஞானமும் தடுமாறி ஸ்வதந்திரம் பாவித்து, சுவாமியினுடைய இத்துக்கத்தை நீக்கிவிடுகிறேனென்று நல்ல இருள்நிறைந்த மத்திய ராத்திரியில் சுவாமிக்கெதிரில் தோன்றும்படியாகவருகின்றார். அஃதெவ்வாறெனில், ஒருகாலத்தும் சலனப்படாத திருவுள்ளம் சோர்ந்து நடுங்குகின்றவரும், தடுமாறுத தைரிய மிழந்தவருமாகிய சுவாமியானவர் இலங்கையை ராவணனுடனே அழிக்காமற் கிருபையுடனே யிருக்கின்ற தன்மையைக்கண்டு ஆச்சரியப்பட்டுத் தமது வேகத்தால் மேருமலையும் பூமியும் கிடுகிடென்று நடுக்கங்கொள்ளவும் உலோகமெல்லாம் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கவும், கண்சிமிட்டாத திக்கஜங்களும் அதிக பிரகாசத்தைப் பார்க்கமாட்டாமற் கண்ணைமூடிக்கொண்டு பயந்துநடுங்கவும் வருகிறார்.

மேலும், சண்டமாருதக்காற்றை வீசுகின்ற சிறகையுடையவரான அக்கருடபகவானனவர் அநேககோடிகாததூரம் கடைநீண்டு தோற்றுகின்ற செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களிடத்தில் தாரைதாரையாகக் கண்ணீர்சொரிந்து அநேகவிதமாக துக்கப்படுகின்ற சுவாமியினுடைய திருமேனியைக்கண்டு அதிக சந்தோஷசித்தராகி, குளிர்ந்தகடலான துதத்தளித்து அலைகளெறியவும், உலோகத்தை மூடிக்கொண்டிருக்கின்ற இருளானது இருந்தவிடந்தெரியாமலோடிவிடவும், தமது இறகைமடக்கிக்கொண்டு, வேதபுருஷன் பல்லாண்டுபாடவும், உலகத்தில் உள்ளவர்களெல்லாம் தம்மைச்சேவித்துப் பாபநிவாரணராகவும், பிணித்துக்கொண்டிருக்கின்ற நாகபாசமெல்லாம் சின்னபின்னப்பட்டுப் பலஹீனப்படவும், இரணக்களத்திலெழுந்தருளி, இருளையடக்கிப் பிரகாசத்தைவிடுத்துத் திக்குகளிலெல்லாம் கிரணங்களைச்செலுத்திச் சந்திரனுக்கு ஒளியைக்கொடுத்துச்சொலிக்கின்ற கண்டத்துடனே ஒளிவிடுகின்ற கிரீடங்கள் பூமியின்மத்தியிலிருக்கின்ற மேருமலையின்மீது விளங்குகின்ற சூரியனைக்காட்டிலு மூன்றுமடங்கத்தனை பிரகாசிக்கவருகிறார்.

அன்றியும், ஒளிவிடுகின்ற நவரத்தினங்களுடனே சாம்பூநதம், கிளிச்சிறை, சாதரூபம், ஆடகம், என்கிற பொன்வகைகள்பிரகாசிக்கும்போது தமக்கியல்பாயுள்ள பிரகாசத்தைக் கொள்ளாமல் அந்தஇரத்தினப் பிரகாசங்களினாலே வேறொருவிதமான ஒளியையுடைத்தாய் மின்னலினாலேயுண்டான ஒருமழையானது மேலுலகத்திலிருந்து பூலோகத்தில் விழுந்ததுபோலவும், சூரியன் தெற்கேயுதித்து வடக்கேவருகிறதுபோலவும், தோன்றப்பட்டு, அநேக நாகரத்தினங்களைகொண்டும்மின்னல்களைக்கொண்டும் செய்ததுபோலப் பிரகாசிக்கின்ற திவ்வியாபரணங்கள்ஒளிவீசவும், வெயிலை வீசுகின்ற பீதாம்பரத்தைத் தரித்துத் துளசிமாலை திருமார்பில் அசையவும், தாம் பெருமாளை வெகுநாள் பிரிந்த துக்க நீங்கும்படியாகவும், ஸ்ரீராமருடைய திருமேனியைக் கண்டு சிரசின்மீது இரண்டு கையையுங் கூப்பித்தொழுது கொண்டு, சுவாமியானவர் யுத்தகளத்தில் யாவருடனுங்கலந்து நிற்கிறபடியால் அவர் திருவடிகளில் மாத்திரம் தனியாகச்சேவிக்கக் கிடையாமல் அவர் துக்கித்துக்கொண்டிருக்கிற நிலைமையை நினைத்து நினைத்து நெஞ்சழிந்து, இந்தப்பதினாலுலோகமுந் தொழும்படியான திருவடிகள் பூமியில் தோயாமல் இறங்கிவரும்போதே அடிக்கடி சுவாமியை வணங்கிக்கொண்டு வருகிறார். இப்படி வருகின்ற கருடபகவான் ஸ்ரீசக்கிரவர்த்தித் திருக்குமாரரைப் பார்த்து, சுவாமீ! தேவரீர் உமதுயதார்த்த ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு அவதரித்தீர், இப்போது உமது திருத்தம்பியாரைப் பிரிந்ததாக வருத்தப் படுகின்றது

போல மாயைகாட்டுதலை நீக்கியருளல் வேண்டும். தேவர்கள் முதலான எழுவகை யுயிர்கட்கும் பிதாவான பிரம்ஹாவைப் பெற்ற தேவரீர் உமது திருவுளப்படி பிறவாமற்பிறந்து விளையாடுகின்றீர். ஓ சமானரகிதரே! அடியேங்களுடைய துக்கங்களை யெல்லாம் நீக்கி இரக்ஷிக்கின்ற தேவரீர் துக்கப்படுவதாய் நாடகநடிக்கிற விதமென்ன? ஓ!எங்கள் காரணவஸ்துவே! வருத்தப்படாதேயும்! வருத்தப்படாதேயும்! என்று அநேகவிதமா யழுதுக்கொண்டு ஸ்தோத்திரம் பண்ணத்தொடங்கினர்.

விருத்தம்.

வந்தான்மறைந்து பிரிவால்வருந்து
மலர்மேலயன்றன் முதலோர்
தந்தாதைதாதை யிறைவாமறைந்து
விளையாடுகின்ற தனியோய்
சிந்தாகுலங்கள் களைவாய்தளர்ந்து
துயர்கூரலென்ன செயலோ
எந்தாய்வருந்த லுடையாய்வருந்த
லெனவின்ன பன்னிமொழிவான்.

தேவாதிதேவர் பலராலுமுந்து
திருநாமமோது செயலோய்
மூவாதநாளு முலகேழொடேழு
மரசாளுமேன்மை முதல்வா
மேவாதவின்ப மவைமேவிமேவ
நெடுவீடுகாட்ட முடியாய்
ஆவாய்வருந்தி யழிவாய்கொலாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

எழுவாயெவர்க்கு முதலாகியீறு
டிடையாகியெங்கு முளையாய்
வழுவாதவர்க்கும் வரமீயவல்லை
யவரால்வரங்கள் பெறுவாய்
தொழுவாயுணர்ச்சி தொடராததன்மை
யுருவாய்மறைந்து துயரால்
அழுவாயொருத்த னுளைபோலுமாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

உன்னுெக்கவைத்த விருவர்க்குமொத்தி
யொருவர்க்குமுண்மை யுரையாய்
முன்னுெக்கநிற்றி புலகொக்கவொத்தி
முடிவொக்கினுென்று முடியாய்
என்னுெக்குமின்ன செயலோவிதென்னி
லிருளொக்குமென்று விடியாய்
அந்நொப்பமேகொல் பிறிதேகொலாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

வாணுளளித்தி முடியாமனீதி
வருநாளுநிற்றி மறையோய்
பேணுயுனக்கோர் பொருள்வேண்டுமென்று
பெறுவானருத்தி பிழையாய்

ஊனுயுயிர்க்கு முயிராகிநிற்றி
யுணர்வாயபெண்ணி னுருவாய்
ஆணுகிமற்று மலியாகியாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

தானந்தமில்லை பலவென்னுமொன்று
தனியென்னு மொன்றுதவிரா
ஞானந்தொடர்ந்த சுடரென்னுமொன்று
நயனந்தொடர்ந்த வொளியால்
வானந்தொடர்ந்த பதமென்னுமுன்னை
மறைநாலின்வந்த முறையால்
ஆனந்தமென்னு மயலென்னுமாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

மீளாதவேத முடிவின்கணின்னை
மெய்யாகமெய்யி னினையும்
கேளாதவென்று பிறவென்றுசொன்ன
கெடுவார்கள்சொன்ன கடவான்
மாளாதநீதி யிகழாமைநின்க
ணபிமானமில்லை வறியோர்
ஆளாயும்வாழ்தி யரசாள்தியாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

சொல்லொன்றுரைத்தி பொருளாதிதூய
மறையுந்துறந்து திரிவாய்
வில்லொன்றெடுத்தி சரமொன்றெடுத்தி
மிளிர்சங்க மங்கையுடையாய்
கொல்லென்றுரைத்தி கொலையுண்டுநிற்றி
கொடியாயுன் மாயையறியேன்
அல்லென்றுநிற்றி பகலாதியாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

மறந்தாயுமொத்தி மறவாயுமொத்தி
மயலாரும்யானு மறியேம்
துறந்தாயுமொத்தி துறவாயுமொத்தி
யொருதன்மைசொல்ல வரியாய்
பிறந்தாயுமொத்தி பிறவாயுமொத்தி
பிறவாமனல்கு பெரியோய்
அறந்தானிறுத்த லரிதாகவாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

வினைவர்க்கமுற்று முடனேபடைத்தி
யவையெய்தியென்றும் விளையா
நினைவர்க்குநெஞ்சி னுறுகாமமுற்றி
யறியாமை நிற்றிமனமா
முனைவர்க்குமொத்தி யமரர்க்குமொத்தி
முழுமூடரென்றிம் முதலோர்
அனைவர்க்குமொத்தி யறியாமையாரிவ்
வதிரேகமாயை யறிவார்.

எறிந்தாருமேரு படுவாருமின்ன
பொருள்கண் டிரங்குபவரும்
செறிந்தாரினுண்மை யெனலாயதன்மை
தெரிகின்றதுன்ன திடையே

*பிறிந்தார்பிறிந்த பொருளோடுபோதி*
*பிறியாதுநிற்றி பெரியோய்*
*அறிந்தாரறிந்த பொருளாதியாரிவ்*
*வதிரேகமாயை யறிவார்.*

*பேராயிரங்க ளுடையாய்பிறந்த*
*பொருடோறுநிற்றி பிரியாய்*
*நீராய்பிரிந்து திரிவாய்திறந்தொ*
*றவைதேறுமென்று தெளியாய்*
*கூராழியங்கை யுடையாய்திரண்டொ*
*ருருவாதிகோட லுரிபோல்*
*ஆராயினேது மிலையாதியாரிவ்*
*வதிரேகமாயை யறிவார்.*

ஓ! ஸ்ரீராமமூர்த்தி! தேவாதிதேவர்களான பிரமேந்திராதியர்களும் அநேகவிதமாய் உழைத்துத் தவஞ்செய்து தேவரீருடைய திருநாமங்களைச் சதாதியானித்திருக்கின்ற செய்கையினாலே, கல்பகால பரியந்தம் அழியாத ஆசையையும்,பதினான்கு லோகங்களையும் அரசாக்ஷிசெய்யும்படியானமேன்மையையும்அடைதற்கருமையான சந்தோஷங்களையும், கிரமக்கிரமமாய் அடைந்து, பிறகு பரமபதவாழ்வையும் பெற்றுக் கரையேறுவார்கள். இவ்வித நன்மைகளைக் கொடுத்தற்குக்காரண பூதரான தேவரீர் அதிகதுக்கமுற்றவரைப்போல அழக்கடவீரோ?இவ்வித உம்முடையமாயையை அறியவல்லவர்கள் யாவர்? ஓ ரகுநந்தனு! பிரம்மேந்திராதியர்களுக்கும்சிருஷ்டிகர்த்தாவும், இரக்ஷக்கர்த்தாவும், சம்மாரகர்த்தாவுமாகி? எங்கும் அகண்டமாய் நிறைந்திருக்கின்றீர், அந்தப்பிரம்மேந்திராதிகளுக்கும் புத்திமுத்திகளைக் கொடுக்கவல்ல தேவரீர் இந்த அவதார விசேஷத்தால் அவர்களிடத்தில் கேவலம் ஐஹிகபிரயோசனங்களைப்பெறுகிறீர். அவர்களை வணங்குகிறீர். சர்வகாரணத்துவ சர்வரக்ஷகத்துவ சம்பந்தங்களால் அவர்களுக்கும் தேவரீருக்குமுள்ள உடமை உடையவனென்கிற சம்பந்தங்களைத் தோற்றுவியாமல், சாமானிய மனிஷ்யரூபத்தைக்கொண்டு மறைத்துத் துக்கமுற்றவராய் அழுகின்றீர். இப்படியொருவர் எழுந்தருளி யிருக்கிறீர் போலே யிருக்கின்றது. இவ்வித உம்முடைய மாயை அறியவல்லவர்கள் யாவர்? ஓ தாசரதி! தேவரீருக்கொப்பாகச் சிருஷ்டித்தருளின பிரமேந்திரர்களுடனே தேவரும் உபேந்திரனென்னுந் திருநாமங்கொண்டு அவர்களோடு சமமுற்றிருக்கின்றீர். அவ்வாறிருந்தும் அந்தப் பிரம்மேந்திரர்களுக்குத் தேவரீருடைய நிலைமை இப்படிப்பட்டதென்று சொல்லுகிறீரில்லை. பிரம்மாமுதல் பிபீலிகைமுடிவாகிய சமஸ்தசேதனு சேதனங்களையுங் கிரமமாய் நிறுத்தி, எல்லாவற்றிற்கும் நீரே காரணபூதரென்கிறதற் கடையாளமாக முந்தி எழுந்தருளியிருக்கின்றீர். பின்னும் பஞ்சபூதமயமான லோகத்தோடு அந்தர்யாமித்துவமாய்க்கலந்து, அந்தந்தப் பூதஸ்வரூபத்தை யொத்திருக்கின்றீர். அந்தந்தப் பூதங்களின் யதார்த்ததன்மையை யூகித்துப் பார்க்குமிடத்தில் ஒவ்வொரு பூதங்களுமாகாமற் பிரத்தியேகமா யெழுந்தருளுவீர். அடியேனைப் போன்றவர்கள் தேவரீருடைய இவ்விதமான செய்கையை அறியவேண்டுமென்று நினைப்பார்களேயானுல், தங்க ளறிவெல்லாம் அந்தகாரமூடி ஒரு நாளும் விடிவடைய மாட்டார்கள். இந்த மாயையானது உமக்குச் சமானமானதோ? அல்லது உமக்கு வேருனதோ? இவ்வித உம்முடைய மாயையை அறிவல்லவர்கள் யாவர் ? ஓசக்கிரவர்த்தி திருக்குமாரரே! உலகத்திலுள்ள யாவர்களுக்கும் அவரவர்களுக்குத் தக்கபடியே வாழ்நாளைக் கொடுக்கின்றீர். அந்தரியாமியாய் நின்றும் அவர்களுடைய ஆத்துமாக்கள் தேகத்தைவிட்டுப் பிரியும்போது, தேவரீர் மாத்திரம் விட்டுப்பிரியாமல் பூரணமாயெங்கு நிறைந்திருக்கின்றீர். எல்லாக்காலங்களையுங் கடந்துநிற்கின்றீர். தேவர்மாத்திரம் நீங்கமாட்டீர். உமக்கின்னபொருள் வேண்டுமென்று ஒருபொருளையும் வைத்துப் போற்றமாட்டீர். அந்தப் பொருள்களில் நீர் இச்சைவைக்கவுமாட்டீர். பஞ்சபூத பஞ்சீகரணமான தேகமெல்லாம்தேவரீரேபோய் அந்தத் தேகத்துக்குள்ளிருக்கின்ற உயிராகி, அவ்வுயிர்க்கந்தர்யாமியாகிய அந்தராத்துமாவாகி நிலைபெற்ற உணர்வுமாகின்றீர். பெண்ணுகின்றீர். ஆணுகின்றீர். இவ்விரண்டுமல்லாத அலியாகின்றீர். இவ்வித உம்முடையமாயை அறியவல்லவர்கள் யாவர்?

ஓ கௌசலைதனயரே! நான்கு வேதங்களும் தேவரீரை எண்ணிலடங்காத பலவாகிய ஸ்வரூபமென்று ஒருதரஞ்சொல்லுகின்றன. ஏகமாகிய சொரூபமென்று

ஒருதரஞ்சொல்லுகின்றன நீங்காதஜ்ஞான பேரொளியாகியஸ்வரூபமென்று ஒருதரம் சொல்லுகின்றன. கண்ணுக்கு புலப்படுவ தானவெளியினளவைகடந்த பரமபதஸ்வ ரூபரானதேவரீரை முடிவில்லாத ஆநந்த ஸ்வரூபரென்றுஞ் சொல்லுகின்றன. அ வ்வானந்தத்தை விளைப்பதான வஸ்துவெ ன்றுஞ் சொல்லுகின்றன. இவ்வித உம்மு டைய மாயையை அறியவல்லவர்கள் யா வர்! ஓ சீதாபதி! செய்யத்தக்கதொழிலின் கூட்டங்களை யெல்லாம் சேதநர்களுக்குக் கரசரணுதி அவயவங்களைச் சிருஷ்டித்த போதே அவற்றோடாதியிலேயே யுண்டா க்கினீர்? ஒன்றிலும் விருப்பமின்றி அத் தொழில்களையெல்லாம்அந்தராத்துமாவா யிருந்து செய்கின்றீர். நினைவால் பிராப்தி யாகின்ற மனதிலுள்ள ஆசைகளையெல் லாமுடிப்பித்து, அந்த மனதுக்க கோசர மாகியே யிருக்கின்றீர். நாரதாதிகளாய் மகாரிஷிகளுட னிருந்தே அவர்களால் தியானித் தறியத்தக்கவராகின்றீர். அவ் வாறே உபேந்திராதியராய்த் தேவர்களுட னிருந்தே அவர்களுடைய இடையூறுக ளிற் புறம்பேயிருக்கிற வஸ்துவைப்போ லத் தியானித்தடையும்படி யெழுந்தருளி யிருக்கின்றீர். இந்த மகாரிஷிகளையும் தேவ ர்களையும் பெருமூடர்களாகச்செய்து, அவ ர்களுடன் தேவரீருந் தெரியாதவரைப் போலவே யெழுந்தருளியிருக்கின்றீர். உம் முடைய மாயையை யாரறிவார்கள்.

ஓ கிருபாநிதி! மாறுபடாத வேதத்தி னுச்சியிலெழுந்தருளி யிருக்கின்ற தேவரீ ரைப் பாவ வசமான தேக சம்பந்தத்தாலு ண்டாகின்ற சம்பாரிகள் அறிவற்று, தேவ ரீருடைய யதார்த்த நிலைமையை விட்டுத் தங்கள் பந்துவான சம்பாரியென்று தங் கள் வாய்வந்தபடி பேசிக் கெட்டுப்போவா ர்கள் சாஸ்திரங்கள் நியமித்த சம்பந்தப் படி பிழைபடாத நீதியைப்புறக்கணியாமல் உம்மிடத்தில் அபிமானங்கொண்டிருக்க வேண்டியதிருக்க, அப்படிப்பட்ட அபி மானங்கொள்ளா ஞான சூநியர்களுக்கே கையாளாயுமிருக்கின்றீர். அந்த நிலை மாறி ஓரவதாரத்தில் இராஜ திருக்கோல முங்கொண்டருளுகின்றீர். இவ்வித லீலை யையாரறிந்து தெளிவார்கள்?

ஓ குணநிதி! யுத்தத்தில் ஆயுதங்களைப் பிரயோகிக்கின்றவர்களும், அந்த ஆயுதங் களாற் காயம்படுகின்றவர்களும், இவ்விர ண்டுகாரியங்களையும் பார்த்து இரக்கப்படு கின்றவர்களும், தேவரீரேயாயிருக்கின்றீர். அஃதுண்மையானதென்கிற நிலைமை தே வரீருடைய சர்வகாரணத்துவ சர்வரக்ஷக த்துவங்களால் பரிஷ்காரமாய் வெளியாகி றது. உம்மைவிட்டு நீங்கினவர்களால் நீக் கப்பட்ட ஜ்ஞானப்பொருளுடனே தேவரீ ரும் அவர்களைவிட்டு நீங்கிநிற்கின்றீர். அ ப்படி நீங்கியிருந்தும் அவ்வஜ்ஞானிகளு டனே அவர்களைப் பிரியாமல் அவர்கள் கடைத்தேறும் வழியைப் பார்த்துக்கொ ண்டுஅவர்களையறியாமல் அவர்களுடனே அந்தர்யாமித்துவத்தால் வசிக்கின்றீர். அநந்நிய பிரயோஜனரும் சரமோபாய நிஷ்டருமான இரண்டதிகாரிகளு மறிந் துகொண்ட பிரபத்திமார்க்கமும் தேவரீ ராகவே நிற்கின்றீர். ஆதலால் தேவரீரு டைய இவ்வித ஆச்சரிய நிலைமையை யாவரறிவார்கள்? ஓ தயாநிதி! ஆயிரந்திரு நாமங்களை யுடைத்தாயிருக்கின்றீர். காரண காரியமாய்ச் சம்பந்தித்திருக்கின்ற சராசர ங்களிலெல்லாம் நிலைகொண்டு நித்தியமாயி ருக்கின்றீர். இவற்றிற்கு வேறாயும் அவத ரித்திருக்கின்றீர். இந்த ரஹஸ்யங்களை ஒருவருக்குந் தோற்றுவிக்கின்றீரில்லை. பரமபாகவதர்களால் வெளியிட்ட உமது ரஹஸ்ய நிலைமைகளை அவர்கள் வாக்கியச் சிதைவு நேரிடவொட்டாமல் அவற்றிலட ங்கி நிற்கின்றீர். உம்முடைய ஸ்வரூபத் தைத் தியானிப்பவர்களுக்குச் சங்குசக்கர தாரியாய்ச் சேவைசாதிக்கின்றீர். உலோ கமே யுமக்குத் திருமேனியென்று உரிமை பாவிக்கும்படி விராட்டுருபமா யெழுந்தரு ளியிருக்கின்றீர். அதனுண்மையை ஆரா ய்ந்தால் அதற்கவயவமாகிய சராசரங்க ளெல்லாம் அவயவியாகிய தேவரீர் அல் லவா? இவையன்றி அப்பிரமேய பரவாசு தேவனுகவும் எழுந்தருளி யிருக்கின்றீர். தேவரீருடைய இவ்விதக் கபடநாடக மா யையை அறியவல்லவர் யாவர்?

ஓ ஸ்வாமி! தேவரீருடைய ஸ்வரூப நிலையை யெல்லா மறந்தவரைப்போலவும் காணப்படுகின்றீர். தேவரீருடைய முயற்சி களிலெல்லாம் உம்முடைய ஸ்வரூபத்தை

மறவாதவரைப் போலவே யெழுந்தருள் கின்றீர். அம்முயற்சியிலும் ஒவ்வொரு கா லங்களில் கொஞ்ச மறந்தவரைப்போல வுங் காணப்படுகின்றீர். நாட்டைவிட்டுக் காட்டையடைந்து லோகவியாபாரங்களை யெல்லாம்விட்டுத் துறந்தவரைப் போல வுங் காணப்படுகின்றீர். பந்துசம்பந்ததுக் கத்தைக் காட்டி அந்த வியாபாரத்தை நீங்காதவரைப் போலவும் காணப்படுகின் றீர். தேவரீர் இன்ன நிலைமையில் நிற்கின் றவரென்று தீர்மானிப்பதற்கு அடங்கமா ட்டீர். ஓ கரசரணாதியவயவங்களைப் பெற் றுப்பிறந்து தேவர் திருவடிகளில் அத்திய வசித்த மனமானது தடுமாற்றமடையாத உமதடியார்களைப் பாவவுலகத்திற் பிறவா மலிருக்கக் கிருபைசெய்கின்ற பரமாத்மரே தேவரீருடைய அரிய தர்மங்களை நிலைபெ றச்செய்வதற்கு உமது அகணித மாயா லீலையை ஆரறியவல்லவர்கள்?

ஓ கிருபாலுவே! சகல சப்தஸ்வரூப மாக எழுந்தருளி யிருக்கின்றீர். அந்தச் சப்தார்த்தமுந் தேவரீரேயா யிருக்கின்றீர். தேவரீருடைய குணப்பிரகாச ஸ்வதப்பிர மாணமான வேதபுருஷனால் ஒருகுணமுங் கடைகாண நிச்சயித்தறியப்படாமல் நிற் கின்றீர். அப்படிப்பட்ட தேவரீர் திருக்கர த்தில் ஒருவில்லைப் பிடித்துக்கொண்டு யா தொரு வருத்தமும் சத்துருக்களுக்குத் தோற்றவொட்டாமல் எழுந்தருளி யிருக்கி ன்றீர். பகைவர்களையெல்லாம் யுத்தத்திற்கு அழைக்கின்ற பாஞ்சசன்னியாழ்வானைத் திருக்கரத்தி லுடைத்தா யிருக்கின்றீர். இராக்ஷசர்களையெல்லாம் கொல்லத் திருவு ளங்கொண் டிருக்கின்றீர். அவர்களுக்கந்த ரியாமியாய் அவர்களுடனேகொலைப்பட்டு மிருக்கின்றீர். ஓ பாபப்பகைவரே! உமது மாயையை அடியேன் இவ்விதமென்று அறியமாட்டேன். தேவரீ ரிராத்திரியுமா யிருக்கின்றீர். பகலுமாயிருக்கின்றீர். இந்த அபாரமான அற்புதத்தை யறியத்தக்கவர் கள் யாவர்? என்று பலவாறாக ஸ்தோத்தி ரம்பண்ணி மனங்கரைந்து, மிகுந்த அக் கினிமயமான சோதியானது அந்த ராத்தி ரியைத் துரத்திவிடப் பொன்மயமான மேருமலையைப் போல் ஒளிவீசிக்கொண்டு எதிரே நின்றார்.

இப்படி நிற்கின்ற பெரிய திருவடியா கிய கருடபகவானை நிலைபெற்ற புகழையு டையவராகிய சக்கரவர்த்தித் திருக்குமாரர் கடாக்ஷித்து, இவர்யார்? தேவ புருஷரா யிருக்கின்றார். என்று நினைத்துக்கொண் டிருக்கும்போது, இந்தச் சப்தலோகங்களை யும்மூடி மறைக்கும்படியானசிறகையுடைய வராகிய கருடபகவான் உயரப் பறந்து வட்டமிட்டு சுவாமியை வலமாகச் சுற்றி வந்து நின்று, பலகோடியாயிர காதவழை யிலும் தமது சிறகின்காற்றை வீசினர். அம்மாத்திரத்திலே அந்தச் சிறகிலிருந்து புறப்பட்ட காற்றானது தன்னைச் சகிக்கிற தற்குச் சக்தியில்லாத நிலத்தினிடத்தில் யாவர்க்கு முணர்வுண்டாகும்படி குளிர்ந்து வீசிக்கொண்டு கிருபையுடன்போக, எல் லாருடலையுங் கட்டியிறுக்கியிருந்த நாகபா சமானது சின்னாபின்னப்பட்டுச் சிதறிப் போயது. அவ்வவர்கள் தேகத்திலுள்ள புண்களும்-வடுக்களும் ஒருவன் பஞ்சேந் திரியங்களையும் அவித்து நல்ல ஸ்வரூப ஜ்ஞானத்துடனிருப்பதுமன்றிச் சாஸ்திர தர்மத்தின்படியே நடந்துவருகின்ற சிரே ஷ்டனும் தளரா முயற்சியுள்ளவனுமான ஒருவனை, நடுவில் அபுத்திபூர்வமாயடை ந்த குறைவானது எப்படியவனைப் பற்றா மல் நசித்துப்போய்விடுமோ? அதுபோல க்கண் ணுக்குத் தோற்றாமல் மறைந்துபோ னதுகள். அக்கால் தருமமார்க்கத்தை ஒரு விதத்திலுந் தழுவாத தன்மையர்களாயிரு க்கின்றபடியால் இடியையொத்த கொடுஞ் செய்கையுடைய துஷ்டர்களான இராக்ஷ சர்கள்மாத்திரம் பிழைக்கவில்லை. ஸ்ரீராம லக்ஷ்மணர்களாகிய பெரியோர்களுடைய கைங்கரியத்தில் நிலைபெற்றிருக்கின்ற வா னரசேனா சமுத்திரமெல்லாம் கருடபகவா னுடைய ஸ்பரிசம் பட்டபடியினாலே, மூலதாமரசபுஷ்பத்தி லெழுந்தருளியிருக் கின்ற பிர்ம்மதேவர் கடைசியில் சிருஷ்டி த்தவைகளைப்போல ஸ்ரீயப்பதியின் கிரு பையாய் மரணமூர்ச்சை தெளிந்தும்-உயிர் பெற்றும் எழுந்திருந்து நிலைத்துநின்றார் கள். அப்போது மஹாபாதகனான இந்திர ஜித்து பிரயோகித்த நாகபாசமானது, அந்த தாமரைக்கொடியினுடைய நூலைப் போலச் சின்னாபின்னப்பட்டதற்குச்சொல் லவேண்டியதென்ன? அக்கால் இளையபெ

ருமாள் எழுந்து, ராமமூர்த்தியினுடைய திருவடிகளில்வந்து வணங்கி நின்றார். அப்படி நின்ற லக்ஷ்மணரை அதிக கிருபையுடனே சுவாமி தமது திருவாபரணங்களுடன்கூடிய திருமார்பிலிறுகத்தழுவி, நமக்கு அதிகவருத்தத்தை விளைவித்த விதியானது மறுபடியுங் கிருபைசெய்ததென்று சந்தோஷித்தார்.

பின்பு தமது பிராணபந்துக்களுக்குச் சமானமாகிய சுக்கிரீவமகாராஜா, ஆஞ்சனேயர், சாம்பவர், இவர்முதலான துணைவர்களும் மூர்ச்சைதெளிந்து, சுவாமி! திருவடிகளில் தண்டன்சமர்ப்பித்தார்கள். அவர்களையும் ஸ்ரீராமர் பிராண பூர்வகமாகக் கடாக்ஷித்துத் தமதுதிருக்கையால் அணைத்துக்கொண்டு, மூன்றாம்பிறைச் சந்திரனைப்போன்ற வக்கிரதந்தங்களையுடையவரான கருடபகவானுக்கு முன்பாகவந்து, அவதார வடிவத்திற்கேற்றபடி மரியாதையுடன் அவரைப்பார்த்து, பிரமேந்திராதி சமஸ்ததேவர்களுடைய அறிவுக்குமெட்டாத அந்த சுவாமியானவர் சொல்லுகின்றார். ஐயா! நீர்யார்! நாங்கள் பூர்வத்திற் செய்த தவப்பயனால்வந்து எங்கள் பிராணனையும் வாழ்வையுங்கொடுத்தீர். எங்களால் நீரொருகைம்மாறும் பெற்றீரில்லை. இப்படிப்பட்ட உபகாரியாகிய உமக்கு நாங்களென்னஉபகாரஞ்செய்யப்போகின்றோம்? புத்திமான்கள் ஆலோசிக்குமிடத்தில் நீர் செய்த உபகாரத்திற்கு ஈடானபொருள் வேறேயொன்றுண்டோ? நீர் இப்படிப்பட்ட இருண்டகாலத்தில் கிருபைகொண்டுவந்து தயவு செய்யத்தக்க மஹைதைஸ்வரியமுள்ளவரானால், உமக்கில்லாத வஸ்துவுமுண்டென்று மனத்தாலேனும் நினைக்கலாகுமோ? ஐயா! எங்களை நீஎப்போதும் பார்த்தவரும் அல்லர். இன்னாரென்றுசொல்லவுங் கேட்டிருக்கவுமாட்டீர். நீர் எங்களால் ஒருநன்மையும் பெற்றவருமல்லர். நீர் எப்போதும் பிறர்க்குக்கொடுக்குந் தன்மையுள்ளவராக இருக்கின்றீரேயல்லாமல், ஒருவரிடத்திலொன்று பெறும்படியான குறையும் உண்டாகமாட்டாது. ஓ! உண்டில்லை என்னும்படியாயிருந்த எங்களுயிரைக்கொடுத்த மஹாநுபாவரே! எங்களுடனே உமக்கெப்போதும் ஒருசிநேகமுமில்லையே! அப்படிப்பட்ட உமக்கு நாங்கள் செய்யத்தகுந்த காரியமென்ன இருக்கின்றது? அதனை நீரே யாலோசித்துச் சொல்லும். என்று கூறியதைக்கேட்ட பக்ஷிராட்டாகிய ஸ்ரீகருடபகவான் ஸ்ரீராமரைப்பார்த்து, சுவாமீ! தேவரீருக்கும் அடியேனுக்கும் நித்தியமான பழையவுறவிருக்கின்றது. தேவரிந்த ராக்ஷசநிரசனஞ் செய்து முடித்தபிறகு அதையடியேன் வந்து விண்ணப்பம்பண்ணிக் கொள்ளுகின்றேன். ஓ! வஞ்சமாயப்பிறவியை அறுக்கின்ற புருஷோத்தமரே! அடியேனுக்கு விடை கொடுத்தருளவேண்டும். என்று விடைபெற்று அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்.

நாகபாசப்படலம் முற்றிற்று.

---

## படைத்தலைவர்வதைப்படலம்.

இப்படி கருடபகவான் போய்விட்ட பிறகு கோதண்டதீக்ஷாகுருவாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர், இவர் நம்முடைய பிராணனை யுபகரித்துத் தமக்கு ஒருபிரயோசனமும் விரும்பாமற் போய்விட்டாரே? கிருபாவான்களுடைய செய்கை இப்படித்தானிருக்கும், பெருந்தன்மையாளர்களுடைய உபகாரமெல்லாம் பிரதிபயனை விரும்பமாட்டாது. ஏனென்றால்; மேகமானது மழைபெய்து உபகரிக்கிறதைப் பெற்றும், உலோகமானது அதற்குப் பிரதியுபகாரஞ்செய்கிறதுண்டாயிருக்கின்றதோ! என்று உகாரலக்ஷணத்தைப் பற்றி யாவர்க்குமுணர்த்தினார். அப்போது ஆஞ்சநேயர் சுவாமி திருவடிகளில் தெண்டன் சமர்ப்பித்து, சுவாமி! இந்தத் துஷ்டராக்ஷசர்கள் இலங்கையிற்போய் இளையபெருமாள் இறந்துபோய்விட்டாரென்று சொல்வார்களேயானால், அந்த வார்த்தையைச் சர்வலோகமாதாவான சீதாபிராட்டியார் கேட்டுத் துக்கப்படுவார். ஆகையால் நாங்கள் யாதொருதுக்கமும் அடையவில்லையென்பதற் கடையாளமாக எல்லாருஞ்சேர்ந்து சந்தோஷகர்ஜ்ஜனை செய்கிறோம். இதைக் கேட்டால் சந்தோஷத்தினாலே மெய்மறந்து நித்திரைசெய்கின்ற இராக்ஷசவஞ்சகர்களும், இறந்தவானரர்களெல்லாம்பிழை

த்துக்கொண்டார்களென்று திடுக்கிட்டுப் பெரும்பயம் அடைவார்களென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அதைக் கேட்ட சக்கரவர்த்தித் திருக்குமாரர் சந்தோஷித்து, அப்பா அநுமானே! நல்லது அப்படியேசெய்யுங்கள்என்று விடை கொடுத்தார். அப்போது சுக்கிரீவமகாராஜர் - சாம்பவர் - ஆஞ்சநேயர் - அங்கதன்- இவர்கள் முதலாகிய வானரவீரர்களெல்லாம் சமுத்திரமனைத்து நடுங்கித் தத்தளிக்கவும், ஆதிசேஷனுடைய முடியும் கூச்சமடையவும், அண்டகோளமானது வெடிபடவும், உலகத்தவர்களெல்லாம் அதிகயேக்கமடையவும், மேகங்களெல்லாம் கருவழிந்து சிதறுண்டு பூமியில்விழவும், மலைகள்கிழியவும், அஷ்டதிக்குகளும் கிழிபடவும், கொல்லென்று சப்தித்தார்கள். அப்போது சாமுத்திரிகாசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட எல்லாலக்ஷணங்களினுங் குறைவற்ற திருமேனியையுடைய சீதாபிராட்டியாரிடத்தில் தனதுமனஞ் செல்லவும், கண்ணுறக்கமில்லாமல் மோகதாபத்தால் நெஞ்சுவேகவும், சிவனுடைய சூலாயுதமும் தைக்கமாட்டாத மார்பை மன்மதபாணங்கள் சின்னுபின்னமாய்க் கிழிக்கவும் பெருமூச்சு விட்டுக்கொண்டு படுக்கையிற் கிடந்த இராவணன்; அந்தச் சப்தத்தைக் கேட்டான். அக்கால் பிதாவின்வாக்கியத்தைச் சிரசாகவகித்துக்கொண்டு தவவுருவம்பூண்டவராயும் - தர்மமூர்த்தியாயும்-பாபங்களையெல்லாம் போக்கிப் பாவனமாக்குகின்ற திருநாமமாகிய ஸ்ரீராமநாமாங்கிதராயுமிருக்கின்ற சக்கரவர்த்தித்திருக்குமாரரும், அவரைச் சதாதியானம் பண்ணிக்கொண்டிருக்கின்ற சீதாபிராட்டியாரும், அச்சீதாபிராட்டியாரை நினைத்து புத்திகெட்டு அதிகபேதையாயிருக்கின்ற இராவணனுமல்லாமல்; அந்தராத்திரியில்இலங்காபட்டணத்திலுள்ளவர்களில் நித்திரையில்லாதவர்களொருவருமில்லை. ஆகையால் - அந்த வோசையைக்கேட்ட ராவணன் ஆண்சிம்ஹமானது இடியோசையைக்கேட்டுப் பயந்ததுபோலவும் - சமுத்திரமானது சீறிக்கொண்டு பொங்கினது போலவும் - படுக்கையைவிட்டெழுந்திருந்து, உயுத்தகளத்தில் எல்லா மிறந்துபோனார்களென்று சொன்னவார்த்தை வெகுவுறுதியாயிருப்பதுபோலவே யிருக்கின்றதென்று கையோடுகையறைந்து, கற்பகப் பூமாலையணிந்த இருபதுதோள்களுங்குலுங்கும்படியாய்ச் சிரித்து, ஸ்ரீராமனுடைய வில்விநாணோசை யுகாந்தகால விடியைப்போல இடித்து இரைகின்றது. அண்டகோளம் வெடிபடும்படி இலக்ஷ்மணனுடைய வில்லின்குணத்தொனி அதிர்கின்றது. அநுமானுடைய வீராஷ்டகாசமானது என்னிருபதுசெவியும் கிழிய அடிக்கின்றது. சுக்கிரீவனுடைய சிங்கநாதம் இந்த லோகங்களையெல்லா மூடிவிடுகின்றது. இவ்வளவுதானோவென்றால்; அங்கதன் அதோ சப்திக்கின்றான். ஆகாசத்திலுள்ள தேவர்களெல்லாம் ஆர்ப்பரிக்கின்றார்கள். அக்கினியாம்சமான நீலன் முதலான மற்ற வீரர்களெல்லாம் தனித்தனியே சீறிக்கொண்டு கர்ஜ்ஜிக்கின்ற ஓசையானது அண்டத்துக் கப்புறம்போய் முட்டுமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால், எல்லாரும் தர்மதேவதையி னுதவியால் நாகபாசக் கட்டுகளினின்றும் விடுபட்டார்களென்று சொல்லித் தன் படுக்கை மெத்தையைவிட்டெழுந்து, ஒன்பதுகோடி ராக்ஷசர்கள் தன்னைச் சூழ்ந்துவரும்படியாகவும் - கோடி ஸ்திரீசனங்கள் சுவர்ன விளக்குகள் பிடித்துக்கொண்டு வரும்படியாகவும்-இராவணன் தன் பெரிய அரண்மனையைவிட்டுப் புறப்பட்டு இந்திரஜித்துவின் அரண்மனையைச் சேர்ந்தான். அப்போது தங்கள் புடவைகளைவாரிச் சுருட்டிக்கொண்டவர்களும், அவிழ்ந்து வீழ்ந்த கூந்தலையுடையவர்களும், மேல்மூச்சு வாங்கி விடுகின்றவர்களும், ஆகாசத்தைமுட்டிய ஸ்தனங்களையுடையவர்களும், உறக்கம் நீங்காத கண்ணையுடையவர்களும், தள்ளாடின நடையையுடையவர்களும், கொடிபோல வளைந்த இடையையுடையவர்களுமான ராக்ஷசஸ்திரீகள் தூக்கத்தாற் சோர்ந்து வீழ்ந்துகொண்டு, இராவணனுக்குத் துற்சகுனமாக எதிர்கொண்டு வந்தார்கள். குடித்தமதுபானமும் - உறக்கமும் - தங்கள் நாயகன்மார் வந்து புணர்வதாகக்கண்ட கனவும்-பண்விளைந்த கானப்பாட்டுகளும்- தம்மைத் தள்ளத் தட்டுமாறி, மதர்த்துக் கள்ளங்களைக்கற்று மீனைப்போலப் பிறழுகின்ற பெரியகண்களை மூடுவதும் திறப்பது

மாகத் தேவஸ்திரீகளெல்லாம் கால்களிற் சதங்கை சப்திக்கும்படியாக இராவணன் முகத்தில் விழிக்காமல் மறைந்துபோய் விட்டார்கள்.

மேகத்திற்கு நீலச்சாயங்கூட்டி நல்ல பரிமளப்புகையை யூட்டி அங்கங்கே சுருட்டி மெல்லிய புஷ்பங்களை யணிந்து இடையினுக் கிடையூருகப் பிரம்மதேவர் சிருஷ்டித்த பெருங்கூந்தலையும், பெருங்கண்களையும், சிவந்தவாயையும், உடையவர்களான அநேகவாபரணங்களைத்தரித்த மானிட ஸ்திரீகளெல்லாம், நித்திரை மயக்கத்தால் அந்தந்த விடங்களிற்ப துங்கி விட்டார்கள். தேனையும், கரும்பையும், வெல்லப்பாகையும், அமுதையுமொத்த சொல்லைத்தேடி அமைத்து, மானையும், கயல் மச்சியங்களையும், வாளாயுதத்தையும், நீலோற்பல புஷ்பங்களையும் ஒத்திருக்கின்ற கண்களையும் சம்பாதித்துவைத்து, உயர்ந்த நடக்கைகளையும் அதற்கொப்பான நல்லமார்க்கங்களையும் கொடுக்கத்தக்கசிறந்தநகரத்தை ஆராய்ந்து, அதிற்பிரமதேவராற் சிருஷ்டித்த ஸ்திரீகள் அநேகம்பேர்கள் இராவணனுடனே போனார்கள். அப்போது வானரவீரர்கள் சப்திக்கின்ற ஓசையானது செவிகளில் நுழைந்தமாத்திரத்தில் தன்னிடத்தில் அகப்பட்ட ஜீவன்களைத் தப்பவிடாத ஆண்முதலைக் கொப்பான பலமுள்ள இராக்ஷசர்களெல்லாம், சிம்ஹகர்ஜ்ஜனையைக்கேட்ட யானைகளைப் போல இருந்தவிடத்திலேயே உழைத்துக் கொண்டார்கள். இராக்ஷச ஸ்திரீகளெல்லாரும் இடிமுழக்கங்கேட்ட புற்றிலுள்ள பாம்பைப்போலக் கர்ப்பங்கலங்கி நடுங்கி விட்டார்கள். இப்பால் இந்திரஜித்துவின் மனைக்குப்போன இராவணனனவன் அவன்படுத்திருக்கின்ற ஸ்வர்ன உப்பரிகையிற் சரேலென்று சென்று, சிம்ஹத்தினல் சங்கடப்பட்டுச் சோர்ந்து வீழ்ந்துகிடக்கின்ற கருக்கொண்ட மேகம்போன்ற யானைக் கொப்பாக இலக்ஷ்மணருடைய பாணவருஷங்களால் தேகமெல்லாம் சல்லடைக் கண்களாய்த் தொளைக்கப்பட்டுள்ள புண்களில் இரத்தந் தாரைதாரையாக வழிந்து கொண்டு கிடக்கின்ற இந்திரஜித்துவைப் பார்த்தான்.

இப்படி இராவணன்வந்து பார்த்த போது இந்திரஜித்து எழுந்திருந்து, தகப்பன்காலில்வீழ்ந்து கும்பிடமாட்டாமற் படுத்த படுக்கையிலேயே இரண்டுகைகளையும் வருத்தப்பட்டுத் தூக்கிக்கும்பிட்டான். அதைக்கண்ட ராவணன் மனங்கலங்கி, அப்பா குமாரனே! நீ வெகு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றாயே! உனக்குச் சம்பவித்த சங்கடமென்ன? உன்னையார் என்ன செய்தார்களென்றுகேட்டான். அப்போது சீழ்பற்றிக் குத்தலெடுத்துக்கொண்டிருந்த புண்களையுடைய இந்திரஜித்து இராவணனைப்பார்த்து, ஓ! வெற்றிமாலையைத்தரித்த மார்பினையுடைய ஐயா! அந்த லக்ஷ்மணனுடைய பாணங்களில் அநேகபாணங்கள் என்முதுகையும் தடாரித்துப்போனதுகள் அநேகபாணங்கள் என்தேகத்திலுள்ளரத்தத்தை யெல்லாம் குடித்துவிட்டதுகள். அனேகபாணங்கள் என்மார்பிலணிந்திருந்த கவசத்தையும் துண்டுதுண்டாய்ச் சிதறடித்து விட்டதுகள். அநேகபாணங்கள் என்தேகத்தைச் சக்கை சக்கையாய்ப்பேர்த்தெறிந்து விட்டதுகள். சிலபாணங்கள் என்கண்களிலும் வந்துநுழைந்து விட்டதுகள். உடனே என்மாயையால் தப்பித்துக்கொண்டு ஓடிவந்து விட்டேன். மேலும், நான் சொர்க்கலோகாதிபதியான இந்திரன், விருஷபவாகனருடரான உருத்திரமூர்த்தி, கருடவாகனருடரான ஸ்ரீமகாவிஷ்ணு, ஆகியவிவர்களோடு சூரியன் முதலான தேவர்களெல்லாங்கூடி என்னோடெதிர்த்து யுத்தஞ்செய்தபோதும்! இவ்வளவு துன்பப்படவில்லை. இப்படி ஒரு நாளும் இளைத்துவந்து உம்மோடு நான் குறை சொன்னதுமில்லை. ஓமந்தரகிரிக்குச் சமமான தோள்களையுடைய ஐயா! அந்த மனிதர்களுடைய வல்லமைக்கு ஒருவரம்பு சொல்ல என்னாலுமாகாது, எனதஞ்சாம் பாட்டனாகிய பிர்ம்மதேவனாலுமுடியாது. நான்சொன்ன இவ்வளவு வல்லமையும் அந்த லக்ஷ்மணனுடைய வல்லமையாக்கும். வெற்றிமாலையைத்தரித்த மார்பையுடைய ஐயா! இராமனுடைய பராக்கிரமத்தை நினைப்போமேயானல் நம்முடைய பிராணன்களோடு மாத்திர முடிந்துபோகாது. சம்பவித்த காரியங்களைப்பார்த்துணரவேண்டுமேயல்லாமல், நமக்குவெற்றியே

உண்டாகுமென்று நினைப்பது தகாது. என்றுசொல்லி இப்போது நிறைவேறியிருக்கிற தன்மையையுணராதவனான இந்திரஜித்துப் பின்னுஞ் சொல்லுகின்றான். ஐயா! யான் இப்போது அந்த வெற்றியாளனான இலக்ஷ்மணனையும் குரங்குவீரர்களையுங்கொன்றது நாகபாசத்தினாலும்என் மாயா வல்லமையினாலுமேயன்றி,என்சொந்த பலத்தினாலே யல்லவென்று நினையும். இன்னும் ஸ்ரீராமன்மாத்திரம் தப்பிநிற்கின்றான். ஆதலால் மேல்நடக்கிறபடி நடக்கட்டும். என்று சொல்லக்கேட்டராவணன் இந்திரஜித்துவைப்பார்த்து, அப்பா வீரகண்டாமணியைத்தரித்த காலையுடைய குமாரனே! இப்போது இலக்ஷ்மணனுடைய வஜ்ஜிரவில்லின்குணத்தொனிஆகாசத்தைப் பிளக்கின்றதே! சப்தமேகங்களின் கர்ஜ்ஜனையடங்கவும், சமுத்திரந் தத்தளிக்கவும், அனுமான், சுக்ரீவன், அங்கதன், சாம்பவன், இவர் முதலான வானரவீரர்கள் போர்க்களத்திற் சப்திக்கின்றார்களே! அந்தச்சப்தத்தைக் கொஞ்சமும் நீ அறியவில்லைபோலிருக்கின்றதேஎன்றான். அதை இந்திரஜித்து கேட்டு, ஐயா! எனது நாகபாசத்தால் அந்த லக்ஷ்மணன் முதலானவர்களெல்லாம் கட்டுண்டார்கள். பிறகு இடிக்குச்சமானமாகிய என்கைப்பாணங்களால் தேகமெல்லாம் சக்கை சக்கையாய்ப் பிளந்து போனார்கள். என் கண்முன்னேயே அறிவுஞ்சோர்ந்து போனார்கள். அப்படிப்பட்டவர்கள் பிழைத்தார்களென்றுசொல்லுவது உண்மையோ? அல்லது வேறோ? அப்படி உண்மையானால் அப்பாசத்தைக்கொடுத்த ஐம்முகக்கடவுள் அவ்வளவு சிறியரோ ? என்றுசொல்லி ஆச்சரியமாயினன்.

இப்படி இராவணனும் இந்திரஜித்துவும் பேசிக்கொண்டிருக்கும்போதே அங்கேநடந்தகாரியத்தைத்தெரிந்துகொண்டு வரும்படியாய்ப்போன தூதர்கள் வேகமாய்த் திரும்பிவந்து இராவணனுடைய பாதங்களில் வீழ்ந்தார்கள். அவர்களைப்பார்த்த இராவணன் நடந்தகாரியமென்னவென்று கேட்க, அந்தக்கல்விமான்களான தூதுவர்கள் சம்பவித்ததைத் தெரிவிக்கத்தொடங்கினார்கள். ஐயா திரிலோகநாயகா! நாகபாசத்தாற் கட்டுப்பட்டு பாணங்களாற் பிளப்புண்டவர்களை அயோத்திநாட்டுக்கரசனான தசரத புத்திரனாகிய ஸ்ரீராமன் அர்த்தராத்திரியில் வந்துபார்த்துச் சிறிது கிலேசித்து, பிறகிவ்வுலகத்தையெல்லாம் எரித்து விடுகிறேனென்று அட்டகாசஞ் செய்தான். அப்போது ஆகாசத்திலிருந்து கருடன் பறந்துவந்தான். அவன்வந்தவுடனே கூரியபற்களையுடையசர்ப்பங்களெல்லாம் சின்னா பின்னப்பட்டுப் போய்விட்டதுகள். அவர்கள் தேகத்துப்புண்களும் ஆறிப்போனதுகள். அவர்கள் மூர்ச்சையு நீங்கிவிட்டது. அவர்கள் எல்லாரும் முன்னிலும் அதிக பலமுள்ளவர்களாகி இரணக்களத்திற்சூழ்ந்து மொய்த்துக்கொண்டார்கள். இதுதான்நடந்தசமாசாரமென்றார்கள். அப்போதுராவணன் அருகிருந்தவர்களைப்பார்த்து, ஓ மித்திரர்களே! ஒருவராலும்புகழ்ந்து முடியாத தோள்வல்லமையையுடைய என்குமாரனான இந்திரஜித்து எய்த நாகபாசத்தைக் கருடன் தன்சிறகின் காற்றினாலே கழன்றுபோகும்படிச்செய்தானாம். கேட்டீர்களா? என்றான் இப்படிப் பட்டவார்த்தை யுண்டாகுமானால் இராவணனிந்த மூன்றுலோகங்களையும் ஆளும் வல்லமையுடையவனாயிருக்கின்றானென்று யாவருஞ் சொல்லிக்கொண்டுவந்த என் வாழ்வு மிக நன்றாயிருக்கின்றது. ஆ! ஆ! என்வெற்றிப் பிரதாபமெல்லாம் முடிந்து போய் விட்டதுபோலிருக்கின்றதே! அப்படியா ! இந்தப்பதினாலுலோகங்களையும் உண்டுமிழ்ந்தவ னென்கிற கீர்த்திபெற்றவனான அந்த விஷ்ணு என்னோடெதிர்த்து உத்தஞ்செய்தபோது புத்திமயங்கித் திகைத்துப்போனான். அப்போதிவன் அவனுக்கு வாகனமாகத்தானேயிருந்தான். நானிந்தப் பூமண்டலமெல்லாம்ஜெயித்து வெற்றிபெற்றுவந்தேன். இந்தச் சப்தசமுத்திரங்களும் என்வல்லமைக்குத் தத்தளித்துப் போய்விட்டன. அப்போது எல்லாம் நீங்கள்சொன்ன இந்தக்கருடன் என் வல்லமையைத் தன்கண்ணாற் பார்க்கவில்லைபோலிருக்கின்றது.

கைகளில் நேமியும் சங்கமும் சுமந்துகொண்டிருக்கின்ற விஷ்ணுவினாலே காக்கப்பட்டிருந்த அந்தவைகுந்தலோகத்தின் மீது நான் சண்டைக்குப்போய் என்வில்லில் அம்பைக்கோத்துப் பிரயோகித்த

போது, சூரியசாரதியாகிய அருணனுடைய தம்பியான இந்தக் கருடனுடைய மார்பிலும்-முதுகிலும் - தோள்களிலும் - அந்தத் தோள்களிலுள்ள சிறகிலும்-அந்தப் பாணங்கள் தைத்திருக்கிறதை மறந்து போய்விட்டோ இப்போதுவந்தான். இதிருக்கட்டும் இன்னுமெப்படி முடிந்தாலும் முடியட்டும், இனிப் பயந்து மீதியாய் நிற்கின்றவர்களைக் கொல்லவேண்டிய விருப்பத்தை முடிக்கவேண்டு மல்லவா! அப்பா ஆண்பிள்ளைச் சிங்கமே! நீயே அந்தச் சண்டையைச் செய்யவேண்டும். உன்னுடைய அருமையான சண்டைகளை அவர்கள் பார்த்தமாத்திரத்தில் வெட்கப்பட்டோடிவிடுவார்கள். என்று தனது பராக்கிரமத்தினுஞ் சிறந்த பிள்ளையாகிய இந்திரசித்துவைப்பார்த்துச் சொல்லினன். அதைக்கேட்ட இந்திரசித்து அவ்விராவணனைப் பார்த்துத் தன்கருத்தைச்சொல்லத்தொடங்கினன். ஐயா எனதருமைப் பிதாவே! இன்றைக்கு ஒருநாள்தங்கி யுத்தத்திற்பட்ட சிரமங்களெல்லாம் ஆற்றிக்கொண்டு நாளைக்குயுத்தகளத்திற்குப்போய் ஒரு க்ஷணநேரத்திற்குள்ளே பிரம்மாஸ்திரத்தை விட்டு அவர்களையெல்லாங் கொன்று உமது மனதிலுள்ள துக்கத்தை நீக்கிவிடுகிறேனென்ருன். அதைக்கேட்ட ராவணன் அப்பா! நல்லது? அப்படியே செய்யக்கடவாய். என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுப்போய்த் தன்னுடைய குளிர்ந்த இரத்தினமாளிகையைச் சேர்ந்தான்.

பின்பு வானரவீரர்களுடைய ஆரவாரத்தைக்கேட்ட இராக்ஷசர்களெல்லாம் யுத்தபேரிகையை முழக்கிச் சண்டைசெய்யவேண்டுமென்று இச்சைகொண்டு, அதிகவாக்குரோஷத்துடனெல்லாரும் ஒருமிக்கக்கூடி, வெற்றிமாலையையணிந்த விசாலமான மார்பையுடையவனுன இராவணனைச்சேர்ந்து எங்களுக்கு யுத்தத்திற்குப் போகும்படி உத்தரவுகொடுமென்று கேட்டார்கள். அப்போது மகாபாரிசுவனும், தூமாக்ஷனும், எங்களுக்கும் உத்திரவு கொடுத்தால் நாங்களும் போகிறோமென்ருர்கள். அவர்களை ராவணன் சந்தோஷமாகப்பார்த்து, நல்லது நீங்களும் போங்களென்று சொன்னுன். அதைக்கேட்ட தூதர் மனம் பொறுக்காதவர்களாகி, ஐயா ராவணேஸ்வரா! இவர்களுடைய நடக்கையைச் சொல்லுகின்ரும் கேளும், தேவரீருடைய குமாரராகிய இந்திரசித்துவானவர் யானைகளும்-குதிரைகளும் - தேர்களும்-பதாதிகளும்-ஆகிய சதுரங்கச் சேனைகளுமிழந்து தான்மாத்திரம் தனியாய் நின்ருர். அப்போதிவர்களதைச்சற்றும் நினையாமல் அவருக்குச் சக்கிரரக்ஷகராய் வந்த தன்மையையும் யோசிக்காமல், மனிதனுடைய வாளி வாளியென்று வாய்குளறிக்கொண்டு யுத்தகளத்தில் நின்றும் ஓடிவந்துவிட்டார்கள். ஆதலால் இவர்களையுமொரு வீரரென்றெண்ணி யெங்களோடனுப்புதல் கூடாதென்று சொன்னுர்கள்.

அதைக் கேட்டமாத்திரத்தில் இராவணனுக்கு அக்கினி பொங்கினதுபோலக் கோபமுதிர்ந்து, இவர்களுடைய வீரத்தன்மை இப்படிப்பட்டதா? நல்லது? இவர்களைப் பிடியுங்களென்று நியமித்தான். அப்படியே கிங்கரர்கள்போய் அவர்களைப் பின்கட்டாககட்டிக்கொண்டுவந்து அவனுக்குமுன்பாக நிறுத்தினுர்கள். அப்போது கருநிறத்தை யுடையவனுன ராவணன் இவர்களைக் கொல்லாமல் நன்ருய்ப்புடையுங்களென்று சொன்னுன். அப்படியே யவர்கள் நன்ருய்க் குமுக்கினபிறகு மறுபடியு மிராவணன் அந்தத் தூதுவர்களைப் பார்த்து, இவர்களுக்கு வேறே தண்டனையில்லை. இவர்களுடைய மலைச்சிகரம்போலிருக்கின்ற மூக்கையறிந்து, இவர்களை ஊரைச்சுற்றி யுத்தத்திற் பயத்தோடினவர்களென்று யாவருக்குந் தெரியப்படுத்துங்களென்பதாககட்டளையிட்டான். அந்தக்ஷணமே அந்தத்தூதுவர்கள் நெய்பூசிய வாளாயுதத்தைக்கையிற்பிடித்து, அவர்களுடைய உயர்ந்த மலையைப்போன்றநாசியை அறுக்கிறதற்காக ஓடினுர்கள். அப்போது மாலியென்பவன் அவர்களைத்தடுத்துச் சென்று இராவணனைக்கண்டு சில சொல்லுவதாயினன். ஐயா கீர்த்திமானுகிய இராவணேஸ்வரா! நீர் அவர்களை இப்படிச்செய்கிறது தகுதியல்ல யுத்தத்திற்குப் பயந்தவர்கள் ஜெயம்பெறுதலும், முன் ஜெயம்பெற்றவர்கள்மாண்டுவிழுதலும்வழக்கந்தான். ஆண்பிள்ளைத்தன்மை யுடையவர்களுக்குள் உயர்வுபடாதவர்களும்-தாழ்வுபடாதவர்களும் யாரிருக்கின்ருர்கள்? நீர் தாரதம்மிய

மொன்றுந் தெரிகின்றீரில்லை. இப்போது தங்களிச்சைப்படிச் சண்டைக்குப் போகிறோமென்று வந்தவர்களைக் கோபித்தாலெப்படி? தேவர்களும் தானவர்களும் சேனையாயிருந்தும் இந்திரனுனவன் உம்மைக்கண்டு நடுங்கினதை நீர்மறந்துபோய் விட்டீரா? அந்த ஸ்ரீராமனென்ன லகுவானவனோ? வருணதேவனே வந்துவணங்கி அவனுடைய கிருபையைப் பெற்றுக்கொள்ளுகிறவரைக்கும் நடுங்கி நின்றானே; அப்படியிருக்க இந்தக் கருநிறச்சூதர்கள் அவனெதிர் நிற்பார்களா? இதை ஆலோசிக்கும்போது இவர்களென்னசாஸ்திரங்களறிந்தவர்களா? சும்மாமுரடர்கள்தானே! இவர்கள் போகட்டும்.

இந்திரஜித்து வுடனே நாற்பதுவெள்ளஞ்சேனைகள் போயினதுகளே? அவ்வளவுபேர்களு மாண்டு இவர்களு மிந்திரஜித்துவுமாகிய இந்த மூன்றுபேர்கள் தானே தப்பிப் பிழைத்து வந்தார்கள்? நீர் நல்ல புத்திமானுச்சே; இவர்களைப் பார்க்க வீரர்களாயிருந்தவர்கள்யார்? தான் விட்ட நாகபாசமும் சிந்திச்சிதறிப்போய் விட்டது. தன்னுடன்வந்த நாற்பதுவெள்ளஞ்சேனையும் படுசூரணப்பட்டுப்போய் விட்டது. தன்தம்பியாகிய அதிகாயனும் பட்டுப்போனான். இப்போது யுத்தமுகத்தில் உமதுகுமாரன் போகிறதற்குப்பயந்து சாக்குச் சொல்லுகின்றான். இப்படியிருக்க அவனையொன்றுஞ் சொல்லாமல் வயிற்றுசோற்றுக்கு உம்மிடத்திலுழைக்கிற இந்த அற்பர்களையா நீர் மூக்கையரியப் புறப்பட்டீர்? லக்ஷ்மணனென்று சொன்ன மாத்திரத்தில் ராக்ஷசரெல்லாரும் தங்கள்வீட்டுக் கதவுகளையெல்லா மூடிக்கொள்ளுவார்கள். இந்த ஏழுசமுத்திரந்தான் அவர்கள்போய் மறைந்துகொள்ளுகிறதற்குஅவர்களுக்குத் துணையாகுமோ?

ஐயா இராவணேஷ்வரா! நாசியறுக்க வேண்டுமானுல் உலகத்திலுள்ளவர்களையெல்லாமே யறுக்கவேண்டும். அப்படிச் செய்வதற்கு ஊழிகாலம்வரையிலும் செய்தாலுமுடியாது. தூதாகவந்த அனுமானுக்குப்பயந்து அன்றைக்கவனோடு சண்டை செய்ய மாட்டாமல் ஓடிப்போனவர்கள், ஒரு தண்டனைக்கு முட்படாமல் உமதுசேனையிற் பாதிக்கதிகமாக நாசியுடனே யிருக்கின்றார்கள். நீர் சீதையை விட்டுவிடாத படியினுலே அந்த ராமலக்ஷ்மணர்கள் நம்மீது சண்டைக்கு வந்தார்கள். அப்போது எல்லாச்சேனைகளும் அவர்கள்மேற் சண்டைக்குப்போய்அந்த ராமலக்ஷ்மணர்களைக் கொல்லாமற் போனுர்களேயென்று நீர் எல்லாருடைய மூக்கையும் ஒரே நாளில் அறுவென்று சொல்லாமற் போனீரே? அப்படியேன் சொல்லவில்லை. ஆகையால் ஈதெல்லாம் ஓர் குற்றமல்லவென்று சொன்னான். அப்போது தூமாக்ஷனு மகாபாரிசனும் இராவணன் தங்கள்மீதுகொண்ட கோபமாறினுனென்று தெரிந்தவர்களாகிப்பயந்தீர்ந்து, மனம் தைரியப்பட்டு, அதிக கோபத்துடனே கண்கள் சிவந்து நின்று தங்களுடைய செய்கையையும் நிலைமையுஞ் சொல்லத் தொடங்கினார்கள். ஐயா இராவணேஷ்வரா! உம்முடைய குமாரன் இந்திரஜித்து அந்த லக்ஷ்மணனுடைய யுத்தத்தில் வருத்தப்பட்டு ஒரு பக்கத்தில் ஒதுங்கிவிட்டது மாத்திரமா? ஆகாசத்திற் போகத் துரிதப்பட்டு ஒரு மாயையைச் செய்துவிட்டுப் போய்ப்பிழைத்து இலங்கைக்குள்வந்து நுழைந்துகொண்டார். நாங்களப்படி வந்துவிடமாட்டோம். இன்றைக்குள் அல்லது நாளைக்குள்ளாக அதிக உஷ்ணமான பெருநெருப்பில் வைத்தசெப்புவட்டிலில்விட்ட எண்ணையைப்போல் வற்றிப்போகும்படி எல்லாருடைய பிராணன்களையு மூடித்துவிடுகிறோம். மூன்றுநாள் வரையிலும் வைக்கிறதில்லை.

ஓ வீரலக்ஷணமெல்லாம் நன்றாய்த் தெரிந்த இராவணேஷ்வரா! நீரேயிரும். நீர் எங்களை இப்போது போருக்குஅனுப்பினீரேயானுல், தூமாக்ஷ மகாபாரிசாள் கொடிய யுத்தத்திலே பிரவேசித்து எல்லாரையுங் கொன்றுவிட்டார்களென்றுகேள்விப் படுவீரேயல்லாமல், கெட்டுப்போய் விட்டார்களென்று கேள்விப்படமாட்டீர். எங்களாவியை முடிக்க விருப்பங்கொண்டவர்களான அவ்விருவரும் சொன்னார்கள். அந்தச் சொல்லைக்கேட்ட ராவணன் அவர்களுடனே பத்துவெள்ளம் ராக்ஷசக்காலாட்சேனைகளையும், அவர்களுக்குத் தக்க யானைகளையும், தேர்களையும், குதிரைகளையும், கூடச்சேர்த் தனுப்பினான். இந்தச்

சேனைகளுடனே நெய்சொரிந்து யாகஞ் செய்யக்கண்டால் அதுகளையெல்லாம்தும்சஞ்செய்கிறவனுனையாககேதுவென்றும், சூரியனுக்கும் பகைவனுன சூரியகேதுவென்றும், மாலி-பிசாசன்-வஜ்ரதந்தன்-என்றும் சொல்லுகின்ற படைத்தலைவர்களெல்லாம் இராவணனுடைய கட்டளையினுல் யானைகளும்-தேர்களும் - குதிரைகளும் - துணையாகவர மலைக்கூட்டங்களைப்போலக் கர்வித்துப் புரப்பட்டுப்போனுர்கள்.

அப்போது ஆகாசத்தை மறைத்துக் கொண்ட தூளியினுல் தேவர்களுடைய கண்களும் தெரியாமற் போய்விட்டபடியினுல், எண்ணைக் கடந்து விளங்கும் அந்தச் சேனையின் தொகையை ஒருவரும் நிச்சயிக்கமாட்டாமற் போனுர்கள். சக்கரங்கள் பூட்டிய தேர்களிற்கட்டிய கொடிகளும், கருமலைபோன்ற யானைகளின்மீது பிடித்துக்கொண்டுவருகின்ற கொடிகளும் வெள்ளை யலைகளைப்போல வீசுகின்றபடியினுலும், மேகங்கள் பரவிய ஆகாசநக்ஷத்திர மீனங்களில் அசைகின்றபடியாலும், அந்தச் சேனைகள் பெரியகடலைப்போலிருந்தது. உலகத்தைச்சூழ்ந்த பெரிய சமுத்திரம்போல முரசங்கள் சப்தித்ததுகள். யானைகள் மேககர்ஜ்ஜனையைத் தோற்கடித்துக் கடலுடன்பகைகொண்டுமுழங்கினதுகள். குதிரைகள் மேகங்களைப்போலக்கனைத்ததுகள். முகபடாமணிந்த குன்றுகள் நடந்தாற்போலப் பெண்யானையின் சுவட்டைமிதித்து ஆண்யானைகள் தொடர்ந்து போக, கலவியினிமித்தமாகப் பெண்யானைகள் நின்று பிணங்க, அவைகளைத் துதிக்கையாற் றழுவிக்கொண்ட ஆண்யானைகள் நில்லாமற் சென்றதுகள். சில யானைகள் நீண்ட துதிக்கைகளை ஆகாசத்தில் நீட்டி மேகசலத்தை வாரி வீசிக்கொண்டுபோகின்றபடியால் அந்த மேகங்கள் விலகிப் போய்விட்டன. அவை யானைகளால் உண்டுவிடப்பட்டனபோலிருந்தன. அக்கினிகளைக் கக்குகின்ற ஆயுதங்களின் பிரகாசமும், வீரர்கள் தரித்திருக்கின்ற ஆபரணங்களின் பிரகாசமும், தேர்களையும்-குதிரைகளையும் - யானைகளையும் - சிங்காரித்த சிங்காரப்பொருள்களின் பிரகாசமும் கிண்கிணிமாலையின் பிரகாசமும் எங்கும் நிறைந்திருக்கின்றபடியினலே; அவ்விராத்திரியினிருளெல்லாம் திக்குவிதிக்குகளாயோடிப் பகலைப்போலிருந்தது. இப்படியாக வந்த படைகளையும் படைத்தலைவர்களையும் சர்வலோக சரண்யரான ஸ்ரீராம மூர்த்தி பார்த்து, விபீஷணரை நோக்கி, அப்பா சற்குணசீலனே! முன்பிங்கேவந்து மாயையால் வெற்றிபெற்றுக்கொண்டு போனஒருவனேமீட்டுமிந்தப் படைகளும் படைத்தலைவர்களும் சூழ வருகின்ருனு? அல்லது வேறே யாரேனுமா சொல்லுக வென்று நியமித்தனர். உடனே யவர் சுவாமிக்குத் தெண்டன் சமர்ப்பித்துச்சொல்லுகின்ருர். ஐயா தசரதநந்தனு! இப்போது முன்பு மாயையால் மயக்கிவிட்டுப் போன இந்திரஜித்து வரவில்லை. மற்றியாரென்ருல் மலைக்குகையிலிருந்த சிம்ஹமானது யுத்தத்தை விரும்பி அதிக கோபங்கொண்டதுபோலவும் சந்திரப் பிறையை யொத்த தந்தங்களையும் பிளந்த வாயையுமுடைய யானையைப்போலவும் சப்தித்து, அக்கினிப்பொறிகளைச் சிந்துகின்ற அம்பறுத்தூணியை முதுகில் கட்டிக்கொண்டு, வில்லைக் கையிற் பிடித்துத் தேரின்மீது வருகின்றவன் மகாபாரிசுவனென்னும் பெயரினையுள்ள இராக்ஷசன். அக்கினிச்சுவாலை வீசுகின்ற கோபக்கண்களையுடையவனுய்ச் சத்துருக்களுடைய ஆவியையுண்கின்ற ஸ்வபாவமுள்ளவனும், பெரிய சமுத்திரத்தை வாயினுல் நக்கியுண்டுவிடுகிறவனுமான மற்றொருவன்; தூமாக்ஷனென்கிற பேருடையவன். பித்தர்களைப்போலத் தடுமாறிக்கொண்டு இப்போது சம்பவித்திருக்கின்ற யுத்தத்திற்காக மூவிலைச் சூலாயுதத்தைப் பலம்பொருந்திய தோளிற்கொண்டு தன்பிரயாசமெல்லாம் யுத்தமேயென்று நினைத்து இதோவருகின்ருனே, இவன் வஜ்ரதந்தனென்கிற பெயருடைய ராக்ஷசன். இதோ வாயுவேகத்தையு மனோவேகத்தையும் பின்னிடச்செய்வதான குதிரையின்மீது மடித்த வாயுடையவனும், சமுத்திரஞ் சப்திக்கிறதுபோலச் சப்திக்கிறவனும்,ஆகாசபரியந்த மளாவிய ஒருசூலாயுதத்தையுடையவனுமாக வருகின்ருனே; இவன் பிசாசனென்கிற பெயருள்ள இராக்ஷசன். வெள்ளத்தைப்போல முழங்குகின்றவனும், நெருப்பைப் பார்க்கிலும் கொடியவனுமாய்த்தேரில்வருகிற இவன்!

சூரியகேது வென்கிற பெயருள்ளவன். ரத்தத்தையும் அக்கினியையும் சொரிந்துகொண்டுவருகின்றவன் யாககேதுவென்னும் பெயருடைய இராக்ஷசன் செந்நெற்கதிர் பழுத்து வளைந்ததுபோல உயர்ந்து வளைந்த கழுத்தையுடைய குதிரைப்படையுடனே வருகின்றவனும், மூலநோயைக்காட்டிலும் அதிக கொடுமையானவனும், அதிக தவத்தைச்செய்தவனும், சூலாயுதத்தையுடைய உருத்திரமூர்த்தியுங் கண்டுபயந்து போகும்படித்தேரிற் காணப்படுகின்றவனுமானவன் மாலியென்கிற பேருடையவனென்றுசொன்னுர்.அதைக்கேட்டவானரச்சேனைகள் ராமமூர்த்தியை ஸ்தோத்திரம்பண்ணி ஆர்ப்பரித்துக் கொண்டுபோய் ராக்ஷசசேனையுடனே கலந்துபோர்செய்தார்.தேவர்களெல்லாம் இதைக்கண்டு எங்கும் போக்கிடந் தோன்ருமல் வியர்த்து, உயிர் பதைத்து நடுநடுங்கி நின்றுவிட்டார்கள், வானரர்கள் யுகாந்தகால இடியோடுங்கூடிய சண்டமாருதக் காற்றைப்போல மலைகளைப்பிடுங்கி யெறிந்தார்கள், ஸ்ரீராமருடைய கோதண்டத்தில் நின்றும் புறப்பட்டபாணங்கள் மேகதாரைகளைப்போலச் சென்றதுகள். மலையிலுள்ள மேகங்கள் சிதறினதுபோல இராக்ஷசர்களுடையதலைகளிலிருந்து பற்களெல்லாம் பலபல வென்று உதிர்ந்து வீழ்ந்ததுகள். மதஜலங்களைப்பொழிகின்ற யானைகள் மாளும்படியாகவும், சேணங்களிட்ட குதிரைகள் அழியவும், பெரிய சக்கரங்கள் பூட்டிய தேர்கள் பொடிப்பொடியாய் முறியவும், போர்க்கு உடன்பட்டுவந்த இராக்ஷசர்களெல்லாம் ஆதிசேஷனுடைய உச்சிப் படம்பட்டு விழுவதுபோலச் சுருண்டு விழும்படியாகவும் வானரச்சேனைகள் எறிந்த மலைகள்போய்ப் பட்டதுகள். இராக்ஷசர்கள் வேகமாயெறிந்த சக்கராயுதங்கள் வானரங்களுடைய மலைக்குச்சமானமாகிய நீண்டதோள்களையும், நிற்கின்ற கால்களையும், உயர்ந்திருக்கின்ற வால்களையும், எறியும்படிப்பேர்த்தெடுத்த மலைகளையும், மரங்களையும், அவர்களுடைய தலைகளையும் அறுத்துக்கொண்டு போய்விட்டதுகள். பூமியைத் தந்தங்களினுற்பிளந்துகொண்டு வருகின்ற யானைகளோடும் மனேவேகத்துடன் தாண்டிப்போகத்தக்க குதிரைகளையும் செலுத்திக்கொண்டு வருகின்ற இராக்ஷசவீரர்கள் எறிந்த தோமராயுதங்கள், வானரவீரச் சிரேஷ்டர்களுடைய தேகங்களைப் பாளம் பாளமாய்ப் பிளந்துவிட்டதுகள். வானரவீரர்கள் கலீரென்று ஆர்ப்பரித்துக்கொண்டு எரிகின்ற கற்பாறைகள் சக்காங்கள்பூட்டியதேர்க்கொடிகளைச்சிதைத்தும், சாரதியினுடைய வக்கிரதந்தங்களோடுகூடிய பெரிய தலைகளை நொறுக்கியும், அந்தச்சண்டாளர்கள் பிடித்திருக்கின்ற விற்களுடனே அவர்களேறிவந்த யானைகளையுங்கொன்றதுகள்.இராக்ஷசர்கள் வானரங்களினுடைய தேகத்திற்பாயும்படியாயெறிந்த சூலாயுதங்கள் காக்கைகள் பறக்காத உயர்ந்த மலைக்குகையிற்பெரும்பாம்புகள்போய்ச் சேர்ந்தாற்போல, அவ்வானரவீரர்களுடைய தேகங்களிற்போய் நுழைந்ததுகள். யானைகள் வானரவீரர்களை வாலைப்பிடித்துப் பூமியில்வாரி அறையவும், அதைத்தப்பித்துக்கொண்டு அந்த யானைகளினுடைய பின்னங்காலைப்பிடித்துத்தூக்கி அவ்வானரவீரர்கள் மோதுவார்கள் அன்றியும்,வானரவீரர்கள் யானைகளைக்கொண்டு இராக்ஷசர்களைத்தாக்கவும், வெங்கண்ணராகிய இராக்ஷசர்கள் வேலாயுதத்தைக் கையிற்கொண்டு எறிவார்கள். வானரவீரர்கள் வேகங்கொண்டு வீசியெறிந்த மலைகள்பட்டு, இராக்ஷசச்சேனைகள் ரணக்களமெல்லாம் மாண்டுகிடந்ததுகள்.

மகா பாதகர்களாகிய இராக்ஷசர்களுடைய வில்லிலிருந்து பிரயோகிக்கப்பட்ட அம்புகளால், வானரச்சேனுசமுத்திரங்கள் பற்களுடன்கூடத்தலைகள்நொறுங்கிமாண்டதுகள். வானரவீரர்கள் எறிந்த மலையினுல் அறுப்புண்டு அந்த மலையுடனேகூடத்தங்கள் வீட்டில்வந்து வீழ்ந்த தங்கணவர்களாகியஇராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்களையுடைய தலைகளை அவர்கள் பெண்சாதிமார்கள் அருகிற்போய்ப்பார்த்து,அவர்களோடு நெடுநாள் பழகியிருந்தும் தங்கணவர் தானென்று தெரிந்துகொள்ளமாட்டாமல் இதுயாருடைய தலையோவென்று சந்தேகித்து நிற்பார்கள். தரித்திரத்தில் வருந்துகின்றபேர்களுக்குக் கொடுத்துண்ணுமல் அழிந்தசெல்வத்தையுடையவர்களைப்போல யானைகள் மாண்டுபோய்விட்டதுகள். பொன்மயமாய்ப் பிரகாசிக்கின்ற

தேர்களினுடைய அச்சுகளெல்லாமுறிந் தழிந்ததுகள். குதிரைகளெல்லாம் நடக்க மாட்டாமற் கால்முறிந்து விழுந்ததுகள். மீகாமனுமற்ற ஆள்களு மாண்டுவிடக் கப்பலானது பாய்விரித்துக் கடலில் நானுவிதமாக ஓடித்திரிவதுபோல, யானைகள் தங்கள் பாகர்கள் மாண்டு செலுத்துகிறவர்களில்லாமல் இரணக்கள முழுவதும் பரவியிருக்கின்ற இரத்தப்பிரவாகத்திற் கரைகாணமாட்டாமல் உழன்றுகொண்டிருந்ததுகள். தங்களாயுதங்களுடனே மேலேறி நடத்திவந்த இராவுத்தர்கள் மடிந்துவிட வாயிலில் ரத்தங்கக்கிக்கொண்டு இரத்தப் பிரவாகத்தில் அங்கங்கே விழுகின்ற குதிரைகள், சமுத்திரத்தில் அக்கினி கக்கிக் கொண்டு நிற்கின்ற வடவாமுகாக்கினியையொத்திருந்ததுகள்.

இப்படிப் போர்விளைகின்ற காலத்தில் தூமாக்ஷனும், ஆஞ்சநேயரும், ஒருவரையொருவர் எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள். மஹாபாரிசுவனை வெற்றிமாலையைத்தரித்த அங்கதகுமாரன் தடுத்து யுத்தஞ்செய்தான். பலம்பொருந்திய வில்லையுடைய மாலியென்பவனும், நீலனென்கிற வானர வீரனும், சண்டைசெய்தார்கள். உயுத்தத்தில் ஜெயம்பெற்ற பிசாசனென்பவனும், பனசனென்பவனும், ஒன்றுகலந்துபோர் செய்தார்கள். சூரியனுக்குப் பகைவனை சூரியகேது என்பவனும், சூரியபுத்திரராகிய சுக்கிரீவமகாராஜரும், ஒருவரையொருவரெதிர்த்துச் சண்டைசெய்தார்கள். யாக்கேதுவும், இளையபெருமாளும், யுத்தஞ்செய்தார்கள். வீரவானுகிய வச்சிரதந்தனென்பவனும், விருஷபனும், ஒருவரோடொருவர் எதிர்த்தார்கள். கொடுங்கணகளையும் வெண்மையாகிய பற்களையுமுடையவர்களான இராக்ஷசர்களுக்குள்ளும், வீர சிம்ஹத்துக்குச் சமானமாகிய வானரர்களுக்குள்ளும், ஒருவீரன்ஒருவீரனைத்தெரிந்து போர்க்களத்தில் யுத்தஞ்செய்யப்புறப்பட்டு தேவர்களுங்கண்டு நடுங்கும்படியாக யாவருஞ் சண்டைசெய்தார்கள். இப்படி இருவகைப்படையும் கலந்து போர்செய்கிற காலத்திற் பிரகாசிக்கின்ற வக்கிரதந்தங்களையுடையவர்களான இராக்ஷசர்களில்வந்த பத்துவெள்ளஞ்சேனைக்குள், ஆறுவெள்ளஞ்சேனைகளை யுத்தகளத்தில் ஸ்ரீராமர் கொன்றுவிட்டார். மற்ற நாலுவெள்ளஞ் சேனைகளை இலக்ஷுமணர் தம்முடைய பாணங்களால் முடித்துவிட்டார். அவர்களுடைய இரத்தப்பிரவாகமானது உப்புக் கடலைச்சேர்ந்து அக்கடல் நீரெல்லாம் உருக்கிய செம்பைப்போல நிறமாறிவிட்டது. அதிலுள்ள மீன்குலங்களெல்லா மதர்த்துப் பவளத்துண்டம்போலாய்விட்டன. வெண்மையாகிய முத்துக்களெல்லாம் குன்றுமணியைப்போலத் தோன்றின. அலையெறிகின்ற கடல்நீரெல்லாம் இரத்தமயமாகி நானுவித நிறமுள்ள இரத்தினங்களெல்லாம்சிவந்துபோய் விட்டதுகள்.மதஜலம்பொழிந்து மலைபோலுயர்ந்திருக்கின்ற யானைகளின் மஸ்தகத்திலிருந்து உதிர்கின்ற முத்துக்களும், கடற்சங்கங்களிற்பிறந்த முத்துக்களும், மற்ற இரத்தினங்களுடனேவேறுருவந்தெரியாமற் சிவந்து போய்விட்டதுகள்.

இப்படி வெகு ஆரவாரத்துடன் யுத்தம் நடக்கின்ற சமயத்திற் பொழுது விடிந்து, சூரியனுனவன் தன்னுடைய கிரணக்கற்றையாகிய கைகளினுலே எதிரிற்காணப் படுகின்ற இருளாகிய யானைகளையெல்லாங் கொன்று, உதிரக்கடலில்ஸ்நானஞ்செய்து புறப்படுகிறவனைப்போல உதயமானுன். போர்க்களத்தில் ராக்ஷசர்களென்கிற காடாந்தகார விருட்டை ஸ்ரீராமர் துரத்திவிடவும், புறத்திலுள்ள விருட்டையெல்லாம் சூரியன் துரத்திவிடவும், உலகமானது இரண்டு சூரியர்களையுடையதா யிருந்தாற்போல எங்கும் பிரகாசமுண்டாயிற்று. ராத்திரிமுழுவதும் நிலைத்திருந்தபெரிய விருட்டானது நீங்கினபடியினுலே அலையெறிந்துகொண்டிருக்கின்ற இரத்தசமுத்திரமும் பிணமலைகளும் எங்கும் பரவிநிறைந்து, பூமியின்மீது பிரவகித்துக் கொண்டுவந்த சமுத்திரத்தையும் அதற்கிடையில் அங்கங்கே கண்ணுக்கெட்டினவரைக்குந்தோன்றுகின்ற மலையையும்போலிருந்தன. இரணக்களமுழுவதும்மூடியிருக்கின்ற இரத்த வெள்ளத்திலிருக்கின்ற நிணற்சேற்றில் அம்புகள்தைத்து வீழ்ந்து கிடக்கின்ற இராக்ஷசர்களுடைய முகங்கள், சூரியோதயத்தில் தடாகங்களிலே மலர்ந்து வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கின்ற தாமரைப் புஷ்பத்தைப்போற் காணப்பட்டுக்

கொண்டிருந்தன. இரணக்களத்தில் தேர்களும், யானைகளும், குதிரைகளும், சின்னபின்னப்பட்டிருக்கின்ற தன்மை, உலகமுமலைகளும் பெயர்ந்துபோகின்ற யுகாந்தகாலத்திற் சண்டமாருதக் காற்றடித்தபோது தேவர்களேறிக்கொண்டு திரிகின்ற விமானங்களும், சூரியசந்திராதி நக்ஷத்திரங்களும், தாறுமாறுபட்டுப் பூமியில்வந்து வீழ்ந்து கிடக்கிறதைப்போலிருந்ததுகள். இராத்திரியினாற்சூழப்பட்ட சந்திரனுக்குச்சமானமாகிய முகத்தையுடைய இராக்ஷசஸ்திரீகள் அக்கினியையொத்த அல்லிப் பூமாலையைச்சுற்றின கூந்தலுடனேவந்து இரணக்களத்தைச்சேர்ந்து மாண்டுபோன தங்கள் நாயகன்மார்களைக் கட்டித்தழுவிக் கொண்டு கிடக்கும்போது, அந்த இராக்ஷசப் புருஷப்பிரேதங்கள் பூங்கொடிகள் சுற்றிக்கொண்டு கிடக்கின்ற மராமரத்தையொத்திருந்ததுகள். அசைகின்ற நுண்ணிய இடையையும், மலைபோன்ற ஸ்தனங்களையும், செவ்வானத்தையொத்த கூந்தலையும், பயங்கரமான பற்களையுமுடைய இராக்ஷசஸ்திரீகள் இரணக்களத்துக்குவந்து, தங்களுக்குப்பிரியமான நாயகருடைய தலைகளைக்கொடுக்காமல் மல்லாடியோடுகின்ற அநேகமான பேய்களைத்தொடர்ந்து பிடித்து இரண்டுகால்களையும்பற்றிப்பிளந்தார்கள். பிரகாசிக்கின்ற சங்குவளைகளையணிந்த கைகளையுடைய ஒரு இராக்ஷசஸ்திரீயானவள் தன்னாயகனைத் தேடிக்கொண்டுவந்து, இரணக்களத்தில் உடலையும் அடையாளத்தையும் பார்த்துச் சகிக்கமாட்டாதவளாகி, குடலையும், ஈரலையும், கண்ணையும், சிறுநரி பற்றிப்பிடுங்கப்பொறுக்கமாட்டாமற்பெருமூச்சுவிட்டுத் தன் கணவனுடனே தன்பிராணனையுந் துறந்து விட்டாள். வாளைப் போன்ற கண்களையுடைய சில இராக்ஷசஸ்திரீகள் தங்கள் நாயகர்களுடைய பெரிய தோள்களைப் பெண்ணரியும் கிழநரியும் அதட்டவும் அஞ்சாமற்கொண்டு போகிறதைக்கண்டு தொடர்ந்தோடும்போது, கீழேயிருக்கின்ற ஆயுதங்கள் செம்பஞ்சூட்டிய கால்களைப் பாளம்பாளமாய்ப் பிளந்தும் அவர்களுக்கு நோய்தெரியாமலிருந்ததுகள். தங்கள் நாயகன்மார்களிடத்திற் சிநேகித்திருந்த மனதையுடைய சிலஸ்திரீகள் தங்கள் புருஷர்களை மலையைப்போலிருக்கின்ற பிணங்களின்மேலேறித் தேடிக்கொண்டு, ஆண்மயிலைப்பிரிந்துமலையின்மேல்திரிந்துலாவுகின்ற பெண்மயிலையொத்திருந்தார்கள். சில ராக்ஷசஸ்திரீகள் தங்கள் நாயகன்மார்கள் போர்த்தொழிலிற்கண்டகோபத்தால் வாயை மடித்துக்கொண்டுஉயிர்துறந்துவிட்டதைப்பார்த்து, வெண்மையாகியபற்களினாலே இதழைக்கடித்துத் தமது சக்களத்திக்குத் தங்கள் கணவன் கலவிக் குறிப்பைக் காட்டுகின்றானென்று பிணங்கினார்கள். சில ஸ்திரீகள் தலையிழந்து களத்திற்கிடக்கின்ற தங்கள் நாயகன்மார்களை நெருங்கிப்பார்த்து மூர்ச்சையடைந்து, அவர்களுடைய உருத்தெரியாமல் வெள்ளைத் துகிற்கொடியையொத்த தங்கள் பருத்தநகங்களினாலே முன்னம் தோளிற் கீறியிருந்த குறியை அவர்கள்மார்பிலணிந்திருந்த கவசத்தை நீக்கிவிட்டுப் பார்த்துத் தங்களுயிரை மாய்த்துக்கொண்டார்கள். சில ஸ்திரீகள் கண்களில் மழையைப்போலக் கண்ணீர்விட்டுக்கொண்டு தங்கள் கணவர்களுடைய வஜ்ரத்துக்கொப்பாகிய தேகத்தைத் தேடிக்கொண்டு ரணக்களத்தில் வந்து, இராக்ஷசர்களுடைய பிணமலைகளிலிருந்து ஒழுகுகின்ற இரத்தப்பிரவாகத்திலழுந்தித் தங்கள் பிராணனை யிழந்தார்கள். உயர்ந்த கால்களையுடைய ஆஞ்சநேயரும் தூமாக்ஷனும் சண்டைசெய்கிறபோது, ஒருவரால் ஒருவர் வருத்தப்படவுமில்லை. தோற்கவும் இல்லை ஜெயிக்கவும் இல்லை. இருவர் கண்களிலும் அக்கினிப்பொறிகள் சிந்தும்படி நின்றார்கள். அப்போது மிகவுங் கறுத்த காளமேகமானதுகோபித்தாற்போலச் சீறுகின்ற தூமாக்ஷன், அக்கினிக் கொடியையொத்த இருபத்தைந்து பாணங்களை அஞ்சனாதேவியின்புத்திரரான அநுமாருடைய தேகத்தின்மீது பிரயோகித்தான். அந்தப் பாணங்கள் அவருடைய தோளிற்பட்டுருவினமாத்திரத்தில் இரத்தவெள்ளமானது குபுகுபுவென்று புறப்பட்டது. உடனே அவ்வாஞ்சநேயர் ஊழிக்காலமேகம்போலக் கர்ஜ்ஜித்து அதிக கோபங்கொண்டு, தூமாக்ஷனுடைய தேரை அழித்துவிட்டார். அப்படி தேர்சிதைந்தமாத்திரத்தில் தூமாக்ஷன் கைவில்லுடனே சூரியன் பிரகாசிக்கின்ற ஆகாசத்தில் வேகங்கொண்டெழும்பினான். அப்போது லக்ஷ்மணர் தம்

முடைய பாணங்களால் அவனுடையவி ல்லை முறித்தெறிந்தார். உடனே வாயுபுத் திரராகிய ஆஞ்சநேயர் அவனைப் பூமியில் தள்ளி, மலையிலும் பெரிய அவனுடைய உடலத்தைமண்ணில்விழத்தள்ளி, கடலைத் தாண்டிய பாதங்களைக்கொண்டு கதறும்படி உதைத்து, அவனது பிளந்த வாயினையு டைய தலையைக் கையாற்பற்றித் திருகிக் கிள்ளிக் கடலிலெறிந்து தமது கோபமாறி னார். மகாபாரிசுவனும் அங்கதகுமாரனும் எதிர்த்துத் தீபத்தைப்போலக்கண்கள் எரி யும்படியாகக் கோபங்கொண்டு, ஒருவரை யொருவர்கொல்ல நினைத்துப்புகையெழும் படிச் சுவாசம்விட்டுக்கொண்டு நின்றார்கள். அந்தச்சமயத்தில் மகாபாரிசுவன் அதிக கோபத்துடனே கர்ஜ்ஜித்துக்கொண்டுவரு கின்ற பலத்த யானையானது உண்டையை விட்டெறிந்தாற்போல அங்கத குமாரன் மீது ஐம்பத்தொருபாணங்களைப் பிரயோகி த்தான். அப்போது பரிவேடத்தோடுங் கூடிய சூரியனைக் கவ்விப்போகின்ற கரிய நாகத்தையொத்த அங்கதகுமாரன் தனது பலத்த கையினால் அவன் கைவில்லைமுறி த்து, பூமியுடனே எடுத்தெறிகிறதுபோல அவனையுந் தேரோடுதூக்கி ஆகாசத்தில் விட்டெறிந்தான்.

இப்படி எறிந்தவுடனே மகாபாரிசு வன் சூரியனைப்போலப் பிரகாசிக்கின்ற தனதூறுபட்ட தேரைவிட்டிழிந்து, தவ ராத சாபவார்த்தையொத்த ஒரு சூலாயுத த்தையெடுத்து அங்கதனுடைய மார்பில் எறிந்தான். அதைக்கண்ட சர்வலோகநா யகராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் இதுசூல மல்ல யுகாந்தகால இடிபோலிருக்கிறதெ ன்று திருவுளங்கொண்டு, ஒருவரும் பயப் படாதபடி விஷம்பொழிகின்ற தமது அம் பினாலே அறுத்துக் கீழேதள்ளினார். அப் போது அங்கதன் நினைவினளவுக்குள்ளாக அந்த மகாபாரிசுவனைக் கிட்டிப் பிடித்து, இந்தப் பதினாலுலோகத்தையும் இரண்ட டியாலளந்த திருவிக்கிரமரும் புகழத்தக்க வல்லமையுடனே அவனை இரண்டு சரி பிளவாய்ப் பிளந்து எறிந்து விட்டான். மாலியென்கிற ராக்ஷசவீரனும் நீலனென் கிற வானரவீரனும் தானவராஜனான இர ணியனும் தேவதேவனான நரசிம்ம மூர்த் தியும்போல யுத்தஞ் செய்கிறார்களென்று சொல்லி, தேவர்கள் புஷ்பமாரி பொழிந் தார்கள். அப்போது நீலன் ஒருமலையை யெறிந்து மாலியினுடையவில்லை இரண்டு துண்டாக்கிவிட்டான். அம்மாத்திரத்தில் அவன் பிரகாசமுள்ள வாளாயுதத்தைக் கையிற்பற்றிக்கொண்டு தேரேறி, நில் நில் லென்று கர்ஜ்ஜித்துக்கொண்டு நீலனை நெ ருங்கிவந்தான். இப்படி அவன்வந்தமாத் திரத்தில் வேறொருபுறத்தில் நின்ற வெற்றி யாளனான குமுதனென்கிற வானரவீரன் ஒருமலையையெறிந்து, அந்தமாலியினுடைய தேரைப் பொடிப்பொடியாகச் சிதைத்து விட்டான். நீலன் ஒரு மராமரத்தை வே ரோடுபிடுங்கி மாலிமேல் விட்டெறிந்தான். அதையவன் தன்கையிலுள்ள வாளினாலே சிதைத்துவிட்டு நீலன்மீதுபாய்ந்துவரும் போது, கெடாத பாவங்களையெல்லாம் நா சம் பண்ணுகிறவரான ஸ்ரீராமமூர்த்திக் கிளையவராகிய இலக்ஷ்மணப்பெருமாள் அ வனுடைய வாள்பிடித்த தோளறும்படி வாளியைப் பிரயோகித்தார். அப்படிப் பிர யோகித்தமாத்திரத்தில் மின்னலைப்போல பிரகாசிக்கின்றவாளாயுதத்துடனே தோள் விழுந்தும் மாலியானவன் தான்போர்செய் வதில் நின்றும்விலகாமல் நிற்க, அதுகண்ட இளைய பெருமாளானவர் இஃதென்னைப் போலொத்தவர்கள் செய்யத்தக்க போர ல்ல. இதுலகுவான போராய்விட்டது என்று அப்பாற்போய்விட்டார்.

இதைக்கண்ட போர்வீரர்களெல்லாம் கடலைப்போலக் கறுத்த திருமேனியையு டைய ஸ்ரீராமமூர்த்தியினிடத்திற்குவந்து, மகாவீரரும் அம்புங்கையுமா யிருக்கின்ற வருமான இலக்ஷ்மணரைக்குறித்து வெகு வாய்க்கொண்டாடி, உலகத்தில் வீரத்தன் மையால் இந்தத் தர்மநடத்தையைசெய்து யுத்தம்பண்ணினவர்கள் யாவரென்று புக ழ்ந்தார்கள். அப்போது யாககேதுவுடன் அதிக கோபங்கொண்டு யுத்தஞ்செய்கின்ற புஜபல பராக்கிரமசாலியான இலக்ஷ்மணர் அவனைநோக்கி, அடாயாககேதுவே! உன் னுடைய ஆயுள் இவ்வளவுதான். என்று கூறி ஒருபாணத்தைப் பிரயோகித்து அவ னுடையமார்பைப்பிளந்தார். உடனே யாக கேது இலக்ஷ்மணருடைய அவ்வொருபா ணத்தினாலே வில்முறிந்து, தோளறுந்து, உயர்ந்த மலைபோன்ற அவனுடையமேனி

பிளந்து, கழுத்தும் கால்களும் துண்டுபட்டு மாண்டுபோனான். வானராதிபதியான சுக்ரீவமகாராஜன் தனது பிதாவாகிய சூரியனை முன்னம் ஒருநாளெதிர்த்து ஜெயம் பெற்றவனும், மலையைப்போன்ற தேககாத்திரத்தையுடையவனும், பின்னிடாத உயர்ந்தபலத்தையுடையவனுமான சூரியகேதுவைக் கொன்றுவிட்டார். இடபனென்பவன் தன்னோடுகொடியசண்டைசெய்கின்ற விஷம்போன்ற கண்களை யுடையவனான வஜ்ரதந்தனாற் சுவர்க்கமும் அதிரும்படிச் செலுத்தப்பட்ட தேரும், பிரகாசிக்கின்ற வாளாயுதமும் அழியும்படி ஒருமலையைப் பிடுங்கி எறிந்தான். அப்படித் தேரழிந்த மாத்திரத்தில் அவ்வஜ்ரதந்தன் வில்லை வைத்துவிட்டு ஒரு பெரியதண்டாயுதத்துடனே பூமியிலிழிந்து, இடியும் எட்டுத் தோள்களையுடைய உருத்திர மூர்த்தியும் அஞ்சும்படி உன்னுயிரைஇனிவைப்பேனோ வென்று வந்து விருஷபனை அடித்தான். அப்படி அடியுண்ட விருஷபன் உயிர்தடுமாறிச் சோர்ந்து இடியுண்ட மலையைப் போல முடிந்துபோவானென்று யாவருஞ் சந்தேகப்படுகிறதருணத்தில், விக்கிரமசுரூபத்தையும் குறுகியசுரூபத்தையு முடையவரான ஆஞ்சநேயர்வந்து குதித்தார். அப்படிவந்த ஆகாசத்தையும் மறைக்கும்படியாய் உயர்த்த தேகத்தையுடையவரான அநுமானை நீண்ட கண்டாமணியைத் தரித்தவனான வஜ்ரதந்தன் ஓங்கி, மார்பில் அக்கினி பறக்கும்படியாகக் குத்திவிட்டுப் போயினான்.

அப்படிபோகும்போது அவனை அநுமான் இடதுகையினாற் பிடித்து, அவன் கையிலுள்ள தண்டாயுதத்தைப்பறித்து எறிந்துவிட்டு, தமது வெற்றிப்பிரதாபமுள்ள கையைக்கொண்டு ஓங்கிக்குத்தினார். உடனே வஜ்ஜிரதந்தன் தேகவல்லமையெல்லாமுடிந்து இறந்துபோனான். ஓர் பெரிய விருக்ஷத்தைக்கையிற்பிடித்துச் சுழற்றிக்கொண்டிருக்கின்ற அதிவேகமுள்ள ஒரு ஆண்புலிபோன்ற பனசனுடைய மார்பில் இரத்தம்புரண்டு வழிந்தோடும்படியாகப்பசாசன் ஒருதோமரத்தைவிட் டெறிந்துவிட்டு, அவன்மேகத்தின்மீதிருக்கின்றானோ? கடலின்மீதிருக்கின்றானோ? பூமியில் நிற்கின்றானோ? சூரியன்மீதுதானிருக்கின்றானோ? மற்றெதின்மேலிருக்கின்றானோ தெரியவில்லையென்று யாவரும் சந்தேகிக்கும்படியாக ஒரு குதிரைமீதேறிக்கொண்டு யுத்தத்திற்குவந்தான். அவ்வொரு குதிரையானது நூறாயிரகோடி குதிரைகளோ? அல்லது ஒருகுதிரையோ? அதனைப்பல்லாயிரந்தேவர்களும் நின்று தங்களிமையாத கண்ணாலே நிச்சயித்தறியக் கூடாதபடி, அஃது பருந்துகளுலாவுகின்ற இரணக்களத்தில் நின்று திரிந்தது. பின்னும்அந்தத்தேவர்கள் ஒன்றுகூடி, இந்தவெற்றிக் குதிரை கண்ணிற்கு மெட்டாமலோடும். மனோவேகத்திலும் அதிவேகமாகப்போகும். ஆகாசத்திற்செல்லுகின்ற காற்றைப் பார்க்கிலும் வேகமாகச்செல்லும். உயுத்தகளத்திற்குள்ளே நிற்கின்றதென்று நினைக்கும்போது புறத்தேபோய்நிற்கும். பூமியிற் கால்பாவமாட்டாது. இப்படிப்பட்ட குதிரையின் வட்டாகாரச் சுற்றுதலினாற் பெரும்புண்ணடைந்தும், இந்தக்குதிரையுடன் பந்திக்கப்பட்டவனைப்போலக் காணப்படுகின்ற பசாசனுடையகையாயுதத்தால் ஆயுதவடுக்கள் பட்டும், குரங்குப்படைகள் குதித்துக்குதித்துப் புறம்பிலோடிப்போய் விட்டதுகள். மேலும் இக்குதிரையோ? ஒருநொடிக்குள்ளாக இருநூறு வானரங்கள் சிதையும்படிக்குப்பாயும், அந்தப்பசாசனுடைய கூர்மையான வேலோ? சற்று நேரத்திற்குள்ளாகத் தனது நுனியினாலே அநேக குரங்குகளைமாய்க்கும். என்று மிகுந்த பலமுள்ள அந்தத்தேவர்களெல்லாம் பயந்து விட்டார்கள்.

இப்படி இடியைப்போலவும் - அதிக கோபமுள்ள யமனைப்போலவும்-வானரர்களை வருத்தப் படுத்திக்கொண்டு உழலுகின்ற கொடுஞ்செய்கையை யுடையவனாகிய அந்தப்பசாசனை, வில்வீரசிகாமணியாகிய லக்ஷமணப்பெருமாள் வாயுவாஸ்திரத்தை பிரயோகித்து அவன் தலையை அறுத்துவிட்டார். அப்படி தலையறுந்தும் அந்தப் பசாசன் குதிரையின்மே லிருந்தபடியால் பூமியில் விழவில்லை. அவன் கை சூலத்தால் குத்துகிறதும் ஓயவில்லை. அந்தச் சூலமும் கொலைசெய்யாமல் நிற்கவில்லை. ஈக்களெல்லாம் நமக்கு இன்றைக்கு லாபமுண்டென்று ராக்ஷசர்களுடைய பற்களினிடத்திலுள்ள மாமிசங்களின்மீதுவந்து

மொய்த்துக்கொண்டதுகள். தென்றிசைக் கதிபனுன யமனுடைய தூதர்கள் இரணக்களத்திற்கு உயிர்களைப் பிடிக்கும்படி வந்தார்கள். இராவணனுடைய தூதுவர்கள் படைத்தலைவர்களெல்லா மாண்டார்களென்பதைச் சொல்லுகிறதற்கு இலங்கைக்கு ஓடினார்கள்.

படைத்தலைவர் வதைப்படலம்-முற்றிற்று.

## மகரக்கண்ணன் வதைப்படலம்.



இப்படிப்போன தூதுவர் ராவணனை வணங்கி, நம்முடைய சேனையெல்லா முடிந்துபோய் விட்டதென்று சொன்னார்கள். அப்படிச்சொன்ன சொல்லானது செவியில் நுழையும்போதெல்லா மிலங்காதிபதியான ராவணன் மனவெறுப்புடன் கொடிய நாகத்தைப்போலச்சீறிக்கொண்டு துக்கிக்கின்றான். அச்சமயத்தில் கரனுடைய புத்திரனுன மகரக்கண்ணன் ராவணனுடைய நிலைமையைக் கண்டு, ஐயா ராவணேஸ்வரா! முன்பாக என்னுடைய தகப்பனுன கரனை நெருங்கின யுத்தத்திற் கொன்றுவிட்ட அந்த ராமனைவெல்லும்படியென்னை யனுப்பாமலும், வேறேயாதுநினையாமலு நீரிப்படி வியசனப்படலாமா நான் போவேனேயானல், அந்த ராமனென்னெதிரே வந்தாற் கெடுதியுண்டாகுமென்று பயந்து ஓடிப்போய்விடுவான். ஐயா திரிபுவனேஸ்வரா! ஆகாசத்திலுள்ளவர்களாவது, பூமியிலுள்ளவர்களாவது, என்னை ஜெயிக்கும் படியான கொள்கையையுடையவர்களோ? அஃதுமக்குத் தெரியாதோ? மேலும்என்தாயார் துக்கசாகரத்தில் மூழ்கினவளாகி எப்போதுங் கண்ணுங் கண்ணீருமாய் அழுதுகொண்டு, தன்மாங்கலியம்வாங்கச் சகிக்க மாட்டாமல் தன் கணவனைக் கொன்றவனுடைய தலைமண்டையில் தன்கடனைக் கழிக்கவேண்டுமென்கிருள். ஆகையால் நீரெனக்குத் தயைசெய்து உத்தரவு கொடுக்க வேண்டுமென்றுகேட்டான்.

அவ்வார்த்தையை ராவணன்கேட்டு, அப்பா மகரக்கண்ணு! நல்லகாரியஞ் சொன்னய். அப்படியேபோய் உன் பழைய பகையைத் தீர்த்துக்கொள்ளக் கடவாயென்று உத்தரவுகொடுத்தான். அந்தத்துராத்துமாவான மகரக்கண்ணனு மிராவணனிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு தேரேறி, வரம்பெற்று வளர்ந்த தோள்களில் வில்லைத் தாங்கினவனுகி, தன்சொந்தமான ஐந்துகோடி சைநியங்கள் தன்னைச் சூழ்ந்துவரவும் இராவணனுற் கொடுக்கப்பட்ட ஐந்துவெள்ளஞ் சேனைகளும் தனக்குப் பின்னுக மேகத்தைப்போல ஆர்ப்பரித்து வரவும் - பேரிகையானது கடலைப்போலச் சப்திக்கவும்-சேனுதூளியால் மேருமலையினுடைய சிகரநுனியு மறைபடும்படிப் புறப்பட்டான். அவனேடுகூட இரத்தக்கண்ணனென்பவனையும் சங்கனையும் இராவணன்பார்த்து, நீங்களிம் மகரக்கண்ணனுடைய குதிரைபூட்டிய தேர்ச் சக்கரத்தைக் காத்துக்கொண்டு போகக்கடவீர்களென்று நியமித்தனன். நல்லதப்படியே யாகட்டுமென்று இருவரும் ரதாரூடராகச்சென்று அவன் தேரைக் குறுகினார்கள். இப்பால் பதாதிமுதலிய சேனைகளுடனே அனைவருந்தொடர்ந்துவர, நக்ஷத்திரங்களை நட்புடன் தழுவின சந்திரனைப்போல மகரக்கண்ணன்போயினன்.

அப்போது பலபெருங் கொடிகளைப் பிடித்து ஆகாசத்திலிட்ட பந்தலானது சூரியகிரணக்கற்றைகள் முழுவதையு மறைத்துலோகத்துக்கு நிழலிடவும், கொல்லத்தக்க கோபத்தை யுடையதான யானைகள் தங்கள் துதிக்கையாற் சமுத்திர நீரையெல்லாம் வாரித்தூவவும், இதைப் பார்த்துச் செயசாலிகளான வானரவீரர்கள் தங்கள் யுத்தமுயற்சியை விட்டுப் பிரமித்து நின்றார்கள். யானைகள் முழங்கினதுகள். குதிரைகள் கனைத்ததுகள். பேரிகைக்கூட்டங்கள் சப்தித்ததுகள். வீரர்கள் கர்ஜ்ஜித்தார்கள். இவைகளெல்லாம் அடங்கும்படியாக சிறுமொந்தை யோசையானது அண்டப்பித்திகை வரையிற்போய் முட்டியது. காற்று நுழைகிறதற்குச் சந்தில்லாமையால் எல்லா ஜீவன்களும் வெந்து புழுங்கினதுகள். மகரக்கண்ணனேடு வேகமாய் வந்த சேனைகள் முந்தி போர்செய்ததுகள். அக்கால் வானரத் தலைவர்களும் - இராக்ஷசத் தலைவர்களும்-அடுத்துக் கர்வித்து நெருங்கி, ஒருவரோடொருவர் கைகலந்து மலை

யும் வில்லும்கொண்டு யுத்தம்பண்ணினார்கள். இரத்தப் பிரவாகமானது யானைகளை யடித்துக்கொண்டுபோயது. வானரர்களெறிந்த மலைகளை இராக்ஷசர்கள் பந்துபோலப்பிடித்து, ஆகாசத்திலுள்ள நக்ஷத்திரங்களு மேகங்களுஞ் சின்னபின்னப்பட வீசினார்கள். அப்படி திருப்பி யெறிந்த மலைகள்பட்டு வானரங்கள் காட்டிலிடிவிழுந்ததுபோல நசுங்கிப்போனதுகள். அவைகளைத் தின்னும்படிக் கவ்விக்கொண்டுபோனபேய்கள் வானரங்களென்றுகண்டு வாயிலறைந்துகொண்டு சப்தித்ததுகள். கறுத்த நிறத்தையுடைய ராக்ஷசர்கள் வலிய கையிற் பிடித்து இருக்கின்ற வயிரவாளை வானரவீரர்கள் பலாத்காரமாகப் பிடுங்கி, அந்த ராக்ஷசர்களையே கொன்றார்கள். வானரவீரர்கள் கையிலெடுத்த மலைகளையும் மரங்களையும்இராக்ஷசவீரர்கள் தங்கள் கையிற்பிடுங்கிக்கொண்டு, வானரர்கள்மீ தெறிந்து வெற்றியடைந்தார்கள்.

இப்படி யுத்தம்நடக்கிறபோது வண்டுகள் மொய்த்திருக்கின்ற மாலையை யணிந்த மார்பை யுடையவனான மகரக்கண்ணனென்னும் பெயருடைய இடியைப்போன்ற பலமுள்ள இராக்ஷசனானவன், பெரியசக்கரங்கள் பூட்டிய தன்தேரைச் சோலை சூழ்ந்த வயல்நிலங்கள் நிறையக் கங்காஜலம் பெருக்கெடுக்கின்ற அயோத்தியாநாட்டை யாளும்படியான மேகம்போன்ற ஸ்ரீராமருக்கெதிராகக் குரங்குச் சேனைகளெல்லா மாளும்படி செலுத்திக்கொண்டு வந்தான். அதைக்கண்ட வானரப் படையெல்லாம் இந்திரஜித்துதானோ வென்கின்ற சந்தேகமும் பயமுங்கொண்டு சிந்திச்சிதறிப்போக வானரத் தலைவர்களெல்லா மயங்கிச் சூத்திரப் பிரதிமைபோல அம்புகள் பட்டு மூர்ச்சை யடைவதானார்கள். இப்படியாக வந்துநின் றஸ்வர்னமயமான மகரந்தங்களை வண்டுகள் குடைந்துண்ணுகின்ற பொன்னரிமாலையை யணிந்த மகரக்கண்ணன் சுந்தரப்பாகுவான ஸ்ரீராமரைப் பார்த்து, நீ என்னுடைய தகப்பனாகிய கரனுடைய உயிரைப் போக்கின யென்கின்ற பழைய பெரும்பகையானது உன்தம்பிமார் மூன்றுபேரிடத்திலும் சேராமல், உன்னொருவனிடத்தில் மாத்திர மிருக்கின்றது. அதை யின்றைக்குத் தீர்த்துவிடுகிறேனென்றுசொன்னான்.

அப்படி மகரக்கண்ணனாகிய துஷ்டன் சொன்ன வார்த்தையை கீர்த்திக்கு வாசஸ்தானமான திருத்தோளையுடைய ஆண்பிள்ளைச் சிம்ஹமாகிய ஸ்ரீராமபிரான் நன்றாய் உற்றுக்கேட்டு, அப்பா! நீதானா கரனுடையபிள்ளை? உன் பிதாவைக்கொன்ற பழையபழியை நீக்குதற்காவந்தாய்? ஆண்பிள்ளையாகப் பிறந்த உனக்கு அது தகுந்த கடமைதான். இது வீரர்களுக்குத் தகுந்த வார்த்தையே என்றுசொன்னார். அப்படிச் சொல்லவே மகரக்கண்ணன்இடியிடித்தது போல வில்நாணைத்தெறித்துச் சப்தமுண்டாக்கி, உன்னோடு என் தந்தைசெய்யவேண்டிய சண்டையைச் செய்து முடித்து என் கோபத்தை ஆற்றிக்கொள்ளுகிறேனென்றுசொல்லி, சூல்முதிர்ந்த மேகமானது சண்டமாருதத்தால் தூண்டப்பட்டு யுகாந்தகாலத்தில் மேருமலையின்மீது வருஷதாரைகளைப் பெய்ததுபோல் ஸ்ரீராமர் மீது அஸ்திர வருஷங்களைப் பொழிந்தான். அவனெய்த பாணங்களையெல்லாம் சுவாமி சில அக்கினி முகாஸ்திரங்களை யேவித் துண்டுதுண்டா யரிந்து தள்ளி, அந்த ஆண்பிள்ளை வீரனுடைய மாலை யணிந்த மார்பில் ஒரு அக்கினி பாணத்தைப் பிரயோகித்தார். அஃததிக கோபத்துடனே புருவத்தை நெரித்துக்கொண்டு நிற்கின்ற அந்த ராக்ஷசவீரனுடைய மார்பிற்போய்ப்பாய்ந்து நின்றது.

அப்படி அக்கினிமயமான பாணம் பாய்ந்து நடுங்காமற் சிவந்த சூரியகாந்திப் பூவைப்போன்ற கண்களையுடையவனானமகரக்கண்ணன்வாயிற்புகையைக் கக்கிக்கொண்டு, தேவகீர்த்தியையுடைய ஸ்ரீராமரது கவசத்தில் ஆயிரம் வஜ்ரபாணங்களைப் பிரயோகித்துக் கர்ஜ்ஜித்தான். அதைப்பார்த்துத் தேவர்களெல்லாம் ஆச்சரியப்பட்டார்கள். அப்போது சமுத்திரஞ் சூழ்ந்த பூமண்டலாதிபதியான ஸ்ரீராமமூர்த்தியானவர் நகைத்து ஆறு கூர்மையான பாணங்களைப் பிரயோகித்து, மகரக்கண்ணனுடைய பொன்மயமான பெரியதேரிற்கட்டியிருந்த குதிரையின் கால்களை நறுக்கி, அவன்கையிற் பற்றியிருந்த வில்லை இரண்டு துண்டாக்கி அறுத்து பாகன்

தலையையும் நிலத்தில்விழத்தள்ளினூர். உடனே மகரக்கண்ணன்தைத்தபாணம்மார்பில் நிற்கவும், வாயில் இரத்தம் வடியவும், தான்வரமாகப்பெற்ற மந்திரத்தினுலேஒரு க்ஷணத்திற்குள்ளாகஆகாசத்தில்மறைந்து, இடிகளையும், காற்றையும், அக்கினியையும்,மேகமான துஊழிக்காலத்திலேஉலோகமெல்லாம் அழியும்போது சொரிகிறது போல வருஷித்தான். அப்போது அந்தக் கொடிய இடிகள் விழுந்ததுகள். ஊழிக்காலத்தைக்காட்டிலும் இரண்டுபெங்காய்ச்சண்டமாருதம் சீறிக்கொண்டு புறப்பட்டது. எங்கேபார்த்தாலும் உகாந்தமேகங்கள்அக்கினிமயமான கல்மழை பெய்ததுகள்.வானரங்களெல்லாம் அதை சகிக்கமாட்டாமல் தாம் செய்து நின்ற யுத்தத்தைவிட்டு நாலா பக்கங்களிலும் ஓட்டம் பிடித்ததுகள்.

இப்படி அஷ்டதிக்குகளிலும் புகைமண்டி நெருப்பைக் கக்கிக்கொண்டு சிலா வருஷம் பொழிவதினுல் ஆயிரங்கோடி வானரங்கள் மாண்டுபோனுர்கள். அதைக் கண்ட ஸ்ரீராமமூர்த்தியானவர் பிரமித்து, இதென்ன மாயமா? மகரக்கண்ணன் பெற்ற வரத்தின் பலமா? என்று விபீஷணுழ்வானைக் கேட்டார். அதற்கவர் சுவாமி! இந்த மகரக்கண்ணன் செய்த தபோவல்லமைக்கு மெச்சி, வாயுதேவனும் வருணதேவனும் அவன் கேட்டதைத் தடுக்காமல் அவனிஷ்டப்படி கொடுத்த தெய்வாஸ்திரத்திஞலிப்படி நேரிட்டதென்றுசொன்னுர். அதுகேட்ட ஸ்ரீராமர் அப்படியா? இதோஒருநொடியில் இவைகளையெல்லாம் மாற்றிவிடுகிறேன். என்றுசொல்லி வாயுவாஸ்திரத்தையும் வருணுஸ்திரத்தையும்-இயமஸ்ரூபமான கோதண்டத்திற்பூட்டி இராமபாணத்தோடு சேர்த்துப் பிரயோகித்தார். அம்மாத்திரத்தில் மகரக்கண்ணனுலே யேவப்பட்ட சிலாவருஷமும் காற்றும், ஆகாசத்தில் நின்றும் வெந்து பெரியகடலில் வீழ்ந்து மாண்டுபோய் விட்டன. அத்தன்மையை அந்த மகரக்கண்ணன்பார்த்து, ஆகாசமுழுவதுந் தன துருவம்போன்ற உருவத்தை யுடையவனுகித் தான்மாத்திரம் மறைந்து, கோடிகோடியாகச் சூலங்களை வரிசை வரிசையாக எங்கும் பரப்பிவிட்டான்.

அதை ஸ்ரீராமர்பார்த்து, இஃதந்த மகரக்கண்ணனுடைய மாயமாக்குமென்று விபீஷணுழ்வானை நோக்கிக்கூறி, இப்படி தன்னுடைய மாயத்தாற்செய்த அவன் எங்கே பார்த்தாலும் அளவிட்டறியக் கூடாத உருவத்தையுடையவனு யிருக்கின்ருன். இதில் எந்தத்தேகம் அந்த மகரக்கண்ணனுடைய யதார்த்தமான தேகமோ தெரியவில்லை. இந்தத் துஷ்டன் விஷயத்தில் என்னசெய்யலாம்? என்று தமக்குத் தாமே மனம்வருந்தி, அம்புபட்டவழியே இத்தவாறு ஒழுகும்படிநின்ற அந்த மகரக்கண்ணன் தன்னைப்போல அளவில்லாத உருவங்களை மாயையால் ஆகாசமெல்லாம்நிறைத்துவிட்டுத் தான்மாத்திரமெங்கேயோ ஒளித்துக்கொண் டிருக்கின்ருனென்றுணர்ந்த தேவதேவராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் அவ்விரத்த மொழுகிவருகின்ற அடையாளத்தைக் கண்டு, இதற்கு நேராகத்தான் அந்த மகரக்கண்ணன் ஒளிந்து நிற்கிருனென்று அந்த வழியாகவே இராமபாணத்தைப் பிரயோகித்தார். அப்போது அந்தமகரக்கண்ணன் தலையறுந்து பூமியில்வந்துவீழ்ந்தான். அப்படிக்கூரியதாய் இடியைப் போலப்போன பாணத்துடன் அந்த ராக்ஷசனுடைய தேகமானது மேகத்தைப்போல இரத்த வெள்ளத்தைப் பொழிந்துகொண்டு பூமியில் வீழ்ந்தமாத்திரத்தில், அவனுற்செய்யப்பட்ட மாயையானது சூரியனுதயமா யிருளையெல்லாம் நீக்கின காலத்தில் நித்திரைகெட்டு அதனுடனே கனவுநீங்கினதுபோல மாய்ந்துவிட்டது.

இப்படி மகரக்கண்ணன் மாண்டவுடனே குருதிக்கண்ணனென்பவன் அழகிய கொடிகள் கட்டிய தேருடனே கோடைக் காலத்துச் சூரியனுக்கு நடுவே தோற்றுகின்ற மேகத்திற் கொப்பான தேககாந்தியையுடையவனுகி, அக்கினி முகாஸ்திரங்களைப் பொழிந்துகொண்டு சண்டமாருதக் காற்றைப்போல இரணக்களத்தில் வந்தெதிர்த்தான். அவனுடனே விரிந்த சமுத்திரத்தை மலையால் அணையிட்டுத் தடுத்தவனுன நளனென்கிற வானரத் தச்சன்வந்தெதிர்த்தான். அப்படி யிருவருமெதிர்த்து நிற்கும்போது அந்தக் குருதிக்கண்ணன் வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து

அநேக பாணங்களை ஊழித்தீக்கொப்பாக
நளன்மீது பிரயோகித்தான். அப்போது
சிம்ஹத்துக் கொப்பாக இரணரங்கத்தில்
நின்றிருந்த அந்த நளன் ஒருநீண்ட மரா
மரத்தைப்பிடுங்கி, அவன்விட்ட பாணங்
யெல்லாம் பொடிப்பொடியாக்கினான்.
களை மறுபடியு மந்தக் குருதிக்கண்ணன்
நளன் கையிலிருந்த மராமரத்தைத்துண்டு
துண்டாகப் பாணங்களினால் தறித்துவிட்
டான். அப்படித் தறித்துவீழ்த்தின அந்
தக்கொடியவனைப் பார்த்து நளனென்கிற
வானரவீரன் தன்மார்பை வளைத்துக்குறுக்
கினவனைப்போலக் காணப்பட்டு, அந்தக்
குருதிக்கண்ணனுடைய சிரசின்மேற் பாய்
ந்துகுதித்தான். அதைக்கண்டு தேவர்க
ளெல்லாம் திக்குகளுஞ் செவிடுபடும்படி
யார்த்தார்கள். எரிகின்ற அக்கினிமலையின்
மேல் இந்திரதனுசை நாட்டினாற்போல
அந்தக் காத்திரமான தேகத்தையுடைய
குருதிக்கண்ணன்சிரமீது நின்ற அழகுள்ள
நளனானவன் அவன் தேகமுழுவது மிரத்
தம் ஒழுகவும், அவன் வலிய கண்ணிலும்
மூக்கிலும் - செவியிலும் - மூளைவடியவும்,
அவன்தலை சுக்கல்சுக்கலாய்நெரியவும்கால்
களால் உதைத்து; அப்பாலவனைப் பூமியி
லுருட்டிக்கொன்றான்.

அவனிறந்த மாத்திரமே அக்கினிக்
கொழுந் தொழுகும்படியான கண்களையு
டையவனான சங்கனென்னும்ராக்ஷசவீரன்
கையில்வில்லும் அம்பும் பிடித்துக்கொ
ண்டு, வெற்றிமாலை பூண்ட தேருடனே
வந்து, அடா வானரமே! எங்கே தப்பிப்
போகின்றா யென்று கூறி எதிர்த்தான்.
அப்போதுமேருபருவதத்துக்குச் சமமான
வல்லமையுள்ள பனசனென்னும் வானர
வீரன் அந்தசங்கனுக்கெதிரிற் பாய்ந்தான்
அப்படி பாய்ந்த மாத்திரத்தில் அந்தச்
சங்கனானவன் அதிதீக்ஷணமான பாணங்
களைப் பொறுக்கியெடுத்து, பனசனுடைய
தோளிலும்-மார்பிலும்-இடிக் கொப்பாகப்
பத்தம்புகளைப் பதியும்படி அழுத்தினான்.
அப்படியழுத்தின மாத்திரத்திற் பனசனா
னவன் அக்கினியில் நெய்சொரிந்ததுபோ
லக்கோபங் கொண்டு, ஒரு க்ஷணத்துக்குள்
ளாக அத்தச்சங்கனென்பவனைத் தேரோடு
தூக்கினான். அப்படி தூக்கினவுடனே
அந்தச்சங்கன் தேரைவிட்டுக் கீழே குதித்
தான். அப்படிகுதித்த அவனுடைய மே
ருமலைக் கொப்பான தோற்றத்தையுடைய
சிரசின்மீது பனசனானவன் அந்த தேரை
க்கொண்டு மோதினான். அதுபட்டுக்கீழே
வீழ்ந்த அந்தச்சங்கன் ஆகாசத்திற் பாய
யத்தனித்தான். அப்போதுவயிரத்தோளை
யுடைய பனசன் அந்தச் சங்கனுடையரத்
தத்துடனே உயிருஞ்சோரும்படித்தள்ளிக்
காலால் துகைத்துக்கொன்றான். இப்படி
பூலோக சக்கிரவர்த்தியாகிய தசரதமகாரா
ஜன் புத்திரராகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்க
ளுடைய பாணங்களினாலும் வானரச்சே
னைகள் பிரயோகித்த மராமரம்-மலைகள்-
இவைகளினாலும், இராவணனா லேவப்ப
ட்ட பத்துவெள்ளஞ் சேனைகளும் மாண்டு
போனதுகள். அவர்களோடுகூட மாளாத
வர்களான இராவணதூதர்கள் நிராயுதர்க
ளாய் இந்தச் செய்தியைச்சொல்ல அவனி
டத்திற்கு ஓடினார்கள்.

மகரக்கண்ணன்வதைப்படலம்-முற்றிற்று.

## பிரமாஸ்திரப் படலம்.



இப்படியோடிய அந்தத் தூதுவர்க
ளாற் கரன்மகனான மகரக்கண்ணன் இராம
பத்திரரால்மடிந்ததையும்குருதிக்கண்ணன்
நளனால் தலைநெரிந்து இறந்ததையும்
சங்கனென்பவன்பனசனால்மாண்டதையும்
மற்றப் பத்துவெள்ளச்சேனையும் பூமிக்குப்
பாரமாக நில்லாமல் மாண்டுபோனதையும்
சொல்லக்கேட்ட சாஸ்திரநெறிதவறினவ
னான ராவணன் சீக்கிரமாக எழுந்து, நீங்க
ளென்குமாரனான இந்திரஜித்துவை விரை
வில் அழைத்துக்கொண்டு வாருங்களெ
ன்று அனுப்பினான். அவர்கள்போய் உம்
முடைய தகப்பன் அழைக்கின்றானென்ற
தைக்கேட்ட ராவணகுமாரன் அவர்களைப்
பார்த்து, ஓ தூதர்களே! திரண்ட தோள்
களையுடைய ராக்ஷசவீரர்களிற் போனவர்க
ளெல்லாம் மாண்டுபோனார்களோ வென்
றான். அதற்கவர்கள் அவனைப் பணிந்து,
ஐயா! உம்மையல்லாமல் அனுப்பினபின்
திரும்பி வரத்தக்கவர்கள் யாரிருக்கின்றார்
கள்? ஐயோ! அவர்களெல்லாம் மாண்டு
போய்விட்டார்களென்றார்கள்.

அதைக்கேட்டமாத்திரத்தில் இந்திரஜித்தானவன் அதிவேகமாகத் தன்பிதாவினிடத்திற்குவந்துவணங்கி, ஐயா! பிரதாபலங்கேஸ்வரா! உமதுபிள்ளைகள் இவ்வளவு வேகத்தில் மாண்டு போனார்களேயென்று உமக்குக் கொஞ்சமாவது மனவருத்தமுண்டாகவில்லை. ஐயோ! குரங்குகள் தவிர இராக்ஷசர்கள் மாண்டுகிடக்கிறதை நீர்போய் இன்றாவது ரணக்களத்திற் பாரும். இனிக் கனத்த குண்டலங்களையணிந்த சீதையும் தேவர்களும்காணப்போகின்றார்கள். என்று சொல்லி வலஞ்சுற்றிவந்து வணங்கி, ஆயிரஞ்சிங்கங்கள்பூண்டு ஆகாசத்தையளாவிய பொன்மயமான கொடித்தேரிலேறி, போர்ப்பறைமுழங்க ரணக்களத்தை நோக்கிப் புறப்பட்டான். அவனுக்குதவியாக அறுபதுவெள்ளம் இராக்ஷசப்படைகளும், யானைக்கூட்டங்களும், தேர்களும், குதிரைகளும், பெருங்கூட்டமாக கூடினதுகள். அப்போது உறுமி-திமிலை-மணி-பலகை-பம்பை-தாளம்-தாரை-டக்கை-உடுக்கை-புல்லாங்குழல்-யானைமணி-ஊமைச்சகடை இவைமுதலிய வாத்தியங்களோடு, பெரும்பேரிகை ஜெயபேரிகை முதலியவும் ஒலித்தன. யானைமேற்பறையும், பக்கமணிகளும், சமுத்திரம்போலக் கோஷித்தன. குதிரைக் கிண்கிணிமாலையும், தேர்மணிகளும், பிருதுக்கொடி கெச்சையும், சேனைகளுடைய வீரகண்டைகளும், வெற்றி மாலைகளும், ஆகிய இவைகளின் முழக்கத்தோடு, கேடகங்கள் ஒன்றுடனொன்றுபடு மோசையும், ஆகாசத்தை யெல்லாம் கடல் வளைந்து இரைத்தாற்போல மூடிக்கொண்டதுகள். சங்கோசையும் குழலொலியும், எக்காலத்தொனியும், சிறுசின்னநாதமும், ஊதுகுழலின் ஆரவாரமும், சிம்ஹங்களின் கர்ஜ்ஜனையும், குதிரைகளின் அனுமானிப்பும், தேர்களின் அதிர்ச்சியும், யானைகளின் இரைச்சலும், மேகமுழக்கத்தோடு மாறுபட்டிருந்தன. அல்லாமலும், இராக்ஷச வீரர்களுடைய வில்லிலுண்டாகும் குணடங்கார ஒலியும், அவர்கள் சப்தித்தழைக்கும்வீரவோசையும், அவர்களதட்டும் ஆரவாரிப்பும், அவர்கள்பேசும்வார்த்தையின் அதிர்ச்சியும், அவர்கள் சுவாசம்விடும்போதுபேசும் சத்தமும், அவர்கள் திரண்ட தோள்களைக்கொட்டுகின்ற பேரோசையும், அவர்கள்காலாற்பூமியைத்தட்டுகின்ற அரவமும், சமுத்திர இரைச்சலையும் மறைத்துவிட்டன. நான்கு பக்கங்களிலுமுள்ள நான்கு சமுத்திரத்துக்கொப்பான இராக்ஷசசேனைகள் நடப்பதினாற் பூமியிலிருந்து மேலெழுந்த தூளியானது ஆகாசத்தின் மேல்தாண்டிப் பறந்தபடியால், அதைப் பார்த்துப் போகானந்தக்கடலின் மூழ்கிக் களித்திருக்கின்ற தேவஸ்திரீகளுடைய பாற்கடலுக்கொப்பாகிய கண்களிலிருந்து கண்ணீரான துபெருக்கெடுத்தது. ஆயிரங்கோடிவீரர்களது தேர்கள் கிரகமண்டலங்களுக்கொப்பாகச் சுற்றிவரத் தேவர்களை நடுங்கச்செய்த இந்திரஜித்து ஒரு பொன்மயமாகிய தேரின்மேலேறிக்கொண்டு, எல்லாக்கிரஹங்களும் சுற்றிநிற்க நடுவே பிரகாசிக்கின்ற நாயகச் சூரியனைப்போலக் காணப்பட்டான்.

இப்படிகாணப்பட்ட இந்திரஜித்தானவன் ரணக்களத்தில்வந்துசேர்ந்து, தன் சேனையை அன்றிற்பக்ஷியைப்போல் இரண்டிறகு ஸ்தானத்திலும் முகஸ்தானத்திலும் நேத்திரஸ்தானத்திலும் கண்டஸ்தானத்திலும் தேகஸ்தானத்திலும் பாதஸ்தானத்திலும் நகஸ்தானத்திலும் வால்ஸ்தானத்திலும் கிரமமாக நிறுத்திக் கிரவுஞ்சவூகம்வகுத்து, தான் கருப்பஸ்தானத்தில் நின்று, முன் தேவேந்திரன்தோற்றுக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டுப்போனதும் சப்த சமுத்திரங்களினுடைய பலத்தையொடுக்கி உகாந்தகாலத்திற் சப்திக்கின்ற பெருங்கோஷ்டத்தைத் தன்வயிற்றில் அடக்கிக்கொண்டிருக்கிறதுமான வலம்புரிச்சங்கைக் கையிலெடுத்து, தேவர்களெல்லாந் தலைவெடித்துப் பயங்கொள்ளும்படியாகவும் அஷ்டதிக்குஞ் செவிடுபடும்படியாகவும் ஊதினான். அந்தச் சங்கத்தொனியைக்கேட்டு வானரக்கூட்டமெல்லாம்பின்னிடைந்து, சிம்ஹநாதங்கேட்ட மிருகங்களெல்லாம் இருந்தவிடந்தெரியாமல் ஓடிப்போய்விடுவதுபோல ஓடிவிட்டன. அத்தருணத்தில் இந்திரஜித்து பார்வதியை அர்த்தபாகத்தில் வகித்திருக்கின்ற உருத்திரமூர்த்தியினது மேருவில்லுக்குச் சமமான தன்வில்லைவளைத்துக் குணடங்காரம் பண்ணினான். அந்த முழக்கத்தைக்கேட்ட வானரங்களுடையசெவிகள் கிழிந்ததுகள்.

நெஞ்சம் பிளந்தது. ஓடிவிடும்படிக் கால்கள் யத்தனித்ததுகள். கையிற்பற்றியிருந்த மரங்களும், மலைகளும், நழுவி விழுந்ததுகள். சரீரமெல்லாம் நடுக்கமடைந்தது. வாயெல்லாம் உலர்ந்துபோயது. தேகம் மயிர்கூச்செறிந்தது. இவனாலேயல்லவோ நாம் அன்றிறந்துபோனுமென்று சொல்லிவிட்டுசூரியபுத்திரனாகிய சுக்கிரீவமகாராஜனும், வாயுபுத்திரனாகிய ஆஞ்சநேயரும், அங்கதகுமாரனும், ஸ்ரீராமச்சந்திரரும், இளையபெருமாளும், சூரிய சமானமாகிய திருவடிச் சுவடணிந்த கிரீடதாரியாகிய விபீஷணாழ்வான் முதலாகிய வீரர்தவிர மற்ற வானரங்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள்.

இப்படி வானரத்தலைவர் நீங்கலாக வானரசேனாசமுத்திரமானது கரையுடைந்தோடும் வெள்ளம்போலோட்டமெடுக்க, ஊழிகாலசமுத்திர ஓசையைப்போல இராக்ஷசசேனாவீரர்கள் வீரகர்ஜ்ஜனை செய்து நான்குதிசைகளையும் மூடிக்கொண்டு ரணக்களத்தில் நின்றார்கள். அப்போது ஸ்ரீராமமூர்த்தியும் இலக்ஷ்மணப் பெருமாளும் மேருபர்வதத்தைத் தோற்கடிக்கத் தக்கவரான வெற்றிமாலையைத்தரித்த ஆஞ்சநேயர்திருத்தோள்களின்மீதும் அங்கதகுமாரனுடைய புஜங்களின் மேலுமாக ஆரோகணித்து, கருடவாஹனாரூடரான மஹாவிஷ்ணுவும், விருஷப வாஹனாரூடரான உருத்திரமூர்த்தியும் கையில் வில்லையுடையவர்களாய் ஊழிக்காலத்தில் நிற்கின்ற தோற்றத்தைப்போல அதி உக்கிரகோபத்தீபிதர்களாய் நின்றார்கள். நீலன்முதலான வானரப் பெருவீரர்கள் ராக்ஷசர்களை எதிர்த்து, விருக்ஷங்களையும் மலைகளையும் கையிற்கொண்டு போர்செய்ய யத்தனித்தார்கள். அப்போது இந்தப்பூலோகத்தையும் தேவலோகத்தையுங்காத்து ரக்ஷித்த தசரதமகாராஜபுத்திரரான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியானவர் இனிமேல் நடக்கப்போகிற காரியங்களை ஆலோசித்து அந்தவீரர்களைத்தடுத்து, உங்கள்மீதுதேவதாஸ்திரங்களை அந்தத் துஷ்டன் பிரயோகிப்பானேயானால் நீங்கள் அவைகளைத் தடுக்க வல்லவர்களல்ல. அதைத் தடுக்குந்தொழிலை எங்களிடத்தில்விட்டுவிட்டு, நீங்கள் பின்னாற் சற்றே நின்று அந்தப்படைகளை நாங்கள்செய்கிற எங்கள் வில்வல்லமையைப் பார்த்துக்கொண்டிருங்களென்று நியமித்தார். அவர்களும் அவராருளப்பாட்டின்படி நின்றார்கள். பிறகு ஆண்தன்மையிற்சிறந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் இருவரும் இராக்ஷசர்களுடைய தேரின்மீதும், பலகதியினவாகிய குதிரைகளின்மீதும், முகபடாமணிந்த யானைகளின்மீதும், ஊழிகால விருட்டையொத்த பதாதிகளின்மீதும், அநேக பாணங்களைப் பிரயோகித்தார்கள். இவர்கள் வில்லிலிருந்துபுறப்படுகின்ற இடிக்குச்சமமானபாண வருஷங்களைக்கண்டு தேவர்களும் திப்பிரமையடைந்து போனார்கள்.

அப்போது வீரர்களுக்குள்சிறந்த வீரனை இந்திரஜித்து தேரின்மேல் வில்லைப் பிடித்தபடியே நின்று, சேனைகள் மடிந்து விழுகிறதையும் அப்படி மடிந்து விழுந்த பிணங்கள் மலைபோற்கிடக்கிற பூமியையும் பார்த்தான். மறுபடியும் அந்த இராமலக்ஷ்மணர்களுடையவில்வித்தையின் வல்லமையால் சேனைகள் மடிந்துமடிந்துவிழுகின்றதென்னும் யுத்த லக்ஷணத்தையும் பார்த்தான். ஆ! ஆ! யானைகள்பட்டுப்போனதுகளோவென்றான். இரதங்கள் முறிந்துபோனதுகளோவென்றான். அணிவகுத்து அளவுசெய்துவந்த சேனைகளெல்லாம் மாண்டுபோனதுகளோ வென்றான். ஐயோ! இப்படி இறந்துபோனவர்களைத் தூக்கிக்கொண்டுபோகிறதற்கும் ராக்ஷசர்கள்வேறேயில்லையோவென்றான். இப்படி ஆகாசபரியந்தமாகப் பிணமலைகள் குவிந்துபோனதைக்கண்டு மதிமயங்கி, இங்கே சண்டைசெய்கிறபேர்கள் இருவர்தானே. ஆனால் இறந்துபோகின்ற சேனைகளைப் பார்க்கும்போது யதார்த்தமான தம்முடைய அறுபதுவெள்ளஞ் சேனையையும் சபித்துக் கொல்லுகின்றார்களோ? மற்றென்னமோசமோ தெரியவில்லையே என்றான். அல்லாவிட்டால் தங்கள் நீண்ட வில்வல்லமையால் மாளும்படி எய்து கொல்லுகின்றார்களோ? எந்த இந்திரஜாலஞ் செய்கின்றார்களோ?என்றுவாய்பிதற்றிக்கொண்டுபாண வருஷங்களைப்பார்ப்பான். அதனால் ஒழுகுகின்ற இரத்தவாறுகளைப்பார்ப்பான். ஆகாசத்தை முட்டிக்கிடக்கின்ற பிணமலைகளின் உயர்வைப் பார்ப்பான். யானைத்தந்தங்கள் அறுபட்டு அவைகளில்நின்றும் உதிர்ந்த

மூத்துக்குவியல்களைப் பார்ப்பான். மாண்டு கிடக்கின்ற யானைக் கூட்டங்களைப் பார்ப்பான். அந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய அழகிய திருத்தோள்களைப் பார்ப்பான். பக்கங்களிலிருக்கின்ற மலைகளைப்பார்ப்பான் அவைகளைப்போல ஆகாசவரையிலுங்குவிந்துகிடக்கின்ற இராக்ஷசர்களுடைய தலைகளைப்பார்ப்பான். அந்த இரண்டு வீரசிம்ஹங்களுடைய பாணவேகங்களைப் பார்ப்பான். அந்தப்பாணங்கள்பட்டு அக்கினிப்பொறிகளைச் சிந்தி முறிந்துக் கிடக்கின்ற ராக்ஷசர்களுடைய ஆயுதப்பறிகளைப் பார்ப்பான். வில்லுகளைப்பார்ப்பான். அந்தவில்லின் நாணிலிருந்து புறப்படுகின்ற இடியினேசையைச் செவியினலே கேட்பான். ஆயிரந்தேர்களையும், போர்செய்கின்ற யானைக் கூட்டங்களையும், வெற்றிமாலையைத் தரித்திருக்கின்ற குதிரைத்தொகைகளையும், ராக்ஷசர்களுடைய பல்லாயிரந்தலைகளையும், சமுத்திரத்துக்கொப்பான ஆயுதக்கூட்டங்களையும் துண்டுதுண்டாகத் துண்டிட்டும், தமதுவேகங் குறையாமல் அண்டத்திற்கப்பால்போகின்ற பாணங்களினுடைய சக்தியை ஆச்சரியப்பட்டுப்பார்ப்பான். அப்படிப்பட்ட பாணங்களுக்கு இவ்வளவென்னுங்கணக்கில்லாத விசாலத்தொகையைப் பார்ப்பான். அறுபதுவெள்ளமான இராக்ஷச வீரர்களுடைய வல்லமைக்கிசைந்தபடி எறிகின்றவைகளும் எய்கின்றவைகளும்சொரிகின்றவைகளும் எற்றுகின்றவைகளான ஆயுதங்களெல்லாம்பெருங்காடுவெந்ததுபோலச் சாம்பலாய்ப்போனதுகளே! அல்லாமல் அந்த வீரர்களுக்குச் சமீபத்திலும்போகாத லக்ஷணத்தைத் தன் மனப்பூர்வமாய் ஆராய்ந்து பார்ப்பான். வயிற்றைப் பிசைந்துகொண்டோடிவந்து தங்கள் தங்கள் நாயகர்கள்மீது அவரவர்களுடைய மனையாட்டிகள் ஆகாசத்திற்செல்லுகின்றமேகங்கள் பூமியில்வீழ்வதுபோல வீழ்ந்து அழுது குழைகின்ற கூட்டங்களைப்பார்ப்பான். இவையல்லாமல் பற்களைக்கடித்து இடியைப்போலச் சப்தத்தையுண்டாக்குகின்ற பிளந்தவாய்களோடு கூடிய தலைகளில்லாத முண்டங்கள் கூத்தாடுகின்றதையும், பருந்து முதலிய பக்ஷிக் கூட்டங்கள் பூமியிலிறங்காமல் ஆகாசத்திற் பறந்துகொண்டிருக்கின்ற விதத்தையும் பார்ப்பான். அங்கத குமாரர்கள் அநேகம்பேரிருக்கின்ருர்களோ! என்பான். ஆஞ்சநேயர்கள் இந்தலோகமெல்லாம் இடமில்லாமல் நிறைந்திருக்கின்ருர்களோ! என்பான். இந்த மனிதர்களெங்கேபார்த்தாலும் அங்கங்கேயிருக்கின்ருர்களே? இரண்டுபேர்தானே? அல்லது அநேகம்பேர்களுண்டோ! என்பான். ஆண்சிங்கங்களுக்குச்சமமான அந்த இராமலக்ஷ்மணர்களுடையவேகமார்க்கத்தைஇன்னபடியென்று தெரியாதவனாகி, ஆகாயத்தி லாரவாரிக்கின்ற தேவர்களைப் பார்ப்பான். அந்தத் தேவர்கள் வருஷிக்கின்ற புஷ்பவருஷங்களைப்பார்ப்பான். இடந்துடிக்கின்ற தனது தோளைப்பார்ப்பான். பார்த்த பார்த்த திக்கிலெல்லாம் பிணக்காடுகள் பரவிநிற்கின்றதைப்பார்ப்பான். அடித்துக்கொண்டுபோகின்ற இரத்தவாற்றிஞேடு யானைப்பிணங்கள் மிதந்துபோகின்றதைப் பார்ப்பான்.

இப்படி இந்திரஜித்து தனக்குத்துணையாகவந்த அறுபதுவெள்ளஞ் சேனையும் அழிந்துபோனதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு நிற்பதைக்கண்டும் ஆயிரங்கோடித் தேர் வீரர்கள்தவிர மற்றவர்களெல்லாமாண்டுபோனதைக்கண்டும், முன்னம்அவ்விந்திரஜித்து நாகபாசத்தாற்கட்டின பயத்தினல் ஓடிப்போன வானரர்கள் மனங்கலங்கி மறுபடியும்வந்து ரணக்களத்தைச் சேராமல் அங்கங்கே சிதறிநின்ருர்கள். இராக்ஷசதளத்தின் அறுபதுவெள்ளச்சேனையுமடிந்து ஆயிரகோடித் தேர்வீரர்கள் மாத்திர மிருந்த வல்லமையோடும்வந்த போர்க்கோலத்தை அநுமானனவர்கண்டு, அளவிட முடியாமற்பூரித்த தமது திருத்தோளைத்தட்டிக்கொண்டு வீராஷ்டகாசஞ் செய்தார். இடிக்கொப்பாகிய அந்தச்சப்தத்தைக்கேட்டுச் சில தேர்வீரர்கள் தேரில் நின்று மூர்ச்சையாய் பூமியில் வீழ்ந்தார்கள். சில இராக்ஷசர்கள் கையிலுள்ள ஆயுதங்களைக்கீழே எறிந்துவிட்டுப் பாதசாரியாகஓட்டம்பிடிக்கயத்தனித்தார்கள். மதில்களாற் சூழப்பட்ட லங்காபட்டணத்திலுள்ள இராக்ஷசர்களும் இந்தக்கர்ஜ்ஜனையைக்கேட்டு இரத்தங் கக்கிக்கொண்டுஉயிர் சோர்ந்தார்கள்.

இதைக்கண்ட மேகத்திலும் கரியமேனியையுடையவனுன இந்திரஜித்து அவர்

களைப்பார்த்து. ஓ!ஓ!! நீங்கள் பயந்துபோனீர்கள். இப்போதேபோய்விடுங்கள். இந்த கர்ஜ்ஜனைக்குப் பலஹீனப்படத்தக்கவர்கள் இனியெப்படி கொடியயுத்தஞ் செய்யப் போகிறீர்கள்? நீங்களும் முன்னிறந்து போன அந்த வீரவான்களுடனே இப்போதே மாண்டுபோனீர்கள்போலானீர்கள். என்று கோபித்துக்கொண்டு தனித்தேரையுடையவனாக ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் மேலெதிர்த்து வந்தான். அதைக்கண்ட ஆயிரங்கோடித் தேர்வீரரும் கர்ஜ்ஜித்துக் கொண்டு நெருங்கி, பூமியுங்கிழிந்துபோய் விட்டதென்னும்படியாகவும், திக்கஜங்கள் தலைநடுங்கி மயங்கிப்போய்விடவும், ஆகாசநட்சத்திரங்கள் உதிர்ந்து விடவும், தேவர்கள் மனந்திகைக்கவும், இரணரங்கத்தில் வந்து நின்றார்கள். அப்போது மகா சாதுரிய வாசகரான இளையபெருமாள் மேகத்திற்குச்சமமான தாதுர்த்துவமுள்ள திருக்கைகளையுடைய வீரசிம்ஹமான ராமச்சந்திரப் பிரபுவை நமஸ்கரித்து நின்று கொண்டு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகின்றார். சுவாமி! உலகத்தாரெல்லாம் இவன்வெற்றிப் பெற்றதாகவும், இவனுடைய நாகபாசத்தாற்கட்டுண்டு அடியேன் தோற்றுப்போனதாகவுஞ் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இது யதார்த்தமே! அடியேனும் இஷ்டபந்துக்களான இவர்களைக் காக்கவில்லை. இந்தச்சண்டாளன் கட்டினபொய்க்கட்டை நீக்காமலும்போனேன். இவனை ஜெயித்து வெற்றிக்கொள்ளாமலும் நின்றுவிட்டேன். இவனுயிருரையும் போக்காமலிருந்தேன். இஃதெப்போதும் தீராத வசையாயிருக்கின்றது. ஆதலால், இந்திரனுக்குப்பகையாளியான இவனுடைய தலையை அடியேனுடைய பாணமானது அந்தரத்திலறுத்துத் தள்ளாமற் போமேயானால், அடியேனே யெல்லாத்துஷ்டர்களுக்குள்ளும்முதன்மைப்பட்டவனும், மனிதரெல்லாரிலும் கடைப்பட்டவனும், ஆகக்கடவேன். சுவாமி!சுவர்னவீரகண்டாமணியையணிந்த திருவடிகளையும் அழகிய திருத்தோள்களையுமுடைய தேவரீர் சந்நிதி முன்பாகவே இந்தத்துர்மார்க்கனுடைய தலையை அடியேனுடைய பாணத்தாலறுப்பேனானால், அடியேன் அடிமைத்தொழிலும் கீர்த்திபெற்றதாகும். அப்படி யாகாவண்ணம் இந்தப்பெரியலோகத்தாரெல்லாம் பார்த்து நிற்கவும் அடியேனுடைய பாணமானது இவனுடையதலையை அறுக்காமற்போகுமானால், தேவரீருக்கு அடியேன் செய்கிற நிஷ்காமிய கைங்கரிய பிரயோசனமெல்லாம் லோகத்திற்குதவாமற் போகக்கடவது என்று சபதஞ்செய்தார். அப்படி மஹாவீரரான இளையபெருமாள் சபதஞ்செய்யவே தேவர்களெல்லாம் எங்கள் மனவருத்த நீங்கினோமென்று ஆனந்தகோஷமிட்டார்கள். சமஸ்தமான லோகங்களும் லோகத்துப் பதார்த்தங்களும்ஆரவாரித்ததுகள். தருமதேவதையும்பல்லாண்டுகூறி யொலித்தது. இயமதருமராஜனும் கெக்கலிக்கொட்டிக் கர்ஜ்ஜித்தான். அப்போது செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீராமபிரான் புன்சிரிப்புள்ள திருமுகத்துடன் அவரைப்பார்த்து, தம்பீ! நீஇவ்வளவஜ்ஞானத்துடனே இந்தச்செய்கையைச்செய்ய ஏற்றுக்கொள்வாயேயானால், சம்ஹாரகர்த்தாவாகிய உருத்திரமூர்த்தியும், இரக்ஷககர்த்தாவாகியஉபேந்திரநாதரும், தங்கள் தொழிலால் வியர்த்தர்களாய்ப் போய்விட்டார்கள். அவர்களால் இனியென்ன நடக்கப்போகின்றது? என்று ஆசீர்வதித்தார்.

இப்படி யாசீர்வதித்த ஸ்ரீ சக்கிரவர்த்தித்திருக்குமாரரை இளையபெருமாள்சாஷ்டாங்கமாகத் தெண்டன்சமர்ப்பித்து, சுவாமீ! இந்த அநேககோடித்தேர்வீரர்களால் சூழப்பட்ட இந்த இராக்ஷசக்கூட்டத்தை இதோ கொன்று விடுகின்றேன். சற்றே தேவரீர் கடாக்ஷித்தருளும். என்று விண்ணப்பஞ்செய்துவிட்டு அதிக சந்தோஷத்துடனே புறப்பட்டார். அப்போது அங்கதகுமாரன் இடியைப்போலக்கர்ஜ்ஜித்தான் அதைக்கேட்டு மேகங்களெல்லாம் சிதறி உதிர்ந்துபோய்விட்டன. இந்திரஜித்துவின்தேரிற்பூட்டியிருந்த சிம்ஹங்களும்நடுக்கமடைந்ததுகள். ஸ்ரீயப்பதியினுடைய பாஞ்சசன்யத்தொனியைப்போலச் சமுத்திரமும் ஆரவாரித்தது. இப்படி இளைய பெருமாள் யுத்தரங்கத்தில்வந்து எதிர்த்து நின்றமாத்திரத்தில் வளைதடி, மழு, சக்கரம், ஈட்டி, தோமரம்,தண்டாயுதம்,வேலாயுதம், முசுண்டி, சூலாயுதம்,கைவேல்,அம்புகள், கன்னக்கோல், இவைமுதலிய ஆயு

தங்களையெல்லா மேகவருஷத்திலு மிரு மடங்காக இராக்ஷசர்கள் வீசியெறிந்தார்கள். அப்போது வசந்தகாலத்துக்குரிய மன்மதனுக்கொப்பான சுந்தரமுள்ள ஸ்ரீ ராமாநுஜர் பிரயோகித்தபாணவேகத்தால் ஆகாசநட்சத்திரங்களெல்லாம் ஒருமிக்க உதிர்ந்து விட்டதுகள். மேலுலகமும் கீழுலகமு மறையும்படிவந்த அந்த ஆயுதங்களெல்லாம் துண்டுதுண்டாய் முறிந்து வீழ்ந்ததுகள். ஒருபாணப்பிரயோகத்திற்கு ஆயிரந்தேர்கள் அச்சுமுறிந்து வீழ்ந்ததுகள். அதிற்பூட்டிய குதிரைகளெல்லாம் மாண்டதுகள், சாரதிகளும் இறந்தார்கள். இரதிகர்களும் தலையறுபட்டார்கள். உலோகமெல்லாந் தீயும்படி நெருப்பும், புகையும் மேன்மேலும் பொங்கினதுகள். தேர்த்தட்டின் அடிமுறிந்து விழுந்ததுகள். தேர் வண்டில்களெல்லாம் அச்சுமுறிந்துபோயினதுகள். அம்புகள் பூட்டியவில்லுகள் ஒடிந்ததுகள். தேர்குத்துக்கால்களும், இரதிகர்களுடைய மார்புகளும், பிளப்புண்டதுகள். பிருதுக்கொடிகள் அற்றதுகள் குடைகள் கிழிந்ததுகள். வெற்றிவீரர்களுடைய முடிகளுடைந்ததுகள். பேரிகைகள் பீறுண்டதுகள். மேகங்களெல்லாம் கரிந்துதிர்ந்ததுகள்.

இப்படி எவரும், எவையும், சின்னபின்னப்பட்டுத் தலை கால் தெரியாமற்போனபடியால், இவைகள் தேருறுப்புகள், இவைகள் தேர்க்குதிரைகள், இவர்கள் ரதிகர்கள், இவர்கள் காலாள்கள், இவர்கள் சாரதிகள் என்று வேறுபாடறிதற்கு ஏலாமற் போய்விட்டது. தகப்பன்மார்தேரிற் பிள்ளைகளுடைய தலைகள் கிடந்ததுகள். பிள்ளைகள்தேரிற் பிதாக்களுடையநரைத்ததலைகள் விழுந்ததுகள். சிலதலைகள் குறியழிந்து அம்புடனே அந்தரமார்க்கத்திற் பறந்துபோனதுகள். சிலதலைகள் சிவந்தரத்த வாற்றில் அம்புபாய்ந்தபடியே கொம்பன் சுறா சமுத்திரத்தில் திரிவதுபோல ஓடினதுகள். தும்பைமாலையை யணிந்த வலது கைகள் அம்பறாத்தூணியில் நின்று மெடுக்கின்ற அம்புகளுடனே அறுந்ததுகள். வில்லைப் பிடித்தபடியே இடதுகைகளும் ஒடிந்ததுகள். கூர்மையான பாணங்களினால் அறுபட்டவைகளும் அடிபட்டவைகளுமான கொடிகளும், குடைகளும், மற்றவைகளும், விசாலமானகடலுக்கொப்பான இரத்தவெள்ளத்திற்பக்ஷிக்கூட்டங்கள்படிவதுபோலும் இருந்ததுகள். அன்றியும் யானைகளின்மேற் றவிசுகளும் அம்புகளும் தேர்களும் வளைகின்ற பெரியவில்லுகள் முதலான ஆயுதங்களும் கொடிகளும் விறகுகளாகி, இறந்த ராக்ஷசர்களுடைய கண்களாகிய அக்கினியிற்பாகமான பிணங்களைப் பேய்க்கூட்டங்கள் சந்தோஷத்துடன் எடுத்து எடுத்து விழுங்கினதுகள். இலக்ஷ்மணருடைய பாணங்கள்பட்டுச் சில தேர்களின் வண்டில்கள் சில்லுச்சில்லாய்ப் பேர்ந்து சிதறிப்போனதுகள். சிலதேர்கள் கயிற்றிற் கட்டிய குதிரைகள் மாண்டு பூமியில் தலைகீழாய்ப்புரண்டு விழுந்ததுகள். சில தேர்கள் ரதிகனும் சாரதியும்மடிய வெறுமையாய் ரணக்களத்திலோடித் திரிந்ததுகள். சிலதேர்கள் பிரகாசிக்கின்ற ரத்தினங்கள் ரத்தவெள்ளத்துடன்சேர்ந்து சிவந்த கிரணங்களை வீசுகின்றதனால், அளவில்லாத பந்துக்களுடனே ராக்ஷச துஷ்டர்களெல்லாம் துக்கப்பட்டு மயங்கும்படி அக்கினியில் வெந்த இலங்காபட்டணத்தின் மாளிகையைப்போல் இருந்ததுகள்.

இப்படியிருக்கின்ற காலத்தில் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும் ஆஞ்சநேயரைச் செலுத்திக்கொண்டு வந்து தம்முடையகோதண்டத்தை வளைத்துச் சோனமாரியைப் போல அஸ்திரப் பிரயோகஞ் செய்தார். அப்போது தேவலோக விமானங்கள் பூமியில்விழுந்து முறிந்ததுபோல அங்கங்கே தப்பியிருந்த சிலதேர்களும் சின்னபின்னப்பட்டு அத்தேர்வீரர்களு மாண்டுபோன பின்பு, இராவண குமாரனான இந்திரஜித்துமாத்திரம் ஒற்றை ரதத்துடனே நின்றான். இப்படி பலயானைகளோடு குதிரைகளும்பூட்டிய தேர்க்கடல்களும் சிம்ஹங்கள்போன்ற ராக்ஷச வீரர்களும் - கூட்டமாய் மடிந்துபோன பிறகு, வில்லோடுங் கூடின ஸ்ரீராமலக்ஷ்மணர்களான இரண்டு வீரர்களையும் இந்திரஜித்துபார்த்து, வெகு கோபத்துடனே கொஞ்சமு மஞ்சாமல், ஓ வீரர்களே! நீங்களிரண்டு பேர்களும் என்னோடு சண்டை செய்கின்றீர்களோ? அல்லாவிட்டால் உங்களிருவரில் தகுதியான ஒருவர் வந்து உயிரைக்கொடுக்கின்றீர்களோ? உங்கள் சேனைகளை யெல்லாம்

சேர்த்துக்கொண்டு போர்செய்து மாண்டு போகின்றீர்களோ! உங்கள் மனதிலுள்ள அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள். அந்தப்படியே உங்களுக்கேற்ற ஒரு உத்தரவு கொடுக்கிறேனென்றான்.

இப்படிச் சொன்னதைக்கேட்ட இளைய பெருமாள் இந்திரஜித்துவைப் பார்த்து, அடா இராவண குமாரனே! நீ வாளாயுதத்தாலாவது, பலம்பொருந்திய வில்வித்தையினாலாவது, மல்யுத்தத்தினாலாவது, இன்னும் உனக்குப் பழக்கமாயிருக்கின்ற எல்லாவித ஆயுதங்களினாலாவது பலங்கொண்டு நீசெய்கின்ற போரில்; நீ அபிப்பிராயப்படுகின்ற யுத்தம் ஒன்றல்ல பலவற்றையுஞ்செய்து உன்னுயிரைவாங்கும்படிச் சபதஞ்செய்திருக்கின்றேன். இது சத்தியமாகுமென்று சொன்னார். அதைக்கேட்ட இந்திரஜித்து-ஓ லட்சுமணா! உனக்குமுன் பிறந்தவனான அந்த ஸ்ரீராமனை முறைமாற்றி உனக்குத் தம்பியாக்கி உனக்குப் பின்னாலே கொல்லுகின்றேன். அவனுக்குப் பின்பிறந்தவனான உன்னை முன்னேகொன்று உன்னை அவனுக்குத் தமையனாகச் செய்துவிடுகிறேன். இப்படிச் செய்யாவிட்டால் நான் ராவணனுக்குப் பிள்ளையாகப் பிறந்ததினாற் பயனென்ன விருக்கின்றது. உனக்கிலக்குவனென்கிற பெயர்தகுதியானதென்னும்படிப் பிரகாசிக்கின்ற என்னுடைய பலமுள்ள பாணத்துக்கு உன்னை லக்ஷியமாக்கி விடுகிறேன். அன்றியும் என் பாணத்தை நடுவேநுழைந்து விலக்கிவிடுகிறேனென்று விருஷபவாகன ரூடரான சாக்ஷாத் உருத்திரமூர்த்தியே விலக்கின போதிலும், அவரையுங்கூட என் வில்லினாற் சின்னபின்னபடக் கலக்கிவிடுகிறேன். இவைகளை யெல்லாம் உனதண்ணனாகிய அந்த ஸ்ரீராமனும் கண்ணாரப் பார்க்கப் போகிறான். என்னுடன் வந்த அறுபது வெள்ள ராக்ஷசசேனைகளைக் கொன்றுபோக்கின நீங்களிரண்டு வீரர்களு மனமிரங்கி வருந்தும்படி, தோஷிக்குரங்குகளின் எழுபதுவெள்ளஞ் சேனையுமாண்டு இரணக்களம் வெறுங்களமாகும்படி ஒருக்ஷணத்துக்குள்ளாக என்னொரு வில்லாலேயே முடித்துவிடுகிறேன். உன்தமயனுடைய பாணத்தாற் கொல்லப்பட்ட கும்பகர்ணனென்கிற பெயருடையவனான இராவணன்தம்பியல்ல நான். அந்த ராவணனுடைய புத்திரனுக்கும். மேலும் நானொரே வீரனுக்கும், என் தம்பிமார்களுக்கும், என் சிறிய தகப்பனாகும்பகர்ணனுக்கும், உன்னையும் உன் அண்ணனையுங்கொன்று உங்களிருவர்களுடைய ரத்தத்தினால் திலதர்ப்பணஞ் செய்வதாகநிச்சயித்து வந்திருக்கின்றேன். என்று சொல்லக்கேட்ட இளையபெருமாள் அவனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

அடா இந்திரஜித்துவே! இராக்ஷசரென்கிற பெயருடையவர்கள் யார்யாரோ? அவர்களுக்கெல்லாம் அபரகிர்த்தியங்களைச்செய்து ரக்ஷிக்கிறதற்குத் தகுந்த விபீஷணாழ்வான் எங்களிடத்தில் முன்னமே வந்துவிட்டான். ஒளித்துக்கொண்டிருக்கின்ற உன் தகப்பனாகிய ராவணனுக்கு நீ செய்ய வேண்டிய உத்தரகிரியைகளை யெல்லாம், அதிக துக்கத்துடனே அவனே வந்து நாளைசெய்யப் போகிறானென்றார். இப்படியிருவரும் சபதஞ் செய்துகொண்ட பின்பு இந்திரஜித்து மனங்கொதித்து, ஆகாசமும்-பூமியும்-திக்குகளும் ஆகியவெல்லா மறைந்துவிடும்படியாகக் கறுத்தகடலையெல்லாம் பானம் பண்ணத்தக்க அக்கினிமுகாஸ்திரங்களைச் சோனாமாரியைக் காட்டிலும் இருமடங்கு மும்மடங்காகப் பிரயோகித்து, அங்கத குமாரன்மேல் ஆயிர பாணமும் வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயர் மீது அதற்கிரட்டிப்பான பாணங்களும்-மற்ற வீரசிம்ஹங்களுக்குச்சமமான வானர வீரர்கள் தேகத்தின்மேல் அநேக பாணங்களுமாகப் பிரயோகித்து, எல்லாவிடமும் பாணமயமாகும்படி நிறைத்துவிட்டான்.

இப்படி ராவணியான இந்திரஜித்து இராமாநுஜர்மீதும் - ஸ்ரீராமபிரான்மேலும்-மகா சமர்த்தர்களான வானரவீரர்கள்பேரிலும் தேகத்தை உளையச் செய்வதானகொடியபாணங்களைப்பிரயோகித்தும் அவனுடையவில் ஒரு நாழிகை பரியந்தம் மண்டலாகாரமானபிறையைப்போல வளைந்து நின்றது. முதுகுப் புறத்திலும்-முகத்திலும்-இரண்டு பாரிசத்திலும்-ஆகியநாற்புறத்தும், அம்புகளை மத்தியான காலச்சூரியனைப்போற் பொழியத்தீரங்கொண்ட அந்த இந்திரஜித்துவின் கைவல்லமையைக்கண்ட தேவர்களெல்லாம் பயந்து கண்ணைமூடி யொடுங்கிவிட்டார்கள். இப்

படி ராக்ஷசன்விட்ட பாணங்களில் தேகத்திற் பட்டவைகளையும் படாதவைகளையும் ஸ்ரீராம சகோதரராகிய இளஞ்சிம்ஹமானவர் விலக்கிவிட்டு, அவன் விடப்பட்ட தேவாஸ்திரத்திற்கு அந்தந்தத் தேவாஸ்திரங்களைப் பிரயோகித்து, அவைகளையெல்லாம் அந்த அறிவீனன்செய்த பொய்ச்சபத வார்த்தைகளைப்போல நாசமாகும்படிச்செய்து அதிவேகமாய் அவனையெதிர்த்து நின்றார். ஸ்ரீராமமூர்த்தியானவர் இந்திரஜித்துவின்மேற் பாணப்பிரயோகஞ்செய்கிறது தர்மமல்லவென்று வெறுமையாய் இளையபெருமாளைப் பிரியாமற் பின்னாக நின்றருளினார். இளைய பெருமாளும் இந்திரஜித்துவும் ஒருவரையொருவர் ஜெயிக்கநேரிடாமல், அவர்கள் பாணங்களெல்லாம் கொள்ளிக்கட்டைகளைப்போல வெந்து ஆகாசத்திற்போய்ச் சேர்ந்துவிட்டதுகள். இருவரும் அதிக உக்கிரத்தோடு பாணப்பிரயோகஞ் செய்தலினாலே காடுகளெல்லாம் பற்றியெரிந்ததுகள். பெரிய மலைகளெல்லாம் சேர்ந் தெரிந்ததுகள். பொன்னுலகமாகிய தேவலோகமும் எரிந்தது. சப்த சமுத்திரங்களுங் கொதித்தெரிந்தன, அதுகளிலுள்ள மலைகளும் திகுதிகென்றெறிந்ததுகள். உலோகமெல்லாம் ஊழிகாலம்போலச் சாம்பற்பட்டெரிந்தது. அப்போது ஆதிசேஷசயனத்தைத் துறந்து அயோத்தியாபுரியி லவதரித்த ஸ்ரீரகுநந்தருக் கிளையவராகிய லக்ஷ்மணப்பெருமாள் தம்முடைய பாணங்களால் இந்திரஜித்தேவிய பாணசமுத்திரங்களை யெல்லாம்விலக்கிவிட்டு, ஆண்முதலைப்போன்ற அந்த ராவணபுத்திரனுடைய தேரையிழுத்துக்கொண்டு வருகின்ற ஆயிரஞ்சிம்ஹங்களையும் யமனுக்குத் தத்தஞ்செய்து விட்டார். அத்தேரழிந்த மாத்திரத்திற்சேமத்தேர் துணையில்லாமற் பரிவேடமழிந்து போகத் தனித்துநின்ற சூரியனுக்கொப்பாகநின்றதேவர்களையெல்லாம்நாசப்படுத்தித் துரத்திவிட்டவனான இந்திரஜித்து அநேக தீட்சண்யமான பாணங்களைப் பிரயோகித்து, அழிந்த அந்தத் தேர்மீதிருந்தபடியே அங்கத குமாரனுடைய வெற்றித் தோள்களின்மீதும்-லக்ஷ்மணருடைய திருத்தோள்களின் பேரிலும் அழுந்தும்படியாக அளவில்லாத பாணங்களைக்கொட்டி தனது பலம்பொருந்திய தனிச்சங்கத்தை யெடுத்து வாயில்வைத்து எல்லா லோகங்களும் நிலைதளர்ந்து தத்தளிக்கும்படிப் பொம்பொம்மென் றூதினான்.

இப்படிச் சங்கநாதஞ்செய்த தசமுகனுடைய தனிக்குமாரனான இந்திரஜித்து தரித்திருந்த வஜ்ரகவசமானது பொடிப்பொடியாய் உதிர்ந்து போகும்படி ஆண்சிம்ஹம்போன்ற லட்சுமணப் பெருமாள் பத்துத் திவ்யபாணங்களைப் பிரயோகித்து நொறுக்கித் தமது வில்லைக் குணத்தொனி செய்தார். இதைப்பார்த்த நீலமேக ஸ்யாமளமேனியரான ஸ்ரீராமர் செந்தாமரை மலர்போன்ற தமது திருக்கண்மலரில் ஆநந்த பாஷ்பமொழுக இளஞ்சந்திரிகையை போலப் புன்சிரிப்புச் சிரித்து, உலோகங்களையெல்லாம் பானம் பண்ணின தம்முடைய திருவாயைத் திறந்து ஓவானரவீரர்களே! நீங்கள் யாவரும் அட்டகாசஞ் செய்யுங்களென்று நியமித்தார். உடனேயெல்லா வீரர்களும் லோகங்களெல்லாம் வெடித்துப் போய்விட்டதுக ளென்னும்படி ஒருமிக்கவீரநாதஞ்செய்தார்கள். அப்போது சூரிய னஸ்தமிக்கும் வேளையாயிற்று. இப்படியிருக்கிறதருணத்திற் கண்ணிமைத்துத் திறப்பதற்கு முன்பாக இந்திரஜித்து ஆகாசத்திற்போய் மறைந்துவிட்டான். இளையபெருமாள் அவனுடைய உருவத்தைக் காணாதவராகி ஸ்ரீராமரைப் பார்த்து, சுவாமி! இவன் தேவர்களுக்குத் துன்பஞ்செய்கிறவ னானபடியால் நம்முடைய சேனையையும் அழிப்பான். இப்போது ஆலோசிக்க வேண்டுவதில்லை. பிரம்ஹாஸ்திரப் பிரயோகம்செய்துவிடுகிறேனென்றார். இப்படி இளையபெருமாள்சொல்வதைக்கேட்ட ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர் அவரைப் பார்த்து, ஆ! தம்பீ! உனக்குக் கோபம் பிறந்ததேனும் அவ்வஸ்திரத்தைத் தொடுத்துவிடாதே. அஃது இந்தமூன்றுலோகத்தையுஞ் சுட்டெரித்துவிடும். அதையொருவருந்தடுக்கமுடியாது. என்றருளிச்செய்யக்கேட்ட மகா புத்திமானான இளையபெருமாள் அதைப் பிரயோகியாமல் நிறுத்திவிட்டார். அப்போது மறைந்துபோய்நின்ற வஞ்சகனான இந்திரஜித்து இவர்களுடைய மனோபாவத்தைத் தெரிந்துகொண்டு, தான் அந்தப்பிரமாஸ்

திரப் பிரயோகஞ்செய்ய எண்ணங்கொண்டவனாகி, இப்போது நாம் இவர்களைவிட்டுப் பிரிந்துபோவது நல்லதாகுமென்று தீர்மானித்துக்கொண்டு போய்விட்டான். இவன்போகிறதைப் பார்த்துக்கொண்டிருந்தவர்களான தேவர்களெல்லாம் கெக்கலிகொட்டிச் சிரித்தார்கள். வானரர்களெல்லாம் இவ்விந்திரஜித்துவினுடைய தேகத்தில் இளையபெருமாளுடைய தீட்சணமான பாணங்கள்பட்டு ஒழுகிவருகின்ற இரத்த வெள்ளமானது மேக வருஷங்களையெல்லாம் ஒழித்துவிட்டதென்றும், அவனும் எதிர்த்து நிற்கப் பயந்து ஆகாசத்தில் ஓடிப்போய் விட்டானென்றும் நினைத்தவர்களாய், அதியுக்கிரத்தாற்பிறந்தசந்தோஷத்துடனே ஆர்ப்பரித்தார்கள்.

அன்றியும் ஓடிப்போன வானரசேனையெல்லாம் சமுத்திரமானது இரணக்களத்தில்வந்து சேர்ந்ததென்று சொல்லும்படி வந்துசேர்ந்து கர்ஜ்ஜித்துக்கொண்டு, இந்திரஜித்துவைப் பின்றொடர்ந்து துரத்தினதுகள். தோல்வியடைந்துபோன இந்திரஜித்து ஒருவருக்குந்தெரியாமல் மந்தரகிரியால் மர்த்திக்கப்பட்ட சமுத்திரம்போலக் கலக்கமடைந்திருக்கின்ற லங்காபட்டணம்வந்து அடைந்தான். இப்பால் அவ்விந்திரஜித்து பிரகாசகரமான பிரம்மாஸ்திரத்தை இந்தவீரர்கள் நம்மேல் விடுவதற்குமுன்பாக நாமே முந்திக்கொள்ளுவோமென்று உத்தியோகித்து, அதர்வணவேத மந்திரங்களால்அஸ்திரயாகஞ்செய்யும்படி தீர்மானித்தான். அந்தத் தீர்மானத்தை யுத்தஞ்செய்யத்தக்க தோள்களை யுடையவர்களான ஸ்ரீராமலட்சுமணர்கள் நினையாமல், அவன் வஞ்சனைத் தொழிலையும் மறந்துவிட்டார்கள், சப்தித்த சேனாவீரர்களுடைய ஆர்ப்பரிப்பானது தேவலோகத்தைப்போய்அலைக்கவும், அதுகண்டசூரிய பகவான் இளையபெருமாள்மீது இந்திரஜித்து பிரம்மாஸ்திரப் பிரயோகம் செய்வதைப் பார்க்கமாட்டேன். முன்னாக நானே மாண்டுபோகின்றேன். என்று போவது போலச் சப்தமாவென்னுங் குதிரையால் இழுபடுகின்ற தனது ரதத்துடனே மேலைக்கடலைப்போய்ச் சேர்ந்து விட்டான்.

அப்போது புண்டரீகாக்ஷராகிய ஸ்ரீ ராமர்விபீஷணாழ்வானைப்பார்த்து, அப்பா தம்பீ! வல்லமைபெற்ற நம்முடைய சேனைகள் ராத்திரியும் பகலுமாகப் பெரும்போர் செய்து இளைப்படைந்து போய்விட்டதுகள். இவர்களுக்கு ஆகாரம்வருகிறதற்குத் தாமசமாய்விட்டபடியால், நீயே இவர்களுக்குவேண்டிய உணவுப்பொருள்களைச் சேகரித்துக்கொண்டு வரவேண்டுமென்று நியமித்தார். அதற்குவிபீஷணாழ்வான்சுவாமி! அப்படியே இதோ அதிசீக்கிரத்திற் கொண்டு வருகின்றேனென்று நமஸ்கரித்துப் புறப்பட்டு, தம்முடைய மந்திரிமார்களோடுங்கூடப்போய் ஒரு நாழிகைக்குள்ளாகச் சமுத்திரத்தைத் தாண்டினார். அத்தருணத்தில் இளையபெருமாளை சுவாமி பார்த்து, தம்பி லட்சுமணா! அவன் தேவதாஸ்திரங்களுக்குக் கிரமமாக யதார்த்த பூஜைகளைச் செய்துவிட்டுப் பிறகு தான்வந்து பிரயோகிப்பான். ஆகையால் நானும்போய் அஸ்திர பூஜைகளைச் செய்துவிட்டு வருகின்றேன். நான்வருகிறவரையிலும்நம்முடைய சேனைகளையெல்லாம் பத்திரமாகக்காத்துக்கொண்டிரு. என்றுகூறி இரணக்களத்தைவிட்டுப் பாடிக்கூடாரத்தைப்போய்ச் சேர்ந்தார். இலங்கைக்குப்போன இந்திரஜித்து இராவணனைக் கண்டு, அவ்விடத்தில் நடந்த காரியங்களையும் தன்மேலவர்கள் முந்திப் பிரமாஸ்திரம்பிரயோகம்பண்ணயத்தனித்திருக்கிற விதத்தையும் அவனெஞ்சிலுறுத்தும்படியாகச்சொல்லினான். அதைக்கேட்ட இராவணன் மனந்திகைத்து, என்னப்பனே! அப்படியா? ஆனால்நாமென்ன செய்யலாமென்று கேட்டான். அதற்கவ்விந்திரஜித்து இராவணனைப் பார்த்து, ஐயா! தன்னைக் கொல்லுவதற்கு ஒருவர் துணிந்தார்களே யானால் தானுமப்படியே அவர்களை முந்திக்கொல்லும்படி யத்தனிக்கலாமென்று சாஸ்திரஜ்ஞர்கள் சொல்லியிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட யுத்தத்தை நான் செய்யப்போகிறேனென்பதை அவர்களறியாதபடி மறைவாயிருந்து அந்தப் பிரமாஸ்திரத்தை விடுகிறதே நன்மை இது சாஸ்திரவிகிதமாகும்.

அன்றியும் நான் பிரம்மாஸ்திரம் பிரயோகிக்கப்போகின்றேனென்பதை அவர்களறிவார்களே யானால், அந்தப் பிரமாஸ்திரத்தைக்கொண்டே தடுத்துவிடுவார்கள். என்னை யெதிரேவரப் பார்ப்பார்களேயா

ணல் கொன்றுபோடவும்வல்லவர்களாவர். அந்தத் தபோவான்களான அவர்களுக்கு வருத்தமென்பது கொஞ்சமாவதுண்டாக வில்லை. ஆகையால் அஸ்திரயாகஞ்செய்து அவர்கள் வாணளை ஒரு க்ஷணநேரத்திற் குள்ளே முடித்துவிடுகிறேன். ஐயா ராவ ணேஸ்வரா! என்னையவர்கள் மறந்து போய்விட்டார்க ளானதால் அவர்களோ டெதிர்த்து யுத்தஞ்செய்ய அவர்கள்மீது அளவில்லாத சைந்நியங்களை ஏறவிட்டு, அந்தச் சேனைகளுக்குப் பின்னாக நானி ன்றுகொண்டுதான் இந்த அஸ்திரம் பிர யோகிக்கப்போகிறேனென்றான்.

இப்படி யவ்விந்திரஜித்து சொல்லிய தைக்கேட்ட இராவணன் தனக்கெதிரில் நிற்கின்ற மகோதரனைப் பார்த்து, ஓ மகா வீரனே! நீயென்மீது தயைவைத்து நூறு வெள்ளஞ் சேனையையும் இதற்குத் தலைவ னான அகம்பன்முதலான அளவில்லாத ராக்ஷசர்களையுங் கூட்டிக்கொண்டு, சீக்கிர மாகப்போய் அந்த மனிதர்களை நெருங்கிப் பெருஞ் சண்டையைச்செய்து, உன்மாயை களெவ்வளவுண்டோ அவ்வளவு மாயை களையுமேவி, மகாகொடிய அந்தகாரவிருளை எங்கே பார்த்தாலும் நிரப்புக. நீயொருத் தன்மாத்திரமே இந்த மூன்றுலோகங்களை யும் ஜெயம்பெறத் தக்கவன். ஆதலால் நீயேபோய் அவர்களைக் கோபித்து அவர் களுயிரைவாங்கி எனக்குபகாரம் பண்ண வேண்டுமென்று சொன்னான். இப்படி ராவணன் சொல்லக்கேட்ட வாள்போன்ற கோரதந்தங்களையுடையவனானமகோதரன் அதிக சந்தோஷசித்தனாகி, ஐயா பிரதாப லங்கேஸ்வரா! எப்போது நீர் உத்தரவு கொடுப்பீரோ வென்று எதிர்பார்த்திருந் தேன். உத்தரவுகிடைத்தும் இனித் தாம சஞ்செய்யத் தக்கவனோ? இதோ புறப்பட் டேன். என்று அதிக உற்சாகத்துடன் அவனுடைய மலைபோன்ற தோள்களைத் தட்டி ஆக்ரமித்துத் தேர்மேல் வந்தேறி னன். மலையைச்சூழ்ந்த மதத்தயானைகளைப் போல ராக்ஷசவீரர்கள் மகோதரனுக்கு உபபலமாகவந்து அவனது தேரைச் சூழ் ந்துகொண்டார்கள்.

அல்லாமலும் கோடிகோடி நூறுநா றுயிரம் யானைகள் அணியணியாக வந்து நின்றன. அந்தந்த அணிகள் தோறும் வாயுவேகத்திலும்அதிவேகமாயோடுகின்ற தேர்க் கூட்டங்கள் அளவில்லாதவைகள் வந்து சேர்ந்ததுகள். மகா பலமுள்ளவை களான அஸ்வப்படைகளும் கணக்கற்ற வைகளாய் வநது சேர்ந்ததுகள். ஆயுத முஷ்டிப்புகளும் உயர்ந்து பருத்த இரத்ந ங்கள்வைத்திழைத்த ஆபரணங்களும்-பிள ந்த வாயிலுள்ள கோரவக்கிரதந்தங்களும் ஆகிய இவைகளெல்லாம் அதிகப் பிரகாச முள்ள சூரியர்களையும் சந்திரர்களையும்போ லச்சொலிக்க, இவைகளுக்கு மத்தியகண்ட மான இருளைப்போல ராக்ஷசச்சேனைகளும் நெருங்கி வந்ததுகள். இராக்ஷசர்கள் பிடி த்துக்கொண்டு வந்த விருதுக்கொடிகள் கூட்டமிட்டுக் கொழுந்துவிட்டு வளர்ந் ததுபோல ஆகாசத்தைப்போய் முட்டி, இடிகளின் சமுகங்களோடுகூடின மேக ஜாலங்களையெல்லாம் துரத்திவிட்டதுகள் அந்த ராக்ஷசர்கள் பூமி குழியும்படிக் கால டிகள்வைக்கு மிடங்களிலெல்லா முன்னே யூறிய ரத்தம் கொப்பளித்துப் புறப்பட்டு நிறைந்தது. உலோகங்களை மூடிக்கொண்டு பிரம்ஹாண்ட வரையிலும் தூளிசென்று அண்டங்களைச் சிருஷ்டித்தவனான பிரம்ம தேவனுடைய கண்களையு மறைத்துவிட் டது. ஆனைகளாகிய பெரிய மலைகளில் நின்றும் ஒழுகிவருகின்ற மதஜலமென் னும் பெரிய நதிகள் குதிரைகளின் வாய் நுரை நீரோடு கலந்து, மரங்களையும் மலை களையும் அடித்துக்கொண்டு வேகமாய்ப் போய் பெருஞ் சமுத்திரத்திற் சங்கமமான துகள். அளவில்லாத நட்சத்திரக் கூட்ட ங்கள். ஆகாச மார்க்கத்தில் பிரகாசிக்கிற தைப் பார்க்கும்போது, அதிக கோபத்தி னல் வாயைமடித்துக்கொண் டிருக்கின்ற வக்கிர தந்தங்களையுடைய ராக்ஷசர்கள் பல ங்கொண்டு கையிற்பிடித்திருக்கின்ற ஆயு தங்களைச் சுழற்றும்போது அதிலிருந்து உண்டான நெருப்புப்பொறிகள் ஆகாசத் தில் தொத்திக்கொண் டிருக்கின்றதுபோ லிருந்தன. இராவணனல் யுத்தத்திற்கு அனுப்புவிக்கப்பட்ட நூறுவெள்ளஞ் சே னைகளும் இலங்கைக்கோட்டை வாசலிலி ருந்து புறப்படுகிறதைப் பார்க்கும்போது, அகஸ்திய மகாமுனிவர் ஆதியிற்சமுத்திர முழுவதையும் பானம்பண்ணியிருந்ததைப் பானம்பண்ணின கிரமப்படியே மறுபடி

யும் உமிழ்வதைப்போ லிருந்தது. சங்கு-பேரிகை-எக்காளம்-தாளம்-ஆகிய விவை களின் தொனியும், வீரர்களுடைய சிங்க நாதமும், குணடங்கார ஓசையும், யானைக ளுடைய முழக்கமும், குதிரைக்கனைப்பும், பொன்மயமாகிய தேர்களினுடைய அதிர்ச்சியும், உலோகங்களையெல்லாம் விஷ்ணுவைப்போல விழுங்கிவிட்டன.

இந்தப் பிரகாரமாக ராக்ஷசப்பெருஞ் சேனைகள் ரணக்களத்திற் சேர்ந்ததுகள். அவர்களை வானரவீரர்களெதிர்த்து, அவர்களாலேவப்பட்ட இடிக்குச்சமமான ஆயுதங்களையும் பாணவருஷங்களையும் தடுத்து, அவர்களோடு ஒருமிக்கஆர்ப்பரித்தார்கள். கோபித்தார்கள். அதட்டினார்கள். அலக்கழித்தார்கள் மலைகளைக் கோடியும் கோடிக்குமேற் கோடியுமாக எறிய, மலையொன்றுக்கு நால்வரும் ஐவருமாக இராக்ஷசர்கள் மாண்டார்கள். போர் செய்துகொண்டிருந்த யானைகளும், பாய்கின்ற குதிரைகளும், பொன்மயமாகிய தேர்களும், அழிந்து வீழ்ந்ததுகள். இராக்ஷசர்கள் பிரயோகித்த மழு-சூலம் - சக்கரம்-கலப்பை-வாள்-வளைதடி-ஈட்டி-அங்குசம்-கோடரி - தண்டாயுதம் - நாராசம் - வேல்-எறிதடி - அம்புகள் - இவை முதலிய ஆயுதங்கள் பட்டு வானரக்கூட்டங்கள் மடிந்துபோனதுகள்-முற்காம்-இருப்புலக்கை-முசுண்டி - ஆப்புகள்-பிண்டிபாலம்-தடி- இருப்புமுள் குறுந்தடி - கவண்கல் - இவைகளெல்லாம் வானரங்களேவின மலைகளை நொறுக்கி, அவர்களையுங் கொன்று ரணக்களத்தில் வீழ்ந்ததுகள். பிரகாசிக்கின்ற கூர்மையான ஆயுதங்களை இராக்ஷசர்கள்முறையாக ஏவினதினுற் பிணப்பெருமலைகள் அங்கங்கே தடைபட்டுக் கிடக்கிறபடியாலும், அழிந்த ரத்தவெள்ளங்கள் நான்கு பக்கங்களிலு மோடுகிறபடியாலும், இராக்ஷசர்கள்மீது வானரங்கள் எதிர்த்துப்போகமாட்டவில்லை. ராக்ஷசர்களும் வானரங்களின்பேரில் எதிர்கொண்டு வரக்கூடவில்லை. அங்கு யுத்தஞ் செய்துகொண்டிருந்த வானரர்களெல்லாம் பூர்வஜென்மம் தேவர்களானபடியால், தேவலோக மடைந்தபிறகு தேவர்களுடனே சேர்ந்து திரிந்தார்கள். அவர்களை ஆலிங்கனம் செய்ய வேண்டுமென்று மோகங்கொண்டு வருத்தமுற்றிருந்த அரம்பா ஸ்திரீகளெல்லாம் அவர்களைக்கண்டு ஆசை கொண்டு, தங்களாவியொன்றும்படி அவர்களைத் தழுவி அவர்களைப் பிரிந்திருந்ததுக்கந் தீர்ந்துபோனார்கள். ஒளிப்பான மாயமும் வஞ்சனையும் களவும் தங்களுக் கெப்போதுங் கடமையுள்ளவைகளாகக்கொண்டு, அன்பு முதலான தருமமார்க்கத்தி லிழியாமலிருந்த ராக்ஷசர்களை பெருந்தேவர்களாகச்செய்த ஞ்ஞான ஸ்வரூபராகிய லக்ஷ்மணப் பெருமாளுடைய பாணங்களிலும் பவித்திரமானவைகள்வேறுஞ்சிலவுண்டென்று சொல்வது தகுதியாமோ? இயமன் தன் தூதுவர்களுடனே அந்தர மார்க்கத்தில் வந்து நின்றான். மூன்றாம்பிறைபோன்ற வளைந்த பற்களையுடைய ராக்ஷசர்களும் - யானைகளும்-தேர்களும்-ஆகிய இவற்றின் மீது ஆகாசமுமிடமில்லை யென்று சொல்லும்படி லக்ஷமணர் தம்முடைய பாணங்களை பிரயோகித்து, நான்கு திசைகளிலும் அந்தந்த திசைகளில் இருக்கிறதுபோலவே திரிந்துகொண்டிருந்தார்.

இப்படிப்பட்டசமயத்தில் வாயுபுத்திரராகிய ஆஞ்சநேயர் கும்பகர்னனாலே அவ்விடத்திற் போட்டுவிடப்பட்டதும், ஆகாசத்தை அளாவிய வஜ்ரமலையைப்போலப் பிரகாசிக்கின்றதும், தேவர்கள் தலையிலணிந்திருந்த தும்பைமாலையையறுத்து அவர்களைத் தோற்கடித்துத் துரத்தினதும், ஜொலிக்கின்ற ரத்னமயமாய்ப் பூமியைப் பார்த்தால் நெளியச்செய்வதுமான ஒரு தண்டாயுதத்தைக்கையிலெடுத்து, தேவர்களெல்லாரும் காற்றோ? அதுவல்ல நெருப்போ? அதுவுமல்ல; என்று நினைக்கும்படி அதிவேகமாய்மிகுந்த கொலைத்தொழிலைச் செய்யும்படியான சுபாவத்துடனே, கோபமே ஒருருவுகொண்டதுபோல ஒருவரும் அளவிட்டறியக்கூடாத பெரிய ஆகாரத்துடன் இயமனே இந்தரணக்களத்திற் போர்செய்யவந்தானென்னும்படி ராக்ஷசர்களைக்கொன்றார். சகல சாஸ்திரங்களுங்கற்றவரான அந்தஆஞ்சநேயர்கொடுங் கண்ணையுடையதுகளான மதயானைகளின் மேலும், வேகமாயோடுகின்றகுதிரைகளின் மேலும், வீரர்கள் செலுத்தும் தேர்களின் மேலும், கூட்டமாகிய ராக்ஷசர்களுடைய

தேகங்களின்மேலும், அவர்களுடையதலை களின்மேலும், சர்வாந்திரியாமியாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவைப்போல நான்குவேதங்க ளாலும் பிரதிபாதிக்கப்படுகின்ற செந்தாம ரைக்கண்ணை யுடையவனாகிய திருவிக்கிர மன் இவனேயென்று சொல்லும்படியாக இரணக்களமெல்லாஞ் சுற்றித் திரிந்தார். தம்மேலெதிர்த்து வந்தவர்களையும் தமது கையிற்கிடைத்தவர்களையும் கண்களில் அக் கினிபொறி பறக்கும்படி கிழித்தெறிந்து, அந்தப்போர்க்களமெல்லாஞ்சேருகும்படி நசுக்கி அவர்களுருவங்களையும் அழித்து விட்டார். இவருடைய விக்கிரம வடிவத் தைக்கண்ட தேவர்களெல்லாம் திரிலோக ங்களையும் மூன் மூன்றடியாலளந்த அந்தச் சாக்ஷாத்காரி இவர்தானேவென்று சந்தே கித்தார்கள். மதத்தயானைகளினுடையமஸ் தகங்களைப்பிளந்து அவைகளிலுண்டாகிய முத்துக்கள் தமது திருமேனியிற்படியவும் மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாசத்தைப் போய்த் திருமேனி முட்டவும் விளங்கிய ஆஞ்சநேயர், உகாந்தகாலஞ் சம்பவித்த போது சண்டமாருதமடிக்க அதனால் நக்ஷ த்திரங்களெல்லாம் உதிர்ந்து தொற்றிக் கொண்டு பிரகாசிக்கின்ற மேருமலையானது சூரியர்களால்சூழப்பட்டிருக்கின்றதையொ த்திருந்தார். பூமியையும் ஆகாசத்தையும் இடித்துவிட்டாரென்று யாவரும் நினைக் கும்படியாகத் தமது பாதங்களாற் பூமியை ஒருதை உதைத்துக் கிளம்பி, கடல்போன் றிருக்கின்ற ராக்ஷசப் பெருஞ்சேனையைத் துகளாய்ப் போகும்படிச் செய்து, கும்ப கர்னனுடைய அந்தப் பெருந்தண்டாயுத த்தை தமது வல்லமையுடன் கையிற்பிடி த்து, யானைகள்-தேர்கள் - குதிரைகள்-முத லாகிய யாவையும் குழம்பிப்போகும்படி அடித்து, அவற்றிலேறிவந்தவர்கள் உயி ரைப்போக்கி வீரகர்ஜ்ஜனைசெய்து தமது மனக்கோபத்தைமாற்றிக்கொண்டார் நூறு யிரம் யானைகளை ஒருநாழிகைப்பொழுதுக் குள்ளாக இரத்தவெள்ளமா யோடும்படி அரைத்து, அநேகமாயிரஞ் சிம்ஹங்களைப் போல் எதிர்த்துவந்த வெற்றிபெற்ற இரா க்ஷசவீரர்களையெல்லாம் காலிலெற்றி, ஒரு வரும் இவ்வளவு பலமுள்ளவ ரிவரென்று அறிய வொட்டாமற் கொல்லுகிறதற்குப் புறப்பட்ட திக்கஜம்போல அந்தரணரங்க மெங்குந் திரிந்துக்கொண்டிருந்தார். விரு ஷபத்தைப்போலவருகின்ற தேர் வீரர்களை யும், சிம்ஹத்தைப்போலவருகின்ற குதிரை வீரர்களையும், மேகம்போலக்கரிய நிறத்தை யுடையவர்களையும், மழையைப்போலக்குமு றுகின்ற கர்ஜ்ஜிதத்தை யுடையவர்களையும், அநேகவிதமான யுத்தசாஸ்திர சமர்த்தர் களையும், எங்கும் ஜெயம்பெற்றுக் கீர்த்தி வந்தர்களாய் யுத்தஞ்செய்யவந்து தம்மைச் சூழ வளைந்தவர்களையும், தம்மோடெதிர் த்துவந்த ராக்ஷசவீரர்களையும், வீரசுவர்க் கம் அடையும்படியாகக் கதையைச் சுழற்றி அடித்து நசுக்கிவிட்டார். சுக்கிரீவமகாரா ஜன்-நீலன் - அங்கதப்பெருமான் - சாம்ப வன்-பனசன்-இவாள்முதலாகச் சொல்லப் பட்ட வானரவீரர்களெல்லாம் மிகுந்த கோபவெறி கொண்டவர்களாகிப் போர்க் களத்திற்புகுந்து, ஒருவரையொருவர்காணு தவர்களாகியராக்ஷசப்பெருங்கடலில் மறை ந்து நின்றார்கள்.

இப்படி பெருந்தொகுப்பாகக் கூடியி ருக்கின்ற ராக்ஷசப்பெருவெள்ளத்தை அப் படியப்படியேவாரிவாரியெறிந்துகொண்டு நகாயுதத்தினாலே இரணியாசுரனுடைய மார்பைப் பிளந்துக் கொன்ற நரசிம்ஹமூர் த்தியானவர் நடந்ததுபோல மிகுந்த இரா க்ஷசசேனைக்கடலில் நுழைந்து தமது தண் டாயுதத்தினாலே அவர்களையெல்லாம் கொ ன்று திரிகின்ற வாயுபுத்திரரானவர், வீர சம்பத்தை யுடையவனான அகம்பனென் னும்ராக்ஷசவீரனை எதிர்கொண்டார். முன் னால் தாருகாசுரனென்னும்பெயரை யுடை யவனாகி வில்வீரரான சுப்பிரமணியரோடு எதிர்த்து அவருடைய வெற்றிவேலால் மாண்டுபோய் இப்போது அகம்பனென் னும்பெயரையுடையவனாகப் பிறந்த அந்த ராக்ஷசன் இவரைப்பார்த்து, மலையையொ த்த ஆயிரங்கழுதைகள் பூண்டு மனோவேக த்திலும் அதிவேகமாய்ப் போகத்தக்க பெ ரியதேரையும்வில்லையுமுடையவனாய்வந்து முப்பத்துமுக்கோடிதேவர்களுக்கும் தலைவ னாகிய தேவேந்திரனும் சத்துருக்களைச் சம்ஹரிக்கின்ற சக்கராயுததாரியாகிய ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியும் முப்புரங்களை எரித்த ருளிய உருத்திரமூர்த்தியும் தவிர மற்றவர் கள் இந்தக்குரங்குடனே யுத்தஞ்செய்யக் கற்றார்களேயானால் யமனுக்கிரையாவார்

கள். ஆகையால் இந்தக்குரங்கைநான்தடுக்காமற்போவேனேயானால் இந்தச் சப்தசமுத்திரங்கள்சூழ்ந்தபூலோகத்திலுள்ள இராக்ஷசர்களென்னும் பெயரையுடையவர்களையெல்லாம் இக்குரங்கே மாய்த்துவிடும். என்று மாமிசத்திற்பழகினதுகளான அஸ்திர வருஷங்களைப் பொழிந்துக்கொண்டு அதிககோபத்துடனே எதிர்த்தான். அப்போது நட்சத்திரமண்டலமளவும் உயர்ந்திருக்கின்ற பலம்பொருந்திய தோள்களையுடைய ஆஞ்சநேயரும் வேகமாக எதிர்த்துவந்து, இரதகஜ துரகபதாதிகளும் நெருங்கிப் பகைத்துநிற்க உகாந்தகாலமேகமும் ஊழித்தீயும் சண்டமாருதம் பொங்கிவந்த பிரளயகாலம்போல வாரிட்டிறுக்கிய வீரக்கழலையுடைய அகம்பன்நெருங்கிவந்தவுடனேவஜ்ரமலையைப்போன்றதிருத்தோள்களை யுடையதாம் அத்தண்டாயுதத்தை கிறுகிறென்றுசுழற்றி, அவனாலெறியப்பட்டவைகளும் வீசப்பட்டவைகளும் பிரயோகிக்கப்பட்டவைகளும் எய்யப்பட்டவைகளும் சொரியப்பட்டவைகளும் ஆகிய எல்லா ஆயுதங்களும் கிரமக்கிரமமாக முறிபட்டுச் சிதறிப்போகும்படித் தூள்தூளாக்கி, தேவர்கள் சந்தோஷிக்கவும் ராக்ஷசர்கள்வதையுண்ணவும் கற்றிருக்கிற தண்டாயுத வித்தையைக்காட்டினர். உகாந்தகாலச் சண்டமாருதத்தினாலும் அசையமாட்டாத மேருவையொத்த ஆஞ்சநேயர் அகம்பன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பத்துக்கோடி யானைகளையும், பத்துக்கோடி குதிரைகளையும், எண்ணற்றதேர்களையும், மூன்றாம்பிறையையொத்த வக்கிரதந்தங்களையுடைய அளவற்ற ராக்ஷசக்கூட்டங்களையும், பொடிப்பொடியாய் நொறுக்கிக் கொன்றுவிட்டார். அப்போது அகம்பன் ராக்ஷசர்கள் மாண்டுகிடக்கின்ற படுகளத்தைப் பார்த்து, வாயிலும்கண்ணிலும்அக்கினியுடன் புகையை கக்கிக்கொண்டும், விருதுக்கொடி கட்டியிருக்கின்ற தேரைச் செலுத்திக்கொண்டு பாணவருஷங்களை மழையிலு மூன்று பங்கதிகமாகப் பிரயோகித்துக் கொண்டு, அதிவேகமாய் வந்து மலையைப்போல மோதி மேகத்தைப்போலக் கர்ஜ்ஜித்தான்.

இப்படி அகம்பனுடைய இடியைப் போன்றவைகளும் நெருப்புப்பொறிகளைக் கக்குகின்றவைகளும் இரண்டுபக்கத்திலும் கழுகைப்போலச் சிறகுகளை யுடையவைகளும் தேவர்களுடைய மார்பைப் பிளந்தவைகளும்பொன்வடிம்புகட்டினவைகளும் நீண்ட கணுக்களையுடையவைகளுமானபாணங்கள், அநுமானுடைய தோளின்மேலும் மார்பின்மேலும் அபரிமிதமாகச்சொரியப்பட்டுத் தோன்றினதுகள். இவ்விதமாக மார்பிலும் தோளிலுந்தைத்த பாணவாய்களின் வழியாக இரத்ததாரைகள் வடியத் தேகமெல்லாம் நடுக்கங்கொண்டு நிற்கின்ற வாயுபுத்திரரானவர், அந்தவருத்தம் நீங்குவதற்கு முன்பாக அகம்பனுடைய தேரிற்பூட்டியிழுக்கப்பட்டகழுதைகளையும் தேர்த்தட்டையும் சின்னபின்னப்படுத்தி, சாரதியையும் மாண்டு விழும்படித் தமது கைத் தண்டத்தினால் மோதியறைந்தார். அதனைக் கல்லினாலே செய்துவைத்தது போலுந் தேகத்தையுடையவனான அந்த அகம்பன்பார்த்து, வில்லினால் இவனை ஜெயிக்கிறது அருமையென்று தனது மல்யுத்தப்பழக்கங்கொண்டதோள்வல்லமையினாலே தெய்வத்தச்சனுடைய சிற்பவேலையால்செய்ததான ஒரு பெருந்தண்டத்தைக் கையிலெடுத்துக்கொண்டு கடலைப்போலக் கர்ஜ்ஜித்து, இன்றைக்கிவனை விண்ணாட்டிலேற்றி இலங்காதிபதியான ராவணேஸ்வரனை வெற்றியாளனாக்கி அந்த இரண்டு மனிதர்களையும் வெறியவர்களாக்கித் தேவர்களுக்குப் பெருந் துக்கத்தை யுண்டாக்கி விடுகிறேனென்று மாருதியைக்கிட்டிநெருங்கினன்.

அவரும் நல்லது வாவென்று சமீபித்துவர ஒருவரையொருவர்முட்டித் தாக்கினர்கள். இடசாரி வலசாரியாகத் திரிந்தார்கள். ஒவ்வொருவரும் வீரகர்ஜ்ஜனைசெய்தார்கள். அவரவர் தங்கள் தங்கள் புஜங்களைத்தட்டினர்கள். ஒருவரையொருவர் கிட்டினர்கள். ஒருவரையொருவர் முட்டினர்கள். ஒருவரையொருவர் கீழேதூக்கிப் பறபறவென்று தள்ளினர்கள். ஒருவரையொருவர் மேலே தூக்கிக் கிறுகிறென்று சுற்றினர்கள். மறுபடியுங் கிட்டிநெருங்கினர்கள். பின்னும்நீங்கிச் சற்றேஆயாசமுற்றார்கள். ஒருவரையொருவர்முட்டி விலக்கினர்கள். ஒருவரையொருவர் கட்டித்தழுவினர்கள். ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்தார்கள். மீட்டுந் தரையிற்குதித்து ஒருவரையொரு

வர் கிட்டிப்பற்றினார்கள். மறுபடியும் ஒருவரையொருவ ரோங்கி அறைந்தார்கள். அந்த அறையை ஒருவரோடொருவர்கீழுமேலுமாகக் கட்டிக்காத்தார்கள். ஒருவரையொருவர் கொல்லமுடியாமல் ஒருவரையொருவர் ஒட்டி நின்றார்கள். ஒருவரையொருவர் தாக்கி வட்டமாகச்சுற்றி முட்டினார்கள். இப்படியிருவரும் மல்யுத்தஞ்செய்து கருநிறத்துடனே பகைகொண்ட நிறத்தையுடையவனான அகம்பனுடையவஜ்ரத்தையொத்த மார்பில் பொய்யுடன் பகைகொண்டுநின்ற தர்ம்மகுணவானான ஆஞ்சனேயர் பாய்ந்து, தண்டத்தினால் மோதியடித்தார். அப்போது துஷ்டனான அகம்பன் அவ்வடியைத் தன் தண்டத்தினால் தட்டிவிலக்கினான். அப்படி விலக்கினமாத்திரத்தில் அவனுடைய கையுமுறிந்து தண்டாயுதமும் பொடிப்பொடியாய்ப் போர்க்களத்தில் விழுந்துவிட்டது.

இப்படி வலதுகையோடு தண்டாயுதமுமிற்று வீழ்ந்தவுடனே கடலைப்போலக் கலங்கி நடுங்கின தேகத்துடனே நின்ற அந்த அகம்பன் பலம்பொருந்திய தன் இடதுகையா லோங்கி அநுமானுடைய வெற்றிமாலை யணிந்த திருமார்பில் அடித்தான். அந்த அடியானது வஜ்ரமலைமேல் விழுந்த இடியைப்போ லிருந்தது. அப்போது ஆஞ்சநேயர் அப்படியடித்தஅகம்பனைப்பார்த்து, தமது கையில் இடிக்குச் சமமான தண்டத்தைப் பிடித்திருந்தும் - அதனாலேயவனையடித்தால் அதர்மமாகும் வெறுங்கையாய் நிற்கின்றான். என்று உதட்டைமடித்துத் தாமும் அவனைப்போலவே இடது கையால் அகம்பனுடைய மார்பிலே குத்தினார். குத்தின மாத்திரமே முன்குடித்திருந்து கக்குகிறதுபோல இரத்தத்தைக் குபுகுபென்று பெருவெள்ளமாய்க்கக்கினான். அம்மாத்திரத்தில் பின்னுமந்த இடதுகையாலேயே ஓங்கிக் கன்னத்திலோரறை யறைந்து கீழேதள்ளி, அவனுயிரை வீரசுவர்க்கத்தில் வசிக்கும்தேவர்களுடனே சேர்த்துவிட்டார். மற்றக்கூட்டமாய்வந்த ராக்ஷசர்கள் காட்டில் வாழ்கின்ற மிருகங்களும் யானைகளும் சிம்ஹத்தைக் கண்ட தன்மையைபோலச் சின்னபின்னப்பட்டு, திக்குவிதிக்குகளாக ஓட்டம் பிடித்தார்கள். இப்படி யொருபக்கத்தில் அநுமான் கையால் அகம்பனும் மடிந்து மண்மேல் விழுந்துவிட்டான். அவனுடன்வந்த ராக்ஷசசேனைகளு மாண்டுபோனார்கள். வானரவீரர்களெல்லாம் திரும்பிவிட்டார்கள்.

மற்றொரு பக்கத்தில் இளையபெருமாள் வருஷிக்கின்ற அம்புகளால் சிங்கமுதலியவைகள் கட்டியிழுக்கின்ற கொடிகள் கட்டின தேர்களும், துதிக்கைகளை யுடைய யானைகளும், குதிரைகளும் மாண்டுபோனதுகள். இப்படிப்பட்ட சமயத்தில் மேருவுக்குச்சமமான திருத்தோள்களை யுடைய ஆஞ்சநேயர் வானரவீரர்கள் சப்திக்கின்ற சப்தத்தைச் சிறிதுங்கேட்டாரில்லை. இடியினோசையையும் அடக்கத்தக்கதான லக்ஷ்மணருடைய வில்லினோசையையும் கேட்கவில்லை. வீரர்களிலின்னாருக் கின்னதுசம்பவித்ததென்று மறியவில்லை. தமக்கொருவரும்வந்து சொல்லுவாருமில்லை. இதனால் அதிக வியசனமுற்றார். விசாலித்திருக்கின்ற ராக்ஷசசேனைகள் தெற்கு மேற்காகக் கடலைப்போலிருக்க,ஏழுயோசனைக்கப்பால் அங்கதகுமாரன் போனான். அவனுக்கப்பால் பதினான்கு யோசனையில் சுக்கிரீவ மகாராஜன் போயிருந்தார். அதற்கப்பால் இருபத்தெட்டு யோசனை ஸ்ரீராமாநுஜர் எழுந்தருளி யிருந்தார். வானரவீரர்களெல்லாம் நான்குயோசனை தூரமும் ஐந்து யோசனை தூரமுமாக யுத்தஞ்செய்துகொண்டு போயிருந்தார்கள். மற்ற வானரசேனைகள் இரண்டு மூன்று காதத்திற்கப்பால் நீர்மேற்பாசிபோல் இராக்ஷச சேனைகளுக்கிடையிடையே கூடி நின்றார்கள்.

இப்படியிருக்க வாயுபுத்திரர் இளைய பெருமாள் எங்கே எழுந்தருளியிருக்கின்றாரோ அவ்விடத்திற்கு வேகமாய்ப் போக வேண்டுமென்னும் ஒரு வருத்தமானது மனதையெழுப்ப, அதனாலவர் ஊழிக்காற்றைப்போலப் போகும்போது தேகம் களைத்துவிடவும் அந்தக் களையை யாற்றிக்கொண்டுபோகும்போது இந்தப் பிரகாரமாகத் தமது கண்ணில் அநேகவிதமான குறிகள் படக்கண்டார். ஆனைத்தந்தங்களையும்மயிற்பிச்சங்களையும் பூமாலைகளையும் இரத்தங்களையும் முத்துமாலைகளையும் வாரி வீசிக்கொண்டு, மீன்களைப்போல அங்குமிங்கும் ஆயுதங்கள்பிரகாசிக்கப் பெரியகுடைகளை அடி

த்துக்கொண்டோடுகின்ற இரத்தவாறுக ளைக்கண்டார். திக்குதிக்குகளாய்ப் போய்ப் போரிடுகின்ற இராக்ஷசர்கள்மீது பிரயோ கித்த அம்புகள் அவர்கள் தலைகளையறுத்து ஆகாசத்தில்வீச, அவைகள் அண்டப்பித் திகையில் முட்டிப் பெருங்கோஷமிட்டுக் கொண்டு லோகமெல்லாம் அதிரும்படி யாகஊழிக்காலத்திற்பொழிகின்றசிலாவரு ஷம்போல விழுகின்றவைகளைக் கண்டார். பெரிய வேலாயுதத்தைக் கையிற் பிடித்தி ருக்கின்ற ராக்ஷசர்களேவின ஆயுதங்கள் லக்ஷமணர் விட்ட அம்புகளால் துண்டு துண்டாகி, அக்கினிப்பொறியுடன் நக்ஷத் திரங்கள் ஆகாசத்திலிருந்து இருளோடும் படி விழுவதுபோலவும், கானகத்திற்பற் றின நெருப்பைப்போலவும், நாலா பக்கங் களிலும் சுடுகின்றதைக்கண்டார். தயாளு வான லக்ஷமணப்பெருமாளுடைய பாணங் கள் ஆகாசமுழுவதும்ஜொலித்துகொண்டு அக்கினிகளைக்கக்கி தேவர்களெல்லாம்பார் க்கும்படியாக இருட்டைத்துரத்தி மசான த்தில் நிர்த்தனம்பண்ணுகின்ற எட்டுத் தோள்களையுடையசாம்பசிவமூர்த்தியினது சுருண்ட சடைக்கற்றையைப்போலப் பிர காசிக்கின்றதைக் கண்டார். நெய்விட்டுக் கொளுத்தப்பட்டநெருப்பைப்போல இரா க்ஷசர்களுடையமலையையொத்த தேகத்தில் நின்று இரத்தம்வடிய, கவந்தங்கள் கூட் டங் கூட்டமாக இராத்திரிக்காலத்திற்குக் கைவிளக்கேற்றினாற்போல ஆடுகின்றதைக் கண்டார். பிரம்ம கல்பபரியந்தமெண்ணித் தொகைசெய்தாலு முடியமாட்டாத வெண் ணிக்கையுள்ளவீரர்களில்லாமல் திரிகின்ற யானைகளும், அப்படியே குதிரைகளும், தலைவர்கள்மாண்டதேர்களும், ரக்ஷிக்கின்ற ராஜனில்லாத நாட்டிலுள்ள குடிகளைப் போலத்திரிகின்றசெயலைக்கண்டார். இதழ் விரிந்த பூமாலையைத்தரித்த திருமார்பை யுடைய இளையபெருமாள் பலம்பொருந் திய அஸ்திரவருஷங்களை மேகத்தைக்கா ட்டிலும் மூன்றுபங்கு அதிகமாகப் பிர யோகித்துயுத்தஞ்செய்ய,அழிந்துமாண்ட ராக்ஷசர்களுடைய தேகமலைகளையும் இரத் தக்கடல்களையும் முறிந்துகிடக்கின்ற ஆயு தக்காட்டையும்கண்டார். ஊழிகால சண்ட மாருதம்போல அதிவேகமாய் லக்ஷமண ரைத்தேடிக்கொண்டுபோகின்ற ஆஞ்சநே யர் அவ்விரத்தக்கடலையெல்லாந் தாண் டினபோது, பிரமாண்டத்தையும் கிழித்து விட்டதென்னத்தக்க ஓர் வில்லின் நாணோ சையைக்கேட்டு இலக்ஷமணர் இருக்கின்ற இடத்தைக் கண்டுபிடித்த சந்தோஷத்தி னாலே யுகாந்தகாலத்துப் பெரும்புறக்கட லின் கோஷத்திலும் இரண்டுபங்கதிகமா கக் கர்ஜ்ஜித்தார்.

இப்படி கர்ஜித்த அநுமானுடைய அட்டகாசத்தைகேட்ட இளையபெருமாள் ஆஞ்சநேயர் வந்துவிட்டாரென்றறிந்து, மற்றவீரர்களுடைய சமாச்சாரத்தை விசா ரிக்கலாமென்றுமனமகிழ்ந்து திரும்பிப்பா ர்ப்பதற்கு முன்பாக அவ்வநுமானனவர் சமீபமாகவந்து இலக்ஷமணரை வணங்கி னர். வணங்கின ஜெயப்பிரதாபரை இளைய பெருமாள் கட்டித் தழுவி, ஐயா அநுமா னே! நம்முடைய வானரசேனையெல்லாம் எங்கே? சூரியகுமாரனை சுக்கிரீவராஜன் நம்மைப்பிரிந்தவிதமென்ன? அங்கதகுமா ரன் எங்கேயிருக்கிறான்? மிகுந்த இருளா யிருக்கிறபடியால் இந்தராக்ஷசசேனைக்கட லில் நடந்ததொன்றும் எனக்குத் தெரிய வில்லை. அதனைச்சொல்லக்கடவீர் என்று வினவ,அஞ்சனைகுமாரர் தமதுசிரசிற் கை யைக் கூப்பிக்கொண்டு நின்று, சுவாமி இராமாநுஜரே! அங்கங்கேபோன வீரர் கள்போய் செய்தவிதமும், அவர்கள் யுத் தஞ்செய்து பெற்ற ஜெயாபஜயமும் அடி யேனுக்குத் தெரியாது. நடந்தகாரியங்கள் போனவீரர்கள் வந்தால்தான் தெரியும். என்று சலசமுத்திரத்தையும் ஐந்திர வியா கரணக்கடலையுந் தாண்டின ஆஞ்சநேயர் விண்ணப்பம்பண்ணிப் பின்னும் லக்ஷமண ரைப்பார்த்துச் சொல்லுகின்றார். சுவாமி! ஒரு உபாயமிருக்கின்றது. இது மனமயக் கத்தைத்தரத்தக்கஇராத்திரிகாலமானதால் நம்முடைய சேனைகளைப் பலவாறாகப் பிரி ந்துபோகச் செய்தது. இது சத்துருக்க ளான ராக்ஷசர்களுடைய தந்திரமாக்கும். இதைத் தேவரீர் திருவுளங்கொண்டு தேவ தாஸ்திரங்களால் இந்த இருட்டைப்போ க்கினாலல்லாமல், தேவரீருடைய அடியா ர்களான வானரர்கள் தேவரீர் திருவடியை அடையமாட்டார்களென்று வினயமாகச் சொன்னார். அதைக்கேட்ட இளையபெரு மாள்சற்றுயோசித்து, அப்படியா? நல்லது

இதோ நீர் சொன்னபிரகாரஞ் செய்கின்றேன். என்று சஹஸ்திராமீதானரான ஸ்ரீராமமூர்த்தியை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்து, தகுந்தபாணங்களைப்பொறுக்கியெடுத்து அவைகளையும் மேருவில்லியான சாம்பவமூர்த்தியினுடைய பாசுபதாஸ்திரத்தையும்உபமந்திரித்து, மின்னல்போலப் பிரகாசிக்கின்ற கோரதந்தங்களுடைய ராக்ஷசர்கள்மீது பிரயோகித்தார்.

இப்படி மூன்றுகண்களையுடைய சங்கரன் ஆயுதத்தைப் பிரயோகித்துவிட்ட மாத்திரத்தில் அது மூங்கிற்காட்டிற் பற்றிய வடவா முகாக்கினியைப்போல ராக்ஷசர்களிலொருவராவதுதவறிப்போகாதபடி ஒருக்ஷணத்துக்குள்ளாக அவர்களைத் தேடித்தேடிக் கொன்றுவிட்டது. சமுத்திரஞ்சூழ்ந்த திக்கிலுள்ள இருட்டையெல்லாம் நாசமாக்கிவிட்டது. தேவர்களும் பிரமைநீங்கினார்கள். அப்போது மகோதரனானவன் இந்த லக்ஷ்மணன் தேவாஸ்திரப் பிரயோகஞ் செய்தபடியினாலே நம்மாற்செய்யப்பட்ட பெருமாயைத் தொழிலெல்லாம் நீங்கிவிட்டதென்று மறைந்துபோய் விட்டான். வானரவீரர்களெல்லாம் வீர அஷ்டகாசஞ் செய்துகொண்டு வந்து இளையபெருமாளுடைய திருவடியைச் சேர்ந்து நர்த்தனம் பண்ணினார்கள். அப்போது தேவதேவரான ஸ்ரீராமபிரானுடைய திருத்தம்பியார் வானரவீரர்களில்ஒருவருக்கும் ஒருதுன்பமில்லாமல் வந்து சேர்ந்ததைக் கண்டு சந்தோஷங்கொண்டு, தமது திருவுளத்திலிருந்த சந்தேகம் நீங்கினார். காவலாகவந்த வானர சேனைகளெல்லாம் கலீர் கலீரென்று ஆரவாரித்துக்கொண்டுவந்து இளையபெருமாளைச் சேர்ந்ததைக் கண்ட தேவர்கள் புஷ்மாரியைப் பெய்தார்கள்.

இப்படி ராக்ஷசசேனை நூறுவெள்ளமுமாண்டு, அகம்பனுமடிந்து, மகோதரனும் ஓடி மறைந்துபோனபடியால், சிலதூதர்களோடி இலங்காதிபதியான ராவணனையடைந்து நடந்தகாரியங்களைச் சொன்னார்கள். அதைக்கேட்ட தசக்ரீவன் ஒன்றுந்தோன்றாதவனாகி, அப்படியா? நீங்கள் மாத்திரந் தப்பி வந்தீர்களாக்கும். ஆ! ஆ! நூறுவெள்ளஞ் சேனையையும், அதைச் சேர்ந்த ரதகஜதுரக பதாதிகளையும், ஒரு வில்லையுடையவன் இவ்வளவு சீக்கிரத்தில் எப்படி கொன்று விடுவான்? முடியமாட்டாதே; என்றுராவணன்கேட்க, அவர்கள் கொன்றைப்பூ மாலையையணிந்த உருத்திரமூர்த்தியினுடைய அஸ்திரத்தினால் முடிந்ததென்றார்கள். அதைக் கேட்ட ராவணன் ஆச்சரியப்பட்டு, அப்படியா? ஆனால் முடியத்தகும். என்றுசொல்லி மனமெலிந்திருக்கும்போது மறுபடியும் தூதர்கள் அவனை நோக்கி, ஓ எங்களாண்டவனே! ஸ்ரீராமன் யுத்தத்திற்கு வரவில்லை. ஒரு மலைமேற்போய் இருக்கின்றான். தேவரீர் தம்பியாகிய விபீஷணன் அவனும் அவன் சேனைகளும்சாப்பிடக் கந்தமூலபலாதிகள் கொண்டுவரப் போனான். நடந்த காரியமிதுவாக்கு மென்றார்கள். அப்போது இராவணன் மகோதரன்எவ்விடத்திலிருக்கின்றானென்றான். அவன் ஆகாசத்தில் மறைந்து நிற்கின்றானென்றார்கள். அது கேட்ட தசக்ரீவன் சற்றாலோசித்து, அடடா! அப்படியா முடிந்தது? இது மிகவும் அழகா யிருக்கின்றது. என்று சொல்லிச் சிரித்தான்.

அப்போது ராவணபுத்திரனான இந்திரஜித்து இதுதான் தகுந்தகாலமென்று ஒரு ஆலமரத்தினிடத்திற்குப் போனான். மூலயாகத்திற்கு வேண்டிய கலப்பைகளைக் கொண்டு அக்கிரமிகளான ராக்ஷச மறையவர்கள் வந்தார்கள். பிறகு யாகஞ்செய்யத் தனித்து, அம்பினால் சமிதைகள்சேர்த்து, அக்கினியில் தும்பைப்பூவும் காரெள்ளுஞ் சொரிந்தார்கள். கறுத்த வெள்ளாட்டின் கொம்பும் பல்லும், இரத்தமும், மாமிசமும், வரிசையாகப்பெய்து, எண்ணெயால் ஓமம்வளர்த்தார்கள். அப்போது ஓமாக்கினியானது வலஞ்சுழித்துக்கொண்டு மேலெழும்பி நல்ல வாசனையை வீசியது. அநேக நல்லகுறிகளை ஒழுங்காயுண்டாக்கியது. அதுகண்ட இந்திரஜித்தானவன் தங்கள் ஜாதிஸ்வபாவமாய்த் தோன்றுகின்ற கொடுமையுடனே நிறைந்து, நமக்கு நன்மைவிளையப்போகிறதென்று புத்திமயங்கி மேலெழும்பி, மாயையின் வல்லமையால் ஆகாசத்திற்போய்ச் சுவர்க்கத்திலுள்ள தேவர்களுடைய பார்வையும் அவர்களுடைய மனதும் அறியாதபடி வழுக்கு நிலமானமேகஜாலத்துக்குள் மறைந்தான். இவன் வந்தது முனீஸ்வரர்களும் அறி

யார்கள். பொன்மயமான கிரகங்களும் நட்சத்திரங்களும் அறியா. இந்தப்பிரகாரம் இந்திரஜித்துவந்ததை மகோதரன் தெரிந்துகொண்டு ஒரு சூதுசெய்ய நினைத்து, இந்திரனைப்போல வேஷங்கொண்டு போய் மிகுந்த பலமுள்ள ஐராவதத்தின் மேல் ஏறிக்கொண்டு, முனிவர்களையும் தேவர்களையும் சேர்த்துக்கொண்டு இலக்ஷ மணருடன் சண்டைக்குவந்தான். இவர்களைப் பார்த்தவுடனே வானரர்களிற் சிலர் இவர்கள் ராக்ஷசர்களுமல்லர். மனிதருமல்லர். குரங்கினத்தருமல்லர். இந்த லோகத்தில் வாழ்கின்ற நால்வகைச்சாதியருள் ஒன்றுமல்லர். ஆனுலிவர்கள் என்னஜாதியார்! யாருக்குதவியாக யுத்தத்திற்கு வந்திருக்கின்றார்கள்? என்றுசொல்லிப்பயந்து ஓடிவிட்டார்கள். சிலர் நான்கு தந்தங்களையும் பால்போல வெள்ளிய நிறமுள்ளதான ஐராவதமென்னும் யானையின்மேலேறி வந்தபடியால் அவனிந்திரனுகவேண்டும். மற்றவர்களெல்லாம் தேவர்களாகும். மிச்சமானவர்கள் ரிஷிகள். இவர்களெல்லாம் சண்டைசெய்யவேண்டுமென்றுகோபித்து வருவதற்கு நாமென்ன பொல்லாங்குசெய்தோம்! என்று பயந்தார்கள். அப்போது சக்கரத்தையுஞ் சங்கையும்நீக்கிக் கைகளில் வில்லையும் அம்பையுங்கொண்டு செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களுள்ளவரான ஸ்ரீராமமூர்த்திக்குத் திருத்தம்பியாராகிய இளையபெருமாள் அநுமானுடைய முகத்தைப்பார்த்து, ஓ ஆஞ்சநேயனே? ரிஷீஸ்வரர்களும் தேவர்களும் நம்மீது எதிர்த்துவரும்படி நாமென்ன பொல்லாங்கு செய்தோம்! அதைச் சீக்கிரமாகயோசித்துச்சொல்லக்கடவீர் என்று சொல்லிக்கொண்டிருக்கிற சமயத்தில் இலக்ஷ்மணருடையதிருமேனியில் இந்திரஜித்து நான்முகனுடைய அஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணிவிட்டான். அதிலிருந்து அநேக கோடி பாணங்கள் புறப்பட்டு, மேருமலையின்மேற் குருவிக்கூட்டங்கள் மொய்த்துக்கொண்டதுபோல வாயாலளவிட்டுச் சொல்லக்கூடாதவைகளாய் லக்ஷ்மணர்பேரில் வந்துபாய்ந்ததுகள். இப்படி கோடிகோடி நூறுயிர பாணக்கூட்டங்கள் இலக்ஷ்மணர் மேனியையெல்லா மூடிச் சுற்றிக்கொள்ளவே வேறொருசெய்கையுஞ்செய்யத் தோற்றமற் பொறிகலங்கி அறிவடங்க, குதிரையும் யானையும் அம்புதைத்தபோது ஒடுங்குவதுபோல ஒடுங்கிவிட்டார்.

அத்தருணத்தில் ஆஞ்சநேயர்பார்த்துப் பிரமித்து, ஈதென்ன இந்திரன்வந்து இப்படிப்பட்ட செய்கையைச் செய்தான்? இனித்தாமசமென்ன? இவனேறிவந்த யானையுடன் இவனையும் வாரிப் பூமியிலறைகின்றேன். என்றுஎழுந்தமாத்திரமேஅநுமானுடைய தேகத்திலும் அநேககோடி பாணங்கள் பாய்ந்தமாத்திரத்தில் நினைவுஞ் செய்கையுமறைந்து பூமியில் விழுந்தார். சுக்கிரீவமகாராஜனும் தனதுதேகத்தில்அதிவேகத்துடனே அளவற்றபாணங்கள் வந்துபாய, அப்பாலந்த விடங்கடோறும் குபுகுபுவென்று இரத்தம்வடிய, ஒரு பொன்மலையானது சுற்றிலும் முருக்கமலரைப் பூத்துக்கொண்டிருத்தல் போன்றவராகி, உருக்கின செம்பைப்போலச் சிவந்த கண்ணையுடையவராய்ப் பூமியில்வீழ்ந்தார். அங்கதகுமாரனும் பதினுயிரம்பாணங்கள் தைக்க இடியுண்ட ஆண்சிங்கத்தைப்போலப் பூமியில்வீழ்ந்தான். அதிகபுகழ்பெற்ற சாம்பவரும் அநேகபாணங்கள் வந்து மார்பையுந்தோளையுஞ் சல்லடைக்கண்களாய்த் தொளைக்கப் பூமியிற்சாய்ந்தார். நீலனும் ஆயிரங்கூரிய பாணங்கள் தேகத்திற்பாய்ந்து வருத்தப்படுத்தக் காலனுர் தரிசனஞ் செய்பவனுய்ப் போய்விட்டான். இவர்களைப்போலவே விஷம்போன்ற சிலபாணங்களால் விருஷபனும் பனசனும் சுவர்க்கமடைந்தார்கள். அம்புவடிவாய்வந்த எமனுல் குமுதனுமாண்டுபோனுன். சமுத்திரத்தை அணையிட்ட நளனும் ஆயிரபாணத்தினுற் சோர்ந்து வீழ்ந்தான். வாலிக்குச் சமமான பலவந்தர்களான மயிந்தனும், அவன்தம்பியும் இறந்துபோனுர்கள். இயமனுக்குச் சமமான கவயனும் ஆகாசம் போய்ச் சேர்ந்துவிட்டான். கேசரியென்பவனும் வரிசை வரிசையாய்த் தைத்த பாணங்களினுல் பூமியிற்சாய்ந்தான். மற்ற வானரவீரர்களெல்லாரும் வடித்த கூரிய பாணவருஷங்களால் முழுதுந் தீர்ந்தார்கள். குபுகுபென் றிரைச்சலிட்டுக்கொண்டு புறப்பட்ட இரத்தப்பிரவாகம் சமுத்திரத்துடனே பகைத்துக்கொண்டு எதிரேற, ஒருபாணத்துக்கு ஆயிரங்குரங்காகப் பிரம்

மாஸ்திரம் அவரவர்களுடைய தேகத்திற் பாணங்களைக்கொட்டி மறைக்கவும், அவைகளை நீக்குவதற்கு ஓரடைக்கலமும் கிடையாமல் இடியையொத்த அந்தப் பாணங்களாற் பூமியில் வலியமூலைகளையடித்தது போல அநேகவானரங்கள் மடிந்துபோனதுகள். தேவஸ்திரீகளெல்லாம் இதைக் கண்டு தங்கள் நீலோற்பலம்போன்ற கண்களைமூடிக்கொண்டு தலையைவளைத்து வியசனப்பட, பூமியிற்கிடக்கின்ற லக்ஷ்மணர் முதலானவர்களை இரத்தங்கள் நான்குபக்கத்திலுஞ் சுற்றிக்கொள்ளவும் பவளக்காடு படர்ந்த பாற்கடலைப்போலிருந்தது. அந்தச் சேனைக்கடலிலிருந்த யிருப்பு இப்படியிருக்க, இறந்தவானரங்களுடைய உயிர்களெல்லாம் ஆகாசத்திற்போய்ச் சேர்ந்தன. தேவர்கள் புதுவிருந்தினரைக் காண்பது போலக்கண்டு மிகுந்தகளிப்புடனே அவர்களையுபசரித்து, நீங்களிக்கணம் மறுபடியும் பூலோகத்திற்குப் போங்களென்றுஉத்தரங்கொடுத்து, நீங்கள் லோகசிருஷ்டிகர்த்தாவினுடைய அஸ்திரத்தினால் உபசாரஞ்செய்யப்பட்டீர்களே யல்லது அது உங்களைக் கொல்லத்தக்கதல்ல. கோதண்டபாணியாகிய ஸ்ரீராம மூர்த்தியினுடைய அடியவர்களுக் கடியவர்களும் பிறவிக்கடலிற் சம்பந்தப்படுத்தாத பரமபதப்பிராப்தியை அடைவார்களாக்கும். நீங்கள் நம்முடைய காரியத்தைச் செய்கிறதற்காகப் பூலோகத்திற்குப் போனீர்கள். உங்கள் பிராணன்களெல்லாம் எங்களுடைய அமிசந்தான். தேகமாத்திரம் அவதாராநுகுணமாக வானரரானீர்கள். செந்தாமரைக்கண்ணரான எம்பெருமானுக்காக ரணக்களத்தில் மாண்டீர்கள். நீங்கள் எங்கள் நாயகர்களாக்கும், என்றுசொல்லி அநேகவிதமாய்க் கொண்டாடினார்கள்.

இப்படியிருக்க இந்திரஜித்துவானவனிவையனைத்தையும் இருந்தபடி யிருந்து கண்டு, வானரர்களுடனே இலக்ஷ்மணன் மாண்டுபோனான். இராமன் இப்பொழுது வராமற்போனான். என்றுசொல்லித் தன்னுடைய வெற்றிச்சங்கத்தை வாயில்வைத்தூதிவிட்டு, சீக்கிரமாக யோடிப்போய் இராவணனைச்சேர்ந்து யுத்தகளத்தில் நடந்த சமாச்சாரத்தையெல்லாம் விபரமாகச் சொன்னான். அதுகளையெல்லாங் கேட்ட ராவணன் அப்படியா! இராமன் இறக்கவில்லையாயென்றான். அதைக்கேட்ட இந்திரஜித்து, ஐயா இராவணேஸ்வரா! அவனெங்கேயோ போயிருக்கின்றான். இல்லாவிட்டால் தம்பியாகிய லக்ஷ்மணனை நான் கொல்லவும், சிறந்த அவனுடைய நண்பர்களை வதைக்கவும், சேனைகளையெல்லாம் அழிக்கவும் மறைந்துவிடுவானோ? அவன் மகாவீரனச்சேயென்றான். அதைக்கேட்ட ராவணன், அப்பா எனதருமைப் புத்திரனே! நீசொன்னதுயதார்த்தமே. அதற்குச் சந்தேகமேயில்லை என்று சம்மதித்தான் பிறகு இந்திரஜித்து தனதரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். இராவணனுத்தரவினால் மகோதரனும் போய்விட்டான். இப்படியிருக்க சர்வ லோகேஸ்வரனான ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியும் இரணக்களத்திற்கு வந்து ஓரிடத்தில் நின்று, இருளாயிருந்தபடியினாலே விண்வீழ் கொள்ளிபோலப் பிரகாசிக்கின்ற அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்து இருட்பிழம்பை யெல்லாம் கவளீகரிக்கும்படி நாசப்படுத்தி, வெறுவெளியாயிருக்கின்ற இரணக்கள விசாலத்தைத் திடுக்கென்றுபார்த்து, தமது திருவடித்தாமரைகள் வருத்தமுறும்படி வேகமாயோடி நான்குதிக்கிலும் முறைமுறையாகச் சென்று, தமதிரண்டு திருக்கரத்தாலும் திருமுகத்திலறைந்து இரத்தக் கண்ணீர் பொழிந்துகளத்தில் நுழைந்து வானரவீரர்கள் தனித்தனிக்கிடக்கிறதைக் காண்கின்றார்.

அப்போது முதலில் சுக்ரீவ மகாராஜரைக்கண்டு செந்தாமரை மலர்போன்ற கண்களில் தாரைதாரையாகக் கண்ணீரொழுகும்படியாக வெகுநேரம் நின்று பெருமூச்சுவிட்டு, அப்பா சுக்ரீவா! நீயுமிப்படி ரணக்களத்தில் மாண்டு கிடக்கத்தகுமோ! வென்று மனந்தளர்ந்து பக்கத்திலிருந்த அநுமானை பார்த்துவிட்டார். என்னசெய்வார்? தன்னைத்தானறியாதவராய்ப் பெருமூச்சுவிட்டு, அப்பா என்னுயிரையளித்த அஞ்சனைச் செல்வனே! கடலைத்தாண்டிப் போய் அரக்கரையும் அசோகவனத்தையும் கலங்கச்செய்து என் துக்கத்தைமாற்றி, நானிருக்கும்படி நீ எனக்குபகாரஞ்செய்தது இதற்குத்தானோ? இராக்ஷசனுடைய அற்பமான வில்லிலிருந்து புறப்பட்ட பா

ணங்கள் உன்னுடையதேகத்தின்பலத்தை கடந்துவிட்டதா? அப்பா வாயுகுமாரா! உன்விஷயமாகத்தேவர்கள்கொடுத்த வரங்களும், ரிஷிகள்கொடுத்தஆசீர்வாதங்களும் பிறகு ஜானகிகொடுத்த சிரஞ்சீவிப் பட்டமும் பொய்த்துப் போய்விட்டதுகளோ? ஓ மகா வீரப்பிரதாபசாலியே! உனக்கிந்த அற்பச்செய்கைவந்தது என்னுடையபாவவினையா? ஐயோ! இப்படிப்பட்ட கொடும் பாவியான என்னைப்போல யாரிருக்கின்றார்கள்? அற்பகிருத்யமான ஈனராஜ்யத்தை அபேக்ஷித்து என்ன பிரயோசனத்தை யடைந்தேன்? முதலில் பெற்றதகப்பனைக் கொன்று அழித்தேன். பிறகு ஜடாயுவையுங் கொன்றுவிட்டேன். அம்மட்டிலும் விடாமல் இன்றைக்கு இத்தனைபேர் வீரர்களையுங் கொன்றுவிட்டேன். கொடுந்தொழிலுக்கு இவ்வளவுதானென்று சொல்லத் தக்க ஒருவரம்பும் உண்டாகுமோ? ஆ! ஆ! வீணைத் தமையனைக்கொன்று தம்பியாகிய சுக்ரீவனுக்கு வானராதிபத்தியத்தைக் கொடுத்தது, எல்லாரையும் ஒருமிக்கச்சேர்த்துக்கொல்லுவதற்குத்தானே? நான் பொறுமையுடையவனாகி உங்களை இப்படிப்பட்ட துன்பத்துக்குள்ளாக்கினேன். உடற் சுமையைச் சுமக்கத்தானே பிறந்தேன்? என்று துயரப்பட்டழுதார். பின்பு விருஷபக்கூட்டங்களுக்குநடுவாக மற்றொரு விருஷபத்தைப் போலக் கடைக்கண்ணில் நெருப்பைக்கக்கிக்கொண்டுகிடக்கின்றஅங்கதனென்கின்றயானையைக்கண்டு,ஐயோ! ஆயுதங்களைவீணாய்ச்சுமக்கின்றபாவியானநான் அடைக்கலம் புகுந்தவர்களை ரக்ஷிக்கின்ற வழகு நன்றாயிருக்கின்றது. நன்றாயிருக்கின்றது; என்று கண்ணீர்விட்டார். அப்பால் சற்றுதூரஞ் சென்ற தருமசொரூபியான ஸ்ரீராமர் தேகத்திற் பதிந்துகிடக்கின்ற அம்புகளுடைய கிரணக்கற்றைகளைப் பரப்பிக்கொண்டிருக்கிற இரத்தவெள்ளத்திற் பூமியைப் பாம்பாகச்சுமக்கின்ற பலம் பொருந்திய ஆதிசேஷன்மீது சயனித்திருப்பதுபோல வானரக்கடலின் மத்தியில் துயில்கின்றவரைப்போற்கிடக்கின்ற தம்பியைக்கண்டு, மனங்கொதித்து உயிர்சோர்ந்து முழுதும் புகைந்தார். நீலரத்தினம் போன்ற திருமேனியும் மனதைப்போல வருந்தி, தமது திருக்கண்களைக் கையால் மூடிக்கொண்டு மயங்கி பூமியில் வீழ்ந்து, இடியுண்டுசாய்ந்த மராமரத்திற்குச் சமானமானார். ஒருநாழிகைவரையிலும் மூச்சு விடாமலும், உணர்வடையாமலும், தேகத்தில்வியர்வுகாணாமலும்,கண்விழியாமலும், தேவர்களுங் கண்டு தெளிவடைந்தாரோ இல்லையோவென் றஞ்சும்படி திருக்கைகளுந்திருவடிகளும்அசையாமலும், கருணையாற் பிறந்தவராகையால் உயிர்மாத்திரம் பிரியாமலிருந்தார். இப்படி வியசனப்படுகின்ற ஸ்ரீராமமூர்த்தியைத் தாங்குவாரொருவருமில்லை. இளையபெருமாளைத் தழுவியணைத்துக்கொண்டிருக்கின்ற கைகளைப் பிணிப்பவிழ்த்து வாங்குவாருமொருவருமில்லை. சொல்லால் தேறுதலை சொல்லுவாருமில்லை. சிநேகர்களாயுள்ளவர்களெல்லாம் மாண்டுபோய்விட்டார்கள். ஆகையால் தனியான ஸ்ரீராமரை யார் துயரந் தீர்க்கவல்லவர்கள்? கவந்தங்களிற் கழுத்தில்லாமையால் தங்கள் நாயகரைக் காணாமல் தேடித்தேடித்திரிகின்ற சிவந்த கண்களையுடைய ராக்ஷசிகளும், பிணங்களைக் கண்டு சந்தோஷங்கொண்டு திரிகின்ற பேய்க்கூட்டங்களும், நரிகளுடைய பந்திகளுமல்லாமல், வேறொருவரும்களத்திலேயில்லாமல் தாம்மாத்திரமே தனியாய் நின்றார். தேவலோகஸ்திரீகளெல்லாம் தங்கள் வயிற்றைப்பிசைந்துகொண்டழுது,தங்கள் கண்ணீரைச்சோனாமாரியைப்போலச்சொரிந்தார்கள். தேவர்களெல்லாம் சோர்ந்தார்கள். மற்ற அசரசரங்களும் இரக்கமுற்றன. இவைகளெல்லாம் ஞானநாயகரான ஸ்ரீராமருடைய திருமேனியே யாதலால் இப்படித் துக்கப்பட்டதுகள். மூலதாமரைப் புஷ்பத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவருக்கும், மூன்றுகண்களையுடையசங்கரமூர்த்திக்கும், ஸ்ரீராமரிடத்துள்ள அன்பால் திருமுகங் கருகிஒளியிழந்துபோகுமேயானால், மற்றத் தேவர்களுக்குச் சம்பவித்த துக்கத்தைச் சொல்ல வேண்டியதென்ன? சுவாமிக்குப் பகையானவர்களும்பாவமும், அவரிடத்திலுள்ளபரிவால் அழுதுவிட்டதுகள். அப்போது ஸ்ரீராமமூர்த்திசற்றுணர்வடைந்து சுவாசம் விட்டு, திருக்கண்களை விழித்துத் தமது திருத்தம்பியாரை உற்றுப் பார்த்து, நம்முடையதம்பி பரமபதம்அடைந்தான்;

இனித் திரும்பமாட்டான் என்று மனம் புழுங்கி புண்ணிலே நெருப்பைக்கொளுத் தினாற்போலத் துன்பமுற்றுப் புலம்பத் தொடங்கினர்.

க வி.

எந்தையிறந்தானென்றுமிருந்தேனுலகெல்லாம்
தந்தனனென்றுங்கொள்கைதவிர்ந்தேன்றமியல்லேன்
உய்ந்துமிருந்தாய்நீயெனநின்றேனுரைகாணேன்
வந்தனனையாவந்தனனையாவினிவாழேன்.

தாயோநீயேதந்தையுநீயேதவநீயே
சேயோநீயேதம்பியுநீயேதிருநீயே
பேயோநின்றாயென்னையிகந்தாய்புகழ்பாராய்
நீயோயானேநின்னினுநெஞ்சம்வலியேனே.

ஊறுநின்றபுண்ணுடையாய்பாலுயிர்காணேன்
ஆறுநின்றேனுவிசுமந்தேயழுகின்றேன்
ஏறெயின்னுமுய்யினுமுய்வேனிருகூறாக்
கீறுநெஞ்சம்பெற்றெனனன்றேகெடுவேனே.

பயிலுங்காலம்பத்தொடுநாலும்படர்கானத்
தயில்கின்றேனுக்காவனநல்கியயிலாதாய்
வெயிலென்றுன்னாய்நின்றுதளர்ந்தேமெலிவெய்தித்
துயில்கின்றாயோவின்றிவ்வுறக்கந்துறவாயோ.

அயிராநெஞ்சுமாவியுமொன்றேயெனுமச்சொற்
பயிராவெல்லைபாதகனேற்கும்பரிவுண்டோ
செயிரோவில்லாவுன்னையிழந்துந்திரிகின்றேன்
உயிரோநானோவாரினியுன்னோடுறவையா.

வேழ்விக்கேகிவில்லுமிறுத்தோர்விடமம்மா
வாழ்விக்கும்மென்றெண்ணினென்முன்னேவருவித்தேன்
சூழ்வித்தென்னைச்சுற்றினரோடுஞ்சுடுவித்தேன்
தாழ்வித்தேனேவித்தனைகேடுந்தருவித்தேன்.

மண்மேல்வைத்தக்காதலின்மாதாமுதலோர்க்குப்
புண்மேல்வைத்ததீநிகர்துன்பம்புகுவித்தேன்
பெண்மேல்வைத்தகாதலினிப்பேறுகள்பெற்றேன்
எண்மேல்வைத்தேனென்புகழ்யான்றானெளியேனே.

மாண்டாய்நீயோயானொருபோதுமுயிர்வாழேன்
ஆண்டானல்லஞ்ஞிலமந்தோபரதன்றான்
பூண்டாரெல்லாம்பொன்றுவர்துன்பம்பொறையாற்றார்
வேண்டாவோநானல்லறமஞ்சிமெலிவுற்றால்.

அறந்தாய்தந்தைசுற்றமுமற்றுமெனையல்லால்
துறந்தாயென்றுமெய்ம்மறவாதாய்துணைவந்து
பிறந்தாயென்னைப்பின்புதொடர்ந்தாய்பிரிவாற்றாய்
இறந்தாயுன்னைக்கண்டுமிருந்தேனெளியேனே.

சான்றோர்மாதைத்தக்கதரக்கன்சிறைதட்ட
ஆன்றோர்சொல்லுநல்லறமன்னன்வயமானல்
மூன்றாய்நின்றபேருலகொன்றாய்முடியாவேல்
தோன்றாவோவென்வல்விலின்வீரத்தொழிலம்மா.

வேலைப்பள்ளக்குண்டகழிக்கும்விராதற்கும்
காலிற்செல்லுங்காகமணிக்குங்கரனுக்கும்
மூலப்பொத்தற்செத்தமரத்தேழ்முதலுக்கும்
வாலிக்கும்மேயாயினவாறென்வலியம்மா.

இருந்தேனானுலிந்திரசித்தேமுதலாய
பெருந்தேராரைக்கொன்றுபிழைக்கப்பெறுவேனோ
வருந்தேனீயேவெல்லுதியென்னும்வலிகொண்டேன்
பொருந்தேனானிப்பொய்ப்பிறவிக்கும்பொறையல்லேன்.

மாதாவுந்நஞ்சுற்றமுநாடுமறையோரும்
ஏதானாரோவென்றுதளர்ந்தேயிருவாரைத்
தாதாய்காணச்சாலநினைந்தேன்றரையாள்வேம்
போதாயையாபொன்முடியென்னைப்புனைவிப்பான்.

பாசமுமுற்றச்சுற்றியபோதும்பகையாலே
நாசமுஞுற்றப்போதுநடந்தேனுடனல்லேன்
நேசமுமற்றார்செய்வனசெய்தேநிலைநின்றேன்
தேசமுமற்றென்கொற்றநலத்தைத்தெரியாதோ.

கொடுத்தேனன்றேவீடணனுக்குக்குலமாள
முடித்தோர்செல்வம்யான்முடியாதேமுடிகின்றேன்
படித்தோனென்றேபொய்ம்மைகுடிக்குப்பழிபெற்றே
ஒடித்தேனன்றேயென்புகழ்நானேயுணர்வற்றேன்.

அப்பா இலக்ஷ்மணா! என்பொருட்டு என்பிதாவாகிய தசரதமகாராஜாிறந்தார். அப்போதே நானும் இறவாமலிருந்தேன். உலகமெல்லாவற்றையும் பரதனுக்குக் கொடுத்துவிட்டேன். இனிக்கொள்ளவேண்டியதையுந் தவிர்ந்துபோனேன். யான் தனிமையாயிருக்கமாட்டேன். நீ பிழைத்திருக்கின்றாயேயென்றிருந்தேன். இப்போது எனக்குத் துணையாக வார்த்தைசொல்வார் ஒருவருமில்லை. தம்பி லட்சுமணா! இதோ நானும் உன்னோடுவந்துவிட்டேன் வந்துவிட்டேன் இனிநான் உயிருடன்வாழமாட்டேன். எனக்குத்தாயும்நீயே; தகப்பனும் நீயே; நான்செய்யும் தவமும்நீயே; என் பிள்ளையும்நீயே; எனக்குத் தம்பியும் நீயே; என் ஐஸ்வரியமும் நீயே, அப்படியாயிருந்த நீ என்னை நீக்கிவிட்டுப் போய்விட்டாயே; புகழையும் நினைத்தாயில்லையே; நீ மாத்திரமோ என்னைவிட்டு நீங்குகின்றவன்? உன்னைவிட்டு நீங்கி நிற்க உன்னைக்காட்டிலும் என் நெஞ்சு வலிமையுள்ளதோ? அப்பா தம்பி! இரத்தமூறுகின்ற புண்ணுடைய உன்னிடத்தில் உயிரைக்காணேன். இவ்வளவு சகிப்புடனே உயிரைப்பொறுத்துக்கொண்டு அழுகின்றேனாதலால், நான் இன்னும் பிழைத்தாலும் பிழைத்திருப்

பேன். ஆ! ஆ! இந்தக்கெடுவேன். இருபாதியாய்ப்பிளப்புருதநெஞ்சையுடையவனுக இருக்கின்றேனல்லவா? அப்பா புருஷசிம்ஹமே! ஓ இந்தப்பதினுலுவருஷமாகவிசாலித்திருக்கின்ற காட்டில் எனக்குண்ணத்தக்க கந்தமூல பலாதிகளைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு,ஒன்றுமுண்ணுமல்சுவாமிகாரியாநுகூல விரதநிஷ்டாபரனுயிருப்பவனே! எப்படிப்பட்டகாலத்திலும் வெயிலென்று லக்ஷியம்வையாமலிருந்த நீ இப்போது மனந்தளர்ந்து தேகங்களைத்து நித்திரைசெய்கின்ருயே, இன்றைக்கிந்த நித்திரையைவிட்டெழுந்திருக்கமாட்டாயோ? நிஸ்ஸந்தேகமானமனதும் உயிரும்ஒன்ருமென்கிற சாஸ்திரங்கள் என்னிடத்தில் விருத்தியாகாத காலத்தில், பாதகனுகிய என்னிடத்திலும் அன்புண்டாகுமோ? வழுவிலா வடிமைசெய்வேனுனென்ற பாரதந்திரஜ்ஞானத்திற் கொஞ்சமும் பிசகாத உன்னையிழந்தும் உயிருடனே திரிகின்றேனே; இப்போது சாஸ்திர நிச்சயமான உயிரோ உனக்குறவாயிருக்கின்றது? அல்லது நானே உனக்கு உறவாயிருக்கிறேன்? தம்பி இலட்சுமணு! ஜனகமகாராஜாவின் யாகத்திற்குப்போய் உருத்திரனுடையவில்லையும் ஒடித்துச் சீதையென்கிற விஷமானது நமக்கு நல்வாழ்வை யுண்டாக்குமென்று முன்னே நினைத்தேன். பிறகு காட்டிற்கு என்பின்னுல்வரச்செய்தேன். இப்போதந்த விஷத்தால் என் பந்துவர்க்கங்களுடனே சுடப்பண்ணினேன். அது என்னைவிட்டு நீங்கினபிறகாவதுபோகட்டுமென்று சும்மாவிருந்தேனு? இவ்வளவு பொல்லாங்கையுஞ் சம்பாதித்துக்கொண்டேன்.

அப்பா என்னருமைத் துணைவனே! பூமியின்மேல்வைத்த ஆசையினுலே என் மாதா முதலானவர்களுக்கும் புண்மேல் தீயை வைத்ததுபோன்ற துன்பத்தையுண்டாக்கினேன். பெண்மேல்வைத்த ஆசையினுலே இந்தப்பெரியலாபங்களையும் பெற்றுக்கொண்டேன். என்புகழையாவரும்மதிக்கும்படியாய்ச் செய்துவிட்டேனல்லவா? நானென்ன சாமானியனே? நீயோமாண்டு போனுய். இனியானே ஒருபோதும் உயிருடனே வாழமாட்டேன். ஐயோ! பரதனும் இந்தப்பூமியை ஆளாமற்போனுனே அவனையாசிரயித் திருக்கின்றபேர்களெல்லாம் இந்தத் துன்பத்தைக் கேட்டு மாண்டுபோவார்கள். நான்தர்மத்துக்குப்பயந்து தாழ்ந்திருந்ததற்கு இவ்வளவு உண்டாகவேண்டாமா? ஓ தர்மமும் தாயும் தந்தையும் பந்துக்களும் மற்ற ஐஸ்வரிய சுகசந்தோஷாதிகளும் உனக்கு நானேயென்று கருதிக்கொண்டு, அவைகளை வாசனையோடு மறந்துவிட்டவனே! ஓ சத்தியத்திற் கொஞ்சமேனும் பிறழாதவனே! ஓ எனக்குத் தம்பியாகப்பிறந்து என்னையே பின்தொடர்ந்து ஒருநிமிடமும் என்னைப்பிரியச் சஹியாதவனே! இப்படிப்பட்ட நீ இறந்துபோக உன்னைப்பார்த்தும் என்பிராணனே டிருக்கின்றேனே ஆ! ஆ! நானென்ன இலேசானவனு! அப்பா இலக்ஷ்மணு! நடுநிலைமையுள்ள ஒப்பற்ற ஸ்திரீயை இந்தராக்ஷசன் சிறையிட்டுத் தடுக்கவும், பெரியோர்களுடைய நீதிவாக்கியங்களும் தர்மதேவதையும் அவனுக்கு வசப்பட்டுப்போகுமானுல் இந்தமூன்றுலோகங்களும்ஒருமிக்கஅழியவேண்டும். அப்படியழியாவிட்டால் என் கோதண்டத்தின் வீரப்பிரதாபம் வெளிப்படாமற் போய்விடுமோ? இந்தச் சமுத்திரமாகிய அகழ்பள்ளத்திற்கும், விராதனுக்கும், காற்றைப்போலோடின காகாசுரனுடைய கண்மணிக்கும், கரனுக்கும், பாதாளதுவாரத்தை வேராலடர்த்திய ஏழுமரத்திற்கும், வாலிக்குமாத்திரமா என்வில் வல்லமை சென்றது? ஐயோ! இங்குநான் அப்போதேயிருந்தேனுனுல் இந்திரஜித்துமுதலானபெருந்தேர்வீரர்களையெல்லாம்பிழைக்கவிடுவேனு? நீ கொல்லுகிறேனென்று சொல்லக்கேட்டபடியினுலே, நீயேகொல்லக்கடவாயென்றுமனதிடங்கொண்டேன். அப்பா என்பிராணுதாரமருந்தே! நான் உன்னேடு பொய்யாகப்பிறந்தேனேயன்றி, மெய்யாகப் பிறந்ததாய் உடம்படவுமாட்டேன். நான் உடற்பாரத்துக்கும் தகுந்தவனல்ல. என்னப்பனே இலக்ஷ்மணு! நம்முடையதாய்மார்களும், பந்துக்களும், அயோத்தியாநகரமும், நம்மை ஆஸ்ரயித்திருந்த பிராமணர்களும், நம்மை என்னமானுர்களோவென்று துக்கமுற்று அழிந்துபோவார்கள். அப்படிபோகவொட்டாமல் அவர்களைப்போய் காணவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். நாம்போய்அவ்வயோத்தியாநாட்டை ஆளலாம். என்னைப்

பொன்முடி சூட்டப் புறப்பட்டு வரக்கடவாய். அப்பா என்கண்மணியே! உன்னை நாகபாசஞ் சூழ்ந்து கட்டினபோதும், சத்துருக்களாலே நாசமுற்றபோதும், நான் உன்னுடனேகூட நில்லாமல் அப்புறம் போய்விட்டேனே. அந்தப் பகையாளிகளைப்போலவே நானும் செய்வனவற்றைச் செய்து நிலைத்து நிற்கின்றேனே; இந்த தேசத்திலுள்ளவர்களெல்லாம் என்வெற்றிப் பிரதாபத்தை ஆலோசிக்க மாட்டார்களா? விபீஷணாழ்வானுக்கு லங்காபட்டணத்தையாளும்படியாக முடிசூட்டி அங்குள்ள வாழ்வெல்லாம் அவனடையும்படியாக அன்று வரங்கொடுத்தேனே? அந்த வரத்தின்படி முடியாமல் இதோ நானே முடிந்து போகப்போகிறேன். நான் பொய்யையல்லவோ சொன்னேன்? ஆ! ஆ! வாக்குப்பொய்யாத சூரியமரபிற்கும் ஒரு பழியைச் சம்பாதித்துக்கொண்டேன் அல்லவா? உணர்வில்லாத நான் என்புகழை நானே கெடுத்துக்கொண்டேன். என்று இவ்விதமாகச்சொல்லிக்கொண்டு ஏக்கமுற்றழுது பெருமூச்சுவிட்டு, நடுவிற்போய் அறிவுடனேஇந்திரியங்களெல்லாஞ்சிறைபடும்படி இறந்துவிடுவேனென்று சொல்லித் தம்பியை ஆசையுடனேகட்டித் தழுவிக்கொண்டு, ஒன்றும் ஆலோசியாமல் தன்னைமறந்து மூர்ச்சையாய் விட்டார். இப்படிமானுஷியசேஷ்டிதராகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் மூர்ச்சையடைந்ததைத் தேவர்கள் பார்த்து, தங்கள் கண்களில் அறைந்துகொண்டழுது அதிக துன்பமுற்று, இனி எவ்வாறு முடியப்போகிறதோவென்று குலைகுலைந்து, ஓ ஒருவராலும் நிச்சயித்தறிகிறதற்கெட்டாத பெரியோனே! எங்கள்பொருட்டல்லவோ இப்படி வருத்தப்படுகிறீர். உமக்குந் துன்பமுண்டோ? என்று அதிக பரிவுடனே சொல்லத்தொடங்கினர்கள்.

கவி.

உன்னையுள்ளபடியறியே
  மூலகையுள்ளதிறமுள்ளேம்
பின்னையறியேமுன்னறியே
  மிடையுமறியேம்பிறழாமல்
நின்னைவணங்கிநீவகுத்த
  நெறியினிற்குமதுவல்லால்
என்னையடியேஞ்செயற்பால
  வின்பதுன்பமில்லோனே.

அரக்கர்குலத்தைவேரறுத்தெம்
  மல்லனீக்கியருளாயென்
றிரக்கவெம்மேற்கருணையினு
  லியையாவுருவமிஃதெய்திப்
புரக்குமன்னர்குடிப்பிறந்து
  போந்தாயறத்தைப்பொறைதீர்ப்பான்
கரக்கநின்றேநெடுமாய
  மெமக்குங்காட்டக்கடவாயோ.

ஈன்றெம்மிடுக்கண்டுடைத்தளிப்பா
  னிரங்கியரசிற்பிறந்தாய்
மூன்றுமுலகந்துயர்தீர்த்தி
  யென்னுமாசைமுயல்கின்றேம்
ஏன்றுமறந்தேமவனல்லன்
  மனிசனென்றேயிதுமாயம்
போன்றதில்லையாளுடையாய்
  பொய்யும்புகலப்புக்காயோ.

அண்டம்பலவுமனைத்துயிரு
  மகத்தும்புறத்துமுளவாக்கி
உண்டுமுமிழ்ந்துமளந்திடந்து
  முள்ளும்புறத்துமுளையாகிக்
கொண்டுசிலம்பிதன்வாயிற்
  கூர்நூலியையக்கூடியற்றிப்
பண்டுமின்றுமமைக்கின்ற
  படியையொருவாய்பரமேட்டி.

துன்பம்விளையாட்டிதுவேயு
  முன்னைத்துன்பந்தொடர்பின்மை
இன்பவிளையாட்டாமெனினு
  மறியாதேமுக்கிடுற்றால்
அன்புவிளையுமருள்விளையு
  மறிவுவிளையுமவையெல்லாம்
முன்புபின்புநடுவில்லாய்
  முடித்தாலன்றிமுடியாவே.

வருவாய்போலவாராதாய்
  வந்தாயென்றுமனங்களிப்ப
வெருவாதிருந்தேநீயிடையே
  துன்பம்விளைக்கமெலிகின்றேம்
கருவாயளிக்குங்களைகண்ணே
  நீயேயிதனைக்களையாயேல்
திருவாழ்மார்பநின்மாயை
  யெம்மாற்றீர்க்கத்தீருமோ.

அம்பரீடற்கருளியது
  மயனார்மகனார்க்களித்ததுவும்
எம்பிரானேயெமக்கின்று
  பயந்தாயென்றேயேமுறுவேம்
வெம்புதுயரநீயுழக்க
  வெளிகாணுதுமெலிகின்றேம்
தம்பிதுணைவநீயிதனைத்
  தவிர்த்தெம்முணர்வைத்தாராயோ.

ஓ இன்பமும் துன்பமுமில்லாத சுவாமி! ஸ்ரீராமபிரானே! உம்முடைய யதார்த்த ஸ்வரூபலக்ஷணங்களை நாங்களின்னபடியென்றறியமாட்டோம், இந்தலோகஸ்வபாவத்தையும் இன்னவாறு யிருக்கிறது என்று அறியமாட்டோம். உமக்கந்தம் இதுவென்றுமறியோம். உமக்கு முதல் இதுவென்றுமறியோம். உமக்கு நடுவுமின்ன நிலைமையென்றறியோம். இவையாதும் தோன்றுமல் உம்மைவணங்கி நீர் நியமித்த வழியில் நிற்பதே யல்லாமல், அடியேங்கள் தேவர் விஷயத்திற் செய்யத்தக்கவைகளும் உண்டோ? இராக்ஷசவம்சத்தைக் களையறுத்து எங்களைத் தேவரீர் திருவடிகளுக்கு அடிமையாக்கிக்கொள்ள வேண்டுமென்று நாங்கள் யாசிக்க, எங்கள்மீது கருணைகொண்டு தேவர்பெருமைக்குப் போதாத இந்த மனிதத் திருமேனியைத் திருவுளங்கொண்டு உலோக ரக்ஷணார்த்தஞ் செய்கின்ற ராஜவமிசத்தில் திருவவதரித்து வந்தது தர்மத்தைக் குற்றமற நிலைநிறுத்தவல்லவோ? அதை யொளித்துவிட்டு உம்முடைய நெடுமாயத்தை அடியேங்களுக்குக் காட்டலாகுமோ? ஓ தயாளுவே! எங்களையெல்லாஞ் சிருஷ்டித்து எங்கள் துன்பங்களையெல்லாம் நீக்கி ரக்ஷிக்கும்படி இரக்கமுற்று இராஜக்கிருஹத்தி லவதரித்தபடியால், சுவர்க்க மத்திய பாதாளமென்கிற மூன்று லோகத்தார்களுடைய துன்பங்களையும் நீக்குவீரென்னும் ஆசையுற்றிருக்கின்றோம். உம்மைத்தெரிந்தும் பூர்வத்தில் மகமேரு சிகரத்தில் வரத்தைத் தயைசெய்த அந்தச் சாட்குணிய பரப்பிரம்மமிவரல்ல. இவன் மனிதன் என்றுமறந்து நினைக்கும்படிசெய்கின்ற இந்தமாயத்தைப் போன்றது ஒன்றுமில்லை, இப்படிப்பட்ட பொய்சொல்லவும் எழுந்தருளினீரோ?ஓபரமேட்டி! நீர் பல்லாயிரங்கோடி அண்டங்களையும்-அவைகளுக்குள் வசிக்கின்ற எல்லா ஜீவகோடிகளையும்-உள்ளும் புறத்தும் உண்டாக்கி, அவைகளை யெல்லாம் உண்டும் - உமிழ்ந்தும் அளந்தும் பிளந்தும் அவைகளுக்குள்ளும்புறத்திலும் நிறைந்தவராயிருந்துகொண்டு, சிலம்பியானதுதன் வாயிலுண்டாகு நூலினாலாகும்படிக் கூடு கட்டினாற்போல முன்னும் பின்னும் சிருஷ்டிக்கின்ற தொழிலை நீங்காதவராயிருக்கின்றீரன்றோ?

ஓ ஆதிமத்தியாந்தரகிதரே! தேவரீரே விளையாட்டாகத் துன்பத்தை அங்கீகரித்த போதிலும், தேவரீரை அந்தத் துன்பந் தொடருமோ? தேவரீர் சந்தோஷ விளையாட்டாக அங்கீகரித்தீரே யாயினும் அஜ்ஞர்களாகிய எங்களுக்கு அந்தத் துன்பம் வரும். அப்போது எங்கள் கர்வமடங்கிப் பக்தியுண்டாகும். அன்னியர்களிடத்தில் தயவுண்டாகும். ஜ்ஞானம்வளரும். அவையெல்லாம் தேவரீரால் நீங்கினால் அல்லாமல் தாமேமுடிவடைய மாட்டாதுகள். ஓ இந்த லோகத்தில் வந்துவிட்டீரென்று எங்களை நினைக்கும்படிச்செய்து பரமபதத்திலெழுந்தருளி யிருக்கின்றவரே! தேவரீர் எங்களுக்கு ரக்ஷகமாக வந்தீரென்றுமனது சந்தோஷிக்கும்படி நீர்ப்பயர்களா யிருந்தோம். அப்படியிருக்க நீர் மத்தியில் துன்பத்தைக்காட்ட எங்கள் மனது நிலையாமல் வருத்தப்படுகின்றோம். ஓ எங்கள் காரணமாயிரக்ஷிக்கின்ற ஆதாரமே! தேவரீரே இப்படிப்பட்ட துக்கத்தை நீக்காவிட்டால் ஓ பெரியபிராட்டியா ரெழுந்தருளியிருக்கின்ற மார்பையுடைய சர்வகாரண ஸ்ரீயப்பதியே! தேவரீரால் பூட்டப்பட்ட மாயையானது அடியேங்களால் நீக்க நீங்கக் கூடியதாகுமோ? ஓ சக்கிரவர்த்தித் திருக்குமாரரே! தூருவாச முனிவரால் அம்பரீஷ ராஜரிஷிக்கு நேரிட்ட துன்பத்தை நீக்கிரக்ஷித்ததும், பிரமதேவபுத்திரராகிய பிரஜாபதிகளுக்கு நேர்ந்த துன்பத்தை நீக்கிரக்ஷித்ததும், ஆகிய இப்படிப்பட்ட ரக்ஷகத்தைப்போல எங்களுக்கின்று அருளிச்செய்தீரென்று சந்தோஷித் திருந்தோம். ஓ எங்கள்பெருமானே! தேவரீரிவ்வளவு கொடுந்துயரத்தில் வருந்துகிறபடியால் எங்களுக்குண்டாகிய துன்பம் ஒழியாமல் வருத்தப்படுகிறோம். ஓ ராமாநுஜருக்குத் துணையா யெழுந்தருளின சுவாமி! தேவரீர் இந்தமாயத்தை நீக்கி எங்களுக்கு அறிவைக்கிருபைசெய்ய மாட்டீரோ! என்றிப்படிப் பலவாறுகச் சொல்லிப் பிரஹம்மேந்திராதி இமையா நாட்டமுடைய தேவர்களெல்லாம் துக்கப்பட்டார்கள்.

அப்போது பூர்வதீர்மானத் திருவுள்ளத்தின்படி துன்பத்தை யடையத்தக்க

மனுஷாவதாரத்திற் கிசைவாக அன்பின் பெருக்கத்தின்பொருட்டுசுவாமியும் மரண மூர்ச்சையாய் விட்டார். அற்பர்களான ராக்ஷசத் தூதர்கள் இராவணனிடத்திற்கு ஓட்டமாயோடி நின்ருர்கள். இராவணன வர்களைப்பார்த்து,ஓ தூதர்களே! நீங்களெ ங்கேவந்தீர்கள்? ஏதேனும் சமாசார முண் டாஞற் சொல்லுங்களென்று கேட்டான். அப்போது ராக்ஷசதூதர்கள் ஐயா பிரதாப லங்கேஸ்வரா! பகைத்துச் செய்கின்ற போர்க்களத்தில் உம்முடைய குமாரனுகிய இந்திரஜித்துவினுடைய பெரும்பாணங் களால் வானரர்களும் வானரவீரர்களும் பூமியில்விழுந்து மடிய, ஸ்ரீராமனுக்குத் தம்பியாக வந்தவனுமிறக்க, அந்தத் துக் கத்தைக்கண்டு அதிக வியசனமடைந்து அந்தஸ்ரீராமனு மடிந்துபோய்விட்டான். உமது பகை இன்றேடு முடிந்துவிட்ட தென்று சொன்னுர்கள்.

பிரமாஸ்திரப்படலம்-முற்றிற்று.

---

## ஜானகி களங்காண்படலம்.

இப்படி துன்மார்க்கசீலனுன ராவண ன் அந்தச் சமாச்சாரத்தைக்கேட்டு, தூதர் கள் பொய்சொல்லமாட்டார்கள் என்கிற நம்பிக்கையால் பொங்கமாய் விளைந்த சந் தோஷசித்தனுகி, அவர்களுக்கு அநேக நிதிகள் ஆசை நீங்கும்படியாகக்கொடுத்து, நமக்கு ஜெயமுண்டாயிற்றென்றுநகரமுழு துக்குந் தெரியும்படியாகவும் யாவருமெண் ணெயிட்டு மூழ்கும்படியாகவும் யானைமேல் முரசறையச் செய்யுங்களென்று நியமித் தான். அந்தப்பிரகாரமாகவே அவர்கள் நடப்பிக்க, மறுபடியுமிராவணன் மருத்த னென்கிற ராக்ஷசனையழைத்து, அடா மரு த்தனே! நீ சீக்கிரமாயோடி ரணக்களத் தில் மடிந்துகிடக்கின்ற ராக்ஷசப்பிரேதங்க ளெல்லாவற்றையும் பொறுக்கி யெடுத்துக் கடலிலெறிந்துவிடு. இந்தக்காரியம் உன் மனதறிந்ததேயல்லாமல் வேருெருவரறி ந்தால் உன்தலையை வெட்டிவிடுவேன். முதலிலென் காரியத்தைச்செய்யக்கடவாய் என்ருக்கியாபிக்கவும், உடனேயவன்போய் இராக்ஷசர்களுடைய உடல்களையெல்லா மெடுத்துக் கடலிலெறிந்துவிட்டான். பிற கவ் விராவணனவன் சில ராக்ஷசஸ்திரீ களை நோக்கி, நீங்கள் சீதையைப் புஷ்பக விமானத்தி லேற்றிக்கொண்டுபோய் மனி தருக்கும்வானரர்களுக்கும் சம்பவித்தசெய் கைகளெல்லாம் காட்டுங்கள். அப்படி தன து சுயக்கண்களாற் பார்த்தாலல்லாமல் தன் மனதிற் சந்தேகம் நீங்கமாட்டாது. விரைவிற் கொண்டுபோங்கள். என்று நிய மிக்கவும் இராக்ஷசஸ்திரீகளெல்லாம் ஆர வாரித்துக்கொண்டு சீதாபிராட்டியாரைப் பெரும்போர்க்களத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அப்போது ஸ்ரீராமமூர்த்தி யின் திருமேனியையே யல்லாமல் வேருெ ருவரையும் பாராத சீதாபிராட்டியார் இர ணக்களத்தைத் தமதுதிருக்கண்களாற்கண் டார். உடனே விஷபானம் பண்ணினவர் களைப்போலத் தேகமும் அறிவும் சுவாச மும் சோர்ந்து, தாமரைப் புஷ்பமானது அக்கினியில் வீழ்ந்தபோது எப்படிப் போய்விடுமோ? அப்படியே துன்பமடை ந்து சகிக்கமாட்டாதவளாயழுது மூர்ச்சித் தாள். ஐயோ! பிராட்டியாரடைந்தபெருந் துக்கமானது லோகத்திலெல்லாவற்றைக் காட்டிலும் அதிகமாகுமல்லவோ? இப் படி சீதாபிராட்டியா ரழுதபோது தேவ லோகத்திலுள்ள மயில்கள்போன்ற ஸ்திரீ களெல்லாம் அழுதார்கள். விருஷபவா ஹனு ரூடரான சாம்பசிவமூர்த்தியின் இடதுபாகத்திலிருக்கின்ற குயில்போலும் மொழியையுடைய பார்வதிதேவியும் அழு தாள். தாமரைபுஷ்ப வாகினியாகிய லக்ஷ் மிதேவியும் அழுதாள். கங்காதேவியும் அழுதாள். சரஸ்வதிதேவியும் அழுதாள். செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடைய விஷ்ணுவின் தங்கையென்னும் துர்க்காதேவியும் அழுதாள். கொஞ்சமு மிரக்கமடையாத இராக்ஷசஸ்திரீகளும் அழுதார்கள். அறிவுமுயிரு நீங்கி மூர்ச்சை யான சீதாபிராட்டியைக் கூட்டமாய்க் காவ லாகவந்த ராக்ஷசஸ்திரீகளெல்லாம் தண் ணீர் தெளித்து, வெகுநேரம்வரை[illegible] சைத்தியோபசாரஞ் செய்து க[illegible]றி மூர்ச்சைத்தெளிவித்துவாரியெடுத்தார்[illegible]. அப்போது சீதாபிராட்டி மூர்ச்சை நீங்கி, மேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீ ராமபிரானை மறுபடியும்பார்த்து, சேற்கண் டையைத் தாமரையாற் கோபங்கொண்டு

மோதி யறைகிறதுபோலத் தனது திருக்கண்களைத் திருக்கரங்களால் அறைந்துகொண்டும், ஸ்தனங்களின்மீது அடித்துக்கொண்டும், வயிற்றைப்பிசைந்துகொண்டும் கிலேசித்தாள். மேலும் அக்கினியில் வீழ்ந்த பூங்கொடியைப்போல உடல்குழைந்து, மனம்புழுங்கிப் பதைத்து, குலைவுற்று நடுங்கி, மீனைப்போல மயங்கிச்சோர்ந்து சுழன்று துள்ளி, அதிக வருத்தமுற் றுயிர் வாடிக் கைகால்களை உதைத்துதறினாள். அந்தப் புஷ்பகவிமானத்தின்மீது திடீரென்றுவிழுந்தாள். கிடுகிடுவென்று புரண்டாள். தேகமெல்லாம் வியர்த்தாள். மெய்மறந்தாள். வெதும்பினாள். மறுபடியு மெழுந்தாள். உட்கார்ந்தாள். தாமரைமலர்போன்ற கைகளை நெரித்துக்கொண்டாள். சிரித்தாள். அழுதாள். ஓகொழுநரே! என்றாள். ஓ அயோத்திநகரத் துள்ளவர்களுடைய கோமானே! என்றாள். ஓ சுவர்க்கமத்திய பாதாளவாசிகளெல்லாம் வணங்குந் திருவடித்தாமரைகளையுடைய ஆண்டவனே! என்றாள். மூர்ச்சையானாள். மீட்டுந்தெளிந்து ஒப்பனைசொல்லிக்கொண்டு பிரலாபிக்கத்தொடங்கினாள்.

### கவி.

மங்கையழலும்வானாட்டு
 மயில்களழுதார்மழவிடையோன்
பங்கினுறையுங்குயிலழுதாள்
 பதுமமலர்மேன்மாதழுதாள்
கங்கையழுதாணுமடந்தை
 யழுதாள்கமலத்தடங்கண்ணன்
தங்கையழுதாளிரங்காத
 வரக்கிமாருந்தளர்ந்தழுதார்.

நினைப்புமுயிர்ப்புநீத்தாளை
 நீராற்றெளித்துநெடும்பொழுதின்
இனத்தினரக்கர்மடவார்க
 ளெடுத்தாருயிர்வந்தேங்கினாள்
கனத்தினிறத்தான் றனைப்பெயர்த்துங்
 கண்டாள்கயலைக்கமலத்தால்
சினத்தினலைப்பாளெனக்கண்ணைச்
 சிதையக்கையான்மோதினாள்.

அடித்தாண்முலைமேல்வயிறலைத்தா
 ளழுதாடொழுதாளனல்வீழ்ந்த
கொடித்தாளென்னமெய்ச்சுருண்டாள்
 கொதித்தாள்பதைத்தாள்குலைவுற்றாள்
துடித்தாண்மின்போலுயிர்கரப்பச்
 சோர்ந்தாள்சுழன்றுதுள்ளினாள்
குடித்தாயெரையுயிரோடுங்
 குழைத்தாளுழைத்தாள்குயிலன்னாள்.

விழுந்தாள்புரண்டாளுடன்முழுதும்
 வியர்த்தாளுயிர்த்தாள்வெதும்பினாள்
எழுந்தாளிருந்தாண்மலர்க்கரத்தை
 நெரித்தாள்சிரித்தாளேங்கினாள்
கொழுந்தாவென்றாளயோத்தியர்தங்
 கோவேயென்றாளெவ்வுலகும்
தொழுந்தாளரசேயோவென்றாள்
 சோர்ந்தாளரற்றத்தொடங்கினாள்.

### வேறு.

உறமேவியகாதலுனக்குடையார்
புறமேதுமிலாரொடுபூண்முலையாள்
மறமேபுரிவார்வசமாயினையோ
அறமேகொடியாயிதுவோவருடான்.

முதியாருணர்வேதமொழிந்தவலால்
கதியேதுமிலார்துயர்காணுதியோ
மதியேன்மதியேனுனைவாய்மையினால்
விதியேகொடியாய்விளையாடுதியோ.

கொடியேனிவைகாணகிலேனுயிர்கோள்
முடியாநமனேமுறையோமுறையோ
விடியாவிருள்வாயெனைவீசினையோ
அடியேனுயிரேயருணாயகனே.

எண்ணுமயலோடுமிருந்ததுநின்
புண்ணுகியமேனிபொருந்திடவோ
மண்ணோருயிரேயிமையோர்வலியே
கண்ணேயமிழ்தேகருணாகரனே.

மேவிக்கனன்முன்மிதிலைத்தலையென்
பாவிக்கைபிடித்ததுபண்ணவநின்
ஆவிக்கொருகோள்வரவோவலர்வாழ்
தேவிக்கமிழ்தேமறையின்றெளிவே.

உய்யாளுயர்கோசலைதன்னுயிரோ
அய்யாவிளையோகுயிர்வாழ்கிலரால்
மெய்யாவினையெண்ணிவிடுத்தகொடுங்
கய்கேசிகருத்திதுவோகளிறே.

தகைவாணகர்நீதவிர்வாயெனவும்
வகையாதுதொடர்ந்தொருமான்முதலாப்
புகையாடியகாடுபுகுந்துடனே
பகையாடியவாபரிவேதுமிலேன்.

இன்றீகலையேலிறவிவ்விடைமான்
அன்றீயெனவும்பரிவோடடியேன்
நின்றீவதுநின்னைநெடுஞ்செருவில்
கொன்றீவதொர்தீமைகுறித்தலினோ.

மேதாவிளையோய்விதியார்விளைவால்
போதாநெறியெம்மொடுபோதுறுநாள்
மூதானவன்முன்னர்மடிந்திடெனும்
மாதாவுரையின்வழிநின்றனையோ.

பூவுந்தளிருந்தொகுபொங்கணைமேல்
கோவுந்துயிலத்தருவாய்கொடியார்
ஏவின்றலைவந்தவிருங்கணையால்
மேவுங்குளிர்மெல்லணைமேவினையோ.

நெய்யார்பெருவேள்விநிரப்பிநெடுஞ்
செய்யார்புனனூடுதிருத்துதியால்
மெய்யாகியவாசகமும்விதியும்
பொய்யானவென்மேனிபொருந்துதலால்.

மழுவாள்வரினும்பிளவாமனனுண்
டழுவேனினியின்றிடராறிடயான்
விழுவேனவன்மேனியின்மீதினெனா
எழுவாளைவிலக்கியயம்பினளால்.

ஐயோ! தருமதேவதையே? என் காதலராகிய ஸ்ரீராமச்சந்திரப்பிரபு உன்னிடத்திலே உறுதியானகாதல்கொண் டிருந்தாரே. வேறோரிடத்தில் சயனிக்கவுமாட்டாரே; இப்படியவரோடு அநந்யராகமாயிருந்த நீ இப்போது பாபகிருத்தியங்களை இயல்பாய் நடத்திக்கொண் டிருக்கின்றவர்களாகிய இராக்ஷசர்கள் வசத்திலோ சேர்ந்துவிட்டாய்! ஆ! ஆ! நீயுங்கொடுமை செய்ய ஏற்பட்டாயே! இதுதானோஉன்னை நான் நம்பியிருந்ததற்கு நீ எனக்குச்செய்த கிருபை? ஐயோ! விதியே! பெரியோர்களுடைய வாக்கியத்தையும் வேத நியமத்தையுமே யல்லாமல் வேறு கதியையுடையவர்களல்லாத எங்களையோ துன்பப்படுத்த வந்தாய்? சத்தியமாயினி உன்னைநான் நம்பமாட்டேன்! நம்பமாட்டேன்! நீ கொடுமையைக்கொண் டிருக்கின்றாய், அப்படிக்கில்லாமல் எங்கள் மனதைச்சோதிக்க விளையாடுகின்றாயோ? ஐயோ! எமதர்மராஜனே! அதிகபாபிஷ்டியான நானிந்தப்பதங்குறையைப்பார்த்துச் சகிக்கமாட்டேன். என்னுயிரைக்கொண்டுபோ. உனக்கு இதுமுறையாகுமா? முறையாகுமா? ஓ அடியேனுடைய பிராணதாரமே! ஓ கிருபா மூர்த்தியே! விடியாதவிருளில் என்னை யுட்படுத்திவிட்டீரோ? அடியேன் மிகுந்த ஆசையுடனே இதுவரையிலு மென்பிராணனைவிடாமல் காத்திருந்தது, இப்போது தேவரீருடைத்தா யிருக்கின்ற புண்ணுன திருமேனியை இரணக்களத்தில் வந்து சேவிக்கும்படியாகத்தானோ? ஓ பூலோகத்தவர்களுடைய பிராணஸ்தானமா யிருக்கின்றவரே! ஓ சுவர்க்கலோக வாசிகளுக்குச் சக்தியாயிருக்கின்றவரே! ஓ அடியேனுடைய நேத்திர ஸ்தானமானவரே! ஓ தேவாமுதத்துக்கொப்பானவரே! ஓகருணாகரமூர்த்தியே! மிதிலாபுரியை யடைந்து அக்கினிசாக்ஷியாகப் பாவியாகிய அடியேனுடைய கையைத் தேவரீர் பற்றினது, தேவரீருடைய பிராணனுக்கிப்படிப்பட்ட பொல்லாங்குவரத்தானோ?ஓதாமரைப்புஷ்பத்தில் வசிக்கின்ற ஜெயலக்ஷ்மிநாயகரே! ஓவேதப்பிரதிபாத்திய வஸ்துவே! தேவரீருடைய மாதாவாகிய கௌசல்யாதேவியானவர் இனி பிழைக்கப்போகிறதில்லை. அதுபோலவே இளையவர்களு முயிர்வாழமாட்டார்கள். உள்ளபடி இப்படிப்பட்ட செய்கைகளை யனுபவிக்க வேண்டுமென்று கொடுமையை யுடையவளாகிய கைகேசியினுடைய எண்ணமிருந்ததோ?

ஓ மதத்தயானைக் கொப்பாகிய சுவாமி! அந்தக் கைகேசி உம்மை நகரானுகையை விட்டுவிடென்ற மாத்திரமே பிரதி உத்தரஞ்சொல்லாமல் மான்கள் முதலான மிருகங்களெல்லாம் பற்றி யெரியும்படியான நாட்டிலேவந்து, உம்மோடெதிர்த்துவந்த கவந்தன்முதலானவர்களைக் கொன்று ஜெயம்பெற்றீரே: இப்படிப்பட்ட உம்மிடத்தில் அடியேனுக்கு எள்ளளவும் அன்பில்லாமற் போய்விட்டதே? ஓ என்பிராணபதமான நாயகரே! காட்டினிடத்தில் வந்த வஞ்சமுள்ள மானைப்பார்த்து, இன்றைய தினம் இந்த மானைப்பிடித்து எனக்குத் தாரும். இது மற்றவர்கள் வளர்க்கிறமானை ஒத்ததன்று. ஆதலால் அபூர்வமாகிய இந்தமானை எனக்குத் தாருமென்று வருத்தத்தோடு தேவரீருடைய அடியாளாகிய நான் பிடிவாதஞ்செய்து நின்றது, இந்த உயுத்தகளத்திலே உம்மைக் கொலையுண்ணச்செய்வதாகிய தீமையைக் குறித்துத் தானோ? ஐயா அதிக புத்திமானுன இளைய பெருமாளே! நீர் ஊழ்வினையாலே நடக்கிறதற்கு யோக்கியமில்லாத காட்டுவழியில் எங்களுடனேவந்த நாளையில்உமதுதாயார் சுமித்திரா தேவியார் உம்மைப் பார்த்து, அப்பா குமாரனே! உன் தமையனுக்கு ஏதேனுமிக்கட்டு நேரிடுமே யானுல் அவனுக்கு முன்னுக உன் பிராணனை விட்டுவிடென்று ஆஜ்ஞாபித்தாளே! மாதுருவாக்கியப்படி அந்தக் கிரமத்தில் நின்று முன்னே மாண்டுபோனீரோ? உம்முடையபிதா

வாகிய இளையபெருமாளுக்கு நித்திராதல பத்தின் பொருட்டுப் புஷ்பங்களும் தளிர் களுங்கொண்டுவந்து கொடுப்பீரே! அப் படிப்பட்ட நீர் சத்துருக்களுடைய கூர் மையான பாணங்களினாலே யுண்டாகிய படுக்கையின்மீது சயனித்துக் கொண்டீ ரோ? ஓ சக்கிரவர்த்தித் திருக்குமாரரே! நெய்சொரிந்து வளர்க்கத்தக்க யாகங்களை அநேகமாகச் செய்து நீண்டவயல்கள்சூழ் ந்து நிறைந்திருக்கின்ற அயோத்தியா நாட்டை ரக்ஷிக்கும்படியான நீர், அடியே னுடைய மேனியைத்தொட்டபடியினாலே வேதமார்க்கமும் ஊழினிலைமையும் பொய் யாய் விட்டதுகள். ஆ! ஆ! என் கற்புடை மைவெகுநேர்த்தி; என்று சீதாபிராட்டி வெகுவாய் துக்கப்பட்டு, கூர்மையான வாளாயுதத்தினாலும் பிளவுண்ண மாட் டாத மனதையுடையவளாக அழுகின்ற நான்! இனியென் துக்கத்தை ஆற்றிக்கொ ள்ளும்படி சுவாமியின் திருமேனியின்மீது விழப்போகிறேனென்று புறப்பட்டாள்.

இப்படிப்பட்ட சீதாபிராட்டியாரைத் திரிசடையானவள்தடுத்து, பக்கத்தில்சூழ் ந்து நிற்கின்ற வக்கிரதந்தங்களையுடையவ ர்களான இராக்ஷசஸ்திரீகள் அயர்ந்திருக் கின்ற சமயம்பார்த்து, சித்திரப்பிரதமை போன்ற சீதாபிராட்டியாரை வாரியெடுத் துக் கட்டிச் சேர்த்துப் பிடித்துக்கொண்டி ருக்கின்றவளைப்போலப் சீதாபிராட்டியாரு டைய திருச்செவியைக் கிட்டி, அம்மா ஜானகிபிராட்டியாரே! இராவணன்முன்பு மோசமாக மாயமானையனுப்பின விதத்தை யும் மாயாஜனகனை யுண்டாக்கினதையும் இந்திரஜித்து மறைந்துபோய் நாகபாசத் தைவிட்டுக் கட்டினதையும் பின்பு கட்ட விழ்ந்துபோனதன்மையையும் நீர்ஆலோ சனைசெய்து நினையாமலும், துன்மார்க்கர் களான இந்த ராக்ஷசர்கள் செய்துவருகி ன்ற பெருமாயங்களை யெல்லாம் தெரியாம லும், வீணிலே பிராணத்தியாகம் பண்ணி க்கொள்ளும்படி நினைக்கலாகுமா? அம்மா அடியேன் தேவரீரிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்ட கனவுகளையும், தேவரீர் கண்ட சகுனங்களையும், உம்முடைய கற் பையும், தண்டாயுதங்களும் வாளாயுதங்க ளும் உடையவர்களா யிருக்கின்ற இராக்ஷ சர்களுடைய பாபகிருத்தியங்களையும், தர்ம ஸ்தாபனரும் தேவ தேவோத்தமருமான ஸ்ரீரகுநந்தனருடைய சௌரிய பிரதாபத் தையும்நீர்மறந்துவிடலாமோ? நம்முடைய சுவாமிக்குஇந்தச்சண்டாளர்கள்கையாலே மரணமும் உண்டோ? சக்கரதரரான இந்த சுவாமியினுடைய திருமேனியில் ஒரு பாணமாவது பட்டுப்புண்ணுண்டாகாதிரு ப்பதைத் தேவரீர்காணவில்லையோ? இளைய பெருமாளுடைய திருமுகமண்டலமானது இன்னமும் பிரளயகால சூரியபிம்பத்தைப் போலப் பிரகாசிக்கின்றபடியால், அவரு டைய பிராணனுக் கீனம்வந்ததென்று திருவுள்ள மயங்கவேண்டாம்.

ஓயாகஜநிதையான சீதாபிராட்டியாரே! ஸ்ரீராமமூர்த்தியானவர் மரணமா யிருப்பா ரேயானால் இந்தப் பதினாலுலோகமுந் தீய் ந்துபோயிருக்கும். அதுவுமல்லாமல் சூரி யனுந்திசைமாறித் தெற்கு வடக்காய் நட பான். தெய்வம் பொய்த்துவிடும். பிரம்மா வோடு அவன் சிருஷ்டித்த உயிர்களெல் லாம் மாண்டுபோய்விடும். இப்போ துரை த்தவைகளெல்லாம்இன்னும் நிலைதப்பாது இருக்கின்றபடியால் ஸ்ரீராம லட்சுமணர் களும்ஜீவவந்தர்களாகவேயிருக்கின்றார்கள் தர்மதேவதையும்இருக்கின்றதம்மா! தேவ ரீர்வரமாகவருளியசிரஞ்சீவிப்பட்டம்வாயு புத்திரராகிய ஆஞ்சநேயருக்கு மரணமில் லையல்லவா? அவருடைய பிராணனுக்கு ஏதேனும் சலன முண்டானால் தேவரீரு டைய கற்பு நிலைக்கு மாறுபாடுண்டாகு மல் லவா? எஃதெவ்வாறாயினும் நன்மையென் பது சிறப்புறுதிருக்குமோ? இப்போதிவர் கள் மூர்ச்சையாகி யிருக்கின்றார்கள். அது பிர்ம்மாஸ்திரத்தின் செய்கையாகும். அது வுமிதோ நீங்கிவிடப்போகின்றது. தேவர் களுடைய எண்ணமும் தவறிப் போகுமா? ஓ சீதாதேவியாரே! தேவர்க ளெல்லாம் தங்கள் சொர்னமய கரகமலங்களைச்சிரசின் மேற் கூப்பிக்கொண்டு திருமூர்த்திகளைக் கண்டா லெப்படிப் பயபக்தி சிரத்தையுட னே நிற்பார்களோ? அப்படியே இளைய பெருமாளையும் சுவாமியையுங்கண்டு தோத் திரஞ் செய்தார்கள். மறந்துவிடவில்லை. அதையடியேன் கண்ணாரக்கண்டேன். நீர் பயப்படவேண்டாம். ஒரு சிறு கிணற்றில் கடல்நீரெல்லாம் அடங்கிவிடுமோ? அது போலிந்த அற்பர்களிடத்தில் இந்தத்

திவ்யபுருஷர்கள் அடங்கிவிடுவார்களோ? அம்மா! இன்னுமொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகின்றேன் கேளும். மங்கிலியமில்லாதவர்களையும், உயிரில்லாதவர்களையும், இந்த தேவவிமானம் பொறுக்கமாட்டாது இந்தத் திருஷ்டாந்தத்தினாலே தேவரீர் துக்கப்படாமலிருக்கவேண்டும். என்று திரிசடை சொன்ன வார்த்தையைக்கேட்ட மாத்திரத்தில் முன் சந்தேஹித்தவரைப் போல அவதாரவியல்பாயிருந்த சீதாபிராட்டியார் கொஞ்சஞ் சோகம் நீங்கி உயிர் கொண்டு திரிசடையைப்பார்த்து, அம்மா விபீஷணாழ்வானுடைய புத்திரியே! நீ இதுவரையிலுஞ் சொன்னவைக ளெல்லாம் ஒன்றுந்தவறாமற் சித்தித்ததை அனுபவமா யறிந்தபடியினாலே, உன்னையே யெனக்கு ஆதாரதெய்வமாகக் கொண்டு இத்தனைக் காலம் பிழைத்திருந்தேன். அப்படியே இன்னும் இன்றைய ராத்திரிவரையிலு மிருக்கின்றேன்.

அம்மா திரிசடையே! நானெப்போது பெருமாளைப் பிரிந்தேனோ? அன்றைக்கே மரணமுண்டாய் விட்டது. என்னுடைய வெட்கமெல்லாமும் நீங்கிவிட்டது. இல்லாளுக்குரிய நன்மைகளையும், ஸ்திரீகளணிந்திருக்கத்தக்க ஆபரணங்களையும், அன்றைக்கே நீக்கிவிட்டேன். ஸ்ரீ கோதண்டபாணியு நீலமேக வண்ணருமான என்னுடைய பிராணநாயகரை மறுபடியும்பார்க்கலாமென்கிற ஆசையானது தடுத்தபடியினாலே, என்னுயிரை இத்தனை நாள் வைத்திருந்தேன். துர்ப்பலமான இந்தத் தேஹத்தை நீக்கிவிடுகிறது எனக்கொரு லக்ஷியமா? என்று தாமரசபுஷ்பத்தை நீக்கி மிதிலையில் வந்தவதரித்தசீதாபிராட்டியார் சொன்னாள். இப்பால் ஸ்ரீராமருடையதிருமேனியை நோக்கிக்கொண் டிருக்கின்ற திருக்கண்களையுடைய ஜானகிபிராட்டியை இராக்ஷசஸ்திரீகளெல்லாம் இரண்டு பக்கத்திலும் நின்று இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு புஷ்பக விமானத்தைச்செலுத்தி, எதார்த்தமான பிராணனை இந்த லோகத்தில் விட்டுவிட்டுப் பலாத்காரமாய் விதியைக் கடந்து பொய்யான உடலை ஆகாச மார்க்கமாகக் கொண்டுபோகின்ற யமதூதர்களைப்போல அசோகவனத்திற்குப் போனார்கள்.

ஜானகிகளங்காண்படலம்-முற்றிற்று.

## மருத்துமலைப்படலம்.

இப்படி சீதாபிராட்டியார் போய்விட்ட பிறகு முன்னம் ஸ்ரீராமமூர்த்தி நியமித்தபடி கந்தமூலபலாதிகளைக் கொண்டுவந்த இலங்காதிபதியான விபீஷணாழ்வான் அந்த ஆகாரங்களைப் பர்னசாலையில் வைத்துப்போட்டுத் தான் ரணக்களத்தில்வந்து சேர்ந்து, இந்தலோகங்களை யெல்லாஞ் சிருஷ்டிக்கும்படியாய்த்தோற்ற பிரம்மாவினுடைய சாபம்பட்டு மாய்ந்தவர்களைப் போல யுத்தஞ்செய்துகொண்டிருந்தவான ரவீரரெல்லாரும் மாண்டுகிடக்கின்றதைக் கண்டு, விஷத்தைப் பானம் பண்ணினவரைப்போலப் பித்துகொண்டு மயங்கி, நடந்தவிதமொன்றும், அறியாமல், கண் சுழன்று மனங்கொதித்து, மெய்யுளைந்து ளைந்து பெருமூச்சுவிட்டு ஆவியுண்டோ இல்லையோ என்னும்படியாக மூர்ச்சையாகி, சூழ்ந்திருக்கின்ற பேய்க் கூட்டங்களும், நாய்களும், நரிகளும் தூரமாயோடி விடும்படியாகச்சமீபித்துவந்து, இளையபெருமாளைக்கட்டித்தழுவினபடியே விழுந்து கிடக்கின்ற ஸ்ரீராமமூர்த்தியை மத்தியிற் கண்டு திடுக்கிட்டார். எலும்பென்பதும் உடலென்பதும் உயிரென்பதும் ஆகிய இவைகளைச் சினேகத்திற் கிசைந்ததாகச் சொல்வதெல்லாம் பின்னிட்டதேயாகும். அப்படிக்கல்லவென்று அதனிலையைமாற்றி முன்னுகை இருந்தவைகளென்றுசொன்னாலும், முழுதுமாராய்ந்து பார்த்தபோது அந்தநட்புக்குக்காரணமான அன்பென்று சொல்லப்பட்டதத்துவத்தினியற்கையைத் தேவர்களு மறிந்தவர்க ளல்லாதவர்களானார்கள். ஏனென்றால் விபீஷணாழ்வானைப் போல அந்தத்தேவர்கள் துன்பமடையவில்லை. அவ்வளவு துக்கமடைந்தவராய் இருந்தாலும், இந்த ஸ்ரீராமலக்ஷ்மணர்களுக்கு அழிவு உண்டாகாதென்றுதெரிந்தகியானவானாயிருக்கின்றபடியினாலே தனது பிராணனை விடவுமில்லை, புலம்பவு

மில்லை. ஆனல் பெருமாளுக்கு இவ்வளவு வருத்தம் வந்ததேயென்று அழுது மிகவும் மனங்கொதித்து, சுவாமியினுடைய தேகத்தில் காயமொன்று மில்லாமையால் மனம் நடுங்காமலும் பயப்படாமலு மிருந்தார். அன்றியும் மிகுந்த பலாஷ்டிகனை இந்திரஜித்து பிரம்மாஸ்திரப்பிரயோகஞ் செய்தான். அதனல் இளையபெருமாளுக்குத் துன்பமுண்டாயது. அந்தத் துன்பத்தைச் சகிக்கமாட்டாமல் பெருமாள் மூர்ச்சையானரென்கிற நுட்பக்கருத்தைத் தெரிந்துகொண்டு, இதற்கென்ன உபாயஞ்செய்து இதை நீக்கலாமென்று ஆலோசித்து, சுவாமியினுடைய திருவுளத்தில் பெருந் துன்பமுண்டா யிருக்கின்றது. அதனல் மூர்ச்சையாயினர். இந்த மூர்ச்சைதெளிந்த பிறகு சுவாமியின் திருவுள்ளத்தை யறிகிறது நம்மால் முடியுமோ? இளையபெருமாளுக்குப் பொல்லாங்குண்டானல்சுவாமி தம்முடைய பிராணனை வைத்திருக்கமாட்டாரே! அந்த மாயாவாழ்வையுடைய திருட்டுப்பயலோ ஜெயம்பெற்றுப் போயிருக்கின்றனே? என்று கண்களில் நின்றும் தாரைதாரையாகக் கண்ணீர்பெருகவிட்டுக் கொண்டு, அந்த நாகபாசம் போனதுபோலவே பிரம்மாஸ்திரமும் இன்றைக்கே நாசமாகப்போகிறது. இளையபெருமாளுக்கும் ஒருதுன்பமுமில்லை. இந்த விசாலமான ரணக்களத்தில் மாண்ட வானரசேனைகளெல்லாம் பிழைத்துக்கொள்ளுவார்கள். அந்த மகாதுஷ்ட நீச்சராக்ஷசனும் ஜெயம்பெறுவானே? என்று மனேதிடங் கொண்டு, சுவாமி மூர்ச்சைதெளிவதற்கு முன்பாக இப்போதே உதவிசெய்யத்தக்க துணையாளர்களைத் தேடிக்கண்டு பிடித்துக் கொண்டு வருகின்றேனென்று ஒரு கொள்ளிக்கட்டையைக்கையிலெடுத்துக்கொண்டு இரத்தக்கடலின் சேற்றில் நடந்து சுற்றிப் போனர். இப்படிபோன விபீஷணழ்வாரானவர் ஓர்பால் வாயைமடித்து இரண்டு கையையும் பிசைந்துகொண்டும் தமது சிவந்த திருக்கண்களில் அக்கினிப்பொறிகளைச் சிதறிக்கொண்டும் மேருமலையைப் போலத் தோள்கள் மேகமண்டலத்தை யளாவும்படியாக ஆயிரகோடி யானைப் பெரும்பிண மெத்தையின்மீது ஆஞ்சநேயரென்கிற வீரசிம்மமானது மிகுந்தகோபத் தோடும் படுத்துக் கிடக்கிறதைக் கண்டு, தமது கண்களில் நீர்சொரியும்படிப் பார்த்து, உயிரிருக்கின்ற தென்பதை ஊகித்தறிந்து, தேகத்திற் பதிந்திருக்கின்ற அம்புகளை ஒவ்வொன்ருகமெல்லமெல்லஉபாயமாய் வாங்கி, மேகஜலங் கொண்டுவந்து அவருடைய முகத்தைக் கழுவிக் குளிரச் செய்தார்.

அப்போது முன்னலே சுவாசம்பிறந்தது. பிறகு ரோமராசிகள் சிலிர்த்துவெயர்த்ததுகள். கண்களைவிழித்தார். தேகத்தை மெல்ல அசைத்தார். வாயில் நீரூறினது. உடனே தூங்கிவிழித்தாற்போலக் கொட்டாவியு முண்டானபோது ஸ்ரீராமநாமத்தை மறவாமல் துதித்தார். அதைக்கண்டு தேவர்களெல்லாம் ஆரவாரித்தார்கள். அப்போது விபீஷணழ்வான் ஆநந்தபாஷ்பம்பொழிந்து மிகுந்த அன்புடனே ஆஞ்சநேயரைக் கட்டித்தழுவினர். அந்த விபீஷணரை வாயுபுத்திரரும் அன்புடனே சேர்த்துத்தழுவி, ஐயா சிரேஷ்டவானே! சுவாமி பாங்காயெழுந்தருளி யிருக்கின்ருரோவென்று வினவினர். அதற்கவர் ஆம்! அப்படியே திடகாத்திரராயிருக்கின்ருரென்று விண்ணப்பஞ்செய்தார். அதைக் கேட்ட மாத்திரமே இந்த மூன்றுலோகங்களையும் தாங்கும்படியான தமது திருக்கைகளைக்கூப்பித் தெண்டனிட்டு நிற்கின்ற ஆஞ்சநேயரை விபீஷணழ்வார் பார்த்துச் சொல்லுகிருர், ஐயா அஞ்சனைச்செல்வரே! சுவாமியானவர் தமதுதிருத்தம்பியார் மீதுவைத்த அன்பினலே மூர்ச்சையாய்க் கிடக்கின்ருர். இனித்தெளிந் தெழுந்திருந்தால் சுவாமிதிருவுள்ள மெப்படி முடியுமோ தெரியாதென்ருர். அக்கால் ஆஞ்சநேயர் ஒன்றுந் தோன்ருதவராய்ச் சற்று நிதானித்து, நல்லது! சாம்பவரெவ்விடத்திலிருக்கின்ருர் கண்டீரோவென்று வினவினர். அதற்கவர் அடியேனுக்கு அவரெங்கே யுண்டென்றுந் தெரியாது. அவரிறந்து போனரோ உயிரோடிருக்கின்ருரோ தெரியாது. நானிப்போதுதான்வருகிறேனென்ருர். அதைக்கேட்ட வாயுபுத்திரர் அவரைப்பார்த்து ஓ வெற்றிபெறத்தக்க ராக்ஷசர்களுக்கெல்லாம் இராஜசிரேஷ்டராயிருக்கின்ற விபீஷணழ்வானே! அந்தச்சாம்பவந்தருக்கு மரணமில்லை. அவரெங்கேயிரு

க்கிருரென்று பார்க்கலாம் வாரும். அந்தச் சாம்பவரைக் காண்போமானால் நம்மை மறுபடியும் வாழச்செய்யத்தக்க யத்தனங் களை நிறைவேற்றுவதில் வல்லவராக்கும். என்றுசொன்னமாத்திரத்தில் விபீஷணுழ் வான் ஐயா அநுமானே! அப்படியானுல் நாம் சீக்கிரமாகப் போகலாம் வாருமென்று கொஞ்சதூரம் அந்தவிருளிற் போனார்கள். சாம்பவரைத் தங்கள் நல்ல விதிவசத்தால் அவ்விடத்திற் கண்டார்கள்.

அதிக வார்த்திகத்தினாலும் பிரம்மாஸ திரம்பட்ட நோவினாலும் தேகத்திலுண் டான காயவருத்தத்தினாலும் மூச்சொடுங்கி ஒன்றுந் தெரியாமல் மயங்கின மனதை யுடையவராயிருந்தும், இந்த ஆஞ்சநேய ரும் விபீஷணுழ்வானும் வருகின்ற சந்தடி யை வச்சிரமுஷ்டியை யுடையவரான அச் சாம்பவர் தம்முடைய செவிகளாற் கேள் விப்பட்டு, இங்குவரப்பட்டபேர் விபீஷ ணுழ்வானே? என்னை அடிமைகொண்ட ஸ்ரீராமமூர்த்தியோ? அநுமானே? அல் லது எளியேன் பொருட்டையோவென்று இரக்கமுற்றுக் கிருபை செய்யும்படியாக வருகின்ற தேவர்களோ? மகாரிஷிகளோ? மற்றயாவரோ அறியேன். பகைவர்கள் நம்மைக் கொன்றுவிட்டுப் போனபடியால் அவர்கள் வரமாட்டார்கள், நம்மை ரக்ஷிக் கத்தக்கவர்களே வருவார்கள். என்று நினை த்துத் தம்முடைய ஆயாசந்தீர்ந்து, தம தருகில்வந்துநின்று மலையில்வீழும்அருவி போலக் கண்ணீர்சோரும்படி அழுதுகொ ண்டிருக்கின்றவர்களை உணர்ந்து, கண்ணை மூடினபடியே ஐயா குணபூஷணர்களாய் வந்து என்னருகில் நின்றவர்களே! நீங் கள் யாரென்றுகேட்டனர். இப்படிகேட்ட சாம்பவருடைய வாக்கியத்தை வினவிய விபீஷணுழ்வாரானவர் பிழைத்தோம் பிழைத்தோமென்றுசந்தோஷிக்கவும் சாம் பவந்தர் அவரை யின்னுனென் றறிந்து, ஐயா விபீஷணுழ்வானே! உம்மோடுகூட நிற்கின்றவர் யாவரென்றுகேட்டனர். அப் போது ஆஞ்சநேயர் ஐயா வெற்றியாளரே உமக்கு மங்கலமுண்டாகக்கடவது. அடி யேன் அநுமான்இதோதண்டனிட்டேன்: என்றுசொல்லக்கேட்ட சாம்பவந்தர் மன மகிழ்ந்து, ஐயா மகானுபாவனுன மாருதி யே! இனி யெல்லாரும் பிழைத்தோம். இனி யாதொரு குறையுமில்லை. என்று மிகு ந்த களிப்புடனே ஓங்கி உற்சாகங்கொண்டு நின்று,ஐயா! இந்திரஜித்து ஏவினதுபிரம் மாஸ்திரமே யானபோதிலும் வேதத்திற் கும் வேதம்போ லெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமமூர்த்தியை ஒன்றுஞ்செய்ய மாட் டாதென்னும்படியான அவருடையவல்ல மையை ஆதியிலேயே தெரிந்திருக்கின் றேன். இப்போது அந்தச் சர்வலோகநா யகரான ஸ்ரீராமமூர்த்தி என்னசெய்கின் ருர்? அதைத்தெரிவியும். என்று சொன் னதைக்கேட்ட அஞ்சனுதேவிபுத்திரர் கை கூப்பி, ஓ எம்பெருமானுகிய சாம்பவரே! சுவாமியானவர் இளையபெருமாளுக்குத் துன்பமுண்டானதென்று மிகுந்த துக்கத் துடன் மூர்ச்சையா யிருக்கின்ருரென்ருர்.

அதைக்கேட்ட சாம்பவர் ஐயா! உள் ளதுதான். இளையபெருமாளுக்குஏதேனும் வருத்தமுண்டாகக் கண்டாரானுல் தாம் சகிப்பாரோ? இருவருடலுமொன்று. இரு வருயிருமொன்று. மூலவஸ்துக்களானசே ஷிசேஷர்களென்கிற இரண்டுபேரும் நர நாராயணரென்கிற ஒருவர்தா னல்லவா? அந்த நிலைமையிருக்கட்டும். ஓ மேருமலை யையொத்த தோள்களையுடைய வாயுபுத்தி ரரே! நீர் க்ஷணப்பொழுதுக் குள்ளாகப் போய்ச் சஞ்சீவியைக் கொண்டுவரவேண் டும். நம்முடைய எழுபதுவெள்ள வானர சேனையும்,ஸ்ரீராமமூர்த்தியும், இளையபெரு மாளும் இந்த மூன்றுலோகத்தவர்களும், தர்ம்மதேவதையும், ஸ்வதப்பிரமாணமான வேதமும், உம்மால் வாழ்வடைந்ததுகள். ஐயா அதிபலாஷ்டியரான ஆஞ்சநேயரே தாமசியாமல் நான் சொன்னபடியே சஞ் சீவியைக் கொண்டுவரப் போகக்கடவீர். அந்தச் சஞ்சீவியானது எங்கேயிருக்கின்ற தென்ருல்? இந்தச்சமுத்திரத்தைத்தாண்டி வடமுகமாய் ஒன்பதினுயிரம் யோசனைதூ ரம் போனீரேயானுல், இமவத்பருவதத் தைச் சேர்வீர். அந்த மலையினுடையவிஸ் தாரம் இரண்டாயிரம் யோசனையுள்ளது. அதைக்கடந்து ஒன்பதினுயிரம் யோசனை தூரம் போவீரேயானுல் ஏமகூடபருவதத் தை யடைவீர். ஓ சிரேஷ்டரே! அந்தப் பருவதத்திற்கப்பால் வடக்கே ஒன்பதினு யிரம்யோசனை தூரம் போனுல் நிஷதகிரி யிருக்கின்றது. அதைத்தாண்டி ஒன்பதினு

யிரம் யோசனை தூரம்போனால் சகல பர்வதங்களுக்கும் பெரியதான மேருகுலாசலமாகிய வடகிரியிருக்கின்றது. அந்த மலையின் விசாலத்தைத் தாண்டிப்போகவேண்டுமானால் முப்பத்திரண்டாயிரம் யோசனை தூரம்போகவேண்டும். ஓ பலமென்பதைத் தோற்கடிக்கத் திரண்ட புஜங்களையுடைய ஆஞ்சநேயரே! மேருவைத்தாண்டி ஒன்பதினாயிரம்யோசனை தூரம்சென்று நெருங்கினால் நீலகிரியைக்காண்பீர். அந்த நீலகிரிபருவதம்இரண்டாயிரம்யோசனை உயரமுள்ளதாக இருக்கின்றது. அதற்கு நாலாயிரயோசனை தூரத்தில் சஞ்சீவிதங்கியிருக்கின்ற கருமலையைக் காண்பீர், அதைக் கண்டமாத்திரமே எங்களுடைய துன்பத்தை முடித்துவிடுவீர். அஃதெப்படியென்றால் அந்த மலையின்மீது இறந்தவர்களைப் பிழைப்பிக்கின்ற அமிர்தசஞ்சீவியென்கிற ஒரு மருந்திருக்கின்றது. தேகம் துண்டு துண்டாய்ப்பிளந்தாலும் பொருந்தச்செய்யும்படியான மருந்தொன் றிருக்கின்றது. ஆயுதங்கள் பதிந்திருந்தால் அதை விலக்குவதான மருந்தொன்றிருக்கின்றது. உருவமழிந்துபோனால் அந்த உருவத்தையே மீட்டுங் கொடுப்பதான ஒரு நல்ல மருந்திருக்கின்றது.

ஆகையால் ஐயா வாயுகுமாரரே! நீர் அவ்விடத்திற்குப்போய் இந்நால்வகையாயுள்ள மருந்தைக் கொண்டுவரவேண்டும். இந்தச் சஞ்சீவிமருந்தை அநேக தேவர்கள் காத்துக்கொண்டிருக்கின்றார்கள். அதுவுமல்லாமல் ஒருவர்க்கு மடங்காததாய் நெய்பூசிய வசிகளையுடையதான ஒரு சக்கரஞ் சுழன்றுகொண் டிருக்கின்றது. ஓ பொய்க்குச் சமீபத்துஞ்செல்லாத அநுமானே! நீர் செய்யவேண்டிய அநுஷ்டானங்களின் பொதுத்தன்மையை முடித்து உம்மைச் சூக்ஷமசரீரியாகச்செய்து போகாவிட்டால், அந்தமருந்துகள் உமது கண்ணுக்கு அகப்படாமல் மறைந்துவிடும். ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். என்று அறிவிலதிகசிரேஷ்டரான சாம்பவரானவர் வேண்டிய அடையாளங்களையும் அநுபோகங்களையுஞ்சொல்லி, அதை யெளிதிற் கொண்டுவரத்தக்க தந்திரமுஞ் சொன்னார். அதைக்கேட்ட ஆஞ்சநேயர் ஐயா புண்ணியசீலரே! அடியேனுக்கு இப்போதே விடைகொடுத்தருளுவீரானால்இதுவரையிலிறந்தவர்களும் பிறந்தவர்களானார்கள். எம்முடைய சுவாமிக்கு யாதொருபொல்லாங்கும் இடையூறும் வாராதபடி நீங்கள் போய்ச்சமீபமாயிருந்து, உபசாரஞ்செய்து ஆறுதல் சொல்லிக்கொண் டிருங்கள். இதோபோய்வருகிறேன். என்றவர்களிடத்தில் அதிகவிசையாய் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு அண்டமுகடுவரையும் ஓங்கி, இரண்டுதோள்களும் இரண்டுதிக்கை யளாவ விஸ்வரூபங்கொண்டு, ஆகாசமுழுதும் வளர்ந்து, வேதம்போல நிறைந்து, கிரகங்களும் நட்சத்திரங்களும் கோத்த மணிமாலைபோல வரிசையாய் மார்பில் தோன்றவும், ஒரு தோளுக்கு மற்றொரு தோள் ஆயிரயோசனை விஸ்தாரமென்று யாவருஞ் சொல்லிக்கொள்ளவும், ஒருபாதத்துடன் மற்றொருபாதத்தைப்பெயர்த்து வைக்கிறதற்கு இலங்காபட்டணமும் போதாமற் போய்விடவும், பெரியகைகளை வீசுகிறதற்கு நீண்டதிக்குகளும்பற்றாமற்போகவும் வளர்ந்தார், அதிகவிசைகொண்டு புறப்பட்ட அநுமானுடையவிஸ்வரூபத்தின் பெருமை இவ்வளவாகும்.

இப்படி வாலைவீசிக் கையை ஓங்கி வாயையுஞ் சிறிது அகலத்திறந்துகொண்டு பெரியகாலை நிலத்திற்பதியும்படி மிதித்து, மார்பைவிசாலித்து விரித்துக்கொண்டு திருக்கழுத்தைக் கொஞ்சம் முன்சுருக்கி, திருமேனியிலுள்ள ரோமங்களும் குடுமியும் நெறித்துநிற்க விசைகொண்டு எழும்பினபோது அந்த லங்காபட்டணமானது சமுத்திரத்தில் முழுகிப்போகின்ற கப்பலைப்போலக் கிறுகிறென்று சுழன்றது. இவருடைய வேகத்தால் குலாசலங்களெல்லாம் பாளம்பாளமாய்ப் பிளந்துவிடும்போலிருந்ததுகள். சமுத்திரமானது நாலுபக்கங்களிலும் கால்கிழிந்து பாய்ந்தது. கிழக்கிலும்மேற்கிலும் மின்னல் மின்னியது. மலைகளுமரங்களும்மேலெழும்பிவீழ்ந்ததுகள். தேவவிமானங்கள் ஆகாசத்திற்போய் இடியைப்போல மோதுண்டு விழுந்ததுகள். சமுத்திரங்குழிந்து மேலேறித் திக்குகளிற் சிதறினதுகள். இந்தப்பிரகாரமாக அநுமான்பாய்ந்தபொழுது பெரிய மலைகளெல்லாம் அவருடைய வேகத்தாற் பெயர்ந்து பின்றொடர்ந்து வடமுகமாய்ச் சாய்ந்து

வீழ்ந்ததுகள். அவர் தேகத்திற் பிறந்த சண்டமாருதக் காற்றினுல் அவருடைய பிதாவாகிய வாயுதேவரும் மனம்தளர்ந்து ஓய்ந்துபோனுரென்று தேவர்களெல்லாம் பேசிக்கொண்டார்கள்.

இப்படி மாருதியானவர் ஆகாசமார்க்கமாய்ப் போகின்ற வேகத்தினுல் கடல்நீர் வற்றிப்போயினது. மேகங்கள் தீய்ந்து போனதுகள். பெருங்காடுகளெல்லாம் வெந்துகரியாய்ப்போய்விட்டதுகள். முன்னே காற்றேடவும், அதன்பின்னே கடலோடவும், காற்றைப்போற் செல்கின்ற ஆஞ்சநேயருடைய திருமேனியானது பின்னே போகவும், இவ்வாறு சகலவுயிர்களும் உள்ளங்குழைந்து போகும்படிப் போகின்ற அவருடைய உருவத்தைப்பார்த்து. எல்லாத்தேவர்களும் இவர் தம்முடைய பலத்தை முன்னே காட்டுகிறபோதே ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட லங்காபட்டணமென்னும் ராக்ஷசர்கள் வசிக்கின்றமேட்டைச் சமுத்திரத்திற் சேர்த்துவிட்டார். இனி நம்முடையதுக்கமே பறியுண்டு போய்விட்டதென்று பேசிக்கொண்டார்கள். இந்தப்பிரகாரமாக ஆஞ்சநேயர் மேகமண்டலத்தைத்தாண்டிச் சூரியர்களும் சந்திரர்களும்நின்ற மண்டலங்களைக் கடந்து நக்ஷத்திரங்கள் வாழ்கின்ற அந்த எல்லையையுந் தாண்டிப்போய், எல்லாச் சாம்பிராச்சியங்களையுமுடைய தேவர்களுக்குப் புகலிடமான சுவர்க்கலோகத்தைத் தாண்டி மூலதாமரைப் புஷ்பத்திற் பிறந்த பிரம்மலோகம் இன்னங்கொஞ்சந்தூரந்தானிருக்கின்றதென்னும்படியாக உயர்ந்த விஸ்வரூபத்துடனே புறப்பட்டுப்போயினுர். இவரைப்பார்த்த சுவர்க்கலோக வாசிகளான தேவர்களிற் சிலர் இவர் வெற்றிபெற்ற கருடபகவானுக்கும்; அதனுல் ஸ்ரீயப்பதிவசிக்கின்ற பரமபதத்திற்குப் போகின்ருரென்ருர்கள். சிலர் பிரம்மதேவர் தம்முடைய லோகத்திற்குப் போகின்ருரென்ருர்கள். சிலர் இவர் மூன்று கண்களையுடைய உருத்திரமூர்த்தி யென்ருர்கள். சிலர் தமக்குத் திருவுள்ளமான திருவுருவத்தைக்கொண்டு இந்தப் பிராகிருதபூமியில் விளையாடுகின்ற ஸ்வதப் பிரமமான நான்கு வேதங்களும் எட்டுதற்கரிய திருவுருவமுள்ள ஸ்ரீயப்பதியே என்ருர்கள். இவருடைய திருமேனியினளவைத் தெரியக்காணலாமென்று இமைகொட்டு முன்பாக நமது கண்ணறிவைச் செலுத்தினுலும் இன்னுங் காணுகிறதற்கு முடிவுபட்ட அளவுடையவராகக் காணப்படவில்லை. இவர் பரமபதத்திற்குப் போகிறவராய் காணப்படுகிருர். என்று அநேக தேவக்கணங்கள் சொல்லிக்கொண்டார்கள். சில தேவர்கள் இது உருவமென்ருர்கள். சில தேவர்கள் இது உருவல்ல ஒளியென்ருர்கள். சில தேவர்கள் இந்தப் பிரகாசமுள்ளமேனி அருவென்ருர்கள். சிலதேவர்கள்இஃதெல்லாவண்டகளுக்கும் மேலாக இருந்துகொண்டு இந்த வண்டங்களெல்லாம் உண்டாகிறதற்குக் காரணமாயிருக்கின்ற வஸ்துவென்ருர்கள். சில தேவர்கள் இதுகாற்றுக் கதிதேவதை யென்ருர்கள்.

இந்தப்பிரகாரமாக எல்லாக்காரியங்களையும் நிச்சயித்தறியவல்ல புத்திமான்கள் இந்த ஆஞ்சநேயருடைய விஸ்வரூபப் பிரகாரத்தை இன்னபடியென்று தெரிந்துகொள்ள சக்தியற்றவர்களாய் விட்டார்கள் தாமரைமலர்மேல் வாசமாயிருக்கின்ற பிரம்மாவினுடைய அண்டம்வரையி லுயர்ந்து மத்தியவாகாசமெல்லாம் தம்முடைய உருவத்துக்குள்ளடங்கி மறைந்துபோகும்படியாகவும் மேருமலைபோன்ற தோள்களின் வீச்சினுல் அண்டபித்திகை தேயும்படியாகவும், விசைகொண்டெழும்பின அந்தவாயுகுமாரருடைய திருமேனியிற் பிறந்த கோஷத்தைக்கேட்டு, திக்குப்பாலகர்களுடைய தலைகளெல்லாம் நடுநடுங்கினதுகள். அண்டகோளமெல்லாங் கிழிந்துபோகும் போலிருந்தது. மகாபலிச்சக்கிரவர்த்தியானவர் வாமனமூர்த்திக்கு மூன்றடிமண்கொடுத்தபோது அவர்தமது சிறியபாதத்தால் உலோகங்களை யளக்கும்படி நீட்டினநாளில் கற்பகப்பூமாலையையணிந்த தேவர்களோடு மகாரிஷிகள் முதலான பெரியோர்கள் யாவரும் தங்களுக்குரிய வேதங்களைப் பாராயணம்பண்ணிக் கோஷித்ததுபோல, ஆஞ்சநேயர் விஸ்வரூபங்கொண்ட அந்த நாளிலும் லோகமெல்லாம் வேதகோஷமாக இருந்தது. தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் அவரவர்களுடைய தேவிமார்களும் சுவர்க்கமத்திய பாதாளத்திலுள்ளவர்களான மற்றவர்களும் ஆநந்

த்துடனே ஒருமிக்கச்சேர்ந்து மொய்த்துக்கொண்டு ஆஞ்சநேயர்மீது தூவின ரத்தினங்களும் சந்தனங்களும் சுகந்தப் பொடிகளும் பலவிதப் புஷ்பங்களும் மேலேபடிந்திருக்க, புஷ்பங்களால் நிறைந்த தேவகற்பக விருக்ஷத்தைப்போல அஞ்சனை திருக்குமாரர் ஆகாயமார்க்கமாய்த் தாவிப்போயினர்.

இந்தப்பிரகாரமாகச் சென்ற வாயுகுமாரர் இமவத்பருவதத்தைச்சேர்ந்தார். அங்கிருக்கின்ற இமையாநாட்ட முடையவர்களான தேவர்களும், யாகாதிகளையுடைய முனிவர்களும், இன்னுந் தர்ம்மமார்க்கத்தைச்சேர்ந்தவர்களெல்லாம், ஐயா ஸ்ரீ ராமதூதரே! உம்முடையகாரியம் அனுகூலமாகக் கடவதென்று வாழ்த்தினர்கள். அதைத்தாண்டி அப்பால் உமாநாயகர் வசிக்கின்ற கயிலாசகிரியைக்கண்டு சந்தோஷமுற்று, ஈசானதிக்கில் தோன்றுகின்ற அந்த மழுவாளி நிறைந்து வசிக்கின்ற அந்த மலையைக்கண்டு, தாமரைமலர்போன்ற தமது திருக்கரங்களைக்கூப்பித் தண்டனிட்டுப்போகின்றார். அப்படி போகின்ற ராமதூதரைக் கயிலாசபதியான பரமசிவனவர் மிகுந்த அன்புடனே கடாக்ஷித்துப் பார்வதிதேவிக்குக்காட்டி, இவர்தான் எனது அமிசபூதரான மாருதியென்னும் நாமதேயர் என்றார். அதைக்கேட்ட பார்வதி அப்படியா! இவரென்னகாரணமாயிங்குவந்தார்? என்று உமையவள்கேட்க மகாதேவர் ஓ பெண்ணே! ஸ்ரீராமமூர்த்தியின் தூதரிவர், இப்போது சஞ்சீவிமருந்தின் பொருட்டுவந்தார். வஞ்சகர்களான லங்காவாசிகள் செய்யும் பொல்லாங்கை நீக்கப்போகிறது சத்தியம். நாளைக்கி மகாயுத்தம் நடக்கப்போகிறது. ஆகையால் நாம்போய்ப் பார்க்கலாமென்றார். பின்பு அவ்வாஞ்சநேயர் ஆயிரயோசனை தூரம் கடந்துபோய் ஹேமகூடத்தைச்சேர்ந்து, அவ்விடத்தில் முடிவில்லாத சந்தோஷங்களை அநுபவித்துக்கொண்டிருக்கின்ற தேவசமூகங்களைக் கண்டு, அப்பாலங்கிருந்து சக்கரத்தைப்போலப் பாய்ந்து நிஷதபருவதத்தினுச்சியிற்குதித்தார். அளவில்லாத சாஸ்திரங்களைப்பயின்ற அறிவாளர்களுடைய பார்வைக்கும் கிருபாவான்களான தேவர்களுடையமனதிற்குமெட்டப்படாத வேகமுடையவரான ஆஞ்சநேயர் அந்த நிஷதபர்வதத்தைக்கடந்து, இந்தப்பூலோகத்திற்கும் அஷ்டதிக்குகளின் நிலைமைக்கும் பிரம்மலோகத்திற்கும் அளவைக்கருவியாக விருக்கின்ற மேருகிரியின்மீதுபாய்ந்தார். நிமைகொட்டாத கண்களையுடையவர்களான தேவர்களாலும் இதனிலைமை இப்படிப்பட்டதென் றறியக்கூடாத அந்த வடமலைக்கு மேலே போன வாயுகுமாரர், நாவலந்தீவென்று சமுத்திரத்தாற்சூழ்ந்த பூவளாகத்தில் மூன்றுலோகத்தவர்களும் கொண்டாடுகிறதற்குக் காரணமான தெய்வத்தன்மையுள்ள சம்புநாவல்விருக்ஷத்தையும் தமது திருக்கண்களாற் கண்டார். அந்த மலையினுச்சியில் இவ்வுலகங்களையெல்லாம் படைத்த சிருஷ்டி கர்த்தாவினுடைய திவ்வியநகரத்தையும் அந்த நகரத்தின்மத்தியில் சகஸ்திரவிதழ்களோடு கூடிய மூலசொர்னதாமரைப் புஷ்பத்தின் மீது நான்குதிருமுகங்களுடனே கூடிய அப்பிரம்மதேவர் எழுந்தருளி யிருப்பதையுங்கண்டு இரண்டுகையுங்கூப்பித் தெண்டனிட்டு, அந்தத் தாமரைப் புஷ்பத்திற்கு ஈசான்யதிசையில் ஆயிரம்சூரியர்கள் வீசுகின்ற கிரணங்களைப் பரப்பினதுபோலச் சடைகளைப்பரப்பிக்கொண்டு ஐந்துசூரியர்கள்போல ஐந்து திருமுகங்களைக்காட்டி மூன்றுலோகத்தவர்களு மிறைத்த புஷ்பங்களுடனே அர்த்தநாரிபாகனாய் எட்டுத் திருத்தோள்களோடு எழுந்தருளியிருக்கின்ற உருத்திரமூர்த்தியைக்கண்டு வணங்கி, பிறகு தில்லைக்காந்தார விருக்ஷத்தினடியில் அந்தந்தவிடங்களில் தேவர்களெல்லாம் வணங்கும் படியாகவும் மஹாரிஷிகளெல்லாம் பெருங்கோஷம் நிறையும்படிபிரம்ம சூத்திரங்களாற் பல்லாண்டுகூறவும் பூமிப்பிராட்டியாரோடும் பெரியபிராட்டியாரோடும் திருத்துழாய் மலர்ந்த கிரீடதாரியாயெழுந்தருளியிருக்கின்ற சகலகாரண மூலவஸ்துவாய் சர்வலோக பாலகராய் வீற்றிருக்கின்ற ஸ்ரீயப்பதியைக்கண்டு சேவித்தார்.

அப்பால் சந்திரனுக்கொப்பாகிய வெற்றிக்குடையானது நிழலிடும்படியாகவும் அரம்பைமுதலிய சுந்தரவதிகள் அழகிய கையிற்கொண்ட சாமரைகளால் தென்றற் காற்றை வீசிக்கொண்டிருக்கவும் சுவர்க்க

லோகவாசிகளான தேவர்களெல்லாம்வந் தடிவணங்கி நிற்கவும் தேவதுந்துமிமுழங் கவும் இவ்வளவுவைபவத்துடனே தேவே ந்திரனெழுந்தருளியிருக்கிற நிலைமையைக் கண்டு அவனையுங் கைகூப்பிக் கும்பிட்டு விட்டு, பின்னர் புஷ்பித்துக்கொண்டிருக் கின்ற கற்பகவிருக்ஷத்துக் கொப்பாய்ச் சொர்னபீடங்கள் பிரகாசிக்கும்படியாகத் தேவர்களுக் கிருப்பிடமான மேருவின் சிக ரப் பிரதேசத்தில் மூன்றுலோகத்தாருஞ் சூழும்படியாக அஷ்டதிக்குகளையும் ரக்ஷித் துக்கொண்டிருக்கின்ற திக்குப்பாலகர் அந் தந்தத்திசையில் நிற்கின்ற நிலைமையை யுங்கண்டு வணங்கி அந்தமலையைவிட்டு அ ப்பாற்போயினர். இப்பால் அவ்வநுமான் உத்தரகுருக்ஷேத்திரத்தை யடைந்து, அவ் விடத்திற் சூரியன் தன்கிரணங்களைப் பரப் பிக்கொண்டு இருளைத்துரத்தி உதயமான செய்கையைப்பார்த்து வருந்தித் தமக்குத் தாமே நினைக்கின்றார். ஆ! ஆ! இப்பொ ழுது விடிந்துவிட்டது. இவ்வளவுதானோ என்வேகம்? பெருமாள் மூர்ச்சைதெளிவத ற்கு முன்பாகப் பாதிராத்திரிக்குள்ளாகச் சஞ்சீவிமருந்தைக் கொண்டுவந்து மரண மடைந்தவர்கள் துன்பத்தை யெல்லாம் நீக்குகிறேனென்று சபதம்பண்ணிவந்தே னே! இப்போது சூரியோதய மாய்விட்ட தே! நான் நிச்சயித்தபடி செய்யமாட்டா மற் போனேனே! இனிநான் செய்யப்போ கிறதென்னயிருக்கின்றது? என்று சமான ரஹிதரான ஸ்ரீராமதூதர் அதிக துக்க முற்று, பின்னர் ஆலோசித்துப் பார்க்கும் போது சூரியன் தமது இடப்பாகத்தில் உதயமானதைக்கண்டு சூரியோதய மேற்கு திக்கிலுண்டாவது சம்பவிக்கமாட்டாதே யென்று நிதானித்து, இப்போது விடிய வில்லை. மேருபர்வதத்திற்கு வடபால் சூரி யன் பிரவேசித்தால் மேற்பாரிசத்தில் உத யமாகுமென்று சாஸ்திரஜ்ஞர்கள் சொல் லுவார்களல்லவோ? அப்படியே இந்தவட பாரிசத்திற் சூரியனுதயமானான். தென் பாரிசத்தில் இப்போது அர்த்தஜாமராத் திரி என்று தமது துக்கம் ஆறினார். உட னே ஆண்பெண் இருவராய்த்தோன்றி அழியாத ஆயுளைப்பெற்றுஒருவருக்கொரு வர் உள்ளமும் உயிரும்போல ஒன்றாகி, அளவில்லாத இன்பங்களை அனுபவித் துக்கொண்டு புண்ணியதம்பதிகளாய் வாழ் ந்திருப்பவர்களுடைய சகஸ்திரபத்திரகம லம்போன்ற கமலநாட்டையும் கண்ணி னாற்கண்டார். இப்படி அக்கினிச்சுவாலை போற் பிரகாசிக்கின்ற சடாபாரத்தையு டைய உருத்திரமூர்த்தியும், இலக்ஷுமிதே வியைத் திருமார்பில் தரித்திருக்கின்றவ ரான விஷ்ணுமூர்த்தியும், தம்மை வழிபடு மன்பினரைக் கழிபடாவண்ணம் காத்து ரக்ஷிக்கும்படிக் கெழுந்தருளி வாழ்கின்ற காணியென்றும், வெற்றிமாலையைத்தரித்த கிரீடதாரியாகிய சோழமகாராஜன் வசிக் கின்ற காவிரி நதிசூழ்ந்த நாடென்றும், யாவராலுஞ் சொல்லுகிற சோழதேசத்திற் கொப்பான வளப்பமுள்ள அவ்வுத்தரகுரு நிலத்தைக் கண்ணுக்கழகாகப் பார்த்து அப்பாற்போயினார்.

இப்பால் விசாலமான மேருபாரிசத் தின்மேலேறி நடக்கும்படியான யோக்கிய ரும் இப்பிறப்பிலேயே பிரம்மபட்டம்பெற் றவருமாகிய ஆஞ்சநேயர், எல்லாலோகங் களையும் திருவிக்கிரமாவதாரத்தால் அள விட்ட பெரியபெருமாளுடைய திருமேனி யைப்போலக் கறுத்துத் தோன்றுகின்ற நீலகிரியைக் கண்ணுற்பார்த்தார். இவ்வா றிராத்திரியுங் குறைந்துபோகும்படிக் கறு த்து விளங்குகின்ற அந்த நீலமலையைத் தாண்டிப்போனபிறகு மேருமலைக்குச் சம மான திருத்தோள்களையுடைய அவ்வாஞ்ச நேயர் மகாவிவேக ஞானமுள்ளவரான சாம்பவர் தமக்குபதேசித்த சஞ்சீவி பர்வ தத்தைக் கண்டு தூரமாகநின்று, அம்மலை முழுவதும் சூரியனும் பிரகாசத்திற் குறை வடையத்தக்க அந்த சஞ்சீவிமருந்துகள் எரிந்துகொண்டிருப்பதைக் கண்டு, இது தான் சாம்பவர்சொன்ன அடையாளமெ ன்று குபீரென்று அந்த மலையின்மீது பாய்ந்தார். அப்படி பாய்ந்தமாத்திரத்தில் அந்தமலையானது பாதாளத்தில் மறைந்து விட்டது. அந்தமலையைக் காத்திருக்கின்ற தெய்வங்கள் நடுங்கி அதிக கோபத்துடன் வந்து அநுமானைப்பார்த்து,ஓபலவானே! நீயாவன்? நீ இவ்விடத்திற்குவந்த காரண மென்ன? என்றுகேட்க அந்தத் தேவதை களுக்குத் தாம் வந்தகாரியத்தைத் தெரியச் சொன்னார். அதைக்கேட்ட அந்தத் தேவ தைகள், ஐயா! உமக்கது வேண்டுமானால்

இம்மலையை யதாப்பிரகாரம் செய்யவேண்டிய கிரமப்படிசெய்து, உமக்கு வேண்டிய மருந்தை ஒன்றும்நோகச்செய்யாமல்எங்களிடத்திற்காட்டும். நாங்கள்கொடுக்கிருேம் என்றவரை வாழ்த்திவிட்டுமறைந்துபோய் விட்டதுகள். பிறகு செந்தாமரைக்கண்ணரான சாட்குண்ணிய மூர்த்தியினுடைய கூரிய சக்கராயுதமானது தரிசனையாகி, அதுவும் மறைந்துவிட்டது. அப்போது ஆஞ்சநேயரானவர் சற்று நிதானித்து, இனிநாம் இவர்களைக்காண நம்மால்முடிகிறதாகவில்லை. காலத்தாமசமாகிறதென்று நினைத்து அந்தச் சஞ்சீவிமலையைத் தம்முடைய வஜ்ரமலைக்குச்சமானமாகியதிருத்தோள்களாற் பூமியில்நின்றும் பேர்த்துக் கையிலேந்தி ஆகாசமாக்கமாகப் போக வேண்டுமென்று கருதி, உலகத்துக்கெல்லாம் தாயைப்பார்க்கிலும் மிகுந்த தயையுள்ளவரான அவ்வநுமான் ஆயிரம்யோசனை விசாலமாகப்பருத்து, மேலே ஆயிரம் யோசனைதூரம் உயர்ந்து, பூமியில் ஆயிரம்யோசனை ஆழ்ந்துநிற்கின்ற அந்தச் சஞ்சீவிபர்வதத்தை ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளாக ஒருபந்தைத் தூக்குவது போல அலக்ஷியமாகத்தூக்கினுர்,

இவ்விடத்தில் ஆஞ்சநேயர் இவ்விதமாயிருக்க அவ்விடத்தில் விபீஷணுழ்வானும் சாம்பவரும் அதிவேகமாய் இரணக்களத்தில் மூர்ச்சித்துக் கிடக்கின்ற சுவாமியினிடத்திற்குச் சென்று, தங்கள் கைத்தலங்களால் அவருடைய திருவடித்தாமரைகளைப் பிடித்துக்கொண் டிருக்கின்ருர்கள். அப்போது ஸ்ரீராமபிராஞனவர் அந்நிய ஸ்திரீகளுடையமனதை வேருடனே நீக்கி ஒருநாளுங் காணுதவைகளும் எல்லா ஜீவ கோடிகளும் பெற்றுக்கொள்ளும்படியான கருணையெல்லாந் தாமே கொண்டவைகளும் சமஸ்தவரங்களையுங் கொடுக்கின்றவைகளும் கொடுமையென்பது ரவைலேசமுமில்லாதவைகளும் இரண்டு தாமரைப் புஷ்பங்களையொத்ததர்ம்மமயமாகியதமது திருக்கண்களைத்திறந்து, கரடிக்குத் தலைவரான சாம்பவரும் மிகுந்த புகழையுடையவரான விபீஷணுழ்வானும் அழுதகண்ணர்களாய் தங்களுடைய திருமுடியைத் தாங்கிக்கொண்டு கூப்பின கைகளோடும் ஏக்கமுற்றுத் தமக்குப் பக்கத்திலிருக்கின்றதைக்கண்டு கடாக்ஷித்து, அப்பா விபீஷணு! உன்னை யனுப்பின காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு வருத்தமில்லாமல் வந்தாயோ? என்று வினவிப் பின்பு அதிக கீர்த்திமானுன சாம்பவரைப்பார்த்து,ஐயா சாம்பவந்தரே! பிழைத்துவந்தீரோ? என்றுகேட்டருளிப் பின்னுஞ் சொல்லுகின்ருர்.ஓ பொய்யில்லாதவர்களும் அதிகபுத்திமான்களுமான விபீஷண சாம்பவர்களே! நமக்கு மிப்படிப்பட்ட அழிவுநேரிட்டதே! செய்கையற்று உயிரிழந்த நம்முடைய இளையவன்முதலான யாவர்களும் பிழைக்கவில்லையே! இவர்கள் பிழைக்கும் படியாகச்செய்யும் உபாயமுண்டாயிருந்தாற் சொன்மின்கள், சீதையென்கிற ஒரு பெண்ணுல் மனமறுக்கமடைந்துஅறிவையுங்கூட விழந்த என்னுடைய தப்பிதத்தால் நேரிட்ட ஈனத்துவத்தை நானென்னென்று சொல்லப்போகின்றேன்? இந்த லோகமுள்ள பரியந்தம் பெரும்பழியான ஒருகதையை நிலைநிறுத்தி வைத்துவிட்டேன். ஐயோ!முன்னமென்தம்பிஅண்ணு இதுமாயமான். உண்மையான மானென்று நம்பாதீர். இது நம்மையே பகட்டுமாயின் பேதையரைப்பகட்டுதல்இதற்கருமையோ? என்று சத்தியமாக நல்ல உறுதிகளான வார்த்தைகளைச்சொல்லியுங் கேளாமல்,ஒரு பெண்வார்த்தையைத் தடுக்கமாட்டாமற் போனபடியால் இந்தப்பழி ஆணியாக நின்றுவிட்டது.

ஐயா அன்பர்களே! அஃதிருக்கட்டும் இராவணனைக் கண்களாற்கண்டுஅவனேடு யுத்தஞ்செய்து என் வல்லமையைக்காட்டி அவனுயிரை வாங்காமல் விட்டுவிட்டு, நான் பூர்வத்திற்செய்த பாவவினையால்எல்லாருடைய பிராணன்களையு மிழக்கும்படிப் பண்ணினேன். பிறகுஅவன்குமாரனுன இந்திரஜித்து வந்து யுத்தஞ்செய்தபோது, இலக்ஷ்மணன் தேவதாஸ்திரப்பிரயோகம் பண்ணி அவனைக் கொன்றுவிடுகிறேனென்றுசொன்ன நல்லகாரியத்திற்கும் இசையாமல், எனக்கிவ்வளவுஅழிவுநேரிடுவதற்கிருக்கிற ஊழினுல் தடுத்துவிட்டேன். மேலும் என்னுடையபாவம் என்னைச் செயங்கொண்டபடியால் நானிந்த ரணக்களத்தில் லட்சுமணனேடு நிற்காமல், ஆயுதங்களுக்குப் பூஜை செய்யவேண்டுமென்று

நினைத்துப்போய்விட்டேன். அதனுல் நம்முடைய சேனைகளெல்லாம் அழிந்துபோய்விட்டன. இலட்சுமணனும் இறந்துபோனுன். நானும் ராக்ஷசர்களைச் செயிக்காமற் போய்விட்டேன். ஆதலால், இனி இவ்விடத்திலிருந்து இப்படி பலயீனத்தன்மையைச் சொல்லிக்கொள்ளவேண்டியதில்லை. இந்த ரணக்களத்தில் இறந்துபோன அதிசூரவான்களான என்பிரியவாளர்களையெல்லாம் காணும்படி இனி நான் தேவலோகத்திற்குப்போய்ப் பிறக்கிறதே நல்லது. இல்லாவிட்டாற் காணமாட்டேன். என் தம்பியையும் என் இஷ்டபந்துக்களையும் இழந்தபிறகு துஷ்டர்களான ராக்ஷசர்களையெல்லாம் கொல்ல அஸ்திரப்பிரயோகம் செய்து, இராவணனுடைய உயிரைவாங்கித் தேவர்களுக்கு உதவிசெய்தும் நான் அதனுலடையப்போகின்ற லாபமென்ன? என்தம்பி இறந்த பிறகு மற்றவர்களால் எனக்காகவேண்டிய தென்ன விருக்கின்றது? எனக்குப் பெருங்கீர்த்தி யென்னத்துக்கு? இராஜரீகமென்னத்துக்கு? வீரமென்னத்துக்கு? கிளையாளர்களான பந்துக்களென்னத்துக்கு? தர்மமென்னத்துக்கு? சாஸ்திரக்கேள்வி யென்னத்துக்கு? உண்டாகிற லாபமென்னத்துக்கு? வேதவிதிப்படி நடக்கிறதென்னத்துக்கு? பிரபுத்துவமென்னத்துக்கு? ஆ! ஆ! என்னுடைய இரக்கத்தையும் பாழாக்கி, இலட்சுமணனையும் இழந்து, இப்போது இராக்ஷதர்களையெல்லாங்கொன்று வீரதத்துவத்தைக் காட்டுவேனேயானுல்: பெருந்திருடனும்வஞ்சகனுமாகிவிடுவேன். இனி மாண்டுபோவதேயல்லாமல் வேறேசெய்யத்தக்க காரியமேதேனும் இருக்கின்றதோ? மேலும் இவ்வுலகத்தில் வல்லமையுள்ளோரெல்லாம் இதைக்கேட்டால், முன்னேதகப்பனையிழந்தான். பிறகு ஜடாயுவென்பவரும் மாண்டார். தனக்கு மிகுந்த அன்புள்ள இஷ்டர்களும் மடிந்தார்கள். தன்னையெல்லாவிதத்திலுங் காத்துக்கொண்டிருந்த தம்பியும் இறந்தான். சீதையை இழந்துபோனுன். இப்படி யிருந்தும் சந்தோஷத்துடனே இருக்கின்முன். என்று பலவாமுய்ச் சொல்லிக்கொள்ளுவார்களே! நான் ராக்ஷசர்களையெல்லாம் வென்று மூலவேரறக் கொன்று அயோத்தியைச் சேர்ந்து, சற்குணவானுந் துணைவனுமான தம்பியையிழந்து நான்மாத்திரம் உயிருடனேவந்துவிட்டேனென்று மகிழ்ந்துஇராஜ்யபாரஞ் செய்கிறது மிகவும் நன்முயிருக்குமல்லவா? இவ்வளவு ஐஸ்வரியமும் இந்தலோகத்தினளவாகவே நின்றுவிடும். ஆனபடியால் இவைகளெனக் கொன்றும் வேண்டாம். இப்போதே என்பிராணனை என் தம்பியுடனே முடித்துவிடுகிறேனென்று உறுதியாய் சுவாமிசொன்னதைக் கேட்ட ஜாம்பவர் ஸ்ரீராமருடைய திருவடிகளில் வீழ்ந்து தண்டனிட்டுச் சொல்லுகின்முர்.

சுவாமி! அடியேனுக்கொரு விண்ணப்பமிருக்கின்றது. தேவரீர் உமது பிரபாவத்தை யாதுகாரணத்தாலோ மறைத்து அறியாமலிருக்கின்றீர்? அடியேன் முன்னமேதேவரீருடையவல்லமையைச் சிறிது அறிந்திருக்கின்றேன். அதை இப்போது அடியேன் சொல்வது புத்தியீனமாகும். ஏனெனில், தேவர் பெருமையைப் பிரமேந்திராதி தேவர்களும் சொல்லத் தவறிவிடுவார்கள். தேவரே பிறகு உம்முடைய அநந்தகல்யாண குணங்களையெல்லாந்தெரிந்தருளப்போகின்றீர். இப்போதுஇந்திரஜித்துவிட்ட ஆயுதம் பிரம்மாஸ்திரமென்று தெரிந்துகொண்டோம். அஃதெப்படியென்முல் இளையபெருமாள் மீதும் அளவில்லாத வானரவீரர்கள்மீதும் பாய்ந்து, யாவரையும் ஏககாலத்திலே ரணக்களத்தில்வீழச்செய்தவெற்றியினுலேஎன்று தெரிகின்றது. ஓமன்மதாகாரரான சுவாமி! இது சத்தியமானவாக்காகும். அந்தப் பிரம்மாஸ்திரம் அயனேந்திராதி தேவர்கள் மீதும் தானவர்கள்பேரிலும் விட்டபோதிலும், அவர்கள் பிராணன்களையெல்லாம் உண்டுவிடும். தேவரொருவரைமாத்திரம் ஒன்றுஞ்செய்யமாட்டாது. ஆதலால்தேவரிடத்திற்குவராமல் மறைந்து விட்டது. இது பிரம்மாஸ்திர மென்பதற்கு வேறு சாக்ஷியும் வேண்டுமோ? ஓ எங்களாண்டவரே! இப்படியானபடியால் அதிக பலவந்தரான அஞ்சனைகுமாரர் மூர்ச்சைதெளிந்தார். அவரெல்லாருடைய துன்பங்களையும் நீக்கும்படியான வல்லமையுள்ளவர். எல்லாரையும் பிழைப்பிக்கும்படியான சஞ்சீவி மருந்தைக்கொண்டு ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளாக வருகிறேன் என்று

வாக்குதத்தம் பண்ணிவிட்டு வடக்கேபோருக்கின்ருர். அவர் இப்போது இமவத்பர்வதத்தைக்கடந்துமேருமலையைத்தாண்டிச் சஞ்சீவிமலையைக்கண்டிருப்பார். இனியொருக்ஷணப்பொழுதுக்குள்ளாக வந்து சேருவார். ஓ ஆதிமூலவஸ்துவே! தேவர்கொண்ட துன்பத்தை நீக்கியருளவேண்டும். அந்தமருந்தை அடியேனும், அடியேன் பிதாவாய் லோகசிருஷ்டி நாதரான பிரம்மாவும், திரிநேத்திரதாரியாகிய சிவனும், சக்ராயுதபாணியாகிய உபேந்திரனும் அல்லாமல்; மற்றத் தேவதானவ மனிதர்களில் ஒருவரும் அறியும் வல்லமையுடையவர்களில்லை. அந்தச் சஞ்சீவிமருந்துகள் க்ஷீரசாகரங்கடைந்து அமிர்தமுண்டாக்கினகாலத்தில் அதனுடன்கூட உற்பத்தியானதுகள். நீலமேக ஸ்யாமளரூபரான ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியினுடைய சக்ராயுதமானது அவற்றை யொருவரும் அபகரித்துக்கொள்ளவொட்டாமற் காத்துக்கொண்டிருக்கின்றது. அதுகள் உத்தர குருக்ஷேத்திரத்திற்கப்பால் இருக்கின்றதுகள். சுவர்க்கலோகத்திலிருப்பவர்களும்அதைப்போய்ப் பார்த்துவந்தவர்கள் அல்லர்.

ஓ சர்வலோக சரண்யரான எங்களாண்டவரே! அந்தச்சஞ்சீவிமருந்துஉண்டானகாலமுதல் அதுகளை யாரும் கையால் தொடவில்லை. அமிர்தத்தோடுகூட உண்டான வல்லமையால் சுவர்க்க அந்தர மத்திய பாதாளமென்று சொல்லப்பட்ட லோகங்களை ஆதியிற் சிருஷ்டித்த பிரம்மதேவர் இறந்தபோதிலும், அவருடைய பிராணனையும் மறுபடியு முண்டாக்கிவிடும். அதுகளில், தேகத்திற் பதிந்திருக்கின்ற ஆயுதமுனைப்புண்ணை நீக்கிவிடுவதான சல்லியகரணியென்பதொன்று முறிந்த அவயவங்களைச் சேரும்படிச்செய்யும் சந்தானகரணியென்பதொன்று. போனவுயிரை மறுபடியும் திருப்பும் மிருதசஞ்சீவிநியென்பதொன்று. மேனியழிந்தவர்களுக்கு மறுபடியும் அந்தமேனியை உண்டாக்கும் சமனியகரணியென்பதொன்று. இப்படி நான்குவித மருந்துகளிருக்கின்றதுகள். ஓ மூலகாரண வஸ்துவானவரே! அந்த மருந்துகள் நிச்சயமாக வரப்போகின்றதுகள். வாயுகுமாரரானவர் தர்மமே தமக்கு அதுகளைக்காட்ட அவற்றைக் கொண்டுவரப் போகின்ருர். தவிரமாட்டார். தேவரீர் வருத்தப்படவேண்டாம். அவருக்கது அருமையல்ல. என்று வணங்கிச் சாம்பவர் சொல்லவே அகங்கார மமகாரங்களை யாவருக்கு நீங்கி ரக்ஷிக்கின்றவரான ஸ்ரீராமமூர்த்தி மிகுதியும் சந்தோஷித்தவரைப்போலத்தோன்றினுர். அப்போது ஸ்ரீராமபத்திரர் அச்சாம்பவரைப்பார்த்து, ஓ சர்வோத்தமரே! நீர் கூறிய வனைத்துஞ் சரியே; அநுமான் மேருமலையின்அப்புறமாகப்போய்ப் போக பூமியிலுள்ள நல்ல சஞ்சீவி மருந்தைக் கொண்டுவருவானென்று சொன்ன இந்த நல்ல வார்த்தைக்குச் சந்தேகமுண்டாக மாட்டாதென்று நினைக்கின்றேன். என்றருளிச்செய்துகொண் டிருக்கையில் வடக்கில் ஒரு பெருங்கோஷம் உண்டாவதைக் கேள்விப்பட்டார்கள். சமுத்திரமெல்லாம் மேலெழுந்து அலைவீசவும், மலைகளெல்லாம் அங்கங்கே பறியுண்ணவும், மகாவிரைச்சலோடு ஆகாயத்தி லெழும்பிவருகிற சண்டமாருதம் வடதிசையிலிருந்து புறப்பட்டதாக ஒருபெருமயக்கந்தோன்றினது. நக்ஷத்திரக் கூட்டங்களெல்லாம் நிலைமாறி உதிர்ந்துவீழ்ந்தன. சூரியமண்டலமானது சந்திரமண்டலத்தைப்போலக் குளிர்ந்து மேகங்களுடன் கூடிக்கொண்டது. மலைகளும் மரங்களும்வேரோடுபறியுண்டு ஆகாசமட்டுமெழும்பி மறைந்து மூடிக்கொண்டு சமுத்திரத்தையெல்லாம் தூர்த்து விட்டதுகள். ஸ்ரீராமவிபீஷணர் சாம்பவர்களுடைய துக்கம் நீங்கத்தக்கதாக அநுமான் அட்டகாசஞ்செய்து சப்தித்தார். ஆண் சிங்கத்துக்குச் சமமான வாயுபுத்திரர் கர்ஜ்ஜித்த பெருங்கோஷமானது, மேகங்கள் நக்ஷத்திரங்கள் முதலான ஆகாசத்திலுள்ளவைகளும் கடல் மலை மரம் முதலான பூமியிலுள்ளவைகளும்பிரதித்தொனிகொள்ளும்படியாகச் செய்துவிட்டது.

அப்போது அவ்வாஞ்சநேயரானவர் எப்படி காணப்பட்டாரென்ருல்? திருப்பாற்கடலைக் கடையும்படி யத்தனித்தபோது அதிகப் பிரகாசம்பொருந்திய மந்தரகிரியைக் கொண்டு வரவேண்டுமென்று சுவாமி நியமித்தமாத்திரமே, அதை எடுத்துவருவது தம்வலிக்கு அற்பமென்பதுபோல ஏந்திக்கொண்டு ஆகாயமார்க்கமாய் வந்த சமானமில்லாத வல்லமையுடையவ

ராகிய கருடபகவானைப்போலக் காணப்பட்டார். அன்றியும் லோகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற ஆதிசேஷனுடன் சபதமிட்டுக்கொண்டு போராடி மேருவின் சிகரத்தைத் தன் வல்லமையாற் பேர்த்துக் கொண்டுவந்த தம்முடையபிதாவாகியவாயு தேவனுக்குச் சமமாகவுந் தோன்றினார். இதைக்கேட்ட சாம்பவர் சுவாமி! இதோ அநுமான் வந்துவிட்டார். என்றுசொல்லி முடிகிறதற்குள்ளாக அவரும் பாய்ந்து வந்து, தம்முடைய பாதத்தைப் பூமியில் வைத்து ஊன்றினார். அந்தத் தெய்வத்தன்மையுள்ள சஞ்சீவிபர்வதம் மாத்திரம் இந்தச் சண்டாள ராக்ஷசரூரில் வருவதற்குக் கூடாமல் ஆகாசத்திலேயே அந்தரமாக நின்றுவிட்டது. ஆஞ்சநேயர்மாத்திரமே ரணக்களத்திற்கு வந்து சேர்ந்தார். அந்தச் சஞ்சீவிமருந்தினுடைய காற்றுவந்து வீசினவுடனே இதுவரை புதிதாகவந்திருந்த சேஷவிருத்தியாகிய புண்ணியங்களைச் செய்த மகாத்துமாக்களான வீரர்களெல்லாம் அதிகதேஜசும் மிகுந்த வல்லமையும் பேரழகுமடைந்தவர்களாகி, தேவர்களெல்லாம் ஆசீர்வதிக்க யமனைச்செயித்து, இரணக்களத்திற் கிடக்கிற தங்கள் தங்கள் பூர்வதேகத்தை வந்து சேர்ந்துகொண்டார்கள். இராக்ஷசர்களுடைய தேகமெல்லாவற்றையும் மருத்தன் முதலான ராக்ஷசர்களே கொண்டுபோய்க் கடலிற் போட்டுவிட்டபடியினாலே, அவைகளெல்லாம் கடலில் மறைந்து ஒழிந்துபோய் விட்டன. மற்றவைகளில், யுத்தத்தால்மாண்டு பட்டுப்போன மரங்களெல்லாமும் உயிர்பெற்று வாழ்வடையுமேயானல் குரங்குக்கூட்டங்கள் ஜீவன்பெற்றதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? இளையபெருமாளுடையதிருமேனியிற் பதிந்திருந்த பிரம்மாஸ்திரத்தோடு மற்ற அம்புகளெல்லாம் கழன்று விழுந்துவிட்டதுகள். கடுத்துக் கொதித்துக்கொண்டிருந்த அங்கமெல்லாம் குளிர்ப்படைந்தது. மூடியிருந்தகண்கள் சுழலமிட்டதுகள். மூர்ச்சை தெளிந்து அறிவு வந்தது. இப்படி யாவரும் எழுந்த மாத்திரமே சப்தசமுத்திரங்களும்கோஷித்ததுகள். இந்தப் பேரோசை லக்ஷ்மணப்பெருமாளுடைய திருச்செவியில் வந்துநுழையவும். தேவர்கள் பல்லாண்டு கூறிய ஆரவாரத்தைக்கேட்டு வருத்தம் நீங்கி எழுந்திருந்தார். அப்படி உயிர்பெற்றெழுந்த திருத்தம்பியாரைக் கண்ட மாத்திரத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர்பூரித்ததமதுதிருத்தோள்களால் தழுவிக்கொண்டு துக்கம் நீங்கினார். உலகத்தில் யாவருக்கு முண்டாயிருந்த வருத்தமெல்லாம்போய் மயக்கமும் ஒழிந்தார்கள். அரம்பை ஊர்வசி திலோத்தமை முதலானபேர்கள் நர்த்தனம் பண்ணினார்கள். கின்னரர்கள் சப்த சுர நரம்புகளுள்ள கின்னரங்களைமீட்டித் தேவாமிர்தமுந் தோற்றுப்போகும்படி பாடினார்கள். உலகத்தவர்களெல்லாம் சந்தோஷஸ்நானம் பண்ணினார்கள். மகரிஷிகளெல்லாம் வேதபாராயணம் பண்ணினார்கள். வேதபுருஷர் கோஷித்தார். வேதியர்களுடைய ஜ்ஞானம் விருத்தியானதுகள். தர்மங்களனைத்தும் ஓங்கிவளர்ந்தன. தேவர்களுடைய மனது குளிர்ந்தது. பிரம்மாஸ்திரமானது சுவாமியைச் சூழ்ந்துவந்து வணங்கி, சுவாமி! தேவரீருடைய திருத்தம்பியார் பிழைத்துவிட்டார். இனி யென்னால் அவருக்கொரு இக்கட்டும் உண்டாகப்போகிறதில்லை. அதற்குத் தேவரீரிடத்தில்அடியேன் வராமையே சாக்ஷியாகும். என்று சொல்லிவிட்டுப் போய்விட்டது.

அப்போது தேவர்கள் ஆநந்தகோஷம் இடும்படியாகத் தாயினும் மிகுந்த அன்பையுடையவராகிய ஆஞ்சநேயரைச் சகலலோக நாயகராகிய ஸ்ரீராமபிரானனவர் கண்டு, அதிக சந்தோஷத்துடனே திருக்கண்களில் ஆநந்தபாஷ்பம் பொழியத்தக்கதாக மனமுருகித் தமது திருமார்பிறுகத் தழுவினார். அக்கால் அவ்வாஞ்சநேயர் சுவாமியினுடைய திருவடிகளில் வணங்கினார். அப்படி வணங்கின வாயுகுமாரரை சுவாமிபார்த்து, அப்பா அஞ்சனைச் செல்வனே! நாங்களெல்லாம் உன்னாலே தசரதமகாராஜருக்குப் பிறந்து அதிக துக்கத்தால் இந்த ரணக்களத்தில் மாண்டுபோய் விட்டோம். இப்போதுமறுபடியும் உன்னிடவயிற்றில் நானும்,இளைய பெருமாளும், சுக்கிரீவன் முதலான யாவரும் பிறந்தோம். ஐயா வேதங்களை நிலை நிறுத்தின பிரதாபசாலியாகிய ஆஞ்சநேயனே! நாங்களெல்லாம் அழிந்துபோகஎங்கள் பிராணன்களையெல்லாம் உபகரித்த

உன்னுடைய உபகாரத்துக்கு எங்களுயிரைத்தான் உனக்குப் பிரதிபலனுகக் கொடுத்தபோதிலும், அந்த உபகாரத்துக் கீடாகுமா? எங்களைப் பழிக்குள்ளாகாமற் காப்பாற்றி, எங்கள் பகையெல்லாம் நீக்கி, எங்கள் வமிசங்களையெல்லாம் நீயே ரக்ஷித்தாய். என்தம்பிமேற் பட்ட அம்புகளாலே அவன் மாண்டதால், இந்த ஏழுலோகங்களும் மாண்டவைபோலக்காணப்பட்டன. நான் உன்னுபகாரத்துக்குப் பிரதியென்ன சொல்லப் போகிறேன். அப்பா அநுமானே! ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளாக சஞ்சீவிகளைக் கொண்டுவந்து எங்களெல்லாரையும் இன்றைக்கு மாண்டுபோகவொட்டாமல் எங்கள் வாழ்நாளை எங்களுக்குதவிசெய்தாயானதால், நீ யொருக்காலும் வருத்தமும் நோயுமில்லாமற் சிரஞ்சீவியாகி, சதாகாலமும் சந்தோஷமாக வாழ்ந்திருக்கக்கடவாயென்று ஆசீர்வதித்தார். மற்றப் பேர்களும் அநுமானுடைய உதவியால் தங்கள்தங்கள் உயிர்களைப்பெற்று மிகுந்த அன்புடையவர்களாய் அவரைச் சூழ நின்று வணங்கி வாழ்த்தினுர்கள். அப்போது ஆஞ்சநேயர் சுக்கிரீவமகாராஜனையும் அங்கதன் முதலானவர்களையும் பார்த்து, தாம் அந்தச்சஞ்சீவியை மலையுடனே கொண்டுவரவேண்டியதற்கு நேரிட்டமுகாந்தரங்களையெல்லாம் சொன்னுர். அதைக் கேட்ட சாம்பவர்வாயுகுமாரரைப்பார்த்து, ஐயா அதிபலவந்தரான ஆஞ்சநேயரே! நீர் கொண்டுவந்துதவிய சஞ்சீவிபருவதம் இங்கேயே யிருக்குமானுல், பொய்யாளர்களான ராக்ஷசர்களில் மாண்டவர்கள் பிழைத்துக்கொண்டேயிருப்பார்கள். ஆகையால் இந்த மலையைக்கொண்டுபோய்மறுபடியும் அவ்விடத்தில் வைத்துவிட்டு வரவேண்டும். என்று நியமித்தவுடனே அநுமான் கேட்டு, ஆம்! இது மிகவும் நல்ல புத்திதான். என்று அங்கீகரித்துக்கொண்டு, இதோ ஒருநாழிகைக்குள்ளாகக் கொண்டுபோய் வைத்துவிட்டு வருகிறேனென்று அந்தத் தெய்வீகமலையை மறுபடியுந் தூக்கிக்கொண்டு ஆஞ்சநேயர் வடதிசையை நோக்கிச்சென்றுர்.

மருத்துமலைப்படலம்-முற்றிற்று.

---

## களியாட்டுப்படலம்.

ஸ்ரீராமர் சன்னிதியில் இப்படி நடக்க இலங்கையில் இராவணன் பிரம்மாஸ்திரத்தால் எல்லாரும் இறந்துபோனுர்களென்று தன்னையறியாத சந்தோஷங்கொண்டு, கின்னர கந்தருவர்கள் தேவகானங்களைப்பாட கண்களென்கின்ற கெண்டைமச்சியங்களை முகத்தி லுடையவர்களான ஸ்திரீகள் கள்ளுண்டுமயங்கியாட அதைப் பார்த்துக்கொண்டிருந்தான். வித்தியாதரஸ்திரீகள் இராக்ஷசஸ்திரீகள் தானவஸ்திரீகள் நாகலோகஸ்திரீகள் யக்ஷஸ்திரீகள் சித்தஸ்திரீகள் இவர்களெல்லாங் கூட்டங்கூட்டமாகவந்தார்கள். மேனகை-திலோத்தமை-அரம்பை-ஊர்வசி-இவாள் முதலாகிய தேவஸ்திரீகள் தங்களுடைய பாதச்சிலம்புகள் கலீர்கலீரென்று சப்திக்கும்படியாகவும், தேவதுந்துமியும் - சங்கங்களும்- குருடுவாத்தியங்களும் - வானமதிர முழங்கும்படியாகவும் நர்த்தனம் பண்ணினுர்கள். அவர்கட்குப் புஷ்பமாலைகளைத் தரித்திருக்கின்ற சுருண்ட குழல்களும். தொங்கிக்கொண்டிருக்கின்ற குண்டலங்களும், சுருண்ட இதழ்களோடுங்கூடிய சொர்னபுஷ்பங்களும் நெற்றித்திலகமும் பிரகாசிக்கச் சிவந்தவாய்களினுல் மறைந்திருக்கின்ற முத்தையொத்த தந்தபந்திகளும், தாமரைமலர்போன்ற சிவந்தகண்களும், காடுகளினுலேமூடப்பட்ட சந்திரனைப்போல அளகபாரங்களோடு முகங்களும் விளங்கிக்கொண்டிருந்ததுகள். இளங்கிரணங்களை வீசுகின்ற தந்தபந்திகளினுடைய இளஞ் சந்திரிகைகளும், மிகுந்த வொளியை வீசுகின்றஇரத்னுபரணங்களுடைய இளவெயில்களும், சொர்னம்போலப் பிரகாசிக்கின்ற தீபங்களைத் தோற்கடிக்கும்படியான தேககாந்திகளும் பிரகாசிக்கின்ற படியினுலே; அந்தப் பிரகாசங்கண்டு அவர்களிடத்தில் மோகங்கொண்டு மயங்கித் திரிகின்றவர்களைப்போலவே இராத்திரிகாலமும்மயக்கங்கொண்டு அங்கங்கே தத்தளித்து மறையும்படியாய்விட்டது. அக்கால் பெருங்கல்விச் செல்வம் நிறைந்த குற்றமற்றவழியிலே நடந்து முந்தினபயனுகிய அதன் அர்த்தத்தைஅநுபவித்து பெரியோர்களுடைய

சாஸ்திரத்திற் பழகித் தேர்ந்தும்பிந்தின பிரயோசனமாகிய மோக்ஷநெறியை உபதேசித்தும் அதில் விஸ்வாசங்கொள்ளாத அறிவீனனைப்போலவும், வஞ்சகனுயிருக்கும் ஒருவன் கற்பனைசெய்த மாறுபாட்டைப்போலவும், குடித்த கள்ளினுடைய வேகமானது அவர்களுடைய தேகம் முழுவதும் நிறைந்துவிட்டது. அதனால் ஒவ்வொருவரும் அடிக்கடி சிரித்தார்கள். தேகத்தில் வியர்வையுண்டாயினது, இதழ் துடித்தது. முல்லையரும்பையொத்த பற்கள் வெளியேதோன்றின. வேல்போன்ற கண்கள்கடை சிவந்தன. புருவங்கள் வளைந்தன. வாய்வெளுத்துப்போயது. மேலும் அளகபாரம் அவிழ்ந்து அவர்களுடைய அவயவங்களை மறைத்துக்கொள்ளவும்.தரித்துக்கொண்டிருந்த சேலையும் மேகலாபரணமும் சிலம்புகளணிந்திருக்கின்ற மாந்தளிர்போன்ற பாதங்களின்மேல் நழுவி வீழ்ந்துவிடவும், ஸ்திரீகளெல்லாம் மயங்கிச் சோர்ந்துவிட்டார்கள். கோத்த மணிகளாலாகிய மேகலாபரணங்களும் வஸ்திரங்களும் அவிழ்ந்து,கீழ்மக்களைப்போல அவர்களை அவமானப்படுத்த யத்தனித்தன. அவர்களுடைய அளகபாரமானது தம்மைச்சேர்ந்தவர்களுக்கு எவ்வித இக்கட்டும் வந்தபோதிலும் தாங்கள் செய்யத்தக்க பெரிய உபகாரமேசெய்வதுபோல, அவர்களுடைய மானத்திற்குப் பங்கம் வரவொட்டாமற் காப்பாற்றினது, மன்மதன் மாந்தர்களை மயங்கச்செய்து வாட்டுந்தொழிலை விட்டுத் தூணியிற்போட்டுவிட்டு அம்பைப்போலத் தங்கள் காமசேஷ்டையினால் மாந்தர்களைமயங்கச்செய்துகொல்லுந்தொழிலைவிட்டுச் சொருகின கண்களையுடைய ஸ்திரீகள். பாடும் பாணி தப்பித்த தாளமாத்திரையுங்கடந்து தந்திவழியே குரலைச்சேர்க்காமற் சுதியழிந்த மார்க்கமாய்ச் சுரமழிந்தபாடலைப் பாடினார்கள்.

அன்றியும் புல்லாங்குழலினால் பாடும் பாட்டிற்கிசைய நயமாய்ப்பாடாமல் அதன் சுதியை விரோதமான கனசுதியைக்கொண்டுமாற்றி, குறைவில்லாதருசியையுடைய பாலிலே புளித்ததேனைக் கலந்தாற்போலக் கள்ளுண்டமயக்கத்தால் வெடித்த குரலைக்கொண்டு எச்சுச் சுதியிற் பாடினார்கள். ஆரியக்கூத்தில் எல்லாவேடிக்கைகளையுங் கண்டபேர்களுக்கு இத்திரஜால வித்தையைக் காட்டுவதுபோல, பாடும்பாட்டின் பாவனைகளைத் தங்கள் அவயவங்களாற்காட்டுஞ் சமர்த்தர்களான ஸ்திரீகள் தங்கள் கண்களாற் பதாதிவீரர்களைக் காட்டி, வாயால் யானையைவெளியிட்டு. கைகளின்அபிநயத்தால் தேரின்வடிவத்தைக்காட்டி. பின் நடக்கப்போகிற கெடுதிக்கு உற்பாதமாக விருந்தார்கள். முன் அழுவதைப்போலக் காட்டிப் பின் சிரிப்பார்கள். பாடியாடுகின்றவர்களை வணங்குவார்கள். தாம் பாடுவதையும் ஆடுவதையும் விட்டுத் தூங்குவார்கள். பவளம்போன்ற வாயிற் சொள்ளு வழியவிடுவார்கள். மயக்கத்தாற் சோர்ந்து ஒருவர் மேலொருவர் விழுவார்கள். கண்களுறங்கத் திமிர்விட்டுக்கொண்டு போய்ச் செத்த உருவத்தின் மாதிரியாய்க் கள்ளுண்டமயக்கத்தால் விழுவதுபோல, தங்கள் உள்ளத்திலுள்ள நினைப்பைத் தங்கள் செய்கையால் உணர்த்தினார்கள். எல்லா ஆசைகளையும் நீக்கி அகங்கார மமகாரங்களைக்கெடுத்த சுத்தமான மனதையுடையவர்களான ரிஷிகளுக்கெல்லாம் மயிர்க்கால்கள் தோறும் காமநீர்சுரக்க வண்டுகளைப்போலப் பிறழுகின்ற நோக்கத்தையுடைய ஸ்திரீகளின் கறுத்த நீலோற்பலத்தையொத்த கண்கள் செந்நிறமாய் மாறவும். சிவந்த இதழ்கள் வெண்மையாய் விடவும், கங்கணங்கள்பூண்ட கைகள் திருட்டுராக்ஷசர்களுக்குமுடிவுவுண்டாகிறதென்றுதெரிவிக்கவும், செண்பகமலர்போன்ற மேனியெல்லாம் ஒளிமாண்டு செத்ததேகத்தைப்போலப் போய்விட்டது. சேற்கெண்டை யமன் வேல் மன்மதபாணம் என்றிவைகளையொத்ததாயிருந்தபோதிலும் அவைகளுடைய லக்ஷணங்களையெல்லாம் இழந்துவிட்ட பெரிய கண்களையுடையவர்களான ஸ்திரீகள் தங்கள் ஸ்தனங்களின்மீதுஅசைந்துகொண்டிருக்கின்ற சொர்னதாலிக் கயிற்றையும், காஞ்சியென்னும் மேகலாபரணத்தையும், வஸ்திரங்களையுங்களைந்து, மேகத்திற்குச் சமமாகிய அளகபாரத்தைச் சேர்த்துக் கட்டினார்கள்.

இந்தப்பிரகாரம் மூத்தொன்றைத் தவிர வேறொன்றையுஞ் சமானஞ் சொல்லப் போகாத தந்தபந்திகளையுடைய ஸ்திரீகள் அலங்கோலப்பட்டிருக்கின்றதை இராவ

ணன் கண்குளிரப் பார்த்துக்கொண்டு அர கிருந்தபோது, வானரவீரர்கள் ஆரவாரித்த பேரோசையானது மதோன்மத்தனை அவனுடைய இருபது செவிகளிலும் வந்து நுழைந்தது. அப்படி அந்த வானர வீரர்கள் ஆர்ப்பரித்த ஓசையானது வந்து நுழைந்த வுடனே நாட்டியங்களும், கள்ளுண்ட மயக்கமும், தாறுமாருகப் பாடுகின்றபாட்டுகளும், மத்தளத்தின் சுதியும், பவளம்போன்றவாயையுடையவர்கள்பிணங்கும் பிணக்கும், அவர்கள்கடைக்கண்பார்வையும், அவர்களுடைய கொஞ்சுமொழியும், ஆகிய வெல்லாம் இராவணனுக்கு வாடின புஷ்பத்தைப்போல வெறுப்பாய் விட்டன. யானைகளுடைய மதமொடுங்கவும், குதிரைகள் உறங்கிவிடவும், இராக்ஷசர்கள் பயங்கொள்ளவும், வீரகண்டாமணியைத்தரித்த ஸ்ரீராமலட்சுமணர்களுடைய தெய்வத் தன்மைபொருந்திய வில்லின் குணத்தொனியானது பாற்கடல் கடைந்த போது பிறந்த பேரோசையைப்போலத் திடுதிடென்று ஒலித்தது. அப்போது முத்துக்களைத்தோற்கடிக்கும்படியான தந்த பந்திகளமைந்த வாயோடுகூடிய முகங்களுள்ளவர்களும் தங்கள் கண்களென்கின்ற வேலாயுதத்தால் துக்கிக்கின்றவர்களுமான ஸ்திரீகளின் கூட்டங்கள், இராவணனுடைய கண்களுக்கு வானரவீரர்களுடைய கூட்டங்களைப்போலத் தோற்றினதுகள், மந்தரகிரியால் மறுக்கமடைத்த கடலைப் போலத் தன்மனது கலங்கி, தன் முகங்களாகிய பத்துச்சந்திரர்களுக்கும்அன்றைய ராத்திரியானது பகலைப்போலிருந்தது. தூதுபோய் வண்டின்ரூபமாய்வந்த ராக்ஷசர்கள் இராவணனுடைய மாலையின்மீது போயேறி, பகையாளிகள் ஒரு துன்பமுமில்லாமற் பிழைத்தார்களென்றும் இன்னும் அங்கேநடந்த வேவுகாரியங்களை யெல்லாமும் விவரமாகச் சொன்னார்கள். இதையுங் கேட்டமாத்திரத்தில் கொதிகொதிக்கின்ற மனதுடனே கற்பகப் பூப்பந்தரைவிட்டு மந்திராலோசனை மண்டபத்திற்கு வந்துசேர்ந்தான்.

களியாட்டுப்படலம் முற்றிற்று.

---

## மாயாசீதைப்படலம்.

இவ்வாறு இராவணன் ஆலோசனைச் சபைக்கு வந்தவுடனே, இந்திரஜித்து மகோதரன் முதலான மந்திரிகள் விருத்தர்கள் பின்னும் மந்திராலோசனைக்கு வரத்தக்கவர்கள் ஆகிய யிவர்களெல்லாம் வந்து இராவணனைச் சூழ நிறைந்தார்கள். நடந்த காரியங்களையெல்லாம் இராவணனே அவர்களுக்கு விவரமாகத் தெரிவித்தான். அப்போது மாலியவானெழுந்து சொல்லுகிறுன். ஐயா இராவணேஸ்வரா! இந்த லங்கையிலிருந்து ஒரு க்ஷணநேரத்திற்குள்ளாக மேருபர்வதமும் பின்னிடும்படிப் பாய்ந்துவல்லமையுள்ள சஞ்சீவிமருந்துள்ள பர்வதத்தைக் கொண்டுவருகிறதற்கு வல்லவன் வெற்றிமாலையைத்தரித்த தோள்களையுடைய அநுமானேயாகவேண்டும். ஏனென்ருல் சமஸ்தமான லோகங்களுக்குங் காரணவஸ்துவான ஸ்ரீராமமூர்த்தியையும் புருஷாகாரபூதையான பிராட்டியையும், உள்ளபடி கண்டிருக்கிறமகானுபாவனுகையினுலேதான். ஆ! ஆ! நம்முடைய சேனைகளில் மாண்டுபோனவர்களையெல்லாம் கடலிற்கொண்டுபோய்ப் போடாமல் இரணக்களத்திலேயேயிருக்கச் செய்திருப்போமேயானுல், அவர்களெல்லாம் இந்தச் சஞ்சீவிகாற்றுப் பட்டுப் பிழைத்து விடுவார்களல்லவா? எப்போது பிரம்மாஸ்திரம் பழுதுபட்டுப் போய்விட்டதோ? இனி அவர்களுக்கு ஓரிடையூறும் உண்டாகமாட்டாது. மேலும் இந்த லங்கையென்கிறமலையை இந்தச் சமுத்திரமத்தியிலிருந்து பெயர்த்துப் பூமிகிழியும்படி யெறிந்தால், அதைத் தடுக்கிறதற்கு நம்மில் யாரிருக்கின்ருர்கள்? நாம் அவர்களுடனே சண்டைசெய்ய முடியுமோ? அந்த அநுமான் மேருமலையைப் பிடுங்கிக் கொண்டுவந்து இந்த ஊர்மேலே யெறிவானுனல், அதை விலக்குகிறதற்கு ஒருவராலாகுமோ? அந்த அநுமான் லோகசிருஷ்டியின் முறையைக் கெடுத்து மாற்றவேண்டுமானுலும் மாற்றிவிடுவான். ஆதியுமந்தமுமில்லாத பரமேஸ்வரனுடைய கலியாணகுணங்களைச் சொல்வதில் குற்றமற்ற வேதங்களாற் கூறுகின்ற மூர்த்திகள் மூன்றுபேர்களென்பது,

ஆலோசியாமல் தான் சொல்லிவைத்த தோ? அநுமாஞேடுசேர்த்து நான்கு மூர்த்திகளென்றே நாமெல்லாம் அங்கீகரிக்க வேண்டும். இறந்துபோனவர்களெல்லாம் இறந்துபோனவர்களாகவேபோக, வேறே பிறவி பிறந்தவர்களைப்போலிருக்கிற நாம் பிழைக்கவேண்டிய மார்க்கத்தை மறந்து போனோமே? ஆனபோதிலும் இனியாவது ஜானகியைமரியாதையுடனேகொண்டுபோய்விட்டுத்தர்மசீலர்களான ராமலட்சுமணர்களை அடைக்கலமடையலாமென்று சொல்லிப்பின்னும் மேல்விளையுங்காரியங்களையெல்லாம் நன்ருயறிந்தவஞன மாலியவான் இராவணனைப் பார்த்துச் சொல்லுகிருன். ஓ இலங்கேசா! இந்தச் சமுத்திரத்தைப் பானம்பண்ண வல்லவர்களாய், ஆகாசத்தையும் பூமியையும் ஒன்ருய்மறைக்கும்படியான ஆயுதவல்லமையுள்ள பெரியராக்ஷச வீரர்களெல்லாம் இறந்துபோனுர்கள். இன்னம் இந்தலங்கையும் நீயும், உன்பிள்ளை இந்திரஜித்து ஒருவனுமேதான் இருக்கின்றீர்கள். வேறே வீரர்களென்று சொல்லும்படியானவர்கள் யாரிருக்கின்ருர்கள்? ஒருவரைக்காட்டு பார்ப்போம், இனிநாம் வெற்றியடைவோமென்பது கனவிலு நினைக்கப்போகாது. ஓ சூலாயுதத்தைக் கையிலுடைய உமாபதியாகிய உருத்திரமூர்த்தியைக் கயிலாச பர்வதத்துடனே பேர்த்தெடுத்த வெற்றித்தோள்களையுடைய இராவணேஸ்வரா! ஒருபாணத்தால் வாலியைச் சுவர்க்கத்திலேற்றிச் சமுத்திர இராஜனை ஜெயித்துக் கும்பகர்னனை மாளும்படியாக செய்த ஸ்ரீராமனை, மழையிலுண்டாகும் குமிழிக்குச் சமமான இந்த ராக்ஷசர்களோ போர்க்களத்தில் வெல்லச் சமர்த்தர்களென்ருன். இப்படிகூறிய மாலியவானுடைய யதார்த்தவார்த்தையைஇராவணன்கேட்டு, கண்களில் அக்கினி பொறிபறக்கப் பார்த்து, ஓ மாலியவானே! இராக்ஷசர்களெல்லா மாண்டாலுஞ்சரி நம்மிடத்திலுள்ள அளவில்லாத ஆயுதங்களெல்லாம் அழிந்தாலுஞ்சரி. மிகுந்த அழகுடையவளான அந்தச் சீதையை என்னுசையைக் கெடுத்து மறுபடியும் விட்டுவிடுகிறதற்காகவா நான் சிறைபிடித்துக்கொண்டு வந்தேன்? என்பிள்ளைதா னென்னத்திற்கு? மற்ற பந்துக்கள்தா னென்னத்திற்கு? பயந்து உயிர் வாழவேண்டுமென்று எண்ணியிருக்கின்ற நீங்களெல்லாரும் பிழைத்துப்போய்விடுங்கள். நாளைக்குநான் ஊழித்தீயைப்போலப் புறப்பட்டு மனிதர்களையும் குரங்குகளையும் சிந்தச்சிதற அடித்துப்போடுகிறேன் என்ருன். அப்போது இந்திரஜித்து தகப்பனைப்பார்த்து, ஐயா! உமக்கு அங்கீகரிக்கக் கூடுமாஞல் எனக்குத் தெரிந்த காரியமொன்றிருக்கின்றது. நான்பிரம்மாஸ்திரத்தை அக்கினி முன்னிலையிற் பூசைசெய்து அந்த ஸ்ரீராமன்மீதும் பிரயோகித்தேன். அஃதவனுடைய மேனியைத் தொடாமல் வந்துவிட்டது. ஆகையால் அவன் மனிதனல்லன், தேவனுமல்லன், ரிஷியுமல்லன் விபீஷணன் சத்தியமாகச்சொன்ன யானெனதென்னும் செருக்கற்றவர்களால் தியானிக்கப்படுகின்ற ஸ்ரீயப்பதியே இப்படி அவதரித்தானென்று சந்தேகமில்லாமல் தெரிந்துகொண்டேன். அது நிற்கட்டும்; அதைச் சொல்லுகின்றது வீரலக்ஷணத்துக்குப் பொருந்தாது. வருகிறது வரட்டும். ஐயா வீரவானே! இன்னொரு தந்திரமிருக்கின்றது. நான் நிகும்பலைக்குப் போய் அந்த யாகத்தைச் சீக்கிரத்திற் செய்து முடித்தால் நம்முடைய சேனைகளெல்லாம் பிழைத்து நமக்குண்டாயிருக்கின்ற துன்பமெல்லாம் நீங்கிவிடுமென்ருன். இதைக் கேட்ட ராவணன், ஆம் அது நல்லகாரியந்தான். அப்பா! அப்படியே பரிவாய் நிகும்பலை யாகஞ் செய்யக் கடவாய் என்ருன். இந்திரஜித்து அந்தயாகம் நான் செய்கிறதை உன்தம்பி விபீஷணன் அவர்களுக்குச்சொன்னுல், அந்தப் பகையாளிகள்வந்து நான் செய்கிற யாகத்தை முடியாதபடி அழித்துவிடுவார்களேயென்ருன் அதற்கு ராவணன் அவர்கள் வராதபடிச் செய்கிறதற்கு என்ன உபாயம் பண்ணலாமென்ருன். அதற்கு இந்திரஜித்து சொல்லுகின்ருன். ஐயா ராவணேஸ்வரா! ஜானகியைப்போல ஒரு ராக்ஷசியை ஏற்படுத்திக் கொண்டுபோய் அநுமான் கண்முன்னிருத்தி என் கைவாளால் அந்த மாயாசீதையைக் கொன்றுவிட்டு என் சேனையோடுங் கூட அயோத்திக்குப் போகிறேனென்று வழிகாட்டிவிட்டுப் போய்விட்டால், அவர்களெல்லாம் அந்தத் துக்கத்திலே முழுகி, இங்கே சீதை இறந்து போய்விட்டாள்.

இனி இவ்விடத்தி லிருப்பதினுற் பிரயோசனமில்லே. அவ்விடத்தில் நம்முடைய தம்பிமாரும் தாய்மார்களும் மற்ற பந்துக்களும் நம்முடைய பட்டணமும் அழிந்து போய்விடுமே! என்கிற வருத்தத்தினுல் நொறுங்குண்டு சேனேயும் தாங்களுமாய்ப் போய் விடுவார்கள். அப்படி அவர்கள் போகாவிட்டாலும் அனுமானேயாவது அவ்விடத்திற்கனுப்பி நடந்த காரியத்தைத்தெரிந்துகொண்டாலே யல்லாமல், தங்கள் வியசனத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கமாட்டார்கள். அதற்குள்ளாக நான் நிகும்பலேக்குப்போய் யாகத்தைமுடித்துக்கொண்டு, அதிலுண்டாகிற ஆயுதங்களினுல் அவர்களேயெல்லாங்கொன்று உமக்கு வெற்றியை உண்டாக்குகின்றேனென்ருன் அதுகேட்ட இராவணன் அப்படிச்செய்கிறது நல்லதென்று சமாதானப்பட்டான். சீதாபிராட்டியைப் போல மாயஞ்செய்துகொண்டுவருகிறதற்கு இந்திரஜித்து போனுன். இவ்விடத்தில் இப்படியிருக்க அவ்விடத்தில் சுக்கிரீவமகாராஜர் மற்றவானர வீரர்களோடும் ஸ்ரீராமமூர்த்தியைத் தண்டஞ்சமர்ப்பித்து, ஸ்வாமி! இந்த லங்கைக் கோட்டையைச் சீக்கிரமாகச் சுட்டுவிடுகிறேமென்ருர்கள். ஸ்ரீராமரும் அதற்கிசைந்து அப்படியே செய்யுங்களென்ருர். உடனேபதினேழுவெள்ள வானரசேனேகளும் ஆளுக்கொரு கொள்ளிக்கட்டையை கையிலெடுத்துக்கொண்டு சுக்கிரீவ மகாராஜருடனே புறப்பட்டுப்பாய்ந்து இலங்கா பட்டணக் கோட்டையைப்போய்ச் சேர்ந்து, கோட்டைவாயிலில் வெள்ளே நிறத்து மேகங்கள் மின்னல்களே வரிசை வரிசையாக மின்னிக்கொண்டு நுழைகிறதுபோல அங்குள்ளவர்களெல்லாம் பீதியடையும்படியாகவும் நாலுபக்கங்களிலும் இந்த லங்கைக்கு நாசகாலம் வந்துவிட்டதென்றுசொல்லத்தக்கதாகவும் இராத்திரியில் நக்ஷத்திரங்கள் பூமியில் விழுகிறதுபோல அளவில்லாதகொள்ளிக்கட்டைகளேவீசியெறிந்தார்கள்,யானேகளேயொத்த வானரங்கள்வீசியெறிந்தஅந்தக்கொள்ளிக்கட்டைகள்ஸ்ரீராமமூர்த்தி சமுத்திரத்தின்மீது ஏவினஅக்னியாஸ்திரங்களேப்போல, வஞ்சகனுன ராவணனுடைய லங்கையின்மீது மேலும்மேலும்போய் விழுந்ததுகள். இப்படி நெருப்புக்கொள்ளிகள்லங்கைக்கோட்டைமீதுநெருங்கினவுடனே இலங்காபட்டணமானது, சுவாமி பிரயோகித்த அம்புகள்பட்டுச்சமுத்திரம் வேகிறதுபோல வெந்தது. அக்கால் பெருங்காட்டில் நெருப்புப்பற்றி எரிகிறபோது அதில்வாசஞ்செய்திருந்த பக்ஷிஜாதிகள் சப்தித்துக்கொண்டு ஆகாசத்திலெழும்பினதுபோல, இலங்கையி லுள்ளவர்களெல்லாம் பெருங் கூச்சலிட்டுக்கொண்டு அந்தரத்தி லெழும்பிப் போனுர்கள். மூன்றுலோகத்தவர்களாலும் நித்தியசூரியர்களாலும் வணங்கும்படியானவில்வீரசிகாமணியாகிய இளேயபெருமாளும் ஸ்ரீராமமூர்த்தியும் தீபத்துக்குச் சமானமான சில பாணங்களேப் பிரயோகிக்க, இலங்கையிலுள்ள மாடகூட கோபுரங்களெல்லா மலேகளேப்போல இடிந்து விழுந்ததுகள்.

இங்கே யிப்படி நடந்துகொண்டிருக்கும்போது முன்னே தம்முடைய திருக்கைகளேச்சிரசின்மேல்வைத்துக்கொண்டுபோய்மருத்து மலேயைப் பேர்த்தெடுத்துக்கொண்டுவந்து மறுபடியும் அதை மேருமலேக்கப்புரத்தில் வைத்துவிட்டு வரப்போன ஆஞ்சநேயர் அந்த இலங்கையின் மேற்கு வாசலில்வந்துசேர்ந்து வீரகர்ஜ்ஜனேசெய்தார். அக்காலந்த ஓசையைக்கேட்டஅந்த லங்கைப் பட்டணத்திலுள்ளவர்கள், சிறகுகளேயுடைய கருடபகவான் சீறுவதைக்கேட்ட பாம்புக்குலங்களே யொத்துப் பயந்தார்கள். இப்படி மேற்கு வாசலில் வந்து சேர்ந்த வாயுபுத்திரருக்கு முன்பாக எல்லாத்தந்திரங்களிலுஞ் சமர்த்தனும் யமனேயுஞ் ஜெயம்பெற்றுச் சொட்டுப்போட்டவனுமான இந்திரஜித்துவந்து ஜானகியைப்போல ஒருமாயப்பெண் உண்டாக்கி, அவளுடைய தலேமயிரை இடது கையிற்பற்றி, வலதுகையில் ஒருவாளே யுருவிக்கொண்டு அதிக கோபத்துடனே அனுமானேப் பார்த்துச் சில சொற்களேச்சொல்லத் தொடங்கினுன். ஓ நரதூதனே! நீங்கள் இவள் நிமித்தமாக வந்து இவ்வளவு சண்டை செய்தீர்கள் அல்லவா? இப்போது என் பிதாவாகிய ராவணேஸ்வரன் இவளேவெறுத்துத்தள்ளிவிட்டான். நானிவளுடைய ஆவியை இதோ உண்டுவிடப்போகிறேன். அப்பாலுங்களாலானதைப் பாருங்களென்ருன். அதுகேட்ட ஆஞ்சநேயர் புத்திமய

சஞ்சீவிமலை கொண்டுவருதல். இராமர் மாருதியை வாழ்த்தல்.



மாயாசீதை. நிகும்பலையாகம்.

ங்கிப் பரவசப்பட்டு அந்த மாயா சீதையைப் பார்த்து, இவர்தானே நாம்கண்ட சீதாபிராட்டியார்? ஐயோ! நம்முடைய வாழ்வுபோய்விட்டதே. இதைத் தடுக்கிறதற்கு வேறொருபாயமுந் தோற்றவில்லையே. என்றுகலங்கி உயிருண்டோ இல்லையோவென்னும்படி வாயுலர்ந்து மூர்ச்சையடைந்து மீட்டுந்தெளிந்து, இனிச்செய்கிறதற்கு வேறேசெயலில்லை. ஆகிலும் நம்மாற் கூடியவரையி லிவனுக்கு நீதிவார்த்தையைச் சொல்லலாம் என்று நினைத்தவராயவனைப் பார்த்து, அப்பா! நீ உயர்ந்த யக்ஷகுலத்திற் பிறந்து நல்ல குணமுடையவனா யிருக்கின்றாயே. ஒரு பெண்பிள்ளையைக்கொல்லுகிறது நீங்காத பழியானதல்லவா? பிரம்ம வமிசத்திலும் நாலாந்தலைமுறையாயிருக்கின்றாய். மேலும்சாஸ்திரங்களையெல்லாந் தீரக்கற்று மிருக்கின்றாய். ஒரு பெண்பிள்ளையை வதை செய்கிறது பெண்பழியென்று நீ யறியவில்லையா? பூலோகத்தாரெல்லாம் வருத்தப்படுகின்றார்கள். தேவர்களெல்லாம் நடுங்கிக் கண்கூச்சம் அடைகின்றார்கள். அதுகளை நீ கண்ணாலேயாவது பார். ஐயோ! உனக்குக்கொஞ்சமாவதுஇரக்கமென்பதில்லையே. பெண்கொலை செய்கிறது பெரும்பழி யல்லவா? உன்பிதா வெறுத்து விட்டபடியினாலே என்னிடத்திற் கொடுத்துவிட்டுப் போய்விடு. அப்படிச் செய்வாயேயானால் இந்த மூன்றுலோகமும் உனக்கு வசமாய்விடும். நல்லவெற்றி யென்பது உனக்கிதுவல்ல. அதை நீ யறிந்திலைபோலும் அற்பகாரியத்தைச் செய்கிறதினால் இதுவரையிலுனக்குண்டாயிருக்கும் புகழுக்கு அழிவுண்டாகுமே என்று பல நீதிவார்த்தைகளைப் பரிவோடுங் கூறினர்.

இப்படி கூறிய ஆஞ்சநேயரை அவ்விந்திரஜித்துப் பார்த்துச் சினந்து, அடா குரங்கே! என் தகப்பனுக்கு வேண்டாத இவளை உன் கையிற்கொடுப்பேனேயானால் எனக்குப் புகழுண்டாகுமா? இவளை என் வாளால் வெட்டி யெறிந்து விடுகிறேன். இவள் போய்விட்டாள். உங்களுக்கு இவளிடத்தில் ஆசைவேண்டாம். அயோத்தி வேண்டுமானால் அதைக் காத்துக்கொள்ளுங்கள்போங்கள். அதையும் இதோ கரியாகச் சுட்டுவிட்டு வரப்போகிறேன். அங்கேயிருக்கின்ற தம்பிமார்களும், தாய்மார்களும், தேவர்கள் விலக்கினபோதும் பிழைக்கவிடமாட்டேன். அக்கினியைப் பொழிகின்ற என்னுடைய பாணங்களினால் அவர்களெல்லா மாண்டுபோய் விட்டார்களென்று நம்புங்கள். இப்போதே போகின்றேன். வேகமாகப்போகவேண்டியதாதலால்புஷ்பகவிமானத்திற்போகப்போகிறேன். அவர்கள் தப்பிவிடுவார்களென்று நினைக்க வேண்டாம். என்னுடைய பாணங்கள் லகுவானவைகளல்ல. என்றுகூறி, வேகப்பட்டான். அப்போதந்த மாயாசீதையானவள் பயந்தவளைப்போல அவனைப்பார்த்து நடுங்கி, ஐயா எங்களாண்டவரே! என்னைக் கொல்லாமல் கிருபைசெய்து விட்டுவிடும். விட்டுவிடும் என்று அநேகவிதமாகக்கெஞ்சிக் கேட்கவும் கொஞ்சமும் இரங்காமல் தன்கைவாளினால் அவளை ஒரேவீச்சாக வீசிவிட்டு, கடலைப்போற் சூழ்ந்துவருகின்ற சேனையுடனே புறப்பட்டுத் தெற்கிலிருந்து வடக்குமுகமாகப் பொன்மயமான புஷ்பக விமானத்தி லேறிக்கொண்டு இந்திரஜித்துப்போய்விட்டான். இதைக்கண்ட வாயுகுமாரர் ஒன்றுந்தோற்றாமல்பிரமித்து மனஞ்சோர்ந்து, மேருமலைசாய்வதுபோல மூர்ச்சித்துக் கீழேவிழுந்துவிட்டார். அதுகண்ட இந்திரஜித்து அப்புஷ்பகவிமானத்தோடுந் திரும்பி நிகும்பலைச்சாலைக்குப் போய் நுழைந்து விட்டான். அப்பால் ஆஞ்சநேயர் சிறிது மூர்ச்சைதெளிந்து உயிர்வாடி உடல்சோர்ந்து மனங்கலங்கித் தளர்ந்து. ஓ அன்னத்துக்குச் சமமான சீதாபிராட்டியாரே! என்பார். ஓ பெண்களுக்கு அருங்கலநாயகமே! என்பார். ஓ என்தாயே! என்பார். கொஞ்சமாவது தெய்வ அருளில்லையே என்பார். ஐயோ இந்த அற்ப காரியத்தைச் செய்யக்கண்டும் பாவியாகிய என்னுடையமனது பின்னப்பட்டுப் போகவில்லையே என்பார். இப்படியாக ஆஞ்சநேயர் தன்பலமெல்லாம் ஒடுங்கி எழுந்திருந்துஇந்திரஜித்துவின்மேற்பாய நினைப்பார். மிகுந்த துக்கத்தினால் தள்ளாடிக் கீழேவிழுந்து பெருமூச்சுவிட்டு அழுதுபுலம்புவார். ஒருபக்கமாய்ப்போய் வருத்தப்படுவார். நெருப்புப் பறக்கும்படி மூச்சுவிடுவார். உடல் நடுங்குவார். தலைமேற் கையை வைத்துக்கொண்டு பூமியில்மோதி

விழுவார். இப்படியெல்லாம் துன்பப்பட்டுப் பின்னும் பலவாறாகப் புலம்பத்தொடங்கினர்.

கவி.

முடிந்ததுநந்தமெண்ணு
 மூவுலகிற்குங்கங்குல்
விடிந்ததென்றிருந்தேன்மீள
 வெந்துயரிருளின்வெள்ளம்
படிந்ததுவினையின்செய்கை
 பரந்ததுபாவிவாளால்
தடிந்தனன்றிருவையந்தோ
 தவிர்ந்ததுதருமமம்மா.

பெருஞ்சிறைக்கற்பினாளைப்
 பெண்ணினைக்கண்ணிற்கொல்ல
இருஞ்சிறகற்றபுட்போல்
 யாதுமொன்றியற்றலாற்றேன்
பருஞ்சிறையழுங்குகின்றே
 னெம்பிரான்றேவிபட்ட
அருஞ்சிறைமீட்டவண்ண
 மழகிதுபெரிதுமம்மா.

பாதகவரக்கன்றெய்வப்
 பத்தினிதவத்துளாளைப்
பேதையைக்குலத்தின்வந்த
 பிழைப்பிலாதாளைப்பெண்ணைச்
சீதையைத்திருவைத்தீண்டிச்
 சிறைவைத்ததீயோன்சேயே
காதவுங்கண்டுநின்ற
 கருமமேகருணைத்தம்மா.

கல்விக்குநிமிர்ந்தகீர்த்திக்
 காகுத்தன்றூதனுகிச்
சொல்விக்கவந்துபோனே
 னுயவித்துயர்செய்தாரை
வெல்விக்கவந்தேனுன்னை
 மீட்பிக்கவன்றுவெய்தின்
கொல்விக்கலந்தேனென்றோர்
 கொடும்பழிகூட்டிக்கொண்டேன்.

வஞ்சியையெங்குங்காணு
 துயிரினைமறந்தானென்னச்
செஞ்சிலையுரவோன்தேடித்
 திரிகின்றானுள்ளந்தேற
அஞ்சொலாளிருந்தாள்கண்டே
 னென்றயானரக்கன்கொல்லத்
துஞ்சினளென்றுசொல்லத்
 தோன்றினேன்றோற்றமீதால்.

அருங்கடல்கடந்திவ்வூரை
 யள்ளெரிமடுத்துவெள்ளக்
கருங்கடல்கட்டிமேருக்
 கடத்தொருமருந்துகாட்டிக்
குரங்கினியுன்னேடொப்ப
 தில்லெனக்களிப்புக்கொண்டேன்
பெருங்கடற்கோட்டந்தேய்வை
 யாயதென்னடிமைப்பெற்றி.

விண்டுநின்றுக்கைசிந்தப்
 புல்லுயிர்விட்டிலாதேன்
கொண்டுநின்றாளைக்கொல்லக்
 கூசினேனெதிரேகொல்லக்
கண்டுநின்றேனேநன்றென்
 கையினிற்கலத்தின்வெண்சோ
றுண்டுநின்றுய்யவல்லே
 னெளியெனேவொருவனுள்ளேன்.

ஐயோதெய்வமே! நம்முடைய எண்ணமானது இனி முடிந்துவிட்டதென்றும், திரிலோகத்தையும் மூடிக்கொண்டிருந்த பாவவிருளும் விடிந்து விட்டதென்று நினைந்திருந்தேனே. மறுபடியும் துக்கவிருட்டு நம்மை மூடிக்கொண்டதே. பாவவினையே மேலிட்டுப் பரவிவிட்டதே. பாவியாகிய இந்திரஜித்து சீதாபிராட்டியாகிய லக்ஷ்மியை வாளால் வெட்டிவிட்டானே. தர்மம் உலகத்தைவிட்டு குடிபோய்விட்டதுபோலிருக்கின்றதே. இத்தனை நாளாகப் பெருஞ் சிறையாகவிருந்த மஹா பதிவிரதையான ஒருபெண்ணைக் கண்ணுக்கெதிரேகொல்லுகிறதைப் பார்த்தும், அந்தச் சடாயுபகவான் சிறகறுந்துபட்டதுபோல நான் ஒருகாரியமுஞ் செய்யாமலிருந்து இப்போது வருத்தப்படுகின்றேனே. என் ஆண்டவராகிய ராமபிரானுடைய தேவியை நான் சிறைமீட்கும்படியாகச் செய்த காரியம் வெகு அழகாயிருக்கின்றது. இந்த மஹா பாதகனுகிய ராக்ஷசனுல் தெய்வப் பத்தினியும், தவத்திலிருந்தவளும், பரதந்திரஸ்வரூபியும், உயர்ந்த குலத்திற்பிறந்து யாதொரு குற்றமுஞ்செய்யாத மஹா உத்தமியும், பெண்ணென்பவளும், சீதையும், லக்ஷ்மியுமாகிய தேவியாரைத் தொட்டுச் சிறையில்வைத்த ராக்ஷசன் ஒருதப்பிதமுமில்லாமலே கொல்லுவித்ததைப் பார்த்திருந்த தர்மத்தின் ஸ்வபாவமும் வெகு கருணையுடையதாயிருக்கின்றது.

என்தாயே! நான் எல்லாச்சாஸ்திரங்களுக்கும் எட்டப்படாதிருக்கின்ற கீர்த்திமானுன ஸ்ரீராமமூர்த்தியினுடைய தூதுவனுகி அவர்சொன்ன சொல்லைத் தெரிவி

க்கவந்து, மறுபடியும்போய் அளவில்லாத இந்தத் துன்பத்தைச்செய்த சண்டாள ராக்ஷசர்களை இடங்காட்டி வெல்லும்படிச் செய்யவந்தேன். தேவரீரை மீட்பிக்க வரவில்லை. இப்போது கொடுமையாய் உம்மைக்கொல்லச் செய்யவந்தேனென்று ஒரு கொடும் பழியைக் கட்டிக் கொண்டேன். என்னுண்டவரும் வில்வீரருமான சுவாமியானவர் தேவரீரை எங்குங் காணுமல் துயரால் ஒருமரம்போலச் சோர்ந்து தேடிக்கொண்டு வந்தபோது, அவர் திருவுள்ளம் தேறும்படி அடியேன் சீதாபிராட்டியாரைக் கண்டேனென்று சொன்னேன். அப்படிச்சொன்ன நான் இப்போது ராக்ஷசன் கொல்லப்பார்த்தேன். ஐயோ! இனியந்த சுவாமியைக்கண்டு தேவரீர் பத்தினியானவர் மரணமாய் விட்டாரென்று சொல்லும்படி நேரிட்டேனே. இது தானே நான் பிறந்ததின்பலன்? அம்மா! யான் பெரிய சமுத்திரத்தைத்தாண்டி இந்த லங்கை நிரம்ப நெருப்பிட்டுக்கொளுத்தி, பிறகு கடலை அணைகட்டி யாவரையு மிதிற்கொண்டு வந்து சேர்த்துப் போராடவிடுத்து, அப்பால் மேருவைத் தாண்டி ஒருவருக்குங் கிடைக்க அருமையானசஞ்சீவி மருந்தைக் கொண்டுவந்து, குரங்குகளுக்குள்ளே உனக்குச் சமமான கைங்கரியசாலிகள் இல்லையென்று பேர்வாங்கிச் சந்தோஷித்தேன். இப்போதிப் பெருங்கடலில் கோஷ்டம் உரைத்ததுபோல ஆய்விட்டது என்னுடைய கைங்கரிய நிலைமை. என் அம்மணி! உம்மைவிட்டு நீங்கி அடியேனுடைய உடல் சிதைந்து அற்பவுயிர் கழியாமற் போனேன். உம்மைப் பிடித்துக்கொண்டு வந்துநின்ற அந்தத் திருட்டுப்பயலைக்கொல்லுகிறதற்கு பின்னிட்டுப்போனேன். உம்மையென்னெதிரே கொல்லும்படிப் பார்த்துக்கொண் டிருந்தேன். இப்படிப்பட்ட நான் கலத்திற்போட்ட வெண்சோற்றையுண்டு கொண்டிருந்து பிழைக்கும்படியாக இருக்கின்றேன். நான் சாமானிய மானவனே? நானுமொருவனு யிருக்கின்றேனே என்று நின்றழுதார்.

இவ்வாறழுத ஆஞ்சநேயரானவர் சற்று நிதானித்து, அந்தத் திருட்டுப் பயல் அயோத்திக்குப் போகிறேனென்றுசொன்னுன். அப்படியே போயுமிருக்கிறுன். நாமவனைத் தொடர்ந்து போனுல் நம்முடைய ஆண்டவனுக்கிங்கே நடந்த காரியந்தெரியாது. நாம்வந்ததும் அறியமாட்டார். இனி நாமென்னசெய்யலாம், என்று இரக்கமுற்றுத்தெளிந்து, நல்லது நடந்த காரியங்களை லோகநாயகரான சக்கரவர்த்தித் திருமகனுரிடத்தில் விண்ணப்பம் பண்ணிவிட்டு மாண்டுபோகின்றேன். இல்லாவிட்டால் அவர் ஆலோசனைபண்ணி நியமித்தபடிச்செய்கின்றேன். வேறே தீர்மானம் ஒன்றுமில்லை. என்று துணிந்து அழகிய பருத்த திருத்தோள்களையுடைய வீரசிகாமணியாகிய தசரதகுமாரருடைய திருவடிப்பக்கல் சேர்ந்து, ஆண் சிங்கத்துக் கொப்பான ஸ்ரீராமபிரானுடைய வீரகண்டாமணியை யணிந்த திருவடிகளிலே தேகமும் மனதும் கண்களும் உயிரும் வாடிப் பெருங்குரல் கொண்டழுது பெருமூச்சுவிட்டுக்கொண்டு, தேகமெல்லாம் கண்ணீரருவி யாருக ஓடும்படி பெருமலைபோல வீழ்ந்தார். அப்படி வீழ்ந்த ஆஞ்சநேயரைப் பெரியபெருமாள் கடாக்ஷித்து, அப்பனே! நடந்ததென்ன சொல்லுகவென்று கையைப்பற்றித் தூக்கினுர். அப்போதுஞ் சகிக்கமாட்டாமல் ஆஞ்சநேயர் மிகுந்த துன்பங்கொண்டுசுவாமி! வருத்தப்பட்டுக் கொண்டிருந்த சீதாபிராட்டியாரை அந்த ராக்ஷசன் கூரிய வாளாயுதத்தால் வெட்டியெறிந்து விட்டானென்று சொன்னுர்.

அப்படிச் சொன்னவர் உடனே பூமியில்வீழ்ந்து புரண்டுபுரண்டு அழுதுமூர்ச்சித்தார். தேஹம் அசையவில்லை. மூச்சுவிடவுமில்லை. கண்ணுஞ் சிமிட்டவில்லை. கண்களில் நீரும் சொரியவில்லை. ஒன்றும் பேசவுமில்லை. அழுது தேம்பவுமில்லை. அழுதுபூமியில்விழவுமில்லை.சாகவுமில்லை. இப்படி ஆஞ்சநேயருக்குண்டான துன்பமென்னத்தினு லென்று தேவர்களுக்குந் தோற்றவில்லை. பலவானுன ஆஞ்சநேயர் சொன்ன வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் வானரசேனைகளெல்லாம் துடித்து அறிவுசோர்ந்து, பெரிய வாடைக்காற்றில் அகப்பட்ட விருக்ஷங்களைப்போல நடுங்கி கற்பகவிருக்ஷம்போல் எழுந்தருளியிருக்கின்றஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் திருவடித் தாமரைகளின்மீது மலைகள் விழுந்ததுபோல வீழ்ந்தழுதார்கள். அப்போது

மகாவீரரான ஸ்ரீராமர் சித்திரப் பிரதிமை போல் அறிவுசோர்ந்து, தமது நண்பர்கள் முகத்தையும் பாராமல், இளையபெருமாள் கேள்விக்கும் பிரதியுத்தரங்கூறுமல், பித்தர்களுஞ்சகிக்கமுடியாத அபிமானமென்கிற வேலாயுதம் மார்பில்தைக்க உயிரிழந்தவனைப்போலப் பூமியிற்சாய்ந்து வீழ்ந்தார். அக்கால் இளையபெருமாள் இப்படிவீழ்ந்த ஸ்ரீரகுநந்தனருடைய தன்மையைப் பார்த்தும், தங்களுக்கு நேரிட்ட வெட்கத்தை நினைத்தும், தலையெடுத்தோங்கின தருமம் மறுபடியும் அழிந்து விட்டதேயென்று ஆலோசித்தும், வாய்ச்சொல்லும் மனமும் கண்களும் திருமேனியும் சோர்ந்து வாடி; தாயையிழந்த கன்றுக் குட்டியைப்போற் பூமியில் வீழ்ந்துவிட்டார். பிறகு எல்லாம் அறியத்தக்க சுஜ்ஞானமுள்ளவரான விபீஷணுழ்வானும் நடுங்கி, சம்பவித்த வருத்தத்தின் உண்மையைத்தெரிந்துகொள்ளாமல், அந்தச்சிறுபயல் இவர்களை நம்மால் ஜெயிக்கமுடியாது நமக்கு இவ்வளவு நாசமும் இவளால்தான் சம்பவித்தது என்று நினைத்துக் கொன்ருலுங் கொல்லுவான். என்பதாக மனதிற் சந்தேகங்கொண்டு, குளிர்ந்த நீரைக்கொண்டு சுவாமியின் திருமுகத்தில் தெளித்து, திருமேனியைத்தொட்டு உணர்வுண்டாகும்படியான எல்லாவுபாயங்களையுஞ் செய்து, திருவடித்தாமரைகளையும் திருக்கரங்களையும் திருமேனியையும்பற்றிவருடினுர். அம்மாத்திரத்தில் வேதங்களுங்கண் டுணரவரியவரான பரவஸ்துவானவர் கண்களை விழித்து சுவாசம் விட்டார். அப்போதுஇளையபெருமாள் ஊற்றெடுத்துக் கண்ணீரொழுக மனமழிந்து உற்றதை நினைத்து ஆற்றமாட்டாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தாரேயன்றி, அந்தப்பிரமையைமாற்றவேயில்லை.தம்முடைய மானத்துக்கு உயிரேமுடிவாக ஹீனம்வந்திருந்தும், தமையனைத்தேற்றும்படி நினைத்துத் தமது சில அபிப்பிராயங்களைச் சொல்லத்தொடங்கினுர்.

சுவாமீ! தனக்கழிவுகாலம் ஊழ்விதிப்படிவந்து சம்பவித்தால் அற்பனுயிருக்கின்றவன் துக்கசாகரத்தில் மூழ்குவது சுபாவம். தேவரீருக்கு இதுபழிப்பாகுமல்லவா? நம்முடையகுடிக்கே ஒரு குறைவுவந்தாலுமென்ன? தர்மத்துடனேகூட இந்தமூன்று லோகங்களையும் நாசப்படுத்திப்போடாமல் அறிவில்லாதவர்களைப்போல நாம் மாண்டு போய்விடலாமோ? ஐயனே! பிராட்டியாரோ பெண்பிள்ளை. மேலும் ஒருதவியும் இல்லாதவள். தவப்பெண். தர்மபதிவிரதா தெய்வம். அல்லாமலுந் தேவரீருடைய தேவி. சாக்ஷாத் மகாலட்சுமி. இப்படிப்பட்ட சீதாதேவியாரை மகாசண்டாளனை ராக்ஷசப்பயல் கையால் தொட்டுக் கொன்ருனேயானுல், இதைக்கேட்டும் வருத்தப் படவேண்டியதென்னத்திற்கு? இப்படிவருத்தப்படுவது இன்னமும் உயிர்வைத்துக் கொண்டிருக்கவோ? அல்லது தேவரீருடைய கிருபையினுலோ? இனி தமக்குத் தர்மத்துடனே சிநேகமும் உண்டாகுமோ? சுவாமி! இனி நமக்கு ராக்ஷசர்களென்ன? தேவர்களென்ன? பிராமணர்களென்ன? குருக்கள்மாரென்ன? மகாரிஷிகள்தாமென்ன? இனி வேதத்தின்படியான ஆசாரமென்ன? துஷ்டர்களால் வல்லமையுடையவர்களாகி யோக்கியர்கள் அழிந்துபோவார்களேயானுல், இந்த மூன்றுலோகத்தையும் அக்கினியாற் சுட்டெரிக்காமற் சும்மாயிருப்பதென்னகாரணம்?இனிஇந்த ஏழுலோகங்களும் ஒழுங்காகத் தர்மங்களைச் செய்துகொண்டு விர்த்தியாகும்படி இருக்கின்றனவோ? தேவர்கள் இன்னமும் பிராணனுடனே இருக்கவோ? தர்மமும் இன்னம் இருக்கின்றதாக நாம்வணங்கிக்கொண்டிருக்கவோ? இன்னமும் மழையும்பெய்ய வேண்டுமோ? நாம் இன்னும் சோர்ந்து வீழ்ந்து அழுதுகொண் டிருக்கின்றதோ? ஆ! ஆ! நம்முடைய வில்வல்லமை வெகு அழகாயிருக்கின்றது. ஓ தயாநிதி! இவ்விலங்கையில் நுழைந்து ஒருக்ஷணத்துக்குள்ளாக அதைச் சாம்பலாக்கிவிட்டு, அந்த ராக்ஷசப்பயல் போன திசைகளையெல்லாம் சுட்டெரித்து, தேவலோகங்களையெல்லாம் கொளுத்தி முடித்துவிடக்கூடிய நாம் வெறுங்கையைத் தலையின்மேல் வைத்துக்கொண்டு எளியவர்கள்போலத் துக்கமுற்றுழைப்போமானுல், உலகத்திற்குச் சிறுமையாய் முடிந்துபோகாதோ? சுவாமி! அயோத்தியிலும் இப்படியே தர்மத்தைப்பார்த்து இராஜமுடியைத் துறந்துவிட்டுக் காட்டிற்குவந்து, சீதாபிராட்டியாரை அந்த வஞ்சகன் பிடித்துக்கொண்டுபோக வரம்பைக்

கெடுக்காமலிருந்து உயிர் வைத்துக்கொண்டிருந்தோம். இப்போது இவ்விடத்திலும் இப்படிப்பட்ட துன்பத்தையடைந்து சும்மாய் இருப்போமானால், ராக்ஷசர்கள் நம்முடைய எளிய தன்மையைப்பார்த்து நம்மைச் சிறையில் விலங்கிட்டுவைத்து அடிமை செய்யும்படியாகவுஞ் சொல்லமாட்டார்களா? நாமிப்போது நம்முடைய ஆவியைப் போக்குவோமேயானால், சீதையை வாளினாலே கொன்றவர்களைக் கொல்லும்படியானவல்லமை இல்லாதவர்களாய் வெட்கப்பட்டிறந்துபோனார்களென்றுசொல்லுவார்கள். ஆகையால் தர்மத்தைப் பார்க்கிறதற்கு இதுகாலமல்ல. தேவரீர் அறிவில்லாதவர்களைப் போலத் தாமசித்திருக்கின்றது என்னகாரியம் என்று சொன்னார். இப்படி இளையபெருமாள் சொல்ல சூரியகுமாரரான சுக்கிரீவமகாராஜன் கனவுகண்டவரைப்போலத் திடீரென் றெழுந்திருந்து, ஓ கருணாநிதி! இனி யாலோசித்துக்கொண்டிருக்கலாமோ? விளக்கில் வீழ்கின்ற விட்டிலைப்போல இராவணனுடைய அரண்மனையிற்போய் அவனுடைய அகன்றமார்பிற் குத்தக்கலாம் வாருங்கள். இலங்கையைப் பேர்த்துப் பாவிகளாகிய ராக்ஷசர்களென்றுபெயருள்ளவர்களையும், அவர்கள் பெண்டுகளையும் பாலுண்கின்ற குழந்தைகளையும், அவர்களுக்குப் பந்துக்களாயிருக்கின்றயாவரையும் ஒருமிக்கக்கொன்றுவிடுவோம். அதற்காகத் தேவர்கள் நம்மேல் யுத்தத்திற்கு வந்துவிலக்குவார்களேயானால், அவர்களுடைய சொர்க்கலோகத்தையும் பேர்த்துப் பூமியிற்போட்டு விடுகிறோம். தர்மத்தையினிக் கெடுத்துவிடுகிறோமென்று புறப்படுவதானால் நாமிங்கே யிருந்து வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதென்னத்துக்கு? இந்த லோகமூன்றையும் அழித்துக் காற்றாடியைப்போலச் சுற்றித் திரிந்து நமக்குதவி செய்யாமலிருந்த தேவர்களுடைய வமிசங்களையுங் களையறுத்து விடுகிறோம். என்று லங்கையின்மேற் பாய்கிறதற்கெத்தனித்தார். மற்ற வானர வீரர்களும் நம்முடைய ராஜனுக்கு முன்னதாகப் பாய்ந்துபோய் இராக்ஷசர்களையெல்லாம் அவர்கள் வசிக்கின்ற வீட்டுடனே பெயர்த்து இன்றைக்கே பூமியிலறைந்து கொன்றுவிடுகிறோமென்று புறப்பட்டார்கள்.

அப்போது ஆஞ்சநேயர் இன்னொரு காரியமிருக்கின்றதென் றெழுந்து, அதிக வஞ்சகனான இந்திரஜித்து அயோத்தியின் மீது புறப்பட்டுப் போனானென்றுஞ்சொன்னார். தாய்மார்களுந் தம்பிமார்களுந் தவஞ்செய்கின்ற அயோத்தியா நகரத்துக்கு இந்திரஜித்துப் போயினனென்று சொன்னவார்த்தை ஸ்ரீராமருடைய திருச்செவியில் நுழைந்தவுடனே, முன்னிருந்தவேதனைக் காடானது பின்வந்த துன்பமாகிய நெருப்பினால் வெந்து சீதையினிடத்திலுண்டான துக்கநீங்கினார். ஆழ்ந்த திருப்பாற்கடலில் நித்திரை நீங்கி வந்ததுபோல முன்னைய துன்பக்கடலிலிருந்து கரையேறி, கொழுந்துவிட்டெரிந்துகொண்டுபுறப்பட்ட கோபாக்கினியும் பயமு மனதிலழுந்தஉளம்வாடி, உளுந்துருளும்அவ்வளவுபொழுதும் தாமசிக்காத முயற்சியையுடையவராயிருந்தும் அக்காலொன்றுந் தோற்றாமல் மயங்கி இவ்வாறு பிரலாபிப்பதாயினார். ஐயோ! என்பாபத்தீயான சீதையுடனேமாத்திரம் தீர்ந்துவிட்டதா இல்லையே சூரியவமிசத்தை வேறொடு முடிப்பதாக மூண்டுகொண்டதே. இன்னம் இதுயாரரைப் பற்றப்போகிறதோதெரியவில்லையே. ஆ! ஆ! இதை மாற்றிவிடும்படியான முயற்சியும் உண்டாகுமோ? என் தம்பிமார்களும் பிழைப்பார்களோ? நினைக்கிறதற்கு முன்னாகப் போகும்படியான புஷ்பக விமானத்திலேறிப் போனானே. தன்னுடைய கொடுஞ்செய்கையை ஒரு க்ஷணத்துள்ளாக முடித்துக்கொண்டு வந்துவிடுவானே. ஐயோ! நான் பிறந்தவீடும் அங்கே சாம்பலாய்ப்போய்விட்டது. இங்கே பெண்சாதியும் மாண்டுபோனாள். இன்னம் எனக்கு என்ன சம்பவிக்கப் போகிறதோ தெரியவில்லை. நான் மாண்டுபோகாமலிருக்கின்றேன். என் தீமையானது என்னையீன்ற தகப்பனாருக்கும் சடாயுவென்கிற பிதாவுக்கும் தனிமையாயிருந்த சீதைக்கும் இயமனைக்காட்டிவிட்டும் அவ்வளவோடு முடியாமல், அந்த யமனுக்குப் பேதைப்பெண்களாய்ப் பிறந்து எங்களைப்பெற்ற தாய்மார்களையும் யாதொருகுற்றமுஞ்செய்யாத அருமைத் தம்பிமார்களையும் ஊராரையும் காட்டிவிட்டதே. ஐயோ! பரதசத்துருக்கர்கள் தங்களுக்கு இப்படிவருமென்று முன்னறி

ந்தவர்களல்லவே. அப்படி ஒருவேளை இந் தச் சண்டாளனேடு எதிர்ப்பார்களே யா ஞல், நாகபாசத்தாலே கட்டியும் பிரம்மா ஸ்திரத்திஞல்ஏவியும் கொன்றுவிடுவானே அக்காலந்தப் பக்ஷிராஜஞன கருடன் வர மாட்டானே. சஞ்சீவி மருந்தைக்கொண்டு வருகிறதற்கு இந்த வாயுகுமாரனும் அங்கி ல்லையே. வேறே யார் அவர்களுக்குச் சஞ் சீவியைக் கொடுக்கப்போகின்ருர்கள்? அப் பா ஆஞ்சநேயா! ஆகாச மார்க்கமாக அயோத்திக்குச் சீக்கிரமாகப்போய்ச் சேரு ம்படியான உபாயமுண்டானுற் சொல்லுக இங்கிருக்கிறதெல்லாஞ் செத்தாலுஞ் சாக ட்டும். இலங்கையில் சண்டையுநிற்கட்டும் அவ்விந்திரஜித்தென்கிற துஷ்டனுடைய கண்களைக் காகங்கள் தின்னும்படியாகச் செய்தபின்பு மறுபடியும்வந்து எனதெண் ணத்தை நன்ருய் முடித்துக்கொள்ளுகிறே னென்று சொல்லினர்.

இப்படி ரகுநந்தர் சொல்லக்கேட்ட இளையபெருமாள் சுவாமியைநமஸ்கரித்து ஐயனே! பரதாழ்வானை யுத்தத்திற் கட்டும் படியாக நாகபாசத்தை விடுகிறதற்குத் தக்க வன் இவ்விந்திரஜித்துவோ? அந்தப் பர தாழ்வான் இந்தச் சத்துருக்களுக்கு முன் பாக வருவாரேயானுல் இந்த மூன்றுலோ கமுந் தீய்ந்து போகமாட்டாதோ? தேவ ரீர் துக்கசாகரத்தில் மூழ்காதேயும். அடி யேன் விண்ணப்பத்தைக் கேட்டருளும். ஆகிலுமிந்தத் துஷ்டவஞ்சகன் பிரம்மா ஸ்திரத்தைக்கொண்டு கட்டித் தள்ளுகிற தற்கு அடியேனென்று நினைத்தருளினீ ரோ? பரதாழ்வானை அப்படி எண்ணவே ண்டாம். அவ்விந்திரஜித்து அவர் கைப் பாணத்தால் அவனுடைய சேனைகளுடன் மடிந்து பூமியில் தலைகீழாய்க் குத்துண்டு விழப்போகிறதைத் தேவரீரே கடாக்ஷித் தருளப்போகிறீர். என்று வெகுகோபத்து டன் சொன்ஞர். அப்போது அநுமான் கைகூப்பிக்கொண்டு, சுவாமி அடியேன் சிறுதோளின்மீதுதேவரீருடையதிருக்கை க்குத்துணையாகவிருக்கின்றகோதண்டத்து டனே ஏறியருளும். வாயுதேவனும் பின் னிடும்படி இந்த க்ஷணத்திலேதானே அ யோத்தியாபுரியைச் சேருகிறேன். இன்னு மிடமுண்டா யிருக்குமானுல் அந்த தட்ச ணத்திலே எல்லாத் திக்குகளையுஞ் சுற்றி வருகிறேன். அதுவுமல்லாமல் அடியேன் மாத்திரமேபோய் அந்தப்பகையாளியைக் கொன்று என் பகையையுந் தீர்த்துக்கொ ள்ளுகிறேன். ஓ என் ஆண்டவனே! அடி யேன் அப்போதே அவனை ஏன்கொல்ல மாட்டாமற் போனேனென்ருல், சீதாபிரா ட்டியாரைக் கொல்லுகிறேனென்று பிடித் துக்கொண்டு வந்தான். அவனுக்கு நீதி வார்த்தையைச் சொல்லி விலக்கிக்கொள் ளலாமென்று நினைத்தேன். அவன் அக்கி ரமமாய்ப் பேசிக்கொண்டிருந்தான். அப் பால் வாளால்வீசிவிட்டான். அதைப் பார் த்துச் சகிக்காமல் மூர்ச்சையாய் பூமியில் விழுந்து உணர்வற்றுப்போனேன். அப் போது அவன் வேகமாய்ப் போய்விட் டான். அப்படிக்கில்லாமற் சற்றே நிற்பா ஞனுல் அந்தத் துஷ்டனுகிய ஈனன் உயிர் தப்பிப்போவானே? சுவாமி! தாமசிக்கவே ண்டியதென்ன? துழாய்மாலை தரித்ததிருத் தோளை யுடையவர்களான நீங்களிரண்டு பேரும் அடியேன்மீது ஏறியருளுங்கள். அவனுடைய புஷ்பகவிமானம் அயோத் திக்குப்போய்ச் சேருவதற்குமுன்பாக அடி யேன்போய்ச் சேர்ந்து அவன் வரவுக்கெ திர்பார்த்துக்கொண் டிருக்கிறேனென்ருர். இவையனைத்துங் கேட்ட ராமலக்ஷ்மணர் கள் நல்லதப்படியே ஏறுகிறேமென்று புறப்பட்டார்கள். உடனே விபீஷணழ் வான் தண்டன்சமர்ப்பித்து சொல்லுகிருர் சுவாமி! அடியேனுக்கொரு விண்ணப்ப மிருக்கின்றது. அதாவது அதிக துக்கத் தால் நடுங்கி மனந்தேறமாட்டாதசெய்கை யால் அடியேன் மயங்கித் திகைத்துப்போ ய்விட்டேன். இப்போது அடியேனுக்குக் கொஞ்ச நினைவு தோன்றினது. அவன் செய்தது மாயமென்று சந்தேகிக்கிறேன். மகா பத்தினியாகிய லோகமாதாவை அந் தப்பாவி கையால்தொட்டுக் கொல்லுவா னுனுல், இந்த மூன்றுலோகமும் வெந்து சாம்பலாய்ப் போகமாட்டாதா? அஃதப் படியிருக்க அவன் அயோத்தியை நோக் கிப்போனது தந்திரமா யிருக்கின்றது. அ தைச் சற்று நேரத்திற்குள்ளே தெரிந்து கொள்ளலாம். அடியேன் இமைப்பொழு துக்குள்ளாகச் சென்று பிராட்டியாரிருக்கு மிடம்போய் ஆராய்ந்து தேடிப் பார்த்து, உள்ளத்தை அறிந்துவந்துசொன்னபிறகு

ஆகவேண்டியதைச் செய்யலா மென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். அதற்குப் பெரிய பெருமாளும், ஆம். இது தகுதியானதுதான் என்று சொன்னார். பின்பு விபீஷணாழ்வான் வண்டினுருவத்தைக்கொண்டு ஸ்ரீராமபிரானுடைய திருவுளவேகத்தைப்போல அந்தரமார்க்கமாகப்போய் அசோகவனத்தைச் சேர்ந்தார். ஆவியுண்டோ இல்லையோ என்னும்படியான துயரத்துடனெழுந்தருளியிருக்கின்ற சித்திரப்பிரதிமையை யொத்தவளும், என்னுடைய துக்கத்தைஎன்னுயிருடனே தீர்த்து விடுகின்றேனென்று சிந்தைகொண்டிருந்ததைச் திரிசடை சமாதானஞ் சொல்ல மறுபடியும் தேறி வந்தபோது சப்தமேகங்களும் உகாந்த காலத்திற் குமுறுவதுபோல வானரவீரர்கள் சப்தித்த ஓசையைத் தேவாமிர்தம்போலக் கேட்டு உயிர் தரித்திருந்தவளுமாகிய பிராட்டியாரைக் கண்களாரக் கண்டு, இந்திரஜித்து வஞ்சனை செய்துவிட்டுப் போனானென்று நினைத்து அளவில்லாத சந்தோஷத்தை யுடைய மனத்தராகித் துக்கமற்று நின்று, இந்திரஜித்து நிகும்பலைக்குப்போய் வேள்விசெய்ய யத்தனித்தானென்பதை இராவணனுடைய சேனைகள்கூட்டங்கூட்டமாக யாகக் கலப்பையும் விறகுகளும் நெய்யும் அபாரியாய்க் கொண்டு போகிறதைப் பார்த்து நிச்சயித்தார்.

இப்படி நிச்சயித்தவர் பின்பிவன்இந்த யாகத்தை முடிப்பானேயானால் இராக்ஷசர்களுக்கு ஒரு குறைவுமில்லாமல் செத்தவர்களையெல்லாம் பிழைப்பிப்பானென்று ஆலோசித்து, தேவர்களையெல்லாம் இம்சை பண்ணின இவ்விந்திரஜித்துத் தந்திரஞ் செய்த எண்ணம் இப்படியாகவாயிருந்தது நன்றாயிருக்கின்றது. என்று தீர்மானித்துக்கொண்டு உடனே திரும்பி, தமது நிசரு பத்தோடுவந்து ஸ்ரீராமருடைய திருவடித் தாமரைகளில் தமது முடியைத் தாழ்த்தி வணங்கி, சுவாமி சக்கிரவர்த்தித் திருக்குமாரரே! உலகமாதாவாகிய பிர்ாட்டியார் க்ஷேமமாகஎழுந்தருளியிருக்கின்றாள். அடியேன் கண்ணாரக்கண்டேன். அருந்ததிக்குச்சமமான மஹாபதிவிரதையாகிய அந்த அம்மாளுக்கு அழிவுண்டாகுமோ? அந்த ராக்ஷசன் நம்மை வருத்தப்படும்படியாக மாயஞ்செய்துவிட்டு நிகும்பலைக்குச் சென்றுயாகத்தை முடித்துக்கொண்டு நம்மைக் கருவறுக்க யத்தனப்பட் டிருக்கின்றான். இதுதான் நடந்த சேதியென்று விண்ணப்பஞ்செய்தார்.

இப்படி விபீஷணாழ்வான் சொன்னவுடனே ஏழுலோகங்களும் சேர்ந்து வாழ்த்தினாற்போலச் சப்தசமுத்திரங்களும் ஒருமிக்கப்புறப்பட்டுச் சப்திக்கின்ற சப்தமோ அல்லவோ வென்று தேவர்களுஞ் சந்தேகிக்கத் தக்கதாக வானரக்கூட்டங்களெல்லாம் கர்ஜ்ஜித்து மலைகளெல்லாம் பொடிப்பொடி யாகும்படி எழுந்து கூத்தாடினதுகள். வீரசிகாமணியாகிய ஸ்ரீராமபிரானும் சீதாபிராட்டியாரைப் பற்றி யுண்டான சந்தேகம் நீங்கி, விபீஷணாழ்வானைத் தமது தேகமும் ஆசையும் உயிரும் ஒன்றுசேரத் தழுவி, ஐயா விபீஷணா! இந்தத் துன்பம் போகிறது ஒரு அருமையோ? என்பங்கில் நீ யிருக்கிறாய். தெய்வமிருக்கின்றது. வாயு புத்திரனிருக்கின்றான். நாம்செய்த தவமுமிருக்கின்றது. வேதமும் பொய்த்துப் போகவில்லை என்று சொல்லியருளினார். அதுகேட்ட விபீஷணாழ்வான் சுவாமியை வணங்கி, ஓ கருணாநிதீ! இந்திரஜித்து அந்த நிகும்பலை யாகத்தை முடிப்பானேயானால் அவனை யாரும் வெல்லமாட்டார்கள். ராக்ஷசர்களுக்கே ஜெயமுண்டாகிவிடும். ஆகையால் தேவரீர் நியமனஞ்சாதித்தால் இளையபெருமாளுடனே போய் அவனுயிரை வாங்கி, அவன் செய்துகொண்டிருக்கும் யாகத்தையும் சிதைத்துவிடுகிறேனென்றார். அதைத் திருச்செவிசாத்தின சக்கரவர்த்தித் திருக்குமாரர், நல்லது அப்படியே செய்யுங்கள். என்று சொல்லிப் பின்னுஞ்சொல்லுகின்றார்.

மாயாசீதைப்படலம்-முற்றிற்று.

## நிகும்பலைப்படலம்.

ராமமூர்த்தி இளையபெருமாளை ஆலிங்கனஞ்செய்து, தம்பீ லக்ஷ்மணா! அவ்விந்திரஜித்து உன்மேல் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிப்பானே யானால் அப்போது நீ அந்தப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து அதைக் கண்டித்துவிடு. அப்படிக்

கில்லாமல் நீ அந்த அஸ்திரத்தைத் தொடுத்துவிடாதே. அப்படி தொடுத்து விட்டாயேயானுல், தேவலோகம் பிரம்மலோகம்பூலோகமெல்லாம்நாசமாய்விடும். ஆனதால் முந்தித்தொடுத்துவிடாதே. மேலும் பாசுபதாஸ்திரம்-நாராயணுஸ்திரம்இவைகளை அவன் உன்மேற் பிரயோகிப்பானேயானுல், அவைகளையும் அந்தந்த அஸ்திரங்களாலே நீக்கும்படியான விதத்தைசெய்து நீக்கி, பிறகுன் வில்வித்தையின் வல்லமையிஞலே அந்த இந்திரஜித்துவின் ஆவியை உண்டுவிட்டு வரக்கடவாய். அப்பா பிரதாபசாலியே! அவனென்னென்ன மாயங்களைச்செய்கிருனே அதுகளையெல்லாம் குறிப்பாய்ப் பார்த்துக்கொண் டிருந்து, அவைகளையெல்லாம்வேரறக்களைந்துவிடு. விசாலமான தர்ம சிந்தையைக்கொண்டு பலவகையானபெரும்போர்களையுஞ்செய்து வருத்தப்படாமல் சமயம்பார்த்துத் தேவர்களுக்குக் கூற்றுவனுய்ப் பிறந்திருக்கின்ற அந்த இராவணியைக் கொன்றுவிடு.

ஐயா யமனுக்கொப்பாயிருக்கின்ற லட்சுமணு! அவன் பதறிக் கோபங்கொண்டு அநேககோடி பாணவருஷங்களைப்பெய்து வேகத்துடனே உன் பாணங்களை விலக்கினபோதும், அல்லது மெலிந்தபோதும் முன்னுல் அவன் அம்புபூட்டி யெய்கின்ற வில்லை வெட்டி யெறிந்துவிட்டுப் பிறகு அவனைக்கொன்றுவிடு. அவன் அம்புதொடுக்கிறதற்கு முன்பாக உன்வில்லில் அம்பைப் பூட்டிக்கொண்டு, அவன் எந்தத் துறைகளில் பாணங்களைப் பிரயோகிக்கிருனே அந்தந்தத் துறையிலேயே அவைகளை நீக்கிவிடு. அவன் வேகமாய்ப் பிரயோகித்தாலும் தாமசமாய்ப் பிரயோகித்தாலும் நீ பராக்காயிராமல் அவைகளைக் குறிப்பாகப் பார்த்து, அந்தந்தவேகத்துக்குத்தக்கபடி நீயும் அஸ்திரப் பிரயோகம் பண்ணுக. என்றிந்தச் சமஸ்தவண்டங்களும்தாமாயிருந்தும் தம்முடைய அளவில்லாத குணப்பிரபாவங்களைத் தாமே அறியமாட்டாத சகல காரணபூதரான ஸ்ரீயப்பதியானவர் அவருக்குவேண்டிய எல்லா உபாயங்களும் அந்த உபாயங்களுக்கு வேண்டியமந்திரங்களும்உபதேசித்து, அவைகளை வினயத்துடனேற்றுக்கொண்ட சிரேஷ்டராகிய அவ்விளைய பெருமாளைக் கடாக்ஷித்துப் பின்னும் சொல்லுகின்ருர். ஓ தனுர்வேத தேர்ச்சியையுடைய லக்ஷமணு! இதோ நான் பிடித்துக்கொண் டிருக்கின்ற வில்லைப்பார். இதுமிகுந்த பலமுள்ள வில்லாக்கும். இதை நீமிகுந்த தைரியத்துடன் பிடித்துக்கொள். இந்த வில்லினுடைய வரலாற்றைச் சொல்லுகிறேன் கேள். ஓ பதருத வில்வீரனே! தமிழ்ப் பாஷையை வெளியிட்டதனுல் தமிழ் முனியென்று பெயர்பெற்ற அகஸ்திய மகாமுனிவர்முன்னமிதைப்பற்றிச் சொன்னதுகளை யெல்லாம் நீசித்திரப்பாவைபோலிருந்து விவரமாய்க் கேட்டிருக்கின்ருயல்லவா? ஆயிரந் திருத்தோள் ஆயிரந் திருமுடியையுடைய விராட்டாகிய மஹாவிஷ்ணுவினுடைய திருமேனியிற் பிறந்த பிரஹம்மாமூட்டிய யாகத்திஞலே பஜித்துப்பெற்ற வில்லாக்கும் இது. என்று சொல்லித் தம்முடைய கவசத்துடனேகூட அவ்வில்லையும் தம்முடைய அம்பருத்தூணியுங் கொடுத்து, இன்னும்வேண்டிய பல உறுதிகளை யுபதேசித்து, மேருமலையைப்போலப் பிரகாசிக்கின்ற இளையபெருமாளைக் கட்டித் தழுவினுர். அப்படித் தழுவினவுடனே சுவர்க்கலோகத்தில்வசிக்கின்றவர்களானதேவர்களெல்லாம் இனி யெங்களுடைய துக்கமெல்லாம் நீங்கிப் போய்விட்டதென்று ஆனந்தித்தார்கள். அக்கால் லக்ஷ்மணர் தேவர்கள் பல்லாண்டு கூறவும், தேவஸ்திரீகள் வாழ்த்தி ஆசீர்வதிக்கவும், பார்வதியை இடது பாகத்திலுடைய சந்திர சடாமகுடதாரியாகிய சங்கரமூர்த்திதிரிபுரமெரிக்கக் கோபித்துப் புறப்பட்டதுபோல இந்திரஜித்தாகிய பகைவன்மேல் யுத்தத்திற்குப் போகிறதற்காகத் தோன்றினுர்.

அப்போது ஸ்ரீராமர் அப்பா வில்வீரசிகாமணியாகிய தம்பீ! மாருதி முதலான வானரவீரர்களை உனக்குத் துணைவர்களாக அழைத்துக்கொண்டு போய் வருவாயாகவென்று விடைகொடுத்தருளினுர். அக்கால் தர்மசீலராகிய இளையபெருமாள் தமது ஆசாரியராகிய பெரிய பெருமாளுடைய திருவடித் தாமரைகளைத் தமக்குள்ளும்புறத்துமாகத் திருமுடியிற் சூடிக்கொண்டு, அழகிய மேகம்போலத் திருமேனியையுடையவராய்ப் பிரிவையெண்ணி யழுது கண்ணீர் பூமியிற் புரண்டோடும்படி நெஞ்

சழிந்து நிற்கின்ற அப்பெரிய பெருமாளை மும்முறை சுற்றிவந்து தெண்டனிட்டு, வஜ்ரமலைபோலிருக்கின்ற வில்லை இடது கையிற்பற்றிக்கொண்டு, இந்திரஜித்துவின் மேல் அதிக கோபங்கொண்டவராய் அவனுடைய தலையைக் கொண்டு வருகிறேன் என்று சுவாமியினிடத்தில் விண்ணப்பம் பண்ணிப் புறப்பட்டுப்போயினர். இப்படி காட்டிலும் தம்மைப் பிரியாமல் எல்லாக் காரியங்களையுஞ் செய்த திருத்தம்பியார் மிகுந்த வேகத்துடன்சென்றபோது, தேகத்தைவிட்டுப் பிரியாத உயிரைப்போன்ற அவர் தமது திருக்கண்களுக்கு மறைவானவுடனே குழந்தையா யிருந்தபோது தாம் விசுவாமித்திரருடைய யாகத்தைக் காக்கிறதற்காகப்போன அன்றையதினம் தமது பிதாவாகிய தசரதமகாராஜா எந்த நிலையிலிருந்தாரோ அந்த நிலையைத் தாமுமடைந்திருந்தார். உடனே வானரசேனைக் கதிபதியான சுக்கிரீவமகாராஜா முதலான வானரவீரர்கள் எரிகின்ற கொள்ளிக்கட்டையைக் கையிலுடையவர்களாகி, காட்டு வழிகளும் மலைகளுங் கிழிபடும்படியாக அதிகவேகத்துடனே போய் நிகும்பலையைச் சேர்ந்தார்கள்.

இவ்வாறுசென்று சேர்ந்த வானரவீரர் முதலாயினோர் அங்கே ஓராலிலையின்மீது லோகங்களையெல்லாம் தமக்குள்ளேயொடுக்கின ஒரு காரணவஸ்துவானவர் சயனித்துக்கொண் டிருக்கிறதுபோல இந்திரஜித்திருக்கின்றதையும், அந்த வஸ்துவின் திருமேனி சுற்றிலுமிருந்த ஆலிலையைப் போல இராக்ஷசக் கருங்கடல் சூழ்ந்திருக்கின்றதையும், பின்னுஞ் சில ராக்ஷசசேனைகள் சக்கரயூபஸ்தம்பம் நாட்டிக்கொண்டு காவலா யிருக்கின்றதையும், அந்தத் துஷ்டன்மத்தியில் ஓமாக்கினியுடனே கூடியிருந்துவடவாமுகாக்கினியுடனே கருங்கடலானது நின்றதுபோலிருக்கின்றதையும் நீர்க்கடலுடனேமற்றகடல்களெல்லாஞ்சூழ்ந்து கொண் டிருக்கின்றதுபோல மேகங்களையெல்லாந் துரத்தி உயர்ந்திருக்கின்ற தேர்களும் குதிரைகளும் கொடிப்படைகளும் ஆயிரகோடி அணியணியாய் ஆயிரயோசனை விஸ்தாரமாக விரிந்திருக்கின்றதையும் இன்னும் பொற்றேர்களும்-குதிரைகளும்-யானைகளும் காலாள்களும் அளவில்லாமல் இந்திரஜித்துவின் ஆஞ்ஞையின்படி பற்பலயூகமாய் லோகத்தைவளைந்து ஆயிரங் கடல் சூழ்ந்திருக்கின்றதுபோ லிருக்கின்றதையும் கண்டார்கள். இப்படிச்சூழ்ந்திருக்கின்ற ராக்ஷசர்களுடைய மேனியின்மீது ஆகாசத்தையெட்டிக் குத்தும்படியாக நெறித்துக்கொண் டிருக்கின்ற செம்மயிர்க் காடானது, நீலமேகத்துக் கொப்பாகிய திருமேனியையுடைய ராம மூர்த்தியானவர் சமுத்திரத்திரத்தின்மீது அக்கினியாஸ்திரங்களைப் பிரயோகித்தது போலக் காணப்பட்டது. அந்த ராக்ஷசர்கள் இளைய பெருமாளையும் வானரவீரர்களையும் பார்த்தும் தங்கள் எஜமானனுடைய உத்தரவின்றி முந்தலாகாதென்றிருந்த அவர்கள் வில்லுகளெல்லாம் குணத்தொனி யில்லாமல், மேகத்தில் தோன்றிய இந்திர தனுசைப்போலிருந்தன. அவர்கள் சங்கங்கள் சமுத்திரத்தில் வாழும் உயிர்களைப்போல நிச்சப்தமா யிருந்ததுகள். பேரிகைகள் கர்ஜ்ஜிக்காத மேகங்களைப்போல ஒளியாமலிருந்ததுகள். அக்கால் மிகுந்த பலம்பொருந்திய ஸ்ரீராமருடைய நியமனத்தால் ஒலியடங்கிப்போன பெருங்கடல்போலிருந்த இராக்ஷசசேனையை மெலிவடையாத வானரவீரர்கள் நெருங்கி, ஆகாசமுங் கிழிபட்டுப்போகும்படி ஆரவாரித்தார்கள். அப்படிச்சப்தித்த வானரசேனைகளுக் கெதிராக இராக்ஷசர்களும் சப்தித்து வானர வீரர்களைவந்து சூழ்ந்து கொண்டார்கள். பேரிகைகள் முழங்கினதுகள். வானரவீரர்கள் மரங்களையும் மலைகளையுங் கொண்டு இராக்ஷசக் கடலை தூர்த்துவிட்டார்கள். இராக்ஷசர்கள் சூல்கொண்ட மேகம்வருஷிக்கின்ற நீர்த்தாரைகளைப்போல அம்புகளை பிரயோகித்தார்கள். இப்படி ராக்ஷசர்கள் ஆயுதங்களைப் பிரயோகித்தபடியால் அவைகள் வானரசேனைகளின்மீது தடாகத்தில் அன்னங்கள் படிந்ததுபோல வந்து படிந்ததுகள். மேலும் இராக்ஷசர்கள்விட்ட அம்புகளும்-மழுக்களும்-வளைதடி முதலானவைகளும் - வானரர்களுடைய பற்களும், தலைகளும், உடல்களும், பூமியில் விழும் படியாகச்சென்று; அவர்கள் விட்ட மலைகளையும் மரங்களையும் சின்னபின்னங்களாகச்செய்ததுகள். மேலு மேலு மிராக்ஷசர்

கள் அம்புகளையும்-மழுக்களையும் - இருப்பு லக்கைகளையும்- கொழுக்களையும்-வேல்களை யும்-வளைதடிகளையும் வீசினதினால், வான ரங்களுடையவால்களும்-தலைகளும்-உடல் களும்-வயிறுகளும்-கால்களும் - கைகளும் சின்னாபின்னப்பட்டுத் தரையில் வீழ்ந்தது கள். இப்படி ராக்ஷசர்களுக்கும் வானரர் களுக்கும் கைகலந்து யுத்தம் நடக்கும்போ து வீபீஷணாழ்வான் வெற்றி வீரராகிய இளையபெருமாளைப் பார்த்து, சுவாமி! தேவரீரிப்படி தாமசித்துக் கொண்டிருப் பது நீதியோ? சீக்கிரமா யெழுந்தருளி இந்த யாகத்தைச் சிதையாமற் போவீரா னால் இந்த ராக்ஷசக்கடலை நாம் ஜெயிக்க மாட்டோமென்று விண்ணப்பம் பண்ணிக் கொண்டார். அப்போது அந்தரமார்க்கத் தில் தேவர்களும்-அசுரர்களும் - பிர்ம்மா வும் அச்சுதனும் உருத்திரனும் மூன்று லோகத்துக்கு நாயகனாகிய தேவேந்திர னும் மற்றுமுள்ள யக்ஷகின்னர கந்தருவா திகளுமாகிய இவர்களில், இந்தயுத்தவேடி க்கையைச் செவ்வையாகப் பார்த்தவர்கள் ஒருவருமில்லை. இப்படி இருவகையாரு டைய சேனைகளும் எதிர்த்தே நின்றது கள் அணியணியாக எதிர்த்து நின்ற வான ரப்படைகளின்மீது மூன்றாம்பிறைச் சந்தி ரனையொத்த வக்கிர தந்தங்களையுடைய இராக்ஷசர்களும் எதிர்த்து நிற்க, பலவிடங் களிலும் அவரவர்களுக்கு ஆயுதங்களா யுள்ளவைகளெல்லாம் இருபடைகளிலும் பிரவேசித்ததுகள்.

அப்போது இளையபெருமாள் அந்தச் சேனைக்குள் நுழைந்து கூர்மையான பாண ங்களை வருஷித்தார். அதனால் ராக்ஷசர்கள் இந்தலோகத்தைவிட்டு யமனுடைய பட் டணமாகிய வைவஸ்வத புரியைப்போய் அடைந்தார்கள். மதங்கொண்ட யானைக ளும் குதிரைகளும் நூறாயிரங்கோடியாக ரணக்களத்தில் மடிந்ததினால், பெருக்கெடு த்தோடின ரத்தக்கடலில் மேடுண்டாகும் படியாக இராக்ஷசர்கள்விட்ட அம்புகளைத் துண்டு துண்டாக்கிக் குவித்துவிட்டார். மதயானைகளினுடைய முன்னங் கால்களா லே தோண்டிய குழிகளில் அக்கினிபற்றி யெரிவதுபோன்ற செம்பட்ட மயிர்களையு டைய இராக்ஷசருடைய தலைகள் விழுந்து, அநேக யாககுண்டத்துக்கொப்பாக இருந் ததுகள். லக்ஷ்மணப்பெருமாளுடைய வில் லில் இருந்து புறப்பட்ட பாணங்களாற் பிளக்கப்பட்டதுகளான யானைகள் இரத் தங்களைப் பொழிந்துகொண்டு, உடலும் வயிறும் மலைகளையுஞ் சுனைகளையுமொத்தி ருந்ததுகள். சிலபாணங்கள்பட்டு உதிர்ந்த பற்கள் மின்மினிப் பூச்சிகளுக்கொப்பாய் இருந்ததுகள். அறுந்துவிழுந்த தலைகள் அம்புதைத்திருப்பதினால் பாம்புள்ள புற் றுக்களையொத்துப் பூமியிற் கிடந்ததுகள். மேகவருஷம்போன்ற பாணங்கள் பாய்ந்த தினால் அறுந்து ரத்தக்கடலில் வீழ்கின்ற கொடிகள், சமுத்திரத்தில் மேகங்கள்படி வதுபோல் இருந்ததுகள். சிலபாணங்கள் பட்டுக் கரம்பற்று உதிரக்கடலில் வீழ்ந்து மூழ்குகின்ற சத்துருக்களுடைய குடைகள், கேதுவாகிய செம்பாம்பினால்விழுங்கிய சந் திரனுக்கொப்பாக இருந்ததுகள். சில பா ணங்கள்பட்டுப் பெரிய யானைகள் துதிக் கையுங் கால்களும் அறுந்து இரத்தக்கட லில் அடித்துக்கொண்டு போகின்றதுகள். அவைக்கு உயிரில்லாதபடியால் அந்த ரத் தத்தில் மிதந்து சமுத்திரத்திலுள்ள முத லைகளுக்கொப்பாகஇருந்ததுகள். அக்கினி முகாஸ்திரம்பட்டு யானைமேற் போர்வைக ளெறிவதினால் மூங்கிற்காடுகள் நெருப்புப் பற்றி வேகின்ற மலைக்குச்சமமா யிருந்தது கள். சமுத்திரத்துக்கொப்பான ராக்ஷசர்க ளைக் கரடிகள்சேர்ந்து அவர்களுடையதலை யின்மீதுள்ள மண்டையோட்டைப் பேர்த் துத் தரையில் தள்ளுவதைப்பார்க்கும்போ து, மலையின்மேலுள்ளபுற்றைநகங்களினாற் பேர்த்தெறிகிறதைப்போல் இருந்ததுகள். லக்ஷ்மணருடைய பாணங்கள் மழையைப் போல வருகிறபடியினாலே இரதத்திற்கட் டிய குதிரைகளும் யாளிகளுந் தடுமாறுந் தோறும், ராக்ஷசவீரர்களாகிய சாரதிகள் தங்கள் தலையிற்சூடிய பூமாலையில்மொய்த்த வண்டுகளோடு கீழேவிழுந்து இறந்தார் கள். ராக்ஷசர்களுடைய தேகங்கள் துண்டு துண்டாய் அறுபட்டபடியினாலே ரதகஜ துரகபதாதியாகிய அங்கங்கள் நிறைந்தி ருக்கின்ற யுத்தகளத்தில் அந்தந்தவிடங்க ளிலேயோடுகின்ற ரத்தவெள்ளங்கள் யாவ ரும் பழிக்கும்படியாக எலும்புகளெங்கும் பரவ அலசினதுகள். இளையபெருமாளா னவர் தம்முடையபிதாவான தசரதச்சக்கர

வர்த்தி ஒரேதேரைச் செலுத்திக்கொண்டு அநேகந்தேரை நடத்திக்கொண்டு எதிர்த்துவந்த அசுரர்களுடைய பேரணியைக் கொன்றுவிட்டதுபோல அஸ்திரப் பிரயோகஞ் செய்து கொன்றுவிட்டார். அப்போது சண்டமாருதமடித்ததினால் மலைகளும் மேகங்களும் வானநக்ஷத்திரங்களும் அழிந்துபோனதுபோல, இராக்ஷசர்களுடையதலைகளும் தேகங்களும் அஸ்திரங்களும் ஓமகுண்ட அக்கினியிற் பலபலவென்றுதிர்ந்ததுகள். அன்றியும் மதயானைக்குச் சமமாகிய இளையபெருமாள் சம்ஹரிக்கிறபடியினாலே ஆகாசத்தைமுட்டி உயர்ந்திருக்கின்ற இராக்ஷசர்களுடைய பெருந்தலைகள் ஒன்றோடொன்று தாக்குண்டு, வேதமந்திரங்களை நிறைய உருச்செபித்து ஸ்தாபனம்பண்ணின பூரணகும்பத்தை உடைத்துப்போட்டதுகள். மதயானைகளை வாரிக்கொண்டு தாமரைக்கொப்பாகாதமுகத்தோடுங்கூடிய ராக்ஷசர்களுடைய தலையை உருட்டிக்கொண்டோடுகின்ற ரத்தப் பெருவெள்ளமானது, இந்திரஜித்து வளர்த்துக்கொண்டிருக்கின்ற ஓமாக்கினியை அவித்துவிட்டுப்போனது. இலட்சுமணர் பிரயோகித்தபாணங்கள் செம்பட்டமயிரையும் வீரக்கழலையுமுடைய இராக்ஷசர்களுடைய வாள்பிடித்தகைகளை ஆகாசத்தில் நின்றுந் துணித்து இடியைப்போல வீழ்த்தினபோது, அதுகள்பட்டு யாகத்துக்காக நின்றிருந்த எருமைக்கடாக்கள்மாண்டு துர்ச்சகுனத்தைக் காட்டினதுகள். மதஜலம் ஒழுகுகின்ற பெரியமலைபோன்ற யானைகளின்மீதிருந்து பலங்குறைந்து வாளிழந்த ராக்ஷசர்கள் லக்ஷ்மணருடைய பாணங்களுக்குப்பயந்து, அந்த யாகசாலை முழுவதும் மூடியிருக்கின்ற ரத்தவெள்ளத்தில்மூழ்கிப் பதுங்கிக்கொண்டார்கள். அதியுஷ்ணமாய் ஜொலிக்கின்ற அக்கினிமுகாஸ்திரங்கள் கால்களையறுத்துத் தலைகளிற் பாய்ந்து செல்லுவதினால், எல்லா ராக்ஷசர்களும் புத்தி மயங்கிக் கையிற்பிடித்திருக்கின்ற வேலைப் பூமியிலூன்றிக்கொண்டு மெய்நடுங்கிக் குடல்சரிந்துதொங்கி அசையும்படியாகச் சின்னபின்னப்பட்டார்கள். சில ராக்ஷசர்கள் பாணங்களால் உடல்பிளந்த தங்கள் பிள்ளைகளைக் கைசோரவிடாமல் தோள்களின் மேற்சுமந்து, அவர்கள் தொங்கிக்கொண்டு வரவும் தங்களுடைய குடல்கள் முதுகுப்பக்கமாய்ச் சரிந்துவிழவும், திக்குமுக்காடி அஸ்திரப்பிரயோகம் பண்ணுகிற லக்ஷ்மணரைநெருங்கிஎதிர்த்துவந்தார்கள். நெய்யுங்கள்ளும் நிறைந்திருக்கின்ற ஜாடிகள் பொரிக்குடங்களுடனேஉடைந்துபோகும்படியாகக் கோடாகோடியான கூட்டமாய் இராக்ஷசக் கவந்தங்கள் கூத்தாடினதுகள். சில உடல்கள் மயங்கிவீழ்ந்ததுகள்.

இந்தப்பிரகாரமாக இளையபெருமாள் காற்றைப் போலவும், விஷத்தைப் போலவும், நெய்வோர்களுடைய நூலைப்போலவும், தேகத்தைத் தொடர்ந்த நோயைப் போலவும், பாலிலுற்ற பிறையைப்போலவும், இராக்ஷசசேனைகள் இருக்குமிடங்கள் தோறும் பிரவேசித்து எல்லாரையுங்கொன்று நாசமாக்கினார். இப்படி விசாலமாகிய பெருங்கடலையொத்திருந்த இராக்ஷசப் பெருஞ் சேனைகள் சண்டமாருதக் காற்றடிக்க வேர்பறிந்து சாய்ந்து வீழ்ந்த தோப்பைப் போல நான்குபக்கத்திலும் வீழ்ந்துகிடக்கின்றதைஇந்திரஜித்துபார்த்தான். அவன் பலம்பொருந்திய யானைப்பிணங்களின்மலைகளையும், குதிரைகளும் தேர்களும் சின்னபின்னப்பட்டு உடலும் தலைகளுமாகிய பர்வதங்களையும், இரத்தக்கடலையுமல்லாமல், அவ்விடத்தில் வேறொன்றும் இருக்கப் பார்க்கவில்லை. தன்னோடு கூடவந்த நூறுநூறுயிரகோடிராக்ஷசமகாவீரர்களை இளையபெருமாள் ஒருவருடைய பாணங்கள் கூறுகூறாக்கிக் குவித்த குப்பல்களையும் ரத்தவாறுகளையுமேயல்லாமல், இராவணகுமாரன் வேறொன்றுங் காணவில்லை. அக்கால்விஷத்தைக்காட்டிலும் அதிக கொடியவர்களான சில ராக்ஷசர்கள் நடுங்கி நாவறண்டு பயந்து தன்னண்டையோடிவருகிறார்கள். சில மிகுந்தகோபத்தையுடைய ராக்ஷசவீரர்கள் திரும்பிவரமாட்டாமல், ஐயோ! நமக்கு உதவியாக ஒருவருமில்லையே என்று வீழ்ந்து மாண்டார்கள். இந்தப்படி ஓமாக்கினி அவிந்து அவ்விடத்திலிருந்த நவதானியக் கலப்புகளும் கட்டினகட்டறுந்த தர்ப்பைப் புல்லும் சின்னபின்னப்பட்டுப் போகவும், தான் உருப்போட்டுஜெபித்துக் கொண்டிருந்த மந்திரவேதமும் விட்டவிடந் தொட்டவிடந் தெரியாமல் மறந்துவிட்டு அந்த ஓமாக்கினி பொங்கினதுபோல

அதிக கோபங்கொண் டிருந்தான். அப்போது அந்தப் போர்க்களத்திலே பாண வருஷத்தால் மாண்டுபோனவர்கள் தவிர உயிருள்ளவர்களாயிருந்த ராக்ஷசர்களெல்லாம் ஒருமிக்கச் சேர்ந்தார்கள். வானர சேனுசமுத்திரமானது இந்திரஜித்துவைச் சூழ்ந்து வளைத்துக்கொண்டது. ஆயிரங் கோடியாகிய ராக்ஷசசேனை ஏயென்றமாத்திரத்திற்குள்ளாக அழிந்துபோனதையும் சத்திய சந்தனரான லக்ஷ்மணப்பெருமாளுடையவில்வல்லமையையும்பார்த்த இந்திரஜித்துவுக்கு அதிகதுக்கமும் மிகுந்தகோபமும் வளர்ந்தன. பூமிதேவியானவள் திருமேனி வேறுபட்டுத் துக்கிக்கத்தக்கதாகக் கொலைசெய்துதிரிந்துகொண்டிருந்த இராக்ஷசர்கள் வமிசத்துடன் கருவறுந்துபோவதையும், அதைக்கண்டு மகாரிஷிகள் கையையசைக்கின்றதையும், இந்திரஜித்து கண்ணினுலே பார்த்தான். இப்படி மானங் கெட்டுபோகவும், ஒருவருடனும் பேசாமலிருந்த மோனம் விக்கினப்பட்டுப் போகவும், அளவில்லாத மிகுந்த பலமுள்ளவர்களான ராக்ஷசசேனைகளும் நாசமாகிப்போகவும், தன்மனதில் நினைத்திருந்த எல்லா எண்ணங்களுமழிந்து சில சொல்லத்தொடங்கினுன். இருபத்தைந்துவெள்ளஞ்சேனையில் இப்போதிருக்கின்றது பத்தக்ரோணிச் சேனையாகும். இனி நாமிங்கிருந்து யாகஞ் செய்யலா மென்பது சிறுபிள்ளைத் தன்மையாகும். இந்தயாகமும் சிதைந்து போய்விட்டது. நாம் யத்தனித்த யாகாக்கினி அடங்கி யவிந்தது. இதுவரையிலும் யுத்தகளத்தில் நமக்குண்டாகிய வெற்றி அடங்கி விட்டதென்பதற்கு இதெல்லாம் ஒரேதுவாகும். அதிருக்கட்டும். இந்திரஜித்து மனிதருக்குத் தோற்றுப்போனுனென்று இழிவானவார்த்தையைஎன்னெதிரே நின்று யாவருஞ் சொல்லுவதினுலே, நம்முடைய குலத்தினுடைய பெருவல்லமையும் ஒழிந்து அழிந்துபோய்விடுமல்லவா? மேலும் மந்திரவிதிப்படியான இந்தயாகம் அழிந்துபோய்விட்டதேயென்று இப்போது நாம் சிந்தைநொந்து வருத்தப்படுவது, தேவலோகத்திலேயிருக்கின்ற தேவர்கள் இந்திரஜித்துக்கு மனிதர்களிடத்திற் சண்டைசெய்யமுடியாது. இவன்வல்லமை தேவேந்திரனிடத்தில் மாத்திரந்தான் செல்லும். என்று பரிகாசம்பண்ணும்படிக்காகவோ ஆ! ஆ! நாம் யாகஞ்செய்ய முயன்றது வெகுநேர்த்தி வெகுநேர்த்தி என்று தனக்குத்தானே ஆலோசித்தான். இந்தப் பிரகாரமாக இந்திரஜித்து சொல்லிக்கொண்டிருக்கும்போது வானரவீரர்கள்பெரிய மலைகளையும் மரங்களையும் ராக்ஷசப்பிணங்களையும் இறந்தயானைகளையும் வீசியெறிந்து அவனைச்சூழ்ந்திருந்த சேனைகளைச் சின்னுபின்னப்படச் சிதறவடித்தார்கள். ராக்ஷசர்கள் அந்தவடியைச் சகிக்கமாட்டாமல் ஒருவர்கீழே ஒருவர் நுழைந்து பதுங்கினுர்கள். லக்ஷ்மணருடையபாணங்கள்வந்துபாய்கிறபடியினுலே அவரவர்கள் அங்கங்கேபதுங்கிக் குடலழிந்து, உடல்பிளந்து, மதமொடுங்கின யானைபோலக் கோபமாறினுர்கள். லக்ஷ்மணருடைய பாணங்களும், வானர வீரர்கள்வீசிய மலைகளும் மரங்களும், உகாந்தகால சண்டமாருதம் அடித்தபோது மழைத்தாரைகளுடனே மேகங்கள் விழுவதுபோல ராக்ஷசசேனைகளின்மீது படிந்ததுகள். அப்போது ஆஞ்சநேயர் ஒரு மராமரத்தைப்பிடுங்கிக்கடலுக்குச்சமமான ராக்ஷசப் பெருஞ்சேனைகள் சின்னுபின்னப்பட்டுச் சிதறிப்போகும்படி மோதியடித்துத்துரத்திவிட்டு, இந்திரஜித்துக்கு சமீபமாகப்போய் அவனுக்கு மிகுந்த கோபமுண்டாக்கத்தக்க சில வார்த்தைகளைச் சொன்னுர்.

அடா இந்திரஜித்துவே! நானுன்னைக் கெஞ்சிச்சொன்ன வார்த்தையொன்றையுங்கேட்டாயில்லை. அப்படியே ஜானகியை வாளினுலே வெட்டிவிட்டாயோ? குபேரனிடத்திற் பறித்துக்கொண்ட புஷ்பகவிமானத்தின் மேலேறிக்கொண்டுராக்ஷசசேனைகள் சூழும்படியாகவடக்குமுகமாய் அயோத்தியாபுரிக்குப் போனுயோ? ஒன்றிரண்டல்லவே கோடிகோடியான வஞ்சனைத்தன்மையும் பொய்யுங் கற்றிருக்கின்ருயே அடாஇராவணக்குட்டியே! கடலைப்போல ராக்ஷசசேனைகளைச் சக்கரயூகங்கட்டி நீ நடுவே எங்களுக்குத் தெரியாமலிருந்துவிட்டாயல்லவா? எங்களிளையபெருமாளுடைய வில்லினுணேசையை நீ கேட்கவில்லையோ? நீஅயோத்திக்குப்போய்அங்கிருக்கின்றவர்களைப் பந்துக்களுடனேகொன்றுவிட்டு எப்போது இவ்விடம் வந்தாய்?

உன்னுடைய யாகம் முடிந்து விடிந்ததல்லவோ? உன்காரியமெல்லாம் அனுகூலப்பட்டுப் போனதல்லவோ? விசாலமாகிய இந்தப் பூலோகமெல்லாம் பாதுகாப்பதல்லாது அதனைத் தாங்கிக்கொண்டிருக்கின்ற ஆதிசேஷனைக் காட்டிலும் நீண்ட திருத்தோள்களையுடையவரும் யாதொரு குற்றமுமில்லாத மகா சத்தியசந்தனருமான எங்கள்பரதமகாராஜரை நீ பார்த்து, உன்வில் வல்லமையை அவரிடத்திற் காட்டி மறுபடியும் உன்னுயிர் தப்பிப் பிழைத்து வந்தாயோ? ஆ! ஆ! இதெல்லாம் நினைக்க ஆச்சரியமா யிருக்கின்றது. அடா இராவணீ! சுவர்க்கலோகத்திலிருந்த சம்பராசுரனைச்சம்மரித்து தேவர்களுக்கு உபசாரஞ் செய்தவரானதசரதமகாராஜாவுக்குத்திருக்குமாரராய் அவதரித்தகுணபூரணரும், தமக்குமுன்பு அவதரித்த மூன்று திருத்தமையன்மார்களுக்கு நான்காமவரென்னுந்திருத்தம்பியுமாய்ச் சத்துருக்களை அழிக்கின்ற காரணத்தால் ஸ்ரீ சத்துருக்கமகாராஜரென்று திருநாமம்பெற்றவரை நீ பார்த்து உன்வில்வீரத்தைக்காட்டினாயோ? எங்கள் இளையபெருமாள் பிரயோகித்த அக்கினிமயமான பாணங்கள் உன்னுடலில் ரத்தம் வடியச்செய்த காயத்திலும் செவிகளிலும் வாயிலும் கண்களினிடத்திலும் பாய்ந்து சல்லடைக் கண்களாய்த் தொளைத்தபோதெல்லாம், அந்த அடிபட்டு ஓடிப்போய் இலங்கையில் நுழைந்தும் அடிக்கடி இப்படிப்பட்ட வஞ்சனைகளை அபரிமிதமாய்ச் செய்துகொண்டு வருகின்ற உன்வல்லமையெல்லாம் இன்றோடே நாசமாய்விடப் போகின்றது. உன்னுடைய நாகபாசமும், பிரம்மாஸ்திரமும், பாசுபதாஸ்திரமும், நாராயணாஸ்திரமும் இன்னு மற்றுமுள்ள தேவாஸ்திரங்களும், பின்னும்எதைஎதை நீயும் உன்னப்பனும் உன்னைச் சேர்ந்தவர்களும் எங்கள்மேற் பிரயோகிக்க இச்சிக்கின்றீர்களோ அவைகளுக்கு நாங்கள் பயந்துபோய்க் கூசிக்கிடக்கின்றோமல்லோம். உங்களைக்கருவறுக்கிறதற்கு இளையபெருமாளாகிய இயமன் இதோவந்திருக்கின்றார். அடா இந்திரஜித்தே! நீங்கள் தேவர்களிடத்திற் பெற்றிருக்கின்ற வரங்களும், நீங்கள்கற்றிருக்கின்றமாயவஞ்சனைகளும், நீங்கள் அத்தேவர்களிடத்தில் வாங்கியிருக்கின்ற தேவாஸ்திரங்களும், உங்கள் தேகவல்லமையும், இதுவரையிலுங்கட்கு நிலைத்திருக்கின்றவிதத்தை நீங்களே பார்த்திருக்கின்றீர்களல்லவா? உங்களை நாங்கள் உயிருடனே தலைகளையும் துண்டித்துவிடுகிறோமென்று சொன்னதில் நாங்களேதாவது மாறுபட்டுப்போனோமா? கண்டத்தில்விஷமுள்ளவரான உருத்திரமூர்த்தியும், கையிற் கதையேந்தினவரான பிரமாவும், பாற்கடலிலே ஆதிசேஷசயனமுள்ளவரான விஷ்ணுமூர்த்தியும், தங்களுடல் நடுங்காமல்வந்து உங்களுக்கு உதவிசெய்தபோதிலும், நீங்கள் மரணமடையப்போகின்றது சத்தியமாகும். உங்களுக்கிடந்துடிக்கின்றதல்லவா? நீங்கள் இனி உயிர்பிழைத்திருப்பீர்களோ? அடாபாவி! இதை நீயே சொல்லக்கடவாய். உன்னை இன்றைக்குக் கொல்லுவேனென்று சபதம்பண்ணிக்கொண்ட வில்வீரசிகாமணியாகிய இளையபெருமாள் இதோ சமீபமாகவந்து, உன்சேனையை முழுவதுங் கொன்று, உன்னையுஞ் சீக்கிரமாய்ச் சண்டைக்குவாவென்று அழைக்கின்றார். அவர் வில்லின் நாணோசையானது நீ செய்கின்ற ஓமத்துக்கு மந்திரமாகிய கிரியையென்று நினைத்திருக்கின்றாயோ? அடா வஞ்சகா! இந்த மூன்றுலோகங்களையும்ரக்ஷிக்கின்ற ஸ்ரீராமபிரானுக்குத் திருத்தம்பியாகிய லக்ஷ்மணருடையசண்டையின் பெருமையைப்பார்க்கிறதற்கு, தேவர்களும் முனிவர்களும் மற்றெல்லாலோகவாசிகளுமான சகலர்களும்வந்து நிற்கின்றார்கள். இனிக்ஷணப்பொழுதுந் தாமசிக்கப்படாது நீங்கள் இந்தச் சமர்க்களம்வியக்க மாண்டு போவது சத்தியந்தான் என்று ஆஞ்சநேயர் கூறியவனைத்தையும் இந்திரஜித்து கேட்டு அக்கினிமயமாகச்சுவாசித்து, வெற்றிமாலையையணிந்ததோள்களில் மின்னற்பறக்கவும் பிளவாகிய வாயில் நெருப்புப் பறக்கவுஞ் சிரித்து இவ்வாறு சொல்லுகிறான். அடா அநுமக்குரங்கே! நீ சிறிதும் பயமில்லாதவனாய் என்னெதிரேவந்து இவ்வித வார்த்தைகளைக் கர்வித்துச் சொன்னாயல்லவா? என்னோடு செய்த எல்லாச்சண்டையிலும்பட்டு மாண்டுபோன நீங்கள் அவ்வொழுங்கையிழந்து நடந்த சண்டையையெல்லாம் மறந்துபோனீர்களோ? நீங்கள் சாகிறதற்கு இப்படி ஆசைப்பட்டிருக்

கின்றீர்கள்போலும். நீங்களெல்லோரும் மாண்டால் உயிர்பெற்றுக் கொள்ளும்படி யான சஞ்சீவிமருந்து வைத்திருக்கின்றீர் களோ? இந்த லக்ஷ்மணனுகட்டும், இவன் அண்ணன் இராமனுகட்டும், இன்னும் தடு க்கிறவர்களெல்லாரும்வந்துவிலக்கினலும் குரங்குகள் கூட்டங்கூட்டமாக மாளப்போ கின்றஎன்னுடையவெற்றியையும், அதைக் கண்டு இந்தமனிதர்கள் அடையப்போகி ன்ற வருத்தத்தையும், தேவர்களும் ரிஷிக ளுமே பார்க்கப்போகின்ருர்கள்.

அடா வானரமே! என்கையில் இந்த வெற்றி வில்லும் என்னுடைய விஜயத் தோள்களும் இருக்க, மாமிசமயதேஹிக ளான சீவன்களும் பிழைக்கப்போகிறதுக ளோ? எங்கேயோ ஒளித்துக்கொண்டா லும் விடாமற் கூனலாகிய குரங்குகளுட னே இந்த ராமலக்ஷ்மணர்களாகிய மனிதர் களையுங் கொன்று, தப்பியிருக்கின்ற தேவ லோகத்துக்கும்போய் அங்கே தேவவுரு வம்பெற்றிருக்கின்ற யாவரையு நாசமாக்கி விடுவேன். சஞ்சீவி மருந்தாலும் பிழைக்க மாட்டீர்கள். நான்செய்தயாகம் இப்போது அழிந்து போய்விட்டபடியினலே ஜெயம் பெற்றதாக வாய்வீரம்பேசிக்கொள்ளுகின் றீர்கள். அப்படியொன்றும் பேசவேண் டியதில்லை. நான் சண்டைக்கு வருகிறதற் குத் தாமசப்படவுமில்லை. உங்களை ஒவ் வொருவராகத் தலைகளையறுத் தெறிகிறதற் குத்தக்க வீரர்கள் என் கையிலிருக்கின்ற பாணங்களா யிருக்கின்றதுகள். இஃதுண் மையா அல்லவா யோசித்துப்பார். உங்க ளைப்போல நான்வாயினல் வீரம்பேசமாட் டேன். நீங்களெனக்கு முன்னும் வெற்றி யைக் கொடுத்துவிட்டுப் போயிருக்கின்றீர் கள். ஆத்திரப்பட்டால் வெற்றியுண்டாக மாட்டாது. நான்கோபித்துப் புறப்படுவே னேயானல் ஒருதரமாவது என்னேடெதிர் த்து நிற்கமாட்டீர்கள். இன்னமும் நீங்கள் மாண்டுபோகப் போகின்றீர்களோ வெற்றி கொள்ளப் போகின்றீர்களோ அதையறி ந்துகொள்ளவேண்டில் நில்லுங்கள். நில் லுங்கள். என்று கண்களில் நெருப்புபொ றிபறக்கப் பார்த்து, மின்னலைப்போலமின் னுகின்ற கவசபணிந்து, அம்பருத்தூணி கட்டி, விரல்களிற் பொன்மயமானபுட்டில் களணிந்து, வில்லைக் கையில்தாங்கி, வஜ்ர பருவதத்துக்குச் சமானமாகிய தேரின்மே லேறி வில்லைக் குணத்தொனிசெய்து சங்க நாதம்பண்ணினன். இந்த ஆடம்பரங்களை க்கேட்டுத் தேவ ஸ்திரீகளெல்லாம் கண்க ளில் அறைந்துகொண்டார்கள். ஒருக்ஷண த்துக்குள்ளே எல்லாரையுங் கொன்றுவிட் டவனல்லவோவென்று தேவர்களெல்லா மனங்கலங்கினர்கள். கயிலாசபதியும், பிர் ம்மதேவனும், மறுபடியும் இன்றைக்குச் சண்டைநேரிட்டதென்ருர்கள். முப்பத்து முக்கோடிதேவர்களும், சமஸ்தமானரிஷிக ளும், நம்முடைய தபோபலத்தினல் இந் திரஜித்துசெய்த நிகும்பலையாகம் தவறிப் போய்விட்டது. அப்படி தவறிப்போன படியினலே இந்தச் சண்டாளப்பயல் இனி ப்பிழைக்கமாட்டான். இப்போதிவனை அ ழைத்துவந்தது விதியே யல்லாமல் வேற ல்ல. லக்ஷ்மணப்பெருமாளுடைய அம்பி னலே இவன் மாண்டு இரணக்களத்திலு ழைக்கப்போகிறதை நாம் காணப்போகி ரேம் என்று எக்களித்தார்கள். இந்திர ஜித்துவினுடைய வில்லின் குணத்தொனி செவிகளில் வந்து நுழைந்தவுடனேவான ரர்கள் தங்களாண்மை குன்றி, கையிலெடு த்துநின்ற மரங்களையும் மலைகளையும் மறு படியும் பூமியிற் சோர்ந்துவிழ விட்டு நாம் இனி இறந்து போவோமென்று பயந்து வானரரெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள். வானர சேனதிபதிகள்மாத்திரம் தைரியங் கொண்டு நின்ருர்கள். இப்படி வானரர்க ளெல்லாம் உகாந்தகால சண்டமாருதத் தால் நாலுபக்கங்களிலும் பொங்கி வழிந் தோடுகின்ற சமுத்திர ஜலத்தைப்போல ஓட்டம் பிடித்ததைக்கண்ட ஆஞ்சநேயர், அவ்விடத்திலிருந்த ஒரு பெரியமலையைப் பேர்த்து எடுத்தார். அப்போது யமனுக் கும் யமனன இந்திரஜித்து, அடா குரங் கே! நில்லு. நில்லு. நீ வாய்மதம் பேசி மலையைப்பேர்த்தெடுத்தது தேவர்கள் பார் க்கும்படி என்னையிந்த ரணக்களத்திற்கொ ன்றுவிடலா மென்ருே? நல்லகாரியஞ் செய் தாய். உன்னைக் குரங்கென்று சொல்லுகி றதுதகும். நல்லவன்தான். வா வா என் றுகூறிக் கூப்பிட்டான். இப்படி வில்வீரர் களுக்குள்ளே அதிவீரனன இந்திரஜித்து வுக்கு முன்பாக மலையைப் பேர்த்தெறிய எதிர்த்து நிற்கின்ற அநுமானைத் தேவர்

கள் பார்த்து, இந்த மல்யுத்த வீரருக்கு என்ன தைரியமப்பாவென்று ஆச்சரியப்பட்டார்கள். வாயுதேவன் பார்த்துத் தன் பிள்ளையின்பலத்தைக் குறித்து நடுங்கினான். ஆஞ்சநேயர் அந்த மலையை ஆகாசத்திலும் அஷ்ட திக்குகளிலும் நெருப்புப் பொறிகள் சிதறும்படியாகச் சுழற்றி இந்திரஜித்துமீது வீசியெறிந்தார். அநேகமிடிகள் ஒன்றாய்ச் சேர்ந்துகொண்டு வருகின்ற ஒரு பெரிய இடிமலையைப்போல் வருகிற அதன் சேஷ்டைகளை லோகத்தவர்களெல்லாம் கண்டு மன நடுங்கினார்கள். இராக்ஷச கூட்டங்கள் அதைப் பார்த்துச் சின்னாபின்னப்பட்டுப் போனார்கள். அப்போது மேருவைப்போலப் பருத்த தோள்களையுடைய இந்திரஜித்துத் தன் குண்டலங்கள் மிகுந்த சாஜ்ஜ்வல்யமாய்ப் பிரகாசிக்கும்படியாக வீராஷ்டகாசஞ்செய்து அஸ்திரப் பிரயோகம்பண்ணி, வாயுபுத்திரர் ஆகாசமார்க்கமாக வெறிந்தஅந்தமலையை தூளா யுதிரும்படிப் பண்ணிவிட்டான். தேவர்கள் அதைக் கண்டார்களே யல்லாமல் அவன் அஸ்திரப்பிரயோகம் பண்ணினதை ஒருவரும் பார்க்கவில்லை. மறுபடியும் வேறே ஒரு மலையைப்பேர்த்து வீசும்படி யத்தனித்த ஆஞ்சநேயருடைய வஜ்ர மலைக்குச்சமமான மார்பிலும், அதிக வேகமாய்ப் போகின்ற காலிலும், கைகளிலும், இந்திரஜித்துப் பிரயோகிக்கப்பட்ட விஷத்தில் தோய்ச்சவூட்டின அக்கினிமுக பாணவருஷங்கள் வந்து பாய்ந்ததுகள். அப்போது அநுமான் மூங்கிற்காடுகள் வளர்ந்திருக்கின்ற மலையைப்போலப் பக்கங்கள் தோற்றுகின்றபடியினாலும், எதிரிலுள்ள ராக்ஷசவிருட்டை அவர் பகைத்து பாய்கின்ற தன்மையினாலும், இந்திரஜித்து விட்ட பாணங்கள் கிரணங்களைப்போலப் பிரகாசிக்கின்றபடியினாலும், உதயகிரியில் தோன்றுகின்ற சூரியனுக்குச் சமானமாக இருந்தார்.

இந்தப்பிரகாரம் வாயுபுத்திரர் சோகமானவுடனே அங்கதகுமாரர் முதலான வானரவீரர்கள் அதிக கோபத்துடனெழும்பி இந்ரஜித்துமுன்வந்து சேர்ந்தார்கள். சுக்ரீவமகாராஜரும்வந்து எதிர்த்தார். இந்திரஜித்து அவரைப்பார்த்து மிகுந்த கோபத்துடனேசொல்லுகின்றான். அடாகுரங்கரசனே! ஓர் சிம்மமானது போருக்குமுன்பாக வந்தபோது யானையை எதிர்க்குமேயல்லால் ஒரு அற்பக்குரங்கைத் தொடர்ந்து வருகிறதுமுண்டோ? இலேசான உங்களைக் கொன்றதனால் எனக்கென்னலாபம்? சற்றுநேரம் எதிர்த்து என்னோடு சண்டை செய்யவல்லவனான அந்தஸ்ரீராமனுடைய தம்பியைக் காட்டிக்கொடுத்து நீங்கள் பின்னிட்டுப்போகாமல், என்கோபத்துக்கு ஈடுபட்டு வீணாயேன் செத்துப்போகிறீர்கள்? சோர்ந்துவிழுந்துபோன அநுமானை நீங்கள் பார்க்கவில்லையோ? அவனைப் பார்க்கிலும் நீங்கள்பலமுள்ளவர்களோ? என்கையில் வில்லிருக்க அந்தவில்லுக்கிப்போது பலங்குறைந்துபோய்விட்டதா? இந்தவில்லால் நீங்கள் முன்னடிபட்டவர்கள் அல்லவோ? நீங்கள் அப்போதில்லாமல் இப்போது என்ன பலத்தைப்பெற்று வந்தீர்கள்? அந்தமனிதரை எனக்குக் காட்டிக் கொடுத்துப்போட்டு நீங்கள்வாசம்பண்ணுகின்ற மலைகளைத்தேடிப் பிழைத்தோடிப் போங்கள் என்றுசொல்லி இளையபெருமாளைநோக்கி வருவதானான். இப்படியவன் வருகின்றதைப் பார்த்த வானர வீரர்கள் அவன்மீது மலைகளையும் மரங்களையும் எறிந்துக்கொண்டு வந்தார்கள். அப்படிவந்த அந்த வானரவீரர்களுடைய கூட்டங்களின்மீது இந்திரஜித்துவினுடைய வில்லில் இருந்து மேருமலையையும் உருவிப்போகத் தக்கபாணங்கள் கோடிகோடியாகப் பாய்ந்ததுகள். அதனால் எல்லாரும் வருத்தமுற்றுச் சக்தியோய்ந்து போய்விட்டார்கள். அப்போது விபீஷணாழ்வான் இளையபெருமாளைப்பார்த்து, சுவாமி! தேவரீருடைய சைனியமெல்லாம் மாண்டுபோகின்றதே; இப்போது பாணவருஷங்களைப் பிரயோகிக்கின்றதல்லவா வெற்றி; அந்த இந்திரஜித்தென்னும் காளமேகம் செய்த யாகம் அழிந்துபோய்விட்டது. இனி அவனைப் பிழைக்கவொட்டாதபடி அதஞ்செய்யவேண்டுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். இளையபெருமாளும் போர்க்களத்துக்குவந்து இந்திரஜித்துவைச் சந்தித்தார். அப்போது சாக்ஷாத் உருத்திரமூர்த்தியினுடைய அமிசமாகிய அநுமான் சோர்வு நீங்கி முகமலர்ச்சியுடனே ஓடிவந்து லக்ஷ்மணர் சந்நிதியில் நின்று, என் ஆண்

டவரே! அடியேனுடைய இரண்டு தோள்களின்மீதும் ஏறியருளக் கடவீரென்று விண்ணப்பஞ் செய்தார். இளையபெருமாள் நல்லதென்று திருவுளம் உவந்து ஆஞ்சநேயர் திருத்தோளின்மீது ஏறியருளினர். உடனே வாயுகுமாரரும் தேவர்களுடைய துக்கங்களை நீக்கினதுபோலச் சந்தோஷமுற்றுச் சாரிகைதிரிந்தார்.

அப்போது ஆயிரம்மேகங்கள் ஒன்றுகக்கூடினதுபோலக் கருநிறமுள்ளவனாகிய இந்திரஜித்து ஆயிரங்குதிரைகள்பூட்டிய உயர்ந்ததேரின்மீது ஏறினன். இருவரும் ஒருவரோடொருவர்எதிர்த்தார்கள். ஆஞ்சநேயரும் சகஸ்திர நாமாங்கிதரான திருவிக்கிரமரைப்போல அஷ்டதிக்குகளிலும் சுற்றித்திரிந்தார். அக்கால் பதினன்குவருஷமாக நித்திரைநீக்கிப் பெருமாள் கைங்கரியமே தமக்குத்தாரகமாக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமாநுஜர் அக்கினிக்கொப்பானவைகளும், சத்துருக்களுடைய பிராணனே தமக்கு ஆகாரமாயிருக்கின்றவைகளும், எங்கும்பேயைப்போலத் திரிகின்றவைகளும், பசியைப்போல் வருத்தப்படுத்துகின்றவைகளும், நோயைப்போலத் துன்பப்படுத்துகின்றவைகளும், தவறுதபிரகிருதிமயமான ஊழ்வினைக்கொப்பானவைகளும், மழுவையொத்தவைகளும், கழுகுக்குத்தாய்போலிருக்கின்றவைகளுமாகிய சில பாணங்களைப் பிரயோகம்பண்ணினர். இந்திரஜித்துவும் அந்தந்த அம்புகளை அந்தந்த அம்புகளாலேயே துண்டாக்கிவிட்டு, ஆகாசமுழுவதையும் அஷ்டதிக்குகளையும் சப்தசமுத்திரங்களையும் மூடிக்கொள்ளும்படிக்கு உகாந்தகாலத்திற் பெய்கின்ற மேகவருஷம்போல உலோகத்தில் இவைகளல்லாத வேறென்ன பாணங்களிருக்கின்றதுக ளென்னும்படியாக எல்லாவிதஅம்புகளையும் புங்கானுபுங்கமாகப் பிரயோகித்தான். அவைகளையெல்லாம்இளையபெருமாள்பொறிகளைப்போலப்பறந்தோட அந்தந்தப் பாணங்களாலேயே தடுத்துவிட்டார். அப்போது இந்திரஜித்துத் தனது தேரை ஆயிரவித சாரிகளோடும்படிச்செய்தான். அக்கால் அநுமானும் பலசாரிகை திரிந்தார். இப்படி இந்திரஜித்துவின் சக்கரம்பூண்ட தேரினுலும், வெற்றிபெற்ற ஆஞ்சநேயருடையதிருவடிகளினுலும், சிறுகுன்றுகளும்-பெருமலைகளும்-மரங்களும் - மற்றப் புற்களுமாகிய வெல்லாம் சாம்பலாகி, அந்தச் சாம்பலும் தோற்றுதவிதமாகத் தேர்போனவழி வாயுபுத்திரரும், வாயுபுத்திரர் போனவழி இந்திரஜித்துவின் தேரும்திரிந்ததுகள். இவ்விதமாய் இரண்டு வீரர்களும் இன்னர் இன்னுரென்று அவ்விடத்திலுள்ள யுத்தவீரர்களுந் தெரிந்துகொள்ளாதபடி சாரிகை சுழன்று பாணங்களைப் பொழிந்தார்கள். இவர்களைப் பார்த்த தேவர்கள் திரிலோகத்திலும் ஒருவீரரும் இவர்களுக்குச் சமமாக மாட்டார்களென்று சந்தோஷித்தார்கள். இலக்ஷ்மணப் பெருமாளும் இந்திரஜித்துவும் ஒருகடலுடனே மற்ருெருகடல்வந்து எதிர்த்தாற்போல இருதிறத்தாரும் சண்டைசெய்தார்கள். ஆகாசத்துக்கு வருவதாகப் பாணங்கள் வருகின்றனவென்று தேவர்களெல்லாம்பயந்து, தங்கள்கண்களாலும் மனத்தாலும் அவைகளை வேறுபிரித்தறியக் கூடவில்லை. அவைகளுக்கு ஒரு கணக்கிடலாமென்று நினைத்தும் இவ்வளவென்று தொகையுஞ் சொல்ல முடியவில்லை. அவைகளுக்கு நடுவே காற்று நுழையக் கூடவில்லை. அந்தப் பாணங்கள் அவரவர்களுடைய தேகங்களிற் புண்செய்கின்றதுகளே யல்லாமல் வேருென்றுஞ் செய்யவில்லை. அஷ்டதிக்குகளும் அக்கினிமயமாக எரிந்ததுகள். அவரவர்களுடைய விற்குணத்தொனியானது இடியைப்போல எங்கும் நடுங்கச்செய்துவிட்டது. மேகங்களில் நிறைந்திருக்கின்ற இடியையும் இவ்விருவருடைய பாணங்கள் உருவிப் போய் விட்டதுகள். நட்சத்திரங்களெல்லாம் கரிந்துபோனதுகள். உலோகமெல்லாம் புகைமண்டிப் போனது. திக்குகளெல்லாம் வெடித்துப் போனதுகள். எங்கே பார்த்தாலும் இடிகள் வீழ்கின்றதுபோல வில்லின் குணத்தொனி பெருங்கோஷமாக ஒலித்ததுகள். இரண்டு வீரர்களும் பல்லை நறநறவென்று கடித்தார்கள். அவர்களுடைய பாணங்கள் ஆகாசத்தை ஊடுருவிக் கொண்டுபோய் அக்கினிப்பொறிகளைக் கக்கினதுகள். தேவர்களெல்லாரும் இதுகளைப் பார்த்தார்கள். கடல்களெல்லாம் வற்றிப்போய் விட்டதுகள். மலைகளெல்லாம் பிளந்து போய்விட்டதுகள்.

சூரியனுடலிலும் நெருப்புப் பற்றினது. மரங்களெல்லாம் வெந்ததுகள். இரத்தக் கடலெல்லாம் வற்றினது. எங்கும் எரிபற்றினது. பாணங்கள் துண்டுபட்டுக்கடலைத் திடர்படுத்திவிட்டது. உலோகமுழுவதும் கிறுகிறுவென்று சுழன்றது. அக்கினிகளை வீசுகின்ற கூர்மையாகிய பாணங்கள் இருவகைச் சேனைகளும் ஓட்டமெடுக்கும்படியாக எங்குஞ் சுற்றினதுகள். உலோகத்திலுள்ள ஜீவகோடிகளெல்லாம் தத்தமிடங்களைவிட்டுச்சிதறித்திக்குதிக்குகளாகப்போனதுகள். யானைகளும்குதிரைகளும்குரங்குகளுமழிந்து கடலைப்போல ரத்தவெள்ளம் ஓடத்தலைப்பட்டது. அநேகர்கொலையுண்டு மரணமடைந்தார்கள். சக்கரவர்த்தி திருத்தம்பியாகிய இளையபெருமாள் பிரயோகிக்கின்ற பாணங்களில் சில புகையைப் பரப்பிக்கொண்டு பறந்ததுகள். சில நெருப்பைச்சொரிந்துகொண்டுபோனதுகள். சில லோகமெல்லாம் புகையாய் எரிந்தோடினதுகள். சில ஒன்றுநூறாய் விரிந்தோடினதுகள். சில இடசாரியா யோடினதுகள். சில வலசாரியாயோடினதுகள். சில நெருங்கியோடினதுகள். சில விரிந்தோடினதுகள். சில அஷ்டதிக்குகளிலும் பாய்ந்தோடினதுகள். அப்போது ஜலமுகாஸ்திரங்களையும், அக்கினிமுகாஸ்திரங்களையும், பர்வதாஸ்திரங்களையும், மேகாஸ்திரங்களையும், இடியாஸ்திரங்களையும், சமுத்திராஸ்திரங்களையும், சூரியாஸ்திரங்களையும், கைலாசபதியாகிய உருத்திரமூர்த்தியினுடைய சிரங்களை யொத்த பஞ்சமுகாஸ்திரங்களையும், மேருமுகாஸ்திரங்களையும், இந்திரஜித்துப்பிரயோகித்தான். இப்படிசுமித்திரை தனையரும் இந்திரஜித்துவும்விட்டகூர்மையானபாணங்கள் இவர்களுடையதேககாவலான கவசங்களிலும், பலம்பொருந்திய தோள்களிலும்,முகங்களிலும், வஜ்ரம்போலுள்ள மார்புகளிலும், கால்களிலும், காமினிகளாகிய ஸ்திரீகளின் கடைக்கண்களைப் போலப்பதிந்துபாய்ந்திருந்ததுகள். எந்த நாளையிலாவது தேவர்களானாலுஞ்சரிதானவர்களானாலுஞ்சரி, இவர்களைப்போலயுத்தஞ்செய்த வீரர்கள் யாருண்டா யிருந்தார்களென்றுதேவர்களெல்லாம் இவ்விரண்டுவீரர்களையும்புகழ்ந்து ஸ்தோத்திரம்பண்ணி ஆரவாரித்தார்கள். இப்படி இவ்விந்திரஜித்தும் இளையபெருமாளும் ஒருவருக்கொருவர் எதிராகி, கிருஷ்ணபட்சதிரையோதசியிலும் பூர்வபட்சதிரிதியையிலும் தோன்றின மூன்றும்பிறைச் சந்திரர்களைப்போல பொன்மயமான தங்கள் வில்லுகளை வளைத்தார்கள். இவ்விரண்டு வீரர்களுடைய பாணங்களும் பாய்ந்து லோகமெல்லாம் வெந்ததுகள். கடல்களெல்லாம் வெந்ததுகள். தேவர்களெல்லாம் நாவுலர்ந்து யுகாந்தகாலமின்று வந்துவிட்டதோ வென்று சந்தேகித்தார்கள். குணத்தொனியைக்கேட்ட திக்கஜங்களெல்லாம் மனம்நொந்துபோனதுகள். ஆகாசமெல்லாம் நட்சத்திரங்களை யுதிர்த்துவிட்டது. சூரியன் கிரணங்களை யுதிர்த்தான். பூரணச்சந்திரன் தன்னிடத்திலுள்ள மானை இழந்துபோனான். மேகங்களெல்லாம் மழையைச்சொரிந்தன. அஷ்டகுலாசலங்களும் முடிகுலைந்துபோனதுகள். உலோகத்திலுள்ளஜீவகோடிகளுக் கெல்லாம் தேகத்தை விட்டு உயிர்கழிந்து போகும்படி போலாய்விட்டது. அப்போது அஷ்டதிக்குகளைச்செயம்பெற்ற இராவணனுடைய குமாரனை இந்திரஜித்து கூர்மையானபத்துப்பாணங்களை இளையபெருமாளுடைய திருமேனியில் எய்தான். இளையபெருமாள் தம்முடைய வில்லைவளைத்து, இந்திரஜித்துவின் கவசமுந்தேகமும் ஊடுருவிப் போகும்படி சில அக்கினிமுகாஸ்திரத்தைப் பொழிந்தார். இந்திரஜித்து தேவர்களை முன்னந்தொடர்ந்து துரத்திக்கொண்டறுத்தவைகளான சில சாஜ்ஜொலியமாய்ப் பிரகாசிக்கின்ற பாணங்களைப் பொறுக்கியெடுத்து வேகமாய்ச்செலுத்தி, ஆஞ்சநேயருடைய திருத்தோள்களின்மீது பிரயோகித்தான். அவைகள்பட்டு ரத்த வெள்ளஞ் சொரிகின்ற மலையையொத்த அனுமானுடைய திருமேனி சூரியனைப்போலச் சிவந்திருக்கின்றதை இளையபெருமாள் பார்த்து, மிகுந்தகோபத்துடனே இந்திரஜித்தேறியிருந்த தேரை வேறொரு பக்கத்திற்கும் போகவொட்டாதபடி குதிரைகளையும் வண்டிகளையும் சிதைத்துவிட்டு, இருளைக்கெடுக்கின்ற சூரிய கிரணங்களைப்போலச் சரவருஷங்களைப்பொழிந்தார். இந்திரஜித்துவின் தேர் அழிந்தமாத்திரத்தில் அதைக்கண்ட தேவர்கள் மிகுந்த சந்தோஷங்கொண்டு

கோவென்று ஆரவாரித்தார்கள். பிரஹ்ம மேந்திராதி பிரதம தேவர்களும் சந்தோஷித்தார்கள். அதைக்கண்ட இந்திரஜித்து மிகுந்த கோபமுற்றுக் குபீரென்று பாய்ந்து வேறொரு தேரின்மேலேறி, பத்துப் பாணங்களை இளையபெருமாள் திருத்தலையிற் பிரயோகித்தான். அதுகள் பட்டவுடனே லக்ஷ்மணர் துடித்துச்சோர்ந்து, உடனே சோகமாறிப் பிறைமுகாஸ்திரங்களையெடுத்துப் பிரயோகித்தார். அதுகளையவன் விலக்குகிறதற்கு முன்பாகப் பூர்வம் விருஷபவாகனருடரான உருத்திரமூர்த்தியானவர் கர்வங்கொண் டெதிர்த்து வந்த யமனை ஏகபாதத்தாலே மார்பிலெட்டி உதைத்ததுபோல இளையபெருமாள் அவன் மார்பில் ஒரு பாணத்தை ஏவினர். அந்தப் பாணம் அந்த இராக்ஷசனுடைய கவசத்தையும் அவன்மார்பையும் தடாரித்துக் கொண்டு போனவுடன் அவன் பரவசப் பட்டுச் சோகமடைந்தான். அதைக்கண்ட தேவர்கள் ஆரவாரித்தார்கள். மறுபடியும் இளையபெருமாள் மத்தியான காலத்துச் சூரியனுக்கொப்பான ஒரு பாணத்தைப் பிரயோகஞ்செய்து அவனுடைய விருதுக் கொடியையறுத்துத்தள்ளி, இன்னுஞ் சில பாணங்களைக்கொண்டு அவனுடைய வஜ்ரமயமான தோள்களையுஞ் சின்னபின்னப் படத் தொளைத்துவிட்டார். அதுபட்ட மாத்திரத்தில் இந்திரஜித்துவின் தேகத்திலிருந்து ரத்தவெள்ளமானது அக்கினிமயமாய்ச் சூடுகொண்டு ஒழுகிவரச் சலனமுற்றவடமேருபர்வதம்போலக் களைத்துச் சாய்ந்து, மறுபடியுஞ் சோகந்தெளிந்து பக்ஷிகள் மாமிசத்துக்காகச் சுழலமிட்டுக் கொண்டிருக்கின்ற சில பாணங்களைப் பிரயோகித்தான். அவைகள்போய் இளைய பெருமாளுடைய கவசத்தில் நுழையாமல் கீழே பலபலவென்று உதிர்ந்துபோக, அதைக்கண்டு ஆயிரங் குதிரைகள்பூட்டிய தேரையுடைய இந்திரஜித்து அதிககோபங்கொண்டு மறுபடியும் ஆயிரம்பாணங்களை இளைய பெருமாளுடைய திருமார்புக்குக் குறிவைத்து ஏவினன். அதுகளை இராமானுஜர் குறிபார்த்துச் சில திவ்யபாணங்களால் முறித்தெறிந்து, சில பாணங்களை அவனுடைய தேகத்தில் ஊன்றச்செய்து, சில பாணங்களை அவன் வில்லினது நாணறும்படிப் பிரயோகித்தார். அப்போது இந்திரஜித்துத் திகைத்து இளையபெருமாளுடைய வில்லைப்பார்த்து, இந்த வில்லென்ன விஷ்ணுவினுடையதோ? சிவனுடையதோ? அல்லது பிர்ம்மாவினுடையதோ? என்று சந்தேகித்து, அவருடைய கவசத்தையும் பேதிக்கமாட்டாமல் தன்னிடத்திலிருக்கின்ற பாணங்களெல்லாம் அவரை ஜெயிக்க மாட்டாமையைக் கண்டு மனமயங்கிப்போனன்.

அந்தத் தன்மையை அவன் சிறிய பிதாவான விபீஷணர்கண்டு, இளையபெருமாளைக் கிட்டிவந்து, அவர் திருமுகத்தை உற்றுப்பார்த்து, சுவாமி அடியேனுடைய ஒரு சிறு விண்ணப்பத்தைக் கேட்டருள வேண்டும். இவன் எப்படிப்பட்ட தேவர்களையும் போரில் வெற்றிபெற்றவனுக்கும். இப்படிப்பட்டவன் இப்போது மனந்தளர்ந்து பித்துக்கொண்டு போனன். இனி பிழைக்கப்போகின்றதில்லை என்றார். அப்போது இந்திரஜித்து யமனைப்போலக் கோபித்து, வில்லில் வேறு நாணிபூட்டி நாணேறிட்டுக் குணத்தொனி செய்து, இதைத் தடுத்துவிடு பார்ப்போமென்று ஏழுலோகத்தையும் போய்முட்ட அதிவேகங்கொண்டு வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தான். இளையபெருமாளும் அதனை வாயுவாஸ்திரத்தைக் கொண்டே தடுத்து விட்டார். அவன் மறுபடியும் அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்தான். இவர் அந்த அக்னியாஸ்திரத்தைக்கொண்டே தடுத்து விட்டார். இராக்ஷசன்வருணாஸ்திரத்தைத் தொடுத்தான். இளையபெருமாளும் அந்த அஸ்திரத்தைக் கொண்டே தடுத்துவிட்டார். அந்தத் துஷ்டன் சூரியாஸ்திரத்தைப் பிரயோகித்தான். தர்மிஷ்டரான இராமானுஜரும் சூரியாஸ்திரத்தைக்கொண்டே தடுத்துவிட்டார். அக்கால் இந்திரஜித்துஇராமானுஜரைப்பார்த்து, நல்லது லக்ஷ்மணா! இத்தனை அஸ்திரங்களையுந்தடுத்தாயல்லவா? இந்த அஸ்திரத்தைத் தடுத்துவிடுபார்ப்போம். என்றுகூறி சமுத்திராஸ்திரத்தைச் செலுத்தினன். அதற்கு லட்சுமணர் அடா இந்திரஜித்தே! நான் வேறொன்றும் ஏவவில்லை. அந்த அஸ்திரத்தைக்கொண்டே தடுக்கின்றேன் பாரென்று தொடுத்து நீக்கினர். அப்போது

இந்திரஜித்து இனிக் கொல்லத்தக்க அஸ்திரத்தைத் தொடுக்கவேண்டுமென்று நினைத்து, ஓ லட்சுமணு! இனி நீ மாண்டுபோவாய். என்றுகூறி பிரம்மாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித்தான். அக்காலந்தர மார்க்கத்தில் வேடிக்கைபார்த்துக்கொண்டு நின்றவர்களான பிரம்மாவும் தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும் தேவேந்திரனும் மற்றமற்ற தேவகணங்களும் மனம்நடுங்கி, இனிமேலும் இளையபெருமாளுக்கு இந்த அஸ்திரத்தினுல் மரண முண்டாகாமற் போகக்கடவதென்று ஆசீர்வதித்தார்கள். அப்போதுப் பிரம்மாஸ்திரமானது உகாந்த காலத்தில் உலோகங்களை யெல்லாம் அழிக்கும்படியான வடவாமுகாக்கினியோடு துவாதசாதித்தியர்களுடைய பிரகாசத்தைக் காட்டிலும் மிகுந்த கிரணங்களைவீசிக்கொண்டு சமானமில்லாமல்வருகின்றதை இளையபெருமாள் பார்த்து, இவனிந்தப் பிரம்மாஸ்திரத்தைத் தன் வல்லமையால் மீட்டுக்கொள்ளவு மாட்டான். தடுக்கவு மாட்டான். நாம் மாண்டுபோவோமென்று விட்டான். இனி நாம் நம்முடைய நிலைமையைக் காட்டாமற் போனுேமாஞல் தகுதியல்ல. என்று தம்மிடத்திருந்த சஹஸ்திரகமலவானுகிய பிரம்மாவினுடைய அஸ்திரத்தைத் தொடுப்பதாகத் திருவுள்ளங்கொண்டு அதனைப்பார்த்து, ஓ சதுர்முகாஸ்திரமே! தேவலோகத்தை மன்னித்து பூலோகத்தை மன்னித்து, இந்தச் சத்துருவினுடன் மாத்திரம் நீ போராடி அவன் விட்ட பிரம்மாஸ்திரத்தை மாத்திரம் மாற்றிவிடக் கடவாயென்று ஆக்கியாபித்து விட்டார். அதைக்கண்ட தேவர்கள் ஆச்சரியப்பட்டு, ஆ! ஆ! இவருடைய கிருபையே கிருபை. அது தம்முடைய தேகத்தைஅழிக்கவந்தபோதும் தாம்தர்மத்தை யழிக்காதபடி யிருக்கின்றுரே! என்று ஒருவரோடொருவர் கூறி ஆனந்தித்தார்கள். இப்பால் ஸ்ரீராமபிரானுடைய திருத்தம்பியார் விட்ட அஸ்திரமானது இடியேறு வந்து எதிர்த்த காலத்தில் அதற்கு எதிர்ப்பாக வேறு நெருப்பைப் பிரயோகித்தால் முன்வந்த இடி மாய்ந்துவிட்டதுபோல இராக்ஷசன்விட்ட அஸ்திரத்தை மாய்த்துவிட்டு, சப்தலோகங்களையுஞ் சுட்டெரிக்கும்படியான பெருந்தீயைப்போல ஆகாசத்தையெல்லாம் மூடிக்கொண்டு நிறைந்து நின்றது. இப்படியவ்வஸ்திரமானது எங்கும் படராதபடி சூரியகுல திலகராகிய இளையபெருமாள் வேறொரு அஸ்திரத்தைத் தொடுத்து அதன்மீது விட்டார். அது ஒருவிஷ மற்றொரு விஷத்தை மாய்த்துவிடுவதுபோல அந்த அஸ்திரவேகத்தை மாய்த்துவிட்டது. தேவர்களதைக் கண்டு, வெற்றிபெற்ற இந்த இளையபெருமாளுக்கு இனிமேலுமாகக் கைகூடாத நன்மைகளும் இருக்கின்றதுகளோவென்றுமனத்தைரியங்கொண்டு சந்தோஷப்பட்டார்கள். அப்போது ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரன் அத்தேவர்களைப் பார்த்து, ஓ தேவசமூகங்களே! இராமலட்சுமணர்களாகிய இருவருக்குமிதுமுடியாத காரியமல்லவென்று நீங்கள் நிச்சயந்தெரியாமற் சொன்னீர்கள். எதார்த்த பொருளை சொல்லுகிறேன் கேளுங்கள். நாராயண நரரென்கிற திருநாமங்களை யுடையவர்களாய், நமக்கெல்லாம் மூலமுதற்காரண வஸ்துவுமாய், பாவவினைகளை யெல்லாம் கழித்த ஜ்ஞானிகளும் தம்மை ஆராய்ந்தறியவிடாத ஒரு மஹா மாயையினுலே தம்மை மறைத்துக்கொண்டு, நாம் பாராயணம் பண்ணுகின்ற நான்கு வேதங்களையுங்கடந்த புராணபுருஷர்களாக்கும் இவர்கள். அறிவுக்கு மெட்டப்படாமல் அப்பிரமேயர்களா யிருந்தவர்கள். தர்ம மார்க்கம் கெட்டுப்போகப் போகிறதென்று இந்த லோகத்து மனுஷியர்களைப்போல வந்து அவதரித்து அந்த தர்மத்தை நிலைநிறுத்துவார்கள்.

ஆகையால் அதர்மிகளான இந்த இராக்ஷசர்களை வேரறக்களையும்படித் திருவயோத்தியில் தசரதமகாராஜாவின்தபோமகிமையால் அவருக்குப் புத்திரர்களாக அவதரித்து, அந்த அவதார ரஹஸ்யங்களை ஒருவருந் தெரிந்துகொள்ளக்கூடாத விதமாய் நடித்துக்கொண் டிருக்கின்றுர்கள். ஜீவகோடிகளிளெல்லாம்நிறைந்துயாவரும்ஸ்தோத்திரிக்கத்தக்க ஒருவனென்கிற ஈஸ்வரனை யாவருக்கும் வெளியிடுகின்ற சந்தேகிக்கவேண்டாத நிச்சய நிலையையுடையவர் இவர். அந்த ஸ்ரீராமனேவென்முல்? இந்த லோகமெல்லாவற்றிலும் தயிரில்தோய்ந்த பிறைபோலக்கலந்து அவைகளுக்கு உத்தி

ருஷ்ட ஆதாரஸ்தானமாயிருக்கின்ற நாராயணனும், வேதபுருஷனாலும் புகழ்ந்து சொல்லுகிறதற்கு முடியாத சகல காரணபூதனுமாகும். இது மூலரஹஸ்யமென்று அறியுங்கள். பெரியபாற்கடலிலே சயனித்துக்கொண்டிருந்தவரும், முன்னால் நாம் நம்முடையகுறைகளைச்சொல்லிக்கொண்ட போது துர்ப்பாக்கியர்களான இராக்ஷசர்களைக் குலத்துடனே களைந்தெடுத்துக் கொன்று சுபாக்கிய தர்மத்தை ஸ்தாபனம்பண்ணுகிறதற்குத் திருவுளங் கொண்டவரும் இவர்தான் என்று சொல்லினான். அப்போது தேவர்கள் நாங்கள் இந்த ரஹஸ்யங்களெல்லாவற்றையும் அநுபவசித்தமாய் அறிந்திருந்தும், அவருடையமகாமாயாப் பிரயோகத்தாலே எங்களுக்கு அவையெல்லாம் தெரியாமல் மறந்துபோனோம். இப்போது உம்முடைய அநுக்கிரகத்தால் உபதேசித்த வாக்கியத்தைப் பற்றினதினாலே எங்களுக்குள்ள சந்தேகமுழுவதும் நீக்கினோம். இனி எங்களுடைய சத்துருக்களையெல்லாம் ஜெயித்துவிட்டுச் சந்தோஷமாய் வாழ்ந்தோம். எங்கள் வருத்தங்களைக் கடந்தோம். என்றுகூறிவணங்கித்தெண்டனிட்டார்கள். இப்படியிருக்கவக்கிரதந்தங்களையுடைய இந்திரஜித்து நாராயணாஸ்திரத்தையெடுத்து இளையபெருமாளைப் பார்த்து, நீ இந்த அஸ்திரத்தைத் தடுத்துவிடுவாயேயானால் உன்னையெதிர்த்து யார் நிற்கவல்லவர்கள்? உனக்கிணையார் இருக்கின்றார்கள்? நீ இதைத் தப்பித்துக்கொள்ளமாட்டாய். உடனே மாண்டு சுவர்க்கம் அடைந்துபோவாய். இது தப்பாமற்கொல்லும். என்று சொல்லி லோகங்களெல்லாம் நிலைகலங்கித்தடுமாறும்படியாகப்பிரயோகித்துவிட்டான். அதைக்கண்டு தேவர்களெல்லாம் தங்களிரண்டுகைகளையும் சிரசின்மேற் கூப்பிக்கொண்டு தங்களைக் காத்துக்கொண்டார்கள். அப்படியே வானரர்கள் முதலாகிய மற்றவர்களும் சிரத்திற் கரத்தைக்குவித்து வாய்திறவாமல் நடுங்கி நின்றார்கள். அப்போது பழுதுறுமற்போவதும் யாவர்களையும் சம்மரிப்பதுமான அந்த நாராயணாஸ்திரம்வருகின்றதை இளையபெருமாள் பார்த்து, சாக்ஷாத் சக்ரதரனான ஸ்ரீயப்பதியேயென்று தியானித்து எதிரே நடந்து போனார். அக்கால் அந்த நாராயணாஸ்திரமானது எந்தலோகங்களையும் சுட்டெரிக்கும்படிச் செல்லுகின்றதென்பதைத் தெரிந்தவரும் ஒருவராலும்விலக்கரிதாகியமுழுமுதற்காரணவஸ்துவின் அஸ்திரமென்று தியானிக்கின்றவருமான ஸ்ரீ ராமாநுஜர் மீதுபோகாமல்,விலகிவலங்கொண்டுசுற்றி அந்தரமார்க்கமாகப்போய்விட்டது. உலகமெல்லாம் நிறைந்துவந்த நெருப்பும் அவிந்துபோனது. புகையும் நீங்கிப்போய்விட்டது. அப்படிப் பொதுவாய் நாராயணாஸ்திரம்போய்விட்டதைக்கண்ட தேவர்களெல்லாம் இளையபெருமாளை ஸ்தோத்திரம் பண்ணினார்கள். வானரவீரர்களெல்லாம் ஆநந்தக் கூத்தாடினார்கள். தேவஸ்திரீகளெல்லாம் நாட்டியமாடினார்கள். மகாரிஷிகளெல்லாம் ஐயா இளையபெருமாளே! உலகங்களையெல்லாம் ரக்ஷித்தீரே. இதற்கு எம்மாற்செய்யுங் கைம்மாறு யாதுண்டென்று கொண்டாடினார்கள். தாமரசோற்பவனான பிரம்மதேவனும் தேவேந்திரனும் வாய்நிறையப் புகழ்ந்தார்கள்.

இதை இந்திரஜித்து பார்த்து இவன் ஆரோ என்று சந்தேகித்து, இவன் அந்த அஸ்திரத்திற்குமுதல்வனும்உடையவனுமென்று நினைத்து, ஆராயிருந்தபோதிலும் இருக்கட்டும். இனி நான் ஆலோசிக்கமாட்டேன் என்று நினைத்துச் சிவாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணி இவனைக் கொன்றுவிடுகிறேனென்று புத்திபண்ணினான். பார்ப்பானாகிய பிரமதேவன் சிருஷ்டித்த லோகங்களையெல்லாம் ஒரேநாளில் ஒரு மத்தியானத்திலே சம்மரிக்கின்ற உருத்திரமூர்த்தியினுடைய பாசுபதாஸ்திரத்தைத் தொடுக்கிறதாக இந்திரஜித்து எண்ணியிருப்பதையறிந்து மேலே வாசமாயிருந்த தேவகணங்களெல்லாம் பயந்துவிட்டதுகள். உலகமெல்லாம் இனி நம்மை க்ஷணநேரத்துக்குள்ளாக அழித்து விடுவானே இந்தச்சண்டாளனென்று மயங்கிவிட்டதுகள். அப்போது இந்திரஜித்து அந்த அஸ்திரத்தைக் கையேந்தி, இது சிவபிரானுடையதாமே, அவர் நம்மீது கருணை கொண்டு கொடுத்ததல்லவா? இதற்காக அநேகம்பேர்கள் பலகால் தவஞ்செய்தும் அவர்களுக்குக்கொடாமல் உனக்குக் கொடுத்தேனென்று அந்த உருத்திரமூர்த்தியே சொல்லியிருக்கின்றாரே; ஆகையால் இது

இந்த இலக்ஷ்மணனுடைய உயிரைவாங்குமோவென்று சந்தேகிக்க வேண்டியதில்லை. அல்லாமலும் நாமேயிதை முன்னுல் சத்துருக்களின்மீது விட்டபோதும் இதற்கெதிராக நின்றவர்கள் ஒருவருமில்லையல்லவா? என்று தைரியங்கொண்டு இராவணியானவன் அந்தஅஸ்திரத்துக்குமானஸிகமாகப் புஷ்பம்-தீர்த்தம்-சந்தனம்-நைவேத்தியம்-தூபம்-தீபம் - இவைகளைக் கொடுத்து, இந்த லக்ஷ்மணனுடைய உயிரைக் கொண்டுவரக் கடவாயென்று அனுசந்தித்து, அதிக கோபத்துடனே பெரிய வில்லிற்பூட்டியநாணியைத் தோள்புரளவாங்கி ஒருவிதத்தாலும் தடைபடாத வல்லமையுள்ளதான பாசுபதாஸ்திரத்தைப்பிரயோகித்து விட்டுவிட்டான். அப்போது அந்தப்பாசுபதாஸ்திரமானது ஒருபக்கத்திலே சூலாயுதங்களையும், மழுவாயுதங்களையும், பலவித பாணங்களையும், அக்கினியையும், விஷத்தையும், சர்ப்பங்களையும், நீரிடி நெருப்பிடிகளையும், அநேகமய ஸ்வரூபங்களையும், கரும்பூதங்களையும், பெரும்பேய்களையும், உலகமெல்லாம் நிரப்பிக்கொண்டு வருவதல்லாமல், ஒருபக்கத்திலே வடவாமுகாக்கினியையும் மற்றொரு பக்கத்திலே லோகங்களையெல்லாம் பின்தொடர்ந் தழிக்கும்படியான சூறைப் பெருங் காற்றையும் உடையதாய், சப்தசமுத்திரங்களுக்கும்அப்புறமாயிருக்கின்ற பெரும்புறக்கடல் வந்ததுபோலவும், அந்தச்சமுத்திரத்தில் வாசமாயிருந்த பேரிருள் மூடிவந்ததுபோலவும் வந்தது. அதைக்கண்டமாத்திரத்தில் இந்தஅஸ்திரம் பழுதாகமாட்டாது. லக்ஷ்மணன் இறந்துபோனுர் என்று பயந்து தேவர்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள். ரிஷிகளெல்லாம்பயந்தார்கள். வானரங்கள் பட்ட பாட்டைக்குறித்துச் சொல்லுகிறது அதிசயமோ? சூரிய சந்திரர்கள் கதிமாறினுர்கள். இந்தத் திரிலோகமுழுவதும் சுழன்றதுகள்.

அதைப்பார்த்த விபீஷணுழ்வான் உயிர் நீங்கும்படியான பயத்துடனே மனந்திடுக்கிட்டு, இந்த அஸ்திரத்தை நீக்கும்படியான உபாயங்களும் உண்டாகுமோ? ஓ சுவாமி! ஓ வீரர்க்குள்ளே முதன்மையான இளையபெருமாளே! ஓ சக்கரவர்த்தித்திருக்குமாரரே என்று கூப்பிட்டார். அதற்கு இளையபெருமாள் சிரித்தார். அக்கால் வெற்றிமாலையைத் தரித்த பலவான்களான வானரவீரர்களெல்லாம் இளையபெருமாளுடைய திருவடிநீழலில் ஒதுங்கி, சுவாமி! தேவரீருக்கு அபயம். அபயம் என்று கூவினுர்கள். இப்படிகூவின எல்லாரையும் இராமாநுஜர் பயப்படாதேயுங்களென்று திடங்கூறி, உங்களெல்லாருக்கும் அபயங் கொடுத்தோமென்று தமது திருக்கரத்தால் அவர்களையாதரித்து, இந்தப் பூலோக சுவர்க்கலோகத்தார் படுகின்ற பயங்களை நாம் அறிந்தோம். இனிநாமிதைச்சும்மாவிடப் போகிறதில்லை. சிவபிராஞகிய பஞ்சமுகனுடைய அஸ்திரத்தையே தொடுக்கின்றேன் என்று நிச்சயித்து அந்தப்பாசுபதாஸ்திரத்தையெடுத்து, இந்திரஜித்துவிட்ட அஸ்திரத்தைமாத்திரம் அழித்துவிடக்கடவாய். உலகத்துக்கு ஓர் உபத்திரவமும் செய்யவேண்டாம். என்று உபமந்திரித்து அதனுள் வேறொரு அக்கினியாஸ்திரத்தைச்சேர்த்துச் செலுத்தினுர். அதுபோய் அந்த அஸ்திரத்தினுலுண்டாகிய எல்லா விபரீதங்களையும் ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளாக விழுங்கிவிட்டது. அப்போது தேவலோகவாசிகளெல்லாம் ஆரவாரித்தார்கள். பூலோகவாசிகளும் ஆர்ப்பரித்தார்கள். தேவதுந்துமிமுழங்கினது. சப்தசமுத்திரங்களும் கோஷித்ததுகள். சப்தமேகங்களும் முழங்கினதுகள். சாஸ்திரங்களுடனே கணிதாதி தேவதைகளும் சப்தமிட்டன. வானரர்களெல்லாம் கர்ஜ்ஜித்தார்கள். ஜெயவிஜயீபவ: என்று சதா பல்லாண்டு கூறிக்கொண்டிருக்கின்ற ஆகாசவாணியும், தர்மதேவதையும் ஒலித்தன. மற்றவர்களெல்லாரும் அதிகஸந்தோஷமாகச்சப்தித்தார்கள். இந்தலட்சுமணன் உகாந்தகாலத்தில் உலகங்களையெல்லாம் சம்மரிக்கின்றவனுடைய பாசுபதாஸ்திரத்தை மயங்காதபடி தெரிந்து அதைமாய்த்துவிடவும் வல்லவனுனுனே யென்றெண்ணிக் கொல்லும் யமனிலுங் கொடியவனுன இந்திரஜித்துமனந்திகைத்துப்போனுன். குறையாத வெற்றியாளர்களான வானர வீரர்களெல்லாம் இவர் சாக்ஷாத் விஷ்ணுவாமிசமென்பதைத் தெரிந்துகொண்டார்கள். அக்கால் இந்திரஜித்து தேவதாஸ்திரங்கள் வியர்த்தமாய்ப் போய்விட்டதுகளென்று வெட்

கப்படாமல், நமக்குப் பாணப்பிரயோகம் பண்ணுகிற சாமர்த்தியம் இருக்கின்றதல்லவாவென்று விசைகொண்டு, தன் கைச் சமர்த்தால் சிலபாணங்களைவாரி இறைத்துவிட்டான். அவைகளெல்லாம் மிகுந்த ஞான சுருபரான இளையபெருமாளுடைய பருத்த தோள்களின்மீதும், நுதற் சுட்டியின்மீதும் பாய்ந்ததுகள். அதுகண்ட சுக்ரீவமகாராஜனாதிய மகா பலாட்டியரான வெற்றிவீரர்கள் கையோயாமல் அநேக மலைகளைவாரி வருஷமாகப்பெய்து, ராக்ஷச சேனைகளைத் தும்சம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இளையபெருமாள் சதகோடி பாணவருஷங்களை இராக்ஷசர்கள் இனிப் பிழைக்க மாட்டார்களென்று சொல்லும்படிப் பிரயோகித்தார். அப்போது இந்திரஜித்து தன் சிறியபிதாவாகிய விபீஷணனைப் பார்த்து வெகுவாய் நிந்திக்கத் தலைப்பட்டான்.

ஓ சிற்றப்பா! உன்கையிலே பலம்பொருந்திய ஒருதண்டத்தை வைத்துக்கொண்டிருந்தும் மனிதர்களுக்குத்தாழ்ந்து, இராக்ஷசமுறைமைமாறி, புரட்டுக்காரரைப்போலப்புகழ்ந்து, புத்தியில்லாதஅடிமைகளைப் போலத் தொழுது, அவர்களுக்குப் பிறகே நின்றுகொண்டு தப்பட்டையைப்போலச் சும்மாச்சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்கின்றாய். உன்தலையை அறுத்தெறிந்துபோடுவேன். பழியாகுமேயென்று விட்டுவிட்டேன். எல்லார்கண்ணுக்கும் தோற்றும்படியான உயர்ந்த ஆசனத்தின்மீது வீற்றிருந்து மும்மூர்த்திகளும்பயந்து ஒதுங்கித் தெண்டனிட்டுச்சொன்னபடி கேட்கவும் திரிலோகத்தாரும் வந்து காலில்வணங்கவும் மகதைஸ்வரியம் சம்பவித்தாலும், எல்லாரையும் அழிக்கும்படியான ஆயுதத்தைக் கையில்வைத்திருக்கின்ற புருஷர்களெல்லாம் வெட்கிப் பழிக்கத்தக்கவனாகவிருக்கிற உன் வாழ்வென்னத்திற்காம்? ஐயோ! இந்தவாழ்வை யாராவது நயந்தவர்களாக நீகண்டாவது கதையிற்கேட்டாவதிருந்ததுண்டா? நீரிருக்குமட்டும் மீன்களிருக்கும். நீர்போனால் மீன்களெல்லாம் ஒருமிக்கமாண்டுபோகும். அதுபோலராவணனுடனே ராக்ஷசக்கருவெல்லாம்மாண்டு போகப் போகின்றார்கள். தவறமாட்டார்கள். லங்காபட்டணமிருக்கின்றது. நீ ஒருவனு மிருக்கின்றாய். நீ ராஜரீகஞ் செய்கிறதற்கு உன்னோடுகூட யார் இருக்கின்றார்கள்? ஓ சிற்றப்பா! முன்னால் உலகத்தையெல்லாம் பெற்ற தேவபிதாவாகிய பிரமாவின் தகப்பனை விஷ்ணுவை யுத்தத்தில்தோற்கடித்து, சுப்பிரமணியருடைய பிதாவாகிய சங்காமூர்த்தியைக் கயிலாச மலையுடன் பேர்த்து ஒரு கையில் தூக்கின என்பிதா இராஜரீகஞ்செய்தது உன்னைப் போல மனுஷிய சகாயத்தைக்கொண்டு தானா? அந்தப் பிரமவமிசமான பிராமண குலத்துக்கெல்லாம் தனித்தலைவனாயிருக்கின்ற உன்னைத் தேவர்களெல்லாம் இனி என்னமாய் வணங்குவார்கள்? நீமனிதர்களுக்கு அடிமையாகி இராவணனுடைய செல்வமெல்லாம்எப்படியாளப்போகிறாய்? உனக்கென்னமானமிருக்கின்றது? எங்களுடனேகூட பெருமையெல்லாம் அடங்கிவிடப்போகின்றது. உங்கள் தங்கையை மூக்கறுத்தவர்களுக்கு நீ வேண்டிய உளவுகளையெல்லாஞ்சொல்லிக்கொடுத்தும், அதனாற் பல இகழ்ச்சிகளையுண்டுபண்ணியும், பிரகாசத்தை வீசுகின்ற ஆயுதங்களைக் கையிலுடைய உங்கள் தமயனை எங்களோடுகூடக் கொல்லும்படிப் பண்ணியும், எங்களுக்கு இதுவரையிலுந் தோற்றுக் கிடந்த இயமனாலே எங்கள் குலத்தையெல்லாம் ஜெயிக்கச்செய்தும்வருகிறாய். இதனால் நீ அடையப்போகிற வாழ்வைக்காட்டிலும் தரித்திரமுற்றிருப்பதே மேலாகுமல்லவா? ஓ வெற்றிபெற்ற தோள்களையுடைய சிற்றப்பா! சித்திரமெழுதி அழகுபெற்றிருக்கின்ற பல மூள்ளதோள்களையுடைய இராவணன் ஸ்ரீராமனுடைய பாணத்தினாலே நிலப்புழுதியே தனக்குப்பாயாகப்புரண்டகாலத்தில் நீயும்புரண்டு அவன்மேல்விழுந்து அழப் போகின்றாயோ? நீயுங்கூட அவனுடனே சண்டை செய்யப் போகின்றாயோ? அல்லது அவனை வாழ்த்தித் தொழப்போகின்றாயோ? என்னசெய்ய நிச்சயித்திருக்கின்றாய்? மாமிசத்துடனேகூடினதேகத்திலிருந்து நீங்கிப்போன உயிரை மறுபடியும் சஞ்சீவியாற் பெற்ற மனிதர்களுக்குள் லங்காதிபதியான இராவணேஸ்வரனை ஜெயிப்பவர்களுமுண்டா? நீயும் அவனுடைய செல்வத்தை யெல்லாம் ஆளும்படியாகத் தகுந்தவனாவாயோ? அந்த ராவணன் விடு

கின்ற பாணத்தினாலே அவர்களுடனே நீயும் சுவர்க்கம் அடையப்போகின்றாயல்லவா? ஐயோ! இப்போது நான் பழிக்காக முன்பின் பார்க்கிறேனென்றான். இப்படி மேகநாதனென்னும் இந்திரஜித்து கூறிய அந்தவார்த்தைகளையெல்லாம் செவிகொடுத்துக்கேட்ட விபீஷணாழ்வான் மாலையணிந்தமுடியை அசைத்துச்சிரித்து இவ்வாறு சொல்லுகிறார்.

அப்பா இந்திரஜித்தே! பாவமெப்போதுங் கெட்டது. தர்மமே உயர்ந்ததாகும். நான்தர்மத்தைத்துணையாகப்பற்றுவேனேயல்லாமல் பாவத்தைத் துணையாகக்கொண்டு மாளாப்பழியுடனே உயிர் வைத்திருக்கமாட்டேன். பொய்யைப்பகைத்துவிட்டுவிடுவேனே யல்லாமல் மெய்யில் கொஞ்சமேனும் தவறமாட்டேன். இலங்காதிபதியாகிய இராவணன் எப்போது தவறிநடந்தானோ அப்போதே அவனுக்குத் தம்பியாக நான் பிறக்கவேயில்லை. நான் இதுவரையிலும் கள்குடித்தவனல்ல. பொய் சொன்னவனும் அல்ல. மேலும் பலவிதமாக ஒருவரிடத்திலும் ஒன்றும் அபகரித்துக் கொள்ளவில்லை. மாயமான வஞ்சனையை நான் நினைத்ததேயில்லை. இதுவரையிலும் என்மேற்குற்றஞ்சொன்னவர்கள் ஒருவரும் இல்லை. இவையனைத்தையும் நீயும் உன்தந்தை முதலானபேர்களும் பார்த்திருக்கின்றீர்களல்லவா? பெண்பிள்ளையின் பொருட்டுத் தவறி நடந்தவர்களைத் துறந்துவிட்டதினாலே என்மீது பிழையென்று சொல்லத்தகுமா? அப்பா இந்திரஜித்தே! திரிலோகத்தாரும் ஸ்தோத்திரஞ்செய்யத்தக்க முதற்காரண வஸ்துவும், எல்லார்க்குமூத்த தேவதேவனான ஸ்ரீராமமூர்த்தியினுடைய தேவியும், கற்பிற் சிறந்தவளுமான சீதாபிராட்டியாரை மனவருத்தப் படுத்துவது தகாதென்று மாத்திரந்தான் சொன்னேன். அதற்கு உன்தகப்பன் என்னைக்கோபித்து அப்புறம் போய்விடென்று கட்டளையிட்டான் அதன்பிறகுதான்வந்தேன். அப்படியிருக்க நான் நகரத்திற்பொருந்தி வாழ்வதெப்படி? நல்லது; அதிகக்குரூரிகளாய்த் தர்மத்தைப்பாராமற் கெட்ட விருப்பத்தையே நல்விருப்பமாக விரும்பி மாளுகின்ற உங்களுக்கேகீர்த்தியுண்டாகட்டும். மோக்ஷமும் உங்களுக்கே கிடைக்கட்டும். ஒழுக்கமாய்நடந்து பெரியோர்கள் நியமித்த அநுஷ்டானப்படித் தர்மத்தைப் பின்பற்றுகின்ற என்போன்றவர்களுக்கே நிந்தையுண்டாகட்டும். நரகமும் எங்களுக்கே கிடைக்கட்டும். அப்பா இந்திரஜித்தே! தர்மத்தைப் பாவம் வெல்லமாட்டாதென்கிறதை அறிந்திருந்தபடியினாலே ஞானமார்க்கத்திற்கும் இதுவேதகுதியென்று நினைத்துத் தேவதேவரான ஸ்ரீராமமூர்த்தியை அடைக்கலம் புகுந்தேன். இதைக்கண்டு என்னை எல்லாரும் புகழ்ந்தாலும் சரி. இகழ்ந்தாலும்சரி. நான் அஷ்ட ஐஸ்வரியபோகங்களை அனுபவித்தாலும் சரி. அவைகளை இழந்தாலும் சரி. எனக்கு அவைகளிலே எண்ணமில்லை என்று சாந்தசீலரான விபீஷணாழ்வான் சொன்னார். இவையனைத்தையும் இந்திரஜித்து கேட்டு, ஓ சிற்றப்பா! நீ அடையப்போகிற சிறப்புகளெல்லாம் என்கையி லிருக்கிற அர்த்தசந்திரபாணத்தால் அழிந்துபோகின்றசிறப்பேயல்லாமல் வேறல்ல. நீ என்னைவிட்டு எங்கே தப்பிப் போகப்போகிறாய்? என்றுகூறி இடியினும் கொடியவனான அவ்விந்திரஜித்து எல்லாவற்றையு முறித்தெறியத்தக்க வேகமுள்ள சிறகுகளோடு கூடிய ஸ்ரீ கருடாழ்வாருக்கொப்பான ஒரு அர்த்தசந்திரபாணத்தை வில்லிலே தொடுத்து, விபீஷணாழ்வானுடைய இரத்தினாபரணங்கள் அணிந்த கழுத்துக்குக் குறிவைத்து எய்துவிட்டான்.

அந்தப் பாணமானது இடியைப்போலவும் விஷபானம்பண்ணவரான திரிநேத்திர சங்கரமூர்த்தியினுடைய சூலாயுதம் போலவும் வேகங்கொண்டு வருகின்ற தன்மையை இளையபெருமாள் பார்த்து, விபீஷணாழ்வான் இதோமுடிந்துபோனார் முடிந்துபோனாரென்று சொல்லிக்கொண்டிருக்கின்ற தேவர்கள் பார்க்கும்படியாகத் தம்முடைய திருக்கையிலுள்ள ஒருபாணத்தால் அந்தப் பாணத்தைத் துண்டாக்கிக் கீழேதள்ளினார். அந்தப் பாணம் துண்டுபட்டுப்போன மாத்திரம் யமனுக்கு யமனான இந்திரஜித்து ஒரு வேலாயுதத்தையெடுத்துப் பிரயோகித்துவிட்டான். அஃதொரு சூரியன் வருகிறதுபோல வருகின்றதைக்கண்டு சகல லோகத்தாரும் நடுக்கமுற்றனர். உடனே தனுர் வித்தியா சாமர்த்தியரான லக்ஷ்மணப்பெரு

மாள் அதையுந்துண்டாய்விழும்படி வெட்டித்தள்ளினர். அப்போது விபீஷணும் வான் தம்மீது இந்திரஜித்து வேலாயுதத்தைப் பிரயோகித்தானேயென்று அதிக கோபங் கொண்டு, பாதசாரியாகத்தானே வாயுவேகமாய்ப்போய்த் தம்முடைய தண்டாயுதத்தினலே இந்திரஜித்துவின் தேரைச் செலுத்திக்கொண்டிருந்த சாரதியையுந்தேரிற்பூட்டிய குதிரைகளையுங்கொன்று அவனுடைய துடிப்பையும் மாற்றிவிட்டார். இப்படியழிந்த அத்தேரின்மேல் இருந்துக்கொண்டே இந்திரஜித்து கோடி அம்புகளைப் பிரயோகித்து, விபீஷணும் வான் தோள்களின்மேலும் இலட்சுமணப் பெருமாள் தோள்களின்மேலும் மற்றவானரவீரர்களுடைய மார்பின்மேலும் ரத்த வெள்ளம் பெருக்கெடுக்கத்தக்கதாகச் செய்து அண்டங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கும்படிவீராஷ்டகாசம்பண்ணி, இனி வேறோர் தேரின்மீதேறி அல்லாமல் யுத்தஞ்செய்வது தகாதென்று நிச்சயித்துக் கொண்டு, பார்த்தகண்ணிமைப்பதற்குமுன்னம் ஆகாசத்தில் மறைந்துவிட்டானென்னும் ஒரு சாமர்த்தியவார்த்தையை யாவரும் சொல்லத்தக்கதாக மேகத்தில் மறைந்துபோய் இராவணனிடம்போய்ச் சேர்ந்தான்.

*நிகும்பலைப்படலம்-முற்றிற்று.*

---

## இந்திரஜித்துவதைப்படலம்

இங்கே வானரவீரர்கள் இந்திரஜித்து ஆகாசத்தில் மறைந்துவிட்டானே முன்போல ஏதேனும் மோசஞ்செய்வானேவென்று கண்கலங்கிச் சந்தேகித்துக்கொண்டிருந்தார்கள். அத்தருணத்தில் தேகமெல்லாம் சல்லடைக்கண்களைப்போலத் தொலைக்கப்பட்ட புண்களிலே இரத்தமொழுகத் தக்கதாகப்போய் எதிரேநின்ற மகாசூரனென்று யாவருங் கொண்டாடும்படியிருந்த இந்திரஜித்துவை ராவணன் பார்த்து, அப்பா மேகநாதா! உன்னுடைய நிகும்பலையாகம் முடிவுபெருமல் அழிந்துபோனதென்பதை உன்தோள்களிலே அபரிமிதமாய்ப் பதிந்திருக்கின்ற அம்புகளே எனக்குத்தெரிவித்தன. கருடனைக்கண்டு படத்தையொடுக்கின பாம்பைப்போல ஒருநாளும் பின்னிடையாத வல்லமையுள்ள தேகம்நடுங்கி அதிகவருத்தமுற்றிருக்கின்றாய். மகனே! நீ நடந்தகாரியத்தைச்சொல்லுக. என்றுகேட்ட தகப்பனை ராவணனை இந்திரஜித்துப்பார்த்து, ஐயா பிரதாப லங்கேஸ்வரா! நான் செய்த மாயவஞ்சனைகளையெல்லாம் உமது தம்பியாகிய விபீஷணன் சூரியனைக்கண்ட இருளைப்போல ஓடச்செய்தான். அந்த உதவியினலே லக்ஷ்மணன் தன்னுடைய சேனைகளுடனே கூடவந்து சூழ்ந்துகொண்டு, நான்செய்த யாகத்தைச் சிதைத்துவிட்டு, மிகுந்த கோபத்துடனே வெகுசமர்த்தாய் உயுத்தத்துக்கு எதிர்த்து நின்ருன். அப்போது நான் பிரமா விஷ்ணு உருத்திரனென்று சொல்லுகின்ற மூன்றுதேவர்களுடைய அஸ்திரங்களையும் பிரயோகித்தேன். அவைகளையெல்லாம் அந்த ஸ்ரீராமன்தம்பி தடுத்துவிட்டான். சமஸ்தலோகங்களையும்சகலதேவர்களையும் சிருஷ்டித்த தேவதேவோத்தமரான சாட்சாத்நாராயணமூர்த்தியினுடைய அஸ்திரமானது நிராயுதனுய் அஞ்சலித்துக்கொண்டுநின்ற அந்தலக்ஷ்மணனை வலஞ்சுற்றிவந்து போய்விட்டதேயானல், அதைக்காட்டிலும் வல்லமைபெற்றது லோகத்திலே வேறோர் அஸ்திரமும் இருக்கின்றதோ? ஐயா! நம்முடைய குலத்திற் பூர்வந்தொட்டுச் செய்துவந்த பாவத்தினலேயே இந்த மாளாத பெரும்பழியைச் சம்பாதித்துக் கொள்ளலாயிற்று. அவ்விலட்சுமணன் கோபிப்பானேயானல் இந்த மூன்றுலோகங்களையும் ஒருவனேமுடித்துப்போடுவான். நெருங்கின யுத்தம் நடக்கும்போது லோகமெல்லாம்அழிந்துபோகுமென்னும் அநுதாபத்தினலே அவன் என்மேற் பிரமாஸ்திரத்தை விடவில்லை. ஆகையால் நான் இதுவரையிலும் ஜெயம்பெற்றுவந்தேன். மற்றிரண்டு அஸ்திரங்களையும் நானேமறுபடியும் பிரயோகித்தேன். அப்போதும் அந்த அஸ்திரங்களைமாத்திரம் தடுத்துவிட்டான். இன்னமும்பகைவர்களுக்குப்பலம் விர்த்தியாகின்றது. அவர்கள் தங்கள் சொந்தபலத்தாலே நம்மைக் கொல்லுகிறதற்கு நிச்சயித்திருக்கின்ருர்கள். அதற்காக நான் பயந்துவந்தேனென்று திருவுளப்படாதேயும். ஐயா எனதருமைப்பிதாவே? நீர்மாத்

திரம் அந்தச் சீதையினிடத்தில் வைத்த ஆசையை விட்டுவிடுவீரேயானால் அந்த இராமலட்சுமணர்கள் கோபமாறிப்போய் விடுவார்கள். நீர் அவர்கள்விஷயத்திற் செய்த அபசாரத்தையும் பொறுத்துக் கொள்ளுவார்கள். நான் உம்மிடத்திலுள்ள பக்ஷத்தினாலே சொல்லுகின்றேனேயல்லாமல் வேறொருகாரணத்தினாலும்அல்லவென்று லோகங்களையெல்லாம் கலங்கச்செய்த மகா வீரனான இந்திரஜித்துச் சொன்னான். இப்படி அவன் சொன்னவுடனே இலங்காதிபதியாகிய ராவணன் தன் பத்து முகங்களிலும் வக்கிரதந்தங்கள் பிரகாசிக்க இருபது தோள்களுங் குலுக்கிச் சிரித்து, அப்பா இந்திரஜித்தே! நீ இனிமேல் இந்தச்சண்டைக்குப் போகமாட்டாய்போலே இருக்கின்றது. மயங்காதே. நீ மனிதர்களுக்குப் பயப்படவேண்டாம். வருத்தப்படவும் வேண்டாம். நானேபோய் என்னொரு வில்லாலே அந்தமனிதர்களை ஜெயித்து எனக்கு வெற்றியுண்டாக்கிவைக்கின்றேன் பார் என்றுகூறிப் பின்னுஞ் சொல்லுகிறான்.

அடா இந்திரஜித்தே! முன்னே இறந்தவர்களெல்லாம் பின்னுலிருக்கின்றவர்கள் இந்தப்பகையை முடித்துவிடுவார்களென்று நினைத்திருந்தார்கள். பின்புள்ளாரெல்லாரும் போனவர்கள் ஜெயத்தினைப் பெற்றுக்கொண்டுவருவார்களென்று நினைத்திருக்கின்றார்கள். இன்னும் நீபோய் அந்தமனிதர்களை ஜெயம்பெற்றுக் கொடுப்பாயென்று நான் நினைக்கவில்லை. நானே இந்தப்பகையைத் தேடிக்கொண்டது. நானே இவர்களைஜெயம்பெறுவேன். இனிவேறொருவரையுமனுப்ப நான் நினைக்கவே இல்லை. நீ புத்தியில்லாத வார்த்தையைச் சொன்னாய். இந்தலோகங்களெல்லாம் அழிந்தாலும் அழியாத பெருஞ்சரித்திரமானது என்புகழுடனே நிலைநிற்கும்படியாக தேவர்கள் கண்முன்னே ஜலபுற்புதம் போன்ற இந்த தேகத்தைவிட்டாலும் விடுவேனேயல்லாமல், எனக்கிருபதுதோள்கள் இருக்கவும் என்பிராணனோடே சீதையை விட்டு விடுவேனோ? நானொருவேளை தோல்வியடைந்தபோதிலும் வேதமுள்ள பரியந்தம் அந்த ராமன்பேர் நிற்பதுபோல என்பேரும் நிலைநிற்குமல்லவா? வீரம் எப்போதாவது தவிர்ந்துபோகப்போகிறதா? இன்றுள்ளவர்கள் நாளைக்கிறப்பரென்பது யாவர்க்கும் பொதுவல்லவா? புகழொன்றுமாத்திரந்தான் நிலையாய் நிற்கும். நான்சீதையை விட்டுவிட்டபோதிலும்தேவர்களெல்லாம் இலேசாய் நினைத்துவந்து என்னைக் கட்டுவார்களே யல்லாமல், திரிலோக பயங்கரனான இராவணனென்று எள்ளளவாவது உள்ளம் நடுங்கிப் பயப்படப் போகின்றார்களா? அல்லவென்று நான் இறந்தாலும் அற்பத்தில் இறந்து போகமாட்டேன். நான் இந்தத் தசதிசைகளையும் வெற்றி பெற்ற வீரனென்று நீ அறியமாட்டாயா? வீண்வார்த்தைகளைப் பலவாய்ச் சொல்லிப் பிரயோஜனமென்ன? நீ உன் அரண்மனையைப்போய்ச்சேர்ந்து உன்தோளிற் பதிந்திருக்கின்ற அம்புகளையெல்லாம் வாங்கி, பெரிய யுத்தத்திலேபட்ட வருத்தத்தைத் தீர்த்துக்கொண்டு, இந்தராத்திரியைச் சுகமாய்க் கழித்துக்கொள்ளுகபோ. என்று சொல்லிப்போட்டு நீண்ட பற்களையுடைய புலியானது மிகவும்சீறிக்கோபித்து எழுந்தாற்போல இராவணன் சிம்மாசனத்தை விட்டு எழுந்திருந்து, என்னுடையதேரை விரைவிற் கொண்டுவாருங்கள் கொண்டு வாருங்களென்று ஆர்ப்பரித்தான். அப்படிப்புறப்பட்ட இராவணனை மாண்டுபோகிறதற்குச் சமீபித்தவனான இந்திரஜித்து தடுத்து அவனுடைய காலில்விழுந்து, ஓ என் பிதாவே! என்மீது உமக்குண்டான கோபத்தை நீக்கியருளவேண்டும். நீர் கொண்ட உறுதியை நிலை நிறுத்தி யிருக்கின்றீர். நானோ அப்படி நிலைநிறுத்தாமற் போனேன். இனி உமக்குண்டாகப்போகின்ற நன்மையை நீரே பார்க்கப்போகின்றீர். என்று சொல்லிவிட்டுத் தேவர்களிடத்திற் பறித்துக்கொண்ட ஒரு திவ்யரதத்தின்மேலேறி, தானதுவரையிலும் வெளியிடாமல் மறைத்துவைத்திருந்த ஆயுதவிஞ்சைகளையும் இன்னும் தன்னிடத்திலுள்ள ஆடையாபரணங்களையும், தேவர்கள் தனக்கு அடைக்கலப் பொருளாகக் கொடுத்திருந்தவைகளையெல்லாமும் விரும்பினபேர்களுக்கெல்லாம் தானஞ்செய்துவிட்டு, துஷ்டனான ராவணனைக் கடைக்கண்ணாற் பார்த்துப் பார்த்து இரண்டுகண்களிலுந் தாரை தாரையாய் நீர் பெருகும்படியாக யுத்தகளத்தைநோக்கிப் போயினான். அப்போது

இலங்கையிலுள்ள ராக்ஷசசிரேஷ்டர்களெல்லாம் எழுந்து அதிவேகமாய் ஓடிவந்து, ஐயா வெற்றிமாலையைத்தரித்த தோள்களையுடைய இந்திரஜித்தே! உம்மை விட்டுப் பிரியமாட்டோம். உம்மோடுகூடவே நாங்களும் இறந்துபோகிறோமென்றார்கள். அதைக்கேட்ட இந்திரஜித்து அவர்களைப் பார்த்து, ஓ நண்பர்களே! அப்படியல்ல. நீங்களெல்லாம் நம்முடைய எஜமானனை இராவணனைக் காத்துக்கொண்டிருங்கள். நீங்கள் மனங்கலங்கவேண்டாம். இன்றைக்கே அந்த மனிதர்களை ஜெயித்து விடுகிறேன் என்று சொல்லி அவர்களைச் சமாதானஞ் செய்தபோது அவர்களிற் சிலர் வணங்கினார்கள். சிலர் வாழ்த்தினார்கள். சிலர் அவன் வடிவத்தைப் பார்த்துத் தம் வாய் உலர்ந்து நின்றார்கள். சிலர் பெருமூச்சுவிட்டார்கள். சிலர்மனமுருகினார்கள். அப்போது பயந்து இரைந்துக்கொண்டு வந்துபார்க்கின்ற ராக்ஷச ஸ்திரீகளுடைய கடைக்கண்களென்கிறவேலாயுதங்கள் இந்திரஜித்துவின்மேற்பாய, அந்த யுத்தத்தை ஜெயித்து வெகு வியசனத்துடனே புறப்பட்டுப்போனான். முன்னம் இவன் மேகத்தில்மறைந்தபோது அவ்விடத்தில் இளைய பெருமாள் பிடித்த வில்லுடனே ஆகாசத்தைப்பார்த்து, ஓ விபீஷணரே! அந்தத் துஷ்டன் ஓடிப்போனான்போலேயிருக்கின்றது. இருந்தானேயானால் ஏதாவது செய்வானல்லவா? ஒன்றையுங் காணோமேயென்றார். இப்படிச் சொல்லிக்கொண்டிருந்த சற்று நேரத்திற்குள்ளே ஆயிரங் குதிரைகள் பூட்டிய தேரினுடைய இரைச்சலைக் கேள்விப்பட்டார்.

அந்தத் தேரானது வழியிலகப்பட்ட மலைகளெல்லாம் பொடிப்பொடியாய் நெரியும்படியாகவும், உச்சியிற் பொன்மயமாகக் கட்டப்பட்ட கொடிகள் மேருமலையின் சிகரங்கள்உருளும் ஓசைபோலவும், இடியைப் போலவும் சப்திக்கவும், அலங்கரிக்கப்பட்ட இரத்தினங்கள் மின்னலைப்போலப் பிரகாசிக்கவும், கடலைப் பானம்பண்ணுகின்ற வடவாமுகாக்கினியானது வெளிப்பட்டு வருகிறதுபோல உலகங்களெல்லாம் திக்குவிதிக்குகளாகப் பறந்தோடும்படியாகவும், சமுத்திரமெல்லாம் சுழன்றிடத்தக்கதாகவும், உலகங்கள் அடுக்கழியவும், சூரிய சந்திரர்கள் கதிமாறவும், வானரசேனைகள் குடல்சரியவும், அஷ்டகுலாசலங்கள் நிலைதடுமாறிப் போகவும். பூமிவெடித்துப் பாளம்பாளமாய்க்கிழிபட்டுப்பேரவும், அந்த வெடிப்பின் வழியாகச் சர்ப்பராஜனிடத்திலிருந்து புறப்பட்ட விஷத்தைப்போல இருள்பரவிநிற்கவும், ஆதிசேஷனுடைய படங்கள் நசுங்குண்ணவும், எதிரிலுள்ள இருளானது பட்டம்பகலைப்போல வெளிச்சமாகவும்வந்துசேர்ந்தது. அக்கால்இராக்ஷசர்களெல்லாம் ஒருமிக்கச்சேர்ந்து ஆரவாரித்தார்கள். இதைக்கேட்டுத் தேவர்கள் பயப்பிராந்தர்களானார்கள். வானரர்களெல்லாம் வெயர்த்து மனமயங்கிப்போனார்கள். அந்தச்சமயத்தில் யுந்தவீரனான இந்திரஜித்துபாணவருஷங்களாய்ப்பொழிந்தான் அதைக்கண்டஜெயசிரேஷ்டராகியஇளைய பெருமாள் அந்த இராக்ஷசனுக்கு நேராக வேகங்கொண்டு நடந்து, அஷ்டதிக்குகளும் செவிடுபடத்தக்கதாக வில்லைக் குணத்தொனிசெய்து பாணப்பிரயோகம்பண்ணினார். அப்போது லோகமெல்லாம் புகைமண்டி அக்கினிபற்றிஎறிந்தது. விபீஷணாழ்வான் இளையபெருமாளைப்பார்த்து சுவாமி! இனித் தேவரீர் இவனை விட்டுவிட்டால் வெற்றிமாலையை அணியமாட்டீரென்று வணங்கிச் சொன்னார். அதைக்கேட்ட சுந்தர புருஷராகிய ஸ்ரீராமாநுஜர் மீட்டும் வில்லைக் குணடங்காரம்பண்ணி, உலகமெல்லாம் தத்தளிக்கவும், அஷ்டகுலாசலங்களிலும் மணலுதிரவும், பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கின்ற ஆதிசேஷனும் திடுக்கிடவும், இடிக்குச்சமமானபாணங்களை அடுக்கடுக்காகப் பிரயோகித்தார். இப்படி இருக்கும்போது இந்திரஜித்துவிட்ட அக்கினிமுகாஸ்திரங்களாலே வானரர்கள் கண்டகண்ட இடங்களிற் சிதறி ஓட்டம்பிடித்தார்கள். இளையபெருமாள் பிரயோகித்த அனல்முகப்பாணங்கள் அக்கினியைப்பார்க்கிலும் எரிந்துகொண்டு சம்மரிக்கத்தலைப்பட்டபடியினாலே ராக்ஷசர்களெல்லாம் திக்குவிதிக்குகளாகச் சின்னாபின்னப்பட்டு ஓட்டம்பிடித்தார்கள்.

அப்போது லோகமுழுதும் அக்கினிமயமாய் நிறைந்தபடியினாலே இருதிறத்தார்சேனைகளும் எண்ணத்தொலையாதபடி மாண்டார்கள். இளையபெருமாளும் இந்

திரஜித்தும் ஒருவரையொருவர் குறிப்பிட்டுப் பிரயோகிக்கின்ற அஸ்திரவருஷங்கள் அக்கினிமழைபோலவும் இடிமழைபோலவும் பாய்ந்ததுகள். இந்திரஜித்து விடப்பட்டபாணங்களை இளையபெருமாள் விடுகிற பாணங்கள் அங்கங்கே துண்டுதுண்டாக்கிக்கொண்டுபோய் அவனுடைய உடலிலுள்ள ரத்தங்களைப் பானம்பண்ணினதுகள். இந்திரஜித்துவின் பாணங்கள் இளையபெருமாளுடைய கவசத்தைப் பேதிக்கமாட்டவுமில்லை. அதைக் கிழிக்கவுங் கூடாமற்போனதுகள். ஆஞ்சநேயருடைய திருமேனியில்மாத்திரம் புற்றில்நுழைகின்ற பாம்பைப்போல நுழைந்ததுகள். அப்போது இளையபெருமாள் விஷத்துக்கொப்பான இந்திரஜித்து அணிந்துக்கொண்டிருக்கின்ற கவசமானது சின்னபின்னப்பட்டுப் போகும்படி அநேக கூர்மையான பாணங்களைப் பிரயோகித்தார். அதைக்கண்ட இந்திரஜித்து தன் தேகமெல்லாம் சல்லடைக்கண்கள் போலத் தொளைக்கப்பட்டதனுற் கண்களில் அக்கினிப்பொறி பறக்கத்தக்கதாகக் கோபித்தேவின பாணங்கள் இளையபெருமாள்மேற்படாமல் ஆகாசமார்க்கத்திலேயே ஓய்ந்துபோகிறதைக்கண்டு, தேவர்கள் சந்தோஷத்தினலே ஒருதோள் ஆயிரந்தோள்களாகப் பூரித்தார்கள். அதைப் பார்த்த இந்திரஜித்து இனிநாம் வில்லால் இவனை ஜெயிக்கிறதற்கு முடியாதென்பதையறிந்து, பிரமாவின் புத்திரரும் தனது பாட்டனுமாகிய புலஸ்திய பிரமாவினிடத்தில் வாங்கினதும் சூரியனுக்கீடான பிரகாசமுள்ளதுமாயிருக்கின்ற ஒரு வேலாயுதத்தையெடுத்து, அதிகவேகத்துடனே வல்லமைகொண்டு மேகத்துக் கொப்பாக வீசி எரிந்தான். அந்தவேலாயுதமானது அதிக சாஜ்ஜொல்லியமாய் வெளிப் பட்டது. அதை இளையபெருமாள்கடாக்ஷித்து, சப்தரிஷிகளுடைய சொல்லைப்பார்க்கிலும் வல்லமையுள்ளதான ஒரு அக்கினிமுகபாணத்தினலே இரண்டுதுண்டாகமுறிபட்டுவிழும்படிச்செய்து பின்னும் அநேகபாணங்களைப் பிரயோகித்தார். அவைகள் ஆணியறைந்ததுபோல இந்திரஜித்துவின் தேகமெல்லாம் ஆயிரமாயிரமாய் நுழைந்து புண்படுத்தி, ரத்தவெள்ளம் பூமியில் வழிந்தோடச் செய்ததுகள். இந்திரஜித்துவின் கைகள் பாணங்களையெடுக்கிறதற்குப் போகிறதைக்கண்ட சூரிய வமிசோத்பவரான இளையபெருமாள் சிலபாணங்களைப் பிரயோகித்து, அவன் முதுகிற் கட்டியிருந்த அம்பறுத்தூணியையும் அதிலுள்ள அம்புகளையும் துண்டுதுண்டாகும்படி அறுத்தெரிந்து, இவனுக்குத் தேர் இருக்குமாறுல் இவன்பலங்குறையாது. பாணங்களால் குதிரைகளும் இறக்கமாட்டா. அலங்கரித்திருக்கின்ற மணிவடங்களும் துணிபடமாட்டா. இந்தத்தேர் மிகவுஞ் சிறப்பான நிலைமையுடையதென்று தெரிந்து, ஒருபாணத்தைப் பிரயோகஞ்செய்து, சாரதியினுடைய மலைபோன்ற தலையை யறுத்துப் பூமியிலுருட்டிவிட்டார். அப்போது இந்திரஜித்துவினுடைய தேரானது ஒருவருஞ் செலுத்துதற்கில்லாமல், தவஞ்செய்து பஞ்சேந்திரியவிஷயங்களில் இழுப்புண்டு வருத்தப்படுகிறவனுடைய மனதைப் போலவும், மேனியைமினுக்கிக் காமத்தை விலைப்படுத்தி தந்திரத்தாற் பொய்ப்போகங்காட்டுகின்ற வேசைகளினுடைய கற்பைப்போலவும், பலவழிப்பட்டு ஓடத்தொடங்கியது. அதைக்கண்ட இந்திரஜித்து அந்தக் குதிரைகளின் இசைவின்படித்தானேசெலுத்திக்கொண்டு, தன்தேகத்தையே அம்பறுத்தூணியாகவைத்து, அதிற்பதிந்திருக்கின்ற அம்புகளைப்பறித்தே இளையபெருமாள்மீதும் அநுமான்மீதும் மற்ற வானரங்கள்மீதும் அநேகமாகப் பிரயோகஞ்செய்து, தேவர்களெல்லாம் நடுங்கத்தக்கதாகஅட்டகாசஞ்செய்தான். அப்போது தேவர்கள் வீரனென்று சொல்லப்பட்டவர்களுக்கெல்லாம் முதன்மையாக நிற்கிற வீரனுக்குமிவன். வீரர்களுடைய தன்மை இவன் ஒருவனிடத்திலேதான் இருக்கின்றது. சூரரென்று சொல்லப்பட்டவர்கள் மரணமாகிறகாலத்திலும் தங்களறிவு மாறமாட்டார்கள். இவ்விரண்டுபேர்தான் வில்வீரரென்னத்தக்கவர்கள் என்று தெய்வீக கற்பகப்புஷ்பங்களை வருஷித்தார்கள். அப்போது இளையபெருமாள் அவன் செய்கையைப்பார்த்து, இவனே தன்மீது பாய்ந்திருக்கின்ற அம்புகளையே பறித்து நம்மீது எய்கின்றுன். அப்படி எய்வதிற் கையுந்தடுமாறவில்லை. மனமும் உயிரைப்போலக் கலங்கவில்லை. தேகத்திற் கோடிகோடியாக

அம்புகளைப் பிரயோகிக்கவும் கொஞ்சமேனுங் கண்சிமிட்டவுமில்லை. இவன் மாண்டுபோனால் இவனோடே ஆண்பிள்ளைத்தனமும் போய்விடுமென்று அவன் சாமர்த்தியத்திற்கு மெச்சினார்.

அப்போது விபீஷணாழ்வான் இளையபெருமாளை வணங்கி, சுவாமி! இவன்தேரைச் செலுத்திக்கொண்டு ஆகாசத்தில் மறைந்துபோனாலும் போவான். செய்துக்கொண்டிருக்கின்ற யுத்தத்தினைவிட்டு ஏதாவது மாயஞ்செய்தாலும் செய்வான். மேகத்தில்மறைந்து வஞ்சனைசெய்தாலும் செய்வான். இவன்பகற்காலத்திலல்லாமல் ராத்திரியில் இவன் மாளமாட்டான் என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார். இலங்காதிபதியான இராவண சகோதரர் இப்படிச்சொல்லக்கேட்ட இராமாநுஜர், அவனிதோசாகப்போகிறானேயல்லாமல் இனி எங்கே தப்பிப்போவான்? அவன் எங்கே போனாலும் என்பாணமும் அங்கேபோகுமல்லவா? இவன் பலமெல்லாம் ஒடுங்கிப்போனான். இனி தாமசமில்லை. இப்போதே நாம் இவனை வெற்றிகொள்ளலாம் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது இந்திரஜித்துவின் இரதத்தைப்போலச் செக்கர் நிறமானது திசையெல்லாம் படரும்படியாய், அவன் தேகத்திற் பதிந்திருக்கின்ற அம்பைப்போல நெருங்கிய ஆயிரங்கிரணங்களைவீசிப் பிரகாசிக்கின்ற தேரில் தோன்றுகின்ற சிறப்புடனே, அவ்விந்திரஜித்து ஆகாசத்தில் மறைந்து தூர நின்றாற்போலச் சூரியன் உதயமானான். அக்கால் தேவர்கள் யாவரும் சந்தோஷித்து பொழுது விடிந்தது. சூரியனும் விளக்கைப்போலே மேலே பிரகாசித்தான். இனி ராக்ஷசர்களாகிய இருட்டு மாண்டுபோய்விடும். மாயமெல்லாங்குறைந்து வலியுங்கெட்டு இந்திரஜித்தும் இனி மரணமடைந்து விடுவான் என்று தேவர்கள் சுவர்க்கமெல்லாம் நிறையும்படி கல்லென்று ஆரவாரித்தார்கள். அப்போது இனிவிளையும் விளைவையறிந்த விபீஷணாழ்வான் லக்ஷ்மணரைப் பார்த்து, சுவாமி! கூர்மைமழுங்காத சூலாயுதத்தையுடைய சங்கரமூர்த்தியானவர் கிருபைசெய்து கொடுத்த இந்தத்தேர் அழியாதவரையிலும், இவன் பிடித்திருக்கின்றவில் முறியாதவரையிலும், இவன் மரணமாகமாட்டான். இது சத்தியமாகுமென்று சொன்னார். அதைக்கேட்ட இளையபெருமாள் நீர் சொல்வதெல்லாம் நிச்சயந்தானென்று கூறி, இந்தப் பச்சைக்குதிரைகளும் கொடி குடை மொட்டுக்குடங்கை தட்டுச் சக்கரத்தோடு அச்சு முதலாகிய பலவுறுப்புகளுடன்கூடியதேரும் இலேசில்ஒழியமாட்டாதென்பதைத்திருவுளத்தில் நினைத்து, வில்வித்தைக்காசாரியரான அந்த ஸ்ரீராமாநுஜர் தமது வல்லமையினால் அந்தத்தேரின் ஆணிகளை வேறுபடுத்தி, அச்சுவேறு சக்கரம்வேறாகக் கழலும்படிச் செய்து விட்டார். அப்படித் தேர்த்தட்டுவிலகிக் கீழே வீழ்ந்தவுடனே அதிற் கட்டியிருந்த குதிரைகளெல்லாம் எவ்வாறாயின வென்றால், ஒருமரயானது கோடரியால் வெட்டுண்டு கிளைவேறு முதல் வேறாகி வீழ்ந்தபோது அதில் வாழ்ந்திருந்த பக்ஷிகளெல்லாம் பலாயனப்பட்டுப் பறந்துபோவதுபோலப் பலவாறாக ஓட்டம்பிடித்ததுகள். அப்படியழிந்த தேர்த்தட்டிலிருந்த இந்திரஜித்து அங்கிருந்த ஆயுதங்களையெல்லாம் வாரி வாரி இளையபெருமாள் மீது வீசி எறிந்தான். அவைகளையெல்லாம்ஸ்ரீராமாநுஜர் தம்முடைய திவ்வியபாணங்களால் துண்டு துண்டாக்கிவிட்டார்.

உடனேயவன் ஆகாயத்திற் பாய்ந்து மூன்றுலோகங்களும் கிழிபட்டுப் போகும்படியாகக் கர்ஜித்தான். அப்போதுஅவனை ஒருவரும் பார்க்கவில்லை. அவன் கர்ஜனையை மாத்திரமே கேட்டார்கள். அப்படிக் கர்ஜித்த மல்லயுத்தத்தில் தேர்ந்த தோள்களையுடைய இந்திரஜித்து தான்பெற்ற வரத்தின் வல்லமையினாலே ஆகாயத்திலிருந்து மலைகளை வருஷித்தான். அப்போது வானரவீரர்கள் ஓடிப்போவதற்குத் திக்குத் திசைதெரியாதபடியினால் தலைகளும்உடல்களும் நசுங்கிப் பூமியில் விழுந்தார்கள். அக்கால் எங்கே பார்த்தாலும் சிலாவருஷமே யல்லாமல் வேறொன்றுங் காணப்படவில்லை. இந்திரஜித்துவோ ஆகாயத்தில் மறைந்து காணப்படாதிருந்தபடியினாலே, இளையபெருமாள் சமஸ்த திக்குகளிலும் நிறைந்து நின்ற ஆச்சரியசேஷ்டிதரான ஸ்ரீ மகாவிஷ்ணுவின் வடிவத்துக்கொப்பாகத் திவ்வியபாணங்களை ஓயாமற் பிரயோகித்துக் கொண்டிருந்தார். அந்தப்

பாணங்களே எல்லாத்திக்குகளிலும் நிறையவே யுத்தஞ்செய்யும் வல்லமை யிழந்து கறுத்த மேகங்களின் கூட்டத்துக்கு மத்தியில் இரத்தமேகமானது இருப்பதுபோல நின்ற இந்திரஜித்துவினுருவத்தைஉலோகமெல்லாம் நிறைந்திருக்கின்ற சர்வவியாபகமூர்த்தியான இளையபெருமாள் பார்த்து இவன் கையிற்பிடித்திருக்கின்ற வில்முறிய மாட்டாதே போனாலும் போகுக. இவனுடைய கையை யறுத்துத் தள்ளாவிட்டால் இந்தச் சண்டை முடியாது என்று திருவுளங்கொண்டு தம்முடைய வில்லைவளைத்து அதிற் சகலகலைகளோடுங் கூடிய சந்திரனுக்கொப்பாகிய ஒளியுள்ள அர்த்த சந்திரபாணத்தைப் பூட்டி, விலையுயர்ந்த ரத்னாபரணங்களைத் தரித்த அவனுடைய கையானது பூமியில் விழும்படி அறுத்தார். அம்மாத்திரத்தில் அவன் விற்பிடித்திருந்த கையானது அமோகமான பெருங்காற்றடித்தபோது பிரளயகால மேகமானது ஆகாயத்திற் போட்ட பச்சை வில்லுடனே கீழேவிழுந்ததுபோல விழுந்தது. பூமியை சுமந்துகொண்டிருக்கின்ற கார்க்கோடக சர்ப்பமானது தன்வாயினாற் சந்திரனைக் கடித்துக்கொண் டிருக்கின்றது போல விரல்களழுந்தப் பிடித்திருக்கின்ற வில்லுடனேகூட வீரபுருஷனாகியஇந்திரஜித்துவின் இடது கையானது கீழேவிழுந்து, மரங்களும் மலைகளும் பொடியாகவும் குரங்குகள் நசுங்கிப்போகவுந் துடித்தது. அப்போது அந்தர மார்க்கத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த தேவர்களெல்லாம் திப்பிரமைகொண்டு, இந்திரஜித்து கையானது சூரியன் நடுங்கும்படியாகவும் சந்திரன் பயப்படும்படியாகவும் மேருமலை சிதறிவிழும்படியாகவும் ஒரு நொடிப்போதில் அறுந்து விழுந்துவிட்டதே? வாழ்நாளிப்படி யிருக்க இந்தச் சூத்திரத்துக்கொப்பான ஜீவவாழ்க்கையைச் சிலபேர் இச்சிக்கின்ற தென்னகாரணமென்று ஆச்சரியப்பட்டார்கள். தர்மதேவதைக் கொப்பான பலத்தையுடைய லக்ஷ்மணப்பெருமாளுடைய அம்பினாலே இராவண குமாரனுடைய வஜ்ஜிரத்தையொத்த கையானது அறுந்ததைப் பார்த்த இராக்ஷசர்களெல்லாம் தங்கள் தலைகள் அறுந்தாற்போலப் பயந்தார்கள்.

இப்படி இந்திரஜித்துவின் கையற்றவுடனே வானரக் கூட்டங்கள் ஆரவாரித்து, மின்னலைப் போன்ற வச்சிரதந்தங்களையுடைய ராக்ஷச சேனைகளையெல்லாம் திரும்பிவாராதபடி கைகளினாலும் பற்களினாலும் விருக்ஷங்களினாலும் பெரிய மலைகளினாலும் வீரசுவர்க்கலோகத்துக்குப் புதுக்குடியேற்றிவிட்டார்கள். இவர்கள்செய்தி இப்படியிருக்க கார்கால மேகத்தைப்போல கறுத்தநிறத்தை யுடையவனான இந்திரஜித்து சிவந்த திருமேனியும் காளகண்டனுமான உருத்திரமூர்த்தி மிகுந்தகிருபையுடனே கொடுக்கப்பெற்றுக்கொண்டசூலாயுதத்தை யெடுத்தெறியும்படியாக எண்ணங்கொண்டு, இளையபெருமாளுக்குமுன்னே வந்து நின்று இந்தச் சூலாயுதத்தினாலே உன்னைக் கொன்றுவிட்டல்லாமல் நானிறக்கப்போகிறதில்லை யென்று சொன்னான். இப்படி சண்டமாருதக் காற்றைப்போலவும் இடியைப்போலவும் வடவாமுகாக்கினியைப்போலவும் ஊழிகாலத்தில் வந்த யமனுடைய உருவத்தைப்போலவும் கொல்லுகிறேனென்று வாயாற் சொல்லிக்கொண்டு எதிரே நின்ற இந்திரஜித்துவை அயோத்தியாபுரியின் மகாராஜரான ஸ்ரீராமச்சந்திரருக்குத் திருத்தம்பியாராகிய தர்மஸ்தாபகரென்னும் இளையபெருமாள் பார்த்து, இனி இவனைத் தலையறுக்கவேண்டிய காலஞ் சமீபித்துவிட்டதென்று நினைத்து வேதங்களையெல்லாங் கரைகண்டமகாரிஷிகளாலே வணங்கும்படியான ஸ்ரீயப்பதியே இந்த ஸ்ரீராமரென்று சொல்லத்தக்க தர்மஸ்வரூபியா யிருப்பாரானால்; இது வக்கிர தந்தங்களையுடைய இந்தராக்ஷசனைக்கொல்லக்கடவதென்று ஒரு அர்த்தசந்திர பாணத்தை வில்லிற்பூட்டி ஆகர்னபரியந்தமாக இழுத்து விட்டுவிட்டார். அம்மாத்திரத்தி லந்த அர்த்தசந்திரபாணமானது விஷ்ணுவின் சக்கராயுதமும் இந்திரனுடைய வஜ்ராயுதமும் நெற்றியில் நெருப்புக் கண்ணையுடையவருடைய பாசுபதாஸ்திரமும் பிரம்மாஸ்திரமும் தோற்றுப் போகத்தக்கதாக அக்கினியைக் கக்கிக்கொண்டுபோய் இந்திரஜித்துவினுடைய தலையை அறுத்தெறிந்து பூமியில் தள்ளித் தேவர்கள் கற்பகப்பூமாரி பெய்யத்தக்கதாகப் பிரகாசித்தது. அறுந்த அந்தத் தலையானது உயர

வெழும்பி ஆகாயத்தைப்போய் முட்டுகிற தற்குமுன்பாக இந்தஜித்துவினுடைய முண்டமானது பிடித்த சூலத்துடனும், உடலில் தைத்திருக்கின்ற பாணங்களுடனும், சண்டமாருதத்தாலடியுண்ட மேகமானது மின்னலுடனும் இடியுடனும் நிலத்தில் விழுந்ததுபோல வீழ்ந்தது. ஆகாசத்திற் பிரகாசிக்கின்ற இரண்டு சந்திரர்களைப் போல மின்னுகின்ற இரண்டு குண்டலங்களுடனேயும், சுருண்ட தலைமயிருடனேயும், சூரியனுக்கொப்பான சிவந்த கண்களுடனேயும், சூரியமண்டலமானது பூமியில் விழுந்ததுபோல இந்திரஜித்துவினுடைய தலையானது நிலத்தில்வந்து விழுந்தது. அவனுக் குயிர்போன காலத்தில் உள்ளேயிருந்த உணர்வும் இந்திரியங்களும்-அந்தக்கரணங்களும்-சிதறுண்டுபோனதுபோல, கூர்மையான பற்களையுடைய ராக்ஷசர்கள் தங்கள் தலைவனிறந்தவுடனே போர்க்களத்திலிருக்கச் சக்தியற்றவர்களாய்த் தங்களாயுதங்களை விட்டெறிந்து மிகுந்த பிரகாசத்தையுடைய இலங்காபட்டணத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். இப்படி வில்வீரர்களுக்குள்ளே அதிக சிரேஷ்டனான இந்திரஜித்து இறந்தமாத்திரத்தில், இனி ராவணனுக்கு இலங்காதிபத்தியஞ்செல்லமாட்டாதென்கிற சந்தோஷத்தினாலே தேவர்களெல்லாம் உடுத்திருந்த வஸ்திரத்தைக் களைந்து மேலேயெறிந்து ஆரவாரித்தார்கள். அப்போதந்தத் தேவர்களெல்லாம் கொல்லா விரதிகளான சமணர்களுடைய நிருவாண தேவகூட்டங்களையொத்திருந்தார்கள். அக்கால்தேவேந்திரன் முதலான எல்லாத் தேவர்களும் தங்களை மறையாமல் மிகுந்த கிருபையுடையவர்களாய்ப் பூலோகத்தாருக் கெல்லாந் தெரியும்படியாகத் தரிசனையானார்கள். அவர்களுடைய திவ்விய தேகங்களை வானரர்களெல்லாம் தங்கள் கண்களாரக்கண்டார்கள். தர்மத்தில் நிலைத்து நிற்கின்றவர்களுக்கு அழிவென்பதொருநாளு மில்லையென்கிற பெரியோர் வார்த்தைசிறப்படைந்தது இராக்ஷசர்களுடைய பாணங்கள் பாய்ந்ததினாலே மாண்டு கடலைப்போற் கிடந்த வானரப் பிரேதங்களெல்லாம் தேவர்களுடைய ஆசீர்வாதத்தால் உயிர்பெற்றெழுந்ததுகள்.

அப்போது தேகத்தைவிட்டு மாண்ட இந்திரஜித்துவின்தலையை மிகுந்தசந்தோஷத்துடனே வாலிகுமாரனான அங்கதகுமாரன் கையில் தூக்கிக்கொண்டு முன்னே போனான். தேவர்கள் வாரி வாரி இறைக்கின்ற புஷ்பப் பந்தலுக்குள்ளாக ஆஞ்சநேயர்மீது இளையபெருமாள் எழுந்தருளினார். அக்கால் ஸ்ரீராமமூர்த்தியானவர் பூரித்த தோள்களையுடையவரும் எங்கும் நிறைந்த புகழையுடையவரும் அதிகசந்தோஷமுட்கொண்ட திருவுள்ளத்தையுடையவருமாகி, தேவர்கள் நிமித்தமாகப் பாற்கடலைக்கடைந்த வாலிபுத்திரனாகிய அங்கதன் தூக்கிக் கொண்டுவருகின்ற இந்திரஜித்துவின் தலையைக்கண்டு, இராத்திரிகால சந்திரனிடத்திலுண்டான களங்கத்தைப்போல எனக்குண்டான பழியானது போகமாட்டாதென்று புலம்பிக்கொண்டிருந்தேன். இப்படிப்பட்ட எனக்குத் தர்மதேவதை கிருபை செய்தபடியினாலே இப்போது அந்தத்துன்பம் நீங்கிவிட்டேன். இதைக்காட்டிலும் வேறேபெறப் போகின்றேனோ? இனி எனக்கு என்னகுறை? என்று தமக்குள் தாமே சந்தோஷித்து அவ்வங்கதகுமாரனைப் பார்த்துச்சொல்லுகின்றார். ஓ வானர யுவராஜ்யாதிபதியே! தெற்கில் கடல்சூழும்படி இலங்கையைக் காத்துக்கொண்டிருக்கின்ற அற்பத்திருட்டுப்பயலான இராவணன்பெற்ற பிள்ளையென்னும் இந்திரஜித்துவை லக்ஷ்மணன்கொல்ல, அவனுடையதலையை யெடுத்துக்கொண்டு நீ முன்னேவந்தபடியினாலே இனி நான் தலையெடுத்துப்போனேன். சக்கராதிபதியுமாய்விட்டேன். தேவர்களெல்லாம் தலையெடுக்கும்படியாகவும், சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்தாரெல்லாம் பிழைக்கும்படியாகவும், தேவேந்திரன் பெருமையடையும்படியாகவும், வேதபுருஷன் விருத்தி யடையும்படியாகவும் ஆச்சுது. எப்பொழுதும் தேன்துளித்துக்கொண்டு வாடாமலிருக்கின்ற வெற்றிமாலையையணிந்த அங்கதகுமாரா! தேவர்களையெல்லாஞ் ஜெயித்த இவ்விந்திரஜித்துவின் மாமிசமுள்ள தலையை நீ கையிலே தூக்கினாயே? ஆ! ஆ! மகா அற்புதம் என்று சந்தோஷங்கொண்டாடினார். அன்றியும் முன்னே இளையபெருமாள் போனது முதற்கொண்டு புத்திமயங்கி எழுந்தருளியிருக்கின்றவரும்,

அதிகமாயமே தன் ஸ்வரூபமாகக்கொண்டிருக்கின்ற இந்த ராக்ஷசனைச் சத்தியமே ஜெயஞ்செய்து தர்மமே ரக்ஷிக்கவேண்டுமென்று விரதங்கொண்டிருக்கின்றவருமாகிய ஸ்ரீரகுநந்தனர்; தம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற பரதாழ்வானைப்போலப் பக்தியை யுடையவரான இளையபெருமாள்வருகின்றவிதத்தைக்கடாக்ஷித்தார். அக்கால் துஷ்டேந்திரியங்களை நசித்தவராய்த் திரும்பிவருகின்ற தமது திருத்தம்பியார்மேல் வைத்த திருக்கண்களாகியதாமரையினிடத்திற்கண்ணீரானது தாரை தாரையாக வடிந்தது. அந்தக் கண்ணீர் அன்பின் கண்ணீரோ? அழுதகண்ணீரோ? ஆனந்தபாஷ்பமோ? எலும்புகளெல்லாம் உருகி வெளிப்பட்டுவருகிற கிருபாவாரியோ? அதை இன்னதென்று நிச்சயித்துச் சொல்லுகிறதற்கு யார்தரமாகும்? அப்படிஎழுந்தருளிவருகின்ற இளையபெருமாளானவர் ஸ்ரீசக்கரவர்த்தி திருக்குமாரர் திருவடித்தாமரைகளில் தம்முடைய திருக்கண்களில் வடிகிற நீரும் சந்தோஷமும் எக்களிப்பும் அதிகரிக்கும்படியாகத் தெண்டனிட்டு, செம்பட்ட மயிர்க்கற்றைகளையுடையதும், பிரகாசிக்கின்றவக்கிரதந்தங்க ளெழுந்தும்படியாக உதட்டை மடித்தும், பிளந்த வாயையுடையதுமான இந்திரஜித்துவினுடைய தலையை ஸ்ரீபாதகாணிக்கையாகச் சமர்ப்பித்தார். அப்போது சுவாமியானவர் தமது திருவடியில் இளையபெருமாள்வைத்த அந்தத்தலையைப் பார்ப்பார். தமது திருத்தம்பியாருடைய வீரலட்சுமி எழுந்தருளியிருக்கின்ற திருத்தோள்களைக் கடாக்ஷிப்பார். எதிரேசேவித்துக்கொண்டிருக்கின்ற வாயுபுத்திரரைக் கடாக்ஷிப்பார். இளையபெருமாளுடைய திருக்கரத்திலிருக்கின்ற வில்லைக் கடாக்ஷிப்பார். தேவர்கள் ஆனந்திக்கின்றதைக் கடாக்ஷிப்பார். இளையபெருமாள் இந்திரஜித்துவைச் சம்மரித்தகொலையைத்திருவுள்ளத்தில் நினைப்பார். பிறகு மிகுந்த ஆனந்தத்தால் ஒன்றும் பேசாமலெழுந்தருளித் தமது திருவடித்தாமரைகளில் தெண்டன் சமர்ப்பித்துக்கொண்டிருக்கின்றஇளையபெருமாளுடைய திருமேனியை அதில்தைத்த அம்புகளின் வழியாயொழுகுகின்ற இரத்தங்கள் காளமேகத்திற் செவ்வான நிறங் கலந்ததுபோலவும், கருமாணிக்கமலையின்மீது சூரியோதயமானதுபோலவும், தமது திருமேனியில் தோயும்படியாகவாரித்தழுவி, அத்திருத்தம்பியாரைக்கடாக்ஷித்து இதனைச் சொல்லுகின்றார். அப்பா தம்பி! கொட்டாரத்திற் கட்டியிருக்கின்ற மத்தகஜங்களே திக்குகள் தோறும் காவல்காக்கத் தக்கதாக இராஜ்ஜியாதிகாரஞ் செலுத்தும் ஜனகமஹாராஜர் தபோபலத்தாற் பெற்றெடுத்த சீதையும், இனி என்னிடம்வந்து சேர்ந்ததுபோலச் சந்தோஷ மடைந்தேன். வாசனையோடுங் கூடிய மூலதாமரைப் புஷ்பத்தில் எழுந்தருளியிருக்கின்ற பிரமாவினாலே சிருஷ்டிக்கப்பட்ட இந்தப்பூலோகத்திலே தம்பியை யுடையவர்கள் படைக்கஞ்சமாட்டார்களென்கிற ஆப்தவாக்கியத்தை நீயே திருஷ்டாந்தப்படுத்தினாய் என்று திருவாய்மலர்ந்தருளி, இளையபெருமாள் திருத்தோளிற் கட்டித் தூக்கியிருந்த அம்பறாத்தூணியை அவிழ்த்திறக்கி, திருத்தோளையுந் திருமார்பையும் மறைத்து அணிந்திருந்த கவசத்தைத் தாள்பிணிப்பைவிடுவித்துக் கழற்றி, யுத்தத்தில் அம்புகள் தைத்ததினாலுண்டாயிருந்த புண்களைத் தமது திருத்தோள்களாற் பலதரம் ஒற்றி ஆறும்படிச்செய்து, தமது திருத்தம்பியாருடைய திருமுகத்தைக்கடாக்ஷித்து, அப்பாபுருஷதிலகமே! இப்போது நீ அடைந்த இந்தவெற்றி உன்னாலுமல்ல. மிகுந்த பலமுள்ள அநுமானென்னும்நாமதேயமுள்ள நம்முடைய சிநேகனாலுமல்ல. வேறே யெந்தத் தேவவரப்பிரசாதத்தினாலுமல்ல. இந்த விபீஷணாழ்வான் சம்பாதித்ததாக்கும் என்று புகழ்ந்து சொல்லிவிட்டுச் சந்தோஷமாய் ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர் எழுந்தருளியிருந்தார்.

இந்திரஜித்துவதைப்படலம்-முற்றிற்று.

## இராவணன் சோகப்படலம்.

இப்படியிருக்குஞ் சமயத்தில் ராக்ஷசத்தூதர்கள் இரணக்களத்திலுள்ள ரத்தக்கடலை வருத்தமுற்றுத்தாண்டியோடிக் கறுத்த அன்றிற்பெட்டைகளைப்போல ராக்ஷசஸ்திரீகள் அவரவர்கள் வீட்டுத் தெருமுற்றங்களிற் கூட்டங் கூட்டங்களாய் நின்று

இன்றையோடு இலங்கை அழிந்துபோய் விட்டதென்று அழுதுகொண்டிருக்க இராவணனுடைய கொலுமண்டபத்திற்குச் சென்று, தங்கள் வாய்களோடு பற்களும், நடந்துவந்த பாதங்களும், உயிரும் மனமும் நடுங்கும்படி நின்று, ஐயா இராவணேஸ்வரா! உம்முடைய ஜேஷ்டகுமாரனாகிய இந்திரஜித்து இன்றைக்கு இந்தப்பூமியை விட்டுச் சுவர்க்கப் பிராப்தியாய் விட்டார் என்று மிகுந்த பயத்துடனே சொன்னார்கள். அதைக் கேட்டமாத்திரத்தில் பக்கத்தில் நின்றிருந்த தேவர்களும், மஹாரிஷிகளும், நிர்த்தனம்பண்ணிக்கொண்டிருந்த அரம்பை ஊர்வசி முதலானபேர்களும், இன்றைக்கு லோகம் அழிந்துவிடுமென்று துக்கத்துடனே நாலா பக்கங்களிலும் ஓடி ஒளித்துக் கொண்டார்கள். ராவணன் கண்களில் நின்றும் அக்கினிப்பற்றியெரியும்படி கோபங்கொண்டு, தன்கையில்வாளையுருவிக் கேதஞ்சொன்ன தூதுவர்களை ஒரேவீச்சாக வீசி யெறிந்துவிட்டு, இருபது கைகளும் அலைகளைப்போலச் சோர்ந்து விழும்படியாக ஒரு பெருஞ்சமுத்திரம்போற் கீழேவிழுந்தான். அவன் வாயினிடத்திலிருந்து பெருமூச்சுப்புறப்பட்டது. கண்களில் அக்கினிப்பொறிகள் இவ்வுலகத்தைச் சுட்டெரிக்கத்தக்க ஊழித்தீயானது லோகமெல்லாம் பரவும்படிப் புறப்பட்டதுபோலப் புறப்பட்டன. படங்களையுடைய ஆதிசேஷனும், அந்த ஆதிசேஷனாற் சுமக்கப்பட்ட பூமியும், நிலைபெயர்ந்து கிறுகிறுவென்றுசுழலும்படியாகத் தேகத்தைப்புரட்டிப் புரட்டி விஷக்கடலைப்போலக் கோஷித்து, இந்திரஜித்துவைக்கொன்றுவிட்டார்களே யென்று அக்கினிக்கொப்பாக அதிக தீக்ஷண்யமான கோபமும், பிள்ளையினிடத்தில் வைத்திருந்தஅன்பும், தோன்றும்படியாக இருபது கண்களிலும் உருக்கினசெம்பைப் போல இரத்தக்கண்ணீர் ஊற்றெடுத்தோடப் பற்களை மலைகளும் பொடிப்பொடியாகும்படி நெறநெறவென்று கடித்து, இடியிடித்ததுபோலக் கைகளைமோதிப் பெரிய மலையிலிருந்து கடல் நீர் புறப்பட்டதுபோலப் பத்துவாயிலு மிருந்து சொல்லுநீர் வடியத்தக்கதாகப் புலம்பத்தொடங்கினான். அஃதெப்படியென்றால்:—



### கவி.

மைந்தவோவெனு மாமகனேயெனும்
எந்தையோவெனு மென்னுயிரேயெனும்
முந்தினேனுனை நானுளெனேவெனும்
வெந்தபுண்ணிடை வேல்பட்டவெம்மையான்.

புரந்தரன்பகை போயிற்றன்றோவெனும்
அரந்தைவானவ ரார்த்தனரோவெனும்
கரந்தைசூடியும் பாற்கடற்கள்வனும்
நிரந்தரம்பகை நீங்கினரோவெனும்.

நீறுபூசிய நேமியுநீங்கினர்
மாறுகுன்றொடு வேலைமறைந்துளார்
ஊறுநீங்கின ராயுவணத்தினோ
டேறுமேறியு லாவுவரென்னுமால்.

வானமானமும் வானவரீட்டமும்
போனபோன திசையிடப்புக்கனர்
தானமானவை சார்கிலர்சார்குவ
தூனமானுடர் வென்றிகொண்டோவெனும்.

கெட்டதூதர் கிளத்தினவாறொரு
கட்டமானுடன் கொல்லவென்காதலன்
பட்டொழிந்தன னேயெனும்பன்முறை
விட்டழைக்குமழைக்கும் வெதும்புமால்.

எழுமிருக்கு மிரைக்குமிரக்குமுற்
றழுமரற்றுமயர்க்கும் வியர்க்கும்போய்
விழும்விழிக்கு முகிழ்க்குந்தன்மேனியால்
உழுநிலத்தையுருளும் புரளுமால்.

ஐயனேயெனு மோர்சிரம்யானினம்
செய்வெனேயரசென்னு மங்கோர்சிரம்
கையனேயுனைக் காட்டிக்கொடுத்தநான்
உய்வெனேயென்றுரைக்கு மங்கோர்சிரம்.

எழுவிற்கோலமெழுதிய தோள்களால்
தழுவிக்கொள்கலை யென்னுமங்கோர்தலை
உழுவைப்போத்தை யுழையுயிருண்பதே
செழுவிற்சேவக னேயெனுமோர்சிரம்.

நீலங்காட்டிய கண்டனுநேமியும்
மேலுங்காட்டி னெறிந்தபடையெலாம்
தோலுங்காட்டித் துரந்தனைமீண்டுநின்
ஓலங்காட்டிலை யோவெனுமோர்தலை.

துஞ்சினாய்கொ றுணைபிரிந்தேனெனும்
வஞ்சமோவெனும் வாரலையோவெனும்
நெஞ்சுநோவ நெடுந்தனியேகிடந்
தஞ்சினேன் றரற்றுமங்கோர்தலை.

காகமாடு களத்திடைக்காண்பெனோ
பாகசாதன் மௌலியொடும்பொறித்
தோகைமாதவ ருச்சியின்வைத்தநின்
வாகைநாண்மல ரென்னுமற்றோர்தலை.

சேலியற்க ணியக்கர்தந்தேவிமார்
மேலினித்தவிர் கிற்பர்கொல்வீரநின்
கோலவிற்குரல் கேட்டுக்குலுங்கித்தந்
தாலியைத்தொட லென்னுமற்றோர்தலை.

கூற்றமுன்னெதிர் வந்துயிர்கொள்வதோர்
ஊற்றந்தானுடைத் தன்றெனையும்மொளித்
தேற்றவெவ்வுல குற்றனையெல்லையில்
ஆற்றலாயென் றழைக்குமங்கோர்தலை.

இன்னவாறழைத் தேங்குகின்றனெழுந்
துன்னுமாத்திரத் தோடினனூழிநாள்
பொன்னின்வானன்ன போர்க்களம்புக்கனன்
நன்மகன்றன தாக்கையைநாடுவான்.

தேவரேமுதலாகிய சேவகர்
யாவரும்முடனே தொடர்ந்தேகினர்
மூவகைப்பெ ருலகுமுறைமையும்
ஏவதாகுமென் றெண்ணியிரங்குவார்.

அழுதவாற்சில வன்பினர்போன்றடி
தொழுதவாற்சில தூங்கினவாற்சில
உழுதவாளைப் பிணம்புக்கொளித்தவால்
கழுதும்புள்ளு மரக்கனைக்காண்டலும்.

கோடிகோடி குதிரையின்கூட்டமும்
ஆடல்வென்றி யரக்கர்தமாக்கையும்
ஓடையானையுந் தேருமுருட்டினன்
நாடினன்றன் மகனுடனுளெலாம்.

மெய்கிடந்த விழிவழிநீர்விழ
நெய்கிடந்த கனல்புரைநெஞ்சினன்
மொய்கிடந்த சிலையொடுமூரிமாக்
கைகிடந்தது கண்டனன்கண்களால்.

பொங்குதோள்வளை யும்பொழிபுட்டிலோ
டங்கதங்களு மம்புமலங்கிட
வெங்கணுகமெனப் பொலிமெய்யதைச்
செங்கையாலெடுத் தான்சிரஞ்சேர்த்தினன்.

கற்றின்மார்பிற் றழுவுங்கழுத்தினில்
சுற்றுஞ்சென்னியிற் சூட்டுஞ்சுழல்கணே
டொற்றுமோர்ந் திட்டுருகுமுளைக்குமால்
முற்றுநாளின் விடுநெடுமூச்சினன்.

கைகண்டான்பின் கருங்கடல்கண்டன
மெய்கண்டான்தன் மேல்விழுந்தானரோ
பெய்கண்டாரை யருவிப்பெருந்திரை
மொய்கண்டார்திரை வேலையைமூடவே.

அப்புமாரி யழுந்தியமார்பைத்தன்
அப்புமாரி யழுதிழியாக்கையின்
அப்புமாரி னணைக்குமரற்றுமால்
அப்புமானுற்ற தியாவருற்றாரரோ.

பறிக்குமார்பிற் பகழியைப்பன்முறை
முறிக்குமூர்ச்சிக்கு மோக்குமுயங்குமால்
எறிக்கும்வெங்கதி ரோடுலகேழையும்
கறிக்கும்வாயினிட் டின்றெனக்காந்துவான்.

தேவரோடு முனிவரும்சீரியோர்
ஏவரோடுமிட மின்றிசின்றவன்
மூவரோடு முலகொருமூன்றுடன்
போவதேகொன் முனிவெனும்பொம்மலான்.

கண்டிலன்றலை காந்தியமானுடன்
கொண்டிறந்தன னென்பதுங்கொண்டவன்
புண்டிறந்தன நெஞ்சன்பொருமலன்
விண்டிறந்திட விம்மியரற்றினன்.

இப்படியாக இராவணன் வெந்தபுண்ணில் வேல் நுழைந்ததுபோன்ற தன்மையையுடையவனாய், அப்பா பிள்ளையே! என்பான். என்னருங்குமாரனேஎன்பான். என்னப்பனே! என்பான். என்னுயிரே! என்பான். உனக்குமுன்னே இதோ வந்தேன் என்பான். நான் பிந்தியிருப்பேனோ என்பான். தேவேந்திரனுக்குப் பகையாயிருந்தாயே; அந்தப் பகை நீங்கிவிட்டதா என்பான். துன்பப்பட்டுக்கொண்டிருந்த தேவர்கள் இப்போது ஆர்ப்பரித்தார்களோ என்பான். கரந்தம் பூவைத்தரித்த சிவமூர்த்தியும், பாற்கடலிற்பள்ளிகொண்டு ஒருவருக்கும் அகப்படாம லொளித்துக்கொண்டிருக்கின்ற அந்த விஷ்ணுமூர்த்தியும், எப்போதும் தங்களுக்குப் பகையாளிகளில்லாமல் இனிச் சுகப்பட்டார்களோ என்பான். விபூதியைப் பூசிக்கொண்டிருக்கின்றவனை சங்கரனும், கையிற் சக்கராயுதத்தைவைத்துக்கொண்டிருக்கின்றவனை விஷ்ணுவும், உனக்குப் பயந்து ஓடிப்போய்மலையிலும் கடலிலும் ஒளித்துக்கொண்டிருந்தவர்கள், தங்களுக் குன்னாலுண்டாயிருந்த இக்கட்டு நீங்கினவர்களாய் இனி விருஷபத்தின்மேலும் கருடன்மீது மேறிக்கொண்டு உல்லாசமாக உலாவுவார்களல்லவா என்பான். தேவவிமானமேறித்தேவ கணங்களெல்லாம் உனக்குப்பயந்து நாலுதிக்கிலோடி யொளித்துத் தங்களிருப்பிடத்தில் வந்து சேராமலிருந்தார்களே. அப்படிப்பட்டவர்கள் இந்த அற்பமான மனிதர்களுடைய வெற்றியினாலேயா மறுபடியும் தங்கள் யதாஸ்தானம்வந்து சேரும்படியாக நேரிட்டது என்பான். இந்தப் புத்தியில்லாத அற்பதூதர்கள் சொன்னபடியே பெண்டிழந்து பெருந்துக்கப்பட்டுக்கொண்டிருந்த ஒரு மனிதன் கொன்றதினால், எனது ஆசைக்குமாரன் மாண்டழிந்தானே என்பான். ஓ இந்திரஜித்தே! என்று கூப்பிட்டு கையுங்காலு முதறிக்கொண்டு சோர்ந்து கிடப்பான். உட்காருவான். ஓவென்றிரைவான். இரக்கங்கொண்டழுது புலம்புவான். மூர்ச்சையாவான். உடம்பெல்லாம் வியர்வையடைவான். ஓடிப்போய் பூமியில்விழுவான். கண்ணைவிழிப்பான். அசையாமற் கிடப்பான். தன்தேகத்தாலே பூமியைக் கிளறுவான். கடகடவெ

ன்று உருளுவான். மல்லாந்து குப்புறுவான். ஒருவாயால் என்னையனேஎன்பான். வேறொருவாயா லினிநான் இராஜாங்கமும் செய்வேனோவென்பான். இன்னொருவாயால் அப்பா! வஞ்சகனாகிய நான் உன்னைப் பகையாளிக்குக் காட்டிக் கொடுத்துவிட்டு நான்மாத்திரம் பிழைத்திருப்பேனோ என்பான். ஒரு வாயால் சந்தனகஸ்தூரிகளாற் சித்திரமெழுதி உருக்குஸ்தம்பத்தைப்போலிருந்த உன் கைகளினாலே என்னைக்கட்டித் தழுவாமற்போய்விட்டாயே என்பான் மற்றொருவாயால் ஆண்புலிபோன்ற உன்னுயிரை மான்குட்டிக் கொப்பான அந்த மனிதனும் வாங்குகிறதா? அப்பா தேர்ந்த வில்வீரனே! என்பான். ஒருவாயால் நீல நிறத்தைக் காட்டிக்கொண் டிருக்கின்ற கண்டத்தையுடையவனான கயிலாசபதியும் சக்கரதரனான விஷ்ணுவும், முன்னம் அபரிமிதமாக வெறிந்த ஆயுதங்களையெல்லாம் தோற்கடித்துத் துரத்திவிட்டாயே? அப்படி துரத்தித்திரும்பிய நீ அவர்களுக்கு உன்னுடைய வீரகர்ஜ்ஜனையைஇனிக் காட்டமாட்டாயோ என்பான்.

ஒரு வாயால் இந்திரனுடைய கிரீடத்தைப் பறித்த உன் விஜயத்தைக்கண்டு சந்தோஷங்கொண்ட தபசிரேஷ்டர்கள் உன் தலையின்மேல் வைத்த வெற்றிமாலையை, இப்போது காகங்கள் ஆடுகின்ற யுத்தகளத்திற் காண்பேனோ என்பான். ஒருவாயால் அப்பா வீரசிகாமணியே! உன்னுடைய வில்லின் குணத் தொனியைக் கேட்டுநடுங்கிய யக்ஷர்களுடைய பெண்சாதிமார்கள், தங்கள் தாலியைக் கையிற்பிடித்துக்கொள்ளுவதை இனி நீக்கிவிடுவார்களோ என்பான். ஒருவாயால், அப்பாஇந்திரஜித்தே! யமனும் உன்னெதிரே வந்து உன்னுயிரைக்கைப்பற்றும்படியான வல்லமையுடையவனல்லவே? பின்னை யெனக்கு ஒளிப்புக் காட்டிக்கொண்டு உனக்கு விருப்பமான எந்தலோகத்திற் போய் மறைந்திருக்கின்றாய்? அளவில்லாத பலமுடையவனான இந்திரஜித்தே! வா வா என்றழைப்பான். இந்தப்பிரகாரமாக இராவணன் புத்திரனைக் கூவிக்கொண்டழுது எழுந்திருந்து நினைக்கிறதற்குள்ளாக ஓடி, தன்னரும் புத்திரனாகிய இந்திரஜித்துவின் தேகத்தைத் தேடும்படியாக ஊழிகாலத்திற் பொன்னிறமா யிருக்கின்ற ஆகாயத்துக் கொப்பான இரணக்களத்தைவந்து சேர்ந்தான். அப்போது தேவர்கள் முதலாகிய தன்னுடைய கிங்கரர்களும் மற்றெல்லோரும் அதைப்பார்த்து, ஐயோ! இந்த மூன்றுலோகங்களும், அவைகளின் முறைமைகளும், இனி யெவ்விதமாய்ப் போகுமோவென்று நினைத்துப் பரிதபித்தவர்களாய்க் கூடத் தொடர்ந்து வந்தார்கள். இப்படி ராவணன் ரணக்களத்திற்கு வந்ததைக் கண்ட மாத்திரத்திலே அங்கு பிணங்களைத் தின்கிறதற்குவந்திருந்த பேய்களும் பக்ஷிகளும் அன்புடைய சினேகர்களைப் போலச் சில அழுததுகள். சில ராவணன் பாதத்தில் வீழ்ந்து வெகு பரிதாபங் கொண்டவைகளைப்போலத் தொழுததுகள். சிலபேய்கள் துன்பத்தாற் சோம்பினதுகள். சிலபேய்கள் பயத்தால்யானைப் பிணங்களுக்குள்ளே புகுந்து ஒளித்துக்கொண்டதுகள். வந்த ராவணன் கோடிகோடி குதிரைப் பிணக்கூட்டங்களையும், உயுத்த வெற்றியாளர்களாகிய இராக்ஷசர்களுடைய பிணங்களையும் முகபடாமணிந்த யானைகளையும், முறிந்து விழுந்திருக்கின்ற தேர்களையும் புரட்டிப் புரட்டி, நாள்முழுவதுந் தன் குமாரனுடைய தேகத்தைத் தேடிப்பார்த்து, அசத்திய நோக்கமுள்ள கண்களிற் கண்ணீர் பெருக்கெடுத்தோட நெய்விட்டெரிகின்ற அக்கினியைப்போலக் கொதிக்கின்ற மனதுடனே அதிக பலமுள்ள வெற்றிவில்லை பிடித்தபடியே இந்திரஜித்துவின் வல்லமையுள்ள கையறுந்து கிடக்கின்றதைத் தன் கண்ணாரக்கண்டு, பெரிய வாகுவலயமும், அம்புகளைப் பொழிகின்ற விரற்புட்டிலும், தோளலங்காரமும், தைத்தபகழிகளும் பிரகாசிக்க அக்கினிமயமான கண்களையுடைய கார்க்கோடக சர்ப்பம்போலக் கிடக்கின்ற அந்தக் கையைத் தன் சிவந்த கையால் தூக்கித் தன் தலையின்மேல்வைத்துக்கொண்டு, ஊழிகாலச் சண்டமாருதத்தைப்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு அந்தக் கையை மலையையொத்த தன் மார்பிற்சேர்த்துஅணைப்பான். கழுத்தில்வைத்துச் சுற்றிக் கொள்ளுவான். மறுபடியுந் தன்தலையில் அணிந்து கொள்ளுவான். சுழலுகின்ற கண்ணி லொற்றிக்கொள்ளுவான். முகர்ந்து மனமுருகுவான். பிறகு

துக்கிப்பான், இப்படி கையைப் பார்த்த பிறகு கறுத்த கடலைப் பார்த்ததுபோல அவ்விராவணன் இந்திரஜித்துவின் தலையில்லாத தேகத்தைக்கண்டு, கண்ணீரருவித்திரைகள் சமுத்திரத்தைக்கவிந்து மூடும்படியாக அந்தப்பிணத்தின்மேல் விழுந்து இலக்ஷ்மணருடைய பாணவருஷங்களால் மூடப்பட்டிருக்கின்ற இந்திரஜித்துவின் மார்பைக் கண்ணீரால் நிறைந்திருக்கின்ற தன்னுடைய உடலில் ஒற்றிக்கொள்ளுவான். வாரியணைத்துக் கொள்ளுவான். ஓவென்று அலறுவான். வீரசிரேஷ்டனாகிய அந்த லங்காதிபதியுற்ற புத்திரசோகத்தை இந்தலோகத்தில் வேறொருவரும் அடையவில்லை. இந்திரஜித்துவின் மார்பில் தைத்திருக்கின்ற பாணங்களைப் பலதரமாகப் பறித்து அவைகளைத் துண்டுதுண்டாக முறித்தெறிவான். மூர்ச்சையாய்ப் போவான். முகர்ந்து பார்ப்பான். தேகத்தோடு சேர்த்து அணைப்பான். ஜ்வாலிக்கின்ற சூரியனுடனே சப்தலோகங்களையும் வாயிற்போட்டு மென்றுவிடுகிறேனென்று சொல்லிச்சொல்லிக் கோபிப்பான். இடமில்லாமல் ஆகாசமெல்லாம் நிறைந்து நிற்கின்ற தேவர்களுடனேயும் ரிஷிகளுடனேயும் உயர்ந்தவர்களான மற்ற யாவர்களுடனேயும் மும்மூர்த்திகளுடனேயும் இந்தமூன்று லோகங்களுடனேயும் கோபம் ஆறுவானோவென்று சொல்லுங் கோபமுள்ளவனாகி, இந்திரஜித்துவின் தலையைக் காணாமல் மிகுந்த கோபங்கொண்டு, அம்மனிதர்கள் தலையைக் கொண்டுபோய் விட்டார்களென்று தீர்மானித்தவனாய் மனதிற் புண்பட்ட வியசனமுடையவனாகி, ஆகாயமும் வெடிபடும்படியாக ஓவென்று அலறியழத் தொடங்கினான்.

வேறு.

நிலையுமா திரத்துநின்ற
யானையு நெற்றிக்கண்ணன்
மலையுமே யெளியவாநான்
மறிதற்கு மறிந்தமைந்தன்
தலையுமா ருயிருங்கொண்டா
ரவருடலோடுந் தங்கப்
புலையனே னின்னுமாவி
சுமக்கின்றேன் போலும்போலும்.

எறியுண் வளைகைமூதா
ரிந்திர னிருக்கையெல்லாம்
பொரியுண வுலகமூன்றும்
பொதுவறப் புரந்தேன்போலாம்
அரியுணு மலங்கன்மௌலி
யிழந்தவென் மதலையாக்கை
நரியுணக் கண்டேனானி
னுயுணு முணவுநன்றால்.

பூண்டொரு பகைமேற்புக்கென்
புத்திர னேடும்போனர்
மீண்டிலர் விளிந்துவீழ்ந்தார்
விரதிய ரிருவரோடும்
ஆண்டுளே குரங்குமொன்று
மமர்க்களத் தாருமின்னும்
மாண்டில ரினிமற்றுண்டோ
விராவணன் வீரவாழ்க்கை.

கந்தர்ப்ப ரியக்கர்சித்த
ரரக்கர்தங் கன்னிமார்கள்
சிந்தொக்குஞ் சொல்லினருன்
றேவியர் திருவினல்லார்
வந்துற்றெங் கணவன்றன்னைக்
காட்டென்று மருங்குவீழ்ந்தால்
அந்தொக்க வரற்றவோநான்
கூற்றையு மாடல்கொண்டேன்.

சினத்தொடுங் கொற்றமுற்றி
யிந்திரன் செல்வமேவி
நினைத்தது முடித்துநின்றே
னேரிழை யொருத்திநீரால்
எனக்குநீ செய்யத்தக்க
கடனெலா மேங்கியேங்கி
உனக்குநான் செய்வதானே
னென்னினியா ருலகத்துள்ளார்.

ஐயையோ! அஷ்டதிக்குகளிலும் நிலைத்துநின்ற திக்கெஜங்களும், நெற்றிக்கண்ணனுடைய கயிலாசமலையும், என்னால் தோற்றுப்போவதற்கு அலக்ஷியமாயிருந்ததுகளே? அப்படிப்பட்ட நான் இறப்பதற்கு முன்னே என் பிள்ளையினுடைய தலையையும் அவனதருமையான உயிரையுங்கொண்டுபோன அந்த மனிதர்கள் தேகத்துடனே தலையுமுயிரு முடையவர்களா யிருக்கவும், புலையனாகிய நான் இன்றையவரையிலும் ஆவியைப் பொய்யாய்ச் சுமந்து கொண்டிருக்கின்றேன்போ லிருக்கின்றது. இது வெகுநேர்த்தி! வெகுநேர்த்தி! அளகாபுரியை நெருப்புவைத்தெரித்து இந்திரபட்டணத்தைப் பொருக்கெழுந்து போகும்படித் துரத்தியடித்து மூன்று லோகங்

களையும் என் ஒரு குடையின்கீழ் ஆண்டு கொண்டுவந்த நான், வண்டுகள் தேனுண்ணும்படியான வெற்றிமாலையை யணிந்த முடியினையுடைய தலையையிழந்த என்பிள்ளையினுடைய தேகத்தை நரிகள் தின்னும்படிக் கண்டேன். நானுண்ணும் உணவைக்காட்டிலும் பிறர் எச்சிற்கலையைத் தேடிக் கொண்டுபோய்த் தின்னுகின்ற நாயினுணவும் நல்லதாயிருக்குமல்லவா? ஒரு பகையாளியின்மேற் பெருங்கூட்டங் கூடிக்கொண்டு என் பிள்ளையுடனே கூடப்போன வீரர்களில் ஒருவராவது மீளாமல் எல்லாரும் மாண்டுபோனார்கள். பகைவர் பக்ஷத்தில் இராமலக்ஷ்மணர்களென்கிற இரண்டு தவசிகளோடு அவர்களுக்குப் படையாக வந்த குரங்குகளிலும் ஒருவராவது ரணக்களத்தில் மரணமாகவில்லையே, இனி ராவணனுடைய வெற்றிப் பிரதாபவாழ்வுமுண்டாயிருக்கின்றதாய் நினைக்கலாகுமோ? அப்பா இந்திரஜித்தே! கந்தர்வ ஸ்திரீகளென்ன? யக்ஷஸ்திரீகளென்ன? சித்தஸ்திரீகளென்ன? இராக்ஷசஸ்திரீகளென்ன? கிளிகளையு நாகணவாய்ப் புட்களையுமொத்த சொற்களையுடைய மிகுந்த அழகுள்ளவர்களான உன்சொந்த தேவிமார்களென்ன? இவர்களெல்லாம் வந்து எங்கள் பிராண நாயகனைக் காண்பிக்கவேண்டுமென்றுஎன்னண்டைவந்து வீழ்ந்தபோது, யமனையும் வெற்றிகொண்டிருக்கிற நான் உங்கள் புருஷனை யமன்கொண்டு போய்விட்டானென்று அவர்களோடுகூட அலறியழுவேனோ? மஹா வெற்றிப்பிரதாபசாலியான இந்திரனுடைய செல்வத்தைநான் அடையவேண்டுமென்றுகோபங்கொண்டபடியே என்னினைவை நிறைவேற்றிக் கொண்டிருந்தநான், சீதையென்கிற ஒருபெண்ணின் ஆசையால் எனக்கு நீ செய்யவேண்டியதாயிருந்த கடமைகளை நீ என்முன்னிறந்தபடியால் உனக்குநானேயழுதுசெய்யும்படியானேனே? என்னைப்பார்க்கிலும் ஹீனர்களாக இந்தலோகத்தில் வேறேயொருவருமிருக்கின்றார்களா? என்றிவை முதலாகிய பல துக்கவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, அப்பா இந்திரஜித்தேயென்று கூவி இரைந்து அழுது, மிகுந்த ஆசையுடனே இந்திரஜித்துவின் தேகத்தைத் தூக்கிக் கொண்டு, ராக்ஷசஸ்திரீகளெல்லாரும் புலம்பிப் புரண்டழுதுகொண்டுவரத் தன்னுடைய சொர்ணாலங்கார நகரத்தைச் சேர்ந்தான்.

அப்படி ராவணன் போனதைக் கண்டவர்கள் புலம்பி அலறுகிற ஓசையானது தசதிசைகளிலும்போய் முட்டினது. இந்திரஜித்துவின் தேகத்தைக்கண்ட ராக்ஷசஸ்திரீகளிற் சிலர் துக்கத்தைச் சஹிக்கமாட்டாமல், குரூர கிருத்தியத்தையுடைய ராக்ஷசகுலத்தின் இயற்கையின்படியே தங்கள் கண்களைப் பிடுங்கிக்கொண்டார்கள். சிலர் தங்கள் கழுத்தினை அறுத்துக்கொண்டார்கள். சிலர் தங்கள் மார்பைப்பிளந்து ஈரலைப்பிடுங்கி எறிந்தார்கள். சிலர் தங்கள் நாவை உயிருடனே பிடுங்கிக்கொண்டார்கள். அன்றியும் அஷ்டதிக்குகளையும் வெற்றிகொண்ட புத்திரனாகிய இந்திரஜித்துவின் கிரீடத்துடனே தலைநீங்கின முண்டத்தை இராவணன் எடுத்துக்கொண்டுபோகக்கண்ட ராக்ஷசர்களெல்லாம் சமுத்திரத்துக் கொப்பாகத் தங்கள் கண்களிலிருந்து ஒழுகவிடுகின்ற அன்பின்கண்ணீர் வெள்ளமானது பலவழியிலும் ஓடிக் கடலிற்போய் விழுந்தது. அப்போது இந்திரஜித்துக்குப் பிராணபதமாயிருந்த ராக்ஷசஸ்திரீகள் முதலான பெண்சாதிமார்கள் கூட்டமாகக் கூடித் தலையின்மேற் கைகளைவைத்துக்கொண்டு சித்திரங்களைப்போல வீழ்ந்து புரண்டழுகின்ற இராஜமாளிகையில், ரத்தநீர், சொரிகின்ற கண்களையுடையவனாய் இராவணன்போய்ச் சேர்ந்தான். அப்போது மயன்குமாரத்தியும்இந்திரஜித்துவின்தாயுமானமண்டோதரியானவள் கறுத்த அளகபாரமானது அவிழ்ந்து குதிக்காலில் விழுந்துபுரளத் தாமரைப்பூவால் தென்னங்குரும்பையுடைப்பதுபோலத் தன் கைகளால் முலைகளின்மீது அறைந்துகொண்டு, ஆபரணங்களையெல்லாம் சுமக்கின்றபடியினாலே அகன்ற அல்குலேயல்லாமல் இடையும்கொஞ்சமுண்டோவென்று நினைக்கும்படியாகத் தலைமேலே கையைவைத்துக்கொண்டு, நெருப்பை மிதிப்பதுபோல் அடிபெயர்த்து வைத்து, பிள்ளைமேலுண்டாகிய ஆசையினாலே ஓர் மயிலானது வேடன் அம்புபட்டு உயிர்சோர்ந்து மலையின் மீது வீழ்ந்ததுபோல இந்திரஜித்துவின் மேல்சோர்ந்துவீழ்ந்து, சுவாசம் விடாமல்

அறிவுங்குலைந்து உயிரிழந்து போனளோ வென்று சொல்லும்படியாகத் தேகமசையாமலும் ஒன்றும் பேசாமலும் துக்கியாமலும் வெகுநேரபரியந்தம் அழாமலுமிருந்து, பிறகு மெல்லமெல்லச் சோர்வுநீங்கி அறிவடைந்து வாயைத்திறந்து அலறிப் புலம்பத்தொடங்கினள்.

கவி.

கலையினற்றிங்களென்ன
வளர்கின்றகாலத்தேயுன்
சிலையினலரியைவெல்லக்
காண்பதோர்தவமுஞ்செய்தேன்
தலையிலாவாக்கைகாண
வெத்தவஞ்செய்தேனந்தோ
நிலையிலாவாழ்வையின்னு
நினைவெனேநினைவிலாதேன்.

ஐயனேயழகனேயென்
னரும்பெறலமிழ்தேயாழிக்
கையனேமழுவனேயென்
றவர்வலிகடந்தகால
மொய்யனேமுளரியன்ன
நின்முகங்கண்டிலாதேன்
உய்வெனேயுலகமூன்றுக்
கொருவனேசெருவலோனே.

தாளரிச்சதங்கையார்ப்பத்
தவழ்கின்றபருவத்தன்னில்
கோளரியிரண்டுபெற்றிக்
கொணர்ந்தனைகொணர்ந்துகோபம்
மூளறப்பொருத்திமாட
முன்றிலின்முறையினேடி
மீளருவிளையாட்டின்னுங்
காண்பெனேவிதியிலாதேன்.

அம்புலியம்மவாவென்
றழைத்தலுமவிர்வெண்டிங்கள்
இம்பர்வந்தானையஞ்ச
லெனவிருகரத்தினேந்தி
வம்புறுமறுவைப்பற்றி
முயலெனவாங்கும்வண்ணம்
எம்பெருங்களிறேகாண
வேசற்றேனெழுந்திராயே.

இயக்கியராக்கிமார்கள்
விஞ்சையரேழைமாதர்
முயற்கறைபயிலாத்திங்கண்
முகத்தியர்முருகநின்னை
மயக்கியமுயக்கந்தன்னன்
மலரணையமளிமீதே
அயர்த்தனையுறங்குவாயோ
வமர்பொருதலசினேயோ.

முக்கணன்முதலினோரை
யுலகொருமூன்றினேடும்
புக்கபோரெல்லாம்வென்று
நின்றவென்புதல்வன்போலாம்
மக்களிலொருவன்கொல்ல
மாள்பவன்வானமேரு
உக்கிடவணுவொன்றோடி
யுதைத்ததுபோலுமம்மா.

பஞ்செரியுற்றதென்ன
வரக்கர்தம்பரவையெல்லாம்
வெஞ்சினமனிசர்கொல்ல
விளிந்ததேமீண்டதில்லை
அஞ்சினேனஞ்சினேனிச்
சீதையென்றமிழ்தாற்செய்த
நஞ்சினலிலங்கைவேந்த
னளையித்தகையனன்றோ.

அப்பாமகனே! கலையினலோங்கும் சந்திரனுக் கொப்பாக நீ வளர்கின்ற காலத்திலே உன்வில்லினலே இந்திரனை ஜெயிக்கப்பார்க்கும்படித் தவஞ்செய்திருந்த நான் உன்னைத் தலையில்லாத முண்டமாகப் பார்க்கும்படி என்ன கெட்டதவஞ் செய்தேனே? ஐயோ! நினைவுகெட்ட நான் நிலையில்லாத இந்த உயிர்வாழ்க்கையை இன்னமும் ஆசைப்படுவேனே? ஓ அப்பா! ஓ என்னையா! அடா என் அதிகசுந்தரவானே! நான் பெறுதற்கரிய தேவாமிர்தம் போன்றவனே! கையில்சக்கரத்தைத்தரித்த விஷ்ணுவையும் மழுவாயுதத்தையுடைய சிவனையும் தோற்கடித்த யமனுக்குச் சமமான வல்லவனே! இந்த மூன்றுலோகத்திற்கும் ஒரு வீரசிகாமணியே. ஓ மஹா வீரனே! உம்முடைய தாமரைமலர்போன்ற திருமுகத்தைக்காணுத நானும்பிழைப்பேனே! கால்தண்டை சப்திக்கும்படியாக நீ தவழ்ந்து விளையாடின குழந்தைப் பருவத்திலும், நாளுக்கொரு மேனியாய் அலங்கரித்துக்கொண்டு நடந்து விளையாடின பருவத்திலும், வாளைப்போ லரிபடர்ந்த கண்களையுடைய தாதிமார்கள் வாழ்த்தும்படியாகத் தெருவேபோய் ஒருவரும் விளையாடாத விளையாட்டாடின உன்விளையாட்டை விதிகெட்டபாவியான நான் மறுபடியும் பார்க்கப்போகிறேனே? அடா எனதருமைச் செல்வனே! நீ குழந்தையில் அம்புலியே இங்கேவாவென்று அழைத்த மாத்திரத்தில் உன்னிடத்திற்குப் பயந்துகொ

ண்டுவந்த சந்திரனைப் பயப்படாதே பயப்படாதே யென்று இரண்டுகையினுலும் அவனைப்பற்றிப் பிடித்து, அவனுக்குத் தோஷமாயிருந்த மறுவை முயலென்று பற்றிப்பிடுங்கின அந்த வல்லமையையுடைய என்பெரியயானையே! உன்னை நான் வையவில்லையப்பா! எழுந்திருந்து வரக்கடவாய். இராக்ஷசஸ்திரீகள் யக்ஷஸ்திரீகள் வித்தியாதர ஸ்திரீகளாகிய முயற்கறையில்லாத சந்திரனுக்கொப்பான முகத்தையுடையவர்கள் உன்னை மோகப்படுத்திச் சையோகஞ்செய்ததினாலே புஷ்பசயனித்தின்மீது அயர்ந்து நித்திரைசெய்கிற நீ, உயுத்தஞ்செய்து அலுத்துப்போனாயோ? ஆ! தெய்வமே! மூன்று கண்களையுடைய சிவன்முதலான பேர்களையும், மூன்றுலோகத்தாரையும், எந்தயுத்தத்திலுஞ் செயித்து வெற்றிபெற்றிருந்த என் புதல்வனை வன் ஒரு சிறுமனிதனாலே கொல்லப்பட்டுப்போனான்? இது ஆகாயத்தையளாவிய மேருமலையை நொறுங்கிப்போடும்படி ஒரு அணுவானது விழுந்து மோதினதுபோலிருக்கின்றதே? அடாமகனே! பஞ்சுக்கூட்டத்தில் அனற்பொரி விழுந்ததுபோல இராக்ஷசக் கடலையெல்லாம் ஒருமனிதன் கோபித்துக்கொல்ல ஒருவராவது தப்பாமல் மாண்டுபோனார்களே? எனக்குப் பயமாயிருக்கின்றதே? இந்திரஜித்தோ! சீதையென்கிற பேரைவைத்து அமுதினால் சிருஷ்டித்திருக்கின்ற விஷத்தினாலே இலங்கேஸ்வரனை உன்தந்தையானவன் நாளைக்கு உன்னைப்போலவே மாளப்போகின்றானல்லவா? என்றுகூவி அழுதுகொண்டிருந்தாள்.

அப்போது ராவணன் கோபங்கொண்டு, என்பந்துக்களுக்கு மரணத்தைத்தேடி வரவழைத்தவள் அந்தச் சீதை அல்லவா? அந்தப் பெரும்பாறையையொத்த மனதையுடைய வஞ்சகியை என்கையிலுள்ள வாளாயுதத்தினாலே கொன்று நாசமாக்கிவிடுகிறேனென்று ஓடினான். அப்படியோடுகின்ற இராவணனை மகோதரன் பார்த்து, ஓஓ!! இவனிப்போது பெரிய பழியைத் தலைமேற் சுமந்து கொள்ளுகின்றானே; ஈதென்ன பாவம்? என்றெண்ணித் தன் மனதைத் தைரியப் படுத்திக்கொண்டு, அவன் கிட்டப்போய் அவன் காலில்வீழ்ந்து வணங்கி, ஐயா பிரதாப இலங்கேஸ்வரா! வெகு காலமாய்ச் சம்பாதித்த உம்முடைய பெருமைக்கு இப்போது கெடுதிநேரும்படிச்செய்ய யத்தனித்தீர். இதென்ன காரியம்? என்று சில புத்திகளைச் சொல்லத் தொடங்கினான்.

ஐயா! எல்லா யுத்தத்திலும் ஜெயம் பெற்றுக் கீர்த்தியை அடைந்த நீர், பிருதுவி-அப்பு-தேயு-வாயு- ஆகாயம் -என்கின்ற பஞ்சபூதங்களுள்ளவரையிலும் ஒழியாதபெரியபழியைக்கைக்கொள்ளவாபுறப்பட்டீர்? காலகேயகர்களுடைய தலைகளையும் திக்கஜங்களையும் கயிலாசமலையையும் சின்னாபின்னப்பட வீசின வெற்றிவாளாயுதத்தை, கொடியையொத்த இடையையும் சிவந்த வாயையுமுடைய இளமை யழகு மாறாத ஸ்திரீயின்மேல் பிரயோகித்தால்; அந்தத் தெய்வத் தன்மையுள்ள வாளாயுதமானது, வெட்கத்தால் முனைமடிந்துபோகுமேயல்லாமல் அவளுடைய ஆவியை வாங்குமா? இந்த தசக்ரீவனென்னும் ராவணன் ஸ்திரீஜாதியாகியும் தவப்பெண்ணாகியு மிருக்கின்றவளைக் கோபித்துக் கொஞ்சமுங் கூச்சமில்லாமல் வாளாயுதத்தாற் கொன்றான். இப்போது பலவீனனானான். மேலுமவன் ராக்ஷசகுலத்திற் பிறந்தவனானபடியினாலே அதற்குத் தகுந்தபடி புத்தியில்லாமற் செய்தான். என்று கங்கையென்கிற பெண்ணைத் தலையில் வைத்திருக்கின்ற சிவனும், விஷ்ணுவும், தாமரை புஷ்பத்தை ஆசனமாகவுடைய பிரம்மதேவனும், கைகொட்டிக்கொண்டு சிரிப்பார்களே; ஓ! புலஸ்தியப் பிரம்மவமிசத்திற்பிறந்த புண்ணியசீலனான லங்கேஸ்வரா! ஸ்திரீகளைக் கொல்வது பூலோகத்தி லுள்ளவர்களுடைய இயற்கையுமல்ல. தேவலோகத்திலுள்ளவர்களுடைய ஸ்வபாவமு மல்ல. மற்ற எந்தலோகத்தாருக்கும் ஒத்த காரியமல்ல. பெரியோர்களுடைய தருமமென்னலாமோ வென்றால் அப்படிக்குமல்ல; வீரவான்களுக்கும் இது தகுதியல்லாத காரியமாச்சே. இப்படியிருக்க எந்நாளும் நீங்காதிருக்கின்ற பழியைத் தேடிக்கொள்ள உமதுபுத்தி மயங்கிப்போனீரே? இன்றைக்கு நீர் இந்தச் சீதையை வாளினாலே வெட்டிப்போட்டு இராமனைச் செயித்துவிட்டு மறுபடியும் இலங்கைக்குவந்து துக்கப்பட்

டுக்கொண்டிருப்பீரோ? அதுவுமல்லாமல் அந்த ராமலட்சுமணர்கள் சீதை மாண்டு போனாள். இனி நாம் சண்டைசெய்வதினாற் காரியமென்னவென்று போய்விடுவார்கள். அப்போது உம்மால் அவர்களைஜெயிக்கமுடியவில்லையென்று சொல்லுவார்கள். அது வீரவாக்கிய மாகுமோ? இப்படி மகோதரன் சொன்னதைக்கேட்ட இராவணன் ஓங்கினவாளைப் பூமியிலெறிந்துவிட்டுத் திரும்பி, தன் பிள்ளையைப்பகைவர்கள் கொன்ற பழிக்காக அந்தப் பகைவர்களுடைய தலைகளைக் கொண்டல்லாமல் திரும்பிவரமாட்டேன். இந்த மூண்டமான தேகத்தைத் தைலதோணியிற் போட்டு வையுங்கள் என்று நியமித்தான். அந்தப் பிரகாரமாகவே அவர்கள் இந்திரஜித்தின் தேகத்தை வாசனைத் தயிலத்தோணியில் வளர்த்தி வைத்தார்கள்.

இராவணன் சோகப்படலம்-முற்றிற்று.

---

## படைக்காட்டுப்படலம்.

அப்போது இராவணன் தனது மூலபலசேனைகளையெல்லாம் மழைத்துக்கொண்டு வரும்படி சிலதூதர்களுக்கு நியமிக்க, அந்த நியமனப்பிரகாரம்போன தூதர்கள் நாலுதிக்கிலும்போய் அங்கங்குள்ள ராக்ஷசர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு வந்து இராவணன் பாதத்தில் வீழ்ந்து, ஸ்வாமி! நாங்களழைத்துக்கொண்டு வந்த சேனைகளுக்கு இந்தலங்கா பட்டணத்திலிடமில்லை. இனியுத்தரவுப்படி நடந்து கொள்ளுகிறோ மென்றார்கள் அப்படித் தூதர்சொன்னதைக் கேட்ட ராவணன் மிகுந்த சந்தோஷங்கொண் டெழுந்திருந்து, வந்தசேனைகள் எங்கேயிருக்கின்றனவென்று கேட்டான். அப்போதந்தத் தூதர்கள் இரண்டுகைகளையுங் கூப்பிக்கொண்டு, ஐயா இலங்கேஸ்வரா! அந்தச்சேனைகளெல்லாம் இன்னவிடத்திலிருக்கின்றனவென்று ஓரிடத்தைக் குறிப்பிட்டுச் சொல்லக் கூடுமோ? சப்தசாகரங்களும் ஊழிகாலத்தில் உலோகங்களை யெல்லாம் வந்து வளைந்துகொண்டதுபோல வந்திருக்கின்ற சேனைக்கு இந்த லோகமே போதாதென்று சொல்லி நின்றார்கள்.

அப்போது பூமியில் மிதித்துநடக்கின்ற சேனைகளினா லெழும்பிய பெருந்தூளி எங்குநெருங்கினபடியினாலே ஆகாசமார்க்கமாயேறி, மேலுமேலுமாகக் கற்பமுடிவின் காளமேகத்தைப்போலக் கண்ணாற்பார்க்கவு முடியாமல் இலங்காபட்டணத்தைநோக்கி வந்ததுகள். அப்படி வருகின்றசேனைகள் வாள்களை விதிர்க்கின்றதினாலே மேகத்திரளெல்லாம் ஓடிவிட்டன. அவர்களுடைய பேரிகை முழக்கத்தைக் கேட்ட இடியும் அதனோடு நேரொத்துச் சப்திக்கமாட்டாது. நீட்டின ஆயுதங்களும்-குதிரைகளும்-யானைகளும் -தேர்களும்- அங்கங்கு போகும்போது கடல்களெல்லாங் கொதித்து மேலெழும்பி விடுமேயானால், அதற்குச் சமானம் வேறெதைச்சொல்லலாம்? இந்தமூலபலசேனைகள் நடந்து போகின்ற பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் உலகங்களெல்லாம் ஒன்றுடனொன்று முட்டி ஒதுங்கிவிட்டதுகள். மேலுலகத்தில் சந்திரனும் நக்ஷத்திரங்களுந் தத்தம் நிலைமையை நீங்கிவிட்டதுகள். சூரியனுந்தான் முன்னம்போகின்ற பழையவழியை விட்டுப் பயந்து விலகிப்போய்விட்டான். ஆகாயத்தை யளாவின மேருமலையைப் போலப் பிரகாசிக்கின்ற கோபுரங்களையுடைய இலங்காபுரியினது நான்கு வாசலாலும்போய் நுழைந்து இந்தப் பூலோகமும் பொறுக்கமாட்டாதென்று சொல்லும் நடக்கின்ற சேனையானது, யமனானவன் கருங்கடலை வேறோரிடத்திற் சேர்த்துவைப்பதற்குச் சமானமாக இருந்தது. இந்தச் சேனையெல்லாம் நெருக்கமா யிருக்கின்ற இலங்கைக் கோட்டை வாசலின்வழியாக நுழையவேண்டுமானால், அநேக நாள் செல்லவேண்டி வருமென்று, அந்த லங்கையின் மதிலின்மீதேறி, எல்லாவண்டங்களிலுமிருக்கின்ற மேகங்களெல்லாம் ஒருமிக்கலந்ததுபோல, லங்கா பட்டணத்துக்குள்ளே பிரவேசிக்க யத்தனித்தது. அப்படி சேனைகள் இலங்கையை நோக்கிவரும்போது இராவணேஸ்வரன் சப்த சாகரங்களையும் ஒரே காலத்திற் பார்க்கவேண்டுமென்றாசையுற்ற அறிவீனனைப் போலச் சேனையை ஒரே தடவையில் இவ்வளவென்று பார்க்கவேண்டு மென்கிற ஆசையினாலே, அலங்காரமான ஒரு பெரியகோபுரத்

தின்மேலேறி நின்ருன். அப்போது ஒரு திக்கிலிருந்து மற்ருெரு திசையை நோக்கிச் சமுத்திரஜலம் போவதையொத்த சேனையை வேத வேதாந்தார்த்தத்தை ஒரு மிக்க விரித்துப் போதிக்கின்றவர்களைப் போலத் தூதுவர்கள் இராவணனுக்கு அணியணியாகப் பலதரமாய்க் காட்டி இன்னதின்னதென்று சொல்லத்தொடங்கினுர்கள்.

ஐயா இராவணேஸ்வரா! இதோ வருகின்ருர்களே இவர்கள் சாகத்வீபத்தில் வாழ்கின்றவர்கள். தானவர்கள்செய்த யாகத்திற்பிறந்தவர்கள். தேவர்களை யெல்லாம் ஒருமிக்கத் தோற்ருேடும்படி அடித்தவர்கள். மாயைக்கு முதன்மையானவர்கள். மேகமண்டலத்தை யளாவிய தேகத்தையுடையவர்கள். ஐயா அதிவீரவானே! இவர்கள் குசத்வீபத்தில் வசிக்கின்றவர்கள். கொலைச்செய்கையினுலும் சிருஷ்டி விருத்தியினுலும் யமனுக்குப் பழிப்பையும் பிரம்மாவுக்குப் பலத்தையும் உண்டாக்கினவர்கள். எப்போதுந் தேவலோகவாசிகளான அமரர்கள் தங்கள் கீர்த்தியையும், ஐஸ்வரியத்தையும் இருப்பிடத்தையும், இழந்துபோனது இவர்களாலே தான். வெற்றியே யிவர்களுக் கியற்கையானதொழிலா யிருக்கின்றது. ஓ இராவணேஸ்வரா! இவர்கள் சான்மலித்வீபத்தில் வசிக்கின்றவர்கள். இமையா நேத்ரத்தையுடையதேவர்களுக்குத் தலைவனுன இந்திரனுடைய பொன்னுலகத்தை அழியும்படி யடித்தவர்கள். சந்திரனை ஜடாமகுடத்தில் தரித்த கயிலாசபதியாகிய உருத்திரமூர்த்தி யருளிச்செய்த வரத்தினுலே சிரேஷ்டப் பட்டவர்கள். காட்டுத்தீப்போன்ற கோபத்தையுடையவர்கள். ஐயா திக்விஜயப் பிரதாப சீலனே! இவர்கள் கிரௌஞ்சத்வீபத்தில் வாசம் பண்ணுகின்றவர்கள், பழையகாலத்தில் மேருமலையை இது தேவர்களுக் கிருப்பிடமா யிருக்கின்றதென்று பேர்த்துக்கொண்டுபோய்ச் சமுத்திரத்திற் போட்டுவிடுகிறதற்கு இவர்கள் யத்தனித்தபோது, தேவர்களெல்லாம் அலைகுலைய தலைகுலைய ஓடிவந்து அப்படிச் செய்யவேண்டாமென்று வேண்டிக்கொண்டதினுலே சும்மா விட்டுவிட்டார்கள்.

ஓ கயிலாசகிரியைப்பேர்த்த புஜபல வீரனே! இவர்கள் பிரவாளத்வீபத்தில் வாழ்கின்றவர்கள். சுக்கிரன் தன்னியல்பழிந்து ஒரு ராக்ஷசக் கன்னிகையைச் சேர்ந்து அவள் வயிற்றிற்பிறந்த பத்துக்கோடி பேர்கள் விளையாட்டைப்போலப் பாற்கடலை வற்றும்படி கொஞ்ச நாளுக்குள் குடித்துவிட்ட பலவந்தர்கள். ஓ எங்களாண்டவனே! இந்த வக்கிரதந்தங்களை யுடைய அளவில்லாதவர்கள் கருங்கடலுக்கப்பால் மந்தமாருதக் காற்றுலாவும்படியான கந்தமானதமென்கிறபருவதத்தில்வாழ்ந்துகொண்டிருக்கின்றவர்கள். முன்னுல் ஆலகால விஷம் பிறக்கும்போது அதனுடன்கூடப் பிறந்தவர்கள. ஐயா தசகண்டேஸ்வரனே? இவர்கள் சாகரத்வீபத்தில் மலையமென்னப்பட்ட பொதியமலையொன்று நிலையமாயிருக்கின்றதே, அங்கே வசிக்கின்றவர்கள். பிரம்மாவானவர் இவர்களாலே லோகத்துக்கு இக்கட்டுண்டாகுமென் றெண்ணி, ஓ ஐயன்மீர்! நீங்கள் தயைசெய்து இந்தமலையிலிருங்க ளென்று யாசித்தபடியினுலே அதிலே இருக்கின்ருர்கள். ஐயா பெருங்கீர்த்திமானே! இந்தமுஷ்கராயுதத்தையும் சூலாயுதத்தையும் முசுண்டியாயுதத்தையும் சக்கராயுதத்தையும் வில்லையும் உடையவர்களாய் நிற்கின்ற வீரர்கள், புஷ்கரத்வீபத்தில் வசிக்கின்றவர்கள். விஷத்துக் கொப்பானவர்கள். சப்தசாகரத்திற்கும் தலைவர்கள். ஓ எங்கள் தலைவனே! பிரகாசம்போன்ற கைகளையுடைய இவர்களை முன்னுலே பிரம்மதேவர் பார்த்து, இவர்களுக்கிந்த லோகம்போதாதென்று நினைத்து, நீங்கள் சப்தலோகங்களிலும் பாதாள லோகத்திலும் போயிருங்களென்றுசொல்ல அங்கே போயிருந்தார்கள். இப்போது உம்மிடத்தில் அன்புடையவர்களாய் அந்தப் பிரம்மாவின் ஆக்கினையையுங் கடந்து வருகின்ருர்கள். ஐயா இராவணேஸ்வரா! இவர்கள் இறலித்தீவில் விருத்தியடைந்திருந்தவர்கள். யமனை முன்னுலே தங்கள் தாயார் சொல்லைக் கேட்டுத் தங்கள் வல்லமையாற் சக்கரவாளகிரியின்மீது விலங்கிட்டுப் பலமொடுங்கும்படி வைத்திருந்தார்கள். பிறகு பிரம்மதேவன் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதினுல், விட்டார்கள். ஐயா ஜயப்பிரதாபனே! இவர்கள் நிருதியின் வமிசத்துப் பிள்ளைகள் சூரியனுக்கும் தேவர்களுக்கும் எவ்வித பந்துத்துவம் உண்டாயிருக்கின்

றதோ? அவ்வளவு உமது வமிசத்தார்களுடனே பாந்தவ்வியமுடையவர்கள். இரத்தபானங் கிடையாவிட்டால் இந்தச் சப்தசாகரங்களையும் தாகத்துக்குச் சாப்பிடத்தக்கவர்கள். கறுத்தமேனியர்கள். ஒவ்வொருத்தர் சப்தகுலாசலங்களையும்பேர்த்தெடுக்கும்வல்லமையுடையவர்கள். ஐயாலங்காதிபதியே! இவர்கள் ஆதிபுருஷவராகமூர்த்தியை மோகங்கொண்டு பார்த்த காரணத்தினாலே அந்த ஸ்திரீகள்வயிற்றிற் பிறந்தவர்கள். இந்திரனைஐராவதமென்கிற யானையின்மேலேறவொட்டாமலடித்து அவனைஜெயித்து வெற்றிமாலை தரித்தார்கள். இதோ பெரிய மலைகளைப்போல நிற்கின்ற கொடுங் கண்களையுடையவர்களான வெற்றியாளர்கள் ஒருவருக்கும் பின்னிடையமாட்டார்கள். தராதலத்திலேயே வாசம்பண்ணுகின்றவர்கள். அவ்விடத்திலிருந்தபடியே எந்தநேரமும் துஷ்கிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்கின்றபடியினாலே ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷனும் நித்திரையில்லாமல், விழித்தகண்விழித்தபடியே எங்கேயிவர்கள் நம்மை இம்சிக்க வருவார்களோவென்று பார்த்துக்கொண்டேயிருப்பான். இதோ கைகளிலிருக்கின்ற வாள்கள் பிரகாசிக்கவும், வக்கிரதந்தங்கள் ஒளிவீசவும் வருகின்றவர்கள், நெற்றிக்கண்ணராகிய சிவமூர்த்தி, காளியைமோகித்தபோது பெருங்கூட்டமாகப் பேய்க் கூட்டத்துடனே மிகுந்தகோபத்துடனே பிறந்தார்கள். இதோ வில்லைக் கையிற்பிடித்துக்கொண்டு வடதிசையிலிருந்து வருகின்றவர்கள், பாபம்பிறந்தபோது அத்துடன்கூடப்பிறந்தபழையவர்கள். விளக்கைப்போன்றகண்ணையுடையவர்கள். கோபம்பிறந்தால் தாயையுங்கொன்று உயிரைவாங்கும்படியானசண்டாளர்கள். ஐயா பிரதாப லங்கேஸ்வரா! இவர்கள் பஞ்சமுகராகிய உருத்திரமூர்த்தி கோபங்கொண்டு, உலோகத்தை யெல்லாம் சுட்டெரிக்கும்படியாக விழிக்கின்ற நெற்றிக் கண்ணிற் பிறந்தவர்கள். சூலமேந்திக் கொண்டு நிற்கின்ற இவர்கள் உருத்திரமூர்த்தி யமனுடைய மார்பிலுதைத்தபோது, அவன் கக்கின ஏழுசமுத்திரத்தையொத்த இரத்தத்தில் நின்றும்பிறந்த வீரவான்கள் இதோபெருங்கூட்டமா யிருக்கின்றவர்கள் ஆலகாலவிஷத்திலும் அமுதத்திலும் பிறந்த இராக்ஷச யுத்தவீரர்கள். இவர்கள் வடவாமுகாக்கினியில் வாசுகி விஷத்தைக் கக்கினபோது அவ்வக்கினியிலிருந்து பிறந்தவர்கள். மேகத்திற் பற்றியெரிகின்ற அக்கினியைப்போன்றிருக்கின்ற செம்பட்ட மயிரினையுடைய இவர்கள் உருத்திரன் தேரைச்செலுத்திக் கொண்டுபோய்த் திரிபுரங்களை யெரித்தபோது அந்தத் தீயிற்பிறந்தவர்கள். ஐயா தசக்கிரீவமகாராஜனே! இவர்களை யெல்லாம் தனித்தனியே சொல்லப்புகுந்தால் கூடியமாத்திரம் நினைக்கவும்குறிப்பிட்டு அறியவும் அளவுபடமாட்டார்கள். இவர்கள்செய்யும்படியான மாயைகளையும், இவர்கள் செய்திருக்கின்ற தவங்களையும், இவர்கள்பெற்றிருக்கின்ற வரங்களையும், ஒவ்வொன்றாய்ப் பேரிட்டுச் சொல்லவேண்டுமானால் ஆயிரம் யுகமானாலும் முடியாது. ஐயா மகதைஸ்வரியவானான இலங்காநாயகனே! இவர்களி லொருவனே போய் அங்கிருக்கின்ற பலவந்தர்களான குரங்குகளையெல்லாம்கெட்டிக்காரர்களான அவ்விரண்டு மனிதர்களோடும் ஒருகையினாலே வாரியடித்துவிட்டு வருவானானால், மற்றெல்லாரைப் பற்றியும் வேறென்ன சொல்லவேண்டு மென்று தூதுவர்கள் சொன்னார்கள்.

இவையனைத்துங் கேட்ட ராவணன் அந்தத் தூதுவர்களைப் பார்த்து, இந்தச் சேனைகளுக்குத் தொகை எந்தக் கணக்காக வகுத்திருக்கின்றதோ, அதைச் சொல்லுங்களென்று கேட்டான். அதற்கவர்கள் ஐயா இலங்காதிபதி! இவர்களுடைய தொகையை ஆயிரம் வெள்ளமென்று சொல்லுவார்கள் பைத்தியக்காரர்கள். இவர்களுடைய தொகையைச் சொல்லுகிறதற்குக் கணக்கில்லை என்றார்கள். அதைக் கேட்டமாத்தில், நல்லது நீங்கள்போய் இந்தச் சேனைகளுக்கு நாயகர்களை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டுவாருங்கள். அவர்கள் வந்தபிறகு நான் அவர்களுக்குச் சொல்லவேண்டிய காரியங்களையெல்லாஞ் சொல்லி, மரியாதை வார்த்தைகளையும் பேசி, உபசாரத்துடனே தகுந்த வெகுமானங்களையுஞ் செய்யவேண்டுமென்றான். அப்படியே தூதுவர்கள் அந்தந்தத் திக்குகளுக்குப்போய்ச், சமுத்திரத்தையொத்த அந்தச் சேனைநாயகர்களைக்கண்டு இராவணேஸ்

இராவணன் சீதையை வெட்டப்போதல். மூலபலசேனையைவரித்தல்.



மூலபலங்கண்டஞ்சியோடி வானரரையழைத்தல். மூலபலவதை.

வரன் உங்களை யழைத்துக்கொண்டு வரச் சொன்னானென்று சொல்ல, அந்தச் சேனாதிபதிகளெல்லாரும் வந்து இராவணன் பாதங்களிற் புஷ்பங்களைத்தூவி ஒருவருடைய கிரீடம் ஒருவர்கிரீடத்தில் மோதுண்ணுமோசை, ஆகாசத்தை முட்டும்படியாக வணங்கினார்கள்.

அப்படி யவர்களெல்லாரும் வரிசை வரிசையாக வந்தனை வழிபாடுகள்செய்து சந்தோஷத்துடன் ஒருபக்கமா யிருந்தபோது அதிவீரனான ராவணன் அவர்களைப்பார்த்து, உங்கள்வரவு நல்வரவாய் முடியக்கடவதென்று அவர்கள்மனதைத் திருப்திகரம்பண்ணிஉங்கள்பெண்டுபிள்ளைகளெல்லாம் க்ஷேமமா யிருக்கின்றார்களோவென்றுபசாரவார்த்தைகளைச் சொன்னான். அதைக்கேட்ட அந்தச் சேனாவீரர்க ளிராவணனை வணங்கி, ஐயா திரிலோகாதிபத்தியமுள்ள பிரதாபலங்கேஸ்வரா! பருத்த தோள்களையுடைய நீர் மிகுந்த தபோவல்லமைகளையுடைத்தா யிருக்கின்றீர். உரியதாயுமக்கு வேண்டியவைகளெல்லாவற்றையு முடித்துக்கொள்ளுகிறதற்குக் குறையென்ன? நீர் தேவர்களையெல்லாம் ஓடவிட்டு அடித்ததைப் பார்த்திருக்கின்றோம். இனி எங்களுக்கென்னகுறை? இஃதிருக்கட்டும். உம்மிடத்திலிருக்கின்ற ஸ்திரீகள் பிள்ளைகளெல்லாரிலும் துக்கப்படாதவ ரொருவருமில்லை. நீருமப்படியே அதிக துக்கமுற்றிருக்கின்றீர். இப்படி நேரிடுகிறதற்குக் காரணமென்னவென்று கேட்டார்கள். அதற்கிராவணன் அவர்களைப்பார்த்து, தனக்குச் சீதையின்மேலிருந்த மோஹத்தினாலே சம்பவித்த காரியங்களை யெல்லாம் விவரித்துச்சொன்னான்.

இதைக்கேட்ட மூலபலசேனாபதிகள் அவனைப்பார்த்து, ஐயா இராவணேஸ்வரா! கும்பகர்ணனையும், இந்திரஜித்தையும், நம்முடைய குலத்தவரான மஹாவீரர்களையும், இராக்ஷசர்களுடைய பெருங்கூட்டங்களை யெல்லாமும் வென்றவர்கள்; இரண்டு மனிதர்களும் அவர்களுக்குச் சேனையாகிய வானரங்களுமா? இதென்ன ஆச்சரியம்? நீர் எங்களை வரவழைத்தது இந்த லோகத்தைச் சேஷனுடைய லோகத்திலிருந்து எடுக்கிறதற் கில்லாமலும், சப்த குலாசலங்களையும் வேரோடு பறிப்பதற்கில்லாமலும், சமுத்திரத்தைக் கையாலள்ளிக் குடிப்பதற் கில்லாமலும், பூவையும் இலைகளையுந்தின்று காட்டிற்பிழைத்துக்கொண்டிருக்கின்ற குரங்குகளின்மேல் ஏவுகிறதற்கா? என்று கூறிக் கையுடனே கையையறைந்து இடியிடித்தாற்போலச் சிரித்து நின்றார்கள். அந்தக் கோரதந்தங்களையுடைய இராக்ஷசர்களைப் புஷ்கரத்வீபத்துக்குத் தலைவனான வன்னியென்பவன் சமாதானப்படுத்தி இராவணனைநோக்கி, அந்த மனிதர்களுடைய வல்லமை எவ்வளவென்று கேட்டான். அவனப்படிக் கேட்டவுடனே மாலியவானென்கிற பேருள்ளவன் வந்து, இந்தப்பகை நேரிட்ட காரணமும் இராமலட்சுமணர்களுடைய சௌரியமும் அவர்களுக்குத் துணையாக வந்திருக்கின்ற வானரவீரர்களுடைய சக்தியும் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினான்.

ஓ வன்னிமுதலிய சேனாபதிகளே! சப்தசாகரங்களையும் சண்டமாருதம்போலத் தாண்டிப்போகின்றவனும் சப்த குலாசலங்களைப் பேர்க்கும்படியான வல்லமையுள்ளவனுமான வாலியினுடைய மார்பை, ஸ்ரீராமனென்பவனுடைய ஓரம்புபோய் பிளந்தெறிந்துவிட்டது. மேலும் அந்த ஸ்ரீராமன் கறுத்த பெருமலையைப்போன்ற கரன்-தூஷணன்-திரிசிரசு-என்பவர்களையும், அவர்களுடைய கடலையொத்த சேனையையும், ஒருவில்லால் ஒருநாழிகைக்குள்ளாகக் கொன்றுவிட்டான். பருத்த தோள்களையுடைய விராதனும், மாரீசனும், அவனால்தான் மாண்டுபோனார்கள். அந்த மனிதர்களுடைய வல்லமையை நீங்கள் வந்து கேட்கிறதென்ன? இந்தப் பெருங்கடல் வெந்தபோது நீங்களங்கே கொஞ்சமாவது பார்க்கவில்லையோ? அதுவல்லாமலும் கங்காசடாதரரான உருத்திர மூர்த்தியினுடைய பெரியவில்லை அவன் முறித்தெறிந்தபோது அந்த ஓசை உங்கள் செவியில்வந்து கேட்கவில்லையோ? இதுவுமல்லாமல் இந்த லங்கையில் தீயினுங் கொடியவர்களான இராக்ஷசசேனைகள் ஆயிரம் வெள்ளமுண்டு. அந்தச் சேனைகளெல்லாம் இந்த ராமலட்சுமணர்களுடைய இரண்டு வில்லாலே எமபுரம்போய் அங்கும்

இடமில்லாமல் நிறைந்திருக்கின்றதுபோலிருக்கின்றது.

அல்லாமலும் மஹா வெற்றியில்லையுடையவனுன கும்பகர்ணனென்கிற உங்கள் எசமானனும், அவன்பெற்ற பிள்ளைகளும், பிரகஸ்தன் முதலான மற்ற வீரர்களும், இந்திரஜித்துவுடனேகூட மடிந்துபோனுர்கள். இன்றுவரையிலும் நானும் இதோவிருக்கின்ற சிலபேர்களு மாத்திரந்தான் பிழைத்திருக்கின்ருேம். எங்களுக்கு மூலச்சேனையாக முந்நூறுவெள்ளஞ் சேனையிருக்கின்றது. நீங்கள் வராவிட்டால் அதை இன்றைக்கு யுத்தத்திற்கு அனுப்பும்படி நிச்சயித்திருந்தோம். வீரகண்டாமணியைத்தரித்த அந்த ராமலட்சுமணர்களுடைய வல்லமையையும், வானரப் பெருஞ் சேனைகளுடைய வல்லமையையும், தெரிவிக்கவேண்டுமானுல், ஒரேயொருகுரங்குவந்து இந்த லங்காபட்டணத்தை நெருப்பூட்டி மிகுந்த கோபிஷ்டனுன அக்ஷகுமாரனேயும் பூமியிற்போட்டு தேய்த்துப் பெருஞ்சண்டைசெய்து தூதுபேசிவிட்டு, இராக்ஷச ஸ்திரீகளெல்லாம் அலறும்படி இராக்ஷச சேனுசமுத்திரத்தையும், இந்த ஜலசமுத்திரத்தையும் தாண்டிக்கொண்டு போய்விட்டது. இலங்கைக்கு வந்து சண்டைசெய்கிறதற்காக வானரர்கள் சமுத்திரத்தை மலைகளைக்கொண்டு அணைகட்டி ஓர் மார்க்க முண்டுபண்ணினதை நீங்கள் உங்கள் கண்ணினுல் பார்க்கவில்லையா!

மேலும் சஞ்சீவிமருந்தை ஒருநொடிக்குள்ளாக மேருவுக்கப்பால் தாண்டிப்போய்க் கொண்டுவரும்படியான எழுபதுவெள்ளம் வானரங்க ளிருக்கின்றன: இஃதிருக்கிறகாரியம், சாமானிய ஸ்திரீகளைப்போலல்லாமற் பதியே தெய்வமென்று விரதம் பூண்டிருக்கின்ற சீதையென்னுங் கற்புடைய பத்தினியின் சிறைநிமித்தத்தாலே வேண்டிய முயற்சிகளைச் செய்துகொண்டு வந்திருக்கின்ற அந்த வில்வீரர்களே செயம் பெறட்டும். அல்லது நீங்களே வெற்றி பெற்ருலும் பெறுங்கள். இது நிச்சயமான காரியமென்பதை உங்களுக்குத் தெரிவித்தேன் என்று தான் சொல்லவேண்டிய வார்த்தைகளை யெல்லாஞ் சொல்லி முடித்தான். அப்போது வன்னியென்னும் சேனுதிபன் இராவணனைப்பார்த்து, ஐயா! நீர் இத்தனை ராக்ஷசவீரர்களெல்லா மடிந்து போனதைக்கண்டு என்னகாரணத்தினுல் அந்த மனிதர்கள்மேல்யுத்தத்திற்குப் போகாம லிருந்தீரென்று கேட்டார்கள். அதற்கு இராவணன் அவர்களைப்பார்த்து, ஓ சேனுபதிகளே! மனிதர்களும் குரங்குகளுமென்கிற அற்பத்தை நினைத்து அவர்கள்மீது யுத்தத்திற்குப் போவதற்கு வெட்கப்பட்டுக்கொண்டு நின்றுவிட்டேனென்ருன்.

அதற்கவர்கள் ஆம்: அதுமெய்தான். நீர் அவர்கள்மேற் சண்டைக்குப் போகிறது தகுதியல்ல. அந்தக்காரியம் எங்கள் கடமை என்று சொல்லிப் பின்னும் வன்னியென்பவன் சொல்லுகின்ருன். ஐயா இராவணேஸ்வரா! எல்லாந்தெரிந்த உம்முடைய பாட்டனுன மாலியவானுடைய அபிப்பிராயம், சீதையைக் கொண்டுபோய் விட்டுவிட்டு, அந்த மனிதர்களைச் சமாதானம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்பது. அது ஆதியிலேயேசெய்யவேண்டும். இனி செய்கிறது கெடுதி. இப்போது இறந்துபோன இந்திரஜித்துவை நாமினி யெங்கே காணப்போகிருேம்? இனி அந்தச் சீதையைக் கொண்டுபோய் விட்டுவிட்டாலும் யுத்தத்தில் மடிந்துபோன வீரர்களை நாம் மறுபடியும் பெறப்போகிறதில்லை. அதனுல் நம்மை எல்லோரும் ஏளனம் பண்ணுவார்கள். ஆகையால் நாம் அவர்களுடன் யுத்தஞ்செய்து அவர்களை வமிசத்துடன் கருவறுப்பதே தகுந்தகாரியம் என்று சொல்லிவிட்டு, அவ்வன்னிமுதலாகிய மூலபல சேனுதிபதிகளெல்லாம் இராவணனைப்பார்த்து, ஐயா பிரதாப லங்கேஸ்வரா! நீர் இங்கேயே இரும். நாங்கள் போய் அந்தமனிதர் குரங்குகளினுடைய சிறுவுடலின் இரத்தங்களைக்குடித்துவிட்டு வருகிருேம். அவர்கள் பலமில்லாத அற்ப சாதிக ளானவர்கள்தானே என்று சொல்லிப்போனுர்கள்.

படைக்காட்டுப்படலம் முற்றிற்று.

## மூலபலவதைப்படலம்.

அதைக்கேட்டுத் தானவர்க ளென்கிற மலைகளையெல்லாம் தன் கைவாளாயுதத்தி

ஞலே வெட்டி ஜெயம்பெற்ற வீரனை இராவணன் மிகுந்த சந்தோஷசித்தனுகி, ஓ மூலபலசேனுபதிகளே! நானொருபக்கத்திற்போய் வானரசேனைகளையெல்லாம் மாமிசங்களைச் சிதைத்து அவர்களுயிர்களைப் பக்ஷித்து விடுகிறேன். நீங்கள்போய் ஒருமிக்க அவ்விரண்டு மனிதர்களை மாத்திரங் கொன்று விடுங்களென்று ஆஜ்ஞாபித்தனன். இப்படி திட்டம் பண்ணினவுடனே, அந்தச்சேனுதிபதிகள் தங்கள் தங்கள் வாஹனங்களின்மேல் ஏறிக்கொண்டு, பெருங் கடலைப்போலிருக்கின்ற தங்கள் சேனையிற் போய்ச் சேர்ந்தார்கள். அதை ராவணன் பார்த்து, இந்தச் சேனைகளுக்கு முன்னதாக நம்முடைய மூலபலச்சேனையை அவர்கள்மீது யுத்தத்திற்கு அனுப்புங்களென்று கட்டளையிட்டான். அவ்வாறேயந்தச் சேனைகள் சென்றபின்பு தேவர்களுடைய புகழையெல்லாம் நாசப்படுத்தினவனை இராவணனும் தேர்மேல் ஏறிக்கொண்டு, திரிலோகத்தவர்களும் மகாரிஷிகளும் நடுங்கிப் பீதியடையும்படியாகப் புறப்பட்டு, காயாம்பூபோலத் திருமேனியை யுடையவரான ஸ்ரீராமமூர்த்தியினுடைய சேனைகளின்மீது ஒருபக்கத்திற் பிரவேசித்தான். அப்போது வள்ளுவர்கள் யானைமீது பேரிகையைக்கொட்டி சேனைகளெல்லாஞ்சண்டைக்குப் புறப்படுங்களென்று பலபல திசைகளிலும் அறைந்தபோது, மூலபல சேனைகள் பூமியையும் ஆகாசத்தையும் அஷ்டதிக்குகளையும் மொய்த்து நிறைந்து கூட்டங்கூடினதுகள். அந்த மூலபலப் பெருஞ் சேனையெல்லாம் ஆயுதந்தரித்த தேகத்தை நெருக்கிச் சுருக்கிக்கொண்டு விஷ்ணுவினுடைய வாமனவுருவத்தைப் போல வருகிறபடியினுலே, சமுத்திரமெல்லாம் மறைந்தது. ஆகாசமெல்லாம் மறைந்தது. உலோகத்திலுள்ள ஜீவகோடிகளெல்லாம் மறைந்தன.

அந்த மூலபல ராக்ஷசர்கள் தருமத்தை வேரோடு விழுங்கிக் கிருபையைப் பானம்பண்ணி வெற்றிபெற்ற வீரத்தையே ஆபரணமாகப்பூண்டு பாபத்தையே தங்களுக்கு மனைவியாகக் கலியாணஞ்செய்திருக்கின்றவர்களும், மேகத்தைப்போலக் கறுத்தவர்களும், ஆலகால விஷத்தைப் போன்ற மனதையுடையவர்களும், நெருப்புப்பற்றி யெரிகிறதுபோலத் தலைமயிரை யுடையவர்களும், யமனும் புகழும்படியானவர்களும், நீளமான கைகளினுலே சமுத்திரஜலத்தை வாரியிறைத்துவிட்டு, அதிலிருக்கின்ற மீன்களுடனே மகாமச்சியங்களையும் வாயிற்போட்டு மென்று, விழுங்கிவிட்டு இடிகளைப்பிடித்துக் காதுகளுக்குக் குண்டலம்போலத் தொங்கவிட்டுக்கொண்டு, மேகங்களையுரித்து வஸ்திரமாகப் போாத்துக்கொண்டு உலாவிக் கர்ஜிக்கின்றவர்களும், குலாசலங்களைப் பேர்த்துப் பல்லாக மேகத்திலிசைத்து மலைப்பாம்புகளாற் கட்டிப் பிணித்திருக்கின்ற வீரகண்டாமணியைத் தரித்தவர்களும், ஆகாசத்திற் பறந்துபோகின்ற கருடனைப்பார்க்கிலும் காற்றைப்பார்க்கிலும் நாலத்தனை வேகமுள்ள நடையையுடையவர்களும், உண்ணும்படியாக பசிக்கு மாமிசங்கிடையாமற் போகுமாளுல், திக்கஜங்களையும் பிடித்து வாயிற் போட்டுக் கொள்ளுகின்றவர்களும், குடிப்பதற்குத் தாகங் கிடையாவிட்டால் ஆகாசத்திற் படர்ந்திருக்கின்ற மேகங்களையெல்லாம் பிடித்து வாயிற் பிழிந்துகொள்ளத்தக்க விடாயையுடையவர்களும், பனிகளுறைந்த மந்தரகிரி முதலானவைகளைக் கைகளினுலே யோங்கியறைந்து குளிரை நீக்கி, உஷ்ணத்தை யுண்டாக்கும்படியானவர்களும், சந்திரனைப்பிடித்து உடம்பைச்சொரிந்து தினவை நீக்கிக்கொள்ளுகிறவர்களும், மலைகளைக்கடைந்து பிடித்திருக்கிற தண்டாயுதத்தை யுடையவர்களும், இடியைப்போலக் கர்ஜிக்கின்றவர்களும், சூலத்தையாவது - மழுவாயுதத்தையாவது - வாளாயுதத்தையாவது - வேலாயுதத்தையாவது-தண்டாயுதத்தையாவது - சக்கராயுதத்தையாவது-அம்பும் வில்லையுமாவது கையிற் கொள்ளுவார்களேயானுல், யமனையும் விஷ்ணுவையும், சிவனையும், சுப்பிரமணியனையும் ஜெயிக்கும்படியானவர்களுமாயிருந்தார்கள்.

அவர்களில் ஒருவரே இந்த லோக முழுவதையும் வெற்றி கொள்ளுவார்கள். இரண்டுபேர் சேர்ந்தார்களேயானுல், இந்தப் பதினுலுலோகங்களையும் மடித்து விடுவார்கள். சுற்றித் திரிவார்களேயானுல், பூமியும் அவர்களுடனே சுழலும் வருவார்களேயானுல் சப்தசமுத்திரங்களும் பின்

தொடர்ந்துவரும். மேகங்களெத்தனையோ அத்தனையத்தனை பதாதிகளா யிருந்தார்கள். பிர்ம்மாண்டத்துக்குள் விசாலித்திருக்கின்ற மலைகளெத்தனையோ அத்தனை தேர்களுண்டாயிருந்ததுகள். அளவில்லாத குதிரைகளிருந்ததுகள். குதிரைகளெத்தனையோ, அத்தனை யானைகளிருந்ததுகள். இப்படிப்பட்ட யானை-தேர்-குதிரை-ஆகிய இவைகளைப் பார்க்கும்போது அவைகளுடைய சேணங்களும், மேற்றவிசுகளும், கொடி-குடை-சிகரம்-ஆகிய உறுப்புகளும் பொன்னும்இரத்தினங்களுமல்லாமல் வேறொன்றினால் அலங்கரிக்கப்பட்டவைகள் ஒன்றுவது கிடையாது. இந்தப் பிரகாரமாக இந்த மூலபலமானது ஆரவாரித்துக்கொண்டு போகும்போது மேலெழும்பின பவளப்பொடிபோன்ற தூளிகள் நிறைந்து தூர்த்துவிட்டபடியினாலே, சமுத்திரமானது நீலநிறமாறிச் செந்நிறமடைந்தது. அதோடு யானைகளினுடைய மதநீர் வெள்ளமுங் கலந்தபடியினாலே தனக்குச் சுபாவமாயிருந்த உப்பு நீங்கிப்போய்விட்டது. அந்தச்சேனை புறப்பட்ட லங்காபட்டணத்தின் கோட்டைவாசலின் வழி எப்படி யிருந்ததென்றால் மலைகளையும்சமுத்திரங்களையும் மற்றப் பொருள்களையும் பிரஹம்மேந்திராதி தேவநிலயங்களையும், மற்ற லோகங்க ளெல்லாவற்றையும் அழிந்துபோகாதபடி உட்கொண்டு, மறுபடியும் உமிழ்ந்த தனிப்பொருளாகிய ஸ்ரீயப்பதியினுடைய திருவாய்மலருக் கொப்பாக யிருந்தது.

அன்றியும், மதஜலம் கபாலம் நிறையும்படியாகப் பாய்கின்ற யானைகளுந் தேர்களுங் குதிரைகளும் நிறைந்திருக்கின்ற அந்தச் சேனாசமுத்திரத்தைச் சுமக்கக்கூடாமையால், ஆயிரம் சிரங்களையுடைய ஆதிசேஷனும் துடித்துப்போனான். திருப்பாற்கடலிற் பிறந்த ஆலகால விஷத்தைக்கண்டு சஹிக்கமாட்டாமல் ஓட்டம் பிடித்த தேவர்களைப்போல, வானரக்கூட்டங்கள் நிற்கிறதற்கும் இடங்கிடைக்க மாட்டாதபடியினாலே ஓடிப்போய் வடதிசையைச்சேர்ந்து நின்றுவிட்டன. சக்கரவாளகிரியினாற் சூழப்பட்டிருக்கின்ற சப்தசமுத்திரங்களும் மலைகளுக்கொப்பாகவும், மூலபலராக்ஷசர்களெல்லாம்மான்கூட்டங்களாகவும், இயமனும்-விதியும்-அவர்களுடைய பாபங்களும்-அவர்களைப் பிடிக்கும் வேடர்களாய் இலங்காபட்டணத்திலிருந்து தொடர்ந்து வர ரணக்களம் வந்து சேர்ந்தார்கள். வீரர்கள் கர்ஜ்ஜித்த ஓசையும், தேர்வண்டில்களினுடைய அதிர்ச்சியும், மேகத்தையொத்த யானைகளின் முழக்கமும், குதிரைகளினுடைய கனைப்பும், அஷ்டதசவாத்தியங்களினுடைய சப்தமும் ஒன்றாகச் சேர்ந்து அண்டமுங் கிழிபட ஒலித்தன. அந்தமூலபல சேனாசமுத்திரத்துக்கு ஆயுதங்களெல்லாம் மீன்களாகவும் யானைகள் முதலைகளாகவும், குதிரைகள் அலைகளாகவும் பேரிகையோசை முழக்கமாகவும், கோபக்கண்களை யுடைய ராக்ஷசசேனைகள் அதிகொடூரமான சுருமச்சியமாகவும் இருந்ததுகள். கருத்த குடங்களைப் போல்உருண்டுதிரண்ட தோள்களையுடைய இராக்ஷஸ சேனைகள் பொற்றலமாகிய சுவர்க்கலோகத்தில் மிதித்து நடக்கின்றபடியினாலேயும், அந்தத் தரையானது யானைமதம்பாய்ந்து ஓடுகிறபடியினாலேயும்,சேறாகியும் குழைசேறாகியும் கெட்டுப்போய்விட்டது. இப்படி ராக்ஷசசேனைகளெல்லாம் ஆகாசத்திற் சென்றபடியினாலே சிகரத்தின்மேற் கட்டி யிருக்கின்ற அந்த லங்காபட்டணமானது அழிந்துபோகாம லிருந்தது. அப்போது தேவர்கள் பூமியைப்பார்த்தார்கள். சமுத்திரத்தைப் பார்த்தார்கள். விசாலமா யிருக்கின்ற ஆகாசமுகட்டைப் பார்த்தார்கள். எட்டுத்திக்குகளையும் பார்த்தார்கள். எங்கும் வெளியென்பது கொஞ்சமாவதில்லாதிருக்கக் கண்டார்கள். எங்கும் நிறைந்திருக்கின்ற வெற்றிக்கொடிகளையும் பார்த்தார்கள். அதனால் எல்லாரும் நடுங்கிப் பயந்து, நாம் நீங்கலாக இந்தலோகத்திலிருக்கின்ற சராசரப் பொருள்களெல்லாம் இராக்ஷசரூபத்தைப்பெற்று அளவில்லாத ஆயுதங்களையெடுத்துக்கொண்டுவந்ததுகளோ? அப்படிக்கில்லாவிட்டால் அலைகளோடுங்கூடிய சப்த சமுத்திரங்களும் பாபத்தினாலே இந்தத்துஷ்டராக்ஷசரூபங் கொண்டதுகளோ? என்று சொல்லி காளகண்டனாகிய சங்கரமூர்த்தியைப் போய்ச் சேர்ந்து, சுவாமி சம்மாரகர்த்தாவே! நாங்கள் ஒளித்துப் பிழைக்கும்படியான இடம் அகப்படவில்லையே. எங்களை யெல்லாம்

இந்த ராக்ஷசர்கள் கொன்று தின்றுவிடுவார்களே. இவர்களுடைய பெருமையை யார் அளவிட்டுச் சொல்லப்போகிறார்கள்? எங்கள் பலமெல்லாம் இன்றையுடனே முடிந்துபோய்விட்டதே. இவர்களில் ஒவ்வொருவரைக் கொல்லுகிறதற்கு ஆயிரம் ஸ்ரீராமர்கள்வந்து நாற்பதுவருஷம் யுத்தஞ்செய்தாலும் முடியாதே. நாமுங்கூடவிருந்தாவது கொல்லலாமென்றால், நின்றுயுத்தஞ் செய்கிறதற்காவது ஒருவெளியிடம் வேண்டாமா? அதுவுமல்லாமல் முதலாவது நம்முடைய உயிரிருந்தல்லவா சண்டை செய்யலாம்? அவர்கள் எல்லாரையுங் கொன்று விடுவார்களே. அப்பால்யார்இவர்களோடு எதிர்த்து யுத்தஞ்செய்யப் போகிறார்களென்று வணங்கினார்கள். அப்போது விஷகண்டராகிய ருத்திரமூர்த்தியானவர் அவர்களைப்பார்த்து, நீங்களொன்றுக்கும் பயப்படவேண்டாம்.இந்தவஞ்சகர்களானராக்ஷசர்களையெல்லாம் ஒருமிக்க அந்த ஸ்ரீராமனொருவனே சம்மரித்து விடுவான். இவர்களையெல்லாம் நாசம் பண்ணுகிறதற்கு அவர்கள் விதியே கொண்டுவந்துவிட்டதென் றருளிச்செய்தார்.

இப்படியிருக்கும்போது, புற்றிலிருந்து பெரும்பாம்புகள் புறப்பட்டபோது எங்கள்வலியழிந்தோமென்று வேகங்கொண்டு ஓட்டம்பிடிக்கின்றஎலிகளைப்போல,வானரசேனை சமுத்திரமானது ஸ்ரீராமலட்சுமணர்களுடைய வீரப்பிரதாபத்தையும் ஆலோசித்துப்பாராமல் நடுநடுங்கிப் பயந்து ஓட்டம்பிடித்ததுகள். அப்படியோடும்போது சிலவானரங்கள் சேதுவழியாக ஓட்டம்பிடித்ததுகள். சில வானரங்கள் சமுத்திரத்தைத் தாண்டிப்போகிறதற்குப் புணைகளைத் தேடித்திரிந்ததுகள். சிலவானரங்கள் சமுத்திரத்தில் நீந்திப்போனதுகள். சிலவானரங்கள் இரண்டிரண்டாக நீந்திக்கொண்டு போய் நடுச்சமுத்திரத்தில் முழுகிப்போய் விட்டதுகள். சில வானரங்கள் எட்டாத மரக்கிளைகளிற்போய்ஏறிக்கொண்டதுகள். சில வானரங்கள் மலைக்குகைகளிற் புகுந்து கொண்டதுகள். சில வானரங்கள் இந்தச் சேதுக்கட்டடந்தான் நமக்குஉயிரைக்கொடுத்ததென்றதுகள். சிலவானரங்களதுகேட்டுஆயினு மந்தராக்ஷசர்கள்இந்தஅணையின்வழியாக நம்மைத் தொடர்ந்துவராமல் இதை உடைத்துவிட்டுப் போய்விடலாமென்றதுகள். சிலவானரங்களப்போது நாமெங்கேபோனாலும் அங்கே ஆகாசத்தின்மார்க்கமாய் வந்துவிடுவார்களேயென்கிற பயத்தினாலே, பிரம்மாசிருஷ்டித்த அஷ்டதிக்குகளிலுஞ் சிதறியோட்டம்பிடித்ததுகள். சுக்கிரீவமகாராஜரும், ஆஞ்சநேயரும், அங்கதகுமாரனும், ஸ்ரீராமலட்சுமணர்களைவிட்டுப் பிரியமாட்டாதவர்களாகி நின்றார்கள். மற்றவானரவீரர்களெல்லாரு மோடிக் கடலைக் கடந்து கரைக்குப்போய் விட்டார்கள்.

இப்படி வானரங்களும் வானரவீரர்களுந் தட்டுக்கெட்டுத் தடுமாறி யலைவதையும் மூலபலச்சேனைகள் மூர்த்தண்ணியங் கொண்டு பராக்கிரமித்து நிற்பதையும் ஸ்ரீராமபிரான் கடாக்ஷித்து, ஓ விபீஷணா! இந்தப்படை இத்தனைநாள் எங்கேயிருந்ததென்று கேட்டார். விபீஷணாழ்வான் ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தாமரைகளில் வணங்கி, சுவாமி! எல்லாத்திக்குகளிலும் மற்றச் சப்த தீவுகளிலும் இருந்தவர்களைத் துஷ்ட ராவணதூதுவர்கள்போய் அழைத்தபடியினாலே, இந்தச்சேனைக்கடல்வந்து சேர்ந்தது. கீழேழுலகத்திலிருந்து மேலேறி ஊழிக்காலத்துச் சமுத்திரம்போல முன்னாலேவருகின்றசேனை, ராவணனுக்கு மூலமாகவிருந்தசேனைகளாகும். இதுதவிர இனி ராக்ஷசர்களென்கிற பெயருள்ள ஒரு பூண்டுங் கிடையாது. இப்போது அந்த அண்டத்திலுள்ள இராக்ஷசர்களெல்லாம் ஒருவரொழியாமல் தங்கள் பாவங்கள் பிடரியைப் பிடித்துத்தள்ள, மாண்டுபோகும்படியானவிதியை பின்பற்றின புத்தியினாலே தூண்டப்பட்டு வருகின்றார்களன்றி வேறல்லவென்று விண்ணப்பம்பண்ணினார். அதைக்கேட்ட பெரிய பெருமாள் சிரித்துக் கோபங்கொண்டு, இவர்கள் படும்பாட்டை நான் காட்டுகின்றேன். சற்றேபார் ஓடிப்போன நம்முடையவானரசேனைகளைப் பயந்தீர்த்துவிட்டு அழைத்துக்கொண்டுவரக் கடவாய் என்று நியமிக்கவும் அங்கதகுமாரன் வானரங்களை அழைத்துக்கொண்டு வருகிறதற்கு வேகமாயோடி வானரசேனையைக்கிட்டி, ஓ வானரர்களே! நான் சொல்லுகின்ற வார்த்தையைச் சற்றேநின்று கேட்டுவிட்டுப் போங்களென்று நல்ல வார்

த்தை சொல்லினன். அப்படிச்சொல்லியும் அவ்வானரங்கள் அதற்குச் செவிகொடாமல், நாங்களொன்றுங் கேட்கமாட்டோமென்று சொல்லிக்கொண்டே ஓடினார்கள். அவ்வானரப் படைத்தலைவர்கள் மாத்திரம் திரும்பிச் சமுத்திரத்தின் வடகரையிலுள்ள ஒருமலையின்மீது நின்றார்கள். அவ்வாறு நின்றவர்களை அங்கதகுமாரன் பார்த்து, நீங்களென்னத்துக்கு ஓடிவந்துவிட்டீர்களென்று கேட்க அவர்கள் சொல்லுகிறார்கள்.

ஐயா உவராஜ்யாதிபதியே! நீர் அந்த ராக்ஷசப் பெருஞ்சேனைகள் கூட்டங்கூடிக் கொண்டு வருகிறதைக் காணவில்லையா? நாமெல்லோருமிறந்துபோனபிறகு என்ன காரியஞ்செய்யப்போகிறோம்? உயிரிருந்தாலும் உப்புமாறிப் பிழைக்கலாம். இந்திரஜித்தென்னும் ஒருவன்செய்த யுத்தத்தில் நாம்பட்டபாட்டை நீர்மறந்துபோய் விட்டீரோ? அவ்விந்திரஜித்துங்கூட இவர்களில் ஒருவனுக்குச் சமமாவானோ? இவர்களொருவராலுஞ் சாகமாட்டார்கள். இவர்கள் இத்தனைபேர்களை இரண்டுபேர் வில்லைப் பிடித்துக்கொண்டு எப்படித் தடுத்து யுத்தஞ்செய்வார்கள்? திரிபுரசம்மாரியான ருத்திரமூர்த்திமுதலானதேவர்கள் தம்மை யடுத்தவர்களுக்கு, எல்லா வரங்களையுங் கொடுத்து ரக்ஷிக்கிறவர்களா யிருந்தாலும், இவர்களோ டெதிர்த்து நிற்கமாட்டாதவர்களாய் ஒளித்துக்கொண் டிருக்கின்றார்கள். இப்படியிருக்க இந்த ராமலட்சுமணர்களாகிய மனிதர்களால் குரங்குகளைக்கொண்டு இந்த ராக்ஷசர்களை ஜெயிக்கப்போகிறார்கள்? ஸ்ரீகைலாசபதியாகிய ருத்திரமூர்த்தியும் சக்கரதரனாகிய விஷ்ணுவும் கமலவாசனாகிய பிரம்மாவும் தேவர்கோனாகிய இந்திரனும்ஒன்றுசேர்ந்துகொண்டு, ஆயிரகோடி ஊழிபரியந்தம் இவர்களுடனே சண்டைசெய்து இவர்களி லொருவரையாவது கொல்வார்களே யானாலும் வெற்றியாகும். அப்பப்பா! இந்தஎழுபதுவெள்ள வானரசேனைகளும் ஒரு ராக்ஷசன் தின்று உமிழ்வதற்குத்தான் போதுமோ? நாங்களென்ன தேவர்களைக் காட்டிலும் வல்லவர்களோ? அல்லவே. ஆலோசிக்குமிடத்தில் அற்பஜெந்துக்கள்தானே இதனை நீர் நன்றாயாலோசித்துப் பாரும். அன்றியும் இந்த உலகங்களை யெல்லாஞ் சிருஷ்டித்த பிர்ம்மாவின் ஆயுசு பரியந்தம் கிரமமாக நின்று, இவர்களுக்குத் தொகைசெய்யவேண்டி ஆயிரத்துக்கொன்றாக எங்களை அவர்களுக்கு உறையிட்டாலும், அதற்குத்தான் நாங்களும் இந்த வானரங்களும் போதுமா? இவர்களுக்குத் தலைவனாக இருக்கின்ற ராவணனுக்குப் பத்துத்தலைகளும் இருபதுகைகளுமுண்டு. அவனொருவனை ஜெயிக்காமலிருக்கின்றோம். அப்படிக் கிருக்க இப்போது வந்தவர்களுக்கு ஆயிரந்தலைகளும், இரண்டாயிரங் கைகளும் இருக்கின்றன. ஐயா! சமுத்திர மணலை எண்ணினாலும் எண்ணலாம். இவர்களை எண்ணத்தொலையாதே. கும்பகர்ணனுடைய அபைச் சஹிக்கவும் சக்தியில்லாம லிருக்க, அவன்செய்த கொடுமைதான் நாங்கள் பார்த்திருக்கிறோமே. தேவர்களை யல்லாமல் அறிவுடையவர்களும் உண்டோ! அவர்களே பயப்படுகிறார்களே. ஆ தம்பீ! நீர் சிறுபிள்ளையாகையால் இளங்கன்று பயமறியாதென்பதுபோல, ஒன்றியாய் எங்களைத் தேடிக்கொண்டு வந்தீர். ஆஞ்சநேயருடைய வல்லமையும், சுக்கிரீவருடைய பலமும், ராமலக்ஷ்மணர்களுடைய வில்வீரத்தன்மையும், தங்களுயிரைத் தாங்கிக்கொள்ளவுமுடியமாட்டாது. ஆதலாலிவர்களால் எங்களுக்கு ஆகவேண்டியதென்ன? ஓ எங்கள் ஆண்டவனே! நாங்களுண்கிறதற்குக் காட்டிற் கனிகளுங் காய்களுமிருக்கின்றதுகள். வசிக்கின்றதற்கு மலைக்குகைகளிருக்கின்றதுகள். இந்த லோகத்தை மனிதர்களாண்டாலென்ன? இராக்ஷசர்க ளாண்டாலென்ன? யாவரும் உயிருடனேயிருந்தால் தானே புகழையும் ஐஸ்வரியத்தையும் அடையப்போகிறார்கள்? அதுபோல் நாங்களிருந்தாலல்லவா எங்கள் பிள்ளைகளும், பெண்டுகளும், பிழைப்பார்கள்? எங்களை எங்கேயாவதுபோய்ப் பிழைத்துப்போங்களென்று சொல்லவேண்டிய நீர் எங்களைச் சாகும்படியாக அழைக்கின்றீரே. இஃது உமக்குத் தர்மமாவென்று கெஞ்சினார்கள். இவையனைத்துங்கேட்ட அங்கதன் தனியேசாம்புவந்தரைப் பார்த்து, ஐயா பெரியோனே! சேஷசாயியான ஸ்ரீயப்பதியே இந்த ஸ்ரீராமபிரானென்று முன்னாலெங்களுக்கு நீர் சந்தோஷமுண்டாகச் சொல்ல

வில்லையா? ஆம்பற் புஷ்பத்துக்குப் பகை வனான சூரியனிடத்தில் ஐந்திர வியாகர ணங்கற்ற ஆஞ்சநேயருக்கொப்பான புத்தி மானான நீர், என்னைப்போலொத்தவர்கள் தப்பிதஞ்செய்தால் அவர்களுக்குத் தகுந்த புத்திசொல்லித் தேற்றுவிக்கின்றவரல்ல வா? அப்படிப்பட்ட நீரே பயந்தவர்களைப் போல உயிரைக் காப்பாற்றிக்கொண்டீரே. இனி என்னகீர்த்தி: உம்முடைய விவேக த்தினாலே பிரயோசனமென்ன? வீரவான் களா யிருக்கின்ற பேர்கள் மரணமடைந் தாலும் தங்கள் வீரங் குறைவார்களோ? நாம் பயந்தபோதே பழியையும் பாவத் தையும் பூண்டுகொண்டோம். இனிஅம்பி னாலே ரணக்களத்திலே பிராணனைவிடுகி றதேயல்லாமல் பிராணனுடனேயும்இருக் கலாகுமா? மிகுந்த பயமடைந்து விஷத் துக்குச் சமமான நம்மை அமுதத்திற்கொ ப்பானவர்களென்று, திருவுளங்கொண்ட ராமலட்சுமணர்களைத் தனிமையாக விடுகி றதைவிடச்சாகிறதே நல்லதல்லவா? ஐயா சாம்பவரே! தானவர்கள் வானவர்கள் முத லானவர்களாலே, கடையமாட்டாத பாற் கடலைக்கடைந்து, அமுதங்கொடுத்த என் றந்தை வாலியானவன், ஸ்ரீராமபாணமொ ன்றாலே மாண்டுபோனதை மறந்துபோன காரணமென்ன? அவருடைய பாணத்தி னாலே சமுத்திரராஜன் பட்டபாட்டை நீர் பார்க்கயில்லையா? இவர்களெத்தனை ராக்ஷ சர்களா யிருந்தபோதிலும் அவர்களிடத் தில் தர்மமில்லை யல்லவா? ஆகையால் தர் மத்தை அத்தனை பாவமும் ஜெயம்பெறு மென்று நீர் நிச்சயித் திருக்கின்றீரோ? நீ ரும் பயித்தியக்காரர்களைப்போல இந்த அவிவேகிகளான வானரங்களுடனே ஓடி வந்துவிட்டது, உம்முடைய விவேகத்துக் குத் தகுதியல்லவே என்று சொன்னான். இப்படிச் சொல்லக்கேட்டசாம்பவர், சற்று நேரம் வெட்கப்பட்டு வருத்தமுற்றாலோ சித்து, அங்கத குமாரனைப் பார்த்து இத னைச் சொல்லுகிறார்.

ஐயா எங்கள் உவராஜ்யாதிபதியே! இதுகாறும் நீர் சொன்னவனைத்துங் கே ட்டு, நாணத்திற் கிலக்கானேனாயினும், இந்த ராக்ஷசர்கள் வரும்போது இவர்களை ப்பார்க்கவாவது இவர்களுக்கெதிரே நிற்க வாவது அந்த விஷகண்டனாகிய ருத்திர மூர்த்தியினால்தான் ஆகுமா? புஷ்பங்களை யுண்டு வாழ்ந்துகொண் டிருக்கின்ற கூன் குரங்குகளிவர்களைக்கண்டும், இவர்களுக்கு முன்னிற்குமோ? இவர்கள்மேற் குற்றஞ் சொல்லலாகுமோ? தேவர்களும் அசுரர்க ளும் ஒருவரோடொருவர் எதிர்த்து முன் னாளையிற் சண்டைசெய்தபோது, அவர்க ளில் யார் என்கண்ணுக் ககப்படாமலிருந் தார்கள்? விசாலமான இந்த மூன்றுலோக த்திலுள்ள மஹா வல்லவர்களுக்குள்ளும், இவர்களுக்குச் சமமான கொலைபாதகர்கள் யாரிருக்கின்றார்கள்? இவர்களோடு யமனாக ட்டும் பகைக்க மாட்டுவானா? முன்னிருந்த மாலியென்பவனையும், மாலியவானென்பவ னையும், நான் பார்த்திருக்கின்றேன். கால நேமி யென்பவனைப் பார்த்தேன். இர ணியனைப்பார்த்தேன். ஆலகாலவிடத்தை யும் பார்த்திருக்கின்றேன். மதுவென்பவ னும், அவன்தம்பி கைடவனென்பவனும், சமுத்திரத்தைச் சின்னாபின்னப்படக் கலக் கினதையும் பார்த்தேன். அவர்களுக்கெல் லாம் இவர்களுக்கிருக்கின்ற வல்லமையி ல்லை. இவர்கள் மிகுந்த பலவந்தர்கள். அதிக வரம்பெற்றவர்கள். மாயத்தில் வல் லமையுள்ளவர்கள். சமுத்ர மணலினும் அதிகப் பெருந்தொகையானவர்கள். இவ ர்களுடையமனமோ பாவத்தினும் மிகுந்த கொடியது. ஆயுதப்பயிற்சியிற் கைதேர்ந் தவர்கள். இப்படியிருந்தால் இவர்களைக்க ண்டவர்கள் யார்தான் தோல்வியடையாத வர்கள்? தேவர்களே இவர்களைக்கண்டு ஓட் டம் பிடித்தார்கள். எப்படியிருந்தபோதி லும், ஐயா! சண்டையிற் பயந்து முதுகு காட்டியோடினால் மறுமையில் அவசிய மாய் நரகமடைவார்கள். நாங்கள் திரும்பி வருகின்றோம். ஆனால் மேகம்போலும் திருமேனியையுடைய ஸ்ரீராமபிரான்சந்நி தியில் எப்படி வெட்கமில்லாமல் முகங்கா ட்டி நிற்போம்? என்று சாம்புவர்சொல்லக் கேட்ட அங்கதகுமாரன் ஐயா பெரியோ னே! பகைவர்மேலேறிப்போகிறதும், அவ ர்களைக்கண்டு சமயம்வந்தால் ஓடிப்போகிற தும், மறுபடியும் எதிர்த்துவந்தவர்களை அடித்துக் கொல்லுகிறதும், வீரவான்க ளுக்கெல்லாம் ஏற்றகாரியமே. அது நிற் கட்டும். நீர் மிகுந்த புத்திமானாகையால் அடியேன்சொல்லுகிறதை ஆலோசித்துக்

கேட்கவேண்டும். நீரொன்றுக்கும் பயப்படவேண்டாம். நாமெல்லாம் ஒருமிக்கக் கூட்டமாகப்போய் நின்றாலும் நம்மாலொன்றுஞ் செய்யமுடியாது. சக்கரவர்த்தித் திருக்குமாரரே அவர்களோடெதிர்த்துச் செயம்பெறுவாரேயானால் நாம்பிழைக்கின்றோம். இல்லாவிட்டால் அவருடனே நாமும் இறந்துபோகிறதே நமக்குக் கீர்த்தி. நம்முடைய கூட்டமான சேனையெல்லாம் போர்க்களத்தைவிட்டு நீங்கியிருப்பானேன் நம்மாலே நாமே ஏன் பழியைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டும்? நாம் போகலாம் வாருங்கள் என்று கூறி அங்கதகுமாரன் அழைக்கவும் சாம்புவந்தர் முதலாகிய வானரவீரர்களும், மற்ற வானரசேனைகளும் திரும்பிவந்து சேர்ந்தார்கள்.

அப்போது பெரியபெருமாள் மூலபலம் வருகின்றதைப்பார்த்து இளையபெருமாளுக்கு நியமிக்கின்றார். தம்பிலக்ஷ்மணா! ராக்ஷசர்கள்தானாகட்டும். அசுரர்கள்தானாகட்டும். எத்தனைபேர்வந்தபோதிலும்நான் வில்லெடுத்தபோது எரிகிற அக்கினியில் வீழ்ந்த பஞ்சைப்போல நாசமாவார்களேயல்லாமல், நமக்கு எக்காலும் இக்கட்டுவர மாட்டாதென்பதை நீ அறிந்திருக்கின்றாயல்லவா. நம்முடையவானரசேனைகள் தங்களை ரக்ஷிப்பவர்கள் ஒருவரும் இல்லாமையாற்பயந்து ஓடிப்போய்த் தங்கள் உறைவிடம்சேர்ந்துவிட்டதுகள். ஆனதால் நான் இந்த இராக்ஷச சேனைகளையெல்லாங் கொன்று நீங்குகிறபரியந்தம் ராக்ஷசர்கள்யாராவது வந்து வானரங்களை வருத்தப்படுத்தவொட்டாமல் நீ அவர்களைப் பாதுகாத்துக்கொண்டிரு. இந்தப்பக்கத்தில் இந்தச் சேனைகளை ஏவிவிட்டு அங்கேயிருக்கின்ற துஷ்ட இராவணன் வேறே தந்திரம்பண்ணிக்கொண்டு அந்தப்பக்கமாய் வருவானானால், வானரங்களையெல்லாம் கொன்றுவிடுவான். அவனை மிகுந்த கோபமுள்ள வில்வீரனாகிய உன்னையல்லாமல் யார் தடுப்பார்கள்? ஆனதால் ஆஞ்சநேயனும் நீயும், சுக்ரீவராஜனும், சீக்கிரமாக வானரசேனையைக் காத்துக்கொண் டிருக்கும்படியாகப் போங்கள். நீங்கள் என்னைத் தனியேவிட்டுப் போகக்கூடாதென்று நினைப்பீர்களேயானால் நாம் தோற்றுப்போய் விடுவோம் என்று சொல்லக்கேட்ட இளையபெருமாள் சுவாமிக்குத் தெண்டன்சமர்ப்பித்துச் சொல்லுகின்றார்.

ஆண்டவனே! தேவரீர் திருவுளப்படியே நடக்கின்றோம். அப்படிக்கில்லாவிட்டால் இந்தச்சேனைகளுக்குமுன்பாகஅடியேங்களாலே தேவரீருக்கு என்ன ஒத்தாசையுண்டாகப்போகின்றது? தேவர்களைப்போல அடியேங்களுஞ் சிரசிற் கைகூப்பிக் கொண்டு தேவரீருடைய வில்வீரத்தைப் பக்கத்தில் நின்று நன்றாய் சேவித்துக்கொண்டிருக்கின்றோம். என்று சொல்லிவிட்டு இளையபெருமாள்புறப்பட்டபோது ஆஞ்சநேயர் சுவாமியை நோக்கி, ஓ எங்களாண்டவரே! அடியேனை அற்பக்குரங்கென்று விட்டுவிடாமல் அடியேன் தோளின்மீதேறி யுத்தத்திற் கெழுந்தருளுவீரானால், நல்லதென்று அடியேன் நினைக்கின்றேன். அப்படிக்கு இல்லாவிட்டால் நாய்போன்ற அடியேன் தேவரீர் பின்னின்று தேவரீருக்கு வேண்டிய அடிமைத்தொழிலிற் பிழையில்லாமல் நடத்துகின்றேன்என்றார். அப்போது சக்கரவர்த்தித்திருக்குமாரர் ஆஞ்சநேயரைக் கடாக்ஷித்துச் சொல்லுகின்றார். ஐயா அநுமானே! உனக்குமுடியாத காரியமும் இருக்கின்றதோ? அதற்காகவல்ல நான் சொன்னது, ராவணன் அந்தப்பக்கத்தில்வந்து இளையவனோடு எதிர்ப்பானேயானால், உன்னுதவியில்லாவிட்டால் அவன்செய்கிறயுத்தத்தில்வெற்றியுண்டாகுமா? அதுவுமல்லாமல் சேனையும் அழிந்துபோய்விடுமல்லவா? மிகுந்த அழகுள்ள தலைமயிரை வகித்த இந்திரஜித்தென்பவனுடைய யுத்தத்தில், லக்ஷ்மணன் எதிர்த்து நின்றபோது, வேறே யாரைக்கொண்டு அவனைவெற்றிபெற்றான்? உன்னாலே அல்லவா? ஓ வீரர்களுக்குள்ளே மகாவீரனே! எல்லா ஞானமும் வல்லோர்க்கெல்லாம் நாயகமாகி நிற்போனே! உன்னை ஒருக்காலும் நான் பிரியமாட்டேன். நீயே இவர்களோடு ஜெயம்பெறக்கடவாயென்று நியமிப்பேன். ஆதலால் நீ இந்த வானரசேனையைக்காத்து, என்னுடனே அயோத்தியின் சுகத்தையெல்லாம் விட்டுவந்த சிம்மத்தையொத்த இளையவனைக் காத்து, வானராதிபதியாகிய சுக்கிரீவனைக்காத்து, தேவலோகத்தாரையும் பூலோகத்தாரையும் வேதமார்க்கத்தையும் விருத்திசெய்யக்கடவாய்

என்றார். பிறகுவாயுபுத்திரர் மற்றொன்றுஞ் சொல்லாமல் இளையபெருமாளோடு கூடப் போனார். அப்பால் பெருமாள் விபீஷணு ழ்வானைப்பார்த்து, அப்பா! நீயும் என்தம் பிக்குப் பின்போய் துஷ்டர்களாகிய ராக்ஷ சர்கள்செய்யு மாயத்தைத்தெரிந்து, அவை களைக்கெடுத்து நம்முடைய வானரசேனைக ளைக் காக்காமற் போனாயேயானால், நமக்கு வெகு கெடுதியுண்டாகுமென்றார். அவரும் அப்படியே நல்லதென்று புறப்பட்டார். சுக்கிரீவமகாராஜரும் தேவரீருடைய ஆஞ் ஞையின்படியே ஆகட்டும் பாக்கியமென்று இளையபெருமாள் பின்னேபோனார். மற்ற வானரவீரர்களெல்லாரும் இதுவே நல்ல காரியமென்று வானரசேனையைக் காத்துக் கொண்டு நின்றார்கள்.

இப்படி எல்லாரும் எம்பெருமான் திருவுள்ளப்படி போனபின்பு ஸ்ரீராமமூர் த்தியானவர் தெய்வத்தன்மை பொருந்திய கோதண்டத்தைவளைத்துக் கையிற்பிடித்து நாணேறிட்டு, மேருமலைக்கொப்பான திரு மார்பில் கவசஞ்சாத்தி, வேதவாக்கியம் போலக்குறைவில்லாத அக்ஷயத்தூணியை யுந் தோளில்வரிந்துகட்டினார். அப்போது நூறுயோசனை வட்டமாக எள்ளிட இட மில்லாமல் நிறைந்திருக்கின்ற மூலபலசே னையின் முன்னணிவந்து சுவாமியைச் சுற் றிக்கொண்டு, அவர்மேற் பிரயோகித்த ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குண்டு நெருங்குவதைத் தேவர்கள் கண்டார்கள். உடனே அத்தேவர்களுடைய தேகமெல் லாம் நடுங்கிப் போய்விட்டது. சேனுபரா கம் ஏமகூடபர்வதமெல்லாம் மூடிவிட் டது. அப்போது தேவர்கள் ஸ்ரீராமரை நோக்கி, ஓ ஸ்ரீயப்பதியே! ஓ அடியேங்க ளுக்கு ரக்ஷகமாக எழுந்தருளியிருக்கின்ற கவசமே! சமுத்திரத்துக்கொப்பான ஒருவ ராலும்அளவிடவொண்ணாதசொரூபனே! ஓ தர்மத்தின்பெருக்கே! ஓ வேதபாராயண ர்களுடைய வல்லமையே! இந்தச் சேனைக ளின்மேலெதிர்த்துப் போகிறதற்குத்தேவ ரீர்அல்லாமல்வேறொருவரால்முடியுமோ? தேவரீருடைய திருவுள்ளப்படியே செய்து முடித்தருளக்கடவீரென்று ஸ்தோத்திரம் பண்ணினார்கள். மகாரிஷிகள் முதலான பரமவைதிக தர்மமார்க்கத்தை நிறைவே ற்றுகின்றவர்கள் பெருமாளுடையதனிமை யையும் ராக்ஷசசேனையின் பெருமையையும் பார்த்துச் சகியாதவர்களாய், கண்களில் கண்ணீர் பெருக்கெடுக்கத்தக்கதாக அழுது மனம்பதைத்து, பாவிகளாகிய எல்லாரும் தோற்றுப் போகக்கடவர்கள். ஸ்ரீராமபி ரானே ஜெயம்பெறக்கடவர். என்று மங் களாசாசனம் பண்ணினார்கள். அப்போது மூலபலசேனையானது ஸ்ரீராமமூர்த்தியைப் பார்த்து, சபாசு! தனக்குதவியாயிருந்த சேனைகளெல்லாம் ஓடிப்போய் ஒருவருந் துணையில்லாமல் தனியாய் நின்றும், நம்மு டைய பெருஞ்சேனையைக் கண்டு கொஞ்ச மும் பயப்படாமல் பாணங்களைப் பொறுக் கிக்கொண்டு வீரத்தன்மை குறையாமற் பிர யோகித்துக்கொண் டிருக்கின்றானே; இது வே வெற்றிகொள்வதிலும் சிரேஷ்டமல் லவா? மாலியவான் எல்லாமறிந்தவனுனப டியினாலே பொய்சொல்லமாட்டான். அவ ன் மெய்யே சொன்னான். திரிபுர சம்மாரி யான ருத்திரமூர்த்திக்கும் ஒருதேர் இருந் தது. தேவர்களெல்லாஞ் சேனையாக வந் தார்கள். ஆச்சரியபூதரான விஷ்ணுமூர் த்தியானவர் நம்மைக் கருவறுத்தநாளையில் கருடவாகனத்தின்மீது அநேக தேவகண ங்களுடனேவந்தெதிர்த்தார். இவன் தனி த்துக் கால்நடையாய்வந்து பயப்பட்டொ ளியாமல் நிற்கின்றானே; நாம் ரதகஜதுர கங்களோடு சிம்மம் யாளி முதலானவைக ளுடனே மேருமலைக்குச் சமமான தேகத் தை யுடையவர்களாய்ச் சப்த சமுத்திரம் போலவரவும், நம்மைக்கண்டு சிறிதுமஞ் சாமல் வாருங்கள் வாருங்கள் என்றழைக்கி ன்ற இந்தமனிதனுக்கு இந்தலோகத்தில் ஓடிப்போகப் போக்கிடமெங்கே? நம்மிட த்தில் நின்றும் எப்படி உயிர்தப்பிப்போகப் போகிறான்? என்று நெருங்கி ஆர்ப்பரித்து ஒரு சிம்மத்தை அநேக யானைகள்போய் வளைந்ததுபோலச் சூழ்ந்துக் கொண்டா ர்கள்.

அம்மாத்திரத்தில் நல்லதாகட்டுமெ ன்று கீழேழுலோகத்தையும் மேலேழு லோகத்தையும் ஒன்றாகத்திரட்டிச் செய் ததையொத்த தமது வெற்றிபொருந்திய வில்லை வேதநாயகராகிய ஸ்ரீராமமூர்த்தி யானவர் குணத்தொனி பண்ணினார். அப் போது இராக்ஷசர்களுடைய மனதிலுள்ள கோபமெல்லாம்அடங்கிப்போய்விட்டது.

காவலாகவந்த யானைகளுக்கு மதமுலர்ந்து போய்விட்டது. நின்றவீரர்கள் வாயுலர்ந்து போனார்கள். குதிரைகளெல்லாம் காலோய்ந்து விட்டதுகள். இராக்ஷசர்களுடைய வல்லமைகளெல்லாம் தளர்ந்துவிட்டன. மூலபலசேனைகளே இப்படி யாகுமானால் சுவாமியின் வெற்றியைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? குதிரைகளும் சிம்மங்களும் தம்மைப் பூட்டியிருக்கின்ற சக்கரங்களுடன் கூடிய தேர்களை முறித்துவிட்டு ஓட்டம்பிடித்ததுகள். துதிக்கையையுடைய யானைகள் தம்மீதிலிருந்த பாகர்களை வீசி யெறிந்துவிட்டு, ஓட்டம் பிடித்ததுகள். எங்கும் இந்தப்பிரகாரமாக ஓர் ஆர்ப்பாட்டம் பிறந்தது. இப்படி நடந்த காலத்தில் அந்தச்சேனைகளுக்கு இடந்துடித்த துர்நிமித்தத்தைக்கண்டு தேவர்களெல்லாம் குதித்துக் கூத்தாடினார்கள். அப்போது வேதப் பிரதிபாத்திய வஸ்துவான ஸ்ரீராமமூர்த்தியானவர் ராக்ஷசர்கள் மீது மின்னல்களைப்போலொத்த பாணங்களைத்தொடுத்தார். பின்னும் யாளிகளின் மீதும், அவைகளைச் செலுத்துகிறவர்களின்மீதும், யானைகளின்மீதும், யானைப்பாகர்களின்மீதும்,வீரவான்களுடைய தேர்களின்மீதும், வாளின்மீதும், வில்லின் மீதும், பூமியிலிருந்தெழும்பின தூளியின் மீதும், ஸ்ரீராமர் அம்புகளை அபரிமிதமாகப் பிரயோகித்தார். மலைகள் விழுந்ததுபோல யானைகள் விழுந்ததுகள், அந்த யானைகள்விழுந்ததுபோல வீரர்களுடைய தலைகள் விழுந்ததுகள். அந்தத் தலைகளைப் போலக் குதிரைகள் கால்முறிந்து விழுந்ததுகள். குதிரைக்கால்கள் அறுந்து விழுந்ததுபோல வில் முறிந்து விழுந்ததுகள். அந்த வில்லுகளைப்போல வெற்றிக்கொடிகள் முறிந்து விழுந்ததுகள். சந்திரர்கள் இற்றுவிழுந்ததுபோல ராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்கள் அறுந்து விழுந்ததுகள்.

அக்கால் கோடைகாலத்திலே நாலு பக்கங்களிலும் காற்று வீசும்போது ஆகாசத்திலுள்ள மேகக்கூட்டங்கள் அபரிமிதமாய் வருஷிக்கிறதுபோல ஸ்ரீராமபாணங்கள் பாய்கிறபடியினாலே, யானைவீரர்களும்-குதிரைவீரர்களும்-தேர்வீரர்களும் - தங்கள் ஊர்திகளோடு மாண்டுபோனார்கள். அதனால் நாலுபக்கங்களிலும் இரத்தவெள்ளங்கள் ஓடுகிறதைப்பார்த்து அவரவர்கள் தைரியமற்றுப்போனார்கள். மேகங்களுந் தோற்றுப் போகும்படியாக ஸ்ரீராமபிரான் சொரிகிற பாணவருஷங்கள் பாய்வதினால் இராக்ஷசர்களுடைய விழித்தகண்களும், எடுத்த கைகளும், வளைத்த வில்லுகளும், எறிந்த வேல்களும், வீசியவாள்களும், சப்திக்கின்ற வாய்களும், நடக்கின்ற கால்களும், பூரித்த தோள்களும், சின்னபின்னப்பட்டுப் போய்விட்டதுகளே யல்லாமல், அவர்கள் பிடித்திருந்த உறைகழற்றிய ஆயுதங்கள் செய்த தொன்றையும், ஒருவரும் பார்க்கவில்லை. ராக்ஷசர்கள் தொடுத்துக்கொண்டிருந்த அம்புடனே வில்லுகள் துணிந்து விழுகிறதற்கு முன்பாகத் தைரியங்கொண்டெடுத்த வாள்களுடனே தோள்களும் அற்றுவிழுந்ததுகள். உடனே வேகமாய் நடந்துகொண்டிருந்த கால்களுங் கண்டங் கண்டங்களாய் அறுந்ததுகள். இப்படி யாகும்போது மிகுந்த கோபங்கொண்டு அந்த வீரர்கள் என்னசெய்ய மாட்டுவார்கள்? தாங்கள் வரம்பெற்றதனால் துணிவு கொண்டு யுத்தத்திற்செலுத்தின குதிரைகளில் ஒவ்வொன்றையும், ஸ்ரீராமபாணங்கள் நூறுநூறாய்ப் பாய்ந்து கொல்லுவதினாலே, குளம்புகள் துணிபட்டு-கண்கள் சிதறுண்டு-சேணங்கள் அறுந்து-மார்பும் பிளந்து விழுந்ததுகளே யல்லாமல் தாவியோடச் சக்தியுள்ளவைகளோ? தேர்வீரர்களென்று பேர்வைத்துக்கொண்டு வந்த பாவிகள் அதைச் செலுத்தலாமென்று நினைத்தால், முன்புமாண்டு குப்பற்குப்பலாய் உயர்ந்துகிடக்கின்ற பிணங்களினாலே அஃதப்புறமிப்புறம் நகர்கிறதற்கு முடியாமற்போச்சுது. அப்படி யொருவேளை பேர்ந்ததேயானால் அபரிமிதமான பாணங்கள் பாய்கிறபடியினாலே ஒன்றுநூறாய் உடைந்து உதிர்ந்துபோனதே யல்லாமல், வேறொன்றுஞ் செய்யமாட்டாமற் போய்விட்டதுகள். எட்டுத்திக்கிலுமிருந்த சமர்த்தர்களான ராக்ஷசர்களெல்லாம் சுவாமியைக் கிட்டி ஒருவரும் பிழைத்துப் போனவர்களில்லை. வரிசைவரிசையாக எதிர்த்துவந்த யானைகள், ஸ்ரீராமபிரானுடைய அம்புகள் பாய்வதினாலே,வெகுநேரத்திற்கு முன்பாக அம்புபட்டு ஓடிவந்து விழுவதுபோலச் சுருண்டு விழுந்ததுகளே யல்லாமல்,

வேறென்ன காரியஞ்செய்ய வல்லவைகளாகும்? தடாகத்தில் மலர்ந்திருக்கின்ற தாமரைப் புஷ்பத்துக்கொப்பான திருக்கண்களையுடைய சக்கரவர்த்தித் திருக்குமாரர் ஒருபாணத்தைப் பிரயோகிப்பாரேயானால் அது நூறுகோடிப் படைகளைச் சம்ஹரிக்குமாகையால், இறந்தசேனைகளைக் கணக்கிட முடியாமற் பிரம்மதேவனும் பிரமித்துப் போய்விட்டான். அந்த யுத்தகளத்தில் மாண்ட சீவர்களைப் பிடிக்கவந்த எமனுக்கும் அந்தபாணத்தின் வேகமுண்டாக சகிக்கவில்லை. ஸ்ரீ ரகுகுலவம்சோத்பவராகிய ஸ்ரீராமமூர்த்தி எய்தபாணங்கள் ராக்ஷசர்களுடைய கிரீடங்கள் தரித்த தலைகளைக் கோடிகோடியாக அறுத்துச் சிதறிவிட்டுப் பின்னும் மிகுந்த வேகங்கொண்டு ஓடுவதினாலே, அவைகளின் வாயிலுண்டாகிற அக்கினியானது கொடிகள் கட்டியிருக்கிற தேரின்பேரிலும் யானைகளின் பேரிலும் பட்டுக் கோடைகாலத்தில் இடிவிழுந்து பற்றியெரிகிற காடுபோல எரிந்தன. பாணங்கள்பட்டு முறிந்த வேலாயுதங்கள் வாளாயுதங்கள் முதலான ஆயுதங்கள் மேலெழும்பி மிகுந்த வேகங்கொண்டுபோய்ச் சமுத்திரத்தில் வீழ்ந்து உஷ்ணங்கொண்டு பற்றியெரிவதினால், சமுத்திர நீர்வற்றி அதிலுள்ள மீன்களெல்லாம் மாண்டு மணலில் அழுந்திப்போய் விட்டதுகள்.

யுத்தத்தில் அரிந்தமனென்னும் திருநாமமுமுள்ள ஸ்ரீராமமூர்த்தியானவர் ஏவின திவ்ய பாணங்கள் சத்துருக்களுடைய ஊரெரிந்ததுபோலவும் பட்டணமெரிந்ததுபோலவும் பிரகாசித்துக்கொண்டு ஓடுகிறபடியினாலே, சமுத்திரஜலம் வற்றினதுபோலவே ரணக்களமுழுவதும் நெருப்பாய்ப் பற்றிக்கொண்டு சத்துருக்களுடைய தேர்களெல்லாம் எரிந்ததுகள். அச்சத்துருக்களுடைய தலைகளுமெரிந்து சிதறிப்போய் விட்டதுகள். ஸ்ரீராமபாணங்கள் பட்டு ராக்ஷசர்கள் பிடித்திருக்கின்ற வாள்களும், வேல்களும், அவர்களுடைய தோள்களும் அறுந்து, மலைப்பாம்புகளைப்போலத்துடித்ததுகள். யானைகளின்மீதிருந்து யுத்தஞ்செய்ய எத்தனித்த வீரவான்களுடைய மடித்த வாய்களுடனே அவர்களுடைய தலைகள், இடிவிழுந்த மலைக்குலங்கள்போலப் பூமியில் விழுந்துவிட்டதுகள். ஸ்ரீராமபாணம் ஒன்று பாய்ந்தவுடனே ராக்ஷசர்களேறிவந்த கோரமான யாளிகள் சிம்ஹங்கள் ஓட்டம்பிடித்ததுகள். பிணங்களைத் தின்னுகிறதற்குப் பிசாசங்களும் நாய்களும் வந்து சேர்ந்ததுகள். கையிற்பிடித்த வாளுடனே ராக்ஷசர்களுடைய நூறுகோடி தோள்கள் அறுந்துபோனதுகள். ராக்ஷசர்கள் வைத்துக்கொண்டிருந்த வருணாஸ்திரம், பிரிதிவியாஸ்திரம், நாகாஸ்திரம், கட்காஸ்திர முதலானவைகளெல்லாம் சின்னபின்னப்பட்டுப் போய்விட்டதுகள். ஊழிகாலச் சமுத்திரம்போலப் பெருக்கெடுத்து வருகின்ற இராக்ஷதவெள்ளத்தினுள்ளே, சக்கரம்பூட்டிய தேர்களழுந்திப்போய், தேர்வீரர்களும் முழுகிப்போய்விட்டார்கள். பாகர்களுடனே யானைகள் அழுந்திவிட்டதுகள். குதிரைகள் அவ்விரத்தநீர்ச்சுழியில் அகப்பட்டு மாண்டுபோனதுகள். புழுதிபட்டுக்கிடந்த ரணக்களமுழுவதுஞ் சேறுபட்டுப்போனது. இராமபாணத்தால் எறியுண்ட ராக்ஷசர்களுடைய தலைகள்மேலே யெழும்பினதினாலே தங்களைக் காயப்படுத்துமென்று தேவர்கள் அங்குமிங்குமாக ஓடி யொதுங்கிப்போனார்கள். இப்படி மேலேயெழும்பிய தலைகள் திரும்பிப் பூமியில் வீழ்கின்றபோது பூமியிற் சஞ்சரிக்கின்றவர்களெல்லாம் ராக்ஷசத்தலைகள் சிலாவருஷம்போல மேலே படுமென்று வருத்தப்பட்டார்கள். லோகங்களையெல்லாம் அழித்துவிடுவதான யுகாந்தகால வருஷத்துக் கொப்பானதும் சிம்ஹத்துக்குச் சமமானதுமான ஸ்ரீராமபாணங்களால், கண்களை விழித்துக்கொண்டு ஆகாசத்தில் மொய்த்துக்கொண்டிருந்த பாவிகளாகிய இராக்ஷசர்களுடைய தேகமெல்லாம், கருக்கொண்ட மேகங்கள் வீழ்கிறதுபோலவும், ஆகாசத்திற்போகின்ற விமானங்கள் வீழ்கிறதுபோலவும், பூமியின்மீது விழுந்ததுகள்.

இப்படியானபோது மூலபல ராக்ஷசர்களிற் சிலர் தெய்வத்தன்மைபொருந்திய ஆயுதங்களை விட்டார்கள். சிலர் எரிக்கும்படியான பாணங்களை வில்லிற்பூட்டி எய்தார்கள். சிலர் ஆயுதங்களைச்சுழற்றி எறிந்தார்கள். சிலர் ஆயுதங்களாலோங்கிக் குத்தினார்கள். சிலர் மலைகளைக் கைகளிற் பேர்த்து எடுத்துக்கொண்டு சூழ்ந்து நின்று

வீசியெறிந்தார்கள். சிலர் கைப்பிடியாய்ப் பிடித்துக் கொள்ளுகிறோமென்று கோபித்துக்கொண்டு நெருங்கி வந்தார்கள். சிலர் ஆயுதங்கள் ஒன்றுமில்லாமற் சும்மா வாயினால் மாத்திரம் வைதார்கள். சிலர் அதட்டினார்கள். சிலர் நெருங்கிவந்தார்கள். சிலர் அங்குமிங்குமாகத் திரிந்தார்கள். அநேகம் பேர் ஆர்ப்பரித்தார்கள். அநேகம்பேர் யுத்தம்செய்தார்கள். அநேகம்பேர் ஆயுதங்களைப் பிடிப்பிடியாய் வாரிவாரி எறிந்தார்கள். அநேகம்பேர் சூலாயுதங்களை யெறிந்தார்கள். அநேகம்பேர் ஸ்ரீராமபாணங்களுக்குப் பயந்து ஒளித்துக்கொண்டார்கள். அநேகம்பேர் கண்களில் நெருப்புப்பொறி பறக்கப் பார்த்தார்கள். அநேகம்பேர் ஸ்ரீராமர்மேல் எறிகிறதற்கு மலைகளைப் பேர்த்தார்கள். இப்படியாகச் சூரியனை மேகங்கள் சூழ்ந்து மறைந்துகொண்டதுபோல் ஸ்ரீராமரை அநேக ராக்ஷசர்கள் சூழ்ந்துகொண்டு தங்கள்தங்கள் ஆயுதங்களைப் பிரயோகம் பண்ணினார்கள். அப்படி அவர்களெறிந்த ஆயுதங்களும், எய்த ஆயுதங்களும், எறிகிறதற்கும் எய்கிறதற்கும் கையிலெடுத்த ஆயுதங்களும், மற்ற பிடித்த ஆயுதங்களெல்லாம் ஸ்ரீராமர்பாணம்பட்டு துண்டுதுண்டாய் விழுந்ததுகள். ஸ்ரீராமரை வந்து சூழ்ந்து வளைந்த தேரும் குதிரையும் சில்லு சில்லாகவும் துண்டம் துண்டமாகவும் நெரிந்துபோனதுகள். வளர்ந்த மயிர்களுடனே கூடின ராக்ஷசர்களுடைய தலைகள் பலபலவென்று உருண்டதுகள் .இராத்திரி விடிந்து சூரியன் உதயமானதுபோலச் சூழ்ந்திருந்த இராக்ஷசர்கள் மடியவே பருத்த திருத்தோள்களையுடைய ஸ்ரீராமபிரானும் வேறுபக்கத்தில் திரும்பினார். இப்படி கழனித்தொழிலாளர்கள் தாமரைப் புஷ்பங்களுடனே நெல்லைச்சேர்த்து அறுக்கும்படியான செழிப்பையுடைய திருவயோத்திக்குத் தலைவரான ஸ்ரீராமருடைய பாணங்கள் பெரியோர்களுடைய சொல்லுக்கு அடங்காத துஷ்டர்களான வலிய ராக்ஷசர்கள் தரித்திருக்கின்ற கவசங்களைத் துகளாக்கி, அவர்களுடைய தேகங்களைத் துண்டுதுண்டாகச்செய்து, பிடித்திருந்த வில்லை முறித்து, தலைகளை அறுத்து, வல்லமையை ஒடுக்கி, வெற்றியைக்கெடுத்து, அவர்கள் மேலும் மேலுமாக எரிகின்ற மலைகளையும் நொறுக்கிவிட்டதுகள். இம்மட்டிலே போகாமல் மரங்களைப் பிடித்துவந்த கைகளையுந் துண்டிட்டு விட்டதுகள்.

தேவர்களெல்லாம் யானைகள் காலிழந்து போனதுகள் உருவிச்சென்ற அம்பால் வாலறுந்து போனதுகள். துதிக்கையற்றுப் போனதுகள். கழுத்தறுந்து போனதுகள். பருமமிழந்துபோனதுகள். தந்தந்தங்கள் அற்றுப் போனதுகள், என்று பேசுகிறார்களே யல்லாமல்; சமுத்திரத்துக்கொப்பான கஜங்கள் ஆசையற்றதுகள். மேகம்போலச் சொரிகின்ற மதமழிந்து போனதுகள். வலியற்றுப் போனதுகள். என்றிந்தத் தொழில்களை ஒருவருங் கண்டு சொல்லவில்லை, ராக்ஷசர்கள் ஆகாசமார்க்கத்திற் பறக்கும்படியாக, நூறுகோடி வேலாயுதங்களையும், நூறுகோடி அம்புகளையும் பிரயோகித்தார்கள். கொல்லுதலே தமக்குத் தொழிலாயுள்ள மலைகளுக்கொப்பான நூறுகோடி யானைகள் நடக்கின்றன. குதிரைகள் பூட்டின தேர்கள் நூறுகோடி ஓடுகின்றன. இவைகளை யெல்லாம் ஒரே வீரராக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீராமபிரான் சின்னபின்னப்படுத்தினார். ஒரு வில்லாளியான ராக்ஷசன் ஒரேகாலத்தில் சப்த லோகங்களையும் நாசமாக்கி விடுவானுக்கும் அப்படிப்பட்டவர்கள் அளவில்லாதவர்கள்நெருங்கிவந்து பாணவருஷங்களை ஸ்ரீராமச்சந்திரர்மீது சொரிந்தார்கள். அவர்கள் பிரயோகம்பண்ணின அஸ்திரங்களெல்லாம் ஸ்ரீராமபாணத்தால் பொடிப்பொடியாவது மன்றி, அந்த ஞானசம்பத்தில்லாதவர்களுடைய தலைகள் பெருமலையைப் போல உருள அவர்கள் பெரிய தேஹங்களெல்லாம் சின்னபின்னப்பட்டுச் சிதைந்துபோனதுகள். நூறாயிரம் யானை பலமுள்ளவர்களான ராக்ஷசர்கள் ராமபாணமொன்று உருவிச்சென்றபோது, தங்கள் பேர்மாறி, மலைகளென்னும்படி உடலழிந்துபோனார்கள். ஆறாயிரந் தோள்களறுந்து அதுகளிலிருந்து பொழிகின்ற ரத்த வெள்ளத்தி லமிழ்ந்தி நீந்திக் கரையேற மாட்டாமல் யானைகள் கூட்டங்கூட்டமாக ரத்தவாறுகளோடு கடலிற்போய் விழுந்துவிட்டதுகள். ஏககாலத்திலே லோகத்தி

னுள்ள ஜீவகோடிகளையெல்லாம் பலகாரம் பண்ணும்படியான வல்லமையையுடைய யமனும் அவனுடைய தூதர்களும் காலனும் இரண்டு காலுடையவர்களாக இருந்தபடியினாலே, அந்தச் சமர்க்களத்தில் நடந்தோடித் திரியமாட்டாம லிளைத்தும், அந்த உயிர்களையெல்லாம் பிடித்துக்கொண்டு, தங்கள் வைவஸ்தவத பட்டணத்திற்குப்போக வழி தெரியாமலும் மயங்கிப் போய்விட்டார்கள். அழிந்த தேர்களும் மாண்ட யானைகளும் சிதைந்த குதிரைகளும் ஒன்றின்மேலொன்று அடுக்கடுக்காய் விழுந்து ஆகாசத்தைமுட்ட ஓங்கிக்குவிந்ததுகளே யானாலும், அதிக பலமுள்ள கவந்தங்கள் கூட்டங்கூட்டமாகவெழுந்து கூத்தாடுகின்றபடியால் அந்தப் பிணக்குப்பல்களெல்லாம் உயிர்பெற்றது போலவே விளங்கினதுகள். மாண்ட இராக்ஷசர்களுடைய ரத்தமானது கருஞ் சூரியனைப்போலெழுந்தருளிய தமதுதிருமேனியில்தெறித்து ஊழிக்காலத்தில் உலகங்களை யெல்லாம் சுட்டெரித்து, உண்ணும்படியான பிரளயகால சூரியனைப்போலப் பெருமாள் பிரகாசித்தார். பின்னும் சத்துருக்களுடைய தேஹத்திலிருந் தொழுகின இரத்தத்திற் குளித்தெழுந்தவரைப் போலவும் இருந்தார். இந்தப்பிரகாரம் நெருப்புக்குச் சமானமாகவும் இடிக்குச்சமானமாகவுமிருந்த ராமபாணங்கள் ஓயாமலறுக்கிறபடியினாலே வெகு மாயமுள்ளவர்களான ராக்ஷசர்கள் தலைகளிழந்து மாள்கின்றதைப்பார்த்திருந்தும், பின்னே யிருக்கின்ற மற்ற ராக்ஷசர்கள் தங்கள் வல்லமை குறையாதவர்களாய்த் தங்கள் தேகத்தினுள்ளே யிருக்கின்ற பிராணனைக் கொடுத்துவிட எத்தனித்து ஸ்ரீராமமூர்த்தியை ஈக்கள் மொய்த்துக் கொண்டதுபோல மொய்த்தார்கள். ஸ்ரீராமபிரானும்அந்த ஈக்களைக் கொல்லுகின்ற தேனை யொத்திருந்தார். இப்படித் தம்மை மொய்த்துக் கொண்ட பின்னணியான மூலபலசேனைகளின் மேல் ஒரு இமைப் பொழுதுக்குள்ளாகத் தம்முடைய வில்லிற் பாணங்களைப் பிரயோகித்தெய்து அந்த ராக்ஷசர்களுடலமெல்லாம் கழற்காயைப்போலச் செய்துவிட்டு, அவர்கள் தேர்களும் யானைகளும் குழம்பாகும்படி, தம்முடைய திவ்ய பாணங்களினாலே தாளித்துவிட்டார். அப்போதுவந்தராக்ஷசர்களில் அநேகர் பிராணனை யிழந்தார்கள். அநேகர்ஓட்டம்பிடித்தார்கள். அநேகர் உயிர்தப்பிப் பிழைத்தார்கள். அநேகர் வருத்தப்பட்டுப் போனார்கள். அநேகர் யுத்தத்தைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள். அநேகர் மாண்டுபோனார்கள். அநேகர் உருண்டுபோனார்கள். அநேகர் புரண்டு போனார்கள். அநேகர் பாணங்களாற் சாம்பலாய் வெந்துபோனார்கள். அநேகர் கரிந்துபோனார்கள். அநேகர் எழுந்துநின்றார்கள். அநேகர் கீழேவிழுந்தார்கள். அநேகர் குடல்சரிந்து போனார்கள். அநேகர் தலையறுந்து போனார்கள். அநேகர் திசை தெரியாமல் மாண்டவர்களுக்கு முன்னே எதிர் நடந்து போனார்கள். அப்போது, மாண்ட இராக்ஷசர்களுடைய தேகத்தின் மீது இரத்தின குண்டலங்கள் வாகுவலயங்கள், மகரக்குழைகள், ரத்தின கிரீடங்கள், மணிக்கண்டிகைகள், கவசங்கள் வீர கண்டாமணிகள், ஆயுதங்கள், ஆகிய இவைகள், மேகத்தில் நின்றும் வருகின்ற மின்னல்களைப்போலச் சிந்திச்சிதறிப் பிரகாசித்ததுகள். அக்கால் மூலபலராக்ஷசர்கள் ராமனென்பவன் எங்களெதிராக இருக்கின்றான். எங்கள்பின்னாக இருக்கின்றான் எங்கள் முகத்தி லிருக்கின்றான். எங்கள் உள்ளத்திலிருக்கின்றான். எங்கள் பக்கத்திலிருக்கின்றான். எங்கள் தலைமேலிருக்கின்றான். தலையின்உச்சியிலிருக்கின்றான்.பூமியிலிருக்கின்றான். ஆகாசத்திலிருக்கின்றான். இதென்ன ஆச்சரியம்? இப்படியும் ஒரு மனிதனுக்கு வேகமுண்டா யிருக்குமோ? என்று சொல்லும்படியாகச் சாரியுலாவி வந்தார். இதோ என்னெதிரே யிருக்கின்றான். எனக்கெதிரே யிருக்கின்றானென்று சொல்லும்படி சுவர்னமயமான கோதண்டத்தைக் கையிற் பிடித்தபடியே, அவர்களுடனே யுத்தஞ்செய்தும் அந்த மூலபல பெருஞ்சேனைக் கடல் நிலைத்திருப்பதால், ஒவ்வொருவருக்கு மவரவர்களுடைய நிழலைப்போல ஸ்ரீராமமூர்த்தியானவர் திரிந்தார். ஆழ்ந்த சப்தசமுத்திரத்திலும் ஏழுலோகங்களிலும், அந்த மூலபலச் சேனை, கடல் நிறைந்திருந்தமையால், அநேக தந்திரங்களை யறிந்து அதிக மாயைகளை யுடையவர்களாய்ப்பிறந்த அவர்களுடைய

உள்ளத்தின்க ணிருப்பதன்றியும் அவர்களுக்குப் புறத்திலும் வியாபித்திருக்கின்ற தம்முடைய ஸ்வபாவத்தின்படியே எங்கும் ராமனுயிருந்தார்.

இப்படி ஸ்ரீராமர் பலவிதமான சாரி சுற்றிவருகிறதைத் தேவர்கள் பார்த்துச், சுவாமி சாரிவருகிருரென்று சொல்லாமல் இன்னவிடத்திற்குப் போனுர். இன்னவிடத்தில் நுழைந்தாரென்று மறியாமல், ஓ!ஓ! சுவாமியானவர் தம்முடைய யதார்த்த நிலைமையை யெடுத்துக்கொண்டு உலகமெல்லாந் தானேயாய் நிறைந்து விட்டார். இனி நம்மை ரக்ஷிப்பதற்கு அவதரித்தவர் ராக்ஷச சம்மாரஞ் செய்கிற செய்கையை, விட்டு விட்டார்போலே யிருக்கிறதென்று சந்தேகித்தார்கள். அப்போது ஸ்ரீராமமூர்த்தியானவர் சண்டமாருதக் காற்றினுல் முறிந்து அடிபட்டுப் பூமியில் விழுந்த மலையைப்போலவும் மரங்களைப்போலவும், துஷ்டச் செய்கையையுடைய இராக்ஷசர்கள் துண்டுதுண்டா யறுந்துவிழும்படி, அதிவேகமாய்ச் சாரிசுற்றிவந்து பாணங்களைப் பிரயோகித்து, ஆகாசத்தை யளந்த திரிவிக்கிரம மூர்த்தியைப்போல விளங்கினுர். மதத்தயானைகளும்-பெரியதேர்களும் வேகமுள்ள குதிரைகளும்-வலியுள்ளயாளிகளும் வல்லமைபொருந்தியசிம்ஹங்களும் அதிக கோபிஷ்டர்களான ராக்ஷசவீரர்களுமாய் ஆகாசமும் மறைந்துபோகும்படி மடிந்து மலைமலையாகக்கிடக்கிற பிணக்குப் பலின்மீது, ஸ்ரீராமமூர்த்தியானவர் க்ஷீர சாகரசயனியாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவை போலத் தாவி நடந்தருளினுர். ஆகாசத்தையளாவிய கொடிகளையுடைய யானைகள் ஸ்ரீராமபாணம் பாய்ந்து மாண்டு, ரத்தப் பிரவாகத்திற் பாய்மரத்தோடுங் கூடிய கப்பல் மூழ்குவதுபோல முழுகினதுகள். ஸ்ரீ ராமச்சந்திரருடைய அம்புகளாலறுபட்டு மேலெழும்பி விழுகின்ற இராக்ஷசர்களுடைய மலைபோன்ற தலைகள், யுத்தப்பெண்ணுள் விஜயலட்சுமி தன்னுடைய செங்கையால் அம்மானைக்கா யாடுகிறதுபோலிருந்ததுகள். வாரிட்டிறுக்கியவீரகண்டாமணி தரித்த இராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்கள் ஸ்ரீராம பாணங்களால் துணிபட்டு யானையின் வயிறுகளில் விழுவது, ஆகாசத்தினுள்ள மேகங்களுக்குள் மூன்றும் பிறைச் சந்திரர்கள் மறைவதுபோலிருந்தது. இராக்ஷசர்களுடைய வக்கிரதந்தங்களும் மதயானைகளுடைய வெண்மையாகிய தந்தங்களும் ரணக்களத்திற் கும்பல்கும்பலாகக் குவிந்துகிடந்து, வெகு காலமாக உதித்துவந்த மூன்றும்பிறைச் சந்திரர்கள் பூமியிலுதிர்ந்து கிடத்தல்போலத் தோன்றினதுகள். அளவில்லாத ராக்ஷசர்களிறந்து அவர்களுடைய ரத்தவெள்ளச் சமுத்திரம் பூமியெல்லாம் நிறைந்துபரவினபடியினுலே, சப்ததீவுகளிலிருந்துவந்த ராக்ஷசர்களெல்லாம் பூமியில் நிற்கமாட்டாமல் உயர்ந்த மலைகளின்மே லேறிக்கொண்டார்கள். இராக்ஷசர்களுடைய தேகத்திலுள்ள பிராணன்களெல்லாம் வீரசுவர்க்கத்தில் நிறைந்து விட்டதுகள். அக்கால் சமுத்திரமெல்லாம் அவர்களுடைய ரத்தங்களினுலும், இரணக்கள முழுவதும் அவர்களுடைய பிணங்களினுலும் நிறைந்ததுகள். தேவர்களெல்லாம் ஸ்ரீராமமூர்த்தியினுடைய வில்வித்தையைக் கண்ணுரக் கண்டார்கள். யுத்தஞ்செய்த ராக்ஷசவீரர்களுடைய ஆயுதங்கள் சிந்திப் பெரிய ரத்தப்பிரவாகத்துடனே கலந்து கடலிற்போய்ச் சேர்ந்தபடியினுலே, அந்தக் கடலிலுள்ள அநேகமீன்கள் அந்த ஆயுதங்களினுலே அறுபட்டதுகள். அப்போது ராவணனுக்கு உதவிசெய்பவனுகிய வன்னியென்கிற மூலபல ராக்ஷசசேனுதிபதி தனது மூலபல சேனையைப்பார்த்து, ஒருமனிதன் நம்முடைய சேனைகளைக் கொன்றுகொண்டிருக்க, மலைபோல ஆகாரமுள்ள நாமெல்லாம் அவனை வெற்றிகொள்ளமாட்டாமற் பல்லைக் கடித்துக்கொண்டு சும்மாயிருக்கலாமா? அந்தமனிதனுடைய அம்புகள் நம்மீதுபடுகிறதற்குமுன்பாக நாமெல்லாம் கூட்டமாகக் கூடி அவன்மேல் விழுந்தாலும், அவன் மாண்டுபோவானல்லவா? ஓ காலிறங்கிப்பெய்கின்ற மேகத்துக்குச் சமானமாகிய ராக்ஷசர்களே! நீங்களெல்லாம் பிரமைகொண்டு மயங்கிப் போனீர்களா? நம்முடைய ஆயிரம் வெள்ளஞ் சேனையும் அடிபட்டு மாண்டுபோனபிறகு லங்காபட்டணம் ஆராளவிருக்கின்றது? ஆகையால் இப்போதிருக்கிற நீங்களெல்லாமாவது ஒருமிக்க அந்த மனிதன்மீது பாயுங்களென்று சொன்னுன். அதைக்கேட்டமாத்திர

த்தில் அப்போது அங்கிருந்த ஏழுவெள்ளம் இராக்ஷசசேனைகளும் அதிககோபங்கொண்டுவந்து ஸ்ரீராமரை சுற்றிவளைந்து, ஒருமலையின்மீது சப்தமேகங்களும் பெருவருஷம் வருஷித்ததுபோல ஆயுதப்பிரயோகம் பண்ணினார்கள். அப்படியவர்கள் தம்மீது பிரயோகித்த ஆயுதங்களையெல்லாம் ஸ்ரீராமபிரான் துண்டு துண்டாய்த் தறித்துவிட்டு, தேரும்-யானையும்-குதிரையும் மாண்டு பூமியில் விழும்படிக்கொன்று, அந்தச் சேனைகளெல்லாம் சின்னாபின்னப்பட்டுச் சிதறிப்போகும்படி சகஸ்திரமுகாஸ்திரங்களை அபரிமிதமாகப் பிரயோகித்தார். அப்படி ஸ்ரீராமமூர்த்தி பிரயோகித்த சகஸ்திரமுகாஸ்திரங்களினால் எங்கும் இரத்தப் பிரவாகம் நிறைந்துவிட்டபடியினாலே, கொள்ளிவாய்ப் பிசாசங்கள் தீபத்தைப்போல அக்கினிகளைக் கக்கிக்கொண்டு கூத்தாடினதுகள். கொழுப்போடுங்கூடின ரத்தப்பிரவாகத்தினால் நிறைந்த பெருங்கடலாகிய சிவந்தவஸ்திரத்தை யுடையவளும் ரத்தமயமாகிய சந்தனத்தைப் பூசிக்கொண்டவளுமாகிய பூமிதேவி பிரகாசித்தாள். ஸ்ரீராமமூர்த்தியும் சிவந்த நிறமாக அலங்கரித்தவரைப்போலத் தோன்றினார். லவணசமுத்திரம் நெய்சமுத்திரம் மதுசமுத்திரம் தயிர்சமுத்திரம் பாற்சமுத்திரம் கருப்பஞ்சாற்றுச் சமுத்திரம் சுத்தோதகச் சமுத்திரம் என்று சொல்லப்பட்ட சப்தசமுத்திரங்களும் பவளக்கடல்போல் ரத்தத்தினால் நிறைந்து, ஸ்ரீராமர் திருக்கரத்திலுள்ள ஒரு வில்லினாலே சற்றுநேரத்திற்குள்ளாக முன்கொண்ட பழையபேர் மாறிவிட்டன.

ஸ்ரீராமருடைய கோதண்டமானது, ஒரு தொடைக்குக் கோடி அம்புகள் பிரயோகித்துக்கொண்டு மூன்றாம்பிறைச் சந்திரனைப்போல வளைந்தபடியே இருந்தது. இராக்ஷசர்கள் என்றைக்கு முடிந்து விடுவார்களோ, என்னும்படியாக அளவற்றவர்களாயிருந்தார்கள். ராக்ஷசர்களிற் சிலர் ஸ்ரீராமர்பேரில் அஸ்திரங்களைப் பிரயோகிக்கத் தொடுத்தார்கள். சிலர் ஆரவாரித்தார்கள். சிலர் ஆயுதங்களை எறிந்தார்கள். சிலர் ஸ்ரீராமர்பிரயோகிக்கிற பாணங்களைக் கண்டு தங்கள் வல்லமையுடனே எதிரே வந்து தடுத்தார்கள். சிலர் தடுக்கமாட்டாமல் கையசந்துபோனார்கள். சிலர் ஓட்டம் பிடித்தார்கள். சிலர்சாய்ந்துவிழுந்தார்கள். சிலர் மதத்த யானையைப்போலக் கோபங்கொண்டு வந்தார்கள். சிலர் அண்டம் வெடிக்கும்படி கூவினார்கள். சிலர் அதிகமாய்ச் சீறிவந்தார்கள். சிலர் அஸ்திரப் பிரயோகம் பண்ணினார்கள். இப்படிப் பல பல செய்கைகளைச் செய்துகொண்டிருந்தவர்களெல்லாம், ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்களினாலே துண்டுதுண்டாகி, இரணக்களத்தில் வீழ்ந்தார்கள். ஸ்ரீராமர் தமது கோதண்டத்தில் ஆயிரம் பாணங்களைத் தொடுத்துப் பிரயோகிப்பாரேயானால், அந்தப் பாணங்கள் பாய்ந்து மாளுகின்ற இராக்ஷசர்கள் ஆயிரம்பேர்களேயல்ல; பதினாயிரம்பேர்களாயிருந்தார்கள். அந்தப் பாணவேகத்தைக் கண்ணினாலும் மனத்தினாலும் நிச்சயிக்கமுடியாது, ராக்ஷசர்கள் பிரயோகிக்கும்படி எடுக்கின்ற கூர்மையான வேலாயுதம் சூலாயுதம் முதலியவெல்லாம் துண்டுதுண்டாய் முறிந்ததேயல்லாமல், அவர்களுக்கொரு நன்மையுண்டாகவில்லை.

அக்கால் ஸ்ரீராமமூர்த்தியானவர் பாணங்களினாலே முன்னணியும் அதற்குத் தலையும் இருகைப் பிரதேசங்களும் அமைந்த மகாபேரணிவகுத்து ஊசியும் நுழையாதபடி செய்தார். அவ்வணியை ராக்ஷசர்கள் பேதித்துக்கொண்டுவர எத்தனித்தபோது, அவர்கள் உயிரை அந்தப் பாணவணிகளே உண்டுவிட்டதுகள். மேலும், அந்தப்பாணங்கள் அப்படியே அந்தத் திசையை ஊடுருவி, அப்புறமும் ராக்கதர்கள் இருப்பார்களானால் அவர்களையும் உருவிப்போகும். சுவாமியை எதிர்த்து வருகின்ற இராக்ஷசர்களெல்லாம் மடிந்து போகிறார்களேயல்லாமல், அவர்களுக்கு வெற்றியென்பது எவ்விதத்தால் உண்டாகுமோ தெரியாது. ஸ்ரீராமமூர்த்தியினுடைய பாணங்கள் ஊழித்தீய்க்குச் சமமாக இருந்தது. மூலபல இராக்ஷசசேனைகளோ வற்றியுலர்ந்தபெருங்கட்டுக்குச்சமமாகவும் யானைகளெல்லாம் நெருப்புப்பட்டு வேகின்ற மலைக்குச் சமமாகவும் இருந்ததுகள். ஸ்ரீராமருடைய பாணங்கள் வீசியெறிந்த வலைக்குச் சமமாயிருந்தன. இராக்ஷசசேனைகள் சமுத்திரத்தில் வாழ்கின்ற செத்தமீன்

களுக்குச் சமமாக இருந்ததுகள். சக்கரவர்த்தித் திருக்குமாரர் யுகாந்தகால சண்டமாருதத்துக்கொப்பாயிருந்தார். மூலபல இராக்ஷசசேனைகள் அந்தச் சண்டமாருதத்தாற் புழுதியா யுதிர்ந்துபோகின்ற மலைகளுக்கொப்பானதுகள். ஸ்ரீரகுநந்தனர் சப்த லோகங்களையும் அந்தலோகங்களில் இருக்கின்ற ஜீவகோடிகளையும் அழிக்கின்ற பிரளயகால சமுத்திரத்துக்கொப்பாயிருந்தார். மூலபல ராக்ஷசர்கள் அந்தக்கடலில் மூழ்கிப்போகிற ஜீவப்பிராணிகளைப்போலானார்கள். மூலகாரணமாய் நடுவாய் அந்தியமாயிருக்கின்ற ஸ்ரீராமச்சந்திரர் எல்லாப்பொருள்களும்சமூலமாயடங்கிப்போகின்றயுகாந்தகாலத்திற் கொப்பாயிருந்தார். ராக்ஷசர்கள் அந்தயுகாந்தத்தில் ஆதாரமில்லாமல் மாண்டுபோகின்ற சராசரங்களுக் கொப்பாயிருந்தார்கள். ஸ்ரீராமர் ஆலகாலவிஷமயமான சப்தசமுத்திரங்களைப்போலிருந்தார். ராக்ஷசர்களெல்லாம் அந்த விஷக்கடலில் அகப்பட்டு மாண்டுபோன மீன்களுக்குச் சமமாக யிருந்தார்கள். ராக்ஷசர்கள் வஞ்சனையைச்செய்து, விசாலமான பூலோகத்திலுள்ள நன்மைகளையெல்லாம்பறித்துண்டு சத்தியங்கெட்டு, பாவசிந்தனையையுடைய துஷ்டசாதியர்களாயிருந்தபடியால் அவர்களையழிக்கின்ற ஸ்ரீராமபத்திரர் தர்மத்துக் கொப்பாயிருந்தார். ஸ்ரீரகு வமிசோத்பவரான ஸ்ரீராமர் நச்சுப்பொய்கைக்குச் சமானமாயிருந்தார். இராக்ஷசர்கள் தண்ணீரில்லாத பஞ்சகாலத்தில் அந்த நஞ்சு நீரையுண்டு மாண்டுபோன தரித்திரர்களைப்போலானார்கள்.

இந்தப் பிரகாரமாக ஆயிரம்வெள்ள மூலபல ராக்ஷசசேனையும் மாண்டு, அவர்களுடைய ரத்தப் பிரவாகமானது சமுத்திரத்தையும் இலங்காத்வீபத்தையும் பள்ள மேடு தெரியாதபடி மூடிக்கொண்டமாத்திரத்தில், அவ்விலங்கைக்குள்ளிருந்த ராக்ஷசஸ்திரீகளெல்லாம் இலங்கைமதிலுக்குள்ளும் புறம்பும் தெரியாதவர்களாகிக் கலக்கமுற்று, தங்கள்கால்தளர்ந் தலறிக்கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். இப்படி மூலபல சேனை முழுவதும் மாண்டுபோனவுடனே நாறுயிரகோடி இராக்ஷசப் படைத்தலைவர்களாய், நாலா பக்கங்களிலும் பரவியிருந்தவர்களெல்லாம் ஒன்றாகநெருங்கி, ராக்ஷசப்பிணங்கள் பெரிய மலைகளைப்போலுயர்ந்து ஆகாசத்தை முட்டியிருக்கவும் ரத்தப் பிரவாகமானது பிரளயகாலக் கடலைப் போல் எட்டுத்திக்கிலும் நிறைந்து நிற்கவுங்கண்டு ஒருவராலும் தடுக்கமுடியாத கோபங்கொண்டு, தங்கள் தங்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, பெரிய தேர்களையும், மதத்தயானைகளையும், மற்ற யாளி-சிம்மம் - குதிரை - இவை முதலியவைகளையும் நடத்திக்கொண்டு அதிவேகமாய்ப் புறப்பட்டு, மேகத்தையும் இடியையுமொத்த ஆயுதங்களையும் அம்புகளையும் எங்கும் நிறையும்படி ஸ்ரீராமர்மீது பிரயோகித்துக்கொண்டேவந்தார்கள். அப்போது பெரியபெருமாள்வருகின்ற இராக்ஷசர்களைநோக்கி, ஓ மூலபலசேனாபதிகளே! வாருங்கள் வாருங்கள் வந்து உங்களுடைய பிராணன்களையெல்லாமும், நீங்கள் பெற்றிருக்கின்ற வரங்களெல்லாவற்றையும், என்னம்புக்கிரையாகக்கொடுத்துவிடுங்கள். என்று திருவாய் மலர்ந்துகொண்டே அந்த ராக்ஷச சேனாபதிகளெல்லாரும்விட்ட ஆயுதக்கடலையெல்லாந்தடுத்து அவர்களையுந் தனித்தனியே தடுத்தார். அப்போது ராக்ஷச சேனாதிபதிகள் ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்களையெல்லாம் விலக்கி நெருங்கி, அவரைப் பல ஆயுதங்களால் மறைத்து, மேகத்திலும் அதிகமாக அம்புகளைப்பொழிந்து திக்குகளையெல்லாம்மூடி மிகுந்த கருவத்துடனே பின்னும்நெருங்கிவந்தார்கள். அதைக்கண்டதேவர்கள் திரிநேத்திரராகிய ருத்திரமூர்த்தியை வணங்கி, சுவாமி! இந்த இராக்ஷச சேனாதிபதிகள் ஒவ்வொருவர் இராவணனுக்கு மூன்றத்தனை வல்லமையுடையவர்களா யிருக்கின்றார்கள். அவர்களுக்குவலிவுஇவ்வளவென்றுஒருகணக்கில்லை. உலகத்தையெல்லாம் ஒன்றாய் வளைத்துக் கொண்டு அதட்டுகின்றார்கள். ஸ்ரீராமர் தனித்திருக்கின்றார். ஐயோ! இவர்கள் எங்கள் வெற்றியை யெல்லாங் கைக்கொண்டவர்களாய் வந்தார்களே. இனியெப்படிமுடியுமோ தேவரீர் எங்களுக்குத்தைரியஞ்சொல்லவேண்டும். அன்றியும் இந்தப் பாவிகள் ஸ்ரீராமர் பிரயோகித்த பாணங்கள் கிட்டிவருகிறதற்குள்ளாக அதுகளையெல்லாம்விலக்கி,ஏழேழுலோகமும்முறையிடும்படி அஸ்திரங்களைப் பிரயோகித்துக்

கொண்டு பெரியமேகங்களைப்போல ஸ்ரீராமரை வளைத்துக்கொண்டார்கள். மேலும் அவரைப் பிடித்துக்கொள்ளுகிறவர்களைப் போல வந்து வைதுவிட்டு, அவர்களே விலகிப்போனாற்போகலாம். அப்படிக்கில்லாமல் அவர்களெதிர்த்து நிற்பார்களானால் அவர்களை ஜெயிக்கும்படியான வல்லமை அந்தஸ்ரீயப்பதியான மகாவிஷ்ணுவுக்காகட்டும், இந்திராதி மற்றத் தேவர்கட்குத்தானாகட்டும்,உண்டோ?இல்லையோ ஓ அரிபிர மேந்திராதியர்க்கு மேலான அமலனே! என்றுபயந்து பணிந்தார்கள்.

அப்படி விழுந்து பணிந்த தேவர்களை உருத்திரமூர்த்தியானவர் கடாக்ஷித்து, நீங்களினிப் பயப்படவேண்டாம். அந்த ராக்ஷசர்கள் எத்தனைபேரானபோதிலும் அத்தனைபேரும் நெருப்பில் அகப்பட்ட பஞ்சுபோலத் தீய்ந்துபோய் விடுவார்கள். இதைப் பலகால் நான் உங்களுக்குச் சொல்லி யிருக்கின்றேன். விஷமானது அமிர்தத்தை ஜெயித்தபோதிலும், தர்ம மார்க்கத்தை வஞ்சனையோடுங் கூடிய பாபமானது ஜெயித்தபோதிலும், ஸ்ரீராமமூர்த்தியை அந்த ராக்ஷசதுஷ்டர்கள் ஒருக்காலுஞ் ஜெயிக்கமாட்டார்கள். உயிருள்ளவர்களில் விபீஷணாழ்வானைத்தவிர ராக்ஷசர்களொருவரும் பிழைக்கமாட்டார்கள். ஒருவரிடத்தில் கிருபையென்பது உண்டாயிருக்குமேயானால், அது தர்மத்தை விருத்தி செய்யாமல் இருக்குமா? இனிமேல் நீங்கள் ராக்ஷசர்களுக்குப் பயந்து ஓடி ஒளித்துக்கொள்ள மலைக்குகைகளைத்தேடி வருத்தப்படமாட்டீர்கள். இன்றைப் பகலுக்குள்ளாக வானர சேனாநாயகனாகிய சுக்கிரீவ மகாராஜனை அடிமைகொண்ட ஸ்ரீராமச்சந்திரர் இந்த இராக்ஷசர்களையெல்லாங் கொன்றுவிடுவர். ஒருவரும் பயப்படாதீர். என்று திருவாய்மலர்ந்தனர். அந்தப்பிரகாரமே சதுர்முகப் பிரம்மாவும் சொன்னார். அதைக்கேட்ட தேவர்கள் தங்கள் மனந்தேறினார்கள்.

அந்தச் சமயத்தில் சக்கரவர்த்தித் திருக்குமாரர் பெருமைபொருந்திய சக்காராயுதத்திற்குச் சமானமாகிய வெற்றிபெற்ற திவ்யாஸ்திரவருஷங்களை அதிவேகமாகப் பொழிந்து, மலைகளுக்கு நிகரான அந்த ராக்ஷசர்களுடைய தலைகளையறுத்துக் குப்பற் குப்பலாகக் குவித்துவிட்டார். மகரமச்சியங்கள்பொருந்திய சமுத்திரத்தைப்போல ஸ்ரீராமமூர்த்தியை வளைந்துகொண்ட இராக்ஷசர்களுடைய மலைகளுக்கொப்பான தேகமானது சிதறிப் பூமியிலுருள, அவர்களுயிர்கள் வீரசுவர்க்கத்தையடைய, அதனாலே தேவர்களுடைய புராதன நகரமானது இடஞ்சுருங்கிப்போய்விட்டது. மற்ற ராக்ஷசர்களெல்லாம் வருத்தப்பட்டார்கள். குதிரைகளெல்லாம் தலையறுந்து விழுந்ததுகள். குதிரைப்பாகர்களுடைய தலைகள் அறுபட்டு ரணக்களப்புழுதியில் உருண்டு கிடந்ததுகள். அவர்களுயிர்கள் வீரசுவர்க்கத்திலுள்ள அப்சரசுக்களை ஆலிங்கனம் பண்ணிச் சந்தோஷித்ததுகள். சமுத்திரங்களும் மலைகளும் காடுகளும் கீழேழுலோகங்களும் மேலேழு லோகங்களும் ஆகிய இவைகளிலெல்லாம் இராக்ஷசர்களுடைய உயிர்களும், அவர்களுடைய தலைகளும், அவர்கள் தேகங்களும், அந்தத்தேகத்திலிருந்து ஒழுகிவருகின்ற ரத்தப்பிரவாகமுமாய் நிறைந்துவிட்டபடியினாலே ஒரு திக்காவது வெறுமையாயிருக்கவில்லை. இப்படி யுத்தம் நடக்கும்போது ஸ்ரீராமரை எதிர்த்துவந்த ராக்ஷசவீரர்களெல்லாம் மாண்டுபோனவுடனே அவர்களைச் சூழ்ந்துவந்த சேனைகளெல்லாம் ஓட்டம் பிடித்ததுகள். அப்போது தேவர்கள் ஸ்ரீராமபிரான்மீது புஷ்பமாரியைப் பெய்தார்கள். அதனாலே மேகவருஷமானது பெய்வதற்கிடமில்லாமல் அந்தரத்திலேயே நின்றுவிட்டது. இப்படியோடிப்போகின்றசேனைகளை அறிவில்லாத சிலராக்ஷசர்கள் இடையிலே ஓடவொட்டாமல்தடுத்துக் கண்களில்அக்கினி பொழியும்படியாகப் பார்த்துத் திரும்புங்கள் திரும்புங்களென்று சொல்லி அதட்டிக்கொண்டு, யானைகளையும்சிம்மங்களையும் குதிரைகளையும்ஸ்ரீராகவபிரான்மீதுசெலுத்திக்கொண்டு உலகங்களெல்லாஞ் செவிடுபடும்படியாகவும், மேகங்களெல்லாம் கரிந்துதிர்ந்துபோகவும், அஷ்டகுலாசலங்கள் அடுக்கழிந்துசிதையவும், தேவர்களுடைய தலைகள் நடுக்கங்கொள்ளவும், ஆயுதவர்க்கங்களெல்லாவற்றையும் அடுக்கடுக்காய்ப் பிரயோகித்தார்கள். அவர்கள் பிரயோகிக்கின்ற ஆயுதங்கள் இடிகளையும் மின்னல்களையும் நிகர்த்துப் பிரகாசித்து மிகுந்த

ஒலியைவிளைத்ததுகள். அதைக்கண்ட சுந்தரபாகுவான ஸ்ரீராமர் சந்தோஷம் சந்தோஷமென்று வெகுகாலமாகப் பழகின அதிதிகளை எதிர்கொள்ளுகிறதைப்போல அவர்களை எதிர்த்துப்போய், அக்கினிமுகாஸ்திரங்களை தேவர்கள் புஷ்பமாரிபொழியும்படி மேகம்பொழிவதுபோலப்பொழிந்தார்கள்.

அப்போது அவ்விராக்ஷசர்களுடைய தேர்கள், சூரியனுக்கொப்பாகக்கட்டியகொடிகள் இடிகளைப்போலப் படபடவென்று சப்திக்க எண்ணிறந்தமேருமலைகள் ஸ்ரீராமமூர்த்தியுடனேயுத்தத்திற்குவருவதுபோல அதிவேகத்துடன் அதிர்ந்துகொண்டு வந்ததுகள். அந்தரதங்கள் ஸ்ரீராமபாணம் பட்டு பருந்துகளும் கழுகுகளும்வந்துபடியும்படியாக நீறுபட்டுப் போனதுகள். நான்கு பக்கத்திலுமுள்ள கடல்களெல்லாம் சுழலவும், உயர்ந்த மலைகளெல்லாம் சுழலவும், சூரியசந்திரர்கள் கதிமாறிச்சுழலவும், உலகமெல்லாம் குலாலசக்கரம்போலச்சுழலவும், ஸ்ரீராமர் கிறுகிறென்று சாரிகைசுற்றிவந்தார். பிரமேந்திராதிகளும், மற்றத் தேவர்களும், மகாரிஷிகளும், சுற்றி சுற்றி நிர்த்தனம்பண்ணினார்கள். கழுகுக் கூட்டங்களும், நமனும், ஸ்ரீராமர் திருக்கைவில்லும், தர்மதேவதையும் ஆனந்தக் கூத்தாடினதுகள். ஸ்ரீராமர் செய்கின்ற இந்தயுத்தத்தின் விசேஷத்தைச் சொர்க்க மத்திய பாதலமென்னுந்திரிலோகாதிபதிகளாகிய இவர்களில் யாரிதை முன்னே அறிந்தவர்கள்? ஒருவருமில்லை. பிரமேந்திராதிகளும் தலைநடுங்கினார்கள். வேதபுருஷன் சுவாமியைப்பார்த்து, ஓ தர்மஸ்வரூபரே! ஓ காயம்பூவண்ணரே! என்று சகஸ்திர நாமங்களைக்கொண்டு ஸ்தோத்திரம் பண்ணினார். ஸ்ரீராமர் பிரயோகித்த ஒரு பாணத்துக்கு சப்தசாகரத்துக்குச் சமமான ராக்ஷசர்களுடைய ரதகஜதுரக பதாதிகளெல்லாம் மாண்டுபோனதுகள். அந்தப் பாணவேகத்தைக் கண்டு தேவர்களெப்படி கைகளை விதிர்த்து நடுங்கினார்களோ? அப்படியே அசுரர்கள் ஓடமாட்டாமற் கதிமாறிப்போனார்கள். ஸ்ரீரகுநந்தனர் ஏவுகின்ற ஒரு பாணமானது ரதகஜதுரகபதாதிகளையெல்லாம், ஊடுருவிக்கொண்டு போகின்றதைப் பார்த்தால், அந்தச் சேனைகளின் தொகை இத்தனை யென்று கணக்கிடுவதைப்போலிருந்தது. அப்போது ஸ்ரீராமர் மாண்டுபோனராக்ஷசர்களெல்லாம்போகமீதியானவர்கள் இனித்தப்பித்துக்கொண்டுபோய்விடுவார்களென்று அவர்களைப் போகவிடாதபடி, தாம்தமதுபாணங்களைக்கொண்டு, மதில்கள்கட்டிவழியைமூடிவிட்டார். அக்காலமாலி யென்பவனையும், மாலியவானையும், மலைபோலுயர்ந்த கைடவனையும், மதுவையும் ஒத்தவர்களான கவசங்களை யணிந்த தேகத்தையுடைய இராட்சசர்கள், அப்பாணமதிலைக் கடக்கமாட்டாமல் நின்றுதிகைத்தார்கள். மற்றராட்சசர்களெல்லாம் சப்தசாகரங்களும் பொங்கிவருகின்ற ஊழிகாலத்திலே வடவாமுகாக்கினி சுட்டுக்கொண்டேவர, எல்லாம்வெந்து மீந்துநிற்கின்ற சில ஜீவன்களைப்போல, ஒரு மூலையிலொதுங்கினார்கள். இப்படி திகைத்தவர்களும் ஒதுங்கினவர்களுமாகிய இராட்சசர்களிற் சிலர் திரிபுரசம்ஹாரியும், புள்ளூர்திகளாகிய விஷ்ணுவும், பிரம்மாவும், வச்சிராயுததரனும், நம்முடைய பலத்தை அடக்கமாட்டார்கள். இந்த ஒருமனிதனோ நம்முடைய பலங்களையும் வரங்களையும்அழித்துவிடுவான்? நம்முடைய வல்லமையையும் அழித்துவிடுவான்? நம்முடைய ஆயுளையும் நாசமாக்கிவிடுவான்? என்று நிச்சயித்துப் பின்னுஞ் சொல்லுகிறார்கள். சமுத்திரத்தினாற் சூழப்பட்ட இந்தப் பூமியைப் புரட்டிப் பேர்த்துவிட வல்லவர்களான ஆயிரம்வெள்ளம் ராட்சச சேனைகளையும், ஒரு வில்லினாலே ஒருக்ஷணபொழுதுக்குள்ளாக எய்து கொன்றுவிட்டானே. இதுவரையிலுந் தேவர்களுடைய ஆயுதங்கள் நம்மை நோக்கிவந்தால் நடுவேயேஒய்ந்து விழுந்துவிடும். அப்படி ஒய்ந்து போகாதவைகள் நம்மிடத்திற்குவந்துவலஞ்சுற்றி விலகிப்போய்விடும். இந்த மனிதனுடைய ஒரு பாணத்தினால் நம்முடைய கோடி படைகளும் மாண்டு போகின்றதுகளே! இந்த ராக்ஷசப்பிறவி கடைப்பட்ட பிறவியாய்ப் போய்விட்டதே அந்தர மார்க்கத்திலே லோகங்களையெல்லாம் சிருஷ்டித்த பிரம்மதேவன் வந்திருக்கின்றான். விருஷபவாகனருடரான உருத்திரமூர்த்தி வந்திருக்கின்றார். மற்றத் தேவர்களும் வந்திருக்கின்றார்கள். இவ்வளவு தேவர்கள் வந்தும்

அந்த ஸ்ரீயப்பதி ஒருவனை மாத்திரம் காணேம். ஆகையால் அந்த மாயக் கள்வனை இந்த மனிதனைகவேண்டும். ஆயிரம் வெள்ளஞ் சேனையையும் கொன்றுவிட்டான். இனி கோடிகோடி பேர்களல்ல ஒரு பதுமச் சேனை வந்தபோதினும், இவனுக்கு முன் என்னசெய்யக்கூடும்? போனதுபோக நாம் சிலபேரிருந்தும் ஆலோசனைசெய்யாம லிருப்பதென்ன? நானென்று சொல்லுகிறேன் கேளுங்கள். என்று வன்னியென்னும் பெயருள்ள ஓர்சேனைத் தலைவன் சொல்லுகிருன்.

ஓ நண்பர்களே! இனிநாம் தப்பியோடி இராவணன் முகத்திலே விழிப்போமோ? அல்லது நாமிவன் கையினாலே மாண்டு போகப் பயந்தோடிப் பழியைக் கட்டிக் கொள்ளுவோமோ! ஆராயுமிடத்தில் எதுவும் சரியல்ல. இந்தப் பாவ தேகத்தை இவன் கையில் ஒப்புக் கொடுத்துவிட்டுப் புகழைப்பெற்று இனிப்பிறவா வழியைத் தேடிக்கொள்ளுவதே சரி. தப்பி ஓடிப் போகலாமென்று நினைத்தோ மானாலும், இந்தப் பாணமதிலைக்கடந்து போகிறதற்கு நம்மாற்கூடாது. ஆகையால் நாமெல்லாரும் ஒரு முகமாகப் போய், நம்முயிரை அந்த மனிதனுக்குக் கொடுத்துவிடலாம். என்றுசொல்லி எல்லாரையுஞ் சமாதானம் பண்ணினான். அந்தப்படியே எல்லாருஞ் சமாதானப்பட்டுத் தங்கள்விதி கொண்டு வந்து தள்ளுவதினாலே மலைபோல் ஆகாரமுடைய அந்த ராக்ஷசர்களெல்லாம் பெரியமலைகள் யாவற்றையும் இழுத்துக்கொண்டு, ஆறுகளெல்லாம் கடலில் விழுவது போலவும் விளக்கினில் விட்டிற்பூச்சிகள் விழுவதுபோலவும் ஆர்ப்பரித்தவர்களாய் ஸ்ரீராமரைவந்து வளைத்துக்கொண்டு, மழு -தண்டு-அம்பு-சக்கரம் - கலப்பை - வாள் - வேல்-சூலம்-வஜ்ராயுதம்-ஈட்டி- தோமரம் -கழு-கப்பணம்- இவை முதலாகிய ஆயுத வர்க்கங்களையெல்லாம் கொட்டத்திற் பதுங்கியிருக்கின்ற புலிக்குச் சமானமான ஸ்ரீ ராமமூர்த்தியின் மீது பிரயோகித்தார்கள். அதைக்கண்டு தேவ ராஜாதிராஜனான ஸ்ரீ ராமமூர்த்தியானவர் காந்தருவாஸ்திரம் என்கின்ற தேவாஸ்திரத்தைத் தமது கோதண்டத்திற் பூட்டிப் பிரயோகித்துவிட்டார். அந்தத் திவ்யாஸ்திரமானது சர்ப்ப ராஜனைப்போலவும் கருடபகவானைப்போலவும் புறப்பட்டு, மூன்றுகண்களும் ஐந்து முகங்களும் உடையவைகளாய், அம்மூன்றுகண்களிலும் நெய்யும் நெருப்பும் ஜலமும்பொழிந்து, அஸ்திர வருஷங்களையும் அநேகமாக வருஷித்துக்கொண்டு, திரிபுர சம்மாரியாகிய ருத்திரமூர்த்தியைப்போல காணப்பட்டு, அந்த பத்துக்கோடி ராக்ஷச வீரர்கள் தவிர அவர்களுடனேவந்த ராவணனுடைய மூலபலச் சேனைகளையெல்லாமும் ஓரிமைப்பொழுதுக்குள்ளாகப் படுசூரணப்படுத்திவிட்டது. அப்போது மஹாத்வீபங்களிலிருந்தும் அஷ்டதிக்குகளிலிருந்தும் பாதாளத்தி லிருந்தும் பலவகையான மலையரணங்களிலிருந்தும் இராவணனுச்கு உதவிசெய்துகொண் டிருக்கின்றவர்களும், பெரிய மேருவைச் சங்கிலியிற் கோர்த்து மார்புக்குப் பதக்கமாக அணிந்துக்கொள்ளத்தக்க வல்லவர்களும், பிரம்மாவினிடத்தில் வேத மந்திரங்கள் கற்று அவைகளை ஜெயிக்கிறதினாலே நாவில் தழும்பேறினவர்களுமான அந்த பத்துக் கோடி ராட்சசவீரர்களும் ஒருவரையொருவர் பார்த்து ஆலோசிக்கும்போது, எல்லாரிலும் பெரியோனாகிய வன்னியென்பவன் இதனைச் சொல்லுகிருன். ஓ மித்திரர்களே! இந்த ராமன் நம்மில் ஒருவனைக் கொல்லுவானே யானால் தப்பாமல் இராவணனைக் கொன்றுவிடுவான். நாமெல்லோரும்ஒருமிக்க இவன்மீது எதிர்த்துப்போகலாமோ? அல்லது தனித்தனியே போய்ச் சண்டைசெய்யலாமோ? நாம் தனித்தனியேபோவோமானால் இவனுக்கு முன்னே ஒருவேளை நிற்கமாட்டோம். நாமெல்லோரும் ஒன்ருய்க் கூடிக்கொண்டு நம்முடைய வல்லமைக்குக் கூடிய யுத்தங்களையெல்லாஞ்செய்யலாம். அப்படிக்கில்லாவிட்டால் இவனை நாம் ஜெயிக்கவே மாட்டோம். என்றுசொல்லவும் மற்ற வீரர்களெல்லாம் அதைக்கேட்டு, பெரியோர் சொல்லே நல்லது அப்படியே செய்யலாம் என்று நிச்சயம் பண்ணிக்கொண்டு எல்லாரும் ஒருமிக்கச் சப்த சமுத்திரங்களைப்போல ஆர்ப்பரித்துச் சங்கத்தொனிசெய்து தோள்களைத் தட்டினார்கள். இப்படிச் செய்ததினாலே மேகங்களெல்லாம் கரிந்து மின்னிக்கொண்டு பூமியில் விழுந்ததுகள். இப்படி

மேகங்களே விழுமானால் சுவர்க்கமத்திய பாதாளமென்று சொல்லப்பட்ட திரிலோகங்களும் பட்டபாட்டை இப்படியென்று சொல்லவேண்டுமோ? அவ்வாறவர்கள்சப்தித்த மாத்திரத்திலே அவர்கள் வல்லமைகளையெல்லாம் ஒடுக்கும்படியான ஸ்ரீராமபத்திரர் தம்முடைய கோதண்டத்தைக் குணத்தொனி பண்ணினார். அது தம்முடைய தருத்தோள் வல்லமையாலே திக்குகளையெல்லாம் அளவிட்டு ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய பாஞ்சசன்னியத் தொனியைப்போல லோகமுழுதுங் கேட்டது. அப்போது எல்லாலோகங்களிலும் பெருமைபெற்றிருக்கின்றவர்களும், திரிலோகங்களையும் ஜெயித்தவர்களும், தேவர்களையெல்லாம் புறங்காட்டி யோடச் செய்தவர்களும், யமனைப்போலத் தானவர் சேனைகளைச் சின்னாபின்னப்படக் கொன்றவர்களும், உலகத்திலுள்ள ஜீவகோடிகளையெல்லாங் கொன்றுதின்றவர்களும், மகா வில்வீரர்களுமான ராட்சதசேனாதிபதிகளெல்லோரும் ஒருமிக்கச் சேர்ந்து கொண்டு வந்து ஸ்ரீராமபத்திரரைத் தொழுவத்திற் சேர்த்து கட்டிவிட்டவர்களைப்போல வளைத்துக்கொண்டு, ஒவ்வொருவரும் இடிகளைப்போலக் கர்ஜித்து யுத்தஞ்செய்ய யத்தனித்தார்கள். அதைக் கண்டு தேவர்கள் மனம்வாடிப் போனார்கள். ஆகாயமும் தீய்ந்துபோகும்படியாக அந்த ராட்சசர்கள் பிரயோகித்த ஆயுதங்களிலே யிருந்து புறப்பட்ட அக்கினியும் அவர்கள் கண்களிலிருந்துண்டான நெருப்பும் ஒன்றாகச்சேர்ந்ததினாலே, ஏழுலோகங்களும்வெந்து குமுங்கிப்போய் விட்டதுகள். தேர்களினுடைய அதிர்ச்சியும், வீரர்களுடைய அதட்டுதலின் சப்தமும், ரத்ன மாலைகளினுடைய ஆரவாரமும், வீரகண்டாமணி ஒன்றோடொன்றுதாக்குகின்ற ஓசையும், வில்லினாேசையும், மேககர்ஜனையையுங் கடலினாரவார ஓசையையும் ஒத்திருந்ததுகள்.

இவர்களுள் ஒவ்வொருவீரரும் இராவணனுக்குச் சமானமான பலமுடையவர்கள். அவர்களாலே ஜெயிக்கப்படாதலோகங்களில்லை. மிகுந்த தேகவல்லமையுமுள்ளவர்கள். இவர்களெல்லாம் வந்து சூழ்ந்தமாத்திரத்தில் தர்மசொரூபியான சக்கரவர்த்தித் திருக்குமாரர் சத்துருக்கள் வந்து சேர்ந்தார்களென்று திருவுளத்திலெண்ணி அவர்களுக்குமுன் எதிர்த்துவந்து நின்று, அந்த ராக்ஷசவீரர்கள் பிரயோகித்த ஆயுதங்களெல்லாம் தம்முடைய அம்பினாலே அறுந்து போகும்படிச்செய்து, உகாந்தகால மேகவருஷத்தைப்போல அநேக திவ்யாஸ்திரங்களைப் பிரயோகித்தார். அதிக தேஜோமயமாகப் புறப்பட்ட ஸ்ரீராம பாணங்கள் அவர்கள் தரித்திருந்த தும்பைமாலையுடனே அவர்கள் மார்பைப் பிளந்ததினாலே சூரியன் தன் பரிவேடத்துடனே அழிந்து பூமியில் விழுந்ததுபோல அவர்கள் தாங்களேறிவந்த தேர்களுடடனேகூட மடிந்து விழுந்தார்கள். ஸ்ரீராமபாணங்கள் எமனைப்போலப் பாய்ந்தபடியினாலே இந்திரதனுசோடு மேகமானது பூமியில் விழுந்ததுபோல அந்த ராக்ஷதர்களுடைய கைகள் பிடித்த வில்லுடனே அறுந்து பூமியில் விழுந்ததுகள். சில ராக்ஷதர்களுடைய பலம்பொருந்திய கைகள் ரத்தக் கடலினிடத்தில் கொம்பைக் கவ்விக்கொண்டு மலைப்பாம்பு விழுந்தது போல அம்புகளைப் பிடித்தபடியே விழுந்ததுகள். பூமியைச் சூழ்ந்து நிற்கின்ற கடலில் முகபடாத்தை அணிந்திருக்கின்ற யானைகள் ரத்தவெள்ளத்தினால் இழுப்புண்டு போய் மின்னலுடனேகூட மேகமானது விழுவதுபோல விழுந்ததுகள். வீரவான்களான ராக்ஷதர்களுடைய வலதுகரங்கள் பிடித்த வாளாயுதத்துடனே ரத்தக்கடலில் கொம்பன்சுறு மச்சியத்தைப்போல வீழ்ந்ததுகள். அந்த ரத்தப்பிரவாகத்திலே குதித்துவீழ்ந்த குதிரைகள் இறாலுக்கொப்பாக இருந்ததுகள். ஸ்ரீராமபாணம்பட்டு ராக்ஷசர்களுடைய கேடயங்கள் தறிபட்டு ரத்தக்கடலில் வீழ்ந்ததுகள். அவைகள் கடலாமைக்கொப்பாக இருந்ததுகள். காம்புகளுடனே கொடிகள் அந்த ரத்தக்கடலில் வீழ்ந்ததுகள். அவை பெருங்காற்றடித்துக் கப்பற்கூம்புகள் கட்டினபாய்களுடனே கடலில் மூழ்கினதுபோல் இருந்ததுகள். தலையற்ற முண்டமாகத் தண்டாயுதத்துடனேகூட ரத்தப்பிரவாகத்தில் வீழ்ந்த ஒரு ராக்ஷசனுடைய கால்களும் தோள்களும் துண்டுபட்ட சுறாமீனைப்போலத் துடித்ததுகள். பளிங்குக்கற்களாற்செய்த சக்கரங்கள்பூண்ட தேர்களானவை நொறு

க்குண்டு, அவற்றின் கொடி குடை முதலிய
உறுப்புகளோடு சக்கரமும் வேறுபட்டு
ரத்தக்கடலில் வீழ்கின்றன. அவைகள்
சோடசகலையுங் கூடிய சந்திரர்களை யொத்
திருந்ததுகள். சில ராக்ஷசர்களுடைய பல
ம்பொருந்திய மார்பில் தரித்திருக்கின்ற
கவசத்தின்மீது கண்களுக்குச்சமமான ஸ்ரீ
ராமபாணங்கள் அளவில்லாதவைகளாய்
மொய்த்துக்கொண் டிருக்கின்றதுகள். அ
வைகள் தேனையுண் ணுகின்ற வண்டுகளுக்
கொப்பாக இருந்ததுகள்.

இப்படி ஸ்ரீராமபிரானுனவர் பருந்து
கள்பறக்கின்ற ரணக்களத்திலே தாமொரு
வராகவேயிருந்து ஒருஜாமபரியந்தம்நூரு
யிரம்யோசனை விஸ்தாரதூரம் சாரிகைசுற்
றிச் சம்மாரம் பண்ணிக்கொண்டு வந்தார்.
ஸ்ரீராமர் நிற்கின்றவர்களுக்கு முன்பு நின்
றும் போகின்றவர்களுக்கு முன்பு போயும்
சிரிக்கின்றபடியினுலே அவர்கள் இவரைப்
பார்த்து, இவன் இராவணன் குமாரனுகிய
இந்திரஜித்துதான் தன்மாயையால் நம்மு
டைய சேனைகளையெல்லாங் கொன்று விட்
டான். இந்தராமன்கொன்ருனென்று சொ
ல்லுகிறது தகாதென்ருர்கள். ஸ்ரீராமன்
வில்லுங் கையுமாகவந்து இதோ என்னெ
திரே நிற்கின்ருன் இதோ என்னெதிரே
நிற்கின்ருன் என்று ராக்ஷசர்கள் கலங்கி
நிற்கின்றகாலத்தில் அவர்களில்ஒவ்வொரு
அரக்கனும் கொடுங்கோபத்தோடு குரூர
மாகிய பாணங்களைக் கண்டகண்ட இடங்க
ளில் எய்வார்கள். ஸ்ரீகோதண்ட தீட்சா
குரு ஒருவன்தான் நின்று போர்செய்கிரு
னென்று உணரத்தக்க உணர்ச்சியில்லாத
வர்களாய் ஸ்ரீராமபாணப் பிரகாசத்தால்
எங்கும் பிரகாசமா யிருப்பதால், இஃது
இராத்திரியல்ல பகலென்று சொல்லுவா
ர்கள். சில ராக்ஷதர்கள் தம்மவரைப்பார்த்
து, பேட்டீர்களா? ராமன் ஒருவனுண்டெ
ன்பது அபத்தம். இராமர்கள் பலபேருண்
டென்பதே யதார்த்தமென்பார்கள். மூல
பலசேனையாக வந்த ஆயிரம்வெள்ளம்
இராக்ஷதர்களில் மலைகளைப்போல நீண்
டுயர்ந்த ஒவ்வொருவரும் ஸ்ரீராமபிரான்
போலத் தங்கள் கண்களுக்குத் தோற்று
கிறபடியால், ஒருவரையொருவர் தம்தம்
ஆயுதத்தாற் கொலைசெய்து உயிர்வாங்கி
னர்களேயல்லாமல் ஏகநாயகனுகிய ஸ்ரீரகு
குலோத்தமர் அந்தப் பாபிஷ்டிகளுயிரை
வாங்கினதுமுண்டோ இல்லை. ரதத்தின்மே
லும் குதிரையின்மேலும் சிவந்த கொடுங்க
ண்ணையுடைய மேகம்போன்ற யானையின்
மேலும்பூமியிலும் நிற்கஇடம்பெருமற்சமு
த்திரத்திலும் ஆகாயத்திலுமிருந்து போர்
செய்கின்ற அரக்கர்களை அங்கங்கு ராமர்
கள் புகுந்து சூழ்ந்து போர்செய்கிருர்க
ளென்று சொல்லும்படியாக,சமஸ்த அண்
டங்களிலும் அவ்வண்டங்களுக்குள் சிற
ந்த பதவிகளிலும் அப்பதவிகளில் உலாவு
கின்ற சோதிமூர்த்திகளிலும் அவர்களு
டைய பக்கங்களிலும் உடல்களிலும் பிரி
யாமல் அந்தரியாமியாகநின்ற தசரதநந்த
னர் போர்புரிகின்றமையால் ராக்ஷதவீரர்
கள் திப்பிரமைகொண்டார்கள். எம்மைய
னுடைய இடதுகையில் தாங்கிய பெரிய
கோதண்டத்தின் தலையிற்கட்டிய மணிகள்
கணகணவென்று ஒலிக்குந்தோறும்,அங்கு
நின்ற மத்தகஜங்களும், அசுவங்களும்
நின்றநிலையிலேயே நடுங்கி யிறந்ததுகள்.
இமயகிரிபோல் உயர்ந்து காணுகின்த ரத
சமுகங்கள் பூட்டுக்குலைந்துஉதிர்ந்ததுகள்.
அவற்றிலுள்ள இராக்ஷசவீரர்களும் நடு
ங்கி மாண்டார்கள். எட்டுத்திக்குகளில் உள்
ளவர்களும் செவிடுபட்டார்கள். சமுத்திர
ங்களும் அதிர்ச்சியாற் கலங்கிச் சேறுபட்
டதுகள். கொல்லுந்தொழிலையுடையவியா
க்கிரமத்துக்குச் சமானமாகிய இராக்ஷசர்க
ளது மனைவிமார்களுடைய கண்களில் நின்
றும் கலகலவென்று நீர்சிந்திப் பிரவகித்
தது. யுத்தத்தில் புருஷசிம்மத்துக்கொப்
பாகிய ஸ்ரீராமபிரானுனவர் எதிர்ப்போ
ருடைய உடலில் தைக்கின்ற படைகளைத்
தாங்கிய கைகளையுடைய ராக்ஷசவீரர்களில்
ஒவ்வொருவருக்கு எதிரேயும் வளைத்தவில்
லுந்தானுமாகக் குதிக்கின்றவேகத்தாலே,
அங்கங்குந் தோன்றுகின்றபடியால், போர்
க்களத்தில் மடிந்து வீரசுவர்க்கம் அடை
கின்றவர்களுடைய தேர்களும், இங்குநின்
று போர்செய்கின்றவர்கள் ஏறிவந்த தேர்
களும் தாம் ஆரோகணித்தருளிய தேரே
யென்னும்படிச் செய்தார். ஆயிரந்தோள்
களுங்கூடி இரண்டுதோள்களுடையவராய்
அவதரித்தவர் ஆகையால் யுத்தகளத்தில்
எவனேனும் ஒரு ராக்ஷசவீரன் வில்லோ
டாவது அம்பருத் தூணியோடாவது

காணப்படுவானேயாகில் அவனுக்கெதிரே எழுந்தருளி, மேகங்கள் வருஷிக்கின்ற தாரைகளின் தொகைக்கதிகமாக ஆயிரம் கைகளால் எய்யும் அம்புமாரிகளைப்பெய்வார் என்றால், ஆயிரம் வெள்ளம் இராக்ஷசப் பெரும்படையோடு ஸ்ரீராமபிரான் செய்யும் போர்த்தொழில்களை ஒருமுகத்தாற் கண்டறியவுங் கூடுமோ? கூடாதல்லவா? ஆதலால் மனிதனாய் அவதரித்த ஸ்ரீரகுநந்தனருக்கு ஒருமுகமென்று சொல்லுதல் பொய்யாகும். ஆயிரமென்போமானால் சேனை ஆயிரத்துக்கு மேற்பட்டதாகையால் அதுவுமல்ல. அனந்த முகங்களென்பதே யதார்த்தமாகக் கண்டறிந்தோம். மேலும், திரிநேத்திரங்களையுடைய ருத்திரமூர்த்தியும் நான்முகக்கடவுளும் சேர்ந்து, எம்பெருமான் கோதண்டத்தை வளைத்து, எய்கின்ற அம்புகளை இவ்வளவென்று எண்ணும்படியாகத் தொடங்கி, அந்த அம்புகள் கூட்டங் கூட்டமாகப் புறப்படுகின்றமையால் கணக்கிடமுடியாமல், அவ்விருவரும் தனித்தனியாய் நின்று பார்ப்போமென்று பார்த்துக் கணக்கிடவும் முடியாமல், இராமபாணத்தைக் கணிக்க நம்மாலாகுமோ? ஆகாது, என்றுசொல்லி ஆச்சரியமடைந்து ஸ்ரீராமபிரானுடைய புஜபலத்தை நினைத்து நினைத்துத் தோள்கள் பூரிப்பார்கள். இந்திராதிதேவர்களும் அப்பிரம்மருத்திரர்களைப்பார்த்து, ஓ தேவசிரேஷ்டர்களே! ராக்ஷசசேனைவெள்ளம் ஆயிரமே? கௌசலைபுத்திரராகிய எம்பெருமான் விடுகின்ற அம்புகளும் அவ்வளவே? என்று வாய்க்கணக்கிட்டு உண்மையை யறிவோமானாலும், ஒவ்வோர் அரக்கனுடைய உருவையும் நூறு அம்புகள்போய்த் தைக்கின்றனவே ஆகையால், அம்புகளுக்கோ கணக்கில்லை. அநேக ஆயிரமாம் என்னலாம்படி யிருக்கின்றன. இவ்வளவு அம்புகளையும் ஸ்ரீராமபிரான் ஒருவருமே எய்தாரேயென்று சொல்லி ஆச்சரியப்பட்டார்கள். இப்படித் தேவர்கள் பேசிக்கொள்வதைக் கேட்ட முனிசிரேஷ்டர்கள் அவர்களைப் பார்த்து, ஓ தேவர்களே! இராக்ஷச சைனியத்தில் தோன்றுகிற குடைகளுக்கெல்லாம், கொடிகளுக்கெல்லாம், வீரர்கள் கையிற்றுங்கிய ஜெயம்பெற்ற அபாரமாகிய ஆயுதங்களுக்கெல்லாம், எய்யும்அம்புகளுக்கெல்லாம், ஏறிவந்த யானைகளுக்கெல்லாம், தேர்களுக்கெல்லாம், குதிரைகளுக்கெல்லாம், பின்னணிப் படைகளுக்கெல்லாம், ஸ்ரீகாகுத்த வமிசத்திலகர் பிரயோகஞ்செய்த அம்புகளுக்கு சங்கியைகளில் ஏதேனுமொரு சங்கியையெடுத்துக்காட்டி இவ்வளவென்று தீர்மானிக்கவல்லவர் நம்மில் யாரேனுமுண்டோ? இல்லையே என்று சொன்னார்கள்.

அதிசௌரியமாக யுத்தஞ்செய்கின்ற அரக்கர்களுடைய கண்டத்திலும், கண்டத்துக்குமேற் கபாலத்திலுமாக, அவர்களைத் தம்முடைய பாணங்கள் தொடர்ந்து பற்றி யுருவுகின்ற தன்மையால், ஸ்ரீராமபிரானனவர் சமஸ்த சேதனாசேதனங்களுக்கு மூலகாரணமாய் நின்று, தோற்றுவித்துத் தமக்குத் திருமேனியாய் நின்ற அவ்வுருவங்களை அவற்றிற்கு ஸ்தானமாகிய பிர்மாண்டத்தை நிரம்ப அம்புகளையெய்து கலக்குகின்றார் என்னும்படியானார். ஸ்ரீதாசரதிக்கு முன்பாக ஓர் பக்கத்திலிருந்த இரண்டுகோடி ராக்ஷசவீரர்கள் அவருடைய பாணங்களால் உயிரிழந்து அழிந்தமாத்திரத்தில் மற்றப்பக்கங்களிற் பிழைத்திருந்த நிசாசரர்களெல்லாருங்கூடி, இப்படி ராமபாணத்தால் நாம் விருதாவாக அழிந்து போவது என்னகாரணம்? முன்னே தவங்களைச்செய்து பெற்ற தேவதாஸ்திரங்களை இம்மனிதன்மேல் எறிந்து அந்த ஆயுதங்களால் அவனுடைய உடல்முழுமையும் மூடிவிடுவோம் வாருங்கள் என்று கோபமூண்டு, மொய்த்துக்கொண்டு நாராயணாஸ்திரம் முதல் பிரம்மாஸ்திரங் கடைசியாகிய தேவதாஸ்திரங்களை ஒருமிக்க எய்தார்கள். எய்தமாத்திரத்தில் பிரம்மாண்டமே கீழ்மேலாகும்போலக் காணப்பட்டது அங்கு கூடியிருந்த சமஸ்த தேவதா சமூஹங்களும் நடுக்கங்கொண்டன, அப்படிப்பட்ட தேவதாஸ்திரங்களை கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீராமபிரான்கண்டு புன்சிரிப்புச் சிரித்து, அவ்வஸ்திரங்களையெல்லாம் அவ்வஸ்திரங்களாலேயே துண்டித்துத்தள்ளி, மேலும்தாம் அவ்வஸ்திரங்களை ராக்ஷசர்கள்மேல் எய்தால் அவர்களால் தடுப்பது அருமையாகும். தடுப்பது அருமையானபோது அந்தப்பாணங்களினது சுவாலையாலேஉலகமானது வடவாமுகாக்கினியில்

மூழ்கினதுபோலப் பொரிந்து, சாம்பலாய் விடும். என்று திருவுளமிரங்கி தேவதாஸ்திரங்களைத்தொடாமல் குரூரமாகிய அநேக அம்புகளையெய்து, உயிர்பிழைத்திருந்த ராக்கதர்களுடைய தலைகளையெல்லாம்இடிவிழுந்தொடிந்த மலைச்சிகரங்களைப்போலக்கீழே தள்ளினர். இவ்வாறு ராமர் பாணவருஷத்தால் மூலபலசேனைகளாகிய ஆயிரம்வெள்ளம் ராக்ஷசர்களும், அவர்களுக்குப்படைத்தலைவராயிருந்த நூறுயிரங்கோடி ராக்ஷசவீரர்களும், இராவணனுக்குத் துணையாக வந்த அவன் மூலபலச்சேனைகளும் யுத்தகளத்தில் உயிர்மாய்ந்து வீழ்ந்தார்கள். அப்படி வீழ்ந்தவுடனே பூமிதேவியானவள்தானிதுபரியந்தம் கீழே சமுத்திரக்கரையும், மேலே ஆகாசமும் தொடங்கி ஒருகோடி யோசனைதூரம் சுமந்துகொண்டிருந்த பாரம் நீங்கிக் குதூகலித்தாள். சமஸ்ததேவர்களும் நம்முடைய சர்வாபீஷ்டத்தையும் முடித்தோமென்று துன்பம் நீங்கினர்கள். அவர்களுக்குள் இந்திரனனவன் தான்வெற்றிமாலையைத் தரித்தான்போலச் சந்தோஷித்தான். அபௌருஷேயமாயும் நித்தியமாயுமுள்ள வேதங்கள் இராக்ஷசதர்களால் இதுவரையுமழிந்திருந்த வரம்புகளைப்பெற்றுயர்ந்தன. ராக்ஷசர்களுடைய தேகபாரத்தால்மடங்கியிருந்த ஆதிசேஷனும் அப்போது தலைகளையுயர்த்தி இளைப்பாறிச் சிரமம் நீங்கினன்.

அப்போது தாமடையவேண்டிய சம்பத்தைக் கைகேசியென்னும் சிறிய தாயானவள் தம்பியாகியபரதனுக்குக் கொடுக்கக்கடவாயென்றுசொல்லிய சொற்படியே தம்பிக்குக்கொடுத்துவிட்டு, இந்திராதிதேவர்கள்செய்த தவத்தின் பொருட்டு மூங்கில்களடர்ந்தகாட்டிற்பிரவேசித்து, வில்லினதுதொழிலாற் சத்துருக்கள் யாவர்க்கும் துன்பத்தைநீக்குகின்ற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியைத் தரிசித்துத் துதித்து, அதனலடையும் பாக்கியம் பெறத்தக்கவர்களெல்லாம்; மங்களம்பாடி வாழ்த்தி வணங்கினர்கள். இப்படி சமஸ்தமானபேரும் வாழ்த்திவணங்கும்படியாகவும், சமஸ்ததேவர்களும் கற்பகமலர்களைக் கைகளால்வாரித் தூவிச் சந்தோஷிக்கும்படியாகவும், ஸ்ரீ ராமமூர்த்தியானவர் தீப்பொறிகள் நெருங்கிப் பறக்கின்ற சிவந்த கண்களையுடைய மூலபலராக்ஷசர்கள் யாவரையுங் கொலைசெய்து, அந்த ரணக்களத்தில் பேய்க்கூட்டங்கள் நெருங்கவும், நரிகள் மொய்த்துக்கொள்ளவும், எப்படி நிற்கின்றரென்றல்,பாரமானபிரேதங்கள் விளங்கித் தோன்றுகின்ற மசானத்தில் தாமொன்றியாய் நிற்கின்ற கறுத்த கண்டத்தையுடைய உருத்திரமூர்த்தியைப் போல நின்றர். மேலும் சுவர்க்கலோகபரியந்தம் அடர்ந்துவந்த இராக்கதர்கள்யாவரையும் கொன்று சமைந்த திருக்கோலத்தால், மறுபடியும் சிருட்டிதிதி சம்மாரத்தொழில் செய்யும்படி சர்வசம்மார காலத்தில் எல்லா உயிர்களையும் வாரியுண்டருளும் ஊழிமுதல்வனகிய மாயப்பிரானென்னும் தமது ஒப்பில்லாதமூர்த்தியையும் ஒத்திருந்தார். இப்பால் மகாகாருண்யராகிய ஸ்ரீராமபிரான் துராத்துமாக்களாகிய அரக்கர்கள் நாசமடைந்தபடியால் தங்கள் மனோவியாகூலந்தீர்ந்த தேவர்கள் அள்ளி அள்ளிச் சொரிந்த குற்றமில்லாத மலர்களாலும் சந்தனத்தாலும் உயுத்த ஆயாசந்தீர்ந்து, அந்தயுத்தகளத்தைவிட்டு இளையபெருமாளோடு ராவணன்செய்கின்றரணக்களத்தை நோக்கிச் சென்றர். இங்கே நடந்த யுத்தகாரியங்களையெல்லாம் சொன்னோம். இனிமுன்னே பயந்து ஓட்டம்பிடித்த வானரசேனையின் செயலையும், வைதீகமார்க்க விரோதியாகிய ராவணன் செய்யும் யுத்தகாரியத்தையும், அவனோடு எதிர்த்த சுமித்திரைச்சிங்கமாகிய ஸ்ரீராமாநுஜர்செய்யும்போர்த்திறமையையும் சொல்லத்தொடங்கினோம்.

மூலபலவதைப்படலம்-முற்றிற்று.

---

## வேலேற்றபடலம்.

மூன்னே மூலபலசேனையைக் கண்டு ஓடிப்போன வானரத் தலைவர்களெல்லாம் அங்கதகுமாரனல் போனதைரியம்வந்தவர்களாகி, நாம் உடலோடு கூடிவாழ்தலையே விரும்பினோம். அதனல் வந்த பழியை நாமேயல்லாமல் வேறேயார் விலக்கவல்லவர்கள்? ஆகையால் நமக்குவந்த பழியை நாமே துடைக்கும்படி பாபிஷ்டர்களாகிய இராக்கதர்களோடு எதிர்த்திறந்து வீரசுவ

ர்க்கத்தை அடைவோம் என்று தங்களுக்குள்ளே தீர்மானஞ் செய்துகொண்டு பாற்கடல் பெருகிவந்ததுபோல, யாவரும் ஒன்ருகத் திரண்டவர்களாய்த் தங்கள் தங்கள் சேனைகளோடு கூடவந்து சேர்ந்தார்களன்ரே? அப்படி யவர்கள்வந்து சேர்ந்தமாத்திரத்தில் ராவணனுனவன் ஆயிரஞ் சக்கரங்களையுடையதாய் ஆயிரங்குதிரைகள் பூட்டிச் சூரியமண்டலத்தைத் தனதொளியாற் பகைத்து விளங்குகின்ற ரதத்தின்மேலே தேவர்களைஜெயித்தவில்லும் முதுகில் அம்பருத்தூணியுமுடையவனுய்த் தனதுவீரப் பிரதாபம் நான்குபக்கங்களிலும் பிரகாசிக்கும்படி ஏறி, வேறே நூறுகோடி தேர்வீரர்களும், இருநூறுகோடி குதிரைவீரர்களும், பத்துக்கோடி யானை வீரர்களும், ஆயிரத்து முந்நூற்றுக்கோடி பதாதிவீரர்களும், ஆண் சிம்மத்துக்குச் சமானமாகிய தன்னைச் சூழ்ந்துவரவும், திரிலோகத்திலும் அப்புறத்துள்ள உலகத்திலும் எதிர்க்கத்தக்க வீரர்களுண்டாயிருந்தால், வரலாம் வரலாமென்று அழைப்பதுபோலத் தொனிக்கின்ற பெரிய ரணபேரியும், ஜெயசங்கங்களும், இடிபோற் குமுறுகின்ற எக்காளமும், பதினுலுலோகமும்கேட்கும்படி ஒலிக்கவும், யுத்தகளத்தே வந்து சேர்ந்தான்.

அப்போது வானரவீரர்கள் ராக்ஷசர்களுக்கு ராக்ஷசனும் சற்கருமத்தைச் செய்கின்ற தேவர்களுடைய தீவினைப்பயனும், சுத்தவீரர்களது நெஞ்சையும்சுடுகின்ற ஒப்பற்ற நெருப்பும், இவனேயென்று சொல்லத்தக்க அந்தக்கொடிய இராவணனையும், உயர்ந்து விசாலமாகிய ஆகாயத்தையும் மறைக்கத்தக்க ராட்சச சேனுசமுத்திரத்தையும் கண்டார்கள். கண்டமாத்திரத்தில் இந்த நெருங்கிய யுத்தத்தில் ஸ்ரீராமகாரியமாக நாமெல்லோரும் பிராணனைவிடுவதே நமக்குச்சுகிர்தமென்றுதிடங்கொண்டுதமக்குள்ளே அணிவகுத்து நின்று, இடிகளுக்குச் சமானமாகிய மலைகளைக் கையிற் பேர்த்தெடுத்து, எமனும் நடுக்கங்கொள்ளும்படி தோள்களைக் கொட்டி, அண்டகோளங்கள் நிற்கும் நிலையுந்தடுமாற அட்டகாசஞ்செய்து ஆரவாரித்தார்கள். இதுகண்ட கொடிய ராவணனுடைய சேனைகளும் தம்முயிரை யுத்தத்தில் விடும்படி நிச்சயங்கொண்டு நின்றன. உடனே வானரசமுத்திரம் அவ்வரக்கர்களோடு எதிர்த்து நின்றது. அக்கால் வானரவீரர்களும் ராட்சசவீரர்களும் தங்கள் கண்களில் நெருப்புப்பொறிகள்பறக்கவும்,மலைக்கற்களும்ஆயுதங்களும் படுவதினுல் நெருப்பிலுருக்கிய செம்புதெறிப்பதுபோல அவர்களுடல்களினின்றும் ரத்தத்துளிகள் ஆகாயத்தில் தெறிக்கவும். ஒருவருக்கொருவர் நெருங்கிச் சண்டையிடும்போது, கடினமாகிய தலைகள் நீங்கிய கவந்தங்கள் துள்ளித்துள்ளி எழுந்து மேலே ஒத்துவதினுலும், வீரர்களுடைய தேகங்களிலிருந்தும் உதிரத்துளிகள்சிதறி மேகங்களிற் படுவதினுலும், ஆகாயமெல்லாம் சூரியோதய மண்டலத்தை ஒத்திருந்தது. அங்கங்கே தலைகளும் உடல்களும் உதிரமும் ஆயுதங்களும் மற்றவைகளும் சிதறிக்கிடப்பதினுல், பூமிமுழுமையும் யுத்தகளம் போலவே காணப்பட்டது. இறகுகள் கட்டிய அம்புகளால் வானரக்கூட்டங்கள் இறந்துபோய், சூழ்ந்து பாய்வதாகிய மாமிசத்தில்நின்றும் ஒழுகும் ரத்தநீரில் மூழ்கி, ரத்தமொழுகாநின்ற தம்முடைய உடல் சுழிக்கும்படியாகநெருங்கி, கூரிய ஆயுதங்கள் மேலுமேலும் படுவதினுல் பெருமையாகிய சேனுசமுத்திரத்துக்குமத்தியிற் குடர்கள் மிதக்கும்படி அந்த ரத்தத்திலேயே அழிந்ததுகள். ராக்ஷசசேனையில் ராக்ஷசஸ்திரீகள் மேலேவிழுந்தழுகின்ற அழுகுரலைக் கேட்டமாத்திரத்தில் குற்றுயிராய்க்கிடக்கின்ற தங்கள் நாயகராகிய அரக்கர்கள் தங்களிடத்துவைத்த அன்பால் கண்களைத்திறந்து பார்த்துப் புன்சிரிப்புச் சிரிக்கக்கண்டு, அந்த ராக்ஷதிகள் தாங்களும் இறந்து அவர்களுயிரோடுகலந்து, தேகத்தோடுகூடியிருந்தகாலத்தில் அனுபவித்த பழமையாகிய சையோகம் இப்போதும் உண்டாகவும் காற்சிலம்புகள் இசையொலியை ஒலிக்கவும் கலந்து வீரசுவர்க்கம் அடைந்தார்கள். அப்போது பதினுலுலோகமும் ஊழிகாலத்தில் நிலைகுலைவதுபோல நடுக்கங்கொள்ளும்படி சம்மரிக்கின்ற குரூரமாகிய யுத்தத்தைப்பார்த்த ராவணன், இன்னம் சிறிதுநேரம் நாம் தாமசிப்போமேயானுல் நம்முடைய சேனைமுழுமையும் நாசமாய் விடுமென்பதை நினைத்துக்கொண்டு சுற்றிலும் பார்த்தான்.

அப்படி பார்த்தபோது ஒருபக்கத்தில் வானரவீரர்களெறிகின்ற மரங்களும் கல்லுகளும் ராக்ஷசர்களுடைய வில் - வாள் - எழுத்தடி-சூலம்-ஆகிய இவற்றோடு அரத்தையும் வாய்மடியச்செய்யும் வேல் முதலிய கூர்மையாகிய ஆயுதங்களையும் நொறுங்கும்படி செய்யவும், ஒருபக்கத்தில் தேக வலியும் தனுர்வேத வித்தையுமுள்ள இளையபெருமாள் போர்செய்யவும், பல பக்கத்தில் தீப்பொறிபறக்கின்ற கண்களையுடைய யானைக்கூட்டங்கள் தம்மை யலங்கரித்த அலங்காரங்களோடு துண்டுபட்டு விழுந்தும் பல குதிரைக்கூட்டங்கள் உயிர்துறந்து விழுந்தும் தேர்க்கூட்டங்கள் சக்கரம் தட்டு, கொடுங்கை முதலானதுகள் சுழன்று சிதைந்து விழுந்தும் கிடக்கும்படியாக, அநுமானும், அவர்பின்னே மற்ற வானரவீரர்களும் நெய்கின்ற குழலும், அதனைத்தொடர்ந்து செல்கின்ற நூலும் போல, அரக்கர் சேனையுட் புகுந்து போர் செய்யவும், சில பக்கத்தில் இவ்வளவென்று அளவுசெய்து சொல்லக்கூடாத விஸ்தாரமாகிய நிறைந்த பெரிய ராக்ஷச சமூகத்தை, எமனுக்கு வில்லுமுண்டென்று சொல்லும்படி, கையில் விற்பிடித்துச் சாரிகைதிரிகின்ற வீரராகிய இராமாநுஜர் தமது அம்புகளாற் கொல்லவும், பலபக்கத்தில் பராக்கிரமமுள்ள சிம்ஹமும் பின்னிடத்தக்க இடியையொத்த குரங்குகள் தங்கள் பல்லுகளால் ராக்ஷசர்களுடைய உடலைச் சின்னபின்னப்படக் கடித்துக் காயப்படுத்துகின்ற அவ்வளவு அந்தராக்ஷசவீரர்களுடைய ஆயுதங்கள் வானரங்களுடைய உடலைக்காயப்படுத்தாதிருக்கவும் கண்டான். உடனே கொடியோனாகிய அந்தத் தசமுகன் ஆ! ஆ! நாம் இனிச் சிறிது பொழுது சும்மா யிருப்போமாகில், அரக்கர்களுடைய உயிரை யெல்லாம் யமன் உண்டுவிட்டு, யுத்தகளத்தைவிட்டுப் போவான். ஆகையால் நேரிட்ட இந்தக்கொடிய யுத்தத்தை நான் ஒரு க்ஷணகாலத்திற் செயித்து, வெற்றி மாலையைத் தரித்துத் திரும்புவேன். என்று அதிகோபிஷ்டனாகி வேகத்தால் வாடைக்காற்றை யொத்தவைகளும், தடையில்லாமலுருவிப் பாய்வதால் இடியையொத்தவைகளும், மலைகளைப் பிளப்பவைகளும், அண்டத்தைச் சிறுதுண்டுகளாகச் செய்பவைகளும், திக்குகளை இவ்வளவுதூர முள்ளவையென்று அவற்றிற் பாய்ந்து அளப்பவைகளும், எதிர்ப்பவருடைய உயிரை அபகரிப்பதினால் யாவராலும் தடுக்கக்கூடாத யமதூதர்களை யொத்தவைகளும், ஆகிய கொடிய அம்புகளை அணியணியாக வானரவீரர்கள் மேலே பிரயோகித்து அவர்களை ஹதம்பண்ணினான். அப்போது இராவணன் யாளியைப் போலவும்வானரவெள்ளம்அந்தயாளியையெதிர்த்த நாய்க் கூட்டத்தைப்போலவும், ராவணன் நடுராத்திரியில் வந்த பத்திரகாளியைப்போலவும் வானரக்கூட்டம் வெளிநிலத்திலே சிந்திய பூளைமலர்களைப்போலவும் காணப்பட்டார்கள். இவ்வாறு குரூர பாணங்களைப் பிரதாபலங்கேஸ்வரன் இடைவிடாமலெய்தபோது குரங்குகளெதிர்க்கமாட்டாமல் திக்குவிதிக்குகளாகச் சிதறி ஓட்டமெடுப்பதைக் கண்ட ஸ்ரீரகுநந்தனருடைய திருத்தம்பியார் அவ்வானரங்களெல்லாம் ஓடுவதை மறித்து, நீங்கள் அஞ்சவேண்டாம் அஞ்சவேண்டாமென்று கருணைசுரந்து திருவாக்களித்து, அஞ்சனாதேவி புத்திரருடைய திருத்தோளாகிய தேரின்மேல் ஆரோகணித்தருளி, எரிந்துகொண்டிருக்கும் கோபாக்கினியையுடைய ராவணனுக்கெதிரேசென்றெதிர்த்தார்.

அம்மாத்திரத்தில் இராவணனானவன் முகத்தில் தீயைக்கக்குகின்ற அம்புகளை நூறுகோடிக்கு அதிகமாகப் பிரயோகிக்க, அதுகண்ட இளையபெருமாள் சீக்கிரமாக வில்லைவளைத்து அவன்தொடுத்தவளவான அஸ்திரங்களை எய்து, காற்றுமுகத்திலகப்பட்ட பஞ்சுபோலத் திக்குகளிற்போய்த் துண்டுகளாகச் சிந்தும்படி அவன்விடுத்த அம்புகளையெல்லாம்அறுத்துத்தள்ளினார். இப்படியறுத்துத்தள்ளினவுடனே ராவணனானவன் அவருடையவிசாலமாகியதோள்களிலும் மார்பிலும்படும்படி பத்து அம்புகளைச் செலுத்தினான். அதனால் இளையபெருமாள் சிறிதும் மனந்தளராமல் அதிக கோபங்கொண்டு அந்தத் துன்மார்க்கனுடைய தோள்களிலும் நெஞ்சிலும் தைக்கும்படி பத்துக்கணைகளை எய்தார். அக்கணைகள் தைத்ததினால் உபத்திரவப்பட்ட ராவணன் மறுபடியும் அம்புகளைத்தொடுப்

இராவணன் மூலபலங்காண்டல்.

இராவணலக்ஷ்மணயுத்தம்.



இராவணன் வதை.

பதற்குள்ளாக, லக்ஷ்மணப்பெருமாள் மிகவும் தடுக்கப்படாத விசையாகத்தொடுத்த அம்புகளைத் தானும் அம்புகளைப் பிரயோகித்துப் பொடிப்பொடியாகச்செய்துவிட்டு இவ்வாறு யோசிப்பதாயினான். ஓ! ஓ!! ஏது மதிகெட்டுவந்து இந்தச் சிறுவன்கையில் அகப்பட்டுக்கொண்டோம். இவன் நம்மை சும்மாவிடுகிறவனாகக்காணவில்லையே. அம்புகளால் இவனை வெல்லலாமென்றால் நம்மால் முடியாதுபோலத் தோன்றுகிறதே. திரிலோகங்களையும் வெற்றிபெற்ற நாம் திரும்பிவிடுவோமானால் அதிக பழிப்பாய் முடியுமே. இனி என்னசெய்யலாம்? நாம் தேவாஸ்திரங்களைப்பிரயோகித்தால் அந்த தேவாஸ்திரங்களையேதொடுத்துத் தடுத்துவிட்டு, மேலுமேலும் அஸ்திரங்களை நம்மேல் எறிகின்ற சமர்த்தனாயிருக்கின்றான். இவன் நம்மைமாத்திரமோ? எல்லாவீரர்களையும் அநாயாசமாக வெல்லுவான். சமஸ்தபிராணிகளுடைய உயிரையும் வாங்க வல்லயமனும் தனக்கெதிர்ப்பட்டால், உனக்கு எவ்வளவுவல்லமையுண்டென்று அவனுடைய உடலைப்பிடித்துப்பார்க்கவும்வல்லவன். தன்னுடையதமயனைப்போல் எந்தவுலகங்களையும் சுட்டெரிக்குஞ் சாமர்த்தியவான். இவன்யாருக்குந் தோற்கான். நாம் முன்னே சிவனிடத்தில் தவஞ்செய்துபெற்ற மோகனாஸ்திரந்தான் இவனை வெற்றியழியச்செய்யும். ஆதலால் அந்தஅஸ்திரத்தையேவிக் காகங்கள் மொய்த்துக்கொண்டிருக்கின்ற ரணக்களத்திற் சீக்கிரத்திலே விழத்தள்ளுவோம் என்று ஆலோசித்து தீர்மானஞ் செய்துகொண்டு, அந்த அஸ்திரத்துக்கு வேண்டிய மந்திரத்தைத் தியானித்தெடுத்து வில்லில் தொடுத்து, எதிரே நிற்கின்ற இராமாநுஜர்மேல் பிரயோகித்தான். இப்படிராவணனானவன் உபமந்திரித்துப் பிரயோகித்த மோகனாஸ்திரத்தைக் கண்டு சமீபத்தில் நின்றுகொண்டிருந்த விபீஷணாழ்வான் இலக்ஷ்மணப்பெருமாளை நோக்கி, சுவாமி! தேவரீர் ஸ்ரீமகாவிஷ்ணு அஸ்திரத்தை எய்து அந்தஅஸ்திரத்தை அறுத்துத் தள்ளுமென்று சொல்லினார். உடனேலக்ஷ்மணர் ஸ்ரீமகாவிஷ்ணு அஸ்திரத்தால்மோகனாஸ்திரத்தை அறுத்துத் தள்ளினர்.

அதைக்கண்ட ராவணனானவன் கோபங்கொண்டு, (குலத்துக்கு இனம்கோடாரி காம்பு) என்பதுபோல இந்த விபீஷணன் நம்முடைய சத்துருக்களுக்குச் சமீபத்திலிருந்து சமயோசிதமாக உபாயங்களைச் சொல்லிக்கொண்டுவருவதினாலேயல்லவோ நமக்கு இவ்வளவு கேடும் சம்பவித்ததென்று தனக்குள்ளே நினைத்து, தெய்வத் தச்சனாகிய மயனென்னுந் தன்மாமன் மகளாகிய வண்டோதரியைத் தனக்குப் பாணிக்கிரஹணஞ்செய்துகொடுத்த காலத்திற் கொடுத்ததும், சக்கராயுதத்தையும் வச்சிராயுதத்தை ஒத்ததும், பாய்ந்துருவத் தலைப்பட்டால் சுத்தவீரர்களுடையவீரப்பிரதாபத்தையும் ஊழியையுங் கடந்து உருவத்தக்கதும், ஆகிய வேலாயுதத்தையெடுத்து, தன் வெற்றியையழித்த தம்பிமேற் பிராணனைவாங்கும்படி அதிக விசைகொண்டு எறிந்தான். இப்படி எறிந்தபோது விபீஷணாழ்வான் அந்தவேலினுடைய நிலைமையை எல்லாம் அறிந்தவராகையால், ஓ இராமாநுஜரே! இந்தவேல் என்னுயிரை நாசப்படுத்தாமற் போகாது. அதைத்தடுக்கும்படியான உபாயமோ ஒன்றுமில்லையென்று விண்ணப்பஞ் செய்துக்கொண்டார். அதுகேட்ட மகாநுபாவராகிய லக்ஷ்மணப்பெருமாள் அதையிதோ தடுத்து விடுகிறேனென்று சொல்லி அதனெதிரே நின்று, அவரெய்த அம்புகளும் எறிந்த எல்லாவாயுதங்களும் எப்படியாய்விட்டதுகளென்றால் பரம வைதீக மார்க்காநுசாரியாய்ப் பரமேகாந்த நிஷ்டராயுள்ள பாகவத சிரோன்மணியாகிய ஒருமகாபுருஷரை அவ்வைதீகமார்க்காநுசாரிகளாகிய துஷ்டர்கள் அசூயையால் தூஷிக்கும் தூஷணங்கள் எப்படியடையாவோ? அப்படி அவ்விராவணனெறிந்த வேலை ஒன்றுஞ் செய்யாமற் போய்விட்டதுகள்.

அங்கே ஆகாசமார்க்கத்திற் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களெல்லாம் விபீஷணாழ்வான் இந்தவேலுக்குத் தப்பிப் பிழையாரென்று பரிசுத்தமாகிய மனம் வாடினார்கள். அதுசமயத்தில் இளையபெருமாளானவர் நான் எய்தவைகளும் எறிந்தவைகளுமாகிய ஆயுதங்களையெல்லாம் லக்ஷியம்பண்ணாமல் வருகின்ற வேலானது நம்முடைய திருத்தமையனாரை அடைக்கல மடைந்த

விபீஷணுழ்வானுடைய உயிரை வாங்கும். அப்படி உயிரைவாங்க விபீஷணுழ்வான் அழிவாரேயானல் சாதுக்களாகிய தேவர்களும் கைகொட்டி நம்மை நகைப்பார்கள். தம்மை அடைக்கல மடைந்தவனுடைய உயிரைத் தங்கள் நிமித்தம் சத்துருவானவன் கொல்லப் பார்த்துக்கொண்டிருந்தார்களென்கிற பழிவந்து நம்மையடைவதற்கு முன்பாக இந்தவேலை நாமே ஏற்றுக்கொள்ளுவோம். அப்படி யேற்றுக் கொள்ளுவதினல் நமக்குத் தோற்புவந்த போதிலும் மகாகீர்த்தி நிலைநிற்கும். இந்தத் தருமமும் நம்மைச்சேரும். ஆதலால் இனி ஆலோசிப்ப தென்னவிருக்கின்றது? என்று அவரிலெதிரே ஓடி விபீஷணருக்கு முன்னேசென்று தமது திருமார்பைக் காட்டிக்கொண்டு நின்றர். அப்படி நின்ற ராமாநுஜருக்கு முன்னே ஓடி விபீஷணுழ்வான் நின்றர். அவ்விருவரையும் விலக்கி நானே இந்தவேலை ஏற்றுக்கொள்ளுகிறேனென்று அங்கதப்பெருமான் போய் நின்றன். அம்மூவரையும் சுக்கிரீவமஹாராஜா தடுத்துத் தாமேபோய் நின்றர். இவையனைத்தையுங் கண்ட ஆஞ்சநேயர் ஆ! ஆ! நன்றயிருந்தது. ஸ்ரீராமபிரானுக்கு அடிமைநானென்பது பொய்யோ? இந்தவேலை நானே ஏற்றுக்கொள்ளுகிறேன். நீங்களெல்லோரும் அப்புறத்தே போங்கள் என்று சொல்லி எல்லோருக்கு முன்னே போய் நின்றர். இந்தப் பிரகாரமாக ஒருவரையொருவர் தடுத்து முன்னேபோய் நிற்கிறதும், நிற்கிறவரைத் தடுத்து மற்றெருவர் போய் முன்னே நிற்கிறதும், ஆகியவிந்தத் துக்கசர சமாச்சாரத்தை இப்படிப்பட்டதென்று சொல்லி முடியுமோ? முடியாது. ஒருவர்முன் ஒருவராக நின்றவர்களையெல்லாம் நீநில். நீநில். என்று விலக்கிவிட்டு ஸ்ரீராமாநுஜரானவர் நானே ஏற்றுக்கொள்ளுகிறேனென்றுசென்று, தேவர்கள் தமது கண்களிற் கைகளால்மோதி அறைந்து கொண்டழவும், அந்தவேல்தமதுமுதுகை உருவிச்செல்லவும், தமது திருமார்பிலேற்றுக்கொண்டார். இப்படி வேலையேற்று நின்று இளையபெருமாள் சாய்ந்த மாத்திரத்தில் இதுவே நமக்குப் போதுமென்று சீக்கிரமாகத் தேரைச் செலுத்திக்கொண்டு போகின்ற பாபிஷ்டனகிய இராவணனை விபீஷணுழ்வான் கண்டு, அடா துராசாரமுள்ள கள்ளா! நீயெங்கே தப்பித்துக்கொண்டு ஓடுகிருய்? நில்லடா நில்லு. என்று சொல்லிப்போய் எதிரே மறித்துகொண்டு புருஷ சிம்ஹத்தைப்போலச் சீறி, தம்முடைய கையிலுள்ள தண்டாயுதத்தால் தேவர்களுந் தலைநடுக்கங் கொள்ளத் தேரிற் கட்டிய குதிரைகளையும் சாரதியையும் விழும்படி மோதியடித்தார். உடனே ராட்சச குலாதிபன் தேரில் நின்றெழும்பி ஆகாய மார்க்கத்தில் நின்று, அதிக கோபத்தோடு கொடிய பத்தம்புகளை விபீஷணுழ்வானுடைய திருமேனியிற் பதியும்படிப்பாய்ச்சி, சமீபத்தில் நின்ற வாயுபுத்திரர் மேலும் ஆயிரம் அம்புகளை எய்து, யுத்தமுடிந்ததென்னுங் குதூகலத்தோடு லங்காபட்டணம்நோக்கிச் செல்லுகிறன். அப்போது சிரஞ்சீவியாகிய விபீஷணுழ்வானனவர் பலவகையாலும் ஆராய்ந்து, சரணகதிசெய்த என்பொருட்டாகச் சர்வலோகாதிபதியாகிய பாக்கியவானனவர் ரணக்களத்திற் சோர்ந்து வீழ்ந்தனர். அடா ராவண! அடாதுன்மதி! இந்தவஞ்சனைப்புத்தியால் நீ எங்கே ஓடிப்போவது? உன்னைக்கொலை செய்து உன்னேடு நானுஞ் சாகிறேன். என்றுசொல்லிக் கோபித்துப் பின்தொடர்ந்தார். அதுகண்ட ராவணன் ஜெயமோ என்பக்ஷத்திலாய்விட்டது. விபீஷணனென்னும் இந்தச் சாதுப்பிராணியைக்கொல்வதினல் இனிப் பிரயோஜனம் ஒன்றுமில்லை. என்று தனக்குள்ளே ஆலோசித்துக் கொண்டு சற்றேனும்நில்லாமலும், விபீஷணுழ்வானுடனே ஒன்றும் பிரதியுத்தரம் பேசாமலும், பொன்மதில்சூழ்ந்த தன்னகரமேபோய்ச்சேர்ந்தான்.

இப்பால் விபீஷணுழ்வானனவர் இரக்கத்துக்கு உருவம் இவர்தானென்று கண்டோர் சொல்லும்படியாக யுத்தகளத்திற் கிடக்கின்ற இளையபெருமாளுடைய இரண்டு திருவடிகளண்டையில் வாயைத்திறந்து கதறி அழுது, அளவுசெய்யமுடியாத அன்புடையவராய்ப் புலம்பிக்கொண்டிருந்தார். அதையும் இராமாநுஜருக்கு நேரிட்டஅவஸ்தையையும்வானரசைனியமும் வானரத்தலைவர்களுங் கண்டு துக்கசாகரத்தில்மூழ்கினர்கள். இவ்வாறுகதறி அழுதுகொண்டிருந்தவிபீஷணுழ்வானனவர் ஒன்

றுந் தோன்ருதவராய் மயங்கி, ஆ! ஆ! பொன்னும் கண்டால் இரும்பாகத்தக்க தேககாந்தியையுடையஇந்தமேருமலைக்குச் சமமானவர் பரமபதத் தேகினபடியால் என்னையடிமைகொண்ட கோதண்ட தீக்ஷா குருவானவர் இனி உயிரோடிருந்து வாழார். ஆகையால் பிராணனேடிருந்து என்னபயன் இந்தக்ஷணத்தில் நானிறக்கின்றேனென்று சொல்லிப் பிரலாபித்தார். அது கண்ட சாம்புவர் அவரைக்கையமர்த்தி, ஐயா விபீஷணுழ்வானே! சற்றேபொறும் சற்றேபொறும் இங்கு முன்னே சஞ்சீவி மலையைக்கொண்டுவந்து யாவரையும்பிழைப்பித்த அஞ்சனுதேவிபுத்திரரத்தினமிருக்கும்போது, தாமெல்லோரும் உயிருக்காகத் துக்கித்துக்கொண்டிருக்க மாத்திரம் அறியோம். வேறே நம்மால் ஒன்றுமாகாது. இந்தவீரர்களுக்குள் வீரராகிய அநுமானுனவர் நினைப்பளவிலே உலகமுழுவதுந் தேடி உயிர்தரத்தக்கநல்லமருந்தை இதோ கொண்டுவந்து தரப்போகிருர். யாவரும் தினையளவுந் துக்கப்படாதிருங்கள் என்று திடஞ்சொல்லிஆஞ்சநேயருடையமார்பில் தைத்திருந்த அம்புகளையெல்லாம் மெல்லெனப்பிடுங்கி இதனைச் சொல்லுகிருர்.

ஓ மகானுபாவரே! நம்முடைய சுவாமியாகிய ஸ்ரீராமபிரானுனவர் இளையபெருமாள் அடைந்த இந்த வருத்தத்தையுங் கண்டு சகிப்பரோ? சகிக்கமாட்டாரே: நீரும் சீக்கிரத்திற்போய்ச் சஞ்சீவியைக்கொண்டுவாராமல் இருப்பீரோ? இருக்கமாட்டீரல்லவா? என்று சொல்லினர்: இப்படிச் சொன்னமாத்திரத்தில் ஆஞ்சநேயரும் சாம்பவர் சொன்ன கருத்தை ஆலோசித்துச் சடக்கென எழுந்து, அநேக பிரதேசங்களைக் கடந்துசென்று, முன்னே தாம் கொணர்ந்த சஞ்சீவியுள்ள திசையை நோக்கிப் போய்த் தப்பாமற் பலிக்கத்தக்க அந்த நல்லமருந்தை மலையோடு கொண்டுவந்து, தமது துக்கநிவாரணம் ஆனவுடன் மறுபடியும் அதனை மலையோடுங் கொண்டுபோய்ச் சரியான அடையாளங்களைத் தாமே குறிப்பாகப் பார்த்துப் பொன்போல் இருந்தவிடத்திலேயே வைத்தார். ஆ! ஆ! அதையவர் மறுபடியும் கொண்டு வருவதிலுல் அவருக்கு வருத்தமும் உண்டோ? இல்லையல்லவா? அப்படி வருத்தமில்லா மலே அந்தச் சஞ்சீவிமருந்தைக் கொண்டுவந்து சேர்த்த ஆஞ்சநேயருக்கும், தன் காற்று மேலே படிவதற்கு முன்னேதானே இறந்து போனவர்களுக்கெல்லாம் உயிரைத்தந்து உற்சாகத்தை உண்டாக்கிய சஞ்சீவி மருந்திற்கும், இணைசொல்லவும் உண்டோ? நொந்தவர்களுடைய நோவை தீர்ப்பது அந்த மருந்துக்கு அற்பமாகுமல்லவா. இப்பால் ஒருநொடிப் பொழுதுக்குள்ளாக இராமாநுஜரானவர் இந்திரலோகவாசிக ளெல்லோரும் சந்தோஷங்கொண்டாடும்படி உயிர்த்தெழுந்தார். எழுந்தவுடனே ஸ்ரீராம கைங்கரிய துரந்தரசீலராகிய அநுமானைத் தமதிரண்டு திருக்கரங்களாலும் சேர்த்தணைத்து, என்னப்பனே! ஆஞ்சநேயா! தாரகமந்திர வாச்சியராகிய ஸ்ரீரகுகுலோத்தமரை அடைக்கல மடைந்த விபீஷணுழ்வானையும் பட்டுருவிச்சென்று அவரும் விழுந்தனரோ? விழுந்தாரில்லையல்லவா? என்று வினவி, அவர் தமக்கு ஓரபாயமுமில்லாமல் தம்மைத் தொழுதுகொண்டிருப்பதையும்பார்த்து, அப்படி பார்ப்பதற்கு முன்னுண்டாயிருந்த அச்சமும் துன்பமும் சிறிதும் இல்லாதவராகி, வேதவிருத்தாசாரமுள்ள தசமுக இராவணன் தன் புத்திரர் முதலிய பந்துக்களோடு நாசத்தையடைந்து சர்வலோக சரணியாகிய தம்முடைய அண்ணியார் சிறையிலிருந்து நீங்கினுற்போலக் குதூஹலமடைந்தார். மறுபடியும் ஆஞ்சநேயரை ஆனந்தக்கண்ணீரோடும் பார்த்து, சுத்தத்துவ கியானிகள் சேதனனுக்குச் சொரூபதருமமென்னும் பொருளானது கைங்கரியமேயல்லாமல் வேறல்லவென்று சொல்லியபடி இப்போது இவ்வநுமான் செய்து காட்டிய தன்மையை ஆலோசித்துப் பார்த்தால், இவ்வித பரமகைங்கரிய சீலராகிய அநுமானைத் தமக்குத் தாஸ்யனுக உடைய ஸ்ரீராமபிரானுக்குச் செய்தற்கு அருமையாகிய காரியமும் உண்டோ என்பதைக் காண்பிக்கின்றதல்லவா? இம்மை மறுமைப்பயன்களை யோசித்துப்பார்த்தால், தருமமே ஜெயத்தையும் பாவமே அபஜயத்தையும் அடையுமன்றே? என்று பேசியபின் அவ்விளையபெருமாளும், சுக்கிரீவமகாராஜரும், விபீஷணுழ்வானும், ஆஞ்சநேயரும் மற்ற வானரப்படைத்தலைவர்களும்

எழுந்து, ஆகாயத்தை யளாவிய அநேக பிரேத பர்வதங்களைக்கடந்து இரத்த ஆறு களைத் தாண்டிச்சென்று தங்களைக் காண வேண்டிவரும் ஸ்ரீராமபிரானைத் தெண்டனிட்டு நின்றார்கள். அவரவர்களை நோக்கி யுத்தம் என்னமாய் முடிந்ததென்று வினவினார். அதுகேட்ட அதிமேதாவியாகிய சாம்பவர் சுவாமியினுடைய திருவுளத்துக்கு ஏற்கும்படி இளையபெருமாள் யுத்தத்தில் இரதகஜதுரகபதாதிகளைத் தும்சப்படுத்தி இராவணன் எய்த மோகனாஸ்திரத்தை விபீஷணாழ்வானுடைய சொல்லினால் ஸ்ரீமகாவிஷ்ணுவின் அஸ்திரத்தைப் பிரயோகித்து அழித்ததையும், அதுநோக்கி அந்தத் தசமுகன் விபீஷணாழ்வான்மேல் வேலெறிய அதை யான் ஏற்றுக்கொள்ளுகிறேன் யான் ஏற்றுக்கொள்ளுகிறேன் என்று சுக்கிரீவமகாராஜா முதலானோர் சென்றதையும், அவர்களை விலக்கிவிட்டு இளையபெருமாள் ஏற்றுக்கொண்டு உயிர் சோர்ந்ததையும், உடனே அநுமானானவர் தாவிச் சென்று சஞ்சீவி கொண்டு வந்ததையும், இலட்சுமணர் உயிர்த்தெழுந்ததையும், மற்றுமுள்ள செய்திகளையும் சாங்கோபாங்கமாகச் சொன்னார். இப்படிச் சொன்னதுக ளெல்லாவற்றையும் கேட்டருளியஸ்ரீராமச்சந்திரரானவர் வாயு புத்திரரைத் திருமார்போடிறுகத் தழுவி, உன்னை யான் பெற்றிருக்கின்றேனாதலால் இனிப் பெறவேண்டியது முண்டோ? ஓ நவவியாகரண பண்டிதனே! யாதொரு துன்பமும் அடையாத ஆயுளை யடையக் கடவாயென்று திருவாய்மலர்ந்தருளினார். அப்போது மிகுதியும் அன்புள்ள ராமானுஜர் மேகம் வருஷிப்பதுபோல இரண்டு தாமரை மலர்போன்ற நேத்திரங்களிலிருந்தும் தாரைதாரையாய் நீரொழுக விம்மி விம்மியழுது, உயிர் புறத்திலே செல்லத் தனித்து நின்ற உடலை ஒத்தவராகி, முன்னே பிரிவென்கிற துன்பத்தைத் தமக்குக் கொடுத்துவிட்டு நிரதிசயானந்த பரமபதத்தை யடைந்த பிதாவாகிய தசரத சக்கரவர்த்தியைக்கண்டாற்போலத் தமது அண்ணராகிய ஸ்ரீராமபிரானைக்கண்டு நமஸ்காரஞ்செய்து சமீபத்திலேபோய் நின்றார். அவ்வாறு நின்ற இளையபெருமாளைப் பெரியபெருமாளானவர் செவ்வையாக உற்றுப்பார்த்து, என்னப்பனே! இலக்ஷ்மணா! நம்மைச் சரணமடைந்த விபீஷணாழ்வானுக்காக உன்னுயிரைக்கொடுத்த தாதுர்த்துவமானது நம்முடைய மரபுக்குத் தகுதியானதே. ஓ துளபமாலை யணிந்த மார்பையுடையானே! இப்படி உயிர்கொடுக்கவும் துணிந்தா யல்லவா; இதற்குச் சாஸ்திரப் பிரமாணம் வேண்டியதில்லை. இது நீ செய்வதற்கு அடுத்ததே யாகும். முன்னாலே நம்முடைய வமிசத்தில் ஒரு புறாவின்பொருட்டுத் தன்னுடைய தேகத்தை அரிந்துகொடுத்த தெய்வத்துக்குச் சமானமாகிய சிபிச்சக்கரவர்த்தியும் உனக்கு ஒப்பாகமாட்டாரென்றால், மற்றஎவர்களை உனக்கு உவமைசொல்லுகிறது? மிகுந்த அருளுடையாரென்பவர்கள் தங்களை அடுத்தவருக்கு ஓராபத்து நேரிடக்கண்டால், தங்களில் ஒன்றுக்குச்சம்பவித்த இடரைக்கண்டு சகியாத பசுவுங் கன்றும்போல இரக்கமடைவார்களல்லவா? என்று சொல்லி நீல நிறச் சூரியனையொத்த தேககாந்தியையுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் தமது திருத்தம்பியார்பூண்டிருந்த கவசமுதலிய யுத்த பூஷணங்களையெல்லாம் ஒவ்வொன்றாகக் கிரமமாய்க்களைந்து, வில்லை ஆஞ்சநேயர் கையிற் கொடுத்துவிட்டு, தமது தலையிற் சுருண்டு நீண்டு தொங்குகின்ற கேசத்தால் மேலே மேகந்தவழ்கின்ற மேருமலையைப் போல விளங்குகின்ற லக்ஷ்மணருடைய ஆயாசத்தை ஆற்றிக்கொண்டிருந்தார்.

வேலேற்றபடலம்-முற்றிற்று.

---

## வானரர்களங்காண்படலம்.

அந்தச் சமயத்தில் அளவில்லாத வானரசேனையோடு சுக்கிரீவ மகாராஜாவானவர் ஸ்ரீராமபிரானுக்கு முன்னே நின்று தண்டன் சமர்ப்பித்து, சுவாமி! ராக்ஷச சமூக மிகுதியைக்கண்டு வானரசேனாவீரர்கள் நடுங்கித் திகைத்துத் தைரியமிழந்து இன்னது நாம் செய்யவேண்டுமென்பதையும் யோசியாமற் பயமடையும்படியாயும், திரிலோகங்களுக்குள் வசிக்கின்றவர்களிலும் அதிகக்கூட்டமாயும், வடவாமுகாக்கினி பரந்து உயர்ந்து எரிந்து வருவது போன்று மூலபலம்வந்ததே. அஃதென்ன

மாய் முடிந்ததென்று விண்ணப்பம் செய்துகொண்டனர். அதுகேட்டருளியஸ்ரீரகுநாயகர் ஓ மகாராஜாவே! அம்முடிவைப் பார்க்கவேண்டுமானுல் படைத்தலைவர்களும் நீயுமாக விபீஷணுழ்வானேடு யுத்தகளம் போய்ப் பாருங்களென்று அருளிச்செய்தனர். உடனே வானரவீரர்களெல்லாம் மூலபல மடிந்ததைக் காணவேண்டுமென்கிற ஆசையானதுதங்களைத் தூண்டுவதினுலே சடக்கென எழுந்திருந்து விபீஷணுழ்வானை நோக்கி, ஐயா! நமதையன் மூலபலசேனையிற் செய்த பராக்கிரமத்தைப்போய்ப் பார்ப்போம் விரைவிலெழுந்திருந்து வாருமென்று அழைத்துக்கொண்டு அதிதுரிதமாய்ச்சென்று, கழுகுகளும் பருந்துகளும், பேய்களும், பூதங்களும், மற்ற மாமிசபட்சணிகளும் கூட்டங்கொண்டிருக்கின்ற போர்க்களத்தைத் தங்கள் கண்களாற் பார்த்தார்கள்.

அப்படி பார்த்தமாத்திரத்தில் யாவரும் திப்பிரமையாய் நின்று, ஆ! ஆ! இவ்வளவுபேரையும் ஒருவில்லுடனே ஸ்ரீராமபிரான் ஒருவர் சகாயமும் வேண்டாமற் கொன்றூரல்லவோ? அதனுல் அவர் திருமேனிக்கு என்ன ஆயாசந்தோன்றிற்றே? என்று கண்ணீர்விட்டு அழுதார்கள். இத்தனை ராக்ஷசர்களையும் ஸ்ரீரகுநாயகர் எப்படி கொலைசெய்தாரோவென்று உடலுமுள்ளமும் நடுங்கினூர்கள். ஸ்ரீராமச்சந்திருடைய கீர்த்தியை வாயாரப்பாடி ஆரவாரித்து உற்சாகத்தோடு தேகம்பூரித்தார்கள். அவ்விடத்தே ராக்ஷசர்கள் அடைந்திருக்கின்ற கோரத்தைக்கண்டு பயந்தார்கள். இந்தத்துராத்துமாக்கள் நம்முடைய சுவாமியை வந்து எதிர்த்தார்கள் அல்லவாவென்று உள்ளத்தில் மிகுந்த கோபங்கொண்டார்கள். நமது ஆண்டவருக்கு இப்பேர்ப்பட்ட சிரமமும் நேரிட்டதோவென்றுதுக்கத்தால் உயிர்தடுமாறி, எப்படிக்கு இருந்தபோதிலும் இவர்கள்யாவரையும் கொன்றுமுடித்தாரல்லவா வென்னும் சந்துஷ்டியினுல் உயிர் நிலைத்துநின்றூர்கள். இந்தப்படி அந்த வானரவீரர்கள் அடைந்தவிதங்களை இன்னது இன்னதென்று அறிந்து சொல்ல வல்லவர்கள் யாருண்டு? ஆயிர வருஷமாகப் பார்த்தாலும் நம்மாற்பார்க்க முடியாதென்று சொல்லிக்கொண்டு அந்தந்தவிடங்களிற்போய்ப் பார்க்குந்தோறும் அதிசயித்து நின்றூர்களேயல்லாமல் முடியக் காணுதவர்களாகி, ஓ விபீஷணுழ்வானே! ஏழுசமுத்திரங்களும் ராக்ஷசவுருவங்கொண்டு வந்ததுபோல இந்தப் பாதகர்கள் தோன்றுகின்றூர்களே; எங்களாற் கண்டுணரக் கூடவில்லையே; இதனை நீர் தெரிந்து சொல்லவேண்டும் என்று வானரப் படைத்தலைவர்களும் சுக்கிரீவமகாராஜரும் கேட்டுக்கொள்ள விபீஷணுழ்வான் சொல்லத்தொடங்கினூர்.

ஓ நண்பர்களே! எமனுனவன் பிரியாமல் வசிக்கின்ற கூர்மையுடைய ஸ்ரீராமபாணத்தால் இறந்ததுகளாய்க் கீழேவிழுந்து படிந்திருந்தபோதிலும், பந்தலைப்போல மேலே காகக்கூட்டங்கள் மொய்த்துக்கொத்திக்கொண்டிருக்கின்ற யானைப்பிரேதங்கள் யுத்தகளத்தில் வெளியில்லாதபடி ஒன்றின்மேலொன்று விழுந்து மேகராசிகள் நிறைந்து தவழ்கின்ற உயர்ந்த பர்வதம் போலத் தோன்றுகின்றதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! அப்புறத்தே தங்களுடைய சிவந்த கண்களால் உருட்டிப்பார்த்தே வெற்றிபெறத்தக்க குரூர ராக்ஷசர்களுடைய உடல்களில் ஸ்ரீராமபாணங்கள் எனக்கு உனக்கென்று ஒன்றின்முன் ஒன்றுசென்று தைத்து உயிரையுண்டதினுற் கிடக்கின்ற அவ்வுடல்களிலே பொத்திய அந்தப் பாணங்கள், சிங்கங்கள் வசிக்க யோக்கியமான பெரிய மலைகளில் நுழைந்து உறங்குகின்ற சர்ப்பங்களைப்போலத் தோற்றுவதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! உதிர்ந்து கிடக்கின்ற கோரதந்தங்களின் இராசிகள் மணற்குன்றுகளைப்போலவும், பரந்து விழுந்திருக்கின்ற கறுத்த உடல்களின் பரப்பு கருங்கடலைப்போலவும், தங்கள்தங்கள் நாயகன்மார்களைத் தழுவிக் களிப்போடு பிராணனைவிட்ட கற்புள்ள ராக்ஷசஸ்திரீகளுடைய ஒளியுள்ள முகங்கள் அக்கடலிற்பூத்த தாமரைமலர்க் காட்டைப்போலவும், அம்முகங்களில் தாவிதாவி ஆரவாரித்துக் கொத்துகின்ற கழுகுகள் கீதங்களைப் பாடிக்கொண்டு மொய்க்கின்ற வண்டுகளைப் போலவும் விளங்குவதைப் பாருங்கோள்.

ஓ நண்பர்களே! கூரிய பாணங்களென்னும் இடிவிழுந்தபோது கட்டியகுதிரைகள் இறந்ததினுல் வெள்ளைக்கொடிகள் பா

ய்களாகவும், அக்கொடிக்காம்புகள் பாய்மரங்களாகவும், பெரியதேர்கள் அடர்ந்தோடுகின்ற உதிரமாகிய கடலில் மரக்கலங்களைப்போல மிதந்து செல்வதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! மும்மதங்களும் பெருகி வழிகின்ற யானைகள் தமது உடலில் அம்புகள் பாய்ந்து உருவிச்சென்ற காரணத்தால் எழுந்து செல்லமாட்டாமல் தேர்களாகிய மரக்கலங்கள் ஓடுகின்ற ரத்த சமுத்திரத்தில் திமிங்கிலமென்னும் மீனரசானது கடலின்மேல் தலையைத் தூக்கித் தூக்கிப் பார்ப்பதுபோலத் தமது தலைமேலே தோன்றுகிறதும் மூழ்கிறதுமாக இருப்பதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! யானைகளைப்போலக் குதிக்கின்ற கவந்தங்களோடு கைகளைக்கோர்த்துக் கொண்டு தாளப்பரிமாணப்படி நடிக்கின்ற பேய்கள், அபிநயம்பிடித்து ஆடுகின்ற நடனத்தைத் தம்முடைய மாணாக்கர்களுக்குக் கற்பிக்கும்படி தாமும் அவர்களோடு கூடிக் காலடைவுபோட்டு அபிநயிக்கின்ற பரதசாஸ்திரிகளைப்போலத் தோன்றுகின்றதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! வெற்றிவீரர்களுடைய கவந்தங்களோடு பொறிகளுடன் பொறிகள் பொருந்தக்கூடிக் கைகளைப்பிணைத்துத் தழுவிக்கொண்டு நிர்த்தனம்பண்ணுகின்றபேய்கள் கோடரிபோலக் கூர்மைவாய்ந்து கீழேகிடக்கின்ற பல்லிடுக்குகளிலே தங்கள் கால்கள் சிக்கிக்கொண்டு நரம்புகளால் தளைக்கப்படுதலால், அப்பேய்கள் இக்கவந்தங்களோடு நடனஞ் செய்ய நம்மாலாகாதென்று கை சோரவிட்டு மெள்ள நழுவிச் செல்கின்ற தன்மையைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! பொன்பட்ட மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற புள்ளிநெற்றியுள்ள கலைமாறிப் பின் முன்னாக ஒன்றோடொன்று கால்கள் பிணைந்து கிடக்கின்ற பலயானைகள், தனக்குச்சமானமில்லாத தமது உடலுக்கு இரண்டு பக்கங்களிலும் தலைகளுண்டென்னும்படி விசித்திரமாய்க் காணப்படுகிறதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! கருங்கடலையொத்த தேகத்தைவகித்த கொடிய ராக்ஷசர்களுடைய அறுபட்ட தலைகளின் ஆவென்றுதிறந்தவாய்களிலே இன்னமும் யுத்தத்திற் கோபத்தோடு சிரித்த சிரிப்பும் புகையோடுகோபத்தீயும் விளங்குகின்றமையால், அந்தவாய்கள்பொறித்திரளும்புகையும் அக்கினியும் அமைந்த பலபல ஓமகுண்டங்களைப்போலத் தோன்றுகின்றதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! மின்னுகின்ற பொன்னாற்செய்த பட்டமணிந்த வெற்றியுத்தஞ் செய்யத்தக்க யானைகளுடைய அறுந்ததலையின் காதுத்தொளையில் அடிக்காம்பு பொத்திக்கொண்டு கடைகுழைந்திருக்கின்ற ஒளிபொருந்திய சாமரைகள், தமது கருணாவேசமாத்திரத்தால் அகண்ட ஐஸ்வரியத்தை யடைந்திருந்த சத்கர்மராஜர்கள் செல்வச்செருக்கால் பின் அகிர்த்தியங்களைச்செய்யத்தலைப்பட்டமாத்திரத்தில் பாக்கியங்களையெல்லாமிழந்து அவர்களும் மாளுவதற்கு ஒருற்பாதமாகச் செந்தாமரை போன்ற திருமுகமண்டலத்தையுடைய ஸ்ரீ மகாலட்சுமி பொற்றாமரைப்பூவில் தலைவளைந் துறங்குவதைப்போலத் தோன்றுந் தோற்றத்தைப் பாருங்கோள்.

ஓ நண்பர்களே! தங்களுடைய கூட்டங்களோடுசேர்ந்துநின்று யுத்தம்பண்ண விரும்பாமல் தனித்தனியாக முன்னே சென்று அதிகோபங்கொண்டு வந்த யானைகளினது வெள்ளியதந்தங்கள், ராக்ஷசவீரர்களுடைய உடலில் வடிகின்ற ரத்தப்பிரவாகத்தில் அங்கங்குதோன்றுகின்றன. அவை இளஞ்செவ்வானத்தில் மேகராசியின் மத்தியில் விளங்குகின்ற மூன்றாம்பிறைச் சந்திரனைப்போலத்தோன்றுகின்றன பாருங்கோள். ஓ நண்பர்களே! பூதங்கள் அதோ கிடக்கின்ற கொடிக்கூட்டங்களின்மேலும், வில்லுக்குப்பைகளின்மேலும்,அம்புக்குவியல்களின்மேலும்,வேல்ராசிகளின்மேலும் குவிந்த தேர்களின்மேலும், யானைகளின் மேல்அலங்கரித்த அவுதாரிகளின்மேலும் உட்கார்ந்துகொண்டு, இராக்ஷசர்களுடைய கண்களிற்பிறந்த தீப்பொறிகளால்வெந்து பக்குவப்பட்டிருக்கின்ற மாமிசங்களை எடுத்தெடுத்துத்தின்று தேகம் பூரிக்கின்றதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! மழையாய்ப் பெய்து ஆத்துமவர்க்கங்களைச் சிருட்டிப்பதும், உணவுகளையுண்டாக்கித் தானுமுண்ணும் நீராய்நின்றுரட்சிப்பதும், முடிவில் எங்குங்கோர்த்துக்கொண்டு அழிப்பதுமாகிய காரணத்தால் முந்நீரெனவும், சகரர்களால் தோண்டப்பட்ட ஏதுவால் சாகரமெனவும் பேர்பெற்ற சமுத்திரமும் ரத்தக்

கடலும் ஒன்றுடனேயொன்று கலந்து பெருகுவதினால், உதிரவெள்ளத்தோடுவந்த யானைப்பிரேதங்களைத் தமதினமென்று நினைத்துவந்த சுறுமீன்கள் சமீபத்திலே வந்து தமது இனமில்லாமையைக்கண்டு பயந்து இவைமலைகளோவென்று சந்தேகித்து, இனமென்று முன்னே நாம் நினைத்ததற்காக நாணித் தமது இருப்பிடத்துக்குப் போகின்றனபாருங்கோள். ஓநண்பர்களே! ககனமார்க்கத்தினின்று யுத்தஞ் செய்தவர்களை ஸ்ரீராமபாணமானது சென்று துண்டித்ததனால் அவர்களுடைய பர்வதாகாரமாகிய தேகங்களானவை சர்வலோகசரணியர்மீது போர்செய்ய வீராவேசத்தோடு வருபவர்கள் மேல்விழுந்ததினால், அந்தப் பிரேதங்களுக்குள்ளே அகப்பட்டுக்கொண்டும் அவற்றில் நின்று நீங்கச் சக்தியற்றவர்களாய் அவர்கள் கைகால்களையுதறிக்கொண்டு உபத்திரவப்படுவதைப்பாருங்கோள். ஓ நண்பர்களே! மிகுதியும் அடர்ந்து மொய்த்துவந்த இரதகஜதுரக பதாதியென்னும் நால்வகைப்படைவீரர்களது உடலில் நின்றுந் தெறித்த இரத்ததாரைகள் தனதுமேனியிற் பட்டதினால் சூரியன் ஆகாசமத்தியில்வந்தவனாயிருந்தும்,உதயகிரியின் சிகரத்தில் உதித்தவனைப்போலக் காணப்படுகிறதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! தங்களுடைய பராக்கிரமமுற்றும் ஓய்ந்த குரூரராக்ஷசர்கள் துண்டிக்கப்பட்டகாலத்தில் அவர்களுடைய தேகத்திலிருந்து இது ஆறுதானோவென்னும்படி மேலேசென்ற உதிரத்தில்மூழ்கிச்சிவந்தநிறம் அமைந்து வேற்றுருவமாய் நின்ற சந்திரன், வேறேயொரு சூரியபிம்பத்தைப்போலத் தோன்றுகின்றதைப் பாருங்கோள்.

ஓ நண்பர்களே! வானமும் பூமியும் உதிரத்தால் நனைந்துபோகவும் சமுத்திரம் உதிரமயமாகவும் ஓங்கியெழுந்த மகா ரத்தப் பிரவாகத்தில் மாமிசபட்சணிகளாகிய பட்சி ஜாலங்கள்மூழ்கி எழுந்து விருக்ஷங்களின்மீது உட்கார்ந்து தமது சிறகுகளை யுதறுவதினால் ரத்தத்துளிகள் நிரம்பப்பட்டு, மலர்ந்த பூக்களில் தேனுண்ணவந்த கறுத்த வண்டுகளும் செவ்வண்டுகளாகிக் காடுகளும்உத்தியானவனங்களும்செந்தளிர்களைத்தளிர்த்ததுபோலத்தோன்றும்அதிசயத்தைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! மலைகளைக் கண்டாலும் போர்செய்யத்தக்க மதங்கொண்ட யானைகளினது இரண்டு தந்தங்களிலும் உதிர்ந்த முத்துக்களையும் அரக்கர்கள் தரித்துவந்த ஆபரணங்களிலுள்ள நானாவித ரத்தினங்களையும் வாரிப் பக்கங்களிலே குவியும்படி அலைகளாலெறிந்துகொண்டும், யானைகளைத் தடுக்கும் மரங்களை உருட்டிக்கொண்டும், கழுகுமுதலிய பட்சிகள் ஆரவாரிக்க வெண்பட்டுக்குடைகளையும், வெள்ளைக்கொடிகளையும், சாமரைகளையும், நுரைகளாகச் சுமந்துகொண்டும், பாரமாகிய பிரேதங்களைக் கரையில் ஒதுக்கிவிட்டுக் கடலோடு சங்கமமாகின்ற பெரிய செந்நீராறுகளைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! வட்டமாக விசாலித்துக் கிடக்கின்ற யானைப்பிணங்களே பெருங்கரையாகவும், ஒன்றின்மேலொன்றாக அடுக்கி வீழ்ந்த புயங்களே கற்களாற் கட்டிய மேடைகளாகவும், உயிர்மாய்ந்து உள்ளே கிடக்கிற குதிரைகளே அலைகளாகவும், யானைத்துதிக்கைகளே தண்டுகளாகவும், ராக்ஷசஸ்திரீகளுடைய ரத்தம்படிந்த முகங்களே அந்தத்தண்டுகளில் மலர்ந்த செந்தாமரை மலர்களாகவும், சுருண்டு சுருண்டு கிடக்கின்ற குடல்களே தாமரையிலைகளாகவும், நிணங்களே சேறாகவும், தேங்கிநிற்கின்ற உதிரமே தீர்த்தமாகவும், அநேக புஷ்கரணிகள்போல அவைதோன்றுவதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! பெரிய ஆயுதங்களாகிய கலப்பைகளால் உழுவதினால் நிணமாகியசேற்றில் உதிர நீர் நிறையத் தேங்கியிருப்பதினாலும், அந்நீரிலே யுழுத எருமைகளைப்போல யானைப்பிணங்கள் கிடப்பதினாலும், விசாலமாகிய பரம்பிலே தாமரை மலர்களைப்போல உள்ளங்கைகள் விளங்குதலாலும், நாற்று முடிகளைப்போலக் கைகள்மாறி நட்டுக்கொண்டு வீழ்ந்திருப்பதினாலும், அந்தவிடங்கள் நாட்டிலுள்ள வயல்களைப்போலக் காணப்படுவதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! தமது திருக்கரத்திலே பிடித்த கோதண்டத்தினின்றும் பலஇடிபோலக் குணடங்காரவோசை பல உண்டாகவும் திண்ணிய பர்வதங்களைப்போல அரக்கர்கள் விழவும் புறப்பட்ட ஸ்ரீரகுநாயகருடைய பாணங்கள், ராக்ஷசர்களுடைய உடலை யுருவியதும் போதாமற் பூமியை யுருவிக்கொண்டு நாகலோகத்தை

ச்சேர்ந்த துவாரத்தின் வழிகள்தோறும் யானைப்பிரேதங்களை இழுத்துச் சுழித்துக் கொண்டு பூர்வத்திலே ஆதிபுருஷ வராகப் பெருமானுடைய திருவடிக்குளம்புபட்டுப் பூமி பொத்தலாய் அதன்வழியே பாகீரதி நதி ஓடியதுபோல ஓடுவதைப் பாருங்கோள். ஓ நண்பர்களே! தாரக மந்திரவாச்சிய ஞகிய ஸ்ரீராமபிரானுடைய பாணங்கள் கஜங்களினுடைய தும்பிக்கைகளையும், முன்னங்கால்களையும், பருத்த கழுத்தையும், அரக்கர்களுடைய நீண்ட புயங்களையும், மார்பையும், வெகுவாய்க் கண்டித்தும் தமது வேகமடங்காமல் பூமியையும் உருவிச் சென்றனவே அல்லாமல்; அந்த யானைகளின் உடல்களிலும் ராக்ஷசர்களின் தேகங்களிலும் ஒருபாணமானது தைத்துக்கொண்டபடி நின்றதுண்டோ பாருங்கோள். ஓ நண்பர்களே! இந்த மூலபலத்தில் வந்த குதிரைகளும் யானைகளும் அநேகம் ஆயிரகோடியாயினும், அவற்றுள் விசேஷமானவைகளைச் சொல்லுகிறேன் கேளுங்கோள். இதோ பாகர்களோடு இறந்து கிடக்கின்ற பத்துக்கோடிக் குதிரைகளும் குமுத மலர்போல மணம்வீசும் வாயையுடையவைகளாயும், நர்த்தனத்தில் தேர்ந்தவைகளாயும், யானையைப்போலக் காணப்படும் பாரிய தேகமுடையவைகளாயும், அமுதத் தோடுகூடப் பிறந்தவைகளாகும். ஓ நண்பர்களே! இங்கே செத்துக்கிடக்கிற பன்னிரண்டுகோடி யானைகளும் தேவசிரேஷ்டனுகிய பிரம்மதேவன் முன்னுள்செய்த யாகத்திலே பிறந்தவைகள். மேலும், மழையும் மேகமும் சமுத்திரமும் கங்காநதியும் ஒரு காலத்தில் வறண்டுபோம். அப்படி வறண்ட காலத்திலும் இவைகளோ மதமொழியாது பெய்கின்றவைகளாகும். ஓ நண்பர்களே! இவ்விடத்திலே கோபவெறியாறியும், உயிரொழிந்தும், உதிரமெல்லாம் வடிந்துபோயும், ஓயாமல் மதத்தைப் பொழிந்துகொண் டிருக்கின்ற பதினுன்குகோடி யானைகளும், மேகவாகனனுகிய இந்திரனுடைய திசையிலுள்ள ஐராவதத்தின் பரம்பரையைச் சார்ந்தவைகளாகும். ஓ நண்பர்களே! இந்தவிடத்தே பிராணன் நீங்கிக் கிடக்கின்ற பத்மமென்னும் கணக்குள்ள யானைகள் தம்முடையதேகபாரத்தைச் சுமக்கமாட்டாமல் பூமி சாய்ந்துபோவதாயிருந்தால் அந்தப் பூமியை அநாயாசமாகத் தனித்தனிச்சுமக்கவல்லதுகள். மற்றயானைகளைப்போல இமைகொட்டமாட்டாதுகள் சார்வபௌமமென்னும் யானையின்வமிசத்திற் பிறந்தவைகளாகும். ஓ நண்பர்களே! பிரேதமாய்க் கிடக்கின்ற இந்த ஆயிரங் கோடி யானைகளும் முன்னுலே இந்திரன் ராவணனுக்குகப்பங்கட்டினவைகள். கணக்கில்லாமல் இறந்துகிடக்கின்ற இவ்வானைகளெல்லாம் நிருதியென்பவன் லங்காதிபதிக்குத் திறைகொடுத்தவைகளாகும். ஓ நண்பர்களே! கொலையுண்டுகிடக்கின்ற இந்தப் பத்துலக்ஷம் குதிரைகளும் க்ஷீரசாகரத்திலே அமிர்தோதயகாலத்தில் அதனோடு சனித்தவைகள். தசக்கிரீவன் தன்னோடு பகைகொண்ட வருணராஜனை ஜெயம்பெற்று அபகரித்தவைகளாகும். ஓ நண்பர்களே! சின்னுபின்னப்பட்டுக் கிடக்கின்ற இந்தப் பத்துலக்ஷங் குதிரைகள் பிரதாப லங்கேஸ்வரனுக்குத்தோற்றுக் குபேரனோடிப்போனபோது விட்டு விட்டவைகளாகும். பத்மமென்னும் கணக்குள்ளனவாய் மடிந்துகிடக்கின்ற இந்தக் குதிரைகளோ வித்தியாதரராஜனை இராவணன் ஜெயங்கொண்டு பிடித்துவந்தவைகளாகும் என்று சொல்லிக்கொண்டுவந்தார்.

இப்படிச் சொல்லிக்கொண்டுவந்த ராவண சகோதரரை வானரேசர்கள்பார்த்து, ஐயா விபீஷணுழ்வானே! நீர் காட்டிக்கொண்டேவரவும், நாங்கள் பார்த்துக்கொண்டே வரவும், இன்னம் ஆயிரத்திலொரு கூறு முடியவில்லையே; ஆகையால் இனிப் பின்னே நீர்காட்ட நாங்கள்பார்க்கிரும். நம்முடைய சுவாமியினிடமேபோய்ச்சேருவோம். என்று தங்களுக்குள் பேசிக்கொண்டுசமஸ்தஅண்டங்களுக்கும் அவற்றுள் வசிக்கின்ற பிரமேந்திராதி சகல சேதனர்களுக்கும் தானே நியமனகர்த்தாவென்பதற்குக்குறியாகத் திருக்கரத்தில் சுதரிசனுழ்வானைத் தாங்கியருளிய ராமபிரானிடமே போய்ச்சேர்ந்து, அவருடைய சரணுரவிந்தங்களில் தண்டன்சமர்ப்பித்தெழுந்து பக்கங்களிலே உட்கார்ந்துகொண்டு, தாம்பார்த்துவந்த எண்ணந்தொலையாமல் மடிந்து கிடக்கிற இரதகஜதுரகங்களையும் ராக்ஷசர்களையும் நினைப்பார்கள். அவ்வளவு சேனைகளையும் இரண்டுமூன்று நாழிகைக்குள்ளா

கக் கொலைசெய்த அதிக பராக்கிரமமுடையனவாய் நீண்டுபெருத்துயர்ந்த தோள்களை உற்றுப் பார்ப்பார்கள். அப்படிப்பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்து பெருமூச்செறிந்து ஆனந்த சமுத்திரத்தில் மூழ்குவார்கள்.

இங்கே யிப்படியிருக்க, அங்கே பிரதாப லங்கேஸ்வரன் யுத்தத்தில் அயர்ந்து வந்தவர்களுக்கும், உள்ளன்போடு தன்னை உசாவவந்தவர்களுக்கும், தன்மாளிகையில் உண்ணத்தகுந்த போஜன பதார்த்தங்களை இட்டு விருந்து செய்யவேண்டுமென்று விரும்பி, சுவர்க்கலோக வாசிகள் வரக்கடவார்களென்று ஆக்கியாபித்தான். உடனே தூதுவர்களோடிப்போய்சொல்லக்கேட்ட தேவர்களும் தானவர்களும் ஓடிவந்து தன் சமுகத்தில் நிற்க அவர்களை ராவணன்பார்த்து, ஓ தேவதானவர்களே! இந்திரஜித்து வெற்றிகொண்ட அந்தநாளில் எப்படி பயத்தோடும் பக்தியோடும் போகங்களை எங்களுக்கு அமைத்து வைத்தீர்களோ? அப்படியே இன்றுமிங்கே அமைக்கவேண்டும். ஏதேனும் குற்றப்பட்டால் உங்கள் தேகத்தில் உயிர் நிலையாதென்பதை அறிவீர்களல்லவா என்று வெகு உறுதியாகக் கட்டளையிட்டான். உடனே யாதொரு குற்றமுமில்லாத நல்ல மதுவகைகளும், மாமிசவகைகளும், மற்ற அன்னபானாதிகளும், நல்ல ஆடைகளும், சந்தனங்களும் தரிப்பதற்கு யோக்கியமான மலர்வகைகளும், வாசனையூட்டிய ஜலவர்க்கங்களும், மிருதுவாகிய சயன சாமக்கிரியைகளும், மாளிகைக்கும் உள்ளும்புறத்தும்வந்து நிறைந்தன. அக்கால் தேவலோக ஸ்திரீகளாகிய அரம்பை மேனகை முதலானவர்கள்வந்து இராக்ஷச ராஜர்கள்முதல் அடிமைத்தொழிலாளிகள் வரையும் வந்துள்ள யாவர்க்கும் வாசனைத் தைலமிட்டு மணமுள்ள கலவைச்சந்தன அரைப்புகளால் மெல்லெனத் தேய்த்து, வாசனையூட்டிய நீரால் ஸ்நானஞ் செய்வித்து, நல்ல போஜனபதார்த்தங்களை யூட்டுவார்கள். மற்ற தேவதாஸ்திரீகளிற் சிலர் இசைப்பாட்டுகளைப் பாடுவார்கள். சிலர் அப்பாட்டின் பொருளுக்கிசைய அபிநயங் காட்டி நடனஞ்செய்வார்கள். வேண்டுமெண்டு விரும்பின அரக்கர்களைச்சிலர் அன்பு பெருகச் சயனஸ்தலங்களில் ஆலிங்கனஞ் செய்வார்கள். இப்படி முன்செய்த நல்வினைப்பயனால் சத்கிருத்திய வணிகனுக்கு முதற்பணங் குறையாமல் அதிக லாபமும் வந்தடைவதுபோலத் தான் முன்னேசெய்த தபோபலத்தாலுண்டாகிய எல்லாச் சுகங்களையும் எல்லாரும்போதுமென்றமட்டில் அனுபவித்துக்கொண்டிருப்பதை ராவணன் கண்டு குதூகலமாயிருக்கின்றபோது, சிலதூதர்களோடிவந்து நமஸ்காரம் பண்ணி அவன் காதோடு வாய்வைத்து, மூலபலசைனியமடிந்த வரலாற்றையெல்லாம் தங்கள் உடல்நடுங்கி நாவுலர்ந்து சுவாச மொடுங்கி, இருதய நிலைகுலைந்து கண்களருகியழுது, உள்ளே ஓடுகின்ற சொற்களைப் பலாத்காரமாக வெளிப்படுத்திச் சொல்லுவார்கள்.

ஐயா பிரதாபலங்கேஸ்வரா! ஓ தேவகுலத்தை நாசஞ்செய்த சௌரியவானே! தற்காலத்திலே விருந்துண்ணுகிற ராக்ஷச வீரர்கள்தான்உயிர்பிழைத்திருக்கிறவர்கள். நீர் ஆக்கியாபித்தபடியேபோன ஆயிரம் வெள்ளம் ராக்ஷசசேனைகள் யுத்தகளத்துக் குப்புறத்திலேபோய் நின்ற இரண்டுமூன்று நாழிகைக்குள்ளாக ராமனென்பவன் தன் ஒரு வில்லாலேயே அவ்வளவு சேனைகளையும் சின்னாபின்னப்படுத்திக் கொன்றான். இப்போது உம்முடையபராக்கிரமத்தாலே தேவர்களைக்கொண்டு ராக்ஷசர்களுக்குப் பிரபலகீர்த்தியைத்தரத்தக்க விருந்தினை நான் செய்வேனென்று நினைத்துச் செய்கிறீர். இதுசந்தோஷங்கொண்டாடத்தக்கதன்று உமது குலத்தார்க்கெல்லாம் இந்த விருந்தையே உத்தாகிரியையிற்செய்யும் அன்னபலியாகப்பாவித்துச் செய்யக்கடவீர். சப்த தீவுகளிலும் நானாவித பர்வதங்களிலும் வனங்களிலும் பாதாளமுதலிய இடங்களிலும் வசித்துவந்த ராக்ஷசர்களெல்லாம், ஸ்ரீராமனுடைய அம்புக்கு இரையாய் மடிந்துபோய்விட்டபடியாலே இந்த லங்கையில் வசிக்கின்ற சில ராக்ஷசர்கள்தான் உயிரோடிருக்கின்றவர்கள். உலகத்தில் வேறே இராக்ஷசப்பூண்டென்பதே கிடையாதென்றார்கள். அப்போது மற்றவர்கள் செய்து பெறக்கூடாத விருந்துசெய்து அந்தச் சந்தோஷத்தில்மூழ்கியிருந்த ராவணன் தூதுவர்கள்சொல்லிக்கொண்டுவந்த செய்திகளையெல்லாம் கேட்டமாத்திரத்தில், அவனுக்

குண்டாகிய துடிப்பும் கோபமும் அவமானமும் தன்னெஞ்சைப்பிளந்தன. வேண்டுமென்று சிவந்தசாயத்தையூட்டினாற்போல விளங்குகின்ற சிவந்தகண்களில் தீப்பொறி பறந்தது. பெருமூச்சு அதிகரித்தது. அக்காலவன் சித்தப்பிரமையடைந்து எழுதி வைத்தசித்திரத்தைப்போல ஒடுங்கி அசைவற்றிருந்துவிட்டான். அப்படி சற்றேயிருந்தபின் அந்த ராவணன் தன்னைத்தானே திடம்பண்ணிக்கொண்டு அடா தூதர்களே படையெடுத்துப்போன ராக்ஷச வீரர்கள் திரிலோக பயங்கரனை என்னைப் பார்க்கிலும் பலவந்தர்கள் எப்படிப்பட்ட யுத்தத்திலும்தோற்றுச் சாகமாட்டாதவர்கள். அவர்களை இத்தனைபேரென்று புத்தியால் அனுமானித்துக் கணக்கிடவும் முடியாது. சமுத்திர மணல்போன்ற பெருந்தொகையுள்ளவர்கள். இத்தன்மையான ராக்ஷசர்கள் ஜெயம்பெற்றார்களென்று சொன்னீர்களில்லை. ஜெயம்பெற்றார்க ளென்னுமற்போனாலும் அபசயப்பட்டு ஓடிப்போனார்களென்றாவது, யுத்தத்துக்குப்போகப் பயந்து தங்கள் தங்கள் இருப்பிடமேபோய்ச் சேர்ந்தார்க ளென்றாவது சொல்லாமல், ராமனென்னும் ஏகமனுஷியனால் இறந்தார்களென்று சொன்ன இந்தச்செய்தி உண்மைதானோ? பொய் சொன்னீர்கள்போலத் தோன்றுகிறதென்றான். இவ்வாறு பாபிஷ்டனாகி ராவணன் சொன்னதைச் சமீபத்திலிருந்துகேட்டுக்கொண்டிருந்த மாலியவான் அவனைப்பார்த்து, என்னப்பனே! இந்தமூலபலத்தை அழித்தலென்பது ஸ்ரீராமனுக்குரிய செய்கையாகுமோ? நாம் அனுப்பிய தூதர்கள் நம்மிடத்திலே பொய்யையும் சொல்லுவார்களோ? அந்த ஸ்ரீராமன் சமஸ்தலோகங்களையும் அழிக்கவேண்டினால் எவ்வளவோகாலம் வேண்டுமோ? ஓரிமைப்பொழுதுக்குள்ளே அழித்துவிடுவானல்லவா? அவனொருவனாயிருந்துஇவ்வளவுராக்ஷசப்பெருங்கூட்டத்தை எப்படி யழிக்கக் கூடுமென்பாயானால், விரிந்துகிடக்கிற சராசரங்களையெல்லாம் உகாந்தகாலத்தில் பார்வதியை இடப்பாகத்தில் வகித்த உருத்திரமூர்த்தி ஒருவரேயல்லவா தமது சங்கல்பத்தால் படுசூரணப்படுத்துகிறார், அவராமிசங்கொண்டு யுத்தகளத்திற் புகுந்தராமனுக்கு ஈதொருபெரிதோ? இஃதிருக்கட்டும். என்றுகூறிப் பின்னுஞ்சொல்லுகிறான்.

அப்பா ராவணா! தன்னோடொத்தாரும் தன்னிலுயர்ந்தாருமில்லாத ஸ்ரீமந்நாராயணன் தனது நிரேதுகடாக்ஷத்தால் அளவிடக்கூடாதபல்லாயிரங்கோடிஅண்டங்களையும் சிருட்டித்தும், ரக்ஷித்தும் சங்கரித்தும் விளையாடல் செய்கின்றானென்று, நித்தியமாயும் அதிபௌருஷமாயுமுள்ள வேதங்கள் சொல்லுவதை நாம் அறிந்திருக்கின்றோம் அல்லவா? அந்த ஸ்ரீஹரியே சேஷசயனத்தின்மேல் திருக்கண் வளர்தலைவிட்டுப் பிரமேந்திராதி சாதுக்களுடைய பிரார்த்தனையால் ஸ்ரீராமனாக அவதரித்தாரென்று விபீஷணன்சொன்ன சொல்லென்ன பொய்யோ? சாட்சாத்சாட்குண்ய பரப்பிரம்மமாகிய அந்தச் சர்வேஸ்வரனுடைய திருவுருவமாகிய பஞ்சபூதங்களில் தேயுவானது பூமியை விறகாகக்கொண்டு அந்தப் பூமியிலுள்ள மற்ற சராசரங்களையெல்லாம் நெய்யாகப்பெய்தால், அவையெல்லாவற்றையும் அத்தேயுவானது உடனே படுசூரணப்படுத்திவிடும், இவை நாம்அறிந்திருக்கிறோம், மற்றொரு பூதமாகிய மகாவல்லமையுள்ள வாயுவானது பர்வதங்களையும், விருட்சங்களையும், புல்லுகளையும், பலசீவராசிகளையும் மோதியடித்துப் பசையறச் செய்துகொல்லும். இது விஷயத்தையும் நாம் அறிந்திருக்கிறோம். இப்படி ஒவ்வொருபூதமே லோகங்களையும் அவற்றுலுள்ள சராசரங்களையும் அழிக்குமேயானால், அவையே உருவமாகக்கொண்ட ஸ்ரீராமனுடையபராக்கிரமத்துக்கு இப்போது நாம் அனுப்பிய மூலபல சைனியத்தைக் கொன்றதை ஒருவரம்பென்று சொல்லலாமோ? அப்பா இராவணா! முன்னே நீ தேவர்களோடும் அசுரர்களோடும் அநேக யுத்தங்கள் செய்திருக்கிறாய் அல்லவா? அந்த யுத்தங்களுக்குள் எந்த யுத்தத்திலாவது உன்மேல் ஓர் அம்பும் தைத்ததுண்டோ? இல்லையே. அப்படி நீ செய்த யுத்தத்தில் இந்திரனானவன் தன்னுடைய செல்வங்கள் யாவற்றையும் பற்றற உனக்கே ஒப்புவித்து விட்டதும் யதார்த்தந்தானே. இந்தப்பிரகாரம் நீசெய்த யுத்தப்பிரதாபம் லோகங்களெல்லாம் வியாபித்தபின்பு எங்கேயாவது ஒருயுத்தமும் நேரிட்ட

துண்டா? அதுவும் இல்லையல்லவா? இப்போது நீ ஸ்ரீராமன் பக்கலிற்செய்த அபசாரத்தாலே உன்னுடைய பிரதாபமும், சகோதர புத்திரர் முதலிய பந்துஜனங்களும், சாதியர்களும், அழிந்துபோனார்கள். இதென்ன உனக்குத்தெரியாததோ? ஆகையால் இனியாகிலும் தீர்க்காலோசனைசெய்து, ஜெகன்மாதாவாகிய சீதாபிராட்டியைக் கொண்டுபோய் விட்டுவிடும்படியான அறிவுக்கிசைந்த காரியத்தை நடத்தி, பிழைக்கும் வழியைப் பாரென்று சொன்னான். இப்படிச்சொன்ன மாலியவானை ராவணன் அதிக கோபத்தோடு பார்த்து, நான் லட்சுமணன்மேல் வேலைப்பிரயோகித்து அவனுடைய உயிரை யமனுக்கொப்புவித்தேன். அவன் இறந்துபோன துன்பத்தால் அங்கிருந்த வானரப்படைத்தலைவர்களெல்லாம் அழுதுக்கொண் டிருக்கின்றார்கள். இது சங்கதியை எப்படியும் அந்த ராமன் கேள்விப்படப்போகிறான். கேள்விப்பட்ட பின்பு தேகவாழ்க்கையை வேண்டாமற் பிராணத்தியாகஞ் செய்துக்கொள்ளுவான். இதுபரியந்தம் அவர்களால்எனக்கு அநேகதுன்பங்கள் நேரிட்டபோதிலும், இப்போது என்பக்ஷத்திலே யல்லவா செயம் என்று சொன்னான்.

இவ்வாறு மாலியவானைநோக்கி அதிபௌருஷத்தோடு இராவணன் சொல்லிக் கொண்டு வந்ததைக் கேட்டுக்கொண்டிருந்த தூதர்கள்மீட்டும் அவனை வணங்கி, ஓ எங்களாண்டவனே! அதுசங்கதி உமக்குத் தெரியாதோ? இப்போது நீர் சொல்லியதெல்லாம் யதார்த்தமே. அநுமானென்பவன் கொண்டுவந்தமருந்தால் உம்முடைய வேல்பட்டு இறந்த லட்சுமணன் உயிர்பெற்றெழுந்தான். உடனே அங்கிருந்த யாவரும் ஓர் சிறுபொழுதும் தாமசஞ்செய்யாமற் சடக்கென்றெழுந்து லக்ஷ்மணனோடு சென்று, சிவந்த தமரசமலர்போலுங் கண்களையுடைய தசரதராமனைச் சேர்ந்து ஒருவரையொருவர் ஆலிங்கனஞ் செய்து கொண்டு குதூஹலமாகவே யிருக்கின்றார்கள். எங்களுடைய சொல்லில் தேவரீருக்குச் சமுசயமிருந்தால் தம்முடைய நேத்திரங்களாலேயே பார்த்தறியலாம் என்று சொன்னார்கள். அவர்கள் சொன்ன சொல்லாலே லக்ஷ்மணரைச் செயம்பெற்றோமெ ன்று ஆனந்தித்துக்கொண்டிருந்த மனம் அதிதுக்கத்தோடு திடுக்கிட்டு, அந்தத் தூதர்களுடைய சொல்லினிடத்தில் நம்பிக்கை வையாமல் அதைக் கண்டறியும்படி சுவர்னமயமான கோபுரத்தின்மேலேறி, இலங்கையிலிருந்து சுரப்பெடுத்துப் பெருகிச் சென்றதுபோல அபரிமிதமாகச்சென்ற தனது சேனைவெள்ளம் அழிந்துகிடக்கின்ற எதார்த்தத்தை உள்ளம் நோவும்படி தன் இருபது கண்களாலும் பிரத்தியக்ஷமாகக்கண்டான்.

ஸ்ரீராமபாணத்தால் தலையறுப்புண்டு கிடக்கிற ராக்ஷசவீரர்களுடைய மனைவிமார்கள் கருங்குவளை மலரையும், கருநெய்தற் பூவையும், கருமையால் வென்ற தங்களுடைய கண்கள் தாரைதாரையாக நீர்சொரியும்படி அழுவதினால் செங்குமுத மலரைப் போலச் செக்கச்செவேலெனத் தோன்ற, இனி நமக்கார் ஆதரவென்று கைகளைத் தலையின்மேல் வைத்துக்கொண்டு தங்கள் தங்கள் புருஷபிரேதங்கள் அண்டையிலிருந்து கடலோசையும் அடங்கும்படியாகக் கோவென்று அலறியழுகின்ற ஓசையைத் தன் இருபது செவியாலும் கேட்டான். அன்றியும், அதிக துக்காக்கிராந்தனாய் அந்த யுத்தகளத்துக்கு மற்றொருபக்கத்தே திரும்பியபோது, அளவைக்கடந்த யானைப் பெரும்பிணங்களை ஏந்திக்கொண்டும், நீர் ஆழமட்டும் பூமியை ஊடறுத்து மலைகளைப்புரட்டி அடித்துக்கொண்டும், விரைந்தோடுகின்ற ரத்தநதிகளில், பேய்கள் புதுவெள்ள நீரில் ஸ்நானஞ்செய்வதுபோலக் குதித்துக்குதித்து மூழ்குகின்ற மிகுதியைத் துக்கத்தால் தனது கண்களிற் சுரக்கின்ற கண்ணீரைத் துடைத்துக்கொண்டு பார்த்தான். மேலும், வேறொருபக்கத்தில் ஆகாயத்தை முட்டவும் உயர்ந்த வலிய தோள்களையுடைய தங்கள் புருஷன்மார்கள்மேல் ஸ்ரீராமபாணம்பட்டு தொளைத்துச்சென்ற புண்களின் வழியாகப் பேய்கள் கைகளை நுழைத்துக் கொழுப்புள்ள புதுநிணங்களைத் தோண்டித்தோண்டி எடுத்துத் தின்பதைப்பார்த்த இராக்ஷசகுலஸ்திரீகள், ஐயோ! நம்முடைய நாயகன் இறந்துகிடக்கப் பேய்கள் தாறுமாறாகப் பிளந்து மாமிசங்களைப் புசிக்கின்ற கோரத்தை இந்தக் கண்களிருந்தபடியால் அல்லவோ பார்க்கி

ரோம்? இவை நமக்கு வேண்டாம் என்று துணிவுகொண்டு அவர்களில் சில அரக்கியர் அங்கே கிடக்கிற வாள்களாலும், சில அரக்கியர்கள்வாளெடுக்கும்நேரமும்சகியாமல் கூரியநகமுள்ள விரல்களினாலும், தங்கள் தங்கள் கண்களைப் பேர்த்தெடுக்கிறதைப் பார்த்தான்.

அன்றியும் நம்முடைய நிமித்தம் இத்தனை ராக்ஷசர்கள் மடிந்தார்களே யென்கிற துக்கத்தாற் பெருகுகின்ற உதிரநீரோடு இவர்களையெல்லாம் ஒரு மனுஷியன் கொன்றானல்லவா வென்கிற கோபத்தாற் பிறக்கும் தீப்பொறிகளைக் கொட்டுகின்ற கண்களையுடைய ராவணன், திருக்குருகாபுரியில் அவதரித்த பராங்குச பரகாலமுனீந்திரர் திருவாய்மலர்ந்தருளிய தமிழ்கள் முன்னோடு பின் மாறுதலில்லாமல் பரமவேதார்த்தங்களை அபாரமாய்த்தந்து வளர்வதுபோல, ஸ்ரீகோதண்டத்தில் நின்றும் ஸ்ரீராமபாணங்கள் புறப்பட்டு நேராகச்சென்று அபாரமாக ராக்ஷசர்களை உருவிக்கொண்டுபோனபடியால், அணியணியாக விழுந்து கிடக்கிற அந்த ராக்ஷசவீரர்களுடைய உடலினின்றும் பெருகி யோடுகின்ற ரத்தவெள்ளம் பாயவே, சங்கஸ்தானம் நிறைந்துபோய் கடலானது உதிர நீரைக் கக்குவதுபோல இரத்த அலைகளை அதிவேகமாய் வீசி மோதுவதைக்கண்டான். பின்னும் விண்ணுலகமும் பிளந்து நிலைமாறும்படி ஆரவாரிக்கின்ற வானர சமூஹத்தையும், அந்தப் போர்க்களமெங்கும் பிளந்து குழியும்படி துள்ளித்துள்ளிக் குதித்தாடுகிற கவந்தக்கூட்டங்களையும், கண்களும் நீலம் பூத்துப் போகும்படி இமையாமற் பார்க்கின்ற தேவர்களுடைய கொண்டாட்டத்தையும் கண்டான். இப்படி ராவணனானவன் பார்க்கப்பார்க்க மிகவும் நொந்து நெஞ்சு புண்ணாயினவனாய்க் கோபுரத்தினின்றும் இறங்கி, ஸ்ரீராமபிரானுடைய கோதண்ட பராக்கிரமத்தையும், அவரை எதிர்த்து மூலபலசேனை நிர்மூலமானதையும், நினைக்குந்தோறும் கலகலவென்று சிரித்து, கடைவாய்களை நாவுகளால் நக்கிக்கொண்டும், புகையெழும்படி பெருமூச்சு விட்டுக்கொண்டும், தீப்பொறிகள் பறக்கும் கண்களை விழித்துப் பார்த்துக்கொண்டும், பல பலவிதமான நினைப்புடையவனாகி; கோபாக்கினியானது மேன்மேலும் வளர்வதினால் குரூரமாகிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டுவந்து சிம்மாசனத்தின்மேல் உட்கார்ந்தான்.

வானரர்களங்காண்படலம்-முற்றிற்று.

## இராவணன் தேரேறுபடலம்.

இந்தப்பிரகாரமாக உட்கார்ந்த சாதுஜனகண்டனாகிய ராவணேஸ்வரனானவன் பர்வதாகாரமாகிய தேஹத்தையும், மேலெழுகின்ற கரும்புகையையொத்த புருவங்களையும், நெருப்புத் திரட்சிபோன்ற சிவந்த கண்களையும், மகோதரனென்னும் பெயரையுமுடைய பாபகருமங்களைச் செய்வதில் தனக்குச் சமானமில்லாதவனாகிய அவன் முகத்தைப்பார்த்து, யுத்தத்துக்குப் போய் மாண்டவர்கள்போகமீதியாய் இந்த இலங்காநகரத்துக்குள்ளிருக்கும் இராக்ஷசசேனாவீரர்கள் யாவரையும் போர்க்கோலம் பூண்டுவரும்படி பறைசாற்றுவிக்கக் கடவாயென்று சொன்னான். அவ்வாறே செய்விக்கிறேனென்றுசொல்லிவந்த மகோதரனது கட்டளையாற் கொட்டிய போர்ப்பறையோசையைக் கேட்டமாத்திரத்தில், ஆயிரத்து நானூறுகோடிராக்ஷசவீரர்களாகிய ரதகஜதுரகபதாதிசேனைகள்சமுத்திரம்வற்றியது போல தன்னிடத்தில் இனி ஒரு வீரனும் உண்டென்று சொல்லாதவண்ணம் லங்காநகரம்பாழாய்ப்போகும்படிக் கூடியதுகள். உடனே பிரதாபலங்கேஸ்வரனானவன்தனது அரண்மனையிற்போய் தன்குலதெய்வமாயும்லோகேஸ்வரராயுமுள்ள பரமசிவனைச் சிவாகமத்திற்கூறியமுறைமைப்படி பஞ்சாக்ஷரத்தை ஜெபித்து ஆத்மார்த்தமாகப் பூசித்தும், தன்னகரத்துள்ள சிவாலயங்களிற் பரார்த்தமாக அர்ச்சனை தீபதூபாதிகளெடுத்து ஆராதித்தும், நானாவித தானங்களைச்செய்தும், யார்யார் எதையெதைவிரும்பினார்களோ அவரவர்களுக்குஅதையதை வெகுமதியாகக் கொடுத்தும், பின் வாங்காமற்செய்கின்றயுத்தத்துக்குவேண்டிய அலங்காரங்களைச் செய்துகொள்ளுவதானான்.

ஸ்ரீ சர்வேஸ்வரனாகிய நாராயணன் அண்டங்களைச் சிருட்டிப்பதற்குத் துணைகாரணமாகிய பிரம்மதேவன் யாகத்திலே படைத்தகவசத்தை ஒருகாலத்தில் இந்திர

ஞனவன்பூண்டுவந்து யுத்தஞ்செய்து தோற்ருேடிப்போகவே, அவனிடத்திலிருந்து அபகரித்த அந்தக் கவசத்தை இரண்டுபக்கங்களிலும் அருவி நீரொழுகுகின்ற நீல மலையினிடத்தில், அநேக சூரியர்கள் உதயஞ் செய்தாற்போலத் தோன்றும்படி தனதுமார்பிற் பூட்டியும், மந்தரகிரியைச்சூழக் கட்டிய வாசுகியென்னும் சர்ப்பத்தைப் போல விளங்கும்படி உடைவாளை வலது பக்கத்தில்தொங்கப் பொற்கச்சிஞல் அரையில் இறுகக்கட்டியும், கிரகங்கள் மகமேருவைச் சுற்றி அயர்ந்துபோய் அங்கங்கே கூட்டங் கூட்டமாக நின்றுவிட்டாற்போலப் பிரகாசிக்கின்ற கிம்புரிப்பூணமைந்த கடிசூத்திரத்தை அரைப்பட்டிகையின்மேலிறுகப்பந்தித்தும், கருடபகவான் வேதங்களையேபக்கத்தில்விரித்துவைத்தாற்போற் பிரகாசிக்கிற தமது சிறைகளை விரித்ததையொத்த வெள்ளைப் பட்டாடையை உடுத்தியும், அதன்மேல் இருபக்கத்திலும் நிலாவானது வழிந்து ஒழுகுவதுபோல முறுக்கிய கொய்சகத்தைத் தொங்கச் சாத்தியும், அது அசையாமலிருக்கும்படி பொன்ஞற் செய்த சர்ப்பாபரணத்தாற்சூழஇறுக்கியும், கருமேகக் கூட்டத்தோடு அதனுள்ளிருக்கும் இடிகளைப்புறப்படுத்தி எடுத்து, ஆபரணமாகச்செய்ததையொத்த உடைமணியென்னு மணிவடமணிந்தும், பொற்ருமரை மலர்போன்ற வடிவமும் குகைக்குளிருந்து சிம்மராஜன் கர்ஜிப்பதுபோன்ற முழக்கமுமுள்ள சதங்கைமாலையைச் சாத்தியும், இடியோசையைக்கேட்ட பாம்புகளைப்போலத் திரிலோகவாசிகளும் பயந்தொளிக்கும்படி ஒலிக்கின்ற பொன்ஞற்செய்த வீரகண்டா மணியைத்தரித்தும், சரிந்து தொங்குவது போல ஒளியுள்ள செஞ்சாயந் தோய்த்த சீலையை அந்த வீரகண்டைக்கு வலப்பக்கத்தில் அணிந்தும், இருபதுகைகளுக்கு நடுவேபலதலைகளையுடைய ஆதிசேஷனது மிடறுகளில் விஷக்கறை தோன்றுவது போலத் தோன்றும்படி முன்கைத்தோற் கட்டும் விரற்புட்டில்களும்தரித்தும், பனைமரங்களைப் பொன்னிறமுள்ள நாகங்கள் தனித்தனியே சூழ்ந்து வளைந்தாற்போலக் கைகளில் கங்கணங்களைப் பூண்டும், திருப்பாற்கடலைக் கடைந்த மந்தரகிரியைச்சூழக் கட்டிய சர்ப்பராஜனைப்போல விளங்கும்படி தோள்களிற் வாகுவலயங்களை அணிந்தும், சூரியன் தன்ஞேடுபோர்செய்து ரத்தமயமாக உடல் குழம்பியோடச் செய்தாற்போலச் சிவந்த கிரணக்கூட்டங்களை வீசுகின்ற ரத்ன குண்டலங்களைக் காதுகளில் தொங்கவிட்டும், உதயகிரியிலுதித்த சூரியனுடைய கிரணச்சாலங்கள் கருங்கடலில் தவழ்வதுபோல குங்குமச் சந்தன மப்பிய எல்லாத் தோள்களிலும் குண்டலங்களின் ஒளி வீசிக்கொண்டிருக்க, அவற்றின்பக்கத்தே சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் வரிசைவரிசையாகநின்று பிரகாசிப்பதுபோல முகங்களின் இரண்டுபாரிசங்களிலும்பெரு முத்துமாலைகளைத் தொங்கவிடுத்தும் அலங்கரித்துக்கொண்டான்.

லங்காதிபதியாகிய ராவணேஸ்வரனனவன் இவ்வாறு சர்வாபரணங்களையும் பூண்டவனுய் உதயகாலத்திற் பன்னிரண்டு சூரியர்களும் கிரணராசிகளை வீசுவதுபோலச் சாஜ்ஜொல்யமாய்ப்பிரகாசிக்கின்ற பத்துமுடிகளின் மேலும், தங்களுக்கு நடுவே அநேக விண்மீன்கள் விளங்கும்படி பல சந்திரர்கள் பிரகாசிப்பதுபோல முத்துக் குடைகள் மேலே கவிந்து நிற்கவும், கருக்கொண்ட நீலமேகங்கள் தவழ்கின்ற ஆகாயத்திற் பத்துப் பெருங்குடங்களிருந்து அவற்றின்மேற்செவ்வானத்திஞெளிபடர அந்தகுடங்களுக்குஇருபுறத்திலும்பிறைச் சந்திரர்கள் முளைத்தாற்போலப் பத்து மலைக்குகைகளுக்குச் சமானமாகிய பெரிய கடைவாய்கள்தோறும் வளைந்த கோரதந்தங்கள் நிலாவீசவும், பத்துத் திசைகளிலுமுள்ள பத்து யானைகளின் முகங்களிலேயும் கட்டிய பட்டங்களைப்போல, ஒரு ராசியாயுள்ள பெருமுத்துகளின் ஒளி நிரம்பிய வீரபட்டங்கள் நெற்றிகளின்மேல் விளங்கவும், ஊடலிலே இஷ்டநாயகி மார்களுடைய அழகிய சிலம்பு சப்திக்கின்றபாதங்களையல்லாமல் லோகேஸ்வரர்களே யான போதிலும் அவர்களுடைய பாதங்களை எக்காலத்திலும் வணங்கி யறியாத தலைகளில் அணிந்த பத்துக்கிரீடங்களும், தங்கவொளியால் இந்தப் பூவுலகத்திலுள்ள சூரியனை ஒளிமழுங்கச்செய்து மற்ற லோகங்களிலுள்ள அளவிடப்படாத இருளையெல்லாம் ஓட்டவும், மகா விபவத்தோடு விளங்கிஞன். அன்றியும் சொர்க்கமத்திய பாதா

ளங்களிலுள்ள வீரர்கள் யாவரையும் வெற்றிகொண்டணிந்த வாகைமாலையை யணிந்து, அதன்பக்கத்தில் மயில்போலுஞ் சாயலுள்ள யௌவனஸ்திரீகளுடைய கண்களும் வண்டுகளும் கலந்து மொய்த்துக் கொள்ளும்படி தும்பைமாலையைத்தரித்து, சகரர்களாலே தோண்டப்பட்ட சமுத்திரத்தையும் தினங்களையும் கடல்மணலையும் இவைபோன்ற மற்றவற்றையும் வேண்டியதுகளையெல்லாம் குறைவின்றித் தருகின்ற மந்திரங்களையும் உவமைசொல்லக் கூடாதனவாகிய, ஐம்பெரும்பூதங்களும் அழியுங்காலத்திலும் அழியாத தனது புகழைப்போல அளவுசெய்யமுடியாத அஸ்திரங்களால் நிறைத்த அம்பறுத்தூணிகளை முதுகில் இறுக்கிக்கட்டினன்.

இப்படி போர்க்கோலங்கொண்ட இராவணனவன் கட்டியக்காரனைப்பார்த்துத் தேர்வரக்கடவதென்று உத்தரவுசெய்தான். அப்படி உத்தரவு செய்தமாத்திரத்தில் தனது தெய்வீக ரதம்வந்து சேர்ந்தது. அந்தத் தெய்வீகரதத்தின் மகிமை எப்படிப்பட்டதென்றால்:

சுவர்க்கமத்திய பாதாளங்கள் ஒருமிக்கத் தன்மேல் ஏறினலும் நாம் தலையில் முடித்துக்கொள்ளும் பூமாலையைப்போல அந்தத் திரிலோகங்களையும் சுமந்து செல்வதும், இராவணன் நினைத்தவிடங்களுக்குக் குதிரைகளைப் பூட்டாமற்படிக்கே ஓர்இமைப்பொழுதுக்குள்ளே போகத்தக்க யந்திரங்கள் அமைத்ததும், அமுதத்தோடு திருப்பாற்கடலிற்பிறந்த ஆயிரங்குதிரைகளையும் சூரியபகவானுடைய தேரிற் கட்டிய பச்சைக்குதிரையின்வமிசத்திற்பிறந்த குதிரைகளையும், அதிதேவதைகளாகிய அக்கினி பகவானுக்காகவும்வாயுபகவானுக்காகவும் கடல்நீரையும் வற்றச்செய்யத்தக்க வடவாமுகாக்கினியிலும்பிரசண்டமாருதத்திலும் ஜனித்த குதிரைகளையும், கட்டிய சிறப்புடையதும், பூமிமேல் ஓடுவதுபோலவே ஆகாயத்தின்மேலும் சமுத்திரத்தின்மேலும்நெருப்பின்மேலும்மகோன்னதமான மேருமலையின்மேலும் ஓடத்தக்கதும், அண்டமுகட்டின்கணுள்ள பிரம்மனுடைய உலகத்துக்கும் மற்ற எந்தத் தேவர்களுடைய உலகங்களுக்கும் ஓரிமைகொட்டுங் காலத்துக்குள்ளேபோய்த் திரும்பத் தக்கதும், எட்டுத்திக்குகஜங்களினுடைய மணிகளைப்போலக் கோஷிக்கும் ஆயிரங்கோடி மணிகளை யுடையதும், அநேக சூரியமண்டலங்களை மேருமலையின்மேல் குவித்து வைத்தாற்போலப் பிரகாசத்தையும், அண்டங்களையே விலைபெறத்தக்க மதிப்பையுமுடைய ரத்னங்களை முழுமையும்பதித்ததும் மகாரிஷிகள் தேவர்கள் முதலானவரும் அண்டாதிபதிகள் யாவரும் கொடுத்தவைகளும் ஒருகாலத்தில் மேலேசொல்லியவர்களே யுத்தத்தில் தோற்று கைநழுவவிட்டவைகளும், யுத்தத்தில் அதிகுரூரமானவைகளும், கடலின் மணலினும் மிகுந்த தொகையுள்ளவைகளுமாகிய ஆயுதச்சுமைகளையுடையதும், ஜயத்துக்கு வாசஸ்தானமானதும், உபேந்திரராகிய பாலன கர்த்தாவினுடைய சக்கரமும், நெற்றிக்கண்ணராகிய பரிபால கர்த்தாவினுடைய மழுவாயுதமும் சதுர்முகனாகிய சிருஷ்டிகர்த்தாவினுடைய கமண்டலமும் ஓர்கால் அழிந்தாலும் தானழியாத வலிமையுடையதும், தேவர்களும் முனிவர்களும் சூட்சுமமாகப் பார்த்தும் அறியக்கூடாத நானாவித சித்திரத்தொழில்கள் சத்தியத்தைப்போல என்றுமழியாமற் பலசெய்யப்பெற்றதும்,ஆகிய மகாரதம்வந்து சேர்ந்தது.

அந்தரதத்துக்கு பிரதாபலங்கேஸ்வரனாகிய ராவணன் அருச்சனை முதலானவைகளைக் கிரமப்படி செய்து, இத்தனைபேரென்று அளவுசொல்லக்கூடாத பிராமண ஜனங்கள் யாவர்க்கும் மனதுக்கு மெட்டப்படாததானமாகச்சொர்னங்களையும்ஆடையணிமுதலியதுகளையும்கொடுத்து, ரதத்துக்கு நமஸ்காரஞ்செய்து அதன்மேல் ஏறினன். இப்படி ராவணன் தேரேறியதைக் கண்ட இந்திரன்முதலாகிய சமஸ்ததேவர்களும் இவன் ஸ்ரீராமபாணத்தால் நாசத்தை யடையப்போகிறானென்பதை முன்னே யறிந்தவர்களா யிருந்தாலும், இவனாற் பலமுறை தாங்கள் பட்டிருக்கிற யுத்த சிரமபீதியால் இனி ஏதாய் முடியுமோவென்று பயந்து சிதறியோடி, புத்தியுங் கண்களும்மழுங்கிப்போய்மனந்திகைத்து நின்று ஒருவரையொருவர் பார்த்து நாம் செய்யவேண்டியது என்ன விருக்கிறதென்று பேசிக்கொண்டார்கள்.ஐம்புலவாசிகளையும் நிரசித்த மகாயோகிகளும் பயந்தார்கள்.

இம்மட்டுந்தானே? சர்வலோகங்களும் அச்சத்தால் தங்கள் தங்கள் நிலைகலங்கியது கள். இப்படி சமஸ்த லோகவாசிகளும் பிராணபீதி யடையும்படி இரதத்தின்மேலேறிய பிரதாப லங்கேஸ்வரன் தன்னருகே நின்ற இராக்ஷசவீரர்களை நோக்கி, ஓ என்னை இருமையிலும் பிரியாத நண்பர்களே! இன்று நான் யுத்தத்திற் பிரவேசிப்பதினுல் எனக்குத்தோற்று ஸ்ரீராமன்தேகவியோக மடைந்தானேயானுல், அதைக் கேள்விப்பட்டு இயற்கைமணம் அமைந்த அளகபாரத்தையுடைய ஜானகியானவள் தன்னுடைய தாமரசமலர்போன்ற கைகளால் வயிற்றைப்பிசைந்தும் மோதியும்சகிக்கமுடியாத கொடிய துக்கசாகரத்தில் மூழ்குவாள்; அல்லது தான்தோற்று அந்தத் தசரதபுத்திரனுல் மாள்வேனே யானுல், அது சமாச்சாரத்தைக் கேள்விப்பட்டு மயனுடைய புத்திரியாகிய மண்டோதரியென்பவள் இரண்டு கைகளையுங்கொண்டு வயிற்றைப்பிசைந்து மோதிமோதி யறைந்து தீராத் துயரக்கடலிலே மூழ்குவாள். இந்த இரண்டு காரியங்களில் ஒன்றுமுடியாமல் வீணே நான் திரும்புவதில்லை. என்றுசொல்லி பலமுடிகளும் பலதலைகளும் பிரகாசிக்கின்ற காரணத்தாலும் அளவுசெய்யமுடியாத பல ஆயுதங்கள் பலகைகளிலும் விளங்குகின்ற ஏதுவாலும் சமுத்திரங்கள் பொறுக்கமாட்டாமல் பொங்கி ஆகாயத்தை முட்ட அலைகளை வீசும்படி தம்முடைய திருவடியைப் பூமியில் வைத்து அளந்த திரிவிக்கிரம மூர்த்தியைப்போலத் தோன்றி உயர்ந்து நிமிர்ந்து நின்று, ஆகாயமானது படீரென்று பிளந்து இருபிளவாகவும் குலாசலங்கள்வெடிக்கவும், புதுப்புண் வெடித்தாற்போலப் பூமிபாளமாகவும் பசும்பொற் குடமானது ஆகாயத்திலிருந்து சுழலுவதுபோலச் சூரியன் தன்கதிமாறிச் சுழலமிடவும் சந்திரன் தன் நிலைகலங்கி அமுதத்துளிகள் சிந்தி வருத்தமுறவும், தன்னுடைய தோள்களைக்கொட்டி ஆரவாரித்து, குரூரமாகிய யுத்தம்நமக்குச் சமீபித்ததென்னும் ஒப்பில்லாத பெருங்களிப்பால் மேருமலையும் வெடித்துச் சிந்தும்படி தன்வில்லைக் குணத்தொனிசெய்தான். அந்தக் குணத்தொனியைக்கேட்ட தேவதாஸ்திரீகளும் தானவஸ்திரீகளும் தங்கள் நாயகன்மார்களுக்கு இன்றையதினம் சுராசுரகண்டனுகிய பாபிஷ்டனுல் பிராணநாசம் உண்டாமோ என்னமோ என்று திடுக்கிட்டு, ஸ்ரீமகாலட்சுமியைத் தியானித்து, அந்தச் சர்வலோகநாயகியினது சின்னமாகிய தங்கள் மாங்கலியத்தைத் தொட்டுப் பயந்தார்கள். இவ்வாறு குணத்தொனி பண்ணி தேரோடுகிற அதிர்ச்சியால் சமுத்திரமானது பலசுழிகள் சுழித்துப்பொங்கவும், பல உயிர்வர்க்கங்களும் நடுக்கமடைந்து சிதறியோடவும், ஆதிசேடனுனவன் கயிலாயமலையைப் பேர்த்தெடுத்த வலிமையமைந்த தன்னைச் சுமக்கமாட்டாமல் கிரணங்களை வீசுகின்ற மாணிக்கங்களுள்ள பலதலைகளையும் பரப்பிப் பூமியைச் சுமக்கவும் ஆயின. இப்படி பாரியதேகபாரத்தையுடையவனுய்த் தேரைச் செலுத்திக்கொண்டுவந்த ராவணனுனவன் தேவர்களும் அசுரர்களும் மற்றத் திரிலோகத்திலுள்ள வீரர்கள் யாவரும் இன்றைக்கு இந்தப் பாபிஷ்டன் யுத்தத்தை உத்தேசித்தபடியால் லோகமெல்லாம் நாசமாய் விடுமேயென்று தங்கள்தங்கள் பிராணன்மேல் ஆசையுடையவர்களாய்ப் பீதியடையும்படி, வடவாமுகாக்கினிக்கு இரண்டுபங்கதிகமாகத் தீப்பொறிகளும் உதிரத்துளிகளும் சிந்தும்படி யுத்தகளஞ் சேர்ந்தான்.

அதுகண்டு லோகத்திலுள்ளவர்கள் அடைகின்ற கலக்கத்தையும் ஆகாயமார்க்கத்தில் நிற்கின்ற தேவர்கள் படுகின்ற தடுமாற்றத்தையும், மலைகளும் சுவர்க்கமும் பூலோகமும் நடுங்குகின்ற நடுக்கத்தையும், கடல்கள் அலைகளைமோதிக் கொந்தளிக்கின்ற கொதிப்பையும், சுக்கிரீவமகாராஜர் முதலாகிய தடுக்கப்படாத பராக்கிரமமுள்ள வீரர்கள் யாவரும் கண்டார்கள். அண்டமே வெடித்தாற்போல ராக்ஷசவீரர்கள் ஆர்ப்பரித்து வருகின்ற ஆரவாரத்தைக் கேட்டு எழுந்த விபீஷணுழ்வானுனவர் ஆதிசிருஷ்டியில் நானுவித பிராணிகள் கோஷிப்பதுபோலக் கோஷம் உண்டாவதற்குக் காரணமென்னவென்று ஆலோசித்து, சமுத்திரங்கள் கரைபுரண்டு பொங்கி வருவதுபோலக் காலால்களும் உயர்ந்த பர்வதக்கூட்டங்கள் விரைந்து வருவதுபோல ரதங்களும் மகமேருவின்மேல் தவழ்ந்து வருகின்ற கருமேகம்போல மகோன்

னதமான தேரின்மேல் ராவணனும் சகல பிராணிகளினுடைய குடர்களுங் குழம்பும்படி ஆகாயமார்க்கத்தில் வருகின்ற ஆரவாரமென்று தீர்மானித்துஓடிவந்து, லோகேஸ்வரர்களுக்கும் சுவாமியாகிய ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தாமரைகளில்தண்டன் சமர்ப்பித்து, ஓ ராக்ஷசகுலவைரியே! அரக்கர்குலாதிபனும், அவனுடைய சேனைகளும் வந்துசேர்ந்தார்கள். அதுகண்டு தேவருடைய சேனைகளாகிய வானரசமுகம் நிலைமாறித் திக்குவி திக்குகளாக ஓடயத்தனித்துக்கலங்குகின்றது. ஆகாசத்தில் தேவர்களும் பயந்து நின்றநின்ற இடங்களிலே ஓடக் காலெழாமல் விழுந்து கலங்கினர்களென்று விண்ணப்பஞ் செய்தனர். அப்போது வானரர்களெல்லாம் கைகளைச் சிரசின்மேல் தூக்கிக் குவித்து, ஓ சர்வ தேவ தேவோத்தமா! ஓ ராக்ஷசகுலகாலா! ஓ சாதுசஜ்ஜனோத்தாரா! எங்களைக் காத்தருளாய் என்று சொல்லவந்தவர்கள் பயத்தால் நாவெழாமல் குழறிக்குழறிச் சொல்லிக்கொண்டு, நடக்கக் காலெழாமல் அங்கங்கே சுருண்டு விழுந்து உளைக்கின்ற கூச்சல் அதிகரித்தது. அம்மாத்திரத்தில் ஆதியிலே பிரமேந்திராதி சமஸ்ததேவர்களும் முனிவர்களும் ராக்ஷசர்களால் துன்பப்பட்டுக் கலங்கி முறையிட்டகாலத்தில் க்ஷீரசாகரத்தில் திருவனந்தாழ்வான்மேல் இருந்து யோகநித்திரை நீங்கி எழுந்தாற்போலச் சடக்கெனவெழுந்து, மத்தகஜம்போலக் காணப்படுகிற தாம் ஒப்பற்ற யமனுடைய விஷபாசக்கயிற்றையே கட்டினாற்போலப் பளபளென்று மின்னுகின்ற வாளாயுதத்தைத் திருவிடையின் வலப்பாரிசத்திற்கட்டி, விபீஷணாழ்வானையும் வானரவீரர்களையும் பார்த்து, ஓ எனது மெய்ப்பத்தர்களே! கற்பின் பூங்கொடியாகிய ஜானகியினது துன்பத்துக்கும் சுவர்க்கலோகவாசிகள் முதலிய சாதுஜனர்களுடைய துன்பக்கடலுக்கும் இன்று முடிவு உண்டாகுமென்று திருவாய்மலர்ந்தருளித் தமது திருமேனியிற் கவசத்தினைத்தரித்தார். அந்தக்கவசம் எப்படிப்பட்டதா யிருந்ததென்றால் வேறே ஒரு பரப்பிரம்மம் உண்டாயிருந்து அதனுடைய வசத்தில் சகல பிரம்மேந்திராதி சேதன சேதனங்களும் அடங்கி யிருப்பதென்பது எந்தவேதாந்த இதிகாசபுராணங்களிலும் இல்லையாதலால் மேலே சொல்லிய சமஸ்த சராசரங்களும் தமது திருவுளப்பாங்கின்படி அடங்கி நடப்பதாயிருக்க இப்போது தாம் பூட்டிக்கொண்ட கவசத்துக்குள் தமது திருமேனி அடங்கியிருப்பதால், சாட்குண்ய பரப்பிரம்மமாகிய தம்மினும் அந்தக்கவசம் வேறே ஒரு பரப்பிரம்மம் உண்டென்னும்படியாயிருந்தது. அப்படிக் கவசத்தைப் பூட்டியபின் அதிகோபிஷ்டனாகிய நமனுடைய மடப்பள்ளியைப்போல விளங்குகின்ற அழகிய கைகளுக்கு விரற்புட்டில்களும் முன்னங்கைத்தோல்களும் கட்டி, சமஸ்த பொருள்களையும்தன்னிடத்து அடக்கிவைத்துக்கொண்டிருக்கும் பூமிபோல விளங்கி அளவுசெய்யமுடியாத நானாவித அஸ்திரங்களை வகித்த அம்பறுத்தூணியை முதுகில் இறுகக்கட்டி யுத்தசன்னத்தராயினார்.

---

அப்போது சுவாமியினுடைய யுத்தத்திறத்தைக்கண்டு சேவிக்கும்படிவந்திருந்த தேவர்களை உருத்திரமூர்த்தி பார்த்து, ஓ அண்டர்களே! ராக்ஷசர்களுடையசண்டை இன்றோடே முடிவாகின்றது. ஸ்ரீராமனே வெற்றியடையப்போகிறார். இதற்குச் சந்தேகமில்லை. இனி ராக்ஷச உபத்திரவபயமென்பது யாருக்குங் கிடையாது. நீங்கள் நிர்ப்பயர்களாய் மணிகள்கட்டி வெற்றிச் சக்கரங்கள்பூட்டிய பொன்னாலமைத்த ரதத்தை அந்த ஸ்ரீராமனுக்கு அனுப்புங்களென்றுசொல்லி யருளினர். ஸ்ரீ உமாநாயகராகிய ருத்திரபகவான் சொல்லியதைக் கேட்ட தேவர்கள் இது செய்யத்தக்கதேயென்றுசொல்லித் தங்கள் அரசனாகிய இந்திரனுக்குத்தெரிவித்தார்கள். அதுகேட்ட இந்திரன் ஒருக்ஷணகாலத்துக்குள்ளே திரிலோகத்தையும் கிரமமாகச்சுற்றிக்கொண்டு வரத்தக்க ஒப்பில்லாத தேரைக்கொண்டு வாருங்களென்று உத்திரவுசெய்தான். உடனே தேவர்கள் குதூகலமாகச்சென்று ரதசாரதியாகிய மாதலியைப்பார்த்து, நமது இராஜனனவர் தேரையோட்டிவரச் சொன்னாரென்று சொல்லினார்கள். தேவர்கள் சொன்னதைக் கேட்ட மாதலியென்பவன் உடனேயத்தேரைக்கொண்டுவருவதானான் அந்தத் தேரின்மகிமை எப்படிப்பட்டதென்றால்:—

ஏழுகுலாசலங்களிலுமுள்ள பலத்தை எடுத்துச்செய்த கொடிஞ்சும், பிரிதிவியிலும் அப்புவிலுமுள்ள பலத்தினற்செய்த இருசும், அஷ்டநாகங்களினற்செய்தவடக்கயிறும், வருஷம்-அயனம்-இருது-மாதம்-பக்ஷம்-வாரம்-நாள்-என்று இதுவரையிலும் நடந்தகாலங்களிலும் இனிவருங்காலங்களிலும் விசாலித்திருக்கின்ற தட்டும், நக்ஷத்திரங்களினற்செய்தமணிமாலைகளும் திக்குகளினலேயமைத்த பக்கச்சுவர்களும், மேகராசிகளாலியற்றிய துவஜமும், ஐந்து பூதங்களினுடைய சக்திகளெல்லாம் ஒன்ருய்த்திரண்டமைந்த பலமும், புற்பூண்டு முதல் விருக்ஷங்கள்வரையுமுள்ள தாபரங்களினலமைத்த கொடிகளும், ஸ்ரீ சர்வேசுவரனுனவர் சங்குதாங்கிய தமது திருக்கரத்தால் பாற்கடலைக்கடைந்தகாலத்தில் உண்டாகிய ஆரவாரமே தனதிடத்துண்டாகும் ஆரவாரமும், அவருடைய திருவுந்தியில் முளைத்த மூலதாமரைமலரின் மொட்டே தனக்குமொட்டும், ஐம்பெரும்பூதங்களையும் திருவுதரத்தில்வைத்து மறுபடியும் உமிழ்கின்ற அஷ்டகுணசம்பன்னனுகியஸ்ரீஹரி சயனிக்கின்ற சயனமாகிய ஆதிசேஷனையொத்த விசாலமுமுள்ளதாய் அமைந்தது அந்தத்தெய்வீகத் திருத்தேர். அப்படிப்பட்ட திருத்தேருக்குச் சதுர்வேதங்களாற் சொல்லப்பட்ட யாகங்களினலும், ஏழுசமுத்திரங்களினலும், ஏழுமலைகளினலும், ஏழுலகங்களினலும், ஐம்பூதங்களினலும், மூன்றுதீயினலும், பெருந்தவங்களினலும், யாகத்திற் சொரிகின்ற அவிர்ப்பாகத்தினலும், ஐந்து ஞானேந்திரியங்களினலும், ஐந்து கருமேந்திரியங்களினலும், ஐந்துசுடர்களினலும், நாலுவேதங்களினலும், மூன்று காரணங்களினலும், பத்துவாயுக்களினலும் இராப்பகலென்கின்ற இரண்டுபெரும்பொழுதினலும் அஸ்வங்களினுருவமாகச்செய்யப்பட்டகுதிரைகளைப்பூட்டி; சந்திரசூரியர் மண்டலங்கள் அடித்தட்டில் நிற்கும்படி உயர்ந்த அந்தத்திருத்தேரை அம்மாதலியென்பவன் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தை நோக்கி ஆகாயமார்க்கமாக ஓட்டிவந்து தேவேந்திரனுக்கு முன்பாக அந்தரத்திலேயே நிறுத்தினன். அதைக்கண்ட தேவேந்திரன் இந்தத்தேரை இதோ பூமியின்கண் யுத்தகளத்தி லெழுந்தருளியிருக்கும் ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீராமபிரானர்க்குச் செலுத்தக்கடவாயென்று மாதலிக்குக் கட்டளையிட்டவுடனே அங்கிருந்த தேவர்களெல்லாம் அந்தத்தேருக்கு நமஸ்காரஞ்செய்து, ஓ ரதசிரேஷ்டமே! எங்கள் அரசனுகிய இந்திரனதுகட்டளையால் ஸ்ரீ ராமச்சந்திரரிடத்திற் செல்கின்ருயன்ருே? நீ எங்களுக்கு உபகாரார்த்தமாக ஜெயத்தையே தரக்கடவாயென்று கற்பகமலர்களை வாரிவாரி இறைத்தார்கள்.

அப்படி தேவர்கள்யாரும் இறைக்காநிற்கையில் மாதலியானவன் இடதுகையிற் கடிவாளவடத்தைப்பிடித்து வலதுகையில் முட்கோல்கொண்டு நடத்த, அந்த ரதமானது மனேவேகத்திலும் அதிவேகமாய் இருவினைகளுக்கும் விரோதியாய் நின்ற மெய்ஞ்ஞான கோசரத்தின் விசையையடைந்து ஆகாயத்தை உருவி, தான்வருவதைக் கண்டு திரிலோகத்தார்களும் கைகளைக்கூப்பித் தண்டன் சமர்ப்பிக்கும்படியாக வந்து, அப்பிராகிருதனுகிய ஸ்ரீ ராமமூர்த்தியின் பக்கலிற் சேர்ந்தது. சத்துச்சித்தானந்தத் திருமேனியை மறைத்து லீலாமானுஷிய விக்கிரக ஸ்வரூபராய் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீரகுநந்தனர் அந்தத்தேரைக் கடாக்ஷித்து, அதிக ஜோதிமயமாயிருப்பதினல் இது சூரியனுடைய ரதமென்போமேயானல் ஒற்றைவண்டியில்லை. அல்லது யுகமுடிவில் தோன்றுகின்ற வடவாமுகாக்கினிச் சுடரென்போமேயானல் வெப்பத்தைக்காணேம். மேருமலையென்போமேயானல்இவ்வளவுபெரியஉருவமுடையதல்ல. ஆகையாலிது திரிமூர்த்திகளும் ஏறியுலாவுகின்ற தெய்வவிமானந்தானே? யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கிற நம்மிடத்திலே இப்போதிது வருவதற்கு என்னகாரணமென்று தமக்குள்ளே எண்ணி மாதலியைப் பார்த்து, யாருடைய கட்டளையால் இதைச் செலுத்திக்கொண்டு நீ என்பக்கலில் வந்தாயென்று திருவாய்மலர்ந்தருளினர். அப்படி அரசர்களுக்கரசனுகிய தசரதபுத்திரர் கேட்டதற்கு அஸ்வங்களினுள்ளத்தை அறியவல்ல மாதலியானவன் சுவாமியைப் பார்த்துச் சொல்லுகிருன்.

ஸ்ரீ காகுஸ்தகுலநாயகரே! இந்தரதம் திரிபுரசம்மார கர்த்தாவாகிய சிவமூர்த்தியும் சதுர்முகப்பிரம்மாவும் பூர்வகாலத்தில்

ஆயிரஞ் சூரியர்களுக்கு உவமையான ஒளியுள்ளதாகச் சிருட்டிக்கப்பட்டது. ஊழி காலத்தில் சமஸ்தவஸ்துக்களும் அழிந்தாலும் இஃதழியாமலிருப்பது. ஓ எங்கள் நாயகனே! இந்திரனுடைய ஏவுதலாலே தேவரீர் ஆரோகணித் தருளுவீரென்று ஓட்டிக்கொண்டுவந்தேன். இந்தப் பிரம்மாண்டம்போன்ற அநேகவண்டங்களை இதன்மேலேற்றி அடுக்கிவைத்து நடத்தினாலும் சிறிதும் சலனமில்லாமற் சுமந்துகொண்டுவேண்டியவிடத்துக்குச்செல்லும் குறுகவேண்டியவிடத்திற் குறுகி நிற்கும். உயரவேண்டியபோது அதியுன்னதமாக உயரும். இக்காரியங்களால் சமஸ்த அண்டங்களையும் தனக்குள்ளே பொருந்தவைத்துக்கொள்ளுகின்ற ஸ்ரீ சர்வேசுரனுடைய திருவயிற்றை ஒப்பாகின்றது. தேவரீர் ஸ்ரீ ஹஸ்தத்தாற் பிரயோகிக்கப்பட்ட பாணத்தைப்போல அதிவேகமாய்ப் போகத்தக்கது. பார்வையின் வேகத்தையும், மனோவேகத்தையும், சண்டமாருதத்தின் வேகத்தையும்கண்டால், அம்மூன்றையும் தன்னுடைய வேகத்துக்குள்ளே அடக்கிக்கொள்ளும். வேகத்திலே ஞானமும் பின்னிடும்படி அதற்குமுன்னே செல்லுமானால், பூமியிலும் ஆகாயத்திலும் செல்லுமென்பது இதற்கொரு விசேடமல்ல. நீரின்மேலும் தீயின்மேலும் பூமியாகாசங்களிற் செல்வதுபோலச் செல்லும். சப்த சமுத்திரங்களையும், பதினாலுலோகங்களையும், ஒருகணப்பொழுதுக்குள்ளாக இரண்டுமுறை சுற்றிவரும். இடையே எங்கேனும் நிற்குமென்றாலோ நிற்பதல்ல. ஸ்ரீகோதண்டத்தைக் கையிலேந்தி உலகங்களைக் காக்கவந்த எம்பெருமானே! இப்படிப்பட்ட திறமுள்ள தேர் இதுவல்லாமல்வேறுமுண்டோ? ஸ்ரீ உருத்திரமூர்த்தியின் ஆக்ஞையால் பிரமனேமுதலிய தேவர்களும் முனிவர்களும் நம்முடையசுவாமிக்குத் தேரை விரைவாக அனுப்பென்று இந்திரனுக்குச் சொல்ல, அவ்விந்திரன் அக்கட்டளையைச் சிரமேலேற்றுத் தேவரீர் ஆரோகணித்தருளும்படி அனுப்பினாரென்றுசொன்னான். அதுகேட்ட நம்முடைய ஐயனாகிய ஸ்ரீராமபிரானவர் ராக்ஷசர்கள் ஏதாவது மாயையாற் கற்பித்து அனுப்பியதோவென்று யதார்த்தமாய்ச் சந்தேகித்தவரைப்போலக் காணப்பட்டார். அப்படியவர் காணப்பட்ட மாத்திரத்தில் அந்த ரதத்திற் பூண்டுள்ள குதிரைகள் ஸ்ரீராமபிரானைநோக்கி, ஓ வேதங்களிற் பிரதிபாத்திய மூலகாரணவஸ்துவே! இந்தமாதலி இப்போது சொல்லியவையெல்லாம் சத்தியமே. ஒன்றும்பொய்யல்ல. என்று வேதமொழிகளைக்கொண்டு சொன்னதுகள். அப்போது தசரதநந்தனர் குதிரைகளினுடைய வேதமொழியால் இனிச் சந்தேகமில்லையெனத் தேறினவரைப்போலத் தோன்றி மாதலியைப் பார்த்து நீயாரென்றுவினவ, அவன் கைகளைக் குவித்து நின்று, ஸ்ரீ ரவிகுலநாயகரே! நானே இந்த மகத்தாகிய ரதத்தைச் செலுத்துகின்ற சாரதி. என்பேர் மாதலியென்றழைப்பார்களென்று உண்மை கூறினான்.

அப்படி யவன் சொல்லியதன்மேல் எம்பெருமானவர் சமீபத்திலிருந்த சுமித்திராதேவி இளஞ்சிங்கமாகிய லக்ஷ்மணரையும் திருவடிகளாகிய அநுமானையும் கடாக்ஷித்து, நீங்கள்இதைப்பற்றி ஆலோசிப்ப தென்னவென்று கேட்டருளினார். அவர்களிருவரும் தெண்டன் சமர்ப்பித்து வாயைப்பொத்திக்கொண்டு வணங்கி நின்று, ஓஎங்களாண்டவனே! நிச்சயமாக இந்திரனுடைய ரதமென்றே தோன்றுகின்றதென்று சொன்னார்கள். அதுகேட்ட ஸ்ரீ ராமபத்திரர் இஃதுள்ளதேயென்று தெளிந்து:—

தாம் ஸ்ரீகோதண்டத்தைத் திருக்கரத்தில் தாங்கியதுமுதல் தனது விர்த்தி நாசமாய்க் கீழேவிழுந்து புரண்டு துக்கித்துக்கொண்டிருக்கின்ற பாபவர்க்கங்களெல்லாம் நமக்கு மாதுருஸ்தானமாகிய ராவணனும் செவிலித்தாயர்கள்போல நம்மை வளர்த்துவந்த ராக்ஷசப் பெருங்கூட்டத்தாரும் இன்றேயோட பற்றற அழிகின்றார்களல்லவாவென்று உள்ளம் நடுங்கி வாடவும், பரம வைதீகமார்க்கத்தார் யாவரும் சிறப்பாகக் கொள்ளப்பட்ட தருமவர்க்கங்களெல்லாம் களிப்போடெழுந்து துள்ளவும், அரக்கர்செய்யும் உபத்திரவத்தால் துக்கித்துக் கொண்டிருந்த தேவர்களும் முனிவர்களும் தங்கள் தங்கள் கைகளைச் சிரசின்மேற்கூப்பி நமஸ்கரிக்கவும், அந்த

ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவானவர் அந்த ரதத்தின்மேல் ஆரோகணித் தருளினர்.

இராவணன் தேரேறுபடலம் முற்றிற்று.

---

## இராவணன் வதைப்படலம்.

இப்படி திருத்தேரின்மேல் எம்பிரானவர் ஏறியருளின மாத்திரத்தில் அந்தத் திருத்தேரினது பரிசுத்தமாகிய சக்கரங்கள் பூமியிலுருண்ட தன்மையை நோக்கிய பிரம்மேந்திராதி சமஸ்த தேவசமூஹங்களும் முனிவர் கூட்டங்களும் ஒன்றுகூடி, இதற்கு முன்னே தேவகண்டகர்களோடு யுத்தஞ்செய்ய வெழுந்தருளும்போதெல்லாம் தாமேறி யளுகின்ற பெரிய திருவடிகளுடைய திருத்தோள்களைச் சிறிது நினைத்துத் துதியாதவர்களாய் சிறிய திருவடிகளாகிய அநுமானுடைய திருத்தோள்களையே இந்தத் திருத்தேருக்குச் சமானமாகச் சொல்லலாமென்று பலவாறு துதித்துக் கற்பகமலர்களைத்தூவி, சுவாமியினிடத்துண்டாகிய பிரேமாதிசயத்தால் வாழ்த்துக்கூறத் தலைப்பட்டு, இந்தத் திருத்தேர் யாதோர் இடையூறுமில்லாமல் செல்லக்கடவதென்றும் எல்லாப்பலங்களையும் வகிக்கக்கடவதென்றும் சுவாமியை எதிர்த்துநின்ற ராக்ஷசர்களெல்லாம் நாசமாகக்கடவர்களென்றும் லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனாகிய ஸ்ரீராமபத்திரனவர் ஜெயம்பெறக் கடவரென்றும் ராக்ஷச ஸ்திரீகளெல்லாரும் ஸ்ரீராமபாணத்தால் பிராணன் நீங்கிய தங்கள் தங்கள் நாயகன்மார் மேலும் பந்து ஜனங்கள்மேலும் விழுந்து கதறி அழக்கடவர்களென்றும் வாழ்த்தி ஆர்ப்பபத்தார்கள்.

இப்படி சமஸ்ததேவர்களும் ஆர்ப்பரிக்கா நிற்கையில் அந்தத்திருத்தேரானது யுத்தகளத்தை நோக்கிச்சென்றது, திருத்தேரானது யுத்தகளத்தை நோக்கி வருவதைத் தசமுகனாகிய இராவணன் தனது இருபது கண்களாலும்பார்த்து, இதுவரையிலும் நமக்கு நடுங்கி ஒடுங்கிக்கிடந்த துர்ப்பலர்களாகிய தேவர்கள் இன்றைய யுத்தத்தில் நாமிந்த அற்பமனுஷியனாகிய இராமன் கையம்பால் மாண்டுவிடுவோமென்று நினைத்துக்கொண்டு தேர் அனுப்பினர்கள். இனி எங்கே அவர்கள் தப்பிப்போவார்கள்? இப்போதிந்த ராமனை ஜெயம்பெற்று அவர்களைத்தண்டித்து இம்சிப்பேன். அது பின்னேயாகட்டும். என்று கூறிப் பற்களை நற நறவென்றுகடித்து இருபது வாய்களையும் மடித்துக் கறுவிக்கொண்டு, அடாசாரதி! அதோ கோதண்டத்தைச் சிவந்த கையிற் பிடித்து ரதாரூடனாய்வருகின்ற ஸ்ரீராமன்மேல் ரதத்தைச் செலுத்தக்கடவாயென்று கட்டளையிட்டான். முன்னேயிவ் விராவணன் தேர்வருவதைக்கண்டு பயந்தோட்டம்பிடித்த வானரங்களெல்லாம் ஒன்றுகூடி, ஸ்ரீராமபிரானே ஜெயமடைவாரென்று தீர்மானித்துத் தேவர்கள் ரதத்தை அனுப்பினர்கள். ஸ்ரீராமச்சந்திரர் வெற்றிகொள்வாரென்பதற்கு இனிச் சந்தேகமேயில்லை என்று பயப்படாமல் அதிதைரியமடைந்து போர்க்களத்தே வந்து மொய்த்துநின்று, அங்குமிங்குமாகத் திரிந்து மரங்களையும் மலைப்பாறைகளையுங்கொண்டு ராக்ஷசர்கள்மேல் எறிந்து, திக்குப்பாலகர்களும் ஆகாசமார்க்கத்தில் ஸ்ரீராமருடைய யுத்தசாதுரியத்தைக்கண்டு சேவிக்கும்படி வந்திருந்த தேவக்கூட்டங்களும் திடுக்கிட்டுச் சிதறும்படியாகக்கல்லென்று பேரிறைச்சலிட்டதுகள்.

அக்கால் வாரிறுக்கிக்கட்டிய முரசவாத்தியத்தின் ஓசையும், வீரர்கள் கர்ஜ்ஜிக்கும் ஓசையும், போர்க்களத்தில் ரதகஜதுரகபதாதிகள் வரிசை வரிசையாக வந்து நிறையும் ஓசையும் அடைந்து ஒருமித்துக் கோஷிப்பதனால்; உலகிலுள்ள எல்லாரும் சகிக்கமாட்டாமல் பூமியில் வீழ்ந்து பேச்சடங்கினர்கள். இவ்வளவிலே நில்லாமல் ஸ்ரீராமருடைய திருத்தேரின் ஆரவாரமும்; பிரதாப லங்கேஸ்வரனுடைய ரதத்தின் ஆரவாரமும், எல்லாருடைய செவிகளும் செவிடாகும்படி அதிகரித்தன. அப்போது ஸ்ரீரகுநாயகர் மாதலியினுடைய முகத்தை நோக்கி, ஓ என்பால் அன்பின் மிகுந்த சாரதிசிரேஷ்டனே! நான் சொல்லுங்காரியம் ஒன்றுண்டு கேட்கக்கடவாய். அதாவது இந்தப் பத்துத்தலையுள்ள சத்துருவானவன் எதுஎது செய்ய நினைக்கின்றானோ அவற்றையெல்லாம் அவன் செய்த பின்பு யான் செய்யும் எத்தனத்தை நோ

க்கி, அதற்குத்தக்கபடி நீ சாரதித்துவ வியாபாரஞ் செய்யக்கடவாய். முன்னதாக அவசரப்பட்டு நீ ஒன்றுஞ் செய்யவேண்டியதில்லை யென்பதை உன்மனதிற் பதிய வைப்பாயாக என்று சொன்னுர். அதுகேட்ட மாதலியானவன் ஸ்ரீராமச்சந்திரசுவாமியினுடைய முகாரவிந்தத்தைப் பார்த்து, சுவாமி! தேவரீருடைய திருவுளக்கருத்தையும், குதிரையினுடைய உள்ளத்தையும், சத்துருக்களுடைய எண்ணத்தையும், இருதிறத்தாருடைய சேனையின் மிகுதியையும், சேனைகளடைந்த குறைவுப்பாட்டையும், சுவாமியடையும் வெற்றியையும், சந்தேகமற்ற காலத்தையும், தகுதியான இடத்தையும், செய்யப்புகுந்த யுத்தத்தின் திறத்தையும் ஆலோசிக்காதவனுகப் போவேனேயானுல்; அஸ்வலக்ஷண சாஸ்திரமுதலிய நூல்களை ஐயமறத்தேர்ந்த என்னுடைய ஞானத்தால் என்ன பிரயோசன மென்ருன்.

அதுகேட்டருளிய ஸ்ரீராமபிரான் நல்லது அப்படியே செய்யென்ருர். இப்படிப் பேசிக்கொண் டிருக்கையில் தசமுகனுனவன் சுவாமிக்கு எதிரேவரவும் மாதலியும் தேரைச்செலுத்த, ஸ்ரீராமமூர்த்தியும்இராவணனும்யுத்தத்துக்குயத்தனிக்கும்போது மகோதரனுனவன் ராவணனைப் பார்த்து, ஓ பிரதாப லங்கேஸ்வரா! நீங்களிருவரும் போர்செய்ய நானென்றும் செய்யாமல் சாக்ஷிபூதனைப்போல் நின்றுகொண்டிருப்பது குற்றமாய் முடியுமல்லவோ? ஓ என்னைப் போஷித்துவந்த மகாநுபாவா! எனக்குச் செலவுகொடுத்தால் இந்த்ராமனையும் வானரசேனைகளையும் அதம்பண்ணி விடுகிறேன் என்ருன். அதுகேட்ட ராவணனுனவன் ஓ ஜெயவீர பிரதாபசாலியே! இதோ நிற்கின்ற தாமரைமலர்போன்று விசாலித்துக்குளிர்ந்த சிவந்தகண்களையுடைய இராமனை நானே யுத்தத்தில்மடிக்கிறேன். அவ் விளங்காளையாகிய லக்ஷ்மணனை என்பக்கம் நோக்கவொட்டாமல் நீபோய்ப் போர்செய்து தடுத்துவைத்திருப்பாயானுல், அதுதான் நீஎனக்குத்தேடிக்கொடுக்கும்வெற்றியென்ருன். அதற்கு மகோதரன் ஐயா பிரதாபலங்கேஸ்வரா! இதுஎனக்கொருபெரிதானகாரியமோ? இதோபோய் நீர் சொன்னபடி அதையே செய்து முடிக்கிறேன். என்று சொல்லிவிட்டுத் திரும்பி ஸ்ரீராமாநுஜர் எழுந்தருளியிருக்கின்ற இடத்துக்குப்போகையில், ஸ்ரீபுருஷோத்தமருடைய தெய்வீக ரதமானது நெருங்கி எதிரே வந்தது. அந்த இந்திர ரதமானது நெருங்கி வருவதை மகோதரன்கண்டு, அதிகோபிஷ்டனுய்த் தனது வலவனைப்பார்த்து, அடா சாரதி! நம்முடையரதத்தை ராமன்தேரை முட்டும்படி ஓட்டென்று உத்திரவுசெய்தான். இப்படிச்சொன்னமகோதரனை அச் சாரதியானவன்வணங்கி, ஐயா வீரவானே! ஸ்ரீராமனுடைய வீராவேசத்தைப் பார்த்தால்எனக்கொன்றுந்தோன்றவில்லை. அளவிடற்குமுடியாத பராக்கிரமமுள்ள கோடி இராவணர்களானபோதிலும் இன்றையதினம் வந்து ஸ்ரீராமனேடு எதிர்பார்களேயானுல் சாகாமல் பிராணனேடுதிரும்பியும் போவார்களோ? கமலாக்ஷனுகியஸ்ரீராமன் முன்னேசெல்லாமல் நீர் அப்புறம் நழுவி விடுகிறதே நல்லகாரியமென்ருன்.

இவ்வாறு சாரதிசொல்வதைக்கேட்ட மகோதரன் கோரதந்தங்களையுடைய ஆழமாகியதனதுவாயைமடித்து, அடாசாரதி! என்னுடைய சௌரியத்தைச் சிறிதும்கவனிக்காமல் அவமரியாதையான வார்த்தைகளைச்சொன்னஉன்னை இப்போதேமென்று தின்றுவிடுவேன். சந்தேகமில்லை. சுத்தவீரனுகிய மகோதரன் தன் சாரதியையே தின்ருனென்கிறபழிக்கு அஞ்சி சும்மாவிட்டேன். என்று கூறிக் கோபமாறியபின் அச்சாரதியானவன் அவனுடையகோபத்துக்குப் பயந்து ஸ்ரீராமபிரானுடைய தேருக்கெதிரே தேரைச் செலுத்தினுன். அப்படி செலுத்தியபோது மகாயுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் பொன்மயமாகிய இரதகஜ துரகபதாதியென்கிற பெருங்கடலானது, ஸ்ரீரகுநந்தனருடைய பாணங்களாகிய வடவாக்கினியால் வற்றிப்போய் மகோதரனென்னும் மகாபாதகன் ஒருவனுமேநின்று, சுவாமி எழுந்தருளிய ரதத்திற்கட்டிய இடிக்கொடியின்மேலும், தேரின்மேலும், குதிரையின்கடிவாளவடத்தைக் கையிற்பற்றியிருக்கின்றமாதலியின்மேலும் ஸ்ரீராமமூர்த்தியினுடைய குவிந்ததோள்களின்மேலும் அதிகவிசையாகப் பாணவருஷங்களைப் பெய்து, ஆகாயமும் பூமியும் கிழிபடும்படி ஆரவாரித்தான். அதைக்

கடாக்ஷித்த தேவதேவோத்தமனாகிய ஸ்ரீ
ராமமூர்த்தி புன்னகைசெய்து, அந்தத்தீய
வன் வகித்திருந்தவில்லையும் கவசத்தையும்
கையையும் தோளையும் கழுத்தையும் ஒவ்
வொருபாணத்தால் அறுத்துத் தள்ளினார்.
அறுத்துத் தள்ளின மாத்திரத்தில், தான்
சொல்லிவந்தசொல்ஒன்றாயும்தன்செய்கை
வேறொன்றாயும் மாறிப்போய் மகோதரன்
முடிந்தான்.

அக்கால் திரிலோகத்தையும் எட்டுத்
திக்கையும் வெற்றிபெற்ற ராவணன் ஸ்ரீரா
மர் மகோதரன் முடியும்படி பாணப்பிர
யோகம்பண்ணி உயிரையபகரித்ததைப்பா
ர்த்து மனம்பொறாமல், அடா! தேர்ப்பா
கனே! ராமன்மேல் தேரைச் செலுத்து
செலுத்தென்று சொல்லினான். அப்படிய
வன் சொல்லுதலும் அந்தப்பாகனும்
அவன் சொன்னபடி ரதத்தைச் செலுத்தி
னான். அதுகண்ட தயாசிந்துவாகிய ஸ்ரீ
ராமபத்திரரானவர் மூடுபனிபோலக் கவி
ந்துகொண்ட இந்தச்சேனைகள் யாவற்றை
யும் படுசூரணப்படுத்தி இவனைத் தனியனா
கச்செய்துவிட்டால்பின்புமனமிளகுவான்.
அப்படி மனமிளகியபின் நம்மைச் சரண
மடைந்து உஜ்ஜீவித்துப்போய்த் தான்பெ
ற்றிருக்கிறவரங்களையும், ஆயுளையும், பூரண
மாக அனுபவிப்பான். முன்னே தானே
இவனோடு போர்செய்வோமானால், ஐயோ!
இவனிறந்துபோவானே என்று திருவுள
மிரங்கினவரானார். இப்படித் திருவுளமிரங்
கிய ஸ்ரீராமபத்திரர் தாம்செய்துகொண்ட
சங்கற்பம் அவனுக்குத் தோன்றாதபடியா
கத் தமதுகோதண்டத்தை நாணேற்றிட்டு,
தேர் - யானை - குதிரை - காலாள்கள்மேல்
அஸ்திரங்களை எய்தனர். அந்தக்காலத்
தில் மகாபராக்கிரமசாலியாகிய ராவணனு
க்கு சமஸ்த அண்டங்களையும் முழுக்கடிக்
கத்தக்க சமுத்திரங்களும் வற்றிப்போகும்
படி வெற்றியுள்ள பிரசண்டவாயுவானது
எழுந்து மோதுகின்றகாலத்தில் மேருமுத
லாகிய பர்வதங்கள் தள்ளாடி அசைவது
போல் வாகுவலயங்களெல்லாம் நெக்குவி
ட்டுச்சிந்தும்படி இடதுதோள்கள்பத்தும்
துடித்தன. ஆகாயத்தில் நின்றும் ரத்த
மழை இடைவிடாதுபெய்தன. உலகங்க
ளெல்லாம் நடுங்கும்படி மேகமில்லாமலே
குமுறின. பெருமலைகளெல்லாம் பொடிப்
பொடியாய் உதிரும்படி மின்னாமல் இடி
கள் விழுந்தன. சூரியனை ஒளிமழுங்கும்படி
பரிவேடம் கவிந்துகொண்டது. தேரிற்
பூட்டிய குதிரைகள் நடுங்கின. கைகளிற்
பிடித்திருந்த பத்துவில்லுகளும் தாமே
நாரிகளற்றன. பத்துவாய்களும்நாவுகளும்
ஈரமில்லாமல் உலர்ந்தன. மார்பிலணிந்த
நல்லமணமுள்ள மலர்மாலைகள் புலால்நா
ற்றம்வீசின. தனது தேரிற்கட்டிய வீணைக்
கொடிமேல் கழுகுகளும் காகங்களும்வந்து
மொய்த்துக்கொண்டன. தன்னைச்சூழ்ந்து
வந்த குதிரைகள் கண்களில் நீரைத் தாரை
தாரையாகச் சொரிந்து அழுதன. பட்டம
ணிந்து அலங்கரித்துவந்த போர்க்குரிய
யானைகள் தறிகளில் கட்டிவைத்தாற்போ
லச் சோம்பிநின்றன. இப்படி தனக்குத்
துன்மைகளும்தேவர்களுக்குநன்மைகளுந்
தரத்தக்க துர்ச்சகுனங்கள் உண்டாயினவ
ற்றைப்பார்த்தும் ராவணன்மனம் சிறிதும்
தளராமல், ஏகமனுஷியனுக்கு என்னைவெ
ல்லவும் முடியுமோவென்று நினைத்தான்.
அவ்வாறு நினைத்த ராவணனுடைய தேரா
னது மகாவேகமாய் வருகின்றது; அது
வருகின்றவேகத்தால் உகாந்தத்தில் யாவும்
பசையறக்காய்கின்ற சூரியனுடைய வெப்
பத்தைச் சகிக்கமாட்டாமல் உயிர்வர்க்கங்
கள் ஒதுக்கிடத்தைத்தேடித் தத்தளிப்பது
போல, இரண்டுபக்ஷத்துச் சேனைகளும்
தாங்கள் அணியணியாக நெருங்கியிருந்த
நெருக்கங்கலைந்து சிதறிப்போயின. அங்கு
வந்த ராவணன் முடிவாகச்சொல்லப்பட்ட
பிரபத்தி நிஷ்டையோடெதிர்த்த யக்யாதி
கருமத்தைப்போலவும், மெய்ஞ்ஞானத்தோ
டெதிர்த்த அஞ்ஞானத்தைப் போலவும்,
சுதர்மத்தோடெதிர்த்த மகா பாதகத்தைப்
போலவும், பராக்கிரமத்தையும் வெற்றி
யையுமுடைய பெரிய திருவடிகளோடெதி
ர்த்த ஆயிரந்தலைகளையுடைய சர்ப்பராஜ
னைப்போலவும், பகற்காலத்தோடெதிர்த்த
இராக்காலத்தைப்போலவும், ஐராவத கஜ
சிரேஷ்டத்தோடெதிர்த்த திக்கஜத்தைப்
போலவும், நரசிங்கப்பெருமானோடெதிர்
த்த மேருமலைபோன்ற இரணியனைப்போ
லவும், ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவை எதிர்
த்துநின்று, முன்னொருகாலத்தில் நடந்த
யுத்தத்தில் எதிர்த்துநின்ற தேவர்களு
டையஆர்ப்பாட்டத்தையெல்லாம் தன்னு

டைய தொனியாலடக்கிய சங்கத்தையெடுத்து, யுத்தத்தைப் பார்க்கும்படி ஆகாயத்தில்வந்து கூடியிருந்த ருத்திரமூர்த்தியும் பிரமதேவனும் தங்கள் கைத்தலங்கள் சோர்ந்து உடல் நடுக்கங்கொள்ளவும் அண்டமுகடுவெடிபடவும்வாயில்வைத்தூதினன். அவன் ஊதிய சங்கத்தொனியைக் கேட்டுத் திருவுளங் கலங்கிய ஸ்ரீபாஞ்சசன்ய ஆழ்வான் விரைந்தெழுந்தருளி, ராவண சங்கத்தொனியும்நடுக்கமுறவும்,இந்திராதி தேவர்களெல்லாம் இஃதெந்தச் சங்கத்தினது தொனியென்று ஏக்கங்கொள்ளவும் தாமேநின்று தொனித்தருளினர். உடனே சுதரிசனமூர்த்தியும், கட்கமூர்த்தியும், சாரங்கமூர்த்தியும், கதாமூர்த்தியும், சுவாமிக்குப் பரமகைங்கரியத்தைசெய்யும்படிஎழுந்தருளி சமீபத்தில் நின்றார்கள். தேவதேவோத்தமனுகிய ஸ்ரீராமபிரானுனவர் தம்முடைய அநந்த கலியாண திவ்வியகுணங்களைச் சதுர்வேதங்களும் அறியாத தன்மையைப்போல அம்மூர்த்தியர்கள்ஐவரையும் காணுதவராயினர். அநந்தரம் திக்குகளும் திரிலோகங்களும் சமுத்திரங்களும் பர்வதங்களும் பெருந்தேவர்களும் நடுங்கவும், இவைகளெல்லாம் அடங்கிய பிரம்மாண்டமும் குலுங்கவும், இந்திரனுடைய சங்கையெடுத்து மாதலியானவன் தன் வாயில்வைத்து ஊதினன். இராவணேஸ்வரனுடைய அம்புகள் ஜகன்மோகனுகார லீலாமனுஷிய திவ்யமங்கள விக்ரகஸ்வரூபராயெழுந்தருளியஅப்பிராகிருதனுகிய ஸ்ரீராமச்சந்திரருடைய அழகிய திருமேனியின்மேல் வந்து படுவதற்கு முன்பாக, தேவதாஸ்திரீகளுடைய தாமரை மலர் போன்ற கண்களாகிய அம்புகள் அனந்தம்வந்து தைத்தன. இருவருடைய தேர்களிலுங்கட்டிய குன்றிமணிபோன்ற கண்களையுடைய குதிரைகள் ஒன்றின்மேலொன்று துள்ளிப்பாயும் கருத்துடையனவாய் கண்களில் தீப்பொறி பறக்கப் பார்த்து, ஒன்றையொன்று மென்று தின்று பின்பு தணியு மென்னலாம்படியான கடுங்கோபத்தைக் காட்டி நின்றன. பூமியும்-சுவர்க்கமும்-கடல்களும்-இன்றே முடிந்துவிடுமென்று சொல்லும்படியான பேரொலி உண்டாகும்படி இராவணனுடையதேரிலுள்ள வீணைக்கொடியும், ஸ்ரீராமச்சந்திர ரெழுந்தருளிய இரதத்திற்கட்டிய இடிக்கொடியும் முறைமுறையாக ஒன்றை யொன்றுமோதின. ராவணேஸ்வரன் வில்லுகளைவளைத்துப்பண்ணின குணத்தொனிகள் ஏழு சமுத்திரங்களும் ஒன்றுகச்சேர்ந்து கோஷித்தாற்போல ஒலித்தன. ஸ்ரீசக்கரதானுகிய எம்பெருமான் ஸ்ரீகோதண்டத்தை வளைத்துச் செய்த குணத் தொனியானது, பிரமாண்டமே நிலைகுலைந்து தடுமாறும்படி ஊழிகாலத்தி லெழுந்த மேகமுழக்கம்போலத் தொனித்தது. இப்படி இராவணனுக்கும் இராகவருக்கும் யுத்தப் பிரயத்தனங்கள் எல்லாம் நடந்துகொண் டிருக்கையில் அங்குமொய்த்து அதிககோபிஷ்டர்களாய் நின்ற திருவடிகள் முதலாகிய வீரர்கள்பிரமையால் இமைகொட்டாமல் கண்கள்விழித்தபடியே நின்று ஏங்கினர்களே யல்லாமல் யுத்தப் பிரயத்தனமொன்றுஞ் செய்தவர்களல்லர். உள்ளம் சிதறிப்போய்த் தங்களுக்குச் சுபாவமாகியசெய்கையையும் மறந்துபோனார்கள். தேவர்கள் யாவரும் இவ்விருவரில் யார் வெல்வார்களோ? யாது முடியுமோ? என்று நிச்சயிக்கக் கூடாதவர்களாய் அழுவார்கள். சுவாமியினிடத்துள்ள பிரேமையால் நாம் இந்தயுத்தத்தைப் பார்க்கமாட்டோ மென்று போவார்கள். எல்லாமும் வல்லோராகிய ஸ்ரீராமபிரான் செயிக்காமற் போவாரோவென்று திடங்கொண்டு திரும்பிவந்து கூடிநிற்பார்கள். உடனே அதை மறந்துபோய் இந்தக் குரூரனல் சுவாமிக்கு என்ன துன்பம் நேரிடுமோவென்று பதை பதைத்தார்கள். இப்படி பற்பலவாறு படுகின்ற துக்கத்தால் தாங்கள் தங்கள் செய்கையழிவார்கள். ஒருவாறு தெருட்சியடைந்து அங்கு நடக்கும் போர் முயற்சிகளைப் பார்த்தவுடனே சுவாமியின்மேல் இறைக்கலாமென்று பறித்துவந்த கற்பகமலர்கள் நழுவிச் சிந்திப்போகக் கைகளைச்சிரசின்மேல் கூப்பிக்கொண்டு ஓ மாதவா! ஓ கோவிந்தா! ஓ வாமனு! ஓ கேசவா! என்று எம்பெருமானுடைய சகஸ்திரநாமங்களைத் துதித்துக்கொண்டு நிற்பார்கள். இப்படி பார்க்கவந்த தேவர்களே பலபல விதமாக நடுங்கி மனேவியாகுலமடைவார்களென்றால், ராவணனைப்போன்ற புருஷசிரேஷ்டனும் இனி ஒருவன் உண்டோ? தனுர்வேதத்தில் கைவந்த

ஸ்ரீரகுநாயகருடைய வில்லும், தேவாசுர கண்டனாகிய இராவணனுடைய வில்லும், மேகத்தினிடத்தே தோன்றுகின்ற இந்திர தனுசுக்கள் இரண்டு உண்டாயிருந்து, அந்த இருவில்லுகளும் மின்னல்களே நாரியாகப்பூட்டப்பட்டு ஒன்றோடொன்று எதிர்த்து நின்றதையொத்தன. அரக்கர்குலாதிபன் பெரியவாய்கள் பத்தையும் திறந்து ஆரவாரிக்கின்ற அட்டகாசத் தொனியும், இராக்ஷச சேனாவீரர்கள் முறையே நிற்கும்படி அதட்டுகின்ற ஆரவாரமும், வில்லுகளிலுண்டாகின்றகுணத்தொனியும், அன்றையதினம் இன்ன இன்னதொனியென்று அறியும்படியாயும் இருந்தனவோ? சப்த சமுத்திரங்களும் மேகங்களும் ஆரவாரிக்கின்ற முடிவில்லாத பேரிரைச்சலென்றே எண்ணத்தக்கதுகளா யிருந்தன. அவை தீக மார்க்கானு சாரியாகிய இராவணனுடைய கண்களிற் பிறக்கின்ற தீப்பொறிகளிற் சில பூமியில் வியாபித்தபோதினும், அவற்றை மேகதாரைகளுக்கு உவமைசொல்லலாமோ? மேல்நோக்கிப் பறந்த சில நெருப்புப்பொறிகள் ஆகாயத்திற்சென்று திரும்பி விண்வீழ் கொள்ளிகளைப்போல உதிர்வன. செவ்வானத்து மேகங்களினின்றும் பிறக்கின்ற மின்னல்களைப்போலவும், இடி நெருப்புகளைப்போலவும் சிவந்தஇருபது கண்களினின்று மெழுந்த பல அக்கினிப்பொறிகள் பக்கங்களிற் பரவி, எட்டுத் திக்குகளிலும்போய் எதிர்ப்பட்ட பொருள்களைச் சாம்பலாகச் செய்வனவன்றிச் சும்மாய்போவனவல்ல. பரதாரகமனவிசிஷ்டனாகிய இராவணன் வாய்களைத் திறந்து வீராவேசச் சிரிப்புச் சிரிக்குந் தோறும் ஸ்ரீராமமூர்த்தி ஒருவருமே கலங்காதஊக்கமுடையவரா யிருந்தனர். மற்ற சதுர்த் திசைகளிலுமுள்ள யாவரும் நடுங்குவார்கள். சமஸ்த தேவசமூஹங்களோ சொற்கள் குழறிக் கால்கள் உதறுவார்கள். மேகங்கள் தாங்கள் கொண்ட கருப்பங் கலங்கின. இலங்கா நகரத்துள்ள அரக்கர்கூட்டங்களும் திடுக்கிட்டன. இப்படிச் சிரித்த இராவணனனவன் சதுர்த்தச புவனங்களையும் வெற்றிகொண்ட நான், இந்தச் சிறிய வில்லாளனாகிய ராமனை லக்ஷியம்பண்ணி வில்லைப்பிடித்துப் போர்செய்து கொல்லுதல் என்னுடைய பிரதாபத்துக்குக் குறைவாகுமல்லவோ? ஆகையால் தேவர்கள் உபகரித்த இந்தத் தேரோடு தூக்கி ஆகாயத்திற் சுழற்றிப் பூமியின்மேல் மோதியறைந்து கொல்லுவேனென்று ஆர்ப்பரிப்பான். உடனே மனமிரங்கிச் சற்று நேரம் வில்யுத்தம் பண்ணிக்கொல்வேன் என்பான். மின்னல்களைக்கொண்டு செய்து வைத்தாலாகிய அம்புகளாலே யுத்தம் இன்றோடுமுடிய ஹதம்பண்ணி, இந்தராமனைச் சிறைபிடித்து வைப்பேனென்றால், அதுவும் இம்மனிதனுக்கு வெற்றியேயாகும். ஆதலால் இரதத்தைக் கைகளால் ஒடித்துப் பொடிசெய்துவிட்டுப் பிடித்திருக்கின்ற ஒருவில்லோடுகூடச் சிறைபிடிப்பேனென்று எழுந்திருப்பான்.

இந்தப் பிரகாரமெண்ணிப் பதறுகின்ற மனத்தையும், இடையிடையே தோன்றுகின்ற கோபத்தையும், அள்ளிவிரைப்பது போலத் தீப்பொறிகள் பறக்கின்ற கண்களையும் உடைய கொடியோன் உயர்ந்தவில்லுகளை இருகுதைகளும் பொருந்தும்படி வளைத்து, இடிகளையும் அக்கினியையும் ஒத்தவைகளும் எமனுடைய மார்பினும் நுழையத்தக்கவைகளும், மழையை ஒத்தவைகளும் முன்னொரு காலத்தில் தேவர்கள்பிரயோகித்த அஸ்திரங்களையெல்லாம் பற்றறும்படிச்செய்தவலியுடையவைகளும் பாற்கடல் கடைந்த மத்தாகிய மந்தரகிரியைச்சுற்றிய வாசுகியென்னும் பாம்பினும் பெரியவைகளும்,ஆகிய கொடியதீக்ஷணியமான அம்புகளை எய்தான். அப்போது மேருமலையையும் துண்டப்படுத்தி அம்மட்டிலே தங்காமல் பிரம்மாண்டத்தையும் தொளைத்துக்கொண்டுஅப்புறத்தும்போகுமென்று தேவர்களும்சந்தேகங்கொள்ளும்படி, கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீராமபிரானனவர் ஸ்ரீ கோதண்டத்தில் அம்புகளைத் தொடுத்து, வாயுவேகமாக வருகின்ற இராவணபாணங்களை அந்தரத்திலேயே துண்டங் துண்டங்களாய் விழும்படித் துண்டித்துவிட்டார்.

அக்கால்செய்து நிறைவேற்றும் வல்லமையுடைய ஒருவன் முயன்ற காரியமானது அவன் முன்செய்த தீவினை நடுவேவந்து இடையூறுபடுத்த அழிந்தாற்போல, ஸ்ரீராமபாணத்தால் தன்னுடைய பாணங்கள் வலியிழந் தழிந்ததைக் கண்ட

இராவணன் அளவில்லாத அஸ்திரங்களை யுகமுடிவில் மேகங்கள் மழைக்காலிறங்கிப் பெய்தாற்போலப் பிரயோகித்தான். அந்த அஸ்திரங்கள் - ஆகாயம் - திக்கு - மலைகள் சமுத்திரங்கள் - பூமி - இவ்விடங்களிலெல்லாம் நிறைந்து, ஒருபொருளையும் பார்க்க வொட்டாமல் எல்லாத் தேவர்களுடைய கண்களுக்குத் தடையாய் நின்று, கணித சாஸ்திரிகளால் ஏற்படுத்தப்பட்ட கணிதங்களையும் கடந்து, வெயில் பூமியில் காய வொட்டாமற் பரவி இருளையுண்டாக்கித் தீயைக் கக்கினதுகள். யானைத் தோலைப் போர்த்த மஹாயுத்தத் தொழில்வல்ல ருத்திரபகவானும் இப்படிப் புறப்பட்டஅம்பு களைக்கண்டு திகைத்துப் போனாரென்றால் அந்த அம்புகளின் பெருமையை நாமென்னசொல்வது? மற்றப்பிரமன் முதலாகிய பெருந்தேவர்களும் முனிவர்களும் பயங்கொண்டு, நாங்களிந்தக் குரூரத்தைக் கண்களாற் பார்க்கமாட்டோமென்று தங்கள் கைகளால் கண்களை மூடிக்கொண்டு சும்மா இருந்துவிட்டனர்கள். அநேக இடிகள் விழும்போது மலைகள் பொடிப்பொடியாய்ச் சிந்துவதுபோல வானரசேனைகளெல்லாம் சிதறிப்போயின. அக்கால் எல்லாவற்றிற்கும் முதல்வராகிய ஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவானவர்அச்செய்கையைக்கண்டு அவற்றை விலக்க வேண்டுமெனத் திருவுளங்கொண்டு வில்லில் ஒரு அஸ்திரத்தை தொடுத்துப் பிரயோகித்தனர். அப்படிபிரயோகித்த ஓரம்பானது எப்படியானதென்றால்:—ஆகவநீயம் - தக்ஷிணாக்கினியம்-காருகபத்தியம் என்னும் முத்தீயால் யாகங்கள்செய்து வேத வொழுக்கத்தில் ஒழுகுகின்ற பிராமணனுக்கு பஞ்ச காலத்தில் ஒருவன்செய்த தானத்தின் பிரயோசனத்தைப்போல விர்த்தியானது. ஆகவேதானஞ்செய்தவனுடைய பூர்வ கர்மங்களெல்லாம் உடனே நசித்துவிடுவதுபோல இராக்ஷசகுலநாயகன் பிரயோகித்த அம்புகளெல்லாம் அந்த ஓரம்பினால் நாசமாயின. ஒருக்ஷணப் பொழுதுக்குள்ளாக லட்சம் பாணங்களைத் தேவகுல காலனானவன் எய்வான். அந்தக்ஷணத்துக்குள்ளேதானே இராக்ஷசகுலகால வைரியானவர் அவ்வளவு அம்புகளையும் பிரதி அம்புகள்தொடுத்து அறுத்துத் தள்ளுவார். இப்படி அவன் எய்கின்ற அம்புகள் யாவும் ஸ்ரீராமபாணத்தால் துண்டுதுண்டுகளாய்க் கடலிற் போய்விழுந்து நீரைக் குடிப்பதினால் அக்கடலும் சேறாகி, சற்று நேரத்துக்குள்ளே நீர்ப்பசையற்று அங்குள்ள பொருள்களெல்லாம் சாம்பலாகி அச்சாம்பல்கள் மேடுமேடாய் விளங்கும்.

அப்போது யுத்தத்தில் வல்லவனாகிய இராவணேஸ்வரன் தானெய்கின்ற அம்புகளையெல்லாம் காகுஸ்தகுலதிலகர் வில்லில் பிரதி அம்புதொடுத்தெய்து துண்டிக்கின்றமையால் மிருதியும் கோபங்கொண்டு எழுத்தடிகளையும்-கோடாரிகளையும்-தோமரங்களையும்-தண்டாயுதங்களையும் - இருப்புலக்கைகளையும் - சக்கராயுதங்களையும்-சூலாயுதங்களையும்-இவைபோன்ற மற்ற ஆயுதங்களையும் தனது இருபது கைகளாலும் எடுத்தெறிந்தான். உடனே சூல்கொண்ட காளமேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீ கோதண்ட ராமரானவர் வேகத்தால் காற்றையும் தீப்பொறிகளைச்சிந்துவதினால் அக்கினியையும் ஓசையால் இடியையும் ஒத்த அம்புராசிகளைத் தொடுத்தெய்ய, அந்த அம்புகளுள் ஓரம்பானது இராவணன் அபரிமிதமாக எய்த ஆயுதங்களுள் ஆயிரவேல்களைத் துண்டித்தன. ஓரம்பானது ஆயிர எழுத்தடிகளைக் கண்டித்தன. ஓரம்பானது ஆயிர கோடரிகளை முறித்தன. ஓரம்பானது ஆயிர அம்புகளைப்பொடிப்பொடி செய்தன. ஒவ்வோரம்பானது ஆயிர சக்கர சூலாயுதங்களைச் சின்னபின்னப்படுத்தின. இந்தப் பிரகாரம் சமயுத்த நடக்கிற சமயத்தில் ஸ்ரீராம பாணங்கள் தன்னுடலில் வந்து தைப்பதினால் இராவணனானவன் அம்புகள்பட்ட மதயானையைப்போல உள்ளங்கொதித்து, ஏழுமேகங்களும் ஒன்றாய்க்கூடிப் பெருந்துளி மழையைப் பெய்வதுபோலப் பத்துவில்லையும் வளைத்து அநேக அம்புகளைத்தொடுத்துப் பிரயோகித்தான். இந்தயுத்தத்தைக்கண்ட பிரிதிவு முதலிய பஞ்சபூதங்களும் பாபிஷ்டனாகிய இராவணன் இன்று முடிவானென்று சந்தோஷித்தன. ஸ்ரீசர்வேசுரனாகிய ஸ்ரீராமபிரானெய்கிற அம்புமழைகள் எங்கும் வியாபித்த போதிலும், கருணையால் தங்களுக்குக் குளிர்ந்திருப்பதினால் தங்களுடைய உருவங்கள் குளிர்ச்சி அடைவன.

அதி நீசனுகிய இராவணனெய்கிற அம்பு மழைகள் எவ்விடங்களிலும் சென்று உஷ்ணமா யிருப்பதினுல், அப்பூதங்களைந்தும் தமது உருவம் வெப்பங் கொண்டுபோய் அக்கினிமயமாயின. இவ்வாறிங்கே யுத்த களத்தே நின்றுப்போலிருந்து, ஸ்ரீ கருட பகவான் ஆகாய மார்க்கமாகக்கொண்டு வந்த மந்தரமலை ஸ்ரீ ஆஞ்சநேயர்கொண்டு வந்த சஞ்சீவிபர்வதம் நினைத்தவிடங்களுக்குச்செல்லுகின்ற திரிபுரம் கந்தர்ப்பலோகம் இவற்றுளொன்றை ஆகாயத்திற் கண்டாற்போலத் தோன்றும்படி இராவணனுடைய தோானது அந்தரத்தி லெழுந்து சென்றது. அங்கு நின்றபடி இராவணனுனவன் எய்த பாணவருஷங்கள் ஸ்ரீராமசுவாமியினுடைய திருக்கண்களுக்கு முன்பாகவே வானரர்களுடைய உடல்களில் தைத்து உருவிப்போவதினுல், இன்றோடு வானரர்கள் ஒழிந்தார்கள் முழுமையும் ஒழிந்தாரல்லர்என்று சொல்லும்படி அநேக வானரவீரர்கள் பிராணனீங்கினுர்கள். அதைக் கடாட்சித்த ஸ்ரீராமச்சந்திரர் தமது சாரதியைப் பார்த்து, ஓ இளமையாகிய ரிஷபத்தை யொத்த மாதலீ! நம்முடைய வானர சேனுவீரர்களில் அநேகர் இறந்தனர்கள். இவர்களிறக்கும்படி அம்புகளைப் பிரயோகித்த இராவணனுடைய இருபது தோள்களோடு பத்துத்தலைகளையும் இதோ அறுத்துத் தள்ளுகிறேன், நீயும் ரதத்தை ஆகாயமார்க்கத்தில் செலுத்தக்கடவாயென்று கட்டளையிட்டனர். அதுகேட்ட புத்திமானுகிய மாதலியென்பவன் அப்படியே செய்கிறேனென்றுகூறி, தேரென்று பெயர் வைத்துக்கொண்டிருக்கும் ஊழிக்காற்றைச் செலுத்தவும் அது சந்திரமண்டலத்தின்மேல் சூரியமண்டலம் போர்க்குப் போனதுபோல இராவணனுடைய தேருக்கு முன்னே வந்து சேர்ந்தது.

அப்படிச் சேர்ந்தமாத்திரத்தில் மேகக்கூட்டங்கள் சிதறவும் திக்குகளெல்லாம் தளர்ந்து நிலைகெடவும் விண்மீன்திரள்கள் உதிரவும் பெரிய மலைச்சிகரங்கள் நெரிந்து பொடியாகிச் சிந்தவும் செல்லுகிற வேகத்தால் உண்டாகிற காற்றுல் சமுத்திர நீர் சுழலவும், குலாசலங்கள்யாவும் குலுங்கவும் அண்டமும் நடுங்கவும் குயவனுடைய சக்கரம் சுழலுவதுபோல இரண்டு தேர்களும் ஆகாயத்தில் வலமிடமாகவும் பூமியில் இடம் வலமாகவும் சாரிகை திரிந்தன. இப்படி உழுந்துருளுகிற காலத்துக்குள்ளே எவ்வுலகங்களிலும் சென்று ஒன்ருக நெருங்கியும் உடனே பிரிந்தும் செல்லுவதினுல், இது வளர்கின்ற கீர்த்தியையுடைய இறைவனுகிய ஸ்ரீதசரதராமன் தேரென்றும் இஃது ராவணன் தேரென்றும் தேவர்களாலும் அறியக்கூடாமற் போயது. இத்தேர்களின் சிகரங்கள் படுவதினுல் உதிராத விண்மீன்களும், சக்கரங்கள் தாக்குவதினுல் நெக்குவிடாத மலைகளும், அதிலுண்டாகும் தீப்பொறிகள் சிதறுவதினுல் வலிகுலையாத திக்குகளும், அதிர்ச்சியினுல் வாயால் இரத்தங்கக்காத உயிர்களும் காணப்படவில்லை.

அக்காலங்கு கூடியிருந்த தேவர்களிற் சிலர் தேர்களிரண்டும் இப்போது இந்திரலோகத்தில் சென்றதுகளென்பார்கள். அப்படிச் சொன்னவர்களே இல்லை இல்லை சந்திரலோகத்தில் சென்றதுகளென்பார்கள். சிலர் பிரமலோகத்தை யடைந்ததுகளென்பார்கள். சிலர் இதோ மந்தரமலையின்மேல் இறங்கினதுகளென்பார்கள். சிலர் இத்தினம் உலகங்கள் அழிந்துவிடுமென்று ஏங்கி நாவுலர்ந்து போனவர்களாய்ப் போனதேர்கள் திரும்பியதுகளோவென்பார்கள். சிலர் மேகங்கள் தவழ்கின்ற ஆகாயத்திலுள்ள சுவர்க்கலோகம்பிளந்து போச்சோ வென்பார்கள். சிலர் பூமியில் இறங்கினவோ என்பார்கள். சிலர் இத்தேர்களிற்பூட்டியதுகள்குதிரைகளோ? அல்ல குதிரைகளானுல் இவ்வளவு வேகம் ஏது? ஆதலால் ஆச்சர்யகரமான காற்றுகளே என்பார்கள். சிலர் தேர்வீரர்கள் பாற்கடல் மத்தியில் நின்று யுத்தஞ்செய்கிருர்களென்பார்கள். சிலர் ஏழுசமுத்திரத்துக்கும் அப்புறத்துச் சென்ருர்களென்பார்கள். சிலர் மேற்குக்கடலின்கண் இருக்கிருர்களென்பார்கள். சிலர் கிழக்குக்கடலின்கண் இருக்கிருர்களென்பார்கள். சிலர் இங்கே வந்தனரென்பார்கள்.

இப்படி தேவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டிருக்கையில் ஸ்ரீராமர் எழுந்தருளிய ரதமும் இராவணன் ஏறியதேரும் சப்த சமுத்திரங்களிலும், சப்த தீவுகளிலும், சப்த குலாசலங்களிலும், சப்தலோக

ங்களிலும், அண்டபப்பித்திகையிலும், ஊழிக்காற்றைப்போல் ஓயாமல் திரிந்தன. அப்படித்திரிந்த கடல்களிலும் உலகங்களிலும் தீவுகளிலும் குலாசலங்களிலும் தனக்கிரக்ஷகமாயிருந்த பொருள்களையெடுத்தெறிந்தாற்போல, இராவணன் எறிந்தனவெல்லாம் ஸ்ரீராமசுவாமியின்மேல் எறிந்த பாணவருஷங்களாகவே யிருந்தன. பிரதாபலங்கேஸ்வரன் எறிகின்ற ஆயுதங்களையும், அவனெய்கின்ற அம்புகளையும், ஸ்ரீராம பாணங்களில் சில அறுத்துத்தள்ளின. சில தடுத்துவிட்டன. இம்மட்டிலே தம்முடையவேகம் அடங்காமல் உலகமுழுமையும் சென்று பாய்வன. ஸ்ரீராமச்சந்திரர் இராவணன் அபாரமாக விடுகின்ற அஸ்திர சஸ்திரங்களை அறுப்பதும் தடுப்பதுமேயல்லாமல் வேறொன்றுஞ் செய்திலர். அவ்விருவர்களுடைய தேர்களும் யுத்தந் தொடங்கிய ஏழாநாள் மலைகளும், சமுத்திரங்களும், சந்திராதித்தர்கள் திரிகின்ற மேலுலகங்களும், கீழுலகங்களும், நிலைகுலையும்படி மோதிமோதித் திரிகின்ற சண்டமாருதம்போலப் பேரிரைச்சலோடு லங்காநகரமே வந்துசேர்ந்தன.

அக்கால் இரண்டு சாரதிகளும் நடத்திய வெற்றியுள்ள தேர்க்குதிரைகள் கடலிலுள்ள மணலினது தொகைக்கு மூன்று பங்கு அதிகமாக எல்லாவிடங்களிலும் சாரிகை திரிந்ததுகளாயினும், சற்றேனும் இளைக்கவும் இல்லை. இளைப்படைந்து பெருமூச்சுவிடவும் இல்லை. ஸ்ரீராமபத்திரர் எழுந்தருளிய இந்திரனுடைய தேரிற்கட்டியதும் இதற்கு முன்னே நடந்த கொடிய சண்டைகளிலெல்லாம்ஒருவராலும்அறுக்கப்படாததுமாகிய ஆணிக்கொடியின்பேரில், அதிபிரதாப சாலியாகிய இராவணன் ஒரு அர்த்தசந்திரபாணத்தைப் பிரயோகித்து அதை யறுத்துத்தள்ளினான். உலைக்களத்திற் காய்ச்சின பெரிய இருப்புலக்கையின் முனையைக் குடத்தினீரில் தோய்த்த மாத்திரத்தில் அந்நீர் சுவறிப்போவது போல, இராவணனால் அறுபட்ட இடிக்கொடியானது சமுத்திரத்தில் வீழ்ந்தமாத்திரத்தில் அக்கடல் நீர் குறைந்துபோனது அப்போது இராவணனனவன் ஸ்ரீதசரத புத்திரர் ஆரோகணித்தருளிய தேரிற்கட்டிய சப்தப்பிரமத்தைப்போல அழியாத குதிரைகளின்மேல் ராசிராசியாகச் சரங்களைப் பிரயோகித்து, சாரதித்தொழிலில் கீர்த்திபெற்ற மாதலியினுடைய வயிரமார்பில் பன்னிரண்டு அம்புகளை எய்தான். உடனேயவன் கட்டுகளமைந்தபத்து வில்லுதகளும் விர்த்தாகாரமாக வானவில்லைப் போலவும் பிறைச்சந்திரனைப் போலவும் தோன்றும்படி வளைத்துத் தூவிய அம்புகள், ஸ்ரீஜானகிபிராட்டி மணவாளருடைய திருமேனியைக் கவிந்துகொண்டமையால் தேவர்களும் சுவாமினுடைய திருவுளத்தைக்கண்டு சேவிக்கக்கூடாமற் போனார்கள்.

இப்படி சேவிக்கக்கூடாமற்போகவே அதி பராக்கிரமசாலிகளாகிய அந்தத்தேவர்கள் தெய்வசகாயராகிய ஸ்ரீராமசுவாமி இனித் தோற்றுவிடுவாரென்று தங்களுக்குள் ஒரு கருத்துத்தோன்றிப் பயந்துவிட்டார்கள். ராக்ஷசர்களெல்லாரும் கோவென்று ஆர்ப்பரித்தார்கள். உலகமே திருவுருவமாயின ஸ்ரீசர்வேசுரனிடத்துத் தனக்குண்டாகிற அன்பினால் பயம் ஜனித்து மேலேயுங்கீழேயும் காற்றுத்திரிந்ததில்லை. அண்டமும் கலங்கியது. அக்கினியும் தனது வெப்பமும் ஒளியும் அடங்கியது. ஏழு கடலும் ஆகாயத்தை அளாவும்படி பொங்காமல் தமக்குள்ளே அசைவற்று அடங்கின. சந்திரசூரியர்கள் ஆகாயமார்க்கத்தில் போகாமல் திரும்பினார்கள். மேகங்களும் தங்களிடத்துள்ள நீர் வற்றிப்போனதுகள். திக்கு யானைகள் களிப்பு நீங்கின. கடல் அலைகள் ஒலிக்க அஞ்சின. அங்காரகன்விசாகநக்ஷத்திரத்தை யேறின காலத்தில் உண்டாகும் நடுக்கம்போன்ற நடுக்கத்தைக்கொண்டு மேருவும் குலுங்கியது வானரங்களும் வானரப்படைத்தலைவர்களும் சுக்கிரீவமகாராஜரும் ஸ்ரீராமாநுஜரும்தங்களுக்குப் பிராணபதமாகிய ஸ்ரீரகுநந்தனரைக் காணாதவர்களாகி, பூதநாதனாகிய கஜசிரேஷ்டத்தைக் காணாமல் காட்டு யானைக் கூட்டங்கள் கலங்குவது போலவும் திருவணை செய்தகாலத்தில் கடல்மீன்கள் கலங்கியதுபோலவும் கலங்கினார்கள்.

ஸ்ரீராமபத்திரரானவர் தருமநீதியின் படி ரதத்தைச் செலுத்திக்கொண்டிருந்த மாதலியினுடைய மார்பில் தைக்கும்படி இராவணன் எய்த அம்புகளைக்கண்டு, முன்

னே இளையபெருமாளுடைய திருமார்பில் வேல் தைத்ததென்று கேள்விப்பட்ட காலத்தில் கலங்கியதைப் பார்க்கிலும் அதிகமாகத் திருவுளம் கலங்கி, நீல நிறமுள்ள ராக்ஷசகுலேந்திரன் எய்த சரங்களையெல்லாம் இமைகொட்டுதற்கு முன்பாகத் துண்டுதுண்டுகளாக அறுத்துத்தள்ளி, வேறே தமது கோதண்டத்தில் அணியணியாக அம்புகளைத்தொடுத்தெய்து ஆகாயமெல்லாம் பாணவருஷ மாக்கிவிட்டார். அது கண்ட தேவர்கள்முதலாகிய யாவரும் மனந்தேறினர்கள். மேலும் எல்லாவுயிர்களிலும் பிரியாமல் வசிக்கின்ற ஸ்ரீராமபிரானவர் தூண்களை வரிசையாக வைத்தாற்போல விளங்குகின்ற இராவணனுடைய தோள்கள்தோறும், வளைந்த பர்வதாகாரமாகிய வில்லுகளின் வலிகுறையும்படி பாணங்களை எய்தனர்.

அவ்வளவிலே நில்லாமல் திருப்பாற்கடலில் யோகநித்திரையி லிருந்துகொண்டே எல்லாம் அறியவல்ல பரஞ்சோதியாகிய ஸ்ரீதசரதாத்மகர் ராவணனுடைய மார்பிற் பூட்டிய கவசத்தை உருவிக்கொண்டு ரத்தபானம்பண்ணும்படி கிரணங்களைவீசுகின்ற கூறிய அம்புகளைப்பிரயோகித்து, உடனே திக்கின்முடிவுவரையுஞ்சென்றடர்ந்தமேகராசிகள்தன துமுனைபட்டுச்சிதைந்தோடும்படி மோதுகின்ற பரந்த வடிவினதாகிய மொட்டுள்ள வீணையெழுதியகொடியையும் ஒரு பாணத்தால் அறுத்துத் தள்ளினர். ஸ்ரீராமபிரானுடைய இரதத்திற் கொடியில்லாமையைக் கண்டு சதுர்வேதஸ்வரூபியாகிய ஸ்ரீகருடபகவான் அத்தேரின் சிகரத்திலெழுந்தருளினர். அதுகண்டதேவர்கள் ஸ்ரீவேதபுருஷனுகிய வைணதேயன் அதிகோபிஷ்டராய் எழுந்தருளினராகையால், நாமினி இந்த யுத்தத்தைப் பற்றி ஒன்றும் யோசிக்க வேண்டியதில்லையென்று ஸ்ரீபக்ஷிராஜனை நானுவிதமாகத் துதித்தனர். அந்தச் சமயத்தில் தேவகண்டகனுகிய இராவணன் போரில் ஒப்பில்லாதவராய் விளங்குகின்ற ஸ்ரீரவிகுல நாயகரைஇனித் தான் விடப்போகிற பாணமானது ஒன்றும் செய்யமாட்டா தென்பதை அறிந்தவனுக இருந்தும், எவற்றிலும் சிரேஷ்ட பாணமாகிய சிவாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகித்தான். அக்கினி மயமாகிய முகத்தையும் இரத்தமயமாகிய முகத்தையும் தேவ முகத்தையும் பேய் முகத்தையும் சர்ப்ப முகத்தையுமுடைய அந்தப் பஞ்சமுகாஸ்திரமானது ஒரு திசையிலிருந்து ஒருதிசைவரையும் வளைந்து காணப்படுகின்ற வக்கிரதந்தங்களை யுடையதாயும், தன்னைப் பிரயோகித்த எசமானன் எதையெதைச்செய்ய வேண்டுமென்று நினைக்கிருனே அவற்றை யெல்லாம் செய்வதாயும், சூரிய சந்திரர்களை விழுங்கத் தக்கதாயும், ஒருதிக்கில் அக்கினிச் சுவாலையையும் ஒருதிக்கில் மழையையும் ஒருதிக்கில் மின்னலையும் ஒருதிக்கில் இடியையும் ஒருதிக்கில் இரவென்றும் பகலென்றும்சொல்லப்படாத மயக்கத்தையும்ஒருதிக்கில் கல்மழையையும் உண்டாக்கிக்கொண்டு, ஏழுலோகங்களிலு மிகுதியும் அந்தகாரமே கவிந்துகொள்ளவும் அங்குள்ள ஜீவராசிகளெல்லாம் கதறவும் வருவதாயது. அதை ஸ்ரீராமநாதனவர் கடாக்ஷித்தருளி அதற்குத் தக்கபடி ஆலோசித்து, அந்தச் சிவமூர்த்தியினுடைய பாசுபதாஸ்திரத்தையெடுத்து எய்தனர். அந்தச் சிவாஸ்திரமானது ஒருவன்கனவினுற்கண்டபொருள் விழித்த மாத்திரத்தில் மறைந்தாற்போல அந்த மாயைகளெல்லாம் போய்விடும்படி இராவணன்விட்ட பாணத்தை விழுங்கிவிட்டது. ஒருவனுக்கு ஸ்ரீமத் பரமவேதமார்க்கக்கியானம் ஜனித்த மாத்திரத்தில் அசுரமோகனுர்த்தமாகஉண்டானஅவ்வைதிகமார்க்கத்திற் பற்றுவிட்டாற் போலத் தன்பாணம் அழிந்துபோனதைக் கண்ட இராவணனுனவன் இருபது கண்களிலும் தீப்பொறிகள் பறக்கப் பற்களால் வாயைமடித்துக்கடித்து, கழுகின் இறகுகளையமைத்த குரூரபாணங்களை யெடுத்து ஸ்ரீரகுநந்தனருடைய திருமேனியில் அழுந்தும்படி எய்தான். தேவர்களுடைய படைகளையும் கீர்த்தியையும் நாசப்படுத்தியதும், இராவணனேடெதிர்த்த வீரர்களுடைய உயிர்களைக் கொண்டுபோய் நமனுடைய வயிற்றிலிட்டு நிரப்பியதும், இந்திரனுடைய ஜெயத்தை முழுமையுந் தொலைத்ததும், ஒருகாலத்தில் எதிர்த்தபோது தேவர்கள் தங்கள் கையில் பற்றியிருந்த ஆயுதங்களைப் பார்த்து அவமதித்துச் சிரித்ததும், எந்தலோகங்களில் உள்ளவர்களையும் வெற்றி

கொண்டு பர்வதங்களைப் பேதித்துச் சென்றதும் ஆகிய அந்தப்பாணமானது, பிராமண்ணிய தெய்வமாகிய ஸ்ரீராமபிரானை நோக்கி வருவதாயது. அதை அங்கங்கே நின்று தேவர்கள் யாவரும் பார்த்து இது லோகங்களையெல்லாம் கவளீகரிக்கும்போலிருக்கிறதென்று நடுங்கவும், அந்நடுக்கமொழிந்து யாவரும் கல்லென்று ஆரவாரிக்கும்படி ஸ்ரீராமச்சந்திரர் இடியின்மேல் வடவாமுகாக்கினியைப் பிரயோகித்தாற்போல அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்து அறுத்துத்தள்ளினர். இப்படி அறுத்துத்தள்ளின நொடிப்பொழுதுக்குள்ளே இராவணனனவன் உயிர்களை அபகரிக்கிற விஷயத்தில் யமன் பின்வாங்கினபோதிலும் தாம் பின்வாங்காதவைகளும், கடலின் நீரையெல்லாம் வற்றச்செய்பவைகளும், மேருமலையையும் புழுதியாக்கத்தக்கவைகளும், காற்றும் பின்செல்லும்படி முன்னே செல்லத்தக்கவைகளும், உலகங்களையெல்லாம் உருவிப்போகத்தக்கவைகளும், ஆகிய நூறுகோடி அம்புகளைத்தொடுத்துச் செலுத்தினன். இவ்வாறவன் செலுத்தினதைக்கண்ட முனிவர்களில் சிலர் இந்தராவணனுக்கு என்ன கைவேகமென்பார்கள். சிலர் இவைபாணங்களல்ல மாயமோவென்பார்கள் சிலர். இந்த அம்புகள் பாய்வதற்குஆகாயத்தில்இன்னமும்இடமுண்டோவென்பார்கள். சிலர்முன்னேயெல்லாம் இவ்வளவு குரூரமான யுத்தத்தை இராவணன் செய்ததில்லை யென்பார்கள். இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கையில் சதுர்வேதங்களும் மூலகாரண பரவஸ்துவென்றெடுத்துச் சொல்லப்பட்ட ஸ்ரீராமநாதனனவர் இலங்காநாயகன லேவப்பட்ட பாணங்கள் யாவும் கூரிலிருந்து அடிக்குதைவரையும் இருபிளவாகும்படி அர்த்தசந்திர பாணங்களைச் செலுத்திப் பிளந்து தள்ளினர். அக்கால் பிரம்மாண்டத்துக்குள்ளே மகா தபசுகளைச்செய்து வரங்களைப்பெற்றவர்களுக்குள் எல்லாம் சிறந்தவனுகிய தசக்கிரீவன் பலபோர்களிலும் வெற்றியொன்றுமேபெற்ற மயனுல் தரப்பட்ட பாணத்தையெடுத்து, ஸ்ரீதசரத திருக்குமாரர்மேல் வில்லில் தொடுத்து விடுத்தான். அதைப் பார்த்திருந்த தேவர்களெல்லாரும் இவ்வரக்கர் குலேந்திரன் மாயாஸ்திரத்தைப் பிரயோகித்துப் பூமியைச்சுட்டு நிர்மூலப் படுத்துகின்றுனேயென்று நடுக்கங்கொண்டுசுருண்டுசுருண்டுவீழ்ந்தார்கள் வானரங்களும் வானரப்படைத்தலைவர்களும் திக்குவிதிக்குகளாக ஓட்டம்பிடித்தார்கள். அப்போது வேதவேதியர்கள் வணங்குதற்குரிய தெய்வமாகிய ஸ்ரீரகுநந்தனர் இனிப்பூலோகத்தில்மனுஷப்பூண்டில்லாமல் செய்து விடுகிறேனென்று வருகின்ற அந்தப் பாணத்தினுடைய சௌரியத்தை அறிந்து, காந்தர்வாஸ்திரத்தைக்கொண்டு அதனைத் துண்டங்கள் செய்துவிட்டார். அக்கால் இராவணனனவன் பூர்வத்திற் பிரமனுற் படைக்கப்பட்டதும், இரணியகசிபானவன் தன்னைக்கொண்டு இந்தப் பிர்மாண்டத்தைத் தன்வசப்படுத்தினதும், மதுவென்னும் அசுரன் தன் கையிற்கொண்டு யுத்தஞ்செய்ததும், சூரபத்மனென்னும் அசுரன் முற்காலத்தில் தேவர்களை அதஞ்செய்ததும், மேருமலைக்குச் சமானமானதும், சூரியனைப்போன்ற ஒளிவீசுவதும், உலகத்திலுள்ள தேவமனுஷிய திரியக்குவாகிய சமஸ்தபிராணிகளும் ஒருயுககாலவரையும் நின்று உருட்டினும் ஒரு சுற்று முருளாத கனமுள்ளதும், அனேக தேவர்களுடைய சிரங்களை உருட்டியதும், சமுத்திரஜலத்தைப் பானம்பண்ணின அகஸ்தியரால் கொடுக்கப்பட்டதும் ஆகிய கதாயுதமானது நம்மிடத்து உண்டல்லவா? அதையெறிந்து இந்த ராமனுடைய உயிரை வாங்குவோம் என்று உத்தேசித்தெடுத்துச்சுற்றி எறிந்தான். அந்தத் தண்டானது ஆகாயத்தில் ஆதித்தனைப்போல ஒளிவீசிக்கொண்டு, இதுபட்டுக் குடம்போன்ற அண்டமானது உடைந்து விடுமோவென்று சுவர்க்கவாசிகள் யாவரும் திடுக்கிடவும் ஸ்ரீராமநாதனுடைய யுத்தத்தைக் கண்டு சேவிக்கும்படி வந்திருந்த சகலதேவர்களும் இருந்தவிடம் தெரியாமலோடிப்போகவும் மந்தரமலையானது அதனுடைய வேகத்தையுணர்ந்து தன்னையெடுத்துப்போகக் கருடபகவான் மறுபடியும் வருகிருரோவென்று பயப்படவும் வருவதாவது. அப்படி வருகின்றதை ஸ்ரீராமச்சந்திர சுவாமியானவர் கடாக்ஷித்து, தேவர்களுக்கரசன் தன் ஆயிரங் கண்களாலும் பார்த்து அளவுசெய்யப்படாத தாமரைமொ

ட்டம்பைச்செலுத்தி நூறு துண்டுகளாகத் துண்டித்து உதிர்த்துவிட்டார்.

அதுபார்த்த இராவணன் நம்முடைய தனுர்வேத வித்தியாசாதுரியத்துக்கு முன்னே இந்த ராமனுடைய வித்தியாகியானத்தைப் பார்த்தால், இவனையொரு சிறுகுழந்தையென்றே எண்ணவேண்டும். பேயைப்போல யாதொரு பயனும்படாத அற்ப ஆயுதங்களை நாம் எய்வதினால் இந்தராமனும் அவைகளைத் துண்டித்து, தான் தெரிந்துகொண்ட வில்யுத்தத் திறமையைக் காட்டுகின்றான். ஆதலால் அப்படிப்பட்ட ஆயுதங்களை எய்வதினால் பயனொன்றுமில்லை. என்று தனக்குள்ளே யோசித்துக்கொண்டு, இந்த மனுஷியனும் இவனுக்குத் துணையாகிய பெருஞ்சேனைகளும் இதனால் தான் மடிவார்களென்று மாயையின் அஸ்திரத்தை எடுத்து, அதற்குச் செய்யவேண்டிய தீப தூப பூஜைகளைச்செய்து, தன் உபாசனாமூர்த்தியாகிய சாக்ஷாத் பரமசிவனை அதிவிநய பயபக்தியோடு சிவாகமத்திற்கூறும் விதிப்படி தியானித்துத்தொழுது, அம்மாயாஸ்திரத்திற் கதிதேவதையாகிய ரிஷியையும் மந்திரத்தையும் மனதிலெண்ணி அதனைப் பத்துத்திக்கிலும் ஆகாயப்பரப்பிலும் அடங்காத வண்ணமாக வில்லில் தொடுத்து அப்பிராகிருதராகிய ஸ்ரீராமன்மேற் பிரயோகித்தான். இப்படி ராவணன் மாயாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்த மாத்திரத்தில் அந்த அஸ்திரத்தினது மாயாசத்தியால் முன்னே மடிந்துபோன இராக்ஷசவீரர்களெல்லாம் ஆகாயத்தை யளாவும்படியான உடலோடு ஆயுளைப்பெற்று உயிர்த்தெழுந்தார்கள் என்னும்படி எங்கும் அரக்கர்களாய் நின்று ஆரவாரித்தார்கள்.

அஃதெப்படியென்றால் இந்திரஜித்தும், அவனுக்கு இளையோர்களாகிய அதிகாயனும் கும்பனும் நிகும்பனும், படைத்தலைவர்களாகிய மகாராக்ஷசனும், பிரகஸ்தனும், குருதிக்கண்ணனும், புகைக்கண்ணனும், வன்னியும், மற்றவர்களும்,மகோதரனும், மற்றமந்திரிகளும், மூலபல ராக்ஷசர்களும், ரதகஜதுரகபதாதிகளும் அவ்விடத்தில் வந்து நின்று; மேகங்கள் சிந்தும்படி கோவென்று பேரிரைச்சலிட்டார்கள். ஸ்ரீராமபாணத்தால் உயிர்மாய்ந்துபோனவை ஆயிரவெள்ளமென்று அறிவுடையோராலே சொல்லப்பட்ட அவ்வளவுசேனைகளும் இராவணன் சாக்ஷாத் ஸ்ரீ ருத்திரபகவானிடத்திற்பெற்ற வரத்தால் உயிர்பிழைத்து எழுந்தனவோவென்று கண்டோர் சொல்லும்படி யுத்தகளமுழுமையும் நிறைந்து வந்து நின்று தேவர்களும் முனிவர்களும் பயந்தோடும்படியாக முன்னே ஜெயித்தது எங்களைத்தானோ? நாங்கள் இறந்து போவதுமுண்டோ? அப்படி இறந்துபோனதை இன்றைக்குக் காட்டுகிறோம். ஓ ஸ்ரீராமா! ஓ இலட்சுமணா! ஓ சுக்கிரீவா! ஓ சாம்பவா! ஓ அனுமானே! யுத்தத்துக்கு வாருங்கோள்: விரைவில் வாருங்கோள்: என்று தங்களைக் கொலைசெய்த வீரர்களுடைய பெயர்களைவிட்டு அழைத்தன. பூமியை வேரோடு பேர்த்தெடுத்துக்கொண்டு எழுந்தன வென்னும்படியான தோற்றத்தையுடைய பூதகணங்கள் பர்வதராசிகளைப்போல ஒருபக்கத்தில் காணப்பட்டன. முதலையின் உருவம்போல விளங்குகின்ற வளைந்த குண்டலங்கள் காதுகளிலே பிரகாசிக்கும்படி பேய்க்கூட்டங்கள் ஆகாயத்தினில் சிறிது இடமுமில்லையென்று சொல்லும்படியாகக் காணப்பட்டன.

அசத்தாகிய நெறியிற்செல்லாத சதுர்முகப் பிரம்மாவைப் பார்க்கிலும் நல்ல சக்தியுள்ளவர்களாய்த் தாமசகுணத்தோடு பிறந்து தருமங்களை அழிக்கின்ற ராக்ஷசர்கள் போர்க்களமெங்கும் வியாபித்து, சித்திரத்தொழில்அமைந்த முத்துக்குடைகள் உடையவர்களாய் நின்றார்கள். முன்னே இறந்துபோன ராக்ஷசர்களைப் பார்க்கிலும் இரண்டுபங்கு அதிகமான பெருங்கூட்டத்தர்களாய் சந்திரப்பிளவுபோலப் பிரகாசிக்கும் கூரிய தந்தங்களையும், அஞ்ஞானத்தொழில்களையும், ஒருவராலும் வெல்லக்கூடாத தேகவலியையுமுடைய முத்துமாலையணிந்த வித்தியாதரர்கள்; எல்லாத்திக்குகளிலும் அதிகர்வத்தோடு நெருங்கி நின்றார்கள். தாவுகின்ற சிங்கமும் யாளியும் ஒப்பென்று சொல்லத்தக்கவர்களாகிய ராக்ஷசர்கள் யாவரும் எட்டுத்திக்குகளிலும் உள்ளவர்களையும் உலகத்திலுள்ளவர்களையும் போரில் வெல்லும் வலியுடையவர்களாகி, வடவாமுகாக்கினியானது கருங்கடலில் மூளைத்தாற்போல் விளங்குகின்ற செ

ம்பட்டமயிரும் கறுத்த உடலுமாகத்தோன்றி, ஒளியும் வெப்பமுமாகிய அழகமைந்த இடிகளையும் சுடருள்ள கொடிய படைகளையும் கைகளிலுடையவர்களாய் வந்து நெருங்கினார்கள். இந்தச் சமூகங்களையும் அவைகள்செய்யும் பயங்கரகிருத்தியங்களையும் கண்ட ஸ்ரீமகாலட்சுமிநாயகராகிய ஸ்ரீராமபிரானானவர் மாதலியைப்பார்த்து, ஓ தேவசாரதி! இங்கே தோன்றுகின்ற இவைகளெல்லாம் மாயத்தினாலுண்டாயினவோ? இறந்த ராக்ஷசர்களும், அவர்கள் சேனைகளும் விதியினுடைய பலத்தால் உயிர்பிழைத்து எழுந்தார்களோ? பிரம்மேந்திராதிகளிடத்தில் தாங்கள் பெற்றிருந்த வரங்களினால் உயிர்பெற்றார்களோ? அல்லது பிழைத்தெழுந்ததற்கு வேறே ஏதுவுமுண்டோ? எனக்குஒன்றுந்தோன்றவில்லை. உனக்குள் ஆலோசித்துச் சொல்லக்கூடுமானால்சொல்லக்கடவாயென்றுசொன்னார்

அதுகேட்ட மாதலியானவன் அவரைப்பார்த்து, ஓ சூல்கொண்ட காளமேகம்போலத் திருமேனியையுடைய மாயப்பிரானே! இரும்புத்தொழில் செய்வதில் தேர்ச்சியுள்ள கருமானிடத்தில்ஒருவன் நூல்கோத்துத் தைக்கும் சிற்றூசி ஒருபொன்னுக்குக் கொள்கவென்று விலைகூறி விற்பதுபோல, இராவணனானவன் மற்றெவராலும் நீக்குதல்கூடாத மாயாஸ்திரத்தைப் பிரயோகித்தான், அஃதினி கூர்மையுள்ள வெண்பற்களையுடைய அரவின்விஷத்தை உமது நாமத்திரையமாகிய அச்சுத அநந்த கோவிந்த என்னும் திருமந்திரங்களைப் பிரணவசகிதமாக உச்சரித்து அடக்கியதுபோலவும், துஷ்கர்ம வியாதிகளையும் அந்தநோய்க்குக் காரணமாகிய வினையையும் உமது திருநாமத்தையோதி ஒழிப்பது போலவும், தேவதாந்தரங்களைப் பற்றவிட்டு நின்னையே பரவஸ்துவென உண்மைஞானம் பிறந்து நினைக்கும் பரமவைதிகளுடைய பிறப்பு ஒழிவதுபோலவும், இதோ உம்முடைய பாணப்பிரயோகத்தால் ஒழிந்துவிடப் போகிறது. இங்கே தோன்றுகின்ற எல்லாமும் தசக்கிரீவன் பிரமேந்திராதிகளிடத்தில் பெற்ற வரத்தினாலேயாவது, மாயையினாலேயாவது, தனதுதவபலத்தினாலேயாவது,அல்லது யதார்த்தத்தினாலேயாவது உண்டானவைகளாயிருந்தபோதிலும்இருக்கட்டும் நீர் கியானாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்வீரென்று சொன்னான்.

இப்படி மாதலிசொன்னமாத்திரத்தில் சகல வேதங்களும் சிரசினால் வணங்கவும் தேடவும் எட்டப்படாத பரம்பொருளாகிய தாசரதியானவர் யானெனதென்னும் அகப்பற்றையும் புறப்பற்றையும் ஒழிப்பதற்கேதுவாகிய கியானமய அஸ்திரத்தை விட்டனர். அந்தக் கியானாஸ்திரமானது புறப்படவும் இராவணனால் விடப்பட்ட மாயாஸ்திரமானது ஜனனத்துக்கேதுவாகிய அஞ்ஞானத்தாற் கவியப்பட்டு ஸ்வரூபக்கியானமில்லாமற் செய்துகொண்டிருக்கும் வியாபாரங்களெல்லாம் ஸ்வரூபக்கியானம்பிறந்தமாத்திரத்தில் ஒழிந்துவிடுவதுபோல ஒழிந்துபோய்விட்டது. அந்தமார்க்கத்தில் காளகண்டராகிய சங்கரமூர்த்தியும், சக்கரதரராகிய உபேந்திர விஷ்ணுமூர்த்தியும், சதுர்முகப் பிரம்மமூர்த்தியும், இராவணன்முதலிற்பெற்றவரமுதலானதுகளையெல்லாம் ஆலோசித்து, இன்றோடே தேவகண்டகர்களாகிய ராக்ஷசர்களை உயிரோடு முடிக்கின்றகாலம் இதுதானென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்தத்திரிமூர்த்திகளுடைய கண்களுக்கு முன்னேதானே சமஸ்ததேவர்களையும் வலியடங்கச்செய்யும் பிரதாபலங்கேஸ்வரனானவன் தானெய்த மாயாஸ்திரமானது ஹதமாய்ப்போனதைக் கண்டு, ஆயிரமணிகள்கட்டிக்கோஷிப்பதும், தேவர்கள் கண்டால் வியாகுலமடைந்து நடுங்குவதும், ஆகிய சூலத்தை எடுத்து சிருட்டிக்கப்பட்ட எல்லாவுயிர்களையும் சுட்டெரிக்கும் வலியுடையதென்று எண்ணி இமைகொட்டு முன்னே எய்தான். அந்தச் சூலாயுதமானது வடவாமுகாக்கினியும் வெப்பங்குறையவும், தேவர்களும் வானரங்களும் பயந்தோடவும், உலகமெங்குந்தனதனலே விரியும்படிமூன்றுதலைகளிலும் சுவாலைகளை வீசிக்கொண்டு தடைப்பட்டு நில்லாமல், நயனகோசரத்துக்கும் எட்டப்படாதவேகமுடையதாய் வருவதாயது. அதைப் பிரம்மேந்திராதிகள்கண்டு, ஓ தீனர்களுக்கு அபயப்பிரதானங் கொடுக்கின்ற ஜானகீரமணா! இராவணன் இந்தச்சூலத்தைச் செல்லக்கடவாயென்று உபமந்திரித்து விட்டான்.

இந்த ஆயுதத்தை நாசப்படுத்த உமக்கே சக்தியுண்டு. எங்களில் ஒருவருக்கும் அடங்கமாட்டாது. மிகவுங்கூர்மையாகிய குரூர சூலமென்னுங் கூற்றுவனைச் சீக்கிரத்தில் துண்டித்துவிடும். துண்டித்துவிடும்என்று வெகுதுக்கத்தோடுபிரார்த்தித்தார்கள். இப்படி தேவர்கள்செய்த பிரார்த்தனையைக்கேட்டருளிய ஸ்ரீராமசுவாமியானவர் சிறந்த இடியும் திடுக்கிடும்படியாயும், பிரசண்டமாருதம்போல அதிவேகமாய்ச் செல்லும்படியாயும், சௌரியமான சில அம்புகளைப்பிரயோகித்தனர். அந்த அம்புகளெல்லாம் இராவணனுடைய சூலத்தை ஒன்றுஞ்செய்யமாட்டாமல், பரமபாகவதர்களைக் குறித்து ஆலோசியாமல் சிலர்செய்யும் கிருத்தியங்கள் பயன்படாமற் போவதுபோல நிஷ்பிரயோசனப்பட்டன. அதுகண்ட சுவாமியானவர் தேவதாஸ்திரங்களை ஓயாமல் எய்தும் அவற்றையெல்லாம் லக்ஷியம் பண்ணுமல் பிரம்மசாபத்தைப்போல வருகின்றசூலத்தினதுவலியைக்கண்டு, அதைத் தடுக்கவேண்டிய செய்கை இன்னதென்று அழியாதவர்போலத்தோன்றிச்சும்மா நின்றார். சமஸ்த தேவஜனங்களும் ஸ்ரீராமச்சந்திரரானவர் சூலத்தைத் தடுக்கவேண்டியதைப்பற்றி ஒன்று நினையாதவராய் ஒன்றுஞ் செய்யாமல் இருக்கின்றாரேயென்று பயந்தனர்கள். தருமதேவதையும் அஞ்சிக் கால்குலைந்தது. மற்ற எல்லோரும் அச்சமுற்றார்கள். இப்படியாவரும் தம்முடைய யதார்த்த நிலையை அறியாதபடி மனுஷியனுகப் பிறந்த ஸ்ரீராமபிரானனவர் பார்த்துக்கொண் டிருக்கையில், அந்தச்சூலமானது கூட்டமாகிய மணியாரவாரத்தால் ஒலியதிகரித்துக்கொண்டு அக்கினிப்பொறிபறக்கச் சுவாமியினுடைய சந்தனமணிந்த திருமார்புக்கெதிரோடி உருவிச்செல்வதாய்வந்தபோது அதிக கோபங்கொண்டு உங்காரஞ்செய்தனர். அந்த உங்காரத்தொனியால் அச்சூலமானது பற்பலபொடிகளாக நொறுங்கிவிட்டது.

இப்படி சூலமானது பொடிப்பொடியாக நொறுங்கிவிட்டதைக்கண்ட தேவர்களெல்லாம் போனவுயிர் வந்தவர்களாகி, சிறிதும் அச்சமில்லாமல் ஆநந்தபரவசங் கொண்டு ஆரவாரித்தார்கள். ஆரவாரித்துக்கொண்டே கற்பகமலர்களை வாரிவாரிச் சுவாமியின்மேலே இறைத்தார்கள். அது செய்தலைவிட்டுத் துள்ளித்துள்ளிக் குதித்தார்கள். பின்னங்கிருந்தபடியேதெண்டன் சமர்ப்பித்து, இந்தமகாசூலத்தினது பலத்தைக் குன்றச்செய்யவல்லவர் நீரே யல்லாமல் வேறொருவருமுண்டோ? சாது ஜனங்களாகிய எங்களுக்குத் துஷ்டர்களால் நேரிடுகிறதுக்கங்களையெல்லாம் தகிக்கின்ற தீயைப்போல நின்று ஒழிப்பவரும் நீரேயென்று துதித்துக்கொண் டிருந்தார்கள். தேவர்கள் இப்படியிருக்க, இனி ஜெயமென்பது நம்முடையபட்சத்திலென்று உற்சாகத்தோடு ராவணன்விட்ட சூலமானது அழிந்தாலல்லாமல் நம்மைவிட்டுப் பேரமாட்டாதென்று உணர்ந்து ஸ்ரீராமநாதரானவர் உங்காரஞ்செய்து பொடிப்பொடியாய்ச் செய்துவிட்டதை அவன்கண்டு திப்பிரமையாய் அசைவற்று நின்று, அந்நாளிலேவிபீஷணுழ்வானனவன்சொன்னது தனக்கு ஞாபகத்துக்குவந்து, நாம் மகாதபங்களைச்செய்து பெற்ற ஒருகாலத்திலும் அழியாத வரங்களையெல்லாம் இந்த ஸ்ரீராமன் பாணப்பிரயோகம்பண்ணி அநாயாசமாகவே அழிக்கின்றான். ஆதலால் இவன் நம்முடைய குலதெய்வமாகிய சாக்ஷாத் உருத்திரனும், பிரமனும், விஷ்ணுவும் அல்லன. அல்லது மகா பிரம்மரிஷியென்போமானல் அப்படிப்பட்டரிஷியானபோதிலும் நம்முடைய தபோபலத்தை அழிக்கவல்லவன் அல்லன். இவன்தான் சகல வேதவேதாந்தங்களாலும் சொல்லப்பட்ட முதற்காரண வஸ்துவென்று தீர்மானஞ்செய்துக் கொண்டான். அந்தத் தீர்மானத்தை உடனேவிட்டுத் தன்னுடைய உன்மத்த சுபாவத்தால் யாரேயானபோதிலும் ஆகட்டும். என்னுடைய ஒப்பற்றபெயரொன்று நின்று எந்தப் புவனங்களிலுமுள்ள சுத்தவீரர்களை யெல்லாம் அழும்படிச்செய்து எனக்குமகாஜெயத்தைத் தருகின்றது. இப்படிப்பட்டகீர்த்தியைப் பெற்றிருக்கின்றேன். மூலகாரணப்பொருளின் அவதாரமாகிய ஸ்ரீராமபிரான் எனக்குநேரேவந்து என்னைக் கொன்றபோதிலும், எல்லாருடைய உயர்ந்த கீர்த்திகளுக்குள்ளும் தலைமைபெற்ற கீர்த்தி எனக்குச் சாஸ்வதமாக இருக்கும். என்று திடங்கொண்டவனுய் தென்மேற்குத்திசைப்பாலகனுகிய நிருதியி

னுடையவெற்றியுள்ள நாகக்கணையை நினைத்தமாத்திரத்தில் அது வந்து சேர்ந்தது. அதை ராவணன் கையிற்கொண்டு, எமனுடையவிருதையும் அழிக்கவல்ல வில்லிலே தொடுத்து, உலகமுழுமையும் நடுங்கும்படியாயும், இருபதுகண்களிலும் தீச்சொரியும்படியாயும் எய்தான். இப்படி இராவணன் எய்த நாகாஸ்திரமானது பூமியைச் சுமக்கின்றபிடரையுடைய ஆதிசேஷனும் மனமஞ்சும்படியாய் கோடிபடங்களை விரித்து, அவ்வளவுதலைகளை உயரத்தூக்கி, ஆழ்ந்து விசாலமாகிய வாய்களைத் திறந்துகொண்டு, மேருமலையும் சிறியதென்று சொல்லும்படி ஆகாயமுழுமையும் வியாபித்த தேகத்தையுடையதாகி, தன்னுடைய எல்லாவாய்களிலும் சமுத்திரஜலம்போல விஷங்கள் ஒழுகவும், கண்களில் தீப்பொறிகள் சிந்தவும், பேய்களின் வாய்களைப்போல வாய்களிலுள்ள வெள்ளைப்பற்கள் எங்கும் பிரகாசிக்கவும் வருவதாயது.

இப்படி நாகாஸ்திரம்வருவதைக்கண்ட லோகத்தார்யாவரும் இந்தக்கொடியசர்ப்பபாணமானது நம்முடைய ஐயனாகிய ஸ்ரீ ராமபிரானைத் தீண்டாமல் திரும்பமாட்டாதென்றும், இவ்வளவிலே நில்லாமல் பூமியையும் கடலையும் விழுங்கிக் குடியாமற்போகாதென்றும், தயைதாக்ஷிணியம்சிறிதுமில்லாத குரூரனாகிய தசமுகன் இந்தச் சர்ப்பக்கணையை விட்டுச் சராசரப் பொருள்களையெல்லாம் இப்பொழுதே நாசமாக்கிச் சாம்பலாகச் செய்யும்படி உத்தேசித்தானென்றும் சொல்லிக்கொண்டு தட்டுதடுமாறிக் கலங்கிக்கொண்டிருக்கையில்; அந்தச் சர்ப்பாஸ்திரமானது எங்கும்பாம்புகளாய் உயர்ந்த மலைகளைக் கவ்விக்கொண்டு வருவதாயது. அதை ஸ்ரீரகுநந்தனர்கண்டு, இது எந்தப் பக்கங்களிலும் பரவிவருகின்றபடியால் யாவருக்கும் பயத்தைத்தருவதாயிருக்கின்றதென்று திருவுளத்தில் நினைத்து, தப்பாமல் ஜெயத்தைத்தருவதாகிய கருடாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகித்தார். இராவணன் எய்த நாகாஸ்திரமானது எப்படிப் பல பல வுருவங்கொண்டு வேகமாய் வந்ததோ? அப்படியே இந்தக் கருடாஸ்திரமானது பொன்மயமாகிய மூக்கும் நகங்களும் சிறைகளும் உடைய அனந்த கருடப்பறவைகளாகி, காற்றைப்போலச் சிறைகளைவிசிறி அதிவேகமாகி ஆகாயமுழுமையும் வியாபித்தது. இப்படி எங்கும் வியாபித்துப் பறக்கின்ற கருடப்பறவைகள் வாய்கள்தோறும் கோபத்தினால் அக்கினிகளைக் கக்கிக்கொண்டு விளங்குவதினால், லங்காநகரம்சாம்பராய்ப்போகும்படி தீயையிடுகிறோமென்று தனித்தனி ஆகாயத்தில் விளக்குகளையெடுத்துச் செல்வதுபோ லிருந்தது கள். கிரணங்களைவிரிக்கின்ற இரத்தினராசியாற் செய்தாற்போன்ற உருவத்தையுடைய அந்தக் கருடப்பட்சிகள், தாமரைத் தண்டுகளை அங்கங்கு கவர்ந்துகொண்டு எழுந்தாற்போலச் சர்ப்பங்களைக் கால் நகங்களால் இடுக்கிக்கொண்டு வாய்களால்விழுங்கிவிட்டதுகள். அப்போது ராக்ஷசகுல நாயகனானவன் அக்கினிச் சுவாலையைப்போல வீசுகின்ற சுவாசம் விட்டுக்கொண்டு கோபமுடையவனாய்க் கொதிகொதித்து, சுவர்க்கமும் பூமியும் நிலைபேரும்படி இடிகளையொத்தபாணங்களை அநேகமாகத் தூவினான். அதன்மேல் ஸ்ரீரகுகுலநாயகரானவர்எய்த அம்புகள் இராவணன் பாணங்களைப் பொடிப்பொடியாய்விழத் துண்டித்துத் தள்ளியும் வேகமடங்காமல், தசக்கிரீவனுடைய மார்பில் அடிக்குதையும் தோன்றாதபடி தைத்துநின்றன.

இப்படிச் சமயுத்தம் நடக்குங்காலத்தில் திரிநேத்திரகாளகண்டருடைய வெள்ளிமலையைப் பேர்த்தெடுத்த பராக்கிரமசாலியாகிய இராவணனுக்கு ஸ்ரீராமபாணபிரயோகத்தால் புத்திமயங்கி, தான்கற்றிருந்த தனுர்வேதவித்தையும், மந்திரவித்தையும், மறந்துபோகத் தலைப்பட்டன. தருமதேவதைக்குச் சம்ரக்ஷணகர்த்தாவாகிய ஸ்ரீராமபிரானுக்குப் பராக்கிரமமும்,வீரமும், அதிகரித்தன. சத்பிராமணர்களாலே ஓதப்பட்ட வேதங்களில் வசிக்கின்ற சச்சிதானந்தசொரூபராகிய ஸ்ரீகாகுஸ்தகுல சுவாமியானவர் மனுநீதியிலும் நின்று நடவாத அசுரகுலத்துக்கிசைவாக முளைத்திருக்கும் பத்துத் தலைகளில் ஒருதலையை அர்த்தசந்திர பாணத்தினால் அறுத்துத் தள்ளினார். பூர்வத்திலே மேருமலையின் சிகரங்களிலொன்றை வாயு பகவானானவர் மோதியறைந்தபோது அந்தச் சிகரமானதுசென்று கடலில் விழுந்ததுபோல, ஸ்ரீராம பாணத்தால் அறுபட்ட தலையானதுநெரு

ப்பைக் கக்கிக்கொண்டு போய்ச் சமுத்திரத்தில் விழுந்து அமிழ்ந்தது. பார்த்திருந்த தேவர்களெல்லாம் பூமியில் இறங்கிவந்து இலங்கை மலையானது நெக்குவிடும்படி மிதித்துக் குதித்து ஸ்ரீராமபிரானைத் துதித்துப்பாடி, உடுத்திருந்த வஸ்திரங்களை ஆகாயத்தில் விசிறியெறிந்து துள்ளித் துள்ளியாடினார்கள். தேகத்தை விட்டுக் கழிந்த உயிரானது முன்செய்த தருமப்பயனால் அத்தேகத்தையே அடைந்தாற்போல, மறுபடியும் அறுந்த தலைக்குப்பதிலாக ஒரு தலை முளைத்தது. ஆகையால்சிறந்தது தவமேயல்லாமல் வேறுசெய்கையு முண்டோ? இப்படியறுபட்ட தலையானது அறுபடவில்லை யென்னும்படி முளைத்து, அழிவில்லாத பேரின்பச் செல்வனாகிய கோதண்ட தீக்ஷாகுருவை இடிபோல முழங்கித் துர்ப்பாஷணங்களால் தூஷணித்து அதட்டினது. மேருமலைச்சிகரம் துண்டிக்கப்பட்டு விழுந்தாற்போல அதிவேகமாய்ச் சென்று விழுந்து தன்னுடைய வாயிலும்-செவித்தொளையிலும்-மூக்குத் துவாரத்திலும்-கடலினது நீரையெல்லாம் அடக்கிக்கொண்டு ஆலால விஷம்போலச் சுவாலையைவீசுகின்ற விழிகள் பிதுங்கித் தோன்றும்படிகிடந்ததலையும், வீராவேசத்தாலே மேகங் குமுறுவதுபோலக் கர்ஜ்ஜித்தது. அப்போதிராவணன் எப்படிப்பட்ட தேவர்களோடும் இதுவரையும் ஜெயமேபெற்று வந்த நம்முடைய தலைகளிலொன்றை இந்தராமன் அறுத்துத்தள்ளினனல்லாவாவென்று கோபவெறிகொண்டு, நெடுங்கணக்கினுள் சிறப்பாகச் சொல்லப்பட்ட உயிரெழுத்துகளில் செயற்கையா யல்லாமல் இயற்கையாகவே நாதமாத்திரையாய் நின்ற அகாரத்துக்குப் பொருளாயுள்ள ஸ்ரீராகவபிரானுடைய திருத்தோள்களில் பதினன்கு அம்புகளை இடியானது நம்மைப்போல வேறோரிடியு முண்டோவென்று சந்தேகிக்கும்படியாக ஆரவாரித்து எய்தான். நீசனாகிய ராவணனுக்குத் தலையறுந்தால் மறுபடியு மத்தலையை முளைப்பிக்கும் தவமும் உண்டாயிருப்பதைச் சக்கரதரனாகிய ஸ்ரீ ராமபிரானவர் அறிந்து, வில்லைத்தாங்கியிருந்த அவனுடைய கைகளிலொன்றைப் பிறைமுக அம்பினால் அறுத்துத் தரையில் விழச்செய்தார். சுவாமியினுடைய அர்த்த சந்திர பாணம்பட்டு அறுந்துவிழுந்தகை வில்லைப்பற்றியபடியே கிடந்தது. அக்கையானது அறுந்தவிடத்தில் மற்றொரு கை முன்னேதானே யிருந்ததுபோல ஒரு கை உடனே முளைத்தெழுந்ததை அறிந்தவர்களுமுண்டோ? ஒருவருமில்லை. அவ்வளவு விரைவிலே பிறந்தது. முன்பாரிசத்தில் முள்ளுகளைப்போல மயிர்கள் அடர்ந்து முளைத்திருப்பதும் மின்னற் கொடியைப் பிடித்திருப்பதுபோல வில்லைபிடித்திருப்பதும் ஆகிய வந்த அறுந்த கையை மகா பாபிஷ்டனாகிய ராவணனெடுத்து, பொன்னாற்செய்த கடிவாளத்தைப் பிடித்துத் தேரைச் செலுத்திக்கொண்டிருக்கும் மாதலியினுடைய உயிரைமாய்க்கவேண்டுமென்றெண்ணங்கொண் டெறிந்தான். எறிந்த அந்தக் கையானது வேகமாய்வந்து மார்பிற்பட்டமாத்திரத்தில் ஒரு காலத்திலும் சலியாத மாதலியானவன் மனோதிடங் குலைகுலைந்து, வாயாற் குபுகுபென்று உதிரத்தைக்கக்கினன் தன்னுடைய பந்துக்களாகிய அசுரர்களைப் போலவே பெற்றுக்கொண்ட தவத்தையுடையவனா யிருந்தபோதிலும் அவ்வசுரர்களிலும் விசேஷிக்கியனென்று சொல்லும்படி காமரசமென்னும் இசையைப்பாடி ஸ்ரீகயிலாசபதியாகிய ருத்திரபகவானிடத்தில் அவர் கையிற்பிடித்திருந்த வாளைப் பெற்றுக்கொண்ட ராவணனவன் தானெறிந்த கையானது மார்பிற்பட்டு உதிரத்தைக் கக்கிக்கொண்டுவருந்துகின்ற மாதலியினுடைய நிலைமையைக் கண்டு, இவன் பிராணனை வாங்க இதுவே நல்லசமய மென்றறிந்து தோமரமென்னும் ஆயுதத்தைச் சுழற்றி எறிந்தான். இப்படி மாதலியினுடைய உயிர்வாழ்க்கையானது இன்றோடு முடிந்ததென்று தேவசமூகங்கள் சிதறியோடும்படி இராவணன் எறிந்த தோமராயுதத்தின்மேல் தீனரக்ஷகனாகிய ஸ்ரீகாகுஸ்தகுலநாயகர் பஞ்சமுகாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அந்த அஸ்திரத்தால் தோமரமானது பொடிப் பொடியாயுதிர்ந்து போயினது. அப்பால் சர்வஜ்ஞமூர்த்தியும் சர்வலோக நாயகனுமாகிய ஸ்ரீராமபிரானவர் தனுர்வேதத்திற்சொல்லிய விதிப்பிரகாரம் சென்று, நிச்சயமாகச் சிறிதும் ஓய்வடையாமல் வியாபிக்கும்படி அபரிமிதமாக அம்புகளை

எய்து தமது திருக்கரத்தின் சாதுரியத் தைக்காட்டத் தலைப்பட்டார். இந்தப்பிர காரம் ஸ்ரீ ராமபாணங்கள் பாய்வதினுல் சமுத்திரத்திலும், சமுத்திர அலைகளிலும், பூமியிலும், மலைகளிலும், நானுதிக்குகளி லும், மற்றும் கண்டகண்ட இடங்களிலும் இராவணனுடைய பலபல தலைகள் இடி கள் விழுவதுபோல விழத்தலைப்பட்டது கள். பர்வதங்களின் மேற்போய் விழுகின்ற தலைகள் அந்தப் பர்வதங்கள் பிளவுபட்டு சாயும்படிவிழும். அறுபட்டு ஆகாயத்தின் மேற் பாய்கின்ற தலைகள் அங்குநின்ற தேவர்களைக் கலைந்தோடும்படி பாயும், கட லிற்போய்ச் சிதறுகின்றதலைகள் அந்நீரில் சுருமுதலிய மச்சங்கள் உலாவுவதற்கு நீரி ல்லாதபடி ஜலமெல்லாம் செவித்தொளை யிலும், மூக்குத்தொளையிலும், வாயிலும், அடங்கிப்போம்படி சிதறும்.

ஒருவன் நெடுநாளாகத் தேடிய புண் ணியங்களெல்லாம் பரமவைதீக சுத்தசாத் துவீகர்களிடத்தில் அபசாரப்பட்ட கார ணத்தாற் கட்டற ஒழிந்துபோனபின், ஜெ யவீர பிரதாபங்களெல்லாம் நீங்கிப்போய் அபகீர்த்தி முதலியதுகளெல்லாம் அவ னைச் சூழ்ந்துகொள்ளு மல்லவா? அது போலவே இந்த ராவணன் ஸ்ரீசர்வேசுர னுடைய தாசபூதர்களாகிய தேவர்கள் பக் கலிலும், பரம முனிவர்கள் பக்கலிலும், சர்வலோக சரணியாகிய பிராட்டியார் பக் கலிலும் அபசாரப்பட்ட காரணத்தால், ஸ்ரீ ராமபாணமானது தனது தலைகளைத் துண்டித்துத் தள்ளவே முன்னே இந்தப் பாபிஷ்டனுக்குப் பயந்து ஒடுங்கி வணங்கி க்கொண்டிருந்த பிசாசங்களெல்லாம் உதிர் ந்துகிடக்கின்ற தலைகளைப்பொறுக்கி எடுத் துக்கொண்டு அந்தத் தலைகளிலுள்ள கண் களைத் தோண்டித் தோண்டித் தின்னத் தலைப்பட்டதுகள். இப்படிச் சகலசேதனு சேதன சுவாமியானவர் தலைகளை யறுத்த றுத்துத் தள்ளிக்கொண்டிருக்கையிலேயே தானே முளைத்துக்கொண்டே யிருக்கின்ற தலைகளையுடைய இராவணன் தனது இரு பதுதோள்களாலும் வாள்-வேல்-உலக்கை வச்சிரம்-தண்டம் - கோடாரிமுதலிய ஆயு தங்களை வாரிவாரி, ஸ்ரீராகவபிரானுடைய மார்பின்மேல் விட்டெறிந்தான்.

இப்படிப் பலவாயுதங்களை ராவணன் விட்டெறியும்போது சர்வ நியாமகனுகிய எங்கள் ஐயனுனவர், இந்தக்கொடியோனை எப்படி வெல்லலாம்? அதற்கு நாம்செய்ய வேண்டியது என்ன? என்று ஆலோசித்து அந்த ராக்ஷசனுடைய உடலைப் பாணங்க ளால் சல்லடைக் கண்களாகத் தொளைத்து விடுவோமென்று மிகுந்த கோபங்கொண்டு மேகத்தைப் பார்க்கிலும் அதிக கருமை வாய்ந்த இராவணனுடைய மார்பிலும் தோள்களிலும் விஷத்தைக் காட்டிலும் கொடிய கண்களிலும் நாவுகளிலும் மற்ற அவயவங்களினும் பல பாணங்கள் தைக் கும்படி எய்து, தம்முடைய பாணங்களா கிய பறவைகள் வசிப்பதற்கு இராவணனு டைய தேகமே பஞ்சரமென்று சொல்லும் படி பொத்திவிட்டார். ஸ்ரீபரந்தாமராகிய காகுஸ்தர் எய்த அம்புகள் பத்துவாய்களு நிரம்பவுந் தைத்து, இருபது கண்களும் மறையும்படி உருவி, மற்ற அவயவங்களி லெல்லாம் பொத்தி, உதிரம் தம்மிற்படாத படி விரைவாக அப்புறங்கழன்று அண்ட த்துக் கப்பாலுஞ்சென்று நிறைந்ததுகள். தேவர்களுடைய லோகங்களிலும் தேவ தேவர்களாகிய திரிமூர்த்திகளுடைய லோ கங்களிலும் தன்னை எதிர்ப்பாரில்லாமை யால் சிறிதும் அஞ்சாமல் பெருங்களிப் போடு பவனிவருவோனுகிய இராவணன் தன்னுடைய தேகத்தில் மயிர்க்கால் மயிர்க் கால்தோறும் ஸ்ரீராமபாண வருஷங்கள் உயிரும் ஓயும்படி ஊடுருவிச்சென்றதனுல், எதிர்த்து வந்த சுருமச்சங்களும் இறக்கும் படியாக இழுத்துச்சென்று கடலிற் கலந் தோடத் தக்கதாகத் தேகத்தில் உதிரப்பிர வாகம் ஒழுகவும் கோபம் பிறக்கவும் தன் னுல் ஒன்றும் செய்யமுடியாமல் நடுங்கி, அறிவு கலங்கிப் பரவசமாய்த் தேரிலே தானே முடிசாய்ந்து கிடந்தான். அதைப் பார்த்த பிரமேந்திராதிதேவர்கள் யாவரும் தருமதேவதையும், சந்தோஷ ஆரவாரஞ் செய்துகொண்டு நடனஞ் செய்தார்கள். பாபகிர்த்தியங்களெல்லாம் இனி நம்மை ஆதரிப்பாரில்லையேயென்று அதி துக்க மடைந்து சோர்ந்து விழுந்ததுகள்.

அப்போது இராட்சச்சாரதியானவன் நம்முடைய தலைவன் மூர்ச்சித்துக் கிடக்கி றுனுதலால் இனிரதத்தையிங்கிருத்துவது

தகுதியல்லவென்று நினைத்து, அதைமெல்லெனத்திருப்பி நடத்திச்சென்ருன். தேவர்கள் முதலிய சாதுக்களுடைய உஜ்ஜீவனார்த்தமாகத் திருவவதரித்த ஸ்ரீராமசுவாமியானவர் நம்முடைய சத்துருவாகிய இந்தப்பாபிஷ்டன் கைகளில் ஆயுதங்களொன்றுமில்லாம லிருப்பதுமன்றி மெய்ம்மறந்து சோர்ந்துகிடக்கிருன். ஆதலால் இவன்மேல் ஒரு பாணத்தையும் எய்யலாகாது. என்று தருமத்தைச் சிந்தித்துச் சும்மாவிருக்கவும் இந்திர சாரதியாகிய மாதலியானவன் சுவாமியை நோக்கி, ஓ எங்கள் ஆண்டவனே! இந்தத் துஷ்டன்மூர்ச்சை தெளிவானே யானல் பின்னே ஒன்றுஞ் செய்யமுடியாது. ஆதலால் மூர்ச்சையாய் கிடக்கிற இந்தச் சமயத்திலேயே இவனுடைய பிராணனை வாங்கவேண்டுமென்று ஸ்ரீ ராமபிரானை உச்சாகமாகத் தூண்டினுன். அதுகேட்டருளிய தருமஸ்வரூபியாகிய ஸ்ரீராமநாதரானவர் அவனை கையமர்த்தி, ஓ மாதலி! இவன் எல்லா ஆயுதங்களையும் கைசோரவிட்டு அறிவு மயங்கிக் கிடக்கின்ருன். இப்போது நாம் ஆயுதங்களை எறிந்தாலும் அறிந்துகொள்ளமாட்டான். அப்படி நாம் பாணப்பிரயோகம் பண்ணி தநுர்வேத நீதி பிசகும்படி பிராணனைவாங்குவது நன்மையோ? இவனுடைய யுத்தமோ முடிவாகப்போகிறது. நீ ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். அவன் மூர்ச்சை தெளிந்து எழுந்தபின்னே தான் எதிர்ப்பேன். இதுவே என்னுடைய கருத்தென்று அருளிச்செய்தார். இப்படி சுவாமியும் மாதலியும் வார்த்தையாடிக்கொண்டிருக்கையில் மற்ற ராட்சசர்கள் அஞ்சினவர்களாகி இராவணனுடைய தேரைத் தொடர்ந்துசென்றனர்கள். அக்காலத்தில் ஸ்ரீரகுநந்தனர்க்குக் கைகளைக்கூப்பித் தண்டன் சமர்ப்பிக்காத தேவர்களுமுண்டோ? யாவரும் தண்டன் சமர்ப்பித்தார்கள். தண்டன் சமர்ப்பித்துக் கொண்டிருந்த தேவர்கள் யாவரும் திடுக்கிடும்படியாகப் பிரதாபலங்கேசுரன் நித்திரைதெளிந் தெழுந்தவனைப்போல மூர்ச்சைதெளிந் தெழுந்து, நிர்த்தாட்சணியமும் வஞ்சகமுமுள்ள தனக்கெதிர்முகத்திலே ரதாரூடராய் ஸ்ரீராமபிரானைக்காணுமல், அதிக கோபத்தோடு மற்ற மூன்றுபக்கமும் திரும்பிப்பார்த்தான் அப்படி பார்க்கையில் பின்பக்கத்திலே ஸ்ரீரகுநந்தனரைக்கண்டு, உடனே தனது வலவனைம்பார்த்து, அடாசாரதி! சொல்பர்களாகிய தேவர்கள் காணவும், கோதண்டத்தைக் கையில் தாங்கியபடியே யிருக்கின்ற ஸ்ரீராமனுக்குச் சிரிப்புண்டாகவும், நீதேரைத்திருப்பி ஓட்டிவந்துதப்புசெய்தாயே: என்ன நினைத்துக்கொண்டு இப்படிச்செய்துவிட்டாய்? அடா வஞ்சகா! நானுனக்கு இரட்சகமாய் நின்று சாரதித்தொழில் முதலியவற்றைக் கற்பித்து, யாவரும் பெறக்கூடாத அகண்டயிஸ்வரியத்தில் நிலைநிறுத்தினேன். அதற்குப் பிரதியுபகாரமாக இப்போது ராவணன் ஸ்ரீராமனேடு போர்செய்ய அஞ்சினுனென்று சொல்லும்படியான பழிச்சொல்லை எனக்குத் தேடிவைத்தாயல்லவா? நீயும் உயிரோடு பிழைத்துப்போக இருக்கின்ருயோ? என்று சலித்துக் கோபித்துத் தன்கையில் ஒரு வாளைப்பற்றிக் கடைக்கண்ணுற் பார்த்துச் சாரதிமேல் வீச உயர்த்தினுன்.

இப்படி யவ்விராவணன் வாளேந்திய கையை உயர்த்தலும் சாரதியானவன் பொருக்கென எழுந்து அவனுடைய பாதங்களை முடிமேல் தரித்துக்கொண்டு, ஓதேவகுலகண்டகா! வடவாமுகாக்கினியைப்போன்ற உமது கோபத்தை ஆற்றக்கடவீர். அடியேன் சொல்லிக்கொள்ளும் விண்ணப்பம் ஒன்றுண்டு. அதனை நீர் தணிவாய்க் கேட்டருளவேண்டும். என்று கெஞ்சிக் கெஞ்சி, ஓ ராக்ஷசகுலமித்திரா! நீர் யுத்தத் தொழில் மறந்து சோர்ந்து போய்விட்டீர். இன்னும் சிறிதுநேரம் மாத்திரம் அங்கேயே யிருந்துவிடுவீரேயானல் உம்முடைய உயிர் இந்தக்ஷணமேநீங்கிவிடுமென்று ஒருதுன்பம் என்னுடைய இதயத்தில்ஜனித்து, அந்தத்துன்பத்தைப் போக்கிக்கொள்ளும்படி ரதத்தைத் திருப்பி நடத்திவந்தேனேயல்லாமல் வேறல்ல. இது சத்தியமாகும். இதுநிற்க, பொதுவாகப் பார்க்குமிடத்தில் தன்னுடைய தலைவனுக்குச் சோர்வும் அல்லது பிராணபாயமும் சத்துருவுக்குத் திடவிர்த்தியுங் கண்டால், உடனே சாரதியானவன் தனது தலைவனுடைய உடலின்சோர்வை நீக்கும் உபாயத்தை ஆலோசித்துச் செய்யக் கடவனன்ருே? ஆகையால் இப்படிச்செய்தேன்.

நீரே தீர்க்காலோசனை செய்யக்கடவீர். நிரபராதியாகிய என்னை வாளாற்கொல்லுதல் தகுதியல்ல. என்று வேண்டிக்கொள்ளுதலும் இராவணனனவன் சரிதானென்று தானும் ஆலோசித்துச் சாரதிமேல் இரங்கி, அடா சாரதீ! இஃதிருக்கட்டும்! தேரை இராமன்மேல் தூண்டி நடத்தென்று உத்திரவுசெய்தான். அப்படியே சாரதியும் ரதத்தைத் திருப்பிக் கொண்டுவந்து தாரகமந்திர வாச்சியனகிய ஸ்ரீராமச்சந்திர சுவாமிக்கெதிரே நிறுத்தினன்.

இப்படி அதிவீரபிரதாப லங்கேஸ்வரனனவன் அகில கல்மஷாந்தகார பாஸ்கரரா யெழுந்தருளியிரா நின்ற ஸ்ரீராகவபிரானை எதிர்த்து நின்று யமனுக்குச் சமானமாகிய கோடாகோடி அம்புகளை எய்து, இவன் பழைய ராவணன் அல்லன்; புது ராவணன்! என்று கண்டவர்களெல்லாம் சொல்லி அஞ்சும்படி முன்செய்த யுத்தத்தைப்பார்க்கிலும் மூன்றுபங்கதிகமான யுத்தத்தைச்செய்தான். அது பார்த்தருளிய ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவானவர் ஒளியுண்டாயிருந்தால்நெருப்புண்டென்பதுபோல இந்தக் கொடியோன்கையில் வில்லுண்டாயிருக்கிறவரையும் இவன் யுத்தத்தை ஒழியான். இவன் ஒழியாமற் போர்செய்துகொண்டிருப்பானேயாகில் வெல்லுதலும் அரிதாகும். என்று திருவுளத்திற்கருதி ஸ்ரீமந்நாராயணஸ்திரத்தை விரும்பி எடுத்துத் தொடுத்துப் பிரயோகித்து, பூமியைச் சுமக்கின்ற எட்டு யானைகளையும் ஜெயித்த ராவணன் பிடித்திருந்த யாவருக்குந் துன்பத்தைத் தருவதாகிய வில்லை இரண்டு துண்டுகளாகச் செய்துவிட்டார். முன்னே பிரம்மதேவரானவர் ஆண்டுகொண்டிருந்தஅந்தவில்லானது, சகஸ்திர திருநாமங்களை வகித்த ஸ்ரீமந்நாராயணனுடைய அஸ்திரத்தால் துண்டுபட்டு வீழ்தலும், தேவர்கள் யாவரும் நாம்செய்த பலவாகிய தவத்தாற் பயனைப் பெற்றோமென்று சொல்லிக் கொண்டு உயர்ந்து உயர்ந்து குதித்தாடினர்கள். உடனே வேறொருவில்லை இராவணன் பிடித்தான். அதையும் எம் ஐயனனவர் துண்டித்து விட்டார். இந்தப்பிரகாரம் அந்தக் கொடியோன் எடுத்தெடுத்துப் பிடித்த பதினோராயிரம் வில்லுகளையும் ஸ்ரீராமமூர்த்தியானவர் இடைவிடாமல் துண்டித்துக்கொண்டே வந்தார்.

இனி வில்லெடுப்பதில் பயனில்லையென்று இராவணனனவன் ஸ்ரீரகுநாதருடைய திருமார்பில் வாசஞ்செய்கின்ற ஸ்ரீமஹாலட்சுமியும் இடம்விட்டுப் பெயரும்படி இருப்புலக்கைகளையும், தண்டாயுதங்களையும், வேல்களையும், ஈட்டிகளையும், வாள்களையும், நெருப்பிலும் அதிதீக்ஷணியமாகிய தோமரங்களையும் எடுத்தெடுத்து, அவருடைய மார்பில் தாக்கும்படி விட்டெறிந்தான். அந்த ஆயுதங்களையெல்லாம் ஸ்ரீராமசுவாமியானவர் தமது அம்புகளை எய்து அறுத்தறுத்து, கடலிலே அங்கங்கே தோன்றுகின்ற திடர்களைப்போல ஓடுகின்ற ரத்தப்பிரவாகத்திலே துண்டுபட்ட ஆயுதக்குவியல்கள் தோன்றும்படி குவித்தார். தமது திருவடிகளைச் சரணண்டினவர்களுடைய பாபங்களையெல்லாம் போக்குகின்ற நிர்த்தோஷராகிய ஸ்ரீகாகுஸ்தகுல திலகரானவர், நாமிப்போது எய்கின்ற பாணங்களைப்போன்ற பாணங்கள் இவன்பிராணனை வாங்கமாட்டாது. கடல் மணலினும் அபரிமிதமாகிய குரூரபாணங்கள் இந்தக் கொடியோனுடைய கண்மணிகளிலும் நுழைந்து ஓடியதுகள். முன்பட்டகாயப் புண்ணின்வழியே தத்துவதரிசிகளுடைய கியானத்தைப்பார்க்கிலும், அதிக கூர்மையுள்ள பலஅம்புகள் உருவிச்சென்றன. இப்படிப் பாணங்கள் பாய்ந்து தொளைத்தும் இவனுடைய தைரியபல வீரியங்களில் ஏதேனுமொன்று கழிந்ததுண்டோ? இந்த மஹாபாபிஷ்டனை உயிரோடு வைத்துக்கொண்டு போர்செய்வதினல் என்னபயன்? நாம் இனி தாமசஞ்செய்யாமல், பிரம்மாவினுடைய அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பிராணனை வாங்குவோம், என்று தமக்குள்ளே தீர்மானித்து ஆதியிலே மூலதாமரையில் ஜனித்துச் சகலஅண்டங்களையும் சிருஷ்டித்த தேவசிரேஷ்டராகிய பிரம்மாவினது அஸ்திரத்தை எடுத்தார். இந்திராதி சமஸ்த தேவர்களுக்கும் தாம் தயைசெய்த வரத்தைப் பாலனஞ்செய்யும்படி அவதரித்த ஸ்ரீராமச்சந்திர சுவாமியானவர், தாம் எடுத்த அந்தப் பிரம்மாஸ்திரத்துக்கு அர்ச்சனைமுதலிய பூஜைகளைச்செய்து, ஸ்ரீகோதண்டத்தின் நாணில்தொடுத்து, மந்

தரமலைக்குச்சமானமாகிய வலதுதோளால் வாங்கி, ஆகாயத்தை ஊடுருவிவளர்ந்த கிளைகளையுடைய மராமரங்களைத் தொளைத்ததும், ஆகமத்தில் சொல்லியபடி சிவபூசா துரந்தரசீலனாகிய வாலியினுடைய மார்பை உருவிச்சென்றதும், ஆகிய அந்தப் பிரம்மாஸ்திரத்தை இராக்ஷசகுலநாயகனாகிய ராவணனுடைய மார்பை இலக்கு குறித்துப் பிரயோகித்தருளினார்.

இப்படி பிரம்மதேவருடைய மந்திரத்தை ஜெபித்துப் பிரயோகித்த அஸ்திரமானது வாயுவால் அறியப்படாத வேகத்தையும் அக்கினியால் அறியப்படாத தீக்ஷணியத்தையுங்கொண்டு, நான்குமுகங்களையுடையதாகி, தன்னிடத்து உண்டாகின்ற சுவாலையால் சக்கரவாளகிரிக்கு அப்புறத்திலுள்ள பெரும்புறக்கடலும், நீர்முற்றுஞ் சுவறிப்போய் வெட்டவெளியாகவும், உகாந்த காலத்துச் சூரியனும் மின்மினியென்று சொல்லும்படியாகத் தன்னிடத்து எழுகின்ற சுடர்களால், உலகத்திலுள்ள அந்தகாரமுழுமையும் நிலைபெயர்ந்து ஓடவும் அதிவேகமாய்ச்சென்று, சுதரிசன ஆழ்வானுடைய பூர்ணமிசத்தையும்பெற்று, சுவர்க்கமத்திய பாதாளங்களும் அஷ்டதிக்குகளும் தடுமாற, மஹா வீரப்பிரதாப இலங்கேஸ்வரனாகிய துஷ்டாத்துமாவினுடைய மார்பில் தைத்து, தான் இந்திரிய ஆசைகளையொழித்து மனத்தை ஒருவழிப்படுத்திப் பெரும்பிரயாசைப்பட்டுச்செய்த அரிய தவத்தையும், சாக்ஷாத் சாம்பசிவமூர்த்தியும் பிரம்மதேவனும் மனப்பூர்வமாய்க் கருணைசுரந்து, ஆதிநாளில் அருளிச்செய்த மூன்றுகோடி ஆயுள்நாளோடு தேவ தானவ மனுஷர் முதலியோரால் ஜெயிக்கப்படமாட்டாயென்று கொடுத்த வரத்தையும், அஷ்டதிக்குப் பாலகர்களையும் லோகேஸ்வரர்களையும் யுத்தத்தில் ஜெயம்பெற்றுவந்த பராக்கிரமத்தையும் கவளீகரித்துண்டுவிட்டு, மார்பை உருவி உயிரையும் உண்டு புறத்தே போய்விட்டது.

அப்போது சமஸ்ததேவர்களும் வேதியர்களும்முனிவர்களும் குதூகலத்தோடு ஆசீர்வாதஞ்சொல்லி, வாரிவாரி இறைக்கின்ற புஷ்பவருஷம் தன்மேல் படும்படியாக அந்தப் பிரம்மாஸ்திரமானது திருப்பாற்கடலிற்சென்று பரிசுத்த நீராட்டஞ் செய்து திரும்பி, இராவணனுடைய மார்பில்நின்று மொழுகாநின்ற உதிரக்கடலின் அலைகளின்மேற்சென்று நீலரத்தின பர்வதம்போல விளங்குகின்ற தசரதாத்மஜனுடைய அம்பறாத்தூணியில் வந்து சேர்ந்தது. கறுத்த பெருமலைபோன்ற தோற்றமுள்ள இராவணேஸ்வரன் பிராணன் நீங்கும் சமயத்தில் மாரிகாலத்துச் சூல்கொண்ட மேகம் குமுறுவதுபோல இருபது தோள்களையும் கொட்டி பத்து வாய்களாலும் வீரகர்ச்சனைசெய்து, தும்பைமாலை தரித்த பருவதாகாரமாகிய மார்பில் நின்றும் ஆபரணக்கூட்டங்களும், அவற்றில் அழுத்திய இரத்தினராசிகளும் சிதைந்து சிந்தவும் இருபது நேத்திரங்களிலிருந்து புகையும் இரத்தமும் பெருகவும் மகோன்னதமான இரதத்திலிருந்து பத்துத்தலைகளும் கீழாகக் குப்புற்று வீழ்ந்தான்.

அசுர மோகனார்த்தமாகக் கல்பித்த சாஸ்திரத்தின் வழியே சென்று, பரம் வைதீக நெறியைத் தவறி நடந்த இராவணாசுரனனவன் ஸ்ரீராமபாணத்தாற் குரூர சுபாவமுள்ள சிங்கத்தினது கோபம்போன்ற கோபம் அடங்கவும், மனோதைரியம் ஒடுங்கவும், மாயா தந்திரங்கள் அழியவும், தேவாசுரர்களாகிய சத்துருக்களது வலி கெடும்படி போர்செய்த இருபது தோள்களினுடைய தொழில்கள் நீங்கவும், பரதாரங்களிடத்து வைத்த மோகம்கெடவும், பராக்கிரமம் தேய்ந்துபோகவும், உயிர் நீங்கினனாயினும், அந்தச் சுத்தவீரனுடைய பத்து முகங்களும் மௌனசீலர்களாகிய ரிஷிக்கூட்டங்களையும் தேவர்களையும் மற்றவர்களையும் தங்கள் நிலைகெட்டுத் தலைகுனிந்தோட முறியடித்த காலங்களில் விளங்கியதைப் பார்க்கிலும் மூன்றுபங்கதிகமாகக் களிப்பும் வீரமும் நிரம்பி விளங்கிக்கொண்டிருந்தன. பின்பு சுவாமியானவர் அப்பா மாதலி! ஆகாயமார்க்கத்தில் செலுத்துகின்ற ரதத்தைப் பூமியில் இறக்குவாயாகவென்று கட்டளையிட்டார். அம்மாத்திரத்தில் மாதலியும் ஸ்ரீராமசுவாமியினுடைய உத்தரவின்படி பூமிமேல் நடத்தி வந்தான். உடனே எவர்களாவது கண்டால் விரும்பத்தக்க சர்வலட்சணங்களும் அமைந்து அறங்களை வளர்க்கின்ற தாமரசமலர்போன்ற விசால நேத்திரங்

களையுடைய ஸ்ரீரகுகுல தீரரானவர் திருத்தேரைவிட்டு இறங்கியருளி மாதலியைக் கடாக்ஷித்து, நீ ரதத்தைச் சுவர்க்கலோகத்துக்கு இனி ஓட்டிக்கொண்டு போகக்கடவாயென்று உத்தரவுசெய்துவிட்டு ஸ்ரீலக்ஷ்மணப்பெருமாளும், சுக்கிரீவமகாராஜரும், மற்ற வானரசிரேஷ்டர்களும், விபீஷணாழ்வானும் தம்மைச் சூழ்ந்துவரச்சென்று, ஆகாயத்தைமுட்ட வீழ்ந்து கிடக்கின்ற, தசமுகனுடைய உருவத்தை உற்றுப்பார்த்தருளினர். மகாதபங்களைச்செய்து ஒருவன் பெற்ற செல்வமானது தன்னைப் பெற்றுக்கொண்டவன் செய்யும் சத்கருமங்களுக்குத் துணையாயிருப்பதுமன்றி, அவன்செய்யும் துஷ்கருமங்களுக்கும் துணையாயிருந்து, அவனுடைய பூர்வ சத்கருமம் அற்றமாத்திரத்தில், உடனே அவனைவிட்டு நீங்கி விடுகின்ற நிலையில்லாமையைப் பார்க்கிலும் வேறொரு நிலையில்லாமையும் உண்டோ? மேலும், அந்தச் செல்வமானது நீர்மேல் கிழித்த சித்திரத்தைப்போலும் நிலைமையுடைய தல்லவா?

பெருந்தவங்களைச்செய்து அகண்டயிஸ்வரியத்தை அடைந்து ஒருவரையும் வணங்கி அறியாத ராவணனுடைய பத்துத்தலைகளின்மேலும், சாக்ஷாத் பரமசிவனவர் பிரதமகணங்களோடும் எழுந்தருளிய கைலாயத்தை ஒருபந்துபோலப் பேர்த்தெடுத்த இருபது தோள்களின்மேலும் தோள்களின் மேற்புறத்திலும், சாகாமிருகங்களாகிய அநேக வானரங்கள் தாவித்தாவியேறி மலைகளின்மேலேறி நின்றாடுவதுபோலக் குதித்துக் குதித்து ஆடினதுகள். அப்போது புற்றுக்களில் பல சர்ப்பங்கள் நுழைந்து சென்றனபோலவும் மேகராசியிற் பிறைச்சந்திரிகைகள் நுழைந்து சென்றன போலவும், இராவணனுடைய முதுகில் திக்குயானைகளினுடைய தந்தங்கள் மார்பில் தைத்துருவிய தழும்புகளை தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீ ரகுநந்தனர் கண்டு, அந்தக்கொடியவன் பிராட்டியார் பக்கலில் அபசாரப்பட்டதனால் தமக்குண்டாகிய கோபமாறிப்போய் புன்னகைகொண்டு விபீஷணாழ்வான் முதலானவர்களைப் பார்த்து, ஆ! ஆ! பார்த்தீர்களா? தன்னுடைய பராக்கிரமத்தால் திரிலோகங்களையும் யதார்த்தமாகவே இந்தத் தசக்கிரீவன் அடைந்தவனானாலும் இன்று என்னுடைய பாணத்தால் இறந்தானென்று நான் என்தோள்களை நோக்கிக் களிக்கின்ற களிப்பானது, இவன் முன்னே எந்தயுத்தத்திலேயோ எதிர்த்துப் பின்வாங்கி முதுகில் தைத்த சில அம்புகளின் வடுக்கள் காணப்படுவதால் அழிந்துபோனதுமல்லாமல், முன்னொரு சுத்தவீரனுக்குத் தோற்றுப்போன ஒருவனை இந்த ஸ்ரீராமன் கொலை செய்தானென்று உலகத்தார் நிந்திக்கும் படியான அபக்கியாதியையும் தேடிக்கொண்டேன்.

இந்த ராவணன் கார்த்தவீரியார்ச்சுனனால் முன்னொருகாலத்திற் கட்டுப்பட்டானென்று உலகத்தார் சொல்லிக்கொள்ளும் பிரபலமான ஒருவார்த்தையும்உண்டு. அந்தவார்த்தையை நினைத்து நினைத்து என் மனமோ மிகவும் நாணுகின்றது. இஃதிருக்கட்டும் யுத்தத்தில் இவன் முதுகுகாட்டி ஓடும்படிசெய்த சுத்தவீரனுடைய இரண்டு கைகளும் இருக்கையிலேயே நான் வில்லைப்பிடித்து அம்பையெய்து இவனைக்கொன்றேனென்பதும் ஒருவீரமோ? முன்சொன்னபடி நாணுகின்ற எனக்கு இது முதுகிற்பட்ட புண்ணல்லவோ? இறந்துபோனாலும் உலகத்தில் நிலைத்திருக்கும்படியான பெருங்கீர்த்தியோ இனி என்னைச் சேரமாட்டாது. போரில் எதிர்த்து நின்று சிறந்தபுண்படச் சண்டைசெய்யத்தக்க சுத்தவீரனவன் சத்துருக்களெல்லாம் கைகொட்டி நகைசெய்யும்படியாகப் பிராணன்மேல் அன்பைவைத்துப் புறகிட்டோடினானென்பதுபோன்ற அபகீர்த்தியைத் தேடிக்கொண்டேன். முன்னே சில வீரர்களிடத்தில் நான்பெற்ற ஜெயமும் வியர்த்தமாய்ப் போயிற்றே என்று வீரரசம் தோன்றும்படி சொல்லினர்.

இப்படி எல்லாம் வல்லோராகிய ஸ்ரீ காகுத்தர் வீரர்களுக்கடுத்த வீரரசவார்த்தைகளை அருளிச்செய்த மாத்திரத்தில் ஸ்ரீ விபீஷணாழ்வானவர் மனம்பொறுமல் சுவாமிக்குத் தண்டன் சமர்ப்பித்து எழுந்து நின்று, இரண்டு கண்களிலும் நீர்பெருகும்படி பெருமூச்சு விட்டுக்கொண்டு, ஓ சுத்தவீரர்களுக்குள் சுத்தவீரசிகாமணியே! தேவரீர் நீதியாகப் பேசவில்லையே! ஓ தைத்திய ராக்ஷசகுல வைரியே!

பூர்வத்திலே ஆயிரந் தோள்களையுடைய கார்த்த வீரியனும் வாலியும் இந்தத் தசமுகனை வெகு அருமையாக வென்றார்களென்பது தேவர்களுடைய சாபத்தினாலல்லாமல் வேறல்ல. இந்தத் துராத்துமாவானவன் பிரம்மேந்திராதி சமஸ்த ஜீவர்களும் தாயை வணங்குவதிலும் அதிகமாக வணங்கத்தக்க சர்வலோகநாயகியாகிய பிராட்டியார்பக்கலிற்பட்ட அபசாரமும், உம்முடைய தாசபூதர்கள் பக்கலிற்செய்த அபசாரம் காரணமாகத் தேவரீருக்குண்டாகிய சீற்றமும், இவனை வென்றதுகளல்லாமல் மற்றஎத்தேவர்களாலும்வெல்லவும் முடியுமோ? முன்னே அவைதிகமார்க்காநுசாரியாகி இவன்பூமிவிஸ்தீரணம் எந்தமட்டும் உண்டோ அந்தமட்டும் தனதுதேரைச்செலுத்திச்சென்று, தன்னை எதிர்க்கத்தக்கசத்துருக்களொருவரையுங்காணுதவனாய், திக்கின்முடிவில் மகம்மேருவைப்போல நின்ற யானைகளோடு முட்டினான். அப்போது அந்தத் திக்கஜங்களினுடைய தந்தங்கள் இவனுடைய வக்கிரமலைபோன்ற மார்பில் தைத்து நிற்கும்படி திமிறி முறித்துக்கொண்டுவந்துவிட்டான். அந்ததந்தங்கள்தன் மார்புக்கு அலங்காரமாகவும், தனதுவீரப்பிரதாபத்துக்குக் குறியாகவும், நெடு நாள் அப்படியே வைத்துக்கொண் டிருந்தான்.

ஒருகாலத்தில் யமதர்மராஜனோடு எதிர்த்தபோது, அவன் எய்த வச்சிரபாணங்கள் இந்த தந்தங்களின்மேல் பட்டதினாலும், இதோ நிற்கின்ற தேவரீருடைய தாசராகிய ஆஞ்சநேயர் யுத்தகளத்திற் குத்திய குத்தினாலும், அவைகள் முதுகுபரியந்தம் பாய்ந்ததுகள். உடனே பாய்ந்த தந்தங்கள் இவருடைய குத்தின் அதிர்ச்சியினால் பலபலவென்று உதிர்ந்துவிட்டதுகள். முதுகிலே தோன்றுகிற வடுக்கள் அவையேயன்றி வேறே ஒரு பாணம்பட்ட வடுக்களல்ல. திருப்பாற்கடலில் பிறந்த ஆலகாலவிஷமானது ஸ்ரீருத்திரபகவானை நாசப்படுத்தினபோதிலும், வாசுகிமுதலிய குரூரசர்ப்பங்கள் ஸ்ரீகருடபகவானை நெருங்கினபோதிலும், இந்தப் பிரம்மாண்டத்திலேயே அல்ல, மற்ற எந்த அண்டங்களிலாவது இவனுக்குச் சத்துருக்களுண்டாயிருந்து அவர்களுடைய பாணங்கள் அஞ்சாமல் வந்து இவனை என்னசெய்யமாட்டும்? ஓ ஜீவகாருண்யமூர்த்தியே! இந்த முதுகுக்காயங்களுக்கு வேறு காரணமும் உண்டோ? இல்லை: இஃதிருக்கட்டும். சமுத்திரத்தாற் சூழப்பட்ட பூகோளமுழுமையும் தன்னுடைய கோரப்பல்லில் அடங்கும்படி வகித்த ஆதிபுருஷ வராகமாகிய பராபரவஸ்து முதலிட்ட தேவதேவர்கள் யாவரும், இந்த ராவணனால் உண்டாகும் இடுக்கண்களை என்றைக்கு நாம் தீங்கப்போகிறோமென்று துன்பப்பட்டுக்கொண்டிருந்தார்கள். இப்போது தேவரீருடைய பாணப்பிரயோகத்தால் இந்தச் சாதுசஜ்ஜன கண்டகன் இறந்தானென்பதைத் தங்கள் கண்களாரக் காணும்படி, இதோ ஆகாயமார்க்கத்தில் வந்து மொய்த்து நின்றார்களென்று கூறி முடித்தனர்.

இப்படி விபீஷணாழ்வான் சொல்லியதையெல்லாம் திருச்செவிசாத்திக் கேட்டருளிய ஸ்ரீராகவபிரான் இந்த வடுக்கள் யானைத் தந்தங்களின் வடுக்களாவென்று தாம்கொண்ட அவதாரத்துக்கேற்க முன் அடைந்திருந்த சந்தேகமும் நாணமும் நீங்கினவராய்த் தம்முடைய திருத்தோள்களை நோக்கிக் களித்து, ஓ விபீஷணனே! உயிர்மாய்ந்தவர்கள்மேல் அவர்கள் முன் செய்த குற்றத்தைப் பாராட்டிச் சலஞ் சாதிக்கிறது தருமமல்ல. அது புத்திமான்களுடைய செய்கையுமல்ல. கொன்றாற்போன்ற குற்றஞ்செய்தவனா யிருப்பனும் உயிர்மாண்டவனாதால் இவன் செய்த தீமைகளை நீ மன்னித்தவனாகி, உங்களுடைய குலாசாரத்துக்குத் தக்கபடி கருமகாண்டத்தில் சொல்லிய விதிகளைஅநுசரித்துப் பிரேதபூசை உத்தரகிரியை முதலியதுகளைச் செய்யக்கடவாயென்று திருவுளமிரங்கித் தமது கருணையால் சொல்லிக்கொண்டிருந்தனர். அது சமயத்தில் தம்மைத்தரிசித்து வணங்கும்படியாக எந்த உலகங்களிலுமுள்ள சமஸ்த சாதுசஜ்ஜனங்களும் பிரமனும் இந்திரனும் மற்றதேவர்களும் வேதங்களால் தோத்திரஞ் செய்துகொண்டுவந்து நிறைந்து, முறைமுறையாக வீழ்ந்துசேவித்துக்கொண்டிருந்தனர்கள். அவர்களோடு வார்த்தை யாடும்படியாகச் சுவாமியானவர் தாம் அப்புறத்தே எழுந்தருளினர்.

---

## விபீஷணாழ்வான் இரங்கல்.

அப்பால் ஸ்ரீசர்வலோக சரணியராகிய ஸ்ரீராமநாதர் அருளிச்செய்த அருளுப்பாட்டின்படி ஸ்ரீ விபீஷணாழ்வானானவர் தம்முடைய கியான வயிராக்கியத்தால் தடுத்து வைத்திருந்த அன்பும் துன்பமும் நீங்கும்படியாகவும், வானரசைனிய முழுமையும் உலகத்திலுள்ள மனுஷ பசுபக்ஷி முதலியஎல்லா உயிர்வர்க்கங்களும்அங்குவந்திருந்தஎல்லாத்தேவர்களும் எல்லாமுனிவர்களும் தங்கள் தங்களுக்கு நேரிட்ட துன்பம்போலத் தம்மைக்கண்டு மனமிரங்கும்படியாகவும் தம்முடைய பெருவாயைத் திறந்து கதறி அழுது, வீழ்ந்துகிடக்கிற ஒருமகா பர்வதத்தின்மேல் ஒரு மலைசாய்ந்து விழுந்தாற்போலப் பிரதாபலங்கேஸ்வரன்மேல் வீழ்ந்து புலம்பத் தொடங்கினார்.

ஓ ஆலோசனையில் மிகுந்தஎன் அண்ணாவே! ஓ அசுரர்கள் குலத்துக்குப் பிரளயமே! ஓ தேவர்கள் குலத்துக்கு யமனையொத்தவனே! விஷமென்பது தன்னையுண்ணாமற்போனால் உயிரையுண்ண மாட்டாதன்றோ? ஜானகிபிராட்டி யென்னும் பெரிய விஷமானது தன்னைக் கண்ணாலே பார்ப்பதினாலேயே உன்னுடையஉயிரைப் போக்கிவிட்டதே மஹா பராக்கிரமசாலியாகிய நீயும் யுத்தகளத்தில் வீழ்ந்தாயே? எல்லா யோசனையிலுஞ் சிறந்தவனென்று என்னை நான் சொல்லிக் கொள்ளவில்லை. முன்னே யான் யோசித்துச்சொன்ன சில புத்திகளை இன்றையதினமாவது யதார்த்தமென்று எண்ணுகின்றாயோ? ஸ்ரீபரமபதநாதனாகிய ஸ்ரீராகவபிரான்மேல் பிராணனே அவனென்று ஆசைவைத்துள்ள கற்புடைய மங்கையர்க் கரசியாகிய மைதிலியின்மேல் நீ துராகிருதமாகவைத்தஆசையை நீக்கிவிடென்றும், இல்லாவிட்டால் நமக்குப் பழிவந்து நேரிடுமென்றும் சொன்ன என்னைக் கோபித்துக்கொண்டாயே? அந்தக்கோபம் இப்போது ஆறி நான் சொன்னதெல்லாம் உண்மைதானென்று தேறினாயோ? ஓ புருவங்களை நெறித்துப் பார்த்துத் திக்கஜங்கள் நிலைபெயர்ந்தோடச்செய்த சர்வலோக பயங்கர சீலனே? யுத்தத்தில் அபேட்சை கொண்டெழுந்த நம்முடைய குலமுழுமையும் நாசமாகிய பின்னேதானோ உன்னுடைய பேராசை நீங்கியது? அக்காலத்தில் அக்கினியில் வீழ்ந்து தேகவியோகமடைந்த வேதவதியென்னும் பதிவிரதாரத்தினமானவர் இப்போதிந்தச் ஜானகிபிராட்டியினுருவமாக அவதரித்திருக் கின்றாரென்றும், இவரே சமஸ்த சராசரங்களையும் பெற்றெடுத்த சர்வ ஜகன்மாதாவென்றும் உனக்குச்சொன்னேன். அதை உன்மனதிற் கொள்ளாமற்போனாயே? அது காரணத்தால் உன் குலமுழுமையும் ஸ்ரீராம லட்சுமணர்களை எதிர்த்து நின்று நாசமடைந்ததே? பின்னேயாவது என்சொல்லை நிஜமென்று நம்பிச் சரணாகதி செய்யாமலே வியர்த்தத்திற் பிராணனைவிட்டாயே! இன்றையத்தினமாவது ஸ்ரீராமநாதனுடைய புஜபல பராக்கிரமத்தை அறிந்து செல்கின்றாயோ? ஓ இருபது குலாசலங்களையொத்த தோள்களை யுடையானே? மூலதாமரைமலரில் வந்த சதுர்முகனோடு கூரிய மழுவாயுதத்தைக் கையில்தாங்கிய பஞ்சமுகனும்கொடுத்தருளிய வரங்களில் ஒன்றுந் தவராமல், எல்லாமும் ஸ்ரீராமபாணத்துக்கு முன்னே உன் பத்து முடிகளோடும் பொடிப்பொடியாய்ப் பயன்படாமற் போனதுகளல்லவா? அக்காலத்தில் உன்னிடத்தில் யான்வைத்திருந்த அன்பின்மிகுதியால் ஸ்ரீராமபிரானைப் பற்றிச் சொன்னவற்றில் ஒன்றும் உண்மையென்று அறிந்து கொள்ளாமற் போனாயே? ஸ்ரீராமபத்திரானவர் லோகேஸ்வரர் களுக்கெல்லாம் ஈஸ்வரனென்பதை, அந்த அவாப்த சமஸ்தகாமனாய்ச் சகல ஜகத்காரணபூதனா யெழுந்தருளிய சர்வேசுரனுடைய பரந்தாமத்தை யடைந்து நின்ற இன்றைக்குத்தான் தெளிந்தாயோ? நீ முன்பிருந்துவந்ததும், சகல பிரமாதிதேவர்களுடைய பதவிகளுக்குமேலாகியதும், இந்த அண்டங்கள் யாவற்றினும் மூன்றுபங்கதிகப் பெரிதுமாகிய வைகுண்டத்தை யடைந்தாயோ? அல்லது நீ உன் குலதெய்வமாக ஆகமவிதிப்படி ஆராதித்துவந்த ஸ்ரீசந்திரசேகரராகிய பரமசிவனுடைய அழியாப் பதவியென்னும் கயிலாசபதவியை யடைந்தாயோ? ஓ என் அண்ணாவே! சிறிதும் பயப்படாமல் உனக்

குச் சமீபத்தில் வந்து உன்னுயிரைக்கொண்டுபோனவர் யாரோ? இதெல்லாம் நிற்கட்டும்; சர்வ லோகேஸ்வரியாகிய சீதாபிராட்டியார் பக்கலில் துன்மதியால் நீ விரகங்கொண்டதை யறிந்து, உன்னோடு போராடிக்கொண்டிருந்த மன்மதனுனவன் தான் செய்துகொண்டிருந்த போராட்டத்தை இனியாவது விட்டானே? அக்கினிச் சுவாலையைப்போலக் கிரணங்களை வீசிக்கொண்டிருந்த, பூரண சந்திரனுனவன் இப்போது குளிர நிலா வெரிக்கின்ருனே? உதட்டை மறைக்கும்படியாக முன்னே நீண்டுதோன்றுகின்ற பற்களையுடைய சூர்ப்பநகையானவள் யாவராலும் கொல்லப்படாதபராக்கிரமசாலியாகிய மைத்துனனை இந்த ராவணனுனவன் கொலைசெய்தான் அல்லவாவென்று உள்ளத்தில் வைரங்கொண்டு அநேக தீயவஞ்சனைகளை ஆலோசித்திருந்தவள், இப்போதாவது தான்கொண்ட வயிரத்தை நீங்கினுளோ? நீ ஜானகிபிராட்டியார் பக்கலில் அபசாரப்பட்ட காரணத்தால் சுவர்க்கவாசிகளாகிய நல்லவர்களும், நரகவாசிகளாகிய தீயவர்களும், நம்மோடு பகைகொண்டிருக்கின்ருர்களே? ஓ புருஷ சிரேஷ்டனே! நீ சுவர்க்கத்தையாவது நரகத்தையாவது அடைந்தாயானுல், அங்கே யாரோடு உறவாயிருந்து யார்முகத்தை விழிக்கப்போகிருய்? ஐயோ! தனித்தவனுகி விட்டாயே! விஜயலட்சுமியையும், சாஸ்திரங்களுக் கதிதேவதையாய்நின்ற சரஸ்வதியையும், கீர்த்தியென்கிற பெண்ணையும் தழுவிநின்று; அந்தமூன்று ஸ்திரீகளும், உன்னைவிட்டு நீங்கும்படியாகப் பொருமையால் ஊடிக்கொள்ளவும், எல்லா வைபவங்களுக்கும் இறைவியும், சகல சம்பத்துகளுக்கும் தலைவியும், பிரமேந்திராதிசமஸ்ததேவர்களுக்குந் தாயும் தெய்வத்தன்மை பொருந்திய கற்புள்ள பெரியபிராட்டியாரும் ஆகிய ஸ்ரீசீதாபிராட்டியை உன்னுடைய துர்ப்புத்தியால் தழுவுதற்காகப் பிராணனையே கொடுத்துப் பழியைப் பெற்றுக்கொண்டனையே! ஓமுழுப்பித்தனே! உன்னெண்ணமெல்லாம் பழுதாகி இப்போது திக்கு யானைகளுடைய தந்தங்களை முறித்துவிட்ட பிரகாசமாகிய மார்பினுலே பூமிதேவியைத் தழுவினுயோ என்று சொல்லிசொல்லி அழுதாா். இப்படியழுகின்றநீ விபீஷணுழ்வானைக்காடிப் படைகளுக்கு அரசனுகிய சாம்பவரானவர் இரண்டு கைகளாலும் எடுத்து, ஓ மலைபோலுயர்ந்த பெருந்தோள்களை யுடையானே! விதியினது நிலைமையைச் சிறிதும் அறியாமல் ஓய்ந்து துக்கிக்கின்ற புத்தியும் உனக்குண்டோ? சுகமும் துக்கமும் மாருமல் வந்துகொண்டிருப்பது நல்வினைதீவினைகளினது பயனென்று தெளியாமல் வீணே வருத்தப்படுகிறது நல்லறிவோ? என்றுஇன்னும் பலபலவிதமாகத்தேற்றிக்கொண்டிருந்தார். இங்கே இப்படியிருக்க மயனுடைய குமாரத்தியாகிய மண்டோதரியானவள் தன் பர்த்தாவினுடைய மரணச்செய்தியைக் கேள்விப்பட்டு, அனந்த லக்ஷம் ராக்ஷச ஸ்திரீகள் தங்கள் தங்கள் கூந்தல்களை விரித்துக் கோவென்று கதறிக்கொண்டு தன்பின்னேவர நினைப்பென்பதும் மறப்பென்பது மில்லாதவளாய் இறந்து கிடக்கின்ற இராவணனுக்குச் சமீபத்தில்வந்து அவன்மேல் வீழ்ந்தாள். எல்லாயுயிர்களிடத்தும்வைத்த கருணையையும் தருமத்தையும் துணையாகக்கொண்டு எல்லாம் உயிர்களையும் காக்கின்ற நல்லவமிசத்திலே பிறந்த சற்புருஷ ஞெருவனுக்குப் பூர்வ கர்மத்தால் நேரிட்ட அபக்கியாதி எங்கும் வியாபிப்பதுபோல, ராக்ஷசஸ்திரீகள் வாயைத்திறந்து அழுத கூக்குரலானது அண்ட முழுமையும் வியாபித்தது. லங்காநகரத்திலுள்ள யக்ஷகின்னர சித்ததானவவித்தியாதர நாகஸ்திரீகளிலும் ராக்ஷசஸ்திரீகளிலும், சிலர்காலிலணிந்த சிலம்புகளும் நூபுரங்களும் அழுவதுபோலச் சப்திக்கும்படி கோபுரங்களின் மேலேறிநின்று பார்த்து அழுதார்கள். சிலர் இந்திரனுடைய பகை இன்ருேடே ஒழிந்துபோய்விட்ட தல்லவாவென்று சொல்லிக்கொண்டு, போக இடம்பெருமல் ஆகாயத்தின் மார்க்கமாய்ச் சென்ருர்கள். சிலர் குண்டலமுதலிய ஆபரணங்களும், இடையும் மின்னலைப்போல விளங்கவும், மான்போன்ற கண்களில் நின்று மழைபோல நீர் சிந்தவும், அழுகுரலானது இடியோசைபோல் தொனிக்கவும், மேகராசிகளைப்போல்வந்து வீழ்ந்து அழுதார்கள். சிலர் தலையின்மேற் கூப்பிய கைகளையும் முலைகளின்மேலொழுகி யோடுகின்ற நீரைச்சொ

ரிகின்ற கண்களையும் உடையவர்களாய் அடர்ந்து வந்து, சமுத்திர அலைகளின் மேல் தாவி வீழ்கின்ற அன்னப்பறவைகள் போல, ராவணனுடைய நீண்டதோள்களின்மேல் விழுந்து அழுதார்கள். சிலர் தசமுகனுடைய தலைகளையும், சிலர் கால்களையும், சிலர் எழுகுத் தூண்களையொத்த தோள்களையும், சிலர் பர்வதம்போன்ற மார்பையும், சிலர் மற்ற அவயவங்களையும் தழுவி; கூட்டங்கூட்டமாய் உட்கார்ந்து கொண்டுவீழ்ந்துஅழுதார்கள். அவனோடு ஊடிக்கொண்டிருப்பது தங்களுக்கு வருத்தமென்றும் அவனோடுகூடி வாழ்தலே தங்கள் உயிர் வாழ்க்கைக்குச் சுகமென்று நினைத்து இதுவரையும் காலங்கழித்து வந்த சில ஸ்திரீகள் இராவணன்மேல் விழுந்தழ இடம்பெறாமல், ஒருவர்மேல் ஒருவர் விழுந்து அவன் தோள்களைப் பற்றிக்கொண்டழுதார்கள். சில ஸ்திரீகள் முறைபிறழமொய்த்துத் தழுவிக்கொண்டு, கண்டோர் யாவருக்கும் உள்ளம் நெகிழும் படியாக அழுதழுது, ஓ திரிலோக பயங்கரனே! ஓ புருஷ சிம்ஹமே! அதர்மமாக உன்மனத்திலே வைத்திருந்த சீதையை இன்னமும் மறந்திலையோ? நீ மறந்துவிட்டது யதார்த்தமாயிருந்தால், பூர்வத்திலே எங்கள்மே லாசையாயிருந்து பேசியது போல உன் வாய்களாகிய மலர்களைத் திறந்து ஏன் பேசவில்லை? பேசாமற் போன போதிலும், கண்களைத் திறந்து எங்களை ஏன் பார்க்கவில்லை? மற்றொரு கிருபையும் ஏன் செய்யவில்லை? இவற்றுள் ஒன்றுஞ் செய்யாமலிருப்பதால் நீயும் இறந்துவிட்டாயோ? என்று சொல்லி அழுதார்கள். இவர்கள் செய்தி இவ்வாறாக சூரியனைப் போல உலகுக்கெல்லாம் தானொருவனே சமர்த்தனென்னும்படி புகழ்பெற்ற மயனுடைய புத்திரியாகிய மண்டோதரியானவள் இருபுறமும் அலைகளைவீசுகின்ற கருங்கடலில் மின்னல் விழுந்தாற்போலப் பிரதாப இலங்கேசுரனுடைய உடலின்மேல் விழுந்து, அங்கு சுற்றுப்பக்கங்களிலுள்ள மரங்களும் மலைகளும் தன்னுடைய புலம்பலைக்கேட்டு உருகும்படி வாயைத்திறந்து புலம்பத் தொடங்கினாள்.

---

## * வண்டோதரி புலம்பல்.

### கவி.

அன்னேயோ வன்னேயோ வாகொடியேற் கடுத்தவாளரக்கர் வேந்தன், பின்னேயோ விறப்பதுமுன் பிடித்திருந்தகருத்ததுவும் பிடித்திலேனே, முன்னேயோ விழுந்ததுவுமுடித்தலையோ படித்தலைய முகங்காட்டாயோ, என்னேயோவென்னேயோ விராவணனார் முடிந்தபரிசிதுவோ பாவம்.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி மேலுங்கீழும், எள்ளிருக்குமிடனின்றி யுயிரிருக்குமிடனாடி யிழைத்தவாறே, கள்ளிருக்கு மலர்க்கூந்தற் ஜானகியை மனச்சிறையிற் கரந்தகாதல், உள்ளிருக்குமெனக் கருதி யுடல்புகுந்து தடவியதோ வொருவன்வாளி.

ஆரம்போர் திருமார்பை யகன்முழைக ளனைத்திறந்தி வ்வுலகுக்கப்பால், ஆரம்போயினவொருவன் சிலைதுரந்தசரங்களே போரிற்றோற்றும், வீரம்போயுரங்குறைந்து வரங்குறைந்து வீழ்ந்தானேவேறே கெட்டேன், ஓரம்போ வுயிர்பருகிற்றிராவணனை மானுடனா ருற்றமீதோ.

காந்தையருக் கணியனைய ஜானகியார்பேரழகு மவர் தங்கற்பும், ஏந்துபுயத் திராவணனார் காதலுமச்சூர்ப்பநகை யிழந்தமூக்கும், வேந்தர்பிரான் றயரதனார் பணியினால் வெங்கானில் விரதம்பூண்டு, போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா.

தேவர்க்குந்திசைக்கரிக்குஞ் சிவனார்க்குமயனார்க்குஞ் செங்கண்மாற்கும், ஏவர்க்கும் வலியானுக் கென்றுண்டாமிறுதியென வேமாப்புற்றேன், ஆவற்கணியுழன்றவருந்தவத்தின் பெருங்கடற்கும் வரமென்றூன்ற, காவற்கும் வலியானோர் மானுடனாருளரென் னக்கருதினேனே.

அரைகடை யிட்டமைவுற்ற முக்கோடியா யுவமுன்னறினர்க்கேயும், உரைகடையிட்டளப்பரிய போராற்றற்றோளாற்றற் குலப்போவில்லைத், திரைகடையிட் டளப்பரிய வரமென்னும் பாற்கடலைச் சீதையென்னும், பிரைகடையிட்டழிப்பதனை யறிந்தேனே தவப்பயனின் பெருமை பார்ப்பேன்.

ஆரானுலகியற்கையறிதற்காரணையேழுமேழுமஞ்சும் வீரானுட்றுறந்து விண்புக்கார் கண்புக்க வேழவில்லால், நாரநாண் மலர்க்கணையானுளெல்லாந் தோளெல்லா னைய வெய்யும், நாரணார்தனியிலக்கை மனித்தனாழித்தனரே வரத்தினாலே.

### வேறு.

ஆராவமுதா யலைகடலிற்கண்வளரும்
நாராயணனென் றிருப்பேனிராமனைநான்
ஓராதேகொண்டகன்றா யுத்தமனார்தேவிதனைப்
பாராயோநின்னுடைய மார்பகலம்பட்டவெலாம்.

---

* மண்டோதரி என்று வழங்குப; பஞ்சகன்னிகளிலொருத்தி

ஓ என்தாயே! ஓஎன்தாயே! மகாபாதகியாகிய எனக்கு இராக்ஷகுல நாயகனுர்க்குப் பின்னே இறக்கும்படி நேரிட்டதே! இதென்னஆச்சரியம்? நான்வேருென்றை அடையாமற் போனுலும் என் குலநாயகருக்கு முன்னே இறக்க வேண்டுமென்றெண்ணியிருந்த எண்ணத்தையாவது பெறுகின்ற பாக்கியம் எனக்கில்லாமற் போய் விட்டதே? இந்த வீரசிரேஷ்டருடைய உடல் முன்னே விழுந்திருக்கிறதே? சொர்னமயமான முடிகளணிந்த தலைகளோ புழுதியிலுருண்டு கிடக்கிறதுகளே? ஓஎன் பிராணநாதா! சற்றே யுமதுதிருமுகங்களை காட்டீரோ? தம்முடைய பேரைக் கேட்ட மாத்திரத்தில் சகலவீரஜனங்களையும் அழச்செய்பவரென்னு மேதுவால் இராவணனென்னும் பெரும்பெயரைப் பெற்ற பராக்கிரமசாலியானவர் இறந்துபோனு ரென்பது என்ன ஆச்சரியம்? ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? இஃதெவ்வளவு பரிதாபமான காரியமாயிருக்கிறது? அன்றியும் தனக்குச் சமானமில்லாத ஸ்ரீராமனுடைய பாணமானது மார்பொன்றையே பிளந்துசெல்லாமல், வெள்ளெருக்க மலர்மாலையைத் தரித்த சாக்ஷாத் ருத்திரபகவானுடைய கயிலையை அநாயாசமாகப் பேர்த்த தோள்களுக்கு மேலுங்கீழுமாக எள் தங்குதற்கு மிடமில்லாமற் சின்னுபின்னமாகத் தொளைத்திருப்பதை யோசித்துப் பார்த்தால் பிராணதாரத்தைத் தேடித் தேடித் தான் இப்படிச்செய்த விதமோ? அல்லது தேவியாகிய ஜானகிபிராட்டியை அசோகவனத்திற் சிறைவைத்த ஓர் ஆசையானது தங்கியிருக்கும் இடத்தைத் தடவிப்பார்த்த விதமோ? எனக்கு யாதொன்றுந் தோன்றவில்லை. இதென்னமோ விபரீதமாய்க் காயம் பட்டிருக்கின்றது. ஒப்பற்ற ஸ்ரீராமனுடையபாணங்கள்மலையிற் குகைகள் காணப்படுவதுபோல மார்பைப் பல தொளைகள் செய்து இவ்வுலகையுங் கடந்து அப்புறத்திலும் சென்றதுகள். சகல வீரஜனங்களையும்ஜெயம்பெற்ற பிரதாபலங்கேசுரர்போரிலே தோல்வியடைந்து, தம்முடைய வீரத்தையிழந்து, வலியுங்கெட்டு, பெற்ற வரங்களெல்லாம்தொலைந்துவீழ்ந்தீரல்லவா? இதென்ன ஆச்சரியத்திலே ஆச்சரியமாயிருக்கிறது? ஐயோ! ஒரு பாணந்தானே என்புருஷருடைய உயிரைவாங்கியது? ஏக மனுஷியனுக்கு இப்படிப்பட்ட பலமும் உண்டோ? இதென்ன அற்புதம்? தேவஸ்திரீஜனங்களுக்கெல்லாம் சிரசிலே யணிந்துகொள்ளத்தக்க ஆபரணம்போல விளங்குகின்ற ஜானகிபிராட்டியாருடைய கட்டழகும், அவருடையகற்பும், உயர்ந்ததோள்களையுடைய இராவணனுர் அந்தப்பிராட்டியார் பக்கலில்வைத்த ஆசையும், இத்துன்பங்களுக்கெல்லாம் காரணமாகிய சூர்ப்பநகையானவள்மூக்கையிழந்ததுவும், ஸ்ரீராமபிரான் தசரதசக்கரவர்த்தியினுடைய ஆக்கினையால் தவவேஷம்பூண்டு காட்டிற் பிரவேசித்ததுவும், இவை யெல்லாவற்றையும் கடைசியாக ஆலோசித்துப்பார்த்தால் இந்திரன்செய்த மகாபாக்கியமாய் முடிந்திருக்கிறதுகள். எல்லாத் தேவர்களுக்கும், திக்குயானைகளுக்கும், ருத்திரனுக்கும், பிரமனுக்கும், விஷ்ணுவுக்கும், மற்றெவர்களுக்குமேலான பராக்கிரமசாலியாகிய ராவணனுர்க்கு மரணமும் உண்டாகுமோ? ஒரு காலத்தும் உண்டாகாதென்றே கர்வங்கொண்டிருந்தேன். அந்தக்கர்வம் இப்போது பங்கமாய்விட்டதே.

ஓ என்பிராணேசா! நீர் எல்லாரைப் பார்க்கிலும் அதிகப் பிரயாசைப்பட்டுச்செய்த அரிய தபமாகிய சமுத்திரத்தைக்காட்டிலும், அந்தத் தவங்களாற்பெற்ற வரமென்னும் அரணைக்காட்டிலும், மிக்கவலிமையுடைய மனுஷியனெருவன் உண்டென்று நான் நினைத்ததுமுண்டோ? இல்லையே. ஓ ராக்ஷசகுல ராஜசிங்கமே! உம்முடைய ஆயுள்நாளோமூன்றரைகோடியாகும். புத்திமான்களாலும் அளவிடுதற்கொண்ணுத உமது பராக்கிரமத்துக்கும் போர்ச்சாதுரியத்துக்கும் இவ்வளவென்று முடிவில்லை. எல்லையில்லாமல் நீர்பெற்றிருந்த வரங்களென்னும்பாற்சமுத்திரத்தை நம்முடைய விதியானது சீதாபிராட்டியாகிய பிரையைக்குத்தி அழிப்பதனை நான் இதற்குமுன்னே அறிந்திருந்தேனே? அறியேனே; அறிந்திருப்பேனே யானுல் எவ்விதத்திலும் ஜானகிபிராட்டியை நீர் விட்டுவிடும்படிசெய்யாமற்போவேனே? செய்தேயிருப்பேன். நீர் பெற்றிருந்த வரங்களின் பெருமையைக் கண்டு எக்களிப்புக்கொண்டிருந்தேன். ஐயோ! உலகசுபாவத்தை யார்

அறியவல்லவர்கள்? ஓ சங்கரா கணுக்கள டர்ந்த கருப்புவில்லே ஏந்தி மலர்க்கணைக ளால் எந்நேரமும் இருபதுதோள்களின் மேலும் எய்துகொண்டுவந்த மன்மதராஜ னுடைய லக்ஷியமென்னும் ராவணரை ஸ்ரீராமரென்னும் மனுஷரானவர் தம்மு டையபராக்கிரமத்தால் அழித்துவிட்டார். சதுர்த்தசபுவனங்களும் அஞ்சத்தக்க மகா சுத்தவீரராகிய அவ்விராவணனார், தன் தேகத்தைத் துறந்து வீரசுவர்க்க மடைந் தார். ஐயோ! நான் தனியளானேனே; இனியென்னசெய்வேன்? ஓ என் பிராண பதமானநாயகமே! ஸ்ரீராமபிரானை எல்லா விறைவர்களுக்கும் திருப்தியுண்டாக்காத அமுதமாகித் திருப்பாற்கடலில் திருக்கண் வளர்கின்ற ஸ்ரீசர்வேசுரனென்றே நினைத் திருப்பேன். நீரதை எவ்வளவும் ஆலோ சியாமல் அந்த அப்ராகிருதராகிய ஸ்ரீரா கவபிரானுடைய தேவியாரை வஞ்சகமாய் எடுத்துக்கொண்டுவந்துசிறைவைத்துவிட் டீர். இப்போது உம்முடைய விசாலமாகிய மார்பு முழுவதும்பட்டிருக்கிற புண்களின் துவாரங்களைப் பாரும் என்று கூக்குரலி ட்டு அழுதனள்.

இப்படி புலம்பியழுத பதிவிரதாசிரோ மணியாகிய மண்டோதரியானவள் எழு ந்து, அந்த ராவணனுடைய மார்பைத் தழுவிப் பெருமூச்செறிந்து, பிரியாமை துக்கத்தாலே உயிரைவிட்டனள். இப்படி பிராணனைவிட்ட மண்டோதரியினுடைய கற்பினிலைமையைக்கண்டு தேவதா ஸ்திரீக ளும், மற்ற பூலோக நாகலோக ஸ்திரீக ளும்,ரிஷிபத்தினிமார்களும்,ஆகிய எல்லா பதிவிரதா ஸ்திரீகளும் கொண்டாடினார் கள். மண்டோதரியும் இறந்துபோனபின் விபீஷணாழ்வானானவர் வேத விதிப்படி பிரேத சடங்குகளைச் செய்து, சந்தனம் அகிற்கட்டைகளையடுக்கி அதன்மேல் தன் அண்ணனை ஏற்றி, மற்றக்கடன்களையும்செ ய்துமுடித்து, மயனுடைய புத்திரிகா ரத் தினமாகிய மண்டோதரியையும் தன் தமய னோடு கட்டைகளின்மேலேற்றித் தீயால் தகனமாக்கி, குடங்களிலிருந்து நீரைக்கொ ட்டுவதிலும் அதிகமாய் இரண்டுகண்களி னின்று நீர்சொரிந்தழுது, கும்பகர்ணன்- இந்திரஜித்து-கும்பன்- நிகும்பன் - இவர் முதலானவர்களுக்கு நீர்க்கடன் முதலிய துகளைச் செய்து, எல்லோர்க்கும் இவனை யல்லாமல் வேறே சரணுகதியில்லையென் றுணர்ந்து ஸ்ரீகோதண்ட தீக்ஷா குருவினு டைய சீர்பாதங்களை வந்து வணங்கினார். இப்படி தம்முடைய சரணாரவிந்தங்களை வந்து வணங்கிய ஸ்ரீவிபீஷணாழ்வானை ஸ்ரீசக்கரவர்த்தி திருக்குமாரர்கடாக்ஷித்து, அப்பாசற்குணசீலனே! ஏன் துக்கிக்கிறாய்? மரணமென்பது யாவருக்கும் இயற்கை யாய் அமைந்திருப்பதுதானே. இஃதெ ன்ன நீ அறியாததோ? என்று பல பல தேறுதல் சொல்லி அவருடைய துன்பப் பாசத்தை நீக்கிவிட்டார்.

இராவணன்வதைப்படலம் முற்றிற்று.

---

## மீக்ஷிப் படலம்.

அப்பால் தான் முன்செய்த அருந்தவத் தின் பயனால் தம்மைச் சரணமடைந்து உஜ்ஜீவித்த விபீஷணாழ்வானை ஸ்ரீராமர் பார்த்து, ஓ மநுநீதி முதலிய தரும சாஸ் திரவிதிகளை யறிந்திருக்கிற புத்திமானே! நீ வருத்தப்படாதே? என்று திருவாய் மலர்ந்தருளி ஸ்ரீ லட்சுமணப்பெருமாளைப் பார்த்து, என்னப்பனே! சுக்கிரீவமகாரா சன்-அநுமான்-மற்றவானரவீரர்கள் இவர் களோடு நீ சென்று வேதத்திற்சொல்லிய படி நீதிமானானவிபீஷணனுக்கு முடிசூட் டக்கடவாய்? என்றாக்கியாபித்து மற்றவர்க களுக்கும் விடைகொடுத்தருளினார். அப் போது அங்குநின்ற சமஸ்ததேவர்களும் மற்ற திக்குபாலகர்களும் தங்கள் தங்களுக் கேற்ற செய்கைகளைச்செய்யும் உட்களிப் போடுசென்று, சமுத்திர தீர்த்தத்தையும் கங்கை-யமுனை- கோதாவரி - நருமதை-கா வேரி முதலிய தீர்த்தங்களையும், திவ்விய ரத்தினமயமாகிய சொர்ன கிரீடத்தையும், பெருமையாகிய வச்சிரமணிக ளிழைத்த சிங்காதனத்தையும், மற்றும்வேண்டியவை களையும் விரைவாகக்கொண்டுவந்தனர்கள். மூலதாமரையிற்பிறந்த பிரமனானவன் பட் டாபிஷேகமண்டபம் கட்டவேண்டிய ஏற் பாடுகளைச்சொல்ல, அச்சொல்லின்வழியே தெய்வத் தச்சனானவன் பிரைச்சந்திரனை யும் கங்கையையும் சடாபாரத்தில் தரித்தரு ளிய கைலாசபதியோடு மற்ற தேவர்கள்

யாவரும் அதிசயித்துப் புகழ்ந்து கொண்டாடும்படி நானுவித ஒளிகளை வீசுகின்ற மணிமயமாகிய மண்டபமொன்று சிருஷ்டித்தனன். உடனே பிரம்மாதி சமஸ்த தேவர்களும் விபீஷணுழ்வானுக்கு வேத விதிப்படி மங்களாபிஷேகஞ்செய்து சர்வாபரணங்களாலு மலங்கரித்து அழைத்து வந்து சிங்காசனத்தின்மீது வீற்றிருக்கச் செய்தபோது சுமித்திராதேவியின் இளஞ் சிங்கமாகிய ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீராகவபிரானுடைய ஆக்கினையின்படி தமது திருக் கரங்களால் திவ்விய மணிமகுடத்தினை யெடுத்து ஸ்ரீராமபத்திரருடையதிருவடித் தாமரைகளைத் தியானித்து வேதமந்திரங் களைச்சொல்லி ஸ்ரீ விபீஷணுழ்வானுக்குச் சூட்டினர். ஒரு நீலமலையானது சூரியகிரணத்தொகுதியைச் சிகரத்திற்சூடி, சிவந்த இரத்தினுசனத்தின்மே லிருந்தாற்போல தமது சிரசில் மணிமுடிவிளங்க விபீஷணுழ்வான் சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்து விளங்கினுர். இலங்காநகரத்திற்கு அரசனுக விபீஷணுழ்வான் இளையபெருமாளால் முடிசூட்டப்பட்டவுடனே தர்ம தேவதை நடனஞ்செய்தது. முப்பத்து முக்கோடி தேவர்களும் கற்பகமலர்களைக் கொய்துகொய்து தூவினுர்கள். சித்தர்-சாரணர் முதலானவர்கள் தங்களுக்கு வேறேமலர்கள் கிடையாமல் திரிமூர்த்திகளோடும் முனிவர்களோடும் பரம வைதீக மார்க்கப் பிராமணர்களோடும் ஆசீர்வசனமென்னும் மலர்களைத் தூவினுர்கள்.

அப்பால் பட்டாபிஷேகனுகிய அரக்கர்குலாதிபனுனவர் ஸ்ரீராகவபிரானைத் தரிசிக்கவேண்டுமென்கிற பேரவாவை யுடையவராகி, லட்சுமணருடைய பாதாம்புயங் களைவணங்கி, ஓமேருமலையுங்கண்டு நாணுகின்ற தோள்களையுடைய ராமாநுஜரே! யான் ஸ்ரீசர்வலோகசரணியராகிய ஸ்ரீராமபிரானைச் சேவித்துவருமளவும் நீர் இந்த லங்காநகரத்திலிருந்து இங்குள்ளவரைக் காவல்செய்திருமென்று அவரிடத்திலே விடைபெற்றுக்கொண்டு, சுக்கிரீவமகாராஜன்-அங்கதன் முதலானவர்கள் சூழ்ந்து வரச்சென்று ஸ்ரீராமச்சந்திரருடைய திருவடிகளை வணங்கினுர். உடனே அன்னமாய் அருமறைதந்த சுவாமியானவர் தம்மைச் சரணமடைந்த விபீஷணுழ்வானை வாரி யெடுத்தணைத்து, ஓ அவைதீகமார்க் காநுசாரிகளாகிய இராக்ஷதர்களைப்போல் இராமல் பரமவைதீகமார்க்கத்திற் பிசகாமலொழுகுகின்ற சிரஞ்சீவியாகிய சுகுண சீலனே! யாகாதிகளால் தேவர்களைத் திருப்திசெய்து நீதியிலும் தருமத்திலும் தவருமல்நடந்து, திரிலோகவாசிகளும்வந்து வணங்கும்படி இம்மை மறுமைப் பயன் களைத் தருவதாக அரசுசெய்யக்கடவாய்? என்றுசொல்லி, மற்றும் பலபல நீதிகளைக் கூறி, உன்னைச்சேர்ந்தவர்களோடு மிகுந்த கீர்த்தியை யடைந்து வாழக்கடவாயென் றும் சொல்லினர். இப்படிச் சொல்லிமுடிந்தபின் மேல்நடக்கவேண்டியதை ஆலோசித்து, திருவடிகளைப் பார்த்து, அநுமானே! நீ பவளம்போன்ற வாயையும் மயில்போலும் சாயலையுமுடைய ஜானகியினிடத்தே சென்று இங்குநடந்த செய்திகள்யாவற்றையும் சொல்லென்றனுப்பினர்.

உடனே சர்வ சுவாமியினுடைய கட்டளையின்படி திருவடிகளானவர் அழகிய அசோகவனத்தைச் சேர்ந்து நீரில்லாமல் வாடிக்கிடக்கின்ற ஒரு பூங்கொம்புக்குத் தளிர்க்கும்படி வார்க்கின்ற நீரைப்போல ஸ்ரீராமபிரானுடைய வீரப்பிரதாபச்செய் கையைக்கொண்டு பிராட்டியாருக்கெதிரே நின்று, ஸ்ரீரகுகுலதிலகருடைய சகஸ்திர திருநாமங்களையும் பலபலமுறை வாயாரப் பாடிக் குதித்துக் குதித்துச் சாரிகைதிரிந்து, ஆனந்தத்தாண்டவஞ்செய்து, களிப்பின்மிகுதியால் நடுங்குகின்ற அழகிய இரண்டு திருக்கரங்களையும் உச்சியின்மேற் கூப்பிநின்று, ஓசர்வக்கியாயிருந்தும் ஒன்றும் அறியாதவர்போல இந்த வனத்தில் இருப்பவரே! மங்களம் உண்டாகுக. இந்திராணி சரஸ்வதி முதலிய உத்தம ஸ்திரீ ஜனங்கள்யாவரும் சிரசின்மேல் வைத்துக் கொள்ளத்தக்க திவ்வியாபரணம் போன்றவரே! மங்களம் உண்டாகுக. உம்முடைய இல்வாழ்க்கைக்கு மங்களம் உண்டாகுக. சக்கரதரனுகிய மத்தகஜமானது தேவரீர் பக்கலில் அபசாரப்பட்ட தசமுகனுகிய முள்மரத்தைத் தும்சப்படுத்திய விஜயத் துக்கு மங்களம் உண்டாகுக. ஓ என்தாயே! ஓ சர்வாத்தும தயாபரையே! அந்தப்பாபிஷ்டனுடைய தலைகள் பர்வதராசிகளைப் போலப் பூமிப்புழுதியில் உருண்டுகிடக்

கின்றதுகள். ரத்தினுபாரணங்களைத்தரித்த புஜசமூகங்கள் சமுத்திரத்தின் அலைகளைப் போலத் தரையிற்கிடக்கிறதுகள். பருத்த தேகமானது சமுத்திரத்தைப்போலக்கிடக்கிறது. மஹா பரிசுத்தராகிய விபீஷணும் வானரவர் சுவாமியை நோக்கி, ஸ்ரீதசரதாத்மஜரே! தேவரீர் இன்னும் பிராட்டியாரை வரவழையாமலிருப்பது தேவரீருக்குப் பிழையாகமுடியும். அன்றியும் யாவரு மதிக்கத்தக்க புகழுமல்லவென்றுசொன்னுரென்று சொல்லினர்.

இப்படி ஆஞ்சநேயர் சொல்லிக்கொண்டுவரும்போது, தம்மை அடைந்தவர்களுடைய இருவினைகளையொழித்து நித்தியானந்தத்தைத்தருகின்றசீதாபிராட்டியார் தினம்தினம் ஒவ்வொருகலையால்வளராமல் எல்லாக் கலைகளையும் ஒரேதினத்திற் சேர்ந்து சந்திரன் வளர்ந்தாற்போலச் சர்வாவயவங்களும்பூரித்தார். இம்மட்டுமோ?செவ்வாம்பல்போன்ற திருவாயும் திருமுகமண்டலமும் மலர்ந்து தோன்றவும், நுட்பமாகிய இடையானது வருந்தும்படி தாம்கொண்ட காதலுக்கு இரண்டுபங்கதிகமாக ஸ்தனபாரங்கள் பூரித்துத் தோன்றவும், ராகுவாற் பிடிக்கப்பட்டு மறுபடியுங் கக்கிய சந்திரனைப்போலவும் காணப்பட்டார். ஆஞ்சநேயர் ஸ்ரீராமநாதருடைய செய்திகளைச் சொல்லிக்கொண்டுவரும்போது, சர்வலோகேசுவரியாகிய பிராட்டியாருக்கு முன்னே ஓங்கிப் பூரித்தது மனமோ? மனத்திலுண்டாகிய பெருங்களிப்போ? அழகிய வளையலணிந்ததோளோ? அல்லதுஸ்தனபாரமோ? எதுவோ இன்னதென்று அறிந்துசொல்ல எம்மால் முடியாது. இப்படி பூரித்ததல்லாமல் திருமுகத்திற் புருவங்கள் நெரிந்தன. ஸ்தனங்கள் வியர்வைக் குழிகளையும் அரும்பின. நினைப்பதொன்றும் சொல்வதொன்று மாயினது. இந்தப் பிரகாரம் பிராட்டியாரைச் செய்யவல்லது, ஸ்ரீராமபிரானுடைய வீரப்பிரதாபமேயல்லாமல், வேறென்றுஞ் செய்ய வல்லதோ? கற்புநூலிற் சொல்லியபடி நடந்து தன்னைப் பாதுகாப்பவரில்லாமற் குற்றத்தையடைந்திருந்த இல்லறத்தினது பழியை நீக்கிப் புனிதமாக்கும்படி திருவவதரித்த ஜானகிபிராட்டியானவள் மேலே சொல்லியபடி ஆனந்தபரவசப்பட்டவளாய்அஞ்சனு இளஞ்சிங்கத்தைப் பார்த்து, இன்னதைச்சொல்லலாமென்கிற நினைவில்லாமல் உன்மத்தமடைந்தவர்களைப்போலச் சும்மா கிடந்து, யான் யாதுசொல்லப் போகிறேனென்று இருந்தாள். அந்த நிலைமையைக் கண்ட ஆஞ்சநேயர், அவளைத்தொழுதெழுந்து, ஓ ஜகன்மாதாவே! தேவரீருடைய இருதயத்திலுண்டாகிய களிப்பின் மிகுதியாலோ? அல்லது என்னுடைய தூது பொய்யென்றோ! நீர் ஒன்றும் பேசாமலிருப்பதென்ருர். அதுகேட்டருளிய எம்முடைய தாயானவள் அவரை உற்றுப்பார்த்து, என்னப்பனே! ஆஞ்சநேயா! உன்னுடைய வார்த்தையாகிய அமிர்தத்தைப் பானஞ்செய்தபின், என்னுள்ளத்திற் கரைபுரண்டெழுந்தோங்கிய சந்தோஷப் பிரவாகத்தினுலே பரவசப்பட்டு எதைச்சொல்லுவோமென்று ஆலோசித்து, ஒன்றுந் தோன்றுமற் சும்மா இருக்கின்றேனேயல்லாமல், நீசொன்ன சமாசாரமாகிய மகாபாக்கியமானது, எனக்குண்டாகிய பைத்தியத்தைப்போக்கமாட்டாமல்மேலுமேலும் பைத்தியத்தைத் தருமோ?

அப்பா அஞ்சனைச்சிங்கமே! முன்னே தூதுவந்தபோது இந்தச் சிறையிலிருந்து யானே நீக்குகிறேனென்று சொன்ன நீ, அப்படியே இப்போதுசிறையினின்று நீக்கிச் சந்தோஷச்செய்தியையும் சொன்னுய். அப்படிப்பட்ட உபகாரியாகிய உனக்கு என்ன பிரதியுபகாரஞ் செய்யப்போகிறுமென்பதை யோசித்து யோசித்து, உன்னேடு பேசவுமாட்டாமற் சும்மா இருந்துவிட்டேன். ஓ என் ஐயனுகிய அநுமானே! இந்தத் திரிபுவனங்களையும் நீ செய்த நன்றிக்குப் பிரதிநன்றியாகத் தந்தபோதிலும் சரிப்படுமோ? அதுவுமன்றி நீ செய்த உபகாரத்தைப்போல என்றைக்கும் அந்த மூன்றுலகமும் அழியாமலு மிருக்குமோ? அழிந்துபோகுமே யென்று நினைத்துக் கொண்டே யிருந்தேன். ஓ என் புத்திரதீபமே! உன்னை என்தலையால் வணங்கவுங் கூடுமென்று எண்ணுகிறேன். இப்படியிருப்பதினுல் யாதொரு உபகாரமும் செய்யச் சக்தியற்ற நான், உனக்கு என்னசெய்யலாமென்று எண்ணியிருந்தேனே யல்லாமற் பேச மறந்துவிட்டவளல்லேன். ஓ சாணை பிடித்த ரத்தினத்துக்குச் சமானமான ஸ்ரீ

ராமதூதனே! உன்பக்கலில் நான் செய்ய வேண்டியது யாது! அதைச் சொல்லக்கடவாயென்று கேட்டார். உடனே வாயுபுத்திரரானவர், ஓ எம்முடைய இறைவியே! நீர் எனக்குத்தயைசெய்கின்றவரம் வேறொன்றுமில்லை. உம்முடையமனம் களிக்கின்ற அனந்த கலியாண குண நிதியாகிய ஸ்ரீரகுகுல நாயகரிடத்தில் உம்மையான்கொண்டு போய்ச்சேர்க்கும்படி நீர் கிருபைசெய்வது தான் நான் பெற்றுக்கொள்ளும் பெருவரமாகும். இதுவுமல்லாமல்இரத்தினத்தைப் போலக் களங்கமற விளங்குகிற திருமுகத்தையுடைய திரிசடையென்னும் என்தாயையொழித்து, இந்த ராக்ஷச ஸ்திரீகளையெல்லாம் என்னுடையகையறையாற் கொல்லும்படி வேண்டுகிறேன். இதைத் தயை செய்வீராகில் இதுவும் ஒருவரந்தான். இவர்களைக் கொலைசெய்வதும் ஒருவரமாகுமோ என்பீரானால், முன்னே தேவரீரைத்தகாத வார்த்தைகளைச்சொல்லி ஒவ்வொருத்தியும் உம்மையெடுத்து விழுங்குவேனென்று ஓடி வந்தார்களன்றோ? ஆகையால் அதுவும் யான் பெற்றுக்கொள்ளவேண்டிய வரமேயாகும். சீக்கிரத்தில் இவ்வரத்தைக்கிருபை செய்வீரானால் இந்த நீசஸ்திரீகளுடைய மலைபோன்ற உடலை என்னுடைய கூரிய நகங்களாற்பிளந்து உயிரை நமனுக்குவிருந்திடுகிறேன். இம்மட்டிலே நில்லாமல், இந்த நிசாசரஸ்திரீகளுடையகுடல்களைப் பிடுங்கி, ரத்தத்தைப்பானஞ்செய்து உடலை முறுக்கித் தின்றுவிடுகிறேனென்று கேட்டுக்கொண்டார்.

ஸ்ரீ ஆஞ்சநேயர் இப்படி கேட்டுக்கொள்ளுதலும் இதைக்கேட்ட தேகவலியையுடைய ராக்ஷச ஸ்திரீகளெல்லாம் சீதாதேவியைப்பார்த்து, ஓ எங்களுடைய தாயே! உம்முடைய பாதாரவிந்தமே எங்களுக்கு அடைக்கலம் அடைக்கலம்என்று திருவடித்தாமரைகளைப் பற்றி விழுந்தார்கள். அப்போது தாயாரானவர் அரக்கமாதர்களை நோக்கி, அஞ்சாதேயுங்கள்! அஞ்சாதேயுங்கள்! என்று அபயப்பிரதானந்தந்து ஆஞ்சநேயருடைய முகத்தைப்பார்த்து, ஓதிரிகரணத்தாலும்பரிசுத்தவானே! அந்தப் பாபிஷ்டன் கட்டளையின்படி இவர்கள் செய்தார்களேயல்லாமல், இவர்களுடைய சுயபுத்தியால் என்ன தீமைசெய்தார்கள்? ஓ பெற்றதாயைக் காட்டிலும் என்னிடத்தில் அன்பின்மிகுந்த ஆஞ்சநேயா! நான்செய்த தீவினையால் இந்தத் துன்பங்கள்நேரிட்டதுகளேயல்லாமல் வேறன்று. ஆயினும் ஸ்ரீகாகுஸ்தகுல திலகருக்குச் சர்வ சித்தமாயிருந்த பட்டாபிஷேகத்தை நிவர்த்தித்த கூனியானவள் இவ்வளவு துன்பங்களுக்கும் காரணமா யிருந்தாள். அந்தக் கூனியைப்பார்க்கிலும் இவர்கள் கெட்டவர்களல்லவே! அன்றியும் கழிந்து போனதைப் பற்றிச் சிந்திக்கவேண்டுவதில்லை. ஓ நவவியாகரண பண்டிதனே! எல்லாத்தீவினைகளும் வசிப்பதற்கு இருப்பிடமாகிய துஷ்ட ஸ்திரீகளா யிருந்தபோதிலும் இவர்களை மனங்கலங்கும்படி செய்யாதே. இவ்வரத்தை எனக்கு நீ கொடுக்க வேண்டும். என்று பிராட்டியார் சொன்ன போது திருவடிகளானவர் சீதாபிராட்டியாருக்குத் தண்டன் சமர்ப்பித்து, எம்பெருமானுடைய தேவியாரது திருவுளப்பாங்கின்படியே நடந்துகொள்ளக் கடவேன் என்று நின்றுகொண்டிருந்தனர்.

இங்கே இப்படியிருக்க, யாவரினும் பெரியோராகிய ஸ்ரீராமபத்திரர் ஸ்ரீ விபீஷணாழ்வானை நோக்கி, ஓ இலங்காநகர ராஜனே! எமதுதேவியை வைபவத்தோடு அதிசீக்கிரத்தில் அழைத்துவா வென்று அருளிச்செய்தார். அம்மாத்திரத்தில் இருளைப்போல மேனியும், சூரியனைப்போல முடியும், மேகத்தில் தோன்றுகிற மின்னலைப்போலப் பீதாம்பரமும், ஆபரணங்களும் விளங்குகின்ற ஸ்ரீ விபீஷணாழ்வானானவர் விரைந்து சென்று, ஸ்ரீ ஜானகிபிராட்டியாருடையதிருவடித்தாமரைகளுக்குத் தண்டன் சமர்ப்பித்து, ஓ எல்லோர்க்குந் தாயே! அந்தணர்கள் அருந்தெய்வமாகிய ஸ்ரீராகவபிரானானவர் தம்முடைய திருவுளத்தில் உத்தேசங்கொண்ட காரியமெல்லாம்முடிந்துவிட்டதுகள். இனி உம்மைக் காணும்படி விரும்புகின்றார். நீங்களிருவரும் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைக்கண்டுசேவிக்கும்படி, பிரமன்முதலிய தேவர்கள் யாவரும் வந்திருக்கிறார்கள். ஆதலால்தேவரீருக்குச்சீக்கிரத்தில் அலங்காரஞ் செய்வித்து உமது வருத்தத்தை ஆற்றுவித்து என்னிடத்தில் அழைத்து

வாவென்றார். ஓ எம்முடைய இறைவியே! எழுந்தருள்வீராக என்றார்.

இப்படி விபீஷணாழ்வான் சொன்ன சொற்களைக் கேட்ட பிராட்டியாரானவர் சற்று நிதானித்து, ஓ ராக்ஷசகுலவீரனே! யான் இவ்விலங்காநகரத்திற்குள்ளிருக்கும் தன்மை இப்படிப்பட்டதென்று அங்குவந் திருக்கும் தேவர்களும் முனிவர்களும் கற்புடைய மங்கையர்களும் கண்டுணரும்படி இதுவேபிரகாரம் யான்வருவேனேயானால் அது எனக்குப் பெருமையுடையதாயிருக்கும். அப்படியல்லாமல்யான் அலங்காரஞ் செய்துகொண்டு வருவேனேயாகில் பெருமையல்லவென் றருளிச்செய்தார். அது கேட்ட ராக்ஷதகுலராஜன் பிராட்டியாரை நோக்கி, ஓ எம்முடைய தாயே! தேவரீர் அலங்காரஞ் செய்துகொண்டு எழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தது யானே சொல்லியதல்ல. நீலரத்தினமலை போன்ற திருத்தோள்களையுடைய ஸ்ரீரகுகுலோத்தமருடைய அருளுப்பாடாகுமென்றுசொன்னார். ஆனாலப்படியே அலங்காரஞ் செய்துகொள்ளக் கடவேனென்று சம்மதித்தார். உடனே தேவர்களுடைய உத்தரவினால் சுவர்க்கலோகத்திலிருந்து திலோத்தமை முதலிய தேவதாஸ்திரீகள் தாயாரை அலங்காரஞ்செய்யும்படி வந்து சேர்ந்தார்கள். அந்த திலோத்தமையும் மேனகையும் அரம்பையும் ஊர்வசியும் மற்ற தேவதாஸ்திரீகளும் வாசனைபூட்டிய தைலமுதலிய திருமஞ்சன திரவியங்களைச் சுமந்து கொண்டுவந்து நெருங்கிநின்று பெண்ணிலக்கணம் விளையுங்காணியும், கற்புடைய மங்கையர்க்கு ஆபரணமும், அழகென்னும் பொன்னின் மதிப்பை யறியும் உரையணியும், திருப்பாற்கடலில் அமுதத்தோடு அவதரித்த அன்னமும், அறங்களை வளர்க்குந் தாயும், உயர்ந்த வேதமார்க்கத்தைத் திருத்தும்படி அவதாரஞ்செய்த செல்வியும் ஆகிய ஸ்ரீசீதாபிராட்டியாருடைய சடையாய்த்திரண்டுள்ள கூந்தலைச் சிக்குநீக்கிவாரி, சர்க்கரைப்பாகைவென்று அமுதத்தைப்போலப் பெருகுகின்றசொற்களையுடைய பவளம்போன்ற வாயில் முத்துக்களின் வரிசையையொத்த தந்தவரிசையைவிளக்கி, வாசனை தைலத்தைச் சிரசிலிட்டுத்தேய்த்து, மலினமாயுள்ள திவ்விய இரத்தினத்தைச் சாணைபிடிப்பவர்போல வேதகீதங்களையெடுத்துப்பாடி வேதமுறைமையின்படித் திருமஞ்சனஞ்செய்து, திருமேனியை மெல்லிய சீலையால் ஈரமில்லாமல் துவட்டி, கருவிளைமலரைப்போலச் சித்திரத்தொழி லமைந்த பட்டு வஸ்திரத்தை உடுத்தி, அதன்மேல் மேகலாபரணத்தைப் பூட்டி, அழகிய பவளக்கொடிக்குப் பாலினுரையை அப்பினாற்போலத் திருவுருவம்முழுமையும் கலவைச்சந்தனம் பூசி, குங்குமச்சந்தனத்தை ஸ்தனபாரங்களின்மேல் அப்பி, சந்திரனுடைய தேவியானவள் தன்மார்பில் தரித்துக்கொள்ளும் முத்துவடத்தையும், இந்திராணியானவள் தான் அலங்கரித்துக்கொள்ளும் இரத்தினாபரணங்களோடு மற்றஆபரணங்களையும், தக்கபடி அணிந்து, இயற்கையாய்ச் சிவந்துள்ள அதரத்துக்குச் செஞ்சாயந்தீற்றி, பிராட்டியாருடைய திருவழகைக் கண்டு, பிறருடையகண்ணெச்சில்கழியும்படி வேத மந்திரங்களைச்சொல்லி, ஆர்த்திநீர்சுற்றி மண்பொட்டிட்டு நின்றார்கள்.

இப்படிச் சீதாபிராட்டியார் திலோத்தமைமுதலிய ஸ்திரீகளால் அலங்கரிக்கப்பட்ட பின்பு, ஸ்ரீவிபீஷணாழ்வானானவர் சந்திரமண்டலத்தின் மத்தியில் மானிருந்தாப்போல ஜானகிபிராட்டியாரை விமானத்தின்மேல் எழுந்தருளச்செய்துகொண்டு, சமஸ்ததேவதாஸ்திரீகளும், ரிஷிபத்தினிமார்களும், வேதவசனங்களால் தோத்திரஞ்செய்துகொண்டுசூழ்ந்துவரவும், ஜகன்மாதாவினுடைய திவ்யசேவையைக்கண்டு, சேவிக்கும்படிவந்து நெருங்குகின்றதேவர்கள் முதலானவர்களை வழிவிட்டு, விலகும்படி, இராக்ஷசவீரர்கள் பொற்பிரம்புகளை ஏந்தி அதட்டிக்கொண்டு முன்னே செல்லவும், தேவதேவர்களுக்கு நாயகனாகிய ஸ்ரீராகவபிரான் பக்கலிற்போய்ச் சேர்ந்தார். தேவர்களும், ரிஷிகளும், வித்தியாதரர்களும், நாகர்களும், தெய்வப்பெண்களும், அருந்தவப்பெண்களும், வித்தியாதரஸ்திரீகளும், நாகஸ்திரீகளும், திரிபுவனத்திலுள்ள மற்ற உத்தமபுருஷர்களும், கற்புடையஸ்திரீகளும், பெருங்களிப்புடையவர்களாய்க் கூட்டங்கூட்டமாய்வந்து நிறைந்து மொய்த்துக்கொண்டு, தேவன்தேவிகளுடைய வடிவழகைச் சேவித்துப் பல்லா

ண்டு கூறினார்கள். இலங்கையின் அசோக வனத்திலிருந்து தாயார் எழுந்தருளியகாலத்தில் சமஸ்த தேவசமூகங்களும், மற்றவர்களும், முன்னும் பின்னும் பக்கங்களிலும் நிறைந்து செல்லுதற்கு வழியில்லாமற்போகவே, ராக்ஷசவீரர்கள் ஓட்டித் துரத்த, அதனாலவர்கள் கலைந்தோடும்போது, கருங்கடலின் முழக்கம்போல ஒருமகாகோஷம்பிறந்தது. அந்தக்கோஷத்தைக் கேட்டருளிய அறக்கடவுளாகிய ஸ்ரீராமநாதரானவர் முன்னே வழியிலுண்டாகிய பேரோசையான துயாதென்று, அன்றலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருமுகமண்டலத்திற் கோபம்தோன்றும்படியாகப்பார்த்துக் கேட்டருளினார். உடனே சமீபத்திலிருந்த முனிவர்கள்அவரைப்பரிவோடும்பார்த்து, ஓ சர்வலோகசரண்யா! ஸ்ரீராமபத்திரா! ஸ்ரீசீதாபதி! அந்தக் கோஷமானது வேறொன்றுமல்ல. ஸ்ரீபிராட்டியார் எழுந்தருளுவதற்கே வழியில்லாமல் தேவர்கள் முதலானவர்கள் அடர்ந்து மொய்த்துவந்தகாரணத்தினால் ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய ஆக்கினையின்படி ராக்ஷசகுலவீரர்கள் அவர்களை அதட்டி, வழிவிலகும்படிச் செய்ய, அதினாலவர்கள் கலைந்தோடும்போது உண்டான கோஷம் என்றார்கள். இப்படிமௌனசீலர்கள் சொன்னதையெல்லாம் திருச்செவிசாத்திக் கேட்டருளிய ஸ்ரீகோதண்டதீக்ஷாகுருவானவர் மிகவும்பவளம்போன்ற அதரம்துடிக்கும்படி நகைத்து, விபீஷணாழ்வானைப் பார்த்துச் சொல்லுகின்றார். ஓ! வேதசாஸ்திரங்களைக்கற்றுணர்ந்த விபீஷணா! சாதுசஜ்ஜனர்களாகிய தேவர் முதலானவர்களை அதட்டித்துரத்தி, அவர்கள் பக்கலில் ஏன் அபசாரப்பட்டு நீதியல்லாததைச்செய்கிறாய்? அவர்களெம்மைக்காண வேண்டுமென்பதுமாத்திரமேயல்ல, யுத்தகளத்தைக்காணவேண்டுமென்னும் ஆசையாலும் வந்து நெருங்குகின்றார்கள். அப்படிப்பட்ட திக்குப்பாலகர்களையும், தேவர்களையும், கடிந்து துரத்தும்படி யாருனக்குச்சொன்னார். மழுவாயுதத்தைத் தாங்கிய சிவமூர்த்தி, உபேந்திரனாகிய விஷ்ணுமூர்த்தி, கமலயோனியாகிய பிரமமூர்த்தி இவர்களும், இவர்களுடைய பத்தினிமார்களாகிய பார்வதிதேவி, இலட்சுமிதேவி, சரஸ்வதிதேவி இவர்களும் இல்லாமல்; உலகத்திலுள்ளவர்களுக்கு ஒருகாரியமும் நடப்பதுண்டோ? அளவிடற்கரிய தேவர்கள் தங்களுடைய உருவத்தை மறைத்துக்கொண்டுசேர்ந்து, படுகளத்தின்பெருமையைப் பார்க்கவந்திருப்பார்களே? அவர்களை அதட்டித்துரத்துவார்களுமுண்டோ? அந்தத் தேவர்களே அப்படி உன்னால் துரத்தப்படுவார்களானால் மற்றவர்கள் என்னபாடு பட்டிருக்கமாட்டார்கள்? ஓ ராக்ஷசகுல வீரசிகாமணியே! சாதுஜனங்களைத்தடைசெய்தோட்டுவது உனக்கு அடுத்ததன்றென்று அருளிச்செய்தனர்.

இப்படி வேதநாயகன் திருவுளங்கொண்டு அருளிச்செய்ததைக்கேட்ட, பரிசுத்தகுணவானாகிய விபீஷணாழ்வானானவர் அதிதுக்காக்கிராந்தராயிருந்தார். இப்பால் அருந்ததிக்குத் திலகம்போன்ற ஜானகிபிராட்டியார் கழுகும் பருந்தும் பேயும் பசிப்பிணிதீர்ந்து களிக்கும்படி இராக்ஷசர்களுடைய உடல்களை சின்னாபின்னப்படுத்திய வீரகோதண்டச் செல்வனுடைய திருமேனியின் கட்டழகின் அலங்காரத்தை, விமானத்திலிருந்தபடி பேரவாவோடுகண்டு சேவித்துத் திருவுளமுங் கண்களும் களிக்கப் பார்த்து, அப்போது தமக்குள் அடங்காத பெருங்களிப்பால் என்னுடைய கற்பினொழுக்கத்தை யாவருமறியச்செய்து, என்னாயகனுடைய வீரத்தன்மையைப் பகிரங்கப்படுத்தி, என்குலத்தினுடையபெருமையை நிலைபெறச்செய்து, இந்தவுலகத்தில் வியர்த்தமாய் நான் பிராணத்தியாகஞ் செய்துகொள்ளாதபடி, உயிர் பிழைத்திருக்கவுஞ் செய்த அநுமானுக்கு, நான் சொன்ன சிரஞ்சீவித்துவத்தை என்னுடையகற்பானது நிலைபெறச்செய்யுமேயல்லாமற் செய்யாமற் போகாதன்றோ? ராக்ஷசர்களுடைய ஊரில் தங்கியிருந்தகுற்றமுடையவெனக்கு அடையவேண்டுவது இனிவேறே என்னவிருக்கிறதென்று பூரிப்புடையவராயிருந்தார். இப்படியிருந்த சீதாபிராட்டியார் தமக்கெதிரே பச்சிலைபோன்ற திருமேனியும், பவளம்போன்ற வாயுமுடையவராய்த், திருக்கரத்தில் ஸ்ரீகோதண்டத்தைத் தாங்கிக் கொண்டிருந்த ஸ்ரீரகுநாயகரைப் பின்னும் கண்களாற் கண்டு, உயிரை இழந்த உடலானது அந்த உயிரைக்கண்டடையுந்தன்மை போலத் தம்முடையதிருமுகமண்டலத்தை

நாயகருக்குக் காட்டும்படி தேவதாஸ்திரீகள் சூழ்ந்துவர எழுந்தருளிவந்த விமானத்தைவிட்டுப் பூமியிலிறங்கி, ஆ! ஆ! ஸ்ரீகாகுஸ்த குலதிலகருடைய திருமேனியையும், அவருடைய ஸ்ரீகோதண்ட பராக்கிரமத்தையும் கண்டு சேவிக்கப் பெற்றேன். இனி இந்தஜன்மதுக்கத்தை ஒழித்தாலும், வேறுஜன்மத்தை அடைந்தாலும், அந்தந்தக்காலத்தில் என்னுயகரைக் கற்போடு கூடி வணங்கினாலும் நன்று. அல்லது அவரையே முழுதுமறந்தாலும் நன்று. இந்த ஸ்ரீசர்வலோக சரண்யருடைய திவ்வியமங்கள விக்கிரகத்தின்வடிவழகை, என் கண்களாரக்காணுமல் ஒருவேளை தேகவியோக நேரிடுமோவென்று, சர்வதா துக்கித்துக்கொண்டிருந்தேன். என் பாக்கியவசத்தால் இந்த ஸ்ரீமானுக்குச்சமீபத்திலேவந்துசேவிக்கவும் பெற்றேன். ஆ! ஆ! என் பாக்கியமே பாக்கியம். இதைவிட வேறென்னவெனக்குச் சிலாக்கியம்? என்று முன்கொண்டிருந்த ஏக்கம் நீங்கி, ஸ்ரீசர்வசுவாமியினுடைய பாதங்களுக்குத் தண்டன்சமர்ப்பித்து நின்ருர். அப்போது கற்பென்கின்ற தருமத்துக்கு அரசியும், பிரமேந்திராதிகளுடைய தேவிமார்களது கழுத்திற்குத் திருவென்னும் ஆபரணமா யெழுந்தருளியிருந்து ரக்ஷிப்பவரும், எல்லா அழகுகளுக்கும் அழகுகொடுப்பவரும், மகா கீர்த்தி வாழ்வதற்கு இருப்பிடமானவரும், தம்மிடத்திலேயே அன்புவைத்த எல்லாவுயிர்களையும்ரக்ஷித்தருளுகின்ற தர்மஸ்வரூபியும், ஆகிய ஸ்ரீஜனகமகாராஜனுடைய அருந்தவபுத்திரிகாரத்தினத்தை ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீராகவபிரானுனவர் திருக்கண்களால் கடாக்ஷித்தருளினுர்.

அப்படிக்கடாக்ஷித்த ஸ்ரீதசரதாத்மஜரானவர், தம்மைக் காணப்பெற்ற பாக்கியத்தாலுண்டாகிய ஆனந்தத்தால், இரண்டு நேத்திரங்களினின்றும் தாரைதாரையாய் ஸ்தனபாரங்களின்மேல் நீர் சொரியும்படி வணக்கஞ்செய்த கற்பின்வாழ்வாகிய ஜகன்மாதாவை சர்ப்பத்தைப்போலச் சீறிப் பார்த்து, ஓ ஜானகி! அவைதிகமார்க்கானுசாரியாகிய ராக்ஷசனுடைய நகரத்தில் நீ இதுபரியந்தம்வாசஞ்செய்துகொண்டிருந்தாய். அங்கிருந்துகொண்டு அறுசுவை யுண்டிகளை சிறிதும் கவலையென்பதே இல்லாமல் உண்டுக்கொண் டிருந்தாய். இப்படியெல்லாம் நடந்தபடியால், உன்னுடைய கற்பினிலைமை கெட்டுப்போனதன்ருே? அப்படிக் கெட்டுப்போயும் இன்னமுயிரோடு பிழைத்திருக்கிருய். இந்தப்பிரகாரம் பல குற்றங்களைச் செய்திருந்தும், சிறிதுமச்சமில்லாமல் திரும்பிவந்தது என்னகாரணம்? உன்னை நான் இச்சிப்பேனென்று நினைத்தோ? கடலைத்தூர்த்து அணைகட்டி அதன்வழியாக இலங்காநகரத்துக்குள்ளே பிரவேசித்து ராக்ஷசப்பூண்டறும்படி என் பகைவனுகிய ராவணனைக்கொலைசெய்தது? ஓ மைதுலி! உன்னைச்சிறையிலிருந்து மீட்பிக்கும்படியென்று நினைத்துக் கொண்டாயோ? அந்தநினைப்புக்கொள்ளாதே! உன்னுலே எனக்கு நேரிட்ட அவமானத்தைப் போக்கிக்கொள்ள வேண்டுமென்று செய்தேன். ஓ என்னிடத்திற் கிஞ்சித்தும் அன்பில்லாத ஜனகராஜன் பெண்ணே! ராக்ஷசர்களுக்கு அமிர்தத்தைப்பார்க்கிலும் ருசிக்கின்றமாமிசத்தையும்மதுவையும், போதுமானமட்டும் இதுபரியந்தம் உண்டாயே? சிலநாளாவது உன்னேடு உறவாடிக்கொண்டிருந்த எங்களுக்கு அந்த மதுமாமிச விருந்து செய்விக்கலாமென்று விரும்பிவந்தாயோ? அப்படி விருந்துசெய்ய அழைத்துக்கொண்டு போவதாயிருந்தால், ஏன் நாணத்தோடு தலைகுனிந்துகொண்டு கண்ணீர்சொரிகிருய்? உயர்ந்தஆபரணங்களிற் பதித்த ரத்தினத்தினது ஒளியைப்போல, உத்தமப்பெண்ணுக்குரிய நற்குண நற்செய்கைகள் உன்னிடத்திலில்லை. நீ நல்ல ராஜவமிசத்திலே பிறந்தவளல்ல. ஆகையால் உன்னிடத்தில் அவைகிடைக்கமாட்டாது. ஒரு புழுவைப்போலப் பூமியிலுற்பத்தியானுய். அதற்குத்தக்கபடி துர்க்குண துற்செய்கைகளைக் காட்டினுய். ஆ! சீதா! சூரியகுலமானது அச்சம்-மடம்- நாணம்-பயிர்ப்பு-என்னும் பெண்ணுக்குரியகுணங்களும், இழிகுணமில்லாமையும், குற்றமில்லாதகுடிபிறப்பும், கற்பென்கின்றதிடமும், நல்லொழுக்கமும், புருஷனே தெய்வமெனக்கொள்ளும் நிச்சயஞானமும், கீர்த்தியும் பொய்சொல்லாமையும், ஆகிய குணங்கள் குறைவின்றி நிறைந்த ஸ்திரீகளையுடைத்தா யிருக்கிறதென்னும் மகா கீர்த்தியை அடைந்திருந்தது. ஒரு பெண்ணுகிய நீ

அந்தச்சூரியவமிசத்தோடுசம்பந்தப்பட்ட படியால், ஈகையென்பதில்லாத அரசனுடைய கீர்த்தியைப்போல, அந்த வமிசத்தின் கீர்த்திமுழுமையும் நாசமாய்விட்டதன்றோ? ஓ! ஜானகி! குலஸ்திரீகளாயுள்ளவர்கள் நாயகனை நீங்கியிருக்கிறகாலத்தில், பஞ்சேந்திரியங்களையும் அடக்கி, நல்லொழுக்கத்தையே உறுதியாகக்கொண்டு தலைமயிரைச் சிக்கறவாரிமுடியாமற் சடையாகச் செய்வித்து, கற்பென்னும் ஒரு பெருந்தவத்தைச் செய்துக்கொண் டிருப்பார்கள். அந்தப் பெருந்தவத்துக்கு ஒரு பழிநேரிடுவதா யிருந்தால் தங்கள் பிராணனைவிட்டு ஒழிந்து, அப்பழியை வாராமல் தடுத்துவிடுவார்கள். இந்த நற்குணங்களில் ஒன்றையாவது நான்உன்னிடத்தில் காணவில்லையே; நான் இனி உனக்கென்னசொல்வது? என்னுடைய நடக்கையானது என்னுடைய நெஞ்சைப் பிளக்கின்றதே? நீ நடந்த நடத்தை குலத்துக்குத் தக்கதல்லவென்று உனக்குத் தெரிந்திருப்பதினால், உனக்கிஷ்டமான மார்க்கமே நீ செல்லக்கடவாயென்று சொன்னார். இப்படி மெய்ஞ்ஞானச்செல்வமுடையயோகிகளின் இருதயத்தில் வசிப்பவராகிய ஸ்ரீரகுராமரானவர், ஸ்ரீசீதாபிராட்டியாருடைய கற்பினிலைமையை யாவருங்கண்டுஉணரும்படிச் செய்யவேண்டுமென்னும் கருத்தால், நிர்தாக்ஷண்யமாகச் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த, பிரமன்முதலிய தேவர்களும், முனிவர்களும், அவர்களுடைய மனைவிமார்களும், இராக்ஷசர்களெல்லோரும், வானரர்களும், மற்ற யாவர்களும் வாயைத்திறந்து கதறி அழுதார்கள்.

இப்பால் இவ்விருவர்களும் கருணையாலும் இச்சையாலும் கொண்ட மானுஷாவதாரத்துக்கேற்கச் சகல வைதிகாதி ஒழுக்கங்களை நடந்து காட்டுகின்றவர்கள் ஆகையால், சர்வசுவாமியானவரைக்காணாமல் நெஞ்சம் புண்பட்டிருந்த ஜானகிபிராட்டியாருக்கு அவர் சொன்னசொல் புண்ணில் கோலிட்டாற்போல அதிக துக்கத்தை உண்டாக்கியது. அதனால் தம்முடைய இரண்டு விசால நேத்திரங்களினின்றும் இரத்தக்கண்ணீர் விழும்படியாய்ப் பூமியை நோக்கிக்கொண்டு, தம்மை முழுதும் மறந்துபோய் பெருமூச்சு விடுகின்றவராகி, பாலைவனத்திலிருந்து சூரியகிரண வெப்பத்தால்தகிக்கப்பட்டு நீருண்ணுமாசையால் வருந்தி, மரணாவஸ்தை யடைந்த மானானது, நல்ல நீர் நிறைந்த தடாகத்தைக் கண்டு, அதன் சமீபத்திற்போய் உண்ணக் கூடாத சில தடையை யடைந்தாற்போலத் தாம் குரூரர்கள் வசிக்கின்ற லங்காநகரத்துக்குள் அதிக கஷ்டத்தோடு வாசஞ் செய்துகொண்டிருந்து, ஸ்ரீ சுவாமியைக் காணவேண்டு மென்கிற பேராசையோடு வந்தவிடத்தில் அவருடைய நிர்த்தாக்ஷண்யமாகிய சொற்களைக்கேட்டு, அதிகதுக்கத்தை யுடையவராய்த் தம்முடைய நேத்திரங்களிலிருந்துபெருகாநின்ற நீரானது, உலகத்தில் பெருகியோடும்படிப் புலம்பி, இதுபரியந்தம் யாதொரு தீயொழுக்கமும் இல்லாமலிருந்து அடைந்தபேறு, இந்த மகானுபாவருடைய திருமேனியைக் காணுதலும், இவருடைய திருவடிகளுக்குத் தண்டன் சமர்ப்பித்தலுமாம். இந்த அரிய பேறு பெற்றதல்லாமல், நான் செய்து வந்த கற்பின்தவமும் நல்லபயனையே தந்தது. என்று தமக்குள்ளே தீர்மானித்துக் கொண்டு ஸ்ரீ சர்வசுவாமியைப் பார்த்துச் சொல்லுகிறார்.

எல்லோரிலும் உயர்ந்த பரம்பரனே! இந்த அநுமானும், ஸ்ரீ விபீஷணாழ்வானும், என்னிடத்தில் வந்து ஸ்ரீரகுநாயகரானவர் உம்மை வரும்படி ஆக்கியாபித்தாரென்று சொல்லி அழைத்து வந்தார்கள். யான் இதுவரையும் அநுபவஞ் செய்து கொண்டிருந்த என்னுடைய துக்கநிலையை தேவரீர் பக்கலில் ஸ்ரீ ஆஞ்சநேயர் சொன்னது மில்லையோ? அவர் சொல்லாமல் போவாரேயாகில், அவரைத் தூதுவரென்று சொல்லவுங்கூடுமோ? இத்தனை காலமாக நான் பிரயாசத்தோடு செய்து வந்தது இப்படிப்பட்ட தவமும், நன்மையும், கற்புமென்று நீர் அறியாமையால், அவை வியர்த்தமாய்ப் போனதுகளன்றோ? ஐயோ! எல்லோருக்கும் கண்போல விளங்குகின்ற ஸ்ரீ புருஷோத்தமரானவர் என்னை நீ தகாதவளென்று சொன்னபோது, உலகத்திலுள்ளவர்கள் என்னைக் கற்புடையவளென்று சொல்லுவார்களோ? சொல்லப்போகிறதில்லை. நான் தாமரையில் எழுந்தருளிய பிரம்மதேவராலும் பேதிக்க

ப்படாத,மன நிச்சயத்தை யுடையவளாயிருந்தும், இவருக்கு அஃதில்லாதவளானேன். இனியிந்த உத்தமருடைய திருவுளத்தில் கொண்ட சமுசயத்தை நீக்க யாரால்முடியும்? பொதுவாய் நிற்கின்ற தருமதேவதையும் இவரைப்போலவே அறியாமற்போகுமோ? யாதோ தெரிந்திலேன்.

பிரமனும் சிவனும் தருமமூர்த்தியாகிய விஷ்ணுவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல எல்லாவற்றையும் தாமே யறிந்துகொள்பவர்களா யிருப்பினும், மங்கையருடைய மனத்தினிலைமை இன்னதென்று அறிந்துகொள்ள முடியுமோ? முடியாது! ஆகையாலினி அன்னியர் நம்பும்படியோ என்னுடைய குற்றமற்ற கற்பினைச் சொல்லிக் காட்டுவேன்? என்று தமக்குள்ளே யோசித்துக்கொண்டு, ஓ வேதநாயகனே! நீர்விரும்பாத இந்தத்தேகத்தை விடுவதைப்பார்க்கிலும் சிறந்த காரியமொன்றுமில்லை. இதுவே உம்முடைய கட்டளையும், என் கடமையாகும். என்று சொல்லிவிட்டு இளையபெருமாளைக் கடாக்ஷித்து, ஓ சுமித்திராதேவியாருடைய புத்திரதீபமே! சீக்கிரத்தில் தீயை மூட்டக்கடவீரென்று ஆக்கியாபித்தனர். உடனே ஸ்ரீராமாநுஜரானவர் எல்லாவுயிர்களுக்கும் ஆதரவாயெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீராமசுவாமியைத் தண்டன் சமர்ப்பித்து நின்றனர். அவரும் அப்படியே செய்யக்கடவாயென்று கண்காட்டினர். சுவாமியினுடைய அபிமதத்தைப் பெற்றுக்கொண்ட ஸ்ரீ லட்சுமணரானவர் தமது உயிர்நீங்கித் தள்ளாடும்படி மிகுந்த துன்பமுடையவராகி, கண்களினின்றும் நீர் தாரைதாரையாய் ஒழுகச்சென்று சாஸ்திரவிதிப்படி தீயை மூட்டினர்.

உடனே செந்தாமரைமலரில் வசிப்பவராகிய தெய்வங்களுக்குத் தாயானவர் அந்தத் தீய்க்குச் சமீபத்தில்போய் நெருங்கினர். அம்மாத்திரத்தில் அதைக்கண்டு சகிக்கமாட்டாமல் சதுர்வேதங்களும், நித்தியமாகிய தருமதேவதையும், மற்றவுயிர்களும், வாயைத்திறந்து கதறி ஓலமிட்டதுகள். தாயாரானவர் மூட்டியதீயை நெருங்கிச் சுற்றிவரும்போது, திரிபுவனங்களிலுமுள்ள எல்லாச்சீவர்களும். தங்கள் தங்களுக்கு நேரிட்ட துன்பத்திலும் அதிக துன்பத்தை யடைந்து, நிலைகலங்கி, ஓவென்று கோஷித்து அலறியழுது, ஓ சர்வலோகேஸ்வராளுக்கும் ஈஸ்வரராகிய ஸ்ரீ ராமபத்திரரே! நீர் இந்த நிர்த்தோஷராகிய பிராட்டியார் பக்கலில் வைத்திருக்கிற பிடிவாதம் தகுதியுள்ளதன்று. ஆதலால் விரைவில் அழைத்தருள்வீராக வென்று சொன்னார்கள். இந்திராணி சரஸ்வதிமுதலிய தெய்வமகளிர்கள் யாவரும் ஜகன்மாதாவைக்கண்டு, வாய்திறந்து கதறியழுது, கைகளால் தங்கள் கண்களை மோதியறைந்து துடிதுடித்தார்கள். இந்திரன் பிரமன்முதலான தேவர்கள் யாவரும், பூமி முழுமையும் தனதொருதலையில் சுமக்கின்ற ஆதிசேஷன் ஏதோ ஒரு காரணத்தால் விஷத்தைக்கக்கினால், அந்த விஷோபத்திரவத்தால் தாங்கள் எப்படி வருத்தப்படுவார்களோ? அப்படிப்பட்ட வருத்தத்தை யடைந்து துக்கித்தார்கள். இப்படி சமஸ்த ஜீவர்களும் தம்மைக்கண்டு மனோதுக்கிதர்களாயிருக்க, ஸ்ரீ ஜானகிபிராட்டியார் லக்ஷ்மணரால் மூட்டிய தீயருகில் நின்று, ஓ அக்கினிபகவானே! திரிகரணங்களாலும் ஏதொரு குற்றத்தையும் அடைந்திருப்பேனேயானால், நீ அதிககோபத்தையுடையவனாய், என்னைச்சுட்டுச் சாம்பராக்கக் கடவாயென்று சொல்லி, ஸ்ரீ புருஷோத்தமராகிய ஸ்ரீரகுநாயகரை நோக்கி, நின்றவிடத்திலேதானே இருந்து மனப்பூர்வக்மான தண்டன் சமர்ப்பித்து, தம்முடைய சுவஸ்தானமாகிய தாமரைமலரில் எழுந்தருளுவதுபோல அந்தத் தீயினுக்கு நடுவே குதித்தாள்.

அப்படிக் குதித்தவுடனே அவளுடைய தெய்வத்தன்மையுள்ள கற்பாகிய நெருப்பினால், அந்தநெருப்புத் தகிக்கப்பட்டது. உடனே தீயின்கடவுளானவர் தம்மிலே குதித்த சர்வஜகன்மாதாவைத் தமது கரங்களினாலே சுமந்தெழுந்து, ஓ தீனபந்து! ஓ தேவதேவோத்தமா! ஸ்ரீகாகுத்தகுலநாயகா! என்னுடைய தேகமுழுமையும் எரிகின்றதேயென்று கதறி, மற்ற இரண்டு கைகளையுங் குவித்துக்கும்பிட்டுக்கொண்டு, வேதாந்தத்தின் முடிவில் பிரதிபாதிக்கப்பட்ட பரவஸ்துவாயுள்ள ஸ்ரீராகவபிரானுடைய திருவடிகளுக்குச் சமீபத்திலே வந்து நின்றார். ஸ்ரீ சீதாபிராட்டிக்கோ?

முன்னே சுவாமியுடனே ஊடிக்கொண்டதினால் உண்டாகிய வேர்வையானது சற்றுமுலரவில்லை. அளகபாரத்திலும், திருக்கழுத்திலும், கைகளிலும் தரித்திருந்த பூமாலைகளெல்லாம், நீரில் தோய்த்து எடுத்தாற்போல விளங்கின. நிலைகலங்கிய சமஸ்தாத்துமாக்களும் தங்கள் தங்கள் நிலையில் நின்றன. அருந்ததிமுதலிய கற்புடைய ஸ்திரீகள் யாவரும் நாணமும், ஒழுக்கமும், இல்லாதவர்களாய் அந்தரமார்க்கத்தில் நின்று ஆனந்தக் கூத்தாடினார்கள். அக்கால் அக்கினிபகவான் ஸ்ரீராமபிரானை நோக்கி, என் ஐயனே! உம்முடைய தேவியாரது தெய்வத்தன்மையுள்ள கற்புத்தீயினால் ஒன்றும் ஆலோசியாமல் என்னுடையபலத்தை க்ஷீணிக்கச்செய்தீர். சுத்தமான யாகாக்கினி ஸ்வரூபராகிய தேவரீர் என்னை யென்னகோபத்தினால் இப்படிச் சுட்டெரித்தீர்? என்று பலபலவிதமாய் முறையிட்டார்.

இப்படி முறையிட்டுக் கொண்டிருந்த அக்கினிபகவானை ஸ்ரீ ராமநாதரானவர் நோக்கி, நீர் யார்? அக்கினியிலிருந்தும் தோன்றிவந்து என்னிடத்தில் நீர்பேசுவதென்ன? இந்தத் தீயொழுக்கமுடைய ஒருத்தியைச் சுட்டெரிக்காமல் ஏன் சும்மா விட்டீர்? யார்சொல்லைக் கேட்டுக்கொண்டு இப்படிச்செய்தீர்?இவற்றையெல்லாம்சொல்லக்கடவீரென்று கேட்டருளினார். அதுகேட்ட செந்தீக்கடவுள் ஸ்ரீதரனை வணங்கி, ஓ பரமாத்துமாவாகிய ஸ்ரீராமச்சந்திரரே! நானே அக்கினிதேவன். இந்த உலகமாதாவினுடைய கற்பென்கிற அதிதீக்ஷணியமாகிய தீயானது என்னைச்சுட, அதைப் பொறுக்கமாட்டாமையால் உம்மைச் சரணடைந்தேன். என்னுடைய முறைப்பாட்டைக் கேட்டருளியும், யாவருக்கும் சாக்ஷிபூதனாய் நிற்கின்ற நீர் ஏன் சமுசயப்படுகிறீர்? ஓ வாளாயுத யுத்தத்தில் மிகவும் கீர்த்திபெற்ற பெருமையாகிய தோள்களையுடையஸ்ரீகோதண்ட தீக்ஷாகுருவே! குலஸ்திரீகளை விவாகஞ்செய்வதும்,அவர்கள் இல்லறத்தினின்றும் விலகுவார்களேயானால் சத்தியபூர்வகமாய்க் கேட்பதும், மற்ற பல பொருள்களிடத்தில் சந்தேகம் தோன்றினால், அந்தச் சந்தேகத்தை நிவர்த்திசெய்து கொள்வதும், ஆகிய இவையெல்லாம் என்னிடத்திலே தான் செய்துகொள்ள வேண்டும். இது நான் சொல்வதன்று, நித்தியமாயும் அபௌருஷேயமாயு மிருக்கின்ற வேதங்களே சொல்லுகின்றன.

மேலும் எவர்களாவது ஐயப்பட்ட பொருள்களை என்னிடத்தி லிடுவார்களேயாகில் அதிசீக்கிரமாக அந்த ஐயப்பாட்டை நீக்கி, உள்ளங்கை நெல்லிக்கனிபோல அப்பொருள்களினது உண்மைநிலையைக் காட்டுகின்ற என்னுடைய சத்தியவசனத்தைக்கேட்டருளியும் சந்தேகிக்கின்றீரோ? ஒருகாலத்திலும் அசத்தியம் பேசியறியாதஆஞ்சநேயருடைய சொற்களையும் உண்மையென்று கொள்ளீர். இதென்ன ஆச்சரியம்? சர்வலோக மாதாவாகிய இந்த ஜானகிபிராட்டியார் தீயில் குதித்தபோது சமஸ்ததேவர்களும் அதிதுக்கத்தோடு தங்கள் கண்களைமோதியறைந்துகொண்டு, ஆ! ஆ! என்று அலறி முறையிட்டதையும் கேட்டீரில்லை. ஓ தர்மஸ்தாபனார்த்தமாகத் திருவவதரித்த மஹாபிரபுவே! தருமத்தை நீக்கித் தருமத்துக்கு அந்நியமாகிய இந்த அதர்மகுணத்தை எங்கிருந்து கொண்டீரோ? பதிவிரதாஸ்திரீகளுடைய சிரோபூஷணமாயுள்ள இந்தச் சீதாபிராட்டியார் சிறிதுதிருவுளத்தில் சீறுவாரேயானால், இனி மேகங்கள் வருஷம்வருஷிக்குமோ?வருஷிக்கமாட்டாதே! பூமிபிளந்துபோகுமேயல்லாமல் சராசரப் பொருள்களைச் சுமந்துகொண்டும் இருக்குமோ?தருமமும்தன்வழியிற்செல்லுமோ? உலகவாசிகளாகிய தேவர் முதலானவர்கள் உயிரோடுபிழைத்திருப்பார்களோ? ஐயோ! இவள்திருவுளத்தில் சீற்றங்கொண்டு சபிப்பாளேயானால் மூலதாமரையி லெழுந்தருளிய பிரஜாபதியாகிய பிரம்மதேவரும் இறந்துபோவதல்லாமல் உயிர்பிழைத் திருப்பாரோ? என்று இன்னம் பலபலவிதமாக எடுத்துச்சொல்லித் துதித்தனர். அகத்தியமாகிய பொருள்களையெல்லாம் சுட்டெரித்துச் சாம்பராய்ச் செய்யத்தக்க அக்கினிபகவானவர், இப்படிச்சொல்லிமுடித்தபின் தேவ சமூஹங்களும், மற்றத் திரிலோகத்தவர்களும் குதித்துக்குதித்து நின்று நடனஞ்செய்ய மங்கையர்க்கரசியாகிய பிராட்டியாரை ஸ்ரீபகவான்பக்கலிற்கொண்டுபோய் விடுத்தனர். இப்படி அக்கினிபகவானை

வர் சொல்லியதைக் கேட்டருளிய கருணு சலநிதியாகிய ஸ்ரீராகவபிரானுனவர் அவரை யுபசரித்து, ஓ பாவகீ! சர்வலோகங்களுக்கும் அழிவில்லாத சாக்ஷியாயிருக்கின்ற நீர் இந்தஜானகியினிடத்தில் இழிந்த குணங்களில்லை, சிறிது நிந்தையும் கிடையாது என்று சொல்லுவதினுல் இனிப் பழிப்பில்லாதவளே! இனி யானும் அங்கீகரிப்பவளாவாள் என்று அருளிச் செய்தனர்.

அதுசமயத்தில் இந்திராதிதேவர்கள் சதுர்முகராகிய பிரம்மதேவரைப்பார்த்து, தேவரீர் மூலப்பிரகிருதியின் காரியமாய் எல்லா ஜீவர்களுக்கும் பொதுவாய் நின்று, அவைகளை மயக்குகின்ற மாயையானது, சிறிதும் அணுகாமல் உண்மை அறிவு ஆனந்தமே, திருவுருவமாகவுடைய ஸ்ரீ ராமபத்திரருக்கு அவருடைய யதார்த்த நிலையில், நீர் அறிந்தவற்றுள்ளே சிறிதை எடுத்துச்சொல்லும்,அவரோ தம்முடைய யதார்த்த ஸ்திதியை அறியாதவர்போலக் காணப்படுகிருர். என்று சொல்லவும் பிரம்மதேவரானவர் ஸ்ரீ ராமசுவாமிக்கெதிரே வந்து நின்று அவரது உண்மையை வெளிப்படுத்தத் தலைப்பட்டார்.

## பிரமாஸ்துதி.

மன்னர்தொல்குலத்தவரினத்துணையொருமனித்தன்
என்னவுன்னலையுன்னைநீயிராமகேளிதனைச்
சொன்னநான்மறைத்துணிவினிற்றுணிந்தமெய்த்துணிவு
நின்னலாதில்லைநின்னில்வேறுளதிலைநெடியோய்.

பகுதியென்றுளதியாதினும்பழையதுபயந்த
விகுதியால்வந்தவிளைவுமற்றதற்குமேனின்ற
புகுதியாவர்க்குமரியவப்புருடனும்நீயிம்
மிகுதியுன்பெருமாயையினுல்வந்தவீக்கம்.

முன்புபின்பிருபுடையெனுங்குணிப்பருமுறைமைத்
தன்பெருந்தன்மைதான்றெரிமறைகளின்றலைகள்
மன்பெரும்பரமார்த்தமென்றுரைக்கின்றமாற்றம்
அன்பனின்னையல்லான்மற்றிங்கியாரையுமறையா.

எனக்குமெண்வகையொருவற்குமிமையவர்க்கிறைவன்
றனக்கும்பல்பெருமுனிவர்க்குமுயிருடன்றழீஇய
அனைத்தினுக்குநீயேபரமென்பதையறிந்தார்
வினைத்துவக்குடைவீட்டருந்தளைகின்றுபீள்வார்.

என்னைத்தான்முதலாகியவுருவங்களெவையும்
முன்னைத்தாய்தந்தையெனும்பெருமாயையின்மூழ்கித்
தன்னைத்தானறியாமையிற்சலிப்பவச்சலந்தீர்ந்
துன்னைத்தாதையென்றுணர்குவமுத்திவித்தொழிந்த.

ஐயஞ்சாகியதத்துவந்தெரிந்தறிந்தவற்றின்
மெய்யஞ்சாவகைமேனின்றநினக்குமேல்யாதும்
பொய்யெஞ்சாவிலதென்னுமீதருமறைபுகலும்
வய்யஞ்சான்றினிச்சான்றுக்குஞ்சான்றிலைவழக்கால்.

அளவையாலளந்தாமன்றென்றறிவுறுமமைதி
உளவையாவையுமுனக்கில்லையுபநிடத்துனது
களவையாய்ந்துறத்தெளிந்திலதாயினுங்கண்ணுல்
துளவையாய்முடியாயுளைநீயெனத்துணியும்.

கரணமொன்றுளதுன்னைவந்தறிவுகாணுமே
அரணமல்லவர்க்கிவைகடந்தறிவரிதாக,
மரணந்தோற்றமென்றிவற்றிடைமயங்குபவவற்றுன்
சரணமல்லதோர்சரணில்லையன்னவைதவிர்ப்பான்.

தோற்றமென்பதொன்றுனக்கில்லைநின்கணேதோற்றும்
ஆற்றல்சான்முதற்பகுதிமற்றதனுளாம்பண்பால்
காற்றைமுன்னுடைப்பூதங்களவைசென்றுகடைக்கால்
வீற்றுவீற்றுற்றுவீவுறுநீயென்றும்வீளியாய்.

மின்னைக்காட்டுதல்போல்வந்துவிளியுமெய்யுலகம்
தன்னைக்காட்டவுந்தருமத்தைநாட்டவுந்தனியே
என்னைக்காட்டுதியிறுதியுங்காட்டுதியெனக்கு
முன்னைக்காட்டிலையொளிக்கினுமிலைமறையுரையால்.

என்னுருக்கொடிவ்வுலகினையீனுதியிடையே
உன்னுருக்கொடுபுகுந்துநின்றோம்புதியுமையோன்
றன்னுருக்கொடுதுடைத்திமற்றிதனியருக்கன்
முன்னுருக்கொடுபகற்செய்யுந்தரத்ததுமுதலோய்.

திருக்குவரன்மலிசெல்வத்துச்செருக்குவேந்திறத்துத்
தருக்குமாய்வறத்தானவரரக்கர்வெஞ்சமரில்
இரிக்கமாழ்கினொந்துனைப்புகல்யாம்புகவியையாக்
கருக்குளாய்வந்துதோற்றுதியீங்கிதுகடனே.

ஓங்காரப்பொருடேறுவோர்தாமுன்னையுணர்வோர்
ஓங்காரப்பொருளென்றுணர்திருவினையுகுப்போர்
ஓங்காரப்பொருளாமன்றென்றூழிசென்றூலும்
ஓங்காரப்பொருளேபொருளென்கிலாவுரவோர்.

ஓ எங்களுடைய துக்க நிவாரணுர்த்தமாகத் திருவவதாரஞ்செய்த வரபாலன மூர்த்தியாகிய ஸ்ரீராமப்பிரபுவே! அடியேன் சொல்வதைக்கேட் டருள்வீராக. பழமையாகிய சூரிய வமிசஸ்தர்களிற் பிறந்த ஒரு மனிதனுக உம்மை நினைத்துக்கொள்ளாதேயும். சமஸ்த அண்டங்களும், அவற்றுள் தங்கிய எங்களையுள்ளிட்ட சராசரப் பொருள்களெல்லாமும், உம்முடைய சங்கல்பலேசமாத்திரத்தால் தோன்றி உம்முடைய கருணையில் ஒதுங்கி நிற்கின்றன. ஆகையால் இந்தச் சமஸ்தபொருள்களும் உம்மையல்லாமல் இல்லை. நீரோ அந்நியமாய் நினைத்தருள வேண்டாம். மூலப்பிரகிருதியென்று அநாதியாக தேவரீருடைய

சந்நிதானத்திலொன்று உண்டு. அதிலே நின்றும் சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களைந்தும், அவற்றிலேதோன்றிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும்பூதங்களைந்தும், அவற்றின் கூறுகளாகிய மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஞானேந்திரிய மைந்தோடு வாக்கு பாதம் பாணி பாயு உபஸ்தம் என்னும் கன்மேந்திரியங்களைந்தும், இன்னும் இவற்றின் வேறுபாடாகவந்த விரிவும், இவற்றிற்கு மேலே நின்ற புருஷனும், அவன் தெரிந்துகொள்வதற்குக் காரணமாகிய, மானச அகங்காரம், மனம் என்னும் இவையும், தேவரீருடைய ஆஸ்ரயத்தில் நிற்பவைகளல்லவோ? இந்த விரிவெல்லாம் உம்முடைய மாயாசத்தியால் விரிந்தனவேயாம்: தோற்றமும் ஒடுக்கமும் அளவுமில்லாமலிருக்கிற தம்முடையபெருமை பிறரால் அறியப்படாமல் தாமே அறியத்தக்க வேத சிரசுக்கள், காரிய வஸ்துக்களாகிய எங்களுக்கு மேல் ஒருபரமாத்துமா உண்டென்று சொல்லும். அந்த பரமாத்துமா யாரெனில்? எங்களிடத்தில் கருணையுள்ள நீர்தானென்று சொல்லுகின்றனவேயல்லாமல், இங்கே வந்திருக்கிற பிரமேந்திராதிகளாகிய எங்களில் ஒருவரையும் சொல்லவில்லையே! பிரம்மனுகிய எனக்கும், இந்திரனுக்கும், பல பிரம்மரிஷிகளுக்கும், மற்ற சீவராசிகளெல்லார்க்கும், நீரே முதற்கடவுளென்று உண்மையறிந்து திடச்சித்தர்களாய்த் தேவதாந்தரங்களைப் பஜிக்காமல், உம்மையேஉபாசிப்பார்கள்; நிவர்த்திசெய்யக்கூடாத இருவினைகளாகிய பாசத்தளையை நீங்கி முத்தியுலகத்தை அடைவார்கள். யான் முதலாகிய எல்லாச்சேதனர்களும் தாய் தந்தை மனையாள் புத்திரர் தனம் இவர்கள்மேல்வைத்த ஆசையாகிய கடலில் அழுந்தி, தங்களுக்குச் சுவாமியாகிய உமக்குச் சொத்தென்கிற உண்மை ஞானமில்லாமையால் அந்தச் சனன சமுத்திரத்திலேயே கிடந்து, துக்கங்களாகிய மகரமச்சங்களால் கவ்வப்பட்டு நடுங்குவார்கள். தேவரீருடைய நிரேதுக்கிருபையால் சில சேதனர்கள் உம்மையே சுவாமியென்றும், உமக்குத் தாங்கள் சேஷபூதர்களென்றும், உண்மை ஞானம்பிறந்து, பிறவித்துன்பங்களையொழித்து, முத்தியுலகத்துக்கு வித்தைப்போலாவார்கள்.

இருபத்தைந்தாகிய தத்துவங்களையும் ஐயமறத்தெரிந்தால், யதார்த்தமான வகையால் அந்ததுவங்களுக்குமேலே நீருண்டு அப்படி நின்ற உமக்குமேல்யாருண்டு? ஒருவருமில்லையே! இப்படியே சதுர்வேதங்களும் உண்மையாக உமக்குமேல் ஒருவருமில்லையென்றே சொல்லும், முதற்கடவுளாகிய நீர் உண்டென்பதை உலகத்தார் உணர்த்துகொள்வதற்கு இந்தவுலகம் உண்டாயிருப்பதே சாக்ஷியாகும். இந்தச்சாக்ஷி உண்மையோ அல்லவோவென்று அறிந்துகொள்ள இதற்கு வேறே சாக்ஷிவேண்டியதில்லை. இதுவே பிரமாணமுமாகும். பிரத்தியக்ஷம் அனுமானம் ஆகமம் என்னும் பிரமாணங்களால், உம்முடைய இருப்பை ஆமென்றும், அல்லவென்றும், அறிகின்ற ஆராய்ச்சி; எங்களுக்கே யல்லாமல் உமக்கோ கிடையாது. ஏனென்றால் உமக்குமேல் ஒருபொருளு மில்லாமையாலே உபநிடதங்கள் தம்முடைய அறிவால், உம்முடைய ஒளிப்பை ஆராய்ந்து நிர்ணயிக்க மாட்டாமற் போயினும், ஓ துளபமாலையணிந்த பரஞ்சுடரே! நீர் ஒருவர் உண்டென்று நிச்சயித்துக்கூறும். உம்முடைய ஞாயமான கடாக்ஷம்பெருத புருஷன், உம்முடைய அநந்த கல்யாண குணங்களை, ஒருவாறு அறிந்து, உஜ்ஜீவிக்க விரும்புவானேயாகில், அவனுடைய அறிவை மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் தடைசெய்யும். ஆதலால் அவற்றை நிக்கிரகித்துக்கொண்டு உம்முடைய நிலையை அறியமாட்டாதவராகி ஜனனமரணங்களில்அகப்பட்டுக்கொண்டு மயங்குவார்கள். அந்த ஜனனமரணங்களில் அழுந்தி வருந்துகின்றவர்களுக்கு அவற்றை நீக்க உம்முடைய திருவடிகளேயல்லாமல் வேறு சரணுகதியும் உண்டோ? இச்சையாலல்லாமல் எங்களைப்போல இருவினைகளால் பிறப்பென்பதொன்றும் உமக்குக்கிடையாது. உம்மிடத்தில் நின்றும் தோன்றிய பரமசக்தியுடைய மூலப்பிரகிருதியில் நின்று ஜனித்த முறைமையையுடைய ஆகாயமுதலிய பஞ்சபூதங்களும், தேவரீருடைய சங்கல்பத்தினுலேற்படுத்திய காலப்பரிமாணம்ஆனபோது அழிந்துவிடும்.

சுவாமியாகிய நீரோ என்றும் அழியமாட்டீர். மேகத்தில்தோன்றி மறைகின்ற மின்னலைப்போல உம்மிடத்தில் ஜனித்து நசிக்கின்ற உலகங்களைச் சிருஷ்டிக்கவும், அவற்றில் தருமத்தை ஸ்தாபிக்கவும், நீர் அநாதியாய் ஒருவராயிருந்து முன்னே என்னைச் சிருஷ்டிக்கின்றீர். கடைசியில் என்னை யுள்ளிட்ட எல்லாப் பொருள்களையும் அழிக்கின்றீர். எமக்குக் காரணமாகிய உம்முடைய நிலையைமாத்திரம் காட்டமாட்டீர். அப்படி நீர் மறைந்திருந்தாலும் நாங்கள் எங்களுக்கு மூலகாரணப்பொருள் நீரேயென்று வேதவாக்கியங்களால் சந்தேகமறத் தெளிகின்றோம். சூரியனானவன் தன்னுருவத்தைக்காட்டிப் பகலையும் தனது உருவத்தை மறைத்து ராத்திரியையும் செய்வதுபோல என்னுருவத்துக்குள் அந்தராத்துமாவாக எழுந்தருளி யிருந்து இவ்வண்டங்களைச் சிருஷ்டிக்கின்றீர். உபேந்திரமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து எல்லாப்பொருள்களையும் பாலனஞ்செய்கின்றீர். அப்பால் ருத்திரமூர்த்தியாயிருந்து, அவற்றையெல்லாம் அழிக்கின்றீர்.

சம்பத்தின் ராசியாகிய பெருஞ்செல்வத்தினாலே கர்வித்துகிடக்கிற, இந்திராதி தேவர்கள் கொண்ட கர்வமானது அடங்கும்படி, அசுரர்களும், அரக்கர்களும் குரூரமாக யுத்தஞ்செய்து, அவர்களையடித்துத் துரத்தவே, அவர்கள் வந்து உம்மைச் சரணாகதியென்று அடைகிறார்கள். அதன் பொருட்டு வசிக்கத்தகுதியல்லாத மானுஷிய கர்ப்பத்தினின்றும் அவதரித்து அந்தக் கொடியவர்களை நாசஞ்செய்து அந்தத் தேவர்களைக்காக்கின்றீர். இப்படிச்செய்வது உமக்குக்கடனே யல்லாமல் மற்றாருக்குக் கடமையாகும்? மூன்றெழுத்துகூடி ஒரெழுத்தாய்நின்ற பிரணவத்தினுடைய உண்மைப்பொருளை யறிந்தவர்கள், உம்மையுள்ளபடி அறிந்தவளாவார்கள். தேவரீரைப் பிரணவத்தின் வாக்கியமாக அறிந்த அந்தப்புருஷர்களே இருவகை வினைகளையும் வெறுத்து ஒழிப்பவர்கள். அந்தப் பிரணவப்பொருளை அறிவதுதான் உண்மை ஞானமென்று உணராதவர்கள் மிகுந்த கியானிகளா யிருந்தபோதிலும், பிரணவப்பொருளாகிய நீர் உண்டோ இல்லையோவென்று சந்தேகங்கொண்டு யுகமுடிவுவரையும் பிறக்கிறதும் இறக்கிறதுமாகி உழன்றுகொண்டு இருப்பார்கள். உஜ்ஜீவிக்கமாட்டார்கள். ஓ சர்வசுவாமி! தேவரீருடைய நிலையிப்படிப்பட்டதாக இருக்கிறது. அதைக் காட்டாமல் ஒளித்து நின்று எங்களை மயக்குகிறீர். ஆனாலும் உம்முடைய திருமார்பிலெழுந்தருளியிருந்து, எங்களையும் எங்களுக்கிருப்பிடமாகிய அண்டங்களையும் பெற்று, கிரகஸ்தாச்சிரமத்தை ஓங்கி வளரும்படி அனுஷ்டித்தருளிய எங்கள் தாயாகிய ஜானகிபிராட்டியாரை வியர்த்தமாகக் கோபஞ்செய்யாதேயும் என்று சொல்லி முடித்தனர்.

இந்தப்பிரகாரம் சமஸ்த அண்டசராசரங்களைச் சிருஷ்டித்த சதுர்முகனானவர், துதிசெய்து ஆனவுடனே இடபவாகனத்தையுடைய உமாநாயகராகிய சிவனானவர் ஸ்ரீராமரைக் கடாக்ஷித்து, ஸ்ரீராமச்சந்திரரே! நீர்உம்முடைய பெருமையை ஒன்றும் அறியீர்போலும். சமஸ்த அண்டங்களுக்கும் தாயாகிய இந்தச் சீதாபிராட்டியென்னும் கற்புடைய மங்கையர்க்கரசியானவள் பழையபடியே உம்முடைய திருமார்பை வந்து சேர்ந்தாள். நீர்இந்தப்பிராட்டியை நிக்கிரகிப்பது தகுதியல்ல, இப்பிராட்டி கற்பில் நின்றும் தவறுவாளாகில் இந்தச் சமஸ்த புவன சராசரங்களும் அழிந்து போகாமல்இன்னும் நிலைத்துமிருக்குமோ? அப்போதே அழிந்துபோய்விடும். ஆகையால் இந்தச் சாக்ஷாத் இலக்குமியை நீர் இப்படி நிந்திப்பது மறந்துவிடத் தக்கதென்று சொல்லினர். தம்மை நோக்கித தவஞ்செய்தவர்களுக்கு வேண்டிய இஷ்டகாமயங்களைத் தயைசெய்கிற பரமசிவனானவர் பின்னும் ஆலோசனைசெய்து, அநந்த கல்யாணகுண நிலயமாகிய ஸ்ரீராகவபிரானைப்பிரிந்த துன்பத்தால் தேகவியோகமடைந்து, பாலனகர்த்தாவாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவினுலகத்தை யடைந்த தசரத சக்கிரவர்த்திக்குப் பிரசன்னமாகி, ஓ மகா புண்ணியசீலனாகிய சக்கிரவர்த்தியே! நீ பூலோகத்துக்குப்போய் உன்னுடையகுமாரனாகிய ஸ்ரீராமச்சந்திரனைக்கண்டு உன்னுடைய மனோதுக்கத்தை மாற்றிக்கொள்ளுக வென்று சொல்லினர். ஸ்ரீசங்கரபகவானுடைய வாக்கின்படி சக்கிரவர்த்தியானவர்

தமக்குப் பிராணபதமாயிருந்த ஸ்ரீராகவ பிரானைக் காணவேண்டுமென்கிறகருத்தால் பூலோகத்துக்கு வந்து, சர்வசுவாமிக்கெதிரே நின்றனர். உடனே வேதபுருஷனாகவும் அவ்வேதங்களால் அறியப்பட்ட பரவஸ்துவாகவும் இரா நின்ற ஸ்ரீஜானகி ரமணனுனவர் சக்கரவர்த்தியினுடைய பாதங்களில் தமது திருமுடிதோயும்படித் தண்டன் சமர்ப்பித்தனர். அப்படித் தண்டன் சமர்ப்பித்த திருக்குமாரரை சக்கரவர்த்தியானவர் வாரியெடுத்து, பர்வதம்போல விசாலமாகிய தமது மார்பில் அழுந்தும்படி இறுக அணைத்து, தம்முடைய கண்களில் ஒழுகாநின்ற ஆநந்தபாஷ்பத்தால் திருமஞ்சனமாட்டி, இப்போதுதான் நாம் வாழ்ந்தோமென்கிறகளிப்பு அதிகரித்தவராய் முன்னே தாம் அடைந்திருந்த துக்கங்கள் யாவற்றையும் அங்குள்ள யாவரும் கேட்கும்படி சொல்லிப் பிரலாபிக்கத் தொடங்கினுர்.

ஓ என்னப்பனே! அக்காலத்திலே கேகயநாட்டு அரசனுடைய புத்திரியாகிய கைகேசியானவள் என்னிடத்தில் பெற்ற வரமென்கிற கூரிய வேலாயுதமானது, என்தேகத்தை நீங்கும்படி செய்ததுமல்லாமல் இன்றுவரையும் என்னெஞ்சினிடத்திலேயே நின்று உபத்திரவத்தை விளைவித்துக்கொண்டிருந்தது. இப்போது உன்னை யான் ஆலிங்கனம் செய்தபின், திவ்வியாபரணங்களைத் தரித்துப் பரிமளமணக்கின்ற உன் திருமார்பாகிய காந்தக்கல்லானது அந்த வரமென்கிறவேலைக் கிரகித்துவிட்டது. ஓ அழகிய பெரிய திருத்தோள்களையுடைய ஸ்ரீரகுநாயகா! நல்ல குணங்களையுடைய சுபுத்திரர்களைப்பெற்று அதிக பிரக்கியாதியை யடைந்த புருஷர்களும், என்னுடைய கால்களில் நின்று மெழுகின்றதுகளுக்கும் சமானமாகாரென்னும்படியான மகாகீர்த்தியை எனக்குண்டாக்கினுய். இருவினைகளிலிருந்து நீங்கினவர்களுக்கும் பெறக்கூடாத ஸ்ரீவிஷ்ணுலோகத்தையும் சத்கீர்த்தியையும்பெற்று யாவர்களிலும் உயர்ந்திருக்கிறேன். ஸ்ரீசூரியவம்சகுல திலகனே! ஓ ஜானகிரமணு! முன்னுலே நான் வணங்கிக்கொண்டிருந்ததேவர்களும் முனிவர்களும் பலமுறை பார்த்து எனக்கு கைகளைக்குவித்து தண்டனிடுதலை உன்னுடைய செந்தாமரை மலர்போன்ற கண்களால் பார்த்து, ஸ்ரீசர்வேசுரனுடைய திருவுந்தி மலரில் அவதரித்த பிரம்மனேடு நானும் சமானமென்னும்படி அந்தச் சதுர்முகனேடு சத்தியவுலகத்தில் ஒரே ஆசனத்தில் இருக்கும்படியாயும் என்னைச்செய்தாய். என்று சொல்லித் தம்முடைய புத்திரராகிய அந்த ஸ்ரீராமநாதரை எடுத்தெடுத்து மார்பில் இறுகத்தழுவிப் பின்பு ஸ்ரீசீதாபிராட்டியார் பக்கலிற் சென்ருர். உடனே பிராட்டியாரும் ஸ்ரீசக்கரவர்த்தியாருடைய பாதங்களில் நமஸ்காரஞ்செய்தனர். நமஸ்காரஞ்செய்த பிராட்டியாரை யாவரும் சொல்லமுடியாத புகழையுடைய தசரதரானவர் அதிக கருணையோடு அணைத்து நின்று, ஓ மங்கையர்க்கரசியே! ஸ்ரீராகவபிரான் உன்னை அக்கினியில் பிரவேசிக்கும்படிச்சொன்னது உன்னுடைய அழிவில்லாத கற்பினிலைமையை உலகத்தாருடைய இருதயத்தில் எட்டுவிக்கும்படியே யல்லாமல் வேறன்று. அதை உன்னுள்ளத்தில் மற்ருென்ருக நினைக்கவேண்டாம். ஸ்ரீபகவத் பக்திஹீனர்களாகிய பாபிஷ்ட துராத்துமாக்கள் உன்விஷயத்தில் சங்கைகொண்டிருப்பார்களேயானுல், அவர்களும் இப்போது அந்தச் சந்தேகத்தை நீக்கி, உன்னிடத்தில் நிச்சயமாகிய நம்பிக்கை யடைந்து உஜ்ஜீவிப்பார்களன்ருே? இது சத்தியமே! கங்கைநாடாகியகோசலநாட்டு ராஜசிகாமணியின்மேல் சீற்றங்கொள்ளாதே! பொன்னைத் தீயிற்போட்டெடுத்தால் அப்பொன்னினுடைய வாஸ்தவத்தை அறியும்படியல்லவோ? அப்படியென்றே இதை நினைப்பது தகுதியாகும். பிரம்மேந்திராதி தேவர்களும் முனிவர்களும் கூடியிருக்கிற இந்த மஹாசபையில், நீ கற்புடைய மங்கையர்களுக்கு அரசியென்று தெரிவிப்பதற்காகவே உன்னை அக்கினியில் மூழுகச் சொன்னது. இதுசமயம் தப்பிப்போனுல் இந்தமஹாசபையைக்கூட்டி உன்னுடைய கற்பினிலையைக் காட்டுதல் அருமையென்றுணர்ந்து நினைத்து, இந்தப் புருஷோத்தமன் இப்படிக்குச் செய்தானுக்கும்.

ஓ பெண்ணுக்குரிய இயற்கைக்குணங்கள் அமைந்த அருந்ததி முதலாகிய கற்பிலக்கண மிகுதியுமுடையஉத்தமஸ்திரீகளுக்குச் சிரோபூஷணமாய் விளங்குகின்ற

என்தாயே! உன்னுடைய அவதாரஸ்தலமோ பூமி? நீ இருந்துவந்த இடம், மனோவாக்குக்கெட்டாத ஸ்ரீவைகுந்தம், உன்னுடைய கல்யாணகுணங்களுக்கு யாதொரு மாசுங்கிடையாது. இனி எந்தமூடனும் உன்விஷயத்தில் வாய்மதங்கொண்டு தூஷணத்தைப்பேசி அபசாரப்பட்டுக் கெட்டுப்போகான். என்று இவ்வண்ணமாகச் சொல்லின பின்பு ஸ்ரீசீதாபிராட்டியாருடைய திருவுளத்தில் சீற்றமென்பது சிறிதுமில்லையென்பதைச் சக்கரவர்த்தியானவர் அறிந்துகொண்டு, மனதில் சிறிதும் கிலேசமில்லாதவராகி, ஸ்ரீராமாநுஜர் பக்கலிற்போய் உள்ளத்திலுள்ள அன்பானது கட்டும்படியாகத் தம்மைத்தாமே தழுவுவதுபோலத் தம்முடைய மார்பில் அவருன்றும்படித்தழுவி, தம்முடைய கண்களிலிருந்து இடைவிடாது ஒழுகாநின்ற நீரானது, பட்டாபிஷேகத்தில் திருமஞ்சனஞ்செய்கின்ற தீர்த்தம்போல இளையபெருமாளுடைய ஜடாமகுடத்தில் பாய்ந்திழியும்படியாக உச்சிமோந்து, அப்பனே! ஸ்ரீலக்ஷ்மணா! என்னுடைய ஜனனவியாதியையும், ஸ்ரீரகுநாயகன் ஆரணியத்துக்குத் தனியாய்ப்போகின்றானென்று என்னெஞ்சிற்கொண்ட துன்பப்பிணியையும், நீக்கினாயே! ஓ சுமித்திராதேவி இளஞ்சிங்கமே! திரிமூர்த்திகளுடைய லோகவாசிகளெல்லாரும் நீ இந்திரனுடைய பகைவனாகிய இந்திரஜித்துவைப் போரில்வென்ற மகாகீர்த்தியையே பேசுகிறார்கள். என்ஐயனே! இந்த உலகத்துக்கு நேரிட்ட துக்கமாகிய விரோதத்தை நிவர்த்திக்கச்செய்து தருமத்தை நிலைபெறச் செய்தாயேயென்று பலவாறு சொல்லினர்.

இந்தப்பிரகாரம் லக்ஷ்மணரோடு பேசிய சக்கரவர்த்தியானவர் மீட்டும் ஸ்ரீ ஜானகீரமணரிடத்துச்சென்று, ஓ என் பிராணபதமாகிய ஸ்ரீராமா! ஓ அநந்த கலியாணகுண நிலயமே! நீ என்னிடத்தில் பெற்றுக்கொள்ளத்தக்க ஒருவரம் கேட்கக்கடவாயென்றார். இப்படி புத்திரவாச்சல்லியத்தாற்கேட்ட பிதாவை ஸ்ரீராமபிரானானவர் நோக்கி, ஓ என்னிடத்தில் அத்தியந்தப் பிரீதியுடையவராயிருந்த தந்தையே! என்பொருட்டுத் தேவரீர் தேகவியோகமானதைக்கேட்டு, யான் அடைந்திருந்த துக்கத்தை நீர் அடைந்திருக்கிற ஸ்ரீவிஷ்ணுலோகத்துக்கு வந்து, உம்மைக்கண்டு தீரலாமென்றிருந்தேன். அப்படி துக்கித்துக்கொண்டிருந்த நான் என்னுடைய பாக்கியவசத்தால் இப்போது இங்கே இந்தத் தேகத்தோடு காணும்படியான பெரும்பயனைப் பெற்றேன். இனியான் பெற்றுக்கொள்ள வேண்டியது யாதென்றார். இப்படி தாம்கொண்ட மானுஷியாவதாரத்துக்கேற்க நடிக்கின்ற ஸ்ரீராமபிரான் சொல்வதைக்கேட்ட தசரதச்சக்கிரவர்த்தியானவர் அவரைக் கட்டியணைத்து, என்னையனே, ஆனபோதிலும் உனக்கு வேண்டியதொன்றைக் கேட்பாயாகவென்று சொல்லினர். அப்போது ஸ்ரீராமபத்திரர் அவரை நமஸ்கரித்து, என்பிதாவே! நீர் என்னிடத்தில்வைத்தவாச்சல்லியகுணாதிசயத்தால் பொல்லாதவளென்று வெறுத்துவிட்ட என்தெய்வமும், உம்முடைய புத்திரனாகிய பரதாழ்வானும், எனக்குத்தாயும் தம்பியுமாகும்படியான வரங்களைத் தயைசெய்யக் கடவீரென்று கேட்டருளினார்.

இப்படி சர்வசுவாமியானவர் கேட்டபோது அவருடைய கருணையைக்குறித்து சமஸ்த ஜீவர்களும் துதிசெய்து ஆரவாரித்தார்கள். அக்கால் தசரதசக்கரவர்த்தியானவர் ஸ்ரீராமரைத்தழுவி, யாவருக்கும் வரத்தைத் தயைசெய்கின்ற ஸ்ரீரகுவமிசதிலகனே! நீ கேட்டுக்கொண்ட இரண்டிலே பரதன் உனக்குத் தம்பியே யாகக்கடவன். உனக்கு யான்கொடுத்த திருமுடியை அபகரித்துக்கொண்டு இந்த விரதவேஷத்தை உனக்குக்கொடுத்த பாவிமேல் எனக்குண்டாகிய கோபமானது சத்தியமாய் நீங்கவில்லை. என்று ஸ்ரீராமபிரானைத்தழுவி நின்ற கைகளும் தளர்ந்து தொங்கும்படியாக அதிகதுக்கத்தோடு சொன்னார். அதுகேட்டருளிய ஸ்ரீராமபிரானனவர் தசரதசக்கரவர்த்தியாரைப் பார்த்து, என்பிதாவே! நிலையில்லாத தேகபோஷணார்த்தத்துக்கு உபயோகியாயிருக்கின்ற ராச்சியாதிகாரத்தை யான்விரும்பும் விருப்பமானது பெருங்குற்றங்களுக்கெல்லாம் மூலமென்பதை யான் அறிந்துகொள்ளாமற்போனதே குற்றமல்லாமல், என்னைவளர்த்தெடுத்த தெய்வமாகிய தாயானவள் கருணையால் என் விஷயத்தில் அந்தராச்சியாதிகாரத்தைத் தடுத்து

விட்டது குற்றமோவென்று சொல்லினர். அப்படியே யாகுகவென்று தசரதரும் சம்மதித்து, முன்னே கைகேசிமேற் கொண்டிருந்த கோபம் ஆறினர். அப்போது ராவணனுக்குப் பிரமனுதியர் தயைசெய்துகொடுத்திருந்த வரங்களெல்லாவற்றையு மழித்து வெற்றிகொண்ட ஸ்ரீராகவபிரானைவர் கேட்டுக்கொண்டபடி சக்கரவர்த்தியார் சம்மதித்ததைக்கண்ட தேவர்கள் யாவரும் ஒருவரையொருவர்பார்த்து, ஆ! ஆ! கேட்டீர்களா? நாம் பெற்றுக்கொண்டவரம் ஈடேறும்படி நம்முடையஇறைவனைக்காட்டுக்கனுப்பிய மகோபகாரியாகிய கைகேசியானவள், இந்தச்சக்கரவர்த்தியாரிடத்திற் பெற்றுக்கொண்ட வரங்களும் இரண்டு. அவ்விரண்டு வரங்களின்படி நடந்துகொண்ட எம்பெருமானுக்கு இன்றிவர்கொடுத்தவரங்களும் இரண்டென்று மனவிரக்கத்தோடு பேசிக்கொண்டார்கள். திரிலோகத்தார்களும் சிறந்ததாகக் கொண்டாடுகின்ற சத்தியத்தின்பொருட்டு உயிரைக்கொடுத்து மிகுந்த கீர்த்தியையடைந்த தசரத சக்கரவர்த்தியானவர் இப்படி இரண்டுவரங்களைத்தந்து, ஜகன்மோகனுகார ஸ்வரூபராகிய ஸ்ரீராமபிரானையும், ஸ்ரீஇளையபெருமாளையும், ஸ்ரீசீதாபிராட்டியாரையும் விட்டுப்பிரிந்து விமானத்தின்மீதேறிப் போயினர். அப்பால் தமது திருக்கரத்தில் ஸ்ரீ கோதண்டந் தாங்கி நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிரா நின்ற ஸ்ரீராகவபிரான்சந்நிதியில், தேவர்கள்யாவரும்வந்து, ஓஜகத்காரண பரவஸ்துவே! ஓ எங்கள்குலதெய்வமே! ஓ எங்கள் நிமித்தம் இந்தமானுஷியாவதாரத் திருமேனிவகித்த பக்தவத்சலனே! தசரதசக்கரவர்த்தியினிடத்துப்பெற்றுக்கொண்ட வரத்தைப்போல எங்களிடத்தில் யாதேனும் ஓர்வரத்தைப்பெற்றுக்கொள்ளுமென்று கேட்டார்கள். அப்போது ஸ்ரீராமபிரானுனவர், ஓ தேவர்களே! இராக்ஷசவீரர்களால் யுத்தத்தில் மடிந்துபோன வானரர்களெல்லாம் உயிர்பிழைத்தெழுந்திருக்கவும், அவர்கள் எந்தெந்த வனங்களிலும், பர்வதங்களிலும், இவைபோன்ற இடங்களிலும்போய் வசிக்கின்றுர்களோ? அந்தஇடங்களிலெல்லாம் மதுரமானகாய்களும், கனிகளும், கிழங்குகளும், தேனும், உண்ணத்தக்கநீரும் புஷ்கரமாய் இருக்கவும், வரத்தை ஈயுங்களென்றுகேட்டருளினர். அதுகேட்ட யாவருக்கும் முதல்வராகிய சதுர்முகக்கடவுளும், இந்திரனும், மற்றத்தேவர்களும், முனிவர்களும், ஸ்ரீராமரைப் பார்த்து, ஓ துன்பத்தையே விளைக்கின்ற ஜனனநோய்க்கு மருத்துவனுய்விளங்குகின்ற ஸ்ரீராமபத்திரனே! உம்முடைய கருணுவீக்ஷணியத்தால் அப்படியே ஆகக்கடவதென்று, ஒவ்வொருவருந் தனித்தனியேசொல்லிக்கண்களும்மனமும் குளிர்ந்தார்கள்.

அப்போது பாபாத்துமாவாகிய இராவணனேடுசெய்த முதற்போர்முதல் அவனேடுசெய்தகடைப்போர்வரையும் மாண்டுபோன வானரங்களில், ஆஞ்சநேயர்கொண்டுவந்த சஞ்சீவியாற் பிழைத்தவைபோக மற்றவையெல்லாம் உயிர்த்தெழுந்து, சிந்தையும்விழிகளும்களிக்கும்படியாக நடந்த யுத்தங்களையெல்லாம் நினைத்தும், படுகளத்தைப்பார்த்தும்,அத்தியந்தப்பிரீதியோடு ஓடிவந்து தாமரைமலர்போன்ற நேத்திரங்களையுடைய ஸ்ரீரகுநாயகருக்குத் தண்டன் சமர்ப்பித்தன. இராவணன்-கும்பகர்ணன்-இந்திரஜித்து-அதிகாயன்-கும்பன் - நிகும்பன்-மகரக்கண்ணன்-பிசாசன்-தூமாக்ஷன்-வக்கிரதந்தன் முதலிய ராக்ஷசவீரர்களால் மடிந்துபோய் இப்போது உயிர்பெற்றெழுந்த அந்த வானரங்களெல்லாம் அங்கே சந்தோஷ ஆரவாரஞ் செய்துகொண்டிருந்தன. பிரமன் முதலிய தேவர்களெல்லாம் ஸ்ரீராமநாதரை நோக்கி, தேவரீர் சுக்கில பக்ஷத்து அஷ்டமியில் சுவேலாசலத்தை வந்தடைந்து, இலங்காநகரத்தை வானர சைனியங்களால் முற்றுகைபோட்டு, அரக்கர்கள் யாவரையும் கொலைசெய்து, அமர பக்ஷத்துப் பஞ்சமி திதியில், இராக்ஷசகுல நாயகனுகிய ராவணனையும் உயிர்மாய்த்து, இனி இந்தஅண்டத்தில் வஞ்சகர்களில்லையென்னும்படியாகக் கொலைத்தொழில் செய்தீர். ஓ தாமரைமலர்போன்ற கைகளையுடைய எம்பெருமானே! தாயார் சொல்லியபடி பதினுலுவருஷமும் இன்றேடுமுடிகின்றது.இன்றையத்தினமேஅயோத்திக்கெழுந்தருளி ஸ்ரீபரதாழ்வானுக்குத் தரிசனையாகாவிட்டால் அந்தஸ்ரீமான்தீயைமூட்டி அதிற்குதித்துப் பிராணத்தியாகஞ்செய்துகொள்ளுவார். ஆதலால் அப்படி அயோ

த்தியில் நடவாதபடி தேவரீர் சீக்கிரமாய் எழுந்தருள வேண்டுமென்று சொல்லிவிட்டுப்போயினார்கள்.

உடனே சுவாமியானவர் விபீஷணாழ்வான் முதலானவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓ மித்திரர்களே! என்தாயானவர் எனக்குக் கட்டளையிட்ட வருஷங்கள் பதினான்கும் இன்றோடு சரிபட்டுப்போகிறது. இன்றையத்தினம் நான் அயோத்தியைப் போய்ச் சேராமற்போவேனேயானால், என் தம்பி பரதாழ்வான் எரியில்விழுந்து பிராணனை மாய்த்துக்கொள்ளுவான். அதுகண்டு என்குலமுற்றும் நாசமாய்விடும். அப்படி நேரிடவொட்டாமல் இங்கேயிருந்து இந்தத்தினமே அயோத்திக்குப் போகத்தக்கவாகனம் ஒன்றுண்டோவென்று கேட்டருளினார். சுவாமி சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீவிபீஷணாழ்வானானவர் அவரைப் பணிந்தெழுந்து, சுவாமீ! யக்ஷராஜனாகிய குபேரனுக்குப் பிரம்மதேவராற் கொடுக்கப்பட்ட மகா புஷ்பகவிமானமொன்றுண்டு. அதுமிகவும்பரிசுத்தமுடையது அதன்மீதுஇந்தவானரவெள்ளங்கள்யாவுமேறினும் ஒருபுறத்தில் அடங்கிப்போமேயல்லாமல், அதற்குஒருசுமையாகமாட்டா. ராவணன் எப்போதாவது ஒருகாலத்தில் இங்கையிலுள்ள இராக்ஷசர்களையெல்லாம் ஏற்றிக்கொண்டுபோய் உலாவுவான். ஆதலால் அவ்வளவு பெரியதென்று சொல்லினர். அப்படிப்பட்டதானால் அதைக்கொண்டுவாவென்று சுவாமியானவர் கட்டளையிட்டனர். அண்டகோடிக ளொன்றாய்த்திரண்டு ஒருருவமாயினதுபோன்ற பெரிய உருவமுடையதாயும், ஆயிரஞ் சூரியர்கள் ஏககாலத்தில் உதயஞ் செய்தாற்போன்ற ஒளியையுடையதாயும், அநேக மணிகள் கணீர்கணீரென்று சப்திப்பதாயுமுள்ள அந்தப் புஷ்பகவிமானத்தைச் சர்வசுவாமியினுடைய கட்டளையின்படி விபீஷணாழ்வானானவர் அதிவேகமாய்க் கொண்டுவந்தார். அந்தப் புஷ்பகவிமானம் பூமியில்வந்திறங்கியதைக் கண்ட ஸ்ரீராகவபிரானானவர் திருவுளமகிழ்ந்து, நம்முடைய எண்ணம் முடியுமென்று அதன்மேலெழுந்தருளினார் உடனே தேவர்கள் யாவரும் அவர்மேல் புஷ்பங்களை வாரியிறைத்துப் பல்லாண்டு கூறினார்கள். கற்புக்குத்தன்னைப்போன்றவரில்லாத ஸ்ரீஜானகிபிராட்டியாரைத் திரிசடையென்னும் சுகுணவதியானவள் தண்டஞ்சமர்ப்பித்து, ஓ ஜகத்காரணி! அடியாளும் தேவரீரோடு அயோத்திக்குவருகிறேனென்று சொல்லினள். அதுகேட்ட ஸ்ரீசீதாபிராட்டியானவர், அம்மா திரிசடையே நீயாதொரு துன்பமுமில்லாமல் இலங்கா நகரத்துக்கு ஒரு தெய்வத்தைப்போ லிருக்கக்கடவாயென்று ஆக்கியாபித்து ஸ்ரீராமபிரான் பக்கலில்வந்து சேர்ந்தார். மணம் வீசுகின்ற மாலையைத்தரித்த இராமாநுஜரும் விமானத்தின்மே லெழுந்தருளினார். அப்போது சமஸ்த அண்டங்களையும் உண்ட ஸ்ரீசர்வேசுரனுடைய திருவுதரத்தைப்போல விளங்குவதாயும், வாயுவினது வேகமும் பின்னிடும்படி மனோவேகத்தையொத்த வேகத்தையுடையதாயும், ஆகாயத்தின்கண் விளங்குகின்ற விமானத்தின்மேலெழுந்தருளியிரா நின்ற ஸ்ரீராமநாதரானவர் ஸ்ரீவிபீஷணாழ்வானைநோக்கி, ஓ பூவினிதழ்களால் தொடுத்த மாலையைத் தரித்தவனே! உன்னைவிட்டுப்பிரியாத மந்திரிமுதலானவர்கள் களிக்கும்படியாயும், இலங்கா நகரத்தில் உள்ளவர்களெல்லாம் புகழும்படியாயும், அரசுசெய்துகொண்டு சுகமாக வாழ்ந்திரு. ஓ அறிவுடையோரால் நீதிமார்க்கம் இவைதானென்று சொல்லும்படியான ஒழுக்கங்களையுடைய விபீஷணாழ்வானே! ஸ்ரீசர்வேசுரன் அன்னமாய் திருவுருக்கொண்டு சதுர்வேதங்களையும் உபதேசிக்கப்பெற்ற பிரம்மதேவரானவர் ஆதிபுருஷராகப்பெற்ற குலத்திற்பிறந்த சுசீலனே! சத்துருக்கள் யாவரும்வந்து கப்பங்கட்டி வணங்குகின்ற லங்காநகரத்திலேயே இருந்துஅரசுசெய்துகொண்டிருக்கப்போவென்று அருளிச்செய்தனர். பின்பு மனோவாக்குக்கெட்டாத கீர்த்தியையுடையஸ்ரீராமபத்திரானவர்சுக்கிரீவமகாராஜரைப்பார்த்து, ஓ சூரியபுத்திரனாகிய மகாராஜனே! உன்னுடைய புஜபலத்தாலே பத்துத்தலைகளையுடைய இராவணனைச் சங்கரித்தேன். அவன் முதலிய ராக்ஷசர்களுடைய யுத்தத்தில் உன்னுடைய சேனைகள்யாவும் மிகுதியுஞ்சிரமப்பட்டு இளைப்படைந்தன. ஆகையால் நீ உன்னுடைய சேனைகளோடு கிஷ்கிந்தைக்குப்போய்ச் சேர்ந்து வாழக்கடவாய். என்றுசொல்லி, அங்கதப்பெருமானை

யும் சாம்புவந்தரையும் பனசனையும் வெற்றியைத்தரத்தக்கபோரில்வல்ல நீலன்முதலாகிய சேனாநாயகர்களையும், வாயு புத்திராகிய ஸ்ரீ ஆஞ்சநேயரையும்கடாக்ஷித்து, நீங்களும் சுக்ரீவமகாராஜருடனே போங்களென்று திருவாய்மலர்ந்தருளினார்.

ஐயனானவர் இந்த வசனத்தைச் சொன்னமாத்திரத்தில் ஸ்ரீவிபீஷணாழ்வான் முதலிய யாவரும் மனந்திடுக்கிட்டு, உடலுமுயிரும் நிலைகலங்கும்படி விழிகளில் நீர் தாரைதாரையாக ஒழுக ஸ்ரீராகவபிரானுடைய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை அவரவர்களும் தங்கள் தங்கள் தலைகளிற்சூட்டிக்கொண்டு, எம்பெருமானே! உம்மைவிட்டு நீங்குவோமேயானால் நாங்கள் பிழைப்பதில்லை. தேவரீரோடு பெரியமதில் சூழ்ந்த திருவயோத்திக்குவந்திருந்து, பசும்பொன்னாற் செய்யப்பட்டு முத்துமாலைகள் தொங்குகின்ற ரத்தினமயகிரீடத்தைத் தரித்துக்கொள்ளும் பட்டாபிஷேக திவ்விய மகோற்சவத்தையும் அங்கு நடக்கும் வைபவங்களையும் சிங்காதனத்தின்மேல்தேவரீர் எழுந்தருளியிருக்கும் அழகையும் உஜ்ஜீவிக்கும்படி கண்டு சேவிக்குமளவும் தேவரீரைப் பிரியாதிருக்கும்படி தயைசெய்வீரென்று மிகுதியும் பணிவாகக்கேட்டுக்கொண்டார்கள். இப்படி விபீஷணாழ்வான் சுக்கிரீவமகாராஜா முதலானவர்கள் அதிக பிரீதியோடு கேட்டுக்கொண்ட விண்ணப்பத்தையும் அவர்கள் பிரிவென்னுந் துன்பத்தால் அடைகின்ற நடுக்கத்தையும் ஸ்ரீ ஜகந்நாதரானவர் கடாக்ஷித்து, நீங்கள் துன்பப்படவேண்டாம். நீங்கள் சொன்னபடியே உங்களை அயோத்திக்கு அழைத்துக்கொண்டுபோக முன்னமே நான் நினைத்ததுண்டு. ஆனால் உங்களுடைய உள்ளக்கருத்தை அறியும்படியாக அது சொன்னதேயல்லால் வேறல்லவென்று சொல்லியருளினர்.

அப்படி சொல்லியருளிய ஸ்ரீராமசுவாமியினுடைய மொழியைக் கேட்டவுடனே ஸ்ரீ சுக்கிரீவமகாராஜரும் விபீஷணாழ்வானும் திருவடிகளும் மற்ற வானரத்தலைவர்களும் சேனைகளும் சகலஜகத்காரணனாகிய ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருடைய சீர்பாதங்களை வணங்கி, தேகத்தோடு முத்தியை யடைந்தவர்களைப்போல ஆச்சரியபூதர்களாய் நின்றார்கள். நின்ற அவர்கள் யாவரையும் புஷ்பகவிமானத்தின்மேலேறும்படி சுவாமி ஆக்கியாபிக்கவே, அதிக விரைவாக சுக்கிரீவன் முதலானவர்களும் வானரப்படைகளும் விபீஷணரும் அவருடைய சேனைகளும் அந்த விமானத்தின் மீதேறி ஒருபுறத்தில் இருந்தார்கள். இவர்களேயல்லாமல் பதினாலுலோகங்களும் அவற்றிலுள்ள சராசரங்கள் யாவும் ஏறினபோதிலும் மேலுமேலும் வெற்றிடமிகவு மிருக்கத்தக்க அவ்வளவு பெருமையுள்ள விமானத்தினுடையஇயல்பை யோகீசுவரர்களாலே சொல்லவேண்டியதேயல்லாமல், இந்தப் பூமியின்கண் சொல்ல வல்லவர்கள் யாருண்டு?

இப்படி அந்தப்புஷ்பகவிமானத்தின் மேல் எழுபதுவெள்ளச் சேனைகளும் சூரியபுத்திரனும் லங்காதிபதியும்அவருடைய சேனையும் சூழ்ந்து உட்கார்ந்திருக்க, மத்தியில் ஸ்ரீராமாநுஜர் ஒருபக்கத்திலும் ஸ்ரீ சீதாபிராட்டியார் ஒருபக்கத்திலும்இருக்க, இவ்விருவருக்கு நடுவே ஸ்ரீராகவபிரான் எழுந்தருளினர். அந்தப் புட்பகவிமானமானது அப்பிராகிருத பரமபதத்தைப் போலத் தோன்றியது. ஹேயகுணங்களும் முதலும் நடுவும் முடிவுமில்லாமலும் நான்குவேதங்களுக்கு மெட்டாமலு மிருக்கிற ஸ்ரீபரஞ்சுடரைப்போல ஸ்ரீராகவபிரான் அந்த விமானத்தில் விளங்கினார். ஸ்ரீராமபத்திரருடைய அநுமதியினால் சூரியபுத்திராகிய சுக்கிரீவமகாராஜனும், இலங்காநகராதிபதியாகிய ஸ்ரீவிபீஷணாழ்வானும், வெற்றியே பூணத்தக்க இருவகைச்சேனைகளும், ஆஞ்சநேயர் சாம்பவர்முதலிய படைத்தலைவர்களும்மனிதவுருவங்கொண்டார்கள். மேற்றிசையிலே அஸ்தமித்த பின்பு கீழ்த்திசையிலே உதையஞ்செய்கின்ற சூரியன் தக்ஷிணாயனம் நீங்கி உத்தராயணத்துக்காக வடபாரிசத்தில் வருவதுபோல யாதொரு தடையுமில்லாமல் புட்பகவிமானமானது ஆகாயமார்க்கத்தில் தாவிவரும்போது, ஸ்ரீராமநாதர் இலங்காபுரியை வலம் செய்துகொண்டு போகவேண்டுமென்று நினைப்பதற்கு முன்னே விமானமானது அதிக விரைவாக கீழ்கோபுரவாயலில் வந்துவிட்டது.

அப்போது ஸ்ரீ சர்வசுவாமியானவர் ஸ்ரீ ஜானகிபிராட்டியாரைப் பார்த்து சொல்லுகின்றார். ஹே சீதா! இங்கேதான் பிரகஸ்தனென்னும் இராக்ஷசப் படைத்தலைவன் நீலனென்னும் வானரப்படைத்தலைவனால் உயிர்மாய்ந்தான். சுபாரிசனென்பவன் மாண்டதும் இவ்விடமேயாம். அப்பால் மேற்றிசைவாயலில் வந்தபோது, இங்கே இந்திரஜித்து ஸ்ரீ லக்ஷ்மணனால் கொலையுண்டான். பின்பு வடதிசைவாயலில் வந்தவிடத்து, இவ்விடத்தில் ராவணனனவன் சுக்கிரீவனால் தன் கிரீடத்தில் இழைக்கப்பட்ட சிரோரத்தினங்களை யிழந்து என்னாற் கொலையுமுண்டான். என்று சொல்லிக்கொண்டுவந்த ஸ்ரீராமச்சந்திரானவர் அங்கே தமக்குள் சற்றாலோசித்து, இந்த ராவணனனவன் பிரமவம்சத்தில் பிறந்தவனாதலாலும் இவன் நம்மாற் கொலையுண்டதினாலும் நம்மைப் பிரமஹத்தி தொடராவண்ணம் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து ஆராதிக்க வேண்டுமென்று நிச்சயித்தனர். அம்மாத்திரத்தில் புஷ்பகமானது பூமியிலிறங்கியது. உடனே ஸ்ரீராமருடைய கருத்தினையறிந்த விபீஷணர் சுக்கிரீவாதியர் கங்கைமுதலியதீர்த்தங்களையும் பத்திரபுஷ்ப தூபதீப பஞ்சகவிய பஞ்சாமிர்த முதலிய பூஜாதிரவியங்களையும் அளவற்றனவாய்க் கொண்டுவர, ஸ்ரீராமரானவர் நித்திய கர்மானுஷ்டானங்களை விதிப்படி முடித்து, சிவலிங்கப்பெருமானைப் பிரதிஷ்டைசெய்து பூசித்து, அப்பெருமானுக்குத் தமது அபிதானத்தால் இராமலிங்கமென்றும்அத்தலத்திற்கு இராமேச்சுரமென்னும் திருநாமஞ்சாற்றித்துதித்து விடைபெற்று யாவரோடும் புட்பக விமானத்தி லேறிப்போய்ச் சேதுவைச் சமீபித்து, ஹே ஜானகீ! உன்னைப்பிரிந்து பலநாள் கழிந்தபிற்பாடு நான் சுக்கிரீவனோடு சிநேகஞ்செய்து உன்னைத் தேடும்படி அநுமானை அனுப்ப, அநுமான் உன்னைக்கண்டுவந்து செய்தி தெரிவித்தபின், வானரசிரேஷ்டர்கள் கட்டியது இந்தச் சேதுவாகும். இந்தத் திருவணையினுடைய மகாத்துமியத்தைச் சொல்லப் பிரம்மாவினாலும்முடியாது. இதன்பெருமையை எவ்வளவென்று சொல்லுவேன்? ஹே மைதுலீ! பெற்ற தாய்தந்தையர்களுக்கும் குருவுக்கும் பெருங்குற்றத்தைச்செய்து, சுற்றத்தாரையும் அழித்த பாதகர்களும் வந்து தரிசிப்பார்களேயானால் உடனே தேவர்களாவார்கள். இந்திரன் மலைகளைச் சிறகரிந்தகாலத்தில் ஓடிவந்து ஒளித்த மைந்நாக பர்வதமும், பார்த்தவர்களுடைய பாபங்களை ஒழிக்கின்ற கந்தமாதன பர்வதமும், இங்கே யிருக்கின்றனபார். அவ்விரண்டு மலைகளும் இந்தச்சேதுவினுடைய சம்பந்தத்தால் பரிசுத்தம் அடைகின்றன.

நதிகளிலே சிறந்த கங்கை யமுனை கோதாவிரி காளிந்தி முதலிய நதிகள் யாவற்றிலும் மூழ்கினாலல்லாமல் பாபங்கள் நீங்கமாட்டாது. இந்தச்சேது அப்படியல்ல. தரிசனஞ்செய்த மாத்திரத்திலே எல்லாப் பாபங்களையும் ஒழித்துவிடும். பசுவையும் ஆசாரியரையும் முனிவர்களையும் ஸ்திரீகளின் கூட்டத்தையும் குழந்தைகளையும் ஏதோ ஒருபயத்தால் அஞ்சிவந்து அடைக்கலம் புகுந்தவரையும் கொலைசெய்த மகாபாதகர்கள் வந்து சேது ஸ்நானஞ்செய்வார்களேயானால், அவர்கள் தங்கள் பாதகங்களையெல்லாம் தொலைத்து தேவர்கள் வணங்குகின்ற தேவர்களாகி விடுவார்கள். என்று கூறிவந்த ஸ்ரீ சர்வசுவாமியானவர் அங்கு மரக்கலங்கள் தோணிகள் முதலானவைகள் உலாவவேண்டுமென்று திருவுளத்திலெண்ணித் தமது திருக்கையிலுள்ள ஸ்ரீகோதண்டத்தினது குதைநுனியால் கீறிவிட்டு, ஹே ஜனகமகாராஜ புத்திரியே! பஞ்சமா பாதகங்களைச் செய்தவர்களானாலும் இந்தத்திருவணைக்குச் சமீபத்தில் வருவார்களேயானால், இருபத்தொரு ஜனனமும் துக்கவியாதியில்லாதவர்களாய் தேவர்கள் விரும்புகின்ற சங்கநிதி பதுமநிதிகளைப்போலச்சிரேஷ்டர்களாவார்கள். செந்தாமரைமலரில் வசிக்கின்ற ஸ்ரீ சீதா! இந்தச் சேதுவைப்போலத் தான் ஆகவில்லையே என்கிற துக்கத்தால் கங்கையானவள் ருத்திரபகவானுடைய நெற்றிக்கண்ணின் நெருப்புச்சூட்டையும் சகித்துக்கொண்டு அவருடைய சடைக்காட்டிலிருந்து தவஞ்செய்கின்றாளென்போமானால், இந்தத் திருவணையினுடைய மான்மியத்தை எப்படிச் சொல்லக்கூடும்? என்று ஸ்ரீராமபிரானனவர் சேதுவின் பெருமை யாவுஞ் சொல்லிவிட்டு, ஹே வனிதாரத்தினமே!

இங்கேதான் சமுத்திராஜன் என்னுடைய பாணதீக்ஷணியத்தைப் பொறுக்கமாட்மல் என்னை வந்து சரணம்புகுந்தான். இது அகஸ்தியர் வாசம்பண்ணும் பொதியமலை. இந்த அகஸ்தியரால்தான் துவாதசாந்தபுரி யென்னும் திருவாலவாய்த் தலத்தின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானுடைய பிரபாவத்தைக்கேட்டு, அவரைப் பூசித்து வந்தனை முதலிய வழிபாடுகள்செய்து, இராவணாதியரைச் சங்கரித்து உன்னைமீட்டு வரும்படி வரம்பெற்றது. அந்தத்திருவாலவாய்த்தலமும் இதோசமீபித்தது. என்றுகூறி உடனே புஷ்பகவிமானத்தினின்றும் இறங்கி, தமது பிராட்டி முதலிய மற்றையரோடும் பொற்றாமரைத்தடத்துள்மூழ்கி, விபீஷண சுக்கிரீவாதியர்களாற் கொணர்ந்த கங்கை காவேரி முதலிய மகாதீர்த்தங்களாலும் கூவிளம் கொன்றைமுதலிய பத்திர புஷ்பங்களாலும் சிவாகமத்தின்விதிப்படி அபிஷேகாதி ஆராதனைகளைச் செய்து, தூப தீபாதி உபசாரங்களைக் கிரமப்படி நடாத்தி தமது பூர்வவிதிப்படி ஆயிரம் பொற்றாமரைகளால் சகஸ்திர நாமார்ச்சனைசெய்து முடித்து, திருமேனி முழுவதும் பூமியிற் பொருந்தும்படி பலமுறை சாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்தானபின் இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பிபலவாறு துதித்துவிடைபெற்று யாவரோடும் புஷ்பகவிமானத்திலேறிச்சென்று, ஹேசீதா! இது அழகப்பெருமான் எழுந்தருளிய திருமாலிருஞ் சோலைமலை. அது ஸ்ரீனிவாசப்பெருமான் எழுந்தருளியசேஷமலை. இதோபார் திருமாலுக்கும் இலக்குமிக்கும் உபாசனாமூர்த்தியாகிய தியாகராஜப்பெருமான் எழுந்தருளிய திருவாரூர். அதோபார்பூர்வம் அகஸ்தியரால் விண்டுவைச் சிவலிங்கமாக்கிய குற்றாலம். என்றின்னும் பலசிவஸ்தலங்களையும்விஷ்ணுஸ்தலங்களையுங்காட்டித் தரிசித்துகொண்டு போம்பொழுது சீதாபிராட்டியானவளவரைநோக்கி, சுவாமி! தேவரீருடைய தாசனாகிய அநுமானை எவ்விடத்திற்கண்டதென்றுகேட்டனள். அதற்கு சுவாமியானவர் பிராட்டியாரைப்பார்த்து,ஹேவனிதா! இதோ தோன்றுகின்ற கிட்கிந்தையென்னும் மலையிற்றான் அந்த உத்தமனைக் கண்டது. சமுத்திரங்களையெல்லாம் ஓரேபாய்ச்சலிற் பாயவல்ல வாலியென்னும் மகாவீரனை அவன் செய்த அபகிர்த்தியத்துக்குத் தண்டனையாகக் கொல்வித்து, தருமநூல்களைக் கற்றுணர்ந்து அதன்வழியே நடக்கின்ற மேலோர்களைப்போலும் நல்லொழுக்கத்தையுடைய சூரியபுத்திரனாகிய சுக்கிரீவமகாராஜன் பட்டத்தைப் பெற்று வாழ்கின்ற இடமும் இதுதானென்று சொல்லியருளினர். அதுகேட்ட பிராட்டியானவள் ஸ்ரீராமரை வணங்கி, சுவாமி! தேவர்களும் அஞ்சத்தக்க சேனைகள் சூழ்ந்துவர யானொருபெண் யாதொரு பெண்கள்கூட்டமில்லாமல் அயோத்தியாநகரத்திற்கு வருவேனேயானால் என்னுடைய பெண்மையானதுபெருமைப்படாது. ஆதலால் இந்தக் கிட்கிந்தையிலிருந்து சில ஸ்திரீகளை எனக்கு உசாத்துணையாக ஏற்றுதல் யுக்தமாகுமென்று சொன்னாள். அந்தச்சொல்லை ஸ்ரீராமபிரான் சுக்கிரீவருக்குச் சொல்லினர். அந்த மகாராஜாவானவர் திருவடிகளைப்பார்த்து, நீ சீக்கிரமாகப் போய் கிட்கிந்தையிலுள்ள ஸ்திரீகளை இராஜதரிசனத்துக்குப் போகும்முறைமை எப்படியோ? அந்த முறைமைப்படி கொண்டுவாருமென்று சொல்லினர். உடனே ஆஞ்சநேயரும் விமானத்தைவிட்டிழிந்து சென்று அங்குள்ள ஸ்திரீஜனங்களை அம்முறைமையாகக் கொண்டுவந்தார். அந்த வானரப்பெண்கள் யாவரும் விமானத்தின் மேலேறி தங்கள் அரசனாகிய சுக்கிரீவ மகாராஜரையும் ஸ்ரீஜானகிபிராட்டியாரையும் ஸ்ரீராமப்பிரபுவையும் நமஸ்காரஞ் செய்து நின்றவர்களாகி, தாம் கிட்கிந்தையிலிருந்து கொண்டுவந்த சுமங்கலத்துக்குரிய பொருள்களைப் பிராட்டியார் பக்கலில்வைத்து முறையாக வணங்கிச் சமீபத்தில் உட்கார்ந்தார்கள். ஸ்ரீசீதாபிராட்டியாரும் இனி யாதொரு குறைவு மில்லையென்றுதிருவுளமகிழ்ந்தனர். உடனேபுட்பகவிமானம் மனோவேகமாகச் சென்றது.

அப்படிச் செல்லும்போது ஸ்ரீராகவபிரான் சீதாபிராட்டியைப் பார்த்து, ஹேசீதா! நமக்கு எதிரே தோன்றுகிற நதியானது கோதாவிரி. அதற்குப் பக்கத்தில் தோன்றுகிற பர்வதத்திலேதான் நாமிருவரும் ஒருவரையொருவர் பிரிந்து துன்பங்களை யனுபவித்தது. ஓ தேனுண்ணும்படி

வண்டுகள்மொய்த்தொலிக்கின்றமலர்மாலை சொருகிய கூந்தலையுடைய ஜானகி! பெருமையாகிய விரதங்களை யனுசரித்து உபாசனை செய்பவர்களும், யாகங்களைச் செய்பவர்களும், எக்காலமும் இடைவிடாது வசிக்கின்ற தண்டகாரணியமோ அதோ தோன்றுகிறது. இதோ தேவர்களில் சிரேஷ்டனாகிய இந்திரனும்வணங்கத்தக்க சித்திரகூடம். இது பரத்துவாசரிஷியானவர் வாசம்பண்ணுகிற இடம் என்று சொன்னார். மின்னல்போலும் தேக காந்தியையுடைய ஸ்ரீஜானகிபிராட்டியாரை நோக்கி ஸ்ரீராமநாதரானவர் இப்படிச் சொல்லிக்கொண்டு வரும்போது பரத்துவாசமுனி சிரேஷ்டரானவர் ஸ்ரீராகவபிரான் வருகின்றாரென்றறிந்து எங்கள் உபாசனமூர்த்தியாய் எங்களை யாட்கொள்ளும் தேவதேவநாயகர் வருகின்றாரென்று மற்றமுனிவர்கள் யாவரும் சூழ்ந்துவர, எதிர்கொள்ளும்படி உத்தேசித்து, குடையும் கமண்டலமும் ஒருகையிற்பிடித்துமற்றொருகையில் வேதவிதிப்படியமைந்த திரிதண்டத்தைப் பிடித்து மகத்தாகியதவங்களெல்லாம் ஒன்றாகத்திரண்டு ஒருருவம்பெற்று எதிரேவருவதுபோல வருகின்றார்.

அப்படி அவர் வருவதை எள்ளின் பிளவளவாவது தினையளவாவது தயையோடு பொருந்திய சிநேகம் உள்ளத்தில் சிறிதுமில்லாத அரக்கர்களாகிய யானைக் கூட்டத்தைச் சங்கரித்து மேருமலையின் குகையில் வசிக்கின்ற சிங்கத்தைப்போல விளங்குகின்ற ஸ்ரீராமபத்திரர்கண்டு, புட்பக விமானமானது பூமியில் தாழும்படி நினைத்தனர். நினைத்தமாத்திரத்தில் சுவர்க்கலோகமானது பூமியில்வந் திறங்கியது போலப் புட்பகவிமானமானது பூமியில் வந்து தங்கியது. உடனே என்னை ஆளாகவுடைய சுவாமியானவர் விமானத்தைவிட்டிறங்கி விரைந்துசென்று, பரம வைதீகஸ்தராகிய பரத்துவாச முனிவருடைய பாதங்களுக்குத் தண்டன்சமர்ப்பித்தனர். இப்படி தண்டன்சமர்ப்பித்த தாமரைக் கண்ணராகிய ஸ்ரீராகவபிரானை அம்முனிவர் வாரியெடுத்தணைத்து உச்சிமோந்து சடைமுடியிலுள்ள தூசுகள் நீங்கும்படி ஆநந்தக்கண்ணீர் சொரிந்தனர். உடனே கறுத்தஅளகபாரத்தையுடைய ஸ்ரீஜானகி பிராட்டியாரும்ஸ்ரீராமாநுஜரும் தண்டன் சமர்ப்பித்துச் சமீபத்தில் நெருங்கினமாத்திரத்தில் அருமையாகிய தவசிரேஷ்டரானவர் ஆசீர்வசனங்களைச்சொல்லிச் சந்தோஷகரமாகிய உண்ணுதற்குரிய அமுதத்தை எதிர்வரக்கண்டாற்போல அவர்களைக்கண்டு மனம் குதூகலிந்து ஆனந்தக் கண்ணீர் பெருகினர்.

அதன்பின்பு சுக்கிரீவமகாராஜரும் விபீஷணாழ்வாரும் ஆஞ்சநேயரும் சாம்பவரும் மற்ற வானராளும் தம்மை வணங்குந்தோறும் ஆசீர்வதித்து, ஞானநாயகனைப் பிராட்டியாரோடு முனிவர்கூட்டங்கள் சூழ்ந்து வேதகோஷடஞ் செய்துவர, தம்முடைய ஆச்சிரமத்துக்குள்ளே அழைத்துச்சென்று, சூரியவமிசகுல திலகராகிய ஸ்ரீராமபத்திரர் முதலிய யாவருக்கும் செய்யவேண்டிய மரியாதைகள் யாவுஞ்செய்து ஆநந்தக்கண்ணீர் பெருக, ஸ்ரீசுவாமியினுடைய திவ்விய மங்களகர வடிவழகைச் சேவித்தும், அவருடைய அதிமானுஷ சேஷ்டிதங்களை நினைத்தும் ஒருவார்த்தை சொல்லுகிறார்: ஸ்ரீரகுவமிசகுலவீரனே! எம்மையொத்த முனிவர்களும், பிரமேந்திராதி தேவர்களும், மற்ற திரிலோகவாசிகளும் துன்பப்பட்டு வருந்தக் கடினசித்தமும், அதற்கு இசைந்த கொடுந்தொழிலுமுடைய இராவணாதி ராக்ஷசர்களிறந்து அவர்களுடைய உதிரமாமிசங்களை வாரியுண்டு களித்துப் பேய்க்கூட்டங்கள் நடனஞ்செய்யும்படி வளைந்த கோதண்டத்தை கையிற்பிடித்த எம்முடைய ஐயனே! உன்னுடைய சௌரியத்தை நாங்கள் எப்படிப் பட்டதென்று நிச்சயித்துச் சொல்லுவோம். விராதனையும்-கரனையும்-மாரீசனையும்-வெற்றிமிகுந்த கவந்தனையும்-ஏழுமராமரங்களையும்-வாலியினுடைய மார்பையும்-சமுத்திரத்தையும்-இராவணனுடைய மார்பையும்-கும்பகருணனுடையபெருவலியையும் ஒரேபாணத்தால் நாசப்படுத்தி சேதனர்களாகிய எங்கள் யாவரையும் இரக்ஷித்த எம்பெருமானே! உன்னுடைய சாமர்த்தியத்தைச் சொல்ல எங்களால் முடியுமோ? ஓ கௌசலாதேவியின் கண்ணே! முன்னே நாங்கள்செய்த அருந்தவத்தால் இந்தச் சித்திரகூடத்தில் வசித்திருந்து, இதைவிட்டுச் சென்று தென்றிசைக்கணு

ள்ள தீமைகள் யாவற்றையும் நீக்கி, மீட்டும் இந்தத் திசையைநோக்கி வந்து எம்முடைய பர்னசாலையில் எழுந்தருளினது வரையும் நடந்த உன்னுடைய பராக்கிரமாதிசயத்தையும் மற்றவற்றையும் நாங்கள் மறந்துவிட்டோமில்லை. ஆயினும் இன்றைத்தினத்தில் எங்களுக்கு நல்விருந்தாக இங்கிருக்கவேண்டும்? என்று கேட்டுக்கொண்டார். வேதங்களின்பரமார்த்தத்தை நன்குணர்ந்த பரத்துவாசரானவர் ஸ்ரீரகுநாயகரைப்பார்த்துமேலுஞ்சொல்லுகிறார் ஓ எங்கள் குலதெய்வமே! ஸ்ரீ ஜானகிரமணா! உண்மையையுடைய தேவர்களது துன்பத்தை ஸ்ரீகோதண்டத்தை வளைத்தொழித்துச் சர்வ லோகங்களையும் காக்கின்ற செந்தாமரைமலர்போன்ற கண்களையும், மரகதரத்தினம்போன்ற திருமேனியையுமுடைய தீனபந்துவே! ஸ்ரீபரதாழ்வானுடைய நிலையைச் சற்றுச் சொல்லுகிறேன் கேட்டருளவேண்டும். ஸ்ரீ தசரதாத்மஜனே! நீ தென்றிசையைச் சென்றபின் உன்னுடைய பிரிவால் ஸ்ரீ பரதாழ்வான் தேகம் வெயர்த்தும், துன்பக்கண்ணீர் சொரிந்தும், நல்வினை தீவினைகளோடு ஸ்ரீபகவத் தாசர்களுக்குச் செய்யும் வைதிக கைங்கரியத்தையும் வெறுத்தும், சித்தப் பிரமை யடைந்தும், மறந்தொரு வேளை உலகத்தை பார்ப்பதாயிருந்தால் தென்றிசையையல்லாமல் மற்ற திசைகளை பாராமலும், பயமும் துக்கமும் ஒருருவங்கொண்ட தென்னும்படியாய்த் தோன்றியும் இருக்கிறான்.

இம்மட்டுந்தானோ! இந்திரியங்களை நிக்கிரகித்து கனி காய்களை ஆகாரமாகப் புசித்தும், நாடுகளிற்சென்று குதிரைகளுக்காகக்கொண்டுவந்த புல்லைப்பரப்பி அதன் மேற் படுத்தும், அயோத்திமாநகரத்துக்குள் பிரவேசியாமல் நந்திக்கிராமத்தில் வாசஞ் செய்துக்கொண்டு உன்னுடைய திருநாமத்தை மறவாமல் இரவும் பகலும் வாயாற் சொல்லிக்கொண்டு மிருக்கிறான். என்னப்பனே, ஸ்ரீராமபத்திரா! இராக்ஷசகுலநாயகனுடைய இருபது நீலகுலாசலங்களையொத்த தோள்களையும், பத்துச் சூரியர்களையொத்த முடிகளணிந்ததலைகளையும் துண்டித்துத்தள்ளிய வீரநாயகா! இதுகாறும் நாங்கள் உன்னைப் பிரிந்ததுமுண்டோ? உன்னுடைய பராக்கிரமாதிசயலீலைகளையும், உன் பக்தகோடிகளுடைய இருப்பையும், சார்வதா ஞானதிருஷ்டியா லறிந்துகொண்டிருக்கிறோம். இம்மாத்திரமேயல்லாமல் உன்னை எங்களுடைய இருதயகமலத்தில்சாக்ஷாத்கரித்துக்கொண்டு நித்தியானந்த அநுபவஞ் செய்துகொண்டிருக்கிற நாங்கள் உன்னை எவ்விதத்தில் பிரிந்தவர்களாவோம்? ஆதலால் உன்னை நாங்கள் எப்போதும் பிரிந்தவர்களல்லோமென்று கூறினர்.

அந்தப் பரத்துவாசமுனிவரைத் தம்முடைய அவதாரத்துக்குத் தக்கபடி நடிக்கின்ற ஸ்ரீராகவபிரானனவர் மகா சந்தோஷத்தோடும்பார்த்து, ஓ சங்கரபகவானும் நான்முகக்கடவுளுமே புகழ்தற்குத்தகுந்த மாதவ சிரேஷ்டரே! உம்மை வணங்கி உம்முடைய கிருபைக்குப் பாத்திரவானாகி உயர்ந்தேன். அதுகாரணத்தால் எனக்குச் சமானமான புருஷன் நானேயல்லாமல் ஒருவருமில்லையென்றுசொல்லினர். பின்பு பரத்துவாசமுனிவரானவர் ஸ்ரீராமபத்திரரைக் கருணையாகப்பார்த்து, ஸ்ரீராமநாதா! உனக்கு என்னவரம் என்னுற் பெற்றுக்கொள்ளவேண்டுமோ? அந்த வரத்தை என்னைக் கேட்பாயாக வென்றார். அதைக் கேட்டருளிய ஸ்ரீராமசுவாமியானவர் அவரைத்தொழுதெழுந்து, இந்த வானரர்கள் தாங்கள் இஷ்டப்பட்டுச் சென்ற காடுகளிலெல்லாம் மழைகாலத்திற்செழித்து உண்டாகுவதுபோலக் காய்கனிகளும் கிழங்குகளும் மதுரமாகிய தேனும் நீரும் நிறைந்திருக்கவும், அவர்கள் சுகசீவிகளா யிருக்கவும் வரத்தைத் தயைசெய்யவேண்டுமென கேட்டருளினர். அந்த முனிவரும் அப்படியே ஆகக்கடவது? என்று ஆசீர்வதித்து ஓ எங்கள் ஐயனே ஸ்ரீரகுராமா! உனக்கும் உன்னுடைய சேனைகளுக்கும் விருந்து செய்கிறேனென்றுகூறி, ஆகவநீயம்-தட்சிணக்கினியம் - காருகபத்தியம் என்னும் மூன்று தீயாலமைத்த யாகத்தில் வேதமந்திரங்களைச்சொல்லி அவிர்ப்பாகஞ் சொரிந்தார். இப்படி ஆகுதிபெய்தமாத்திரத்தில் யாதொரு குறைவுமில்லாமல் சுவர்க்கலோகத்திலுள்ள எல்லாவளப்பங்களும் ஒருமிக்கவந்து அங்கே இறங்கியதுகள். ராகவபிரான் அரசர்முதல் அடியார்கள்வரை

ஒரு பேதமுமில்லாமல் அபரிமிதமாக அந்தவளப்பங்களை அநுபவிக்கக்கண்டு, பிற்பாடு தாம் அறுசுவையுள்ள உண்டியை அமுதுசெய்யப் போகும்போது திருவடிகளை அழைத்து, ஓ அநுமானே! நாம் அயோத்திக்கு வருவதற்கு முன்பாக நீசென்று ஸ்ரீபரதாழ்வானைக்கண்டு எம்முடைய க்ஷேமத்தைத் தெரிவித்து, அந்தப்பரதன் தான் விழுந்திறக்கும்படி தீமூட்டியிருப்பான். அதைஅவித்துவிட்டு அவனுடைய எண்ணத்தையும் அவனிருப்பையும் நீ அறிந்துகொண்டு எம்மிடம்வந்துசேரவேண்டுமென்றுசொல்லித் தமது விரலாழியையுங் கொடுத்தனுப்பினர். உடனே அஞ்சனை தேவிபுத்திரர் தம்முடையபிதாவினுடைய வேகமும் தம்முடைய சுவாமியினது பாண வேகமும் மனோவேகமும் பின்னிடும்படிச் சென்று, கங்கையின் கரையிலுள்ள குகப் பெருமானுக்கு ஸ்ரீராமபத்திரருடைய வருகையையும் அவரெழுந்தருளியிருக்கும் ஆச்சிரமத்தையும் தெரிவித்து ஆகாயமார்க்கமாகச் சென்றார். அனந்த கலியாணகுண நிலயமாகிய ஸ்ரீராகவபிரான் தெற்குத்திக்கைநோக்கிச்சென்ற செய்திகள் யாவற்றையும்சொன்னோம். எம்பெருமானவர் அக்காலத்தில் நான் பதினான்குவருஷமானவுடன் அயோத்தியா நகரத்துக்குத் திரும்பி வருகிறேனென்று சொன்னதை விசுவசித்திருந்த ஸ்ரீபரதாழ்வானுடைய நிலையை இனி எடுத்துச்சொல்லுவோம்.

ஸ்ரீ சர்வேசுரனாகிய ஸ்ரீ ராகவபிரான் ஆரணியத்துக்கெழுந்தருளும்போது சித்திரகூடத்தண்டைவந்து கண்டுபோன ஸ்ரீ பரதாழ்வானவர் தமக்கு அந்தச் சுவாமியானவர் அருளிய திருப்பாதுகையை நந்திக்கிராமத்தில் சிங்காதனத்தின்மேல் எழுந்தருளச்செய்தும், பின்பு ஸ்ரீசத்துருக்காழ்வானைநோக்கி, ஹே சத்துருக்கா! நீ ஒரு ஏவலாளியைப்போல் இருந்துக்கொண்டு அயோத்தியா நகரத்திலுள்ள அந்தணர் முதலிய வருணத்தார் துன்பப்படாதவண்ணம் காத்திருவென்று ஆக்கியாபித்துத் தாமும் அங்கே ஒருவரோடும் வார்த்தையாடாமல் இந்திரியங்களை நிக்கிரகித்துவிட்டுத் தமது தமையனாருடைய திருப்பாதுகைகளைத் தியானித்து அர்ச்சனை செய்துகொண்டும், பிரிவென்கிற துக்கத்தினால் உடல் மெலிந்து எலும்புருவமாய் நின்று அவரைப்பார்ப்போர் அன்பென்பது ஒருருவங்கொண்டதுபோலத் தோன்றுகின்றாரென்னும்படியாகக் காணப்பட்டும், ஸ்ரீ சுவாமியானவர் ஆரணியத்துக்குச் சென்றதை நினைக்கும்போதெல்லாம் கண்களில் நீர்பெருகிக்கொண்டும், காய் கனி கிழங்குகளையல்லாமல் மற்றொன்றையும் புசியாமலும், ஸ்ரீராமபிரான் நம்மையாட்கொள்ளும்படி வருகிறதிசை இதுவன்றோவென்று தென்றிசையையேநோக்கிக்கொண்டு உயிர்போவதுவருவதுமாகிமகாதுக்கத்தை அநுபவித்தும், என்னுயிர்க்கும் உயிராகிய ஸ்ரீரகுநாயகன் திருமுடிசூட்டியபின் அல்லாமல் என் துன்ப மொழியமாட்டாதென்று தமக்குள் நினைத்துக்கொண்டும் இருந்தனர்.

இப்படிப்பட்ட துக்காக்கிராந்தராயிருக்கின்ற ஸ்ரீபரதாழ்வானவர் ஒருநாள் திருப்பாதுகைகளை அர்ச்சிக்குங்காலத்தில் ஸ்ரீராமபத்திரரானவர் அயோத்திக்குத் திரும்பிவருகிறேனென்று சொல்லிய திருவாக்கை நினைத்து, அந்தநாள் என்றைக்கோவென்று ஜோதிஷசாஸ்திரிகளை வரவழைத்துக்கேட்டபோது அவர்களும் இன்றைக்குத்தானென்று சொன்னார்கள். அந்தச் சொல்லைக் கேட்டமாத்திரத்தில் ஸ்ரீரகுநாயகர் திரும்பிவருகிறேனென்ற சொல்லை நினைத்துக்கொண்டு, கொலையுண்டவர்களைப்போலச் சுவாசம் அடங்கிப் பூமியில் வீழ்ந்து மறுபடியும் எழுந்து செந்தாமரைமலரைவென்ற கண்களில் தாரைதாரையாக நீர்சொரிந்து, உடலினின்றும் பிராணன் போவதும்வருவதுமாய்ஊஞ்சலாட அதிக மரணவஸ்தையடைந்து அங்கிருந்தமுனிவர் முதலானவர்களைப்பார்த்து, ஓ முனிவர்களே! பொய்சொல்லவறியாத எங்களருந்தெய்வமாகிய ஸ்ரீராமநாதர் எனக்குச்சொல்லிவிட்டுப்போன நாட்கெடுவையும் நான் படுகிற துன்பத்தையும், எங்கள் தாயாகிய கௌசலா தேவியினுடைய பிரமாதிசயத்தையும் சகித்துக்கொண்டு வனத்திலேயே வாசஞ்செய்யமாட்டார். யான்செய்த பாப கர்மபலனால் ஏதோ ஒருபகை அவ்விடத்திலும் சம்பவித்து அதனால் காலவிளம்பரம் நேரிட்டிருக்கலாமென்று தேம்பித்தேம்பியழுவார். ஆ! ஆ! எங்களுடைய வீர

சிகாமணியாகிய ஸ்ரீகோதண்டபாணிக்கெதிரே திரிமூர்த்திகளாயினும், சுவர்க்கமத்தியபாதாளங்களிலுள்ள எவர்களாயினும், ஆயுதமெடுத்துவந்து பிராணபீதியில்லாமல் நிற்பார்களோ? அவ்வளவு சக்திமான்களல்லர்களே என்று தாம்கொண்ட சந்தேகத்தை நிவர்த்திப்பார். நமது தம்பியாகிய பரதனென்பவன் ராச்சியாதிகாரத்தில் இப்போது இச்சையுடையவனுயிருப்பான். அப்படி இச்சையிருக்கிறபட்சத்தில் அந்த இராச்சிய பட்டாபிஷேகத்தை அவனே அடையட்டும். நமக்கு வேண்டியதில்லை. இந்தக்காட்டி லிருந்துகொண்டு தவஞ்செய்வதே நல்ல ஆத்துமபலனென்று தமக்குள் ஆலோசித்துக்கொண்டு வனத்திலேயே இருந்துவிட்டாரோவென்று மூர்ச்சையடைவார். நான் பிராணனை மாய்த்துக்கொள்வதினுல் இங்குள்ள குடும்பத்தார்யாவரும் உயிரை மாய்த்துக்கொள்ளுவார்கள். அப்படி என்குடும்பத்தை நான் கொலைசெய்பவனுனுலும் ஆகக்கடவேன். அந்த ஸ்ரீராகவபிரானுனவர் வனத்திலேயே வாசஞ்செய்தாலும்செய்யட்டும். அல்லது அயோத்தியாபுரிக்குவந்து அரசுசெய்தாலும் செய்யட்டும். எங்களாண்டவர் வருவார் வருவாரென்று நினைத்து இந்தத் துக்கத்தில் வருந்தமாட்டேன், என்னுயிரோடு என் துக்கத்தைப் போக்கடிப்பேனென்ருர்.

இப்படிப் பலபலவிதமாகச் சொல்லிய ஸ்ரீபரதாழ்வானுனவர் ஸ்ரீசத்துருக்கனை என்னிடம்வரச்சொல்லுங்களென்று தூதரையனுப்பினுர். அந்தத்தூதர்கள்போய்ச் சொன்னமாத்திரத்தில் ஸ்ரீசத்துருக்காழ்வானுனவர் விரைந்துவந்து தமது தமையனுருடைய சீர்பாதங்களை வணங்கினுர். உடனே வணங்கிய திருத்தம்பியாரை ஸ்ரீபரதரானவர் கண்ணீரொழுகி வடிகின்ற தமதுமார்பில் இறுகத்தழுவி, ஓ என்னையனே சத்துருக்கா! இப்போது நான் உன்னிடத்திற் கேட்டுக்கொள்ளும்வரமோ ஒரு குற்றமுமில்லாதது. ஆகையால் நீயும் சம்மதித்துக் கொடுக்கவேண்டியதே; அந்தவரம் என்னவென்று கேட்பாயாகில், நம்முடைய தெய்வநாயகனுகிய ஸ்ரீராகவப்பெருமானுனவர் முன்னே தாம் திருவாய்மலர்ந்தருளிப்போனநாள் இன்ருகும். இத்தினத்தில் எழுந்தருளாமையால் இனித்தீயை மூட்டி அதிற்குதித்து இறந்துவிடுகிறேன். அயோத்தியாநகரத்திலுள்ளவர்கள் வருந்தாதபடி நீ இராஜ்ஜியபட்டாபிஷேகனுகி அரசுசெய்யக்கடவாய். இதுதான் வேருென்றுமல்ல. இதைத்தடுக்காதேயென்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீபரதாழ்வானுனவர் இந்தச் சொல்லைச் சொன்னமாத்திரத்தில் ஸ்ரீசத்துருக்கப்பெருமான் தமது கைகளாலிரண்டுகாதுகளையு மூடிக்கொண்டு திடுக்கிட்டு, கண்களும் மனமும் நடுநடுங்கி, விஷத்தையுண்டவரைப்போல அதிவேதனைப்பட்டுச் சோர்ந்துவிழுந்து புலம்பிக்கதறிப் பெருமூச்செறிந்து, மறுபடியு மெழுந்து மனங்கொதித்து ஸ்ரீபரதாழ்வானைப் பார்த்துச் சொல்லுகிருர்.

ஸ்ரீராகவபிரான் எழுந்தருளவில்லையென்று கவலைகொண்ட என்னையனே! அடியேன் தேவரீர் விஷயத்தில் என்ன அபசாரப்பட்டேன்? ஒரு தம்பியானவர் திருவயோத்தியாபுரியென்னும் பூமகளைக் கைவிட்டுக் காட்டையாளும்படியாகச் சென்ற தன் தமையனுருக்குவேண்டிய கைங்கரியத்தைக் குறைவின்றிச் செய்யப்போனுர். காட்டுக்குச்சென்ற தமையனுனவர் இன்னநாளில்வருகிறேனென்றுசொல்லிப்போன தவணை தப்பிப்போச்சென்று ஒரு தம்பியானவர் தம்முடைய உயிரை மாய்த்துக்கொள்ள எத்தனப்படுகிருர். இவற்றையெல்லாங்கண்டு நான்றுகொண்டு பிராணனை விடாமல் நான்தானே அயோத்தியாபுரியை அரசாள்விருக்கின்றேன்? ஆ! ஆ! என்னுடைய யோக்கியதை நன்ருயிருக்கின்றது. இதென்ன ஆச்சரியம்! என்னையனே! ஸ்ரீராகவரானவர் காட்டுக்கெழுந்தருளியபின் நகரத்துக்குள் பிரவேசித்து வாழ்ந்துகொண்டிருந்தார் ஸ்ரீ பரதமகாராஜரென்று உலகத்தார் சொல்லவொட்டாமல் நீர் அயோத்திக்குப்புறம்பிலேயேயிருந்து இந்த அரிய தவத்தைச் செய்துகொண்டிருந்தீர். உமக்குப்பின் பிறந்தவனுய் இந்தச் சத்துருக்கனென்கின்ற ஒரு அடியானிருந்தபோதிலும்இப்படிப்பட்ட சொல்லைச் சொல்லலாமோ? தேவரீர்தீயிற்குதித்துப் பிராணனை மாய்த்துக்கொண்ட பிறகு நான் உயிரோடிருந்தேனுகில் அதுவும், அக்கால் ஒரு குடையின்கீழ் இந்தப் பூமண்டலங்களை ஆளுவேனுகில் அதுவும்

பரதன் அக்கினிப்பிரவேசம்.

மாருதி பரதனுக்கு சங்கதிகளைக்கூறல்.



பரத்துவாசர் விருந்திடல்.

இராமனாதியரை குகன் காணுதல்.

ஒன்றுக்கொன்று சமானமானதேயல்லாமல் வேறன்றே? என்று சொன்னார்.

இப்படிச்சொல்லி முறையிட்ட ஸ்ரீசத்துருக்காழ்வானை ஸ்ரீ பரதாழ்வானனவர் நோக்கி, ஆ தம்பி, சத்துருக்கா! நம்முடைய பெருமானனவர் இதுபரியந்தம் வாராமல் தாமதித்திருக்கிறார். இங்கே நாமும் அப்படியேசர்வசித்தமாயிருக்கிறோம். நாம் இறந்துவிட்டால் இந்தப்பூமி அரசனில்லாமலலைந்துபோமல்லவா ? அதை அந்தக் காருண்ணியமூர்த்தியார் கேள்விப்பட்டு ஆரண்ணியத்திலேயே இருக்கமாட்டார். உடனே வந்து இவ்வரசாட்சியை ஏற்றுக்கொள்ளுவார். அவர் இப்போது செய்கிற மாறுபாடு நிலைபெறாது. ஆகையால் என்னப்பனே! சீக்கிரமாகச்சென்று அக்கினியை மூட்டக்கடவாயென்று ஆக்கியாபித்தார். அப்போது இச்செய்தியை அயோத்திமாநகரத்திற் சொன்னவுடனே ஸ்ரீபரந்தாமனைப்பெற்ற கற்பிற் சமானமில்லாத ஸ்ரீகௌசல்யாதேவியார் வயற்றிற் மோதி அடித்துக்கொண்டு புத்திரப்பிரம்மையடைந்தழுது, ஐயோ! என்மகனே! நீ இறப்பாயேயானால் உடனே இந்த அயோத்தியிலுள்ள ஜனங்கள் யாவரும் இறந்துபோவதற்குச் சந்தேகமில்லையே? என்று துக்கமே உருக்கொண்டு நடந்தது போல விரைந்தோடி ஸ்ரீ பரதாழ்வானை விலக்கும்படி சென்றார். மற்ற மந்திரிமார்களும், சேனாநாயகர்களும், பிராமணர்களும், எல்லா ஸ்திரீகளும், அந்த நகரத்திலுள்ள யாவரும் கைகளைத் தங்கள் தலைமேல்வைத்து வாய்விட்டுக்கதறிக்கொண்டு சூழ்ந்து சென்றார்கள்.

அங்கே இந்திரன் முதலாகிய தேவர்களும் அவர்களுடைய தேவிமார்களும் முனிவர்களும் ஸ்ரீ பரதாழ்வானுடைய இருப்பைநோக்கி துதிசெய்ய விரைந்து சென்ற ஸ்ரீகௌசல்யாதேவியானவள் தம்முடைய கூந்தலானது அவிழ்ந்தலையவும், தேகம்தடுமாறவும், கண்கள் நீர்சொரியவும் திடுக்கிட்டு ருத்திரபூமியில் சித்தப்படுத்தியிருக்கிறநெருப்பில்விழப்போகின்ற தமது திருக்குமாரருக்கும் தீய்க்கும் குறுக்கே போய் நின்றார்.

அப்படி நின்றதிருத்தாயாருடையசரணகமலங்களுக்கு ஸ்ரீபரதாழ்வானனவர் தண்டன் சமர்ப்பித்தனர். தண்டன் சமர்ப்பித்த குமாரனை ஸ்ரீ கௌசல்யாதேவியானவள் வாரியெடுத்து, உறுதியாக துணைப்பிடித்துக்கொண்டு சொல்லுகிறார். அப்பா பரதா! சக்கரவர்த்தியார் நம்மைவிட்டுப் பிரிந்து மரணத்தை யடைந்ததும், ஜேஷ்டபுத்திரனாகிய ஸ்ரீராமன் நாம் படுகிற துன்பமொன்றையுங் கவனியாமல் காட்டுக்குச் சென்றதும், முன்னே நாம்செய்த தீவினைப்பயனாகும். பதினான்குவருஷம் கழிந்தபின் வருகிறேனென்று சொல்லிப்போய் அந்த ஸ்ரீராகவன் இன்னம் வராமலிருப்பதும், நாம்செய்த பாபகர்மபலந்தான். நீ அதை நினைத்துக்கொண்டு இப்படிச்செய்யத் தலைப்பட்டாய். நீ தீயிற்குதிக்க நினைப்பாயேயானால் இந்தக் கோசலதேசமுழுமையும், அரசர்களும், சதுரங்கசேனைகளும், அக்கினிப்பிரவேசஞ் செய்வார்கள். நானும் சுமித்திராதேவியும், அந்தக்கைகேசியல்ல, நாங்களும் நெருப்பில் மூழ்குவோம் இவ்வளவிலே போகுமோ? தருமதேவதையும் தீயிற்குதித்து மாய்ந்துவிடும். உலகங்களும் தங்கள் நிலைகுலைந்து போகும், ஓ என்னருங் குழந்தையே! என் அப்பா! ஸ்ரீ பரதா! மநுஸ்மிருதியிற் சொல்லப்பட்ட சத்கருமங்கள் யாவும் என்னுடைய ஒழுக்கமேயென்று நாங்கள் நினைத்திருக்கிறோம். உன்னுடைய அருமையைச் சிறிதும் நீ அறிந்து கொள்ளவில்லை. உன்னுடைய பெருங்கீர்த்தியானது ஊழிகாலம் வந்து போயினும் அழியுமோ? அநேக ஸ்ரீராமர்களானபோதிலும், உன்னுடைய கருணையை யோசித்துப் பார்த்தால், உனக்குச் சமானமாவார்களோ? இவ்வுலகஞ்செய்த புண்ணியமாகிய உன்னுடைய உயிர்போகுமேயானால், தேவர்களாயினும், இந்த மனுஷர்களாயினும் உயிரோடிருப்பார்களோ? அந்த ஸ்ரீராமபத்திரன் இன்றைக்கு வராமற்போனால் நாளையாவது வருவான். உனக்குச் சொன்னசொல்லைத் தவறிப்போவானென்று நினைக்கவேண்டாம். நாளைக்கும் வாராமல் தப்பிப்போவானேயானால் நாம் எல்லோரும் மரணமடைவது திண்ணந்தான். ஓ தருமசொரூபி நீயேயல்லாமல் வேறில்லை யென்னும்படியா யிருக்கின்ற ஸ்ரீபரதா! ஒப்பற்றபரதன் இறந்துபோனானென்று துக்கித்து நெடுநாள் வாழவிருக்

கிற உயிர்கள்யாவும் இறக்கும்படி செய்யப் போகிருயோ? அப்படிச் செய்யாதே! இறத்தலும், சிலர் விட்டுப்பிரிதலும், ஒன்றின் மேற்கொண்ட மோகத்தினுலே பிறத்தலும், சேதனர்களுக்குக் கடமையென்றுணர்ந்து, இந்த லோகபந்தத்தில் நின்று நீங்குதல், அல்லது யான் எனதென்னும் இருவகைப் பற்றையும் துறத்தல்; இவைதான் ஒருபுருஷனுக்குத் திடமென்று சொல்லப்படுவதென்று சொல்லினுர்.

இந்தப்பிரகாரம் நீதிகளை எடுத்துச் சொன்ன ஸ்ரீகௌசல்யாதேவியைப் பார்த்து ஸ்ரீபரதாழ்வானுனவர் சொல்லுகிருர். அம்மா என் தெய்வமே! புத்திரனுனவன் சொல்லைத் தடுத்துவிட்டானென்று என் மேலும் நிஷ்ரேங்கொள்ளாதேயும். யான் முன்னே செய்துகொண்ட சபதம் தவறுவேனேயானுல், நம்முடைய சூரியவமிசத்தாருடைய நல்லொழுக்கத்துக்குக் குற்றம் நேரிடுமல்லவா? அப்படி நம்முடைய குல தர்மமானது அழியும்படியாக என்பிராணனை விரும்பி வாழமாட்டேன். முன்னே யான் செய்துகொண்ட சபதத்தையே செய்து முடிப்பேன். தாம் சொன்னசொல் தப்பிப்போகாமல், யதார்த்தத்துக்குத் தம்முடைய உயிரைக்கொடுத்து, ஸ்ரீ விஷ்ணு லோகத்தை யடைந்த சக்கரவர்த்தியாருக்கு, நானும் புத்திரன்தானே? அப்படியிருக்க, நான் சொன்னசொல்லைத் தவறிப் போகலாமோ? மூத்தோர்சொன்ன சொல்லின்படித் தாம் சங்கற்பித்துக்கொண்டது பிசகாமல், நடப்பது ஸ்ரீகாகுத்தராகிய ஸ்ரீ ராமபிரானுக்கு மாத்திரந்தானு கடமை? மற்றப் புத்திரர்கள் அப்படிநடப்பது நீதியல்லவோ? ஸ்ரீ சக்கரவர்த்தியாருடைய ஜ்யேஷ்டபாரியாகிய என்தாயே! தாயினுடைய சொல்லின்படி நடத்தலும், பிதாவினுடைய வாக்கின்படி நிறைவேற்றலும், தாய்மார் தம்பிமார்களிடத்து வைக்கவேண்டிய அன்பை பற்றில்லாமல் ஒழித்தலும், சர்வசுவாமியாகிய ஸ்ரீராமபிரானுக்கே கடமை. நானே அப்படியொன்றும் செய்யவில்லை. நான் இன்னது செய்வேனென்று ஆதியிற்சொல்லிக்கொண்ட சொல்லை இந்தத் தீயில்வீழ்ந்து மாண்டு காட்டுவேனேயானுல் ஒருகுற்றமும் இல்லாதவனுவேன். என்று சொல்லிவிட்டு மூட்டியிருக்கிற நெருப்புக்குச் சமீபத்தில்போய், அயோத்தியாபுரி ஜனங்களும் மற்றவர்களும் கோவென்று முறையிட்டு அழுதுகொண்டு பின்தொடரத் தாம் அந்த அக்கினிக்கெதிரே நின்று, ஸ்ரீராமருடைய திருவடிகளைத் தியானித்துப் பூசைசெய்கிருர்.

இப்படிப் பூஜைசெய்கிற ஸ்ரீபரதாழ்வானுக்கெதிரே ஸ்ரீ அநுமானுனவர் பிராமணப் பிரமசாரியைப்போல வந்து, நம்முடைய ஐயனுனவர் இதோவந்தார். யாவரும் பூசிக்கப்பட்ட ஸ்ரீராகவபிரானுனவர் இதோ வந்தார். உண்மைக்கும் உண்மையாய்நின்ற உம்முடைய உயிர்நீங்கினுல் அந்த ஸ்ரீராமப்பிரபுவானவர் உயிரோடும் இருப்பாரோ? என்று ஓயாமற் சொல்லிக்கொண்டு வந்து அந்த ஜனநெருக்கங்களுக்குள் பிரவேசித்து, எரிகின்ற நெருப்பை தமது கையினுல் அவித்துக் கரியாக்கிவிட்டார். இவ்வாறு தீயைக் கரியாக்கிவிட்ட வாயுபுத்திரரானவர் ஸ்ரீபரதாழ்வானுடைய சீர்பாதங்களை நமஸ்கரித்து எழுந்து வாயைக் கையாற்பொத்தி வளைந்துநின்று, ஸ்ரீபரதமகாராஜரே! நீர் அங்கீகரிக்கத்தக்கது ஒரு சொல்லுண்டு அதைக் கேட்பீராக. முன்னுலே ஸ்ரீராமச்சந்திரரானவர் தாம் வருகிறதாகச் சொல்லிப்போன நாள் முடியவில்லை, இன்னம் நாற்பது நாழிகையிருக்கிறது. அப்படி யில்லாமற்போனுல், உமக்கு முன்னேதானே நான் நெருப்பை மூட்டிப் பிராணனை மாய்த்துக் கொள்ளுகிறேன். இன்று இராத்திரியுங் கழிந்து நாளை உதயம்வரையில் அடியேன்சொல்லை நம்பியிரும். என்சொல் தவறிப்போகுமேயானுல் நீரும் இந்த ஜனங்களும் பிராணனை மாய்த்துக்கொள்ளுங்கள். நம்முடைய நாயகருக்குப் பரத்துவாசமுனிவர் விருந்துசெய்யும்படி வேண்டிக்கொண்டு அவரை யங்கே நிறுத்திவிட்டனர். அல்லாமற்போனுல் உம்மிடத்தில் வராமற் காலவிளம்பரமும் செய்வாரோ? இன்னமொன்று அடியேன் சொல்லக்கேளும். ஓ யாதொரு குற்றமுமில்லாத பரிசுத்த இருதயத்தையுடைய ஸ்ரீபரதமகாராஜரே! தேவதேவர்களுக்கு நாயகனுகிய ஸ்ரீராகவபிரானுனவர் அதிகிருபையோடு கொடுத்த பெரியவடையாளம் ஒன்றுண்டு. அதை அடி

யேன் கொண்டுவந்தேன். நீர் அதைப்பாரும். என்று கூறி ஸ்ரீ சுவாமியினுடைய மோதிரத்தைக் காட்டினார். காட்டிய மோதிரமானது ஸ்ரீபரதாழ்வானுக்கும், ஸ்ரீசத்ருக்காழ்வானுக்கும், திருவயோத்தியாபுரியிலுள்ளவர்களுக்கும், விஷத்தால்பிராணன்போகின்ற ஒருவனுக்குப் பிரயோகித்த நல்ல மருந்தைப்போலாயிற்று. முன்னாலே அழுதுகொண்டிருந்த வாய்களெல்லாம் சந்தோஷ ஆரவாரஞ்செய்தன. தாரைதாரையாய் நீர் பெருகிக்கொண்டிருந்த கண்களெல்லாம் அந்தநீரைச் சொரிந்ததில் பூமியிலே வளைந்து மோதிக்கொண்டிருந்த தலைகளெல்லாம் ஸ்ரீ ஆஞ்சநேயருக்குக் கைகளைக்குவித்துத் தண்டன் சமர்ப்பித்துக்கொண்டு மேலே உயர்ந்தெழுந்தன. ஸ்ரீபரதாழ்வானனவர் அந்தத் திருவிரலாழியை வாங்கித் தமதுதிருமுகத்தில் அணைத்துக்கொண்டு, இந்த மோதிரத்தைக்கண்டு பூரிப்பதற்கு நம்முடைய பரதமகாராஜருடைய தேகம் போதுமானதோவென்று சொன்னவர்கள் நாணும்படி தேகமிகவும் பூரித்து, ஸ்ரீபரதாானவர் தம்மை வணங்குகின்ற அஞ்சனபுத்திரரை வணங்கிக் குதித்துக்குதித்துக் கூத்தாடினார். ஸ்ரீராகவபிரானனவர் தம்மைப் பிரிந்துபோனதுமுதல் அவருடைய பிரிவின் துன்பத்தையே யல்லாமல் யாதொரு சந்தோஷத்தையும் அனுபவிக்காமையாலே வாயாலூதினால் பறந்துபோகத்தக்க நிலையிலிருந்த ஸ்ரீபரதாழ்வானுடைய திருமேனியானது, இவர் நம்முடைய பரதமகாராஜரல்லர் யாரோ அந்நியரென்னும்படி பூரிப்பினால் பருத்தது. அவருடைய இரண்டுதோள்களும் திக்குகளை யளாவும்படி வளர்ந்ததுகள். இப்படிப் பூரித்துநின்ற ஸ்ரீபரதாானவர் ஸ்ரீராமபத்திரர் தம்மிடத்து வைத்துள்ள கருணையைக் குறித்துச் சற்றுநேரம் அழுவார். ஸ்ரீகாகுஸ்தரானவர் வருவாரென்கிற மகிழ்ச்சியால் சற்றுநேரம் சிரிப்பார். தமக்குச் சுவாமியினுடைய திருவிரலாழியைக் கொண்டுவந்து கொடுத்தலாகிய மகோபகாரஞ்செய்த ஸ்ரீ அநுமானுக்குச் சற்றுநேரம் தண்டன் சமர்ப்பிப்பார். களிப்பு அதிகரிப்பதனால் எழுந்து சற்றுநேரம் துள்ளுவார். ஸ்ரீ ஜானகிரமணனனவர் சொன்னசொல் தவறினாரென்று வியர்த்தமாய் அபசாரப்பட்டோமேயென்று சற்றுநேரம் பூமியில்விழுந்து புரண்டு அழுவார். ஆ! ஆ! ஸ்ரீராமசுவாமியினுடைய மோதிரம் நமக்குக் கிடைத்ததல்லவாவென்றுபூரிப்பார். அவருடையசொல் தவறுத நிலையைக்குறித்துஅச்சப்பட்டுஉடல்வியர்ப்பார். அங்குள்ளகூட்டத்தாரோடு ஸ்ரீராமருடைய கலியாண குணங்களைப் பாடிக் கைகளைக் கொட்டிக்கொண்டு சற்றுநேரம் ஆனந்தக்கூத்தாடுவார்.

பின்னும் அங்குள்ளவர்களைப்பார்த்து, ஓ பாவிகளே! உங்களுடைய பாவங்களெல்லாம் நசிக்கும்படி ஆனந்தத்தாண்டவம் செய்யுங்கோள் செய்யுங்கோள். இந்தப் பரத்துவாசருடைய ஆச்சிரமத்தண்டைதான் ஸ்ரீராமநாதர் எழுந்தருளியிருக்கிறார். அங்கே ஓடிச்சேவியுங்கோள் சேவியுங்கோள். ஸ்ரீராமபிரானுடைய மஹாகீர்த்தியைப்பாடுங்கோள் பாடுங்கோள். இப்படிப்பட்ட மகோபகாரஞ்செய்த ஸ்ரீராமதூதருடைய பாதாரவிந்தங்களைத் தலையில் சூடிக்கொள்ளுங்கோள் சூடிக்கொள்ளுங்கோள் என்பார். எம்பெருமானனவர் காட்டுக்கெழுந்தருளும்படிவஞ்சனைசெய்த மாயக்கைகேசியானவள் இனிப்பிராணனை மாய்த்துக்கொள்வாளல்லவாவென்று தமது தோள்களைக் கொட்டுவார். ஒருபாதத்தைப்பூமியிலூன்றி நின்று மற்றொருபாதத்தைத் தூக்கிக்கொண்டு, நீலமலை ஆடுவதுபோல மண்டலாகிருதியாக நடனஞ்செய்வார். சுவாமியினுடைய புகழைப்பாடுவார். தமக்கெதிரேயுள்ள பிராமணர்களைநோக்கி, நீங்கள் ஆசாரத்தில்வழுவாமல் நடக்கும்படியாக நல்லகாலம் நேரிட்டதல்லவாவென்று அவர்களை நமஸ்கரிப்பார். அரசர்களைப்பார்த்து, நீங்கள் இராஜதர்மங்களிற்பிசகி ஒருவரோடொருவர் கலகித்து நாசமடையாமல் நீதியோடு இராஜ்ஜியபரிபாலனஞ்செய்து ஒருவருக்கொருவர் அந்நியோந்நியமாயிருக்கும்படி நல்லகாலம் இப்போது சம்பவித்ததல்லவாவென்று அவர்களைத் தொழுவார். தாதியர்களைப் பார்த்து, கூனியென்னும் மகாபாதகியானவள் நம்முடையபெருமான் பக்கலில் அபசாரப்பட்டு நாமெல்லாம்வருந்தும்படியாக இவ்வளவுதீமைகளைச் செய்ததுபோல நீங்கள்யாதொருதீமையும்செய்யாமல் உத்தமிகளா யிருக்கிறீர்களல்லவா

வென்று அவர்களுக்குத் தண்டனிடுவார். இனிராகவபிரான்பட்டாபிஷேகஞ்செய்து கொண்டு சிங்காதனத்தின்மேல் எழுந்தருளியிருக்க, அவருக்குவேண்டிய குற்றேவல்களைச்செய்து யான் உஜ்ஜீவிப்பதற்குபயோகியாயிருப்பது இந்தத் தேகமல்லவாவென்று தம்மைத்தாமே கும்பிடுவார். உன்மத்தராய்ச் சற்றுநேரம் உட்கார்ந்திருப்பார். திடுக்கிட்டு எழுந்திருந்து சற்றுநேரம் நிற்பார். ஸ்ரீராமபிரான் பக்கலிற்கொண்ட பிரீதியானது ஸ்ரீபரதாழ்வானை இப்படியெல்லாம் செய்வதினுல், அந்தப் பிரீதியென்பது மயக்கத்தைத் தருகின்ற மதுவிலே பிறந்ததுதானே? மற்றெதுவோ அறியோம்.

இந்தவிதமாக ஆநந்தபரவசராய் நின்ற ஸ்ரீ பரதாழ்வானுனவர் ஆஞ்சநேயரைப் பார்த்து, ஓ ஸ்ரீராமதூதனே! நீ திரிமூர்த்திகளில் ஒருவனு யிருக்கலாமென்று நினைக்கின்றேன். நீ பிர்மசாரி உருவங்கொண்டு வந்தது வாஸ்தவமன்று. உண்மையாக நீயாரோ அதை எங்களுக்குச் சொல்லவேண்டுமென்றுகேட்க ஆஞ்சநேயர் சொல்லுகிருர். ஸ்ரீராமச்சந்திரர் பக்கலில் அதிபக்தி மானஸீகராகிய ஸ்ரீ பரதாழ்வானே! அஞ்சனுதேவியானவள் தான்செய்த அருந்தவத்தின் பலனுக வாயுபகவானுக்கு என்னைப்பெற்ருள். நானே உம்முடைய தமையனுராகிய ஸ்ரீராகவபிரானுக்கு அடிமைத்தொழில்செய்கின்ற ஏவலாளன். எனக்கியற்கையான உருவம் ஒரு குரங்கினுடைய வடிவம். அவ்வுருவத்தை மாற்றிக்கொண்டு இங்கே வந்தேன். அடிமைத்தொழில் செய்கின்ற நாயினேனுடைய அற்ப உருவத்தை உம்முடைய தாமரை மலர்போன்ற கண்களாற் பார்த்தருளும். என்று பொய்யாகிய பிராமண உருவத்தை நீக்கிவிட்டு, தேவர்களுடைய கண்ணுக்கும் எட்டாத தூரத்தில் தமது முடியானது உயரும்படியாக வளர்ந்து நின்ருர். இப்படிநின்ற திருவடிகளுடைய உருவத்தைக்கண்ட ஸ்ரீ பரதசத்துருக்கர்களும், வசிஷ்டரிஷியும், இது ஆச்சரியப்படத்தக்க உருவமென்று நினைத்தார்கள். அங்குள்ள சேனுவீரர்களெல்லாம் அவருடைய திருமேனியைக் கண்டு பயத்தால் இறக்காமற்போயினும் பிராணபீதி யடைந்தார்கள்.

அப்போது பரதாழ்வானுனவர் திருவடிகளைப்பார்த்து, ஹே ஆஞ்சநேயா! இங்கேநின்று நாங்கள் சொல்லுகிற சொற்கள் உன்னுடைய குண்டலங்களணிந்த காதுகளில் நுழையமாட்டா. ஆதலாலிந்த அழிவில்லாத உருவத்தைச் சீக்கிரமாகக் குறுகச்செய்வாயென்று வேண்டிக்கொண்டார். உடனே திருவடிகளானவர் தம்முடைய திருவுருவத்தைப் பழையபடி சுருக்கி வணங்கிக்கொண்டு எதிரே நின்ருர். அவருக்கு ஸ்ரீபரதாழ்வானுனவர் அளவற்ற திரவியாபரணங்கள் முதலியவற்றைப் பிரீதியினுற்கொடுத்து, சத்துருக்காழ்வானை நோக்கி, தம்பி சத்துருக்கா! ஸ்ரீராகவபிரான் பரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் எழுந்தருளி யிருக்கின்ருர். அவரை எதிர்கொண்டு போகும்படி அயோத்தியா நகரத்துள்ள ஜனங்களைப் பிரயாணஞ்செய்யும்படிக்கும், தோரணங்கள் நாட்டி மேலே கொடிச்சீலைகள் சுற்றிப் பூரணகலசங்களை வேதிகைகளின் மேல்வைத்து இப்படிப் பட்ட சர்வாலங்காரங்களையுஞ் செய்யும்படிக்கும், ரதகஜதுரகங்களுக்கு அலங்காரம் பண்ணும்படிக்கும், அயோத்தியா நகரத்தின் மதின்முதற்கொண்டு பரத்துவாசர் வசிக்கும் வனம்வரைக்கும் முத்துப்பந்தர் போடும்படிக்கும் பறையறைவித்துத் தெரிவிப்பாயென்று உத்திரவுசெய்தார். பரதாழ்வானுனவர் இந்தவண்ணம் உத்திரவுசெய்தமாத்திரத்தில் சத்துருக்கஆழ்வானுனவர் அவருடைய திருவடிகளைவணங்கி, குற்றமில்லாத நூற்கேள்விகளையும் அவற்றிற்குத்தக்க ஒழுக்கத்தையுமுடைய சுமந்திரனுக்கு இப்படி நகராலங்காரஞ்செய்விக்கும்படி தெரிவித்தார். அந்தக் கட்டளையைப் பெற்றுக்கொண்டு குதூகலமான சித்தமுடையவரான சுமந்திரரென்கிற முதன் மந்திரியானவர் வள்ளுவர்களை அழைப்பித்து, ஸ்ரீராமச்சந்திரர் சித்திரகூடத்தில் எழுந்தருளி யிருக்கிருர். அவரை எதிர்கொண்டு போம்படி புரவாசிகள் யாவரும் பிரயாணப்படவும், நகரமுழுமையும் ரதகஜதுரகபதாதிகளும் அலங்காரஞ்செய்யவும், அயோத்திமாநகர முதற்கொண்டு பரத்துவாசருடைய ஆச்சிரமம் வரையில் முத்துப்பந்தர்போடவும், முரசங்கொட்டித் தெரிவிக்கக் கடவீர்களென்று ஆக்கியா

பித்தார். அவருடைய ஆக்கினையின்படி வள்ளுவர்கள் யானைகளின்மே லேறிச்சென்று, சுவர்க்கத்தையும் திக்குகளையுங் கடந்துசென்ற மகாகீர்த்தியையுடைய ஸ்ரீராகவபிரானுக்கு எதிர்கொண்டுபோகும்படி நகரஜனங்களும் அரசர்களும் சதுரங்கசேனைகளும் எழக்கடவீர்கள். நகரத்தை அலங்காரம் செய்யக்கடவீர்கள். அயோத்தியா நகர் மதில்முதல் சித்திரகூடம் வரையில் முத்துப்பந்தல் போடக்கடவீர்கள் என்று பறைசாற்றினார்கள்.

இப்படி வள்ளுவர்கள் கொட்டிய முரசொலியைக் கேட்டமாத்திரத்தில் திருவயோத்தியாபுரியிலுள்ள பிர்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர சாதுர் வருணத்தார்களும் ஆச்சரியகரமா யிரைந்துகொண்டு, அளவிடக்கூடாத களிப்பை யுடையவர்களாய் விரைவாக அலங்காரஞ் செய்துகொண்டு பிரயாணத்துக்குச்சித்தமானார்கள். தோஷரகிதராகிய ஸ்ரீராமநாதரை எதிர்கொள்ள வேண்டுமெனக் கொட்டிய பேரிகையின் ஓசையானது அந்நகரவாசிகளுக்கு எப்படியிருந்ததென்றால்? நெடுநாள் தரித்திரத்தால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்த ஏழைகளுக்குத் திரவியக்குவியல் யாதொரு முயற்சியுமில்லாமல்எதிர்ப்பட்டாற்போலவும், முன்னே திருக்கலியாணத்தின் நிமித்தம் ஸ்ரீ மிதிலாபுரிக்குப் பிரயாணப்படும்படி கொட்டிய முரசொலியைப்போலவும் இருந்தது. முரசொலியைக்கேட்டு அலங்கரித்துக்கொண்டு ஆயத்தமான அறுபதினாயிரம் அக்குரோணி சேனைகளும், இராஜநாயகர்களும், மற்றவர்களும், அவரவர்களுடைய சுபத்தினிமார்களும்,தாங்கள் வெகுதினமாக அடையவேண்டுமென்று கோரியிருந்தபொருள் தானேவந்து கிடைத்தாற்போலச் சந்தோஷங் கொண்டாடிக்கொண்டு சென்றார்கள். அப்போது தேவர்களெல்லாம் எங்களுடைய துக்கநிவாரணார்த்தத்துக்குக் காரணபூதர்கள் இவர்களல்லவாவென்று தெருங்கித்தோத்திரஞ்செய்து கும்பிடும்படியாகத் தாய்மார்கள் மூவரும் பொன்னால் செய்யப்பட்டமணிகளிழைத்த தண்டிகைகளிற் சென்றார்கள். தமக்குத்தாமே சமானமானவர்களாகிய முனிசிரேஷ்டர்களும் பந்துஜனங்களும் சூழ்ந்துவரச் சத்துருக்கரோடு பரதாழ்வானனவர் திருவடிகளுடைய கையைப் பற்றிக்கொண்டு, ஸ்ரீராகவபிரானுடைய திருப்பாதுகைகளைத் தமது சடைமுடியின்மேல் எழுந்தருளச்செய்து, இருபுறத்திலும் சாமரைவீசவும் வெண்பட்டு குடைபிடிக்கவும் எழுகடலினோசையைப்போல ரதகஜதுரகங்களினோசை கோஷிக்கவும் சென்றனர். அக்கால் சூரியபகவானனவர் பீதாம்பரதாரியாயும், மணிமகரகுண்டலங்களைத் தரித்தவராயும், செந்தாமரை மலர்போன்ற நேத்திரங்களையுடையவராயும், சங்குசக்கரமுதலிய பஞ்சாயுதபாணியாயும், எனக்குள் எழுந்தருளியிரா நின்ற ஸ்ரீ கோதண்ட தீக்ஷாகுருவை எதிர்கொள்ளும்படியாய் ஸ்ரீபரதாழ்வான் செல்லுகின்றார். என்னுடைய கிரணவெப்பத்தால் கற்கள் நிறைந்தவழி தாமரசமலர் போன்ற அவருடைய பாதங்களைச்சுடும். ஆதலால் நான் மறைந்து விடுகிறேன். என்று போகின்றவரைப்போல அஸ்தமனமானார்.

ஸ்ரீ ஆஞ்சநேயருடைய கையைப்பற்றிச்சென்ற ஸ்ரீபரதாழ்வானனவர் பொழுதுபோனவுடனே ஸ்ரீ அநுமானைப்பார்த்து, ஐயா அஞ்சனைச்சிங்கமே! ஸ்ரீலட்சுமிபதியாகிய ஸ்ரீராமச்சந்திரரானவர் எந்தவிடத்திலிப்போது வசித்துக்கொண்டிருக்கின்றார்? அங்கே தங்கியிருப்பதற்குக் காரணம் யாது? அவற்றையெல்லாம் சாங்கோபாங்கமாகச் சொல்லக்கடவாயென்று கேட்டார். அம்மாத்திரத்தில் ஆஞ்சநேயரானவர் ஸ்ரீபரதாழ்வானுக்குத் தண்டன் சமர்ப்பித்து, சுவாமி! எம்பெருமானனவர் திருவயோத்தியாபுரியில் இருந்ததும், ஒருகால் விஸ்வாமித்திரரது வேள்வி காரணமாக வெளிப்பட்டு முடித்து மிதிலாநகரத்துக்குச்சென்று திருக்கலியாண மகோச்சவத்தை நிறைவேற்றிக்கொண்டு திருவயோத்தியாபுரிக்குத் திரும்பி எழுந்தருளியதும், அப்பால் மாதுர் பிதுர்வாக்கிய பரிபாலனார்த்தமாக வனவாசஞ்செய்ய வெளிப்பட்டுச் சென்று சித்திரகூடபர்வதத்தை யடைந்ததும், தேவரீர் அறிந்திருக்கின்றனவேயல்லாமல் அடியேன் சொல்லவேண்டியதில்லையன்றோ? அந்தச் சித்திரகூடத்தை நீங்கிச்சென்றபின் பத்துத்தலைகளையுடைய இராவணனோடு நடந்த யுத்தமும் இந்தப் பரத்துவாசருடையஆச்சிரமத்தை அடை

ந்ததுமே முடிவாகும். என்று ஸ்ரீராமபிரானுடைய திவ்விய சரித்திரங்களைச் சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீ பரதமகாராஜரே! ஸ்ரீகோதண்டத்தைக் கையிற்றுங்கிய எம்பெருமானவர் சித்திரகூட பர்வதத்தை நீங்கிச் சென்றபின்பு விராதனென்னும் ஒரு ராக்ஷஸனைக் கொலைசெய்து, தபோநிதிகள் வாசஞ்செய்கின்ற தண்டகாரணியத்தைச் சேர்ந்தார். அங்கேயிருந்த அருந்தவமுனிவர் யாவரும் ஸ்ரீசர்வசுவாமியின் பக்கலில் வந்து, ஸ்ரீராமப்பிரபுவே! நாங்கள் ராவணகும்பகர்ணாதி ராக்ஷசர்களுக்கு எங்கள் தபோபலம் அழிந்துபோனோம். அவர்கள் செய்கிற உபத்திரவத்தால் யாகாதி சத்கருமங்களையும் செய்வதில்லை. என்று முறையிட்டுக்கொள்ளவே ஸ்ரீராமநாதரானவர் கருணைசுரந்து, ஓ தண்டகாரணியவாசிகளே! ஸ்ரீ பகவத்பக்த மானஸீகர்களாகிய உங்கள் பக்கலில் அபசாரப்பட்ட அந்த ராக்ஷசர்களையெல்லாம் என்கையிலுள்ள கோதண்டத்தை வளைத்துக் கூர்மையுள்ள அம்புக்கு இரையாக்கி நாசப்படுத்துகிறேன். இது சத்தியமாகும். நீங்கள் உங்கள் மனத்திலுள்ள கிலேசங்களை ஒழிக்கக்கடவீர்களென்று அவர்களுக்கு அபயப்பிரதானங்கொடுத்து அங்கே பத்துவருஷம் வசித்திருந்தனர். அப்போது தண்டகாரணிய முனிவர்கள் யாவரும் நித்தநித்தமும் ஸ்ரீராமபிரானுடைய ஜகன்மோகனுகார திவ்வியமங்கள விக்கிரக சௌந்தரியத்தைத் தங்கள் கண்களாரச் சேவித்தும் விட்டுப்பிரிய மனமில்லாதவர்களாய் மேலே நடக்கவேண்டியதாகிய இராவணாதிகளுடைய வதத்தை யோசித்து, ஸ்ரீராகவபிரானே! நீர் இந்த வனத்துக்குச் சமீபத்திலுள்ள அகஸ்தியருடைய ஆச்சிரமத்துக்குப் போகக்கடவீரென்று ஆக்கியாபிக்க, உடனே அங்கிருந்துபுறப்பட்டுச்சென்றுர். அகஸ்தியமுனிவரானவர் காகுஸ்தர் எழுந்தருளுவதை முன்னதாகவறிந்து எதிர்கொண்டு வந்து அழைத்துச்சென்று, திவ்வியமாகிய ஒரு வில்லையும் அம்பறுத்தூணியையும் கவசத்தையும் வாளாயுதத்தையும் கொடுத்தனர். அவரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு ஜடாயுவென்னும் கழுகின் குலராஜனைக் கண்டு, ஜானகிபிராட்டியாரோடும் இளைய பெருமாளோடும்கூட சோலைகள் அடர்ந்த பஞ்சவடியில் வாசஞ்செய்தார்.

அங்கே நம்முடைய ஆண்டவனைவர் சுகமாக எழுந்தருளி யிருக்கும்போது இராக்ஷசகுலத்தார் நெடுநாளாகச் செய்துவந்த பாபங்களெல்லாம் ஒன்றாய்த்திரண்டு ஒருருவமாய்நின்ற சூர்ப்பநகையென்பவள் வந்து, ஸ்ரீஜானகிபிராட்டியாரைச் சீறிச்சென்றாள். அதுகண்ட இளையபெருமாளானவர் பிராட்டியாருக்குப் பயம் நிவர்த்திசெய்து, அந்த ராக்ஷசியினுடைய காதுகளையும் மூக்கையும் ஸ்தனங்களையும் கொய்து துரத்திவிட்டார். உடனே அவள் ஓடி கரனிடத்திலே சென்று முறையிட்டாள். அதுசெய்திகேட்டகரனும் திரிசிரனும் தூஷணனும் மூன்று வடவாக்கினி மூளைத்தெழுந்தாற்போல உடன்சேர்ந்து, சேனைகளோடு அதிவிரைவாகவந்து எதிர்த்தார்கள். நம் ஐயனவர் தமது திருக்கரத்திலேபிடித்திருந்த ஸ்ரீகோதண்டத்தை கண்ணுற்ற் பார்த்தமாத்திரத்தில் அவர்கள் யாவரும் தீப்பொறிப்பட்டபஞ்சுக்குவியலைபொத்து நாசமாயினார்கள். அம்மூவரும் ஸ்ரீராமபாணத்தால் நாசமானதைக்கண்ட சூர்ப்பநகை லங்காநகரத்துக்குப்போய் ராவணனிடத்திற்சொல்லி முறையிட்டுக்கொண்டாள். அந்தப்பாபிஷ்டன் வஞ்சமாகிய மானையொன்றேவி, ஸ்ரீராமலட்சுமணர்கள் பிராட்டியாரைவிட்டுப்பிரியச்செய்து, தான் திரிதண்டத்தைக் கையிற்பிடித்து வைதிக மார்க்கச் சந்நியாசிவேடங்கொண்டுவந்து, நம்முடைய தாயை நிலத்தோடு பேர்த்தெடுத்துக்கொண்டு போனான். அப்படி போகும்போதுவந்தெதிர்த்த சடாயுவைப் பூமியில் விழும்படி தனக்குச் சிவமூர்த்திகொடுத்த வாளாயுதத்தால் அவருடைய சிறகைவெட்டித் தள்ளிவிட்டு, அதிதுக்கத்தோடு வருத்தப்பட்டுக்கொண்டிருக்கின்ற பிராட்டியாரைக் கொண்டுபோய் அசோகவனத்திற் சிறைவைத்துவிட்டான். மாரீசனென்னும் மானைத்துரத்திச்சென்று அம்மானைக் கொலைசெய்து திரும்பிவருகின்ற ஸ்ரீராகவபிரான் வழியிலே இராமானுஜரைக்கண்டு மனக்கிலேசத்தோடு அதிக விரைவாய்வந்து, குற்றுயிராய்கிடக்கின்ற தமது தந்தையாகிய சடாயுராஜனைக்கண்டு மிகுதியும் துக்கப்பட்டு அவருக்குச் செய்யவேண்டிய

கடன்களைச் செய்துவிட்டு, தேவியாரைத் தேடிக்கொண்டு தெற்குத்திசையை நோக்கிச்செல்லுகையில் கவந்தனைச் சம்மரித்து அவனுக்குச் சாபவிமோசனஞ்செய்து, தம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த சபரியானவள்செய்த பூசனையை ஏற்றுக்கொண்டு அவள்சொன்ன அடையாளப்படி கிட்கிந்தைக்குவந்து சேர்ந்தார்.

இளையபெருமாளோடுவந்த ஸ்ரீராமநாதர் சுக்கிரீவமகாராஜரைச் சிநேகித்து, வாலியினாலுண்டாகிய துன்பத்தை நீக்கி உனக்கு முடிசூட்டுகிறேனென்று அபயங்கொடுத்து, பின்பு மராமரமேழையும் மகாபராக்கிரமசாலியாகிய வாலியினுடையமார்பையும் ஊடுருவிச்செல்லும்படி பாணப்பிரயோகஞ் செய்து சுக்கிரீவமகாராஜருக்குப் பட்டாபிஷேகஞ் செய்தனர். அடுத்து வந்த மாரிக்காலம் ஒழிந்தபிறகு கவயன்-இடபன்-நீலன்-மயிந்தன்-சாம்பன்-சதவலி பனசன்-அங்கதன்-முதலிய வானரசிரேஷ்டர்களும்,எழுபதுவெள்ளம் வானரர்களும் சூழும்படி, சுக்கிரீவமகாராஜனனவர் ஸ்ரீ ராமசுவாமி பக்கலில்வந்து சேர்ந்தார். ஸ்ரீ ராமபத்திரருடைய அநுமதிபெற்றுத் தேவியாரைத்தேடும்படி ஒவ்வொருதிக்குக்கும் இரண்டுவெள்ளஞ் சேனைகளை அனுப்பித் தேடும்படி மகாராஜா அனுப்பினர். தென்றிசையில் இரண்டுவெள்ளஞ் சேனையோடு சென்றஅங்கதப்பெருமானும்,சாம்புவரும் என்னை இலங்கைக்குள் பிரவேசிக்கும்படி ஏவினர்கள். நானும் மகேந்திரமலையிலிருந்துபாய்ந்து இலங்காநகரத்தைச்சேர்ந்து ஸ்ரீஜகன்மாதாவைக்கண்டு சேவித்து நான் திரும்பிவந்து ஸ்ரீசர்வசுவாமிக்குச் செய்தி சொன்னமாத்திரத்தில், வானரவெள்ளங்களாகிய எல்லார்களோடும்வந்து தென்சமுத்திரக்கரையைச் சார்ந்தார். அதுசமயத்தில் மெய்ஞ்ஞானத்துக்கு மெய்ஞ்ஞானம் போன்ற ஒழுக்கமுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானனவர் தனது அண்ணனாகிய ராவணனைப்பார்த்து, நீ ஸ்ரீசீதாபிராட்டியாரைவிட்டு ஸ்ரீராமபிரானைச் சரணுகதி அடை, இல்லாவிட்டால் உன்னுடைய சம்பத்தும் ஆயுசுமுடிந்து நாசமடைவாய் என்றுசொன்னர். அந்த நீதிமொழிகளைக் கேட்டுத் துராத்துமாவாகியதசக்கிரீவனனவன் மிகுந்த கோபிஷ்டனய் அவரைச் சீறினன். உடனே சுகுணசீலராகிய விபீஷணாழ்வானனவர் காருண்ணியமூர்த்தியாகிய தாசரதியைச் சரணம்புகுந்தார். சரணமடைந்த அவருக்கு ஸ்ரீகாகுஸ்தரானவர் அபயப்பிரதானந்தந்து, இலங்காநகரத்துக்கு அரசன் இனி நீதானென்று வாக்களித்துப் பிற்பாடு வருணனைக்குறித்து உபாசித்தார். வருணபகவானே சற்றுத் தாமசஞ் செய்தான். அதுகண்டு ஸ்ரீராமபிரானுக்கு இரண்டு நேத்திரங்களும் சிவந்தன. உடனே ஏழு சமுத்திரமும் வருணபகவானுடைய உடலும் வெந்துபோயின. அம்மாத்திரத்தில் சமுத்திரராஜன் அபயமென்றுசொல்ல அவனுக்கு அபயங்கொடுத்தார். உடனே வானரவீரர்கள் மலைகளைக்கொண்டுவந்து சமுத்திரத்தை அணைகட்ட அதன்வழியாக யாவருஞ்சென்று இலங்கையைமுற்றுகை போட்டுக்கொண்டு ஆரவாரித்தார்கள். அவ்வோசையைக் கேட்டுத் தேவர்களெல்லாம் ராக்ஷசபயந்தீர்ந்தார்கள்.

அப்போது சுவாமியானவர் இலங்காபதியின் தம்பியாகிய கும்பகர்ணனுடைய தோள்களையுந் தாள்களையுங் கண்டித்து, மற்றராக்ஷசர்களையும்நாசப்படுத்தி,வெள்ளிமலையைப் பேர்த்தெடுத்த ராவணனுடைய இருபதுதோள்களையும், அஷ்டதிக்கஜங்களினது தந்தங்களை முறித்த மார்பையும், பத்துத்தலைகளையும் அம்புகளால் அறுத்துத்தள்ளித் தேவர்களுடைய துன்பத்தை நீக்கினர். ஸ்ரீஇராமாநுஜரானவர் இந்திரஜித்துவையும் மற்றத்தம்பிமார்களையும் மற்றவர்களையும் தம்முடைய அம்பினல் துண்டித்து வீழ்த்தினர், தேவர்கள் யாவரும் புஷ்பமாரியைத்தூவி இறந்த இராக்ஷசக்கூட்டங்களிற் கவந்தங்கள் கூத்தாடுவதைக்கண்டு சந்தோஷித்தார்கள். தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் அவரவர்களுடைய பத்தினிமார்களும் மற்ற திரிலோகவாசிகளும் தனித்தனியாக ஸ்ரீராகவபிரானைப் புகழ்ந்து மொய்த்துக்கொள்ள, அப்போது காயாம்பூவைப்போலும் திருமேனியையுடைய ஸ்ரீ ஜானகி ரமணரானவர் விபீஷணருக்கு நீதிகளைச்சொல்லி இறந்தவர்களுக்கு உத்தரகிரியைகளைச்செய்வித்து ஸ்ரீ லட்சுமணரைக்கொண்டு அவருக்குப் பட்டங் கட்டுவித்தார். இவையெல்லாம் நடந்தபின் தம்மிடத்தில் எழுந்தருளிய

ஸ்ரீஜானகிபிராட்டியாரைச் சுவாமியானவர் சீறியருளினர். அதுகண்ட ஜானகியார் அக்கினியிற்பாய, அக்கினிதேவன் அவரை யேந்திவந்து ஸ்ரீதாசரதியைத் தோத்திரஞ்செய்து நிற்க, உடனே பிரமதேவனும் ருத்திரமூர்த்தியும் அவருக்குச் சொன்னசொல்லாற் கோபந்தீர்ந்தார். அப்பால் ருத்திரமூர்த்தியின் ஏவலால் சத்தியத்துக்குப் பிராணனைக்கொடுத்த சக்கரவர்த்தியானவர் விமானத்தின்மேல் அங்கே எழுந்தருளினர். ஸ்ரீராகவபிரானும், பிராட்டியாரும், லக்ஷ்மணரும், சக்கரவர்த்தியாருடைய பாதத்தில் வீழ்ந்து சேவித்தார்கள். அப்படிச் சேவித்தவர்களைச் சக்கரவர்த்தி தனித்தனி ஆலிங்கனஞ்செய்து ஸ்ரீரகுபதியைநோக்கி, என்னால் உனக்குவேண்டியவரம் பெற்றுக்கொள்ளுகவென்றார். அதற்கு ஸ்ரீராமபிரானானவர் என்னையனே! தம்முடைய கருணையால் என்னையெடுத்துவளர்த்ததாயும், அவருடைய புத்திரனும், முன்போலவே எனக்குத்தாயுந் தம்பியுமாகும்படியானவரம் தயைசெய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். சக்கரவர்த்தியாரும் அப்படியே ஆகுகவென்று வரந்தந்துபோனார். தேவர்கள் உமக்குவேண்டிய வரத்தைக்கேளுமென்றுகேட்டுக்கொள்ள, அதற்குச்சுவாமி இறந்தவானரர்கள் உயிர்த்தெழுந்திருக்கவும், எல்லா வானரர்களும் சென்றவிடங்களிலெல்லாம் உணவுகள் குறைவின்றிக்கிடைத்து சுகஜீவிகளாயிருக்கவும், வரந்தர வேண்டுமென்று கேட்டார். அத்தேவர்களும் உம்முடையகருணையால் அப்படியே ஆகுகவென்று சொல்லிப் போயினர்கள்.

அப்பால் நமது ஐயனானவர் அதிகவிரைவாய்அயோத்திக்குப்போகவேண்டுமென்கிற குறிப்பை தென்னிலங்கைவேந்தராகிய ஸ்ரீவிபீஷணாழ்வானானவர் அறிந்துக்கொண்டுபுட்பகவிமானத்தைக்கொடுத்தார். அதன்மேல் ஸ்ரீராகவபிரானும், ஸ்ரீசீதாபிராட்டியாரும், ஸ்ரீ இலக்ஷ்மணரும், ஸ்ரீமகாராஜாவும், ஸ்ரீவிபீஷணாழ்வானும், ஸ்ரீசாம்புவர்முதலிய படைவீரர்களும், இருவகைச் சேனைகளும், ஆரோகணித்துக்கொண்டு பரத்துவாசருடைய ஆச்சிரமத்துக்கு வந்துசேர்ந்தார்கள். இப்படிசேர்ந்தபின்பு ஸ்ரீரகுபதியானவர் உம்மிடத்துள்ள பிரேமாதிசயத்தாலே என்னை அழைத்து விரலாழியைக் கொடுத்து, நீ விரைவாகச்சென்று இதைக்காட்டி என்தம்பியாகிய ஸ்ரீபரதாழ்வானுடைய துன்பத்தை முழுமையும் நீக்கிவரக்கடவாயென என்னையனுப்பினார். என்று சாங்கோபாங்கமாகச் சொல்லினர். இவ்வாறு சமுத்திரத்தைத் தாண்டி ராக்ஷசர்களுடைய நகரத்தை எரியூட்டிய வாயுபுத்திரரானவர் சொல்லிக்கொண்டுவரக் கேட்டருளிய ஸ்ரீபரதாழ்வானானவர் கண்ணீர் பெருகிக்கொண்டு அநுமானே! இலங்காநகரத்தில் ராக்ஷசவேட்டையாடிய நீலமேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீராமபத்திரர்க்குப்பின்தொடர்ந்துசென்றான் ஒருதம்பி. அவருடைய சரித்திரங்களைக் கேட்டுக்கொண் டிருப்போனாகிய நானும் ஒருதம்பியாயிருக்கிறேன். என்னுடையஅடிமைத்தொழிலும்மகாகீர்த்தியையுடையதன்றோ? என்றுசொல்லிக் கண்ணீரொழுக அழுதுக்கொண்டு ஆஞ்சநேயருடைய கரத்தை வலக்கரத்தாற்பற்றி, அந்த இருளிலே கால்நடையாகச் சென்று சூரியோதயத்துக்கு முன்னே கங்கைக்கரையைச் சேர்ந்தார்.

அப்போது கீழ்த்திசைக் காவலாளியாகிய இந்திரனானவன் எம்பெருமான் இராவணவேட்டையாடித்திரும்பி அயோத்தியாநகரத்துக்கு எழுந்தருளிப் பூதேவியும் சீதேவியும் உள்ளங்குதூகலப்படும்படி தரித்துக்கொள்ளும் பொன்னாற்செய்த கிரீடத்துக்குத்தகுந்த சிகாமணியை எடுத்தாற்போலச் சூரியனுதயஞ்செய்தான். இப்படி சூரியோதயமானவுடன் ஸ்ரீபரதாழ்வானானவர் காலைக்கடன்களைச் செய்து, ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாருடைய திருப்பாதுகைகளை அர்ச்சித்து ஆஞ்சநேயரை நோக்கி, ஓ பிலவங்கசிரேஷ்டனே? நீசொல்லியசொல் தவறிப்போம்போலிருக்கிறது. நீ நவவியாகரண பண்டிதனாகையால் உன்னுடைய சொல்லுக்கு எதிர்சொல் சொல்லுவாருமுண்டோ? ஸ்ரீராமநாதரோடுகூட எழுபது வெள்ளம் வானரசேனைகளும், ராக்ஷசகுல ராஜனுடைய அளவில்லாத ராக்ஷச சேனைகளும், இதோ தோன்றுகிற பரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் வந்திருக்குமேயானால், அங்கேசமுத்திரகோஷம்போல ஆரவாரமில்லாமலிருக்கவுங் கூடு

மோ? ஓ மகாவீரசிகாமணியே! எம்பெருமான் எழுந்தருளினுரென்று சொன்னது சத்தியந்தானே? நீ சொன்ன பரத்துவாசருடையசோலை நமக்கு இரண்டுயோசனை தூரத்திலிருக்கிறது. சமுத்திரம் பெருகிப் பொங்கியதையொத்திருக்கத்தக்க எழுபது வெள்ள வானரசேனைகளும், மற்ற ராக்ஷச வீரசேனைகளும், இந்தச் சோலையில் தங்கியிருப்பது யதார்த்தமேயானுல், சிறிதும் அரவமில்லாமல் இருப்பது முண்டோ? ஆ! இதென்ன ஆச்சரியம்? நீ எனக்கு ஆசைகாட்டி அழைத்துவந்தது போதும் போதும். எஃதெப்படியிருந்தபோதிலும் இருக்கட்டும். ஐயா மகாநுபாவா! நீ சொன்ன எங்கள் சூரியகுல திலகனுகவும் என் பிராணபதமாகவும் இருக்கிற ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரர் எங்கேயிருக்கிருரென்று அதிக துக்கமும் கோபமுந் தோன்றக் கேட்டருளினுர்.

இப்படி ஸ்ரீபரதாழ்வானுனவர் உறுத்திக்கேட்டருளும்போது அநுமானுனவர் அவர்க்குத் தண்டன் சமர்ப்பித்துச் சொல்லுகிருர். ஸ்ரீ தாரகமந்திர வாச்சிய திவ்விய சரித்திர குணுநுபவ புருஷோத்தமனே! யான் சொன்னது பொய்யன்று. இந்தப் பரத்துவாசமுனிவரும் மற்ற முனிவர்களும் சமஸ்ததேவர்களும் ஸ்ரீபரந்தாமருடைய வேண்டுகோளின்படி கொடுத்தவரத்தால், இந்தச்சோலையில் பூவையும் காயையும் கனிகளையுமேயன்றி மதுவையும் பரிமாணத்துக்கதிகமாக உண்டு சமஸ்த வானரர்களும் இராக்ஷசர்களும் அறிவழிந்து மயங்கிக் கிடக்கிருர்கள்போலக் காணுகிறது. இல்லாவிட்டால் யாதொரு அரவமுமில்லாதிராது. தேவர்களும் முனிவர்களும் கொடுத்த வரத்தாற்பெருகிய மதுவையும் காய்கனிகளையும் நிரம்ப உண்டு. அதனுல் மயங்கிச் செயலழிந்து சோம்பி வாயைத்திறவாமல் இருக்கின்றுர்கள். அப்படியல்லாவிட்டால் இருவகைச்சேனைகளும் சும்மா விருப்பவைகளல்லவே: என்னையனே! என்மேற் கோபங்கொள்ளாதேயும். இனி ஒரு க்ஷணத்துக்குள்ளே நம்முடைய பெருமானுனவர் புட்பகவிமானத்தின்மேல் எழுந்தருளுகின்ற திவ்விய சேவையை, இங்கிருந்தபடியே நீர் பெருகிக் கொண்டிருக்கின்ற நேத்திரங்களாலேயே சேவித்துக் களிக்கப்போகிறீர். என்று இன்னும் பலவிதமாகச் சொல்லிக்கொண்டிருந்தனர். இனி ப்ரத்துவாசருடைய ஆச்சிரமத்தில் எழுந்தருளியிருக்கின்ற தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீ கோதண்ட தீக்ஷாகுருவானவர் செய்த செய்கைகளை யெடுத்துச் சொல்லுவோம்.

அங்கேயவ் வருந்தவர்க்கரசனுனவர் அறுசுவைப் பதார்த்தங்களோடு போஜனத்தை அமைத்துவைக்க ஸ்ரீமைதுலியோடும் ஸ்ரீராமாநுஜரோடும் தம்முடையஆதரவைப்பெற்றுள்ள துணைவர்களோடும்ஸ்ரீ ராகவபிரானுனவர் அமுதுசெய்து எழுந்தருளி யிருக்கும்போது, ஸ்ரீ குகப்பெருமானுனவர் கருங்கடல் புரண்டு வருவதுபோல வேடுவச்சேனை தம்மைச் சூழ்ந்துவர அதிக விரைவாய் வந்து ஸ்ரீராமபத்திர சுவாமியைத் தண்டன் சமர்ப்பித்து, அவருடைய திவ்விய மங்களகர விக்கிரகசௌந்தரியத்தில் தம்முடைய மனமும் கண்களும் அழுந்திச் சுழலமிடச் சுற்றிச்சுற்றிச் சேவித்து, இப்படிப்பட்ட திவ்வியசேவையை இத்தனைகாலமாகச் சேவியாமல் வியர்த்தமாய்க் காலத்தைப் போக்கிவிட்டோமேயென்று மிகுந்த துக்கத்தால் அழுதனர். எம்மேல்வைத்த நிரேதுக்கிருபையால் எம்மை யாட்கொள்ளும்படி இங்கெழுந்தருளினுரென்கிற பக்தி பரவசத்தால் தடுமாறிப் பலமுறை தண்டன் சமர்ப்பித்தனர். அதுகண்ட ஸ்ரீராகவபிரானுனவர் ஸ்ரீபரதாழ்வானை எடுத்து தழுவதுபோல குகப்பெருமானை வாரியெடுத்துத் தழுவி, என்னப்பா குகனே! உன்னுடைய புத்திரர்களும்மனைவியும் க்ஷேமமோவென்று குலசப் பிரசனைசெய்தார். அதற்கவர், சுவாமி! நாயேனுக்குத் தேவரீருடைய கருணை ரட்சகமாயிருக்கும்போது தேவர் வினவிய பொருள்களிரண்டும் அருமையானவைகளல்ல. மெய்ஞ்ஞானச் செல்வராகிய இளையபெருமாளானவர் உம்மைப் பிரியாமற் பின் தொடர்ந்துவந்து செய்தற்குரிய கைங்கரியங்களைச் செய்தனர். அவ்வாறு செய்யாது அஞ்ஞானமே நிரம்பிய மனத்தையுடையேனுக்கு இந்த அற்பதேகத்தோடு கூடிவாழ்த லொன்றுமே நித்தியசுகமல்லவோ! இப்படிப் பலபலவிதமாகச் சொல்லித் துக்கித்தனர். இவ்வாறு தம்மைத்தா

மே இகழ்ந்துகொண்டு துக்கிக்கின்ற ஸ்ரீ குகாழ்வானைப் பக்தவத்சலராகிய ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரர் கடாக்ஷித்து, அப்பாகுகனே! பரதனிருந்த நிலையினின்று நீ என்ன வேறுபட்டிருந்தது? எல்லாவிதத்திலும் நீ அவனையே ஒத்திருக்கின்றாய். இனி துன்பப்படவேண்டாம் போய் உட்காரென்று சொல்லினர். உடனே ஸ்ரீஜானகிபிராட்டியாரையும், ஸ்ரீராமாநுஜரையும், நமஸ்கரித்து உட்கார்ந்தார்.

ஸ்ரீரகுபதியானவர் குகப்பெருமானை முன்னே தமது திருக்கண்களாற் பார்த்து, சுக்கிரீவமகாராஜா முதலிய தோழர்களைப் பின்பு பார்த்து, இந்த ஸ்ரீமான் சிறந்ததீர்த்தமாகிய கங்கையினிருகரைக்கு நாதன், தாயைப்பார்க்கினும் எல்லா உயிர்களிடத்தும் அன்புள்ளவன். வேதமார்க்கத்தில் தவறுதலில்லாத வேடராஜனென்னும்பெயருள்ளவனென்று சொல்லினர். இப்படி ஜானகிரமணனானவர் சொல்லியருளின போது சுக்கிரீவமஹாராஜா முதலானவர்கள் பொருக்கென எழுந்து, ஒவ்வொருவராக குகப்பெருமானைக் காடாலிங்கனஞ்செய்து சிநேகித்தார்கள். இந்தப்பிரகாரம் நடந்துகொண்டிருக்கையில்சூரியபகவான் சக்கரவர்த்தித் திருக்குமாருடைய ஜகந்மோகனாகார திவ்விய சௌந்தரியத்தை யாவருங்கண்டு சேவிப்பதினால் அவர் திருமேனிக்குக் கண்ணெச்சில் படுமேயென்னும் பிரமையால் உலகமுழுமையும் இருளால் மூடிவிடுவான்போல அஸ்தமித்தான். ஸ்ரீராகவபிரானானவர் சந்தியாவந்தனக் கடமையைச்செய்து, சேனைகள்யாவும் கடல் வளைந்துகொண்டதுபோலச் சூழ்ந்து சயனித்துக்கொள்ள சீதாபிராட்டியாரும் தாமுமாகச் சயனித்துக்கொண்டார். ஸ்ரீராமாநுஜரும் குகப்பெருமானும் கையில் வில்லும் அம்பும் ஏந்திக்கொண்டு, சிறிதும் கலங்காமல் இராமுழுமையும் காத்துக்கொண்டு திரிந்தார்கள். சூரியனும் உதயமானான். ஸ்ரீபுருஷோத்தமராகிய தாசரதியானவர் உதயகடனைச் செய்துகொண்டு, ஜானகிபிராட்டியாரும் லக்ஷ்மணரும் இருபக்கங்களிலும் வரச்சென்று பரத்துவாசருக்குத் தண்டன் சமர்ப்பித்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, எல்லாரோடுங்கூடப் புட்பகவிமானமேறிப் பரத்துவாசமுனிவருடைய கருணையும் மனமும் தன் பின்னே தொடர்ந்துவரச் சென்றனர். அந்தப் புஷ்பகவிமானமானது ஆகாயத்திற் செல்லும்போது இஷ்டநாயகனைக் கண்டமாத்திரத்தில் காமக்குறிப்புத் தோன்றநின்ற குலமங்கையைப்போலாகியும், சித்திரம் உயிர்பெற்றாற்போல அலங்காரமுடையதாகியும், இந்திரலோகமும் ஒப்பாகாத இயற்கை யழகுடையதாகியும், இந்திரலோகமும் ஒப்பாகாத இயற்கையழகுடையதாகியும் விளங்காநின்ற,திருவயோத்தியாபுரியினது மதிலின்புறமானது தோன்றியது. அப்பால் சற்றுதூரம் புஷ்பகவிமானம் சென்றபோது அம்மதில்களால் சூழப்பட்ட அழகுவாய்ந்துள்ள அயோத்தியாநகரந் தோன்றாநிற்க, ஞானமே திருமேனியாகவுடைய ஜானகீரமணனானவர் அதிமேதாவிகளாகிய தோழர்களைப் பார்த்து, இப்படிப்பட்ட அலங்காரத்தையுடையதென்று, ஒருவராலும் சொல்லமுடியாத அயோத்திமாநகரந் தோன்றுகின்றதென்றுசொல்லுதலும், கைகளைக் கூப்பிக்கொண்டு யாவரும் எழுந்து வணங்கி நின்றார்கள்.

அப்போதுபுஷ்பகவிமானமானதுஆகாயத்தின்கண் வருவதானாலும், அநேகசூரியர்கள் உதயமாயினாற்போல அந்தவிமானமும் அதிலெழுந்தருளிய ஸ்ரீராகவபிரானுமே ஆஞ்சநேயருக்கு முன்னே தோன்றினார்கள். தோன்றினமாத்திரத்தில் ஆஞ்சநேயர் பரதாழ்வானைப் பார்த்து, ஓ பரத மஹாராஜரே! அன்றலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருநேத்திரங்களையுடைய ஸ்ரீராமபிரானும், கற்புடைய பெண்களுக்கு ஆபரணம்போலச் சிரேஷ்டமாக விளங்குகின்ற ஜானகிபிராட்டியாரும், உமக்குப் பின்னே அவதரித்த லக்ஷ்மணப்பெருமாளும், வானரசேனைகளும், விமானத்தின் மேல் வருகின்றதைப் பார்த்தருள்வீராக வென்று சொன்னார். பதினாலுலோகங்களும், தன்மேல் ஏறியபோதிலும், வெற்றிடமிருக்கத்தக்க பெருமை யுடையதாய் ஒளியமைந்த விமானத்தின்மேல், ஊழி முதல்வனாகிய ராமபத்திரர் தோன்றுகின்றாரென்று ஆஞ்சநேயர் சொன்னபோது, ஸ்ரீராமசுவாமியை எதிர்கொள்ளும்படிவந்தவர்களெல்லாம் ஒளியை வீசுகின்ற மேரு

மலையின் பெருங்குகையில் விளங்குகின்ற நீருண்ட மேகம்போல விமானத்துக்குள்ளே எழுந்தருளிய ஸ்ரீரகுபதியைக் கண்டவுடனே ஆரவாரித்த சந்தோஷ ஆரவாரமானது, இராவணன் அரசாண்ட தென்னிலங்கைக்கு அப்புறத்திலும் சென்றது. அப்போது சத்தியத்தை ஆசரித்து, மாமிசதேகத்தை விட்டொழித்து, விஷ்ணுலோகத்தை யடைந்த ஸ்ரீசக்கரவர்த்தியாரது வருகையைக்கண்டாற்போல, காட்டுக்குச்சென்ற தன் பிராணபதமாகியஸ்ரீராகவபிரானை, பரதாழ்வான் கண்களாரக்கண்டனர். தாம் இழந்துபோன பொருள் கிடைப்பதற்குமுன் வருந்திய துன்பங்களெல்லாம், அப்பொருள் கிடைத்த மாத்திரத்தில் மறந்து, ஆனந்திப்பவர்களைப்போல சுவாமியானவர் காட்டுக்குச் சென்றபின், மிகுந்த துக்கங்களால் வருத்தப்பட்ட பரதாழ்வானனவர் அதிககுதூகலங்கொண்டு ஸ்ரீசீதாபதியைக் கும்பிடும்படி தமது கையால் ஆஞ்சநேயர் கையைப் பற்றிக்கொண்டிருந்ததைவிட்டு, இரண்டு கையையும் சிரமேற் குவித்துக்கொண்டிருந்தார்.

யாவரிலும் அதிமேம்பாடுள்ள கீர்த்திமானுகிய பரதாழ்வானுனவர் தாம் பற்றியிருந்த கையை விட்டவுடனே, அநுமானுனவர் அவ்விடத்தினின்று மேலேயெழுந்து, தமக்கெதிரே வருகின்ற விமானத்தின்மேற்பாய்ந்து, ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருடைய சீர்பாதங்களை வணங்கி, பரதாழ்வார்படுகிற ஆற்ருமையை நினைத்துக்கொண்டு கண்களில் நீர் தாரைதாரையாகப் பெருகிக்கொண்டு நின்று, ஸ்ரீமகாலட்சுமிக்கு நிவாசஸ்தானமாகிய திருமார்பையுடைய எம்பெருமானே! சுவாலையை வீசிக்கொண்டு எரிகின்ற பெருநெருப்பில் வீழ்ந்துவிடுவதற்குச் சர்வசித்தமாயிருந்த, பரதாழ்வானை நாயேன் அடைந்து தேவருடைய வரவைச் சொல்லினேன். சொன்னபின்பு தான் அயோத்தியாநகரத்தில் உள்ளார் யாவரும், உயிரோடிருப்பவர்களாயினுர்களென்று சொல்லினர். அதுகேட்டருளிய ஸ்ரீராமபத்திரர் அவரைக் கிருபையோடும் பார்த்து, அப்பா அஞ்சனைச் சிங்கமே! முன்பு யான்செய்த தீவினைகள் பலவற்ருல், அநேகஇடுக்கண்கள் ஒன்றின்பின் ஒன்ருக வந்துகொண்டேயிருக்கின்றன. இப்போது யான்செய்த சுகிர்தத்தால் நீயொருவன் கிடைத்து அவற்றையொழிக்க ஒழிந்துபோகின்றன. ஓ என்தாயைப் பார்க்கினும் என்னிடத்து அதிக அன்பு வைத்துள்ளவனே! என்று சொல்லிக் காடாலிங்கனஞ்செய்து, நீ எனக்குக்கிடைத்தது தவத்தாலென்று எனக்குமாத்திரமா சொல்லிக் கொள்வது? என்பிதாவுக்கும், என் தாய்மார்க்கும், என் தம்பிமார்களுக்கும், எம்மைச் சார்ந்தவர்களுக்கு மாகுமென்று சொன்னுர்.

இவ்வாறு ஸ்ரீராமபதியானவர் திருவாய்மலர்ந்தருளுகையில், எல்லாருடைய கீர்த்திகளையும், தாழ்த்திவிட்டோங்கிய,உயர்ந்தபுகழையுடைய ஸ்ரீபரதாழ்வானுனவர், முத்திநெறிக்கு வழித்துணையும், தமக்குத் தாமே சமானமானவையும், ஆகிய ஸ்ரீராமபிரானுடைய திருப்பாதுகைகளைத் தலையின்மேல் தாங்கிக்கொண்டும், இரண்டு கரங்களைக் குவித்துக்கொண்டும், கண்டவர்களுக்குள்ளே இந்தத்தேகத்திலும் உயிருண்டோ வென்ருர்க்குக் கண்ணீரொழுக்கலாலும் அழுதலாலும் நடத்தலாலும் உயிருண்டென்னும்படியாக மிகவும் இளைத்த தேகத்தை யுடையவராய் விமானத்துக்குச் சமீபத்திலே நெருங்கிவந்தார். அப்படிவந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத்தருமதேவதைக்கோர் துணைவனுய் நிற்கின்ற, ஆஞ்சநேயரானவர் தண்டன் சமர்ப்பித்துவிட்டு, ஸ்ரீஜானகிரமணரை நோக்கி, சுவாமி! தேவரீருக்குத் திருத்தம்பியாரும், சிந்தையுமொழியும் செல்லாத நிலைமையுடையதாகிய பரமபதத்தையடைவதற்குச் சுலபமார்க்கமாகிய பாரதந்திரிய மென்னும் மெய்ஞ்ஞானவரசை ஆண்டுக்கொண்டிருந்தவரும், தேவர் பக்கலிலுண்டாகிய பிரேமாதிசயத்தால், பெற்றதாய்விஷயத்திற் பகைமைபாராட்டுபவருமாகிய ஸ்ரீபரதாழ்வான்இதோவந்து நிற்கின்ருர். தம்முடைய திருக்கண்களால் கடாக்ஷித்தருளும் என்று வாய்பொத்திக் கொண்டு சொல்லினர்.

ஸ்ரீ அஞ்சனுதேவி புத்திரர் காட்டத் தமது திருத்தம்பியாரைக்கண்ட ஸ்ரீரகுராமரானவர்ஸ்ரீதசர தசக்கரவர்த்தியாரைக் கண்டாற்போல சந்தோஷசித்தராகி, தம்மைக் காணவந்த அயோத்தியாநகர ஜனங்களையும், அறுபதினுயிரம் அக்குரோணி

சேனுவீரர்களையும், தாய்மார் மூவர்களையும், தம்பிமார்களையும், முனிவர்களையும், என் கண்ணாரக் காண்பேனென்று நினைத்தமாத்திரத்தில் புஷ்பகவிமானமானது பூமியிலிறங்கியது. ஸ்ரீராகவபிரான் எழுந்தருளிய புஷ்பகவிமானம் அவரவர்கள்செய்த நல்வினையால்,மண்ணுலகத்திலிருந்துசுவர்க்கலோகத்துக்குக் கொண்டுபோம்படிவந்ததுபோல எல்லாவுயிர்களும் களித்தன. தசரதராமரானவர் ஸ்ரீகௌசல்யா தேவி முதலிய தாய்மார்களுக்குப் பசுவின் பக்கலில்வந்த இளங்கன்றுபோலவும், விஷயாந்தர முதலியவற்றையொழித்த, பிரபன்னர்களுக்கு மனோலயம்வந்ததுபோலவும், வாலிபர்களுக்குத் தங்கள் கண்களிலாடுகின்ற பாவைபோலவும், பிரிவிநோயினுலிளைத்த தேகத்தையுடைய ஸ்ரீபரதசத்துருக்கர்களுக்கு நல்லுயிர்வந்ததுபோலவும், தம்மைத் தரிசியாமையால் மிகவும் வருத்தமுற்று உழன்றுக்கொண்டிருந்த எளிய உயிருடையோர்களுக்கெல்லாம் பெற்றதாய் வந்தாற்போலவும், அன்புடைய சத்புருஷர்களுக்கெல்லாம் தேவாமிர்தம்போலவும், மெய்ஞ்ஞானத்தையுடைய உயர்ந்தோர்களுக்கெல்லாம், தம்முடைய யதார்த்த நிலைமையோடு பிரசன்னமாயினது போலவும், மதர்த்தவிழிகளையுடைய மங்கையர்களுக்கெல்லாம் களிப்பைத்தருகின்ற தேன்போலவுமானுர். ஸ்ரீஜானகிரமணரே! தங்களுக்குப் பிராணனல்லாமல் வேறேயுண்டென்று நினையாத கோசலநாட்டாரும், அயோத்தியா நகரத்தாருமாகியஸ்ரீபுமான்கள்யாவரும்,ஸ்ரீராமநாதர் எதிரேவந்ததைக்கண்டவுடனே சித்திரப்பிரதிமை உயிரடைந்தாற்போல முன்னடைந்திருந்த சித்தப்பிரமை நீங்கி நல்லுணர்ச்சியை அடைந்தார்கள். சக்கரவர்த்தித் திருக்குமாரர் வந்துவிட்டாரென்கிற ஆநந்தத்தால்சுமங்கலஸ்திரீகளும் புருஷர்களும் சுவாமிமேலும் ஒருவருக்கொருவர் வாரிவாரித் தூவுகின்ற பரிமளப் பொடிகளும், சந்தனமும், நெய்யும், முத்துகளும், புஷ்பங்களும், வாசனைத்தைலமும், ஒன்றுகச்சேர்ந்துபெருகி, குதிரைகளினுடைய நுரையோடும், யானைகளினுடைய மதத்தோடும், அவர்களதுகண்களிலிருந்து ஒழுகாநின்ற நீரோடும்கலந்து, கடலையுங்கடந்தோடியது. இந்தப்பிரகாரம் யாவரும் சந்தோஷங்கொண்டாடிவந்தபோது, கருணைசலதியாகிய ஸ்ரீராமநாதரைப்பெற்றகௌசல்யாதி தாய்மார்கள் மூவரும், தம்பிமார்களிருவரும், வசிஷ்டமுனி ஒருவரும்போய் புஷ்பகவிமானத்தின்மீதேறினுர்கள். உடனே ஸ்ரீராமபிரானுனவர் தங்குலத்துக்கு ஆசாரியராகியவசிஷ்டருடையபாதங்களை வணங்கினுர். வணங்கிய ஸ்ரீராகவபிரானை அம்முனிபுங்கவர்ஆசீர்வதித்து, முன்தாம் கொண்டிருந்த துன்பங்கள் நீங்கும்படி இரண்டு கரங்களாலும் தூக்கியெடுத்துப் பலமுறைதழுவினுர்.

பின்பு ஸ்ரீஇராமாநுஜர், அந்த முனிசிரேஷ்டருடைய பாதங்களைவணங்க, அவர் ஸ்ரீரகுபதியைத் தழுவியது போலவே ஆசீர்வசனம்சொல்லி ஆலிங்கனம் செய்தனர். தாய்மார்கள் மூவரில் கைகேசியினுடைய அடிகளைச் செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீதசரதாத்மஜர் முன்னே நமஸ்கரித்து, பின்னே மற்ற இருவர்களுடைய கால்களையும் நமஸ்கரித்தார். அம்மூவரும் கண்களில் நீர்பெருகி மிகவும் பிரீதியோடு தழுவினுர்கள். ஜனகராஜபுத்திரியார் வசிஷ்ட முனிவரையும், மாமியர்களையும் வணங்கி நின்றுர். தனக்கு ஒப்பில்லாத வெற்றியையுடைய லக்ஷ்மணர் மூன்றுதாய்மார்களையும் வணங்கினுர். அப்படிவணங்கிய இளையபெருமாளை அத்தாய்மார்மூவரும் எடுத்தணைத்து, ஓ குழந்தாய்! நீதான் ஸ்ரீராமனுக்குத் தம்பியென்னும்படி காட்டுக்கு அப்புருஷோத்தமனோடு கூடப்போய் வந்தாயென்றுசொல்லி ஆசீர்வதித்தார்கள். ஆதியில் தாம் கொடுத்தருளிய திருப்பாதுகைகளிரண்டையும் பரதாழ்வானுனவர் திருவடிக்காணிக்கையாகவைத்துத் தண்டன் சமர்ப்பித்தனர். அப்படித் தண்டன்சமர்ப்பித்த பரதாழ்வானை ஸ்ரீரகுராமரானவர்தமதுதிருப்பவளத்தால்ஆசீர்வசனம் சொல்வதொன்றும் அறியாமல் உதடுகள் துடிக்கக் கதறியழுது, உயிருமுடலும் ஒன்றும்படி காடாலிங்கனஞ் செய்து, தமது நேத்திரங்களிலிருந்து பெருகியொழுகாநின்ற நீரால், இளமைக்கும் அழகுக்கும் மாருக அணிந்திருக்கிற சடைமுடியிலுள்ள மாசெல்லாம் நீங்கும்படியாகக் கழுவி, உச்சியைமோந்து, கன்றைக்கண்ட

பசுவைப்போலத் தமதுள்ளத்துள்ள அன்பு புறத்திலும் தோன்றும்படி நின்ருர். அதுசமயத்தில் ரதகஜ துரகபதாதியாகிய நால்வகைச் சேனைகளின் ஆடம்பரமும், மற்ற வைபவங்களும், ஸ்ரீசர்வசுவாமியினுடையதிருப்பாதுகைகளுக்கே நடக்கும்படி செய்துவந்த, பரதாழ்வானுடைய திருவடிகளில், இந்திரனைவெற்றிகொண்ட இந்திரஜித்துவைக் கொலைசெய்த இளையபெருமாளானவர்வீழ்ந்து தண்டனிட்டார். தண்டனிட்ட ஸ்ரீராமாநுஜரை பரதாழ்வான் எடுத்துத் தழுவினுர். அவ்விருவர்களுடைய திருமேனிகளையுங்கண்ட அறிவுடையோர் யாவரும், ஸ்ரீராமபத்திரரைவிட்டுப் பிரிய மாட்டாமல் அவரோடு பின்ருெடர்ந்து சென்று காட்டில்வருந்தியதிருமேனியோ! அவருடைய பிரிவைச் சகியாமல் அதிக துக்கத்தால் நாட்டிலிருந்துவருந்திய திருமேனியோ? இவ்விரண்டுகள் எது மிகுதியும் இளைத்து மெலிந்திருப்பதென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு உள்ளம் நைந்தார்கள். கடைசியில் ஸ்ரீசத்துருக்கப் பெருமானுனவர், தேவதேவ நாயகனுகிய ஸ்ரீராகவபிரானுடைய சீர்பாதங்களிலும், இளையபெருமாளுடைய திருவடிகளிலும், நானுவித நல்லமலர்களைத் தூவிச் சேவித்துக்கொண்டார். அவ்விருவர்களும் எடுத்தணைத்தபின், ஸ்ரீமகேஸ்வரியாகியஜானகிபிராட்டியாருடைய திருவடிகளை வணங்கினுர். அப்பால் ஸ்ரீராகவபிரானுனவர் ஸ்ரீ பரதசத்துருக்கர்களுக்குத், தம்முடையஉயிர்த்தோழர்களாகிய சுக்கிரீவமகாராஜர் முதலானவர்களை, இன்னுரின்னுர் இப்படிப்பட்டவர்களென்று சொல்லிக் காட்டினர். உடனே சுவாமியோடுகூட வந்தவர்கள் அவ்விருவர்களையும் வணங்கினுர்கள். பரதாழ்வான் சுக்கிரீவமகாராஜாவையும், அங்கதப்பெருமானையும். குமுதனையும், சாம்புவரையும், நீலனையும், மற்றும் படைவீரர்களையும், ஸ்ரீவிபீஷணுழ்வானையும், அவரவர்களுக்குத் தக்கவிதமாக மரியாதைகளைச் செய்தார். சுமந்திரனென்னும் முதன்மை பெற்ற மந்திரியானவர் மற்ற மந்திரிமார்களோடும், சேனுநாயகர்களோடும், பந்துக்களோடும், மத்தகஜங்கள்போன்ற இராஜகுமாரர்களோடும், மற்றவர்களோடும், ஸ்ரீரகுநாதருக் கெதிரேவந்து, அருமைத்திருமேனி வாடிவருந்தும்படி காட்டுக்கெழுந்தருளியதை நினைக்குந்தோறும் தோன்றுகிற அழுகையும், அந்தப் பதினுன்கு வருஷங்களையுங் கழித்துவந்து, இனிப் பட்டாபிஷேகஞ் செய்துக்கொள்வாரல்லவாவென்று நினைக்குந்தோறும், தோன்றுகிற மகிழ்ச்சியும், ஒன்றையொன்று அதிகரித்து உயரும்படியாகத் தொழுது, எழுந்திருந்து கண்ணீர் பெருக்கிக்கொண்டு நிற்க; நம் ஐயனுனவர் அவரைத்தழுவி குசலப்பிரசனைகள்செய்து ஆநந்தித்தார். இளையபெருமாளும் அப்படியே க்ஷேமங்களை விசாரித்துச் சந்தோஷித்தார். அக்கால் சுமந்திரரானவர் ஸ்ரீராமபத்திரரைச் செவ்வையாயுற்றுப்பார்த்து, இனிஇந்தப் பூமிக்கு யாதொரு குற்றமுமில்லையென்று, மற்ற மந்திரிமார்களைப் பார்த்துச் சொன்னுர். தம்மோடொத்தவர்களும், தம்மிலுமுயர்ந்தவர்களுமில்லாத, ஸ்ரீராமநாதரானவர் சேனைகளெல்லாம் விமானத்தின் மேல் ஏறக்கடவனவென்று கட்டளையிட்டனர். சமுத்திரநீரானது மேகத்தில் அடங்குவதுபோல அந்தச் சேனைகளெல்லாம் விமானத்தின் மேலேறி ஸ்ரீராமலக்ஷமணர்களுடைய சீர்பாதங்களை வணங்கின. இவைகளையெல்லாம் அந்தரமார்க்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள் யாவரும், இந்த விமானத்தை அண்டங்களையெல்லாமுண்ட ஸ்ரீசர்வேசுரனுடைய திருவயிற்றுக்குச் சமானமென்று சொல்லுவோமேயானுல், அந்தத் திருவுதரத்தில் பிரம்மேந்திராதி, சமஸ்த சேதனர்களும், அடங்கி யிருந்தார்களேயல்லாமல், தாம் அடங்கி யிருந்ததுண்டோ? இல்லையே! இந்த விமானத்திலே அந்தத் தேவதேவ நாயகனுகிய ஸ்ரீராகவபிரான் எழுந்தருளியிருப்பதால், இதற்கு அந்தத் திருவுதரம் ஒப்பாகமாட்டாது. ஸ்ரீபகவானுடைய திருவயிறே ஒப்பாகாமற் போகுமேயானுல், சமுத்திர மொன்றைமாத்திரம், தனக்குள் அடக்கிய அகஸ்தியருடைய கையொன்ருே சமானமாகப் போகிறதென்று சொல்லிக்கற்பகமலர்களைத்தூவித் துதித்தார்கள். அப்போது இடிக்கூட்டங்களும், எழுசமுத்திரங்களும், ஒருமித்து ஆரவாரித்தாற்போல முரசங்களும், சங்கங்களும், மற்ற வாத்தியங்களும், யானை குதிரைகளும்,

ஒலிக்கின்ற ஓசையும், பிராமணர்களுடைய வேதகீதங்களின் ஓசையும் உயர்ந்தோங்கித் திக்குகளெல்லாம் பரவிச் சத்தித்து; ஆகாயவீதியில் நின்று சமஸ்த தேவகணங்களும், சித்தர்களும், சாரணர்களும், ஸ்ரீசக்கரவர்த்தித் திருக்குமாரருக்குக் கூறும் பல்லாண்டொலியினால் அடங்கிப்போகாநின்றன. இவ்வளவு கோஷத்தோடு அயோத்தியை நோக்கி, ஆகாயத்தில் செல்கின்ற புஷ்பக விமானமானது, இந்திரனுக்குக் களிப்புண்டாகும்படி, சுவர்க்கலோகத்துக்குச் செல்வதுபோ லிருக்கிறதென்று, இந்தப் பூமியிலுள்ளோர் யாவரும் பேசிக்கொண்டிருக்கையில், இந்திரனோடு மற்றத் தேவர்களோடும் சுவர்க்கலோகமே பூலோகத்துக்கு வருவதுபோல, அந்தப் புஷ்பகவிமானம் தேவர்கள் தூவுகிற மலர்மாரியோடு ஸ்ரீ அயோத்தியா நகரத்தை வந்துசேர்ந்தது.

மீக்ஷிப்படலம் மூற்றிற்று.

---



ஸ்ரீராமஜெயம்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்.

## திருமுடிசூட்டுப்படலம்.

### விருத்தம்.

சித்திரமண்டபம் அதிலேஉள்ளங்கொண்டு தேவர்கள் மானிடர்கள்செய்யும் சேவைகொண்டு
சுத்திபெறுகுகன் விபீஷணன்சுக்ரீபன் துணைவர்பணி கொண்டுசிங்கா தனமேற்கொண்டு
சத்தியமும்நீதிமேற் கொண்டுதுள்ளச் சகலமுங்கைக்கொண்டு செங்கோல் கொண்டராமன்
பத்தினிஜானகியுடனே யுலகையாளும் படிகொண்டான் அபிஷேக முடிகொண்டானே.

ஸ்ரீ சக்கரவர்த்தித் திருக்குமாரரோடு யாவரும் விமானத்தைவிட் டிழிந்தனர்கள். அப்படியே ஸ்ரீஜானகிரமணர் ஸ்ரீபரதாழ்வானோடு மற்றவர்களோடும் திருவயோத்தியாபுரிக்குத்தென்மேற்குத்திசையிலுள்ள நந்திக்கிராமத்தைச் சேர்ந்து, தாமும் மற்றத் தம்பிமார்களும் சடைமுடியை மாற்றிவிட்டு க்ஷவரமும்செய்துகொண்டு சரயுநதியில் மூழ்கி, தமக்கு உபாசனமூர்த்திகளுடைய திருநாமங்களைச்சொல்லித் திருமண்காப்பிட்டுக்கொண்டு, பீதாம்பரதாரிகளாயும், சர்வாபரண பூஷிதர்களாயும், நந்திக்கிராமத்தை விட்டு அயோத்தியாநகரத்து எல்லைக்கண்வந்து சேர்ந்தார்கள். அக்கால் ஸ்ரீராமச்சந்திரரானவர் சதுர்வேதங்களையுமொத்த நான்கு வெள்ளைக் குதிரைகளைக் கட்டிச் சூரியனைப்போலவிளங்குகின்ற ரதத்தின்மேல் ஆரோகணித்தருளினர். உடனே அந்தத்திருத்தேரில் மற்றமூவர்களும் ஏறியருளி, அவர்களில் ஸ்ரீஇராமாநுஜர் சுவாமிக்குப் பின்புறத்து நின்று வெண்கொற்றக் குடைபிடித்தார். ஸ்ரீசத்துருக்காழ்வான் பின்னே நின்று இரண்டு கரங்களிலும் இரண்டு சாமரைகளைப்பற்றி வீசினர். ஸ்ரீபரதாழ்வானனவர் ஆனந்தப்பரவசராய்க் கண்ணீர் பெருகிக்கொண்டு முட்கோல் பிடித்துத் தேரை நடத்திச்சென்றார்.

ஸ்ரீ புருஷோத்தமராகிய ஸ்ரீ ராகவபிரான் எழுந்தருளிய திருத்தேருக்கு இரண்டு பாரிசங்களிலும் விபீஷணாழ்வானும், சுக்கிரீவ மகாராஜாவும், யானையின்மேலேறிப் போற்றிசெய்துகொண்டுசென்றார்கள். அங்கதப்பெருமான் கொடிப்படையின் முன்னே போனர். திருவனந்தாழ்வானுக் கொப்பாகிய திருவடிகள் திருத்தேருக்குப் பின்வந்தார். அறுபத்தேழுகோடிவானரப் படைவீரர்கள் மானிட வுருவங்கொண்டு, நல்ல ஆடையாபரணங்களைத் தரித்துக் கொண்டும், கலவைச்சந்தனமுதலிய பூச்சுகளைப்பூசிக்கொண்டும், வெண்பட்டுக்குடை நிழலைச் செய்ய, பல வாகனங்களிலேறிப் போனர்கள். நவகண்டங்களிலுமுள்ள ராஜ

புருஷர்களில் சிலர் யானைகளின்மேலும், சிலர் பசும்பொன் தகடுவேய்ந்த தேர்களிலும், சாமரைகள் பக்கங்களில்வீசவும், வெண்பட்டுக்குடை பிடிக்கவும், இரத்தினமய கிரீடங்கள் சிரசுகளில்பிரகாசிக்கவும் ஏறிக்கொண்டு கைகளைக்குவித்துச் சென்றார்கள். வானரமங்கையர்களெல்லாம் தெய்வ ஸ்திரீகளைப்போல உருவமாறி நல்லபட்டுவஸ்திரங்களையுடுத்தி, திவ்வியாபரண பூஷிதர்களாய் பிடியானைகளின்மேலும், கோவேறு கழுதைகளின்மேலுமேறி, விண்மீன் கூட்டங்களைப்போலச் செல்ல, அவர்களுக்கு நடுவே மகேஸ்வரியாகிய ஸ்ரீஜானகிபிராட்டியார் விமானத்தின்மேல் சந்திரனைப் போலச் சென்றாள். ஆகாயவீதியினின்ற எல்லாத்தேவர்களும், முனிவர்களும், ஸ்ரீ ராகவபிரானும், ஸ்ரீசீதாபிராட்டியாரும் எழுந்தருளுகிற திவ்வியசேவையைச்சேவிக்கும் உள்ளக்களிப்பால், கற்பகமலர்களையும், வேறு சுகந்தமலர்களையும், கைகளோயாமல் வாரிவாரிச் சொரிதலாலே, இந்தப் பூமண்டலம் அந்தப்பூவுகளாலேயே நிறைந்து, தரைதோன்றப்படாமையால் அதை கண்ட நிறைந்த கவிவாணர்கள் இப்பூமியைப் பூவென்று பெயரிட்டு அழைத்தார்கள். அன்றுமுதல் இந்த ஜகத்துக்குப் பூவென்று பெயருண்டாயிற்று. ஸ்ரீரகுநந்தனரானவர் காட்டுக் கெழுந்தருளிய பிரிவின் துன்பத்தாலே, கோடைக்காலத்தில் நீர்ப்பசையில்லாத மேகம்போலப் பதினான்குவருஷம்வரையில், மதநீர்ப்பெருக்காமல் இளைத்துச் சோம்பிக்கிடந்த யானைகளெல்லாம், இப்போது ஸ்ரீராகவபிரானானவர் ஆரண்ணியத்தைவிட்டுத் திருவயோத்தியாபுரிக் கெழுந்தருளியதை உணர்ந்தும், அவரைச்சேவித்தும் தாம்கொண்ட ஆனந்தமானது உள்ளத்தில் நிறைந்து, அடங்காமற் பெருகியதுபோல, மூன்றுமதநீரும் ஆறுயோடிக் கடலிற்போய்விழும்படிப்பெருகியதுகள். அந்த யானைகளைப்போலவே குதிரைகளெல்லாம் பேசியறியாத ஊமைகள் ஏதோவொரு தெய்வவருளால் பேசும்படி பெற்றபோது எப்படி பேசுவார்களோ அதுபோலவும், இடிகளையே பெய்கின்ற மேகராசிகளைப் போலவும் கனைத்துக்கொண்டு சென்றதுகள். ஓரறிவுயிர்களாகிய மரங்கள் செடிகள் கொடிகள்யாவும் ஸ்ரீசர்வசுவாமியானவர் வனத்துக் கெழுந்தருளிய துக்கத்தால் அரும்பெடுத்துப் போதாகி மலராமலிருந்து, இப்போது ஸ்ரீராமபத்திரர் அயோத்திக் கெழுந்தருளியபடியால் அந்தந்தப்பருவங்களிலரும்பி உடனே நல்லமணமுள்ள மலர்களை மலர்ந்து சுகந்தத்தைவீசியதுகள். ஸ்ரீராமபத்திரர் அயோத்தியாபுரியைப் பிரிந்ததுமுதல் அதிக துக்கத்தை யுடையவர்களாய்க் கலவியின்பத்திலிச்சையில்லாமல் வெறுத்திருந்த ஸ்திரீஜனங்கள் யாவரும், ஸ்ரீரவிகுல சந்திரன் எழுந்தருளினவுடனே, மிகுந்த செல்வச் செருக்குடையவர்களாய்க் கலவியில் நினைப் புண்டாகவே, அந்த மங்கையர்களுக்கு உடல் முழுமையும் பொன்னிறம்போன்ற பசலைபூத்தது. இவ்வண்ணம் திருவயோத்திமாநகரமெங்கும் மிகுந்த களிப்பே சிறக்கும்படி அனந்த கலியாணகுண சலதியாகிய ஸ்ரீரவிகுலோத்துங்கரானவர் அயோத்தியாநகரத்துக்குள்ளேபிரவேசித்து, ஸ்ரீகௌசலை முதலிய தாய்மார்களை வணங்கி, வசிஷ்டபகவானுக்கு நமஸ்காரஞ்செய்து, ஸ்ரீதேவியும் பூதேவியும் குதூஹலமாக நடித்துக்கொண்டிருக்கின்ற அரண்மனைக்குள்ளே சென்றனர்.

ஸ்ரீரகுகுலநாயகர் திருமாளிகைக்குள் எழுந்தருளினவுடனே, புருஷர்களும் ஸ்திரீகளும்உடுத்திருந்தவஸ்திரங்களை அவிழ்த்துவிடவேண்டுமென்னும் கருத்தில்லாதவர்களாயினும் தாமே அவிழ்ந்துவிடுகிற அந்த வஸ்திரங்களைக் கீழேவிழவொட்டாமல் பலமுறை கைகளால் தாங்கிக்கொண்டவர்களாகியும், ஆனந்தப் பரவசத்தால் தேகம் பூரிப்பதினாலும், துள்ளித்துள்ளிக் குதிப்பதினாலும், தங்களையறியாமல் வஸ்திரங்கள் அவிழ்ந்துபோய், மதுபானஞ்செய்த மயக்கத்தாலே நிருவாணிகளாயிருப்பவர்களைப் போன்றார்கள். பிராமணர்கள் உடுத்தியிருந்த வஸ்திரங்களை வேசியர்கள் பறித்து உடுத்திக்கொண்டார்கள். அந்த வேசையர்களுடைய ஆடைகளை, அந்தணர்கள் பறித்துத் தரித்துக் கொண்டார்கள். ஒருவருடலோடு ஒருவருடல் நெருங்கிப்படுதலாலே, ஸ்ரீசுவாமியினுடைய சேவையைக் காணும்படி சந்தனமுதலிய பூச்சுகளைப்பூசவும் நேரமில்லாமல் அதிகவிரை

வாய் வந்துவிட்டவர்களுடைய தேகமும், பூசிவந்தவர்களுக்கு இரட்டிப்பாகச் சந்தனமுதலானவைபட்டுப் பரிமளித்தன.

ஸ்ரீராமசுவாமியானவர் ராஜசம்பத்தை நீங்கியிருந்த பதினன்கு வருஷமும் நல்ல ஆடையும், இரத்தினபரணங்களும் தரியாமல், துக்கத்தையே அநுபவித்துக்கொண்டிருந்த மங்கையர்கள்யாவரும், இப்போது சர்வாபரணங்களாலும், தங்கள் உடல்மறையும்படியாகத் தரித்துக் கொண்டமையால், அந்தந்தஅவயவங்களின் இலக்கணந்தோன்ருமல், புருஷர்கள் மயங்கிநின்ருர்கள். தேவபுருஷர்களுடைய தேகத்திலணிந்திருந்த, சந்தனம் இராஜபுருஷர்களுடைய தேகத்திலும்இராஜபுருஷர்களுடையஉடலில் அணிந்த சந்தனம் தேவபுருஷர்களுடைய உடலிலும்பட்டுப் பரிமளிக்குங் காரணத்தால், தேவதாஸ்திரீகள் நம்முடைய நாயகர் பூலோகஸ்திரீயை ஆலிங்கனம்செய்துவந்தாரென்றும், ராஜஸ்திரீகள் நம்முடையகணவர் தேவதாஸ்திரீயைத் தழுவிவந்தாரென்றும், தங்கள் தங்கள் கொழுநர்களோடூடிக்கொண்டார்கள். இவ்வாறு அரண்மனையெங்கும் சந்தோஷ ஆரவாரமாயிருக்கும்போது ஸ்ரீராமச்சந்திரரானவர் பரதாழ்வானைக் கருணையோடுபார்த்து, ஹே பரதா! விபீஷணுழ்வானையும், சுக்கிரீவமகாராஜாவையும் மற்றவானரப்படைத்தலைவர்களையும், மற்றவர்களையும் அழைத்துப்போய், நம்முடைய சக்கரவர்த்தியினுடைய மாளிகையிலுள்ள சிறப்புகளெல்லாவற்றையும் காட்டுகவென்று கட்டளையிட்டார். இப்படி கட்டளையிட்ட உடனே பரதாழ்வானுனவர் சுவாமிக்குத் தண்டன் சமர்ப்பித்து, அவர்கள் யாவரையும் அழைத்துச்சென்று பலதிருமாளிகைகளைக்கடந்துபோய் தேவர்களுக்குவாசஸ்தலமாய் நானுரத்தினங்கள் பிரகாசிக்கின்ற மேருமலைபோலவும், ஸ்ரீமகாலட்சுமிக்கு நிவாசமாகவும் விளங்குகின்ற தசரதச்சக்கரவர்த்தியினுடையஅந்தப்புரத்தைக்காட்டினர். அந்தத் திருமாளிகை வச்சிரம்-மாணிக்கம்-நீலம்-மரகதம்-இவை முதலிய ரத்தினங்களால் கட்டப்பட்டதாகையால், அவர்கள் அம்மணிகளுடையகிரணகாந்தியால் உயிர் நிலைகுலைந்து, மனமும் தங்கள் மனேதிடமும் இழந்து புத்திமயங்கி, கண்ணிமை கொட்டாமல் அப்படியப்படியே நின்றுவிட்டார்கள்.

அப்பால் அவர்கள்யாவரும் அங்கிருந்துநீங்கி, இரத்தினங்களுக்குள் ஸ்ரீகௌஸ்துவ மணியைப்போல விளங்குகின்ற ஒரு திருமாளிகையைக்கண்டு, இது யாது? என்று வினவினர்கள். அவர்களை ஸ்ரீ பரதாழ்வானுனவர் பார்த்து, பூர்வத்தில் இக்ஷ்வாகு மகாராஜா மூலதாமரையில் உற்பவித்த சதுர்முகனை நோக்கித் தவஞ்செய்துபெற்று, சதாகாலமும் இலக்குமிதேவி எழுந்தருளியிருக்கும் திருமாளிகையென்றுசொன்னர், அதுகேட்ட யாவரும் இதைத் துதிக்க எங்களால் முடியுமோ? முடியாது. என்று தண்டன் சமர்ப்பித்துவிட்டு அப்பாற்சென்று, மற்ருேர் இரத்தினமய மண்டபத்தைச்சேர்ந்து உட்கார்ந்தார்கள். அங்கு உட்கார்ந்துகொண்டு தாங்கள் கண்டுவந்த நானுவித விசித்திரமணிகளாலமைத்த தொழில்களை எண்ணியெண்ணி ஆச்சரியபூதர்களாயிருந்த அவர்களில் சுக்கிரீவமகாராஜாவானவர் ஸ்ரீ பரதாழ்வானை நமஸ்கரித்து, ஓ பரிசுத்தகுணசீலரே! நம்முடைய பெருமானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்யும் நல்லநாள் இன்னநாளென்று இன்னம் குறிக்காமலிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். இப்படிகேட்ட மகாராஜாவை ஸ்ரீபரதாழ்வானுனவர்பார்த்து, ஏழ்கடலினது தீர்த்தமும், கங்கை முதலிய நதிகளினது தீர்த்தமும், இவ்விடத்தேவந்து சேர்தற்குச் சில நாள் கழியுமல்லவா? அவை வந்தபின்புதான் ஒரு திவ்வியமுகூர்த்தநாள் நிச்சயித்துக்கொள்ள வேண்டுமென்ருர். அதுகேட்ட சுக்கிரீவமகாராஜா சரிதானென்று ஒப்புக்கொண்டு நம்முடைய ஆஞ்சநேயரிருக்கச்சே அந்தத் தீர்த்தங்கள் இங்கே வருவது பிரயாசமோ வென்றுசொல்லி ஆஞ்சநேயரைப் பார்த்தார். அந்த மகாநுபாவர் இந்தக்குறிப்பை அறிந்துகொண்டு அந்தத்தீர்த்தங்கள் யாவும் கொண்டுவரும்படி பூமியைத் தாண்டி அப்புறத்தேசென்ருர்.

ஸ்ரீபரதரானவர் சாரதியை யழைத்து எம்முடைய குலத்துக்கு ஆசாரியராகிய வசிஷ்டமுனிவரையும், கணிதநூல்களில்

வல்ல மற்றவர்களையும், இங்கே வரும்படிச் செய்யவேண்டுமென்று சொல்ல, அப்படியே சாரதியானவன்சென்று அவர்களுக்குத்தெரிவிக்க, வசிஷ்டமுனிவரும் கணித சாஸ்திரிகளும்வந்து மண்டபத்தைச்சேர்ந்தார்கள். வசிஷ்டபகவானைக் கண்டமாத்திரத்தில் யாவருமெழுந்து தண்டன்சமர்ப்பித்தார்கள். உடனே ஸ்ரீபரதரானவர் ஒரு திவ்வியாசனத்தைக் காட்டி அதிலெழுந்தருளும்படி கேட்டுக்கொள்ள, வசிஷ்டர் அந்த ஆசனத்தின்மேல் எழுந்தருளினார். மற்றவர்களும் தங்கள்தங்களுக்குரியபீடங்களில் உட்கார்ந்தார்கள். ஸ்ரீராமபத்திருடைய மூத்ததிருத்தம்பியார் வசிஷ்டமுனிவரைநோக்கி, சுவாமி! பூதேவியும் அஷ்டலக்ஷிமிகளும் களிக்கும்படி ஸ்ரீ தசரதாத்மஜருக்குத் திருமுடி சூட்டும் நாள் எந்த நாள்? என்றுகேட்டார். அம்முனிசிரேஷ்டர் நன்றாய் ஆலோசித்து நாளையென்று சொன்னார். உடனே அங்குள்ள காரியக்காரர்கள் இந்தப் பூமண்டலத்துக்கு ஏகசக்கராதிபதியாயிருந்த தசரத சக்கரவர்த்தியாருடைய திருக்குமாரருக்குத் திருமுடிசூட்டும் நக்ஷத்திரத்தையும், வாரத்தையும், லக்கினத்தையும் குறித்து எழுதி, இந்திரகுருவாகிய பிரகஸ்பதிக்கொப்பாகிய முனிபுங்கவர்களுக்கும், மற்ற தேசாதிபதிகளுக்கும் தூதுவர்கள் வசமாகத் திருமுகங்களை அனுப்பினார்கள். அந்தத் தூதர்கள் ஸ்ரீமுகங்களைக்கொண்டு இந்தப் பூலோகமேயல்லாமல் மற்ற சுவர்க்க பாதாள லோகங்களுக்கும்போய்ச் சுவாமியினுடைய பட்டாபிஷேக சுபச்செய்தியைத் தெரிவித்தனர்கள். அந்தமங்களச்செய்தியைக்கேட்டவுடனே திரிலோகவாசிகளும், ஸ்ரீராமநாதரானவர் திருமுடிசூட்டிக்கொண்டுசிங்காதனத்தின்மே லெழுந்தருளி யிருக்கும் திவ்விய சேவையைச் சேவிக்கவேண்டும் என்கிற பேரவாவால் தங்கள் சுயதேசத்தில் ஒருவருமில்லாமல் அயோத்திமாநகரத்துக்குள் வந்து சேர்ந்தார்கள். அப்படி வந்து சேர்ந்தவர்களுடைய வைபவத்தையும், முன்னே அயோத்திமாநகரத்திலுள்ள வைபவத்தையும், ஒரு முடிவுதோன்றும்படி சொல்லச் சதுர்முகராகிய பிரம்மதேவராலு முடியுமோ? முடியாது. ஆதலால் அந்த வைபவங்களை யெடுத்து வருணிக்காமல் விட்டுவிட்டு மற்றவைகளைச் சொல்லப் புகுந்தானென்று என்னை யிகழ்பவர்களில்லை. இப்படி எந்த உலகத்தார்களும் வந்துசேர்ந்தபோது வசிஷ்டமுனிவர் ஸ்ரீராமபத்திரரிடத்துக்கு எழுந்தருளினார். அவர்பின்னே ஸ்ரீ பரதாழ்வானும் ஸ்ரீசுக்கிரீவமகாராஜாவும், விபீஷணாழ்வானும், சாம்புவரும், அங்கதப்பெருமானும் மற்ற படைவீரர்களும் சென்று, அனந்த கல்யாணகுண பரிபூரணராய் எழுந்தருளியிராநின்ற ஸ்ரீரவிகுலச்சந்திருக்குத் தண்டன்சமர்ப்பித்து, ஸ்ரீ ராகவ சுவாமியே! நாளையதினம் தேவர் திருமுடிசூடும் நல்ல நாள். அதற்காகமுன்னாள் செய்யவேண்டிய தொடக்கத்தைச் செய்ய எழுந்திரும் என்று கேட்டுக்கொண்டார்கள். அப்போது சாக்ஷாத் உருத்திரபகவானுக்குச் சமானமாகிய முனிசிரேஷ்டரும் அப்படியேகூறினர். அதுகேட்ட சுவாமியானவர் அக்கிரியைகளைச் செய்ய எழுந்துசென்றனர். பிரமதேவர் வந்திருந்து, மயனென்னும் நாமமுள்ள தெய்வத்தச்சனை நோக்கிப் பட்டாபிஷேகமண்டபங் கட்டவேண்டிய முறைமைகளைச் சொல்ல, மயனும் அந்தவண்ணமே பொன்னும் நவரத்தினங்களுங்கொண்டு ஒரு திவ்வியமணிமண்டபத்தை யாதொரு குறைவுமில்லாமல் நிருமாணஞ்செய்தான்.

முன்னே தீர்த்தம் கொண்டுவரும்படி, தாவிச்சென்ற ஸ்ரீ அஞ்சனாதேவிபுத்திரர் நான்குதிசைக் கடலினது தீர்த்தங்களையும் சப்த புண்ணிய நதிகளினது தீர்த்தங்களையுங் கொண்டு, தம்முடைய பிதாவைப் போல அதிக விரைவாய் வந்துசேர்ந்தார். அரசர்கள் பல நூறு யானைகளின்மேல் குடைநிழல் பரவப் பலபல இரத்தினக் குடங்களில் சரயூநதி தீர்த்தத்தை நிரப்பி ஏந்திக்கொண்டு, காளம்-சங்க முதலிய பல வாத்தியங்கள்முழங்க வந்துசேர்ந்தார்கள். பளிங்குக்கற்களால் கட்டிய ஒரு சிங்கார மாளிகையில் மாணிக்கப் பலகை தைத்து, வச்சிரக் கால்கள் சேர்த்து, சுற்றிலும் பொன்னாற்சமைத்த பீடத்தின்மேல் ஸ்ரீ ராகவபிரான் ஸ்ரீ ஜானகிபிராட்டியாரோடு எழுந்தருளினார். சுமங்கலஸ்திரீகள் மங்களகீதங்கள் பாடவும், சாஸ்திரவிதிப்படி அந்தணர்கள் வேதகோஷ்டம்செய்யவும்,

சங்கம்-தாளம்-முழவம்-பேரி-பூரி இவை முதலிய பல வாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்கள் பூமழைசொரியவும், வசிஷ்டர் முதலிய முனிவர்களும், பிராமணர்களும், மிகுந்த புத்திமான்களும், நல்லொழுக்க முடையவர்களுமாகிய ராஜபுருஷர்களும், மந்திரியர்களும் முறையாக முன்னபிஷேகஞ் செய்தார்கள். சுக்கிரீவமகாராஜர்-சாம்பவர்-அநுமான்-ஸ்ரீ விபீஷணாழ்வான்-குகப்பெருமான் முதலிய யாவரும் முறையாகப் பின்அபிஷேகஞ்செய்தார்கள்.

அதுகாலத்தில் மரகதரத்தினமலையானது செந்தாமரைமலர்கள் பலபூத்து கங்காநதியினுடைய அலைகளின் துளிகளால் முழுமையும் நனைந்து, இரண்டு பொற்குழைகளைத் தாவிப் பாய்கின்ற வேல்போலும் வடிவமைந்த விசால நேத்திரங்களையுடைய ஒரு சொர்னநிற மயிலோடும் வீற்றிருந்தாற்போலவிளங்குகின்ற ஸ்ரீஜானகிராமரை முனிவர்கள் முதலிய சாதுசஜ்ஜனர்கள் யாவரும் தங்கள் ஜனனநோய் நீக்கும்படி கண்களும் மனமும் குளிரச் சேவித்து ஆநந்தித்தார்கள். இந்தத் திருவபிஷேகம் வசிஷ்டமுனீந்திரர் பரம வைதீக மார்க்கத்தின்படி மந்திரங்களைச் சொல்லி நடத்தி, சுமந்திரனென்னும் முதன்மந்திரியைச் சமீபத்தில் வைத்துக்கொண்டு மற்றச் சடங்குகளையும் இந்திரனுக்கு முடிசூட்டுங்காலத்தில் நடக்கும் கிரியாவிசேடங்களைப்போல மிகுதியும் செய்தனர்.

இவையெல்லாம் நடந்தபின்பு சிங்காதனத்தை மகாநுபாவராகிய அநுமான் சுமக்கவும், உடைவாளை அங்கதப்பெருமாள் பற்றிநிற்கவும், ஸ்ரீ பரதாழ்வான் வெண்கொற்றக்குடை பிடிக்கவும், ஸ்ரீலட்சுமண சத்துருக்கர்கள் இருபுறத்திலும் நின்று சாமரை வீசவும், வசிஷ்டபகவானவர் மாணிக்கமயக்கிரீடத்தை எடுத்து உபயவிபூதிநாயகனாகிய ஸ்ரீராமபிரானுக்குச் சூட்டினார். அசுரகுலகுருவாகிய சுக்கிரனும், தேவகுலகுருவாகிய பிரகஸ்பதியும், கணிதசாஸ்திரவிதிப்படி குறித்த நல்ல முகூர்த்தத்தில்திரிலோகத்தார்களும் துள்ளித்துள்ளிக் குதித்து ஆனந்திக்க, சதுர்வேதங்களோடும் சீதேவி பூதேவிகளோடும் சர்வேஸ்வரனாகிய ஸ்ரீரவிகுலநாயகர் திருமுடி சூட்டியருளினார்.

அவாப்த சமஸ்தகாமராய்ப் பக்தபராதீனராய் விளங்குகின்ற ஞானமே திருமேனியாகவுடைய ஸ்ரீராமபிரானானவர் தம்மிடத்தில் மிகுதியும் அன்புடையோர்களுடைய கருத்தின்படி அதிகதிருப்தியுடையவராய்ச் சூடிக்கொண்ட திருமுடியானது அவருடைய சிரசின்மேல் பிரகாசித்துக் கொண்டிருப்பினும் சமஸ்தசேதனர்களும் மிகுதியுங் களிக்கின்ற களிப்பை யோசித்துப்பார்த்தால் ஒவ்வொருசேதனனும் தன் தன் முடியிலும் அன்று அந்த முடியைத் தரித்துக்கொண்டு ராச்சியபாரம் பெற்றுக் கொண்டாற்போலிருந்தது. பலநாள்தவஞ் செய்து தன்னுடைய இயற்கைக்குத்தக்க நாயகராகிய ஸ்ரீராமச்சந்திரரையடைந்து இடையேபிரிந்து வருந்திக்கொண்டிருந்த பூதேவியானவள் இப்போது புருஷோத்தமராகிய ஸ்ரீராமநாதரை மாந்தளிர்போலச் சிவந்து மிருதுவாகிய கைகளை நீட்டிஸ்தனங்கள் அவருடைய மார்பிலழுந்தும்படி தழுவினாள்.

திருமுடி சூட்டிக்கொண்டு ஸ்ரீஜானகிபிராட்டியோடு ஸ்ரீராகவபிரான் பட்டாபிராமராய் எழுந்தருளியிருக்கும் திவ்விய சேவையைக்கண்ட வசிஷ்டர் முதலிய பிரம்மரிஷிகளும், மற்ற பிராமணசஜ்ஜனர்களும் ஆனந்தப்பரவசர்களாகி சர்வசுவாமியினுடைய திருவழகுக்குக் கண் எச்சில் படுமோ? என்கிறபயத்தால் பிராமணஸ்திரீகளைக்கொண்டு ஆர்த்திநீர்சுற்றி மங்களாசாசனஞ்செய்து, வேதாங்கத்தாலும் வேத மொழிகளாலும் துதிசெய்தார்கள். அப்பால் வசிஷ்டமுனிவர் வேதமந்திரங்களை சொல்ல, சாஸ்திரவிதிப்படி ஸ்ரீராகவபிரானனவர் திருத்தம்பிமார்கள் மூவருக்கும் கிரீடங்களைத் தரித்து, ஸ்ரீ பரதாழ்வான் செங்கோல்நடாத்தத் தாம் எல்லாரோடும் அளவிடப்படாத நானாவித போகங்களை அநுபவித்துத் திரிவித லோகங்களையும் பரிபாலித்துக்கொண்டிருந்தனர்.

திருமுடிசூட்டுப்படலம் முற்றிற்று.

---

## விடைகொடுத்தபடலம்.



அப்படி அநுபவித்துக்கொண் டிருக்குங்காலத்தில் ஒருநாள் பசும்பொன்னால் சுவர்களெழுப்பி மாணிக்கத்தூண்கள் நட்டு, நானாவித ரத்தினங்களால் முகடுவேய்ந்த கொலுமண்டபத்தில் மணிகளிழைத்த சிவிகையின்மேல் நீருண்டமேகமும் மின்னலும்போல ஜனகமகாராஜா புத்திரியோடு தசரதராமர் வந்து பரந்த வடிவினதாகிய கருங்கடலின் மத்தியில் மின்னல்கள் ஓடுவதுபோல ரத்தினாரங்களும், முத்தாரங்களும், மதாணியும் திருமார்பில் அசைந்து பிரகாசிக்கவும், உதயசூரியனைப்போல நவரத்தினங்கள் இழைத்த பொன்மகுடம் திருமுடியில் விளங்கவும், மேகசிரேஷ்டமானது பல செந்தாமரைமலர்களை மலர்ந்து ஒரு சிங்காதனத்தின்மேல் இருந்தாற்போல இரத்தினமய சிங்கங்கள் சுமந்த பீடத்தின்மேல் எழுந்தருளி யிருந்தார். மரகதமலையின் பக்கங்களில் வெண்மையாகிய சந்திரிகை பாய்வதுபோல வேல்போலுங் கண்களையுடைய மங்கையர்கள் தாமரை மலர்போன்றகைகளால் சாமரைகளைப் பற்றி வீசவும், தம்முடைய ஜகன்மோகனாகார திவ்விய வடிவழகில் ஈடுபட்டு, நாகர்களும் உரகர்களும் தேவர்களும் பலவாறு துதிக்கவும், சந்திரன்கண்டு உள்ளம் நோகும்படி பதினாலு லோகங்களிலும் தன்னுடைய குளிர்ந்த ஒளிவீசிக்கொண்டு பிரதாப லங்கேஸ்வரனை வெற்றிகொண்ட கீர்த்தி மேலே ஓங்கிப் பரவியதுபோல மேலே வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவும், கற்புள்ள சுமங்கல பிராமணஸ்திரீகள் மங்களகீதங்கள் பாடவும், ஸ்ரீமத் வேதமார்க்க பிராமணஜனங்கள் ஆசீர்வசனங்களைச்சொல்லவும், தாளம் முழங்கவும், சங்கம்முதலான மங்களவாத்தியங்கள் முழங்கவும், சேல்போலப் பிறழ்கின்ற கருங்கண்களையும் கோவைக்கனிபோன்ற சிவந்த வாயையும் தாமரைமலர்போன்ற முகத்தையு முடைய சௌந்தரியவதிகளாகிய வேசியஸ்திரீகள் நடனஞ்செய்யவும், அலைகளையெறிந்து கோஷிக்கின்ற சமுத்திரத்தினோசையும் அடங்கும்படி நானாவித வாத்தியங்கள் முழங்கும்படியாகச் சம்பன்னதேசாதிபதிகளும் அயோத்தியாநகரத்தினது பர்வதாகாரமாகிய கோபுரவாயிலில் நெருங்கிவந்து தம்முடைய திவ்ய கீர்த்திகளையெடுத்துப் புகழ்ந்து முடிகள் ஒன்றோடொன்று தாக்கும்படி வணங்குந்தோறும் சீர்பாதங்களிரண்டும் சிவக்கவும், சுமந்திரர் முதலாகிய மந்திரிமார்களும் முனிவர்களும் படைத்தலைவர்களும் சூழ்ந்து துதிக்கவும், பவளம்போன்ற சிவந்தவாயால் கற்புடைய மங்கையர்கள் பல்லாண்டு சொல்லவும், சிங்காதனத்தின்மேல் தேவராஜனைப்போல ஸ்ரீராமச்சந்திரர் அரசுவீற்றிருந்தார்.

நித்தியவிபூதி லீலாவிபூதி நாயகராகிய ஸ்ரீராகவப்பெருமான் அரசுவீற்றிருக்கும்போது, மயிந்தன்-துமிந்தன்-கும்பன்-அகம்பன்-அநுமான்-குமுதாக்ஷன்-சதவலி குமுதன்-ததிமுகன் முதலாகியஅறுபத்தேழுகோடி வீரர்களோடும், எழுபதுவெள்ள வானரசேனைகளும் சுற்றிவரச் சூரியபுத்திரராகிய சுக்கிரீவமகாராஜாவும், ராக்ஷதகுல வீரரோடு ஸ்ரீவிபீஷணாழ்வானும், புள்ளிகளமைந்த புலியினதுவாலை இறுகக்கட்டியஅரையும், சுழல்கின்ற செங்கண்ணும், மலைபோல் உருண்டு திரண்ட புயங்களும் உடையவராய் தம்முடைய வேடுவச்சேனை சூழ்ந்துவர, ஒருசிங்கம்போல குகப்பெருமானும் வந்து தெண்டன் சமர்ப்பித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு நின்றார்கள். ஸ்ரீராமச்சந்திரரும் அவர்களிடத்துத் தமக்கு உண்டாகிய பேரன்புமறவாமல் முகத்தில் தோன்றும்படியாகக்கடாக்ஷித்து அவர்களைக்கட்டி ஆலிங்கனஞ் செய்ததுபோலவேஅன்போடுஇனியவார்த்தையால்தமது திருப்பவளவாய்திறந்து யாதொருகுற்றமுமில்லாத வெற்றியாளர்களே இங்கே உட்காருமென்று சொல்லினர். அவர்கள் யாவரும் அப்படியே ஆசனங்களின்மேல் உட்கார்ந்து இமைகொட்டாமல் ஸ்ரீசுவாமியினுடைய வடிவழகைப் பார்த்துப்பார்த்து ஆநந்தித்துக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீமத் வேதமார்க்கத்தில் ஒழுகாநின்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களாகிய முனிசிரேஷ்டர்களும், நான்குவேதங்களையும் ஐயமற ஓதியுணர்ந்த கிரகஸ்தாச்சிரமத்தர்களும், வேதத்திலும் மநுஸ்மிருதியிலும் சொல்லிய

படி நடக்கின்ற உண்மை யறிவுடைய வானரப்பிரஸ்தாச்சிரமத்தர்களும், குருகுல வாசஞ்செய்து சாமானிய சாஸ்திரங்களையும் அவற்றைச்சார்ந்த நூல்களையும் சந்தேக விபரீதமில்லாமல் கற்றறிகின்ற பிர்ம்மசாரி யாச்சிரமத்தர்களும், பாரம்பரியமாய் பலநூல் கற்றுணர்ந்த வித்வஜனர்களும், அயோத்தியாநகரத்துக்கு இறைவராகிய ஸ்ரீரகுகுலநாயகரை முறையாகச் சூழ்ந்து தங்கள் தங்களுக்குரிய பீடங்களின்மேல் உட்கார்ந்தார்கள். விதி சிவேந்திராதி சமஸ்ததேவர்களும், முனிவர்களும், வேண்டிக்கொண்ட பிரார்த்தனையின் பொருட்டுத் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மேல் சயனித்துத் திருக்கண் வளர்வதைவிட்டு நீர்வளம் நிலவளப்பம் மிகுந்த அயோத்தியாநகரத்தில் வந்து அவதரித்த நிர்மல சொரூபராகிய ஸ்ரீகாகுஸ்தரை வணங்கித் துதித்து, சமஸ்த தேசாதிபதிகளும்மற்றவர்களும் தங்கள்தங்களுக்குரிய ஆசனங்களின்மேல்வீற்றிருந்தார்கள். இந்தப்பிரகாரம் நித்தம் நடந்துகொண்டே மெள்ளமெள்ள இரண்டுமாதங் கழிந்தது. தேவர்கள் முதலாகிய சாதுஜனங்களுடைய துக்கநிவாரணார்த்தமாகத் திருவயோத்தியாபுரியில் அவதரித்து அவைதிக மார்க்கானு சாரிகளாகிய துஷ்டராக்ஷதர்களைச் சங்கரித்த ஸ்ரீராமபிரானவர் முதலில் சதுர்வேதியர்களாகிய பிராமணர்களுக்கெல்லாம் ரத்தினம்-முத்து-பொன்-விளையத்தக்க பூமியும், பசுவும் தானஞ்செய்தும்; எங்களுக்கு இன்னதுகுறைவு யென்றுசொல்லி யாசித்தவர்களுக்கெல்லாம் அவர்களுடைய உள்ளக்குறைவு நீங்கும்படி வேண்டியவற்றைத் தானஞ்செய்தும்; அவர்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து அவர்களெல்லோரையும் அனுப்பிவிட்டு, அரசர்களை வரும்படி உத்தரவுசெய்தனர். அப்படியே அரசர்களும் வந்தார்கள். வந்த அரசர்களைக் கிருபையோடு பார்த்து அவரவர்களுளுக்குத் தக்கபடி தேசம்-சிவிகை-ரத்தின கிரீடம்-ரத்தினாரம்-முத்தாரம் இவை முதலிய ஆபரணங்கள் - குதிரை-தேர்-யானை-பீதாம்பரம் இவைகளை உள்ளன்போடு கொடுத்து அவர்கள் தங்கள் பதிகளுக்குப் போகும்படி கட்டளையிட்டனர். பிற்பாடு திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்வதைவிட்டு அயோத்தியாநகரத்தில்வந்த ஸ்ரீராமச்சந்திரரானவர் சொர்க்க லோக வாசிகளை நானாவித இடுக்கண்செய்த சம்பராசுரனை ஜெயங்கொண்ட தசரதச் சக்கரவர்த்தியாருக்கு அக்காலத்தில் இந்திரன் மனங்களித்துக்கொடுத்த தெய்வமணிகளிழைத்த கடகத்தையும், யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும், நல்ல சுவர்ணபரணங்களையும், சுக்கிரீவமகாராஜருக்கு வெகுமதியாகக் கொடுத்தார். யாதொரு பழிச்சொல்லுமில்லாத ஸ்ரீ ஜெயராமரானவர் அறிவுடையோரால் அங்கதனென்னும் பெயரை அழகுபடும்படி திருத்தும் விதம்போல இக்ஷவாகு சக்கரவர்த்திக்குப் பூர்வத்தில் பிரமதேவரானவர் கொடுத்திருந்த வாகுவலயத்தை அங்கதப்பெருமானுக்குக் கொடுத்தார். அப்போது அங்கதப்பெருமான்கொண்ட ஆனந்தத்தை யாரால்அறிந்து சொல்லிமுடியும்? மேலும் அந்த அங்கதப் பெருமானுக்குப் பெரிய விலைமதிப்புள்ள ரத்தினாரத்தையும் பீதாம்பரத்தையும் குதிரைகளையும் கஜசிரேஷ்டங்களையும் கொடுத்து உனக்கு நீயேயல்லாமல் வேறு ஒப்பில்லாதவனே! அப்பா அங்கதா! சூரியகுமாரராகிய சுக்ரீவமகாராஜா வைப்பிரியாமல் அவருடைய அபிமதாநுசாரியாய் நடந்துக்கொள்? என்றார்.

நிற்க, நித்தியம் வழங்கிக்கொண்டிரானின்ற கீர்த்தியையுடைய சக்கரவர்த்தித் திருக்குமாரர் அநுமானைக் கருணையோடு கடாக்ஷித்து, நீசெய்த மகோபகாரத்தை எமக்கு யார் செய்யப்போகிறார்கள்? அதற்குப் பிரதி வுபகாரமாக யான் செய்யவேண்டியது என்ன இருக்கிறது? எமக்காகக் கொடிய அரக்கர்களோடு போர்செய்த திண்ணியதோள்களையுடையானே! இதோ என்மார்பிலணிந்த வஜ்ஜிரமணியாரத்தை யணிந்துக்கொள்? என்றார். என்று புகழ்ந்தமாத்திரத்தில் ஆஞ்சநேயரானவர் மிகவும் நாணத்தோடு தலைவணங்கி வாயைப் புதைத்து முன்தானையைமடக்கி யொதுக்கிக்கொண்டு ஒன்றும் பேசாமல் பயபக்தியோடு நின்றனர். அப்படி நின்ற வாயுபுத்திரரை நன்றாய் உற்றுக் கடாக்ஷித்து, ஸ்ரீ சர்வசுவாமியானவர் தமது திருமார்பில் அணிந்திருந்த வஜ்ஜிர ரத்தினாரத்தையும்

மெல்லிய பீதாம்பரத்தையும் யானைகளை யும் குதிரைகளையும் கொடுத்தனர். ஸ்ரீ சர் வேஸ்வரனுடைய திருமார்பை நீங்கி மிதி லாபுரியில் திருவவதரித்த ஜானகிபிராட்டி யாரை சுவாமியானவர் கடைக்கண்ணால் கடாக்ஷித்தனர். அக்குறிப்பை யறிந்துக் கொண்டு பிராட்டியாரும் முன்னே தமது திருக்கரத்திலெடுத்து மகாபிரீதியோடுதிரு வடிகளுக்குக் கொடுத்தனர். சமஸ்த அண் டங்களையும் அவற்றிலுள்ள சேதனுசேத னங்களையும் முன்னே தம்முடைய உந்திக் கமலத்தின்வழியே வந்த ஸ்ரீபரந்தாமரா கிய ஸ்ரீராமநாதரானவர் விண்மீன்களை வென்று சந்திரனுக்கொப்புள்ளதும், இந் திரன் தரித்துக்கொள்ளத் தக்கதுமாகிய முத்தாரத்தையும், மற்றும் சில ஆபரணங் களையும், யானை குதிரைகளையும், பீதாம்பர த்தையும்; ஜாம்பவந்தருக்கும் சிறந்த நவ மணிமாலையையும், முத்து மாலையையும், பொன்னிழையால்செய்தவஸ்திரத்தையும் ஒப்பிலாத பொன்னணிகளையும், மற்ற பல வணிகளையும், யானை குதிரைகளையும் நீல னுக்குக் கொடுத்தார். ஆதியிலே சதுமுக னைச் சிருஷ்டித்த பகவானுகிய ஸ்ரீரகுநாய கர் மத்தகஜங்களையும், சுவேதாசுவங்களை யும், பொன்னுபரணங்களையும், மாணிக்க மாலையையும், மேலும் யோக்கியமான பல வஸ்துக்களையும், சதவலியென்னும் படை வீரனுக்கும், விலைமதிக்க அருமையான தும் தனக்குச் சமானமில்லாததுமாகிய ஒளியுள்ள மணியாரத்தையும், பொன்வஸ் திரத்தையும், மதித்த யானை குதிரைகளை யும், கேசரியென்னும் படைத்தலைவனுக் குக் கொடுத்தார்கள்.

கோசலநாட்டு அரசனுகிய ஸ்ரீராகவ பிரான் நானுரத்னுரங்களையும், கனகாம்பர த்தையும், கஜ துரகங்களையும், இப்படிப் பட்ட அளவில்லாத திவ்வியவஸ்துக்களை யும், குமுதன்-தாரன்-பனசன் ஆகிய இவர் களுக்குக் கண்டோர் ஆநந்திக்கும்படி ஒவ் வொருவராக அழைத்துக் கொடுத்தார். இந்தப்படி அறுபத்தேழுகோடி படைத் தலைவர்களில் மற்றவர்களுக்கு அவர்களு டைய யோக்கியதைக்குத் தக்கபடி முத்தா ரம்-மணியாரம் - பொன்னணிகள் -வஸ்தி ரங்கள் - கஜம் - துரகம் முதலியவற்றைக் கொடுத்து, இனிய வார்த்தைகளைப்பேசி, கடலைப்போல ஓங்கிப்பெருகிய எழுபது வெள்ளம் வானரவீரர்களைக் கடாக்ஷித்து, சுகித்துவாழத் தம்முடைய கருணையைப் பாலித்தனர்.

வானரர் யாவர்களுக்கும் நடக்கவேண் டிய முறைமை யாவும் நடத்தினர். க்ஷீர சாகரத்தில் திருவனந்தாழ்வான்மேல்செய் யும் அறிதுயிலை நீங்கி, அயோத்தியில் வந் தவதரித்த எம் ஐயனுனவர் பின்பு மின்ன லினது திரக்ஷியையொத்த முடியைத் தரி த்த சிவந்த நேத்திரங்களையுடைய ஸ்ரீவிபீ ஷணுழ்வானைக் கிருபையோடு திருக்கண் மலர் சாத்தி இந்தச் சராசரங்களையெல் லாம் சுமக்கும் பெருவலியுள்ள உனக்கு நீயே ஒப்பல்லாமல் வேருெருவரும் ஒப் பாகார். ஒருவருண்டென்று சொல்லினும் பொன்னை இரும்பு ஒத்ததாயினும் ஒப் பாகமாட்டாதென்று அவருடைய உண் மை நிலையையெடுத்துப்புகழ்ந்து, முன்னே தேவர்கள் தமக்குச் சமர்ப்பித்த இரத்தின கடகத்தையும், மதயானைகளையும், குதிரை களையும், பொன்னிழையால் செய்யப்பட்ட வஸ்திரங்களையும், கலவைச் சாந்தையும், செஞ்சந்தனத்தையும் அன்போடு கொடுத் தார். சிருங்கபேரியமென்னும்நகரத்துக்கு அரசனுகிய ஸ்ரீ குகப்பெருமானை கடாக்ஷி த்து குற்றமற்றதுணைவராயினர்க்கு என்ன உபசாரஞ் சொல்லுகிறது என்றுசொல்லி யானைகளையும் குதிரைகளையும் நிதிக்குவிய லையும் உயர்ந்த விலையுள்ள வஸ்திரங்களை யும், இரத்தினுபரணங்களையும் கொடுத்து அவருடைய ஊருக்குப்போகும்படி விடை கொடுத்தனர்.

உடனே கருணுசலநிதியாகிய ஸ்ரீராம நாதரானவர் திருவடிகளையும் அங்கதப்பெ ருமானையும் ஜாம்பவ மகாராஜாவையும் நோக்கி உங்களைப் பிரியும் பிரிவை நினைப் பதற்குங் கூடாமையாயிருக்கிறது. நீங்கள் வசிக்கும் கிட்கிந்தையானது உங்களுடை யதல்ல. என்னுடையதே. அங்குள்ள குடி கள் காப்பாரில்லாமல் வருந்துவார்களே யானுல் அக்குற்றம்என்னைச்சாருமல்லவா? ஆகையால் என்னுடைய ஆக்கினையால் கிஷ்கிந்தைக்குச் சேனைகளோடுபோய்ச்சே ருங்கோளென்று உத்திரவு தந்து விபீஷ

ஞூழ்வானையும்நோக்கி, வானரேந்திரர்களு க்குச் சொன்னதுபோலவே இன்சொற்கள் சொல்லிவிடைகொடுத்தனர். ஸ்ரீசர்வசுவா மியானவர் இப்படித் தங்களுக்கு விடை கொடுத்தவுடனே அதிவிவேகிகளும் வேத ஞ்சொல்லும் சத்தியமார்க்கத்தில் நடப்ப வர்களுமாகிய அவர்கள் யாவரும் சுவாமி யைப் பிரிகிறோமென்று சிறிதும் நெஞ்சங் கலங்காமல்குதூகலமாகியநெஞ்சுடையவர் களாய் நம்முடைய சுவாமியானவர் ஏவிய தைச்செய்வதே நமக்குக் கடனென்றுணர் ந்து, பரதாழ்வானையும், ஸ்ரீராமாநுஜரை யும், ஸ்ரீசத்துருக்கப்பெருமானையும், வசி ஷ்டபகவானையும், தாய்மார்கள்மூவரையும் மகேஸ்வரியாகிய ஸ்ரீஜானகிபிராட்டியா ரையும், ஸ்ரீசர்வேஸ்வரனாகிய ராகவபிரா னையும்,தனித்தனியாகபிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து, அவரவர்களிடத்தில்செலவு பெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டுத் திரு வயோத்தியாபுரியைக்கடந்து, கங்கை கரை யில் சிருங்கபேரியநகரத்தில் ஸ்ரீகுகப்பெரு மானை இருக்கவிட்டு அப்புறஞ்சென்று கிஷ்கிந்தாபுரியை அடைந்து, அங்கே ஸ்ரீ சுக்ரீவமகாராஜர் அங்கதப்பெருமான் ஜா ம்பவர் திருவடிகள் நீலன் பனசன் முத லானவர்களை இருக்கவிட்டு, அரக்கர்சே னைகளோடு ஆகாயமார்க்கமாக ஸ்ரீராகவ பிரானுடைய கருணைக்கு பாத்திரபூதரா கிய ஸ்ரீவிபீஷணாழ்வானானவர் சமுத்திரஞ் சூழ்ந்த இலங்காநகரம்போய்ச் சேர்ந்தார். பிரம்மருத்திரேந்திராதி சமஸ்தசேதனர்க ளுக்கும் பிதாவாகிய ஸ்ரீதசரத ராமசுவாமி யானவர் தமக்குத் துணைவர்களாகிய சுக்கி ரீவமகாராஜா முதலானவர்களைத் தங்கள் தங்கள் இருப்பிடமேபோய்ச் சேரும்படி உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டு, நித் திய சூரியாவதாரமாகிய திருத்தம்பிமார் கள் தம்முடைய சீர்பாதநிழலைவிட்டுப் பிரி யாமல் வேண்டிய உபசார கைங்கரியங்களை செய்துக்கொண்டிருக்கவும், மநுஸ்மிருதி யிற் சொல்லியபடி சாதுர் வருணத்தார்க ளும் மற்றவர்களும் ஸ்ரீபரம வைதிகமார்க் கத்தில் நடக்கவும், பொய் கொலை களவு முதலிய தீச்செயல்களைச் செய்யும் அவர்க ளுள் துஷ்டராயினவர்களைத் தக்கபடிதண் டித்துப் பூபாரத்தை நீக்கி ஸ்ரீதேவி பூதே விகளிருவரும் திருவுளம் வாட்டமில்லா மல் களித்திருக்கவும், திரிலோகத்தார்க ளும் இவர்தான் நம்முடைய பெருமானெ ன்று துதித்து வணங்கிக் குற்றேவல்களைச் செய்யவும், தானந்தருமமுமாக இந்தத் தர ணியை ஆண்டுக்கொண்டிருந்தனர்.

விடைகொடுத்தபடலம்-முற்றிற்று.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

அவியுக்தர்கள் செய்தகவி.

அன்னதான மகிலநற்றானமே
கன்னிதானங் கபிலையின்றானமே
சொர்ன்னதான பலமெனச்சொல்லுவார்
மன்னிராம கதைமறவார்க்கரோ.

இதன்பொருள்.

நித்தியமாகிய ஸ்ரீமத்ராமாயாண கால க்ஷேபஞ் செய்துக்கொண்டிருக்கும் அவர் சத்புருஷர்களுக்கு அன்னதானம் பூதா னம் கன்னிகாதானம் கோதானம் இரணிய தானம் இவைகளைச்செய்த பேறு அடை வார்களென்று அறிவுடையோர்கள் சொ ல்லுவார்கள்.

கவி.

கம்பநாடனுமை செவிசாற்றுபூங்
கொம்பநாடன் கொழுநனிராமப்பேர்
பம்பநாடழைக் குங்கதைபாச்செய்த
கம்பநாடன் கழறலையிற்கொள்வாம்.

இதன்பொருள்.

பரமசிவனானவர் பூர்வத்தில் தம்மு டையநாயகியாகிய உமாதேவிக்கு உபதேசி த்த ஸ்ரீஜானகிரமணருடைய திருநாமங் கள் பலசெய்யுள்களிலும் பொருந்தும்படி நித்தியமாகிய ஸ்ரீராமசரித்திரத்தைக் கவி யாகச் செய்தருளிய கம்பநாட்டாழ்வாரு டைய திருவடிகளை எல்லாநன்மையும் அ டையும்படி நாம் தலையில் தரித்துக்கொள் ளுவோம்.

## க வி.

*வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பன்வாழ்த்து*
*தாழ்வாருயரப் புலவோராகவிருடானகலப் [பெறத்*
*போழ்வார்கதிரினுதித்ததெய்வப்புலமைக்கம்பநாட்*
*டாழ்வாரடியைச் சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே.*

## இதன்பொருள்.

செழிப்பு நிறைந்த திருவெண்ணெய் நல்லூரிலுள்ள சடையப்பவள்ளலானவர் வாழ்த்தையடையவும், கல்லாமையால் புலமை நிரம்பாதவர்கள் புலமைநிரம்பிஉயரவும், ஸ்ரீசர்வேஸ்வரன் பக்கலில் அன்பில்லாதவர்கள் அன்புபெற்று உயரவும், புலமை யுடையோர்களுக்கு சொன்னோக்கம் பொருணோக்கமுதலிய நோக்கங்களைப் பற்றித் துணியப்படாமல் தமது நெஞ்சினுண்டாயிருந்த அறிவின்மையாகிய இருளானது ஒழியவும், இருளைச் சிதைத்தோட்டுகின்ற நீண்ட கிரணங்களையுடைய மார்த்தாண்டனைப்போல நம்முடைய தவப்பேருக அவதரித்த தெய்வப்புலமையுள்ள கம்பநாட்டாழ்வாருடைய திருவடிகளைத் தியானிப்பவர்களுக்கு எதுவும்அருமையாயிராது; யாவும் கைகூடும்.

உயுத்தகாண்டம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்.

## உத்தரகாண்டம்.

### தோத்திரக்கவி.

வெள்ளியங்கிரியைமீதேவேரொடுமெடுத்தவீரக்
கள்ளவன்புயநாலைந்துங்கனகமாமவுலிபத்தும்
துள்ளியம்புவிமேல்வீழவொருகணைதொடுத்துவிட்ட
வள்ளலம்புயமேயன்னமலரடிவணக்கஞ்செய்வாம்.

## இலங்கை நிருமாணப்படலம்.

### முதற்கவி.

கண்ணாருலகிற்கருதார்குலக்கட்டைவாங்கித்
தண்ணார் தருமந்தழைக்கத்தனிக்காவல்பூண்டு
மண்ணோர்வணங்கமதிவெண்குடைமேனிழற்ற
விண்ணோர்குலம்வாழவிராகவன்வீற்றிருந்தான்.

இதனுள் ரகுநாயகர் மகுடாபிஷேகம் செய்துக்கொண்டு செங்கோல் செலுத்தி வருகிறநாளையில் அகஸ்திய முனிவரான வர் ஒருநாள் அவரைக் காணவேண்டிவர அவரையவர் நமஸ்கரித்துச் சில துவினாவ அதற்கவர் விடைதர வாரம்பித்ததும், முன்னோர்கால் பிரம்மதேவன் உலகத்தைச் சிருஷ்டிசெய்யும்போது மாலியவான் சுமாலி மாலி இவர்கள் உற்பவித்து பலவரங்கள் பெற்றதும், விசுவகர்மனிவர்களுக்கு இலங்காபுரியை நிருமித்துத்தந்தும், பின்பு மூவரும் தேவர்கள்மேற் போர்கொள்ளலும் தேவர்கள் வேண்டுகோளின்படி விஷ்ணுவினால் மாலி யிறக்கக்கண்ட மற்றிருவரும் தங்களினத்தினரோடு பாதாளலோகம்போய் மறைந்திருந்ததுங் கூறப்படும்.

### முடிவுகவி.

பாழிப்புயத்தரக்க பழியொடுதம்பியுந்தானு
மாழித்துயினெடுமொல் படையைந்தாலுமக்கருட
னாழிப்பெருங்காற்றாலு மிவ்வுலகிற்பிழைப்பரிதென்
றேழிற்பெரும்பாதாளத் தடைந்தாரிகலடைந்தார்.

## ஸ்ரீராமருடைய கேள்விக்கு அகஸ்தியர் விடைதர வாரம்பித்தல்.

பூலோகத்தினிடத்திலே சுவர்க்கலோகம்போல விளங்கும் அயோத்தியாபட்டணத்தில் அளவில்லாத விசித்திரமானதேவேந்திர சபையைப்பார்க்கிலும் அதிகமான சிங்காரங்கள் பொருந்திய கொலு மண்டபத்தினடுவிலே, சுவர்க்கமத்திய பாதாளமென்று சொல்லப்பட்ட மூன்றுலோகங்களும் நடுங்கச்செய்யும், கொடிய துஷ்டர்களாகிய இராவண கும்பகர்ணுதியர்களையும், பொல்லாதபாபமே ரூபமாகக்கொண்ட ராக்ஷதகுலத்தையும் நாசமாகும்படிச்சம்மரித்து ஜெயம்படைத்திருக்கின்ற ஸ்ரீராமரானவர், ஜோதிமயமாகப் பிரகாசிக்கும் மாணிக்ககிரீடமும், மகரகுண்டலமும், வாகுவலயமும், வச்சிரகடகமும், ரத்தினகங்கணமும், கொத்துசரப்பளியும், முத்து மாலையும், மோகனமாலையும், பொற்பூணூலும், பட்டையரைஞாணும், பவித்திமோதிரமும், இராஜமுத்திரைமோதிரமும், வீரகண்டாமணியும், ஆகிய சகல திவ்வியாபரணங்களோடுசித்திரப்பூம்பட்டாடையும், உத்தரீயமும், பீதாம்பரமுந்தரித்து, சீதள களப சந்தன கஸ்தூரியும், சுகந்த பரிமள புஷ்பமாலைகளும் அணிந்து, அலங்கரித்துக்கொண்டு, சர்வாபரண அலங்கார அதிரூப சவுந்தரியவதியாய் விளங்கும், ஸ்ரீ மகாலட்சுமியாகிய சீதாதேவி சமேதராய், நவரத்தின சிங்காதனத்தின் மேவி, வசிஷ்டர்முதலான மகாரிஷிகளும், தேவேந்திரன்முதலான சகலதேவர்களும், வேதப்பிராமணர்களும், சகல வித்தைகளிலும் வல்லவர்களாகிய மகாவித்துவான்களும், அங்க வங்க குலிங்க கலிங்க காஸ்மீர மகத குகுத மாளவ சாளுவ மச்ச குற்சர கேகய கோசல கேரள விதேக விதற்ப பாண்டிய பாஞ்சால பப்பர சிந்து சௌராஷ்டர கொங்கண நேபாள மாராட விராட கருணுடகமுதலான தேசாதிபத்திய மகுடவர்த்தனராகிய ராஜாக்களும், எங்கு நிறையச் சூழ்ந்து துதித்து வணங்கவும், பேரிகை சங்க முதலான பதினெட்டுவகை வாத்தியங்களும் முழங்கவும், யக்ஷகந்தருவர் தேவகானங்கள் பாடவும், பரதமோகன நாட்டியமாதர்கள் நடனங்கள் செய்யவும், இன்னமும் அநேக விநோதமான சம்பிரமத்துடனே பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு கொலுவீற்றிருக்கின்றார்.

அந்தச் சமையத்தில் அகஸ்தியர்-காசிபர்-அத்திரி - பரத்துவாசர் - கவுதமர்-ஜமதக்கினி இவாள் முதலான மகாமுனிவர்கள் அயோத்தியாநகரத்தில் பிரவேசித்து, ஆஸ்தானமண்டபத்துக்கு முன்னுக விளங்கும் கோபுரவாயலில் வந்து, அந்த வாசலைக் காத்திருக்கும் காவலாளரைப் பார்த்து, ஓ சேமத்தலைவரே! நீங்கள் ஸ்ரீராமரிடம்போய் நாங்கள் உம்முடைய பட்டாபிஷேகத் திருக்கோலங்காண அபேட்சித்து வந்திருக்கின்றோமென்று அறியப்படுத்துவீரென்று சொல்லினர். அவர்களும் அப்படியே ஸ்ரீராமருக்கு அறியச்செய்து, அவர் சொல்லியனுப்பிய உபசாரங்களைச்சொல்லி அந்த முனிவரர்களை யுள்ளே அழைத்துக்கொண்டு போனுர்கள். அப்போதவர்கள் ஆஸ்தானமண்டபத்துக்குச் சமீபமாக அடுத்தமாத்திரத்தில் ஸ்ரீராமர் அந்த முனிவர்களைக்கண்டு துணுக்குற்றுச் சிங்காதனத்தைவிட்டு எழுந்திருந்து சீக்கிரமாகவந்து, அவர்களுடைய பாதங்களிலே தீர்க்கதெண்டனுக நமஸ்காரம்பண்ணி வந்தனஞ்செய்து, அனேகமான உபசாரவார்த்தைகள்சொல்லி அவர்களை முன்னே நடத்தித்தாம் பின்னே நடந்து, அழைத்துப்போய் அந்த ஆஸ்தான மண்டபத்தில் நிறைந்திருக்கும் சகலமான ரிஷிகளும் தேவர்களும் இராஜாக்களும் மற்றுமுள்ள எல்லோரு மெழுந்திருந்து வந்தனங்கள் செய்ய, அந்த முனிவர்களுக்கு ஆசனங்கள் கொடுத்துப் பூசித்து எழுந்தருளி யிருக்கச்செய்தார். அவர்களும் ஸ்ரீராமருக்கு ஆசீர்வாதம் செய்தார்கள்.

அதன்பின்பு ஸ்ரீராமர் மகாசந்தோஷமாக எழுந்தருளியிருக்கும் சமதக்கினிபகவான் முதலான மகா யோகிகளைப்பார்த்து தேவரீர்களுடைய ஆச்சிரமங்களும் யாக சாலைகளும் பசுக்களும் நன்றாயிருக்கின்றனவோ? வேதங்கள் ஆகமங்கள் சாஸ்திரங்கள் இதிகாசங்கள் புராணங்கள் இவை முதலாயுள்ள சகல வித்தைகளையும், உங்களுடைய புத்திரர்களும், வித்தியார்த்திகளும், நன்று யோதி வருகிறார்களோ?

நித்திய கன்மானுஷ்டான முதலான காரியங்களும் கால நியமங்களும் தப்பாமல் நடந்து வருகின்றனவோ? என்று அந்தரங்க விநய பயபத்தியுடனே மாதுரியவசனமாக க்ஷேமங்களை விசாரித்தார். அப்படி ஸ்ரீராமர் சுகவிருத்திகளைக்கேட்ட மதுரவசனமாகிய அமிர்தத்தைப் பானம்பண்ணினவர்களான அம்முனிவர்கள், மகா சந்தோஷத்தை யடைந்து, அந்த ஸ்ரீராமரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்கள்.

கேளும் ஸ்ரீராகவா! சகல லோகங்களும் நசிக்கும்படியாய் மிகவும் கொடுமையான வுபத்திரவங்களைச்செய்யும் துஷ்டகண்டகராகிய விராதன் - கவந்தன்-கரன்-தூஷணன்-கும்பன்- நிகும்பன்-அகம்பன்-மகோதரன் - மகாபாரிசுவன் - தூம்பிராட்சன்-விருபாட்சன்-சோணிதாட்சன்-மகராட்சன்-அதிகாயன் - பிரகஸ்தன்-தேவாந்தகன்-நராந்தகன்-கும்பகர்ணன்-இவாள்முதலானவர்களோடு அளவில்லாத சேனாபதிகளும் இராட்சதசேனையும் மூலபலமும் தசக்கிரீவனும் உயுத்தகளத்திலே சின்னபின்னப்பட்டு மடிந்து பிணக்குவைகள் பருவதங்கள்போல ராசிராசியாகக் குவியவும்,தேர்களும்-யானைகளும்-குதிரைகளும் குடைகளும்-கொடிகளும் - சாமரங்களும்-மயிற்பிச்சங்களும் - ஆலவட்டங்களும்-வாள்களும்-வேல்களும் - வில்லுகளும்-பாணங்களும்-தண்டங்களும் முசலங்களும்-சூலங்களும்-எழுக்களும்-ஆகிய பலவும் அறுபட்டு - முறிபட்டு - தெறிபட்டு-ஒடிபட்டு-சிதைபட்டு ரத்தப்பிரவாகத்தில் மிதந்தோடவும், நாய்களும்-நரிகளும்-காக்கைகளும் கழுகுகளும் - பருந்துக்களும் - குடல்களை-மூளைகளை-கொழுப்புகளை- நிணங்களை-சதைகளை கொத்தியும்-பிடுங்கியும்-குடித்தும்-தின்றும்-கவ்வியும், ஒன்றோடொன்று கலந்து கூட்டமிட்டு நெருங்கி ஊளையிட்டுக் குலைத்துக் கத்திக் கதறி ஆர்ப்பரிக்கவும், பூதப்பிரேத பிசாசங்களில் ஆணும்பெண்ணும் குட்டிகளும் அங்கங்கே கூட்டங் கூட்டமாகக் கூடிக்கொண்டு, நன்றாய்க் கொழுத்த நிணங்களையும், சதைகளையும், கொழுப்புகளையும், வேறுவேறாக யெடுத்து வைத்துக்கொண்டு, மண்டைகளாகிய கலங்களிலே பகுந்திட்டுத்தின்று, தேக்கிட்டுக் கொக்கரித்துத் தோள்கொட்டிக் கூத்தாடி விளையாடவும், விஜயலட்சுமி சந்தோஷத்தோடு நடனஞ் செய்யும்படியாக மகா உக்கிராவேசத்துடனே அட்டகாசம்பண்ணி ஸ்ரீ விஜய கோதண்டத்தை வளைத்து, நாணேறிட்டுக் குணத்தொனிமுழக்கி, அக்கோதண்டம் சக்கராகாரமாகும் படியாக வளையவாங்கி, அர்த்தசந்திரபாணம், வச்சிரசூசிகாபாணம், அக்கினிபாண முதலான திவ்வியாஸ்திரங்களைப் புங்காநுபுங்கமாக இடைவிடாதுதொடுத்துச் சரவருஷமாகப் பொழிந்து, கண்டதுண்டங்களாகச் சித்திரவதைசெய்து சங்கரித்துச் சர்வலோகங்களும் நிற்பயமாக வாழ்ந்திருக்கும்படிவெற்றிபெற்று, வாகைமாலைசூடிய விஜயகோதண்டபாணியாகியதேவரீரோடு மகா தபோமகிமை பொருந்திய முனிவர்களாலும், திரிலோகாதிபதிகளாலும், மற்றுமுள்ளவர்களாலும் வெல்லுதற்கரிய சகல மாயாவுபாயங்களினும் வல்லவனாகி, பல பராக்கிரம சௌரியங்களாலே மதோன்மத்தனாகி, துவாதசாதித்தியர்கள், ஏகாதசருத்திரர்கள், அஷ்டவசுக்கள், மருத்துவரிருவர் ஆகிய இந்நால்வகைப்பட்டமுப்பத்துமூவர்க்கும், ஓரொருவகையினர்க் கொவ்வொரு கோடியாகக்கூடிய முப்பத்துமுக்கோடி தேவகணங்களுக்கதிபதியாகிய இந்திரனை, மாயாபாசத்தினாலே கட்டிக் கொடுஞ்சிறையில் வைத்து, அந்தக் காரணத்தினாலே இந்திரஜித்தனென்னும் பெயர்பெற்ற பொல்லாத துஷ்டகண்டகனைச் சங்கரித்து, வெற்றிபெற்ற லக்ஷ்மணருமிருக்க, எங்களுக்கு எக்காலத்தினும் யாதேனுமோர் குறையுண்டாகுமோவென்று கேள்விக்கு உத்தரமாகப் பிரதிவசனஞ்சொல்லி வாழ்த்தினார்கள்.

அப்படிக்கு அநுக்கிரகித்த மகாரிஷிகளைநோக்கி, இராகவர் சொல்லுகிறார். ஓ என்னிருமைக்குந்துணையாயுள்ள தவசிரேஷ்டர்களே! நீலபர்வதங்கள்போலப்பூரித்துயர்ந்த புஜபலபராக்கிரமங்கள் பொருந்திய தசக்கிரீவன் கும்பகர்ணன் இந்திரஜித்து முதலாயினோர்கள் உற்பத்தியேதுக்களும், அவர்கள் பெற்றவரங்களும், கடினமான இரும்புபோலும், சற்றும் இரக்கமில்லாத பாபசித்தகண்டகராகிய ராக்ஷசர்களுடைய உற்பத்திகாரணமும், அவர்கள் பெற்றவரங்களும், பூர்வோத்தரசங்கதியாக

நன்ருய் விவரித்து உரைத்தருள்வீரென்று கேட்டனர். அப்பொழுது மகாசபையாக நிறைந்திருக்கும் ஆஸ்தான மண்டபத்திலே பிரமசபைபோல விளங்கும் முனிகணங்களுக்குள்ளே சர்வ சிரேஷ்டராகிய அகஸ்தியமாதவரை, அந்தச் சமதக்கினி பகவான் முதலானோர்களும், வசிஷ்டர் பராசரர் முதலானோர்களும்நோக்கி, வாரீர் கும்பமுனிவரே! முன்னமோர்காலம் விருத்திராசுரனைச் சங்கரிக்கும்பொருட்டுத் தேவேந்திரன்பிரார்த்தித்துவணங்கிவேண்ட, அவனுக்காக அளவுபடாத சமுத்திரஜலத்தை உள்ளங்கையி லடக்கி ஆபோசனமாகப் பானம்பண்ணினீர். திரிலோகாதாரமாகிய மகாமேருபர்வதத்தினுடனே பகைத்து அகங்கரித்துச் சந்திரசூரியர்களுந் தடுமாற, நவக்கிரகமண்டலங்களுக்குமேற் பட்டுவளர்ந்த, விந்தபருவதத்தை ஒருகையினுலமிழ்த்தி பூமிக்குட்புதைபட அடக்கினீர். இவையல்லாமலும் பருவதராஜ புத்திரியாகிய பார்வதிதேவிக்கும் பரமேஸ்வரனுக்கும் விவாகமாகும் காலத்தில், திருமணக் கோலங்கண்டு சேவிக்கும் பொருட்டு சதுர்த்தச புவனங்களினுமுள்ள காலாக்கினி ருத்திரர்முதலாயின உருத்திரகணங்களும், இந்திராதி சமஸ்ததேவகணங்களும் சனகாதி சமஸ்த ரிஷிகணங்களும், விஷ்ணுவும் பிரம்மாவும் மற்றுமுள்ள யாவர்களும், இமயகிரியிற்சார்ந்துநெருங்க, பாரம் பொறுக்கமாட்டாமல், வடதிசைப்பூமி தாழ்ந்து, தென்றிசைப்பூமி யுயர்ந்து, உலகம் சஞ்சலப்பட்டுவருந்த, அதுகண்டு உலகம் நடுங்கிவருந்தும் துன்பத்தினைத் தீர்ப்பதற்கு, இவ்விடத்திலுள்ள பிரம்மாமுதலான ஒருவராலும் ஆகாது ஆனதால் நமக்குச் சமானமான மகிமையுடையவரான நீரே! இந்த உலகத்துன்பம் நீங்கும்படி தக்ஷண திசைக்குப் போகவேண்டுமென்று பரமசிவன் அநுக்கிரகிக்க, அப்படியே தென்றிசைநோக்கிவந்து பொதியமலையில் அமர்ந்து பூமியைச் சமப்படுத்தி உலகத்தை ரக்ஷித்தீர். இப்படிப்பட்ட பலமகிமைபொருந்திய நீர் சகலமும் தெரிந்தவராதலால் ஸ்ரீராகவர்கேட்டகேள்விக்குஉத்தரம்தேவரீரே சொல்லத்தக்க சாமர்த்தியமுடையவரென்று உபசரித்துச் சொல்லினர்கள். அதுகேட்ட அகஸ்திய மகாமுனிவரானவர், அவர்களை நமஸ்கரித்து, வாரீர் நண்பர்களே! மகா தபோமகிமை பொருந்திய நீங்கள் கட்டளையிட்டபடியே நானறிந்த மாத்திரம் சொல்லுவேனென்று சம்மதித்து,ஸ்ரீராகவர்கேட்ட விருத்தாந்தங்களெல்லாம் கிரமமாக விவரித்துச் சொல்லத் தொடங்கினர்.

கேளும் ஸ்ரீராமா! பூர்வமொருகாலம் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவரானவர், பூலோகம்-புவலோகம் - சுவலோகம்-சனலோகம் - தபோலோகம்-மகாலோகம்-சத்தியலோகம் என்று சொல்லப்பட்ட மேலேழுலோகமும்; அதலம்-விதலம்-சுதலம்-தராதலம் - இரசாதலம் - மகாதலம் - பாதாளம் என்று சொல்லப்பட்ட கீழேழு லோகமும், ஆகிய பதினுலுலோகங்களையும் உண்டாக்கி, சரமென்றும் அசரமென்றும் சொல்லப்பட்ட இரண்டு வகையாகிய எண்பத்துநான்கு லட்சம் யோனிபேதமாயுள்ள ஜீவகோடிகளையும் படைத்து, அந்தச் சீவகோடிகளுக்குள்ளே அறிவோடுகூடிய பிராணிகளைப்பார்த்து நீங்கள் இந்த லோகங்களை ரக்ஷிப்பீரென்று ஒருவாக்கியம் பொதுப்படச் சொன்னர். அதுகேட்டு அந்தப் பிராணிகளெல்லாம் நமக்கொரு சுதந்தரமும் செயலுமுண்டோ? நம்மைப்படைத்த கர்த்தாவானவர்! யாவரைக் குறித்து, என்ன கட்டளையிடுவாரோ? அந்தப்படி நடப்போம். என்றெண்ணிக்கொண்டு எல்லாப் பிராணிகளும், அதற்குப் பிரதிவ்சனமொன்றும் சொல்லாமலிருக்கச் சில பிராணிகள் யக்ஷ-யக்ஷ என்று சொன்னர்கள். சிலபிராணிகள் ரக்ஷ-ரக்ஷ என்று சொன்னர்கள். அவர்கள் வாயிற்பிறந்த வசனப்படியே பிரம்மதேவர் யக்ஷ-யக்ஷ என்றவர்கள் யக்ஷர்களும், ரக்ஷ - ரக்ஷ என்றவர்கள் ராக்ஷதர்களும் ஆகக்கடவீரென்று அருளிச்செய்தார். அப்படியுண்டான ராக்ஷத குலத்திலே மூதேவியும் சீதேவியும்போல விளங்கும்எதியென்றும் பிரகேதியென்றும் சொல்லப்பட்ட அண்ணனும் தம்பியுமாகிய ராக்ஷதர்களிருவரில், இளையவனுகிய பிரகேதியென்று சொல்லப்பட்டவன் சாந்தகுண முடையவனுகி, துன்மார்க்கங்களை விட்டுச்சன்மார்க்கங்களையனுசரித்து,பெரியோர்களைச் சார்ந்து, சற்கதியடையவேண்டுமென்று நினைத்தவனுய், அளவில்

லாத தபோதனர்களாகிய மகாரிஷிகள் வாசம் செய்துகொண்டிருக்கும், தபோவனத்திலே தபசுசெய்யப் போயினன். அதன்பின்பு அவனுக்கு மூத்தவனென்று சொல்லப்பட்ட எதியானவன் தைரிய பல பராக்கிரமங்களிலே தனக்குச் சமானமானவர்களொருவரு மில்லையென்னும்படி மேம்பாடுடையவனாக இருந்தான்.

அப்படியிருக்குங் காலத்தில் அவன்தனக்குத் தகுமான சரீரதிடமும் நல்லரூபமும் உத்தமகுணமுமுடைய ஒருஸ்திரீயை விசாரித்துவருவீர்களென்று தன்னுடைய தூதர்களுக்குச் சொல்லி யனுப்பினான். அவர்களும் அப்படியே எங்குந்தேடி அவ்வளவு யோக்கியமுள்ள ஸ்திரீயைக்காணாமல், யமலோகத்திலேபோய்த் தாங்கள் தேடிக்கொண்டு வந்தபடிக்கு எல்லா லக்ஷணங்களும் பொருந்தியிருக்கும் ஒரு பெண்ணைக்கண்டு, தங்களுக்குத்தலைவனாகிய அந்த ராக்ஷசனிடத்துக்குவந்து தாழ்ந்து வணங்கிச் சொல்லுவார்கள். சுவாமி! தேவரீர் சொல்லி யனுப்பியபடியே எல்லாக்குணங்களுமுடையவளாய், உம்முடைய யோக்கியத்துக்கேற்றவளாய், யமனுடைய தங்கையொருத்தியிருக்கிறாள். என்று சொல்லவும் எதியானவன் அப்பொழுதே எமபுரிக்குப் போய், உலகத்திலுண்டாகிய எல்லாவுயிர்களையும் கொலைசெய்யும் கொடிய கூற்றுவனிடத்திற்சென்று, உம்முடையதங்கையை எனக்குக் கொடுக்கவேணுமென்று கேட்டான். அதற்கவனும் சம்மதித்து, கண்ணினாலே பார்த்தவர்கள்பயந்து, நடுங்கும்படியான சுத்தரூபத்தையும் பயையென்றுசொல்லப்பட்ட பெயரினையுமுடைய தன் தங்கையைக் கலியாணம் செய்வித்துக் கொடுத்தான்.

அதன்பின்பு அவளும் அவனும் காம சம்போகத்தில் விட்டுப்பிரியாமற் கூடியிருக்கும் காலத்திற் கருப்பந்தரித்து, அந்தப் பயையென்பவள் ஒரு புத்திரனைப்பெற்றாள். அவன் மின்னலைப்போலும் சிகையினை யுடையவனாதலால் அவனுக்கு வித்தியுற்கேசனென்று பெயர். அவன் அழகும் பருவமும் பொருந்திய கந்தருவகுலப் பெண்ணாகிய சந்தியென்னும் பெயருடையவள்பெற்ற, சாலகடங்கடையென்று சொல்லப்பட்டவளை விவாகம் செய்துகொண்டு அவளும்தானுமாக இரதியும்மதனும் அன்றிலும் பேடும்போல க்ஷணப்பொழுதும் விட்டு நீங்காமல் மோகசமுத்திரத்தில் அழுந்தினவர்களாகி, திவ்விய பரிமளமான புஷ்பவாசனைகளுடனே இளந்தென்றற்காற்று வீசும் சிங்காரவனங்கள் குளிர்ந்த அருவிகளிறங்கும் மலைச்சாரல்கள் பூஞ்சோலைகள் புஷ்பத்தடாகங்கள் ஓடைகள் நதிக்கரைகள் இவைமுதலான இடங்களெங்கும், தங்களுடைய மனசுக்கு இஷ்டமான பிரகாரம், நினைத்தவிடங்களிலே விநோதம் விநோதமாக இருவரு மொருமையாய்க் காமசுகபோகம் அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். அப்படி யிருக்குங்காலத்தில் அந்தச் சாலகடங்கடை வயிற்றிலே கருப்பந்தரித்து, அவளொரு குழந்தையைப்பெற்றாள். அந்தப்பிள்ளையைப் பிறந்தவிடத்திலே எறிந்துபோட்டு, எள்ளளவு மிரக்கமில்லாமல் சற்றாகிலும் திரும்பியும் பாராமல், அடங்காத காமவிகாரத்தை யடைந்திருக்கிற ராக்ஷதஸ்திரீயானவளாதலால், மதங்கொண்ட யானைபோலத் திரியும், தன்னுடைய கணவன் எங்கெங்கே செல்லுகின்றானோ அங்கங்கே தானும் அவன் பின்னே தொடர்ந்துபோனாள். அப்படியவள் போனபின்பு எங்கும் மேகங்கள் பரந்து இருண்டு காற்றும் மழையும் இடியும் மின்னலுமாய் அந்தகாரப் பட்டிருக்கிற வேளையில், அந்தக் குழந்தையானது தன் கைவிரல்களை மடித்து, வாயிலேவைத்துக்கொண்டு, எடுத்து அணைத்து ஆதரவுசெய்வார் ஒருவருமில்லாவல் தனியே அழுதுகொண்டுகிடந்தது. அப்படிகிடக்கிறதைத் தேவேந்திரன் முதலான சகலதேவர்களுங் கண்டு பரிதாபப்பட்டு, பரமசிவனுடைய திருவுளச்செயல் இப்படியும் இருந்ததோவென்று அதிசயத்தையடைந்து, அந்தப் பரமசிவனைநோக்கி மனதிலே தியானித்து புஷ்பவருஷம்பொழிந்து வணங்கிப் போற்றித் துதிசெய்து நின்றார்கள்,

அந்தச்சமயத்தில் பரமசிவன் உலகத்திலுள்ள எல்லாவுயிர்களும் துன்பங்கள் நீங்கி இன்பங்களைப்பெற்று, மகிழ்ந்திருக்கும்படியாக உமையவளுடனே ரிஷபாரூடராய், சிவகணங்கள்சூழச் சகலமான பேர்களுக்கும் காட்சிகொடுத்தருளி, எல்லாவுலகங்களிலும் பவனியாக உலாவிவரு

ம்பொழுதில், அவ்விடத்தில் அந்தக்குழந்தை, நிராதரவாய்த் தனியே அழுது பரதவித்துக்கொண்டு கிடக்கின்றதை, உமையவள் கண்டு திருவுள்ளமிரங்கிப் பரமசிவனை நோக்கிக் கூறுவாள். சுவாமீ! இவ்விடத்தில் இப்படிக்கு ஒரு ஆதரவுமில்லாமல், தனியாய்ப் பரதவித்து அழுதுகொண்டு, கிடக்கும் இந்தப்பிள்ளையை, தேவரீர் கிருபைசெய்து ரக்ஷிக்கவேண்டுமென்று, இரக்கத்துடனே வேண்டிச்சொல்லினாள். அதுகேட்ட பரமசிவன் அப்படியேதமது திருவுள்ளத்திற் கிருபைபொருந்தி, அந்தக் குழந்தையைக் கருணையாகப்பார்த்து, நிறைந்த ஆயுசும், எவ்வனமான பருவத்துக்குள்ள அழகும், யாவரையும் வெல்லத்லக்க பலமும், சுகேசனென்கிற பெயரும், உண்டாகக்கடவதென்று அனுக்கிரகம்செய்தார். அப்படியே பார்வதிதேவியும் அந்தக்குழந்தையைப் பார்த்து, உன்னுடைய வமிசத்திலுண்டாகிய எல்லாருக்கும், கெற்பம் தரித்தவுடனே பிள்ளையாகப் பிறக்கவும், அப்படிப் பிறக்கும் பிள்ளைக்குப் பெற்றதாய்க்குள்ள பருவமுண்டாகவும் கடவதென்று அருளிச்செய்தாள். இப்படிக்குப் பரமசிவனும் பார்வதிதேவியும் கொடுத்த வரத்தினாலே, அளவில்லாத செல்வமும் சிறப்பும் பலமும் வெற்றியும் பொருந்தி, சுவர்க்கலோகத்தினும், அதிகமான வளங்கள் பொருந்தி விளங்கும் ஒரு பெரிய நகரத்தினிடத்திலே, தேவேந்திரனைப்போல வீற்றிருந்தான். அப்படிக்குச் சிறப்பாக விளங்கியிருக்கும் சுகேசனுடைய அளவில்லாத மேன்மைகளெல்லாம் ஒரு கந்தருவனைவன் கேள்விப்பட்டு, இந்தச் சுகேசனுக்கே தன்னுடைய கன்னியைக் கொடுக்கவேண்டுமென்று ஆலோசித்து, தான் பெற்ற புத்திரியாகிய தெய்வவதியை அந்தச் சுகேசனுக்கே விவாகஞ்செய்வித்துக் கொடுத்தான். அதன்பின்பு அந்தச் சுகேசனும் தெய்வவதியுமாகிய இருவரும் இஷ்டமாகக்கூடிக் கலந்து காமசுகம் அனுபவித்துக்கொண்டு மகிழ்ந்திருக்குங்காலத்தில், அந்தத் தெய்வவதி வயிற்றிலே கெற்பந் தரித்து, அந்தச் சுகேசனுக்குப் புத்திராக மாலியவான் சுமாலி மாலி என்றுசொல்லப்பட்ட மூவரும் பிறந்தார்கள்.

## விசுவகருமன் மாலியவானாதியர்க்கு லங்காபுரியை நிருமித்துத்தரல்.

அதன்பின்பு அந்தமூவரும் மருந்தினாலே தீராத பொல்லாத வியாதிகள்போலவும், நெய்யினை வார்க்க வார்க்க மூண்டெழுந்தெரியும் நெருப்புபோலவும், அறிவில்லாத மூடர்களிடத்தில் அவர்களைக் கெடுக்கப் பெருகுஞ் செல்வம்போலவும், நல்லோரைச் சாராத பொல்லாத மூர்க்கரிடத்தில் விளையும் பாவம்போலவும்,இரக்கமில்லாத பாவிகளிடத்தில் உண்டாகிய கோபம்போலவும், உயிர்களை யிரையாக வுண்ணும் யமன்போலவும், மணிமந்திர அவுஷதங்களினாலே திரும்பாத கொடிய விஷத்தினைப்போலவும், உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளும், ஏங்கிப்பயந்து நடுங்கும்படிக்கு, நாளுக்குநாள் செழிப்பாய் வளர்ந்து, அதிகமான பலபராக்கிரமமுமுடையவளாகி, தங்கள் பிதாவாகிய சுகேசனென்பவன், முன்னாள் தவஞ்செய்து சிவனிடத்தில்பெற்ற வரத்தைப்பார்க்கிலும் மேன்மையான வரங்கள் பெறவேண்டுமென்று மனதிலெண்ணி, மகாமேருபருவதத்திற்கு வடபாரிசத்தில் பெரிதாய்விளங்குந்தபோவனத்தைச் சார்ந்து, அங்கே தபசுசெய்யும் விதிப்பிரகாரம் பஞ்சேந்திரியங்களையடக்கி, ஒருமைப்பாடாக மனவுறுதிகொண்டு, சலனப்படாமல் பிரம்மதேவனைநோக்கி, அளவில்லாத காலம் அரிதான தவங்களைச் செய்தார்கள்.

இப்படி அவர்கள் தவஞ்செய்து வருகிற செய்தியைத் தேவர்கள் அசுரர்கள் முதலான எல்லோரும் கண்டு, இந்தப் பாவிகள்செய்கிற கொடிய தபசுக்கு வரம் பெற்றார்களேயாகில், அதினாலே என்ன காரணமும் உற்பாதமும் விளையுமோவென்று, மனங்கலங்கி நடுக்கமுற்றார்கள். அப்படியாக விருக்குஞ் சமயத்திலே அந்த மூன்றுபேருக்கு மெதிராக நவரத்தினமயமான விமானத்திலேறி, பிரம்மதேவர் பிரசன்னராகி, அவர்களைப் பார்த்து நீங்கள் நம்மைக்குறித்துச் செய்த மகாதபசுக்கு நாம் மிகவும் சந்தோஷத்தை யடைந்தோம். ஆகையால் உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேட்பீராகில் நாம் தருகிறோம்.

என்று சொல்ல, அதற்கு அந்த மூன்று பேருங் பிரம்மதேவரை நோக்கி, ஓ வாணி கேள்வரே! சுவர்க்கலோகம்-பூலோகம்-பாதாளலோகம் என்று சொல்லப்பட்ட மூன்று லோகங்களிலுமுள்ள தேவர்களோடு பராக்கிரம மகிமைபொருந்திய சக்கிரவர்த்திகளாகிய மகாராஜாக்கள் முதலான யாவராலும் ஜெயிக்கப்படாத பலமும், பராக்கிரமமும், வெற்றியும், குறைவில்லாத ஆயுசும், அஸ்திர சஸ்திரங்களும், எங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பிர்ம்மதேவர் நீங்கள் கேட்டபடியே எல்லாவரமும் கொடுத்தோமென்று அனுக்கிரகஞ்செய்து, உடனே தாமிருக்கும் சத்தியலோகத்துக்குப் போயினார். அதன்பின்பு அந்த மாலியவான் முதலான மூன்றுபேர்களும், படு நெருப்பாகப் பற்றி எரியுங் காட்டுத்தீய்க்கு கடுங்காற்று கூடினதுபோல், தாங்கள் பிர்ம்மதேவரிடத்திற்பெற்ற தபோவரத்தினாலே, பெரிய மலைகள்போலத் தோள்கள் பூரித்து, தங்களுக்கு எதிரானவர்கள் எந்தவுலகத்திலும் ஒருவருமில்லையென்று அகங்காரங்கொண்டு, உலகத்திலுள்ள சகல பிராணிகளுக்கும், துக்கவேதுவாய் பிர்ம்மதேவர் சிருஷ்டித்த பயமும், கொடுமையுமல்லாமல், வாதபித்த சிலேஷ்மமென்று சொல்லப்பட்ட மூன்றுவகை வியாதிகளுந் தொந்தப்பட்டு, பிராணிகளைத் துன்பப்படுத்தி வதைப்பதுபோலச் சுவர்க்கலோகமுதலான மூன்றுலோகத்திலுமுள்ள தேவேந்திரன் முதலான சகலதேவர்களும் மற்றுமுள்ள வெல்லோர்களும் நடுநடுங்கிப் பயந்து, சகிக்கப்படாத துன்பத்தை யடைந்து, நிலைகெட்டோடும்படிக்குக் குரூரமான அநியாய தண்டனைகள்செய்து, வருத்தப்படுத்தி, அஷ்டதிக்குகளுடனே, மேல் கீழாகிய பத்துத்திசைகளிலும், தங்களுடைய ஆணையாக்கினை செல்லும்படிக்குத் திசைகளையெல்லாம் வென்று, வெற்றிபொருந்தி யிருந்தார்கள்.

அப்படி யிருக்குஞ்சமயத்தில், அந்த மாலியவான் முதலான மூன்றுபேர்களும், தெய்வத்தச்சனை அழைப்பித்து, ஓ விஸ்வகர்மாவே! பிரம்மா விஷ்ணு உருத்திரனென்று சொல்லப்பட்ட திரிமூர்த்திகளும் மற்று மூன்றுலோகத்திலுமுள்ள தேவர்கள் முதலான யாவர்களும் ஒருமித்துக் கூடி யுத்தம்பண்ணத் துடங்கினாலும் அவர்களாலேயும் அடுத்துச் செயிக்கப்படாத பலமான துர்க்கங்களை யுடைத்தானதாய், தேவேந்திரனுடையசுவர்க்கலோகத்திலேயிருக்கும் காமதேனு-கற்பகவிருக்ஷம்-சங்கநிதி-பதுமநிதி-சிந்தாமணி-இவை முதலான அயிஸ்வரியங்களுடனே அமராவதி பட்டணத்தையும் நவநிதிச் செல்வத்துடனே குபேரனிருக்கும் அளகாபுரி பட்டணத்தையும் தாழ்வுபடுத்தி நிந்தைசெய்யத்தக்க மிகுந்த சிலாக்கியம் பொருந்தியதாய் நீங்களொரு பெரிய நகரத்தை நாங்களிருந்து இராஜரீகஞ்செய்யும்படி யுண்டாக்குகிறதற்கு யோக்கியமான ஒரு ஸ்தானத்தைப் பார்த்து நிச்சயித்துச் சொல்லுவாயென்று கூறினார்கள். அதற்குப் பிரதியுத்தாரமாக விஸ்வகர்மாவானவன் சொல்லுவான். கேட்பீர் அசுரேந்திரரே! முன்னமொருகாலம் ஆதிசேஷனும் வாயுபகவானுமாகிய இருவரும் நான் பெரியவன்-நான்பெரியவன், நான்பலவான்-நான்பலவான், நான்பராக்கிரமன்-நான்பராக்கிரமன், நான்மகிமையுடையவன்-நான் மகிமையுடையவன், நானே சிலாக்கியன்-நானே சிலாக்கியன், என்று இந்தப்பிரகாரம் ஒருவருக்கொருவர் வாக்குவாதப்பட்டு, இந்தக் காரியத்தின் முன்னிலையாய் நம்மிருவருடைய பலாபலமும் ஜெயாபஜெயமும்அறிவோமென்று சமஸ்தமான தேவர்களும் சாக்ஷியாகச் சபதம் பண்ணிக்கொண்டார்கள். அப்பொழுது பொன்மயமான ஆயிரத்தெட்டுச் சிகரங்களுடனே எண்பதினாயிரம் யோசனை உயரமாகவிளங்கும் மகாமேரு பர்வதத்தை ஆதிசேஷனானவன் தன்னுடைய விசாலமான ஆயிரம் படங்களையும் விரித்து மேலேமூடியும், உடலினாலே யிறுகச்சுற்றியும், இரவைலேசமும் தெரியாமல்மறைத்துக்கொண்டான். அந்த வேளையிலே வாயுபகவானானவன் யுகாந்தப்பிரளயகாலத்திலே பூலோகத்திலுள்ள சகல பர்வதங்களையும் பஞ்சாகப் பறக்கச் செய்யுந் தன்னுடைய மகாபலத்தினாலே பிரசண்ட வேகங்கொண்டு மோதிமோதியடித்தான். அப்படிக்குமோதியடித்தஅடியினாலே அந்த ஆதிசேஷன் சற்றுகிலுந் தளராதிருந்த பலத்தினைக்கண்ட அந்த

வாயுபகவான் தன்னுடைய சொரூபத்தை யொடுக்கிக்கொண்டு வெட்கப்பட்டு, ஒருவருக்குந்தெரியாத ஓரிடத்திலே வெளிப்படாமல் மறைந்திருந்தான்.

அப்பொழுது எங்கும் வாயுசஞ்சாரமில்லாதபடியினாலே பூலோகத்திலும் சுவர்க்கலோகத்திலுமுள்ள எல்லாவுயிர்களும் உலைநெருப்பிலிட்டஅரக்குப்பாவைபோல் உடல்களுருகிப் புழுங்கிக் கரிந்து வாடி, பரிதாபப்பட்டு மயங்கி, பின்பு துன்பம் பொறுக்கமாட்டாமல் தேவர்கள் முனிவர்கள் முதலானஎல்லோருங்கூடி ஆதிசேஷனிடத்திற் சேர்ந்து, ஐயா அனந்தரே! இந்தப் பூலோகத்தைச் சிரசிலேதாங்கி ரக்ஷிக்கிறவர் நீரல்லவோ? உம்மைப்போலப் பெருமைபடைத்தார் ஒருவருண்டோ? அறிவுடையவர்களில் உயர்ந்தவரும் நீரே: ஆகையாலிப்பொழுது இந்தவுலகத்திலுள்ளசகலபிராணிகளும் மரணவேதனையாகப் படுகின்ற துன்பந்தீரும்படிக்குக் கிருபை செய்து ரக்ஷிக்கவேண்டுமென்று மிகவும் வணக்கத்துடனே உபசரித்து வேண்டிக் கொண்டார்கள். அதுகேட்ட வனந்தன் அவர்களுக்கு உபகாரம் பண்ணும்பொருட்டு ஒரு உபாயந்தேடி, அவர்களைப் பார்க்கிறவன்போலத் தன்னுடைய ஆயிரந் தலைகளில் ஒருதலையைச் சற்றே நெகிழ்த்துத் தூக்கிச் சாய்த்துப் பார்த்தான். அப்பொழுது சமயப்பார்த்திருந்த வாயுபகவான் இதுதான் வேளையென்று, மகாவுக்கிர கோபத்துடனே அதிக பலங்கொண்டு பிரசண்டவேகமாக மோதி யறைந்தான். அப்பொழுது அந்த வாயுபகவான் மோதிய வேகத்தினாலே ஆதிசேஷன் ஆயிரம் படங்களினாலே மறைக்கப்பட்டிருந்த மகாமேரு பர்வதத்தினுடைய ஆயிரத்தெட்டுச் சிகரங்களில், மூன்று சிகரங்கள் பேர்ந்து தெறிபட்டுத் தக்ஷணசமுத்திரத்திலே விழுந்தது. அப்படிச் சமுத்திரத்திலே விழுந்த சிகரங்கள் மகாவுன்னதமாயும் விசாலமாயும் பொன்மயமாயும் ஒன்றாய் விளங்கியிருக்கின்றது. அதுதான் நீங்கள் இராஜரீகஞ் செய்கிறதற்குயோக்கியமானஸ்தானமென்று சொன்னான். அதுகேட்ட மாலியவான் முதலான மூன்றுபேரும் அந்த விஸ்வகர்மாவைப்பார்த்து, நீ சொல்லிய சமுத்திரம் பருவதத்தின்மேலே நாங்களிருந்து இராஜாதிகாரஞ் செய்யத்தக்க யோக்கியமான ஒரு பெரியபட்டணத்தை நிருமிப்பாயென்று கட்டளையிட்டார்கள்.

அந்தப்படியே விசுவகர்மன் அந்தப் பருவதத்தின்மேலே சந்திரசூரியர்களும் வழிவிலகிச் செல்லும்படியான உயரத்தையுடையதாய் ஏழுதீவுகளுடனே பூமண்டலத்தைச் சூழ்ந்திருக்கப்பட்ட சக்கரவாளகிரிபோலப் பொன்மயமாக விளங்கும் கோட்டையும், அந்தச் சக்கிரவாளகிரியைச் சூழ்ந்த பெரும்புறக்கடல்போலஅகழியும், அந்தக் கோட்டைக்குள்ளே அனேகம் பருவதங்களை வரிசை வரிசையாக நிறுத்தி வைத்ததுபோல ஆகாசபரியந்தம் அளாவப்பட்டதாய் நவரத்தினமயமான சிகர பந்திகளோடு விளங்கும் அளவில்லாத மாடமாளிகைகள்-கூட கோபுரங்கள்-உப்பரிகைமேடைகள்-ஆஸ்தான மண்டபங்கள் சித்திரமண்டபங்கள் - சபாமண்டபங்கள்-நாடகசாலைகள் - ஆயுதசாலைகள்-மல்லகசாலைகள்-குதிரைச்சாலைகள் - யானைக்கூட்டங்கள்-இராஜகிரகங்கள் - புஷ்பதடாகங்கள்-மலரோடைகள் - உத்தியானவனங்கள்-இவை முதலானவைகளெல்லாம் அனேக விநோத விசித்திரமாக நிருமித்து, இலங்காபுரியென்று பெயரிட்டான். அப்படிக்கு நிருமிக்கப்பட்ட திவ்வியமான மகா பட்டணத்தை அம்மூவரும் பார்த்து ஆச்சரியப்பட்டு, அந்தத் தெய்வத்தச்சனாகிய விஸ்வகர்மாவுக்கு உபசாரஞ்செய்து வேண்டிய வரிசைகளுங்கொடுத்து அனுப்பிவித்தார்கள்.

## மாலியவானாதியர்தேவர்கள்சூழ்ச்சியறிந்து அவர்கள்மேற் போருக்கெழுதல்.

அதன்பின்பு அந்த மாலியவான் சுமாலி மாலியென்று சொல்லப்பட்டமூன்றுபேர்களும் அந்தலங்காபட்டணத்தில் நல்லமுகூர்த்தகாலத்திலே பிரவேசஞ்செய்து, பூமி சுவர்க்க பாதாளமாகிய மூன்று லோகத்திலுமுள்ள சகலமானபேர்களும் தங்களுடைய ஆக்கினைப்பிரகாரம் ஏவல்கேட்டு நடக்கும்படிக்கு இராஜாதிகாரம் செய்து கொண் டிருக்கின்றார்கள். அக்காலத்தில் கந்தருவகுலத்திலே பிறந்த தருமதையென்று சொல்லப்பட்டவளுடைய புத்திரி

கள் மூவரில் மூத்தவளாகிய சுந்தரியென்னுங் கன்னிகையை மாலியவானும், அவளுக்குஇளையவளாகிய கேதுமதியென்னும் கன்னிகையை சுமாலியும், அவளுக்கும் இளையதங்கையாகிய கன்னிகையை மாலியும் விவாகஞ்செய்துகொண்டு அந்தக் கன்னியர்களுடனே அந்த மூன்றுபேர்களும் அளவில்லாத விநோதமான காமசுகபோகங்களை அநுபவித்துக்கொண்டு இஷ்டசல்லாபமாகச் சந்தோஷத்தை யடைந்திருந்தார்கள். அப்படியிருக்குங்காலத்தில் மாலியவானுக்கும் சுந்தரிக்கும் புத்திரராக வச்சிரமுஷ்டியென்றும், விருபாக்ஷனென்றும் துன்முகனென்றும், பாபசித்தனென்றும், நியாயகோபனென்றும், மத்தனென்றும், உன்மத்தனென்றுஞ் சொல்லப்பட்ட ஏழுபேர் பிறந்தார்கள். அவனுக்கு இளையவனாகிய சுமாலிக்குங் கேதுமதிக்கும், கைகசியென்றும் கும்பீநசியென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டு புத்திரிகள் பிறந்தார்கள். அவனுக்கும் இளையவனாகிய மாலிக்கும் கேதுமதிக்கிளைய தங்கைக்கும், குரூரயுத்தனென்றும்- நீலனென்றும் - நிலயனென்றும்-சம்பாதியென்றுஞ் சொல்லப்பட்ட நாலுபுத்திரர்கள் பிறந்தார்கள். அல்லாமலும் முன்பு பிரமதேவன்கொடுத்த வரத்தினாலுண்டாகிய ரதகஜ துரகபதாதி சதுரங்கசேனைகளும் விதம் விதமாயுள்ள அநேகமான அஸ்திரசஸ்திரங்களும் மற்றுமுள்ள ராஜாங்க விமரிசைகளெல்லாமும் பெற்றிருக்கிற புஜபல பராக்கிரமத்தினாலே மதோன்மத்தராகி, தங்களுக்கு எதிரானவர்க ளொருவரு மில்லையென்று அகங்கார மேற்கொண்டு, பூலோகத்திலுள்ள சகல பிராணிகளையும் வதைத்துப் பாழாக்கி, சுவர்க்கலோகத்திலிருக்குஞ் சகல தேவர்களும் பயந்தோடும்படி கெடுத்து, தேவேந்திரனையுந் துரத்தி, அமராவதி பட்டணத்தைக் கொள்ளைகொண்டு, கற்பகச்சோலையினையும் அழித்து, நாடோறுமிப்படிக் கொடுமைப்பட்ட குரூரதண்டமான அதிகாரஞ் செய்துகொண்டிருக்கிறார்கள்.

அக்காலத்திலே அவர்கள் செய்யப்பட்ட பொல்லாத வுபத்திரவங்களைப் பொறுக்கமாட்டாமல்பூலோகத்திலுள்ளதபோதனர்களாகிய மகாரிஷிகள் முதலானவர்களும் பாதாளலோகத்திலிருக்கும் ஆதிசேஷன் முதலான நாகர்களும் சுவர்க்கலோகத்திலுள்ள இந்திரன் முதலான தேவர்களும், பரிதாபப்பட்டு, எல்லோருங் கூடி எங்கும் புகலிடமில்லாமல் கைலாசகிரியைச்சார்ந்து, தம்மிடத்திலே சரணாகதியாக நம்பியடைந்த எல்லாப் பிராணிகளுக்கும் துன்பங்களைத் தீர்த்துக் கிருபைசெய்து ரக்ஷிக்கும் சகல புவனகர்த்தாவாகிய பரமசிவனிடத்திற்சென்று வணங்கித் தோத்திரஞ் செய்கிறார்கள்.

எந்தாய்போற்றி யேறேறு மிறைவாபோற்றி ஏழுலகும், தந்தாய்போற்றி யணிகொன்றைத் தாராய்போற்றி சகமுய்ய, வந்தாய்போற்றி வஞ்சகர்முன் வாராய்போற்றி மலரோனும், செந்தாமரைக்கட் டிருமாலுமாணாய்போற்றி சிவாபோற்றி.

இப்படி தோத்திரஞ்செய்த அந்தத் தேவேந்திரன் முதலானவர்க ளெல்லோரும் மூன்றுலோகமும் பாழாகக் கொடுமைசெய்யும் பாவிகளாகிய மாலியவான் முதலான இராக்ஷதர்களாலே தாங்கள் படுகிற துன்பங்களெல்லாஞ் சொல்லி முறையிட்டார்கள். அப்பொழுது பரமசிவன் அவர்களைப் பார்த்து, ஓ அன்பினர்களே! புஜபல பராக்கிரமசாலியாய் என்னிடத்தில் மிகவும் பத்திவைத்துள்ள சுகேசன்வழியில் வந்த அரக்கர்கள் எவ்வளவு பிழைகளைச்செய்தாலும், அவர்களும் அவனைப் போலென்னை யடைந்தோராதலால் அவர்களை நாமேயழிப்பது தருமமல்ல. ஆகையால் இராக்ஷதர்குலத்துக்குப் பகைவராய் அவர்களைக்கொல்லும் உபாயமும்வெற்றியும்பொருந்திய மகாவிஷ்ணுவினிடத்துக்கு நாம் அநுபவித்தோமென்று நீங்களெல்லோரும்போய் உங்கள் குறையைச்சொன்னால், அவர் உங்களுக்குத் துன்பஞ்செய்யும் அந்த ராக்ஷதர்களைச் சங்கரித்து உங்களை ரக்ஷிப்பார் என்று அநுக்கிரகஞ்செய்து அனுப்புவித்தார்.

அப்படியே அந்தத்தேவேந்திரன் தேவர்கள் மகாரிஷிகள் முதலானவெல்லோரும் திருப்பாற்கடலினிடத்திற் சேர்ந்து, அந்தத் திருப்பாற்கடலின் நடுவிலே மரகத ரத்தினம்போலப் பச்சையாய் விளங்கும் ஒருபெரிய ஆலிலையின்மேலே சிரசிலே மாணிக்கரத்தினங்கள் வரிசையாய் விளக்குப்போலப் பிரகாசிக்கும் ஆயிரம் படங்களையுடைய ஆதிசேஷசயனத்திலே

மாணிக்ககிரீடம்-மகரகுண்டலம்-ஆரகேயூரம்-கவுஸ்துபம் - பீதாம்பரம்-இவை முதலான திவ்வியாலங்காரபூஷிதராகி, சங்கம்-சக்கிரம்-தண்டம் - கோதண்டம் - கட்கம்-என்று சொல்லப்பட்ட பஞ்சாயுதங்களையுந் தரித்தவராகி, ஸ்ரீ மகாலட்சுமியும் பூதேவியுமாகிய தேவிமாரிருவரும் உபய பாதங்களை வருடவும், சகல புவனங்களையும் படைக்குந் தொழிலினையுடைய சதுர்முகப் பிரம்மாவானவர் இருக்குவேதம்-எசுர்வேதம் - சாமவேதம் - அதர்வணவேதம்-என்று சொல்லப்பட்ட நாலுவேதங்களையும் அவருடைய உந்திக்கமலத்திலிருந்து பாராயணஞ்செய்யவும், தும்புருநாரதரிருவருஞ் செவிகளுக்கின்பமாக ஆனந்தமயமான வீணாகானஞ்செய்யவும், பரமபதவாசிகளான பாகவதர் இருபக்கங்களினு நெருங்கிக் கைகள் கூப்பித் தோத்திரஞ் செய்யவும், கருடபகவான் முதலான பக்தகணங்கள் புடைசூழ்ந்து நிற்கவும், செந்தாமரைபோன்ற தமது வலதுகையைச் சிரசின்கீழே கொடுத்துக் கருணையே திருமேனியாக அறிதுயிலாகிய யோகநித்திரை செய்தருளும் நாராயணமூர்த்தியைக் கண்கள் குளிரக்கண்டு தீர்க்கதண்டனாக நமஸ்கரித்து இவ்வாறு தோத்திரஞ் செய்கிறார்கள்.

பிறிவிலாவுயிரு முடலும்வா சகத்துப் பேர்கலாப் பொருளுமாங் கெனவும், வெறியுநன்மலரு மெள்ளு மெண்ணெயும்போல் விரிந்தவப்பொருள்களின்மேவிக், கறுவிமேன் முயலுங்காரியமாகிக் கண்ணுமாய்க்கருத்ததுவாகி, அறியவுமாயறியப்படுவதாயறிவா ராயினா யாருனையறிவார்.

உறப்பெரிதுணரி னுருவமாயருவா யுளவுமாயில்லையுமாகிப், பிறப்பிலியாகிப் பிறத்திநீயாண்பெண்ணலியெனப் பேசவும்படைத்தாய், மறப்பகையொன்று மன்றியேயென்றும் வலிகொள்பஞ் சாயுதமெடுத்தி, அறச்சிலுகுடைத்துநின்றிறமுரைக்கி னச்சுதாயாருனையறிவார்.

தெவ்வடலவுண வடவியையெறியத் திகிரிசங்கங்கையிற் றறித்தாய், செவ்வடங்கோத்த மணியெனக்கோத்துத்திரியவுஞ் சிதறுவையுலகை, மொய்வ்வடமேரு வோடுமூன்றுலகை முற்றுமுண்டாலிலைத் துயின்றோய், அவ்வடநின்ற தெவ்விடமறியே னமலனேயாருனையறிவார்.

இவ்வாறு அத்தேவேந்திரன் முதலானவர்கள் தோத்திரஞ்செய்து, சுவாமி! தேவர்களுக்குச் சத்துருக்களாகிய அசுரரைக்கெடுத்து உலகங்களைக்காக்கும் ரக்ஷக கர்த்தாவாகிய தேவரீருடைய பரிபூரண கிருபையிருக்கவும், முன்பு தபசுசெய்து பிரமதேவனிடத்திற்பெற்ற வரத்தினாலே எல்லார்களிலும் மேலான பல பராக்கிரமங்களைப் பொல்லாத துஷ்டகண்டகராகிய மாலியவான்-சுமாலி-மாலியென்று சொல்லப்பட்ட மூவர்கள், தங்களுடைய புத்திரர்களும் மித்திரர்களும் சுத்தவீரராயுள்ள சேனாபதிகள் முதலான அளவில்லாத வெகுகோடி ராக்ஷதசேனைகளுமாய்ப் பிரளயகாலத்திலே உலகத்தைமூடிய பெருவெள்ளம்போல எங்கும் இராக்ஷதமயமாய்ப் பாதாளலோகத்தைப்பாழாக்கி, பூலோகத்தைப் பொடியாக்கி, சுவர்க்கலோகத்தைத் தூளியாக்கி, எங்களையும் படாதுன்பங்கள் படுத்திய கொடுமைகளை யின்னபடியென்று அளவிட்டுச் சொல்லவும் தொலையாதென்று முறையிட்டார்கள்.

அப்பொழுது அந்த மகாவிஷ்ணுவானவர் அப்படி முறையிட்ட தேவர்கள் முதலாகின எல்லாரையும் பார்த்து, நீங்களெல்லோரும் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாமென்று அபயங்கொடுத்து நாமே அந்தத் துஷ்டர்களாகிய மாலியவான் முதலான அசுரர் இராட்சதர்க ளெல்லாரையுஞ் சங்கரித்து உங்களுக்கு ஒரு பகையும் இல்லாமற்செய்து இரக்ஷிக்கிறோமென்று உறுதியாகச் சொல்லி யனுப்புவித்தார். இந்திரன் முதலான எல்லோரும் அந்த மகாவிஷ்ணுசொன்ன அனுக்கிரக வாக்கியத்தை உறுதியாக நம்பிக்கொண்டு திருப்பாற்கடலினின்று நீங்கி அவரவரிருக்கும் இடங்களிலே சேர்ந்தார்கள். அப்படியிருக்க, தேவர்கள் முதலான எல்லோருங் கூடிக் கைலாசகிரியைச்சேர்ந்து பரமசிவனிடத்திலே தங்கள் குறைகளைச்சொல்லி முறையிட்டதும், அதற்குப் பரமசிவன் திருப்பாற்கடலுக்குப்போய் மகாவிஷ்ணுவினிடத்திலே சொல்லுவீர்க ளென்று அனுப்புவித்ததும், அப்படியே அவர்கள் எல்லாரும் திருப்பாற்கடலுக்குவந்து மகாவிஷ்ணுவைக்கண்டுமுறையிட்டதும், அதற்கு மகாவிஷ்ணுவானவர் அவர்களெல்லாரையும் பார்த்து, உங்களுக்குத் துன்பங்கள் செய்யும் மாலியவான் முதலான துஷ்டர்களையழித்து நீங்களெல்லோரும் ஒரு பயமுமில்லாமற் சுகமாக வாழ்ந்திருக்கும்படி செய்கிறோமென்று உறுதியாகச்சொல்

லியனுப்புவித்ததும், ஆகிய இவைகளை யெல்லாம் உலகமெங்கும் சஞ்சரித்தாராய்ந்து ராஜகாரிய சமாச்சாரங்களை விசாரிக்கும் சாரணர்கள் கேள்விப்பட்டு உடனே சீக்கிரமாக லங்காபட்டணத்துக்குப்போய் அசுரேந்திரராகிய தங்களுடைய ராஜாக்களுக்குச் சொன்னார்கள்.

அந்த சமாச்சாரங்கேட்ட அந்த மூவர்களும் துருத்தியினாலேயூத உலைமுகத்தில் எரியும் நெருப்புப்போல மனங்கொதித்து சீறி, மிகவும் கொடுமையான கோபங்கொண்டு, இந்தக்ஷணமே சுவர்க்கலோகத்தைப் பாழாக்கித் தேவர்களென்று பேர்சொல்ல ஒருவரு மில்லாதபடிக்குத் தேவர்களெல்லாரையுங்கொன்று ஜயங்கொண்டு மீண்டு வருவோமே யல்லாமல் நாங்கள் சும்மா வரமாட்டோமென்று சபதம் பண்ணிக்கொண் டெழுந்திருந்து போர்க்கோலங்கொண்டு, தாங்களும் தங்களுடைய புத்திரர்களும் சுத்தவீரராகிய படைத்தலைவர்களும் தேர்களேறி, இரத கஜ துரக பதாதியாகிய சதுரங்கசேனைகளும், பூமி ஆகாயம் எங்கும் இருள்மூடப் பரந்து நெருங்கிச்சூழ்ந்துவரவும், சத்தமேகங்களுங்கூடியிடித்து முழங்குவதுபோலப் பதினெட்டு வாத்தியங்கள முழங்கவும் ஆரவாரித்து, அதிவேகத்துடனே சுவர்க்கலோகத்தை நாடிச் செல்லுவதானார்கள். அப்பொழுதில் பொல்லாத நிமித்தங்களாக மேகங்கள் ரத்தத்தையும் எலும்புகளையும் மழையாகச்சொரிவதோடு மலைகளதிர்ந்து நடுங்கவுங்கண்டு தங்களுக்கு அழிவுகாலஞ் சமீபமாக நேரிட்டிருப்பதால் அந்தத் துர்நிமித்தங்களைச் சற்றும் எண்ணாமல் அகங்காரத்தையடைந்து மேற்சென்று நடந்தார்கள்.

விண்டுவினால் கனிஷ்டனாகிய மாலி யிறக்கக்கண்ட மற்றிருவரும் பாதாள லோகம்போய் மறைதல்.



அப்படிக்கு மிகவும் கொடுமையான கோபத்துடனே எட்டுத்திக்குகளுஞ் செவிடுபடச் சேனாசமுத்திரங் கோஷிக்க ஆரவாரித்து வருகிற வேகத்தைப்பார்த்த தேவர்களெல்லாருங் கருடனைக்கண்ட சர்ப்பங்கள்போலப்பயந்து என்னசெய்வோம்? எங்கேபோவோம்? என்று புலம்பிப் பரதவித்து, ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாமல் திக்கு திக்காக ஒளிப்பிடந்தேடி ஓடிப்போவாரும் ஓடமாட்டாமல் மனங்கலங்கி சுழன்றலைவாருமாகி, பின்பு அவர்கள் ஒரு தேவதூதனைக் கூவி, அப்பா குணவானே! நீ யித்ததியிற் றயைசெய்து ஓர் ஓட்டமாகவோடி இந்தச்செய்தியை நாராயணமூர்த்தியினிடத்திலே சொல்லுவாய்? என்றனுப்புவித்தார்கள். அப்படியே அந்தத் தூதனுஞ் சுவர்க்கலோகத்தைவிட்டு வாயுவேக மனோவேகத்திலும் அதிகவேகமாய்த் திருப்பாற்கடலை நோக்கி, ஓ! ஓ! நாராயணா! நாராயணா! ஓ! ஓ! முகுந்தா! முகுந்தா! ஓ! ஓ! மாதவா! மாதவா! ஓ! ஓ! புருஷோத்தமா! புருஷோத்தமா! ஓ! ஓ! லோகரட்சகா! லோகரட்சகா! என்று கூக்குரலாக கூப்பிட்டுக்கொண்டு ஓடிச்சென்று முறையிட்டுச் சொன்னான்.

அப்படிக்குஅந்தத் தூதன் முறையிட்ட சொல் காதிலேகேட்குமுன்னமே ஸ்ரீநாராயணமூர்த்தியானவர் துணுக்குற்று, ஆதிசேஷசயனத்தை விட்டு எழுந்திருந்து, அதிசீக்கிரமாக மகாமேரு பர்வதத்தின் மேலே சமுத்திரஜலபானம் பண்ணிச் சூற்கொண்டு கறுத்த மேகமானது மின்னல்கள் பளபளவென்று விட்டெறிப்ப ஒரு பெரிய பச்சைவில்லுடனே பிரகாசித்து விளங்கினாற்போல சங்கம் - சக்கரம் - தண்டம்-கோதண்டம்-கட்கம் ஆகிய பஞ்சாயுதங்களோடு ஆரம்-கேயூரம் - கிரீடம்-கட்காங்கதம்-குண்டலம் இவைமுதலான திவ்விய மாணிக்கபூஷணங்களும் பிரகாசிக்கத் தக்கதாக அதிக பல பராக்கிரமம் பொருந்திய பக்ஷிராஜனானகருடபகவான்தோளின் மேல் ஏறிக்கொண்டு அந்த ராக்ஷத சேனாசமுத்திரத்தின்மேலே மகா வேகத்துடன் பாய்ந்தார். அப்பொழுது கருடபகவான் மகா வுக்கிரகோபத்துடனே மூலைக்குமூலையெங்கும் பாய்ந்து மோதியடிக்கிற சிறகுக் காற்றாகிய பிரசண்டமாருதவேகத்தினாலே அந்த ராக்ஷதசேனையிலே மலைகள்போலே நெருங்கியிருக்கிற தேர்களெல்லாந் தெறித்துமுறியப்பட்டும், யானைக்கூட்டங்கள் சாய்ந்துவீழ்ந்து உருளப்பட்டும், குதிரைத்திரள்கள் சிதையப்பட்டும், பதாதி வெள்ளமெல்லாம் பஞ்சாய்ப்பறந் தழியப்

பட்டும், இப்படிக்குப் பலபலவிதமாகச் சின்னுபின்னப்பட்டு அளவில்லாத சேனைகள் மடிந்தன. அதைக்கண்ட சுமாலியானவன் மிகவும் உக்கிரமான கோபங்கொண்டு சிதைவுபட்டோடுஞ் சேனுசமுத்திரங்களையொன்ருய்த்திரட்டி முன்னேறிச்செல்ல நடத்தி நெருக்கி, தானும் தன்னுடைய தேரைக் கடுக முடிக்கிக் கிட்டிநின் றெதிர்த்து அட்டகாசம்பண்ணி, தனது வில்லை வளைத்து நாணேரிட்டு அநேகவிதமாயுள்ளபாணங்களைத்தொடுத்து மகாவிஷ்ணுவினுடைய சரீரமுழுதும் மறையும்படி சரவருஷமாகப் பொழிந்து மிகவும் குரூரமான யுத்தம் பண்ணினுன். அப்பொழுது அந்தச் சுமாலியினுலே விடப்பட்ட சகல பாணங்களையும் மகாவிஷ்ணுவானவர் தம்முடைய கோதண்டமாகிய வில்லைவளைத்து அக்கினிமயமான அநேக பாணங்களைப் பிரயோகம்பண்ணி, அளவில்லாத ராட்சதசேனைகளை மடித்துச் சுமாலியினுடைய சரீரமெல்லாஞ்சல்லடைக்கண்ணுகத்துளைத்து மூர்ச்சித்து விழும்படிச் சாய்த்தார். அப்படி அந்தச்சுமாலி மூர்ச்சையடைந்து சாய்ந்துகிடப்பதையும் சேனைகளெல்லாம் இறந்தழிவதையும், அவனுக்கிளையதம்பியாகிய மாலியென்பவன் கண்டு, தன்னுடைய சேனைகளும் தானுமாக எதிர்த்துச் சூழ்ந்துகொண்டு ஆரவாரித்து, அநேக விதமாயுள்ள ஆயுதபாணங்களைப் பிரயோகித்து மிகவும் குரூரமான யுத்தம் பண்ணினுன்.

அப்பொழுது மகாவிஷ்ணுவானவர் சிலசில ஆயுதபாணங்களைப் பிரயோகித்து அவர்களால் விடப்பட்ட அஸ்திரசஸ்திரங்கள் யாவையும் அறுத்துத்தள்ளி, அளவில்லாதசேனைகளை மடியச்செய்தார். அப்படிச் செய்யும்பொழுது கிரீடங்களுடனே தலைகளும், வாள்களுடனே தோள்களும், கவசங்களுடனே மார்புகளும், வில்லுகளுடனே கைகளும், வீரகண்டாமணிகளுடனே கால்களும், அம்புகளுடனே விரல்களுமாக, இப்படி வேறுவேருய்க் கண்டதுண்டப்பட்டு உருண்டு புரண்டு சிதைத்தழிந்து யுத்தகளமெங்கும் குடலும் மூளையும் இரத்தமும் கலந்து செஞ்சேறுபட்டுக் கிடந்தது. அதைக்கண்ட மாலியானவன் மகா வுக்கிரகோபங்கொண்டு அதிசீக்கிரமாக ஒருபலம்பொருந்திய வச்சிரதண்டத்தைக் கையிலே யெடுத்துக்கொண்டு தேரிலேநின்றும் பூமியிற் குதித்துப் பாய்ந்து ஓடிச்சென்று அந்த மகாவிஷ்ணுவைத் தோளிலே தாங்கி எதிர்த்துநின்ற கருடபகவானுடைய நவரத்தினகிரீடம்தகர்ந்து சிதறிவிழும்படி ஓங்கியடித்தான். அப்படி அவன் அடித்த அடியினுலே கருடபகவான் சற்றே மயங்கிச்சோர்ந்தார். அது கண்ட மகாவிஷ்ணுவானவர் அப்படியோ என்று புன்சிரிப்புகொண்டு இனி இந்தத் துஷ்டனை க்ஷணப்பொழுதும் உயிருடனே வைக்கப்படாதென்றெண்ணித்தம்முடைய வலது கையிலிருக்கும் சக்கரத்தைப் பிரயோகம்பண்ணினுர். அந்தச்சக்கரமானது அடுத்துநின்ற மாலியினுடைய சிரசினையறுத்துத் தள்ளி, பின்னும் அதிகவேகத்துடனே எதிர்ப்பட்ட சேனைகளெல்லாஞ் சாய்ந்துவிழும்படியரிந்துமடித்து, ஆகாசமார்க்கத்திலே பன்னிரண்டு சூரியருடனே பதின்மூன்ருஞ் சூரியன்போலப் பிரகாசத்துடனே சுழன்றுகொண்டுதிரிந்தது. அந்தச் சக்கரத்தினுலே தலையறுபட்டு மாலியாகிய இளையதம்பி இறந்துகிடப்பதையும் அவனிறப்பதற்குமுன்னமே மகாவிஷ்ணுவானவர் பிரயோகித்து விடப்பட்ட அக்கினிமயமான பாணங்களினுலே சரீரமெல்லாம் துளைபட்டு சுமாலியானவன் இறந்தவன்போல மூர்ச்சையடைந்து கிடப்பதையும், போர்க்களத்திலே பார்த்தவிடமெங்கெங்கும் தன்னேடுவந்த பலவிதச்சேனைகளெல்லாம் சில குறைத்தலைக் கவந்தங்களாய்நின்று கூத்தாடுவதையும் பல சின்னுபின்னப்பட்டுப் பிணக்குவியல்களாய் மடிந்தழிந்து கிடப்பதையும், சிரேஷ்டனுன மாலியவான்பார்த்து மிகவும் துக்கப்பட்டு மகாவிஷ்ணுவினுடைய ரவுத்திராகாரத்தைக்கண்டு எதிர்நிற்கமாட்டாமற் பயந்து ஓடுகிறுன். அப்பொழுதில் அவனேடுகிறதைக்கண்ட அவனுடைய சேனைகளும் கலைந்து பின்னே தொடர்ந்தோட, அதைக் கண்ட மகாவிஷ்ணுவானவர் சத்துருசேஷம் வைக்கப்படாதென்றெண்ணிப் புறங்கொடுத்தோடுகிற மாலியவானைக் கொல்ல மகா வுக்கிரகோபத்துடனே நின்ருர். அப்படி நிற்கும்பொழுது முன்பு போர்க்களத்திலே அஸ்திரசஸ்திரங்களினுலே அடி

பட்டு மூர்ச்சையடைந்துகிடந்த சுமாலியானவன் அந்தமூர்ச்சைதெளிந்தெழுந்து தன்னுடைய தம்பி இறந்துகிடப்பதையும் அளவில்லாத சேனைகளெல்லாம் பாழாய் மடிந்துகிடப்பதையும், தமையனாகிய மாலியவானும் அவன்சேனையும் பயந்தோடுவதையுங்கண்டு, நமக்கு இப்படிப்பட்ட கதியும் வருமோவென்று மிகவும் மனங்கொதித்துக் கொடுமையான கோபங்கொண்டு மகாவிஷ்ணுவுக்கெதிரே அதிசீக்கிரமாகவோடி யடுத்துநின்று இடிபோல முழங்கி அட்டகாசம்பண்ணி அவரைப் பார்த்து இதனைச் சொல்லுகிறான்.

ஓ விஷ்ணுவே! உலகத்திலே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலன முதலான காரியங்களிலே மநுநீதிதவராமற் செங்கோல் செலுத்தி அரசாளப்பட்ட இராஜாக்கள் யுத்தகளத்திலே போர்செய்யக் குறித்து வராதவர்களையும், எதிர்த்துப் போர்செய்ய மாட்டாதவர்களையும், போர்செய்யத் திறம் இல்லாமல் முதுகுகொடுத்தோடு மவர்களையும் யுத்தத்திலெதிர்த்தபொழுது பயப்பட்டுக் கைகால் நடுங்கிச் சோர்ந்துவிழுமவர்களையும், போர்செய்வதை விட்டொழிந்து நிற்குமவர்களையும் நிராயுதராய் நிற்பவர்களையும் உனக்கு நானுறவானவனென்று நயம் பேசி வேண்டிக்கொள்ளு மவர்களையும், சரீரதிட மில்லாதவர்களையும் வியாதியினாலே மெலிந்திருப்பவர்களையும் சுற்றத்தாரையும் பேடியர்களையும் ஸ்திரீசாதிகளையும் கொலைசெய்ய நினைந்து, அவர்கள்மேலாயுதமெடுப்பது சுத்தவீரனுக்குத் தருமமல்லவென்று அநேக தருமசாஸ்திரங்களிலே சொல்லியிருக்கின்றனர். நீ அந்த ராஜதர்மத்தைச் சற்று மெண்ணாமல், இளங்கன்று பயமறியா தென்பதுபோலச் சிறுபிள்ளைப் புத்தியாலுபாயந் தெரியாமல் அபாயமாய்ச் சேனைகளையெல்லா மடியக் கொடுத்துத் தானும் இறந்துபோய்விட்ட என்னுடைய தம்பி மாலியென்பவனைக் கொன்று வெற்றிகொண்டோ மென்றும் நானிருக்கிறது தெரியாமலென்னைத்தேடிக்கொண்டு போகிறவென்னுடைய தமையன் மாலியவானை யுத்தம்பண்ணமாட்டாமற்பயந்தோடிப் போகிறானென்றும் எண்ணி, அவனைப் பின்றொடர்ந்து கொல்லப் போகிறவன்போல நீ நிற்கிற கோலத்தைப் பார்த்தால் எனக்கே மிகவும் வெட்கமாயிருக்கின்றது. ஆகையாலிப்பொழுது எதிர்த்துநிற்கிற என்னுடனே உனக்கு யுத்தம் பண்ணத் திறமுண்டானால் யுத்தம் பண்ணுக. என்று போருக்கழைத்து மகா உக்கிரத்துடனே சுப்பிரமணிய சுவாமியினுடைய வேலாயுதத்துக்குச் சமானமான பலம்பொருந்திய ஒரு வேலாயுதத்தைக் கையிலே யெடுத்துக் குலுக்கி, வலமாகச் சுழற்றித் திருப்பி, பின்வாங்கி முன்பாய்ந்தோடி நின்று, மகாவிஷ்ணுவினுடைய மார்பு பிளந்துருவி யோடும்படியாக வுரங்கொண்டோங்கி யெறிந்தான். அப்படிக்கு அவனெறிந்த வேலானது மகாவிஷ்ணுவினுடைய மார்பு பிளக்கும்படிபாய்ந்தது. அப்பொழுது மகாவிஷ்ணுவானவர் தம்முடைய மார்பிலே பாய்ந்திருக்கிற அந்த வேலைத் தானேபிடுங்கி, அதிக வேகமாக அந்தச் சுமாலியினுடைய மார்புதட்டுருவி யோடும்படிக்கு விசை கொண்டெறிந்தார். அந்த வேலானது வாழைப்பழத்திலே பாய்ச்சப்பட்ட ஊசியானதெப்படி தடையற்றோடுமோ? அப்படிப்போல அந்தச் சுமாலியினுடைய மார்பைப்பிளந்துருவிப் புறப்பட்டுப் பின்னும் அநேகமான ராக்ஷதக்கூட்டங்கள் சாய்ந்துவிழும்படி துளைத்துருவி அப்பாலும் ஓடுகிறது. அப்படியோடுகிற வேகத்தை அந்தச் சுமாலியானவன் கண்டு, முன்பு தனக்குப் பரமசிவன் கொடுத்த ஒரு சூலத்தைக் கையிலேயெடுத்து, ஆனாலு மித்தோடேயென்று முன்பு அந்த வேலை யெப்படி யெறிந்தானோ? அப்படியே யெறிந்தான். அந்தச் சூலமானது மகாவிஷ்ணுவினுடைய மார்பிலே பட்டு, சுவரிலெறிந்த பந்துபோல உதைந்து தெறித்து விழுந்தது. அதைக்கண்ட சுமாலியானவன் சற்று நிதானித்து ஓ ஓ!! நம்முடைய தவமும் பலமும் நன்றாயிருந்தது! நன்றாயிருந்தது! என்று நகைத்து ஆச்சரியப்பட்டு மனங்கலங்கி, இப்படிக்கெல்லாம் நமக்கொன்று உதவாமல் அபஜயமாக வருகிறபடியினாலே இந்தப்பொல்லாத காலத்திலே துரபிமானத்தை மேற்கொண்டு கோபத்தினாலே யின்னமும் யுத்தம்பண்ணிப் பிராணனைப் போக்கிக்கொள்ளுகிறது யோக்கியமல்ல, இந்தவேளை உயிர்பிழைத்துத் தப்பி யிருந்தோமாகில்

இனிமே லெப்போதாகிலும் நல்லகாலம் வந்து நேரிட்ட சமயத்தில் அந்தக் கால பலத்தினுலே சத்துருக்களைக் கொன்று பழியும்வாங்கி வெற்றிகொண்டு இராசரீக ஞ்செய்திருக்கலாம். என்று ஆலோசனை பண்ணினவனுய் அப்பொழுதே அவ்விட த்தினின்றும் நீங்கி, யுத்தத்திலே மடிந்த சேனைகள்போக மிகுந்துள்ள சேனையுந் தானுமாய் தன்னுடைய தமையன் மாலிய வானேடு சற்றும் திரும்பிப்பாராம லோட் டமாக வோடிச்சென்று லங்காபட்டணத் திலே புகுந்து, அவ்விடத்திலிருந்த தங்க ளுடைய ஸ்திரீஜனங்கள்புத்திரர்மித்திரர் முதலானவர்களையுங்கூட வழைத்துக்கொ ண்டு, எங்கே போவோமென்று ஓரொளிப் பிடந்தேடி ஒருவருக்குந் தெரியாமலிருள் பட்டிருக்கும்பாதாளலோகத்திலே மறைந் திருந்தான்.

இலங்கைதிருமாணப்படலம்-முற்றிற்று.

---

## குபேரன் லங்கையாள்படலம்.

புலஸ்தியர் குணவதியை மணம்புரிதல்.

கேளீர் சக்கரவர்த்தித் திருக்குமாரரே! இப்படி மாலியவானும் சுமாலியும் இலங் கையை யிழந்து தங்களினத்தினரோடும் பாதாளம்போய் மறைந்திருந்த காலத்தில் சகல தேவர்களினுஞ் சிலாக்கியம் பொருந் திய புருஷோத்தமனுகிய மகாவிஷ்ணுவி னுடைய நாபிக்கமலத்திலே அவதரித்த சதுர்முகப் பிரம்மதேவர் புத்திரராகிய புல ஸ்தியப் பிரம்மாவானவர், இகபரப் பிர யோசனங்களை விரும்பிய உத்தம குணமு டைய யாவர்களும், தங்கள்தங்கள் பிராரத் தவ கருமவசத்தினுல், வரப்பட்ட துன்பங் கள் நீங்கிச் சுகிர்தபலன்களை யடையத்தக்க தாகத் தபசுசெய்யும் மகாமேரு பருவதத் தைச்சார்ந்த தபோவனத்திற்சென்று தபசு செய்துகொண் டிருந்தார். அக்காலத்தில் தேவகன்னியர்களும், நாககன்னியர்களும் ரிஷிகன்னியர்களும், சேர்ந்துகூடி, அந்த வனத்திலே நாடோறும் வந்து அங்கங்கி ருக்கும் குளிர்ந்த மலர்கள் நிறைந்த தடா கங்களிலேயே ஜலக்கிரீடையாகக் குளித்து விளையாடுவதும், வகை வகையாயுள்ள சுக ந்த பரிமள புஷ்பங்களைக்கொய்து சூடுவ தும், ஒருவரோடொருவ ரிசைந்து குயிலி சைபோலக் கானம் பாடுவதுமாகப் பகற் காலமுழுதும் பொழுதுபோக்காக விளையா டிப்போவார்கள். அப்படியிருக்குங் காலத் தில் ஒருநாள், அந்தப் புலஸ்தியமுனிவர் தபசுபண்ணிக்கொண்டிருக்கும் ஆச்சிரமத் துக்குச் சமீபத்திலே எந்நாளும்போல வேடிக்கையாக ஆடியும் பாடியும் அநேக விநோதங்கள்செய்து விளையாடிக் கொண் டிருக்கிற தொனி அந்த முனிவர் காதிற் கேட்சப்பட்டு, அந்த இங்கிதத்தினுலே மனோவிகாரமாய்ச் சஞ்சலப்பட்டுத் தமக் குத் தபசு கூடாமற் போனபடியினுலே, அவர் அந்தக் கன்னியர்களைப் பார்த்து மகாவுக்கிரமான கோபங்கொண்டு, இன்று முதல் நீங்கள் யாவரேனும் எந்தக் காலத் திலேயாகிலும் இந்த வனத்திலே வந்து தபசுக்குவிகாதமாக நம்முடைய கண்காண இப்படி எதிர்ப்படுவீர்களாகில், உங்களுக் குப் பொல்லாத வுற்பாதமான கெற்பமுண் டாகக் கடவதென்று சாபம் பண்ணினுர். அவர்செய்த சாபத்தைக்கேட்டு அந்தக் கன்னியர்களெல்லோரும் நடுநடுங்கிப் பய ந்து, ஒருவருக்கொருவர் சொல்லாமல் திசைதிசையாக ஓடிப்போனுர்கள்.

அப்படி யிருக்குங்காலத்தில் சகலவே தங்களையும் நன்ருக ஓதியுணர்ந்து, அந்த வேதங்களாலே சத்தியமென்று சொல்லப் பட்ட அழியாத பொருளாகிய பரப்பிரம்ம சொரூபத்தை, உள்ளங்கை நெல்லிக்கனி போலக்கண்டு, மகிமைபொருந்தி யிருக்கி ன்ற திரணபிந்துவென்று சொல்லப்பட்ட மகாபுருஷருடைய பெண்ணுகிய, அதிரூப சௌந்திரியமும் நல்லயவ்வனமும் பொரு ந்திய குணவதியென்னும் கன்னிகையான வள், முன்பு தேவகன்னியர் முதலானவர் களைக் குறித்து அந்தப் புலஸ்திய மகா முனிவரிட்ட சாபகாரணத்தை யறியாதவ ளாய்த் தானுந் தன்னுடைய தோழிமார்க ளுமா யெந்நாளும்போல அந்த வனத்தி லேபுகுந்து, எப்பொழுதும் விளையாடுவது போல் அங்கங்கே யிருக்கும் புஷ்ப தடா கங்களிலே ஜலக்கிரீடையாகக் குளித்து விளையாடியும், பூக்கள்பறித்துச் சூடியும், அம்மானையாடியும், பந்தடித்தும். இப்ப

டிக்கெல்லாம் பலபலவிதமாக அவரவர் மனதுக் கிஷ்டமானபடியே விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்படி யிருக்கிற வேளையிலே, அந்தக் குணவதியானவள் தோழிப் பெண்களைவிட்டு நீங்கித் தனிப்பட்டுத் தன்னுடைய உயிர்த் தோழியைத் தேடிக் கூவியழைத்துப் போகும்பொழுதில், அங்கே யோரிடத்திலே யாவருங் கேட்டறியாத ஒருதிவ்யமான வேதகானம் தன்னுடைய காதிற் கேட்கப்பட்டு மனமுருகி ஆனந்தபரவசத்தை யடைந்து, ஆ! ஆ! நாம் ஒருநாளும் இந்தவனத்திலே இப்படி பாடப்பட்ட சங்கீதகானங்கேட்டதில்லையேயென் றதிசயித்து, இந்தக்கானம் பண்ணப்பட்ட மகாபுருஷர் எப்படிப்பட்டவரோ அவரைப் பார்க்கவேணுமென்று அந்தக் கானசுரத்தின் வழியே சென்று போய் அவரைக்கண்டாள். கண்டவுடனே அந்தப்புலஸ்திய மகாரிஷியானவர் முன்பு தாம் சாபமிட்டிருந்த காரணப்படியே கெர்ப்ப முண்டாகி, அக்கெர்ப்பத்துக்குள்ள அடையாளங் காணப்படவு மவள்பயந்து இஃதென்ன காரணமோவென்று ஆச்சரியத்தை யடைந்தவளாய்ச் சீக்கிரமாகப் போய்த் தன்னுடைய பிதாவாகிய திரணபிந்து மகாமுனிவரிடத்திலே தான் வனத்துக்குப் போனதும், அங்கேநடந்த விருத்தாந்தமும், தனக்கு அதிசயமான கருப்பமுண்டானதையும், கிரமமாகச் சொல்லி விசனப்பட்டாள்.

அப்பொழுது அந்தத் திரணபிந்துவானவர் திரிகால வர்த்தமானங்களும் தெரிந்தவராதலால், அந்தப் புலஸ்திய மகாமுனிவரிட்ட சாபகாரணத்தினு லுண்டாகிய காரியமென்றறிந்து, தம்முடைய புத்திரிக்குத் தேறுதல்சொல்லி, அவளையும் அழைத்துக்கொண்டு புலஸ்தியப் பிரம்மாவினுடைய ஆச்சிரமத்துக்கு வந்தார். அவருமவருக் குபசாரம்பண்ணி இருக்கச் செய்தார். அப்பொழுது திரணபிந்துவானவர் புலஸ்திய மகாமுனிவரைப்பார்த்து நீர் மகா தபோமகிமை யுடையவராதலால் உம்முடைய நேத்திரவீட்சண்யம் பட்ட மாத்திரத்திலே இந்தப்பெண் கெர்ப்பவதியாயினள். அல்லாமலும் நானெடுங்காலம் அரிதான தபசுசெய்து இந்தப்பெண்ணைப் பெற்றேன் இவளும் நல்ல சுகிர்தகுணமுடையவள். ஆகையால் இவளுக்குக் குணவதியென்று நாமதேயம். உமக்கேற்ற யோக்கியமெல்லா முடையவள். இந்தப்பெண்ணினை நீரே விவாகஞ் செய்துகொள்ள வேண்டும். என்று உபசாரமாகச் சொல்லவும், அவருஞ் சம்மதித்துப் பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டார். பின்புஅந்தப் புலஸ்தியராலே உபசரிக்கப்பட்டவராய்த் திரணபிந்துவானவர் தம்முடைய ஆச்சிரமத்துக்குப் போயினர்.

### விச்சிரவாவென்பவர் தேவகன்னியை விவாகஞ்செய்தல்.

அதன்பின்பு அந்தக் குணவதியானவள் தன்னுடைய பர்த்தாவாகிய புலத்தியருக்கு மிகவுஞ் சந்தோஷமுண்டாகும்படியாய் அவருடைய ஆச்சிரம தருமகருமங்களிலும், அவரிடத்தில் தான் நடந்துகொள்ளவேண்டிய உபசாரப் பணிவிடைகளிலும், அவர் மனக்குறிப்பின்படியே பதிவிரதா தருமத்துக்கேற்க; ஒரு காரியத்திலுஞ் சற்றுந் தாழ்வுவராமல் பயபத்தி விசுவாசத்துடனே நடந்து வருகிருள். அப்படி நடந்து வருகிற யோக்கியதையினலே அவர் மனமகிழ்ந்து, தம்முடைய பாரியாளாகிய அக்குணவதியைப் பார்த்துச் சொல்லுவார். கேளாய் பெண்ணே! நான் தபசு பண்ணிக்கொண்டிருக்கிற காலத்திலே தேவகன்னியர் முதலானவர்களைக்குறித்து நான்செய்த சாபகாரணந் தெரியாதவளாய் உன்னுடைய தோழிப்பெண்களும் நீயுமாகஇந்தவனத்திலே வந்து சஞ்சரித்து விளையாடிக்கொண்டிருக்கும்பொழுதில், அந்தத் தோழியர்களை விட்டுப் பிரிந்து நீயோரிடத்தில் தனித்தவளாய் உன்னுடைய பிராணசகியாகிய கன்னியைத் தேடிக்கூவி யழைத்துக்கொண்டு வந்தாய்.

அப்பொழுது நாம்பாடிய வேதகானத்தை நீநன்ருய் உன்னுடைய செவிக்கின்பமாகக்கேட்டுச் சந்தோஷித்து, அக்கானத்தின் வழியே தேடிவந்து நம்மைக் காணப் பெற்ற காரணத்தால், அக்காலுன்னுடைய கருப்பத்திலுண்டாகிய சிசுவானதும் அந்தக்கானத்தைச் சிரவமென்று சொல்லப்பட்ட காதினுலே நன்ருய்க் கேட்டபடியி

ஞலே, விச்சிரவாவென்னும் பெயருடைய வொருபுத்திரனுகப் பிறக்கக்கடவதென்று அனுக்கிரகம் பண்ணினுர். அவர் அனுக்கிரகஞ் செய்தபடியே உடனே அக்குணவதியானவள் கருப்பவேதனைக ளொன்றுமில்லாமல் சுகமாக ஒருபுத்திரனைப் பெற்ருள். அந்தப்புத்திரனை அத்தாயானவள் நாடோறும் அருமையாகப் போற்றிவளர்க்கச் செழுமையாய் வளர்ந்துவருங் காலத்தில், பிதாவானவர் அந்தந்தக் காலங்களிலே வேதமார்க்க விதிப்படியே கிரியைகள் தப்பாமல் சாதகருமம் நாமகரணம் அன்னப்பிராசனம் கவுளம் வித்தியாரம்பம் உபநயனம் இவை முதலாயுள்ள பிராமண கருமங்களெல்லாம் கிரமமாகச் செய்வித்தார். அந்த விச்சிரவாவென்னும் பெயருடைய புத்திரரானவர் பிதாவாகிய குரு அனுக்கிரகத்தினுலே, சகல வேதசாஸ்திரங்களும் ஓதியுணர்ந்து, பிதாவைப் பார்க்கிலும் மேலான தபோமகிமை பொருந்தி விளங்கினுர். இப்படி விளங்கிய அவ்விச்சிரவா வென்பவருடைய சௌந்தரியமும் யவ்வனமும் குணமும் வித்தையும் அறிவும் ஆசாரமும் அனுஷ்டானமும் மகிமையும் ஆகிய உத்தம யோக்கிய குணங்களையெல்லாம் பெரியோர்களாயுள்ள யாவரும் எங்கெங்கும் கொண்டாடிப் புகழும் மேன்மையைப் பரத்துவாசமகாமுனிவர்கேட்டு, தாம் தபோபலத்தினுல் பெற்ற தம்முடைய புத்திரியாகிய தேவவன்னியென்னுங் கன்னியை அந்த விச்சிரவாவென்பவருக்கே விவாகஞ்செய்து கொடுக்கவேணுமென்று ஆலோசித்தவராய், தமது குடும்பத்தோடு அந்தப் புலஸ்திய மகாமுனிவருடைய ஆச்சிரமத்துக்கு வரும் பொழுதில், புலஸ்தியமகாமுனிவர் பரத்துவாச மகாமுனிவரை யெதிர்கண்டெழுந்து உபசரித்து அழைத்துக் கொண்டு போய் ஆசனங்கொடுத்துஇருக்கச்செய்து, தேவரீர் கிருபைவைத்து இங்கே எழுந்தருளிய காரணமென்னவென்று கேட்டார். அதற்கு அந்த மகாயோகியானவர் நான் நினைத்துவந்த காரியத்தை இன்னபடியென்று சொல்லுவேன் கேளுமென்று சொல்லுவதாயினுர்.

ஐயா புலஸ்திய மகாமுனிவரே! நீர் அனேககாலமாகச்செய்த தபோபலமெல்லாம் ஒருருபமாகக்கொண்டு அவதரித்த உம்முடைய புத்திரருடைய சிலாக்கியகுணங்களுக்கு யோக்கியமான ரூபமும் பருவமும் அழகும் குணமும் அன்பும் விவேகமும் பொறுமையும் கற்பும்ஆகிய வெல்லாமேன்மைகளும் பொருந்திய எம்முடைய புத்திரியாகிய தேவவன்னியை, உம்முடைய அப்புத்திரருக்கு விவாகஞ்செய்து கொடுக்க வேண்டுமென்கிற அபிப்பிராயத்தை நினைத்து வந்தோமென்று சொல்லினுர். அது கேட்டமாத்திரத்தில் அவர் சம்மதித்து, ஐயா! மகாசந்தோஷம் தேவரீர் அபீஷ்டப் பிரகாரமே செய்விப்போம். என்றுசொல்லிக் கல்யாணமுகூர்த்தம் நிச்சயம்பண்ணிக்கொண்டு, அந்த மகாயோகிகள் இருவரும் தங்களைச்சார்ந்த இருடிகள் வானப்பிரஸ்தர்கள் யோகிகள் சன்னியாசிகள் பிர்ம்மசாரியர்கள் மற்றப் பிராமணர்கள் முதலியவெல்லாரும் வரும்படியாக வித்தியார்த்திகள்கையில்மங்களபத்திரிகையெழுதிக்கொடுத்து அனுப்பிவித்தார்கள். அவர்களும் அந்தப் பத்திரிகையைப் பார்த்தமாத்திரத்திலே, மகா சந்தோஷத்தையடைந்தவர்களாகி, தங்கள் தங்களுடைய பத்தினிகள் புத்திரர்கள் வித்தியார்த்திகள் பரிசாரகர்கள் இவர்கள் முதலானவர்களுடனே அந்தப்புலஸ்தியருடைய ஆச்சிரமத்துக்கு வந்தார்கள். அப்படியாக வந்த சகலமானபேர்களுக்கும் அந்த மகாயோகிகளிருவரும் மரியாதை உபசாரங்கள் செய்து, அவர்களுடனே நல்ல முகூர்த்த காலத்திலே விச்சிரவாவுக்கும் தேவவன்னிக்கும் வேதவிதிக் கிரியைகள் தப்பாமல் விவாகஞ் செய்வித்தார்கள். அதன்பின்பு விவாகத்துக்குவந்த சமஸ்தமானவர்களுக்கும் அவரவர்களுக் கேற்றபடியான உபசார மரியாதைகள்செய்து அனுப்புவிக்க, அவர்களெல்லாரும் மகிழ்ச்சியுடனே தாங்களிருக்குந் தலங்களைச் சேர்ந்தார்கள். அதன்பின்பு அந்தப் புலஸ்தியப் பிரம்மாவும் பரத்துவாச மகாமுனிவரும் சுவர்க்கலோகத்தை யடைந்தவர்கள் எவ்வளவு சந்தோஷத்தைப் பொருந்தி யிருப்பார்களோ? அவ்வளவு சந்தோஷத்தை யடைந்தவர்களாய், ஒருவரையொருவர் பார்த்து, பூலோகத்தி னிடத்திலே யாவரொருவர் நல்ல சற்குணமும் விவேகமும் பொருந்திய மக்க

ளைப் பெறுவதைப்பார்க்கிலும், மேலான புண்ணியபலத்தினல் அடையப்பட்ட பிரயோஜனம் அவர்களுக்கு வேறென்றுமில்லையென்பதாகப் பெரியோர்களால் சொல்லப்பட்டதை, நாம்செய்த தபோபலத்தினலே நாமே பெற்ருேமென்று மிகவுஞ் சந்தோஷத்தைப் பொருந்தியிருந்தார்கள்.

வைச்சிரவணனென்னுங் குபேரன்
லங்கையில் அரசியற்றிருத்தல்.

அந்த விச்சிரவாவென்பவரும், தேவவன்னியாகிய வனிதையும், உடலும் உயிரும்போல நிமிஷமாத்திரமும் விட்டுப்பிரியச் சகியாதவர்களாய், அளவுபடாத மோகத்துடனே மனோரஞ்சிதமான காமசுகபோகத்திலே, விதம்விதமாக அனுபவித்திருக்குங்காலத்தில், அந்தத் தேவவன்னி என்பவள் கெற்பவதியாகி, நாளுக்குநாள் அதிக மதிகமாக இடைபெருத்து, வயிறு கனத்து, முலைமுகங்கறுத்து, முகம்வெளுத்து, உடம்பெங்கும் பச்சைநரம்பு படர்ந்து, இப்படி பல வடையாளங்களுண்டாகிப் பூரணகெற்பமாயினுள். அப்பக்குவத்திலே லட்சுமீகாந்தனுகிய மகாவிஷ்ணுவுக்குப் புத்திரராகச் சதுர்முகப் பிரம்மதேவர் அவதரித்த சிலாக்கியம்போல, சகல லோகமுஞ் சந்தோஷத்தை யடைய நல்ல முகூர்த்தத்திலே ஒருபுத்திரன் ஜனித்தான். அதுகேட்டுச் சத்தியலோகத்திலிருக்கும் பிரம்மாமுதலான பிரம்மரிஷிகளும், சுவர்க்கலோகத்திலிருக்கும் தேவேந்திரன் முதலான திக்குப்பாலகர்களும், மற்றுமுள்ள தேவர்களும், முனிவர்களும், அந்த ஆச்சிரமத்தை நாடிவந்து,எல்லோரும் விச்சிரவாவென்பவரைப் பார்த்துச் சொல்லுகிருர்கள்.

ஐயா புலஸ்தியப் பிரம்மாவின் புத்திரரே! நீர்செய்த தபோபலத்தினலே இந்தச் சற்புத்திரனைப்பெற்றீர். நீரே யாவரினும் மேலானமகிமையும்,சிலாக்கியமும், யோக்கியமும், பெருமையு முடையவரானீர். என்று உபசரித்து, அந்தப் புத்திரனுக்கு வைச்சிரவணனென்று நாமதேயந் தரித்து ஆசீர்வாதஞ்செய்துவாழ்த்தி,எல்லோரும் தாங்கள் வாசம்பண்ணு மிடத்தைச் சேர்ந்தார்கள். அதன்பின்பு அந்தப் புத்திரன் இளம்பிறைச் சந்திரன்போல வளர்ந்து, பதினறு வயதுக்குள்ளாக சகல வேதசாஸ்திரங்களெல்லாம் ஓதியுணர்ந்து அந்த வேதங்களிலே நித்தியமானவஸ்துவென்று சொல்லப்பட்ட பரப்பிரம்ம சொரூபத்தை நிச்சயமாகத்தேர்ந்து, சமஸ்தமானவர்களும் தவஞ்செய்யும், தபோவனத்திற்சென்று வாயுவையும்ஜலத்தையும்ஆகாரமாகப் புசித்துக்கொண்டு, அனேககாலம் பிரம்மதேவரை நோக்கிச் சித்திரப்பிரதிமைப்போல் அசைவற்று, அரிதான தபசு செய்துகொண்டிருந்தான். அப்படி யிருக்குங்காலத்தில் அந்த வைச்சிரவணனுக்கு எதிராகப் பிரம்மதேவர் பிரசன்னராகி, உன்னைப்போல நெடுங்காலம் உறுதியாக விருந்து அரிய தபசுசெய்தோர் ஒருவருமில்லை. நீசெய்த தபசுக்கு நாம் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்தோம். ஆதலால் உனக்குவேண்டிய வரங்களைக்கேள்! நாம் தருகிருேமென்று சொல்ல, அதற்கு அந்த வைச்சுரவணன் சொல்லுவான். சுவாமி! இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு என்று சொல்லப்பட்ட திக்குப்பாலர்களுடனே நானுமொரு திக்குப்பாலகனுகவேண்டும். எடுக்கவெடுக்கக் குறையாத நவநிதிக்கு அதிபதியாகவேண்டும். என்று கேட்கப் பிரம்மதேவர் அப்படியே கொடுத்தோம். அல்லாமலும் உலகத்திலுள்ள யாவர்களும் மனதில் நினைத்து, வாயினற் சொல்லப்பட்ட பொருள்களெல்லாம் அந்த நிதிகளிலே பெருகக்கடவதென்றும் வரங்கொடுத்து, பின்னும் மனோவேகத்தைப் பார்க்கிலும் அதிக வேகமாக நினைத்த விடங்களெங்கும்போய் மீண்டு வருவதாய், அதனை யிழுத்துக்கொண்டு பாய்ந்தோடக் குதிரைகள் பூட்டாததாய், ஏழுலகத்திலுள்ள வெல்லோர்களும் ஏறினும் இடங்கொடுத்துப் பின்னும் விசாலமா யிருக்குமிடத்தை யுடையதாய், யாவராலும் வெல்லப்படாததாய், நவரத்தின மயமான சிகரங்களால் அலங்காரம் பொருந்தியதாய், மகாமேரு பர்வதம்போலப் பிரகாசிக்கும் புஷ்பகமென்று சொல்லப்பட்ட திவ்ய விமானமுங்கொடுத்து அனுக்கிரகித்துத் தம்முடைய சத்தியலோகத்துக்குப் போயினர். இப்படியாகப் பிரம்மதேவரிடத்தில் வரம்பெற்ற வைச்சிரவணனுகிய குபேரன், அளவில்லாத மகிழ்ச்சி

யுடனே தன்னுடைய பிதாவான விச்சிரவாவிருக்கும் ஆச்சிரமத்துக்குவந்து, அவரை வணங்கி நமஸ்கரித்து, தான் தவசு பண்ணி வரம்பெற்ற விதங்களெல்லாஞ் சொல்லி, ஐயா பிதாவே! பிரம்மதேவர் வரங்கொடுக்கும் பொழுதில் நானிருந்து வாசம்பண்ணுதற்கு ஒரு ஸ்தானம் அனுக்கிரகஞ் செய்யவில்லை. ஆனதால் எந்தக் காலத்திலும், சகல வுபாயங்களினாலேயும், சத்துருக்களாலேயும், ஜயிக்கக்கூடாததாய் பலமான துர்க்கங்களை யுடைத்தானதாயிருக்கும் ஓரிடத்தை நியமித்து அருள்செய்வீரென்று கேட்டான். அதற்கவனுடைய பிதாவாகிய அவ்விச்சிரவாவென்பவர்சொல்லுவார். அப்பா மகனே! மூன்றுலோகத்திலுமுள்ள யாவர்களாலும் சாதிக்கப்படாத பலங்களை, உடைத்தானதாய்ச் சமுத்திரத்தின் நடுவிலே ஜலதுர்க்கஞ் சூழ்ந்திருக்கிற இலங்காபுரியென்னும் ஒரு பெரிய நகரமுண்டு. அதினிடத்திலேஅனேக காலமாக இராஜரீகஞ் செய்துகொண்டிருந்த வெகுகோடி ராக்ஷதர்கள், ஸ்ரீமகாவிஷ்ணுவினுடனே எதிர்த்து யுத்தம் பண்ணி, அளவில்லாத ராக்ஷதசேனைகளை மடியக்கொடுத்து, அவருடைய யுத்தத்துக்காற்றமல் முறிபட்டோடிப் பிலத்துவாரத்தின் வழியாகப்போய்ப் பாதாளலோகத்லே புகுந்து ஒளித்துக்கொண்டார்கள். ஆனதால் அந்த ராக்ஷதர்களிருந்த பலம் பொருந்திய லங்காபட்டணத்திலே நீ வாசஞ்செய்துகொண் டிருப்பாயென்று சொன்னார். அவர் சொன்னபிரகாரமே தன்னுடைய வமிசத்தாரான யக்ஷ கந்தருவ கின்னரர் முதலாயுள்ள பந்து பரிஜனங்களுடனே புஷ்பக விமானத்தின் மேலேறிப் போய், அந்த லங்காபட்டணத்திலே பிரவேசித்து, முன்னமொருகால் மகாவிஷ்ணுவின் சக்கரத்தினாலே யுத்தகளத்தில் மகா பலசாலியாகிய மாலியென்னும் இராக்ஷசன் இறந்தபின்பு, அழகும் பெருமையுங்கெட்டுப் பாழ்பட்டுக்கிடந்த அந்த நகரமே சுவர்க்கலோகமாகவும், தானேயொரு தேவேந்திரனாகவும், சகல தேவர்களும் தன்னை வணங்கும்படியாய் அளவில்லாத செல்வச் சிறப்புடனே வாழ்ந்திருந்தனன்.

குபேரனிலங்கையாள்படலம் முற்றிற்று.

---

## ராவணனுதியரிலங்கைபுகுபடலம்.

இராவணன் கும்பகருணன் சூர்ப்பநகி விபீஷணன் இவர்களுற்பவம்.

இப்படி குபேரனானவன் லங்கையில் அரசியற்றி வருகிறநாளையில் ஓர்நாள், பாதாள லோகத்திலே யிருள்சிறைக்கூட்டத்தில்அடைபட்டிருப்பவர்கள்போலஅனேகாலந் துன்பப்பட்டுக்கொண்டிருக்கும் மாலியவான் சுமாலி என்னு மிருவருங்கூடி, நாம் எத்தனைகால மிப்படி யிந்தத்துன்பத்தி லழுந்திக்கொண்டு கிடப்போமென்று ஆலோசித்தார்கள், அப்பொழுது மாலியவானனவன் சுமாலியைநோக்கி, கேளாய் தம்பி! இப்பொழுதிருக்கிற ஏதுக்களைப் பார்த்தால் இந்தத்துன்பங்களை நீக்கிக்கொள்ளுவதற்குநம்மாலுமாகாது. நம்முடைய புத்திரர்களும் அதிஷ்டவீனர்கள். அப்படி யிருந்தாலும் நீ பெற்ற கன்னிகளிருவரில் மூத்தபெண்ணானவள் பிரம்மதேவனுக்குச் சமானமான மகிமைபொருந்திய வொரு மகாபுருஷனுக்கு ஸ்திரீயாவதற்கும், இந்த மூன்றுலோகத்துக்கும் ராஜாக்களா யிருக்கத்தக்க புத்திரர்க்குத் தாயாவதற்கும், ஏதுக்களாயுள்ள உத்தமலட்சணங்களைப் பொருந்தி யிருக்கிறாள். ஆனதால் அந்தப் பெண்ணினாலே நாமுஞ் சுகப்படலாம். நம்முடைய குலமும் விர்த்தியாகும். இனிநாம் அதற்கானமுயற்சியில் முயல்வதே உத்தமமென்று சொன்னான். இப்படி தமையன்சொல்லிய வசனத்தை சுமாலி உண்மையாகக்கொண்டு, அந்தயோசனை முடியும்படிக்கேற்ற உபாயத்தைத் தேடினவனாகி, தன்னுடைய புத்திரியாகிய கைகசியையும் அழைத்துக்கொண்டு பாதாளலோகத்தைவிட்டுப் பூலோகத்திலே சஞ்சரித்து வருகிறான். அப்பொழுது லங்காபட்டணத்திலே ராஜரீகஞ் செய்துகொண்டிருக்கும் குபேரனானவன் யக்ஷ கந்தர்வ சித்த வித்தியாதரர் முதலான தேவர்களுடனே புஷ்பக விமானத்தின்மேலேறி, அனேக சம்பிரமத்துடனே பரமசிவனைத் தரிசனம் பண்ணக் கயிலாயகிரியை நாடிப்போகிறான். அப்படி போகும்பொழுதில் அவனைச் சுமாலியானவன் கண்டு, மனங்கொதித்துப் பெருமூச்சுகொண்டு பொறாமைப்

பட்டுப் புலம்பி, தன்னுடைய மகளைப்பார்த்து, கேளாய் பெண்ணே! இந்த மூன்று லோகத்திலுமுள்ள எல்லோர்களும் எங்களாக்கினைக்குட்பட்டு ஏவல்கேட்டு நடக்கும்படிக்குத் தம்பி தமையன்மாரான நாங்கள் மூவரும் இராஜரீகஞ் செய்துகொண்டிருந்த எங்கள் காணியாக்ஷியாகிய இந்த லங்காபட்டணத்திலே, பல பராக்கிரமம் பொருந்திய சிங்கமானது அரசு செய்துகொண்டிருந்த பெரியவனத்திலே ஒரு சிறியநரி அரசுசெய்திருப்பதுபோல இந்தக் குபேரனுமிருந்து ராஜரீகம் பண்ணும்படியான காலமும் நேரிட்டது.

அம்மா! இந்தக் குபேரனுக்கு இப்படியான செல்வமுதலானவைகளெல்லாம் உண்டாயிருப்பது, இவனைப்பெற்ற பிதாவாகிய விச்சிரவாவென்பவருடைய தபோமகிமையே யல்லாது வேறில்லை. ஆனதால், நீயுமந்த விச்சிரவாவென்பவர் இருக்குமிடத்துக்குப்போய் அவருன்னைக் கூடும்படிக்கு உபாயஞ்செய்து புத்திரரைப்பெறுவையேயானால், அந்தப் புத்திரராலே நமக்குப் பகைவராயுள்ள இந்தக் குபேரன் முதலான தேவர்களையெல்லாம் வென்று நாமும் நம்முடைய வமிசத்தாரெல்லோரும் ஒருகுறைவுமில்லாமல் இலங்காபுரியிலே வாழ்ந்திருக்கலாமென்று சொல்லினன். அதுகேட்ட கைகசி அப்படியே செய்கிறேனென்று அவ்விடத்தினின்று நீங்கி அந்த விச்சிரவாவென்பவ ரிருக்கும் ஆச்சிரமமாகிய இளந்தென்றலுலாவும் குளிர்ந்த பூஞ்சோலையினுள்ளே புகுந்து, அந்த விச்சிரவாவென்பவர் சாயங்கால சந்தியாவந்தனக்கிரியை செய்துகொண்டிருக்குஞ்சமயத்திலே, அவருக்கெதிரேகண்டோர் எல்லோரும் மோகங்கொண்டு, மயங்கி விழும்படியான அதிரூப சவுந்தரியத்தினையுடைய ரதியைப்போல வடுத்து,தன்னுடைய தேககாந்தியும் ஆபரணங்களும் விளங்க நின்று, புஷ்பகந்தங்கள் பரிமளிக்கச் சுவர்னகலசங்கள்போல நெருங்கி யிருக்கப்பட்ட கொங்கைகளின்மேலே மூடிய வுத்தரீயப் பட்டாடையை அடிக்கடி விலக்கி மூடிக்காட்டி மறைத்து, புன்சிரிப்புடனே கடைக்கண் பார்வையாய்ப் பார்த்துக்கொண்டு, காலிற்பூட்டிய தண்டை சதங்கை முதலான ஆபரணங்கள் கலகலென்கிற சத்தமாய் மெல்லவொலிக்க அவரை மயக்கி நின்றாள். அவளைக்கண்ட விச்சிரவாவானவர் மிகவும் காமவிகார மேற்கொண்டவராகி மனங்கலங்கி மயங்கிச் சகிக்கமாட்டாதவராய் அவளைப்பார்த்து, பெண்ணே! இந்த வனத்திலே இப்படித் தனியாகவந்து நிற்கின்ற நீ யாருடையமகள்? உன்னுடைய பெயரென்ன? இங்கே வந்த காரண மென்னவென்று கேட்டார். அதற்குக் கைகசியானவள் அவரைப்பார்த்து, சுவாமி! நான் அசுரேந்திரராகிய மாலியவான் தம்பி சுமாலியினுடைய புத்திரி. என்பெயர் கைகசி. நான் நினைத்துவந்த காரியம் தேவரீர் திருவுள்ளத்துக்கேதெரிந்திருக்கும். என்று அமிர்தரசமொழுக இளங்கிளி பேசினாற்போல நயமாகச் சொல்லக்கேட்ட விச்சிரவாவானவர் பின்னும் அதிக மோகங்கொண்டவராய் மிகவும் ஆச்சரியப்பட்டு, பெண்ணே! நீ புத்திரார்த்தமாக நம்மைக்குறித்து வந்தாய். வந்தவேளை அசுரசந்தியான மாலைப்பொழுதாகையால், இப்பொழுது நம்மோடுகூடிப் பெறுகின்ற புத்திரர்கள் மிகவுங் கொடிய துஷ்டர்களாகப் பிறப்பார்கள். என்று சொல்லவும் அதற்குக் கைகசியானவள் சுவாமி! உம்முடைய கிருபையினாலே உம்மைக் கூடிப்பெறுகிற புத்திரர்களும் உம்மைப் போலவே யிருக்கவேண்டுமல்லாமல், பொல்லாத புத்திரராகப் பிறக்கலாமோவென்று மிகவும் உபசரித்துச் சொல்லினாள்.

இப்படி கைகசிகூறிய வார்த்தையைக் கேட்ட விச்சிரவாவானவர் சந்தோஷப்பட்டு, எல்லாருக்கும் இளையவனாகப் பிறக்கிறவன் சற்புத்திரனாகப் பிறப்பானென்று அனுக்கிரகஞ்செய்து அப்பொழுதே யவளுடன்கூடி யனுபவித்தார். அப்படிக்கு அனுபவிக்கிற சமயத்திலே கருப்பமுண்டாகி, உடனே பத்துத்தலைகளும் இருபது கைகளு முடையவனாய், அதிக பல பராக்கிரம உக்கிரரூபத்துடனே தசக்கிரீவன் பிறந்தான். பின்னும் அப்படியே அனுபவிக்கும்பொழுது முன்போலவே கருப்பமுண்டாகி, இருண்ட நீலகிரிபோலச் சரீரமும், கொழுந்துவிட்டெரியும் நெருப்புப் போலச்சிகையும்,அர்த்தசந்திரனைப்போல விளங்கும் வக்கிரதந்தங்களு முடையவனாய், வடவைக்கனல்போல் மாறுதெரியும்

கொடுமையான பசியுடனே கும்பகர்னன் பிறந்தான். அதன்பின்பு பெருத்தமூக்கும், பெருத்தஉதடும், பெருத்தமுலையும், பெருத்தஇடையும், பெருத்தகாலும், பெருத்த கையும், கடித்தபல்லும், வெடித்தகுரலும், தூறுதலையும், சீறுமுகமுமுடையவளாய், கூற்றுவனே பெண்ணுருக் கொண்டது போல மிகவும் பொல்லாத பாவியாகிய சூர்ப்பநகை பிறந்தாள். இப்படிக்கு மூவரும் பிறக்கத்தக்கதாக முதற்சாம முழுதுங் கூடிப் புணர்ந்து கலவியிளைப்பாறி, பின்னும் மனமகிழ்ந்து இரண்டாஞ்சாமத்தில் அவ்விருவருங்கூடிப் புணர்ந்தார்கள்.

அது நல்லகாலமானதால் முன்பு பிறந்த அந்தப்பாவிகள் மூவருக்கு மிளையவனுய், நல்லகுணமும் ரூபமும் விவேகமும் பொறுமையும் தயாளமும் சன்மார்க்ககீர்த்தியு முடையவனுய் புலஸ்தியருடைய குலமும் வேதமும் தருமமும் தவமும் உலகத்திலுள்ள சகல பிராணிகளும் தழைத்தோங்கும்படியாய் விச்சிரவாவென்று சொல்லப்பட்ட பிதாவைப்போலவே சற்புத்திரனுக விபீஷணன் பிறந்தான். பின்பு இந்தத் தசக்கிரீவன் கும்பகர்னன் விபீஷணன் ஆகிய மூவரும், பிதாவினிடத்திலேதானே சகல வேதசாஸ்திரங்களும் ஓதியுணர்ந்து, தனுர்வேதவித்தையும் அப்பியாசம்பண்ணி, எல்லாவித்தையினும் வல்லவர்களாய் மேலான பராக்கிரமத்தைப் பொருந்தி யிருந்தார்கள். அம்மூவருள் முதலிருவர் மதோன்மத்தராய் அகங்காரங் கொண்டு, அந்தப் பிறதேசத்திலுள்ள கிரி வனங்களிலே, ஆச்சிரம வாசிகளான தபோதனர்கள் உபத்திரவம் செய்துகொண்டு கொடிய விஷம்போல வளரா நின்ருர்கள். அந்தத் துஷ்டர்களுக்கு இளையோனுகிய விபீஷணனுனவன், தன்னுடைய குருவாகிய பிதாவுக்கு மனமகிழும்படியான ஏவற் பணிவிடை செய்துகொண்டு, அவருடைய அனுக்கிரகத்தினுலே, சகல வேதசாஸ்திர சம்பன்னனுகி, யாவரும் சந்தோஷப்படத்தக்க யோக்கியனுக விருந்தனன், பாபியாகிய சூர்ப்பநகையென்பவளோ? அடங்காத காமவிகாரத்தை யுடையவளாகி, தான் சஞ்சாரமாகத் திரியுமிடங்கள் எங்கெங்கும் எதிர்ப்பட்ட ரிஷிகள் முதலான யாவரையும் வலிதிற்பற்றியிழுத்து, அவர்கள் வருந்தி நடுங்கும்படி துன்பப்படுத்தி வலியப்புணர்ந்து இன்பமனுபவித்துக்கொண்டு திரிந்தனள். இப்படி இவள் திரிந்துகொண்டிருக்க, அந்தத் தசக்கிரீவன் முதலான மூவரும் அந்த வனத்திலே தானே சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்.

### இராவணுதியர்மூவரும் பிரமனைவேண்டித் தவஞ்செய்து வரம்பெறுதல்.

அப்பொழுது அவர்களைப்பெற்ற தாயாகிய கைகசியானவள் முன்னமே ஒருநாள் தன்னுடைய பிதாவாகிய சுமாலியென்பவன் குபேரனைக் கண்டபொழுது மாச்சரியப்பட்டு நீ இவன் பிதாவாகிய விச்சிரவாவைச்சேர்ந்து புத்திரரைப்பெற்று அந்த புத்திரராலே நமக்குத் துன்பத்தை விளைக்கும் பகைவராகிய தேவர்களைக் கெடுத்து இந்தக் குபேரனையும் துரத்தி நம்முடைய வரசாட்சிக்குக் காணியாகிய லங்காபட்டணத்திலே நாமெல்லோரும் வாழ்ந்திருக்கும்படி செய்வாயென்று போதித்த, மனக்குறை தீரும்படிக்குக் காலம்பார்த்திருக்குமளவில், அந்தத் தசக்கிரீவன் முதலான மூவரும் தங்களுடைய பிதாவிருக்கும் ஆச்சிரமத்துக்குவந்து, அவரைக்கண்டு வணங்கித் தரிசனஞ்செய்துகொண் டவ்விடத்தே வாசமாக விருந்தார்கள். அப்பொழுது கைகசியானவள்தன்னுடையபுத்திரராகிய தசக்கிரீவன் முதலான மூவரையும் பார்த்து, ஓ என்னருமைச் செல்வர்களே! நீங்களொரு சிறப்புமில்லாமல் இந்த வனத்திலிப்படியிருக்க, உங்களுக்குத் தாயாதிப் பகைவனுகிய குபேரனுனவன் எடுக்கவெடுக்கத்துலையாத நவநிதிச் செல்வமுதல் எல்லாச் சிறப்புமுடையவனுகி, பரமசிவனுக்குத்தோழனுமாகி, உங்களுடையபாட்டன்மார் நெடுங்காலம் காணியாட்சியாக அரசு செய்துகொண்டிருந்த லங்கையில் தன்னை தேவர்களெல்லாம் வணங்கும்படி ஆணை செலுத்தி, ராஜரீகஞ் செய்துகொண்டிருக்கிருன். இந்த அநியாயத்துக்கென்னசெய்வேன்? என்று மகா துக்கப்பட்டுப் பொல்லாத பகையுங்கோபமும் உண்டாகும்படிச் சொன்னுன். அவன் சொல்லிய கொடிய வார்த்தைகளெல்லாம் நெருப்பிற்காய்ச்சிய இருப்பு நாராசத்தைச் செவிகளிற் செலுத்

தியதுபோலக்காதிற்கேட்டு, மிகவும்மனங் கொதித்து உதடுமடித்துப் பல்லை நெறு நெறெனக்கடித்து, மாதாவினுடையமனந் தேறும்படிக்கு அவளைப்பார்த்துச் சொல் லுகின்றார்கள்.

தாயே! அந்தக்குபேரனுக்கு இத்தனை மேன்மைகளும் உண்டாயிருப்பது அவன் செய்த தபோபலத்தினாலல்லவோ? ஆகை யால் நாங்களும் தவங்களைச்செய்து அவ னிலும் மேலான சகல மேன்மைகளும் படைத்து, உன்னுடைய மனக்குறைதீரும் படிச்செய்கிறோம் என்று சொல்லி, அப் பொழுதே அந்த மூவரும் தாய்க்கு விடை கொடுத்தனுப்பி அவ்விடத்து நின்று நீங்கி தபோவனத்திற் சேர்ந்து தவஞ்செய்யத் தொடங்கினார்கள். அவர்களிற் கும்பகர்ன னனவன் பிரம்மதேவனை நோக்கி, வேனிற் காலத்திலே பஞ்சாக்கினி மத்தியிலேயிருந் தும், வருஷகாலத்திலே மழையிலே நனை ந்தும், பனிக்காலத்திலே ஜலத்தில் மூழ் கிக்கிடந்தும், ஆகாரம் நித்திரையில்லா மல் இப்படிக் குறுதியாகப் பதினாயிரவரு ஷம் தபசுசெய்தான். அவனுக்கு இளையவ னாகிய விபீஷணன் ஊசியை நிறுத்தி, அதின்மேலே தன்னுடைய ஒருகாற்பெரு விரலையூன்றி, மற்றொரு காலை மடித்துக் கொண்டு அண்ணாந்து நின்றபடியாய் இர ண்டுகைகளையும் நீட்டிக் குறித்து, கண்கள் இமையாமல் சூரியனைப்பார்த்துக்கொண்டு இப்படி ஐயாயிரவருஷமும் மடித்த காலை நீட்டியூன்றி நின்றும், ஊன்றியகாலைமடித் துக்கொண்டும், இப்படி ஐயாயிரவருஷ மும் ஆக இப்படிப் பதினாயிரவருஷம் ஒருவராலும் சாதிக்கப்படாத அரிய தவத் தைச் செய்தான்.

இப்பால் அவ்விருவரும் மூத்தோனா கிய தசக்கிரீவனானவன் வேதவிதிப்படி யாகசாலை நிர்மித்து, அதின்நடுவிலே ஓம குண்டஞ்செய்து, அந்தக்குண்டத்துக்குள் ளே யாகசமித்துக்களை நிறைத்து, அக்கி னியைமூட்டி வளர்த்தி, அந்த அக்கினி யிலே ஆயிரம்வருஷத்துக்கு ஒவ்வொரு சிரசாக ஒன்பதினாயிரம்வருஷத்தில் ஒன் பது சிரங்களை அரிந்து ஆகுதிகொடுத்து பதினாயிரம்வருஷத்தில் மிகுந்துநின்றபத் தாம்சிரசையும் ஆகுதியாகக் கொடுக்கத் துணிந்து, அந்தச்சிரசினை உடைவாளினா லரிகிறான். அப்பொழுதும் அவன்செய் யும் கொடுந்தொழிலுக்கு ஆச்சரியப்பட்ட பிரம்மதேவனானவர் அந்தக்ஷணமே அவ னுக்குப் பிரத்தியக்ஷமாகி, உனக்கு வேண் டிய வரங்களைக்கேள்? தருகிறோமென்று சொல்லினர். அதற்குத் தசக்கிரீவன் பிரம தேவரை நோக்கி, ஓ பாரதிகொழுநரே! மனுஷரை ஒருபொருட்டாயெண்ணாமல் தேவர்கள் இராக்ஷதர்கள் முதலாயுள்ள யா வரும் என்னுடைய ஆக்கினைப்பிரகாரம் ஏவல்கேட்டு நடக்கும்படிக்கு எல்லாவல்ல மையும் உண்டாக்கவேண்டுமென்று கேட் டான். அதற்கு அவர் அப்படியே கொடுத் தோமென்று அனுக்கிரகஞ்செய்து, பின்பு விபீஷணனுக்குப் பிரசன்னராகி, இப்படி உன்னைப்போல மிகவும் அருமையான தவத்தினைத் தவறாமற் செய்துமுடித்தோர் ஒருவருமில்லை. ஆதலால் உனக்குவேண் டிய வரங்களைக் கேட்பாயென்று கூறினர்.

அதற்கு விபீஷணன் பிரம்மதேவரை நோக்கி, சுவாமி! சகலபிராணிகளும்துன்ப முற்று நடுங்கும்படிக்கு அதர்மமார்க்கத்தி னாலே செய்யப்பட்ட பாபகிருத்தியங்கள் என்னால் செய்யப்படாமலிருக்கவும், மே லான சிலாக்கியம்பொருந்திய தேவர்கள் முதலான யாவராலுஞ் ஜெயிக்கப்படாத வெற்றியின்மேன்மைபொருந்தியிருக்கவும் வேண்டுமென்று கேட்டான். அப்படியே உனக்குண்டாகக் கடவதென்று வரங்கொடு த்தும், பின்னும் அந்தப் பிரம்மதேவரான வர் விபீஷணன் வரங்கேட்ட விவேகத் தைப்பார்த்து, இவன் மிகவுஞ் சற்குணவா னாகவும், தர்மிஷ்டனாகவும், சத்தியவானாக வுமிருக்கிறான். ஆனதால் அவன் இந்தப் பூலோகத்திலே நெடுங்காலமிருப்பானாகிற் சகல பிராணிகளுக்கும் இதத்தைத் தேடு வான். என்று நினைந்தவராய், அந்த விபீ ஷணனை நோக்கி, அப்பா உத்தமனே! நீ யுகாந்தப் பிரளயகாலமளவும் அழியாமற் சிரஞ்சீவியாயிருக்கக்கடவதென்று அனுக் கிரகஞ்செய்து, அவனிடத்தினின்று நீங் கிக் கும்பகர்னனுக்கு அனுக்கிரகஞ்செய்ய வேண்டி வருகிறார்.

அப்பொழுது இந்தக் கொடிய பாவி யாகிய கும்பகர்னன் செய்து முடித்திருக் கின்ற குரூரமான தபசுக்குப் பிரம்மதேவர் வரங்கொடுப்பாரேயாகில் நாமெல்லோரும்

பிழைப்பிடமின்றி, இறந்துபடும்படியாய்த் துன்பப்படுத்திக் கெடுப்பானென்று பயந்து நடுங்கிய தேவர்கள்-அசுரர்கள்-ரிஷிகள் முதலான யாவருங்கூடி ஆலோசித்து அந்தப் பிரம்மதேவரிடத்துக்கு வந்து வணங்கித் தோத்திரம்பண்ணி, சுவாமி! உமக்கு நாங்கள்செய்த அபராதமென்ன? மற்றுமுள்ள பிராணிகள்செய்த பாவமென்ன? அப்படிக்குத் தேவரீர் திருவுள்ளம் வெறுக்கும்படியான குற்றங்கள் செய்திருப்போமேயானால் ஒரு பாவமுஞ் செய்தறியாத இளம்பசுங்கன்றைக் கொடும்புலிக்கு இரையாய்க் கொடுப்பதுபோல, அந்தப் பொல்லாத கண்டகனாகிய கும்பகர்னனுக்கு வரங்கொடுத்து அவனாலே துன்பப்படுத்துவித்து அழியச்செய்வதிலும் எங்களைச் சிருஷ்டித்த நீரே தண்டனை பண்ணிக்கொல்வது மிகவும் நன்மையென்று இந்தப்பிரகாரம் முறையிட்டு வேண்டினார்கள். அதுகேட்ட பிரம்மதேவர் அவர்களைப்பார்த்து திருவுள்ளமிரங்கி, அந்தக் கும்பகர்னனால் உங்களுக்கு ஒரு துன்பமுமுண்டாகாதபடிக்குச் செய்கிறோமென்று அனுக்கிரகித்து, அதற்கு ஓர் உபாயம் தேடினவராய்த் தம்முடைய தேவியாராகிய சரஸ்வதியைப்பார்த்து, நாம் அந்தக் கும்பகர்னனுக்குவரங்கொடுக்கும்பொழுது நீ அவனுடைய வாக்கிலிருந்து அவன் கேட்கிறவரம் பலியாமற் கெடும்படி மாறுபடுத்திச் சொல்விப்பாயென்றுகூறி, கும்பகர்னனுக்குப் பிரசன்னராகி உனக்குவேண்டியவரமென்ன கேள் தருகிறோமென்று சொல்லினர். அதற்குக் கும்பகர்னன் எல்லாவரங்களினு மேலாகியவரம் அழியாமலிருப்பதல்லவோவென்று ஆலோசித்தவனாய், நித்யதத்துவம் தரவேண்டுமென்று கேட்கிற வசனத்தை அவனாவிலிருந்த சரஸ்வதியானவள் மாறுபடுத்தி, நித்ராதத்துவந்தரவேண்டுமென்று கேட்கச்செய்தாள். இப்படி அவன் கேட்டமாத்திரத்தில் அப்படியே உனக்கு வரங்கொடுத்தோமென்றுரைத்துப் பிரம்மதேவர் தாமிருக்குஞ் சத்தியலோகத்துப் போயினர். இந்தப்படி வரம்பெற்ற கும்பகர்னனுக்கு அப்பொழுதே அறிவுமயங்கி அவசரமான சோபநித்திரைதோன்ற, அதுகண்டவன் இப்படி மாறுபாடு செய்தவர்கள் தேவர்களேயல்லாது வேறில்லையென்று ஆலோசித்தவனாய் மிகவும் வியாகுலப்பட்டு, தமையனாகிய தசக்கிரீவனிடத்திலும், தம்பியாகிய விபீஷணனிடத்திலும், புலம்பிப் பரிதாபபட்டான். அப்படிக்கு விசனத்தையடைந்திருக்கும் கும்பகர்னனுக்கு அவர்கள்தேறுதலைச்சொல்லி, பின்பு அவனுடனே தாங்கள் முன்பு வாசஞ்செய்திருந்த வனத்திற் சேர்ந்திருந்தார்கள்.

### இராவணன் மாலியவானுதியர் சூழ்ச்சியால் குபேரனையோட்டித் தான் இலங்கையை யாண்டிருத்தல்.

முன்னம் மகாவிஷ்ணுவுடனே யுத்தம் பண்ணி யாற்றமாட்டாமல், முதுகுகொடுத்தோடிப் பாதாள லோகத்திலே நெடுங்காலம் துன்பப்பட்டுக்கொண் டொளித்திருக்கும் மாலியவான் சுமாலிமுதலான ராக்ஷசர்கள் யாவரும், தசக்கிரீவன் முதலான மூவரும், தவஞ்செய்து பிரம்மதேவரிடத்தில் வரம்பெற்றிருக்கிற மேன்மைகளெல்லாம் தூதர்கள் விசாரித்து வந்து சொல்லக்கேள்விப்பட்டு, மகா சந்தோஷத்தை அடைந்தவர்களாய் அந்த மூவருமிருக்கும்வனத்துக்குவந்து அவர்களைக்கண்டு, ஓ அநேக காலமாக விசனத்தை அடைந்திருக்கும் எங்களுடைய துன்பங்கெடவும், மகாவிஷ்ணுவினாலே கெடுக்கப்பட்டு பாழாய்க்கிடக்கும் நம்முடையவம்சம்தழைத்துமேற்படும்படியாகவும் அவதரித்த புத்திரர்களே! வாருங்கள்! வாருங்கள் என்றெதிர்சென்று பார்த்து, மார்புடனே தழுவிக்கொண்டு மனமகிழ்ந்திருந்தார்கள். அவ்விடத்தில் அப்படியிருக்குஞ் சமயத்தில் சுமாலியானவன் தசக்கிரீவனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஐயனே! மகாவிஷ்ணுவினாலே இற்றை நாளளவும் நாங்கள் படுகிற துன்பங்களை இன்னபடியென்று அளவிடச் சொல்லக்கூடாது. அன்றியும், குபேரனானவன் நம்முடைய லங்காபட்டணத்தை ஆண்டுவருகிறான். அந்தக் குபேரனையும் உன்னையும்பெற்றபிதா ஒருவராகையாலும் அவனுனக்கு மூத்தவனாகையாலும் தானேயுடையவனென்று எண்ணிக்கொண்டு அந்த லங்காபட்டணத்தை உனக்குக்கொடுக்கமாட்டான். அப்படிக்கிருந்தாலும் எந்தவிதத்தினாலேயானாலும் நீ அந்த லங்கா

பட்டணத்தை உன்னுடையதாகச்செய்து கொள்ளாதவரையில், நீ பிரயாசைபட்டுத் தவஞ்செய்துபெற்ற வரத்தினுலுண்டாகிய பலபராக்கிரம சவுரியங்களெல்லாம் அப்பிரயோசனமாய்ப் போய்விடும். நமக்குச் சத்துருக்களாயுள்ள தேவர்களும்இகழ்ச்சி செய்யும்படியான அபகீர்த்தியுண்டாகும். என்று பலவாருய் முறையிட்டான். இப்படி முறையிட்டுக்கூறிய அநேகவிதமான துர்ப்போதனைகள் சொல்லக்கேட்ட அந்தத் தசக்கிரீவனுனவன் சுமாலியாகிய பாட்டனைப்பார்த்து,ஐயாஎன்மூதாதையே! நீதி தப்பித் தமையனைக்கெடுத்து அவனுளுகிற பட்டத்தைத் தம்பி கட்டிக்கொண்டாளுவது தருமமல்லஎன்றுமறுத்துச்சொன்னுன்.

அதுகேட்டிருந்த பிரகஸ்தனுனவன் அந்தத் தசக்கிரீவனைப் பார்த்து, ஓ எங்களிறையே! உலகத்திலேராஜாதிகாரச்செல்வத்தைவிரும்பிய சுத்தவீரராயுள்ள வேந்தர்கள் மூப்பிளமையென்னும் முறைமை பாராட்டுவார்களோ? அல்லாமலும், எந்த முறைமையும் நீதியும்பற்றி இளையோராகிய தேவர்கள் தங்களுக்கு மூத்தோராகிய நம்முடைய குலத்தோர்களை உபத்திரவஞ் செய்து கெடுத்து அதிகாரம் செய்து கொண்டிருக்கிருர்கள் ? ஆனதால் மீறவிடுவது நமக்கு முறைமையும் நீதியும் அல்லவென்று சொல்லினுன். இப்படிபிரகஸ்தன் மித்திரபேதமாகச் சொல்லவும், அவன்சொல்லிய துர்ப்போதனைகளையெல்லாம் தசக்கிரீவன் மெய்யென்று உட்கொண்டு, நீயே தூதாகப்போய் இந்தப்பிரகாரம் விவரமாகச்சொல்லி வருவாயென்று தன்னுடைய அபிப்பிராயத்தைச்சொல்லியனுப்புவித்தான். உடனேயவனும் அவ்விடத்தினின்றும் நீங்கி, லங்காபட்டணத்துக்குப்போய் குபேரனிடத்திற் சென்று, அவனைநோக்கி இவ்வாறு சொல்லுகிருன். ஐயா அரன்றேழரே! உம்முடைய தம்பியாகிய தசக்கிரீவன் தன்னுடையபாட்டன்மார் முதலானேர்கள் நெடுங்காலம் பரம்பரையாய் அதிகாரஞ்செய்துவந்த லங்காபட்டணத்துக்குடையவன் நானேயன்றி வேறெருவருண்டோ வென்றும், என்னுடைய சினேகிதமும் சகாயமும் உனக்கு வேண்டி யிருக்குமேயாகில், இப்பொழுதே இந்த லங்கையைவிட்டு அப்புறத்தே போகவேண்டுமென்றும் உம்மோடு சொல்லச் சொன்னுனென்று சொன்னுன். அதுகேட்ட குபேரனுனவன் அப்பொழுது நேரிட்டிருக்கிற காலதேச வர்த்தமானங்கள் மூன்றையும் நன்ருயாலோசித்து, இந்தப் பட்டணமும் ராஜரீகமும் எனக்கிளையோனுகிய தசக்கிரீவனுடையதே? அவன் மனதின்படியே நான் செய்கிறேன். என்று சொல்லிப் பிரகஸ்தனை யனுப்பிவிட்டுத் தன்னுடைய பிதாவாகிய விச்சிரவாவென்பவரிடத்துக்குவந்து,தசக்கிரீவனுலேஉண்டான சங்கதிகளெல்லாஞ் சொல்லினன். அவரும்அவனைப்பார்த்துச்சொல்லுகிருர்.

அப்பாமகனே! அந்தத் தசக்கிரீவனுனவன் என்னுடனே ஒவ்வொரு வேளைகளிலே லங்காபட்டணம் முன்பு தன்னுடைய பாட்டன்மார் முதலானேர்கள் ஆண்டுவந்ததென்று சொல்லி யிருந்தான். அல்லாமலும் இப்படிக்கு நீ நியாயவிரோதஞ்செய்வது உனக்கு யோக்கியமல்லவென்று எவ்விதமாகச் சொன்னுலும் கேளான். ஆதலால் விரோதப்படாமல் அந்தத் துஷ்டனுக்கு லங்காபட்டணத்தைக் கொடுத்துவிட்டு, அளவில்லாத சிறப்பினையுடைய இமயகிரியினிடத்திற் சேர்ந்து, தபசுசெய்திருப்பாயாகில்உனக்கெல்லாரினும் மேன்மையான சகல செல்வங்களும் உண்டாகுமென்று அனுக்கிரகித்துச் சொல்லினுர். அப்படியே குபேரனும் தன்னுடைய பந்து பரிவாரங்களுடனே புஷ்பகவிமானத்தில் மேவிச்சென்று, அந்தக்கிரியினிடத்திலே தபசு செய்துகொண்டு வாசமாகவிருந்தான். அதன்பின்பு தசக்கிரீவன் தன்னுடைய பாட்டனுகிய மாலியவான் முதலானவர்களுடனே இலங்காபட்டணத்திலே பிரவேசித்து, மந்திரி புரோகிதர் முதலானவர்களினுலே பட்டாபிஷேகஞ் செய்வித்துக்கொண்டு, மகுடாதிபதியாய் நவரத்தின சிங்காசனத்தின்மேவி இராஜாதிகாரஞ் செய்துகொண்டிருந்தனன்.

## ராவணன் புத்திரபாக்கியம் பெற்றிருத்தல்.

இப்படி தசக்கிரீவனுனவன் பூர்வம் மகாவிஷ்ணுவினுலே யடிபட்டோடிப் பாதாளலோகத்தில் வெகுகாலந் துன்பப்பட்டுக்கொண் டொளித்திருந்த மாலியவான் முதலானஎல்லோரும் ஒருவனுக்குப்போன

பொருள் கிடைத்தாற்போல முன்னமிருக்கையிழந்திருந்த அந்த இலங்காபட்டணத்திற் சகலமான செல்வங்களுடனே தன்னைப் புடைசூழ்ந்திருக்கப் பெருமையாக வாழ்ந்திருக்குங்காலத்திலே அரம்பைமுதலான தேவஸ்திரீகளுக்குத் தனக்குள்ள இரும்புபோலுங் கடினமான சரீரமும், பெரியமலைகளைப்போலும் முலைகளும், அந்த முலைகளைத் தாங்கவல்ல பருத்தவிடையும், காற்றினுங்கடுமையா யுலகமெங்கு மொரு நொடியிற் சுற்றிவருங் கடியநடையுமில்லையென்று, ஒட்டகங் குதிரையைப் பழிப்பது போலத் தன்னழகைத் தானே புகழ்ந்துக் கொண்டிருக்குஞ் சூர்ப்பநகையினுடைய அழகைக்கண்டு மோகங்கொண்டு மூர்ச்சித்துப் பரவசப்பட்ட வித்துமசிங்கனென்னு மிராக்ஷதனுக்கு அந்தச் சூர்ப்பநகையை விவாகஞ் செய்வித்துக் கொடுத்தான். அதன்பின்பு ஒருநாள் அந்தத் தசக்கிரீவனானவன் தன்னுடைய பரிவாரசேனைகளுடனேவேட்டையாட வனத்திற்சென்றான். அப்பொழுது மயனானவன் தன்மகளை எல்லாரினும் மேன்மையுடைய புருஷனுக்கு விவாகஞ் செய்துகொடுக்க வேணுமென்று நினைந்து, அந்தப்பெண்ணையு மழைத்துக் கொண்டுஅந்த வனமார்க்கமாகவருகிறான். அப்பொழுதில் அவர்களைக்கண்ட தசக்கிரீவன் நீங்கள் யாரென்றுகேட்க, அந்த மயனானவன் தசக்கிரீவனைப் பார்த்து, ஓ இலங்கைவேந்தே! நான் தயித்தியராஜன் மகன். என்னுடையபெயர் மயன். இலக்ஷிமிக்கு நிகரான சௌந்தரியத்தைப் பொருந்திய தரிசனையென்பவளை எனக்குத் தேவர்கள் விவாகஞ் செய்வித்துக் கொடுத்தார்கள். அவளும் நானுமாக ஐந்நூறுவருஷம் காமசுகபோக மனுபவித்திருந்தோம். அப்படியிருக்குங் காலத்தில் மண்டோதரியென்னுமொருபுத்திரியும்,மாயா-துந்துபி என்னும் இரண்டுபுத்திரரும்பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே மிகவுஞ் சௌந்தரிய சற்குணங்களைப் பொருந்திய இந்தப்பெண்ணுக்கேற்ற புருஷனை எங்குந்தேடிக்காணாமல், இவ்விடத்திலென்னுடைய பூர்வ தபோபலத்தினாலும் என்மகளுடைய பாக்கியவசத்தினாலும் உம்மைக் காணப்பெற்றேன் என்று உபசாரமாகச்சொல்லிப் பின்னும் சொல்லுகின்றான்.

குலம்வேண்டு மென்றிருப்பார் குலத்துள்ளார்கல்வியினாற் குறையானைப், பலம்வேண்டுமென்றிருப்பார் தந்தைமார் பரந்தபெருஞ் செல்வமுள்ள, தலம்வேண்டுமென்றிருப்பார் தாய்மார்கள்யவ்வனமு மழகுஞ்சார்ந்த, நலம்வேண்டுமென்றிருப்பார்நாறுகுழற்கன்னிமார்நலத்தின்மிக்கார்

பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பில்லாப் பேரழகும் பரந்தகேள்வி, நுண்பொருளை நீரொழியப் பாலுகரு மன்னம்போலாராய்ந்தீரும், ஒண்பொருளுமிந்நான்கு முடையாரைக் கிடையாதிவ் வுலகந்தண்ணில், பெண்பெறுகை போலிந்தப் பெரியதுயர் தானுண்டோ பேசுங்காலே.

ஓ தசக்கிரீவராஜனே, உலகத்திலே ஒருபெண்ணுக்கு விவாகஞ்செய்ய ஆலோசிக்குமிடத்தில் சுற்றத்தார்கள் நல்ல குலவானுக்குக் கொடுக்கவேணுமென்றும், பிதாவானவன் நல்ல குணமுள்ளவனுக்குக் கொடுத்துக் கீர்த்திபெறவேணுமென்றும், தாய்மார்கள் பெருஞ்செல்வமுள்ளவனுக்குக் கொடுக்கவேண்டுமென்றும், அந்தக் கன்னிகையானவள் யவ்வனமுமழகும்பொருந்திய புருஷனுக்குப்பாரியாகவேணுமென்றும் இச்சிப்பார்கள். இப்படிப்பட்ட மேன்மைகளோடு பாலையும்நீரையும் பிரித்துண்ணு மன்னத்தைப்போலக் கல்வியறிவினாலே குணகுணங்களைப் பகுத்தறியும் விவேகமுமுடைய உத்தமபுருஷன் கிடைக்கமாட்டான். ஆனதால்பெண்ணைப்பெறுவதைப்போலும் அபவாதம் வேறொன்றுமில்லை. என்றுஞ்சொல்லி உத்தமபுருஷனிடத்திலிருக்கவேண்டிய யோக்கியங்களெல்லாம் பொருந்தியிருக்கும் உம்முடைய குலமுதலானவைகளெல்லாஞ் சொல்வீரென்றுகேட்டான். அதற்குத் தசக்கிரீவன் மயனைப்பார்த்துச்சொல்லுகிறான். ஐயா தைத்தியர்வேந்தே! சகலலோகங்களையுஞ்சிருஷ்டிக்கின்ற பிரம்பதேவருடையபுத்திரர் புலஸ்தியப் பிர்மா. அவருடைய புத்திரர் விச்சிரவாவென்பவர். நான் அவருடைய புத்திரன். என்னுடையபெயர்மூன்றுலோகமுமேவல்கேட்டு நடக்கும்படிக்கு இராஜாதிகாரஞ் செலுத்தி யாளுகிற லங்காதிபதியாகிய தசக்கிரீவன். அளவுபடாமல் அநேகவிதமாக விரிந்திருக்கிற சகல வேதங்களையும் ஓதியுணர்ந்திருக்கும் வல்லமையுடையவன். என்று தன்னுடைய சகல பெருமைகளையும்புகழ்ந்துசொன்னான். அதுகேட்ட மயனானவன் பெண்ணினால் அடையப்பட்ட பிரயோசனத்தை நானே யடைந்தே

னென்று மிகவுஞ் சந்தோஷப்பட்டு, இவனுக்கே கொடுக்கவேணுமென்று நிச்சயித்துக்கொண்டு, அந்தவனத்தில் அப்பொழுதுதானே அந்தத் தசக்கிரீவனுக்கு மண்டோதரியைக் கலியாணஞ் செய்துக் கொடுத்து, நவரத்தினமுதலான பூஷணங்களும் சீதனவரிசையாகக் கொடுத்து, பிரம்மதேவன்மேலே பிரயோகஞ்செய்தால் அவனையுங்கொன்று மீளுவதாகிய ஒரு வேலாயுதமுங் கொடுத்துத் தன்னுடைய தானத்துக்குப் போயினுன். பின்பு தசக்கிரீவன் அந்த மண்டோதரியுடனே தேரின்மேல் ஏறிக்கொண்டு, பரிவார சதுரங்கசேனைகளுஞ் சூழ்ந்துவரச் சகலவாத்தியங்களும் முழங்க அநேகவித சம்பிரமத்துடனே லங்காபட்டணத்திலே பிரவேசித்திருந்தான். அப்படியவ னிருக்கும்பொழுது கும்பகர்ணனுக்கு அசுரகுலத்தினிற்பிறந்தவயிரோசனன் மகளாகிய வச்சிரச்சுவாலை பென்பவளையும், விபீஷணனுக்குக் கந்தருவகுலப்பெண்ணுகிய சரமையென்பவளையும் அநேக விமரிசைகளுடனே விவாகஞ்செய்வித்து, அவர்களும்மகிழ்ந்திருக்க இந்திரனும் இந்திராணியும்போலத் தானும் மண்டோதரியுங் காமசுகபோக மனுபவித்துக்கொண் டிருந்தார்கள். அக்காலத்தில் அந்த மண்டோதரி கர்ப்பவதியாகி ஒருபிள்ளையைப் பெற்ருள். அந்தபிள்ளை பிறந்தவுடனே கார்காலத்துமேகங்கள் இடித்தாற்போல முழங்கினுன். ஆனதால் அந்தப்பிள்ளைக்கு மேகநாதனென்றுபெயரிட்டார்கள். அந்தமேகநாதனென்னும்பிள்ளையைச் செவிலித்தாய் முதலானவர்கள் உலகத்தையெல்லா மழிக்குந் திறத்தினையுடைய சிறுநெருப்பைமூட்டிப் பெருநெருப்பாக்குவது போல, அறுசுவைச் சிற்றுண்டி முதலான உணவுகளூட்டி வளர்த்தார்கள். அப்படிவளர்க்க வளர்ந்துவருங் காலத்தில் அவனுக்கு இளைய தம்பிமாராக அதிகாயன் - அக்ஷகுமாரன்- என்றும் இரண்டு புத்திரர் பிறந்தார்கள். அவர்களு மவனைப்போலவே வளர்ந்து வருமளவில், கும்பகர்னனுக்கு கூற்றுவனுமஞ்சத்தக்க கொடுமைபொருந்திய கும்பனென்றும் நிகும்பனென்றும் இரண்டு புத்திரர் பிறந்தார்கள். அந்தப் புத்திரர்களெல்லோருஞ் சிங்கக் குட்டிகள்போல வளர்ந்து பலபராக்கிரமங்கள் பொருந்தி நாளுக்குநாள் பிரபலமாக மேம்பட்டு வந்தார்கள். இப்படிச் சுவர்க்க லோகம்போலச் சுவர்ன்னமயமாக விளங்கும் லங்காபட்டணத்திலே தசக்கிரீவனுந் தம்பிமார்களும் புத்திரமித்திரர் முதலான சம்பத்தினுலும் செல்வப் பெருக்கினுலும் பிரம்மதேவர் கொடுத்த வரத்தினுடையமகிமையினுலும் காட்டுப் பெருநெருப்புக்குக் கடுங்காற்றுக் கூடினுற்போலச் சுபாவமாயிருக்கிற துர்க்குணத்துடனே கர்வமிகுந்து மதோன்மத்தராகி, தங்களுக்கு நிகரானவர்களொருவருமில்லையென் றகங்காரங்கொண்டு, புண்ணிய பாவங்களை யெண்ணுமல், சகல பிராணிகளும் பயந்து துன்பப்படும்படிக்குக் குரூரதண்டமான அதிகாரஞ் செய்துகொண்டிருக்கின்ருர்கள்.

இராவணுதிய ரிலங்கை புகுபடலம் முற்றிற்று.

---

## இராவணன் திக்குவிஜயப்படலம்.

### விருத்தம்.

இந்தவகைலங்கையி லிருந்தமுதியோனும்
விந்தைதருதிக்குவிஜ யஞ்செயவிரும்பி
மந்திரியுடன்பெரிய வஞ்சபையினெய்தி
தந்திரயுபாயமது செய்திசைதழைத்தான்.

சர்வலோகரக்ஷகராயும், சிருஷ்டி திதி சங்காரமென்னு முத்தொழிற்குங் காரணராயும், ஸ்ரீ அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராயும், சர்வஜீவதயாபரராயும் ஸ்ரீ வைகுண்ட நிகேதனராயும், ஆபத் சகாய புருஷபரமாத்த சுவரூபராயும் திவ்வியாலங்கிருத பரிமள விசேஷசற்குண நிரஞ்சன பரப்பிர்ம தேவதாஸ்தோத்திர ஸ்ரீ மகாலக்ஷ்மி சமேதராயும், துவாதசாந்தராயும், பரமவிபவானந்த மோக்ஷகாருண்யப் பிரபுவாகியும் சர்வமங்கள விலாசவுல்லாச லக்ஷ்மீகரராகியும் சத்தியகனகாம்பர தேக வைபோக மூர்த்திகராயும் சர்வாடசந்தன தாசானுதாசராயும் சகஸ்திர நாமாவதாரராகியும் பிரம்மதேவ பூஜிதராயும் சிவசாம்பவத்தோழராயும் தேவாதிதேவர் சுகாலய மனேபீஷ்ட கைவல்யராயும் ராக்ஷத கர்வ

பங்க நரசிம்ம மூர்த்தியாயும் அஷ்டாக்ஷர பிரணவ மந்திரசொருப மூர்த்தண்ய ஸ்ரீ ஹரிவாசுதேவராயும் வாமனுவதார மாபலி வந்திதராயும் திருமண்காப்புளவலங்கிருத ராயும் கதம்ப பரிமள புஷ்பவினேத நித்திய சாம்பிராணிவாசராயும் ஸ்ரீ துளவமாலிகாபரணராயும் துவாரகாபுரி வாசகராயும் ஸ்ரீமதுசூதனமாதவகேசவ ஸ்ரீயப்பதியாயும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியாயும் வடபத்ரசயனராயும் கருடவாகனனந்தரூடராயும் பூலோகநாத அடயாத்தியாதிபதியாகியும் தசரதராஜ கோசலாதேவி சுபுத்திரராயும் பரதசத்துருக்க சகோதரராயும் சீதாதேவி காந்தராயும் கோதண்ட தீக்ஷாகுருவாகியும் துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலகராயும் ஜாம்பவந்த சுக்ரீபமித்திரராயும் அஞ்சனுதேவிகுமார ஆஞ்சநேய நிர்தய பரிபூர்ண கிருபாகடாக்ஷராயும் சர்வசேனு சமுத்திரப் பிரயாண லங்காபுரிதகனராயும் எம்போல்வனைக் கார்த்திரக்ஷித்துத் திருவடி நிழலிற்கூட்டி என்றும் சிரஞ்சீவியாய் திரிகூடபர்வதத்தில் வாழக்கடவதென்று ஆசீர்வதித்த சுகுணரஞ்சிதானந்த அழிவில்லாதரஞ்சன நிர்மலஜோபிதபரப்பிர்ம வஸ்துவாயும் விளங்காநின்ற ஸ்ரீராமச்சந்திர பிரபுவே! என்றுதன் இருகரங்களையுஞ் சிரமேற்கொண்டு வணங்கி நிற்கும் பக்தரிற்சிறந்த விபீஷணுழ்வாரை சுவாமியானவர் ஆதரித்துக் கட்டித்தழுவிக்கொண்டு ஆனந்தக்கடலில் மூழ்கித் தேகம் பரவசமடைந்து என்னிரு கண்மணியாகிய அப்பாவிபீஷணு! சத்தியசந்தனு! நீஇந்த இராக்ஷதவம்சத்தி லுதிக்கப்பட்ட பிறவியல்லநானென்னமோவென்று நினைத்தேன். இப்போது நீ சொல்லிக்கொண்டு வந்த உண்மையான ஆதிபரம்பரையாகிய ராக்ஷதவுற்பத்தியும் அவாள்வமிசமும் வரப்பிரதாபங்களையும் ராஜ்ஜியபாரங்களையும் ஜெயப்பிரபலங்களையும் விவாக மகோற்சவ புத்திரசந்தானங்களையும் உன் மொழியினல் கிரமமாய்க்கேட்டுஆனந்தமானேன். இது நிற்கட்டும் அப்பால் அவர்கள்செய்த தென்னவென்றுகேட்க, விபீஷணரும் வணங்கி இராவணன்செய்த திக்குவிஜயத்தைச் சொல்லுகின்றார்.

---

## இராவணன் மந்திராலோசனைசெய்து திக்குவிஜயஞ்செய்ய வெளிப்படுதல்.



கேளீர் ஸ்ரீகாகுஸ்தவம்சோற்பவரே! தன் தமயனுகிய அளகேசனிடத்திற் பாத்தியதையைக் காட்டிப் பெற்றுக்கொண்ட இலங்காபுரியில் அரசாக்ஷி செய்துவரும் தசக்கிரீவனுனவன் ஒருநாள் தன் சபையினிடத்தில் உட்கார்ந்துகொண்டு யோசனை செய்தது யாதெனில்? தனக்குத்தபோபலத்தினுல் அவதரித்த மேகநாதனென்னுங் குடிமகனுனவன் மகா வல்லமைபெற்றவனென்றும், இளையசோதராளான கும்பகர்ணனும்-விபீஷணனும் - உலகத்தையெல்லாம் வெற்றி கொள்ளத் தகுந்தவர்களென்றும், நாம் பெற்றிருக்கும் வரங்களுக்கு யாவரெதிராவாரென்றும்,இனிநமக்கொரு தீங்கில்லையென்றும், நாம் தேவர்களையும் ரிஷீஸ்வரர்களையும் தும்சஞ்செய்தபோதினும் கேள்விமுறை யிராதென்றும் கர்வம் படைத்து இறுமாந்து, தன் ஸ்திதியைத் தானறியாமலும் எதிர்வலியைச் சிறிதுமுணராமலும் தனக்குத்தானேமமதைகொண்டு, ஆக்ர நிக்குரோதனுய்ப் புவியடங்கலுங்கருவறுக்க நினைத்து, தன் மூத்தகுமாரனுகிய மேகநாதனையும் சபைக்குதவியாக வைத்துக்கொண்டு அந்தரங்கமாய் மந்திராலோசனை செய்கிருன். அக்காலையில் தந்தையின் வாக்கிலிருந்து முன்னந்தேவர்களையும் ரிஷீஸ்வரர்களையும் அதஞ்செய்ய வேண்டுமென்று வந்த குறிப்பை யறிந்த அந்தப்பிள்ளையும் அவனை நோக்கி, கேளுமென் பிதாவே! அப்படியே நடத்தலாம். அதற்கென்ன தாமதம்? படையிலுமொருவன் கொடையிலுமொருவ னென்பது போல நானெருவன் துணைவந்தாற் போதாதா? உத்திரவுகொடுத்தால் சித்ரவதை செய்யேனு! நாமிருவரு மாத்திரம் காற்று நெருப்பும்போற் கலந்தாலிவ்வீரேழு பதினுன்கு புவனங்களும் பஸ்மீபடல மாகாதா? அந்த தேவலோகத்தாரும் இந்திரனும் சேர்ந்து வந்தால்தானென்ன? நம்மைத் திரிமூர்த்திகளுங் கண்டஞ்சுவார்களென்ருல் எழைகளாகியும் பலஹீனராகியுமிருக்காநின்ற அந்த அமரர் கூட்டங்களெல்லாம் நம்மைக் கண்டவுடன் சிம்ஹ

சொப்பனமாய் காற்றிற் பறக்கும் இலவம் பஞ்சுபோலோடி யொளியார்களா? அவாளுடைய தலைகளைக் கிளிஞ்சல்போல் நறுக்கேனு? அற்பமாகிய மசகத்தைக்கொல்லக் கையில் வச்சிராயுதமெடுப்போருமுண்டா? ஐயா! நானவர்களையெல்லா நிர்த்தூளிதஞ் செய்து கண்டதுண்டமாக்கிப் பொடியாக்குவதை நீரேகண்டு ஆச்சரியப்படப் போகின்றீர். என்று மைந்தனுகிய மேகநாதனுனவன் விந்தை விந்தையாக வந்தமட்டும் பந்துபோலக் குதித்துத் தெந்தனம்பேசிச் சொன்னுன்.

இப்படியவன் சொல்வதை தசக்கிரீவன் தன் சிந்தையிலெண்ணிச் சந்தோஷமுறுங்காலையில், கும்பகர்னனுக்கு முன்பு பெற்ற வரத்தின்படியே தூக்கத்தின் மயக்கம் தொடரவே அவனுந் தமையனைப் பார்த்து, அண்ணு! என்மேற் கோபம்வேண்டாம். எனக்கிந்தவிதி நேரிட்டதினுல் பின்னடையவேண்டி யிருக்கிறது. இல்லாவிடில் சப்தலோகங்களையுந் தகித்துச் சாம்பலாக்கி விடேனு? அந்த சாமர்த்தியம் எனக்கிருந்தும் ஊழ்வலியால் நேரிட்ட நித்திரைவந்துவிட்டதே. என்செய்வேன் இனிநீர் தாமதஞ்செய்யாமல் இந்தத்தரையில்நான் துயிலுவதற்கேற்ற சுரங்கமொன்றமைத்துத் தரவேண்டும். முன்னமிந்த விஷயத்தை முடித்துப் பிறகு மற்றக் காரியத்தையோசியும். என்றுசொல்லவே தசக்கிரீவனுனவன் தனதிளவலான கும்பகர்னனலுவலைப் பார்க்க முயன்றவனுய்த் தன் மாமனுகிய மயனைத்தன்னுள் நினைத்தான். அவனும் இதையறிந்து வந்தவுடன் தசக்கிரீவனுனவன் அவனை எதிர்கொண்டழைத்து, அந்தக் கும்பகர்னனுக்கு நேர்ந்த விதிவலியின் சவிஸ்தாரங்களை யெல்லாஞ் சொன்னுன். அதன்மேல் அவனும் ஆம் சரிதான். "உள்ளிய தெள்ளியராயினும் ஊழ்வினைப்பைய நுழைந்துவிடும்" என்பதுபோல வரும்விதி யொருவனைக்கேட்டு வருவதுண்டாவென் றெண்ணி அவனெண்ணப்படி முடிப்பதாயினுன். அஃதெவ்வாறென்ருல் பூமியினிடத்தில்விந்தையாக சந்திர சூரியர்களாலுங் கண்டு தொடராவிதம் வெகு தந்திரபுத்தியுடன் யாவருங் கண்டு களிக்கும்படிக்கும், மாமாவென்றடி வணங்குந் தசக்கிரீவன் சிந்தை மகிழவும், அந்த மயனுனவன் முக்காதவழி அகலமுள்ளதாயும் அறுகாதவழி நிகளமுள்ளதாயும் தகுதியுடன் ஒரு சுரங்கமமைத்துத் தந்தனன். ஓ இராகவா! அதனது வளப்பங்களை ஆயிர நாவினுலுஞ்சொல்லி முடியாதெனில்அஃதெத்தன்மையுள்ளதென்று நீரறிந்துகொள்ளும் இவ்வாறமைத்த சுரங்கத்தைக்கண்ட தசக்கிரீவன் மாமனைக் கொண்டாடி, அதிசீக்கிரமாய் அதில் வரிசைவரிசையாக உன்னதமாகிய மாணிக்கங்களாலிழைத்த பொற்சுவரெழுப்பி, அரண்மனையொன்றுபுதுக்கி, அதில் நானுவிதமான சித்திரவினோதங்களடங்கிய பஞ்சணைகள் ஜோடித்து, தத்தைகளும் கின்னரி பயிலும் அப்சர ஸ்திரீகளைப்போன்ற பதுமைகளும்பூட்டி, பொற்றீபங்களேற்றி, பரிமளமிகுந்த சகல மணமுள்ள வஸ்துக்களையெல்லாம்புகட்டி, தென்றற்காற்று புகுந்து வரத்தக்க ஜன்னல்களைத் திறக்கவைத்து, இன்னஞ் செய்யவேண்டிய அலங்காரங்களையெல்லாஞ் செய்து முடித்தான். அன்றியுமதனில் தன்தம்பி நித்திரைபோகுமளவில் ஒருவேளை சத்துருக்களால் வருத்தம் நேரிடப்போகுதென்று மிகவுஞ் சாக்கிரதையாய் அந்தச் சுரங்கத்துக்குள் எறும்பு முதலிய சிறியவஸ்துவுங்கூட நுழையவொட்டாமறபடிக்கும், அப்படிமீறி நுழைபவர்கள் யாவரேனுஞ்சரி அவர்களை அந்தக்ஷணமே சித்ரவதைசெய்யும்படியாயும், தனக்குள் ஆப்தர்களாய் நெருங்கிய பாத்தியதையானவர்களில் ஜெயவீரப்ரதாப ராக்ஷசகிங்கரர்களை வெகுவிதபத்திரஞ்சொல்லி, எண்ணிறந்த காவற்காரர்களென வைத்தான். இதுவுமல்லாமல் மிகவும் பலாஷ்டியர்களாயும், இரவும்பகலுங்கூடக் களைக்காதவர்களாயும், கற்பகோடிகாலம் யுத்தஞ்செய்யினும் இளைக்காதவர்களாயும், மிருகங்களையெல்லாமெடுந்து வாரிவிழுங்கத்தக்க சாமர்த்தியமுள்ளவர்களாயு மிருக்கின்ற ராக்ஷதர்களை யழைத்து அவர்களுக்குத் திட்டஞ் செய்து, அவர்களதுகண்களின் ரப்பையை யறுத்துமுப்பத்திரண்டாயுதங்களையுங்கொடுத்து அவர்களையும் முதற்பாராக் காவலாளிகளாகவைத்தான். இவன்வைத்தசேனைத் தொகுதிகளைச் சொல்லி முடிவதல்ல. இப்படி சர்வாடம்பாத்துடன் எமனும் வந்து நெருங்கப் பயங்கரமா யேற்படுத்திய சுரங்

கத்தைக் கும்பகர்ணனுக்குக்காட்டி, எனது அன்பிற்கியைந்த தம்பி! இதில் நீ துயில் கொள்ளலாமென்முன். அவனும் அதன் விநோதங்களையெல்லாம் பார்த்து அகமுவந்து நின்றுன்.

உடனே தசக்கிரீவன் கட்டளையின்படி மடையர்கள் அறுநூறுவண்டிகளில் மேரு பர்வதம்போற் குப்பற் குப்பல்களாக அன்னத்தைவடித்துக் கொட்டிக்கொண்டு, தாக சாந்திக்குப் பதினுயிரஞ் சாடிகளில் மதுவையுங் கொண்டுவந்துவைத்தார்கள். அந்தக்கும்பகர்ணன் அதை நொடிக்குட் புசித்துத் தாகமருந்தியும் நித்திரையின்றி, உடனே சோகத்தினுலே அச்சுரங்கத்தையடுத்துத் தனக்கிஷ்டப்படிக்கு மலையபர்வதஞ் சாய்ந்து கிடப்பதுபோல் நீட்டிக்கொண்டான். அவன் அவ்விதந்துயில்வதற்கெப்போது ஏற்பட்டானே? இராகவா! அப்போதே அவ்விலங்காபுரியில் மூத்தவள் குடிவந்ததனுல்அதுமுதல்சகலமுமவளது செய்கையாகவே யிருந்ததென்று அறிந்து கொள்ளும். இவ்வாறு நித்திரைசெய்பவனது நேத்திரத்தில் உற்பத்தியாய் வடியும் பீளைகளானது மலைபோலக் குவிந்திருக்கும். தன்னைமறந்து தூங்குங்கால் அவனது பெருவாயினிடத்தொழுகிவரா நின்ற சொள்ளானது ஓர்பெரிய பர்வதத்தின் அருவிபோல மாருதுவடியும். அவன் விடும்படியான சுவாசத்தில் எத்தனைபேர்கள் அகப்பட்டபோதிலும் அவர்களெல்லாம் ஒருவருந்தப்பாமல் இறந்து விடுவார்கள். அந்தச்சுவாசத்தினுல்திக்குமுக்காடிப் பிராணுவஸ்தையடைந்து,மாண்டவர்கள்கணக்கில்லை. மேலுமவன் சுவாசம் விடும்போது அதில் நேர்ப்பட்டது எவ்வித மிருகமானுலுஞ்சரி, மூக்கில் நுழைவதும் வெளியில் வருவதுமாயிருக்கும். இவ்விதமாய் இறந்தது கோடானுகோடி. அன்றியுமவன் காலவளவின்படி நித்திரைதெளிந்தெழுந்தாலல்லாது ஒருவராலவனை விழிக்கச்செய்யப்படாது. காற்றுவேண்டுமென்று எச்சரிப்பாணுயின் கிங்கரர்களால் வேருடனே பிடுங்கிவந்த மலைகளை விசிறியெனக்கொண்டு வீசுவார்கள். அஃதவனுக்குச் சிறிய வாடையாய் இருக்கும். மும்மதங்கள் ஒழுகாநின்ற மதகரிகளையும் மற்ற பலமுள்ள சிங்கமுதலிய மிருகங்களையும்விடுத்து அவன்மேலேறி மிதிக்கச்செய்தபோதினுங்கூடத் துயில்கலைந்து எழுந்திரானெனில், பிணம்போலும் நித்திரைசெய்பவனதுபேச்சை நாம் பேசுவதிற் பயனென்ன? அவன்வினை யப்படிக்கிருக்க, முன்னம் பிள்ளையினிடத்து யோசனைசெய்த பத்துத்தலையனை இலங்காதிபன் பின்னும் மாமனை பிரகஸ்தனைப் பார்த்தும் மந்திரிகளை நோக்கியுஞ் சொல்லுவான்.

### பிரகஸ்தன் புத்திகூறல்.

கேளுங்கள் என்கருத்துக்கிசைந்த மதியுள்ள மந்திரிகளே! நாம் தேவர்களையும் ரிஷீஸ்வரர்களையும் அதஞ்செய்ய வேண்டியபடியால், அதற்கு நீங்களென்ன சொல்லுகிறீர்களென்முன். அதற்கவர்களும் ஆமாம் சரிதான் அதற்கென்ன தடையென்முர்கள். அதில் பிரகஸ்தன்மாத்திரம் உடனேபுறப்பட்டு யுத்தஞ்செய்யலாமென்று துணிந்து, தீர்க்கமாய்ச்சொன்னவன் மறுபடியும் "பழம்புண்ணுளி பரிகாரி" யென்பதுபோல மருமகனைப்பார்த்து, அப்பா தசக்கிரீவா! நானென்று சொல்லுகின்றேன். அதாவது, எனக்குத் தோற்றுவதென்னவெனில், பூர்வத்திலே எங்கள் பெரியோர்களாகிய மாலியவான் சுமாலி மாலி இவாள் முதலாயினேர்கள் இவ்விதம்தான் யோசனைசெய்து தேவாதிதேவர்கள்பேரிற் படையெடுத்து அவர்களைத் தும்சம்பண்ணுநின்ற காலையில், அவர்களிவர்களை ஜயிக்கமாட்டாமலும், கஸ்தியைப் பொறுக்க மாட்டாமலும், ஆலைவாய்க்கரும்புபோலே நசுங்கி, இறந்தவர்கள்போக மற்றவர்களெல்லாம் இந்திரனைக்கூட்டிக்கொண்டுபோய் வெள்ளியங்கிரியில் உமாபதியுடன் முறையமிட்டார்கள். அதற்கவர் இவர்கள்பேரில் வைத்த அன்பினுல் அவர்களுக்குத் தற்காலம் தன்னுலே முடியாதென்று சொன்னுர்.

பின்னுஞ் சதுர்முகனையடுத்துத் தீர்க்கதெண்டஞ்செய்ததில், அவருமிவ் விர்த்தாந்தங்களைக்கேட்டு, இவர்கள் தன்னுடைய வம்சபரம்பரையாதலாலும், தானும் அனேகவரம் கொடுத்திருப்பதினுலும், கூடாதென்று பரிஷ்காரமாய்ச் சொல்லிவிட்டார். கடைசியில் மகாவிஷ்ணுவினிடத்திற்போய் முறையமிட்டு வணங்கினுர்கள். அப்போது அந்த ஸ்ரீமந்நாராயண மூர்த்

தியானவர் போர்க்கோலங்கொண்டு உங்களோடு யுத்தஞ்செய்தனர். அப்பொழுது தான் உன்னுடைய பாட்டனுனமாலி இறந்துவிட்டது. அதன்மேல் நாங்கள் அவ்விஷ்ணுவை ஜயிக்க வல்லமை போதாதவர்களாய் இந்த லங்கையினுசையை ஒழித்துவிட்டு, ரசாதலம்போய்ச் சேர்ந்தோம். அதன்பிறகு இவ்விலங்கையை வைச்சிரவணனுன குபேரன் ஆண்டுகொண்டு வந்தான். இப்போது நீயாளுகின்ருய். ஆதலால் இனிமேல் நீயும் அவ்விதமே தேவர்களைத் தும்சஞ்செய்தாயேயானுல், அம்மகாவிஷ்ணு எப்பொழுதும்போலே யுத்தத்திற்கு வந்தால் அப்பொழுது நாமென்னசெய்கிறது? ஆயினும் இதுவெல்லாம் கொஞ்சம் யோசித்து நடத்தத்தகுந்த காரியமா யிருக்கின்றதென்ருன்.

அந்தப் பேச்சைக்கேட்ட தசக்கிரீவனுனவன் கலுக்கென நகைத்து, கண்களிலே அக்கினிப்பொறி சிதறப்பார்த்து, ஆ! ஆ!! நல்லகாரியஞ்சொன்னுய்மாமா! என்னையும் அந்தப் பலமில்லாத கிழங்களென்பதாய் நினைத்தாயோ? அவர்கள் தான் தோற்றுப்போய்விட்டார்கள். நானுமப்படியா? நீநான்பலமில்லாதவனென்று நினைப்பதை அந்தயுத்தத்தில் காணப்போகிருய். மாலியென்போன் தான் விதியினுலே யிறந்துபோனுன். மற்ரேருமிறப்பாரா? அந்த விண்டுவெனச் சொல்லப்பட்டவன் என்னதான் பரிந்து வந்தாலும் என்னைச் செயித்தபின்பல்லவோ நானுந்தோற்ரேடிப்போகவேண்டும். அதுவரையிலும் நான் தேவர்களைச் சும்மாவிடலாமா? நான் அவர்கள் கொட்டமடங்கவாட்டாமற்போனுல் அவர்கட்குப் பின்னும் மமதைமீருதா? அப்பால் நம்மையும் அவமதித்து அற்பமாய் நினைப்பார்களே அப்பொழுதென்னசெய்கிறது? அந்த விஷ்ணுமாத்திரமல்ல. திரிமூர்த்திகளும் ஒன்ருய்க்கூடி வந்தாலும் என்னைச் செயிக்கமுடியாது. அவர்களையெல்லாம் நான் நாசஞ்செய்வேனுதலால் நீ அஞ்சாதிரு நானே செல்லுகிறேன். எங்களுடைய வரமெங்கே போச்சுது? பயப்பட்டாற் பாராளும் பட்டங் கிடைக்குமா? ஒருவேளை அவ்விஷ்ணு எத்தனைதரஞ் சண்டைசெய்து எனது தலைகளை யறுத்தாலும் உடனுக்குடன் வளர்ந்துவர நான்பெற்ற வரத்தின்திறம் உனக்குத்தெரியாதா? எனக்களித்த சாம்பசிவமூர்த்தியும் பழுதாவாரா? நீ மறந்துபேசுகின்ருய். என்னைப்போலே ஓமகுண்டத்தில் தலைகளை யறுத்துப்போட்டுத் தேவர்கள் தவஞ்செய்தார்களா? கண்டவிடத்திலே அந்தத் தேவர்களைக் கண்டதுண்டஞ்செய்யாமல் காலஹரணஞ் செய்துவந்தால் நம்மைக்கண்டு ஏளிதஞ்செய்வார்களே? முருங்கையும் மூளியையும் மூன்றுமாதத்திற் கொருதரம் மொட்டையடிக்க வேண்டுமென்பதை நீ கேட்டதில்லையா? என்று பலவாருய்ச்சொல்லும் தசக்கிரீவன் பேச்சைக்கேட்டுப் பிரகஸ்தனுஞ்சம்மதித்தான். கேளும் ஸ்ரீராமமூர்த்தியே! இப்படி பிரகஸ்தன் சம்மதித்தவுடனே தசக்கிரீவன் பருப்பிலே கிருதம்விட்டதுபோலே மகிழ்ந்து, உடனே தனது சைனியங்களையெல்லாம் புறப்பாடாகும்படிக்குப் பிரயாணபேரிகையறைவிக்கச்சொன்னுன். அவர்களும் வெகு ஆடம்பரத்துடனே ஒருபங்கு உத்தரவுசெய்ததற்குமேலே பதின்மடங்கு அதிகமாய் யுத்தசன்னுகத்தோடும்வெளிப்பட்டார்கள்.

## இராவணன் அளகையையழித்தல்.

கேளும் ஸ்ரீராமமூர்த்தியே! இப்பால் தசக்கிரீவனுனவன் தனது அமைச்சர் முதலாயினுரோடும் யுத்தகோலங்கொண்டு தேவர்களாதியோரை நாசஞ்செய்யும்படியாய்ப் பிரவேசித்து, அடவிகளிலேசென்று கந்தமூலபலாதிகளை யருந்திக் கண்மூடித் தவஞ்செய்யாநின்ற ரிஷிக்கூட்டங்களையெல்லாம் செங்குத்தாய் வாரிக்கொண்டு குலைவாழைப்பழங்களை யுரித்துத் தின்னுவதுபோலே தட்டாமல் விழுங்கியும், சிலரை ஆயுதங்களால் அரிந்தும், சிலரை ஈட்டியாற்குத்தி வதைசெய்தும், சிலரைக் கை வேறு கால்வேறு குடல்வேறு தலைவேருய் வெட்டி வெட்டி யெறிந்தும், சிலரைச் சடாமகுடத்தையும், சந்நியாசவேடத்தையும் தாடிகளையும் பனநாறுபோற் பிய்த்தெறிந்தும், சிலரைப் பேய்போலறைந்தும், சிலரைக் கையினுலே தேய்த்துவிட்டும், இவ்விதமாய் நானுவகையான இம்சைசெய்து வருத்துகிருன். அப்பொழுது அந்த இருடிகளிலே நாசமானவர்கள்தவிர மற்

ரேரெல்லாம் அந்தந்த மலையடிவாரக் குகையிலும் காறு பள்ளம் படுகுழி இது களிலும் நுழைந்து கிலிகொண்டு ஒளித் துக்கொண்டோரும், சிலபேர் மாதவஞ்செய்வதை நிறுத்தி, இந்தச் சங்கடத்தைச் சிவபெருமானுக்கு அறிக்கை செய்பவர் போலேயோடி வெள்ளியங்கிரிச்சாரலிலே ஒளித்துக்கொண்டு அங்ஙனே தவத்தை அனுசரித்தோரு மானர்கள். இதுவுமல்லாமல் சிலபேர் என்னைப்போலே நசுங்கி ஆவிவிட்டோரும், சிலபேர் இனி நமது தவத்திற்கு இடையூறு வந்ததே! இனியெத்தனைகாலஞ் செல்லுமோ, அது மறுபடியும் முடித்தற்கென்று உள்ளம் நொந்தோரும், சிலபேர் இந்த ராக்ஷதரைக் கண்டவுடனே, அவர்களுடைய திருஷ்டிக்கேயகப்படாமல், மறைந்துகொண்டோரும், நானுவிதமாய்அலங்கோலமானர்கள். இவ்விதமான காலத்திலே அந்தக் கொடுமை பொருந்திய தசக்கிரீவனனவன் ரதாரூடனுகி, தன் மனதிற்கினிய சில சுத்தவீரர்களோடு மந்திரிகளையும் கூட்டிக்கொண்டு போய்த்தேவர்களையெல்லாம் கைகொண்டமட்டும் வாட்டியும், நசுக்கியும், குத்தியும், வெட்டியும், உதைத்தும், அவர்களையெல்லாந் தலைகாட்டவொட்டாமல் பலவிதமான வருத்தஞ்செய்தான். அதனலவர்கள் இதுவும் காலகதியெனவும், இனி நாமிதற்கு என்னசெய்யலாமெனவும், இதற்கேற்ற வேடம்போடவேண்டுமெனவும், மண்டையுள்ள நாள்மட்டும் சளிவிடப்போகிறதில்லையெனவும் கருதினேராகி, அவர்களிலே சிலர் அந்த ராக்ஷதர்கட்கு இதமான மொழிகளை யெடுத்துரைத்து, ஐயா! நாங்கள் மகா ஏழைகளா யிருக்கப்பட்டவர்கள். அதிலுமடிமைகள். உங்களுடைய பலாபலத்திற்குமுன் நாங்களெவ்வளவு? எங்களைக் காக்கும்படியான கடமை உங்களுடையதேயல்லாமல் வேறில்லை. என்று உபசாரமொழியால் அவர்களைப் பரிவினலே நேசித்துத் தப்பியோடி யொளித்துக்கொண்டார்கள். சிலர் தெய்வலோகத்திலே யிருந்தாலும்மறுபடியும் இந்தவேதனை தானென்று உள்ள மெலிந்திருந்தார்கள். சிலர் விண்டுவிருக்க இவனது ஐபஞ்சாயாது. நாம் பயப்படத்தகுந்த அலுவலில்லையெனத் தைரியத்தோடே யிருந்தார்கள். சிலர் இவர்கட்குக்காலம் குறுகிப்போய்விட்டதென ஓடிப் பதுங்கினர்கள், இப்படி தசக்கிரீவனனவன் நானுவிதமான பாதைகளைச் செய்துகொண்டிருக்கும்பொழுது பிரகஸ்தனென்போன் அவனைப்பார்த்து, ஐயா லங்காதிபதி! இதென்னகொள்ளை? இவர்கள் நமக்கோரெதிரோ! இவர்களுடைய பலனென்ன மிகவும் அற்பமான ஊர்க்குருவிப்பிராணன்;இவர்களால் நமக்காகவேண்டியதென்ன? நாமிவர்களை இப்படியாய்ப் பாதைசெய்வதனல் நடுங்கி வணங்கி அடைக்கலமென அழுகிருர்கள். ஆதலினலே இவர்களை விடுவித்து நமக்குச்சரியான பலாஷ்டியரை யெதிர்க்கவேண்டுமே யல்லாமல், (ஏழையழுதகண்ணீர் கூரியவாளுக்கொக்கும்,) என்பதுபோலே இவர்கள்மேலே துஜங்கட்டுவது சரியல்லவெனத் தெளிவுறச் சொல்லினன். அவ்வார்த்தையைக் கேட்ட ராவணன் சற்றுநேரம் நிதானித்திருக்குங்கால் அருகிலேயிருந்த மகோதரனென்போன் சொல்லுகின்றுன்.

ஐயா லங்காதிபதி! நான் சொல்லுகிறது மாத்திரம் தப்பாது. பிரகஸ்தன் சொன்னதுஞ் சரிதான். அஃதென்னவெனில், தக்க இரையைத்தேடித் தின்னும் புலியானது, புல்லைத்தின்ன விசையுமா? இஃது உமக்குத்தெரியாதா? நாமென்ன? நமது வீரியங்களென்ன? வரப்பிரசாதங்களினுடைய மகிமைகளென்ன? நமக்குமிஞ்சியிருக்கப்பட்டவருமுண்டா? சமானமானபேருடன் எதிர்ப்பதுதான் தருமயுத்தம். அதிதிகளை வாட்டுவது நமக்கோர் அழகாமா? உமக்குக் குபேரனுடைய நந்தவனமிருப்பது சற்றும் தெரியாதா? அதை மறந்துவிட்டு இப்படி முழிக்கவேண்டிய காரணமேன்? அதில் அளவிறந்த யக்ஷர்களையும், கின்னரர்களையும், காவல்வைத்திருக்கிருன். மேலும் அதில் நானுவிதமான மணமுள்ள மலர்களும் விசேடமானமரங்களுஞ் சூழ்ந்து, வானத்தையளாவி யிருக்கிறது. அதில் அசுரர்முதலானவர்கள் போகக்கூடாது. அதில் அநேகவித வினேதங்களெல்லாம் இருக்கின்றன. நம்முடைய அழகுள்ள இலங்கையிலே அசோகவனமெவ்வளவு கட்டுப்பாடாய் இருக்கிறதோ? அதற்கு இரட்டிப்பானதாயிருக்கும். ஆதலால் அதனை நாடிப்போயழித்து, அவ்வி

டத்தில் உம்முடைய சௌரியத்தைக் காட்டினால், அங்குமதுகீர்த்தி பரிமளிக்கும். அதைவிடுத்து பலஹீனர்களாகிய இவர்களைச் செயிப்பதனால் என்னகீர்த்தியுண்டென்று விபரமாய்ச் சொல்லினன்.

இப்படி மகோதரன் கூறியதைக்கேட்ட தசக்கிரீவன் ஆச்சரியப்பட்டு அவன் புத்திக்கும்யோசனைக்கும் மெச்சி, இப்படிப்பட்ட தந்திரசாலியான மந்திரிகளே நமக்குத்தக்கவரெனக்கொண்டாடி, புலியானது முகப்பம்பிடிப்பதுபோல, வில்விட்டகணையினும் அதிவேகமாய், அந்தப் பலவந்தனையே வெல்லவேண்டுமெனக் கருதி, அங்கிருந்தபடியே வடதிசைநோக்கிக் கைலைமலைக்கருகிலே, மந்தாகினி தீர்த்தத்திலிருக்கும் குபேரனது நந்தவனத்தை நாடிச் சென்று, தனது சேனாசமுத்திரமெல்லாம் கூடிப்போய்த் தண்டிறங்கி, அவ்வனத்தை அழிக்கும்படிக்குக்கட்டளையிட்டான். அவர்களும் உடனே வீராவேசங்கொண்டு பிரவேசித்து, எண்ணிறந்தவிருக்ஷங்களையெல்லாம் வேர்காணப்பிடுங்கிச், சடசடவெனச் சதுர்முகத்திலும்வீசியெறிந்தார்கள். சிலர் அவ்விடம் காவல்செய்யாநின்ற யக்ஷர்களையெல்லாம் அவ்விருக்ஷங்களாலேயேசாடிக் கொல்லுதலைச் செய்தார்கள். சிலர் அந்த நந்தவனத்திலே விளையும் முக்கனியெனச் சொல்லப்பட்ட வாழை - மா-பலா - இவை முதலான சர்வகனிகளையும்புசித்தும், அவற்றினின்றூறிவராநின்றமதுவையுண்டும், தங்கட்குள்ளாகவே போராடி; அவ்வெறியினு லொருவரையொருவர் ஜாடினார்கள். சிலர் தமது நினைவுதடுமாறி உக்கிரமான யுத்தத்தைச் செய்தார்கள்.

இப்படி இந்த இராக்ஷதர்கட்குள்ளாகவே ஒருவர்க்கொருவர்மோதி, அலங்கோலஞ்செய்துகொண்டு, தம்மைத்தாமே மறந்தோராகி, உக்கிராவேசங்கொண்டனர். அந்தநந்தவனமாகியமடுவிலே, இவ்விதமான ராக்ஷதரெனச் சொல்லப்பட்ட, யானைக்கூட்டங்களிறங்கிக் கலக்குகிறதைப் பார்த்த தசக்கிரீவன் உள்ளம் களிப்பெய்தி, தானுமொருபக்க மந்திரிகளைக் கூட்டிக்கொண்டு நுழைந்து, தனதுமுழுபலத்தையுங்காட்டி, மரங்கள்முதலிய எல்லாவற்றையும் பிடுங்கி எறிந்து, நாலுதிசையிலேயும் வீசி, செடிவேறு கொடிவேறு மரம்வேறாய் நானாவிதமாக நீர்த்தூளிதஞ் செய்து, அதுவும் போதாமல் அவ்வனத்திலே காவல் காக்கும்படியான யக்ஷர்களையெல்லாந் துமசப்படுத்தி ஒருத்தரையும் விடாமற் கண்டித்து, தானும் மதுவுண்ட லாகிரியினால், வெறிபிடித்தவன் போலவும், உகாந்தகால ருத்திரனைப் போலவுமாகி, பார்த்தவர்களெல்லாம் பயந்து பாதாளம் புகவும், தேவர்களெல்லா மிதென்ன விபரீதமென உள்ளநடுங்கவும், இனியேதுகுபேரனுக்கு நந்தவனமெனச்சிலபெயர் பேசிக்கொள்ளவும், வீராவேசங்கொண்டு ஆர்ப்பரித்து நின்று, அந்தக் குபேரனானவன் சுத்தவீரனாகியும் இதற்கதிபதியாயு மிருப்பானாயின், இப்பொழு தென்னுடனே வந்தெதிர்ப்பான். இல்லையாயின் பேடியைப்போலே ஓடிப்போய்ப் பிழைப்பான். என விருதுமொழிகள் பேசி, மறுபடியும் அந்த நந்தவனத்துள் நுழைந்தான்.

இவ்வாறு நுழைந்த தசக்கிரீவனானவன் முன்னினுமதிக வீராவேசங் கொண்டவனாய், ஒன்று-பத்து-நூறு-ஆயிரம்-பதினாயிரம்-நூறாயிரம் - பத்துலக்ஷம் - கோடி-பத்துகோடி-சங்கம்-மகாசங்கம் எனச்சொல்லப்பட்ட அளவிறந்த விருக்ஷமெல்லாவற்றையும் பிடுங்கி, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு சுழற்றுச் சுற்றி, அந்த வைச்சிரவணனாகிய குபேரனுடைய பட்டணத்தின்மேலே வீசியெறிந்தான். அதினாலே அவ்வளகா புரியினுடைய தெருக்கள்தோறும் நடக்கக்கூடப் பாதையில்லாமல் எவ்விடத்திலும் மரக்காடாய்ப்போனது மல்லாமல், அவ்வவருடைய மாடமாளிகை கூடகோபுரமு மிடிந்து பொடிந்துபோய் விட்டதனாலே யாவரும் அல்லோல கல்லோலபட்டுச் சிலர் காலஞ்சென்றனர். அரண்மனை ஆஸ்தானங்களெல்லாம் விருக்ஷங்களா லிணைபிரியாது மறைவுபட்டு, மேருமலைக்குச் சமானமாய் உயர்ந்திருப்பதினாலே, பகற்காலத்துச் சூரியபகவானும் கண்டு, இது அத்தமானகிரியோவெனப் பிரமித்து நின்றான். இவ்விதமாய் அந்தக் குபேரனுடைய நந்தவனத்தில் ஒருபற்குச் சுங்கூடப் பார்ப்பவருடைய கண்கட்குப் புலப்படாதபடி சர்வமுநாசஞ்செய்து, தங்கள் தங்களுடைய முழுபலத்தை காட்டிய ராக்ஷதரெல்லா மானந்தத்தை யடைந்து

கெக்கலி கொட்டினார்கள். ராக்ஷதத் தலைவனான தசக்கிரீவனும் இனியிந்த வனத்திலென்னவிருக்கிறதெனவும், இனி அளகேசனும் வரப்போகிறதில்லை யெனவும், தெரிந்துகொண்டு, ஜெயப்பிரதாப வீரத்தைத்தெரிவிக்குஞ்சங்கத்தை உலகமானது செவிடுபடமுழக்கி, தனது சேனாசமுத்திரத்தையெல்லாங் கூட்டிக்கொண்டு, எப்பொழுதும்போலே இனி யெவர்கள் நமக்கெதிரென இறுமாப்படைந்து, இலங்கையிலேபோய்ச் சேர்ந்தான்.

குபேரன் நந்தவனத்துக்காக விரங்கல்.

இதையெல்லாங் கேள்விப்பட்ட குபேரனவன் மிகவும் மனங்கலங்கி, உடனே வந்து நந்தவனத்தைக் கண்ணினாலே பார்த்தான். அம்மாத்திரத்தில் அவன் திப்பிரமைகொண்டு, மெய்மறந்து, சோர்ந்து விழுந்து, ஆ! ஆ! சபாஷ்! வெகு நன்றாயிருக்கின்றது. சுத்தமாய்ப் பெருக்கியிருக்கின்ற தரைபோலே யிருக்கிற இந்த நந்தவனத்தைப் பார்த்தும், என்னுடைய ஆவியான் திருக்கிறதே? இதைப் பார்த்துப்பார்த்து வயிறெரியும்படியாய் வைத்த அப்படு பாவி, இன்னஞ் சில காலத்திற்குள்ளாய் என்ன கதி யடைவானோ? ஆதியிலிந்த வனத்திற்காக நான் பட்டபாடு அந்த அரியரப் பிர்மாதிகளுக்கே தெரியும். மூப்புவனங்களினுந் தேடினாலும் இந்தச் சோலையைப்போலு முண்டா? ஆ! தெய்வமே அந்தத் துன்மார்க்கனை நீ யென்னசெய்வாயோ? பச்சைப்பசேலென்று தழைத்து இலைகளுந் தழைகளுமாய் நெருங்கிக் குளிர்ச்சியடைந்து, பரிமளவாடையை வீசி, தேவர்களெனச் சொல்லப்பட்டவரையும் மயக்கும் பாரிஜாத புஷ்பமென்ன சொல்லத்தக்கதா? எதுகேட்கினுந் தந்து உதவி செய்து, இந்திரனைக் காப்பாற்றி, உலகத்திற்கெல்லாம் ஆதாரமா யிருக்கும் கற்பக விருக்ஷத்தைக் காட்டிலும் சிறந்த பஞ்ச தருவை, நான் பிள்ளைபோல் வளர்த்தேனே? அதென்ன கிடைக்கத் தக்கதா? சர்வ மணமுங் கமழா நின்ற முல்லை, அசோகு, நீலம், அல்லி, இவைமுதலிய விநோதமான மலர்கள் அந்த மன்மதனையும் மயக்கி, தேவர்களையுஞ் சித்தம் பிரமிக்கச்செய்து, உலகமெங்கும் துதியா நின்ற தேவமாதர்களுடைய கூந்தலுக்கும் ஸ்தனபாரங்களுக்குமிலக்காயிருந்து, வாலிபருடைய மனதையுங் கவர்ந்து, தேவதார்ச்சனைகளுக்குஞ் சிறப்புற்று, எம்போல் பவனுக்கு முதவியாக யிருந்துகொண்டு, எனதுயிர்க்குயிராய் பிரதி தினமும் இடைவிடாமல் பொன்னலங்கிருத பாத்தியிலே, பனிநீர் வார்த்து வளர்த்துங்கிள்ளைபோலே பார்த்திருந்தது. இப்பொழுதந்தச் சண்டாளன் கையிற், சிக்கிப் பேர்வூரில்லாமல், இருந்த விடமும் தெரியாமற் பறந்துபோய் விட்டதே? சதுர்முகப்பிரமன் வாசமாயிருப்பதாயும், நெடுமாலான மகாவிஷ்ணுவினுடைய திருவுந்திக்குச் சமானமாயும், உலகமாதாவான ஸ்ரீமகாலக்ஷ்மிக்கு இருப்பிடமாயும், சகத்திர தளங்களுடனேபுவியடங்கலும் பரிமளஞ்செய்து, சூரியனைக் கண்டு வாசனை வீசிப் புட்பித்தும், அமுதகலையோனைக் கண்டு மாலையிற்குவிந்தும், நந்தவனத்திற்கெல்லா மொரு பொற்பிரகாசத் தீபம்போற் பிரகாசித்துக் கொண்டிருந்த செந்தாமரைக் கமல முதலிய புட்பங்களென்ன மறுபடியுந் தவஞ்செய்தாலும் வளர்ந்து கிடைக்கத்தக்கதா ?

இன்னும் வாழை கமுகு முதலிய மரங்களும், வாசனைமலர்களைத் தருகின்ற விருக்ஷங்களும், சில அரும்புவிட்டதும், சில அரும்புவிடாததும், சில முளைந்ததும், சிலமுளையாததும், சிலபுட்பித்ததும், சில புட்பியாததும், சிலவளர்ந்ததும், சில வளராததும், சில தலையெடுத்ததும், சில தலையெடுக்காததுமாக என்னுடைய கண்ணிற்குகண்ணாய் இளங்குழந்தைகள்போல இராப்பகலேக்கமாய்க் காப்பாற்றி, வளர்த்ததையெல்லாம், குலநாசனென்று சொல்லப்பட்ட சண்டாளன் இதிலே காலைவைத்துக்கடையாய்ப்பறக்கச்செய்தானே? அவனுக்குப் பிள்ளைகளில்லையா? தெய்வம் சகாயஞ்செய்யுமா? இப்படிப்பட்ட நந்தவனத்தையுண்டாக்க இனி எத்தனைநாட்செல்லும்? ஐயோ தெய்வமே! இனி இவைகளையெல்லாம் நான் முன்போலவும் காண்பேனோ? என்னுடைய வாழ்நாளெல்லா மிதற்குழைத்தேனே; இருந்த திரவியமெல்லாம் இதற்கே விரையஞ் செய்தேனே? என்னுடைய மனம்புழுங்கி அனலிலிடுமெழுகு

போல உருகுவதென்ன? வீண்போமா? என அந்த நந்தவனத்தை நோக்கிப் பல வாருய் விசனமாகிப் பிரலாபித்துக் கண்களிலே நீர்ததும்பநின்று, மறுபடியும் ஒருவாருய்த் தேறிச் சொல்லுகிருன்.

ஆ தெய்வமே! நாம் அவனுக்கென்ன பொல்லாங்கு செய்தோம்? நாம் ஆண்டுக்கொண்டிருந்த செங்கோலையும் துரைத்தனத்தையும் பதியையும், இவனுக்கேகொடுத்து நாமிங்கே தனியேவந்து, ஒரு குருவி கூடுகட்டிவாழ்வதுபோல அளகாபுரியென ஒருபட்டணமுண்டாக்கி இதிலேவாழ்ந்து கொண்டிருந்தால், நம்மை இங்கேகூடத் தங்கும்படியாகச் செய்யாமற் சக்களத்திப்பிள்ளைபோல் இடைவிடாமல் வந்து நாசஞ் செய்யாநின்ருனே? இதற்கு என்னசெய்கிறது? பங்காளியையும் பனங்காயையும் பதம்பார்த்து வெட்டவேண்டுமெனச் சொல்லும் தன்மைபோலே நாமவனை அதஞ்செய்ய ஏற்பட்டால், நம்மை உலகமென்ன சொல்லும்? மேலும் அது நமக்குக் கௌரவத்தாழ்வல்லவோ? ஐயோ நமக்கு நமது தந்தைசொல்லி யிருப்பதுபோலே, தனது துஷ்டச்செய்கையைக் காட்டினுனே? என்னுடையமனம் தாளவில்லையே? இதற்கென்னசெய்யலாம்? நல்லதிவனை நாம் கரிஷிக்கமுயன்ருல் வம்பான மார்க்கத்திலே வந்துவிடுவான். அப்பொழுது அவனுடனேபோராடநமக்கென்னஇரும்புத்தலையா தம்பி தம்பியென எத்தனைகாலந்தான் தாங்குவது? இவன் சாம்பிராச்சியத்தையும், கெம்பீரத்தையும், சாம்பவமூர்த்தி நாசஞ் செய்யுநாள் எந்நாளோ தெரிகிலேன். எப்போதும் "பொறுத்தார் பூமியாள்வா" ரென்பதுபோலவும், தண்ணீரும் மூன்றுபிழை பொறுப்பதுபோலவும், ஞாயப்பொதுவா யவனிடத்திற்கு நாமொரு தூதனுப்பி அவனுக்குத்தகுந்தபுத்திமதிகளை சொல்லிப்பார்ப்போம்; அப்பாலவன் தலை எழுத்தின்படியாகுக; என்று காமம் வெகுளி மயக்கமுதலியவற்றைக்கடந்த தபோமுனிவர்களும் மெச்சும்படியாகிய திவ்வியகுணமும் பொறுமையும் சாந்தமும் விவேகமும் நன்மார்க்கமும் படைத்த வைச்சிரவண்ணனுகிய குபேரனுனவன் பாரியாலோசனை செய்து, தன்னிடத்திலே யிருக்கும் ஒரு தூதனையழைத்து, ஓ வித்தகா! நீ நேராய் இலங்கைக்குப் போய் தசக்கிரீவனைக்கண்டு, நான் அனுப்பின தூதுவனெனத் தெரிவித்து, நீ நந்தவனத்தை அனியாயமாயழித்த காரணமென்னவெனக்கேட்டு, அந்த முழுமடையனுக்கு நீ நன்ருய்த் தெளிவுற வெடுத்துச் சொல்லவேண்டுவதாவது:—உன்னுடைய தமயனுகிய அளகேசனுனவர் இனிமேலாகிலும் இந்த துர்ப்புத்தியை நிவர்த்திசெய்து, நன்னடக்கையை யனுசரித்து, வீணுய் நாகத்துக்காளாகாமல்இதுவரையிலுஞ்செய்ததபோபலத்தின் மகிமையாற் கிடைத்த வரங்களைப் பாழாக்காமல் கிரமமா யிருக்கும்படியாயும், ஏழைகளாகிய தேவர்களை இனி அதஞ்செய்ய வேண்டாமென்றும், நீதிமுறைமை வழுவாமல் செங்கோல் செலுத்தினுல் மிகுந்த புகழும் தர்மமுங் கிடைக்குமென்றும், இவைகளையெல்லாம் உனக்கெடுத்துச் சொல்லும் பாத்தியதை, உன் தமையனுகிய வெனக்குண்டென்றும், உனக்கு மூத்தவன் தந்தைக்குச் சமானமானவனென்றும், பெரியோர் சொல்லுவதை இகழ்ந்து தட்டிவிட லாகாதென்றும். இவ்விதமாகவுனக்கு நற்புத்தி வரும்படியாயும், நல்லதெளிவை யடையும்படியாயும்,சொல்லச்சொன்னுரென்று சொல்லுக.

அன்றியும், நான் முன்பு இமயகிரியினிடத்திலே சிவனைநோக்கித் தபசுசெய்து கொண் டிருக்குங்காலத்தில் பரமசிவன் உமையவளுடனேஎதிர்தோன்றினுர். அப்பொழுதில் உமையவள் விளங்கும் அற்புதத்தைக்கண்ட யான் ஆச்சரியப்பட்டு, இப்படி விளங்குஞ் சொரூபத்தை யுடையபேர்களு முண்டோவென்று மனதிலே நினைத்தேன். அதையறிந்த உமையவளுக்கிரமாகக் கோபித்துப் பார்த்தாள். அந்தக் கோபாக்கினியினுலே என்னுடைய இடதுகண்ணனது நீருயெரிந்து, சரீரமுழுதுங்கருகியுருகிச் சோபித்துவிழுந்து, பயந்து, அவ்விடத்தினின்று நீங்கி, அந்த மலையிலே தானே வேருேரிடத்தில் அந்தக்குற்றந்தீர, முன்புபோல் நியமங்கள் வழுவாமல் பயபத்தியுடனே தவஞ்செய்துகொண்டிருந்தேன். அப்படி யிருக்குங்காலத்தில் ஒருநாள் அந்தப் பரமசிவன் வெளிப்பட்டு என்னைநோக்கி, உன்னைப்போலும் அரிய தவஞ்செய்தோம் ஒருவருமில்லை யான

தால், நீ நமக்குத் தோழனுகக்கடவாய். உமையவள் கோபத்தால் எரிந்துபோன கண்ணும் முன்புபோல விளங்கி யிருக்கக் கடவது. என்று அனுக்கிரகித்து ரக்ஷித்தார். அறியாமையினுலே செய்த அல்ப காரியத்துக்கு இப்படிப்பட்ட பிழைவருமானுல், அறிந்துசெய்யும் பொல்லாத காரியங்களுக்கென்ன தீங்குநேரிடாது? ஆதலால் இதனையுஞ்சொல்லுகவென்று அனுப்பினுன்.

அப்படியே அந்தத் தூதுவனும் தென்னிலங்கையை நாடி வந்துகொண் டிருக்கையில் முன்னம் அளகாபுரியிலுள்ள நந்தவனத்தின் மரங்களையெல்லாம் பொடியாக்கித் தும்சப்படுத்தி முறித்து, வாசனை மலர்களையெல்லாம் பறித்து நாசமாக்கி, வீரம்பேசிக் கொக்கரித்துக்கலகலவென்று சிரித்து, எப்போதும்போல்வந்து லங்கை சேர்ந்த தசக்கிரீவனுனவன் சிங்காதனத்திலிருந்து, வெகு சட்டதிட்டமாக மந்திரி பிரதானிகளைப்பார்த்து, ஓ எனது நண்பர்களே! மகோதரன்செய்த யோசனை நல்ல யோசனைதான். நாமும் அவன் சொன்ன படியே செய்தோம். அதுவும் ஜெயமாகி அவன் வனத்தில் பற்குச்சிக்குத்தேடினும் ஓர் சுப்பலுங்கூடக் காணுதவிஷயமாக ஏக வெளியாய் நிர்மூலஞ் செய்துவிட்டோம். நாமினிமேற் செய்யவேண்டியதென்ன? ஓ மகோதரா? நீதான் முன்போலெனக்குச் சொல்லவேண்டும். இவ்வுலகத்தில் யுக்தி சொல்வதிலுனக்கு நிகர் யாரிருக்கின்ருர்கள்? தபோரிஷிகளும் ஒடுங்கிவிட்டார்கள். தேவர்கள் கண்களில் ஜலம் தாரைதாரையாகக் கலங்குகின்ருர்கள். குபேரனும் நம்மை ஜெயிக்கச் சக்திபோதாமற் பயந்தொடுங்கி ஓர்மூலையிற் பதுங்கி யிருக்கிருன்.

ஓ மகோதரா! இவ்வித தந்திரயுக்திகளையெல்லாஞ் சமயத்துக்கேற்றபடி எங்கேகற்றுக்கொண்டாய், இனிமேலொருவர் போதித்தாலும் அந்த யுக்தியெனக்குச் சரிப்படாது. உன் வார்த்தைக்கு நான் எதிர்பார்த்துச் சிரசாக வகித்துக்கொள்ளத் தடையிராது. இதுபோல முன்னமே சொல்லி யிருந்தால் இவ்வளவு தூரங்கூட தேவர்கள் தலைவிசிறி யாடமாட்டார்கள். நமக்குள்ள தயிரியமும் பலமும் இந்தக் கிழவர்களுக் கில்லாமையால் தான், அந்த விஷ்ணு இவர்களை முன்னம் பம்பரம்போலாட்டினுன். நம்மிடத்தில் அவன் வீரம் செல்லாது. அப்படியானுல் எதோ இப்போது வரமாட்டானு? என்று பல வாரு இகழ்ந்துபேசி மூதாதையாகியமாலியவானுக்குத் தனது வீரப்ரதாபத்தையும், தான் தேவலோகத்தை யழித்ததும், அதனுலவர்க ளழுகின்றதையும், அப்பால் பிரகஸ்தன் வேண்டுகோளால் விடுபட்டதும், குபேரனது வனத்தைநோக்க மகோதரன் குறிப்புணர்த்தியதும், தானவ்வாறு சென்றழித்ததும், பின் இலங்கைவந்து சேர்ந்ததும், ஆகிய யிவைகளை ஒன்றும் விடாதுரைத்து; ஓ பாட்டா! நீ யிதை ஆண்டேனென்று என்னேரமும் ஒருபாட்டாகச் சொல்லுகின்ருயே? நீ தேவர்களை யழித்ததும், விஷ்ணுவந்துயுத்தஞ்செய்து உன்னைவென்றதும், அதனுல் நீங்களிலங்கையினுசைவிட் டகன்ருேடியதும், உன் தம்பி சுமாலியாற்கேழ்விப்பட்டேன். அதற்கும் இப்போதெனது வெற்றிக்கும் எப்படியிருக்கின்றது சொல்லுகவென்றுகேட்டான். அப்போதந்த மாலியவானுனவன் அவன் சொன்னவை யெல்லாங் கேட்டுக்கொண்டு அதற்குச் சும்மாயிருந்து, விஷ்ணுவென்று சொன்னதில் மாத்திரம் அந்தச் சப்தத்திற்கே பயந்து, சித்தப்பிரமை கொண்டான். அதை எதிரினின்றும் பார்த்திருந்த தசக்கிரீவனுனவன் இளம்பிள்ளை பயமறியா தென்பதுபோலக் கலகலவென்றுசிரித்து, இந்தக் கிழவனுக்கு அஸ்திச்சுரம்போலாச்சுதென் றறிந்தவனுய் உடனே அவனது சோபத்தை நீக்கினுன். அப்போது தெளிந்தெழுந்த மாலியவானுனவன்; புலியென்று சொல்லிய கிலியிற்றேறி யெழுந்திருப்பவர்கள் போலாகி, ஐயையோ! இவன் குடியைக் கெடுக்க, மகோதரனெருவன் எங்கிருந்து ஏற்பட்டான்? நாமென்ன சொன்னுலும் இனி இந்தத் துடுக்கன் கேழ்க்க மாட்டானே! என்று நினைத்துத் துடித்து மனம்வாடி தனக்குத் தோன்றிய வரையில் பேரப்பிள்ளையாகிய தசக்கிரீவனை பார்த்துச்சொல்லுகின்ருன்.

## மாலியவான் இராவணனுக்கு புத்தியுறைத்தல்.



அப்பா என்னிருகண்மணியாகிய சுபுத்திரனே! உனக்கு நான் சொல்லுவதென்னவிருக்கின்றது? சகலமுந் தெரிந்து இராச்சியபரிபாலனஞ் செய்யும் ஒருவனுக்கு வேறொருவர்கூடப் புத்தியுரைக்கவேண்டுமா? மரமேறுபவனை யெத்தனை தூரந் தாங்கலாம்? கட்டிச்சோறும் சொல்லிக் கொடுத்த வார்த்தையும்கூட நிலைக்குமா? உன்னுடைய புத்தியென்ன இப்படியாய் விட்டது? கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்ததுபோல் உனக்கென்று மகோதரன் தோன்றினானோ? நீ அவனால் சிறப்படையலாமென்று குதிக்கின்றாய். அப்பா தசக்கிரீவா? மேலோர்களெப்போதும் சகலமுந் தெரிந்தபோதினும் ஆத்திரப்படாமலும் வெளிக்குவராமலும், தங்கள்மட்டும் கணக்காய் மரியாதையுட னிருப்பார்கள். அப்படியிருக்க நீ இப்போதுதானே மிஞ்சி சகலகாரியத்திலுந் துணிந்துநடத்து கின்றாய். நீ ராச்சியபாரஞ் செய்யவந்து இன்னம் அநேகநாளும் ஆகவில்லை. அப்படிக்கிருக்கையில் இதற்குள்ளே நீ இந்த அக்கிரமத்துக்குப் பாத்தியப்படலாமா? இந்த மந்திரிகளுடைய சொற்புத்தியைக் கேட்டுக்கொண்டு, நெடுநாள் தவமிருந்துபெற்ற வரத்தையெல்லாம், நீ வீணில்போக்கடித்துக்கொள்ளாதே. அடா எங்கள் குலமீடேறவந்த சிகாமணியாகிய தசக்கிரீவா! நானுனக்கு நன்மையைச் சொல்லுகின்றேன். சர்வலோக ரட்சகராயும், ஆக்கல், காக்கல், அழித்தல், என்று சொல்லும் முத்தொழிற்குங் காரணவஸ்துவாயும், சகஸ்திரநாமனும், கருடவாகனரூடனும், அஷ்டாக்ஷரப் பிரணவ மந்திரார்த்த சொரூபியாயும், ஆதிமூலமென் றடைக்கலம் வேண்டுபவரை யாதரிக்குங் கர்த்தவ்யமாயுமிராநின்ற அந்த அதிநாராயணனுடைய பயம் எனக்குப் பெரிதாயிருக்கின்றது. அவரோ லேசானவரல்ல. அவரெப்போதும் நமது பட்டணத்தின்மேல் லக்ஷியம்வைத்துத்தானிருக்கின்றார். நாங்கள் முன்னமே தப்பித்துக் கொண்டோடப் பட்டபாடு சொல்லிமுடியாததாயிருந்தும், இப்போது மறுபடியு நீயென்னமோ அதைக் கிளறிக் கொண்டு தூந்துவிட்ட கிணற்றைத் தூறு வாரி விடுவதுபோல யோசனை செய்வதாயிருக்கின்றது.

அப்பா தசக்கிரீவா! அந்தக் குபேரனுடைய பகையைத் தேடிக்கொள்ள நினைப்பது நியாயமல்லவே. அவன் என்ன லேசானவனா? நீ என்னவென்று அவனை நினைத்திருக்கின்றாய்? அடா குழந்தாய்! இளம்பிள்ளை பயமறியா தென்பதுபோல, யாதொரு காரியமும் துடுக்காய்ச் செய்கின்றாய். வேண்டாம்! இதெல்லாம் பிரமாதமாய்வந்துமுடியும். வீணாய்தலைச்சுமை தேடிக்கொள்ளுகின்றாய். அந்தகுபேரனோ நிட்களங்கப்பொருளாகியும், நிர்மலானந்த சொரூபியாகியும், திரியேவலும் திரிசெய்கையும் திரிவிதகுணமும்படைத்தவராயும், சாட்சாத் பரமசிவமாய் முப்புராதிகளைச் சிரித்தெரித்தவராயும், ரிஷப வாகனாரூடராயும், பார்வதிசமேதராயும், வெள்ளியங்கிரிவாசராயும் மிராநின்ற சாம்பசிவப்பெருமானாகிய ஈஸ்வரனுடையவரப்பிரசாதம் பெற்றவன். மேலும் அவருக்குத் தோழனாயிருக்கப்பட்டவன். இவையனைத்தையும் நீ சிறிது மெண்ணாமல், திடீலென்றுபோய் அவன் வனத்தையழித்தேனென்று சொல்லுகிறபோதே என்மனந் துடிக்கின்றது. இனியென்ன செய்வது? ஒருவேளை குபேரன் சினங்கொள்வானாகில், முன்பின் தெரியாத நீ நின்று முழிக்கும்படியாயிருக்கும். அந்தக்கைலாசபதியும் அவனுக்குதவியாய் வருவார். இப்போது குதி குதியென்பவர்களெல்லா நீக்குழியைக்கண்டபின்பு கூடக் குதியார்கள். கெட்டுப்போகச்சொல்ல வருபவன் முன்னஞ் சிரிக்கத்தான் சொல்லுவான். வீணாயவன்பேச்சைக் கேட்டுக்கொண்டு உலகங்களை நாசஞ்செய்யவேண்டாம். ஏதோ என்னாலியன்றவரையில் மனங்கேழ்க்காமற் சொன்னேன். நீ செவ்வையாக இருந்தால் நாங்களின்னஞ் சிலகாலம் கண்ணுக்கழகாய்ப் பார்ப்போம். கிழப்பாட்டு கின்னரிக்கேற்குமா வென்பதுபோல என் பேச்சைத் தட்டிவிட்டு நீ என்னசெய்வாயோ தெரியவில்லை. என்று நல்லமதியைச் சொல்லும் மாலியவானைப் பார்த்துக் கல்லென்று நகைத்துத் தசக்கிரீவன் சொல்லுகிறான்.

ஓ பாட்டா! உனக்கு வயதாய்விடவே மதியுங்கெட்டுப் போய்விட்டதோ? மந்திரிகளையேன் வீணாய்இகழ்ச்சிசெய்கின்றாய்? அந்த மும்மூர்த்திகளும் வந்து எதிர்த்தாலும், அவர்களை எதிர்த்து வெற்றிகொள்ளும்படியான வரங்களை, நான் பெற்றுக் கொள்ளவில்லையா? நல்லது என்னைப்போல நீ வரம்பெற்றாலல்லவோ உனக்குத் தைரியமிருக்கும்; நீ கிழவனாகையால் உனக்கொன்றுந் தோற்றவில்லை. நீ சும்மாவேளைக்குச் சாப்பிட்டு மூலைவீட்டிலேதானே படுத்துக்கொண்டிரு; நான் ஏதாவதுன்னை யடுத்து மதிகேட்கவந்தால், அப்போது வேண்டியமட்டில் எனக்கிந்தப்பழையபூரணக்கதையைச் சொல்லுக. என்றுகூறி அவனையொருவாறாய் ஒதுக்கிவிட்டுப் பின்னுமத் தசக்கிரீவனானவன் மகோதரன் பக்கந்திரும்பி, ஓ குணவானே! அந்தக் கிழவன்பேச்சு நமக்கென்னத்திற்கு உதவி? நீஒன்றும் அவைகளை மனதில் வையாதே. சாக்காட்டுக்கிழவன் என்னமோ வாக்காடு வார்த்துக்கொண்டிருக்கிறான். நாம் நோக்காடு வைக்கப்படாது. நீயும் மாமா பிரகஸ்தனும் சொல்லுகிற யோசனைப்பிரகாரம் நான் நடந்துகொள்ளச் சித்தமாயிருக்கின்றேன். என்றிப்படி சொல்லிக்கொண்டிருக்கையில் தானே மாலியவானும் சுமாலியும் திடீரென்று எழுந்து, அக்கொலுவை வைவிட்டு மனந்தாளாதவர்களாய் அரண்மனைக்குட் போய்விட்டார்கள்.

கேளும் ஸ்ரீராமப்பிரபுவே! இவ்வண்ணமாகப் பாட்டன்மார்களிருவரும் உரைத்ததையெல்லாம் தசக்கிரீவன் ஆற்றிற்கரைத்த புளியாக்கிவிட்டுத் தான்கொண்ட கருத்தே சரியென்றெண்ணி யிருக்கும் காலையில், தனது வருத்தமெல்லாஞ்சொல்லியனுப்பிய குபேரன் தூதுவனானவன் அதிவேகமாக இலங்கைக்கு வந்து கொலுமண்டபத்தை யடுத்து நின்று, அங்கு மலைபோலும் வீற்றிராநின்ற தசக்கிரீவராஜனைப் பார்த்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஒரு வார்த்தை சொல்லுகின்றான். ஐயா லங்காதிபதி! கைலாயமலைச்சாரலில், மந்தாகினி தீர்த்தத்தில், அளகாபுரியை யரசு புரியும் உமது தமயனாராகிய குபேரராஜனுடைய தூதுவன்யான். அவரென்னைத் தங்களிடத்திற்கு அனுப்பினார். அதனாலே நான்வந்தேன். அஃதென்னவெனில் ஆதிகாலத்தில் அவராலாளப்பட்டிருந்த இந்த லங்காபுரியையும் அதனிராச்சியத்தையும் உங்கள் மனம்போலவே உங்களையே ஆளும்படியாகச் சொல்லிவிட்டு, அவர் ஒரு பராரிபோற் போய்விட்டாரேயல்லது உங்களை என்னகெடுதலைசெய்தார்? தான் ஆண்டாலென்ன தம்பி ஆண்டாலென்னவென்று உடலு முயிரும்போ லொன்றாகப் பார்த்து, சகோதரர் சுகம் தன் சுகமெனக் கருதி உமது க்ஷேமத்தைக் கோரிக்கொண்டிருக்கும் அவ்வளகேசன் தன் பிள்ளையினும் எண்மடங்காய்ப் பாதுகார்த்துக்கொண்டிருந்த நந்தவனத்தை நீர் நிரேதுவாக யாதொரு காரணமுமில்லாமல், அவரைக் கெடுக்கமாட்டாத குறையாய், அதனை யழித்துவிட்டதுமல்லாமல், தேவர்களையெல்லாம் அதஞ்செய்யவேண்டிய பவுரிஷமென்ன? குற்றமற்றுக் கண்மூடியிருக்கும் ரிஷிகளும் என்னகுறை செய்தார்கள்?

ஐயையோ!! யாவருங்கண்டு அஞ்சும்படியாய் இப்பேர்ப்பட்ட அக்கிரமங்களையெல்லாஞ் செய்கின்றது உமது ராஜரீகத்துக்குத் தர்மமா? உம்மாலே இப்போது மூன்றுலோகங்களுந்தத்தளிக்கின்றனவே! ஏழைகளது கண்ணினின்றொழுகும் நீரென்ன நமது வீட்டுக்கிணற்றுத் தண்ணீரா? அது சும்மாய்விடுமா? இஃது உம்மோடும் போவதல்லாமல் உமது வமிசத்துக்கும் ஊனமாச்சுதே? இவ்வித தொந்தரவு நீர் செய்வதினால் உமது தவமும், வீரமும், வாழ்வும், இன்னும்கொஞ்சநாளையில் அழிந்துபோகுமல்லவா? உமக்கென்ன தெரியாதா? மேலும், உமது தமையனும் சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்து வரம் பெற்றிருப்பதை நீர் அறியீரா? அதனை நீர் கிள்ளுக்கீரையென்று நினைத்திருக்கின்றீரோ?கொஞ்சம்சபலபுத்தியால் அவ்வீஸ்வரனது வாமபாகத்திலிருக்கும் தாயொத்த பார்வதியைப் பார்த்ததினாலல்லவா அவருடைய ஒரு கண்ணுக்குப் பழுதுநேர்ந்தது? ஆகிலும் நீர் வீணாய் முன்பின் தெரியாமல் பெரியோர்கள்கூறும் வாக்கியங்களையெல்லாம் அறியாமைத் தனத்தோடு சிறுபிள்ளைகட்டிய சிற்றாடைபோல்வீசி அக்கிரமங்களைச் செய்வதினால் அவர் மனந்தாளாமல், உமக்குத் தமையனாயிருந்தாலும்

தந்தைக்குச் சமானமாய் இவைகளைத் தெரியச்சொல்லச் சொன்னார். இப்படி யவர் சொல்வதினால் வேறொன்றும் நினையாதீர். ஆயாசம் வேண்டாம். நானிதற்காகத்தான் வந்தேன். அப்பால் உம்முடைய சித்தமென்று சொல்லி நின்றான்.

இராவணன் குபேரனுடைய தூதுவனை வெட்டுதல்.

இவ்வாறு குபேரனிடத்தில் நின்றும் வந்த தூதுவனானவன் இந்த வார்த்தையைச் சொன்னமாத்திரத்தில் அந்தத் தசக்கிரீவன் தனதொருபதுவாய்களையும் ஆவெனத்திறந்து, இது மகாவிந்தையெனச்சொலித் தந்தங்கள் பிரகாசிக்க நகைத்து, இருபது கண்களிலுந் திகுதிகுவெனத் தணற்பொறிபறக்கவும் புருவங்கள் பயங்கரமாக நெறியவும் ஆக்ரமித்து, கலகலவெனக் கோபாக்கினிச் சிரிப்பெழத் தொண்டைகளைக் கிழித்துக்கொண்டு அண்டம் வெடிக்கும்படி கர்ஜித்து, சண்டனைப்போல அத்தூதுவனைப் பார்த்து, அடா ஒற்றுரைக்க வந்த ஊழைப்பயலே! என்னிடத்து உன்னை அனுப்பின குபேரனுடைய மண்டை பிளக்கவேண்டி என்னுத்தண்டங் காண்பிக்கிறேன், நண்டு கொழுத்தால் வளையிலிருக்குமா? அவனையு முன்னையுங் கண்டதுண்டஞ் செய்யாமற் போனேனாகில் நானென்ன தசக்கிரீவராஜனா? நானவன்கீழ் அடிமைப்பயலா? அல்லது அவனுக்கு இளைத்தவனா? என்னை அவன் பயமுறுத்தவேண்டியதென்ன? நான்வனமழித்தபோது, எங்கொளித்துப் போய்விட்டான்? இப்போது திருமந்திரம் ஓதவந்தானோ? அதனால் உன் கல்வியெல்லாம் இவ்விடங் காட்டவந்தாயோ? இது செல்லாப்பணத்தை மாற்றச் செட்டியாரிடம்வந்த கதைபோ லிருக்கின்றதே! அவன் சொன்னானென்று நீயா எனக்குப் புத்திசொல்லுகிறவன்? அவன் ஜபம் இங்கொன்றும் சாயாது. என்று சீறிப்பேசி அவனைக் கிங்கரர்வசம்ஒப்புவித்து, மந்திரிகளைப்பார்த்து, இவனை என்செயலாமென்று கேட்டான். அவர்களும் கூத்துக்கேற்ற பந்தமாய் இவனை ஆக்கினைசெய்துவிடுமென்றார்கள்.

இப்படி அவர்கள் சொல்லவும் தூதுவனை வெட்டலாகாதென்று பழமொழியிருக்க உடனே தசக்கிரீவனும் முன்பின் யோசியாமல் தன்னுடைய கூரியவாளாலே அவனை வெட்டிக் கண்டதுண்டமாக்கி, இராக்ஷச கிங்கரரைத் தின்றுவிடுங்களென்றான். அவர்களும் அப்படியே செய்தார்கள். அப்பால் பாவியாகிய தசக்கிரீவன் மந்திரிகளைப் பார்த்து, இந்தக் குபேரன் இப்படி சொல்லி யனுப்பவேண்டிய காரணமென்ன? அதைக்குறித்து நாம் என்ன செய்யவேண்டியது? என்று கேட்கும்போது பிரகஸ்தன் சொல்லுகிறான். ஓ லங்கேஸ்வரா! நான் சொல்வது என்னவிருக்கிறது? இது கிணறுவெட்டப்போய் பூதம் புறப்பட்ட கதையாய் நேரிட்டது. தேத்திரம் போனபின்பு இரவியை நமஸ்கரிப்பதில் என்னபலனுண்டு? அவனோ மிகுந்த பலாஷ்டியன். மேலும் சிவபெருமான்தோழன். அவனுக்கு அவரது திவ்ய வரப்பிரசாத அருளிருப்பதினால் இவ்வளவு தயை தாக்ஷணியமின்றித் தூதனுப்பினான். அவன் என்னமாயிருந்தபோதிலும் உனக்குப் பெரியவன் யாவராயிருந்தபோதிலும் பெரியோரென்பதைக் கிஞ்சிற்றெண்ணி நடக்கவேண்டும். நீயோ அதிக்கிரமித்து அவன்வனத்தை நிர்த்தூளிதஞ்செய்தாய். அந்தக்குற்றம் ஒருபக்கம் உன்பேரிலிருக்க, அதுவும் போதாதென்று உன்னை நாடி வந்த தூதனையும் வெட்டினாய். இது செய்யப்படாது. துணிந்து செய்துவிட்டாய். அந்தக்குபேரனே முன்னமே நமக்கு ராஜ்ஜியத்தைத் தடைசொல்லாமற் கொடுத்திருக்கிறான். அப்படிக்கிருக்க நீ அநியாயமாய் அவன் வனத்தை யழித்துவிட்டாய். ஆகையால் பூதபௌஷிய வர்த்தமானங்களை யறிந்து நடந்துகொள்ள வேண்டியதுதான் விவேகிகளது கடமை. உனக்குத் தெரியாத காரியம் நானென்ன சொல்லப்போகின்றேன்? எப்போதும் "எதிர்வலியுந் தன்வலியும் மாற்றான்வலியுந் துணைவலியுந் தூக்கிச்செயல்" என்பதை அறிந்து நடக்கின்றவனேஉத்தமனாவான். அன்றியும், "அடக்கமமரருளுய்க்கு மடங்காமை ஆரருளுய்த்துவிடும்" என்று ஒரு நீதிவாக்கிய மிருக்கின்றது. இதையறிந்து ஒருவன் எப்போது நீதிமுறை வழுவாமல்

இராச்சியபாரஞ் செய்யவேண்டும். என்று சொல்லித் தான் மௌனமாய் இனி விளைவதை யறியலாமென்று ஒன்றும்பேசாமல் வாயை மூடிக்கொண்டான். அப்போது அருகிலிருந்தமகோதரனுனவன் சொல்லுகின்றுன்.

ஓ லங்கேஸ்வரா! உலகத்தினிடத்தில் ஒருவன் ஒருத்தியுடன் கலந்து புணர்ச்சி செய்ய எண்ணிக் கட்டிலின்மேல் ஏறிய பின்னும்கூட, அவளது முறையும் அநுமதியுங் கேழ்ப்பானே? இந்த வைச்சிரவணன் வெகு நிறுக்காய்த் தூதனுப்பி, நம்மை வலியச் சண்டைக்கிழுக்கும்போது இனி அவனுக்கும் நமக்கும் என்னவுறவிருக்கிறது? நீர்என்னமோ அவனை வெகு பலவானென்று எண்ணியிருக்கின்றீர்? அவனை மாத்திரமல்ல! அவனுடன் கலந்து ஒருவேளை திரிமூர்த்திகளும் வந்து எதிர்த்தாலும், அவர்களையெல்லாம் ஜெயிக்குந் திறமை உம்மிடத்தி லிருக்கின்றது. அது எனக்குத் தெரிந்துதான் தைரியமாகச்சொல்லுகின்றேன். நீர் என்னமோ பின்னிடைவதுபோ லிருக்கிறது. அவதைரியத்தை விட்டுவிடும். துணிந்தார்க்கு துக்கமேது? தண்டிலேபோனுல் சுத்தவீரர்க்கு இரண்டிலொன்று நிச்சயம். என்றைக்கிருந்தாலும் திரேகம் அனித்தியம். பயந்தால் ஜெயங்கிடைப்பது அரிது. நீர் ஒன்றுக்கும் அஞ்சாமல் தாராளத்துடன் உமது சேனுசமுத்திரங்களைக் கூட்டிக்கொண்டு விமானமேறி, கைலைமலைச்சார்பில், மந்தாகினி தீரத்துள்ள அளகாபுரிக்குச்சென்று, குபேரன் சேனையைக்கொன்று, அவனையும்வென்று, அவ்விதமாகவே உலகமெங்கும் திக்குவிஜயஞ்செய்து, கீர்த்தியைப் பெற்றுக்கொண்டால், அப்பால் உமக்குச் சரியானவர்கள் ஆரிருக்கிருர்கள்? ஆகையால் வடதிசைத் தலைவனிடம்போகும்படி தண்டுதளத்துக்கு உத்திரவுகொடும். இது தானென துகருத்து. அப்பால் உம்முடைய இஷ்டமென்றுன்.

அதுகேட்ட தசக்கிரீவனுனவன் அவனையும் மற்ற மந்திரிமார்களையும் பார்த்து, ஓ எனது ஆப்தமானவர்களே! எனதுமனமும் அவ்வாறுதான் நாடுகின்றதாகையால் இனி நான்செய்யும் இந்தயோசனையுள்ள திக்குவிஜயத்தினுல் சர்வத்ராளும் மெச்சுவதுமன்றி, நீடுற்றபுகழுந் திரிலோக சாம்பிராச்சியமும் பெறுவேன். என்று சொல்லிக்கொண்டு ஜெயத்தைத்தரும் பிரயாண பேரியறைந்து தனது ராணுவங்களையெல்லாம் விமானத்தி லேற்றிக்கொண்டு, பிரகஸ்தன்-விருபாட்சன்-மாரீசன்-மகோதரன் வச்சிரமுஷ்டி முதலிய மந்திரிமார்களோடும் இரதகஜதுரகபதாதிகளாகிய சேனைகளோடும் பிரயாணமாகி, அளகாபுரியை நோக்கி ஆகாயமார்க்கமாகச் சென்று அதன்கோட்டைவாசற்கெதிர் நின்று விமானம் விட்டிறங்கி, தனக்குமுன்னமே அவ்விடம் வந்திருக்குஞ் சேமத்தேரிலேறிக்கொண்டு, தனது இருகாலையுமடக்கிமண்டியிட்டு இருபதுகைகளிலும் இருபது விதமான ஆயுதங்களைத் தாங்கிக் கெடிவீர சிங்கம்போலக் கெர்ஜ்ஜித்து, தனதுபாரியவில்லை ஆகர்ண பரியந்தமிழுத்துவளைத்துக் குணத்தொனி செய்து, கத்தி-கேடகம்-ஈட்டி-சூலம்-வில்-வாள்-தண்டம்-குந்தம் - இவை முதலாகிய சர்வாயுதங்களோடு மற்றிதரமாகிய படைகளையும் பாங்குபெறப் பக்கத்திருத்தி, தனது பத்துவாய்களையும் திறந்து அண்டம் படீரென ஆர்ப்பரித்து, அண்ணு வைச்சிரவண்ணு! ஓ குபேரா! இப்போது என்னுடன் போர்செய்ய உனக்குப் பலமிருந்தால், நீ ஆண்பிள்ளையேயானுல், உன்முகத்தில் மீசையுமிருந்தால், உனது புஜபலபராக்கிரமத்தைக்காட்டி என்னை ஜெயிக்கலாம். நான் தம்பியென்றும் நீ தமயனென்றுஞ் சொல்லுகிற பந்தமுப் பட்சமும் வேண்டியதில்லை. இனி படுகளத்திலும் ஒப்பாரியுண்டா? நாமிருவரும் நின்று சண்டைசெய்தாலும் ஜெயமுண்டு. இறந்தாலும் வீரசொர்க்கமுண்டு. ஆதலால் விரைவில் யுத்தசன்னுகங்கொண்டு வெளியே வாவென்று உகாந்தகாலப் பேரிடிபோல அறைகூவி ஆக்கிரமித்தான். அக்கால் அங்குள்ள தூதர்கள் நாயினுங் கடியவேகமாய்ச்சென்று இச்சங்கதிகளையெல்லாம்குபேரனுடனே சொன்னுர்கள். அதுகேட்ட மாத்திரத்தில் குபேரனுனவன் திடுக்கிற்று ஐயோ! இதென்ன வனியாயம்? இதென்ன காரணம்? நாமவனுக்கென்ன குற்றஞ்செய்தோம்? முன்னம் அவன் இலங்கையைக் கேட்காமுன்னமே கொடுத்துவிட்டோம். குருவிக்கூடுபோல் இவ்வளகையை கட்டிக்

கொண்டிருந்தால், இதிலுள்ள வனத்தையெல்லாம் அழித்து வெட்டவெளியாக்கினன். அதன்மேல்தூதுவனையனுப்பி இப்படிச் செய்யலாமாவென்றும் கேட்டால் மறுபடியும் அக்கிரமத்துக்கே காப்புக்கட்டிக்கொண்டு, என்னை வெட்டமாட்டாத குறையாய் அவனையும் வெட்டினன். அத்துடன் சும்மாயிராமல் நம்முடன் யுத்தத்திற்கும் வந்துவிட்டான். இவனையாரழைத்தது? நம்மையேகொலைசெய்யவந்தானுகையால் இவனுக்கென்ன கெட்டகாலமோ தெரியவில்லை. ஆயினும்இருக்கட்டும். நாம் என்ன இவனுக்கிளைத்தவனு? அல்லதுவரம்பெறவில்லையா? இனியிவனை ஏறவிடப்படாது. தம்பியென்று நினைப்பதைத் தள்ளிவிடவேண்டும். இனியிவனைக் கரிஷிப்பதேசரி. தனக்கியல்பாகிய செய்கையிற் கருக்கைக்காட்டாத தேளினைப் பிள்ளைபூச்சியென்றுபேசாரா? ஓ மந்திரிகளே! நீங்களென்ன சொல்லுகிறீர்கள்? யுத்தத்திற்கு வந்திருக்கிற என்தம்பியாகிய தசக்கிரீவனை இலேசாய்விடலாமா? பங்குக்கு நேர்ந்தவரையும் பழிக்காரரையும் பதத்துடன் நீக்கவேண்டுமென்றுசொல்வதை நீங்கள் கேட்டறியீரா? என்றுரைப்பதை முதல் மந்திரியாகிய மணிமாலன் கேட்டுச் சொல்லுகின்றுன். ஐயா அளகைக்கதிபரே! நீர்தாங்கித்தாங்கிப்பார்ப்பதனுல்உமக்கேதாழ்வல்லது வேறென்னயிருக்கிறது? முன்னமவன் லங்கையைக் கேட்கும்போதே அவனை ஜெயித்து அதஞ்செய்யாமல் அதை விட்டதனுலல்லவா இப்பேர்ப்பட்ட அனர்த்தம்நேரிட்டது. நீரே அவனைவீணுயுயர ஏறவிட்டுவிட்டு இப்போது விழிக்கும்படியாயிருக்கிறது. நான் அநேகவிசை அவனை லேசாய் விடப்படாதென்று சொல்லியுங் கேழ்க்காமற்போனீர். என்றுபலவாருய்ச்சொல்லுங் குறிப்பையறிந்த குபேரனுந் தனது ரதகஜ துரகபதாதிகளையெல்லாங் கூட்டிக்கொண்டு யுத்த சன்னுகனுய்ப் புறப்பட்டான்.

## இராவணனுக்கும் குபேரனுக்கும் யுத்தம்.

இவ்வாறு புறப்பட்ட குபேரனுனவன் வானமளாவிய சகஸ்த்ர சிங்கங்கள்பூட்டிய ஸ்வர்னரதத்திலேறி பார்ப்பவர்கள் கண்களைப் பறிக்காநின்ற பிரகாசந்தங்கிய கிரீடத்தோடும் விளங்கி, பூர்ண சந்திரோதய விலாசம்போன்ற முகங்களில் அழகான தொழுகவும், மீசைகள் துடிதுடிக்கவும், கண்களில் அனலெழும்பவும், அபாரவில்லைவளைத்து, புவனங்களெல்லாஞ் செவிடுபட நாணேசைசொண்டு, தன்னுடைய பிராணமந்திரிகளாகிய மணிமாலன், சங்கியோதகண்டகன் விண்டினை வீரன் இவாள் முதலாயினேர் புடைசூழவும், நால்வகைச்சேனைகளும் நெருங்கிவரவும், ஜெயபேரி முழங்கவும், அநேகங்கோடி யக்ஷகின்னரர்களுடன் ஆக்கிரமித்து வருகிறுன். இப்படிவருகிற அளகேசனைத் தசக்கிரீவன்கண்டு, தானும் தயாராய்தேரேறிக்கொண்டு தனது மந்திரிமார்களுடனும், இரதகஜ துரகபதாதிகளுடனும், அமர்க்களத்திற்கு வந்துசேர்ந்தான். உடனே இருதிறப்படைகளுங் கைகலந்துகொண்டன. அப்போது தசக்கிரீவன்தனதுவில்லைவளைத்து,நாணேறிட்டுக் குணத்தொனிசெய்து, அளவிறந்த கொடிய நாராசங்களைப் பிரயோகஞ் செய்தான். இதற்குள்ளாகவே தேர்த்தலைவருடன் தேர்த்தலைவரும், கரித்தலைவருடன் கரித்தலைவரும், பரித்தலைவருடன் பரித்தலைவரும், பதாதிவீரருடன் பதாதிவீரரும் எதிர்த்து, ஒருவர்க்கொருவர் வாள் வேல் முதலிய அஸ்திரசஸ்திரப் பிரயோகங்களை செய்து எண்ணிறந்த அம்புகளை எய்தார்கள். மற்றுஞ் சிலராக்ஷசர்கள் தங்கள் தங்களது பராக்கிரமத்தினுற் பர்வதங்களையும் மரங்களையும் அடியுடன்பேர்த்து, நாற்றிசைமுழுவதுந் திடுக்கிட வெறிந்தார்கள். இவ்விதமாக இவர்கள் சண்டைசெய்வதினுல் அண்டங்கள் கலங்கி ஆதிசேஷனுந் தத்தளித்தான். ஒருவரையொருவர் வெட்டியும், குத்தியும், இடித்தும், உதைத்தும், இப்படி நானுவிதமாகச் சின்னுபின்னப்படுத்துகையில் அளவிறந்தவீரர்கள்மாண்டார்கள். இதிற்காலொடிந்தவர்கள் அநேகர். கரமொடிந்தவர்கள் அநேகர். தொடைமுறிந்தவர்கள் அநேகர். இடைமுறிந்தவர்கள் அநேகர். சிரம் இழந்தவர்கள் அநேகர். உரமிழந்தவர்கள் அநேகர். தோள்கள் அழிந்தவர்கள் அநேகர். வாளழிந்தவர்கள் அநேகராய் இப்படி அல்லோலகல்லோலப்பட்டுச் சின்னுபின்

ணமானுர்கள். அவ்வவர்களுடைய தேகத்திலிருந்துவரும் உதிரமானது ஆறுபோலவும், வெள்ளம்போலவும், சமுத்திரம் போலவும், ஓடத்தலைப்பட்டது. இந்தவெள்ளத்தில் அடித்துக்கொண்டோடிய ரதங்களும், புரவிகளும், காலாள்களும்,பிணக்குவையல்களும் சொல்லி முடியாது. இப்படி அவ்விருவகைச் சேனைகளிலும் பட்ட பேர் சங்கம்-மகாசங்கம்-கர்வம்-மகாகர்வம்-அற்புதம்-நிற்புதம்-என்றுசொல்லப்பட்ட கணக்கினும் விசேஷத்தன்மையா யிருந்ததென்றால், அதன்பெருமிதத்தை நீரேயறிந்துகொள்ளும். இப்படியிருக்கையில் தசக்கிரீவனுடைய மாரீசன் முதலாகிய மந்திரிகளெல்லாம் தங்கள் தங்கள் தேர்களை நடத்தி, மண்டியிட்டுப்பற்கடித்து வில்லைவளைத்து நாணேறிட்டுக் குணத்தொனிசெய்து, அநேகவிதமாக அனலாஸ்திரம்-அயிந்திராஸ்திரம் - வாயுவாஸ்திரம் - வருணாஸ்திரம்-பிரம்மாஸ்திர முதலானவைகளையெல்லாந் தொடுத்து விடுத்தார்கள். அந்த அஸ்திரங்களெல்லாம் வில்லில் நின்றும் விடுபட்டுவந்து குபேரனுடையமந்திரிகள் முதலானவர்களைச் சின்னபின்னமாகத் துளைத்து, முதுகிலும் மார்பிலும் தோளிலும் துடையிலுமாக உருவிப்போய்விட்டன.

அதுகண்ட குபேரனது முதல்மந்திரியாகிய மணிமாலனுனவன் உக்ராவேசங்கொண்டு, பல்லை நறநறவென்று கடித்து, மீசைகள் துடிக்கத் தனது அபாரவில்லை எடுத்தூன்றி ஆகர்ணபரியந்தம் இழுத்து, அநேகவிதமாகிய கொடிய நாராசங்களைப் பிரயோகித்து அவர்களையெல்லாம் தலைவிரிகோலங்கொண்டு அலைந்தோடும்படிச் செய்தான். அதையறிந்த தசக்கிரீவனது மந்திரிமார்கள் வந்தவனைவிடாமல்மடக்கி, அவனுடன் அகோரமான சண்டை விளைத்து, அவனதுதேர்களையும்-கொடிகளையும் குடைகளையும் - அச்சுகளையும் - ஆணிகளையும்-வேறுவேறுபடுத்தி ஒன்றும் விடாமல் அழித்து, அவனதுகரத்தில் ஏந்திவந்த மலையை நிகர்த்த நெடியவில்லையுங் கண்டித்து, அவன் பிர்மித்துக் கலங்கிச் சோபம் அடையச் செய்தார்கள். அக்கால் அம்மணிமாலனுனவன் மறுபடியுந்தேறி எழுந்து, புத்திலிருந்து வெளிப்பட்ட விடநாகம்போலச் சீறி, மலைபோன்ற பெரிய கதையையெடுத்துக்கொண்டு வேங்கைபோற் பாய்ந்து படைக்குள் புகுந்து கிறுகிறுவென்று சுழற்றிப் புடைத்தான். அம்மாத்திரத்தில் அவனுக்கு முன்னின்ற தசக்கிரீவனுடையமந்திரிகளெல்லாம் எதிர்த்தவனை ஜெயிக்கப் பலமற்றவர்களாகி, ஒருவரையொருவர் நோக்கி மிரள மிரள விழித்து, ஐயையோ! இதென்ன அநியாயம்? பூங்கிளிளை பூனையின்வாய்க்கிரையான கதைபோலாச்சுதே? அவன் வைத்தது வைத்தபடியாய் திப்பிரமைகொள்ளச் சாடுகின்றனே, இந்தத் தத்துக்கு நாம்பிழைப்பது அருமைபோலுங் காண்கிறதே? யமனும் இவனது பராக்ரமத்துக்கு அஞ்சிப்போவானெனிற் பின்னுஞ் சொல்வதென்ன? இவனுடைய தீரத்துக்குமுன் நாம்எவ்வளவு? இனிநாம் செய்யவேண்டுவதொன்றுங்காணேம். என்றுரைத்தவர்கள் பின்பு ஒருவகையாய்த்தேறித் தெளிந்து, தங்களாலியன்றவரையில் அளவிறந்த கதைகளைக் கைக்கொண்டு ரதத்தைவிட்டிறங்கி வலமிடமாய்ச் சுழற்றிவந்து, மூச்சுமேல் மூச்சடித்தால் மும்மூர்த்திகளையுங் காணலா மென்பதுபோல் மனவுறுதி கொண்டவர்களாய் ஓங்கி யடித்தார்கள். அதனால் அந்தக் குபேரனுடைய மந்திரியாகிய மணிமாலன்மெய்மறந்து களைப்புற்றுச் சோர்ந்துபோனுன்.

அச்சமயத்தில் மாரீசன் முதலிய மந்திரிகள் அவனதுசேனைகளாகிய யக்ஷர்களை வச்சிராயுதம்-தோமரம்-ஈட்டி-வில்-வாள்-முதலிய சர்வாயுதங்களினாலேயும் சிரமறுபடச் சிதைத்தார்கள். அதுகண்ட மற்ற யக்ஷர்களெல்லாம் பயந்தோடினார்கள். சிற்சிலர் உயிரிழந்தார்கள். அநேகர் அவயவங்களின் உறுப்புக்கள் சிதைவுபட்டதனால் வாதைப்பட்டார்கள். சிலர் நமது மந்திரியாகிய மணிபத்திரனையும் மூர்ச்சையாக்கி நம்மையுங் கொல்லவந்தார்க ளாதலால், இனியிவர்களை இலேசாய்விடப்படாதென்றெண்ணி முனைந்து, இவர்களுக்கு நாம் தோற்றவர்களாவது ஏனென்று அமர்க்களத்தில் வீரம்பேசியும், ஏதோ நம்மாலியன்றவரையிற்பார்ப்போம். அதன்மேற் கடவுள் இச்சையின்படியாகுகவென்றும் தங்கள் தங்களுடைய நெடியவில்லைக் குணத்தொனிசெய்து, அதில்விஷத்திலும்வலிய நாராசங்களைப் பூட்டி, எதிர்த்துவந்த மாரீ

சன் முதலானவர்கள் அடங்கலுந் துறை கெட்டோடும்படி மாட்டினார்கள். மற்றும் சில யக்ஷர்கள் உயிர்க்கிச்சை வைத்தவர்களாகி, ஆர்கெலித்தாலென்ன? ஆர்தோற்றாலென்ன? நமக்கேனிந்தவீண்வேலை? இந்த ராக்ஷதர்களுடன் பொழுதுக்கும் பாட்டுக்குஞ் சரியாய்ப் போராடிக்கொண்டிருக்க நமக்கென்ன இரும்புத்தலையா? என்றினைத்து அடவிகளிலும் மலைச்சாரல்களிலும் ஓடிப் பதுங்கிக்கொண்டார்கள். அதுகாலையில் இருபடைகளிலும் மாண்ட ராணுக்கள் கணக்கிடப்படாது. மனத்தினாலும் எண்ணவும் முடியாது. இவர்களெல்லாம் இவ்வித ஆடம்பரமாய் முனைந்து யுத்தஞ் செய்யும்போது தசக்கிரீவன் சண்டமாருதம்போற்கூக்குரலிட்டுக்கொண்டு இருபது கண்களிலும்வடவாமுகாக்கினிபோல அக்கினிப்பொறிகள்பறக்கவந்து, இருபதுகைகளிலும் பிடித்திரா நின்ற வில்லை வளைத்து குணத்தொனிசெய்து சிங்கநாத அட்டகாசத்தோடும் குபேரனிடஞ் சென்று அவனைப் பார்த்து, அண்ணா குபேரா! இதென்ன சௌரியம்? என்னுடன் சண்டைசெய்து ஜெயமடையும் வல்லமை உனக்கில்லையா? உன்னுடைய வல்லமையைக் கண்டால் பெண்களும் பழியார்களா? உனக்கும் சுத்தவீரனென்கிற பேரா? உனக்குப் பரமசிவன் ஒத்தாசையிருந்தும் பலனென்ன? என்னுடன் யுத்தமிட்டு என்னை வெற்றிக்கொண்டால் நீ எனதுசெங்கோலைப் பெற்றுக் கொள்ளுகிறாய். அப்படியில்லாமல் இந்த யுத்தகளத்தில் என்னாலிறந்தால் மகத்தாகிய மோக்ஷமடைவாய். அவ்விதமே இரண்டுவிதத்திலொன்று நானும் பெறுகிறேன். மேலும் நீயும் வெகுகாலமாய் நான்முகனைக்குறித்து மாதவமியற்றி வேண்டிய வரங்களைப் பெற்றிருக்கின்றாய். நானும் அவ்வாறுதான் அடைந்திருக்கிறேன். ஆதலால் நீ பெற்றவரமெல்லாம் எங்கேபோச்சுது? துணிந்தார்க்குத் துக்கமேது? போருக்குவந்தும் புறங்கொடுக்கலாமா? எப்போதுந் தேகமனித்தியமல்லவா? உனதுசௌரியத்தை நான் பார்க்கவேண்டும். என்னுடன் போர்செய்ய உனதுதனுசை எடு. எதோ நாமிருவரும் ஒருகை பார்ப்போம் வா. என்று பதைபதைக்கப்பேசுந் தசக்கிரீவனைக் குபேரனானவன் கண்டு பிர்மித்து யாதொன்றும் தோன்றாதவனாகி இதனைச் சொல்லுகிறான்.

ஆ தெய்வமே! கெட்டபுத்தி இவனை விட்டுப்போகுமா? அதேது போவது? நாயின்வாலைக்குணப்படுத்தயாவரால்முடியும்? நல்லதென்று நாம் சும்மாயிருந்தால் இவன்தலைக்கீழாய்த் துள்ளிவிழுகிறான். ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூ சர்க்கரைப் போல இவன்மட்டுக்கும் இவனேகெட்டிக்காரனென்றுதிக்குவிஜயஞ்செய்யவந்தான். பிள்ளையில்லாவீட்டிற் கிழவன் துள்ளிவிளையாடுவதுபோல இவன் தலைவிசிறியாடி, பெற்றதாயிடத்திலேயே கற்றவித்தையைக் காட்டுவதுபோல உடலில் நாக்குவழிக்கவந்தான். ஆயினும் மூச்சுவிடாமலடித்தாற் காச்சுமூச்சென்றோடப்பட்ட பூச்சிக்குச்சமதையானபயல் இவனோநம்மை அதட்டுகிறவன் இவனிடத்தில் நமதுசுருக்கைகாட்ட வேண்டும். படுகளத்திலு மொப்பாரி பார்ப்பவர்களுண்டோ? என்று தன்னுடைய வில்லையெடுத்து நிறுத்தி, உலகமுழுவதுஞ்செவிடுபடவும், ஆயிரம் பணுமகுடனுந் தத்தளிக்கவும், பார்ப்பவர்களெல்லாம் பிர்மிக்கவும், இனி என்னவிதமோவென்று சொர்க்க லோகத்தாரும் பயமடையவும், ஏதேது! இனி தசக்கிரீவன் பிழைக்கான்? வீணாய் மாண்டுபோவானோ என்னமோ? என்று அந்தரவாசிகளும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கவும், டங்காரவோசையெழுப்பி, அந்த லங்கேஷ்வரனாகிய தசக்ரீவனைப்பார்த்து, அடா துன்மார்க்கனே! நானிதுவரையிலும் உன்னோடெதிர்க்காமற் சகோதரவாஞ்சையிலிருந்தேன். இனி தம்பியென்றும் பாரேன். எனக்குயிராகிய நந்தவனத்தை யழித்து, என் தூதனையும் வெட்டிய துரோகியாகிய உன்னுடன் நான் சரிக்குச்சரியா யிருந்து சண்டைசெய்ய மனமில்லாமலும், நீயெனக் கிளையவனாதலால் உன்னோடு நானெதிர்ப்பது தர்மமல்லவென்று மெண்ணி சும்மாயிருந்தால் நீ என்னிடத்திலேயே கற்றவித்தையைக் காட்டவந்தாய். நானுனக் கடங்கினவனென்று வெகு வாயிகழ்ந்தும் பேசிவிட்டாய். ஆயினும் பெரிதல்ல? எதோ உன்திராணியை நான் அறிகிறேன். என்று வடவாமுகாக்கினிபோல விழிகளெரியவும் திரேகம்பதைக்கவும் மீசைதுடிக்கவும் தடதட

வெனத் தேரேறி மண்டியிட்டு, வில்லைக் குண்டலாகிர்தியாய் வளைத்து, அதிற்சொல்லக்கூடாத வாயுவாஸ்திரம்-அக்கினியாஸ்திரம்-தேவதாஸ்திரம் - சூரியாஸ்திரம் நாகாஸ்திரம்-இவைமுதலிய அளவிறந்த அஸ்திரங்களை யெல்லாம் கைகொண்ட மட்டும் யாவருங் கண்டஞ்சும்படிச் சங்கஞ் சங்கமாகப் பிரயோகஞ் செய்தான்.

அதுகண்ட தசக்கிரீவன் தனது வலிய வில்லையெடுத்தூன்றி விநோதமாகிய இரண்டு அர்த்தசந்திர பாணங்களைப் பிரயோகித்து, அவன் விடுத்தவைகளை யெல்லாம் ஒன்றேனும்விடாமல் வழியில்தானே துண்டித்து, உடனேஎண்ணிறந்த மகாகொடிய நாராச பாணங்களைத் தொடுத்துவிட்டு அந்த வைச்சிரவணன் ஊர்ந்துவந்த தேரை அச்சு கழன்றுபோகவும், ஆணியுடைந்து போகவும், குடைகிழிந்துபோகவும், கொடியறுந்துபோகவும், குத்துக்காலாடிப் பிடுங்கிக்கொள்ளவும், கொடுங்கை வெவ்வேறாகவும், சின்னுபின்னப்படுத்தி நிர்தூளிதஞ் செய்து, அவனது காத்தேந்தி நிற்கும் வில்லையும் கண்டித்து, பாகனையுஞ் சிரமுடியவடித்துப் பொடியாக்கினுன். அப்போது வைச்சிரவணனுகிய குபேர னனவன் பிர்மித்து, மறுகாலும் வேறோரி ரதத்திலூர்ந்துகொண்டு, மறுவில்லைக் கையிலேந்திவளைத் தெதிர்சென்று, இருவிததிவ்யாஸ்திரங்களை யெறிந்து அந்தத் தசக்ரீவனது தண்டு தளங்களை யெல்லாம் சிரம் வேறு-உரம்வேறு-கரம்வேறு-சதைவேறு-நிணம்வேறு - சுக்கிலம்வேறு - கால்வேறாகத் தும்சப்படுத்தி அதஞ்செய்து உகாந்த கால உருத்திரனைப்போல நின்றான்.

கேளும் ஸ்ரீராமா! அப்போது யமன் போல்வந்தெதிர்த்த அக்குபேரனைக்கண்டு, ராக்ஷதர்க ளெல்லாம் சின்னுபின்னமாய்த் தலைவிரிகோலம் பூண்டு, காற்றினுங் கடிய வேகமாயோடத் தலைப்பட்டார்கள். சில ராக்ஷசர்கள் இதென்ன வேலையில்லாத வேலை? நாம் சும்மா சிவனேயென்றிருந்தாலிந்த தசக்ரீவன் நம்மை வலிய விழுத்து வந்து இங்கு பலிகொடுக்கின்றான். சுமப்பவனுக்கல்லவோ தெரியும் சொல்பவருக்கென்னதெரியும்? தசக்ரீவன் வாய்க்கொழுப்புச் சீலையால் வடிந்தகதைபோல் இதை வளர்த்திக்கொண்டான். இவனென்ன விடுவானு? நாமுமிந்த அளகேசனை என்னமோவென்று நினைத்தோம். ஏதேது நாம் பிழைப்பது? இவன் உகாந்த காலனைவிட அதிகவுக்ரமாய்க் காய்ந்துகொல்லுகின்றான். இவனையொருபஞ்சையென்று நினைத்து வந்துவிட்டோம். இனியிந்தக் குபேரன் ஈஸ்வரானுக்ரகம் பெற்றவனுதலால் இனியென்செய்வானே! என்றேங்கினவர்களாய் எவரை அடைக்கலம் கேட்கலாமெனப் பயந்து நின்றார்கள். அக்கால் தசக்ரீவன் அவர்களை நெருங்கி அவர்களுக்கெல்லாந் தைரியஞ்சொல்லி, இது குபேரன்செய்த கோலாகலமென்று நினைத்து அவனை யடித்து, அடாகுபேரா! இனி நானுன்னைத் தமையனென்றுங்கூட நினைப்பேனு? நீ யெவ்வளவு பஞ்சை? அந்த நஞ்சுண்ட கண்டனே மிஞ்சி உனக்குத் துணைவந்தாலும் ஒரு கைபார்த்து, நீயே யென்னைக் கெஞ்சும்படியாய் வைப்பேன். இதோ பஞ்சாகப் பறக்கடிக்கிறேன்பார். என்றுசண்டமாருதம்போல் நின்று நானாவிதமாகத் தூஷித்து, தனதிருபது கைகளிலும்பிடித்திருந்த விற்களைத் தேரில் வைத்துவிட்டுக் கீழேகுதித்து, பர்வதம்போன்ற ஓர் கதாயுதத்தைக்கைக்கொண்டு, ஓடோடியும்வந்து கந்துபாய்ந்து சிலம்ப விளையாட்டெலாங் காட்டி, ஆனையடி-சிங்கவடி-புலியடி-யாளியடி-என்னு மிவை முதலியவுஞ் செய்து சுழன்று, வலமிடமிதித்து ஆகாயத்தெழும்பி, மீட்டும் பூமியிற் குதித்துப் பாய்ந்து எமதண்டம் போன்ற தனது கதையை யுறுமிநோக்கி குலாலன் சக்கரமெனச் சுழற்றிமோதினன். அதைக்கண்ட குபேரனுங்கலங்காமல், தானுமவ்வாறே வில்லைவிடுத்து, கதையை யெடுத்து, அதிக வுக்கிரத்தோடும் அத்தசக்ரீவனது வல்லமையை மிஞ்சவொட்டாமல் திப்பிரமைகொள்ளும்படியாய்ச் சாடினன். இப்படி நற்குணமும் நற்செய்கையும்வாய்ந்த அளகேசனனவன் தனது புஜபலங்கொண்டு மோதியடித்த விசையால் தசக்ரீவனனவன் உடனே சுருண்டு மூர்ச்சையடைந்தான். இவ்வாறு மூர்ச்சித்துக் கீழ்விழுந்தவன் மறுபடியுமெழுந்து, ராக்ஷத பலத்தினல் கோபமதிகரிக்க மகாவுக்ரத்துடன் கணக்கற்ற பர்வதங்களையும் விருக்ஷங்களையும் வேருடன் பிடுங்கிக் கொண்டு, அந்தக் குபேரனைப் பார்த்து,

அடா மூடா! நீ என்னை மூர்ச்சையாகச் செய்தவனுனபடியா லிதற்கு நீ தப்பித்துக் கொள்ளுக பார்ப்போம். என்றுகூறித்தன திருபது கைகளினுலு மோதியடித்தான். அம்மலைகளும் மரங்களு மவன்கையிலிருந்து விடுபட்டுவந்து இவன் படைமேற் புடைத்ததனுல், அநேக யக்ஷர்கள் மாண்டு போனதுமன்றி அளகேசபட்டணமும்அதமாகிவிட்டது. மேலும் தசக்கிரீவனுனவன் முன்பின் பாராமல் அவனுடைய மந்திரி பிரதானிகள்பேரில்லக்ஷலக்ஷமாகக் குந்தங்களையும், தோமரங்களையும், மலைகளையும் வாரியிறைத்து அவர்களையுஞ்சிதறவடித்து மூர்ச்சையாக்கி, அக்குபேரன்அழகாய் ஏறிவரும் புஷ்பக விமானத்தையும் பிடுங்கிக் கொண்டு அவனையும்பொத்தினுன்.

அக்கால் சரீரம்நொந்து நிற்கும் குபேரன் மனம் புழுங்கி, அடா சண்டாளா! அடா துரோகி! உன்னிலும் கொடிய துஷ்ட ஞெருவனேனு மிருப்பானு? மூத்தோர் உள்ளங்கலங்கி முனிவராகில், உன் குலமும் விர்த்தியாகுமா? நானுண்ட லங்கையும் பெற்றுக்கொண்டு, என்னுடைய நந்தவனத்தையுங் கெடுத்து, தூதுவனையுங்கொன்று, பிரம்மாவினுல், தரப்பட்ட புஷ்பக விமானத்தையும் மெடுத்துக்கொண்டதல்லாமலும் வெகு சேனைகளையும் மாய்த்துக் கணக்காக்கி விட்டாய், உன்னிடத்தில் நான்தோற்பதினுல் எனக்கென்ன யிழிவு? நீதான் ஊர்மெச்ச என்மேற்படையெடுத்தாய். எளியார் வலியாரென்றறியுந் தெய்வமொன்றில்லையா? அடா நரகத்துக் கேதுவாகியதுஷ்டா! தந்தைசொற்படி நடந்தவெனக்கு உன்னுல்வந்தலாபமிதுதான் அப்போதே கண்டித்தா லிவ்வளவு தூரம் விளையாததல்லவா? ஆகிலுமுன்னையடக்கி விட வெனக்கென்ன தெரியாதா? தருமத்துக்கஞ்சினேன். அடா ராக்ஷச காதகா! அடாகுலநாசகா! அடா படுபாவி! என்று வயிறெரியப் பேசி, மறுபடியும் நமக்கேன் இவனுடன் வீண்சண்டை யென்று பெரியாலோசனைசெய்து, எதிரில்வந்து நின்று அப்பா தசக்கிரீவா! இதுவரையில் நாமிருவரும்செய்த யுத்தம் போதுமானதா யிருக்கிறது. வெற்றியுன்னதாகவே யிருக்கட்டும். அதில்வரும் புகழை நீயே பெற்றுக்கொள்ளுக. என்று மனமிளைத்துச் சொல்லிப் போயினுன். இப்படியவன் சொல்லிப்போனதைகேட்ட தசக்கிரீவனுனவன் அவனை நோக்கி, அடாகுபேரா! வெகு யோக்கியமாய் வெட்கத்துக் கஞ்சினவன்போற்பேசுகின்ருய். நல்லது நில்லு! நீதோற்றையா இல்லையாவென்ருன். துஷ்டரை நிவர்த்தி பண்ணுவதே மேலோர் கடமையாதலால் குபேரனும் இவனே பெரியவனுக யிருக்கட்டு மென்றெண்ணி, ஆமப்பா! நானே தோற்றேனென்ருன். அதுகேட்ட தசக்கிரீவன் குலுங்கக்குலுங்கச்சிரித்து, இருபது கைகளையுங் கொட்டி அவனைப் பார்த்து, அடாகுபேரா! நேரிலெனது வலிமையைக்கண்டும் இனிமேல் வீரங்காட்டுவையோ பத்திரம்? சாக்கிரதையாயிரு. இதோ உனக்குவரமளித்த சிவபெருமானிடஞ்சென்று ஒருகை பார்க்கிறேன். என்று தனதுசேனு சமுத்திரத்தை யெல்லாம் அப்புஷ்பக விமானத்தின்மேலேற்றிக்கொண்டு, அண்டகடாகங்க ளெல்லாந் திடுக்கிட் டலற ஆகாய மார்க்கமாய் உத்தரதிசையை நோக்கி நடந்தான்.

## இராவணன் கைலாயவரையை யெடுத்தல்.

கேளும் இரகுநந்தனு! இப்படி உத்தரதிசையை நோக்கிச்சென்ற தசக்ரீவனுடைய புஷ்பகவிமானமானது வெள்ளியங்கிரிக் கெதிராகச் சென்ற மாத்திரத்தில், அப்பாற் செல்லமாட்டாமல் தடைபட்டு நின்றுவிட்டது. இவ்வாறு யாவராலுந் துதிக்கப்படா நின்றகைலைமலையினுல்தடைபட்டு நிற்கும் புஷ்பக விமானத்தை, தசக்கிரீவனுனவன் கோபித்துப் பின்னுந் தூரத்தியும், அது சிறிதும் நகராமலிருப்பது கண்டு, ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? நாம் காணுத பர்வதங்களும் உலகிலுண்டா? எத்தனையோ மலைகளைப் பந்தாகவெடுத்தாட்டினேம். இதென்ன விநோதம்? இந்த புஷ்பகவிமானம் இதற்கஞ்சி நின்று விட்டதல்லவா? என்று தனக்குத் தானே புகல்வதை அந்த வெள்ளியங்கிரியிற் காவற்றலைமைபூண்ட நந்திகேஸ்வர ரறிந்து, அந்த தசக்கிரீவன்மேற் சினந்து கடுகடுத்து, சுவாச பந்தனத்தோடும் ஒரு தடியைக் கையிலேந்திக்கொண்டு ஓடோடியும்

வந்து சொல்லுகின்ருர். அடா பத்துத் தலைப் பூச்சியாகிய தசக்கிரீவா! நீ எவ்வளவுபிராணி? உனக்கிதென்னவேலை? காலத்துக்கேற்ற புத்தி கொடுக்கிறதோ? இவ் வெள்ளியங்கிரிக்குத் தடைபட்ட விமானத்தை ஏன் வீணுய் நோகச்செய்கின்ருய்? இந்தக் கிரியின் காரணந் தெரிந்துகொண்டாயா? நானுகிலுஞ்சொல்லுகிறேன்கேள். முத்தொழிற்குங் காரணமாய், சத்துச்சித்தானந்த நிஷ்களங்கப் பொருளாய், எப்பொருட்கு மிறையாய், ஆதிமுதற் கடவுளாய், பார்வதிசமேதராய், முப்புரமெரித்த மூர்த்தியாய், மான்மழு சதுர்ப்புய காளகண்ட திரிநேத்ரதாரியாய், ரிஷபவாகனருடராய், இளம்பிறையைச் சடாபாரத்திற்றரித்த பஞ்சாக்ஷரத் திருமேனியான சிவசாம்பவ மூர்த்தியாய், ஸ்ரீ மஹாகணபதியையும் நவவீரர்களென்னுஞ் செங்குந்தர் சோதரரான முருகக்கடவுளையும் பெற்ற முதல்வனுய், அடியேனை யாதரிக்குந் தெய்வமாயிரா நின்ற சிவபெருமானெழுந்தருளியிருக்கப்பெற்ற கைலைமலையென் றறியாயா? இடைவிடாத சிவபூசை துரந்தரனுயிருக்கிற உனக்கேன் தெரியாமற் போயிற்று? உன்புத்தி மாறிநடப்பது சரியல்ல. இனியேனும் நானெனு மகந்தையை விடுத்து, நான் சொல்லும் புத்தியின்படி அந்த ரிஷபவாகனக்கடவுளை வணங்கி, அப்பாற் செல்லுக. அடா மூடா! இல்லையே லிவ்வரையைச் சுற்றிக்கொண்டு போய்விடு. உந்தன் சேனைகளும் நீயுஞ் சிதறும்படியாய்வந்து நேரிடும். உனது திக்குவிஜயம் இந்தத் திக்கிற் செல்லாது, திக்குமுக்கலாடித் தியங்காமுன்னமே பக்குவமாய்த் தப்பித்துக்கொள்ளென்று சொல்லினர்.

இவையனைத்துங்கேட்ட தசக்கிரீவனுனவன் பகிரண்டங்களுங்கிழிபடக் கர்ஜ்ஜித்து, மலையும் நிலையுங் கலங்கக் குலுங்கச் சிரித்து, கண்களிருபதினுந் தீப்பொறிசிந்தப்பார்த்து, மீசைதுடிக்கத் தனது புயாசலங்களைத்தட்டி அட்டகாசஞ்செய்து, அந்த நந்திகேஸ்வரரை யடுத்துப் பரிகாசஞ்செய்து சகலருந் திடுக்கிடும்படி முகிலினங் குமுறியதுபோல ஒருவார்த்தை சொல்லுகின்ருன். அடா நந்திதேவா! நீயோ என்னைத் தடைபடுத்தி எதிர்ப்பவன்? நீ எவ்வளவு அற்பஜெந்து, என்வில்லானது வளைந்துநின்ருல் நீயும்எதிர் நிற்பையா? உனது சிறியமண்டை என்னுடைய ஒரு தண்டாயுதத்திற்குப்போதுமா? உனக்குச் சண்டைபோடவுஞ்சக்தியுண்டா? மண்டைகிழிந்துபோமென்றறியாயா? நானே பிரம்மதேவருடைய பௌத்திரன்; அதிலும்ராக்ஷசன்; நீயோ காளைரிஷபம்; நான்பெற்ற வரங்களென்ன இலேசானதா? அப்பேர்ப்பட்ட அளகாபுரிக்கரசன் இவனுக்கும் நேசன்; விச்சிரவப் பிரம்மாவினுடைய புத்திரன்; அநேக மந்திரிகளுக்கும் யக்ஷகின்னரர் கூட்டங்களுக்குந் தலைவன்; மேலும் எனக்குத் தமயன்; அவனையுமல்லவா அரைநாழிகைக்குமுன் தலைமூளைசிதற அடித்தேன். அந்தச்சேதியும் இவ்விடம் எட்டியிராதா? நீங்கள் அக்குபேரனுக் கானவர்களாயிருந்தும் அக்கால் நீங்கள் எங்கொளித்திருந்தீர்கள்? அவனை வந்து காக்கக்கூடாதா? கள்ளரைப்போற் பதுங்கிக்கொண்டிருந்த உங்களுக்கும் ஒருபேச்சா? இந்த மலையின் மேல் இராநின்ற உங்கள் எஜமானனை வெள்ளைக்குரங்கின் முகத்தை நான் அறியேனு? அவனிப்போதிருக்கிருனு? எதோ நானவனையும் உன்னையும் ஒருகைபார்க்கிறேன் என்னுடைய சாமர்த்தியத்தைப்பார் என்று உருட்டிப்பேசி மிரட்டினுன்.

## நந்திகேசுவரர் இராவணனுக்குச் சாபங்கொடுத்தல்.



இவ்வாறு தசக்கிரீவனுரைத்ததைக் கேட்ட நந்திகேசுவரரானவர் திரிகாலங்களையும் உணர்ந்த செல்வராயிருந்தும் கோபம்கொண்டு உலகமதிரவும், கதிரவனுமதியும்கதிமாறவும் கர்ச்சனைசெய்து, தமதுமெய்யிலே கோபவியர்வையுண்டாகப் பெருஞ் சுவாசமிட்டு, சினக்குறிப்பினுல்வருஞ்சிரிப்புடனே வாய்திறந்து சொல்லுகின்ருர். அடா துன்மார்க்கா! தகுந்த புத்திகளை இதுவரையிலும் நான் உனக்குப் போதித்தும், அவைகள்சற்றேனும் காதிலே நுழையாமல் கழுதைக்குபதேசித்ததுபோலாயிற்றல்லவா? ஆ! ஆ! உன்னுடைய துர்க்குணத்தையே காட்டிக்கொண்டு பேசினுய். களஞ்சியமாய் மழைபெய்தாலும் கிளிஞ்சற்குப்பல் கரையாதென்பதுபோலே, நீபேசியதினுல் எங்களுக்கொன்றும் குறைவில்லை

கெட்டகாலத்தினது - தொடர்ச்சியினலே தொப்பென்று துள்ளிவிழுகின்ருய். சட்டதிட்டமாய்ப் பேசாதே. கிட்டநெருங்கிச் சற்றே நிதானி, கட்டவிழ்க்கும் போதல்லோ காட்டும், அடா மட்டிப்பயலே! அந்தச் சிட்டர் போற்றுஞ் சிவனை ஏசி நட்டமாய் நொடித்து ஓர் குரங்குமுகமென்று திட்டினதினலே, நானிதோ பட்டயம்போலே சாபம் தருகிறேன். இன்னங் குட்டநாளைக்குள் அட்டதிக்கும் புகழும் உன்னுடைய இலங்கைப் பட்டணத்தில் மட்டில்லாத வெள்ளைமுகக் குரங்குகளும், தட்டிழியாத செங்குரங்குகளும் கருங்குரங்குகளும் அட்டியில்லாமல் வந்து; உங்களுடைய வம்மிசத்தின் கொட்ட மடங்கிப் போக வெட்டி வெட்டிச் சாய்த்துவிடக் கடவது. அடா துஷ்ட ராக்ஷதா! என்று சாபமிட்டார்.

இராவணன் கைலாயமலையை யெடுத்தல்.



இவ்விதமாய்ச் சாபத்தை யேற்றுக் கொண்ட தசக்கிரீவனுனவன் மூட்ட நனைந்தவனுக்கு நட்டமில்லை யென்பதுபோல கோபமதிகரித்து, ஓ நந்தீ! சாபங்கொடுப்பவனும் நீயாவையா? நல்லது அச்சாபம் பலித்து அவ்விதம்நடக்குங்கால் அதற்கென்ன நானனுபவிக்கச் சித்தமாய்க்காத்துக் கொண்டிருக்கிறேன். (பேறிளமையின்பம் பிணிமூப்புச் சாக்காடு இவ்வாறுங் கருவிலமைப்பு) என்பதுபோல விதியால் வருவதைவெல்ல யாவரால்முடியும்? ஆயினும் உன்னைப்போலே நான் துள்ளுமாடல்ல? அல்லது உனது எஜமானனைப்போலே பேயோடாடியுமல்ல? நானே முப்புவனத்திற் கதிபதியாகிய தசக்கிரீவராஜன்? என்னிடத்தில் உனக்கு பயமென்று சொல்லப்பட்டதில்லாமல் என்னைத்துரும்புபோலெண்ணி நீ பேசிவிட்டதனலே, இனிமேல் உன்னையும் உன்னுடைய சிவபெருமானையும் எளிதில் விடுவேனென் றெண்ணவேண்டாம். இதோ நிமிஷத்திற்குள்ளே காண்பிக்கிறேன் என் சாமர்த்தியத்தைப்பார். என்று தனது வக்ரதந்தங்களை நறநறவென்றுகடித்து, இருபதுவிழியினுந் தணற் புகையானதுகுப்பென்றெழும்பிப்படரவும் முகங்களானவை குருதிகொப்பளிப்பதுபோலே சிவந்துவிடவும் நாலைந்துபுஜங்களையும் ஆர்ப்பரித்துத்தட்டி, படபடவென மீசைதுடிக்கவும், கடகடவென ஆகாயமானது அதிரவும் அட்டகாசஞ்செய்து, பகிரண்டமும் உடைபட வாயைத்திறந்து இதனைச் சொல்லுகிறுன். அடா நந்தீ! இதோபார் இந்தக்கைலாசமலையை அடியோடேயெடுத்தெறிகிறேன். ஏதோ உங்களுடைய சாமர்த்தியத்தைப் பார்ப்போம், என்று சொல்லிக்கொண்டே புட்பக விமானத்தைவிடுத்துத் தாழக்குதித்துத் திடுதிடுவென்றேடிவந்து, அக்கைலைமலையின்சாரலிலே ஒருபக்கத்திலேபோய் தன்னுடைய கோரப்பற்களாலே உதட்டை மடித்துக் கொண்டு தனது இருபதுதோள்களையும் அப்பர்வதத்தினடிச்சந்திலே மூட்டக்கொடுத்துத் தாக்கி ஆதிசேஷனுனவன் முற்காலத்திலே மகம்மேருவைச் சுற்றிக்கொண்டு வலித்ததுபோலே தன்னுடைய இருபது கரத்தினலேயும் அந்தக் கைலாசமலையை விடாது தன்னுடைய முழுபலத்தோடே பிடித்துக்கொண்டு ஆட்டினுன். அப்படியாட்டினமாத்திரத்திலே அந்தக் கைலாசமலையானது வேரோடே பெயர்ந்து, தடதடவெனவும் கிடுகிடுவெனவும் குலுங்கியது. அப்போதுஉலகமெல்லாம்கவிழவும், அஷ்டதிக்குப்பாலகர் - அஷ்டவயிரவர் - கருடகாந்தருவர்-சித்தவித்தியாதரர் முதல் இயக்கரீருகச் சொல்லப்பட்டவர்களெல்லாங்கண்டு இடிவிழுந்தநாகம்போலே ஏங்கித்தத்தளித்து, இதென்னவிநாசகாலமோ தெரியவில்லையே ஐயையோ! நம்மையெல்லாம் முன்னமிவன் நிர்த்தூளிதஞ் செய்ததும் பெரிதல்ல. நமக்கெல்லாம் அபாயம் நேரிட்டசமயத்திலேஇந்தக்கைலாசபதியினிடத்திலே மூட்டிக்கொள்ளலாமென்று சொல்லும்படியான ஒரு பலமிருந்ததுவும் இப்படிக்காய்விட்டதே? நாம் செய்த சிவார்ச்சனையும் தபமும் இப்படி அவருடைய மலையையே பேர்த்தெடுக்கும்படியாச்சுதே? ஒன்ருகியசிவமே இப்பாடுபடுமானல் இனி அத்துஷ்டன் யார்க்குப் பயப்படுவான்? சுவாமியும் அவனை லேசாய்விடுவாரென்று நினைக்கிலோம். ஏதோ இவனை விளையாடவிடுத்து வேடிக்கைபார்ப்பதும் அவருடைய திருவிளையாடலென்று சொல்லப்பட்டதுதான்.

மேலும் இவனுடைய மூதாதைகளான மாலி-சுமாலி - மாலியவான் - என்பவர்கள் கெருவித்துத் தேவர்களையெல்லாம் அதஞ் செய்யும்பொழுது, விஷ்ணுவானவர் ஏற்பட்டு அவர்களை அழித்துவிட்டாரல்லவா? அப்பேர்ப்பட்டவர்களே எள்ளைப்போலே நசுங்கிப்போயிருக்க இவனெவ்வளவு பஞ்சையென்றெண்ணியிருந்தது. இப்பொழுதல்லவா இவனுடையசெய்கையாற்றெரிய வந்தது. இவனைவிட அவர்கள் கூடினவரையில் நல்லவர்கள்தானென்று நினைக்க வேண்டியதாய் இருக்கின்றது. ஓ சங்கரா! ஓ கங்காதரா! ஓ மகாதேவசம்போ! ஓ தெய்வமே! இனி யாங்கள் செய்யும்படியானகாரிய மென்னவிருக்கின்றது? வைத்தியன் கைவிட்டாற்போலாயிற்று. என்று வாய்விட்டுக்கதறிக் கண்ணீர் ஆறாய்ப்பெருகியோட வாடினார்கள். இவர்கள் இப்படிவாட ரிஷீஷ்வரார்களெல்லாரும் திடுக்கிட்டுக் கலங்கினார்கள். நந்திகேஷ்வரரும் இதென்ன இவனுக்குநேர்ந்த கேடுகாலம்? நமது வல்லமையினலே இவனை முழுத்திவிட எண்ணினலும்அதுநடவாதகாரியம். முன்பின் தெரியாத மூடனை நாம் சரி சமானமாக்கிக் கொள்ளக்கூடாது. ஆனபோதிலும் இவன்செய்கிறதோ உலகம் முழுகிப்போகின்ற காரியமாய் இராநின்றது நாமும் அவனுடையராஜ்ஜியத்திலே நானுவிதமான குரங்கினங்களெல்லாம் நெருங்கி அவர்களை நாசமாக்கிவிட வேண்டியதென்று சாபமிட்டு இருக்கின்றோம் இவனுஞ் சிலகாலத்திற்கப்பால் முடிவில் ராமபாணத்திற்கு இரையாகவேண்டியவனுச்சேஇப்பொழுதுவந்த வினையானது தீரும்பொருட்டு எந்தையாகிய பரமசிவன் கிருபை எவ்வண்ணமோ? என்று பலகூறிச் சிந்தைகலங்கினார்.

அந்தவேளையிலே சந்திரசூரியர்களும் இதென்ன விந்தையென்று புத்தி மயங்கி, இந்தப் பாவியாயிங்குவந்தானென்று அந்தரத்திலேதானே தயங்கினார்கள். இப்படி அந்தக் கைலாசமலையை அடிமுடி குலுங்கும்படி தசக்கிரீவனானவன் தன்னுடைய புயாசலங்களாலே தாக்கி மோதி முட்டி அசையத்தூக்கும்வேதத்தினலுண்டாகும் கோஷ்டத்தினலும் அவனுடைய அட்டகாசங்களினலும் அண்டச்சுவரெல்லாம் உடைபடும்படியாயும், தேவலோக மெல்லாஞ் செவிடுபடும்படியாயும், சொர்க்க மத்திய பாதாளலோகங்களெல்லாம் தத்தளிக்கும்படியாயும், ஆதிசேஷனென்று சொல்லப்பட்டவனும், திப்பிரமை கொள்ளும்படியாயும், அஷ்டகஜங்களும் ஆ! ஆ! எனக்கதறி நாற்றிசைகளிலும் ஓடும்படியாயும், நக்ஷத்திரங்களெல்லாம் அவல்போலே உதிரும்படியாயும், ஏழுசமுத்திரமும் சுவறிப்போய் வெறுந்தரை யாகும்படியாயும் நேரிட்டன. அதுகாலையிலே சிவசங்கரபகவானுடைய பூதவர்க்கங்களெல்லாம் அலறிப்பயந்து,இதென்னமோஒருபூச்சிவந்து இவ்விதமாய் அதஞ்செய்கிறதே ஓ சுவாமி! ஓ சிவசாம்பவா! ஓ திரிபுராந்தகா! ஓ சங்கரா! ஓ சாம்பவிமனோகரா! ஓ பஞ்சாட்சர சொரூபா! ஓ திரிநேத்திரதரா! ஓ காளகண்டா! ஓ திரிசூலா! ஓ சிவனே! ஓ மகாதேவப்பிரபு! இதென்ன அநியாயம்? இதென்ன விளையாட்டு? ஆச்சு ஆச்சு: இன்னம் கொஞ்சம் நேரத்திற்குள்ளே என்ன செய்வானே தெரியவில்லை. இவ்விதமான துஷ்டனுக்கு ஒரு சிக்ஷைபண்ணலாகாதா? என்று மனோவியாகுலத்தை அடைந்து பலவிதமாய்ப்போற்றிசெய்து நின்றார்கள். அப்பொழுது ஈஸ்வரனானவர் இவனைமெள்ள அமுத்திவிட வேண்டுமென்று நினைத்து மௌனமாயிருந்தார். உடனே அவர் அருகிலேயிருந்த லோகேஷ்வரியான உமையவளானவள் நடுநடுங்கி, ஐயோ! இந்தப் பாவியரக்கன் செய்யாதகாரியஞ் செய்கின்றானே? ஒய்யாரமும் பண்ணவிடலாகுமா? பொல்லாதவேலை செய்கின்றானிடத்தில் நாம் வல்லாண்மையென்று சொல்லப்பட்டதைக் காட்டாம லிருக்கலாமா? சுவாமி! உமக்கு ஈதொரு பெரிதானகாரியமா? மலேயோ தலைகீழாய்க் கவிழ்கிறதா யிருக்கின்றதே; இன்னமும் பராமுகஞ்செய்யலாமா? நான் இனி என்னசெய்வேன்? என்று மலைப்பெண்ணான அப்பார்வதியும் அந்தப் பரமசிவனைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு, சுவாமி! ரக்ஷியும், காப்பாற்றும், ஆதரியும். என்று பலவிதமாய்ச் சொன்னதில் கருணை சமுத்திரமான பரமேசுவரர் இளநகைகொண்டு சொல்லுகின்றார்.

## கைலாயபதி இராவணனைப் பெருவிரலால் அழுத்திவிடுதல்.

ஓ என்னுயிர்க்குயிராகியபெண்ணே! நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். அறிமுகமில்லாமலாண்டி அழைப்பானா? "உத்தரவில்லாமற் சிற்றெறும்புதீண்டுமா"? நன்மையின்றிநாய்வாலாட்டுமா? இது காரணமில்லாமல்வந்துவிளையாது. அந்த மார்க்கமும் உனக்குத்தெரியவேண்டியிருக்கிறபடியால் சொல்லுகின்றேன் கேள்? நம்முடைய அன்பன் சுகேசனுடைய குமாரர்களாகிய மாலியவான் சுமாலிமாலி என்போருடைய விர்த்தாந்தமும் அதிலேமாலியென்போன் விண்டுவினால் மாய்ந்துவிட்டதும் உனக்குத் தெரியுமல்லவா? அவ்விதமானபோரிலே தப்பித்துக்கொண்டு ஓடிவிட்ட மாலியவான்-சுமாலி என்னும் இருவர்களிலே அந்தச் சுமாலியினுடைய மகளாகிய கைகசி வயிற்றில் விச்சிரவப் பிரமாவினது சாபத்தாலே வந்துதித்த தசக்கிரீவனல்லவா இவன். வேறொருத்தனுமல்ல. நாமுஞ் சுகேசனென்போனுக்கு மாதா பிதாவர்க்கமாதலாலே நமக்கு இவன் திரிதியபௌத்திரனாகவேண்டும். இவ்வளவு பாத்தியதையும் அன்பும்விசுவாசமுமில்லாமல் வேறொருவனாயிருந்தால், நானும் இதுவரையில் சும்மா வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருப்பேனா? அப்படியல்லாதஅன்னியன்கூட நமது அருகில் நெருங்கி இந்தப் பர்வதத்தையுங் கண்ணெடுத்துப்பார்ப்பானா? இவன் சுதந்தரப்பேட்டை தோல் முட்டையிட்ட கதையைப்போலே பழைய வுறவையும் தைரியத்தையுங் கொண்டு, நாம் காளையாதலாலும், இவன் கிழவனாதலாலும், நம்மை இவன் என்னசெய்யக் கூடுமென்று இறுமாந்து வந்திருக்கின்றான். அதிலும் இன்னமொன்று; அதுதான் இவனை ஆட்டிவைப்பது; இவன் திரிகாலமு முணர்ந்த யோகீஸ்வரர்களாலும் மற்ற எவ்விதமான தேவாதி தேவர்களாலும் அறியக்கூடாத பரவஸ்துவினுடைய நிர்ணயத்தையறிந்து, இடைவிடாமல் நம்மை இரவிலும் பகலிலும் பூசை செய்யாதவன்போலே இருதயத்தினிடத்திலேயே நம்மை நோக்கி மானதபூசையாகச் செய்யப்பட்ட மகா வுள்ளன்பினனாதலால், அவ்வன்பென்னும் பலத்தினாலல்லவா இவ்வசையாத கைலாச பர்வதமும் கிஞ்சித்தசைந்தது. நாமும் நம்முடைய செய்கையும், நமது குடிவர்க்கமும், நமது இருப்பிடமும், அடியார்களுடைய இருதயத்திற்குள்ளே ஐக்கியமென்பது உனக்குத் தெரியாதா?

ஓ பார்வதி! இவனும் நம்முடைய பிரம்மாவைக் குறித்துத் தவஞ்செய்து, மகத்தான வரங்களையெல்லாம் பெற்றவன். நாம் இவனுக்குநாசங்கூறப்படாது. ஏதோ அவனுடைய இராட்சதச் செய்கையின் சுபாவத்தைக் காட்டுகிறான். இதற்கு நீ பயப்படலாமா? உனக்கு அண்ணனும் எனக்கு அன்பனுமான ஸ்ரீ மகாவிஷ்ணு இராமாவதாரங் கொள்ளுங் காலத்தில், இவன் பலம் குன்றி யடங்கிவிடுவான். என்று சொல்லிக்கொண்டே யவன் கெருவத்தை யழிக்க நினைத்து, ஒருவருக்கும் தெரியாமல் தமது திருப்பாதத்தின் அங்குஷ்டவிரலாலே அக்கைலாசபர்வதத்தை யழுத்தினார். அப்படியழுத்திவிடவே தசக்கிரீவனானவன் அடியிலே அகப்பட்டுக்கொண்டு நசுங்கி, இருபதுவிழிகளும் பிதுங்கி, முதுகெலும்பு நெறநெறவென்று பொடிபடக் கீச்சுகீச்சென்று கூவி, அப்பிராணிப் பூச்சுகள் ஓர் இடுக்குத்துறைமுகத்திலே யகப்பட்டுக்கொண்டு தத்தளிப்பதுபோலே பத்து வாய்களாலும் கத்திக்கொண்டிருந்தான். அந்தக் கைலாசமலையும் முன்போற் சாயாமல் அமர்ந்துவிட்டது. இதுகண்ட சிவகணங்கள் முதலிய சகல தேவாதிதேவர்களும், இருடிகளும், மற்ற சர்வ புவனர்களும், உள்ளக்களிப்புற்றுச் சிவபெருமானைத் துதித்துக் கொண்டாடினார்கள். அருகிலிருந்த தாயாகிய பரமேஸ்வரியும் ஆனந்தித்து இதற்குள்ளே என்னகாரியஞ் செய்தீர்? எனக்குத் தெரியாமற்போச்சுது? உமது மகிமையே மகிமை? என்று பலமுறை போற்றிசெய்தாள்.

## இராவணன் கைலைமலையின்கீழ் அகப்பட்டு வருந்துதல்.

இப்படி லங்காதிபதியாகிய தசக்கிரீவனானவன் அந்தக் கைலாசமலையின் கீழ்ப்

புறத்திற்கும் பாதாளத்திற்கும் நடுமத்தியிலே அகப்பட்டுக்கொண்டு ஆலைவாய்க் கரும்புபோலவும், செக்கின்வாய் எள்ளைப்போலவும், அரவின்வாய்த் தவளைபோலவும், தேகத்தின் கூறுபாட்டுகளிலுள்ள எலும்புகளனைத்தும் தூள்படக் கெருவமெல்லாம் அடங்கிப் பலமனைத்தும் ஒடுங்கக் களைப்படைந்து, வெகுநாளாய் ஊண் உறக்கமின்றி மெய் சோர்ந்து தன்னில் தானே நினைந்துருகி, ஐயையோ தெய்வமே! இதென்ன அனியாயம்? ஆழமறியாம லிறங்கி முழிக்கும்படி நேர்ந்ததே? இது நம்முடைய வாய்க்கொழுப்பினாலல்லவா? எலியையொத்த சிறியேன் மலையை தாங்குவேனா? வருகிறதெல்லாம் எனக்குத் தானா வரவேண்டும்? இதையறிந்துதானே மாலியவான் தேவர்களை வருத்தாதே எனவும், லோகத்தை நாசஞ்செய்யாதே எனவும், திரிமூர்த்திகளைப்பழிக்காதே எனவும் ஞாயமாய் அரசாட்சிசெய் எனவும் எனக்குச் சொன்னார். அதைச் சிறிதுங் கவனியாது தட்டிவிட்டு வந்தேனே? இனியென்ன செய்யப்போகின்றேன்? இப்போதல்லவா சகலமும் தெரியவருகின்றது? அந்தக் கிழவனை யிகழ்ந்த பலன் இங்கே நிமிர்ந்து விடுகிறதே? ஐயையோ! அறிவும் ஒழுக்கமும்போதித்த பாட்டனாகிய மாலியவானுடைய சொல்லைத் தள்ளிவிட்ட லாபமிதுதானோ? நண்டு கொழுத்தால் வளையிலிராதென்பதுபோலே நான் திக்குவிஜயஞ் செய்யவந்து வாரிக்கொண்டது போதும், போதும் இலேசாய்சொல்லிவிட்ட மகோதரன் முதலானவர்களாலல்லவா இவ்வித துன்பை யடையலாச்சுது? சிரிக்கச்சொல்லுகின்றோர் விஷயத்தையும், அழச்சொல்லுகின்றோர் மகிமையையும், சிறிதுமறியாத மூடனாகினேனே? இந்த மூலகாரணத்தை யறியாமல் மந்திரிகளுடைய பேச்சைக்கேட்டு வந்ததனாலல்லவா இந்தவினை நேர்ந்தது, இக்கைலாசபதியை நாமென்னமோவென்று நினைத்தோமே? லோககர்த்தாவாகிய பரமேசனாய் சர்வ ஜீவதயாபரனா யிருக்கப்பட்ட சாம்பசிவமூர்த்தியென் றறியாமற் போனோமே? மிண்டனுக்கு மிண்டனு மிருப்பானென்பதுந் தெரியாமற் போச்சுதே? விரலுமுரலுஞ் சரியாகுமா? இவர் சொரூபம் தெரியாமற் குதிக்கின்றபோது நந்திசொன்ன சூட்சுமத்தையாயினுங் கண்டுபிடிக்காமற்போனேனே? என்ன காரணத்தினாலேயோ மதிமயங்கி மோசம்போனேனே ? இனி எவர்கள் என்னைமதிப்பார்கள்? உலகமென்னசொல்லும்? நாம்தேடிக்கொண்டகாரியம்பெண்டுகளும் நகைக்கலாச்சுதே? பிரதாப லங்கேஸ்வரனென்று ஈரேழு பதினான்குபுவனங்களும் மெச்சும்படியாய் அரசாக்ஷிசெய்தும் கிஞ்சித்தாயினும் யோசியாமற் போனேனே? இப்படியும் உண்டாவென்று துக்கித்துக்கொண்டிருந்தான்.

தசக்கிரீவருக்கு மந்திரி உபாயஞ்சொல்லல்.

கேளும் ஸ்ரீராமா! இப்படியாகத் தசக்கிரீவனானவன் துன்பப்பட்டு அவனுக்கு முன்னம் அன்னைவார்த்தசெவ்வெண்ணெயும் வெளிகண்டு, தன்னையுமறந்து, பின்னையும் ஆவி யுண்டோ வில்லையோவென்றிருக்கும்பொழுது பொன்னுலகத்தாரும் மற்ற மன்னர் மன்னர்களு முன்னி, ஒருத்தருக்கொருத்தர் பன்னிப் பன்னிக் களிப்புற்றிருந்தார்கள். அவ்வேளையிலே மாரீசன் முதலான மந்திரிகள் கேட்டு விசனமடைந்து, இந்த மகோதரன் பேச்சைக் கேட்டல்லவா இவனை விடுத்தோம்? இப்பொழுதுஅவன்படும் கஸ்தியை நாம்கண்ணுற் பார்த்திருக்கலாமா? என்றிருதலைக் கொள்ளியி லெறும்புபோல வாடினோர்களாய் நாம் இதற்கொரு உபாயஞ் செய்யாவிடில் பிழைப்பது அரிதென்றெண்ணி உடனே அந்த கைலைமலையைச் சுற்றிப் போய் அவனைக்கண்டு அவனுடன் தாங்களும் மிகுந்த வியாகுலமடைந்து, ஐயா இலங்கேசா! உலகத்திலே பராக்கிரம சவுரியத்தினாலே மிகுந்தபலமுடையவன் பலமில்லாமல் தனக்குக் கீழ்ப்பட்டவனைப் பகைத்துத் துன்பஞ்செய்தால் அந்தத் துன்பமானது அவனிலும் மேலான பலமுடையவனாலே தீர்க்கப்படும். ஆனால் சகலமான தேவர்களினும் மேன்மையுடையவராய் தேவதேவனென்றும் மகாதேவனென்றும்பேர்படைத்து தனக்குமேலானவரு மொப்பானவரு மில்லாமல் தானே தனக்கு நிகராய் விளங்கும் பரமசிவனாலே வரப்பட்ட துன்பம் அந்தச் சிவனாலே

தீர்க்கப்படுமெல்லாமல் வேறொருவராலே தீர்க்கலாகாது. ஆனதால் அந்தப்பரமசிவனிடத்திலே யாவனொருவன் அறியாமையினாலே ஆயிரம் குற்றங்கள் செய்யினும் ஒருகாலத்திலே அறிவு உண்டாகிப் பயந்து நீயே கதியென்றுநம்பித் தோத்திரம் பண்ணுவானாகில் அவர் பேரருளுடையராகையாலே அதற்குச் சந்தோஷப்பட்டு, அவன் செய்த குற்றங்களையெல்லாம் குணமாகக்கொண்டு கிருபைசெய்து ரக்ஷிப்பர். எப்பொழுதும் சர்வ ஜீவதயாபரனாகிய சாம்பசிவமே யாரினும் மேலான தனிப்பொருளல்லதுவேறல்லர். அவர் படைத்தளிக்கும் ஜீவாத்மாக்களிலே நாமும் ஒன்றல்லவோ? அவர் எங்கும் நிறைந்த தேஜோமயப்பொருளாதலாலே அவர்க்கு நம்மிடத்திலேயும் கிருபாநோக்கம் உண்டாகும். அதிலும் அந்த பரமேஸ்வரனுக்குச் சாமவேதத்திலே அதிக விச்சையுண்டு. நீரும் அதிற் பழக்கமாதலால் அதற்குகந்து பிரசன்னமாவார். அப்பொழுது உமக்குஇந்த வியாகுலமுதலான கஷ்ட நிஷ்டூரங்கள் எல்லாம் நிவர்த்தியாய்விடுகிறதுமல்லாமல் உமது மனோபீஷ்டப்படிக்கு நினைத்த வரமெல்லாம் பெறலாமென்று ஓர் தந்திரவுபாயத்தை யுரைத்து அப்பாலகன்றார்கள்.

## இராவணன் சாமவேத கானஞ்செய்தல்.

இப்படி உற்றமந்திரிகளுரைத்த உண்மைவாக்கியமானது உலோசனன் மற்றவனுக்கு ஊன்றுகோல் கிடைத்ததுபோலவும், வாடும் பயிருக்கு வானஞ்சொரிந்தது போலவு மிருந்தபடியால் தசக்கிரீவனானவன் அதையே பெரிதாயெண்ணி, வேறு முகாந்தர மென்னவிருக்கிறதென்று தெளிந்து, இந்தச்சமயத்திலே இவ்வளவுதான் நமக்குச் சொல்வா ராரெனவுங்கருதி கராவினாலவத்தையுறுங் கரி யழைப்பதுபோல ஓ மகாதேவசம்போ! ஓ சிவசங்கரதேவா! ஓசாம்பவிமனோகரா! ஓ கைலாசகிரிநாதா! ஓ கமலபொற்பாதா! ஓ பாலலோசனா! ஓ பரமதயாளா! ஓ அரகரசிவனே! ஓஅருள் தருபரனே! ஓ ரிஷபவாகனா! ஓ நின்மல சொரூபா! ஓ சந்திரசேகரா! ஓ சடாதார தற்பரா! ஓ முப்புரதகனா! முனிவர்கள் வந்திதா! ஓ நான்மறைக்கெட்டா நாதாந்த சோதி! ஓ சுத்தநிர்மலனே! ஓ சுபாஸ்கர வொளியே! ஓ மேருவில்லுடையாய்! ஓ விளங்குதிரிசூலா! ஓ மான் மழுவேந்தி! ஓ வானவர் பூஜிதா! ஓ பார்வதி சமேதா! ஓ பக்தர்கள்சகாயா! ஓ விரிஞ்சனுங்காணா வெள்விடைக்கதிபா! ஓ பஞ்சாட்சரனே! ஓ பரவெளிசிவனே! ஓ தந்திமுகத்தனைத் தந்தருள்மூலா! ஓ சரவணபவனைத் தாங்கிய சீலா! சரணம்சரணம் சங்கராசரணம்; தருண மறிந்தெனைத் தாங்குவாய் சரணம்; அத்தாசரணம் அமலாசரணம்; நித்தாசரணம் நிறைவே சரணம்; போற்றி போற்றி புண்ணிய மறையோய்; போற்றி போற்றி புங்கவர்க்கிறையோய்; போற்றி போற்றி யென் புன்மதி தவிர்த்தோய்; ஓ சுவாமி! ஏழையான நான் தெரியாமற்செய்த பிழையை க்ஷமித்துக் காக்கவேண்டும். இத்தருணம் உம்மையல்லாமல்வேறு துணையில்லை. என்று வாய்விட்டுக்கூவி, தாயாகிய பரமேஸ்வரியையும் இவ்விதமே பிரார்த்தனை செய்துகொண்டு தன்னுடைய பத்துத்தலைகளிலே ஒரு தலையையும், இருபது கைகளிலே ஒருகையையும் அறுத்து யாழாகச் செய்துக்கொண்டு அந்த மலையின்கீழே தானே தான்படும்படியான அவஸ்தையுடனே ஜகத்திராண்டுமட்டும் வீணையின் அருமையாலே சாமவேதகானஞ் செய்தான். அப்படி இவன் செய்துவரும் சாமவேதகானத்தினாலே சர்வ சீவராசிகளும் தேர்ச்சியடைந்ததுமல்லாமல் ரிஷியீஸ்வரர் முதலானோரும் மகிழ்ச்சியடைந்தார்கள். அதுகாலையிலே வெள்ளியங்கிரியிலிராநின்ற ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியானவர் ஆனந்தமடைந்திருப்பதுகண்ட பார்வதாதேவி பரமேஸ்வரனைப்பார்த்து, சுவாமி! அடியாள் இப்பேர்ப்பட்ட விநோதமான கானத்தை இதுகாறும் கேட்டதில்லை. இதுவோ தேகம்பரவசமுறும்படியானதாயும், அற்புதந்தரப்பட்டதாயும் இருக்கின்றது. இப்படி கானஞ்செய்வோனெவனோ தெரியவில்லை. ஆதலால் இதைநாம் சிரவணித்தும்சும்மாயிருப்பதுஞாயமல்ல. அவனிடஞ் சென்றும் இன்னானென் றறிந்து, கருதினவற்றைத் தருங்கடமை நம்மதல்லவா வென்றாள். இதைக்கேட்ட ஜகதீசன் உமாதேவியைப்பார்த்து, பெண்ணே! உனக்கு நினைவில்லையோ? ஆயிரம் வருடத்தி

ற்குமுன்னர் இந்தப்பர்வதத்தை அடியோ டே ஒருத்தன் எடுக்கவந்தகாலத்தில், நீ அச்சமுற்று என்னசெய்வேனென்று தழு விக்கொண்டாயே? அவனல்லவா இவ்வித கானஞ் செய்கின்றது? அந்த உள்ளன்பு எனக்குமுண்டு. ஆனல் அவன் துன்மார்க் கனு யிருக்கின்றபடியாலும், முன்னமேதா னே பிரமாவினிடத்திலே தக்கவரங்களைப் பெற்ற பலத்தினுலே நம்மையே முழம் போட வந்தவனு யிருந்தபடியாலும், இப் பொழுது நாம் அவனைக் காணும்பட்சத் திலே ஏதாவது ஒருவரம் தரவேண்டிய தாய் நேரிடுமல்லவோ? அவ்வரத்தைக் கொண்டு பின்னும் அவன் உலகத்தை நா சம்பண்ணுவானே என்கிற ஏக்கமேயல் லது வேறில்லையென்று சொன்னர். அந்த வசனங் கேட்ட லோகேஸ்வரியான பார் வதியம்மன் பின்னும் தக்கபடி சொல்லி, அப்பால் நடக்கவேண்டியவைக்கு என்ன சொல்வீரென்றுள். பரமேஸ்வரன் அத் தேவியாருடைய கருத்திற் கிசைந்தனர்.

## பரமசிவன் தசக்கிரீவனுக்கு வரங்கொடுத்தல்.

கேளும் ஸ்ரீராமபத்திரா! ஆதிசேஷ னும் தன்புத்தியினுல் எண்ணுதற் கருமை யாகிய சாமவேதகானஞ் செய்ததில் மனமி ரங்கிய ஈஸ்வரனும் ஈஸ்வரியும் மழைவி டைமேலெழுந்தருளி தசக்கிரீவன்முன்வந் தார்கள். உடனே அவன் ஜன்மசாபல்ய னுனேன் என்று அந்த வருத்தத்தில் நின் றும் அவர்களது திவ்விய சாணாரவிந்தங் களில் தீர்க்கதெண்டன் செய்து, இருபது கண்களிலும் நீர் தாரையாய்வடிய நிமிர் ந்து, சுவாமீ! அடியேனை ஆதரியும். இக் குற்றம் பொறுத்தருளும், நாயினுங்கடைய னுகிய சிறியேனை உமது கடைக்கண்ணுற் பார்த்துக் கிருபையுடன் கைதூக்கியாட் கொள்ளும். ஓ என்னையாளுங் கடவுளே! எனப் பலவாருய்ப்போற்றி வருந்தினுன். இப்படி வருந்துகின்றவனை சுவாமி பார் த்து, அடா தசக்கிரீவா! உனது வீறிட்ட குரலின் ஓசையினுல் அதற்கேற்ற ஒருபெ யர் இராவணனெனத் தந்தேன். இன்றுமு தல் உனக்கு அப்பெயர் வழங்கிவருக. நீ கருதிய வரங்கேள் தருகிறேனென்று திரு வாய் மலர்ந்தனர். அம்மாத்திரத்தில் அத் தசக்கிரீவன் இந்தமட்டுக்கும் விட்டால் அதுவே போதுமென் றெண்ணியிருப்பவ னுதலால், யாதுந் தோன்ருதவனுய் அசை வற நின்ருன். அவன் குறிப்பையுணர்ந்த பரமசிவன் சற்ருலோசித்து, இவனுக்கு இதுவே உயிர்ப்பிச்சைதந்த வரமெனக் கொண்டிருக்கின்ருன். இவன் நம்மை வரங்கேளான். எனத்தாமே ஜீவகாருண்ய த்தினுல் திருவுளமிரங்கி, அப்பா ராவணு! நீ கேழ்க்காவிடினும் உனது அருமைத் தொண்டுக்கும் உயர்வாகிய சாமவேத கான த்திற்கும் உள்ளமகிழ்ந்தோமாதலால், உன க்கு மூன்றரைக்கோடி ஆயுளுண்டாகுக. என்று கூறி எதிர்த்த சத்துருக்களெல்லா ரையுங் கொல்லத்தக்க ஓர் கூரியவாளும் கொடுத்தார். அப்போது தசக்கிரீவனுக்கு முன்னிருந்த வருத்தமெல்லாந் தீர்ந்து, எதாப்பிரகாரமாய் சந்தோஷமுற்றபோதி னும், மிகவும் மெலிவுற்றவனுதலால் வா யாற்சொல்லவுந் திடமற்றுத் தாகம்வேண் டிக் கையை எடுத்துக் குறிப்பித்தான். உட னே ரிஷபவாகனரூடராகிய ஈஸ்வரன் நந்திதேவர் முகத்தைப்பார்க்க, அவர்தேவ ர்களை எச்சரிக்க, க்ஷணத்துள் அமுதகலச த்தைக்கொண்டுவந்து எதிர்வைத்தார்கள். உடனேமிகவும் விடாய்ப்பட்டவனுதலால் ஆவலுடன் அக்கலயத்தை அப்படியே எடுத்துத் தட்டாது உட்கொண்டான். நேரில் கிருபையாற் பார்த்திருந்த பார்வதி சமேதர் அவனைநோக்கி, அப்பா ராவணு! இனி உனக்கோர் பயமில்லை. எப்போதும் போல உன் புஷ்பகவிமானத்தில் ஏறிக் கொண்டு நினைத்தவிடஞ் செல்லலாம். என்று ஆசிகள்கூறி எழுந்தருளினுர். அப் பால் தசக்கிரீவன் மறலிகையிற் சிக்கிய ஆன்மா மீண்டதுபோல முன்னிலும்பாங் காய்த் தேர்ச்சியடைந்து, மகா பலத்தைப் பெற்று, தன்னுடைய ராணுக்களோடும் புஷ்பகவிமானத்தேறி வெகு கீர்த்தியுடன் இமயமலையை நோக்கி வருகின்ருன். இந் தச்செய்திகேட்டரிஷிகளோடு தேவர்களெ ல்லாருங்கூடி, இந்தத் தசக்கிரீவன் முன்பு பிரம்மதேவனிடத்திற்பெற்றவரத்தினுலே ஒருகாலத்தினும் சலனமில்லாத கைலாச கிரியை அடியோடேபேர்த்தான். இப்பொ ழுது அந்தப் பலத்துடனே பரமசிவன்

கொடுத்த வரத்தைக்கொண்டு எந்த உலகத்தை எவ்விதஞ்செய்வானோதெரியவில்லை. இனி நாம் எல்லோரும் இவனால் என்ன பாடு படுவோமோ? என்று மனங்கலங்கிப் பயந்துசீக்கிரமாகப்போய் மகாவிஷ்ணுவினிடத்திலே முறையிட்டார்கள்.

அதுகேட்ட மகாவிஷ்ணுவானவர் அவர்களைரக்ஷிக்கும்பொருட்டுத் திருவுள்ளங் கொண்டு, முன்னம் ஒருகால் மகாபலிச்சக்கரவர்த்திக் கெதிராகப் போனது போலக் கையிலே குடையுங் கமண்டலமுமேந்தி, அற்புதமான பிரம்ம சந்நியாசி வேஷங் கொண்டு தசக்கிரீவனுக்கெதிரேவருகிறார். அப்பொழுது அவன் சீக்கிரமாக விமானத்தினின்றுங் கீழேகுதித்து, எதிர்கொண்டு வந்து வணங்கி நமஸ்கரித்துப் பாதபூசை பண்ணி அநேக உபசாரங்கள் செய்தான். மகாவிஷ்ணுவானவர் அவனைப் பார்த்து, லங்காதிபதி! உன்னைப்போலும் பெருமை படைத்தார் எந்தவுலகத்திலுமில்லை. ஆனாலும் உன்னுடைய விர்த்தாந்தங்களைச்சொல்லுவாயென்று கேட்க. அவன் அவரைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ அந்தணர் பெருமானே! என்னிலும் பெருமையுடையவன்போல எனக்குமாறுபாடுபேசியகுபேரனைஜெயித்து வெற்றிகொண்டேன். சிவனுடைய கைலாசகிரியை அடியோடும்பெயர்த்தேன். அந்தப் பலத்துக்குச் சந்தோஷப்பட்ட பரமசிவன் எனக்கு மூன்றரைக் கோடி ஆயுளும், அவருடைய சூலத்துக்குச் சமானமான ஒருவாளாயுதமும் கொடுத்தார். இதுதான்என்னுடையவிர்த்தாந்தம், என்று சொல்லவும் அதற்கவர் அவனைப் பார்த்து, ஓ அதிவீரப்பிரதாபம்பெற்ற தசக்கிரீவமகாராஜனே! நீ ஒருவருக்குங்கிடையாத வரங்களைப்பெற்றாய். நீ எத்தனைகாலமிருந்தாலும் அத்தனைகாலமும் உலகத்துக்கு உபகாரமே யானதால் குறையாயிருக்கிற அரைக்கோடி வருஷமும் பெற்றாயானால் உனக்கு நிகரானவர்களொருவரும் இல்லை. எல்லா வுலகத்திலும் உன்னுடைய அதிகாரஞ் செல்லுமென்று சொல்லிப்போயினர். அதுகேட்ட தசக்கிரீவனானவன் உடனே அவ்விடத்தினின்று நீங்கி அதிசீக்கிரமாகக் கயிலாசகிரிக்குப்போய்ச் சிவனை நோக்கி அநேகமான தோத்திரங்கள்பண்ணி மிகவும்வணக்கத்துடனே நின்றான். இப்படி அவன் நிற்கும்பொழுது பின்னும் நீ இங்கேவந்தகாரியம் என்னவென்று பரமசிவன் கேட்க, அதற்கவன் குறையில்லாமற்படிக்கு அரைக்கோடி வருஷம் எனக்குக் கொடுக்கவேணுமென்று சொன்னான். அப்பொழுது பரமசிவன் நீ கேட்டபடியே உனக்கு அரைக்கோடிவருஷம் கொடுத்தோம் என்று அனுக்கிரகஞ் செய்தார். இப்படிக்கு முன்புபெற்ற மூன்றரைக்கோடி வருஷம்போய் அரைக்கோடிவருஷமாக வரம்பெற்றதைத் தேவர்களும் முனிவர்களும் கேட்டு, இவ்வளவாகிலும் பரமசிவனும் மகாவிஷ்ணுவுமுபகாரஞ் செய்தருளினார்களே? ஆனதால் சிலகாலஞ் சென்றாகிலும் நாம் எல்லோரும் சவுக்கியத்தை அடைந்திருக்கலாம் என்று ஆலோசித்திருந்தார்கள்.

### இராவணன் வேதவதியாற் சாப மடைதல்.

கேளும் ஸ்ரீராமா! இப்பால் யாவரினும் அதிக பல பராக்கிரமசாலியாகிய தசக்கிரீவனானவன் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனிடத்தில் வாளாயுதமும் அரைக்கோடி ஆயுளும், ராவணனென்னும் பெயரும், அதிக பலமும் படைத்தவனாகி, தன்னுடைய பரிவார சேனைகளுடனே அவ்விடத்திலே நின்று நீங்கி, சிலநாள் சகல தீவுகளிலுஞ் சஞ்சரித்துக்கொண் டிருக்குமளவில், ஒருநாள் இமவனமென்னும் பெயர் பொருந்திய மகா ஆரண்ணியத்திற் சேர்ந்தான். அங்கே வன்னமயிலாடும் கிள்ளைகள் கொஞ்சும் புஷ்பங்கணிறைந்த ஓர் தண்டலையின்கண் காமமுதலானவையும்மகற்றி அக்னிவளர்த்தி அதனிடை நின்றுமகா தவமியற்றும் மாணிக்கத்தை நிகர்த்த ரூப லாவண்ய சவுந்தரியமுள்ள ஓர் கன்னிகாஸ்திரீயைத் தசக்கிரீவன் பார்த்தான். அம் மாத்திரத்தில் அவன் ஸ்தம்பம்போல் அங்ஙனே நின்று பிரமித்து, இத்தகை வாய்ந்த சௌந்தரியவதி இவ்விடம் ஏது காரணமோ தவஞ்செய்யத் துணிந்ததென்றும், உலகமாயையை நிவர்த்திசெய்து, அழிவில்லாப் பரம்பொருளை வேண்டி அமர்ந்தனளோ வென்றும், வயதுற்ற வாலைப்பருவத்திலும் வதுவையாகாத மடமங்கையா யிருப்பதனால் எவ்வாறு நினைக்

கக்கூடுமென்றும், இளமைக்கேற்றவாகைப் புருஷனை விரும்பி இவ்வாறுயிருளோ? என்றும், அதுவாயிருக்குமாகில் இவட்கு நம்மினுஞ் சிறந்த தலைவனுங் கிடைப்பா னோவென்றும், சதுர்முகனால் நாமும் வேண்டியரூபம் பெறத்தக்க வரம் பெற்றிருக்கின்றோமல்லவா? என்றும், அஃது இவளுக்கு எவ்வாறு வெளியுறும். யாம் விளம்பித் தெளிவுறச்செய்வதே சரியென்றும், ஒருவேளை தேவனருளால் நமக்கு இவள் இசைந்தாலும் இசையாவிடினும் இவளை வலியக் கைப்பற்றுவதே சரியென்றும் பலவாய் யோசித்து, காலஹேதுவாய் (ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந்துறும்) என்பதுபோல தான் நினைத்ததே சரியென்று விமானத்தைவிடுத்து, தனியாய்யாதினும்பற்றற்றுத் தன்னை மறந்து கண்மூடியிருக்கும் அவளையடுத்து, ஓ பெண்கள் நாயகமே! நீ யார்? உனக்கு என்ன பெயர்? நீ தவத்துக்குவந்த காரணமென்ன? என்று உரத்தசப்தமாக வானமுமுடைபடும்படியாய்க் கர்ஜ்ஜித்துக் கேட்டான்.

இவ்விதக் குரலைக் கேட்டவுடன் தவத்திலிருந்த வேதவதியென்பவள் கண்களை விழித்துப்பார்த்து, ஓ! ஓ! என்னகாரியம் செய்தோம்? மகாரணியத்தில் புருஷசஞ்சார மிராதென் றெண்ணி யிருந்தோமே; இவன் யாரோ தெரியவில்லையே? ஆயினும் தக்கபடி சொல்லுவோமென்று அக்கன்னிகையானவள் அவனைப்பார்த்து, ஓ இராஜனே! நீர் கேட்டதற்கு நான் சொல்வது யாதெனில்: அந்தணரில் மிகுந்த வீரகுசத்துவ மகாமுனிவருடைய குமாரத்தி நான்; என்பெயர் வேதவதி; என்னுடைய பிதா சதாகாலமும் சந்தியாவந்தனாதி நித்திய நைமித்திய கருமங்களிலே எவ்வளவுந் தவறாமல் விதிப்படி வேதபாராயணம் செய்துவருவார். அப்படி செய்துகொண்டு வருகிறநாளையில் அவர் ஓதப்பட்ட வேதசொரூபத்திலே நின்று நான் பிறந்தேன். அப்படி வேதத்திற் பிறந்த காரணத்தால் எனக்கு வேதவதியென்றுபெயரிட்டார். நானோகன்னிகாஸ்திரீ. என்னை மணம்புரியவேண்டுமென அமரர்களும்-அரக்கர்களும்-அசுரர்களும் - மற்றயாவரும்வந்து எனது பிதாவை வின்வினார்கள். எனக்கு அவர்கள்பேரில் இஷ்டமில்லாமையால் நடவாதென்று உரைத்தேன். அதனால் அதிலோர் அரக்கனாகிய சம்பு என்பவன் அதை மனதில்வைத்துக் கொண்டு என் பிதாவை இரவில்வந்து மரணமாக்கி விட்டுப் போய்விட்டான். அதுகண்ட யான் சிந்தைநொந்து இவ்வேடங்கொண்டு என்மனதில்நெடுநாளாய் கருதியிருக்கும் என் வடிவுக்கேற்ற புருஷனாகிய விஷ்ணுவை நினைத்துத் தவமியற்றுகிறேனென்றாள். இதைக்கேட்ட தசக்கிரீவன் ஓ பெண்ணே! என்னசொன்னாய்? மாதர்களுக்கெல்லாம் சிகாமணியா யிருக்கிற உன் வாயில் அந்தச்சொல் வரவேண்டியதென்ன? கரும்பிருக்க வேம்பை நுகர்வாரு முண்டோ? கற்பகத்தை விடுத்து அற்பரையடுப்பார்களா? யாதிற் சிறந்தவனென்று அவ்விஷ்ணுவை நினைத்தாய்? அவனை மிருகமென மதிக்கத்தக்கதே யல்லது வேறென்ன யிருக்கின்றது. மீனும் ஆமையாயும் சிங்கமாயும் இன்னும்பலவாறும் அவனெடுத்த தேகத்தின் கதைகளை நான் சொல்லவும்வேண்டுமோ? ஐயையோ! அந்த நெடுமாலாகிய நெட்டைக்கோலனையா இச்சிக்கவேண்டும்? அவனைப்போல நானல்ல. நானோபுலஸ்தியப்பிரம்மாவின் சம்பந்தத்தினால்வந்த பௌத்ரன். எனது நாமகரணம் தசக்கிரீவனென்று உலகஞ் சொல்லும். விச்சிரவப்பிரம்மாவே எனக்குப் பிதாவாயிருக்கிறார். நான் இவ்வுலகத்திற்கு ஆதாரகர்த்தாவாகிய கைலாசபதிக்கு அன்பன். எனது வல்லமையால் அக்கைலையங்கிரியையெடுத்த வீரப்பிரதாபன். மூன்றுலகமும் புகழ்கொண்ட லங்கைப் பட்டணத்தில் அரசாக்ஷி செய்யப்பட்டவன். மகத்தாகிய ஈஸ்வர வரமல்லாது பிரம்மாவினால் சமையத்துக்கேற்ற ரூபம் எடுக்கத்தக்க அனுகூலவரமும் பெற்றிருக்கின்றேன். ஆதலால் நீ கோரின அந்த விஷ்ணுவானவன் என்னிலுஞ் சிறந்தவனோ? நீ பெண்புத்தியால் அவனை இதுவரையிலும் பெரிதாய்க் கருதினாய். இனி அந்த நினைப்பைவிட்டு என்னை விவாகஞ் செய்துகொண்டாயானால் அந்த விஷ்ணு முதலானபேர்களும் உன்னோடு நல்லவார்த்தைசொல்லுவார்கள். அரம்பை-ஊர்வசி முதலான தேவஸ்திரீகளும் உன்னேவல்

கேட்டு நடப்பார்கள். இந்திராணி முதலானவர்களுக்குங் கிடையாத சகலபோகபாக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பாய். என்று சொல்லித் தன்னால் இயன்றவரையில் இராக்ஷதமாய்கைத் தந்திரமெல்லாஞ் செய்து நின்றான்.

இவையனைத்தையும் தவத்தினிற்கும் கன்னிகையாகியவேதவதியானவள்கேட்டு சிந்தை பொறுக்காமல் அந்த தசக்கிரீவனைப்பார்த்து, அடா இராக்ஷதப்பதரே! இதற்குள் மறந்துவிட்டாயோ? உன் வல்லமையும் சாமர்த்தியமும் ஒருவாறு நடவாமல் வெள்ளியங்கிரியின்கீழ் அகப்பட்டுப் பிராணாவஸ்தையடைந்து, பின்பு பல்லைக்காட்டிக்கெஞ்சி யாவரும் நங்கச்சொல்லும்படியாகச் சகஸ்திரவருடம் சாமகானஞ்செய்து சிவபெருமான் அருளினால் தேறி தப்பித்துக்கொண்டு வந்த வுனக்கும் ஒருவாயா? அஃதென்ன நான் அறியாத குலாவலா? ஒரே வெண்மையாயிருக்கின்ற இரண்டு வஸ்துவாகிய லவணமும்-சூடகமும் சரியெனக் கொள்வாருமுண்டா? அடா நிர்மூடா? நானெனு மகந்தைகொண்டு உன்னாலான பிரட்டெல்லாம் செய்ய வந்தாய். நீயா அந்த சாக்ஷாத் ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்குச் சமானமாவாய்? வானமுட்டிப் பறக்கினும் ஊர்க்குருவி பறவைராஜனுக்கு நிகராமா? ஓ துர்க்குணமுடைய துஷ்டா! இந்தக்ஷணம் அப்பால்அகன்று விடு? இவ்விடம் நிற்காதே. என்றியம்பித் தான் மௌனத்திருந்தாள். உடனே தசக்கிரீவன் கோபங்கொண்டு ஆலகாலவிஷம் போற் சீறி அதிக்கிரமித்து, அந்தக் கற்புடைய வேதவதியின்கூந்தலைப் பற்றிவலிக்க நினைத்தான். அந்த நினைப்பையறிந்த வேதவதிக்கு ஆக்ருஷம்பிறந்து, உடனே அடா துன்மார்க்கப்பதரே! அடாதகாரியஞ்செய்தாற் படாதபாடு படுவாரென்பது தெரியாதா? உனக்குநேர்ந்த கெட்டகாலத்துக்கேற்ற துர்புத்திகொண்டாய். இருப்புத்தூணைச் செல்லெரிக்குமா? அக்கினி போலுஞ் செழித்திருக்கிற என்னைத் தீண்டவந்தாயல்லவா? உனது வல்லமை நடவாது. என்று சீறிப்பேசித் தணலை வளர்த்தி, ஆதாரமந்திரத்தைச்செபித்து, அது சுவாலாக்கினியா யெழும்பி எரியும்போது இவன்தொடவெண்ணிய சிகையைத் தன் கரமாகிய வாளாலே துணித்து அதனை அவ்வக்கினியிற்போட்டு அடா இராவண காதகா! என துதவத்துக்கு இடையூறுவருமாதலால் இதோ நீபற்றநினைத்த கொண்டையும் அறுத்துப்போட்டேன். இனி நானும் இந்த அக்கினியில்தானேகுதித்து மறுபடியும் சீதையாய்ப்பிறந்து உன்னுயிரை நாசமாக்குகிறேன். அத்துடன் உனது குலத்தையும் கருவறுக்கிறேன். என்றுசாபமிட்டுத் தானும் அவன் பார்க்கவே திடீரென்று மனவுறுதியினால் தீயில் குதித்து பின்பு பூலோகத்தில் கலப்பைநுனியிற் சீதாதேவியம்மனாக அவதரித்துத் தேவரீரைத் திருமணம் புரிந்தனள்.

## இராவணன் மருத்துராஜாவின் யாகமழித்தல்.

கேளும் ஸ்ரீரகுநந்தனா! ஆதியில் நியமித்த விதிப்பிரகாரம் வந்து நேரிட்ட வேதவதி சாபத்தை ஏற்றுக்கொண்ட தசக்கிரீவனானவன் திகிலடைந்து, இதென்ன அநியாயம்? பட்டகாலில்தானா படவேண்டும்? எனக்கென்று இந்தச் சாபங்களெல்லாம் எங்கிருந்து சம்பவிக்கின்றனவோ? ஐயையோ! தெய்வமே! அக்கன்னிகையை நாம் விரும்பினதினாலல்லவா இவ்வாறு நேர்ந்தது? சகல வேதங்களுங்கற்றும் பிரயோசனமென்ன? எல்லாம் விருதாவாய் மதிமயங்கிக் கடைசியில் ஒரு பெண்பாலிடத்தில் பிழையானோமே? இதற்கு இனி என்னசெய்யலாம்? காலத்துக் கேற்றபடி வரப்பட்டவைகளை யனுபவித்துத்தான் தீரவேண்டும். அதற்கெல்லாம்பின்னிடைவதில் வருவது வாராதிருக்குமா? என்று தீர்மானித்துக்கொண்டு தைரியம்விடாமல் திடகாத்திர வீரபராக்கிரமத்துடன் தன் சேனைகளையெல்லாம் புஷ்பவிமானத்தில் ஏற்றிக்கொண்டு, அங்கிருந்து புறப்பட்டு சகலவிடங்களிலும் சுற்றித் திக்குவிஜயஞ் செய்துகொண்டு, பல மன்னர் மன்னர்களையெல்லாம் வெற்றிகொண்டு கப்பணம்பெற்று, அளவிறந்த ஸ்திரீகளையுஞ் சிறையெடுத்து, மகா வுக்கிரத்துடன் இமையகிரிக்கருகில் வருகிறான்.

அங்கே பொருளும்-புண்யமும்-குணமும்-கொடையும் - செல்வமும்-கல்வியும் -

சீரும்-சிறப்பும் - அறமும்-பொறுமையுமுள்ள மருத்துராசனனெவன் கற்பகவனத்திற்கு நிகராய் வானத்தைமுட்டும் விநோதமான ஒரு பூஞ்சோலையில் யாகசாலை நியமித்து, அதில் சங்கவர்த்தன ரென்பவரை ஆசானக வைத்துக்கொண்டு, யாககுண்டத்தில்அக்கினியைமூட்டி, வசிஷ்டர்-வால்மீகர்-நாரதர்-கௌதமர் - கண்ணுவர்-அகஸ்தியர்-ஜமதக்னி-பௌண்டிரிகர்-சதாநந்தர்-பரத்துவாசர் - விஸ்வாமித்திரர் - தூர்வாசர்-பராசர் முதலிய ரிஷிகூட்டங்களுடன் இயக்கர்-விஞ்சையர்-கருடர்-காந்தருவர் - கின்னரர் முதலாகியவர்களுடனே அஷ்டவசுக்கள்-தேவர்கோனுகிய தேவேந்திரன் - யமன் - அக்கினி-வருணன்-வாயு குபேரன் இவாள்முதலானவர்களும்புடைசூழும்படி அந்த யாகசாலை மண்டபத்தின்கண் ஆசானுரைத்தபடி கங்கைநீராடி நார்மடியுடுத்தி, தனது பத்தினியுடனமர்ந்து, வேதவிதிப்படி யாகத்தை நடாத்தி வருகிருன். அந்த யாகம் முடிவுபெற்று ஆகுதி கொடுக்குந்தருணத்தில் தசக்ரீவன் அச்சோலையின் வழியாய் வருபவன் அதனைப்பார்த்து தனது மாரீசன் முதலிய மந்திரிகளைநோக்கிச் சொல்லுகிருன். ஓ மந்திரிமார்களே! இதென்ன மிகவும் விந்தையாக ஒருயாகம் நடத்துகின்ருர்கள். அவர்களுடைய திடத்தை நான் என்னசொல்வேன்? நான் அந்த வெள்ளியங்கிரியிலிருக்கும் பரமேஷ்வரரையே லேசாகநினைத்த வீரப்ரதாபன். அவ்வகைப்பட்ட நானே புஷ்ப விமானத்திலேறி வருவதை யறிந்தும் என்னைப் பணியாமலும், எனக்குத் திரைப்பணஞ் செலுத்தாமலும் அதிகக் கெருவம்படைத்து யாகஞ்செய்யும் இந்த மருத்துமன்னனை நொறுக்காமல் விடுவதுஞ் சீராகுமா? அப்படி லேசாய் விடுத்தால் நம்மை ஒரு திரணமாக மதியானு? அவனது யாகத்துடன் அவனையும் மற்றுமங்கு சூழ்ந்திருக்கும் குருமுதலிய சகல ரிஷீஸ்வரர்களையும், இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களையும், நான் நிமைப்பொழுதிற் கொல்லாவிடில் எனது வீரத்தன்மையும் ஒரு பிரதாபத்தை வகித்ததுதானு? ஆகையால் இதனை நான் முந்தி நடத்துவதற்கு உங்களிஷ்டம் இப்படியிருக்கின்றதென்று வினவ, மாரீசன் சொல்லுகிருன். ஓ முப்புவனங்களுக்குந் தலைவனுயிருக்கும் இராவணேஷ்வரா! நான்சொல்லுவதைக் கிஞ்சித்து கவனமாய்க்கேளும், நீர் எந்தக்காலத்திலும் ஒருவேளையைத் துணிந்து திடீலென்று நடத்திவிட்டு பிறகு விழிக்கின்றது உமக்கியல்பா யிருக்கின்றது. அரசாள்பவர்களுக்கு ஆத்திரம் ஆகாதென ஆதிகாவியஞ்சொல்வதை நீர் நன்ருயறிந்தும் அதை மறந்து இவ்வாறு ஆத்திரப்படலாமா? எப்போது முன்பின் தெரியாமல் ஆழக்கிணற்றி லிரங்கிவிட்டு, பின்பு எல்லோரும் வாருங்கள்? என் கையைப்பிடித்துத் தூக்குங்கள்? என்பதினல் என்ன பிரயோசனமும் கீர்த்தியுமுண்டு. ஐயா தசக்கிரீவமகாராஜனே! திருஷ்டாந்தமாய் நீர் கைலைமலைக்கீழ் கதறியழுததும் கன்னிகை வேதவதியிடத்திற் காலாகாலத்திலும் எண்ணித் துக்கிக்கத்தக்க சாபத்துக்கு ஆளானதும் போதாதா? நல்லோர்க்குப் பலசொல்லும் வேண்டுமா? நமது நிலையை நாம்யோசித்துநடந்துக்கொள்ள வேண்டியதுமன்றி அந்தந்த காலத்தின் பலாபலங்களையும் உணர்ந்தொழுக வேண்டியதுதானே தெரிந்தோர்களது கடமை. அப்படிக்கிருக்க, நீர் இப்படி யெண்ணி மிஞ்சுவது சரியல்ல. எந்தப்புற்றில் எந்த நாகமிருக்குமோ அதுவுந் தெரியாதல்லவா? என்று அவனுரைத்தவுடன், தசக்கிரீவன் அருகிலிருந்த மகோதரன் மூகத்தைநோக்க, அவன் அக்குறிப்பையறிந்து சொல்லுகிருன். ஐயா பிரதாபலங்கேஷ்வரா! நாம் நமது நகரத்தைவிட்டுப் புறப்பட்டது யாதுகாரணம்? நாம் செய்வதென்ன திக்குவிஜயமல்லவா? யாவரேனுஞ் சரி! எப்பேர்ப்பட்ட சமையமானுலுஞ்சரி! இக்காலத்தில் நாம் பார்த்தும் பின்னிடையலாமா? அதுவும் திக்குவிஜயத்துக்கு அழகாமா? காலாகாலத்துக்கோர் பேச்சல்லவா? இந்த ராஜனும் மற்றங்கிருக்கும் சகலமான பேர்களுந்தான் நம்மை என்னவென்று மதிப்பார்கள்? நாம் இந்த யாகத்துக்கு இடையூறு செய்யப்படாதென்று அஞ்சிப்போனுலும் அவர்களுக்கு நாம் பயந்து பின்னிடைவதுபோல் எண்ணுர்களா? இதென்னபேச்சு? தண்டைக் கூட்டிக்கொண்டு மண்டியிட்டு ரதத்திற் குந்தியும் இன்னம் அண்டை அயலென் றெண்

ணுவார்களும் உண்டா? தைரிய சாமார்த்தியர்கள் சாவுக்கஞ்சுவார்களா? அவனே லேசானவனல்ல. அதிலும் சத்தாகிய மஹேஸ்வரயாகஞ் செய்கின்றான். இவ்வகையுற்ற விசேஷமான யாகம் இவ்வுலகத்தில் எவருஞ் செய்யக்காணேன். ஒருவரும் இவ்வாறு இயற்றினவரில்லை. நமக்கு ஒருவர் எதிரில்லையென்னும் இவனது திடசித்தத்தால் இதனைச் செய்கின்றான். நீர் இவனை யெதிர்த்து அந்த யாகசாலை முன்னிலையில் போர்புரிவீராகில் அவன் வந்து வணங்குவதல்லாது நமக்கும் நாம் செய்யும் திக்குவிஜயத்திற்கும் மிக்க புகழுண்டாகுமென் றுரைத்தான். அதுகேட்ட தசக்கிரீவன் எடுத்துக் கொடுத்ததுபோல் உரைத்த அவன் மொழிகளுக்கும் மெச்சி உடனே விமானத்தை ஆகாயத்தில் விடுத்துத் தனது புயாசலங்களைத்தட்டி ஆர்ப்பரித்துக்கொண்டு, மீசையானது துடிக்கப், பற்களை நெறநெறவென்று கடித்து, உதட்டை மடக்கிக் கோபச்சிரிப்பு காட்டி, இருபது விழிகளும் அக்கினிப்பொறிகளைக்கக்க, பகிரண்டங்களு முடைபடும்படி அட்டகாசஞ்செய்து கர்ஜித்தான். மற்ற ராட்சதர்களும் பேரிடிபோற் கூவினார்கள். அந்தச் சப்தத்தையறிந்த தேவர்கள் மன்னர்களனைவரும் ஆச்சரியப்பட்டுத் திகிலடைந்து, ஆகாயத்தை யுற்றுப் பார்த்து, சரி சரி ராவண ராக்ஷசன் வந்துவிட்டான். ஏதேது இனி இவன்விடுவனு? அவனிடத்திலும் அகப்பட்டவர்கள் தப்பிப் பிழைப்பார்களா? என்றேங்கி இடியினோசைக் கழுங்கிய சர்ப்பம்போலச் சகலரும் வியாகூலமடைந்து, ஐயையோ!! என் செய்யலாம்? நாங்கள் எவ்வாறு பிழைப்போம்? சண்டனென்று சொல்லும் இந்த மிண்டன் வந்துவிட்டானே? இனி நம்மைக்கண்டும் சும்மாவிட்டுப் போவானு? கொண்டல் வண்ணராகிய விஷ்ணுவிருந்தால் சண்டப்பிரசண்டமாய்க் கண்டதுண்டஞ்செய்வார். ஓதேவேந்திரமகாராஜனே! நீர் இதற்கு என்னவிதஞ் சொல்லுகின்றீர் என்றார்கள். அவர்களுக்கு ஆயிரங்கண்ணன் சொல்லுகின்றான். ஓ தேவர்களே! முனிவர்களே! இயக்கர்களே! இராஜர்களே! நானென்னசெய்வேன்? என்பாடுதான் காசியிற்சென்றும் கன்ம மகன்றிலை யென்னுங்கதைபோற் படவேண்டியவனு யிருக்கிறேன். ஏதோ கிஞ்சிற்று மகிழ்வாய் இந்தச் சுபகாரியத்துக்கு வந்தேன். இதற்குள் அவனுமிவ்விடம் வந்துவிட்டான். நான் அவனிடத்தில் பட்டபாடு பரமேஸ்வரனுக்கே தெரியும். என்னுடம்பைச் சல்லடைக் கண்களாகத் துளைத்திருக்கிறான். என்னை லேசாய் விட்டவனல்ல. என்று அழுவாருடன் கலந்து முறையமிட்டுத் தன் குறைகளையுஞ்சொல்லி, இவ்வேளை நீங்கள் அவாளவாள் வெவ்வேறு மாறு வேடம்பூண்டு மலை குகை கானுறு முதலிய விடங்களிற்சென்று பதுங்கிக்கொண்டால் தற்காலம் பிழைக்கலாம். இதுதான் தற்காலம் எனக்குத் தோன்றும் சூட்சுமயுக்தி. என்று சொல்லவும் அவர்களவ்வாறே ஓடி ஒளித்தார்கள். புரந்தரனுகிய தான் சமையோஜிதமாகப் புள்ளிமயில் வடிவுகொண்டு அந்தரத்தில் பறந்து சென்றான். இது கண்ட சர்வஜீவனையும் மடிக்கும் சண்டனுகிய நமன்பயந்து, நமக்குமிவன் நமனுக வந்தான்போலும் இருக்கின்றதாகையால், இவனுடன்போராடி நம்மால் முடிவதல்ல இனி இவ்விடமிருந்தால் பிராணசங்கடம். என்றெண்ணித் தானுஞ் சமையத்துக்கேற்றபடி ஓர் காகவடிவெடுத்து உயரப் பறந்துபோனுன். அதுகாலையிற் சமுத்திரதேவனுங் கலங்கி, இந்தக்கடலை எவ்வாறு தாண்டுவோமென்று கருதி, இதென்ன கெட்டகாலம்? நாமுமவனை ஜயிக்கமுடியாதாகையாற் சும்மாயிருப்பது சரியல்ல. என்று உடனே மிகுந்த வேகமுள்ள அம்ஸவடிவாய்ப் பறந்தோடினுன்.

அப்போது இதைப்பார்த்த அளகாபுரித் தலைவனுகிய குபேரன் திடுக்கிட்டு, இதென்ன கோலம்? அடியைப்பிடியடா பாரதப்பட்டா வென்பதுபோல இவனிங்கும் வந்து மூளைத்தானு? இவனுடன் போராடினதினுல் உண்டாகிய புண்களும்இன்னஞ் செவ்வைப்படாமுன்னமே இதற்குள் இவளிடத்திலுங் கண்டெதிர்த்தால் எவரால்முடியும்? நமக்கு அவ்வளவு திடமில்லை. இவன் நடத்தையெல்லாம் நமக்குப் பாராயணமா யிருக்கின்றது. அண்ணனென்கிற முறைதான் அன்றே ஒழிந்தது, மேலும் நானென்றறிவானுகில் அவனுக்கு நாக்கும் பதைக்கும்.. ஆ! தெய்வமே! இத

ற்கென்னசெய்வது? இந்தத்துஷ்டன் பார்வைக்கு அகப்படாதபடி பதுங்குவதே யுக்தம். என்றுன்னித் தானும் ஓர் ஓணுகை வடிவெடுத்து மறைந்தான். இவ்விதமாக ஓர் கல்லெறிக்குமுன் காக்கைக் கணங்களெல்லாம் குபீலென்று ககனமார்க்கத்தில் எழும்புவதுபோல் சகல தேவக்கூட்டங்களும் ஓர் நிமைப்பொழுதில்தானே மாறுரூபங்களெடுத்து அகன்றுபோகவும், அதுகண்டு அங்குள்ள மகத்தாகிய ரிஷீஸ்வரர்களெல்லாம் இனியிவன் சலுதியில் நாசமாய்விடுவானென்று சாபமளித்துத் தத்தம் இருப்பிடஞ் சேர்ந்தார்கள். இவ்விதமாகச் சகலரும் மறைந்ததுகண்ட மருத்துராசன் தனக்கு அந்தச்சமயத்தில் அந்தயாகசாலையல்லாது வேறிடமில்லாதவனும், போக்கிடமற்றவனுயு மிருந்தான். அப்படி இருப்பவனேக்கண்ட ராவணனுனவன் ஆகாயத்தினின்றும் பூமியில் விமானம்விடுத்து, தோள்களைத் தட்டிக்கொண்டு கொக்கரிப்புடன் தாழக்குதித்து அவனை யடுத்துச் சொல்லுகிறான்.

அடா மருத்தா! உனக்கும் யோக்கியதையுண்டா? இந்த மஹேஸ்வர யாகத்தைச் செய்துமுடிக்க நீ என்னைவிட அவ்வளவு மேன்மையை வகித்தவனு? நான் திரிபுவனத்துக்குந் தலைவனுகிய ராவணனென்றறிந்தும், எனது திடகாத்ரவீரசௌரியபராக்ரமங்களைக் கண்டும், என் முன்னேதானே உனக்கிவ்வளவு கர்வமா? அளகேசனது நந்தவனத்தைக் கெடுத்துப் புஷ்பக விமானத்தையுங் கைக்கொண்டு, அவனையும் அலங்கோலப்படுத்திய செய்தியறியாயா? நான் கைலாயமலையை யெடுத்த சேதி நீ நன்ருய்க் கேள்வியுற்றும், உனக்கேனிந்த மமதைகொண்ட செய்கை?ஊர்க் குருவிக்கேன் ராயர் சிம்மாசனம்? கேட்பாரில்லையென்று கெர்வித்து இதைச்செய்ய முயன்ருயோ? நல்லது என்னுடன் போர் செய்வதொன்று, இல்லாவிட்டால் நீதோற்றேனென்று சொல்வதொன்று. இவ்விரண்டிலொன்று நடவாவிடில் நீயும் உனது யாகமும் நிமைப்பொழுதில் நிர்மூலமாகச் செய்வேனென்று அண்டச்சுவரும் இடிபட நின்று உரைத்தான். அவ்வார்த்தையைக்கேட்ட மருத்துராஜனுக்குக் கோபம் பிறந்து, விழிகள் கோவைப்பழம்போலச் சிவந்து, மீசைதுடிக்க புஜங்களைத் தட்டிக்கொண்டு தான்செய்யும்யாகத்தையும் விடுத்து, ராவணனைநோக்கி, அடா துன்மார்க்கா! அடா நிர்மூடா! அடா துரோகி! அடா சர்வசண்டாளா? நான் அனேக கோடிகாலமாக முடிக்க நினைத்திருந்ததை இப்போது நான் செய்யப்பார்த்து இதற்கு நீ புண்ணியங் கட்டிக்கொண்டு, சிவபூஜை வேளையில் சிந்தை கலங்கச்செய்யும் பாவிகளில் நீயும் ஒரு பாவிபோல் உன் துஷ்டத்தனத்தினுல் நான்செய்யும் யாகசாலையை அழிக்கவந்தாய். அடா ராக்ஷதப்பதரே! கொஞ்சமேனும் புத்தியில்லாமல் தன் மானம் பிறர்மானமின்றி உடலில் நாக்கைச் சீவியதுபோல், தந்தையென விளங்கும் உனது தமையனுகிய குபேரனை ஜயித்ததையும், அவன்வனத்தையழித்ததையும், ஒரு பெருமையாகச் சொல்லுகின்ருய். உண்டவீட்டுக்கு இரண்டகஞ் செய்பவர் போலும், கர்த்தத்துரோகஞ் செய்பவர் போலும், அந்தக்கைலாசபதியினிடத்தில் உன் கர்வத்தைக் காட்டப்போய் நீ பட்டபாடென்னதெரியாதா? உன்னைப்போலொத்த பெட்டைகள்தான் உன்னை மெச்ச வேண்டுமேயல்லது, இங்காருமுன்னை மதிப்பாரில்லை. சுத்தவீரன் வெளியில் வருவானு? நீ எவ்வளவு கைக்காரன்? என்னை லேசாய் நினைந்து வாலாட்ட வந்தாயோ? ராட்டினம் வருகிறதென்று ரதத்தைத் திருப்புவார்களோ? அடா பேதாய்! உன்னையும், உன்னுடன் வந்தவர்களையும், உன் திக்குவிஜயத்தையும், அரைநொடிக்குள் அறிகிறேனென்று காட்டுச் சிங்கம்போலக் கர்ஜித்தெழுந்தான். மிகுந்த பராக்கிரமசாலியாகிய மருத்துராசன் இவ்வாறு கோபங்கொண்டு எழுந்ததைக்கண்ட அருகிலிருந்த ஆசானுகிய சங்கவர்த்தனர் அவனைத்தடுத்து, ஓ மகாராசனே! உமது கீர்த்தியும், ஜயப்பிரதாபமும் திரிபுவனங்களுக்கும் தெரிந்திருக்க, இவனென்னமோ பஞ்சை உம்மை லேசாய் மதித்தானென்று இந்தவேளையில் அவனை யெதிர்த்து மகத்தாகிய யாகத்துக்குக் குறைவுதேடிக் கொள்ளுவானேன்? அவனென்ன உமக்கு நிகரானவனு? நமது காட்டினிடத்தில் எத்தனைவித ஜந்துக்களைக் கண்டிருப்போம். அவைகளில் இவனும் ஒருவிதப் பூச்சியெ

ன்று அறிந்துகொள்ளும். யாகம் நிறைவேறி வருகின்ற இந்த நல்லசமையத்தில் அவனுடன் சண்டைக்கு நிற்பதைவிட, நான்தோற்றேன் நீ கெலித்தாய் என்று வாயினாற்சொல்லி அவனை மகிழச்செய்து அனுப்பிவிடுவதே சர்வோத்தமமா யிருக்கின்றது. என்று குருவாகிய சங்கவர்த்தனர் திருவாய்மலர்ந்து அருளியதை மருத்து மகாராஜன் அறிந்து, ஆம்! இதைவிட வேறென்ன யிருக்கின்றது? இவ்வாறு சொல்லி யனுப்புவதில் நமக்கென்ன குறைவு? எவ்விதத்திலும் காரியமே பெரிது. என்று குருவுரைத்த வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, இதுவுமொரு தந்திரந்தானென்று இசைந்து அவன்முன் சென்றான்.

இப்படி நற்குணமும் பொறுமையும் கல்வியும் செல்வமும் படைத்து மேலோர் சொல்லுக்கு எதிர்விளம்பாத மருத்துராசனவன் ராவணனை யடுத்து, ஐயா மூப்புவனமும் புகழும் பிரதாப லங்கேஸ்வரா! நான்உமக்கோரெதிரா? இன்னவகைபோர் செய்வதென்று அறியேனே! ஏதோ தெரியாமையால் இந்த யாகத்தை வளர்த்துகின்றேன். சிறிய பிள்ளைகள் விளையாடுவதுபோல் செய்யாநின்ற விதனைப் பெரியோர்களாகிய நீங்கள் கண்டுகொள்ளவும் தகுமா? அல்லது போரிடுவதுந்தான் தருமமா? என்று சொல்லிப் பின்னும் நானே யிளைத்தேன். நீரே கெலித்தீர். என்றுஞ் சிறப்பித்துச் சொன்னதில் தசக்கிரீபன் சபாஷ்! சபாஷ்!! என்று தோள்களைத் தட்டி, மருத்தன் எனக்குத் தோற்றானென்று வீராவேசங்கொண்டு, சென்ற ரிஷிகள்போக நின்ற ரிஷிகளைப் பக்ஷியுங்களென்று தன் ராணுக்களாகிய ராக்ஷதக்கூட்டங்களையெல்லாம் ஏவி, பிறகு இவ்வண்டம் வெடிக்கும்படியாகக் கொக்கரித்துக்கொண்டு பேரானந்தமடைந்து தன் சேனைகளுடன் புஷ்பகவிமானமூர்ந்து, ஆகாயமார்க்கமாய்ச் சொல்லத்தொடங்கினான். இவ்விதமாக ராவணன் போயினபின் சகலமானதேவர்களும் முன்ரூபத்தைப்பெற்று எப்போதும்போல் யாகசாலைக்கு வந்தார்கள். குணசாலியாகிய மருத்துமகாராஜனும் தன் குருவாகிய சங்கவர்த்தனரது கிருபையால் அந்த யாகத்தின் பூரணாகுதியை உருத்திரமூர்த்திக்குத்தந்து, அதனை நிறைவேற்றி, தேவர்களுக்கெல்லாம் அவிர்ப்பாகங்கொடுத்து வந்தான். அந்தச் சமயத்தில் வெள்ளைவாரணனாகிய இந்திரன் சிலவசனம் விளம்புகின்றான்.

ஓ பூலோகமெங்குந் துதிக்கும் மருத்து மகாராஜனே! கேளும் அந்தத் துன்மார்க்கனாகிய ராவணன்பொருட்டு நான் மயில் வடிவு எடுத்ததனால், இனிமேல் என்னுடைய அடையாளமாக இந்தத் திரிபுவனத்தில் உண்டாகப்பட்ட மயூரங்களுக்கெல்லாம், தோகைகளிடத்தில் சகஸ்திர நேத்திர மிருப்பதுபோல் பிரகாசிக்கக்கடவது. நான் முகிலூர்தியாகையால் என் வானமாகிய மேகத்தைக்கண்டு இனிவரும் மஞ்சைகளெல்லாம் தேகம் புளகாங்கிதமாய் மிகுந்த சந்தோஷமுற்று, அற்புதமாகிய தங்களது பசுங்கலாபங்களை விரித்து நர்த்தனஞ் செய்யக்கடவன, மேலும் நாகங்களினால் அவைகட்கு ஒரு துன்பமில்லாமலும் வரங்கொடுத்தேனென்றான். பிறகு அந்தச் சபையிலுள்ள சகலரையுங் எமதர்மாராஜன் நோக்கி, நானும் அந்த துஷ்டனிமித்தம் காகரூபமெடுத்தபடியால், இனியுலகத்துள்ள காகங்களுக்கெல்லாம் பிதுர்திதியில் அன்னம் படைப்பார்களாகில் அப்பிதுர்க்களெல்லாம் நிறையத் தாழாமல் முத்தியாகிய கரையை அண்டுவார்கள் இதுவுமன்றி எக்காலத்திலும் அக்காகங்கள் நோயென்பதை யணுகாமல், தீர்க்காயுசும் பெற்றிருக்கக் கடவனவென்று ஆசீர்வதித்தான். அப்பால் சமுத்திராஜனாகிய வருணனானவன் நான் பிழைத்தோட வெடுத்தது அம்ஸரூபமாதலால், இனி இவ்வுலகின்கண் அவ்வன்னங்களெல்லாம் என்னைப்போல வெண்மை நிறமாகக்கடவனவென்று வரமளித்தான்.

அச்சமயத்தில் வைச்சிரவணனாகிய வடதிசைத்தலைவன் தம்பிக்காகப்பயந்து உருவெடுத்த ஓணானுக்குத் தன் குபேரலோகம்போல் தேகம் பொன்மயமாகவும், மற்ற தனது நானாவித மாடமாளிகைகள் போல் பலபல வர்னமாகவும் இருக்கக்கடவதென்று கட்டளையிட்டான். இவ்வகையாய் தாங்களெடுத்த ரூபங்களுக்கெல்லாம் அவ்வவர்களும் தனித்தனியாய் வரங்களை அளித்ததினால், அந்தந்த ஜந்துக்கள் அவ்வாறே பெற்றிருந்தன. இப்பால் சகல

மான ரிஷிகளும் தேவர்களும் மருத்து மகாராஜனிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு, அவனையும் அவன் மனைவியையும் வாழ்த்தித் தங்கள் தங்கள் ஆசிரமத்துக் கெழுந்தருளினார்கள். மருத்துராஜனும் சிறப்புற்றோங்கிய மஹேஸ்வரயாகத்தை நிறைவேற்றி, பூர்ணாகுதிசெய்து உள்ளக் களிப்பை யடைந்திருந்தனன். இவ்வித மஹேஸ்வரயாகத்தை இதுவரையில் பதினான்குலோகத்தில் ஒருவருஞ் செய்ததில்லை. ராஜாதிராஜ ராஜமார்த்தாண்டனாய் இத்திரேதாயுகத்தில் இதைச்செய்து முடித்தவன் இவனொருவன்தான். இந்தயாகம் லேசானதல்ல. அற்பமான புருஷரால் முடியத்தக்கதுமல்ல. ஆதலின் இதன் பெருமையை எம்போன்றவனால் சொல்லி முடியாது.

## இராவணன் அனரண்யராஜனை வெல்லுதல்.

கேளும் ஸ்ரீ ரகுநந்தனா! இப்படி பஞ்சாசதகோடி பூமண்டலங்களினுந் தன் கீர்த்தியை நாட்டித் திக்குவிஜயஞ் செய்து வராநின்ற ராவணனானவன் உமது சூர்ய வம்சபரம்பரையில் அவதரித்தவனாகியும் உம்முடைய மூதாதைகளாகிய பாட்டன்மார்களி லொருவனாகியுமிருந்த இராஜாதிராஜ ராஜகெம்பீர வீரப்ரதாபனாகிய அனரண்யமகாராஜன் அரசாக்ஷிசெய்துவரும் உமது அயோத்தியாபுரிபட்டணத்தினுஞ் சென்று அங்கு தனது வல்லமையை யாவரும் மெச்சும்படி சேனாசமுத்திரத்துடன் தண்டிறங்கி அட்டகாசஞ்செய்து, தனது புயாசலங்களைத்தட்டி ஈரைந்து வாயையுந் திறந்து உகாந்தகாலப் பேரிடிபோல முழங்கிச் சொல்லுகிறான் ஓ அனரண்யமகாராஜனே! பாழூருக்கு எலிராஜனைப்போலும், ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூச் சக்கரைபோலும், நீ இந்தவூரில் ஒரு ராசனென்னும் பேர்வைத்துக்கொண்டு அதிக கர்வம்படைத்து, கொஞ்சமேனும் மரியாதையில்லாமல் நான் வந்திருக்கிற காரியமுந் தெரியாமல் நீ என்னமோ வெகு ராச்சியபாரத்தில் மூழ்கி யிருப்பவன்போல் உனக்குள் நீயே மதித்துக்கொண்டிருக்கின்றாய். அடா அனரண்யா! நீ என்னையும், என் சேனாசமுத்திரத்தையும், எனது ஜெயக்கொடியையும், தேவ புஷ்பவிமானத்தையும் பார்க்கவில்லையா? அரனது கைலைமலையையும், அளகேசனையும், மற்ற ராசர்களையும், யாகஞ்செய்த மருத்துராசனையும், நான் திடுக்கிட்டலறச்செய்திட்ட சேதியுங் கேட்கவில்லையா? என்னைக் கண்டவுடன் எழுந்துவந்து வணங்காமலும், திரைப் பணத்தை அளக்காமலும், அல்லது யுத்தத்திற்கு வராமலும் இருப்பதென்ன? ரவிகுலத்திற்பிறந்த உனக்குக் குறைவுவராதா? நீயும் ஒரு க்ஷத்திரியவானா? அடா மதியீனனே! என்று பலவாறாய்க் கூவிநிற்கும் தசக்கிரீவனை உமது பாட்டனாகிய அனரண்யமகாராஜன் பார்த்து மனந்திடுக்கிட்டவனாகி கோபாக்கினியுடன் பெருமூச்செறிந்து, இதென்ன கெட்டகாலமோ தெரிகிலேன்? ஆண்டவனே! என்று வாழ்நாளைக் கழித்துவரும் என்னை இவ்விதமாய் ஈனமாகப்பேசிய கொடியனைக் கண்டிக்காமல்விடுவோமாகில் மண்டலத்தில் இவன் போராட்டமே கண்டுமுடியாததா யிருக்குமாகலின், நாம் சர்வ ஜாக்கிரதையாய் மரியாதையைக் காப்பாற்றிக்கொள்வதே யுக்தமென்றெண்ணி, தனது நால்வகைச்சேனைகளையும் பிரயாணப்படுத்திக் கூட்டிக்கொண்டுவந்து அணியணியாய் வகுத்து வியூகங்கட்டி, யாவராலும் பேதியாமல் நிறுத்தி, தானும் தேரேறிப் போர்க்களம் வந்துசங்கத்தொனிசெய்து, தனதுஅபார வில்லைக் கையிலேந்திப் பூமண்டலங்களெல்லாம் திடுக்கிடும்படிக் குணத்தொனிசெய்து பிரளயகால ருத்திரனைப்போல நின்றான். அதுகாலையில் இரண்டுவகைச்சேனைகளும் கோபாவேசங்கொண்டு தங்களைத் தாங்கள் மறந்து நானாவித ஆயுதங்களென்றுசொல்லப்பட்ட கத்தி-கேடயம்-ஈட்டி தோமரம் - குந்தம் - வில் முதலியவைகளை ஏவிக் கைகலந்து போர்புரிந்தார்கள். இதில் குத்துகளாலும் வெட்டுகளாலும் மாய்ந்தவர்கள் அநேகர். இடிகளாலும் கடிகளாலும் இறந்தவர்கள் அநேகர். இம்சை சகியாமலும் ஒருவரையொருவர் எதிர்க்கச் சக்தியில்லாமலும் ஓடினவர்களநேகர். இப்படிப் போராடிவருங் காலத்தில் இராட்சதப்படைகள் மிஞ்சி, சிலர் பர்வதங்களைப் பேர்த்தெறிந்தார்கள். சிலர்விரு

க்ஷங்களைப் பிடுங்கிச் சாடினார்கள். சிலர் இறந்துகிடக்கும் பிணங்களை வாரி வீசினார்கள். இதனால் கரங்கள் அறுபட்டும் தலைகளுடன் நின்றவர்கள் சிலபேர். தோள்கள் அறுந்தும் காலுடன் நின்றவர்கள் சிலபேர். தொடைகளறுந்தும் இடையுடன் நின்றவர்கள் சிலபேர். குடல்கள்கிழிந்தும் அடலுடன் நின்றவர்கள் சிலபேர். நடைகள் தளர்ந்தும் படையுடன் கலந்தவர்கள் சிலபேர். கண்டதுண்டமாயறுந்தும் முண்டமாய் நின்றவர்கள் சிலபேர். மெய்மறந்து நின்றும் கைவீசி யுலாவினர்கள் சிலபேர். இவ்விதப் பிரமாதயுத்தமானது நடந்ததனால் பெருகிவரும் ரத்தவாறானது நான்கு பக்கமுமோடிக் கடல்போல ஒன்றாய்ச்சேர்ந்து, ஏழுசமுத்திரத்துக்கு மேலான பிரளயம்போலோடியது.

அக்கால் ராவணனானவன் பின்னும் ஆக்கிரமித்து வில்லைவளைத்துப் பல்லைக் கடித்து அந்த அனரண்யராஜனை மடக்கிக்கொண்டு, அவன்மீதில் அளவிறந்த அகோரமாகிய நாராசங்களை யெடுத்து ஏகம் தசம் சதம் சகஸ்திரம் என்று சொல்லும் கணிதப்படிக்கு முறையே பிரயோகஞ்செய்தான். அம்மாத்திரத்தில் அதுகள் புறப்பட்டு உலகங்களையெல்லாம் மூடிக்கொண்டதனால் இருளானது கம்மிக்கொண்டு, ஒருவர்முகம் ஒருவருக்குத் தெரியாதபடி மகா பயங்கரத்துடன் வந்து, அந்த ராஜனுடைய தேகமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்தன. அதுகளில் சிலர் அவன்தேரையும், புரவியையும், பாகனையும், கொடியையும், மற்றக் காலாள்களையும் தும்சப்படுத்தின. அதனால் அவனும் தத்தளித்துப் பிராணவஸ்தை யடைந்து அந்த தசக்ரீவனையடுத்து, அடா துஷ்ட ராவணா! கெடுமதி கண்ணுக்குப் புலப்படாது என காலத்துக்கேற்ற துற்புத்திகொண்டு என்னை இவ்வாறு செய்தாயல்லவா? என்றுரைத்துக்கொண்டே தரையின்மேல் நிற்கவும் சக்தியற்றவனாய்ச் சோர்ந்து விழுந்தான். அதுகண்ட ராவணன் கைகொட்டிச் சிரித்து, ஆ! ஆ! அனரண்யன் நமக்குத் தோற்றானென்று கெக்கலி கொட்டினான். மூர்ச்சையாய் விழுந்த அனரண்ய மகாராஜன் தன்தேகத்தில் பாய்ந்த அஸ்திரங்களின் வேதனை பொறுக்கமாட்டாமல், தனக்குவந்த அவமரியாதையை எண்ணி எண்ணி நெஞ்சம்புண்ணாகிக் கண்ணைத்திறந்து அந்தத் தசக்கிரீவனைப்பார்த்துச் சொல்லுகிறான்.

அடா ராவணகாதகா! ஏதோ நீதான் பலாஷ்டியனாயிருந்து என்னைப் பூமியிற் கிடத்தினை; போகட்டும்; இதற்குப் பதில் இப்போதல்ல; எனது ரகுவம்சத்தில் என் பேரன்மார்களில் ஒருவனாகிய தசரதச்சக்கரவர்த்தி பிறந்து பூலோகமுழுமையும் ஒருகுடைக்கீழ் ஆளப்போகிறான். அக்காலத்தில் அவன்வயிற்றிலே உன்குல வைரியாகிய அந்த விஷ்ணுவே ஸ்ரீராமராக அவதாரஞ் செய்யப்போகின்றார். அப்போது நீயும் துஷ்டகுணம் போகாமல் அவர் பத்தினியாகிய சீதாதேவியாரைச் சிறையெடுப்பாய். அம்முகாந்தரத்தினாலேயே அவரால் நீயும் உனது வம்சபரம்பரையும் நாசமாவீர்கள். என்று சாபமளித்துத்தான் நித்திய வைபோக மிகுந்த பரமபத நாட்டுக்கெழுந்தருளி அங்குண்டாகிய வீரசொர்க்க பதவியை யடைந்தான். இப்படி அளவற்ற சாபங்களையெல்லாம் ஆஸ்தியாகத் தேடிக்கொண்ட ராவணனானவன் அவைகளையெல்லாம் தன்னுள் நினைந்து, இதென்ன நமக்கு எப்போதும் தீராக் குறையா யிருக்கின்றது? இப்பேர்ப்பட்ட சாபங்களெல்லாம் நமக்கென்று வருவானேன்? இந்த அனரண்யராஜனை நாமேன் எதிர்த்தோம்? என்று மனஸ்தாபப்பட்டவனாய் தன்சேனைகளை விமானத்திலேற்றிக் கொண்டு அந்தரமார்க்கமாய் நடந்துபோகையில் தன் மந்திரிகளைப்பார்த்து வருந்திச் சொல்லுகிறான்.

## இராவணன் எமதர்மராஜனை வெல்லுதல்.

ஓ அமைச்சர்களே! நாம் உலகங்களிலுள்ள சகல மன்னர்களையும் வெற்றிபெற்றோம். ஜெகமுழுமையுஞ் சிதறும்படி திக்விஜயஞ்செய்து கீர்த்தியும் பெற்றோம். ஆனால் இதிலடைந்த லாபம் சாபந்தான். இதை நினைக்குந்தோறும் வயிறு பற்றியெரிகின்றது. இதற்கென்ன செய்வது? என்று சொல்லி வருந்தும் இலங்கேசனுக்கு அம்மந்திரிகள் சொல்லுகிறார்கள். கேளும் பிர

தாப லங்கேஸ்வரா! நாமென்ன ஜாக்கிரதையா யிருந்தபோதிலும் வருவனவெல்லாம் வந்துதான் தீரும். அமைப்பினளவின்படி எவரும் அனுபவித்துத்தான் தீரவேண்டும். அதைவெல்ல யாவரால் முடியும்? அதற்கேன் அஞ்சுகிறீர்? என்று பக்குவமாய்ச் சொன்னதின்மேல் துக்கித்திருந்தவன் ஒருவாறுய்த்தேறி,இனிநாம் சர்வ ஜாக்கிரதையா யிருக்கவேண்டுமென்றெண்ணினவனாய் இதுவுஞ்சரிதானெனப் புந்தி தேர்ந்து,பூரி-கர்ண-டக்கை-மல்லரி-முரசு-பேரி-இவைமுதலிய சர்வ வாத்தியப் பேரொலியுடன் பூலோகத்திலிறங்கி, பல மணமுள்ள சோலைகள் சூழ்ந்த ஒருகாட்டினிடத்தில் விமானத்துடனின்று, சகலமான பேர்களுந் தன்னைச் சூழும்படி சர்வ சேனா சமுத்திரத்துடன் கேளிக்கையில் மகா விபவத்தோடிருக்கின்றான். அப்போதுமூன்று லோகமும் திரிந்துகொண்டு இடையிற் புலித்தோலணிந்து கையில் யாழையேந்தி சங்கீத சாஹித்தியங்களில் தேர்ந்தவராய் பகவானது திவ்விய குணானுபவங்களையே ஸ்மரணை செய்துகொண் டிருப்பவரும், சத்வகுணத்தராய் முப்புரிநூல் பிரகாசிக்கத் தவமகிமை யடைந்து தாரகப்பிரமத்தை நினைந்து தேவரகசியங்களையும் வெளிப்படுத்தி அகங்கரிப்பவரிடத்தில் நூதன கலகங்களைச் சோடித்து அவ்வவர்க்குத் தக்கபடி உட்பகைகளும் விளைத்து யுத்தத்திற்குத்தக்க சித்தப்படுத்தி, வீதிச்சண்டை விழிக்குக் குளிர்ச்சியென்று எண்ணப்பட்டவரும், இந்த ராவணகாதகனது கர்வபங்கஞ்செய்து கொட்டமடக்கி இன்னமுங் கூடியவிதத்தில் நாடிய சாபங்களையெல்லாம் இவனுக்குத் தேடி வைக்கும்பொருட்டுத் தமதுமனத்துள்எண்ணினவரும்,ஆகிய நாரதமுனிவரானவர் வந்தார். அந்த முனிவர் வருதலைக்கண்ட ராவணனானவன் புன்சிரிப்புடன் அவரை நமஸ்கரித்து, வாரும் நாரதரே! இங்கு உட்காரும், உமதூருங் குடியும் நீரும் சுகந்தானா? என்றுசாவினவனாய் ஓர் சிம்மாசனந்தர, உடனேயவர் அதிலிருந்து வெகு அன்புடன் விளம்புகின்றார். ஓ தராதலங்கள் மெச்சும் தசக்கிரீவா! நீ ஏது இவ்விடம் வந்திருப்பது? மந்திரிகள் முதலியசேனைகளுங் கவிந்திருப்பானேன்? ஆயாசமாக இந்த ஆரணியத்தில் நீ இறங்கியிருப்பானேன்? இஃதெனக்கு ஒன்றுந் தெரியவில்லை என்று கேட்கவும் ராவணன் அவரை வணங்கிச் சொல்லுகின்றான்.

ஓ முனிவரேறே! எனக்கு மூத்தவனாகிய வைச்சிரவணனென்னும் குபேரனை வென்றேன். பிறகு வெள்ளியங்கிரியை உமாபதியுடன் தூக்கிக் களைத்துச் சாம வேதகானஞ் செய்து, அவரது நிஜரூபத்தைத் தெரிசித்ததுமல்லாமல் உயர்ந்த வரங்களையும்பெற்றேன்.அதன்மேலும் காட்டில் தவத்தினைச் செய்துகொண்டிருந்த வேதவதியென்னும் கன்னிகையைச் சிறையெடுக்க நினைத்ததில் அவள் சாபமளித்து இறந்தனள். மருத்துராசனுடனும் போர் செய்து வெற்றிகொண்டேன். அப்பால் சகல புவனங்களிலும் திக்விஜயஞ்செய்து பகுதிபணம் வாங்கிக்கொண்டு அயோத்தியாபுரியில் அரசாக்ஷிசெய்யும் அனரண்ய மகாராஜனையும் ஜெயித்து, அளவற்றஸ்திரீகளையும் சிறையெடுத்து, இப்பாலெனது இலங்கைக்குப் போகவேண்டி இவ்வழியாய்வந்து இவ்விடம் இறங்கியிருக்கின்றேன். நானே திக்குவிஜயஞ்செய்து ஜெயத்தைப்பெற்ற வீராதிவீர ஜெயப்பிரதாபனாதலால் இன்னமும் என்கைக்குள் அகப்படாமலிருக்கப்பட்ட மன்னர்களிருந்தால் அதை யோசித்துச் சொல்லுமென்று கேட்டான். அதற்கு நாரதமுனிவரானவர் திரேகங்குலுங்கச்சிரித்து இதனைச் சொல்லுகின்றார். ஆ!ஆ! இராவணா! இதுதானா உனது வீரப்பிரதாபம்? நான் என்னமோவென்று நினைத்தேன். இவர்களெல்லாம் ஒரு கணக்கா! பஞ்சையரினுங் கூட்டல்லவே! இவர்களுடன் சண்டையும் செய்ய வேண்டுமா? கண்டவுடன் தெண்டனிட்டு வணங்கும் காவலர்களாச்சே? இவர்களைச் ஜெயித்ததையோ ஒரு பெரிதாகச் சொல்ல வந்தாய்? இதிலென்ன கீர்த்தி? அப்பா தசக்கிரீவா! உன்னைப்போலும் திக்குவிஜயஞ்செய்தவர்கள் அனேகரைப் பார்த்தேன். அவர்களெல்லாம்மகத்தாகிய இராஜர்களை எதிர்த்து வன்போர் விளைத்து, வானமளாவிய கீர்த்தியை வாய்ந்தார்கள். இப்பேர்ப்பட்ட அற்பர்களை அவர்கள் திருஷ்டியிலும் வையார்கள். மருத்தனையும் அனரண்யனையும் ஒரு பெரிதாயெண்ணி

உனக்குள்மதித்துப்போர்புரிந்தாற்போலு மிருக்கிறது. சீச்சீ! இவைகளெல்லாம் பாச்சி சோச்சி யென்னும் பயல்கள் விளையாட்டல்லவோ? இஃதிருக்கட்டும், அப்பா லங்கைக்கரசாகிய ராவணா! இதுகாறும் நீ போரிட்ட சகலமான பேர்களையுங் கொன்று, அவர்களுயிரையும் வாங்கப்பட்ட பாசக்கயிறுடைய தென்திசைக்கு அதிபனென்னும் எமதர்மராஜனிடத்தில் சென்றாயா? இல்லையே! நீ பராக்கிரமசாலியென்று சொல்லுவாயாகில் அவனிடத்திற் சென்று யுத்தஞ்செய்து வெற்றிபெறுவதே உனது திக்குவிஜயத்துக்குஅழகாகும். வீரசூரர்களிருக்கப்பட்ட திக்குகளை விடுத்து அடவிகளிலும் மலைகளிலும் செல்லுவதிற் பயனென்ன? அந்த எமனோ நம்மை ஜெயிப்பவர் ஒருவருமில்லையென்று வீரம் பேசுகிறான். நீ அவனிடம் செல்லாமலும். லங்கைக்குட் செல்லலாமா? அவனை ஜெயித்தால்தான் உனக்குக் கீர்த்தியுண்டாகும். அதுவரையிலும் நான் உன்னைச் சுத்தவீரனென்று எவ்விதஞ்சொல்லலாம்? என்று தூண்டிக்கொடுக்கும் நாரதர் சொல்லைக் கேட்ட துஷ்டனான ராவணன் துடிதுடித்து, ஆ! ஆ!! இந்த மந்திரிகளெல்லாம் கும்பற்கும்பலாயிருந்தும் என்ன பிரயோசனம்? இந்த மர்மத்தை வெளியிட்டு ஒருவராயினும் அவன் விஷயத்தைக் குறித்துக் கவனப்படுத்தாமற் போய்விட்டார்கள். ஆயினும் பெரிதல்ல. இதோ இப்பொழுதே அவனுடைய உயிரை வாங்குகிறேன். நானென்ன லேசானவனென்று நினைத்தீரோ? அவனை வெல்லாமலும்விடுவேனோ? நீரே பார்க்கப்போகிறீர். என்றண்டகடாக மட்டு மெழும்பிக் குதித்து, ஆர்ப்பரித்து நின்றான். அதுகண்ட மகோதரன் சிலவற்றை சொல்லத் தொடங்கினான்.

ஐயா பிரதாப லங்கேஸ்வரா! உம்முடைய நற்காலபலத்தை நானென்னவென்று சொல்லப்போகிறேன்? வெகு மேலானகீர்த்தி யடையும்படியான காலம் வந்தபடியினாலல்லவா? இந்த மகானுபாவரான நாரதமுனிவர் வந்தார். நீர் இவரை லேசாய் மதிக்கவேண்டாம். நமக்கு வெகுவாய்ப் பாடுபடத்தக்கவர். நமக்கெப்பொழுதும் மேன்மையே கோரிக்கொண் டிருக்கப்பட்டவர். இவரொருகாலத்தினும் பிறருக்குக் கேடு நினையார். எனக்கும் இவருடைய விஷயத்திலே வெகு அனுபோகமுண்டு. ஆதலால், இனியிவர் உரைத்தபடிக்கு நடத்துவதே சரி. அந்த எமனோ அற்பனல்ல. பூலோகத்திலே கருவிலே ஜனிக்கப்பட்டவைகளையும், ஜனித்தபின்னர் அங்ஙனே வளர்ந்து வரப்பட்டவைகளையும், அதைவிடுத்து உலகத்திலே யுதித்தகாலத்திலும், உதித்துத் தவழுங்காலத்திலும், தவழ்ந்து நடக்குங்காலத்திலும், நடந்து கல்விபயிலுங் காலத்திலும், பயின்ற வாலிபகாலத்திலும், வாலிபத்தில் மணஞ்செய்த காலத்திலும், மனைவியுடன் சுகிக்குங்காலத்திலும், சுகித்துப் பிள்ளை பெறுங்காலத்திலும், பெற்று ஞானமடைந்த காலத்திலும், எப்பேச்சும் பேசாமல் எதையும் கருதாதவனாய்ச் சண்டமாருதமெனச் சொல்லப்பட்ட காற்றினுங் கடுவேகமாய் நுழைந்து; இவனுடைய அதிகாரமே பெரிதாய் நின்றது நின்றபடிக்கு எவ்விதமான உயிர்களையும் வாட்டி முன்பின் பாராமல் சமூலமும் கொல்பவன். ஆதலால் அப்படிப்பட்டவனை நீரெதிர்த்து ஜயமடைவீரேயானால், அவனும் அடங்கிப்போய்விடுவான். மேலுமிந்த ஈரேழு பதினான்கு புவனங்களும் உம்மையே மெச்சுவதல்லாமல், இனி எக்காலத்திலேயும் எண்பத்து நான்குலக்ஷம் யோனிபேத ஜீவராசிகளெல்லாம் கிடுகிடாய்த்து, உம்முடையபெயரைக் கேட்காமுன்னமே அஞ்சி வணங்கி நிற்கும். அப்பால் உமக்கொருவரும் எதிரில்லை. என்று இசைந்தாற்போல் சொல்லவே ராவணன் சம்மதமடைந்து, அப்படியா? ஆனால் இப்போதே எமலோகத்திற்குச் செல்லுவோம் வாருங்களென்று சொன்னான். அதை யருகிருந்து கேட்டுக்கொண்டிருந்த மாரீசனென்போன் பதைபதைத்துத் தனக்குத்தானே எண்ணுகிறான். ஐயையோ!! இதென்னகொள்ளை? கலகப்பிரியனெனச்சொல்லும் நாரதன் சொன்னதும், அதனைமகோதரன் சிறப்பித்ததும், அதற்கு இவ்விராவணன் சம்மதித்துப் பிரயாணமானதும், மிக நன்றாயிருக்கின்றதே! இவனிவ்விருவர்சொல்லையும் நயவஞ்சகச்சொல்லென்று சற்று நினைக்கவில்லையே? இதென்ன வேலையில்லாதவேலை? இந்தமட்டும் நம்மு

டைய சேனைகளை இலங்கையிற் கொண்டு போய்ச் சேர்க்காமல். கொஞ்சநஞ்ச மிருப் பதைக் கொண்டுபோய் எமபுரத்தில் சேர்ப்பிக்க எண்ணுகிறானே! இஃது எவ்வித மான அனியாயம்? என்று எண்ணிக்கொண்டு தன்னுள்தானேதேறி, எதற்கும் நம் மால் இயன்றதைச் சொல்லுவோமெனத் தசக்கிரீவனை யடுத்துச் சொல்லுகிறான். அப்பா ராவணா! இந்த முனிவருடைய வார்த்தையையும், மகோதரனுடைய சொல்லையும் நம்பி எமபுரத்திற்கு ஏகவேண்டாம். எனக்கது சம்மதியில்லாத காரிய மா யிருக்கின்றது. முன்னமே பரமசிவனுடனே தூக்கிய மலையின்கீழே யகப்பட்டுக் கொண்டு உன்னாலே மாளாமல், பின்பு தெய்வசங்கற்பத்தாலே தேறியதென்ன மறந்து விட்டாயோ? எல்லாவிஷயங்களையுஞ் சமமாகப் பாவிக்கலாமா? சரியானவற்றை யே நன்றாயோசித்துச் செய்யவேண்டிய தாயிருக்க, இப்படி முன்பின் எண்ணாமல் இவ்விருதிறத்தாருடைய சொல்லைக்கேட்டுக் குதிப்பது நம்போன்றவர்க்கு அழகாயிராது. என்று இதமான வார்த்தைகளை எடுத்துரைக்கவும், ராவணனனவன் அவனைத்தடுத்து, ஐயா மாரீசனே! நீங்கள் எதுவுரைக்கவந்தாலும் கேட்பேன். இந்த மகோதரனுடைய சொல்லுக்குமாத்திரம் இரண்டாவது சொல்லவேண்டாம். அவனுக்கு நீங்கள் நிகராகமாட்டீர்கள். அவனொருகாலத்திலும் தீங்கு நினையான். இந்த நாரதர் பொய்யுரையார். என்றுகூறி, அவ்வாறே தனக்குள்ளேயும் தீர்மானித்துக் கொண்டு, உடனே யுத்தசன்னத்தனாய் வீரியங்கூறிச் சகல மேளவாத்தியங்களுடனே எமலோகத்திற்குச் சேனைகளைப் பிரயாணப் படுத்தித் தானும் விமானத்திலேறினான்.

இப்படி இவன் விமானமேறுமுன்னமே நாரதமுனிவர் அவனிடத்தினின்றும் செலவு பெற்றுக்கொண்டு, இவனை யறியாமல் இவன் போகாமுன்னமே தாமந்த எமனிடஞ்சென்று நின்றார். அவ் வியமனும் மிகுந்த வணக்கத்துடனே தன்னுடைய சிங்காசனம்விட்டு, ஓடோடியும்வந்து கைலாகுகொடுத்து நாரதரை யழைத்துப் போய் அவனுக்கெதிரே யிராநின்ற திவ்விய தர்ப்பாசனத்திலமர்த்தி, அவருக்குச் சோடசோபசாரமுஞ் செய்து தெண்டனிட்டு வணங்கிக் கைகூப்பி நின்றான். கேட்டீரோ ஸ்ரீராமா! இப்படி கலகம்விளைக்கக் கங்கணங்கட்டும் நாரதரானவர் எருமைக் கடாவின்மீது ஏறும் எமதர்மராஜனைவன் வணங்கி நின்று, ஐயா மகதியாழ்த் தலைவரே! தேவரீர் இங்கு வந்த காரிய மேதோ? அடியேன்செய்த பூஜையினுடைய பலத்தாலே தங்களுடைய திருவடியைத் தரிசிக்கப்பெற்றேன். எனச்சொல்லவும் நாரதரிஷியானவர் இளநகையுடனே சிரமசைத்துப் பெருமூச்சுவிட்டு, இப்படியும் உண்டோவென்று தன் இருகரங்களையும் நெரித்துத் தாபந்திரியப் படுபவர் போலாகி, ஓ எமதருமராஜனே! இதென்ன விபரீதம்? நான் என்னென்றுரைப்பேன்? நான் வழக்கப்படியே கைலாயமலையிலே பரமசிவனையும் வைகுந்தத்திலே விஷ்ணுவையுந் தரிசனஞ்செய்துகொண்டு, அவ்விடம்விட்டுச் சுவர்க்கலோகத்திலே சென்று தேவாதிதேவனான இந்திரனையுங் கண்டு, பிறகு பூலோகத்திற்சென்று சகல தேச விநோதங்களையும் பார்த்து வருகிறேன். அப்பொழுது ஒருவனத்தில் லங்காபுரிக் கரசனான ராவணனென்போன் தன்னுடைய மந்திரிபிரதானிகள் முதலான தண்டுதளங்களுடனே புவியடங்கலும் ஜெயித்துத் திக்குவிஜயவீரனாகி, கைலாசத்தையும் தூக்கிச் சிவபெருமானது திருவருள் பெற்று உல்லாசமாயிராநின்ற ஆர்ப்பாட்டத்தைக் கண்டேன்.

இப்படிகண்ட நான் அவனையடுத்து, அப்பா ராவணா! என்னகாரணமாய் இங்கு வந்திருக்கிறா யென்றேன். அதற்கவன் தன்னுடையவரலாறெல்லாஞ் சொன்னது மன்றி, எமலோகத்திற்குச்சென்று, எமனுடனே யுத்தஞ்செய்து அவனைக் கொல்லப் போகின்றேனென்றான். நானுஞ் சிலவார்த்தைகளால் வேண்டியவரையிலும் போதித்தேன், அவன் கேட்பவனாயில்லை. ஆதலின் எனக்கு அதுகேட்டவுடனே மனந் தாளாமல், இதனை நம்முடைய ஆப்தனுக்குச் சொல்லாது அப்பாற்செல்வது தர்ம மல்லவென்றெண்ணி நேரா யிங்குவந்தேன். அவனை நீ அற்பமாய் நினைக்கவேண்டாம். ராக்ஷதசித்தன். வெகு பராக்கிரமத்தையுடையவன். உன்னுடைய விஷயத்தில் சிறிதேனும் லக்ஷியமில்லாதவன்.

அவன்வந்து எதிர்ப்பானுயின் மறுபடியும் அவனை உயிருடன் லங்கைக்குச் செல்ல வொட்டாமல் உனது முழுபலத்தையும் காட்டி, அவனது சேனைமுழுமையும் வாட்டி, உனது மழுவாயுதத்தைத்தீட்டி, சமூலமுமாட்டி, உனதுகீர்த்தியை நிலைநாட்டி வைப்பாயென்று எண்ணுகிறேன். ஆயிற்று இந்நேரம்! உன்னுடைய பட்டணத்திற்கு அருகிலே வந்துகொண்டிருப்பான். நீ சற்றேனும் இளையாதே. என்று ஆளைத் தட்டி கூர்சீவிக்கோபமெழுப்பிவிட்டு,அவனிடஞ் செலவு பெற்றுக்கொண்டு அப்பாற்போயினர். இதற்குள் போர்க்கோலங் கொண்டெழுந்த ராவணனனவன் அண்டம்வெடிக்கக் கர்ஜனை செய்துகொண்டு, உகாந்தகால ருத்திரனைப்போல் எமபுரத்தை நோக்கி வருகிருன். ஐயா தசரதநந்தன! அப்படியவன் வருகின்றபோது அந்த எமபுரத்தில் அவன்கண்ட அதிசயங்கள் சிலவுள. அவையாவன:—

பூர்வஜன்மத்திலேபாபத்துக்கேதுவான ஸ்திரீகளுடைய மோகத்தினலே காமவிகாரத்தில் அழுந்தாத நல்ல மனதையுடையவர்களும், சரீரத்தை நிலையென்றெண்ணுமல் அழியாத புகழாகிய சரீரத்தை விரும்பிப் புண்ணியத்தையே செய்தோர்களும், நியமந்தவருதஉத்தமப்பிராமணர்க்குநல்ல புண்ணியகாலங்களிலே பூமிதான முதலான புண்ணிய தானங்களைச் செய்தோர்களும், அந்தப் புண்ணியதானங்களை யேற்றுக்கொண்ட உத்தமபுருஷர்களும், சன்னியாசிகள் வாசஞ்செய்கிறதற்கு மடங்களும், கிரகஸ்தன் முதலானவர்கட்கு இடங்களு முண்டாக்கிக் கொடுத்தோர்களும், கோடைகாலத்திலேதண்ணீர்ப்பந்தல்வைத்துத் தாகந்தீர்த்தவர்களும், பனிக்காலத்திலே குளிருக்கு வஸ்திரங் கொடுத்தோர்களும், இருக்குமிட மில்லாதவர்களுக்கு வீடுகொடுத்து இருக்கச்செய்தோர்களும், வியாதிகளைத்தீர்த்துச் சவுக்கியப் படுத்துவித்தோர்களும், அறியாமையினலே மூடரானவர்கள் இகழ்ந்துபேசுங் குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளும் பொறுமையுடைய பெரியோர்களும், பிராமணரையும் பசுக்களையும் ஆபத்துக்காலத்திலே ரக்ஷித்தோர்களும், சுவர்க்கலோக வாசிகளாய் சுவர்னமயமான மண்டபங்களிலே வீற்றிருப்பதைப் பார்த்து ஆச்சரியத்தை யடைந்து அப்பாற் போயினன்.

அப்படிப் போம்பொழுதில் உலகத்திலே பொருளுக்காசைப்பட்டு நியாயப்பிழையாக வழக்குத்தீர்த்தவர்களும், பதிவிரதையான தன்னுடைய ஸ்திரீயைவிட்டு பரஸ்திரீகளை ஆசைப்பட்டவர்களும், உயிர்களைக்கொன்று தின்னுங் கொலையாளரும், கோட்சொல்லிக் குடிகெடுக்கும் வஞ்சகரும், செய்தநன்றி மறக்கும் விசுவாசகாதகரும், கல்விகளைக்கற்று வல்லமைபொருந்தி நல்லறிவுமுடைய பெரியோர்களை நிந்தைசெய்த மூர்க்கர்களும்,பெற்றதாய் பசித்திருக்கவுண்ட பெரும்பாவிகளும், களங்கமில்லாமல் நம்பி யுறவுகொண்ட சினேகிதனை வஞ்சித்து நடந்த கபடர்களும், ஆபத்தில் உதவுவானென்று நாடோறும் ரக்ஷித்து வைத்திருந்த ராஜாவை யுத்தமுகத்திலே சத்துருக்களிடத்தில் காட்டிக்கொடுத்த இராஜத்துரோகிகளும், கோபத்தினலே ஒருவனிடத்தில் வயிரம்வைத்துக் குடிகேடுசெய்த கண்டகரும், மற்றொருவராலே மனக்கவலையுற்று வந்தடைந்தோர்களுக்கு ஆதரவுசெய்யாமல் அவர்களைச் சீறியிகழ்ந்த கொடியோர்களும், ஆபத்தானகாலத்திலே யடைக்கலமென்று அடைந்தோர்களைக் கைவிட்ட குணக்கேடரும், எல்லோர்க்குங் குற்றம்பேசி யிகழ்ச்சிசெய்த ஈனரும், பகுத்தறியும் அறிவினையுடைய இவ்வரிய மானிடப்பிறப்பிலே பிறந்து, நாவினைப் பெற்றிருந்தும் அரிவோம் நமவென்றும் நாராயணய நமவென்றும் துதித்தறியாத பாவிகளும், தெய்வநிந்தைசெய்த தீயோர்களும், பின்னும் பலபல விதமாயுள்ள பாவங்களைச்செய்த கொடியோர்களும், உதிரமும் தசையும் மூளையும் வழும்பும்இந்திரியமுமாகச்சேறு பட்டுக் குழம்பி நிறைந்திருக்குங் கோரநரகங்களிலே; நாவிலுஞ் சரீரத்திலும் புழுக்கள்சொரிய நெடுங்காலம் அழுந்தித் துன்பப்பட்டுக் கிடப்பதைப் பார்த்தான்.

அன்றியும் இவ்வுலகத்தி லிராநின்ற உத்தமர்களில் சதுர்வேதங்களை யுணர்ந்தவர்கள் வந்தாலும், ஆதுலர்க்கு அன்னசாலை வைத்தவர்கள் வந்தாலும், அறுசமயத்தாருக்கும் உண்டி நல்கினேர்கள் வந்தாலும், கூன் - குருடு - செவிடு - முடம்-

நொண்டி-சப்பாணி-நோயாளி இவர்களைப் பாத்ராபாத்ர மறிந்து காப்பாற்றினவர்கள் வந்தாலும், பசுவுக்கு வாயுரைகொடுத்தவர்கள் வந்தாலும், எறும்புக்கு நொய்யும், காக்கைக்குஅமுதுமிட்டவர்கள்வந்தாலும் தர்மப்பிணத்தைத் தகனம்பண்ணி, தர்மச்சாவடி வைத்து, ஆலயங்களைப் புதுக்கி, நீர்க்குள முண்டாக்கினவர்கள் வந்தாலும், மலினத் துகிலை வெளுத்துத்தந்து, வளர்ந்தசிகையைக் கழிக்கப்பொருளுதவி, பிணியாளர்க் கௌஷதமளித்து, விலைகொடுத்துயிர்களைக்காத்து, சிலவுகட்குத் தலைக்கெண்ணெய் உதவப்பட்டவர்கள் வந்தாலும், சிறைச்சாலைக்கு அன்னம்படைத்து, தின்பண்டத்தை யொருவர்க்குக் கொடுத்து, பெண்போகஞ் செய்துவைத்து, தருமாதிகிருத்தியங்களையும் நடத்தி தன்னுடைய வுயிர்போலே மன்னுயிரையும் காக்கப்பட்ட மகா புண்ணியவான்கள் வந்தாலும், எமதர்மராஜனனவன் அவர்களை முன்னம் எழுந்து அழைத்துவந்து, அவர்களையெல்லாம் தராதரமறிந்து கிரமப்படிக்கு ஆதரணைசெய்து, தனது தர்மசபையின்கணுள்ள சிம்மாசனத்தில் உட்காரவைத்து, வாஞ்சனையான வார்த்தைகளாடிச் சந்தோஷங்கொண்டு, பக்ஷத்துடன் சொர்க்கத்தில் அமைக்காநின்ற ஆக்ஞாசக்கர மொருபக்கஞ் சுழன்றுகொண்டிருக்கும். பின்னும் இவ்வுலகத்தில் இராநின்ற அதமர்களில் பிறர்பொருட்டுஇச்சைவைப்போரும்,ஈயும் பொருளை விலக்குவோரும், அறிந்ததை யறிந்தேனென்றும், விவகார விஷயங்களிலே அசத்தியஞ் செய்வோரும், அவனியோரறிய மதிகதிர் பூதேவியும் பார்க்க, வானவாணியைச் சாக்ஷிவைத்து, அக்கினி முன்னிலையிலே உன்னையன்றி மற்றோர் முகம் பார்ப்பதில்லையென நிச்சயஞ்சொல்லிப் பின்னர் அவளைவிடுத்து, அயலிற் செல்கின்ற பாவிகளும், சகல சாஸ்திரமுணர்ந்த முதியோர்களை அவமானஞ்செய்தவர்களும், இல்லாதுசொல்லிக் கலகஞ் செய்வோரும், தாய்தந்தை வாக்கைத் தள்ளினோரும், ஆசானுரைத்ததை அன்றே மறந்தோரும், சிவனடியாரைத் தூஷித்தோரும், ராமஸ்மரணை செய்யாமல் நாளை வீணாய்க் கழித்தோரும், கருவையழித்த குலநாசரும், துஷ்கிர்த்தியத்தைச் செய்யத்துணிந்தவரும், யாசகர்க்கு அன்னம்படைக்காதோரும், அவரைத் துராக்கிரமஞ்செய்து அடித்தோரும், பொருள்படைத்திருந்தபோதிலும் ஒருவர்க்கு வழங்காமலும் சிவாலயம் விஷ்ணுவாலயங்கட்கு உதவி செய்யாமலு மிருப்போரும், தருமத்தைப் பழிக்கின்றோரும், கோவதை, சிசுவதை, முதலியவைகள் செய்யப்பட்டவரும், புலையுங்கொலையுங் களவுந் தவிர்க்காதவரும், தன்னைமறக்க மதுபானம் பண்ணப்பட்டவரும், தெய்வதூஷணை செய்யப்பட்டோரும் காலவிதிப்படி வருவாராயின்; அள்ளல்-ரௌரவம்-கும்பிபாகம்-கூடசாலம்-செந்துத்தானம்-பூதி-மாபூதி-என்று சொல்லப்பட்ட ஏழுகோடிவகை நரகமானது அவர்களைக்கண்டு, இன்றைக்கு நமக்கு நல்லுணவு கிடைத்ததென்று சந்தோஷிப்பதல்லாது, சண்டனாகிய எமனும் கோபங்கொண்டு அவ்வவர்களுடைய பாபத்திற்குத்தக்க நரகத்தில் அமைக்காநின்ற ஆக்ஞாசக்கரம் ஒருபக்கம் சுழன்றுகொண்டு இருக்கும். இப்படி நரகத்துக்கு சந்தோஷமும், எமனுக்குக் கோபமும் உண்டாக்கத் தக்க பாவிகளை அவ்வெமதருமராஜனுடைய தூதர்களும், கிங்கிலியர்களும், பாசக்கயிற்றாற்கட்டி, இருப்புலக்கைகொண்டு தாக்கித், தணலிற்றள்ளியும், குத்தியும், வெட்டியும்,சுட்டும், கொளுத்தியும், இன்னும் பலவித இம்சைகளைச்செய்து; தாங்களுஞ் சலித்தபின்பு எமதருமனிடத்தில் ஒப்புவிப்பார்கள். அவனு மவர்களைக் கண்டவுடன் சீறிவிழுந்து, அவர்களுடைய குற்றங்களையெல்லாம் விசாரணைசெய்து, நானாவித துஷ்டச்செந்துக்களை யெல்லாங் கடிக்கவிடுத்து, அவ்வப்பாவங்களுக்கேற்ற நரகத்திற்றள்ளி, சொல்லக்கூடாத கஷ்டங்களையெல்லாம் அனுபவிக்கும்படி செய்து தண்டிப்பான். இப்படி உத்தமர்களை ஆதரித்தும், அதமர்களைத் தண்டித்துமிராநின்ற, அந்த எமதருமராஜனுடைய நிலைமை எப்படிப்பட்டதென்றால்? தன்னுடைய ஒருகால் சந்தனத்திலும் மற்றொருகால் நெருப்பாற்றிலும் இருக்க, சென்னியினுடைய மேற்புறத்திலே மேருவையொத்த பர்வதம் ஒன்று மயிர்க்காலிலே தொங்கிக்கொண்டிருக்க, சித்திரகுப்தன் - கொள்ளிக்கண்ணன் - சிங்கமு

கன்-ஆள்விழுங்கி - பெருவாயன் -வக்ரதந்தன்-இவாள்முதலானமந்திரிகள் தன்னைச் சூழ்ந்திருக்க எமகிங்கிலியர்களான சேனைகளும் ஏவற்காரரும்காவற்காரரும் சுவாமி! சுவாமி! என்று சொல்லா நின்றவர்களாய் அணிவகுத்து இருபுறத்திலும் கவிந்து கொண்டு கைகட்டி நிற்க, காலதண்டமும் திரிசூலமும் கொடிய பாசக்கயிறும் கையிலேவிளங்க, மாணிக்கமகுடமானது பிரகாசிக்க, மகா உக்ரத்துடனே விசித்திரமான சிங்காசனமிட்ட கொலுவிலமர்ந்து, சகல மானவர்களுக்குஞ் சேர்வைதருவன். இப்படிப்பட்ட பிரபலனுன எமதர்மமகாராஜன் அரசாட்சிபுரியாநின்ற அப்பேர்ப்பட்ட சுவர்க்கலோகத்தைநாடி, அவனெங்கே எங்கேயென்று கேட்டுக்கொண்டு மகாவேகத்துடனே ராவணனுனவன் வந்தான். இவ்விதமாய் உலகமெல்லாம் ஒன்றுய்த்திரண்டுவந்ததுபோலவும், சத்தசமுத்திரமும் அணைகடந்துவந்தபிரளயம்போலவும், தேவர்களென்று சொல்லப்பட்டவரும் பிரமிக்கும்படி யமலோகத்தைச்சுற்றி வளைத்துக்கொண்ட ராவணனுனவன் தன் சேனையைக் காலன் படையை நிர்த்தூளிதஞ்செய்யும்படி ஆக்கியாபித்து, மூதண்டகூடமு முடைபடும்படியாகத் தானுஞ் சங்கத்தொனிசெய்து, தனதுபாரியவில்லையெடுத்துக் கரத்திலேந்திக் குண்டலாகிர்தியாய்வளைத்துக் குணத்தொனிபண்ணி, எமலோகமெல்லாம் திடுக்கிட்டலறும்படிக்குக் கர்ஜித்து, ஓ மந்திரிகளே! நான் இவ்வெமனுடனே சண்டைசெய்ய வந்திருப்பதையும், நான்பிரதாபலங்கேஸ்வரனென்பதையும், மற்றும் நான் பெற்றிருக்கும்படியான வரங்களின் பலங்களையும், எனது கிர்த்தியத்தையும் நன்றுய்த் தெரிவிக்கும்படி ஓர் தூதனை யனுப்புங்களென்றுன். அவர்களும் அவ்வாறேவிடுக்க அத்தூதுவனும் எமதர்மராஜனைக் கண்டு வணங்கிச் சொல்லுகிறுன்.

இராவணனுடைய தூதன் எமனைப் போருக்கழைத்தல்.

ஐயா எமதருமராஜனே! கேளும் தென்னிலங்கைக் கதிபதியான இராவணேஸ்வரனென்னும் பெயரை வகித்தவர் புவியனைத்தினும் கீர்த்தியடைந்து, கைலைமலையை வேருடன் பேர்த்தெடுத்து அரிதாகிய வரம்பெற்று, அளகேசனை வென்று புட்பகவிமானம் பறித்து அடங்காவீரப்பெருமையைப் படைத்து, தேவர்கள் கெர்வம் பங்கப்படவாட்டி, தேவதா ஸ்திரீகளையும் யக்ஷ ஸ்திரீகளையும் சிறையெடுத்து, சங்கிராமசூரனுய் திக்குவிஜயஞ்செய்து, இவ்விடம் உம்முடனும் யுத்தஞ்செய்ய சர்வாடம்பர வாத்தியகோஷ முழங்கும்படியாய் வந்திருக்கின்றதை உமக்கறிவிக்கச்சொன்னுர். நீர் உலகமெல்லாம் பயப்படும்படி அரசுபுரிந்து சர்வஜீவர்களையும் கொல்லும்வீரம் உம்மிடத்திலிருப்பது மெய்யாயிருந்தால், ஆண்பிள்ளைக்கேற்றவீரத்தன்மையும் உமக்கிருக்குமாயின், இந்தக்ஷணம்வந்து போர் செய்யலாம். இல்லாவிட்டால் வந்து அடிவணங்கித் தோற்றேனென்றுரைத்துக் கப்பணஞ் செலுத்தவேண்டுமெனவுஞ் சொன்னுர். ஆதலால் இவற்றிலே உமக்கு யுக்தமான விஷயத்தை நடத்தலாமென்றுன். இப்படியுரைத்த தூதுவன்மேற் காலனுனவன் சினந்து, கண்களிலே வடவாமுகாக்கினிபோலே கொதிப்பெழும்படியாய்ப் பார்த்து, அடாதூதா! கொஞ்சமாயினும் பயமில்லாமல் நம்முடையபட்டணத்திலே நீ பிரவேசித்ததுமல்லாமல், நம்மோடு மதிப்பில்லாமற்படிக்கு வார்த்தையாடிய உன்னையும் உன்னை என்னிடத்திற்கனுப்பிய அவ்விராவணனையும் லேசாய் விடுவேனென்று எண்ணவேண்டாம். இப்பொழுதே உன் சிரசைக் கொய்துவிடுவேன். ஆனுல் தூதுவனைவெட்டலாகாதாகையால் விடுத்தேன். நீ பிழைத்தோடி அவனுக்கு என்னுடைய வரவையுரைத்து, எவ்விடமுமோடிப் பதுங்காமலிருக்கச் சொல்லுகவென்று அதட்டிச் சொல்லினுன். அப்படியவன்சொன்னபடிக்கு அத்தூதுவனுஞ் சென்று, தான் போய்வந்த சமாச்சாரத்தை ராவணனுக்கு அறிவித்தான். இவ்விடம் எமதருமராஜனுனவன் தனது சுயமந்திரிகளைப் பார்த்துச் சிலவசனஞ் சொல்லுகிறுன்.

கூற்றுவன் மந்திராலோசனை செய்தல்.

கேளும் ஸ்ரீராமா! எமதருமராஜனுனவன் முதல்மந்திரியான சித்திரகுப்தனை

வரவழைத்து, அப்பா சித்திரகுப்தா! நாம் சத்தியமாய் இவ்விடத்திலே நமதுவரையிலும் மெத்தென நாளைக்கழித்திருந்தால், புத்தியில்லாத இராவணனானவன் தன்னுடைய வித்தையையெல்லாங் காட்டி இத்ததியிற் போருக்கழையா நின்றான். சத்துரு போலேவந் தெதிர்ப்போனை சித்திரவதை செய்யாமற் சும்மாவிடலாமா? இதற்கு நீ என்ன உத்தரவு சொல்லுகின்றாய்? என்று வினவவும் மித்திரனான சித்திரகுப்தனுஞ் சற்றுநேரம் யோசித்து, சத்தலோகமுஞ் சஞ்சரியாநின்ற நித்தனான நாரதரிஷி சொன்னதிலே குற்றமில்லை. உத்தமனென்றே எண்ணவேண்டும். இனிநாம்பத்திரமா யாவருஞ்சென்று அவனைச் சுற்றிக்கொண்டு தத்திகெட்டுத்தடுமாறும்படியாய் மொத்தினால், எத்துப் பேசுவதெல்லாம் வற்றிப்போய் நம்மையே நத்திவந்தடைக்கலம் புகுவான். மற்றதொன்றும் எண்ண வேண்டாம். எத்திசையும் கீர்த்திபெற்ற நம்முடைய சுத்தவீரர்களான படைகளை அத்திமத்தகத்தைக் கிழிக்காநின்ற சிங்கம் போலே இத்தக்ஷணமே புறப்பட்டுச் சித்தப்படுத்தவேண்டுமென்றான். அதற்கு மற்றப் பிரசித்தமான மந்திரிகளும் ஒத்துக்கொள்ள, அதுகண்ட காலன் ஆம் சரிதான் இல்லாவிடில்நம்மைமதியான். துன்மார்க்கனுக்கு நன்மார்க்கஞ் சொல்வாரெவர்? என்றெண்ணி அவ்வாறே தனது சேனாசமுத்திரங்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு, வரிசைத்தலைவர் - சேனைத்தலைவர் - யூகத்தலைவர்-தேர்த்தலைவர் - ஆனைத்தலைவர்-குதிரைத்தலைவர் முதலாய்ச் சொல்லப்பட்ட வீராதிவீரரெல்லாம் அணியணியாய்ச் சதுர்ப்பாரிசத்திலும் கவிந்துவரும்படியாகவெளிப்பட்டான். இப்படி வெளிப்பட்ட சண்டனான எமதருமராஜனானவன் தன்னுடைய மந்திரிகளுடனே காலதண்டத்துடன் சூலமுதலாய்ச் சொல்லப்பட்ட ஆயுதங்களும் பாசக்கயிறு மெடுத்துக்கொண்டு, எமபடாளுந் தன்னைச்சூழ்ந்துவரும்படி உத்தண்ட கோலாகலத்துடனே சர்வவாத்தியங்களும் முழங்காநிற்க, விஷாக்னி போற்சீறிப் பிரயாணபேரிகை யறைந்துகொண்டு, பார்த்தோரெல்லாம் பயந்தோடும்படிக்கும் இனி என்னவிதமாமோவென்று அமரர் முதலிய சகலமானபெயரும் திடுக்கிடும்படிக்கும் அட்டகாசத்தோடுதன்னுடைய பட்டணத்தின் மதிற்சுவரைத்தாண்டிவந்து, என்னைப்போருக்கழைத்தவன் எவனோ அவனை இப்போதே அதமாக்கிவிடுகிறேனென்று வீரம்பேசி நின்றான். இப்படி அவன்வந்து நிற்பதை முன்னமே சர்வஜாக்ரதையாய்வந்து இவனுடையவாயிற்கெதிர்பார்த்திராநின்ற இராவணனானவன்கண்டு, உடனே தன்னுடைய சேனைகளை முடுக்கிவிட்டான். அம்மாத்திரத்தில் வஞ்சமானது நெஞ்சிற் குடிகொண்டு மிஞ்சிய இருதிறப்படைகளும் அதிககோபங்கொண்டு, தங்கள் தங்களுடைய மூலபலத்தோடு அந்தந்த வீரர்களும் அவர்களுக்கு இனமாகிய அந்தந்தவீரர்களைமடக்கி எதிர்த்துக்கொண்டுசர்வாயுதங்களையுமெறிந்து யுத்தம் விளைத்தார்கள்.

இவ்விதமாய் நெருங்கியதில் ஓர்பால் ரதக்காரர்கள் ஒருவருக்கொருவர் எதிர்நின்று தேரை நிறுத்தி, இரண்டு மகம்மேருகிரிகள்எதிர்ப்பதுபோலே எதிர்த்துப்போராடி, தேருருளைகளொடிந்தும், மச்சுகள் முறிந்தும், அடித்தட்டுகள்புரண்டும், கொடிமுடிகள் சிதறுபட்டும், ஸ்தம்பங்கள் கழன்றுவீழ்ந்தும், பாகரானபேர் இறந்தும் போக மாளாப்போரை விளைத்தார்கள். ஓர்பால் கர்னமதம் - கரடமதம் - பீஜமதம்- என்று சொல்லப்பட்ட மும்மதங்களையும் பொழியும்படியான கஜவீரர்களோடு கஜவீரரெதிர்த்து, ஆனைகள் தும்பிக்கையினாலே ஒன்றையொன்றிழுப்பதும், வீறிட்டுத் தாக்குவதும், காலாலே மிதிப்பதும், வாலாலே வீசுவதும், செவியாலே மோதுவதும், கர்ஜித்து வாரி எறிவதுமாக யுத்தஞ் செய்தார்கள். ஓர்பால் குதிரைவீரரென்று சொல்லப்பட்டவரெல்லாம் யூகமாய் வளைந்துகொண்டு நின்று, ஒருவரையொருவர் வெட்டுவதும், குத்துவதும், ஏவுவதும், தாவுவதும், இடசாரி வலசாரியாய்ச் சுழன்று திரிவதுமாய் வீரங்காட்டினார்கள். ஓர்பால் போர்ச்சேவகரெல்லாம் ஒருவரையொருவர்வாரி எறிவதும், மற்கட்டிவீழ்வதும், ஒருவர்தோளையொருவர் வெட்டுவதும், அதனாலே ஒருவருடைய கரங்களை மற்றொருவரறுப்பதும், அதுகண்டு அருகில்நின்றவர் அவருடைய சிரசைத் துண்டித்துவிடுவதும், இப்படிக்குயாவரும் ஆக்

கிரமித்துச் சேனையினுள்ளேபுகுந்து, பல விதமான இம்சையைவிளைத்தார்கள். இதிற் சிலர் ஈட்டி - இருப்புலக்கை - சூலாயுதம்- வேலாயுதம் - பிண்டி - பாலம் - முசுண்டி- இவை முதலானவற்றை எடுத்துக்கொண்டு படையினுள்ளே புகுந்து, முன்பின் பாரா தவராய் வீராவேசங்கொண்டு, புடைத்துச் சமூலமும்வாட்டி நிர்மூலஞ்செய்தனர். அப்போது அறுபட்ட தலைகளெல்லாம் குன்றுகள்போலே உருண்டன. ஒடிந்த தோள்களெல்லாம் மலையைப்போலக் குவிந்திருந்தன. வாளாயுதத்தால் தறிபட்டகாங்களெல்லாம் பெருத்த பனந்துண்டுபோலே போர்க்களத்திலே எவ்விடத்திலேயு மிதிபட்டிருந்தன. முறிபட்ட தொடைகளெல்லாம் வானத்தையளாவியபனமரம்போலக் கிடந்தன. முண்டங்களெல்லாம் பெருந்திண்டுகளைப்போலே கண்டவிடத்திலெல்லாம் அண்டரென்று சொல்லப்பட்டோரும் பிரமிக்கப் புரண்டுகொண்டிருந்தன. இவ்விதமானயுத்தகளத்திலே செவ்வானம் போலே ரத்தவெள்ளமானது பூமி தெரியாதபடி சர்வபிணக்குவையல்களையும் அடித்துக்கொண்டோடியது. இதிலே உயிரற்றிராநின்ற பிரேதத்தைப் பருந்துகள்தின்றுசலித்து, என்றைக்குமிப்படிகிடைக்குமாவென்று எண்ணியிருந்தன. கண்டகண்ட விடத்திலேயுருண்டுகொண்டிராநின்றதலைகளைப்பங்கிட்டுக்கொண்ட கழுகுகள் இங்குமங்குமாயோடி, மகா இஷ்டமுடன் தத்தம் இனத்திற்கெல்லாம் அத்தலைகளைக்கொடுத்துதவிசெய்தன. பூதப்சாசமெல்லாம் கொண்டாடனடித்து விருந்திட்டு களித்துக்கொண்டிருக்கும். இதிலே ஒன்றையொன்று தழுவி, இச்சண்டைமாளாது. இன்னம்நமக்கு எண்ணற்ற பிரேதங்கள் தண்டியாய் அகப்பட்டுக்கொண்டிருக்கும். என்று சண்டப்பிரசண்டமாய் நிர்த்தனஞ்செய்து உலாவிக்கொண்டிருந்தன. இவ்விதமான கோலாகலத்துடனே அமோகமான யுத்தமானது நடந்துவரவும், எமதூதர்மீறி ராக்ஷதரை அடித்துத் தும்சஞ்செய்துவருவதையறிந்த இராவணனுடைய சேனைகளெல்லாம் கோவென்றலறி, அவனை அடைக்கலமடைந்து பயந்து நின்றன.

இப்படி எந்தக்காரியத்திலு முன்பின் தெரியாமல் இகலை மூட்டிக்கொள்ளும் லங்கேசன்படைகளெல்லாங் கலக்கமடைந்து, பலங் குறைந்து, மலஞ்சலங்களெல்லாம் வரண்டுபோய்ப் புலம்பும்படியான வாயர்களாய் அலங்கோலமடைந்து, நங்குலங்கெடப்பிறந்த சண்டாள ராவணனுலல்லவா நாமனைவரும் நலங்கெட்டதுமல்லாமல் விலங்கிட்ட பறவைபோற் பறக்கும்படியாயிற்று ஐயையோ! இனி என்னசெய்யப்போகின்ருேம்?என்றிரங்குவதைதசக்ரீவன்பார்த்தான். அப்படிப்பார்த்தபோதவன் இதென்ன ஒருபோதும்பேதியாத நமதுசேனைகள் தத்தளிக்கின்றது? ஆ! ஆ! அந்தகலகஞ் செய்யும் நாரதன் காட்டிய வழியல்லவா? இது? அவன் வராவிட்டால் நமக்கென்ன தெரியும்? கொல்லைக்கும் குடிக்கும் பல்லியும் குடிக்குச் சகுனியும்போ லிருந்தானே. இனியென்செய்வது? இந்தமட்டும் தேர்வர்க்கத்திலும்,யானைக்கூட்டத்திலும், குதிரைத்திரள்களிலும், காலாட் சேனைகளிலும், மாண்டுபோனவர்கள் இருநூறுவெள்ளம். இனியார் நமக்கு உதவிசெய்வார்கள்? என்றெண்ணி நிற்குங்காலையில் மறலியின் மந்திரிகள் வந்து அவனை வளைந்துகொண்டு, வானவில்லை எடுத்துக் குணத்தொனிசெய்து இந்திராஸ்திரம் இரவியாஸ்திரம் சந்திராஸ்திரம் தனலாஸ்திரம் கடலாஸ்திரம் பிரம்மாஸ்திரம் விஷ்ணுவாஸ்திரம் ருத்ராஸ்திரம் இவைமுதலிய பலத்த அஸ்திரங்களையெல்லாம் பிரயோகஞ் செய்தார்கள். அவைகளெல்லாம் புறப்பட்டு ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினுயிரம் நூருயிரம் பத்துநூருயிரம் கோடி என்னும் தொகைகளாய்ப் பரவி, ராவணனுடைய தேர் குதிரை கொடிச்சீலை சாரதி இவை முதலியவைகளையெல்லாம் கண்டித்து, அவன்மார்பின் கவசத்தையும் துண்டித்து, அவனுடைய தேகமெல்லாம் சல்லடைக்கண்களாகத் துளைத்து, அவன் சேனைகளையும் சின்னுபின்னப் படுத்தியதுகள். அதனுல் இராவணன் மூர்ச்சையடைந்தான்.

அதையவன் மந்திரிகளாகிய மாரீசன் மகோதரன் பிரகஸ்தன் விருபாக்ஷன் முதலிய பேர்களெல்லாம் கண்டு, ஐயையோ!! நமது தலைவனுக்கும் இப்படியாச்சுதாவென்று இரங்கினவர்களாய், அவனையெடுத்து மார்புடனணைத்துச் சைத்தியோப

சாரங்களால் தேறச்செய்வித்தார்கள். ஆ கையாலவன் முன்போல் தேறி, ஆக்ரமித் தெழுந்து மீறி, வேறு சேமத்தேரிலேறி, விருதுகள் பலவாய்க்கூறி, வில்லேவளைத்து நாணியேறிட்டுக் குணத்தொனி செய்து ஆகர்னபரியந்த மிழுத்து, அமோகமாக சூரியாஸ்திரம், சந்திராஸ்திரம், வருணு ஸ்திரம், வாயுவாஸ்திரம், இவைமுதலா கிய அனேகவிதமான அஸ்திரங்களேஅபி மந்திரித்துப்பிரயோகஞ்செய்தான். அவை கள் விடுபட்டு கணக்கற்ற தொகைகளாய் மேலுலகங்களேயெல்லாம் மறைத்துக்கொ ண்டு, அக்கினிப்பொறிகளேக்கக்கி, கோடை யிடிபோலக் குபீலென்று குமுறி, ஒன்றே னும் பிறழாமல் வந்து நமனுகிய எமதர்ம ராஜனுடைய சேனேகளேயெல்லாம் பஸ்மீ படலமாகக்கறுவி, நிர்மூலஞ்செய்தனுகள். அதுகண்ட எமதூதர்களாகிய தூமகேது சிங்கமுகன் ஆளிமுகன் கழுதைமுகன் கோரப்பல்லன் வக்ரதந்தன் இவாள் முத லானவர்களெல்லாம் வடவைத்தணல்போ லவெறிந்து ஆக்ரமித்துச்சீறி, ஒவ்வொரு வனும் உகாந்தகாலப் பேரிடிபோல்வந்து சொல்லுகின்றுர்கள்.

அடா அற்பராவணு! நீயும் ஒருதிட வானு? உன்னிலும் பஞ்சையு மிருப்பானு? நாங்கள் உலாவிச் சஞ்சரிக்கப்படா நின்ற இந்த நெடியகடல்சூழ்ந்த பூலோகத்தின் கண் மிகவுமோர் சிறிய தீவாகிய லங்கை யில் நீ வாசமாயிருக்கப்பட்டவன். எங்கள் பெயரைக்கேட்டாலுஞ் சிம்ஹசொப்பனங் கண் டிருக்கப்பட்டவன். எங்களுடைய வல்லமைக்கு உனதுகாத்ரம் ஓர் ஊர்க்குரு விக்குச் சமதையாகும். இப்பேர்ப்பட்ட நீ எங்களேயெதிர்க்கத் திராணிகொண்டுவந்த துணிகரத்தை நினேக்குந்தோறும் மகா ஆச்சரியமாயிருக்கின்றது. இவ்வளவு தை ரியசாலியாயிருக்கிற நீதிப்பிரமைகொண்டு, எங்கள் மந்திரிகள் கையினுற் கிஞ்சிற்று நேரத்துக்குமுன் உன்னே நீ மறந்து, சவம் போல் ரதத்திற் சாய்ந்தாயே இன்னமும் அது போதாதென எங்களேயும் மடக்கிக் கொண்டாயல்லவா? இனி உன்னேயும்உன் னுடன்கூட வந்தவர்களேயும், சும்மா விட ப்போகிறதில்லே. எங்களே லேசாக நினேக்க வேண்டாம். உனது பிராணனே நசிக்கச் செய்யாமல்விடோம் நல்லதாகட்டும். என் றந்த எமபடர்களெல்லாம் ஒரு பெரிய சமுத்திரம்போல் திரண்டு, அந்த ராவண னேத்தடுத்து, எண்ணிறந்த நாராசங்களே யெல்லாம்ஏவினுர்கள். அவைகளெல்லாம் அந்தந்த உக்ர கோலாகலத்துடன் நானு விதமாகிய அக்கினிப்பொறிகளே யுமிழ்ந்து கொண்டு, கண்டவர்களெல்லாம் பிரமித்து உள்ளந்திடுக்கிட்டு அலறும்படியாய்அந்த தசக்கிரீவனது திரேகமெல்லாம் துளே த்து, அவன் ஏறிவந்ததேரையும் பொடி யாக்கி விட்டதுமன்றி கையிலிருக்கும் வில் லேயும் கண்டித்து, அவனது விசாலமாகிய பலமுள்ள மார்பையும் பிளந்து, மெய்மறக் கச்செய்து, உடனே பூமியிற் சோர்ந்து விழுந்து ஆகுலமடையும்படிக்குஞ் செய் தன.

அதுகாலேயில் ராவணன் முன்னிலும் பதின்மடங்கு அதிகமாக மனம்பேதித்து, இனியென்னசெய்வேன்? ஐயையோ!! இ தென்ன பொல்லாதகாலம்? அந்த நார தன்சொல்லிய விஷயத்தினுலல்லவா நாம் க்ஷாத்திரங்கொண்டு படையெடுத்தோம். இப்போது சேவகர்களாகிய மேலவர்களு டன் நம்மாலானவரையிலும் போரிட்டு வரும்போதே ஒன்றும் பொறுத்து முடியா ததாயிருக்கின்றதே! இனி அந்த எமனே யுத்தத்திற்கு வருவானுகில் அப்போதவனு டன் தலேகொடுத்து நிற்க நம்மால் என்ன முடியப்போகின்றது? உண்டு உளமகிழ்ந் திருந்த நம்மை வீணேவந்து கண்டு கிண் டிவிட்டானே? முப்புவனத்துக்கும் பேரா யதே? மோர்க்குவந்தும் மொந்தையை ஒளிக்கலாமா? நம்மையும் நமது சேனேயை யும் இவ்விதமாக நாசஞ்செய்ய அந்தநார தன் எத்தனேநாள் கார்த்திருந்தானே? ஏதோ நாம் சிவனேயென்று லங்கைக்குச் செல்ல விருக்கும்போது அவன் குறுக்கே மலேபோல்வந்து இதை மூட்டிவிட்டுக் கா ட்டிக்கொடுத்துப் போயினுனே! அவனு க்கு வாய்ச்சொல்லா யிருந்ததுபோய் நமக் கது தலேக்குத் தாங்காச் சுமையாயதே! தண்டுமுழுமையும் பறிகொடுத்து, அண் டர்களும் மற்றப் பூலோகப்பெண்டுகளும் கண்டு நகைக்கும்படி ஒண்டியாய்த் தத்தளி க்கும்படி யாச்சுதே? பெரியோர்கள் வார்த் தையைக் கடப்பவர்களுக்கு இவ்விதலாபந் தானே வருவது? இஃதுணர்ந்துதானே

கடவுள் மேடத்துக்கு வாலை நீடச்செய்யாமல் வைத்திருப்பது? என்று இவ்வாறு தன்னுள்தானே துக்கமுற்றவனாய், வாயினாற் சொல்லப்படாத இம்சையைச்செய்யும் இக்கொடிய தூதர்கள்கையில் அகப்பட்டு வருந்துவதைவிட இந்த எமலோகத்துக்குத் தலைவனாகிய தர்மராஜனுடன் சண்டைசெய்து மாள்வதே யுக்தமென்று ஒருவாறாய்த் தேர்ந்தவனாகி, கோபாக்கினியுடன் அத்தூதர்களை யெல்லாம் வாட்டி, சொர்க்க மத்திய பாதாளலோகங்களெல்லாம் அஞ்சும்படியாய் உக்கிராவேசங்கொண்டு அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்.

அடா துஷ்டதூதர்களே! நீங்களெல்லாம் எனக்கு ஒரு நிகரல்ல. உங்களுக்கு எஜமானாகவும் இந்த லோகத்துக்கு அரசனாகவு மிருக்கப்பட்ட அந்தச் சண்டனாகிய நமன் எங்கிருக்கின்றான்? அவனைக்காட்டுங்கள். நான் அவனை இப்போதே சம்மரித்து விடுகிறேன். என்கண்ணுக்கு அவன் புலப்படுவதுதான் தாமதம்; இதுவரையிலும் எனக்கஞ்சிப் பயந்திருக்கின்றானல்லவா? அவனை நானென்ன லேசாய்விடுவேனா? என்று ராவணன் உரத்த குரலோசையுடன் கூவுவதைக்கேட்ட எமதர்மராசனானவன் நகைத்து, ஏதேது? இவன்கிரமமாய்த் தப்பித்துக்கொண்டோடிப் பிழைப்பவன்போற் காணவில்லை. நமது கூர்மையுள்ள ஒரு சூலத்துக்கு முன்னும் நிற்பானா? என்று உடனே வச்சிரமகுடந்தாங்கி, இரத்னமயமாகிய தண்டாயுதம் சுழலவேந்தி, மாயாவிசித்திர பாசக்கயிறுடன் சோதிப்பிரகாசம்போல மேதியின்மேலேறிக்கொண்டு, கிங்கிலியர்களுந் தூதுவர்களும் தன்னைச்சூழ்ந்துவர அண்டரண்டபகிரண்ட சராசரங்களெல்லாம் அதிரும்படி வந்து, அந்த லங்கேசனாகிய ராவணனைக்கண்டு கோபங்கொண்டு நின்றான்.

## எமதருமராஜனுக்கும் ராவணனுக்கும் யுத்தம்.



இவ்வித கோலத்துடன் வந்த எமதருமராஜனுக்கும் ராவணனுக்கும் போர்மூண்டு கொண்டதனால் இருவர்களும் எதிரெதிர் நின்று, இரண்டு மகமேருகிரிகள் எதிர்த்தாற்போல் அளவிறந்தபாணங்களையெல்லாம் கோடானுகோடியாக ஏவினார்கள். அவைகள் அநேகவிதமான கோலாகலத்துடன் புறப்பட்டு, ஆலகால விஷங்களைப்போற்சீறி, யாவரும் பிரமிக்கும்படிக்கு உலகங்களையெல்லாம் தகிக்கத் தலைப்பட்டதுகள். அதனால் தேவாதிதேவர்களெல்லாம் பயந்து, இதென்ன விநாசகாலம்? இது விளைந்ததற்குக் காரணம் இராவணனாதலால் அவனது கர்வ மடங்காதா? நாங்கள் மெய்மறந்து விழிமூடி மௌனத்திருந்தாலும் வந்து அலைக்கின்றனவே? நாங்கள்படும் கஷ்டியென்ன லேசாய்விடுமா? முடியுடன் முடிநெருங்கி மோதுங்கால் நடுவிலிருக்கும் பேன்களெல்லாம் பொடியாய்ப் போவதுபோல் நாங்கள் நசுங்கிவிடலாச்சுதே? ஐயோதெய்வமே! இனியிதற்கென்னசெய்வது? என் ஏங்கி நின்றார்கள். ரிஷிக்கூட்டங்களெல்லாம் இவன் குலம் கோதண்டபாணியாற் கூறுகூறாய் விடுமெனச் சாபங்கூறி, அவரவர்கள் மலைகளிலும், குகைகளிலும், செடிகளிலும், ஓடிப் பதுங்கிக்கொண்டார்கள். ஆதிசேஷனுந் திடுக்கிட்டுக் கண்கள் பிதுங்கத் திகைத்து நின்றான். திரிபுவனத்தர்களுங் கலங்கி வாடிப் புலம்பினார்கள்.

இதுகண்ட ராவணன் பின்னும் அகோரமான பாசுபதாஸ்திரத்தை யெடுத்து மானதபூஜைசெய்து மந்திரித்து விடுத்துச் சங்கத்தையெடுத்துப் பூரித்தான். அந்த மகிமையுள்ள பாசுபதாஸ்திரமானது அண்டகடாகமெல்லாம் கிடுகிடுவென்று நடுங்கும்படியாகவும், பிர்மாதி தேவர்களெல்லாங்கண்டு அஞ்சும்படியாகவும், சூரியசந்திராதிகளின் கதிமாறவும், அஷ்டகுல பர்வதங்களெல்லாம் நிலைமாறவும், தாராகணங்களெல்லாஞ் சிதறும்படியாகவும், ஏதேது? இன்றோடிவ்வந்தகன் சிந்திவிடுவான், அதற்குச் சந்தேகமில்லை; என வந்தவர்களெல்லாம் சிந்தை கலங்கும்படியாகவும், நவகோடி சூரியர்களும் ஒரேகாலத்தில் நவீனமாய்ச் செனித்ததுபோற் ஜொலித்துக்கொண்டு, வடவாக்கினிப் பொறிகள் சிந்தும்படியாய் வந்து அந்த எமதர்மராஜனுடைய நிலையைத் தடுமாறச்செய்து, அவன் மகுடத்தையும், கைவில்லையும், தண்டாயுதத்தையும், பாசக்கயிற்றையும், சின்னா

பின்னப்படுத்தி, அவனது உரத்த மார்பினிடத்து அணிந்திருக்கும் வஜ்ரகவசத்தையும் அறுத்து, பெருமையாக ஏறிவந்த கருமை நிறமுள்ள எருமைக்கிடாவையும் தரையில் வீழ்த்தி, அவனையும் மூர்ச்சையாக்கிவிட்டுத் தனது இருப்பிடமாகிய தசக்கிரீவனது அம்புப்புட்டிலில்வந்து அடங்கியது. அக்கால் தன்னைமறந்து மூர்ச்சையாம் விழுந்த எமனை அவன் மந்திரியாகிய சித்ரகுப்தன் கண்டு, இதென்ன வகைமோசமா யிருக்கின்றதென்றெண்ணி, உடனேயோடிவந்து உபசாரஞ்செய்து தேற்றிக்களைப்பாற்றினான். அப்போது அக்கூற்றுவனானவன் ராவணனிருக்கின்றானோ என்னமோவென்று மெதுவாய்த் தன் கண்களைத்திறந்து பார்த்து, அப்பா சித்ரகுப்தா! இப்பேர்ப்பட்ட அபஜெயம் எப்போதும் வந்ததில்லையே! இப்பாவி நமக்கென்று மூளைத்தானோ? நாமே எல்லாரையும் மாய்க்கும் எமனாயிருக்க, இவன் நம்மை மாய்க்கவந்த எமன்போ லிருக்கின்றானே! ஐயையோ! இவன் நாசமாகானா? என்றேங்குவதைக்கேட்ட முதல்மந்திரி சித்திரகுப்தன் தன்னிலும் சகிக்காமற் சொல்லுகிறான்.

சித்திரகுப்தன் நமனுக்கு பிரியவசனம் கூறுதல்.

ஐயா தருமமூர்த்தியே! (எண்ணித் துணிக கருமந் துணிந்தபின் எண்ணுவதெல்லா மிழுக்கு.) என்பதுபோற் படைகூட்டிக்கொண்டு நாம் எதிர்த்து உயுத்தஞ்செய்தும் அந்த இராவணனைச் செயிக்காமற்போனால் பின்பு என்ன சௌரியமாம்? அவன் வெகுவாய்த் துள்ளிவிழவும் நாம் பார்த்திருக்கவும் ஆச்சுதே! எளியார்க்கும் வலியாராகில் வலியார்க்குத் தெய்வமேற்படாதா? அரசனைப்போல் தெய்வமும் அன்றே கொல்லுமா? இவனது வீரமும் குலத்தின்தீரமும் பூமிபாரமும் தீர்க்க, இவனுக்கெதிரியாய் ஸ்ரீராமர் அவதரிக்கப்போகின்றார். அவராலிவன் நாசமாவான்; நாமிவனைக் கொன்றாலுஞ் சாகான்; ஆனபோதிலும் இலேசாய் விடப்படாது. இவனைப் பரிஷ்காரமாய் வாட்டி, சவம்போல நீட்டி, நம்மையினி ஏறெடுத்துப் பார்க்காமல்மாட்டி, சொந்தவிடத்துக்குத் திரும்பவோட்டி, நமதுவீரத்தன்மையைக் காட்டி, இவன்செய்த வஞ்சத்தைப் பாராட்டி, பூலோகமெங்கும் நமது கீர்த்தியை நாட்டி, நமதுகிங்கிலியர்க்கும் இரையூட்டி, பார்ப்பவர்களுக்கும் ஆனந்தங் கூட்டிவைப்பீரென்று கூறினான்.

இப்படி சித்திரகுப்தன் செப்பியவுடன் எமனுக்குவாட்டமெல்லாம்பறந்து, ஆட்டிவிட்ட பம்பரம்போற் சுழன்றெழுந்து, ஈட்டிமுதலிய ஆயுதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு, தாட்டிகத்துடன் சர்வாடம்பரமாய் அதிக கோபங்கொண்டு வேறுதேரேறி, வில்லைக் கையிலேந்தி நாணியேறிட்டு டங்காரவோசையெழுப்பி, எவர்களும் பிர்மிக்கும்படியாய் இராவணனைத் தடுத்து, அடா தசக்கிரீவா! உனது சண்டையின் தைரியத்தை நான் என்னென்று சொல்லுவேன்? அன்னவாகனனும் மற்றத்தேவர்களுங்கண்டு நன்னயம்பேசும்படியாய், முன்னமே உன்தலையைச்சின்னாபின்னப்படுத்தி இருப்பேன். இந்நேரமும் வைப்பேனா? என்னை யாரென நினைத்தாய்? அடா துன்மார்க்கா! உனதுகழுத்துக்கும் உன்தலையெழுத்துக்கும், சரியாய்ப்பார்த்தழுத்தி இழுத்து விடும்படியான கோதண்டமொன்று இருக்கின்றது. அதெனக்குத் தெரிந்துதான் உயிருடன் விட்டிருக்கின்றேன். அப்போதும் என்னிடத்தில்தான் நீ வந்து மசியவேண்டும் என்றுகூறி அஸ்திரங்களையெல்லாம் சகஸ்திரம் சகஸ்திரமாய்த்தொடுத்து விடுத்தான். அதனால் இராவணன் வெகுவாய் நொந்து மரணமூர்ச்சை யடைந்து, பின்பெழுந்து வெகுண்டு பல்லைக்கடித்துத் தனது கதாயுதத்தையெடுத்து லகுவாய்ப்பாய்ந்து சுழற்றி, தனது முழுசௌரியத்தையுங் காட்டி, அண்டம் படீரெனக்கூவி ஆக்கிரமித்து, கதாயுதவரிசையிற் கைதேர்ந்தவனாதலால் வெகு தந்திர மந்திர யந்திரங்களையெல்லாங் காட்டித் தாண்டிக்குதித்து, விசையாய் ஓங்கியடித்து, சாரதியைக்கொன்று அடக்கி, எமனையொடுக்கி, ரதத்தையும் பேர்த்தெறிந்தான். இப்படியவன் அதோடு நில்லாமல் அக்கூற்றுவன் தலையைப்பார்த்துப் பேரிடிபோல்மோதிய கதாயுதத்தினடியால் அவன் சதாசிவமுங் கலங்கித் திப்பிரமைகொண்டு, மேல்விழி

கீழ்விழியாய்ப் புரண்டுபோயினன். அப்படி போயும் அந்த நமனனவன் சற்றும் பேதியாமற் சரியொத்த திடங்கொண்டு, தானும் சண்டமாருதம்போல் இருப்புலக்கையை எடுத்து, குலாலன் திகிரியைப் போற் காகரவெனச் சுழற்றி அந்தத் தசக்கிரீவனது தலை மண்டையின்மீது மோதினன். அவனப்படிமோதியது அண்டபகிரண்டங்களெல்லாம் வெடித்ததுபோலிருந்தால், அவ்வடியினது உக்கிரத்தை நான் என்னென்றுசொல்லுவேன்? கேளும்ஸ்ரீராகவா! அவ்விராவணனனவன் பிர்மாவின் வரம்பெற்றவனுதலாலும், இராக்ஷதப்பிறப்பாதலாலும், அவ்வடிக்குஇறந்துவிடாமல் மரணமூர்ச்சை யடைந்திருந்தான். அப்படியிருக்கையில் எமதர்மராஜன் கோபத்துடன் அவனைத் தூதர்வசம் ஒப்பிவித்து, அடா செங்கண்ணு! நமது பெருவயிற்றனுக்கு இந்தப்பத்துத்தலைப்பூச்சியைக்கொண்டுபோய் இரையாகக்கொடுத்து அவனைத் தின்றுவிடச்சொல்லென்று உரைத்தான். அவ்வண்ணமே அக்கிங்கிலியர் இராவணனை நெருங்க, அதைப்பார்த்திருந்த அவன் சேனைத்தலைவர்களாகிய வக்ரதந்தன்-கொள்ளிக்கண்ணன்-ஆள்விழுங்கி இவாள் முதலியவர்களெல்லாம், ஓ! ஓ! இதேது முழுமோசமாயிருக்கிறது என்றுணர்ந்தவர்களாய் எடுக்கவந்தவர்களை உடனே தூக்கிக்கொண்டுபோய் தரையில் வீழ்த்தி, காலால் தேய்த்துக் கசக்கி, நாமரூபமில்லாமற் செய்துவிட்டார்கள்.

அப்பால்மூர்ச்சைதெளிந்த ராவணன் அச்சேதிகேட்டு உள்ளங் களித்து மெச்சி, தனக்கருகிலிருக்கிற ஆயிரந்தலையும் இரண்டாயிரங் கைகளையுமுடைய சில ராக்ஷசர்களைநோக்கி, அடா வீரர்களே! நீங்களிப்போதேசென்று அந்த எமனைத்தின்றுவிடுங்கள் என்று உத்தரவுசெய்து ஒருகதையினல் அவன் தூதர்களையெல்லாம் தலைசிதற அடித்து, மந்திரி முதலானவர்களையும் வாட்டி எங்கும் பிணக்காடாக்கினன். இதுகண்ட யமன் ஒருநாழிபரியந்தம் திப்பிரமைகொண்டு ஒன்றுந் தோன்றாமல் நின்றான். இவ்விதப் பிரமாதயுத்தத்தில் மிகவும் நாசமாகிய தன் சேனைகளைக்கண்ட எமதர்மராஜனனவன் ஆக்கிரமித்துக் கோபாவேசமடைந்து, உதட்டைப் பற்களாற் கடித்துக்கொண்டு, முகத்தில் வேர்வைசிந்தக் கோபச்சிரிப்புடன் ராவணனையடுத்து, அடா பத்துத்தலைப் பூச்சியே! நீ எவ்வளவு பலசாலி? உன்னுடைய சௌரிய முதலியவைகளை இப்போதே காட்டுகிறேன்பார் என்றுரைத்துத் தனது வில்லில் ஒரு பர்வதாஸ்திரத்தைத் தொடுத்து விடுத்தான். அவ்வஸ்திரமானது குபீலென்று ஆகாயத்திற் கிளம்பிஎங்கணுமலைகளாகப்பறந்து,அந்த ராவணனுடைய சேனைகளின் மத்தியில்வந்துவிழுந்து கூழுக்கரைத்த மாவைப்போலரைத்துவிட்டன.

அதுகண்ட தசக்கிரீவன் ஒருவஜ்ஜிராயுதத்தை ஏவி அந்தப்பர்வதாஸ்திரத்தின் சிறகையறுத்துவிட்டு, தனதுகூர்மையுள்ள ஒப்பற்ற வாளாயுதத்தைக் கையிலேந்தி, இவ்வந்தகனை இப்போதேஅதமாக்குகிறேனென்றார்ப்பரித்து, காற்றினுங் கடுவேகத்துடன் நமனைவந்து அதட்டி நெருங்கினன். அக்கால் அச்சண்டனும் பிரசண்டமாகிய இரண்டு அர்த்தசந்திரபாணங்கள் தொடுத்து அவனது நீண்டதனுசைக்கண்டித்து, பின்னும் வில்லிற்கொடிய விஷாக்கினி பாணங்களையும் நெருப்பாஸ்திரத்தையும் அபிமந்திரித்து விட்டான். அவைகளெல்லாம் வில்லில் நின்றும் விடுபட்டமாத்திரத்தில் உலகமனைத்தையுந் தகித்து, தணற்பொறிகளைச் சிந்திக்கொண்டு இராவணன்மேற் பாய்ந்து, அவனுடைய திரேகத்தைத் துளைசெய்யுங் கருவிபோல் துளைத்தன. லங்கேசன் அவ்வுபத்திரவந் தாளாதவனுய்நாரதனை நினைந்து, ஐயையோபாவி! இப்படியுங் கொண்டுவந்து மாட்டிவிடுவானு? இப்படியென்னைக் கெடுக்கவேணுமென்றே ஓர் உத்தேசம் தனது உள்ளத்தில் வைத்திருந்தானே? இவ்வளவை யறிந்துரைப்பார் இல்லாமற் போய்விட்டார்களே. ஒருவர்க்கு மடங்கொணு உம்பல்போல் திரிந்தேனே! இப்போது இந்தப் பாணவருத்தஞ் சகிக்கமுடியாதனவா யிருக்கின்றதே? தலைக்கும் முழங்காற்கும் முடியிடும் நாரதன் இந்தயிடியை அனுபவியாமற் போவானு? என்றிரங்கினன்.இப்படியவன் இரங்குவதைக்கண்ட மகோதரன் சிறிது உபசரித்துத்தேற்ற உடனே தெளிந்தவனுய் மறுபடியும் வில்லையெடுத்து நிறுத்தி, இந்த நமனைச்சொல்லாமற் பறக்க வடிக்க

வேண்டுமென்று நினைந்து தனக்குக் கிடைத்திருந்த ஒரு அற்புதமாகிய சூலாயுதத்தையெடுத்து அபிமந்திரித்துப் பிரயோகஞ்செய்து விடுத்தான்.

அந்தச் சூலாயுதமானது காளகூட விஷம்போற்சீறி எமனைத் தேடிவர, அதைக் கண்டமாத்திரத்தில் அவன் பயந்து அதற்கு எதிர் நிற்கமாட்டாதவனாகி, இஃதெப்படியும் நம்மைத் தப்பாதுகொல்லும். இனிநாம் எவ்விடத்திற் பதுங்கிக்கொள்வது? யாரும் இதை தடுக்கவரமாட்டார்களே? மார்க்கண்டனுக்காக ஏவிய பரமசிவத்தின் சூலாயுதத்தை எவர்தடுத்துக் காப்பாற்றினார்கள்? இல்லையே, ஆதலால் என்செய்வேனென்று அழுகிறான். அக்கால் ஆகாயத்தில் அசரீரிதோன்றி, ஓ எமதருமராஜனே! சிவபெருமான் திருவருளால் கிடைத்த சூலாயுத மாதலாலும், அதைஜெயிக்க மும்மூர்த்திகளுக்கும் அரிதாகையாலும், ஆனால் அது நிராயுதபாணிகளையும் சிவபக்தர்களையும் ஒன்றுஞ்செய்ய மாட்டாதாகையாலும், அக்குறிப்புணர்ந்து தப்பித்துக்கொள்வதே சமையோஜித தந்திரமென்றுகூறிற்று. அதுகேட்ட நமன் சரியென்று தேர்ந்து, மரக்கலக் காக்கைக்கு வாய்த்த ஆதாரம்போற் கையிலிருந்த சர்வாயுதங்களையும் விடுத்து, தேரைவிட்டிறங்கி, அகமுழுவதும் விபூதியைப் பூசிக்கொண்டு, பஞ்சாக்ஷர மந்திரத்தை யுருச்செபித்து, அரகரசிவசம்போ! ஓம் மஹாதேவா! ஓம் உமாமயேஸ்வரா! ஓம் சந்தரஜடாதரா! ஓம் பரமசிவமே! என்று தோத்திரஞ்செய்து நிராதரவாக நின்றான். இப்படி அவன் நிற்பதை அதிவேகத்துடன் கோலாகலமாய்வந்த சூலாயுதமானது கண்டு, தனது ஆத்திரமெல்லாம் அடங்கி அந்த ராவணனைத் தூஷித்து, இப்படியும் அனுசந்திப்பானா? இது என்னமோ சூது தெரியவில்லை என்று எப்போதும்போல இராவணனது அம்பறாத்தூணியில் வந்து அடங்கியது. அது கண்ட ராவணன் மகோதரனை யழைத்து, ஐயா நண்பனே! இனி யென்னசெய்வது? எவ்விதத்தில் வெல்லலாம்? இவன் வேளைக்கேற்ற வேஷம் பூண்டிருக்கின்றானே? நான் விடுத்த சூலமும் திரும்பச் செய்துவிட்டானே? இதற்கு நீ என்னசொல்லுகிறாயென்று கேட்டான். அதற்கவன் ஐயா! எவ்வளவு காலந்தான் யுத்தஞ் செய்தபோதினும் நீர் அவனைவெல்வதரிது. அவனுமும்மை ஜெயிக்கான். ஆகையால் இனி அவனுடன் சந்திபேசி மருவிக்கொள்ளுவதே சர்வோத்தமம். அப்பால் உமது சித்தமென்றான். உடனே மாரீசனும் அவனைப்பார்த்து, கேளாய் மருகனே! நான் தலையில் முட்டிக்கொண்டு கல்லுங்கரைய உரைத்தேன். அப்போதென்னை எடுத்தெறிந்து பேசிவிட்டு, இப்போது அடுத்து வந்து முறையமிட்டுக்கொள்ளுகிறாய். இன்னமுந் தெரியச் சொல்லுகின்றேன். இந்த க்ஷணந்திரும்பிவிடு. ஆத்துமாமாத்திரமிருந்தால்யாவையும்அனுபவிக்கலாம். என்று அவன் கூறியவுடன் பிரகஸ்தனும் வாய் திறந்து, ஐயோ! நாரதன் வரவையும் நன்மைக்கென்று எண்ணலாமா? போரைவிடுத்து ஊரையடுத்துப்போய்ச் சேருமென்றான். இவர்கள் சொல்லால் ராவணனுக்கு ஒன்றுந் தோன்றாது சற்றுநேரமிருந்து, பின்னுஞ் சூலாயுதத்தை நினைந்து பெருமூச்செறிந்து, அந்த நமனை வெல்லாமல் இலங்கைக்குச் செல்லுவேனா? பல்லாயிரங்கோடி வருஷமானாலுஞ்சரி இவனை விடுகிறதில்லை என்று வில்லில் நின்றும் விடுபட்ட கணைபோற்கிளம்பித் தோளைத்தட்டி சொல்லொணாத விருட்சங்களையெல்லாம் கெல்லிப் பிடுங்கிக்கொண்டு வல்லாண்மையுள்ள நமனையும் அவன்படைகளையும் மாட்டி, சர்வசம்மாரப் பிரளயகால ருத்திரனைப்போல் விளங்கிநின்றான். அதுகண்ட காலனுங் கோபங்கொண்டு, இதுதான் மூலமென்று நுழைந்து ராக்ஷசப் படைகளையெல்லாம் கருவறுக்க நினைத்து, தனது பாசக்கயிற்றினால் வீசிவீசிச்சேர்த்து, கட்டிக்கட்டித் திண்டுகள்போற் புரளச்செய்தான். சிலரை அலறச்செய்தான். சிலரை மிரளச்செய்தான். அதிலுஞ் சிலர் இவன் எமனாதலால் நம்மை ஒருபோதும் விடமாட்டானென்று ஓடிவிட்டார்கள். இப்படி நானாவிதமாக இராவணன் சேனைகளில் மாய்ந்து விட்டவர்களும், தப்பித்துக்கொண்டு ஓடிவிட்டவர்களும் போக, மற்றவர்களெல்லாம் பயந்து வந்து இலங்கேசனை யடுத்து வணங்கிச் சொல்லுகின்றார்கள்.

ஐயா பிரதாப லங்கேஸ்வரா! இதென்ன ஆச்சரியம்? எப்போதும் இப்பேர்ப்பட்டகாலம் வந்ததில்லை. பகற்பொழுது போய்விட்டது. இராப்பொழுது சமீபித்தது. இத்தருணத்தில் எங்களுக்கோர் ஆதரவு சொல்லுவாரில்லாமலும், அண்ட நிழலில்லாமலும், நாங்களலைவது உமக்கழகா? என்று சமுத்திரக் கோஷம்போல் முறையமிடுவதை ராவணன் பார்த்து, நீங்களேன் இப்படிநோவது? நானே தத்தளிக்கின்றேன். வீடுபற்றி வேகும்போதா நீங்கள் கிணறெடுப்பது? அந்த எமன் சூதானமார்க்கமாய் சண்டை செய்வதென்ன தெரியாதா? தேரேறி வரும்போது அதனைப் பொடிசெய்தால், அந்தக்ஷணம் கிடாவின்மீது ஏறி நிற்கின்றான். அதனையுங் கீழேவிழச் செய்தால், எண்டிசையும் நடுங்கும்படியாய் தண்டேந்தி வருகிறான். அதனைக் கண்டித்துவிட்டால், மலைபோலும் இருப்புலக்கையைக்கொண்டு புடைக்கிறான். அதற்குஞ் சமாளித்திருக்குமளவில், நானாவித சுருக்கு பாணங்களைத் தொடுக்கிறான். அவனை எவ்வாறு ஜெயிப்பதென்று எண்ணித் தியங்குகின்றேன். நான் பிறந்ததுமுதல் இத்தன்மையுள்ளசண்டைசெய்ததேயில்லை. ஐயோ மயிர்ப்பாலமும் நெருப்பாறுமாக வந்து வாய்த்ததல்லவா? ஆயினும் என்பிராணன் போமளவும் அந்தநமனை வுயிருடன் மாத்திரம்விடுவேனென்று நீங்கள்எள்ளளவும் எண்ணவேண்டாம். முற்றிலும் ஒருகை பார்த்துவிடுவதே சரியென்று தீரங்கொண்டுதான் இருக்கின்றேன். அதன்மேல் சிவன்செயலெப்படியோ? எனத் தேறுதலை சொல்லி அவர்களை நிறுத்தினான்.

இப்படி அவர்கட்குத் தேறுதல்சொல்லிய ராவணனானவன் முன்னினும் அதிக கோபங்கொண்டு, தன் இருபதுகண்களினும் நெருப்புப்பொறிகள் சிந்தவும் மீசை துடிக்கவும் ஆக்கிரமித்து வீராவேசங்கொண்டு, அஷ்டநாகங்களும் ஒடுங்க, எட்டு மதகரிகளும் நடுங்க, ஆழமுள்ள கடல்களேழுங் கலங்க, அஷ்டகுலாசலங்களுங் குலுங்க, ஆதிசேஷனுஞ் சித்தம் பிரமிக்க, ஆதிகூர்மனும் நெளிந்து சிரமிக்க, அண்டகோளங்களெல்லாம் வெடிக்க, விண்டுவாதிய தேவர்களும் உளம்வாடி நிற்க, ஐராவதங்களின் மனங்களும்பெதிர, தாராகணங்களெல்லாம் உதிர, மதியுங்கதிருங் கதிமாற, புவனங்களேழும் புலம்பி நிலைபேர, அந்தரவாசிகளும் பிரமிக்க, திரிமூர்த்திகளுங்கண்டு அதிசயிக்கத் தேரேறி வில்லைவளைத்து நாணியேறிட்டுக் குண்டலாகிர்தியாய்ச் செய்துகொண்டு, அமோகமாகிய நாராசபாணங்களையெல்லாம் அற்புத நிற்புதமென்னுங் கணக்குக்கப்பாலும் அளவிடாத விசேஷமான தொகைகளாகத் தொடுத்து, பின்னும் கொடிய விசித்திரமான அஸ்திரங்களையும் கும்பற் கும்பலாகவெடுத்து, இன்றேடேயிந்த நமனை அதமாக்கி விடவேணுமென்றெண்ணி மாட்டிவிட்டான். அவைகளெல்லாம் ஆலகால விஷம்போற் சீறி, காளமேகம்போல் மீறி, அதிக்ராமித்தெழுந்து சீறி, அனந்தமான விருதுகளைக்கூறி, அக்கினியைப்போல் கொதித்து, முப்புவனமுங்கலங்க விதித்து, எவருந் துதிகொள மிகுந்து, எமன் படைக்குள்புகுந்துவாட்டி ஒன்றும் விடாமல் பஸ்மீகரம்பண்ணத் தலைப்பட்டதுகள். இதுகளின் சித்திரவதைகளையும் இம்சைகளையும், ஸ்ரீராமா! நான் என்னென்று உமக்கு எடுத்துரைப்பேன்.

இப்படி காவேக சரவேகங்களால் ராவணன் தொடுத்த அபரிமிதமான அஸ்திர சஸ்திரங்களெல்லாம் பலமுகமும் பரவிச் செய்யுங் கோலாகலத்தால் எமதர்மராஜனுடைய ரதகஜதுரகபதாதிகளும், எமகிங்கிலிய தூதர்களும், அதனைச் சகிக்கமுடியாதவர்களாகி, தலையுடைந்தவர்களனேகர் நிலைகடந்தவர்களனேகர். கண்டமறுந்தவர்களனேகர். தொண்டை யுடைந்தவர்கள் அனேகர், தோளொடிந்தவர்க ளனேகர். வாளறுந்தவர்களனேகர். வயிறுகள் சரிந்தவர்களனேகர். உயிர்களிழந்தவர்களனேகர். மரம்போல நின்றவர்களனேகர். சிரம்போயும் உலாவினவர்க ளனேகர். வருத்தமுற்றவர்களனேகர். கருத்தழிந்தவர்க ளனேகர். வில்லைவிடுத்தோடினவர்களனேகர். பல்லையிளித்தாடினவர்களனேகர். ஒருவரையொருவர் கட்டிக்கொண்டவர்க ளனேகர். ஒருவருடனொருவர் முட்டிக்கொண்டவர்கள் அனேகர். வந்தடி பணியலாமென்று சிந்தையிலெண்ணினவர்க ளனேகர். இந்த கண்டந் தப்புவோமென்று சந்துபார்த்து ஒளித்துக்கொண்டவர்க ளனேகர். கூவி

நின்றவர்களனேகர், தாவி நின்றவர்களனேகர். நாவறண்டு நின்றவர்க ளனேகர். ஆவிவிடுவதே சரியென்று அகன்றவர்க ளனேகர். பொறிகலங்கி நின்றவர்கள் அனேகர். நெறியழிந்தோடினவர்க ளனேகர். பாணத்துக்கொளித்தவர்களனேகர். நாணத்துக்கஞ்சினவர்களனேகர். வழியுமிரத்தத்தை வாரியெறிந்து பின்னுமீறினவர்க ளனேகர். ஒழியும்விதத்தைத் தேடிப் பழியில்லாமல் நின்று ஊடாடினவர்களனேகர்.

இவ்விதமாகக் காலன் படைகளெல்லாம் நாலாவழியிலும் கோலாகலமா யழிந்ததில் எங்கும் பிணக்காடுகளாய் இரத்த வெள்ளங்களில் மறைந்து அழுந்திய வைபோகம், அங்கங்கு மலைகள்போலும், கோபுர நிலைகள்போலும், ஆகாயமுட்டிக் குவிந்திருந்ததினால், பருந்துகளும் - கழுகுகளும்-ஓரிகளும் - பேய்களும் - நாய்களும்-கூளிகளும் மிகுந்த கொண்டாட்டமாய் ஒன்றுக்கொன்று உதவுவதும், ஒன்றையொன்று அதட்டுவதுமாகி யிருந்தன. சில போராட்டம்வந்துப் பிணங்கி, மறுபடியும் இவ்வாறு கிடைக்குமோவென்று இணங்கின. சில நமது பாக்கியவசத்தாலல்லவா ராவணன் திக்குவிஜயஞ்செய்து, இந்த எமலோகத்துக்கும் வரும்படி நேரிட்டதென்று எண்ணிப் புசித்துச் சலிப்பற்றிருந்தன. சில ஆம் ஆம் மெய்தான் இதுபோலுஞ்சமயம் மறுபடியும் வாய்க்காது என்றெண்ணி உடனே தங்கள் தங்கள் இனங்களுக்கெல்லாம் விருந்துகள் சொல்லிக் கூட்டிப் பிர்மானந்தமாய்த்தின்று களிப்புற்றிருந்தன. சில அந்தந்த மாமிசங்களைக் கையிலெடுத்து, வாயினாலும் பல்லினாலும் இழுத்துப்பார்த்து இது மிகவும் வலியுள்ள சதைகளென்று அப்படியே தட்டாது விழுங்கிவிடும். சில தமக்குள் இனம்பிரிந்து பந்திவரிசையாகி, அதனதன் சுற்றத்துக்கும்-பெண்டீர்க்கும்-குஞ்சுகளுக்கும்-பங்கிடும். சில மூண்டங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கண்டங்களாகப் போட்டு, பண்டிகைநாள் கொண்டாடிக் கூத்துகளாடும். இப்படியாக அமர்க்களமெல்லாம் கணக்காக்கி நிர்மூலப்படுத்தியும், துடைத்துப் பெருக்கியும் போதாமல் திடீரென்று அவ்விராவணன் தேரைவிட்டிழிந்து ஒருகதையைக் கைக்கொண்டு கிறுகிறுவென்று சுழற்றி நமனருகில் வந்து நெருங்கி, சண்டமாருதம்போல அவன் மண்டையின்மீது ஓங்கியடித்தான். அதனாலந்த எமனும் பிதிர்கலங்கித் திகைத்து, தட்டுகெட்டுத் தடுமாற்ற முற்றவனாகி, ராவணனை ஏறெடுத்துப் பார்க்கவுங்கூட தைரியமின்றி, இந்த எமராக்ஷசனை எவ்வாறு ஜெயிப்பதென்றெண்ணி ஏக்கமுற்றிருந்தான்.

### சதுர்முகப்பிரம்மா எமனைத்தடுத்தல்.

கேளும் ஸ்ரீராமச்சந்திரா! இராக்காலங்களிற்செய்யும் யுத்தம் ராக்ஷத வம்சங்களுக்குப் பலந்தருவதல்லாது வெற்றியுந் தருமாதலாலும், ஏழுநாள் வரையிலுஞ் செய்துவந்த யுத்தத்தைவிட இராத்திரி நடந்தயுத்தம் பிரமாதமாதலாலும், அதிலுங் கதாயுதத்தால் ராவணன் மண்டையின்மேல்மோதியடித்த வருத்தத்தினாலும் சற்றுக் களையுற்றிருந்த மறலியாகிய எமதர்மராஜன் ஒருவாறாய்த் திடங்கொண்டு, இனியொரே தடியடியாய் நமது காலதண்டத்தை யேவாவிடில் இவனொழியானென்றெண்ணி, அதனை ஏந்தித் தரைமீது நின்று கந்துபாய்ந்து காட்டுச்சிங்கம்குகைக்குளிருந்து புறப்படுவதுபோல் வெகுலாகவத்துடன் வருகிறான். இப்படியவன் வருகிற நோக்கத்தையும் குறிப்பையுமுணர்ந்த குவலயம்படைத்த குணவானாகிய பிர்மாவானவர் அன்னத்தின்மீதுவந்து அந்த அந்தகன் நடுவில் நின்று, ஓ தண்டத் தலைவரே! சற்று நிதானியும். நான் சொல்வதைக்கேளும். இந்தலங்கேசனுக்கு நாம் கொடுத்த அனேக மகிமையுள்ள வரங்களல்லாது கைலாசபதியும் வேணவரந் தந்திருப்பதனால், அவனை நீர் தோல்வியடையச்செய்ய முயல்வது தகுதியன்று. நீரிக்காலதண்டத்தை வீணி லேவாதீர். அதைவிட அவனுக்கிளைத்தேனென்று உரைப்பது உம்மைப்போலொத்தவனுக்கு அழகாயிருக்குமென்றார்.

உடனே எமனானவன் அவரை வணங்கி, ஐயா இரணியகருப்பரே! அவனுக்கு நான் இளைத்ததாகச் சொல்லவேண்டிய காரணமெனக்கு உரைக்க வேண்டுமென்று கேட்டான். அதற்குப் பிரம்மாவானவர்

நகைத்து, ஐயா அந்தகரே! உப்புக்கும், முத்துக்கும், சர்க்கரைக்கும், மணலுக்கும், சரி பார்ப்பவர்களுண்டா? துஷ்டனுக்கு இடைந்துநின்றால் அதில் தாழ்வென்ன? இது எவர்களுக்கழகு? தர்மசொரூபியாய் சர்வபுவனமுங் கொண்டாடுமும்மை விவேகபுஞ்சமாகிய கர்மயீனனென்னும் இராவணனுக்கு இணைசொல்லலாமா? ஆகிலும் திரிமூர்த்திகளில் எங்களிருவர்களாலுமே மாளானெனில் நீரா அவனை ஜெயிப்பது? அதைவிட்டுவிடும். ஆனாலிவன் சிலகாலம் பொறுத்தபின்பு ஸ்ரீராமபாணத்துக்கு இரையாய்விடுவான். நீர் வருத்தம் வையாதீர் என்று விளம்பவும் எமனவன் நகைத்து, ஐயா பரமேட்டீ! நல்லகாரியஞ் சொன்னீர். என்னை வணங்கும் அந்தத்துஷ்டனை நானு வணங்கிநிற்பது? உமக்கும் பரமசிவத்துக்கும் வரமென்பதுலேசாயிருக்கின்றதே? அதனாலல்லவா இதுவரையிலும் அவனுடன் போராடும்படியாயிருக்கின்றது என்றுகூறி அவர்கருத்துக்கு ஒருவாறாய்ச் சம்மதித்து உடனே தசக்கிரீவனைப்பார்த்து, ஆ! ஆ! இராவணா! இன்னமும் உனக்கு என்னுடன் போர்செய்யத் திடமிருக்கிறதா வென்றான். இதற்குள் பிர்மாவானவர் ராவணனுக்குக் கண்ணினாற் குறிப்புக்காட்டினார். அதனால் அவனும் ஏதேது நான் பயப்படுவது? நீ ஒரு எமன் மாத்திரமல்ல. உன்னைப்போல் இன்னம் கோடானுகோடி எமன் வந்தபோதிலும் நான் பின்னிடையேன். இஃதுன் அநுபோகத்துக்குத் தெரியவாராதா? இதையெல்லாம் விடுத்து நீ எனக்குத் தோற்றாயென்று உன்வாயாற்சொல்லவேண்டும், பிறகு நான் செல்லவேண்டுமென்றான்.

இப்படி அவ்விராவணன் துணிவுடன் சொல்வதைக்கேட்டு அருகிலிருந்த சித்திரகுப்தனாகிய மந்திரி தன் ராஜாவாகிய எமனுக்கு நன்றாய்த்தெளிவுற, இவ்வேழுநாளாக நடந்த யுத்தத்தினது பலாபலத்தின் ஜெயாபஜெயத்தையும் அதன் நயநஷ்டத்தின் குணானுபவத்தையு மெடுத்துரைத்தான். அதன்மேல் மகிஷவாகனனாகிய நமனுஞ் சம்மதித்து, பிள்ளையைப் பள்ளியென்பதனால் உள்ளசெல்வம்போவதில்லையென்றுன்னி, உடனே பாதகாணிக்கைகள் கொண்டுவந்து நின்று, ஓ ராவணேஸ்வரா! இவ்வுலகமெல்லாம் உமது வீரப்பிரதாபங்களை மொழியுமெனில் நான் ஒருவனுயுரைத்து முடிவது? நீர்செய்த யுத்தத்தில் நான் தோற்றுவிட்டேன். ஆதலால் சந்திசெய்துகொள்ளும் நிமித்தம் உம்மிடத்துக்கு வந்தேனென்றான். அதுகேட்ட ராவணன் என்னதான் இவனும் இவன் படைகளும் இந்தச்சண்டையில் நின்று தயங்கி உண்டில்லையென்பதாயிருந்தாலும், கடைசியிலிவன் ஏந்திவந்த காலதண்டத்துக்குப் பிராணபிச்சை கிடைத்ததல்லவா? என்று தன்னுள்தானே நினைத்து, மேலுக்கு வீரம்போகாமல் கைகொட்டிச் சிரித்து, நமனும் ஒரு சுத்தவீரனா? எனக்குத் தோற்றான் எனக்குத் தோற்றான் என்றுசொல்லி வெற்றிச் சங்கத்தொனிசெய்து, வீறிட்ட மும்மத வேழத்தைப்போலத் தன் புஷ்பகவிமானத்தின்மீது தானும் மற்ற மாளாமல் நின்ற சேனைகளுமாக ஆரோகணித்தேறிக்கொண்டு, திக்குவிஜயப் பிரதாபனாய் அந்த எமலோகத்தைவிட்டு அப்பாற்சென்றான். பிர்மதேவரும் இருப்பிடத்துக்கு எழுந்தருளினார். சர்வதேவர்களும் சந்தோஷமுற்றிருந்தார்கள். அப்பால் எமதர்மராஜன் ஏதோ ஒருவகையால் தேறினவனாகி, இறந்த சேனைகள்போக மற்றவர்களுடன் தன் பதியின் ஆளுகையிலமர்ந்து சுகமாக விருந்தான்.

## இராவணன் ஆதிசேடனை வெல்லுதல்.

கேளும் தசரதநந்தனா! இவ்விதமாக பெயரைச் சொன்னவுடன் சகலலோகமும் பேரிடியைக்கேட்டசர்ப்பம்போல் கிலிகொள்ளும் வீரத்தன்மையையுடைய எமலோகத்துக்கு அதிபதியாகிய எமதர்மராசனைச் செயித்த பிரதாபத்தினால், இலங்கேசனாகிய ராவணன் தன்னைமறந்து, புயாசலங்களைத்தட்டி ஆர்ப்பரித்து, யுத்தசன்னுத்தனாகி, எவர்களும் நடுங்கும்படியாய் மத்தளம் கர்னா பேரி பூரி முதலிய சர்வமேளவாத்தியங்களும் முழங்கும்படிக்குச் சங்கத்தொனியுடன் பிரயாணபேரிகை யறைந்துகொண்டு புறப்பட்டு வருகிறான். இப்படி வருகிறபோது வழியில் தனது மந்திரிகளைப்பார்த்துச் சொல்லுவான். கேளும் அமைச்சர்களே! அந்தமட்டும் நாம்செய்த

பூஜாபலத்தால் நாரதன்செய்து மூட்டிவிட்ட கலகத்துக்குத் தப்பித்துக்கொண்டு, அந்த எமனையும் வெற்றிகொண்டு திரைப் பணமும்பெற்று மீண்டோம். இனிமேல் என் செய்யலாம்? திக்குவிஜயஞ்செய்யப் புறப்பட்டுக் கூடினவரையில் வெகு கீர்த்தியெல்லாம் பெற்றோம். அடங்காத குபேரனையும் அடக்கிவிட்டோம். காணாத சிவனையுங்கண்டு கைலாசத்தையுந் தூக்கிப் பயப்படச்செய்தோம். ஒருத்தராலும் இளைக்காத மருத்துராஜனையும் வென்றோம். கனகராஜப்பிரபுவாகிய அனரண்யனையும் ஜெயித்தோம். பின்னும் பூலோகமுழுமையுந் திரிந்து, திக்குவிஜயத்தின் நிலைநாட்டி வந்தோம். இன்னம் எவர்களிருக்கின்றார்களோ அவர்கள் உங்களகத்துளிருந்தால், அதனைக் குறிப்புடன் கூறுங்கள். இந்த க்ஷணந் தரிக்காமல் சென்று பருப்புடன் நெய் பகர்ந்ததுபோல் அரிபிரம்மாதிகள் வந்தாலும், அவர்களுக்குஞ் சிரிப்புண்டாகும்படி நிறுத்தி, அவர்கள் பார்க்கவே சமூலமும் சரிப்படுத்தி, நரிப்பசாசுகளுக்கு இரையாக்கி விடுகிறேனென்று நவின்றான். இப்படியவன் நவின்றதை விருப்பில்லாமல் கேட்ட பிரகஸ்தனும், மாரீசனும், விளம்புவார்கள். கருப்பிற் றெளிந்தெழுந்தும் கர்மந்தீராமல், இன்னம் உரிப்பணம் போயும் சண்டைக்கு உலைவைத்திருக்கின்றீரோ? ஐயா லங்கேஸ்வரா! இம்மட்டும் வெற்றிகொண்டது போதும். எங்களுக்கோ உள்ளதாதும் திப்பிரமைகொண்டு கலங்கி போகின்றது. அந்தந்தச் சண்டைக்கேற்ற சூதும் வாதும் ஆர்கற்றிருக்கின்றார்கள்? அந்தமட்டும் எமனிடத்திற் கேட்டதில் எங்கள்காதும் புளித்துப்போயிற்று. இனிமீதும் உலகவெற்றியும் கலகநாசமும் வேண்டாம். யாதொரு ஏதுவுமில்லாமல் வீணாய் எவர்கள்பேரில் வலியப் படையெடுப்பது? ஆதலால், இந்த க்ஷணம் லங்கைக்குத் திரும்பும். என்று இருவர்களும் இதவாகச் சொல்வதைக்கேட்கும் இராவணனுக்கு மகோதரனியம்புவான். கேளும் கெடிஸ்தலாதிபதியாகிய ராவணேஸ்வரா! ஏற்காத வார்த்தைகளை விளம்பும் இம்மந்திரிகள் முகத்தைப் பார்த்திருப்பதில் என்ன பிரயோஜனம்? நீர் என்னகண்டீர்? இம்மந்திரிகளுக்குத்தான் என்னதெரியும்? இன்னம் அனேக ராச்சியங்களும் மகுடமன்னர்களும் இருக்கின்றார்கள். அவர்களையெல்லாம் விடுத்து, அண்டைவீட்டு குண்டிசட்டிக்குள்ளாகவே அஸ்வமேதயாகத்தை நடத்தினவன்போல, இம்மட்டில் திக்குவிஜயத்தை நடத்தி முடித்துவிட்டோமென்பதும் ஒருவீரமா? ஐயா தசக்கிரீவ மகாராஜனே! இப்புவனங்களையெல்லாம் தனது சகஸ்திர மகுடங்களில் தாங்கிநிற்கும் ஆதிசேஷ மகாப்பிரபு வசிக்கப்படாநின்ற நாகலோகத்திற் செல்லாமல் இலங்கைக்குச் செல்வதுஞ் சீரோ? அந்தச்சேடராஜனோ லேசானவனல்ல. சர்வவிஷயங்களிலுஞ் சிறந்தவன். அவன்பெருமை எவர்களாலுஞ் சொல்லி முடியாது. அப்பேர்ப்பட்டவனை நாம் ஜெயிப்போமாகில், மிகுதியாகிய கீர்த்தியை அடைவதுமல்லாமல், விசேஷமாகிய மாணிக்கங்களையும், நவரத்தினகஜிதமாகிய நவதிரவியங்களையும், வேணது கொண்டு வரலாம். என்று தட்டிக்கொடுத்து எடுத்துச் சொல்வதைக்கேட்ட ராவணன் இதுவுமொரு குணந்தான். இதைவிட ஆதாயமென்னவிருக்கின்றது? என்று தன்னுளெண்ணி, ஆ! ஆ! மகோதரா! இப்பேர்ப்பட்டயுக்தி யெனக்குச் சொல்லுவார் எவர்களிருக்கின்றார்கள்? உன்னதேதந்திரம். இவ்வகைத்தான மந்திராலோசனையை இதுவரையிலும் இவர்கள் சொல்லாமற் போய்விட்டார்கள். உன்னுடைய தைரியமே தைரியம். என்று அவனைக் கொண்டாடிநிற்பதை மற்றவர்களெல்லாம் கேட்டு, இந்த நயவஞ்சகனே இவனுக்குத் தகுந்தவன். அடித்துப் பாலூட்டுந் தாயையும் நோவதுபோல் நம்மை நோவதுமன்றி, அவன்சொற்படி தட்டாது இவன் நடக்கின்றான். இனியிதற்கு என்செய்வதென்று இரங்கினார்கள்.

கேளும் கௌசலைச்சிங்கமே! தூளேறு தூசிபோல்வினையேறுமென்று சொல்லும் மொழிப்படிக்குத் தசக்கிரீவன் மகோதரன் சொல்லுக்கு எதிர்பேசவொட்டாது யாவரையுந்தடுத்து, தன் சேனைகளையெல்லாம் பிரயாணப்படுத்தி, நாகலோகஞ்சேர்ந்து, சர்வ வாத்தியங்களையும்முழக்கி வெகு ஆடம்பரத்துடன் தண்டிறங்கி, தான் வந்தசேதியை ஒரு தூதுவனைக்கொண்டு அறிவித்

தான். அத்தூதுவனும் ஆதிசேஷனைக் கண்டு நின்று, தான் இலங்காபுரித் தலைவனாகிய ராவணன் தூதனென்றும் அவர் திக்குவிஜயஞ்செய்து உம்மோடு யுத்தஞ் செய்யும் நிமித்தம் படையெடுத்துவந்து இருக்கிறாரென்றும், அவர்உலகமெல்லாம் வெற்றிபெற்றவர் ஆதலால், நீர் சண்டைக்குவந்தால் ஆயிற்று, இல்லாவிடில் தோற்றேனென்று அவரை வணங்கிக் கப்பணங் கட்டச்சொன்னாரென்றும் சொல்லினான். இப்படி அத்தூதுவன் சொன்னதைக்கேட்ட நாகராஜன் பிரமித்து, இதென்ன ஆச்சரியம்? அடா அரக்கனாகிய தூதா? நாமென்ன லேசானவர்களா? அல்லது, அவனிப்போது கொடுக்கும் பேதிக்குப் பயந்தவர்களா? வில்லுக்குப் பயந்து சொல்லுக்குஇளைப்பவர்களுமுண்டா? இவ்வளவுதூரம்வந்த ராவணனுக்கும், அவன் சேனைக்கும், நாங்கள்மரியாதைசெய்யாமல் அனுப்புவோமா? எங்கள் பலாபலம் தெரியாதவன்போற் காண்கிறதாகையால், நாங்களும் ஒருகைபார்க்கச் சித்தமாயிருக்கின்றோமென்று பரிஷ்காரமாய்ச் சொல்லடா: போடா அடா நிர்மூடா; என்று அதட்டித் துரத்திவிட்டான்.

இப்படியாக ஆதிசேடனானவன் இராவணன் தூதுவனுக்குச் சொல்லி யனுப்பிவிட்டு மந்திரிகளை நோக்கி, ஐயா அமைச்சர்களே! இதென்னவிந்தை? அந்த ராவணன் இந்த நாகலோகத்தின்மீது படையெடுத்து வந்திருக்கிறேனென்று சந்திவிட்டானே! அதற்கு நீங்கள் என்னசொல்லுகிறீர்களென்றான். இந்தப் பேச்சைக் கேட்ட முதன்மையான மந்திரியானவன் சிந்தையிலெண்ணி, தந்திரமாக ஒரு மந்திராலோசனையைச் சொல்லுவான். ஐயா இராஜாதிராஜனே! மனந்தடுமாறி மாற்றானுக்கு இடங்கொடேலென்றும், ஆகாதவனை அத்துமீறிவரச் செய்யப்படாதென்றும், மேலோர் உரைப்பதால், அவன் லேசானவனல்ல. மிகவும் புகழ்பெற்று இருமாந்திருப்பவன். அதினுங் கெர்வம்படைத்தவன். பிரம்மனை நோக்கித் தவஞ்செய்து தான்பெற்றவரங்களால் தனக்கு எதிர் ஒருவருமில்லையென்று இருக்கப்பட்டவன் கைலைமலையை யெடுத்து, காளகண்ட திரிநேத்திரதாரியாகிய சிவபிரான் அருளைப் பெற்றவன். குபேரபட்டணத்தைக் கொள்ளைகொண்டவன். புவியனைத்தையும் ஜெயித்து, நமனையும் வென்றசூரன். இவ்விதங்களிலெல்லாம் தான் கீர்த்திபெற்றதே தனக்குள் மேலாக நினைத்து, நம்மையும் ஏமாற்றிவிடலாமென்று இவ்விடம் வந்தான். ஆகையால் அவனை இந்தக்ஷணம் எதிர்த்துப் படுசூரணப் படுத்துவதே சரியென்று சாற்றினான்.

அதின்மேல் இரண்டாவது மந்திரியும் சொல்லுவான். கேளும் நாகராஜனே! (எதிர்வலியும் தன்வலியும் மாற்றான்வலியும் துணைவலியும் தூக்கிச்செயல்) என்பதுபோல நாம் சகலமும் யோசிக்கவேண்டியிருக்கிறது. எவ்வளவு பலாபலமும் அதற்கேற்ற நல்லகாலமும் இல்லாமல், இவ்வளவுதூரம் தைரியமாக வருவான். குண்டை பலமிருந்தாற் குப்பைமேட்டையும் உழுது பயிர்செய்வார்களென்று அறியீரா? அதையும் நாம் எண்ணவேண்டியதல்லாது சற்று நிதானிக்கவும் வேண்டுமென்று சொன்னான். அப்பால் மூன்றாவது மந்திரி சொல்லுவான். சுவாமி! (எக்குடிபிறப்பினும் யாவரேயாயினும் அக்குடியிற்கற்றோர் அறிவுடையோர்) என்பதுபோல நாமோ அவன்போல் மூடரல்ல. துன்மார்க்கருமல்ல. நம்மிலெவர்களும் சாம்பிரதாயந்தெரிந்த ஆத்மாக்கள். அவர்களோ மூர்க்கமான வஞ்சக ராக்ஷசக் கூட்டங்கள். நாமோ சர்ப்பயினங்கள் அவர்களுக்கு வரத்தின் பலங்கள் மிகவுண்டு. நாம் மீறித் தூறிக்கொன்றாலும், நம்மால் இறப்பவர்களல்ல. அவர்களுக்கு எமன் இந்த நமனுமல்ல. ஒன்றாகிய சர்வலோக சரண்யனென்னும்ஸ்ரீராமமூர்த்தியால் மாண்டுபோக விருக்கின்றவர்கள். ஆதலால் நாம் அவர்கள்மீது படையெடுத்து யுத்தஞ்செய்வது மிகவும் வீணான காரியமென்றான்.

அதுகாலையில் நான்காவது மந்திரியும் சில வசனஞ் சொல்லுவான். ஓ! ஓ! அனந்தரே! காலமுணர்ந்த தபோமுனிவர்களுக்கும் ஞாலமென்பது உண்டா? ஆகிலும் இவர்கள் சொல்லுவதெல்லாம் இருக்கட்டும். இதென்னபேச்சு? இதென்னஞாயம்? வீட்டில் திருடனுழைந்தால் நல்லநாள் பார்த்துத் துரத்தி விடலாமென்று சொல்

லுவதுபோல, மீறிட்டு வெள்ளம் வந்திருக்கும்போது தக்க அணையிட்டுத் தழியவேண்டுவதற்கான முயற்சி செய்யாமலே இப்படியும் பேசிக்கொண் டிருக்கலாமா? அந்த இராக்ஷதப்படைகளென்ன லேசானவையா? தூளியென்னுமுன் நிர்த்தூளிதஞ் செய்துவிடுமே? அப்போது நாம் என்னசெய்வது? இதமான வாக்கியமும், சன்மார்க்கநடையும்,பொறுமையான காரியமும் அவர்களினிடத்தில் நடக்குமா? நமது சாந்தம் அவர்களிடத்தில் ஒன்றுஞ் சாயாது. துறட்டுக் கசையாய்ப்பழம் திருப்பாட்டுக்கசையுமா? வந்தெதிர்த்தவனுக்கு நாமா வணங்கி வார்த்தைசொல்வது? எப்போதும் படையிலுமொருவன் கொடையிலுமொருவன் என்பதறியீரா? ஜெயம் ஒருவனது பங்கா? நமது விஷஜுவாலைக்குமுன் அவர்கள் பொறுத்து நிற்கார்கள். அவர்களே நம்மிடத்திலிருக்கும் விஷப்பாங்கினுல் இறந்துபோவார்கள். அப்படி ஒருவேளை அவர்களால் நாம் இறந்தபோதிலும், நமது மிருதசஞ்சீவி மந்திரமென்ன லேசானதா? உடனே எழுப்பிவிடக்கூடாதா? இப்படி பலவாறு யோசிப்பதைவிட நமதுசேனுசமுத்ரங்களைப் பிரயாணப்படுத்தச் சித்தப்படுவதே சரியென்றுசொல்லினுன். அதற்கந்தஆதிசேஷன் இதுதான் யுக்தமென்றெண்ணி, உடனே தனது நாக கூட்டங்களுக்கெல்லாம் அறிக்கைசெய்து யாவரையுங் கும்பலாகச் சப்தகடலுந் திரண்டு வந்தாற்போற் கூட்டிக்கொண்டு தானும் போர்க்கோலங் கொண்டுவந்து, சர்வ வாத்தியங்களும் முழங்கும்படிக்கு ராவணனைக்கண்டு எதிர்த்து நின்றுன்.

இவ்வாறு வந்துநின்ற ஆதிசேஷனைக் கண்டவுடன் இராவணனும் திடங்கொண்டு, வில்லைக் கையிலெடுத்து வளைத்துச் சரத்தைத் தொடுத்தான். அவன் தொடுக்கு முன்னமே நாகராஜனுனவன் தனது சகஸ்த்ர பணமகுடங்களையும் விரித்து, காளகூடவிஷத்தினும் விசேஷ கோலாகலமாய்ச் சீறிப் பாய்ந்து, அந்த ராவணனுடைய சேனைகளின்மேல் குப்பென்று எரியும்படியாய் விஷாக்கினிகளைக் கக்கினுன். அவற்றுல் அவ்வரக்கனது தேர்த்தட்டு எரிந்துபோனதுமன்றி, கட்டியிருந்த கொடிச்சீலை முதலாகியதுகளெல்லாம் சாம்பராய்த் தகிக்கப்பட்டன. அதை நேரில் பார்த்திருந்த ராவணன் திடுக்கிட்டு, தனது வில்லைவளைத்துக் குவலயங்களெல்லாங் கூக்குரலிடும்படி கொஜித்து, அமோகமாகிய அர்த்தசந்திர பாணங்களையெல்லாந் தொடுத்து விடுத்தான். அவைகள் நூறு நூறுகவும், ஆயிர மாயிரமாகவும், பதினுயிரம்பதினுயிரமாகவும், லக்ஷம்லக்ஷமாகவும், கோடானு கோடியாகவும், அற்புத நிற்புதமாகவும் புறப்பட்டு, ஆதிசேஷன் கொண்டுவந்த தண்டிலே நுழைந்து, அச்சர்ப்பக்கூட்டங்களை யெல்லாம் உடல்வேறு-தலைவேறு-இடைவேறு-வால்வேறுகத் துண்டித்துப் பொடியாக்கி விட்டன. அதனுல் உண்டாகிய ரத்தசாகரமானது சப்த பிரளயம்போலச் சிவந்த நிறங்கொண்டோடத் தலைப்பட்டது.

இப்படி தன்சேனைகள் மடிந்து ரத்தப்பிரவாகம் ஓடுவதை ஆதிசேஷன் கண்டு, உள்ளம் வெகுண்டு, நமது தண்டுகளையெல்லாம் இவ்விதங் கண்டித்து அதஞ் செய்கின்ற இவனை எளிதில் விடப்படாதென்றுன்னி, உடனே புஸ்ஸெனச்சீறி, அதிக கோபத்துடன் அந்த ராவணன் ராணுக்களையெல்லாம் சுற்றிக் கோட்டையாக வளைத்துக்கொண்டு, ஒவ்வொருவரையும் விடாது கடித்துப் பிணக்காடாய் நீட்டிவிட்டான். அதனுலந்த ராக்ஷதர்களில் தலைமண்டைக்கேறின விஷச்சுவாலையாற் பொறுத்து முடியாமல், துடித்துத் துடித்து மாண்டவர்கள் கணக்கில்லை. சர்ப்பங்களின் விஷமானது சடலத்தில் பாய்ந்தமாத்திரத்தில் விழிபிறண்டு புரண்டிறந்த ராக்ஷதர்கள் எத்தனையென்று இயம்பலாம்? தேகமுழுமையும் படர்ந்த விஷங்களால் ராக்ஷதர்கள் தேகம் முன்னிலும் அதிக கறுப்பாகி, ஆனைத்திண்டுகள்போலச் சாய்ந்து, லாகிரிகொண்டு அந்தந்த விடங்களைவிட்டு எழுந்திராமல் பயந்து, ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு இறந்தவர்களைக் கருதிக் கணக்கிடத்தக்கதோ? நாகங்களின் கூரிய பற்களின் வேதைபொறுக்காமல் ராக்ஷதர்கள் இதென்ன சிலீமுகக் கணைகள்போல் துளைக்கின்றதேயென்று சித்தம் பிரமித்தவர்களாகி, தத்திக்கெட்டுத் தடுமாறிக்கத்திக்கொண்டு காலஞ் சென்றவர்கள் எத்தனையென்று சொல்லு

வேன்? இப்பால் வாதனைச்சகிக்காமல் ஓடிப்போக விரும்பும் ராக்ஷதர்கள் தண்டுமுழுமையும் பாம்புகள்வளைத்துக்கொண்டு கொல்லுவதைப்பார்த்து, அப்பால் தாண்டிச் செல்லக்கூடாதவர்களாய் மறுபடியும் ராவணனைக்கண்டு, ஐயா ராஜனே! எங்களையும் இவ்வாறு அவதிப்படுத்துவீரா? எங்களுக்கின்றே ஆயுள் முடிவதா யிருக்கின்றதே? இனிமேல் எங்களை இவ்விடம் கணக்காக்கிவிட்டு நீர் தனித்துச்செல்ல விருக்கின்றீரோ? என்று அலறினார்கள். இப்படி அவர்களலறுங் கூக்குரலைக்கேட்ட தசக்ரீவன் அவர்களுக்கெல்லாம் ஆதரவுசொல்லித் தேற்றி ஓடிப்போகாமல் நிறுத்தி, தனது நெடிய வாளாயுதத்தை யெடுத்துக் கீழே குதித்து, ஓர் நிமைப்பொழுதில் தண்டு முழுமையுங் குயவன் திகிரியைப்போற் சுற்றி, அந்தக் கொடிய நாகக்கூட்டங்களை யெல்லாம் வெட்டி, கும்பற் கும்பல்களாகக் குவித்து, பின்னும் இரண்டு வாயுவாஸ்திரத்தையும்,அக்கினியாஸ்திரத்தையும், எடுத்து அபிமந்திரித்துப் பிரயோகஞ்செய்துவிட்டான். அவைகள் காற்றுடன் நெருப்பு கலந்த பான்மைபோற் கூடித் தகத்தகாயமாய்ப் பற்றியெரிந்து யாவையும் பஸ்மீகரப்படுத்தத் தலைப்பட்டதனால், அதனாலிறந்த சர்ப்பங்கள் விசேஷமுண்டு.

இவ்வித உக்ரமான போர்மூண்டு நடக்குங்கால், மிகவும் பலாஷ்டியர்களாயும் வீராதி வீரர்களாயு மிருக்கப்பட்ட வாசுகி-தக்ஷகன்-கார்க்கோடகன்-முதலிய அஷ்டநாகர்களும் ஒன்று சேர்ந்து, ஆ! ஆ! இதென்னவிபரீதம்? இவனெவ்வளவு அரக்கன்? இவனாலேயா நாம் மாள்வது: மிகவும் அற்பபிராணிகளாகிய நிர்மூடர்களாகச்சே நாம் இவர்களை லேசாய் விடப்படாது. பாம்பென்று சொல்லுமுன் படையும் நடுங்குமென்றும், கொடுநாகம் ஒன்று சீறிற் கோடியெலிகள் கிலிபிடித் திறக்குமென்றும், நாம் கேட்டிருந்தும், அவ்வளவு பராக்கிரமத்தையும் பெற்றிருந்தும், இப்படியும் நமது இனங்கள் மாளலாமா? பெருமலைகளையுந் துளைத்துவிடுவது சிற்றுளியல்லவா? என்று அதிக கோபாவேசமும் ஆக்ரமும் வகித்து, தங்கள் தங்கள் கொடிய விஷங்களையெல்லாம் குடங்குடமாய்க் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு ராக்ஷத சேனைக்குட் புகுந்து சின்னபின்னப்படுத்தி, அனேகர்களை நிர்மூலப்படுத்திச் சர்வாங்கமும் தணலாய்த் தகித்துவிட்டு, பின்னும் ராவணனது தேகத்தையுங் கெடுத்து, எங்கும் விஷமாய்கை யாக்கி அவனை மூர்ச்சை யடையச்செய்து, அவன் தேரையும் காலாள்களையுஞ்சீறி தும்சப்படுத்தினார்கள்.

இப்படி அவர்கள் தங்கள்விஷாக்கினியால் பராக்கிரமித்திருப்பதை லங்கேசன் கோபச்சிரிப்புடன் பார்த்து, நாம் கஸ்தியடையவும், பாம்புகளுக்கு வீம்புண்டாகவும் ஆச்சுதல்லவாவென்று, தன் இருதயத்துளெண்ணி, சிக்கென ஒரு மகாமகிமையுள்ள சூலாயுதத்தை யெடுத்து, அதற்குரிய அபிஷேக ஆராதனைகளோடு தூபதீபநைவேத்தியங்களும் மனதினாற்செய்து மந்திரோச்சாடனம் பண்ணி, பரமசிவத்தை நினைந்துவிடத் தலைப்பட்டான். அது கண்ட அஷ்டநாகங்களும் மற்றச் சர்ப்பங்களும் உடனே ஓடிவந்து ஆதிசேஷனைக் கண்டு, ஐயா இராஜனே! அந்தக் கொடிய இராவணனனவன் சூலாயுதத்தை நமது படைமேல் ஏவப்போகின்றானே? அதுவோ சிவனருளாற் கிடைத்ததாயிற்றே! நாம் பின்னுங்கூடப் பிழைப்பதுண்டா? நாங்கள் எள்ளளவும் அதற்குமுன்னின்று சகிக்கமாட்டோம். என்று பயந்தோடிப் போயின. அப்படி யவைகள்போகவே சர்ப்பமந்திரிகளும் நாகராஜனைப் பார்த்து ஓ ஆதிசேஷா மஹாப்பிரபு! இனி நாம் என்னசெய்யலாம்? முன்னிற்கும் சர்ப்பக் கூட்டங்களெல்லாம் பின்னிடைந்து ஓடினதல்லாது, அட்டநாகமும் வெட்டவெளியாய்க் கைகளை விரித்து அப்பாலகன்றன. இன்னமுமுட்ட வெள்ளெழுத்தோ? ஆதலா லினியேனும் அட்டிசெய்யாமல் இட்டமாகச் சந்திசெய்து கொள்வதே கெட்டியென்றார்கள்.

அதுகேட்ட மட்டில்லாக் கலைக்ஞானனாகி, பட்டம்பூண்டிருக்கும் நாகேந்திரன் சற்று நிதானித்து, சரி! சரி! நானும் உங்கள்சொல்லைத் தட்டப்படாதல்லவா? நட்டம் நமக்கேயன்றி அவனுக்கென்ன? என்றுன்னித் தட்டுத்தட்டுகளாக, நவதிரவியமான மாணிக்கங்களை யெடுப்பித்துக்கொண்டு, யாவரும் கும்பலாய் வரப்போய் கப்

பணமாகவைத்து, ஐயா ராவணேஸ்வரா! நாங்களோ அற்பமாகிய சர்ப்பங்கள். நீங்களோ ராக்ஷதர்கள். அதிலுங் கெடிஸ்தலாதிபதிகள். உங்களை ஜெயிக்கவும் எங்களால் முடியுமா? இந்தமட்டுக்கும் போரை நிறுத்திச் சந்திசெய்துகொள்ள வந்தோம் என்று வணங்கிக்கூறினன். அதைத் தசக்கிரீவன்கேட்டு, இதுவும் தெய்வானுகூலந்தான். நமதுபாடும் உண்டில்லையென்று இருக்கின்றது. இவர்களை நாம் ஜெயிப்பது வந்தியானவள் மைந்தன்பெறச் சிந்தையிலெண்ணி யிருந்ததுபோலாகும். இந்தச் சமையத்திலேயே நாமும் முந்திக்கொள்ளுவோம். என்று சந்திசெய்து கொண்டதாய் வெளியிலெவரும் பிரமிக்கும்படி கெக்கலிகொட்டி, ஆதிசேஷன் எனக்கு இளைத்தான் இளைத்தான் என்று உரைத்து ஆர்ப்பரித்து நின்றான். உடனே மந்திரிகளும் இம்மட்டிற் கூட்டிவைத்தது நமது குருகடாக்ஷந்தானென்றெண்ணிச் சந்தோஷித்தார்கள். உடனே தசக்கிரீவன் அம்மாணிக்கங்களை யெல்லாம் கைக்கொண்டு சம்மதவாரியாகி, சென்றுபோன ராக்ஷதர்கள்போக மற்ற நின்ற ராக்ஷதர்களைக் கூட்டிக்கொண்டு மந்திரி பிரதானிகளுடன் புஷ்பகவிமானமேறி அப்பாற் சென்றான். இங்குஉடனே ஆதிசேஷனவன் தனது மாண்டுபோன சேனைகளையெல்லாம் அமிர்தசஞ்சீவியின் பலத்தால் எழுப்பிக்கொண்டு, எதாப்பிரகாரம் தன்னிருப்பிடம் சேர்ந்து நாகலோகத்தரசை நடாத்திச் சுகித்திருந்தான்.

### இராவணன் நிவாதகவசர்களை வெல்லுதல்.

கேளும் ஸ்ரீராமபத்திரா! இலங்கைக்கரசனகிய ராவணன் இவ்வாறு சமஸ்த லோகங்களிலும் திக்குவிஜயப் பிரதாபனாய் ஜெயம்பெற்று வருகின்றவன் மகோதரனைப் பார்த்து, இனி நடக்கவேண்டியது என்னவென அவனுஞ் சொல்லுவான். ஐயா மூப்புவனத்துக்கும் அதிபதியாகிய முதல்வனே! இந்த நாகராஜனைச் செயித்தது ஓர் பெரிதான காரியமல்ல. என்னெஞ்சில் ஒன்று நினைந்திருக்கின்றேன். அதனை வெளியிடும்போது நீரே மனமுவந்து கொண்டாடுவீர். அது யாதெனில், தேவலோகத்தில் நிவாதகவசாளென்கிற அசுரர்கள் மூன்றுகோடிபேர்கள் ஒரேகெற்பத்தில் அவதரித்து ஒருதாய்க்குப் பிறந்தவர்கள். அவர்களோ வெகு தந்திரவாதிகள். அவர்களை வெல்லத் திரிமூர்த்திகளாலும் ஆகாது. அவர்களது பேரைச்சொன்னல் பிள்ளைகளும் உள்ளம் நடுங்கும். மேலும் எவர்களும் கெற்பங்கலங்கி, அவர்களை ஏறெடுத்துப் பார்க்கமாட்டார்கள். அப்பேர்ப்பட்டவர்களை ஜெயிப்பதல்லவா உமது கீர்த்திக்கு அழகாகும். அவர்களை வெல்லாமல் நமது திக்குவிஜயத்தையும் முடிக்கலாகுமா வென்றான். இப்படி அவன்சொல்வதை ராவணனவன் கேட்டு ஆனந்தமடைந்து, அவ்வாறுசெய்வதே சரியென்று தோளைத்தட்டி நின்றான். அப்படியவன் நிற்பதைப்பார்த்தபிரகஸ்தன் மகோதரனை நோக்கிக் கூறுவான். ஓ மகோதரா! ஆய்ந்தோய்ந்தடங்கிய நாயை பாய்ந்தோடிப் பகட்டு முயலின்மேற் பாயவிடுப்பது போல் ஏவிவிடுகின்றாயே, இதுவும் வேலைதானா? ஊரில் குட்டிக்கலகஞ் செய்துவிட்டுப் பின்பு இரட்டிப்புப்பணந் தெண்டமிறுப்பவன்போல் ஆக்குகின்றாயே இதுவும் ஞாயமா? கூடிக் கைகோர்த்துகொண்டே வேடிக்கை பார்த்திருப்பதும் அழகா? என்றவனைப் பலவாறாய் நிந்தித்து அரற்றினன். அதுகேட்ட மாரீசனும் அவனைப் பார்த்து, அடா மகோதரா! அடாதகாரியங்கள் செய்தால் படாதபாடு படுவார்களென்பது அறியாயா? நீ யொருத்தன்மாத்திர மில்லாவிட்டால் ராவணனைக் கட்டிக்கரும்பென்னலாமே ஆ பாவி! நீ கொல்லைக்குப்பல்லி குடிக்குச்சகுனியாய்த் தோன்றினையே? என்று தூஷித்தான். இன்னும் பலர் பலவாக தூஷிக்கவே மகோதரன் வெட்கமும் கோபமுங்கொண்டு, எதிரில் நிற்கும் தசக்கிரீவனைப் பார்த்தான். அவன் தன் மந்திரிகள்பேரிற்சீறி, எமதண்டம் போல்மீறி, நீங்களேன் வீணாய் குதித்துப் பேசுகின்றீர்கள்? அந்த மகோதரனை லேசாய் நினைத்தீர்களோ? அவன் சொல்லிவந்தவிடங்களில் நாம்சென்று யுத்தஞ்செய்ததில் என்ன தோல்வி யடைந்தோம்? ஜெயப்பிரதாபமாய் திக்குவிஜயத்தை நடத்தி வைக்கின்றவனை ஏன் தூஷித்தீர்கள்?

என்று அதட்டிப்பேசினன். அவன் அவ்வாறு பேசவே அமைச்சர்கள் யாரும் நமக்கேனென்று பெட்டிப்பாம்பை யொத்திருந்தார்கள். அப்பால் ராவணனவன் சேனைகளுடன் வரும் புஷ்பகவிமானத்தைத் திருப்பி ஆகாயமார்க்கமாகச்சென்று, சொர்னபுரியில் மாடமாளிகை கூடகோபுரங்கள் நிறைந்த நிவாதகவசர்கள் பட்டணத்தை யடுத்து அட்டகாசஞ்செய்து, சர்வ வாத்தியங்களையும்முழக்கிக் கோட்டை மதிலண்டையில் தண்டிறங்கினன்.

இவ்வாறு வீராவேசங்கொண்டு போர்க்குப் புகுந்துநின்ற இராவணன் மேல் நடக்கவேண்டியதற்கு மகோதரனைநோக்க அவனும் சொல்லுவான். ஐயா தசக்கிரீவரே! நானுமக்குச் சொல்லவேண்டுமா? வழக்கப்படிக்கு நல்ல தீரனுயிருக்கிற நம்மில் ஒருவனைவிடுத்து அவர்களுக் கறிக்கைசெய்யுமென்றான். அவ்வாறே இராவணன் ஜெயசூர பராக்கிரமசாலியாயும் வெகுதந்திரவாதியாயும், சமயோசிதமறிந்து பேசத்தக்கவனுயும், தன்னிடத்தில் அநேககாலமாய்ச் சேவகஞ்செய்துகொண்டு திரிமதங்களையும் பொழிகிற நந்தவனத்தைப் போற்செழித்திரா நின்ற அக்கினிக்கண்ணனென்பவனை அழைத்து, அடா சூரா! நீ போய் என துஜெயப்ரதாபங்களையும், நான் வந்திருக்கிற சேதியையும், அந்த நிவாத கவசர்களுக்கு அறிக்கைசெய்து, என்னை அவர்களெதிர்த்துச் சண்டைசெய்ய வலுவிருந்தால் வரச்சொல்; இல்லாவிடில் தோற்றேனென்று கப்பணத்தைச் செலுத்தச்சொல்; அவர்களும் வீரர்களென்று பேர்வைத்துக்கொண்டு, முகங்களில் ஆண்மைக்குறிய மீசைகளை வளர்த்துவைத்துக் கொண்டிருக்கிறார்களாதலால், நீயவர்களையடுத்து நான் சொன்னபடி தெரிவித்து வாவென் றனுப்பினன். அவ்வண்ணமே அவன்சென்று அவ்வரக்கர்கள் வாழும் பட்டணத்தையடுத்து, அந்த நகரத்தரசர் கொலுமண்டபச் சிங்காதனத்தின் முன் நின்று, வணக்கத்துடன் ஓ நிவாதகவசர்களே! இலங்கேசனகிய இராவணேஸ்வரன் திக்குவிஜயஞ்செய்து, இவ்விடத்திலும் உம்மிடத்திற் போர்செய்யவெண்ணி, யுத்தகளஞ் சேர்ந்திருக்கின்றார். ஆதலால் அப்பேர்ப்பட்ட மகுடமன்னனை உங்களுக்கு ஏதாவது ஜெயிக்கத் திறமிருந்தால் படையெடுத்துவரலாம், அப்படியெதிர்க்க வலுவில்லாதபக்ஷத்தில் வணக்கத்துடன் சமாதான காணிக்கையைக் கட்டிவிட வேண்டும். நீங்கள் வெகு பராக்கிரமசாலிகளாதலால் என்ன சொல்லுகின்றீர்கள்? இரண்டிலொன்று கேட்டுவரச்சொன்னர் என்றான். அவன் சொல்லிய வார்த்தையைக்கேட்ட மூக்கோடி அசுரர்களும் இதென்ன விநோதம்? இதென்னபேச்சு? நாமெங்கிருக்கின்றோம்? லங்கையெங்கிருக்கின்றது? நாம் யார்? இராவணனென்பவன் யார்? நமக்கும் அவனுக்கும் என்னவுண்டு? என்றவர்களெல்லாம் கோபாக்கினிக்கடலில்மூழ்கினவர்களாகி விழிகளெல்லாம் செவ்வானம்போற் சிவந்து, தேகங்களும் நெஞ்சங்களும் ஆத்திரப்பட்டுத்துடிக்க அத்தூதுவனைப்பார்த்து என்னசொன்னயடா தூதா! நாங்களா வணங்கிவருவோம்? எங்களை இன்னரென்று நீங்கள் அறியாமல் வந்தாற்போலும் காண்கின்றதாகையால் நீசொல்லிய அந்த ராவணன் யார்? அவனது விருத்தாந்த மென்ன? அதை யெங்கட்குச் சொல்லடாவென்று அதட்டிக்கேட்டார்கள். அதற்கு அவ்வக்கினிக்கண்ணனகிய தூதுவன் சொல்லுகிறான்.

ஐயா நிவாதகவசர்களே! கேளுங்கள்; எங்கள் இராஜாதிராஜனகிய பிரதாபலங்கேஸ்வரனை நீங்கள் இலேசாய் நினைக்கப்படாது. பூர்வம் விச்சிரவப்பிரம்மாவாகிய தவசிரேஷ்டருக்கு குபேரனென்றும் தசக்கிரீவனென்றும் கும்பகர்னனென்றும் விபீஷணனென்றும் நான்கு பிள்ளைகளும் சூர்ப்பநகை யென்றொரு பெண்ணும் உற்பவித்தார்கள். பிறகு குபேரன் பிரமனைக்குறித்து அநேக நாள்வரையில் தவமியற்றி லங்காபுரியரசும் புஷ்பவிமானமும் படைத்து ராச்சியபாரஞ்செய்துவருங்காலத்தில் தசக்கிரீவனகிய எங்கள் ராஜனும் தன்தம்பிமார்களுடன் சதுர்முகனைநோக்கி தவஞ்செய்து மகத்தாகிய வரங்களைப்பெற்ற தாஷ்டீகத்தினல் தனது அண்ணனகிய அவ்வளகேசனை இலங்கையைத் தரச்சொல்லிக்கேட்டுப் பெற்றுக்கொண்டு அந்தத் திரிகூடபர்வதத்தில் தானே அரசுபுரிந்து வருகின்றார். மேலும் அந்த லங்கேசனை

வன் தன் சோதரியாகிய சூர்ப்பநகையைக் காலகேயர்களுடைய வம்சத்தி லொருவனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்வித்து, தானும் மயனென்பவனது புத்திரியாகிய மண்டோதரியென்னும் கன்னிகைக்குமணமாலைசூட்டி, தனது துணைவர்களுக்குத் தக்கபடி பெண்களைவிசாரித்துக் கலியாண முடித்து மகா சந்தோஷ சாம்பிராச்சியத்தில் தழைத்திருக்கின்றவர். அவருக்கு மேகநாதனென்று அவரினும் மேலான வல்லபங்களிற் சிறந்த ஓர் பிள்ளையுளன், அவனோடைவ ராலோசித்து திக்குவிஜயஞ் செய்ய வெளிப்பட்டு, அங்கங்கு நடத்தி வந்த ஜெயப்பிரதாபத்தை நான் என்னென்று சொல்லுவேன். முன்னம் குபேரனை குலைநடுங்கச்செய்து கைலாசமலையை நிலைகுலுங்கப்பேர்த்து, அளவற்ற செல்வத்தையும் மிகுந்த புகழினையும் படைத்த மருத்துராஜனை வணங்கச்செய்து, அயோத்திக்கரசனாகிய அனரண்யமகாராஜனையும் வென்று, சப்ததிசைகளையும் அஷ்டதிக்கஜங்களையும் பேதிக்கச்செய்து, உலகமெல்லாம் நடுங்கும் எமதருமராஜனையும் இணங்கும்படிவாட்டி, நாகலோகத்தரசனாகிய ஆதிசேஷனுடனும்போராடி, ஆங்காங்குளெண்ணிறந்த ஸ்திரீகளையும் கைக்கொண்டு, மிகுந்த புஜபலபராக்கிரம வீரராய் திக்குவிஜயத்தைச் செலுத்திக்கொண்டு, இவ்விடத்திலும் உம்முடன் போராடவந்திருக்கின்றார். ஆதலால் அவரது சவிஸ்தாரங்களை இன்னமும் சொல்லவேண்டுமோ? பஞ்சாசதகோடி பூமண்டல சராசரங்களிலும் பரவிய கீர்த்தியை வகித்தவரென் றெண்ணுங்கள். என்றத்தூதுவன் சொன்னவுடன் அந்த நிவாதகவசர்கள் கேட்டு, அப்படியா? நல்லதாகட்டும்: நாங்களும் அப்பேர்ப்பட்டவர்களைப்பார்க்க ஆவல்கொண்டு யுத்தத்திற்குவரத் தயாராய் காத்துக்கொண்டிருக்கிறோம். நீ பரிஷ்காரமாய் அந்த ராவணனென்பவனுக்குச் சொல்லலாமென்றார்கள். இப்படி அவர்கள் சொல்லிய தீரத்தையும், அவர்களது பலாபலத்தையும் நன்று யூகித்துக்கொண்ட அத்தூதுவன் திரும்பிவந்து, தசக்கிரீவனுக்குஇவைகளையெல்லாம் பிரிவுபடுத்திச்சொல்லி வெளியிட்டான். அதனைக்கேட்ட ராவணன் மனங்கலங்கி மகோதரனை நோக்கி, ஓ மந்திரீ! அவர்கள் வெகு வல்லமைசாலிகள் போலும் வெகு தந்திர யுக்திகளைக் கற்றவர்போலும்காணுகின்றதாகையால்இதற்கு என்னசெய்யலாம்? அல்லது எப்போதும் போல நமது நகரத்துக்குத் திரும்பிவிடலாமா? என்று கேட்டான். அதற்கு அம்மகோதரன் சொல்லுகிறான்.

ஐயா இலங்கேஸ்வரா! (படை குடி கூழமைச்சு நட்பரணாறும் உடையான்அரசருள் ஏறு) என்பதுபோல் நாம் சகலமும் பெற்றிருக்கின்றோம். நமக்கென்னகுறைவு இருக்கின்றது? மேலான வரங்களும் கைகூடியிருக்கின்றன. அநேக ராஜர்களையும் ஜெயித்து வெற்றிமாலை புனைந்திருக்கின்றோம். எப்போதும் எதிரிகள் நமதுதூதுவனுக்கு இணங்கி யுரைப்பார்களா? அவர்கள் தங்கள் வல்லமையைக் காட்டிப் பேசுவது வழக்கந்தானே. இதற்கு நீங்கள்பயப்படலாமா? வல்லமையில்மாத்திரம் உமக்கவர்கள் மீறியிருக்கமாட்டார்களென்கிற ஆந்தரியம் எனக்குத் தெரியும். ஆகிலும் நாம் இவ்வளவுதூரம் இவர்கள் நகரையடுத்து தண்டிறங்கினதுமல்லாமல் தூதுமனுப்பினோம். அவர்களும் வருவதாய்ச் சொல்லியிருக்க, இப்போது நாம் யோசிப்பது மிகவும் நம்போன்றவர்களுக்கு அழகல்ல. மலைவிழுந்தாலும் தலையே தாங்கவேண்டுமெல்லாமல் மண்ணுங்கட்டித் தாங்குமா? நீரேன் கலக்கப்படுகின்றீர்? அவதைரியப்படவேண்டாம். நீரேஜெயிப்பீர். உமது தைரியம்போலும் இவ்வுலகத்தில் ஒருவருக்குண்டா? இதுவரையில் நீர் போரிட்ட இடங்களைவிடவா இந்தயிடம் பெரிதென நினைக்கிறீர்? போர்க்குவந்து பின்னிடைவதும் அரசருக்குள் சீரா? வேறொன்றும் நினைக்கவேண்டாம். உம்மைப் பார்க்கும்போதே அவர்கள் கிலிபிடித்து வணங்கிவந்து நிற்பதை நானே பார்க்கப்போகிறேன். மேலும் உமது சங்கத்தொனிமுழங்கினமாத்திரத்தில் அவர்களெல்லாம் சிங்கத்தைக்கண்ட யானைபோல் அடங்கிவிடார்களா? என்று வெகு அனுபோகசாலியாக வெடுத்துரைத்தான். அதை இராவணன்கேட்டு சரியென்றுன்னி போரிடச் சேனைகளைமுடுக்கித் தானும் சங்கத்தொனி செய்துநின்றான். அதுகண்ட சேனைசைனியங்களெல்லாம் அரசனெவ்வழி அவ்வழி

குடிகளென்பதுபோல் உடனே தங்கள்தங்கள் வில்லுகளைக் குண்டலாகிர்தியாய் வளைத்து, யுகாந்தகாலப் பேரிடிபோல் டங்காரவோசையெழுப்பி குணத்தொனி செய்தார்கள். அந்தப் பேரோசையானது அண்டகடாகங்களெல்லாம் செவிடுபடச்செய்ததுமன்றி, நிவாதகவசர்களாகியமூன்றுகோடி அசுரர்கள்-மந்திரிகள் - பிரதானிகள் முதலாயினோருடைய செவிகளிலும் நாராசம் போலக் கேட்டதாகையால் அவர்களும் தங்கள் மந்திரிகளை நோக்கி ஆலோசிப்பதானார்கள். ஓ அமைச்சர்களே! இதென்ன விந்தை? எந்தமன்னர் மண்டலீகரும் நமது பட்டணத்தின்மேல் எதிர்க்கார்கள். இந்தத் துஷ்டனுக்கு அதுதெரியாமல் வந்து மூளகின்றான். நாம் அவனை லேசாய் விடலாமா? நம்மிலொருவனுக்கு இணையாவானா? ஏதோ தெரியாமைத்தனத்தால் தலையிட்டுக்கொள்ளவந்தாற்போலும் இருக்கின்றதாகையால், நீங்கள் எல்லோரும் மூன்பாகச்சென்று யுத்தஞ்செய்யுங்கள். என்று ஆலோசித்தவர்களாய் உடனே தங்கள் படைகளைப் பிரயாணப்படுத்திவிட்டார்கள். அவர்களும் அவ்வாறேசென்று மிகுந்த கோபாவேச மதிகரித்தவர்களாய் முப்பத்திரண்டு ஆயுதங்களையுந் தாங்கி, விழிகளில் அனற்பொறிகள் குப்பென்று எரிந்துவிழ வில்லெடுத்து, சப்தசமுத்திரங்களும் ஒன்றாய்த்திரண்டு வந்ததுபோல, ரணக்களத்தில் வந்து சேர்ந்தார்கள். இவ்வாறு வந்துசேர்ந்த இருதிறவர்களது ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனையும் அளவிட்டுச் சொல்லத்தரமோ? சப்தசாகரத்தின் நுண்ணியமணலை எண்ணினாலும் அப்படைகளின்தொகை கணக்கிடப்படாது. மகா நுண்ணிய விவேகத்தையும் கூர்மையையுமுடைய ஆயிரம் பணமகுடனுக்கும் சொல்ல, அரிதாயிருக்கப்பட்டதென்றால், எவ்வாறு அந்த நிவாதகவசர்களது சேனைகளையும், ராவண ராக்ஷசனது படைகளையும் கணக்கிடப்படலாம்? ஆகாயமளாவிய வெற்றிக்கொடிகளும், மேருவொத்த ரதங்களும், அஷ்டகஜங்களை வெல்லும். யானைகளும், வானமளாவிப் பறக்கும் புரவிகளும், அதிவீர பராக்கிரமம் பொருந்திய பதாதிகளும், மற்ற வீராதிவீரர்களுமாக வந்துநின்று யுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள்.

கேட்டீரோ ஸ்ரீ மஹாலக்ஷ்மி மனோகரா! இவ்விதமாக வந்துநின்ற சேனைகளுக்குள் தேர்மன்னர்களுடன் - தேர்மன்னர்களும், யானைவீரர்களுடன்-யானைவீரர்களும், குதிரைக்காவலர்களுடன்-குதிரைக்காவலர்களும்,படைத்தலைவருடனே படைத்தலைவரும், அணித்தலைவருடனே-அணித்தலைவரும், சேனாபதிகளுடனே - சேனாபதிகளும், வியூகராஜர்களுடனே - வியூகராஜர்களும், இப்படியே பட்டவர்த்தனர்- மகுடவர்த்தனர் - அர்த்தரதக்காரர் - வெங்கலரதக்காரர் - இவர்களெல்லாம் தங்கள் தங்கள் இனத்தொடு நெருங்கி யெதிர்த்து, வில்-வேல்-வாள்-முதலாகச் சொல்லப்பட்ட எண்ணூன்காயுதங்களையுங் கையிலேந்தினவர்களாகி, ஆக்ரநிக்குரோதத்துடனே திரிபுவனங்களும் கலங்கிப் பிர்மிக்கும்படியாய்ச் சர்வசங்காரப் பிரளயகால ருத்திரர்களைப்போலே ஒருவரையொருவர் குத்தியும்-வெட்டியும்- இடித்தும் - உதைத்தும்- அவரவர்களை உடலம் பதைக்கப் பிடித்தெறிந்தும், கடித்துத் தின்றும், கரங்களால் வாரியெறிந்தும், மரங்களாலே மோதியறைந்தும், இப்படியாய் அகோரமான சண்டை விளைத்தார்கள். அக்காலத்திலே நிலைகள் புரண்டதும், தலைகள் உருண்டதும், கைகள் அழிந்ததும், கால்கள் ஒழிந்ததும், தோள்கள் அறுந்ததும், நாவுகள் அறுந்ததும், குடல்கள் சரிந்ததும், உயிர்கள் பிரிந்ததுயாகி; இருவகைச்சேனைக் கூட்டங்களிலுள்ள ஜனங்களெல்லாம் கழிந்துபோக மற்றவர்களெல்லாம் ஒருவரையொருவர் எதிர்த்து, அவரவர்களால் ஒவ்வொருவரும் மாண்டுபோகுமளவும் யுத்தஞ்செய்து இறந்தார்கள்.

இவ்விதமான மகா யுத்தத்திலே இரண்டுபேருக்குள்ளும் சிலவழிந்துபோன சேனைகள் எட்டிலொரு கூறென்று எண்ணலாம். மாண்டுபோன தேகங்களினின்றும் ஓடிவாராநின்ற ரத்தமானது மலையினுடைய அருவிநீர்ப் பிரவாகமாயிருந்ததால் உயிரிழந்து தரையிற் கிடந்த பிரேதமெல்லாம் மிதந்துகொண்டு வருவது வியாபாரச் சரக்கேற்றிவருந் தோணியைப்போலிருந்தது. அப்பால் ஒவ்வொருத்தராயுஞ் சண்டைசெய்து பார்த்து அவர்களுக்குள்

ளாகவே பொறுக்காமல், தங்கள் தங்களுடைய அரசருக்கு அறிக்கைசெய்யச்சென்ருர்கள். அதில் ராக்ஷதச் சேனுவீரர்கள் இராவணனுக்கு அறிவிப்பதாவது, ஐயா ராவணேஸ்வரா! இந்த அனியாயத்தை என்னென்று எடுத்துச் சொல்லுவோம்? ஐயோ! நம்முடைய சேனைகளெல்லாம் மாண்டுவிடுகின்றன. இதுவரையில் இப்படியும் நாம் சண்டைசெய்ததுண்டா? இந்தத் திக்குவிஜயத்தைப் பார்க்கிலும் இன்னம் ஏதாவதொரு பக்குவமான வேலைகளை இடமாட்டீர்களா? நாங்களும் எத்தனையோ பேர்களுடனே சண்டைசெய்தோம். இந்தச்சண்டையில் நாங்கள் படுகிற இடியானது கோடையிடியைப்போ லிருக்கின்றதே; நாங்கள் என்னசெய்வோம்? எங்களால் வஞ்சனையென்பதில்லை. மாண்டபடைகளும் வேண்டியதுண்டு. இதற்கென்ன சொல்வீர்; என்றுகேட்குஞ் சேனுவீரர்களுடைய முகத்தை ராவணன் பார்த்து, அவர்கள் வாடிக் களைத்துவந் தழுகின்ற நோக்கத்தையுமறிந்து, அவர்களுக்கெல்லாம் ஆதரணைசொல்லித் தேர்ச்சியடையும்படி செய்வித்து, தைரியம் வரும்படியாய்ச் சிலவாக்கியங்களை எடுத்து அவ்வவர்களுடைய முறைக்கிணங்கிய மார்க்கமாய்ச் சொல்லுவான்.

கேளுங்கள் சுத்தவீரர்களே! ஒருவன் காசிக்குப்போக நெடுநாள் பிரயத்தினஞ் செய்து கடைசியில் ஒருநாள் துணிந்து புறப்பட்டான். அப்படி புறப்பட்டவனுக்கு அநேக சங்கடங்களிருந்தும், மனோ தைரியத்தாலும், தன்னுடைய சித்த சாதுரியத்தாலும், பேதியாமற்படிக்குச் சென்று கயாவின்மூழ்கி நினைக்கின்ருன். உலகத்தினிடத்திலே யாவத்திராளும் காசிக்குச் செல்வதுதான் தடையென்றும், அப்படிச் சென்றவர்களுக்குத் தங்கள் கர்மம் தொலைவதல்லாது கருதியபொருளுங் கைகூடி இஷ்டப்படிக்கு மேலானபதமும் கிடைக்குமென்றுமேலோர் சொல்லுகின்ருர்கள். ஆதலால் நாமுஞ்சென்று அவ்வாறு தொழுதால் சகலமும்பெறலாமென்று எண்ணினவனய் சிவாலயத்தினுட்சென்று, ஓம் சங்கரசம்போ! ஓம் அரகர மகாதேவா! ஓ காசிவிஸ்வநாதா! என்னை யாண்டருளும்: என்னை யாண்டருளும்: என்பதாய்ச் சொல்லிக்கொண்டு கதறிநின்ருன். அதற்கந்தப் பரமசிவன் அப்பா! நீ இவ்வளவு தூரம் வந்தாயல்லவா? நானுனக்கு என்ன சொல்லப்போகிறேன்? சர்வ லோகங்களினுமுள்ள எண்பத்து நான்குகோடி சீவராசி பேதங்களுக்கும்பிரதிதினமும் இடைவிடாமல் படியளக்கவேண்டிய தொழிலால் நான் இரவும்பகலும்பெரிய ஏக்கமாயிருப்பதல்லாமல், வேடன் காலால் உதைபட்டதை வெளியிட வெட்கமாயும், பிட்டுக்கு இரந்துண்ணப்போய்ப் பிரம்படிபட்ட குறைவினுலும், காட்டிலே காண்டீபனுல் அடியுண்ட வேதைதாளாமலும், சடைமீதிலே யொருத்திக்குத் தயவுசொல்லிக்கொண்டும், அண்டையி லொருத்திக்கு ஆதரணை சொல்லிக்கொண்டும்,ஐயாவென்றழைக்கும் இரண்டு பிள்ளைகட்கும் அனுசரணைசெய்து நின்றும் வருவதில்; அப்பா! என்னைவிட நீயே பரவாயில்லை. உனக்கிந்ததொல்லையெல்லாம் இல்லையல்லவா? என்று கடைசியில் காசி விஸ்வநாதரே கையை விரித்ததில் வெளியில் ஒருவருக்குஞ்சொல்ல மனமில்லாதவனய் வீட்டில் வந்து, எதனை எவ்வழியில் சீர்படுத்திக் கொள்ள வேண்டுமோ? அதனை அவ்வழியில் தனக்குத்தானே சீர்படுத்திக்கொண்டு, காசிக்குப்போய் வந்ததனுல் உண்டாகிய கடனையும் ஒழித்துக்கொண்டு, வெகு சீக்கிரத்தில் சிலநாளைக்குள்ளாய்ச் சர்வ வியாகுலமும் தீர்ந்தவனய் வேண்டியபொருளையடைந்து சந்தோஷமா யிருந்தான்.

கேட்டீரோ எனக்குரிய சேனைத்தலைவர்களே! அந்த அற்பாகிய அசுராள் செய்த ஒருபோரைச்சகித்து அவரைக்கண்டித்து உக்ரமாய் வெற்றிகொள்வீரேயானுல், நீங்கள் சுகமடைவதல்லாமல் எனக்குஞ் சவுக்கியமுண்டு. அதனைவிட்டு என்னுடனே வந்து மோதிக்கொள்வதினுலேயென்னவுண்டு? உம்மைப்பார்க்கிலும் எனக்கு நானுவிதத்திலும் வெகுவித வியாகுலமிருக்கின்றது. அதனை யாருடனே சொல்லி யாற்றுவேன்? நானும் சும்மாயிருக்கின்றேனு? நீங்களே பார்த்துப் பிரமித்துச் சண்டைசெய்கிறதென்ன தெரியாதா? அவர்களுடைய சேனைகள் சண்டைசெய்ததற்கே இப்படி கோலாகல மாகின்றீர்களே: நான் என்னசெய்வேன்? ஆனபோதிலும்

எனக்குமாத்திரம் தைரியமுண்டு. ஜெயம் நம்மதேதவிர வேறல்ல. நீங்கள்மாத்திரம் கிஞ்சித்து இளைக்காமலிருங்கள். நான் அவாளுடைய பூண்டில்லாமல் பொறுக்கி விடுகிறேன். மேலும் பிரமனுடைய வரமெல்லாம் கிரமமாய்ப் பெற்றிருக்கிறேன் ஆதலால், நீங்களெல்லோரும் இன்னும் எது வந்தபோதிலும் தைரியலக்ஷ்மியை மாத்திரம் விடவேண்டாம் என்று சொல்லிக்கொண்டிராநின்ற வேளையிலேதானே அங்கே நிவாதகவசருடைய சேனாவீரரெல்லாம் இவ்வாறே தம்முடைய தலைவர்களிடத்திற்போய் அலறி விழுந்து முறையிடுகின்றார்கள்.

ஓ எங்கள் இறைவர்களே! இதென்ன வேலையிட்டீர்கள்? நாங்கள் சின்னாபின்னப்படவும் பார்த்திருக்கலாமா? இப்பேர்ப்பட்ட சித்திரவதையைச் சகிப்பதைப் பார்க்கிலும் உயிர்விடுவதே சரியென்றெண்ணி வந்தோம். நாங்களும் அனேகம்பெயரைப் பார்த்தோம். இந்த ராக்ஷதரைப்போலே நாங்கள் எந்தஜென்மத்திலும் பார்த்ததேயில்லை. எங்களைத் தாவித்தாவி யமுக்கிக் கசக்கி விடுகிறார்கள். தண்டுகளெல்லாம் செண்டுபோலே அண்ட நிழலில்லாமல் குதிக்கின்றன. அவாளுடைய வல்லமைக்கு நாங்கள் சிங்கத்தின் முன்னே ஆனையைப்போலே யானோம். நாங்கள் கோடி பேர்சென்று அவாளிலொருவனை வளைத்துக்கொண்டாலும், அவனுடைய ஒரு கடைவாய்ப் பல்லுக்குங்கூடப் பற்றாததாயிராநின்றோம். இனி அவாளுடனே போரிடும் வேலைக்குமாத்திரம் நாங்கள் உடன்படவே மாட்டோம் என்பதாய்ச் சொல்லித் தலைவிரிகோலமாய் முறையமிடுகிறதைக்கேட்ட அந் நிவாதகவசாளுடைய மந்திரிமார் அவர்களை நோக்கி, ஓ பராக்கிரமசாலிகளாகிய படைத்தலைவர்களே! இதென்ன நீங்கள் இப்படிச் சொல்லுகின்றீர்கள்? என்னயுத்தம் நடந்துவிட்டது? ஒன்றுமில்லை. ஒருநாழிகைக் குள்ளேதானே இவ்வித குபார்செய்வதானால், இனி முழுமையும் எப்படியாகும்? ஓ! ஓ! நீங்கள் எவ்வளவேணும் தைரியசாலிகளேயல்ல. அதிலும் நீங்கள் செஞ்சோற்றுக்கடனைக் கழிக்கவந்து கும்பலாய்க் கூடினீர்களே யல்லாமல் காரியத்திலே ஒன்றுமில்லை. நாங்கள் இருக்கிறபோது உங்களுக்கு என்ன பயம்? இன்னம் அரைநாழி பரியந்தம் அந்த ராக்ஷதருடனே போர்செய்வீர்களானால் சர்வ சங்கடமும் தீர்ந்துபோய்விடும். இவ்வளவு தொல்லையிராது, உங்களுடைய தைரியமும், கீர்த்தியும், புஜபலமும், உயுத்த சாதுரியமுமாகிய இவையெல்லாம் இவ்வுலகத்தில் மற்றொருவருக்கு உண்டா? இன்னும் வேணுமென்றால் இதோ நாங்களே புறப்பட்டு வருகிறோம். அந்த இராவணனனவன் படுகிறபாட்டை நீங்களே பார்க்கப்போகிறீர்கள். அதைச் சற்றுநேரத்திற்குள்ளாய்க் காட்டுகிறோம் என்று வந்துநின்ற சேனாவீரர்களுக்கு வெகுவாய்த் தைரியஞ்சொல்லி உற்சாகமெனச் சொல்லப்பட்டதை யுண்டாக்கி, முன்னிலும் அதிக தைரியமும் பலமும்கொடுத்து அவர்களையெல்லாம் அனுப்பிவிட்டுத் தாங்களும் யுத்தகோலங்கொண்டு புறப்பட்டார்கள். இப்படி நிவாதகவசாளுடைய மந்திரிமாரெல்லாம் ஆத்திர மிகுந்த கோபத்துடனே போரிடத் துணிந்துவந்து,யுத்தகளத்தில் நிற்கும்படியான ராக்ஷதக்கூட்டத்தை எதிர்த்துப் புஜத்தைத் தட்டிக்கொண்டு வீரசிங்கநாதஞ்செய்து, மீசைதுடிக்க வில்லைவளைத்து டங்காரவோசையெழுப்பி, ஈரேழு பதினான்குலோகமும் செவிடுபடும்படியாய்ப் பிரமாதமான யுத்தஞ்செய்து, ராவணன் தண்டையெல்லாம் குட்டையைக் கலக்கிப் பருந்திற்கு இரைகொடுக்கும் தன்மையைப்போற் பறக்கடித்தார்கள். பின்னும் அந்த மந்திரிமாரெல்லாம் கும்பலாய்க்கூடி, இராவணனைத்தேடி, வீரப்பிரதாபத்தைப்பாடி,எதிர்த்தோரையெல்லாம் சாடி, பலவிதமான அத்திர சத்திரமெல்லாம் எடுத்து உலகத்தையெல்லாம் மூடி, இருள் கம்மிக்கொள்ளும்படி நாடி, ஒவ்வொருத்தருடனும் வாதாடி, அடா ராவணகாதகா! என்று கோடானுகோடி பாணத்தை யேவினார்கள். அவையெல்லாம் வெகு விநோதமாயும் - பயங்கரமாயும் - அபரிமிதமாய்ப் புறப்பட்டுக் கிறு கிறுவென்று குலாலனுடைய திகிரியைப்போலே சுழன்றுகொண்டு வந்து, அந்த இராவணனுடைய சேனைக்கூட்டமெல்லாம் உடல் வேறு-குடல்வேறு-வால்வேறு-கால்வேறு கைவேறு - மெய்வேறு - தலைவேறு - நிலை

வேறுவேறாய்க்கண்டித்து பஸ்மீகரப்படுத்திக்கொண்டிருந்ததுகள். அத்தருணத்தில் தசக்கிரீவனுடைய தண்டுகள் கோபங்கொண்டு, சுமார் இருபதுவெள்ளம் ராக்ஷதர் புறப்பட்டு, காலனுங்கண்டு அஞ்சும்படியாயும், கண்டவரெல்லாம் மண்ணுடனே கவிழ்ந்து கொள்ளும்படியாயும் வெகு ஆர்ப்பாட்டமாய் வந்து, அந்த மந்திரிமார்விடுத்த அளவிறந்த அஸ்திரங்களையெல்லாம் தங்களுடைய கையினாலே தாவிப் பிடித்துக்கொண்டு அவற்றையே திருப்பி அவர்கள்பேரில்தானே விடுத்தார்கள். பின்னுஞ் சிற்சில ராக்ஷதர் நானாவிதமா யிரா நின்ற விருக்ஷத்தையெல்லாம் வேரோடே பிடுங்கிக்கொண்டு வந்து அந்த அசுரக்கூட்டம் அனைத்தையும் அதமாக்கி மண்டையானது பிளக்கும்படி யடித்தும், மாண்டசேனையை வாரிக்குவித்தும், நேரிட்டபேரை அப்பால் எடுத்தெறிந்தும், இப்படி நேர்ந்தபடியெல்லாம் சமர்விளைத்ததன்றி, சிலரை அந்த நிவாதகவசாள் பட்டணத்தில் தானேபோய் விழும்படிச் சுழற்றிவிட்டும், ஆகாயத்தில் எறிந்தவர் மறுபடியும் பூமியில்வந்து விழாமுன்னமே பின்னுமவரைத் தலைகீழாய்ச்சுழற்றி நாற்றிசையிலும் வீசியும், சிலரை வெட்டியும், சிலரைக் குத்தியும், சிலரைச்சேர்த்து ஒருவருடனே ஒருவரை மோதியடித்து இறக்கச்செய்தும், சிலரைத் துள்ளத்துள்ள வதைத்தும், சிலரை எண்ணாமல் உதைத்தும், இப்படிக்குப் பலவிதமாய் எவ்விடம் பார்த்தாலும் பிணக்காடாக்கி நிர்மூலஞ் செய்துவிட்டது மல்லாமல்; இந்த ராக்ஷதர் அவ்வசுரருடைய பிரேதங்களின் தாள்களையும்-தோள்களையும்-கரங்களையும் - சிரங்களையும்-உடல்களையும் - குடல்களையும்-வீசியெறிந்த வேகத்தினால், அவைகள் தெய்வலோகத்தில் தேவேந்திரனுடைய கற்பகச் சோலையில்போய் விழுந்து அந்தவனத்திலிருக்கப்பட்ட மரங்களுக்கெல்லாம் எருவுபோட்ட துபோ லிருந்ததுகள்.

தேவர்கள் முறையிடுதல்.



அதுகாலையில் முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் இருடியர்களும், அஷ்டவசுக்களும், சித்தர் - சாரணர் - கின்னரர்-கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - இயக்கர்-விஞ்சையர் - வித்தியாதரர் முதலாயினோரும் தேவேந்திரமகாராஜனுடைய சபைக்குவந்து, ஐயா தேவாதிதேவனாயிரா நின்ற ஆகண்டல மகாப்பிரபு! நாங்கள் என்னென்று சொல்லுவோம்? இந்த அக்கிரமத்தையெல்லாங் கேட்டுக் கண்டிப்பாருமில்லையா? அந்தத் துன்மார்க்கனான இராவணனெனச் சொல்லப்பட்டவனுக்கு இவ்வளவு தைரியமும் உண்டாச்சுதல்லவா? அவன் திக்குவிஜயஞ் செய்ய நினைந்து வெளிப்பட்டுப் பூமண்டலங்களையெல்லாம் வெற்றிபெற்று, குபேரன்-பரமசிவன் - மருத்தன் - அனரண்ணியன்-எமன் - ஆதிசேஷன் முதலியோரையெல்லாம் ஒருகைபார்த்துக்கொண்டு எவ்விடத்திலுங் கீர்த்திபெற்று, தற்காலம் நிவாதகவசாளிடத்திற் சண்டைசெய்கிறார் போலுங் காண்கின்றது. அஃதெப்படியென்றால், அந்தராக்ஷதர்கள்வீசியெறியும்படியான நிவாதகவசருடைய பிரேதங்களானவை மலைமலைகளாய் நமதுமாடமாளிகை கூடகோபுரமும் கற்பகச்சோலையும் நிரம்பிவிட்டன. அந்தராக்ஷதர் ஒருவர்க்குமாத்திரம் இந்தவேகமுண்டு. மற்றவர்க்கு இவ்விதத்துணிவும், இவ்வளவுதூரம்வந்து விழும்படியாய் வீசியெறியும்படியான பலமுங் கிடையாது. இவ்விதமாக நம்முடைய நாடெல்லாம் பிணக்காடாய்ப் போய்விட்டது. இதற்கு நாம் என்னசெய்வோம்? இவனுக்கு இப்போர்செய்யும்படியான சத்தியுமுண்டா? இதென்ன அனர்த்தகாலம்? அந்த நிவாதகவசாளென்ன லேசானவர்களா? இவனுக்குமிளைப்பார்களா? ஒருகாலத்திலேயும் முதுகுகாட்டித் தோல்வியடைந்து பின்னிடாதவர்கள். அவர்களு மநேக காலஞ் சதுர்முகனைநோக்கித் தவஞ்செய்து மகத்தான வரங்களைப் பெற்றிரா நின்றவர்கள். அவர்களுடைய தந்திரங்கட்கும் வீரதீர சௌரிய பராக்கிரமங்கட்குமிஞ்சி இவனென்ன சிறந்தவன்? ஐயா வேள்வி வேந்தரே! இவ்விதமான பலமுள்ள மூன்றுகோடி அசுரரும் ஒரேமுகமாய் ஏககாலத்தில் திரும்புவாராயின், மறுபடியுங்கூட இந்த ராவணனென்னும் பேர்தானேது? அல்லது இலங்கையென்னும் பட்டணத்திற்குத் திரும்புகிறதுங் கூட எண்ணமா?

இவனழிந்துபோகத்தகுந்த காலமோ? மற்றென்னமோ? தெரியவில்லை. அந்தநிவாத கவசரோவென்ருல் விசேடமான வரத்தை பெற்று முதலிலே சூரபதுமாசுரனுடைய சண்டையிற் போராடி வென்று, அதுமுதலிதுவரையிலுந் தங்களை எதிர்க்கின்றவர் எவருமில்லையென்னும் புகழ்பெற்றிருக்கின்ருர்கள். அவர்களை இவ்விராவண னடுத்துப் போரிடுகின்ருன். இனி அவர்கள் விட நாகம்போலும் குகைச்சிங்கம்போலும் புறப்பட்டு மாத்திரம் தலையிட்டுக்கொள்வார்களாயின் இவனுடன் போகிறதுமல்ல. இழுப்பும் பறிப்புமா யிரா நின்றவனை எழுப்பிவிடப் போனதில் முழுப்பணத்திற்குச் செலவு வந்ததுபோலவும், எல்லை வெளிக்காற்று நெல்லுப்பயிர்கட்கே சேதமென்பதுபோலவும், காகமேறியசைக்குங் கிளையுடன்போகாமல் மரத்துடன் அடிவேருமாளுமென்பதுபோலவும், நம்மையும் ஒரு சுற்றுக்கிழுத்து, நமது தெய்வலோகத்தையும் அதஞ்செய்வார்கள். அவ்வேளையில் நாமென்னசெய்வது? அந்தமட்டும் அதிகாரிகளான அரசர்வராமல் மந்தரிமார்வந்துசெய்யா நின்றயுத்தத்திற்கே இவ்வளவு அல்லோல கல்லோலமாகின்றது. இனியவரெல்லாம் ஒன்ருய்க்கூடிவருவாராயின் அதன்பிறகு எவ்வாருமோ? இந்தத் தொண்ணூறுநாளாய் நாங்கள் கஸ்திபடுவதல்லாமற் கிலிகொண்டிரா நின்றதையும் என்னவென்று சொல்லப்போகிருேம் என்று தெய்வலோகத்தா ரெல்லாம் சிந்தை கலங்கி, ஓ எந்தையே! எங்கட்கென்ன கட்டளையிடுகின்றீர்களென்று சொல்லிப் பிரலாபித்தார்கள்.

### தேவர்களுக்கு இந்திரன் தைரியம் உரைத்தல்.

கேளும் ஸ்ரீராமா! இப்படி புரந்தரனை தேவேந்திர மகாராஜனிடத்தில் தேவர்கள் முதலாயினேர் முறையமிட்டுக்கொள்ளுகிறதை அந்தப் பொன்னகர்க் கிறைவன் உணர்ந்து, கேளுங்கள் தேவர்களே! நீங்களொன்றுக்கும் அஞ்ச வேண்டாம். (வளம்பெறவேண்டாதார் யார்யாருமில்லை அளந்தனபோக மவரவராற்ருல்.) என்று சொல்லப்படுதல்போல் உலகத்திலே முன்னுக்குவர நினையாதோர் யார்? நாமெதற்கென்றுதான் பயப்படலாம்? காலவிதி எப்படியோ அப்படி அனுபவிக்கவேண்டியவற்றைத் தடையின்றி யனுபவித்துத்தான்தீர வேண்டும். இந்த ராவணனுடனே போர் கொடுத்து நமக்குந் தலைமொட்டையாகின்றது. அதற்கு என்னசெய்யலாம்? அவனுடைய குடிக்கு மகோதரன் ஒருத்தன் ஏற்பட்டிருக்கிருன். அவனுல்தான் அவன் துள்ளி விழுந்து இவ்வழிக்கெல்லாம் நடக்க விசைகிருன். இலங்கையினிடத்திலே சுகமாயிருந்து அரசுபுரிந்துவரப்பட்டோனைக் கலைத்துக் குபேரன்மீதேவி அவனைக் கெடுத்ததல்லாமல், அவனுடைய புட்பவனத்தையும் அழிக்கச் செய்து வைத்தது இந்தமகோதரனல்லவா? அதேமூல்யமாய் திக்குவிஜயமென்றுசொல்லி ஒன்றை ஏற்படுத்தி, அதன் முன்னிலையிற் சகலலோகத்தையும் நாசப்படுத்திவைத்ததும் அப்பாவிதானே நல்லதிருக்கட்டும். நாரதரால் எமலோகஞ்சென்று உயிர்பிச்சைகொண்டுதிரும்பி, லங்கைக்குச்செல்ல விருந்த அக்கொடியதுஷ்டனை, நாகலோகத்திற்கு ஆதிசேஷன்மேற் படையெடுக்கச் செய்துவைத்ததும் இந்தப் புண்ணியவான் தான். அந்தமட்டும் இன்னஞ் சிலநாள்மாத்திரம் யுத்தம் நடக்கும்படியாயிருந்தால், அந்த நாகலோகத்திற்கே இரையாய்விடுவான். இதற்குள்ளே அந்த மந்திரிமார் செய்த தந்திரவுபாயத்தினுலே யன்ருே தேறிவந்தான். அப்படி தேறிவந்து ஒரேபிடியாய் இலங்கைக்கே செல்லும்படியாய் கருத்துகொண்டிருந்த இராவணனை, மறுபடியும் இந்த நிவாதகவசாள்பேரிலே ஏவிவிட்டுக் கூத்துப் பார்க்கின்ருனே? இன்னமும் அந்த மகோதரன்சொல்லைத்தானே அவன் நம்பியிருக்கின்ருன். ஆனுல் துணிந்துசெய்யுஞ் ஜெயகாலமானது அவனுக்குவெற்றியைத் தருகிறதே யல்லது மற்றென்ன இரா நின்றது? ஓ தேவர்களே! அதிலும் பாருங்கள். ஒவ்வொருகாலத்தில்இந்தமகோதரன்தூக்கிக்கொடுப்பதினுல் அவன் முன்பின் தெரியாமல் நல்ல பலாஷ்டியரா யிரா நின்றவரிடத்திற்போய் மாட்டிக்கொண்டு முழிக்கின்றவேளையிலே, பிரம்மாமுதலியோரும் தங்களுடைய மானத்தை யெண்ணி ஓடிவந்து இருவருடைய நடுவிலும் நின்று சமாதா

னஞ்செய்து வைக்கிறார்கள். அந்த மமதையும் அவனுக்கு உண்டாயிராநின்றது. இன்னமொன்றுகேளுங்கள். தற்காலத்தில் எல்லார்க்குஞ் சள்ளைதொலைந்து, சிவனேயென்று ஒரு மூலையிலே யிருக்கும்படியான நல்ல சமயம்வந்து வாய்த்தது. அப்படி வாய்க்கும்படிகாலதண்டத்தை எடுத்தோடிவந்த எமதர்மராஜனை ஏதோ ஒருவிதமாய் சூதுசெய்தொழித்தார்கள். இன்னமுங்கூட அவனுக்கிருக்கும் உபபலத்தை எடுத்துச் சொல்லவேண்டுமா? பிரம்மதேவர் இவ்வாறுழைக்கின்றார். பரமேசன் தக்கபடிவரங்களைச் சாதிக்கின்றார். ஆனபோதிலும்பரவாயில்லை; ஸ்ரீமகாவிஷ்ணு நமதுபேரிற் கிருபைசெய்யும்படியானசமயமும், இந்த இராவணனுடைய முடிவுகாலமும் ஒன்றாய்க் கூட நேரிடப்போகாநின்றது. அப்பொழுதந்த அரிதுயிலமர்ந்தமூர்த்தியான ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர், அவனையவன் குடும்பத்தோடு பரிஷ்காரமாய் ஒழித்துவிடப்போகின்றார். ஆனபோதிலும் இப்பொழுதுவந்து விளைந்திருக்கின்ற இந்தப் பிரமாத யுத்தத்தில் இருதிறத்தாருக்கும், வெற்றிமாத்திரம் கிடையாது. இதினும்பிரம்மதேவர் நடுவில் வந்து நின்று பைசல்செய்யாமற் போகார். ஆனால் இந்த நிவாதகவசர்பேரில் அந்தச் சதுமுகற்கு அன்பென்பதுகிடையாது. ராவணனைமாத்திரம் காத்தளிக்கக் கையிற் கங்கணங்கட்டிக்கொண்டிருக்கின்றார். அந்த உளவறிந்துதான் அவனுடிவருகின்றான். கோமான் பலத்திருப்பானேயானால் நாயும் குப்பையேறிக் குலைக்குமல்லவா? நீங்கள் இதற்குள்ளே ஏன் பயப்படுகின்றீர்கள்? நெருப்பென்று சொல்லாமுன்னமேவாய்வெந்துவிடுமென்பதுபோலே நீங்கள் வீணாய் ஏன் கலங்குகிறீர்கள்? அந்தவருத்தம் உங்கட்கேன்? எனக்குத்தெரியும். நீங்கள் உங்களுடைய வேலையில் இருங்களென்று சொல்லி அனுப்பிவிட்டான்.

இதுநிற்க அவ்விடம் ராவணனுடைய மந்திரிமாரான பிரகஸ்தன்-விருபாக்ஷன் - முதலானோரெல்லாம் தங்கட்குள்ளாகவே யோசனைபண்ணி, இதென்ன ஆச்சரியம்? நாம்வந்து இவ்வளவுதூரம் யுத்தஞ்செய்தும், இந்த மந்திரிமார்மாத்திரம் வந்து போராடுகின்றாரேயல்லாமல், அந்த நிவாதகவசரெனச்சொல்லப்பட்டோர்வரவில்லை. இதற்கு என்ன செய்கிறது? ஆனபோதிலும் நாமிந்த மந்திரிமாரைப் பூரணமாய் வாட்டினால், அப்போது அவர்கள் தமக்குத்தாமே வருவார்கள். என்றெண்ணி ஒரேகாலத்திற் சகலத்திராளும் ஒன்றாய்க் கூடிக்கொண்டு, தங்கள் விற்களைக் குணத்தொனிசெய்து, அவ்வசுரர் மந்திரிமார் பேரில் இந்திராஸ்திரம் - வருணாஸ்திரம்-வாயுவாஸ்திரமுதலிய அளவிறந்த அத்திரப்பிரயோகஞ் செய்தார்கள். அப்போது அவையெல்லாம் வில்லினின்றும் விடுபட்டு அண்டராண்டங்களெல்லாம் பற்றிவேகும்படியாய் எதிர்த்துக்கொண்டுவராநின்ற பொழுதில், அவர்களுந் தோற்புகெலிப்பில்லாமல், வில்லைவளைத்து நாணேறிட்டு, அவர்கள் விடுத்த அத்திரங்களை நடுப்பாதியிலே கண்டித்து, இரண்டு நாராசங்களைத்தொடுத்து அந்த மந்திரிகளைத் தத்தளிக்கும்படியாகச் செய்து, உடனே அவர்கள் ரதத்தையுமழித்து, வில்லையுமொடித்து, சாரதியையும்வெட்டி, சேனைகளையும் தலைசிதற வடித்தார்கள். அதன்மேல் இச்சேதியையெல்லாம் இராவணன் கேட்டு, உடனே அம்மந்திரிகட்குத் தன்னுடைய சேமத்தேர்களையும் முப்பத்திரண்டாயுதங்களையும் உதவியாய்க் கொடுத்தான். அவர்களும் அந்தத் தேரின்மீது ஆரோகணித்துக்கொண்டு, வில்-வேல் - வாள் - முதலியவைகளையுந் தாங்கி ஆக்கிரமித்து நின்று, அந்த அசுரர்மந்திரிகளையடுத்து, இமோத்பர்வதம்போலோங்கி, ஓ நண்பர்களே! நாங்கள்விடுத்தபாணங்களையெல்லாம் நீங்கள் கண்டித்துவிட்டீர்களென்கிற கெர்வம் உங்களுக்குள் இருக்கின்றதல்லவா? ஆகிலும் பெரிதல்ல. நாங்கள் இனிச்செய்யப்போகின்ற போரைக்கண்டு நீங்களே திப்பிரமைகொள்ளப் போகின்றீர்கள். அதை இப்போதே பாருங்கள். என்று தங்கள் நெடியவில்லை வளைத்து உகாந்தகால ருத்திரனைப்போல ஆக்கிரமித்து, தகுதியான சுறுக்கு பாணங்களையெல்லாந் தொடுத்துவிட்டார்கள். அவைகளெல்லாம் எமதண்டம்போலெழும்பி, ஏகம் - தசம்-சதம் - சகஸ்திரம்-தசசகஸ்திரம் - சதசகஸ்திரம்-என்றுமொழியப்பட்ட கணக்குகளாகப் புறப்பட்டு, அந்த மந்திரிகளினுடைய தேகங்களிற்

சுறுக்குச் சுறுக்கென்று துளைக்கருவி துளைப்பதுபோல் துளைத்தன.

அதனாலவர்கள் இதென்னவிநோதம்? இவர்களை இதுவரையில் வெகு லேசாக மதித்திருந்தோம். இவர்களுடைய பாணங்களினால் வாதைப்படுவதைப் பார்க்கினும் உயர்ந்த விஷஜெந்துக்களால் வாதைப்படலாம். இவர்கள்விடுத்த பாணங்களில் ஒவ்வொன்றும்நெருப்புத்தணலைப்போலவெரிந்து, தேகமெல்லாம் தகத்தகாயமாய்த் தகிக்கின்றதுகள். இவ்வாறு நம்மை நோவச்செய்தவர்களை நாம் எளிதில் விடப்படாது என்கிறதாய், தாங்களும் தங்களுடைய உயர்வாகிய வில்லில் அநேகமாகிய அக்கினியாஸ்திரங்களை யெடுத்து விடுத்தார்கள். அதுகளும் வெகு உன்னதமாக வெளிபட்டுத் திரிபுவனங்களெல்லாம்பரவித் தணலைவாரியிறைத்துக்கொண்டு, பார்த்தவர்களெல்லாம் திடுக்கிடும்படிவர, அதைக்கண்டு மாரீசன்முதலியவர்களும் தங்கள் வில்லைவளைத்து, அவைகளையவித்துவிட நினைத்து, அளவிறந்த வருணாஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்தார்கள். அப்போதவைகள் கடல்போலஅம்புமாரிகளைச்சொரிந்துகொண்டு வந்து அந்த அக்கினியாஸ்திரங்களையெல்லாம் அவியச்செய்துவிட்டன. அப்பால் அவர்கள்பெரிய பர்வதாஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார்கள். அவைகளும் வில்லில் நின்றும் விடுபட்டு அநேகபர்வதங்களாகப்பரவி இராவணனது சேனைக்குட்புகுந்து மலை மலைகளாக விழுந்து, அநேக ராக்ஷதர்களைப் படுசூரணஞ் செய்து விட்டன. அதை மாரீசன் முதலானவர்கள் கண்டு, அடடா! இதென்ன சாதுர்யம்? இவர்கள் நம்மிலும் வெகு கெட்டிக்காரர்களாக இருக்கின்றார்கள். மேலும்தட்டாமல் யானையைத் திட்டென்று விழுங்கிவிடுவார்கள்போலு மிருக்கிறது. ஆனாலும் நாம் ஓட்டாரஞ்செய்து இம்மட்டான மலைகளையெல்லாம் கொட்டாவிவிடுவதுபோல் வாயைத்திறந்து, நமது வயிற்றுக்கு மெட்டாமல் விழுங்கிவிட மாட்டோமா? இவர்கள் கொர்வத்தை நொடிப்பொழுதி லடக்கி விடுவோம் என்று உடனே தங்கள் வில்லில் அளவிறந்த வஜ்ராஸ்திரங்களையெடுத்துப் பூட்டி, ஆகர்ணபரியந்தமிழுத்து விடுத்தார்கள். அதுகளெல்லாம் வில்லில் நின்றும் விடுபட்டுப் பூலோகமெல்லாம் மூடிக்கொண்டு, எவ்விடம் பார்த்தாலும் மலைக்கூட்டங்களா யிருக்கிறதுகளின் சிறகுகளையெல்லாம் அறுத்துவிட்டதுமல்லாமல் அந்தப் பர்வதங்களையும் நிர்த்தூளிதஞ் செய்துவிட்டதுகள். அதுகண்ட அவ்வசுரர் மந்திரிகள் அநேக மேகாஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார்கள். அவைகளும் உகாந்தகாலத்திருள்போல உலகத்தையெல்லா மூடிக்கொண்டு, இடி குமுறல் மின்னல்களோடும் கர்ஜித்துக்கொண்டு, ஒருவர்முகம் ஒருவர்க்குத் தெரியாதபடி இருபடைகளும் ஒன்றாய்க் கலந்துகொண்டு ஒருவரையொருவர் இன்னாரென்றறியாமல் வெட்டிக்கொள்ள எங்கும் பிரளயம்போல வருஷித்தன.

அதுகண்ட மகோதரன் தன்னோடிருக்கும் மற்ற மந்திரிகளைப்பார்த்து, ஓ நண்பர்களே! இவர்கள்மாயாவாதிகளாகையால் இதுதானாசெய்வார்கள்? இன்னம் அநேக விதமான விந்தைகளெல்லாம்செய்வார்கள் இதற்குநாம் பின்னிடையக்கூடாது என்று கூறித் தன்னுடையவில்லைவளைத்து, எண்ணிறந்த கொடிய வாயுவாஸ்திரங்களையும், அக்கினியாஸ்திரங்களையும், சூரியாஸ்திரங்களையும் பிரயோகஞ் செய்து; அந்த மேகாஸ்திரங்களை யெல்லாம் வந்தவழி தெரியாமல் ஓடும்படிச் செய்து பொடிப் பொடியாக்கினான். உடனே மற்ற மந்திரிகளில் ஒவ்வொருவரும் வில்லைவிடுத்து, ரதத்தை விட்டிறங்கி, அனேகங்கோடி கதாயுதங்களை வீசினார்கள். அப்போதவர்கள் இதேதுஇவர்கள்வில்லையெறிந்துவிட்டுக் கதையை எடுத்துக்கொண்டார்கள். இதற்கு என்செய்வது? என்று தாங்களும் வில்லைவிடுத்து ரதத்தைவிட்டிறங்கி, கதாயுதங்களைக் கைக்கொண்டு எமகிங்கிலியர்களைப்போல் மிகவும் ஆக்ருஷத்துடன் அவர்களை எதிர்த்தார்கள். இந்தக்கதாயுத யுத்தங்களிற் சிறந்த இருதிறவர்களும் மலைபோல் எதிர்த்து நின்றவுடன், ஒருவரையொருவர் நோக்கியும், அவரவர்கள் கதாயுதங்களை உறுமிப்பார்த்தும், பின்னடி-முன்னடி-ஈரடி-நாலடி-புறவடி முதலாகிய லகுகள் பாய்ந்தும், முன்னம் மேருகிரியை வாயுபகவான் மோதினதுபோல் ஒருவரையொருவர் ஜாடினார்கள்.

இந்தத் தண்டாயுதப்போரில் அசுரர் மந்திரிகள் மீறி, ராக்ஷதர்களையெல்லாம் ஓங்கி யடித்து, நெற்களைப் புடைப்பது போல் அனேகரைக் கொன்ருர்கள். சிலரைக் குத்துயிருடன் நிலத்திற் சாயும்படி அடித்தார்கள். அப்போது தங்கள் ராவணன் தண்டுகளெல்லாம் இறந்து குப்பற்குப்பல்களாகப் பிணக்காடானதைக்கண்ட ராவணனுடைய மந்திரிகள் மீறித் திடகாத்திரத்துடன் பிரவேசித்து, அவர்களுடைய கதைகளையெல்லாம் விருக்ஷங்களைக் கொண்டுதட்டிவிட்டு, அவர்களையெல்லாம் அங்கங்கிருந்தபடிக்கு அப்படிக்கப்படியே அமுக்கிப் பிடித்துக்கொண்டு, கால்களை வாரிச் சுழற்றி, சண்டமாருதம்போல் நிலத்திலறையத் தலைப்பட்டார்கள். அது கண்ட அசுரர் மந்திரிகள் ஓ! ஓ! இவர்களை என்னமோவென்று இருதயத்துளெண்ணியிருந்ததற்கு இப்போதல்லவா தெரியவருகின்றது. இனிநாம் இவர்களைப் படுசூரணப்படுத்தவேண்டும். என்று ஆளுக்குஒவ்வொரு இருப்புலக்கையை எடுத்துக்கொண்டு கரகரவென்று ஆக்ஞாசக்கரம்போல் சுழற்றி மோதியடிக்கத் தலைப்பட்டார்கள். அதனாலந்த ராக்ஷதர்களுக்குக் கண்கள் சிவந்து, கோபாவேசங்கொண்டு, இவர்கள் நம்மிலும் இந்த இருப்புலக்கையில் கைதேர்ந்தவர்களா? என்று ஆகாசமளாவிய உயரமும், வெள்ளியங்கிரிபோல் பருத்த கனமும் உள்ளனவாய், வரிசை வரிசையாகக் கட்டுகள்போட்டுப் பதித்திருக்கும் பயங்கரமாகிய இருப்புலக்கைகளைத் தாங்களும் குலாலன் திகிரியைப்போல் சுழற்றி மோதிச் சாடினர்கள்.

இவ்விதமாக ஒருவரையொருவர் அடித்துக் களைப்புற்றுச் சகியாதவர்களாய்ப் பூமியில் சாய்ந்திருக்கையில், இது சேதியறிந்த தசக்கிரீவனனவன் உடனேதனது ரதத்தைத் துரத்திக்கொண்டுவந்து வில்லை வளைத்து, ஆயிரம் பாணங்களை மொத்தமாக ஒரேகாலத்தில் தொடுத்து, அந்த நிவாதகவசர் மந்திரிக ளேறிவந்த தேர்களையெல்லாம் குத்துக்கால்வேறு கொடுங்கைவேறு அச்சுவேறு ஆணிவேருகப் பொடியாக்கி, அவர்களையும் பாணங்களால் தலையெடுக்க வொட்டாமல் அடித்தான். இப்படியவன் திடீரென்று வந்து செய்த யுத்தத்திறத்தை அவ்வசுரர் மந்திரிகள் பார்த்து, ஐயையோ! இவனுரோ தெரியவில்லையே! இவனைப் பார்க்கும்போதே திப்பிரமை கொள்ளுதே பத்துத்தலைகளும் இருபதுகைகளும் நாலைந்து கண்களுமாகப் பெரிய பசாசுபோல வந்தெதிர்த்தானே! இவனுடன்தான நாம் சண்டைசெய்து கெலிக்கப்போகிறேம்? எல்லோரும் பயங்கரமாய்ப் பேசிக்கொள்ளுகிருர்களே? அந்த ராக்ஷதனுகிய இராவணன்தானே இவன்? என்று கருதினவர்களாகி, இனி நாம் பின்னிடைவதில் என்னபலன்? இவனேடெதிர்த்து மாள்வதேசரி. எனத்தேறி வேறு தேர்களின்மீதேறி, அவர்களெல்லாம் இணைபிரியாதுகாலாந்தகர்கள்போல் வில்லைவளைத்து நாணியேறிட்டுக் குணத்தொனிமுதலிய பயங்கரவோசையுஞ் சிங்கநாதமுங்காட்டி, அம்புகளைத்தொடுத்து ஆயிரம்-ஐயாயிரம் - பதிஞயிரம் - நூருயிரம்-லக்ஷம்-பத்துலக்ஷம் - கோடி-மஹா கோடியென்று விடுத்துப் பின்னும் சொல்லுவார்கள்.

அடா ராவணு! இதுவரையிலும் நீ எங்கொளித்திருந்தாய்? அடா திருடா! இஃதுனக்கு அழகா? சண்டைக்கு வந்தவன் இன்னேரம் தாமதஞ்செய்து சமயம் பார்த்து வருவானேன்? ஆனாலும் நாங்கள் உன்னைவிடப்பட்ட ஆசாமிகள்தானு? இதோ நாங்கள் பலபாணங்கள் தொடுத்திருக்கிறேம். நீ சுத்தவீரனுகில் அவைக்குத் தப்பித்துக்கொள்ளுக. என்றும் பின்னும் அளவிறந்த அர்த்தசந்திர பாணங்களைப் பிரயோகஞ்செய்தார்கள். அதுகளையெல்லாம் கண்டும், அவர்கள் சொன்னதையுங்கேட்டும், ராவணனனவன் தானும் வில்லை வளைத்துச் சொல்லுவான். ஓ அசுரர்மந்திரிகளே! நீங்கள்தொடுத்த அம்புகளென்ன ஒருகணக்கா? மஹாகோடிவரையில் விடுத்தீர்கள். இதோபாருங்கள். சங்கம்-மகாசங்கம், கர்வம்-மகாகர்வம், க்ஷோணி-மகாக்ஷோணி-இன்னும் அற்புதம் நிற்புதமென்று சொல்லப்பட்ட கணக்குகளாய் விடுகிறேன். இவைகளை நீங்கள்மாத்திரம் தடுத்து விடுங்கள் எதோ பார்ப்போம். என்று பின்னும் விசேஷமாகத் தொடுத்து விட்டான். அவைகளெல்லாம் ஆகாயங்களிலும் புவனங்களிலும் பரவிக்கொண்டு

எங்கும் அம்புமயமாய்ப் புகுந்து நிவாத கவசர் மந்திரிகளை அதஞ்செய்துகொண் டிருக்கையில், முன்னம் இவர்கள் விடுத்த அர்த்தசந்திராஸ்திரங்கள்மாத்திரம் எந்த அம்புகளுக்கும் அகப்படாமல் தப்பித்துக் கொண்டுவந்து குபீலென்று விழுந்து, அந்த ராவணனுடைய வில்லை ஒடித்து; நாணியை அறுத்து, அவனுடைய கவசத் தையும் கிழித்து, மார்பையும் பத்தலாக்கி, அவனுடைய தேகமுழுமையுஞ் சல்லடை கண்களாகத் துளைத்தன.

இப்படித் துளைக்கவே பத்துத்தலைய னுக்கு இருபது கண்களும் இருபது கை களும் பிரண்டு, பத்து நாவுகளும் வரண்டு, திப்பிரமைகொண்டு மிரண்டு, மெய்மறந்து மூர்ச்சையாகித் தேரின்மீது சாய்ந்தான். அந்தச் சமயத்தில் பின்னும் அந்த மந்திரிகள் வில்லில் ஒரு அக்கினி யாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணி, அவ னுடைய தண்டிலே பாதி அழித்தார்கள். அப்போது இரத்தவெள்ளங் கரைபுரண் டோடத் தலைப்பட்டது. இதற்குள்ளாக ராவணனுக்குச் சோபந்தீர்ந்து கண்ணைத் திறந்துபார்த்து எழுந்திருந்து, உடனே மகோதரனை யழைத்துவரும்படி உத்திரவு செய்தான். அகோரச்சண்டையை மூட்டி விடும் மகோதரச் சண்டனை யழைக்கவும் அவன்வர, அவனைராவணன்கண்டவுடன் சொல்லுவான். அப்பா மகோதரா! இதெ ன்ன கொள்ளை? இப்படி படுசூரணமாக நமது தண்டுகளெல்லாம் மாண்டுவிடும்படி யாயதே. இதென்னசெய்கிறது? உன் பேச் சைநம்பி நான் இந்தவேலையில் தலையிட்டுக் கொண்டபடியால் நீஎன்னசொல்லுகிறாய்? இந்தமட்டும் முந்நூறு வெள்ளஞ் சேனை கள் இறந்துவிட்டன. இன்னமும் அந்த நிவாதகவசர்களைக் கண்ணாலும் பார்க்கக் கூடவில்லை. என்றிரங்கும் தசக்கிரீவனை மகோதரன்தேற்றி அவன்மனந் திடமுறச் சொல்லுவான். கேளும் ராவணேஸ்வரா! நாரதன் பேச்சைக்கேட்டு எமதர்மராஜனு டன் சண்டை செய்யப்போனதில் அங்கு நீர் என்னகெலித்தீர்? உமது சேனைகளில் ஒன்றும் மாளவில்லையா? கைலாசமலையைத் தூக்கி என்னபுகழெடுத்தீர்? ஆதிசேஷனு க்கும் அஞ்சி நிற்கும்போது ஆதரவு கிடை த்ததில் ஆண்பிள்ளையாயினீர். எப்போதும் நீர் சண்டைசெய்வதிற் பிரசண்டனென்று மாத்திரம் பேரேயல்லது, உமக்குத்தைரிய மென்பதில்லை. எப்போதும் யுத்தத்தில் ஜெயாபஜயம்வருவது உண்மை. ஆகிலும் இதற்குளென்ன கண்டீர்? இந்த அற்பர்க ளாகிய மந்திரிகளுக்கே நீர் இப்படி பேது றுவதானால், நாளை நிவாதகவசர் வந்தெதி ர்க்கும்போது எப்படி நிற்கப்போகிறீர்? நீர் இவ்வளவு அவதைரிய புருஷனென்றால் இதிற்பிரவேசிக்கச் செய்யமாட்டேன். உம க்கு லாபமுங் கீர்த்தியும் பின்னிட்டுவருவ திற் றெரிந்துகொண்டு நீரேயென்னைப்புக ழ்ந்துகொள்ளப் போகின்றீர். மேலும் நீர் என்ன அவ்வளவு விபரீதயுத்தஞ் செய்து விட்டது? உமக்கெத்தனைவெள்ளஞ் சேனை கள் மாண்டால்தானென்ன? நாளைக்கே நிவாதகவசர்கள்பட்டணத்திற் செங்கோல் செலுத்தப்போகின்றீர். அப்போது எவ்வ ளவு சைனியங்களைப்பெறுவீர்? வீணாயேன் என்னை நொந்துகொண்டு உம்மையுமறியா மல் தொண்டையைக் கிழித்துக்கொள்ளுகி றீர்? என்று பற்பலவிதமாகக் கூறி அவ னைத் தேற்றினான். இப்படி அவனுக்கு இதவாகச் சொன்னதில் உள்ளமெலிவும் தேகவிடாயுந் தீர்ந்து, பின்னுந் தேறினவ னாய் தாமசகுணத்தை வகித்து, வில்லையே ந்தி முன்னிலுமதிக உக்ராவேசங்கொண்டு உகாந்தகால உருத்திரனைப்போற்சீறி, பல் லைக்கடித்து வில்லை வளைத்து வீரச்சொல் லைப்படித்து, ஓர் இடியாஸ்திரத்தை எடுத் துத் தேகமுழுதுந் துடிக்கப் பிரயோகஞ் செய்து, அதன்பின்போர் அக்கினியாஸ் திரத்தையும், அநேக அர்த்தசந்திரபாண ங்களையும் பிரயோகஞ்செய்தான். அப்போ தந்த இடியாஸ்திரமானது மின்னல்குமுற லோடும்வெளிப்பட்டு, பார்ப்பவர்கண்களை யும் பறித்து, தகத்தகாயமாய் படபட பட லென்றும், தடதட தடாலென்றும், ஏக ஆர்ப்பாட்டமாக சப்தித்துக்கொண்டு வந் தது. அந்தவேடிக்கைகளையெல்லாம் ஆச் சரியமாகப் பார்த்துக்கொண்டிருந்த நிவா தகவசர் மந்திரிகள் இதென்ன விந்தை யென் றிரங்கிவாடி, அவர்கள் தனுசை வளைத்து எதிர்ப்பதற்குள்ளாக அந்த ராவ ணன் விட்ட அக்கினியாஸ்திரமானது அண்டமெங்கும்பரவி அக்கினிகளைக்கக்கி, அவர்கள் சேனைமுழுமையும் திக்கென்று

எரிந்துபோகப் பஸ்மீகரஞ் செய்துவிட்டது. அந்தச்சமயத்தில் இரணக்களமெல்லாம் வெட்டவெளியாகிக்கொண்டிருக்க, அவன் விடுத்த அவ்விரண்டஸ்திரங்களோடு அவனது அர்த்தசந்திரபாணங்களும் சரேலென்று பாய்ந்து அசுரர் மந்திரிகளுடைய இரதசாரதிகளின் சிரசுகளையெல்லாங் கண்டித்து, தேர்களையும் பொடியாக்கி, விற்களையுமறுத்து, அவர்கள் மார்பிற் பூண்டுவந்த கவசங்களையும் கிழித்து, அவர்கள் தேக முழுமையும் ஊடுருவிப் பாய்ந்து துளைத்தன. அதினால் அவர்களெல்லாம் மூர்ச்சையடைந்து தாழவிழுந்தார்கள். மாண்டவர்கள்போக மற்றுஞ்சில சேனைகள் குத்துயிருடன் ரணக்களத்திற் புரண்டிருந்தன. பின்னுஞ் சிலசேனைகள் இந்த அகோர அநியாயங்களை நமது எஜமான்களிடத்திலாவதுபோய் முறையிட்டுப் பிழைக்கலாமென் றெண்ணினவைகளாய் ஓடிவிட்டதுகள். இப்பால் இவ்விடத்தில் மந்திரிகள் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து யுத்தகளத்தைப் பார்த்தார்கள். எங்கணும் ராட்சதக் கும்பல்மயமா யிருக்கின்றதே தவிர, தங்கள் சேனைகளில் ஒருவனுங் காணுதபடியால் மிகவும் உள்ளமாழ்கினவர்களாகி, ஐயோதெய்வமே! இனி என்ன செய்வது? இந்த அநியாயத்தையாருடன்தான் சொல்லுவோம்? எவ்விதந்தான் நம் மூர்க்குப்போவது? கேட்கும் பெண்டீர்களுக்குங் கேலியாச்சுதே? விருதுகள் கூறி வந்தது வேணதுண்டே? நமது இராஜர் கேட்டால் என்னசொல்வது? என்று காகம்போற் கதறிக்கூவிப் புலம்பிக்கொண்டு மிகவும் வருத்தத்துடன் தங்கள் பட்டணஞ்சென்று அசுர ராஜேந்திரர்களாகிய நிவாதகவசர்களிடத்திற் சொல்லிப் பிரலாபிக்கின்றார்கள்.

கேளும் தசரதநந்தனு! இப்படிச் சித்தங்கலங்கி, மெத்த மயங்கித் தத்திக்கெட்டுத்தடுமாறி வயிறுகள் பற்றியெரியும்படி மந்திரிகளெல்லாம் தங்களுக்குள்ள அரசர்கள்முன் நின்று, ஐயா! எங்களைக்காக்கும் இராஜேஸ்வரர்களே! ஆழமறியாது இரங்கிப் பிறகு முழிப்பதுபோல மிகவும் அபாயமாகிய படுபள்ளத்தில் எங்களை மூழ்த்திவிட நினைத்திருந்தீர்களோ?ஐயையோ!! அந்தஅனியாயத்தை என்னென்று எடுத்துரைப்போம்? நாங்களா அந்தராக்ஷதப் பசாசுக்கூட்டங்களிடத்தில் எதிர்த்து யுத்தஞ்செய்வது? ஏதோ நல்லகாலம் நாங்களாவது இந்தமட்டும் பிழைத்து வந்து உங்கள் முகத்தில் விழிக்கும்படியாயிற்று. அவர்கள் நானுவித ரூபங்களாய் நிற்பதும்-எடுப்பதும் - தொடுப்பதும்-பார்க்கும் போதே, எங்கள் கெற்பங்கலங்கிச் சிம்ஹ சொப்பனம் கண்டவர்களைப்போலானோம். அப்படி யானபோதிலும் நாங்களிங்கிருந்துபுறப்பட்டுப்போயின இதுவரையிலும் அவர்களை அதஞ் செய்துகொண்டுதான் இருந்தோம்.அவர்களுமெங்களுக்குளன்னதான் இளைத்துப் போனபோதிலும், அவர்களுடைய சேனைகளில் நிர்மூலமாய் மாண்டுபோன மூந்நூறு நானூறுவெள்ளஞ் சேனைகளை அவர்கள் கண்ணுற்பார்த்த கலக்கத்தினால், உடனே எங்களை வெகுமூர்க்கமாக எதிர்த்துச் சூதுமார்க்கமாய்ச் சண்டைசெய்து, கடைசியில் இந்தவழியாகப் படுசூரணப்படுத்தி இப்படி அலங்கோலமாக்கித் துரத்தி யடித்து ஓட்டிவிட்டார்கள். ஆதலால், ஐயா ராஜாதிபதிகளே! நாங்கள் இனியெதிர்க்கச் சக்தியில்லாமல் வந்துவிட்டோம். என்னதான் வீராதிவீரர்களா யிருந்தபோதிலும் அவர்கள் முன்பாக எங்களுக்கொன்றுஞ் சாயவில்லை. எங்களை யவர்கள் அனியாயப்படுத்தினார்களே யல்லது பின்னை நாங்கள் என்ன வெற்றி யடைந்தோம்? இனியெங்களால் எள்ளளவேனும் மாளாது. உங்களுக்கும் அவர்களுக்குந்தான் சரி. என்று அறுதியாகச்சொன்ன உறுதியைக்கேட்ட அதிபதிகளாகிய நிவாதகவசர்களுக்கெல்லாம் கண்கள் சிவந்து கோபம்பிறந்து, ஆ! ஆ! அப்படியா? அவர்களும் அவ்வளவு கைக்காரர்களா? இந்தத் திரிபுவனங்களிலும் நாமறியாத வீரர்களும் உண்டா? ஆயினும் நாம் அப்பேர்ப்பட்டவர்களைத்தான் பார்க்கவேண்டும். நம்முடையசேனைகளும் இப்படி நாசமாய் விட்டதல்லவா? என்று ஆக்ர நிக்குரோதரர்களாய் குகைக்குளிருந்த சிங்கம் குஞ்சரங்களைத் தேடிவருவது போல் அந்த ராக்ஷதர்களையெல்லாம் இந்த க்ஷணம் அந்த நமனுக்குள்ளாக்கி விடுகிறோமென்று கூறி, புத்தின் வாய் திறந்தெ

மூம்பும் ஈசற் கும்புகள்போலப் புறப்பட்டார்கள்.

இப்படி இளம்பிள்ளைகளும் கண்டு வாய்மூடும்படியான உக்கிரத்தோடு மூன்று கோடி நிவாதகவசர்களும் தங்களுடைய மந்திரிகளுக்குத்தக்கபடி உத்திரவுசெய்து விட்டு, தாங்கள் ஸ்தானமுதலாகிய மந்திர ஜெபபூசைகளையும் வழக்கப்படி முடித்துக் கொண்டு, அறுசுவைகளோடுங் கூடிய ஆகாரங்களை உண்டு கலவைச்சாந்தணிந்து, பரிமளாதிகள்திமிர்ந்து, தட்டி ஜல்லடமிறுக்கி வரிந்துக்கட்டி, ஆயிரஞ் சிங்கங்கள்பூட்டிப் பிரசண்ட சங்கிலிகளைமாட்டி ஜெயப்ரதாபமணிக ளலங்கரித்து தக்கத்தகாயமாய் வானமளாவியிருக்கின்ற முக்கோடி வெண்கலரதங்களை வருவித்து, வீர பட்டமணிந்து, இரத்னகஜிதமாகிய மகுடங்கள்பூண்டு, கண்டாமணி வெற்றிக்கொடி முதலியவைகள் விளங்கும் வீரசிங்கநாதச் சங்கங்களைக் கையிலேந்திக்கொண்டு, எண்ணுன்காயுதங்களும் எடுத்துக்கொண்டு, மந்திரிகளையும் யுத்தசன்னத்தர்களாகப் புறப்பட்டுப்பின்றொடர்ந்துவரும்படித் திட்டப்படுத்தி, தங்கள் பட்டணத்திற் குள்ளாக யாதொரு ராக்ஷசப் பூண்டானது பிரவேசித்தால் அதனை அந்தக்ஷணம் வெட்டிவிட்டுச் சேதிசொல்லத்தக்க காவற்காரர்களை யமைத்து, மற்றும் சில காவற்காரர்களைத் தங்கள் தங்கள் மாடமாளிகைகளுக்கும் சப்பிரகூடமஞ்சங்களுக்கும்காவல்செய்ய ஆக்கியாபித்து, முன்னனுப்பிய சேனைகளைவிடப் பதின்மடங்கதிகமான இராணுக்களையெல்லாங்கூட்டி முன்னதாய் ரணக்களத்துக்கனுப்பிவிட்டு,ஒருவேளை தங்களுடைய ரதங்களெல்லாம் சண்டை செய்யுங்கால் எதிரிகளா லுடைபட்டுப்போனால் அதற்கெல்லாம் உடனுக்குடன் ஏறிக்கொள்ள வேண்டியதற்குப் பிரதிரதங்களாகச் சேமத்தேர்களை யனுப்பிவையுங்களென்று கட்டளையிட்டு, சுற்றுக்கோட்டை மதில்களுக்கெல்லாம் தக்க ராணுவத்தை யமைத்து, நல்ல சகுனம் பார்த்து, தங்களுடைய ரத கஜ துரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளுடன் போர்க்கோலங்கொண்டு ரதாரூடர்களாகி, ஈரேழு பதினான்கு புவனங்களுங் கலங்கும்படியாகவும், சூரிய சந்திரர்களும் திப்பிரமைகொள்ளவும், தேவேந்திராதிதேவர்களெல்லாம்திடுக்கிட்டலறவும், ஆதிசேஷனுந் தத்தளிக்கவும், பாதாளங்களதிரவும், தாராகணங்களெல்லாம் பொடிபட்டுதிரவும், மஹா ஆர்ப்பாட்டங்களுடன் யாவருங்கண்டு பிரமிக்கும்படியாகப் புறப்பட்டு, தங்கள் விற்களைக் குண்டலாகிர்தியாய் இருகுதைகளும் பொருந்தவளைத்துக் குணத்தொனி செய்தார்கள்.

இவ்வாறு அவர்கள் செய்யும் விற்குணத்தொனிகளின் பேரோசையானது உலகமெல்லாஞ் செவிடுபட எழும்பி, சப்தகடல்களினோசைகளையும் அடக்கி, திரிமூர்த்திகளையும் பேதித்து, எமனும் உள்ளம்பிதிர் கலங்கும்படிச் செய்தது. இப்படி பேரி-மத்தளம்-குடமுழா - தம்பட்டம்-மல்லரி - கர்னு - முதலாகிய சர்வ வாத்தியப் பிரசண்டகோஷத்துடன் பிரளயகால ருத்திரர்களைப்போற் புறப்பட்ட மூன்றுகோடி நிவாதகவசர்களாகிய அசுரர்களெல்லாம் பற்களைக் கடித்துச் சொற்களைப் படித்து, ஏககாலத்தில் முக்கோடி சூரியர்களும் வெளிப்பட் டோங்குவதுபோ லோங்கிப் பம்பம்மென்று சங்கங்களை முழக்கி, இரைதேடவெழுந்த சிங்கங்கள்போல் வீறிட்டு ஆர்ப்பரித்துக்கொண்டு, சிலர்இன்றேடே இவ்வுலகம் நாசமாய்விடுமென்று பேசிக் கொள்ளவும், சிலர் ஏதோ ஒருவகையாய் இதுவரையில் இந்த ராவணன் சண்டை செய்துவந்தவன் இனி இவர்களுடன் எவ்வாறு எதிர்த்து நிலைக்கப்போகிறனென்று வார்த்தையாடவும், சிலர் ஆருக்கு மடங்காத இராவணனாயிற்றே? அவனும் இளைப்பானுவென்றுசொல்லிக்கொள்ளவும், சிலர் இந்நாள்போலல்ல, இனி இவன்கொட்டமடங்கிப்போக எட்டிற்சனி தொட்டிருக்கிறுப்போலுமிருக்கிறதென்று வசனிக்கவும் இப்படி பலவாறாய் எவர்களும் புலம்பி நிற்க யுத்தகளத்திற்குவந்து, ஆர் எங்களை எதிர்க்கவந்திருக்கிறவனென்றும், எவன் எங்களுடைய படைகளை அழித்தவனென்றும்,இப்போது அவன்சாமார்த்தியங்களைக் காட்டலாமென்றும், நானுவித இடும்புகள் பேசிக்கைகளைவீசியுலாவிக்கொண்டு,ஒருவருந் தங்களுக்கெதிரில்லாமல் அறைகூவி நின்றார்கள்.

இவைகளையெல்லாம் தூதரால் தெரிந்துகொண்ட இராவணனனவன் உடனே

மகோதரனைப்பார்த்து, அப்பா புண்ணிய வானே! இதென்னசேதி? இப்போது நூதனமாய் ஆராரோவந்து ஏதேதோ சொல்லுகின்றார்களே? நானும் வெளியில் வந்துபார்த்தேன். அவ்வாறுகத்தான் கிலி கொள்ளும்படியா யிருக்கின்றதே: இவ்வளவு சேனைகளும் இரதங்களும் இதுவரையில் எங்கேவைத்துக்கொண் டிருந்தார்களோ தெரியவில்லை. இவர்கள் மகா பலாஷ்டியர்கள் போலும் தோன்றுகின்றது. நாம் எப்படி அவர்களை எதிர்ப்பது? எனக்கும் ஜெயம்வருமா சொல்லு; அதையாவது நம்பித்துணிகிறேன். இவர்கள் விடுத்த மந்திரிகளிடத்திலேயே நமது தந்திரங்களெல்லாம் உதவாமற்போய் கடைசியில் எந்தவகையோ ஒருவழியில் ஒழித்தோமே, இப்போது இதென்னகொள்ளை? இதென்ன கூட்டம்? இதென்ன ராணுக்கள்? ஐயையோ!! ஒருவேளை நாம் போராடிவந்த எமன் முதலாகிய சர்வத்திராளும், இவர்களுக்கு உபபலமாகக் கூடிக்கொண்டு வந்திருக்கிறார்களோ? இதென்ன ஆச்சரியம்? இவர்களுக்குமுன் நாமும் நமதுபடைகளும் எந்தமூலை? இதற்கு நீ என்னசொல்லுகிறாய் என்றியம்பும் ராவணனைப்பார்த்துப் பிரகஸ்தன்-மாரீசன்-வஜ்ரமுஷ்டி-புகைக்கண்ணன்-இவாள்முதலிய மந்திரிகளெல்லாம் கோபங்கொண்டு சொல்லுகின்றார்கள்.

ஐயோ! இதென்ன விநாசகாலமோ தெரியவில்லை. இவன்புத்தியும் நடத்தையும் பார்த்தால், ஒன்றுங் கைகூடுவதாகக் காணவில்லை. கிணற்றுத்தவளைக்கேன் நாட்டின் வளப்பமென்றிராமல், இந்த மகோதரன் இவனைத்தூண்டிவிட் டழகுபார்க்கிறான். இதற்கு நாம் என்னசெய்யலாம்? இவனும் இந்த மகோதரனையே குலதெய்வமென்றெண்ணிக் கும்பிட்டுப் பூஜைசெய்து குறிகேட்டுக்கொண் டிருக்கிறான். இவன் சொல்லைக் குருவாக்காக நம்புகிறவனுக்கு நாம் சொல்லுவதும் ஏற்குமா? இதுவரையிலும் நடந்த யுத்தமே நமது ஜென்ம ஜென்மத்துக்கும் போதுமானதாயிருக்க, இன்னமுங்கூடத் தலையிட்டுக் கொண்டு நிலைகெட்டுத் தடுமாற யோசனை பண்ணுகின்றானே? இனி விளையும் யுத்தத்திற்கு யார் போராடித் தொலைப்பவர்கள். ஆனாலும் அந்த அசுரர்கள் ஒருவரா? இருவரா? மூன்றுகோடி பேர்கள். முன்வந்த மந்திரிபிரதானிகள், தண்டத்தலைவர்கள், வியூகத்தலைவர்களாகிய இவர்களே கணக்குக் குட்படாம லிருந்தார்கள். அதல்லாமலும் காலாள்களாகிய போர்ச்சேவகர் அளவிறந்தபேர்கள் இவ்வளவு தளங்களுடையவர்களிடத்தில்தானா இந்த மூடன் முட்டிக்கொள்ளப்போகிறான்? நல்லது: விரல்போலிருக்கிற இவனுக்கேஇவ்வளவு யிருக்கிறபோது, உரல்போலிருக்கிற அவர்களுக்கு எவ்வளவிராது? மேலும் மவன் அவர்களில் ஒருவனுக்கு இணையாவானா? வீரியத்துக்கெடுத்த பத்துத்தலைகளும் காரியத்துக்குதவுமா? ஏதோ கிஞ்சிற்று வரம்பெற்றிருக்கிறோமென்று குதிக்கிறான். இவனுக்குத் தலையிலிடித்துந் தக்க புத்தி வரவில்லையே? என்று உதிரபாசபந்தத்தினால் பேசிக்கொண்டார்கள். அது கேட்ட மகோதரன் கோபவெறிகொண்டு வெளிக்குப் பிகுவிடாமல் இருப்பவர்போலும், குறைவில்லாமல் உறவாடிக்குடிகெடுப்பவர்போலும் அதிக மானம்வகித்தவர் போலும் இராவணன் முகத்தை நோக்கி இயம்புவான். கேளும் பிரதாபலங்கேஸ்வரா! இவர்களெல்லாம் விர்தாவாய் உம்முடைய பலந்தெரியாமல் பேசுகின்றார்கள். நானோ அப்படியல்ல; நீர் வெள்ளியங்கிரியை யெடுத்தபோதே எனக்கு நன்றாய்த் தெரிந்துதான் உம்மாற் சகலலோகங்களையுங் கெலிக்கலாமென்று நினைத்தேன். திரிமூர்த்திகளும் உம்மைக்கண்டு நடுங்குவார்களென்றால் இந்த அற்பர்களாகிய மூன்றுகோடி அசுரர்களும் ஒருபெரிதானவர்களா? நீர் இவர்களுக்கும் பயப்படலாமா? அந்தந்தச் சமையத்துக்கு ஏற்றபடி நடத்திவைக்க நானில்லையா? அப்படி என் தலைப்பாரமாய்த் தாங்கிக்கொண்டிருக்கும் போது நீரும் அஞ்சத்தக்கதோ? மேலும் நான் சொல்வதைக் கவனியும். இந்தச் சப்தலோகமுதல் மற்றெந்த லோகங்களிலும் உம்மைமாத்திரம் எதிர்த்துக் கெலிப்பவர்களுண்டா? ஒருபோதும் ஒருவரும் உம்மைச்செயிக்கமாட்டார்கள். உமதுவில்லில் நாணியேற்றி இசைநாட்டுவீராகில் எவர்கள் உமக்கு நடுங்காதவர்கள்? எல்லாவுயிர்களையுங் கொல்லாநின்ற அப்போர்க்

கொத்த எமதர்மராசனையே செயித்த உமக்கு நான் இன்னமுஞ் சொல்லவேண்டுமா? தைரியத்தை மாத்திரம் விடவேண்டாம். என் வாக்கைக் குருமொழியாக நம்பும். ஓ கெடிஸ்தலாதிபதியாகிய இராவணேஸ்வரா! இந்த நிவாதகவசர்களை நோக்கி என்னமோவென்று நீர்மலைக்கவேண்டாம். சோற்றுபட்டாளங் காற்றுக்குஉதவாதென்றும் காக்கைக்கும்புகள் நோக்கத்திற்கு உதவாதென்றும், சிலர்சொல்லுவார்கள். அதுபோல் அந்த மந்திரிகளுக்குப் பயந்த நீர் பின்பு எப்படி அவர்களைச்சேதித்தீர்? அவர்களும் என்னகதியானார்கள்? இவ்வளவு தூரம் உமக்குச்சொல்லவேண்டுமா? இனியுமக்கு என்னாலுங் குறைவில்லை. ஆனால் இவர்களும் பலமான யுத்தந்தான் செய்வார்கள். அதற்கெல்லாம் நீர் பயப்படுவதானால் இப்போதே திரும்பிவிடும். நான் கெடுத்தேனென்று பழிவேண்டாம். அந்த அசுரர்கள் மீறிச்செய்யும் யுத்தவேளையில் நீர் கிஞ்சிற்று இளைத்ததுபோற் சாடை காட்டி, அப்பாற் படைமீதேறி எதிர்த்து சாடுவீராகில் அவர்கள் பிரமித்து அலங்கோலமாவார்கள். மேலும் உமக்குப்போதரவாகிய பிரமன் வரங்களெல்லாம் பொக்கிஷம்போ லிருக்கின்றன. பின்னும் மகத்துவமுள்ள பாணங்களெல்லாம் கக்கிஷத்திலிருக்க அதையெல்லாம் ஒளித்துவைப்பானேன்? இப்பேர்ப்பட்ட எதிரிகள் வந்திருக்கும் இந்தசமையத்தில் உம்முயிரைக் காப்பாற்றிக்கொள்ள முயற்சி தேடவேண்டாமா? ஆபத்துக்கு உதவாப்பிள்ளையும் அரும்பசிக்கு உதவாத அன்னமும் இருந்தென்ன பிரயோசனம்? இவைகளையெல்லாம் நான் உமக்குச் சொல்லவேண்டுமா? மீனின்குட்டிக்கு நீந்த எவர்கள்பழக்குகின்றார்கள்: உமக்குத் தெரியாத தொன்றுண்டா? என்று வேளைக்கேற்றபடி ஆளைத்தட்டிக்கொடுத்தான்.

இப்படி அவன் தட்டிக்கொடுக்கவே அதுகளையெல்லாங்கேட்ட இராவணனுக்குத் தெளிவுபிறந்து, ஓ மகோதரா! மருந்திட்டு விருந்துக் கழைப்பதுபோல நல்ல காரியஞ்சொன்னாய். நீதான் மகா புத்திமான். எனக்கு நீயே சரி. என்று அவனைக் கொண்டாடி, உடனே வெகு கோபங்கொண்டுவந்து நிவாதகவசர்களை யுறுமிப்பார்த்து, உக்ராவேசமதிகரித்து, இரண்டுபுயாசலங்களைத்தட்டி, ஆகாயமளவும் எழும்பி பூமியில் மண்டியிட்டமர்ந்து, மீட்டுந்துடிக்கவெழுந்து, மீசையை முறுக்கிவிட்டு யாவரும் பயப்பிராந்தி கொள்ளும்படியாக நறநறவென்று பற்களைக் கடித்து, இந்த அற்பர்களாகிய நிவாதகவசர்களும் எனக்கோ ரெதிராவென்று இடிபோலக் கர்ச்சித்துத் தேரேறி, வில்லைக் கையிலேந்தி ஜெயமாலை புனைந்து நின்றான்.

## நிவாதகவசர்களுக்கும் இராவணனுக்கும் பிரசண்ட யுத்தம்.

கேளும் ஸ்ரீராமபத்திரா! இவ்விதமாக நிவாதகவசர்களையெல்லாம் இராவணனவன் அலட்சியஞ்செய்து பேசவும் அதுகேட்ட அம்மூன்றுகோடிபேர்களும் ஏககாலத்தில் கிருஷ்ணசர்ப்பம்போலச் சீறி தங்கள் தங்கள் வில்லைவளைத்து நாணியேற்றி நானாவிதமாகிய திவ்வியாஸ்திரங்களையெல்லாம் மணலை வாரி யிறைத்ததுபோற் சொரிந்தார்கள். அதுகண்ட இராவணன் சபாஷ்! இவர்கள்தானா நிவாதகவசர்கள்? என்றுசொல்லி, உடனே அதற்கு நேரான அஸ்திரங்களையெல்லாந் தொடுத்து விடுத்து அவைகளையெல்லாம் நடுப்பாதியில்தானே துண்டித்துவிட்டுப் பின்னும் தன்னுடைய வில்லில் மூன்றுகோடி சுறுக்குப்பாணங்களை மொத்தமாகப் பிரயோகஞ்செய்து அபிமந்திரித்து விடுத்தான். அவைகளெல்லாம் புறப்படும்போதே பிர்மாண்ட சராசரங்களை யெல்லாம் கவளீகரித்துக்கொண்டு, ஒவ்வொன்றும் நூறுநூறாகி எங்குமிடமில்லாமற் பரவித் தணற் பொறிகளை இறைத்துக்கொண்டு குபீல்குபீலென்று பாய்ந்து, அந்த நிவாதகவசர்களுடைய தேகங்களில் ரிவ்ரிவ்வென் றுருவித் துளைத்தன. இப்படி முள்தைப்பதுபோற் சுறுக்கெனத் தைத்துத் துளைத்ததனால் அவர்களும் சற்றுநேரம் அசைவற்றுச் சித்திரப்பாவைபோல நின்றார்கள்.

அதுகண்ட தசக்கிரீவன் மறுபடியும் முக்கோடி நெருப்பாஸ்திரங்களை யெடுத்துப் பிரயோகஞ்செய்துவிட்டான். அதுகளும் உபபலமாக நுழைந்து சேனைகளை

யெல்லாம் கருவறுக்கத் தலைப்பட்டதைக் கண்ட நிவாதகவசர்கள் சற்று நிதானித்து ஏதேது? இவன் முதல் யுத்தமாரம்பிக்கும் போதே நம்மைச் சித்திரவதை செய்வது மல்லாமற் சித்தப்பதுமைபோலச் சற்றும் அசைவில்லாதபடி யாக்கிவைத்தானே ? இப்படித் தணலாயெரிப்பவனை நாம் எப்படி ஜெயிப்பது? ஐயோ தெய்வமே! நாம் பிரமனாற் பெற்ற வரங்களெல்லாம் பாழாகி விட்டதா? இந்தராவணன் பெற்றிருப்பது போல்தான் நாமும்பெற்றோம். இதென்ன சூது? என்றுடனே அவர்களும்வேண்டிய அஸ்திரங்களையெல்லாம் பிரயோகஞ்செய்தார்கள். ஓ இராகவா! அந்த இராவணன் சதா மானசபூசை செய்பவன். அந்தப் பூசையில் சதாசிவப்பெருமானையும் சதுர் முகத்தேவனையும், அவன் பத்திவிநயத்துடன் தியானஞ்செய்வதால் அவனுக்கிந்த யுத்தம் ஒரு பெரிதாயுங் காண்பதில்லை. மேலும் பிரமன் அங்கிருந்தவண்ணம் இவனை ஆசீர்வதித்து ஜெயங்கூறியிருக்கின்றான். இந்த நிவாதகவசர்களோ அப்படிக்கல்ல, தாங்கள் வரம்பெற்றதுமுதல் இதுவரையிலும் அவ்வன்னவாகனனை உன்னியிருக்கமாட்டார்கள். இன்னு மிறுமாப்புடையவர்கள். அவர்கள் பலத்தை என்னென்றுசொல்லுவேன்? இந்த நிவாதகவசர்கள் விடுத்த அநேககோடி திவ்வியாஸ்திரங்களும் நானாவிதமாகத் தகிக்கத் தலைப்பட்டதானாலும், அதில் ஒரு அக்கினியாஸ்திரமானது புறப்பட்டு எண்ணிறந்த அஸ்திரங்களாகப் பிறந்து சிவசங்கரசாம்பவமூர்த்தியானவர் சிரித்துப் புரத்தையெரித்ததுபோல இராவணன்சேனைக்குள் புகுந்து சுமார் நூறுவெள்ளஞ்சேனைகளைத் தும்சப்படுத்தி நாசமாக்கிவிட்டது. அதுகண்ட தசக்கிரீவன் தன்னுடையவில்லினிடமாக அதற்கெதிராய் அனேகங் கோடி வருணாஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்து அந்த அக்கினியாஸ்திரங்களைக் கண்டித்து, உடனே அளவற்ற அர்த்தசந்திரபாணங்களை அமோகமாகத் தொடுத்து விடுத்தான். அவைகளெல்லாம் குபீலென்றெழும்பி வானமெல்லா மூடிக்கொண்டு வந்து, அசுரர்களாகிய மூன்றுகோடி பேர்களுடைய மேறிநிற்கும் இரதங்களையெல்லாம் பத்தல்பத்தலாகவும் பொடிபொடியாகவும் செய்துவிட்டதல்லாமல் அவர்கள் பிடித்திராநின்ற வில்லுகளையெல்லாம் ஒடித்து, கவசங்களையெல்லாமறுத்து அவர்களுடல்களையும் சின்னபின்னமாகும்படித் தாறுமாருய்க்கிழித்தெறிந்தன. அதனால் அந்த நிவாதகவசர்களெல்லாம் சாவுக்கினமான மூர்ச்சையடைந்திருக்கிற சமயத்தில் ராவணன் அதர்மயுத்தஞ் செய்ய நினைத்து, கோடானுகோடி கதைகளையெடுத்துக் கும்பற்கும்பல்களாகச்சுழற்றி எறிந்தான். அதனால் அந்நிவாதகவசாளுடைய சேனைகளெல்லாம் மண்டைகள் பிளந்தும், வாயினிடத்தில் உதிரங்களைக் கக்கிக்கொண்டும், ஐயையோ!! என்று அலறி இறந்தார்கள். அவ்வுதிரவெள்ளப்பிரவாகத்தில் ரணபத்திரகாளியானவள் நிர்த்தனஞ் செய்வதும் பசாசுக் கூட்டங்களெல்லாங் கொண்டாடித்துக் குலாவுவதுமாயிருந்தன.

கேட்டீரோ ரகுநந்தனா! இந்தமட்டும் நடந்த யுத்தமே போதுமானதாயிருக்க, பின்னும் ராவணனானவன் இந்த அலங்கோலத்தைக்கண்டும் சும்மாயிராமல் உள்ளங்கருவி, நூறுகோடிஅர்த்தசந்திரபாணங்களை ஏககாலத்திலே சோனைமாரிபோற் சொரிந்தான். அவைகளெல்லாம் குபீலென்று பாய்ந்து, அந்த நிவாதகவசர்களிற் சுமார் கோடி அசுரர்களுடைய சிரங்களைக் கண்டித்துவிட்டன. ஆனபோதிலும் அவர்களும் வரப்பிரசாதிகளானபடியால் உடனே அறுபட்ட சிரசுகளெல்லாம் மறுபடியும் எப்போதும்போல் முளைத்துவிட்டன. அதனால் அவர்களும் தேரேறி ஆர்ப்பரித்து, வில்லில் மகத்தாகிய சத்திவேலாயுதத்தைப் பிரயோகஞ் செய்தார்கள். இவ்விதமாய் அவர்கள் சிரங்கள் அறுந்ததையும், மீட்டுமுளைத்ததையும், எதாப்பிரகாரமாகச் சண்டைக்குவந்து சத்திவேலை ஏவியிருப்பதையும்பார்த்த ராவணன் ஆச்சரியப்பட்டு, தானும் ஒருசத்திவேலையெடுத்து விடுத்தான். அந்த இரண்டுவேலும் வடவாமுகாக்கினிபோற் சீறி ஆக்கிரமித்து, அண்டரண்டங்களை யெல்லாம் எரிக்கத் தலைப்பட்டன. அதன்மேல் அவர்களும் உடனுக்குடன் மேகாஸ்திரப் பிரயோகஞ் செய்தபடியால், ராவணனும் அநேகங் கோடி வாயுவாஸ்திரங்களைவிடுத்து அந்த முகிலாஸ்திரத்தை அதோகதியாக்கி, உட

னே ஒரு அக்கினியாஸ்திரந்தையும் பிரயோகஞ்செய்துவிட்டான். அக்கால் அந்த நிவாதகவசர்கள் அதற்கெதிராகிய வருணஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தபடியால், இனி இவர்களை வேறுவழியாய் நாசப்படுத்தவேணுமென் றெண்ணி இராவணன் நாகாஸ்திரத்தை ஏவிவிட்டான். அந்த சர்ப்பாஸ்திரமானது வில்லில் நின்றும் விடுபட்டு ஆலகாலவிஷங்களைக் கக்கிக்கொண்டு, ஒன்று - பத்து-நூறு - ஆயிரம்-பதினாயிரம்-நூறாயிரம் - பத்துநூறாயிரம் - பத்துக்கோடி-அற்புதநிற்புத அஸ்திரங்களாகப் புறப்பட்டு, ஒவ்வொரு அஸ்திரங்களும் அநேகங்கோடி நாகங்களாகி அவ்வசுரர் சேனைகளைச்சீறிக் கடித்துப் பஸ்மீகரப்படுத்தின. உடனே அவர்கள் கையிலிருந்த கருடாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்து விட்டபடியால், அதைக் கண்ட நாகக்கூட்டங்களெல்லாம் ஒன்றில்லாமல் அதமாக்கிவிட்டன. பின்னும் ராவணன் பர்வதாஸ்திரத்தை ஏவினான். அவர்கள் அதை வஜ்ஜிராஸ்திரத்தாற் கண்டித்தார்கள். அப்படி கண்டித்து அதஞ்செய்த நிவாதகவசர்கள் உடனே பத்து அர்த்த சந்திராஸ்திரத்தையும் பிரயோகஞ்செய்துவிட்டார்கள். அந்த அஸ்திரங்கள் வெகு விநோதமாகவும் விசித்திரமாகவும் ஆர்ப்பாட்டமாகவும் வெளிப்பட்டு, பார்ப்பவர்களும்பயப்படும்படிவரத்தலைப்பட்டன. அப்படிவருவதைக்கண்ட தசக்கிரீவன் திகைப்பூண்டு மிதித்தவன்போல் திப்பிரமைகொண்டு சற்று நிதானித்து, அவைகட்கெதிராகவிடத் தன் வில்லை வளைக்காமுன்னமே அவைகள் அமோகமாக வந்து குபீலென்று பாய்ந்து, அவனுடைய வில்லையொடித்து, சாரதியை முடித்து, ரதத்தைப் பொடித்து, அவ்விராவணன் சிரசுகளையும் கரகரவென்று வெட்டிக்கொண்டு போய் விட்டன.

அதைப்பார்த்த ராக்ஷதர்கள் ஆ! ஆ! என்று கையை நெரித்துக்கொண்டார்கள். நிவாதகவசர்களெல்லாம் கைதட்டிக் கெக்கலி கொட்டினார்கள். தேவர்களெல்லாம் இஃதுண்மையா யிருக்குமாவென்று அதுவேநோக்கமாய் நிமைகொட்டாமற் பார்த்திருந்தார்கள். அந்தரவாசிகளும் சிந்தை கலங்கி வேடிக்கைப் பார்த்திருந்தார்கள். மற்ற முனீஸ்வரர்களும்-ரிஷீஸ்வரர்களும் நாம்இனி ஆசோதையாயிருக்கலாமென்று நினைத்தார்கள். மாரீசன் பிரகஸ்தன் முதலாகிய மந்திரிபிரதானிகள் கண்களில் நீர் ததும்பப் பிரமித்து நின்றார்கள். மற்றச் சேனைகளெல்லாம் பட்டபாடுகள் சொல்லி முடிவனவன்று. மூன்றுகோடி அசுரர்களும் சள்ளையொழிந்ததென் றிருந்தார்கள். ஆகாயத்தினிடத்தில் மும்மூர்த்திகளும் இஃதெவ்வாறாய் முடியுமென்று இருதயத்திலெண்ணினார்கள். கேளும் இராகவா! நான் என்னென்றுரைப்பேன்? அறுபட்ட பத்துத் தலைகளும் ஆகாயத்தில் எழும்பி அங்கிருந்து மறுபடியும்வரிசையாய்வந்து நின்று, அடா நிவாதகவசர்களே! எங்களை வெட்டினீர்களல்லவா? நாங்கள் அறுபட்டுப்போனதுபோல் உங்களுடைய மூன்றுகோடி சிரங்களும் அறுபட்டுப்போகாதா? என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே அவன் மார்பில் அமுதகலச மிருப்பதல்லாது கைலாசமெடுத்தபோதும் அதைப் பானம்பண்ணி யிருக்கிறபடியாலும், அறுபட்ட தலைகள் மறுபடியும் முளைக்கும்படி பிரமதேவனால் வரம்பெற்றிருப்பதாலும், உடனே அவனுக்கு எப்போதும்போல் பத்துத்தலைகளுமுளைத்தன. அதுகண்டுசகலரும் ஆச்சரியப்பட்டார்கள். சிலருக்குச் சந்தேகநிவர்த்தி ஆச்சுது. ஆனால் நிவாதகவசர்களுக்கு மாத்திரம் இவன்மாயாவாதியாதலால் இதனை நன்றாய்ப் பரிசோதிக்கவேண்டுமென்று ஐயப்பட்டு, மறுபடியும் வெட்டினார்கள். ஆனால் ஒருவிசையல்ல. அநேகவிசை வெட்டினார்கள். எத்தனைதரம் வெட்டினபோதிலும் மறுபடியும் அத்தலைகள் முளைப்பது கண்டு, ஓ! ஓ! இவன் பிரமன் வரப்பிரசாதியாதலால் இவ்வாறு பலித்ததென்றெண்ணி, தாங்கள் கொண்ட கருத்து விருதாவாகி மனஞ்சலித்திருந்தார்கள். அப்போது தசக்கிரீவன் பனியைச் செயித்துப் பிரகாசிக்கும் இளஞ்சூரியனைப் போல் நிற்கின்றவனானபோதினும், தனக்குள் அச்சப்பட்டு மகோதரன் முகத்தைப் பார்த்தான். அப்போது அவன் ஐயா! கடல்களெல்லாம் தாண்டிக் கால்வாய்க்குப் பின்னிடைந்து மூழ்கிவிடலாமா? அவர்களோ கெற்பங் கலங்கிக் கருடனைசைக் கழங்கிய நாகம்போல் இருக்கிறார்கள்.

இதுவேளையில் நீர் தைரியம்விடாமல்மாத்திர முனைவீராகில், இன்னங் கொஞ்சநேரத்துக்குள் சவுக்கியமடையலாம். என்பேச்சை நம்பும். உம்மைப்போலுங் கெடிவீர பிரதாப சௌரிய தீரசூர புருஷசிங்கத்தை நான் கண்டதில்லை. உம்முடைய வல்லபத்தை நான் என்னென்று சொல்லுவேன். பூனைத்தோலுடுத்தியிருந்து சமையம்வந்தபோது புலிபோற் பாய்ந்தீரே; இப்போதல்லவா தெரியவந்தது. ஆனால் இன்னமொன்று. நீர் இதுவரையிலும் அஸ்திர சஸ்திரப் பிரயோகஞ் செய்ததுபோல இனிச்செய்யாமல், உமது கூர்மையுள்ள வாளாயுதத்தையெடுத்து விடுமென்றான்.

## இராவணன் வாளாயுதப் பிரயோகம் செய்தல்.

அதுகேட்ட ராவணன் சபாஷ் என்று கொண்டாடி இதுவுஞ் சரிதானென்றெண்ணி, தன்னுடைய மனதில் ருத்திரபஞ்சாக்ஷரத்தை ஜெபித்துச் சிவனைத் தியானஞ் செய்து, அந்தச் சதாசிவமூர்த்தி யருளாற் கிடைத்த வாளாயுதத்தை யெடுத்து அபிமந்திரித்து விடுத்தான். ஆனால் அந்த நிவாதகவசர்களுக்கு இப்போர்க்கொத்த வாளாயுதம் கிடையாததலால், இதுபுறப்பட்டு குபீலென்று அக்கினிப்பொறிகளைச் சிந்திக்கொண்டு வெகு பயங்கரமாக வாயு வேகத்தினும் மிஞ்சியவேகத்துடன்வந்து அந்த மூன்றுகோடி அசுரர்களுடையதலைகளையும் பனங்குலைபோல் வெட்டி எறிந்துவிட்டு, அநேகசேனைகளையும் நாசப்படுத்திவிட்டு, ஆகாய கங்கையில் ஸ்நானஞ்செய்து ராவணனிடத்தில் வந்து சேர்ந்தது. உடனே அந்த மூன்றுகோடி அசுரர்களுக்கும் அறுபட்ட சிரங்கள் முளைத்துவிட்டன. அதுகண்ட மகோதரன் ஆச்சரியமாகி, இவர்களும் இலேசானவர்களல்லவென்றுகருதி ராவணனைப்பார்த்து, ஐயா! இவர்களும் உம்மைப்போல் வரங்கள்பெற்றிருப்பதனால் இவ்வாறு அறுபட்ட சிரங்கள் மீட்டுந் துளிர்த்தன. இக்கர்மமொழியும் வகைக்கு உமது பிரமாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகஞ் செய்யுமென்று சொன்னான். அந்த லங்கேசனும் பிரம்மாவை நினைத்துப் பூஜைசெய்து, தன் வில்லில் ஒருபிரமாஸ்திரத்தைப்பிரயோகஞ்செய்து விடுத்தான். அதுகண்டு அவர்களும் ஒரு பிரமாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து விடுத்தார்கள். இவ்விரண்டுபேர் விடுத்ததும் ஒரே பிரமாஸ்திரமாகையாற் சேனைகளெல்லாம் நாசமாகிச் சமூலமுங் கருவறுக்கப்பட்டன. இப்படி அப்பிரமாஸ்திரங்கள் ஒருவரையும்விடாமல் இருதிறப்படைகளையும் பஸ்மீகரப்படுத்தத் தலைப்பட்டதனால், மாண்டுபோன சேனைகள் எண்ணிறந்த கோடானுகோடிகளைப் பார்க்கினும் விசேஷமுற்றதொகைகளாயிருந்தன. அந்தச் சமயத்தில் அநேகங்கோடி கழுக்களெல்லாம் வந்து, மாண்டபிணங்களின் கண்களைத் தோண்டித் தோண்டித் தின்று, மூக்கினாலே தங்கள் குஞ்சுகளுக்கும் கொண்டு போய்க் கொடுக்கும். உதிரங்களிற் பிரண்டுக்கொண்டிருக்கும் மாமிசங்களைப் பேய்களெல்லாம் தின்று களித்திருக்கும். பின்னுஞ் சில கூளிகள் வந்து பார்த்து, ஆ! ஆ! நல்லகாலம். அந்தராவணன் இலங்கைக்குப்போகாமல் திரும்பினதினால் அல்லவா நமக்கிந்த ஆகாரங்கள் கிடைத்தன. அவனே ஜெயம்பெறக்கடவன். என்றுரைத்துக்கொண்டேசெத்தபிணங்களையிழுத்து வேணமட்டுந்தின்று இரைத்துக்கொண்டிருந்தன. ஆனால் சிலபேய்கள் இந்த கர்வமுள்ள நிவாதகவசர்களுக்கு இவ்வளவு வருத்தம் உண்டாகாவிட்டாலுஞ்சரியல்ல அந்தமட்டும் புண்ணியவானாகிய இராவணன் நல்லபுகழ்பெற்றான். என்று தங்கள் உற்றார்பெற்றாருடன் விருந்துண்டு மகிழ்வு கொண்டிருந்தன. இவ்வாறாகச் சகலவிதமான பேய்களும் ஒன்றுக்கொன்று பிடுங்கித் தின்னவும், நாய்நரி முதலியவைகளெல்லாம் ஊளையிட்டுக்கொண்டு நாளை இது கிடைக்குமாவென்று சந்தோஷ மடைந்திருந்தன. இப்படி அந்த இருதிறத்தார் சேனைகளும் தத்தளித்து மாண்டுபோவதல்லாது லோகா லோகங்களெல்லாம் நிலைபெறாது அனலாற் சகிக்கமாட்டாதவைகளாய் வாடுவதைக்கண்ட பிரமதேவரானவர், இதுசமயம் நாம் பார்த்திருக்கப்படாதென்று அன்னவாகனத்தின்மீதேறி அவர்களெதிரில்வந்து நின்றார்.

சதுர்முகப்பிரம்மா சந்திபேசுதல்.

கேளும் ஞானகிரமணு! இப்படி நான்முகக்கடவுளானவர்சமர்க்களத்திற்குவந்து இருதிறவர் மத்தியில் நின்று, முன்னம் நிவாதகவசர்களைக்கண்டு சொல்லுகின்றார். கேளுங்கள் எனக்குரிய அன்பர்களே? நீங்கள் இச்சண்டைக்கு ஏற்படவேண்டியதென்ன? க்ஷாத்திரந்தான் வரவேண்டியதென்ன? அல்லது ஒருவரையொருவராகிலும் ஜெயித்தீர்களா? நீங்கள் விவேகசாலிகளல்ல. விருதாவாய் பிரமாஸ்திரத்தை ஏவி உலகத்தை நாசம்பண்ணுகின்றீர்கள். இதுசரியல்ல. இப்போதும் என்னசொல்லுகிறீர்களெனக்கேட்டார். அதற்குநிவாதகவசர்கள் அவ்வரைவணங்கி, சுவாமி வாணிகேள்வரே! நாங்கள் வலியச்சண்டையெடுக்கவில்லை. அந்த இராவணனே வந்தான். இப்போதும் அவன் விடுத்த பிரமாஸ்திரத்தைவரவழைத்துக்கொண்டால், நாங்கள் விடுத்ததையும் திருப்பிக்கொள்ள எங்களுக்குஞ் சமாதானந்தானென்று சொன்னார்கள். அதைக்கேட்ட பிரமதேவர் இராவணனையடுத்து, அப்பா இராவணு! இதெனவேலை? உனக்கந்த அசுரர்கள்ஓரெதிரா? நீயோ உத்தமபுருஷன். அதிலும் என்வார்த்தையை நீதடுக்கமாட்டாயென்று எனக்குத்தெரியும். உனக்கு நான் அதிகமாய்ச் சொல்லவேண்டியிராது. இதுவே நல்ல சமயம். நீ என்னதான்வாள்கொண்டுவெட்டினபோதிலும், அவர்கள் வரப்பிரசாதங்களாலும் மாயாவித்தைகளாலும் மறுபடியும் முளைப்பார்கள். மேலும் துவாபரயுகத்தில் விஷ்ணுவானவர் நரநாராயணர்களாய் அவதரிக்கப்போகின்றார். அப்போதிவர்கள் அவர்களால் மாண்டுபோய்விடுவார்கள். ஆனல் இப்போதல்ல. நீ வீணய்ச்சண்டையிட்டாலும்ஜெயிக்கமாட்டாய். அவர்களும் வெகு மாயாவாதிகள். அவர்கள்பேரிலிருக்குந் தயவைவிட உன்பேரில் எனக்கு அதிக அன்புண்டானபடியினல் தான் சொல்லவந்தேன். நீவாசித்தறியாத சாஸ்திர மென்னவிருக்கிறதென்றார். அதற்கு அந்த ராவணன் அவரை வணங்கி, சுவாமி இரணியகருப்பரே! இந்த தந்திரங்களெல்லாம் நானறிவேன். எனக்காதெரியாது? இந்த விஷயங்களெல்லாம் நான் பார்த்திட்ட பிச்சையாச்சுதே. நீர் ஏதோ அவர்கள்மீது வைத்த அன்பிஞலல்லவா என்னை இவ்வாருசோதிக்கின்றீர்? என்பேரில்வைத்த அன்பிஞல் வந்ததாக நான் நினைக்கவில்லை. அப்படியாஞல் எனதிஷ்டப்படிக்கு அவர்கள் என்னெதிரில்வந்து, நாங்கள் இளைத்தோம். நீயேகெலித்தாய்; என்று சொல்வார்களாகில் அப்போதுசம்மதியாவேனேயல்லது; இப்போது அந்த வெறுஞ்சொல்லுக் கிணங்கேன். அவர்களோ கிலிபிடித்துப்பிரமித்திருக்கிரூர்கள் நாவறண்டு இன்னமுஞ் செய்வதேன் இப்பேர்ப்பட்ட முரண்டு. பூலோகம் பதினன்கும் தேவாதி திரிமூர்த்திகளும் ஒன்ருய்ப் புரண்டுபோரிடவந்தாலும், அவர்களெல்லாம் நிலைபெருது வாடிவதங்கிப் போவார்கள் என்முன்னே நிற்காமல் மிரண்டு நீரே பார்க்கப்போகாநின்றீர் மருண்டு. என்று திரண்டு பருத்த இரண்டு பத்துத் தோட்களையுந்தட்டி, ஆகாயத்திலெழுந்துமுட்டி, அப்பாலும் பூமியிற்கிட்டி ஆர்ப்பரித்து நின்ருன்.

அதுகண்ட கமலாசனன் இதேதுநமக்கு இரவும் பகலும் பெரும்போராட்டமாயிருக்கின்றது. இவனுக்குச் சொன்னலும் கேட்பவனல்ல. இவன் மடைய புத்திக்காரனுகையால் எப்படியாவதுஇப்போரையொழித்துவிடுவதேசரி என்றுன்னி நிவாதகவசர்களையடுத்து அவர்கட்குஞ்சொல்ல வேண்டிய நீதிமார்க்கங்களையெல்லா மெடுத்துச்சொல்லி, சதுர்வித வுபாயத்தாலும் அவர்களைச் சரிப்படுத்தி, ஓ அன்பர்களே! இவன் இராமபாணத்திற்கு இரையாகப் போகாநின்ருன். ஆதலால் இவன்மீது உங்களுக்கு க்ஷாத்திரம் வேண்டியதில்லை. என்று தெளியவுரைத்துப் பக்குவப்படுத்திக் கப்பணத்துடனே வரச்சொல்லி, இராவணன் முன்னிலும் நாங்களே தோற்ருேம். நீயே கெலித்தாய். என்று சொல்லச்சொல்லி இருதிறத்தார்களையுஞ் சமாதானமாய்க் கலக்கவைத்தார். அதன் மேல் இராவணன் அவர்கள் தோற்றுவிட்டார்க ளென்கிற சந்தோஷசகிதனுகி அவர்களுடைய மாயாவித்தைகளைக் கற்றுக்கொடுக்கும்படிச் சம்மதவாரியாய்க் கேட்டுக்கொண்டான். அதற்கு அவர்கள் சம்மதித்து இரணக்களத்தை விட்டு நீங்கி,

மாண்ட சேனைகள்போக மற்றவருடனே இராவணனை யழைத்துக்கொண்டு தங்களுடைய பட்டணத்திற்குள்ளே போனார்கள். பிரமதேவருஞ் சத்தியலோகத்திற் புகுந்தார். இந்த பலத்த யுத்தத்திலே இருதிறத்தார்கட்கு மாண்ட சைனியங்கள் கணக்கிடப்படார். கேளும் இராகவா! ஒருவருஷமாய் அகோரமான யுத்தஞ்செய்த இவர்களிருவரும் பின்பொருவரோடொருவர் கலந்து அதிக வாஞ்சனையாய் நீரும் பாலும் போல்மருவியிருந்தபடியாலே அந்த நிவாதகவசர்கள் இந்த ராவணனுக்குத் தக்கமரியாதைசெய்து பின்னும் ஒருவருஷகால வரையிலும் தேவதா போசனத்தோடே வெகு பிரீதியாய் விருந்துகள் செய்து, அவன் கேட்டுக்கொண்ட வித்தைகளில் ஒன்றாயினும் ஒழியாமற் கற்பித்துக்கொடுத்தார்கள். அவையனைத்தையும் கற்றுக்கொண்ட ராவணனானவன் பின்பு அவர்களிடத்தில் விடைபெற்று புஷ்பகவிமானமேறி விரைவில் இலங்கைக்குப் போகவேண்டுமென்று கருதி வெளிப்பட்டு மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிறான்.

இராவணன் காலகேயரை வெல்லுதல்.

கேளும் அமைச்சர்களே! நாம் இலங்கையைவிட்டுப் புறப்பட்டு வெகுநாளாய் விட்டபடியாலும், நாமும் அநேக பட்டணத்திற் போராடி அளவிறந்த மன்னரை ஜெயித்துவந்திருக்கின்றபடியாலும், இனி நாம் நம்முடைய நகருக்குச் செல்லுவோமென்று சொல்லினான். அதுகேட்ட மாரீசனும் பிரகஸ்தனும் மகிழ்ந்து அதுவே சரியென்று சொன்னார்கள். அப்போது மகோதரன் இராவணனைப்பார்த்து, ஐயா! பிரதாப லங்கேஸ்வரா! இவ்வளவுதூரம் வந்தும் நீர்விவாகஞ்செய்துகொடுத்த உம்முடைய தங்கையான சூர்ப்பநகி வாழுமிடத்திற்குபோய்அந்தப்பட்டணத்தையாளப்பட்ட அறுபதினாயிரம் காலகேயர்களையும் ஜெயித்து, அந்தச் சூர்ப்பநகியையும் அவளதுபுருஷனான வித்துச்சிங்குவையுங்கண்டழைத்துக்கொண்டு போகாமல் நாம்மாத்திரஞ் செல்வது நன்மையன்று. மேலும் அந்த நகரத்தினுடைய சிறப்பை நான் என்னவென்று சொல்லுவேன்? நவரத்தினகசிதமான மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும்,விசித்திரமான அரண்மனைகளும், விசாலமான வீதிகளும், ஆகாயத்தையளாவியிரா நின்றமதில்களும், சமஸ்தகுண ரஞ்சிதராகிய மின்போன்ற இடையினையுடைய ஸ்திரீஜாதிகள் நடனஞ்செய்யும்படியான அரங்கங்களும், மாணிக்கச் சிங்காசனமேடைகளும், பரந்த கீர்த்தியையுடைய மன்னர்மன்னர்களெல்லாஞ் செங்கோல்செலுத்தும் பிரதாபங்களும், யாவராலும் கணக்கிடப்படாத் புகழ்வாய்ந்த சேனைத்திரள்களும், பிரதிதினமும் அவ்வூர் அரசர்கள் ஆடையாபரணமணிந்து கந்த பரிமளாதிகளெல்லாம் திமிர்ந்து சகலருஞ்சூழ மாலைப்பொழுதில் பவனிவந்து கேளிக்கையி லிருக்கும் கொலுமண்டபத்தின் ஒய்யாரங்களும் நான் சொல்லி முடியுமோ? ஆதிசேஷனே தன்னுடைய வாயாற் சொல்லப்படாத மகத்துவமுடைய பட்டணம். நாம் எப்பொழுதுங் கண்டறியோம். அதிலுள்ள அதிசயங்களில் ஒவ்வொன்றையும் பார்ப்பதற்குப் பதினாயிரம் கண்கள் வேண்டும். மேலும் அந்தக் காலகேயர் இலேசானவரென்பதாய் நினைக்க வேண்டாம். அவர்களெல்லாம் பிரமாவினாலே வரம்பெற்றவர்கள். அவர்களைமாத்திரம் இந்தத் திக்குவிஜயத்திற் ஜெயிப்பீரேயானல் அதன்மேல் உமக்கு எதிர் ஒருவருமில்லை. அந்தக் காலகேயர்கட்கும் உம்முடைய மைத்துனனான வித்துச்சிங்குவுக்கும் பாத்தியதை யுண்டு. ஆதலால் அவர்களையுஞ் ஜெயித்துவிட்டுப் பிறகு இவர்களை யழைத்துக்கொண்டு போவதே சரி என்றுசொல்லவும், இராவணன்மகோதரனைமெச்சி, அந்தப்பட்டணம் எங்கிருக்கிறதென்று வினவினான். அதற்கவன் அமராவதிபட்டணத்திற் கடுத்த பட்டணந்தான் அந்த காலகேயர் வாழுமிடமென்று சொல்லினான். அதற்கு அந்தத் தசக்ரீவன் சந்தோஷப்பட்டு, அப்படி நாம் செல்லும்பட்சத்தில் நான் ஜயம்பெறுவேனா? உனக்குத் திடமிருக்கின்றதா? என்றுகேட்டான். அதற்கு அந்த மகோதரன் பின்னுஞ்சொல்லுவான். ஐயா! இராவணேஸ்வரா! இதென்னபேச்சு? நீர் கேட்பது எனக்கே மகா ஆச்சரியமாயிருக்கின்றது. புவனத்தையெல்லா மளந்தவன் ஒரு புறக்

கடையளக்கப் பின்னிடுவனு? குட்டிச்சுவற்றி னெழுத்தைப்போலே கட்டுக்கதை பேசுகின்றீரே? உமக்கு மிஞ்சினவர்களும் ஒருவருண்டா? உம்முடைய வெஞ்சரங்களின்முன்னும் ஒருவர் நிற்பார்களா? அந்த நிவாதகவசரும் பல்லைக்காட்டிக் கெஞ்சித் தஞ்சமென் றடையும்படியாய்ச் செய்து வைத்தீரே? உமக்குமுண்டோ இனிமேலும் ஒருசஞ்சலம்? ஐயா பிரதாபலங்கேஸ்வரா! மலையைத் தூக்கிக் குலையச்செய்தவனுக்கு மண்ணாங்கட்டி ஒரு பாரமா! நான் இதுவரையிலுஞ் சொன்னவிடங்களிலே நீர் சென்று யுத்தஞ்செய்து யாரிடத்தில் தோல்வியடைந்துவந்தீர்? அந்த நிவாதகவசருடைய விஷயத்தில் நீர் பயந்ததற்கும், நான் சொல்லிக்கொடுத்ததற்கும், என்னகுறைச்சலாயது? எந்தக்காலத்திலேயும் நீரே கெலிப்பீர். இந்தக் காலகேயருக்கு நீர் எவ்வளவேனும் பயப்படவேண்டியதில்லை. அறுபதினாயிரத்திற்கும் மூன்று கோடிக்கும் வித்தியாசமில்லையா? மலையையெல்லாஞ் ஜெயித்தீரே? இந்த அணுவிற்கு மஞ்சலாமா? நிவாதகவசராகிய அசுரர்கட்கு இந்த காலகேயர் எத்தனையோ பங்கு தாழ்ந்தவரல்லவா? ஆனால்தைரியம் விடாமல்மாத்திரம் நிற்கவேண்டுமென்றான். அதுகேட்ட அங்கிருந்த மாரீசன் முதலிய மந்திரிகள் சற்றும்சம்மதிக்காமல் ஐயையோ! இதென்ன அநியாயம்? நீச்சு நிலைகொள்ளாத ஆழமுள்ள மடுவாகிய அந்த நிவாதகவசர்களிடத்தில் மூழ்கிப் பிராணாவஸ்தையடைந்து இனி யேதென இரங்கிநிற்குங்கால் கடவுள் கிருபையால் ஏதோ ஒருவகையாய்த் தேறிவந்திருக்கின்றோம். இப்போதுஞ் சும்மாயிராமல் இப்பாவி மகோதரன் சோடிக்கின்றானே? இந்தக் காதகனாகிய இராவணனுக்கு அந்த நமனே அண்டையிலிருந்து சொல்லுகின்றதுபோ லிருக்கின்றதே; இவனைவிட வேறு நமனுண்டா? எந்த யுத்தத்திலாவது இவன்திக்குமுக்கலாடிப்போய்ச் செக்கிலகப்பட்ட எள்ளைப்போலேபல்லைஇளித்துக்கொண்டு வாயில்ரத்தங்கக்கி வயிறுகிழிந்து சாகானா? நாங்களும் சவுக்கியமாவோமா? இவ்விராவணனுஞ் சீர்பெற்றிருக்கானா? என்று தங்கட்குள்ளாகவே நினைந்துகொண்டு மேலுக்குமாத்திரம் ஒருவாறாய்ச் சம்மதியாளரைப்போற்பேசினார்கள். இப்படி அவர்கள் ஒருவாறாய்ப் பேசியதை தெரிந்துகொண்ட இராவணன் அவர்களைப்பார்த்து இந்த மகோதரன் பேச்சுக்கிரண்டு சொல்லாதீர்களென்று உங்கட்கு நானெத்தனைதரந்தான் சொல்லுவேன்? என்பதாய் அவர்களை வெறுத்துக்கொண்டான். அந்தக்குறிப்பையறிந்த அவர்களும் நமக்கேனென்று ஒரு மூலையா யிருந்தார்கள்.

அப்பால் காட்டுச்சிங்கம்போன்ற ராவணனும் ஆட்டுக்கேற்ற பாட்டுப்பாடும் மகோதரனுங்கலந்துகொண்டு சர்வசேனைகளுடன் மந்திரிபிரதானிகள் சூழப் புட்பவிமானத்தேறி, சகல மேளவாத்தியகோஷத்தோடே காலகேயர் வாழும்படியான பட்டணத்தையடுத்து ஓரிடத்திலே தண்டிறங்கி, மகோதரனுடைய சொற்படிக்குத் தூமகேதுவென்பவனைத் தூதாகஅனுப்பி அவர்கட்குத் தங்களுடைய வரவை அறிக்கையிடும்படி சொன்னார்கள். அவனும் அப்படியே அந்தக் காலகேயருடைய பட்டணத்துள் சென்று, அரசுபுரியாநின்ற அறுபதினாயிரம் பெயர்கள் முன்னின்று தான்வந்த வரலாற்றையும், அந்த இராவணன் புறப்பட்டநாள்முதல் அவன்பெற்ற ஜெயப்பிரதாபத்தையும், விச்சிரவப் பிரமாவினுடைய புத்திரனாகியும் தனக்குத் தமயனாகியுமிராநின்ற வைச்சிரவணனென்னும் குபேரனை ஜெயித்ததையும், அவனுடைய நந்தவனத்தையழித்துப் புட்பகவிமானத்தைப் பெற்றுக்கொண்டதையும், ஈசுவரன் வாழும்படியான வெள்ளியங்கிரியைத்தூக்கியதையும், அவரது சேவையை அவன் தெரிசிக்கப்பெற்றதையும், மருத்து மகாராஜனை வாட்டியதையும், அனரண்ய மகாராஜனைக்கொன்றதையும், யாவராலும் ஜெயிக்கப்படாத நமனைப் பின்னிடச் செய்ததையும், நாகலோகத்திலே சென்று ஆயிரம் பணமகுடங்களை யுடைத்தாயிரா நின்ற ஆதிசேஷனைவென்றதையும்,ஒருவரேனும் ஏறெடுத்துபார்க்கவுங்கூடாத மூன்று கோடி நிவாதகவசர்களை ஓர் நாழிகைக்குள்ளேதிப்ராமைகொண்டுதன்னைவணங்கும்படியாகச் செய்துகொண்டதையும், இன்னும் அவனுடைய திக்குவிஜயத்தின் பெருமைகளை ஒன்றும் விடாமல், அருகிருந்துகேட்

பவர்கட்கும்கிலிபிடித்து மனமானது இளைத்து வாடும்படியாகச் சாங்கோபாங்கமாய்ச் சொன்னான். அவையனைத்தையும் அந்தக் காலகேயர் கேட்டு ஆச்சரியப்பட்டு, நல்லது அப்படியாவென்று கோபங்கொண்டு, அப்பா தூதனே! நாங்களும் அப்பேர்ப்பட்டவனைத் தான் பார்த்துக்கொண்டிரா நின்றோம். எங்களையும் கண்ணெடுத்துப் பார்க்கப்பட்டவனாய்ஒருவனிருப்பானாயின் அவனை மாத்திரம் ஓடிப்போகாமற்படிக்கு இருக்கச் சொல்லுக என்றுகூறி அவனை அனுப்பிவிட்டார்கள். உடனே அத்தூதுவன்வந்து அவர்கள் சொல்லிய வண்ணம் ராவணனுக்குணர்த்த, அவன் இதென்ன காரியமெனச்சலித்து, சாகும்வரையில்சனியானால் இனியாகும்வழி என்னவென்று அகமெலிந்திரா நின்றான். அவனைப் பின்னும் மகோதரன் தேற்றித் தைரியம்வரும்படிச்செய்து, உம்முடைய ஜெயகாலத்திற்கோர்நாளுங் குறைவென்பது வரப்போகின்றதேயில்லை. ஆயினும் நடக்கும்பிள்ளை தவழ்வதானால்தாய்தானென்னசெய்வாள்? வயிறுசெய்த தீவினைதானென்று வருந்தியிருப்பாள். ஆதலால் ஓஜயவீரப்பிரதாபா! உமக்கு நான் சொல்லவேண்டியது இதைவிட வேறில்லையென்றான். அந்த வார்த்தையைக் கேட்ட தசக்கிரீவன் ஓர்வாறாய் மனந்தேறிப்போர்க்கோலங்கொண்டு, வில்லைக்கையிலேந்தி யுத்தசன்னுத்தனாய் ஆக்கிரமித்து, அமர்க்களத்திற்கு வெகு உல்லாசமாய்ச் சகலரும் புடைசூழும்படியாய் வந்து நின்றான். இங்கே இவன்செயல் இவ்வாறாக, அங்கே மிகவும் வல்லமைசாலிகளாக அறுபதினாயிரம் காலகேயர்களும் மந்திரிகளை நோக்கிச் சொல்லுகின்றார்கள்.

ஓ மந்திரிகளே! இப்பொழுது வந்த தூதன்சொன்னவார்த்தையெல்லாம் கேட்டீர்களா? எவ்வளவு தைரியமாய் நம்மை எண்ணினதுமல்லாமல், நம்மிடத்திற்குத் தூதனையும் அனுப்பினானல்லவா? அவனுடைய திடதைரியத்தை நான் என்னென்றுசொல்லுவேன்? செல்வஞ் சொல்லுக்கஞ்சாதென்பதுபோல அவன் நம்மை இலேசாய் நினைத்துவிட்டான். இதற்கென்ன யோசனை செய்வீர்க ளென்றார்கள். அதற்கவர்கள் ஐயா காலகேயப் பிரமுகாளே! நாங்களுஞ் சொல்லவேண்டுமா? உங்களுக்குத் தெரியாததென்ன விராநின்றது? ஆனபோதிலுஞ் சொல்லுகின்றோம் கேளுங்கள். இந்த ராவணன் லங்கைக்குத் தலைவனா யிருக்கின்றவன். இவன் பெற்ற வரங்களெல்லாம் அற்பமானவை அல்ல. நம்மிலும் பிரமாவினிடத்தில் மிகுந்த அன்புடையவன். சாம்பசிவக் கடவுளான பரமேசனது கிருபையையும் பெற்றவன். ஆதலால் நாம் எளிதாய் நினைத்து அவனிடத்தில்இலேசானயுத்தஞ்செய்யப்படாது. சிறியபாம்பாயினும் பெரியதடிகொண்டடிக்கவேண்டும். அவன் தானெனு மகந்தையால் எவரையும் மதியாமல் எப்பேர்ப்பட்டவரையும் நிர்த்தாக்ஷண்யமாகப் பேசி, அவர்களையெல்லாம் எதிர்த்துக் கெர்வம் படைத்துப் பிரமதேவரால் அந்தந்தவிடங்களிலே சந்தி செய்துகொண்டு, தான் வெகு காரியக்காரனாய் அளவிறந்த ஸ்திரீகளையெல்லாம்சிறையெடுத்துவந்திருக்கின்றானாம். அவையெல்லாம் அவனுடைய மைத்துனனாய் இங்கு நம்முடைய பட்டணத்தில் இராநின்ற வித்துச்சிங்குவினாற் பரிஷ்காரமாய்த் தெரியவந்தன. ஆகையால் அவனை நாம் சித்திரவதைசெய்து இனிச் சத்துருபயமில்லாமல் நம்முடைய மித்திரரெல்லாஞ் சுகப்படும்படிச் செய்ய வேண்டியதே யல்லது, இவ்வளவுதூரம் வந்தவனை நாம் இலேசாய் நினைக்கக்கூடாதென்று சொன்னார்கள்.

இப்படி அம்மந்திரிகள் சொல்வதை யறிந்த காலகேயர்கள் மந்திராலோசனையுடன் தங்கட்குள் திடப்படுத்திக்கொண்டு, கண்களிலே அக்கினிப்பொறிகள் பறக்கவும், ரதகஜ துரகபதாதிகள் சூழவும், ரணபேரி-ஜெயபேரி-வெங்கலபேரி முதலாய்ச் சொல்லப்பட்ட வாத்திய வோசையுடன் மாணிக்கம் பதித்த கிரீடம் புனைந்து, அணித்தலைவர் - படைத்தலைவர் - தண்டத்தலைவர் முதலாயினோர் மருவிவர அண்டமுட்டிய தேர்களின்மீது ஏறிக்கொண்டு, எண்ணான்கு ஆயுதங்களுந்தாங்கி, மங்கள வாத்தியத்தோடே திரிபுவனங்களும் குலுங்கும்படியாய் ரணக்களத்திற்குவந்து சேர்ந்தார்கள். அதுகாலையில் இரண்டுபடைகளும் கைகலந்து யுத்தத்திற்கு ஆரம்பஞ்செய்து, தேராள்களுடனே தேராள்களும், குதிரைவீரருடனேகுதிரைவீரரும்,

ஆனைக்காரருடனே ஆனைக்காரரும், போர்ச்சேவகருடனே போர்ச்சேவகரும்,அணித்தலைவருடனே அணித்தலைவரும்,படைத்தலைவருடனே படைத்தலைவருமாக ஒவ்வொருவருந் தங்கள் தங்கட்குள்ள எதிராளிகளுடனே எதிர்த்து, முப்பத்திரண்டாயுதங்களையு மெறிந்து, அஸ்திரசஸ்திரப் பிரயோகங்களை யெல்லாஞ் செய்து குத்தியும்-வெட்டியும்-உதைத்தும் - அடித்தும்-சாடியும் - பாடியும் - இப்படி பிரமாதமான யுத்தஞ் செய்தார்கள். அதனால் அச்சுவேறு - ஆணிவேறு-குடைவேறு - கொடிவேறு-குத்துக்கால்வேறு - கொடுங்கைவேறாய் ரதங்களெல்லாம் அழிந்ததல்லாமல், குதிரைகளும் - யானைகளும் - அநேகமாய் மாண்டன. பாகர்களும் - காலாள்களும் - அநேகராய் இறந்தார்கள். மாண்டவருடைய தலைகளும்-கைகளும் - உடல்களும்-கால்களும்-தோள்களும்-எங்கும் விழுந்து கிடந்து உருண்டுக்கொண்டிருந்தன. இச்சண்டையின்பெருமை என்னென்றுசொல்லுவேன்? இம்மண்டலமெல்லாம் ரத்த வெள்ளமாய்ப் பெருகியது.

அப்போது காலகேயர்களுடைய மந்திரிகள் பிரவேசித்து காலாந்த உருத்திரனைப்போலே ஆக்ரமித்து, இந்திராஸ்திரம்-சந்திராஸ்திரம் - வருணாஸ்திரம்-வாயுவாஸ்திரம் என்று சொல்லப்படாநின்ற அளவற்ற அஸ்திரங்களை அமோகமாய்ப் பிரயோகஞ்செய்து ராவணனுடையதண்டுகளிலேபுகுந்து சங்கரித்தார்கள். அதைப் பார்த்திருந்த பிரகஸ்தன் முதலியோரும் இளையாமல் களையாமல் வளையாமல் நின்று சண்டமாருதம்போல் அநேகமான திவ்வியாஸ்திரங்களை யெல்லாஞ் சரமாரியாய்ப் பொழிந்தார்கள். அதனாலே அந்தக் காலகேயருடைய சைனியங்களெல்லாம் காலனுடைய கைக்குள்ளே சிக்கியதுபோலே கால்மாடு தலைமாடாய் நிலைகெட்டோடின. பின்னும் அந்த காலகேயருடைய மந்திரிகளும் தேர்ச்சாரதிகளும் மரணமூர்ச்சையடைந்தனர். அதன்பிறகு மாரீசன்-விருபாட்சன் முதலானவர்கள் சென்று ஆளுக்கொவ்வோர் கதைகளையெடுத்துச் சுழற்றியடித்தார்கள். அவ்வடியை அம்மந்திரிகள் சகிக்கக்கூடாமலோடித் தங்களரசராயிராநின்ற காலகேயருடனே முறையிட்டுக்கொண்டார்கள். அவர்களும் பிரசண்டமான அறுபதினாயிரம் வெண்கலத்தேரின்மேல் ஏறிக்கொண்டு ஆயிரபாரம்பளுவுள்ள சகஸ்திர தங்கக்கட்டுகள் பூட்டிய விற்களையெடுத்து, புருவமெல்லாம்நெரிய கண்களிலே பொறிகள்மின்ன, விண்ணுலகமும் அதிர, மண்ணுலகமுமதிர வெகு ஆர்ப்பாட்டத்தோடே பார்க்கின்றவர்கட்கும்பயங்கரமுண்டாகி என்னமோவென்றுஎங்கும்படி யுத்தகளத்திற்குவந்து இராவணனைப் பார்த்துச் சொல்லுகின்றார்கள். அடா நீர் மூடா! நீதானா எங்களை ஜெயிக்கின்றவன்? உன்னைப் பார்க்கும்பொழுதே ஜெயிப்பாயென்று நன்றாய்த் தெரியவரா நின்றது. ஐயையோ! வீணாயெங்களுடைய மண்ணிற்கு இரையாக வந்தாயே? அடா ராவணப் பயலே! என்று கோபாவேசங்கொண்டு பேசுகின்றதைத் தசக்கிரீவன்கேட்டு, உடனே வில்லைவளைத்து நாணியேறிட்டு டங்காரவோசையை யெழுப்பி அநேக நாராசங்களைத்தொடுத்துவிட்டு சந்திராஸ்திரங்களையும் அளவிறந்தகணக்காய்ப் பிரயோகஞ்செய்தான். அவையெல்லாம் வெளிப்பட்டுவந்து காலகேயர் பேரிலே பாய்ந்து வெகுவிதமான நாசத்தைச் செய்து, தேர் - கரி-பரி-பாகர்-கவசம் - கொடி-வில்-இவை முதலியவற்றைப் பொடியாக்கி, அவர்களுடைய தண்டையும் மண்டைபிளக்க வாட்டிச் சண்டமாருதம்போற் சாடின. அதனாலே அக்காலகேயப் பிரசண்டரெல்லாம் மெய்மறந்து திப்பிரமைகொண்டு, ஏதேது நாம் இவனைஜெயிக்கிறது? அல்லவென்று சந்திபேசிக்கொள்ளவும் சிந்தையொத்தவரில்லையே என்று மந்தவெளிக்கல்போலிருந்தனர். அந்தவேளையில் மகோதரன் ராவணனைப் பார்த்து, ஐயா! இனி இவர்களுடன் வாளாயுதப்போர் செய்யுமென்றான். அவனும் அவ்வாறே மகத்தான சைனியத்தையெல்லாம் கூட்டிக்கொண்டு வந்திராநின்ற காலகேயர்மேலே தன்னுடைய மந்திரவாளையெடுத்து, பஞ்சாட்சரத்தைச் செபித்துச் சிவபெருமானை நினைத்துவிட்டுவிட்டான். அதுவும் அதிவேகத்தோடே சென்று, அவ்வறுபதினாயிரம் பேருடைய சிரசுகளை யெல்லாம் அறுத்துவிட்டது. ஆனால் அவர்களும் வரப்பிரசாதிகளாதலாலே அவைகள் மறுபடியும் மூளைக்கா

நின்றன. அதைக்கண்ட தசக்கிரீவன் பிரமித்து, ஈதென்னவிந்தை? இவளுக்கவள் எழுந்துண்பாளென்று சொல்லும்படியான கதையாச்சுதே? என்றுகூறி, பிரமாஸ்திரத்தை விடுத்தான். அவர்கள் இவனிலும் தேர்ந்த கைக்காரர்களாதலாலே பதிலுக்கு மற்றோர்பிரமாஸ்திரத்தை ஏவினதுமல்லாமல் அநேகமான அர்த்தசந்திரபாணங்களை ஏவி இராவணனுடைய பத்துச்சிரசையையும்வெட்டிவிட்டார்கள். ஆனால் இவனுக்கு அந்தத் தலைகள் மறுபடியும் வளர்ந்துவிடுமென்பது அவர்களுக்குத் தெரியாதாகையால் மறுபடியும் எப்போதும்போலே முளைக்கின்றதைக்கண்டு ஆச்சரியமடைந்து ஒருவிதத்திலே திகில் அடைந்து, பின்னும் இவனை அதோகதியாக்கவெண்ணி ஒரு சத்திவேலை ஏவினார்கள். அதுகண்ட இலங்கேசனும் தனக்கு சிவபெருமானுடைய அருளாற் கிடைத்த ஒரு சத்திவேலையெடுத்து, தன்னுடைய வில்லை நிறுத்தித்தொடுத்து அபிமந்திரித்து ஆகர்ணபரியந்தம் இழுத்து விடுத்தான்.

கேளும் ஸ்ரீராமா! இவ்விரண்டுதிறத்தார் முன்விட்ட அஸ்திரங்களே உலகம் எல்லாவற்றையும் மூடிக்கொண்டு ஒருபக்கம் தகித்துக்கொண்டிருக்க, மறுபடியும் இவ்வேல்கள் விடுபட்டு அஷ்டகுலாசல பர்வதத்தையும் அதமாக்கி ஈரேழுபுவனமெல்லாவற்றையும் நீறுபடச்செய்துநாசம் பண்ணி வருகின்றபடியாலே இந்திராதி தேவர் சகலத்திராளும் இந்த வேதனைப் பொறுக்கமாட்டாமல் திகிலடைந்து, ஓவென்றலறி ஒன்றாய்ச்சேர்ந்து கைலாசபர்வதத்திற்கு வந்து, ஓம் சங்கர மகாதேவா! சாம்பவிமனோகரா! திரிபுரதகனா! காளகண்டதிரிநேத்திரா! சமஸ்த புவன சர்வாத்ம ரக்ஷக நிதியானந்தநாமசகஸ்திரா! ஓம் தூல சூக்ஷ்மகாத்திரா! ரிஷபவாகனரூடராய் வந்து தொண்டருக் கருள்செய்யும்படியான பிரதாபா! மான் மழு சதுர்ப்புஜ பஞ்சாக்ஷரசொரூபா! தத்துவமெய்ஞ்ஞான நிர்மலானந்த சர்வபரிபூரணா! ஓம் சண்முகக்கடவுளைப் பெற்ற சந்திரசேகரப் பிரபுவே? எங்களை இவ்விதமாகவும் காட்டிக்கொடுக்கலாமா? தேவரீரே பாராமுகஞ் செய்வதானால் பிறகு உலகமானதெவ்வாறாகும்? நாங்களெல்லாம் தாமரையிலை நீர்போல் தவிக்கிறது மழகா? இன்னம் எவ்வளவுகாலந்தான் இவ்விதமாய்த் தத்தளிக்கின்றது? நாங்களெல்லாம் தேவரீருடைய ஆதரணையிலே நீழியாய்வாழ்ந்துகொண்டிருக்கவும், எங்களுடைய பாரம்பரியமெல்லாம் தேவரீருடைய திருவடி நிழலையே ஆதாரமாய்க்கருதியிருந்தும், திடீலென்று நேற்றுவந்த ராக்ஷதனுக்கு அன்புவைத்து வரங்கொடுத்துவிட்டு அவன்முன்னே எங்களை இவ்விதமாய் அலையவிடலாமா? அன்னையிழந்த குழவிபோலே யாவர்முகத்தையும் நோக்கிப் பரதவிக்கவேண்டியதாயிராநின்றதே? காலனைக்காட்டிலும் வெகு கடுமைகாட்டி அநியாயப்படுத்தி, ஆலகால விஷம்போலே கடுகடுத்து எங்களைக் கருவறுக்கின்றானே. ஓபாலலோசனரே! தேவரீருஞ் சாலஞ்செய்வதானாற் பிறகு நாங்களெல்லாமுய்வ தெவ்வண்ணம்? இனியெங்கட்கென்னவழி? என்று யாவருஞ் சமுத்திர கோஷம்போல் இரைச்சலிட்டுக்கொண்டு புலம்பாநின்றார்கள். அதையறிந்த நிரஞ்சனப்பொருளாய் விளங்காநின்ற நித்தனாகிய நீலகண்டனானவர் அவர்கட்கெல்லாம் ஆதரணைசொல்லிக்கையமர்த்தி, ஓ தேவேந்திராதி தேவர்களே! நான் என்னசெய்வேன்? ஏதோ நம்மேல் அவன்வைத்த பிரீதியினாலும், அன்பைச்செலுத்தாநின்ற அடிமைத்திறத்தினாலும், என்னை இடைவிடாது மனனஞ் செய்யும்படியான சீாம் பிரதாயத்தினாலும் நான் உள்ளமிரங்கி; அவனுடைய அருமையான பக்திக்கு உகந்து ஒருவரமளித்துவிட்டேன். வணங்கினவர்களைக் காப்பாற்றாவிட்டாற் பிற்பாடு உலகமென்ன சொல்லும்? இவன் ராக்ஷத வம்சமாய்த் துடுக்கனாயிராநின்றபடியாலே எவ்வளவோவெண்ணி நான் சுலபமாய் நடத்தினேன். ஆனாலும் அவன்தானென்னுங் கர்வத்தாலே பின்னும் பதின்மடங்காய் வளர்த்திக்கொண்டு இவ்வாறுசெய்து வருகின்றான். அதுவுமெனக்குள்ளே தெரிந்துதான் இரவும் பகலும் உங்கட்காகவே இரங்குகின்றேன். நான்அவனாற் குமுங்கித் தவிக்கின்றது உங்கட்குத் தெரிந்து தான் இருக்கும். கேட்டவனுக் கில்லையென்னாது கொடுக்கும் தாஷ்டீகம் பரம்பொருளாகிய நமக்குரியதல்லவா? அவன்உங்களை விடவா

எனக்குப் பிராணமித்திரன்? இப்படியெல்லாம் வரப்போகுதென் றறிந்து தானே ஆயிரம் வருஷம் வரையிலும் உயிருக்கொட்டி நம்மைக்குறித்துத்தவஞ்செய்து வசப்படுத்திக் கொண்டான். நான்மாத்திரம் அவனுக்கு இந்த வரத்தைக்கொடுக்காமல் அயலார்போ லிருப்பேனுகில், இவ்வளவு தூரங்கூட அவன் ஆடும்படி பார்ப்பேனு? இப்போதே அப்படியல்ல. நாம் சற்று நிதானிக்கவேண்டி யிருக்கிறதுமல்லாமல், தான்பெற்ற பிள்ளையைத் தாய் பழிப்பதுண்டா வென்பதுபோல் நம்மை யடுத்து நின்றவனை நாமா கெடுப்பது? அவன் எப்படியாவது பூலோகத்தில் தசரதச்சக்கரவர்த்தியின் தவபுத்திர சிகாமணியால் மாண்டுபோய் விடுவான். ஆதலால் இதனை நீங்கள் சத்தியலோகத்திற் சென்று சதுர்முகனிடத்தில் அறிக்கையிடுங்கள். என்று அவர்களுக்கெல்லாம் பிரிய வசனங் கூறி அப்பிஞ்ஞகனவர் அனுப்பிவிட்டார்.

அப்பால் அவர்கள் அன்னவூர்தியாகிய எண்கண்ணனிடத்தில் இதனைச் சாங்கோபாங்கமாகச்சொல்லி நின்று முறையிட்டுக்கொண்டு, ஐயாபிரமதேவரே! உம்மைத் தகப்பன்போல் நினைத்திருந்தும் எங்களுக்கு இந்த அவஸ்தைவரலாமா? அந்த ராவண ராக்ஷதனுகிய பூனையிடத்தில் கிளியொத்த எங்களைக் காட்டிக்கொடுக்கலாமா? அந்தக் காலகேயர்களுக்கும் இவனுக்கும் தொடுத்துகொண்டயுத்தத்தில் ஐயையோ! நாங்களுந் தலையெடுக்கவுண்டா? அவர்களேவும் அஸ்திர சஸ்திரங்க ளெல்லாம் எங்கள் உலகமாகிய தேவலோகமெல்லாம் நிரம்பி எங்களுங் கம்மிக்கொண்டு நீச்சு நிலைகொள்ளாமல், அனலிடு மெழுகாயும், இருதலைக்கொள்ளி எறும்பாயும், நாங்கள் கஷ்தியடைகின்றேம். இனியாகிலும் உமது சித்தம் இரங்காதா? ஓ வானவர் முதல்வனே! என்று இணையடிபணிந்து தலைமேற் கைகூப்பிக் கண்ணீர்வடியப் புலம்பினார்கள். அதுகேட்ட மண்பொதுத்தந்தையாகிய விரிஞ்சனுனவன் விளம்புவான். கேளும் தேவர்களே! கடையல்பாகஞ்செய்திட்ட கீரைக்கு மடையத்தனத்தாற் பின்னிட்டுப் புல்லாய்ந்தெடுப்பவர்போல் நாங்கள் இப்போதொன்றுஞ் செய்யப்படாது. ஆனல் எங்களால் ஆகாதகாரிய மொன்றுமில்லை. இதுவோ அப்படியல்ல. ஆலயம் புதுக்கினவர்களும், அன்னசாலை அமைத்தவர்களும், ஆவினங்களைப் பரிபாலனஞ் செய்தவர்களும், அவர்களே எந்தக்காலத்திலாவது அவைகட்குத் தீங்குசெய்ய நினைப்பார்களா? நினையார்கள். அதுபோல நானும் எனது ஆதாரக்கடவுளாகிய பரமசிவனும், அவனுக்கு வரமளித்திருக்கிறபடியால், ஆக்கல் - காத்தல் - அழித்தல் - என்று சொல்லப்பட்ட முத்தொழில்களில் ரக்ஷிக்கும் வல்லமையை யுடையவராயும், எனக்குப் பிதாவாயும், உலககர்த்தாவாயும் இரா நின்ற ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடத்திற்சென்று பணியுங்கள். அவரால்தான் இவன் காலஞ்செல்லவேண்டி முன்னமே அநுக்கிரகித்திருக்கின்றது. நானும் உங்கள் வார்த்தையைத்தட்டாமல் தற்காலம் உங்களுக்கு உற்ற கஷ்தியை நிவர்த்திசெய்யும் நிமித்தஞ்சென்று, அந்த இருவர்களையும் சமாதானஞ்செய்து விடுகிறேன். இது தான் என்னுலானகாரியம். அந்தக் காலகேயர்களும், ராவணுதிகளும், என் சொல்லைத் தடுக்கமாட்டார்கள். ஆதலால் நான் அவ்வாறு செய்து வைக்கிறேன். நீங்கள் இந்த க்ஷணமே ஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்திற் செல்லுங்கள். என்று திருவாய்மலர்ந்தருளினர். அவ்வண்ணமே தேவர்கள் இதுவும் நல்லயோசனைதானென்று திருப்பாற்கடலிற் சென்று, ஜெகதீசனுகிய ஸ்ரீ மகாலக்ஷ்மி சமேதனை வணங்கி நின்று, ஓ மதுசூதனு! ஓ மாதவா! ஓ கேசவா! ஓ ஜனுர்த்தனு! ஓ பரப்பிர்மசொரூபா! ஓ கருடவாகனு! ஓ கருணுகரா! ஓ கமலக்கண்ணு! ஓ புண்டரீகாக்ஷா! ஓ வடபத்திரசயனு! ஓ ஸ்ரீயப்பதீ! என்று பலவாருய் ஸ்தவுத்தியஞ் செய்தார்கள்.

அதுகாலையில் க்ஷீராப்தி நாதனுகிய ஆலிலைதுயிலும் பரவஸ்துவானவர் பரிவுகூர்ந்து புயில்வார். ஓ தேவர்களே! நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நீங்கள் இலேசாய் நினைக்காதீர்கள். நான் சும்மாயிருக்கவில்லை. நித்தியம் சூரியனுகிய அளவுகோலால் அவனது வாழ்நாளையளந்துகொண்டுதான் வருகிறேன். அவனே அரைகோடி ஆயுளைப்பெற்றவன். அதினும் பாதியாய்விட்டது. இனிமேல் அவனது வாழ்நாள் குறுக்கந்தான். குடலறு

ந்த நரியும் உடல்வருந்தி யோடுமோ? எரிந்துவிழுந்தீபம் அவிந்துவிடும்போது குபீலென்று பேரொளியுண்டாய்த் தணிந்துவிடுமென்பது உங்களுக்குத் தெரியாதா? சிக்கத்திற் சிக்காத பக்ஷிகளும் உண்டா? நமது வலைக்குமாத்திரம் இவன் தப்புவானென் றெண்ணுதீர்கள். இவனென்ன ஓர் பஞ்சு. அந்த மாலி-சுமாலி-மாலியவான் களைவிட இவன் அவ்வளவா சிறந்தவன் அல்ல. அவர்கள் உங்களையும் மற்ற லோகங்களையு மதஞ்செய்ததைவிடவா இவன் செய்யப்போகிருன்? ஏதோ அவனும் தலைவிசிறியாடுகிருன். இரணியாக்ஷதன் இராஜ்ஜியபாரத்திலும், மற்றவர்கள் துரைத்தனத்திலும் நீங்களென்ன சவுக்கியமடைந்திருந்தது? ஆனல் இன்னஞ் சிலநாள் போகவேண்டும். இப்போது அவர்கள் காலபலத்தினுல் ஆடுவதெல்லாம் பார்த்துக்கொண்டுதா னிருக்கவேண்டும். எப்படியும் ஸ்ரீராமாவதாரத்தில் இவன் நமதுகோதண்டபலத்தினுல்மாளப்போகிருன். நீங்களேன் வீணிற் கலக்கமுறுகின்றீர்கள். என்றந்த இந்திராதி தேவர்களுக்கெல்லாம் உறுதிமொழியுரைத்தார். இவை யனைத்தையுங் கேட்ட இந்திராதிதேவர்கள் கைவிரித்து ஆ! ஆ! இதுவுமொரு நல்ல விஷயந்தான். வாசா கயிங்கரியமென்பதும் இதுதான். ஒருவன் பூசைக்கு உட்கார்ந்து நடத்திவரும்போது மந்திரவிதி சொல்லவேண்டி அப்போது ஆசானைத் தேடிக்கொண்டு சென்றதுபோலும். உலகத்தில் பசியெடுத்து அன்னங்கேட்பவனை வீட்டில் நிறுத்திவிட்டு, உடனே வெகு அவசரமாகக் கலப்பையும் நூதன விதையையும் எடுத்துக்கொண்டு போவதுபோலும். ஊரில் கிராமவரிசையில் ஆற்றின்வெள்ளம் பிடுங்கிக்கொண்டோடுவதைக்கண்ட அன்றைய முறைக்காரன் இதோ வருகிறேனென்று மண்வெட்டிக்காக விஸ்வகுலத்தனைத் தேடிக்கொண் டிருந்ததுபோலும்; இவர் சொல்லும்சேதி நமக்கு வெகு ஆனந்தமாயிருக்கின்றது. ஏதேது? இவர் ஸ்ரீராமாவதார மெடுக்கிறவரையிலும் அவன்சாமான்யமாய் விடுகிறவனுகத் தோற்றுவதில்லை. நாம் ஒவ்வொரு மூர்த்திகளையும் அடுத்தடுத்துக் கேட்டுக்கொண்டதற்கு இப்போது ஒன்றும் அவசரத்திற் காகவேண்டியவைகளாயில்லை. இனி என்செய்வோம்? இனி இவரைவிட வேறுதெய்வமுமில்லை. கடைசியில் காளகண்டனும் கமலாசனனும் கையை விரித்ததைவிட இவர் சொல்வதிற் கிஞ்சிற்று அநுகூலமிருக்கிறது என்றொருவாருகத் தேறினவர்களாய் விடைபெற்று தத்தம் இருப்பிடஞ் சென்ருர்கள்.

கேளும் இரகுநந்தனு! இவ்விட மிவ்வாருக, அவ்விடம் யுத்தகளத்திலிறங்கிக் கலக்கிக்கொண்டுவரும் காலனுகிய இராவணனுனவன் கைகொண்டமட்டும் பார்த்து எவர்களையும் தலைகாட்டவொட்டாமற் செய்துவருபவன் சொல்லுகின்ருன். கேளாய் மகோதரா! நாம்செய்யும் இந்த அகாதயுத்தங்களின் கொரோங்களால் தேவர்களும் மற்ற யாவர்களும்சகிக்காமல், அந்த மூவர் களிடத்திலும் முறையிட்டுக் கொண்டார்கள். அதற்கவர்களும் ஏதோ பயந்துரைத்தாற்போ லிருக்கின்றது. அதனுல்தான் தெய்வலோகம் முழுவதும் நிர்ச்சப்தமாய் இருக்கின்றது. இனிநமக்கும் எதிருண்டாவென்ருன். அதற்கு மகோதரன் ஐயா இராவணேஷ்வரா! நீர் முன்னம் பயந்தீரே? இப்போது என்னமாயிருக்கின்றது பார்த்தீரா? உம்முடைய வில்லின்முன்னுமொருவர் நிற்பார்களா? என்று உற்சாகப்படுத்தினுன். அதனுல் அந்த தசக்கிரீவன் பின்னும் பேரிடிபோல் நுழைந்துகொஞ்சம் நஞ்ச மிருப்பதை வாட்டிக்கொண்டு வருகிருன். அப்போது அந்த யுத்தகளத்தில் இராணுக்களுடன் கலந்துவந்து யுத்யுஞ்செய்த சூர்ப்பநகியின்புருஷனும் தன் மைத்துனனுமாகிய வித்துச்சிங்குவனென்பவனையும், படுகளத்தில் ஒப்பாரி பார்ப்பவர்களு முண்டாவென்று சம்மரித்து வீரசிங்கம்போல் ஆர்ப்பரித்து நின்ருன்.

## பிரமதேவர் சந்திபேசுதல்.

இப்படியாக சேனுசமுத்திரங்களெல்லாம் சின்னுபின்னப்பட்டு உலகமெல்லாம் தத்தளிப்பதையறிந்த பிரமதேவரானவர் வந்து அவரவர்களுக்கு இனமானபடி தழைக்கச்சொல்லி, அப்பா காலகேயர்களே! உங்களுக்குஞ் சொல்லவேண்டுமா? எனக்குத்தெரியாத காரியமொன்றுண்டா? வீண்சிரமை கொள்ளவேண்டாம். என்று

கையமர்த்தி, கண்குறிப்பால் இராவணனை யும் நிதானிக்கச்செய்து, நீங்கள் சிங்கம் போல் ஒருவரையொருவர் எதிர்ப்பதில் வீணாய் மற்றவர்களெல்லாம் நரிகளைப் போல் நசுங்கிவிடுகிறார்கள். இதுஞாயமா? இம்மட்டும் நிறுத்துங்கள். என்று வெகு வாய்ப்பிரயாசைப்பட்டு சந்திசெய்வித்தார். அம்மிண்டர்களாகிய இருதிறவரு மடங் கினதில் காலகேயர் கொண்டுவந்த கப்ப ணத்தை இராவணன் ஏற்றுக்கொண்டு, பிர்மா சென்றவுடன் மகோதரனைக்கொண் டாடி, காலகேயர் தோற்றாரென்று கெக் கலிகொட்டி, நின்றசேனைகளுடன் மந்திரி முதலானவர்களைப் புஷ்பகவிமானத்தில் ஏற்றிக்கொண்டு அந்தர மார்க்கமாகச்செ ன்று அங்கு ஆகாசகங்கையில் ஸ்நானஞ் செய்து, ஓர் குளிர்ந்த சோலைக்கணிறங்கித் தன் பூஜாவிதிகளைமுடித்து, உண்டு உடுத் தித் தாம்பூலமணிந்து, யாவரும் தன்னைச் சூழ அவ்விடம் கொலுவிலிருந்தவன் மந் திரிமார்களைப்பார்த்துச் சொல்லுவான்.

இராவணன் லங்கைக்குச்செல்லவிருத்தலை மகோதரன் கலைத்தல்.

கேளுங்கள் எனக்காப்தமான அமைச் சர்களே! யான் லங்கையைவிட்டு வந்து நெடுநாளாயிற்று. அவ்விடத்திற் கும்பகர் ணன்முதலானவர்களும், தாயாரும் எப்படி யிருக்கிறார்களோ தெரியவில்லை. ஒருவேளை ஆறுமாதந்தூங்கித் தம்பி எழுந்திருந்து மற்ற ஆறுமாதமும் அரசுபுரிகின்றானோ என்னமோ? கிழவர்களாகியமாலியவானும், சுமாலியும், எப்படிக் காலங் கழிக்கின்றார் களோ? என்றுகூறித் துக்கித்தவனாய், இந் தக்ஷணம் லங்கைக்குச் செல்ல வேண்டுமெ ன்று உறுதிகொண்டான். அதைக்கேட்டி ருந்த மாரீசனும் பிரகஸ்தனும் அவனைப் பார்த்து, அப்பா ராவணா! அவ்வளவு கவ னமுங்கூட உனக்குண்டாயிற்றா? உன்புத்தி ஒருவழிப்பட்டதல்லவே; எங்கள் சொல் லைக்கேளாமல் மகோதரன் வாக்கியப்படி க்குநடக்கின்றாயே; அதுவாகிலும்கிரமமா யிருக்கின்றதா? நல்லது! அந்தமகோதரன் செய்தசூதென்ன தெரியாதகாரியமா? முன் னிலைச்சூட்டாகத் தங்கையாகிய சூர்ப்ப நகியைப் பார்க்கவேண்டுமென் றிழுத்துக் கொண்டுபோய் காலகேயபுரத்திற் புக்கி அங்குள்ள அறுபதினாயிரம் பேர்களுடன் எதிர்க்கச்செய்துவைத்ததல்லாமல், அவள் புருஷனாகிய உன்மைத்துனன் வித்துச்சிங் குவையுங் கொல்லச் செய்துவைத்தானே அது தர்மந்தானா? இப்படியாய்விட்டதே யென்றறிந்தும்பின்னர் அப்பட்டணத்திற் சென்று, அவளைக்கண்டாகிலும் அம்மா! உன்காலகதிஇப்படியாயிற்றல்லவா? என்று பிரியவசனமாவது சொன்னீர்களா? அது வும் இல்லை. இந்நேரம் அவளுக்கும் அந்த சமாச்சாரம் எட்டியிருக்கும். என்ன அலங் கோலமாகின்றாளோ? கணவனையிழந்தும் உயிருடன் இருப்பாளா? நமது குலத்திற் பிறந்த பெண்ணாச்சுதே; அதிலும் அவ ளுடைய காந்தாளத்துக்கு இரணபத்திர காளியும் பயப்படுவாளே: அஃதுனக்குத் தெரியுமல்லவா? நீ திக்கில்லாதபிணமாய் ஆக்கிவிட்டு வந்தாயே. அப்பா ராவணா! இனியார் அவளுக்குத்தேறுதலைச்சொல்லி முன்னுக்கு வருவார்கள்? ஒருவர் சொல்லை யுங் கேழ்க்கப்பட்டவளல்ல. நீ வீணாய்த் தலைச்சுமை தேடிக்கொண்டாய். காலகேய ர்களுடைய பட்டணத்திற்கு நீ செல்லும் போதே எங்களுக்கு வாலகேசரி சோதிட த்தாலென்னமோ காலவித்தியாசமென்றெ ண்ணியிருந்தோம். அதற்கேற்றாப்போல் இந்த மூலம்வந்து தோன்றியது. இனி அந்த பாலலோசனனாலுமாகாதே: இதற் கென்னசெய்வோமென் றிரங்கினார்கள்.

அதுகேட்ட மற்ற மந்திரிகளாகிய தூமகேது-விருபாக்ஷன் - ஓமகோபன்-அக ம்பன் - சுதக்கினன் - முதலானவர்களெல் லாம் அவர்களைப்போலவே பலபலவித மாக வெறுத்துக்கொண்டார்கள். ஆனால் வஜ்ரமுஷ்டியென்பவன் அவையெல்லாங் கேட்டுப் பட்டுகத்தரித்தாப்போல் ஒருவார் த்தை சொல்லுகிறான். கேளுங்கள் எனது நண்பர்களே! இவர் அந்தக்கைகசியம்மன் வயிற்றிற் பிறந்தபோதே உலகஞ்சொன்ன தென்ன? அதற்கென்று வந்தேனே எனக் கென்னவேலையென்பதுபோல் அவர்வந்த கூத்தெல்லாம் ஆடித்தான் தீரவேண்டும். அதிலும் குலத்திற்பிறந்தபெண் மங்கிலிய மிழக்கும்படிக்குச் செய்து வைத்த குட்டிக் கலகக் கோமானாகிய மகோதரன் வயிறும் குளிர்ந்திராதா? ஏதேது இனிவழிப்படி

வதாயில்லை. நீங்களேன் வீணாய் ஒருவருட்ெனாருவர் முட்டிக் கொள்ளுகின்றீர்கள். நஷ்டமும் நயமுமான இவ்விரண்டுக்கும் பாத்தியப்பட்ட அந்த மகோதரன் இஷ்டப்படிக்கே நடக்கட்டுமென்றான். இதனையெல்லாங்கேட்ட ராவணன் ஆற்றிற்கரைத்த புளியாக்கி, தான்கொண்டதே சரியென்று பின்னும் மகோதரனைப் பார்த்தான். அக்காலவன் வெகு கோபங்கொண்டவனைப்போலாகி, ஓ இராவணேஷ்வரா! எனக்கேன் இந்தவிதி? நீர் சீர்படும்படி நான் அக்கரையாகப் பாடுபட்டால், அஃதுமது மந்திரிமார்களுக் கேற்கவில்லை. இனியென்னை யாதொன்றுக்கும் கேழ்க்கவேண்டாம். நானும் இந்தஜோலிக்கு வரப்போகிறதில்லை என்று வெகுவாய் நொந்துகொண்டான். அதுகண்ட ராவணன் உடனேயம்மகோதரனுக்குஅன்புபாராட்டி இனிய வார்த்தை சொன்னதின்மேல், அவனும் அதற்குச் சாந்தமானவன்போற் சம்மதிகாட்டி, (ஏபுத்திபோதேனு நாலஞ்சபுத்தி போவகலதா?) என்பதற்கிணங்க அந்த இராவணனை நோக்கிச் சொல்லுகின்றான். கேளும் தசக்கிரீவரே! நாம் இப்போது ஜெயம்பண்ணிய விடங்களெல்லாம் மிகவும் மேலான இடங்கள். அதிலும் வெகு சாமர்த்தியவான்களையெல்லாம் கெலித்திருக்கிறோமல்லவா? இவர்கள் பேச்சுப் பிரகாரம் நீர் கேட்பீராகில் இந்தவிதங்களெல்லாம் நடக்குமா? ஆனாலும் நானொன்று சொல்லுகின்றேன் கேளும். இப்போதே இலங்கைக்குச்செல்ல எனக்கும் இஷ்டந்தான். உம்மைவிட எனக்கு அதிக ஆவலுண்டு. ஆனால் நீர்திக்குவிஜயம்செய்யவந்து ஓரிடத்திற் றலைகாட்டிநின்று மற்றோரிடத்தில் போகாமலேயே நமது ஜெயப்ரதாபத்தைநாட்டினால் உலகமென்னசொல்லும் நங்கஞ்சொல்லாதோ? நீயும் அப்போது கவனப்படுத்தாமற் போய்விட்டாயே? யென்று என்மேற் கோபித்துக்கொள்ளுவீர். ஆதலால் என்னில் வஞ்சனையில்லாமல் இன்னுஞ்சொல்லுகிறேன். என்னைப்பழிக்கின்றவர்கள் பழிக்கட்டும். தெய்வலோகத்தில் இந்திரனுடைய கற்பகச்சோலையில் பிரமதேவருக்குநிகராகிய வசிஷ்டருடைய ஆசிரமத்தில் காமதேனுவின் முலைகளில் நின்றும் சுரந்துவரும் பாலால்நிறைந்த கடலுக்கதிபனாகிய வருணத்தீவில், அநேகங்கோடி விசித்திர சித்திரப்பதுமைக்குச் சமானமாகி மிகவும் ரூபலாவண்ய சௌந்தரியமுள்ள நூறுகோடி அப்சரஸ்திரீகள் தங்க விக்கினங்கள்போ லிருக்கின்றார்கள். அவர்களைப்பார்க்கப் பதினாயிரங் கண்கள் வேண்டும். இன்றைக்கெல்லாம் பார்த்திருந்தாலும் பசியெடுக்காது.

கேளும் இலங்கேஷ்வரா! அப்படிப்பட்டவர்களுக் கதிபதியானவன் வருணதேவன். அவர்களிச்சையையடக்க அவனால்முடியாது. நீரோ மிகவும் பலாஷ்டியர். மேலும் உலகமெல்லாம்மயங்கும் மன்மதசொரூபி. அதினும் காமாந்தகாரர். உமக்கு அவர்கள் கிடைத்தால், ஆ! ஆ! நானென்ன சொல்லுவேன்? உம்மைப் போலும் பிரதிஷ்டையும் பிரபலமும்பெற்றவன் ஒருவனும் இருக்கமாட்டான். அவ்வருணன் அவ்வளவாய் சூரனல்ல? அவனைமிகவும் எளிதில்ஜெயித்து அந்த அப்சரஸ்திரீகளையு மழைத்துக்கொண்டு பிறகு இலங்கைக்குச்சென்றால் நீர் சுகத்தையனுபவிப்பீர். நானும் மகிழ்வாய்க் கண்ணுக்கலங்காரமாகப் பார்ப்பேன். ஆனால் உமக்கிஷ்டமிருந்தாற் செய்யலாம். இல்லாவிடில் நீர் கருதியபடி லங்கைக்குச் செல்லலாம். என்று சமயோசித வார்த்தையாகப் பேசினான். அப்படி அவன் பேசுவதையறிந்த இராவணன் உடனேபெண்ணாசை மயக்கந் தலைக்கேறினவனாகி கூர்சீவிக் கொடுக்கும் மகோதரனைக் கொண்டாடி. சபாஷ்! நன்றாயிருக்கிறது. இப்பேர்ப்பட்ட யுக்தியும் தந்திரமுமல்லவா எனக்குச்சொல்லவேண்டும். அப்பா! என் இருபதுகண்களுக்கும் இனிய மகோதரா! என்னுயிரை இன்றல்லவா காப்பாற்றினாய். இதற்குப் பிரதியாய் உனக்கு நான் என்ன செய்யப்போகிறேன்? என்று பேரானந்த முற்றவர்போலெழுந்து அவனைத் தழுவிக்கொண்டு, மற்றும் அங்குள்ளவர்களைப்பார்த்து, நீங்கள் எல்லோரும் இனிமேல் இந்த மகோதரன் சொல்லுக்கு எதிர்பேசினாலும், இவனைத் தூஷித்தாலும், உங்களை இந்தத் தண்டாயுதங்கொண்டு தலைமண்டைசிதறவடிப்பேன். என்று ஆக்கியாபித்துத் தான்கொண்டபிரமையினால் உடனே சேனைகளைப் பிரயாணப்படுத்தி, தானும்

யுத்தகோலங்கொண்டு சர்வ ஜாக்கிரதை யுடன் புறப்பட்டான்.

### இராவணன் அப்சரஸ்திரீகளையும் தேவ ஸ்திரீகளையும் சிறையெடுத்தல்.

கேளும் ரகுநந்தனு! அப்போது பிரகஸ்தன்-மாரீசன் முதலானவர்களெல்லாம் அவன் வெளிப்படுகிற துரிதத்தைப்பார்த்து, இனியேது நாம் பிழைப்பது? அந்த மகோதரன்காட்டிய வித்தையாகிய பெண் மயக்கத்தாலல்லவா நம்மையுமெதிர்த்துப் பேசித் தலைமண்டையு முடைப்பேனென்ருன். நாம் இவன் பேச்செடுத்துப் பேசவும்படாது. இவனுப்புந்தண்ணீரும் நாம் கொள்ளுகிறபடியால் இவன் போகுமிடங்களுக்கு நாம் போகாமலுமிருக்கப்படாது. என்று நிதானித்துக் கொண்டவர்களாய் தங்கள் தங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்பால் அந்த இராவணன்மகோதரன்சொற்படி புஷ்பகவிமானமேறி வருணலோகத்தையடைந்து தனது பாரிய வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்துடங்காரவோசையெழுப்பி, அண்டகடாகங்களெல்லாம் அதிரும்படி அட்டகாசஞ்செய்து, அடா வருணு! அடா வருணு! என்று அலட்சியமாகக் கூவித் தன்னுடைய வில்லில் ஒரு அக்கினியாஸ்திரத்தையெடுத்துத் தொடுத்துப் பிரயோகஞ்செய்தான். இப்படி அதைப் பிரயோகஞ்செய்யும்போதே அதில்நின்றும் புறப்பட்ட எண்ணிறந்தகோடி தணலாஸ்திரங்கள் வடவானலம்போற்சீறி, உலகங்களையெல்லாம் எரித்துச் சமுத்திரத்தையுங்கலக்கித் தகிப்பதனுல் அந்தக் கடலிலுள்ள சகலவித ஜீவராசிகளும் சுருண்டு புரண்டு மடிந்தன. ஆதிசேஷனும் இதென்னஇவனுக்குவந்த பொல்லாத காலமென்று தத்தளித்து உடல் நெளித்தான். ஸ்ரீ மஹாலக்ஷிமியும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பார்த்து, சுவாமி! இன்னம் எத்தனைகாலந்தான் இவனுல் இவ்வுலகங்கள் தத்தளிக்கும்? நீரும் பராமுகஞ் செய்யலாமா? என்ருள். அதுகாலையில் வருணராஜன் தேவலோகம் போயிருந்தபடியால் அவன் புத்திரர்களாகிய கோமுகன்-புஷ்கரன் என்னும் இருவர்களும் போர்க்கோலங்கொண்டு அந்த இராவணனை யெதிர்த்து அவனேவிய அக்கினியாஸ்திரத்துக்குப் பதில் வருணுஸ்திரத்தையேவித் தணித்தார்கள். உடனே இராவணன் அர்த்தசந்திரபாணத்தையேவினுன். அதற்கவர்களும் எதிர் அஸ்திரங்களை விடுத்தார்கள். இவ்விதமாயவ்விருவர்களுக்கும் வெகுநேரம் யுத்தம் நடந்துவருகையில் மகோதரன் சொற்படி இராவணன் சூலாயுதத்தையெடுத்து அபிமந்திரித்து விடுத்தான். அந்த மகிமையுள்ள சூலாயுதமானது புறப்பட்டுச் சர்வமுந் தகித்துக்கொண்டு பயங்கரமாகவரும்போது ஆகாயத்தில் தற்செயலாய் அசரீரி தோன்றி யுரைத்தபடிக்கு அச்சிறுவர்களாகிய இருவர்களும் தங்கள்படையுடனின்று ஓ சிவசங்கரா! ஓ சம்போ! ஓ மஹாதேவா! ஓ பாலலோசனு! ஓ பார்வதிசமேதா! ஓ தற்பரானந்தா! ஓ பரம்பொருளே! என்று சிவத்தியானஞ் செய்தார்கள். அதுகண்ட அந்தச் சூலாயுதமானது மீண்டும் இராவணிடம் வந்து சேர்ந்தது. உடனே வருணராஜன்தேவி தன் பிள்ளைகளை சந்திசெய்துகொள்ளும்படி உத்திரவுசெய்ய, அவர்களும் அதற்குச் சம்மதித்திருந்தார்கள். அப்போது யாவரும் பயந்தீர்ந்தார்கள். அக்கால் மகோதரன் இராவணனைப்பார்த்துச் சொல்லுகிருன்.

ஐயா இராவணேஸ்வரா! இதுசமயம் வருணராச னில்லாதகாலமா யிருக்கிறபடியால் நீர் கருதிய பெண்களை யாதொரு தடையுமின்றிச் சிறையெடுக்கலா மென்ருன். அதுகேட்ட ராவணனுனவன் மீறி, ஈதொரு கந்தாயமென்றுகூறி வருணன் இல்லாததருணமென்று அவன் லோகத்துட்பிரவேசித்து, கொக்கினங்களின்மேல் ராசாளி பாய்ந்ததுபோல அப்சரஸ்திரீகளுடைய அரண்மனைகள்தோறும் பாய்ந்து, அவரவர்களும் அலங்கோலப்பட்டு கண்ணீரிறைத்துத் தாமரையிலையின் நீர்போற்றவிக்கவும், வாயிலறைந்துகொள்ளவும், ஒருவரையும் விடாமல் பலாத்காரமாய் அந்தநூறுகோடி அப்சரஸ்திரீகளையும் பிடித்துப் புஷ்பகவிமானத்திலடைத்தேற்றிக்கொண்டு தன் சேனையுடன் அவ்வூரைவிட்டுக் ககனமார்க்கமாய் அப்பால் செல்லுகிருன். அக்காலந்த அப்சரஸ்திரீகளெல்லாம் அழுதுப் புலம்புவதைத் தன்

காதுகளாற் கேட்டும், கண்களினுற் பார்த்தும், சற்றும் இரக்கமில்லாதவனுகி, பின்னும் மகோதரனைப் பார்த்துச் சொல்லுவான். அப்பா மகோதரா! என்மீது நீ வைத்திருக்கும் அன்பு இப்போதுதான் தெரியவந்தது. அந்தமட்டும் உன்னைக்குருத்துவமாய் நம்புவதற்கு நீயும் தக்கபடி உள்ளன்புவைத்துச் செலுத்துகின்றுய். இதற்குநானென்ன கைம்மாறுசெய்வேன்? இன்னம் இப்பேர்ப்பட்ட பெண்கள் எந்தயிடத்திலிருந்தாலும் இப்போதேசொல்லிவிடுக; என்று கேட்கவும் மகோதரன் சொல்லுவான்.

தசக்கிரீவன் தேவலோகத்துப் பெண்களை சிறையெடுத்தல்.

கேளும் ஸ்ரீராமா! (பிறன்பொருளாட்டொழுகும் பேதைமைஞாலத் தறம்பொருள் கண்டார்கணில்) என்றும், பரஸ்திரீகமனம் பரலோக நாசனமென்றும், பிறர்மனைபுகாமை அறமெனத்தகும் என்றும், தருமநீதி சாஸ்திரங்களெல்லாம் சொல்லியிருக்க, இந்தத் துன்மார்க்கனுகிய இராவணன் மேற்கூறிய வருணலோகத்து அப்சரஸ்திரீகளைச் சிறையெடுத்ததே இவன் தலைக்குத் தாம்பூலமாயிருக்க, பின்னும் பெரும்பாவத்துக்கும் நரகத்துக்கு மேதுவாகியசெய்கைகளையே தனதுகவனத்திற்கருதிதலைமாட்டுகொள்ளியொத்த நிலைகாட்டு மகோதரனை யடுத்து வினவினபடியால், அவனும் ஆடு நனையுதென்று கோனுய்க்கென்ன துக்கம் என்பதுபோலப் பளுவேறுவதெல்லாம் நமக்குச் சுளுவேயல்லது வேறல்லவென் றெண்ணினவனுகி, ஐயா பிரதாபலங்கேஸ்வரா! தெய்வலோகத்து பெண்களெல்லாம் மகா சௌந்தரியமுள்ளவர்கள். இந்த ஸ்திரீகளைப்பார்க்கிலும் அவர்கள் வெகு மேலானவர்கள். அவர்களும் உமக்குக் கிடைக்கப்பட்டவர்களல்ல. ஆனுல் நீர் இந்தக்ஷணம் யமுனுநதிக்குப் போனுற் பார்க்கலாம். அவ்விடத்தி லவர்கள் நிதம்ஸ்நானஞ்செய்யும்நிமித்தம் வருவதுண்டு. அவர்களுக்கு இரதிதேவி முதலானவர்களும் தொண்டு செய்வார்கள். ஆதலால் உமக்கு இஷ்டமானுல் போய் வரலாமென்றுன். அதுகேட்ட தசக்கிரீவன் தன்னுடன்வந்த தளங்களையெல்லாம் நிறுத்தி அப்சரஸ்திரீகளுக்குக் காவல் வைத்து, அவர்கள் வெளிவருவதானுல் உடைவாளால் உடனே வெட்டிவிடும்படி ஆக்கியாபித்து, பால்பானைக்கு முகப்பமிட்டுச்செல்லும் பூனைபோல் தான் புஷ்பக விமானத்திற்சென்று, அந்த யமுனுநதிக் கரையில் நின்று அங்குவந்திருக்கும் தேவதாஸ்திரீகளைப்பார்த்து. ஆ! ஆ! பெண்கள் சிகாமணிகளே! என்னை யறிவீர்களா? என் புகழை நீங்கள் கேட்டது இல்லையா? என்று தனக்குள்ள கீர்த்திப்புகளையெல்லாம் பிரபலமாக ஒன்றுவிடாமல் அவர்களுக்குச்சொல்லி, பின்னும் தனக்கு இந்தத்திரிபுவனங்களும், திரிமூர்த்திகளும், மற்ற யாவத்திராளும் நடுங்குவதாயும் சிரிப்புடன் புகன்றுன். அதுகளைக்கேட்ட அவர்கள் பூனைமுன்பு எலியொத்தவர்களாகிப் பதுங்கிப் போவதற்கும் இடமில்லாமல் அடா பாதகா! அடா துரோகி! அடா சண்டாளா! இங்கு முழம்போட வந்தாயாவென்று புலம்பினுர்கள். அதனுல் இவன் அவர்களை வலுவிலிழுத்துக்கட்டி புஷ்பக விமானத்தடைத்தும், சிலரைச் சீறுமாறுபடச்செய்தும், சிலரைக் கூந்தல்களையறுத்தும், சிலரை வாயினுலுஞ் சொல்லக்கூடாத அலங்கோலஞ்செய்தும் ஆக்கிரமித்துக் கொக்கரித்திருந்தான்.

அதுகாலையில் ஓடிவிட்டவர்கள் சிலபேர்; ஓடும்போது வாளால் வீசியதனுல் வெட்டுபட்டு இறந்தவர்கள் பலபேர்; தங்களுக்குத் தாங்களே வாடி யிறந்துவிட்டவர்கள் சிலபேர்; இந்தச் சங்கதியைத் தேவர்களுக்காவது அறிக்கைசெய்யலாமென்று நாடிச்சென்றவர்கள் பலபேர். இப்படி நானுவிதமாகப் போனவர்கள்போக மற்ற எண்பதுகோடி ஸ்திரீகளைச் சிறையெடுத்துக்கொண்டு வரும்போது அவரவர்கள் புலம்பி யழுகின்ற வோசையானது உலகமெல்லாம் செவிடுபடவாகி, அவர்கள் கண்களினின்றும் வடியாநின்ற நீரானது எங்கும் ஆறுய்ப்பெருகி ஓடிக்கொண்டிருந்தது. வானவழியாய்ச்செல்லும் பாவியான இராவணன் தனது மூடத்தன்மையால் மகோதரனைப்பார்த்து, அப்பா என்னுயிர் துணைவனே! இதென்ன ஆறுகள்? நாம் எவ்வளவுதூரம் சென்றுலும் நம்முடனே

கூட வளர்ந்து வளர்ந்து வருகின்றதே? என்முன். அதற்கவன் ஐயா ராவணேஸ்வரா! நீர் இந்த தேவகன்னிகைகளேயும் அந்த அப்சர ஸ்திரீகளேயும் சிறையெடுத்து வருவதைக் கேள்வியுற்ற இவர்களுக் குரியவர்களாகிய இந்திராதிதேவர்களும் வருணராசனும் சந்தோஷமடைந்தவர்களாகி கூடினவரையில் தக்கநாயகன் நமது குலப்பெண்களுக்குக் கிடைத்ததே நாம் செய்த பாக்கியமென்று ஆசீர்வதிப்பதையறிவிக்கும்பொருட்டும், தேவரீர்திக்குவிஜயஞ்செய்து இளேப்புடன்செல்வதால் வழியில் அந்த ஆயாசம் தீரும்பொருட்டும், உமக்குக் குளிர்ந்த காற்றுண்டாகும்படியாயும், வருஷம் வருஷிக்கக் கட்டளேயிட்டதனுல் அந்த மழையானது இவ்வுலகங்களேயெல்லாம் குளிரச்செய்ததுமன்றி உமக்கும் விடாய்தீரப் புனலேவாரி இரைக்கிறதென்முன்.

அதுகேட்ட ராவணன் வெகு ஆநந்தக் கடலில்மூழ்கினவனுகி இருபதுபுஜங்களும் இருநூறு புயாசலங்களாய் விம்மப் பரவசமடைந்தான். அக்கால்வானத்தில் அசரீரியானதுதோன்றி, அப்பா ராவணு! அதை நம்பாதே. உன்னேத்தொடர்ந்துவரும் இவ்வாமுனது நீ சிறையிட்ட ஸ்திரீகளின் கண்களிலிருந்து பாய்ந்தோடி வரப்பட்டது. இதைத்தண்ணீரென்றும், குளிர்ச்சியுடையதென்றும் நினைக்காதே. இஃதுன் குலத்தை யறுக்கவந்த மிகவும் வெப்பமாகிய அக்கினிக்குச் சமதையாகிய கூர்மையுள்ள வடிவாளென்று நினேந்துகொள்ளுக. எனச்சொல்ல அதைத் தான் கேட்டும், அவன் தோய்ந்திருக்கும் ஆசையினுல் கிஞ்சிற்றேனும் நினேக்காதவனுய் இவனேக் கவுரவப்படுத்திப் பேசிய மகோதரனுக்குப் பின்னும் உபசாரங்களேச் செய்து வெகு ஆடம்பரமாக கலந்து பேசிக்கொண்டு, முன்பின்வருவதறியாத அற்பச்சந்தோஷியாய் இன்னம் எவர்களிருக்கிமுர்கள் நமக்கெதிரியானவர்களென்றும், இப்பேர்ப்பட்ட ஸ்திரீசாதிக்கூட்டங்களிருக்கிறயிடங்கள் இன்னமுண்டாவென்றும், அப்படியுண்டாயின் அவர்கள் தலேமீதுங் கையை வைக்கலாமென்றும் யோசனேயில் இருந்தான்.

## தேவர்கள் இரங்கல்.

கேளும் கௌசலேநந்தனு! ஒன்றல்ல இரண்டல்ல எண்ணிறந்தகோடி ஸ்திரீகளே இவ்வாறு அல்லோலகல்லோலப்படுத்திக் கஸ்தியடையச்செய்து சீர்மாறுபடச் சிறையெடுத்துக்கொண்டு போனதைக் கேட்ட தேவர்களெல்லாம் ஆ! ஆ! ஆ! என்றெழும்பி கோவென்றலறி, திரேகத்தை மறந்து சோர்வையடைந்து, நீந்துதற்கும் அரிதாகிய மகா துக்கசமுத்திரத்தில் மூழ்கினவர்களாகி, ஆத்திரமொருபக்கம் எழும்பவும், க்ஷாத்திரமொருபக்கம் துடிக்கவும், மானமொருபக்கம் வலிக்கவும், அக்கினிப் பொறிகள் கண்களிலிருந்து குபீலென்று ஜொலிக்கவும், ஐயையோ!! என்று கூவி, ஆ! தெய்வமே! என்று தாவி, இனிமேல் நமக்குள் என்னபுருஷவீரத்தனம் இருக்குதென்று மேவி, இந்தவெட்கத்தை யடைவதைவிடச் சாகலாகாதா நமதாவி? எங்குளது பச்சைநாவி? ஆ! ஆ! இப்படியுஞ் செய்தானு அந்த மகாபாவி. என்று பிரலாபித்தவர்களாய் இதற்கென்ன செய்வதென்று நினேத்து, தெய்வம் இவனுக்குஞ் சகாயஞ் செய்கிறதல்லவா? கண்ணுள்ள தெய்வமாகில் இப்போதே நமதுகண்முன்னம் காட்டிவைக்காதா? இப்படியும் பெண்களேச் சிறைபடுத்தலாமா? எங்களுக்காருந் துணேயில்லேயே; ஓ ஹரிஹரிமாதவா! ஓ கேசவா! ஓ வைகுந்தா! ஓ க்ஷீராப்திநாதா! நீரும் இப்படிக் காட்டிக்கொடுத்துவிட்டுக் கடக்க நிற்கின்றீரே; இஃதுமக்கு ஞாயந்தானு? என்று கிஞ்சிற்றும் ஓரிடத்திலும் தரியாதவர்களாய்த் துடிதுடித்து, ஓடோடியும் திருப்பாற்கடலே யடைந்து, அவ்விடத்தில் ஆலிலேமேற் றுயில்கூரும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கண்டு சேவித்துத் தலேமேற் கைகூப்பித் துதித்து நின்று, ஓ ஜெகதீசா! இதுவும் உமது விளேயாட்டல்லவா? இன்னம் எப்போதுதான் அந்தப் படுபாவியாகியசண்டாளனேச் சம்மரிப்பீர்? தேவரீருக்கு இவ்வளவு தாமதமாமா? அவனெங்களேப் பண்ணுத கோலங்களெல்லாம் பண்ணியதுமன்றி இப்போது எங்களுடைய பெண்களேயும் துராக்கிரமமாகச் சிறையெடுத்து மானபங்கமாய்ச் செய்யாத

காரியங்கள் செய்கின்ருனே; ஓ கமலக் கண்ணு! ஓ தாமோதரா! ஓ ஸ்ரீதரா! இவ் விதமாக நாங்கள் வருந்துவதும் உமக்கு வேடிக்கைதானே? என்று பலவாருய் துக் கப்பட்டார்கள். அவ்வாறு அவர்கள் படு வதை என்னையாளும் எம்பெருமானுரறி ந்து, அருள் நிறைந்த இருதயம் மகிழ்ந்து திருவாய்மலர்ந்தருளுவார்.

க்ஷீராப்திநாதன் தேவர்களுக்கு
உறுதி கூறல்.

கேளுங்கள் தேவர்களே! ஒருவன் ஒரு விதையெடுத்தூன்ற அதுமுளைந்து பெரிய விருக்ஷமாகவளர்ந்து எங்கணும் பரவிநிற் பதுமல்லாமல் பின்பதுயாவர்க்கும் வெறுப் புண்டாகும்படியானதாயும் வெட்ட வெட் டத் தளிர்ப்பதாயுமிருக்குமானுல், அதனை அவன் என்ன செய்யவேண்டுமோ அது தானே செய்யத் துணியவேண்டும். அதை விடுத்து வீணில் மேலாகவெட்டி எறிவத ஞல் என்ன பிரயோஜனம்? ஆதலால் அந்தவிருக்ஷத்தின் ஆதாரவேரோடுசெல்லி வேர்களையும் பாதாளம் வரையிற் கெல்லி யறிந்து சிதைத்து, அதுகளில் ஒன்றும் பற்றில்லாதபடிக்கும், அவ்விருக்ஷத்தின் சார்பொன்றுமில்லாதபடிக்கும், வெட்டி வெளியிலெடுத் தெறிந்துவிட்டால் பிறகு முளைப்பதுண்டா? அதுபோல அவனை இப்போது நாம் கொன்ருலும் சாகான். தண்டித்தாலுங்கேளான். மேலும் அவனு டன் போவதல்ல. அவனிலும் இன்னம் விசேஷமாகிய கொரேத்தன முள்ளவர்க ளெல்லாம் அவன் கையின்கீழிருக்கிருர்க ளாதலால், அவர்களெல்லாங்கூட மாள வேண்டியிருக்கிறது. ஆச்சுது: இன்னஞ் சிலநாள்மாத்திரம்பொறுத்திருங்கள். இது வரையிலும் அவனுக்கு நாற்பதுலக்ஷம் வருஷமாகிவிட்டன. காலம் நெருங்கநெரு ங்கக் கோலங்கள் அதிகமுண்டாகிக் கிள றும். அதற்கெல்லாம் நாம் அந்தச்சமயத் துக்கு அவன்பேரில் துவேஷிப்பது சரிய ல்ல. அதிலும் உங்களுக்கும் அவனுக்கும் வெகு தாரதன்மியமிருக்கின்றது. நாமெல் லாம் அவனைக் காலமல்லாத காலங்களி லெல்லாம் இலேசாய்ச் சந்திக்கப்படாது. இதுவுமல்லாமற் பிரமாவானவர் கொடுத்த வாழும், கைலாசபதியருளிய ஆயுளும்' கணக்குப்படிக்கு நடந்தேறவேண்டி யிருக் கின்றன. அதற்குள்ளாக நாமும் அவனை விரோதஞ் செய்யப்படாதாதலால் நீங்கள் பொறுத்திருக்க வேண்டும். அவனுக்கு இவைகளெல்லாம் இப்போது சந்தோஷ மாகவும், உங்களுக்குத் தீராத்துக்கமாகவு மிருந்தால், பின்னிட்டு நீங்கள் சவுக்கியம் அடைவீர்கள். மேலும் நாம்அவனைப்போ லல்ல. நமக்குள் அநேகவிதிக ளிருக்கின் றன. "கறுத்தின்ஞசெய்தவக்கண் ணுமறுத் தின்ஞ செய்யாமை மாசற்ருர்கோள்" என் றும், முற்பகல்செய்யிற் பிற்பகல் விளையுமெ றும், "பிறர்க்கின்ஞ முற்பகற்செய்யிற் றமக் கின்ஞ பிற்பகற்ருமேவரும்." என்றுசொல் வதுபோல நாமும் தூறப்படாது. அவ னும் அநுபவியாமல் விடான். ஆனுல் இப்போதவன் அநுபவித்துக் கொண்டு வருவது அவனுக்குத் தோற்ருமலிருக்கின் றது. எதற்கும் அவனைச் சமூலப்படுத்த அவனுள்தானே ஒருவன் தோன்றியிருக் கின்ருன். அந்த மகோதரனுக்கு இவன் ஆதியிலிழைத்த ஒரு தீங்கை அவன் தன் கெற்பத்தில்வைத்துக்கொண்டே உறவாடி இவனுக்கு இனியவைகளை செய்வதுபோற் காட்டிக்கொண்டு அவனுக்கு நாளுக்கு நாள் எடுக்கமாட்டாத் தலைச்சுமையாக்கி வைக்கின்ருன். இனி அவன் தனது சுய வேலையாய்ப் பார்த்துவருவானே யல்லது, அதற்கென்று ஏற்பட்டும் சும்மாவிடுவானு? உங்களுக்கேன் வீணன கவலை? அதிலும் இன்னமொன்று கேளுங்கள். அவன் கால த்துக்கேற்றபடி அவன் தங்கையாகிய சூர் ப்பநகியின் புருஷனையுங் கொன்றுவிட்ட படியால், அவள் மங்கிலிய மிழந்துவிட் டாள். இனி நான்கூட அவனைச்சங்கரிக்க வேண்டுமா? கோடாலி காம்புபோல் உங்க ளுக்கு அவன்செய்த பாவமும் உலகவாத னையும்ஒன்ருய்ச்சேர்ந்துஅவ்வாருகி, அவ ளைப் பிரசண்டமாகவுண்டாக்கி மூட்டிவிட் டிருக்கின்றன. ஆச்சுது: இனி அவள்கை யிற் கங்கணங் கட்டிக்கொள்ளப்போகிருள். தன்னைப்போல் அவன் பெண்டிர்களையும் ஆக்காமல் விடாள். அந்த வஞ்சகம் அவ ளுக்குள் பால்வார்த்து வளர்க்கும் பாம்பு போல் வளர்ந்து படுவிஷத்தை வைத்துக் கொண்டு, இனி அவனையும் அவன் குலத்

த்தையும் படுசூரணம் பண்ணும்படியான முகாந்திரத்துக்குக் கொண்டுவந்து விடப் போகிறாள். நீங்கள் அவளை இலேசாக நினைக்க வேண்டாம். நேராய் கண்ணுக்கு முன்பாகவே பார்க்கப்போகிறீர்கள். அப்பால் உங்களுக்கொரு துன்பமும் இருக்க மாட்டாது. நீங்கள் ஏன் வந்து என்னை அடிக்கடி நொந்துக் கொள்ளுகிறீர்கள்? வானத்தின்கீழ் குடியிருந்து வருஷத்திற்குப் பயப்படலாமா? உரலிற் றலைகொடுத்து விட்டுப் பின்பு உலக்கைக்கு அஞ்சலாமா? ஆதலால் என்னைப் பழிகாரனுக்காதீர்கள்? என்று உரைத்துவிட்டார். அவர்களும் தெய்வலோகத்தை யடைந்தார்கள்.

## ராவணன் கின்னரஸ்திரீகளாதியோரைச் சிறையெடுத்துக்கொண்டு லங்கை சேர்தல்.

கேளும் ஸ்ரீதாசரதி! இங்கே தேவர்கள்செயல் இவ்வாறாக, அங்கே பாவங்களையெல்லாம் மூட்டையாகக் கட்டிக்கொண்டு செல்லும் ராவணனுக்கு மகோதரன் பின்னுஞ் சொல்லுவான். ஐயா ராவணேஸ்வரா! நீர்கேட்டுக்கொண்ட ஸ்திரீகள்விஷயத்திற்கவனம்வைத்து நானும் யோசித்து பார்த்தேன். ஆனால் உம்மைப் பார்க்கும் போதே எவ்விதப் பெண்டுகளும் ஆவல்கொண்டு நாடுகிறபடியால் எனக்குஞ் சுலபமாகவிருக்கின்றது. உமக்கும் வேலை தீர்ந்தாற்போலிருக்கின்றது. மாணிக்கமிருக்குமிடத்தைக் குருடனுக்குக் காட்டி என்ன பிரயோசனம்? மலடிக்கு மைந்தன் கதைகளைச்சொல்லியென்னபயன்? சரசசையோகங்களின் கூறுபாட்டைப் பேடிகளுக்கு உரைத் தென்னகுணம்? உம்மைப்போல் சகலவிதத்திலும் கைதேர்ந்து நல்லகுணத்தையும் திடத்தையும் திவ்வியாலங்கிருத வழகினையும் பெற்றவர்கள் யாரிருக்கின்றார்கள்? ஐயா தசக்கிரீவரே! கன்னிவைத்துப் பறவை பிடிப்பதுபோல் நாமும் இலக்கு வைத்துக்கொண்டு இதுவரையில் கிடைப்பதற்கு மரிதாகிய அப்சரஸ்திரீகளையும் பார்ப்பதற்குங் கிட்டாத தேவகன்னிகைகளையும் சிறையெடுத்தோம். உமது மனதினிஷ்டப்படிக்கு அவர்களெல்லாஞ் சித்தித்ததும் அவர்களை நீர் சிறையெடுக்கப் பெற்றதும்ஒருபெரிதல்ல. இன்னமொன்றிருக்கிறது. அதுமிகவும் கந்தாயபலமாயிருக்கும். அது யாதெனில்: பாகீரதிதீர்த்தத்தில் கின்னரஸ்திரீகள் பத்துலக்ஷம்பேர்கள் நீர்விளையாட வருகிறதுண்டு. அதற்கு மிதுதான் சமயம். இந்தக்ஷணமே போவோமேயாகில் அவர்களும் வெகுலேசாய் கிடைப்பார்கள். என்று மிகவும் உத்தம புருஷன்போல் மெத்தவும் தாபந்தரியத்துடன் சொல்லினான். இப்படி அம்மகோதரன் சொல்லிமுடியுமுன்னமே இராவணனனவன் தாவிக்குதித்து, தோளைத்தட்டிக் குலுங்கச்சிரித்து, உண்டுருசிகண்டவனும் பெண்டுருசிகண்டவனும் ஓயாது அலைவனென்பதுபோல் வில்லிட்டகணையினும் அதிக மனோவேகமாக வெகு ஆவலுடன் அந்த பாகீரதி தீர்த்தத்தை யடுத்து மாரீசன் முதலானவர்கள் தடுக்க, தான் கொண்டதே சரியென்று நடக்க, அங்கிருந்தவர்களெல்லாம் நடுநடுக்க, கின்னரர்களெல்லாரும் துன்பத்திற்படுக்க, பின்னும் அந்த ஸ்திரீகளெல்லாம் சாபங்கொடுக்க, அவர்களையெல்லாஞ் சிறையெடுத்து, உடனே சகலலோகமுங் கலங்க ஆர்ப்பரித்துவந்து மகோதரனைக்கண்டு, இன்னம் என்னசேதி ஏதாவதுண்டா? என்றான். அதற்குஅவன் ஐயா இலங்கேசா! உமக்குத்தானா பெண்டுக்குக் குறைவு? இன்னும் அநேகமிருக்கின்றன. நானும் உமதுபேரில் வைத்த அன்பினால் எனக்குள் நெடுநாளாக வைத்துக்கொண்டிருந்த இடங்களை யெல்லாம் உமக்கே தெரிவித்துவிடுகிறேன். எனக்கு உம்மைவிட யாரிருக்கின்றார்கள்? நீருமந்த வேலைக்கென்றே வந்தவர். உமக்கிப்போது நல்லோலை கிள்ளாக்காக இருக்கின்றது. உமது செங்கோலுக்கு முன் சங்கீதமும் உண்டா? உமது நல்லகாலபலத்தினால் மண்ணும் தங்கமாகிவிடும். நீர்மாத்திரம் பிரவேசிப்பதானால் நானும் அடுக்கடுக்காகச் சொல்லுகிறேன் சற்றே இளைப்பாறியிரும். என்று மகோதரன் பூமேலேற்றி, இன்னும் யக்ஷகன்னிகைகளும், கந்தருவ கன்னிகைகளும், இராஜகன்னிகைகளும், பிராமணகன்னிகைகளும் ஆகிய பலவகை கன்னிகைகள் இன்னின்ன விடங்களில் இன்னின்னபடிக் கிருக்கின்றார்கள் என்று ஓரேதடவையாய்த் தன் வஞ்சந்தீரும்படிக்

குச் சரவத்திவைத்ததுபோற்சொல்லிமுடித்தான்.

இப்படி மகோதரன் சர்க்கரைக்கஞ்சி வார்த்துப் பக்குவமாய்ச் சொல்லியவாறே இராவணன் அச்சொக்குப்பொடியி லகப்பட்டுச் சக்கரம்போற்சுழன்றுசென்று அக்கன்னிகைகளை யெல்லாம் சிறையெடுத்து, ஆக முன்னூறுகோடி ஸ்திரீகளுடனும் இலங்கைக்குப்போக மிக்க மதத்தையடைந்து உக்ரமாகத்திரும்பி, தனது சதுரங்க சேனைகள்முதலிய சர்வத்திராளு மருவிவர நடந்துவருகிறன். அக்காலையில் சிறைபட்ட ஸ்திரீகளெல்லா முறையிட்டழவும், அவர்கள் கண்களிலிருந்து நீரானது வடிந்து சமுத்திரத்தினும் பெரிதாகி ஓடவும், அவரவர்கள் தலைவிரித்துப் பசுவைப்போலேகதறவும், இப்படி அவன் அல்லோல கல்லோலஞ் செய்துகொண்டு ஆடம்பரமாய் வருவது எப்படியிருந்ததென்றல், வீட்டிற்பிறந்த பெண்ணுகிய சூர்ப்பநகியின் புருஷன் காலஞ்சென்றமையால் அதற்காகக் காலக்ஷேயாகிய அசுரப்பெண்களெல்லாம் கூடிக்கொண்டு வந்து விசாரித்து துக்கங்கொண்டாடுவதுபோ லிருந்தது. மேலும் அந்த ஸ்திரீகளெல்லாம் தலைவிரிகோலமாகித் தீராத் துயரையடைந்து இனி எவ்வாறு பிழைப்போமென்று ஏங்கினவர்களாகி, அடா ராக்ஷதா! அடா பத்துத்தலையா! அடா பாவி! அடா சண்டாளா! அடா துரோகி! எங்களையும் இப்படி பொசுக்குவாயா? நாங்கள் என்னசெய்தோம்? மசகம்போலிருக்கிற நாங்களும் உனக்கோரெதிரா? எங்களை இனியாகிலும் விட்டுவிடப்படாதா? பதைபதைக்கப் பச்சைக்கிளிகளைப் பிடித்துக் கூண்டிலடைப்பதுபோல் எங்களைப்பிடித்து நிரேதுவாய் இவ்விமானத்தி லடைத்துக்கொண்டு போகின்றயே? எவ்விடஞ் செல்கின்றய்? அவ்விலங்கையில் எங்களைக் கொண்டுபோய் வைத்து எங்கள் வாழ்நாளைக் கொள்ளை கொள்ளவா நினைத்திருக்கின்றய்? அடா துன்மார்க்கா! நாங்கள் இப்படி வயிறெரிந்து வாடித் தவிப்பது வீண்போமா? உனக்கு அஃதிடிக்காமல்விடுமோ? எங்களுடைய இச்சையை நீ அனுபவிக்க வெண்ணியபடியால் உன்தேகத்தை அக்கினி தகிக்காதா? எங்களை நாடிவந்த உனதுகால்களை எமதூதர்கள் வெட்டியெறியார்களா? பதிவிரதாசிரோமணிகளாகிய எங்களைவிருப்பமுடன்பார்த்த உன் கண்களை நுங்கின்கண் தோண்டுவதுபோற் கழுகினங்களெல்லாங்கூடிக் குத்திக்குத்திக்கிளராதா? வம்புவார்த்தைகளால் வாவென்றழைத்த வாய்களிற் புழுக்கள் சொரியாதா? அடா பெண்களையலையக்கண்ட பிசாசே! எங்களை வலிய விழுத்துப்பற்றிய உன்காங்களைப் பனந்தறிபோல் வெட்டித்தறியார்களா? எங்கள் பெண்பாவம் பிடித்து நீ பேய்போலலையாயா? ஒருவன்பெண்சாதி மற்றொருவனுக்குத் தாயென்பதும், பிறனில்விழையாமையேபேரறமென்பதும், அறிந்திலாயா? அடா மட்டிக்கிடாவே! உனக்கு நாங்கள் இடும் இச்சாபங்கள் வீணுகப் போகுமா? பெண்டுகளை யலையக்கண்ட சண்டாளரைத் தண்ட காலனுனவன் கண்டகண்டமாக வெட்டித் தண்டிக்காமல் விடுவானு? அடா அற்பனே! இந்தக்காலத்தில் எங்களை இக்கோலஞ் செய்கிறபடியால் ஒரு ஸ்திரீயினுல்தானே நீநாசமாகிப்போவாய். எங்கள் தலைவர் கூக்குரலைக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டிருக்கும் பாக்கியவானுகிய ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் இன்னம் எத்தனைநாள்தான் பொறுத்திருப்பாரோ? அவரும் பாணந்தொடுப்பது எக்காலம்? உனக்குஞ் சாணந்தெளிப்பது எக்காலம்? அடா பாதகா! என்று ஒவ்வொருவரும் நானுவிதமாகச் சாபங்கூறினுர்கள்.

இப்படி முந்நூறுகோடி ஸ்திரீகளும் ஓவென்றலறிச் சாபமிடுவதைக் கேட்ட ராவணன் மகோதரனைப் பார்த்து, அப்பா புண்ணியவானே! இதென்ன கொள்ளை? ஐயோ! இவர்களெல்லாம் இப்படி தூஷித்துச் சாபமிடுகிறுர்களே? இவைகளையெல்லாம் கேட்டு மனந்தாளவில்லையே; என்காதும் புளித்துப்போகின்றதே; இதற்கொரு வழிசொல்லையாவென்றன். அதற்குஅவன் சேட்பத்துக்கேற்ற கோட்பாடான வைத்தியனைப்போல் ராவணனைப்பார்த்து, ஐயா லங்கேஸ்வரா! இவர்கள் ஒய்யாரமாகக் கைகளை நீட்டி நீட்டி அய்யா! அப்பா! அம்மா! என்று தவிப்பதெல்லாம், நீர் மெய்யாக விட்டுவிடுவீரென்று பொய்யாகவே புகலுகின்றுர்களே யல்லது அவர்களாற் செய்யப்போகிறதொன்றுமில்லை. நீர்

என்ன அப்படிச் செய்யாதகாரியஞ்செய்து விட்டீர்? ஈதெல்லாம் வையகத்திலடுத்த காரியந்தானே. நாம் இந்த நையப்பாட்டுக்கோ நடுங்குவது? இனியுய்யும் வழியைத் தேடும். என்றவனைப் பையப்பையத்தேற்றினான். அதனால் தசக்கிரீவன் பயித்தியந் தேறினவன்போல் தேறி, அப்பா மகோதரா! இனிநடக்கவேண்டியதென்னவென்றான். அதற்கவன் நாம் இனிநேராய் நமது பட்டணத்துக்கே செல்லவேண்டுமென்று உரைத்தான். அம்மாத்திரத்தில் ராவணனவன் சர்வத்திராளுடன் புஷ்பகவிமானத்தைத் திருப்பி, சகல மேளவாத்தியங்களும் முழங்கும்படியாய் மகா சந்தோஷானந்தவைபவத்துடன் லங்காபுரியில்வந்து சேர்ந்தான்.

## இராவணனைக்கண்டு சூர்ப்பநகி புலம்பல்.

இவ்விதமாக லங்கைப் பட்டணத்தில் இராவணன் வந்து இறங்கியிருக்க, அவ்விடம் காலகேயரோடுவிளைத்த போரில் தன் தங்கைபுருஷனாகிய வித்துருச்சிங்குவனைச் சம்மரித்துவிட்ட சேதியை அச்சூர்ப்பநகியானவள்கேட்டு, ஓடோடியும் ரணக்களத்திற்குவந்து, தன்புருஷனைக் கண்டெடுத்து வாரி மடியின்மீது வைத்துக்கொண்டு, கடகடவெனப் புரண்டு, பூதவேதாளங்களும் பிர்மிக்கக் கதறி, அலங்கோலமாகக் கூந்தலைவிரித்து மார்பிற் புடைத்துக்கொண்டு, ஐயையோ தெய்வமே! இப்படியுஞ் செய்வாயோ? எனக்குப் பிராணநாயகனாகிய வித்துச்சிங்குவையும் கொண்டுபோய் விட்டாயே? எனக்கூவி அப்பால் தன்புருஷன் முகத்தைப் பார்த்துப் புலம்புகின்றாள்.

காதலானீயென்னைக்கைப்பிடித்தவன்றுமுதல்
பேதையேன்சொல்லியசொல்பிழைத்தறியாப்பேரவுணா
நாதனேயென்னைநீநடுக்கங்காணுதூரில்
போதநீயெழுந்திராய்பொய்யுறக்கமுறங்காதே.

என்னிற்பின்சூர்ப்பநகையிருக்குமோவிராளோவென்
றுன்னிச்சோதிப்பானுள்ளுயிரடக்கிக்கிடந்தாயோ
பின்னிற்கும்பழிபூண்டுபெருந்துயரப்பட்டுநான்
உன்னிற்பின்னிருக்கிலேனெழுந்திராயுத்தமனே.

முன்னமேதானென்னைமுறைமையாலேகொடுத்துப்
பின்னெனைநாலிழப்பித்தவிராவணனுமென்றமையன்
றன்னைமூவுலகாளயான்கண்டுதாரவுணர்
மன்னனேயுடல்சுமந்துவாழ்வேனோவாழ்வேனே.

கைமுறுக்கிவாய்மடித்துநீகிடந்தகருத்தறியேன்
மைமுகத்துக்கருமனத்துவாளரக்கர்கோமானை
மெய்முறிக்கப்பெற்றிலேனெனநினைந்தோமேவாரை
மொய்முறிக்குமாற்றலாய்காரணமென்மொழியாயோ.

என்று புலம்பினவள் பின்னும் அடங்காத்துயரையாற்றாளாய்வருந்தி, ஆ! ஆ! என்னருமைக் கணவனே! நான் இனி என்னசெய்வேன்? நீ இப்படி என்னைவிட்டுப் பிரியவும், நான் இவ்விதம் வருந்தி உயிர்வாடவும், பார்ப்பவர்களெல்லாஞ் சந்தைக்கூட்டம்போற் கூடவுஞ் செய்துவிட்டாயே! ஆ! என்னுயிர்க்குயிரான நாயகா! உனக்கும் இப்படிவருமென்று நான் அறியாமற் போனேனே! நீ சுவர்க்கலோகவாழ்வை விரும்பிச் செல்லவும், நான் இந்த மண்ணில் இன்னம் அவதிப்படவுமாக வைத்துவிட்டாயல்லவா? ஆ! என்புருஷசிகாமணியே! நீ இப்படி இறந்துவிடுவது தெரிந்தால் நான் உன்னை யுத்தத்திற்கும் அனுப்புவேனா? அறியாமற்போனேனே! நீ இப்படியும் என்னைவிட்டுப் பிரியலாமா? இதுவுந் தர்மந்தானா? என்று அநேகவிதமாகப் புலம்பி, அறுபட்ட முண்டத்தையும் தலையையும் ஒன்றாய்ச் சேர்த்துப் பார்த்து, வருத்தஞ் சகிக்காதவளாய் அதனுடன் சமஸ்நானஞ் செய்து, தகனம்பண்ணிக் கர்மத்தைமுடித்துப் பின்னும் சொல்லுகிறாள்.

ஓ பிர்மாவே! என்தலையில்தானா இப்படி யிடிக்கவேண்டும்? வலியற்று மெலிவுற்றிருக்கும் இந்த எலியைத்தானா பலியிட நினைத்தாய்? பட்டகாலிற்றானாபடவேண்டும்? ஏழைகுடிக்குங் கூழைத்தானா பிடுங்கிக் கொள்ள வெண்ணினாய். ஆ தெய்வமே! என்று மரணமூர்ச்சையடைந்து பூமியில் விழுந்து, பின்பு எழுந்து முன்சொன்ன அலங்கோலத்தினு மிஞ்சிய வேஷத்துடன் ஆறாத்துயரங்கொண்டு, ரணபத்திர காளிபோல் அடங்காத கோபவெறியாகி பார்ப்பவர்களெல்லாம் பயப்படும்படியாகவும், அதிலும்சிலர் இனியென்னவிதமாக முடியுமோ வென்று நடுங்கும்படியாகவும் தேவாதிதேவர்களெல்லாம் சரி! சரி! இன்றைக்குத்தான் இராவணன் தலைக்குத் தாம்பூலம் வருகிறது என்று பேசிக்கொள்ளவும், இரண்டு கண்களும் கோவைப்பழத்தினு மேலாகச் சிவந்து, வழியொன்றுந்

தெரியாமலும், மேடு பள்ளமும் குறியாமலும், முள்ளுமுரடென் றன்னுமலும், கல்லுங்கரடென் றெண்ணுமலும், எதிரிற் சந்திக்கும் பேய் பிசாசுகளெல்லாம் பயந்து ஒளித்துக் கொள்ளவும், சண்டமாருதம் போல் இவளுமொரு பெண்தானுவென்று யாவரும் பேசிக்கொள்ள இலங்கையை நோக்கிநடந்துவந்து தன்ஸ்மரணை தனக்குத் தெரியாமல் மறந்து, மானுபிமானம் என்பதையுந் துறந்து, கோவென்றலறிப் போய் இராவணன் சபையிற் குதித்து, கடகடவெனப் புரண்டு, தலையை மோதிக் கொண்டு, விரித்த கூந்தல் பூமியிற் புரளவும், கண்ணீர்பெருகிக் கடல்போலோடவும் முறையிடுகின்ருள்.

## விருத்தம்.

சொல்லெடுத்துப்பழிதூற்றித்துன்பங்கொண்டென்வீடு
கல்லெடுத்துநல்லுற்ருர்கரைந்தேங்கக்சுடைக்கானீ
வில்லெடுக்கையுன்னுடையவீரத்துக்கழிவன்ரே
அல்லெடுக்குந்தலைமாய்த்தவண்ணுவோவண்ணுவே.

மூலைப்பாலேநஞ்சாகிமூனைமுகத்திலொருக்காலும்
கொலைப்பர்லனல்லாத்தன்மைத்துனனைக்கொலைசூழ்ந்த
புலைப்பாவியுன்றமையன்பொல்லானென்றெல்லாரும்
அலைப்பாலேயறவலைந்தேனண்ணுவோவண்ணுவே.

காசுக்கும்பொன்னுக்குமாழிக்குங்கடுஞ்சொல்லின்
வாசிக்குங்காலுண்ணுமணவாளப்பிள்ளைகளைப்
பூசிக்கைபொருகளத்துக்கொன்றுபுரட்டிடுகையோ
ஆசைக்கும்புறஞ்செலுத்துமண்ணுவோவண்ணுவே.

மிகையெல்லாஞ்செய்தாரேயாயிடினும்விளையாட்டாம்
வகையல்லாலொருக்காலுமைத்துனமார்தம்மோடு
பகையில்லையென்னுமந்தப்பழமொழியுங்கேட்டிலையோ
அகைவில்லான்வரையெடுத்தவண்ணுவோவண்ணுவே.

என்று முறையிட்டழுது பின்னும் அவ்விராவணனைப் பார்த்து அடங்காத துயரோடு அரோதனம் பண்ணுகிருள். ஓ எனதண்ணுவே! என்னை இந்தக் கோலமும் பண்ணுயல்லவா? இப்படியும் அனியாயஞ் செய்யலாமா? இதுவும் உனக்குத் தருமந்தானு? என்று பேசி மனம்ரோசி யாவர்க்கும் அடங்காப் பிடாரிபோல் வீசி, அடா தோஷி! அடா படுபாவி! உனக்கு வந்த பொல்லாத காலமென்ன? இவ்விதமாக நான் நிலைகுலைந்து அழுவதும் உனக்குச்சீரா? இதற்குத்தானு உன்னுடன் நான் பிறந்தது? நீ திக்குவிஜயஞ்செய்து திகைத்துப்போய் திக்கற்றுநின்ற கொள்ளைக்கு இக்குவலயத்தில் என் பாவத்தைத்தானு யளந்து கொள்ளவேண்டும்? நான் மங்கிலியமிழந்து வாடித்தவிக்க, நீ யுன் வாழ்நாளைக்கழிப்பது முண்டோ? சும்மாயிருந்த என்புருஷனைச் சற்றேனும் நினையாமல்எதிர்த்து, தன்மானம்பிறர்மானமின்றி நிரேதுவாய்க் கொன்றுவிட்டு, வெகுகீர்த்தியுடன்வந்து சேர்ந்தாயோ? அடா துன்மார்க்கா! இந்தக் கண்காக்ஷிக்கு என்னை ஏன் ஒருவனுக்குக் கொடுக்கவேண்டும்? இப்படி என்னை உருவிய கோல்போலாக்க எத்தனைநாள் நினைத்திருந்தாயோ? என்ன தான் யுத்தம் நடந்தபோதிலும் இப்படி யார் செய்வார்கள்? நீயென்ன அவ்வளவு பிரதாபத்தை வகித்தவன்? அவரையெத்தனையோபராக்கிரமசாலிகளெல்லாம்கெஞ்சித் தஞ்சமென் றிருக்கிருர்களே? அடா பஞ்சைப்பயலே! நீதான் ஒருவன் பார்க்கும்போதே துள்ளித் தொப்பென்று விழுகின்ருய். அடாவிவேகசூனியனே! உலகத்தினிடத்தில் என்னதான் பெண்ணுக்குத் தாய்வீட்டுச் செல்வம் அமைந்திருந்தாலும், ஆடையாபரண அலங்கிருதங்களும் பஞ்சகச்சாய உண்டியும், யோக வைபோக்கியமும், மற்றுமுண்டான சீருஞ்சிறப்பும், வெகுவாய்க் கிடைக்கப்பெற்றபோதிலும், காமகரலீலையின் விநோதங்காட்டிப் புணரும் கண்ணிறைந்த கணவன் பாக்கியமே பாக்கியமென்பது உனக்குத் தெரியாதா? உன் கைவில்லின் திறமும், உன் சௌரிய பராக்கிரமமும், எனது எழ்மைப் பிராண நாயகனிடத்தில்தானு காட்டவேண்டும்? அப்போதுதானு உன்னை இவ்வுலகங்கள் மெச்சிக்கொண்டாடும்? அந்தக் காலகேயர்களுக்கும் உனக்கும் என்னபகையிருந்தது? அல்லது என்புருஷன்தான் என்ன குற்றஞ்செய்தான்? என் பிச்சைச்சோற்றைப் பிடுங்கவெண்ணி வந்ததேயல்லது, நீ யுத்தத்திற்காக வந்தவனல்ல. இதென்ன கன்னத்திலடித்தகாயமிருக்கப் பின்னும் சாக்ஷி தேடுவாருண்டோ? நீ சண்டையில் வாள் யுத்தஞ்செய்தபோது அவனுன் அண்டையிலிருந்தானு? அவனிருந்த விடத்தைக் கண்டுபிடித்து வேணுமென்றே மண்டை பிளக்க அடித்த அடா சண்டாளப்பாவி! நீமாத்திரம் நால்வர்க்கழகாய் உண்டுடுத்தி பெண்டுதேடிச் சுகித்திருக்கின்ருயே? தன

க்கு உண்டு எதிரிக்கு இல்லையென்று நினைக்கலாமா? அடா சாமத்துரோகி! தாலிச் சரட்டை நீளச்செய்ய ஒரு சகோதரன் வேண்டுமென்று உலகிற் றேடுவதுண்டு. நீ கூலிக்குப்பாவங் குறுக்காக நின்றதுபோலும், வேலிக்கிட்ட முல் காலிற் றைத்தது போலும், சாலுமுழவையுந் தட்டாதுவிழுங்கவந்தாயே? நான் எள்ளத்தனை மஞ்சள் பூசிக்கொண்டு உள்ளபடி சிவன்செயலாமென்றிருந்ததில் நீ துள்ளித் தடுமாறி வந்து அதைக்கிள்ளி எறிந்தாயே! அடா பேயா! நீ இனியாகிலுஞ் சுகப்படுவாயா? என்று பலவாருய்த் தூஷித்து, சீவரத்தானிருந்துங்கெடுத்தான் செத்துங் கெடுத்தானென்பதுபோல, நானொருத்தி இப்படியாகவும் இந்த லங்கைப்பெண்களெல்லாம் வாழவுமாவென்று தன்மனதில் எண்ணிக்கொண்டு, அங்குள்ள யாவத்திராளுங்கண்டேங்கவும், சும்மா நின்று வேடிக்கை பார்ப்பவர்களுக்கும் துக்கந்தொடரவும், முறையே கும்பகர்னன் முதலானவர்களிடத்திலும்போய் நொந்துகொண்டு, அடுக்கடுக்கான வக்கணைகட்டி வாய்நிறந்து அகோரமாகஅழுதுகொண்டிருந்தாள். கேட்டீரோ ஸ்ரீராமசந்திரப் பிரபுவே! இவள் தான் அந்த ராவணனுக்கும், அவன்குடித்தனத்துக்கும், யமன்போல் நேர்ந்த தலைமாட்டுக் கொள்ளியென்றறிந்துகொள்ளும். ஆனால் இராவணனுக்கதுகாலமிஃதெல்லாம் உணர்ந்தறிவதற்கான நியாயந்தெளிவுறக்காட்டுவாருமில்லை. அவனுக்கும் இதன்மூலம் விளங்கவுமில்லை. ஓ ராகவா! இதையவள் மனதில் வைத்துக்கொண்டு தான் காற்றுள்ளபோது தூற்றிவிட வேண்டுமென்றெண்ணி, அவனுக்குச் சீதாதேவியினுடைய ரூபத்தை வர்ணித்து எடுக்கச்சொல்லவும், அவனும் விதிவலிப்பிரகாரம் எடுத்து அசோகவனத்திற் கொண்டுபோய் வைக்கவும், தேவரீரும் அவ்வளவுதூரம் போகவும், உமது திருக்கோதண்டத்தால், அவனுடைய புத்திரமித்திராதியரான சமூலமும் மாளவும் ஆய்விட்டன. இவள்செய்த இந்தத் தீம்புக்கும், இராவணனென்னும் பாம்புக்கும் கும்பகர்ணனும் மகோதரனும் படிக்கும் வீம்புக்கும், உமது கோதண்டக் காம்புக்கும்சரியாய்விட்டது. மேலும் அவ்விராவணன் அழிவதற்கு அநேக முகாந்திரங்க ளிருந்தபோதிலும், அவையெல்லாம்பலித்துமுடிவதற்கு இவள்தான்மூலாதாரமாயிருந்து தூண்டிவிட்டாள்.

இப்படியிருக்க தசக்கிரீவனுனவன் நான்குபக்கமுங் கவனித்து நோக்கிக் கன்னியிற் சிக்கிக்கொண்ட அன்னப்பட்சிபோல விழித்து, தன்னுடைய முகத்தில் ரத்தமென்பதில்லாமல் என்னசெய்வேனென்றுன்னிப் பிறகு மகோதரனைப்பார்த்தான். அன்னவனும்நானும் அறிந்திலேன் அவளும் பொய்சொல்லாளென்பதுபோலும், பிள்ளையுங் கிள்ளிவிட்டுத் தொட்டிலும் ஆட்டிவிடுவாளென்பதுபோலும், புண்ணிற்கோலிட்டுவதைத்தாலும் கண்ணுக்கழகாய்ப் பார்ப்பவன்போலும், அடங்காமனக்களிப்புண்டாகியும் அதை வெளியிற் காட்டாதவன் போலும், அவளுக்குமுன்பாக அவனுக்கு ஏதோதான் தணிக்கைசொல்லுவதுபோல் எழுந்து, ஐயா ராவணேஷ்வரா! இதென்ன சபையா மற்றென்னவென்று நினைத்தீர்? இதென்ன அலங்கோலம்? ஒருபெண் பாலும் இப்படி பிரலாபிக்கலாமா? ஐயையோ!! இதுசும்மாவிட்டுப்போவதல்லவே! பெண்பாவங்கொடியதென்றறியீரோ! அவளுக்கேதாவது ஒருவழியாய் தணிவுசொல்லி, ஆதரிக்காமற் சும்மா கேட்டுக்கொண்டெண்ண மிடுகிறீரே? குலப்பெண்ணுந் தத்தளித்துக் கலக்கமுறலாமா? உமது வங்கிஷத்துக்கு நன்மையல்லவே; ஆனாலும் உமது ஆத்திரத்தை நான் என்னென்று சொல்லுவேன்? காலகேயரைத்தான் நாம் கண்டிக்கவேண்டிய கடமை. இவன் கணவன் என்னசெய்தான்? நீர் அநியாயமாக அவனை ஏன் வெட்டினீர்? இது நீரே தேடிக்கொண்ட வேலையாயிருக்கிறதே நான் அப்போதே வேண்டாமென்று எவ்வளவு தூரந் தடுத்தேன்? அந்தச்சொல் உமது செவிக்கு ஏற்காமற் போச்சுது. மிஞ்சிப் போனதற்கு என்ன செய்யலாம்? ஏதோ கோபஞ் சண்டாளமாக நடந்தேறிவிட்டது. அந்த யுத்தமுனையில்மாத்திரம் யார்க்கும் ஒன்றுந் தோற்ருது. சாந்தகுணத்தர்களும் ஆத்திரப்பட்டு மீறுவர்களல்லவா? உமக்கும் அக்காலத்தில் இவனின்னுனென்றும், பிறகு இப்படியெல்லாம் வருமென்றுந் தோன்ருமற்போயிற்று.

இராவணன் சூர்ப்பநகைக்கு ஜலஸ்தானம் ஏற்படுத்தித் தருதல்.

ஐயா லங்கேஸ்வரா! போனதெல்லாம் போகட்டும். ஐயோ! பாவம். இவளைப்பார்க்கும்போதே என்வயிறும் பற்றி எறிகின்றதல்லாமல், இவளும் அண்டநிழலில்லாமற் பரதவிக்கின்றாள். இனியார் அவளுக்குத் திக்கு? நாமும் அவள் துக்கத்தைப் பாராட்டவேண்டிய கடமையாயிருக்கின்றதாதலால், நீரே அவளுக்கு இனிமையான வாக்கியங்களையும் நல்ல நீதிகளையும் போதித்து, அவளுடைய ஆத்திரத்தையும் துக்கத்தையுந் தணித்து, இப்போதே தண்டகாரணியத்திற்கு அனுப்பிவிடும். ஏனெனில், அங்கிருப்பவர்களோ உம்முடைய தாயாதிகள். அவர்களும் பதினாலாயிரம் பேர்களிருக்கிறார்கள். அத்தனைபேர்களுக்கும் தங்கையில்லாமல் வருந்துகின்றார்கள். அதற்கிசைந்தபடி இவளும் இருப்பாள். அவர்களுந் தங்கம்போல் வளர்ப்பார்கள். அவர்களைப்போல் பாதுகார்க்க உங்களாலும் முடியாது. என்று இங்கிதமாகவே இனிமேல் நடக்கவேண்டிய காரியங்களுக்குச் சோடித்துவிட்டான். இவ்வாறுசொல்லிய மகோதரன்பேச்சுக்கிசைந்த ராவணனானவன் புலம்பி அழுதுகொண்டிருக்கிற சூர்ப்பநகியைப்பார்த்து, அம்மா என்னிரு கண்மணியும் அருமைப் பிறப்புமாகிய தங்கையே! இனிநான்தான்என்னசெய்வேன்? இது நான் மனமறிந்து செய்ததல்ல. கையானது கண்ணிற்பட்டு விட்டாற்போல் நான் வேண்டுமென்று கொன்றவனுமல்ல. தெய்வச்செயல் இப்படியானால் இதற்கு நாமென்ன செய்யலாம்? நீ ஏதோ பலவாறாய் துக்கித்தழுகிறாய். அந்தத் துக்கம் எனக்கில்லையா? மூவுலகத்துக்கும் அதிபதியின்தங்கை இப்படி மூளியானாளென்றால், அந்தமானம் என்னதல்லவா? அம்மா! கும்பகர்ணன்-விபீஷணன்-இந்திரசித்தன் மாரீசன்-பிரகஸ்தன் - இவர்கள் முதலானவர்களும், தண்டகாரணியத்தில் நமதுபங்காளிகளும், இன்னமும் அநேக பாத்தியஸ்தர்களுமிருக்க; ஏதோ தெய்வச்செயலாய் தப்பிப்போன ஒருபிராணிக்கு நீ இந்தப்படி அவதைரியப்படலாமா? நாங்களெல்லாம் இல்லையா? இன்னமும் அன்பான உன் மதனி மண்டோதரியிருக்க, உன்தாயார் கைகசியம்மாளிருக்க, உனக்கென்ன குறைவு? ஆனால் உன்னை இந்தக்கோலத்துடன் பார்க்கும்படி விதித்ததொன்றேயல்லது மற்றென்ன விருக்கின்றது? அம்மா! நீ வீணாய் பிரலாபிப்பதை விடுத்து, மனதைத்தேற்றிஉறுதிப்படுத்திக்கொள். இனி நீ அழுவதினால் மாண்டவர்கள் மீண்டுவரப்போகிறதில்லை. ஆண்டவன் கட்டளை இப்படியும் ஆச்சுதல்லவாவென்று திடப்படுத்திக்கொள் உனக்குத் தகுந்த இடமும் ஆதரவுஞ் சொல்லுகிறேன் கேள். தண்டகாரணியத்தில் நமக்கான தமயன்மார்கள் பதினாலாயிரம்பேர்களிருக்கிறார்களல்லவா அவர்களிடத்திற்சென்றால் உனக்குச் சகல சவுக்கியமும் கிடைக்கும். பயப்படாதே! என்று ஆதரணைசொல்லித் தேற்றினான். அதுகேட்ட சூர்ப்பநகி ஒருவழியாய்த் தேறி, இதுவும் ஒருவகைதானென்றும், நமக்குத் தீங்குசெய்த இத்துஷ்டனை எந்த மூலத்திலாவது அழித்துவிட வேண்டுமென்றும், அதற்கும் காலம் நேரிடாமற் போகுமாவென்றும், இனி இந்தச் சண்டாளத் துரோகிமுகத்தில் விழிக்கப்படாதென்றும் எண்ணிக்கொண்டு, உடனே தண்டகாரணியஞ் சென்று கரதூஷணாதிகளிடத்தில் வாசமாயிருந்து பல்லிற் பகை வைத்துக் கொண்டிருந்தாள்.

இராவணன் தன் சிறியதாயாகிய கும்பீநசியைக் கவர்ந்துபோன மதுவின்மேற் படையெடுத்துப்போய் பின்னவள் வேண்டுகோளாற் சன்மானித்தல்.

கேளும் ஸ்ரீரகுநந்தனா! இவ்வாறு இவள் தொலைந்தபின்பு தசக்கிரீவன்தனது திவ்யாலங்கிர்த அரண்மனையை அடுத்து, அவ்விடம் முன்பின்நடந்த சங்கதிகளையெல்லாம் கேட்டும், யோகக்ஷேமங்களையெல்லாம் விசாரித்தும், அன்னையாகிய கைகசியம்மனைத்தீர்க்கதெண்டஞ்செய்தும், தம்பியாகிய கும்பகர்ணனைக் கண்டு தழுவிக்கொண்டாடியும், மண்டோதரியைக்கண்டுவார்த்தை வழங்கியும், பட்டணத்தின் க்ஷேமங்களையெல்லாம் மற்ற மந்திரிபிரதானிகளைக் கொண்டறிந்துகொண்டும், ஒருபக்கமாகக் குந்தி தான் திக்குவிஜையஞ் செய்துவந்த

சவிஸ்தாரங்களெல்லாஞ்சொல்ல ஆரம்பித்து, தன் தமயனுகிய குபேரனை ஜெயித்ததும், அவன் நந்தவனத்தை அழித்ததும், அவனேறிவந்த புஷ்பக விமானத்தைக் கைக்கொண்டதும், கைலாசத்திற் சென்று நந்திகேஸ்வாருடன்போராடினதும், அப்பால் வெள்ளியங்கிரியைத் தூக்கினதும், அதற்கு உலகங்களெல்லாம் பயந்ததும், வெள்ளைக் குரங்கினங்கள் லங்கையில்வந்தழிக்குமென்று நந்திகேஸ்வரரால் தனக்கு நேர்ந்த சாபமும், பரமசிவன் தன்னைப் பெருவிரலால் அழுத்திவிட்டதும், பின்பு மந்திரிகளால் உபாயந்தெரிந்துக்கொண்டு சாமவேதகானஞ் செய்ததும், அதன்மேல் சாம்பசிவமூர்த்திக்குத் தயவுவந்து வரமளித்த விநோதமும், வேதவதியைத் தவத்தினின்றும் தொடப்போனசேதியும், அதற்கவள் ஜானகியம்மனுகப் பிறந்து அழிப்பதாகச் சாபமிட்டுத் தணலிற்குதித்ததும், மருத்துராஜன் யாகத்தில் ஒருத்தருமில்லாமற்செய்து தன்பலத்தைக்காட்டி ஜெயம் பெற்றதும், அங்கிருந்தவர்களெல்லாம் மாறுருபங்களெடுத்துப் பயந்தோடினதும் அப்பால் சங்கவர்த்தனரால் மருத்தன் கப்பணங்கட்டினதும், அயோத்தியாபுரியில் அனரண்யனை மடக்கினதும், அவனும் தான் தசரதச்சக்கரவர்த்திக்குப் புதல்வனுகப்பிறந்து, அழிப்பதாகச் சொல்லி உயிர் விட்டதும், சாங்கோபாங்கமாகச்சொல்லிப் பின்னும் சொல்லுகிறன்.

கேளும் ஸ்ரீராமா! இவ்வாறு இவர்களையெல்லாம் ஜெயித்து, அவ்வவர்களிட்ட சாபங்களையுமேற்று, மகா பராக்கிரம சாலியாய்த் தான் மீண்டும் லங்கையைநோக்கிவரும்போது, தன்னை நாரதர்வந்து கண்டுகொண்டதும், அவர் எமலோகத்தின்சங்கதியெடுத்துரைத்ததும், உடனே தான் சண்டைக்குத் தயார் செய்து, நமனிடத்திற்போராடினதும், அவ்வமோகமான யுத்தத்திற் பிரமதேவர் தோன்றிச் சமாதானஞ் செய்ததும், பின்னர் தானே கெலித்துத் திரைப்பணம் வாங்கினதும், மகோதரன்சொற்படிக்கு நாகலோகஞ்சென்றதும், அங்கும் அநேகமாகிய வரிசைகளைப்பெற்றதும், நிவாதகவசர்பேரிற் கோடையிடிகள்போற் சென்றதும், அவர்களெல்லாம் திப்பிரமை கொண்டு ஆடிக்காற்றிலெழும்புந் தும்புபோற்பறந்ததும், பின்பு இரவும் பகலும் மாளாத யுத்தஞ்செய்து தேவாதிகளெல்லாம் திடுக்கிட்டலறப் பல அஸ்திர சஸ்திரங்களை அமோகமாகப் பொழிந்ததும், அதனைக்கண்ட பிரமதேவரும் பிர்மித்து, ஓடிப்போன நிவாதகவசர்களைச் சரிப்படுத்தி, இருவரையும் சமாதானஞ்செய்ததும், அந்த நிவாதகவசர் தனக்கு விருந்திட்டு மாயாவித்தை கற்றுக் கொடுத்ததும், அதன்மேல் மகோதரன் யோசனையின்படி காலகேயர்மேற் படையெடுத்ததும், அவர்கள் கால்-தலை-எலும்பு முதலானவைகளையெல்லாம் தெய்வலோகத்தின் கற்பகவனத்தில் விழச்செய்ததும், அதற்குத் தேவர்கள் கதறியழுதகுறையும், அங்கும் பிரமன் வந்து தோன்றிச் சந்திசெய்வித்த சங்கதியும், வருணன்மீது படையெடுத்த மாக்ஷிமையும், அங்கு சகலரையும் வாட்டிய கொள்ளையும், அப்சரஸ்திரீகளையும் தேவஸ்திரீகளையும் கின்னரஸ்திரீகளையும் இன்னும் மற்றுமுண்டான பலவகைப்பட்ட ஸ்திரீகளையும் சிறையெடுத்ததும்கூறி; தான் திக்குவிஜையப் பிரதாபனுய் யாவரும் தனக்கு நிகருமெதிருமில்லையென்று வெற்றிகொடி தரித்து ஜெயம்பூண்டுவந்த பிரதாபங்களையெல்லாம் விவரம் விவரமாய் ஒன்றெழியாமலெடுத்துரைத்தான். அவர்களுமவையனைத்தையுங் கேட்டு, வெகு சந்தோஷப்பட்டு மிகவும்கொண்டாடினுர்கள். உலகமும் களித்திருந்தது. லங்கைப்பட்டணம் முழுமையும் மங்களவாத்தியங்கள் முழங்கின. பிரஜைகளும் தங்கள் ராஜனை மெச்சிக்கொண்டு வாழ்த்தினுர்கள். ராவணன் சர்வசேனைகளுக்கும் உத்திரவுகொடுக்க அவ்வவர்களும் தங்கள்தங்கள் விடுதியிற்செல்லவும், தான்மந்திரிசகோதரரிஷ்டசனசகிதருடன் ஸ்நானஞ் செய்து, தாயாருடன் புசித்துத் தாம்பூலமருந்தி, பின்புமண்டோதரியுடன் அம்சதூளிகா மஞ்சத்திற் சேர்ந்து, வெகு உல்லாசமாக மருவி வார்த்தையாடிக்கொண்டிருந்தான்.

கேளும்ராகவா! அப்போதுநான்எதிரிலிருந்தபடியால் என் மனந்தாளாமல் இவன் ஆதியோடந்தமாகச்செய்தவிஷயங்களெல்லாம் மிகவும் தகாதகாரியமென்றும் இப்படியெல்லாம் நீ செய்யப்படாதென்றும் நான் வெகுசாய் எடுத்து அக்காலத்தி

லுங்கூட உரைத்தேன். அதுவும் அவன் செவிகளில் நுழையாமல் கமரிற் கவிழ்த்த பால்போலாச்சுது.அப்பாலும்நானென்ன செய்வேன்தேவன்விசாரிப்பானென்றிருந்தேன் அப்படிக்கிருக்க இந்த ராவணனுனவன் திக்குவிஜயத்திற்குச் சென்ற பிற்பாடு இவ்விடம் ரசாதலத்தில் மாலியவான் பெண்ணுகிய கும்பீநசியென்னுங் கன்னிகையை மதுவென்னும் அசுரனுனவன் சிறையெடுத்துக்கொண்டு போயிருந்தபடியால் ஓ அண்ணு! பார்த்தீரா நீசெய்துவந்த வேலைக்குச்சரியாய் தீவினைவந்து விளைந்து திருஷ்டாந்திரமாச்சுதே, நானும் இலங்கையிலிருந்தபடி கேள்விப்பட்டேனென்று அந்தச் சங்கதியைச் சொல்லி யிடித்தேன். அவனும் இந்த கும்பீநசியானவள் நமக்கு சிறியதாயாராச்சுதே யென்று அபிமானம் வகித்து அவ்வசுரன்மேற் கோபித்து ரசாதலத்திலிருந்த மாலியவானையும் சுமாலியும் வரவழைத்துக்கொண்டு மதுபுரத்துக்கு யுத்தஞ்செய்யச் சென்ருன். இதையறிந்த கும்பீநசியானவள் தன்னை எடுத்துவந்த அசுரனுக்குச்சாந்தஞ்சொல்லுவாள். ஐயா என் பிராணநாயகரே! நான் காமாந்தகாரத்தால் ஜாதியபிமானத்தையும்விடுத்து உம்மைக்கலந்துவிட்டபடியாலும், வந்திருக்கின்ற அந்த ராவணுதிகள் லேசானவர்களல்ல மிகவும் பொல்லாதவர்களென்றும், அவர்களை ஜெயிக்க உம்மால் முடியாதென்றும் நானே நேராய்ச்சென்றுபேசிச் சந்தி செய்து வைக்கிறேனென்றும் சொல்லி அவனை நிறுத்திவிட்டு அங்கிருந்தபடிக்குச் சரேலென்று தண்டிறங்கியிருக்குமிடத்திற்குவந்து தகப்பனுகிய மாலியவானைக்கண்டு ஐயா என்னருமைப் பிதாவே! கறந்தபால் ஏறுமா? அணைகடந்தவெள்ளம் நிற்குமா? கெட்டது இனி நல்லதாமாவென்றும் என்னைக் காப்பாற்றவேண்டுமென்றுஞ் சொன்னுள். அக்குறிப்பையறிந்துமாலியவானும் மிஞ்சிப்போனதற் கென்செய்யலாமெனத் தேறி ராவணனைப்பார்த்து அப்பா தசக்கிரீவா! இவளுக்கு மாங்கிலியபிச்சைகொடுத்தனுப்பென் றுரைத்தவாறே அவனும் அப்படியே கொடுத்து அவளை அனுப்பிவிட்டு அங்கிருந்தபடி யப்பாலுஞ்சென்று அரம்பையைக்கண்டு மோகித்ததில் அவளும் நளகூபரனுஞ் சாபங்கொடுத்ததையறிந்து ராவணன் மகோதரனிடத்தில் முறையிட்டுக்கொண்டதும் அவன் சொற்படிக்குத் தசக்கிரீவனுகிய தன் தமையன் தேவேந்திரன்மேற் படையெடுத்ததும் யாவராலுஞ் சொல்லப்படாத மகாவுக்ர அற்புதமான யுத்தந்தொடுத்ததும் அவர்களையெல்லாம் வாட்டி வெற்றிக்கொடி தரித்து திக்குவிஜயத்தை முடித்து இனியாரும் தனக்கு நிகரில்லையென்று மிகவும் பிரதாப வீரதீரசௌரிய பராக்கிரமசாலியாய் இலங்காபுரியில் எப்போதும்போல் கெடிவீரசிங்கத்துக் கொப்பாய் சுக வைபோகத்துடன் அரசாக்ஷி செய்துக்கொண்டு வந்ததும் வேணதுண்டென்று விளம்பிப் பின்னுஞ் சொல்லித் தெளிவுற முடிக்கின்ருர்.

கேட்டீரோ ஸ்ரீராமமூர்த்தியே! இவ்விதமாக என் அண்ணனுடைய விஷயங்களையெல்லாங் கேட்க விரும்பிய தேவரீருக்கு அடியேன் அநுபோகசாலியாதலால் நடந்த விருத்தாந்தங்களில் முக்கியமானவைகளையுந் திக்குவிஜயத்தையும் இயன்றமாத்திரம் எடுத்துரைத்தேன் சுவாமியென்று விபீஷணரானவர்கைகூப்பி அவரது திருப்பாதங்களில் வணங்கி நின்றவுடன் ஸ்ரீராமச்சந்திரப்பிரபுவும் திருவாய்மலர்ந்தருளுவார். ஐயா விபீஷணரே! பூவுடன் சேர்ந்தநாறும் மணம்பெற்றதுபோல அவனது செய்கை ஒருவாருயிருந்தபோதினும் நல்ல சத்வகுணமுங்கீர்த்தியும்வகித்த உமதுவாக்கால் இதை யெடுத்துரைத்தபடியாலும் நாமும் இதனைக் கேட்டபடியாலும் இதுவும் நமது ஸ்ரீராமகதைக்குள் ஐக்கியமாதலாலும் இதை எழுதிபடித்தவர்களும் கேட்டுக் களித்தவர்களும் மென்மேலுஞ் சிரஞ்சீவியாய்ச் சகல பாக்கியமும் பெற்று சர்வ மங்களாகார சம்பன்னர்களாய் நீடூழி வாழக்கடவர்களென்று ஆசீர்வதித்தனர்.

விருத்தம்.

மிக்கபுக ழிலங்கைமன்ன னிக்குவல
யங்களெல்லாம் வெற்றிகொண்டு
திக்குவிஜயஞ் செய்தா னென்றுதம்பி
விபீஷணராற் செப்பக்கேட்ட
பக்குவஸ்ரீ ராமருந்தன் னுளமுவந்தங்
கிருந்தவொரு பரிசினுலே
மக்களுடன் பேறனைத்தும் பெறுவரிதைப்
படித்தோரும் வாழிமாதோ.

ராவணன் திக்குவிஜயப்படலம் முற்றிற்று.

## மகாவிஜயப்படலம்.



இவன் செயல் இவ்வாறாக, இவன் திக்குவிஜயஞ்செய்யப் புறப்பட்டுச்சென்று நடத்திவரும்காலத்தில் இலங்காபட்டணத்திலிருந்த மேகநாதனென்று சொல்லப்பட்ட இவன் குமாரன் தன்னுடைய தகப்பனைப்பார்க்கிலும் அதிகமான பலசவுரியங்களைப் பெறவேண்டுமென்று ஆலோசித்து, ரகசியமாய் நிகும்பலையென்று சொல்லப்பட்ட மகா வனத்துக்குப்போய் தங்கள் குலகுருவாகிய சுக்கிரபகவான் முன்னிலையாய் பரமசிவனைக்குறித்து வேதங்களிலே சொல்லப்பட்ட பதினெட்டு மகா யாகங்களுக்குள்ளே யாவராலுஞ் செய்துமுடிக்கப்படாத கோமேதம்-அசுவமேதம்-பவுண்டரீகம்-ராஜசூயம் இவைமுதலான அறுவித யாகமுஞ்செய்து நிறைவேற்றி ஏழாவது யாகம் தொடங்கிச் செய்துகொண்டிருந்தான். இவனை மண்டோதரியுடன் மருவி, வெகுவுல்லாசமாய்வார்த்தையாடிக்கொண்டிருக்கின்ற இராவணனானவன் சிந்தையிற் கருதி, அவ்விரவு நீங்கி மறுநாளுதயத்தில் தனது அரண்மனை புகுந்து, நித்தியவிதிகள் முடித்துக் கொலுச்சபைக்குவந்து, என்னுடைய பட்டத்துக்குமாரனாகியமேகநாதன் எங்கேயென்று விசாரித்தான். அதற்கு மந்திரிமுதலானவர்கள் மேகநாதன் நம்முடைய இலங்கைப் பட்டணத்திலே இல்லையென்று சொன்னார்கள். அதுகேட்ட இராவணனானவன் விரைவில் தூதுவரைவிடுத்து மேகநாத னிருக்குமிடத்தை விசாரித்துவரச் சொல்லுங்களென்று உத்தரவுசெய்தான். அவர்களும் அப்படியே நான்குதிசையிலும் தூதர்களை அனுப்புவிக்க, அந்தத் தூதரும் தேடிக்கண்டு இன்னவிடத்தில் இப்படியாக விருக்கிறானென்றுசொல்ல, அதுகேட்ட மந்திரிகள் இராவணனுக்கறிவிக்க, உடனே அவன் நிகும்பலை வனத்துக்குப்போய்த் தன்னுடைய புத்திரனாகிய மேகநாதனைக்கண்டு மிகவுஞ் சந்தோஷத்தையடைந்து நீ இப்படிக்கெல்லாம் பிரயாசைப்பட்டு இந்த யாகங்களை என்ன காரியத்தைவேண்டிச் செய்கிறாயென்று கேட்டான். அதற்கு சுக்கிராசாரியர் அவனைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கேளும் இராஜனே! நம்முடைய அசுரகுலமெல்லாம் விளங்கத்தோன்றிய உம்முடைய புத்திரனாகிய மேகநாதனானவன் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்து, யாதொரு சலனமுமில்லாமல் அதிக திடபத்தியுடனே பரமசிவனைநோக்கி விதிப்படி தப்பாமல் மகா தபசும் யாகங்களுஞ் செய்து முடித்தான். அதுகண்ட பரமசிவன் மிகவும் கிருபையுடனே வெளிப்பட்டு ஒருகாலத்திலும் அழிவில்லாத இரதமும் வில்லும்-கவசமும்-அக்ஷய தூணியும்-மகாரிஷிகளுடைய கோபாக்கினிபோற் பகைத்தவர் யாரையும் நாசஞ்செய்கின்ற அஸ்திரமும் கொடுத்து, சகல லோகத்திலுமுள்ள எல்லோரும்மனங்கலங்கி மயங்கச்செய்யும் மாயாவல்லபமும், எதிர்த்தவர்யாவரையும் வெல்லத்தக்க பலமும் உண்டாகக்கடவனவென்று அனுக்கிரகஞ்செய்தார். ஆகையால் இப்படிப்பட்ட மேன்மைபொருந்திய புத்திரனைப்பெற்றவுமக்கு யாதுகுறை? என்று சொல்லக்கேட்ட ராவணன் மிகவுஞ் சந்தோஷத்தையடைந்து, சுவாமி! எல்லா மேன்மைகளுந் தேவரீருடைய அனுக்கிரக விசேஷத்தினாலே யல்லவோ விளைகின்றனவென்று கூறி, அந்த சுக்கிரபகவானுக்குபசாரவந்தனஞ்செய்து பின்பு மேகநாதனைப்பார்த்து, அடா எனது அருமைச் செல்வனே! சகலமான வரங்களையும் பெற்ற நீ இனி என்னகாரியத்தைவேண்டி யாகஞ்செய்கின்றாய்? ஐயோ! மெத்தவும் இளைத்தனையே? என்று அப்பொழுது செய்துக்கொண்டிருக்கிற யாகத்தை நிறைவேறச்செய்து, ஆசாரியராகிய சுக்கிரபகவானை அவருடைய லோகத்துக்குப் போகும்படியாக உபசரித்தனுப்பிவித்து, தன்னுடைய குமாரனாகிய அம்மேகநாதனை யழைத்துக்கொண்டு இலங்காபட்டணம் வந்து சேர்ந்தான்.

அப்படிவந்தவன் அவ்விலங்காபட்டணத்திலே வாசஞ்செய்துக்கொண்டிருக்குமளவில், சிலநாளைக்குப் பின்பு ஒருநாள் மிகவும் அடங்காத காமவிகாரமதமேற்பட்டுச் சகிக்கமாட்டாமல் முன்பு தான்கொண்டுவந்து வைத்திருந்த கந்தருவ கன்னியர் முதலான பெண்களெல்லாரையுந் தன்

னிடத்துக்கு அழைத்துவரச் சொல்லிச் சில சேவகரை அனுப்புவித்தான். அவர்களும் அப்படியே அந்தக் கன்னியர்கள் எல்லாரையும் ஒரு திரளாகக்கூட்டி வீதி வழியாய் அழைத்துக்கொண்டு வரும்பொழுதில், அந்தப் பெண்களெல்லாரும் கொடிய பாவிகளாகிய வேடர்கள் வலையி லகப்பட்ட இளமான்கள்போலவும், கண்ணியி லகப்பட்ட மயில்கள்போலவும், கூட்டில் அகப்பட்ட கிளிகள்போலவும், மனங்கலங்கி துடிப்பாரும், சரீரம் நடுங்கிப் பதைப்பாரும், பயத்தினாலே நடக்கமாட்டாமற் சோர்ந்து விழுவாரும், கண்ணீர் சோர அழுது புலம்புவாருமாகி, இப்படிப் பல பலவிதமாகப் புலம்பித் தவித்து அலறுகின்றார்கள். இப்படி ஓ! ஓ! என்று அலறுஞ்சத்தம் புண்ணியபுருஷனாகிய விபீஷணன் காதிலே கேட்கப்பட்டு, அந்தக்ஷணமே பதைத்தெழுந்திருந்து அதிசீக்கிரமாகத் தன்னுடைய தமையனாகிய இராவணனிடத்துக்குப்போய் அவனைப் பார்த்து, அண்ணா! என்ன காரியத்தை நினைத்தீர்? இப்படியுமுண்டோ? உலகத்திலே யாவன் ஒருவன் செல்வம் கீர்த்தி மேன்மை முதலான சிலாக்கியங்களெல்லாம் கெடும்படியாய் மேலே தனக்கு வருகின்ற துன்பத்தையும் எண்ணாமல், நல்லோர் சொல்லையும் கேளாமல், மூர்க்ககுணத்தையே மேற்கொண்டு காமவிகாரத்தினாலே யறிவுகெட்டு, நல்லகுலத்திலேபிறந்த உத்தமஸ்திரீகளை இச்சிப்பானாகில் அப்பாவத்தினாலே அவனுமழிந்து, அவனுடைய குலமும் நாசத்தை யடையும்: என்று வேதசாஸ்திரங்களிலே சத்தியமாகச் சொல்லியிருக்கின்றதே? இஃதுமக்குத் தெரியாததல்லவே? ஐயோ! உமக்கு இந்தப்புத்திவரலாகுமோ? என்று தடுத்துச்சொல்லிச் சாந்தப்படுத்தி, பின்பு மெள்ள இன்னமொரு செய்தியைச் சொல்லுகிறேன் கேளும்: என்றுசொல்லுகின்றான்.

அண்ணா! நீர் இந்தப் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டு குபேரன்மேற் படையெடுத்துப்போய் அந்தக் குபேரன் முதலான அநேகம்பேர்களை ஜெயித்து வருவதற் குட்பட்ட காலத்திலே மேகநாதன் வனத்திலே யாகஞ் செய்துகொண் டிருந்தான். கும்பகர்ணன் நித்திரை செய்துகொண்டிருந்தான். நான் சலத்திலே முழுகித் தபசுசெய்துகொண்டிருந்தேன். அப்படியிருக்கிற சமயம்பார்த்து, மதுவென்று சொல்லப்பட்ட அசுரனானவன் தன்னுடைய சேனைகளுடனேவந்து பட்டணத்திற்புகுந்து, இவ்விடத்திலிருந்தஅநேகஞ் சேனைகளையுமழித்து, நம்முடைய சிறிய தாயாராகிய கும்பீநசியை வலிமையாகப் பற்றிக்கொண்டு தன்னுடைய பட்டணத்துக்குப்போய்ச் சேர்ந்தான் என்று சொல்லவும், நெய்யைவார்க்கப் பொங்கியெரியும் நெருப்பைப்போல் இராவணன் மனங் கொதித்துச்சீறி, பூனையின் செவியை எலி பற்றி இழுத்தாற்போலவும், புலியைச் சிறுமான் துரத்தினாற்போலவும், சற்றுமஞ்சாமல் என்னையும் மதியாமல், சந்திர சூரியரும் பயப்பட்டு வழிவிலகிச் செல்லுகின்ற இந்த இலங்காபட்டணத்திலும் புகுந்து என்னுடைய சிறியதாயையும் ஒருவன் கொண்டுபோனானல்லவா? வெகு நேர்த்தி! வெகு நேர்த்தி!! தம்பி விபீஷணா! அந்த மதுவென்று சொல்லப்பட்டவனை இப்பொழுதே ஜெயித்துக் கொன்று அவன் குலத்திலுள்ள ஸ்திரீகளையும் கற்பழித்துக் கெடுத்து மீண்டுவருகிறேன். என்று சபதம்பேசித் தன்னுடையசேனைகளெல்லாம் முன்னே போகும்படி உத்தரவுசெய்து, விபீஷணனை இலங்காபட்டணத்துக்குக் காவலாகவைத்து, நித்ரை செய்துகொண்டிருக்கிற கும்பகர்ணனையெழுப்பி அழைத்துக்கொண்டுவரச்சொன்னான். அப்படியே சில தூதர்கள்போய் மேகமும் இடியும் முழங்கினாற்போலப் பூமி அதிரும்படிக்கு அநேகமான பேரிகை முதலான பெரிய வாத்தியங்களை யடித்து முழக்கினார்கள். அந்த முழக்கத்தினாலே கும்பகர்ணன் நித்திரைவிட் டெழுந்திருந்தான். அப்பொழுது காலாக்கினிபோலே தகிக்கின்ற கொடுமையான பசி தீரும்படிக்கு ஆயிரம்வண்டிகளிலே சோறும் - புலாலும் - கறிகளும், ஆயிரம்ஜாடிகள் நிறையக் கள்ளும் கொடுக்க வாங்கித் தின்று குடித்தும், அவனுக்குப் பசியடங்காமல், பின்னும் அப்படியே கொண்டுவந்து கொடுக்க வாங்கிப்புசித்து, பசிதீர்ந்து இளைப்பாறியிருந்தான். அந்தச்சமயத்தில் இராவணேஸ்வரன் அழைக்கிறானென்று தூதர்சொல்ல, அதுகேட்ட

கும்பகர்ணன் அந்தக்ஷணமே தமையனிடத்துக்குப்போய் என்னை அழைப்பித்த காரியம் என்னவென்று கேட்க, அதற்கு இராவணன் மதுவென்று சொல்லப்பட்டவன் செய்த காரியம் இப்படி யிருந்ததென்று கூற, அதுகேட்ட கும்பகர்ணன் மிகவும் ஆச்சரியப்பட்டு கோபத்துடனே துக்கத்தையுமடைந்துநிற்க, அதுகண்ட தசக்கிரீவன் அவனையும் மேகநாதனையும் புறப்பட்டு வரச்சொல்லி ஆக்கியாபித்தான். அப்படியே அவர்களிருவரும் போர்க்கோலங்கொண்டு அநேகவிதமாயுள்ள அஸ்திர சஸ்திரங்களைத் தரித்து, தேரின்மேலேறி, தங்களுடையசேனைகளோடும் வீதியிற் புறப்பட்டார்கள். அம்மாத்திரத்தில் இராவணன் ரௌத்திராகாரமாய்க் கோபாக்கினிபொங்க,வஜ்ஜிரகவசம்-கிரீடம்-நெற்றிப்பட்டம்-வீரகண்டாமணி இவை முதலான ஆபரணங்களும் வஸ்திரங்களும் தரித்து, வில்-அம்பு-வேல்-வாள்-பரிசை-தண்டம்-சூலம் இவை முதலான திவ்விய ஆயுதங்களைக் கைகளிலே தாங்கி, வெள்ளைக்குடைகள்பிடிப்பாரும், வெண்சாமரைகள் வீசுவாரும், வெற்றிக்கொடிகள் ஏந்துவாரும், விஜயப்புகழைப் பேசுவாரும், இன்னுமுள்ள பலபல இராஜாங்க வுபசாரங்களினாலே பணிவிடைசெய்வாருமாகிய அநேகம் பரிவாரங்கள் சூழ்ந்துவரச் சகல வாத்தியங்களுமுழங்கத் தேரின்மேலேறிப் புறப்பட்டான்.

அப்பொழுது முன்னே போகும்படி உத்தரவுசெய்த சேனைகள்போகப் பின்னும் அனேகம் சதுரங்கசேனைகள் பூமி ஆகாயமெங்குந் தூளிபடலமறைக்கத்தக்கதாக நெருங்கிவர, முன்னணிப்படையிலே பட்டத்துக் குமாரனாகிய மேகநாதனும், பின்னணிப்படையிலே இளவரசு பட்டத்துக்குடைய கும்பகர்ணனும் படைசெலுத்திவர, அந்தச்சேனாசமுத்திரத்தின் நடுவிலே மகாமேருபர்வதம்போலே விளங்குகின்ற தன்னுடைய தேரினை வேகமாகநடத்திச்சென்று மதுவினுடைய பட்டணத்துக்குச் சமீபத்திலே போயடுத்தான். அப்பொழுது மதுவென்று சொல்லப்பட்டவன் நித்திரைபண்ணிக்கொண்டிருந்தான். இராவணன் வருகிறானென்று சொல்லக்கேட்ட கும்பீநசியானவள் பயந்து சீக்கிரமாக எதிரேபோய் அவனுடைய காலிலே விழுந்து புலம்பியழுதாள். இராவணனும் தன்னுடைய சிறியதாயாரைத் தாழ்ந்தெடுத்து உபசரித்து அவளைப்பார்த்து, தாயே! நீ யொன்றுக்கும் விசனப்பட வேண்டாம் என்று தேறுதலை சொல்லினான். அப்பொழுது பின்னும் அவள்புலம்பிப் பரிதாபப்பட்டு இராவணனைப் பார்த்து, கேளாய் மகனே! நான் நெடுநாளாய் என்னுடைய புத்திரரை யிழந்தது முதலான துன்பங்களினாலே விசனத்தை யடைந்திருக்க, இப்பொழுது உன்னுடைய கோபத்தினாலே எனக்குண்டாகப்பட்ட துன்பம் அந்தத் துன்பங்களைப்பார்க்கினும் மிகவும்கொடியதல்லவோ? ஆகையால் நீ கோபத்தை விட்டு எனக்கு மங்கலியப்பிக்ஷை கொடுக்க வேண்டும். என்றுபசாரஞ்செய்து வேண்டிக்கொண்டு பின்னும் இராவணனைநோக்கிச் சொல்லுகிறாள். கேளாய் ஐயனே! வேதங்களிலே அஷ்டவித மணங்கள் சொல்லியிருக்கின்றன. அவை பிரமம்-பிராசாபத்தியம்-ஆரிடம்-தெய்வம்-காந்தர்வம் ஆசுரம்-ராக்கதம்-பைசாசம் என்று சொல்லப்படுகிறது. இவற்றுள் பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீமுன்னர் கொடுப்பது பிரமமணம். தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தார் உடப்பட்டு அவளைத் தீமுன்னர் கொடுப்பது பிரசாபத்தியமணம். ஒன்றிரண்டு பசுவும் எருதும் வாங்கிக்கொண்டு கன்னிகையைத் தீமுன்னர் கொடுப்பது ஆரிடமணம். வேள்வியால்வந்த கன்னியைத் தீமுன்னர் கொடுப்பது தெய்வமணம். கொடுப்பாரும் கேட்பாருமின்றி இருவரும் தனியானவிடத்தில் எதிர்ப்பட்டுத் தாமே கூடுவது காந்தருவமணம். பெண்ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்கும் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வது அசுரமணம். பெண்ணும் பெண்ணினத்தாரும் உடம்படாமல் வலிதிற்கொள்ளுவது இராக்கதமணம். துயின்றாளைச் சென்று கூடுவது பைசாசமணம். இந்த எட்டு மணங்களுக்குள்ளே ராக்ஷச மணமென்பது மேற்சொன்னபடி கட்டுங் காவலுந் துர்க்கமுமாயிருக்கின்ற விடத்திலிருக்குங் கன்னியையும் யாவனொருவன் தன்னுடைய சவுரியபலத்தினாலே வலிமை செய்துகொண்டுபோயனுபவிக்கின்றானோ?

அஃதல்லவோ? அந்த நியாயமும் உனக்குத் தெரிந்திருக்குமே? என்று மிகவும் வணக்கத்துடனே சொன்னாள்.

அதற்கவன் அவளைப்பார்த்து அம்மா! தாயினிடத்திலே என்னகுற்றமிருந்தாலும் விசாரிக்க வேண்டுவது இல்லையென்றும், பொறுக்கவேண்டுமென்றும் வேதசாஸ்திரங்களிலே சொல்லியிருப்பதால் உன்னைக் குறித்து எல்லாக்குற்றங்களையும் பொறுத்தேன். உன்னுடைய அபீஷ்டமெனக்குஞ் சம்மதமே. இனி ஒரு விகற்பமுமில்லை. இப்பொழுது நான் சுவர்க்கலோகத்தை ஜெயிக்கப்போகிறேன். ஆகையால் உன்னுடைய புருஷனை ஒன்றுக்கும் பயப்படாமல் எனக்குச் சகாயமாய் சேனைகளுடனே வரச்சொல்லுக: என்று கூறிக் கும்பீநசியைப் போகச்சொன்னான். அவளும் அப்படியே சீக்கிரமாகப்போய் நித்ரைசெய்து கொண்டிருக்கின்ற தன்னுடைய புருஷனை எழுப்பி, நடந்த விர்த்தாந்தங்களெல்லாஞ் சொல்லினாள். அதுகேட்ட மதுவானவன் அப்படியோ வென்று ஆச்சரியப்பட்டு, உள்ளத்திலே பயமும் வெளியே சந்தோஷமுமாய் உடனே புறப்பட்டு எதிர்கொண்டுபோய் இராவணனைக் கண்டு, அன்புடனேகலந்து அநேகவுபசாரங்கள்செய்து தன்னுடைய பட்டணத்துக்கு அழைத்து வந்து, கிரகத்திலே விருந்து முதலான எல்லாச்சிறப்புகளுஞ் செய்வித்தான். ராவணன் கும்பகர்ணன் மேகநாதனுதியர்களும் அம்மதுவினுடனே விருந்துண்டு, மிகவுஞ் சந்தோஷமாய் அன்றைநாள் அவ்விடத்தில் வாசஞ்செய்திருந்தார்கள்.

இராவணன் நளகூபரனை நாடிச்செல்லும்
அரம்பையை வலிதிற்புணர்ந்து
அவள் சாபமேற்றல்.

---

இந்தப்பிரகாரம் இராவணனுனவன் மதுவினுடைய பட்டணத்திலே ஒருநாளிருந்து மறுநாளுதயத்திலே அந்தமதுவென்பவன் தன்னுடைய சேனையுடனேகூட வரும்படியாகப்பிரயாணப்பட்டு,தேவலோகத்தை நாடிப் போகின்றுன். அப்பொழுதில் நடுவழியிலே எதிராக ஒருபெரியவனத்தைக் கண்டு, அந்தவனத்திலே சகலசேனைகளோடும் இறங்கியிருந்தான். அப்படியிருக்குமளவில் அந்த வனத்தினுடைய சிங்காரத்தைப் பார்க்கவேண்டித் தானொருவனும் தனியாகப் புறப்பட்டு, அங்கங்கே சந்தனம் - குங்குமம் - சண்பகம் - பாதிரி-புன்னை-கோங்கு-மகிழ் - மா-பலா-வாழை-இவைமுதலானவிருக்ஷங்கள் நல்லவாசனை பொருந்திய புஷ்பங்களையும் மதுரரசமொழுகுங் கனிகளையுமுதிர்த்து நிற்கும் வளங்களையும், அறிவினுலே விளங்கப்பட்ட நற்குணம் பொருந்திய உத்தமபுருஷனுடைய மனம்போலத் தெளிவும், மயக்கத்தைச்செய்யும் ஸ்திரீகளுடைய மனம்போல் அளவிடப்படாதவாழமும் உடைய தண்ணீர்த் தடாகங்களின் மாட்சிமைகளையும், அந்தத் தடாகங்களிலே நிறைய மலர்ந்திருக்கும் தாமரைப் புஷ்பங்களில் அன்னப்பக்ஷிகள் ஆணும்பெண்ணுமாகக் கூடி விளையாடிக் கொண்டிருக்கும் சிங்காரங்களையும், குளிர்ந்தபுன்னை நிழலின்கீழே தேவர்களும்தேவஸ்திரீகளும் இஷ்ட சல்லாபமாகக் கூடி அநுபவித்துக்கொண் டிருக்கப்பட்ட பளிங்குப்பாறை மண்டபங்களின் பெருமிதங்களையும், மயில்களாட வண்டுகள்பாட குயில்கள்கூவ கிளிகள் கொஞ்சிப்பேசும் நயங்களையும் பார்த்துக்கொண்டு உலாவிவருகிறுன்.

அப்படி அவன்வருமளவிற் சாயங்காலவேளையாக, அங்கோரிடத்திலே அழகெல்லாந் திரண்டு ஒருவடிவாக விளங்கும் அதிரூபசவுந்தரியத்தையுடைய அரம்பையென்னும் ஒரு அப்சரப்பெண்மயில் நவமணியணிந்து, நல்வண்ணப் பட்டுடுத்தி, நாணத்தொடு கதம்பம்பூசி மந்தாரப்பூமாலைசூடி, அப்பாதையாய்நளகூபரனிடம் நாடிச் சென்றுக்கொண்டிருந்தனள். ராவணன் அவளைக்கண்டு மோகங்கொண்டு, இவள் எந்தலோகத்துப் பெண்ணோவென்றுச்சரியப்பட்டுப் பிர்மித்து, அடுத்துநின்று அந்தக்கன்னிகையைப் பார்த்து, பெண்ணே! நீ எங்கேயிருக்கிறவள்? உன்னுடைய பெயரென்ன? எவ்விடத்துக்குப் போகிறுய்? என்று கேட்டான். அதற்கு அவள் நான் சுவர்க்கலோகத்திலிருக்கும் தேவஸ்திரீகளில் ஒருபெண். எனக்கு ரம்பையென்றுபெயர், என்னுடைய நாயகன் நளகூபரனென்று சொல்லப்பட்டவன்.

அவனிடத்துக்குப் போகிறேனென்றுசொன்னாள். அதற்கவன் அவளைப் பார்த்து, அடிபெண்ணே இவ்வுலகத்திலே இச்சிக்கின்ற யாவருக்கும் போகஸ்திரீகளாகவிருக்கும்வேசைக்கு ஒருநாயகனென்றும், அவர்கள் ஒருவனுக்குப் பாரியென்றும் நியமமுண்டோ? என்று பரிகாசமாக இகழ்ந்து பேசினான். அதற்கவள் ஐயா! அந்தஸ்திரீகள்பலசிந்தையுடையவர்களேயானாலும், தங்களை விசுவாசத்துடனே பாரியாகக்கொண்ட உத்தமபுருஷருக்கு வஞ்சனை பண்ணுவது தருமமல்லவேயென்று சொல்லினாள். ராவணன் அந்தவசனத்தைச் சற்றுமெண்ணாமல் மதப்பட்டயானைபோலமேல்விழுந்து புணரும்படியாக நிற்கின்றான். அப்படியவன் நிற்கின்ற மனக்குறிப்பை ரம்பையறிந்து, மிகவும்பயந்தவளாய்வணங்கித் தொழுது, ஓ ராஜனே! புலஸ்தியருடைய புத்திரருக்குப் பேரனாகிய நளகூபரனென்று சொல்லப்பட்டவர் எனக்குநாயகனாகையால், அந்த முறைமையிலே யான் உமக்குமருமகள். உமதுதமயனாரான குபேரன்தனயனை நளகூபரனால்வரிக்கப்பட்டு அவ்விடம் போகா நின்றேன். ஆதலால் அதற்குத் தடைபடாதபடி விடைதரவேண்டுமென்று பின்னும் பலபலவிதமாய் வேண்டிச் சொல்லினாள். அப்படிச் சொல்லியும் ராவணன் கேளாமல், வேசைகளுக்கு முறையுண்டோவென்றுமறுத்து, அடங்கார்த காமவிகாரத்தினாலே மதிகெட்டு மேல்விழுந்து அவளைவலிமைசெய்துபுணர்ந்து அநுபவித்தான். அப்படிக்கு அவனாலே துன்பப்பட்ட அரம்பையானவள் மேனிகுலைந்து பதைபதைத்து மனங்கொதித்து ராவணனைப்பார்த்து, அடா பொல்லாத துஷ்டபாபியே! என்னை இப்படி அநியாயஞ் செய்து துன்பப்படுத்திய நீ இனிமேல் என்னுடைய பதிவிரதா தர்மத்தை அறியப் போகிறாய். எந்தக்காலத்திலேயாகிலும் மகா பதிவிரதைகளாயிருக்கின்ற ஸ்திரீகளை இப்படி வலிமைசெய்து தீண்டுவாயானால், அவர்கள் சாபத்தினாலே என்னுடைய வயறு பற்றி எரிகிறதுபோல நீ எரிந்து போகக் கடவாயென்று சாபங் கொடுத்தாள்.

இப்படி சாபங்கொடுத்த அரம்பையானவள் உடனே அந்தப்பாதகனைத் தப்பிக் கடந்து, எப்பொழுதுவருவாளோவென்று வழிபார்த்திருக்குந் தன்னுடைய நாயகனாகிய நளகூபரனிடத்திற் சென்று, தனக்கு இராவணனாலே நேர்ந்த துன்பத்தையெல்லாம் உண்மையாகச் சொல்லி மிகவும் விசனப்பட்டாள். அதுகேட்ட நளகூபரனானவன் சகலத்தையும் தருமமாக நன்றாய் ஆலோசித்து, இவளிடத்திலே தோஷமில்லையென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு, அடி பெண்ணரசி! உனக்கு இப்படித்துன்பஞ்செய்த பாபியாகிய ராவணன் பதிவிரதையாயிருக்கின்றஒருவனுடையஸ்திரீயை அஞ்சாமல் இனிமேல் எக்காலத்திலேயாகிலும் வலிமையாகத்தீண்டுவானாகில், அப்பொழுதே அவனுடையபத்துத்தலைகளும் எழுபிளப்பாக வெடித்துப்போகக் கடவதென்று சாபஞ்செய்தான். அங்கே ராவணனானவன் அந்தவனத்திலேதானே அடங்காதகாமவிகாரத்தையுடையவனாகி, தன்னை விட்டு நீங்கிப்போன அரம்பையானவள் எந்தவழி வருவாளோவென்று நாலுதிக்கிலுந்திரும்பித்திரும்பிப்பார்த்துக்கொண்டு, மன்மத பாணங்களினாலே சரீரமுழுவதும் புண்ணாகத்துளைக்கப்பட்டு, மேலுமேலுஞ் சகிக்கப்படாதகாமவிகாரத்துடனே, அந்த ராத்திரிமுழுதும் ஒரு க்ஷணகாலம் ஒருயுகமாகக் கடக்கப்படாத மோக சமுத்திரத்திலே முழுகிக்கிடந்தான்.

ராவணன் சொர்க்கலோகஞ்சென்று போர் விளக்கையில் மேகநாதன் இந்திரனைப் பாசத்தாற்பிணித்து யாவரோடும் லங்கைக்குமீண்டும் சிறைக்கூடத்தில் அடைத்து, பின் பிரமன் வேண்டுகோளால் அவனை விடுத்தல்.

---

இந்தப்பிரகாரம் அந்த வனத்திலே முதனாள் இராத்திரி முழுவதும் ரம்பையினுடைய மோகவிகாரத்தினாலே துன்பப்பட்டுக்கொண்டிருந்த இராவணனானவன் மறுநாளுதயகாலத்திலே சூரியனைக் கண்டு நீங்கும் இருளுடனே தன்னுடைய மோக இருளும் நீங்கி மயக்கந்தீர்ந்துசிந்தைதெளிந்து, அவ்விடத்தினின்றும்புறப்பட்டுச் சகலசேனைகளுஞ் சமுத்திரம்போல முழங்

கிச்சூழ்ந்துவர, சுவர்க்கலோகத்தை நாடிப் போகின்முன். அப்படி போகும்பொழுதில் அந்தச் செய்தியைத் தேவேந்திரனறிந்து பயந்து துணுக்குற்றெழுந்திருந்து, சில தேவர்களும் தானும் சீக்கிரமாக வைகுண்டத்துக்குப்போய் மகாவிஷ்ணுவை கண்டு வணங்கித் துதிசெய்து நின்ருன். மகாவிஷ்ணுவானவர் அவ்விந்திரனைப் பார்த்து, ஓ சுரேசனே! நீங்கள் யாவரும் இவ்விடத்துக்குவந்த காரியமென்ன? யாதுகாரணத்திஞலே விசனத்தை யடைந்திருக்கின்றீர்கள்? என்று கேட்க, அதற்குத் தேவேந்திரன் மஹாவிஷ்ணுவை நோக்கி, சுவாமி! எக்காலமும் எங்களுக்குத் துன்பத்தையே விளைத்துவருகின்ற பொல்லாத அசுரகுலத்தைக் கெடுத்துத் தாய்போல் எங்களை ரக்ஷிக்கும் தேவரீரையன்றி வேறு தஞ்சமுமுண்டோ? இராவணனுனவன்முன்பு மிகவும் கொடிதான தவங்களைச்செய்து பிரமதேவனிடத்திலும் பரமசிவனிடத்திலும் பெற்றவரத்திஞலும்பலத்திஞலும் பூலோகத்தைப் பாழாக்கி, இப்பொழுது எங்களை துன்பப்படுத்த நினைந்துதேவலோகத்தை நாடி அளவில்லாத தன்னுடைய சேனைகளுடனே வருகிருன். நாங்கள் என்னசெய்வோம்? என்று வணங்கி முறையிட்டுச் சொல்லினுன்.

அதுகேட்ட மஹாவிஷ்ணுவானவர் அவனை நோக்கி, ஓ இமையவர் வேந்தே! நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். நாமே அந்த ராவணன் முதலானவர்களை சங்கரித்து உங்களை இரக்ஷிக்கின்றேம். என்றுஉத்தரவுகொடுத்தனுப்பவும், அந்த உத்தரவைப் பெற்றுக்கொண்ட தேவேந்திரன் தன்னுடைய பரிவாரங்களோடு அமராவதி பட்டணத்துக்கு வருகிருன். அவன் வருவதற்குமுன்னே இராவணனுடைய சேனுசமுத்திரம் சுவர்க்கலோகம் எங்கும்நிறைந்து ஆரவாரிக்கிற முழக்கத்தை அவ்விடத்திலே தலைமையாயிருக்கிற சில தேவர்கள் கேட்டு, இந்த இராக்ஷதர்களுடைய உபத்திரவத்திலே உள்ளநாளளவுந் துன்பப்பட நம்மாலே முடியாது. ஆனுலும் இத்துடனே தேவர்கள் வெல்வதொன்று. அசுரர்கள் வெல்வதொன்று. தேவர்கள் இறப்பதொன்று. அசுரர்கள் இறப்பதொன்று. இவ்விரண்டில் ஒன்றை இன்றைக்கே காணக்கடவோம். என்று எல்லோரும் ஒருமித்து ஒட்டிட்டுக்கொண்டு, தேவசேனைமுழுது மொன்ருகத் திரண்டு, வடவாக்கினிபோலச் சீறி, ஆரவாரித்து நெருங்கிக்கலந்து, மிகவும் கொடுமையான யுத்தம்பண்ண ஆரம்பித்தார்கள். அப்பொழுது அந்த யுத்த விநோதம் பார்க்கவேண்டி சத்தியலோகத்திலிருக்கும் பிரம்மதேவர் அவ்விடத்துக்கு வந்தார். அந்தப் பிரமதேவர் சந்தோஷத்தை யடையும்படியாகத் தேவர்களெல்லோரும் பின்னுமட்டகாசம்பண்ணிநெருங்கி, அநேகமான அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்து யுத்தஞ்செய்தார்கள்.

அந்தயுத்தத்தில் அளவில்லாத இராக்ஷதசேனைகளெல்லாம் கண்ட துண்டங்களாகச் சின்னுபின்னப்பட்டு, போர்க்களம் எங்கும் பிணக்குவியல்கள் மலைமலையாகக் குவிந்து, இரத்தவெள்ளம்பெருகியோடத் தலைப்பட்டது. கவந்தமும் பேயும் கலந்து கூத்தாடின. இப்படி தேவசேனைகள் ராக்கத சேனைகளை அழித்து, பின்னும் மேல் விழுந்து மோதிவருவதை இராவணன் கண்டு தன்னுடைய பாட்டனுகிய சுமாலியை யழைத்து, ஐயா என் மூதாதையே! இத்தேவர்கள் நம்முடைய சேனுசமுத்திரத்திலே அநேகஞ் சேனைகளை மடித்துப் பின்னும் பலங்கொண் டடித்துவருகிருர்களே! நீர் இந்தச்சமயத்தில் இப்படியிருக்கலாமோ? உம்முடைய பல சவுரியங்களை இந்தத் தேவர்களும் மற்றெல்லோர்களும் அறியும்படிச்செய்து, இனியேனும் பகை வென்று வெற்றிகொள்ள வேண்டுமென்று சொன்னுன். அவன் அப்படிச்சொல்லிய கோபக்குறிப்பினை சுமாலியறிந்து, அப்பா இராவணு! உன்னிஷ்டப்படியே செய்கிறேன். என்னுடையசாமர்த்தியத்தை இன்றைக்கு நீயே காணப்போகிருய். என்று சொல்லி பானுகோபன் - நியாயகோபன் - துன்முகன் - தூமகேது - தூம்பிராக்ஷன் - விருபாக்ஷன் - மகோதரன் - மாரீசன் - கரன் - திரிசிரன் - தூஷணன் - சுகசாரணன் - பாசகரன் - பைசாசன் - விராதன் - கும்பன் - நிகும்பன் - சம்பன் - சம்புமாலி - என்று சொல்லப்பட்ட சேனுதிபதிகளுடனே அச்சுமாலியானவன் அந்தக்ஷணமே போர்முகத்தில் திரும்பினுன்.

அதுக்கண்டு முன்பு மூலைக்கு மூலையா ய்த்தெறிபட்டோடிப்போன ராக்ஷசசேனை களெல்லாம் வந்து சேர, அந்தச் சேனைக ளையும் சேர்த்துக்கொண்டு, தேவர்களெல் லோரும் இன்றேடே இறந்தார்களென்று சொல்லும்படிக்கு மிகவுங் குரூரமாக ஆர வாரித்து நெருங்கி, சூலம்-வேல் - ஈட்டி- வாள் - கண்டகோடாலி - இருப்புலக்கை- தண்டம் - இவை முதலான ஆயுதங்களி ஞலே குத்தி வெட்டி அடித்து தகர்த்து, இப்படிப் பலபலவிதமாகத் தாக்கி மோதி அநேகஞ் சேனைகளை மடித்தான். அப்ப டியே அநேகம் ராக்ஷசசேனைகளைத் தேவ ர்களும் அடித்து மடித்தார்கள். பின்பு இருவகைச்சேனைகளும் ஒன்றேடொன்று போர்செய்யத் தன்சேனை மடியும்வேளையிற் சுமாலியானவன் மிகவும் உக்கிரமான கோ பங்கொண்டு சீறி, பலவிதமாயுள்ள வெகு கோடி பாணங்களைத் தொடுத்துச் சரவரு ஷமாகப்பொழிந்து, தேவசேனைகள்சாய்ந் தோடும்படிக்குத் தாக்கி நெருக்கித் துரத்தி ஞன். அப்படிக்கு அவன் துரத்திவருகிற தைக்கண்ட தேவர்களில் ஒருவனுகிய சா வித்திரனென்று சொல்லப்பட்ட சேனுதி பதியானவன் சாய்ந்தோடுகிற தேவசேனை களை நிறுத்தி, சுமாலியைத் தடுத்து, அவ னேடு எதிர்த்துக்கொண்டு அவனும் இவ னும் அநேக விசித்திரமான யுத்தம்பண் ணிக்கொண்டிருந்தார்கள். அந்தச்சமயத் தில் சாவித்திரனுனவன் லக்ஷியமில்லாத இவனை ஓர்பொருளாகப் பாராட்டி யுத்தம் பண்ணிக்கொண் டிருக்கவேண்டுவதென்ன வென்று நினைத்து, மகா கோபத்துடனே அநேக பாணங்களைத்தொடுத்துப் பிரயோ கம்பண்ணி, அந்தச் சுமாலியினுடைய வில்லம்பு - குதிரை - சாரதி-தேர் முதலிய யாவையுந் துண்டுதுண்டாக அறுத்துத் தள்ளி, உடனே ஒருவராலும் தடுக்கப் படாதபலமும் மகிமையும்பொருந்திய ஒரு தண்டாயுதத்தைக் கையிலேயெடுத்துச்சுழ ற்றிவிட்டான். அந்த தண்டாயுதமானது யமதண்டம்போலே அதிகவேகமாகப் பா ய்ந்து, மலைமேலே விழுந்த இடிபோலச் சுமாலியினுடைய தலை தகர்ந்து அவனு டைய சரீரமுழுதும் உருத்தெரியாமல் அழிந்துகுழம்பிச் சேருகும்படியரைத்துக் கொன்றது. அப்படிக்கு அந்தச் சுமாலி இறந்தவுடனே, சேனைகளெல்லாம் சிதை பட்டுத் திசைதிசையாக ஓடக்கண்ட மேக நாதனுனவன் அந்தச்சேனைகளையெல்லாந் தடுத்துத் திருப்பி, பின்னும் போரிலே முட்டி எதிர்த்துக்கொண்டு அளவில்லாத அஸ்திரசஸ்திரங்களினுலே தேவசேனைக ளெல்லாம் நிலைகுலைந்தோடும்படி தாக்கி யுத்தம்பண்ணிக்கொண் டிருக்கின்றுன்.

அப்படி அவனிருக்குமளவில் தேவே ந்திரனுடையகுமாரனுகிய சயந்தனுனவன் அவனுடனே எதிர்த்துக் கொண்டான். அப்பொழுது இவனே மேகநாதன்? இவ னே சயந்தன்? என்று மயங்கத்தக்கதாக அவ்விருவருந் தங்களுடைய தேர்களைச் சக்கிராகாரமாக இடசாரி வலசாரியிலே அதிவேகமாக முடுக்கி, பாணங்களைச் சரவ ருஷமாகப் பொழிந்துகொண்டு, ஒருவருக் கொருவர் மாறிமாறித் தோற்பதும் ஒரு வரையொருவர் வெல்வதுமாக இப்படியே நெடும்பொழுது போர்விளைத்து, தங்களு டைய இருவகைச்சேனைகளும் யுத்தம்பண் ணுகிறதை விட்டு, ஆச்சரியப்பட்டுப் பார் க்க ஆக்கிரமித்து நின்றுர்கள். அப்படி நிற்குமளவில் மேகநாதன் முனைந்து, கொ டியபாணங்களினுலே சயந்தனுடைய ரத சாரதி நிலைகுலைந்து விழும்படி அறுத்துத் தள்ளினுன். அதுகண்ட சயந்தன் மிகவுங் கோபித்து, சில பாணங்களினுலே மேக நாதனுடைய ரதசாரதியுடலைத் துளைத்து அறுத்துத் தள்ளினுன். இப்படிச் சாரதி இறந்ததைக்கண்ட மேகநாதன் மிகவுங் கோபங்கொண்டு, சீக்கிரமாக அக்கினிமய மான அநேகபாணங்களினுலேசயந்தனது மார்புமுழுதும் நிறைத்தான். அதினுலே அந்தச் சயந்தன் மூர்ச்சை யடைந்தான். அப்பொழுது அவனுடைய பாட்டனுகிய புலோமனென்றுசொல்லப்பட்டவன்மேக நாதனுடனே எதிர்த்து யுத்தம்பண்ணிக் கொண்டிருந்தான். அதுபார்த்திருந்த பிர ம்மதேவர் தேவேந்திரனிடஞ் சென்று, ஓ வலாரி! உன்னுடைய குமாரன் மேகநாத னுலே அடிபட்டு மூர்ச்சித்துக் கிடக்கின் றுன். அல்லாமலும் அந்த மேகநாதனு டனே உனக்கு மாமனுகிய புலோமன் யுத் தம் பண்ணிக்கொண் டிருக்கிறுனென்று சொன்னுர். அதுகேட்டமாத்திரத்திலே இந்திரனுனவன் புத்திரனை நினைந்து மிக

வும்விசனத்தையடைந்தவனுய்அதிகமான உக்கிரகோபங் கொண்டு, ரதசாரதியாகிய மாதலியென்று சொல்லப்பட்டவனைச் சீக்கிரமாகத் தேர்கொண்டுவரச்சொல்லி, வஜ்ஜிரகவசம் - கிரீடம்-குண்டலம்-இவைமுதலானவைகளை யணிந்து போர்க்கோலங்கொண்டு யுத்தசன்னத்தனுய் சபாமண்டபத்தினின்று நீங்கிப் புறப்பட்டு, பிரகஸ்பதி பகவான் முதலான மகாரிஷிகள் ஆசீர்வாதஞ் செய்யவும், யக்ஷகந்தர்வர்கள் திவ்விய கானம்பாடவும், தேவஸ்திரீகள் மங்களம் பாடி வாழ்த்தி நாட்டியஞ்செய்யவும், முத்துக்குடைகள் பிடிக்கவும், வெண்சாமரைகளிரட்டவும், விசிறிகள் வீசவும், தேவதுந்துமிமுதலான சகலவாத்தியங்களும் முழங்கவும் வந்து தேரின்மேலேறி, அஷ்டவசுக்களும் மருத்துவரிருவரும், ஏகாதசருத்திரர் முதலானவர்களும், தங்கள் தேர்களிலேறி அளவற்றசேனைகளுடனே சூழ்ந்து வரும்படியாகவந்து யுத்தகளத்திற் பிரவேசித்தான். அம்மாத்திரத்தில் அதைக்கேள்விப்பட்ட ராவணனுனவன் தன்னுடைய சேனுபதிகளும் தானுமாக எதிர்த்து வருகிருன்.

அப்படி வரும்பொழுதில் அவ்விராவணனுடைய குமாரனுகிய மேகநாதன் அவ்விடத்துக்கு வந்து, தன் பிதாவாகிய ராவணனைப் பார்த்து, இந்தத் தேவேந்திரனைஜயிப்பதற்கு நீர் புறப்படவேண்டுமோ? நானெருவன் போதாதோ? என்னைப் புத்திரனுகப்பெற்றதற்கு இந்நாள்வரையிலும் என்னுலொருபிரயோசனத்தையு மறியீரல்லவோ? ஆகையால் இப்பொழுது உம்முடைய மனது சந்தோஷத்தை யடையும்படிக்கு இவனை ஜயித்து, உமக்கு வெற்றியும் கீர்த்தியும் உண்டாகச் செய்கிறேன். எனக்கு உத்தரவுகொடும். என்று அவனை நிறுத்தித் தானே சென்று அவ்விந்திரனுடன் எதிர்த்துக்கொண்டு, கார்காலத்து மழை பெய்வதுபோல ஆகாசமெங்கும் பாணமயமாக நிறையும்படி சரவருஷமாகப் பொழிந்து,மகாகோரமானயுத்தம்பண்ணுகிருன். அப்பொழுதில் தேவர்களுடைய தேர்த்திரள்களுக்கெல்லாம் அச்சு தெறித்தும், ஆணிகள்கழன்றும், உருளைகளுடைந்தும், கொடிகளறுந்தும், கொடுங்கைகள் சரிந்தும், குதிரைகளுஞ்சாரதிகளும் மடிந்தும் போயின. யானைக்கூட்டங்களுக்கெல்லாம் கால்களறுபட்டும், வால்கள் தரிபட்டும், கன்னங்கள் விடுபட்டும், பின்னங்கள் பலபட்டும், துதிக்கைகள் துணிபட்டும், மதப்பைகளறுபட்டும், கொம்புகள் முறிபட்டும், அம்புகளடிபட்டும் போனதல்லாமல், முகங்களும் மத்தகங்களும் பிளக்கப்பட்டும் போயின. குதிரைத் திரள்களுக்கெல்லாம் கால்களும், வால்களும், தலைகளும், குளம்புகளும், முதுகுகளும், வேறுவேருகிக் கண்டதுண்டப்பட்டழிந்தன. பதாதிவெள்ளமெல்லாம் பெருங்காற்றி லகப்பட்ட இலவம் பஞ்சுபோல உருத்தெரியாமல், ஆயுதங்களோடே சின்னுபின்னப்பட்டழிந்தன. கேளும் ஸ்ரீராகவா! அப்போதந்த யுத்தகளமோ ஒரு பெருந்தாழியாகவும், அதிலேயகப்பட்டதேவர்களேதயிர்க்கட்டியாகவும், மேகநாதன் புயவலியே மத்தாகவும் இருந்தன. இப்படித் தேவர்களுடைய ரத்தமாம்சங்கள், சேறுபட்டுக் குழம்பாகும்படி கடைந்து கலக்கியழிப்பவனுன மேகநாதனுனவன், மேருவில்லையும் கோதண்டவில்லையுமே யல்லாமல் வேறெரு வில்லையும் இவன்வில்லுக்கு நிகர் சொல்லக்கூடாதென்று, பிரம்மதேவர் முதலானவர்கள் ஆச்சரியப்படும்படிக்குப் பூமியாகாசம் திக்குகளெங்கும் உள்ளிலும்புறம்பிலுமுலாவி, தேவர்களுடைய கண்ணிலும் மனதிலும் தானுகவே காணும்படிக்கு, அதிவேகமாகப்பாய்ந்து சுழன்று மகா விசித்திரமான யுத்தம் பண்ணிக்கொண்டு நிற்கின்றுன். அப்படி அவனிற்குமளவில் கும்பகர்ணனுனவன் அதிககோபத்துடனே கண்கள்சிவந்துநெருப்புப்பொறிபறக்கவும், அண்டம் வெடிபடவும், பூமி நடுங்கவும், அட்டகாசம்பண்ணி ஒருபெரிய நீலமலை நடந்தாற்போல அதிசீக்கிரமாகச் சென்று, தேவர்களெல்லாரும் முறிந்தோடும்படி போர்க்களத்திலேபுகுந்து, தன்னுடைய தண்டாயுதத்தினுலேயாவரையும்மடித்து, தேரோடு தேர்களைத்தாக்கிநொறுக்கியும்,யானையோடு யானைகளை மோதிச் சிதைத்தும், குதிரையோடு பதாதிகளை ஜாடிக்கொன்றும், கைகளினுலே ஓங்கியறைந்தும், கால்களினுலே உதைத்தும் மிதித்தும், இப்படிக்குப் பலபலவிதமாக அநேகஞ் சேனைகளை மடித்தான்.

அதுகண்ட உருத்திரர் - வசுக்கள் - அருக்கர் - மருத்துவர்-என்று சொல்லப்பட்ட பலவகைத் தேவர்களெல்லாம் வெகுகோடி சதுரங்கசேனையுடனே அதிவேகமாக வந்து எதிர்த்துக்கொண்டு, மேகம் போலமுழங்கி அட்டகாசம்பண்ணி, சூலாயுதம்-வேலாயுதம் - வாளாயுதம் - வஜ்ஜிராயுதம் - தண்டாயுத முதலான அநேகம் ஆயுத பாணங்களினாலே கும்பகர்ணனுடைய சரீரமுழுதும் ரத்தவெள்ளமொழுகியோடும்படி துளைத்துப் பிளந்து, அளவில்லாத ராக்ஷச சேனைகளையுஞ் சின்னாபின்னப்பட்டழியும்படி அடித்தார்கள். அப்பொழுது ராவணன் பிரளயகாலருத்திரன் போல மகா உக்கிரகோபங்கொண்டு, இந்த க்ஷணமே தேவர்களென்கிற பெயரே இல்லாதபடி அழித்து, என்னுடையவெற்றிப் புகழை நிலைநிறுத்துவேனென்று பிரதாபம்பேசி அட்டகாசஞ் செய்து, அதிவேகமாகத் தேரை முடுக்கி யடுத்து எதிர்த்துக்கொண்டு,கையிலேவில்லையெடுத்து நாணேறிட்டுக் குணத்தொனிபண்ணி, சத்தமேகங்களுங் கூடி நெருப்புமழை பெய்தாற்போல அக்கினிமயமான அநேககோடி பாணங்களைத் தொடுத்துச் சரவருஷமாக ஓயாமற்பொழிகிறான். அப்போது அந்தப் பாணங்களினாலே தேவசேனைகளெல்லாம் நெருப்பிலகப்பட்ட பஞ்சுபோல் நீறாகி மடிய, அதைக்கண்ட தேவேந்திரனானவன் ராவணனைப்பார்க்கிலும் அதிகோபங்கொண்டு எதிர்த்து நின்று, அவ்விராவணனுடையதலைகளிலும் தோள்களிலும் மார்பிலும் பாணமயமாக நிறையும்படி விஷரூபமான அநேககோடி அக்கினிச்சரங்களைச் சொரிந்தான். அதற்கு எவ்வளவாகிலும் பலங்குறைந்து சலியாத ராவணனானவன் பின்னுமப்படி அவ்விந்திரன்மேலே அநேகபாணங்களைவிட்டான். இந்திரனும் அப்படி அநேகபாணங்களை விட்டான். இப்படியே பின்னும் பின்னும் ஒருவருக்கொருவர் இளையாமல் அநேகபாணங்களை பொழிந்துகொண்டு, சமமான குரூரயுத்தம் பண்ண அவ்விருவருடைய சேனாசமுத்திரத்திலுள்ள படைத்தலைவர்களும், சுத்த வீரர்களும், அவர்களைப்போலவே ஒருவரோடொருவர்எதிர்த்துக்கொண்டு,உலகமெங்கும் பாணமயமாக நிறைந்து, இருளும்படி சரவருஷமாகப் பொழிந்து, மிகவும்கொடுமையானயுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். அவர்களுள் தேவர்சேனையிலுள்ள படைத்தலைவர்களெல்லாரும் ஒன்றாகத்திரண்டு ஆரவாரித்து, அதிககோபத்துடனே மிகவும் பலங்கொண்டு, பலபல விதமாயுள்ள அநேக அஸ்திரசஸ்திரங்களினாலே ராக்ஷசசேனைகளெல்லாம்மடிந்து அழியும்படியாக யுத்தம் பண்ணும்பொழுதில் ராவணனானவன் அதைக்கண்டு, உலைமுகத்து நெருப்பைப்போல் மனங்கொதித்து, சிறிதும் சகிக்கமாட்டாதவனாய்த் தன்னுடைய சாரதியைப்பார்த்துச் சொல்லுகிறான்.

அப்பா வலவனே! யான் உன்னுடைய கைத்தொழில் வல்லமையை இன்றைக்கு அறியவேண்டும். இந்தத்தேரினை ஒரு நிமிஷத்திலே தேவர்களுடைய சேனைக்கு நடுவேகொண்டுபோய்விட்டாயானால், இப்பொழுதே என்னுடைய பகைவரை ஜெயித்து, மூன்றுலோகமும் என்னுடைய ஆக்கினைப்பிரகாரம் நடக்கும்படியாக இராஜரீகஞ் செய்வேன். ஆகையால் இந்த உபகாரம் எனக்கு நீ செய்யவேணும். என்று நயமாகச்சொல்லவும், அதுகேட்ட அந்தச் சாரதியானவன் ரதத்தை அரை நிமிஷத்திலே மனோவேகத்திலும் அதிவேகமாகப் போக்கி, எதிரே நின்ற சேனையைப் பேதித்து, உள்ளே செலுத்திக்கொண்டு போகிறான். அப்படி போகும்பொழுதில் அது கண்ட தேவேந்திரன் தன்னுடைய பக்கத்திலே நின்றதேவர்களைப்பார்த்து, ஓ நண்பர்களே! என்னை வஞ்சனையாலே அபஜயப்படுத்தவருகிற இந்த ராவணனை இப்பொழுதே உங்களுடையமனது சந்தோஷத்தை அடையும்படிக்குப் பிடித்து, தோளோடு தோள்சேரக் கட்டுகிறேன் பாருங்களென்று சொன்னான். அப்படி அவன் சொல்வதற்கு முன்னமே தேரோடு ராவணன்வந்து கிட்டினான். அவன் கிட்டவே தேவேந்திரன் பயந்து மறைந்தோடிப் போயினான்.

அப்பொழுது ராவணனானவன் நூறு யோசனை தூரவிஸ்தாரம் நிறைந்து நின்ற தேவசேனையினுள்ளே திசை திசைக்குத் தேரைமுடுக்கித் திருப்பி வளைத்து, தன்னு

டைய பாணங்களினுலே சென்ற சென்ற விடமெங்கும்பாழாக அநேகஞ் சேனைகளை மடிக்கத் தலைப்பட்டான். அச்சமயத்தில் ஒரு பெரிய பருவதத்தைக் கார்காலத்து மேகங்கள்கவிந்துமூடிக்கொண்டதுபோல முன்பு மறைந்தோடிப்போன தேவேந்திரன் அளவில்லாத சேனைகளைத் திரட்டிக் கொண்டுவந்து, ராவணனைவளைத்து நெருங்கினுன். அப்பொழுது ராக்ஷசசேனையெல்லாம் இன்றோடே இலங்கைமன்னவன் இறந்து போய்விட்டானென்று பயந்து முறையிட்டலற, அந்தச் சத்தங்கேட்ட ராவணனுடைய குமாரனுகிய மேகநாதனுனவன் மிகவுங் கொடிய கோபங்கொண்டு அதிவேகமாகவந்து, தகப்பனை வளைத்துக் கொண்டிருந்த சேனைகளெல்லாஞ் சின்னுபின்னமாய் முறிபட்டோடத் துரத்தி, தேவேந்திரன்மேலே திரும்பி எதிர்த்துக் கொண்டு, அவனுடைய தேரும் - குதிரையும்-சாரதியும் - அவனும் உருத்தெரியாத படிக்கு அநேககோடி பாணங்களை இடைவிடாமல் மேலுமேலுஞ் சொரிந்து நிலைகுலைந்து சாயும்படி அடித்தான். அப்பொழுது தேவேந்திரன் நமக்குச் சத்துருக்களாயுள்ள பலசவுரியம்பொருந்திய அநேகமான ராக்ஷசர்களுடனே மகத்தான யுத்தங்கள் செய்திருக்கிறோம். ஆனுலும் இப்பொழுது இவனுலே படப்பட்ட துன்பத்தை ஒருகாலத்திலும் பட்டறியோம் என்று பயந்து, மனங்கலங்கித் தேரிலிருந்து நிர்வகிக்கமாட்டாமல் அந்தத்தேரை விட்டு, மிகவும் பலமும் வேகமும் பொருந்திய ஐராவதத்தின்மே லேறிக்கொண்டு, மகாவுக்கிரகோபத்துடனே பலபலவிதமாயுள்ள அநேகபாணங்களினுலே தன்னை எதிர்த்து நின்ற ராக்ஷசசேனைகளெல்லாஞ் சின்னுபின்னப்பட்டழியமடித்து,பின்னும் சிலராக்ஷசர்கள் நாமெல்லோரும் எப்படிக் குத் தப்பிப் பிழைப்போமென்று பயந்து முறிந்தோடத் துரத்தி, மேகநாதனும் பிரமித்துப் பயப்படும்படிக்கு நெருங்கிச்சீறிக் கொடுமையான யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தான். அப்படியவன் இருக்குமளவில் அந்த மேகநாதன் அவனை யுத்தம்பண்ணி வெல்லக்கூடாமல் வஞ்சனையினுலே வெல்லவேணுமென்றுலோசித்து, முன்புதனக்குப் பரமசிவன் கொடுத்த வரத்தினுலே, உலகமெங்கும் அந்தகாரப்பட்டிருளும்படிக்கு ஒரு மாயைசெய்து மயக்கினுன்.

அப்பொழுது தேவசேனையிலுள்ள எல்லோரும் மயங்கிச் செயலழிந்து, கைகால் சோர்ந்து கண்ணுந்தெரியாமல் மூர்ச்சையடைந்துகிடந்தார்கள். தேவேந்திரனும் சிந்தை கலங்கி, ஒருசெயலுந் தோற்றுமல், சித்தப்பிரமை கொண்டவன்போல மயங்கி நின்றுன். அப்படிக்கு நின்ற தேவேந்திரனை அந்த மேகநாதன் யமனுடைய பாசத்துக்குச் சமானமான ஒருபாசத்தினுலேகட்டி, ராக்ஷசசேனைகளெல்லாம் இந்திரன் அகப்பட்டுக் கட்டுப்பட்டானென்று ஆரவாரித்துச் சூழ்ந்துவரத் தன்னுடைய தகப்பனுகிய ராவணனுக்கு எதிரே கொண்டுபோய் நிறுத்தி, ஓ எனதையாவே! நமக்குப் பகைவனுயிருப்பதல்லாமல், நம்முடையகுலத்திலுள்ள அநேகமான பலம் பொருந்திய ராக்ஷசர்களையழித்த பராக்கிரமனுகிய இவ்விந்திரன் எனக்காற்றமாட்டாமலென்கையிலகப்பட்டுக்கொண்டான். ஆனபடியினுல் இனிமேல் உமக்கொரு பகையுமில்லை. அன்னத்தைப்பழிக்கும்அழகிய நடையினையுடைய ஊர்வசி முதலான தேவஸ்திரீகளும் உமது மனதுக்கேற்றபடி நடப்பார்கள். இந்த மூன்றுலோகத்துக்கும் நீரே அதிபதியாகி ராஜரீகம் பண்ணியாளுவீர். என்று இப்படி தன்னுடைய பிரதாபங்களைச் சொல்லக்கேட்ட ராவணனுனவன் புத்திரனுலே பிதாவடையப்பட்ட பிரயோசனத்தை யடைந்தவன் நானேயென்று மிகவும் ஆனந்தசந்தோஷமாக மனம்பொங்கி, இருபதுதோள்களும் பூரித்து, மகனை மார்பிறுகத்தழுவிக்கொண்டு, தேவர்களுக்கெல்லாம் அதிபதியாகிய தேவேந்திரனை நீ ஜெயித்தது இந்த மூன்றுலோகத்தையும் ஜெயித்து வெற்றி கொண்டதல்லவோவென்று, மகனை அருமையாகக்கொண்டாடி உபசரித்து மகிழ்ந்தான்.

அதன்பின்பு அந்த ராவணனுனவன் தனக்கு ஜெயந்தருவித்த மேகநாதனேடு, கட்டுப்பட்ட இந்திரனும் படைத்தலைவர்களும் பரிவாரசேனைகளும் கூடவரச் சுவர்க்கலோகத்தினின்று நீங்கி, இலங்கையை நோக்கி வருகிறுன். அப்படி வரும்பொழுது அந்தலங்காபட்டணத்திலுள்ளசகல

ஜனங்களும் எதிர்கொண்டுவந்து வணங்கிப் புகழ்ந்து உபசாரஞ்செய்ய, அவர்களுடனே தன்னுடைய லங்காபட்டணத்துக்குள்ளே பிரவேசித்து, தேவேந்திரனைச் சிறைக்கூடத்திலே வைத்து, மிகவுஞ் சந்தோஷத்தை அடைந்திருந்தான். அப்படியிருக்குங்காலத்தில் சகலமானதேவர்களும் அரசிழந்த குடிபோலத் துன்பத்தையடைந்தவர்களாய் என்னசெய்வோமென்றாலோசித்து, உடனே சத்தியலோகத்துக்குப் போய்ப் பிரம்மதேவரைக் கண்டு வணங்கி நமஸ்கரித்து, சுவாமி! ராவணனென்பவன் யுத்தம் பண்ணிக்கொண்டிருக்கின்ற சமயத்திலே அவன்குமாரனாகிய மேகநாதனென்பவன் எங்களுடைய ராஜாவை வஞ்சனையினாலே அபஜயப்படுத்திப் பிடித்துக்கொண்டுபோய் லங்காபட்டணத்திலே சிறைவைத்திருக்கிறான். இந்தச் செயல்களெல்லாம் உம்முடைய மகிமையினாலே உண்டானதல்லவோ? ஆகையால்இப்பொழுது எங்களிடத்திலே கிருபைவைத்து ரக்ஷிக்கவேண்டுமென்று முறையிட்டு வேண்டினார்கள். அதுகேட்ட பிரம்மதேவர் அவர்களைச் சன்மானித்து, ஓ சுவர்க்கலோகவாசிகளே! இனி நாமே உங்களுடைய ராஜனைச் சிறையினின்றும் விடுவித்து, முன்போல இருக்கச்செய்கிறோம். அஞ்சாதீர்கள் என்றுசொல்லி அவர்களையுங்கூட அழைத்துக்கொண்டு லங்காபட்டணத்துக்குவந்து ராவணனைக் கண்டு ஆசீர்வாதஞ்செய்து சொல்லுகின்றார். கேளும் தசக்கிரீவராஜனே! இந்த மூன்றுலோகங்களிலேயும்பலபராக்கிரமசௌரியவிஷயங்களிலே உமக்குச் சமானமாக சிலாக்கியத்தையடைந்தவர்கள் ஒருவருமில்லை. இப்படிப்பட்ட மேன்மைபொருந்திய உம்முடைய புத்திரனோ உம்மிலும் அதிகபலவான். திரிலோகாதிபதியாகிய இந்திரனை ஜெயித்து சிறையிலேவைத்தான். ஆகையால் அந்தக் காரணத்தினாலே மேகநாதனுக்கு இன்றுமுதல் இந்திரஜித்தென்று சொல்லப்பட்ட நாமதேயம் விளங்கக்கடவது. என்று சொல்லிப் பின்னும் நயமான அநேக உபசாரவார்த்தைகள்கூறி, ஐயா லங்காதிபதி! இந்தத் தேவர்களெல்லோரும் நம்முன்னிலையாய் உம்முடைய தரிசனத்துக்கு வந்தார்கள். ஆகையால் இவர்களுடைய மனது சந்தோஷமாகும்படிக்கு இந்திரனைச்சிறைவிடுத்து அனுப்பும்படி தயைசெய்யவேண்டும். என்று சொல்லவும் அதற்கு ராவணன் அவரைப்பார்த்து, ஐயாவாணிகேள்வரே! உம்மைக்குறித்து இந்தத் தேவேந்திரனை விடுகிறதினாலே எனக்கென்ன பிரயோஜனம்? ஆகையால் இதற்குப் பிரதியுபகாரமாக இந்தலோகமுள்ளளவும் அழியாமலிருக்கும் நித்தியத்துவத்தை எனக்குக்கொடுத்தீராகில், நானும் நீர்சொல்லிய படியே செய்கிறேனென்றான். இப்படிராவணன் கேட்டதைப் பிரம்மதேவர் நன்றாய் ஆலோசித்து, ஓ தசக்கிரீவமகாராஜனே! உலகத்திலே சர்வகாரணனாகிய ஈஸ்வரனைத்தவிர வேறொருவருக்கும் நித்தியத்துவங்கிடையாது. ஆகுங்காரியத்தை கேட்டாற் செய்யலாம். ஆகாதகாரியத்தை யார்தான் செய்வார்கள்? நம்மாலே கொடுக்கப்படாத பிரயோசனத்தை நீர் கேட்கிறது தருமமல்லவென்று சொன்னார்.

அப்பொழுது பக்கத்திலிருந்த இந்திரஜித்தானவன் பிரம்மதேவரைப் பார்த்து, சுவாமி! நான் இனிமேற்செய்யும் யாகத்திலேயுண்டாகிற ரதத்தின்மேலேறிக்கொண்டு யுத்தம்பண்ணுங்காலத்தில் எனக்கந்தியம் வராமலிருக்கவும், அந்த யாகத்துக்கொரு விகாதமுமில்லாமல் நிறைவேறும்படியாகவும் எனக்கு வரங்கொடுமென்று கேட்டான். அந்தப்பிரகாரமேகொடுத்தோமென்றநுக்கிக்கிரகஞ்செய்தார். அப்படிக்கு வரம்பெற்ற இந்திரஜித்தானவன் மிகவுஞ் சந்தோஷத்தையடைந்து, சிறைக்கூடத்திலிருந்த இந்திரனை வரவழைத்துப் பிரம்மதேவருக்கு எதிராகக் கொண்டுபோய் விட்டான். அப்பொழுதுதேவேந்திரனானவன் அற்பபிராணியாகிய ஓர் எறும்பினாலே பெரிய மதயானையானது துன்பப்பட்டாற்போல இந்த ராவணன் மகன்செய்த மாயத்தினாலே நமக்கிப்படிப்பட்ட துன்பங்களெல்லாம் நேரிட்டதல்லவாவென்று மிகவுந் துக்கத்தையடைந்து, சரீரமுழுதுங் குன்றி வெட்கப்பட்டு, ஒருவரையும் பாராமல் தலைகவிழ்ந்து நிலத்தைப்பார்த்தபடியாய் நின்றான். அக்கால் பிரமதேவன் இந்திரனை நோக்கி, கேளாய் தேவராஜனே! முன்பு கவுதமர் கொடுத்த சாபத்தினாலே உனக்கு இப்படிப்பட்ட துன்பங்களெல்

லாம் நேரிட்டன. தவமகிமை பொருந்திய மகாரிஷிகளுடைய சாபத்தை ஒருவரும் நீக்கமாட்டார்கள். ஆனபடியினலே நீவிசனப்படவேண்டாம் என்று தேவேந்திரனுக்கு உபசாரஞ்சொல்லி ராவணனிடத்தில் உத்தரவு செய்வித்து, தேவர்களுடனே தேவேந்திரன் சுவர்க்கலோகத்திலேபோய் இருக்கும்படியாக அனுப்பித் தாம் தம்முடைய சத்தியலோகத்துக்குப் போயினர்.

மகாவிஜயப்படலம் முற்றிற்று.

## இராவணன் கார்த்தவீரியனல் கட்டுண்டபடலம்.

### இலங்கையைநோக்கிவந்த கார்த்தவீரியார்ச்சுனனை ராவணன் எதிர்த்தல்.

இந்தப்பிரகாரம் அகஸ்தியமகாமுனிவர் இராவணனுடைய பல பராக்கிரமவிசயங்களெல்லாஞ் சொல்லக்கேட்ட ஸ்ரீராமர் மிகவுஞ்சந்தோஷத்தையடைந்து ஆச்சரியப்பட்டு, பின்னும் அவ்வகஸ்தியமகாமுனிவரைப்பார்த்து, ஐயா சகலகலைக்கியானங்களுக்குந் தாயகமாகிய பொதிகைமுனியே! அந்தராவணன் தனியாய் திக்குவிஜயஞ்செய்ய வெளிப்பட்டபோது அவனல் அநேகமான ராஜாக்கள் ஜெயிக்கப்பட்டு அழிந்துபோனர்களென்றும், பின்னர் மேகநாதன் கும்பகர்ணன் முதலாகிய பந்துக்களுடனே மகாவிஜயஞ் செய்யப் புறப்பட்டபோது இந்திரன்கட்டுப்பட்டானென்றும் சொன்னீர். ஆனல் இந்த உலகத்திலே ராவணனுக்குமேலான பலமுடையவர்கள் ஒருவருமில்லையோ? அவன் ஒருவராலேயு மபஜயப்பட்ட தில்லையோ? என்று கேட்கவும் அதற்கு அகஸ்தியமகாரிஷியானவர்ஸ்ரீராமரைப்பார்த்து,கேளும் ஸ்ரீராகவா! சத்துருக்களென்றுவாயினலேயாகிலுஞ் சொல்லுகிறதற்கு ஒருவருமில்லாமல் இந்தவுலகமெல்லாந் தன்னுடைய ஆக்கினைப்பிரகாரம் நடக்கும்படி ராச்சியபரிபாலனஞ்செய்யும் கார்த்தவீரியார்ச்சுனனிடத்திலும், வாலியினிடத்திலும், இராவணனனவன் தனக்கு மேலான பலமுடைய தொன்றுமில்லாத சரபத்தினிடத்திலே ஒரு சிறுநரி அகப்பட்டதுபோலத் தன்னுடையபலபராக்கிரமமெல்லாம் இழந்து கட்டுப்பட்டான். சக்கரவர்த்திகளாயினும் சத்துருக்கள் இல்லாதவர்கள் யார்? என்றுசொல்லவும் அதுகேட்ட ஸ்ரீராமர் பின்னும் அதிகமான சந்தோஷத்தையடைந்தவராய் அவ்வகஸ்திய மகாமுனிவரை நோக்கி, சுவாமி! அவ்விருவரிடத்திலும் ராவணன் கட்டுபட்ட விதங்களை நன்ருக விவரித்துச் சொல்லவேணுமென்று கேட்க, அகஸ்தியபகவான் சொல்லத் தொடங்கினர்.

கேளும் தசரதநந்தன! முன்னமொரு காலம் தனக்குநிகரான பலமுடையவர்கள் ஒருவருமில்லாத பராக்கிரமனும், ஆயிரந் தோள்களுடையவனும், கார்த்தவீரியார்ச்சுனனென்று சொல்லப்பட்ட பெயரையுடையவனுமாய் ஒருவனிருந்தான். அவனளவில்லாத தன்னுடைய பரிவாரசேனைகளுடனே உலகத்திலே சத்துருக்களென் றெதிர்த்தவர்களெல்லாரையும் ஜயித்து, வெற்றிகொண்டுவருமளவில் லங்காபட்டணத்தைச் சார்ந்து, ராவணனென்று சொல்லப்பட்டவன் எவன்? அவன் எவ்விடத்திலிருக்கின்ருன்? அவனை யுத்தம்பண்ண வெளியிலே புறப்பட்டு வரச்சொல்லுங்கள் என்றறைகூவி நின்ருன். அதற்கு அவ்விடத்திலுள்ள ராவணனுடைய மந்திரிமார்கள் அவனை நோக்கி, ஐயா சகஸ்திரபுய சம்பன்னரே! நீர் கேட்ட எங்கள் ராஜன் அநேகமான ஸ்திரீகளுடனே ஜலக்கிரீடை விளையாடல்செய்ய விரும்பி, ராஜபரிவாரசேனைகளுடனே நருமதைநதிதீரத்துக்குப் போயிருக்கிருரென்று சொல்லினர். அதுகேட்டமாத்திரத்திலேகார்த்தவீரியார்ச்சுனனனவன் அவ்விடத்தினின்றும் நீங்கி, யானையைத்தேடிக்கொண்டு சிங்கம் போவதுபோல ராவணனைத் தேடிக்கொண்டு அவன்போனவழியே அதிவேகமாகச் செல்லுகின்ருன். அப்படி அவன் செல்லும்பொழுதில் அவனுக்கெதிராகக் குளிர்ந்த அருவிகளாலும், இளந்தென்றலுலாவும் பூஞ்சோலைகளாலும், அழகு பொருந்தி பொன்மயமான ஆயிரஞ் சிகரங்களுடனே ஆகாயபரியந்தம் உயர்ந்து விளங்கும் விந்தபருவதத்தைக்கண்டு அவ்

விடத்திலிருந்தான். அவனுக்குமுன்பாகச் சென்ற ராவணன் நருமதைநதிதீரத்தில் பல ஸ்திரீகளோடு ஜலக்கிரீடை விளையாடல் முடித்து அந்தப்பருவதத்தினுடைய அழகைப்பார்த்து இப்படியுமுண்டோவென்று ஆச்சரியப்பட்டு, அந்தப் பருவதத்தின்பக்கத்திலேசெல்லும் அந்த நருமதை நதியிலே மந்திரி முதலானவர்களுடனே தீர்த்தமாடி, வேதாகம விதிப்படி மணலாலே லிங்கம் வகுத்துச் சிவபூசை செய்துக்கொண்டிருக்கின்றான். அந்த நதிக்கு மேலாக நெடுந்தூரத்திலே ராவணனைத் தேடிவந்த கார்த்தவீரியார்ச்சுனன் அநேக வித ஸ்திரீகளுடனே ஜலக்கிரீடைசெய்து விளையாடுதற்காக வெண்ணி, தன்னுடைய ஆயிரங்கைகளினாலே அந்தநதியைக் குறுக்கேதடுத்து, அந்தக்கைகளையே அணையாகக்கட்டி சலத்தைப் பெருக்கினான். அந்த ஜலமானதுசமுத்திரம்போலத்தேங்கி எதிர்த்துமேற்கொண்டு, இரண்டுபக்கத்திலும் ததும்பிப் புரண்டு கரைகளையுடைத்துக் கொண்டு பெருகியோடத் தலைப்பட்டது. அப்படியோடுகின்ற வெள்ளமானது ராவணனுடைய பூஜாமுகத்திற்பாய்ந்து, அவனாதித்துவந்த பிரிதிவிலிங்கத்தைக்கரைத்து அழித்துப்போயது. அதுகண்டராவணன் திடுக்கிட்டெழுந்து திகைத்து, மகாகோபத்துடனே சுகசாரணரை யழைத்து, அகாரணமாக இப்பொழுது இந்தவெள்ளம், இப்படி வரவேண்டியதென்ன? இந்தக் காரணத்தை நீங்கள் சீக்கிரமாகப்போயறிந்து வாருங்களென் றனுப்புவித்தான். அவர்களும் அப்படியேபோய்க் கண்டுவந்து ராவணனை நோக்கிச் சொல்லுகின்றார்கள்.

ஓ மகாப்பிரபு! கார்த்தவீரியார்ச்சுனனென்று சொல்லப்பட்டவன் ஆயிரந்தோள்களுடையவன். அவன் தன்னுடைய ஆயிரங்கைகளினாலே ஆற்றைக் குறுக்கே தடுத்து ஜலத்தைப்பெருக்கி, அநேகஸ்திரீகளுடனே ஜலக்கிரீடை விளையாடிக்கொண்டிருக்கிறான். அந்தஜலம்பெருகித் தேங்கிக் கரைபுரண்டு வெள்ளமாக ஓடிவருகிறது. என்று சொல்லக்கேட்ட ராவணன் அந்தக்ஷணமே மந்திரிமார்களுடன் கார்த்தவீரியார்ச்சுனன் இருக்குமிடத்தே அதிவேகமாகப்போய் அவனுடைய மந்திரிமார்களைப் பார்த்து, ராவணன் யுத்தத்துக்கு வந்திருக்கிறானென்று உங்களுடைய ராஜாவுக்குத் தெரிவியுங்களென்று சொல்லினான். அதற்கு அவர்கள் எங்களுடைய ராஜா சில ஸ்திரீகளுடனே விநோதமாக ஜலக்கிரீடை செய்து விளையாடிக்கொண்டிருக்கிற சமயமாதலால், இப்போது நாங்கள் உம்முடையகாரியத்தை அறியப் பண்ணவுங்கூடாது. யுத்தத்துக்கழைப்பதுவும் நியாயமல்ல. நாளைக்குவந்தால் நீங்களிருவரும் யுத்தம்பண்ணலாம். என்றுசொன்ன மாத்திரத்திலே ராவணன் மிகவுங்கோபித்துச்சீறி, அந்த மந்திரிமார்கள்மேலே புலிபோலப் பாய்ந்தான். அவர்களுங் கோபங்கொண்டு அநேக சேனைகளுடனே எதிர்த்துக்கொண்டார்கள். அதுகண்டு இராவணனுடைய மந்திரிமார்களும் எதிர்த்தார்கள்.

## இராவணன் கார்த்தவீரியார்ச்சுனனால் சிறைபட்டுப் பின்பு புலஸ்தியரால் விடுபடல்.

இப்படி அவ்விருவகை மந்திரிமார்களும் ஒருவருக்கொருவர் அஸ்திரசஸ்திரங்களைமழைபோலப்பொழிந்து போர்க்களமெங்கும் ரத்தவெள்ளம்பெருக மிகவுங் கொடுமையான யுத்தம் பண்ணிக்கொண்டிருக்குமளவில், கார்த்தவீரியன்படை முனைந்து ராவணன் சேனையிலே அநேகஞ்சேனையைமடித்தது. அதுகண்ட மகோதரன்-மாரீசன்-விரூபாக்ஷன்-தூமிராக்ஷன் - முதலான சேனாபதிகள் கோபங்கொண்டு எதிர்த்து, வேல் - சூலம்-தண்டம் - இருப்புலக்கை - இவை முதலான ஆயுதபாணங்களினாலேமோதியடித்தார்கள். அதனால்அநேகஞ் சேனைகள் மடிந்து முறிபட்டோடிக் கார்த்தவீரியார்ச்சுனனிடத்தில் சாய்ந்து விழுகிறபொழுதில், அதைக்கண்ட ஸ்திரீகளெல்லாரும் விளையாடுகிறதை மறந்து நடுங்கிப் பயப்பட்டார்கள். அப்பொழுது கார்த்தவீரியனானவன் அந்தஸ்திரீகளெல்லாரும்பயப்படாமலிருக்கத்திடஞ்சொல்லி நிறுத்தி, ஜலக்கிரீடை விளையாட்டைவிட்டுக்கரையேறி, மகாவுக்கிரகோபத்துடனே வந்து ராவணன் சேனையெல்லாந் திசைதிசையாய் நிலைகெட்டு முறிந்தோடும்படி

க்கு மோதிவதைத்தான். அப்பொழுது அவனுடனே பிரகஸ்தன் எதிர்த்துக்கொண்டு தன்னுடைய பல பராக்கிரமங்களெல்லாங் காட்டி, அநேக ஆயுதபாணங்களினாலே அளவில்லாத சேனைகள் மடிய மோதியடித்து மேற்கொண்டு வருகிறான்.

அதைக்கண்ட கார்த்தவீரியன் தன்னுடைய ஒருகையிலேயிருந்த தண்டாயுதத்தினாலே பிரகஸ்தனை ஓங்கியடித்து தரையிற் சிதறிவிழத்தள்ளி, பின்னும் மகாவுக்கிரவேகத்துடனே சேனைகள்மேற்சென்று மோதிவருகிறான். அக்கால் ஒருவரும் அவனுக்கு எதிர் நிற்கமாட்டாமற் பயந்து நிலைகுலைந்து, மகோதரன் முதலான படைத்தலைவர்களும் சேனைகளும் முறிந்தோடுகிறார்கள். அதைக்கண்ட ராவணனானவன் ஊழிகாலத்துப்பெருநெருப்புபோலக்கோபங்கொண்டு சீறி, தன்னுடைய சேனைகளையெல்லாம் ஓடாதபடி நிறுத்தி, கையிலே ஒரு தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு மனோவேகமாய்ப்பாய்ந்து கார்த்தவீரியனையடித்தான் அவனும் எதிர்த்தான். அப்பொழுது அவர்களிருவரும் மலையும்மலையும், தீயுந்தீயும், சிங்கமுஞ்சிங்கமும், யானையும்யானையு மெதிர்த்ததுபோலப் போரில் மூண்டு, இடிபோல முழங்கிக் கதாயுத்தஞ் செய்துகொண் டிருந்தார்கள். அப்படியிருக்குமளவில் ராவணனானவன் தன்னுடைய பலமுழுதுங்கொண்டு உரத்துக்கார்த்தவீரியன்மார்பிலே அடித்தான், அவன் அந்த அடியைவாங்கிக்கொண்டு, அதற்கெவ்வளவுஞ் சலியாமற் புன்சிரிப்பாகச் சிரித்து ராவணனைப்பார்த்துச் சொல்லுகிறான்.

அடா தசக்கிரீவா! உன்னுடைய பலமெல்லாம் இவ்வளவுதானோ? இனி இவ்வளவுபலத்துடனேஓரடியடிக்கமாட்டாயே? சிங்கத்துக்கு நரியானது எப்படியோ அப்படிப்போல நீ எனக்குலக்ஷியமல்ல. ஆனாலும் என்னுடைய பலத்தைச் சற்றேபார். என்று அந்தக்கார்த்தவீரியன் ஓங்கி ஓரடி அடித்தான். அந்த அடி பொறுக்கமாட்டாமல் ராவணன் நிலைகுலைந்து, இடிவிழுந்தநாகம்போலச் செயலழிந்து நின்றான். அதுகண்ட கார்த்தவீரியன் அவனைத்திருடனைக் கட்டினாற்போலத் தோளோடுதோளிறுகச்சேர்த்துக்கட்டி முன்னே நடத்திக் கொண்டுபோகிறான். அப்பொழுது நம்முடையராஜனை இவன் இப்படி கட்டிக்கொண்டுபோக நாமெல்லோரும் பார்த்திருக்கலாமோவென்று மகோதரன் மாரீசன் முதலானவர்கள் பின்றொடர்ந்து, கார்த்தவீரியனை நில்லுநில்லென்று தடுத்து எதிர்த்தார்கள். அப்பொழுது கார்த்தவீரியனும் மகாவுக்கிரகோபத்துடனே நரிக்கூட்டத்தின்மேலேசிங்கந்திரும்பினாற்போல அந்த மகோதரன் முதலானவர்கள்மேலே திரும்பி, தன்னுடைய ஆயிரங்கைகளிலும்பிடித்திருந்த அநேக ஆயுதபாணங்களினாலே மோதி யடித்துச் சின்னாபின்னப்படுத்தித் துரத்திவிட்டு, தன்னுடைய பட்டணத்துக்குப்போய்ராவணனைச்சிறைக்கூடத்திலே அடைத்து மிகவுஞ் சந்தோஷத்தையடைந்திருந்தான். கார்த்தவீரியனாலே அடிபட்டோடிய மகோதரன்முதலான எல்லாருஞ் சேர்ந்து லங்காபட்டணத்துக்குட்சென்று, விபீஷணனிடத்திலே ராவணன் பட்டபாடு நாங்கள்கெட்டகேடும் இப்படியிருந்ததென்று நடந்த விருத்தாந்தமெல்லாஞ் சொல்லிப் புலம்பிப் பரிதாபப்பட்டார்கள்.

அதுகேட்ட விபீஷணன் மிகவும்விசனத்தை யடைந்து, சிறையிலகப்பட்டிருக்குந் தமையனை மீட்பதற்கு உபாயமென்னவென்றாலோசித்து, தன்னுடைய பாட்டனாகிய புலஸ்தியரிடத்துக்குச் சீக்கிரமாகப்போய் தமையன்செய்தி இப்படியென்று சொன்னான். அதுகேட்ட அவரும் உடனே புறப்பட்டுக் கார்த்தவீரியார்ச்சுனன் பட்டணத்துக்கு வந்தார். அவர்வருகிற சமாச்சாரங்கேட்ட கார்த்தவீரியன் அவரை எதிர்கொண்டு உபசரித்து அழைத்துப்போய் ஆசனங்கொடுத்திருக்கச்செய்து, என்னிடத்துக்குவந்தகாரியமென்னவென்று கேட்டான். அதற்கவர் அவனை நோக்கி, ராவணனானவன் நெடுங்காலம் மிகவுங் கொடிதானதபசுகள்பண்ணிப் பிரம்மதேவரிடத்திலும்பரமசிவனிடத்திலும் வரம்பெற்று, அவ்வரத்தினுடையபலத்தினாலே திரிலோகாதிபதியாகிய தேவேந்திரன் முதலானவர்களை வெற்றிகொண்டு, அவ்வெற்றியாகிய திரவியத்தை உமக்குத் திறையாகக்கொடுத்து உம்முடைய சிறையிலும் அகப்பட்டிருக்கிறான். இப்படி அவனைச்செய்த உமக்கு நிகரான பலவான்கள் ஒருவருண்டோ. ஆகையால் இந்த ராவ

ணன்மேலேவைத்த கோபத்தை ஒழித்து அவனைச் சிறையினின்றும் விடும்படிக்குத் தயைசெய்யவேணும் என்றுசொல்ல, அப்படியே கார்த்தவீரியார்ச்சுனன் ராவணனைச் சிறையினின்றும் விடச்செய்து, அந்தப் புலஸ்தியமகாமுனிவருக்கு உபசாரஞ் செய்தனுப்பினன். அவரும் பிரம்மலோகத்துக்குப்போயினர். ராவணன் லங்காபட்டணஞ் சேர்ந்திருந்தான்.

இராவணன் கார்த்தவீரியனாற் கட்டுண்ட படலம் முற்றிற்று.

---

இராவணன் வாலியின்

## வாலினாற் கட்டுண்டபடலம்.

### இராவணன் சிவபூசையிலிருக்கும் வாலியைக்கட்ட யத்தனித்தல்.

இந்தப்பிரகாரம் அகஸ்தியமகாரிஷியானவர் கார்த்தவீரியார்ச்சுனனிடத்திலே ராவணன் கட்டுபட்ட கதையைச் சொல்லக்கேட்ட ஸ்ரீராமர் மிகவுஞ் சந்தோஷத்தையடைந்தவராய் பின்னும் அகஸ்தியபகவானைநோக்கி, சுவாமி! அந்தராவணன் வாலியினிடத்திலும் கட்டுபட்டு அலைந்தானென்று சொன்னீரே? அந்தக் கதையை நன்றாக விவரித்துச் சொல்லவேண்டுமென்று கேட்டார். அதற்கு அவ்வகஸ்தியமகாமுனிவர் இசைந்து, கேளும் சீதாலட்சுமிநாயகா! உலகத்திலே அகங்காரியாய் இருக்கின்ற ஒருவனுக்கு என்ன விவேகமிருந்தாலும், அந்த அகங்காரத்தினாலே பின்னும் பின்னும் அறிவுமயங்கிக் கெட்டுப்போவான். தடாகஜலத்தை மூடிக்கொண்டிருக்கும் பாசியிலே கல்லைவிட்டெறிந்தால் அந்தக்கல்பட்டமாத்திரத்திலேபாசி நீங்கிப் பின்னும் உடனே மூடிக்கொள்வதுபோல, அந்தராவணன் கார்த்தவீரியனிடத்திலே முன்பு தான்பட்டபாட்டையெல்லாம் மறந்து பின்னும் அகங்காரத்தையடைந்து,சேனைபரிவாரங்களுடனே புறப்பட்டு உலகத்திலே எதிர்ப்பட்ட எல்லாரையும் அழித்து நாசமாக்கிக்கொண்டு வருகிறான்.

அப்படி வரும்பொழுது கிஷ்கிந்தா பட்டணத்துக்குப்போய் வாலியென்றுசொல்லப்பட்டவன் எவன்? அவனெங்கேபோயிருக்கிறான்? என்று கேட்டான். அதற்கு வாலியினுடைய பாரியாகிய தாரையானவள் ராவணனைப்பார்த்து, ஓ தசக்கிரீவா! நீ இப்பொழுது இங்கேவந்து வாலியைத் தேடுகிற காரணமென்னவென்று கேட்டாள். அதற்கவன் நான் வாலியினுடனே யுத்தம்பண்ணவந்தேனென்றுசொன்னான். அதற்கவள் கேளாய் ராக்ஷசா! நீ வாலியாகிய யமனுடனே யுத்தம்பண்ணிப் பிராணனுடனேதப்பிப்போகத் திறமுடையவனோ அல்லாமலும் முன்பு உன்னைப்போலறிவில்லாமல் வந்து வாலியுடனே யுத்தம் பண்ணி, பின்பவனடிகட்காற்றாராய் இறந்துபோன துந்துமி முதலானவர்களுடைய எலும்புமயமாகக்குவிந்துகிடக்கின்றஇந்த மலையை நீ என்றும் பார்த்ததில்லையோ? ஆயினும் நீ போர்செய்ய நினைப்பாயாகில் உன்னுடைய உயிர்யமலோகத்திலும், உன்னுடைய எலும்புகள் இந்த எலும்புமலையிலுஞ் சேருகிறது நிச்சயந்தான். இப்போது என்கணவனாகிய வாலியானவர் தன்னுடைய நித்தியகருமானுஷ்டானம் முடித்துவரப் போயிருக்கிறார். அவரும் இப்பொழுது இவ்விடத்துக்கு வருகிற சமயந்தான். இதற்குள் நீ என்பதறுகின்றாய். அவரை நீ விரைவிற்காணவேண்டுமானால் இப்பொழுது தெற்குச்சமுத்திரத்தீவுக்குச் சிவபூஜைசெய்யப்போயிருக்கிறார். நீ அவ்விடத்திற்குப் போனாற் காண்பாயென்று சொன்னாள்.

அப்படியே அவ்விராவணன் தன்னுடைய மந்திரிகள் முதலானவர்களுடனே அவ்விடத்துநின்று நீங்கி, உடனே புறப்பட்டுப்போய்த் தெற்குச் சமுத்திரத்தீவு சேர்ந்தான். அப்பொழுது அங்கே முன்னமொருகால் முப்பத்துமுக்கோடி தேவர்களெல்லோருமொருபக்கத்திலுந் தானொரு பக்கத்திலுமாக நின்று திருப்பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தங்கொடுத்த பல பராக்கிரமம்பொருந்திய வாலியானவன், மகாமேருபருவதம்போலச் சரீரமும், உதயகாலசூரியபிம்பம்போலமுகமும் விளங்கத்தக்கதாகச் சிவபூஜாமுகத்திலே கண்களைமூடிக்கொண்டு, சரீரம் சற்றுமசை

யாமற் பதுமாசனமாகவிருந்து சிவத்தியானம் பண்ணிக்கொண்டிருக்கிருன்; அந்த வாலியை ராவணன் கண்டு, ஆ! ஆ! நாம் வந்தவேளை நல்லவேளை, இந்தச்சமயத்திலே இவனைப் பிடித்துக் கட்டலாம் என்றெண்ணிக்கொண்டு தன்னுடனே வந்த எல்லோர்களையுந் தூரத்திலே நிறுத்தி, தானொருவனுந் தனியனுய் மெள்ளவந்து பக்கத்திலேயடுத்துச் சத்தப்படாமற் றிரிகிருன். அதை வாலியானவன் கண்டுங்காணுதவன்போலே யிருந்தான்.

இராவணன் வாலியாற் கட்டுண்டபின் தாரையால் விடுபட்டு இலங்கை சேர்தல்.

---

அந்தச்சமயத்திலே ராவணன் வாலிக்குப் பின்னுலே வந்து, மெள்ளமெள்ளப் புலிபோலப்பதுங்கி ஒரேபாச்சலாகப் பாய்ந்து, தன்னுடைய இருபதுகைகளினுலும் அவனைப்பலமாகச்சேர்த்துக் கட்டிப்பிடித்தான். அப்படிப்பிடித்த ராவணனை வாலியானவன் இருந்தபடியே ஒருகையினுலேயொதுக்கிக் கக்கத்துக்குள்ளே சேர்த்திறுக்கி, ஆலையிலிட்ட கரும்புபோலச் சரீரத்திலுள்ள எலும்பெல்லாம் நொறுங்கும்படி நெருக்கி, பின்பு தன்னுடைய வாலின் நுனியிலே அவனை ஒருமணியாகக்கட்டிவிட்டுச் சிவபூஜையினைச்செய்து முடித்துக்கொண்டான். அப்பாலந்த வாலியானவன் அவ்விடத்தினின்றும் மேற்கடற்றீவுக்குப் போகவேணுமென்று நினைத்து, தனது மூச்சினை யடக்கிப் பலமான விசைகொண்டெழுந்து ஆகாசமார்க்கத்தில் அதிவேகமாகப்பாய்ந்தான். அப்படிப்பாய்கிற பிரசண்டவேகக்காற்றினுலே முன்னும் பின்னுமுள்ள சிறுமலைகள்-பெருமலைகள் - கல்லுகள் - மரங்கள் முதலியவெல்லாமோதப்பட்டு, அவ்வவைகளும் நிலைகுலைந்து பேர்ந்து பறிப்பட்டு, எங்கும் பின்னுமுன்னுமாகப் பறந்துவீழ்ந்தன. அக்கால் ராவணனுடைய சகல பரிவாரசேனைகளும் அவனைப் பின்றெடர்ந்து மீட்கப் போகிறவர்கள் போல அந்த வேகக்காற்றிலே இழுக்கப்பட்டு, ஆகாசத்திலே சுழற்காற்றிலகப்பட்ட சருகுகள்போலப்பறந்து அலைபட்டுப் பின்னும் நிலத்திலே வீழ்ந்தன.

இவ்விதமாக தென்கடலுக்கடுத்த பாரத வருஷமென்று சொல்லப்பட்ட பூமிப்பரப் பொன்பதினுயிரம் யோசனைதூரவகலமும் அதற்கடுத்த இமயமென்று சொல்லப்பட்ட மலைப்பரப்பு இரண்டாயிரம்யோசனை தூரவகலமும், அதற்கடுத்த கிம்புருஷ வருஷமென்னும் பூமிப்பரப்பொன்பதினுயிரம் யோசனைதூரவகலமும், அதற்கடுத்த ஏமகூடமென்னும் மலைப்பரப்பு இரண்டாயிரம்யோசனைதூரவகலமும், அதற்கடுத்த அரிவருஷமென்னும் பூமிப்பரப் பொன்பதினுயிரம்யோசனைதூரவகலமும், அதற்கடுத்த சமுத்திரப்பரப்பு இரண்டாயிரம் யோசனைதூரவகலமும், ஆகக்கூடிய முப்பத்துமூவாயிரம் யோசனை தூரமும் ஒரு பாச்சலாகப் பாய்ந்து, மேற்குக்கடற்றீவுக்குப்போய் அவ்விடத்திலும் சிவபூஜைசெய்து முடித்துக்கொண்டான். பின்னும் அப்படியே மேற்குக்கடல்முதல் வடக்குக் கடல்வரைக்கும், வடக்குக்கடல்முதற் கிழக்குக்கடல்வரைக்கும், இவை நடுவிலுள்ள பலபூமிகளையும் பருவதங்களையும் பாய்ந்து கடந்து, அந்தத்தீவுகளிலும் சிவார்ச்சனை செய்து முடித்துக்கொண்டு பின்னும் ஒரு பாச்சலாகப்பாய்ந்து கிஷ்கிந்தாபட்டணம் வந்து சேர்ந்தான்.

அப்படிவந்துசேர்ந்த வாலிக்கு அவனுடைய பாரியாகிய தாரையானவள் மிகவும் உபசாரஞ்செய்து, ஓ நாயகா! உம்முடைய வாலிலே கட்டுப்பட்டு, சரீரமுழுவதும்நொறுங்கி நொந்துபுண்ணுகி, மிகவுந் துன்பத்துடனே பயந்துகிடக்கும் இவன் எவனேவென்று கேட்டாள். அதற்கவன் அவளைப்பார்த்து, ஓ நாயகி! இன்றைக்கு நான் சிவபூஜை பண்ணப்போன தீவிலே இந்தப் பத்துத்தலைப்பூச்சி அகப்பட்டது. இதை நீ பார்க்கவேணுமென்று கொண்டு வந்தேன். என்று சொல்லக்கேட்ட அவள் வாலியை நோக்கி, ஐயா! உம்முடைய பெருமை பொருந்திய பலத்துக்கு இவனொரு லக்ஷியமோ? ஆனதால் நீர் தயவுசெய்து இவனைவிட்டுவிடவேண்டுமென்று மிகவும் வேண்டிக் கொண்டாள். அதற்கவன் அப்படியே என்று சம்மதித்து கட்டவிழ்த்துவிட்டு, அடா ராவணு! இப்பொழுது இப்படிக் கட்டுப்பட்டோமென் றெண்ணவேண்டாம். உலகத்திலே இவன் பலமு

டையவனென்றும், இவன் பலமில்லாதவனென்றும், இவன் வெல்வானென்றும், இவன் தோற்பானென்றும் ஒருவனை ஒருவராலேயும் நிச்சயிக்கக்கூடாது. ஜயமும் அபஜெயமும் ஒருவன் பங்கல்ல. காலமுமொருபடித்தாயிராது. ஆனதால் உனக்கு யுத்தம்பண்ண வேணுமென்கிற இச்சையுண்டானால் இப்பொழுதே யுத்தஞ்செய்யலா மென்றான்.

அதற்கந்த ராவணன் சற்று நிதானித்து அவ்வாலியைப்பார்த்து ஓ கவிச்சக்கரவர்த்தி! நான் உம்முடைய வாலிலே கட்டுபட்டனுபவித்த துன்பத்திலு மிக்கது வேறே யொரு துன்பமுண்டோ? உம்மோடு யுத்தமென்று சொல்லப்பட்டதை நினைக்கவும் திறமுண்டோ? நானு வும்முடனேயுத்தம்பண்ணத்தக்கவன்? நீரென்னை வேறுபாடாக நினையாமல் தயைவைத்துச் சிநேகிதனுக்க் கொள்ளவேணு மென்று தாழ்ந்து சொல்லினன். அதற்கவன் அப்படியே யென்று சம்மதித்து மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்து, அப்பொழுதே தன்னுடைய கிரகத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் போசனமுதலான உபசாரங்கள் செய்வித்து ஒருமாதம்வரைக்கும் வைத்திருந்து, அப்பாதசக்கிரீவா! இன்றுமுதல் நீ எனக்கு முதன்மையான உரிமைத்தோழனுகுக. இனி யாதொன்றுக்கும் அஞ்சற்க. என்று உபசாரஞ்சொல்லி யனுப்புவிக்க, இராவணன் அவ்வாலியினிடத்திலே உத்தரவு பெற்றுக்கொண்டு தன்னுடைய இலங்காபட்டணம் வந்து சேர்ந்திருந்தான்.

இராவணன் வாலியின் வாலினுற்
கட்டுண்ட படலம் முற்றிற்று.

---

## அநுமப்படலம்.

---

### ஆஞ்சநேயருடைய உற்பத்தியும் அவர் பிரமனுதிய தேவர்களால் வரம்பெற்றதும்.

இந்தப்பிரகாரமாக அகஸ்தியமுனிவரால் வாலியினுடைய பல பராக்கிரம சவுரிய முதலான மேன்மைகளோடு இராவணனுடைய உற்பத்திமுதற்கொண்டு அவ்வாலியினுடைய வாலிலே கட்டுப்பட்டது வரைக்குமுள்ள சரித்திரங்களை யெல்லாஞ் சொல்லக்கேட்ட ஸ்ரீராமரானவர் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்தவராகி, பின்னும் ஸ்ரீராமர் அவ்வகஸ்தியபகவானை நோக்கிச் சொல்லுகின்றார்.

### விருத்தம்.

மறவாலிகொற்றமதுவோகிடக்கமருவார்வெருக்கொள்வலியால், நிறைவான்மிசைப்பொன்வரையீடழிந்துநெகிழாதுநிற்குநிலையால், குறையாதவிச்சையதனுலளப்பில் குணநீதிகொற்றமொடுகூ,டறிவாலிவற்றிலநுமானையொக்குமவரார்சகத்திலினியே.

அங்காரதாரைசுடர்மாலைசூடியலைவேலைதாவியடையார்
தங்காரணங்கள்பொடியாகநூறிவருசம்புமாலிமுதலோர்
பொங்காரவாரமொடுநேர்பொருந்தவவர்சேனையானைபரி
சங்காரமாடுமநுமானையொக்குமவரார்சகத்திலினியே[தேர்

வரையோடுருத்திரனைமீதெடுத்த வயவாளரக்கன்மகனைத், தரையோடரைத்துநகர்தீமடுத்துவருசேனையைச்சலதியில், திரையோடமுக்கியொருதாவிலத்திவடதீரமுற்றதிசைமேல், உரையோடுவெற்றி யநுமானையொக்கு முரவோர்சகத்திலுளரோ.

அருமாதவத்தின்முனிவாவுரைக்கிலநுமானையொக்குமவரார்,செருவார்சிலைக்கையிளையோனைமிக்கதிறல்வானரப்படையொடு, மருவார்மயக்கவடமேருவுக்குவடபான்மருத்துமலைகொண், டொருநாழிகைக்குள் வருவாரொருத்தருளரோசகத்திலினியே.

இவனுலருக்கன்மகனேடெமக்குமினிதாயநட்புமியல்பும்
இவனுலளப்பில்பெருநீரடைத்ததிணையாவயத்தநுமனும்
இவனுலரக்கர்பொருசேனையிற்சென் றிடையூறகற்றியவெ
லாம், இவனுலரக்கர்குலம்வேரறுத்த தினியானுரைப்பதெ
[வனே.

ஐயா முத்தமிழ்முனியே! முன்பு நான் வனவாசஞ்செய்து வருகிறபோது சுக்கிரீவனுக்கும் எனக்கும் சிநேகஞ்செய்வித்தும் ஒரு சிறிதான குளத்தைத் தாண்டுவது போலப் பெரிதான சமுத்திரத்தைப் பாய்ந்து தாண்டியும், அப்பொழுது எதிர்ப்பட்ட சாயாக்கிரகணியென்று சொல்லப்பட்டவளுடைய குடலைப்பிடுங்கி மாலையாகத் தரித்துக்கொண்டு அவளைவதைத்தும் அசோகவனத்தைச் சூறையாடிப் பாழாக அழித்தும்சம்புமாலிமுதலானவர்களை நிலத்தோடேதேய்த்து வதைத்தும், பின்னும் எதிர்த்துவந்த சேனைகளையெல்லாம் சமுத்திரத்திலே வாரி வீசி துவைத்தழித்தும், சீதையின்பிராணனை ரக்ஷித்தும், இப்படிக்

கெல்லாம் அவ்விடத்தில் பிரயாசைப்பட்டுஞ் சற்று மனஞ்சலியாமல் முன்பு இந்தக் கரையிலிருந்து தாண்டும்பொழுதுள்ள பலமாகத்தானே பின்னுமந்த லங்காதீவினின்றும் பாய்ந்து இவ்விடத்துக்குவந்து என்னுடைய சோகத்தைத்தீர்த்தும், சமுத்திரத்திலே யணைகட்டுவதற்கு எவ்வளவு பிரயத்தனஞ் செய்யவேண்டுமோ அவ்வளவு பிரயத்தனமுஞ்செய்து சுலபமாகக் கட்டுவித்தும், யுத்தமுகத்திலே இந்திரஜித்துபிரயோகித்த பிரமாஸ்திரத்தினலே கட்டுப்பட்ட வசமாய் மூர்ச்சையடைந்து கிடக்கும்பொழுதில் உத்தரதிக்கிலே மகா மேருபர்வதத்துக்கு வடக்கே வெகுதூரத்திலிருந்த சஞ்சீவிமலையைப்பேர்த்து ஒரு நாழிகையளவிற் கொண்டுவந்து வானர சேனைகளையும் இலக்ஷ்மணனையும் மூர்ச்சை தெளிவித்து ரக்ஷித்தும், பின்னும் இராக்ஷதர்கள்செய்யும் மாயையினலேயுண்டாக்கப்பட்ட விகாதங்களையெல்லாம்தீர்த்தும், இப்படி இன்னம்அநேகவிதமாயுள்ள காரியங்களாலே எனக்கு உபகாரஞ்செய்தவனும்; அணுவைப்போலவும், மகாமேருவைப்போலவும் சிறிதாகவும் பெரிதாகவும் தான் நினைத்தபடிக்கு ரூபங்கொள்ளத்தக்க சித்தியும், நிறைந்த வித்தையும், சுந்தரமும், பொறுமையும், நீதியும், சத்தியமும், விசுவாசமும் பொருந்தி, இன்னும் இவை முதலாயுள்ள சிலாக்கியகுணங்களெல்லாம் பெற்று விளங்கும் இவ்வநுமானுடைய உற்பத்தியும், சரித்திரமும், தன்னுடைய பராக்கிரமம் தனக்குத் தெரியாத காரணமும் விவரமாகச் சொல்லவேணுமென்று கேட்டார்.

அதற்கந்த அகஸ்தியபகவானனவர் ஸ்ரீராமனைப் பார்த்து கேளும் தசரதநந்தன! முன்னம் ஒருகாலம் அஞ்சனதேவிக்கும் வாயுபகவானுக்கும் ஓர் காரணமகிமையினலே புத்திரனுக அநுமான் பிறந்தவுடனே மாதாவைப் பார்த்து வணங்கி, அம்மா! எனக்கு மிகவும் பசியாயிருக்கின்றது. இந்தப்பசி தீரத்தக்கதாக நான்புசிக்கும் பதார்த்தங்கள் என்னவென்று கேட்டான். அதற்கு அவள் இவனைப் பார்த்து அடா குழந்தாய்! குளிர்ந்த வனங்களிலும் சோலைகளிலும் மதுரமாய்ச் சிவந்து பழுத்திருக்கும் கனிகளே உன்பசியைத் தீர்க்கத் தக்க பதார்த்தங்கள் என்றுசொல்லித் தன் மகனுடைய பசியாற்றவேண்டிக் கனிகள் கொண்டுவர வனத்துக்குப்போனள். இவ்வாறுபோன தாய் வருவதற்கு முன்னமே இவனுக்கு மிகவும் கொடுமையான பசியுண்டாகி, அப்பசி வருத்தம் பொறுக்க மாட்டாமல் பரிதாபப்பட்டுக்கொண்டிருக்கிறசமயத்திலே உதயகாலத்தில் சூரியன் உதித்தான். அந்தச் சூரியபிம்பத்தை இவ்வநுமான்கண்டு தாய் தனக்குச்சொல்லிய சிவந்த கனிவகைகளிலே இதுவுமொரு கனிதானேவென்று நினைத்து சூரியன் மேலே மகா வேகமாகப் பாய்ந்தான். அப்பொழுது அந்த வேகத்தைப்பார்த்த தேவர்களெல்லாம் பிரமித்து, இவன் குழந்தையாயிருக்கிற இப்பருவத்திலேயே பிதாவினுடைய பலமும் வேகமும் பெற்றதல்லாமல் கருடவேகமும்பெற்றுச் சூரியன் மேலே இப்படிப் பாய்ந்தானல்லவோ? ஆனல் இவன் சகல பலமும்பொருந்தி நாளுக்குநாள் பிரபலமாவானனல் நம்முடைய சத்துருக்களாகிய ராட்சதர்களெல்லாரும்என்ன துன்பத்தையடைவார்களோவென் றுச்சரியத்தை யடைந்தார்கள். அக்கால் பிதாவாகியவாயுபகவான் அக்கினிமயமாய் எரிக்கும் சூரியகிரணங்கள் சீதளசந்தனம்போலக் குளிர்ந்திருக்கக் கடவதென்று வரங்கொடுத்தான். அல்லாமலும் சூரியபகவான் தன்மேற்பாய்ந்து கவ்விக் கொண்டிருக்கும் இவவநுமானை விளையாட்டுக் குழந்தையென் றெண்ணிக் கோபஞ் செய்யாமல், தனது கிரணங்களினலே தகியாமல் இவன்மேல் தயவாக மகிழ்ச்சிகொண்டிருந்தான்.

இப்படியிருக்குஞ் சமயத்தில் கிரகணகாலம் நேர்ந்தபடியினலே சூரியனைப்பற்ற வந்த ராகுவானவன் அந்தச்சூரியனைக் கவ்விக்கொண்டிருக்கும் இவ்வநுமானுடைய பராக்கிரமத்தைக் கண்டு பயந்தோடித் தேவேந்திரனிடத்துக்குப் போய், ஐயா தேவராஜனே! சந்திர சூரியமண்டலங்களைப்பற்ற எங்கட்கு முன்னமே வரங்கொடுத்திருக்க, இப்பொழுது வேருெருவனுக்கு நியாயத்தவருய்க் கொடுக்கத்தக்கதாக நாங்கள்செய்தகுற்றம் என்னமோ? என்ன காரணத்தால் இப்படிக்கு அவமரியாதை செய்வித்தீர்? என்று முறையிட்டுக் கூறி

னன். அதுகேட்ட தேவேந்திரன் அப்பொழுதே மிகவுங் கோபத்தோடு ஐராவதத்தின்மேலேறிக்கொண்டு அதிவேகமாகப் போய் அடுத்து நின்று, நீ இந்தச்சூரியனைப்பிடியென்று ராகுவை ஏவினன். அவன்சூரியனையடுத்து வருவதைக்கண்ட இவ்வநுமான்சூரியபிம்பத்தைவிட்டு ராகுவின் மேலேபாய, அந்த ராகுவானவன் பயந்து நடுங்கி உளறிக்கொண்டு ஓட்டமாயோடித் தேவேந்திரன் காலடியில் வீழ்ந்து புலம்பினன். அதுகண்ட தேவேந்திரன் மிகவும் உக்கிரமான கோபத்துடனே ஐராவத யானையை மகாப்பிரசண்டவேகமாக நடத்திக்கொண்டு அநுமான்மேலே சீறிவருவதானன். அப்பொழுதில் அந்த ஐராவத யானையின்முகத்திலே சிவப்பாய்விளங்குஞ் சிந்துரப்பொட்டு வட்டத்தை இவ்வநுமான் இதுவுமொரு கனிதானோவென்றெண்ணி, அவ்வயிராவதயானையின் மத்தகத்திலேபாய்வதானன். அப்படிபாயுமளவில் அதைக்கண்ட தேவேந்திரன் பலம்பொருந்திய தன்னுடைய வஜ்ஜிராயுதத்தினலே இவனை அடித்தான். அந்த அடியினலே இவ்வநுமான் மூர்ச்சையடைந்து பூமியிலே விழுந்தான்.

அந்தவேளையிலே இவ்வநுமானுடைய பிதாவாகிய வாயுபகவானனவன் இந்திரனைக் கோபித்து, இந்த மூன்றுலோகங்களையும் க்ஷணப்பொழுதிலழிப்பேனென்று சபதம்பண்ணிக்கொண்டு, லோகத்திலே எங்கும் வாயுவியக்கமில்லாதபடி செய்து, தன்னுடைய புத்திரனைப்பார்த்து மிகவும் விசனத்தையடைந்தவனய் எடுத்துக்கொண்டு போய் இமயகிரியைச்சேர்ந்து, அந்தக்கிரியிலே ஒருபெரிய குகையிற் பிரவேசித்திருந்தான். அப்பொழுது உலகமெங்கும் வாயு வியக்கமில்லாதபடியினலே, யானைமுதலெறும்புகடையான எண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதங்களாயுள்ள சகலபிராணிகளும், வயிறுகள் விம்மி மரணவேதனையாகத்துன்பப்பட்டன. அச்சமயத்தில்தேவர்களும் ரிஷிகளும்போய்ப் பிரம்மதேவரிடத்திற்சொல்ல, அவர் அந்தத் தேவரிஷிகளுடனேவாயுபகவான் இருக்குமிடத்தைத் தேடிவந்தார் வாயுபகவான் அந்தப்பிரம்மதேவரைக்கண்டு எழுந்துபோய் மிகவும் புத்திரசோக விசனத்துடனே அவருக்கு நமஸ்கரித்துவணங்கிநிற்க, அப்பொழுது பிரம்மதேவர் அந்த வாயுபகவானுடைய விசனந்தீரும்படி தேறுதலைசொல்லி உபசரித்து, மூர்ச்சித்துக்கிடந்த அநுமானைத் தம்முடைய கையினலே தடவி மூர்ச்சை தெளிவித்து எழுப்பி, தம்முடனேவந்த தேவர்களை நோக்கி நீங்களெல்லோரும் இந்த அநுமானுக்கு வரங்கள் கொடுப்பீரென் றருள்செய்தனர்.

அப்படியே சூரியபகவான் தன்னுடைய கிரணகாந்தியிலே நூற்றிலொருபங்குப்பிரகாசமுண்டாகக்கடவதென்றும்சகல வித்தைகளையுஞ் சுலபமாகக் கிரகிக்கத்தக்க தீக்ஷணபுத்தியு முண்டாகக்கடவதென்றும் வரங்கொடுத்தான். வருணபகவான் யுத்தகளத்திலேசத்துருக்களாலே என்னுடைய பாசத்தாற்கட்டுபட்டாலும் மரணமடையாதிருக்கக்கடவனென்றும், யமதருமராஜன் என்னுடைய காலதண்டத்தினலே மரணமடையா திருக்கக்கடவனென்றும், குபேரன்தன்னுடையகதாயுதத்தினலே சாவாமலிருக்கக்கடவனென்றும், ருத்திரமூர்த்தி தம்முடையசூலாயுதத்தினலே யழிவில்லாதிருக்கக்கடவனென்றும், விசுவகருமாவானவன் சகல தேவர்களுடைய அஸ்திர சஸ்திரங்களினலே அபஜயப்படாமலிருக்கக்கடவனென்றும் வரங்கொடுத்தார்கள். பின்பு பிரம்மதேவர் தம்முடையபிரமதண்டத்தினலே நாசப்படாம லிருக்கக்கடவனென்று வரங்கொடுத்து, இவ்வநுமானுடைய பிதாவாகிய வாயுபகவானை நோக்கி, ஓ சமீரணனே! உன்னுடைய புத்திரன் இனிமேல் இந்த லோகங்களைப் பிடித்துக் கொடுமைசெய்யும் ராவணனுடைய லங்கா பட்டணத்தை எரித்தழித்து, ராக்ஷதர்குலத்தை வேரறுத்து, ஸ்ரீராமன் சந்தோஷத்தையடையும்படிக்கு உபகரித்து, அவருடைய அநுக்கிரகத்தினலே பிரம்மபதத்தை அடையக்கடவனென்றும் அநுக்கிரகித்தார். இவ்விதமாகப் பிரம்மதேவர் முதலாயுள்ள சகலதேவர்களும் வரங்கொடுத்துத் தங்களுடையலோகத்தைச் சேர்ந்தார்கள்.

---

ஆஞ்சநேயருக்கு முனிவர்களுடைய சாபம்நேர்ந்ததும், பின் அவர் சுக்கிரீவன் நண்பாய் சூரியனிடத்தில் ஐந்திரவியாகரணம் பயின்றதும்.



இப்படிக்குப் பிரம்மதேவர்முதலாயுள்ள சமஸ்ததேவர்களிடத்திலும்பெற்ற வரத்தினுடைய மகிமையினாலே இவ்வநுமானனவன் நமக்குநிகரானவர்கள் ஒருவருமில்லையென்று அகங்கார கர்வத்தை அடைந்தவனாய் இதாகிதங்களொன்றுந் தெரியாமல் மதோன்மத்தனாகி, தபோதனர்களாகிய மகாரிஷிகள் வாசஞ்செய்துக்கொண்டிருக்கும் ஆச்சிரமங்களிலும் யாகசாலைகளிலும் புகுந்து, அவ்விடங்களிலுள்ள ஓமத்திரவியங்களாகிய நெய் பால் தயிர்களைக்குடித்தும்,கந்தமூலபலாதிகளைத்தின்று எச்சிலாக்கியும், சந்தன புஷ்பங்கள் முதலானவைகளை எடுத்தெறிந்தும், கமண்டலமுதலான பாத்திரங்களை எடுத்துருட்டி யுடைத்தும், இப்படிக்குப் பலபலவிதமான பாலியசேட்டையாய் ஓமயாககாரியங்களுக்கு விகாதஞ் செய்துகொண்டு திரிந்தான். அக்காலத்திலொருநாள் முனிவர்களெல்லோரும் நாடோறும் இவ்வநுமான் செய்கிற துஷ்டசேஷ்டைகளைப்பார்த்துச் சகிக்கமாட்டாதவர்களாய் மிகவுங்கோபங்கொண்டு, இவன் சகல லோகங்களையும் ஒரு நிமிஷத்திலே அழிக்கத்தக்க மகிமைபொருந்திய பிரம்மதண்டத்தினாலும் மரணமில்லாத வரம்பெற்றவன். மிகவும் பொல்லாதவனாகவும் இருக்கிறான். இவனை யாவராலும் என்ன செய்யலாகும்? ஆனாலும் இவனைத் தண்டித்து அடக்குவோமென்று ஆலோசித்து எல்லோரும் ஒருவாக்காகத் தன்னுடைய பல பராக்கிரமந் தனக்குத் தெரியாமற் போகக்கடவதென்று சாபஞ்செய்தார்கள்.

அப்படிக்கு அந்த மகாரிஷிகள்செய்த சாபத்தினாலே விஷப்பல் பிடுங்கப்பட்ட பாம்புபோல இவ்வநுமான் தன்னுடைய அகங்கார கருவமுங் கோபமுமடங்கிச்சாந்தத்தை யடைந்தவனாகி, அந்தத் தபோதனர்களுக்குப்பயந்து, ஆ! ஆ! நாம் என்ன காரியஞ் செய்தோம்? நம்முடைய வறியாமை எப்படியிருந்தது? இந்திரன் முதலானதேவர்களுடையசாபமும்பெரிதல்ல. அந்தத்தேவர் வணங்கத்தக்க பெருமையுடையவர்களாய் சகல லோகங்களையும் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் செய்கிற அதிகாரிகளாயுள்ள பிரமதேவர் விஷ்ணுபகவான் ருத்திரமூர்த்தி ஆகிய திரிமூர்த்திகளுடைய சாபமும் பெரிதல்ல. அந்தத் திரிமூர்த்திகளுந் துன்பப்படும்படி சாபஞ்செய்கின்ற தபோதனர்களுடையசாபத்தைக்கடந்தார் ஒருவருமில்லை. அப்படியிருக்க நாம் இந்த மகாரிஷிகளுக்கு அபசாரத்தைச் செய்தவனானேம். என்று ஆலோசித்துத் தன்னைத் தானே வெறுத்துக்கொண்டு வெட்கத்தை யடைந்தவனானான்.

அதன்பின்பு முன்னம் ஒருகாலம் வாலி சுக்கிரீவனாகிய இருவரும் தாரையின் பொருட்டு ஒருவருக்கொருவர் விரோதப்பட்டுச்சகலலோகங்களிலுஞ்சென்று வெகு காலமாய் யுத்தம்பண்ணிக்கொண்டுவருகிற நாளில், ஒருநாள் சுக்கிரீவன் அந்தவாலியினாலே அடிபட்டாற்றாமல் இளைத்தோடி மதங்கமா முனிவருடைய ஆசிரமத்தையடைந்து அவர்பால் அடைக்கலமாகப்புக, அவர் அந்தச் சுக்கிரீவனுக்கு அபயங்கொடுத்து ரக்ஷிக்க, அக்கால் அச்சுக்கிரீவனை இவ்வநுமான் பிராணசிநேகிதனாகத் தோழமைகொண்டு, அந்த மதங்கமகாமுனிவரையுங்கண்டு வணங்கிச் சேவித்து அநுமதிபெற்று, வித்தியார்த்தியாகி வேதவேதாந்தமுதலான சகலசாஸ்திரங்களும் ஓதியுணர்ந்து, பின்பு சூரியபகவானிடத்துக்குப்போய் எனக்கு ஐந்திரவியாகரணம் போதிக்கவேணுமென்று கேட்டான். அதற்கு அவன் இவனைப்பார்த்து, அப்பா அஞ்சனைச் சிங்கமே! நாமேறியிருக்குமிந்தரதமானது ஒரு சுவாசகாலத்துக்கு இருபத்தோராயிரத்தறுநூறு யோசனைதூரம் அதிவேகமாகச் சதாகாலமுஞ் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால், ஓரிடத்திலிருந்து பாடஞ் சொல்வதற்குச் சாவகாசமில்லை. இப்படியாகவிருக்கும் என்னிடத்திலே நீ அவ்வியாகரணம் கற்றுக்கொள்வதற்குவல்லமையுண்டாகில் ஓதுவிக்கிறேனென்று சொல்லினான்.

அதற்கு இவ்வநுமான் சூரியபகவானைப்பார்த்து, ஓ ஆதித்தமூர்த்தி! தேவரீருடைய அநுக்கிரக விசேஷத்தினாலே உம்மிடத்திலே அந்த வித்தை கற்றுக்கொ

ள்வதற்கு எனக்குவல்லமையுண்டாயிருக்குமென்று சொல்லி உடன்பட்டு, குருவினிடத்தில் எதிரேயிருந்து பாடங்கேட்கிறபடிக்குச் சூரியபகவானுக்கு எதிர்முகமாகவே அந்த ரதவேகத்துக்குப் பின்னிடாமல் ஆகாசமார்க்கத்திற் பாய்ந்தபடியாய் ஆறுதினத்திலே அவ்வயிந்திரவியாகரணமுழுதுங் கற்றுக்கொண்டான்.

தண்ணளியினன்மிகு தயாவுடைமையால்வரு தருக்கறுதலால், எண்ணுகருமங்களிவை யாவுமுடையூறற வியற்றுமியல்பால், நண்ணலரைவிண்ணவர்களாயினு நடுக்குறுமிடுக்குடைமையால், மண்ணுலகில் விண்ணுலகின் மாருதியையொக்குமவர் யாருமிலையால்.

அறந்தலையெடுத்தபுவி வானவர்களானவர்க ளாடினர்கடீ, மறந்தலையிறக்கியது வாலிமுதலானவர்கள் வாமநயனம், சிறந்ததிரடோள்புருவமார்பிடைதுடித்தனசிறந்தபுகழான், நிறைந்தகுணமாருதி நினைத்திருவடித்தொழுதுநின்றபொழுதே.

கேளும் ஸ்ரீ சீதாலக்ஷிமி மனோகரா! தயாளத்திலும், சாந்தத்திலும், சத்தியத்திலும், ஞானத்திலும், நிகருவகுணத்திலும், பிரயத்தினம்பண்ணின காரியங்களை விகாதப்படாதபடி முடிக்கும் வல்லமையிலும், நம்பினோர்களைப் பாதுகாக்கும் மனோதிடத்திலும், இவனுக்குச் சமானமானவர்கள் ஒருவருமில்லை. இவனாலே தருமங்களெல்லாம் அபிவிருத்தியாய்த் தேவர்களெல்லோரும் சவுக்கியத்தை யடைந்தார்கள். மேலும் பாவங்களனைத்தையும் பரிபாலிப்பவராகிய ராக்ஷசர்களெல்லாரும் துக்கத்தையடைந்தழிந்தார்கள். இன்னுமளவில்லாதமேன்மைபொருந்திய இந்தஅநுமானனவன்உம்முடையதிருவடிப்பணிவிடையைவிரும்பி உம்மைவிட்டு நீங்காதிருப்பானாகில் உம்முடைய குணத்துக்கும் கீர்த்திக்கும் சமானமுண்டோ? என்று இப்படி அநுமானுடைய சரித்திரங்க ளெல்லாம் ஸ்ரீராமனுக்குத் தெரியச்சொன்னார்.

அநுமப்படலம் முற்றிற்று.

---

## ஜனகப்படலம்.

### ஸ்ரீராமனுதியர் ஆரண்யம் புகுதல்.

இப்படிக்குத் தேவர்களும், மகாரிஷிகளும், வேதப்பிராமணர்களும், மகுடவர்த்தனராகிய இராஜாக்களும், மற்றுமுள்ள சகல பரிஜனங்களும் நிறைந்திருக்கும் மகாசபையில் இராவணாதியருடைய உற்பத்திமுதலாயுள்ளசரித்திரங்களையும், அநுமானுடைய உற்பத்தி முதலாயுள்ள சரித்திரங்களையும் கிரமமாக ஏதுக்களுடனே அகஸ்தியமகாமுனிவர் சொல்ல, ஸ்ரீராகவன் கேட்டுச் சந்தோஷத்தை யடைந்திருக்கும்சமயத்தில் மநுநீதிதவறாமற் செங்கோற்செலுத்தி அரசாளும் மன்னர்மன்னவனாகிய ஜனகமகாராஜன் மருமகனாகிய ஸ்ரீராமனைக் காணவேண்டி இரத கஜ பரிவார சதுரங்க சேனைகளுடனே மிதுலாபட்டணத்தினின்று நீங்கிவந்து அயோத்தியாநகரத்திற் பிரவேசித்து உள்ளேவருமளவில் ஸ்ரீராமன் எதிர்கொண்டுபோய் மாமனாருக்கு நமஸ்கார வந்தனஞ்செய்ய, அவரும் அப்படி வணங்கிய ஸ்ரீராமனாகிய மருமகனைத் தாழ்ந்தெடுத்துத் தழுவிக்கொண்டு உபசரித்து சபையிற்போயிருந்து அங்குள்ள இந்திராதி தேவர்களுக்கும், அகஸ்தியராதி முனிவர்களுக்கும் நமஸ்காரஞ்செய்து, மற்றுமுள்ள பரிஜனங்கட்கெல்லாம் பரிவுகூறி, தான் வரிசையாகக் கொண்டுவந்த இராசோபசாரஞ் செய்யும் ஏவற்பெண்களும், நிதிக்குவியல்களும், ரத்தினத்திரள்களும்,வஸ்திரபூஷணங்களும் மற்றுமுள்ள சுகந்த பரிமளத்திரவிய வஸ்துக்களும்கொடுத்து மனமகிழ்ந்திருந்தார்.

அப்படி இருக்குமளவில் அந்த ஜனகமகாராஜன் ஸ்ரீராமனை நோக்கி, ஓ என்னிருமைக்கும் பெருமைதரவந்த மருமகனே! நீர் இங்கிருந்து வனம்நோக்கிச் சென்றதுமுதல் தென்கடற்கரை சேர்ந்தவரையில் நடந்த சரித்திரங்களையும், பின்னர் அக்கடல்நடுவிலுள்ள இலங்காதீபஞ் சென்று, இராவணாதிகளைச் சங்கரித்த விதங்களையும் விவரித்துச் சொல்லவேணுமென்று கேட்டார். அதற்கு ஸ்ரீராமர் அகஸ்தியமகாமுனிவரைப் பார்த்து, ஓ! முற்றுமுணர்ந்த முனீந்திரரே! இக்கேள்விக்கு அநுக்கிரகிக்குந்தன்மையும், தேவரீரதேயென்றுவந்தனத்தோடு விண்ணப்பஞ் செய்தார். அதற்கு அவ்வகஸ்தியமகாமுனிவர் இசைந்து, ஸ்ரீராமன் பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யவேண்டி,சீதாலக்ஷமணருடனே அயோத்தியாபட்டணம்விட்டுப் புறப்பட்டு, சுமந்

திரன் கொண்டுவந்த தேரின்மேலேறிக் கொண்டு, கங்காதீரம்வரைக்கும் போனதும், அப்படிபோம்பொழுது சிருங்கிபேரபுரத்திலிருக்குங் குகனுனவன் நெடுந்தூரமெதிர்கொண்டுவந்து அந்தரங்க பயபத்தியுடனே தெண்டனிட்டு உபசாரஞ்செய்யத் தானும் அன்புடனே உபசரித்து அவனை உயிர்த்துணைவனுகச் சிநேகஞ் செய்துகொண்டதும், சுமந்திரனுக்கு உத்தரவுகொடுத்து அயோத்திக்குப்போகும்படிச் செய்ததும், அவ்விடத்தில் ஏவற்கலையுடுத்திச் சடைதரித்து தவவேடங்கொண்டு, அந்தக் குகனுலே விடப்பட்ட ஓடமேறிக் கங்கையைக் கடந்து தென்கரைக்குவந்து குகனுக்கு உத்தரவுகொடுத்து நிறுத்தி, தாங்கள் மூவருமாகத் தென்றிசைநோக்கிச் சிலதூரஞ்சென்று எதிரே காணப்பட்ட சுதரிசனமென்னுந் தீர்த்தக்கரையில் அன்றிராத்திரி தங்கியிருந்ததும், மறுநாள் அவ்விடத்தினின்று நீங்கி அப்பாற்சென்று பரத்துவாசர் ஆச்சிரமஞ் சேர்ந்து, அவரைக் கண்டுவந்தித்து,அவருபசாரத்தில்அன்றிரவு அங்கேயிருந்ததும், மற்றைநாள் அவ்விடம்விட்டு அப்பாற்சென்று சித்திரகூடபருவதஞ் சேர்ந்து அவ்விடத்திலுள்ள அநேகமகாரிஷிகளைக் கண்டு சேவித்துக் கொண்டு அவர்களெல்லோரும் உபசரிக்க அவர்களுடனே வாசமாக விருந்ததும், ஆகிய இவைகளைக் கிரமமாகச்சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிருர்.

பரதனுக்குப் பாதுகாநுக்கிரகம்.

---

கேளும் ஜனகமகாராஜனே! அப்படி அவ்விடத்திலிருக்குமளவில், முன்பு பாட்டனுரிடத்துக்குப்போயிருந்த பரதராஜனுக்குப் பிதாவாகிய தசரதமகாராஜனிறந்து போனவிசேஷந்தெரியும்படியாக வசிஷ்டகுருவுஞ் சுமந்திரனும் பத்திரிகையெழுதி அனுப்புவிக்க, அதுபார்த்துக்கொண்டு அதிசீக்கிரமாகப் பரதன் அயோத்தியாபட்டணம் வந்து சேர்ந்து, தமையனுகிய ஸ்ரீராமன் வனவாசஞ் செய்யப்போனதும், பிதாவானவர் புத்திரசோகத்தினுலே இறந்துபோனதும் விசாரித்து, இத்தனை தீவினைகளையும் விளைவித்தவள் இவளல்லவோ வென்று தன்னுடைய மாதாவாகிய கைகேசியை மகாவுக்கிரகோபத்துடனே நிந்தித்து வெறுத்து, உடனே துக்கசமுத்திரத்தில் அழுந்தினவனுய் மூர்ச்சையடைந்து பிரலாபித்து புலம்பியழும்பொழுதில் குலகுருவாகிய வசிஷ்டமகாமுனிவர், மாதாவாகிய கௌசலாதேவி, சுமந்திரன்முதலாயுள்ள உரியவர்கள் இவர்களெல்லோரும் தேறுதலைசொல்லி உபசரித்து, சமாதானப்படுத்த மனந்தெளிந்து, அவர்கள் சொற்படியே பிதுருகருமத்தை விதிப்படியேசெய்துமுடித்து, பின்பு தனக்குச் சமாதானஞ் சொல்லிய வசிஷ்டகுரு முதலானவர்களை நோக்கிப் பிதாவுக்குச்சமானனுன ரவிகுலதிலகனென்னும் ஸ்ரீராமனிருக்க நானே பட்டந் தரித்துக்கொண்டு ராஜாதிகாரஞ் செய்யத்தக்கவன்? இப்படி தருமநீதியுமுண்டோ? ஆகையால் இப்பொழுதே நான் போய் ஸ்ரீராமனையழைத்துவந்து பட்டாபிஷேகஞ் செய்வித்து, அவர் நியமித்த ஏவற்பணிவிடை கேட்டு, நடந்துகொள்ளத்தக்கவனேயல்லாது வேறில்லையென்று மறுத்துச்சொல்லினர்.

இப்படி சொல்லிய பரதராஜனுனவர் அப்பொழுதே வசிஷ்டகுரு முதலானவர்கள் மாதாக்கள் மந்திரிமார்முதலான பரிவாரஜனங்கள் சதுரங்கசேனைகள் ஆகிய இவர்களுடனே அயோத்தியாபட்டணம் விட்டு நீங்கிக் கங்காதீரம் வந்து சேர்ந்து, ஸ்ரீராமன் தவவேடங்கொண்ட விருக்ஷத்தடியிலே, தானுந் தவவேடங்கொண்டு போய் வழியிலேகுகனுலுபசரிக்கப்பெற்று, ஸ்ரீராமனுடைய விருத்தாந்தமெல்லாம் அவன் சொல்லக்கேட்டு, உடனே கங்காநதியைக் கடந்துபோய் வெகுதூரத்திலே சேனைபரிவாரங்களை நிறுத்தி, பரத்துவாசர் ஆச்சிரமத்தைச்சேர்ந்து, தாய்மார்கள் முதலானவர்களுடனே அப் பரத்துவாசரைக்கண்டு சேவித்தனர். அவர் அப்பாதராஜனைநோக்கி, அப்பா ரவிகுலதிலகனே! நீயே உத்தமபுருஷன். உன்னைப்போலத் தமையனுக்கு விரோதம்நினைத்ததம்பியும், உன்னுடைய தாயைப்போலப் புருஷனை வரத்தினுல் வசப்படுத்திக்கொண்டு மாற்ருந்தாய் மைந்தனுக்குக் கேடுநினைத்த ஸ்திரீயுமுண்டு. அப்படி நினைத்த தீங்கி

னாலே அவர்கள் அநுபவித்த துன்பங்களும் அநேகமுண்டு. என்றொரு ராஜாவினுடைய சரித்திரத்தை உபகதையாகவெடுத்துக்காட்டிமிகவுங்கோபத்துடனே நிந்தையாகச் சொல்ல, அதுகேட்ட பரதராஜன் பயந்து, நொந்தபுண்ணிற் சுடுகோலிட்டாற்போல மகாவிசனத்தை யடைந்து, அந்தப் பரத்துவாசரை நோக்கி, சுவாமி! என்னாலே ஒருவஞ்சனையும் உண்டானதில்லை. நானொருபாவத்தையும் நினைத்தறியேன். சகலமுந் தெரிந்திருக்கும் தேவரீர் என்னை இப்படியெல்லாம் புத்தியில்லாத மூர்க்கனைப்போல நினைத்து நிந்திக்கவேண்டாம். என்று அவரைவந்தித்து வேண்டிக்கொண்டு, அந்தப் பரத்துவாசமுனிவர் சொன்னபடியே தன்தமையனாகிய ஸ்ரீராமனிருக்குஞ் சித்திரகூடத்தைத்தேடிவந்து, தூரத்திலே சேனைபரிவாரங்களை நிறுத்தி, மாதாக்களும் தானும் மற்றுஞ்சில சுகிர்த்தாயுள்ள ஜனங்களுடனே அத்தமையனைக் கண்டு தெண்டனிட்டுச் சேவித்து வணங்கி நின்றனர்.

அப்படி வணங்கிய பரதராஜனைப்பார்த்த ஸ்ரீராமர் ஆச்சரியப்பட்டு உபசாரஞ் சொல்லியிருக்கச் செய்து யோகக்ஷேமம் விசாரிக்குமளவிற் பிதாவிறந்துபோனாரென்றுசொல்லக்கேட்டுச்சகிக்கப்படாத துன்பத்தையடைந்தவராய்,அப்பொழுதே வசிஷ்டகுரு முதலானவர்களுடனே கங்காதீரத்திலே பிதுர்கருமத்தைச்செய்து முடித்துப் பின்பு, பரதராஜனுக்குத் தேறுதலை சொல்லிச் சமாதானப்படுத்தி, அப்பா என்னிளவரசே! நாம் சத்தியந்தப்பாமற் பிதுர் வாக்கிய பரிபாலனஞ் செய்யவேணும். ஆகையாலே நீ என்னுடைய சொற்படி தவறாமல் அயோத்தியாபட்டணத்துக்குப் போய் இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருப்பாயென்று சொல்லினர். அதுகேட்ட பரதராஜனானவர் மிகவும் விசனத்தை யடைந்து, தேவரீர் இப்படி திருவுளம்பற்றினால் இதற்கு நானென்ன உத்தரஞ்சொல்லுவேனென்று அநேக விதங்களிலே வேண்டிக்கொண்டனர். அதற்கு ஸ்ரீராமர் அப்பரதராஜனுடைய மனதுக்கு ஏற்கச் சமாதானப்படுத்தித் தன்னுடைய திருவடிப்பாதுகைகொடுத்து, இதை நீ என்னுடைய அடையாளமாக வைத்துக்கொண்டு அரசுசெய்திருப்பாயென்று விடைகொடுத்தனுப்ப, அப்படியேபோய்ப் பரதராஜன் மாதாக்களைச் சில பரிஜனங்களுடனே அயோத்தியா நகரத்தி லிருக்கச் செய்து தான் நந்திக்கிராமத்திலே இராஜரீகஞ் செய்துகொண்டிருந்தார்.

*தண்டகாரண்யவாசிகள் சம்ரக்ஷணம்.*



கேளும் ஜனகமகாராஜனே! இங்கே பரதராஜன்செயல் இவ்வாறாக, அங்கே ஸ்ரீராமனானவர் சித்திரகூட பருவதம்விட்டு அப்பாற்போய் தபோமகிமையிற் சிறந்த அத்திரிமகாரிஷியினுடைய ஆச்சிரமத்தைச் சேர்ந்து அவரைக்கண்டு சேவிக்க, அவரும் தனக்கு உபகாரஞ்செய்ய, அவருடனன்றிரவங்கே வாசமாகயிருக்குமளவில் அவருடையபத்தினிஅநுசூயை சீதையை அந்தப்புரத்திலேவைத்துக்கொண்டு அன்புடனே உபசரித்துப் பதிவிரதா தருமங்கள் போதித்து, கந்தமூலபலங்களோடு புஷ்பமுதலான பரிமள வஸ்துக்களும் கொடுத்து கபோலங்களிலே சித்திரரேகைகள் எழுதி அலங்கரித்து இந்த அலங்காரத்தை உன்னுடைய நாயகனான ஸ்ரீராமனுக்கு நீ காட்டினால் உன்னிடத்திலே அதிமோகமான பிரியங்களைச்செய்து சந்தோஷத்தை அடைவாரென்று மங்களாசீர்வாதஞ் செய்தனுப்பினள்.

ஸ்ரீராமர் அச்சீதாபிராட்டியோடுமறுநாள் அவ்விடம்விட்டு வனமார்க்கமாகச் செல்லும்பொழுதில் எதிரேவந்து நேரிட்டுதடுத்து, சீதையைப்பற்றின விராதனை லக்ஷ்மணனும் தானும் அவனுடைய இரண்டு தோள்களையும் வெட்டித்தள்ளி சங்கரித்து, பின்பு அவ்விடத்தினின்றும் அப்பாற் செல்லும்பொழுது மார்க்கத்திலே சரபங்கர் ஆச்சிரமத்திலும் சுதீட்சணராச்சிரமத்திலும்போய் அந்த மகாமுனிவரை கண்டு அங்கங்கே வாசமாகவிருந்து அப்பாற்சென்று தண்டகாரணியத்திற் பிரவேசித்தார். அந்த தண்டகாரணியவாசிகளாயுள்ள மகாரிஷிகளெல்லோரும் ஸ்ரீராமனைக்கண்டு ஆசீர்வாதஞ்செய்து நாங்கள் வெகுகாலம் இராவணாதி ராக்ஷதர்கள்செய்யும் உபத்திரவத்தினாலே மிகவும் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறோம். எங்களுடைய

விசனத்தைத் தீர்த்து ரக்ஷிக்கவேணும். என்றுசொல்ல அதற்கவர் அவர்களை நோக்கி, ஓதண்டகாரணியவாசிகளே! உங்களுடைய ஆசீர்வாதபலத்தினாலே அந்தராவஞுதிகளைச்சங்கரித்து நீங்கள் சந்தோஷத்தை அடையும்படி செய்வேனென்றவர்களுக்கு அபயங்கொடுத்தனர். உடனேயந்த மகாரிஷிகளெல்லோரும் ஸ்ரீராமனை தங்களுடைய ஆச்சிரமங்களுக்கு அழைத்துப்போய் ஒவ்வொருவரும் ஒருதினம் ஒருவாரம் ஒருபக்ஷம் கந்தமூலபலாதிகள் புசிப்பித்து உபசரிக்க, அவரவர்களுடைய வாச்சிரமங்கடோறும் அந்தப்பிரகாரம் பத்து வருஷமளவும் அந்தத் தண்டகாரணியத்திலே வாசஞ்செய்திருந்தனர். பின்பு நான் வாசமாயிருக்கும் சந்தனசலத்திலேவந்து என்னைக்கண்டு சேவிக்க, நான் பல ஆசீர்வாதங்கள்செய்து உபசரித்து, தனுசு - அக்ஷயதூணிரம்-கட்காயுதம் இவை முதலிய திவ்வியாஸ்திரங்களைக்கொடுத்து உத்தரதிசையிற் கோதாவரிநதிக்கடுத்த பஞ்சவடிதீரத்திலே வாசஞ்செய்துகொண்டிருமென்று அனுப்பினேன்.

இராவணன் சீதாபஹரணம்.



கேளும் ஜனகமகாராஜனே! எனது சொற்படியே ஸ்ரீராமன்பஞ்சவடிதீரத்தை நோக்கிவரும்பொழுது ஜடாயுவைக்கண்டு அந்த ஜடாயு நான் உங்களுடைய பிதாவுக்கு மித்திரன். ஆனபடியினாலே நீரெனக்குப் புத்திர சமானர். இவ்விடத்திலே ராக்ஷதர்களுடைய உபத்திரவ மூண்டாயிருக்கும். நீங்கள் சாவதானமாயிருக்கவேணும். நானும் பாதுகாத்துக்கொண்டிருக்கிறேன் என்றுசொல்ல, அப்படியேவந்து பஞ்சவடிதீரத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கும்நாளில் ஒருநாள் அவ்விடத்துக்குச் சூர்ப்பநகைவந்து தன்னைக்கண்டுமோகித்துக் கல்யாணஞ்செய்துகொள்ளச் சொன்னாள். ஸ்ரீராகவன் இலக்ஷ்மணனிடத்துக்குப் போகச்சொன்னார். அதற்கவள் சீதையை அதட்டிப் பயமுறுத்த, அதுகண்ட லக்ஷ்மணன் அவளைக் காதையும் மூக்கையுமரிந்து துரத்திவிட்டார். உடனே அந்தச் சூர்ப்பநகை அதிவேகமாக ஜனஸ்தானத்துக்குப்போய்க் கர தூஷணர்களிடத்திலே தனக்குவந்த அவமரியாதித்துன்பத்தைச்சொல்லி மிகவும் துக்கப்பட, அதுகேட்டு அந்தக் கர தூஷணரிருவரும் திரிசிரன் முதலான அநேக ராக்ஷதசேனையுடனே வந்தெதிர்த்து யுத்தம்பண்ண அவர்களைத் தான் சங்கரித்தார். அப்படிக் கர தூஷணர்முதலானவர்கள் இறந்துபோனதைக்கண்ட சூர்ப்பநகையானவள் பின்னுமளவில்லாத துன்பத்தை யடைந்தவளாய் தலைவிரி கோலத்துடனே புலம்பினபடியாய் சீக்கிரமாக இலங்காபட்டணத்துக்குப்போய் இராவணன் சபையிலே பிரவேசித்து இவ்விதமாகச் சொல்லினாள்.

கேளாய் அண்ணா! இன்றைக்கு நான் வனத்துக்குப்போனவிடத்தில் அங்கொரு பெண்ணைக்கண்டு அவளுன்னுடைய அழகுக்கேற்ற அழகுடையவளென்றெண்ணி ஆசைப்பட்டு, அவளை உனக்குக் கொண்டுவரக் கிட்டப்போயடுத்தேன். அதுகண்டு அவளுக்குத் துணையாகநின்ற ஒருமனிதனென்னை இவ்வேஷமாகச்செய்தான். இவ்வநியாயத்துக்கு என்னசெய்வேன்? திரிலோகத்தையும்ஜெயங்கொண்ட அண்ணா! நீ ஒருவனிருக்க மற்றொருவன் என்னை இப்படிச் செய்வதற்கு நீதியில்லையோ? முறைமையில்லையோ? அரசில்லையோ? ஆண்மையில்லையோ? ஆக்கினையில்லையோ? வீரமில்லையோ? வெற்றியில்லையோ? அம்மனிதர்கள் என்னை இப்படிச் செய்தது இராக்ஷதகுலத்திற் பிறந்த உங்களுடைய பெருமையைக் கெடுத்ததல்லவோ? என்று பலபலவிதமாகப் புலம்பியழுத சூர்ப்பநகையை இராவணன்தேற்றி, அவளாலே சொல்லப்பட்ட சீதையினுடைய சவுந்தரியமெல்லாங்கேட்டு மிகவும் மோகத்தையடைந்தவனாகி, அவளை எப்படியும் கிரகிக்கவேணுமென்று ஆலோசித்து, எல்லாமாய வித்தைகளிலும் வல்லமையுடைய மாரீசனும் தானும் வனத்துக்கு வந்தார்கள். அப்பொழுது மாரீசன் ஒரு பொன்மானாகஉருக்கொண்டு தாங்களிருக்கும் பன்னகசாலைக்கு எதிரே மகா விநோதமாக விளையாடித்திரிய, அதைக்கண்டு இந்த மானை எனக்குப் பிடித்துத்தரவேணுமென்று ஸ்ரீராமனைச் சீதை மிகவும் நயந்து வேண்டிக்கேட்க, அதற்கு அப்படியே செய்கிறேனென்று தான் அந்தமானைத்

தொடர்ந்து நெடுந்தூரம்போய்ப் பாணத்தினாலே எய்யும்பொழுது அந்தமானானது ஓ ஓ லட்சுமணா! அபயம்: என்று கூப்பிட்டுவிழ, அந்தச் சப்தம் கேட்டமாத்திரத்தில் ஸ்ரீராமனுக்கு என்ன அபாயம் வந்ததோவென்று சீதை புலம்பித் துக்கப்பட, அது பொய்யான சப்தமென்று தடுத்துச் சொன்ன இலக்ஷ்மணனை உமது புத்திரி துச்சமாய்ச்சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன் சீதையைத் தனியேவைத்து ஸ்ரீராமனைத் தேடிவந்து காண, தாங்களிருவரும் மீண்டுவருமளவில் மார்க்கத்திலே குற்றுயிராய்க் கிடக்கும் ஜடாயுவைக் கண்டார்கள்.

அந்த ஜடாயு ஸ்ரீராமனை நோக்கி தேவரீர் ஒரு பொன்மானைத் தொடர்ந்து போனதும், தேவரீரை லக்ஷ்மணர் தேடி வந்ததும், அந்தச்சமயத்திலே ராவணன் கபடசன்னியாசி வேஷமாகவந்து மாறுபட்டுத் தன்னை அவன் கொண்டுபோகிறதையும், சீதாதேவி முறையிட்டுச் சொன்னதை நான் கேட்டுவந்து குறுக்கே தடுத்துக்கொண்டு அந்த துஷ்டனாகிய ராவணனுடனே என்னாலே யானமட்டும் யுத்தம் பண்ணினேன். அவன் என்னை இப்படிச் செய்து சீதாதேவியைக் கொண்டுபோய் விட்டான் என்று சொல்லிப் பிராணனை விட்டுச் சுவர்க்கமடைந்தார். அந்த ஜடாயுவை ஸ்ரீராமன் தன்னுடையகையினாலே தகனஞ்செய்து அப்பால் வருமளவில், மார்க்கத்திலே எதிர்ப்பட்ட கவந்தனை வதைத்தார். பின்பு தன்னை நெடுங்காலம் காணவேண்டி தபசுசெய்திருந்த சபரியினுடைய ஆச்சிரமத்துக்குவந்தார். அவள் கந்தமூலபலங்கள் கொடுத்து உபசரித்து யோகமார்க்கத்தினாலே சரீரத்தை விட்டு முத்தியடைந்தாள்.

## சுக்கிரீவர் ஆஞ்சநேயர் சம்பாஷணம்.

கேளும் ஜனகமகாராஜனே! பின்பு ஸ்ரீராமனும் இலக்ஷ்மணனும் பம்பாதீரத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்குமளவில் முன்பு தமையனாகிய வாலிக்குப் பயப்பட்டு மதங்கருடைய ஆச்சிரமத்துக்கு அடுத்த ரிஷியமுகபர்வதத்தில் ஒளித்திருக்கும் சுக்கிரீவன் தங்களைக் கண்டு, இவ்விடத்தில் இப்படி அற்புதரூபமான ரூபவான்களாய் உலாவிக்கொண்டிருக்கும் இவர்கள் எவர்களோவென்று ஆச்சரியப்பட்டுத் தன்னுடைய சிநேகிதனாகிய அநுமானையனுப்ப, அந்த அநுமான்வந்து விசாரித்து, சுக்கிரீவனுக்குச் சொல்லி, அவனைத் தனக்குச் சக்கியஞ் செய்வித்தான். பின்பு சுக்கிரீவன் ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய பலபராக்கிரமங்களையறியவேண்டி பரீக்ஷித்தபொழுது, தடாகக்கரையில் வளைவாகச் சூழ்ந்துநின்ற மராமரங்களேழுந் தட்டுருவியோட ஒரு பாணத்தினாலே எய்தும், மலைபோலக்கிடந்த துந்துபி எலும்பைச் சருகுபோலாகாசத்திற்பறக்க வெற்றியும், அவனுடைய சந்தேகந்தீரத் தங்களுடைய சாமர்த்தியத்தை அறிவித்தார். அதற்குமேல்வாலியை வதைத்து, அந்தச் சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டினார். அவன் கிஷ்கிந்தாபட்டணஞ் சேர்ந்து, ஐஸ்வரிய அநுபோகத்தினாலும், மதுபான மயக்கத்தினாலும், அறிவழிந்து தன்னையும் மறந்து காலந்தாழ்ந்திருந்தான். அப்பொழுது ஸ்ரீராமன் லக்ஷ்மணனை அனுப்பினவுடனே அவன்பயந்து ஓடிவந்து தன்னைவணங்கி வேண்டிக்கொண்டான். அப்பால் அச்சுக்கிரீவன் எழுபதுவெள்ளம்வானரசேனைகளைச் சேகரம்பண்ணி, சீதையைத் தேடிக்காணத் திசைதிசைக்கு ஒருவரை நியமித்துச் சில சேனைகளுடனே அனுப்புவித்தான்.

அக்கால் தெற்குத்திசைக்கு அநுமானை நியமித்தபொழுது அவன் கையிலே ஸ்ரீராமர் தன்னுடைய முத்திரைமோதிரம் கொடுத்தனுப்பினார். அந்த அநுமான் அங்கதன் முதலான சில வானரசேனைகளுடனே மகேந்திர பருவதஞ் சேர்ந்து ஆலோசித்து அந்த பருவதத்தினின்றும் அதிவேகமாகப் பாய்ந்து, கடலைக்கடந்து போய் இலங்காபட்டணமெங்குந் தேடிக்காணமல் அப்பால் அசோகவனத்திலே இராவணன் காவலுக்குள்ளே வைத்த அருஞ்சிறையிலிருக்குஞ் சீதையைக்கண்டு, ஸ்ரீராமனுடைய சவுந்தரியகுணவிசேஷங்களையும், இவர் முன்பு அந்தரங்கத்திலே பேசிய ரகசியங்களையும் அடையாளமாகச் சொல்லி, முத்திரைமோதிரத்தையும்கொடுத்துத்தேற்றி, பின்பு அந்த அசோகவனத்தைச் சூறையாடி யழித்தான். அதுகண்டு எதிர்த்து யுத்தத்துக்குவந்த சம்புமாலி-

அக்ஷயகுமாரன்-பஞ்சசேனாதிபதிகள் சப்த மந்திரி புத்திரர்கள் ஆகிய இவர்களுடன் இராக்ஷதசேனைகளையும் அவ்வநுமான்மடித்து, இராவணனோ டெதிர்த்துப்பேசி, இலங்கையைப் பாழாகச் சுட்டெரித்து மீண்டான். இப்படி மீளும்பொழுது முன் போலவே பலங்கொண்டு சமுத்திரங் கடக்கப் பாய்ந்து மகேந்திரகிரியிற் குதித்து, அவ்விடத்திலிருந்த சாம்புவன்-அங்கதன் கந்தமாதனன்-விருபாக்ஷன் இவை முதலானவர்களுடனே வரும்பொழுது சீதையை கண்டோமே என்னும் சந்தோஷத்தினாலே சரீரத்தைமறந்து சுக்கிரீவனுடைய மதுவனமென்னும் சிங்காரவனத்தை யழித்து மிகவும் மகிழ்ச்சியுடனேவந்து ஸ்ரீராமனைக்கண்டு அவ்விடத்தில் சீதையிருக்கும் செயலையும், அவள் சொல்லிய ரகசிய வசனங்களையுஞ் சொல்லி, அவள் அடையாளமாகக் கொடுத்த சூடாமணி ரத்தினத்தையுங் கொடுத்துச் சோகந்தீர்த்தான்.

சமுத்திர சேதுபந்தனம்.

கேளும் ஜனகமகாராஜனே! பின்பு ஸ்ரீராமன் சுக்கிரீவன் சேகரம்பண்ணின சகல வானரசேனைகளுடனே சமுத்திர தீரம்போய்ச் சேர்ந்தார். அப்படி யிருக்குமளவில் இலங்காபட்டணத்திலே இராவணனானவன் மகோதரன்-மகாபாரிசுவன்-தூம்பிராக்ஷன் முதலான பிரதான மந்திரிகளுடனே மந்திராலோசனை பண்ணின பொழுது விபீஷணன் இராவணனை நோக்கி, அண்ணா! இந்த ஸ்ரீராமனை ஒருவராலும் ஜெயிக்கக்கூடாதென்று அநேகவிதமான சன்மார்க்க புத்திகளைப் போதித்தும் கேளாதபடியினாலே அவன் தன்னுடைய தமயனை வெறுத்து நீங்கி அனலன்-அணிலன்-அரன்-சம்பாதி என்று சொல்லப்பட்ட நால்வர் மந்திரிகளுடனே வந்து சேர்ந்து ஸ்ரீராமனை சரணாகதியாக வடைந்தான். உடனே அந்த விபீஷணனுக்குத் தான் அபயங்கொடுத்து இலங்காபுரி பட்டாபிஷேகஞ் செய்வித்தார். பின்பு இராவணனுடைய பெருமைகளையும் உபாயங்களையும் தனக்கு விபீஷணன்சொல்ல, அது கேட்டவுடன் சமுத்திரராஜனைக்குறித்து தருப்பசயனஞ்செய்திருந்து பின்பு அவன் வாராததினாலே கோபித்து அக்கினியாஸ்திரம் பிரயோகம்பண்ண, உடனே அந்த வருணன் பயப்பட்டு தன்னை வணங்கிச் சரணாகதியடைந்து தோத்திரம் பண்ணினான். அதற்குமேல் எழுபதுவெள்ளஞ் சேனை வானரவீரர்களும் மகாபருவதங்களைக் கொண்டுவந்துபோட, அந்தப் பருவதங்களையெல்லாம் நளனானவன் எளிதாகக் கடற்கரைக்கும் இலங்காதீவுக்கும் நடுவேயுள்ள சமுத்திரத்தைத் தூர்த்துப் பத்து யோசனைதூரம் அகலமும் நூறுயோசனை தூரம்நீளமுமாகச் சேதுபந்தனம் மூன்று தினத்திலே கட்டித் தீர்மானப்படுத்தினான்.

அப்பால் ஸ்ரீராமர் இலங்காதீவுபோய்ச் சேர்ந்து சுவேலாத்திரி பருவதத்தில் சேனைகளுடன் இறங்கியிருக்கும்பொழுது இராவணன் அனுப்பின சுகசாரணர்கள் வந்து, இவருடைய சேனைப்பெருக்கத்தையும், பலபராக்கிரம சவுரியப்பிரதாபங்களையும் பார்த்தறிந்துபோய் இலங்காபட்டணத்து வடக்குவாசற் கோபுரத்தின்மேலேறியிருக்கும் இராவணனுக்குக் காண்பித்து அறியப்படுத்திக்கொண் டிருக்குமளவில் அந்த ராவணன்மேலே சுக்கிரீவன் சிங்கக்குட்டிபோலப் பாய்ந்து சேர்ந்து கட்டிப் போராடி அவனுடையகிரீடரத்தினத்தை பறித்துக்கொண்டு வந்தான். அப்படி மகுடபங்கப்பட்ட இராவணன் மகாவிசனத்தை யடைந்தவனாய்த் தன்னுடைய அநேககோடி ராக்ஷதசேனைகளையும் நாலு பிரிவாகப் பிரித்து, நாலு வாசல்களிலேயும் காவலாகவைத்தான். அக்கால் ஸ்ரீராமன் தன்னுடைய சேனையைக் கோட்டையாகவகுத்து, கிழக்கே நீலனையும், தெற்கே அங்கதனையும், மேற்கே அநுமானையும், வடக்கே சுக்கிரீவனையும் சாம்புவனையும் காவலாகநியமித்து, இலக்ஷ்மணனுடனே தானும் அங்கிருந்தார். அப்பால் தான் இராவணனிடத்துக்கு அங்கதனை தூதாக வனுப்ப, அவன்போய் சதுர்வித வுபாயங்களினாலே இராஜநீதிகளையெல்லாம் இராவணனுக்குத் தெரியச்சொல்ல, அப்பொழுது இராவணன் கேளாய் அங்கதனே! உன்னுடைய பிதா எனக்கு மித்திரனானபடியினாலே நீ எனக்குப் புத்திரனுக்குச் சமானம். உன்னுடையதகப்பனைக்கொன்ற

சத்துருக்களாகிய இராமனையும் சுக்கிரீவனையும் மடித்து உனக்கு நான் இராஜபட்டாபிஷேகம்செய்கிறேன் என்று சொன்ன மாத்திரத்திலே அங்கதன் கோபித்து இராவணனை நோக்கி, ஆ தசக்கிரீவா! ஒரு சிறுநாயானது சிங்கத்துக்கு மிருகராஜபட்டங் கட்டுகிறேனென்றதுபோல என்னைக் குறித்துச் சொன்னாய்? ஆகையால் உன்னைப்போலும் அறிவில்லாதவர்கள் ஒருவருமில்லை என்று இகழ்ந்துபேச, இராவணன்கோபித்து இவனைப்பிடித்துக் கட்டுங்களென்று சொல்ல, அவ்வங்கதன் தன்னைப் பிடித்த ராக்ஷதர்களையு மிடுக்கிக் கொண்டு ஆகாசத்திலேயெழும்பி அவர்கள் இறக்கும்படி பூமியிலே உதறித்தள்ளி மீண்டு ஸ்ரீராமனிடத்துக்கு வந்தான்.

## முதல்நாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! அதற்கு மேல் இராவணன் யுத்தத்துக்கு ஆரம்பிக்கச்சொல்லிஉத்தரவுசெய்தமாத்திரத்திலே இந்திரஜித்து பிதாவாகிய அவ்விராவணனைப் பார்த்து, ஐயா! இந்தமனிதரையும் குரங்குக் கூட்டத்தையும் ஜெயிப்பதற்கு நான் ஒருவன் போதாதோ? என்று தன்னுடைய பல பராக்கிரம சவுரியங்கள்பேசிப் போர்க்கோலங்கொண்டு இராஜசின்னங்களுடனே இரதாரூடனானன். அப்பொழுது இராவணனுடையமந்திரிசேனாபதிகளாகிய மகோதரன்-மகாபாரிசுவன்-அதிகாயன்- விரூபாக்ஷன் - தூம்பிராக்ஷன் இவாள்முதலானவர்களும் போர்க்கோலங்கொண்டு, அஸ்திரசஸ்திரங்களேந்தித் தேரேறினார்கள். அப்படிக்கு யுத்தசன்னத்தரானவர்கள் எல்லோரும் பேரி சங்கமுதலான சகலவாத்தியங்களும்முழங்க, அநேககோடி ராக்ஷத சேனாசமுத்திரத்துடனே இலங்காபட்டணம்விட்டுப்புறப்பட, அது கண்ட ஸ்ரீராமனும் யுத்தத்துக்கு ஆரம்பிக்கச்சொல்லி சுக்கிரீவன் முதலானவர்களுக்கு உத்தரவுகொடுக்க, அவர்களும் தங்களுடைய எழுபதுவெள்ளம்வானரசேனைகளையும் சேகரித்து எதிர்சென்று நடக்க, அப்பொழுது இருவகைச்சேனையும் ஆர்ப்பரித்துமுழங்கி, கடலுங்கடலும்கலந்தாற்போல ஒன்றோடொன்று போர்செய்யத் தொடங்கி நெருங்கின.

அம்மாத்திரத்திலே இராக்ஷதர்கள் தண்டம்-சூலம்-முசலம்-வேல் வாள்-ஈட்டி சக்கரம் இவைமுதலான ஆயுதங்களினாலே வெட்டிக் குத்தி யடித்து தகர்த்து வீசியெய்து மோதித் தாக்கியும், வானரவீரர்கள் மகா பருவத விருக்ஷங்களினாலே மோதி நெருக்கியும், இந்தப்பிரகாரம் அவ்விருவகைச் சேனையும் யுத்தஞ்செய்ய, அப்பொழுது பல பராக்கிரமங்களுக்கு ஒத்திருக்கும் வானரசேனாதிபதிகளும் இராக்ஷதசேனாதிபதிகளுமான வீரர்களுக்குள்ளே அங்கதனும் - இந்திரஜித்தும், அநுமானும்-சம்புமாலியும்,சுக்கிரீவனும்-பிரகஸ்தனும் நீலனும்- நிகும்பனும், சம்பாதியும்-பிரசங்கனும், மயிந்தவனும் - வச்சிரமுஷ்டியும், சாம்புவனும்-மகராக்ஷதனும், சுசேஷணனும்-வித்துன்மாலியும், கவாக்ஷனும்-தேவாந்தகனும், பனசனும் - நராந்தகனும், கேசரியும் - தூம்பிராக்ஷனும், தூமனும்-கும்பனும், துவிதனும் - அக்கினிப்பிரபனும், சரபனும்-திரிசிரனும், குமுதனும்-அகம்பனும், ரிஷபனும்-சாரணனும், ரம்பனும் - விநுதனும், வேகதரிசியும் - சுகனும், சதவலியும்-வித்தியுற்சிகுவனும், கந்தமாதனனும் - சுபாரிசுவனும், விபீஷணனும்-மித்திரக்கினனும், இலக்ஷமணனும்-விரூபாட்சனும், அக்கினிகேது - ரஸ்மிகேது-சுத்தக்கினன் - யக்கியகோபன் என்னும் நால்வருடனே ஸ்ரீராமனும், கட்கரோமன்-சர்ப்பரோமன் -விருச்சிகரோமன் முதலான இராட்சதர்களுடனே விகடன்-சார்வபவுமன்-காலகாலன்முதலானவானர வீரர்களும் ஒருவருக்கொருவர் எதிர்த்துக் கொண்டு, அநேககோடி அஸ்திர சஸ்திரங்களினாலும் பருவதவிருட்சங்களினாலும் தாக்கி நெருக்கித் துவந்தயுத்தம் பண்ணிக் கொண் டிருந்தார்கள்.

இவ்வித யுத்தத்திலே இராட்சதசேனையினாலே வானரசேனை யடிபட்டு நிருவகிக்கமாட்டாமல் நிலைகுலைந்து முறிவது கண்ட வானரசேனாதிபதிகளெல்லோரும் ஒருமித்து, ஊழிகாலத்துப் பெருநெருப்பு போலச்சீறி முனைந்து ஆர்ப்பரித்து அளவில்லாத இராட்சதசேனை மடிந்தழிய, ஜாடும்பொழுது அநுமானாலே சம்புமாலி

அடிபட்டிறந்தான். சம்பாதி பிரசங்கனை மடித்தான். விபீஷணன் மித்திரக்கினனை வதைத்தான். மயிந்தவனாலே வச்சிரமுஷ்டிபட்டான். துவிதனாலே அக்கினிப்பிரபன் செத்தான். சுஷேணனாலே வித்துன்மாலிமாண்டான். நளனாலே பிரதமணனும், கோரனும், இரணகர்க்கஜனும், விந்தனுமிறந்தார்கள். லக்ஷுமணன் விருபாக்ஷனை வதைத்தான். அக்கினிகேது முதலான அந்த நால்வர்களும் உமது மருகனை ஸ்ரீராமனால் அடிபட்டிறந்தார்கள். சுக்கிரீவனாலே பிரகஸ்தன் அடிபட்டு மூர்ச்சை யடைந்தான். கேசனுக்காற்றாமல் தபனன் ஓடிப்போனான். இந்தப்பிரகாரம் வானரவீரர்களாலே, இராக்ஷசசேனையும் சேனாதிபதிகளும் அடிபட்டிறந்து மூர்ச்சை யடைந்து சின்னாபின்னமாய்க் கடலுடைந்து சாய்வதுபோல முறிபட்டோடும் பொழுது,இந்திரஜித்தும் தனக்குள்ள பலமெல்லாங்கொண்டு அநேகவிதமான யுத்தங்களைப்பண்ணி யாற்றாமல், அங்கதனால் அபசயப்பட்டான். அப்படி அபஜயப்பட்ட இந்திரஜித்து முதலான எல்லோர்களும் லங்காபட்டணஞ் சேர்ந்தார்கள்.

அப்பொழுது ராவணன் இந்திரஜித்துவைப்பார்த்து, அப்பா! இப்படி அபஜயப்பட்ட எனக்கு அபகீர்த்திவரச் செய்தாயே! என்று மனஞ்சலித்துச் சொல்லவும், அதற்கு இந்திரஜித்து இராவணனைப்பார்த்து, ஐயா! இப்பொழுது நான் ஒருவனுமேபோய் அவ்விராம லட்சுமணன் முதலான எல்லோர்களையும் ஜெயித்து உமது மனமகிழச் செய்கிறேன்பாரும். என்று சபதம்பேசி, மகாவுக்ரகோபத்துடனே அன்று ராத்திரியே அதிவேகமாக ஆகாசத்திற்போய் மேகமண்டலத்தில் மறைந்து, ஒருவருமறியாமல் தன்னுடைய நாகபாசத்தைப் பிரயோகித்தான். அந்த நாகபாசத்தினாலே லக்ஷுமணன் முதலான எல்லோர்களும்கட்டுப்பட்டுச் சரீரங்களை அசைக்கமாட்டாமல் இறந்தவர்போலப் பிராணன் அடங்கிப்பிரேதாகிருதியாய்க்கிடக்க, அக்கால் ஸ்ரீராமனும் மூர்ச்சை யடைந்தார் அப்போது அவ்விந்திரஜித்து இராவணனிடத்துக்குப்போய் அவ்விலக்ஷுமணன் முதலான எல்லோர்களும் இறக்கும்படி நாகபாசத்தினாலே பந்தித்து வந்தேனென்று சொல்ல, அதுகேட்ட ராவணன் மனமகிழ்ந்து, சீதைக்கு ஸ்ரீராமன் முதலானவர்கள் இறந்துகிடப்பதைக் காண்பியுங்களென்று உத்தரவுசெய்ய, அப்படியே அசோகவனத்திற் காவலாயிருந்த ராக்ஷசஸ்திரீகள் சீதையைப் புட்பகவிமானத்திலேற்றிக்கொண்டு யுத்தகளத்தில் வந்து உன்னுடைய நாயகனாகிய ஸ்ரீராமனும் மைத்துனனாகிய லக்ஷுமணனும் இறந்துகிடப்பதைப் பாரென்று காட்டினார்கள்.

அதைக் கண்டமாத்திரத்திலே சீதை சோகத்தை யடைந்து, முன்பு தன்பிதாவாகிய உம்மிடத்திலே இந்தப்பெண் தீர்க்கசுபமங்கலியாய்ப் புத்திரவதியா யிருப்பாளென்று பெரியோர்கள் சொல்லிய சத்தியவாக்கியமும் பொய்யாய்ப் போமோவென்று புலம்பித் துக்கப்படுமளவில், சமீபத்திலிருக்குந் திரிச்சடையானவள் சீதையைப் பார்த்து, அம்மா! இந்தத் தெய்வீக மகிமையுடைய புஷ்பகவிமானம் விதவைகளைத் தாங்காது. ஆகையால், உன்னுடைய நாயகனாகிய ஸ்ரீராமன் இறக்கவில்லை. எல்லாருக்கும் முகத்திலே களையிருக்கிறபடியினாலே உன்னுடைய மைத்துனனாகியவரும் இறக்கவில்லை. மூர்ச்சை யடைந்திருக்கிறார்கள். நீஒன்றுக்கும் விசனப்படவேண்டாம். ஸ்ரீராமன் முதலான எல்லோர்களும் சுகமாக யிருக்கிறார்களென்கிற சுபவசனத்தை நாளையதினம் நீயே கேட்பாய். என்று அநேகவிதமாகத் தேறுதலைச்சொல்லி அழைத்துக்கொண்டுபோய் அசோகவனம் சேர்ந்திருக்குமளவில், ஸ்ரீராமன் மூர்ச்சை தெளிந்தெழுந்து லக்ஷுமணன் முதலான எல்லோர்களையும் பார்த்துக் கிலேசமடைந்திருக்க, அச்சமயத்தில் தேவர்களாலோசித்துக் கருடபகவானை யனுப்ப, அவர் வரும்பொழுதே சூரியனைக்கண்ட அந்தகாரமானவிருள் எப்படி நீங்குமோ அப்படிபோல அன்று இராத்திரி மரணவாதனையாகப் பந்தித்திருந்த நாகபாசஞ் சிதைந்துகெட்டு விடியற்காலம் லக்ஷுமணன் முதலான எல்லோரும் சரீர வருத்தங்களின்றி எழுந்தார்கள். அப்படியெழுந்த வானரசேனை முழுதும் இலங்கையையடுத்து ஆரவாரித்து அட்டகாசம்பண்ணி முழங்க, அந்தச் சத்தங்கேட்டுச் சீதை சந்

தோஷத்தை யடைந்தாள். இராவணன் விசனத்தை யடைந்திருந்தான்.

இரண்டாநாள்யுத்தம்.



கேளும் ஜனகமகாராஜனே! இப்படி முதல்நாள் விசனத்தை யடைந்திருந்த ராவணன் மறுநாள் தூமிராக்ஷனை யழைத்துச் சந்தோஷப்படுத்த, அவனின்றைக்கு நானே யுத்தத்துக்குப்போய் அந்த ராமன் முதலானவர்களை ஜெயித்து வருகிறேனென்று பிரதாபம்பேசித் தேரேறி அளவில்லாத சதுரங்கசேனையுடனே மேற்குவாசல் வழியாக வெளிப்பட்டான். அப்பொழுது அந்த மேற்குவாசலில் நெருங்கியிருந்தவானரசேனையும் வானரவீரர்களும் ஆரவாரித்தெழுந்து போர்மூண்டு, அனேக குரூரயுத்தம் பண்ணுமளவில், வானர வீரர்களிலே குமுதன்-குமுதாக்ஷன்-சுஷேணன்-என்னும் மூவரும் தூம்பிராக்ஷன் மேலே பாய்ந்து பருவத விருக்ஷங்களினலே மோதியடிக்க, அவனும் அனேக அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்து சுஷேணனைக்கொன்று, மற்றையிரண்டுபேரையும் மூர்ச்சையடையும்படி யடித்தான். அதுகண்ட அநுமான் மகா வுக்கிரகோபத்துடனே அதிவேகமாக இராக்ஷசசேனையிலேபாய்ந்து சின்னபின்னப்படுத்தி, எழுபதுகோடி சேனைகளையும் மடித்துத் தூம்பிராக்ஷனேடு எதிர்த்துக்கொண்டு, அவன் பிரயோகித்த அனேக அஸ்திரசஸ்திரங்களையும் நொறுக்கி, அவனுடைய தேரையுமடித்துச் சிதைத்தான். அந்தத்தேர் போனமாத்திரத்திலே தூம்பிராக்ஷனவன் மற்றொரு தேரேறி வந்தெதிர்த்தான். அந்தத்தேரையும் அனுமான் முன்போலவே பொடிப்பொடியாகச் சிதைத்தான். அப்படியே பின்னும் பின்னும் ஒவ்வொரு தேரிலேறி வந்தெதிர்க்க, அவனேறிவந்த பதினெரு தேர்களையும் சின்னபின்னப்படுத்தி அந்தத் தூம்பிராக்ஷனை வதைத்து மடித்தான்.

மூன்றுநாள் யுத்தம்.



கேளும் ஜனகமகாராஜனே! இப்படி இரண்டாம்நாளும் அபஜயப்பட்டது கேட்ட ராவணன் தூம்பிராக்ஷனு மிறந்தானேவென்று மிகவும் கிலேசத்தை யடைந்து பிரகஸ்தனுடனே ஆலோசனைபண்ணி, மூன்றும்நாள் வச்சிரதமிஷ்டிரனுக்கு உத்தரவுகொடுத்து, கோரன்-கோரதமிஷ்டிரன்-விகடன்-இவாள் முதலான பத்துப் படைத்தலைவர்களையும் உபபலமாக அனுப்பினன். அந்தவச்சிரதமிஷ்டிரனும் அந்தக்கோரன்முதலான படைத்தலைவர்களும் தேரேறி, அபரிமிதமான சதுரங்க பலத்துடனே தெற்குவாசல்வழியாக வெளிப்படும்பொழுதே அநேககோடி அஸ்திரங்களை அக்கினிமழைபோலப் பொழிந்துகொண்டு வந்தார்கள். அதுகண்ட அங்கதனுத்தரவுசெய்ய, அந்தவாசலில் எதிர்த்து நின்ற வானரசேனைமுழுதும்ஆரவாரித்து முழங்கி அனேககோடி பருவத விருட்சங்களினலே மோதியடித்து இராக்ஷசசேனையை வதைக்க, அதுகண்ட வச்சிரதமிஷ்டிரனுடனேவந்த கோரன்முதலான பத்துப்பேர்களும்எதிர்த்துக்கொண்டு அநேக வானரசேனைகளைச்சாடிவதைத்தார்கள். அப்பொழுது வானரவீரர்களில் கவயன் சரபன் குமுதன் இவாள்முதலானவர்கள் எதிர்த்து, அந்தக் கோரன்முதலான பத்துப் பேரையும் அடித்துக்கொன்றார்கள். அது கண்ட வச்சிரதமிஷ்டிரனும் மகாவுக்கிர கோபங்கொண்டு, அந்த வானரவீரர்களைச் சின்னபின்னப்படுத்தித் துரத்தி, வானர சேனைகளிலே மூன்றுகோடி சேனைகளை மடித்தான். அதுகண்ட அங்கதன்சீறி, ராக்ஷசசேனையில் அறுபதுகோடி சேனைகளை மடித்தான். அதுகண்ட வச்சிரதமிஷ்டிரன் அவ்வங்கதனுடனே எதிர்த்துக் கொண்டு யுத்தம்பண்ணுமளவில், அவனலே விடப்பட்ட அஸ்திரசஸ்திரங்களையெல்லாம் அங்கதன் நொறுக்கி, அந்த வச்சிரதமிஷ்டிரனையும் அடித்துக் கொன்றான்.

நான்காநாள் யுத்தம்.



கேளும் ஜனகமகாராஜனே! இப்படி மூன்றுநாளும் அபஜயப்பட்டு, வச்சிரதமிஷ்டிரனும் இறந்ததுகேட்ட இராவணன் மிகவுங் கோபங்கொண்டு அகம்பனைப்பார்த்து, நீ மகா பலவானனபடியினலே இன்

றைக்கு நீயேபோய்த் தூம்பிராக்ஷன் முதலானவர்களைக்கொன்ற குரங்கை எப்படியும் கொன்றுவர வேணுமென்று தன்னுடையதேரில் ஒரு தேருங்கொடுத்து ஒரு வெள்ளஞ் சேனையுங்கூட்டி, சேனாதிபதிகளில் கேசரி-தூமன்-தேவாந்தகன்-நராந்தகன்-இவாள் முதலான பதினேழுபேர்களையும் உபபலமாகப் போகச்சொல்லி உத்தரவுகொடுத்து அனுப்பினான். அப்படியே ஜெயித்து வருகிறேனென்று அந்த அகம்பனனவன் தன் சேனாதிபதிகளுடனே தேரேறி, லங்காபட்டணம்விட்டு மேற்குவாசல் வழியாகப் புறப்பட்ட மாத்திரத்திலே, வானரசேனையுஞ் சேனாதிபதிகளும் எதிர்க்க, ராக்ஷசசேனையும் நெருங்கி ஒன்றோடொன்று கலந்து யுத்தம்பண்ணி அளவில்லாதசேனைகள் மடிந்தன. அக்கால் கேசரி-தூமன்-மகராக்ஷன்-முதலான ராக்ஷச வீரர்களும், கவயன்-கவாக்ஷன்-சேனாபிந்து முதலான வானரவீரர்களும், ஒருவரோடொருவர்எதிர்த்து யுத்தஞ்செய்துகொண்டிருக்கையில், கவயன் முதலான வானர வீரர்களாலே அடிபட்டு கேசரிமுதலான ராக்ஷசவீரர்களில்ஒன்பதுபேர்கள் இறந்தார்கள். அப்படி சேனையும் வீரர்களும் இறந்ததுகேட்ட இராவணன் பின்னும் அரை வெள்ளஞ்சேனையும் சுமதியென்னும் சேனாதிபதியையும் அனுப்பினான். அந்தச் சுமதியும் சேனையும்வந்து எதிர்க்க, அது கண்ட அனுமான் அதிவேகத்துடனே வந்து எதிர்த்து, அந்தச் சேனாதிபதியையும் சேனைமுழுவதையும் வதைத்து, அகம்பனுடனே மகாகோரமான யுத்தம்பண்ணி அன்றையதினம்சாயங்காலவேளையில் அந்தவகம்பனை ஒருபெரிய விருக்ஷத்தினாலே தலைசிதற மடித்துக் கொன்றான்.

## ஐந்தாநாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி நாலாநாள் அகம்பனுமிறந்து, அபஜயமானதுகேட்ட ராவணன் இடிமுழக்கங்கேட்ட சர்ப்பம்போல திற்சிவணுகி, சரீரஞ் சோர்ந்து தெளிந்து, மந்திரிகள் முதலானவர்களுடனே ஆலோசித்தான். அப்பொழுது அவ்வாலோசனையில் ராவணன் பிரகஸ்தனைப்பார்த்து, 'இனிமேல் யுத்தத்துக்குக் கும்பகர்ணனாவது நிகும்பனாவது இந்திரஜித்தாவது நீயாவது அல்லது நானாவது போகவேணுமே யல்லாமல், வேறொருவருஞ் செயித்து வரமாட்டார்களென்று சொல்ல, அதுகேட்ட பிரகஸ்தன் இன்றைக்கு நானே யுத்தத்துக்குப் போய் அந்தமனிதர் குரங்குகளி லொரு பிராணியுமில்லாமல்எல்லோரையும் வதைத்து வெற்றிகொண்டு வருகிறேனென்று ராவணனிடத்தில் உத்தரவுபெற்று, நராந்தகன்-கும்பவனு-மகாநாதன்-சமுன்னதன் என்று சொல்லப்பட்ட தன்னுடைய மந்திரிமார் நால்வருடனே தேரிலேறி ஐந்து வெள்ளஞ்சேனைகள் சூழ்ந்துவரக் கிழக்கு வாசல்வழியாக வெளிப்பட்டான். அது கண்ட ஸ்ரீராமன் விபீஷணனைப்பார்த்து, இப்படி மேகமண்டலத்தை யளாவிய தேரேறி வருகிறவன் எவனென்று கேட்டார். அதற்கவன் இவன்றான் பிரகஸ்தனென்று சொல்லப்பட்டவன். ராவணனுடைய மந்திரிகளில் சிரேஷ்டனானவன். மகாபலவான். இவனுடைய பராக்கிரமத்தை இன்னபடியென்று சொல்லக்கூடாது. என்று சொல்லிக்கொண்டிருக்கையிலே பிரகஸ்தனனவன் வானரசேனையிலே ரதத்தை மகாவேகமாகச்செலுத்தி, அக்கினியாஸ்திரம்-வாயுவாஸ்திரம் - வருணாஸ்திர முதலான அநேக அஸ்திரங்களைப் பிரயோகித்துத் திசைதிசையாகக் கொன்றுஜாடி அநேகம் சேனையை மடித்தான்.

அதுகண்ட வானரவீரர்களெல்லோரும் ஒருமித்து ராக்ஷசசேனையிற் கலந்து யுத்தம்பண்ணி மடிக்குமளவில், அவ்வானரவீரரோடு எதிர்த்து யுத்தம்பண்ணிக்கொண்டிருக்கும் பிரகஸ்தனுடைய மந்திரிமார்கள் நால்வரிலே நராந்தகனைத் துவிதனென்னும் வானரவீரன் ஒருமலையால் அடித்துக் கொன்றான். துன்முகன் ஒரு பெரிய விருக்ஷத்தினாலே சமுன்னதனை வதைத்தான். சாம்பவன் ஒரு பெரிய பாறையினாலே மகாநாதனை மோதி மடித்தான். தாரனொரு விருக்ஷத்தினாலே ஜாடிக் கும்பவனுவென்பவனைக் கொன்றான். அதுகண்ட பிரகஸ்தன் மகாவுக்கிரகோபத்துடனே அநேககோடி பாணங்களினாலும்-ஆயுதங்களினாலும் - அளவில்லாத வானரசேனைகளை மடித்து, வானரசேனாதிபதிகளிலே

சம்பாதி-விவிம்சதி-சுசேஷணன்-சாருசித்திரன்-சித்திரன்-இவர்களையும் வதைத்து பின்னும் மேற்சென்று வருகிறான். அதைக்கண்ட நீலன் ராக்ஷசசேனையிலே மூன்று வெள்ளம் சேனையை மடித்து, சேனாதிபதிகளிலே குண்டோதரன்-குமுதாக்ஷன்-பிரமலோசனன்-முதலான இருபத்தைந்து சேனாதிபதிகளையுங்கொன்று அந்தப் பிரகஸ்தனோடு எதிர்த்துக்கொண்டு மகாபருவத விருக்ஷங்களினாலே மோதியடித்து, அவனாலே விடப்பட்ட பாணங்களையும் பொடிப்பொடியாக நொறுக்கி, தேர் சாரதி குதிரைகளையும் சிதைத்து வில்லையும் ஒடித்தான். அப்பொழுது பிரகஸ்தன் பூமியிலே குதித்து ஒரு பெரிய கதையினாலே நீலனையடித்தான். அவ்வடியினாலே நீலன் மூர்ச்சையடைந்து மீட்டுந்தெளிந்து, ஒரு பெரிய விருக்ஷத்தினாலே தலைதகரவடித்துப் பிரகஸ்தனைக் கொன்றான்.

ஆறுநாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி ஐந்தாநாளும் அளவில்லாத சேனைகளை மடியக்கொடுத்துப் பலவானான பிரகஸ்தனும் இறந்துபோனதினாலே இராவணன் மகா விசனத்தையடைந்து ஆலோசித்து, இன்றைக்கு நானே யுத்தத்துக்குப்போய் சத்துருசேஷ மில்லாதபடிக்கு அந்த ராமலட்சுமணரையும் அவர்கள் சேனையான வானரக்கூட்டங்களையும் அழித்து,என்னுடைய விசயத்தை நிறுத்துகிறேனென்று மகாகோபத்துடனே மந்திரிசேனை சேனாதிபதிகள் எல்லோரையும் யுத்தசன்னத்தராய்ப் புறப்படச்சொல்லி உத்தரவுகொடுத்து, தானும் வச்சிரகவச கிரீடகுண்டல வீரகண்டையாதி ஆபரணங்களைத்தரித்து, பாணதூணீரம் முதுகிற்சேர்த்து கட்க கேடக சூல வச்சிர சத்தி குந்தோமர தண்டமுதலான வாயுதங்களுடனே தனுசு கைகளிலேந்தி போர்க்கோலங்கொண்டு,குடை கொடி பதாகை மணி மாலை முதலானவைகளினாலே அலங்கரிக்கப்பட்டும் ஆயிரங் குதிரைகள் பூட்டப்பட்டும் மகாமேரு பருவதம்போலப் பொன்மயமாக விளங்கும் ரதத்திலே இராஜபரிவார சின்னங்களுடனேறினான். அம்மாத்திரத்திலே சிங்கத்துவசங்கட்டின ரதங்களிலே இந்திரஜித்தும் கும்பனுமேறினார்கள். அதிகாயனும் நராந்தகனும் ரதங்களிலும், அகம்பனும் மகோதரனும் கஜங்களிலும், மகாபாரிசுவன்-திரிசிரன்-விருபாட்சன்-சோணிதாட்சன்-அயோனகன்-சூசிமுகன்-உற்காமுகன் பிசாசன்-முதலானவர்கள் அவரவர் வாகனங்களிலும் ஏறினார்கள்.

இப்படி வாகனருடரான மகோதரன் முதலானவர்கள் சூழ்ந்துவர பேரி சங்க முதலான சகல வாத்தியங்களுமுழங்க, ராவணன் பதின்மூன்றுவெள்ளம் ராக்ஷசசேனா சமுத்திரத்துடனே, வடக்குவாசல் வழியாகப் புறப்படும்பொழுதே அநேக கோடி பாணங்களைச் சரவருஷமாகப் பொழிந்து, அந்த வாசலில் எதிர்த்து நெருங்கி நின்ற அளவில்லாத வானரசேனைகளை மடித்து வருகிறான். அப்படி மடித்து வருகிற உக்கிரவேகத்தைக்கண்ட சுக்கிரீவன் அவ்விராவணனுடன் எதிர்த்தான். அப்படியெதிர்த்த சுக்கிரீவனும் ராவணனும் பருவதங்களினாலும் பாணங்களினாலும் ஒருவரோடொருவர் வீசிப்பொழிந்து, மிகவுங் கொடுமையான யுத்தம்பண்ணிக்கொண் டிருக்குமளவில், இராவணன் கோபித்து அதிவேகமாக அநேகபாணங்களை ஏககாலத்திலே பிரயோகித்து, சுக்கிரீவனை மூர்ச்சித்து விழும்படி அடித்தான். அதுகண்ட வானரவீரர்களுக்குள்ளே பலவான்களான கவயன்-கவாட்சன்-சுஷேணன்-ரிஷபன் - சோதிர்ம்முகன் -நளன்-என்னும் ஆறுபேர்களும் அவ்விராவணனை எதிர்த்துப் பருவத விருட்சங்களினாலே மோதி யடிக்கும்பொழுது, அவன் அந்த ஆறுபேர்களையும் மூர்ச்சித்து விழும்படி அடித்துப் பின்னும் அனேகபாணங்களைப் பிரயோகித்துத்தாக்கினான். அப்பொழுது உருத்தெரியாமல் இரண்டுவெள்ளம் வானரசேனைகள் மடிந்து, மிகுந்துள்ள சேனை சேனாதிபதிகளெல்லோரும் எதிர் நிற்க மாட்டாமல் பயந்து நிலைகுலைந்து முறிபட்டு, முறையிட்டுக்கொண்டு ஓடிவந்து ஸ்ரீராமனிடத்தில் விழுந்தார்கள்,

ஸ்ரீராமன் எல்லாரையும் பார்த்துப் பயப்படவேண்டாமென்று அபயங்கொடுத்து, பிரளயகால ருத்திரன்போல மகாவுக்கிரத்துடனே அதிவேகமாகப் புறப்

பட்டார். அந்தச்சமயத்தில் லக்ஷுமணன் வந்து வணங்கி யுபசரித்து தன்னை நிறுத்தித் தானே ராவணனோடு எதிர்க்கும்பொழுது, அந்த லக்ஷுமணனுக்கு முன்னே அநுமான் அதிவேகமாகச் சென்று, ராவணன் தேரின்மேலேபாய்ந் தடுத்து நின்று, அடா ராவணா! நானிப்பொழு தடிக்கவோங்கிய வென்னுடைய கையினலே உன்னுயிரை வாங்குகிறேனென்று சொல்லினன். அதுகேட்ட ராவணன் நீ அப்படியேசெய்து கீர்த்தியடைவாயென்றுசொல்ல, அதற்கு அநுமான்ராவணனைப்பார்த்து, அடா ராக்ஷசா! முன்னமே இலங்கையிலும் அசோகவனத்திலும் உன்னுடைய புத்திரன் அக்ஷயகுமாரனைத் தேய்த்துக் கொன்றதில் என்னுடைய பலத்தையுங் கீர்த்தியையும் அறிவாயேயென்று சொன்னன். அம்மாத்திரத்திலே ராவணன் கோபித்து அநுமானையோங்கி ஓரடி அடித்தான். அதினலே அநுமான் மூர்ச்சையடைந்து தெளிந்து, உடனே பலங்கொண்டு ராவணனையோங்கிஓரடியடித்தான். அப்போது மூர்ச்சையடைந்து தெளிந்த இராவணன் அநுமானை நோக்கி, அடா வானரவீரா! நீமகாபலவான் தான்சந்தேகமில்லை.என்று புகழ அதுகேட்ட அநுமான் ராவணனைப் பார்த்து, அடா தசக்கிரீவா! நீ நானடித்த வடிக்குத் தப்பிப் பிராணனோடிருக்கிறபடியினலே என்னுடையபலத்தினலே என்ன பிரயோசனமென்று சொன்னன். இப்படி இவ்வநுமான்சொல்லுமுன்னே ராவணன் கோபித்துக் கையை முஷ்டியாக மடித்துக் கொண்டோங்கி, அவன் மார்பிலே ஒரு குத்து குத்தினன். அதைத்தாங்கமாட்டாமல் அநுமான் மூர்ச்சையடைந்து விழுந்தான்.

அதுகண்டு சமீபத்திலே நின்ற நீலன் ராவணனோடு எதிர்த்துக்கொண்டு அநேக பருவத விருக்ஷங்களினலே மோதியடித்து, மிகவுங்குரூரமானயுத்தம்பண்ணுமளவில், ராவணன் முனைந்து நீலனுடைய சரீரமுழுதும் இடைவெளியின்றி நெருங்கிப்பாய அநேகபாணங்களைக் கார்கால மேகம்போலச் சொரிந்தான் அந்தவேளையில் நீலன் தன்னுடைய சரீரத்தை ஒடுக்கிக்கொண்டு ராவணனுடையதேரிற்கட்டியகொடியிலே பாய்ந்து அட்டகாசம்பண்ணி, அங்கிருந்தபடியே வில்லிலேபாய்ந்து, வில்லிலிருந்து கிரீடத்திலே குதித்து, பின்னுமந்தக் கொடியிலேபாய்ந்து, இப்படி கழைக்கூத்தாடிகள்போல ஒரு நிமிஷத்துக்குள்ளே பலவிடத்தும் பாய்ந்து குதித்துத் தாவி விநோதம் பண்ணினன். அதைக்கண்ட லக்ஷுமணனும் அநுமான் முதலான வானரவீரர்களும்ஆச்சரியப்பட்டார்கள். அக்கால் ராவணனும் பிரமித்து ஆச்சரியப்பட்டுக் கோபித்து, அந்த நீலனை அக்கினியாஸ்திரத்தினலே அடிக்க, அஃது அவனுடைய மார்பிலேபடவும் தேர்க்கொடியிலிருந்த தான் அலறிக்கொண்டு நிலத்திலே விழுந்து மூர்ச்சையடைந்தான். அப்படி நீலனையடித்த ராவணன் பின்னும் அதிவேகமாகலக்ஷுமணன்மேலேசெல்ல,இருவரும் ஒருவரையொருவர் எதிர்த்துக்கொண்டார்கள்.

அப்படி எதிர்த்த இருவரும் இடியுமிடியும் அக்கினியுமக்கினியும் எதிர்த்தாற்போல எதிர்த்துக்கொண்டு, ஒருவர்மேலொருவர் அநேககோடி பாணங்களைச் சொரிந்து இன்னபடியென்று சொல்லப்படாத குரூரமானயுத்தம் பண்ணுமளவில், ராவணன்முனைந்து தனக்குப் பிரமதேவன் கொடுத்த பாணத்தினலே லக்ஷுமணன் மூர்ச்சித்துவிழும்படி நெற்றியிலடித்தான். உடனே லக்ஷுமணனும் மூர்ச்சைதெளிந்தெழுந்து மகாவேகமாக அநேக திவ்விய பாணங்களைப் பிரயோகித்து ராவணன் கைவில்லையறுத்து, பின்னும் மூன்றுபாணங்களினலே நெற்றியிலடிக்க, ராவணன் மூர்ச்சையடைந்தான். பின்னர் ராவணன் மூர்ச்சைதெளிந்தெழுந்தமாத்திரத்திலே மகாவுக்கிரகோபங்கொண்டு, பிரமதேவன்கொடுத்த வேலையெடுத்து எறிந்தான். அந்த வேல் மார்பிலேபட்டு லக்ஷுமணன் மூர்ச்சித்து விழுந்தான். அப்படி மூர்ச்சித்துக் கிடக்கும் லக்ஷுமணனை ராவணன் எடுக்க வந்து அசைக்கமாட்டாமல் நிற்கும்பொழுது, அநுமான் அதிவேகமாகப்பாய்ந்து கண் வாய் காது மூக்குகளிலிருந்து ரத்தம் பொழிந்துகொண்டு நிலத்திலே கவிழ்ந்து விழும்படி ராவணனைக் கையினலேகுத்தித் தள்ளிவிட்டு, லக்ஷுமணனை எடுத்துக்கொண்டுவந்து ஸ்ரீராமனிடத்திற் சேர்த்தான். அச்சமயத்தில் ராவணன் மூர்ச்சைதெளி

ந்து எழுந்து அதிவேகமாகத் தேரைச்செலுத்தி, பார்த்தவிடமெங்கும் பிணமாக மடிய அநேகம் வானரசேனையை அழித்து வந்தான்.

அப்பொழுது ஸ்ரீராமன் அநுமானுடையதோளிலேறிக்கொண்டெதிர்க்க ராவணன் அவ்வநுமானுடைய சரீரமுழுதும் துளைபடும்படியாக அநேக பாணங்களினாலே அடித்தான். அதுகண்ட தான் பிரளயகாலருத்திரன்போலக்கோபங்கொண்டு பூமியாகாசமெங்கும் நெருங்கி நிறையும்படி, விதம்விதமாயுள்ள அநேக திவ்விய பாணங்களைப் பிரயோகித்து, ராவணனுடையதேர்-சாரதி-குதிரை-சக்கரம்-கொடி-குடை-இவை முதலானவைகளை வேறுவேருகச் சின்னுபின்னப்படுத்தி, கைகளிலிருந்த சூலம்-தண்டம்-வச்சிரம் - வில்-வாள்-வேல் - இவை முதலான ஆயுதங்களையுங் கண்டதுண்டப்படுத்தி, அர்த்தசந்திரபாணத்தினாலே கவசகுண்டலங்களுடனேகிரீடங்களையும் அறுத்துத்தள்ளினர். அக்கால் ராவணன் நிராயுதனுகி அவஸ்தைப்பட்டு நின்ருன். அவனை ஸ்ரீராமர்பார்த்து, ஆ! ராவணு! இப்பொழுது உன்னுடைய பல பராக்கிரம சவுரியமெல்லாம் உனக்கே தெரியவந்தது. ஆகையால் இப்படி அவதிப்பட்ட சரீரத்தைத் திடப்படுத்திக்கொண்டு இன்னும் யுத்தத்துக்கு வருவதற்கு இச்சையுண்டானுல் நாளைவருவாயென்று சொல்லினர். அதுகேட்ட ராவணன் இடிவிழுந்த மலைபோல நெஞ்சுடைந்து புண்ணுகி, பிராணனென்று தவிர எல்லாமேன்மையும்இழந்து லங்காபட்டணஞ்சேர்ந்து, தன்னுடைய ராஜகிரகத்திலே தனித்தோரிடத்திலிருந்து, தனக்கு முன்பு நந்திகேசுவரன்-வேதவதி-அனரண்ணியன்-இவாள் முதலானவர்களிட்ட சாபத்தை எண்ணியெண்ணி வியாகுலத்தை யடைந்தவனுகி, மிகவும் உரியவர்களாயுள்ள சில ராக்ஷசர்களைப்பார்த்து, நான் யுத்தத்துக்குப்போய் இராமனுலே அடிபட்டு அபஜயத்தையடைந்து இப்படியானேனென்று பலபல விதமாய்த் தனக்கு நேரிட்ட துன்பத்தையெல்லாம் அன்றிராத்திரி முழுதுஞ் சொல்லி விசனப்பட்டுக்கொண் டிருந்தான்.

---

ஏழா நாள் யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி ஆருநாள் அபஜயத்தையடைந்து விசனப்பட்டுக்கொண்டிருந்த ராவணன் ஆலோசித்து கும்பகர்ணனை அழைத்துவரச்சொல்லி உத்தரவுகொடுக்க, சில ராக்ஷசர்கள் போய் பேரி - சங்கம் - சிங்கநாதம் - இவை முதலான மகாவாத்தியங்களை இடிபோல முழக்கியும், யானை-ஒட்டகம்-குதிரை-ஆடு-இவைமுதலான மிருகங்களாலே மிதிப்பித்தும், கதைமுதலானதுகளினாலேயடித்தும் எழுப்ப; கும்பகர்ணன் நித்திரைவிட்டெழுந்திருந்து, அவர்களைப்பார்த்து என்னையென்ன நிமித்தம் எழுப்பினீர்களென்று கேட்டான். அதற்கு ராவணன் மந்திரியான யூபாட்சன் கும்பகர்ணனைப் பார்த்து, முன்பு நம்முடைய பட்டணத்தைச் சுட்ட குரங்கு முதலான அநேக வானரசேனையுடனே ராமலக்ஷுமணர் முதலானவர்கள் வந்து சூழ்ந்துகொண்டிருக்கிருர்கள். இன்றையவரைக்கும் ஆறுநாளாக யுத்தம்பண்ணி நம்முடையசேனை சேனுபதி மந்திரிகள் முதலானவர்கள் அனந்தம்பேர் இறந்தார்கள். ஆகையால் ராவணேஸ்வரன் உம்மையழைத்துவரச்சொன்னுரென்ருன். அப்படி சொல்லக்கேட்ட கும்பகர்ணன் தமயனிடத்துக்கு வந்து, சீதையென்னுமொரு பெண்ணினைக்குறித்து நம்முடைய பெருமையெல்லாம்கெடவேணுமோ? அப்படி கெடாதபடி செய்துக்கொள்ளுகிறதே உத்தமமென்று சொல்லினுன். அம்மாத்திரத்திலே ராவணன் கோபித்து, நரிக்குப் பயந்த சிங்கம்போல நீ மனிதருக்குப்பயந்தவனேயானுல் உன்னுடைய இச்சையிலேயிருப்பாயென்று சொல்லினுன்.

அப்படிசொல்லிய தமயனைத் தம்பியாகிய அக்கும்பகர்ணன் பார்த்து, அண்ணு! என்னையும் நீர் இப்படி நினைக்கலாகுமோ? அவர்கள் என்னிலும் பலாஷ்டியர்களோ? என்று மகா உக்கிரகோபங்கொண்டு, அங்கிருந்தபடியே சூலமுங் கதையுங் கையிலெடுத்து வெளிப்பட்டான். அதுகண்ட அநேக ராக்ஷசசேனைகள் பின்ருெடர்ந்து வர, அந்தச்சேனைகளுடனே லங்கையைத் தாண்டி யுத்தகளத்திலே பிரவேசித்தான். அவனைக்கண்ட ஸ்ரீராமன் விபீஷணனை

நோக்கி, அப்பா நண்பனே! இப்படி ஆகாச மட்டும் உயர்ந்த சரீரத்தையுடையவனுக வருகின்றவன் எவனென்றுகேட்டார். அதற்கு அவன் சுவாமி! இவன் ராவணனுடைய தம்பி. எனக்குத்தமையனுகிய கும்பகர்ணன். என்று அவனுடைய பலபராக்கிரமங்களை அறியப்படுத்திக்கொண்டிருக்கையில், கும்பகர்ணன்வானரசேனையிலே தலைப்பட்டு சூலத்தினுலுங் கதையினுலும் குத்தியுமடித்தும் அநேகஞ்சேனைகளைமடித்து வருகிறுன். அதைக்கண்டு எதிர்நிற்கப் பயந்தோடும் சேனைசேனுபதிகளை அங்கதனுனவன் நிறுத்தி, கும்பகர்ணனேடு எதிர்த்துக்கொண்டு அநேக பருவத விருக்ஷங்களினுலே மோதியடித்தான். அக்கால் பின்னும்கும்பகர்ணன் பிரளயகாலயமன்போல அடித்துவருவதை அங்கதனுனவன்கண்டு அநுமான்-ரிஷபன் - சரபன்-நீலன்-கவாக்ஷன்-இவர்கள் முதலான வானரவீரர்கள் எல்லாரையும் சேர்த்துக்கொண்டு கும்பகர்ணன்மேலே திரும்பி மகாயுத்தஞ்செய்தான் அப்பொழுது கும்பகர்ணன் தன்சூலத்தினுலே அநுமானையடித்தான். ரிஷபனைக் கையினுற்கட்டி இறுக்கி நொறுக்கித்தள்ளினுன். சரபனைக்குத்தியெற்றினுன். நீலனை முழங்காலினுலிடித் துருட்டினுன். கவாக்ஷனைக் கையினுலறைந்து மோதினுன். உடனே இவ்வைந்துபேர்களும் மூர்ச்சையடைந்தார்கள். இப்படி அந்தக்கும்பகர்ணன் இவ்வைந்துபேர்களு மூர்ச்சையடையும்படி அடித்துப் பின்னும் அநேக சேனைகளை வதைத்து மடித்துக்கொன்றும், வாரியெடுத்துத் தின்று வருமளவில், மிகுந்துள்ள சேனைகள் பயந்து முறையிட்டு ஓடிவந்து தன்னிடத்திற் சாய்ந்துவிழ அப்பொழுது சுக்கிரீவன் எதிர்த்தான். அவன்மேலே கும்பகர்ணன் சூலத்தை எறிய, அந்தச்சூலத்தை அநுமான் முறித்தெறிந்தான். அதுகண்ட கும்பகர்ணனுடனே ஒரு பர்வதத்தினுலெறிய, அதுபட்டு சுக்கிரீவன் மூர்ச்சித்து விழுந்தான். அந்தச் சுக்கிரீவனைக் கும்பகர்ணன் எடுத்துக்கொண்டு இலங்கைக்குள்ளே போம்பொழுது சுக்கிரீவன் மூர்ச்சைதெளிந்து பலங்கொண்டு, கும்பகர்ணனுடைய மூக்கைப் பல்லினுற் கடித்துக் காதை நகத்தினுற் கிள்ளிப் பறித்துக்கொண்டு எழும்பி ஆகாயமார்க்கமாகப் பாய்ந்து ஸ்ரீ ராமனிடத்துக்கு வந்து நடந்த சங்கதியை அறியப்படுத்திக்கொண் டிருக்குமளவில்; அப்படி அவமானப்பட்ட கும்பகர்ணன் தன் சரீரத்தை வெறுத்து மகாவுக்கிர கோபத்துடனே திரும்பி யுத்தகளத்தில் எதிர்ப்பட்ட அனேகம் வானரரை மடித்து வருகிறுன். அப்பொழுது லக்ஷ்மணனெதிர்த்து அளவில்லாத பாணங்களைச்சொரிய, கும்பகர்ணன் அந்தப் பாணங்களையெல்லாம் அடித்துத் தள்ளிக்கொண்டு, லக்ஷ்மணனை ஒருபொருட்டாய் எண்ணுமல்விட்டு, மேற்சென்று வந்து ஸ்ரீராமன்மேல் ஒருபருவதத்தை எறிந்தான். அதையவர் பாணங்களினுலே யுடைத்து அவனுடைய கவசத்தையுமறுத்து, பின்னுமுடனே தனித்தனி ஒவ்வொரு பாணங்களினுலே கால்வேறு கைவேறு உடல்வேருகத் துண்டித்து, ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அதுதலையையறுத்துச்சமுத்திரத்திலேபோடக் கும்பகர்ணனிறந்தான்.

## எட்டாநாள் யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி ஏழாநாள் கும்பகர்ணன் இறந்துபோனதினுலே இராவணன் என்னிலும் பலவானுன தம்பியும் இப்படி யிறந்துபோனுனே யாஞல் இனிமேல் எவர்களாலே என்ன செய்யலாகுமென்று மிகவும் புலம்பித் துக்கப்பட்டுக்கொண் டிருக்குமளவில், தன்னுடைய புத்திரனுகிய திரிசிரன்வந்துதேறுதலைச்சொல்லி, சமாதானப்படுத்தித் தேவாந்தகன் நராந்தகனுடனே யுத்தத்துக்குப் புறப்பட, அவர்களுக்கு உபபலமாக மகோதரனும் மகாபாரிசுவனும் புறப்பட்டார்கள். ஆயிரங்குதிரைகள் பூட்டிய தேரிலேறி அதிகாயனும் அநேக ராக்ஷசசேனைகளுடனே புறப்பட்டான். அவர்களெல்லோரும் யுத்தகளத்தில் பிரவேசித்து, பிரளயாக்கினிபோலச்சீறி வானரசேனையைச் சாடி யழிக்கும்பொழுதில், அங்கதன் நராந்தகனை அவனேறிய குதிரையுடனே மடித்தான். அநுமான் தன்னுடைய கையினுலே தேவாந்தகனுடைய தலைதகரக் குத்திக்கொன்று, திரிசிரனை அவன் கைவாளை

ப்பறித்து அதினுலேவெட்டியெறிந்தான். நீலன் மகோதரனை ஒருமலையாலெறிந்து, அவனேறிய யானையுடனே மடித்தான். ரிஷபன் மகாபாரிசுவனை அவன் கைக்கத்தையைப் பிடுங்கிக்கொண்டதனுலே அடித்துக்கொன்முன். இப்படி திரிசிரன்முதலானவர்கள் இறந்ததைக்கண்ட அதிகாயன் மகா உக்கிரகோபங்கொண்டு, அதிவேகமாக ஆயிரம் குதிரைபூண்ட தன்னுடையதேரை முடுக்கிச்சாடி நீலன் குமுதன் முதலான வானரவீரரெல்லோரும் முறிந்தோடும்படி வானரசேனையைச் சின்னுபின்னமாக மடித்துக்கொண்டு ஸ்ரீராமன்மேல் வருகிருன்.

அப்பொழுது அவனேடு எதிர்த்த லக்ஷுமணனை அவ்வதிகாயன் தடுத்து, நீ பாலியன் எனக்கு நிகரான பலமுடையவனே? என்று பரிகாசம்பண்ண லக்ஷுமணன் சினந்து, உனக்கு நானே எமனென்று உடனே அனேகபாணங்களைச் சொரிந்து அக்கினியாஸ்திர முதலான அஸ்திரங்களைப் பிரயோகித்தான். அவனும் சூரியாஸ்திர முதலானவைகளைப் பிரதியாகப் பிரயோகித்தான். அப்பொழுது வாயு பகவான் உபாயஞ்சொல்ல அப்படியே லக்ஷுமணன் பிரம்மாஸ்திரப் பிரயோகம் பண்ண, அஃதவ் வதிகாயன் பிரயோகித்த அஸ்திரங்களையு மாயுதங்களையு மறுத்து அவனுடைய சிரசையுமறுக்க இறந்தான். இப்படி தனக்கு நிகரான பல சவுரியம் பொருந்திய அதிகாயனென்னும் புத்திரன் தேவாந்தகன் முதலான மைந்தருடனே இறந்ததுகேட்ட இராவணன், அதற்குமுன்பு கும்பகர்ணன் முதலான மகா பலவான்கள் இறந்துபோனதையும் எண்ணியெண்ணி விசனப்பட்டுக்கொண் டிருக்குமளவில், இந்திரஜித்துவந்து பிதாவை நோக்கி, ஓ எனதருமைப்பிதாவே! நான் ஒருவனிருக்க நீரிப்படி விசனப்படவேண்டியதென்ன? இப்பொழுதே அந்த ராமன் முதலான எல்லோரையும் சத்துருசேஷமில்லாதபடிச் செய்கிறேன்பாரும். என்று அவ்விராவணனைத்தேற்றி, மகா உக்கிர கோபங்கொண்டுஅநேகசேனையுடனே யுத்தகளஞ்சேர்ந்து தன்சேனைகளையொரிடத்தில் நிறுத்திவைத்தான். பின்பு தான்மற்ருெரு பக்கத்திலேபோய், முன்பு தனக்குப் பிரமதேவர் வரங்கொடுத்திருக்கிறதை ஆலோசித்து, விதிப்படி ஓமகுண்டத்திலே பாணங்களினுலும் ரத்தங்களினுலும் ஆகுதிபண்ணி, அசமுதலானவைகளை வெட்டிப் பலியுங்கொடுத்தான்.

அப்பொழுது அந்த ஓமகுண்டத்திலே நின்று தேர் குதிரைகளும் வில் வாள் சூலம் முதலான ஆயுதங்களும் பாணங்களும் பிரம்மாஸ்திரமும் உண்டாகக்கண்டு மகா சந்தோஷத்தை அடைந்து, அந்த ரதத்திலேறி ஆகாசத்திலெழும்பி மறைந்து, ஊழிக்காலத்துப் பெருநெருப்பாகிய மேகம் அக்கினியாகிய மழையைப் பொழிந்தாற்போல அபரிமிதமான அநேககோடி பாணங்களை ஓயாமற் சரவருஷமாகச் சொரிந்தான். அக்கால் வானரசேனையிலே அறுபத்தேழுகோடிசேனைகள் வால்களுங் கால்களும் தோள்களும் கைகளுஞ் செவிகளும் தலைகளும் வேறுவேருக அறுபட்டுத் தகர்ந்து சிதைந்து கெடும்படியாயின. மேலுமவன் வானரவீரர்களிலே பலவான்களாகிய கேசன்-மயிந்தவன்-நளன்-சாம்பவன் - கந்தமாதனன் - நீலன் - இவர்களை முறையே ஐந்து-ஏழு-ஒன்பது-பத்து-பதினெட்டு-முப்பது-என்னும் பாணங்களினுலே அடித்து, சுக்கிரீவன்-அங்கதன்-இரிஷபன்-துவிதன்-அநுமான்-இவர்கள் முதலானவர்களையும அநேகபாணங்களினுலே அடித்து, பின்னும் மந்திரத்துடனே அநேக அஸ்திரங்களைப்பிரயோகித்து சுஷேணன்-வேகதரிசி-கவன்-கவாட்சன்-கோமுகன்-கேசரி-அரிலோமன் - சூரியானனன்-சோதிர்முகன் -வித்தியு - யுத்தமிஷ்டிரன்-குமுதன்-இவர்களையும் அடித்து, பின்பு உடனே லக்ஷுமணனும் ஸ்ரீராமனும்எதிர்த்துப் பாணந்தொடாதபடி பிரமித்து நிற்க, அநேககோடி பாணங்களைச்சொரிந்து பிரமாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணிப் போயினுன்.

அப்போதவ் விந்திரஜித்தினுல் அடிபட்டு இறந்தவர்போக மற்றையரெல்லாம் நினைவுடனும்- நினைவுகெட்டும்-குற்றுயிராயும்-மூர்ச்சையாயும் - செயல்கெட்டும்-இன்னும் பலபலவிதமாய்ப் பிரேதாகிருதியாய் அலையடங்கின சமுத்திரம்போலச் சத்தமடங்கிக் கிடக்கும்பொழுது, பிரமதேவர் வரத்தினுலே வாதனைப்படாம லிருந்த

அநுமானும் விபீஷணனுஞ்சேர்ந்து, படுகளமாக எல்லோரும் மடிந்து கிடக்கின்றதைப்பார்த்து, என்னசெய்வோம்? எவரெவர் பிழைத்திருக்கிறுர்களோ? என்று எங்கெங்குந்திரிந்து ஒவ்வொருவராகப் பார்த்து வருமளவில், விபீஷணன் சாம்பவனைக்கண்டு பிராணனுடனே யிருக்கிறீரோ வென்று கேட்க, அவன் பிராணனென்று தவிர மற்றெரு செயலுமில்லை. கண்ணுமில்லை. சத்தத்திலே நீர் விபீஷணரென்று தோற்றப்படுகின்றது. ஆயினும் அநுமான் பிழைத்திருக்கின்றுரோ? என்று கேட்க அதற்கு விபீஷணன் ஸ்ரீராமன் முதலாயுள்ள மகா பலவான்களாகிய சிரேஷ்டர்களிருக்க அநுமானைக் கேட்டவிதம் என்னவென்றுகேட்க, அதற்கவன் அநுமானொருவன் பிழைத்திருந்தால் எல்லோரும் பிழைக்கலாமென்று சொன்னமாத்திரத்திலே சமீபத்திலேநின்ற அநுமான் வந்தனஞ்செய்து என்னால் எல்லோரும் பிழைப்பது எவ்விதத்தாலென்று கேட்டான்.

அதற்கவன் இமயகிரிக்கு வடக்கே ரிஷபகிரிக்கும் கயிலாயமலைக்கும் மத்தியிலேயிருக்கும்மருத்துமாமலையிலுள்ளவேல் முதலான ஆயுதங்கள்பட்டு, புண்ணுனரணங்களை யாற்றுவிக்கும் சல்லியகரணியும், வேருகவறுபட்ட கைமுதலான உறுப்புத்துண்டங்களை ஒன்றுகக் கூட்டிவிக்குஞ் சந்தானகரணியும், மாறுபட்ட வுடல்களைப் பழையபடியாகச் செய்விக்குஞ் சமானகரணியும், இறந்தவுயிரைத் தருவிக்குஞ் சஞ்சீவினிகரணியும், ஆகிய நால்வகை ஔஷதங்களைக் கொண்டுவந்தால் இறந்துபோனவர்முதலான எல்லோர்களும் பிழைப்பார்களென்று சொன்னமாத்திரத்திலே, அநுமான் அங்கிருந்தபடியே மேலெழும்பி ஆகாயமார்க்கமாக மனோவேகத்திலும் அதிவேகமாகப்பாய்ந்து, சாம்பவன்சொன்ன அடையாளப்படியே பார்த்து, மருந்துகாணுமல் அந்தப் பர்வதத்தைப் பேர்த்தெடுத்துக்கொண்டு பின்னும் அப்படியே வேகமாகவந்து அடுத்தான். அம்மாத்திரத்தில் அம்மலையிலுள்ள அந்தச் சஞ்சீவி முதலான ஔஷதக்காற்றுப் பட்டமாத்திரத்திலே யுத்தகளமெங்கும் கண்டதுண்டம் சின்னுபின்னங்களாகச் சிதைந்து கிடந்த சரீரங்களெல்லாம் முன்போலப் பொருந்தி பிராணனுண்டாகி மூர்ச்சைதெளிந்து, நித்திரைசெய்திருந்தவர்போல முன்னிலும் அதிக பலத்துடனே முதனுள் முதற்கொண்டு இறந்துகிடக்க எல்லோருமெழுந்திருந்தார்கள். அப்படி யெழுந்த வானரசேனைகள் கடல்போல முழங்கிஆரவாரித்துப் பாய்ந்துபோய், இலங்காபட்டணமுழுதும் வானரமயமாக நெருங்கி, மூலைக்குமூலை நெருப்பைக்கொளுத்திக் கலகஞ்செய்தார்கள்.

## ஒன்பதாநாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி எட்டாநாளிராத்திரி இலங்கையிலே நெருப்பிட்டதைக்கண்ட இராவணன் முதலான எல்லோர்களும்அந்தநெருப்பிலும் அதிகமாக மனங்கொதித்துத் துக்கப்பட்டார்கள். மறுநாள் உதயத்தில் இராக்ஷசவீரர்களிலே அதிக பலவான்களாகிய கம்பனன்-சோணிதாக்ஷன் - யூபாக்ஷன் - பிரசங்கன்-இவர்கள் முதலானவர்கள் ராவணனைத்தேற்றி அவன்உத்தரவுபெற்றுக்கொண்டு, சரீரத்தை வெறுத்துத் துணிந்து போர்க்கோலங்கொண்டு, அநேககோடி இராக்ஷசசேனைகளுடனே யுத்தகளத்தில் வந்து எதிர்த்தார்கள். அதுகண்ட வானரவீரர்களிலே அங்கதன்-மயிந்தவன் - துவிதன்- என்னும் வானரவீரர்களோடு மற்றவானரசேனைகளும் நின்று எதிர்த்து, மிகவும் குரூரமான யுத்தம்பண்ணி அளவில்லாத சேனைகளை மடிக்குமளவில், அங்கதனால் அடிபட்டுக் கம்பனனும் பிரசங்கனுமிறந்தார்கள். துவிதன் சோணிதாக்ஷனைக்கொன்றுன். மயிந்தவன் யூபாட்சனை மடித்தான். அதுகண்ட கும்பகர்னனுடைய புத்திரன் கும்பனென்பவன் அதிவேகமாக வந்து எதிர்த்து, அநேகபாணங்களினாலே அங்கதன் மூர்ச்சித்து விழும்படி அடித்து சேனைகளையுஞ் சாடினுன். அப்பொழுது வானரசேனைகள் திர்வகிக்க மாட்டாமல் முறிந்தோடிவந்து அங்கதன் விழுந்தானென்று ஸ்ரீராமனிடத்தில் முறையிட்டுச் சொல்ல, அப்பொழுது சீக்கிரமாக அநுமானையும் - சாம்பவனையும் - சுஷேணையும்- அனுப்ப, அவர்கள் சேனைகளுடனே வந்

தெதிர்த்து யுத்தம் பண்ணுமளவில் சுக்கிரீவனுலே யடிபட்டுக் கும்பனென்பவன் இறந்தான். அதுகண்ட அவனுடைய தம்பி நிகும்பன் எதிர்த்து வானரசேனைகளையும் சேனுதிபதிகளையும் சின்னுபின்னப் படும்படி அடிக்கும்பொழுது, அநுமான் எதிர்த்து யுத்தம்பண்ணி அந்த நிகும்பனைக் கொன்றுன்.

### பத்தாநாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி ஒன்பதாநாள் யுத்தத்திலே தன்னுடைய தம்பி கும்பகர்ணன் புத்திரர்களாகிய கும்பன் நிகும்பன் முதலான மகாபராக்கிரம சவுரியவான்களு மிறந்ததுகேட்ட ராவணனுனவன் சகிக்கப்படாத விசனத்துடனே பிரளயாக்கினிபோலே சீறிக்கொண் டிருக்குமளவில், கரனுடைய புத்திரன் மகராக்ஷன் என்பவனைப்பார்த்தான். அவன்ராவணனை நோக்கி, இன்றைக்கு நானேயுத்தத்துக்குப்போய் நம்முடைய பழியும்வாங்கிப் பகையுமுடித்து உம்முடையமன துசந்தோஷத்தை அடையும்படி செய்கிறேனென்று பராக்கிரமம் பேசி, உடனே தேரேறி அநேக சேனைகளுடனே புறப்பட்டுவந்து அளவில்லாத வானரசேனைகளைச் சிதைத்துக்கொண்டு அங்கங்குவந்தெதிர்த்த லக்ஷ்மணன் முதலானவர்களையும் ஒருபொருட்டாய் எண்ணுமல், தேரைமுடுக்கிக்கடந்து வந்து அடுத்து நின்று ஸ்ரீராமனைப்பார்த்து, நீஇத்தனை நாளும் அநேகம்பேர்களை மடித்ததை வெற்றியாக வெண்ணுதே. இப்பொழுது இப்படி எதிர்த்து நிற்கின்ற என்னுடனே எவ்வகை யுத்தம்பண்ண வருகிருய்? என்று அலக்ஷியமாகச்சொல்லினுன். இவ்வாறு அவன்சொல் லுஞ்சொல் காதிற் கேட்குமுன்னமே ஸ்ரீராமன் ஆகாசம்பூமியெங்கும் பாணமயமாக நிறைத்து, தேவர்களும் பிரமிக்க எட்டுநாராசபாணங்களினுல் சாரதியை யறுத்து, ஒரு பாணத்தினுலே வில்லையொடித்து, உடனேசிலபாணங்களினுலே ரதத்தையும் சின்னுபின்னப்படுத்தினுர். அம்மாத்திரத்திலே அவன் தரையிற் குதித்து, ஒரு சூலத்தை எடுத்துக்கொண்டு எதிர்த்தான். அந்தச் சூலத்தை மூன்றுபாணங்களினுலே துண்டித்து உடனே அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகிக்க அதினுலே தலையறுபட்டு அந்த மகராக்ஷன் இறந்தான்.

### பதினேராநாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி பத்தாநாள் மகராக்ஷனும் இறந்ததுகேட்ட ராவணன் இன்னபடியென்று சொல்லப் படாத உக்கிரகோபத்தை யடைந்தவனுய் தன்னுடைய பட்டத்துக்குமாரனுகிய இந்திரஜித்தைப் பார்த்து, ஓ என்னப்பனே! படைக்குமொருவன் கொடைக்குமொருவனென்று சொல்லப்பட்ட வசனத்துக்கு லக்ஷியம் உன்னைத்தவிர வேறொருவருண்டோ? ஆகையால் நீயே நம்முடைய பகையைவென்று பழிவாங்கத்தக்க பிரதாபமுள்ளவனென்று புகழ்ந்து சொல்லினுன். அதுகேட்ட இந்திரஜித்து மகா உக்கிரத்துடனே தன்னுடைய யாகசாலைக்குவந்து, அக்கினிபகவான் பிரத்தியக்ஷமாய் ஏற்றுக் கொள்ளும்படி ஆகுதிபலிகொடுத்து அந்த அக்கினிகுண்டத்திலுண்டான மாயா ரதத்திலேறி யுத்தகளத்துக்குமேலாக ஆகாசமார்க்கத்தில் ஒருவருக்குந் தெரியாமல் நின்று, அவனொரு மேகமாகப் பாணங்களே மழையாகப் பொழிந்து, ஸ்ரீராமனுடனே லக்ஷ்மணன் முதலான எல்லோர்களும் ரத்தமழையிலே முழுகினவராகும்படி யடித்து, இன்னும் இவர்களுக்கேற்றபடி செய்து முடிக்கவேணுமென்று ஆலோசித்து, லங்கைக்குவந்து மாயாசீதையையுண்டாக்கித் தேரிலே வைத்துக்கொண்டு மேற்கு வாசல்வழியாக வெளிப்பட்டு, அந்த வாசலில் அநுமானுக்கெதிரே அந்தச் சீதையைவெட்டி எறிந்தான்.

அதுகண்ட அநுமான் அவ்விந்திரஜித்துடன் எதிர்த்து யுத்தம்பண்ணிச் சலித்து, இதுவரையில் இப்படியெல்லாம் பிரயாசப்பட்டதினுல் என்ன பிரயோஜனம்? ஐயோ! சீதை போய்விட்டாளே என்று மனமெலிந்து போர்விட்டு, ஸ்ரீராமனிடத்துக்குவந்து நடந்த சங்கதி சொல்லினுன். அதுகேட்ட யாவரும் விசனத்தையடையத் தானுஞ் சோகத்தையடைந்தார். அப்படியிருக்குமளவில் விபீஷணன் அந்த ஸ்ரீராமரைப் பார்த்து, சுவாமி! இதுமா

யமேயல்லது நிஜமன்று. இப்படி நம்மை யாக்கி வஞ்சனையாய் இந்திரஜித்து நிகும்பலைவனத்திலே யாகஞ் செய்யப்போயிருக்கிறான். அந்தயாகம் நிறைவேறி அதிலே ரத முதலானவைகளுண்டானால் அவனைத் திரிமூர்த்திகளாலுஞ் ஜெயிக்கக் கூடாது. என்று சொல்லி லக்ஷ்மணன் முதலானவர்களை யழைத்துக்கொண்டுபோய் நிகும்பலைவனத்தில் யாகசாலையைக் காண்பித்தான். அங்கிருந்த இராக்ஷச சேனைகளெல்லாம் பிணக்காடாகமடிய அநுமான் மகா உக்கிர வேகத்துடனே பாய்ந்து ஜாடி அடிக்கும் பொழுது, இந்திரஜித்து வெளிப்பட்டு அநுமான்மேலேசாட, அநுமானு மோதி யடித்துக்கொண்டிருக்கையில் இவன்தான் இந்திரனென்று லக்ஷ்மணனுக்கு விபீஷணன்காட்ட, லக்ஷ்மணன் எதிர்த்து மகா உக்கிரவேகத்துடனே அநேக பாணங்களைச்சொரிந்து இந்திரஜித்து மூர்ச்சித்து விழும்படி அடித்தான்.

உடனே அவன் மூர்ச்சைதெளிந்தெழுந்துசினந்து, ஏழுபாணங்களை லக்ஷ்மணன் மேலும், பத்துபாணங்களை அநுமான்மேலும், நூறுபாணங்களை விபீஷணன்மேலும் பிரயோகித்து, பின்னும் பின்னும் அநேகபாணங்களை சொரிய, லக்ஷ்மணன் முனைந்து ஏககாலத்திலே அநேகபாணங்களைச் சொரிந்து, இந்திரஜித்தினுடைய கவசத்தையறுக்க, அவனும் அப்படியே பாணத்தினாலே லக்ஷ்மணன் கவசத்தை யறுத்தான். லக்ஷ்மணனும் அளவில்லாத சரங்களை அவன்மேலேசொரிந்து, உடனே நாலுபாணங்களினாலே குதிரைகளை அறுத்து, ஒருபாணத்தினாலே சாரதியைக்கொன்றான். இந்திரஜித்தும் உடனே மறுகுதிரைகள்கட்டித் தானே சாரத்தியம் பண்ணிக்கொண்டு யுத்தஞ்செய்யுமளவில், வானரவீரர்களிலே பிரமாதி-சரபன்-பரசன்-கந்தமாதனன்-என்னும் நால்வரும் பாய்ந்து, அந்த நாலுகுதிரைகளையும் அடித்துக்கொன்றார்கள். அப்பொழுது இந்திரஜித்துப்போனதும் வந்ததுந்தெரியாமல், ஒரு நிமிஷத்துக்குள்ளே இலங்கைக்குப்போய் மறுதேரிலேறிவந்து லக்ஷ்மணன் மேலே முனைந்து சாடும்பொழுது, விபீஷணன்எதிர்த்துக்கொண்டு போர்செய்து, தேர்குதிரைகளுஞ் சாரதிகளும் ஒன்றாய் மடியத் தண்டத்தினால் அடித்துக்கொன்றான். அப்பொழுது இந்திரஜித்து தேரை விட்டு நிலத்திற்குதித்து ஒருவேலை எடுத்தெறிந்தான். அந்தவேலை விபீஷணன் பத்துப் பாணங்களினாலே யடித்தொடித்தான். அப்பொழுது லக்ஷ்மணன் மகா வேகத்துடனே வருணாஸ்திர முதலான அஸ்திரங்களைப் பிரயோகிக்க, இந்திரஜித்தும் அந்த அஸ்திரங்களுக்குப் பிரதியான அஸ்திரங்களைப் பிரயோகித்தடித்தான். அதுகண்ட லக்ஷ்மணன் இந்திராஸ்திரத்தைப் பிரயோகம்பண்ண, அந்த அஸ்திரமானது மனோவேகமாகப்போய்த் தலையையறுக்க இந்திரஜித்து இறந்தான்.

## பதினான்காம்நாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி பதினோராம்நாள் முதற்கொண்டு மூன்று நாள் இடைவிடாமல் மகாயுத்தம்பண்ணி, லக்ஷ்மணனால் அடிபட்டு இந்திரஜித்தும் இறந்துபோனானென்று சொல்லக் கேட்ட மாத்திரத்திலே, இராவணன் மெய்மறந்து மூர்ச்சித்து விழுந்து புலம்பியழுது துக்கப்பட்டு, மீட்டுந்தேறி மகாவுக்கிர கோபங்கொண்டு சீறி, மந்திரிமார்களைப் பார்த்து, இப்பொழுதே நம்முடைய மூலபலச்சேனைகளையெல்லாம் வரவழையுங்களென உத்தரவுசெய்தான். அப்படியே அவர்களும் சாரணர்களுடனே சொல்லியனுப்ப, அதுகேட்ட மாத்திரத்திலே பாதாளமுதலான அநேக இடங்களிலிருந்து புறப்பட்டுக் காற்றடிக்கத்திரண்ட கார்காலமேகம் போல ஆகாசம் பூமியெங்கும் ராக்ஷசமயமா யிருளும்படி ஆயிரம்வெள்ளஞ் சேனையுடனே வன்னிமுதலான அநேக சேனாபதிகளும் வந்தார்கள். அவர்களெல்லோரும் ராவணனுடைய உத்தரவுபெற்றுப் பூமியைப் பெரும்புறக்கடலானது பொங்கிப்பறந்து மூடிக்கொண்டாற்போல, வானரசேனை முழுதையும் கவிந்துகொண்டு விதம்விதமாயுள்ள அநேககோடி ஆயுத பாணங்களினாலே அடித்து மடிக்க, அக்கொடுமையைக்கண்ட ஸ்ரீராமன் இனி மேல் ஒருவரையும் ஏவப்படாதென்று எண்ணிச் சங்காரகால உருத்திரன்போலக் கோபங்கொண்டு, தான் ஒருவருமே

ஏகவீரனாக எதிர்த்துப் பூமி ஆகாசமெ ங்கும் பாணமாக நிறைந்து இருளும் படி அநேககோடி சரங்களைச்சொரிந்து, பின்னும் உடனே இந்தச்சமயத்திலிதை த்தான் பிரயோகிக்க வேணுமென்று நினை ந்து, காந்தருவாஸ்திரமாகிய சம்மோகனா ஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணினார். அம்மாத்திரத்திலே அந்த அஸ்திரமா னது அந்த மூலபல ராக்ஷசர்களெல்லோ ருக்குந் தன்னுடைய ரூபமாகக்காட்டி மய க்க, அந்தரூபத்தை இராமனிராமனென் றெண்ணிப் பகைத்து ஒருவருக்கொருவர் ஆயுதபாணங்களினால் அடித்துக்கொண்டு எல்லோரும் ஒரு முகூர்த்தகாலத்தில் இற ந்தார்கள்.

பதினைந்தாம்நாள்யுத்தம்.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படிப் பதிநான்காநாள் மூலபலச்சேனையும் அடி பட்டிறந்ததுகேட்ட இராவணன் காட்டு நெருப்பிலே நெய்மழை பெய்தாற்போல மேலுமேலும் மனங்கொதித்துச்சீறி, தன் னுடைய மந்திரிகளாகிய மகோதரன்-மகாபாரிசுவன்-விருபாட்சன் முதலானவர் களைச் சேனைகளுடனே யுத்தத்துக்குப் புற ப்படச்சொல்லி உத்தரவுகொடுத்து, தா னும் போர்க்கோலங்கொண்டு தேரேறி இலங்காபட்டணம் விட்டு, வெளிப்படும் பொழுதே அக்கினிமழைபோல அநேக கோடி பாணங்களைச் சொரிந்து, பார்த்த விடமெங்கும் பாழாக அளவில்லாத வா னரசேனைகளை மடித்துக்கொண்டு வருகி றான். அதைக்கண்ட சுக்கிரீவன் சுசேஷ ணனைப் பேரணிப்படையிலே நிறுத்தி, அங்கதன் முதலானவர்களுடனே சேனை களை முன்செலுத்திக் கலந்து யுத்தம்பண் ணும்பொழுது, மகோதரனையும் மகாபாரி சுவனையும் மிகவும் பிரயாசமான யுத்தம் பண்ணி உடனே பலமாக வடித்துக்கொன் றான் விருபாக்ஷனை அங்கதன்வதைத்தான். இப்படி மந்திரிமார்கள் இறந்ததைக்கண்ட இராவணன் மகா வுக்கிரகோபங்கொண்டு, ஊழித்தீத்திரண்டு ஒருவழியாகச் சென் றாற்போல, எதிர்ப்பட்ட சேனைகளில் ஒன் றுந்தப்பாமல் அழித்துக்கொண்டு, இராம னெங்கே எங்கேயென்று நாடி வருகிறான். இப்படி வருகிற உக்கிரவேகத்தைக்கண்ட இலக்ஷுமணன் எதிர்த்தான். இராவணன் அவனையுந்தள்ளிக் கடந்துவந்து மழை போலப் பாணங்களைச் சொரிந்தபடியே ஸ்ரீராமனையடுத்துஎதிர்த்தமாத்திரத்திலே அவரும் அநேககோடி பாணங்களைச்சொ ரிந்து அடித்து உருத்திராஸ்திரமுதலான திவ்வியாஸ்திரங்களைப் பிரயோகித்தார். இராவணனும் பிரதியாக அசுராஸ்திர முதலான அஸ்திரங்களைப் பிரயோகித் தான். இப்படி மகாகுரூரமான யுத்தம்பண் ணிக்கொண்டிருக்கையில் இலக்ஷுமணன் முனைந்து, ஏழுபாணங்களினாலே ராவண னுடைய தேரிற்கட்டிய நரசிரக்கொடியை யறுத்து, ஒருபாணத்தினாலே சாரதியைக் கொன்று, அஞ்சுபாணங்களினாலே வில் லையுமறுத்தான். அந்தவேளையிலே விபீஷ ணன்பாய்ந்து, ஒருதண்டத்தினாலே குதி ரைகளை யடித்து மடித்தான். அதுகண்ட ராவணன் கோபித்து, விபீஷணன்மேலே ஒருவேலை எறிந்தான். அந்தவேலை லக்ஷ் மணன் மூன்றுபாணங்களினாலே மூன்று துண்டமாக அறுத்தான். அதுகண்ட ராவணன் முன்பு தனக்கு மயன்கொடுத்த எட்டுமணிகட்டிய வேலைவிட்டெறிந்தான். அது மார்பிற்பட்டுருவி லக்ஷ்மணன் நிலத் தில்விழுந்தான். அப்படி மூர்ச்சித்துகிடக் கும் லக்ஷ்மணனைக்கண்ட ஸ்ரீராமன் விச னப்பட்டபடியே ராவணனுடனே யுத்தம் பண்ணிக்கொண்டு வயித்தியனாகிய சுசேஷ ணனைப்பார்த்து லக்ஷ்மணனைப் பிழைக்கும் படிசெய்வாயென்று கூற, அவன் அநு மானை நோக்கி மிருதசஞ்சீவினி ஔஷதம் வேணுமென்று சொல்ல, அதுகேட்ட அநுமான் முன்போல அதிவேகமாகப் பாய்ந்து மருத்துமாமலையைக்கொண்டுவர, சுசேஷணன் அதிலிருந்த ஔஷதத்தைப் பிடுங்கி நசியம்பண்ண, லக்ஷ்மணன் முன் னிலும் அதிகமான பலத்துடனே எழு ந்து ஸ்ரீராமனைப்பார்த்து இன்னுந்தாழ்ந் திருக்கலாமோவென்று துரிதம் பண்ணி னான். அக்கால் தேவேந்திரன் ராவணன் அடிக்கும் வேகத்தைப் பார்த்து, ஸ்ரீராம ருக்குத்தேர் - குதிரை-வில் - அம்பு-வேல்-இவை முதலானவைகளைக் கொடுத்து, மாதலி என்னுஞ் சாரதியையும் அனு ப்பினான்.

அவன் ஸ்ரீராமனிடத்துக்குவந்து சேர்ந்தமாத்திரத்தில் அவரந்தத்தேரிலேறிக் கொண்டு உலகமெங்கும் நடுங்கும்படி மகா கோரமான யுத்தம் பண்ணுமளவில் ராவணன் கோபித்து, அக்கினிமயமாய் யமன் போல உயிரைவாங்கும் ஒரு சூலத்தை எடுத்து விடுத்தான். அந்தச்சூலத்தை ஸ்ரீராமன் இந்திரன்கொடுத்தவேலாலேஒடித்து, சில பாணங்களினாலே குதிரைகளையுமறுத்து, அவனுடைய சரீரமுழுதுஞ் சல்லடைக்கண்ணாகத் துளைக்கவும், ராவணன் இளைத்து மூர்ச்சையடைந்தான். அப்பொழுது அவன்சாரதிதேரைத்திருப்பி நெடுந்தூரங் கொண்டுபோய் வைத்திருந்தான். அந்தச் சமயத்திலே நான் அங்ஙனம்வந்து, இந்த மந்திரபலத்தினாலே சத்துருவைச் செயிக்கலாமென்று ஸ்ரீராமனுக்கு ஆதித்ய விருதயமென்று சொல்லப்பட்ட மந்திரத்தை உபதேசித்துப் போனேன். அந்தவேளையில் ராவணன் மூர்ச்சைதெளிந்துபார்த்து, இப்படி அவமானமானகாரியம் ஏன்செய்தாயென்று தன்னுடைய சாரதியைக்கோபித்துக்கொண்டு, மீட்டும் அதிவேகமாகத் தேரைவிடச்சொல்லி, விளக்கொளியிற் பாய்ந்திறக்கும் விட்டிற்பறவைபோல, ஒரு நிமிஷத்துக்குள்ளாகவந்து எதிர்த்துக் கொண்டான். அம்மாத்திரத்திலே இந்த ஸ்ரீராமனுனவர் பூமியதிர, மலைகள் குலுங்க, அண்டம் வெடிபட, ஆகாசமிருள, சமுத்திரந்ததும்ப, சகல லோகங்களும் நடுங்க, தேவர்களும்பயந்து பிரமிக்க, பூமி - ஆகாசம் - திக்கு-கோணங்கள் எங்கெங்கும் திரிந்து சுழன்று திரும்பி அடர்ந்துமயக்கி, அதிர்ந்து சினந்து ஆரவாரித்துத்தாக்கிநோக்கி, அஸ்திரபாணங்களினாலேகொடி-குடை-கொடுங்கை-தேர்க்கால் - தேருருள்-சாரதி - குதிரை-கவசம் - கிரீடம் - தனுசு - இவைமுதலானவைகள் அடிக்கடி சின்னபின்னப்படும்படி அடித்துக்கொண்டு, பின்னும் பின்னும் ஓயாமல் ஆகாசத்திற்காகாசமும் சமுத்திரத்திற்குச் சமுத்திரமும் எப்படியுவமையோ? அப்படி ராமராவணயுத்தத்துக்கு அதுவே உபமானமென்று தேவர்கள் முதலான எல்லோருஞ் சொல்லி அதிசயிக்க யுத்தம்பண்ணினார். இப்படி ஸ்ரீராமனுனவர் ராவணனுடைய தேர் சாரதிகுதிரைகளையுமறுத்து அம்பு - வில்-ஆயுதங்களொன்றும் எடாதபடி அடித்துத் தலைகளையுமறுத்துத் தள்ளினமாத்திரத்திலே, அறுத்ததலை கீழே விழுமுன்னமே அறுபட்டதொருவருக்குந் தெரியாமற் பின்னும் பழையபடி தலைகள் முளைக்க, ஸ்ரீராமன் அந்தத்தலைகளையும் முன்போலவறுக்க, பின்னுமப்படியேமுளைக்க, இப்படி முளைக்குந்தோறும் நூற்றொருதரமறுத்துப் பின்னும் முளைக்கக்கண்டு அறுத்தறுத்துக் கையும் மனமுஞ்சலித்து, இனி என்னசெய்யலாம்? இதுவென்ன அதிசயம்? என்றாலோசித்தார். அக்குறிப்பறிந்த சாரதியாகிய மாதலி ஸ்ரீராமனை நோக்கி, ஐயா மகாநுபாவா! சகலமுந்தெரிந்திருக்கும் நீரும் இப்படிமயங்கலாமோ? முன்னமொருகாலம் பிரம்மதேவர் இந்திரனுக்குக் கொடுக்க, இந்திரன் இனிமேல் ராவணனைச் சங்கரிக்க அவதாரஞ்செய்யும் ராமனுக்குக் கொடுப்பீரென்று அகஸ்தியரிடத்திற் கொடுக்க, அவரும் உமக்குக்கொடுத்த பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்யுமென்று ஞாபகம்பண்ணினான். அப்படியே இவர்பிரயோகஞ்செய்யவும், அந்தப் பிரம்மாஸ்திரமானது சகல லோகத்தினுமுள்ள எல்லாரும் சந்தோஷத்தையடைய ராவணனுடையசிரங்களை யறுத்துத்தள்ளி வெற்றிபெற்று மீண்டும் அக்ஷயதூணீரத்திற்சேர்ந்தது. இப்படி ராவணன் இறந்ததைப் பார்த்த அவன் தம்பி விபீஷணனும் மண்டோதரி முதலான ஸ்திரீகளும் சகிக்கப்படாத விசனத்தை யடைந்தழுது புலம்பித் தயங்க, ஸ்ரீராமன் அவர்களெல்லோருந்தேறும்படி விபீஷணனுக்கு சமாதானமுரைத்து ராவணன் முதலானவர்களுக்கு உத்தரக்கிரியை முடிப்பித்து, பின்பு லக்ஷ்மணனை அனுப்பி, விபீஷணனுக்கு இலங்காபட்டணத்திலே பட்டாபிஷேகஞ் செய்வித்தார்.

ஸ்ரீராமனுதியர்மீக்ஷி.

கேளும் ஜனகமகாராஜனே! இப்படி நடந்த விர்த்தாந்த சந்தோஷங்களெல்லாம் சீதைக்கு அறியச்செய்து வரச்சொல்லி, ஸ்ரீராமன் அநுமானையனுப்ப, இவருடைய உத்தரவின்படியே, அநுமான் சென்று சீதையைஅலங்காரஞ்செய்வித்து, சிவிகையிலேறி அழைத்துவந்து தன்னி

டத்திற் சேர்த்தமாத்திரத்திலே அவளைத் தான் வெறுத்து நிந்திக்க, சீதை இவரை நோக்கிவிசனப்பட்டு இப்படிதேவரீராலே நிந்தை செய்யவிருந்த இந்தச் சரீரத்தை வைத்திருக்கலாமோவென்று வெறுத்து, என்னுடைய கற்புக்கு வழுவுண்டாளுல் இந்த அக்கினி என்னைத் தகிக்கக்கடவதென்று சபதம்பண்ணி, லக்ஷ்மணனாலே உண்டாக்கப்பட்ட அக்கினியிலே பிரவேசித்தாள். அக்கால் பிரம்மா-விஷ்ணு-ருத்திராகிய திரிமூர்த்திகளும், இந்திரன் முதலான சகல தேவர்களும், சுவர்க்கத்திலிருந்த தசரதமகாராஜாவாகிய பிதாவும், அவ்விடத்தில்வந்து நிறைந்தார்கள். அப்பொழுது அக்கினிபகவான்சீதையைக்கொண்டு வந்து எதிரேவிட்டான். எல்லோரும் சீதையினுடைய கற்பைப் புகழ்ந்து ஒப்புவித்தார்கள். இந்திரன் ஸ்ரீராமனைநோக்கி, உமக்கு வேண்டியவரம்கேட்பீரென்று வேண்ட, அதற்கு என்பொருட்டுப் பிரயாசப்டிறந்த வானரர்களெல்லோரும் உண்டாக வேண்டியதன்றி அவர்கள் தின்று மகிழ வனங்கள்-புஷ்பங்கள்-பழங்கள் - மிகுதியாயுண்டாகவேணுமென்று சொல்ல, அதற்கப்படியே ஆகக்கடவதென்று இந்திரன் அநுக்கிரகஞ்செய்தான். அப்படிவரங்கொடுத்த இந்திரன் முதலான தேவர்களும் திரிமூர்த்திகளும் தங்களுடைய லோகத்தைச் சேர்ந்தார்கள்.

பின்பு விபீஷணன்கொண்டுவந்த புஷ்பகவிமானத்தில் சீதையுடனே லக்ஷ்மணனும் தானும், வானரசேனையுடனே சுக்கிரீவனும், மந்திரிகளுடனே விபீஷணனுமேறி, அயோத்திக்குவரும்பொழுது, சீதைக்கு லங்காபட்டணமும், உயுத்தகளமும், ராவணன் - கும்பகர்ணன் - இந்திரஜித்து முதலானவர்களை வதைத்த விடங்களும், சேதுபந்தனமும், முன்பு வரும்பொழுது சிவனைப்பூசித்து அநுக்கிரகம்பெற்ற இராமேச்சுரமும்கிஷ்கிந்தாபட்டணமுங்காட்டி அவ்விடத்தில் இறங்கிச் சுக்கிரீவனுடைய தாரைமுதலானவானரஸ்திரீகளையும் விமானத்திலேற்றிக்கொண்டு, பின்னும் வரும்பொழுது, கரதூஷணரை வதைத்த இடங்கள் என்னுடைய ஆச்சிரமம் மற்ற மகா முனிவர் ஆச்சிரமங்கள் பஞ்சவடி தீரம்சித்திரகூடபருவதம் ஆகிய இவை முதலிய வைகளைக்காட்டி, பரத்துவாசர் ஆச்சிரமத்துக்குவந்து அவரைவணங்கி அவ்விடத்திருந்து, அநுமானைப் பரதனிடத்துக்கு முன்னாக அனுப்பி, பின்பு பரத்துவாசருடைய உத்தரவுபெற்று உடனே நந்திக்கிராமம் வந்துசேர்ந்தார். அம்மாத்திரத்தில் பரதன் வந்து தன்னைவணங்கிச் சுக்கிரீவன் முதலானவர்களுக்கு உபசாரஞ்செய்ய, தானும் அங்கிருந்த தன்னுடைய மாதாவாகிய கௌசலை முதலானவர்களை வணங்கி, புஷ்பகவிமானத்தை லங்கைக்கு அனுப்பி, உடனே அவ்விடத்திலிருந்து மகா அலங்காரத்துடனே தேரேறி, பரதன் சாரத்தியம்பண்ணவும், சத்துருக்கன் குடைபிடிக்கவும், லக்ஷ்மணனும் விபீஷணனுஞ் சாமரம்வீசவும் வெளிப்பட்டு, சத்துருஞ்சயனென்று சொல்லப்பட்ட பட்டத்து யானையின்மேலே சுக்கிரீவனும் மற்றுமுள்ள கஜங்களிலே வானரவீரர்களுமேறிச் சூழ்ந்துவர, மகா சம்பிரமத்துடனே அயோத்தியா பட்டணம்வந்து சேர்ந்தார். அன்றிராத்திரியே சுக்கிரீவன் உத்தரவின்படி கிழக்கே சாம்புவனும், தெற்கே அநுமானும், மேற்கே வேகதரிசியும், வடக்கே ரிஷபனும்போய் நான்கு சமுத்திரதீர்த்தமும் மற்றுமுள்ள வானரர்கள் அநேகம் புண்ணியதீர்த்தமும் கொண்டுவர, நல்ல முகூர்த்தகாலத்திலே வசிஷ்டர்-வியாசர் - சாபாலி-காசிபர்-காத்தியாயனர் - கவுதமர்- வாமதேவர்-ஆகிய சத்தரிஷிகள் விதிப்படி பட்டாபிஷேகஞ் செய்வித்தார்கள். இது தான் இந்த ஸ்ரீராமனவர் பிதாவாக்கிய பரிபாலனராய் பதினான்குவருஷம் சீதா லக்ஷ்மணர்களோடு வனவாசஞ் செய்து மீண்ட சரித்திரமென்று ஜனகராஜனுக்கு அகஸ்தியபகவான்சொல்லி முடித்தனர்.

ஜனகப்படலம்

முற்றிற்று.

---

## விடைகொடுத்தபடலம்



### ஸ்ரீராமர் தமது பரிஜனங்களோடு கொலுவீற்றிருத்தற் சிறப்பு.

இப்படி அகஸ்தியமகாமுனிவர் சொல்லி முடித்தவுடனே, மற்ற மகாரிஷிகளெல்லோரும் ஸ்ரீராமபிரானைப் பார்த்து, ஓ சீதாமனோகரா! எங்கட்கு விதியாய் விதித்திருக்கப்பட்ட நித்திய நியமாதிகாரியங்கள் அநேகமிருந்தாலும் சதாகாலமும் உம்மை விட்டுப் பிரிந்திருப்பதற்கு மனங்கொள்ளவில்லையென்று சொன்னார்கள். அதுகேட்ட ஸ்ரீராகவன் அந்த மகாமுனிவர்களை நோக்கி, ஓ தபோநிதிகளே! நீங்கள் எவ்விடத்திலிருந்தாலுமென்ன, உங்களுடைய ஆசீர்வாத அநுக்கிரகமொன்றுமேவேண்டுவது உங்களுடையதபோமகிமையினாலேயல்லவோ எங்களுடையராஜரீகமும் உலக பரிபாலனமும் உண்டாகத்தக்கது? ஆனதால் நீங்கள் நாடோறும் கால நியமங்கள் அதிக்கிரமியாமல் நித்தியநைமித்தியமான சற்கர்மானுஷ்டானங்களை வழுவாமல் நடத்திவருவதே உங்களுடையபாரம். இனி உங்களுடைய ஆச்சிரமங்களுக் கெழுந்தருளலாம். என்று உபசரித்து அனுப்புவிக்க, சந்தனுசலவாசராகிய அகஸ்தியபகவான் முதலான மகாரிஷிகளெல்லாரும் ஆனந்த சந்தோஷத்தை யடைந்தவர்களாய் ஸ்ரீராகவனுக்கு அநேக ஆசீர்வாதஞ்செய்து வாழ்த்தித் தங்களுடைய வாசமாகிய ஆச்சிரமங்களை சேர்ந்திருந்தார்கள். அப்பால் ஸ்ரீராமரானவர் தம்முடைய மாமனாராகிய ஜனகமகாராஜனுக்கு அருமையாயுள்ள வஸ்திராபரணம் முதலியவைகளைக் கொடுத்து உபசரித்தனுப்பி தம்பியர் மூவரோடு உலகமுழுமையும் ஆண்டு அளவிடப்படாத நானாவித போகங்களை அநுபவித்துக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்குங் காலத்தில் ஒருநாள் பசும்பொன்னால் சுவர்களெழுப்பி மாணிக்கத்தூண்கள் நட்டு, நானாவித ரத்தினங்களால் முகடுவேய்ந்த கொலுமண்டபத்தில் மணிகளிழைத்த சிவிகையின்மேல் நீருண்டமேகமும் மின்னலும்போல ஸ்ரீஜனக மகாராஜ புத்திரியோடு ஸ்ரீதசரதராமர்வந்து, பரந்த வடிவினதாகிய கருங்கடலின் மத்தியில் மின்னல்களோடுவதுபோல இரத்தினாரங்களும்-முத்தாரங்களும்-மதாணியும்-திருமார்பில் அசைந்துபிரகாசிக்கவும், உதய சூரியனைப்போல நவரத்தினங்கள் இழைத்த பொன்மகுடம் திருமுடியில்விளங்கவும், மேகசிரேஷ்டமானது பல செந்தாமரைமலர்களை மலர்த்தி, ஒரு சிங்காதனத்தின்மேல் இருந்தாற்போல ரத்தினமயமான சிங்கங்கள் சுமந்த பீடத்தின்மேல் எழுந்தருளியிருந்தார்.

அன்றியும், மரகதமலையின் பக்கங்களில் வெண்மையாகிய சந்திரிகை பாய்வதுபோல வேல்போலுங்கண்களையுடைய மங்கையர்கள் தாமரைமலர்போன்றகைகளால் சாமரைகளைப்பற்றி வீசவும், தம்முடைய ஜகன்மோகனாகார திவ்யவடிவழகில் ஈடுபட்டு நாகர்களும் தேவர்களும், பலவாறு துதிக்கவும், சந்திரன்கண்டு உள்ளம்நோகும்படி பதினாலுலோகங்களிலும் தன்னுடைய குளிர்ந்த ஒளிவீசிக்கொண்டு பிரதாப லங்கேஸ்வரனை வெற்றிகொண்ட கீர்த்தி மேலேயோங்கிப் பரவியதுபோல், வெண்கொற்றக்குடையானது மேலேயோங்கி நிழலைச்செய்யவும், கற்புள்ள சுமங்கல பிராமண ஸ்திரீகள் மங்கலகீதங்கள் பாடவும், ஸ்ரீமத் வேதமார்க்க பிராமணஜனங்கள் ஆசீர்வசனங்களைச் சொல்லவும், தாளம் - முழவம்-சங்கம் இவைமுதலான மங்களவாத்தியங்கள் முழங்கவும், சேல்போலப்பிறழ்கின்றகருங்கண்களையும், கோவைக்கனிபோன்ற சிவந்த வாயையும், தாமரை மலர்போன்ற முகத்தையுமுடைய சௌந்தரியவதிகளாகிய வேசியாஸ்திரீகள் நடனஞ்செய்யவும், அலைகளைஎறிந்துகோஷிக்கின்ற சமுத்திரத்தினோசையையும் அடங்கும்படி நானாவித வாத்தியங்கள் முழங்கும்படியாகச் சம்பன்ன தேசாதிபதிகள் யாரும் அயோத்தியாநகரத்தினது பர்வதாகாரமாகிய கோபுரவாயலில் நெருங்கிவந்து, தம்முடைய திவ்யகீர்த்திகளையெடுத்துப் புகழ்ந்து, முடிகள் ஒன்றோடொன்று தாக்கும்படி வணங்குந்தோறும் சீர்பாதங்களிரண்டும் சிவக்கவும், சுமந்திரர் முதலாகிய மந்திரிமார்களும் முனிவர்களும் படைத்தலைவர்களும்சூழ்ந்து துதிக்கவும், பவளம்போன்ற சிவந்தவாயால் கற்புடைய மங்கையர்கள் பல்லாண்டு சொல்லவும், ரத்தினகஜித

மான சிங்காதனத்தின்மேல் தேவராஜனைப் போல ஸ்ரீராமர் அரசுவீற்றிருந்தார்.

இப்படி நித்தியவிபூதி லீலாவிபூதிநாயகராகிய ஸ்ரீராகவப்பெருமான் அரசுவீற்றிருக்கும்போது, மயிந்தன்-துமிந்தன்-கும்பன்-அகம்பன்-அநுமான் - குமுதாக்ஷன் - சதவலி-குமுதன் - ததிமுகன்-இவர்கள்முதலாகிய அறுபத்தேழுகோடி வீரர்களோடு எழுபதுவெள்ள வானரசேனைகளும் சுற்றிவரச் சூரியபுத்திரனாகிய ஸ்ரீ சுக்கிரீவமகாராஜாவும், ராக்ஷசகுலவீரரோடு ஸ்ரீவிபீஷணாழ்வானும், புள்ளிகளமைந்த புலியினது வாலை இறுகக்கட்டிய அரையும், சுழல்கின்ற செங்கண்ணும், மலைபோலுருண்டுதிரண்டபுயங்களுமுடையவராய் தன்னுடைய வேடுவச்சேனை சூழ்ந்துவர, ஒரு சிங்கம் போல ஸ்ரீகுகப்பெருமானும் வந்து தண்டன் சமர்ப்பித்துக் கைகளைக்கூப்பிக்கொண்டுநின்றார்கள். ஸ்ரீராமச்சந்திரரும் அவர்களிடத்துத் தமக்குண்டாகிய பேரன்பு மறையாமல், முகத்தில் தோன்றும்படி கருணையாகக்கடாக்ஷித்து அவர்களைக்கட்டி ஆலிங்கனஞ் செய்ததுபோலவே அன்போடு இனியவார்த்தையால் தமது திருப்பவளவாய் திறந்து, ஓ யாதொரு குற்றமுமில்லாத வெற்றியாளர்களே! இங்கே உட்காருமென்று சொல்லினர். அவர்கள் யாவரும் அப்படியே ஆசனங்களின்மேல் உட்கார்ந்து இமைகொட்டாமல் ஸ்ரீசுவாமியினுடைய வடிவழகைப் பார்த்துப் பார்த்து ஆனந்தித்துக்கொண் டிருந்தார்கள்.

ஸ்ரீமத் வேதமார்க்கத்தில் ஒழுகாநின்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களாகிய முனிசிரேஷ்டர்களும், நான்குவேதங்களையும் ஐயமற ஓதியுணர்ந்த கிரகஸ்தாச்சிரமத்தார்களும், வேதத்திலும் மநுஸ்மிருதியிலும் சொல்லியபடி நடக்கின்ற உண்மையறிவுடைய வானப்பிரஸ்தாச்சிரமத்தார்களும் குருகுலவாசஞ் செய்து சாமானிய சாஸ்திரங்களையும் சதுர்வேதங்களையும் அவற்றைச்சார்ந்தநூல்களையும், சந்தேகவிபரீதமில்லாமற் கற்றறிகிற பிர்மசாரி ஆச்சிரமத்தார்களும், பாரம்பரியமாய்ப் பலநூல் கற்றுணர்ந்த வித்வஜனர்களும், அயோத்தியா நகரத்துக் கிறைவராகிய ஸ்ரீரகுநாயகரை முறையாகச் சூழ்ந்து, தங்கள் தங்களுக்குரிய பீடங்களின்மேல் உட்கார்ந்தார்கள். பிரமேந்திராதி சமஸ்ததேவர்களும் முனிவர்களும் வேண்டிக் கொண்ட பிரார்த்தனையின்பொருட்டுத் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மேல் சயனித்துத் திருக்கண் வளர்வதைவிட்டு, நீர்வளப்பம் நிலவளப்பம் மிகுந்த அயோத்திமா நகரத்தில் வந்து அவதரித்த, நிர்மலசுரூபராகிய ஸ்ரீகாகுஸ்தரை, சமஸ்த தேசாதிபதிகளும் மற்றவர்களும் வணங்கித் துதித்து, தங்களுக்குரிய ஆசனங்களின்மேல் வீற்றிருந்தார்கள்.

ஸ்ரீராமர் தமது பரிஜனங்களுக்கு வெகுமானத்தோடுவிடையுங்கொடுத்தனுப்புதல்

இந்தப் பிரகாரம் நித்தம் நடந்துகொண்டேமெள்ளமெள்ள இரண்டுமாதங் கழிந்தது. தேவர்கள் முதலாகிய சாதுஜனங்களுடையதுக்கநிவாரணார்த்தமாகத் திருவயோத்தியாபுரியில்அவதரித்து, அவைதிகமார்க்காநுசாரிகளாகிய துஷ்ட ராக்ஷசர்களைச் சங்கரித்த ஸ்ரீராமபிரானானவர்முதல் சதுர்வேதிகளாகிய பிராமணர்களுக்கெல்லாம் ரத்தினமும்-முத்தும் - பொன்னும் - விளையத்தக்கபூமியும் - பசுவும் - தானஞ்செய்து, எங்களுக்கு இன்னது குறைவென்று சொல்லி யாசித்தவர்களுக்கெல்லாம், அவர்களுடையஉள்ளக்குறைவு நீங்கும்படி வேண்டியவற்றைக்கொடுத்து, அவ்வவர்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து அவர்கள் எல்லோரையும் அனுப்பிவிட்டு அரசர்களை வரும்படி உத்திரவுசெய்தனர். அப்படியே அரசர்களும் வந்தார்கள். அவ்வரசர்களைக்கிருபையோடு பார்த்து அவரவர்களுக்குத்தக்கபடி தேசம்-சிவிகை-ரத்தினகிரீடம் - ரத்தினாரம்-முத்தாரம்-இவை முதலிய ஆபரணங்களோடு, குதிரை-தேர்-யானை - பீதாம்பரம் - இவைகளை உள்ளன்போடுகொடுத்து, அவர்கள் தங்கள்பதிகளுக்குப் போகும்படி கட்டளையிட்டனர்.

பிற்பாடு திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்வதைவிட்டு அயோத்திநகரத்தில்வந்த ஸ்ரீராமச்சந்திரரானவர் சுவர்க்கலோகவாசிகளை நானாவித இடுக்கண்செய்த சம்பராசுரனை ஜெயங்கொண்ட தசரதச்சக்கரவர்த்திக்கு அக்காலத்தில் இந்திரன்தன் மனங்களித்துக் கொடுத்த தெய்வமணிகள் இழைத்த கடகத்தையும், யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும், நல்ல சொர்ணாபரணங்களையும், ஸ்ரீசுக்கிரீவமகாராஜனு

க்கு வெகுமதியாகக் கொடுத்தார். யாதொரு பழிச்சொல்லுமில்லாத ஸ்ரீஜயராமரான வர் அறிவுடையோரால் அங்கதனென் னும்பெயரை அழகுபடும்படி திருத்தும் விதம்போல, இக்ஷுவாகு சக்கரவர்த்திக் குப்பூர்வத்தில் பிரமதேவரானவர் கொடுத் திருந்த வாகுவலயத்தை அவ்வங்கதப் பெருமானுக்குக் கொடுத்தார். அப்போது அங்கதப்பெருமான் கொண்ட ஆனந்தத் தை யாராலறிந்து சொல்லி முடியும்? மேலும் அந்த அங்கதப்பெருமானுக்குப் பெரிய விலைமதிப்புள்ள இரத்தினுரத்தை யும், பீதாம்பரத்தையும், குதிரைகளையும், கஜசிரேஷ்டங்களையும் கொடுத்து, ஓ உன க்கு நீயேயல்லாமல் வேருெரொப்பில்லா தவனே! அப்பா அங்கதா! சூரிய குமார ஞகிய சுக்கிரீவமகாராஜாவைப் பிரியாமல் அவருடைய அபிமதாநுசாரியாய் நடந் துக்கொள்ளுக வென்ருர்.

நித்தியமாய் வழங்கிக்கொண் டிரா நின்ற கீர்த்தியையுடைய ஸ்ரீ சக்கரவர்த் தித் திருக்குமாரர் அநுமானைக் கருணை யோடு கடாக்ஷித்து, நீ செய்த மகோபகா ரத்தை எமக்கு யார்செய்யப்போகிருர்கள்? அதற்குப் பிரதி யுபகாரமாக யான் செய்ய வேண்டியது என்னயிருக்கிறது? ஓ எமக் காகக் கொடிய அரக்கர்களோடு போர் செய்த திண்ணியதோள்களையுடையானே! இதோ என் மார்பிலணிந்த வச்சிரமணி யாரத்தை அணிந்துக்கொள் என்ருர். என்று புகழ்ந்தமாத்திரத்தில் ஆஞ்சநேய ரானவர் மிகவும் நாணத்தோடு தலைவண ங்கி வாயைப்புதைத்து முன்தானையைமட க்கி ஒதுக்கிக்கொண்டு ஒன்றும் பேசாமல் பயபக்தியோடு நின்றனர். அப்படி நின்ற வாயுபுத்திரரை ஸ்ரீராகவரானவர் நன்று யுற்றுக் கடாக்ஷித்து, தமது திருமார்பில் அணிந்திருந்த வச்சிர ரத்தினுரத்தையும் மெல்லிய பீதாம்பரத்தையும் யானைகளை யும் குதிரைகளையும் கொடுத்தனர். ஸ்ரீ சர் வேஸ்வரனுடைய திருமார்பை நீங்கி மிதி லாபுரியில் திருவவதரித்த ஜானகிபிராட்டி யாரை ஸ்ரீ சுவாமியானவர் கடைக்கண் ணுற் கடாக்ஷித்தனர். அக்குறிப்பை யறி ந்துகொண்ட பிராட்டியாரும் முன்னே தமக்கு சரஸ்வதிதேவி சமர்ப்பித்த முத்தா ரத்தைத் தமது திருக்கரத்தால் எடுத்து மகா பிரீதியோடு அவ்வாஞ்சநேயருக்குக் கொடுத்தனர்.சமஸ்தவண்டங்களையும்அவ ற்றிலுள்ள சேதனுசேதனங்களையும் முன் தம்முடைய உந்திக்கமலத்தின் வழியே தந்த ஸ்ரீபரந்தாமராகிய ராமநாதரானவர் விண்மீன்களை வென்று, சந்திரனுக்கொப் புள்ளதும் இந்திரன் தரித்துக்கொள்ளத் தக்கதுமாகிய முத்தாரத்தையும், மற்றுஞ் சில ஆபரணங்களையும், யானை குதிரைகளை யும், பீதாம்பரத்தையும், சாம்புவந்தருக் கும்; சிறந்த நவமணிமாலையையும், முத்து மாலையையும், பொன்னிழையால் நெய்த வஸ்திரத்தையும், ஒப்பில்லாத பொன் னணிகளையும், மற்ற பல வணிகளையும், யானை குதிரைகளையும் நீலனுக்குங்கொடுத் தார். ஆதியிலே சதுர்முகனைச் சிருட்டித்த பகவானுகிய ஸ்ரீரகுநாயகர் மத்தகஜங்களை யும், சுவேதாஸ்வங்களையும், பொன்னுபர ணங்களையும், மாணிக்கமாலையையும்,யோக் கியமான பல வஸ்துக்களையும், சதவலி யென்னும் படைவீரனுக்கும்: விலைமதிக்க அருமையானதும் தனக்குச் சமானமில் லாததுமாகிய ஒளியுள்ள மணியாரத்தை யும், பொன் வஸ்திரத்தையும், மதித்த யானை குதிரைகளையும் கேசரியென்னும் படைத்தலைவனுக்குக்கொடுத்தார். கோசல நாட்டு அரசனுகிய ஸ்ரீராகவபிரான் நானு ரத்தினுரங்களையும், கனகாம்பரத்தையும், கஜதுரகங்களையும், அளவில்லாத திவ்விய வஸ்துக்களையும்; குமுதன்-தாரன்-பனசன் ஆகிய இவர்களுக்குக் கண்டோர் ஆனந் திக்கும்படி ஒவ்வொருவராக அழைத்துக் கொடுத்தார்.

இந்தப்படி அறுபத்தேழுகோடிபடைத் தலைவர்களில் மற்றவர்களுக்கு அவரவர்க ளுடைய யோக்கியதைக்குத்தக்கபடி முத் தாரம்-மணியாரம் - பொன்னணிகள்-வஸ் திரங்கள்-கஜம்-துரகம் இவை முதலியவற் றைக்கொடுத்து இனிய வார்த்தைகளைப் பேசி, கடலைப்போல் ஓங்கிப்பெருகிய எழு பதுவெள்ளம் வானரவீரர்களைக் கடாக்ஷித் துச் சுகித்துவாழத் தம்முடைய கருணை யைப் பாலித்தனர். வானரர் யாவர்களுக் கும் நடக்கவேண்டிய முறைமை யாவும் நடத்தினுர். க்ஷீரசாகரத்தில் திருவனந் தாழ்வான்மேற் செய்யும் அறிதுயிலை நீக்கி அயோத்தியில்வந்து அவதரித்த எம் ஐய

னுனவர் பின்பு மின்னலினது திரட்சியை யொத்த முடியைத்தரித்த சிவந்த நேத்திரங்களையுடைய விபீஷணுழ்வானைக் கிருபையோடு திருக்கண்மலர் சாத்தி, இந்தச் சராசரங்களையெல்லாம் சுமக்கும் பெருவலியுள்ள உனக்கு நீயே ஒப்பல்லாமல் வேறு ஒருவரும் ஒப்பாகார். ஒருவருண்டென்று சொல்லினும செம்பொன்னுக்குக் கரும்பொன் சரியொத்ததாயினும் அதற்கிது ஒப்பாக மாட்டாதென்று அவருடைய உண்மைநிலையை எடுத்துப் புகழ்ந்து, முன்னே தேவர்கள் தமக்குச் சமர்ப்பித்த இரத்தினக் கடகத்தையும், மதயானைகளையும், குதிரைகளையும், இரதங்களையும், மணிகளழுத்திய பொன்னணிகளையும், பொன்னிழையால் நெய்யப்பட்ட வஸ்திரங்களையும், கலவைச்சாந்தையும், செஞ்சந்தனத்தையும் அன்போடு கொடுத்தார்.

அப்பால் சிருங்கபேரிய மென்னும் நகரத்துக்கு அரசனுகிய குகப்பெருமானை கடாக்ஷித்து குற்றமற்ற துணைவராயினுர்க்கு என்ன உபசாரஞ்சொல்லுகிறதென்று சொல்லி யானைகளையும், குதிரைகளையும், நிதிக்குவியலையும், உயர்ந்தவிலையுள்ளவஸ்திரங்களையும், இரத்தினுபரணங்களையும் கொடுத்து, அவருடையஊருக்குப்போகும்படி விடைகொடுத்தனர். உடனே கருணுசலபதியாகிய ஸ்ரீராமநாதரானவர் ஆஞ்சநேயரையும் அங்கதப் பெருமானையும் சாம்புவரையும் சுக்கிரீவ மகாராஜனையும் நோக்கி, உங்களைப் பிரியும்பிரிவை நினைப்பதற்குங் கூடாமையாயிருக்கிறது. நீங்கள் வசிக்கும் கிஷ்கிந்தையானது உங்களுடையது அல்ல; என்னுடையதே. அங்குள்ள குடிகள் காப்பாரில்லாமல் வருந்துவார்களேயானுல் அக்குற்றம் என்னைச் சாருமல்லவா? ஆகையால் என்னுடைய ஆக்கினையால் கிஷ்கிந்தைக்குச் சேனைகளோடு போய்ச் சேருங்களென்று உத்தரவுதந்து, விபீஷணுழ்வானையும் நோக்கி வானரேந்திரர்களுக்குச் சொன்னதுபோலவே இன்சொற்கள் சொல்லி விடைகொடுத்தனர்.

ஸ்ரீசர்வசுவாமியானவர் இப்படி தங்களுக்கு விடைகொடுத்தவுடனே அதிவிவேகிகளும் வேதஞ்சொல்லும் சத்தியமார்க்கத்தில் நடப்பவர்களுமாகிய அவர்கள் யாவரும் சுவாமியைப் பிரிகிறேமென்று சிறிதுநெஞ்சம்கலங்காமல் குதூகலமாகிய நெஞ்சுடையவர்களாகி, நம்முடையசுவாமியானவர் ஏவியதைச்செய்வதே நமக்குக் கடனென்றுணர்ந்து பரதாழ்வானையும், இராமாநுஜரையும், சத்துருக்கப்பெருமானையும், வசிஷ்டபகவானையும், தாய்மார்கள் மூவரையும், மகேஸ்வரியாகிய ஜானகிபிராட்டியாரையும், ஸ்ரீசர்வேஸ்வரனுகிய ராகவபிரானையும் தனித்தனியாகப்பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து, அவரவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டுத் திருவயோத்தியாபுரியைக்கடந்து கங்கைக்கரையில் சிருங்கபேரிய நகரத்தில்வந்து சேர்ந்தார்கள். அங்கே ஸ்ரீராகவபிரானுடைய கருணைக்குப் பாத்திரபூதராகிய ஸ்ரீவிபீஷணுழ்வானுனவர்குகப்பெருமானை இருக்கவிட்டு, அப்பால் கிஷ்கிந்தாபுரியையடைந்து அங்கே சுக்கிரீவ மகாராஜன்-அங்கதப்பெருமான்-சாம்புவர் ஆஞ்சநேயர்-நீலன்-பனசன் இவாள் முதலானவர்களை இருக்கவிட்டு, அரக்கர்சேனைகளோடு ஆகாயமார்க்கமாக தாம் சமுத்திரம்சூழ்ந்த இலங்காநகரமே போய்ச்சேர்ந்தார். இந்தப்பிரகாரம் பிரமேந்திராதி சமஸ்த சேதனர்களுக்கும் பிதாவாகிய ஸ்ரீதசரதராமசுவாமியானவர் தமக்குத் துணைவர்களாகிய சுக்கிரீவமகாராஜன் முதலானவர்களைத் தங்கள் தங்கள் இருப்பிடம்போய்ச் சேரும்படி உத்திரவுகொடுத்து அனுப்பிவிட்டு, நித்திய சூரியாவதாரமாகிய திருத்தம்பிமார்கள் தம்முடைய சீர்பாதநிழலை விட்டுப் பிரியாமல் வேண்டிய உபசார கைங்கரியங்களைச் செய்துகொண் டிருக்கவும், மநுஸ்மிருதியில் சொல்லியபடி சாதுர் வருணத்தார்களும் மற்றவர்களும் ஸ்ரீமத் பரம வைதீகமார்க்கத்தில் நடக்கவும், பொய்-கொலை-களவு இவை முதலிய தீச்செயல்களைச் செய்யுமவர்க ளுளராயின் அவர்களைத் தக்கபடிதண்டித்துப் பூபாரத்தை நீக்கி, ஸ்ரீதேவி பூதேவிகளிருவரும் திருவுளம் வாட்டமில்லாமல் களித்திருக்கவும், திரிலோகத்தார்களும் இவர்தான் நம்முடைய பெருமாளென்று துதித்துவணங்கிக் குற்றேவல்களைச் செய்யவும், தானும் தருமமுமாக இந்தத் தரணியை ஆண்டுகொண்டிருந்தனர்.

விடைகொடுத்தபடலம் முற்றிற்று.

## சீதை வனம்புகுபடலம்.

---

### ஸ்ரீராமர்பால் புஷ்பகவிமானம் விடைபெற்றேக, அதுகண்ட பரதர் வியந்து அவராதரசின் சிறப்புரைத்து மகிழ்வித்தல்.

இப்படி ஸ்ரீராமபிரானானவர் கொலுமுகத்தின்கண் தம்மைச் சூழ்ந்துள்ள பிராமணர் முதலான சகல பரிஜனங்கட்கும் வானரவீரர்களுக்கும் விடைகொடுத்தனுப்பினபின்பு உலகத்திலுள்ள எல்லோரும் சந்தோஷத்தையடைந்து வாழ்ந்திருக்கும்படி செங்கோல்செலுத்தி இராஜ்ஜியபரிபாலனஞ் செய்துகொண்டு வருகிறார். அக்கால் ஒருநாள் தமது தம்பிமாரோடு நித்தியநியமாதிகள் முடித்துத் திருவமுது கொண்டிருக்குங்கால் ஆகாயத்தில் ஓர்வாக்குண்டாகி ஓ தசரதநந்தனா! யான் புஷ்பகம். எனக்குப் பூர்வம் குபேரனுக்கோர் ஒன்றுளது. அதாவது இனித் தசரதராமனால் அரக்கர் கோமானாகிய இராவணன் மடிவது நிச்சயம். ஆதலால் அவ்வரக்கனழிவதற்கேதுவான காரியங்களை நீயுமுடனிருந்து செய்திடுக. அவன் அழிவானாயின் உடனே என் சிந்தைநோய் தீருமென்றனன். இப்படி எனக்கவன் சொல்லியிருந்தபடியே யாவு முடிந்தன. ஓ புவனநாதா! இன்று நான்போய் அக்குபேரனைக்கண்டு மகிழ்வித்துவருகிறேன் விடைகொடுத்தருளும் என்று ஆகாயவாக்கிற்கூறவும், அதுகேட்ட ஸ்ரீராகவன் மிகவும் ஆச்சரியப்பட்டு அந்தப் புஷ்பகவிமானத்தைச் சந்தன புஷ்பாதிகளால் பூசித்து, உன் சித்தப்படியே செல்லுகவென்று விடைகொடுத்தனர். உடனே அப்புஷ்பகம் தான் செல்லவேண்டும் திசையைநோக்கி மனோவேகமாய்ச் சென்றது. இவ்வற்புதத்தைப் பரதரானவர் கண்டு வியந்து, கோதண்டபாணியாகிய ஸ்ரீராமபிரானைத் தொழுதெழுந்து, சுவாமி! தேவரீர் இவ்வுலகத்தைப் பரிபாலனஞ்செய்ய விசைந்தபின்பு உண்டாகிய அற்புதங்கட்கு அளவில்லையாயினும் அவற்றுள் சிலவற்றைச் சொல்லுகிறேன்: தேவரீர் திருச்செவி சாத்தியருளும்.

### விருத்தம்.

*அத்திராதிகளாற்சாக்காடில்லைவாளரியால்யானைச்*
*சத்துருவில்லைவேங்கையாவொடுமானைச்சார்ந்து*
*மித்திரமாகுமோனெருப்பினால்வீவோரில்லை*
*புத்திரர்மரணங்காண்பாரில்லையிப்புவனத்தெங்கும்.*

*நோயுறுவார்களில்லைநோயுறுமூத்தோருக்குக்*
*காயும்வெங்கூற்றமில்லைக்கணவனையிழப்போரில்லை*
*வாயுவுமுடலுக்கின்பமாகவந்தசையாநிற்கும்*
*ஆயிழையார்களெல்லாமாண்மகப்பெறுகின்றார்கள்.*

*மண்ணுலகுள்ளமன்னர்மைந்தர்கண்மங்கைமார்கள்*
*எண்ணிடுமெண்ணமெல்லாமிராமனேயரசுசெய்திக்*
*கண்ணகன்ஞாலங்காப்பானென்றுகட்டுரைப்பரென்ன*
*அண்ணலுமதனைக்கேட்டாங்ககமகிழ்ந்திருந்தகாலை.*

என்று கூறவும், அதுகேட்ட ஸ்ரீராமர் மகா சந்தோஷசித்தராய் சகல வுயிர்களினிடத்து முன்னிலும் மேலான காருண்ணியத்தைச் செலுத்தி அரசாண்டிருந்தனர். இப்படியிருக்குங்கால் பங்குனித்திங்களுண்டாகி இளவேனிற்காலம் நேர்ந்தது.

### ஸ்ரீராமர் இளவேனிலைக்கழிக்கப் பிருந்தாவனஞ்சென்றிருக்கையில் சீதையைப் பற்றி ஓர் நிந்தையுண்டானதறிதல்.

---

அப்போது ஸ்ரீராமர் சீதாபிராட்டியோடு பிருந்தாவனத்தை யடைந்து, அப்பூங்காவிலுள்ள விநோதங்களையெல்லாம் அப்பிராட்டியாருக்கு காண்பிப்பாராயினார்.

### விருத்தம்.

*மென்னடையன்ன நின்னடைக்கஞ்சி வெளியிடைநின்றிடவெள்கித், துன்னிடைமலர்பூஞ்சோலையின்மறையத்தோகைநின்சாயலுக்குடைந்து, தன்னடைகெட்டேயினியுயிர்தாங்கோமெனத்தழன்முழுகுவபோல, மின்னிடைப்பூணாய் விரிமலரசோகின் மேற்சென்று வீழ்வனகாணாய்.*

*உள்ளபோதினிதுண்டிலாதபோதவரோடுறவுவிட்டுறுமிடந்தேடும், ஒள்ளியரல்லாருறவுபோனெடுநாளுயர்தருமலர்மதுவுண்டு, மெள்ளவம்மரம்பூமாறிடவிட்டுவேறொருபூமரந்தேடிக், கள்ளவிழ்கோதைகமழ்குழலணங்கேகளிவண்டுபோவனகாணாய்.*

*ஐங்கணையானைவிட்டதிவிருபனருநிதியுடையனேவலுக்கும், மங்கைமார்மனம்போல்வாழைதன்மருங்குவந்துறமரகதமாகிப், பொங்கியசெருந்திப்பூவுறப்பொன்னாய்நீலமாய்ப்பூவைவீபொருந்தப், பங்கயநிடேப்பச்செம்மணியாகும் பளிக்கறைபைந்தொடிபாராய்.*

பொருகயனயன்புரிகுழலாளே பொய்த்தவவேடத்தின்மறைந்து, விரிகடலுலகில்வேண்டியவண்ணம்வெவ் வினைசெய்பவரென்னத், திருதருமினைத்தப்பறக்கொத்தித்தின்றிடுமுபாயமீதெண்ணிக், கருதியகொக்குமெய்சலியாதுகண்முகிழ்த்திருப்பனகாணாய்.

அடிமலராம்பைகுறங்ககலல்குலரவு மின்னிடையணியமைத்தோள், இடைநிரைதரளப்பவளவாய்வேற்கணெழிலுதல்விரைகமழோதி, வடிவினிற்செய்யமங்கையன்னாளே வண்டுகண்மொய்த்தசெங்கமலம்,கடுவினைக்கொல்லனுலைக்கரிமூடுங்கனலினைநிகர்ப்பனகாணாய்.

இப்படி அங்குள்ள ஒவ்வொரு விநோதத்தையும் வைதேகிக்குக் காண்பித்தபிறகு பங்கயத்தடாகம் சூழ்ந்த ஓர்பளிங்குமண்டபத்தில் மங்கையரெல்லாம் வாழ்த்தவும் மாதரெல்லாமேத்தவும், பூர்வம் திருப்பாற்கடல்மத்தியிற் சேஷசயனத்திற்கண் இலக்குமி தேவியோடும் வீற்றிருந்தபடி, அவ்வைதேகியோடும் வீற்றிருந்து, தெய்வமங்கையர்களுங்கண்டு நாணும்படியாகச் சேடியையார்கள் செய்கின்ற பாதநாட்டியத்தையும், பாணர்கள்பாடுஞ்சங்கீதத்தையும் கண்டும் கேட்டும் களித்துக்கொண்டாடி, அவ்வவர்கட்கும் அருமையாயுள்ள நிதிகளையும் ஆடையாபரணங்களையும் கொடுத்து மகிழ்வித்தனுப்பி, சிலபோது அப்பொழிலின்கணுள்ள பலவகை மலர்களை நன்னுதலாரோடுசென்று கொய்தும், புனல் விளையாடல் புரிந்தும், அறுசுவையோடுங்கூடிய திருவமுதுண்டும், இப்படி நாடோறும்பல சுகபோகங்களை அநுபவித்துக்கொண்டிருக்கின்றார்.

அந்நாளில் சீதாதேவியாருக்கு கர்ப்பக்குறிகள் தோற்றக்கண்ட ஸ்ரீராமரானவர் அவளைப்பார்த்து, ஓ ஜனகன்பெற்ற இரத்தினமே! நீ வயிறுவாய்த்திருப்பது எனக்குச் சாலக் களிப்பைத்தருகின்றது. இப்போது யாதுவிரும்புகின்றனை? என்று வினவுகையில், அந்த ஜானகிபிராட்டி சிறிது புன்னகைகொண்டு, ஸ்வாமி! தயாதாக்ஷிண்ய தைரிய சவுரியாதி சகல கல்யாணகுண பூரணரான பர்த்தாவைப்பெற்றிருக்கிற அடியாளுக்கு விரும்பத்தக்கது ஒன்றுமில்லை. ஆயினும் ஸ்வாமியே இவ்வளவு நியமிப்பதனால் ஒன்று வேண்டுகின்றேன். அஃதென்னவெனில், இன்னொருதரம் கங்கைக்கரையிலுள்ள முனிவர்களின் ஆச்சிரமங்களிற் சென்று அவர்கள் திருவடிக்கீழ்க் குற்றேவல் செய்துகொண்டு அவ்விடத்தினழகை அநுபவிக்க வேண்டுவது தான். என்று விண்ணப்பஞ் செய்யவும், அதற்கந்த ராஜசிகாமணியானவர் அப்படியே ஆகட்டுமென்றருளிச்செய்தார்.

இப்படிச் சிலநாள்சென்ற பின்பு ஒரு நாளிரவில், அயோத்தியா பட்டணத்திலிருக்கும் வண்ணான் தன்னுடைய பெண்டாட்டியைக் கோபிக்கும்பொழுது அவளைப் பார்த்து, பகைவனான ராக்ஷசன் கொண்டு போய் வைத்திருந்த தன்னுடைய பெண்டாட்டியைப் பின்னுஞ் சேர்த்துக்கொண்டிருக்கிற இராமனைப்போல் மானமில்லாதவனென்றென்னை நினைத்தாயோ? என்று தண்டித்தான். அதைப் புரசோதனைக்குப் போனசாரணர்கேட்டுவந்து சொன்னமாத்திரத்திலே, ஸ்ரீராமஸ்வாமியானவர் மனக்கலக்கமுண்டாகி, நித்திரையில்லாமல் சூரியோதயத்துக்கு முன்னெழுந்து ஸ்நான முதலாகிய நித்திய கர்மாநுஷ்டானவிதிகளை நிறைவேற்றிக்கொண்டு, மந்திரிகள் - சாமந்தர் - சேனாபதிகள் - பௌரோகிதர்- அன்னியதேசராஜாக்கள்-இவர்கள்முதலானவர்களுடனே வந்து கொலுக்கூடத்தில் எழுந்தருளியிருந்தார். அந்தச் சபையில் அகம்பியக்காரர்களாகிய விஜயபத்திரன்-தந்தவத்திரன் - சுமாதகன்-சுராஞ்சி-இவர்கள் முதலானோர்கள் வேடிக்கைக் கதைகளும் பரிகாசக்கதைகளும் உரைக்க, அது கேட்டிருந்த ஸ்ரீராமர் அவர்களைப்பார்த்து, நல்லது இதெல்லாமிருக்கட்டும். இப்பட்டணத்திலாவது நாட்டுப்புறங்களிலாவது ஜனங்கள் என்னைப்பற்றியும், லக்ஷ்மணன்-பரதன் - சத்துருக்கன் - சீதை-கைகேசி - இவர்களைப்பற்றியும், என்னசொல்லிக் கொள்ளுகிறார்கள்? நூதனமாய் ஓர் அரசன் வந்தபோது, அவனைப்பற்றி ஜனங்களுக்குள் ஒருபேச்சு நிகழ்வதுண்டு. மூக்கியமாயதை அரசனறிந்து, காரியாகாரியங்களை நிச்சயிக்கவேண்டும். ஆனதுபற்றி நீங்கள் காதிற்கேட்டவைகளைச் சொல்லுங்களென்றார். அவர்களுள் விஜயபத்திரனென்போன் கைகூப்பிக்கொண்டு கூறலாயினன்.

ஸ்வாமி! தேவரீர் துரைத்தனச்சிறையும், சுகுணங்களின் சிறப்பையும், பராக்கிரமப் பெருமையையும்பற்றி; யாவரும் இக்க

வியந்துபுகழ்கின்றனர். அப்படியே லக்ஷ்மணுதியரையும் புகழ்கின்றனர். இவ்வாறு தேவரீர் சரித்திரத்தையெல்லாம் மேலாகப் பேசிவருகையில், அமுதத்தில் ஒரு சொட்டு விஷங்கலந்ததுபோல் இடையிலொன்று வழங்குகின்றனர். சுவாமி! தேவரீர் உண்மைகூறும்படி நியமித்திருப்பதனுல் அதையும் விண்ணப்பஞ் செய்கின்றேன். சகல சற்குணங்களும் நிறைந்த நம் ராஜா ஓராண்டளவும் ராக்கதன்வசத்திலிருந்த தம்மில்லாளை எங்ஙனம்வைத்துக் கொண்டுகுலாவுகின்ருர்? அரசன்செல்வழி குடியுஞ்செல்லுமாதலின் இனி நாமும் நம்மில்லாள்களைப் பிறரிடஞ் சென்றிருந்தாலும், வெறுக்காமல் வைத்துக்கொள்ளவேண்டுவதேயெனப் பேசிக்கொள்ளுகிருர்கள் என்ருன். இவ்வாறு அவன்சொல்லியதைக் கேட்டமாத்திரத்தில், சுவாமி கிஞ்சித்து விசனமடைந்தவர்போலே சபையிலுள்ளோரைநோக்கி, இதைப்பற்றி என்னசொல்லுகிறீர்களென்ருர். அவர்களும் மனப்பதைப்புடன் கைகூப்பி வணங்கி, ஆம் அப்படித்தான் சொல்லுகிருர்கள். சாதாரண ஜனங்கள் உட்காரியமறியமாட்டார்கள். ஆதலின் மேலுக்குத்தோன்றியவாறு வழங்குகின்றனர் என்ருர்கள்.

லக்ஷ்மணர் ஸ்ரீராமருத்தரவின்படி சீதையைக் கங்கைக்கப்பால்விடுத்து அவரது கருத்தையறிவித்து மீளுதல்.

பின்பு ரகுகுலோத்தமர் யாவர்க்கும் விடைகொடுத்து அனுப்பித் தம்பிமாரையழைத்துவரக் கட்டளையிட்டார். அப்படியே வாசற்காப்போற்சென்று இக்கட்டளையை அறிவிக்கத் தம்பிமார் மூவரும் தமயனுர்சந்நிதிக்குவந்து வணங்கித் தெண்டனிட்டு, அவர் திருமுகமண்டலம் வாட்டமாயிருப்பதுகண்டு கலங்கி நின்ருர்கள். அப்போதவர் அநுஜரைநோக்கி, ஓ என்னுயிர்க்குயிராகிய சகோதரர்களே! இப்போது நிகழும் நாட்டுச்செய்தியைக் கேட்டீர்களா? நம்மைப் பிறவாற்ருர்புகழும் பிரஜைகள் ராவணனிடத்திலிருந்து சீதையை கொண்டு வந்ததைப்பற்றி இகழ்கின்றனராம். எனக்கு ஜானகியின் கற்பு நிலை தெரியாததன்று. அக்கினியில் மூழ்கி அத்தேவனுற்புகழ்ந்து கொடுக்கப்பட்டாள். என்னிடத்திலிடையருத அன்பும், மற்றும்பெண்மைக்குரிய நற்குணங்களும் வாய்த்தவள் தான். ஆகிலும் என்னசெய்யலாம்? உலைவாயைமூடலாம் ஊர்வாயை மூடலாமோ? நாம் கீர்த்திக்காளாகவேண்டுமோ? அபகீர்த்திக்காளாகவேண்டுமோ? அபகீர்த்திக்காளாவதினு மிறப்பதோடுநரகம்புகுவதுவே மேலாம். ஆதலால் ஓ என்னுயிர்த்தோழரான தம்பிமாரே! அவளைக்காட்டுக்கனுப்ப விரும்புகிறேன். நீங்கள் நன்ருய்க்கற்றவரும் புத்திமான்களுமாதலின் யான் புகன்ற அதின்சாரமறிவீர்கள். இப்போதென் கருத்தை நீவிர்யாரும் தடுக்கவொண்ணுது எனக்கோ அந்தப் பெண்கள் நாயகத்தை இப்படிச் செய்வதினும் துக்கம்வேறில்லை. என்னசெய்வேன்? ஓ லக்ஷ்மணு! அவள் மறுபடி முனிவராச்சிரமத்தில் வாசஞ்செய்ய என்னைக் கேட்டிருக்கின்ருள். அந்த நிமித்தத்தால் நீ நாளைக்காலையில் தேர்மேலேற்றிக்கொண்டுபோய், நம்முடைய நாட்டின் கடையெல்லையான கங்கையின் அக்கரையில் வான்மீகர் ஆச்சிரமத்தண்டை விட்டுவர வேண்டுமென்ருர்.

ஸ்ரீராமபிரான் இவ்வாறுரைத்ததைக் கேட்ட இளையபெருமாள் துக்கத்தின்மூழ்கி, ஒன்றுந்தோன்ருமல் சற்றுநேரம் திகைத்து நின்று, அவராணையை மறுக்கமாட்டாமையால் தலைகுனிந்து தம்மாளிகைக்கேகி, ஐயோ! இவ்விரவு விடியாதிருக்குமானுல் பழிக்காளாகாமல் உய்வேனென்னுஞ் சிந்தையாற் றுயிலொழிந்திருந்து, பின்னர் விடிந்ததும் சுமந்திரரைத் தேர் கொண்டுவரும்படிசொல்லிச் சித்தப்படுத்தி உடனே பிராட்டி திருமாளிகைக்குப்போய் அவளது திருவடிதொழுது, தாயே நீர் மீட்டும் கங்கைக்கரையிலுள்ள முனிவராச்சிரமங்களைக்கண்டு சேவிக்க விருப்பங்கொண்டு, சுவாமி சந்நிதியில் விண்ணப்பஞ்செய்தீராம். அது நிமித்தம் அவ்விடத்துக்கு அழைத்துக் கொண்டு போம்படி அடியேனுக்கு நியமனமாயிற்று. ரதமும் வாசலில் வந்திருக்கின்றது. தேவரீர் எழுந்தருளலாம் என்ருர். அதுகேட்ட சீதாதேவி குதூகலித்து, வேண்டும் ஆடையாபரணங்களை எடுத்துக்கொண்டுவந்து திருத்தேர்

மேல் ஏறினுள். இப்படி இருவரும் ரதமேறிச்செல்லுகையில், சீதாதேவிவழியில்சில அவசகுனங்களைக் கண்டு அச்சங்கொண்டு மைத்துனர்க்கு அறிவிக்க, அவர் அதுகேட்டு எல்லாம்நன்மையே ஆகக்கடவனவென்று முகத்திற் சந்தோஷமுள்ளவர்போலக்காட்டிப் பேசிக்கொண்டே கோமதியென்னும் நதிக்கரையிலிறங்கி இரவை நீத்து, காலையில் மீளவும் புறப்பட்டுக் கங்காநதிக்கரைசேர்ந்து பிராட்டியை இறக்கினவுடனே இளையவர் கோவென்று கதறி அழுதார்.

அதுகண்ட அத்தேவியார் கலங்கி, இஃதென்ன அகாரணமாய் அழுகின்றீர்? பெருமானைப் பிரிந்த நிமித்தம் அழுகின்றீரோ? வேண்டாம் ஓரிரண்டுநாளிலேயே நான்திரும்பிவிடுகின்றேன். எனக்கும் அவருடைய திருமுக மண்டலத்தையும், திருக்கண் மலர்களையும், திருமார்பையும், திருத்தோள்களையும், சேவிப்பதற்குமனம்பதைக்கின்றது. துரிதமாய்க் கங்கையைத் தாண்டுவோம் என்றருளிச்செய்தார். சுமித்திராதனயரும் ஒன்றும் பேசாமல் சுமந்திரரை இங்கேயே யிருமென்று கட்டளையிட்டு, ஓர் படகை அழைப்பித்து, ஜானகியும் தாமும் அதிலேறி ஆற்றைக் கடந்து, அக்கரையிலிறங்கி, கண்ணுங் கண்ணீருமாய்க் கைகூப்பி நின்றுபிராட்டியைநோக்கி, அம்மா! ஒருவார்த்தை சொல்ல என்மனது பதைக்கின்றது. அடியேன்மேல் அநுக்கிரகம் வைத்து அதைத் திருச்செவி சாத்தவேண்டும். அருந்ததியுமீடாகாத உம்மேல்ஊரார் ஏதோ அபவாதஞ் சொன்னதை யறிந்து நம்முடைய ரகுகுலதிலகர் உம்மைக் காட்டில்விட்டுவரும்படி கட்டளையிட, கொடும்பாவியான அடியேன் கொடிதான இக்காரியஞ் செய்யலானேன். இந்நொடியில் அடியேனுக்கு உயிர்போமாகில் யான் தவஞ்செய்தவனே யாவேன். என்று விண்ணப்பஞ் செய்து நின்றார். இது செவியிற்பட்டமாத்திரத்தில் ஜானகிதேவி வேரற்ற கொடிபோல்தரையில்விழுந்துமூர்ச்சித்து, சற்றுநேரத்தின்பின் மூர்ச்சை தெளிந்து, கண்ணீர் ஆருயப்பெருக லக்ஷ்மணரைநோக்கித் தழதழத்த சொற்களால் அருளிச்செய்யத் தொடங்கினாள்.

### விருத்தம்.

அன்னேயோவையாவோவாருயிர்த்தோழிமீர்காள்
தன்னேரிலாதவென்றித்தாசரதியார்செய்த
இன்னுதவிச்செயலைக்கேட்டபோதென்படுநீர்
என்னேரிவ்வுலகத்தில்யானேவிங்கிவைபடுவேன்.

பய்யார்வெம்பணத்துலகிற்பழியாலேபழிமறைத்து
செய்யாலேநெருப்பவிக்கநீணிலத்திற்கண்டறியேன்
கய்யார்வெஞ்சிலைதரித்தகாகுத்தனிடைக்கண்டேன்
உய்யாரென்மாமிமாரிவ்வுரைதஞ்செவியுறவே.

கன்னெஞ்சராயென்னைக்காட்டில்விடச்சொன்னவரோ
வன்னெஞ்சராயதனுக்கிசைந்துவிடவந்தவரோ
நன்னஞ்சம்விழிக்கணிந்தநங்கைமார்நகைசெய்ய
இன்னஞ்சாகாதிருந்தயானேநெஞ்சார்வலியார்.

பண்பிறந்தசொன்மடவார்பழித்தென்னைநகைப்பர்களோ
எண்பிறந்தவன்னெஞ்சனிராகவனென்றியம்புவரோ
மண்பிறந்தபின்பிறந்தமறிகடல்சூழ்வையகத்தும்
பெண்பிறந்தார்யான்பட்டபெருந்துயரமார்பட்டார்.

கனிமனத்துக்காகுத்தன்கடலுலகிற்பழிக்கஞ்சித்
தனியொருத்தியான்கதறத்தனிக்காட்டில்விடுவித்தான்
பனியகற்றுமாதித்தன்பயந்தெடுத்துப்பழிப்பற்ற
மனுகுலத்திற்பிறந்தார்கட்கிவையோதான்மனுநெறியே.

கைகேசிமனந்திரியக்கற்பித்தகூனியைப்போல்
மையார்கண்மடவாரோமைந்தரோமண்ணுலகில்
ஐயாவென்காதலனையாரோவிக்காரியத்தைச்
செய்வாயென்றிப்பொழுதுசிந்தையுறக்கற்பித்தார்.

என்று பிரலாபித்த சீதாபிராட்டியார் லக்ஷ்மணரைநோக்கி ஐயாமைத்துனரே! பகவான் துக்கத்துக்கென்றே என்னைப் படைத்தான். முற்பிறப்பில் யான் யாரைப் பெண்டிரோடு சேரவொட்டாமற் பிரித்தேனோ? என்னபாவஞ் செய்தேனோ? இப்போது இப்படி எனக்குநேர்ந்தது. முன் ஸ்ரீரகுநந்தனர் திருவடியைப் பற்றிக்கொண்டு கானகத்தில் வசித்தேன். இப்போது என்னசெய்வேன்? யாருக்கு இதைச்சொல்வேன்? இக்கங்கையில் விழுந்து என்னுயிரைத் துறக்கலாமென்றால், அது என்பர்த்தாவின் குலத்திற்கு இழிவாதலால் அங்ஙனஞ் செய்யவும் துணிகின்றிலேன். ஆகிலும் இனி என்னசம்பவிக்கவேண்டுவதோ அதுசம்பவித்தது. அவர் நியமனத்தை நீர் எப்போதும் கடக்கவேண்டாம். என்பேச்சாய் அவர் சந்நிதியில் அஞ்சலிபந்தத்தோடு விநயமாயொன் றுரைக்கவேண்டும். அதாவது நெடுநாள் அடியாளோடு பழகியும், எனது மனதையும் ஒழுக்கத்தையும் உணர்ந்திருந்தும், அபகீர்த்திக்கஞ்சி அடி

யாளைக் கானகத்தில் விடுத்ததற்கு மனநோகின்றிலேன். இதுவுந் தேவரீர் குணப்பெருமையென்றேகளியா நின்றேன். கற்புள்ள பெண்களுக்குக் கணவர் திருவுள்ளப்படி நடப்பதன்றோ தருமம்? ஆகிலும் அடியாள்மீது பண்டுவைத்திருந்த அன்பையாகிலும் நினைக்கவேண்டும். கருவுற்றிருக்கும் அடியாள்கதி எங்ஙனமாயினுமாகுக. தேவரீர் தருமநெறி தவறாமல் அரசாட்சி செலுத்திவரவேண்டும். என்று இப்படி அவருக்கு விண்ணப்பஞ்செய்து, என்மாமிமாருக்கும் என்வந்தனஞ் சொல்லக்கடவீரென்றாள். இளையபெருமாளும் அப்படியே செய்கிறேனென்று அவளை வலம்வந்து தெண்டனிட்டு, அம்மணி!

விருத்தம்.

உலகுக்குநாயகனேயோராழிதனைநடத்தி
மலையொக்குமதகளிற்றின்மதிக்குடைக்கீழ்வாழ்ந்தநளன்
நிலைகெட்டுநேரிழையைநெடுங்கானத்திடைவிட்டு
மலையொத்தவினைப்பயனுன்மடையனுய்வருந்தினனே.

தன்னேரிலாதவரிச்சந்திரன் றன்மைந்தனையும்
மின்னேரிலாதவிடைமெல்லியலையும்விட்டு
முன்னேசெய்விதியாலேமுடைப்பறையற்காளாகி
என்னேதானிடுகொடுகாத்துநிலையிருந்தான்.

ஆகையால், அந்த நளன் பத்தினியாகிய தமயந்தியும், அரிச்சந்திரன் பத்தினியாகியசந்திரமதியும், தொழத்தக்கதெய்வம் போன்றவர் நீராதலால், உமக்கு யாதொரு குறைவும் இனிவரமாட்டாது. ஸ்ரீராமமூர்த்தியை அடியேன் விரைவிற்போய்த் தரிசிக்கும்படி தேவரீர் விடைகொடுத்தருளும் என்று கூறி அவ்விடத்தினின்றும் அரிதில் நீங்கி, கண்ணீர்ததும்பச் சூனியமான சித்தத்தோடே மீட்டும் படகுஏறி, சீதையைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே வடகரைசேர்ந்து திருத்தேர் அருகில் வந்துவிட்டார்.

சீதாபிராட்டி தனியளாய் புலம்பிச்சென்று வான்மீகர் ஆச்சிரம மடைந்திருத்தல்.

இப்பால் பிராட்டியோ அங்கிருந்து லக்ஷ்மணப்பெருமாள் போவதைப் பார்த்துக்கொண்டேயிருந்து, அவர் தன்கண்ணுக்கு மறைந்தவுடன் சோகவெள்ளத்திலாழ்ந்தவளாய் மெய்மறந்து கோவென்று பெருங்குரலிட்டு அழத்தொடங்கினாள்.

விருத்தம்.

இலங்கையிலேநெடுங்காலமிருஞ்சிறையிலேயிருந்து
புலம்பியழுதியான்பட்டபுல்லனவும்போதாமல்
தலங்குலவுபழிபூட்டித்தனிக்கானில்விடுவித்து
விலங்கரியதுயர்விளைத்தவிதியேயோவிதியேயோ.

ஏதமுறுபழிபூட்டியிப்பிறப்பிலெனையொழிய
மாதரையென்மனத்தாலுந்தொடேனென்றுவரந்தந்த
காதலனைமனங்கலக்கிக்காட்டிலெனைவிடுவித்து
வேதனைநோய்செய்வித்தவிதியேயோவிதியேயோ.

கண்ணறக்காகுத்தனெனைக்காட்டில்விடக்கண்டிருந்து
மண்ணகத்தார்வன்கொடுமைவாய்திறவாமானமிலாய்[ய்]
பண்ணறைச்சியென்றென்னைப்பழிதூற்றப்பண்ணுவித்தா
விண்ணவர்க்கும்வெலற்கரியவிதியேயோவிதியேயோ.

தாளார்செந்தாமரைத்தாட்டாசரதியார்மனத்தைக்
கேளானுளுரையென்றுங்கேளாதவகைகலக்கிக்
கோளானதிடையறாக்கொடுவினையேனுக்கொருநாள்
மீளாதவனந்தந்தவிதியேயோவிதியேயோ.

தக்ககணவன்சிறத்தன்னைக்கைவிட்டகன்ற
புக்ககத்தார்கைவிடுவர்பிறந்தகத்தார்போற்றார்கள்
அக்கணமேபழியிடுவரன்னியர்களருவினையேன்
மிக்கொரிடங்காண்கிலேன்விதியேயோவிதியேயோ.

இப்படி சீதாபிராட்டியார் அழுதுக்கொண்டிருப்பதை அங்கு திரிந்துகொண்டிருந்த முனிமக்கள் ஓடி, வான்மீகமகாமுனிவர்க்கு அறிவித்தார்கள். அவர்தமது யோகதிருஷ்டியாலே நடந்ததையெல்லாமுணர்ந்து, ஜனகன்பெற்ற பொற்கொடி கதறுமிடத்திற்குத் துரிதமாக வந்து, அம்மணீ! நீ ஜனகமகாராஜன்மகள். தசரத மகாராஜன்மருமகள். ராமச்சந்திரன் மனையாட்டி. பதிவிரதாசிரோமணி. உன்வரலாற்றைத்தவத்தாலறிந்தேன். இங்ஙனம் ஆகவேண்டுவதுதானாயிற்று. நீ புலம்பவேண்டாம். உன்மாமனாருக்கு நான் தோழனாதலின் எனக்கும் நீ மருமகளேயாகின்றாய். ஆனதால் விசனமற்று என்னிடத்திலிருக்கலாம். தவஞ்செய்யும் பெண்டிர்பலர் என்னாச்சிரமத்தின் அருகில் இருக்கின்றனர். அவர்களெல்லாம் உன்னை மகளைப்போல் எண்ணிப்பாதுகாத்துவருவார்கள். உனக்கு யாதும் குறையில்லை. இதோ இவ்வருக்கியசலத்தைக்கைக்கொள்ளக்கடவை. ஓ குழந்தாய்! சிந்தையைவிட்டு எழுந்திரு. என் ஆச்சிரமத்திற்குவா என்று உபசரித்துச் சமாதானப்படுத்தினார்.

அப்போது சீதாபிராட்டியும் அவர் திருவடிகளுக்குத் தெண்டனிட்டு, அவர்

கொடுத்த அர்க்கியத்தைக் கைக்கொண்டு சமாதான முள்ளவளாகி, முனிகுமாரர் புடைசூழ வான்மீக முனிவரோடுகூடத் தவப்பெண்களிருக்குமிடம்சென்ருள். அந்தத் தவப்பெண்கள் இவளைக்கண்டு அதிசயித்து, கண்பரந்தவர்களாய் அம்முனிவர்க்குச்செய்யவேண்டுங் கடமைகளைச்செய்து வணங்கி, சுவாமி! யாதுநிமித்தம் தேவரீர் இப்பெண்மணியோடு இங்கெழுந்தருளியதென்று வினவினர். அதற்கவர் அவர்களை நோக்கி, ஓ புண்ணியசீலிகளே! இப்பெண் ஜனகன்புதல்வி. தசரதன்மருகி. ராகவன் காதலி. ஒருகாரணத்தாற் காதலனுல் இங்கு விடப்பட்டாள். இவளை நீவிர் மேன்மையாய்ப் பரிபாலித்து வரவேண்டும். என்று கட்டளையிட, அவர்கள் ஓ முனிவரரே! இப்பெண்மணியை இயற்கையிலேயே உபசரிப்போம். தேவரீர் பணிப்புமுண்டானபோது கேட்பானேன்? என்று அவளைச் சூழ்ந்துகொண்டு தெய்வப் பெண்ணுகவே பாவித்து, தினமும் விசேஷ உபசாரத்தோடு பாராட்டி வந்தார்கள். முனிவரும் சீஷரோடு தமது ஆச்சிரமத்திற்குச் சென்ருர். சீதையும் அவர்களோடுகூடி ஒருவாறு விசனமாறித் தவநிட்டைகளைச்செய்துகொண்டு அங்கேயிருந்தாள்.

### லக்ஷ்மணர்சுமந்திரரால் விஷ்ணுவுக்குப் பூர்வம் பிருகுமுனிவரால் நேர்ந்த சாபமறிந்து ஸ்ரீராமரிடம் வந்து சேர்தல்.



இங்கே இப்பிராட்டியாருடைய செய்தி இவ்வாருக, அங்கே முன்னரிருந்த ரதத்தருகில்வந்த இராமாநுஜர் மிகுந்த சந்தாபத்தோடு சுமந்திரரைநோக்கி, ஐயா சுமந்திரரே! நம்முடையசுவாமிக்கு முன்பு பட்டதுபோதாமல், இப்போதும் ஒப்பில்லாத நற்குண நற்செய்கைகளுள்ள மனையாளைப் புத்திபூர்வகமாய்க்காட்டில்விட்டுப்பிரிந்து துக்கப்படும்படிநேரிட்டதே? ஐயோ! இவற்றையெல்லாம் நாம் எப்படிபார்த்துசகிப்போம்? என்றுகூற அந்தச்சாரதி ஐயனே! நீர் இங்ஙனம் துயரப்படவேண்டாம். இப்படிவரக் காரணம் முன்னமே எனக்குத் தெரியும். நம்முடைய சுவாமி உலகத்தையொத்து நடக்கின்ருரேயன்றி, நினைத்தால் இப்பதினுன்கு உலகமும் அவர்கடைவிரலுக்குத்தான் போதுமோ? சீதையைப் பிரிந்ததுமாத்திரமோ? உம்மையும், பரதாழ்வானையும், சத்துருக்கனுழ்வானையும் பிரியப்போகின்ருர். இதுவெல்லாம் உம்முடையபிதாவின்முன்னிலையில் முனிவர் நிர்ணயித்த தேவரகசியம். இதனையான் வெளியிடக்கூடாது. இஃது உமது பிதாவின்கட்டளையென்றுரைத்தார். அதுகேட்ட லக்ஷ்மணர் இது நானும் அறியக்கூடாத இரகசியமாவென்ன, சுமந்திரர் அப்படியல்ல; நீர் என் மனதைப்போன்றவர். ஆதலின் உமக்குச் சொல்லுகிறேன் கேளும். நீர் இதை எங்கும் புலப்படுத்தலாகாதென்று சொல்லலுற்ருர்.

ஐயா சுபத்திரைநந்தனரே! ஒருகால் தூர்வாசமகாரிஷி வசிஷ்டமாமுனிவருடைய ஆச்சிரமத்திற்கு வந்திருந்தார். அங்கே நம்முடைய தசரதமகாராஜா குருதரிசனத்துக்குச்சென்று அந்த தூர்வாசரையும்தெண்டனிட்டு உட்கார்ந்தார். அப்போது அங்கு பலபல மதுரமான கதாப்பிரசங்கங்கள் நடந்தன. கடைசியில் நம் மகாராஜா தூர்வாசமுனிவரை நோக்கி சுவாமி! அடியேனுடையகுலம் எதுவரையிற் பெருகும்? ஸ்ரீராமசந்திரனுடைய ஆயுண் முதலானவை எப்படி? இவற்றையெல்லாம் அருளிச்செய்யவேண்டுமென்ருர். அதுகேட்ட அம்முனிவர் கேளும் அரசனே! பூர்வத்தில் தேவர்க்கும் அசுரர்க்கும் பெரும்போர் நடந்தபோது ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தயித்தியரைத் துரத்த, அவர்களோடிப் பிருகுமுனிவர் ஆச்சிரமத்திலே நுழைந்து அவருடைய பத்தினியை அடைக்கலம் புகுந்தனர். அவளவர்களுக்கு அபயங்கொடுத்து, தன் ஆச்சிரமத்துள் மறைத்துவைத்துக் காத்துவந்தாள். அஃதறிந்த உபேந்திரர்பகைவரைக் காட்டும்படி வெகுவாய்க்கேட்டும் இசையாமையால் முற்பட அவள் சிரத்தைத் துணித்து பிற்பட அவுணர்களை வதைத்தார். அதனுல் பிருகுமாமுனி கோபங்கொண்டு நீ என்பத்தினியை வதைத்து என்னைத் தனியாக்கியதனுல் நீரும் மனிதராய் அவதரிக்கும்போது பத்தினியைப் பிரிந்திருக்கக்கடவீர்? என்று விஷ்ணுவுக்குச் சாபமிட்டார். உடனே அவ்விருடிகோபந்

தணிந்து, நாம்செய்தது அக்கிரமமென்று மனஸ்தாபப்பட்டு பெருமாளை வேண்டிக் கொள்ள, அதற்கு அவர் நீர் இட்டசாபம் நாம் ஏற்கவேண்டுவதே? அன்றேல்உமது தவப்பெருமை கெடும். உமக்கு ஒரு கேடு மில்லை. அஞ்சாதேயும்? என்று அச்சாபத்தைக் கைக்கொண்டார். அவரே உம்முடைய குமாரரான ஸ்ரீராமமூர்த்தி. ஆதலால் அவர் சீதையைப் பிரிந்திருக்க நேரிடும். அந்த ஸ்ரீராமபிரான் மகா தருமவானாயிருந்து யாவரும் களிக்கும்படி அரசு செலுத்துவர். அநேக யாகங்கள் செய்து பெரும்புகழ் படைப்பர். ஆனால் அவருக்கு இன்பம் நுகருங்காலம் சிறிதும், துன்பம் நுகருங்காலம் பெரிதுமா யிருக்கும். இருவர் குமாரர் ஜானகியிடம் உதிப்பர். அக்குமாரர்கள் உதிப்பது அயோத்தியிலன்று. புற்றிலேதான் உதிப்பர். அவர்கள் பட்டம்பெருவர். சந்ததி நீடித்திருக்கும். என்று இப்படி துர்வாசர் மொழியக் கேட்ட நம்மரசர் களிப்புடன் அயோத்திக்கு வந்துவிட்டார்.

கேட்டீரோ இராமாநுஜரே! இப்படி காரணமுண்டாயிருந்தபடியினாலே ஸ்ரீராமபிரானுக்குப் பத்தினி வியோகம்வந்தது. இதைப்பற்றிக் கலங்கவேண்டாம் என்று சுமந்திரர் கூறியதைச் செவியுற்ற இளையவர் சரிதானென்று மனக்கலக்கம் நீங்கித் தேரேறிக் கேசினிநதிக்கரையில் நிசியை நீத்து சூரியனுதிக்கப் புறப்பட்டு நடுப்பகலில் திருவயோத்திசேர்ந்து மனத்துயரத்தால்முகம்வாடி எழுந்தருளியிருந்த தமையனாரைக்கண்டு தெண்டனிட்டு, கண்ணீராற் கலங்கின கண்களோடும், குழறுகின்ற நாவோடும் தேவியாரைக் கானகத்தில் விட்டுவந்த செய்தியை விண்ணப்பஞ்செய்தார். அதைச் செவிசாத்திய பெரியபெருமாள் சாலவும் திருவுள்ளங் கலங்கிநிற்க, இளையபெருமாள் சுவாமீ! முக்காலமும் உலகவியல்பும் அறிந்த தேவரீர் இப்படி துயரக்கடலி லாழலாமோ? தேவரீராலேயன்றோ உலகமெல்லாம் சந்தாப நீங்கும்படி யிருக்கின்றன. (துதிபழி யிரண்டுங் கேட்டது சொல்லு மூலகையு மதன்வழியொழுகு, மதியையும் நோவவடாது மாஜனகன் மகளையு நோவவுங் கூடாததா, லதிகுணவதியால் அழலினுந்தூய வவளையு முன்னையும் பிரித்த, விதியினைநோவ வடுக்குமற்றிதனை வீர நிற்குணர்த்தவும்படுமோ) என்று பலவாறுரைக்கக் கேட்டபின்பு ஸ்ரீராமர் சிறிது துக்கம் துறந்திருந்தார்.

சீதை வனம்புகுபடலம் முற்றிற்று.

## சாந்திப்படலம்.

இப்படி ஸ்ரீராமர் இலக்ஷ்மணரால் ஒருவாறு தேறியபின் இராஜகாரியத்தில் இதயத்தைச் செலுத்தினவராய் அவ்விளையவரைநோக்கி இராஜகருமமுரைக்கப்புகுந்து ஆய்வின்மை-சினம்-குரோதம் இவைகளைப்பற்றிப் பார்க்கன் -வசிஷ்டன்-யது இவர்கள் சரித்திர முரைத்தல் சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீராமர் லக்ஷ்மணருக்கு ஆய்வின்மையைப்பற்றி கூறிய பார்க்கராஜன் கதை.

இப்பால் ஸ்ரீராமபத்திரர் தம்மைத் தேற்றிய தம்பியைநோக்கி, அப்பா லக்ஷ்மணா! நீயுரைத்ததெல்லாம் உண்மையே? உன்னாலே யான் கவலைதீர்ந்தேன். இதெல்லாமிருக்கட்டும். நாம்நெடுநாளாய் ராஜகாரியமொன்றும் பாராமலிருக்கின்றோம். அது மிகுந்த தவறு. உலகத்திலே அரசனானவன் இராஜ்ஜியத்திலே நடக்குங்காரியங்களை நாடோறும் நன்றாய் விசாரித்துப் பரிசோதித்து இராஜரீகஞ்செய்வது ராஜதருமமுறைமை. ஆதலால் நாமும் அப்படியே செய்யவேண்டும். அன்றியும்:

### விருத்தம்.

சீறியமனத்தனாகிச்சிறந்தசெங்கோலைவிட்டுக்
கூறுவெம்பழியைநாடிக்குலைந்திடக்கொடுங்கோலோச்சி
ஆறிலொன்றிறைகொள்கின்றதல்லவையகற்றிடாதே
ஏறிறைகொள்வோனாட்டிலிருப்பவர்மூடரென்றான்.

தண்டிக்கப்படுவோர்தம்மைத்தண்டியாதொழிந்துவிட்டுத்
தண்டிக்கப்படாதோர்தம்மைத் தண்டிக்குந்தரணிமன்னன்
எண்டிக்கும்பரந்துமூடுமிரும்பழியெய்தித்தீயோர்த்
தண்டிக்குந்தருமனாலேதண்டிக்கப்படும்பினென்றான்.

அடற்பெருங்களிறுதிண்டேரடுபரிகாலாடென்று
கடற்படையுடையோன்மிக்ககருணையோன்காதலோடும்
இடர்க்கடல்வறியோரேறவிருநிதியீவோனாட்டில்
நடப்பறியாதுகெட்டநரபதியுளன்கொலென்றான்.

என்றுல். கோபசித்தனுய் நீதிமார்க்கத்தை விட்டுப் பழிபாவங்களை மேற்கொண்டு தன்னுடைய நாட்டிலே வாசமாயிருக்கும் குடிகளுக்குண்டாகிற துன்பங்களைப் போக்காமல் அவன்றுனே அந்தக் குடிகளுக்குத் துன்பத்தை யுண்டாக்கிக் குரூர தண்டஞ்செய்து நடுங்கப்பண்ணி அதிகமாக விறைகொண்டு கொடுங்கோல் செலுத்துவாஞகில் அந்தத்துஷ்டனுகிய ராஜாவினுடைய தேசத்திலிருக்கும் சன்மார்க்கரானவர்களும் துன்மார்க்கத்தையுடைய மூர்க்கரே யாவார்கள்.

அல்லாமலும் யாவனெருவன் ராஜாவானவன் தன்னுடைய தேசத்திலிருப்பவர்கள் ஒரு திரவியமூலியத்திலே ஒருவருக்கொருவர்விவாதப்பட்டுத் தன்னிடத்திலேவந்து விவகாரத்தைச் சொல்லிக் கொண்டால் அந்த விவகாரத்தை உள்ளபடி விசாரித்துத் தருமசாஸ்திரப்பிரகாரம் நடப்பியாமல் நட்பினுலேயாவது ஆசையினுலேயாவது குரோதத்தினுலேயாவது பக்ஷபாதமாகி, தண்டனை செய்யத்தக்க குற்றமுடையவர்களைத் தண்டனை செய்யாமலும் தண்டனை செய்யத்தகாத பரிசுத்தரானவர்களை தண்டனைசெய்தும் இப்படிக்கு நீதிமார்க்கந்தப்பிநடக்கில், அப்படிப்பட்ட கொடுங்கோன் மன்னவன் பூலோகமுள்ளளவும் கெடாமல் நிலைபெற்று விளங்கும் பாபத்தையும், அபகீர்த்தியையும் அடைந்தவனுய்ப் பரலோகத்திலே யமதருமராஜனுல் குரூர தண்டனையாகத் தண்டிக்கப்பட்டு, ஒருகாலத்திலும்கரையேற்றமில்லாத நரகவாசத்துக்கும் யோக்கியனுவான்.

மேலும் ரத கஜ துரக பதாதியென்று சொல்லப்பட்ட சதுரங்க சேனைப்பெருக்கமும், சகல பிராணிகளிடத்திலும் தன்னுயிர்போல இரங்குந் தயாளமும், வறுமையாளர்களுடைய தரித்திரத்துன்பம்கெடும்படிக்கு அவர்கள் இச்சித்தபொருளை அன்புடனே சந்தோஷமாகக் கொடுக்கும் கொடையினையு முடையவனுகிய நீதிமன்னவனெருவனுளனுயின் அவன் தேசத்திலிருக்கும் யாவர்க்கும் ஏதேனும் ஒருகுறையுண்டாகுமோ? இந்தப்பிரகாரம் தருமசாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருந்தும், அஃதறிந்து நீதிமார்க்கமாக நடவாத ராஜாக்களுடையசரித்திரங்கள் பலவுள. அவற்றுள் சில சொல்லுகிறேன் கேள் முன் ஒருகாலத்தில் பார்க்கனென்றுசொல்லப்பட்டராஜனவன் அன்னதானமுதலான சோடசமகாதானங்களும், மற்றுமுள்ள சகல புண்ணியங்களும் விதிப்படி நாடோறுஞ் செய்துவருவான். அந்தராஜன் இப்படிசெய்துவருமளவில் அநேககோடி காலத்திலே செய்யப்பட்ட புண்ணியங்க ளெல்லாம் ஒரு நிமிஷத்திலே சித்திப்பதாகிய மகா புண்ணியகாலம் வந்து நேரிட்டது.

அப்பொழுது அளவில்லாத நல்ல பசுக்களை வேதோத்தமராகிய பிராமணர்களுக்குத் தானம் பண்ணுகிற சமயத்திலே அந்த ராஜாவினுடைய புண்ணிய சரித்திரங்களைக் கேள்விப்பட்டு மிகவும் தரித்திரனுகிய ஒருபிராமணன் நெடுந்தூரத்திலிருந்துவந்தான். அந்தப் பிராமணனுக்கும் ஒரு பசுவைத் தானமாகக் கொடுத்தான். அவன் அந்தப் பசுவைக் கொண்டுபோய் தன்னுடைய கிரகத்திலே கட்டிவைத்துக் கொண் டிருந்தான். அந்தப் பசு தப்பிப் போய் பின்னும் அந்த ராஜாவினுடைய பசுக்கூட்டத்திலே சேர்ந்தது. அதை விசாரியாமல் அப்படியே மற்றும் ஓர்நாள் கோதானம் பண்ணும்பொழுதில் அந்தப் பசுவையும் வேறெரு பிராமணனுக்குத் தானமாகக் கொடுத்தான். தானம்வாங்கின பிராமணன் அந்தப் பசுவைக் கொண்டு போய் தன்னுடைய கிரகத்திலே வைத்துக்கொண்டிருந்தான். அப்படி இருக்குமளவில் முன்பு தானம்வாங்கின பிராமணன் தப்பிப்போன பசுவை எங்கும்காணுமல் இரண்டாவது தானம்வாங்கின பிராமணனிடத்தில் இருக்கக்கண்டு இந்த பசுவானது என்னுடையதென்று சொல்ல, அதற்கிரண்டாவது தானம்வாங்கின பிராமணனும் என்னுடையதென்று சொல்ல, இப்படி அந்தப் பிராமணர்கள் இருவரும் அந்தப் பசுவை என்னுடையது? என்னுடையது? என்று மாறுபாடாக விவாதப்பட்டுத் தங்களுக்குத் தானமாகக்கொடுத்த பார்க்கனென்னும் ராஜாவினுடைய ஆஸ்தானவாசலிலேவந்து நெடுநாளாய் முறையிட்டு அலைந்து திரிந்தார்கள்.

இப்படி அலைகின்றவர்களை வந்தகாரியம் என்னவென்று கேட்கும் கேள்வியில்லாமல் போனபடியினுலே அவ்விருவரும்

மிகவும் மனஞ்சலித்து கோபித்து, அந்த ராஜாவைப் பார்த்து நீ ஓந்திவடிவாய் பாழுங்கிணற்றிலே அளவில்லாத துக்கத்துடனே தலைகீழாகத் தூங்கிக்கொண்டு கிடக்கக்கடவாய்? என்று சாபத்தைக் கொடுத்தார்கள். அதுகேட்ட அந்த ராஜாவானவன் ஓ ஓ!! நாம் என்னகாரியம்செய்தோம்? நம்முடைய அறியாமையினாலே நமக்கு இப்படி அபகீர்த்தியான காரியம் வந்து நேரிட்டதே! என்று பயப்பட்டு, அந்தப் பிராமணர்கள் இருவரையும் நான் செய்த அபசாரத்தைப்பொறுத்து ரக்ஷிக்க வேணுமென்று மிகவும் வணங்கி வேண்டிக்கொண்டான். அதற்கு அவ்விருவரும் ராஜாவைப்பார்த்து, நீ இப்படி வெகுகாலமிருந்து மேல்வரும் துவாபரயுகாந்தத்தில் அவதாரஞ் செய்யும் மகாவிஷ்ணுவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடையகிருபாகடாக்ஷவீக்ஷண்யத்தினாலே, உனக்குவந்த சாபம் நிவர்த்தியாய்ப் பழையரூபத்தையடைந்து முன்போலவேயிருக்கடவாயென்று அநுக்கிரகஞ் செய்து, தங்களிருவருக்கும் விவாதப்பொருளாயிருந்த பசுவை உத்தமனான மற்றொருபிராமணனுக்குத் தானமாகக்கொடுத்து தாங்கள் இருக்குமிடம்போய்ச்சேர்ந்தார்கள். பின்பு அந்தராஜா அவர்களிட்ட சாபப்படியே ஓந்தி வடிவாகி, ஒருபாழுங்கிணற்றிலே தலைகீழாகத் தூங்கிக்கொண்டு கிடந்தான். அப்பாலக்ஷ்மணா! அந்தயோக்கியனானராஜனுக்கும் விசாரியாததினாலே அப்படிப்பட்ட தீங்குவந்து நேரிட்டதல்லவா? என்று ஸ்ரீராமர் சொல்லக்கேட்ட லக்ஷ்மணர் இப்படியு முண்டோவென்று ஆச்சரியப்பட்டுத்தனக்குத்தானே எண்ணமுற்று நிற்க, அவருடையகுறிப்பறிந்த ஸ்ரீராமர் பின்னும் லக்ஷ்மணரை நோக்கி, ஆ தம்பி! நீ இதைத்தானோ வதிசயமென்றெண்ணினாய்? இதனினும் அற்புதமான ஒருகதையுண்டு அதனையும் கேளென்று சொல்லத் தொடங்கினார்.

ஸ்ரீராமர் லக்ஷ்மணருக்குச் சினங்கடியாமையைப்பற்றிக்கூறிய வசிஷ்டமுனிகதை.

முன்னமொருகாலம் நம்முடைய குலத்திலுற்பவித்த நிமிச்சக்கரவர்த்தியென்று சொல்லப்பட்டமகாராஜாவானவர் அநேககாலம்மநுநீதிதவறாமல், தன்னுயிர்போல மன்னுயிர்க்கிரங்கிச் செங்கோற் செலுத்தி இராச்சியபரிபாலனஞ் செய்துவருநாளில், இகப்பிரயோஜனங்களெல்லா மடைந்தவராய்ப் பரப்பிரயோஜனமாகிய மோக்ஷபதத்தை அபேக்ஷித்து, மகாவனத்தைச் சார்ந்து, சத்திரயாகஞ் செய்யவேண்டி, அத்திரி-பிருகு - ஆங்கிரசர்-வசிஷ்டர் என்று சொல்லப்பட்ட நால்வரையும் வரவழைத்து இந்த யாகத்தைச் செய்விப்பீரென்று சொன்னார். அப்பொழுது தன்னுடைய குலகுருவாகிய வசிஷ்ட மகாமுனிவர் அவரைப்பார்த்து, ஓசக்கரவர்த்தி! இப்பொழுது தேவேந்திரன் யாகஞ் செய்விப்பதற்காக நம்மை வரித்திருக்கிறான். அந்தயாகத்தை நிறைவேற்றிப் பின்புவந்து உன்னுடைய யாகத்தை நடப்பிக்கிறோமென்று சொல்லிப்போயினார். அவர் அப்படி சொல்லக் கேட்ட நிமிச்சக்கரவர்த்தியானவர் இந்த வசிஷ்டனைத்தவிர வேறொருரிஷியும் இல்லையோ? இவனிப்படி மறுத்துப்போய்விட்டதினாலே என்னுடைய யாகம் நடவாமல் நின்றுபோய்விடுமோ? என்று ஆலோசித்தவராய் அந்த வசிஷ்டமகாமுனிவருக்குச் சமானமான மகிமையுடைய கௌதம மகாமுனிவரைவரவழைத்து, அவர் முன்னிலையாக அந்தச் சத்திரயாகத்தை நடப்பித்துக்கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில் வசிஷ்டரானவர் சுவர்க்கலோகத்திலேதேவேந்திரனுடைய யாகத்தை நிறைவேறச்செய்திருக்குமளவில் பூலோகத்திலே நிமிச்சக்கரவர்த்தி கௌதமரைக்கொண்டு யாகம்நடப்பித்துக்கொண்டிருக்கிறதை யறிந்து, இந்த நிமியென்று சொல்லப்பட்டவன் நம்மை யொருபொருட்டாக வெண்ணாமல் நமக்குப் பிரதியாக வேறொருவரைவைத்துக்கொண்டு இப்படி யாகமுஞ்செய்விப்பானோ? அதனையும்அறிகிறேன். என்று அதிதீவிரமாகச் சுவர்க்கலோகத்தினின்று நீங்கி, அந்த யாகசாலைக்கு வந்தார். அந்தச்சமயத்திலே நிமிச்சக்கிரவர்த்தியானவர் நித்திரைசெய்துகொண்டிருந்தார். அதினாலே வசிஷ்டரிடத்துக்கு வாரதிருந்தார். அப்பொழுதந்த வசிஷ்டமகாமுனிவர் நம்மை வேறுபடுத்தி யாகஞ் செய்விப்பதுமல்லாமல், நாம்வந்தவிடத்து நம்மையொருலக்ஷியமாயெண்ணாமல் அவமரியாதை செய்தபடியினாலேயும், செத்தபி

ணம்போலத் தூங்கிக் கிடந்தபடியினலே யும், சரீரத்தைவிட்டுப் பிராணன் நீங்கி மரணத்தையடையக்கடவனென்று சாபஞ்செய்தார். அதைக்கேள்விப்பட்ட நிமிச்சக்கரவர்த்தியானவர் நான் நித்திரை செய்துகொண்டிருந்தபோது இவர்வந்தது அறியாதிருக்குமென்னை இப்படி அனியாயமாகச்சாபஞ்செய்ததால், இச்சாபம் இவரைத் தானே யடையக்கடவதென்று தன்னைச் சபித்த அந்த வசிஷ்டருக்குப் பிரதிசாபஞ் செய்தார்.

அந்தச் சக்கரவர்த்தி தபோபலத்தினலே சிலாக்கியம்பொருந்தி யாவரினும் மேன்மையானதபோமகிமையுடையவராதலால், அவருடையசாபத்தினலே வசிஷ்டரானவர் மிகவுந் துக்கபயத்தையடைந்தவராய்த் தம்முடையபிராணன் விடுபடுமென்றறிந்து, பிரம்மதேவரிடத்திற்குப்போய்த் தமக்கு அவமரியாதையாக ராஜாவினுடைய சாபம்வந்து நேரிட்ட விருத்தாந்தங்களையெல்லாஞ்சொல்லி, இந்தச் சாபத்தினலே மேலுமேலும் ஜனனமரணங்களுக்கிடமான யோனிபேதங்களிலே பிறவாமல் இந்தச்சாப நிவர்த்திக்கேதுவாக வேறொரு ஜனனமுண்டாகும்படிக்கு உபாயஞ்செய்து அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக் கேட்டார். அதற்குப் பிரம்மதேவர் வசிஷ்டரை நோக்கி, ஐயா முனிசிரேஷ்டரே! முன்னமொருகால் மித்திரனென்று சொல்லப்பட்ட சூரியபகவான் ஊர்வசியைக்கண்டு மோகப்பட்டு உன்னைக்கூடி அநுபவிக்கவேணுமென்று கேட்க, அதற்கவள் உடன்பட்டு அப்படியே உம்மைச் சேருகிறேனென்றுசொல்லிப்போய், அநேகந் தெய்வப்பெண்களுடனே ஒரு சிங்காரமான புஷ்பத்தடாகத்திலே ஜலக்கிரீடையாக விளையாடிக்கொண்டிருந்தாள். அச்சமயத்தில் அவ்விடத்திலே வருணபகவான் வந்து, அந்த ஊர்வசியைக்கண்டு மயங்கிக் காமவிகாரத்தையடைந்து, நீஎன்னைக்கூடவேணுமென்று கேட்டான். அதற்கவள் முன்னமே என்னை இச்சித்த சூரியபகவானுக்கு உடன்படிக்கை செய்து வந்திருக்கிறேனதலால், முதலில் என்னை வரித்தவரைவிட்டு முறைமைத்தப்பாக உம்மை நான் சேரமாட்டேனென்று சொன்னாள்.

அம்மாத்திரத்திலே அந்த வருணபகவான் காமாக்கினியினலே சரீரமெல்லாம் உருகி, மோகவிகாரஞ் சகிக்கமாட்டாமல் இந்திரியத்தை ஒழுகவிட்டான். அந்த இந்திரியத்தை ஒருகும்பத்திலே பிடித்துவைத்திருக்கவும் அதனிடத்திலேஅளவில்லாத மகிமையுடனே விளங்கும் அகஸ்தியபகவான் உற்பவித்தார். அதன்பின்பு ஊர்வசியானவள் வருணனிடத்திலே மிகவுமாசையுள்ளவளாகி, சூரியபகவானிடத்துக்குப் போனாள். அப்பொழுது அவருஞ்சகிக்கப்படாத காமவிகாரத்தை அடைந்தவராதலால், அவளைக்கண்டவுடனே அவள் வருணனிடத்திலே ஆசைகொண்டிருக்கிறகுறிப்பறிந்துகொண்டு கோபித்து, நீ பூலோகத்திலே நரஜனனத்திலேபிறந்து புரூரவாவென்றுசொல்லப்பட்ட ராஜனுக்குப் பாரியாகி, நெடுங்கால மிருந்துவரக் கடவாயென்று சபித்து, அவளைச்சேராமலே தம்முடைய வீரியத்தை வெளியிலே விட்டார். கேட்டீரோ வசிஷ்டரே! அதனை மகா ரேதசென்றெண்ணி வருணரேதசிருந்த கும்பத்திலேபிடித்துப் பூரித்துவைத்தார்களாதலால், நீர் அந்தச் சரீரத்தை விட்டு அந்தக் கும்பத்திலே பிரவேசித்துத் திவ்விய சரீரத்தையடைந்து வருவீரென்றநுக்கிரகஞ்செய்தனுப்புவிக்க, அப்படியேஅவரும் உற்பவித்தார். அப்பா லக்ஷ்மணா! இப்படியாக வசிஷ்ட மகாமுனிவருக்குக் கோபத்தினலே மகத்தானபங்கம்நேரிட்டதால் யாவரையும் கோபங்கெடுக்கும். அந்தக் கோபத்தை எவனொருவன் கெடுத்தவனே அவன் சுகத்தையடைவான்.

அப்பால் அந்த வசிஷ்டரிட்ட சாபத்தினலே, நிமிச்சக்கரவர்த்தி மரணத்தையடைந்து சூட்சும சரீரத்தைப் பொருந்தியிருக்க, அவருடைய மந்திரிமுதலான பரிஜனங்கள் மரித்துப்போன ராஜாவினுடைய சரீரத்தை வஸ்திராபரண கந்தபுஷ்பாதிகளினலே அலங்கரித்து வைத்துக்கொண்டு, அந்தக் கௌதம மகாமுனிவரைக்கொண்டு தானே அணுமாத்திரமும் மந்திரலோபம் கிரியாலோபம் திரவியலோபங்களில்லாமல், அந்த யாகம் ஆரம்பித்தநாள் முதல் ஐயாயிரம்வருஷம் அளவாக யாகத்தைச் செய்து முடித்தார்கள். இப்படி முடிக்கவே அதையறிந்த இந்தி

ரன் முதலான சகலதேவர்களும் ஆச்சரியத்தை யடைந்து, சூட்சுமதேகியாயிருக்கும் நிமிச்சக்கரவர்த்தியை அழைத்து, உம்முடைய யாகத்துக்கு நாங்களெல்லோருஞ் சந்தோஷத்தை யடைந்தோம். உமக்குவேண்டியவரத்தைக்கேட்பீர். என்றுசொல்ல, அதற்கந்த ராஜாவானவர் நான் இந்த உலகத்திலுள்ளோர்களுடைய கண்களினிமையாக எல்லாவதிசயங்களையுங் கண்டுகொண்டிருக்க அநுக்கிரகஞ் செய்வீர்களென்று கேட்டார். அதற்கவர்கள் அப்படியேயாகக்கடவதென்று வரங்கொடுத்துத் தங்களுடைய லோகத்தைச் சேர்ந்தார்கள், அதன் பின்பு சகல ரிஷிகளுங்கூடித் தாங்கள் நித்தியாக்கினி யுண்டாக்கப்பட்ட அரணியாகிய தீக்கடைக்கோலினாலே, அந்த நிமிச்சக்கரவர்த்தியினுடைய சரீரத்தைக் கடந்தார்கள்.

அவ்வாறு கடையும்பொழுதில் அதினின்றும் ஒருபுருஷனுண்டானான். அப்படிக்கு அந்தப்புருஷன் பிறந்ததால், அவனுக்கு ஜனகனென்றுநாமதேயமிட்டு, இந்தப் பூமியைப் பரிபாலனஞ்செய்துகொண்டிருப்பாயென்றுஆசீர்வாதஞ்செய்து,மண்டலாதிபனாகவைத்து, அந்த முனிவர்கள் எல்லோரும் தாங்களிருக்கும் ஆச்சிரமங்களுக்குப் போயினார்கள். அந்தநிமியென்று சொல்லப்பட்ட ராஜன் தபோமகிமைபொருந்திய உத்தமராகையால் நித்தியத்துவமான வரத்தைப்பெற்றார். களேபரமான அவருடைய சரீரமும், அவ்வளவு சிலாக்கியத்தை யடைந்தது. அல்லாமலும் அந்தச் சரீரத்தினின்றும் ஒருவமிசமும் உண்டாயது. ஆனதால் சத்தியமாக நீதிதப்பாமல் நடக்கும் மன்னவனுக்கு ஒருகாலத்திலும் யாவராலும் எந்தமூலியத்திலும் ஒரு துன்பமுங் கேடும்வராது.

விருத்தம்.

ஒள்ளியதவத்தாற்கல்வியாலுணர்வாலுண்மையாலுணர்ந்தவருயர்ந்தோ, ரெள்ளியகுற்றமல்லவரெய்தும்வெகுளியாலிப்படிப்பட்டார், தெள்ளியவீரச்சிலையினாய்புறத்துத்திறற்பகைவெல்லலாஞ்சினமா, முள்ளுறுபகையையறிந்தவருலகத்தொருவரும்வென்றவரில்லை.

மூங்கிலிற்பிறந்த முழங்குதீமூங்கின் முதலறமுருக்குமாபோல, தாங்கருஞ்சினத்தீதன்னுளேபிறந்துதன்னுறுகிளையெலாஞ்சயிக்கும், ஆங்கதன்வெம்மையறிந்தவர்கமையாலதனையுள்ளடக்கவுமடங்கா, தோங்கியகோபத்தீயினையொக்குமுட்பகையுலகில்வேறுண்டோ.

தம்பி! குலத்தினாலேயாவது, கல்வியினாலேயாவது, தவமகிமையினாலேயாவது, மற்றுமுள்ள வெல்லாமேன்மையினாலேயாவது, தனக்கு நிகரில்லாமலிருப்பவனேயானாலும், கோபத்தை யடைந்தானேயாகில் இப்பொழுது சொல்லப்பட்ட வசிஷ்ட மகாமுனிவருக்கு நேரிட்டாற்போல மகத்தான துன்பத்தை அடைவான். தன்னையும் குலத்தையும் தனக்குள்ள எல்லாச்சிறப்புகளையும் உடனே கெடுப்பதற்கு, தன்னிடத்திலுண்டாகும் கோபத்தைப்போலும், வேறொரு பகையுமுண்டோ? என்று சொல்லி ஸ்ரீராகவர் பின்னும் லக்ஷுமணரைப் பார்த்து இன்னமொருகதை சொல்லக்கேளென்று சொல்லத் தொடங்கினார்.

ஸ்ரீராமர் லக்ஷ்மணருக்குக் குரோதம்
வகித்தலைப்பற்றிக் கூறிய யது
வென்னும் இராஜகுமாரன் கதை.

ஓ என்னுயிர்க்குயிராகிய அநுஜனே! சந்திரகுலத்திற் றோன்றினவன். திரிலோகங்களையும் வென்று சகல கீர்த்திகளையும் பெற்றவன். நூறு அஸ்வமேதயாகஞ்செய்தவன். நகுஷனென்னும் பெயரையுடையவன். அவன் புத்திரன் யயாதி. எல்லா மேன்மையும்பெற்றவன். அவன் விருஷபனென்று சொல்லப்பட்ட அசுரேந்திரன் புத்திரியாகிய சருமிஷ்டையையும், சுக்கிராசாரியர் புத்திரியாகிய தேவயானியையும் விவாகஞ்செய்துகொண்டு அவர்களுடனே சகல போகபோக்கியங்களை யனுபவித்துக்கொண் டிருந்தான், அப்படி யிருக்குநாளில் சருமிஷ்டைக்குப் பூருவென்பவன் பிறந்தான். தேவயானிக்கு யதுவென்பவன் பிறந்தான். அந்தப்புத்திரர்களுக்கு ராஜாங்கத்துக்கு வேண்டிய சகல வித்தைகளையும் படிப்பித்துவருங்காலையில், ஒருநாள் ராஜசபையில் இரண்டு புத்திரரும் பிதாவைக் காணவந்தார்கள். யயாதிராஜா சருமிஷ்டையிடத்தில் அதிக மோகமுள்ளவனானபடியினாலே அவள் பிள்ளை பூருவினிடத்திலே பிரீதிபண்ணி, தேவயானி பிள்ளை யதுவினிடத்தில் உபேட்சைசெய்திருந்தான். அதுகண்டுயதுவென்பவனுக்குக் கோபமுண்டாய்த் தாயினிடத்துக்குப் போய் தன் பிதா செய்த பக்ஷத்தைச்சொல்

லித்துக்கப்பட்டான். அதுகேட்ட அவள் சருமிஷ்டையி னிடத்திலிருக்கிற பிரீதியி னலல்லவோ இப்படி பக்ஷபாதம் பண்ணி ஞனென்று தன் பிதாவாகிய சுக்கிரபக வானை நினைத்தாள். அஃதறிந்து அவர் வந்தார். அவருடனே தேவயானி ராஜா பண்ணின பக்ஷபாதமெல்லாம்சொன்னுள். அதுகேட்ட சுக்கிராசாரியர் கோபித்து யயாதியைப்பார்த்து நீ யௌவனத்தின லல்லவோ அவளிடத்தில் உனக்கு அதி மோகமுண்டாகி இவர்களை யுபேக்ஷபண் ணினுய்? ஆகையால் உன்னுடையயௌவ னம்போய் மூப்படையக்கடவாய்? என்று சபித்துப் போய்விட்டார்.

அப்பால் யயாதிராஜன் தன்னுடைய யௌவனம்போய் முதுவையடைந்து துக் கப்பட்டுக்கொண்டிருக்குங்காலத்தில் ஸ்தி ரீகளிடத்திலே மோகந் தணியாதவனுய்த் தன்னுடைய பிள்ளை யதுவை யழைப்பித் துச் சொல்லுகிருன்.

விருத்தம்.

நைந்தடியற்றவாலநடுங்கிவீழ்கின்றதென்று
வந்தவீழன்றிவீழாவகைநிலவிளக்குமாபோல்
மைந்தர்கடமக்குநல்லவறிவினன்மகிழ்ந்துசேர்ந்து
தந்தையைத்தளராவண்ணந்தாங்குவர்தவத்தினென்ருன்.

புத்திரனுவோனீதிபொருந்தித்தன்குலத்தினுள்ளோர்
அத்தனைவரையுந்தீயவருநரகுறுமற்காத்துச்
சுத்தமாங்கதியினுய்ப்பானென்றுசொல்வார்கடியோய்
இத்தைநீயுணர்ந்தென்மூப்பாமிடும்பையைத்தீர்த்தியென்
[ருன்.

என்றுசொல்லி அப்பா மைந்தனே! இன்னும் சிலகாலம் ஸ்திரீபோக்கிய முத லான சகல சுகங்களை யனுபவிக்க வெனக் கிச்சையிருப்பதால் என் மூப்பை நீ வாங் கிக்கொண்டு உன்னுடைய யௌவனத்தை கொடுப்பாயென்று கேட்டனன். அது கேட்ட அவன் உனக்குரிமையுள்ள புத்தி ரன் கொடுப்பானேயன்றி நானேன்கொடு ப்பேனென்றுசொல்ல, அப்போது ராஜன் உனக்கும் உன்னுடைய வம்சத்திலேபிறக் கிறவர்களுக்கும் கிரீடாதிபத்திய மில்லா மற்போகக்கடவதென்றும், உன் வமிசத் திலே ராட்சதர்கள் பிறக்கக்கடவர்களென் றும் சாபம்பண்ணி அவனைப் போகச்செ ய்து தன்னிடத்தில் விசுவாசமுள்ள பூரு வையழைப்பித்து யது மறுத்ததைச்சொ ல்லி நீயேனும் மறுக்காமல் உனது யௌ வனத்தை எனக்குக் கொடுக்கவேணுமெ ன்று கேட்டான். அந்தப்புத்திரன் வணங் கிப் பிதாவினுடைய மூப்பைத் தானேற் றுக்கொண்டு தன்யௌவனத்தைக்கொடுத் தான். அப்படியே அந்த யௌவனத்தி னலே நெடுநாள் போகபாக்கியங்களையனு பவித்து, மறுபடியும் விவேகத்தினலே வெறுத்து பூருவென்பவனுக்கு மூப்பைப் போக்கிப் பட்டாபிஷேகம் பண்ணுவித்து தான் வனத்துக்குப்போய்த் தபசுபண்ணி மேலான கதியை யடைந்தான். அப்பா லக்ஷ்மணு! அற்பமாகிய குரோதத்தினலே யதுவென்பவன் துக்கத்தை யடைந்தா னன்ருே? ஆதலால் இராஜாக்கள் குரோ தத்தைவிட்டு சாந்தத்தை யடையவேணு மென்று ஸ்ரீராமர் லக்ஷ்மணருக்குச் சொன் னர்.

சாந்திப்படலம் முற்றிற்று.

---

## இலவணசுரன்வதைப்படலம்.

---

### ஸ்ரீராமர் கொலுமுகத்தில் யமுனுதீரவாசி கள் இலவணனைப்பற்றிக் கூறியது.

---

இப்படி ஸ்ரீராகவ சிகாமணியானவர் லக்ஷ்மணருக்குப் பலதருமநெறிகளைத் திரு ட்டாந்த சரித்திரங்களோடு மெடுத்துரை த்தபின் அவ்விளையவராதியரோடெழுந்து காலைக்கடன்களைக் கழித்துக் கொலுமுகத் துவந்து, மந்திரிபிரதானிகள் முதலானு ரோடு குடிகளின் முறைகளைக்கேட்டு விசா ரித்து நியாயஞ் செலுத்திவந்தார். இவ் வாறே நாணுளு நீதிசெலுத்திவருகையில் மிக்க சுகம்விளக்கும் வசந்தகாலம்வந்தது. அக்கால் ஒருநாள் யமுனநதிக்கரையிலே தவமியற்றிக்கொண்டிருக்கும் முனிவரிற்ப லர். பார்க்கவச்சிவனரை முன்னிட்டுக்கொ ண்டு அரண்மனைவாயிலிலே வந்து நின்ற னர் அதை ஸ்ரீராமபிரான் அறிந்து உள்ளே அழைப்பித்துத் தெண்டனிட்டு, சகலவுபசாரங்களாலே பூசித்து, ஓ சுவாமி காள்! தேவரீர்கள் இங்கெழுந்தருளினகா ரியம் ஏது? அதனை அடியேனுக்கு நியமி

க்கவேண்டும். யான் அதைத்தடையின்றிச் செய்வேன் என்று வினவினர். அதுகேட்ட அவர்கள் அவரைநோக்கி. ஓ தசரத நந்தனு! காகுஸ்தசிங்கமாகிய உமக்கேஇங் ஙனமுரைக்கத்தகும். நாங்கள் சில அரசரிடஞ் சென்றேம். அவர்கள் யாவரும் இப்படி உறுதிபேச அஞ்சினர்கள். ஆதலின் நீரே ராஜகேசரி. எங்களை அசுரபயத்தினின்றும் விடுவிக்கவேண்டும். என்று கூறி தாங்கள் வந்த காரியத்தை விண்ணப்பஞ் செய்வதானுர்கள்.

கேளும் மகாராஜாவே! கிருதயுகத்திலே லோலையென்பவள் சுதனுகிய மது வென்னும் அவுணனெருவனிருந்தனன். அவன் மகா பலபராக்கிரம முள்ளவன். பிராமணவிசுவாசி! மகாதருமாத்மா! தேவரோடும் அவனுக்கு நேசமேயிருந்தது. அவன் சிவபிரானைநோக்கி நெடுநாள் தவஞ்செய்ய, அக்கடவுள் அவனுக்குப் பிரசன்னராகித் தமது சூலாயுதத்தினின்றும் ஒரு சூலாயுதத்தை உண்டாக்கி அவனுக்குத்தந்து, அப்பா மதுவே! இது மகா மகிமையுள்ளது. உன்னை மாறுகொள்ளும் பகைஞரைத் தப்பாமல் வென்று உன்கையில்மீட்டும்சேரும். ஆனால் தேவர்மேலும் அந்தணர்மேலும் விடுத்தையாயின் பயன்படாதுபோவதுமன்றி, உன்னையும்விட்டு நீங்குமென்று அருளிச்செய்தார். அதற்கு அவன் சம்மதித்து சுவாமியை நோக்கி, ஓ தயா நிதி! தேவரீரளித்த இவ்வாயுதம் என் சந்ததிக்கெல்லாம் இருக்கும்படி அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்கவர் அப்பா! அஃதப்படியாக மாட்டாது. ஆயினும் உன் வேண்டுகோளும் வீணுகாதபடி ஒருவரந்தருகின்றேன். அதாவது, உன்மகனுக்குமாத்திரம் இருக்கக்கடவது என்று கூறி அந்தர்த்தியானமாயினர். இப்படி ருத்திரமூர்த்தியருளிய தற்குக்களித்து அவருக்குச்சரணஞ்செய்து சென்று, திவ்வியமான மாளிகையொன்று கட்டி வாழ்ந்திருந்தான்.

அவனுக்குக் கும்பீநசியென்னு மனையாட்டிவயிற்றில் இலவணன் என்னு மகன் பிறந்தான். அவன் தந்தையின்குணங்களுக்கு மாறுனதன்மையுள்ளவனுய், நல்லோர்களை நலிந்துகொண்டே வந்தான். அதற்குத்தகப்பன் மனவருத்தமுற்றும் ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் ஆயுதத்தை அவன் கையிற்கொடுத்து, அதன்பிரபாவத்தையும் அவனுக்குத்தெரிவித்துத் தான் வருணலோகம்போய்ச்சேர்ந்தான். பின்னர் அந்த இலவணுசுரன் சூலத்தின் மகிமைபற்றியும் இயல்பான தன் கொடுமைபற்றியும் செருக்குமிகுந்து, உலகத்தையெல்லாம் வருத்திவருகின்றனன். ஒருதலையாய்முனிவரையே இம்சிக்கின்றுன். ஐயா! இத்தன்மையன் இலவணன். அத்தன்மையதுசூலம். உமையன்றி எமக்கு வேறுகதியில்லை. இத்துன்ப மாற்றமாட்டாமல் யாம் பல அரசரிடஞ் சென்று முறையிட்டோம். எமக்கு அபயமளிப்பா ரொருவருமில்லை. யாவரினும் மேலான திறத்தனுன ராவணனையே நீர் சங்கரித்ததனுல் உம்மைச் சரணமடைந்தோம். இனி எம்மைப் பாதகன்கையிற் சிக்காதிருக்குமாறு காத்தருள வேண்டும். உமது பேராற்றலுக்கு இசையாததொன்று மில்லை. என்று இவ்வகை தாபதர் விண்ணப்பஞ் செய்யக் காகுத்ததிலகர் துன்புற்றேரை நோக்கி, ஓ தவசிகாள்! அஞ்சன்மின். அக்கொடியோன் விரைவில்மாய்வான். என்று அபயமளித்து தம்பியரைப் பார்த்து, ஓ அநுஜர்களே! இப்புண்ணியத்தை யார் ஏற்றுக்கொள்ளுகிறீர்கள் என்றுர். அதுகேட்ட லக்ஷ்மணர் அவரைத் தொழுதெழுந்து, சுவாமி! இம்மூவகையுலகிலுள்ள முனிவர்கள் தானவர்களாதிய வெல்லோருங்கூடி அவ்விலவணனுக்குத் துணையாகவந்து என்னேடு பொருதுநின்றுலும், இப்பணியிலென்னைத் தேவரீர் ஏவுவீராகில் அப்பாவகாரியை நான்கொல்லுவது நிச்சயமென்றுர். அப்போது பரதாழ்வானுனவர் ஸ்ரீரகுநந்தனரைநோக்கி, ஐயனே! அடியேன் விண்ணப்பமொன்றுளது. அதற்குத்தேவரீர் தமது திருச்செவி சாத்தி அருளல்வேண்டும். பதினுன்கு வருடகாலமாய்த் தேவரீரோடு கானகமெல்லாம் நடந்து, காய் கனிமுதலிய பக்ஷணிகளைத் தேவரீர் அமுதுசெய்வதற்கு ஆய்ந்துதேடிக்கொணர்ந்து, கங்குலும்பகலுங் கண்ணுறங்காதபடி காத்து, தன்னைப்பொருத மாயவரக்கரையெல்லாம் மடிய நூறி அந்தகபுரத்திலேற்றி, அதிகாயனையும் இந்திரஜித்துவையுங் கொன்று, ராவணனுக்கும் பல இடர்களைச்செய்து நமது தம்பி

மிகவும் நொந்திருக்கின்ருன். ஆதலால் தேவரீர் இவைகளை ஆலோசித்து, இப்பணியை அடியேனுக்குப் பிரசாதிக்கவேண்டும் என்ருர்.

சத்துருக்கர் ஸ்ரீராமரால் இலவணராஜ்ஜிய பட்டாபிஷேகம் தரப் பெற்றுப்போய் வான்மீகராச்சிரம மடைதல்.



உடனே சத்துருக்கனுழ்வானெழுந்து சக்கரவர்த்தித் திருமகனுர்க்குத் தீர்க்கதெண்டன் சமர்ப்பித்து அஞ்சலியஸ்தராய் நின்று, சுவாமி! தேவரீர் வனவாசமெழுந்தருளினபோது, பதினுன்கு சம்வச்சரம் இந்தப் பரதாழ்வான் மரவுரியுஞ் சடைமுடியுமாய்க் கனிகளை அமுதுசெய்துக்கொண்டு, தமது கட்டளைப்படி அயோத்தியில் நின்று அரசாளில் அவனியோர் பழிப்பரென்று தேவரீர் பொன்னடிநிலையை நன்முடியாகக் கொண்டு நந்திக்கிராமத்தில் நல்லநித்திரையுமில்லாமல் இராச்சியபாரசிரமத்தை அநுபவித்தருளினுர், அப்படி வருந்தினவரை இன்னமும் வருந்தும்படி நியமிப்பதினும் அந்தக் கைங்கரியத்தை அடியேனுக்கு நியமித்தால் நியமனப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன் என்றுவிண்ணப்பஞ் செய்தார். அதுகேட்ட ஸ்ரீராமபிரான் இதுசரிதான்! நீயும் பல பராக்கிரமங்களிற் குறைந்தவனன்று. நீயேபோய் அந்தப் பாதகனைத் தொலைக்கக் கடவாய். நாம் சொல்லும் இன்னொருவார்த்தையை நீ தடைசெய்யாமல் ஏற்றுக்கொள்ளவேண்டும். அதாவது அவனைமடித்தபின் அவ்விராச்சியத்தை நீயே ஆளவேண்டும். யாதொரு ராச்சியத்தையும் பாழ்படுத்துவது தருமமன்று. ஆதலால் உனக்கிங்கேயே பட்டாபிஷேகஞ் செய்கிறேனென்று அருளிச்செய்தனர்.

அக்கால் ஸ்ரீசத்துருக்கனுழ்வான் கிஞ்சித்து நாணமும் விசனமுமுற்று, திருமுகமண்டலம் கீழ்நோக்குள்ளவராய்த் தமயனுரைக்குறித்து, சுவாமி என்னுண்டவரே! மூத்தோரிருக்க இளையோர் அரசாள்வது நெறியல்லவெனக்கேட்டிருக்கிறேன். ஆயினும் இது அறநெறியெனவும் அன்றெனவும் எடுத்துப்பேச அடியேன்சத்தியுள்ளேனல்லேன். பரதாழ்வான் முயன்றதைத்தடுத்த அபசாரத்திற்குப் பயனுய்க் கைங்கரியத்தை இழக்க நேரிட்டதே! இனி சுவாமி நியமனத்தை உல்லங்கனஞ்செய்தால் என்னநேரிடுமோ? என நடுங்கி யாதும்புகலத் திறமின்றி வருந்துகின்றேன். ஆதலால் தேவரீரே கருணைகூர்ந்து அடியேன் துயரத்தைத் தீர்க்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்ட சக்கரவர்த்தித் திருமகனுர் மந்தகாசத்தோடு அவரைநோக்கி, அப்பா சுமித்திரையின் இளையசிங்கமே! மூத்தோர் மொழியை ஏற்றுக்கொள்வதேபெரியதருமமாதலின்இக்கட்டளையை நீ அங்கீகரித்தல் வேண்டும். நான் இட்ட பணியை ஏற்றுச் சும்மாவிரு. என்று கூறி மந்திரிமாரைக்கொண்டு அபிஷேகத்துக்கு வேண்டுவன சடுதியிற் சேகரிப்பித்து, குலகுருவாகிய வசிஷ்டமாமுனி, முதலியோரால் இலவணராச்சியத்திற்கு அரசாக அவ்விலக்ஷ்மணநுஜருக்குப் பட்டங்கட்டியருளினுர். அதை நாட்டார் நகரத்தார் முதலியோரும் தேவர்களும் அனுமோதித்துக்கொண்டாடினுர்கள்.

பின்பு ரகுகுலோத்தமர் அந்தணர்முதலிய நால்வகை வருணத்தினரோடு சதுரங்க சேனைகளும், சத்துருக்கரோடுகூடப் போகும்படி நியமித்து, அவ்விளையதம்பியைஎடுத்து மடிமேலணைத்துக்கொண்டு, அடா குழந்தாய்! இச்சேனைமுதலிய பரிவாரங்கள் கங்கை வெள்ளம் பெருகாமுன்னமே அதைக்கடந்து செல்லுக. நீயோ வருஷகாலத்திற் சென்று அந்த லவுணன் உண்டிக்காகத் திரிந்து, தன்னிடஞ்சேருமுன்னே ஒன்றியாயெதிர்த்து, யுத்தஞ்செய்து பகைவனைமடிக்கக்கடவாய். அவனுட்புகுந்துசூலம்கைக்கொள்வனுயின் அவனை வெல்லவெளிதன்று. சிவபிரானுடைய வரத்தைவீணுக்கக்கூடாது. இதோ ஓர் அம்பு தருகிறேன்; இது மதுகைடவரைச் சங்கரிக்கு நிமித்தம் பாற்கடலிற் பள்ளிகொண்ட பரமபுருடன் உண்டாக்கியது. இதற்குத் தப்ப யாராலுமாகாது. இதை நான் ராவணன்மேலும் பிரயோகியாது வைத்திருந்தேன். இது உண்மையதாக உனக்குவெற்றிதரத்தடையில்லை. நீமாற்ருனைமடித்து, நீதியோடு நெறியோடும் பிரகிருதிகள் மனமகிழ அரசாளக்கடவை. என நியமித்து வாழ்த்தி யருளினுர். அந்நியமனத்தைச்

சத்துருக்கர் சிரமேற்கொண்டு, தம்மோடு வந்த ஜனங்களையும் படைகளையும் முந்தியனுப்பி, தக்கவிடத்திலிருக்கும்படி கட்டளையிட்டு, ஒருமாதம்தாம் அங்கேயிருந்து மழைக்காலம் கிட்டினவுடனே புறப்பட்டு, அண்ணன்மார் தாய்மார் குருமார்களைக் கும்பிட்டு வலம் வந்து அவர்களிடத்து வாழ்த்தோடு விடைபெற்று, இரண்டுநாளில் வான்மீகமுனிவராச்சிரமஞ்சேர்ந்து, அவராற் பூசனை செய்யப்பெற்றுக் களிப்புற்று வீற்றிருந்தார்.

சத்துருக்கர் வான்மீகியால் கல்மாஷபாதன்சரித்திரங்கேட்டிருக்கையில் சீதாபிராட்டி குசலவரைப்பெறக் கேட்டு வருந்தல்.



அங்கே பக்கத்தில் பெரியதொரு யாகசாலையிருக்கக்கண்டு அம்முநிவரைநோக்கி, சுவாமி! இதுயாருடைய யாகசாலையென வினவினர். அதற்கு அந்தயாகத்தலைவர் அருளிச்செய்பலாயினர். கேளுமையா! காகுத்தமணியே! உமது திருவமிசத்திலே சுதர்சனனென்னும்அரசனுக்குவீரசஹன் என்றொரு குமாரர் இருந்தார். அவரறத்தினு மறத்தினும் பேர்பெற்றவர். ஒருகால் அவர் வேட்டைக்குச் சென்றிருக்கையில் புலிவேடம்பூண்டு மிருகங்களைத் தின்றுக் கொண்டிருந்த இரண்டு இராக்கதச் சிறுவரைக்கண்டு, இருவரில் ஒருவனை அம்பினால் வீழ்த்தினர். மற்றொருவன் அரசன்மேற் பகைபாராட்டி, ஆ! நல்லது மன்னவனே! இப்பழியை எவ்விதத்தேனும் யான் தீர்ப்பேனென்று கூறி மறைந்துபோயினன். பின்பு அந்த நரபதி இராஜ்ஜியமடைந்து மித்திரசஹன் என்கிற பெயர்கொண்டு அசுவமேதமியற்றி முடித்தவளவில், அவ்விராக்கதன் குருவாகிய வசிஷ்டமாமுனி வேடம்பூண்டு ராஜனை நோக்கி, எந்தனுக்குப் புலாலோடுகூடிய மதுரமான ஆகாரந் தருகவென்று கூறினன். அதற்கு மித்திரசஹன் நல்லதென்று தன்பாகத்தலைவனுக்குக் கட்டளையிட, வசிஷ்டவேஷம்பூண்ட ராக்ஷசன் முனிவேஷம் விட்டுப் பாகனுகவும்நின்று நரமாமிசஞ்சமைத்துவைத்துத் தன்னிடஞ் சேர்ந்தான்.

இப்பால் நரேந்திரனும் பாகத்தலைவனும் ராக்ஷசனுடைய மாயையறியாமல் அவ்வன்னத்தை ஆசிரியற்கு அளிக்க, அவர்அதனையறிந்துமிகச்சினந்து, அடா அதமா! என்றனுக்கு அசுத்தமான ஆகாரம் இட்டனையாதலின் நீ இவ்வாகாரம் புசிப்பவனே ஆகக்கடவை எனச் சபித்தனர். கோமகனும் தன்னிடத்து யாதொரு குற்றமுமில்லாதிருக்கச் சபித்தமையால் தான் அக்குருவுக்குச் சாபமிடக் கையினீரேந்தினன். அப்போது அவன்மனைவியாகிய மதயந்தியானவள், ஆசிரியருக்குச் சாபமிடுவது தகுதியல்லவென்று மறுத்ததனால், அவ்வேந்தன் அந்நீரைத் தன்தாளின்மீது பெய்தனன். அதனால் பாதம் வெம்பியதுபற்றி அவருக்குக் கல்மாஷபாதனென்கிற பெயருண்டாயிற்று. பின்பு அவ்வரசன் இஃது இராக்கதன்செய்த வஞ்சமென்பதை அறிவித்துக் குருவைப் பணிந்துபோற்ற, அவரும் ராக்ஷசமாயையென்று அறிந்து இரக்கமுற்றவராகி, மன்னவனே! நான்கோபங்கொண்டுசொல்லிய வார்த்தை தவராது. ஆயினும் ஒருவரந் தருகிறேன். அதாவது இச்சாபத்தைப் பன்னிரண்டாண்டு அநுபவித்துப் பின்னர் அரசாளக்கடவை. அன்றியும் சாபந் தீர்ந்தபிறகு முன்னுகர்ந்த துன்பம்யாவும் மறக்கக்கடவை. என்று அநுக்கிரகித்து அருளினர்.

அப்படியே அப்பார்த்திபனும் முன் சாபந்தீர்ந்து பழையபடி இராச்சியபாரம் நடாத்திவந்தனன். அந்த மகாராஜா அசுவமேதஞ்செய்த சாலை இது என்று வான்மீகியுரைக்கக்கேட்ட, சத்துருக்கனும்வான் பெரியோர் பிரபாவத்தைச் சிந்தித்துக் கொண்டிருந்தார். இப்படியிருக்க, அவ்விரவிலேயேசீதாபிராட்டிஇரண்டுகுமாரரை ஈன்றாள். அச்செய்தியை சில முனிகுமாரரால் அறிந்த வான்மீகமாமுனிவர் அங்கு சென்று, குழந்தைகளிருக்கும் வடிவழகு வண்ணமுதலியவற்றைக் கண்டு களித்து, குசைகளின் நுனியாலே மூத்தவனையும், அப்புறத்தாலே இளையவனையும் காப்புச் செய்வித்து இக்காரணத்தாலேயே மூத்தோனுக்குக் குசன் என்றும் இளையோனுக்கு இலவன் என்றும் நாமகரணஞ்செய்ய உத்தேசித்து,தகுந்தகாலத்தில்அப்படியே

செய்தார். சத்துருக்கனும்வான் அங்கிருப்போரால் அச்சேதிதெரிந்து, தமக்குள் ஒன்றுந்தோன்றாதவராய் இதனைச் சிந்திக்கின்றார். ஐயோ! இப்பிள்ளைகள் அயோத்தியி லுற்பவிக்கப்பெறாது பறவைகளொலியேயன்றிப் பஞ்சகருவிகளொலி சிறிதுமில்லாத இக்காட்டிற்பிறந்தார்களே? இவர்கள் நமது பொன்னகரியிற் பிறந்தார்களாகில் பொய்யாத வேதியர்களுக்கெல்லாம் பூதானங் கோதானமுதலிய பல தானங்களைச்செய்து,கையார நிதிக் குவியல்களைவீசி காகுத்தனுக்குக் காளையர்கள்பிறந்தார்களென்று நகரத்தினரெல்லாம் மகிழ்வெய்தும்படியாக முரசமறைந்து, நெய்யாடல் முதலாகிய சம்பிரமங்களினால் ஜனங்கள்யாரும் என்ன சந்தோஷத்தை யடைவார்கள்? ஆ! ஆ! இஃதென்னகுறை? என்று சிந்தித்து தமக்குள்தாமே நைந்தார்.

சத்துருக்கர் சியவனமுனிவர் உதவியால்
இலவணனைச் சங்கரித்தல்.

இப்படி ஒருவிதத்தில் இன்பமும் மற்றொருவிதத்தில் துன்பமும் கொண்ட சத்துருக்கனும்வான் காலையிலெழுந்திருந்து பயணமாகி, ஏழுநாள்வழிதங்கி, மதுவனம் போய்ச் சேர்ந்தார். அங்கு மகாரிஷிகள் சொல்லிய பலவிசித்திரக்கதைகளைச் செவிசாற்றிக்கொண்டு இரவைக்கழித்துவருகையில் கீழ்வானம் வெள்ளென்றாக அந்தச் சத்துருக்கனும்வான் சியவன முனிவரை நோக்கி, ஐயா! இந்த மதுமகனுடைய பலபராக்கிரமங்களையும்விசிதமாயறியவிரும்புகிறேன். இவனாற்பட்டவர் யார்யார்? என வினவ அத்தவசிகுலதிலகர் உரைக்கலாயினார். கேளும் காகுத்தசிங்கமே! இவனாற்பட்டார்க்கு அளவில்லை. அவற்றையெல்லாம் சொல்லப் பொழுதில்லை. சாரமாய் ஒன்றுகேளும்! உமது திருவமிசத்தில் யுவனாசுவனென்பவருடைய குமாரர் மாந்தாதா என்பவர் மகா பல பராக்கிரமசாலியாயும், மகா மகிமையுள்ளவராயும் இருந்தாரெனக் கேள்வியுற் றிருக்கின்றோம். அவர் இப்பாதகனாலேதான் இறந்தார். எப்படியென்றால், அந்த மகாபுருஷன் இந்திரனோடு அர்த்தாசனத்திலிருந்து, தேவராச்சியத்திற் பாதியாள வேண்டுமென்று கருத்துகொண்டு அதற்கேற்றதவமுதலான முயற்சிசெய்து வருகையில், தேவர்கோன் பொறாமைகொண்டு வருந்தி, அவ்வரசனிடம்வந்து இதனைச் சொல்லுகிறான்.

ஓ ராஜாதிராஜனே! நீர்செய்யும் முயற்சிதெரியும். அதுபயன்படாமற்போகாது அதுநிற்க, இந்த நரலோகத்திலே உமது பிரதாபம் செல்லாதிருக்க, சுரலோகத்தில் அதைச்செலுத்தஎத்தனிக்கின்றீரே! அது நேராகத்தோன்றவில்லை என்றியம்பினன். அது செவியுற்றமாத்திரத்தில் மாந்தாதா விம்மிதங்கொண்டு, ஆ! அப்படியா! எங்கே எனது பிரதாபஞ் செல்லவில்லை? அதனை நீரெனக்கு உணர்த்தவேண்டும் என்றுகேட்டலும், அந்தசுரபதி அவரை நோக்கி, ஓ நரபதீ! மதுவின்மைந்தன் இலவணன் என ஒருவனுளன். அவன் நற்கிரியைகளை யழித்து, நற்றவர்களைப்புசித்து, நானிலம் நடுக்கிவருகின்றான். அவனை நீர்வென்றிலீர் என்னவும், அவ்வேந்தன் வெட்கித் தலைகுனிந்து, அத்தேவற்கு வந்தனமியற்றித் தன்னகர்க்குச்சென்று, நாற்படையுங் கூட்டிக்கொண்டு மதுபுத்திரன் வசியுமிடஞ்சேர்ந்து, அவனைப் போருக்கு அழைத்தார். அவ்விராக்கதன் சூலமுங்கையுமாக வந்து நின்றான். அரசன் எத்தனைமுயன்றும்பயன்படாமல் சேனையோடு தான் அச்சூலத்திற்கிரையானார். கேட்டீரோ அவன் விறலை? பொழுதுபுலர்ந்தது. இனி அவ்வரக்கன்சூலமில்லாமல் ஊணுக்காகவெளியிற் செல்லுவான். அவன் திரும்பிவருகையில் நீர் அவனை எதிர்த்துச் சங்கரிக்கவேண்டும். ஆதலின் எழுந்து அவன்வசியுமிடத்து வாயிலில் சன்னத்தராயிருக்கவேண்டுகிறோமென்றார்.

அதைக்கேட்ட லக்ஷ்மணாநுஜர் வில்லில் நாணேறிட்டுக்கொண்டு ஆண்டேகி நின்றார். அக்கால் அந்த இலவணன், எங்குந்திரிந்து பலஜந்துக்களைக்கொன்றெடுத்துக்கொண்டு வருகையில், வாயிலில் இவர் இருப்பதைக்கண்டு, நீ யார்? இங்குநிற்க யாதுகாரணம்? என வினவவும் சத்துருக்கர் அவனைநோக்கி, அடா ராக்ஷசா! யான் தசரத குமாரன். ஸ்ரீராமச்சந்திரருடைய தம்பி? உன்னோடு தொந்தயுத்தஞ்செய்து உன்னைப் பரலோகமனுப்ப வந்திருக்கிறேனென்றார். அதுகேட்ட இராக்கதன் நகை

த்து, ஓ! ஓ! நான் வெகுநாளாய் உங்களைக் காணவிரும்பியிருந்தனன். என்குலத்தலைவனாகிய ராவணனைவதைத்தவர்க்கத்திற்சேர்ந்தவனல்லவோ நீ? ஆதலின் உன்னை இன்றே மிருத்துவுக்கு அதிதியாக்குகிறேன். சற்றிரு உள்ளேசென்று படைக்கலங்கொண்டு வருகிறேனென்றான். அதுகேட்ட லக்ஷ்மணாநுஜர் அதுகூடுமா? உன்னையினி ஒருநிமிஷமாகிலும் புறஞ்செல்லவிடுவேனா? கையிலகப்பட்டபகைவனை விடுகிறவன் தான்சாகமருந்துகொள்பவனன்றோ? ஆகவே நீ நின்றநிலையிலேயே போரிடவேண்டுமென் றருளிச்செய்தார்.

இச்சொல் செவிசாரவே அப்பாதகனுக்குக் கோபம் பொங்கிக் கையோடு கை புடைத்து, எயிறுதின்று இதழ்கவ்விக்கொண்டு, அடா மனிதப்பதரே! உன்னண்ணன் தசக்கிரீவன்முதலானோரைக்கொன்றதைக் கேட்டுப் புன்மையான மனிதரோடு போர்புரிவதிழுக்கென்றிருந்தேன். இன்று நீ இலட்டுகம் வாயில் வீழ்வதுபோல, வலுவில் வீழ்ந்ததனால் உன்கருவத்தையடக்க வேண்டும். இதோயுத்தசன்னத்தனாய் நின்றேன். என்றோர் பெருமரத்தைப் பிடுங்கிச் சத்துருக்கர் மார்பில் எறிந்தான். அவரதனைக் கூரிய பகழிகளாலே பலதுண்டாக்கித்தள்ள, இலவணன்மறுத்தும் பல பர்வதங்களைப்பறித்து மோதக்கண்டு, காகுத்ததிலகர் ஒவ்வொன்றையும் மூன்று நான்கு அம்புகளைக் கொண்டு சிதைத்துத் தள்ளி, மழைபொழிவதுபோல் அவ்விராக்கதன் மீது அம்புகளைப் பொழிந்தனர். அவனோ அதனாற்சிறிதும் வருந்தாதவனாகி ஒருபெரிய விருக்ஷத்தால் அவரது சென்னியிற் புடைக்க, அப்புடைத்தலால் அவர் சோர்ந்து மூர்ச்சையடைந்தார். அதுகண்டு தேவரும் முனிவரும் ஹா! ஹா! எனக் கதறினார்கள். அந்நிருதன் அவர்தரையிற் சாய்ந்ததுகண்டு, இறந்தாரென்றேகருதி, தான் குதூகலத்தோடு கொணர்ந்த பக்ஷிகளைப் புசிக்கத் தலைப்பட்டானேயல்லது சூலங் கொண்டுவர நினைத்திலன்.

அப்பால் சத்துருக்கனும்வானே முகூர்த்தத்திறகுள் அறிவூன்றி எழுந்து மிக்க சீற்றமுற்று, ஸ்ரீராமபிரான் தமக்குப்பிரசாதித்திருந்த விஷ்ணு சாயகத்தைக் கோதண்டத்திற் சந்தானம்பண்ணி விடுத்தார். அக்கணையானது சூரியனுதித்தால் என்ன ஜாஜ்வல்யமானமாய், உலகெல்லாந் தீய்ந்துபோமாறு வானத்திற் செல்லக்கண்டு, அமரரும் அஞ்சி ஆர்ப்பரித்தோடிப்பிரமதேவனை வினவினர். அவர் இது திருமாலின்சரம் அஞ்சன்மின் அவரது அமிசாவதாரமான சத்துருக்கனும்வான் இலவணன் மேற் பிரயோகித்தனன். என்றுரைத்ததனால் மனத்தளர்ச்சியற்றிருந்தார்கள். அங்ஙனம் புறப்பட்ட மகாஸ்திரமானது அக்கொடியோனுடைய மார்பைப் பிளந்து தரையிற் புகுந்து, மீண்டும் ரகுகுலசிங்கத்தின் கைத்தலம்பற்றியது. அவனோ சூறையிற்பட்ட பெருமரம்போல்வீழ்ந்து யமனுக்கு விருந்தாயினன். அவன்வசத்திலிருந்த முத்தலைவேலானது மீண்டும் சூலபாணி சந்நிதானமேசேர்ந்தது. இவ்வாறு லோககண்டகனாயிருந்த இலவணன் சங்கரிக்கப்பட்டவுடனே ஓர்அம்பினால் மூவுலகத்தையும் உய்வித்த இராகவாநுஜனைத் தவசிகளும்வானவரும் புகழ்ந்து, ஜயவிஜயீபவ! என வாழ்த்திப் பூமழைபொழிந்தனர்.

### சத்துருக்கர் மதுரையைஸ்தாபித்து அரசாண்டிருத்தல்.



பின்பு சுவர்க்கத்தாரெல்லாம் அந்தக் காகுத்தவீரருக்கு எதிரில்வந்து, ஐயா! மிகக்கொடியவனான லவணனைச் சங்கரித்துப் புவனமெல்லாங் காத்தீர். ஆதலின் யாம் சால உவப்புற்றோம். எம்மிடத்து நீர் வரம்வேண்டுக. எனவும் அவர் எனக்கு வேறுவரமொன்றும் வேண்டாம். இவ்விடம் வசிப்பதற்கு ஏற்ற நகரமாதல்வேண்டுமென உரைத்தார். அவர்கள் அங்ஙனமே யாகுகவெனக் கூறித் தம்முலகுக்கேகினர். உடனே அது அர்த்தசந்திராகாரமாய் ரமணீயமும் விசாலமுமான மாடமாளிகை கூடகோபுர மண்டப முதலியவற்றாலும், எல்லாப் பண்டங்களும் நிறைந்த பணிகளாலும், தந்தநிறைதவறாத நால்வகைவருணத்தாராலும்விளக்கமுற்று; பலசெல்வமுமல்கியதோர் நகரமாயிற்று. மதுவென்பவன் கைக்கொண்டிருந்ததுபற்றியும், கண்ணுக் கினிமையானது பற்றியும், அதற்கு மதுரையெனத்திருநாமஞ்சாத்தப்பட்டது முன் பன்னிரண்டாண்டாய் அழிந்துகிட

ந்த அதுபின் சூரசேனதேசத்துக்குத் தலைப்பட்டணமாய் யமுனாநதிக்கரைக்கோரணியாயொளிரா நிற்கக்கண்ட சத்துருக்கர் தமதுசேனை சேனாதிபதி மந்திரி முதலாயினோரை அவ்விடத்துக்குத்தக்க பரிசாயிருத்தி, இலவணன் குடியிருந்தவிடத்தையே அரண்மனையாக்கி அலங்கரித்து எழுந்தருளியிருந்தார்.

இவ்வாறு சத்துருக்கர் பன்னிரண்டாண்டு அந்நாட்டையாண்டு, ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளைச் சேவிக்கப் பேரவாக்கொண்டு, துரைத்தனத்தை மந்திரிகள்வச மொப்புவித்து, ஒருநூறு ரதமும் சிறிதுபடையுங்கொண்டு பிரயாணப்பட்டு, ஏழெட்டுநாள் வழிதங்கி, மறுத்தும் வான்மீக முனிவர் ஆச்சிரமத்திற் கெழுந்தருளி அத்தபோதனரை யிறைஞ்சி அவரளித்த ஆதித்திய நுகர்ந்துவீற்றிருந்தார். இப்படியிருக்கையில், அந்தமுனிவரர் பற்பலகதைகளை இயம்பி மதுபுத்திரனை மாள்வித்ததையுகர்ந்து ஓ இரகுகுலதிலகா! நீர் இலவணனோடு நிகழ்த்தியவமரை யான் இந்திரசபையிலிருந்துநோக்கினன். வெகுசிலாக்கியமாயிருந்தது. என்மனதிலும் மிக்க உவப்புண்டாயிருக்கின்றது. ஆதலின் அதன்பயனாக உம்மையுச்சிமோர்கின்றேன். எனவெழுந்து தழுவி யுச்சிமோந்து சிறப்புச்செய்தனர். இங்ஙனம் அவரால் கொண்டாடப்பட்டுநின்ற சத்துருக்கனாழ்வார், குசனும் லவனும் தூரத்தில் மறைபவிருந்து ஸ்ரீராமமூர்த்தியாகிய ராமபாணத்தை தக்க தாளலயைகளோடு யாழிலிட்டு மதுரமாய் பாடக்கேட்டு, அதெல்லாம் அப்போது தான் நடந்ததுபோல அனுபவத்தில்வர மனந்தளர்ந்து கண்ணீர்மல்க ஒரு முகூர்த்தகாலம் பிரக்ஞையற்றிருந்தார்.

அவரோடுகூடவந்தவர்களும் அப்பாடலைச்செவியுற்றுத் தலையிறங்கி முகம்வாடி, இதென்ன ஆச்சரியம்? எப்போது நடந்த சரித்திரமிது? யார்பாடுகின்றனர்? ஈதொரு கனவோ? நனவுதானோ? என்றயிர்த்துத் தம்மரசரிடஞ் சென்று, இதென்ன வான்மீக முனிவரை வினவியறிந்து தெரிவிக்க விரும்புகிறோ மென்றனர். அதற்கவர் தம் பரிவாரத்தாரை நோக்கி, மகரிஷியின் ஆச்சிரமத்தில் எத்தனையோ அதிசயங்களிருக்கும். நாம் வினவவொண்ணாது. என்றவர்களைப் போகவிடுத்துத் தமக்கென்று அமைத்தவிடஞ் சென்று படுத்து, ஸ்ரீராம கதா சங்கீத நினைவேகொண்டு விசனத்தினால் நித்திரையின்றி இரவைக்கழித்தனர். கதிரவன் கிரணங்களாகிய கைகளால் இரவென்னும் கரியபோர்வையை நீத்து விளங்கியபின், லக்ஷ்மண சகோதரர் காலைக்கடன்களை அநுட்டித்துப், புற்றிற்பிறந்த பெருமுனியிடம் விடைபெற்று, சகோதர நகரத்தை நண்ணிச் சக்கரவர்த்தித் திருமகனைத் தெண்டன் சமர்ப்பித்து நேத்திரத்தில் நீர்ததும்ப நின்று, சுவாமி! தேவரீர் நியமித்தபடி இலவணனையொழித்து, மதுரையைச் சீராக்கி இராஜ்ஜியபரிபாலனஞ் செய்துவந்தேன். பன்னிரண்டுவருடம்கழிந்தன. இனி சுவாமி திருவடிவாரத்தை விட்டுப்பிரிய மனமற்றிருக்கிறேன். தாயில்லாக்குழவிபோ லென்னைத் தனியேவிட்டு, அனாதரிப்பது தேவரீருக்குத் தகுமோவென்று விண்ணப்பஞ்செய்தார்.

அப்போது தமையனாரும் தம்பியையணைத்துக்கொண்டு, அப்பா! விசனப்படாதே! பிரிவிற்குக்கரைதலும், படைக்குக் கூசுதலும், போர்க்குப்பின்னிடுதலும், க்ஷத்திரியதருமமன்று. கடைக்குட்டியாகியஉன்னைப் பிரிந்திருப்பதில், எனக்குத் துன்பமில்லையா? ஆயினும்அறத்துக்குயாரும் அடங்கவேண்டுவதாதலின்பொறுத்துக்கொண்டிருக்கின்றேன். நீயும் இவ்வாறே அறம் நோக்கிக் கடவுள் கட்டளையாலமைந்த ராச்சியாதிகாரத்தை நிறைவேற்றக்கடவை. வேண்டுமானபோது இங்குவந்துஎன்னைக் கண்டுபோகலாம். இப்போது ஏழுநாள் இங்குவதிந்து மதுரைக்கு ஏகக்கடவை. என்று தேற்றியருளினர். இப்படி தேற்றியும் சத்துருக்கர் தேறாமல், கட்டளையை மறுக்கக்கூடாதென்று அப்படியே உடன்பட்டு, லக்ஷ்மணரையும், பரதரையும், தாய்மாரையுங்கண்டுதெண்டனிட்டு, மற்றுமுள்ளோரையும் தக்கபரிசிலுபசரித்து ஏழுபகல் கழிந்தவுடனே புறப்பட்டு மதுராபுரிக்கு எழுந்தருளினர்.

இலவணசூரன் வதைப்படலம் முற்றிற்று.

## சம்புவன்வதைப்படலம்.



### ஸ்ரீராமர்கொலுமுகத்தில்ஓர்பிராமணனும் பிராமணியும் இறந்துபோன தம்பிள்ளையைவைத்து முறையிடல்.



இப்படி ஸ்ரீராமர் சத்துருக்கனை வடமதுரைக்கனுப்பி இராஜ்ஜியபரிபாலனஞ் செய்துக்கொண்டிருக்குங் காலத்திற் சில நாள் சென்றபின்பு ஒருநாள் மிகவும் விருத்தனான ஒரு பிராமணன் தன்பத்தினியோடு இறந்துபோன தன்னுடைய பிள்ளையைக் கொண்டுவந்து இராஜத்துவாரத்திலேபோட்டான். அப்போது அப்பார்ப்பினியானவள் அங்கிருப்போரெல்லாம் கலங்கிவருந்தும்படியாகத் தன்பிள்ளையின் மேல்விழுந்து புலம்புகிறாள்.

### விருத்தம்.

மணியேயென்றன்மாசறுசோதிவடிவுக்கோர்
அணியேயென்றனாருயிரேயாரமிழ்தேவன்
பணியேதிந்நாளேகவுனக்குப்பணிபாராப்
பிணியேதந்தாயீங்கிதுவோநான்பெறுபேறே

முன்னைச்சன்மத்திட்டுடையேனாதலின்மோகத்
துன்னைப்பெற்றுப்போற்றிவளர்த்தின்றுனைவிட்டேன்
என்னைப்போலப்பாவிகளுண்டோவிணையில்லாப்
பொன்னைப்பெற்றுத்தப்பமுடிந்தேன்பொறியற்றேன்.

பதங்களிலார்க்கும்பன்மணியார்க்கும்படியில்லாச்
சதங்கையுமொண்பொற்றண்டையுமம்பொன்னரைஞாணு
பதம்பலவாகுமைம்படையும்மெய்யழகெல்லாம் [ம்
பொதிந்தகழுத்துங்காறையுமம்பொற்புனைபூணும்.

பட்டமுநெற்றிப்பன்மணிமுத்தின்படர்சோதிச்
சுட்டியுமம்பொற்றோடுமிலங்கென்றுனையேயோ
எட்டனையுஞ்சார்பில்லவனாட்டினிடைவந்தாய்
கட்டியசுற்றிக்காப்பிடவாராய்களிறேயோ.

மண்ணறுசீருமானமுமங்கவசைபூண்டோன்
கண்ணறையன்காகுத்தனெனாதிக்கடன்ஞாலம்
புண்ணுறுதீயிற்புத்திரசோபந்தனைமாற்றிப்
பண்ணிறைநாய்தாய்செத்திலளென்றேபழிதூற்றும்.

என்னைக்கைவிட்டேகியநீயோவெழின்மைந்தா
உன்னைக்கைவிட்டென்றுவாராதுழல்வேனோ
தன்னைச்சொல்லிக்கூப்பிடவேதுந்தகவில்லா
மன்னர்க்கல்லாமன்னவனோவுன்வலியாரார்.

ஒன்றுந்துன்பக்கொள்கலமானேனுயிரெல்லாம்
கொன்றுண்பாவிக்கூற்றுவனென்னைக்கொடுபோகான்
வன்றிண்சிந்தைமன்னவனாமென்வினைதேரான்
என்றென்றிவ்வாறேந்திழையாளுவிடருற்றாள்.

இவ்வாறுகூறிப் புலம்பிய பார்ப்பினி புத்திரசோகத்தால் தனது நிலைகுலைந்து நிற்க, அந்தப் பிராமணனும் ஆற்றமாட்டாத துக்கத்தினனாய் அழத்தொடங்கினான்.

### விருத்தம்.

கன்னெஞ்சராயுள்ளோர்காளையரைத்தாமிழந்துகதறுநிற்பர், மென்னெஞ்சராயுள்ளோர்வெந்துயரம்பொறுக்கலாவிடுவராவி, என்னெஞ்சிலெரிமூட்டியென்னையறக்கைவிட்டவுன்னைப்போல, வன்னெஞ்சனோயானுமைந்தனேயுனைத்தொடர்ந்துவருகின்றேனே.

தனக்குநோய்வேண்டாதான்சந்ததிபெற்றிடாதொழிகதளர்வுமிக்கு, மனத்துநோய்தான்பெருகமலடனுக்கின்றியாம்படுமிம்மறுக்கமில்லை, எனக்குநீசெயவிருந்தநீர்க்கடனின்னிற்பினிருந்துபிள்ளாய், உனக்குநான்செய்வெனோசெய்யேன்காணுனைத்தொடர்ந்துவருகின்றேனே.

கண்ணிலான்பெற்றிழந்தா னெனவுன்னைப்பெற்றிழந்துகாந்திப்பொங்கும், புண்ணுளேநாராசம்புடைத்தனையபொறுக்கலாதாற்றேமாகி,மண்ணிலாப்பெரும்பாவத்தெங்களுக்குமகனாகவென்னபாவம், பண்ணினாய்மகனேயென்பழிப்பற்றபேரழகாபகர்ந்திடாயே.

தேசற்றதீவினையேன் றிருவுடையோர்பிள்ளைகளைப்பெற்றுவாழ, ஆசைப்பட்டாவிதளர்ந்தருந்தவங்கள்செய்துநானனேகங்காலம், ஏசற்றேனேசறவுகெடவந்தாயென்றிருந்தேனெங்கேபோனாய், மாசற்றமணியேயென்மறுவற்றவடிவுடையமைந்தரேறே.

தள்ளாடுமேனியனாய்த் தனயனைநானிழந்தாவிதளர்கின்றேனைக், கொள்ளாதுகூற்றுமென்னைக்கொடுபோகாதினியுனக்குத்தோழராகி, உள்ளார்களொடுதெருவில்விளையாடியுடம்பலசியுறங்கினாயோ, பிள்ளாய்நீயெழுந்திராயிதுவென்னபேருறக்கம்பேசிடாயே.

கொஞ்சியவுன்சொற்கேட்டுக்குடுமியுஞ்சுட்டியுமழகுங்குறித்துச்சால, நெஞ்சுகளித்தினிதிருந்தநெடுந்தவத்தால்விதிமுறைநின்னரையிற்கட்டும், முஞ்சியுநற்கோவணமுமுப்புரிநூலுந்தோளும்விளங்கித்தோன்ற, வஞ்சனேன்மைந்தாநீமறையோதிவரக்காணப்பெற்றிலேனே.

தராதலத்திலிதற்குமுதற் றந்தையர்க்குமுனந்தனயர்மரித்தாரில்லை, புராதனத்தாலல்லாதிப்புத்திரசோகத்தாலேபுலம்புமிந்தப், பிராமணிக்குப்பிழைப்பரிது பெரும்பீடையால்யானும் பிழைக்கமாட்டேன், இராமனுக்கேபழியாகவிறக்கின்றோமிருவருமேயென்னுங்காலை.

இவ்வாறழுத பிராமணனானவன் ராமபத்திரனை நோக்கி, ஓ ராஜனே! இந்த அநியாயமுண்டோ? நானொரு பாபமுஞ் செய்ததில்லை. உன்னாற்செய்யப்பட்ட அதர்மத்தினாலே, என்னுடையபிள்ளை இறந்து போய்விட்டது. நானும் என்னுடைய

ஸ்திரீயும் உனக்கெதிரே பிராணனைவிடுகி றோம். இந்தப் பிரமஹத்திபாதகத்தையும் ஏற்றுக்கொண்டு நீயே சுகமாயிருப்பாய். என்றிப்படி நிந்தித்து, முறையிட்டு, பின் னும் புலம்பித் துக்கப்பட்டான். அதுகே ட்ட ராமர் மிகவும் விசனத்தையடைந்தவ ராகி, உடனேவசிஷ்டர்-வாமதேவர்-கௌ தமர் நாரதர்முதலானமகரிஷிகளைவரவழை த்து,இதென்னகாரணத்தா லுண்டானதெ ன்றுகேட்டார்அப்பொழுதவர்களில்நாரத மகாமுனிவர் ஸ்ரீராமரை நோக்கி, கேளும் மகாராஜனே! கிருதயுகத்திலே பாபமேயி ல்லை. பிராமணனுக்கு தபசு மகிமையுண்டு. திரேதாயுகத்திலே நாலிலொருபங்குபாபம் க்ஷத்திரியனுக்குத் தபசு மகிமையுமுண்டு. துவாபரயுகத்திலே இரண்டுபங்கு பாபம். வைசியனுக்குத் தபசுமகிமையுமுண்டு. கலி யுகத்திலே மூன்றுபங்குபாபம் சூத்திரனு க்குத் தபசு மகிமையுமுண்டு. இப்படி யுக தருமமிருக்க, இந்தத் திரேதாயுகத்திலே அதர்மமாக சூத்திரன்தபசுபண்ணுகிறபடி யினாலே இந்தப்பிள்ளை இறந்துபோய்விட் டது. நீர்இதைவிசாரித்துத் தண்டித்தால் இந்தப்பிள்ளைபிழைக்குமென்றுசொன்னார்.

அதுகேட்ட ஸ்ரீராமர் சந்தோஷ த்தையடைந்து லக்ஷ்மணனைவரவழைத்து தம்பி! நீ இந்தப்பிராமணனைச்சமாதானப் படுத்தி, இந்தப்பிள்ளைச்சரீரத்தை எப்படி பாதுகாத்துவைத்திருக்கவேண்டுமோ அப் படிச்செய்துவைத்திரு. நான் அச்சூத்திர னைக்கண்டுபிடித்துச்சங்கரித்துவருகிறேன் என்று உத்தரவுகொடுத்து உடனே புஷ் பக விமானத்தை நினைத்து வரச்செய்து, அம்பு-வில்-வாள்-இவற்றை எடுத்து அதி லேறிக்கொண்டு, கிரமமாக மேற்கு - வட க்கு-கிழக்கு-இம்மூன்றுதிசையிலுந்தேடிப் பார்த்து ஒருபாபமும் இல்லாதிருப்பதை யறிந்துகொண்டுதெற்குத்திசையிற்செல்ல, அப்பொழுது சைவல பருவதத்திற்கடுத்த வடபாரிசத்தில் ஒருமடுவிலே தலைகீழாகத் தபசுபண்ணிக்கொண் டிருக்கிறவனைக்கண் டு, நீயார்? என்ன நிமித்தம் இப்படித்தபசு செய்கிறாய்? என்று கேட்க, அதற்கவன் ஐயா! நான் சூத்திரன் என்பெயர் சம்புவ னென்பர். யான் இந்தச் சரீரத்துடனே தேவத்தன்மை யடைவதற்காகத் தவஞ்செ ய்கிறேனென்று சொன்னான். அம்மாத்திர த்திலே ஸ்ரீராமர் வாளாலே அச்சம்புவ னைத் தலையுருளவெட்டி வதைத்தார். அப் பொழுது இந்திராதி சகல தேவர்களும்வ ந்து, சந்தோஷப்பட்டு ஸ்ரீராமரைக்கொ ண்டாடி, உமக்கு வேண்டிய வரத்தைக் கேளுந் தருகிறோமென்று சொன்னார்கள். அதற்கு ஸ்ரீராமர் அந்த பிராமணப்பிள்ளை பிழைப்பதே எனக்குவேண்டியவரமென்று சொன்னார். தேவர்கள் அந்தப்பிள்ளை இப்பொழுதே பிழைத்தானென்று அநுக் கிரகித்து, பின்பு அகஸ்தியர்பன்னிரண்டு வருடஞ் சலசயனஞ்செய்த தீக்ஷை இப் பொழுதுமுடிகிறபடியினாலே நாங்கள் அவ ரிடத்துக்குப்போகிறோம். நீரும் அவரைக் காண வரலாமென்று சொல்லிப்போயினார் கள். பின்பு ஸ்ரீராமரும் அவர்களோடு அகஸ்தியருடைய ஆச்சிரமத்தைச் சேர்ந் தார்.

### ஸ்ரீராமருக்கு அகஸ்தியர் சுவேதராஜன் கதைகூறி, அவனாற்றாம்பெற்ற ஆபா ணத்தை அளித்தல்.

---

இப்படி அகஸ்தியருடைய ஆச்சிரம த்திற்சேர்ந்த இந்திராதிய தேவர்களெல் லாம் அவரா லுபசரிக்கப்பெற்றுப் போன பின், ஸ்ரீராமர் அவரைக்கண்டு வணங்க, அவர் அவரையும் உபசரித்து, தம்மிட த்திலிருந்த திவ்வியாபரணத்தைக்கொடுத் தார். அதை அவர் வாங்கிக்கொண்டு இது வந்தவிதமென்னவென்று கேட்க, அதற்கு அவர் ஸ்ரீராமரைப்பார்த்துச் சொல்லுகி றார். கேளும் காகுத்தவம்ச சிரோமணியா கிய ராகவா! முன்பு நான் திரேதாயுகத் திலே நூறுயோசனை விசாலமாய் ஒருபிரா ணிகளுமில்லாத மகாவனத்திலே தபசுசெ ய்யப்போயிருந்தகாலத்தில், அந்தவனத்தி நடுவில் ஒருயோசனைவிசாலமாய் ஒருதடா கமும் அதற்கடுத்த ஒருவருமில்லாத ஓராச் சிரமமுமிருக்கக்கண்டு, அன்றிராத்திரியதி லிருந்து, மறுநாளுதயத்தில் அந்தத்தடா கத்திற்கிடக்குஞ் சவத்தைக்கண்டு ஆலோ சித்துநிற்குமளவில் அநேக விசித்திரத்து டனே மேலுலகத்திலிருந்தொருவிமானம் வந்தது. அதிலிருந்தொருபுருஷனிறங்கி அந்தச்சவத்தைப் பிடுங்கித்தின்றான். அவ னை நீயாவனிஃதென்னகாரணத்தாலென்று

கேட்க, அதற்கவன் நான்விதர்ப்பதேசாதிபதியாகிய வசுதேவனென்னும் இராஜனுடையபுத்திரன் என்பெயர்சுவேதன். நான் இராஜ்ஜியபரிபாலனஞ் செய்துக்கொண்டிருக்குங்காலத்தில், ஆயுட்பிரமாணந்தெரிந்து, என்னுடையதம்பியாகிய சுரதனென்பவனுக்கு ராஜ்ஜியங்கொடுத்து தபோவனத்திற் சேர்ந்து, மூவாயிரம்வருஷம் தபசு செய்து, பிரமலோகத்தையடைந்து அவ்விடத்திற் சகிக்கப்படாத பசிதாகத்தினுலே மிகவும் வருந்தி, எனக்கிப்படி வரவேண்டுவதென்னவென்று பிரமதேவரைக் கேட்டேன். அதற்கவர்பூலோகத்திலே நீ அன்னங்கொடாமல் உன்னுடையசரீரத்தையே போஷித்தபடியினுலே, உனக்கிப்படி வந்தது. இந்தப்பசிக்கு உன்னுடைய சரீரத்தையேபுசி, அஃதுனக்கு அமிர்தம்போலிருக்கும். இனிமேல் எப்பொழுது அகஸ்தியபகவான்நேரிடுவாரோ? அப்பொழுது அவரால் இந்தத் தோஷம்நீங்கும். என்று பிரமதேவர்அநுக்கிரகித்தபடிக்குஇப்பொழுதுதேவரீரைக்காணப்பெற்றேன். ஆகையால் என்னுலுபசரித்துக்கொடுக்கப்பட்ட இந்த ஆபரணத்தை ஒப்புக்கொண்டு, கிருபைசெய்து என்னைரக்ஷிக்கவேணுமென்று மிகவும் வணங்கிப் பிரார்த்தித்தான். அப்பொழுது அதை நான் ஏற்றுக்கொண்டமாத்திரத்திலே, அந்தச்சவங் காணுமற்போய்விட்டது. அவனும் பசிநீங்கி முன்னிருந்த பிரமலோகத்தை அடைந்தான். அப்படி அந்தச் சுவேதமகாராஜனுலே கொடுக்கப்பட்ட இந்தத் திவ்வியாபரணமென்று சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் மகா சந்தோஷத்தையடைந்தார்.

### ஸ்ரீராமர் அகஸ்தியரால் தண்டனிராஜ்ஜியம் ஆரண்யமானவாறுகேட்டு அயோத்தியையடைதல்.

இப்படி அகஸ்திய மகாமுனிவராலே சொல்லப்பட்ட சுவேதமகாராஜன் சரித்திரத்தைக்கேட்டுமகிழ்ச்சியடைந்த ஸ்ரீராமர் பின்னும் அவரைநோக்கி, அந்தச் சுவேத மகாராஜன் தபசுபண்ணினவனம் நூறு யோசனை விசாலமாய் அதிலே ஒருபிராணியு மில்லாமலிருக்கின்ற காரணமென்னவென்று கேட்டார். அதற்கு அகஸ்தியர் ஸ்ரீராமரை நோக்கிச் சொல்லுகிருர். கேளும் ரகுநந்தனு! முன்பு கிருதயுகத்திலே மனுவானவர் பூமண்டலமுழுதுஞ் செங்கோல் செலுத்தி இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தார். அவர் தம்முடைய புத்திரனுகிய இக்ஷுவாகுமகாராஜனுக்குத் தருமசாஸ்திர முதலான சகலசாஸ்திரங்களையும்போதித்து, இராஜ்ஜியபட்டாபிஷேகமும் பண்ணுவித்து, சுவர்க்கத்தை யடைந்தார். பின்பந்த இக்ஷுவாகு மகாராஜா அளவில்லாத புண்ணியங்களைச் செய்து, நூறுபுத்திரரைப்பெற்றுர். அவர் திரிகாலவர்த்தமானமும் தெரிந்தவராகையாற் கடைசிபுத்திரன் இனிமேல் தண்டத்தை யடைவானென்பதை யறிந்து அவனுக்குத் தண்டனென்றுபெயரிட்டு, விந்தகிரிக்குஞ் சைவலபருவதத்திற்கும் நடுவுள்ள நூறுயோசனைதூரம் பூமியும்கொடுத்தார். அவனங்கேமதுமந்தனென்ஞெருபட்டணமுண்டாக்கிச் சுக்கிரபகவானை ஆசாரியராக வைத்துக்கொண்டு அதிகாரஞ்செய்துக்கொண்டிருந்தான்.

அப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் அவன் சுக்கிராசாரியரிடத்துக்குப் போம்பொழுது, அவரிருக்கும் ஆச்சிரமத்துச் சமீபத்திலே, அவருடைய புத்திரி சரையென்பவளைக்கண்டு மோகித்து, சகிக்கப்படாத காமவிகாரத்தை யடைந்தவனுகி, அநேகவிதங்களால் உபசரித்து வேண்டியும் அவளுடன்படாதுமறுக்கவும், கேளாமல் அவளை வலிமைசெய்து புணர்ந்தான். அவள்மிகவும்விசனப்பட்டு அழுதபடியே தன்னுடைய பிதாவிடத்துக்குப்போனுள். அவர் நடந்தசெய்கையை அறிந்துகோபித்து, என்னையும் மதியாமற் குருபுத்திரியென்றும் நினையாமல் இப்படி அவமரியாதையானபாதகம் பண்ணினுனுதலால், இந்தத் தண்டனேடு இவனுடைய வமிசமும் பட்டணமும் ஏழுநாளையிலே தீப்பட்டுவெந்தழியக்கடவதென்று சாபஞ்செய்தார். அவர் சாபப்படியே அப்பட்டணமழிந்து வனமாயது. அந்தக்காரணத்தினுல் அன்றுமுதல் இந்த வனத்துக்குத் தண்டகாரணியமென்று பெயராயது. என்று அகஸ்திய மாமுனிவர்சொல்லக்கேட்ட ஸ்ரீராமர் மிகவுஞ்சந்தோஷத்தையடைந்தவராய், அன்றிராத்திரியங்கிருந்து, மறுநாளுதயத்தில்

அவருடைய அநுமதிபெற்று அவ்விடத்தினின்றும் நீங்கிப்போய் அயோத்தியா நகரஞ்சேர்ந்தார். அதற்கு முன்னமே இறந்த பிராமணப்பிள்ளை பிழைத்திருந்ததால் அந்தப்பிள்ளையுடனே மாதாபிதாக்களையும் சந்தோஷப்படுத்தி அனுப்பினர்.

சம்புவன்வதைப்படலம் முற்றிற்று.

---

## அஸ்வமேதயாகப்படலம்.

### ஸ்ரீராமருக்குப் பரதலக்ஷ்மணர்கள் அஸ்வமேதயாகத்தைப்பற்றி விருத்திராசுரன் கதையுரைத்தல்.

இப்படி அயோத்தியாபட்டணத்தைச் சேர்ந்த ஸ்ரீராமர் வாயிற்காவலருக்கு உத்தரவுசெய்து, பரதலக்ஷ்மணரை வரவழைத்து, இராஜசூயயாகம் பண்ணவேணுமென்று ஆலோசித்தார். அதற்குப் பரதர் ஸ்ரீராமமூர்த்தியைநோக்கி சொல்லுகிறார்.

விருத்தம்.

சொற்பொருடெரியாமைந்தன்சொல்லியகுதலைச்சொற்கள், பெற்றதாய்க்கினியவாகும்பெற்றிபோற்பெருஞ்சொனன்னால், கற்றறிவொன்றுமில்லேன்கழறிமிந்தப் புன்சொல், கொற்றவாவின்சொல்லாகக்கொள்ளுதியென்றுகூறும்.

பொன்னையேநோக்கிநிற்பர்பொதுவிலைமகளிர்மாரி
தன்னையேநோக்கிநிற்குந்தரணியிற்பைங்கூழ்தந்த
அன்னையேநோக்கிநிற்குமரும்பெறற்குழவியன்ன
நின்னையேநோக்கிநிற்குநீணிலத்துயிர்களெல்லாம்.

ஆதலால், சுவாமி! இராஜசூயயாகத்திலே அநேக ராக்ஷசர்களுக்கு உபத்திரவமுண்டாகும். ஆனபடியினாலே, கருணையேயுருவமாக அவதரித்திருக்கின்ற தேவரீரால் அந்தயாகம் எப்படி செய்யப்படுமென்று சொல்லினர். அதுகேட்ட ஸ்ரீராமர் சந்தோஷத்தையடைந்து, நீ சொன்னது தகுதியேயென்று ஒப்புக்கொண்டார். அப்பொழுது லக்ஷ்மணர் ஸ்ரீராமரை நோக்கி, சுவாமி! யாகங்களுக்குள்ளே மிகவும் நன்மையானயாகம் அஸ்வமேதம், தேவேந்திரனுக்கு அந்த யாகத்தினாலே பிரமஹத்தி தீர்ந்ததென்று கேள்விப்பட்டிருக்கிறேன். அஃதெப்படியென்றால், விருத்திராசுரனென்னும் ஓரசுரன் இராச்சியாதிகாரம்பண்ணிக்கொண்டு, மதுராபட்டணத்தி லிருந்தான். அவன்சிலகாலஞ்சென்றபின்பு தன்னுடையசிரேஷ்டபுத்திரனுக்கு அரசியல் கொடுத்து, கொடுமையான தபசுபண்ணிக்கொண்டிருக்குமளவில், அதைத் தேவேந்திரனறிந்து இவனாலென்னதீங்கு விளையுமோவென்று பயந்தவனாய், சகலதேவர்களுடனேவிஷ்ணுவினிடத்துக்குச்சென்று உலகமெல்லாங்கெடும்படிதவஞ்செய்கின்ற விருத்திராசுரனைச்சங்கரித்து எங்களைரக்ஷிக்கவேணுமென்று பிரார்த்தித்தான்.

அக்கால் விஷ்ணுவானவர் அவனைப் பார்த்து, ஓ வலாரி! அந்தவசுரன் என்னிடத்தில் விசுவாசமுள்ளவனாகையாலவனை நான் வதைக்கப்படாது. பின்னை எப்படியென்னில், என்னுடையசத்தியை மூன்றுகப்பிரித்து ஒருபங்கு பூமியினிடத்திலும், ஒருபங்குவச்சிராயுதத்தினிடத்திலும், ஒருபங்கு உன்னிடத்திலும் இருக்கச்செய்கிறேன். அதுகொண்டுநீயே அவனைஜெயித்திடுக. என்றநுக்கிரகித்தனுப்புவிக்க, அப்படியே இந்திரன் சகல தேவர்களுடனே விருத்திராசுரன் தபசுசெய்துகொண்டிருக்கிற வனத்துக்குவந்து, அவனைக்கண்டுவச்சிராயுதத்தினாலே வதைத்தான். அம்மாத்திரத்திலே தேவேந்திரனைப் பிரமஹத்தி பற்றித் துன்பப்படுத்தத் தலைப்பட்டது. அதுகண்ட தேவர்கள் பின்னும் விஷ்ணுவினிடத்துக்குப்போய்த் தங்களுடைய ராஜனுக்குவந்த துன்பத்தைச்சொல்லி விசனப்பட்டார்கள் அதுகேட்டமகாவிஷ்ணு அவர்களைநோக்கி, ஓ தேவர்களே! அசுவமேதயாகம் பண்ணினால் அந்தப் பிரமஹத்தி தீருமென்று சொல்லினர். அப்படியே தேவர்கள் அந்த யாகத்தைச் செய்வித்து, முடிக்குமளவில் அந்தப் பிரமஹத்தி வெளிப்பட்டது. அதை அவர்கள் நாலுபங்காக்கிப் போக்கி, பிரமஹத்தி நீங்கிய தேவேந்திரனுடனே சகல தேவர்களும் சந்தோஷத்தை யடைந்திருந்தார்கள். ஆகையால், அசுவமேதம் அப்படிப்பட்ட மகிமையுடையதல்லவோ வென்று லக்ஷ்மணர் சொன்னார். அக்கால் பரதரும் அதுவே நலமென்று வற்புறுத்திக்கூறினர்.

ஸ்ரீராமர் பரதலக்ஷ்மணர்களுக்கு இளன் கதைகூறி அஸ்வமேதம்புரியச் சம்மதித்தல்.

இப்படி லக்ஷ்மணர் சொன்ன கதையைக்கேட்ட ஸ்ரீராமர் அந்தலக்ஷ்மணரையும் பரதரையும் நோக்கி, ஓ என் துணைவர்களே! இவ்வஸ்வமேதத்தைப்பற்றி நானுமோர்கதைசொல்லுகிறேன்கேண்மின்கள். அஃதெப்படியெனில், பாகிலீக தேசாதிபதியாகிய கர்த்தமப் பிரசாபதியினுடைய புத்திரன் இளனென்பவன். இவன் ராஜ்ஜியபரிபாலனஞ்செய்துக்கொண்டிருக்குங் காலத்தொருநாள், வனத்திலே வேட்டையாடப்போயினன். அப்பொழுது மகாதேவராகிய பரமசிவன் சகல பிராணிகளையும் ஸ்திரீரூபமாக்கிப் பார்வதிக்கு உபதேசஞ் செய்திருக்குமிடத்துக்கு அவனும் போன மாத்திரத்திலே, இவனும் இவனுடனே போனவர்களும் ஸ்திரீகளானார்கள். அப்படி ஸ்திரீரூபத்தையடைந்த இளனானவன் மிகவும் பயந்து நடுங்கி அந்தப் பரமசிவனைச்சரணமாகவடைந்தான். அதற்கு உபதேசமுறையிற் கூடியிருக்கும் பரமசிவன் இளனைநோக்கி, நீ புருஷத்தன்மை தவிர மற்றெந்தவரங்கேட்கினும் தருவோமென்றுசொல்லினர். அதற்கு அவன் மறுமொழியொன்றும் சொல்லாமல் உமையவளை மிகவும் வணங்கித் தோத்திரம்பண்ணிப்பிரார்த்தித்தான். அதற்குஉமையவள் நான் கொடுக்கவேண்டிய பாதி புருஷத்துவத்தைத் தருகிறேன். உன்மனதின்படியாகுகவென்று சொல்லினள். அதற்கவன் ஒருமாதம்பெண்ணாகவும் ஒருமாதம் ஆணாகவும் இருக்கவேணுமென்று கேட்டான். அப்படியே உமையவள் அநுக்கிரகித்து, பின்னும் அவனுக்குப் பெண்ணானகாலத்தும் புருஷனாகவிருந்ததும் புருஷனானகாலத்துப் பெண்ணாகவிருந்ததும் தெரியாதிருக்க வரங்கொடுத்தாள்.

அந்தவரத்தினால் அப்படியே இளன் பெண்ணுருவமாகி, முன்பு தன்னோடுஸ்திரீயானவர்களுடனே அந்தவனத்திலேசஞ்சரித்துக்கொண் டிருந்தான். அப்பொழுதில் அவ்விடத்தில் ஒருமடுக்கடுத்த தடாகமத்தியிலே, தபசுசெய்துக்கொண்டிருக்கும் புதனானவன் இளையைக்கண்டுமோகப்பட்டு மிகவும் ஆச்சரியத்தையடைந்து மனங்கலங்கித் தபசைவிட்டுக்கரையில்வந்து, ஆவர்த்தனியென்னும் மந்திரத்தினாலே அவளுடையசெயலையறிந்துகொண்டு, கூட நின்றவர்களைக்கிம்புருஷரிடத்திற்சேரப்பண்ணி பின்பு அவளைநோக்கி நான் சந்திரனுடையபுத்திரனாகிய புதன். என்னை நீ விரும்பிச்சேரலாம். என்று நயந்துவேண்டவும் அவளும் அப்படியே சம்மதித்தாள். அப்பொழுது அவ்விருவருங்கூடி, இஷ்டமாகக் காமசுகபோக மனுபவித்தார்கள். இப்படி மகிழ்ந்திருக்குங்காலத் தொருமாதம் ஆனவுடனே ஓர்நாள் சயனத்தைவிட்டெழுந்திருக்கும்பொழுது, இளையான விளன் புருஷரூபமாகி எழுந்தான். அந்த இளமகாராஜன் தபசுபண்ணுகிறபுதனைக்கண்டு என்னுடனே வந்த பரிவாரஜனங்களெங்கேயென்று கேட்க, அதற்குப்புதன் அவர்கள் கல்மழைபெய்து இறந்துபோய்விட்டார்களென்று சொல்ல, அதுகேட்டு எனக்கு மிகவும் உரிமையானவர்கள் இறந்தபின்பு நான் உயிர்வைத்திரேனென்று விசனப்பட்டான். அதற்குப்புதன் நீ இவ்விடத்தில் ஒருவருஷமிருந்தால் உன்னுடைய விசனந்தீரும்படி உதவி செய்கிறேனென்றுசொல்ல, அதுகேட்டுஅப்படியே ஒப்புக்கொண்டு வரத்தின்படியே ஸ்திரீயாகவும் புருஷனாகவும் இருந்தான்.

அக்காலத் தொன்பதாமாதம் புரூரவசுவென்னும் பிள்ளையைப்பெற்று புதனிடத்திற் கொடுக்க, அந்தப்பிள்ளையை அவன்வளர்த்தான். அப்படி ஒருவருஷஞ்சென்று புருஷனாகவிருக்கையில் அந்தப்புதனானவன் சம்வர்த்தர், தூருவாசர்முதலான மகாரிஷிகளை வரவழைத்து, இந்த இளனுக்கு நன்மையைச் செய்வீர்களென்று பிரார்த்தித்தான். அஃதறிந்தந்த இளனுடைய பிதாவாகிய கருத்தமப்பிரஜாபதி என்பவர் புலஸ்தியர் முதலான மகா முனிவர்களுடனே அவ்விடம்வந்து சேர்ந்தார். பின்பு அம்முனிவர்க ளெல்லோரும் ஒருவருக்கொருவர் ஆலோசித்து, இந்தக்கருத்தமப் பிரஜாபதியானவர் அசுவமேதயாகத்தைச் செய்து, பரமசிவனைப் பிரார்த்தித்தால்

அவருடைய அநுக்கிரகத்தினாலே இளனுடைய பெண்தன்மை தீருமேயன்றி, வேறொன்றினாலுந் தீராதென்று சொல்லினர். அப்படியே எல்லோருஞ்சம்மதித்து புதனுடைய ஆச்சிரமத்திலே அசுவமேதம் ஆரம்பித்து விதிப்படிசெய்து முடிக்குமளவில், பரமசிவன் எதிர்தோன்றினார். அம்மாத்திரத்திலே மகாரிஷிகள்முதலான எல்லோரும் இவனுக்குப் பெண்தன்மை தீரும்படி அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, பரமசிவனும் அப்படியே வரங்கொடுத்துப்போயினார். பின்பு அந்த மகரிஷிகளும் யாகத்தைமுடித்து, அவரவரிருக்குமிடம்போய்ச் சேர்ந்தார்கள். அந்த இளனும் புருஷத்துவத்தை யடைந்து, தன்னுடையபாகிலீகதேசத்தைவிட்டு, மத்தியதேசத்திலே பிரதிஷ்டானமென்னும் பட்டணத்தில் இருந்தான். அவனுடைய மூத்தபிள்ளையாகிய சசிபிந்துவென்பவன் பாகிலீகதேசத்துக் கதிபதியா யிருந்தான். அந்த இளமகாராஜனுக்குப் பின்பு அவனுடைய புத்திரன் புரூரவசு அந்தப் பிரதிஷ்டான பட்டணத்தில் மத்தியதேசாதிபதியானான். ஆகையால் அசுவமேதம் அப்படிப்பட்டமகிமையுடையதேயென்று ஸ்ரீராமரானவர் பரதலக்ஷ்மணர் கேட்கச் சொன்னார்,

## வேள்விச் சிறப்பு.



இப்படி பரதலக்ஷ்மணரை நோக்கிக் கூறிய ஸ்ரீராமர் மீட்டுமவர்களைப்பார்த்து, ஓ என் அநுஜர்களே! நீங்களுரைத்தபடி அதனை நாம்அநுஷ்டிக்கவேண்டும். அதற்காக நம்முடைய குலகுருவான வசிஷ்டமகாமுனிவரையும், வாமதேவர் முதலானாரையும் அழைத்து யோசித்து, அவர்கள் பணிப்பு பெற்றுக்கொண்டு, இலட்சணம் நிறைந்த குதிரையைவிட வேண்டுகிறேன் என்று தமயனாருளிச்செய்ததைக்கேட்ட லக்ஷ்மணர் அம்முனிவரரை தமயனார் சந்நிதியிலழைத்துக்கொண்டுவந்து சேர்த்தார். இப்படிச் சேர்ந்தவர்கள் கும்பிட்டு நிற்கின்ற ஸ்ரீராமமூர்த்திக்கு ஆசிகளைப் பொழிந்து, அசுவமேதத்தைநாடிய அவர் கொள்கையை மிகவுங்கொண்டாடினார்கள். அவர்கள் ஒத்துக்கொண்டதும் ஸ்ரீ ராகவேந்திரர் இளையபெருமாளைநோக்கி, நாம் செய்யும் இவ்வேள்விக்கு வானரசைனியத்தோடு சுக்ரீவமகாராஜனும் ராக்ஷசசேனையோடு விபீஷணனும் நம் பந்துக்களாகிய சகலராஜாக்களும் மற்ற அரசரும் அங்கங்கிருக்குந்தவசிகளும், பிராமணரும், ஏனைய யாவரும் வரும்படி தூதரை யனுப்புவதுமன்றி, கோமதிநதிக்கரையில் பெரிய யாகசாலை நிருமித்து அங்கநேக ஆயிரங்கலம் அரிசியும்,பலகாய்கனிவர்க்கங்களும், நெய்முதலிய ரசத்திரவியங்களும், மற்றும் வேண்டுவனவற்றையும் சேகரித்து வைக்கக் கடவாய்.

அன்றியும், அநேகமாயிரம் பெண்களும் ஆடையணி முதலியவைகளும் சேகரித்துக் கொண்டு, பரதன் அங்கு முந்திச் சென்றிருக்கவேண்டும்.அவனோடுகூடவே பலவேலைக்காரரும், சமையற்காரரும், ஆடுவோர் பாடுவோர் முதலானோரும், நம்முடையதாய்மார்களும், மற்றும் அந்தப்புரத்துள்ள நம்மவர் யாவரும்போகப் பணித்திடுவாய். சீதைக்குப் பிரதியாய் ஏற்படுத்தியிருக்கிற சுவர்ணசீதையை முன்னிட்டுக்கொண்டு பரதன்செல்லக்கடவன். அங்குவரும் அரசர் முதலானோர்க்கு இருப்பிடமுதலானவைகளையும் அங்கேயே நன்றாயமைத்திடுக. என்று இப்படி கட்டளையிட்டருளி இருந்து விக்குகளைக்கொண்டு, விதிப்படி நல்ல லக்ஷணமுள்ள குதிரையை, லக்ஷ்மணர் காவலில் வைத்து விடுத்தனர். இப்பால் ஜயராமன்வேள்வி துடங்கிட விதித்த நன்னாள் இன்றுடன் ஏழா நாளென்று வள்ளுவனனவன் எங்கும் பறைசாற்றவும், அங்கங்குள்ள ஜனங்கள்யாரும் சமுத்திர கோஷத்தினும் மேலாக விரைந்துகொண்டு, பல சம்பிரமத்தொழில்களை நடாத்தினார்கள். அஃதெப்படியென்றால்:—

### விருத்தம்.

குறைவொன்றில்லாக்கோசலநாட்டிற்சனமெல்லாம்
இறைவன்வேள்விகாணவிசைந்தோரெங்கெங்கும்
நிறைபொற்கும்பமுடனெய்விளக்குநின்றேந்தி
உறைசீர்மாடத்தொண்ணகரஞ்சென்றுறுவாரும்.

கேதுவிளங்குங்கேழ்கிளர்செம்பொற்குலைவாழை
சோதிவிளங்குந்தோரணமெங்குநடுவாரும்
வீதிகடோறும்வெண்மணலெங்கும்விடுவாரும்
வேதிகைமாடவாயில்விதானமிடுவாரும்.

காலையுதித்தஞாயிறுபோலக்கனகத்தால்
கோலநிரைத்தமாளிகைதோறுங்குடம்வைத்து
மேலொளிமுத்தின்ருமநிரைத்துமிகுபைம்பூ
மாலைநிரைத்தேதகாவணமிட்டேமகிழ்வாரும்.

சாலைகடோறுங்கோவலர்நெய்பாறயிர்வெண்ணெய்
கோலநெடுங்காவிற்கொணர்வாருங்குறைவற்ற
வாலரிசித்திண்பண்டிகள்கொண்டுவருவாரும்
மூலபலங்காயங்குளமுற்கந்தருவாரும்.

வண்டாரைம்பான் மங்கையர்கண்ணுமனமுந்தாழ்
தண்டார்நாதன்சாலைகடோறுஞ்சபைவந்தங்
குண்டாருண்டிமிக்கநல்சோறுமுயர்வெற்பின்
கண்டார்கண்டகண்டிடமெங்குஞ்சொரிவாரும்.

வந்தவரைச்சீர்மாநகருள்ளோர்மகிழ்வுற்றுத்
தந்தமனைக்கேகொண்டுபுகுந்தார்சனமெல்லாம்
சிந்தையுவப்பவின்னமிழ்தாயதினிதூட்டிச்
சந்தனமப்பித்தண்ணுறுமென்பூத்தருவாரும்.

சூதனகொங்கைச்சோருமிடைச்செந்துவர்வாயொண்
பேதையர்நெஞ்சம்பின்செலவன்பிற்பிரிவாரை
வாதைசெயும்போர்மாரனுமஞ்சும்வடிவோர்மா
வீதிகடோறும்வீரர்விநோதம்பயில்வாரும்.

கோழிப்போருங்கொண்டசினப்போர்த்தகர்முட்டும்
பூழிப்போருமஞ்சுதலின்றிப்பொருவோரும்
பாழித்திண்டோள்வீரர்பகற்கண்டிரவெல்லாம்
வீழிச்செவ்வாயார்கலவிப்போர்மிகுவாரும்.

கொஞ்சுகிளிச்சொற்கோபவிதழ்த்தாழ்குழலார்தம்
கஞ்சமுலைக்கோலஞ்செய்வகண்டாடவர்தாழ
விஞ்சொலிநற்பூண்மேனிவிளங்கப்புனையாமென்
பஞ்சியடிக்குப்பல்லணியெல்லாமணிவாரும்.

படர்ந்திருள்கேசப்பாரமதிற்பன்மலர்பெய்தும்
தடந்திகழ்கொங்கைசந்தமணிந்துந்தகவில்லோர்
வடந்திகழ்முத்தின்கோவையணிந்தும்வலியின்றி
நுடங்குமிடைக்குண்ணோவுசுளேசெய்திடுவாரும்.

ஆளியனார்தம்மாருயிர்கொள்வாரணிநாகக்
கோளநுமுத்தங்கோவைகுலைத்துத்தெரிவாரும்
காளையர்நெஞ்சங்கொள்ளவனத்திற்கருவிக்கண்
வாளிகளுள்ளேமையெனுநஞ்சமிடுவாரும்.

மென்னுரைநுண்பட்டாடையின்மெள்ளவிரைசோதிக்
கன்னிரைபைம்பொற்காஞ்சியரைக்குப்புனைவாரும்
பொன்னுரைகல்லிற்பொற்புரையென்னப்புனையாடி
இன்னுரைநல்லோர்தம்மெழில்கண்டுண்மகிழ்வாரும்.

வள்ளலிராமன்வந்திலனோவந்தனனோவென்
றெள்ளிழையாரைவீதியிலோடவிடுவாரும்
கள்ளவிழ்கோதைக்காரிகையாரிவ்வழிநண்ணப்
பள்ளிகொளாழிப்பைவிரிநாகப்பாணிப்பால்.

இப்படி நாடு நகரத்துள்ள ஆடவர்களும் ஸ்திரீகளும் ஆனந்தப் பரவசத்தராகியிருப்பர். இரதகஜதுரகபதாதிகளும் படைத்தலைவர் முதலிய பரிஜனங்களும் கோமதி நதிக்கரையைக்குறுகின. அஃதெப்படியென்றால்:—

விருத்தம்.

ஓய்வில்விசையோடுகடலோவிடுகலம்போல்
மேயமதிவெண்குடைநுரைச்சுழிகள்பாய
பாய்திரையுடைப்படர்படைக்கடலினுள்ளே
போயினவிசும்புறுபொருங்கொடியபொற்றேர்.

வெம்பியமனத்தனவிழித்துணைமுகக்கார்
அம்புநிறத்தனமுழக்கெனவசைக்கும்
கம்பமுறழ்கைக்கறையடிப்பிறைமருப்பின்
கும்பிகளிருட்குவடெனக்கடிதுபோன.

கலன்கலனெனுங்கவின்விளங்குகனகத்தால்
பொலன்கொள்புனைபூண்கள்புரைதீர்குரவனேவல்
விலங்குதவிலாதவரின்மேல்வருதநாதன்
புலன்செல்வழியாகவழிபோம்பரிகள்போன.

எடுத்ததழைசத்திரமிடத்தவடையாளக்
கொடித்திகழ்தரக்கொலையயிற்கொலைஞர்சுற்றக்
கடற்படைசெருப்பிரிகளத்தவியவொன்னார்
படச்சிலைவளைத்தவர்படைத்தலைவர்போனர்.

இறந்தகருமங்கொடுவருங்கருமமெண்ணிச்
சிறந்தவரசன்கருமநாடியதுசெய்வோர்
அறந்தழுவுநெஞ்சினரசஞ்சலர்பிழைச்சொல்
மறந்துமொழியாதவர்கண்மந்திரிகள்போனர்.

பூசுகமழ்சாந்தினர்புனைந்ததிகழ்பூணோர்
மாசறவிளங்குமணியாரமணிமார்பர்
தேசுடையவில்லிதிருவேள்வியதுகாணும்
ஆசையினராய்விரைவினுடைவர்நடந்தார்.

கஞ்சமலர்விஞ்சுகவினஞ்சியமுகத்தோர்
கொஞ்சுகிளிமென்சொலியர்கொங்கைகள்சுமந்தே,
வஞ்சிபுரைநுண்ணிடைவருந்தவழிகாண
மஞ்சர்கண்மனந்தொடரமங்கையர்கள்போனர்.

தங்கள்விழியஞ்சியுழைதன்னினமொடோடப்
பைங்கிளிசொலஞ்சியினமோடவைபறப்ப
அங்கண்மயில்சாயலவையஞ்சியகலச்சீர்
பொங்குபுணர்பூண்முலையினர்கள்சிலர்போனர்.

மத்தளமுடுக்கைதமருங்குவரவானத்
துத்தமையுருப்பசியுமுட்குமுருவத்தோர்
சித்திரமணிச்சிவிகையோரரசரைத்த
மத்திரவிழிக்கொலைகள்செய்யுமவர்போனர்.

மண்ணின்மறுவற்றொளிர்மணிச்சிவிகைமீதே
நுண்ணிசையிலேமனநுழைந்திசையினுண்ணூல்
நண்ணினவர்தும்புருவுநாரதனுநாணப்
பண்ணிசைகலந்தவழிபாடுமவர்போனர்.

குண்டிகையர்குந்துநடையோர்கள்குடையோர்கள்
தண்டினர்திரித்தருமித்தலையர்சாரப்

பெண்கெணடக்கைபிரமாதமெனவஞ்சிப்
புண்டரிகவள்ளலனபூசுரர்கள்போனர்.

மூலமெனவாயவொருமூன்றுதொகையாலே
காலமொடுகோணிலையறிந்துகடிதாகிச்
சால்புடையசாயைசலசாதனமதாகக்
கோலியறிசோதிடவர்கூடியவர்போனர்.

இணைக்கருவிவித்தகரிசைத்தவழிநான்கும்
குணக்கிரியையெட்டுமெறிகோதறுகுணத்தோர்
அணுத்தொகைமலைச்செய்தசலத்தையணுவாக்கும்
கணக்கர்கண்மணிச்சிவிகையிற்கடிதுபோனர்.

ஊனவுடல்கொண்டவர்களோடுவதுகண்டோர்
தேனனையவின்சொன்மடமங்கையர்சிரிப்ப
ஆனைபரிதேர்வரிலகப்படுதுமென்னக்
கூனருமருங்குறளருங்கடிதுபோனர்.

மண்டலமதிர்ந்திடவழங்குவழியிற்கண்
நுண்டுகெள்படச்சிகரிநூறுபடவெண்ணும்
எண்டிசைகளுங்கடகடென்னுமொலியெய்தப்
பண்டமதையெய்தவுயர்பண்டிகள்பரந்த.

கரிக்கொடுதிரட்டியதெனக்கரியமெய்யர்
பெருத்தயருதட்டையறவிட்டபெருவாயர்
சுருக்கமில்சரக்கைமலையிற்பெரிதுதுற்றுப்
பரித்தவளைசிக்கமொடிபப்பரவர்போனர்.

நன்றெனவிளங்கிடநடந்துசெலுமம்பொற்
குன்றின்மிசையேறுசிலகோலமயில்போலப்
பொன்றிகழ்மணிப்புரவிபூண்டபுனைதேர்மேல்
மன்றல்கமழ்வார்குழலினர்கள்சிலர்போனர்.

மேகநிறவண்ணல்பெருவேள்வியதுகாணும்
ஓகைதமையுந்தவணிபூணொளிபரக்க
வேகமொடுபோகுமுகின்மின்னினமெனக்கை
நாகவெரின்மீதுசிலநாரியர்கள்போனர்.

தாவிநிரையேவருதடந்திரைவிளங்கும்
தூவியிளவன்னவினமென்றுவமைசொல்லக்
கூவுகுயின்மென்சொலணிகோவைநிகர்வாயார்
வாவுபரிமீதுதிகழ்மாதர்சிலர்போனர்.

அக்கால் ஸ்ரீராமமூர்த்தியானவர் திவ்விய பரிமளவஸ்துக்களைச்சேர்த்துக் காய்ச்சப்பட்டுள்ள தைலமாடி, அந்தணர்களால் வேதகோஷடத்தோடுகொண்டுவரப்பட்டகங்காதீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்து, சிவாகம முறைப்படி நித்திய நியமாதிகளை முடித்துஆபரணசாலையுள் நுழைந்து அலங்கரித்துக்கொண்டு, சகலவாத்திய கோஷ்டத்தோடும் தமது அரண்மனையின் கோபுரவாயிலைக் கடந்து, திரிலோகத்தாரும் ஜயவிஜயீபவாவென்று வாழ்த்தும்படியாகச் சாம்பூனதத்தாற்சமைத்து, நவமணிகளால் இழைக்கப்பட்டுள்ள செழுந்தேரில் ஆரோகணித்தனர். அஃதெப்படியென்றல்:—

## விருத்தம்.

செந்நிறநளினச்சேவடியிரண்டுஞ் செறிகழல்செறிந்திடச்சேர்த்திப்,பொன்னிறவாடைபொலிவுறச்சாத்திப்புனைமணிக்கச்சரைபொருத்தி, மின்னிறவுடைவாள்கச்சொடுவிசித்துவிளங்குசீருதரபந்தனத்துக், கன்னிறச்சோதிகதிரவன்சோதிகாட்டிடக்கவின்பெறக்கட்டி.

அஞ்சனவரைபோ லழகியமார்பத்தாரமும்பதக்கமுமணிந்து, மஞ்சணிவாகுவலயமதணிந்துமாமணிக்கடகமுஞ்சாத்திக், கஞ்சநன்மலர்போற்கைவிரலாழிகடைச்செறிக்விணுறச்சாத்தி,வஞ்சிபோலிடையார்மாலுறக்கோலக்கழுத்தினின்மணிவடஞ்சாத்தி.

செந்துவர்வாயுந்தாமரைக்கண்ணும்புருவமுநெற்றியுந்திகழும், சுந்தரவதனந்துலங்கிடவிலங்குஞ்சுடர்மணித்தோடுகள்சாத்தி, இந்திரநீலக்கற்றையைவிழுங்கியிரவிமண்டிலங்கருவரைமேல், வந்துதோன்றியதுபோன்றிடத்திகழவளரொளிமணிமுடிசாத்தி.

திருமணிமார்பன்றன்றிருநெற்றிதிகழ்திருநாமமுஞ்சாத்தி, எரிமணிச்சோதியரியணைநின்றுமிழிந்திளையோர்கள்கைகொடுப்ப,வருமணியாரத்தவனியாண்மன்னனருள்வழிபுகுந்துபோவார்கள், குருமணிமகுடகோடிகடேய்க்குங்கோபுரவாயிலைக்கடந்தான்.

மத்தளமுடுக்கைபேரியொண்படகம்வளையொலிகொம்பொலிகாளம்,எத்திசைதோறுமூதொலிதாளத்தெழுமொலிதுடியொலியெங்கும், வித்தகர்பாடும்பாட்டொலியாழின்வீணையொலிசச்சரிதாளம், ஒத்தொலியெல்லாமோரொலியாகியுவாக்கடல்கிளர்ந்தெனவோங்க.

மங்கையர்வாழ்த்தமாகதரேத்தமறையவராசிகள்கூறப், பொங்கியகடலிற் புடைபரந்திரைத்துப்பொன்னகர்ச்சனம்புடைசுற்றப், பங்கமில்வீரன்பங்கயக்கண்ணாற்பார்த்தபார்த்திடமெலாஞ்சனங்கள், செங்கரங்கூப்பத்தேவர்களுவப்பவேறினன்செழுமணித்திண்டேர்.

இப்படி தேரேறிய ஸ்ரீராமர் சூரியன் சந்திரன் முதலாகிய நவக்கிரகங்களுக்கும் நக்ஷத்திரங்களுக்கும் ஒப்பாகிய, அநேகவித ரத்தினங்களாற் பத்திபத்தியாக உண்டாக்கப்பட்டிருக்கின்ற மாடமாளிகைகள் நிறைந்த வீதியில், தேவர்கள் ஆந்தரத்தினின்று மலர்மாரி பொழிய வரும்போது, ஆங்காங்கு தெய்வசின்னங்கள் மாறிமாறி யூதத் தலைப்பட்டன. அஃதெப்படியென்றல்:—

## விருத்தம்.

கம்புவைத்தரித்தகையிற்கார்முகந்தரித்தான்வந்தான்
அம்புயக்கண்ணன்வந்தானன்பருக்கன்பன்வந்தான்

தம்பியர்க்கினியான்வந்தான் றசரதராமன்வந்தான்
உம்பருக்கமிழ்தமுன்னளுதவியவொருவன்வந்தான்.

மனுகுலம்விளங்கத்தோன் றிவரிசிலையிளையோனேடும்
முனியொடுபோனன்வந்தான்முப்புரமெரித்தவில்லி
தனுவினையிறுத்துச்சீதைதனைக்கரம்பிடித்தான்வந்தான்
அனையவளுடனேமீண்டுமயோத்தியிலடைந்தான்வந்தான்

தாயுரைதலைமேற்கொண்டுதையலையுடனேகொண்டு
தீயவெங்கானஞ்சேர்ந்தசெருவலிவில்லிவந்தான்
தூயமாமுனிவன்முன்புதோன்றியதூயோன்வந்தான்
மாயமாரீசன்மாளவரிசிலைவளைத்தோன்வந்தான்.

அனுமனையடிமைகொண்டாங்காயிரங்கதிரோன்மைந்தற்
கினியனுய்வாலிமாளவெரிசரந்துரந்தான்வந்தான்
நினைவதன்முன்னமாழிநீரெலாநெருப்பதாகக்
குனிசிலைவளைத்தான்வந்தான்கோசலைநாடன்வந்தான்.

குன்றினலாழிகட்டிக்கொடுந்திறற்சேனையோடு
சென்றிராக்கதரையெல்லாஞ்செருக்களத்தவியநூறித்
தன்றிறலழிந்துநின்றதசமுகன்வலிமைகண்டங்
கின்றுபோய்நாளைவாவென்றியம்பியவிறைவன்வந்தான்.

முன்னநாஞ்சொன்னநாளின்முடிகிநாஞ்செல்லோமாயின்
வன்னியிற்பரதன்வீழுமென்றுதன்மனத்திலெண்ணி
அன்னவனெறிவிழாமலநுமனைமுன்னேயேவிப் [தான்.
பொன்னகரடைந்தான்வந்தான் புவனமூன்றுடையான்வந்

இப்படிதெய்வசின்னங்கள் மாறிமாறி யூதும்படியாக ராமபிரானனவர் அயோத்தியாபுரியினதுமாடவீதியில் ரதாரூடராய் வரும்பொழுது, பேதைமுதல் பெதும்பையீருயுள்ள ஸ்திரீஜனங்களெல்லாம் தத்தம் மாடங்கள்தோறும், அம்மாடங்களின் வாயில்கள்தோறும் நின்று, அவரைக்காணுந்தோறும் தம்முடகாதலானது, மேன்மேலுமோங்கும்படியாகக் கூடிப் பலவாறு பேசுவதானர்கள். அஃதெப்படியென்றால்,

### விருத்தம்.

வண்ணமாமுகிலோமையோமரகதவடிவோவள்ளல்
ஒண்ணிறமிவையொன்ருகவுருக்கியவுருவோவென்பார்
கண்ணிணைசெவ்வாய்பாதங்கைத்தலங்கமலமென்பார் [ர்.
புண்ணியஞ்செய்தாரிந்தப்புறக்கொடைதொழுவாரென்பா

கள்ளமாமனக்கைகேசிகண்களாலிவனைக்கண்டும்
முள்ளழற்கானத்தேவமுயன்றனளென்னேவென்பார்
ஒள்ளழற்றாயிற்பாலுயர்ந்தகோசலையென்பாளிப் [பார்.
பிள்ளையைப்பெறுதற்கென்ன பெருந்தவஞ்செய்தாளென்

சிறந்தசீர்முகமுங்கண்ணும்புருவமுஞ்செய்யவாயும்
நிறைந்தபூண்மார்புமெங்கணெஞ்சுவிட்டகலாதென்பார்
அறம்புரிமனத்தளாகியருந்தவஞ்செய்துபெண்ணுப்
பிறந்திலளிவனைப்பெற்றும்பெற்றிலள்சீதையென்பார்.

பங்கயக்கண்ணற்பற்றிப்பார்த்தனனம்மையென்பார்
அங்கவைபொதுநோக்காகுமவனியில்வந்துதோன்றும்
செங்கயற்கருங்கட்செவ்வாய்ச்சீதையைப்பார்த்தகண்ணால்
நங்களைப்பார்க்குமோதான்ஞாலநாயகனின்றென்பார்.

இப்படி ஸ்திரீஜனங்களெல்லாம் ஸ்ரீரகுநாயகன்மேல்வைத்தகண் வாங்காதபடி பார்த்து உழலுஞ் சிந்தையராகி, தங்கள் வளையுங்கலையுஞ் சோரவும் செயலுஞ்சேட்டையுமாறவும் சித்திரம்போல் நின்றார்கள். அவருள்:—

### விருத்தம்.

கொங்கணைகுழலோர்மங்கை கொண்டலைக்கண்டாள் காமன், வெங்கணைநிறத்திற்பாயமென்மயில்போலவீழ்ந் தாள், அங்கணைபுடையோர்தாங்கியரிதினிற்கொடுபோய் மாதர், பொங்கணைக்கிடத்திச்சீதப்புனன்முகந்தெளித்துந் தேறாள்.

கனக்கருநிறத்தினனென்கண்வழியதனால்வந்தேன்
மனத்திடைப்புகுந்தான்வந்தவழியவன்பேர்கிற்பின்னை
எனக்கவன்பிடிக்கொடானென் றிமைக்கதவடைத்தாளே
நினைத்ததுமுடித்தேனென்றுநெடுநிலைமாடம்புக்காள்.[ழை

பேதையங்கொருத்திதன்கைபெய்வளைகழலநின்றாள், ஆதலாற்றெழுதேனென்கை யணிவளைகொண்டானென் கண்,ஈதவன்கருணையான்சென்றிரந்திடத்தாராேனலென், வாய்தலிலவனேவந்தால்வளைக்குநான்வனைப்பனென்றாள்.

புனமயிற்சாயற்பைம்பொற் பூண்முலையொருத்தியந் தச், சனமுடைத்தெருவைவிட்டுத்தசரதராமனென்றன், மனதிடைத்தனியேவந்து புகுந்துநானுறங்கும்போழ்து, கனவிடைத்தோன்றுமேதான் கருத்தினைமுடிப்பேனென் றாள்.

இவ்வண்ணமாக மடவார்களெல்லாம் சிந்தைமயங்கி நிற்கும்படியாக, ஸ்ரீராமமூர்த்தியானவர் அவ்வயோத்தியா நகர்த்தினது மாடவீதியைக்கடந்து சென்று, கோமதியென்னும் நதிக்கரையைச் சேர்ந்தார். அப்பால் பரதாழ்வான் சுவாமியின் ஆக்கினைப்படி கோமதிதீரத்திலுள்ள நைமிசமென்னும்புண்ணியஸ்தலத்தில் யாகசாலைமுதலியனசமைப்பித்து, அவற்றிற்குவேண்டுவனவெல்லாம் கொண்டு சேர்த்தார். சத்துருக்கனழ்வான் அங்கெய்தும் பார்த்திபர்க்குவேண்டியவற்றையமைத்துக்கொண்டு நின்றனர். அக்கால் முன்னர் ஸ்ரீராமர் நியமனத்தின்படியே இளையபெருமாள் அங்கங்கே தூதுவரையனுப்ப, ஆங்காங்குள்ளயாவரும் பிரயாணமாகி அக்கோமதி நதிக்கரையிலுள்ள நைமிசாரண்யம்வந்து சேர்ந்தார்கள். அஃதெப்படியென்றால்:—

### விருத்தம்.

காரைநெருங்குகொடையங்கர்வங்கர்கலிங்கர்காம்போசர்
வீரராயபாஞ்சாலர்விலாடரிலாடர்விறன்மிக்க
சூரர்சீனர்மகதேசர்தோலாவென்றியாதவர்கள்
சேரசோழபாண்டியர்கள்சிந்துமன்னர்திரிகத்தர்.

காதுவைவேற்காம்பீரர்கங்கர்கொங்கர்கருநாடர்
சேதிமன்னர்குருமன்னர்சிங்களேசர்வந்திகர்
சோதிமணிமாமுடிச்சனகர்துருக்கர்துளுவரெனவிவர்கள்
ஆதியாயமுடிமன்னரளவில்சேனையொடும்வந்தார்.

தன்னில்வலியோரிலாவனலனனிலனரன்சிர்ச்சம்பாதி
என்னுமமைச்சர்புடைசூழவெதிரிலாதசேனையொடும்
மின்னுமணிமாமுடிச்சோதிவெய்யோனுதயவெயில்விரிப்ப
மன்னனிராமன்பெருவேள்விகாணவலிவீடணன்வந்தான்.

சங்கன்குமுதன்சதவலிபோர்த்தாரன்சாம்பன்சாபன்போர்
பங்கமிலாதவங்கதன்றன்சங்கன்பனசன்பாருலகில் [ப்
எங்கும்வலியேறியநீலனிடபன்கவயனெறிகடலைத் [ன்.
தங்கவணைசெய்தவன்மயிந்தன்றுமிந்தன்றுசிரன்றன்மருட

ஊழிநெருப்புங்காற்றும்போலுடன்றுபொருகேசரியாதி
பாழிமிக்கபடைத்தலைவர்பக்கஞ்சேவித்துடன்போத
எழுபத்தின்பெருவெள்ளமென்னுந்தகைவானரச்சேனை
சூழவென்றியநமனுடன்சுக்கிரீவன்றோன்றினன்.

ஆசையற்றதூயநெஞ்சத்தாங்கிராவத்திரிமாயைக்
காசையற்றஞானக்கட்காசிபன்கோசிகன்விதனப்
பாசமற்றசமதக்கினிபரத்துவாசன்கோதமன்பூ
நேசமற்றோர்மற்றோருநெடியதவத்துச்சாபாலி.

காயங்குறியநெடுந்தவத்தோன் கண்ணுவன்றௌமிய ன்கனலின், தூயனுயபுலத்தியன்றன்சுவத்திதவத்தைத்துர ந்தழிக்கும், தீயபுலன்களைந்தடக்கித்தெளிந்தஞானப்பிருகு முதல், ஆயமாயப்பிறப்பறுத்தோரகண்டவேதக்கரைகண் டோர்.

சய்யிற்றிகழும்பவித்திரர்கள் காதிற்றூங்குங்குண்டல த்தர், மெய்யிற்றிகழ்ந்துதோன்றொளியர்விளங்குமரையின் மரவுரியர், பொய்யிற்புரளாநாவினர்நற்பொருளிற்செல்லுந் தியானத்தோர், எய்விற்கரத்தோன்பெருவேள்விகாணவெ ழுந்தவுவகையினோர்.

சின்னூல்வழியாமறுசமயச்சிலுகில்வீழாதுலகுய்யத்
தொன்னூலன்னமாயுரைத்ததூயோற்காணவச்சுருதி
நன்னூலெல்லாமுருக்கொண்டுநடந்துசெல்லுமாபோல
முன்னூறிகழுந்திருமார்பர்முனிவர்வேள்விவனம்புகுந்தார்

தேடுதனம்பூணுடைமுதலடங்கக்கொண்டுசேனையொடும்
கூடியடங்கவருதவினலந்தக்குலமன்னவர்வாழும்
நாடுந்தூயநலமிக்கநைமிசாரணியமென்னும்
காடோடாயினதென்றூற்சனத்தையாரேகணக்கிடுவார்.

அக்கால் ஸ்ரீரகுநந்தனர் அங்குவரும் முனிவர்களையெல்லாந் தொழுதும், தம் மைத் தொழுதோர்க்குத் தக்க உபசாரஞ் சொல்லித் தழுவியும், அவர்கள் கூட்டத் தின் நடுவே இனிதுவீற்றிருந்தார். லக்ஷ் மணர் சுக்கிரீவமகாராஜனையும் மற்றுள்ள வானரவீரர்களையும் துணையாகக்கொண்டு, அந்தணர் முதலிய எல்லாவருணத்தாருக் கும் அடிசில்முதலியபரிமாறி, உபசரித்து வந்தார். அப்போது ஜனங்கள் யாவருங் களிப்பெய்தியது எப்படியென்றால்:—

### விருத்தம்.

மூட்டுமுத்தீயந்தணர்கண்முதலாநீசர்சடையாக
ஈட்டுந்தனமார்பெருவேள்விக் கிளையோன்சமைவித்திடுமெ
காட்டுமடிசிறம்முடையகாதன்மடவாரன்பினொடும் [முதம்
ஊட்டவுண்ணுமாபோலவுண்டுகளித்தாருறுசனங்கள்.

வாட்டமில்லாவரையொருமாமந்தரத்தைமத்தாக
நாட்டிவெய்யவாசுகியாமாநாகத்தைநாணகப்
பூட்டியாழிகடைந்தமிழ்தம்புகழவானோரானோரை [ளோ.
ஊட்டினூற்கிவ்வுலகுள்ளோர்க் கடிசிலூட்டவொருபொரு

அக்கால் விபீஷணர் தந்துணைவராய பிசிதாசனரோடு முனிவர்க்குப் பூசனை இய ற்றிக்கொண்டு இருந்தார். இத்தன்மையா கவே அவரவர் யாதொருகுறையும் வராதி ருக்கும்படி, அந்தந்தக்காரியங்களைக் கைக் கொண்டதனால், அத்தேவயசனம் யாவ ருங் கொண்டாடும்படி நடந்துவந்தது. இன்னது வேண்டுமென்று வாய்திறக்குமு ன்னே, அஃது அவரவர்க்கு இருமடங்கா கக் கொடுக்கப்பட்டது. ஆண்டுச்சென்ற வருள் ஒருவராயினும் எமக்கு இன்னது குறையெனக்கூறவிடமின்றி யாவரும் விரு ப்பமெல்லாம்பெற்றும் விளங்கினர். தபோ தனரெல்லாம் லோகபாலகரிடத்தும், இத் தன்மையதாய் ஸவனம் நடக்கக் கண்டி லோமென வியந்து புகழ்ந்துக்கொண்டிரு ந்தனர்.

### குசலவர் வால்மீகராக்ஞையால் யாகசாலை யுட்சென்று இராமாயணம்பாடி ரகு நந்தனரை மகிழ்வித்தல்.



இவ்வாறு சிறக்க வியற்றப்பட்டுவரு மகத்திற்கு வான்மீகிமுனிவர் எழுந்தருளி, புறநகரிலமைத்த பர்ணசாலையிலிறங்கி, தம் சீஷர்களான குசலவரைநோக்கி, ஓ பிள்ளை காள்! நீவிர் யாகசாலையிடஞ்சென்று, இரு டிகள் ராஜாக்கள் முதலியோர் குழுமியிரு

க்குமிடமெங்கும் யாம் கற்பித்தபடி ராமாயணத்தை உச்சரிப்பும், ஸ்வரலயைகளும், தாளப்பிரமாணங்களும்தப்பாமல், யாழின் தந்தி ஸ்வரத்தோடுகூட மிளிதமாகும்படி, செவிக்குஇனிமையாகப்பாடுங்கள். நீங்கள் யாரென்று யார்வினவினும் யாம் வான்மீக முனிவரின் மாணுக்கரெனவே விடைதாருங்கள். ஆதிதொடங்கி நாளொன்றுக்கு இருபது சருக்கமாகப் பாடக் கடவீர்கள். நமதுபர்ணசாலையின்வாயிலில் பண்டிபண்டியாய் மதுரமானகனிகளும்கிழங்குகளும் மற்றும் திண்பண்டங்களு மிருக்கின்றனவாதலின், உங்கட்குவேண்டும்போது அவற்றை நுகர்ந்து, அயர்வின்றி களிப்போடு உல்லாசமாகக் கானஞ்செய்யுங்கள் என நியமித்தனர். அவ்விரட்டையர் அப்படியேயென ஒப்புக்கொண்டு, விடிந்ததும் நீராடி சந்தியாவந்தனுதிகளும் சமிதாதானமுஞ் செய்து, பின்னர் வீணையினடிகளை மாடகம்பற்றியிறுக்கிமீட்டிக்கொண்டு சென்று, ஒத்தகுரலினராய்த் தம்மாசிரியராற் புதிதா யியற்றப்பட்ட காப்பியத்தை, முதல்துவக்கி மதுரமாகப் பாடிவந்தனர்.

அதை ஸ்ரீசக்கரவர்த்தி திருமகனர் திருச்செவிசாத்தி, அக்கவியின் இனிமைக்கும், கானத்தின் இனிமைக்கும் போதவுகந்து, மற்றைநாள்வைகரையிற் காலைக்கடன் கழித்தவுடன் யாகசாலையிற்சென்று, சங்கிதபரதங்களில்வல்லவரையும், காவியாலங்காரங்களிற் றேர்ந்தவரையும், சத்தம் சோதிடம் புராண முதலியவற்றை முற்றக்கற்றவரையும், வேதவேதாந்த பாரங்கதரையும், லவுகிகவியவகாரங்களிற் பயின்றவரையும், மேன்மேல் யுக்திசொல்லவல்ல தார்க்கீகரையும், மற்றுமுள்ள அரசர் அந்தணர் முதலியோரையும் வருவித்து, அப்பிள்ளைகள்பாடும்காவியத்தைக் கேட்பித்தார். அங்கிருந்த முனிவரும் பிறரும் அச்சிறுவர் உருவத்தைப் பார்த்து, இவர்யாரோ அறிகிலோம். ஸ்ரீராமச்சந்திரர் உருவத்தோடு ஒத்து, ஒருபிம்பத்திலெடுத்த பிரதிபிம்பம்போ லிருக்கின்றனர். சடைமுடியும் மரவுரியும் நீக்கிவிட்டால் வேற்றுமைகாண்பரிது. கல்வித்திறமோ வியந்து முடியாததாய் இருக்கின்றது. காவியமோ அற்புதம். இவர்களின் வரலாற்றை அறியவேண்டும். என்றிப்படி ஒருவரோடொருவர் பேசிக்கொண்டும் கொண்டாடிக்கொண்டும், அவர்களை நோக்குவதிலும் பாட்டைக் கேட்பதிலும், மனமொழியாதிருந்தனர். ஸ்ரீராமபிரானும் ஒருநாள் அபரான்னத்தில் இளையபெருமாளை நோக்கி, இச்சிறியபாலகர்க்குப் பதினெண்ணுயிரம் பொன்னும், வேண்டும் ஆடைமுதலியவும் அளிப்பாயென்றனர். அவரும் அங்ஙனமேயளிக்க, அவ்விளைஞர் காய்கனியருந்திக் கானகத்துறைவோருக்கு இப்பொன்னுற் பயன் யாது? ஆதலின் எமக்கு வேண்டாமென மறுக்க, அதைக்கண்டு யாவரும் விம்மிதங்கொண்டிருந்தனர்.

அக்கால் ஸ்ரீராகவபிரானுனவர் அவர்களைநோக்கிச் சொல்லுகின்றூர். ஓ மக்காள்?

மன்னவர்வலிதின்வௌவாவளமனைக்கள்ளர்கொள்ளா
இன்னுயிர்க்கிறுதிசெய்யாவிழந்தபினிரங்கல்வேண்டா
துன்னியதுயிலையொட்டாதோகையர்காதல்கூட்டா
உன்னியபொருளைநீட்டாமுடைமையினின்மைநன்றால்.

பூரியர்தமைவேந்தர்க்கும்புவிபுரப்பிக்குந்துய்க்கும்
சீரியவுண்டிசேர்க்குந்தேவர்தம்முலகம்போக்கும்
காரியமனைத்துங்கூட்டுங்கருதலர்தம்மைவாட்டும் [ர்.
கூரியதிதன்மேலில்லைகொழும்பொனீர் கொண்மினென்று

என்று கூறவும் அப்பிள்ளைகள் மீட்டும் ஸ்ரீராமபிரானை நோக்கிச் சொல்லுவதானூர்கள்.

மூலமுஞ்சாகந்தானும்பலங்களுமுவந்துகொள்ளும்
மாலையமுனிவரோடவ்வனத்துறைவோமதானுல்
காலைநீரருளுகின்றகாஞ்சனங்காஞ்சிரங்காய்
போலுமதெங்கட்கென்றுபுகன்றனர்புதல்வர்தாமே.

என்று ராமானுஜருக்குக்கூறியபடியே கூறவும், அதற்கு ஸ்ரீராகவேந்திரர் சந்தோஷித்து, ஓ பிள்ளைகாள்! இக்காவியத்தின் அளவு என்ன? கதை எதுவரையிற் சொல்கின்றது? இப்பிரபந்தஞ்செய்தமுனிவர் இப்போது எங்கிருக்கின்றனர்? என்று அந்தக்குமரரைவினவ, அவர்கள் அவரை நோக்கி, ஓ இராஜேந்திரரே! இதன் கர்த்தா வான்மீகமகாரிஷி! இந்த யாகத்திற்காகஇங்கெழுந்தருளி, பர்ணசாலையின்கண் வீற்றிருக்கின்றனர். பிரபந்தம் இருபத்துநாலாயிரம் சுலோகப் பிரமாணமுள்ளது. நூறு உபாக்கியானங்களையுடையது. ஐந்

நூறு சருக்கங்களடங்கிய ஆறுகாண்டமும் உத்தரகாண்டமுமாகப் பிரிக்கப் பட்டது. காவியநாயகருடைய ஆயுள் அளவுமுள்ள சரித்திரங்களமைந்தது. திருச்செவிசாய்க்கத் திருவுள்ளமாயின் அதிகமாய் ஒழிந்திருக்கும்வேளையிற் பாடுகிறோம் என்றனர். அங்ஙனமேபாடுங்களெனச் சுவாமி அங்கீகரிக்க, அதை அப்பிள்ளைகள் குதூகலத்தோடு, பர்ணசாலைக்குச் சென்று ஆசாரியரிடம் விண்ணப்பஞ்செய்துவந்து நாடோறும் முறையே பாடிவந்தனர்.

### ஸ்ரீராமர் குசலவரைத் தமது மக்களென்று அறிந்து வான்மீகரையும் சீதையையும் அழைப்பித்தல்.



இங்ஙனம் பலநாள் நடந்துவருகையில், ஸ்ரீராகவபுங்கவர் இக்காயகரிருவரும் ஜானகியிடமுதித்த, தமது சேய்களெனவறிந்து சிந்தையிற் குதூஹலங்கொண்டு, அவையின்கண்ணே தூதர் சிலரை விளித்து, நீவிர் வான்மீகிபகவான் சந்நிதிக்குச்சென்று, சீதை கல்மிஷமின்றி சுத்தமான ஒழுக்கமுள்ளவளாயின், அம்முனிவருடைய கட்டளையினால், இச்சபைநடுவே நம்பிக்கைவரத்தக்க சபதஞ் செய்யக்கடவளென்று விஞ்ஞாபனஞ் செய்யுங்கள். இவ்விஷயத்தில் அம்மகாரிஷியின்கருத்தும் சீதையின்கருத்தும் இத்தன்மையதெனவறிந்து, துரிதமாக நமக்கறிவிக்கவேண்டும். உடன்பாடாயின், நாளைக் காலையிலேயே இவ்வண்ணஞ்செயல்வேண்டும்என்றுஆக்கியாபித்தருளினர். அவ்வினையுரைப்போர் உடனே அம்முனிபுங்கவர் சந்நிதானஞ் சென்று வணங்கி, ஸ்ரீராமவாக்கியத்தை விண்ணப்பஞ்செய்ய, அவர் நல்லது அப்படியே சீதை செய்வாளென்று நும்மரசற்குக் கூறுமின்களென்றனர். அத்தூதுவர் அவ்வாக்கியத்தை சிரமேற்கொண்டு, ஸ்ரீரகுநாயகரிடம் விஞ்ஞாபனம் செய்தனர். அதுசெவியிற்பட்டவுடனே ஸ்ரீராமர்களிப்புற்று, ஆண்டு குழுவிநின்ற முனிவர் அரசர்முதலியயாவரையும்நோக்கி, நாளைக் காலை சீதை தனது நல்லொழுக்கத்திற்குக் குறியாகப் பிரமாணஞ் செய்யச் சித்தமாயிருக்கின்றாள். யாரார் காணப் பிரியமுள்ளவரோ அவரெல்லாம் இங்குவந்திருக்கலாமென வுரைத்தனர். அதனை யாவருங்கொண்டாடிப் புகழ்ந்து, விடைபெற்றுத் தத்தமிடஞ்சென்றனர்.

இப்பால் மறுநாளுதயத்தில் வசிஷ்டர்-வாமதேவர்-விசுவாமித்திரர்-சதானந்தர்-பரத்துவாசர்-அகஸ்தியர்-நாரதர் முதலிய இருடிகளும், விபீஷணர்முதலிய அரக்கரும், சுக்கிரீவன் முதலிய கபிகளும், மற்றும் அந்தணர்-அரசர்-வைசியர்-சூத்திரர் ஆகிய நால் வருணத்தினரும்வந்து சபைகூடி நிற்க; வான்மீகமகாமுனிவரும் மாணாக்கரோடு அவ்விடந்துன்னினர். அவர் பின்புறத்திற் பிராட்டியார் காஷாயவாடையும்,குவித்தகையும்,குனிந்தசென்னியுமாகி, பிரமனை தொடர்ந்து சுருதிவருவதுபோல் வந்து நின்றனள். இவ்வாறு அனைவரும் சேர்ந்திருக்க, அந்தப் பிராசேதசரான வான்மீகிமுனிவரர் ஸ்ரீரகுவரரைநோக்கி, ஓ தசரதகுமாரரே! இதோ நிற்கின்ற சீதை மகா பதிவிரதை! மேன்மையான தருமாசாரமுள்ளவள். கரணமூன்றிலுங் குற்றமற்றவள். உலகத்தின் அபவாதத்துக்கு அஞ்சின உமக்கு நம்பிக்கைகொடுக்கச் சித்தையாயிருக்கின்றாள். இதோ நிற்கிற குமாரர் இருவரும் உமதுபுத்திரர். இரட்டைப் பிறப்பினர். நான் சத்தியமேசொல்கிறேன். நான் வருணதேவருடைய பத்தாங் குமாரன். பொய்யை நினைத்துமறியேன். ஈண்டு யானுரைத்தவை பொய்யாயின்! அநேக ஆயிர வருஷங்களாகச் செய்த தவத்தின் பயனை இழக்கக்கடவேன். ஐம்பொறிகளிலும் அந்தக்கரணத்திலும், இவள் தூயவளெனத் தெரிந்தேன் யான் இவளை ஆதரித்து வந்தேன். இவள் உலக நிந்தைக்கு வெருவி, தன்னைக்காட்டி லுய்த்த உமக்கெதிரிற் சபதஞ் செய்யக் காத்திருக்கிறாள். என்று உறுதியாக மொழிந்தனர்.

பிறகு காகுத்தசிரோமணி அஞ்சலியஸ்தம் செய்துகொண்டு, சுவாமீ! தேவரீர் வாக்கியங்களே நம்பிக்கைக்குப் போதுமானவை. முன்பு இவள் தேவதைகள் சந்நிதானத்திற் சபதஞ்செய்ததினாலேயே சுத்தமானவளென நிச்சயித்தும் மனையில்வைத்துக்கொண்டேன். இவளுடைய நல்லொழுக்கங்களும் நற்குணங்களும் அடியேற்

குத்தெரியாதனவல்ல. ஆயினும் லோகஅபவாதபயத்தினுற் புறம்விட்டதைத்தேவரீர் க்ஷமித்தருளவேண்டும். இச்சிறுவரும் என் மக்களெனத் தெரிந்துகொண்டேன். இவ்வாறு பரிசுத்தமான இம்மைதிலியிடம் எனக்கு அன்புபெருகக்கடவது. என்றியம்பி நிற்கையில் ஜானகிசெய்யுஞ் சபதத்தினிமித்தம் இந்திராதி சகலதேவர்களும் சதுர்முகக்கடவுளையும் முன்னிட்டுக்கொண்டு அவ்விடஞ்சேர்ந்தனர். இவர்கள் சேர்ந்ததைக் கண்ட ஸ்ரீராகவர் முன்போலவே மறுபடியும் உரைத்தருளினுர். அப்போது வாயுபகவான் யாவரும் ஆனந்திக்குமாறு, சுகமான பரிமளத்தோடும் சுத்தமான கந்தத்தோடும் வீசினுர். இதைக்கண்டு ஆங்குதுன்னியயாவரும் பெருவியப்போடு பெருங்களிப்பும் அடைந்தனர்.

வான்மீகரோடுபோகசாலைவந்தசீதை தனது
கற்பைப்பற்றி பிரமாணஞ்செய்து
பூப்பிரவேசமாக அப்பூதேவி
மேற்சினந்த ஸ்ரீராமர் பிரமனுற்
றணிந்துமீண்டும் அயோ
த்தியையடைதல்.



இப்படியிருக்க பிராட்டியார் கண்கள் நீராற் சுழலாநிற்க, யாவருக்கும் கைகுவித்துத் தரையை நோக்கிக்கொண்டு, நான் மனமொழிமெய்களினுலே ஸ்ரீராமமூர்த்தியன்றி மற்றெவரையும் பரிசியாதிருந்தவளாயின், இப்பூமாதேவி எனக்குத் தன்னிடத்தில் இடங்கொடுக்கக்கடவள். நான் மூன்றுகரணங்களாலும், இந்தப் புருஷசிங்கத்தையே பூசித்திருப்பேனுகில், இப்பூமிதேவி என்கருத்தை நிறைவேற்றக்கடவள். யானுரைத்தவெல்லாம் உண்மையாயின் என்தாய் என்னைத் தன்வயிற்றில் அடக்கக்கடவள். எனப்பிரமாணஞ்செய்து நின்ருர். இப்படி சபதஞ்செய்தபோது, பூமியிலிருந்து ஒருதிவ்யசிங்காதனமானது திவ்வியமான ரத்தினுபரணம்பூண்ட நாகலோகத்தாராலே சிரமேற்கொள்ளப்பட்டதாய்த் தோன்றியது. உடனே பூமாதேவி வந்துதன்னிரண்டுபுஜங்களாலேசீதையை அணைத்தெடுத்து, அச்சிங்காதனத்தின் மேல் வைத்துக்கொண்டு உள்ளே புகுந்துவிட்டாள்.

இவ்வாறு பிராட்டி பூமிக்குள் பிரவேசித்தவளவில், வானவர் பூமழைபெய்து புகழ, புவியிலிருந்தோரும் ஆச்சரியத்தோடுகூவிப் புகழ்ந்தனர். யாவரும் சிறிதுபொழுது ஒன்றுந்தோன்ருது, பாவைகளையொத்திருந்தனர். அக்கால் தசரத நந்தனரோ? ஓர் தடிக்கொம்பைப் பற்றிக்கொண்டு தலைகுனிந்து, கண்ணீர்மல்கி மனஞ்சோர நின்று, நெடுநேரம் அழுதரற்றிச் சோகமுங் குரோதமும் மிஞ்சி, பூதேவியை விளித்து இங்ஙனமிசைக்கலாயினுர். ஓ நிலமகளே! நான் பார்த்துக்கொண்டேயிருக்கையிற் சீதை மறைந்ததினுலே சோகமானது என்மனதை வருத்தலாகின்றது; முன்பவள் காணுதிருந்தபோது, கடலைக் கடந்து லங்கையைவென்று கொணர்ந்தேன். இப்போதும் உன்னைகடிகண்டு கொண்டுவரமாட்டுவேன். அப்படிவேண்டாம், நீயேஎன்னரியகாதலியைக்கொண்டுவந்து கொடு. இன்றேல், அவள் சென்றவழியாகிலும் எனக்குக்காட்டுக. எதுவும் செய்யாதொழிவையாயின், உன்னை மலை-கடல்-காடுகளோடு நீருக்கிவிடுகிறேன். அவளிருக்குமிடத்திலாகிலும் என்னைக் கொண்டுபோய்விடு. இப்போது அவளிருக்குமிடம் சொர்க்கமோ? பாதாளமோ? மற்றெதுவோ? அவளோடுகூட நானிருக்க விரும்புகின்றேன். நீ என்றனுக்கு மாமியாயிருந்து இங்ஙனஞ் செய்வது நலமன்று என, இவ்வாறு புகன்று உலகத்தை எரிப்பவர்போனிற்கையில், கமலாசனரான பிரமதேவர் வானவர் குழுவோடணுகி விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினுர்.

ஐயா ஸ்ரீராமபிரானே! தேவரீர் இவ்வண்ணம் வருந்தலாகுமோ? தேவரீருடைய முந்திய தன்மையாகிய விஷ்ணுபாவத்தையும், சொர்க்கிகளோடு நிர்ணயித்ததையும் நினைத்துக் கொள்ளுமாறு இங்ஙன நினைப்பிக்கின்றேனேயல்லது வேறில்லை. சீதாதேவியும் தேவரீரோடு பூர்வீகரூபத்தையே அடையுந்தன்மையள். இப்போது நாகலோகத்தில் எழுந்தருளியிருக்கின்ருள். பரமபதத்தில் உம்மோடு சேர்வாள். இதுநிற்க, வான்மீகமுனிவரால் தேவரீருடைய சரித்திரம் அமைத்துச்செய்யப்பட்ட இக்காவியமே மேலான காவி

யம். இதுவே ஆதிகாவியம். யான் தேவதைகளோடுகூட முன்பே கேட்டிருக்கின்றேன். இதுவெகு அற்புதமானது. இதில் மிகுந்திருக்கிறபாகத்தைத் தேவரீரே செவிசாய்த்தருளல்வேண்டும். பிறர் கேட்கலாகாது. தேவரீரன்றிக் காவியம்பெறத்தகும் புருடனெங்குமில்லை. என்றிப்படி விண்ணப்பஞ் செய்து தமது உலகத்திற்குச் சென்றார்.

பின்பு பெரியபெருமாள் பிராசேதச முநீந்திரரைநோக்கி, சுவாமி! இந்த நான்முகக்கடவுளின் கட்டளைப்படி அடியேனுடைய உத்தர சரித்திரம் நாளைக்குக் கேட்கப்படட்டும். என்று நியமித்து யாவரையும் அனுப்பி, அச்சிறுவரோடு பர்ணசாலைக்கெழுந்தருளினர். மறுநாள் சூரியோதயமாக ராமாயண சேஷத்தையுஞ் செவிசார்த்தி, பிராட்டியாரைப் பிரிந்ததனால், மனந்தளர்ந்தவராய் யாகத்தை நிறைவேற்றி, அந்தணர் அரசர் முதலியோர்க்கும், சுக்கிரீவமகாராஜன் முதலிய வானரத்தலைவர்களுக்கும், இலங்காதிபதியாகிய விபீஷணாழ்வானுக்கும், மற்றுமுண்டான பரிஜனங்கட்கும், செய்யவேண்டிய வெகுமதிகளையெல்லாஞ் செய்து அனுப்பிவிட்டு, மனமெல்லாஞ் சீதைநினைப்பே மூடிநிற்க திருவயோத்தி சேர்ந்தருளினர். அதுமுதல் வேறொருத்தியையும் மனையாளாகக் கொண்டிலர். தாம் முன் செய்துவைத்திருந்த பொற்சீதையைக் கொண்டு அநேக அசுவமேதங்களும், வாஜபேயங்களும், இன்னும் பல சத்திரயாகங்களும், தக்க தக்ஷிணைகளோடு நன்கியற்றிக் கொண்டு; அறநெறிதவறாதுமன்பதைகாத்துவந்தார் அக்காலத்தில் யார்க்கும் எவ்வகைத் துன்பமுமின்றிப் பருவந்தப்பாது மழையுமுண்டாகி, இராஜ்ஜியமெங்கும் செழிப்பாகவேயிருந்தது. இப்படிச் சில ஆண்டுகள் கழிகையில், ஸ்ரீராமமூர்த்தியையீன்றவளாகிய கௌசலியாதேவி சொர்க்கஞ் சேர்ந்தாள். உடனே சுமித்திரை-கைகேயி - இவ்விருவரும் அங்ஙனமேசேர்ந்து தங்கணவனோடு களித்திருந்தனர். கௌசலியாசுதரும்வேற்றுமையின்றி யாவர்க்கும் சரமகிரியைகளைச் சீராய் நடத்தி, தானதருமங்கள் செய்துக் கொண்டிருந்தனர்.

அஸ்வமேதயாகப்படலம் முற்றிற்று.

## கால்காத்தபடலம்.



ஸ்ரீராமர் பரதருடைய குமாரரிருவர்க்கும் கந்தர்வராஜ்ஜியத்தைப் பகுத்தளித்தல்.



இப்படியிருக்க ஒருகால் கேகயதேசாதிபதியான யுதாசித்தென்னும் மகாராஜா அநேகமாயிர நற்பரிகளும் கம்பளங்களும் அணிகளும் ஆடைகளுங்கொடுத்துத் தம் புரோகிதரான கார்க்கியமாமுனிவரை ஸ்ரீராமரிடம் அனுப்பினர். அவர் தம்பட்டணத்திற்கு வருவதைக்கேட்டுச் சக்கரவர்த்தித் திருமகனர் எதிர்கொண்டுபோய் வெகுவணக்கத்தோடு அவைகளைப் பெற்றுக்கொண்டு, அம்முனிவரை ஆஸ்தானத்திலழைத்துக்கொண்டு வந்து பூசித்து அம்மான் முதலானார்களுடைய யோக க்ஷேமங்களை விசாரித்து, சுவாமி! யாதுகாரிய நிமித்தம் தேவரீர் இங்கெழுந்தருளியதெனக் கேட்டனர். அதற்கு அத்தபோதனர் நவிலலுற்றனர். ஓ காகுத்ததிலகரே! சிந்து மகாநதியின் இருகரையிலுமுள்ள நாடுகளைச் சைலூஷன் என்னுங் கந்தருவனுடைய மக்கள் அநேகவாயிரத்தவர் கைபற்றிக்கொண்டு பார்த்திவரைப் பாதித்து வருகின்றனர். அந்நாடுகளெங்கும் மிகு வளப்பமுள்ளவையாய் அரசர்க்கு வேண்டும் பொருள்களைத் தருபவை. ஆதலின் அக்காந்தருவரைவென்று ராஜவம்சத்தார்க்குச் சுகம் வருவிக்கவேண்டும். அது உம்மையன்றிப் பிறராலாகத்தக்க தன்றென்று உம்முடைய நல்லம்மான் சொல்லும்படி என்னை யனுப்பினரென்றார்.

இச்சொல் செவிபுக்க, உடனே ராகவசிங்கம் கைகுவித்து அத்தவத்தோர் பெருமானைநோக்கி, சுவாமி! அங்ஙனமேயாகுக. நம்பரதன் மக்களாய தக்ஷனும் புஷ்கரனும் பெரும்படைகொண்டு சென்று வெற்றிபெறுக. அவர்க்குத் துணையாய் அப்பரதனே ஏகுக. வெல்லப்படு மவ்விராச்சியம் இருபிரிவாகி இருவர்க்குமுரியனவாகுக. என்று உரைத்து அக்குமாரருக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தனர். உடனே பெருமாள் நியமனப்படி கைகேயிபுத்திரர் நால்வகைத்

தானபெருந்தானைகளைக் கூட்டிக்கொண்டு, குமாரரோடு கார்க்கியமுனியை முன்னிட்டுக்கொண்டு பயணமாகிப் பதினைந்துநாட்களிற் கேகயதேசஞ் சேர்ந்தனர்.

இவ்வகைப் படைத்துணையோடு பரதாழ்வான் சேர்ந்தவுடனே, யுதாசித்தும் தனது சைனியத்தோடு பரதற்குப் பக்கபலமாகப் புறப்பட்டார். இத்தன்மையாகப் பரதாழ்வான் கந்திருவர் நகரத்தண்டை சென்று சுற்றிக்கொள்ள, அக்கந்திருவரும் போர்க்கு வலிந்து நின்றனர். இருதிறத்தாரும் ஏழுதினமளவும் பேரமர்புரிந்து ஒருவரையொருவர் மேலிடமாட்டாமலே யிருந்தார்கள். அத்தருணத்தில் ஸ்ரீராமாநுஜர் சம்வர்த்த மென்கிற காலாஸ்திரத்தைப் பகைஞர்மேற்பிரயோகிக்க, அவர்கள் அனைவரும் காலபாசங்களாற் கண்டுண்டு கணப்பொழுதில் மாண்டுபோயினர். அனந்தரம் அவரந்தக் கந்தர்வதேசத்திலும் காந்தாரதேசத்திலும், தக்ஷசிலையென்றும் புட்கலாவதியென்றும் இரண்டுமகாநகரங்களை நிருமித்து, தக்ஷனைத் தக்ஷசிலையிலும் புட்கரனைப் புட்கலாவதியிலுந்தாபித்து, ஐயாண்டளவு மங்கிருந்து அவர்களரசாட்சியின் திருத்தங்களைக்கண்டு களிப்புற்றுத் திரும்பித் திருவயோத்திக்கெழுந்தருளி, தமயனுர் திருவடிகளையிறைஞ்சி நடந்தவையெல்லாம் விண்ணப்பஞ்செய்தார்.

ஸ்ரீராமர் லக்ஷ்மணருடைய குமாரரிருவர்க்கும் காருபதமென்னும் தேசத்தைப் பகுத்தளித்தல்.

அதுகேட்ட சுவாமி ஆனந்தபரிதராய் இலக்குமணரைவிளித்து, உன்மகரிருவரும் பருவமடைந்து பரிபூர்ண சவுரியதயிரியங்களுள்ளவராயிருப்பதால் அவர்களுக்கும் அரசாட்சிதரவேண்டும். ஆகலின் தக்கதேசம் ஆய்ந்துரையென்னப் பக்கத்திருந்த பரதாழ்வான் அவர் திருமுகத்தை நோக்கி, சுவாமீ! அதோகாருபதம் என்கிற தேசமிருக்கிறதே, அது நல்லவிடம். அதிற்பல துஷ்டரிருக்கின்றனர். அதனைக் கைவசமாக்கி இவர்களுக்குத் தாபிக்கலாமென்று விண்ணப்பஞ்செய்தார். இது சரிதான் என்று ராகவேந்திரர் அங்கீகரித்து, அங்கதன் சந்திரகேதுவென்னுஞ் சவுமித்திரி புதல்வரிருவர்க்கும் பட்டாபிஷேகஞ் செய்து வேண்டும் படைமுதலானவைகளோடு அனுப்பியருளினர். அவர்களுள் அங்கதனுக்கு இளையாழ்வானுனவர் பக்கத்துணையாகி, ரகுநந்தனரால் ஆக்கியாபிக்கப்பட்ட பெரும்படையோடுசென்ற இலக்குமணர் அக்காருபதத்துள்ள விடங்களைத் தம்வசப்படுத்தி, அங்கு அங்கதீயா என்னும் ரமணீயமான நகரமொன்று உண்டாக்கினர்.

அந்தநகரத்தில் லக்ஷ்மணர் மூத்தவனுகிய அங்கதனையிருத்தி அரசியற்றச்செய்து மீண்டு அயோத்தியையடைந்து, ஸ்ரீராமபிரானை வணங்கித் தாம்போய் நடத்திவந்தகாரியங்களை விளம்பி மகிழ்வித்தனர்.

இப்பால் பரதாழ்வானுனவர் லக்ஷ்மணருடைய கனிஷ்டகுமாரனுக்குப் பக்கத்துணையாகி, முன்பு ஸ்ரீராமரால் ஆக்கியாபித்துச் சிரேஷ்டகுமாரனேடும்போன படைபோக மற்றப் பாதிப்படை தம்மைச் சூழ்ந்துவர வெளிப்பட்டார்.

இவ்வித பெரும்படையோடு சென்ற பரதர் அந்தக்காருபதத்து மல்லபூமியென்னுமிடத்தில்,சந்திரகாந்தாஎன்பதொரு மகாபுரிநிருமித்துச் சந்திரகேதுவை அரசாளவைத்து, அவர் ஆட்சிதிருந்தி நிலைபெறப்பார்த்து ஓர் ஆண்டு கழிந்தபின், அயோத்திக்குமீண்டு ஸ்ரீராமபாதாரவிந்தங்களையே சேவித்துக்கொண்டிருந்தனர்.

காலகாத்தபடலம் முற்றிற்று.

## சுவர்க்காரோகணப்படலம்.

ஸ்ரீராமர்பால் காலன்வந்து பிரமன்கருத்தையறிவிக்க அக்கால்தூருவாசர் லக்ஷ்மணரைச்சினந் துள்ளேசென்று அன்னமருந்திப்போதல்.

இப்படி ரகுநாயகர் தருமந்தழைக்க, இராஜ்ஜியாதிபத்தியம் நடாத்தி வருகையில் ஒருபகல் தென்றிசைக்கடவுளானவன் பிரமதேவனேவலால் ஓர்தவசிபோலே அரண்மனைவாயலில் வந்து, லக்ஷ்மணரைவிளி

த்து, யான் அதிபலமகாமுனிவரின் தூதன். பெரியதொரு காரியநிமித்தம் வந்தேன். விரைவி லென்வரவை ஸ்ரீராமமூர்த்திக்கு அறிவிக்கவேண்டும் என்றான். அதைக்கேட்ட லக்ஷ்மணர் அங்ஙனமேசென்று விண்ணப்பஞ் செய்ய ஸ்ரீராமமூர்த்தி உள்ளேவரும்படி யுரைத்ததனால், அத்தவத்தோன் யாவரினும் விசேஷமானதோ ரொளிதிகழச்சென்று ஆசிகூறினன்.

ஆ! என்னவாச்சரியம்.

பாருடைமன்னனைப்படர்ந்துபையென
வேருடைமறலிவந்தெய்திற்றாதலால்
நீருடையுலகினினிகழ்ந்துளோர்க்கெலாம்
சேருமென் றறிந்துமாதவங்கள்செய்ம்மினே.

அப்போது சுவாமி அவர்க்கு முறைப்படி சற்காரமியற்றித் தேவரீர் யாருடைய தூதராக எழுந்தருளியதோ அவர் பணிப்பை அருளிச்செய்யலாமென மொழிய, அவரும் ஓ ரகுகுலோத்தமா! என்னைத் தூதனுப்பிய மாமுனிவரின் வாக்கியங்களைச் செவிகொள்ளத் திருவுள்ளமாயின், நாமிருவரேயன்றி மற்றியாவரும் இருத்தல்கூடாது. யாராயினும் நம்முடைய சல்லாபத்தைக்கேட்டாலும் இவ்விடத்துவந்தாலும், அவர் கடுந்தண்டனைக்குள்ளாகும்படி கட்டளையிட வேண்டுமென்றார். அதுகேட்ட ஸ்ரீராமர் அங்கீகரித்துச் சவுமித்திரியை நோக்கி, அப்பா! இங்கு வேறு வாயிலோன் வேண்டாம். நீயே இருக்கக்கடவை. யாங்களிருவரும் பேசுமிடத்து எவரும் வரவொண்ணாது. ஒட்டிக்கேட்கவுமொண்ணாது. அவ்வாறுசெய்தால் அத்தண்டனைக்குப் பாத்திரமாவர். ஆதலின் நீ நன்று காக்கவேண்டும். என்று ஆணையிட்டு ஏகாந்தத்திற்சென்று, இனிக் கட்டளையிடுகவெனமுனிவரைத் தூண்டினார். தூண்டவே முனிவேடம்பூண்ட தேவனுஞ் சொல்லத் தொடங்கினான்.

சுவாமி! அடியேன் பிரமதேவராலே தேவரீர் சந்நிதிக்கு ஏவப்பட்டேன். உலகத்துள்ள உயிர்களைக் காலமறிந்துண்ணுங் காலனாய், அடியேனும் தேவரீராலே படைக்கப்பட்டவன். என்னைச் சதுர்முக பகவான் விண்ணப்பஞ்செய்ய சொல்லியதாவது: தேவரீர் பூர்வம் உலகங்களையெல்லாம் உள்ளடக்கிக்கொண்டு பெரும்புறக்கடலிற் பள்ளிகொண்டு, உந்தியிற்பூத்த திவ்விய தாமரைப்பூவில், அடியேனை உற்பவித்துப் படைப்புத்தொழிலை நடத்தும்படி கட்டளையிட்டருளினீர். அடியேனும் தேவரீரிடத்துப் பாரத்தைவைத்து நியமனப்படி பிரஜாபத்தியஞ் செலுத்திவருகிறேன். மதுகைடவரென்கிற தயித்தியர் இருவரை வதைத்து, அவர்களுடைய எலும்புகளாலும் நிணங்களினாலும் இப்பூமியை மலைகளொருங்கியதாகவும், புல்பூண்டு முதலியன முளைக்கும்படியானதாகவும் செய்தருளினீர். அதனாலே பூமிக்கு மேதினி என்கிற பெயருண்டாயிற்று. அடியேனுக்கு உண்டாயிருக்கிற சத்தியெல்லாம் தேவரீர் தந்ததே. இப்படியே எல்லாவற்றிலும் சத்தி கற்பித்திருக்கிறீர். பின்பு தேவதைகளின் காப்புக்காக அதிதிதேவியினிடம் இந்திரனுக்குத் தம்பியாக உபேந்திரனென்னுந் திருநாமத்தோடவதரித்து, அவர்களுக்கு விபத்துக்கள் நேர்ந்தபோதெல்லாம் சகாயமாக நின்றருளினீர்.

பின்பு இராவணாதியரால் உலகமெல்லாம் நடுக்கமுற்றிருக்கையில், அவர்களுடைய சங்காரத்திற்காக மனிதரிலவதரிக்கத் திருவுளம்பொருந்தி இவ்வவதாரஞ் செய்தருளினீர். சங்கற்பித்தகாரியம் நிறைவேற்றியாயிற்று. சங்கேதப்படி பதினோராயிரமாண்டு கழிந்தன. ஆதலால் இனித் தன்னடிச்சோதிக்குஎழுந்தருளலாம். சகல பூதங்களையும் ரக்ஷித்தருளவேண்டும். தேவரீர் எழுந்தருள்வதை எதிர்பார்த்துக்கொண்டு விண்ணவர் அங்கங்கே காத்திருக்கின்றனர். அவர்களை அநுக்கிரகிக்கவேண்டும். அடியேன் இங்ஙனஞ் சொல்வது நினைப்பூட்டலேயல்லது வேறன்று. இன்னும் பூலோகத்திலேயே எழுந்தருளியிருக்கத் திருவுள்ளமாயின் அவ்வாறே செய்யலாம். என்று பிரமதேவன் சொல்லியதாகக் காலமூர்த்தி செப்பியதைச் செவிகொண்ட ஸ்ரீபகவான், இந்திர நீலபருவதசிகரத்தில் நிலவுபட்டதென்ன முறுவலித்து அருளிச்செய்யலாயினர்.

ஓ தென்றிசைத்தேவனே! நாம் எண்ணிக்கொண் டிருப்பதையே பிதாமகனும்

உரைத்தார். நீ வருவாயென்று நினைத்த படிவந்தாய். நமக்கு மிகவுஞ் சந்தோஷமாயிற்று. உனக்கு நன்மையுண்டாகக்கடவது. யாம் எமது பிரகிருதியைச் சேருகிறோம். என்று இப்படி சம்பாஷித்துக்கொண் டிருக்கையில் சுவாமியைத் தரிசிக்கவேண்டுமெனத் தூர்வாசமுனிவர் இராஜதுவாரத்தண்டைவந்து நின்று, துரிதமாய் என்னை ஸ்ரீராமரிடம் அழைத்துக்கொண்டுபோக வேண்டுமென்றனர். அதற்கு இளையவர் கைகூப்பிக்கொண்டு, சுவாமி! காரியம் யாது? அடியேனிருக்கிறேன் அதனைச்சாதிப்பதற்கென்று கூறினர். அது செவிப் பட்டதும் அம்முனிக்குக் கோபாக்கினி பொங்கி, இந்த க்ஷணத்திலேயே ராமனுக்கு நான் வந்ததைத் தெரிவிக்கவேண்டும். அப்படிச்செய்யாமற்போனால் உடனே இந் நகரத்தோடு நீங்களும், உங்கள்சந்ததியும், அழிந்துபோகும்படி சபிப்பேன். நான் கோபத்தை அடைக்ககில்லேன். எனவே லக்ஷ்மணர் தமக்குத்தாமே சற்று ஆலோசித்து, என்னொருவனுக்குக் கேடுவந்தாலும் வரட்டும். என்னிமித்தம் மற்றவர்க்கு வராதிருந்தாற்போதும் என்று நிச்சயித்து, சுவாமி சந்நிதியில் இவர்வரவைத் தெரிவித்தார். அவரும் காலனை அனுப்பிவிட்டுக் கோவமுனிவரைக்கண்டுவந்தனஞ்செய்து, சுவாமி! அடியேற்கு யாதுபணிக்கின்றீர் என வினவினர். அதற்கவ்வத்திரிபுத்திரர் ஓ தசரதநந்தன! யான் ஆயிரவருஷமளவுந் தவஞ்செய்துமுடித்தேன். இப்போது பெரும்பசியால் வருந்துகின்றேனாதலால் அன்னந்தரவேண்டுமென்றனர். அதற்கு ரகுநாயகர் புன்னகைகொண்டு, அவருக்கு விரும்பியபடி போஜனமளிக்க, உடனே அவர் புசித்துத் திருப்தியடைந்து ஆசிகூறித் தமதாச்சிரமத்திற்கு போந்தனர்.

### லக்ஷ்மணர் வசிஷ்டாதியர் முன்னிலையில் வைகுண்டமடைய அதுகண்டுவருந்திய ஸ்ரீராமர்பால் பரதனாதியர் முறைபாடு.

இப்பால் ஸ்ரீராகவபிரான் காலதேவன் பேச்சை நினைத்துச் சற்றுத் துயரமுற்றவராகி, ஏதும்பேசவாயெழாமற்றலைகுனிந்து நின்றார். அதைக்கண்டு இளையபெருமாள் தமையனாரைக்கிட்டி, சுவாமி! சிந்திப்பதேன்? காலகதியைக்கடக்கலாகுமோ? அடியேனைத் துறந்து பிரதிக்கினையைக் காத்தருளுக. என விஞ்ஞாபனஞ்செய்ய, சுவாமி நகரத்தினரோடு மந்திரிமாரையும் வசிஷ்டரையும்அழைப்பித்து, நடந்ததைத் தெரிவித்தார். அதற்கு மயித்திராவருணி ஓ ஸ்ரீ ராமபிரபுவே? இக்காரியமெல்லா முன்பே அறியப்பட்டதுதான். தம்பியைத்துறந்து பிரதிக்கினையை நிறைவேற்றித் தருமத்தைக் காத்தருளவேண்டும். தருமம் அழியப் பிரபஞ்சமே அழியுமன்றோ என்று உரைத்தனர். அதைத் திருச்செவிசாத்திய பெருமாள் தம்பியைநோக்கி, அப்பா லக்ஷ்மணா! தக்கவர்க்குக் கைவிடுவதும், வகிப்பதும் ஒக்குமாதலின், உன்னைக் கைவிட்டேனென்றார். அக்கால் அவ்விளையவர் கண்கள் நீராற்கலுழந்து, தந்திருமாளிகை செல்லாமல் நேராகச் சரயூநதிக்கேகி நீராடி பிராணயாமத்தால் சுவாசமடங்கி நின்றருள, சகல தேவதைகளும் பரிவாரத்தோடு அங்கேவந்து பூமழை பொழிந்தனர். உடனே அவர் சாக்ஷாத்விஷ்ணுவின் அம்சமாகிய ஆதிசேஷராய் விமானத்திலெழுந்தருளிவைகுண்டஞ்சேர்ந்தார். அப்போது ஸ்ரீராமமூர்த்தியின் இருப்பும், நகரத்தினர் செயலும் எவ்வாறுரைப்பது? இவ்வாறு தம்பியைத் துறந்த ஸ்ரீரகுநந்தனர் உடனே மனதிற் றுயரந்தாங்கினவராகி, உள்ளம் பதைபதைத்து, மேனியெல்லாம் வேர்த்து மெலிவுற்று, நெடுங்காலமாக என்னுடனிருந்துகாத்த நீ இப்போதுகை விட்டாயோவென்று புலம்புவதாயினர்.

இப்படி சராசரங்களனைத்தும் அழும்படியாகப் புலம்பிய ஸ்ரீரகுநந்தனர், உடனே மந்திரிகள் முதலானவர்களை யழைப்பித்து, ஓ மித்திரர்களே! இனிப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டு, நான் தம்பிசென்றவழி செல்கின்றேன். சௌமித்திரியைப் பிரிந்திருக்கிலேன் என்றனர். அதுகேட்ட கைகேயி சுதரும் மற்றுமிருந்தோரும் அப்படியே நிலத்துவீழ்ந்து மூர்ச்சித்துக்கிடந்தனர். பின்னர் பரதர் எழுந்திருந்து ஸ்ரீராமபிரானைத் தொழுதெழுந்து, சுவாமி! அரசாட்சியை யான் சிறிதும் ஏற்கமாட்டேன். இது தேவரீர்

திருவடியாணை. தேவரீருட னிருத்தலே மேலான சுவர்க்கமாதலின் அங்ஙனமிருக்க அநுக்கிரகிக்கவேண்டும். இந்ததக்ஷிணகோசலத்திற்குக் குசனையும், உத்தரகோசலத்திற்கு லவனையும், அரசாளும்படி பட்டாபிஷேகஞ் செய்தருளுக. சத்துருக்கனிடத்துக்குத் தூதரையனுப்பி அழைப்பிக்கவேண்டும். என்று இப்படி பரதாழ்வான் கிளர்ந்ததைக்கேட்டும்,தரையில்விழுந்து கிடக்கிற பிரஜைகளைப்பார்த்தும், வசிஷ்டமாமுனிவர் ஸ்ரீராமரை நோக்கி, ஓ ராமபத்திர பகவானே! பிரகிருதிகள் கிடக்குங்கிடையைக் கடாக்ஷித்தும், பரதன்விண்ணப்பத்தை அங்கீகரித்தும் கிருபை கூர்ந்து, அவர்களுடைய மனோரதத்தைப் பூரிப்பதே தகுதி. அவர்கள் மனமுறியச் செய்தல் தகுதியன்று எனவெடுத்துரைத்தனர். அதனாலே சுவாமி இரங்கி யாவரையும் எழுப்பி, ஏன் கிடக்கின்றீர்கள்? யான் செய்யத்தக்கது யாது? எனத் திருவாய் மலர்ந்தருளவும், அவர்கள் விண்ணப்பஞ் செய்யலாயினர். ஓ ஆண்டவனே! அடியோங்களிடத்தில் அநுக்கிரகமும் அன்புமுளவாயின் அடியேங்களையுங்கூட அழைத்துக்கொண்டு போகவேண்டும். தேவரீர் கானகத்தேகினும், கடலிற்புகினும், வேறுலகஞ்செல்லினும், அடியேங்களும், அங்கு வந்திருக்கும்படி திருவுள்ளம் பற்றவேண்டும். தேவரீர் இல்லாவிடம் எமக்கு நரகமாகும். ஆதலின் எங்கெழுந்தருளினாலும் யாமியாவரும் குடும்பத்தோடு அங்கு பின்செல்லக் காத்திருக்கின்றோம். இதுதான் எங்களுடைய மனோரதம். என்று அன்போடும் வணக்கத்தோடும் பிரார்த்திக்க, ஸ்ரீராமபிரான் அவர்களுடைய அன்பின் உறுதிப்பாட்டைக்கண்டு அப்படியே யாகட்டுமென்று சாதித்தருளினர்.

கோசலையில் ஸ்ரீராமர்பிள்ளைகட்கும், மதுரையில்சத்துருக்கர்பிள்ளைகட்கு மகுடாபிஷேகமும் அச்சத்துருக்கனரும் சுக்ரீவாதியரும் அயோத்திக்கு வருகையும் அவ்வவர்கட்கு ஸ்ரீராமரது அருளிப்பாடும்.

---

உடனே பரதாழ்வான் இரட்டைப் பிள்ளைக ளிருவரையும் கோசலநாடிரண்டிற்கும்அரசராக்கிமுடிமேல்வைத்தணைத்துப் போதிக்க வேண்டுவன போதித்து, ரதகஜதுரகபதாதி சேனைகள்பலவும், ரத்தினாபரணாதிகளும் பிரசாதித்து, குசாவதியென்னும் நகரத்திற்குக் குசனையும், சரஸ்வதியென்னும் நகரத்திற்கு லவனையும், அனுப்பிவிட்டுச் சத்துருக்கனாழ்வானிடம் தூதரைவிடுத்தருளினர். அத்தூதரும் வழியிற்றங்காமலே சென்று, லக்ஷ்மணாநுஜரைக் கும்பிட்டு, லக்ஷ்மணர் பிரிந்ததுமுதலாக எல்லாச்செய்தியும் விண்ணப்பஞ் செய்தனர். அவரும் இச்செய்தி செவிப்பட்டமாத்திரத்தில் அமைச்சர் புரோகிதர் முதலியோரைக் கூடி விருத்தாந்தங்களை அறிவித்து, தம்புதல்வர் இருவருள் சுபாகு என்போனுக்கு மதுரையின் அரசும் சத்துருக்காதி என்போனுக்கு வைதிசத்தின் அரசுமளித்து, தாம் ஒற்றைத்தேரோடு திருவயோத்தியை நண்ணிப் பெருமாளைச் சேவித்துச் செய்யவேண்டுவன செய்து தீர்த்து, தேவரீர் திருவடிநிழலை யொற்றிவரச் சித்தமாயிருக்கின்றேன். இதற்கு மறுத்து யாதும் நியமிக்கவேண்டாம் என்று வேண்டினர்.

இப்பால் ஸ்ரீரகுநந்தனர் லக்ஷ்மணர் சென்றவழியே தாமுஞ்செல்லச் சித்தமாயிருப்பதையும், பரதாழ்வான் முதலியோர் அவரைப் பின்றொடர்ந்து செல்ல உத்தேசித்திருப்பதையும், விபீஷணர் முதலிய இராக்கத வீரர்களும் சுக்கிரீவன் முதலிய கவிவீரர்களும் கேட்டு, தங்கள் தங்கள் பரிசனங்களோடு அயோத்தியாபுரிக்கு வருவதானார்கள்.

இவ்வாறே நீலன் குமுதன்முதலாகிய படைவீரர்களுந்திரண்டு ரகுவீரர் சந்நிதியில்வந்து, நாங்களும் சுவாமியைப் பின்றொடர ஆயத்தராய் வந்துவிட்டோம். இவ்விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றாதுமறுக்கின் எம்மைக் காலதண்டத்துக்குக் காட்டிக் கொடுத்ததேயாகும் என்று முறையிட்டுக்கொண்டனர். இவற்றையெல்லாந் திருச்செவிசாத்திய பகவான் மலர்ந்த திருமுக மண்டலத்தோடு அங்ஙனமேயாகுகவெனக் கையமர்த்தியருளி விபீஷணாழ்வானை விளித்து, உமக்கு நாம்கொடுத்த லங்காராஜ்ஜியத்தை நீர் சந்திராதித்தருள்ளளவும்பரிபாலித்துவருவதுமன்றி, நமது

குலதெய்வமாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை ஆராதித்துக்கொண் டிருக்கவேண்டும் என்று கட்டளையிட்டார். அவரும் சுவாமியின் ஆக்கினையை நினைத்து ஒத்துக்கொண்டார். அக்கால் சுக்கிரீவன் தனக்கும் இவ்வாறு சுவாமி கட்டளையிடுவரென வஞ்சி, ஓ எனதாண்டவனே! கிஷ்கிந்தைக்கு அங்கதனை மகுடஞ் சூட்டிவைத்து யான் இங்குவந்தேன். இனித்தேவரீர்செல்லும்நெறியே யானுந்தொடர்வது திண்ணமென்றனர். அதுகேட்ட ஸ்ரீராமர் பின்பு அநுமானை நோக்கி, நீர் முன் குறித்தபடி நமதுகதை உலகத்திருக்குமளவு மிருக்கவேண்டுமெனவும்; சாம்பவன் - மயிந்தன்- துவிந்தன் என்போரையும் நோக்கி, நீவிர் கலிவருமளவும் பூமியிலிருக்கவேண்டுமெனவுங்கட்டளையிட்டனர். அவர்களும் அப்படியேயென அங்கீகரித்தார்கள். இவ்வாறு இவர்களை நியமித்து மற்றயாவரையும் தம்மைப் பின்றொடர்ந்து வருமாறு பணித்தருளினார்.

ஸ்ரீராமர் தமது சகோதரர்முதலிய பரிஜனங்களோடு சரயூகட்டஞ்சேர்ந்து சோதியிற்கலந்தருளி லட்சுமி சமேதராய் ஸ்ரீ வைகுண்டமடைதல்.

மறுநாள் விடிந்தவுடன் ஸ்ரீராமச்சந்திரபகவான் கஞ்சமொத்ததிருக்கண்களும், நிறைமதியன்னவதனமும், பவளக்கடிகையொக்கும் அதரமும், வீழைநிகர்த்த திருத்தோள்களும், வரையெனப் பரந்தெழுந்த மார்புமாய்ப் பரிதிபோல விளங்கா நின்று, புரோகிதரால் மகா பிரஸ்தானத்துக்குரிய சடங்குகள் செய்யப்பெற்று, அக்கினிஹோத்திரம் இருத்துவிக்குகளோடு முன்செல்லவும், வாஜபேயத்தைப்பற்றிய கவிகை நிழற்றவும், மெல்லியவாடை சாத்திக்கொண்டு விரல்களில் தருப்பைப்பவித்திரங்கள் விளங்க, பிரம்மந்திரம் ஆவர்த்திசெய்துகொண்டு, எங்கும் யாவரோடும் ஒன்றும்பேசாமல் பாதரக்ஷையின்றியே அரண்மனைவிட்டுப் புறப்பட்டெழுந்தருளினார். அக்கால் அவருடைய வலப்பக்கத்தில் திருமகளும், இடப்பக்கத்தில் நிலமகளும், கூடிச் சென்றனர்.

அன்றியும், சங்கற்பம் பராக்கிரமம் கார்முகம்முதலியபடைகளும், புருஷரூபங்கொண்டு கூடச்சென்றன. மேலும் மறைகள் மறையவர் வடிவத்தோடும், அவ்வண்ணமே காயத்திரிமுதலிய மந்திரங்களும் அவரைத்தொடர்ந்துபோயின. மகா பிரமரிஷிகளும், வேதியர் வேந்தர் முதலியோரும், முகமலர்ந்து கூடவேகினர். அந்தப்புரத்திருந்த மடவார்களும், பாலகரும், ஊழியரும், அமாத்தியர் சேனைத்தலைவராதியரும், தம்தம் பரிவாரங்களோடு குதூகலித்துக் கூடப்படர்ந்தனர். பரதசத்துருக்கர்களும், தம்தம் அக்கினிஹோத்திரத்தை முற்கொண்டு அவர்பின்போயினர். வானர ராக்ஷசர்களும் சேரக்குழுமித் துன்னினர். இவ்வாறு பிரகிருதிகளனைவரும் திறந்திருக்கும் விண்ணகர்புக மிகமகிழ்ந்து கலியாண நடையாக நடந்தனர். சுவாமி எழுந்தருளுவதைப் பார்க்கவந்தவர்களும் அப்படியே பின்றொடர்ந்து சென்றனர். இவ்வாறு அந்நகரத்திருந்த யாவரும் விலங்கு பறவைமுதலியனவும் களித்தே அநுகமனஞ்செய்தன. இவையெல்லாம் ஓர் அற்புதமாயிருந்தது.

இப்படி பலரும் புடைசூழநடந்த ஸ்ரீ பகவானனவர் சுழல்களுள்ளதாய் உச்சாகத்தோடு வருவதுபோலக் குடதிசைநோக்கிச்செல்லா நின்ற சரயூநதியைக் கண்ணுற்று, அதன்கரையினின்றருளினார். அப்போது நான்முகக்கடவுள் மற்றைத்தேவர் குழாத்தோடும், திவ்விய முனிவர்குழாத்தோடும் அங்குவந்தனர். அவர்களுடைய தேஜசும், விமானங்களினொளியும் பரவ, வானமெல்லாம் அநேககோடி ஆதித்தருதித்தாற்போல் பிரகாசித்தது. நறுநாற்றத்தோடும் மந்தமாருதம் வீசியது. புஷ்பவருஷம் வருஷித்தது. திவ்விய வாத்தியங்கள் முழங்கின. இப்படி பெருவிழாவாயிருக்கையில் சுவாமி நதியைத் திருவடியாற்பரிசித்தனர். அப்படி பரிசிக்கையில் அயனார் வானிலிருந்துவந்து, ஓ திருமாலே! பல்லாண்டு! பல்லாண்டு! இங்கெழுந்தருளுக. அடியேம் பாக்கியத்தால் இப்படி கிடைத்தது. தம்பியரோடெழுந்தருளித் தமது திருமேனியிற்புகுக. அல்லது எந்தத்திருமேனியிற் றிருவுள்ளமோ அதிற்புகுக. அல்லது நலமந்தமில்லாதோர்நாட்டிற்கே

நேரேயெழுந்தருளத் திருவுளமிருக்கின் அப்படியே யெழுந்தருளுக. எப்புவனத்திற்கும் புகுமிடமானவரும், புகுவிப்பவரும், தேவரீரே யன்றோ? தேவரீரோடென்றும் பிரியாதுரைகின்ற திருமகளன்றி மற்றை யாருந்தேவரீரையறியமாட்டார்கள். தேவரீரேயாவையும் அநுக்கிரகிக்கவல்லவரும், அழியாதவருமாகிய மகாபுருடன் என்று துதித்து விண்ணப்பஞ்செய்தார்.

உடனே ஸ்ரீராமமூர்த்தி அத்திருமேனியோடும், தம்பிமாரோடும், தமது சோதியிற் கலந்தருளினர். தேவதைகளும் ரிஷிகளுங்கூடி அன்புநிரம்ப ஆராதித்தனர். அக்கால் சுவாமி விதாதாவைநோக்கி, என்னிடத்திடையறுத அன்பினராய்ப் பின்பற்றிய யாவர்க்கும் புகுமுலகந்தருகவெனக் கட்டளையிட, அவர் பகவானுடைய திருவுளத்தைத் தெரிந்து, சாந்தானிகம் என்னுமிடம் புகும்படி செய்தனர். உடனே பிரமலோகத்திற்கு மேற்பட்டதாய்ப் பரமபதம் போலவே, மறுத்தும் வருதலில்லாத மேம்பாடுள்ள சாந்தானிகபோகத்தை யாவரும் பெற்று மகிழ்ந்தனர். அப்போது பதுமயோனி, இவரேயன்று இன்னும் எவராகிலும் ஸ்ரீராமபாதாரவிந்தத்தில் அன்புள்ளவராயின் அவரும் இவ்வுலகஞ்சேர்ந்து பரமபதமடைவரென்று உரைத்தருளினர். சுக்கிரீவன்முதலிய வானரமுதலிகளும் மற்றோரும், தாம்தாம் தோன்றிய தேவர்களிற் கலந்தனர். இங்ஙனம் அன்பரெல்லாம் கோப்பிரதாரமென்கிற சரயூகட்டத்தில் மூழ்கி உடம்புகளை இங்கேநீத்து உடனே விமானமேறி உத்தமபதமடையும்படி செய்து, சுவாமி ஆதிநாராயணராகியும், பரத சத்துருக்கர்சங்குசக்கரங்களாகியும், நித்திய சூரிகளோடு பஞ்சாயுதந்தரித்து லட்சுமி சமேதராய் ஸ்ரீவைகுண்டத்திற் கெழுந்தருளினர். இதையெல்லாங்கண்டு பிதாமகர் முதலான வானுலகத்தோர் ஆனந்தக்கண்ணீர் அரும்பப்பெற்று, ஸ்ரீவைகுண்டபதியைப் பணிந்து, துதித்துக்கொண்டே தம் தம் உலகமுற்றனர். திருவயோத்தி நெடுங்காலம் பாழாகவிருந்து, பின்பு ரிஷபனென்னும் அரசன்காலத்து மறுபடி வளமான நகரமாயிற்று.

இவ்வாறு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி லோகாநுக்கிரகநிமித்தமாக ஸ்ரீராமாவதாரஞ்செய்து நடத்திய திருவிளையாட்டுகளை அமைத்து வான்மீக முனிபுங்கவர் இயற்றிய ராமாயணமென்கிற மகா காவியத்தை அன்போடு தேவரும் நிதங்கேட்டு உவக்கின்றனர். மகா புண்ணியசரிதமாயும் வேதத்தோடொத்ததாயும் இருக்கின்ற இந்தப் பிரபந்தத்தை, படிப்போர் கேட்போர் ஆதரிப்போர் முதலிய யாவரும் பாவம் நீங்கி விரும்பியசெல்வம்பெற்று வாழ்வதுமன்றி, வைகுந்தமும் பொருந்துவர்.

கலைமறை முனிவர்வாழ்த்தக் காரிகை யார்தங்கற்பு
நிலைபெற மன்னர்செங்கோ னீணிலந்தன்னில் வாழ்க
அலைகட லிலங்கைமூதூ ரரக்கர்வே ரறுத்தவைவேற்
சிலைதொடு வில்லிகாதைச் செந்தமிழ் வாழ்கவன்றே.

இனையநற் காதைமுற்று மெழுதினோர் வியந்தோர்கற்றோர்
அனையது தன்னைச்சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக்கேட்போர்
கனைகடற் புடவிமீதே காவலர்க் கரசாய்வாழ்ந்து
வினையமதறுத்துமேலாம் விண்ணவன் பதத்தைச் சேர்வார்.

உத்தரகாண்டம் முற்றிற்று.

---